ஸ்ரீ

# கம்ப ராமாயணம்

முதலாவது

## பாலகாண்டம்

வை. மு. கோபால கிருஷ்ணமாசார்யர்
தெளிசிங்கப்பெருமாள்கோயில் தெரு, திருவல்லிக்கேணி.)

இயற்றிய

உரையுடன்

சென்னை

கணேச அச்சுக்கூடத்திற்

பதிப்பித்தது.

---

[illegible]சய ௵
[illegible]த்திகை ௴

விலை ரூபா-ரு.

# இப் புத்தகத்தில் அடங்கியவை.

# நான்முகம்.

“ கற்பாரிராமபிரானையல்லான்மற்றுங்கற்பரோ
புற்பாமுதலாப்புல்லெறும்பாதியொன்றின்றியே
நற்பாலயோத்தியில்வாழுஞ்சராசர முற்றவு
நற்பாலுக்குய்த்தனனான்முகனார்பெற்றநாட்டுளே.”

[illegible]லைமலிபள்ளியெய்தியிதுமாயமென்னவினமாயமான்பினெழில்
[illegible]மலிவேற்கணாளையகல்விப்பதற்கோ ருருவாயமானையமையா,
[illegible]மலியெய்துவித்தகோடியோனிலங்கைபொடியாக வென்றியம
[illegible]மலிசெஞ்சரங்கள்செலவுய்த்தநங்கடிருமானமக்கோரரணே.”

[illegible]திருமகள்கொழுநனும் நற்குணவடிவனு மாகிய முழுமுதற்கடவுள், [illegible]ண்டமென்கிற திவ்வியலோகத்திலே திருமாமணிமண்டபத்திற் [illegible]ாதனத்திலே திருமகள் மண்மகள் முதலிய தேவிமாரோடு [illegible]து நித்தியமுத்தர்களால் நிரந்தரம் தொண்டுபூண்டொழுகப் [illegible]ப்பினும், அந்தப் பரமபதத்திலுள்ளார் எப்போதும் பேரின்பத்தை [illegible]வருதல்போல இந்த லீலாவிபூதியி லுள்ள உயிர்களும் பேரின்பத் [illegible]பெற்றுப் பெருங்களிப்புக் கடலில் மூழ்கவேண்டியிருக்க அங்ஙனம் [illegible] உரைமெழுக்கிற் பொன்போல மூலப்பிரகிருதியில் அழுந்திக்கிடந் [illegible]வைக்கண்டு மிகவும் வருத்தமுற்று, தனக்கு இயற்கையாயுள்ள [illegible]னால் அவ்வுயிர்களைப் படைக்கத் திருவுளங்கொண்டு மகான் [illegible]ரம் என்றுற்போன்ற முறைப்படியே படைத்து, தன்னைத்தரிசித் [illegible]ழுதல் முதலியனசெய்து உய்வுபெறும்படி அவ்வுயிர்கட்குக் கண் [illegible] முதலிய உறுப்புக்களையும் உடலையும் தந்து, தனதுகட்டளை [illegible] வேதநூலையும் வெளிப்படுத்தித் தரவும், அவ்வுயிர்கள் அந்நூலி [illegible]மதிப்புக்கொள்ளாமல் அவமதிப்பும் அவிசுவாசமும்பூண்டு யாற் [illegible]டக்கக் கொடுத்த புணையைக்கொண்டு யாற்றுப்பெருக்குவழியே [illegible]ப்புகுவாரைப்போல அந்தக் கண் கை கால் முதலிய உறுப்புக் [illegible]ண்டு சுவை ஒளி முதலிய ஐம்புலன்களிற்சென்று உழல்வனவாக, [illegible]ளைசெல்லாத நாட்டில் தாமே சென்று தண்டம் நடத்தும் [illegible]ல அத்திருமால் தனது ஒழுக்கவகையாலேனும் அவ்வுயிர்கட்கு [illegible]கொளுத்தவேணுமென்று திருவுள்ளங்கொண்டு, திசைமுகன் [illegible] தேவகணங்களின் வேண்டுகோளையும் தன்னைப் புதல்வனாகப்

பெறுமாறு நோற்றிருந்த தசரதனது கருத்தையும் முற்றுவித்தற்காக இராமன்முதலிய நான்கு வடிவுடன் இம்மண்ணுலகில் தசரதகுமாரராகத் திருவவதரித்தான்.

அவர்களுள் அடைக்கலம்பூண்டாரை யாதரிப்பதையே நோன்பாகக் கொண்டு இராவணசங்காரஞ்செய்த ஸ்ரீராமன் பெற்றோரின்சொல்லைக் கடவாதுசிரமேற்கொண்டுநடக்கை யாகிற சாதாரணதருமத்தையும், இலட்சுமணன் பகவானுக்குஅடிமைபூண்டொழுகுகை யாகிற விசேட தருமத்தையும், பரதன் அஃறிணைப்பொருள்போல எம்பெருமானுக்குப் பாரதந்திரனாயிருக்கை யாகிற விசேடதருமத்தையும், சத்துருக்கனன் எம் பெருமானுடையஅடியார்களிடத்து அடிமைபூண்டொழுகுகை • யாகிற விசேடதருமத்தையும் காட்டியதோடு, சகோதரவாஞ்சையையும் இவ்வுலகத் தார்க்குத் தம்முடைய ஒழுக்கத்தால் வெளியிட்டுக்காட்டினர். அன்றியும், மூத்தோர்சொல்லையமுதமாகக்கொள்ளவேண்டு மென்பதும், எத்துணைப் பெருஞ்சிறப்புப்படைத்தோராயினும் பெரியோரிடத்து அடங்கி ஒழுக வேண்டுமென்பதும், பெரியோர்கட்டளையை ஆராய்ச்சியில்லாமலேசெய்ய வேண்டு மென்பதும், தீயொழுக்கந்தீமையைத்தரு மென்பதும், செருக்குக் கொண்டவர்தாழ்மையடைவ ரென்பதும், ஒருவரை யேளனஞ்செய்வது தீமைக்குமூலமா மென்பதும், எந்நிலையிலும்கணவனைப்பிரியாதிருத்தலேகற் புடையமாதர்க்கு ஒழுக்க மென்பதும், தனக்குமுறையின்றிக்கிடைக்கும் மேன்மையும் பாராட்டற்கு உரியதன் றென்பதும், தான் மேற்கொண்ட நோன்பை எந்தக்காரணத்தினாலுங்கைவிடலாகா தென்பதும், தந்நலங்கரு தாது பிறர்குறைநீக்கமுயலுதலேபெரியோர்தன்மை யென்பதும், காமம் நலத்தைக் குலைக்கு மென்பதும், தீக்குணத்தோர்க்குப்பரிந்துஉதவுதல் விநாசத்தைத் தரு மென்பதும், எவரையும் ஆராயாது தெளியலாகா தென் பதும், ஒருவர்க்கு ஒருநன்மைசெய்தால் அது பின்பு தானே பயனைத்தரு மென்பதும், நன்னெறியிற்செல்வோர்க்கு விலங்கும் பணிசெய்யு மென்ப தும், அடைக்கலமடைந்தோர்க்கு ஆவனசெய்தல் அறிஞர்கட னென்ப தும், பிறர்மனைநயத்தல் பீழைதரு மென்பதும், எப்படிப்பட்டவரும் உல கப்பழிக்கு அஞ்சவேண்டுமென்பதும் முதலிய நீதிகளும் இந்த இராமாயண சரிதத்தில் வெளியாதலைக் காணலாம்.

இங்ஙனம் இராமாயணபுருஷர்கள் தம்முடைய ஒழுக்கத்தால் உல கோர்க்கு உணர்த்திய நீதிகள் அக்காலத்தார்க்குப்போலவே பிற்காலத் தார்க்கும் உதவவேண்டுமென்ற கருத்தால் பிதாமகக்கடவுள், நூறுகோடி யளவினதாக அந்த இராமசரிதத்தைச் செய்து நாரதாதிமுனிவர்க்குத் தேவலோகத்தி லுபதேசித்த மாத்திரத்தோடு நில்லாமல், அந்த நாரத முனிவனை இராமநாமத்தையே செபிப்பவனான வால்மீகிமுனிவனிடத்து

அனுப்பி அவ்விராமசரிதத்தை உபதேசித்துத் தானும் அம்முனிவனுக்குக் காட்சிதந்து இராமகதையையியற்றுமாறு கட்டளையுமிட்டான். நாரதமுனிவனால் உபதேசிக்கப்பெற்றுத் திசைமுகக்கடவுளால் இராமசரிதத்தில் ஒன்று விடாமல் எல்லாம் ஞானக்கண்ணுக்குப் புலனாவதோடு பிரபந்தத்தைச் செய்தற்குரிய ஆற்றலும் அருளப்பெற்ற அந்தவான்மீகிமுனிவன் வேதோபபிரம்மணமான இவ்விதிகாசத்தைக்*காந்தாசம்மிதமெனப்படுகிற காப்பியமாகச் செய்தனன்.

இங்ஙனந்தோன்றிய இவ்விராமாயணத்தின் சிறப்பையேனும் இதனையோதுவதாற் பெறத்தக்க பயனையேனும் ஆஸ்திகத்தன்மைகொண்ட சிறுவர்முதல் முதியோர்வரையிலு முள்ள யாவரும் நன்குணர்வ ராதலால் ஈண்டுக்கூறுவது மிகையேயாம்.

வடமொழியிற்செய்த அந்த இராமசரிதத்தைத் தமிழ்மக்களும் அறிந்து உய்வுபெறுமாறு விருப்பங்கொண்டு, 'கல்வியிற் பெரியர் கம்பர்', 'கவிச்சக்கரவர்த்தி', கம்பர்வீட்டுக் கட்டுத்தறியும் கவிசொல்லும்', "விருத்தமென்னுமொண்பாவி லுயர்கம்பன்" என்று பிரசித்திபெற்ற கம்பரென்னும் பெரும்புலவர் தமிழில் விருத்தப்பாக்களாற் பாடிவெளியிட்டார். (சங்ககாலத்தில் இராமாயணம் பாடப்பட்டிருப்பினும் பழையவுரைகளில் அந்நூலின் சிலசெய்யுள்கள் காணப்படுவதன்றி நூல்முழுதும் கிடைப்பதில்லை; கம்பர்காலத்துக்குமுந்தியே இறந்ததுபோலும்.)

---

* மாந்தர்க்கு உறுதிபயப்பனவாகிய நூல்களை வடமொழியாளர் பிரபுசம்மிதமென்றும், சுகிருத்சம்மிதமென்றும், காந்தாசம்மிதமென்றும் மூவகையாகப் பகுத்துள்ளனர்; அவற்றுள், வேதம்போல்வன - அரசன் கட்டளையிடுவதுபோல, "ஸத்யம் வத [உண்மையைச்சொல்]", "நபரதாராந் கச்சேத் [பிறர்மனை நயவாதே]" என்று கட்டளையிட்டு அக்கட்டளைக்கு உட்பட்டு நடப்பார்க்கு நன்மையும் நடவாதார்க்குத் தீமையும் விளைத்தலாற் ப்ரபுஸம்மிதமெனப்படும்; புராணங்கள்-முன்னையோரின்சரிதங்களைக் கூறுமிடத்து, இன்சொற்களால் நல்வழியிற்செலுத்தும் நண்பன்போல அவர்களின் நன்னடக்கையைப் புகழ்ந்தும் தீயொழுக்கங்களை இகழ்ந்துங் கூறி நல்வினைதீவினைகளில் விருப்புவெறுப்புகளைப் படிப்போர்க்கு உண்டாக்குவதால் ஸுஹ்ருத்ஸம்மித மெனப்படும். காப்பியமோ-'இதைச் செய், இதைச்செய்யாதே' என்று வாய்திறந்துசொல்லாமல், தன் கடைக்கண் குறிப்பினாலேயே காதலனைத் தனது விருப்புவெறுப்புகளிற் செலுத்துங் காதலிபோல, ராமராவணாதியரின்சரிதத்தைக் கூறுகையில் 'இராமாதியரைப் போல இருக்கவேண்டும்; இராவணாதியரைப்போல இருத்தலாகாது' என்பதைக் குறிப்புப்பொருளாலேயே கற்போரின்மனத்திற் பதியும்படி செய்வதனாற் காந்தாஸம்மித மெனப்படும்.

தன்னிகரில்லாத் தலைவனை யுடைத்தாய்ச் செகசிந்தாமணிபோற் செந்தமிழ்நடையிற்சிறந்து பெருங்காப்பியவிலக்கணம் முழுதும் நிரம்பப் பெற்ற இந்தக் கம்பர்செய்த இராமாயணமானது, பிற்காலத்துக்கவிஞர்க்கு இன்ன இன்னவற்றை இன்ன இன்னவாறு பாடவேண்டுமென்று உணர்தற் கேற்ற வழிகாட்டியாகவுள்ளது; அவ்வக்கதைப்போக்கிற்கு ஏற்ப மாறி மாறிவரும் விருத்தங்கள் அமைந்தது; இன்பம் வீரம் முதலிய சுவைகள் ஆங்காங்குத் திகழ்ந்து தோன்றுவது; கற்கக்கற்க இன்பம் பயப்பது; ஆழ்ந்து நோக்க நோக்கத் தொனிப்பொருள்கள் ஊற்றுப்போற் சுரக்குந் தன்மையது. இந்நூலில், * கதலீபாகம் திராட்சாபாகம் நாரிகேளபாகம் என்னும் மூவகைநடையும் அமைந்துள்ளன: இதுபற்றி, இந்நூலைக் கூறுமிடத்துக் கற்றறிந்தபெரியோர் 'நெல் நாலாயிரம், புல் நாலாயிரம், கல் நாலாயிரம்' எனக் கூறுவர். இந்நூலில் திரிபு மடக்கு முதலிய சொல் லணிகளும், உவமை உருவகம் தற்குறிப்பேற்றம் உயர்வுநவிற்சி வேற்றுப் பொருள்வைப்பு தொடர்நிலைச்செய்யுட்குறி முதலிய சொல்லணிகளும் நிறைந்துகிடப்பதை ஆங்காங்குக் காணலாம்.

வான்மீகிமுனிவர் கூறியதைத் தாம் இயற்றும் நூலுக்கு ஆதாரமாகக் கொண்டாராயினும், இந்நூலாசிரியர், தமிழ்க்காப்பியவிலக்கணத்துக்கும் தமது மனோபாவத்துக்கும் ஏற்ப வருணனைப்பகுதியி லன்றிக் கதைப் பகுதியிலும் முதனூலோடு மிக்கமுரண்பாடு இல்லாமல் புதுமைபெறக் கூறு தலையும், மிதிலைக்காட்சிப்படலம் வரைக்காட்சிப்படலம் பூக்கொய்படலம் புனல்விளையாட்டுப்படலம் முதலிய படலங்களிற் காணலாம். இங்ஙனம் இந்நூலாசிரியர் புதுமைபெற அமைத்துக் கூறுவதுபற்றியே, இந்நூல் 'கம்ப நாடகம்' எனவும் படுகின்றது.

இந்நூலாசிரியர் இராமகதையைக் கூறுவதற்கும் வான்மீகிமுனிவர் கூறுவதற்கும் வேறுபாடு மிகவுள்ளது. அவ்வேறுபாடுகளை உரையிற்

---

* நெல்லென்பது-கதலீபாகத்தையும், புல்லென்பது-திராட்சாபாகத்தையும், கல்லென்பது-நாரிகேளபாகத்தையும் குறிக்கும். கதலீபாகமாவது-வாழைப்பழம் தோலையுரித்துச் சுவைக்கப் பின்பு சுவைதருவதுபோலச் செய்யுளைப் படிப்போர்க்குச் சிறிது ஆராய்ச்சியிற் சுவைதருவது. திராட்சாபாகமாவது - திராட்சைப்பழம் சுவைத்த மாத்திரத்தில் உள்ளும்புறம்புஞ் சுவைமயமாக விளங்குவதுபோலச் செய்யுளைப் படிக்கும்போதே படிப்போர்க்குச் சுவை ததும்பித் தோன்றுவது. நாரிகேளபாகமாவது-தெங்கம்பழம் உள்ளிடத்திருப்பதை வருந்திப்பெற்றுச் சுவைக்கச் சுவைதருவது போலச் செய்யுளை யாழ்ந்துநோக்கிப்படித்தோர்க்குப் பின்பு சுவைதருவது. கம்ப சூத்திரமென்றும், கம்ப விசித்திரமென்றுங் கூறப்படுவன, நாரிகேளபாகமான செய்யுள்களே.

காண்க. அன்றியும், கதைப்போக்கினால் 'ஸ்ரீராமன் திருமாலின்திருவவதாரம்' என்பது பெறப்படினும், வான்மீகிமுனிவர் இராமபிரானது சரிதத்தைக் கூறுமிடத்து ஓர்உத்தமபுருடனது வரலாற்றைக் கூறுவதுபோற் கூறி, இராமன் பரம்பொருளென்பதைத் தொனிப்பொருளாற் பெறவைப்பர்; கம்பரோ இராமபிரான் பரம்பொருளென்பதை வெளிப்படையாகக் கூறும் நோக்கத்தினைக் கொண்டவராய் 'திருமால் மாயாமானுடவேடம் பூண்டதற்கு ஏற்றபடி நடிக்கின்றான்' என்ற பொருள்பட வுரைப்பர்.

இந்தக் கம்பராமாயணத்தை யான் படிக்கத்தொடங்கிய காலந்தொட்டு அவ்வப்போது கிடைத்த பிரதிகளைக்கொண்டு மூலபாடத்தைத் திருத்தி வைத்திருந்தது தவிர, பின்னும் மூலபாடம்சீர்திருத்தம்பெறவேணுமென்று நாடியபோது, சேதுசமஸ்தான மகாவித்துவான் ஸ்ரீ. உ. வே. ரா. ராகவய்யங்கார் ஸ்வாமிகள் 'கம்பராமாயண ஏடுகளுக்குள் இது மிகவும் சிறந்தது' என்று பாலகாண்டஏட்டுப்பிரதியொன்றை அடியேனுக்கு அன்போடு உதவினார்கள்; அதுகொண்டு இக்காண்டம் முழுவதையும் மிகக் கருத்தோடு ஒப்பிட்டுப்பார்த்துக் குறித்துள்ளேன். இந்த ஸ்வாமி காலத்தினாற்செய்த மாறில்லாத இவ்வுதவிக்குத் தலையல்லாற் கைம்மாறிலேன். இன்னும் பலபிரதிகள்கொண்டு சோதித்தாற் சிறந்த பாடங்கள் கிடைக்குமாயினும், அவ்வாறு செய்தற்கு ஏற்ற துணைக்கருவிகள் அடியேனிடத்து இல்லாமையால், அங்ஙனஞ்செய்ய இயலவில்லை.

சொற்செறிவும்பொருட்பொலிவும்பெற்றுத் திகழுங்காப்பியவரதனமாகிய இந்தக் கம்பராமாயணத்திற்கு உரைகாண்பது நிரம்பிய கல்வியும் கூர்த்தறிவும் நுண்ணுணர்வும் உடையார்க்கு அன்றி அற்பக்கல்வியும் சிற்றறிவுமுடைய என்போலியர்க்கு இயலாதாயினும், இந்நூலினிடமுள்ள விருப்பத்தால் அடியேன் இராமபிரானது திருவருளை முன்னிட்டு இப்பெருந்தொழிலில் தலையிடலானேன். எனக்குத் தமிழாசிரியரும் தமையன் முறையானவரும் உரையெழுதுவதில் மிக்க சீர்த்திபெற்றவரும் கும்பகோணம் கவர்ன்மெண்ட்காலேஜில் தமிழ்ப்பண்டிதராக விளங்கி எம்மனோரது தீப்பேற்றால் இளம்பிராயத்திற்றானே பரமபதித்தவருமான ஸ்ரீ உ. வே. வை. மு. சடகோபராமாநுஜாசார்ய ஸ்வாமிகள் பாலகாண்டத்திற் பலபடலங்கட்கு எழுதி வெளியிட்டிருந்த உரை, இங்ஙனம் யான் பாலகாண்டம் முழுவதற்கும் உரையெழுதி வெளியிடுவதற்குப் பெருந்துணையாய் நின்றது.

இந்தப்பதிப்பில், சீர்பிரித்த செய்யுளும் பதவுரையும் என்பவற்றோடு, பாடலிற்கூறியுள்ள விடயம் விளங்குமாறு எல்லாச்செய்யுட்குந் தலைப்பும், கருத்து பதசாரம் தொனிப்பொருள் மற்றுங்கூறற்குஉரியஉரைகள் இலக்கணக்குறிப்புக்கள் அணிகள் ஒத்தபகுதிமேற்கோள்கள் புராணகதை

கள் முதனூலுக்கும் இந்நூலுக்குமுள்ள வேறுபாடுகள் பிரதிபேதங்கள் என்பனவும் காட்டப்பட்டுள்ளன. பள்ளியிற் படிக்கும் மாணவகர்க்கு விலக்குதற்குஉரிய பாடல்கள் தலையில் உடுக்குறியிடப்பெற்றுள்ளன. அன்றியும், அரும்பதவகராதிமுதலியனவும் செய்யுண்முதற்குறிப்பகராதியுஞ் சேர்க்கப்பட்டுள்ளன.

யான் இவ்வுரை எழுதும்போது ஒப்புநோக்குதல் முதலியவற்றிற்கு உதவியாயிருந்தவர், இராயப்பேட்டை வெஸ்லியன்மிஷன்காலேஜ் தமிழ்ப் பண்டிதராயிருக்கும் ஸ்ரீமான் அ. க. ரங்கசாமியையங்கா ரென்பவர்.

இந்த உரையிற் சிறப்புக்கள் காணப்படின் அவை எனது ஆசிரியர் முதலியோருடையன வென்றும், குற்றங்காணப்படின் அவை என்னுடையவை யென்றுங் கருதுக. என்னுடைய திரிபுணர்வு சோர்வு அறியாமை முதலியவற்றால் இவ்வுரையிற் காணக்கூடிய குற்றங் குறைகளை விவேகிகள் பொறுத்து அடியேனுக்கு அறிவுறுத்துவராயின், அவர்களிடத்து நன்றிபாராட்டுதலோடுஅவற்றையேற்று, இனி எழுதுமாறு கருதியிருக்கும் பகுதிகளில் அவ்வகைக்குற்றங்கள் நேராவண்ணம் இயன்ற வரைமுயல்வதோடு அமையம் வாய்க்கும்போது இந்தப்பகுதியைத் திருத்தி அச்சிடவும் கருதியுள்ளேன்.

கம்பராமாயணத்துக்கு உரையெழுதுமாறு சிற்றறிவுடைய சிறியேனுக்கு விருப்பையுண்டாக்கி இந்தப் பாலகாண்ட வுரையை முற்றுமாறு தோன்றாத்துணையாய் நின்று திருவருள்புரிந்த ஸ்ரீராமபிரானது திருவடித் தாமரைகளை யென்றும் கருத்திற்கொண்டு வழுத்துவேன்.

"குற்றங்களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்."

இங்ஙனம்
வை. மு. கோபாலக்ருஷ்ணன்.

## நூலாசிரியர் வரலாறு.*

கம்பர் சோழநாட்டிலே திருவழுந்தூரிற் பிறந்தவர். இதனை "பெற்று வளர்த்தும்" என்று தொடங்குஞ் சோழமண்டலசதகச் செய்யுளில் "திருவழுந்தூர்க்கம்பன் றழையக் கருணைசெய்தோர், மற்றும் புலவோரையும் வாழவைத்தார் சோழமண்டலமே" என்று கூறுவதாலும், "கம்பன் பிறந்த வூர்...வாழு மழுந்தூர்" என்ற தமிழ்நாவலர்சரிதையாலும் உணரலாம். இவர் உவச்சச் சாதியினர்: இது "நாரணன் விளையாட்டெல்லாம்" என்று தொடங்கும் பாடலின் மூன்றாமடியில் "சீரணி சோழநாட்டுத்திருவழுந் தூருவச்சன்" என்று காணப்படும் பாடத்தினாலும், "கைம்மணிச் சீரன்றிச் சீறியாக் கம்பநாடன்" என்ற தமிழ்நாவலர்சரிதைப் பாடலாலும் விளங்கும். இவரது தந்தையின் பெயர், ஆதித்தனென்பது, "ஆவின் கொடைச் † சகரராயிரத்து நூறொழித்துத், தேவன் திருவழுந்தூர் நன்னாட்டு - மூவலூர்ச், சீரார் குணாதித்தன் சேயமையப் பாடினான், காரார் காகுத்தன் கதை;" "தாரதலத்தினுள்ள தமிழ்க் குற்றமெல்லா, மராவுமரமாயிற்றன் றே - யிராவணன்மே, லம்புநாட் டாழ்வா னடிபணியு $ மாதித்தன், ‡ கம்பநாட்டாழ்வான்கவி," "ஆதவன்புதல்வன் முத்தியறிவினை யளிக்கு மண்ணல், போதவனிராமகாதை புகன்றருள் புனிதன் மண்மேற், கோதவஞ் சிறிதுமில்லான் கொண்டன்மா றன்னை யொப்பான், மாதவன் கம்பன் செம்பொன் மலரடி தொழுதுவாழ்வாம்," "இம்பரு மும்பர்தாமு மேத்திய விராமகாதை, தம்பமாமுத்திசேர்தல் சத்தியஞ் சத்தியம்மே, யம்பரந் தன்னின்மேவு மாதித்தன் புதல்வன் ஞானக், கம்பன் செங்கமலப் பாதங் கருத்துற விருத்துவாமே" என்று ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுவனவாக வழங்குஞ் செய்யுள்களாற் பெறப்படும்.

---

* இவர் வரலாற்றைப் பலர் பலவாறு கூறுவராயினும், பழையநூல்களை ஆதாரமாகக் கொண்டு இராமாயணத்துக்குச் சம்பந்தப்பட்ட மட்டுமே இவர் வரலாறு, மிக்க சுருக்கமாக இங்குக் குறிக்கப்படுகிறது. இதிற் கூறப்படும் விஷயங்களிற் பெரும்பாலன, சேது சம்ஸ்தான மகா வித்வான் ஸ்ரீ. உ. வே. ரா. ராகவையங்கார்ஸ்வாமி செந்தமிழில் வெளியிட்டன.

† சகரரென்பது - சகவருஷத்தை.

$ ஆதித்தன்புதல்வனாகிய கம்பநாட்டாழ்வா னென்க.

‡ கம்ப நாடாள்வானென்று பிரதிபேதம்.

இவர்க்குக் * கம்பரென்பது பெற்றோரா லிடப்பட்ட பெயரென்பது, ஒரு சாரார் கொள்கை; மற்றொரு சாரார் "கம்பநாடுடையவள்ளல்," "கம்ப நாடன்" என்றபடி கம்பநாடு என்று பெயர்பெற்ற நாட்டை உடையவ ராதல் பற்றி இவர்க்கு இப்பெயர் வந்ததென்ப. புலவர்புராணமுடையார், கம்பத்தினடியிற் கிடந்த இப்பிள்ளையை உவச்சனொருத்தன் கண்டெடுத் ததனால் இவர்க்கு இப்பெயர் வந்த தென்பர்.

இவர் இளமையில் தந்தை இறந்ததனால், போஷகரில்லாமல் திருவெண்ணெய்நல்லூரிற் சடையப்பவள்ளலிடம் போய்ச் சேர்ந்து, அவரால் ஆதரிக்கப் பெற்றுக் கல்வியிற் சிறந்தவ ராயினர்; இதனை "பெற்று வளர்த்தும் வித்தைதனைப் பேணிக் கொடுத்தும் பெயர் கொடுத் தும், பற்றவரும் பாலமுதளித்தும் பகைத்த வறுமைப் பயந்தீர்த்துங், கற்ற முதனூற் றிருவழுந்தூர்க் கம்பன் றழையக் கருணை செய்தோர், மற்றும் புலவோரையும் வாழ வைத்தார் சோழமண்டலமே" என்ற செய்யுளால் அறியலாம்.

---

* இனி, ஒருசாரார் கம்பரென்னும் பெயர்க்குக் காரணங் கூறுமாறு:- இவர் சிறு பிள்ளையாய் இருந்தபோது இவரதுஉபாத்தியாயர் வைரபுர மென்னுங் கிராமத்திலுள்ள தமது தினைக்கொல்லையைக் காப்பதற்காக ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மாணாக்கனை அனுப்புகின்ற வழக்கப்படியே இவரை ஒரு நாள் அனுப்ப, இவர் நல்ல வெயிலில் அங்கு அருகிலிருந்த காளிகோயிலிற் படுத்து உறங்கிவிட, அப்போது அக்கொல்லையில் அவ் வூராள்வோனான காளிங்கராயனது குதிரை மேய, கண்விழித்ததும் அதுகண்ட இவர் அஞ்சி நடுங்கிப் புலம்ப, அதுகண்டு இவர்விஷயத்திற் பிரசன்னையான காளிகாதேவி இவரது நாவிற் பீஜாக்ஷரத்தை யெழுதி அநுக்கிரகித்துச் செல்ல, உடனே இவர்நாவிலிருந்து "வாய்த்த வயிர புர மாகாளியம்மே கேள், காய்த்த தினைப்புனத்துக் காலைவைத்துச்— சாய்த்துக், கதிரை மாளத்தின்ற காளிங்கராயன், குதிரை மாளக்கொண்டு போ" என்று ஒருபாட லுண்டாக, உடனே அது இறக்கவே, அதனை யுணர்ந்த உபாத்தியாயர் பெருங்கலக்கமடைந்தது கண்டு இவர் அப் பாடலை 'குதிரைமீளக் கொண்டுவா' என்று திருப்பிப் பாடின மாத்திரத் தில் அது பிழைத்தெழுந்ததாக, இதனை அக்காலத்துச் சோழராசன் அறிந்து இவரைக் காண விரும்பினான்; அப்போது இவர் கம்புங் கையு மாய் அரசன் முன் நிற்க, அரசன் 'இக்கம்பனா இவ்வாறு செய்தான்?' என்று வினாவினானென்றும், அதனால்தான் இவர்க்குக் கம்பன் என்ற பெயர் வந்த தென்றுங் கூறுவர்: ஆயினும், தமிழ்நாவலர்சரிதையில் "வாய்த்தவயிரபுரமாகாளியம்மேகேள்" என்ற பாடல் பொய்யாமொழிப் புலவர் பாடியது என்று எழுதியிருத்தலால், அதற்கு மாறாக அவ்வா லாற்றை இவர்மீது ஏற்றுதல் ஆதாரமற்றதாம்.

**கம்பர் இராமாயணம் பாடிய காரணம்:**—ஸ்ரீவால்மீகிமுனிவர் வடமொழியிற் செய்துள்ள ராமாயணம் அக்காலத்தில் அறிவுடையோர் பலராலும் மதித்துப் பாராட்டப்படுவது கண்ட கம்பர் அவ்வாறான சரிதை நம் தமிழ்மொழியிலும் வேண்டுமென்று எழுந்த பேரவாவினாலேயேயாம்; இதனை, "ஆசைபற்றி யறைய லுற்றேன் மற்றிவ், வேசில்கொற்றத் திராமன்கதையரோ," "ஆங்கவன் புகழ்ந்தநாட்டை யன்பெனுநறவமாந்தி, மூங்கையான் பேசலுற்றானென்ன யான் மொழியலுற்றேன்" என்றபாயிரச்செய்யுட்களால் அறியலாம். இவர் தாம் பாடிய ராமாயணத்துக்கு 'இராமாவதாரம்' என்று பெயரிட்டா ரென்பதை "நடையினின்றுயர் நாயகன் தோற்றத்தி, னிடை நிகழ்ந்த விராமாவதாரப் பேர்த், தொடைநிரம்பிய தோமறுமாக்கதை," "இத்தலத்துமிராமாவதாரமே,பத்திசெய்துபரிவுடன் கேட்பவர், புத்திமிக்க அரும்புண்ணியமுந்தரு, மெத்தலத்து மவனடியெய்துவார்" என்பவற்றால் அறியலாம். இவர் இந்நூலைப் பெரும்பாலும் திருவெண்ணெய்நல்லூரிலும் சிறுபான்மை திருவொற்றியூரிலும் பாடினாரென்பதும், இரவெல்லாம் வடமொழிப்புலவர்களைக்கொண்டு அம்மொழியில் இராமபிரான் விஷயமாகக் கூறிய சரிதத்தை யாராய்ந்து பகற்பொழுதில் *ஒருநாளைக்கு எழுநூறுபாடல்வீதம் பாடினாரென்பதும், ஒற்றியூரில் பாடியபோது இரவிலே மாணாக்கர் இவர்பாடுகின்ற இராமாயணத்தைப் பிந்தாமலெழுதுவதற்கு அவ்வூர்க்காளியைத் தீப்பந்தம்பிடிக்கப்பாடினரென்பதும், "தொடைநிரம்பிய தோமறுமாக்கதை, சடையன் வெண்ணெய் நல்லூர்வயிற் றந்ததே" என்ற பாயிரத்தாலும், "கவிநாதன், விழுந்த நாயிறெழுவதன்முன் மறைவேதியருடனாராய்ந், தெழுந்தநாயிறு விழுவதன்முன் கவிபாடிய தெழுநூறே" என்ற கம்பர் தனியனாலும், "ஒற்றியூர்காக்க வுறைகின்ற காளியே, வெற்றியூர்காகுத்தன் மெய்ச்சரிதை - பற்றியே, நந்தாதெழுதுதற்கு நல்லிரவின் மாணாக்கர், பிந்தாமற் பந்தம்பிடி" என்ற தமிழ்நாவலர்சரிதைப்பாடலாலும் தெளியப்படும். இவர் பாடியது பாலகாண்டம் முதல் யுத்தகாண்டம் ஈறாகவுள்ள ஆறுகாண்டங்களே யென்பது, "பூணிலாவுங் கம்ப னலம்பொலியுந்தமிழாற் புகழெய்தக், காணுமாறுகாண்டமுறுங்கதையிற் பெரியகதையென்னுந், தாணிலாவுங் கழலபயன்சபையிற்பயி லுத்தரகாண்டம், † வாணிதாதனரங்கேற்றவைத்

* ஒருநாள்என்பது - தேவமானத்தாற்கூறிய தாகையால், முந்நூற்றறுபத்தைந்துநாள்கொண்ட ஒருவருஷகாலத்தையா மென்பது ஒருசாரார் கொள்கை.

† 'கம்பரோடு மாறுபாடுகொண்ட வாணியன்தாதனையே இங்கு வாணிதாதனென்றது' என ஒருசாராரும், 'ஒட்டக்கூத்தர் சரசுவதி தம்பலங்கொடுக்க அதனால் கவித்திறமை அடைந்தவ ராதலால், அவரையே வாணிதாதனென்றது' என மற்றொருசாராரும் கூறுகின்றனர்.

தார் சோழமண்டலமே' என்னுஞ் சோழமண்டலசதகத்தாலும், "பொற்று மறை மாறெழியாதுபொலியுமார்ப, வெற்றூங்கு மேனிரகுராமசரிதையா வுங், கற்றூர்கலியிற்பெரிதாந்தமிழ்க்கம்பநாட, னூற்றூங்குரைத்தானுரையா தனவோதுகிற்பாம்" என்னும் இரகுவம்சத்தாலுந் தெளியப்படும். ஆகவே, "கதைபொருகாண்டமேழும்" என்று தொடங்குவதான செய்யுளில் ஏழுகாண்டங்களையும் கம்பர் இயற்றினரெனக்கூறுவது, உண்மையறியாத பிற்காலத்தோரொருவர் கூற்றென்னவேண்டும்.

கம்பரியற்றிய இவ்விராமாயணத்தில் கம்பர்பாடியபாடல் சில விடப் பட்டும் பிறர்பாடியன சில இடையிடையே சேர்க்கப்பட்டும் உள்ளனவென் பது, பலஏட்டுப்பிரதிகளை வைத்துக்கொண்டு ஒப்பிட்டுப்பார்ப்போர்க்கு எளிதில் விளங்கும். பிற்காலத்து வெள்ளியம்பலத்தம்பிரானென்பாரொரு வர் இவ்விராமாயணத்தில் தம் செய்யுட்கள் சிலவற்றை இடைமடுத்துப் போயினரெனவும் அவை வெள்ளிபாடலென்னும் பெயரான் வழங்கு மென்றுங் கூறுவர்.

**கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றியது:**—தாம் இராமபிரானிடத்து அன்பின் மிகுதியால் கம்பர் இந்நூலைச் செய்தனராதலால், இந்நூலை அரச சபையில் அரங்கேற்ற விருப்பங்கொள்ளாமல் படிகொண்ட கீர்த்தி யிரா மாயணமென்னும் பத்திவெள்ளம் குடிகொண்ட நெஞ்சத்தவர்பலர் நெருங்கியுள்ள ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றுமாறு கருதி அங்குச்சென்று ஆங்குள்ள பெருநாவலர்கட்குத் தாம் இயற்றிய நூலைப் படித்துக் காட்ட, அவர்கள் இவர்க்கு ஆழ்வார்சம்பந்தமில்லாமைபற்றி இவரிடத்துப் பல குற்றங் கண்டனர். இவ்விஷயம் "பாவைத் திருவாய்மொழிப்பழத்தைப் பசுங்கற்பகத்தின், பூவைப் பொருகடற்போதாவமுதைப் பொருள் சுரக் குங், கோவைப் பணித்த வெங்கோவை யல்லா வென்னைக் குற்றங் கண்டேன், ஞவைப்பறிப்பினு நல்லோரன்றே மற்றைநாவலரே" என்ற சடகோபரந்தாதிச்செய்யுளா லுகிக்கப்படும். பிறகு பிரணவாகார விமானத் தில் அராவணையில் அறிதுயில்கொள்ளும் அமலனுன ஸ்ரீரங்கநாதனை இந்த க்கம்பர் சேவித்துநிற்க, அப்பெருமான் இவரைத் தன்னடியாருக்கு ஆட் படுத்தக் கருதி அர்ச்சகமுகமாக ஆவிர்ப்பவித்து 'நம்சடகோபனைப் பாடி னையோ? பாடினால் தான் நாம் நீ பாடிய ராமாயணத்தைத் திருவுள்ளம் பற்றுவோம்; இல்லாவிடில் நமக்கு அங்கீகாரமாகாது' என்று அருளிச் செய்ய, இவர் ஆழ்வாரது கருணைக்கு இலக்காகி நம்மாழ்வார்விஷயமாகச் சடகோபாந்தாதி யென்ற நூறுகட்டளைக்கலித்துறையுள்ள நூலைப் பாடி னர். இவ்விஷயம் "நஞ்சடகோபனைப் பாடினையோவென்று நம்பெரு மாள், விஞ்சியவாதரத்தாற் கேட்பக் கம்பன் விரித்துரைத்த, செஞ்சொலந் தாதிக்கலித்துறை நூறும்" என்ற சடகோபரந்தாதியின்பாயிரத்தா லறிய

லாகும்; பின்பு இராமாயணம் திருவரங்கத்திலுள்ள பெரியோர் கூடிய சபையில் மேட்டழகியசிங்கர் சிரக்கம்பஞ்செய்யுமாறு அரங்கேற்றப்பட்டதென்ப.

கம்பர் காலம் :—ஒருசாரார் இராமாயணத்தை அரங்கேற்றியதைத் தெரிவிக்கின்ற

"எண்ணியசகாத்தமெண்ணூற்றேழின்மேற் சடையன் வாழ்வு
கண்ணியவெண்ணெய்நல்லூர்தன்னிலேகம்பநாடன்
பண்ணியவிராமகாதை *பங்குனியுத்தரத்திற்
கண்ணியவரங்கர்முன்னே கவியரங்கேற்றினானே"

என்ற பாடலில் "எண்ணூற்றேழின்மேற் சடையன்வாழ்வு" என்று கூறிய சாலிவாகனசகாப்தம் 807 - என்பது கி. பி, 885-வது வருஷம் ஆதலால், கம்பர்காலம் ஒன்பதாம் நூற்றாண்டென்று திண்ணமாக ஏற்படுமென்பர். மற்றொருசாரார் கலிங்கத்துப்பரணிக்குக் கதாநாயகனாகிய முதற்குலோத்துங்கசோழனது பேரனும் அகளங்கனென்று ஒருபேரையுடைய விக்கிரம சோழனுக்குமகனுமான இரண்டாவதுகுலோத்துங்கனையும், அவனது மகனான இராசராசசோழனையும் "புவிபுகழ் சென்னிபேரமலன் றோள் புகழ், கவிகடம் மனையென"; "சென்னிநாட்டெரியல்வீரன் ** பொன்னி நாடு" என்று 'சென்னி, வீரன்' என்றசொற்களால் தமது நூலிற் கம்பர் குறித்திருத்தலாலும், "சென்னி திருமகன் சீராசராசன்" எனவும் "நெடுஞ் சிலையை நாணெறிந்த வீரதார வீரோதயா" எனவும் ஒட்டக்கூத்தர் தாம் பாடிய உலாவில் முறையே இரண்டாவது குலோத்துங்கனையும் அவன் மகனான இராசராசனையும் 'சென்னி, வீரன்' என்று கூறியிருத்தலாலும், தாம் அரசரையும் குற்றேவல்கொள்ளும் வல்லமையுடையவரென்பதைக் கம்பர் சோழனுக்குக் காட்டுமாறு ஓரங்கல் அதிபதியர்க் காகதீயகணபதியரசருள் ஒருவனாகிய பிரதாபருத்திரனைத் தமக்கு அடைப்பைகட்டிவரப் பாடியதாகத் தமிழ்நாவலர்சரிதையில் வருதலாலும், முறையே இரண்டா

* "திண்மையேறுங் கம்பனிடஞ் செய்யத் தகும்பல் சிறப்பயர்ந்து, நண்மையேறு மிராமகதை நற்பேர் புவியிற் றழைத்தேற, வுண்மையேறுந் திருவரங்கத் தொருவன் சபையி லுத்தரநாள், வண்மையேற வரங்கேற்றி வைத்தார் சோழமண்டலமே" என்று சோழமண்டலசதகத்திற் கூறி, அதற்கு மேற்கோளாக "பண்ணிய விராமகாதை பங்குனி யுத்தரத்திற், கண்ணியவரங்கர்முன்னே கவியரங்கேற்றினானே" என்று எடுத்திருத்தலாலும், அந்தப் பங்குனியுத்தரமே ஸ்ரீரங்கத்தில் பெரிய திருவிழா நாளாகி அறிஞர்பலரும் திரளுதற்கு ஏற்ற நாளாதலாலும், இராமபிரானது திருக்கலியாண தினமாகிச் சிறந்தநாளாதலாலும், "பங்குனியத்த நாளில்" என்ற பாடம் ஏற்றுக்கொள்ளத் தக்கதாகத் தோன்றவில்லை.

வது குலோத்துங்கன் கி. பி. 1132 முதல் 1162 - வரைக்கும் அதற்குமேல் அவனது மகனுன இராசராசன் கி.பி. 1200-வருஷங்கட்குமேல் சிலவருஷங் கள் வரைக்கும் அர்சாண்டனரெனவும் ஓரங்கற்பிரதாபருத்திரன் கி. பி. 1162 - க்குச் சிறிதுமுற்காலந் தொடங்கி, கி. பி, 1197 - க்குச் சிறிது பின் வரையில் அரசாட்சிபுரிந்தனனெனவும் சிலாசாஸநங்களால் ஏற்படுவதா லும், கம்பர்காலம் பன்னிரண்டாவது நூற்றாண்டின் பிற்பகுதியென ஏற் படுகின்றதென்பர். கம்பர்காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டென்றுகொ ண்டால்''எண்ணிய சகாத்தம்'' என்றுவழங்குஞ்செய்யுளோடுமாறுபடுகின்ற தேயெனின்?—காலத்தால்முற்பட்டதாக ஒருநூலைக்கூறின் அது நூலுக் குச்சிறப்பாகுமென்ற கருத்துக்கொண்ட ஒருவரால் இச்செய்யுள் அமைக் கப்பட்டதென்றாவது, முன்வழங்கிய வேறுவகைப்பாடம் இங்ஙனம் மாற்றி வழங்கப்பட்டதென்றாவது கொள்ளவேண்டும்; அன்றி அச்செய்யுளில் 'எண்ணூற்றேழு' என்ற தொடர் எண்ணைக் குறிப்பதாகக் கொள் ளாமல், எண்-மதித்துச்சொல்லப்படுகிற, நூற்றேழு என்றுகொண்டு, பெருந்தொகையான ஆயிரம் என்பதைச் சொல்லாதுவிட்டு அதற்கு மேற் பட்டதான நூற்றேழு என்பதையே கூறியதாகவைத்து, ஆயிரத்து நூற் றேழாவது வருஷம் அதாவது கி. பி. 1185 - என்று பொருள்கொண்டால் ஒருவகை மாறுபாடுமின்றி எல்லாம் பொருந்து மென்பர். இனி, ''எண் ணியசகாத்தமுன்னூற்றேழின்மேல்'' என்று காணப்படும் பாடமும் இங் ஙனம் பொருள்படும். இந்தக்கம்பராமாயணம் வைஷ்ணவஆசார்யர் களாகிய பெரியவாச்சான்பிள்ளையாலும் நம்பிள்ளையின் உபந்யாசத்தைப் பட்டோலைகொண்டருளிய வடக்குத்திருவீதிப்பிள்ளையாலும் ஆதரிக்கப் பெற்று நாலாயிரதிவ்யப்ரபந்தவ்யாக்யானங்களில் மேற்கோளர்கக் காட் டப்பட்டிருத்தலால், பதின்மூன்றாநூற்றாண்டில் மிகவும் பிரசாரம் பெற்று விட்டதென்பது தெற்றென விளங்கும்.

மதம் :—இவர் பிறப்பினால் எந்தக்கோள்கையினராயிருந்திருப்பினும், இவ்விராமாயணத்தைப்பாடத்தொடங்கும்முன்னரே திருமண்காப்புத்தரிக் கும் வைஷ்ணவராகிவிட்டன ரென்பது, திண்ணம். ஏனெனின்?—ஸ்ரீவான் மீகிமுனிவர் இராமன் முதலியோரைப்பற்றி வருணித்துக் கூறுமிடத்து எங்கும் நெற்றியில் இன்னவாறு தரித்திருந்தா ரென்று ஒன்றும் கூறாதிருக் கையில், ''என்று நான்முகன்முதல்யாரும் யாவையும், நின்றபேரிருளினை நீக்கி நீணெறி, சென்று மீளாக்குறிசேரச் சேர்த்திடு, தன்றிரு நாமத்தைத் தானுஞ் சாத்தியே'' என்று பாலகாண்டத்துக் கடிமணப்படலத்தும், ''அய்யனுமமைந்து நின்றூ னூழியானளவினும, நெய்சுடர்விளக்கிற்றேன்று நெற்றியே நெற்றியாக, மொய்ம்மயிர்ச்சேனைபொங்க முரணயிலுகிர்வாண் மொய்த்த, கைகளே கைகளாகக் கடைக்கூழை திருவாலாக'' என்று சுந்தர காண்டத்துச் சம்புமாலிவதைப்படலத்தும் கூறுமாறு காண்க.

இவர் தாம் பாடிய இராமாயணத்தில் தம்மை ஆதரித்த பிரபுவாகிய சடையப்பவள்ளலை நன்றியறிவுகாரணமாக ஒருபத்துக்கவிகளிற் பாராட்டிக்கூறியுள்ளார்; இவ்விஷயம், சோழமண்டலசதகத்திலும் "சயராம கதையிலோருபான் கவிமுழுதும், வெண்ணெய்ச்சடையன் சடையனென விறலார் கம்பன் விளங்க வைத்த, வண்ணத்துறைவேளாண் பெருமான்" என்று குறிக்கப்பட்டுள்ளது.

இவர்க்கு அம்பிகாபதியென்று ஒருமகன் பிறந்து அவனும் சிறந்த வித்துவானாகி இவரோடு ராஜசபைக்கு நாடோறும் போய்ப் பெருமை பெற்று வந்தனனென்பர்.

இவர்செய்த நூல்கள் - இராமாயணம், சடகோபரந்தாதி, ஏரெழுபது, சிலையெழுபது, திருக்கைவழக்கம், சரசுவதியந்தாதி முதலியன.

இவர்காலத்து வித்துவான்கள்-புகழேந்திப் புலவர், ஒட்டக்கூத்தர், ஔவை முதலியோர் என்பர்.

இவர் சரித்திரவிவரத்தைத் தொண்டைமண்டலசதகம், தமிழ்நாவலர்சரிதை பாண்டிமண்டல சதகம், சோழமண்டல சதகம் முதலிய நூல்களிற் காணலாம்.

"வெண்பாவிற்புகழேந்திபரணிக்கோர்சயங்கொண்டான் விருத்தமென்னு
மொண்பாவிலுயர்கம்பன் கோவையுலாவந்தாதிக் கொட்டக்கூத்தன்
கண்பாயகலம்பகத்திற்கிரட்டையர்கள் வசைபாடக்காளமேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா லொருவர் பகரொணாதே"

என்பதனால், இவர் விருத்தம்பாடுதலில் மிகச்சிறந்தவரென்பது விளங்கும்.

---

# சோதன பத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 8 | 39 | திழ | திரு |
| 11 | 6 | யமே | யே |
| ,, | 26 | உடை | உள |
| 15 | 12 | ன்ஞே | ல்வோ |
| 34 | 10 | நான்கு | ஐந்து |
| ,, | 16 | வாசன | வாசனை |
| 48 | 7 | சார்ந்து | சாந்து |
| 49 | 30 | யியில் | யயில் |
| 59 | 12 | ௬௧ | ௨௧ |
| 75 | 19 | க்கும் | க்குறும் |
| 80 | 33 | எவ்வ | எங்ங |
| 104 | 24 | களை | களின் |
| 109 | 31 | ணிந்த | யணிந்த |
| 112 | 36 | விசி | வள் விசி |
| 115 | 36 | மளிரது | மகளிரது |
| 117 | 12 | மிரண்டு | ம், கை, ௦ |
| ,, | 13 | ஒன்றுஆக | என |
| 159 | 8 | குனி | குணி |
| ,, | 32 | மொழி | மகிழ் |
| 169 | 35 | சொல்ல | செல்ல |
| 197 | 5 | யன்த | யன் |
| 209 | 2 | சாத்தி | சாற்றி |
| 213 | 19 | நொ | ஒரு நொ |
| 226 | 19 | ங்ளை | ங்களை |
| 233 | 28 | கொள்ளா | கொள்ள |
| 247 | 21 | போரரா | பேரா |
| 274 | 21 | ஹஸ | ஹாஸ |
| 280 | 7 | மரி | மாரி |
| 293 | 17 | புரத்தி | புத்தி |
| 295 | 26 | சித்த | சித்தா |
| 314 | 4 | ராக | யராக |
| 337 | 17 | குஞ் | குங் |
| 349 | 12 | வினை | தொழில் வினை |
| 357 | 9 | ஆயுத | அயுத |
| 399 | 4 | மென்மை | மென்மைத் |
| 415 | 20 | ழகுள் | ழகும் |
| 425 | 18 | றுருகாமை | கருகுவே |
| ,, | ,, | கருக்காமை | கருகாமைவேதல் |
| 440 | 40 | குறை | குரை |
| 451 | 3 | கின | கின' ஏனீ |
| 463 | 10 | வே, னெ | வேனெ |
| | . | ன்னனை | ன்ன |
| 465 | 31 | இரு | யான் இரு |
| 472 | 5 | அவ்விலி | அவ்லி |
| 481 | 9 | கடுந் | பின்னுங் கடுந் |
| ,, | 12 | பித்தற் | பித்ததற் |
| 506 | 30 | இராந்தி | இந்தி |
| 508 | 4 | 2 அசன் | 2 அயன் |
| 521 | 2 | லனென்ங்கு | 2 னெங்கு |
| 522 | 15 | அரனு | அரசனு |
| 534 | 30 | துய | தூய |
| 554 | 12 | கிஞண் | கிஞள் |
| 602 | 25 | கவடு | குவடு |
| 610 | 32 | றையெ | வைத்தெ |
| 620 | 22 | இருந்து | இனிது |
| 623 | 37 | மதிநல் } | வான் |
| ;, | 38 | வேழம் } | வேழம் |
| ,, | ,, | வான் } | மதி நல் |
| 626 | 34 | படி | வடி |
| 634 | 34 | கசுாயனை | சுனையாக |
| 638 | 21 | கும் | குறம் |
| 639 | 34 | நெடுங்கி | நெருங்கி |
| 644 | 17 | தாம் | திரம் |
| 676 | 35 | டனுடை | டானுடை |
| 684 | 14 | தறி | தற் |
| 688 | 4 | தோழு | தோழி |
| 697 | 27 | னில் | னிழல் |
| 699 | 2 | இகி | இழிகி |
| 709 | 13 | விஞள் | வினவிஞள் |
| 711 | 22 | பயிறுரு | பயிருறு |
| 735 | 2 | ற்ழின் | ற்றின் |
| 774 | 3 | களும் | களிலும் |
| 778 | 14 | மூடி | முடி |
| 799 | 2 | அயர் | உயர் |
| 800 | 9 | ப் பாத | யாத |
| 832 | 9 | வெளி | ஒளி |
| 867 | 34 | இந்தமூ | மு |
| 878 | 25 | சினமு | சினமுமு |
| 879 | 7 | வன்ா | வான் |
| 894 | 40 | பட்டா | பாட்டா |

## கம்பராமாயணத்தைப்பாராயணஞ்செய்வோர் அநுசந்திப்பனவான காப்புமுதலியன:—

### க.—நம்மாழ்வார்துதி.

தருகை நீண்ட தயாதன் ருன்றரு
மிருகை வேழத் திராகவன் றன்கதை
திரிகை வேலைத் தரைமிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே.

(இதன்பொருள்.) தருகை நீண்ட-கொடுக்குந்தொழில் மிக்குள்ள, தயரதன் - தசரதச்சக்கரவர்த்தி, தரும் - பெற்ற, இரு கை வேழத்து - இரண்டு கையையுடைய யானையைப்போன்ற, இராகவன்தன் - இராமபிரானது, கதை - சரித்திரத்தை, திரிகை வேலை தரைமிசை செப்பிட - வட்டவடிவமாகிய சமுத்திரத்தாற் சூழப்பட்ட இந்தப் பூலோகத்திலே சொல்லுதற்கு, காப்பது - காப்பாகஇருப்பது, குருகை நாதன் குரை கழல் - திருக்குருகூரில்திருவவதரித்த தலைவராகிய நம்மாழ்வாரது ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடிகளேயாகும்; (என்றவாறு.)

இராமபிரானது சரித்திரத்தைத் தொடங்கியு நாம், இந்நூல் இனிது முடியும்பொருட்டு நம்மாழ்வாரது திருவடிகளைச் சரணமாகப்பற்றுவோமென்றவாறு. விக்நேசுவரருடைய ஸ்தாநத்தில் விஷ்வக்ஸேநரைவணங்குவது ஸ்ரீவைஷ்ணவர்களின் மரபாதலாலும் நம்மாழ்வாரென்பவர் விஷ்வக்ஸேநருடைய அமிசமாகையாலும், நம்மாழ்வாரை இந்நூலைத்தொடங்கும்போது வணங்குவதாகச் செய்யப்பட்டது, இந்தப்பாடல். அரக்கரால் உலகிற்குநேர்ந்திருந்த துன்பங்களைப் போக்குமாறு ஸாக்ஷாத்தர்மமான புகவானைப் புதல்வனாகப்பெற்றுத் தந்தவனாதலின், தசரதனை 'தருகை நீண்ட தயரதன்' என்றார். தயரதன் = தசரதன்: பத்துத்திசைகளிலும் தடையின்றிச்செல்லவல்ல தேரையுடையவனென்று பொருள்படும். உலகத்துள்ள வேழங்களைவிட வேறுபாடுதோன்ற 'இருகைவேழத்து' என்றார். இராகவன் - இரகுவின்வமிசத்திற்பிறந்தவன். இரகு - உலகமுழுவதையும் தன் வல்லமையால்வென்று சருவசொத்தையும் தட்சிணையாகவுடைய 'விசுவஜித்'என்ற யாகத்தைச்செய்து பெரும்புகழ்படைத்த ஒரு சூரியகுலத்தரசன். எதுகைநோக்கி 'திருகை' என்றோதுவாருமுளர். இது-கலிவிருத்தம்.

### உ.—அநுமான்துதி.

அஞ்சிலே யொன்று பெற்ற னஞ்சிலே யொன்றைத் தாவி
யஞ்சிலே யொன்று றாக [1]வாரியற் காக வேகி
யஞ்சிலே யொன்று பெற்ற வணங்குகண் டயலா ரூரி
லஞ்சிலே யொன்றை வைத்தா [2]னவனெம்மை யளித்துக் காப்பான்.

(இ - ள்.) அஞ்சிலே ஒன்று பெற்றான் - பஞ்சபூதங்களுள் ஒன்றாகிய வாயுதேவனாற் பெறப்பட்டு,—அஞ்சிலே ஒன்று ஆறு ஆக - பஞ்சபூதங்களுள் ஒன்றாகிய ஆகாயத்தின்வழியாக, அஞ்சிலே ஒன்றை தாவி - பஞ்சபூதங்களுள்ஒன்றாகிய அப்பை [சமுத்திரத்தைக்] கடந்து, ஆரியற்குஆக ஏகி - இராமபிரான்பொருட்டு (ஒற்றனாக இலங்கைக்கு)ப் போய்,—அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கு கண்டு-பஞ்சபூதங்களுள்ஒன்றாகிய பூமிதேவி பெற்ற தெய்வப்பெண்ணாகிய சீதாபிராட்டியைச் சேவித்து(ச் செய்தி சொல்லிவிட்டு),அயலார் ஊரில் அஞ்சிலே ஒன்றை வைத்தான் - சத்துருக்களான அரக்கருடைய ஊராகிய இலங்கையிலே பஞ்சபூதங்களுள்ஒன்றாகிய நெருப்பை வைத்துச் சென்றவனான,அவன் - அப்படிப்பட்ட[மிக்க]மேன்மையையுடைய அநுமான்,எம்மை—, அளித்து-கருணைசெய்து, காப்பான் - (யாம் தொடங்கியநூலுக்குஓரிடையூறும்வராதபடி)பாதுகாப்பான்; (எ-று.) —ஆதலால், அந்தப்பெருமானை வணங்குவோமென்பது, குறிப்பு.

†'எங்குஎங்கு இராமபிரானதுகீர்த்தனம் நிகழ்கின்றதோ, அங்கங்கெல்லாம் சிரத்தின்மேற்குவித்த கையனாய், ஆனந்தக்கண்ணீர்நிரம்பியகண்ணனாய் அநுமான் நிற்பன்' என்பது நூற்கொள்கை யாதலால், இராமபிரானது சரித்திரத்தைச் சொல்லும்போது அநுமானைக் காப்பாகக் கொண்டனர். இராமபிரானுடைய தேவியைக் கவர்ந்த கொடுமையுடைய இராவணனும் அவனைச்சேர்ந்தஅரக்கரும் வசிக்கின்ற இடமாதலின், இராமபிரானையே தெய்வமாகக்கொண்ட அநுமானுக்கு அது அயலாரூர் ஆயிற்று.'அணங்கைக் கண்டு' என்ற பாடம் ஓசைக்குச் சிறவாது.

அஞ்சிலேயொன்று என்ற ஒருபொருளைக்கொண்டதொடர் பலமுறை வந்தது - **சொற்பொருட்பின்வருநிலையணி.** வந்தசொல்லே மிக்குவருதல், **ஏந்தல்வண்ணம்** எனப்படும்; "ஏந்தல்வண்ணஞ், சொல்லியசொல்லிற் சொல்லியது சிறக்கும்" என்ற தொல்காப்பியமும், 'ஏந்தல் - மிகுதல்: ஒருசொல்லே மிக்குவருதலின் ஏந்தல்வண்ணமென்றாயிற்று' என்ற உரையுங் காண்க. அஞ்சு - ஐந்துஎன்பதன்போலி. அஞ்சுஎன்றஎண்ணுப்பெயர்கள் - குறிப்பால், மண் நீர் முதலிய பஞ்சபூதங்களை யுணர்த்தின. ஏகாரங்கள் - அசை. பெற்றான் - முற்றெச்சம். இதுவும், அடுத்த கவியும் - அறுசீராசிரிய **விருத்தம். பிரதிபேதம்:**— [1]ஆரியர்க்காக. [2]அவனன்மை. (உ)

**ங.—சரசுவதிதுதி.**

*புத்தகம் படிக மாலை குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகந் தரித்த செங்கை விமலையை யமலை தன்னை
மொய்த்தகொந் தளக பார முகிழ்முலைத் தவளமேனி
மைத்தகு கருங்கட் செவ்வா யணங்கினை வணங்கல் செய்வாம்.

(இ-ள்.) புத்தகம் - புத்தகத்தையும், படிகம் மாலை - ஸ்படிகமணியினாலியன்ற மணிவடத்தையும், குண்டிகை - கரகத்தையும், ஞானம் பொருள்

† யத்ரயத்ர ரகுநாதகீர்த்தநம் தத்ரதத்ர க்ருதமஸ்தகாஞ்ஜலிம்-பாஷ்பவாரிபரிபூர்ணலோசநம் மாருதிம்நமதராக்ஷஸாந்தகம்.

சேர் வித்தகம் - ஞானம்புகட்டுதலைப் பொருளாகக்கொண்ட சின்முத்திரையையும், தரித்த—, செம் கை அழகிய (நான்கு) கைகளையுடைய, விமலையை- (உடற்) சூற்றமற்றவளும், அமலைதன்னை - (மன) மாசு இல்லாதவளும், மொய்த்த கொத்து அளகம் பாரம் - நெருங்கிய பூங்கொத்துக்களையணிந்த கூந்தல் தொகுதியையும், முகிழ் முலை - (தாமரை) அரும்புபோன்ற ஸ்தனங்களையும், தவளம் மேனி-வெண்ணிறமான திருமேனியையும், மை தகு கரு கண் - மையினுல் விளங்குகின்ற கருநிறமுள்ள கண்களையும், செவ் வாய் - செந்நிறமுள்ள வாயையுமுடைய, அணங்கினை - தெய்வப்பெண்ணுமான சரசுவதீதேவியை, வணங்கல் செய்வாம் - வணங்குவோம்; (எ - று.)

சரசுவதீதேவி வாக்குக்கு உரியதேவதை யாதலாலும், பிரமதேவனருளினுற் சரசுவதீதேவி ஸ்ரீவால்மீகிமுனிவனது வாக்கில் ஆவிர்ப்பவித்ததனுலேயே ஸ்ரீராமாயணம் என்ற இந்தஇதிஹாஸமஹாகாவியம் தோன்றியதனுலும், இராமாயணத்தைப் பாடத்தொடங்கிய கம்பநாட்டாழ்வார்க்கும் காளிகாதேவியினருளினுற் சரசுவதீதேவி பிரதியட்சமாகியிருத்தலாலும், இவ்விராமாயணத்தைத் தொடங்கும்போது சரசுவதீதேவியின்வணக்கமும் செய்யவேண்டுவ தாயிற்று. புத்தகத்தை இடப்பாற் கீழ்க்கரத்திலும், படிகமாலையை வலப்பான் மேற்கரத்திலும், குண்டிகையை இடப்பான்மேற்கரத்திலும், சின்முத்திரையை வலப்பாற் கீழ்க்கரத்திலும் சரசுவதீதேவி கொண்டுள்ளனளென அறிக. "புத்தகமுஞானத்து முத்திரையும் பொற்பளிங்கும், வைத்த கமண்டலமும் வன்னிகையு - முத்து, வடங்கொண்டமார்பினள்" என்முர், பிறரும். கல்வித்தெய்வமென்பது விளங்கப்புத்தகமும்,ஜபமந்திரத்தைத்தொகையிடப் படிகமாலையும், ஆசாரமாயிருக்கக் கமண்டலமும், ஞானத்தைப் பலருக்கும் உபதேசிக்குந் தன்மை விளங்க ஞானமுத்திரையும் கொண்டுள்ளனள், சரசுவதீதேவி யென்க. ஞானமுத்திரையாவது - கட்டைவிரல் நுனியையும் சுட்டுவிரல் நுனியையும் ஒன்றுசேர்த்து மற்றைமூன்றுவிரல்களும் நேர்நிற்கவைக்கும் நிலையாம். விமலையையமலைதன்னையென்றதொடரில், 'விமலை-தான் பரிசுத்தமானவள், அமலை-தன்னையடைந்தாரைப் பரிசுத்தஞ் செய்பவள்' என்றுமாம்: இனி, ஒருபொருட்பன்மொழியெனக்கொண்டு - மிகவும்பரிசுத்தமானவள்என்று உரைத்தலுமுண்டு. **கருங்கட் செவ்வாய்-முரண்தொடை:** "மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே". **அணங்கினை வணங்கல் - பிராசப்.** கொந்து - மெலித்தல்.

புஸ்தகம், ஸ்படிகமாலா, குண்டிகா, ஜ்ஞாநம், விமலா, அமலா, அலகபாரம், தவளம் என்ற வடசொற்கள் திரிந்துவந்தன. பிரசித்தனென்ற பொருளுள்ள 'வித்த' என்றவடமொழி 'க' ப்ரத்யயம்பெற்று, 'வித்தக' என்ருகி, அஃறிணையின்பொருட்டு, 'வித்தகம்'என்ருய், அறிவுஎன்ற பொருளை யுணர்த்தும்;அச்சொல்-இலக்கணையால்,ஞானமுத்திரையென்ற பொருளில்வந்தது.

**ச.—இதுமுதல் எட்டுக்கவிகள் - கம்பர் தனியன்கள்.**

**தராதலத்தி னுள்ள தமிழ்க்குற்ற மெல்லா**
**மராவு மரமாயிற் றன்றே—யிராவணன்மே**

லம்புநாட் டாழ்வா னடிபணியு மாதித்தன்
கம்பநாட் டாழ்வான் கவி.

(இ - ள்.) இராவணன்மேல் - (தன் மனைவியாகிய சீதாபிராட்டியைக் கவர்ந்த) இராவணனென்பவன்மீது, அம்பு - பாணத்தை, நாட்டு - பிரயோகித்து (அவ்வரக்கனை)க் கொன்றொழித்த, ஆழ்வான் - (நம்மை) ஆள்பவனாகிய இராமபிரானுடைய, அடி - திருவடிகளையே, பணியும்-(எப்போதும்) வணங்குந்தன்மையுள்ள, ஆதித்தன் - சூரியன்போன்ற, கம்பநாட்டாழ்வான் - கம்பநாட்டில்தோன்றிய பக்தராகிய கம்பரென்பவரது, கவி-,—தராதலத்தின் உள்ள - பூமியிலுள்ள, தமிழ் குற்றம் எல்லாம் - தமிழ்க்குற்றங்களை யெல்லாம், அராவும் - அராவிப்போக்குகின்ற, அரம் ஆயிற்று - அரம்போலாயிற்று; (எ - று.)—அன்றே - தேற்றம்; ஈற்றசையுமாம்.

நூலுள் அடங்காது தனியே பாயிரமாய் நிற்றல்பற்றி; இப்பாடல் ஒவ்வொன்றும்தனியன் என்று பெயர்பெறும்:'அன்'விகுதி-உயர்வுப்பொருளது.

கம்பர் அருளிச்செய்த இராமாயணத்தைக் கற்ற நுண்ணுணர்வினர், பிறர்செய்த குற்றமுள்ள பாடலைப் படிக்கையில் 'கம்பர் இவ்விஷயத்தை இங்ஙனம் சுவை முதலியன குறைவுபடக் கூறார்; இன்னவகையாகப் பலவகையணியும் வனப்பும்பொருந்தக் கூறுவர்' என்று அறிதற்குக் கருவியாயிருத்தலால், 'கம்பநாட்டாழ்வான்கவி - தமிழ்க்குற்றமெல்லாம் அராவும்அரமாயிற்று' என்றார்; இனி, கம்பர்செய்த கவியைப் படித்துப் புலமைபெற்ற புலவர்கள் பாடுங் கவிகளும் குற்றமின்றி விளங்குமென்பார், 'கவி - தமிழ்க்குற்றமெல்லாம் அராவும் அரமாயிற்று' என்றாரெனினுமாம். இதனால், கம்பருடையபாடல்கள் குற்றமொன்றும் தம்மிடத்துச் சேரப்பெறாமல் விளங்கு மென்றவாறாயிற்று. சூரியன் தான் சோதியுடையவனாயிருந்து தன்னுடைய கிரணங்கள் மூலமாக இருளைப் போக்கிப் பொருளை விளங்கச் செய்தல்போல, அறிஞரில்தலைவராகிய கம்பர் தமது கவிகளின்மூலமாக உலகத்தாரது அஜ்ஞானவிருளைப்போக்கிப் பரம்பொருளை விளக்குவதனால், அக்கம்பரை ஆதித்தனாக உருவகஞ் செய்தது.

மூன்றாமடி - முற்றுமோனை. கவி - சாதியொருமை. 'அம்புநாட்டாழ்வான்' என்ற தொடரில், ஆள்வான் என்பது ளகரத்துக்கு ழகரத்தைப் போலியாகப் பெற்று 'ஆழ்வான்'என வந்தது. எம்பெருமானது குணக்கடலில் ஆழ்ந்து ஈடுபடுபவரென்ற காரணம்பற்றி, கம்பரை 'ஆழ்வார்' என்றார். ஆதித்தன் - ஆதித்யன்: காசியபமுனிவனுக்கு அதிதிதேவியினிடம் பிறந்த புதல்வனுதல்பற்றிய பெயர்; வடமொழித்தத்திதாந்தநாமம்.இது - நேரிசை வெண்பா.

(௪)

௫. வாழ்வார் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பன் வாழ்த்து
தாழ்வா ருயரப் புலவோ ரகவிரு டானகலப் [பெறத்
போழ்வார் கதிரி னுதித்ததெய் வப்புல மைக்கம்பநாட்
டாழ்வார் பதத்தைச்சிந் திப்பார்க்கி யாது மரியதன்றே.

(இ - ள்.) வாழ்வு ஆர் - வளங்கள் நிரம்பிய, திருவெண்ணெய் நல்லூர்- திருவெண்ணெய்நல்லூரிற் பிறந்த, சடையப்பன் - சடையப்பவள்ளல், வாழ்த்து பெற-(கம்பராமாயணத்துள் ஆங்காங்குப்) புகழப்படவும்,—தாழ்வார் உயர - தாழ்குலத்தவரும் மேன்மையடையவும், புலவோர் அகம் இருள் தான் அகல - வித்துவான்களுடைய மனத்திலிருந்த (அஜ்ஞானமாகிய இருள் அடியோடு நீங்கவும்,—போழ் - (இருளைப்) பிளக்கின்ற, வார் கதிரின் - நீண்டகிரணங்களையுடைய சூரியனைப்போல, உதித்த-, தெய்வ புலமை கம்பநாட்டு ஆழ்வார்தம் பதத்தை - தெய்விகமானபுலமைநிரம்பி கம்பநாட்டில் தோன்றிய கம்பரது பாதங்களை, சிந்திப்பார்க்கு - (எப்பொதும்) தியானிப்பவர்க்கு, யாதும்-(இம்மை மறுமை யின்பங்களில்) எதுவும், அரியது அன்று - அருமையுடையதன்று; (எ - று.)

இம்மைமறுமை யின்பங்களையெல்லாம் வேண்டுவார் வேண்டியபடி தரவல்ல கடவுளான ஸ்ரீராமபிரானது சரித்திரத்தை விரித்துரைத்து அப்பரமனது திருவருளைப்பெற்ற கம்பரது திருவடிகளைத் தியானிப்பவரும், இஷ்டசித்திபெறுவ ரென்பதாம். கம்பர் திருவவதரித்து இராமாயணம் பாடியதனால் அவரையாதரித்த சடையப்பமுதலியார் அக்கம்பராமாயணத்தில் ஆங்காங்குப் புகழப்பெறுவதும், கம்பராமாயணத்தில் வல்லவரான இழிகுலத்தவரும் அவ்விராமாயணத்தைப் பிரசங்கஞ்செய்து சபையில் நன்கு மதிப்புப்பெறுவதும், சாதாரணமான தமிழ்ப்புலவர் இக்கம்பரது ராமாயணத்திற் பயின்று தேர்ச்சிபெற்றுத் தமது அறியாமை நீங்கப்பெறுவதும் காண்க. இனி, சடையப்பன் வாழ்த்துபெற - (கம்பரை ஆதரித்து இராமாயணத்தைத் தமிழ்ப்பாவினாற் பாடுமாறு செய்ததனாற்) சடையப்பமுதலியார் (உலகத்தவரால்) புகழ்ச்சிபெறவும், தாழ்வார் உயர - நான்காம்வருணத்தவர் (தங்கள்சாதியில் மகாகவியாகிய கம்பர் பிறந்ததனால்) மேன்மை பெறவும், புலவோர் அகவிருள்தான் அகல-பெரும்புலவரும் (இவ்விராமாயணத்தை வாசித்து 'நமது கல்வியறிவு எம்மாத்திரம்?' என்று தமது) மனத்துக்கொண்டிருந்த செருக்காகிய இருள் நீங்கவும் என்றும் உரைக்கலாம். ஸரஸ்வதியின் கடாட்சம்பெற்றவராதலால், கம்பரை 'தெய்வப்புலமைக் கம்பநாட்டாழ்வார்' என்றார். சிந்திப்பவர்க்கியாதும் - குற்றியலிகரம்: இது- இங்கே அலகுபெற்றது. இது - கட்டளைக்கலித்துறை. (ரு)

சு. **அம்பரா வணிசடை யரன யன்முத**
**லும்பரான் முனிவரால் யோக ராலுய**
**ரிம்பராற் பிணிக்கரு மிராம வேழஞ்சேர்**
**கம்பராம் புலவரைக் கருத்தி ருத்துவாம்.**

(இ - ள்.) அம்பு - (கங்காநதியின்) நீரையும், அரா - சர்ப்பங்களையும், அணி - தரித்திருக்கின்ற, சடை - (கயர்த்தமென்னும்) ஜடையையுடைய, அரன் - சிவபிரானும், அயன் - பிரமதேவனும், முதல் - முதலாகிய, உம்பரால் - தேவர்களாலும், முனிவரால் - தேவருஷிகளாலும், யோகரால் - (அணிமா முதலிய அஷ்டசித்திகளைப்பெற்ற) சித்தர்களாலும், உயர் இம்ப

ரால்- சிறந்தஇவ்வுலகத்தவர்களாலும், பிணிக்க அரு-கட்டுதற்குஅரியதான, இராம வேழம் - இராமனாகிய யானையை, சேர் - (தம்மனத்திற்) சேர்த்துக் கட்டிய, கம்பர்ஆம் புலவரை - கம்பரென்று பெயர்பெற்ற மகாவித்துவானை, கருத்து இருத்துவாம் - மனத்திற்கொண்டு தியானிக்கக்கடவோம், (யாம்).

ஒருவராலும் கட்டுதற்குஅரிய ஸ்ரீராமனென்னும் மத்தகஜத்தைத் தமது மனத்திற் பக்தியாகிய கயிற்றினாற் கட்டிய கம்பரை,நாம்,எப்போதும் மனத்திற் கொள்வோமென்பதாம். "பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கு அரிய வித்தகன்" என்றபடி எம்பெருமான் பக்திமான்கட்கு அன்றி மற்றையோர் எத்துணைச்சிறப்புடையோராயினும் அவர்களால் அறிதற்கு அருமையனாதல்பற்றி, 'அரனயன்முதல் உம்பரால்...உயர் இம்பரால் பிணிக்கரும் இராமவேழம்' என்றார். யானையானது - ஒருநாள் கண்டோமென்று திருப்தியாயிருக்கவொண்ணாதபடி தினந்தோறுங் காணவேண்டுமென்னும் விருப்பத்தை யுண்டாக்குவதும், மிக்கசெருக்கையுடையதும், கைக்கெட்டினாரை நினைத்தபோது எடுத்துக் கழுத்திலே வைத்துக்கொள்வதும், தன்மீது ஏறநினைப்பார்க்குத் தன்னைப் பணிந்துகொடுப்பதும், உகவாதாரை ஆராயாது கிழித்துப்போகடுவதும், தன்னைக்கட்டுமாறு தானே கயிற்றையெடுத்துக்கொடுப்பதுமாக விருக்கும்; அவ்வாறே, எம்பெருமான் தினந்தோறும் காணத்தக்கவடிவழகும், எப்பொருட்கும் இறைவனாயிருக்குந்தன்மைதோன்றக் கொண்டிருக்குஞ் செருக்கும், நித்தியசம்சாரியொருவன் தன்னைச்சரணமடைந்ததே காரணமாகஅவனுடைய குற்றங்களைப்போக்கியமாகக்கொண்டு தன்னைக்கொடுத்தால் கேட்பாரில்லாத ஸ்வாதந்திரியமும், கர்மம் ஜ்ஞாநம் முதலிய உபாயங்களால் தன்னை அடைய விரும்பினவர்க்குத் தன்னைக்கொடுக்குஞ் சீலமும், தனது அடியார்களின்விரோதிகளை ஆராயாது அழிக்கின்ற விரோதிநிரஸநஸ்வபாவமும், தன்னைக்கட்டுப்படுத்துமாறு பக்தியைத் தானே தருகிற ருசிஜநகத்வமும் உடையவனாவன். ஆதலால், இராமபிரானை முற்றுவமைபற்றி வேழமாக உருவகஞ்செய்தார்.

அரன்—ஹரன்: அழித்தற்கடவுள். அயன்—அஜன்: திருமாலினிடத்தினின்று தோன்றியவன். உம்பர் - மேலிடம்: அங்குள்ளார்க்கு, இடவாகுபெயர்: இம்பர்என்பதும் இவ்வாறே. பிணிக்கரும் - தொகுத்தல். புலவர்- தேர்ந்த அறிவுடையவர். இது - கலிவிருத்தம். (சு)

எ. சம்ப நாடன் னுமைசெவி சாற்றுபூங்
கொம்ப னாடன் கொழுநனி ராமப்பேர்
பம்ப நாட ழைக்குங்க தைபாச்செய்த
கம்ப நாடன் கழறலை யிற்கொள்வாம்.

(இ - ள்.) சம்பு - சிவபிரான், அ நாள் - முற்காலத்தில், தன் உமை - தனதுதேவியான பார்வதியினது, செவி - காதில், சாற்று - உபதேசித்த, பூ கொம்பு அனாள் கொழுநன் இராமன் பேர் - பூங்கொம்புபோன்றவளான சீதாதேவியின்து கணவனாகிய ஸ்ரீராமபிரானுடைய திருநாமம், பம்ப - பரவும்படி, நாடு அழைக்கும் - தேசத்திலுள்ளாரெல்லாரும் விரும்பிப்படிக்

கின்ற, கதை - ராமகதையை, பா செய்த - தமிழ்ப்பாடல்களாகச் செய்தருளிய, கம்பநாடன் - கம்பநாட்டாழ்வாரது, கழல் - திருவடித்தாமரைகளை, தலையில் கொள்வாம் - தலைக்கு அணியாகச் சூடுவோம், (யாம்); (எ - று.)

முன்னொருகாலத்திற் பார்வதி பரமசிவனை நோக்கி, 'எம்பெருமானது ஆயிரந்திருநாமங்களையும் எளிதாகக் கூறும் உபாயம் யாது?" என்று வினவ, பரமசிவன் 'ராம என்னுந் திருநாமத்தை உச்சரித்தால் அது ஆயிரந்திருநாமங்களையும் சொல்லியதற்கு ஈடாகும்' என்று உபதேசித்தனென்பதை, "பார்வத்யுவாச: கேநோபாயேநலகுநா விஷ்ணோர்நாமஸஹஸ்ரகம் - பட்யதே பண்டிதைர்நித்யம் ஶ்ரோதும் இச்சாம்யஹம்ப்ரபோ; ஈஶ்வரஉவாச: ஸ்ரீராமராமராமேதி ரமேராமேமநோரமே - ஸஹஸ்ரநாமதஸ் துல்யம் ராமநாம வராநநே" என்ற மகாபாரதத்தா லறிக.

இச்செய்யுளில் திரிபு என்னுஞ் சொல்லணி காண்க. திரிபாவது - முதலெழுத்துமாத்திரம் வேறுபட்டிருக்க, இரண்டு முதலிய சில எழுத்துக்கள் ஒன்றிநின்று பொருளால்வேறுபட்டு வருவதாம். பொதுநகரத்துக்கும் சிறப்புனகரத்துக்கும் வரிவடிவில் மிக்கவேறுபாடு இருப்பினும், ஒலிவடிவில் மிக்க வேறுபாடு இல்லாமைபற்றி, யமகம், திரிபு, சிலேடை இவற்றில் நகரனகரங்களை அபேதமாகக்கொண்டு அமைத்தல் மரபாதலால், 'கொம்பனுள்' என்று இருக்கவேண்டிய இடத்து, 'கொம்பநாள்' எனப்பட்டது. ஶம்பு - அடியார்க்குச் சுகத்தையுண்டாக்குபவன். அநாள்-தொகுத்தல். இளமையில் பார்வதீதேவி சிவபிரானைநோக்கித் தவஞ்செய்யச் சென்றபோது, பெற்றோர் 'அம்ம! வேண்டா' என்று தடுத்ததுபற்றி, பார்வதீதேவிக்கு உமை [உ-அம்ம! மா-வேண்டா.] என்று பெயராயிற்று. இது-முன்னையதினும் வேறுபட்டுவந்த கலிவிருத்தம். (எ)

அ. இம்பர் நாட்டிற் செல்வமெலா மெய்தி யரசாண் டிருந்தாலு
மும்பர் நாட்டிற் கற்பகக்கா வோங்கு நீழ லிருந்தாலுஞ்
செம்பொன் மேரு வனையபுயத் திறல்சே ரிராமன் றிருக்கதையிற்
கம்பநாடன் கவிதை யிற்போற் கற்றோர்க் கிதயங் களியாதே.

(இ - ள்.) இம்பர் நாட்டில் - இந்நிலவுலகத்தில், செல்வம் எலாம் எய்தி - எல்லாச் செல்வங்களையும் அடைந்து, அரசு ஆண்டு இருந்தால் உம் - அரசாட்சிசெய்துகொண்டிருந்தாலும், உம்பர் நாட்டில் - மேலுலகத்தில், ஓங்கு கற்பகம் கா நீழல் இருந்தால் உம்-உயர்ந்துவளர்ந்த கற்பகமரச்சோலையினது நிழலில் வசித்தாலும்,—செம் பொன் மேரு அனைய - சிவந்த பொன்மயமான மேருபர்வதத்தைப்போன்ற, புயம் - தோள்களில், திறல் சேர்-வலிமையமைந்த, இராமன் - ஸ்ரீராமபிரானது, திருக்கதையில் - திவ்யசரித்திரத்தைக் கூறுகின்ற நூல்களுள், கம்பநாடன் கவிதையில் போல் - கம்பராமாயணப்பாடல்களிற் பயில்வதனால் மனங்களிப்பதுபோல, கற்றோர்க்கு - கற்றறிந்தவர்கட்கு, இதயம் - மனமானது, களியாது - திருப்தியடையாது.

கம்பராமாயணமானது, கற்றறிந்தவர்கட்கு, இம்மை யின்பங்களெல்லாவற்றினும் மிக்க இன்பத்தைத் தருமென்க. அறுசீராசிரியவிருத்தம். (அ)

௯. கழுந்த ராயுன கழல்பணி யாதவர் கதிர்மணி முடிமீதே
யழுந்த வாளிக டொடுசிலை ராகவ வபிநவ கவிநாதன்
விழுந்த ஞாயிறு வெழுவதன் முன்மறை வேதிய ருடனாய்ந்
தெழுந்த ஞாயிறு விழுவதன் முன்கவி பாடின தெழுநூறே.

(இ - ள்.) கழுந்தர் ஆய் - வில்லின் தடியைப் போன்றவர்களாய் [நெறிப்புக்கொண்டு], உன கழல் - உன்னுடைய திருவடிகளில், பணியாதவர் - வணங்காத ராக்ஷஸர்களுடைய, கதிர் மணி முடிமீது - ஒளியைவீசுகின்ற இரத்தினங்களையிழைத்துச்செய்யப்பெற்ற கிரீடங்களையணிந்த தலைகளின்மேல், அழுந்த - நன்றாகப்பதியும்படி, வாளிகள் தொடு - அம்புகளைப் பிரயோகித்த, சிலை - (கோதண்டமென்னும்) வில்லை யேந்திய, ராகவ - இராமபிரானே!— அபிநவ கவிநாதன் - (உன்விஷயத்தில்) புதுமையாகக் கவிபாடித் துதித்த கம்பன்,-விழுந்த நாயிறு எழுவதன் முன்-அஸ்தமித்த சூரியன் உதிப்பதற்கு முன் [இராத்திரிவேளையில்], மறை வேதியருடன் - வேதம் வல்ல அந்தணர்களுடன், ஆராய்ந்து - (ஸ்ரீராமசரித்திரத்தைக் கூறும் வடமொழி நூலை)ஆராய்ச்சிசெய்து, எழுந்த நாயிறு விழுவதன்முன்-உதயமான சூரியன் அஸ்தமிப்பதற்குள் [பகற்பொழுதில்], பாடினது கவி - பாடிய பாடல்கள், எழுநூறு - எழுநூறாகும்; (எ-று.)

கவிபாடினது எழுநூறு-ஒருமைப்பன்மை மயக்கம். கம்பர் இராப்பொழுதில் வடமொழியில் வல்லவர்களை உதவியாகக்கொண்டு ஸ்ரீராமசரித்திரத்தை ஆராய்ச்சி செய்து, பகற்பொழுதில் நாளொன்றுக்கு எழுநூறு பாடல் வீதம் ஆறுகாண்டங்களையும் பதினைந்துநாளிற் பதினாயிரத்து ஐந்நூறு செய்யுள்களாற் பாடி முடித்தனரென்பதாம். தேவர்கட்கு உத்தராயணகாலமெல்லாம் பகற்பொழுதென்பதும், தட்சிணாயன காலமெல்லாம் இராப்பொழுதென்பதும் நூற்கொள்கையாதலால், இச்செய்யுளில் 'இரவு பகல் என்பன-தேவமானத்தின்படியான அவ்வாறு மாதங்களைக் காட்டும்' என்பர் ஒரு சாரார். இதுவும் - ஒரு வகை அறுசீராசிரியவிருத்தம். (௯)

௧௦.—நாரணன் விளையாட் டெல்லா நாரத முனிவன் கூற
வாரணக் கவிதை செய்தா னறிந்தவான் மீகி யென்பான்
சீரணி சோழ நாட்டுத் திருவழுந் தூருள் வாழ்வோன்
காரணக் கொடையான் கம்பன் றமிழினாற் கவிசெய் தானே.

(இ - ள்.) நாரதமுனிவன் - நாரதமஹர்ஷி, நாரணன் விளையாட்டு எல்லாம் - திருமாலினது அம்சமான ஸ்ரீராமபிரானது சரித்திரம்முழுவதையும், கூற - உபதேசிக்க, அறிந்த - (அதனைக்கேட்டு) உணர்ந்த, வான்மீகி என்பான் - வால்மீகியென்று சிறப்பித்துச்சொல்லப்பட்ட முனிவன், ஆரணம் கவிதை செய்தான் - (அதனை) வேதத்தோடொத்த [மிகச்சிறந்த] வடமொழிச்சுலோகரூபமாகச் செய்தான்; (பிறகு அந்த ராமசரித்திரத்தை), சீர் அணி சோழநாட்டு திருவழுந்தூருள் வாழ்வோன் - சிறப்புப்பெற்ற சோழநாட்டிலுள்ள திருவழுந்தூரென்னுந் தலத்திலே வாழ்பவனும்,

காரணம் கொடையான் - புகழுக்குக்காரணமான ஈகைக்குணமுடையவனுமாகிய, கம்பன்—, தமிழினுல் கவி செய்தான் - தமிழ்ப்பாடலாகச் செய்து முடித்தான்; (எ - று.)

ஸ்ரீநாரதபகவான் உபதேசித்த ராமசரித்திரத்தை வால்மீகிமுனிவன் ஸ்ரீராமாயணமென்ற ஆதிகாவியமாக வடமொழியில் இயற்ற,கம்பர் அம்முதனூலையே துணையாகக்கொண்டு,தமிழ்ப்பாஷையிலும் ராமசரித்திரத்தை அதன் வழிநூலாகப் பாடின ரென்பதாம். வால்மீகிமுனிவன், வேதத்தில் மாத்திரம் வழங்கிவந்த சந்தசைக்கொண்டு முதலில் வடமொழியில் ஸ்ரீராமாயணத்தைச் செய்தன னாதலால் 'ஆரணக்கவிதைசெய்தான்' என்று ரென்னலாம். வால்மீகிமுனிவன் ஸ்ரீராமாயணத்தைச் செய்தபின்புதான் லோகத்திலே வடமொழியிற் சுலோகங்கள் செய்யப்பட்டனவென அறிக.

நாரணன் - நாராயணன் என்ற வடமொழியின் திரிபு: பிரளயப்பெருங்கடலைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டவ னென்றும், எல்லாப்பொருள்கட்கும் இருப்பிடமானவ னென்றும், எல்லாப்பொருள்களிலுந் தான் இருப்பவனென்றும், மற்றும்பலவாறும் உரைக்கப்படும். காத்தற்றொழிற்கடவுளாகிய திருமால் தருமத்தை நிலைநிறுத்துதற்பொருட்டு ஸ்ரீராமனாகத் திருவவதரித்தன னாதலின், அப்பிரானை 'நாரணன்' என்றே கூறினர். நாரதன் - தத்துவஞானத்தை உபதேசிப்பவனென்றும், உலகத்தாரது அஜ்ஞானத்தைப் போக்குபவனென்றும் பொருள்படும்; உலகத்தாரது ஒற்றுமையைக் கெடுப்பவனென்றும் சிலர் கூறுவர். கவிதா - வடசொல். என்பான் - முதல்வேற்றுமைச் சொல்லுருபு. காரணக்கொடையான் என்பதை, கார் அண் அ கொடையான் என்று பிரித்து - மேகத்தையொத்த கைம்மாறு கருதாத கொடையையுடையவ னென்று உரைப்பாரு முளர். இதுமுதல் மூன்றுசெய்யுள்கள் - முன்னையதினும் வேறுபடவந்த அறுசீராசிரியவிருத்தங்கள். (க0)

கக. **அம்பிலே சிலையை நாட்டி யமரர்க்கன் றமுத மீந்த**
**தம்பிரா னென்னத் தானுந் தமிழிலே தாலை நாட்டிக்**
**கம்பநா டுடைய வள்ளல் கவிச்சக்ர வர்த்தி பார்மே**
**னம்புபா மாலை யாலே நரருக்கின் றமுத மீந்தான்.**

(இ - ள்.) அன்று - முற்காலத்தில் [தேவர்கள் தமது செல்வத்தையிழந்தகாலத்தில்], அம்பிலே-திருப்பாற்கடலிலே, சிலையை-மந்தரமலையை, நாட்டி-(மத்தாக) நிறுத்தி(க் கடைந்து,) அமரர்க்கு-தேவர்கட்கு, அமுதம்-அமிருதத்தை, ஈந்த - கொடுத்தருளிய, தம் பிரான் என்ன - தமது தலைவனை திருமாலைப்போலவே,—கவி சக்ரவர்த்தி - கவிகளுக்குட்சிறந்தவனும், கம்பநாடு உடைய வள்ளல்தான்உம்-கம்பநாட்டுக்குத் தலைமைபூண்ட வரையாதுகொடுப்பவனுமாகிய கம்பனும், இன்று - இக்காலத்தில், தமிழில்-தமிழ்ப்பாஷையாகிற திருப்பாற்கடலில்,தாலை நாட்டி-(தனது)நாவாகிய மந்தரமலையை நிறுத்தி(க் கடைந்து), நம்பு பாமாலையால் - (யாவரும்) விரும்பு

கின்ற பாக்களின் தொகுதியினால், பார்மேல் - இந்நிலவுலகத்தில், நரருக்கு - மனிதருக்கு, அமுதம் ஈந்தான்-(ராமசரித்திரமாகிய)அமிருதத்தை யுண்டாக்கிக்கொடுத்தான்; (எ - று.)

முற்காலத்தில் திருமால் மந்தரமலையைக்கொண்டு திருப்பாற்கடலைக் கடைந்து விண்ணுலகத்தவரான தேவர்கட்கு அமிருதத்தைக் கொடுத்தது போல, இக்காலத்தில் கம்பரும் தமது நாவினால் தமிழ்க்கடலைத் துழாவிக் கடைந்து ஸ்ரீராமசரித்திரமாகிய அமிருதத்தை மண்ணுலகத்தவரான மனிதர்கட்குத் தந்தருளினரென்பதாம். உவமையணி. "மறைப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற்கடைந்து, துறைப்பாற்படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமுதம், கறைப்பாம்பணைப்பள்ளியானன்பரீட்டங்களித்தருந்த, நிறைப்பான்" என்றதனோடு இதனை ஒருசார் ஒப்பிடுக.

அம்பு - நீர்: இலக்கணையால், கடலை யுணர்த்தும்; இங்குச் சிறப்பாய், திருப்பாற்கடலைக் குறித்தது. சிலை - கல்லினாலாகிய மலைக்கு, ஆகுபெயர். தாலை - தாலுவை. "நம்பும் மேவும் நசையாகும்மே" என்பவாதலால், நம்பு என்பதற்கு - விரும்புகின்ற எனப் பொருளுரைக்கப்பட்டது. நம்பு பாமாலை - வினைத்தொகை. (கக)

### கஉ.—அரங்கேற்றின காலம் இடம் முதலியவை.

**எண்ணிய சகாத்த [1]மெண்ணூற் றேழின்மேற் சடையன் வாழ்வு**
**நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்**
**பண்ணிய விராம காதை பங்குனி [2]யுத்த ரத்திற்**
**கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றி னானே.**

(இ - ள்.) எண்ணிய - கணக்கிடப்பட்ட, சகாத்தம் எண்ணூற்றேழின்மேல்-சாலிவாகநசகாப்தம் எண்ணூற்றேழாவது வருஷத்திற்குமேல், சடையன் வாழ்வு நண்ணிய - சடையப்பமுதலியார் வாழ்தல்பொருந்திய, வெண்ணெய்நல்லூர்தன்னில் - திருவெண்ணெய்நல்லூரிலே, கம்பநாடன் - கம்பன்,—பண்ணிய - (தான்) இயற்றிய, இராம காதை - ஸ்ரீராமசரித்திரமாகிய ராமாயணத்தை,—பங்குனி உத்தரத்தில் - பங்குனிமாதத்து உத்திர நக்ஷத்திரத்திலே, கண்ணிய அரங்கர் முன்ன - (யாவராலும்) தியானிக்கப்படுகின்ற ஸ்ரீரங்கநாதனது சந்நிதியில், கவி அரங்கு ஏற்றினான் - (வித்துவான்கள் திரண்டுள்ள) சபையிலே கவியை யாவரையும் அங்கீகரிக்கும்படி செய்தான்; (எ - று.)

கண்ணிய அரங்கர் - மாலையைச்சூடிய திருவரங்கநாதருமாம். அரங்கேற்றுதலாவது - கவி தான்செய்த பிரபந்தத்தை வித்துவான்கள் பலரும் திரண்டுள்ள சபையிற்கொணர்ந்து படித்துக்காட்டி அவரவர்கள் கேட்கின்ற ஆட்சேபங்கட்கெல்லாம் தக்கசமாதானங்கூறி, அப்புலவர்களால் இந்நூல் குற்றமில்லாததென்று அங்கீகரிக்குமாறு செய்தல். இராமகாதையை கவியை அரங்கேற்றினனென்க. காதை - கதை என்பதன் நீட்டல்; இனி, காதை - பாடல் என்றுமாம். [1]முந்நூற்று. [2]அத்தநாளில். (கஉ)

கங.—இதுமுதல் எட்டுக் கவிகள்-நூற்பயன்.

நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமு மின்றித் தீருமே
யிம்மையமே ராமவென் றிரண்டெ ழுத்தினால்.

(இ - ள்.) ராம என்ற இரண்டு எழுத்தினால் - 'ராம' என்கிற இரண்டெழுத்துக்களை யுச்சரிப்பதனால், (அதற்கு உரியவனான ஸ்ரீராமன்), இம்மை - இந்தப் பிறவியில்தானே, நாள்உம் - எப்போதும், நன்மைஉம் - (எல்லா)நன்மைகளையும், செல்வம்உம்-(அவற்றிற்குக் காரணமான) செல்வத்தையும், நல்கும் - கொடுத்தருள்வான்; (அன்றியும் அவ்வாறு உச்சரிப்பவர்க்கு), தின்மைஉம் - தீயசெயலும், பாவம்உம் - (அதன்பயனான) தீவினையும், சிதைந்து தேயும் - அழிந்து கெடும்; சென்மம்உம் மரணம்உம் இன்றி தீரும் - பிறப்பு இறப்புகள் இனி நேராமல் தீர்ந்துவிடும்; (எ - று.)

ராமநாமோச்சாரணஞ்செய்பவர், இம்மையில் தீச்செயலும் தீவினை விளைவுமின்றி எல்லாவைசுவரியங்களும்நிரம்பி மிக்கநன்மைகளையெல்லாம் அடைந்து இனிதுவாழ்ந்து, பிறகு பிறப்புஇறப்புக்களில்லாத மோக்ஷத்தைப் பெறுவரென்பதாம். தின்மை இப்பொருளில்வருதலை "கயிறுமாறிவிட்டபி னன்மை தின்மை, யோதுவ நமதுபாரமல்ல" என்றவிடத்துங் காண்க. இதுவும் அடுத்தகவியும் - கலிவிருத்தங்கள். (கங)

கச. வடகலை தென்கலை வடுகு கன்னட
மிடமுள பாடையா தொன்றி னாயினுந்
திடமுள ரகுகுலத் திராமன் றன்கதை
யடைவுடன் கேட்பவ ரமர ராவரே.

(இ - ள்.) வடகலை-ஸம்ஸ்க்ருதமோ, தென்கலை-தமிழோ, வடுகு-வடுகுபாஷையோ, கன்னடம் - கன்னடபாஷையோ, இடம் உடை-இவ்வுலகத்திலுள்ள, பாடை யாது ஒன்றின் ஆயின்உம்-எந்தப் பாஷையிலாயினுஞ்சரி, திடம் உள இரகு குலத்து இராமன் தன் கதை அடைவுடன் கேட்பவர் - வலிமைபொருந்திய இரகுகுலத்திலேஅவதரித்த ஸ்ரீராமனது சரித்திரத்தை முறைப்படி கேட்பவர், அமரர் ஆவர் - (என்றும் மரித்தலில்லாத) நித்தியசூரிகளாய்விடுவார்கள்; (எ - று.)

எந்தப் பாஷையிலிருந்தாலுஞ்சரி இராமசரிதத்தைப் பய பக்திவிசுவாசங்களுடன் கேட்பவர்க்கு மோட்சம் சித்திப்பது திண்ணமென்பதாம். வடுகும் தெலுங்கும் வேறு என்பாரும், இரண்டும் ஒன்று என்றே கொள்வாரும் உளர். பரதகண்டத்தின் வடதிசையில் ஆதிகாலத்தில் மிகவும் பரவியிருந்ததுபற்றி, ஸம்ஸ்க்ருதபாஷை 'வடமொழி, வடகலை' என்றும், தென்திசையில் மிகவும் பரவியிருத்தல்பற்றி,தமிழ்மொழி 'தென்மொழி, தென்கலை'என்றும் வழங்கப்படும். (கச)

கரு வென்றிசே ரிலங்கை யானை வென்றமால் வீர மோத
நின்றரா மாய ணத்தி னிகழ்ந்திடு கதைக டம்மி [மு
லொன்றினைப் படித்தோர் தாமு முரைத்திடக் கேட்டோர் தா
நன்றிது வென்றோர் தாமு நரகம தெய்தி டாரே.

(இ - ள்.) வென்றி சேர் - வெற்றி பொருந்தியிருந்த, இலங்கையானை - இலங்கைக்குஅதிபனான இராவணனை, வென்ற - வெற்றிகொண்ட, மால் - திருமாலின், வீரம் - வீரகுணத்தை, ஓத நின்ற - சொல்லும்படி செய்யப்பெற்றுள்ள, ராமாயணத்தின் - இராமாயணமென்ற காவியத்தில், நிகழ்ந்திடு - வந்துவழங்குகின்ற, கதைகள் தம்மில் - கதைகளுக்குள், ஒன்றினை-ஒரு கதையை, படித்தோர் தாம்உம்-(தாமே) படித்தவர்களும், உரைத்திட கேட்டோர் தாம்உம் - பிறர்சொல்லத் தாம் கேட்டவர்களும், இது நன்று என்றோர் தாம் உம் - இது நன்றாயுள்ளதென்று கொண்டாடினவர்களும், நரகம் அது எய்திடார்எ - நரகத்தையடையவேமாட்டார்கள்; (எ - று.)

இராமாயணத்துள் வழங்குவதான சரித்திரங்களுள் ஏதேனும் ஒன்றைப் படித்தவர்களும், பிறர் சொல்லக்கேட்டவர்களும் நரகத்தை யடையாமையே யன்றி, அவ்விரண்டுஞ் செய்யாது ராமசரித்திரம்நல்லதென்று பெரியோர் சொல்லப் பலமுறை கேட்டுள்ளதனால் தாமும் ராமசரித்திரம் நன்றென்று சொன்னவர்களும் நரகத்தை யடையாரென்க. நரகமது,அது - பகுதிப்பொருள்விகுதி. அறுசீராசிரியவிருத்தம். (கரு)

**கசு.** இராகவன் கதையி லொருகவி தன்னி னேகபா தத்தினை யுரைப்போர், பராவரு மலரோ னுலகினி லவனும் பன்முறை வழுத்த வீற்றிருந்து, புராதன மறையு மண்டர்பொற் பதமும் பொன்றுநா ளதனினும் பொன்றா, வராவணை யமல னுலகெனும் பரம பதத்தினை யணுகுவ ரன்றே.

(இ - ள்.) இராகவன் கதையில் - இராமாயணத்திலுள்ள, ஒரு கவிதன்னின் - ஒரு பாடலினது, ஏக பாதத்தினை - ஓரடியைமாத்திரமும், உரைப்போர் - சொல்பவர்களும்,—(தாம் மரணமடைந்தபின்பு பிரமலோகத்தை யடைந்து), பராவு அரு மலரோன் உலகினில்-புகழ்வதற்குஅரிய [மேன்மை தங்கிய] (அந்தப்) பிரமனது லோகத்தில், (தமது மகிமையை), அவன்உம் பல் முறை வழுத்த - அந்தப்பிரமதேவனும் பலமுறை எடுத்துப்புகழ்ந்து சொல்ல, வீற்றிருந்து - (அவ்வுலகத்தில் கற்பம்முடியும்வரை) மிகச் சிறப்போடு தங்கியிருந்து, (பிறகு),—புராதனம்மறைஉம் அண்டர் பொன் பதம் உம் பொன்றும் நாள்அதனின்உம்-மிகப்பழமையான வேதங்களும் தேவர்களின்பொன்னுலகும் அழிகின்ற(கற்பாந்த)காலத்திலும், பொன்றா-அழியாததான, அரவு அணை அமலன் உலகு எனும் பரமபதத்தினை - அநந்தசயனனாகிய விமலனது உலகமாகிய பரமபதத்தை, அணுகுவர் - சேர்வர்; (எ-று.) —அன்றே - தேற்றம்; ஈற்றசையுமாம்.

இராமாயணகவியில் ஒருபாதத்தைச் சொல்லுவோரும், இஹலோக ஐசுவரியங்களையெல்லாம் அநுபவித்து, இறுதியில் அந்தமிலின்பத்து மோட்சத்தையும் பெறுவ ரென்க; இதனால், இராமாயணத்தைப் பாராயணஞ்செய்வோர் அடையும் பயன் இப்படிப்பட்டதென வரையறுத்துச் சொல்லவொண்ணு தெனத் தெரிவித்தவாறு. இந்தலீலாவிபூதிக்குள் உத்தமமான இன்பம் பிரமலோகத்துப் பெறும் இன்பமே யாதலால், பரமபதத்தைப்பெறுவதற்குமுன் அதனையும்பெற்றுப் பிறகு பரமபதத்தையும் பெறுவரென்க. பரமபதம்-எல்லாஸ்தாநங்களினும் மேம்பட்ட இடம்.எழுசீராசிரியவிருத்தம்.

கஎ. இறுவ ரம்பிலி ராமவென் றோரும்பர்
நிறுவ ரென்பது நிச்சய மாதலான்
மறுவின் மாக்கதை கேட்பவர் வைகுந்தம்
பெறுவ ரென்பது பேசவும் வேண்டுமோ.

(இ - ள்.) 'இறு வரம்பில் - இறக்கின்ற காலத்தில், இராம என்றோர் - இராமவென்று (அவனது திருநாமத்தை ஒருமுறை) சொன்னவர், (எந்தச் சாதியிற் பிறந்தவராயினும் எத்துணைப்பாவஞ் செய்தவராயினும்), உம்பர் - தேவலோகத்தில், நிறுவர் - நிற்பார்கள்', என்பது-, நிச்சயம்-: ஆதலால்-, மறு இல் மா கதை கேட்பவர் - குற்றமற்ற இராமாயணமென்ற மஹாகதையைக் கேட்பவர்கள், வைகுந்தம் பெறுவர் - வைகுண்டத்தையடைவார்கள், என்பது - என்பதைப்பற்றி, பேசவும் - (தனியே யெடுத்துச்) சொல்லவும், வேண்டுமோ-? (எ - று.)

சரியானநிலையிலிருக்கையில் எம்பெருமானை நினைத்தலுஞ்செய்யாத பரமபாவிகளும் தாம் இறக்கின்ற தருணத்தில் அகஸ்மாத்தாகவேனும் ராம என்று அப்பரமனது திருநாமத்தைச்சொன்னால் அம்மாத்திரத்தில் எம்பெருமானருளால் தீவினைகளெல்லாமொழிந்து முத்தியையடைவரென்றால், அப்பரமனது பரமபாவனமான பெருஞ்சரிதத்தை விவரித்துக்கூறும் ஸ்ரீராமாயணம்முழுவதையும் பக்தியோடுகேட்பவர் பரமபதத்தையடைவ ரென்பதைப் பற்றிச்சொல்லவும்வேணுமோ? சொல்லாமலே யமையு மென்பது, கருத்து. இச்செய்யுளில், 'மலையைவிழுங்கின மகாதேவனுக்குக் கதவு எம்மாத்திரம்?' என்றாற்போன்று கைமுதிகநியாயம்படக் கூறியிருப்பது-தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணியாம். நிறுவர்=நிறுவுவர்: நிற்பர்: தன்வினைப்பொருளில்வந்த பிறவினை: ஸ்வார்த்தேணிச் எனப்படும். இச்செய்யுட்கு வேறுவகையாக உரைகூறுவது ஏற்குமேல், கொள்க. ரகரத்தை உச்சரித்தமாத்திரத்தில் திறந்த வாய்வழியாகப் பாவம்யாவும் நீங்க மகரத்தை உச்சரித்தமாத்திரத்தில் அது பாவம்புகாதபடி அவ்வழியையடைக்கு மென்பர். கலிவிருத்தம். ()

கஅ. அன்ன தான மகிலநற் றானங்கள்
கன்னி தானங் கபிலைநற் றானமே
சொன்ன தானப் பயனெனச் சொல்லுவர்
மன்னி ராம கதைதமை யார்க்கரோ.

(இ - ள்.) மன் - நிலைபெற்ற, இராம கதை - இராமசரித்திரத்தை, மற வார்க்கு - மறவாமல் எப்போதும் பாராயணஞ் செய்வார்க்கு,—அன்ன தானம் - அன்னதானத்தின்பயனும், நல் அகிலம் தானங்கள் - சிறந்த பூதா னங்களின் பயனும், கன்னிதானம் - கன்னிகாதானப்பயனும், கபிலையின் தானம் - கோதானத்தின் பயனும், (என்று இவ்வாறு), சொன்ன - (நூல் களிற்) கூறியுள்ள, தானம் பயன் - தானங்களின்பயன், (சித்திக்கும்), என - என்று, சொல்லுவர்-(அறிஞர்) சொல்வார்கள்; (எ-று.)—அரோ - ஈற்றசை.

இராமாயணபாராயணஞ்செய்வோர்க்கு அன்னதானம்முதல் பலவாகக் கூறப்பட்டுள்ள தானப்பயன்களெல்லாஞ் சித்திக்குமென்பதாம். அகிலம்-பூமி அகிலநல்தானம் என்றதொடரை 'கபிலைதற்றானம்' என்பதன்பின்வைத்து - மற்றும்கூறப்படாத சிறந்த எல்லாத்தானங்களும் என்றுமாம். கன்னி=கந் யா:வடசொல். சொன்னதானம்=ஸ்வர்ணதாநம் எனினுமாம். கபிலை-பொன் னிறப்பசு: இதனைக்கூறியது, மற்றைப்பசுக்களுக்கும் உபலக்ஷணம்: சிறப் புப்பெயர் பொதுப்பொருளை யுணர்த்திற்றென்னலுமாம். இதுவும் - கலி விருத்தமே. (கஅ)

**கக.** ஆதியரி யோநமநா ராயணர்தி ருக்கதைய றிந்தனுதி னம் பரவுவோர், நீதியனு போகநெறி நின்றுநெடு நாளதினி றந்துசகத ண் டமுழுதுக், காதிபர்க ளாயரசு செய்துளநி னைத்ததுகி டைத்தருள் பொ றுத்துமுடிவிற், சோதிவடி வாயழிவில் முத்திபெறு வாரெனவு ரைத்தசுரு தித்தொகைகளே.

(இ - ள்.) ஆதி - தொடங்கும்போது, அரி ஓ நம - 'ஹரிஃ ஓம் நமஃ' என்றுசொல்லி வணங்கி, நாராயணர் திருக்கதை - ஸ்ரீமந்நாராயணனது திரு வவதாரமூர்த்தியாகிய ஸ்ரீராமபிரானது சிறந்தசரிதத்தை, அறிந்து - உண் மையறிவுகொண்டு, அனுதினம்-நாள்தோறும்,பரவுவோர்-துதிப்பவர்,—நீதி- முறைமையாக, (இவ்வுலகத்தில்), நெடுநாள் - நெடுங்காலம், அனுபோகம் நெறி நின்று - சுகத்தையனுபவித்தலாகிய வழியிலே நிலைத்துநின்று,(பின்பு), அதின் இறந்து - அதனைக் கடந்து, சகத் அண்டம் முழுதுக்கு ஆதிபர்கள் ஆய் - இந்தப் பிரமாண்டம் முழுதுக்கும் தலைவர்களாயிருந்து, அரசு செய்து- ராஜாங்கஞ் செலுத்தி, உளம் நினைத்தது கிடைத்து - (தாம்) மனத்தினால் நினைத்ததெல்லாம் கிடைக்கப்பெற்று, (இவ்வாறு இந்த லீலாவிபூதியிற் பெறக்கூடிய ஐசுவரியங்களைப் பரிபூர்ணமாக அநுபவித்தபின்பு), அருள் பொறுத்து - (இவ்வாறு பரமைசுவரியத்தில் மூழ்கியிருந்தே பகவானுடைய) திருவருளைப் பெற்று அதனால், முடிவில் - இறுதியில், சோதி வடிவு ஆய் முடிவுஇல் முத்தி - பேரொளிவடிவாகி என்றும் அழியாதுநிற்பதாகிய மோட்சத்தை, பெறுவார் - அடைவார்கள்: என - என்று (இவ்வாறு), சுருதி தொகைகள் - பெருந்தொகுதியாயுள்ள வேதங்கள், உரைத்த - சொல்லி யுள்ளன; (எ - று.)

பகவச்சரித்திரமாகிய ஸ்ரீராமாயணத்தைப் பாராயணஞ்செய்வோர்க்கு இகலோக ஐசுவரியங்களில் ஒன்று தவறாமல் எல்லாம் கிடைப்பதோடு

பார்லௌகிகமூன மோட்சவின்பமும் கிடைக்கு மென்பது, பல கிளைகளாக வுள்ள வேதங்களிலும் ஏற்பட்டுள்ள பொருளாகுமென்பதாம். அறுசீராசிரிய விருத்தம். (கசு)

உ0. இனையநற் காதை முற்று மெழுதினோர் வியந்தோர் கற்றோ
ரனையது தன்னைச்சொல்வோர்க் கரும்பொருள் கொடுத்துக் கே
கனைகடற் புடவி மீதே காவலர்க் கரசாய் வாழ்ந்து [ட்டோர்
வினையம தறுத்து மேலாம் விண்ணவன் பதத்திற் சேர்வார்.

(இ - ள்.) இனைய நல் காதை முற்றுஉம்-இப்படிப்பட்ட சிறந்த இராம சரித்திரம் முழுவதையும், எழுதினோர் - எழுதினவர்களும், வியந்தோர் - கொண்டாடினவர்களும், கற்றோர் - படித்தவர்களும், அனையது தன்னை சொன்னோர்க்கு அரும் பொருள் கொடுத்து கேட்டோர் - அந்த இராமசரித்திரத்தைச் சொன்னவர்க்கு அருமையான பொருளைக் கொடுத்துக் கேட்டவர்களும்,—கனை கடல் புடவிமீது - ஒலிக்கின்ற கடலாற்சூழப்பட்ட இந்தப்பூமியின்மீது, காவலர்க்கு அரசு ஆய்-அரசர்க்கரசராகுஞ் சக்கரவர்த்திகளாகி, வாழ்ந்து - (பெருஞ்சிறப்புடன்) வாழ்ச்சிபெற்று, வினையம் அது அறுத்து-(மோட்சத்தைப்பெறுதற்குத் தடையாகுந்) தீவினையையும் ஒழித்து, மேல் ஆம் விண்ணவன் பதத்தில்-(எல்லாப்பதவியினும்) உயர்ந்ததான திருமாலின்ஸ்தானமாகிய பரமபதத்தில், சேர்வார்—; (எ - று.)

இராமாயணசரித்திரத்தை யெழுதுதல் முதலிய செய்தோரும், இம்மைமறுமைப்பயன்களை முற்றிலும் பெறுவ ரென்பதாம். இதுவும் - அறுசீராசிரியவிருத்தம். (உ0)

---

இராமாயணத்தில் உத்தரகாண்டத்திற்குமுட்படக் காண்டம் படலம் முதலியவற்றைக்குறிக்கும் பாடலொன்று சிலபிரதியிற் காணப்படுகின்றது; அது வருமாறு:—

கரைசெறிகாண்டமேழுகதைகளாயிரத்தெண்ணூறு
பரவுறுசமரம்பத்துப்படலநூற்றிருபத்தெட்டே
புரைசெயும்விருத்தம்பன்னீராயிரத்தொருபத்தாறு
வரமிகுகம்பன்சொன்னவண்ணமுந்தொண்ணூற்றாறே.

---

# கம்பராமாயணம்.

கம்பர் செய்த ராமாயணம் என விரியும். ராமாயணம் என்ற வடசொல் ராம அயந என்ற இரண்டுமொழி சேர்ந்த தீர்க்கசந்தி: இது ஒன்றற்கு இயற்பெயராதலால், வடநூல்விதிப்படி ராமாயணம் என நிலைமொழியின் ரகாரத்தை நோக்கி வருமொழியின் நகாரம் ணகாரமாயிற்று. தனது நற்குணநற்செய்கைகளினாலும் திருமேனியழகினாலும் எல்லாரையும் மகிழ்விப்பவன் என்பது, 'ராம' என்னுஞ் சொல்லுக்குப் பொருள்; அயநம்-அறிவிப்பது: ஆகவே, இராமகதையைத் தெரிவிக்கும் நூல் என்பது திரண்டபொருள். அயநம் - இடம், அல்லது விஷயம் எனப் பொருள்கொண்டு, இராமனை விஷயமாகவுடைய நூலென்று கூறுதலும் உண்டு. ராமா அயநம் என்றுபிரித்து, சீதையை அறிவிக்கும் பிரபந்த மென்றும் சிலர் பொருளுரைத்திருக்கின்றனர்; [ராமா-சீதை.] ராமாயணம் என்பது - முதலில் வால்மீகி முனிவர் செய்த நூலுக்கு இயற்பெயராய்ப் பின்பு அதன்வழிநூலாகிய இத்தமிழ்நூலுக்கும் பெயராகி, வால்மீகிராமாயணத்தினும் வேறுபாடுவிளங்கக் கம்பராமாயணமென்று வழங்குவதாயிற்று. கம்பர் இந்நூற்கு, 'இராமாவதாரம்' எனப் பெயரிட்டன ரென்ப.

இந்நூல், பெருங்காப்பியமாம்; பெருங்காப்பிய விலக்கணத்தை, "பெருங்காப்பியநிலை பேசுங்காலை, வாழ்த்துவணக்கம் வருபொருளிவற்றினொன், றேற்புடைத்தாகி முன்வரவியன்று, நாற்பொருள்பயக்கு நடைநெறித்தாகித், தன்னிகரில்லாத் தலைவனையுடைத்தாய், மலைகடலாடு வளநகர்பருவ, மிருசுடர்த்தோற்ற மினையனபுனைந்து, நன்மணம்புணர்தல் பொன்முடிகவித்தல், பூம்பொழினுகர்தல் புனல்விளையாட, றேம்பிழிமதுக்களி சிறுவரைப்பெறுதல், புலவியிற்புலத்தல் கலவியிற்களித்தலென், றின்னனபுனைந்த நன்னடைத்தாகி, மந்திரந்தூது செலவிகல்வென்றி, சந்தியிற்றொடர்ந்து சருக்கமிலம்பகம், பரிச்சேதமென்னும் பான்மையின்விளங்கி, நெருங்கியசுவையும் பா[வா]வமும்விரும்பக், கற்றோர்புனையும் பெற்றியதென்ப" என்பதனாலறிக. தொல்காப்பியனார் "இழுமென்மொழியான் விழுமியதுநுவலினும், பரந்தமொழியா னடிநிமிர்ந்தொழுகினும், தோலெனமொழிப தொன்மொழிப்புலவர்" என்னுஞ் சூத்திரத்தால், 'அறம்பொருள் இன்பம்வீடென்னும் விழுமியபொருள்பயப்பப் பழையதோர்கதைமேற்கூறின் அது தோலாம்' என்று கூறினமையால், இத்தொடர்நிலைச்செய்யுள் அங்ஙனம்வந்த தோலாமெனவுணர்க.

இதிகாசம் புராணம் என்ற பகுப்பு இரண்டனுள், இராமாயணம் இதிகாசமாம்; மகாபாரதமும் அப்படியே. உபதேசபரம்பரையில் வந்த ஒருவருடைய பழையசரித்திரத்தைப் பிரதானமாக எடுத்துப் பலகிளைக்கதைகளோடுபுணர்த்துவிரித்துக்கூறும் நூல் இதிகாசமென்றும், உலகத்தின்தோற்றம், ஒடுக்கம், முனிவர்கள் அரசர்கள் மரபு, அவர்கள் சரித்திரங்கள், மநுவந்தரம் என்னும் ஐந்துவிஷயங்களை விரவிக்கூறும் நூல் புராணமென்றும்

வேறுபாடு உணரத்தக்கது: [இதிகாசம் - பழைய ஒருவரலாற்றை விரித்துக் கூறும் நூல். புராணம் - மேற்குறித்த ஐந்து இலக்கணங்களும் அமையப் பழைய பல வரலாறுகளைக் கூறும் நூல்.]

முதனூலாகிய வடமொழிவால்மீகிராமாயணத்தோடு; அதன் வழிநூலாகிய இத்தமிழ்ராமாயணம் சிற்சில்விடத்துச் சிறிது சிறிது வேறுபடுதலும் உண்டு. அது, "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி, யழியா மரபினது வழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கணவிதிபற்றிப் பிறநூல்மேற்கோள்கொண்டாவது தமதுகற்பனாசக்திகொண்டாவது அமைக்கப்பட்டதெனக்கொள்க.

இராமாயணத்தை முதலில் வடமொழியிற் செய்தவர், வால்மீகி மகாமுனிவர். இவர் ஸ்ரீராமபிரான் பூலோகத்திலெழுந்தருளியிருக்கையிலேயே இராமாயணம் முழுவதையுஞ் செய்தருளி, அவர் அசுவமேதயாகஞ்செய்யத் தொடங்கிய சந்தர்ப்பத்தில் அவர்சந்நிதியிலே அவர் குமாரர்களான குசலவர்களைக்கொண்டு அந்நூலை அரங்கேற்றினர். ஆனல், பாலகாண்டம் முதல் யுத்தகாண்டமீறாக ஆறுகாண்டங்களும் உத்தரகாண்டத்தில் அசுவமேதமளவுந்தான் இராமபிரான் சபையிற்கேட்டனர். உத்தரகாண்டத்தில் எதிர்காலவரலாற்றை முனிவர் ஞானக்கண்ணினல் முந்தியறிந்து கூறியதான மற்றைப் பகுதியை, அப்பெருமான், பிரமதேவன்சொன்னபடி ஏகாந்தத்திற் கேட்டனர்.

## தற்சிறப்புப்பாயிரம்.

"தெய்வவணக்கமுஞ்செயப்படுபொருளு,மெய்தவுரைப்பது தற்சிறப்பாகும்", "ஆக்கியோன்பெயரே வழியேயெல்லை, நூற்பெயர்யாப்பே நுதலிய பொருளே,கேட்போர்பயனோடா யெண்பொருளும், வாய்ப்பக்காட்டல் பாயிரத்தியல்பே; காலங்களனே காரணமென்றிம், மூவகையேற்றி மொழிநருமுளரே" என்பவாதலால்,கவி, தெய்வவணக்கம் முதலியவற்றுட் சிலவற்றை வெளிப்படையாகவும் சிலவற்றைக் குறிப்பாகவும் கூறுகின்றனரென்க. (கீழ் வந்த காப்பு முதலியன பிறர் செய்தன; இனி வருபவை, கவி தாமே செய்தவை.)

**க.—இதுமுதல் மூன்றுகவிகள்-கடவுள்வணக்கம்.**

**உலகம் யாவையுந் தாமுள வாக்கலு**
**நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா**
**வலகி லாவிளை யாட்டுடை யாரவர்**
**தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே.**

(இ - ள்.) உலகம் யாவைஉம் - எல்லா வுலகங்களையும், தாம் - தாமே, உள ஆக்கல்உம் - படைத்தலும், நிலைபெறுத்தல்உம் - காத்தலும், நீக்கல்உம் - அழித்தலும், (ஆகிய மூன்றையும்), நீங்கலா - நீங்காத, அலகு இலா விளையாட்டு - முடிவில்லாத விளையாட்டுக்களை, உடையார் - உடையவர் எவர் - எவரோ, (அவரே), தலைவர்-(இவ்வுலகங்கட் கெல்லாம்) தலைவரான

டவுள்ளாவர்: அன்னவர்க்குஏ - அப்படிப்பட்ட கடவுட்கே, நாங்கள் சரண் - ங்கள் அடைக்கலம்; (எ - று.)

இதனால், கவி, தாம் எடுத்துக்கொண்ட நூல் இனிது முடிதற்காகப் பெரியோர்மரபின்படி முதலில் மங்களாசரணஞ் செய்யவிரும்பி, வாழ்த்து ணக்கம் வருபொருளுரைத்தல் என்னும் மூவகைமங்களங்களுள் வணக்க ாகிய மங்களத்தைச் செய்கின்றார். படைப்புக் காப்பு அழிப்பு என்னும் மத்தொழில்கட்கும் முதற்காரணமான கடவுளை யடைவோ மென்றவாறு. மத்தொழில்களைக் கூறியது, அந்தர்யாமியாயிருக்கை அநுக்கிரகிக்கை யென்ற எஞ்சிய இரண்டற்கும் உபலட்சணம். இவைகளை விளையாட்டு என் து - இத்தொழில்கள் அக்கடவுட்குச் சிறிதும் சிரமமில்லாமல் மிக எளி ாகச் செய்யுமாறு இருத்தலினால். இத்தொழில்கள் நித்தியமாக நிகழ்வன ாதலால்,'அலகிலா' என்று அடைமொழி கொடுக்கப்பட்டது. எம்பெருமா ாது தொழில்ஐவகைப்படுமென்று நூல்கள் அளவிட்டுக்கூறியிருத்தலினால், லகிலா என்பதற்கு - எண்ணிக்கையி லடங்காத என்று உரைத்தல் சிறப் ன்று. அன்னவர்க்கே சரண் ஆங்கள் என்று பிரித்து, ஆகுங்கள் என்பது ஆங்கள்' எனத்திரிந்ததாகக்கொண்டு,அப்படிப்பட்டவரையேசரணமாகப்பற் ங்கோ ளென்று உலகத்தாரைநோக்கி உபதேசிப்பதாகக் கொள்ளவுமாம். ல்லாநூற்கும் மங்கலமொழி முதலில்வகுத்துக்கூறவேண்டுமென்பது இலக் ணமாதலால், 'உலகம்' என்று தொடங்கினார்; இச்சொல் மங்கலமாதலை சீரெழுத்துப் பொன்பூதிருமணிநீர் திங்கள் சொற்,கார்பரிதியானை கடலுல ம் - தேர்மலைமா, கங்கைநிலம் பிறவும் காண்டகைய முன்மொழிக்கு,மங் லமாஞ் சொல்லின் வகை" என்றதனாலும் அறிக. (க)

உ. [1]சிற்கு ணத்தர் தெரிவரு நன்னிலை
யெற்கு ணர்த்தரி தெண்ணிய மூன்றனுண்
[2]முற்கு ணத்தவ னேமுத லோனவ
னற்கு ணக்கட லாடுத னன்றரோ.

(இ - ள்.) சித்குணத்தர்-அறிவாகிய குணத்தைப் பெற்றவர்களும்[ஞான ன்களும்], தெரிவு அரு - அறிந்துசொல்லமுடியாத, நல் நிலை - சிறந்த அக்கடவுளின்து) தன்மையை, உணர்த்த - (பிறரறியும்படி) சொல்லுவது, ற்கு அரிது - எனக்கு முடியாததாகும்: (ஆயினும்), எண்ணிய மூன்ற ள் - (சாஸ்திரங்கள்) மதித்துக்கூறுகின்ற (சத்துவம் இரசசு தமசு என்ற) ன்று குணங்களுள், முன் குணத்தவன்ஏ - சிறந்தகுணமாகிய சத்துவ ணத்தையுடைய திருமாலே, முதலோன் - (மும்மூர்த்திகளுள்ளும்) முதல் ர்த்தியாவன்; அவன் - அக்கடவுளுடைய, நல் குணம் கடல் - மங்கள ணங்களாகிய கடலிலே, ஆடுதல் - மூழ்குதல், நன்று - நன்மையைத்தருவ ம்; (எ-று.)—அரோ-ஈற்றசை.

சத்துவம் இரசசு தமசு என்னும் மூன்றுகுணங்களையும் முறையே கொ ட திருமால் பிரமன் சிவன் என்னும் மும்மூர்த்திகளுள் சத்துவகுண

ஆசை பற்றி யறையலுற் றேன்மற் றிக்
காசில் கொற்றத் திராமன் கதையரோ.

(இ - ள்.) ஒரு பூசை - ஒரு பூனையானது, ஓசை பெற்று - ஒளியைப் பெற்று, உயர் - சிறந்துள்ள, பாற்கடல் - திருப்பாற்கடலை, உற்று - அடைந்து, முற்றஉம் - (அக்கடலிலுள்ள) பால் முழுவதையும், நக்குபு - நக்கிப் பருகுவதற்கு (ஆசைகொண்டு), புக்குஎன-புகுந்தாற்போல, காசு இல்கொற்றத்துஇராமன்-குற்றமற்ற வெற்றியையுடையஇராமபிரான து, இ கதை-இந்தக் கதையை [ராமாயணத்தை], ஆசை பற்றி-ஆசையினால், அறை ல் உற்றேன் - சொல்லத் தொடங்கினேன்; (எ - று.)

பாற்கடலின் பால்முழுவதையும் நக்கிப் பருகுதல் ஒரு பூனை யாதவாறுபோல இவ்விராமாயணம் முழுவதையும் பாடுதல் என யாத செயலாயிருந்தும், 'பிறர் என்னைப்பார்த்து எளனம் செய்யப் ளே' என்பதையும் கருதாது, ஆசை வெட்கமறியாதென்ற ப கேற்ப இதனைப் பாடத்துணிந்திட்டேனென்று அவையடக்கங் பா று. நக்குபு - செய்புஎன்னும்வாய்பாட்டுவினையெச்சம், செயவெ பொருளது. ஓசை-ஓஜஸ். ஓசை-ஒலியுமாம். பி - ம்:—மற்றவ்வேசில்.

ரு. நொய்தி னொய்யசொ னூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமர மேழ்தொளை
யெய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே.

(இ - ள்.) வைத வைவின்-(பெரியோர்கள்) சபித்த சாபவார்த்தையிலேபோல, மராமரம் ஏழ் - ஏழுமராமரங்களும், தொளை எய்த - தொளையாய் கும்படி, எய்தவற்கு-(அம்பைத்) தொடுத்துவிட்ட இராமன்பொருட்டு, எ த, திய - (தெய்விகமாகத்) தோன்றிய, மா கதை - சிறந்த இச்சரித்திரத்தை த, செய்த - (சுலோகங்களாலியன்ற இராமாயணகாவியமாகச்) செய்துமுடித்த து, செய் தவன் - செய்துமுடிந்த தவத்தையுடைய வால்மீகிமுனிவன தில் சொல் - வாக்கு, நின்ற - வழங்கிநிலைபெற்றுள்ள, தேயத்து - தேசத்தானே, நொய்தின் நொய்ய-மிகவும்இழிந்த [அர்த்தபுஷ்டியில்லாத], ெ னன்; சொற்களைக்கொண்டு, நூற்கல் உற்றேன் - நூல் செய்யத்தொடங்கிடே எனை - (இது) என்னபேதைமை! (எ - று.)

தவச்சித்தியடைந்த வான்மீகிமுனிவன் தெய்வாநுக்கிரகம்பெற் று இராமன்விஷயமாகமிக்கபொருட்பொலிவுள்ளஸ்ரீராமாயணகாவியத்தை செய்து பரவச்செய்துள்ளதனால், அவ்விராமாயணம் வழங்கும் இடத்தில் சிறிதும் பொருட்சிறப்பில்லாத சொற்களைக்கொண்டு நான் புவிபாடுதல் ன் தைமை! என்று தமதுசெயலைக் கவி மிகவும் தாழ்த்தி ம க்கூறுகின்றனர். "வைவனமுனிவர்சொல்லனையவாளிகள்" என்மன்ப என்றனர். லும் சாபத்தை வாளிக்கு உவமையாக்கூறுவர்.சை ெ தைப்படலத்தி எடுத்து - என்னை யானே வைதுகொண்ட வசை பு வைவின் என்று ரினுமாம். மரா

மரம் ஏழ்தொளை எய்த எய்தவற்கு வைத வைவின் எய்தியஎன்று இயைத்து-வைத வசவினாலே[வசவே வியாசமாக]இராமபிரான்பொருட்டுத் தோன்றிய என்று உரைத்தலும் சிறக்கும்; தம்மிடத்துக்குவந்த நாரதமுனிவன் இராம பிரானது சரித்திரத்தைச்சுருக்கமாகக் கூறக் கேட்டறிந்த வான்மீகி அந் நாரதமுனிவன்சென்றதும் மாத்தியான்னிகத்தின்பொருட்டுக் கங்கையைச் சார்ந்த தமசைநதியைச் சேர்கையில், அங்கே அப்போது ஆணும்பெண்ணு மாகிக் கூடியிருந்த கிரௌஞ்சப்பறவையிரண்டனுள் ஆண்பறவையைக் கொன்று பேடையைக் கதறச்செய்த வேடனைநோக்கி † "மாநிஷாத! ப்ர திஷ்டாந் த்வம் அகமஸ் ஶாஶ்வதீஸ் ஸமா꞉ - யத் க்ரௌஞ்சமிதுநா தேகம் அவதீ꞉ காமமோஹிதம் [வேடனே! நீ க்ரௌஞ்ச மிது னத்தினுள் காமமயக்கங்கொண்ட ஆண்பறவையைக்கொன்றதனால் என்றும் நற்கதியை யடையமாட்டாய்]" என்று கூறிய வாக்கியமே சுலோகமாய்நிற்க, பிறகு ஆச்சிரமஞ்சேர்ந்து அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு முனிவன் அதனையே சிந்தித்துக்கொண்டிருக்கையில், பிரமதேவன்தோன்றி, 'எம்மு டைய கட்டளையினால் சரசுவதி உமதுநாவிலிருக்கவேதான் இந்தச் சுலோ கம் வந்தது; இதையே முக்கியமாகக்கொண்டு இராமாயணத்தைச் செய்யும்' என்று அநுக்கிரகித்துக் கட்டளையிட்டுச்செல்ல, அந்த வால்மீகிமுனிவன் இராமாயணத்தைச் சுலோகங்களினாற்பாடிமுடித்தானென்பது,வரலாறு. (ரு)

சு. வைய மென்னை யிகழவு மாசெனக்
கெய்த வும்மிதி யம்புவ தியாதெனிற்
பொய்யில் கேள்விப் புலமையி னோர்புக
றெய்வ மாக்கவி மாட்சிதெ ரிக்கவே.

(இ - ள்.) வையம் - கற்றறிந்த பெரியோர், என்னை இகழஉம் - (இந்த அற்பபுத்தியான் இராமாயணத்தைப் பாடத்தொடங்கினானே! என்று) என்னை ஏளனஞ்செய்யவும், மாசு எனக்கு எய்தஉம் - (அதனால் மிக்க) அபகீர்த்தி எனக்கு உண்டாகவும், இது - இந்தராமசரித்திரத்தை, இயம்புவது-(யான்) சொல்வதற்குக்காரணம், யாது எனில்—, பொய் இல் கேள்வி புலமையி னோர் - குற்றமற்ற நூற்கேள்விகளும் பாண்டித்யமு முடையவர், புகல் - (இராமபிரான் விடயமாகச்) சொல்லியுள்ள, தெய்வம் மா கவி - தெய்வத் தன்மையுள்ள சிறந்த பாடல்களின், மாட்சி - பெருமையை, தெரிக்கஏ - தெரிவிப்பதற்கே (யாகும்); (எ - று.)

பிறர் ஏளனஞ்செய்யவும் 'இது என்னபாடல்!' என்று எனது பாடலைப் பிறர்பழித்துக்கூறவும் நான் இந்த இராமாயணம் பாடியது, நிழலினருமை

† வேடனைவைதலைத் தெரிவிக்கும் இந்தச் சுலோகம் "இலக்குமியை மார்பிற்கொண்டிருப்பவனே! க்ரௌஞ்சமிதுனம்போன்ற ராவணன் மண் டோதரி என்ற இருவருக்குள் காமமோகிதனான ஒருத்தனை [இராவணனை]க் கொன்றாயாதலால், நீ பல்லாண்டுகளில் பெரும்புகழ் பெறுவாய்" என்று இராமபிரானைவாழ்த்தியதாக ஒரு பொருளையும் கொண்டதாதல் காண்க.

வெயிலிலிருந்தவர்க்கே நன்குதெரிதல்போலக் கல்விகேள்விகளில்நிறைந்து தெய்வாநுக்கிரகம்பெற்ற பெரியோரின் பாடலின்மேன்மையைத்தெரியும் படி செய்தற்பொருட்டே யென்பதாம். பொய்யில்கேள்விப்புலமையினோர் என்றதொடர், வான்மீகியைக்குறிக்குமென்க: இனி,இராமபிரான் விஷயமாகக் காவியஞ்செய்துள்ள பெரும்புலவரெல்லாரையுங் காட்டுமென்றலு மொன்று. எய்தவும் மிது - விரித்தல். (சு)

ஏ. துறைய டுத்தவி ருத்தத்தொ கைக்கவிக்
குறைய டுத்தசெ விகளுக் கோதின்யாழ்
நறைய டுத்தவ சுணநன் மாச்செவிப்
பறைய டுத்தது போலுமென் பாவரோ.

(இ - ள்.) ஓதில் - ஆராய்ந்துசொல்லுமிடத்து,—துறை அடுத்த - பல விகற்பங்களைக்கொண்ட, விருத்தம் தொகை - பாக்களின் கூட்டங்களினு லியன்ற, கவிக்கு - பாடல்களுக்கு ,உறை அடுத்த-உறை விடமாகப்பொருந்திய, செவிகளுக்கு - (அறிஞருடைய) காதுகளுக்கு, என் பா - என்னுடைய பாடலானது,—யாழ் நறை அடுத்த அசுணம் நல் மா செவி - யாழிசையாகிய தேனைப் பருகுகின்ற அசுணமென்ற சிறந்த [இசையினால் மகிழுந்தன்மை யுள்ள] விலங்கின் செவிக்கு, பறை அடுத்தது - பறையொலி சேர்ந்ததை, போலும்-;(எ-று.)-அரோ - ஈற்றசை.

பேரறிஞரின் பலதிறப்பட்ட இனிய கவிகளைக் கேட்டு இன்புறும் பெரியோருடைய செவிகளில் என்னுடைய புன்கவி விழுந்தால், அசுணமாவின் செவியில் பறையொலி வீழ்வதை யொத்து வெறுப்பையும் வருத்தத்தையும் உண்டாக்குமென்பதாம். அசுணம்-இசையறிவிலங்கு; இது இனியயாழோசைகேட்டு இன்புறுதலும் பறையொலிகேட்டு உயிர்நீப்பது மான தன்மை யுள்ளதென்பதை, "இன்னளிக் குரல்கேட்ட அசுணமா, வன்னளாய்," "பறைபட வாழா வசுணமா" என்பவற்றா லறிக. இதனை, இசையறிபறவை யென்பர், பிங்கலந்தையார். விருத்தம் என்ற வடசொல், பாக்கட்குப் பொதுப்பெயராக வழங்கும். துறை - நூல் என்றும், கூறும்பொருளென்றும் கூறுவாரு முளர். (எ)

அ. முத்த மிழ்த்துறை யின்முறை போகிய
வுத்த மக்[1]கவி கட்கொன்று ணர்த்துவென்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் [2]பன்னப்பெ றுபவோ.

(இ - ள்.) மு தமிழ் துறையில்-(இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னப்படும்) மூவகைத் தமிழ்நூல்களிலும்; முறை போகிய - கிரமமாகக் கற்று நன்குதேர்ந்த, உத்தமர் கவிகட்கு - சிறந்தவரான வித்துவான்கட்கு, ஒன்று உணர்த்துவென் - ஒன்றுசொல்லுவேன்; (அது யாதெனில்), - பித்தர் சொன்னஉம் - பைத்தியம்பிடித்தவர் சொன்னவைகளும், பேதையர் சொன்னஉம் - மூடர் சொன்னவைகளும், பத்தர் சொன்னஉம் - பக்தியுடை

யவர் சொன்னவைகளும், பன்ன பெறுபவோ - ஆராய்தற்கு உரியனவோ? [அல்ல என்றபடி]; (எ - று.)

பித்தர் மனத்தெளிவில்லாதவராதலாலும், பேதையர் பகுத்தறிவில்லாதவராதலாலும், பத்தர் பரவசராக இருப்பவராதலாலும் அவர்கள் சொல்லியவற்றில் குற்றநற்றங்களை யாராய்தல் மணற்சோற்றில் கல்லாராய்தலோடொக்குமாதலால், இராமகதையைக் கூறவேணுமென்ற பித்தும் இயற்கையான பேதைமையும் அவ்விராமபிரான்திறத்துப்பக்தியும் கொண்டுள்ள என் சொல்லிலும் குணதோடங்களையாராய்தல் தகுதியன்றென்பதாம். பின்னிரண்டடிகள் - உபமேயத்தையுணர்த்திய பிறிதுமொழிதலணியாம். ஓகாரம்-வினாவகையால், எதிர்மறையையுணர்த்திற்று. உத்தமக்கவி - "சிலவிகாரமாமுயர்திணை." பி - ம்:—[1]கவிஞர்க்கு. [2]பன்னப்படுபவோ. (அ)

கூ. அறையு மாடரங் கும்[1]படப் பிள்ளைக
டறையிற் கீறிடிற் றச்சருங் காய்வரோ
விறையு ஞானமி லாதவென் புன்கவி
முறையி னூலுணர்ந் தாரு. முனிவரோ.

(இ - ள்.) அறைஉம் - சிறுவீடுகளும், ஆடு அரங்குஉம்-ஆடுதற்கு உரிய நர்த்தனசாலைகளும், (முதலியவற்றின் உருவம்), பட-தோன்ற, பிள்ளைகள்—, தறையில் - நிலத்திலே, கீறிடில் - கீற்றுவரைந்தால், (அவற்றைக்கண்டு), தச்சர்உம் - (சிற்பநூலில் வல்லவரான) சிற்பிகளும், காய்வர்ஓ - (இவர்கள் கீறியவை சிற்பசாஸ்திரத்துக்குப் பொருத்தமாக இல்லையென்று) கோபித்துக் கொள்வார்களோ? [கோபித்துக் கொள்ளமாட்டார்கள்]; (அதுபோலவே), இறைஉம் ஞானம் இலாத - சொற்பமேனும் நூலுணர்ச்சியில்லாத, என் புன் கவி-என்னுடைய இழிவான பாடல்களைக்கண்டு, முறையில் நூல் உணர்ந்தார்உம் - முறைபிறழாது நூல்களையோதியுணர்ந்தபெரியோர்களும், முனிவர்ஓ-கோபிப்பார்களோ? [கோபிக்கமாட்டார்கள் என்றபடி]; (எ-று.)

சிறுபிள்ளைகள் அறை முதலியவற்றைக் கீறக்கண்டு சிற்பிகள் இவை நூல்முறைக்கு ஒத்தனவல்ல என்று சினவாது சிறுபிள்ளைகள் கீறியவையென்று உபேட்சித்திருப்பதுபோல, என்னுடைய புன்கவிகளைக்காணும் பெரியோரும் உபேட்சையாக இருப்பரேயன்றிச் சினங்கொள்ளாரென்பதாம். எடுத்துக்காட்டுவமையணி. தறை=தரா: பி-ம்:— [1]மடப்பிள்ளைகள்.

கய.—இதுவும், அடுத்த கவியும்-நூல்வரலாறு.

[1]தேவ பாடையி னிக்கதை செய்தவர்
மூவ ரானவர் தம்முளு முந்திய
நாவி னாருரை யின்படி நான்றமிழ்ப்
பாவி னாலிது ணர்த்திய பண்பரோ.

(இ - ள்.) நான்—, தமிழ்பாவினால்-தமிழ்ப்பாடலினால், இது உணர்த்திய - இவ்விராமாயணத்தைச்செய்த, பண்பு-தன்மை,—தேவபாடையின் - வடமொழியிலே, இ கதை செய்தவர்-இந்த இராமாயணத்தையருளிச்செய்த

வர்கள், மூவரானவர்தம்முள்உம் - மூன்றுபேர்களிலும், முந்திய நாவினார்-முதன்மையான நாவல்லமையையுடையரான வால்மீகிமுனிவர், உரையின் படி-உரைத்துள்ளவகையாகவேயாம்; (எ - று.)

வடமொழியில் இராமகதையைச்செய்த இருடியர் மூவருள்ளும் மேம்பட்ட வான்மீகிமுனிவன் செய்தபடியே யான் இந்நூலைச் செய்தேனென்றவாறு. பிரமதேவன் அநுக்கிரகத்தினால் நாமகள் நாவிலிருந்து முதன்முதல் ஸ்லோகத்தைச் சொல்வித்ததனாலும் இராமசரித்திரத்திற் சிறிதும் விடாமல் எல்லாவற்றையும் உணருமாறு பிரமதேவன் ஞானக்கண்ணை இவர்க்கு அளித்ததனாலும் வான்மீகியை 'மூவரானவர்தம்முளும் முந்தியநாவினார்' என்றார். மூவர் - வான்மீகி வசிட்டர் போதாயனர். வசிட்டர் செய்தது வாசிஷ்டராமாயணமெனவும், போதாயனர் செய்தது போதாயனராமாயணமெனவும் வழங்கும். வசிட்டர்க்குப்பதிலாக வியாசர்என்றுகூறி, வியாசர் செய்த ராமாயணம் அத்யாத்மராமாயணம் என்றுகூறுவாருமுளர். மூவரானவர்தம்முளும் முந்தியநாவினார் என்பதற்கு - மூன்றுஇருடியரினும் மேம்பட்டநாவையுடைய ஆழ்வார்களென்று பொருள் கூறினரு முளர். பி - ம்:—[1]தேவர்பாடை. (௧0)

௧௧. நடையி னின்றுயர் நாயகன் றோற்றத்
தினிடைநி கழ்ந்தவி ராமா வதாரப்பேர்த்
தொடைநி ரம்பிய [1]தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயிற் றந்ததே.

(இ - ள்.) நடையில் நின்று - நல்லொழுக்கத்தில் நிலைபெற்றிருந்து [நல்லொழுக்கத்தைத் தாபித்து], உயர் - மேன்மைபெற்ற, நாயகன் - கடவுளாகிய திருமாலின், தோற்றத்தினிடை - அவதாரங்களுள், நிகழ்ந்த - (ஒன்றாக) நிகழ்ந்த, இராமாவதாரம் - இராமாவதாரத்தைக்குறித்த, பேர் - புகழ் பெற்ற, தொடை நிரம்பிய - செய்யுள் நிரம்பப்பெற்ற, தோம் அறு மா கதை-குற்றமற்ற சிறந்த கதை, சடையன் வெண்ணெய் நல்லூர்வயின் - சடையப்பவள்ளலின் திருவெண்ணெய் நல்லூரில், தந்தது - செய்யப்பட்டது; (எ-று.)

இராமாயணமென்ற இந்தத்தமிழ்நூல், திருவெண்ணெய்நல்லூரிற் செய்து முடிக்கப்பட்ட தென்பதாம். இராமாவதாரம் பேர் - இராமாவதாரமென்று பேர்பெற்ற, நாயகன் தோற்றத்தினிடைநிகழ்ந்த கதையென்று உரைத்து, இந்நூற்கு இராமாவதாரமென்பது பெயரென்று கொள்ளுதலும் ஒன்று. நடையினின்றுயர் என்பதற்கு - முக்குணங்களிற் சத்துவகுணச் செயலாகிய காத்தலென்ற தொழிலை மேற்கொண்டு மேன்மைபெற்ற என்று உரைப்பாரு முளர். பி - ம்:—[1]தொல்லைநன். (௧௧)

௧௨.—நூற்பயன்.

நாடிய பொருள்கை கூடு ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறு[1]பட் டழிய வாகை
சூடிய சிலைவி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே

(இ - ள்.) நீடிய அரக்கர் சேனை - மிகுதியான இராட்சசசேனை, நீறு பட்டு அழிய - சாம்பராய் நசித்துப்போக, வாகை சூடிய - வெற்றிமாலையை யணிந்த, சிலை - (கோதண்டமென்னும்) வில்லையேந்திய, இராமன் - இராம பிரானது, தோள் வலி - புயவலிமையை, கூறுவோர்க்கு - பாராட்டியெடுத் துச்சொல்பவர்கட்கு,—நாடிய-(அவர்கள்) வேண்டிய, பொருள்-(சகலமான) பொருள்களும், கைகூடும் - கைவசமாகும்; ஞானம்உம் - மனத்தெளிவும், புகழ்உம் - கீர்த்தியும், உண்டாம்-சித்திக்கும்; (அவர்களை), வீடுஇயல் - மோக்ஷத்தையடைதற்குஏற்ற, வழியது-வழியை, ஆக்கும்-(புருஷகாரஞ்செய்து) உண்டாக்குகின்ற, வேரி அம் கமலை - நறுமணமுள்ள அழகிய தாமரையில் வாழ்பவளான இலக்குமியும், நோக்கும் - கடாட்சிப்பாள்; (எ - று.)

இராமபிரானதுசரித்திரத்தை யுணர்ந்துரைப்போர்க்கு, பொருள்முத லிய இம்மைப்பயனோடு புருஷகாரபூதையான இலக்குமிகடாட்சத்தாலே மறுமைப்பயனாகியமோட்சமும்சித்திக்குமென்க. சேதநனுடையகுற்றத்தைக் கண்டு எம்பெருமான் சீற்றங்கொண்டுநின்றநிலையில் அச்சேதநனதுகுற்றத் தைக் குணமாகஏற்பித்தல் முதலிய வகைகளால் எம்பெருமானுடைய திரு வுள்ளத்தை இரங்கப்பண்ணுகின்ற தன்மைய ளாதலால், பிராட்டியை 'வீடியல்வழியதாக்கும் வேரியங்கமலை' என்றார். நாடியபொருள் என்பது- கல்விப்பொருளும் செல்வப்பொருளும்: அவைகள் கைகூடியதால், முறையே, ஞானமும்புகழும், வீடியல்வழியும் வேரியங்கமலைநோக்கும் உண்டாகு மென உரை கூறுவாருமுளர்: இன்னும் பலபடியாக இச்செய்யுட்குப் பொருள் கூறுதலுண்டேனும், அவை ஆசிரியர்கருத்துக்கு ஒவ்வாமையோடு இடர்ப் பட்டுக்கூறுதலாய் முடியு மா த லா ல், ஈண்டுக் கூறப்படவில்லை. அடி யவன் பாராட்டியடைதற்கு உரியன எம்பெருமானது திருவடிகளேயாயி னும் தாடகைவதம்தொடங்கி இராவணன்வதையளவும் ஸ்ரீராமபிரானது தோள்வலியே இவ்விராமாயணகாப்பியம் முழுவதிலும் கூறப்படுவதாலும், அத்தோள்வலி நம்முடையபிரதிபந்தகங்களையும்போக்கு மென்ற கருத்தா லும், 'தோள்வலிகூறுவோர்க்குப் பொருள்முதலியன கைகூடும்' என்றார். 'நாடியபொருள்' என்றதனால் - பொருளின்பங்களும், 'ஞானமும்புகழும்' என்றதனால் - அறமும், 'வீடியல்வழியதாக்கும்' என்றதனால் - மோக்ஷமும் ஆகிய நால்வகைப்புருடார்த்தங்களும் சித்திக்கு மென்று பயன் கூறியவாறு. 'வாகையென்பது - பகைமேற்சென்றுவென்றவர்அணியும் மாலை' என்று புறப்பொருளிலக்கணநூல் கூறுதலால், வாகைசூடியஎன்பதற்கு - வெற்றி மாலையைப்புனைந்த எனப்பட்டது. (கஉ)

தற்சிறப்புப்பாயிரம் முற்றிற்று

முதலாவது

# பாலகாண்டம்.

இராமாயணம், அந்தந்தப்பாகத்துச் சரித்திரத்தின் முக்கியமான விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களால், பாலகாண்டம் அயோத்தியாகாண்டம் ஆரணியகாண்டம் கிஷ்கிந்தாகாண்டம் சுந்தரகாண்டம் யுத்தகாண்டம் உத்தரகாண்டம் எனப்பெயர்பெற்ற ஏழுகாண்டங்களையுடையது. பாலகாண்டம் என்ற வடமொழித்தொடர்க்கு - கதாநாயகனான ஸ்ரீராமபிரானுடைய இளம்பிராயத்தில் நடந்த சரித்திரத்தை யுணர்த்தும் பாகம் என்பது பொருள். பாலனது சம்பந்தமான காண்டம் என விரிந்து, ஆறும்வேற்றுமைத் தொகையாம். பாலன் - பதினாறுபிராயத்துக்கு உட்பட்ட இளம்பருவத்தினன். இச்சொல் - இங்கு, இலக்கணையாய், பால்யசரித்திரத்தைக் குறித்தது. காண்டம் - கூட்டம்; இப்பொதுப்பெயர் - இங்கு, சரித்திரத்தின் ஒருபாகத்தை யுணர்த்துஞ் செய்யுட்களின் கூட்டமென்று சிறப்பாகக் கொள்ளப்பட்டு, ஒரு பெரும்பிரிவுக்குப் பெயராகவழங்கியது.

இக்காண்டம் - ஆற்றுப்படலம் முதல் பரசுராமப்படலம் ஈறாகப் பகுக்கப்பட்ட உ௨ - படலங்களை யுடையது. அவற்றுள்

## க.—ஆவது ஆற்றுப்படலம்.

ஆற்றைப்பற்றிய படலம் என விரியும். இரண்டாம்வேற்றுமை யுருபும் பயனும் உடன்தொக்கதொகை. காண்டம் என்றதற்குப்போலவே படலம் என்ற வடசொல்லுக்கும் கூட்ட மென்றே பொருளாயினும், இது - ஸங்கேதத்தால், இந்நூலுள் ஒரு பெரிய வகுப்பினுட்பட்ட சிறியபாகத்தைக் குறிக்கும்

க.—கவிக் கூற்று.

*ஆச லம்புரி யைம்பொறி வாளியுங்
காச லப்பு முலையவர் கண்ணெனும்
பூச லம்பு நெறியின் புறஞ்செலாக்
கோச லம்புனை யாற்றணி கூறுவாம்.

(இ - ள்.) ஆசு அலம் புரி - மிகவும் குற்றத்தைச்செய்கின்ற, ஐம் பொறி வாளிஉம் - (ஆடவர்களுடைய) பஞ்சேந்திரியங்களாகிய பாணங்களும், காசு அலம்பு முலையவர் கண்எனும் பூசல்அம்புஉம் - இரத்தினவாரங்கள் (ஒன்றோடொன்றுதாக்குண்டு) ஒலித்தற்குஇடமான தனங்களையுடையரானமகளிரின் கண்ணென்கிற போர்த்தொழிலமைந்த அம்பும், நெறியின் புறம் செலா - சன்மார்க்கத்துக்குப்புறம்பே [துன்மார்க்கத்திற்] செல்லாத, கோசலம் - கோசலநாட்டை, புனை - அலங்கரிக்கின்ற, ஆறு - சரயூநதியின், அணி - வர்ணனையை, கூறுவாம் - (இங்குச்) சொல்லுவோம்; (எ - று.)

நாட்டின்வளத்துக்கு இன்றியமையாதது மிக்கபுனலே யாதலாலும், அப்புனலைக் குறைவறத்தரக்கூடியது யாறே யாதலாலும், நாட்டின்சிறப்பைக் கூறுதற்குமுன்னர், கவி, யாற்றின்சிறப்பைக் கூறுகின்றார். கந்தபுராணத்தும் இங்ஙனமே கூறப்பட்டிருத்தல் காண்க.

தமக்குத் தோன்றிய விடங்களிலெல்லாஞ் சென்று பாவத்தைவிளைத்துக்கொள்ளுந் தன்மைய வாதலால், 'ஆசலம்புரி ஐம்பொறி' என்றார். குறித்த இலக்கிற் செல்லுந் தன்மையவாதலால், ஐம்பொறி, வாளியாக உருவகிக்கப்பட்டன. மேல், 'மூலையவர்கண்ணெனும் பூசலம்பும்' எனவருதலால், ஐம்பொறிஆடவருடையனவென்பது, பெறப்படும். 'ஐம்பொறிவாளியும் கண்ணெனும்பூசலம்பும் நெறியின்புறஞ்செலாக்கோசலம்' என்றது-தன்னிடத்து வாழும் ஆடவரும் மகளிரும் அக்கினிசாட்சியாக மணந்த தமது மனைவி கணவன்மாரிடத்தே தாம் அன்புசெலுத்தி இன்பமனுபவிப்ப தன்றி, பிறர் மனைநயத்தல் பரபுருஷரைச்சேர்த லென்ற தீச்செயலிற் செல்லாதிருக்குமாறு தடுக்குந் தன்மையது, அந்நாடு என்றவாறு. நிலத்தின் தன்மை நல்லொழுக்கத்திற்கும் தீயொழுக்கத்திற்கும் காரணமாமென்ற நூற்கொள்கை, இங்கு அறியத்தக்கது. கோசலமென்ற • வடசொல் - பிரமனை மகிழ்விப்பதென்று அவயவப்பொருள்படும். அலம் - மிகுதிப்பொருள் தந்த வடசொல். இனி, ஆசு-குற்றத்தில், அலம்புரி-சுழல்விக்கின்ற என்றும், ஆசலம்என்றதை வடசொல்லாகக்கொண்டு, "அந்தகராசலம்வந்தால்" என்ற இடத்துப்போல மிக்க சஞ்சலமென்றும் கூறினுமாம். நெறியின்புறம் - நன்னெறிக்குப் புறமாயிருப்பது: இதனை "அறன்கடை" என்றதுபோலக்கொள்க. (க)

உ.—மேகம் சென்று கட லிற்படிந்துமீளுதல்.

*நீற ணிந்த கடவு ணிறத்தவா
னாற ணிந்துசென் றார்கலி மேய்ந்தகிற்
சேற ணிந்த முலைத்திரு மங்கைதன்
வீற ணிந்தவன் மேனியின் [1]மீண்டதே.

(இ - ள்.) நீறு அணிந்த கடவுள் நிறத்த - விபூதியைத்தரித்துள்ள கடவுளாகிய சிவபிரானது நிறத்தையொத்த நிறத்தையுடைய [வெண்ணிறத்தையுடைய], வான் - மேகமானது,-ஆறு அணிந்து சென்று - (தான் செல்லும்) வானவழியை யலங்கரித்துப் போய், ஆர்கலி மேய்ந்து - கடலின்நீரைப் பருகி, அகில் சேறு அணிந்த முலை திரு மங்கை தன் வீறு அணிந்தவன் மேனியின் - அகிற்குழம்பையணிந்த தனங்களையுடைய திருமகளைத் தனக்கு வேறொருவர்க்கில்லாதசிறப்புஉண்டாகுமாறு (மார்பில்) அணியாகக்கொண்டுள்ள திருமாலின்திருமேனியைப்போல [கருநிறத்துடன்], மீண்டது—.

நீரின்மையால் வெண்மைநிறங்கொண்ட மேகம் கடலிற்படிந்து நீரை முகந்து கருநிறத்துடன் மீண்ட தென்க. சிவபிரான் செந்நிறமுள்ளவனென்பது பிரசித்த மாதலால், அக்கடவுளுக்கு வெண்ணிறங்கூறவேண்டி, 'நீறணிந்த' என்று விசேடித்தார்; கருத்துடையடைமொழியணி. ஆர்கலி -

நிறைந்தவோசையையுடையது; வினைத்தொகையன்மொழி. திருமங்கை தன்வீறு - திருமங்கையின் இன்பமென்றலுமுண்டு. பி - ம்:-[1]மீண்டவே. ()

ந.—இமயமலைமீது அந்தமேகம் படிதல்.

பம்பி மேகம் பரந்தது பானுவா
னம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினு
னம்பி [1]னுட்டுது மென்றகன் குன்றின்மே
லிம்பர் வாரி யெழுந்தது போன்றதே.

(இ - ள்.) மேகம்—, பம்பி - எழுந்து, பரந்தது - (இமயமலையிற்) படிந்த தன்மை,—இம்பர் வாரி - இவ்வுலகத்துள்ள கடல், 'நம்பன் மாதுலன்- சிவபிரானது மாமனுர், பானுவால் - சூரியனுல், வெம்மையை-வெப்பத்தை, நண்ணினுன் - அடைந்திட்டான்: (ஆதலால் அவ்வெப்பந்தணியும்படி), அம்பின் - நீரினுல், ஆட்டுதும்-(அவனை) நீராட்டுவோம்,' என்று - என்று கருதி, அகல்குன்றின்மேல் எழுந்தது - பரந்த இமயமலையின்மீது எழுந்துள்ளதை, போன்றது—; (எ-று.)

வானம் மழைபெய்யுமாறு இமயமலைமீது எழுந்து படிந்ததை, கவி, 'கோடையினுல் சிவபிரானதுமாமன் அடைந்த வெம்மையைத் தணிக்கும் பொருட்டுக் கடல் அங்குப் படிந்ததுபோலும்' எனக் குறித்தார்; தன்மைத் தற்குறிப்பேற்றவணி. சிவபிரானது பத்தினியாகிய உமையைப் பயந்ததனுல், இமயவரசன் சிவபிரானுக்கு மாமனுவன். இனி, கடலுக்கு மனைவியரெனக் கூறப்படுகின்ற கங்கைமுதலிய நதிகள் பலவற்றைத் தன்னிடத்தினின்று தோற்றுவித்தலால், கடல் 'நம் பன்மாதுலன்' என்று இமயமலையைக்கொண்டதாகக் கூறலுமாம்: நம் - நம்முடைய, பன் - சிறப்பித்துக் கூறத்தக்க, மாதுலன் என்க. பம்புதல் எழுதலென்னும் பொருள்தாதலை "பம்பல் கஞ்றலே பொலிவுபாய்ச்சல்...எர்பென்றெட்டுமே யெழுச்சியின்பேர்" என்ற சூடாமணியாலறிக. வாரி என்ற வடசொல் - இலக்கணையால், கடலையுணர்த்திற்று. மாதுலன் - தாயுடன் பிறந்தவனென்று பொருள்படுந் தத்திதாந்தம்; இது, மாமன்மகளைமணக்கும் முறைமைபற்றி, மனைவியின்தமப்பனைக் காட்டும். பாநு - (ஆயிரங்கிரணங்களால்) விளங்குபவன்: வடசொல். பி-ம்:—[1]ஆற்றுதும். (ந)

ச.—வானம் மழை பொழிதல்.

புள்ளி மால்வரை [1]பொன்னென நோக்கிவான்
வெள்ளி வீழிடை [2]வீழ்த்தெனத் தாரைக
ளுள்ளி யுள்ளவெ லாமுவந் தீயுமவ்
வள்ளி யோரின் வழங்கின மேகமே.

(இ - ள்.) புள்ளிமால்வரை - பெருமையையுடைய பெரியஅவ்விமயமலையானது, பொன் எனல் நோக்கி - பொன்மயமாயிருத்தலைப்பார்த்து,-வான் - ஆகாயமானது, (அந்தப்பொன்னைக் கல்லியெடுக்கும்படி), வெள்ளி வீழ் - வெள்ளிமயமான தோண்டுங்கருவியை, இடை-(அதன்) நடுவில், வீழ்த்(த்)து என - வீழ்த்தினுற்போலத் (தோன்றும்படி),—உள்ளி - (செல்வநிலையாமை

ஈகைநற்கதிதருகை என்பவற்றை) ஆலோசித்து, உள்ள எலாம் - (தம்மிடத்து) உள்ளனவான பொருள்களையெல்லாம், உவந்து ஈயும் - மனமுவந்து தருகின்ற, அ வள்ளியோரின் - வண்மைக்குணமுடைய அப்படிப்பட்ட [மிகச்சிறந்த] வள்ளல்களைப் போல, மேகம் - மேகங்கள், தாரைகள் - (வெண்ணிறமுள்ள) மழைத்தாரைகளை, வழங்கின - தந்தன; (எ - று.)

தம்மிடத்துள்ள நீரையெல்லாம் பொழியும் மேகத்துக்கு, வரையாது கொடுக்கும் வள்ளியோரை உவமைகூறினர். 'உள்ளியுள்ளவெலாம் உவந்தீயும்' என்பது - வள்ளல்களின் தன்மையைவிளக்கும் அடைமொழி. பொன்மயமான இமயமலைமீது மேகம் வெண்ணிறத்தாரைகள்வீழ்த்ததை, கவி, அம்மலை பொன்மயமா யிருத்தலால் அப்பொன்னைத்தோண்டியெடுத்துக்கொள்ளக்கருதி அம்மலையின்தகுதிக்கேற்ப வெள்ளிமயமானதோண்டுகருவியை வானம்வீழ்த்ததுபோலுமெனக் குறித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இமயமும் மேருவும் வேற்றுமைப்பட்டதாகவன்றி அபேதமாகக் கூறப்படுவதும், இமயமலையே பொன்மயமான மலையாகக் கூறப்படுவதும் உள்ளதனல் 'புள்ளிமால்வரை பொன்னெனநோக்கி' என்றார். 'வீழ்த்தென' என்ற இடத்தில், வீழ்த்து என்பதனை 'வீழ்த்தால்' என்ற எச்சத்தின் திரிபாகவும்கொள்ளலாம். இனி, மலைபொன்மயமாக இருத்தலால், அதனோடு தனக்குத்தொடர்புவேணுமென்றுவிரும்பி, வானம் - வானுலகம், வெள்ளிமயமான, வீழை - கோலை, வீழ்த்(த)து என, மேகம் தாரைகள் வழங்கின எனினுமாம். தாரை-ஒழுகும் நீர்த்தொடர்ச்சி. மழைத்தாரைக்கு வெள்ளிக்கோல் உவமையாதலை "வெள்ளிவெண் கோனிரைத்தனபோற் கொழுந்தாரைகள்" என்றவிடத்துங் காண்க. அகரச்சுட்டு-பிரசித்திபற்றியது. பி-ம்: - [1]பொன்னெனநோக்கி. [2]வீழ்த்தன, வீழ்வன. (௪)

ரு.—மழைபெய்ததனுற் பெருக்கெடுத்தல்.

மான நேர்ந்தற நோக்கி மனுநெறி
போன தண்குடை [1]வேந்தன் புகழென
ஞான [2]முன்னிய நான்மறை யாளர்கைத்
தான மென்னத் தழைத்தது நீத்தமே.

(இ - ள்.) மானம் நேர்ந்து - மானத்தைப் பொருந்தி, அறம் நோக்கி - தருமத்தைக் கருத்துடன்கவனித்துப்பார்த்து, மனு நெறி போன-மநுதருமசாஸ்திரத்தின்வழியே நடக்கின்ற, தண் குடை வேந்தன் - குளிர்ந்த குடையையுடைய [நல்லரசாட்சியையுடைய] அரசனது, புகழ் என - கீர்த்திபோலவும்,—ஞானம் உன்னிய - ஞானவழியையே நாடுகின்ற, நான்மறையாளர் - நான்குவேதங்கட்கும் உரிமைபூண்ட அந்தணர்களுடைய, கை-கையிற்கொடுத்த, தானம் என்ன - தானம்போலவும், நீத்தம் - (அந்த மழைத்தாரையாலுண்டான) வெள்ளமானது, தழைத்தது - பெருகிற்று; (எ - று.)

நீதிதவறாத வேந்தன் புகழ் தழைப்பதுபோலவும், நான்மறையாளர்கைத்தானம் தழைப்பதுபோலவும் நீர்வெள்ளம் தழைத்ததென்க. உயர்

தோர்க்கு உதவிய தானம்,தழைக்குமென்பதை "தானம்,தான்சிறிதாயினுந் தக்கார் கைப்பட்டக்கால், வான்பெரிதாப்போர்த்துவிடும்" என்பதனாலு மறிக. மனு - மனுவினாற் செய்யப்பட்ட தருமநூலுக்கு, ஆகுபெயர். நான் மறையாளர்=வேதியர். நீத்தம் - நீந்தப்படுவது; செயப்படுபொருள் விகுதி பெற்றபெயர். பி-ம்:—[1]வேந்தர். [2]முந்திய. (௫)

சூ.—இதுமுதல் ஆறு கவிகள்- வெள்ளத்தின் வருணனை.

*தலையு மாகமுந் தாளுந் [1]தழீஇயத
னிலைநி லாதிறை நின்றது போலவே
மலையி னுள்ளவெ லாங்கொண்டு மண்டலால்
விலையின் மாதரை யொத்ததவ் வெள்ளமே.

(இ - ள்.) தலைஉம் - (மலையின்) உச்சியையும் [தம்மிடத்துவந்த காமுகரது தலையையும்], ஆகம்உம் - நடுவிடத்தையும், [மார்பினையும்], தாள்உம்- தாழ்வரையையும் [பாதத்தையும்], தழீஇ - தழுவி, அதன்நிலை - அம்மலையி னளவில் [வெளிக்குக்காட்டும் அவ்விருப்பத்தினளவில்], நிலாது - நிலைத்திராமல்,இறை நின்றது போல - க்ஷணமென்னும்பொழுது நிகழ்ந்து நின்றது போல (ச்சற்றுநேரம் மலையிலிருந்து) [சற்றுநேரம் விருப்பத்தைக்கொண்டு நின்று], மலையின் உள்ள எலாம் கொண்டு - மலையி லுண்டாகின்ற பொருள்களை யெல்லாம் வாரிக்கொண்டு [மலைபோலப் பெருந்திரளாக (அந்தக் காமுகரிடத்துள்ள) பொருள்களையெல்லாம் (தாம்) பெற்றுக் கொண்டு],மண்டலால் - வேகமாக அப்பாற் செல்லுதலால்,—அ வெள்ளம் - அந்த மழைவெள்ளம், விலையின் மாதரை - வேசியரை, ஒத்தது—; (எ - று.)

மலையின் உச்சி இடை அடி என்ற இடங்களைத் தழுவி அம்மட்டோடு நிலைத்திராமல் மலையிலுள்ள பண்டங்களையெல்லாங் கொண்டு அப்பாற் செல்லும் வெள்ளம் - காமுகரின் உச்சி முதலிய உறுப்புக்களைத் தழுவித் தம் விருப்பத்தை வெளிக்குக்காட்டி மலைபோற்பெருந்திரளான பொருள் களையெல்லாம் கைப்பற்றிக்கொண்டு பிறகு அக்காமுகரை விட்டிட்டுச்செல் லும் வேசியரை யொக்கு மென்க. சற்று மலையில் வெள்ளமிருப்பதுபோலத் தோன்றுதற்கும் வேசியர் சற்றுவிருப்பமுடையர்போலக் காட்டுதற்கும், இறைப்பொழுது நிற்பதை உவமை கூறினர். மலையில்தோன்றுவன - "தக்கோலந் தீம்பூத் தகைசாலிலவங்கம், கற்பூரஞ்சாதியோடைந்து;" இனி, அடுத்த கவியிற்கூறும் மணிமுதலியன எனவுமாம். சிலேடையணியை யங்கமாகக் கொண்டுவந்த உவமையணி. பி - ம்:—[1]தழீஇயதில். (௬)

எ. மணியும் பொன்னு மயிற்றழைப் பீலியு
மணியு மானைவெண் கோடும கிலுந்தன்
னிணையி லாரமு மின்னகொண் டேகலான்
வணிக மாக்களை [1]யொத்ததவ் வாரியே.

(இ - ள்.) அ வாரி - அந்த வெள்ளமானது,—மணிஉம் - இரத்தினங்களும், பொன்உம் - சுவர்ணமும், மயில் தழை பீலிஉம் - மயிலினிறகாகிய

பீலியும், அணியும் ஆனை வெண்கோடும் - நிரைத்த யானைகளினுடைய வெண்மையாகிய தந்தமும், அகிலும் - அகிற்கட்டையும், தன் இணை இல் ஆரமும்-தனக்கு ஒப்பில்லாத சந்தனக்கட்டையும், (ஆகிய), இன்ன-இத்தன்மையவான பொருள்களை, கொண்டு - வாரிக்கொண்டு, ஏகலான் - போவதனால்,—வணிகமாக்களை - வர்த்தகர்களை,ஒத்தது—; (எ - று.)

மணிமுதலியவற்றை யடித்துக்கொண்டு செல்லுகின்ற வெள்ளம், மணிமுதலியவற்றை வாணிகத்தின்பொருட்டுக் கொண்டுசெல்லும் வணிகமாக்களை யொத்திருக்கு மென்றார். மலையில்மூங்கில்முதலானவைகளில் முத்துத் தோன்று மென்ற நூற்கொள்கைபற்றி அம்மலையிலிருந்து பெருகிவரும் வெள்ளம் அந்த முத்துக்களையும் அடித்துக்கொண்டு வருமென்க. தழைப்பீலி - இருபெயரொட்டு. மணி - கனிகளில்தோன்றும் அரதனங்களென்றுகொண்டு, ஆரம் - முத்து எனினுமாம். பி - ம்:—[1]ஒத்தது வாரியே. (எ)

அ. பூநி ரைத்துமென் றாது பொருந்தியுந்
தேன ளாவியுஞ் செம்பொன் [1]விராவியு
மானை மாமத வாற்றொ டளாவியும்
வான வில்லை [2]நிகர்த்ததவ் வாரியே.

(இ - ள்.) அ வாரி - அந்தவெள்ளமானது,-பூ நிரைத்தும் - மலர்களை வரிசையாகப்பொருந்தியும், மெல் தாது பொருந்தியும்-மிருதுவானமகரந்தங்களைப் பொருந்தியும், தேன் அளாவியும் - தேனோடுகலந்தும், செம் பொன் விராவியும் - செம்பொன்னைச்சேர்ந்தும், ஆனை மா மதம் ஆற்றொடு அளாவியும் - ஆனைகளின் மிக்கமதநீர்ப்பெருக்கோடு சேர்ந்தும், (பலவர்ணங்களைப் பெற்றதனால்),—வானம் வில்லை-வானத்தில் (சில காலங்களில்)தோன்றும் இந்திரவில்லை, நிகர்த்தது - ஒத்தது; (எ - று.)

அந்தவெள்ளம் பூமுதலியவற்றோடு சேர்ந்து பல நிறத்தைப்பெற்றதனால், பல நிறங்களைப்பெற்ற வானவில்லைப்போன்றதென்றார்; தற்குறிப்பேற்றவுவமையணி. பி-ம்:—[1]அளாவியும். [2]நிகர்த்ததுவாரியே. (அ)

கூ. மலையெ டுத்தும ரங்கள்[1]ப றித்துமா
டிலைமு தற்பொருள் யாவையு மேந்தலா
னலைக டற்றலை யன்றணை வேண்டிய
நிலையு டைக்கவி [2]நீத்தமந் நீத்தமே.

(இ - ள்.) மலை எடுத்தும்-(வேரோடு)மலைகளைப்பறித்துக்கொண்டும், மரங்கள் பறித்தும் - மரங்களைப் பறித்துக்கொண்டும், மாடு-(தன்) பக்கத்திலேயுள்ள, இலை முதல் பொருள் யாவையும் - இலை முதலாகிய பொருள்களெல்லாவற்றையும்,ஏந்தலான்-ஏந்திக்கொண்டும் வருதலால்,— அ நீத்தம்-அந்த நீர்ப்பெருக்கானது,—அலை கடல்தலை - (அலைகள்) அலைந்து வீசுந்தன்மையுள்ள சமுத்திரத்தில், அன்று - அக்காலத்தில் [இராமபிரான் கட

லைக்கடந்து இலங்கைக்குச்செல்லக்கருதிய காலத்தில்], அணை வேண்டிய - அணைகட்ட விரும்பிய, நிலை உடை - மனநிலைமையையுடைய, கவி நீத்தம் - வானரவெள்ளமேயாகும்; (எ - று.)

மலையெடுத்தல் முதலிய செயல்களை மேற்கொண்டதனால், அந்தவெள்ளம் கடலில் அணைகட்டவேண்டி மலைபறித்தெடுத்தல் முதலியசெயல்களைக் கொண்ட வானரவெள்ளமேயென உருவகவணிபடக் கூறினார். நீர் வெள்ளத்துக்கு அடைமொழியாக்கும்போது,'அலைகடல்தலை அன்று அணைவேண்டிய' என்பதற்கு - அலைகடலிலே அப்போது சேர்தலை [போய்விழுதலை] விரும்பிய, நீர்வெள்ளமென்க: இந்தச் சிலேடை, உருவகத்துக்கு அங்கமாக வந்தது. பி-ம்:—[1]முறித்தும். [2]ஒத்ததநீத்தமே. (க)

கo. ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிகந்
தூக்க மேமிகுந் துட்டெளி வின்றியே
தேக்கெ றிந்து வருதலிற் றீம்புனல்
[1]வாக்குந் தேனுகர் மாக்களை மானுமே.

(இ - ள்.) தீம் புனல் - இன்சுவையுள்ள நீரையுடைய அவ்வெள்ளமானது,—ஈக்கள் வண்டொடு மொய்ப்ப - ஈக்களும் வண்டுகளும் மொய்க்க, வரம்பு இகந்து - எல்லைகடந்து, ஊக்கம் மிகுந்து—, உள் தெளிவு இன்றி - உள்ளே தெளிவு இல்லாமல், தேக்கு எறிந்து - தேக்கைவீசிக்கொண்டு, வருதலின் - வருவதனால், வாக்கும் - வார்க்கப்படுகின்ற, தேன் - கள்ளை, நுகர் - குடிக்கின்ற, மாக்களை-மனிதர்களை, மானும் - ஒத்திருக்கும்; (எ - று.)

கட்குடியரைக் கூறுமிடத்து, ஈக்கள் வண்டொடுமொய்த்தல் - அவரிடத்துள்ள கள்நாற்றத்துக்காக ஈக்களும் வண்டுகளும் மொய்த்தலும், வரம்பிகத்தல் - தமது குலம் குடிப்பிறப்பு என்ற இவற்றுக்கு ஏற்ற ஒழுக்கத்தைக் கைவிடுதலும், ஊக்கம் மிகுதல் - உற்சாகம் மிகுதலும், உள் தெளிவின்மை - மனம் தெளிவுபெறாமையும், தேக்குஎறிதல் - ஏப்பம்விடு தலுமென்றும்; ஆற்றுவெள்ளத்தைக்கூறுமிடத்து, ஈக்கள் வண்டொடுமொய்த்தல் - அடித்துக்கொண்டு செல்லும் பல்வகைமலர்கள் தேன் முதலியவற்றிற்காக ஈக்களும் வண்டுகளும் மொய்த்தலும், வரம்பு இகத்தல் - கரை கடந்து செல்லுதலும், ஊக்கம் மிகுதல் - வலிமை மிகுதலும்,உள் தெளிவு இன்மை - தன்னுள்ளேயிருக்கின்ற நீர் கலங்கலாயிருத்தலும், தேக்கு எறிதல் - அடித்துக்கொண்டுவரும் தேக்குமரங்களை வீசுதலுமென்றும் செம்மொழிச்சிலேடையாகப் பொருள் காண்க:சிலேடையையங்கமாகக்கொண்டு வந்த உவமையணி. தேக்கு எறிதல் - தேக்கமரங்களை முறித்தலுமாம். கட்குடியர் விலங்குபோல்வாரென்று அவர்களையிழித்துக்கூற, மக்களென்னாது 'தேனுகர்மாக்கள்'என்றார். பி-ம்:—[1]வாக்குதேன். (கo)

கக. பணைமு கக்களி யானைபன் மாக்களோ
டணிவ குத்தென வீர்த்திரைத் [1]தார்த்தலின்
மணி[2]யு டைக்கொடி தோன்றவந் தூன்றலாற்
புணரி மேற்பொரப் போவது போன்றதே.

(இ - ள்.) (அந்தவெள்ளம்),—பல் மாக்களோடு - பலவகை மிருகங்க ளோடு [பல்வேறு தேயத்தவரான பதாதிகளோடு], பணை முகம் களி யானை - பருத்த முகத்தையும் களிப்பையு முடைய யானைகளையும், அணி வகுத்து என் - வியூகமாகப் பிரித்தாற்போல (ஒரு ஒழுங்குபட), ஈர்த்து - இழுத்துக் கொண்டு, இரைத்து ஆர்த்தலின் - ஒலித்துப் பேராரவாரஞ்செய்தலாலும்; மணி உடை கொடி தோன்ற வந்து ஊன்றலால் - அழகையுடைய கொடி கள் தோன்றும்படி வந்து தங்குதலாலும், புணரிமேல்-சமுத்திரத்தின்மீது, பொர போவது - போர்செய்யுமாறு போவதை, போன்றது - ஒத்திருந்தது.

போர்க்குச் செல்லுபவர் யானை குதிரை முதலியவற்றை யணிவகுத்துக்கொண்டு எதிரிகளுள்ள விடத்துக்குப் பேராரவாரத்தோடு செல்லுதலும், தமக்கு உரிய துவசக்கொடிகள் தோன்றவந்து தங்குதலும் இயற்கை; வெள்ளமும் யானை குதிரை முதலியவற்றை யிழுத்துக்கொண்டு பேராரவாரத்துடன் செல்லுதலும் காட்டில் முளைக்கின்ற பலவகைக்கொடிகளுந் தோன்றுமாறு புணரியில் தங்குதலு முள்ளதென்க. புணரி - பலநதிகளும் வந்துசேரப்பெறும் கடல்.போன்றதுஎன்பதற்கு,'வெள்ளம்'என்ற எழுவாய் வருவிக்க. ஊன்றுதல் தங்குதலாதலை "அகலிருவிசும்பினூன்றும்" என்னும் புறநானூற்றாலும் அறிக. பி-ம்:—[1]ஆர்த்துவெண். [2]நிரைக்கொடி, நுரைக்கொடி. [3]போவதும். (கக)

கஉ.—சரயூநதியின் சிறப்பு.

இரவி தன்குலத் தெண்ணில்பல் வேந்தர்தம்
பரவு நல்லொழுக் கின்படி பூண்டது
சரயு வென்பது தாய்முலை [1]யன்னதிவ்
வுரவு நீர்நிலத் [2]தோங்கு முயிர்க்கெலாம்.

(இ - ள்.) இரவிதன் குலத்து - சூரியகுலத்திற்பிறந்த, பல்வேந்தர்தம் - பல அரசர்களுடைய, எண் இல் - (பிறரால்) எண்ணுதற்கும் முடியாத [மிகச்சிறந்த], பரவு - (யாவரும்) கொண்டாடுகின்ற, நல் ஒழுக்கின்படி - நல்லொழுக்கத்தின்தன்மையை, பூண்டது - மேற் கொண்டதாகிய, (முற்கூறிய மழைவெள்ளத்தால் தோன்றிய), சரயு என்பது - சரயு என்ற நதியானது, உரவு நீர் இ நிலத்து - உலாவுந்தன்மையுள்ள நீரையுடைய கடலினாற் சூழப்பட்ட இந்நிலவுலகத்தில், ஓங்கும் - வளர்கின்ற, உயிர்க்குஎலாம் - பிராணிகட்கெல்லாம், தாய் முலை அன்னது - (சிறு குழந்தைக்குத்) தாய்முலை பயன்படுவதுபோலப் பயன்படுந்தன்மையுள்ளது; (எ - று.)

இதுவரையில் இமயமலையில் மழைபெய்ததனால் தோன்றிய வெள்ளத்தை வருணித்த கவி, அங்ஙனம் தோன்றிய வெள்ளநீராகிய சரயுவைப்பற்றி இனிக் கூறுகின்றார். சரயுநதி - கைலாசகிரியிலுள்ள மானசமடுவில்தோன்றுவது: மானசசரசிலிருந்து தோன்றுவதனால்தான் இதற்குச் சரயுவென்று பெயர். கைலாசமும் இமயமலையின் ஒருபகுதியேயென்றுகொண்டு கவி, இரண்டையும் அபேதமாகக் கூறியுள்ளாரென்க. தாயின் முலைப்பால்

குழந்தையைவளர்த்தல்போலச் சரயு தன்னீரை இவ்வுலகத்தாரையுண்பித்துவளர்க்கு மென்க.சூரியகுலத்துமன்னவரின் நல்லொழுக்கம் என்றும் மாறாது ஒருபடிப்பட்டிருக்கும்; அதுபோலவே, இந்தச்சரயூநதியின் ஒழுக்கும் [நீர்ப்பெருக்கும்] என்றும் இடையறாது ஒருபடியாக வோடுமென்க. யாற்றுக்குத் தாய்முலை உவமை கூறப்படுதலை "புனிறுதீர்குழவிக்கிலிற்றுமுலைபோலச், சுரந்தகாவிரி" என்ற இடத்துங் காண்க. உரவுதல் - உலாவுதல்: உரவுநீர்-வினைத்தொகையன்மொழி.பி-ம்:—[1]அந்நதி. [2]ஒல்கும். (௧௨)

௧௩.—அந்நதிவெள்ளம் நானிலத்திலும் செல்லுதலின் வருணனை - இதுமுதல் நான்கு கவிகளாற் கூறப்படும்.

கொடிச்சிய ரிடித்த சுண்ணங் குங்குமங் கோட்ட மேல
நடுக்குறு சந்தஞ் சிந்தூ ரத்தொடு நரந்த நாகங்
கடுக்கைநாள் வேங்கை கோங்கு பச்சிலை கண்டில் வெண்ணெ
யடுக்கலி னடுத்த தீந்தே னகிலொடு நாறு மன்றே.

(இ - ள்.) (அந்தச் சரயுநதியின் வெள்ளமானது),—கொடிச்சியர் - குறிஞ்சிநிலத்துமகளிர், இடித்த - இடித்துச்செய்த, சுண்ணம் - வாசனைப்பொடியும், குங்குமம் - குங்குமமரமும், கோட்டம்-கோஷ்டமரமும், ஏலம் - ஏலக்கொடியும், நடுக்கு உறு-(சைத்தியத்தினால்) உடலை நடுங்கும்படி செய்கின்ற, சந்தம் - சந்தனமரமும், சிந்தூரத்தொடு - வெட்சிமரமும், நரந்தம்-நாரத்தைமரமும், நாகம் - சுரபுன்னைமரமும், கடுக்கை - கொன்றைமரமும், நாள் வேங்கை - நாள்மலரையுடையவேங்கைமரமும், கோங்கு-கோங்கிலவமரமும்,பச்சிலை-பச்சிலை மரமும், கண்டில்வெண்ணெய்-கண்டில் வெண்ணெயென்னும்பூண்டும், அடுக்கலின் அடுத்த தீ தேன் - மலையிற்கட்டப்பட்ட இனிய தேன்கூடும், அகிலொடு - அகில்மரமும் (என்ற இவற்றோடுகூடி), நாறும் - மணம் வீசும்; (எ - று.) - அன்று ஏ - ஈற்றசை.

சரயுநதியை வருணித்தகவி, அந்நீர்வெள்ளம் குறிஞ்சிநிலத்திற் சென்றமையை, இதனாற் கூறுகின்றார். அந்தச் சரயூநதியின் வெள்ளம் சுண்ணம் முதலியவற்றை அடித்துக்கொண்டுவருதலால் நறுமணங் கமழு மென்க. நரந்தம் - ஒருவகைப்புல் என்றுமாம்: கஸ்தூரியென்பாருமுளர். நடு குறு சந்தம் என்று பிரித்து-நடுவில் குறியதாகத் தறிக்கப்பட்ட சந்தனக்கட்டையெனினுமாம்.சிந்தாமணியிலும் "நாள்வேங்கை" என்று உள்ளது. கடுக்கையார் வேங்கையென்ற பாடத்திற்கு - கடுக்கையும் ஆத்தியும் வேங்கையுமென்க. கண்டில்வெண்ணெய் - ஓமாலிகை முப்பத்திரண்டினுளொன்று: இதனை, மரமென்றும், காய்ந்தபாற்றிரளையென்றுங் கொள்ளுவாருமுளர். ()

௧௪. எயினர்வாழ் சீறா ரப்பு மாரியி னிரியல் [1]போக
வயின்வயி னெயிற்றி மாதர் வயிறலைத் தோட வோடி
யயின்முகக் கணையும் வில்லும் வாரிக்கொண் டலைக்கு நீராற்
[2]செயிர்தருங் கொற்ற மன்னர் சேனையை மானு மன்றே.

(இ - ள்.) எயினர் வாழ் சிறுஊர்-வேடர்கள்வாழ்கின்றசிறியவூர்களை, அம்பு மாரியின்-அம்புமழையால் [அம்புமழை-நீர்மிகுதியும் பாணமழையும்], இரியல்போக - நிலைகெடவும், வயின் வயின் - அங்கங்கே [தான்போகின்ற எல்லாவிடத்தும்], எயிற்றிமாதர்-வேடப்பெண்கள், வயிறு அலைத்து ஓட - வயிற்றிலடித்துக்கொண்டு ஓடவும், ஓடி - விரைந்துபோய்,—அயில் முகம் கணைஉம் வில்உம் - கூர்மையான முனையையுடைய பாணங்களையும் விற்களையும், வாரிக்கொண்டு—, அலைக்கும் - (உலகத்தாரை) அலையச்செய்கின்ற, நீரால் - ஜலத்தையுடைமையால் [தன்மையினால்], செயிர் தரும் - (பிறர்க்கு) வருத்தத்தை விளைக்கின்ற, கொற்றம் மன்னர் சேனையை - வெற்றியையுடைய அரசர் சேனையை, மானும்-ஒத்திருக்கும்; (எ - று.)

அந்தச்சரயுவின் வெள்ளம், எயினரின் சிற்றூர்களைத் தன் அம்புமழையால் நிலைகெடவும் அங்கங்கே எயிற்றிமாதரை வயிறடித்துக்கொண்டு ஓடவுஞ் செய்து அவ்வெயினர் வைத்துள்ள கணையையும் வில்லையும் வாரிக்கொண்டுசெல்வதால்,பகையரசர் சேனையையொக்கு மென்க. சேனை ஒரூரிற் சென்று அம்புமழைபொழிந்து ஆடவரை நிலைகெடச்செய்கையில் அவ்விடத்துள்ள மகளிர் வயிறடித்துக்கொண்டு அச்சத்தால் ஓடுதல், இயற்கை. கீழ்க்கவியிற் குறிஞ்சியில் யாற்றுவெள்ளஞ்சென்றதனைக் கூறிய கவி மேற்கவியில் முல்லையிற்செல்வதனைக் கூறப்போவதால், அவ்விரண்டுநிலமுந் திரிந்த பாலைநிலச்சிற்றூர்களையடுத்து அந்நதிவெள்ளஞ்செல்வதனை இதனாற் கூறுகின்றாரென்க. குறிஞ்சிமுல்லைகளே தம்நிலைதிரிந்து பாலையாகுமென்பதனை "வேனிற்கிழவனொடு வெங்கதிர்வேந்தன், றானலந்திருகத் தன்மையிற் குன்றி, முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற்றிரிந்து, நல்லியல்பிழந்து நடுங்குதுயருறுத்துப், பாலையென்பதோர் படிவங்கொள்ளும்" என்றதனாலும் அறியலாம். எயினர் - பாலைநிலமாக்கள். அப்புமாரி, அலைக்குந்நீர் - மடக்கு மொழிச்சிலேடை. போக ஓட அலைக்கும் நீரால் என்க. அப்புமாரி-வலித்தல்.
பி-ம்:—[1]போக்கி. [2]செயம்வருங்கொற்றமன்னர். (௧௪)

௧௫. செறிநறுந் தயிரும் பாலும் வெண்ணெயுந் [1]தெளிந்த நெய்யு
முறியொடு வாரி யுண்டு குருந்தொடு மருத முந்தி
மறிவிழி யாயர் மாதர் வனை துகில் வாரு நீராற்
பொறிவரி யரவி னாடும் புனிதனும் [2]போலு மன்றே.

(இ - ள்.) செறி நறு தயிர்உம் - உறைந்த நன்மணமுள்ள தயிரும், பால்உம்—, வெண்ணெய்உம்—, தெளிந்த நெய்உம்-(காய்ச்சிவடித்ததனால்) தெளிந்துள்ள நெய்யும், (ஆகிய இவற்றை), உறியொடு வாரி உண்டு - உறியுடனே வாரியெடுத்து உட்கொண்டும், குருந்தொடு மருதம் உந்தி - குருந்தமரத்தையும் மருதமரத்தையும் முறித்துத்தள்ளியும், (இவற்றோடு நில்லாமல்), மறி விழி ஆயர் மாதர் - மான்குட்டிபோல்மருண்ட பார்வையையுடைய இடைச்சிகள், வனை - அணிந்த, துகில் - ஆடையை, வாரும் - கவர்ந்துசெல்லுகின்ற, நீரால் - தன்மையால், பொறி வரி அரவின் ஆடும் -

படப்புள்ளியையும் உடல்வரிகளையுமுடைய காளியனென்னும்பாம்பின்மீது ஆடுகின்ற,புனிதன்உம்-பரிசுத்த மூர்த்தியாகிய ஸ்ரீக்ருஷ்ணனையும்,போலும்-ஒத்தது, (அந்த நீர்வெள்ளம்); (எ - று.)

இதனால், அந்நதிவெள்ளம் முல்லைநிலத்துச் சென்றமை கூறப்படுகின்றது. பால்முதலியவற்றைவாரித் தன்னுட்கொள்ளுதல், குருந்தமருதமரங்களைமுறித்தல், ஆயராடையைக்கவர்தல் என்பவை - கிருஷ்ணபகவானுக்கும் வெள்ளத்துக்கு முள்ள பொதுத்தன்மைகள். அரக்கரால் ஆவேசிக்கப்பட்டுத் தன்மீதுவீழ்ந்து கொல்லவேணுமென்றுஇருந்த குருந்தமரத்தை ஸ்ரீக்ருஷ்ணன் தானே முறித்தெறிந்தன னென்பர்.குருந்தமரத்தையொசித்ததுகுறித்துச் சைனர்கூறும் வரலாறு:—ஒருநாள் கிருஷ்ணன் யமுனாநதியில் கோவியரோடு விளையாடிக்கொண்டிருக்கையில் கோவியருடைய துகில்களையெல்லாம் கவர்ந்துகொண்டு அவ்யாற்றங்கரையிலுள்ள குருந்தமரத்திலேறிநிற்க, அவன்தமையனான பலராமன் அங்குவர, அதனையறிந்த க்ருஷ்ணன் தன்னுடையசெயலை அண்ணனறிந்தால் தன்னை மிகவும்பழிப்பனென்றுநினைத்து யமுனையாற்றில்விழுமாறு அக்குருந்தமரத்தை முறித்துத்தள்ளித் துகிலை யமுனாநதியிலிருந்த கோவியர் எளிதிற்பெறுமாறுசெய்து தானும் அந்நீரிற்குதித்து நீந்தி வேற்றிடஞ் சென்றா னென்பது. **மருதமொசித்தவரலாறு:**—க்ருஷ்ணன் குழந்தையாயிருந்தபோது அவனது துன்பப்படுத்துகின்ற சேஷ்டைகளைக் கண்டு கோபித்த வளர்த்த தாயாகிய யசோதை ஒருநாள் திருவயிற்றிற் கயிற்றினாற்கட்டி ஒருரலிலே பிணித்துவிட, க்ருஷ்ணன் அவ்வுரலையிழுத்துக்கொண்டு அங்கிருந்த இரட்டைமருதத்தின்நடுவிலே யெழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய்நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும்முறிந்துவிழுந்தவளவிலே, முன்பு, மதுபானமயக்கத்தால் ஆடையின்றித் தம்மெதிரே ஜலக்கிரீடைசெய்துகொண்டிருந்ததுகண்ட நாரதமுனிவனது சாபத்தினால் அம்மரங்களாய்க்கிடந்த நளகூபரன் மணிக்கிரீவனென்னும் குபேரபுத்திரரிருவரும் சாபந்தீர்ந்து சென்றன ரென்பதாம். **அரவினுடியகதை:**—யமுனாநதியில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடுமுழுவதையும் தன்விஷாக்கினியாற் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பானத்துக்கு யோக்கியமாகாதபடிசெய்த காளியனென்னுங் கொடிய ஐந்தலைநாகத்தைக் கிருஷ்ணன் தண்டிக்கவேண்டுமென்று திருவுள்ளங்கொண்டு, அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ள தொரு கடம்பமரத்தின்மேலேறி அம்மடுவிற்குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின்மேல் ஏறித்துவைத்து நர்த்தனஞ்செய்து நசுக்கி வலியடக்குகையில், மாங்கலியபிக்ஷையிட்டருளவேண்டுமென்று தன்னைவணங்கிப் பிரார்த்தித்த நாககன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி அந்தக்காளியனை உயிரோடு கடலிற்சென்றுவாழும்படி விட்டருளின னென்பதாம். **பி - ம்:**—[1]சேர்ந்த. [2]மறியுடை. [3]மானும், போன்றது. (௧௭)

**௧௮.** கதவினை முட்டி யள்ளர் கைபெடுத் தார்ப்ப [1]வெய்தி
நுதலணி யோடை பொங்க நுகர்வரி வண்டு கிண்டத்

தசைமணி சிந்த வுந்தித் தறியிறத் தடக்கை சாய்த்து
மதமழை யானை யென்ன மருதஞ்சென் றடைந்த தன்றே.

(இ - ள்.) (பின்னும் அவ்வெள்ளமானது),—கதவினை முட்டி - (ஆங்காங்குள்ள மதகுக்) கதவுகளைமுட்டி, மள்ளர் கை எடுத்து ஆர்ப்ப எய்தி - உழவர்கள் (மகிழ்ச்சியினாற்) கைகளையுயரவெடுத்து ஆரவாரிக்கப்பொருந்தி, நுதல் அணி ஓடை பொங்க-முற்பக்கத்துள்ள நீண்ட நீர்நிலை நிரம்பி வழியவும், நுகர் வரி வண்டு கிண்ட - (தமது உணவை நாடி) உண்ணுந்தன்மையுள்ள உடல்வரியமைந்த வண்டுகள் குடையவும், தசை மணி சிந்த - நெருங்கிய இரத்தினங்கள் சிந்தவும், உந்தி - (நீரைத்) தள்ளிக்கொண்டுபோய், தறி இற - (வெள்ளம் கரையையறுத்துக்கொண்டு போகாதபடி அங்கு நாட்டிய) முளை முறியும்படி, தட கை சாய்த்து - அலையென்னும் பெரியகைகளால் வீழ்த்தி, மதம் மழை யானை என்ன - மதமழையையுடைய யானைபோல, மருதம் - மருதநிலத்தில், சென்று அடைந்தது - போய்ச்சேர்ந்தது; (எ - று.)

மதயானைகள் தாம்அடைக்கப்பட்டுள்ள இடத்தின் கதவுகளை முட்டுதலும், மக்கள்விலகும்படி யானைப்பாகர் கையெடுத்து ஆரவாரஞ்செய்யப் போதலும், நெற்றியிலணிந்தபட்டம் விளங்கவும் மதநீரையுண்ணும் இசைப்பாட்டையுடையவண்டுகள் கிண்டவும் நெருங்கிய இருபக்கங்களிலும் கட்டிய மணிகள் சிதறும்படி தள்ளுதலும், தாம்கட்டியிருக்குங்கட்டுத்தறியை முறித்துத்தள்ளுதலுமுடையனவென்க. நுதல் - முற்புறம், நெற்றி. ஓடை - நீர்நிலை, நெற்றிப்பட்டம். மணி - இரத்தினம், அடிக்கும்மணி. இதனால், அந்நதிவெள்ளம் மருதநிலத்தையடைந்தமை கூறப்பட்டது. ஆறுகளிற் பள்ளம்வீழ்ந்த இடங்கள் முதலியவற்றை யுணருமாறு தறிநடுதலும் உண்டு. பி - ம்:—[1]ஓடி. (கசு)

கஎ. முல்லையைக் குறிஞ்சி யாக்கி மருதத்தை முல்லை யாக்கிப்
புல்லிய நெய்த றன்னைப் பொருவறு மருத மாக்கி
யெல்லையில் பொருள்க ளெல்லா மிடைதடு மாறு நீராற்
செல்லுறு கதியிற் செல்லும் வினையெனச் சென்ற தன்றே.

(இ - ள்.) முல்லையை குறிஞ்சி ஆக்கி - முல்லைநிலத்தைக் குறிஞ்சிநிலமாகச் செய்தும், மருதத்தை முல்லை ஆக்கி - மருதநிலத்தை முல்லைநிலமாகச்செய்தும், புல்லிய நெய்தல்தன்னை - அற்பப்பயனைத் தருகிற நெய்தனிலத்தை, பொரு அறு மருதம் ஆக்கி - (தனக்கு) நிகரில்லாததான மருதநிலமாகச்செய்தும், (இங்ஙனம்), எல்லையில் பொருள்கள் எல்லாம் - அவ்வந்நிலங்களிலுள்ள திரவியங்களெல்லாம், இடை தடுமாறும் நீரால் - (தம்தம்) இடத்தைவிட்டு வேற்றுநிலத்திற் செல்லுதற்குக்காரணமாகுந்தன்மையினால், செல் உறு - (உயிர்கள்பிறக்குமாறு) செல்லுகின்ற, கதியில் - (நால்வகைக்) கதியிலும், செல்லும் - (அவ்வுயிர்களைவிடாது பின்பற்றிச்) செல்லுகின்ற, வினை என - (புண்ணியம் பாவம்என்னப்படும் இரு) வினைகளைப்போல, சென்றது - (அவ்வெள்ளம்) போயிற்று; (எ-று.)—அன்றே-ஈற்றசை.

ஒருநிலத்தை மற்றொரு நிலமாகச்செய்யும் வெள்ளத்திற்கு, தேவரை மனிதராக்கியும் மனிதரைத் தேவராக்கியும் தாவரங்களை விலங்குகளாக்கியும் இங்ஙனம் ஒருகதியிற் பிறந்த வுயிர்களை மற்றொருகதியிற் பிறக்குமாறு செய்யும் இருவினை ஒப்பாகும். சரயுவெள்ளம் குறிஞ்சியினின்று முல்லைக்கும் அங்குநின்று மருதத்திற்கும் அங்குநின்று நெய்தற்குஞ்சென்று கடலிற் சேர்ந்ததாதலால் 'முல்லையைக் குறிஞ்சியாக்கி...நெய்தலனைப் பொருவறுமருதமாக்கி' எனக்கூறினர். முல்லையைக்குறிஞ்சியாக்கி-குறிஞ்சி நிலப்பொருள்களைக் கொண்டுவந்து நிறைத்தலாலே முல்லைநிலத்தைக் குறிஞ்சிநிலமாக்கியென்க: இங்ஙனமே மேலும் காண்க. உயிர்கள்பிறக்கும் நாற்கதிகள் - தேவகதி மக்கட்கதி விலங்குக்கதி தாவரகதி யென்பன.(கஎ)

### கஅ.—வெள்ளம் பலவாய்க்கால்களிற் பிரிதல்.

**காத்தகால் மள்ளர் வெள்ளக் கலிப்பறை கறங்கக் கைபோய்ச்**
**சேர்த்தநீர்த் திவலை பொன்னு [1]முத்தமுந் திரையின் வீசி**
**நீத்தமாந் தலைய தாகி நிமிர்ந்துபார் கிழிய நீண்டு**
**கோத்தகா [2]லொன்றி னொன்று குலமெனப் பிரிந்த தன்றே.**

(இ - ள்.) நீத்தம் - வெள்ளம்,—மள்ளர்-உழவர், காத்த-காத்து நின்ற, கால் - வாய்க்காலில், வெள்ளம் கலி பறை கறங்க - வெள்ளம்வருவதைக் குறிப்பிக்கும் ஆரவாரத்தையுடைய பறை ஒலிக்க, கைபோய் - விரைந்து சென்று, சேர்த்த நீர் திவலை-திரண்ட நீர்த்திவலையும், பொன்உம்—, முத்தம்உம் - முத்தும் (ஆகிய இவற்றை),திரையின் வீசி - அலைகளாலெறிந்தும், ஆம் தலையது ஆகி நிமிர்ந்து - பொருந்திய தலைமையுடையதாயோங்கி, பார் கிழிய நீண்டு - பூமியினிடம் கிழியும்படி நீளச்சென்று, கோத்த - (முறையாகத்) தொடர்ந்துள்ள, கால் ஒன்றின் ஒன்று - ஒருகால்வாயிலிருந்து மற்றொரு கால்வாயாக, குலம்என - குலம்பிரிவதுபோல, பிரிந்தது—; (எ-று.)

வெள்ளம் மருதப்பறையாகிய கிணையொலிக்க, மிக்க தலைமையுடனே பூமி கிழியுமாறு வெகுதூரஞ் சென்று தன்னில் தொடர்ந்த பலவாய்க்கால்களிலும் பிரிந்து சென்றதென்பதாம். கால் ஒன்றின் ஒன்று பிரிதல் - ஒருபெருவாய்க்காலிலிருந்து பல சிறுகால் பிரிதல். குலமும் பல கிளைகளாகப் பிரிதலால், காலொன்றினொன்று பிரிதற்குக் குலம்பிரிதல் உவமையாயிற்று. கரைகாக்கும் மள்ளர் புதுவெள்ளம் வரும்போது பறைசாற்றுதலை "காப்பவர், செவ்வனூருயிரஞ் சிலைக்கும் பம்பையும்"என்றதனாலுமறிக. பி-ம்:—[1]முத்தொடு. [2]ஒன்றேடொன்றில். (கஅ)

### கசு.—சரயுவெள்ளம் பலநிலையையடைதல்.

**கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்த**
**மெல்லையின் மறைக ளாலு மியம்பரும் பொருளி தென்னத்**
**தொல்லையி லொன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்**
**பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற் பரந்த தன்றே.**

(இ - ள்.) கல் இடை பிறந்து - இமயமலையிலுற்பத்தியாகி, போந்து - (அங்குநின்று) வெளிப்பட்டுவந்து, கடலிடை கலந்த - சமுத்திரத்திலே சங்கமமான, நீத்தம் - (அந்தச் சரயூநதியின்)வெள்ளம்,— எல்லை இல் மறைகளால்உம் - அளவிடமுடியாத [அனந்தங்களான] வேதங்களாலும், இயம்ப அரு-(இப்படிப்பட்டதென்று அளவிட்டுச்)சொல்லுதற்கு அருமையான,பொருள் ஈது என்ன-பரம்பொருள்போலும் இது என்று சொல்லும்படி, தொல்லையில் ஒன்றுஏ ஆகி - ஆதிகாலத்தில் ஒன்றாகவேயிருந்து [சரயுவெள்ளமென்று ஒருபெயருடனிருந்து], துறைதொறும்-(ஏரி குளம் முதலிய) இடங்களிலெல்லாம்,—பரந்த சூழ்ச்சி பல் பெரு சமயம் சொல்லும்பொருள் போல்உம் - பரந்த ஆராய்ச்சியையுடைய பலபெருஞ்சமயத்தவர் (அந்தப்பரம்பொருளைச்)சொல்லும் பொருள்(பலபடிப்பட்டிருப்பது) போலவும்,பரந்தது-(பல்படியாகப்) பரவியிருந்தது; (எ - று.)

பரம்பொருள் ஒன்றேயாயிருப்பதுபோலச் சரயுநீர்வெள்ளம் ஒன்றேயாயிருந்தும், பல சமயத்தவர் சூழ்ச்சிக்கு உட்பட்டு அப்பரம்பொருள் பல படியாகச் சொல்லப்படுவதுபோல ஏரி தடாகம் முதலிய பல இடங்களிற் பொருந்திப் பல பெயருடனே வழங்கலாயிற் றென்க. உவமையணி. உம்மை இரண்டனுள், முதலன - முற்று, பின்னது - இறந்தது தழுவிய எச்சம். பெருஞ்சமயமென்றார்,வாதிக்கும்நூல்கள்பலவற்றைக் கொண்டமையால்.

உ௦.—பிரிந்த அவ்வெள்ளம் பலவிடத்தும்பாய்தல்.

தாதுகு சோலை தோறுஞ் சண்பகக் [1]காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும் புது[2]மணத் தடங்க டோறு
மாதவி வேலிப் பூக வனந்தொறும் வயல்க டோறு
மோதிய வுடம்பு தோறு முயிரென வுலாய தன்றே.

(இ - ள்.) தாது உகு சோலைதோறும்-மகரந்தங்கள் சிந்துகின்ற சோலைகள்தோறும், சண்பகம் காடுதோறும் - காடுபோல் மிகுந்திருக்கிற சண்பகச் சோலைதோறும், போது அவிழ் பொய்கை தோறும் - அரும்புமலரப்பெற்ற பொய்கைகள்தோறும், புது மணம் தடங்கள் தோறும் - புதுமணத்தைக் கொண்ட தடாகங்கள்தோறும், மாதவி வேலி பூகம் வனம் தொறும் - குருக்கத்திக்கொடிகளை வேலியாகக்கொண்ட கமுகந்தோட்டந்தோறும், வயல்கள் தோறும்-, ஓதிய உடம்பு தோறும் உயிர் என - (நாற்கதியாகவுள்ளன என்று நூல்களிற்) கூறப்பட்ட உடம்புகள்தோறும் உயிர்சென்று புகுதல்போல, உலாயது - (அவ்வெள்ளம்) உலாவிற்று; (எ - று.)

உயிர் நாற்கதிகளிலுமுள்ள உடம்புகளிற்புகுந்து செல்லுதல்போல, அந்த வெள்ளமும் சோலைமுதலிய இடங்களிற் புகுந்து சென்றதென்க.

பி - ம்:—[1]காவு. [2]மணற்றடங்கடோறும். (உ௦)

ஆற்றுப்படலம் முற்றிற்று.

---

## உ-ஆவது நாட்டுப்படலம்.

கோசலநாட்டின் வளப்பத்தைக்கூறும்படல மென்பது, பொருள். நாடு - நாட்டுவளப்பத்துக்கு ஆகுபெயர். நகரப்படலமென்பதற்கும் இவ் வாறே பொருள் காண்க.

க.—கவிக்கூற்று.

வாங்கரும் பாத நான்கும் வகுத்தவான் மீகி யென்பான்
றீங்கவி செவிக ளாரத் தேவரும் பருகச் செய்தா
னாங்கவன் புகழ்ந்த நாட்டை யன்பெனு நறவ மாந்தி
[1]மூங்கைபான் பேச லுற்றா னென்னயான் மொழிய லுற்றேன்.

(இ - ள்.) வாங்க அரு பாதம் நான்குஉம் வகுத்த-(எவராலும்) எடுத்து விட்டு (ஏற்குமாறு வேறு) வைக்கமுடியாத நான்குபாதங்களையுமுடைய சுலோகங்களைச்செய்த வால்மீகி என்பான் - வால்மீகியென்னும் முனி வன்,—செவிகள் ஆரதேவரும் பருக-(இந்தநிலவுலகத்தவரேயன்றித்) தமது காதுகள் நிரம்புமாறு வானுலகத்தவரும் பருகும்படி, தீம் கவி - இனிய கவி களைக்கொண்டு, செய்தான்-(இராமசரித்திரத்தை இராமாயணகாவியமாகச்) செய்தான்: ஆங்குஅவன் புகழ்ந்த நாட்டை-அந்தராமாயணத்தில் அவ்வால் மீகிமுனிவன்புகழ்ந்துகூறிய கோசலநாட்டை, யான்—, அன்பு எனும் நற வம் மாந்தி - அன்புஎனப்படுகிற மதுவைப் பருகி, மூங்கையான் பேசல் உற் றான் என்ன-வாயில்லாத ஊமன் பேசத்தொடங்கினான்போல, மொழியல் உற்றேன்-புகழ்ந்து பேசத்தொடங்கினேன்; (எ - று.)

இந்த நிலவுலகத்தாரேயன்றி வானுலகத்தவரும் இராமசரித்திரத்தைக் கேட்டு மகிழ்ந்து திருத்தியடையும்படி பேரறிஞனாய்ச் சிறந்தகவிஞனாகிய வால்மீகிமுனிவன் ஸ்ரீராமாயணத்திற் புகழ்ந்துகூறிய கோசலநாட்டைச்சிற் றறிவினனாகிய யான் புகழ்ந்துகூறுதல், மூங்கை பேசத்தொடங்குவது பல ரும் நகைத்தற்குக் காரணமாதல்போலப் பிறர் நகைப்பதற்குக் காரணமாவ தன்றி முறைப்படி செய்கின்ற தாகா தென்று அவையடக்கங் கூறுகின்றன ரென்க. இங்ஙனம் சிற்றறிவினராகிய தாம் புகழத்தொடங்கியது, மதுவைப் பருகியவர் 'தாம் செய்வது முறையோ? அன்றோ' என்று ஆராயாது செய் யுஞ்செயலைப்போலு மென்பார், 'அன்பெனும் நறவமாந்தி' என்றார்; இத னால், இவர் கோசலநாட்டைப் புகழத்தொடங்கியதும் இராமாயணத்தைப் பாடத்தொடங்கியதுபோல் அன்பின் செயலேயாமென்றவாறு. அன்பெனும் நறவம் - உருவகம். வான்மீகிமுனிவன்பாடிய ஸ்ரீராமாயணத்தில் எந்தக் கவியிலேனும் ஒருபாதத்தை யெடுத்துவிட்டு வேறு ஒருபாதம் செய்து பொ ருந்துமாறு அமைத்தல் எவ்வளவுசிறந்தகவிஞர்க்கும் இயலாதென்பார் 'வாங் கரும்பாதநான்கும் வகுத்தவால்மீகி' என்றார். வேதத்தில்மாத்திரம் இருந்த நான்குபாதங்களையுடைய சந்தசுகளை [பாக்களை] க்கொண்டு இந்தவான்மீகி யே பிரமதேவனருளால் முதலில் ஸ்ரீராமாயணகாவியத்தைச் செய்து உல கத்தார்க்குத் தந்தனனாதலால், 'பாதநான்கும் வகுத்த வான்மீகியென்

பான் தீங்கவி செய்தான்' என்றார்; இதுபற்றியே இவற்கு 'ஆதிகவி' என்று ஒருபெயர்வழங்கும். வகுத்து அ வான்மீகி என்று பிரித்துஉரைப்பாருமுளர். பாதம் - அடி; இங்கே, கவிதையின் அடி. தேவபாடையிற் செய்ததனால், "தேவரும்பருக' என்றார். வால்மீகி - வல்மீகத்தினின்று பிறந்தவன்: வல்மீகம் - புற்று. ப்ருகுவின்புத்திரனாய் அல்லது ப்ருகுவின் வமிசத்தவனாய் ருக்ஷனென்று பெயர்கொண்ட இம்முனிவன் சலியாது ஓரிடத்திலிருந்து கடுந்தவம்புரிந்தன னாக, இவனைப் புற்று மூடிக்கொண்டிட,வருணன் மழை பெய்து அப்புற்றைக்கரைக்க, அதினின்று வெளிப்பட்டதனால், இம்முனிவனுக்கு இப்பெயர் வந்தது: இதனால், இவன் மஹாஞானியென்பது போதரும். பி-ம்:—[1]மூங்கையார் பேசலுற்றார்.        (க)

உ.—நாட்டின் பலவளம்.

**வரம்பெலா முத்தந் தத்து மடையெலாம் பணில மாநீர்க்**
**குரம்பெலாஞ் செம்பொன் மேதிக் குழியெலாங் கழுநீர்க் கொள்ளை**
**பரம்பெலாம் பவளஞ் சாலிப் பரப்பெலா மன்னம் பாங்கர்க்**
**கரம்பெலாஞ் செந்தேன் சந்தக் காவெலாங் களிவண் டீட்டம்.**

(இ - ள்.) வரம்பு எலாம் முத்தம் - கழனிகளின் வரம்புகளிலெல்லாம் முத்துக்களும், தத்தும் மடை எலாம் பணிலம் - (நீர்) தாவிப்பாயுந் தன்மையுள்ள நீர்மதகுகளிலெல்லாம் சங்குகளும், மா நீர் குரம்பு எலாம் செம்பொன் - பெரிய நீர்ப்பெருக்கையுடைய (வாய்க்கால்களின்) செய்கரைகளிலெல்லாம் செவ்விய பொற்கட்டிகளும், மேதி குழி எலாம் கழுநீர் கொள்ளை - எருமைவீழ்ந்து உழக்குகின்ற நீர்க்குழிகளிலெல்லாம் செங்கழுநீர் மலர்க் குவியலும், பரம்பு எலாம் பவளம் - பரம்படித்துச் சமமாக்கிய இடங்களிலெல்லாம் பவழங்களும், சாலி பரப்பு எலாம் அன்னம் - செந்நெற்பயிருள்ள பரந்த இடங்களிலெல்லாம் அன்னப்பறவைகளும், பாங்கர் கரம்பு எலாம் செந் தேன் - பக்கங்களிலுள்ள கரம்புகளிலெல்லாம் செந்நிறத்தேன் பெருக்கும், சந்தம் கா எலாம் களி வண்டு ஈட்டம் - அழகிய சோலைகளிலெல்லாம் மதுமயக்கங்கொண்ட வண்டுகளின் கூட்டங்களும், (அந்தக் கோசலநாட்டி லுள்ளன); (எ - று.)

அந்தக் கோசலநாட்டின் வளத்தை முற்றக் கூற முடியாமையால், முற்றுக்கொடுத்து முடிக்காமல் 'காவெலாங்களிவண்டீட்டம்' என்று வாளா விட்டன ரென்பர். நாடு என்பது மனிதர்க்கு இன்றியமையாத உணவைக் கொண்டிருந்தால் தான் சிறக்கு மாதலாலும், அவ்வகை உணவு மருதநிலத்தில்தான் முக்கியமாக உண்டாகக்கூடுமாதலாலும் அவ்வகைஉணவைத்தன்னிடத்துக்கொண்ட மருதநிலவளனை இதனாற்கூறுகின்றனர். அந்நாட்டைச் சார்ந்த மருதநிலத்தில் முத்தம் முதலியவையும் நிரம்பியிருக்கின்றன வென்றபடி. வரம்புகளில் முத்துக்கள் நிறைந்திருத்தலைக் கூறி, அம்முத்துக்கட்குக் காரணத்தை 'மடையெலாம் பணிலம்' என்றார். ஈற்றடியில் 'கரும்பெலாம்' என்றும்பாடம்; கரும்பில் தேன்கூடு கட்டப்படுதலை "தீங்கரும்பெருத்திற்றூங்கி யீயின்றியிருந்ததீந்தேன்" என்ற இடத்துங் காண்க.        (உ)

௩.—பலவகையொலி.

ஆறுபா யரவ மள்ள ராலைபா யமலை யாலைச்
சாறுபா யோசை வேலைச் [1]சங்குவாய் பொங்கு மோதை
யேறுபாய் தமர நீரி லெருமைபாய் துழனி யின்ன
மாறுமா றாகித் தம்மின் மயங்குமா மருத வேலி.

(இ - ள்.) மா மருதம் வேலி - (அந்தக் கோசலநாட்டின்) மருதநிலத்தெல்லை,—ஆறு பாய் அரவம் - ஆற்றுநீர்ப்பாய்வதனாலான ஓசையும், மள்ளர் ஆலை பாய் அமலை - உழவர் கரும்பாலையையோட்டுவதனாலுண்டான ஓசையும், ஆலை சாறு பாய் ஓசை - கரும்பாலையிலிருந்து கருப்பஞ்சாறுபாய்வதனாலான ஓசையும், வேலை சங்கு வாய் பொங்கும் ஓதை - நீர்க்கரைகளிற் சஞ்சரிக்கின்ற சங்குப்பூச்சிகளின் வாயிலிருந்து மிகுதியாகத்தோன்றுகின்ற ஓசையும், ஏறு பாய் தமரம்-எருதுகள் (பொருகையில் ஒன்றன்மீது ஒன்று) பாய்ந்து தாக்குதலாலுண்டாகும் ஓசையும், நீரில் எருமை பாய் துழனி - நீரினிடத்து எருமைகள் விழுதலினாலுண்டாகிய ஓசையும், (ஆகிய), இன்ன - இவைபோன்ற ஓசைகள், மாறு மாறு ஆகி - (தமக்குள் ஒன்றோடொன்று) மாறுபட்டனவாகி, தம்மின் மயங்கும் - ஒன்றோடொன்று கலந்திருப்பதற்கு இடனாகும்; (எ - று.)

நாட்டிற் பலவகையோசை நிரம்பியிருப்பதாகக் கூறும் கவிஞர் மரபின்படி அந்நாட்டு மருதவெல்லையில் அந்தநிலத்தின் பொருள்களாற் பலபடியான ஓசை உண்டாந்தன்மையைக் கூறுகின்றார். ஒலியென்ற பொருளுள்ள 'அரவம், அமலை, ஓசை, ஓதை, தமரம், துழனி' என்ற சொற்கள் வந்தது - பொருட்பின்வருநிலையணியாம். வேலையென்ற வடசொல் - இங்கு, நீர்க்கரையென்ற பொருளில்வந்தது; இனி, வேலை சங்கு என்பதற்கு - கடலிலிருந்து (புதுநீரிலேறி) வந்த சங்குப்பூச்சிக ளெனினுமாம். மருதவேலி என்னும் இடப்பெயர், எழுவாயாகிவந்தது. இனி, மருதவேலியில் ஆறுபாயரவம் முதலிய இன்ன ஒலிகள் தம்முள்மயங்கும் எனக்கூறலுமாம். வயங்குமென்று* பாடமோதி, விளங்குமென்று பொருள் கூறுவாருமுளர். பி - ம்:—[1]சங்கின்.

௪.— மருதநிலத்தின் சிறப்பு.

தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் [1]தாங்கக்
கொண்டல்கண் முழவி னேங்கக் குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட மருதம்வீற் றிருக்கு மாதோ.

(இ - ள்.) மருதம் - மருதமென்ற அரசன்,—தண்டலை மயில்கள் ஆட - சோலை யாகிய (நர்த்தனசாலை)களில் மயில் (களாகிய நாட்டியப்பெண்) கள் நடனஞ் செய்யவும், தாமரை விளக்கம் தாங்க - தாமரைக்கொடி(களாகிய மகளிர் மலர்களாகிய)விளக்குகளை(த் தமதுகையில்) ஏந்திநிற்கவும், கொண்டல்கள் முழவின் ஏங்க - மேகங்கள் மத்தளம்போ லொலிக்கவும், தெண்

திரை எழினி காட்ட - தெளிந்த (நீர்நிலையில் தோன்றுகின்ற) அலைகள் திரைச்சீலையின்தன்மையைக் காட்டவும், தேம் பிழி மகரம் யாழின் வண்டுகள் இனிது பாட - இனிய தேனையொத்த மகரயாழினிசைகளையொத்து வண்டுகள் இனிமையாகப்பாடவும், குவளை கண் விழித்து நோக்க - கருங்குவளைமலர்களாகிய தனதுகண்களால் மலரவிழித்துப் பார்க்குமாறு, வீற்றிருக்கும்-பெருஞ்சிறப்போடு தங்கிநிற்பான்; (எ - று.)—மாதோ - ஈற்றசை.

முழவம் கொட்டவும் யாழ் இசைசெய்யவும் எழினியினின்று வெளிப்பட்டு நாட்டியப்பெண்கள் ஆடுகையில் மகளிர் விளக்குக்களையேந்திநிற்க அந்நாட்டியத்தை ஓரரசன் காணுமாறு வீற்றிருத்தல்போல, கொண்டல் ஒலிக்க வண்டுகள் ரீங்காரஞ்செய்ய மயில்களாடத் தாமரைக்கொடிகள் செந்தாமரைமலரை யேந்திநிற்கக் குவளைகண்போலவிளங்க மருதம்சிறந்திருக்குமென்றவாறு. மருதத்தினிடத்து ஓரரசன்தன்மையையேறிட்டுக்கூறியது, சுருங்கச்சொல்லலணியெனப்படும் ஸமாஸோக்தியலங்காரம்: இதற்கு, 'விளக்கந்தாங்க', 'கொண்டல்கள்முழவினேங்க', 'குவளைகண்விழித்துநோக்க', 'தெண்டிரையெழினிகாட்ட' முதலியவற்றிலுள்ள உவமை, உருவகம் காட்சி என்னும் அணிகள் உபகாரப்பட்டன. 'குவளைக்கண்'என்ன வரவேண்டியது- செய்யுளோசையின்பொருட்டு இயல்பாய்வந்தது. மகரயாழ் - இசைக்கு, ஆகுபெயர். எழினி தன்னுள்ளேயிருப்பவராகிய கூத்தியரை மறைத்துப் பிறகு வெளிக்காட்டுதல்போலத் திரைகள் மயில்களை மறைத்து மறைத்துக் காட்டுதலால், 'தெண்டிரை யெழினி காட்ட' என்றது. தண்டலை - குளிர்ந்த இடத்தையுடையது: சோலை: பண்புத்தொகையன்மொழி. தாமரை = தாமரஸம். பிழி - பிழியப்படுவது: தேன்: செயப்படுபொருள்விகுதி புணர்ந்து கெட்டபெயர். பி - ம் [1]ஏந்த. (ச)

ரு.—வண்டுமுதலியவை தாமரைமுதலிய இடத்துத்தங்குகை.

* தாமரைப் படுவ வண்டுந் தகைவருந் திருவுந் தண்டார்க்
காமுகர்ப் படுவ மாதர் கண்களுங் காம னம்பு
மாமுகிற் படுவ வாரிப் பவளமும் வயங்கு முத்து
நாமுதற் படுவ மெய்யு நாமநூற் பொருளு மன்னோ.

(இ - ள்.) வண்டுஉம்—, தகை வரும் திருஉம் - அழகு வளர்கின்ற இலக்குமியும்,—தாமரை படுவ - தாமரைமலர்களில் தங்குவன; மாதர் கண்கள்உம் - மகளிருடைய கண்களும், காமன் அம்புஉம் - மன்மதனுடைய அம்புகளும்,-தண் தார் காமுகர் படுவ-குளிர்ந்தமாலையையணிந்த காமுகரைத் தாக்குவன; வாரி பவளம்உம் - கடலிற்றோன்றுகின்ற பவழங்களும், வயங்கு முத்துஉம் - விளங்குகின்ற முத்துக்களும், மா முகில் படுவ - பெரிய மேகங்களினு லுண்டாகின்றன; மெய்உம் - உண்மையும், நாமம் நூல் பொருள்உம்- பிரசித்தமானசாஸ்திரங்களின்பொருளும், நா முதல் படுவ - (அந்நிலத்தில் வாழ்கின்ற மக்களின்) நாவிலே தங்குவன; (எ - று.)—மன்னோ - ஈற்றசை.

அந்நாட்டு நிலத்தின் வளத்தால் எங்குப்பார்த்தாலும் செந்தாமரைமலர் மலர்ந்திருப்ப அவற்றில் வண்டுகளும் திருவும் வந்து தங்கும்; அந்நிலத்தவரான மைந்தர்யாவரும் யாதொரு குறையுமின்றிக் களிப்புடனிருத்தலால் அவர்கள்மீது மகளிரின் பார்வை தாக்க, அந்தச் சமயம் நோக்கிக் காமனது மலர்க்கணையும் அவர்கள்மீது தாக்கும்; அரசன் தீநெறிச் செல்வாரையொறுத்துத்தருமமேசெல்லுமாறு செங்கோல்செலுத்துவதுபற்றித் தவறாது மழைபொழிவதனால் கடலிலே பவழமும் முத்தும் மிகுதியாக உண்டாகும்; அந்நாட்டவர் மெய்ம்மொழியே யுரைப்பவராகஇருத்தலோடு எப்போதும் சிறந்தநூற்பொருள்களைப் பயின்றவண்ணமாகவே யிருப்ப ரென்பதாம். கடலில் பவழம் முத்துமுதலியன மழையாற்றோன்றுமென்பதை, "கடலுந்தன் னீர்மை குன்றும்" என்பதற்கு விசேடவுரையில், 'தன்னியல்புகுறைதலாவது - நீர் வாழுயிர்கள் பிறவாமையும் மணிமுதலிய படாமையுமாம்' என்று பரிமேலழகர் உரைத்ததனாலும் அறியலாம். இனி, மூன்றாமடிக்கு-மேகங்கள் நீரைப் பொழிவதோடு நில்லாமல் பவழம் முத்து என்ற இவற்றையும் பொழிகின்றன என்று கூறுவாருமுளர். ப்ரஸ்துதங்களாகிய இவ்விரண்டுகளைச்சேர்த்து ஒவ்வொருபொதுத்தன்மையில் அமைத்துக்கூறியது, ஒப்புமைக்கூட்டவணியாம்: வடமொழியில், துல்யயோகிதாலங்காரமெனப்படும். இரண்டாமடியில், படுவ=படுத்துவ: தன்வினை பிறவினைப்பொருளைக் காட்டிற்று. (கு)

சு.—சங்குமுதலியவை நீர்முதலியவற்றில் இனிதுதங்குதல்.

நீரிடை யுறங்குஞ் சங்க நிழலிடை யுறங்கு மேதி
தாரிடை யுறங்கும் வண்டு தாமரை யுறங்குஞ் செய்யா
ளாரிடை யுறங்கு மாமை துறையிடை யுறங்கு மிப்பி
போரிடை யுறங்கு மன்னம் பொழிலிடை யுறங்குந் [1]தோகை.

(இ - ள்.) சங்கம் - சங்குகள், நீரிடை உறங்கும் - ஜலத்தில் இனிதாகக்கிடக்கும்; மேதி - எருமைகள், நிழலிடை-(மரத்தின்) நிழலில், உறங்கும்-இனிது தூங்கும்; வண்டு-வண்டுகள், தாரிடை உறங்கும் - (மகளிரும் ஆடவரும் அணிந்த) பூமாலைகளில் இனிதாகக்கிடக்கும்; செய்யாள் - அழகியவளான இலக்குமி, தாமரை உறங்கும் - தாமரைமலரில் இனிது அமர்ந்திருப்பாள்; ஆமை - ஆமைகள், ஆரிடை உறங்கும் - புதர்களில் இனிதுஅமர்ந்திருக்கும்; இப்பி - முத்துச் சிப்பிகள், துறையிடை உறங்கும் - நீர்த்துறைகளில் இனிதுஅமர்ந்திருக்கும்; அன்னம் - அன்னப்பறவைகள், போரிடை உறங்கும் - நெற்போரில் இனிது தங்கும்; தோகை - மயிற்பறவைகள், பொழிலிடை உறங்கும் - சோலைகளில் இனிது தங்கி நிற்கும்; (எ - று.)

சங்கம்முதலியவை நீர்முதலியவற்றில் இனிதுதங்குமென்க. இதனாலும், வளனுடைமை பெறப்படும்.—பி - ம்:—[1]மேகம். (சு)

எ.—அந்நாட்டில் விளங்குபவை.

படையுழ வெழுந்த பொன்னும் பணிலங்க ளுயிர்த்த முத்து
மிடறிய பரம்பிற் காந்து மினமணித் தொகையு நெல்லு

மிடைபசுங் கதிரு மீனு மென்றழைக் கரும்பும் வண்டுங்
கடைசியர் முகமும் போதுங் கண்மலர்ந் தொளிரு மாதோ.

(இ - ள்.) படை உழ எழுந்த பொன்உம்-கலப்பைகளுழுதலாற் (புவியிலிருந்து) மேலேயெழுந்த சுவர்ணமும், பணிலங்கள் உயிர்த்த முத்துஉம் - சங்குப்பூச்சிகள் வெளிவிட்ட முத்துக்களும், இடறிய பரம்பில் காந்தும் இனம் மணி தொகைஉம் - பரம்படித்த நிலங்களிற் பிரகாசிக்கின்ற பல வகையாயுள்ள இரத்தினங்களின் தொகுதியும், நெல்லு மிடை பசுங் கதிர்உம்- நெற்கள் நிறைந்த பசிய கதிர்களும், மீன்உம்—, மெல் தழை கரும்புஉம் - மெல்லிய இலைகளையுடைய கரும்பும், வண்டுஉம்—, கடைசியர் முகம்உம் - உழத்தியருடைய முகமும், போதுஉம் - தாமரைமலர்களும், கண்மலர்ந்து-, ஒளிரும் - விளங்கும்; (எ - று.) - மாது ஓ - ஈற்றசைகள்.

பொன் முத்து மணித்தொகை இவைகட்குக் கண்மலர்தல் - ஒளியினால் விளங்குதல்; (கண் - உபசர்க்கம்.) நெல்லு மிடைந்த கதிருக்குக் கண் மலர்தல் - அவ்வவ்விடந்தோறும் பரவியிருத்தல்; (கண் - இடம்.) மீனுக்கும் வண்டுக்கும் கண்மலர்தல் - கண்கள்போலத் தோன்றிநிற்றல் ; கரும்புக்குக் கண்மலர்தல் - கணுக்கள்பெற்று விளங்குதல்; (கண் - கணு.) கடைசியர் முகத்துக்குக் கண்மலர்தல் - தாமிட்ட பயிர் செழித்துவிளைதலா லான மகிழ்ச்சியாற்; கண்கள் மலர்ந்துநிற்றல் போதுக்குக் கண்மலர்தல் [கள்மலர்தல்] - தேனோடு விகசித்து விளங்குதல். இந்தச்செய்யுளில் வர்ணியங்களான [வருணிக்கத்தக்கவான] பலபொருள்களைச்சேர்த்து அவை கண்மலர்ந்தொளிர்தலாகிய ஒருபொதுத்தன்மையைப் பெற்றுள்ளனவாகக் கூறியது - ஒப்புமைக்கூட்டவணியாம். 'கண்மலர்தல்' என்ற தொடர் பல்வகையாகப் பொருள்படுவது - சிலேடையணியாம். ஈனும் மெல்தழை கரும்பு என்று பிரித்து, மெல்தழை ஈனும் - மெல்லிய இலைகளை மிகுதியாகத் தோற்றுவிக்கின்ற, கரும்பு என உரைத்தலும் ஒன்று. (எ)

அ. — பாணரின் பாடல்.

தெள்விளிச் சிறியாழ்ப் பாணர் தேம்பிழி [1]நறவ மாந்தி
வள்விசிக் கருவி பம்ப வயின்வயின் வழங்கு பாடல்
வெள்ளிவெண் மாடத் தும்பர் வெயில்விரி பசும்பொற் பள்ளி
யெள்ளருங் கருங்கட் டோகை யின்றுயி லெழுப்பு மன்றே.

(இ - ள்.) தெள் விளி சிறு யாழ் பாணர் - தெளிவான இசையையுடைய இசைப்பாட்டைப் பாடுதற்குஉரிய சிறியயாழைக்கொண்ட பாணர்கள், தேம் பிழி நறவம் மாந்தி - இனிய வடித்த கள்ளைக் குடித்து, வள் விசி கருவி பம்ப வயின் வயின் வழங்கு பாடல் - வாரினாற்கட்டுதலமைந்த முழவம் (யாழினிசைக்குப்பொருந்த) ஒலிக்க அவ்வவ்விடங்களிற் பாடுகின்ற பாடல்கள்,— வெள்ளி வெள் மாடத்து உம்பர் வெயில் விரி பசும் பொன் பள்ளி எள்ள அரு கருங் கண் தோகை - வெள்ளிபோல் வெண்ணிறமான மாளிகைகளின் மேலிடங்களில் வெயில்போன்றஒளியைவீசுகின்ற பசும்பொன்னாற்

செய்யப்பட்ட கட்டிலிலுறங்குகின்ற பழித்தற்கு அரிய [மிகவும்] கரிய கண்களைப்படைத்த தோகைபோலுஞ் சாயலுள்ள மகளிரை, இன் துயில் எழுப்பும் - இனிய உறக்கத்திலிருந்து எழச்செய்யும்; (எ - று.) - அன்று ஏ - ஈற்றசை.

பாணர்களின் பாடல், மாடத்தின்மேலுறங்கும் மகளிரை யெழுப்புமென்க. தெள்விளி - பண்புத்தொகையன்மொழி: இசைப்பாடல்; "தீந்தொடைமகரவீணைத் தெள்விளி யெடுப்பி" என்றார், சிந்தாமணியிலும். பி - ம்:—[1]நறவை. (அ)

கூ.—தேனின் மிகுதி.

ஆலைவாய்க் கரும்பின் றேனு மரிதலைப் பாளைத் தேனுஞ்
[1]சோலைவீழ் கனியின் றேனுந் தொடையிழி யிறாலின் றேனு
மாலைவா யுகுத்த தேனும் வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்ப [2]வுண்டு மீனெலாங் களிக்கு மாதோ

(இ - ள்.) ஆலைவாய் கரும்பின் தேன்உம் - கரும்பாலைகளிற் (சிதைந்த) கரும்பினின்று வெளிவந்த தேன்போலினிய சாறும், அரி தலை பாளை தேன் உம் - அரிந்த நுனிகளையுடையபாளையினின்று தோன்றிய கள்ளும், சோலை வீழ் கனியின் தேன்உம்-சோலைகளிற் பழுத்துவீழ்கின்ற பழங்களின் சாறும், தொடை இழி இறாலின் தேன்உம் - ஒழுங்காக இழிகின்ற தேன்கூட்டின் தேனும், மாலைவாய் உகுத்த தேன்உம் - பூமாலைகள் வெளிவிட்ட தேனும், வரம்பு இகந்து ஓடி - எல்லையில்லாமற் பெருகிச் சென்று, வங்கம் வேலைவாய் மடுப்ப - அலைகளையுடைய கடலினிடத்துப் போய்ச்சேர, மீன் எலாம் உண்டு களிக்கும் - (அக்கடலில் வாழும்) மீன்களெல்லாம் (அத்தேன்களையுட்கொண்டு) களிப்படையும்; (எ - று.)

அந்நாட்டு மருதநிலத்திலிருந்து பெருகிச் சென்ற தேன்கள் நெய்தல் நிலத்தைச் சார்ந்து கடலிற் போய்விழ, அதனால் உவர்க்கடல் தேன்கடலாக, அத்தேன்களை அக்கடலில்வாழும் மீன்கள் உண்டு களிப்புக்கொள்ளுமென்க. இதனால், அந்நாட்டவர் உதவுந் தன்மையரென்ற பொருளும் தொனிக்கும். இச்செய்யுளில் தேன்மிகுதி பெறப்பட்டது - வீறுகோளணியாம். தொடையளியிறாலின் தேனும் என்ற பாடத்துக்கு - தேனடை கனிந்தொழுகுகின்ற தேன்கூட்டின்மதுவு மென்க. பி - ம்:—[1]சோலைவாய் [2]வேலை. (கூ)

கO.—நீர்மலர்கள்.

பண்கள்வாய் மிழற்று மின்சொற் கடைசியர் பரந்து நீண்ட
கண்கைகான் முகம்வா யொக்குங் களையலாற் களையி லாமை
யுண்கள்வார் கடைவாய் மள்ளர் களைகலா [1]துலாவி நிற்பார்
பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால்.

(இ - ள்.) உண் கள் வார் கடைவாய் மள்ளர் - குடிக்கின்ற கள் ஒழுகாநிற்கும் வாயோரங்களையுடைய உழவர்,— பண்கள் வாய் மிழற்றும் இன் சொல் கடைசியர் - பண்கள்போல [இனிமையாக] வாயினாற் பேசுகின்ற

இன்சொற்களையுடைய உழத்தியரின், பரந்து நீண்ட கண் கை கால் முகம் வாய் - அகன்று நீண்டுள்ள கண் முதலிய உறுப்புக்களை, ஒக்கும் - ஒத்திருக்கின்ற, களை அலால் - (கருங்குவளைமலர் தாமரைமலர் ஆம்பன்மலர் என்ற மலர்களாகிய) களைக ளல்லாமல், களை இலாமை - (பயிருக்குக்)களையாகத் தோன்றியவை வேறொன்றில்லாமையால், களைகலாது - (அந்தக்களைகளைக்) களையமனம்வராமல், உலாவி நிற்பார் - (களைபறிக்கவேண்டிய காலங்களில்) உலாவிக்கொண்டிருப்பார்கள்; (இது தக்கதே: எப்படியென்றால்),—சிறியோர் - கீழோர்,பெண்கள்பால் வைத்த நேயம் பெற்றால் - பெண்களிடத்து(த் தாம்) அன்புவைத்தலைப் பொருந்தினால், பிழைப்பரோ - (பிறகு அதனினின்று) தவறுவார்களோ? [தவறமாட்டார்களல்லவோ?] (எ - று.)

சிறியோர் பெண்கள்பால் தாம் அன்புவைத்தாராயின் அதனைத் தவிர வேண்டியகாலத்தும் தவிரமாட்டார்க ளென்ற பொதுப்பொருளை, உழவர் களைபறிக்கவேண்டியகாலத்தும் களையாயிருப்பவைகள் தாம் அன்பு வைத்த மகளிரின் கண் முதலிய உறுப்புக்களைப் போன்றிருத்தலினாற் களை பறியாது உலாவித் திரியலாயின ரென்றசிறப்புப் பொருள்கொண்டு விளக்கினார்; வேற்றுப்பொருள்வைப்பணி. கண் - கருங்குவளையையும், வாய் - செவ்வாம்பலையும், மற்றைக் கை கால் முகங்கள்-தாமரைமலரையும் ஒக்கு மென்க. பேற்றால் என்று பாடமாயின், வேறொருபயனால் என்க. [1]உலோபி நிற்பார் என்றபாடத்திற்கு - விருப்பங்கொண்டுவாளாவிருப்ப ரென்க: உலோபி - 'உலோபு' என்ற பகுதியின் செய்தெனெச்சம். (க0)

கக.—மங்கையரின் மிகுதி.

புதுப்புனல் குடையு மாதர் பூவொடு நாவி பூத்த
கதுப்புறு வெறியே நாறுங் கருங்கடற் றரங்க மென்றான்
மதுப்பொதி மழலைச் செவ்வாய் [1]வாட்கடைக் கண்ணின் மைந்தர்
விதுப்புற நோக்கு மன்னார் மிகுதியை விளம்ப லாமோ.

(இ - ள்.) கருங் கடல் தரங்கம் - கருநிறமாகத்தோன்றுகின்ற சமுத்திரத்தி னலைகள்,—புது புனல் குடையும் மாதர் - புதுவெள்ளத்தின் நீரில் நீராடுகின்ற மகளிருடைய, பூவொடு நாவி பூத்த கதுப்பு - மலர்களும் கஸ்தூரிக்குழம்பும் பொருந்திய கூந்தலில், உறு - மிக்கிருக்கிற, வெறியே - மணமே, நாறும் - வீசும், என்றால்-, மைந்தர் விதுப்பு உற - ஆடவர் ஆசை மிக, வாள் கடைக்கண்ணின் நோக்கும் - வாட்படைபோற் கூரிய கடைக் கண்ணினாற் (காதற்குறிப்புடன்) பார்க்கின்ற, மது பொதி மழலை செவ் வாய் அன்னார் - தேனினினிமை நிரம்பிய குதலைச் சொற்களைச் சொல்லுகின்ற செந்நிறவாயையுடைய அந்தமகளிரின், மிகுதியை—, விளம்பல் ஆமோ-சொல்லமுடியுமோ? [முடியாதென்றபடி]; (எ-று.)

அந்தநாட்டுமகளிர் நீராடும் யாற்றுவெள்ளத்தின்நீர் மலரையும் நாவியையும் அணிந்த அம்மகளிர் கூந்தலின் நறுமணங் கலக்கப்பெற்றுச் சென்று, கடலிற்பாய்ந்து அதன்புலால்நாற்றத்தையும் நீக்கி அந்தக்கடலின் நீரையும்

நறுமணம் பொருந்தச் செய்யுமென்பது, முன்னிரண்டடிகளிற்கூறிய விஷயம்; வீறுகோளணி: இங்ஙனம் கடனீரும் நறுமணங்கமழுமாறு நீராடுதலால், அங்ஙனம் நீராடும் மகளிர் மிகப்பலரென்று உய்த்துணரவைத்தது - அநுமானலங்காரமாம். பி - ம்:—[1]வாட்படை. (கக)

கஉ.—ஆடவரின் மிகுதி.

வெண்டளக் கலவைச் சேறுங் குங்கும விரைமென் சாந்துங்
குண்டலக் கோல மைந்தர் குடைந்தநீர்க் கொள்ளை சாற்றின்
றண்டலைப் பரப்புஞ் சாலி வேலியுந் தழீஇய வைப்பும்
வண்டலிட் டோடு மண்ணு மதுகர மொய்க்கு மாதோ.

(இ - ள்.) சாற்றின் - சொல்லுமிடத்து,—குண்டலம் கோலம் மைந்தர் குடைந்த நீர் கொள்ளை - குண்டலத்தையணிந்த அழகிய ஆடவர் மூழ்கின நீரின்மிகுதி,—(அந்நீர் பாயப்பெற்ற), தண் தலை பரப்புஉம் - சோலைப் பரப்புக்களும், சாலி வேலிஉம் - நெற்பயிர்களுண்டாகுமிடமும், தழீஇய- பொருந்திய, வைப்பும் - மருதநிலம் முழுவதிலும், வெண் தளம் கலவை சேறுஉம்-வெண்ணிறமாகி அழுத்தமாகவுள்ள (பச்சைக்கருப்பூரம் முதலிய) கூட்டுவர்க்கத்தோடு கூடிய சந்தனக்குழம்பையும், குங்குமம் விரை மெல் சாந்தும்-குங்குமப்பூச்சேர்ந்த பரிமளமுள்ளமெல்லியசெஞ்சந்தனக்குழம்பையும், வண்டல் இட்டு - வண்டலாகப்படியுமாறு செய்து, ஓடும்—; மண்உம் - (அவ்வண்டற்படிந்த) மண்ணிலும், மதுகரம் மொய்க்கும்-(மணத்தை நாடி) வண்டுகள் மொய்யாநிற்கும்; (எ - று.)—மாது ஓ - ஈற்றசை.

மைந்தர்நீராடின நீர்க்கொள்ளை, அம்மைந்தர்களின் கலவைச்சேற்றையும் குங்குமச்சாந்தையும் சோலைப்பரப்பு சாலிவேலி இவைகளைக்கொண்ட மருதவைப்புஎங்கும் வண்டலாகச் செய்து ஓடும்; அன்றியும், அம்மருதநிலமெங்கும் அம்மைந்தரணிந்த கலவைச்சாந்து முதலியவற்றின் மணத்தை நாடி வண்டுகள் மொய்க்கு மென்பதாம். ஆடவராடும் நீர்மிகுதியைக் கூறினரேனும், கீழ்ச்செய்யுளில் மகளிர்மிகுதியைப் பெறவைத்த நூலாசிரியர்க்கு மிக்க நீரில் ஆடும் ஆடவர் மிகுதியைக் கூறுதலே கருத்தாகும். சாற்றின் என்ற வினையெச்சத்தை 'என்று சொல்க' என்று கூட்டி முடிக்க. [பரப்]புக்களிலும் மருதவேலிகளிலும்,தழீஇய வைப்புக்களிலும் வண்டலிட்டு ஓடுமெனினுமாம். தழீஇய வைப்பும் என்பதற்கு-(பரப்பு வேலி என்ற இவைகளைச்) சார்ந்துள்ள கரம்புநிலங்களிலும் என்பாரு முளர். மதுகரம் - தேனை மலர்களிலிருந்து ஈட்டுவது எனப் பொருள்படும் வடசொல். (கஉ)

கங.—பண்ணையின் வருணனை.

சேலுண்ட வொண்க ணாரிற் றிரிகின்ற செங்கா லன்ன
மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத் தேரை[1]தா லாட்டும் பண்ணை,

(இ - ள்.) பண்ணை - வயல்களில்,—சேல் உண்ட ஒண் கணாரில் திரிகின்ற செங்கால் அன்னம் - சேலென்னும்மீனையொத்த விளக்கமாகிய கண்களையுடையரான மகளிர்போல் நடந்துதிரிகின்ற செந்நிறமுள்ள பாதங்களையுடைய பெண்ணன்னப்பறவை, மால் உண்ட நளினம் பள்ளி வளர்த்திடிய மழலை பிள்ளை - பெருமைபொருந்திய தாமரைமலராகிய படுக்கையிற் கிடத்திய இளங்குஞ்சு; - கால் உண்ட சேறு மேதி கன்று உள்ளி கனைப்ப சோர்ந்த பால் உண்டு - (மேயச்செல்லும்போது தமது) காலிற்பட்ட சேற்றையுடைய எருமைகள் (ஊரில்விட்டுவந்த) தமதுகன்றை நினைத்துக் கனைப்பதனால் (அவற்றின்முலையினின்று தானே) பெருகிய பாலைக் குடித்து, (பிறகு), துயில - இனிது உறங்குமாறு, பச்சை தேரை - பசுநிறமுள்ள தவளை, தாலாட்டும் - தாலாட்டுப்பாடும்; (எ - று.)

அன்னப்பறவைகள் தமதுகுஞ்சுகளை மலர்ப்படுக்கையிற் கிடத்த, எருமைகள் தமது கன்றுக்கு இரங்கித் தமது முலைவழியேபெருக்கிய பால் அக்குஞ்சுகட்கு உணவாக, பிறகு அவை இனிது துயிலுமாறு தாலாட்டுப்பாடுதல்போலத் தமது நாவினால் தேரைகள் ஒலிசெய்யுமென்க. இச்செய்யுளில் உருவகவணி காண்க. எருமைகள் தமது கன்றை நினைத்தமாத்திரத்தில் அக்கன்றுகளின்மீதுள்ள அன்பினால் தமது முலைவழியே பால்சுரக்குந்தன்மையனவென்பதை "கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி, நினைத்து முலைவழியே நின்றுபால்சோர" என்ற பாசுரத்திலுங் காண்க. "ஊரினின்ற கன்றுள்ளிட்மென் முலைத்தாரைகொள்ளத் தழைப்பனசாலி" என்பர், மேலும். திருமகள் தங்குஞ் சிறப்பு வாய்ந்ததாதலால், 'மாலுண்ட நளினம்' என்றார்: மாலுண்ட என்பதை, பிள்ளை என்பதனோடு இயைத்து, (தாம்) அன்புபூண்ட எனினுமாம். மழலை என்ற சொல் - இலக்கணையால், இளமையையுணர்த்திற்று. [1]தாராட்டுமென்றபாடத்துக்கு லகர ரகரங்கட்கு அபேதத்தால், தாராட்டும் என்றாரென்க. இனி, தாராட்டும் - அந்தப்பூவினைத் தொட்டிலையாட்டுவதுபோலஆட்டு மென்றும்பொருள்படும். (கஙு)

கசு.—சோலைவருணனை.

குயிலினம் வதுவை செய்யக் கொம்பிடைக் குனிக்கு மஞ்ஞை
யியில்விழி மகளி ராடு மரங்கினுக் கழகு செய்யப்
பயில்சிறை யரச வன்னம் பன்மலர்ப் பள்ளி நின்றுந்
துயிலெழத் தும்பி காலைச் செவ்வழி முரல்வ சோலை.

(இ - ள்.) சோலை - சோலைகளில், குயில் இனம் - குயிலின் கூட்டங்கள், வதுவைசெய்ய-மணஞ்செய்ய, கொம்பு இடை-மரக்கிளைகளில், குனிக்கும் மஞ்ஞை - ஆடுந்தன்மையுள்ள மயில்கள், அயில் விழி மகளிர் ஆடும் அரங்கினுக்கு-வேற்படைபோன்ற கண்களையுடைய மகளிராடுகின்ற நர்த்தநசாலையினும்,அழகுசெய்ய-(அச்சோலைக்குமிக்க)அழகை யுண்டாக்க,—பயில் சிறைஅரச அன்னம் பல் மலர் பள்ளி நின்றும் துயில் எழ-நெருங்கிய சிறகையுடைய அரசவன்னப்பறவைகள் பலவாகிய தாமரைமலர்களாகிய படுக்

கையினின்றும் துயில் நீங்கவும், தும்பி - வண்டுகள், காலை - காலையில், செவ்வழி - செவ்வழிப்பண்ணை, முரல்வ - பாடுவன; (எ - று.)

சோலைகளில் ஒருபால், குயிலினம் கிளைகளில் வதுவை செய்யாநிற்க, ஒருபால் மயிற்குலம் கூத்தாடி அந்தச் சோலையை நர்த்தனசாலைகளினும் அழகு மிகச் செய்ய,ஒருபால் அரசவன்னம் துயிலெழுமாறு வண்டுகள் செவ்வழிப்பண்ணைக் காலையிற் பாடுமென்க. அரசவன்னம் - ராஜஹம்ஸம்; இது, தாள் முதலிய உறுப்புக்கள் செந்நிறமாக இருக்குமென்ப. செவ்வழி - வைகறையிற்பாடும் பண். அரங்கினுக்கு - அரங்கினும்: வேற்றுமைமயக்கம். கொம்பிடை குனிக்கும் மஞ்ஞை யெனக் கூட்டுதலுமாம். (கச)

**கரு.—இதுமுதல் நான்குகவிகள் - குளகம்: பலரும் பலபடி இனிது போதுபோக்குதலைத் தெரிவிக்கும்.**

**பொருந்திய மகளி ரோடு வதுவையிற் பொருந்து வாரும்**
**பருந்தொடு நிழல்சென் றென்ன வியலிசைப் பயன்றுய்ப் பாரு**
**மருந்தினு மினிய கேள்வி செவியுற மாந்து வாரும்**
**விருந்தினர் முகங்கண் டன்ன விழாவணி விரும்பு வாரும்.**

(இ - ள்.) பொருந்திய மகளிரோடு - (பருவம் வடிவம் குலன் செல்வம் முதலியவை)ஒத்துள்ள மகளிருடனே,வதுவையில் பொருந்துவார்உம்-விவாகச் சடங்கிற் பொருந்தியிருப்பவர்களும்,- பருந்தொடு நிழல் சென்று என்ன இயல் இசை பயன் துய்ப்பார்உம் - பருந்தோடு அதன் நிழலும் தொடர்ந்து செல்லுதல்போல இயலையொத்துச் செல்லுகின்ற இராகத்தின் இனிமையை யனுபவிப்பவரும்,—மருந்தின்உம் இனிய கேள்வி செவிஉற மாந்துவார்உம்- (நாவுக்கு இனிமையைத் தருகின்ற) தேவாமிருதத்தைக் காட்டிலும் (செவிக்கு) மிக்க இனிமையைத்தருகின்ற நூற்கேள்விகளை(த் தமது) செவிகளாகிற வாயாற் பொருந்த உட்கொள்வாரும், விருந்தினர் முகம் கண்டுஅன்ன விழா அணி விரும்புவார்உம் - விருந்தினருடைய முகத்தைக் கண்டு (அவர்கட்கு) அன்னமளித்தலாகிய விழாவின் சிறப்பை விரும்புபவர்களும்,-(எ-று.)

சிலர் புதிதாய் மணந்தமகளிரோடு இன்பந் துய்த்தும், சிலர் இயலிசைப் பயன் துய்த்தும், சிலர் இன்கேள்விகளை நுகர்ந்தும், சிலர் விருந்தினர்க்கு உபசரித்தும் போதுபோக்குவ ரென்க. இயல் - பாடுதற்கு உரிய பாடல். பாடற்கும் அதையொட்டிவரும் இசைக்கும் முறையே பருந்தையும் அது பறந்துசெல்லுகையில் அதனையொட்டிச் செல்லும் நிழலையும் உவமை கூறினார்; "பருந்துமதனிழலும் பாட்டு மெழாலும்" என்ற சிந்தாமணியும்,'பருந்துபறக்குமிடத்து முறையே உயர்ந்து அந்நிலத்தின்கண்நின்று ஆய்ந்து பின்னும் அம்முறையே மேன்மேல் உயர்கின்றாற்போலப் பாடவேண்டுதலின் அஃது உவமையாயிற்று' என்ற உரையும் இங்கு நோக்கத்தக்கன. பொருந்திய என்பதற்கு - விவாகத்திற்குப் பார்க்கவேண்டிய பத்துவகைப் பொருத்தங்களும் சரியாக அமைந்துள்ள எனினுமாம்; பத்துவகைப்பொருத்தங்களாவன-தினம் கணம் மாகேந்திரம் ஸ்திரீதீர்க்கம் யோனி ராசி ராசியதிபதி

வசியம் ரஜ்ஜு வேதை யென்பன: இவற்றின்விவரங்களைச் சோதிடநூல் களிற் காணலாம். ஈற்றடிக்கு - விருந்தினர்முகத்தைப் பார்த்து அப்படிப் பட்ட [மிகச்சிறந்த] திருவிழாவைக் கண்டாற்போல இனிதுவிரும்புபவ ரும் என்றும் உரைக்கலாம். (கரு)

கசு. கறுப்புறு மனமுங் கண்ணிற் சிவப்புறு சூட்டுங் காட்டி
யுறுப்புறு படையிற் றாக்கி யுறுபகை யின்றிச் சீறி
வெறுப்பில களிப்பின் வெம்போர் மதுகைய வீர வாழ்க்கை
மறுப்பட வாவி பேணு வாரணம் பொருத்து வாரும்.

(இ - ள்.) உறு பகை இன்றி சீறி - (முன்பு ஒன்றோடொன்று) பொரு ந்திய பகையில்லாமலே சீற்றங்கொண்டு, கறுப்பு உறு மனமும் கண்ணில் சிவப்பு உறு சூட்டும் காட்டி - சினம்பொருந்திய மனத்தையும் கண்ணைக் காட்டிலும் செந்நிறம்பொருந்திய உச்சிக்கொண்டையையும் தோற்றுவித்து, உறுப்பு உறு படையில் தாக்கி - (தாளாகிய) உறுப்பிற் கட்டப்பட்டுள்ள வாட்படைகளினால் (எதிர்த்தகோழிகளைத்) தாக்கி, வெறுப்பு இல - (போர் செய்தலில்) வெறுப்பில்லாதனவாகி, களிப்பின் வெம் போர் மதுகைய - மனச்செருக்கோடு கொடிய போரைச்செய்யும் வலிமையையுடையனவும், வீரம் வாழ்க்கை மறுபட ஆவி பேணு - (தாம்) வீரத்தோடு வாழ்வதற்கு ஒருகுறையுண்டாகும்வண்ணம் (உயிர்தப்புமாறு ஓடிப்போகாமல் தமது) உயிரையும் ஒருபொருட்டாக மதியாதனவுமான, வாரணம் - கோழிகளை, பொருத்துவார்உம் - (போர்செய்யுமாறு) ஏவுபவர்களும்,—(எ - று.)

சிலர் கோழிப்போரினாற் பொழுதுபோக்குவதை இதனாற் கூறுகின் றன ரென்க. இங்குக்கோழிப்போரை இயற்கையழகுபட வருணித்துக் கூறி யது, தன்மைநவிற்சியணியாம். சினக்குறிப்பாகக் கண்சிவந்திருத்தலால், 'கண்ணிற்சிவப்புறு' எனப்பட்டது. கறுப்புறுமனமும்... சிவப்புறு சூட்டுங் காட்டி - தொடைமுரண். கோழியைப் போர்க்கு விடுபவர் அதன்தாளிற் கத் தியைக்கட்டி விடுதல் இயல்பாதலால், 'உறுப்புறுபடையில்தாக்கி' என்றார்; இனி இத்தொடர்க்கு-உறுப்பாகப்பொருந்திய படையினால் என்று உரைத்து, கால்களை ஆயுதமாகக்கொண்டு கோழி பொரவல்லதனால், இங்ஙனம் கூறினா ரென்றலுமொன்று: வடமொழியிற் கோழிக்குஉள்ள பெயராகிய'சரணாயுதம்' என்ற சொல், இவ்விருவகைப்பொருட்கும் ஏற்கும். உறுபகையின்றிச்சீறி - "கறுவொடு மொன்றோடொன்று காரணமின்றிச் சீறி" என்றார் பிறரும். பேணு - வினையாலணையும்பெயர். (கசு)

கஎ. எருமைநா கீன்ற செங்க ணேற்றையோ டேற்றை சீற்றத்
துருமிவை யென்னத் தாக்கி யூழுற நெருக்கி யொன்றாய்
விரியிரு ளிரண்டு கூறாய் வெகுண்டன வனைய நோக்கி
யரியினங் குஞ்சி யார்ப்ப மஞ்சுற வார்க்கின் றாரும்.

(இ - ள்.) எருமை நாகு - எருமைகள், ஈன்ற - பெற்ற, செம் கண் - செந்நிறக்கண்களையுடைய, ஏற்றையோடு - எருமைக்கடாவுடனே, ஏற்றை-

மற்றொரு எருமைக்கடா, இவை சீற்றத்து உரும் என்ன-'இவை கோபத்தை யுடைய இடியாகும்' என்று சொல்லும்படி, தாக்கி - முட்டி, ஊழ் உற நெருக்கி - முறைமையாகநெருக்க, 'ஒன்று ஆய் விரி இருள் இரண்டு கூறு ஆய் வெகுண்டன அனைய-ஒருபொருளாக உலகம் முழுவதும் பரவுகின்ற இருள் இரண்டுபகுதியாகி (ஒன்றோடொன்று) சினந்து பொருகின்றனவற்றை யொத்தனவாகிய அந்தக் கடாக்களை, நோக்கி - வேடிக்கைபார்த்து, (அவற்றுள் ஒவ்வொன்றும் தன்தன்திறமையை விசேடமாகக் காட்டும்போது),அரி இனம் குஞ்சி ஆர்ப்ப - (தமது வியப்புக்குறிப்பைத்தெரிவிக்கும்படி சிரத்தை யசைத்தலால் தாஞ்சூடிய மலர்களில் மொய்த்துள்ள) வண்டுகளின் கூட்டம் கூந்தலினின்று எழுந்து ஆரவாரஞ்செய்ய, (தாம்), மஞ்சு உற ஆர்க்கின்றார் உம் - மேகமண்டலம்வரையில் (தமது குரலொலி) செல்லுமாறு முழங்குபவர்களும்,—(எ - று.)

சிலர் எருமைக்கடாக்களைப் பொரவிட்டுப் போதுபோக்குதலை, இதனாற் கூறுகின்றனர். இருள் பிரிந்து இருபகுதியாகி, ஒன்றோடொன்று முட்டி நெருக்கிப் பொருவதுபோல எருமைகள் ஒன்றோடொன்று தாக்கிப் போர்செய்வது கண்டு, சிலர் தமதுகொண்டாட்டத்தைத் தெரிவிக்குமாறு தலைதுளுக்கி ஆரவாரஞ்செய்வரென்க. மூன்றாமடி - இல்பொருளுவமை. எருமை நாகு-இருபெயரொட்டு: "எருமையும் மரையும்பெற்றமுநாகே" என்பது, தொல்காப்பியம். பி - ம்:—[1]வெகுண்டென. (கஎ)

கஅ. முள்ளரை முளரி[1]வெள்ளி முளையிற முத்தும் பொன்னுந்
தள்ளுற மணிகள் சிந்தச் சலஞ்சலம் புலம்பச் சாலிற்
றுள்ளிமீன் றுடிப்ப வாமை தலைபுடை சுரிப்பத் தூம்பி
னுள்வரா லொளிப்ப மள்ள ருழுபக டுரப்பு வாரும்.†

(இ - ள்.) முள் அரை முளரி வெள்ளி முளை இற - முள்ளரையை யுடைய தாமரையின் வெண்ணிறமானமுளை ஒடியவும், முத்துஉம் பொன் உம் தள்ளுஉற - (நிலத்திற்கிடக்கின்ற) முத்தமும் சுவர்ணமும் (அப்பால்) தள்ளப்படவும், மணிகள் சிந்த-இரத்தினங்கள் சிதறவும், சலஞ்சலம் புலம்ப-சலஞ்சலமென்னுஞ் சங்குகள் வாய்விட்டு அழவும், சாலில் மீன் துள்ளி துடிப்ப-உழுபடைச்சால்களில் மீன்கள் துள்ளித் துடிக்கவும், ஆமை தலை புடை சுரிப்ப - ஆமைகள் (தமது) தலையையும் பக்கத்துள்ள நான்கு கால்களையும் (தமது உடம்புகளில்) அடக்கிக்கொள்ளவும், தூம்பினுள் வரால் ஒளிப்ப - மதகுகளிற்சென்று வரால்மீன்கள் ஒளித்துக்கொள்ளவும், மள்ளர் உழு பகடு உரப்புவார்உம் - உழுகின்ற கடாக்களை அதட்டிச் செலுத்துகின்றவரான உழவர்களும், (அங்குஉள்ளார்); (எ - று.)

மள்ளர் உழுபடைகொண்டு நிலத்தை உழும்போது கழனிகளில் உழுபகட்டை உரப்பியதனால் முளைத்திருக்கும் தாமரையின் முளையிறுதல் முதலியன நிகழ்ந்தனவென்க. சலஞ்சலம் - சங்கின் சாதிபேதம்: "இப்பியாயிரமே சூழ்ந்த சலஞ்சலம்" என்றதுகாண்க. ஏதேனும் ஒன்று தம்மீது படும்போது ஆமை தமது உறுப்புக்களை உடலில் அடக்கிக்கொள்ளுதல், இயல்பு.

† இந்தச் செய்யுளின்பின் "முந்து" என்று தொடங்கும் உஉ-ஆம்பாடல் சில பிரதிகளிற் காணப்படுகின்றது.

'அங்குஉள்ளார்' என ஒருமுற்றுவருவித்து, விரும்புவாரும் (கடு), பொருத்துவாரும் (கசு), ஆர்க்கின்றாரும் (கஎ), உரப்புவாரும் (கஅ) அங்கு உள்ளார் என முடிக்க. இனி'உரப்புவாரால்'என்றபாடங்கொள்ளின்,கீழ்ச்செய்யுளில், 'அங்குள்ளார் என்று வருவித்துமுடிவுகாண்க. பி - ம்:—[1]வெள்ளை. (கஅ)

**கசு.—விளைபொருள்களின் ஏற்றுமதி.**

**முறையறிந் தவாவை நீக்கி முனிவுழி முனிந்து வெஃகு**
**மிறையறிந் துயிர்க்கு நல்கு மிசைகெழு வேந்தன் காக்கப்**
**பொறைதவிர்ந் துயிர்க்குந் தெய்வப் பூதலந் தன்னிற் பொன்னி**
**னிறைபரஞ் சொரிந்து வங்க நெடுமுது காற்று நெய்தல்.**

(இ - ள்.) முறை அறிந்து - மநுநீதியை யறிந்து, அவாவை நீக்கி - (குடிகளிடத்தினின்று பணத்தை எப்படியாவது பறித்துக்கொள்ள வேணுமென்ற) ஆசை சிறிதுமில்லாமல், முனிவு உழி முனிந்து - சினங்கொள்ள வேண்டியவிடத்துச் சினங்கொண்டு, வெஃகும் இறை அறிந்து - (தான்) விரும்பத்தக்க கடமைப்பொருளை யறிந்துபெற்று, உயிர்க்கு நல்கும் - (தன் செங்கோலின்கீழ் வாழும்) பிராணிகளிடத்து இரக்கங்கொள்கின்ற, இசை கெழு வேந்தன் - புகழ்விளங்குகின்ற அரசன், காக்க - பாதுகாத்தலினால், பொறை தவிர்ந்து - (பாவம் நிரம்புதலினாலாகிய) சுமை நீங்கி, உயிர்க்கும் - இளைப்பாறுகின்ற, தெய்வம்பூதலந்தன்னின்-பூமிதேவியைப்போல, வங்கம்- கப்பல்கள், பொன்னின் நிறை பரம் சொரிந்து-அருமையானபொருள்களின் நிறைந்த பாரத்தை (இந்தநாட்டினின்று ஏற்றிக்கொண்டு சென்று) இறக்கிவிட்டு, நெய்தல் - நெய்தல்நிலத்தில், நெடு முதுகு ஆற்றும் - (தன்னுடைய) நீண்ட முதுகை (ப் பாரத்தைச் சுமந்ததனாலான வருத்தத்தை) யாற்றிக்கொள்ளும்; (எ - று.)

இந்தநாட்டில் அருமையான பலபொருள்கள் மிகுதியாக விளைதலால் அவற்றில் இந்நாட்டிற்கு வேண்டியனபோக எஞ்சியவற்றை வேற்றுநாட்டிற்கு மரக்கலங்கள் ஏற்றிச்சென்று இறக்குதலைக் கூறுமுகத்தால், இந்நாட்டிற் பல அரும்பொருள்கள் மிகுதியாக விளைதலைப் பெறவைத்தார். இங்ஙனம் பலபொருள்களை யேற்றிக்கொண்டுசென்று இறக்கியபிறகு அந்த மரக்கலம் முதுகாற்றி நிற்பதற்கு, செங்கோல்மன்னன் அரசுசெய்வதாற் பாரமற்று இளைப்பாறிநிற்கும் பூமியை உவமை கூறினர். வேந்தன் - தயரதனென்னலாம். முனிவுழி முனிதல் - அறத்திற்கு விரோதமான செயலைப் புரிபவரைக் கடிந்து தண்டித்தல். வெஃகும் இறை - ஆறிலொன்றாகிய கடமை. பி - ம்:—[1]பூதலமதனின். (கசு)

**உ0.—அறுத்த நெல்லைப் பண்டியினாற் கொண்டுசேர்த்தல்.**

**எறிதரு மரியின் சும்மை [1]யெடுத்துவா னிட்ட போர்கள்**
**குறிகொளும் போத்திற் கொல்வார் கொன்றநெற் குவைகள் செய்**
**வறியவர்க் குதவி மிக்க விருந்துண மனையி [2]லுய்ப்பா [வார்**
**னெறிகளும் புதையப் பண்டி [3]நிறைத்துமண் ணெளிய வூர்வார்.**

(இ - ள்.) (மள்ளர்);—எறிதரும் - (வாள்கொண்டு) அரியப்பட்ட, அரியின் சும்மை - நெல்லரிகளின் தொகுதிகளை, எடுத்து—, வான் இட்ட - ஆகாயமளாவப் போகட்ட, போர்கள் - போர்களை, குறி கொளும் போத்தில் கொல்வார் - (தம்மைச் செலுத்துவோரின்) கருத்தின்படி செல்லுகின்ற கடாவைக்கொண்டு துவைப்பிப்பார்; கொன்ற நெல் - அங்ஙனம் மிதிப்பித்ததனாற் கதிரினின்று கீழ்வீழ்வித்த நெற்களை, குவைகள் செய்வார்-குவித்து, - வறியவர்க்கு உதவி - (களப்பிச்சை கொள்ளுதற்கு உரியவரான) ஏழைகட்குக் கொடுத்து, மிக்க - எஞ்சிய தானியங்களை, விருந்துஉண - விருந்தோடு உண்ணுமாறு, மனையில் - (தமது) வீடுகளில், உய்ப்பான் - கொண்டுபோய்ச் செலுத்தும்படி, நெறிகளும் புதைய பண்டி நிறைத்து - (செல்லுகின்ற) வழிகளும் குழிந்துபோம்படி வண்டிகளில் நிறைத்து, மண் நெளிய - (பாரமிகுதியைத் தாங்கமாட்டாது) நிலமும் முதுகு நெளியும்படி, ஊர்வார் - (அந்தநெல்லேற்றிய பண்டிகளைச்) செலுத்துவார்கள்; (எ - று.)

மள்ளர்கள் நெற்கதிர்களை யறுத்துக் கடாக்களைக்கொண்டு துவைப்பித்து நெற்களைக் குவித்துக் களப்பிச்சைமுதலியவற்றை யீந்திட்டுத் தமக்கு உரியபகுதியை வண்டிகளில் நிறையவேற்றித் தமதுமனையிற் சேர்ப்பரென்க. எழுவாய்வருவிக்க. விருந்தைக்கூறினது - தென்புலத்தார்முதலிய மற்றையோர்க்கும் உபலட்சணம். அரசனுக்கு ஆறிலொன்றுபோக எஞ்சிய ஐந்து பகுதியைக்கொண்டு செய்யவேண்டிய முறைமையை "தென்புலத்தார்தெய்வம்விருந்தொக்கல்தானென், றைம்புலத்தாறோம்பறலை" என்று திருவள்ளுவர் கூறியுள்ளது காண்க. இருந்துஉணஎன்று பிரித்து-மனையிலிருந்துண்ண என்றுமாம். குறிகொளும்போத்து - "வினைஞர்தங்குறிப்பிற்செல்லுவ" என்றார், பிறரும். "ஈடுசால்போரழித்தெருமைப்போத்தினுன், மாடுறத்தெழித்துவைகளைந்துகாலுறீஇச், சேடுறக்கூப்பியசெந்நெற்குப்பைகள்" என்றது முதலிரண்டடியோடு ஒப்பிடத்தக்கது. 'குறிகளும்போற்றிக்கொள்வார்' என்று அச்சுப்பிரதிகளிற் காணப்படும் பாடம் சிறவாமைகாண்க. உய்ப்பான் - 'பான்' ஈற்றுஎதிர்காலவினையெச்சம். பி - ம்:—[1]எடுத்துளார். [2]உய்ப்பார். [3]நிரைத்து. (உ0)

உக.—மள்ளர் பலபொருள்களையும் மெல்லக் கொள்ளுதல்.

கதிர்படு வயலி னுள்ள கடிகமழ் பொழிலி னுள்ள
முதிர்[1]பல மரத்தி னுள்ள [2]முதிரைகள் புறவி னுள்ள
பதிபடு கொடியி னுள்ள படிவளர் குழியி னுள்ள
மதுவன மலரிற் கொள்ளும் வண்டென மள்ளர் கொள்வார்.

(இ - ள்.) கதிர் படு வயலின் உள்ள - கதிராக விளைகின்ற வயலிலுள்ள தானியங்களையும், கடி கமழ் பொழிலின் உள்ள ர் பல மரத்தின் உள்ள - நறுமணம்வீசுகின்றபொழிலிலுள்ள முதிர்ந்த பலமரங்களிலுள்ள பழங்களையும், புறவின் உள்ள முதிரைகள் - கொல்லையில் விளைவனவான (துவரைமுதலிய) பருப்புவகைகளையும், பதி படு கொடியின் உள்ள - (பூமியிற்) பதிக்

கப்பட்ட கொடியிலுண்டாகும் பொருள்களையும்,படி வளர் குழியின் உள்ள- பூமியில்வளர்கின்ற குழிதோண்டிப்பெயர்த்தெடுக்கவேண்டிய கிழங்குகளையும்,— மள்ளர் - உழவர்,—வன மலரின் - அழகியமலர்களினின்று, மது கொள்ளும் - தேனைக்கொள்கின்ற, வண்டு என-வண்டுகளைப்போல, கொள்வார் - (மெல்ல மெல்ல) எடுத்துக்கொள்வார்கள்; (எ - று.)

வண்டுகள் பலமலர்களிடத்துஞ்சென்று தேனைக்கொணர்ந்து ஓரிடத்திற் சேர்ப்பதுபோல, மள்ளர் எல்லாவிடத்துஞ்சென்று அவ்வவ்விடத்துப் பொருள்களை அந்நாட்டிற் கொண்டுவந்துசேர்ப்ப ரென்பதாம். மள்ளர்க்கு மலரினின்று மதுவைக்கொள்ளும் வண்டை உவமை கூறியதனால், சாரமான ஒவ்வொரு பொருளையும் தயங்காமற் கொள்ளுந்தன்மையையுடையவர் அம்மள்ள ரென்பது, பெறப்படும். படிவளர் குழியின் உள்ள என்பதற்கு - பாத்திகளில் வளருங் கீரைமுதலியன என்பாருமுளர். பொழிலினுள்ள என்றவிடத்துள்ள 'உள்ள' என்பது - குறிப்புப்பெயரெச்சம்; மற்றவை - வினையாலணையும்பெயர்கள். வனமலர் - வனப்புமலரென்பதன் விகாரம்: வனம்மலர் என்றுபிரித்து - வனத்திலுள்ளமலரென்றுஉரைப்பாருமுளர். பி - ம்:—[1]பயமரத்தின். [2]முதிரைகொள். (உக)

**உஉ.—அந்தணர் விருந்தோடு உண்டல்.**

**முந்துமுக் [1]கனியி [2]னானா முதிரையின் முழுத்த [3]நெய்யிற்**
**[4]செந்தயிர்க் கண்டங் கண்ட மிடையிடை செறிந்த சோற்றின்**
**றந்தமி லிருந்து தாமும் [5]விருந்தொடுந் தமரி னோடு**
**மந்தண [6]ரமுத ருண்டி யயிலுறு மமலைத் தெங்கும்.**

(இ - ள்.) எங்கும் - (அந்நாட்டின்) எவ்விடமும்,—அந்தணர் - பராமணர், தம்தம் இல் - தம்தம்முடைய வீட்டிலிருந்து, விருந்தொடுஉம்தமரினோடுஉம் தாம்உம் இருந்து - விருந்தினரோடும் பந்துக்களோடும் தாமும் இருந்து,— முந்து முக்கனியின்-(எல்லாக்கனிகளினுஞ்)சிறந்த (மா வாழை பலா என்ற)முப்பழங்களினாலும், நானா முதிரையின்-பலவகைப்பருப்புக்களினாலும், முழுத்த் அ நெய்யின் - (அந்தப்பருப்புக்களை) முழுத்துகின்ற அப்படிப்பட்ட (மிக்க) நெய்யினாலும், செம் தயிர் கண்டம் - செந்நிறமுள்ள தயிர்க்கட்டிகளினாலும், கண்டம் - கண்டசர்க்கரைகளினாலும், இடை இடை செறிந்த சோற்றின் - (இவற்றிற்கு) நடுவே நடுவே நெருங்கிய சோற்றினாலும், அமுதர் உண்டி அயில்உறும் - தேவர்களின்உணவாகியஅமிருதம்போலினிய உணவை உண்கின்ற, அமலைத்து - ஆரவாரத்தையுடையது; (எ-று.)

அந்தணர்கள் அந்நாட்டில் எங்கும் விருந்தினர்முதலானாரோடு இருந்து, முக்கனி முதலிய இனிய தின்பண்டங்கள் மிகுந்திருக்கச் சோற்றை இனிது உண்ப ரென்க. மள்ளர் பலபொருள்களையும்விளைவித்துத் தாம் கொள்வதைக் கூறிய கவி, இதனால், அவ்விளைபொருள்களை அம்மள்ளர் எல்லாவருணத்தார்க்கும் பயன்படுமாறு ஏற்றபெற்றி செய்வ ரென்பதைத் தெரிவிக்கக் கருதி, முதல்வருணத்தவரான அந்தணர்க்கு அவை பயன்

படுவதைக் கூறி, மற்றையோர்க்குப் பயன்படுவதை உபலக்கணத்தாற் பெறவைத்தன ரென்க. இனி, அந்தணர் - பிராமணர்கள், அமுதர் உண்டி - தேவருணவாகிய அவிசுகளை, அயில்உறும் - (தாம் செய்யும் வேள்விகளில்) உண்ணச்செய்கின்ற, அமலைத்துளனினுமாம். அமலைத்து என்றமுற்றுக்கு, பெயர்ச்சொல்தன்மைப்பட்ட 'எங்கும்'என்பது, எழுவாய். முழுத்து என்பது இப்பொருளதாதலை "துதிக்கை முழுத்திற்று" என்ற (திருவாய்மொழி - ௩, க, க) ஈட்டிலும் காண்க. பி-ம்:—[1]கனியும். [2]ஆனுமு திரையும். [3]செய்யும். [4]செந்தயிரொடுதேன்கண்டமுதலிய. [5]விருந்துநல்லமு துண்டென்ன. [6]அமுதவுண்டியயில்வுறும், முதலோருண்டியயர்வுறும். (உ௨)

**உ௩.—மகளிர் கண்ணைப் பெண்வண்டேன ஆண்வண்டுமயங்குதல்.**

பருவ மங்கையர் பங்கய வாண்முகத்
துருவ வுண்கணை யொண்பெடை யாமெனக்
கருதி யன்பொடு காமுற்று வைகலு
மருத வேலியின் வைகின வண்டரோ.

(இ - ள்.) வண்டு-(ஆண்) வண்டுகள்,—பருவம் மங்கையர் பங்கயம் வாள் முகத்து உருவம் உண் கணை - இளம்பருவத்தையுடையமங்கைமார்களின் தாமரைமலர்போன்ற ஒளிபொருந்திய முகத்திலுள்ள அழகிய மையுண்ட கண்ணை, ஒள் பெடை ஆம் என கருதி - அழகிய பெண்வண்டாகுமெனநினைத்து, அன்பொடு காமுற்று - அன்போடு ஆசைப்பட்டு, வைகலும் - நாடோறும், மருதம் வேலியின் - மருதநிலத்தில், வைகின - தங்கின.

ஆண்வண்டுகள் மருதநிலத்திலுள்ள மங்கையருடைய கண்களைக் கண்டு பெண்வண்டென்று மயங்கி, தமது பேடைகளினிடத்துச்செய்யும் அன்பைக்கொண்டு தங்குவதற்கிடமாவது, அந்நாட்டு மருதநில மென்க. மங்கையர்கண்களைப் பெண்வண்டென்று கருதியதாக வந்தது - மயக்கவணி யாம். கணை - கண்ணை: தொகுத்தல். 'வண்டெலாம்' என்றும் பாடமுண்டு. காமுற்று - காமம் உறு என்றசொற்களின் விகாரமான 'காமுறு' என்பதன் செய்தெனெச்சம். அரோ - ஈற்றசை. (உ௩)

**உ௪.—மகளிரும், வாளைமீனும்.**

*வேளை வென்ற [1]விழிச்சியர் வெம்முலை
யாளை நின்று முனிந்திடு மங்கொர்பாற்
பாளை தந்த மதுப்பரு கிப்பரு
வாளை நின்று மதர்க்கு மருங்கெலாம்.†

(இ - ள்.) அங்கு ஒர்பால் - அந்த மருதநிலத்தி னொருபக்கத்தில்,—வேளை வென்ற விழிச்சியர் - மன்மதனையும் (தமதுகண்விழிகளால்) வென்ற மங்கையரின், வெம் முலை - (ஆடவர்க்கு) விருப்பத்தையுண்டாக்குகின்ற முலைகள், ஆளை நின்று முனிந்திடும் - வீரருக்கு எதிராகநின்றுகோபித்து

† இதுமுதல் இந்தவிருத்தம் முடியுமளவுமுள்ள பாடல்களின்முறை பலபிரதிகளிலும் பலபடி யுள்ளன.

வணங்கச்செய்யும்; மருங்கு எலாம் - அந்த மருதநிலத்துப் பக்கங்களிலெல்லாம், நின்று—,பாளை தந்த மது பருகி - (தென்னம்) பாளையினின்று உண்டான கள்ளைக் குடித்து, பரு வாளை - பருத்த வாளைமீன்கள், மதர்க்கும் - மதங்கொள்ளும்; (எ - று.)

மன்மதன் கணைகளால் வசப்படுத்தமுடியாத புருடனையும் மகளிரதுவிழிகள் வசப்படுத்துதலால், 'வேளைவென்ற விழிச்சியர்' என்றார்; இனி, இத்தொடர்க்கு - மன்மதனையும் இச்சைவயத்தனுக்கித் தோல்வியடையச்செய்த எனினுமாம். வேள் - விருப்பத்தை யுண்டாக்குங் கடவுள். முதலடி - முற்று மோனை. பி - ம் :—[1]முகத்தியர், உழத்தியர். (உச)

**உரு.—எருமைகளின்பாலாற் செந்நெல்வளர்தல்.**

**ஈர நீர்படிந் திந்நிலத் தேசில**
**கார்க ளென்ன வருங்கரு மேதிக**
**ளூரி னின்றகன் றுள்ளிட [1]மென்முலை**
**தாரை கொள்ளத் தழைப்பன சாலியே.**

(இ - ள்.) ஈரம் நீர் படிந்து - குளிர்ச்சியுள்ள நீரில் மூழ்கிக்கிடந்து, இநிலத்தே - (வானத்திலன்றி) இந்த நிலவுலகத்திலும், சில கார்கள் என்ன - சில மேகத்துண்டங்கள் சஞ்சரிப்பனபோல, வரும் - (வயல்களிற்) சஞ்சரிக்கின்ற, கரு மேதிகள் - கருநிறமுள்ள எருமைகள், ஊரில் நின்ற - ஊரில் தானே தங்கிவிட்ட, கன்று - (தமது) கன்றுகளை, உள்ளிட - நினைத்தலால், (அவற்றிற்குக் கன்றினிடத்துள்ள அன்பின் மிகுதியாற் சுரப்பெடுத்துப் பெருகத்தொடங்கிய), மென் முலை - மெல்லிய முலைகள், தாரை கொள்ள - (பாலைத்) தாரையாகச் சொரிய, (அதனால்), சாலி-செந்நெற்பயிர்கள், தழைப்பன - தழைத்துவளர்வனவாயின; (எ - று.)

எருமைகள் ஊரில்நின்ற கன்றை நினைந்து தம்பாலைச் சுரந்து பெருக்க, அந்தப்பால் ஒருவெள்ளம்போற் பாய்வதனுற் செந்நெற்பயிர் தழைக்கு மென்க; வீறுகோளணி. பி - ம்:—[1]உண்முலை. (உரு)

**உசு.—கழுநீர் செந்நெலை வளர்த்தல்.**

**முட்டி லட்டின் முழங்குற வாக்கிய**
**நெட்டு லைக்கழு நீர்நெடு நீத்தந்தான்**
**பட்ட மென்கமு கோங்குப டப்பைபோய்**
**நட்ட செந்நெலி னூறுவ ளர்க்குமே.**

(இ - ள்.) முட்டு இல் - (வேண்டும்பொருளிற்) குறைபாடில்லாத, அட்டில் - சமையல்வீட்டிலே, முழங்குற வாக்கிய - ஒலிக்குமாறு கீழேவார்க்கப்பட்ட, நெடு உலை கழு நீர்-பெரிய உலையிற் (பெய்தற்குஉரிய அரிசிகழுவிய) கழுநீரினுடைய, நெடு நீத்தம் - மிக்கவெள்ளமானது,—பட்டம் மெல் கமுகு ஓங்கு படப்பை போய் - நீர்க்கரைகளில் முளைத்துள்ள மெல்லிய கமுகினுடைய ஓங்கிவளர்ந்துள்ள சோலைகளின்மூலமாகப் போய், நட்ட செந்நெ

லின் நாறு வளர்க்கும் - நடப்பட்ட செந்நெல் நாற்றுக்களை வளரச் செய்யும்; (எ - று.)—தான் - அசை.

வடித்த கழுநீர் கமுகந்தோட்டத்தின்மூலமாகப் பாய்ந்து செந்நெலையும் வளர்க்கு மென்ற இதில், இந்நாட்டில் வந்த விருந்தினரெல்லாம் உண்ணும்படி அன்னசாலை பலவுள்ளனவென்பது, தொனிக்குமாறு காண்க. கழி நீர் நெடுநீத்தம் என்ற பாடத்திற்கு - உலைவடித்த கஞ்சியென்க. (உசு)

உஎ. சூட்டு டைத்[1]தலைச் செந்நிற வாரணந்
[2]தாட்டு ணைக்குடை யுந்தகை சான்மணி
மேட்டி மைப்பன மின்மினி யாமெனக்
கூட்டி னுய்க்குங் [3]குரீஇயின் குழாமரோ.

(இ - ள்.) சூட்டு உடை தலை - உச்சிக்கொண்டையைக்கொண்ட தலையையும், செம் நிறம் - செந்நிறத்தையுமுடைய, வாரணம் - கோழிகள், தாள் துணை - (தமது) காலிரண்டினாலும், குடையும் - (குப்பைகளைச்) சீய்த்தலால் வெளிப்படுகின்ற, மேடு இமைப்பன-குப்பைமேடுகளிற் பிரகாசிப்பனவான, தகை சால் மணி - தகுதி மிக்க இரத்தினங்களை, குரீஇயின் குழாம் - குருவிக்கூட்டங்கள், மின்மினி ஆம் என-மின்மினிப்பூச்சியென்றுகருதி, கூட்டின் உய்க்கும் - கூட்டிற்கொண்டுபோய்ச் செலுத்தும்; (எ - று.)

கோழிகள் குப்பையைத் தமது கால்களாலே சீய்க்கையில், ஆங்குக் கிடந்து ஒளிவீசுகின்ற மணிகளைத் தமது குஞ்சுகட்கு உணவாகக்கூடிய மின்மினியென்று கருதிக் குருவிகள் தமதுகூட்டிற் சேர்க்குமென்பதாம். குப்பைகளைச் சீய்த்தல், கோழிகட்கு இயல்பு. மணிகளைக் குருவிகள் மின்மினியென்று கருதியனவாகக்கூறியது-மயக்கவணி. பி -ம்:— [2]தாட்டுடைக் குடையும் என்றபாடத்திற்கு - தாளினால்துடைக்க [சீய்த்தலினால்] சிந்துகின்ற என்க. [1]துணைத்தூநிறவாரணம். [3]குரீஇயின் குழாமெலாம், குருவிக் குழாமரோ. (உஎ)

உஅ.—ஆய்ச்சியர் தயிர்கடைதல்.

தோயும் வெண்டயிர் மத்தொலி [1]துள்ளவு
மாய வெள்வளை வாய்விட் [2]டரற்றவுந்
தேயு நுண்ணிடை சென்று வணங்கவு
[3]மாயர் மங்கைய ரங்கை வருந்துவார்.

(இ - ள்.) ஆயர்மங்கையர் - (அந்நாட்டிலுள்ள) இடைப்பெண்கள்,— தோயும்-(பாறைபோல்) தோய்ந்துள்ள, வெள் தயிர்-வெண்ணிறத் தயிரை, (கடைகின்ற) மத்து ஒலி துள்ளஉம் - மத்தினோசை விட்டுவிட்டு மிகுந்தொலிக்கவும், மாயம் வெள் வளை வாய்விட்டு அரற்றஉம்-(தாம் கையிலணிந்துள்ள) விசித்திரத்தொழிலமைந்த வெண்ணிறமான சங்குவளையல்கள் வாய்விட்டுக் கத்துவதுபோலப் பேரொலிசெய்யவும், தேயும் நுண் இடை சென்று வணங்கஉம் - மெலிந்த நுட்பமான (தமது) இடைகள்

முன்னே பேய்ப்போய் வளையவும், அம் கை வருந்துவார் - (தமது) அழகியகைகளினால் வருந்திக் கடைவார்கள்; (எ - று.)

அந்நாட்டு இடைப்பெண்கள் மத்திட்டுக்கடைவதனாலான ஒலியும் கைவளைகள் குலுங்குவதனாலான அந்தச்சங்கவளையினொலியும் மிகுதியாகத் தோன்றவும், தம் மெல்லிய இடை தள்ளாடி வணங்கவும், கைகளிரண்டும் வருந்தவும், தாம்புகொண்டு மாற்றி மாற்றி யிழுத்துத் தயிர் கடையலாயின ரென்க. இது தன்மைநவிற்சியணி. ஆயவெள்வளையென்றும் பிரிக்கலாம். [1]துள்ளல் போய் மாய என்ற பாடத்துக்கு - மத்தின் துள்ளலொலி மறையும்படி அவர்களணிந்துள்ள வெள்வளை யரற்றுமென்க. பி-ம்:—[2]அழைப்பவும். [3]ஆயமங்கையர். (உஅ)

நகூ.—தினைமுதலியவற்றிற் கிளிமுதலியன சிலம்புதல்.

**தினைச்சி லம்புவ தீஞ்சொ லிளங்கிளி**
**நனைச்சி லம்புவ நாகிள வண்டுபூம்**
**[1]புனைச்சி லம்புவ புள்ளினம் வள்ளியோர்**
**மனைச்சி லம்புவ மங்கல வள்ளையே.**

(இ - ள்.) தினை - தினைப்புனங்களில், தீஞ்சொல் இளங் கிளி - மதுரமாகிய சொற்களையுடைய இளங்கிளிகள், சிலம்புவ - ஒலிப்பன; பூநனை-பூவரும்புகளில், நாகு இள வண்டு - மிக்க இளமையுள்ள வண்டுகள், சிலம்புவ—; புனை - நீர்நிலங்களில், புள் இனம் - பறவைகளின் கூட்டம், சிலம்புவ—; வள்ளியோர் மனை - கொடையாளிகளின் வீடுகளில், மங்கலம் வள்ளை - மங்கலமான உலக்கைப்பாட்டுக்கள், சிலம்புவ—; (எ - று.)

வள்ளை - நெற்குத்தும் மகளிர் உலக்கையோச்சுகையில் மனைக்கு உரிய தலைவனுடைய வளத்தைப் பாடும் பாட்டு. மனைத்தலைவர் தாம் அன்னதானஞ் செய்யும்படி பெருந்தொகையரிசியைக் குற்றுவித்தலால், அவற்றைக் குற்றுபவர் தாம்குற்றும்போது வள்ளைப்பாட்டைப் பாடுவதால் வள்ளியோர் மனையில் வள்ளைப்பாட்டு ஒலிக்கு மென்க. நாகுஇள - ஒருபொருட் பன்மொழி. எதுகைக்கு ஏற்ப, புனலென்பது புனையென்றாயிற்று; "புனைவரவுயிர்வருமுலவை" என்பர், ஆரணியகாண்டத்தும். ஒலித்தலென்ற பொருளுள்ள சிலம்புவ என்றசொல் பன்முறைவந்தது - சொற்பொருட்பின்வருநிலையணியாம். பி - ம். [1]புனற்சிலம்புவ. (உகூ)

ங0.—இதுமுதல் ஆறுகவிகள்-திணைமயக்கம் கூறுவன.

**[1]குற்ற பாகு கொழிப்பவர் கோணெறி**
**கற்றி லாத கருங்க ணுளைச்சியர்**
**முற்றி லார முகந்துதம் முன்றிலிற்**
**சிற்றில் கோலிச் சிதறிய முத்தமே.**

(இ - ள்.) (அந்நாட்டில்), குற்ற பாகு கொழிப்பவர் (கொழிப்பன)- புதிக்கப்பட்ட பாக்கைக் கொழிப்பவர்(அசாரமானபொருள்களாகத்) தள்ளு

பவை,— கோள் நெறி கற்று இலாத கருங் கண்-களவுநெறியைக் கற்றிரா தனவான [காமக்குறிப்புள்ள பார்வையைக்கொள்ளாமல் நேர்மையான பார்வைகளையேகொண்ட] கரியகண்களையுடைய, நுளைச்சியர் - நெய்தல் நிலத்துப்பெண்கள், முற்றில் ஆர முகந்து - சிறுசுளகுநிறைய(க் கடலிலி ருந்து) வாரிவந்து, தம் முன்றிலில் சிறு இல் கோலி - தமது வீட்டின் முன் புறத்திலே (விளையாட்டாகச்) சிறு வீடு கட்டி, சிதறிய - சிந்திய, முத்தமே- முத்துக்களையேயாகும்; (எ - று.)

'கொழிப்பன' என்பது வருவிக்கப்பட்டது.கொழித்தல் - ஒருபொரு ளைச் சுத்தஞ்செய்கையில் செற்றை குப்பைமுதலியன கலவாதபடி அவற்றை நீக்குதல்.பாக்கைக்கொழிப்பவர் அந்தப்பாக்குக்களோடு கலந்திருந்த முத்து க்களைச் செற்றை குப்பைகள்போல நீக்குவ ரென்க. மருதநிலத்துப்பொரு ளாகிய பாக்குக்களோடு நெய்தனிலப்பொருளாகிய முத்தம் கலந்திட, அதனைப் பிரித்தெடுப்ப ரென்று திணைமயக்கங்கூறியவாறு. இத்திணை மயக்கத்தால் நிலங்கள் மிகஅடுத்திருக்குமென்பதுபெறப்பட்டு, நாட்டின் சிறப்பைவலியுறுத்து மென்பது,கவிஞரின் கொள்கை. குற்ற பாகு கொழிப் பவர் - தறிக்கப்பட்டபாக்கைக் கொழிக்கும் மருதநிலப்பெண்கள், கோள் - (அப்பாக்குகளினின்று அசாரமானவையென்று நீக்குமாறு) கொண்ட பொருள், நுளைச்சியர் சிந்திய முத்தமேயென்றும் கூறலாம். இனி,முத்தமே- முத்தங்களே, குற்ற பாகு கொழிப்பவர் - குறுகுதலையுடைய சருக்கரைப் பாகைப் பனையோலையிற் சேர்த்துவிற்பவர், கோள் - கொள்ளும்பொருள் களாமென்றுஉரைத்து, பனையோலையிற் காய்ச்சிவிடுத்த சருக்கரைப்பாகை நுளைச்சியர் சிற்றில்கட்டி விளையாடிச் சிதறிவிட்ட முத்துக்களைக் கொடுத்து வாங்குவ ரென்று கருத்துக் கூறுதலு முண்டு. பி-ம்:— [1]குற்றமாகக்கொழிப் பன, குற்றபாகுகொழிப்பது.

(௩0)

௩௧. திருவை மென்பிணை யீன்ற துளக்கிலா
[1]வரிம ருப்பிணை வன்றலை யேற்றைவா
னுரும்மி டித்தெனத் தாக்குறு [2]மோதையின்
வெருவி மால்வரைச் சூன்மழை மின்னுமே.

(இ - ள்.) திருவை.மெல் பிணை - செம்மறியாட்டின் மென்மைக்குண முள்ள பேடுகள், ஈன்ற - பெற்ற, துளக்கு இலா வரி மருப்பு இணை - அஞ் சுதலில்லாத வரிகளமைந்த இரட்டைக்கொம்புகளையுடைய, வல் . தலை ஏற்றை - வலியதலைகளையுடைய கடாக்கள், வான் உரும் இடித்து என தாக் குறும் ஓதையின் - மேகத்தில்தோன்றுகின்ற இடி யிடித்தாற்போலப் பேரொலியுண்டாகுமாறு (ஒன்றையொன்று) மோதுதலாலுண்டாகின்ற பேரொலியினால், வெருவி - அஞ்சி, மால் வரை சூல் மழை - பெரியமலை களில்தங்கியுள்ள நீர்கொண்ட மேகம், (வாய்திறக்க, அதனால்), மின்னும்- மின்னலுண்டாகும்; (எ - று.)

செம்மறியாட்டுக்கடாக்கள் ஒன்றையொன்று எதிர்த்துத் தாக்கும் போது பேரொலி யுண்டாக, அவ்வொலிகேட்டு அஞ்சிய நீருண்ட மேகம்

வாய்விட்டுக் கதற, அதனால் மின்னலுண்டாகு மென்க. நீருண்டமேகம் சூல் முதிருமளவும் மலைமேற்படிந்து பின் வானிலேறி மழைபெய்தல், இயல்பு. இயற்கையில் நீருண்டமேகம் இடித்து மின்னுதலை, இந்நாட்டின் ஆட்டுக் கடாப்போரில்தோன்றும்ஒலிக்கு அஞ்சி மேகம் வாய்விடுவதாகக் கற்பித்தார். அயர்ந்திருக்கையில் பேரொலி செவியிற்பட்டவர், அச்சத்தினால் வாய்விட்டுக்கதறுதல்,இயல்பு. மேகம் வாய்திறத்தலால் மின்னல்தோன்றுவதாகக்கூறுவதை, "கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போல்" என்றவிடத்துங் காண்க. இதனால், முல்லைக்கும் குறிஞ்சிக்கும் மயக்கங்கூறப்பட்டமை காண்க. பி-ம்:—[1]வரிமருப்பின. [2]ஒல்லொலி. (நுக)

நுஉ. கன்று டைப்பிடி நீக்கிக் களிற்றினம்
வன்றொ டர்ப்படுக் கும்வன வாரிசூழ்
குன்று டைக்குல மள்ளர் குழூஉக்குர
லின்று ணைக்களி யன்ன மிரிக்குமே.

(இ - ள்.) கன்று உடை பிடி - கன்றுகளையுடைய[1] பெண்யானைகளை, நீக்கி - நீக்கிவிட்டு, களிறு இனம் - ஆண்யானைகளின் கூட்டங்களை, வல் தொடர் படுக்கும் - வலிய சங்கிலிகளினாற் கட்டுகின்ற, வனம் வாரி - காடுகளிலுள்ள யானையகப்படுத்துமிடங்களினால், சூழ் - நிறையப்பெற்றுள்ள, குன்று-மலைகளை, உடை-(தமதிடமாகக்)கொண்டுள்ள,குலம் மள்ளர் குழூஉ - சிறந்த வீரர்களின் கூட்டங்களினின்று தோன்றுகின்ற, குரல் - ஓசையானது,—இன் துணை களி அன்னம்-இனிய பெட்டைகளுடன்கூடிக் களிக்கின்ற ஆண்அன்னங்களை, இரிக்கும் - (அச்சத்தினால்)[2]நிலைகெட்டு ஓடச் செய்யும்; (எ - று.)

குன்றுகளிற்றிரியும் களிற்றினங்களைப் பிடிகளைக்கொண்டு பிடித்துக் கட்டுவிக்கும் மள்ளரின் குரல், மருதநிலத்துள்ள அன்னங்களை நிலைகெடச் செய்யுமென்பதாம். இதனால், குறிஞ்சிக்கும் மருதத்திற்கும் திணைமயக்கங் கூறியவாறு. காட்டிற் சஞ்சரிக்கும் ஆண்யானைகளைப் பெண்யானைகளின் மூலமாகப் பிடித்துக் கட்டிவைத்தல்,மரபு. வாரி - வாரீ யென்ற வடசொல்லின் திரிபு: யானைகட்டுமிடமென்று பொருள். இங்கு அகப்படுத்துமிடத்தைக்காட்டிற்று:இதுஇப்பொருளில்வருதலை "வாரிகொள்ளாவரைமருள்வேழம்" என்றவிடத்துங்காண்க. மள்ளர்-யானையையகப்படுத்தும் வீரர். (நுஉ)

நுநு. வள்ளி கொள்பவர் கொள்வன மாமணி
தள்ளி கொள்வன தூங்கிய மாங்கனி
புள்ளி கொள்வன பொன்விரி [1]புன்னையிற்
பள்ளி கொள்வன பங்கயத் தன்னமே.

(இ - ள்.) வள்ளி கொள்பவர் - வள்ளிக்கிழங்கைத் தோண்டியெடுப்பவர்கள், கொள்வன-(மண்ணிற் கலந்திருத்தலால் வள்ளிக்கிழங்கை யெடுக்கும்போது உடன்)எடுக்கப்படுவனவாகிய,மா மணி-சிறந்த இரத்தினங்களால் [சிறந்த இரத்தினங்களை யெறிந்துவிடுவதனால்], தூங்கிய மாங் கனி - (மா

மரங்களில்) தொங்குகின்ற மாம்பழங்கள், துள்ளி கொள்வன - தேன் துளியைச் சிந்துவனவாயின; புள்ளி கொள்வன பொன் விரி புன்னையில் - புள்ளியின் வடிவத்தைக்கொண்டனவான தாதுக்கள் பொன்போற் பரவியிருக்கப்பெற்ற புன்னைமலர்க்கொத்துக்களில், பங்கயத்து அன்னம்-தாமரைமலரில் தங்கும் அன்னம், பள்ளிகொள்வன - படுத்துக்கொள்வன; (எ - று.)

குறிஞ்சிநிலப்பொருளாகிய வள்ளிக்கிழங்கைக் கிண்டியெடுப்பவர் தம் கையிலகப்பட்ட இரத்தினங்களை யெறிய,அவை அருகே தொங்குகின்ற மருதநிலப்பொருளாகிய மாங்கனியின்மேற் பட்டு அவற்றினின்று தேன்றுளியைச் சிந்து மென்று - குறிஞ்சியும் மருதமும் மயங்கியமையும், பொன்போன்ற தாதுக்கள் விரிந்த புன்னைமலர்க்கொத்துக்களிற் பங்கயத்தில்தங்கும் அன்னம் பள்ளிகொள்ளு மென்று - நெய்தலும் மருதமும் மயங்கியமையும் கூறியவாறு. புள்ளி-பெருமையுமாம். பி - ம்:—[1]புன்னைகள். (௩௩)

௩௪. கொன்றை வேய்ங்குழற் கோவலர் முன்றிலிற்
கன்று றக்குங் குரவை கடைசியர்
புன்றலைப்புனங் [1]காப்புடை போதரச்
சென்றி சைக்கு நுளைச்சியர் செவ்வழி.

(இ - ள்.) கடைசியர் - மருதநிலப்பெண்களின், குரவை-குரவைக் கூத்தாடுகையிற் பாடுகின்ற பண், கொன்றை வேய் குழல் கோவலர் முன்றிலில் கன்று - கொன்றைக்குழலையும் வேய்ங்குழலையுமுடைய இடையர்களின் முற்றத்திலிருக்கின்ற கன்றுகளை, உறக்கும்-தூங்கச்செய்யும்; நுளைச்சியர் செவ்வழி - நெய்தனிலத்துமகளிர்பாடுகின்ற செவ்வழிப்பண், புல் தலை - புன்செய்ப்பயிர் விளையுமிடமான, புனம் - புனங்களில், காப்பு உடை போதர - காக்கின்றகாவல் சோர்வுபடும்படி, சென்று-போய், இசைக்கும் - ஒலிக்கும்.

கடைசியரின் குரவைக்கூத்துப்பாடல் ஆயர்முன்றிலிற் கன்றையுறக்குமென்று - மருதத்தோடு முல்லைநிலம் மயங்கியமையும், நுளைச்சியர் செவ்வழிப்பண் புனங்காப்புஉடைதரச்சென்று இசைக்குமென்று-குறிஞ்சியோடு நெய்தனிலம் மயங்கியமையும் கூறியவாறு. கொன்றைப்பழத்தைக்கொண்டு குழலமைத்தலை,"ஒழுகிய கொன்றைத்தீங்குழல்","கொன்றையந்தீங்குழல்" முதலிய இடத்துங் கூறியிருத்தல் காண்க. நுளைச்சியர் செவ்வழிப்பண்ணைப் பாடும்போது புனங்காக்கும் மகளிர் அந்தப்பண்ணைக் கேட்டலிலுள்ள விருப்பத்தினால் தாம் மேற்கொண்ட புனக்காவலிற் சோர்வுபடுவ ரென்பது, பின்னிரண்டடிகளின் கருத்து. இனி, "ஆயோவெனுங் குரலையோ புனமழிக்கின்றதே" என்றாற்போல நுளைச்சியர்பாடுஞ் செவ்வழிப்பண் மிக அருகிலுள்ள தினைப்புனத்திற் கிளிமுதலியவற்றை வருவித்து அத்தினைக் காவலைக் கெடச் செய்யு மென்று கருத்துக் கூறுவாரு முளர். 'புனம் காப்புடைப் போதர'என்று பாடங்கொண்டு - புனத்திலுள்ள பறவைகள் சோலையின்பக்கத்திற் செல்லும்படி என்று உரைகூறினாருமுளர். பி - ம்:[1]—காப்பிடைப்போதர.

(௩௪)

**௩௫ சேம்பு [1]காலிறச் செங்கழு நீர்க்குளத்**
**தூம்பு காலச் சுரிவளை மேய்வன**
**காம்பு கால்பொரக் கண்ணகன் மால்வரைப்**
**பாம்பு நான்றெனப் பாய்பசுந் தேறலே.**

(இ - ள்.) காம்பு - மூங்கில்கள், கால் - காற்றினால், பொர - மோதுவதனால், (மலைப்பாறைகளின்மீதுகட்டிய தேன்கூடுகள் உடைய), கண் அகல் மால் வரை - இடமகன்ற பெரிய அம் மலைகளிலிருந்து, பாம்பு நான்று என பாய் - பாம்பு தொங்குவதுபோன்ற தோற்றத்துடன் பாய்கின்ற, பசுந் தேறல் - புதிய தேனொழுக்கை,—சேம்பு கால் இற-சேம்புகள் (தமது) மடல் இற்றுப்போம்படி, செங் கழுநீர் குளம் - செங்கழுநீர்க்கொடிகளைக்கொண்ட குளங்களின், தூம்பு - மதகுகள், கால - கக்க, சுரி வளை-முகஞ்சுரிந்த சங்குகள், மேய்வன - (அத்தேனை) உண்பன; (எ - று.)

மூங்கில்கள் அசைந்து தேன்கூட்டின்மீது பட, அத்தேன்கூடுகளைக் கொண்ட மலைப்பாறைகளினின்று தேன் பெருகிச் செங்கழுநீர்க்குளத்தை நிறைத்து அக்குளத்தின் மதகுகளின்வழியாகப் புறம்பேயுள்ள சேம்பு காலிறும்படி விசையாகப் பாய,அத்தேனைச் சங்குகள் உண்ணுமென்க. குறிஞ்சியும் மருதமும் மயங்கியவாறு. பி - ம்:—[1]காலில்பொர. (௩௫)

௩௬.—விருந்தோம்பலும், ஈகையும்.

**பெருந்த டங்கட் பிறைநுத லார்க்கெலாம்**
**பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்**
**வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்**
**விருந்து மன்றி விளைவன [1]யாவையே.**

(இ - ள்.) பெருந் தட கண் - மிகப்பெரிய கண்களையுடைய, பிறை நுதலார்க்கு எலாம் - பிறைச்சந்திரன்போன்ற நெற்றியைக்கொண்ட மகளிர்கட்கெல்லாம், பொருந்து செல்வம்உம்-நிலைபெற்ற செல்வமும், கல்வி உம் - கல்வியறிவும், பூத்தலால்-உண்டாயிருத்தலால்,—வருந்தி வந்தவர்க்கு ஈதல்உம் - (வறுமையால்)வருத்தமடைந்துவந்தவர்க்கு (அவர்வேண்டியவற்றைக்) கொடுத்தலும், விருந்துஉம் - (வந்த) விருந்தினரைஉபசரித்தலும், அன்றி - அல்லாமல், வைகல்உம் - தினந்தோறும், விளைவன - (அம்மகளிரிடத்து)நேர்கின்ற செயல்கள், யாவை - எவை? [வேறெவையுமில்லையென்றபடி]; (எ - று.)

விருந்தினரைக்குறிப்பறிந்துஉபசரித்தல், ஈகை என்ற செயல்கட்கு இன்றியமையாதனவான கல்வியறிவும் செல்வமும் அந்நாட்டுமகளிர்க்கு நிரம்பியிருத்தலால், பிறர்கூறுமலே அம்மகளிர் ஈகை விருந்தோம்பல் என்ற இத்தொழில்களை எப்போதும் மேற்கொண்டுள்ளன ரென்பதாம். பெருந் தட - ஒருபொருட்பன்மொழி; நீண்டுஅகன்றஎனினுமாம். விருந்து-புதுமை: ஆகுபெயரால், விருந்தினர்க்குச்செய்யும் உபசாரத்தை யுணர்த்திற்று. பி-ம்:- யாவையோ. (௩௬)

௩௭.—அன்னசாலை.

பிறைமு கத்தலைப் பெட்பினி ரும்புபோழ்
குறை[1]க றித்திரள் குப்பை பருப்பொடு
நிறைவெண் முத்தி [2]னிறத்தரி சிக்குவை
யுறைவ [3]கோட்டமி லூட்டிடந் [4]தோறுமே.

(இ - ள்.) கோட்டம் இல் ஊட்டு இடம் தோறும் - வஞ்சகமில்லாத [ஏற்றத்தாழ்வுபாராது யாவர்க்கும் ஒருவகையாக உணவளிக்கின்ற] அன்ன சாலையின் எல்லாவிடங்களிலும்,— பிறை முகம் தலை இரும்பு - பிறைமுகத்தைத் தலையிலேயுடைய அரிவாளால், பெட்பின் - விருப்பத்தோடு, போழ் குறை - பிளந்து திருத்திய, கறி திரள் - கறிகளின் திரளும், பருப்பு குப்பையொடு - பருப்புக்குவியலோடு, நிறை வெண் முத்தின் நிறத்து அரிசி குவை- நிறைந்த வெண்மையாகிய முத்தினிறத்தையுடைய அரிசிக்குவியல்களும், உறைவ - கிடப்பன; (எ - று.)

அன்னசாலைகளில் விருந்தினர்க்குச் சமைத்துப்பரிமாறும்படி கறிக்குவைமுதலியன எப்போதுஞ் சித்தமாக வுள்ளன வென்பதாம். சிந்தாமணியாரும் அரிவாளை "தேய்பிறையிரும்பு" என்று கூறியுள்ளார். பிறைமுகத் தலையிரும்புஎன்பதற்கு - துருவலரிவாள்மணை யெனக் கூறலு மொன்று. போழ்-வினைப்பகுதி, எச்சப்பொருளில்வந்தது. பி - ம்:-[1]நறைக்கறிக்குப்பை. [2]நிகரரிசி. [3]கொட்பின. [4]தோறெலாம். (௩௭)

௩௮.—குடிகட்குஉள்ள நிதியம்முதலியன.

கலஞ்சு ரக்கு நிதியங் கணக்கிலா
நிலஞ்சு ரக்கு நிறைவள நன்மணி
பிலஞ்சு ரக்கும் பெறுதற் கரியதங்
குலஞ்சு ரக்கு மொழுக்கங் குடிக்கெலாம்.

(இ - ள்.) குடிக்கு எலாம் - (அந்நாட்டிலுள்ள) குடிகட்கெல்லாம்,— நிதியம் - திரவியங்களை, கலம் - (வர்த்தகத்துக்குச்செல்லும்) மரக்கலங்கள், கணக்கு இலா - கணக்கில்லாதனவாக, சுரக்கும் - (எப்போதும்) கொடுக்கும்; நிலம் - பூமியானது, நிறை வளம் - மிகுந்த (விளையுளாகிய) வளத்தை, சுரக்கும்—; பிலம் - கனிகள், நல் மணி - சிறந்த இரத்தினங்களை, சுரக்கும்—; தம் குலம் - அவரவர்கள்பிறந்த குலமானது, பெறுதற்கு அரிய ஒழுக்கம் - (பிறநாட்டவர்) அடையமுடியாத நல்லொழுக்கத்தை, சுரக்கும்-;

பிலம் - இரத்தினங்கள் தோன்றும் ஆகரம். "ஒழுக்கமுடைமை குடிமை" என்றபடி குடிப்பிறப்புடைமைக்கு அடையாளம் ஒழுக்கமுடைமையாதலால், 'தம்குலஞ் சுரக்கும் ஒழுக்கம்' என்றார். (௩௮)

௩௯.—அந்நாட்டிற் கூற்றம் முதலியன இல்லாமை.

கூற்ற மில்லையோர் குற்றமி லாமையாற்
சீற்ற மில்லைதஞ் சிந்தையிற் [1]செம்மையா

லாற்ற னல்லற மல்லதி லாமையா
லேற்ற மன்றி யிழிதக வில்லையே.

(இ - ள்.) ஓர் குற்றம் இலாமையால் - (அந்நாட்டில் எவரிடத்தும்) தீவினைச்செய வில்லாமையால், கூற்றம் இல்லை - அகாலமிருத்தியு (அந்நாட்டில்) உண்டாவதில்லை; தம் சிந்தையில் செம்மையால் - தமது மனத்தில் (அந்நாட்டவர்க்கு) நேர்மைக்குணமே யிருத்தலால், சீற்றம் இல்லை - சினம் விளைவதில்லை; ஆற்றல் - (அந்நாட்டவர்) மேற்கொண்டு செய்வது, நல் அறம் அல்லது இல்லாமையால் - சிறந்த தருமச்செயலே யல்லாமல் (வேறொன்றாகிய தீமைச்செயல்) இல்லாமையால், ஏற்றம் அன்றி இழிதகவு இல்லை-(அந்நாட்டவர்) நற்கதியிற் சேர்தலன்றித் தீக்கதியிற் சேர்வதில்லை.

நாட்டில் தீச்செயல் நிகழ்தலால்தான் அகாலமிருத்து தோன்றுகின்றதென்பது, நூற்கொள்கை. அவ்விஷயத்தை உத்தரகாண்டத்தில் சம்பூகனுடைய வரலாற்றாலும் அறியலாம். இனி, முதலடிக்கு அந்நாட்டிற் கொலை களவு முதலிய எக்குற்றமுமில்லாமையால் யமனுடைய ஆணை செல்வதில்லையென்றுமாம். "கொல்லாமை மேற்கொண்டொழுகுவான் வாழ்நாண் மேற், செல்லாது யிருண்ணுங் கூற்று" என்றதுங் காண்க. மனத்திற் சத்துவ குணமே மிகுந்திருக்கப்பெற்றோர்க்குத் தமோகுணத்தின்காரியமாகிய சீற்றம் தோன்றாதாதலால், 'சீற்றமில்லை சிந்தையிற்செம்மையால்' என்றார். ஏற்றம் - நற்கதி, இழிதகவு - தீக்கதி: ஆகுபெயர்கள். ஏற்றம் - உயர்ந்த புகழ்: இழிதகவு - தாழ்மையாகிய பழிப்பு எனினுமாம். பி - ம்:—[1]செய்கையால். [2]அல்லது. (௩௯)

௪௦.—அந்நாட்டவரின் நன்னெறிச்செல்கை முதலியன.

நெறிக டந்துள பரந்தன நீத்தமே
குறிய ழிந்தன குங்குமத் தோள்களே
சிறிய மங்கையர் தேயு மருங்குலே
வெறிய வும்மவர் மென்மலர்க் கூந்தலே.

(இ - ள்.) நெறி கடந்து - செல்லவேண்டிய வழியைவிட்டு, [சன்மார்க்கத்தைவிட்டு], பரந்தன - பரந்துசெல்வனவும், நீத்தமே - வெள்ளங்களே, [அந்நாட்டிலுள்ள சனங்களல்ல];குறி அழிந்தன-(தமக்குஉரிய) குறியழிந்தனவும், [செய்த அடையாளம் அழிந்தவையும்], குங்குமம் தோள்களே-குங்குமத் தொய்யில யணிந்த மகளிர் தோள்களே, [நெற்கதிர்ப்போர் முதலியவற்றின் குறிகளல்ல]: சிறிய - சிறியனவாயிருப்பனவும், மங்கையர் தேயும் மருங்குலே - (அந்நாட்டுமகளிரின்) மெலிந்த இடைகளே, [அந்நாட்டிற் சிறுமைபெற்றபொருள் வேறுஎதுவு மில்லை]; வெறிய உம் - வாசனையுள்ளனவும், [வெறிபிடித்திருப்பனவும்], அவர் மெல் மலர் கூந்தலே - அம்மடந்தைமாரின்மெல்லியமலரையணிந்த கூந்தலே, [குடிமயக்கம்பிடித்த சனம் எதுவும் அங்கில்லையென்றபடி]; (எ - று.)

ஏகாரமநானகும - பிரிநிலை. வெறியவும், உம் - இறந்ததுதழுவியது. நெறிகடத்தல்முதலியன நீத்தம்முதலியவற்றின்தொழில்களே யென்றமை யால், அந்நாட்டில் நெறிகடப்பனவையும் தமக்குரியகுறியழிந்தனவும் சிறுமை யுடையனவும் வெறியுடையனவும் வேறில்லை யென்றவாறும்; ஒழிப்பணி. குறி - தொயிற்குறி, முத்திரை: வெறி - நறுமணமும், குடிமயக்கமும்: சிலேடை. பி - ம்:—[1]படர்ந்தன. (௬0)

சுக.—பல்வகைப்புகைகள்.

அகிலி டும்புகை யட்டி லிடும்புகை
நகலி ஞலை நறும்புகை [1]நாவலர்
புகலும் வேள்வியிற் பூம்புகை யோடளாய்
முகிலின் விம்மி [2]முயங்கின வெங்கணும்.

(இ - ள்.) அகில் இடும் புகை - அகிலையிடுவதனு லுண்டாகும் புகை யும், அட்டில் இடும் புகை - சமையல்வீடுகளி லுண்டாகும் புகையும், நக லின் ஆலை நறும் புகை - (கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுவதற்காக நெருப்பு) விளங்குதலையுடைய கரும்பாலையிற்றோன்றும் புகையும், நாவலர் புகலும் வேள்வியிற் பூம் புகையோடு - வேதம்வல்ல பிராமணர் (வேதங்களை) உச் சரிக்கின்ற யாகத்திற் றோன்றும் அழகியபுகையுடனே, அளாய் - கலந்து, முகிலின் விம்மி - மேகங்கள்போலமிகுந்து, எங்கண்உம் முயங்கின-எங்கும் வியாபித்துத் தோன்றுவனவாயின; (எ - று.)

இதனால், அந்நாட்டவர் அறம்பொருளின்பங்களைப் பெறுபவரென்பது, பெறப்படும். [2]முழங்கினஎன்றபாடத்துக்கு - 'புன்கணீர்பூசல்தரும்' என்ற விடத்துப்போல, இலக்கணையால் பலரையும்அறியச்செய்தனஎன்றுபொருள் காண்க. பி - ம்:—[1]நான்மறை. (௬க)

சுஉ.—மயில்முதலியனஅந்நாட்டுமகளிரின்சாயல்முதலியவற்றையொத்தல்.

*இயல்புடை பெயர்வன மயின்மணி யிழையின்
வெயில்புடை பெயர்வன [1]மிளிர்முலை [2]குழல்போற்
புயல்புடை பெயர்வன பொழிலவர் விழிபோற்
கயல்புடை பெயர்வன கடிகமழ் கழனி.

(இ - ள்.) மயில் - மயில்கள், இயல் - (அந்நாட்டுமகளிரின்) சாயலைப் போன்று, புடைபெயர்வன - சஞ்சரிப்பன; மிளிர் முலை - (அந்நாட்டுமகளி ரின்) விளங்குகின்ற தனங்களிற்பூண்ட, மணி இழையின் - அரதனமிழைத் துச்செய்யப்பட்ட அணிகலங்களினொளியைப்போல, வெயில்—, புடை பெ யர்வன - அந்நாடெங்கும் வீசுவன; குழல்போல் - (அம்மகளிரின்) கூந்தல் போல, பொழில் - (அந்நாட்டுச்) சோலைகளில், புயல் - மேகங்கள், புடை பெயர்வன - சஞ்சரிப்பன; அவர் விழிபோல் - அம்மகளிரின்கண்களைப் போல, கயல் -கயல்மீன்கள், கடி கமழ் கழனி - நறுமணம்வீசுகின்ற கழ னிகளில், புடைபெயர்வன - பிறழ்வன; (எ - று.)

மகளிரின்சாயலுக்கு உவமையாகி மயிற் பறவைகளும், அவர்களின் அரத்னவணிகளுக்குஒப்பாகி வெயிலும், கூந்தலுக்குப்போலியாகி மேகங்களும், கண்களுக்குநிகராகிச் சேல்மீன்களும் அந்நாட்டிற் புடைபெயரு மென்ற வாறு. இங்கு உபமேயங்களாகிய மகளிரின்சாயல்முதலியவற்றைப் பிரசித்த உவமானங்களாகிய மயில்முதலியவற்றிற்கு உவமையாக மாற்றிக்கூறியது- எதிர்நிலையணி: இதனாலும், அந்நாட்டின்வளம்விளங்கும். வீசும் இடங்களின் பன்மைபற்றி 'வெயில் புடைபெயர்வன' எனப் பன்மையாற் கூறினர். முதலடிக்கு - மகளிரின்சாயலுக்குத்தோற்று மயில்கள் அப்பாற்செல்வன என்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1]முலையவர். [2]குழலின். [3]விழியின். (சஉ)

**சங.—மகளிரின்வாயிதழும் முகமும்.**

இடையிற மகளிர்க ளெறிபுனன் மறுகக்
குடைபவர் துவரித ழலர்வன குமுத
மடைபெய ரனமென [1]மடநடை யிளகக்
கடைசியர் முகமென மலர்வன கமலம்.

(இ - ள்.) இடை இற - (தமது) இடை ஒடிவதுபோலத்தோன்றவும், எறி புனல் மறுக - (அலை) வீசுகின்ற நீர் கலங்கவும், குடைபவர் - நீராடுபவர்களாகிய, மகளிர்கள் - மகளிரின், துவர் இதழ் (என)-செந்நிறமுள்ள வாயிதழ்கள்போல, குமுதம் - செவ்வாம்பல்மலர்கள், அலர்வன - மலர்வனவாயின; மடை பெயர் அனம் என - நீர்மடைகளிற் சஞ்சரிக்கின்ற அன்னப் பறவைபோல, மடம் நடை இளகு - மெல்லியநடையோடு மெல்லச்செல்கின்ற, அ கடைசியர் - அந்நாட்டுஉழவர்மகளிரின், முகம் என - முகம் போல, கமலம் - தாமரைமலர்கள், மலர்வன—; (எ - று.)

குமுதம் மகளிரின் துவரிதழ்போலஅலர்வன, கமலம்முகமெனஅலர்வன என்று உபமானங்களாகக்கூறவேண்டிய குமுதம் கமலம் என்பவற்றை உபமேயங்களாக மாற்றிக்கூறினர்; எதிர்நிலையணி. பி - ம்:—[1]மலர்வன. [2]மடநடையளகக் கடைசியர், நடைபயிலளகக் கடைசியர். (சங)

**சச.—மகளிரின் விழிமுதலியன.**

*விதியினை நகுவன வயில்விழி பிடியின்
கதியினை நகுவன வவர்நடை கமலப்
பொதியினை நகுவன புணர்முலை கலை[1]வாழ்
மதியினை நகுவன வனிதையர் வதனம்.

(இ - ள்.) வனிதையர் - (அந்நாட்டு) மகளிரின், அயில் விழி - கூரிய விழிகள், விதியினை - (தமக்கு) உவமையாக ஏற்பட்டுள்ள பொருள்களை, நகுவன - (தமக்கு உவமையாகா என்ற காரணத்தால்) இகழ்வனவாயின; அவர் நடை - அம்மங்கையரின்நடை, பிடியின் கதியினை - பெண்யானையின் நடையினை, நகுவன—; புணர் முலை- (அம்மங்கையரின் ஒன்றோடொன்று) இணைந்துள்ள முலைகள், கமலம் பொதியினை - தாமரையரும்புகளை, நகுவன—; வதனம் - (அந்தவனிதையரின்) முகங்கள், கலை வாழ்

மதியினை - பதினாறுகலைகளுடனும்பொருந்திவாழ்கின்ற பூர்ணசந்திரனை, நகுவன—; (எ - று.)

மகளிரின்விழிக்கு வேற்படைமுதலியனவும், நடைக்குப் பெண்யானை நடையும், தனங்கட்குத் தாமரையரும்பும், முகத்துக்கு முழுமதியும் உவமையாகச்சொல்லப்படுதல் மரபாயினும், இந்நாட்டுமங்கையரது விழிமுதலியன-வேற்படைமுதலியவற்றினும் விஞ்சியிருத்தலால்,அவைகளை நகுவனவாயின வென்க. விதி - உவமையாகக் கவிஞரால்நியமிக்கப்பட்டுள்ள பொருள்கள். கவிஞராற் கண்கட்கு உவமையாக நியமித்துள்ளபொருள் இன்னவை யென்பதை "வேல்வாள்கணைவண்டுவேலைவிடமமுதஞ், சேல்பங்கயங்குடங்கைசெங்காவி-காலன், வடுமான்கருவிளையைவண்சகோரத்தை, யடுமாங் குழையை யடர்ந்து", "விழிக்குவண்டுந்தாமரையுங், காவியுங்கூற்றம்புங்கருவிளையு—மாவடுவும்,வேலுங்கடலும்விடமுமமுதும்வாளுஞ்,சேலும்பிணையுமிணை" என்னுஞ்செய்யுட்களால் அறிக.இனி,விதியினை நகுவன அயில் விழி என்பதற்கு-நீதியையிகழ்ந்துநீக்குவன [மிகக்கொடுந்தொழிலையுடையன] பெண்களுடைய கூரியகண்களே என்றுகூறி "கதமுங்கோடுந்தொழிலு மன்பின்,கணமுங்குடியிருப்பாக் காட்டும்" என்ற இரத்தினச்சுருக்கத்தை மேற்கோள்காட்டுவாரும், பெண்களின்விழிகள் முனிவர்களின் நியமத்தைப் பழிப்பன [கெடுப்பன] என்றும், ஆண்மக்களுக்குஏற்பட்ட ஆயுள்வரையறையைப் போக்கிக் கொல்லவல்லன என்றும், படைத்தற்கடவுள்ஆடவர்க்குவிதித்த ஆயுள்வரையறையைக்குறைத்தலால் அவரையே பரிகசிப்பன என்றும் கூறுவாரும் உளர். மலர்தலும் குவிதலும் உள்ளனவாதலால் கமலப்போதினை என்றும் ஒருதன்மையனவான முலைகள் நகுவனவென்றும், தேய்தலும் களங்கம் பெறுதலுமாகிய குற்றங்களைக் கொண்டிருத்தலால், மதியினை வதனம் நகுவன வென்றும் விரித்துக் கருத்துக் காண்பர். பி-ம்:—[1]வாண்மதி. வான்மதி.

சுரு.—மணி இளநீர் வெண்பட்டு மணமுரசு இவற்றின்வருணனை.

*பகலினொ டிகலுவ படர்மணி மடவார்
நகிலினொ டிகலுவ நளிவள ரிளநீர்
துகிலினொ டிகலுவ சுதைபுரை [1]நுரைகார்
முகிலினொ டிகலுவ கடிமண முரசம்.

(இ - ள்.) படர்மணி - (அந்நாட்டில் எங்கும்) பரவிக்கிடக்கின்ற மணிகள், பகலினொடு - சூரியனுடைய ஒளியோடு, இகலுவ - மாறுபட்டு ஒளிவிடுகின்றன; நளி வளர் இள நீர்-குளிர்ச்சிமிகுந்துள்ள (அந்நாட்டு) இளநீர்கள், மடவார் நகிலினொடு இகலுவ-(அந்நாட்டு) மகளிரின் தனங்களுடனே மாறுபடுவன; சுதை புரை நுரையினொடு - பாலின்மேற்புறத்தேதோன்றுகின்ற நுரையோடு, துகில் இகலுவ-(மகளிரணியும்)வெண்பட்டுக்கள் மாறுபடுவன; கடி மணம்முரசம்-கலியாணத்திலடிக்கப்படுகின்ற பேரிகைகள்,கார் முகிலினொடு - கருநிறமுள்ள [நீர்கொண்ட] மேகத்தோடு, இகலுவ - மாறுபட்டொலிப்பன; (எ - று.)

மணிமுதலியவை பகல்முதலியவற்றினும் விஞ்சித்தோன்றுகின்றன என்பது கருத்து. பாலின்மேல்தோன்றுகின்றவெண்ணுரை வெண்பட்டுக்கு உவமையாதலை "தீம்பாலுரைபோற்றிகழ்வெண்பட்டு" என்ற இடத்துங் காண்க. சுதைபுரைநுரையென்பதற்கு - அமுதத்தையொத்து விளர்த்த நுரை யென்றலு மொன்று. நகிலை உவமேயமாகக்கொள்ளவுமாம். கார்முகில் - கார்காலத்து முகிலுமாம். பி - ம்:—[1] நுரைகள். (சுரு)

சுசு.—சோலை நெற்போர் நீர்நிலைகள் ஊர் என்ற இவற்றின் வருணனை.

காரொடு நிகர்வன கடிபொழில் கழனிப்
போரொடு நிகர்வன பொலன்வரை யணைசூழ்
நீரொடு நிகர்வன நிறைகட லிநிதிசா
லூரொடு நிகர்வன விமையவ ருலகம்.

(இ - ள்.) கார் - மேகங்கள், கடி பொழிலொடு - (அந்நாட்டிலுள்ள) விளக்கமுள்ள சோலைகளோடு, நிகர்வன - ஒப்பன; பொலன் வரை-பொன் மயமான மேருமலை, கழனி போரொடு - கழனியிலிருந்து அரிந்துபோகட்டப்பட்ட நெற்போர்களோடு, நிகர்வன-; நிறை கடல்-(எப்போதும் நீர்வற்றாமல்) நிரம்பியிருக்கப்பெற்ற சமுத்திரம், அணை சூழ் நீரொடு - கரையோடு கூடிய (அந்நாட்டு) நீர்நிலைகளுடனே, நிகர்வன—; இமையவர் உலகம் - தேவலோகமானது, நிதி சால் ஊரொடு-செல்வம்மிகுந்த அந்தக் கோசலதேசத்துடனே, நிகர்வன—; (எ - று.)

சாதாரணமாகச் சோலைமுதலியவற்றிற்கு உபமானங்களாகிய கார் முதலியவைகள், அந்நாட்டுச்சோலைமுதலியவற்றைத் தாம் நிகர்வன என்றார்; எதிர்நிலையணி. அந்நாட்டுச்சோலை முதலியவை கார்முதலியவற்றிற்குத் தாம் உவமையாகுமாறு மிக்குள்ளன வென்றபடி. மற்றை மூன்றடிகட்குஏற்பக் கடிபொழிலொடு கார் நிகர்வன என மாற்றி உரைக்கப்பட்டது. "நெற்குப்பைகள், கோடியர்கொழும்பொனின் குன்றமொத்தவே" என்றவாறு நெற்போர்க்குப் பொன்மலையை உவமை கூறுவதன்றி முலையை ஒப்புமை கூறுதல் கவிமரபு அன்றாதலால், 'புணர்முலை' என்றபாடம் கொள்ளத்தக்கதல்ல; 'புணர்மலை' என்றும் பாடமுண்டு. உறுப்புப்பன்மைபற்றி, வரைமுதலியன, 'நிகர்வன' என்னும்பன்மைமுற்றைக் கொண்டன. 'நிகர்வது' என்றே நான்கடிகளுமிருப்பின் நலம். (சுசு)

சுஎ.—நென்மலை முதலிய பல்வளங்கள்.

நென்மலை யல்லன நிரைவரு [1]தாளஞ்
சொன்மலை யல்லன தொடுகட லமிர்த
நன்மலை யல்லன நதிதரு [2]நிதியம்
பொன்மலை யல்லன மணிபடு புளினம்.

(இ - ள்.) நெல் மலை அல்லன - நெற்குவியலில்லாத இடங்கள், நிரைவரு தாளம் - வரிசையாகக் குவிந்துள்ள முத்துக்களாம்; சொல் மலை அல்லன-சொல்லப்பட்ட (அந்தமுத்துக்) குவியல் இல்லாத இடங்கள், தொடு

கடல் அமிர்தம்-தோண்டப்பட்ட கடலிலிருந்து உண்டாகிய உப்புக்களாம்; நல் மலை அல்லன - அந்த உப்புக்குவியலில்லாத இடங்கள், நதி தரு நிதியம் - நதிகளாற்கொணர்ந்து குவிக்கப்பட்ட (பொன்முதலிய) நிதிகளின் தொகுதிகளாம்; பொன் மலை அல்லன - அந்தப் பொற்குவியல் முதலிய நிதிகளில்லாத இடங்கள், மணி படு புளினம் - இரத்தினங்கள் பொருந்திய மணல்மேடுகளாம்; (எ - று.)

நெற்குவியல் இல்லாதஇடங்களில் முத்துக்குவியல்களும்,அவையில்லாதஇடங்களில் உப்புக்குவியல்களும்,அவையும் இல்லாத இடங்களில் பொன்முதலிய நிதிகளும், அந்நிதிக்குவையும் இல்லாத இடங்களில் இரத்தினங்கள் பொருந்திய மணல்மேடுகளு மாக, அந்நாட்டில் எங்கும் பல்வகைவளனே நிரம்பியுள்ளன வென்க. குவிந்து உயர்ந்து தோன்றுதல்பற்றி 'மலை' என்றார். இங்குக்கூறிய நெல் முதலிய மலைகளன்றிக் கன்மலையில்லை யென்க. இப்பாடலுக்கு நகரப்படலத்தில் வரும் "பொன்றிணிமண்டபம்" என்று தொடங்கும் பாடலுக்குப்போல வெவ்வேறு உரை கூறுவர். பி - ம்:—[1]நீத்தொன்மலை. [2]அமுதினன்மலை. [3]நிதியப்பொன். (சஉ)

**சஅ.—இளையவர்பந்துபயிலிடமும், ஆடவர்கலைதெரிகழகமும்.**

**பந்தினை யிளையவர் பயிலிட மயிலூர்**
**கந்தனை யனையவர் கலைதெரி கழகஞ்**
**சந்தன வனமல சண்பக வனமா**
**நந்தன வனமல நறைவிரி புறவம்.**

(இ - ள்.) இளையவர் - இளையமங்கையர், பந்தினை பயில் - பந்தினை விளையாடுகின்ற, இடம் - இடங்கள், சந்தனம் வனம் அல - சந்தனச்சோலைகளல்ல, சண்பகம் வனம் ஆம்-சண்பகச்சோலைகள் போலும்; மயில் ஊர் கந்தனை அனையவர் - மயிலை வாகனமாகக்கொண்டு செல்லுகின்ற சுப்பிரமணியக்கடவுளையொத்த ஆடவர், கலை தெரி கழகம் - வில்வித்தை முதலிய கலைகளை ஆராய்கின்ற சாலைகள், நந்தனவனம் அல - நந்தனவனமல்ல, நறை விரி புறவம் - தேன்விரியப்பெற்ற காடுபோலும்; (எ - று.)

மகளிர்கள் பந்தடிக்குமிடங்கள் சந்தனச்சோலைகளேயாயினும் பந்தடித்தல்பற்றி வண்டுகள்மொய்க்காமையாற் சண்பகச்சோலையை யொத்திருக்க, ஆடவர் வில்வித்தை பயிலுமிடம் நந்தவனங்களேயாயினும் அச்சத்தால் மனிதரெவரும் அங்குச்செல்லாராதலாற் காடுபோலுமென்க. **முறைநிரனிறைப்பொருள்கோள்** காண்க. இனி இளையவர் பந்தடிக்குமிடம் அவர்களின் இயற்கைமேனி மணத்தாற் சந்தனச்சோலைபோலத் தோன்றினும், அம்மங்கையரின் மேனிநிறத்தாலும், பந்தடித்தல்பற்றி வண்டுகள் பயிலாமையாலும் சண்பகவனம்போன்றன; அங்ஙனமே,ஆடவர் கலைதெரி கழகம் பரிசுத்தமுடைமையால் நந்தனவனம்போலு மாயினும், மனிதசஞ்சாரமில்லாமையாற் காடு போன்றன என்று உரைத்தலும்: இன்னும் வேறு வகையாகக் கருத்துரைத்தலும் உண்டு. கலை - வில்வித்தைமுதலியன. பி - ம்:—[1]பயில்விடம். (சஅ)

சுகூ.—மடவாரின்சொல் முதலியவை.

கோகில நவில்வன விளையவர் குதலை
பாகியல் கிளவிக ளவர்பயி னடனே
கேகய நவில்வன கிளரிள வளையி
ளுருக லுமிழ்வன நகைபுரை தரளம்.

(இ - ள்.) கோகிலம் - குயில்கள்,— இளையவர் குதலை - இளமங்கையரின் குதலைச்சொற்களாகிய, பாகு இயல் கிளவிகள் - பாகின் தன்மையைக் கொண்ட (இன்) சொற்களை, நவில்வன - கற்றுக்கொள்வன; கேகயம்-மயில்கள், அவர் பயில் நடன் - அம்மங்கையர் பழகின நடனத்தைப் (பார்த்து), நவில்வன - (தாம்) பழகுவன; கிளர் இள வளையின் நாகுகள் - விளங்குகின்ற இளமையுள்ள பெண்சங்குகள், நகை புரை தரளம் - (அம்மங்கையரின்) பற்களையொத்த முத்துக்களை, உமிழ்வன - கக்குவன; (எ - று.)

இளையவர்கிளவிகளைப்போலக் குயில்கள் பேசும்; அவர் நடனத்தைப் போல மயில்கள் நடிக்கு மென்றும் கூறலாம். பி-ம்:—[1]நடமே. (சுகூ)

ருo.—நறைமுதலியன பழையர்முதலியோரிடத்திருத்தல்.

பழையர்த மனையன [1]பழநறை நுகரு
முழவர்த மனையன வுழுதொழில் புரியு
மழவர்த மனையன மணவொலி யிசையின்
கிழவர்த மனையன கிளைபயில் வளையாழ்.

(இ - ள்.) பழ நறை - பழகிய கள், பழையர் தம் மனையன - கள்விற்போரின் வீடுகளி லுள்ளன; உழு தொழில் - உழவுதொழிலுக்குஆன கருவிகள், நுகரும் உழவர் தம் மனையன-(அந்தக் கள்ளைப்பருகும்) உழவருடைய வீடுகளி லுள்ளன; மணம் ஒலி - மணத்துக்குஉரிய வாச்சியங்களின் ஒலி, புரியும் மழவர் தம் மனையன - (மணமகளிரால்) வரிக்கப்பட்ட இளைஞரின் வீடுகளிலுள்ளன; கிளை பயில் வளை யாழ் - கிளையென்னும் நரம்பு பொருந்திய வளைந்த வீணைகள், இசையின் கிழவர்தம் மனையன - இசைபாட வல்ல பாணர்களின் மனையி லுள்ளன; (எ - று.)

இதனால்,அவ்வச்சாதியார் தத்தமக்கு உரிய தொழிலைச் செய்வ ரென்று கூறியவாறு; அன்றியும், யாவரும் குறைவின்றி இனிதிருக்கின்றனரென்பதும் பெறப்படும். மனையன என்பதற்கு - மனையிலுள்ள குழந்தைகள் என்று கொண்டு, பழையர்குழந்தைகளும் மதுவை நுகரும்;உழவர்குழந்தைகளும் உழுதொழிலைப் புரியும்; பறைகொட்டும் இளைஞரின் குழந்தைகளும் மணவொலியைச் செய்யும் :பாணர்குழந்தைகளும் யாழ்வாசிக்கும் எனப் பின்னிரண்டடிகளிற் பயனிலைகள்வருவித்து முடித்தலுமாம்.இனிஇச்செய்யுளை, நிரனிறைப்பொருள்கோளாகக்கொண்டு, மனையனவாகிய கிளை-கிள்ளைகள், நறை நுகரும்; உழவர் மனையனவாகிய பயில் - நத்துக்கள், உழுதொழில் புரியும்; மழவர் மனையனவாகிய வளை மணவொலி பயிலும்; இசைக்கிழவர்

மனையன்னவாகியயாழ் - கின்னரப்புள், இசைபயிலும் என்று உரைப்பாரு முளர். பி - ம்:—[1]பனிநறை. (ருo)

ருக.—கோதைமுதலியன நறவம்முதலியவற்றைச்சொரிதல்.

கோதைகள் சொரிவன குளிரிள நறவம்
பாதைகள் சொரிவன பருமணி கனக
மூதைகள் சொரிவன வுறையுறு மமுதங்
காதைகள் சொரிவன செவிநுகர் [1]கனிகள்.

(இ - ள்.) கோதைகள் - பூமாலைகள், குளிர் இள நறவம் - குளிர்ந்த இளந்தேனை, சொரிவன—; பாதைகள் - மரக்கலங்கள், பரு மணி-பருத்த இரத்தினங்களையும், கனகம் - பொன்னையும், சொரிவன—; ஊதைகள் - காற்றுக்கள், உறை உறும் அமுதம் - துளியாகப்பொருந்திய நீரை, சொரிவன—; காதைகள் - (கவிஞரின்) பாடல்கள், செவி நுகர் கனிகள் - செவிகளால் நுகரப்படும் இன்னிசைகளை, சொரிவன—; (எ - று.)

பாதை - நீரென்றபொருளுள்ள 'பாதஃ' என்ற வடசொல் இலக்கணையால் மரக்கல மென்ற பொருளைத் தந்தது. கோதை-மகளிர்கூந்தலுமாம். பாதைகள் - செல்லும்மார்க்கங்கள் என்றுகூறி, கோதைமுதலியவற்றினின்று சிந்தின இரத்தினகனகங்கள் எடுப்பாரின்றிக்கிடத்தலால், பாதைகள் பருமணி கனகம் சொரிவன என்று ரெனலுமாம். கனி - சாரமென்னும்பொருளதாதலை, சிந்தாமணியில் "களிகொள்காமக் கொழுங்கனி" என்றவிடத்துக்கு நச்சினார்க்கினியர் கூறிய உரையாலும் அறிக. [1]கவிகள் என்ற பாடத்துக்கு, காதைகள் - பழையசரித்திரங்கள், செவிநுகர் கவிகளைச் சொரிவன என்று கூறி, பழஞ்சரித்திரங்கள் கவிஞரால் இனியசுவையமைந்த கவிகளாகப் பாடப்படுகின்றன என்று கருத்துக் கூறுக. (ருக)

ருஉ.—ஆண்மயில்கள் மகளிரிடத்துப்பேடையின் சாயலைக்கண்டு தொடர்தல்.

* இடங்கொள் சாயல்கண் டிளைஞர் சிந்தைபோற்
றடங்கொள் சோலைவாய் மலர்பெய் தாழ்குழல்
வடங்கொள் பூண்முலை மடந்தை மாரொடுந்
தொடர்ந்து போவன தோகை மஞ்ஞைகள்.

(இ - ள்.) தோகை மஞ்ஞைகள் - கலாபத்தையுடைய ஆண்மயில்கள், தடம் கொள் சோலைவாய் இடம் கொள் சாயல் கண்டு - பரப்பைக் கொண்டுள்ள சோலையிலே (வந்த மகளிரிடத்துத் தமது பேடைகளின்) பெருமையைக் கொண்ட சாயலைக் கண்டு, (அவர்களைப் பெண்மயிலென்றுமயங்கி), இளைஞர் சிந்தை போல் - காளைப்பருவமுள்ள ஆடவரின் மனம்போல, மலர் பெய் தாழ் குழல் வடம் கொள் பூண் முலை மடந்தைமாரொடும் - மலரையணிந்த தொங்குகின்ற கூந்தலையும் முத்துவடங்களையணிந்த (கச்சைப்) பூண்ட தனங்களையுமுடைய (அம்) மகளிருடனே, தொடர்ந்து போவன - தொடர்ந்து செல்வன; (எ - று.)

ஆண்மயில்கள் சோலையிலேவந்த மகளிரிடத்துத் தமது பேடைகளின் சாயலைக்கண்டு பெண்மயிலென்றுமயங்கி, ஆடவர் சிந்தை தொடர்ந்துசெல்வதுபோல அம்மகளிரைத்தொடர்ந்துசென்றனவென்க; மயக்கவணியோடு உவமையணிசேர்ந்துவந்த சேர்வையணி. சாயல் என்பதற்கு மென்மையெனப் பொருள்கொண்டு, ஆண்மயில்கள் அம்மகளிரிடத்து மென்மையைக் கற்க வேண்டி, ஆடவர்சிந்தைபோலத் தொடர்ந்துசென்றன வெனினுமாம். தடம் - தடாகமுமாம். பி - ம்.:—[1]மஞ்ஞையே (௫௨)

௫௩.—அந்நாட்டில் வறுமைமுதலியன இல்லாமைக்குக்காரணம்.

வண்மை யில்லையோர் வறுமை யின்மையாற்
றிண்மை யில்லைநேர் செறுந ரின்மையா
லுண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
[1]வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால்.

(இ - ள்.) (அந்தக்கோசலநாட்டில்), ஓர் வறுமை இன்மையால் - சிறிது தரித்திரமு மில்லாமையால், வண்மை இல்லை - கொடைச்சிறப்புத் தெரிவதில்லை; நேர் செறுநர் இன்மையால் - எதிர்த்துப் போர்செய்பவ ரில்லாமையால், திண்மை இல்லை - பராக்கிரமச் சிறப்புத் தெரிவதில்லை; பொய் உரை இலாமையால் - பொய்பேசுத வில்லாமையால், உண்மை இல்லை - உண்மையின்சிறப்புத் தெரிவதில்லை; பல் கேள்வி மேவலால்-பல பெரியோரையடுத்துக்கேட்டலை (அந்நாட்டவர்) பெற்றிருத்தலால், வெண்மை இல்லை - அறிவின்மையென்பது (அங்கு) இல்லை; (எ - று.)

வண்மையில்லை யோர்வறுமையின்மையால் - "கொள்வாரிலாமைக்கொடுப்பார்களுமில்லைமாதோ." வெண்மை - அறிவின்மை. பி - ம்:—[1]ஒண்மை யில்லை பல்கேள்வியோங்கலால். (௫௩)

௫௪.—எள்ளுமுதலியன கொணரும்பண்டிகள் ஒன்றோடொன்று மயங்குதல்.

எள்ளு மேன லு மிறுங்குஞ் சாமையுங்
கொள்ளுங் கொள்ளையிற் கொணரும் பண்டியு
மள்ள லோங்களத் தமுதின் பண்டியுந்
தள்ளு நீர்மையிற் [1]றலைம யங்குமே.

(இ - ள்.) எள்உம்-எள்ளையும், ஏனல்உம்-செந்தினையையும், இறுங்குஉம்-சோளத்தையும், சாமைஉம் - சாமையையும், கொள்ளுஉம் - கொள்ளையும், கொள்ளையில் கொணரும் - மிகுதியாகக் கொண்டுவருகின்ற, பண்டிஉம் - பண்டிகளும், அள்ளல் ஓங்கு அளத்து அமுதின் பண்டிஉம் - குழைசேறு மிக்கிருந்துள்ள உப்பளத்தினின்று உப்பைக்கொணரும் பண்டிகளும், தள்ளும் நீர்மையில் - ஓட்டிக்கொண்டுபோகப்படுந்தன்மையோடு, தலைமயங்கும் - ஒன்றோடொன்று கலக்கும்; (எ - று.)

குறிஞ்சிநிலவிளைபொரு ளாகிய ஏனல் முதலியனவும், நெய்தனில விளைபொருளாகிய உப்பும் மிகுதியாக வண்டிகளி லேற்றப்பட்டு இர்

நாட்டுக்குக் கொணரப்படுகையில் ஒன்றோடொன்று அவ்வண்டிகள் மயங்குமென்க. தலைமயங்கும் - இடம்மாறு மெனப் பொருள்கூறி, அந்நாட்டில் ஓரிடத்துத்தோன்றிய எள்முதலியவை அவைதோன்றிய இடங்களிலிருந்து அவை விளையாத மற்றையிடங்கட்குக் கொண்டுபோகப்படுமெனக் கருத்துக்கூறலுமாம். பி - ம் :—[1] தரை. (ருச)

ருரு.—அயிர்முதலியபொருள்கள் தலைமயங்குதல்.

**உயருஞ் சார்விலா வுயிர்கள் செய்வினைப்**
**பெயரும் [1]பல்கதிப் பிறக்கு மாறுபோ**
**லயிருந் தேனுமின் பாகு மாயரூர்த்**
**தயிரும் வேரியுந் தலைம யங்குமே.**

(இ - ள்.) உயரும் - உயர்கதியை [மோட்சத்தை] யடைவதற்குஉரிய, சார்வு - பற்றுக்கோட்டை [உபாயத்தை], இலா - உடையனவாகாத, உயிர்கள் - ஆன்மாக்கள், செய் வினை - (தாம்) செய்த வினைப்பயனை (நுகருமாறு), பெயரும் - மாறிமாறிவருகிற, பல் கதி - (மக்கள் தேவர் நரகர் விலங்குகள் என்ற) நால்வகைக் கதிகளில், பிறக்கும் ஆறு போல் - பிறக்கின்ற விதம்போல,—அயிர்உம்-கண்டசர்க்கரையும், தேன்உம்—, இன் பாகுஉம்-இனிய வெல்லப்பாகும், ஆயர் ஊர் தயிர்உம் - இடையருடைய ஊரிலுண்டாகின்ற தயிரும், வேரிஉம் - கள்ளும், தலைமயங்கும் - இடம்மாறும்; (எ-று.)

மருதம்முதலிய நால்வகை நிலங்களுள் ஏதேனும் ஓரிடத்தில் தோன்றுவனவான அயிர்முதலியவை மற்றை நிலங்களிற் செல்வதற்கு, நால்வகைக் கதிகளுள் ஏதேனும் ஒருகதியிற் பிறந்த ஆன்மாக்கள் மற்றைக்கதிகளிற் செல்வதை உவமையாகக் கூறினர்; உவமையணி. முதலிரண்டடிகள் - கடவுளை ஏதேனும் உபாயத்தாற்பற்றி நாற்கதித்துன்பத்தினின்று ஈடேறுவதே உயிர்கள் கைக்கொள்ளவேண்டிய கடமை யென்ற விஷயத்தைக் குறிப்பிக்கும். உயருஞ்சார்வு - மெய்ஞ்ஞான மெனினுமாம். "ஓதியவுடம்பு தோறுமுயிரென" என்ற தொடரோடு இச்செய்யுளின் முன்னிரண்டடிகளை யொப்பிடுக. பி - ம்:—[1]செல்கதி. (ருரு)

ருசு.—திருவிழாவும் வேள்வியும் தலைமயங்குதல்.

**[2]கூறு பாடலுங் குழலின் பாடலும்**
**வேறு வேறுநின் றிசைக்கும் வீதிவா**
**யாறு மாறும்வந் [3]தெதிர்ந்த வாமெனச்**
**சாறும் வேள்வியுந் தலைம யங்குமே.**

(இ - ள்.) கூறு பாடல்உம் - (மிடற்றுக்கருவியாற்) பாடப்படுகின்ற வாய்ப்பாடலும், குழலின் பாடல்உம் - வேய்ங்குழலினிசையும், வேறு வேறு நின்று - தனித்தனியாக, இசைக்கும் - ஒலிப்பதற்கு இடமாகிய, வீதிவாய் - வீதிகளில்,—ஆறுஉம் ஆறுஉம் வந்து - நதியும் நதியும் வந்து, எதிர்ந்த ஆம் என - ஒன்றோடொன்று எதிர்ப்பட்டனவென்று உவமைசொல்லுமாறு, சா

றுஉம் வேள்விஉம்-திருவிழாவின்பொருட்டும் வேள்வியின்பொருட்டும் வருகின்ற சனத்திரள், தலை மயங்கும் - ஒன்றோடொன்று கலக்கும்; (எ - று.)

அந்நாட்டில் ஆங்காங்குத் தேவாலயங்களில் நடக்கின்ற திருவிழாவைக் காணும்பொருட்டும், ஆங்காங்கு நிகழ்த்தும் பல்வகை யாகங்களைக் காணும் பொருட்டும் திரண்டுவருகின்ற சனங்களின்திரள் ஆறும் ஆறும் ஒன்றையொன்று எதிர்வதுபோல ஒன்றோடொன்று மயங்கு மென்பதாம். இனி, விழா - திருவிழாக்கள்: வேள்வி - கலியாணங்கள் என்று உரைத்து, அவற்றில் நிகழும் ஊர்வலத்தில் திரளுஞ் சனங்கள் தலைமயங்கு மென்றலு மொன்று. பி - ம்:—[1]கூறும் [2]எதிர்ந்தது. (ருசு)

ருஎ.—சங்கு பறை முதலியவற்றின் ஓசையினும் உழவர் உரப்பு ஓங்குதல்.

மூக்கிற் றாக்குறு [1]மூரி நந்துநேர்
தாக்கிற் றாக்குறும் பறையுந் தண்ணுமை
வீக்கிற் றாக்குறும் விளியு மள்ளர்[2]தம்
வாக்கிற் றாக்குறு [3]மொலியின் மாயுமே.

(இ - ள்.) மூக்கில் தாக்குறும் மூரி நந்துஉம் - மூக்குப்போன்ற இடத்திலே (வாய்வைத்து) நெருக்கி யூதப்படுகின்ற வலிய சங்கவாச்சியத்தினோசையும், நேர் தாக்கின் தாக்குறும் பறைஉம் - நேரிதானகுறுந்தடியால் தாக்கப்படுகின்ற பறையோசையும், வீக்கில் தாக்கும் தண்ணுமை விளிஉம் - (வார்கொண்டு) இறுகக்கட்டுதலினால் அதிர்தல்பொருந்திய மத்தளத்தினோசையும், மள்ளர்-உழவர்கள், தம் வாக்கில் தாக்குஉறும் - (தமது) வாயினாலே (உழவுமாடுகளை) யதட்டுகின்ற, ஒலியின் - ஒலிக்குள்ளே, மாயும் - அடங்கிவிடும்; (எ. - று.)

சங்கு பறை தண்ணுமை என்ற இவைகளினோசை யடங்கிவிடும்படி மள்ளர் உழவுகுண்டைகளை யதட்டும் ஓசை ஓங்கிநிற்கு மென்க. வலிமை பெற்ற ஒன்றனால் மற்றையவை யடங்குதலைக் கூறுதலால், இச்செய்யுள் மறைவணியாம்; வடநூலார் மீலிதாலங்காரமென்பர். பி - ம்:—[1]முரிந்த கோதை. [2]கை. [3]ஒலியுமானுமே. (ருஎ)

ருஅ.—குழந்தைகட்குப் பாலைப்பருதவித்தலின் வருணனை.

தாலி யைம்படை தழுவு மார்பிடை
மாலை வாயமு தொழுகு மக்களைப்
பாலி னூட்டுவார் செங்கை பங்கயம்
வானி லாவுறக் குவிவ மானுமே.

(இ - ள்.) தாலி ஐம்படை தழுவும் மார்பிடை - ஐம்படைத்தாலிபூண்ட மார்பிலே, மாலை - ஒழுங்காக, வாய் அமுது ஒழுகும்-வாயிலிருந்துசொள்ளுநீர் வடியப்பெற்ற, மக்களை-மக்களுக்கு,பாலின் ஊட்டுவார்-பாலைப்பருகுவிக்கின்ற மகளிரின், செங்கை-செந்நிறமுள்ள கைகள், வால் நிலாஉற பங்கயம் குவிவ-வெண்ணிறமுள்ள நிலாப்படுதலால் தாமரை மலர்குவிவதை, மானும்-ஒத்திருக்கும்; (எ - று.)

ஐம்படைத்தாலி - காத்தற்கடவுளான திருமாலின் சங்கம் சக்கரம் தண்டு வில் வாள்என்னும்பஞ்சாயுதங்களின் வடிவமாக அமைப்பது; இதனை, பிள்ளைகளுக்கு அனுக்கம்நேராமலிருத்தற்பொருட்டுக் காப்பாக ஐந்தாவது மாதத்திற் பூணுவித்தல், மரபென்பர். இது-தாலியென்றும், தாலியைம்படையென்றும் தமிழிலும், பஞ்சாயுதமென்று வடமொழியிலும் வழங்கப்படும்; "சிந்துபு சின்னீ ரைம்படைநனைப்ப," "அமளித்துஞ்சு மைம்படைத்தாலிக், குதலைச் செவ்வாய்க் குறுநடைப்புதல்வர்," "தாலிகளைந்தன்று மிலனே," "எழிலார் திருமார்பிற் கேற்குமிவையென், றழகியவைம்படையுமாரமுங் கொண்டு" என்பன காண்க. பால் நிலாவிற்கும், அப்பாலிற்படுமாறு குவிந்துள்ள மகளிர்கை பங்கயமலர்க்கும் உவமையாம். பாலின், இன் - சாரியை. பாலினூட்டுவார்என்பதற்கு-பாலுடனே சோற்றையுண்பிப்பவ ரென்றுமாம்.

ரு௯.—ஆடவர் மகளிர் என்பவரின் பொலிவுமுதலியன.

பொற்பி னின்றன பொலிவு பொய்யிலா
நிற்பி னின்றன நீதி மாதரா
ரற்பி னின்றன வறங்க ளன்னவர்
கற்பி னின்றன கால மாரியே.

(இ - ள்.) பொலிவு-அழகுகள், பொற்பின் - (அவரவர்களுடைய) நல்ல குணங்களில், நின்றன - நிலைபெற்றிருந்தன; நீதி-நியாயங்கள், பொய் இலா நிற்பின் - பொய்ம்மையில்லாத நிலைமையால் [உண்மைநிலையால்], நின்றன-; மாதரார் - மகளிருடைய, அற்பின் - அன்பினால், அறங்கள் - தருமங்கள், நின்றன—; அன்னவர் - அம்மகளிருடைய, கற்பின்-கற்பினால், காலம் மாரி- பருவமழைகள், நின்றன—; (எ - று.)

பின்னிரண்டடி - மடவாரைப்பற்றிவருதலால், முன்னிரண்டடி ஆடவரைப்பற்றியனவென்னலாம்; அந்நாட்டு ஆடவர் அழகாகக்கருதுவது - நற்குணமுடைமையே; அன்னார் உண்மைதவறு திருக்கவேணுமென்னும்உறுதியையுடையராதலால், அவரிடத்து நீதி பிறழாதிருந்தனவென்க. "அறத்திற்கேயன்புசார்பென்ப" என்றவாறு, 'அன்பினின்றன வறங்கள்' என்றார். "தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள், பெய்யெனப்பெய்யு மழை" என்றவாறு தேவரும் கற்புடைமகளிர்க்குக் குற்றேவல்புரிவ ராதலால், 'கற்பினின்றன காலமாரி' என்றார். இப்பாடல் முழுவதும் மகளிரைப்பற்றியனவெனக் கொள்ளினுமாம். (ருக)

சு௦.—கோசலதேசத்தின்பரப்பு.

சோலை மாநிலந் துருவி யாவரே
வேலை கண்டுதா மீள வல்லவர்
சாலும் வார்புனற் சரயு வும்பல
காவி னேடியுங் கண்ட தில்லையே.

(இ - ள்.) சோலை - சோலைகளாற்சூழப்பட்ட, மா நிலம் - பெருமை பொருந்திய அந்தக்கோசலதேசத்தை, துருவி - தேடி, வேலை-எல்லையை, தாம்—, கண்டு - பார்த்தறிந்து, மீள வல்லவர் - மீண்டுவந்துசொல்லும் வல்லமையுடையவர், யாவரே—? [எவருமில்லை]; சாலும் வார்புனல் சரயுஉம் - மிகுந்து பெருகுகின்ற நீரையுடைய சரயுநதியும், பல காலின் ஓடிஉம் - பல வாய்க்கால்களால் ஓடிச்சென்றும் [பலகால்களைக்கொண்டு நடந்துபார்த்தும்], கண்டது இல்லை-(அத்தேசத்தினெல்லையைக்) கண்டதில்லை; (எ - று.)

பலகால்களால் ஓடிச்சென்றுங் காணமுடியாத கோசலதேசத்தின் எல்லை, இரண்டே கால்களையுடைய மானுடரால் எங்ஙனங் காணமுடியும்? காணமுடியாதென்றுதொடர்நிலைச்செய்யுட் பொருட்பேறணிபடக்கூறினர். 'பலகாலினோடியும்' என்ற சிலேடை இவ்வணிக்கு உபகாரப்பட்டது. (௬0)

**௬க.—நாட்டின்சிறப்பும் மேற்படலத்தின் தோற்றுவாயும்.**

வீடு சேரநீர்வேலை கான்மடுத்
தூடு பேரினு முலைவி லாநலங்
கூடு கோசல மென்னுங் கோதிலா
நாடு கூறினு நகரங் கூறுவாம்.

(இ - ள்.) வீடு சேர - (பூமிமுழுவதும்) அழிதலைப் பொருந்த, நீர் வேலை - நீரையுடைய கடல், கால் மடுத்து - கடுங்காற்றினால் மோதப்பட்டு, ஊடு பேரினஉம் - அந்தப் பூமியினிடையிலே பேர்ந்துவந்தாலும், உலைவு இலா - அழிதலில்லாத [அழியாத], நலம் - நல்ல தன்மை, கூடு - பொருந்திய, கோசலம் என்னும் - கோசலமென்கிற, கோது இலா நாடு - குற்றமில்லாத நாட்டின் சிறப்பை, கூறினும் - (இதுவரையிற்) சொன்னோம்; (இனி), நகரம் - (அந்தக் கோசலநாட்டிலுள்ள) அயோத்திமாநகரின் சிறப்பை, கூறுவாம் - இனிச் சொல்லுவோம்; (எ - று.)

கோசலநாடு பிரளய காலத்திலும் அழியாத தன்மையுடையதென்க. வீடு - முதனிலைத்தொழிற்பெயர். (௬க)

நாட்டுப்படலம் முற்றிற்று.

---

## ரு.—ஆவது நகரப்படலம்.

நகரத்தினது சிறப்புக்களைச் சொல்லும் பாகமென்பது பொருள். இதனால் காப்பியத்தலைவனான இராமபிரானது திருவவதாரத்திற்கிடமான இராசதானியாகிய அயோத்தியா நகரத்தைக் கவி வருணிக்கின்றனர்.

**க.—இதுமுதல் ஏழுகவிகள்-அயோத்திமாநகரத்தின் சிறப்பைத் தெரிவிக்கும்.**

செவ்விய மதுரம் சேர்ந்தநற் பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞ ரனைவரும் வடநூன் முனிவரும் புகழ்ந்தது வரம்பி

லெவ்வுல கத்தோ ரியாவருந் தவஞ்செய் தேறுவா னாதரிக் கின்ற
வவ்வுல கத்தோ ரிழிவதற் கருத்தி புரிகின்ற தயோத்திமா நகரம்.

(இ - ள்.) அயோத்திமாநகரம் - அயோத்தியென்னுஞ் சிறந்த பட்டணமானது,—செவ்விய - அழகையுடையனவும், மதுரம் சேர்ந்த - சுவை பொருந்தியனவும், நல் பொருளின் சீரிய - சிறந்த பொருளாற் சிறப்புடையனவும், கூரிய - நுட்பமாயுள்ளனவும், தீம் சொல் வவ்விய - இனிமையைத்தருவனவாகிய சொற்களைக் கொண்டுள்ளனவுமான, கவிஞர் அனைவர் உம் - புலவர்களெல்லோராலும், வடநூல் முனிவர் உம் - வடநூலில் வல்ல முனிவர்களாலும், புகழ்ந்தது - புகழப்பட்டுள்ளது; (அன்றியும்), வரம்பு இல் எ உலகத்தோர் யாவர் உம் - அளவில்லாத எல்லாவுலகங்களிலுமுள்ளவர்களெல்லோராலும், தவம் செய்து - தவத்தைச் செய்து, ஏறுவான் - பெறும்பொருட்டு, ஆதரிக்கின்ற - விரும்பப்படுகின்ற, அ உலகத்தோர் - அந்த மோட்சலோகத்தி லிருப்பவர்களும், இழிவதற்கு - (அங்குநின்றும்) இறங்கி வந்து வசிப்பதற்கு, அருத்தி புரிகின்றது - ஆசையைச் செய்யுந் தன்மையுடையது; (எ - று.)

இங்ஙனம் அயோத்திமாநகரம் யாவராலும் புகழப்படுவதற்கும் விரும்பப்படுவதற்குங் காரணம், ஸ்ரீராமனது திருவவதாரஸ்தலமாதலா லென்க. கவிக்குச் செவ்வியாவது—மடக்குமுதலிய சொல்லணிகளாலும், மோனை எதுகை முரண் முதலிய சொல்தொடைகளாலும் வரும் அழகாம். இதற்கு- ஐயமின்றிப் பொருளைப் பயப்பது என்றும் உரைக்கலாம். மதுரம் என்றது - சிருங்காரம் வீரம் கருணை அற்புதம் நகை பயம் பீபத்சம் ரௌத்ரம் சமநிலை என்னும் நவரசங்களை. நற்பொருளிற் சீரிய என்றது - உவமை முதலிய பொருளணிகளால் வரும் அழகைக் கருதி. கூரிய - த்வந்யர்த்தமெனப் படுகிற குறிப்புப்பொருளையுடைய என்றபடி. தீஞ்சொல் - செவிக்கினிமை பயக்குஞ்சொல். 'கவிஞரனைவரும்' என்றது - திராவிடம்முதலிய பதினெட்டுத் தேசபாஷைகளிலும் மற்றை ஸம்ஸ்கிருதம் முதலிய பாஷைகளிலும் இராமகதையைப் பாடிய புலவர்களை. வடநூல் முனிவர் என்றது - ராமகதையைக் கூறியவர்களான வால்மீகி போதாயனர் முதலியோரை.

வரம்பில் எவ்வுலகத்தோர் என்றது - மிக்க பரப்பையுடைய பூலோகம் முதலிய மேலேழுலகங்களிலும் அதலம் முதலிய கீழேழுலகங்களிலும் உள்ளவர்களை. பின்னிரண்டடிகளினால் நிரதிசய வின்பத்தை அனுபவிப்பவரான முத்தியுலகத்தவர்களும் அதனைவிட்டுவர விரும்பும்படியான் பலவகை யின்பங்களையும் தருந் தன்மை கூறப்பட்டது. 'ஆதரிக்கின்ற' என்ற பெயரெச்சம் அவ்வுலகத்தோர் என்பதிலுள்ள அவ்வுலகம் என்றதைக்கொண்டு முடியும். மீளாவுலகமாகிய வீட்டுலகத்திலுள்ளவரும் வர விரும்புகின்றனரென்றதனால், பிறவுலகத்தவர் வர விரும்புதல் கூறாமையே பெறப்படும். அவ்வுலகத்தோர் என்றதன் ஈற்றில் உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. அந்நகரத்தினது சிறப்பு முக்காலத்திலும் ஒரு தன்மைத்தாக விருப்பதென்பது தோன்ற 'புரிகின்றது' என நிகழ்காலத்தாற்கூறினர். அயோத்தி-

(அகழி ஆயுதம் சேனை முதலியவற்றால் மிக்ககாவலுடைமையால் மாற்ருராற்) போரிடுதற்கு முடியாத தென்று அவயவப்பொருள்படும் வடசொல். பி - ம்:—[1]சேர்ந்தன. (க)

உ. *நிலமகண் முகமோ திலகமோ கண்ணோ நிறைநெடு மங்கல நாணோ, விலகுபூண் முலைமே லாரமோ வுயிரி னிருக்கையோ திருமகட் கினிய, மலர்கொலோ மாயோன் மார்பினன் மணிகள் வைத்தபொற் பெட்டியோ [1]வானோ, ருலகின்மே லுலகோ வூழியி னிறுதி யுறையுளோ யாதென வுரைப்பாம்.

(இ - ள்.) (அவ்வயோத்திமாநகரமானது),—நிலம்மகள் முகம்ஓ - பூமிதேவியினது திருமுகமோ?, திலகம்ஓ - (அம்முகத்திலணியும்) திலகமோ?, கண்ஓ - (அவ்வாது) கண்தானோ?, நிறை நெடு மங்கலம் நாண்ஓ-நிறைந்த நீண்ட மங்கலசூத்திரமோ?, முலைமேல் பூண் இலகு ஆரம்ஓ - தனங்கள் மேல் தரிக்கப்பட்டுவிளங்குகிற இரத்தினமாலையோ?, உயிரின் இருக்கைஓ - உயிர் இருக்குமிடமோ?, திருமகட்கு இனிய மலர்ஓ - இலக்குமிக்கு வசித்தற்குஇனியதான தாமரைமலரோ?, மாயோன் மார்பில் நல் மணிகள் வைத்த பொன் பெட்டிஓ - திருமாலின் திருமார்பில் அணியப்பட்ட சிறந்த கௌஸ்துபவிரத்தினம்போன்றஇரத்தினங்கள் வைக்கப்பட்டுள்ள பொன்னாற்செய்த பெட்டிதானோ?,வானோர் உலகின் மேல் உலகுஓ-தேவலோகத்தினும் மேலாகவுள்ள ஸ்ரீவைகுண்டலோகமோ?, ஊழியின் இறுதி உறையுள்ஓ - யுகாந்தகாலத்தில் எல்லாப்பொருள்களுந் தங்குமிடமாகிய திருமாலினது திருவயிறோ?, யாது என உரைப்பாம் - (இவற்றுள்) எது என்று நிச்சயித்துச்சொல்லுவோம்? (எ - று.)—கொல் - அசை.

எல்லாஅங்கங்களுள்ளும் சிறந்து மேன்மைபெற்றிருத்தலால் 'முகமோ' என்றும், திலகம் அம்முகத்திற்கும் அழகுசெய்தலால் 'திலகமோ' என்றும், கண்ணிற்சிறந்ததோருறுப்பில்லையாதலால் 'கண்ணோ' என்றும், மகளிர்க்குச் சிறந்தஅணியாதலால் 'மங்கலநாணோ' என்றும், கணவர்கண்ணுக்குக் களிப்பைக்கொடுத்தலால் 'முலைமேலாரமோ' என்றும், எல்லாவுயிர்க்குமுயிராகிய திருமால் திருவவதரித்த தல மாதலால் 'உயிரினிருக்கையோ' என்றும், அளவிறந்தஅருஞ்செல்வத்தை அகலாமல் அமையப்பெறுதலோடு இலக்குமியம்சமாகியசீதாபிராட்டியாருக்குத் தான் அவதரித்த தலமாகிய மிதிலாபுரியினும் மிகவினியவாசத்தல மாதலால் 'திருமகட்கினியமலர்கொலோ' என்றும், சிறந்தபொருள்களை யுள்ளேயுடைமையால் 'மாயோன்மார்பினன்மணிகள்வைத்தபொற்பெட்டியோ' என்றும், எல்லாவுலகத்தினும்சிறந்திருத்தலால் 'வானோருலகின்மேலுலகோ' என்றும், எல்லாப்பொருள்களுமுடைமையால் 'ஊழியினிறுதியுறையுளோ' என்றும் கூறினர்; இங்ஙனம் ஒரு பொருளைப் பலபடக்கூறியது, பலபடப்புனைவணியாம்; இதை வடநூலார் உல்லேகாலங்கார மென்பர். இயற்கையாலும் செயற்கையாலுமமைந்த அழகுகள் எத்தனையிருந்தாலும் மகளிர்க்கு மங்கலநாண்இல்லையாயின் அவையனைத்தும் பயன்படா வாதலால், 'நிறைநெடுமங்கலநாண்'

பாராட்டிக்கூறப்பட்டது. 'திருமகட்கு' என்பதனை மத்திமதீபமாகக் கொண்டு,'திருமகட்குஉயிரினிருக்கையோ'என இயைத்து உரைத்தலுமாம்.
பி - ம்:—[1]மலரோன். (உ)

ங. உமைக்கொரு பாகத் தொருவனு மிருவர்க் கொருதனிக் கொழுநனு மலர்மேற், கமைப்பெருஞ் செல்வக் கடவுளு [1]முவமை கண்டில ரங்கது காண்பா, னமைப்பருங் [2]காதன் முன்பிடித் துந்த வந்தரஞ் சந்திரா தித்த, ரிமைப்பிலர் திரிவ ரிதுவலா [3]லிதனுக் கியம்பலா [4]மேதுமற் றியாதோ.

(இ - ள்.) உமைக்கு - உமாதேவியை, ஒரு பாகத்து - ஒருபக்கத்திலே கொண்ட, ஒருவன்உம்-ஒப்பற்றவனான பரமசிவனும், இருவர்க்கு-(ஸ்ரீதேவி பூதேவி என்னும்) இரண்டுமகளிர்க்கும், தனி ஒரு கொழுநன்உம் - ஒப்பற்ற ஒருகணவனாகிய திருமாலும், மலர்மேல் - (அத்திருமாலின் நாபீ) கமலமலரில் (தோன்றிய), கமை பெரு செல்வம் கடவுள்உம் - பொறுமையையே பெருஞ்செல்வமாகக்கொண்ட பிரமதேவனும், உவமை - உவமையான தொருபட்டணத்தை, கண்டிலர்—; அது - அங்ஙனம் அயோத்தியாநகரத்துக்குஒப்பான வேறுபட்டணத்தை, காண்பான் - பார்க்கும்பொருட்டு, அமைப்பு அரு காதல் - தடுத்தற்குக்கூடாத ஆசை, முன் பிடித்து உந்த - (தம்மை) முன்னே பிடித்துத் தள்ளுதலினால், அந்தரம் - ஆகாயத்தில், சந்திர ஆதித்தர் - சந்திரனும் சூரியனும், இமைப்புஇலர் திரிவர்-இமைகொட்டாதவராய் இன்னமும் அலைகின்றனர்; இது அலால் - இதுவல்லாமல், இதனுக்கு - இவ்வாறு திரிவதற்கு, இயம்பல் ஆம் - சொல்லக்கூடிய, ஏது-காரணம், மற்று யாதோ - வேறுயாதுளதோ? (எ - று.)

சந்திரசூரியர்கள் நாடோறும் ஆகாயத்தில் திரிவதற்குக்காரணம்,'இந்த அயோத்திமாநகரத்தைப்போன்ற வேறுநகரம் எவ்விடத்திலேனும் காணக் கிடைக்குமோ?' என்ற எண்ணத்தினாலேயாகு மென்றார்: இங்குக்காரணமல்லாததைக் காரணமாகக் குறித்தது, ஏதுத்தற்குறிப்பேற்றவணியாம்:இதனால், அந்நகரத்தின் ஒப்புயர்வில்லாத் தன்மை விளங்கும். திரிமூர்த்திகளுமே இந்நகர்க்குச் சமானமானதொருநகரத்தை யெங்குங் கண்டதில்லையென்று நகரத்தினது ஒப்பின்மையை முதலிரண்டடிகளினாற் கூறினர். திரிமூர்த்தி முதலியோர்தாமே இந்நகரத்திற்கு ஒப்பானநகரம் ஒன்று காணாதிருக்க, அம்மூர்த்தியுள் ஒரு மூர்த்தியின் கண்ணிலும் மனத்திலுந்தோன்றிய சூரியசந்திரர் எவ்வனங்காணுவரென்றகருத்து இங்குத் தொனிக்கும். 'இமைப்பிலர்' என்றதனால்; சந்திரசூரியர்கள் சாக்கிரதையோடு காண்கின்றனரென்பது பெறப்படும். 'இருவர்க்கு ஒருதனிக்கொழுநன்' என்பதற்கு - வள்ளி தேவயானையென்கிற இருவர்க்கும் ஒப்பற்ற கணவனாகிய சுப்பிரமணியக்கடவுள் என்று கொள்வாருமுளர். முருகக்கடவுளைப் பிரமருத்திரரோடு வைத்தெண்ணுதல் அத்துணையாகப்பொருந்தாது: முக்கண்ணும் எட்டுக்கண்ணுமுடைய கடவுளரிடையே பன்னிருகண்களையுடைய கடவுளைவைத்துக்கூறுதல் தகுமெனின், ஆயிரங்கண்களையுடைய கடவுளிந்திரனைக் கூறுதல் அத

னினுஞ் சிறக்கு மென்க. 'ஒருபாகம்' என்பது - வாமபாகத்தை. உமைக்கு உருபுமயக்கம். இருவர்க்கு என்றவிடத்தில் - முற்றும்மை, விகாரத்தால் தொக்கது. சந்திராதித்தர் - "உயர்திணையும்மைத்தொகை பலரீறே". ஆதித்தன் = ஆதித்யன்: (காச்யபமுனிவரது மனைவியருள்) அதிதி யென்பவளது மகன்; இச்சொல்-சூரியனுக்குச் சிறப்பாக வழங்கும். அங்கு-அசை. பி-ம்:— [1]முதலோர்கண்டிலாநகரது, உலகர்கண்டிலாநகரிது,[2]காதலது. [3]அதனுக்கு. [4]உவமை. (ந.)

**௯. அயின்முகக் குலிசத் தமரர்கோ னகரு மளகையு மென் றிவை யயனுர், [1]பயிலுற வுற்ற படி[2]பெரும் பான்மை யிப்பெருந் திரு நகர் படைப்பான், மயன்முதற் றெய்வத் தச்சருந் தத்த மனத்தொழி [3]ஞணினர் மறந்தார், புயறொடு குடுமி நெடுநிலை மாடத் திந்நகர் புகலுமா றெவனே.**

(இ - ள்.) அயில் முகம்-கூர்மையை முகத்திலேகொண்ட, குலிசத்து - வச்சிராயுதத்தையுடைய, அமரர் கோன் - தேவர்களுக்கு அரசனான இந்திரனது, நகர்உம் - இராசதானியாகிய அமராவதிபட்டணமும், அளகைஉம் - (குபேரனது இராசதானியாகிய) அளகாபுரியும், என்ற இவை-என்று சொல்லப்பட்ட இவ்விரண்டு நகரங்களையும், அயனுர் - (படைத்தற்றொழிற்கடவுளான) பிரமதேவன், பயில் உறவு உற்ற படி - (படைத்துப்) பயிற்சிசெய்து கொண்டதற்குத் தக்கபடி, பெரு பான்மை இ பெரு திரு நகர் - மிக்க சிறப்பையுடைய பெரிய அழகிய இவ்வயோத்தியாநகரத்தை, படைப்பான் - படைக்கலாயினன்; மயன் முதல் தெய்வம் தச்சர்உம் - மயன்முதலாகிய தேவசிற்பியர்களும், (இந்நகரத்தின் சிறப்பைக்கண்டு), நாணினர் - (இவ்வாறு தங்களால் நிருமிக்கமுடியாமையால்) வெட்கங்கொண்டவர்களாய், தம் தம் மனம் தொழில் மறந்தார் - தங்கள் தங்களினுடைய சங்கற்பத்தினாற் படைக்குந்தொழிலை மறந்துவிட்டார்கள்; (என்றால்), புயல் தொடு குடுமி நெடு நிலை மாடத்து இ நகர்-மிக்கஉயர்ச்சியால் மேகங்களையளாவுகின்ற சிகரங்களையுடைய நீண்ட மேல்நிலையைக்கொண்ட உபரிகைவீடுகளையுடைய இவ்வயோத்தியாபுரியை, புகலும் ஆறு - வருணித்துச் சொல்லும் வகை, எவன் ஒ - எவ்வாறோ? [எம்போலியரால் இந்நகரத்தை வருணித்துச் சொல்லமுடியாது என்றபடி]; (எ - று.) - ஆயினும், எட்டியமட்டிற் சிறிது சொல்வேனென அவையடக்கங் கூறியவாறும்.

அழகு, செல்வவளம் முதலியவற்றில் மிக்கவையென்று எல்லோராலும் உயர்த்துச்சொல்லப்படுகிற அமராவதியும் அளகாபுரியும்என்ற இத்தேவநகரங்களே அயோத்தியாநகரைப் படைத்தற்குப் பழகும்பொருட்டுச் சிருட்டிக்கப் பட்டவை யென்றால், இவ்வயோத்திமாநகரின் சிறப்பு அமராவதிமுதலிய தேவநகரங்களினும் விஞ்சியிருக்குமன்றோ? 'இவ்வயோத்திநகரையொத்த வேறுநகரம் நம்மாற் படைக்கமுடியுமா?' என்று ஆராயாமலே இதுபோன்றதொரு நகரத்தை நிருமிக்கமுயன்று மயன்முதலான தெய்வத்தன்மையுள்ள

நச்சர்களும் சிறிதும் முடியாது மிக்க நாணங்கொண்டு தந்தம் மனத்தொழிலையும் மறந்துவிட்டனர்; ஆதலால், இவ்வளவு சிறப்புடைய இந்நகரை வருணித்தல் எம்போலியர்க்கு அரிதென்பதாம். அமராவதி அளகை என்ற இவற்றைப் படைத்தபின்பு அயோத்திமாநகரத்தைப் பிரமன் படைத்ததற்குக்காரணம் - கைதேர்ந்தபின்பே இந்நகரைப் படைக்கவேண்டு மென்ற எண்ணமே எனக் காரணமல்லாததைக் காரணமாகக் கற்பித்துக்கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணியாம். புயல்தொடு குடுமி என்றது-தொடர்புயர்வு நவிற்சியணி. இதனால், அந்நகரத்துமாளிகைகளின் மிகவோங்கியதன்மை தொனிக்கும். அமராவதி-தேவேந்திரனதுஇராசதானி: வானுலகத்துள்ளது. அளகை - குபேரனதுபட்டணம்: இது, கைலாசத்திலுள்ளது. என்றிவை தொகுத்தல். பி - ம்:—[1]பயில்வுறல். [2]பெரும்பாலும் பெருந்திருநகரது. [3]நாணினன். (௪)

ரு. **புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க மென்னுமீ தருமறைப் [1]பொருளே, மண்ணிடை யாவ ரிராகவ னன்றி மாதவ மறத்தொடும் வளர்த்தா, ரெண்ணருங் குணத்தி னவனினி திருந்திவ் வேழுல காள்வி டமென்று, [2]லொண்ணுமோ விதனின் [3]வேறொரு போக முறைவிட முண்டென வுரைத்தல்.**

(இ - ள்.) 'புண்ணியம் புரிந்தோர் - (இம்மையில்) நல்வினைகளைச் செய்தவர்கள், புகுவது - (மறுமையிற்) சேர்ந்து இன்பமனுபவிக்குமிடம், துறக்கம் - சுவர்க்கலோகமாம்', என்னும் ஈது - என்கிற இவ்விஷயம், அருமறை பொருள் ஏ - (அறிவதற்கு) அருமையான வேதங்களிற் கூறிய சித்தாந்தமான அருத்தமேயாகும்; அறத்தொடும்-(அத்தன்மைய சிறப்புடைய) தருமத்துடனே, மா தவம் - பெரிய தவத்தையும், மண்ணிடை - (இந்த) நிலவுலகத்திலே, வளர்த்தார் - நன்குசெழிக்கச்செய்தவர், இராகவன் அன்றி - ஸ்ரீராமபிரானே யல்லாமல், யாவர் - வேறு எவரிருக்கின்றனர்? [எவருமில்லையென்றபடி]; (அங்ஙனம் அறத்தை நிலைநாட்டிய), எண் அருங் குணத்தின் அவன் - நினைத்தற்கும் அருமையாகிய [மிகப்பலவாகிய] திருக்கலியாண குணங்களையுடைய அந்த ஸ்ரீராமன், இனிது - இனிமையாக, இருந்து - (பலகாலம்) எழுந்தருளியிருந்து, இ ஏழ் உலகு - இந்த ஏழுலோகங்களையும், ஆள்வு - ஆளுதற்கு உரிய, இடம் - ஸ்தானமாகும், (இந்நகரம்), என்றால்—, இதனின் - இவ்வயோத்திமா நகரத்தினும் மேம்பட்டதாகிய, போகம் உறைவு - (பலவகைச்) சுகாநுபவங்களுக்கும் இருப்பிடமான, வேறு ஒரு இடம் - வேறொரு உலகம், உண்டு என - உள்ளதென்று, உரைத்தல் - சொல்லுதல், ஒண்ணுமோ - பொருந்துமோ? [பொருந்தாதென்றபடி]; (எ - று.)

தீவினைநீக்கி நல்வினையைச்செய்தவர் இறந்தபின்பு போய்ச்சேர்ந்து இன்புறுகருமிடம் தேவலோகமே யா மென்பது, வேதப்பொருளாகுமென்பது திண்ணமாயினும், அவ்வேதமுதல்வனே அவ்வறத்தை நிலைநிறுத்தும் பொருட்டு இரகுகுலத்தில் தசரதசக்கரவர்த்தியின்திருமகனாய்த் தோன்றி

அனைத்துலகத்தையும் அரசாண்டுகொண்டிருந்த இடம் இவ்வயோத்தியென்றால் இதனினும் மேலான வேறு ஒரு போகஸ்தானம் உண்டென்று நாக்கூசாமற் சொல்லமுடியுமோ? முடியாதென்க. எனவே, கருமபூமியும் புண்ணிய பூமியுமாகிய எல்லாவுலகங்களிலு முள்ள நகரங்களனைத்தினுஞ் சிறந்தது, அயோத்தி யென்றவாறும் எல்லா வுலகங்களுக்குந் தலைவனாக உள்ளவனொருவன் அவ்வுலகங்களுள் ஒன்றிலே ஓரிடத்தில் வாழ்ந்திருப்பனாயின், அவ்விடம் மற்றை யெல்லாவிடங்களினுஞ் சிறப்புற்றே யிருத்தல் வேண்டுமென்பது யாவரும் ஒப்புக்கொள்ளக்கூடிய விஷயமே யென்க. இராகவன் என்பதை இரண்டாம்வேற்றுமைத்தொகையாகவைத்து, உலகத்தில் இராமனைக்குறித்தல்லாமல் வேறொருவரைக்குறித்துத் தவமுந் தருமமும் யார் செய்கின்றனர்? எவருமில்லை; அங்ஙனம் யாவராலுந் தியானஞ் செய்யப்படும் பொருளாகிய ஸ்ரீராமன் அரசுவீற்றிருக்குமிடம் என்று முரைப்பர் இனி, 'சரணாகதியாகிய நற்செய்கையைச் செய்தவர்கள் புகுமிடம் வீட்டுலகமென்பது, ஸகலவேதாந்தஸாரார்த்தமே; அச்சரணாகதியாகிய பெருந்தவத்தைத் தத்தம் வருணாச்சிரமங்களுக்குரிய தருமங்களுடனே இராமபிரானைக் குறித்தல்லாமல் வேறெவரைக்குறித்து உலகத்திற் செய்வார்கள்? அங்ஙனம் ஸர்வசரண்யனான எம்பெருமான் தனது வீட்டுலகத்தை விட்டு இங்கு அரசு ஆண்டு இருந்தனனென்றால், இந்நகரம்போல வேறொரு பெரும்போகம் நுகரிடம் உண்டோ வென்றுங் கூறலாம். பி - ம்:—[1]பொருளேல். [2]ஒண்ணுமோவதனின், ஒண்ணுமேயதனின் (இ)

**௯. [1]தங்குபே ரருளுந் தருமமுந் துணையாத் தம்பகைப் [2]புலன்களைந் தவிக்கும், பொங்குமா தவமு ஞானமும் [3]புணர்ந்தோ ரியாவர்க்கும் புகலிட மான, செங்கண்மால் பிறந்தாண் டளப்பருங் காலந் திருவின்[4]வீற் றிருந்தன னென்றால், அங்கண்மா ஞாலத் தந்நக ரொக்கும் பொன்னக ரமரர்நாட் டியாதோ.**

(இ - ள்.) 'தங்கு - (தம்மிடத்துப்) பொருந்திய, பேர்அருள்உம் - மிக்க கருணையையும், தருமம்உம் - தருமத்தையும், துணை ஆ - துணையாகக் கொண்டு, தம் பகை புலன்கள் ஐந்து அவிக்கும் - (தமது) பஞ்சேந்திரியங்களையும் (ஐம்புலன்களிற்போகவொட்டாமல்) அடக்குபவர்களாகி, பொங்கு மா தவம்உம் ஞானம்உம் புணர்ந்தோர் யாவர்க்கும் - மேன்மேல்வளர்கின்ற தவத்தையும் தத்துவஞானத்தையும் பெற்றிருப்பவர்களாகிய (இல்லறத்தார் துறவறத்தாராகிய பெரியோர்) யாவர்க்கும், புகல் இடம் ஆன - சரணமாக அடைதற்குரிய ஸ்தானமான, செங்கண் மால் - சிவந்த திருக்கண்களையுடைய திருமால், பிறந்து - திருவவதரித்து, ஆண்டு - அவ்வயோத்தியாநகரத்தில், அளப்ப அரு காலம் - அளவிடுதற்குமுடியாத [மிகப்பல] காலம், திருவின் - ஸ்ரீமகாலட்சுமியினது அவதாரமாகிய சீதாபிராட்டியுடனே, வீற்றிருந்தனன் - மிக்கசிறப்புடனேதங்கியிருந்தான்,' என்றால்—, அம் கண் மா ஞாலத்து - அழகிய இடத்தையுடைய பெரியபூமியிலுள்ள, அ நகர் - அவ்வயோத்தியாபுரியை, ஒக்கும் - ஒத்திருக்கின்ற, பொன் நகர் - பொன்போலருமையான

[அழகிய] நகரம், அமரர் நாடு - தேவலோகத்தில்தாம், யாதோ - எதுஉள்ளதோ? [எதுவுமில்லையென்றபடி]; (எ - று.)

துறவறத்தார்இல்லறத்தார் என்ற இவ்வுலகத்திலுள்ள சகலசேதனர்களுக்கும்புகலிடமான ஸ்ரீராமனே இந்நகரத்தினினிமையைக்கண்டு இங்கே திருவவதரித்துப் பல்லாயிரமாண்டுஅரசுபுரிந்து இனிதுவாழ்ந்தனனாதலால், தேவலோகத்திலும் இந்நகரத்தையொத்த நகரம் வேறொன்றில்லையென்று, கீழ்ச்செய்யுளிற்கூறிய கருத்தையே கவி இங்கு வேறுவகையாகக் கூறினர். இதனால், இவ்வுலகத்திலில்லையென்பது தானேபெறப்படும். அருளால் தருமமும், தருமத்தால் தவமும், தவத்தால் ஞானமும், ஞானத்தால் கடவுளும் கைகூடுதலால், 'தங்குபேரருளும்...ஞானமும்புணர்ந்தோரியாவர்க்கும் புகலிடமான செங்கண்மால்' என்றார். 'அளப்பருங்காலம்' என்றது; சற்றேறக்குறைய பதினோராயிரம் வருடம்; இதில், சீதாபிராட்டியுடன் ஸ்ரீராமன் கூடியிருந்தது, ஆயிரம் வருடமே. ஞானத்திற்கு விரோதம் விளைத்தலின் 'பகைப்புலன்கள்' என்றார். என்றால் - "அனையதேபட்டதென்றால்" என்ற சிந்தாமணியிற்போல ஒருவார்த்தைப்பாடு. பி - ம்:—[1]தங்குமாபொருளும். [2]புலன்களைத்தவிர்க்கும். [3]புரிந்தோர். [4]வீற்றிருந்தமை தெரிந்தால். (கூ)

**எ. அரசெலா மவண வணியெலா மவண வரும்பெறன் மணியெலா மவண, புரசை[1]மால் களிறும் புரவியுந் தேரும் பூதலத் தியாவையு மவண, விரசுவார் முனிவர் விண்ணவ ரியக்கர் விஞ்சையர் முதலினோ [2]ரென்றா, லுரைசெய்வேன் யானே யானபோ ததனுக் [3]குவமைதா னரிதரோ வுளதோ.**

(இ - ள்.) 'அரசு எலாம் - எந்நகரத்தரசர்களும், அவண - அவ்விடத்திலிருக்கின்றனர்; அணி எலாம் - சிறந்த ஆபரணங்கள் யாவும், அவண - அவ்விடத்திலிருக்கின்றன; பெறல் அரு மணி எலாம் - கிடைப்பதற்கு அருமையான இரத்தினங்களெல்லாம், அவண—; புரசை மால் களிறுஉம்-கழுத்திடு கயிற்றையுடைய பெரிய மதயானைகளும், புரவிஉம்-குதிரைகளும், தேர்உம்-இரதங்களும், பூதலத்து யாவைஉம்-இந்நிலவுலகத்திலுள்ள மற்றையெல்லாப் பொருள்களும், அவண—; (அன்றியும்), முனிவர்-இருடியரும், விண்ணவர்-தேவர்களும், இயக்கர் - யட்சர்களும், விஞ்சையர் - வித்தியாதரர்களும், முதலினோர்-முதலியவர்கள், விரசுவார் - (அந்நகரத்தில்) மனங்கலந்து வசிப்பார்கள்', என்றால் - அப்படியானால், யான்ஏ உரைசெய்வேன் ஆன போது- (இப்படிப்பட்டநகரத்தை) வருணித்துக்கூறுபவன் நானேயாயிருக்கையில், (என்சிற்றுணர்வினால்அறிந்துசொல்லக்கூடிய), அதனுக்குஉவமை - அதற்கு உபமானமாயிருப்பதொருநகரம், உளதுஓ - இருக்கின்றதோ? அரிது - அருமையானது; (எ - று.) - அரோ - ஈற்றசை.

எல்லாவுலகத்தும் சுற்றிப் பார்க்கச் சக்தியுள்ளமுனிவர்முதலியோர்இந்நகரத்தையொப்பதொருநகரம் கிடையாமையால் இந்நகரத்தில்தானே தங்குகின்றன ரென்றால், எல்லாவளங்களும் நிரம்பிய இந்நகரத்தைப்போன்ற

வேறொருசிறந்தநகரத்தை, எங்குஞ்சென்று பார்த்தற்கு வலியற்றவனும்ச் சிற்றறிவையுடையவனுகிய நான் கண்டுபிடித்துக் கூறுதல் எளிதிற் செய்யக்கூடிய தொழிலோ? ஒருகாலும் செய்யமுடியாததொருதொழிலாகு மென்றவாறு. உவமை அரிதரோ உளதோ - உவமைஇலதோஉளதோ சொல்வீரென்று, இலதென்னுங்கருத்தால் உலகத்தாரை வினவியதாக உரைத்தலும் ஒன்று. அவண - பலவின்பாற்குறிப்புவினைமுற்று. பி-ம்:—[1]மாகளிறும். [2]எவருமுரைசெய்வாரானார். [3]உவமைதானுளதெனற்கரிதே. (௭)

௮.—இதுமுதல் ஆறு பாடல்கள் - அந்நகரத்து மதிலின் வருணனை.

**நால்வகைச் சதுரம் விதிமுறை நாட்டி நனிதவ வுயர்ந்தன பனிதோய், மால்வரைக் குலத்தி னியாவையு மில்லை யாதலா னுவமைமற் றில்லை, நூல்வரைத் தொடர்ந்து பயத்தொடும் பழகி நுணங்கிய நுவலரு முணர்வே, போல்வகைத் தல்லா லுயர்வினோ டுயர்ந்த தென்னலாம் பொன்மதி னிலையே.**

(இ - ள்.) நால்வகை சதுரம் - நாற்சதுரமாக, விதி முறை - சிற்பசாஸ்திர விதிப்படியே, நாட்டி - ஏற்படுத்தப்பட்டு, நனி தவ உயர்ந்தன - மிகவும் அதிகமாக உயர்ந்துள்ளவை, பனி தோய் மால் வரை குலத்தின் - குளிர்ச்சி மிகுந்த பெரிய மலைக்கூட்டத்துள், யாவையும் - எவையும், இல்லை—; ஆதலால் - ஆகையினால், மற்று உவமை - (அம்மதிலுக்கு அதுவே உவமையாவதன்றி) வேறு உவமையாவதற்கு உரிய பொருள், இல்லை—; (ஆயினும் உவமைசொல்லத் தொடங்குவோமேயானால்),-பொன் மதில் நிலை - பொன்னினாலாகிய (அந்நகரத்து) மதில்களின் நிலைகள்,—நூல் வரை தொடர்ந்து - சாஸ்திரங்களின் அளவு எவ்வளவோ அதுவரையிற் சென்று, பயத்தொடு உம் பழகி - பிரயோசனத்தோடே கூடியதாகி, நுணங்கிய - சூட்சுமமாகி, நுவல் அரு - சொல்லுதற்கு அசாத்தியமான, உணர்வுஏ போல் - பேரறிவைப்போன்று (உயர்ந்து)ள்ள, வகைத்து - தன்மையையுடையது; அல்லால்-அதனைவிட்டால், உயர்வினோடு உயர்ந்தது என்னலாம் - உயரமுள்ள பொருள்களெல்லாவற்றைக்காட்டிலும் உயர்ந்துள்ளதென்று சொல்லலாம்.

அழித்தற்கு அருமை பெருமை வலிமை உயர்வுகளால் மலைகளை மதிலுக்கு உவமை சொல்லவேண்டுமென்றால், மலைகள் சதுரமாக இல்லையாதலாலும் மலைகளினும் உயர்ந்துள்ளமையாலும் பொருந்தாதென்பது முன்னிரண்டடியின் கருத்து. சதுரம் - அகலம் நீளம்ஒத்த நாற்கோணம். திரிகோணத்தை முச்சதுரமென வழங்குவது உண்டாகலின், அதனை யொழித்தற்கு 'நால்வகை' என்ற அடைமொழி கொடுத்தார். வரைக்குலம் என்பதை குலவரை யென்று மாற்றி-அஷ்டகுலபருவத மெனினு மமையும். பயம் என்றது-சொற்பயன் பொருட்பயன்களோடு அறம்பொருளின்பம்வீடடைதலாகிய நூற்பயனையும் காட்டும். மதிலைச்சேரும்போது, நூல் - கயிறு, பயம் - நீர் எனக் கொண்டு, சிற்பிகள் கையிலுள்ள எற்றுநூலின்படி கோணமை

லுயர்ந்து கீழேஆழ்ந்துசென்று அகழிநீரோடும்பழகி நுட்பமாக நோக்கத் தக்கதும் சொல்லக்கூடாத் சிறப்புள்ளது மான மதிலென்னலாம். "கற்ற, நூலளவே யாகுமா நுண்ணறிவு" என்பவாகலின், 'நூல் வரைத் தொடர்ந்து நுணங்கிய வுணர்வு' என்றார். உயர்வு - உயரமுள்ள பொருளுக்கு, ஆகு பெயர். உயர்விஞேடு என்பது உயரமுள்ள பொருள்களனைத்தினுமென்று எல்லைப்பொருளில்வந்ததனுல், உருபுமயக்கம். உயர்விஞேடுஉயர்ந்ததுஎன்ப தற்கு-(வேறுஉவமையில்லாமல்)தன்னுயர்ச்சியோடொப்பவுயர்ந்ததென்றும் உரைகூறுவர். நூல்வரைத்தொடர்ந்து - சிற்பநூலின்வரம்பைக்கடவாம லெனினுமாம். உணர்வென்பது - மிகவும்மேம்பட்ட பரம்பொருளையும் எட் டிப்பிடிக்குந்தன்மையதாதலால், உயர்ச்சிக்கு அதனைஉவமைகூறினர். உயர் விஞேடுயர்ந்தது - உயர்ச்சியென்னும் பண்பின்பொருளையொத்து உயர்ந்த தென்றலும்ஒன்று. உயர்வுநவிற்சியணியும் சிலேடையணியும் கலந்துவந்த கலவையணி. (அ)

கூ. மேவரு [1]முணர்வின் முடிவிலா மையினுல் வேதமு மொக் கும்விண் புகலாற், றேவரு மொக்கு முனிவரு மொக்குந் திண் பொறி யடக்கிய செயலாற், காவலிற் கலையூர் கன்னியை யொக்குஞ் சூலத்தாற் காளியை யொக்கு, மி[2]யாவையு மொக்கும் பெருமையா லெய்தற் கருமையா லீசனை யொக்கும்.

(இ - ள்.) (அந்த மதில்),—மேவரும் உணர்வின் முடிவுஇலாமையினுல்- பொருந்திய அறிவினுல் முடிவுகாணவொண்ணுதபடி யிருத்தலினுல், வேதம்உம் - வேதத்தையும்; ஒக்கும் - ஒத்திருக்கும்; விண் புகலால்-மேலுல கத்தையடைதலால், தேவர்உம் - தேவர்களையும், ஒக்கும்—; திண் பொறி அடக்கிய செயலால் - வலிய பஞ்சேந்திரியங்களையடக்குஞ் செய்கையினுல், [வலிய பல யந்திரங்களைத் தன்னுள் மறைத்துவைத்திருக்குந் தொழிலால்], முனிவர்உம் - இருடிகளையும், ஒக்கும்—; காவலின் - காத்தற்றொழிலால், கலை ஊர் கன்னியை - கலைமானை (வாகனமாகக்கொண்டு) ஏறிநடத்து கின்ற துர்க்காதேவியை, ஒக்கும்—; சூலத்தால் - சூலாயுதமேந்துதலால், காளியை - காளிகாதேவியை, ஒக்கும்—; பெருமையால் - பெருந்தன்மை யால், யாவையும் - (பெருந்தன்மையுடைய) எல்லாப்பொருள்களையும், ஒக் கும்—; எய்தற்கு அருமையால் - (எவராலும் எளிதில்) அடையக்கூடாத தன்மையால், ஈசனை - கடவுளை, ஒக்கும் - ஒத்திருக்கும்; (எ - று.)

"அநந்தாவைவேதா:"என்றபடி வேதம் மிகப்பரந்து நுண்பொருள்களை யுள்ளடக்கிமுடிவுகாணமுடியாதிருத்தல்போல, இம்மதிலும்மிகப்பரந்து நுண் ணியவேலைப்பாடுகளைக்கொண்டு முடிவுகாணமுடியாதிருக்கின்றதென்றும்; தேவர் விண்ணுலகத்தையடைந்திருத்தல்போல இதுவும் உயர்ச்சியால் விண் ணுலகத்தை யடைந்திருக்கின்றதென்றும், முனிவர் ஐம்பொறிகளையடக்கி நிற்பதுபோல இதுவும் பல்பொறிகளை [யந்திரங்களை]த் தன்னுளடக்கிக் கொண்டிருக்கின்றதென்றும்; துர்க்கை நகரதேவதையாய்நின்றுகாத்தல்

போல இதுவும் பிறர்படையெடுத்துவரவொட்டாது காவலாயிருக்கின்ற தென்றும்; காளி சூலத்தைத் தாங்கிநிற்றல்போல இதுவும் இடிதாங்கியாகிய சூலத்தைத் தாங்கிநிற்கின்றதென்றும்; பத்துடையடியவர்க்கன்றிப்பிறர்க்கு ஸ்ரீமந்நாராயணன் அடைதற்கரியனாயிருத்தல்போல இதுவும் நண்பினரான அரசர்க்கன்றி மாற்றரசர்க்கு அடைதற்குஅரியதாயிருக்கின்றதென்றும்; இப்படி இந்நகரத்துமதில் பல்வகைப்பெருமைகளைப்படைத்திருத்தலால் பெருமைபெற்றபொருள்களெல்லாம் இம்மதிலுக்கு உவமையாதற்குஏற்கு மென்றும்கூறியவாறாயிற்று: சிலேடையையங்கமாகக்கொண்டுவந்த உவமையணி. தேவர்க்குவிண்புகுதல் - வானுலகத்தில்வாழ்தல்; மதிலுக்கு விண்புகுதல் - வானத்தளவுமோங்கிநிற்றல். முனிவர்க்குத்திண்பொறியடக்குதல்-பஞ்சேந்திரியங்களை விஷயங்களிற் செல்லவொட்டாது தடுத்தல்; மதிலுக்குப் பொறிகளையடக்குதல்-நூற்றுவரைக்கொல்லிமுதலியன கொண்டிருத்தல். மதிற்குக்கூட்டும்போது, எய்தற்கு - எய்யப்படுவதற்கு எனினுமாம். "உயர்வகலந்திண்மையருமையிந்நான்கி, னமைவரண்" என்றபடி எணிக்கெட்டாத உயர்வும் அகலமும் குத்தக்கூடாத திண்மையும் இயந்திரங்களினாற்சேர்தற்கு அருமையும்அமைந்திருப்பது மதிலுக்குஇலக்கணமாதலால், 'மேவருமுணர்வின்முடிவிலாமையினால்...விண்புகலால்...ஒக்கும்'என்பதனால் உயர்வையும், 'காவலிற்கலையூர்கன்னியையொக்கும்' என்பதனால் திண்மையையும், 'முனிவருமொக்குந் திண்பொறியடக்கிய செயலால்' 'எய்தற்கருமையாலீசனையொக்கும்' என்பவற்றால் அருமையையும்,'யாவையுமொக்கும் பெருமையால்'என்பதனால் அகலத்தையும் குறிப்பித்தாரென்னலாம். மேவஅரு என்று பிரித்தும் உரைக்கலாம். பி -ம் :— [1]உணர்வு. [2]யாவரும். (௬)

௧௰ *பஞ்சியாவ் மதியை [1]யூட்டிய வனைய படருகிர்ப் பங்கயச்
செங்கால், வஞ்சிபோன் மருங்குற் குரும்பைபோற் கொங்கை
[2]வாங்குவேய் வைத்தமென் பணைத்தோ, ளஞ்சொலார் பயிலு
மயோத்திமா நகரி னழகுடைத் தோவென வறிவா, னிஞ்சிவா னோங்
கி யிமையவ ருலகங் காணிய [3]வெழுந்ததொத் துளதே

(இ - ள்.) இஞ்சி - (அந்த நகரத்தின் மிக்குயர்ந்த) மதில்,— பஞ்சி ஊட்டிய வால் மதியை அனைய படர் உகிர் பங்கயம் செம் கால் - செம்பஞ்சுக்குழம்பு ஊட்டப்பட்டனவாகிய வெண்ணிறமுள்ள சந்திரனையொத்த (ஒளி) வீசுகின்ற நகங்களைக்கொண்ட தாமரைமலர்போன்ற பாதங்களையும், வஞ்சி போல் மருங்குல் - நீர்வஞ்சிக்கொடிபோல மிக நுண்ணிய இடையையும், குரும்பை போல் கொங்கை - தெங்கினிளங்காய் போன்ற தனங்களையும், வாங்கு வேய் வைத்த மெல் பணை தோள் - வளைகின்ற இளமூங்கிலையொத்த மென்மையான பருத்த தோள்களையுமுடைய, அம் சொலார் - அழகிய சொற்களையுடைய மகளிர், பயிலும் - நிரம்பியிருக்கின்ற, அயோத்தி மா நகரின் - அயோத்தி யென்னும் பெருமைபெற்ற நகரத்தைக் காட்டிலும், இமையவர் உலகம் - தேவர்கள் வாழ்கின்ற சுவர்க்கலோகம், அழகு உடைத்து ஓ - அழகுஉடையதோ? (அழகுஉடையதன்றே?), என-

என்று, அறிவான் - அறியும்பொருட்டு, வான் ஓங்கி காணிய - ஆகாயத்தி லுயர்ந்துசென்று (அந்தச்சுவர்க்கலோகத்தைக்) காண்பதற்காக, எழுந்தது - எழுந்ததை, ஒத்துஉளது - ஒத்திருக்கின்றது; (எ - று.)

இது வானுறவோங்கிய அந்நகரத்துமதிலைப்பற்றிய தற்குறிப்பேற்றவணி. மதில் வானுறவோங்குதற்குப் பயன், வானுலகத்தைக்காணுத லென்பதாகாமலிருக்கையிலும் அதனைப்பயனாகக்கூறியமை காண்க. 'அஞ்சொலார் பயிலும் அயோத்தி' என்றதனால், அயோத்திநகரத்து மகளிரினும் அமரலோகத்துமகளிர் அழகுஉடையவரோ அல்லரோ' என அறியவேண்டி மதில்ஓங்கிற் றென்க. அழகுடைத்தன்றெனு என்றபாடத்திற்கு - அழகு உடைத்து அன்று என்பவற்றின் ஈற்றில் செய்யுள்விகாரத்தால் தொக்க ஓகாரம் கூட்டிப் பொருள் உரைக்க; அன்றி, அயோத்திமாநகரத்தைவிட இமையவருலகம் அழகுஉடைத்தன்று [உடையதன்று] என்று உலகத்தார் கூறுவது உண்மைதானு என்று அறியும் பொருட்டு என்னலுமாம். ஊட்டிய - பெயர்; பெயரெச்சமாக் கொள்வாருமுளர். பி-ம்:—[1]ஊட்டியதனைய. [2]வயங்குவேயமைத்த. [3]எழுவவொத்துளதே. (௧௦)

**௧௧. கோலிடை யுலக மளத்தலிற் பகைஞர் முடித்தலை கோடலின் மனுவின் [1]னூனெறி நடக்குஞ் செவ்வையி னியார்க்கு நோக்கருங் காவலின் வலியின், வேலொடு வாள்விற் பயிற்றலின் வெய்ய சூழ்ச்சியின் வெலற்கரு வலத்தின், சால்புடை [2]யுயர்விற் சக்கர நடத்துந் தன்மையின் றலைவரொத் துளதே.**

(இ - ள்.) கோல் இடை உலகம் அளத்தலின் - செங்கோலினால் உலகத்தவரை அளவளாவிப் பாதுகாத்தலாலும், [அளவுகோலைக்கொண்டு உலகத்தவரா லளக்கப்படுதலாலும்], பகைஞர் முடி தலை கோடலின் - பகையரசரது கிரீடமணிந்த தலைகளை(ப் போரில் ஆயுதங்களால்) அழித்தலாலும்; [பகைவர்களது முடித்தலைகளை(த் தன்னிடத்துள்ள யந்திரங்களினால்) துணித்தலாலும்], மனுவின் நூல் நெறி நடக்கும் செவ்வையின்-மனுவினாற் செய்யப்பட்ட தருமசாஸ்திரத்தின்வழியே நடக்கின்ற நேர்மைக்குணத்தாலும்; [(சிற்பநூலில் வல்ல) மனிதனது எற்றுநூலின் வழியே அமைந்துள்ள (கோணாமல்) நேர்மையாயிருத்தலினாலும்], யார்க்குஉம் நோக்க அரும் காவலின் - எவர்க்கும் பார்த்தற்கும் அரிய காக்குந்தன்மையையுடைமையாலும், வலியின் - மிக்க பலமுடைமையினாலும், வேலொடு வாள் வில் பயிற்றலின் - வேல் வாள் வில் முதலிய படைக்கலங்களைப் பழக்குதலாலும், வெய்ய சூழ்ச்சியின் - கொடிய தந்திரங்களையுடைமையாலும், வெலற்கு அரு வலத்தின் - (பிறரால்) வெல்லுதற்கு அரிய வெற்றியையுடைமையாலும், சால்பு உடை உயர்வின் - சிறப்புப்பெற்ற உயர்ச்சியினாலும், சக்கரம் நடத்தும் தன்மையின் - ஆஞ்ஞாசக்கரத்தைச் செலுத்துகின்ற தன்மையினாலும், [சக்கரப்பொறி யிடைவிடாமற் சுழலுதற்கு இடங்கொடுக்குந் தன்மையினாலும்], தலைவர் ஒத்துஉளது - அந்நகரத்தின் அரசர்களாகிய சூரிய வமிசத்து அரசர்களை யொத்திருக்கின்றது, (அந்த மதில்); (எ - று.)

சூரியகுலத்துத் தலைவர்க்கும் மதிலுக்குஞ் சிலேடைமூலமாக உவமை கூறப்பட்டதனால், சிலேடையுவமையணி. உலகத்தில் வெளிநாட்டுநகரங்களில் மதிலெடுக்க விரும்பியவர்கள் இம்மதிலினிடம்வந்து அளவையெடுத்துக்கொண்டுபோகிறார்களென்று இம்மதிலின்சிறப்பைவிளக்க, 'கோலிடையுலகமளத்தலின்' என்றார். பகைஞர் - மதிலினுள்ளே வஞ்சனையாக நுழையப்புகுகிற சத்துருக்களும் கள்ளரும். மதிலுக்குச் சூழ்ச்சி - புறத்தோர் வரவுபோக்குக்கள் செய்யாமை யமைந்திருப்பதோடு, அகத்தோர் அவற்றைச் செய்யும்படி நுழைவாயில்முதலியவற்றைக் கொண்டிருத்தல். மனு-ஸ்மிருதி நூல் செய்த மனுவும், மநுஷ்யரும். மனு என்று ஒருவர் சிற்பநூல் செய்துள்ளாரெனக் கூறுவாருமுளர். மதிலும் பொறியாக அமைந்த வேல் வில் வாள்களைத் தொழிற்படுத்து மென்க. 'சால்பு உடை உயர்வு' என்றது - உயர்ச்சிக்கு எல்லை இனி யில்லை யென்னுமாறு உயர்தல். பி - ம். [1]நூலிடை. [2]மரபிற் சக்கரநடாத்தும். (கக)

**கஉ. சினத்தயில் கொலைவாள் [1]சக்கரந் தண்டு சிலைமழுத் தோமர முலக்கை, கனத்திடை [2]யுருமின் வெருவருங் கவண்கலென் றிவை கணிப்பில கொதுகி, னினத்தையு முவணத் திறையையு மியங்குங் காலையு மிதமல நினைவார், மனத்தையு மெறியும் பொறியுள வென்றான் மற்றினி [3]யுணர்த்துவ தெவனோ.**

(இ - ள்.) சினத்து-(பகைவரையழித்தலிற்) கோபத்தையுடைய, அயில்-வேலும், கொலை வாள் - (பகைவரைக்) கொல்லுதலையுடையவாளும், சிலை - வில்லும், மழு - மழுவும், தண்டு - கதையும், சக்கரம் - சக்கரமும், தோமரம் - தோமரமும், உலக்கை - உலக்கையும், கனத்திடை உருமின் வெருவரும் கவண் கல் - மேகத்திலே தோன்றுகின்ற இடிபோல அச்சத்தைக் கொடுக்கின்ற கவண்கல்லும், என்ற - என்று சொல்லப்படுகின்ற, கொதுகின் இனத்தைஉம் உவணத்து இறையைஉம் இயங்கும் காலைஉம் இதம்அல நினைவார் மனத்தைஉம்எறியும் - கொசுகின்கூட்டத்தையும் பட்சிகளுக்குஅரசனாகிய கருடனையும் விரைந்துசெல்லுந்தன்மையுள்ள காற்றையும் நன்மையல்லாத (தீய) வற்றைச் சிந்திப்பவரதுமனத்தையும் துணிக்கவல்ல, கணிப்பு இல பொறிஇவை-அளவிடமுடியாத [மிகப்பலவான] இவ்வகையந்திரங்கள், உள-(அந்தமதிலில்) அமைந்துள்ளன, என்றால்—, இனி உணர்த்துவது-(அம்மதிற்காவலைப்பற்றி) இனி விவரித்துச்சொல்லவேண்டுவது, எவன் - யாது உள்ளது? (எ - று.) - மற்று, ஓ - அசை.

அந்நகரத்துமதில் திண்ணியபொறிகளையடக்கிக் காவலாயிருப்பதை, இதனால் விளக்கினர். அம்மதிலில் அமைந்துள்ள பொறிகள், நுண்ணுருவமுடையபொருள்களையும்துண்டித்துவிடுமென்றற்கு-கொதுகினினத்தையும், மிகஉயர்ந்து செல்வனவற்றையும் துணிக்குமென்றற்கு-கருடனையும், விரைந்துசெல்வனவற்றையும் பரிசமாத்திரமுடையனவாய் அருவமானபொருள்களையுந் துணிக்குமென்றற்கு - இயங்குங்காற்றையும், மிக்க விரைந்துசெல்லுந்தன்மையோடு பரிசமுமில்லாது அணுவளவான அருவப்பொருள்களையும்

துணித்துவிடு மென்றற்கு - மனத்தையும் எறியு மென்று கூறினர். இதமல நினைவார்மனத்தையுமெறியு மென்றற்கு - இங்ஙனம் பல பொறிகளையுடைமையைப்பார்த்துப் பகைவர் மனமழிவ ரென்றும் கருத்துக் காணலாம். ஆயுதத்தின்தொழில் கொல்லுத லாதலால், அக்கொலைக்குக் காரணமான சினத்தை அப்படையின்மேலேற்றி, 'சினத்தயில்' என்றார். கோடாலிக்கும் எரியிரும்புக்கும் 'மழு' என்று பெயர். தண்டு - தண்டாயுதம். தோமரம் - இருப்புலக்கையும் கைவேலும் பேரீட்டியுமாம். கவண்கல் - கயிற்றினெறி கல். இதமலநினைத்தல் - மதிலையழித்தல், மதிலினுள்ளே வஞ்சனையாக நுழைதல் முதலியன. பி - ம்:—[1]சிலை மழுத்தண்டு சக்கரந்தோமரம்வலயம், சிலைமழுத்தண்டு செம்புருக்காக்கெணெய்சிவணி. [2]உருமும். [3]உரைக்குவது.

**௩௩. பூணினும் புகழே யமையுமென் றினைய பொற்பினின் றுயிர்நனி புரக்கு, மியாணரெண் டிசைக்கு மிருளற விமைக்கு மிரவிதன் குலமுத னிருபர், சேனையுங் கடந்து திசையையுங் கடந்து திகிரியுஞ் செந்தனிக் கோலு, மாணையுங் [1]காக்கு மாயினந் நகருக் கணியென வியற்றிய தன்றே.**

(இ - ள்.) பூணின்உம் புகழ்ஏ அமையும் என்று - (பொன் இரத்தினம் முதலியவற்றாலாகிய) ஆபரணங்களைக்காட்டிலும் கீர்த்தியே (நமக்குச்சிறந்த ஆபரணமாகப்) பொருந்துமென்று நினைத்து, இனைய பொற்பில்நின்று உயிர் நனி புரக்கும்-இத்தன்மையனவான சிறந்த நல்லொழுக்கத்தோடுபொருந்தி உலகத்துயிர்களைப் பாதுகாப்பவரான, யாணர் எண் திசைக்குஉம் இருள் அற இமைக்கும் இரவிதன் குலம் முதல் நிருபர் - அழகிய எட்டுத்திக்குக்களினிடத்துமுள்ள இருள் நீங்கும்படி விளங்குகின்ற சூரியபகவானது குலத்தில்தோன்றிய அரசர்களின், திகிரிஉம் செந் தனி கோல்உம் ஆணைஉம் - ஆஜ்ஞாசக்கரமும் ஒப்பில்லாதசெங்கோலும் கட்டளையும் என்ற இவைகளே, சேனைஉம் கடந்து திசையைஉம் கடந்து - மேலுலகத்தையும் இவ்வெட்டுத்திக்குக்களையும் வியாபித்து, காக்கும்-பாதுகாக்கும்; ஆயின்-என்றால், (அந்நகரத்து மதில்),—அ நகருக்கு அணி என இயற்றியது அன்று ஏ-அந்நகரத்துக்கு ஓரலங்காரமாக அமைக்கப்பட்டதேயாகும்; (எ - று.)

பகைவர்களால் யாதோரிடையூறும் உண்டாகாமலிருத்தற்கன்றோ மதில் வேண்டுவது; இந்நகரத்தரசர்களான சூரியகுலத்துமன்னவரது செங்கோல்முதலியனவே பிறரால் இந்நகரத்தார்க்கு எவ்வகைத்துன்பமு மில்லாமற் காப்பனவாக இருக்கையில், இம்மதிலாற் பயன் யாதோ? என்று ஓராசங்கையை யெழுப்பி, பிறநகரத்துக்குப்போல இந்நகரத்துக்கு, மதிள்,காவலுக்காக அமையவில்லை: அழகுக்காகவே அமைந்ததெனக் கூறியவாறு; இதனால், இந்நகரத்துமன்னவரது பேராற்றலும் செங்கோலும் இத்தன்மையவென்பது பெறப்படும். நிலையில்லாத உடம்புக்கே அழகைச்செய்து அழியுந்தன்மையன்வான ஆபரணங்களினும் நிலையுடையஉயிர்க்கு அழகுசெய்வதாய் என்றும் அழியாததான புகழ் மிகச்சிறந்ததெனக்கொண்டு காக்கின்றனர் மன்னவரென்பது, 'பூணினும் புகழேயமையுமென்று...புரக்கும்' என்ப

தன்கருத்து. குல்முதல், முதல்-ஏழனுருபு: "சுரன்முதல்வந்த, வுரன்மாய் மாலே" என்ற இடத்துப்போல. பி-ம். [1]நடாத்துமாயினர் நகர்க்கு, கடக்குமாயினு நகருக்கு. (கரு)

**கச.—இது - கவிக்கூற்று: இனி, அகழியைப்பற்றிச்சொல்வோமெனல்.**

*** அன்னமா மதிலுக் காழிமால் வரையை யலேகடல் சூழ்ந்தன வகழி, பொன்விலே மகளிர் மனமெனக் கீழ்போய்ப் புன்கவி யெனத் தெளி வின்றிக், கன்னிய ரல்குற் றடமென யார்க்கும் [1]படிவருங் காப் பின தாகி, நன்னெறி விலக்கும் பொறியென வெறியுங் [2]கராத்தது நவிலலுற் றதுநாம்.**

(இ - ள்.) அன்ன - அப்படிப்பட்ட, மா மதிலுக்கு-பெரியமதிலே, மால் ஆழி வரையை அலே கடல் சூழ்ந்து அன - பெரியசக்கரவாளகிரியை அலேயுமநீரையுடைய பெரும்புறக்கடல் சூழ்ந்திருத்தலேயொக்கும்படி சூழ்ந்துள்ளதாகி, நாம் நவிலல் உற்றது - நாம் இப்போது சொல்லத்தொடங்கியதான, அகழி-அகழியானது, பொன் விலே மகளிர் மனம் என கீழ் போய் - பொன்னே(த் தமது இன்பத்திற்கு) விலேப்பொருளாகப்பெறுகின்ற வேசையரது உள்ளம்போல மிகக்கீழேபோய், புன் கவி என தெளிவு இன்றி - (நன்ருகக்கற்காதவன் பாடின) இழிவாகிய பாடல்போலத் தெளிவில்லாமல், கன்னியர் அல்குல் தடம் என யார்க்கும் படிவு அரு காப்பினது ஆகி - கலியாணமாகாத குலப்பெண்களது அல்குலினிடம்போல எவர்க்கும் தோய்வதற்கு இயலாத காவலேயுடையதாய், நல் நெறி விலக்கும் பொறி என எறியும் கராத்தது-சன்மார்க்கத்திற் செல்லவொட்டாமல் விலக்கித் துன்மார்க்கத்திற் செலுத்துகின்ற பஞ்சேந்திரியங்கள்போலப் பாய்கின்ற முதலேத்திரளேயுடையது; (எ - று.)

இதுவரையில் மதிலின்சிறப்பைக்கூறிவந்த கவி, இச்செய்யுளால், இனி அம்மதிலேச்சூழ்ந்துள்ள அகழியின்சிறப்பைக் கூற எடுத்துக்கொண்டிருப்பதைத் தெரிவிக்கின்றன ரென்க. மிகவும் ஓங்கிவளேந்துள்ள மதிலுக்கு - சக்கரவாளகிரியும், அம்மதிலே வளேந்துள்ள அகழிக்கு அந்தச்சக்கரவாளகிரியைச் சூழ்ந்துள்ள பெரும்புறக்கடலும் ஏற்றஉவமையாம். "நகரியினேச், சூழுமதிலு மம்மதிலேச் சூழ்ந்த கிடங்கும் புவிசூழ்ந்த,வாழி வரையுமவ்வரை சூழகல் வேலேயையுமொத்துளதால்" என்ருர், பிறரும். ஏழுதீவுகளேயும் சூழ்ந்துள்ள ஏழுகடல்களுக்கும் அப்பாற் கோட்டைமதில்போலச் சக்கரவாளகிரி சூழ்ந்திருக்கின்றதென்பதும், அந்தச் சக்கரவாளகிரியையுஞ் சூழ்ந்திருப்பது பெரும்புறக்கடலென்பதும் புராணக்கொள்கை. கீழ்போதலால் விலேமாதர்மனமும், தெளிவில்லாமையாற் புல்லறிவாளர்கவியும், காவலுடைமையாற் கன்னியரல்குற்றடமும், அகப்பட்ட பொருளேப் பற்றிக்கொண்டு வருத்தும் முதலேயையுடைமையால் ஐம்பொறிகளும் அகழிக்கு உவமையாம். அகழிக்குக் கீழ்போதல்-இவ்வளவினதென்று அறியப்படாமல் மிகவும் ஆழ்ந்திருத்தல்; விலேமகளிர் மனத்திற்குக் கீழ்போதல் - இத்தன்மைத்தென்று அளவிடமுடியாமல் ஆழ்ந்திருத்தல். விலேமாதர் மனத்திற்குக் கீழ்

போதல் - கீழ்மக்களிடத்துச் செல்லுதலென்றும், இழிவான்வழியிலொழுகுதலென்றுங்கொள்ளலுமாம். புன்கவிக்குத்தெளிவின்மை - கருதியபொருளை விளங்கத் தொடுப்பதாகிய அழகைப் பெறாமை; அகழிக்குத் தெளிவின்மை-முதலைமுதலியகொடும்பிராணிகள் திரிதலால் நீர்கலங்கியிருத்தல். அகழப்பட்டது-அகழி: அகழ்தல்-தோண்டுதல். பி-ம்:—[1]கடப்பரும். [2]கராமது.

**கரு.—இதுமுதல் ஆறுகவிகள் - அகழியின்சிறப்பைத் தெரிவிப்பன.**

**ஏகுகின்ற [1]தன்கணங்க ளோடுமெல்லை [2]காண்கிலா**
**நாகமொன்ற கன்கிடங்கை நாமவேலை யாமெனு**
**மேகமொண்டு கொண்டெழுந்து விண்டொடர்ந்த குன்றமென்**
**றாகநொந்து நின்றுதாரை யம்மதிற்கண் வீசுமே.**

(இ - ள்.) ஏகுகின்ற - (வானத்திற்) சஞ்சரிக்கின்றனவான, தன் கணங்களோடும்-தனது கூட்டத்துடனிருக்கின்ற, மேகம்-பிரதானமான மேகம்,—எல்லை காண்கிலா - (இவ்வளவு பரப்புள்ளதென்று) வரையறைசெய்ய முடியாத [மிகப்பரந்த], நாகம் ஒன்று அகல் கிடங்கை - பாதாளலோகம் வரையில் ஆழ்ந்துள்ள விசாலமான அகழியை, நாம வேலை ஆம் என-'(இது காண்பதற்கு) அச்சத்தைத்தருகின்ற கடலாகும்' என்றுகருதி, மொண்டு கொண்டு - (அதில்இறங்கி அந்நீரை) உட்கொண்டு, எழுந்து - (அங்குநின்றும்) மேலெழுந்துவந்து,— (அவ்வகழியாற்சூழப்பட்டுள்ளமதிலை), விண் தொடர்ந்த குன்றம் என்று-ஆகாயத்தையளாவிய [மிகவுயர்ந்த] மலையென்று நினைத்து, ஆகம் நொந்து - உடம்புவருந்தி, (அதன்மேலேறி), நின்று - (கருமுதிர்கின்றவரையில் அம்மதிலிற்) படிந்திருந்து, (பின்பு), தாரை - மழைநீர்த்துளிகளை, அ மதிற்கண் - அந்தமதிலினிடத்தே, வீசும் - பொழியும்.

இச்செய்யுளில், மேகம் அகழியைக் கடலென்றுமயங்கி அதிற்படிந்து நீரைமொண்டுகொண்டு, பின்பு அவ்வகழியை அடுத்தாற்போன்றுள்ள மதிலை மலையென மயங்கி அதின்மீது ஏறிநின்று கருமுதிர்ந்தவுடனே நீர்த்தாரையைப் பொழிவதாகக் கூறினார்; **மயக்கவணி.** இதனால், அவ்வகழியின் அகற்சியும் ஆழமும் பெறப்படுவதோடு, அவ்வகழியை யடுத்துள்ள மதிலின் உயர்ச்சியும் பெறப்படும். மேகங்கள் கடலிற்படிந்து நீரைமொண்டுகொண்டு, மலைமீதுசென்று கருமுதிர்கின்றநிலையில் மழையாகப்பொழியுமென்று கூறுதல், கவிமரபு. நாம் - அச்சப்பொருளைத்தரும்உரிச்சொல்: அ - சாரியை. நாமம்என்றுஎடுத்தால் - பிரசித்தமான என்று பொருளாம். எழுசீராசிரிய விருத்தமாகவும் இந்தப்பாடல்களைப் பிரிக்கலாம். பி - ம்:—[1]தம். [2]காணலா.

**கசு.** **அந்தமா மதிற்புறத் தகத்தெழுந் [1]தலர்ந்தநீள்**
**சந்தநாறு பங்கயத்த கானமான மாதரார்**
**முந்துவாண் முகங்களுக் குடைந்துபோன மொய்ம்பெலாம்**
**வந்துபோர் [2]மலைக்கமா மதில்[3] வளைத்த மானுமே.**

(இ - ள்.) அந்த மா மதில் புறத்து - அந்தப்பெரியமதிலின் வெளிப்பக்கத்திலேயுள்ள, அகத்து - அகழியினிடத்து, எழுந்து - தோன்றி, அலர்ந்த-

மலர்ந்த, நீள் [1]கந்தம் நாறும் - மிக்கமணம் வீசுகின்ற, பங்கயத்த கானம் - தாமரைமலர்மயமானகாடு [தாமரைமலர்த்தொகுதி],— மானம் மாதரார் - பெருமைபெற்ற (அந்நகரத்து)மகளிருடைய, வாள் முகங்களுக்கு - ஒளியையுடைய முகங்களுக்கு, முந்து உடைந்து போன - முன்னுளில் தோற்றுப் போன தாமரைமலர்கள், மொய்ம்பு எலாம் - வலிமையெல்லாம், வந்து - (சேரப்பெற்று) மீண்டுவந்து, போர் மலைக்க - (அம்முகங்களுடனே) போர் செய்தற்கு, மா மதில் வளைத்த (து) - அந்தப்பெரியமதிலை வளைத்திருப்பதை, மானும் - ஒத்திருக்கும்; (எ - று.)

அயோத்திமாநகரின்மதிலைச் சூழ்ந்திருக்கும் அகழியிலே முளைத்துள்ள தாமரையின்மலர்களை நோக்கி, அந்நகரில்வாழ்கின்ற மகளிரது முகத்திற்குமுன்னே நிற்கமாட்டாமல் தோற்றுஓடிப்போன தாமரைமலர்களெல்லாம் ஒருங்குதிரண்டு தமதுமுழுவலிமைகொண்டு அம்மகளிரின் முகங்களோடு பொரக்கருதி அந்நகரத்துமதிலை முற்றுகைசெய்தாற்போல விளங்குமென வருணித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இதனால், அந்நகரத்துமாதரின் அழகு தொனிக்கும். தாமரைமலர் சிற்சிலவாயிருந்தபோது தாம் தோற்றுவிட்டமையால் முழுவலிமையைப்பெறப் பெருந்தொகுதியாகத் திரண்டனவென்றார். போன - பலவின்பாற்பெயர்: பெயரெச்சமாக்கொண்டு, 'மொய்ம்பு' என்பதனோடுஇயைத்து உரைகூறுவதுமுண்டு. பங்கயத்த - குறிப்புப்பெயரெச்சம். பி - ம்:—[1]அலர்ந்துநீள், அலர்ந்தபூ. [2]விளைக்கவான். [3]வளைத்தன்மானுமே, வளைந்தபோன்றவே. (கசு)

கஎ. சூழ்ந்தநாஞ்சில் சூழ்ந்தவாரை சுற்றுமுற்று பாரெலாம்
போழ்ந்தமா கிடங்கிடைக் கிடந்துபொங் கிடங்கர்மா
தாழ்ந்த வங்க வாரியிற் [1]றடுப்பொணு [2]மதத்தினு
லாழ்ந்தயானை [3]மீதெழுந் தழுந்துகின்ற [4]போலுமே.

(இ - ள்.) சூழ்ந்த - (பகைவர் கிட்டவொண்ணுதபடி) ஆலோசித்துச் செய்த, நாஞ்சில் - நாஞ்சிலென்னுமுறுப்புக்களோடு, சூழ்ந்த - (நகரத்தைச்) சுற்றிலுமுள்ள, ஆரை - மதிலின், சுற்றும் - சுற்றுப்பக்கங்களில், முற்று - நிறைந்துள்ள, பார் எலாம் - பூமி முழுவதையும், போழ்ந்த - அகழ்ந்து அமைக்கப்பட்ட, மா கிடங்கிடை - பெரிய அகழியிலே, கிடந்து - உள்ளே தங்கி, பொங்கு-மேலேயெழுகின்ற, இடங்கர் மா - முதலைகளாகிய நீர்வாழுயிர்கள்,—தாழ்ந்த - ஆழமாகவுள்ள, வங்கம் வாரியில் - மரக்கலங்களையுடைய கடலிலே, தடுப்பு ஒணு மதத்தினல் ஆழ்ந்த - தடுக்கவொண்ணுத மதமயக்கத்தினலே யமிழ்ந்த, யானை - யானைகள், மீது எழுந்து அழுந்துகின்ற [அழுந்தி மீது எழுகின்ற] - உள்ளே யமிழ்ந்து மேலேயெழுவனவற்றை, போலும் - ஒத்திருக்கும்; (எ - று.)

கடலிலே முதலைகள் ஆழ்ந்தெழுவதற்கு, யானைகள் அமிழ்ந்து எழுவதை உவமைகூறினர்; வலிமையும், பருமையும் கருமையும் பற்றிய உவமம். நாஞ்சில் - மதிலின்ஒருறுப்பு. முற்றுதல் - வளைதலுமாம். 'திர்யக்' என்பது வடமொழியில் இருத்தல்போல, மா என்பது மிருகங்கட்கேயன்றிப்

பறவைகட்கும் நீர்வாழ்வனமுதலியவற்றிற்கும் வழங்கும் பெயராகும்; 'அசுணமா', 'கலிமா' என்பனவும் காண்க. போழ்ந்து அம்மா இடங்கு என்றும் பிரிக்கலாம். பி-ம்:—[1]தடுக்கொணு. [2]மதத்தின்வீழ்ந்து. [3]மீள்கி லாது. [4]போன்றதே. (கஎ)

கஅ. ஈரும்வாளின் வால்விதிர்த் தெயிற்றிளம் பிறைக்குலம்
பேரமின்னி [1]வாய்விரித் [2]தெதிர்ந்தகட் பிறங்குதீச்
சோரவொன்றை யொன்றுமுன் றொடர்ந்துசீ றிடங்கர்மா
[3]போரில்வந்து சீறுகின்ற போரரக்கர் போலுமே.

(இ - ள்.) ஈரும் வாளின்-(அகப்பட்டவற்றை) அறுக்கின்ற வாளாயுதம் போல, வால் விதிர்த்து - வாலை யசைத்துக் கொண்டு, எயிறு இளம் பிறை குலம் மின்னி பேர வாய் விரித்து-கோரதந்தங்களாகிய இளஞ்சந்திரர்களின் கூட்டம் ஒளிவிட்டுவிளங்க வாயைத் திறந்துகொண்டு, எதிர்ந்த கண் பிறங்கு தீ சோர - (ஒன்றையொன்று) ஒப்பனவான கண்களினின்று (கோபத்தால்) விளங்குகின்ற தீப்பொறிகள் சிந்த, ஒன்றை ஒன்று முன் தொடர்ந்து - ஒன்றன்மீதொன்று முன்னாக எதிரிட்டுப் போய், சீறு - சீறு கின்ற, இடங்கர்மா - முதலைகள்,—போரில் வந்து சீறுகின்ற போர் அரக்கர் போலும் - யுத்தகளத்திலே வந்து (ஒருவரையொருவர்) கோபித்துப்போர் செய்தலையுடைய இராக்கதரை யொத்திருக்கும்; (எ - று.)

முதலைகள் முருட்டுத்தனமாக ஒன்றோடொன்றுபொருதல், அவ்வாறு அரக்கர் போர்புரிவதை யொக்குமென்க: உவமையணி; கொண்டது விடாது முரண்கொண்டு பொருதல், பொதுத்தன்மையாம். பற்கள் பலவா தற்கு ஏற்பப் பிறைக்குலம் உவமையாயிற்று. எயிற்றினுக்குப் பிறை, வளைவுவெண்மை ஒளிகளில் உவமையாம். பி - ம்:—[1]நாநிமிர்த்து. [2]எரிந்த. [3]போருவந்து. (கஅ)

கக. ஆளுமன்னம் வெண்குடைக் குலங்களா வருங்கராக்
கோளெலா முலாவுகின்ற குன்றமன்ன யானையாத்
தாளுலாவு பங்கயத் [1]தரங்கமே துரங்கமா
வாளும்வேலு மீனமாக மன்னர்சேனை மானுமே.

(இ - ள்.) ஆளும் அன்னம் வெண் குடை குலங்கள் ஆ - (அவ்விடத்திற்) பயிலுகின்ற அன்னப்பறவைகள் வெண்கொற்றக்குடைகளின் கூட்டங்களாகவும்,—அரு கரா - (வேறோரிடத்திலே கிடைத்தற்கு) அரிய [மிகப்பெரிய] முதலைகள், கோள் எலாம் உலாவுகின்ற குன்றம் அன்ன யானை ஆ - (சூரியன் முதலிய) கிரகங்கள்யாவும் (தன்னைச்சுற்றிச்) சஞ்சரிக்கப்பெற்ற (மேரு) மலையை யொத்த [வலிய பெரிய] யானைகளாகவும்,— தாள் உலாவு பங்கயம் தரங்கமே துரங்கம் ஆ - நாளத்தோடு அசைகின்ற தாமரைமலர்களையுடைய அலைகள் குதிரைகளாகவும்,—மீனம் - மீன்கள், வாள்உம் வேல்உம் ஆக - வேல் வாள் முதலிய ஆயுதங்களாகவும், மன்னர் சேனை மானும் - அரசரது சேனைகளை யொக்கும் (அவ்வகழி); (எ-று.)

அகழியானது அன்னங்களாகிய வெண்கொற்றக்குடை முதலியவற்றைக்கொண்டிருத்தலால், மன்னர்சேனையை யொக்கு மென்றார்; உருவகவணியை அங்கமாகக்கொண்டுவந்த உவமையணி. வருங் கரா என்று பிரிப்பாருமுளர். அன்னம், தரங்கம், மீனம், சேனை - வடசொற்றிரிபுகள். துரங்கம் - வேகமாகச்செல்வது; பங்கஜம்-சேற்றில்தோன்றுவது; கராம்=க்ராஹம்;(அகப்பட்டபிராணிகளைக்)கொள்ளும் வல்லமையுள்ளதுஎன்றுபொருள்படும் வடசொற்கள். பி - ம்:—[1]தரங்கமும். (௧௯)

௨௦. **விளிம்பு[1]தெற்றி முற்றுவித்து வெள்ளிகட்டி யுள்ளுறப்**
**பளிங்கு [2]பொற்ற லத்தகட் டடுத்துறப் படுத்தலிற்**
**றளிந்தகற் றலத்தொடச் சலத்தினைத் [3]தனித்துறத்**
**தெளிந்துணர்த்து கிற்றுமென்ற றேவரானு [4]மாவதே.**

(இ - ள்.) விளிம்பு - (அவ்வகழியின்) ஓரத்திலே, தெற்றி - திண்ணை, வெள்ளி கட்டி முற்றுவித்து - வெள்ளியினாலேயமைத்து முடித்து, உள்உற - (அந்தத்திண்ணையின்) உள்ளிடம் முழுதும்பொருந்தும்படி, பொன் தகடு தலம் - பொன்தகட்டினாலாகியதலத்திலே, அடுத்து உற - அடுத்துப்பொருந்தும்படி, பளிங்கு - ஸ்படிகக்கற்களை, படுத்தலின் - பதித்திருத்தலினால்,— 'தளிந்த கல் தலத்தொடு - போழ்ந்துபதித்தபளிங்குமயமான நிலத்துடனே, அ சலத்தினை - அவ்வகழியின்நீரை, தனித்து உற தெளிந்து - வேறுபிரித்து (இது பளிங்கு இது அகழிநீர் என்று)நன்குஉணர்ந்து,உணர்த்துகிற்றும் - (காரணங்காட்டி இந்தவேறுபாட்டை அயலார்க்கும்) தெரிவிக்கவல்லமையுடையோம், (நாம்)', என்றல்-என்பது, தேவரால்உம் ஆவதே-(மனிதராலன்றித்) தேவர்களால்தான் செய்யக்கூடியதோ? [ஆகாதென்றபடி]; (எ - று.)

அகழியின்ஓரத்திலே வெள்ளியினால் திண்ணையாயமையுமாறு தட்டையாகச் சுவரெழுப்பி, அந்தத் திண்ணையினிடமெல்லாம் பொற்றகட்டிற் பளிங்குக்கற்களைப் பதித்திருத்தலால், 'இது அகழிநீர் இது பளிங்குத்தலம்' என்று அறியமுடியாமற்போயிற் றென்பதாம். இங்ஙனம் ஒற்றுமைநயத்தால் வேறுபாடு உணராமற்போவது, பொதுவணியாம்; வடநூலார் ஸாமாந்யாலங்காரமென்பர். இவ்வருணனையால், அகழியின்நீர் மிகத்தெளிவாயுள்ளதென்பது தோற்றும். தேவராலும் உணர்த்தமுடியாதென்றமையால், அத்தேவர்களினும் குறைந்த அறிவினரான மனிதரால் உணர்த்த முடியாதென்பது, தானே பெறப்படும்; உம் - உயர்வுசிறப்பு: ஏகாரம்-எதிர்மறை. வெள்ளி கட்டி என்பதற்கு - (ஓரத்திற்கு) வெள்ளியைக்கட்டி என்று உரைப்பாருமுளர். பி-ம்: [1]சுற்று. [2]பொற்றகட்டகத்தடுத்து. [3]கணித்துற. [4]ஆவதோ.(௨௦)

**௨௧.—அகழியைச்சூழ்ந்த சோலையின் வருணனை.**

**அன்ன[1]நீ ளகன்கிடங்கு சூழ்கிடந்த வாழியைத்**
**துன்னிவேறு சூழ்கிடந்த தூங்குவீங் கிருட்பிழம்**
**பென்னலா மிறும்புசூழ் கிடந்தசோலை யெண்ணிலப்**
**பொன்னின்மா [2]மதிட்குடுத்த நீலவாடை போலுமே.**

(இ - ள்.) எண்ணில்-ஆலோசிக்குமிடத்து,—அன்ன நீள் அகல் கிடங்கு சூழ் கிடந்த ஆழியை - அப்படிப்பட்ட மிகப்பரந்து நீண்ட அகழியாகிய

(பூமண்டலத்தைச்) சுற்றிக்கிடந்த கடலை, துன்னி - நெருங்கி, இறும்பு சூழ் கிடந்த-காடுபோன்று சூழ்ந்துகொண்டிருந்த, சோலை - சோலையை,—வேறு சூழ் கிடந்த-(அந்தப் பெரும்புறக்கடலை) அடுத்துத்தனியே சூழ்ந்துகொண்டிருக்கின்ற, அங்கு வீங்கு இருள் பிழம்பு என்னல்ஆம் - அசையாதுமிக்குள்ள பேரிருளின் தொகுதி யென்னலாம்; (அன்றியும் அச்சோலை),அ பொன்னின் மா மதிட்கு உடுத்த நீலம் ஆடைபோலும்-பொன்னினாலாகிய பெரிய அம்மதிலுக்கு உடுத்தின நீலநிறமுள்ள ஆடையையும் ஒக்கும்; (எ - று.)

இந்த ஏழுதீவுகளாகவுள்ள பூமண்டலத்தைச்சுற்றப் பெரும்புறக்கடலென்று வழங்கப்படுகின்ற மகாசமுத்திரமொன்று இருக்கின்றதென்றும், அந்தக்கடலையடுத்துப் பேரிருள் சூழ்ந்துள்ளதென்றும் புராணங்கள்கூறும்; "நேமிவரையதனைக் கருப்போதகமாங் கடல்சூழு, மழிநீரலையாழியையலைக்கு மந்தகாரக்குழாம்" என்றது காண்க. மதில்சூழ்ந்தஅயோத்திமாநகரே ஒருபூமண்டலத்தைப்போற்பரந்திருக்க, அதனைச் சுற்றியிருக்கின்ற அகழி பூமண்டலத்தைச்சுற்றியுள்ள பெரும்புறக்கடலையும், அதனைச்சூழ்ந்த சோலை அந்தப் பெரும்புறக்கடலைச் சுற்றியுள்ள பேரிருளையும் ஒக்குமென்றார்; இது - தன்மைத்தற்குறிப்பேற்றவணி. அன்றியும், அரத்திலிருந்து காண்பார்க்குக் கருநிறமாகி மதிலையடுத்துத் தோன்றுகின்ற சோலை, பொன்மதிலுக்குக் கண்ணெச்சிலை[திருஷ்டி தோஷத்தை]ப் பரிகரிக்கும்பொருட்டு நீலவாடையையுடுத்தியதுபோலுமென்பது, ஈற்றடியின் கருத்து. கறுப்பு உடை யுடுப்பது திருஷ்டிதோஷத்தைப் போக்குவதன்பொருட் டென்க. இவ்வீற்றடியும்-தற்குறிப்பேற்றவணியே. கிடங்குசூழ்கிடந்ததும் இருட்பிழம்பென்னத்தக்கதும் செய்குன்றுகள் சூழஇருக்கப்பெற்றதுமான சோலை-மதிட்கு உடுத்தின நீலவாடைபோலு மென்று உரைத்தலுமாம். உடுத்த-'உடு' என்ற முதனிலையின் பெயரெச்சம்;'உடுத்து'என்ற முதனிலையடியாகப் பிறந்தசெயவெனெச்சமெனக்கொண்டு உரைப்பினுமாம். பி-ம். [1]நீர். [2]நகர்க்கு.

உஉ.—அந்நகரத்துக் கோபுரவாயில்களின் வருணனை.

**எல்லைநின்ற வென்றியானை யென்ன [1]நின்ற முன்னமா**
**லொல்லையும்பர் நாடளந்த தாளின்மீ [2]துயர்ந்தவான்**
**மல்லன்ஞாலம் யாவுநீதி மாறுறு வழக்கினை**
**னல்லவாறு சொல்லும்வேத [3]நான்குமன்ன வாயிலே.**

(இ - ள்.) வாயில் - அந்நகரத்துக் கோபுரத்துவாரங்கள் (நான்கும்),—(நான்குதிக்கிலும் நேராக நிற்றலால்), எல்லை நின்ற வென்றி யானை என்ன நின்ற-(நான்குதிக்குக்களிலும் தமக்கென்று ஏற்பட்ட) இடத்திலே நிலையாக நிற்கின்ற வெற்றியையுடைய நான்குதிக்கஜங்கள்போல நின்றன; (அன்றியும் அவை), - மால் முன்னம் ஒல்லை உம்பர் நாடு அளந்த தாளின் மீது உயர்ந்த - திருமால் முன்னே [திரிவிக்கிரமாவதாரகாலத்திலே] விரைவாக மேலுலகத்தையளவிட்ட திருவடியினும் மேலாகவுயர்ந்தனவாகி,—மல்லல் ஞாலம் யாவும் நீதி மாறு உறு வழக்கினால் - புலவளங்களும்

நிரம்பிய இவ்வுலகத்துள்ள எல்லாப்பிராணிகளும் (தத்தமக்கு உரிய) ஒழுக்க முறைமையினின்று தவறாதபடி நடத்தலால், நல்ல ஆறு சொல்லும் வேதம் நான்கும் அன்ன - நல்லொழுக்கங்களையுபதேசிக்கும் நான்குவேதங்களையும் ஒத்திருந்தன; (எ - று.)

திக்கஜங்கள் தமதுஎல்லையில் தவறாது நிலை[redacted]றலபோல, [redacted] நகரத்துக் கோபுரவாயிலும் கிழக்குமுதலிய நான்குஎல்லையிலும் கோணுமல் நேராக அமைந்துள்ளன வென்க; அவ்வாறு அமைந்துள்ள வாயில்கள் மிகவும் ஓங்கியவையென்பதை விளக்குதற்குத் தொடர்புயர்வுநவிற்சியணி வகையால், 'மாலொல்லையும்பர்நாடளந்ததாளின்மீ துயர்ந்த' என்றார். நிலைத்தன்மையாலும் இந்நகரத்தையாள்கின்ற அரசரின் செங்கோலினுலும், இந்நகரத்துவாயிலிற்புகும்போதே புகுகின்றபிராணிகள் தீயொழுக்கம் நீங்கி நல்லொழுக்கத்திற் செல்லுதலால், நல்லவாறு சொல்லும் வேதத்தை அவ்வாயிலுக்கு உவமையாக்கினர். திக்கஜங்களை உவமைகூறியதனல் எட்டுவாயில்களுள்ளனவோ என்று தோன்றுகின்ற ஐயத்தை 'வேத நான்கு மன்ன'என்ற தொடர் போக்கும்: கிழக்குமுதலிய எட்டுத்திக்கிலும் முறையே ஐராவதம் புண்டரீகம் வாமனம் குமுதம் அஞ்சனம் புட்பதந்தம் சார்வபௌமம் சுப்பிரதீகம் என்று பெயர் பூண்ட யானைகள் நிலையாகநின்று அவ்வத்திக்குக்களைத் தாங்கு மென்பது, நூற்கொள்கை. "தன்மதவாரணம் திசைதொறு நிறுவியதிறல்" என்றவாறு அரசர் தாம் திசைமுழுவதையும் வென்று திக்கஜங்களை யெல்லாம் வசப்படுத்தி அவற்றைத் தமதுவெற்றிக்கு அறிகுறியாகத் தமதுயானையாக எல்லாத்திக்கிலும் நிறுத்துவரெனக் கூறுவதுமுளதாதலால், எல்லைநின்ற வென்றியானை என்பதற்கு - எல்லையில் (தமது யானையாக நிறுத்தப்பட்டு) நிற்கின்ற திக்கஜங்களென்றும், தமது எல்லையில் வெற்றிக்கு அறிகுறியாக நிறுத்தப்பட்டுநின்ற தம்மதயானைகள் என்றும் உரைப்பாருமுளர். மல்லல் - வளம்: ஒல்லை - விரைவு. பி - ம்:— [1]நின்றுமுன்னர், நின்றுமுன்னை. [2]உயர்ந்துபோய். [3]நாலும். (௨௨)

### ௨௩.—அவ்வாயிலிலமைந்துள்ள சித்திரம்.

***தாவில்பொற் றலத்தினற் றவந்தினோர்க டங்குநாட்**
**பூவுயிர்த்த கற்பகப் பொதும்பர்புக் [1]கொதுங்குமா**
**லாவியொத்த [2]வன்புசேவல் கூவவந் தணைந்திடா**
**வோவியப் புறவின்மா டிருக்கவூடு பேடையே.**

(இ - ள்.) ஆவி ஒத்த அன்பு - தன்னுயிரினிடத்துள்ள அன்போடொத்த அன்பையுடைய, சேவல் - ஆண் புறாவானது, கூவ-(தன்புணர்ச்சி விருப்பங் குறிப்பாய்த் தோன்றுமாறு பெண்புறா) அழைக்கவும், வந்து அணைந்திடா - (அதனை) வந்து தழுவாமல், ஓவியம் புறவின் மாடு - (அவ்வாயிலின் புறத்திலே) சித்திரிக்கப்பட்டுள்ள பெண்புறாவின் அருகிலே, இருக்க - (தன்பேடையென்று) மயங்கியிருக்க, ஊடு - (அதுகண்டு வேறு பேடையினிடத்து விருப்பங்கொண்டதென்று தன்சேவலினிடத்துச்)

சிறிது கோபங்கொண்ட, பேடை - பெண்புறுவானது, தா இல் பொன்தல த்தில் - குற்றமில்லாத பொன்மயமான தேவலோகத்திலே, நல்தவத்தினோர் கள் தங்கு-(முற்பிறப்பிலே) நல்லதவஞ்செய்துள்ள புண்ணியவான்கள் வசிக் கின்ற தாள் பூ விரிந்த கற்பகம் பொதும்பர் - காம்பையுடைய மலர்களைப் பூக்கின்ற கற்பகச்சோலையில், புக்கு ஒதுங்கும் - போய்மறையும்; (எ - று.)

கோபுரவாயிலில் வசிப்பதான ஆண்புறு, அருகே சித்திரிக்கப்பட்டுள்ள பெண்புறுவைக்கண்டு அதனைத் தன்பெட்டைப்புறுஎன்று மயங்கியதனால் தன்பெட்டைப்புறுத் தன்னைக் கூவியழைக்கவும் அந்தக்குரல் தன்செவியிற் படாமல் மிக்கவிருப்பத்தோடு அந்தச்சித்திரப்புறுவினிடம் போய்விட, அதுகண்ட பெட்டைப்புறு தன்சேவல் வேறொருபெண்புறுவை விரும்பிய தென்று ஊடல்கொண்டு கற்பகச்சோலையில் ஒதுங்கு மென்றவாறு; மயக்க வணி. இந்தவருணனையால், கோபுரவாயிலிலமைந்துள்ள சித்திரங்கள் தத் ரூபமாகவே இருக்கின்றன வென்பதும், கோபுரவாயில்கள் மிகவும் ஓங்கி யுள்ளனவென்பதும், தொனிக்கும். தாள்-அடியுமாம். கற்பகப்பொதும்பர்-சந் தானம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம், அரிசந்தனம் என்ற ஐந்தருக்களின் செறிவு. கற்பகம் = கல்பகம்: நினைத்தவற்றைத் தருவது. அங்குப்போய்த்தங் குதல், நல்வினையுடையோர்க்கேயன்றி மற்றையோர்க்கு இயலாதென்பார் 'தவத்தினோர்கள் தங்குதாள் கற்பகம்' எனப்பட்டது. பி-ம்:—[1]ஒதுங்கலால். [2]சேவல்கூவவருகு. (உ௩)

உ௪—உ௬.—இதுமுதல் மூன்றுகவிகள்-குளகம்; நகரகோபுர வருணனையைத் தெரிவிக்கும்.

உ௪. [1]கல்லடுத் தடுக்கிவாய் பளிங்கரிந்து கட்டி [2]மீ
தெல்லிடப் பசும்பொன்வைத் திலங்குபன் மணிக்குலம்
வில்லிடக் குயிற்றிவாள் விரிக்கும்வெள்ளி மாமரம்
புல்லிடக் கிடத்திவச் சிரத்தகால் பொருத்தியே.

உ௫. மரகதத் திலங்குபோதி கைத்தலத்து வச்சிரம்
புரை[1]தபுத் தடுக்கிமீது பொன்குயிற்றி [2]மின்குலா
நிரைமணிக் குலத்தினுளி நீள்வகுத்த வோளிமேல்
விரவுகைத் தலத்தினுய்த்த மேதகத்தின் [3]மீதரோ.

உ௬. ஏழ்பொழிற்கு மேழ்நிலத் தலஞ்சமைத்த தென்னநூ
லூழுறக் [1]குறித்தமைத்த வும்பர்செம்பொன் வேய்ந்துமீச்
சூழ்சுடர்ச் சிரத்துநன் மணித்தசும்பு தோன்றலால்
[2]வாழ்நிலக் குலக்கொழுந்தை மௌலிசூட்டி யன்னவே.

(இ-ள்.) (உ௪) கல் அடித்து அடுக்கி-இடையிலேகற்களையடித்து(ச்செவ் வைசெய்து) ஒன்றன்மேலொன்றாகப் பொருத்தி [சுவரெழுப்பி], வாய் பளிங்கு அரிந்து கட்டி - (அதன்) முற்புறத்திலே பளிங்குக்கற்களை யறுத்து அவற்றாற்கட்டி, மீது - மேலே, எல் இட பசும் பொன் வைத்து - ஒளிவீசும்

படி பசும்பொற்றகட்டைப் பதித்து, இலங்கு பல் மணி குலம் வில் இட குயிற்றி - விளங்குகின்ற பல்வகை யிரத்தினங்களின் கூட்டத்தை ஒளி வீசும்படி (அப்பொற்றகட்டிலே)யிழைத்து, வாள் விரிக்கும் - ஒளிவீசுகின்ற, வெள்ளி மா மரம் - வெள்ளியினாலாகிய பெரிய கைம்மரங்களை, புல்லிட இடத்தி - மேலேபொருந்தும்படி யிருக்கவைத்து, (தளப்படுத்தி), வச்சிரத்த கால் பொருத்தி - வச்சிரரத்தினமயமான தூண்களை அதன்மேலே நாட்டி, (உக) (அந்தத்தூணங்களின் மேலிடத்திலே), மரகதத்து இலங்கு போதிகை தலத்து-பச்சையிரத்தினங்களினாற் செய்யப்பட்டு விளங்குகின்ற போதிகைக் கட்டைகளில், வச்சிரம் புரைதபுத்து அடுக்கி-வைரக்கற்களைக்குற்றம்நீக்கிஒன் றன்மேலொன்றுவைத்து, மீது பொன் குயிற்றி-மேலே பொற்றகட்டைவை த்து, மேல்-(அவற்றின்) மேலே, மின் குலாம் நிரை மணி குலத்தின் வகுத்த நீள் ஆளி ஒளிமேல்-மின்னல்போல விளங்குகின்ற ஒழுங்காகிய இரத்தினங்க ளின் கூட்டத்தாலியன்ற நீண்ட சிங்கவடிவத்தின் வரிசைமேல், விரவு கைத்தலத்தின் உய்த்த மேதகத்தின் மீது - (கோணலில்லாமல்) நேரொழுங் காகப்பொருந்திய கைம்மரமாக வைக்கப்பட்ட கோமேதகத்தின்மேலே, (உ௩) ஏழ் பொழிற்குஉம் - மேலேழுலகத்தவர்யாவரும் (தனித்தனி) தங்கு தற்கு, ஏழ் நிலம் தலம் - ஏழு விசாலமானஇடங்களை, சமைத்தது என்ன - ஏற்படுத்தியதுபோல [ஏழுநிலைகள் அமைய], நூல் ஊழ் உற குறித்து அமை த்த - சிற்பசாஸ்திரங்களின் முறைமைக்குப்பொருந்த ஆலோசித்துக் கட்டிய கோபுரங்கள்,— உம்பர் செம்பொன் வேய்ந்து - மேலே சிவந்த பொன்னின் தகட்டால் முழுவதும் மூடப்பட்டு, மீ சூழ் சுடர் சிரத்து - மேலுலகத் திலே சென்று சூழ்கின்ற சிகரத்திலே, நல் மணி தசும்பு தோன்றலால் - சிறந்த மாணிக்கத்தாலாகிய கலசம் விளங்கப்பெறுதலால், வாழ் நிலம் குலம் கொழுந்தை மௌலி சூட்டி அன்ன - வாழ்கின்றபூமியாகிய இளம்பெண்ணை முடி சூட்டி யலங்கரித்தாற்போன்றன; (எ - று.)

குளகமாகியுள்ளமூன்று செய்யுள்களில், முதற்செய்யுள்-அடியிலிருந்து சுவரெழுப்பி அச்சுவரின்மேல் வெள்ளிக் கைகள்பொருத்தித் தளப்படுத்தி, அதன்மேல் முதல்நிலையமைப்பதற்காக வச்சிரத்தூண்கள் நிறுத்தியதையும், இரண்டாவதுசெய்யுள்-அங்ஙனம் நிறுத்திய தூண்களில் மரகதத்தாற் செய்த போதிகைகள் அமைத்து, ஒருபுறத்து வச்சிரக்கற்களை வரிசையாகவைத்துப் பொன்பதித்தும் மற்றையிடங்களில் மற்றையரதனங்களைப் பதித்துஞ் செய்த சிங்கவடிவங்களை அந்தப்போதிகையின்மேல் அலங்காரமாக வைத்து அதன்மேல் முதல்நிலை முற்றுப்பெறுவதற்காகக் கோமேதகக்கைகளையமை த்து மூடித் தளப்படுத்தி இங்ஙனம் முதல்நிலை முற்றுப்பெற்றதையும், மூன் றாஞ்செய்யுள் - அங்ஙனமே எழுநிலையமைந்து முற்றிய கோபுரங்கள் கலசம் நாட்டப்பட்டு விளங்குவதையுங் கூறுமென்று கூர்ந்து நோக்குக

(உ௪):—வாய் பளிங்கு அரிந்துகட்டி மீப்பொன்வைத்து மணிக்குலம் குயிற்றி வாள்விரிக்கும் வெள்ளிமரம் என்க. இவை ஜனங்கள்புகுங் கோபுர வாசலுக்குமேலே முதல்நிலையமைவதற்காகத் தளமிடுவதற்குப் பரப்பிய கை

களைக் காட்டுமென்க. வச்சிரக்கால் என்பது - அங்ஙனம் கைபரப்பித் தளமாகச்செய்த பிறகு அத்தளத்தின்மேல் நாட்டிய வயிரத்தூணங்களை. பி-ம்:- [1]கல்விடித்து. [2]மீ, யெல்லிடை.

(உரு) அங்ஙனம்நாட்டிய வயிரக்கம்பங்களின்மேற் புறத்திலே முதல் நிலையைமூடுமாறு தளம் பரப்புவதன் பொருட்டு மரகதப்போதி கையோடு ஒட்ட மேல்தளத்தைத் தாங்குவனபோலச் சிங்கவடிவுகள் அமையவைத்ததை முதல்மூன்றடிகள் காட்டும். அச்சிங்கவரிசைகளின்மேல் கோமேதகச்சட்டங்களைப் பரப்பியதை ஈற்றடி விளக்கும். அரோ-ஈற்றசை. மேதகம் - கோமேதகம் என்றதன் முதற்குறை. ஓளி - ஒளி யென்பதன் நீட்டலாகக்கொண்டு, ஒளிவிரவு - ஒளிபொருந்திய எனினுமாம். மணிக்குலத்தினொளி நீள் வகுத்த வோளிமேல்-இரத்தினங்களாற் சிங்கக்கூட்டங்களை நீள வகுத்த வரிசையின்மேல்: அதாவது - சிங்க வடிவுகள் செய்துவைத்த கால்களின்மேல் என்று கூறுதலு முண்டு. பி-ம்:—[1]தவிர்த்து. [2]மீன். [3]மேலரோ.

(உசு) முதலடி - அந்நிலை மிகவும் விசாலமானவை யென்பதைக் காட்டும். கீழ் இந்நகரத்தை 'நிலமகள்முகமோ' என்றதற்கு ஏற்ப இங்குக் கோபுரத்தைக் கிரீடமாகக்கூறினர். நிலைத்தலம் - தங்குமிடம். அமைத்த - பெயர்: இவ்வினையாலணையும்பெயர் - ஏழ்நிலைகளைக் காட்டு மென்று உரைப்பாருமுளர். நான்குவாயில்கட்குமாக நான்குகோபுரங்களாதலாற் பன்மையாற் கூறினர் பி - ம்.—[1]குவித்து. [2]வாழ்நகர். (உசு)

**உஎ.—இதுமுதல் ஒன்பதுகவிகள் - அந்நகரத்து மாளிகைகளின் வருணனை.**

**திங்களுங் கரிதென வெண்மை தீற்றிய**
**சங்கவெண் சுதையுடைத் தவள மாளிகை**
**வெங்கடுங் கால்பொர மேக்கு நோக்கிய**
**பொங்கிரும் பாற்கடற் றரங்கம் போலுமே.**

(இ - ள்.) திங்கள்உம் கரிது என வெண்மை தீற்றிய - (வெண்ணிறமுடைய) சந்திரமண்டலமும் (இதன்முன்னே) கருநிறமுடையதாகத்தோன்றுமென்று சொல்லுமாறு வெண்மைநிறம் பொருந்தும்படி பூசிய, வெண் சங்கம் சுதை உடை - வெண்சங்குகளைச்சுட்டுச்செய்த சுண்ணாம்புச்சாந்தையுடைய, தவளம் மாளிகை - வெண்ணிறமுள்ள வீடுகள்,— வெம் கடு கால் பொர - பயங்கரமாகிய பெருங்காற்று வீசுதலால், மேக்கு நோக்கிய - மேல் நோக்கியெழுந்த, பொங்கு இரு பாற்கடல் தரங்கம் - மேலே பொங்கியெழுகின்ற பெரிய பாற்கடலி னலைகளை, போலும்—; (எ - று.)

ஓங்கியுயர்ந்த வெண்ணிறமாளிகைகள், கடுங்காற்றுவீசுதலால் மேலெழுந்த பாற்கடலலைகளை யொக்கு மென்றார்; **தன்மைத்தற்குறிப்பேற்றவணி:** நிறமும் உயர்ச்சியும் பற்றி வந்தது. சங்கம், ஸுதா, தவளம், தரங்கம் என்ற வடசொற்கள் திரிந்துவந்தன. திங்களும், உம்மை - உயர்வு சிறப்பு. (உஎ)

உஅ. **புள்ளியம் புறவிறை பொருந்து மாளிகை**
**தள்ளருந் தமனியத் தகடு வேய்ந்தன**

வெள்ளருங் கதிரவ னிளவெ யிற்குழாம்
வெள்ளியங் [1]கிரிமிசை விரிந்த போலுமே.

(இ - ள்.) தள்ள அரு தமனியம் தகடு வேய்ந்தன-நீக்குவதற்கு அருமையான பொன்றகடுகள் மேலேவேயப்பட்டனவாகிய, புள்ளி அம் புறவு இறை பொருந்தும் மாளிகை - உடற்புள்ளிகளையுடைய அழகிய மாடப்புறாத் தங்கப்பெற்ற மாளிகைகள்,— வெள்ளி கிரி மிசை - வெள்ளிமலைமேலே, எள் அரும் கதிரவன் இள வெயில் குழாம் விரிந்த - இகழ்ச்சியில்லாத சூரிய பகவானது இளையகிரணங்களின் தொகுதிகள் பரவிவிழுந்திருத்தலை, போலும் -; (எ - று.)

சங்கவெண்சுதைதீற்றிய தவளமாளிகைமீது பொற்றகடுவேய்ந்திருத்தல், வெள்ளிக்கிரியின்மீது கதிரவன்இளவெயிற்குழாம் விழுவதைப் போலுமென்றார்: இதுவும் - தற்குறிப்பேற்றவணியே. அம் - சாரியை. 'புள்ளியம் புறவிறைபொருந்தும்' என்பது, மாளிகைக்கு இயற்கையடைமொழி: ஒப்புமையின்பொருட்டு வந்ததன்று. இறை - இறுத்தல், தங்குதல். புறவிறை - புறாவரசுமாம். தமனியம்=தபநீயம்: (நெருப்பினால்) தபிக்கப்பட்டு விளங்குவதென்று காரணப்பொருள்படும் வடசொல். விரிந்த=விரிந்தது: தொகுத்தல். பி - ம். [1]கிரியிடை. (உஅ)

உகூ. வயிரநற் கான்மிசை மரக தத்துலாஞ்
செயிரறப் போதிகைக் கிடத்திச் சித்திர
முயிர்பெறக் [1]குயிற்றிய வும்பர் நாட்டவ
[2]ரயிருற விமைப்பன வளவில் கோடியே.

(இ - ள்.) வயிரம் நல் கால் மிசை - வச்சிரத்தினாலாகிய தூண்களின் மேலே, மரகதம் துலாம்-மரகதரத்தினத்தாலாகிய உத்தரத்தை, செயிர் அற போதிகை கிடத்தி - குற்றம்நீங்க [நன்குபதியுமாறு] போதிகைக்கட்டையின் மேலே பொருத்தி, சித்திரம் உயிர் பெற குயிற்றிய-அந்தத்துலாத்தில் உயிர் பெற்றிருப்பனபோலத் தோன்றும்படி சித்திரங்கள் இயற்றியனவும், உம்பர் நாட்டவர் அயிர் உற இமைப்பன - தேவலோகத்தவர்களும் (தமதுவிமானமோ?) என்று ஐயங்கொள்ளும்படி விளங்குவனவுமாகிய மாளிகைகள், அளவு இல் கோடி-அளவிறந்த பலகோடிக்கணக்கினவாம்; (எ - று.)

உயிர்பெற்றிருப்பதுபோலத்தோன்றுமாறு அமைவனவே சிறந்தசித்திரங்களாமாதலால், 'சித்திரமுயிர்பெறக்குயிற்றிய' என்றார். இலக்கணம் வழுவாது வரையப்படின், சித்திரங்கள் உயிர்பெறு மென்றகொள்கைபற்றி இவ்வாறு கூறிய தெனினுமாம். துலாம்-தூலமென்று வழங்குகின்றது. பி-ம்:— [1]குறித்தன. [2]அயர்வுற. (உகூ)

ருo. சந்திர [1]காந்தத்தின் றலத்த சந்தனப்
பந்திசெய் தூணின்மேற் பவளப் போதிகைச்
செந்தனி மணித்துலாஞ் செறிந்த திண்சுவ
ரிந்திர நீலத்த வெண்ணில் கோடியே.

(இ - ள்.) சந்திரகாந்தத்தின் தலத்த - சந்திரகாந்தக்கற்கள்பதித்திய தரையையுடையனவும், சந்தனம் பந்தி செய் தூணின்மேல் - சந்தனமரங்களி னால் வரிசையாகச்செய்து நிறுத்தின தூண்களின்மேலே, பவளம் போதிகை- பவழத்தாலாகியபோதிகைக்கட்டையில், செம் தனி மணி துலாம் - செந் நிறமுள்ள ஒப்பற்ற மாணிக்கத்தாலாகிய உத்தரம், செறிந்த - பொருந்தின வையும், திண் சுவர் இந்திரநீலத்த - வலியசுவர்கள் இந்திரநீலவிரத்தினத்தா லியன்றனவுமாகிய மாளிகைகள், எண் இல் கோடி-பலகோடியாம்; (எ-று.)

சந்திரகாந்தம் - சந்திரனைக்கண்டவளவில் நீரைக் கக்குவதாகியதொரு கல் என்பர். பந்தி=பங்க்தி: பவளம்=ப்ரவாளம்: வடசொற்சிதைவுகள். தலத்த, செறிந்த, நீலத்த - பெயர்கள். பி - ம்:— [1]காந்தத்திற்றளம் வேய் ந்தன. (௩௦)

௩க பாடகக் காலடி பதுமத் தொப்பன
சேடரைத் தழீஇயன செய்ய வாயின
நாடகத் தொழிலன நடுவு துய்யன
வாடகத் தோற்றத்த மகளிர் போன்றன.

(இ - ள்) பாடு அகம் கால் அடி - வேலைப்பாடு தம்மிடத்துஅமைந்த தூண்களின்அடிப்பகுதிகள், பதுமத்து ஒப்பன - தாமரை வடிவாக அமைந் தனவும், சேடரை தழீஇயன - (அஸ்திவாரத்தின் ஆழத்தால்) நாகலோகத் தாரைச்சேர்ந்துள்ளனவும், செய்யஆயின - (வேலைத்திறத்தால்) செப்பமுள் ளனவும், நாடு அகம் தொழிலன - (யாவரும்) விரும்பிக்காணுமாறுள்ள உள் வேலையையுடையனவும், நடுவு துய்யன - நடுவிடமெல்லாம் சுத்தமான வெளி யாயுள்ளனவும், ஆடகம் தோற்றத்த - பொன்னினாலாகிய வெளியமைப்பை யுடையனவுமான மாளிகைகள்,—மகளிர் போன்றன - விலைமகளிரை யொத்தன; (எ - று.)

விலை மகளிர்கள்—பாடகமென்னும் ஆபரணத்தையணிந்த காலென் னும் அடித்தாமரையைப் பெற்றிருத்தலும், சேடரை [இளமையை யுடைய புருடர்களைத்] தழுவுதலும், செந்நிறவாயுடனிருத்தலும், நாடக மாடுந்தொழிலிற் பயின்றிருத்தலும், தம்முடைய இடை சிறுத்திருத்தலாற் பஞ்சின்றொடர்நுனியை யொத்திருத்தலும், பொன்போல் ஒளிர்கின்ற மேனியையுடையவராதலுங் காண்க. விலைமகளிர்க்கும் அந்நகரத்துமாடங் கட்குஞ் சிலேடையமையக் கூறியிருத்தலால், இச்செய்யுள் - சிலேடை யுவமையணி. ஆடகத்தோற்றத்த அளவிலாதன என்றும் பாடமுண்டு; இந்தப்பாடத்தில், அடைமொழிகளின் ஒற்றுமையால், ஒருவிஷயத்தை வருணிக்கையில் அப்ரஸ்துதமாகிய மற்றொரு பொருள் தொனிப்பதாகிய சுருங்கச்சொல்லலணி யென்னவேண்டும்: 'ஆடகத்தோற்றத்த மகளி ரல்லன'என்ற பாடத்திற்கு - இப்படியிருப்பன மகளிரோவென்றால் அவரல்லன என்றுகூறி, இப்படிப் பலமாளிகைகள் உள்ளனவென்க. சேடர்- விடரெனினுமாம். ஆடகம் - ஹாடகம்: இது, நால்வகைப்பொன்னினுள் ஒன்று. மாளிகையைக் கூறுமிடத்து—'பாடுஅகம் கால் - பக்கங்களிலும்

அகத்திலும் நாட்டப்பட்ட ஆண், பதுமத்து ஒப்பன - பதுமத்தின் வடிவையொப்பன; சேடரை தழீஇயன - பெரியோரைத் தம்மிடத்துப் பொருந்தியன; செய்யவாயின - நேர்மையான வாயிலினை யுடையன; நாடு அகம் தொழிலன-(மனத்தினாற்) கருதிச்செய்யப்படுஞ் சித்திரத்தொழிலைத் தம்மிடத்தே கொண்டன' என்றும் உரைக்கலாம். (ருக)

ருஉ. புக்கவர் [1]கண்ணிணை பொருந்து றுதொளி
[2]தொக்குடன் றயங்கிவிண் ணவரிற் றோன்றலாற்
றிக்குற நினைப்பினிற் செல்லுந் தெய்வவீ
டொக்கநின் றிமைப்பன வும்பர் நாட்டினும்.

(இ - ள்.) புக்கவர் - (அம்மாளிகையைப்பார்த்தற்கு) உட் புகுந்தவர், கண் இணை பொருந்தஉறுது - (மிக்கவேலைப்பாடு அமைந்திருத்தல்பற்றிப் பெருவியப்போடு அவற்றைக் கவனித்துப் பார்த்தலால்) இரண்டு கண்களும் இமைபொருந்தாமல், ஒளி தொக்குடன் தயங்கி - (அம்மாளிகைகளினுடைய) ஒளி (தம்) உடம்போடு பொருந்தப்பெற்று, விண்ணவரின் தோன்றலால் - தேவர்கள்போல விளங்குதலால், (அம்மாளிகைகள்),—நினைப்பினில்- நினைத்தமாத்திரத்தில், திக்கு உற - (பத்துத்) திக்குக்களிலும் பொருந்த, செல்லும் - செல்லுதற்கு உரிய, தெய்வம் வீடு ஒக்க நின்று - தெய்வத்தன்மையையுடைய விமானங்களோடு ஒப்ப நின்று, உம்பர் நாட்டின்உம் இமைப்பண - (உயர்ச்சியாலும் ஒளிமிகுதியாலும்) தேவலோகத்திலுஞ் சென்று விளங்குவன; (எ - று.)

இந்நகரத்து மாளிகையினுள்ளே புகுந்தவர்கள் மாளிகைகளின் வேலைப்பாட்டைக் காண்கையிலுள்ள பேராதரத்தால் இமையாக்கண்ணராகி அவற்றினொளி தம்மீது பாயத் தேஜோமயமான திவ்வியசரீரத்தைப் பெற்றுத் தேவர்கள்போல விளங்குதலாலும் ஓங்கியிருத்தலாலும்அம்மாளிகைகள் தேவவிமானங்களை யொத்தன. தொக்கு = த்வக்: தோல், உடம்பு. மூன்றாமடிக்கு-எத்திசையிலுள்ள உயிர்களும், உற நினைப்பினில் - (நன்மை) பொருந்தத் தருமசிந்தனையைக் கொள்ளுதலாலும், செல்லும்-(தாம்) பெறுகின்ற, தெய்வவீடு - தேவர்களின் வாழிடத்தை என்று உரை கூறுதலும் ஒன்று.
பி - ம்:—[1] கண்ணிமை. [2]தொக்குடறயங்க. (ருஉ)

ருரு. அணியிழை மகளிரு மலங்கல் வீரருந்
தணிவன வறநெறி தணிவி லாதன
மணியினும் பொன்னினும் வனைந்த வல்லது
பணி[1]பிறி தியன்றில பகலை வென்றன.

(இ - ள்.) அணி இழை மகளிர்உம் - அழகிய ஆபரணங்களையணிந்த மாதர்களும், அலங்கல் வீரர்உம் - மாலையைத்தரித்த வீரத்தன்மையுள்ள வீரர்களும், தணிவன-ஒருவரோடு (ஒருவர் கூடித் தமது) விரகதாபம் ஆறப்பெற்றனவும், அறம் நெறி தணிவு இலாதன - தருமமார்க்கத்தினின்றுந் தவறாது (நல்லொழுக்கத்தோடு) வாழப்பெற்றனவுமாகிய மாளிகைகள்

யாவும்,— மணியின்உம் பொன்னின்உம் வினைந்த அல்லது - இரத்தினங்களினாலும் பொன்னினாலும் செய்யப்பட்டனவேயன்றி, பிறிது பணி இயன்றில - (இவற்றினும்)வேறாகிய (மண்முதலிய) எந்தப் பொருளினாலும் வேலை செய்யப்பட்டனவல்ல; (ஆகையால், அம்மாளிகைகள்),— பகலை வென்றன- சூரியனையும் (தமது ஒளியால்) வென்று விளங்குவன; (எ - று.)

பொன்மணிகளால் இயன்றன வாதலால், அந்நகரத்துமாளிகைகள் சூரியனைவிட மிக்குவிளங்குகின்றன வென்க. தணிதல் - எவ்வகைத் துயருமின்றிச் சமுசாரசுகங்களெல்லாம் பெற்று வாழ்த லென்னலுமாம். இழை - இரத்தினங்களிழைத்துச் செய்யப்படுவது என ஆபரணத்துக்குக் காரணக்குறி. அலங்கல் - தொங்கியசைவ தென்பதுபற்றி வந்த பெயர். தணிதல் - தங்குதலுமாம். தணிவன: தணிவிலாதன ,- மூன்றோடை. பி-ம்:—[1]பிறிதியன்றன பாங்குமில்லையே. (௩௩)

௩௪. வானுற நிமிர்ந்தன வரம்பில் [1]செல்வத்த
தானுயர் [2]புகழன தயங்கு சோதிய
வூனமி லறநெறி யுற்ற [3]வெண்ணிலாக்
கோனிகர் [4]குடிகடங் கொள்கை சான்றன.

(இ - ள்.) வான் உற நிமிர்ந்தன - ஆகாயத்தையளாவ உயர்ந்தனவும், வரம்பு இல் செல்லத்த - அளவில்லாத செல்வமுடையனவும், உயர் புகழன- மிக்கபிரசித்திபெற்றனவும், தயங்கு சோதிய - விளங்குகின்ற ஒளியுடையன வுமாகியமாளிகைகள்,—ஊனம் இல் அறம் நெறி உற்ற - குற்றமற்ற தரும மார்க்கத்திற் செல்வனவாய், எண் இலா - வரம்பில்லாம லிருக்கின்ற, கோன் நிகர் குடிகள் தம் - அரசனைப்போலப் பெருஞ்சிறப்புடன் வாழ்கின்ற அந்நகரத்து ஜனங்களை, கொள்கை - தன்மை, சான்றன-மிகுந் திருக்கப்பெற்றன; (எ - று.)

அந்நகரத்துச்சனங்களும் மேலானஒழுக்கநெறியிற்செல்வதால்மிகமேம் பட்டு,செல்வத்தோடுபெரும்புகழும்படைத்துப்பேரொளியுடன்விளங்குவரென்க.எண்ணிலாகோனிகர்குடிகடங் கொள்ளை சான்றன என்றபாடத்திற்கு- நிமிர்ந்தனவும், செல்வத்தனவும், புகழனவும், சோதியவும், அறநெறியுள்ளனவும், குடிகள்தம் கொள்ளை [மிகுதி] நிறைந்தனவுமாகியமாளிகைகள், எண்ணிலர் - அளவிறந்தனவாம் என்க. "வீறுசான்மன்னர் விழையுங் குடியுள" என்பவாதலால், 'கோனிகர் குடிகள்' என்றார். பி-ம்:—[1]செல்வத்தோர், [2]புகழனத். [3]எண்ணில. [4]குடிபல. (௩௪)

௩௫. அருவியிற் றாழ்ந்துமுத் தலங்கு தாமத்த
விரிமுகிற் குலமெனக் கொடிவி ராயின
பருமணிக் குவையன பசும்பொற் சோடிய
[1]பொருமயிற் கணத்தன மலையும் போன்றன.

(இ - ள்.) அருவியின் தாழ்ந்து அலங்கு முத்து தாமத்த-நீரருவிபோல (வெண்மையாகத்) தொங்கியசைகின்ற முத்துமாலைகளை யுடையனவும், விரி

முகில் குலம் என் கொடி விராயின-பரவிய மேகக்கூட்டம்போலத் துவசங்கள் மேலே பரவப்பெற்றனவும், பரு மணி குவையன - பருத்த இரத்தினங்களின் தொகுதியை யுடையனவும், பசும் பொன் கோடிய - பசும்பொன்னின் திரளுள்ளனவும், பொரு மயில் கணத்தன - (ஒன்றோடொன்று) ஒத்த மயிற்பறவைகளின் குழாத்தை யுடையனவுமாகிய (அந்நகரத்து) மாளிகைகள்,—மலைஉம் போன்றன - மலையையும் ஒத்தன; (எ - று.)

அருவி முகில் மணி பொன் மயில் இவை மலையிலுள்ளன. அருவி போன்ற முத்துத்தாமமும் மணிமுதலியனவும்,இந்நகரத்துமாளிகைகளிலுள்ளன: ஆகையால், மிகவோங்கியமாடங்கள் மலையையும் ஒத்தன வென்றார். பலநிறமுள்ள துவசங்கள் பலநிறமுள்ள மேகம்போலு மென்க; இனி கொடி என்பதற்கு - மின்னற்கொடி துவசம் என இருபொருள் கொள்ளுதலுமாம். கோடிய - பக்கத்திலுடையன என்றுமாம். பொரும் அயில் என்றும் பிரிக்கலாம்: இடிதாங்கியாகிய அயிலை மாளிகையின்மேல் நாட்டுதல், வழக்கம். பி - ம்:—[1]வரு. (ருரு)

ருசு.—இதுமுதல் மூன்றுகவிகள் - கோடிகளின்சிறப்பைத் தெரிவிக்கும்.

அகிலிடு கொழும்புகை யளாய் மயங்கின
முகிலொடு வேற்றுமை [1]தெரிக லாமுழுத்
துகிலொடு நெடுங்கொடிச் சூல[2]மின்னுவ
பகலிடு [3]மின்னணிப் பரப்புப் போன்றவே.

(இ - ள்) அகில் இடு கொழும் புகை - அகிற்கட்டையினலிடப்படுகின்ற மிக்கபுகையுடனே, அளாய் மயங்கின - நன்றாகக்கலந்தனவாய், (அதனல்), முகிலொடு வேற்றுமை தெரிகலா - (வடிவத்தில்) மேகங்களோடு வேற்றுமையறியப்படாத [மேகங்களையொத்த], முழு துகிலொடு - பெரிய கொடிச்சீலைகளுடனே, நெடு கொடி சூலம் - நீண்ட துவசதண்டங்களின் நுனியில் நாட்டப்பட்டுள்ள சூலங்கள், மின்னுவ - விளங்குபவை,—பகல் இடு மின் அணி பரப்பு - பகற்பொழுதில் மின்னுகின்ற மின்னல்களின் வரிசையின்விரிவை, போன்ற - ஒத்தன; (எ - று.)

புகையோடுகலந்த துவசபடங்கள் முகிற்குலத்தைப் போன்றனவாக, அவை கட்டப்பட்டுள்ள துவசதண்டங்களின்மீது விளங்குகின்ற சூலங்கள் அம்முகிற்குலத்தில்தோன்றும் மின்னலினணிகளையொத்தன வென்றார்; தற்குறிப்பேற்றவணி. பகற்காலத்தில் மின்னுகின்றதன்மைபற்றி வருணிக்கின்றாராதலால், 'பகலிடு' என்று மின்னுக்கு அடைமொழி கொடுக்கப்பட்டது. அளாய் மயங்குதல் - ஒருபொருட்பன்மொழி. பி - ம்:—[1]தெரிக்கிலா. [2]மின்னிட. [3]மின்மினிப்பறப்ப. (ருசு)

ருஎ. *துடியிடைப் பணைமுலைத் தோகை யன்னவ
ரடியிணைச் சிலம்புபூண் டாற்று மாளிகைக்
கொடியிடைத் தரளவெண் கோவை சூழ்வன
கடியுடைக் கற்பகக் கான்ற [1]மாலையே.

(இ - ள்.) துடி இடை - உடுக்கைபோல நடுச்சிறுத்த இடையையும், பணை முலை - பருத்த தனங்களையுமுடைய, தோகை அன்னவர் -(சாயலால்) மயிலையொத்த மகளிர், அடி இணை-(தமது) காலிரண்டிலும், சிலம்பு பூண்டு - சிலம்பென்னுங்காலணியை யணிந்து, அரற்றும் - (அவை) ஒலிக்கும்படி நடக்கப்பெற்ற, மாளிகை - பெருவீடுகளில், கொடியிடை - துவசங்களிலே, தரளம் வெண் கோவை - வெண்ணிறமான முத்துச்சரங்கள், சூழ்வன - தொங்கவிடப்பட்டுள்ளவை,—கடி உடை கற்பகம் கான்ற - நறுமணமுள்ள கற்பகமரங்கள் தாம் (பூத்து) வெளிவிட்ட, மாலை - புஷ்பவரிசையையே யொத்திருக்கும்; (எ - று.)

அந்நகரத்துமாளிகைத்துவசங்களிலே தொங்கவிடப்பட்ட முத்துமாலைகள், கற்பகத்தின்பூமாலைகளை யொக்குமென்றார்; இதனால், துவசங்களின் மிகவோங்கியுள்ள தன்மைபெறப்படும். அரற்றும் - அரற்றுமாறுநடக்கின்ற: காரணம் காரியமாக உபசரிக்கப்பட்டது. இச்செய்யுளுக்கு - கொடியிடை- கொடியினிடங்கள், தரளக்கோவையோடு, கற்பகங்கான்றமாலை, சூழ்வன- சூழப்பெறுவன என்றும், கொடியிலே தரளக்கோவையாகச் சூழ்பவை கற்பகங்கான்றமாலையாகும் என்றும் உரை கூறுவாருமுளர். பி - ம்:—[1]போன்றவே. (௩எ)

௩அ. காண்வரு நெடுவரைக் கதலிக் கானம்போற்
[1]கோணிமிர் பதாகையின் குழாந்த ழைத்தன
வாணனி மழுங்கிட மடங்கி வைகலுஞ்
சேண்மதி தேய்வதக் கொடிக டேய்க்கவே.

(இ - ள்.) நெடு வரை - பெரியமலைகளினிடத்து, காண்வரு- காணப்படுகின்ற, கதலி கானம் போல் - வாழைமரக்காடுபோல, கோள் நிமிர் பதாகையின் குழாம் - நவக்கிரகமண்டலம்வரையிலுயர்ந்துள்ள பெருங்கொடிகளின் கூட்டம், தழைத்தன - மிகுந்துள்ளன; சேண் மதி - ஆகாயத்திற் செல்லுகின்ற சந்திரன், வாள் நனி மழுங்கிட - (தனதுஒளி)மிகவுங்குறைவுபடும்படி, மடங்கி-வடிவம்வளைந்து,வைகல்உம்-(கிருஷ்ணபட்சத்தின்) நாள்தோறும், தேய்வது - தேய்ந்துவருவது,அ கொடிகள் தேய்க்க - அந்தத் துவசங்கள் தேய்ப்பதினாலேயே யாகும்; (எ - று.)

அந்தநகரத்துத் துவசங்கள் நவக்கிரகமண்டலம் வரையில் ஓங்கியிருத்தலாலும் அவ்வழியே சந்திரன் செல்வதனாலும் அந்தச்சந்திரனது உடம்பு துவசங்களால் தேய்க்கப்பட்டு நாடோறும் சிறிது சிறிதாகத் தேய்ந்துவிடுகின்ற தென்று கவி சந்திரன் கிருஷ்ணபட்சத்தில் தேய்வதற்கு ஒருகாரணங் கற்பித்துக் கூறினார்; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. ஓங்கிய மாளிகைகளின்மீது கொடிகள் நாட்டப்பட்டிருப்பதற்கு,மலைகளின்மீது வாழைமரக்காடு இருப்பதை உவமைகூறினார்; இரண்டணிகள் இவ்வாறு இச்செய்யுளில் சேர்ந்துவந்தது - சேர்வையணி. பி - ம்:—[1]தாணிமிர். (௩அ)

௩௯.—இதுமுதல் முப்பத்தேழுகவிகள் - அந்நகரத்தின் பலவகைவளங்களை விரவிக்கூறுவன.

பொன்றிணி மண்டப மல்ல பூத்தொடர்
மன்றுக ளல்லன மாட மாளிகை
குன்றுக ளல்லன [1]மணிசெய் குட்டிம
முன்றில்க ளல்லன முத்தின் பந்தரே.

(இ - ள்.) பொன் திணி மண்டபம் அல்ல - சுவர்ணத்தால் வலிமையாகக்கட்டியமண்டபம் அல்லாதன, பூ தொடர் - மலர்த்தொகுதியாற்சமைந்த மண்டபங்களாம்; மன்றுகள் அல்லன-(பலர்கூடுமாறு சமைக்கப்பட்டுள்ள) சபைகளல்லாதவை, மாடம் மாளிகை - உபரிகைகளோடுகூடிய மாளிகைகளாம்; குன்றுகள் அல்லன - செய்குன்றுகள் அல்லாதவை, மணி செய் குட்டிமம் - இரத்தினக்கற்கள்படுத்துச்செய்த தலங்களாம்; முன்றில்கள் அல்லன - (வீட்டின்) முற்றங்களல்லாதவை, முத்தின் பந்தர் - முத்துக்களாலியன்ற பந்தராம்; (எ - று.)

இச்செய்யுளால், அந்த அயோத்திமாநகரத்தில், எங்குப்பார்த்தாலும், பொன்மண்டபங்களும் அவைகளைப்போல் மலர்கள்நிறையப்பூத்துப்படர்ந்த மலர்க்கொடி மண்டபங்களும்,பெரியமன்றுகளும்அவைகளைப்போன்றமாடமாளிகைகளும், செய்குன்றுகளும் அவைகளைப்போன்ற மணிக்குட்டிமங்களும், முன்றில்களும் அவைகளைப்போன்ற முத்துப்பந்தரும் உள்ளன என்றவாறு. இனி,பூத்தொடர்முதலியவை மண்டபம்முதலியனபோன்றிருத்தலால், அப்பூத்தொடர்முதலியவை பொன்றிணிமண்டபம்முதலியன அல்ல எனக்கூறினுமாம்: சாதிசம்பங்கிமுதலியபூங்கொடிகள் உத்தியானவனத்திற் பந்தரிட்டு வளைத்துப்படரவைத்தவை, பொன்னாற்கட்டி யிடையில் நானாவகை இரத்தினம்பதித்தமண்டபம்போலு மென்பதுகருத்து. "நஞ் இவ யுக்தம் அந்யஸத்ருஸே, ததாஹி அர்த்தகதி: [எதிர்மறைப்பொருளைத்தருஞ் சொல்லோடேனும் ஒப்புப்பொருளைத்தருஞ் சொல்லோடேனும் சேர்ந்திருப்பது, அதனினும்வேறுபட்டதாய் அதனோடொத்ததையேகாட்டும்;பொருட்போக்கு அவ்வாறன்றோ]" என்ற நியாயம்பற்றி,இவ்வாறுகருத்துக்கொள்ளுதல்சாலும்.இனி இச்செய்யுட்கு வெவ்வேறுவகையாகப்பொருள்கூறினாருமுளர்: அவைவருமாறு:-பொன்திணிமண்டபங்களும்,அல்ல-அவையல்லாதன, பூத்தொடர் மன்றுகள் - பொலிவுபொருந்தியசபைகளும், அல்லன - அவையல்லாதன, மாடம் மாளிகைக்குன்றுகள் - மலைகள்போன்ற உபரிகைவீடுகளும், அல்லன - அவையல்லாதன, மணி செய் குட்டிமம் முன்றில்கள் - இரத்தினக்கற்களைப்பதித்துச்செய்த கட்டிடத்தையுடைய முற்றங்களும், அல்லன - அவையல்லாதன, முத்தின்பந்தர்- முத்துக்களினால் வேயப்பட்ட பந்தர்களுமாம் என்பது ஒன்று. அந்நகரத்திலே பொன்மண்டபம்முதலாக முத்துப்பந்தரிறுதியாகக் கூறப்பட்ட இவைகள்தாம் எங்கும் நிறைந்திருந்தனவேயல்லாமல் வெற்றிடமென்பது சிறிதுமில்லையென்பது, இதன் கருத்து. இனி, மற்றோருரை:—பொன்றிணிமண்டபம் அல்ல முத்தின்

பந்தர், பூத்தொட்டர் மன்றுகள் அல்லன முத்தின்பந்தர்என இவ்வாருக முன் றில்கள்வரையிலும் இயைத்து, பொன்மண்டபம் முதல் மணிமுன்றி லீருக வுள்ளவையாவும் முத்துக்கோவைகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளன என் பது. பி-ம்:—[1] மணிகள் கூட்டிய (௩௯)

௪0 மின்னென விளக்கென வெயிற்பி ழம்பெனத்
துன்னிய தமனியத் தொழிற ழைத்தவக்
கன்னிநன் னகர்நிழல் கதுவ லாலரோ
[1]பொன்னுல காயதப் புலவர் வானமே.

(இ - ள்) துன்னிய தமனியம் தொழில் தழைத்த அ கன்னி நல் நகர் - (ஒளி)மிகுந்த மாற்றுயர்ந்தபொன்னினுற்செய்யப்பட்டு வேலைப்பாடு கள் நிறைந்த அந்த அழிவில்லாத சிறந்த அயோத்தியாபுரியின், மின் என - மின்னல் போலவும், விளக்கு என - தீபச்சுடர்போலவும், வெயில் பிழம்பு என - சூரியகிரணத்தின் தொகுதிபோலவும் (உள்ள), நிழல் - ஒளி, கதுவலால் - (தன்மீது) மிகப்படுதலால், அ புலவர் வானம் - அந்தத்தேவலோகம், பொன் உலகு ஆயது - பொன்னுலகாயிற்று; (எ - று.)—அரோ - ஈற்றசை.

தேவலோகம் பொன்னுலகாகத் தோன்றுவதற்குக் காரணம், இந்த நகரம் பொன்னினுலியன்ற வேலைப்பாடுகள் நிரம்பி மின்னல் முதலியன போன்ற பேரொளிகளை வீசுகையில் அந்தப்பேரொளியால் அத்தேவலோகம் மூடப்பட்டிருப்பதேயாமென்று, பொன்னுலகாயிருப்பதற்குக்காரணமாகாத தைக் காரணமாகக் கற்பித்துக்கூறினர்; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. இத ஞல், அயோத்திமாநகரின் பொன்னின்மிகுதியும் விளக்கமும் பெறப்படும். கன்னியின் நலம் பிறராற் கவரப்படாதிருத்தல்போல அந்நகரின்வளம் பிற ராற் கவரப்படாதிருத்தலால், 'கன்னிநன்னகர்' என்றன ரென்னலாம். 'அப்புலவர்வானம்' என்ற இடத்திலுள்ள அகரச்சுட்டுத்தேவலோகத்தினது பிரசித்தியையும் சேய்மையிலுள்ளதன்மையையும் தெரிவிக்கும். புலம் இயற் கையான தேர்ந்த அறிவு: அதனை யுடையவர்-புலவர்: இச்சொல், 'விபுதர்' என்ற வடமொழியின் பொருள்கொண்டது. பி - ம்:—[1] பொன்னகரானது.

௪௧. எழுமிடத் தகன்றிடை யொன்றி யெற்படு
பொழுதிடைப் போதலிற் புரிசைப் பொன்மதி
லழன்மணி திருத்திய வயோத்தி யாளுடை
நிழலெனப் பொலியுமா னேமி வான்சுடர்.

(இ - ள்.) வான் - ஆகாயத்தில் விளங்குகின்ற, நேமி சுடர்-வட்டவடிவ மான தேஜோரூபியாகிய சூரியன், எழும் - உதயமாகின்ற, இடத்து - காலத் தில், அகன்று - மிகநீளமாகக் காணப்பட்டு, இடை - நடுப்பகலிலே, ஒன்றி- உருவத்தினளவாகப் பொருந்தி, எல்படுபொழுதிடை-அச்சூரியன் அஸ்தமிக் கின்ற மாலைக்காலத்தில், போதலின் - மீளவும் நீண்டுபோதலால்,—(அந்தச் சூரியமண்டலம்),—புரிசை பொன்மதில் - சுற்றிலுமுள்ள பொன்மயமான மதிள்கள், அழல் மணி திருத்திய-நெருப்புப்போலச்செந்நிறமுள்ள மாணிக்

கங்களைக்கொண்டு ஒழுங்காகப்பதிக்கப்பெற்றுள்ள, அயோத்தியாள்உடை- அயோத்தியாபுரியாகிற பெண்ணினது, நிழல் என - சாயைபோல, பொலி யும்-விளங்கும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

காலையில் மிகநீண்டிருந்து வரவரக்குறுகி நண்பகலில் உருவத்தினள வாகி மாலையில் மீண்டும் நீண்டுசெல்லுதல், நிழலுக்கு இயற்கை; சூரியமண் டலமும் அங்ஙனமே காலையிற் பெரிதாகித்தோன்றி நண்பகலிற் சிறிது சுருங்கியவளவினதாகக்காணப்பட்டு மாலையில் மீண்டும் பெரிதாகத்தோ ன்றுவது பற்றி, அதனை, அயோத்தியாபுரியின் நிழல்போலு மெனக் குறித் தார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இந்த வருணனையால், அயோத்தியா புரியானது சூரியனைவிடப் பன்மடங்கு சுடர்பெற்றுவிளங்கு மென்பது, பெறப்படும். இனி, இக்கவிக்கு - சூரியன் காலையிற் பேரொளியின்றி யிருந்து நடுப்பகலில் ஒளிமிக்கு மீண்டும்மாலையில் ஒளிகுறைதலால், அயோ த்தியாபுரியினொளியால்ஒளிபெறுவனெனவிளங்குமென்று உரைப்பினுமாம்; சூரியனுக்கு இயற்கையிற் பேரொளி யுண்டாமானால், எப்பொழுதும் ஒரு படிப்பட விளங்கவேண்டுமன்றோ? அங்ஙனம் விளங்காமல் இந்நகரத்து க்கு நேரேவருகின்ற நடுப்பகலில்மாத்திரம் ஒளிவிஞ்சி மற்றைக் காலைமாலை களில் அத்துணைஒளியைப் பெறாதிருத்தலால் இந்நரத்தினொளியினா லேயே சூரியனுக்குப் பேரொளி யுண்டாகின்ற தென்னவேண்டு மென்பது கருத்து. அயோத்தியா என்பது வடமொழியிற் பெண்பாற்சொல்லாதலால், 'அயோத்தியாள்' எனப் பெண்பால்விகுதி கொடுத்துக் கூறினர். இடைப் போதல் என எடுத்து - 'வரிப்புனைப்பந்து' என்ற இடத்தில் 'வரி' என்பது போல இடைந்து என்றவினையெச்சம் 'இடை'என வந்ததெனக்கொண்டு, இடைந்து [விலகிச்] செல்லுதலென உரைத்தலுமொன்று. அழல்மணியென் பதற்கு-சூரியகாந்தக்கல் என்று பொருளுரைத்தலிற் சிறப்பின்மை யறிக. ()

**௪௨. ஆய்ந்தமே கலையவ ரம்பொன் மாளிகை**
**வேய்ந்த[1]கா ரகிற்புகை யுண்ட மேகம்போய்த்**
**தோய்ந்தமா கடனறுந் தூப் நாறுமேற்**
**பாய்ந்ததா ரையினிலை பகரல் வேண்டுமோ.**

(இ - ள்.) ஆய்ந்த - ஆராய்ந்து திருத்தமாகச் செய்யப்பட்ட, மேகலைய வர் - மேகலையென்ற எண்கோவையணியையணிந்த மகளிர், அம் பொன் மா ளிகை வேய்ந்த - (தமதுகூந்தல் ஆடை மாலை முதலியவற்றிற்கு நறுநாற்றம் ஊட்டும்பொருட்டு) அழகிய பொன்னாலாகிய மேன்மாடங்களிலே யெழுப் பிய, கார் அகில் புகை - கரிய அகிற்கட்டையின் புகையை, உண்ட - உட் கொண்ட, மேகம் - மேகங்கள், போய் - (நீருண்ணும்பொருட்டுச்) சென்று, தோய்ந்த - படியப்பெற்ற, மா கடல் - பெரியசமுத்திரமும், நறு தூபம் நா றும் - நறுமணமுள்ள அவ்வகிற்புகையின்வாசனை வீசப்பெறும், ஏல் - என் றால்,—பாய்ந்த - (அம்மேகங்களினின்று) கீழ்விழுந்த, தாரையின் - மழைத் தாரையின், நிலை - தன்மையை, பகரல் வேண்டுமோ - (அகிற்புகைவாசனை வீசுகின்றதென்று) சொல்லவேண்டுமோ? (எ - று.)

மகளிரெழுப்பிய அகிற்புகையையுண்ட மேகங்கள் படிந்த மாத்திரத்தால் புலால்நாற்றமுள்ள கடலும் அந்தத்தீநாற்றம் நீங்கி நறுமணங் கமழு மென்றால், அம்மேகத்திலிருந்து சொரிந்த மழைத்தாரைமணங்கமழு மென்பது, தானேவிளங்குமென்றவாறு: தொடர்நிலைச்செய்யுட் பொருட்பேறணி. இதனால், அந்நகரத்தவரின் செல்வச்சிறப்புத் தொனிக்கும். ஆய்ந்த - அழகிய, பாய்ந்த - பரந்த எனினுமாம். பி-ம்:—[1]காழகில். (௪௨)

**௪௩. குழலிசை மடந்தையர் குதலை [1]கோதையர்**
**மழலை[2]யங் குழலிசை மகர யாழிசை**
**யெழிலிசை மடந்தைய[3]ரின்சொ [3]லின்னிசை**
**பழையர்தஞ் சேரியிற் பொருநர் பாட்டிசை.**

(இ - ள்) குழல் இசை மடந்தையர் - (அப்பொழுதுதான்) மயிர் முடி கூடப்பெறுகிற இளம்பெண்களது, குதலை-குதலைச்சொற்கள்,-அம் குழல் இசை - அழகிய வேய்ங்குழலின் பாட்டிசையை யொக்கும்; கோதையர் - கடைகூடிய மயிர்முடியையுடைய மங்கைப்பருவத்து மகளிரது, மழலை - மழலைச்சொற்கள், மகரம் யாழ் இசை-மகரவீணையின் கீதம்போலும்; எழில் இசைமடந்தையர் - வளர்ச்சிபொருந்திய[பருவம் முதிர்ந்த] மகளிரது, இன் சொல் இன் இசை-இனியசொற்களோடுகூடிய இனியகண்டத்தொனியானது,—பழையர்தம் சேரியில்-கள்விற்பவர்களது சேரியிலேயுள்ள, பொருநர்-கூத்தர்களது, பாட்டுஇசை-கானத்தின்தொனியை யொத்திருக்கும்; (எ-று.)

'போலும்' என வினைவருவித்தாவது, ஆகும்என வருவித்து அபேதமாகவாவது தனித்தனி வாக்கியத்தை முடிக்க. பருவம் முதிரப்பெறாதவர் பருவம்பெற்றவர் பருவம்முதிர்ந்தவரென மகளிரை மூன்றுகூறாகப்பிரித்து, அம்மகளிரின் பேச்சுக்கு உவமை கூறினார்.குதலை மழலையென்பன பரியாயமாகப் பலவிடங்களில் வழங்கப்படினும், குதலை - எழுத்துவடிவங்கூடாத இளஞ்சொல் என்றும், மழலை-எழுத்துவடிவுபெற்றுச் சொல்நிரம்பாதது என்றும் வேறுபாட்டை இங்கே கொள்ளலாம். முன்னிரண்டடி - முறைநிரனிறைப்பொருள்கோள்.பி-ம்:—[1]கோதையாழ். [2]செய்மகரயாழ் மயங்குமெங்கணும். [3]அவ்விசை. (௪௩)

**௪௪. கண்ணிடைக் கனல்சொரி களிறு கால்கொடு**
**மண்ணிடை வெட்டுவ [1]வேட்கு மைந்தர்கள்**
**பண்ணைகள் பயில்லிடங் குழிப டைப்பன**
**சுண்ணமக் குழிகளைத் தொடர்ந்து [2]தூர்ப்பன.**

(இ - ள்.) கண் இடை கனல் சொரி களிறு - (மதமிகுதியாலாகிய பெருங்கோபத்தால்) கண்களின்வழியாக நெருப்பைச் சிந்துகின்ற ஆண்யானைகள், கால்கொடு - (தமது) கால்களால், மண்ணிடை - பூமியிலே, வெட்டுவ - வெட்டுவனவாயின; (அதனால்), வேட்கும் மைந்தர்கள் - (கண்டோரால்) விரும்பப்படுகின்ற அழகிய பிள்ளைகள், பண்ணைகள்பயில்-விளையாட்டுக்களைப் பழகுகின்ற, இடம் - இடங்கள், குழி படைப்பன-குழிகளைப்

பெறுவன; அ குழிகளை - அந்தக் குழிகளை, சுண்ணம்-(அந்தமைந்தர்கள் தமது உடம்பிலணிந்துள்ள) வாசனைப்பொடிகள், தொடர்ந்து - (விளையாடும்பொழுது) இடையறாது விழுந்து, தூர்ப்பன - நிறைப்பனவாம்; (எ-று.)

அரசச்சிறுவர் யானைகளைத் தம்முடன்கொண்டு விளையாடும்பொழுது, அவ்யானைகள் தமது தாள்களாலே பறித்து அம்மைந்தர்கள் விளையாடுமிடங்களிலே பள்ளங்களை யுண்டாக்க,அந்தப்பள்ளங்களை அம்மைந்தர் தமது மேனியிலேயணிந்துள்ளவாசனைப்பொடிகள் தூர்க்குமென்க;இதனால், அந்நகரத்துமாந்தரது செல்வச்சிறப்பும், வீரமும் தொனிக்கும். சுண்ணம்=சூர்ணம்: வடசொல். பி-ம்:—[1]வெட்டமைந்தர்தம். [2]தூர்க்குமே. (சச)

௪௫. பந்துகண் மடந்தையர் பயிற்று வாரிடைச்
சிந்துவ முத்தின மவைதி ரட்டுவா
ரந்தமில் சிலதிய [1]ராற்று குப்பைகள்
சந்திர னொளிகெடத் [2]தழைப்ப தண்ணிலா.

(இ - ள்.) பந்துகள்-பந்துகளை, மடந்தையர்-பெண்கள், பயிற்றுவார்-ஆடுவார்கள்; இடை - (அவர்கள்) நடுவிலே, (அவர்களுடைய ஆபரணங்களினின்று), முத்து இனம் - முத்துக்கூட்டங்கள், சிந்துவ - சிதறுவனவாயின; அவை-அந்தமுத்துக்களை, திரட்டுவார்-(ஓரிடத்திலே)சேர்ப்பவராகிய, அந்தம் இல் சிலதியர் - அளவில்லாத [மிகப்பலரான] ஏவல்செய்கின்ற மகளிர், ஆற்று-குவித்த, குப்பைகள்-குவியல்களால், சந்திரன் ஒளி கெட-சந்திரனும் ஒளிமழுங்கும்படி, தண்நிலா-குளிர்ந்தவெள்ளொளி,தழைப்ப-மிகுவன.

மகளிர் பந்தாடும்பொழுது அதிர்ச்சியால் முத்துக்கள்சிந்த,ஏவல்மகளிரால்குப்பைகளாகக்குவிக்கப்பட்டஅம்முத்துக்கள்வெள்ளொளிவீசுமென்க. பயிற்றுவார்=பயில்வார்: தன்வினைப்பொருளில்வந்த பிறவினை: இது வடமொழியில் 'ஸ்வார்த்தே ணிச்' எனப்படும். பி-ம்:—[1]அகற்றுகுப்பைகள். [2]நிலாத்தழைக்குமே. (௪௫)

௪௬. அரங்கிடை மடந்தைய ராடு வாரவர்
கருங்கடைக் [1]கண்ணயில் காமர் நெஞ்சினை
யுருங்குவ மற்றவ ருயிர்க ளன்னவர்
மருங்குல்போற் றேய்வன வளர்வ தாசையே.

(இ - ள்.) அரங்கிடை - நடனசாலையில், மடந்தையர் - மகளிர், ஆடுவார் - நர்த்தனஞ்செய்வார்கள்; அவர் கரு கடைக்கண் அயில் - அவர்களது கருமையான கடைக்கண்களாகிய வேலாயுதங்கள், காமர் நெஞ்சினை-வேட்கையையுடைய (மைந்தர்களது) மனத்தை, உருங்குவ - உருகச்செய்வன; மற்று - பின்பு, அவர் உயிர்கள் - அம்மைந்தரது ஆவிகள், அன்னவர் மருங்குல் போல் - அம்மகளிரது இடைபோல, தேய்வன - மெலிவன; ஆசை - (அவ்வாடவர்க்கு அம்மகளிர்மீது) வேட்கை, வளர்வது-(வரவர) வளர்ச்சி பெறுவதாகும்; (எ - று.)

நடனசாலையில் நடிக்கின்ற மகளிரின் நோக்குக்கு இலக்காகிய சில ஆடவர், அன்னாரிடத்துக் காதல்கொண்டு மனமுருகி ஆவி மெலிவாராயின ரென்க. 'அவருயிர்கள் அன்னவர் மருங்குல்போல் தேய்வன' என்றதற்கு ஏற்ப, அவ்வாடவரதுஆசை அன்னவர்நகில்போல் வளர்வது எனக் கொள்க. கடைக்கண் - இலக்கணப்போலி. உருங்குவ - உருக்குவ என்பதன்மெலித்தல். ஒருங்குவ என்றபாடத்திற்கு - ஒருக்குவ என்பதன்மெலித்தலெனக் கொண்டு, அழிப்பன என்க. பி - ம்:—[1]கண்ணிணை. (சுசு)

சஎ. *பொழிவன சோலைகள் புதிய தேன்சில
விழைவன தென்றலு மிஞிறு மெல்லென
நுழைவன வன்னவை நுழைய நோவொடு
குழைவன [1]தணந்தவர் கொதிக்குங் கொங்கையே.

(இ - ள்) சில சோலைகள்—, புதிய தேன் - அன்றுஅலர்ந்த மலர்களின் மதுவை, பொழிவன - சொரிவன; (அவற்றை), விழைவன - விரும்புவன வாகிய, தென்றல்உம் - தெற்கிலிருந்துவரும் இளங்காற்றும், மிஞிறுஉம் - வண்டும், மெல்லென-மந்தகதியாக, நுழைவன - (அச்சோலைகளிற்) புகுவன; அன்னவை நுழைய-அவை யுட்புகவே, தணந்தவர் கொதிக்கும் கொங்கை - (தலைவரைப்) பிரிந்த மகளிரது (விரகதாபத்தினாலே) வெதும்புகின்ற தனங்கள், நோவொடு குழைவன - வருத்தத்தோடுமெலிவன; (எ - று.)

சோலைகள் தேனைப்பொழியவே அதனைநாடி வண்டுகளும் தென்றலும் செல்ல, அவற்றைக் கண்ட கணவரைப்பிரிந்த மகளிர் தமது ஸ்தனங்கள் வெதும்பி வருத்தத்தோடு மெலிந்துகுழைய வருந்துவாராயின ரென்க. தென்றலும் வண்டும் காமோத்தீபகப்பொருள்க ளாதலால், இங்ஙனங் கூறினர். தென்றற்காற்றுத் தேன்சொரிகின்ற சோலையிற் புகுவது, அத்தேனைநாடிச் செல்வதுபோன் றிருத்தலால், வண்டு சோலையில்நுழைவதைக் கூறுமிடத்துத் தென்றலையு முடன்கூறினர். மிஞிறு - வண்டின் சாதிபேதம் : இது, உயர்ந்தமணத்தே செல்லும். பி - ம்:—[1]பிரிந்தவர். ()

சஅ. இறங்குவ மகரயா ழெடுத்த வின்னிசை
நிறங்கிளர் [1]பாடலா னிமிர்வ வவ்வழி
கறங்குவ வள்விசி கருவி கண்முகிழ்த்
துறங்குவ மகளிரோ டோதுங் கிள்ளையே.

(இ - ள்.) இறங்குவ - (நுனி) வளைந்துள்ளனவாகிய, மகரம் யாழ் - மகரவீணைகளினின்று, எடுத்த - (விரல்களைக்கொண்டு தடவுதலால்) எழுப்பின, இன் இசை-இனியசுரங்கள், நிறம் கிளர் பாடலான்-(மகளிர்பாடுகின்ற) வண்ணம்விளங்குகின்ற வாய்ப்பாட்டுடனே, நிமிர்வ எடுப்பாகஒலிப்பன; அ வழி - அவ்வழியே [அவ்விசைக்கு ஏற்பவள்], விசி கருவி - தோலாற் கட்டப்பட்டுள்ள மத்தளங்கள், கறங்குவ - ஒலிப்பன; (அவ்விசையைக்கேட்டு மெய்ம்மறந்து), மகளிரோடு ஓதும் கிள்ளை - பெண்களோடு பேசுந்தன்மை

புள்ள கிளிகள், கண் முகிழ்த்து உறங்குவ - கண்களைமூடிக்கொண்டு தூங்குவன; (எ - று.)

இதனால், கண்டத்தொனியும் கருவியிசைகளும் ஒத்து, பகுத்தறிவில்லாத பறவைகளையும் பரவசப்படுத்துமென்று, அந்நகரத்து இசையொலியின் சிறப்பைக் கூறினர். பாடலான்-பாடலோடு. மகரயாழ் எடுத்த இன்னிசை இறங்குவ நிமிர்வ என்று இயைத்து - மகரயாழின் இனியஇசை ஆரோகணமும் அவரோகணமும் அமைந்துள்ளன என்று கூறினுமாம். அவ்வழி - அவ்விடத்தில் எனினுமாம். பி - ம்:—[1]பாடல்போய் நிமிர்ந்ததவ்வழி. (௪அ)

௪௯. *குதைவரிச் சிலைநுதற் கொவ்வை வாய்ச்சியர்
[1]பதவுகைத் தொழில்கொடு பழிப்பி லாதன
ததைமலர்த் தாமரை யன்ன தாளினு
லுதைபடச் [2]சிவப்பன வுரவுத் தோள்களே.

(இ - ள்.) குதை வரி சிலை - குதையையுடைய கட்டமைந்த வில்லை [புருவத்தை] யுடைய, நுதல் - நெற்றியையும், கொவ்வை வாய்ச்சியர் - கொவ்வைப்பழம்போற் சிவந்த வாயையுமுடைய மகளிரது, பதவு கை தொழில் கொடு பழிப்புஇலாதன - மிருதுவான கைத்தொழிலை [செம்பஞ்சுக் குழம்பு ஊட்டுதலை]ப் பெற்றுக் குற்றமற்றனவாகிய, ததை மலர் தாமரை அன்ன தாளினால் - (இதழ்கள்) நெருங்கிய செந்தாமரைமலரைப்போன்ற பாதங்களினால், உதைபட - (ஊடலைத்தீர்க்கத்தொடங்கியபொழுது) உதை பட்டதனால், உரவு தோள்கள் - (ஆடவர்களது) வலிமையுள்ள தோள்கள், சிவப்பன - செந்நிறமடைவன; (எ - று.)

புருவமென்று கூறாமல் உருவகவகையால், 'சிலை' என்றார். தலைமகனும் தலைமகளும் ஓரிடத்து இருக்கையில் அத்தலைவன்மீது சினங்கொள்ளுதற்குக் காரணம் இல்லாதிருக்கவும் காதல் கைம்மிகுதலால் நுண்ணியதோர் காரணத்தைக் கற்பித்துத் தலைவி யூடுதலும், அவ்வண்ணம் தலைவி ஊடல் கொண்டபொழுது அதனைத் தணிக்கும்பொருட்டுத் தலைமகன் வணங்கி நிற்றலும், அஞ்ஞான்று தலைவி தான் கொண்ட ஊடலால் அத்தலைமகனைத் தாளா லுதைத்தலும் இயல்பு. இது, அங்ஙனம் ஊடல்கொண்ட மனைவியினுடைய ஊடலைக்கணவன் தீர்க்கத்தொடங்கியகாலத்தில் நிகழ்ந்தசெயலைக்கூறுவதென்க. பதவு - மென்மை. இனி, பதவு - பக்குவமான செம்பஞ்சுக்குழம்பினாற் செய்யப்படுகின்ற, கைத்தொழில் எனினுமாம். [1]பதயுகத் தொழில் கொடு என்ற பாடத்துக்கு - இரண்டு கால்களுக்கும் செய்யப்படுகின்ற செம்பஞ்சூட்டுதலாகிய தொழிலைக்கொண்டு என்றும், பரதயுகம் என்பது பதயுகமென விகாரப்பட்டதாக்கிப் பரதத்துக்குரியனவான சாந்திக் கூத்து விநோதக்கூத்துஎன்னும் இருவகை நாட்டியத்தொழிலையும் பயின்று என்றும் உரைப்பினுமாம். கூத்தின்வகை இருவகைப்படும் என்பதை "கூத்தின் வகையுங் குறைவறநோக்கி, னேத்தும்வகையா னிருவகைப்படுமே," "அவைதாம், சாந்திக்கூத்தேவிநோதக்கூத்தென், றாய்ந்துற வகுத்தன

னகத்தியன்றானே" முதலியனவாகச் சிந்தாமணி யுரையில் கூறியுள்ளது காண்க. பி - ம்:—[2]சிவந்தன. (௪௯)

௫௦. பொழுதுணர் வரியவப் பொருவின் மாநகர்த்
தொழுதகைம் மடந்தையர் சுடர்வி ளக்கெனப்
பழுதறு மேனியைப் பார்க்கு [1]மாசைகொ
லெழுதுசித் திரங்களு மிமைப்பி லாதவே.

(இ - ள்.) பொழுது உணர்வு அரிய - (பொன்மணிகளின் ஒளிமிகுதியால் இரவும் பகலாய்விடுதலால் 'இது, பகற்பொழுது, இது இராப்பொழுது' என்று) காலத்தை அறிதற்கு அருமையாயுள்ள, அ பொருவு இல் மா நகர் - அந்த ஒப்பில்லாத பெரிய நகரத்திலேயுள்ள, தொழுத கை மடந்தையர் - (கற்பினால் யாவரும் கைகூப்பி) வணங்குதற்குரியதன்மையுள்ள பெண்களின், சுடர் விளக்கு என பழுது அறு மேனியை - ஒளியையுடைய விளக்கைப்போலக் குற்றமற்றுவிளங்குகின்ற உடம்பை, பார்க்கும் ஆசை கொல் - பார்க்கவேண்டுமென்கிற விருப்பத்தினால்தானோ, எழுது சித்திரங்கள்உம் - சித்திரத்திலெழுதிய பிரதிமைகளும், இமைப்பு இலாத - கண்ணிமைத்தலில்லாதனவாயின; (எ - று.)

பொழுதுணர்வரிய - "நல்லாரணிகலம் பகலைச்செய்ய" என்றார், சிந்தாமணியாரும். சித்திரவுருவங்கள் கண்ணிமைத்தலில்லாமலிருத்தற்கு, அயோத்திமாநகரிலுள்ள மாதரின் பழுதறுமேனியைப் பார்க்குமாசைபோலுமென ஒருகாரணத்தைக் கற்பித்துக்கூறியது-ஏதுத்தற்குறிப்பேற்றவணி. கொல் - தற்குறிப்பேற்றவுருபு. பி - ம்:—[1]ஆசையால். (௫௦)

௫௧. தணிமலர்த் திருமக டயங்கு மாளிகை
யிணரொளி பரப்பிநின் றிருடு ரப்பன
திணிசுடர் நெய்யுடைத் தீவி ளக்கமோ
மணிவிளக் கல்லன மகளிர் மேனியே.

(இ - ள்.) தணி மலர் திரு மகள் தயங்கும் மாளிகை - குளிர்ந்த செந்தாமரைப்பூவில் வாழ்கின்ற இலக்குமி விளங்கப்பெற்ற (அவ்வயோத்திமாநகரத்து) வீடுகளில், இணர் ஒளி பரப்பி நின்று - தொகுதியாகிய ஒளியை வீசிக்கொண்டு, இருள் துரப்பன - இருளையோட்டுபவை,— திணி சுடர் நெய் உடை தீ விளக்கம்ஓ - செறிந்த சுவாலையையுடைய நெய்யினாலெரிக்கப்படுகின்ற விளக்கின் ஒளிகளோ, மணிவிளக்கு(ஓ) - இரத்தினதீபங்களோ (எனின்),— அல்லன - இவ்விரண்டுமல்ல; (பின்னையாவையெனின்),- மகளிர் மேனிஏ - (அந்நகரத்துவாழும்) பெண்களின்உடம்பினொளியேயாம்.

இந்நகரத்தில் நெய்விளக்கினொளியும் மணிவிளக்கினொளியும் கீழ்ப்படும்படி மாதர்களின்மேனியினொளி விளங்கு மென்பது, கருத்து. இருள்துரக்குந்தன்மையைத் தீவிளக்கு மணிவிளக்கு இவைகளினின்று விலக்கி, மாதர் மேனியினிடத்து ஏற்றிக்கூறியது - அவநுதியணியாம். இனி, ஐயப்பொருளதாகிய ஓகாரத்தை, மணிவிளக்கு மகளிர்மேனி என்பவற்றோடுங்கூட்டி,

அந்நகரத்துமாளிகைகளிற்பொருந்திய மாணிக்கங்களும் மாதர்மேனிகளும் விளக்கொளிபோலவிளங்கி யிருளையொழிக்கு மெனக் கூறினுமாம். அன்றி, இருள் துரப்பன, நெய்யுடைத்தீவிளக்கமோ? [அன்று]; பின்னை இருள் துரப்பவை, மணிவிளக்கும் அவையல்லனவாகிய மகளிர்மேனியுமேயென்று உரைத்தலு மொன்று. (௫௧)

௫௨. பதங்களிற் றண்ணுமை பாணி பண்ணுற
விதங்களின் விதிமுறை சதிமி திப்பவர்
மதங்கிய ரச்சதி வகுத்துக் காட்டுவ
சதங்கைக ளல்லன புரவித் தார்களே.

(இ - ள்.) தண்ணுமை - மத்தளவொலிக்கும், பாணி - தாளத்திற்கும், பண்-பாட்டுக்கும்; உற - பொருத்தமாக, விதி முறை - பரதசாஸ்திரமுறைப் படியே, விதங்களின்-பலவிதமாக, பதங்களில் - கால்களால், சதி மிதிப்பவர் - சதிபெற அடிவைத்து நர்த்தனஞ்செய்பவர்கள்,—மதங்கியர் - ஆடல் பாடலில்வல்லயுவதிகளான பெண்கள்; அ சதி - அந்தச்சதியை, வகுத்து காட்டுவ - (பிறர்க்கு) விவரித்துக் காட்டுவன,— சதங்கைகள் - (அவர்கள் கால்களிற்பூண்ட) சதங்கைகளும், அல்லன-அவைகளல்லாதனவாகிய, புரவி தார்கள்ஏ - (அங்ஙனம் ஆடுகின்ற) குதிரைகளின் (உடம்பிலணிந்துள்ள) கிண்கிணிமாலைகளுமாம்; (எ - று.)

இதனால், அந்நகரத்துமகளிரது நாட்டியச்சிறப்பும், குதிரைகளின் ஆட்டநடையின் சிறப்பும் கூறப்படுகின்றன. பெண்கள் நாட்டியமாடும்பொழுது அதற்கேற்ப ஒலிக்கின்ற அவர்கள்காற்சதங்கைகள் அந்நடனத்தின் நன்மையை விளக்குதலாலும், குதிரைகளின்ஆட்டம் மகளிராட்டத்தை யொத்திருத்தலாலும், குதிரைகளாடும்பொழுது கிண்கிணி மாலைக ளொலித்தலாலும் இங்ஙனம் கூறினார். சதி - தாளவொத்துக்கு ஏற்ப வைக்கும் அடி. பாணி-தாளத்தின் ஒருறுப்பு: மற்றவை சீர் தூக்கு எனப்படும். இதனை, "பாணியுந் தூக்குஞ் சீரு மென்றிவை" என்பதனாலு முணர்க. (௫௨)

௫௩. *முளைப்பன முறுவலம் முறுவல் வெந்துயர்
விளைப்பன வன்றியு மெலிந்து நாடொறு
மிளைப்பன நுண்ணிடை யிளைப்ப மென்முலை
திளைப்பன முத்தொடு செம்பொ னாரமே.

(இ - ள்.) முறுவல் - புன்சிரிப்புக்கள், முளைப்பன - (அந்நகரத்து மதங்கியராகிய மகளிர்முகத்தினிடத்து எப்பொழுதும்) தோன்றுவன; அ முறுவல் - அந்தப் புன்சிரிப்புக்கள்,—(அவற்றைக்காண்கின்ற காமுகர்க்கு), வெந் துயர் விளைப்பன - கொடிய காமவேதனையை யுண்டாக்குகின்றன; அன்றிஉம் - அவையல்லாமலும், நுண் இடை - (அம்மளிரது இயற்கையிற்) சிறிய இடைகள், நாள்தொறுஉம் - பிரதிதினமும், மெலிந்து இளைப்பன-(முலைப்பாரத்தால்) வருந்தியிளைத்துவருவன; இளைப்ப - (அவை) நன்குமெலியும்படி, மெல் முலை—அம்மாதரது மென்மையான தனங்களிலே,

முத்தொடு - முத்துவடங்களும், செம் பொன் ஆரம் - சிவந்தபொன்னினு லாகிய ஆரங்களும், திளைப்பன - இடையறாது பொருந்துவன; (எ - று.)

மாதர்களின் முறுவலைக்கண்டு ஆடவர் காமவேதனை மிகுகின்றனரென் றும், மாதர்களின்இடை மெலிவது கண்டு அவர்களது கொங்கைகள் பருத் துப் பின்னும் அவ்விடை மெலியும் வண்ணம் முத்தாரம் முதலியவற்றைப் பூண்டுநிற்கின்றன என்றும் கூறியஇவற்றில், ஒருவர் வருந்த மற்றொருவர் உற்சாகங்கொண்டுநிற்பரென்ற இவ்வுலகவியற்கை தோன்றுதல் காண்க. இச்செய்யுளில் அங்கதரத்துமாதரது பெருங்களிப்புக் கூறப்பட்டது. (ருங)

**ருச. இடையிடை யெங்கணுங் களிய றுதன**
**நடையிள வன்னங்க ணளின நீர்க்கயற்**
**பெடையிள வண்டுகள் பிரச மாந்திடுங்**
**கடகரி யல்லன மகளிர் கண்களே.**

(இ - ள்.) நடை இள அன்னங்கள் - (அழகிய) நடையையுடைய இளமையான அன்னப்பறவைகளும், நளினம் நீர் கயல் - தாமரைமலர்களை யுடைய நீர்நிலையிலே வாழ்கின்ற கயல்மீன்களும், பெடை இள வண்டுகள் - (தம்) பெடையோடுகூடிய இளைய ஆண்வண்டுகளும், பிரசம் மாந்திடும் கடம் கரி - (அவ்வண்டுகள்) மதநீரை யுண்ணப்பெற்ற மதயானைகளும், அல்லன - இவையல்லாதனவாகிய, மகளிர் கண்கள் - பெண்களுடையகண் களும், இடை இடை - (முறையே அவ்வவற்றிற்கு உரிய) இடங்கள்தோறும், எங்கண்உம் - எப்பொழுதும், களி அறுதன - களிப்பு நீங்காமலுள்ளன.

அன்னப்பறவைகள் தாமரைமலர்களிலும், கயல்மீன்கள் நீர்நிலைகளி லும், பெடையிளவண்டுகள் மலர்களிலும், கடகரிகள் ஆனைக்கூடங்களிலும், மகளிர்கண்கள் வீடுகளிலும் களிப்போடிருக்கின்றன வென்பது, கருத்து. இனி, இச்செய்யுளுக்கு—களிப்புநீங்காதன, அன்னங்களும் கயல்களும் வண்டுகளும் யானைகளும் அல்ல; மகளிர்கண்களேயாம் என்றும் உரைக்க லாம். யானையின்மதத்தை வண்டுஉண்ணுமென்பதை "மதங்கவ்வியுண்ண வண்டாதரிக்கத் திரிமாமதயானை" என்று கூறுவதாலும் உணர்க. 'பிரசம் மாந்திடும்' என்பதற்கு - மதத்தையுண்டாக்கும்பொருளை யுண்ணும் என்று பொருள்கூறுதலுமாம்; அன்றி, இத்தொடரை வண்டுகளுக்கு அடைமொழி யாக இயைத்துத் தேன் என்றலு மாம். (ருச)

**ருரு. தழல்விழி யாளியுந் துணையுந் தாழ்வரை**
**முழைவிழை கிரிநிகர் களிற்றின் மும்மத**
**மழைவிழும் விழுந்தொறு மண்ணுங் கீழுறக்**
**குழைவிழு மவில்விழுங் கொடித்திண் டேர்களே.**

(இ - ள்.) தழல் விழி ஆளிஉம் - (கோபத்தால்) நெருப்பைச் சொரி கின்ற கண்களையுடைய சிங்கங்களும், துணைஉம் - (அவற்றின்) பெட்டை களும், தாழ் வரை முழை விழை-(தாம் சுகமாகவாழும்படி) தாழ்வரைகளின் குகைகளை விரும்பப்பெற்ற, கிரி - மலைகளை, நிகர் - ஒத்த, களிற்றின்-ஆண்

யானைகளின், மும் மதம் மழை - மூன்றுவகைப்பட்ட மதநீர்ப்பெருக்கம், விழும் - சொரியும்; விழும் தொறும் - (அது) பெருகுந்தோறும், மண் உம் கீழ் உற - பூமியும் ஆழமடையும்படி, குழை விழும் - குழைசேறு உண்டாகும்; அவில் - அந்தச்சேறுகளில், கொடி திண் தேர்கள் - துவசங்களையுடைய வலிய இரதங்கள், விழும் - புதையும்; (எ - று.)

இதனால், யானைகளின் மதமிகுதி கூறப்பட்டது. விழும்என்ற ஒருசொல் வெவ்வேறு பொருளிற் பன்முறை வந்தது - சொற்பின்வருநிலையணி யாம். 'தழல்...முழை விழை' என்னுந் தொடர் - கிரிக்கு அடைமொழி: இது, கிரியின் பெருமையை விளக்கும். கிரி, களிற்றுக்கு உவமை. ஆணும்பெண்ணும் ஒன்றற்குஒன்று துணையாதலால், இங்கே பெண்யாளி 'துணை' எனப்பட்டது. தாழ்வரை - மலையடிவாரம். மும்மதம் - கன்னமிரண்டு, ஆண்குறி ஒன்று, ஆக மூன்றிடத்தினின்று பெருகுபவை. அகரச்சுட்டினடியாப் பிறந்த 'அவ்' என்ற பலவின்பாற்பெயர் அற்றுச்சாரியை விகாரத்தால் தொக, ஏழனுருபு ஏற்று 'அவில்' என வந்தது: சாரியை பெறின் 'அவற்றில்' என நிற்கும். 'அதில்' என்று சில ஏடுகளில் ஒருமையான பாடமுண்டு. அவல் என்ற பாடத்துக்கு - பள்ளமென்று பொருளாம். (௫௫)

௫௬. *ஆடுவார் [1]பொருவினூ புரத்தை யார்ப்பன
கூடுவா[2]ரிகந்தவத் தொங்கன் மாலைக
ளோடுவா [3]ரிழுக்குவ வூட லூடுறக்
கூடுவார் வனமுலை கொழித்த சாந்தமே.

(இ - ள்) சூடுவார் - (புதுப்பூச்) சூடிக்கொள்பவர், இகந்த - எடுத்து வீசியெறிந்த, அ தொங்கல் மாலைகள் - தொங்குந்தன்மையுள்ள அந்தப் பழையபூமாலைகள்,—ஆடுவார் பொரு இல் நூபுரத்தை-நர்த்தனஞ்செய்கின்ற மகளிரின் ஒப்பில்லாத சிலம்புகளை, ஆர்ப்பன - (ஒலிக்க விடாமற்) கட்டுவனவாம்; ஊடல் ஊடு உற - புலவி யிடையிலே பொருந்த, கூடுவார் - (பின்பு ஆடவரோடு) கூடுந் தன்மையுள்ள மகளிர்கள், வன முலை - அழகிய (தமது) தனங்களினின்று, கொழித்த - (வீதியில் வழித்து) எறிந்த, சாந்தம்- சந்தனக்கலவைகள், ஓடுவார் - (வீதியில்) ஓடுபவர்களை, இழுக்குவ - வழுக்கி வீழச்செய்வன; (எ - று.)

இதனால், செல்வச்சிறப்புக் கூறப்பட்டது. அந்நகரத்து மகளிர் தாஞ் சூடிய பூமாலைகள் சிறிதுபழகினமாத்திரத்தில் அவற்றைக் கழற்றி யெறிந்து புதுப்பூமாலைகளைச் சூடிக்கொள்ளுதலால், அங்ஙனம் எறிந்த பூமாலைகள் நர்த்தனஞ் செய்கின்ற மகளிரின் காற்சிலம்புகளில் மாட்டிக்கொண்டு பந்தப்படுத்தி அந்தச்சிலம்புகளை இலயத்திற்கு ஏற்ப ஒலிக்கவொட்டாது தகைய, அங்ஙனமே ஓடுகின்ற மானிடரை மகளிரெறிந்த கொங்கைச்சந்தனம் ஓடவொட்டாது வழுக்கி வீழச்செய்யு மென்றாரென்க. ஊடல் ஊடுறக்கூடுவாரென்றது - காமநூலின் நுட்பமறிந்தவ ரென்றபடி. காதல்கைம்மிகுதலால் ஊடல்கொண்ட தலைவி பின்னர்த் தலைவனது வேண்டுகோளால் அந்தப்பிர

ணயகலகம் தணிந்து அத்தலைமகனைக் கூடுதலும் இன்பமிகுதிக்குக் காரண மாதலால்,இங்ஙனங்கூறினர்;இதனை"ஊடுதல் காமத்திற்கின்ப மதற்கின்பங், கூடி முயங்கப்பெறின்"என்னுந்திருக்குறளினாலும் அறியலாம். இனி,ஊடல் ஊடுற என்பதற்கு -ஊடுதல் ஊடுதலையடைய அதாவது ஊடல் தணிவுபெற என்று உரைப்பாருமுளர். கணவர் தமது தனங்களிலே யப்பிய சந்தனங் களை ஊடலினால் மகளிர் வழித்தெறிந்தன ரென்க: அன்றி, ஊடல்தீர்ந்த பின்பு,தமதுகணவரோடு கூடுதற்கு விரும்பியமகளிர் தமதுதனங்களில்அணி ந்திருந்த சந்தனமும் தம்கணவரை நேரே முயங்குதற்கு இடையீடுசெய்வ தென்றுகருதி அதனை வழித்தெறிந்தன ரென்றேனும், முதலில் மகளிர்க்கு அலங்காரஞ்செய்யுமென்று அம்மகளிரின் கொங்கையில் சந்தனக்குழம்பை யப்பிய ஆடவர் பிறகு அம்மகளிரின் இயற்கையழகைக் குறைப்பதென்று கருதித் தாம் அப்பிய சந்தனத்தைத் தாமே வழித்தெறிவ ரென்றேனுங்கூற லுமாம். சாந்தம்=சந்தனம். வனப்புமுலையென்பது, வனமுலையென விகாரப் பட்டது. பி - ம்:—[1]புரவியின்குரத்தை. [2]இகழ்ந்த. [3]இழுக்குவது. (௩௬)

௩௭. இளைப்பருங் குரங்களா லிவுளி [1]பாரினைக்
கிளைப்பன வவ்வழி [2]கிளர்ந்த தூளியி
னொளிப்பன மணியவை யொளிர மீதுதேன்
றுளிப்பன குமரர்தந் தோளின் மாலையே.

(இ - ள்.) இவுளி - குதிரைகள், (வீதிகளிலோடும்பொழுது), இளைப்பு அரு குரங்களால் - (நடத்தலில்) இளைத்தலில்லாத (தமது) குளம்புகளினால், பாரினை - பூமியை, கிளைப்பன - கிண்டுகின்றன: அ வழி - அவ்விடத்தி னின்று, கிளர்ந்த-மேலெழுந்த, தூளியின் - புழுதிகளினால்,மணி - (அக்குதி ரைகளின் மேலேறிய மைந்தர் பூண்டுள்ள அணிகளிற் பதிக்கப்பெற்ற)இரத் தினங்கள், ஒளிப்பன - மறைவனவாயின; அவை-அங்ஙனம் மறைந்த இரத் தினங்கள், ஒளிர - (மீண்டும் முன்போல்) விளங்கும்படி,குமரர்தம் தோளின் மாலை-அம்மைந்தர்களது தோள்களிலணிந்துள்ள பூமாலைகள், மீது - (மணி களைமறைத்துள்ள புழுதியின்)மேல், தேன் துளிப்பன-தேனைச் சிந்துவன.

குதிரையின்மீது ஏறிச்சாரிபோவோரது அணிகலங்களின்மணியை அக் குதிரைகள் குளம்புகளினாற் கிண்டியெழுப்பிய தூளி மறைக்க, அந்தத்தூளி யை அவர்கள் தோளிலணிந்துள்ள மாலைகளினின்று பெருகியதேன்போக்கு மென்க; தொல்லுருப்பெறலணி. பி - ம்:—[1]தாரணி. [2]கிளைத்த .(௩௭)

௩௮. விலக்கருங் கரிமதம் வேங்கை நாறுவ
குலக்கொடி மாதர்வாய் குமுத நாறுவ
கலக்கடைக் கணிப்பருங் கதிர்க ணாறுவ
மலர்க்[1]கடி நாறுவ மகளிர் கூந்தலே.

(இ - ள்.) விலக்க அரு - தவிர்க்கமுடியாத, கரி மதம் - யானைகளின் மதநீர்கள்,— வேங்கை நாறுவ-வேங்கைமலர்போல வாசனைவீசுவன; குலம் கொடி மாதர் வாய் - உயர்குலத்திற்பிறந்தவராய்ப் பூங்கொடிபோன்றுள்ள

மகளிரின் வாய்கள், குமுதம் நாறுவ - ஆம்பல்மலர்போல விளங்குவன; கலக்கடை - (அந்நகரத்தவர் பூண்டுள்ள) ஆபரணங்களினிடத்து, கணிப்பு அரு கதிர்கள்-அளவிடுதற்கு அருமையான ஒளிகள், நாறுவ - தோன்றுவன; மகளிர் கூந்தல்-(அந்நகரத்து) மாதர்களின் தலைமயிர்கள், மலர் கடி நாறுவ-(சூடியுள்ள) புஷ்பங்களின் வாசனை வீசுவன; (எ - று.)

யானைமதம் வேங்கைமலர்போல மணம்வீச, மகளிர்வாய் குமுதமலரைப்போன்று செந்நிறமும் அழகும் வாய்ந்துவிளங்கு மென்க. முதலடிக்கு-வேங்கைமரம் பூத்திருக்கையில் அது புலிபோலத்தோன்ற, அதுகண்ட யானைகள் அம்மரத்தைச்சார்ந்து முரித்தலின் யானைகளின்மதம் அம்மலரிற்படிந்து அம்மலர் யானையின்மதமணம் கமழு மெனினுமாம். கலக்கடை கணிப்பரும் என்ற *இயல்பானபாடத்துக்கு-கலக் கடை - ஆபரணங்கள் விற்கும் அங்காடிகள், கதிர்கள் நாறுவ-பலவகையிரத்தினங்களினொளிகள் விளங்கப் பெறுவன என்று உரை காண்க. கலக்கடை-ஆபரணங்களின் கடைப்புணர்வுமாம். ஈற்றடிக்கு-மகளிர்கூந்தல் பூவின்மணம்போல இயற்கைமணம் வீசுவன எனினுமாம். சிலபிரதிகளில் இரண்டு மூன்றுமடிகள்-மூன்று இரண்டாமடிகளாகக் காணப்படுகின்றன. பி - ம்:—[1] கடைநாறுவ. (ருஅ)

ருகூ. கோவையின் [1]நகரொடெண் குறிக்க லாதவத்
தேவர்தந் நகரியைச் செப்பு கின்றதென்
யாவையும் [2]வழங்கிடத் திகலி யிந்நக
ராவணங் கண்டபி னளகை தோற்றதே.

(இ - ள்.) அளகை - (செல்வச்சிறப்போடு கூடிய) அளகாபுரியானது, யாவையும் வழங்கு இடத்து இகலி - (தன்னிடத்துக் கொடைத்தொழிலில்லாமையால்) எல்லாவற்றையும் கொடுக்கின்ற விஷயத்தில் (இந்நகரத்தோடு) மாறுபட்டு,(மற்றைத்தன்மைகளிலாவது ஒப்பாகலாமென்று கருதி), (பின்பு), இ நகர் ஆவணம் கண்ட பின் - இப்பட்டணத்தின் கடைவீதியைக் கண்டபின்பு, தோற்றதுஏ-தோல்வியையேயடைந்துவிட்டது; (ஆதலால்), (இந்நகருக்கு எவ்வகையிலும் அவ்வளகாபுரி ஒப்பாகாதுஎன்றால்),கோவை-நகரவரிசையிலே, இ நகரொடு - இவ்வயோத்தியாபுரியுடனே, எண் குறிக்கலாத - ஒன்றாகக்குறித்து எண்ணப்படாத, அ தேவர்தம் நகரியை - அந்தத் தேவநகரமாகிய அமராவதியை, செப்புகின்றது-(இந்நகரமுழுவதுக்கும் ஒப்பாகுமா ஆகாதாஎன்று) எடுத்துச்சொல்லுவது, என்-எதற்காக? [சொல்லவேண்டுவதில்லை என்றபடி]; (எ - று.)

அமராவதிக்கு ஒப்பானதும் அதனோடு எண்ணிச்சொல்லப்படுவதுமாகிய அளகாபுரி கொடைத்தொழிலில் வேறுபாடு உடையதாயினும் மற்றைய விஷயங்களில் அயோத்தியாபுரியோடு ஒற்றுமையுடையதாக முதலில் தன்னை நினைத்துப் பிறகு இவ்வயோத்தியாபுரியின் கடைவீதியொன்றற்கே ஒப்பாகாமல் தோற்றுவிட்டதென்றால், அயோத்திமுழுவதுக்கும் அமராவதி ஒப்பாகாதென்பதைப்பற்றிக் கூறவேண்டியதில்லை; தானே பெறப்

படுமென்பதாம். இச்செய்யுளில் கைமுதிகநியாயமென்னுந் தண்டாபூபிகாநியாயந்தோன்றக் கூறியது - தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணியாம். கோவை - அயோத்தி மதுரை மாயை காசி காஞ்சி அவந்தி துவாரகை என முத்திதரும் நகரம்எழு எனப்படும் வரிசை. இதில், அமராவதிநகரத்தைச் சேர்த்துச்சொல்லாமையால் 'கோவையிந்நகரொடெண் குறிக்கலாதவத்தேவர்நகர்' எனப்பட்டது: இத்தொடரை, அளகைக்குங் கூட்டிப் பொருளுரைக்க. யாவையும் வழங்கிடத்து இகலி என்பதற்கு - எல்லாவற்றையும் கொடுக்கின்ற தன்மையில் இந்நகரத்தோடுமாறுபட்டுஎதிர்த்துநின்றுஎன்று உரைப்பாருமுளர். ஆவணம்=ஆபணம்: வடசொல். பி-ம்:—[1]நகர்தனொடு. [2]விளங்கிடத்திகலினன்னகர். (இக)

கூ0. அதிர்கழ லொலிப்பன வயிலி மைப்பன
கதிர்மணி [1]யணிவெயில் கால்வ மான்மத
முதிர்வுறக் கமழ்வன முத்த மின்னுவ
மதுகர மிசைப்பன மைந்த ரீட்டமே.

(இ - ள்.) (அந்நகரியில்), மைந்தர் ஈட்டம் - ஆடவர்களின் கூட்டத்தினிடத்து, அதிர் கழல் - அசைகின்ற வீரக்கழல்கள், ஒலிப்பன - ஆரவாரஞ் செய்வன; அயில் - வேற்படைகள், இமைப்பன - விளங்குவன; கதிர் மணி அணி - ஒளியையுடைய யிரத்தினுபரணங்கள், வெயில் கால்வ - வெயிலினொளி வீசுவன; மான்மதம் - கஸ்தூரிப்புழுகுகள், முதிர்வு உற - மிகுதி பொருந்த, கமழ்வன - வாசனைவீசுவன; முத்தம் - முத்தாபரணங்கள், மின்னுவ - பிரகாசிப்பன; மதுகரம் - வண்டுகள், இசைப்பன-கீதம்பாடுவன.

மான்மதம் - கஸ்தூரியென்னும்மானின் கொழுப்பு. மதுகரம்-தேனைச் சேர்ப்பது. பி - ம்:—[1]இளவெயில். (கூ0)

கூக. வளையொலி வயிரொலி மகர வீணையின்
கிளையொலி [1]முழவொலி கின்ன ரத்தொலி
துளையொலி பல்லியந் துவைக்குஞ் சும்மையின்
விளையொலி கடலொலி மெலிய விம்முமே.

(இ - ள்.) (அந்நகரத்தில்), வளை ஒலி - சங்கங்களினோசையும், வயிர் ஒலி - ஊதுகொம்புகளின் ஓசையும், மகரம் வீணையின் கிளை ஒலி - மகரயாழின் இனங்களின் ஓசையும், முழவு ஒலி - மத்தளங்களின் ஓசையும், கின்னரத்து ஒலி - கின்னரமென்னும் வாச்சியத்தின் ஓசையும், துளை ஒலி - (சின்னம் முதலிய) துளைக்கருவியினோசையும், பல் இயம் துவைக்கும் சும்மையின்விளை ஒலி-மற்றும்பலவகை வாத்தியங்கள் முழங்குகின்ற ஆரவாரத்தினுண்டாகிய ஓசையும், கடல் ஒலி மெலிய - சமுத்திரகோஷமும் கீழ்ப்படும்படி, விம்மும் - மேற்பட்டு ஒலிக்கும்; (எ - று.)

சங்கவாத்தியம் - வெற்றிச்சங்கு மங்கலச்சங்கு கொடைச்சங்கு என மூவகைப்படும். கிளையொலி - கிளையென்னும்பண்ணின்இசையென்றும், செழிக்கின்றஓசை யென்றுமாம். கின்னரம் - வீணையின் இனமானதொரு

வாச்சியம். பலவகையொலிகள் அந்நகரத்தில் நிரம்பியிருந்தன என்று கூறிய இதில், அந்நகரத்து மாந்தர்யாவரும் யாதொருதுயரமுமின்றி, மனமகிழ்ந்து மங்களங்கள் மிக இருக்கின்றன ரென்பது விளங்கும். கிளை - வீணையினோர் நரம்பு, துளை - துளைக்கருவியாகிய குழல் என்னலுமாம். பி - ம்:—[1]குழலொலி. (௬௧)

௬௨. மன்னவர் [1]தருதிறை யளக்கு மண்டப
மன்னமென் னடையவ ராடு மண்டப
முன்னரு மருமறை யோது மண்டபம்
பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்.

(இ - ள்.) மன்னவர் - வேறு தேயங்களின் அரசர்கள், தரு - (கொண்டு வந்து) கொடுக்கின்ற, திறை - அரசிறைப்பொருள்களை, அளக்கும் - அளந்துகொள்ளுதற்கு இடமான, மண்டபம் - மண்டபங்களும், - அன்னம் மெல் நடையவர் - அன்னத்தின் நடைபோன்ற மெல்லிய நடையையுடைய மகளிர், ஆடும் - நர்த்தனஞ்செய்கின்ற, மண்டபம் - மண்டபங்களும், உன்ன அரு - ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுதற்கு அருமையாகி, அரு - (ஓதுதற்கும்) அருமையாயுள்ள, மறை - வேதங்களை, ஓது - அத்தியயனஞ் செய்வதற்கு இடமான, மண்டபம் - மண்டபங்களும், பன்ன அரு-ஆராய்ச்சி செய்வற்கு அருமையாயுள்ள [வருத்தமாயுள்ள], கலை - (வேதத்தின் அங்கங்களாகிய) சாஸ்திரங்களை, தெரி - ஆராய்ச்சிசெய்வதற்கு இடமான, பட்டிமண்டபம் - கல்விமண்டபங்களும், (அந்நகரத்தில் எங்கும் உள்ளன).

இதனால், செல்வம் வித்தை இவைகட்கு இடமாயிருப்பது,அவ்வயோத்திநகரமென்பது, பெறப்படும். வினை வருவித்து உரைக்கப்பட்டது. மண்டபங்கள் கூறிமுடிக்கமுடியாதபடி மிகப்பலவாகவுள்ளன என்பதை விளக்குமாறு வினைமுற்றின்றியுரைத்தனரென்பர். கலை - சிட்சை வியாகரணம் சந்தசு நிருக்தம் சோதிடம் கற்பம் என்னும்ஆறங்கங்களை. அறுபத்துநான்கு கலைகளைக்காட்டுமென்று கொள்வாருமுளர். "ஒட்டிய சமயத்துறுபொருள் வாதிகள், பட்டிமண்டபத்துப் பாங்கறிந்தேறுமின்" என மணிமேகலையிலும்,"பகைப்புறத்துக்கொடுத்த பட்டிமண்டபமும்," எனச் சிலப்பதிகாரத்திலும், " பட்டிமண்டபமேற்றினை யேற்றினை " எனத் திருவாசகத்திலும் 'பட்டிமண்டபம்' என்பது, வந்துள்ளது. "பட்டிமண்டபம்-வித்தியாமண்டபம்; ஓலக்கமண்டபமுமென்ப" என்பர், அடியார்க்குநல்லார். சிலபிரதிகளில் மூன்றுநான்காமடிகள் நான்குமூன்றுமடிகளாகக் காணப்படுகின்றன. பி - ம்:—[1] அருந்திறை. (௬௨)

௬௩. இரவியிற் சுடாமணி யிமைக்குந் தோரணத்
தெருவினிற் சிறியன திசைகள் சேணிளங்
கருவியிற் பெரியன வானத் தானங்கள்
பரவையிற் பெரியன புரவிப் பந்தியே.

(இ - ள்.) சுடர் மணி - ஒளியுள்ள மணிகள், இரவியின் - சூரியனைப் போல, இமைக்கும் - பிரகாசிக்கப்பெற்ற, தோரணம் - தோரணங்களை

யுடைய, தெருவினில் - வீதிகளைவிட, திசைகள் - திக்குக்கள், சிறியன - சிறுமையையுடையனவாம்; ஆனை தானங்கள் - யானையின் மதப்பெருக்குக்கள்,—சேண் விளங்கு அருவியின் - வெகுதூரம் விளங்குகின்ற மலைநீர்ப் பெருக்குக்களினும், பெரியன - மிக்கவையாம்; புரவி பந்தி - குதிரையின் வரிசைகள், - பரவையின் பெரியன - கடலினும் பெரியனவாம்; (எ - று.)

'தெருவினிற்சிறியன திசைகள்' என்று கூறினாரேனும், பின்னிரண்டடிகட்கு ஏற்ப, திசைகளின் தெரு பெரியன என்று கருத்துக்கொள்க. தோரணம் என்ற வடசொல் - கட்டுவாயிலென்னும் பொருளது. பந்தி = பங்க்தி. (கூ௩)

**கூ௪. சூளிகை மழைமுகிற் றொடக்குந் தோரண**
**மாளிகை மலர்வன மகளிர் வாண்முகம்**
**வாளிக ளன்னவை மலர்வ மற்றவை**
**யாளிக ளன்னவர் நிறத்தி னாழ்பவே.**

(இ - ள்.) சூளிகை - (தமது) சிகரங்களினால், மழை முகில் தொடக்கும் - மழைபொழியுந்தன்மையுள்ள மேகங்களைப் பிணிக்கின்ற, தோரணம் மாளிகை - தோரணங்களையுடைய வீடுகளில், மகளிர் வாள் முகம் - பெண்களுடைய ஒளியுள்ள முகங்கள், மலர்வன - விளங்குவன; அன்னவை - அம்முகங்களில், வாளிகள் - (பார்வைகளாகிய) அம்புகள், மலர்வ - விளங்குவன; அவை - அந்த அம்புகள், யாளிகள் அன்னவர் நிறத்தின் - ஆண்சிங்கத்தையொத்த ஆடவர்களின் மார்பிலே, ஆழ்ப-தைத்து அழுந்துவனவாம்.

மகளிர்கண்களாகிய அம்புகள் ஆடவர்மார்பில் அழுந்துவன என்றது, மாதர்கண்பார்வைகள் ஆடவர்க்கு ஆசைநோயைவிளைத்து வருத்தத்தைத் தருவன என்றவாறு. தோரணம் - வெளிவாயில்: இனி, மாவிலை முதலியவற்றாற் கட்டப்படுந்தோரணங்கள் என்று கொள்வாருமுளர். சிங்கம்-நடைவலிமை நோக்குத்தைரிய காம்பீரியங்களில், உவமை. ஆழ்ப - பலவின்பால் முற்று; ப்-இடைநிலை, அ-விகுதி: "அ ஆ வ எனவருஉமிறுதி, யப்பான்மூன்றே பலவறிசொல்லே" என்ற தொல்காப்பியச்சொல்லதிகாரச் சூத்திரத்தில் "உண்பஎன்பது பகரவீற்றுப்பலரறிசொல்லன்றே, அஃறிணைக்கு ஆயினவாறு என்னையெனின்,— பகரவிறுதியாயினன்றே உயர்திணைக்காவது; ஈண்டுக்காட்டப்பட்டது எதிர்காலத்துவரும்பகரமூர்ந்துநின்ற அகரவீறுதலின் அஃறிணைச்சொல்லேயாமென்பது" என்று ஆசிரியர்சேனாவரையர் கூறியிருப்பது காண்க. இது - ஏகாவளி யென்னும் அலங்காரம். (கூ௪)

**கூ௫ மன்னவர் கழல்ஒலியொடு மாறுகொள்வன**
**பொன்னணித் தேரொலி புரவித் தாரொலி**
**மின்னனை யவர்சிலம் பேங்க வேங்குவ**
**கன்னியர் குடைதுறைக் கமல வன்னமே.**

(இ - ள்.) பொன் அணி தேர் ஒலி - பொன்னினாலியன்ற அலங்காரத்தைக்கொண்ட தேர்களினோசையும், புரவி தார் ஒலி - குதிரைகள் பூண்ட

கிங்கிணிமாலையினோசையும், மன்னவர் கழலொடு - அரசர்கள் காலிலணிந்த வீரக்கழல்களினொலியோடு, மாறு கொள்வன - மாறுபட்டு ஒலிப்பனவாயின; இன் நகையவர் சிலம்பு எங்க - இனியசிரிப்பையுடைய மகளிரணிந்துள்ள சிலம்பென்னுங்காலணிகள் ஒலிக்க, (அந்தச்சிலம்போடு மாறுபாடு கொண்டு), கன்னியர் குடை துறை கமலம் அன்னம் - இளம்பெண்கள் நீராடுகின்ற நீர்த்துறையிலுள்ள தாமரைமலரில் வாழ்கின்ற அன்னப்பறவைகள், எங்குவ - (தாமும்) ஒலிப்பன; (எ - று.)

மன்னவர்வீரக்கழல் ஒலிப்ப அவ்வொலியோடு மாறுபடப் புரவித்தாரும் தேரும்ஒலிக்கின்றன; அங்ஙனமே, மாதர்சிலம்பு ஒலிக்க அதனோடுமாறு கொண்டு அன்னப்பறவை ஒலிக்கின்றனஎன்க. முன்வாக்கியத்தைநோக்கிப் பின்வாக்கியத்திலும் 'மாறுகொண்டு' என்று வருவித்து உரைக்கப்பட்டது. ப்ரக்ருதங்களாகிய பொருள்களையே உபமான உபமேயங்களாக இந்தச்செய்யுளிற் கூறப்பட்டுள்ளமை காண்க. (சுரு)

சுசு. *ஊடவுங் கூடவு முயிரி னின்னிசை
பாடவும் விறலியர் பாடல் கேட்கவு
மாடவு மகன்புன லாடி யம்மலர்
சூடவும் பொழுதுபோஞ் சிலர்க்கத் தொன்னகர்.

(இ - ள்.) அ தொல் நகர்-அந்தப் பழமையான நகரத்தில், சிலர்க்கு-சில மகளிர்க்கு,—ஊட உம்-(தம்தம் கணவரோடு) புலத்தலாலும், கூட உம்-(உடனே அப்புலவிதீர்ந்து அவர்களோடு) கலத்தலாலும், உயிரின் இன் இசை பாட உம் - உயிர்போலருமையான இனியகானத்தைப் பாடுதலாலும், விறலியர் பாடல் கேட்க உம் - பாடும்மகளிரது பாட்டுக்களைக்கேட்டலாலும், அகல் புனல் ஆட உம் - பரந்தநீரிலே குடைந்து விளையாடுவதாலும், ஆடி அம் மலர் சூட உம் - (அங்ஙனம் நீராடியபின்பு) அழகியமலர்களைப்பறித்துச் சூடுவதாலும், பொழுது போம் - காலங்கழியும்; (எ - று.)

இதனால், அந்நகரத்துமகளிர் கவலைசிறிதுமில்லாது சுகமாகக் காலங் கழித்தலைக் கூறுகின்றார். ஊடிக்கூடுதல் காமத்துக்குஇன்ப மாதலால், ஊடலைக்கூறிப் பிறகு கூடலைக் கூறினர். விறலி - விறல்படப்பாடியாடும் மகள்: விறல் - மெய்ப்பாடு. அ மலர் என்று பிரித்து - அந்த நீர்நிலையிலுள்ள மல ரெனினுமாம். (சுசு)

சுஎ. முழங்குதிண் கடகரி முன்பி னூரவு
மெழுங்குரத் திவுளியோ டிரத மேறவும்
பழங்கணோ டிரந்தவர் பரிவு தீர்தர
வழங்கவும் பொழுதுபோஞ் சிலர்க்கம் மாநகர்.

(இ - ள்.) அ மா நகர் - அந்தப் பெரிய பட்டணத்தில், சிலர்க்கு - சில ஆடவர்கட்கு, முழங்கு திண் கடம் கரி முன் பின் ஊர உம் - பிளிறுகின்ற வலிய மதயானைகளை முன்னும்பின்னுமாக உலாவும்படி ஏறிச்செலுத்துத லாலும், எழும் குரத்து இவுளியோடு - மேலெழுகின்ற குளம்புகளையுடைய

குதிரைகளையும், இரதம் - தேர்களையும், ஏறஉம் - ஏறிநடத்துதலாலும், பழங்கணோடு இரந்தவர் பரிவு தீர்தர வழங்கஉம் - தரித்திரத்தினால் (வெளி நாட்டிலிருந்து வந்து)இரக்கின்ற யாசகருடைய வருத்தந்தீரும்படி கொடுத் தலினாலும், பொழுது போம்—;(எ - று.)

கீழ்ச்செய்யுளினால் மகளிர் இனிது காலங்கழித்தலைக்கூறிய கவி, இதுமுதல் இரண்டுகவிகளினால் ஆடவர் இனிது காலங்கழித்தலைக் கூறு கின்றார். பழங்கண்-வறுமைநோயால் வாடிய கண்: இந்தக்காரியச்சொல், காரணமாகிய வறுமையைக் காட்டிற்று: உபசாரவழக்கு. (கூஎ)

கூஅ. கரியொடு கரியெதிர் பொருத்திக் கைப்படை
வரிசிலை முதலிய வழங்கி வாலுளைப்
புரவியிற் பொருவில்செண் டாடிப் போர்க்கலை
தெரிதலிற் பொழுதுபோஞ் சிலர்க்கச் சேணகர்.

(இ - ள்.) சேண் அ நகர் - பரந்த அந்தநகரத்திலே, சிலர்க்கு - சில ஆடவர்க்கு,—கரியொடு கரி எதிர் பொருத்தி - யானைகளோடு யானைகளை எதிரெதிராகப் போர்செய்தற்கு முட்டவிடுதலாலும், வரி சிலை முதலிய கை படை வழங்கி - கட்டமைந்த வில்முதலிய கையிலுள்ள ஆயுதங்களைப் பிர யோகித்துப் பழகுவதாலும்,வால் உளை புரவியில் பொரு இல் செண்டு ஆடி - நீண்ட பிடரிமயிர்களையுடைய குதிரைகளின்மீதேறி ஒப்பற்ற வீதிகளில் வையாளி வருதலாலும், போர் கலை தெரிதலின் - போர் செய்தற்குரிய படைக்கலநூல்களை ஆராய்ச்சிசெய்தலாலும், பொழுதுபோம்—; (எ - று.)

யானைகளை ஒன்றோடொன்றுபொருத்துதல் சிலைமுதலிய படைக்கலங் களைவழங்குதல் குதிரைகளிலேறி வையாளிசெல்லுதல் என்ற இங்ஙனமரன போர்க்கலைகளைப் பழகுதலால், சிலர்க்கு அந்நகரிற் பொழுதுபோ மென்று உரைப்பினுமாம். முதலிய - பெயர். எய்வன குத்துவன எறிவன முதலிய எல்லாத்தொழில்களையும் குறிக்குமாறு 'வழங்கி' என்றார். வாலுளை - வெண்ணிறமுள்ள பிடரிமயிரென்பாருமுளர். செண்டு - குதிரை நடத்தும் வீதி; குதிரைமீது ஏறி ஆடும் ஒருவகைப்பந்து என்பாரு முளர். (கூஅ)

கூகூ. நந்தன வனத்தலர் கொய்து நவ்விபோல்
வந்திளை யவரொடு வாவி யாடிவாய்ச்
செந்துவ ரழிதரத் தேறல் மாந்திச்சூ
துந்தலிற் பொழுதுபோஞ் சிலர்க்கவ் வொண்ணகர்.

(இ - ள்.) அ ஒள் நகர் - அந்த விளங்குகின்ற நகரத்திலே, சிலர்க்கு - சில மங்கையர்க்கு,—நந்தனவனத்து அலர் கொய்துஉம்-சிங்காரப்பூஞ்சோலை களிலே சென்று மலர்களைப் பறித்தலாலும்,—நவ்வி போல் வந்து - (பார் வையால்) மான்களையொத்து அருகில்வந்து, இளையவரொடு வாவி ஆடி - யௌவனப்பருவமுடைய (தமது) கணவருடனே தடாகங்களில் நீர்விளை யாடுதலாலும், வாய் செம் துவர் அழிதர தேறல் மாந்தி - (தமது) வாயினி

டத்து இயற்கையாகவுள்ள மிக்க செம்மைநிறம் அழிவுபெற மதுவைப் பருகுவதாலும், சூது உந்தலின் - சூதாட்டமாடுவதாலும், பொழுதுபோம்—.

சிலமகளிர்க்குப் பூக்கொய்தல் புனல்விளையாடல் உண்டாட்டு சூதாட்டம் என்ற இவ்வழியால் இனிது காலங்கழியுமென்பதாம். சிலர் என்றது, கடைசியரை யென்னலாம். மகிழ்ச்சியுண்டாக்குவதென்று பொருளுள்ள 'நந்தனம்' என்ற வடமொழி-காரணவிடுகுறியாய்,இந்திரன்பூந்தோட்டத்தை யுணர்த்தும்; அச்சொல் - இங்கு உவமையாகுபெயராய், அதுபோல் அழகியதாய்ச் செழித்துள்ள பூஞ்சோலையை யுணர்த்திற்று. வாவி - வாபீ: வடசொல். செம் துவர் - ஒருபொருட்பன்மொழி. தேறல் - தெளிதல்: தெளிந்த கள்ளுக்குத் தொழிலாகுபெயர். வாய்ச்செந்துவரழிதர என்பதை, மத்திம தீபமாக, வாவியாடி என்பதனோடு கூட்டியும் உரைக்கலாம். (௬௬)

எ௰. [1]நானா விதமா [2]நளிமாதிர வீதி யோடி
மீனாறு வேலைப் புனல்வெண்முகி லுண்ணு மாபோ
லானாத மாடத் திடையாடு கொடிக்கண் மீப்போய்
வானாறு நண்ணிப் புனல்வற்றிட நக்கு மன்னோ.

(இ - ள்.) வெள் முகில் - வெண்ணிறமுள்ள [நீரில்லாத] மேகங்கள், நளி மாதிரம் வீதி நானாவிதம் ஆ ஓடி - பெரியஆகாயமார்க்கத்திலே பல வகைகளாக விரைந்து சென்று, மீன் நாறு வேலை புனல் - மீன்கள் விளங்குகின்ற கடலின் நீரை, உண்ணும் ஆ போல் - பருகும் விதம் போல,— ஆனாத மாடத்திடை ஆடு கொடிக்கள் - அழிவில்லாத (அந்நகரத்து) மாளிகைகளின்மேலசைகின்ற துகிற்கொடிகள், மீ போய் - மேலே சென்று, வான் ஆறு நண்ணி - ஆகாசகங்காநதியைப் பொருந்தி, புனல் வற்றிட - அதன் நீர் வரளும்படி, நக்கும் - (தமது சீலையின் நுனியாகிய நாவினால் நீரை) நக்கியுட்கொள்ளும்; (எ - று.)—மன் ஓ-ஈற்றசை.

அந்நகரத்து மாடங்களின்மீது கட்டப்பட்டுள்ள துவசபடங்கள் காற்றில் அசைந்தாடி ஆகாயகங்காநதியில் தோய்வதை, கவி, வெயிலிற்காயும் வெப்பத்தினால் நீர்வேட்கைகொண்டு அந்தத்துவசங்கள் ஆகாயகங்காநதியின் நீரை நக்குவதுபோலு மென்றார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி; இவ்வணியைக் காட்டக்கூடிய உருபு தொக்குவந்ததனால், இது, குறிப்புத்தற்குறிபேற்ற மெனப்படும். துவசங்கள் ஆகாயகங்காநதியின் நீரைப் பரிசியாதிருக்கவும் கொடிகள் வானாற்றுப்புனலை நக்கு மெனக் கூறியது - தொடர்புயர்வுநவிற்சியணி. வெண்ணிறக்கொடிகள் வானாற்றுப்புனலிற் படிதற்கு, வெண்ணிறமேகங்கள் கடலிற்படிதலை யுவமைகூறினார்: உவமையணி: இங்ஙனம் பலஅணிகள் சேர்ந்துவந்தது - சேர்வையணி. நாநாவிதம் - வடசொற்றொடர். நளி - பெருமைப்பொருள்குறிக்கும் உரிச்சொல். கொடி கண் என்று பிரித்து - துவசங்கட்டப்பட்டுள்ள மூங்கில் என்பாரு முளர்: இப்பொருளில், கணுவென்ற பொருளுள்ள கண்என்பது மூங்கிலையுணர்த்தியது, சினையாகுபெயர். விதமா, உண்ணுமா என்ற இடங்களிலுள்ள ஆ-முறையே, ஆக, ஆறு என்பவற்றின் விகாரம்.இதுமுதல் அடுத்த

புடலத்தின் முதலைந்து செய்யுள்வரை யுள்ள பாடல்களை நாற்சீராகவும் அலகிடலாம். பி-ம்:—[1] நானுவிதமாய். [2] நளிர். (எ0)

எக. [1]வன்றோ ரணங்கள் புணர்வாயிலும் [2]வானி னும்பர்
சென்றோங் கிமேலோ ரிடமில்லெனச் செம்பொ னிஞ்சி
குன்றோங் குதோளார் குணங்கூட்டிசைக் குப்பை யென்ன
வொன்றோ டிரண்டும் முயர்ந்தோங்கின வும்பர் நாண.

(இ - ள்.) வல் தோரணங்கள் புணர்வாயில்உம் - வலிய தோரணங்கள் பொருந்தப்பெற்ற கோபுரவாசலும்,— செம்பொன் இஞ்சி ஒன்றோடு இரண்டுஉம் - சிவந்தபொன்னாலாகிய மூன்று மதில்களும்,—வானின் உம்பர் சென்றுஓங்கி-தேவலோகத்தினும் மேலாகப்போய் உயர்ந்து,மேல் ஓர் இடம் இல் என - இன்னும் மேலே ஓங்கிச்செல்வதற்கு வேறேஇடமில்லை யென்று சொல்லும்படி [அவ்வளவு உயர்வாக], குன்று ஓங்கு தோளார் குணம் கூட்டு இசை குப்பை என்ன - மலைபோலுயர்ந்த தோள்களையுடையரான (அவ்வயோத்திமாநகரின்)அரசர்கள்(தமது)நற்குணங்களாற் சம்பாதித்த புகழின் திரள்போல, உம்பர் நாண உயர்ந்து ஓங்கின - தேவலோகமும் வெள்கும்படி மிகவும் உயர்ந்துவிளங்கின; (எ - று.)

அவ்வயோத்திமாநகரத்து வாயிலும் மதிள்களும், அவ்வயோத்தியை யாண்ட அரசர்களின் புகழ்த்திரள்போல இனிச் செல்லுதற்கு மேலே யிடமில்லையென்னும்படி அவ்வளவு உயர்ந்தோங்கின வென்பதாம். உள்மதில் இடைமதில் புறமதில் என மும்மதிள்கூறும் மரபுபற்றி, 'இஞ்சி ஒன்றோடிரண்டும்'என்றார்;"கோடுறழ்ந்தெடுத்த" என்று தொடங்கும்பதிற்றுப்பத்தின் பாடலையும், அதன் உரையையும் நோக்குக. உம்பர் - மேலிடம்; இடவாகு பெயரால், தேவலோகத்தைக் காட்டும். இச்செய்யுளுக்கு வேறுவகையாக உரைப்பது சிறக்குமாயிற் கொள்க. பி - ம்:—[1] வன்றோல்புணர்ந்த மணி. [2] வானினூடு. (எக)

எஉ. காடும் புனமுங் கடலன்ன கிடங்கு மாத
ராடுங் குளனும் மருவிச்சுனைக் குன்று மும்பர்
வீடும் விரவும் [1]மணிப்பந்தரும் வீணை வண்டு
பாடும் பொழிலும் மலர்ப்பல்லவப் பள்ளி மன்னோ.

(இ - ள்.) காடுஉம் - (அவ்வயோத்திநகரைச் சூழ்ந்துள்ள அரணாகவுள்ள) காடுகளிலும், புனம்உம் - விளைநிலங்களிலும், கடல் அன்ன கிடங்கு உம் - கடல்போன்ற அகழிகளிலும், மாதர் ஆடும் குளன்உம் - பெண்கள் நீராடுகின்ற குளங்களிலும், அருவி சுனை குன்றும் - அருவிகளையும் சுனைகளையுமுடைய (அரணாகவுள்ள) மலைகளிலும், உம்பர் வீடுஉம் - மேல் நிலைமாடங்களிலும், மணி விரவும் பந்தர்உம் - முத்துக்களினாலமைந்துள்ள பந்தல்களிலும், வீணை வண்டு பாடும் பொழில்உம் - யாழிசைபோல வண்டுகள் இசைபாடுகின்ற சோலைகளிலும், மலர் பல்லவம் பள்ளி - மலர்களாலும் தளிர்களாலும் படுக்கைகள் (அமைக்கப்பட்டுள்ளன); (எ - று.)

வினை வருவிக்க. காடுமுதலிய இடங்கள்வாய்ப்பாக இருத்தலால், அவற்றிற்படுக்குமிடம் அமைப்பாராயின ரென்க.குளன் என்றது - அதனிடையிலுள்ள மண்டபங்களையும். கரைகளையும். கிடங்கு என்றது-அதனைச்சார்ந்துள்ள இடத்தை. அருவி-மலைநீர்ப்பெருக்கு. சுனை - நீரூற்றுள்ள மலைக்குளம். உம்பர்வீடும் விரவும்மணிப்பந்தர் என ஒன்றுக எடுத்து-(உயர்ச்சியால்) தேவர்களின் வாழுமிடமாகிய தேவலோகத்தையும் அளாவுகின்ற முத்துப்பந்தரெனினுமாம். இனி, இத்தொடர் - வானுலகத்தளவும் அளாவுகின்ற அழகிய கொடிவீட்டை [லதாகிருகத்தை]க் குறிக்குமெனக்கொண்டு, காடுமுதலியவற்றில் மலர்களும் தளிர்களும் மிகுந்துள்ளவற்றையே இங்ஙனங் கூறினரெனினுமாம். அன்றி, காடும்புனமும் கிடங்கும்குளனும் குன்றும், மலர்பல்லவம்.- மலரும்பல்லவமுஞ்செறிந்த, பள்ளி - இடங்களாயுள்ளன; உம்பர்வீடும் பந்தரும்பொழிலும், மலர்பல்லவம் பள்ளி-மலராலும் தளிராலுமாகிய படுக்கைகளையுடையன என்று பிரித்து உரைத்தலும் ஒன்று. பி-ம்:—[1]மணப்பந்தரும். (எ௨)

**எ௩. தெள்வார் மழையுந் திரையாழியு முட்க நாளும்**
**வள்வார் முரசம் மதிர்மாநகர் வாழு மாக்கள்**
**கள்வா [1]ரிலாமைப் பொருள்காவலு மில்லை [2]யாதுங்**
**கொள்வா [1]ரிலாமைக் கொடுப்பார்களு மில்லை மாதோ.**

(இ - ள்.) தெள் வார் மழைஉம்-தெளிவான நீரைச்சொரிகின்ற மேகங்களும், திரை ஆழிஉம் - அலைகளையுடைய கடலும், உட்க - (ஓசையைக் கேட்டு) அஞ்சும்படி, நாள்உம் - தினந்தோறும், வள்வூர் முரசம் அதிர் - பெரியதோற்கயிற்றாற்கட்டிய பேரிகைக ளொலிக்கின்ற, மா நகர் - பெரிய அந்நகரத்தில், வாழும் - வாழ்கின்ற, மாக்கள் - மனிதர்கள், கள்வார் இலாமை - களவுசெய்பவரெவரும் இல்லாமையால், பொருள் காவல்உம் இல்லை - பணத்தை முயற்சிகொண்டு காப்பதும் இல்லை; யாதும் கொள்வார் இலாமை - எப்பொருளையும் வாங்கிக்கொள்பவ ரில்லாமையால், கொடுப்பார்கள் உம் இல்லை - கொடுப்பவர்களும் இலராயினர்; (எ - று.)

காவற்சிறப்பிற்கும் கொடைச்சிறப்பிற்கும் குறைவுகூறும் முகத்தால், அவ்வயோத்திமாநகரில் இருப்பவரது தீயொழுக்கமின்மையையும் பெருஞ்செல்வமுடைமையையும் பெறவைத்தார். இடிகளினாலும் அலைகளினாலும் பேரொலிபடைத்த மேகமும் கடலும் உட்குமாறு முரசு பேரொலிபடவொலிக்கு மென்க; உட்குதல்-நாணுதலுமாம். அவிவேகிகளுள்ளும் கள்வரும் இரப்பவரும் இல்லை யென்பார் 'மாநகர் வாழும் மாக்கள்' என்றார். 'மக்கள்' என்றே பாடங்கொள்ளுதலும் ஒன்று. முதலடியில், வார் - வடசொல். பி - ம்:—[1]இலாமல். [2]யாரும். (எ௩)

**எ௪. கல்லாது நிற்பார் பிறரின்மையிற் கல்வி முற்ற**
**வல்லாரு மில்லை யவைவல்லரல் லாரு மில்லை**

யெல்லாரு மெல்லாப் பெருஞ்செல்வமு மெய்த லாலே
யில்லாரு மில்லை யுடையார்களு மில்லை [1]மாதோ.

(இ - ள்.) (அந்தநகரத்தில்),—கல்லாது நிற்பார் பிறர் இன்மையின் - (படித்தற்கு உரியநூல்களைப்) படியாமல் (வீணுகப் பொழுதுபோக்கிக் கொண்டு) நிற்பவர்கள் வேறு சிலரில்லாமையால், கல்வி முற்ற வல்லார்உம் இல்லை - படிப்பில் முழுதும்வல்லவர்களும் இல்லை; அவை வல்லர் அல்லார்உம் இல்லை - அக்கல்விகளில் வல்லவரல்லாதவர்களும் இல்லை; எல்லாரும் எல்லாம் பெரு செல்வம்உம் எய்தலால் ஏ—எல்லோரும் எல்லா வகைப்பட்ட பெருஞ்செல்வத்தையும் நிரம்பப்பெற்றிருத்தலாலே, இல்லார்உம் இல்லை - வறியவர்களும் இல்லை; உடையார்கள்உம் இல்லை - செல்வவான்களென்று தனியே எடுத்துச்சொல்லத்தக்கவர்களும் இல்லை; (எ - று.)

'நிழலினருமை வெயிலில் அடிபட்டவர்க்கே தெரியும்' என்றபடி கல்வி பொருள் என்றஇவை இல்லாதவரிருந்தால், அந்தக்கல்வி செல்வம் என்றவற்றைப் பெற்றவர்களின் அருமை தெரியும்; இந்நகரத்திலோ யாவரும் கல்விசெல்வங்களைப்பெற்று உயர்ந்திருத்தலால்,இவர்கல்வியாளர் இவர் செல்வர் என்று உயர்த்தி ஒருவரைச் சொல்லமுடியாதென்பதாம். முரண்விளைந்தழிவணியோடு ஏதுவணியும் கலந்துள்ளது காண்க.
பி-ம்:—[1]மன்னோ. (எச)

எரு. ஏகம் முதற்கல் விமுளைத்தெழுந் தெண்ணில் கேள்வி
[1]யாகம் முதற்றிண் பணைபோகி யருந்த வத்தின்
சாகந் தழைத்தன் பரும்பித்தரு மம்ம லர்ந்து
போகங் கனியொன் றுபழுத்தது போலு மன்றே.

(இ - ள்.) (அந்நகரம்),—கல்வி - படிப்பென்கிற, ஏகம் முதல் - ஒரு வித்தானது, முளைத்து—, எழுந்து - மேலெழுந்து, எண் இல் கேள்வி ஆகு- அளவிறந்த கேள்விகளாகிய, அ முதல் திண் பணை - அழகிய சிறந்த வலிய கிளைகளை, போக்கி - வளரவிட்டு, அரு தவத்தின் சாகம் தழைத்து - (செய்தற்கு)அரிய தவமாகிய இலைகள் தழைத்து, அன்பு அரும்பி - அன்பாகிய அரும்பு தோன்றி, தருமம் மலர்ந்து - தருமமாகியமலர் மலர்ந்து, போகம் கனி ஒன்று பழுத்தது போலும் - இன்பமாகியபழமொன்றைப் பழுக்க இடமாயிருத்தல் போலும்; (எ - று.)

அயோத்திமாநகரம் கல்விகேள்விகட்குத் தான் இருப்பிடமாகி, அந்தக் கல்வி முதலியவற்றைப்படைத்தார் தவம் அன்பு தருமம் பேரின்பம் இவற்றைப் பெறுதற்கு இடமாகின்றதென்பதாம். கேள்வியானது கல்வியை வளர்த்தலால், 'கிளை' எனப்பட்டது. தவம் முதல் போகம் ஈறாகவுள்ளன நான்கும் கல்வியின் காரியமாய் முறையே ஒன்றற்கு ஒன்று காரணமாதலால், இங்ஙனங் கூறினர்: உருவகவணியை யங்கமாகக் கொண்டுவந்த தன்மைத் தற்குறிப்பேற்றவணி. இனி, இச்செய்யுட்கு—அந்த அயோத்தியிலே கல்வி கேள்விகளானமைந்து, தவமும் தருமமும் மிகுந்து, அன்பும் போகமும்

நிறைந்து ஒருவனுள னென்று மேற்படலத்திற்குத் தோற்றுவாய்செய்வதாக உரைகொள்வாருமுளர். இவ்வுரையில் ஏகம்முதலென்றது - இக்ஷ்வாகு வமிசத்ததை யென்க. சாகம்-கிளையுமாம். பி - ம்:—[1] ஆகம்முரட்டிணபணே. (எரு)

நகரப்படலம் முற்றிற்று.

## ௪-ஆவது அரசியற்படலம்.

அயோத்திநகரத் தரசனாகிய தசரதசக்கரவர்த்தியினது அரசாட்சி முறைமையைக் கூறும் பாகம்.

௧.—அந்நகர்க்கு அரசன் ஒருவன் உளனென்பது.

**அம்[1]மா ணகருக் கரசன்னர சர்க்கிராசன்**
**செம்மாண் டனிக்கோ லுலகேழினுஞ் செல்ல நின்றா**
**னிம்மாண் கதைக்கோ ரிறையாய விராம னென்னு**
**மொய்ம்மாண் கழலோற் றருநல்லற மூர்த்தி யன்னான்.**

(இ - ள்.) மாண் அ நகருக்கு - மாட்சிமைப்பட்ட அந்த அயோத்தியா புரிக்கு, அரசன் - அரசனுவான், (எத்தன்மையனென்றால்),— அரசர்க்கு இராசன்-(உலகத்திலுள்ள மற்றை) அரசர்களுக்கெல்லாந் தலைவன்; மாண் தனி செம் கோல் - மாட்சிமையுள்ள ஒப்பில்லாத (தனது) நீதிதவறாத அரசாட்சி, உலகு ஏழின்உம் செல்ல - ஏழுலகங்களிலும் தடையில்லாமல் நடக்கும்படி, நின்றான் - சிறந்துநின்றவன்; இ மாண் கதைக்கு - இந்த (ராமாயணமென்ற) பெரியசரித்திரத்துக்கு, ஓர் இறை ஆய - ஒப்பற்ற தலைவனாகிய, இராமன் என்னும் மொய் மாண் கழலோன் - ஸ்ரீராமனென்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற வலிய பெரிய வீரக்கழலையணிந்த குமாரனை, தரு - பெற்ற, நல் அறம் மூர்த்தி அன்னான் - நல்லதருமத்தின்வடிவத்தையொத்தவன்.

அரசர்க்கிராசன்-சக்கரவர்த்தி. செவ்வியகோல்போலுதலால், அரசாட்சியை 'செங்கோல்' என்றார்; வடநூலாரும், தண்டமென்பர். கதைக்கு மாண்பு - தன்னைப்படித்தல் முதலிய செய்தோர்க்கு அறம் பொருள்இன்பம் வீடு என்னும் நால்வகையுறுதிப்பொருள்களையும் தரவல்லதாதல். உலகு என்பது - இங்கே தீவுஎன்று உலகத்தின் ஏகதேசத்தைக் காட்டிற்று; "மாயோன்மேயகாடுறையுலகமும்" என்றவிடத்து 'உலகம்' என்பதுபோல. ஏழு தீவுகளாவன - நாவல் இறலி குசை கிரவுஞ்சம் புட்கரம் தெங்கு கமுகு என்பன. அறமூர்த்தியன்னான் - தருமமே அரசவடிவமெடுத்துவந்தாற்போன்றவன், அரசர்க்கரசன் என்ற பாடம் நாற்சீரடியாக அளவிடும்போது ஓசைக்கு ஏற்குமென்று தோன்றுகின்றது. பி - ம்:—[1] மாநகருக்கு.

௨.—இதுமுதல் நான்குகவிகள் - அவனுடைய சிறப்புக்களைக்கூறும்.

**ஆதிம் மதியும் மருளும்மற னும்ம மைவு**
**மேதின் மிடல்வீ ரமுமீகையு மெண்ணில் யாவு**

நீதிந் நிலேயும் மிவைநேமியி னோர்க்கு நின்ற
பாதிம் முழுதும் மிவற்கேபணி கேட்ப மன்னோ

(இ - ள்.) ஆதி மதி உம் - முதன்மையான உண்மையறிவும், அருள் உம் - இரக்கமும், அறன்உம்-தருமமும், அமைவுஉம் - சாந்தகுணமும், ஏது இல் மீடல் வீரம்உம்-குற்றமற்ற வலிமையுடன்கூடிய பராக்கிரமமும், ஈகை உம் - தானமும், நீதிநிலேஉம் - நீதிமார்க்கத்திற் சலியாமல் நிற்றலுமாகிய, யாஉம் இவை - (அரசர்க்குவேண்டிய) இக்குணங்களெல்லாம், எண்ணில் - ஆலோசித்துச்சொல்லுமிடத்து, நேமியினோர்க்கு - மற்றைச் சக்கரவர்த்திகளுக்கு, பாதி நின்ற - பப்பாதியேயிருந்தன; இவற்கே-இந்தத் தசரத சக்கரவர்த்திக்குத்தான், முழுதுஉம்-முழுமையும் [எல்லாக்குணங்களும்], பணி கேட்ப - ஏவல்கேட்பனவாயிருந்தன; (எ - று.)— மன்,ஓ - ஈற்றசை.

மற்றைச்சக்கரவர்த்திகளிடத்திலுள்ள நற்குணங்களெல்லாங் கூடினலும், தசரதசக்கரவர்த்தியினிடத்துள்ள சற்குணங்களுட் பாதிக்கும் ஈடாகாவென்பதாம். அமைவு - நிறைவுமாம். நேமி - சக்கரம். அரசருடைய ஆஜ்ஞையைச் சக்கரமென்றல் கவிமரபு. ஏது - ஏதமென்பதன் கடைக்குறை. ஆதி மதி முதலியவை - விரித்தல். யாவும் என்பதனால் - உயர்குடிப்பிறப்பு சதுரப்பாடுடைமை ஆழ்கருத்துடைமை முதலியன கொள்க. எண் இல் என்று பிரிப்பினுமாம். முதலிரண்டடிகளில் எண்ணும்மைமிக்குவந்தது-எண்ணுவண்ணம்; "எண்ணுவண்ணமெண்ணுப்பயிலும்" என்பது தொல்காப்பியம். (உ)

ந. மொய்யார் கலிசூழ் முதுபாரின் [1]முகந்து தானக்
கையார் புனலா னனேயாதன கையு மில்லே
மெய்யாய வேதத் துறைவேந்தருக் கேய்ந்த [2]யாரும்
செய்யாத யாக மிவன்செய்து [3]முடித்த மாதோ.

(இ - ள்.) மொய் ஆர்கலி சூழ் முது பாரில் - வலிமைபொருந்திய சமுத்திரஞ்சூழ்ந்த பழமையாகிய பூலோகத்தில்,—முகந்து கை ஆர் தானம் புனலால் - (தசரதசக்கரவர்த்தி) மொண்டு கையிலெடுத்து(த் தாரைவார்த்துக்கொடுத்த) தான ஜலத்தினால், நனேயாதன - ஈரமாகாதனவாகிய, கைஉம் - (அந்தணரது) கைகளும், இல்லே—; மெய் ஆய வேதம் துறை வேந்தருக்கு - உண்மைப்பொருளேயே உணர்த்துவதாகிய வேதத்தின் வழியிலேநடக்கின்ற அரசர்கட்கு, ஏய்ந்த - (செய்தற்கு உரியனவாகப்) பொருந்தியனவும், யாரும் செய்யாத - (மற்றை வேந்தர்களில்) எவருஞ் செய்து முடிக்காதனவுமாகிய, யாகம் - யாகங்களெல்லாம், இவன் செய்து முடித்த - இவன் செய்துமுடித்தனவேயாம்; (எ - று.)

இவனிடத்துத் தானம் வாங்காத அந்தணரும், இவனாற்செய்யப்படாத யாகங்களும் இல்லேயென்பதாம். எல்லாவந்தணரும் இவ்வரசனிடத்துத் தானம் வாங்கியுள்ளாரென்பதை 'தானக்கையார் புனலால் நனேயாதன கையுமில்லே' என்று வேறுவகையாகக் கூறியது - **பிறிதினவிற்சியணி.**

தானம் வாங்கக்கூடியவர் அந்தணரேயாதலால், கையும் என்பதற்கு - அந்தணர்கையும் என்னப்பட்டது. தானஞ்செய்யும்போது, தாரைவார்த்துக் கொடுத்தல், மரபு. வேந்தருக்கேய்ந்தயாகம் - இராசசூயம் அசுவமேதம் முதலியன. [3] மறந்த என்றபாடத்துக்கு - இளமையிலேயே செய்துவிட்டன என்று கருத்துக்காண்க. பி - ம்:—[1] முகந்த. [2] யாவும். (௩)

௪. தாயொக்கு மன்பிற் றவமொக்கு நலம்ப யப்பிற்
சேயொக்கு முன்னின் றொருசெல்கதி யுய்க்கு நீரா
னோயொக்கு மென்னின் மருந்தொக்கு நுணங்கு கேள்வி
யாயப் புகுங்கா லறிவொக்கு மெவர்க்கு [1] மன்னன்.

(இ - ள்.) அன்னன்-அந்தத்தசரதசக்கரவர்த்தி—எவர்க்கும் - எல்லோருக்கும், அன்பின் - மிக்க அன்புஉடைமையால், தாய் ஒக்கும் - பெற்ற தாயை யொத்திருப்பான்: நலம் பயப்பின் - (வேண்டிய) நன்மைகளையெல்லாம் செய்து தருதலால், தவம் ஒக்கும் - தவத்தையொத்திருப்பான்; முன் நின்று ஒரு செல்கதி உய்க்கும் நீரால் - முக்கியனாய்நின்று ஒப்பில்லாத செல்லுதற்கு உரிய நற்கதியிற் செலுத்துதலால், சேய் ஒக்கும் - புத்திரனை யொப்பான்; நோய் ஒக்கும் என்னின் மருந்து ஒக்கும்-(தீயவழியிற்சென்றோரைத் தண்டித்து வருத்துதலால்) நோயையொப்பானாயினும் (தண்ணளி செய்தலால்) மருந்தையும் ஒப்பான்; நுணங்கு கேள்வி ஆய புகும் கால்-சூக்குமமான நூற்பொருள்களை ஆராயப்புகுமிடத்து, அறிவு ஒக்கும் - (ஐயந் திரிபுகளையகற்றித் தெரிவித்தலால்) அறிவை யொப்பான்; (எ - று.)

தாயினும்மிக்க அன்புடையா ரில்லை யாதலால், 'தாயொக்குமன்பின்' என்றார். தவம் வேண்டிய நன்மைகளெல்லாந் தரவல்ல தென்பதனை "வேண்டியவேண்டியாங்கெய்தப்பெறுதலாற் செய்தவ,மீண்டு முயலப்படும்" என்பதனாலும் அறிக, தவம்-முற்பிறப்பிற்செய்த நல்வினையுமாம். கதியென்பது - சிலேடையால், மறுமை உயர்ந்தஒழுக்கம் என்ற இருபொருளைத் தந்தது. புத்திரன் தான் செய்யுங்கிரியைகளினால் தந்தைதாயர்களை உயர்கதி பெறுவித்தலாலும், மக்களில்லாதவர் புத் என்னும்நரகத்தையடைவரென்பவாதலாலும், 'சேயொக்கு முன்னின்று செல்கதி யுய்க்குநீரால்' என்றார். இதனால், நாட்டில் தீக்கருமங்களையொழித்து நற்கருமங்களைநடக்கச்செய்து உயிர்களை உயர்பதமுறுவிக்கின்றனன் தசரதனென்க. மூன்றாமடியினால், அரசர்க்குஉரிய தெறல் தண்ணளி யென்றவற்றையுடைமையைக் கூறினார். இனி இவ்வடிக்கு - (எவனாயினும் ஒருவன் பிறர்க்குத் துன்பத்தைச்செய்து) வியாதியை ஒப்பானாயின், (அவனுக்கு உடனே அழிவைச்செய்தலால்) மருந்தையொப்பானென்றும், (எந்தப்பிராணிக்கு ஆயினும்) வியாதிவந்து கூடுமாயின், (உடனே அதனை ஒழிக்கமுயலுதலால் சக்கரவர்த்தி தானே) மருந்தொப்பானென்றும் உரைக்கலாம். செம்மையென்ற பண்புப்பெயர் ஈறுகெட்டு ஆதிநீண்டுமுன்னின்றமெய்திரிந்த சேய் என்பது - செந்நிறமுள்ள முருகக்கடவுளைப் பண்பாகுபெயராலுணர்த்த, பிறகு, அச்சொல்-குமாரன் என்பதுபோல அழகுமுதலியவற்றைக்கொண்ட புத்திரனென்றபொருளை உவமையாகுபெயராற் காட்டும். பி - ம்:—[1] மன்னே. (௪)

ரு. *ஈந்தே கடந்தா னிரப்போர்கட லெண்ணி னுண்ணூ
லாய்ந்தே கடந்தா னறிவென்னு மளக்கர் வாளாற்
காய்ந்தே கடந்தான் பகைவேலை கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான் றிருவிற்றொடர் போக வெளவம்.

(இ - ள்.) (அவ்வரசன்),—இரப்போர் கடல் - யாசகர்களாகிய சமுத்திரத்தை, ஈந்துஎ கடந்தான் - தானஞ்செய்தலாகிய புணையையடைந்தே தாண்டினுன்; எண் இல் நுண் நூல் என்னும் அளக்கர் - அளவிடமுடியாத நுட்பமாயுள்ள சாஸ்திரங்களென்னுங்கடலை, அறிவு ஆய்ந்துஎ - அறிவினுலாராய்தலாகிய புணையைக்கொண்டே, கடந்தான்—;பகை வேலை - பகைவராகிய சமுத்திரத்தை, வாளால் காய்ந்துஎ-ஆயுதத்தாலழித்தலாகிய புணையைக் கொண்டே, கடந்தான்—; திருவின் தொடர் போகம் வெளவம் - செல்வத்திஞேடு தொடர்ந்துள்ள இவ்வுலகவின்பமாகிய சமுத்திரத்தை, கருத்து முற்ற - மனம் திருத்தியடையும்படி, தோய்ந்துஎ - அநுபவித்தலாகிய புணையைக்கொண்டே, கடந்தான் -; (எ - று.)

இரப்போர் முதலியவர்களைக் கடலென்றதற்கு ஏற்ப, ஈதல்முதலியவற்றைப் புணை யென்று கூருமையால், இஃது - ஏகதேசவுருகவணி. 'கடந்தான்' என்ற சொல் பன்முறை வந்ததும், கடலின்பரியாயச் சொற்கள் பன்முறை வந்ததும், முறையே, சொற்பொருட்பின்வருநிலையும், பொருட்பின் வருநிலையுமாம். 'எண்ணில்' என்ற அடைமொழி கொடுத்ததனுலும்,சாஸ்திரங்களைக் கடலாகக்கூறுவதே மரபாதலாலும், 'நுண்ணூலென்னுமளக்கர்' என்று கூட்டப்பட்டது. நூற்பொருளின் நுண்மையை நூலின் மேலேற்றிக்கூறியது - உபசாரவழக்கு. வாள் - ஆயுதப்பொது. பகை - பண்பாகு பெயர். அளக்கர்-அளத்தற்கு அருமையானது என்பதுபற்றிய பெயர். (ரு)

சா.—அந்த அரசன் பேயர் தசரதனென்பது.

*வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசிய
ருள்ளமு மொருவழி யோட நின்றவன்
றள்ளரும் பெரும்புகழ்த் தயர தப்பெயர்
வள்ளல்வள் ளுறையயின் மன்னர் மன்னனே.

(இ - ள்.) (அம்மன்னவன்),—வெள்ளம்உம் - யாற்றுநீர்ப்பெருக்கும், பறவைஉம் - பட்சிகளும், விலங்குஉம்-மிருகங்களும், வேசியர் உள்ளம்உம் - விலைமகளிரது மனமும், ஒரு வழி ஓட - ஒருவழியிலேயே செல்லும்படி, நின்றவன் - செங்கோல்செலுத்தி நின்றவன்; (அவன் யாவனென்னில்), தள்ள அரு பெரு புகழ் - நீக்குதற்குஅரிய பெருங்கீர்த்தியோடு கூடிய, தயரதன் பெயர் - தசரதனென்று பேர்படைத்த, வள்ளல் - வரையாது கொடுக்குந்தன்மைவாய்ந்த, வள் உறை அயில் மன்னர் மன்னன் - தோலினுலமைக்கப்பட்ட உறையிற்பொருந்திய வேலாயுதத்தையுடைய சக்கரவர்த்தியே; (எ - று.)

இந்த கதாநாயகனுக்குத் தந்தையின்பெயர்,அயோத்திக்கரசனுன தசரத சக்கரவர்த்தியென்றவாறு:முதலிரண்டடிகள்-அம்மன்னவனது ஆட்சிச்சிறப்பை விளக்கும். வெள்ளம்ஒருவழியோடுதல் - மாதம் மும்மாரிபெய்தலால் ஆற்றொழுக்கு மிகுவதும் குறைவது மாகாமல், என்றும் ஒருபடிப்பட இடையருது ஓடுதல். "இயல்புளிக்கோலோச்சுமன்னவனுட்ட, பெயலும் விளையுளுந் தொக்கு"என்பவாதலால்,தவருதுமழைபெய்தற்குச் செங்கோல்ஏதுவாதலறிக. விலங்கும்பறவையும் ஒருவழியோடுதல்-ஒன்றற்கொன்றுபகையுடையனவான விலங்குகளும் பறவைகளும் தம்முட்பகையில்லாது செல்லுதல்: தீநெறியொழுகிச் சனங்கட்குத் தீங்குசெய்யாமை யெனினுமாம். வேசையருள்ளம் ஒருவழியோடுதல் - தமக்குமுதலிற்கிடைத்த நாயகனே பெருஞ்செல்வமும் மிக்ககொடையும் கட்டழகும் இன்பச்சிறப்பும் உடைமையாலென்க. தசரதன்-பத்துத்திசைகளிலும் தடையின்றிச் செல்லவல்ல தேரையுடையவ னென்று பொருள்படும் வடசொல். (௬)

எ.—உலகம்முழுவதையும் அந்தச்சக்கரவர்த்தி எளிதி லாளுதல்.

**நேமிமால் வரைமதி லாக நீள்புறப்**
**பாமமா கடல்கிடங் காகப் பன்மணி**
**வாமமா ளிகைமலே யாக மன்னற்குப்**
**பூமியு மயோத்திமா நகரம் [1]போலுமே.**

(இ - ள்.) மால் நேமி வரை - பெரிய சக்கரவாளகிரியானது, மதில் ஆக - மதிலாகவும், நீள் பாமம் மா புறம் கடல் - நீண்டபரவிய பெரும்புறக்கடலானது, கிடங்கு ஆக - அகழியாகவும், மலை-(பூமியினிடையிலுள்ள குல) பர்வதங்கள், பல் மணி வாமம் மாளிகை ஆக - பலவகையிரத்தினங்களையுங் கொண்ட அழகியவீடுகளாகவும், மன்னற்கு-அந்தத் தசரதசக்கரவர்த்திக்கு, பூமிஉம் - பூமிமுழுவதும், அயோத்தி மா நகரம் போலும் - அயோத்தியென்னும்பெரும்பட்டணத்தை யொத்திருக்கும்; (எ - று.)

ஓரரசன் ஒருநகரத்தை யாளுதல்போலத் தசரதன் பூமிமுழுவதையும் எளிதாக அரசுஆண்டன னென்பதாம்: உருவகத்தையங்கமாகக்கொண்டுவந்த உவமையணி. பாமம் - பரப்பு: பா - பகுதி, அம் - விகுதி, ம் - பெயரிடைநிலை. பி - ம்:—[1]போன்றதே. (எ)

அ.—சக்கரவர்த்தியின் பகையின்மையும், யாவருந்தாளில் வீழும்வெற்றியும்.

**[1]ஆவரும் வன்மைநே ரறிந்து தீட்டலான்**
**மேவருங் கையடை வேலுந் தேயுமாற்**
**கோவுடை நெடுமணி மகுட கோடியாற்**
**சேவடி [2]யணிந்தபொற் கழலுந் தேயுமால்.**

(இ - ள்.) ஆவரும் வல் மை நேர் அறிந்து தீட்டலால் - உண்டாகின்ற வலிய அழுக்கை [துருவை] நன்கு அறிந்து (அந்தத்துரு நீங்கும்படி)தீட்டுதலால், மேவரும் கை அடை வேல்உம் - விரும்பத்தக்க கையிலுள்ள வேற்படையும், தேயும் - தேயாநிற்கும்; கோ உடை நெடுமணி மகுடம் கோடி

யால் - (வந்துபணிகின்ற) அரசரது நீண்ட இரத்தினமயமான கிரீடங்களின் நுனிபடுதலால், சே அடி அணிந்த பொன் கழல்உம் தேயும் - (அவ்வரசனது) சிவந்தபாதத்திற் பூண்ட பொன்னாலாகியவீரக்கழலும்தேய்வடையும்.

ஆவரும் - 'ஆ' என்ற வினைமுதனிலை'வா' என்னுந்துணைவினை பெற்று வந்தது; 'உலவரும், துயல்வரும்' என்ற இடங்களிற்போல: மேவரும் என்பதும் இவ்வாறே. இனிமுதலடியை ஆவர் வன்மை உம் நேர் அறிந்து நீட்டலால் என்று பிரித்துக்கூட்டி - எல்லார் வலிமையையும் நேராக அறிந்து (அவர்களோடு பொருமாறு கூராக்கும்படி வேற்படையைத்) நீட்டுதலால் என்றும், மேவு அரு என்று பிரித்து - (பிறரால்) அடைதற்கு அரிய என்றும் பொருள்கூறுவாருமுளர். பிறரிடத்து இல்லாத மிகச்சிறந்த வேற்படையைத் தாங்கிய இவ்வரசன் பகைவர்வலிமையையறிந்து தன் வேற்படையை ஒருமுறைநீட்டினனாக, அதனையறிந்த பகையரசர் இவனது பாதங்களில் வந்து விழுகின்றன ரென்று கருத்துக்காண்க. வேலும் கழலும், உம்மைகள் - எச்சப்பொருளன. கோ - சாதியொருமை. பி-ம்:—[1]யாவரும். [2]அடைந்த. (அ)

கூ.—தசரதசக்கரவர்த்தியின் வெண்கொற்றக்குடை.

**மண்ணிடை யுயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றித்**
**தண்ணிழல் பரப்பவு மிருளைத் தள்ளவு**
**மண்ணறன் குடைமதி யமையு மாதலான்**
**விண்ணிடை மதியினை மிகையி [1]தென்னவே.**

(இ - ள்.) வளர்ந்து - (தான்) வளர்ச்சிபொருந்தி, தேய்வு இன்றி - (நாளுக்குநாள்) குறைவதென்பது இல்லாமல், மண்ணிடை - இந்தப்பூலோகத்தில், உயிர் தொறும் தண் நிழல் பரப்பஉம் - பிராணிகளிடத்துக் குளிர்ந்த நிழலைப் பரவச்செய்யவும், இருளை தள்ளஉம் - இருளை யொழிக்கவும், அண்ணல் தன் குடை மதி அமையும் ஆதலான் - அவ்வரசனது குடையாகிய சந்திரனே போதுமாகையினால், விண்ணிடை மதியினை - ஆகாயத்தினிடத்துள்ள சந்திரனை, இது மிகை என்ன - இது அதிகப்படியானதென்று கழித்து விடுக; (எ - று.)

கிருஷ்ணபட்சத்தில் தேய்வதென்ற குறையைக்கொண்டதாய் வானத்திலுள்ளதான சந்திரனைப்போல அல்லாமல்,இந்தப்பூலோகத்திலேயேயுள்ள தசரதசக்கரவர்த்தியினது குடைமதி சந்திரன்தொழிலாகிய நிழலைப்பரப்புதல் இருளையொழித்தல் என்ற தொழில்களைச் செய்துவிடுவதால், அந்த விண்மதிவேண்டா வென்க. ஆளுகையைக் குடையென்றலும், மரபு. மதி நிழல்பரப்புதல் - நிலவொளியை வீசுதல்: குடை நிழல்பரப்புதல் - எல்லாவுயிர்க்கும் இன்பஞ்செய்தல்: இருளைத்தள்ளுதல்-துன்பமொழித்தல். என்ன- வியங்கோள். குடைமதி - உருவகம் : விண்மதியினும் குடைமதிக்குத் தேய்வின்மை மண்ணிடையிருத்தல் என்ற தன்மைகளைக் கூறியது - வேற்றுமையணி. பி - ம்:—[1]என்பவே. (கூ)

௧௦.—தசரதசக்கரவர்த்தியின் பாதுகாத்தற் சிறப்பு.

வயிரவான் பூணணி மடங்கன் மொய்ம்பின
னுயிரெலாந் தன்னுயி ரொப்ப வோம்பலாற்
செயிரிலா வுலகினிற் சென்று நின்றுவா
ழுயிரெலா முறைவதோ ருடம்பு மாயினன்.

(இ - ள்.) வயிரம் வான் பூண் அணி - வச்சிரவரதனத்தாலியன்ற சிறந்த ஆபரணங்களை யணிந்தவனான, மடங்கல் மொய்ம்பினன் - சிங்கம் போன்ற வலிமையையுடைய அவ்வரசன்,—உயிர் எலாம் தன் உயிர் ஒப்ப ஓம்பலால் - (உலகத்திலுள்ள) பிராணிகளை யெல்லாம் தன்னுயிர்போல (எண்ணிப்) பாதுகாத்தலால், செயிர் இலா உலகினில் - குற்றமற்ற இந்த நிலவுலகத்திலேயுள்ள, சென்று நின்று வாழ் உயிர் எலாம் - சரமாகவும் அசரமாகவும் வாழ்கின்ற எல்லா வுயிர்வர்க்கங்களிலும், உறைவது - (ஒருங்கே) தங்குதலையுடைய, ஓர் உடம்புஉம் ஆயினன் - உடம்பையும் போன்றான்.

உலகத்துயிர்களெல்லாந் தங்குகின்ற உடம்பு ஒன்று இல்லாமையால், இஃது - இல்பொருளுவமையணி: இனி, உள்பொருளுவமையாகவே கொண்டு, பிரளயகாலத்தில் எல்லாவுயிர்களையும் தன்வயிற்றிற் கொண்டு பாதுகாக்கின்ற திருமாலின் திருமேனி போன்றா னெனினுமாம்; எல்லா வுயிர்கள்மீதும் அன்புபாராட்டுந்தன்மையன் தசரத னென்றவாறு. சென்று வாழுயிர் - இயங்கும் பிராணிகள்: நின்று வாழுயிர் - இயங்குந்தன்மையில்லாத மரம் புல் முதலியன. பூண் - வலயமென்றுகொண்டு, வயிரவான்பூண் அணிமொய்ம்பினன் என்பதற்கு - வயிரமிழைத்துச் செய்யப்பெற்ற சிறந்த வலயமணிந்த புயத்தை யுடையவ னெனினுமாம். (௧௦)

௧௧.—தசரதசக்கரவர்த்தியின் ஆஜ்ஞாசக்கரம்.

குன்றென வுயரிய குவவுத் தோளினன்
வென்றியந் திகிரிவெம் பரிதி யாமென
வொன்றென வுலகிடை யுலாவி மீமிசை
நின்றுநின் றுயிர்தொறு நெடிது காக்குமே.

(இ - ள்.) குன்று என உயரிய குவவு தோளினன் - மலைபோலவுயர்ந்த திரட்சியையுடைய தோள்களையுடைய அந்தத் தசரதசக்கரவர்த்தியினது, வென்றி அம் திகிரி - ஜயத்தையுடைய அழகிய ஆஜ்ஞாசக்கரமானது, வெம் பரிதி ஆம் என - உஷ்ணகிரணங்களையுடைய சூரியமண்டலம்போல, மீமிசை நின்று நின்று - மிக்கமேலிடத்திலே நின்றுகொண்டு, ஒன்று என உலகிடை உலாவி - இணையற்றதென்னும்படி உலகமுழுவதுஞ் சஞ்சரித்து, உயிர்தொறும் - எல்லாவுயிர்களிடத்தும், நெடிது - மிகுதியாக, காக்கும் - காத்தற்றொழிலைச்செய்யும்; (எ - று.)

மேல்நிற்றல் உலகம்முழுவதுஞ்சஞ்சரித்தல் உயிர்களைப்பாதுகாத்தல் என்ற தன்மைகளில் சூரியன் திகிரிக்குஉவமையாவன். ஒன்றுஎன உயிர்

தொறும் நின்று நின்று நெடிதுகாக்கும்என இயைத்து — ஏகமாய் [தனித்து] நிற்கும் பரப்பிரமம்போல உயிர்தோறும் நின்று மிகவும் காக்கும் எனக்கூறு தலுமாம்; இப்பொருளில், மேல்நின்று உலகமுழுவதும் உலாவுதலிற் பருதியும், உயிர்தொறும்நின்று காத்தலிற் பரப்பிரமமும் திகிரிக்கு உவமையென்க. அடுக்கு - இடைவிடாமைப்பொருளது. (கக)

கஉ.—தசரதன் உலகமுழுவதையும் கருத்தோடு பாதுகாத்தல்.

எய்யென வெழுபகை யெங்கு மின்மையான்
மொய்[1]பெறு தினவுறு முழவுத் தோளினன்
வையக முழுவதும் [2]வறிஞ னோம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றான்.

(இ - ள்.) எய் என - (என்மேல் அம்பை) எறிஎன்று வீரவாதஞ்செய்து கொண்டு, எழு - (தன்மேல்) வருகின்ற, பகை - பகைவர்கள், எங்கும் - எவ்விடத்தும், இன்மையான் - இல்லாமையினால், மொய் பெறு தினவு உறு - போரைப்பெறாமல் தினவு மிகுந்த, முழவு தோளினன் - மத்தளம்போலத் திரண்டுருண்ட தோள்களையுடையனான தசரதன்,—வையகம் முழுவதும் - பூலோகமுழுவதையும், வறிஞன் ஓம்பும் ஓர் செய் என - தரித்திரனாயிருப்பவன் காக்கின்ற சிறுகழனியைப்போல, காத்து - பாதுகாத்து, இனிது அரசு செய்கின்றான் - நன்றாக அரசாட்சி செய்பவனானான்; (எ - று.)

பொருளில்லாத ஒருவன் தனக்குஉள்ள சிறுகழனியை எங்ஙனம் மிக்க கருத்தோடு யாதொருதீங்கும் நிகழாதபடி காத்திடுவனோ, அங்ஙனம் உலகம் முழுவதையும் காத்தனன், தசரதசக்கரவர்த்தி யென்பதாம். 'ஒருசெய்' என்ற தொடரால், அங்ஙனம் உலகமுழுவதையும் காக்கையில் சக்கரவர்த்திக்குச் சிறிதும் சிரமமில்லை யென்பது தொனிக்கும். பி - ம்:—[1]பொரு. [2]வறியன். (கஉ)

அரசியற்படலம் முற்றிற்று.



# ரு-ஆவது திருவவதாரப்படலம்.



திருமால் இராமன் முதலிய நான்கு திருமேனியுடனே தசரதசக்கரவர்த்திக்குப் புதல்வனாகத் திருவவதரித்ததைக் கூறும் பகுதி.

க.—இதுமுதல் நான்குகவிகள் - குளகம்; தசரதன் தனக்குப்புத்திரர் பிறவாக்குறையை வசிட்டனிடஞ் சொல்லுதல்.

ஆயவ னொருபக லயனை யேநிகர்
தூயமா [1]முனிவரற் றொழுது தொல்குலத்
தாயருந் தந்தையுந் தவமு மன்பினன்
மேயவான் கடவுளும் பிறவும் வேறுநீ.

(இ - ள்.) ஆயவன் - அத்தன்மைகளையுடையவனாகிய தசரதன்,—ஒரு பகல்-ஒருநாள்,அயனை நிகர் தூய மா முனிவரன்-பிரமதேவனையேயொத்த பரிசுத்தியையுடைய சிறந்த இருடிச்சிரேட்டனான வசிட்டமுனிவனை, தொழுது-வணங்கி,—தொல் குலம் தாயர்உம்-தொன்று தொட்டுவருகிற உயர்குலத்திற் பிறந்த தாய்மார்களும், தந்தைஉம்—,தவம்உம்-,அன்பின் நான் மேய வான்கடவுள்உம்-பக்தியோடு விரும்பியடையப்படுகின்ற சிறந்த குலதெய்வமும், பிறஉம்-மற்றும்இம்மைக்குஉறுதிதரும்பொருள்களும், வேறுஉம் - மறுமைக்குஉறுதிதரும்பொருள்களும், நீ - (எனக்கு) நீயேயாவாய்; (எ - று.) — இச்செய்யுளிலுள்ள 'தொழுது' என்ற வினையெச்சம், மேல் நான்காங்கவியில் 'என்றனன்' என்பதனோடு முடியும்.

தசரதன் தன்குறையை யொழிக்கவேணு மென்று வசிட்டமுனிவனை வேண்டிக்கொள்ளப்போவதால், முதலில் அம்முனிவனை வணங்கித் துதிக்கின்றன னென்க. வசிஷ்டன் - சூரியகுலத்தரசர்க்குக் குருவும் மந்திரியுமாகுபவன்; பிரமபுத்திரன்: இச்சொல் - இந்திரியங்களைவென்றவனென்று பொருள்படும். தாய்தந்தையர் தன்னையுண்டாக்கியவராதலாலும், இவ்வுலகத்திற்றோன்றிய ஒருவன் தான் இம்மைமறுமைப்பயன்களை நாடுவதற்குத் தவம் சாதனமாயிருத்தலாலும்,தவத்தைச் செய்யும் பிராணிக்குப் பயனையளிப்பவன் கடவுளேயாதலாலும் அந்நான்கும் நீயேயென்று, முனிவனை மன்னவன் துதிக்கின்றனனென்க. சிறப்புப்பற்றியேனும், ஈன்றதாய் ஊட்டுந்தாய் முலைத்தாய் கைத்தாய் செவிலித்தாய் எனத் தாய்மார் ஐவராதலாலேனும் 'தாயர்' எனப் பன்மையாற் கூறியது. அன்பின் நான் மேய என்று பிரித்து உரைப்பாரு முளர். தாயரும் தந்தையும் தவமும் கடவுளும் பிறவும், (பிறர்க்கு), வேறு - தனித்தனியேயிருக்கும்; (எனக்கோ), நீ - (தாயர்முதலியயாவும்) நீதான் எனினுமாம். "முனிவரற்றொழுது"-இயல்பின்விகாரம். பி - ம்:—[1]முனிவனை.　　(க)

உ. எங்குலத் தலைவர்க ளிரவி தன்னினுந்
தங்குலம் [1]விளங்குறத் தரணி தாங்கினார்
மங்குந ரில்லென வரம்பில் வையக
மிங்குன தருளினி லினிதி [2]னோம்பினேன்.

(இ - ள்.) எம் குலம் தலைவர்கள் - எமது குலத்து முன்னரசர்கள், இரவிதன்னின்உம் தம் குலம் விளங்குற - சூரியனைக்காட்டிலும் (மிகுதியாகத்) தங்கள்குலம் (கீர்த்தியாற்) பிரகாசிக்கும்படி, மங்குநர் இல் என-(ஒளி) மழுங்கினவர்கள் எவருமில்லையென்றுசொல்ல, தரணி தாங்கினார் - இவ்வுலகத்தைப் பாதுகாத்தார்கள்; வரம்பு இல் வையகம் - எல்லையில்லாத நிலவுலகத்தை, இங்கு - இக்காலத்தில், (யானும்), உனது அருளினால்—, இனிதின் ஓம்பினேன் - இனிமையாகப்பாதுகாத்தேன்; (எ - று.)

'உனதருளினால்'என்பதை முன்வாக்கியத்தோடுங் கூட்டி,என்முன்னோர்களும் யானும் இவ்வுலகத்தை மிக்கபுகழுடன் ஆட்சிபுரிவது உனது

திருவருளினாலேயேயென்று வசிட்டனைப் புகழ்கின்றனன் தசரதனென்க. தரணி - தரணீ: பொருள்களைத் தரிப்பது. மங்குநர், ந் - பெயரிடைநிலை. பி - ம்:—[1] விளங்கிட. [2] ஓம்பினன். (௨)

௩. அறுபதி னாயிர மாண்டு மாண்டுற
வுறுபகை யொடுக்கியிவ் வுலகை யோம்பினேன்
பிறிதொரு குறையிலை யெற்பின் வையக
[3]மறுகுறு மென்பதோர் மறுக்க முண்டரோ.

(இ - ள்.) அறுபதினாயிரம் ஆண்டு மாண்டு உற - அறுபதினாயிரவருஷம் கழிந்துவிட, உறு பகை ஒடுக்கி-மிக்க பகைவர்களை யடக்கி, இ உலகை ஓம்பினேன் - இந்தலோகத்தைக் காத்தேன்; 'என் பின் - எனது காலத்திற்குப்பிறகு, வையகம் - பூலோகம், மறுகுறும் - (காப்பவரில்லாமையாற்) கலங்கிவிடுமே,' என்பது-என்பதாகிய, ஓர் மறுக்கம்-ஒருமனக்கலக்கம்மாத்திரம், உண்டு - (எனக்கு) உள்ளது: (இதனைத்தவிர்த்து), பிறிது ஒரு குறை இலை - வேறொரு குறையுமில்லை; (எ - று.)

அறுபதினாயிரவருஷகாலம் யாதொருகுறையுமின்றி யான் அரசாண்டும், என்காலத்திற்குப்பிறகு இந்தஇராச்சியத்தை ஆளுதற்குச் சந்ததியில்லையேயென்ற ஒருகுறைமாத்திரம் எனக்கு உண்டாயிருக்கின்றதென்பதாம். இரண்டாமடி - முற்றுமோனை. ஆண்டும் என்றும் பிரிக்கலாம். பி-ம்:—[3] மறுகுவதென்பது. (௩)

௪. அருந்தவ முனிவரு மந்த ணாளரும்
வருந்துத லின்றியே வாழ்வின் வைகினா
[1]ரிருந்துய [2]ருழக்குவ ரெற்பி னென்பதோ
ரருந்துயர் வருத்துமென் னகத்தை யென்றனன்.

(இ - ள்.) அரு தவம் முனிவர்உம்-(பிறராற்செய்தற்கு) அரிய தவத்தையுடைய முனிவர்களும், அந்தணாளர்உம் - அழகியகுளிர்ந்தஅருளையுடைய பிராமணர்களும், வருந்துதல் இன்றிஏ - துன்பப்படுதலில்லாமல், வாழ்வின் வைகினர் - நல்வாழ்வில் (இதுவரையில்) தங்கியிருந்தார்கள்; (அப்படியிருந்தவர்கள்), என் பின் - என்காலத்துக்குப்பின்பு, இரு துயர் உழக்குவர் - (காப்பவரில்லாமையால்) மிக்கதுன்பத்தை அனுபவிப்பார்களே, என்பது - என்பதாகிய, ஓர் அரு துயர் - (நீங்குதற்கு) அரியதுன்பமொன்றே, என் அகத்தை வருத்தும் - என்மனத்தைவருத்தாநின்றது, என்றனன் - என்று கூறினான்; (எ - று.)

கீழ்க்கவியினால் தனக்குச் சந்ததியில்லாமையால் 'எற்பின் வையகம் மறுகுறுமே' என்று பொதுவாகக்கூறிய அரசன், தன்குறையை வற்புறுத்து தற்பொருட்டு விரித்துக்கூறுகின்றனனென்க. புதல்வனைவிரும்புவது முனிவர்முதலியோரைக் காத்தற்பொருட்டேயன்றித் தன்நன்மையைக் கருதியன்றென்பது, பெறப்படும். பி - ம்:—[1] பெருந்துயர். [2] உழக்குநர். (௪)

ரு, சு.—இதுவும், அடுத்தகவியும் - குளகம்; அமரர்க்குத் திருமால் கூறியருளிய வார்த்தையை வசிட்டன் நினைத்தலைத் தெரிவிக்கும்.

ரு. முரசறை செழுங்கடை முத்த மாமுடி
யரசர்தங் கோமக னனைய கூறலும்
விரைசெறி கமலமென் பொகுட்டு மேவிய
வரசரோ ருகன்மகன் [1]மனத்தி னெண்ணினான்.

சு. அலைகட னடுவணோ ரனந்தன் மீமிசை
மலையென விழிதுயில் வளரு மாமுகில்
கொலைதொழி லரக்கர்தங் கொடுமை [2]தீர்ப்பனென்
றுலைவுறு மமரருக் குரைத்த வாய்மையை.

(இ - ள்.) (ரு) முரசு அறை - பேரிகைகளொலிக்கின்ற, செழு கடை - பெரிய அரண்மனைவாயிலையுடைய, முத்தம் மா முடி-முத்துக்களைப்பதித்த பெரிய கிரீடத்தையணிந்த, அரசர்தம் கோமகன் - தசரதசக்கரவர்த்தி, அனைய - அவ்வார்த்தைகளை, கூறலும் - சொன்னவளவில்,—விரை செறி மென் கமலம் பொகுடு - வாசனைமிகுந்த மென்மையான தாமரைமலரின் கொட்டையிலே, மேவிய - தங்கிய, வரம் சரோருகன் - சிறந்த பிரமதேவனது, மகன் - புத்திரனான வசிட்டன்,—(சு) அலை கடல் நடுவண் - அலையுந் தன்மையுள்ள திருப்பாற்கடலினது நடுவிலே, ஓர் அனந்தன் மீமிசை - ஒப்பற்ற திருவனந்தாழ்வான்மேலே, மலை என - (நீல) மலைபோல, விழி துயில் வளரும்-கண்களால் அறிதுயி லமர்கின்ற, மா முகில் - கரியமேகம்போன்ற திருமால், கொலை தொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பன் என்று-(நல்லோரைக்) கொல்லுந்தொழிலையுடைய (இராவணன்முதலிய) அரக்கரது உபத்திரவத்தை ஒழிப்பேனென்று, உலைவு உறும் அமரருக்கு உரைத்த - வருத்தமிக்க தேவர்கட்கு (அபயமளித்து) ச் சொன்ன, வாய்மையை - சொல்லை, (ரு) மனத்தின் - (தன்)மனத்திலே, எண்ணினான்—; (எ - று.)

இவ்வரசனது குறையைத்தீர்ப்பதற்கு என்னசெய்யலாமென்று வசிட்ட முனிவன் நினைக்கையில், தேவர்கட்குத் திருமால் அபயமளித்தது அம்முனிவனது நினைவிற்கு வந்ததென்பதாம். கண்ணுக்குஎதிரேநடவாமல் அபிரதியட்சமான செயலையும் ஞானக்கண்ணாலறியும் ஆற்றல் வாய்ந்தவன் இம்முனிவனென்க. பொகுடு - தாமரையிதழ்களினிடையேயிருக்குங் கொட்டை. ஸரோருஹம் - பொய்கைநீரில்முளைப்பதென்று தாமரைக்குக் காரணக்குறி. சரோருகன் - திருமாலினதுநாபிக்கமலத்தில் வாழ்பவன். இச்சொல், பிரமனென்றமாத்திரமாய்நின்றது. சந்தவின்பம்நோக்கி 'கொலைதொழில்' என இயல்பாயிற்று. பி - ம்:—[1] மனத்தில். [2] தீர்ப்பென். (ரு, சு)

இனி இருபத்துமூன்றுகவிகளால் - கீழ் திருமால் அரக்கர்கொடுமை தீர்ப்பேனென்று கூறியவாய்மையினை விவரிக்கின்றார்:—

எ.—தேவர்கள் சிவபிரானிடத்துத் தம்குறைகூற, அவன்தன்னாலாகாதென்று பிரமனை நாடிச்செல்லுதல்.

சுடுதொழி லரக்கராற் றொலைந்து வானுளோர்
கடுவமர் களனடி கலந்து கூறலும்
படுபொரு ளுணர்ந்தவப் பரமன் [1]யாமினி
[2]யடுவதில் லெனமறுத் தவரொ டேகினான்†.

(இ - ள்.) வான் உளோர் - மேலுலகத்திலுள்ள இந்திரன் முதலிய தேவர்கள், சுடு தொழில் அரக்கரால் தொலைந்து - (பிறரை) வருத்துந்தொழிலையுடைய அரக்கர்களால் மிகவும் வருந்தி, கடு அமர் களன் அடி கலந்து- (பாற்கடலிற்றோன்றியஆலாகலமென்னும்) விஷம்பொருந்திய கண்டத்தையுடைய சிவபிரானது திருவடிகளை யடைந்து, கூறலும் - (அரக்கரால் தமக்கு உண்டாயிருக்குந்துன்பத்தைச்) சொன்னவளவில்,—படு பொருள் உணர்ந்த அ பரமன் - நடந்த செய்தியை(த் தேவர்களால்) அறிந்த மேலான அக்கடவுள்,'யாம் இனி அடுவது இல்-நாம் இனிமேல் (அரக்கரை)அழிக்குஞ் செயல் ஆவதில்லை',என - என்று, மறுத்து - தடுத்துச்சொல்லி, அவரொடு - அத்தேவர்களுடனே, ஏகினான் - (தானுஞ்) சென்றான்; (எ - று.)

தேவர்கள் சிவபெருமானையடைந்து கூறுதலும், தேவர்கள் இராவணனாதியரான அரக்கரால் அலைக்கப்படுவதையறிந்த அக்கடவுள் 'அவ்வரக்கரை யழித்தல் எம்மாலாகாது' என்று சொல்லி,அத்தேவர்களுடனே பிரமனுள்ள விடத்துக்குச் சென்றனனென்க. சுடு தொழில் என்பதற்கு - (நினைக்கும் மனத்தையுஞ்) சுடுகின்ற (அத்துணைக்) கொடுந்தொழில் என்றும், படுபொருள்உணர்ந்த என்பதற்கு - (இனிமேல்) நடக்கப்போகின்ற செயலை)த் தன் ஞானக்கண்ணினால்) உணர்ந்த என்றுமாம். பி - ம்:—[1]யானினி. [2]அடுகில னென. (எ)

அ.—சிவபிரான் பிரமனையடைந்து தேவர்களின் குறையைக் கூறுதல்.

வடவரைக் குடுமியி னடுவண் மாசறு
சுடர்மணி மண்டபந் துன்னி நான்முகக்
கடவுளை யடிதொழு [1]தமர கண்டக
ரிடிநிகர் வினையம தியம்பி னனரோ.

(இ - ள்.) வட வரை குடுமியின் நடுவண் - வடக்கேயிருக்கும் மேருமலையின் சிகரத்தின் நடுவிலேயுள்ள, மாசு அறு சுடர் மணி மண்டபம் துன்னி - குற்றமற்ற ஒளியையுடைய அரதனமயமான மண்டபத்தை (த்தேவர்களுடனே சிவபிரான்)அடைந்து,நான்முகன்கடவுளை அடி தொழுது,

† இந்தப்பாடலின் பின்னே "கறைமிடற்றண்ணலுங் கடவுளோர்களு, மறைமுதற் கிழவனை வந்துநண்ணலு, முறைமையிற் கடன்முறை முற்றிமுண்டகத், திறைவனு மவரொடு மினிதினேகினான்" என்று ஒருபாடல் பலஏட்டுப்பிரதிகளிற் காணப்படினும், கதைத்தொடர்ச்சிக்கு வேண்டாமையாலும் பலபிரதிகளிற் பயிலவழங்காமையாலும் உரை யெழுதப்படவில்லை.

நான்கு திசைகளையும் நோக்கிய நான்குமுகங்களையுடையவனான பிரம தேவனைத் திருவடி வணங்கி, அமரகண்டகர் இடி நிகர் வினையம் அது - தேவர்கட்கு விரோதிகளான அசுரர்களுடைய இடிபோலக்கொடிய அச் செயலை, இயம்பினான் - சொன்னான்; (எ - று.) - அரோ - ஈற்றசை.

"தடவரையினடுவுச்சிதனின்மூளைத்தசிகரத்தின், வடிவுடையமனோவதி தான்மலரயன்வாழ்புரி" என்றபடி மகாமேருமலையின் நடுவுச்சியான மனோ வதியென்பது பிரமனுறைகின்ற இடமாதலால், அங்குத் தேவர்களுடனே சிவபிரான் சென்று பிரமனை யடிதொழுது தேவர்கட்கு அரக்கரால் நேர்ந் துள்ள துன்பத்தைக் கூறினனென்க. மேரு எவ்விடத்திலுள்ளதென்றால் வடக்கிலுள்ளதெனவேண்டுதலின், 'வடவரை' என்றார். கண்டகம் - முள்: அதுபோலவருத்துபவர் - கண்டகர். வினை - சாதியொருமை: அஃது அம் முச்சாரியைபெற்று வந்தது. பி - ம்:—[1]அமரர்...இயம்பினரரோ.　(அ)

௯.—தன்னாலியன்றஉதவியைத் தான் செய்துள்ளதாகப் பிரமன் கூறுதல்.

பாகசா தனன்றனைப் பாசத் தார்த்தடன்
மேகநா தன்புகுந் திலங்கை மேயநாட்
போகமா மலருறை [1]புனிதன் மீட்டமை
தோகைபா கற்குறச் சொல்லி னானரோ.

(இ - ள்.) அடல் மேக நாதன் - வலிமையையுடைய மேகநாதனென் னும் இராவணன்மகன், பாகசாதனன்தனை - தேவேந்திரனை, பாசத்து - கயிற்றுவடிவமானதொருபடைக்கலத்தால், ஆர்த்து - கட்டி, இலங்கை புகுந்து மேய நாள் - இலங்காபுரியிற்புகுந்து இருந்த காலத்தில், மீட்டமை- (தான் அவ்விந்திரனை) மீட்டுவந்தசெய்தியை, போகம் மா மலர் உறை புனி தன் - இனிமையான சிறந்த தாமரைமலரிலேவாழ்கின்ற பிரமதேவன், தோகை பாகற்கு - மயில்போலுஞ்சாயலையுடைய உமாதேவியை (த் தன் னிடப்)பக்கத்திற்கொண்டுள்ள சிவபிரானுக்கு, உற சொல்லினான் - பெரி தாகச்சொன்னான்; (எ - று.)

இனிஎன்னாற்செய்யலாவதில்லையென்பதைக்குறிப்பித்தற்கு, பிரமதே வன் தான் இந்திரனைச் சிறைமீட்டசெய்தியை உருத்திரமூர்த்தியினிடஞ் சொன்னானென்க. இராவணன் தன்பரிவாரத்தோடுசென்று திக்குவிசயஞ் செய்தகாலத்தில் வானுலகத்துக்குச்சென்று தேவர்களோடுபொருகையில் இராவணன்மகனான மேகநாதன் இந்திரனைக்கட்டி இலங்கையிற்சிறைவைத் தானாக,அதனையுணர்ந்த பிரமதேவன் நல்வார்த்தைசொல்லி 'இந்திரனை வென்றதனால் உனக்கு இந்திரசித்தென்றுபேராகக்கடவது' என்று வரமளி த்து அவ்விந்திரனைச் சிறைவிடுவித்த செய்தியை உத்தரராமாயணத்திற் காண்க. பிறந்தபொழுது அழுத குரல் மேகத்தொனிபோன்றிருந்ததனால் மந்தோதரிகுமாரனுக்கு 'மேகநாதன்' என்று பெயரிடப்பட்டது. பாகசா தனன் - பாகனென்னும்அசுரனைக்கொன்றவன். தோகை - பெண்ணுக்கு இருமடியாகுபெயர். 'போகமாமலருறைபுனிதவொல்லையி, னேகிநீமீட்டமை யியம்பவேண்டுமோ' என்ற பாடத்திற்கு - மாமலர் உறை புனித - பிரமதே

வனே! மேகநாதன் இலங்கைமேயநாளில், இந்திரனைப்பாசத்தால் ஆர்த்து, போக - (இலங்கையிற்) போய்விட, நீ ஒல்லையின்எகி அவனை மீட்டமை இயம்பவேண்டுமோ? என்று தேவர்கள் பிரமனைத் துதித்தன ரென்க. ஆகவே, இப்போதும் எமதுகுறையைத்தீர்த்து உதவவேணுமென்பது, குறிப் பெச்சம். பி-ம்:—[1]சொல்விஞரரோ. இந்தப்பாடத்தில்அமரர்எழுவாய். (கூ)

கம.—பிரமவுருத்திரர் திருமாலினல்தான் அரக்கரிடர் தீரவேணுமென்று நினைத்தல்.

இருபது கரந்தலை யீரைந் தென்னுமத்
திருவிலி வலிக்கொரு செயலின் றெங்களாற்
கருமுகி லெனவளர் கருணை யங்கடல்
பொருதிடர் தணிக்கினுண் டெனும் [1]புணர்ப்பினர்.

இதுமுதல்மூன்றுகவிகள்-குளகம்.

(இ-ள்.) 'கரம் இருபது தலை ஈர் ஐந்து என்னும்-கைகள்இருபதும் தலைகள்பத்துமாகுமென்றுசொல்லப்படுகிற, அ திரு இலி - நல்லறிவாகியசெல்வமற்றவனை அந்தஇராவணனது, வலிக்கு - பலத்தையொழிப்பதற்கு, எங்களால் ஒரு செயல் இன்று - எம்மிருவராலுஞ் செய்யக்கூடியதொரு பரிகாரச்செயல் இல்லை; கரு முகில் என வளர் கருணை கடல் - காளமேகம்போல(க் கருந்தோற்றத்துடனே) திருக்கண்வளர்ந்தருளுகிற கிருபாசமுத்திரமாகிய திருமால், பொருது-(அவனுடன்)போர்செய்து, இடர் தணிக்கின்-(அரக்கரால்தோன்றுந்துன்பத்தைத்) தணித்தால், உண்டு - (உய்வு) உண்டாம்,' எனும் - என்கின்ற, புணர்ப்பினர் - ஆலோசனையுடையவர்களாய்,— (பிரமனும் உருத்திரனும்), (எ-று.)—'நெஞ்சினல் வழுத்தி'என அடுத்த கவியோடு தொடரும்.

'இராவணனையொழிப்பது, நம்மால்முடியாதகாரியம்; திருமால் தனது கருணையால் அவ்வரக்கனையொழித்தால்தான் அரக்கரால் நேருந் துயர் நீங்கத் தேவர்கட்கு உய்வுஉண்டாகும்' என்று அந்தப்பிரமனும் உருத்திரனும் ஆலோசித்தன ரென்பதாம். திரு - இலக்குமிகடாட்சமென்றுமாம்; அருளாகிய செல்வமெனினும் பொருந்தும்; "அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்" என்றார் நாயனார். கருணையங்கடல், அம் - சாரியை; அழகிய எனினுமாம். பி-ட:—[1]புணர்ப்பினல். (கம)

கக.—பிரமனும் உருத்திரனும் திருமாலை மனத்தினல் தியானித்தல்.

திரைகெழு பயோததித் துயிலுந் தெய்வவான்
மரகத மலையினை வழுத்தி நெஞ்சினற்
கரகம லங்குவித் திருந்த காலையிற்
பரகதி யுணர்ந்தவர்க் [1]குதவு பண்ணவன்.

(இ-ள்.) திரை கெழு பயோததி துயிலும் - அலைகள் மிக்க திருப்பாற்கடலிலே யோகநித்திரை செய்கின்ற, தெய்வம் வான் மரகதம் மலையினை - தெய்வத்தன்மையுள்ள பெரிய மரகதரத்தினமயமான மலையைப்

போன்ற திருமாலை, நெஞ்சினால் வழுத்தி - மனத்தினால் தியானித்தலோடு (வாயினால்) துதித்து, கர கமலம் குவித்து இருந்த காலையில் - செந்தாமரை மலர்போலும் (தமது) கைகளைக் கூப்பிக்கொண்டு இருந்த காலத்தில்,— உணர்ந்தவர்க்கு பரகதி உதவு பண்ணவன் - (தனதுசொரூபத்தை யுள்ளபடி) அறிந்தவரான தத்துவஞானிகட்குப் பரமபதத்தைக் கொடுக்குங் கடவுளான அத்திருமால்,—(எ - று.)—'கலுழன்மேல்வந்துதோன்றினான்' என அடுத்த செய்யுளில் முடியும்.

போன பாடலில் 'புணர்ப்பினார்' என்பதை முற்றாகவுரைத்து, தேவர்கள் திரிகரணங்களாலும் திருமாலைவழிபட்டன ரெனினுமாம். பயஸ்-பால்: உததி - சமுத்திரம்: 'பயஉததி' என்று வடநூல்விதிப்படி வரவேண்டியது தமிழில் பயோததியென விகாரப்பட்டுவந்தது. நெஞ்சினால் வழுத்தி - மனத்தினால்தியானித்து என்பாருமுளர். பரகதி - எல்லாப்பதவிகளினும் மேலான பரமபதம். பி - ம்:—[1] உதவும். (கக)

கஉ.—திருமால் கருடன்மேல் தோன்றிக் காட்சிதருதல்.

கருமுகி றாமரைக் காடு பூத்துநீ
டிருசுட ரிருபுறத் தேந்தி [1]யேடவிழ்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினான்.

(இ - ள்.) கரு முகில் - நீலமேகமானது, தாமரை காடு பூத்து-(தன்னிடத்தே) செந்தாமரைமலர்த்தொகுதி மலரப்பெற்று, நீடு இரு சுடர் இரு புறத்து ஏந்தி - நெடுந்தூரம் விளங்குகின்ற சூரியசந்திரராகிய இரண்டு சோதிகளையும் (தன்) இரண்டு பக்கங்களிலே தரித்துக்கொண்டு, அவிழ் ஏடு திருவொடும் - அலர்ந்த தாமரைமலரில்வாழ்கின்ற இலக்குமியுடனே, பொலிய - விளங்க, ஓர் செம் பொன் குன்றின்மேல் வருவ (து) போல்-ஒரு செம்பொன்மலைமீது (ஏறி) வருவதுபோல, கலுழன்மேல் வந்து - கருடாழ்வான்மேல் (ஏறி) வந்து, தோன்றினான் - (அந்தத்தேவர்கட்குமுன்னே) காட்சிதந்தான்; (எ - று.)

இல்பொருளுவமை. ஏடு - மலருக்குச் சினையாகுபெயர். "பொன்மலைமேலெழுந்தமாமுகில் போன்றுளர் வந்துகாணீர், அஞ்சிறைப்புள்ளுமொன்றேறிவந்தார்" என்றார், திருமங்கையாழ்வாரும். கருமுகில் - நீலமேனிக்கும், தாமரைக்காடு - "வாய்கண்கையுந்திபதம்"என்னும் அவயவங்கட்கும், சந்திரசூரியர் - சங்கசக்கரங்கட்கும், பொன்மலை - கருடனுக்கும் உவமை. காடு திரளென்னும் பொருளதாதலை "ஆம்பலாய் மலர்க்காடு" என்பதற்கு நச்சினார்க்கினியர் கூறிய உரையாலும் உணர்க. பி - ம்:—[1] ஏந்தலர். (கஉ)

கங.—திருமாலைத் தேவர்கள் வணங்குதல்.

எழுந்தனர் கறைமிடற் றிறையுந் தாமரைச்
செழுந்தவி சுகந்தவத் தேவுஞ் சென்றெதிர்

விழுந்தன ரடிமிசை விண்ணு ளோரொடுந்
தொழுந்தொறுந் தொழுந்தொறுங் களிது ளங்குவார்.

(இ - ள்.) (அப்பொழுது), கறை மிடறு இறைஉம் - விஷக்கறையை யுடைய கண்டத்தையுடைய சிவனும், தாமரை செழு தவிசு உகந்த அதேஉம் - தாமரைமலராகிய செழிப்பான ஆசனத்திலே விருப்பங்கொண்டு வாழ்கின்ற அந்தப்பிரமனும், விண் உளோரொடுஉம் - (மற்றை) இந்திராதிதேவர்களுடனே, எழுந்தனர் - எழுந்து, எதிர் சென்று - எதிர்கொண்டு, தொழும் தொறும் தொழும் தொறும் களி துளங்குவார் - துதிக்கும்பொழுதெல்லாம் மகிழ்ச்சி மிகுபவர்களாய், அடிமிசை விழுந்தனர் - (அந்தத்திருமாலின்) திருவடிகளில் வணங்கினார்கள்; (எ - று.)

அடிமிசை விழுந்தனர் - திருவடிகளில் விழுந்து கிடந்தனரென்று உரைப்பினுமாம். பலமுறை வணங்குதல் நமஸ்காரமென்றும், அருள்புரியுமளவும் எழுந்திராது வணங்கியபடியே கிடத்தல் பிரணிபாதமென்றும் சொல்லப்படும். அடிமிசை விழுந்தனர் - திருவடிகளின்மேல்விழுந்து [தண்டனிட்டு], தொழுந்தொறும் தொழுந்தொறும், களிதுளங்குவார்-மகிழ்ச்சி மிகலாயினார் என்று முடிப்பினுமாம். துளங்குவார்-ஆடுபவராயினாரென்பாருமுளர்.

கசு.—தேவர்களின் மகிழ்ச்சி.

ஆடினர் பாடின ரங்கு [1]மிங்குமா
வோடின [2]ருவகைமா நறவுண் டோர்கிலார்
வீடின ரரக்கரென் றுவக்கும் விம்மலாற்
சூடினர் முறைமுறை [3]துளவத் தாண்மலர்.

(இ - ள்.) (அங்ஙனம் தேவர்கள்),—துளவம் தாள் மலர் - திருத்துழாயையணிந்த (திருமாலின்) திருவடித்தாமரைமலர்களை, முறை முறை - (வணங்கவேண்டிய) முறைப்படியே, சூடினர் - (தமது) சிரசிலணிந்துகொண்டு [நமஸ்கரித்து], அரக்கர் வீடினர் என்று - அரக்கர் அப்பொழுதேயழிந்து போய்விட்டனரென்று நினைத்து, உவக்கும் - மகிழ்வதனாலாகிய, விம்மலால் - பூரிப்பினால், உவகை மா நறவு உண்டு - களிப்பாகியமிக்க மதுவை யுட்கொண்டு, ஓர்கிலார் - (இன்னது செய்வதென்று) தெரியாதவர்களாய், ஆடினர் - ஆனந்தக்கூத்தாடினார்கள்; பாடினர் - கீதம்பாடினார்கள்; அங்கும் இங்கும் ஆ ஓடினர் - பலவிடங்களிலும் ஓடினார்கள்; (எ - று.)

தாம் திருமாலைத்தியானித்தபொழுது அக்கடவுள் சேவைசாதித்ததனால், அப்பெருமானால் தமதுகுறை விரைவில் முடியுமென்பதுபற்றித் தேவர்கள் பெருமகிழ்ச்சிகொண்டு ஆடுதல் முதலிய புரிந்தனரென்க. ஆடுதல் முதலியன—உவகையின் மெய்ப்பாடுகள். பி - ம்:—[1]இங்குமாய். [2]உவகையாம். [3]துளவந்தாண்மலர்.

(கசு)

கரு.—திருமால் கருடனினின்று இறங்கி, மண்டபத்து ஓராசனத்தமர்தல்.

பொன்வரை யிழிவதோர் புயலின் பொற்புற
வென்னையா ளுடையவன் சேணின் றெம்பிரான்

**சென்னிவான் றடவுமண் டபத்துச் சேர்ந்தரி**
**துன்னுபொற் பீடமேற் பொலிந்து தோன்றினன்.**

(இ - ள்.) பொன் வரை இழிவது ஓர் புயலின் பொற்பு உற - பொன்மயமான மலையினின்றும் கீழிறங்குவதாகிய ஒருமேகத்தினது அழகுபொருந்த, எம்பிரான் - எமதுசுவாமியாகிய திருமால், என்னை ஆள் உடையவன் தோள் நின்று - என்னை அடிமையாகவுடைய கருடாழ்வானது திருத்தோள்களினின்றும் (இறங்கி), சென்னி வான் தடவு மண்டபத்து சேர்ந்து - (தன்) சிகரத்தால் ஆகாயத்தையளாவுகின்ற மண்டபத்திலெழுந்தருளி, அரி துன்னு பொன் பீடம் மேல் - சிங்கத்தின் வடிவந்தோன்றச் சித்திரிக்கப்பட்டதொரு பொன்மயமான ஆசனத்தின்மேல், பொலிந்து தோன்றினன் - விளங்கிவீற்றிருந்தருளினன்; (எ - று.)

தேவர்களிருந்த இடத்தில்வந்து அங்ஙனம் காட்சிதந்த திருமால் கருடனது தோளினின்று இறங்கி அம்மண்டபத்தே இடப்பட்ட செம்பொற்சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்தன னென்பதாம். எம்பெருமானது அடியார்க்கு அடிமையாயிருப்பதைக் கொண்டாடுவதே திருத்தொண்டுக்குச் சிறப்பாதலால், கருடனை 'என்னையாளுடையவன்' என்றார்; இனி, எம்பெருமானை எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்த உபகாரத்தைத் தமக்குச் செய்த உதவியாக நினைத்து இங்ஙனங் கூறினருமாம். அரி - எல்லாமிருகங்களையும் அழிக்கவல்லது; சிங்கம். அரிதுன்னு - செந்நிறவொளிபொருந்திய எனினுமாம். தசரதன் வேள்விபுரிகையில் அவிர்ப்பாகம்பெறவந்த தேவர்கள் யாவரும் கூடியகாலத்து அத்தேவர்களின் சபையில் பிரமனைநோக்கித் தேவர்கள் தம்குறையைச்சொல்ல, பிரமன், 'மானிடரைக்கொண்டே இராவணனைக்கொல்லவேணும்' என்று தீர்மானிக்கையில், திருமால் இரட்சிக்குங்காலம் வாய்த்ததற்கு மகிழ்ந்து அங்குத் தோன்றினனென்றும்;மேல்வருபவை அங்கு நிகழ்ந்தனவென்றும் முதனூலிற் காணப்படுகின்றன. தோள்-பிடர். (கசு)

கஎ.—திருமாலினிடத்து அரக்கர்கொடுமையைத் தேவர்கள் கூறத்தொடங்குதல்.

**விதியொடு முனிவரும் விண்ணு ளோர்களு**
**[1]மதிவளர் சடைமுடி மழுவ லாளனு**
**மதிசய முடனுவந் தயலி ருந்துழி**
**கொதிகொள்வே லரக்கர்தங் கொடுமை [2]கூறுவார்.**

(இ - ள்.) விதியொடு - பிரமதேவனுடன், முனிவர்உம் - தேவவிருடியரும், விண் உளோர்கள்உம் - வானுலகத்திலுள்ளவரான (இந்திரன்முதலிய) தேவர்களும், மதி வளர் சடை முடி மழுவலாளன்உம்-பிறைச்சந்திரன்வளர்தற்குஇடமான சடைமுடியையுடைய மழுவென்னும் ஆயுதத்தைக்கொண்ட சிவனும், அதிசயமுடன் - ஆச்சரியத்தோடு, உவந்து - மகிழ்ச்சிகொண்டு, அயல் இருந்த உழி - அருகிலிருந்தபோது, கொதி கொள் வேல் அரக்கர்

தம் ...னத்தைக்கொண்ட வேற்படையையுடைய அரக்கரின், கொடுமை - கொடியசெய்கையை, கூறுவார்-பின்வருமாறு சொல்லலானார்கள்; (எ-று.) —அதனை அடுத்த கவியிற் காண்க.

எல்லாத்தேவரும், அதிசயமும் மகிழ்ச்சியுமடைந்து திருமாலினருகிலிருந்து அரக்கரால் நேர்ந்துள்ள கொடுமையைக் கூறுவாராயின ரென்க. விதி - பிறவிஆயுள்முதலியவற்றை யேற்படுத்துங் கடவுள். வீரரின்கொதிப்பை வேலின்மீது ஏற்றி, 'கொதிகொள்வேல்' என்றார். கொதிகொள் என்பதை, அரக்கரோடுகூட்டவுமாம். பி-ம்:—[1]மதிவரு. [2]கூறினர். (கசு)

கஎ.—அரக்கர்கொடுமை.

ஐயிரு தலையினோ னனுச ராதியா
மெய்வலி யரக்கரால் விண்ணு மண்ணுமே
செய்தவ மிழந்தன திருவி னாயக
வுய்திற மில்லையென் றுயிர்ப்பு வீங்கினர்.

(இ-ள்.) 'திருவின் நாயக-இலக்குமிக்குக் கொழுநனே! ஐ இரு தலையினோன்-பத்துத்தலைகளையுடைய இராவணனும்,அனுசர்-(அவன்)தம்பிமாரும், ஆதி ஆம்-முதலான, மெய் வலி அரக்கரால் - உடல்வலிமையையுடைய அரக்கரால், விண்உம் மண்உம்-விண்ணுலகத்தவரும் மண்ணுலகத்தவரும், செய்தவம் இழந்தன - (தாம்) செய்தற்குஉரியதவங்களைச் செய்யமுடியாமலிழந்திட்டனர்; உய் திறம் இல்லை - (இனிப்) பிழைக்கும்வழி யில்லை,' என்று - என்று (அரக்கர்தீமையைச்) சொல்லி, (அப்போது மனத்திற்றோன்றியுள்ள பெருந்துயரத்தால்), உயிர்ப்பு வீங்கினர் - பெருமூச்சுவிட்டார்கள்; (எ-று.)

'விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் செய்கின்ற நற்கருமங்கட்கெல்லாம் அரக்கர் பேரிடையூறு இழைக்கின்றா ராதலால், நீ அவர்களை யொழிக்காவிட்டால் எங்களாற்பிழைத்திருக்கமுடியாது' என்று தேவர்கள் முறையிட்டன ரென்க. அனுசர் = அநுஜர்: பின்பிறந்தவர்: என்றது - இராவணனது சகோதரரிருவருள் விபீஷணனொழிந்த கும்பகர்ணனையும், அவனுடைய பெரியதாய்சிறியதாய்மார்களின்மக்களாய்உடன்பிறந்தமுறையுடையரானகரன்முதலியஅரக்கரையும். தவம்-நற்காரியம். 'திருவினாயக' என்றவிளியால், கருணாரூபிணியாகிய இலக்குமி உன்னை யகலாது இருத்தலால், எங்கள்திறத்து உனக்குக் கருணை தவறாது விளையு மென்ற குறிப்பு. (கஎ)

கஅ.—தேவர்களைப் பேசாமல் நிறுத்தி, சிவன் கூறத்தொடங்குதல்.

†வானவ [1]ரவ்வுரை வழங்க மாமதித்
தேனுறு மிதழியந் தெரியல் வேணியா
னானவர் தமைக்கர மமைத்தங் கையனைத்
தான்முக நோக்கியே சாற்றன் மேயினான்.

---

† இச்செய்யுள் சிலபிரதிகளிற் காணப்படாவிடினும், "எங்கணீள் வரங்களால்" என்று மேல்வரும் பாடலை நோக்கு மிடத்து இருக்கத்தக்க தெனவே தோன்றுகின்றது.

(இ - ள்.) வானவர் அ உரை வழங்க - தேவர்கள் அச்சொல்லைச் சொல்ல, அங்கு - அப்போது, மா மதி தேன் உறும் இதழிஅம் தெரியல் வேணியான் - சிறந்த சந்திரனையும் தேன்நிரம்பி-யுள்ள அழகிய கொன்றைமலர்மாலையையும் சடையிற் றரித்தவனான சிவபிரான், ஆனவர் தமை கரம் அமைத்து - அந்தத் தேவர்களைத் தன்கையினாற் (சைகை காட்டிப் பேசாதிருக்குமாறு) அமர்த்தி, தான்—, ஐயனை முகம் நோக்கி - பெரியோனாகிய திருமாலின்முகத்தைப்பார்த்து, சாற்றல்மேயினன் - சொல்லத் தொடங்கினான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க. பி - ம்:—[1] அம்முறை. (கஅ)

கக.—சிவன் திருமாலை நோக்கிக் கூறுவன.

எங்கணீள் வரங்களா லரக்க ரென்றுளார்
பொங்குமூ வுலகையும் [1]புடைத்த ழித்தனர்
செங்கணா யக[2]வினித் தீர்த்த லில்லையே
னுங்குவ [3]ருலகையோர் நொடியி [4]னென்றனன்.

(இ-ள்.) 'செங் கண் நாயக-சிவந்ததிருக்கண்களையுடையவனான(யாவர்க்கும்) தலைவனே! அரக்கர் என்று உளார் - அரக்கரென்று உலகத்தாற் சொல்லப்படும்படியிருக்கின்ற கொடியவர், எங்கள் நீள் வரங்களால்-எங்களாற் கொடுக்கப்பட்ட பெரிய வரபலத்தினால், பொங்கு மூ உலகைஉம்-செழிக்கின்ற மூன்றுலகங்களையும், புடைத்து - அடித்து, அழித்தனர் - நாசஞ்செய்திருக்கிறார்கள்; இனி - இனிமேலாயினும், தீர்த்தல் இல்லை ஏல் - (நீ அவர்களை) ஒழிக்காவிட்டால், (அவர்கள்), ஓர் நொடியின் - மிகவிரைவில், உலகை - மூவுலகங்களையும், நுங்குவர்-அழித்து விடுவார்கள்,' என்றனன் - என்று (சிவன் தனியே) கூறினான்; (எ - று.)

நாங்கள் அறியாது அரக்கர்க்கு வரங்கொடுத்ததனால் உலகங்கட்கெல்லாம் தீம்பு உண்டாயிற்று; இவ்வுலகங்கட்கெல்லாம் தலைவன் நீயேயாதலால், அதனைத் தீர்த்து உலகத்தைக் காக்கவேண்டுவது உனது கடன். சற்று உபேட்சித்தாலும் அவர்களால் உலகமெல்லாம் அழிந்துவிடு மென்றனன் சிவனென்க. இராவணன் தன்தலையையறுத்து ஓமஞ்செய்தபோது தேவர்முதலியோரால் அழிக்கமுடியாமைமுதலிய வரங்களைச் சிவன் தானே தந்ததனால், தான் முன் செய்த பிழையைக் கூறிக் காக்கவேண்டு மென்று தனியே கூறலாயினன். முன்னைய [கஅ - ஆவது] பாடல் இல்லாத பிரதிகளில் [4]என்றனர் என்றுபாடம்: தேவர்கள் என்று கூறினரென்பது பொருள். பி - ம்:— [1]புடைத்தழித்துளார். [2]இது. [3]உலகெலாம். (கக)

உ0.—திருமால் தேவர்கட்கு அபயமளித்து ஒன்று கூறத்தொடங்குதல்

[1]என்றபி னமரர்க ளிறைஞ்சி யேத்தலு
[2]மன்றலந் துளவினன் வருந்தல் வஞ்சகர்
தந்தலை யறுத்திடர் தணிப்பன் றாணிக்
கொன்றுநீர் கேண்மென [3]வுரைத்தன் மேயினன்.

(இ - ள்.) என்ற பின் - என்று சிவபிரான் கூறினபின்பு, அமரர்கள்-தேவர்கள், இறைஞ்சி ஏத்தலும்-வணங்கி (த் தன்னை)த் துதித்தவளவில்,—மன்றல் அம் துளவினன்-பெருமணத்தையுடைய அழகிய திருத்துழாய் மாலையைத் தரித்தவனான திருமால், (தேவர்களை நோக்கி), 'வருந்தல்-(நீங்கள்) வருந்தாதிருக்கக் கடவீர்; (யாம்), தாரணிக்கு - பூமியில் (மானுடனாகத் தோன்றி), வஞ்சகர்தம் தலை அறுத்து - வஞ்சனைக்குணமுடைய அரக்கரின் சிரங்களைத் துணித்துத்தள்ளி, இடர்-(நும்) துன்பத்தை, தணிப்பன்-போக்குவேன்; நீர்-நீங்கள், ஒன்று-(யான் சொல்லுகின்ற) ஒருபொருளை, கேண்ம்-கேளுங்கள்,' என-என்று சொல்லி, உரைத்தல் மேயினன்-சொல்லலானான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

தாரணிக்கு - தரணிக்கு என்பதன் நீட்டல். தாரணிக்கு - உருபுமயக்கம். 'வருந்தல், வஞ்சகர்தந்தலையறுத்திடர்தணிப்பன் றாரணிக்கு' என்று இங்குக்கூறியதை உஉ, உ௩-ஆவது கவிகளால் விரித்துஉரைத்தல் காண்க. தாரணிக்கு இடர்தணிப்பனென்றுமாம். வருந்தல் - எதிர்மறைவியங்கோள். கேண்ம்-கேளுமென்பதன் விகாரம்: இதிலுள்ளமகரம் குறுக்கம். பி - ம்:—[1]என்றனரிடருழந்து. [2]மன்றலர். [3]உணர்த்தல். (உ0)

உக.—திருமால் தேவர்களைப் பூமியில் வானரங்களாகப் பிறக்குமாறு கூறுதல்.

வானுளோ ரனைவரும் வான ரங்களாக்
கானினும் வரையினுங் கடித டத்தினுஞ்
சேனையோ டவதரித் திடுமின் சென்றென
வானன மலர்ந்தன னருளி னாழியான்.

(இ - ள்.) 'வான் உளோர் அனைவர்உம் - தேவர்களாகிய நீங்கள் யாவிரும், வானரங்கள் ஆ - குரங்குகளாக, கானின்உம் - காடுகளிலும், வரையின் உம் - மலைகளிலும், கடி தடத்தின்உம் - நறுமணமுள்ள இடங்களிலும் [சோலைகளிலும்], சேனையோடு - கூட்டங்களுடனே, சென்று - போய், அவதரித்திடுமின் - பிறவுங்கள்', என - என்றுகூறி, ஆழியான் - பாற்கடலிற்பள்ளிகொண்டிருப்பவனாகிய திருமால், அருளின் - கருணையினால், ஆனனம் மலர்ந்தனன் - (பின்னும்) வாய்திறந்துகூறலானான்; (எ - று.)-அதனை, அடுத்த இரண்டு கவிகளிற் காண்க.

வானுளோரனைவரும் - இடவழுவமைதி. வாநரம்-மனிதரினும் சிறிது வேறுபட்ட வடிவமுடையதென்பதுபற்றியபெயர். கடி தடம்-அச்சமுள்ள மலைப்பக்க மென்பாருமுளர். அவதரித்தல்-மேலிருந்துகீழிறங்குதல்: தேவர்கள் வானரங்களாதல் மேல்நிலையிலிருந்து கீழ்க்குவருவதாதல் காண்க. சேனை-அவரவர்களைச்சேர்ந்தகூட்டம். ஆழியான்-நீர்நிறைந்தகடல்போலக் கருணைமிகுந்திருப்பவ னென்றும், சக்கரப்படையுடையவ னென்றும், கடல்போன்றதிருவுருவமுடையவ னென்றும் பொருள்கூறலாம். சிவபெருமானோடு பார்வதிதேவி இன்பமனுபவிக்கையில் தேவர்கள் தவிருமாறு வே

ண்ட, தனக்குப் புத்திரன்தோன்றுமுன் தேவர்கள் அதனைத்தடுத்ததனால் இனி,'மனைவியரிடத்து நுமக்குச் சந்ததி தோன்றாதொழிக' என்று அந்தப் பார்வதிசபித்ததனால் தேவர்கட்குத் தமதுமனைவிமாரிடத்துச் சந்ததியுண்டாகா வாகையாலும்,இராவணன் நந்திதேவரையிகழ அத்தேவன் முகவிகாரமுள்ளசாதிகளால் அரக்கநாசம் நேரிடுமென்று சாபங்கொடுத்ததனாலும் வானரராயினரென்று அறிக. (உக)

**உஉ,உங.—இதுவும் அடுத்தகவியும்-குளகம்: திருமால் தாம் பரிவாரத்தோடு தசரதனுக்குப் புதல்வனாய்வருவோமென்பதைத் தெரிவிக்கும்.**

உஉ. மசரத மனையவர் வரமும் வாழ்வுமோர்
நிசரத கணைகளா னீறு செய்யயாங்
கசரத் துரகமாக் கடல்கொள் காவலன்
றசரதன் மதலையாய் வருதுந் தாரணி.

உங. வளையொடு திகிரியும் வடவை தீதர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலு
மிளைஞர்க ளெனவடி பரவ வேகிநாம்
வளைமதி லயோத்தியில் வருது மென்றனன்.

(இ - ள்.) (உஉ) 'மசரதம் அனையவர் - பேய்த்தேரையொத்த [மாயத்தன்மையுள்ள] அரக்கரின், வரம்உம் - வரத்தையும், வாழ்வுஉம் - வாழ்வையும்,ஓர் நிசம் ரதம் கணைகளால்-ஒப்பற்ற சொந்தமான சாரமுள்ளபாணங்களினால், நீறு செய்ய - பொடிபடுத்தும்படி, யாம் - , கசம் ரதம் துரகம் மா கடல் கொள் காவலன் தசரதன் மதலை ஆய் - யானை தேர் குதிரைகளாகிய பெரியசமுத்திரத்தை [சேனையை] க் கொண்டுள்ள அரசனாகிய தசரதனுக்குப் புத்திரனாய், தாரணி வருதும் - பூமியில் பிறப்போம்; (உங)வளையொடு-சங்கமும், திகிரிஉம் - சக்கரமும், வடவை தீதர விளை தரு கடு உடை விரி கொள் பாயல்உம் - படபாமுகாக்கினியுங் கரிந்துபோம்படி பொங்குகின்ற விஷத்தையுடைய விரிக்கப்படும் பாயாகியுள்ள ஆதிசேஷனும், இளைஞர்கள் என - (எனது) தம்பிமார்களாகிவந்து, அடி பரவ - (எம்) பாதங்களை வணங்க, நாம்-,ஏகி-போய்,வளை மதில் அயோத்தியில்-வளைந்தமதிலையுடைய அயோத்தியாபுரியிலே, வருதும் - அவதரிப்போம்,' என்றனன் - என்று (தேவர்களை நோக்கித் திருமால்) கூறிமுடித்தனன்; (எ - று.)

நமதுசங்கசக்கரங்களும் திருவனந்தாழ்வானும் நமக்குத் தம்பிகளாயமைய நாம் அயோத்தியில் தசரதசக்கரவர்த்திக்குப்புத்திரனாய்ப்பிறந்து,அரக்கரதுவரத்தையும் வாழ்வையும் நமதுகணைகளாலொழிப்போமென்று கூறினனென்பதாம். (உஉ.) மசரதம்-பேய்த்தேர். மயல்என்றசொல் மசஎன்றுதிரிந்தது: மயல் - பேய். இனி, மசரதம்-கொசுகின்கூட்டமுமாம்: இப்பொருளில் மசம் - மசகம்என்பதன்விகாரம்: ரதம் - கூட்டம்: மசரதமனையவர் - அற்பரென்றபடி. திரிபென்னுஞ்சொல்லணிகாண்க. நிசரதம் என்பதற்கு - இலக்

குத்தவருத கணையென்றலுமுண்டு; (நி - மிகவும், சரதம் - நிச்சயமான, கணையென்க). (உரு) வடவை - படபாஎன்றவடசொல்லின்திரிபு: இச்சொல் - மழைமுதலியவற்றாற்கடலில் நீர்வெள்ளம்மிகாதபடி அதனிடையே நின்று அதன்நீரைப் பருகும் அக்கினியை முகத்திலேயுடைய பெண்குதிரையைக்காட்டும். பரதன் சக்கரமும், இலக்குமணன் - ஆதிசேஷனும், சத்துருக்கன் சங்கமு மென்பர். திருமாலே நான்குவடிவங்கொண்டுவந்ததாக முதனூல்கூறும். (உஉ,உங)

**உச.—திருமாலின் சொல்லைக் கேட்ட தேவர்களின் மகிழ்ச்சி.**

என்றவ னுரைத்தபோ தெழுந்து துள்ளினார்
நன்றிகொள் மங்கல நாதம் பாடினார்
[1]மன்றலர் செழுந்துள வணியு மாயனா
ரின்றெமை யளித்தன ரென்னு மேம்பலால்.

(இ - ள்.) என்று—, அவன் - அந்தத்திருமால், உரைத்த போது - சொல்லியருளிய பொழுது,—(தேவர்கள்), 'மன்று அலர் செழு துளவு அணியும் மாயனார் - பெருமணம் வீசுகின்ற செழிப்புள்ள திருத்துழாய் மாலையையணிந்த திருமால், இன்று எமை அளித்தனர் - இப்பொழுது எம்மைக் காத்தருளினார்,' என்னும் - என்பதனாலாகிய, ஏம்பலால் - மகிழ்ச்சியினால், எழுந்து துள்ளினார் - ; நன்றி கொள் மங்கலம் நாதம் பாடினார் - நற்பொருளைக்கொண்ட மங்களகரமான இசைகளைப் பாடினார்கள்; (எ - று.)

மாயனார், ஆர் - சிறப்புப்பொருளது ; மாயை - விசித்திரசக்தி: அதனையுடையவன் - மாயன். பி - ம்:—[1]மன்றலந்துளவினான். (உச)

**உரு.—தேவர்கள் மகிழ்ந்திருக்க, திருமால் கருடன்மீது ஏறுதல்.**

போயதெம் பொருமலென்னா விந்திர னுவகை பூத்தான்
றூயமா மலரு ளோனுஞ் சுடர்மதி சூடி னோனுஞ்
[1]சேயுயர் விசும்பு ளோருந் தீர்ந்ததெஞ் சிறுமை யென்றார்
மாயிரு ஞால முண்டோன் கலுழன்மேற் சரணம் வைத்தான்.

(இ - ள்.) (அப்பொழுது), எம் பொருமல் போயது என்னா - எமது துன்பம் போய்விட்டதென்று எண்ணியும் சொல்லியும், இந்திரன்—, உவகை பூத்தான் - மகிழ்ச்சி மிகுந்தான்; தூய மா மலர் உளோன்உம் - பரிசுத்தியையுடைய சிறந்த தாமரைமலரில் வாழ்கின்ற பிரமதேவனும், சுடர் மதி சூடினோன்உம் - விளங்குகின்ற சந்திரனைச்சூடிய சிவனும், சேய் உயர் விசும்பு உளோர்உம் - மிகவுயர்ந்த வானுலகத்திலுள்ள தேவர்களும், எம் சிறுமை தீர்ந்தது என்றார் - எங்கள் கீழ்மை (இன்றோடு) ஒழிந்ததென்றார்; மா இரு ஞாலம் உண்டோன் - மிகவும் பெரிய உலகத்தையுட்கொண்டருளிய திருமால், கலுழன்மேல் - கருடாழ்வான்மேல், சரணம் வைத்தான்—; (எ - று.)

சேயுயர், மாயிரு - ஒருபொருட்பன்மொழிகள். பி-ம்:—[1]சேயிரு. (உரு)

**உசு.—திருமால் சென்றபின்பு, ஜாம்பவான் தன்னமிசமேயென்று கூறி நீவிர்பலவானரங்களாகப் பிறவுங்களென்று பிரமன் தேவர்கட்குக் கூறல்.**

**என்னையா ளுடைய வையன் கலுழன்மீ தெழுந்து போய**
**பின்னர்வா னவரை நோக்கிப் பிதாமகன் பேசு கின்றான்**
**முன்னரே யெண்கின் வேந்தன் யானென மொழிகின் றான்மற்**
**றன்னவா றெவரு நீர்போ யவதரித் திடுமி னென்றான்.**

(இ - ள்.) என்னை ஆள்உடைய ஐயன் - என்னை அடிமையாகவுடைய தலைவனாகிய திருமால், கலுழன் மீது எழுந்து போய பின்னர் - பெரியதிருவடியின்மேலே எழுந்தருளிப் போய்விட்டபின்பு, பிதாமகன் - பிரமன், வானவரை நோக்கி - தேவர்களைப் பார்த்து, பேசுகின்றான்-சொல்பவனாய், 'முன்னர் எய்' எண்கின் வேந்தன்-முன்னரே பிறந்துள்ள கரடிகளிற்சிறந்த ஜாம்பவான், யான் - என்னுடைய அமிசமே,' என - என்று, மொழிகின்றான் - சொல்லி, மற்று - பின்பு, 'அன்ன ஆறு - (திருமால் நியமித்துள்ள) அந்தவகையே, நீர் எவரும் - (தேவர்களாகிய) நீங்கள் எல்லீரும், போய் அவதரித்திடுமின் - போய் அவதரியுங்கள்,' என்றான் - என்று சொன்னான்.

பிதாமஹன் - தந்தையாவார் யாவர்க்குந் தந்தையாகுபவன்: படைத்தற்கடவுளென்றபடி. முழுமுதற்கடவுள் சென்றபின்பு மற்றைத்தேவர்களுள் முதன்மைபெற்ற பிரமன் கூறலாயினனென்க. ஒருகால் பிரமன் தன்வாயை யங்காந்து கொட்டாவிவிட்டபோது அதினின்று ஜாம்பவான் தோன்றினனென்பது சரித்திரம். (உசு)

**உஎ.—இந்திரன் சூரியன் அக்கினி என்பவர் தமது அமிசம் இன்னாரெனத் தெரிவித்தல்.**

**தருவுடைக் கடவுள் வேந்தன் சாற்றுவா னெனது கூறு**
**மருவலர்க் கசனி யன்ன வாலியு மகனு [1]மென்ன**
**விரவிமற் றெனது கூறங் கவற்கிளை யவனென் றோத**
**வரியுமற் றெனது கூறு நீலனென் றறைந்திட் டானால்,**

(இ - ள்.) தரு உடை கடவுள் வேந்தன் - கற்பகவிருட்சங்களையுடைய தேவர்தலைவனான இந்திரன், சாற்றுவான் - சொல்லத்தொடங்கியவனாய், 'எனது கூறு - எனது அமிசம், மருவலர்க்கு அசனி அன்ன வாலிஉம் மகன் உம் - பகைவர்க்கு இடிபோன்ற வாலியும் (அவன்)மகனான அங்கதனும், என்ன - என்றுகூற,—இரவி - சூரியன், அங்கு அவற்கு இளையவன் எனதுகூறு என்று ஓத - 'அங்கே குறிக்கப்பட்ட அந்தவாலிக்குத் தம்பியாகிய சுக்கிரீவன் எனது அமிசம்'என்று கூற,—அரிஉம் - அக்கினிதேவனும், 'நீலன் எனது கூறு - நீலனென்னும் வானரன் எனது அமிசம்', என்று—, அறைந்திட்டான் - சொன்னான்; (எ - று.)—மற்று ஆல் - அசைகள்.

அச்சத்தையுண்டாக்கி அழித்தலின், இடிஉவமை. வாலி - வாலில் வலிமையுடையவன்: இதனை, இராவணனை வாலிற்கட்டிச் சென்றதனாலும் அறியலாம். 'இங்குவந்தார் யாவரும் பெண்வடிவமடையக்கடவர்'என்ற பார்

வதிதேவியின் சாபத்தாற் பெண்வடிவமடைந்த ருக்ஷராஜஸென்கிற வானர ராசனது வாலின் அழகைக்கண்டு காதல்கொண்ட தேவேந்திரனுக்கு அப் பெண்குரங்கினிடம் பிறந்தவன் வாலியென்றும், அவ்வாறே அதன் கழுத் தழகைக்கண்டு காமுற்ற சூரியனுக்கு அதனிடத்துத் தோன்றியவன் சுக்கி ரீவனென்றும் உணர்க. பிறவாறுமுரைப்ப. அங்கதன் - வாலிக்குத் தாரை யினிடம் பிறந்தவன். நீலன்-நிறம்பற்றியபெயர். பி - ம்:—[1]என்றான். (உஎ)

**உஅ.—வாயுவும் ருத்திரனும் தமது அமிசத்தைக்கூற, மற்றைத் தேவர்யாவரும் வானரர்களாகப்பிறக்கத் துணிந்ததாகக் கூறிப் பிறக்கச்சேல்லுதல்.**

**வாயுமற் றெனது கூறு மாருதி [1]யெனலு மற்றோர்**
**காயுமர்க் கடங்க ளாகிக் காசினி யதனின் மீது**
**போயிடத் துணிந்தோ மென்றார் புராரிமற் [2]றியானே வாத**
**சேயெனப் புகன்றான் மற்றைத் திசையுளோர்க் கவதி யுண்டோ.**

(இ - ள்.) வாயு - வாயுபகவான், எனது கூறு - எனது அமிசம், மாருதி எனலும் - அநுமானென்று சொன்னவளவில், மற்றோர் - மற்றைத்தேவர் கள், காயும் மர்க்கடங்கள் ஆகி-(அரக்கரை)அழிக்கவல்ல குரங்குகளின் வடி வமாகி, காசினியதனின்மீது - பூமியிலே, போயிட - போவதற்கு, துணிந் தோம் என்றார் - மனவுறுதிகொண்டோமென்று கூறினார்கள்; புர அரி - திரிபுரசங்காரஞ் செய்தவனாகிய சிவன்,யானே வாதன் சேய் என புகன்றான்- எனது அமிசமும் வாயுகுமாரனை அனுமானே யென்று சொன்னான்; மற்றை திசை உளோர்க்கு - மற்றைத் திக்குகளிலுள்ள தேவர்கள் தனித் தனிக்கூறிப் பிறந்ததற்கு, அவதிஉண்டோ - ஒரெல்லையுண்டோ ? [இல்லை யென்றபடி]; (எ - று.)

வாயு, உருத்திரமூர்த்தி என்ற இருவரது அமிசமுமானவன், அநுமா னென்க. மாருதி - மாருதனது [வாயுதேவனது] புத்திரனாதல்பற்றி, அனு மானுக்கு இப்பெயர். இச்சொல்-இங்கே காரணங்கருதாது நின்றது. கேச ரியென்னும் வானரவீரனது மனைவியாகிய அஞ்சனையென்பவளைக் கண்டு காமுற்ற வாயுபகவானது அனுக்கிரகத்தால் அவளிடம் பிறந்தவன் அனுமா னென்று அறிக. பிரமன் முதலியோர் பூமியில் தமது அமிசங்களாற் சாம்ப வான் முதலாக ஆயிருப்பதைத் தெரிவிக்க, மற்றைத்தேவர்கள் தாமும் வானரங்களாகப் பிறத்தற்குத் துணிந்து சென்றார். இங்ஙனம் தேவர்கள் வானரர்களாகப்பிறக்க ஒருப்பட்டபின்பு, இந்தத்தேவன் இந்தவானரனை னென்று தனித்தனி ஒவ்வொருவரையும்பற்றிச் சொல்லுதல் இயலாதென் பது கருத்து. காசினி - காஸ்யபீயென்ற வடசொற்றிரிபு. இருபத்தொரு முறை அரசரைக்கொன்று பூமியை வென்ற பரசுராமனென்னும் அந்தணன் தனதுபாவந் தொலைய அந்தப்பூமியைக் காசியபனென்ற முனிவனுக்குத் தானஞ்செய்ததனால், பூமிக்கு இப்பெயர் வந்ததென்பர். வாதசேய் - உயர்தி ணைப்பெயரீறுகெட்டது. பி - ம். [1]என்ன. [2]யானும். (உஅ)

உகூ.—தேவர்கள் தம்அமிசங்களால் வானரர்களாக
ஏற்பாடுசெய்திட்டுத் தம்மிடஞ் சேர்தல்.

அருடரு கமலக் கண்ண னருண்முறை யலரு ளோனு
மிருடரு மிடற்றி னோனு மமரரு மினைய ராகி
மருடரு [1]வனத்தின் மண்ணின் வானர ராகி வந்தார்
பொருடரு [2]மிறைவர் தத்த முறைவிடஞ் சென்று புக்கார்.

(இ-ள்.) அருள் தரு கமலம் கண்ணன் - கருணைபொழிகின்ற தாமரை மலர்போலுந் திருக்கண்களையுடைய திருமால், அருள் முறை-நியமித்தருளிய படியே, அலர்உளோன் உம்-தாமரைமலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவனும், இருள் தருமிடற்றினோன்உம்-கருநிறம்பொருந்திய கண்டத்தையுடையனான சிவனும், அமரர்உம் - மற்றைத்தேவர்களும், இனையர் ஆகி-இத்தன்மையராய் [தத்தம் அமிசமாகுபவரது பெயர்களைச்சொல்லிக்கொண்டு], மருள்தருவனத்தில் - (காண்போர்க்கு அச்சத்தாலாகிற) மயக்கத்தைத்தருகின்ற காடுகளிலும், மண்ணின்-(மற்றை மலைமுதலிய) நிலப்பகுதிகளிலும், வானரர் ஆகி-, வந்தார் - பிறந்தார்கள்; பொருள் தரும் இறைவர் - (அங்ஙனம் தம் அமிசத்தால் வானரவடிவான) புத்திரர்களைத்தருமாறு உறுதிகொண்டு அங்ஙனமே தருபவரான தேவர்கள், தம் தம் உறைவு இடம் சென்று புக்கார் - தத்தம் வாழிடத்தைப் போய்ச்சேர்ந்தார்கள்; (எ - று.)

முதல் மூன்றடிகளால், கீழ்க்கதைத்தொடர்ச்சியாக, கவி, திருமால் நியமித்தபடியே தேவர்கள்தம் அமிசங்களாகப் பல வானரவடிவத்தை யெடுத்துக்கொண்டு பிறந்தார்களென்று கூறிக் கதையையொருவாறு முடித்து, மேரு நடுச்சிகரத்தின் அங்ஙனம் வானரங்களாகத் தீர்மானித்த தேவர் தத்தம் இருப்பிடத்துக்குப்போயின ரென்பதை ஈற்றடியாற் கூறுகின்றார்.
பி - ம்:—[1]மனத்தின். [2]எவரும். (உகூ)

ங௦.—வசிட்டன் பூர்வகதையை மனத்தில் நினைந்து
தசரதனைநோக்கி யாகஞ்செய்யின் குறைதீருமெனல்.

ஈதுமுன் னிகழ்ந்த வண்ண மெனமுனி யிதயத் தெண்ணி
மாதிரம் [1]பொருத திண்டோண் மன்னநீ வருந்த லேழ்ழ்
பூதல முழுதுங் [2]காக்கும் புதல்வரை யளிக்கும் வேள்வி
தீதற முயலி னைய சிந்தைநோய் தீரு மென்றான்.

(இ - ள்.) 'ஈது - இது, முன் நிகழ்ந்த வண்ணம் - முன்னமே நடந்த செய்தி,' என - என்று, முனி - வசிட்டமுனிவன், இதயத்து எண்ணி-மனத்திலே நினைத்து,—(தசரதனை நோக்கி), 'மாதிரம் பொருத திண் தோள் மன்ன - மலைகளையொத்த வலிய தோள்களையுடைய அரசனே! ஐய - பெரியோனே! நீ வருந்தல்—; ஏழ் ஏழ் பூதலம்முழுதும் காக்கும் புதல்வரை-(இந்த ஏழுதீவுகளையுடைய பூலோகமாத்திரத்தையன்றிக்)கீழ்ஏழ் மேல்ஏழ் என்ற பதினான்கு லோகத்தைக்கொண்ட இவ்வண்ட முழுவதையும் காக்கவல்ல

புத்திரரை, அளிக்கும் - கொடுக்கவல்ல, வேள்வி-யாகத்தை, தீது அற முய லின்-குற்றமில்லாமற் செய்துமுடித்தால், சிந்தை நோய்-(நின்) மனத்துயரம், தீரும் - நீங்கும், என்றான்—; (எ - று.)

இராமபிரான் ராட்சச சங்காரஞ் செய்யும்பொருட்டுத் தசரதபுத்திரனு கப் பிறக்கப்போவதை மனத்திலெண்ணிய வசிட்டமுனிவன், யாகஞ்செய் தால் அந்தவியாசத்தினல் திருமால் திருவவதரிப்பனென்ற வுறுதியினல், 'நீ வேள்வி முடித்தால் உன்மனக்குறை நீங்கப் புத்திரர் உதிப்பர்' என்றன னென்க. வேள்வியின்சிறப்பை யுணர்த்துவான்போல நீ தொடங்கும் வேள்வி எழேழ்பூதலம் காக்கும் புதல்வரையளிக்கு மென்பதைக் குறிப் பித்தது,கருதத்தக்கது. பூதலம்-பூமியென்ற பொருளைத்தராது உலகமென்ற பொருளைத் தந்தது. மாதிரம் பொருத - எல்லாத்திக்கிலுள்ளாரையும் பொ ருதுவென்றனனினுமாம். தீது-திரவியலோபம் கிரியாலோபம் நியமலோபம் முதலியன. பி - ம்:— [1]பொருந்து. [2]தாங்கும். (௩0)

ரு௧.—மன்னவன் அதுகேட்டுமகிழ்ந்து, 'யாகத்திற்குத் தான் செய்யவேண்டுவதேன்?' எனவினவல்.

என்னமா முனிவன் கூற வெழுந்தபே ருவகை பொங்க
மன்னவர் மன்ன னந்த மாமுனி சரணஞ் சூடி
யுன்னையே புகல்புக் கேனுக் குறுகண்வந் தடைவ துண்டோ
வன்னதற் கடியேன் செய்யும் பணி[1]யினி தளித்தி யென்றான்.

(இ - ள்.) என்ன - என்று, மா முனிவன்-வசிட்டமகாமுனிவன், கூற- சொல்லியருள, மன்னவர் மன்னன் - தசரதசக்கரவர்த்தி, எழுந்த பேர் உவ கை பொங்க-(அதுகேட்டு) உண்டான பெருங்களிப்பு மிக, அந்த மா முனி சரணம் சூடி - அந்தச் சிறந்தமுனிவனது திருவடிகளை முடிமேலணிந்து [சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து], 'உன்னை ஏ புகல் புக்கேனுக்கு-உன்னையே சரணமாகவடைந்த எனக்கு, உறுகண் வந்து அடைவது உண்டு ஓ - துன்ப மொன்று வந்துசேருவது உள்ளதோ? [இல்லையென்றபடி]; அன்னதற்கு - அவ்யாகத்தின்பொருட்டு, அடியேன் செய்யும் பணி - யான்செய்யவேண்டுந் தொழிலை, இனிது அளித்தி - இனிமையாகக் கூறியருளுவாயாக,' என் றான் - என்று வினவினான்; (எ - று.) பி - ம்:— [1]இனியளித்தி. (௩௧)

௩௨,௩௪.—இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்; அப்போது வசிட்டமுனிவன் தசரதனைநோக்கிக்கூறும் உத்தரம்.

௩௨. மாசறு சுரர்க ளோடு மற்றுளோர் தமையு மீன்ற
காசிப னருளு மைந்தன் [1]விபண்டகன் கலைகை சூடு
மீசனும் புகழ்தற் கொத்தோ னிருங்கலை பிறவு மெண்ணிற்
றேசுடைத் தந்தை யொப்பான் றிருவருள் புனைந்த மைந்தன்.

நூங. வருகலை பிறவு நீதி மநுநெறி [2]வரம்பில் வாய்மை
தருகலை [3]மறையு மெண்ணிற் சதுமுகற் குவமை சான்றேன்
றிருகலை யுடைய விந்தச் செகத்துளோர் தன்மை தேரா
வொருகலை முகச்சி ருங்க வுயர்தவன் வருதல் வேண்டும்.

நூச. பாந்தளின் மகுட கோடி பரித்தபா ரதனின் வைகு
[4]மாந்தரை விலங்கென் றுன்னு மனத்தன்மா தவத்த னெண்ணிற்
பூந்தவி சுகந்து ளோனும் புராரியும் புகழ்தற் கொத்த
சாந்தனல் வேள்வி முற்றிற் றனயர்க ளுளரா மென்றான்.

(இ-ள்.)(நூஉ) (அப்போது வசிட்டமுனிவன் தசரதனைநோக்கி), கங்கை சூடும் ஈசன்உம் புகழ்தற்கு ஒத்தோன் - கங்காநதியை முடியில்தரித்த சிவபிரானும் புகழ்தற்கு உரியவனும், இரு கலை பிறஉம் எண்ணில் தேசு உடை தந்தை ஒப்பான் - பெரிய வேதம்முதலிய நூல்களிலும் மற்றைஅறிவு ஒழுக்கம் அடக்கம் முதலியவற்றிலும் ஆலோசிக்குமிடத்து ஒளியையுடைய தன்பிதாவாகிய காசியபமுனிவனை யொப்பவனுமான, மாசு அறு சுரர்களோடு மற்றுளோர்தமைஉம் ஈன்ற காசிபன் அருளும் - குற்றமற்ற தேவர்களுடனே மற்றுமுள்ள அசுரர்முதலியோரையும் பெற்ற காசியபமகாமுனிவன் பெற்றருளின, மைந்தன் - குமாரன், விபண்டகன் - விபண்டகனென்றுபேருள்ளவன்; (அவனுடைய), திருவருள் - மேலானகருணையை, புனைந்த-பெற்ற, மைந்தன் - குமாரனும், (நூங) வரு கலை பிறஉம்- வழங்கிவருகிறமற்றைச்சாஸ்திரங்களிலும், நீதி மனு நெறி-(மனிதர்க்குஏற்ற) நீதியைத்தெரிவிக்கும் மனுதருமசாஸ்திரத்திலும், வரம்பு இல் வாய்மை தரு கலை மறைஉம் - அளவில்லாத [அனந்தங்களாயிருக்கின்ற] உண்மைப்பொருளையே கூறுகின்ற சாஸ்திரமாகிய (காண்டம் பிரசினம் அநுவாகம்முதலிய) பகுப்புக்களையுடைய வேதத்திலும், எண்ணில் - ஆலோசிக்குமிடத்து, சதுமுகற்கு-நான்முகனாகிய பிரமதேவனுக்கு, உவமை சான்றோன்-உவமைப்பொருளாகச் சிறந்தவனுமாகிய, திருகு அலை உடைய இந்த செகத்து உளோர் தன்மை தேரா ஒருகலை சிருங்கம் முகம் உயர் தவன் - மாறுபடுந்தன்மையுடையவரான கடலாற்சூழப்பட்ட நிலவுலகத்திலுள்ளவர்களின் தன்மைகளை யறியாதவனாகி மான்கொம்பை முகத்திலேயுடையவனான சிறந்த தவத்தையுடையவன் [ருசியசிருங்கமுனிவன்] வருதல், வேண்டும்—; (நூச) பாந்தளின் மகுடம் கோடி பரித்த பார்அதனின்-ஆதிசேஷனுடைய (அனேக) முடிகளின் நுனிகளிநாற் சுமக்கப்பட்ட பூமியில், வைகும்-தங்குகின்ற, மாந்தரை-மனிதர்களை, விலங்கு என்று உன்னும்-மிருகங்களென்று நினைக்கிற, மனத்தன் - மனத்தையுடையவனும், மா தவத்தன்-பெருந்தவத்தையுடையவனும், எண்ணில் பூ தவிசு உகந்துளோன்உம் புராரிஉம் புகழ்தற்கு ஒத்த சாந்தனல்-ஆலோசிக்குமிடத்துத் தாமரைமலரையாசனமாக விரும்பிக்கொண்டுள்ளவனான பிரமதேவனும் திரிபுராதகனஞ்செய்தவனான சிவனும் புகழ்தற்கு ஏற்ற சாந்தகுணத்தையுடையவனுமான அந்தருசியசிருங்க

முனிவனால், வேள்வி - (இப்பொழுது நீ செய்யக்கருதியுள்ள) யாகத்தை, முற்றின்-செய்துமுடித்தால், தனயர்கள் - புத்திரர்கள், உளர் - தோன்றுவர், என்றான் - என்று மறுமொழி கூறினான்; (எ - று.)

காசியபனுக்குப்புதல்வன் விபண்டகனென்னும் முனிவன்; அவனுக்குப் புதல்வன் ருசியசிருங்கனென்று பேர்பெற்றவன்; அவன் மனிதர்களையே பாராமல் தபோவனத்திலேயே தன்தந்தைக்குப்பணிவிடைசெய்துகொண்டிருந்து விட்டதனால், நாடுநகரங்களில் வாழ்கின்ற மானுடரை விலங்குகள் போலுமென்று நினைப்பவன்; சகல சாஸ்திரங்களிலும் வல்லவன்; மகா தபஸ்வி; பிரமருத்திரரும் புகழும் பொறுமை வாய்ந்தவன்: அந்த முனிவன் வந்து யாகத்தை முற்றுவித்தால், நீ கருதியபடி புத்திரர் பிறப்பரென்று வசிட்டன் தசரதனுக்கு மறுமொழி கூறினனென்க. தசரதன் புத்திரனில்லாக்குறையைப்போக்கிக்கொள்ளும் பொருட்டு அசுவமேதயாகஞ் செய்யுமாறு வசிட்டன் முதலிய அமைச்சர்களோடு ஆலோசித்து உறுதிசெய்துகொண்டபின்பு, ஏகாந்தத்தில் சுமந்திரன் தசரதனைச்சார்ந்து, 'ஸநத்குமார பகவான் ருசியசிருங்கமுனிவனை ருத்விக்காகக்கொண்டு யாகஞ்செய்யத் தசரதனுக்குப் புத்திரர் தோன்றுவரென்று இருடியரின்முன்னிலையில் முன்பு சொல்லியுள்ளார்' என்று தெரிவிக்க, பின்பு தசரதன் சுமந்திரனைக்கொண்டு வசிட்டனிடத்து அந்தச்செய்தியைத் தெரிவித்து, ருசியசிருங்கரை வரவழைக்க அனுமதிபெற்று அழைத்துவந்தனனென்று முதனூலிற் கூறியுள்ளது.

௩௨:—கங்கைசூடும் என்ற அடைமொழி, அந்தக்கடவுளது ஆற்றலை விளக்கும். தேசு=தேஜஸ். காசியபபிரமாவானவன் தட்சப்பிரமாவின்பெண்களுள் அதிதிமுதலாகிய பதின்மூவரை மணந்து, தேவர் தைத்தியர் தானவர் மனிதர் மிருகங்கள் பறவைகள் செடிகொடிவர்க்கங்கள் ஊர்வன நீர்வாழ்வன என்னும் இவற்றைப் பெற்றனனென்பதை ஆரணியகாண்டத்திற் சடாயுகாண்படலத்திலுள்ள கவிகளாலு மறிக. பி - ம்:—[1]விபாண்டகன்.

௩௩:—ஒருகலைமுகச் சிருங்க வுயர்தவன் - ருசியசிருங்கன்: தமிழில் 'கலைக்கோட்டு முனிவன்' எனப்படுவன்: கலைமானி னிடமாகப் பிறந்ததனால், இம்முனிவன் முகத்தில் ஒற்றைக்கலைமான் கொம்பை யுடையவனானான். மான்முகமுடையவ னல்லன். அலை - கடலுக்கு, இலக்கணை. திருகு என்பதை அலைக்கு அடைமொழியாக்கி, திருகலையென்பது - கடலுக்கு அன்மொழியென்றேனும், திருகலையென்றே யெடுத்து, இரண்டனுருபேற்ற தொழிற்பெயரென்றேனும் கொள்ளினுமாம். வேண்டும் - இன்றியமையாமைப்பொருளது. செகத்துளோர் தன்மை - ஆண்பெண்ணாக இருக்குந் தன்மை. சிருங்கம் - கொம்பு. இந்தப்பாடலில் திரிபு என்னுஞ் சொல்லணி காண்க. பி - ம்:—[2]யாவும். [3]பிறவும்.

௩௪:—மாந்தரை விலங்கென்று உன்னுதல், அவர்களிடத்து அபிமானமின்மையா லெனினுமாம். இனி, மாந்தர் என்ற சொல்லை மாதரென்பதன் விரித்தலாகக்கொண்டு உரைப்பினுமாம்; மேல் குலமுறைகிளத்து

படலத்தில் "மின்னுடங்குமிடையாரை, முலைக்கோட்டு விலங்கென்றங் குடனணுகி" என வருதல் காண்க. பி - ம்:—[4]மாந்தர்கள். (கஉ-கச)

கரு.—தான்செய்யவேண்டுவதைக் கூறுமாறு தசரதன்வசிட்டனைவினவல்.

ஆங்குரை யினைய கூறு மருந்தவர்க் கரசன் செய்ய
பூங்கழ றொழுது வாழ்த்திப் பூதல மன்னர் மன்னன்
றீங்கரு குணத்தான் மிக்க செழுந்தவன் யாண்டை யுள்ளா
னீங்கியான் [1]புரியுந் தன்மை [2]யியம்புதி யிறைவ வென்றான்.

(இ - ள்.) ஆங்கு - அப்பொழுது, இனைய உரை - இத்தன்மையனவான வார்த்தைகளை, கூறும் - சொல்லுகின்ற, அரு தவர்க்கு அரசன் - அருமையான தவத்தைக்கொண்ட முனிவர்களுட்சிறந்தவனான வசிட்டனுடைய, செய்ய பூ கழல் தொழுது-அழகிய தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கி,வாழ்த்தி-துதித்து, பூதலம் மன்னர்மன்னன் - நிலவுலகத்திலுள்ள அரசர்க்குஅரசனான தசரதசக்கரவர்த்தி,—(அம்முனிவனைநோக்கி), 'இறைவ-தலைவனே! தீங்கு அறு குணத்தால் மிக்க செழு தவன் - குற்றமற்ற (நற்) குணங்களாற் சிறந்த மிக்கதவத்தையுடைய அந்த ருசியசிருங்கன், யாண்டை உள்ளான் - எங்கேயிருக்கிறான்? ஈங்கு - இப்போது, யான்—, புரியும் - செய்யவேண்டிய, தன்மை-செயல், (இன்னதென்பதை), இயம்புதி-சொல்லியருள்வாய்,' என்றான் - என்றுவினவினான்; (எ - று.)

தீங்கு - காமவெகுளிமயக்கங்கள். கழல் - பாதத்துக்கு, இலக்கணை. பி - ம்:—[1]கொணருந்தன்மை. [2]அருளுதி. (கரு)

இதுமுதல்இருபத்தோருகவிகள் - வசிட்டன்வார்த்தை: இருசியசிருங்கமுனிவன் வரலாறு:—

கசு.—உரோமபாதனென்றுஒருவன்உளனென்பது.

புத்தான கொடுவினையோ டருந்துயரம் போயொளிப்பப் புவனந் தாங்குஞ், சத்தான குணமுடையோன் றயையினொடு தண்ணளியின் சாலைபோல்வா, னெத்தானும் வெலற்கரியான் மனுகுலத்தே வந்துதித்தோ னிலங்கு மௌலி, யுத்தான பாதனரு ளுரோமபத னென்றுளனிவ் வுலகை யாள்வான்.

(இ - ள்.) (வசிட்டமுனிவன் தசரதமன்னனைநோக்கிக் கூறுவான்:—) புவனம் தாங்கும் - நிலவுலகத்தைக் காக்கின்ற, சத்து ஆன குணம் உடையோன் - நல்லனவான குணங்களை யுடையவனும், தயையினொடு தண் அளியின் சாலை போல்வான் - அன்புக்கும் குளிர்ந்த அருளுக்கும் உறைவிடம் போல்பவனும், எத்தான்உம் வெலற்கு அரியான் - (பகைவர்செய்கின்ற) எந்தஉபாயத்தினாலும் வெல்லமுடியாதவனும், மனு குலத்தே வந்து உதித்தோன் - ஸ்வாயம்புவமனுவின்குலத்திலே வந்து பிறந்தவனும், இலங்கு மௌலி - விளங்குகின்ற கிரீடத்தையணிந்தவனுமான, உத்தானபாதன் - உத்தானபாதனென்னுமரசன்,— புத்து ஆன கொடு வினையோடு அரு துய

ரம் போய் ஒளிப்ப - புத்தென்றுசொல்லப்படுகிற கொடியநரகமும் நீக்கு தற்கு அரிய மற்றைத்துன்பங்களும் சென்று ஒளிக்கும்படி, அருள் - பெற்ற, உரோமபதன் என்று - உரோமபாதனென்று சொல்லப்பட்டு, இ உலகை ஆள்வான் - இப்பூலோகத்தையரசாள்வானொருமன்னன், உளன்—;(எ-று.)

சுவயம்புவென்றுபேர்கொண்ட பிரமனுக்கு மனுஎன்று ஒருகுமாரன் தோன்றினன்; அவன் சுவாயம்புவமனுவெனப்படுவான்; அவன்மகன், உத்தானபாதன்; அவனுக்கு உரோமபதனென்று ஒருமகன் தோன்றினனென்க. உரோமபாதன்=ரோமபாதன்: காலில் மயிருள்ளவனென்று பொருள். இவன், அங்கதேசத்திற்குஅரசனாக இருந்தான். நரகத்தை வினையென்றது - காரியத்தைக் காரணமாகக் கூறிய உபசாரவழக்கு. மகன் புத்தென்னும் நரகத்தை யடையவொட்டாது பெற்றோரைக்காப்ப னென்பது நூற்கொள்கையாதலால்,'புத்தானகொடுவினையொளிப்ப'என்றார். இனி,புது என்றபண்படி புத்துஎன விகாரப்பட்டுவந்ததாக்கொண்டு, புத்தானகொடுவினை-விசேடமான கொடுஞ்செயல்[பெருங்கொடுமை] என்றுஉரைப்பாருமுளர் தயை-அன்பு: அளி-அருள். அன்பின்பயன் அருள்: "அருளென்னுமன் பீன்குழவி" என்றார், வள்ளுவரும். எத்தானும் - சாமம் பேதம் தானம் தண்டம் என்னும் உபாயங்களுள் எதனாலு மென்க. (௩௬)

**௩௭.—உரோமபாத மன்னவன் நாட்டில் மழைபெய்யாதாக, முனிவர்கள் இருசியசிருங்கன் வந்தால் மழையுண்டாகு மேனல்.**

**அன்னவன்றன் புரந்தளிக்குந் திருநாட்டி னெடுங்கால மளவ தாக, மின்னியெழு முகிலின்றி வெந்துயரம் பெருகுதலும் [1]வேந்த னன்னூன், மன்னுமுனி வரையழைத்து மாதானங் [2]கொடுக்கினும்வான் வழங்கா தாகப், பின்னு[3]முனி வரர்க்கேட்பக் கலைக்கோட்டு முனிவரின்வான் பிலிற்று மென்றார்.**

(இ - ள்.) அன்னவன் புரந்து அளிக்கும் திரு நாட்டில் - அவ்வுரோமபாத மன்னவன் காத்தருள்கின்ற அழகிய (அங்க) தேசத்திலே, நெடு காலம் அளவு அது ஆக - வெகுகாலமளவாக, மின்னி எழு முகில் இன்றி - மின்னல் மின்னிக்கொண்டு மேலெழுகின்ற மேகங்கள் (வந்து மழைபெய்தல்) இல்லாமல், வெம் துயரம் பெருகுதலும் - கொடிய பஞ்சத்துயர் மிக்கவளவில்,—வேந்தன் - அவ்வுரோமபாத மன்னவன், நல் நூல் மன்னும் முனிவரை அழைத்து - (வேதங்கள் முதலிய)சிறந்தநூல்களையறிதல் பொருந்திய (பல) முனிவர்களை வரவழைத்து, மா தானம் கொடுக்கின்உம்-பெரிய தானங்களைக் கொடுத்தபின்னும், வான் வழங்காது ஆக - மேகம் மழைபொழியாதாக, பின்உம் - அதன்பின்பும், (அரசன்), முனிவரர் கேட்ப - இருடிச்சிரேட்டர்களை '(என் செய்வது?)' என்றுவினவ,—(அவர்கள்), கலைக்கோட்டு முனி வரின் வான் பிலிற்றும் என்றார் - இருசியசிருங்கமுனிவன் இந்நாட்டில் வந்தால் மழைபெய்யு மென்று சொன்னார்கள்; (எ - று.)

முனிவரார்க்கேட்ப - இரண்டன் தொகை. பி - ம்:—[1]வேத நன்னூல். [2]கொடுத்தலும், கொடுத்தும். [3]மறையவர். (ருஎ)

ரு அ.—இருசியசிருங்கமுனிவனை யழைத்துவருவது எங்ஙனம்?'என்று உரோமபாதன் சிந்திக்க, விலைமகளிர் தாம் அழைத்து வருவதாகக் கூறுதல்.

*ஓதநெடுங் கடலாடை யுலகினில்வாழ் மனிதர்விலங் கெனவே யுன்னுங்,கோதில்குணத் தருந்தவனைக் கொணருமவகை யாவதெனக் குனிக்கும் வேலைச், சோதிநுதற் கருநெடுங்கட் டுவரிதழ்வாய்த் தரள நகைத் துணைமென் கொங்கை, மாதரெழுந் தியாமேகி யருந்தவனைக் கொணர்துமென வணக்கஞ் செய்தார்.

(இ - ள்.) (அதுகேட்டு அரசன்), 'ஓதம் நெடு கடல் ஆடை உலகினில் வாழ் மனிதர் விலங்கு என எ உன்னும் - அலைகளைக்கொண்ட பெரியகடலை ஆடையாகவுடைய [கடலாற் சூழப்பெற்ற] பூலோகத்திலே வாழ்கின்ற மனிதர்களை மிருகங்களென்றே யெண்ணுகின்ற, கோது இல் குணத்து - குற்றமற்ற குணத்தையுடைய, அரு தவனை - (பிறரால்) செய்வதற்கு அரிய தவத்தையுடைய அந்த இருசியசிருங்கமுனிவனை, கொணரும் - (இந்த அங்கதேசத்துக்கு) அழைத்துக்கொண்டு வருதற்குஉரிய, வகை - உபாயம், யாவது - எது?' என - என்று, குனிக்கும் - சிந்தைகொள்கின்ற, வேலை - பொழுதில்,—சோதி நுதல் - ஒளிபொருந்திய நெற்றியையும், கரு நெடு கண்-கறுத்து நீண்ட கண்களையும், துவர் இதழ் வாய் - சிவந்த அதரத்தோடு கூடிய வாயையும், தரளம் நகை - முத்துப்போன்ற [வெள்ளிய] பற்களையும், துணை மெல் கொங்கை-இரட்டையாகவுள்ள மெல்லிய தனங்களையுமுடைய, மாதர் - விலைமகளிர் சிலர், எழுந்து—, 'யாம் எகி - நாங்கள் போய், அரு தவனை - அந்த இருசியசிருங்கமுனிவனை, கொணர்தும் - (இந்நகரத்துக்கு) அழைத்துக்கொண்டு வருவோம்,' என - என்று சொல்லி, வணக்கம் செய்தார் - ; (எ - று.)

கடலைப் பூமிதேவிக்கு ஆடையாகக் கூறுதல், கவிமரபு. முதலடியால், அந்தஇருசியசிருங்கன் உலகத்தாரை இலட்சியஞ்செய்யாதவனென்று கூறியவாறு. துவர் இதழ் - பவழம்போன்ற இதழுமாம். மாதர்-விலைமகளிர்.(ரு அ)

ரு கூ.—அரசன் அநுமதிதர, இருசியசிருங்கமுனிவனையழைத்து வருமாறு விலைமகளி ரேகுதல்.

*ஆங்கவரம் மொழியுரைப்ப வரசன்மொழிந் தவர்க்கணிதூசாதியாய, பாங்குள[1]மற் றவை[2]யருளிப் பணிப்பிறையைப் பழித்தநுதல் பணைத்த வேய்த்தோ, ளோங்குமிடை [3]தடித்தமுலை யிருண்ட குழன் மருண்டவிழி யிலவச் செவ்வாய்ப், பூங்கொடியீ ரேகுமெனத் தொழுதிறைஞ்சி யிரதமிசைப் போயினரே.

(இ - ள்.) ஆங்கு - அப்பொழுது [அல்லது அவ்விடத்தில்], அவர்-அவ்வேசையர், அ மொழி உரைப்ப - அந்தவார்த்தையைச் சொல்ல,—அரசன் -

உரோமபாதன், மகிழ்ந்து—, அவர்க்கு - அவ்விலைமகளிர்க்கு, அணி தூசு ஆதி ஆய - ஆபரணங்கள் சேலைகள் முதலியவற்றையும், பாங்கு உள மற்றவை - நன்மையுள்ள மற்றைச் செல்வம் முதலியவற்றையும், அருளி - கொடுத்து, பனி பிறையை பழித்த நுதல் - குளிர்ந்த இளஞ்சந்திரனை யிகழ்ந்த நெற்றியையும், பணைத்த வேய் தோள்-பருத்த மூங்கில்போன்ற தோள்களையும், எங்கும் இடை - வாடிய இடையையும், தடித்த முலை - பருத்த தனங்களையும், இருண்ட குழல் - கறுத்த கூந்தலையும், மருண்ட விழி - மருட்சியுள்ள [மருண்ட பார்வையையுடைய] கண்களையும், இலவம் செவ் வாய்-இலவம்பூப்போலச் சிவந்த வாயையுமுடைய, பூ கொடியீர்-பூங்கொடிபோன்றவர்களே! ஏகும் - செல்லுங்கள்', என - என்றுசொல்லிவிடைகொடுக்க, (அம்மங்கையர்), தொழுது இறைஞ்சி - (அரசனை) மிகவணங்கி, இரதம் மிசை போயினர் - (அரசன் கொடுத்த) தேரின்மேலேறிச்சென்றார்கள்; (எ - று.)

பூ - அவர்களுடைய ஆபரணங்களுக்கும் அவயவங்களுக்கும், கொடி - மேனிக்கும் உவமை. பி - ம்:—[1]மற்றவர்க்கு. [2]அளித்து. [3]தடிக்கும். (௩௯)

**௪௦.—சென்ற வேசையர் இருசியசிருங்கனுச்சிரமத்தருகு தங்குதல்.**

> ஓசனை பலகடந் தினியொ ரோசனை
> யேசறு தவனுறை [1]யிடமி தென்றுழிப்
> பாசிழை மடந்தையர் பன்ன சாலைசெய்
> தாசறு மருந்தவத் தவரின் வைகினர்.

(இ - ள்.) பாசு இழை மடந்தையர் - பசுமையான [பைம்பொன்னினாலாகிய] ஆபரணங்களையணிந்த அவ்விலைமகளிர், ஓசனை பல கடந்து - பல யோசனை தூரவழியைக் கடந்து சென்று, ஏசு அறு தவன் உறை இடம் இது இனி ஒர் ஓசனை என்ற உழி - குற்றமில்லாத தவத்தையுடைய இருசியசிருங்கமுனிவன் வசிக்கின்ற இடமாகிய இது இனி ஒருயோசனை தூரத்தி லுள்ளது என்று சொல்லும்படியான இடத்தில், பன்னசாலை செய்து - பன்னசாலை யொன்றை யமைத்துக்கொண்டு, (அதில்), ஆசு அறும் அரு தவத்தவரின் - குற்றமில்லாத அருமையான தவத்தையுடைய முனிவர்கள் போல, வைகினர் - தங்கியிருந்தார்கள்; (எ - று.)

சென்ற வேசையர் இருசியசிருங்கமுனிவனது ஆச்சிரமத்தைக் கிட்டுதற்கு ஒரு யோசனை தூரம் இருக்குமிடத்தில், முனிவர்வேடத்துடன் ஒரு பன்னசாலை யமைத்துக்கொண்டு அதில் தங்கினரென்க. ஓசனை - நான்கு கூப்பீடுகொண்டதூரம். பன்னசாலை=பர்ணசாலை: இலையால் வேயப்பட்ட குடிசை; பர்ணம் - இலை. பி - ம்:—[1]இடமது. (௪௦)

**௪௧.—இருசியசிருங்கமுனிவனை அவன் தந்தையில்லாத சமயத்து இம்மாதர் அடைய, அம்முனிவன் இவரை முனிவராகவே கருதுதல்.**

> அருந்தவன் றந்தையை யற்ற நோக்கியே
> கருந்தடங் கண்ணியர் கலைவ லாளனிற்

பொருந்தினர் பொருந்துபு விலங்கெ னுப்புரிந்
திருந்தவ ரிவரென வினைய செய்தனன்.

• (இ - ள்.) கரு தட கண்ணியர் - கரிய பெரிய கண்களையுடையவேசையர்,—அரு தவன் தந்தையை அற்றம் நோக்கி - அரியதவத்தையுடைய அம்முனிவனுடையதந்தையாகியவிபண்டகமுனிவ னில்லாத சமயம் பார்த்து, கலைவலாளனில் பொருந்தினர் - நூல்களில்வல்ல அவ்விருசியசிருங்கமுனிவனிடத்திற் சென்றனர்; பொருந்துபு - (அங்ஙனம்) சென்றுசேர, (அந்தருசிய சிருங்கமுனிவன்), இவர் விலங்கு என புரிந்து இருந்தவர் என - இவர்கள் (நம்மைப்போலவே உலகத்தாரை) மிருகமெனக்கருதியிருந்த முனிவரென்றுகருதி, இனைய செய்தனன் - இத்தன்மையனவானஉபசாரங்களைச் செய்தான்; (எ - று.)—உபசாரஞ்செய்த வகையை மேற்கவியிற் காண்க.

கலைவலாளன் இல் என்றுபிரித்து - கலைவலாளனுடைய இல்லத்தில் என்றுஉரைப்பாருமுளர். விபண்டகமுனிவன் ஆச்சிரமத்திலிருந்தால் தங்கள் வஞ்சனையை யுணர்ந்து சபித்துவிடுவா னாதலால், வேசையர் அவனில்லாத சமயத்தை யெதிர்பார்த்தனர். "ஆத்மவத் ஸர்வபூதாநி ய꞉பஶ்யதிஸபண்டித꞉ [தன்னைப்போலவே எல்லாப்பிராணிகளையும் கருதுபவன் எவனோ, அவனே பண்டிதன்]" என்றவாறு தன்னைப்போலவே பிறரையும் தகுதியுடையவரென்று கருதும் நல்லியற்கையுடையவனாதலால், இருசியசிருங்கன், வேசையரை 'விலங்கெனுப்புரிந்தவ ரிவர்' என்று கருதினான். "மார்பினிற்கோடு பூத்த, செறிதவமுனிவரென்ன முனிவனை மயக்கஞ்செய்து" என்பது, கூர்மபுராணம். உலகத்தாரை தபஸ்விகள் விலங்கென்றுநினைக்கக்காரணம், உலகத்தார்க்குத் தத்துவஞானமில்லாமையா லென்க; "ஜ்ஞாநேநஹீந꞉ பஶுபிஸ் ஸமாந꞉ [தத்துவஞானமில்லாதவன் விலங்கோடொப்பான்]" என்பது, மேற்கோள். இனி, விலங்கு எனு புரிந்து - (முதலில்இவர்களை) மிருகங்களென்று முனிவன் நினைத்து என்றுமாம்; அன்றி, பொருந்துபு - (மாதர்கள்) அம்முனிவன்ஆச்சிரமஞ்சேர்ந்து, விலங்கு எனு புரிந்தவர் இவர் என - மனிதரை விலங்குஎன்றுஎண்ணியிருந்தவராவர் இந்தமுனிவரென்று நினைக்கையில் என்று முரைக்கலாம். அற்றம் - இல்லாத சமயம். (௪௧)

௪௨.—வந்தவேசையர் இருசியசிருங்கனிடம்உபசாரம்பெற்றுத் தம் பன்னசாலை யடைதல்.

அருக்கிய [1]முதலினோ டாச னங்கொடுத்
திருக்கென விருந்தபி னினிய [2]கூறலு
முருக்கிதழ் மடந்தையர் முனிவ னைத்தொழாப்
பொருக்கென வெழுந்துபோய்ப் புரையுட் புக்கனர்.

(இ - ள்.) (முனிவன் அவர்களுக்கு), அருக்கியம் முதலினோடு - அருக்கியம் முதலியவற்றோடு, ஆசனம் - ஆசனத்தையும், கொடுத்து—, இருக்க என-'(இவ்வாசனங்களில்)வீற்றிருப்பீர்களாக' என்றுசொல்ல, இருந்தபின்- (அவர்கள்) வீற்றிருந்தபின்பு, இனிய கூறலும் - நல்லஉபசாரமொழிகளைச்

சொன்னவளவிலே,— முருக்கு இதழ் மடந்தையர்-பலாசம்பூப்போற்சிவந்த அதரத்தையுடைய அவ்விலைமகளிர், முனிவனை தொழா - அம்முனிவனை வணங்கி (விடைபெற்றுக்கொண்டு), பொருக்கென எழுந்து போய் - விரைவாக எழுந்து சென்று, புரையுள் புக்கனர் - (தமது) ஆச்சிரமத்துட் சேர்ந்தனர்; (எ - று.)

'இருசியசிருங்கமுனிவனுடைய தந்தை வந்துவிடக்கூடும்' என்றும், 'ஒருகால் இம்முனிவன்தானும் நம்மை யுணர்ந்துவிடக்கூடும்' என்றும் அஞ்சியதனால், விரைவில் விடைபெற்றுச் சென்றனர், விலைமகளி ரென்க. ஷோடச [பதினாறு] உபசாரங்களுள் கைகழுவநீர்தரல் தவிசளித்தல் என்னுமிரண்டையுங்கூறி, மற்றவற்றை 'முதலினோடு' என்றதனாற் பெறவைத்தார். இருக்கென - விகாரம். பி - ம்:—[1]முதலிய. [2]கூறியம். (சஉ)

**சங.—இருசியசிருங்கனுக்கு மகளிர் கனிகள்பல அருந்துமாறு தருதல்.**

திருந்திழை யவர்சில தினங்க டீர்ந்துழி
மருந்தினு மினிபன வருக்கை வாழைமாத்
தருந்தருங் கனியொடு தாழை யின்பல
மருந்தவ வருந்தென [1]வருளி னாரரோ.

(இ - ள்) திருந்து இழையவர் - திருத்தமான வேலைப்பாட்டையுடைய ஆபரணங்களையணிந்த அவ்விலைமகளிர், சில தினங்கள் தீர்ந்த உழி - சில நாள் கழிந்தபிறகு, மருந்தின்உம் இனியன - தேவாமிருதத்தைவிட மிக்க இன்சுவையுடையனவாகிய, வருக்கை வாழை மா தரு தரும் கனியொடு - பலாமரங்களும் வாழைமரங்களும் மாமரங்களும் தந்த பழங்களுடனே, தாழை இன் பலம் - இனியதேங்காய்களையும் (கொணர்ந்து), 'அரு தவ அருந்து - அரியதவத்தையுடையமுனிவனே! நீ அமுதுசெய்தருள்வாயாக', என-என்றுசொல்லி, அருளினார் - அன்புடன் கொடுத்தார்கள்; (எ - று.)

சிலதினங்கழிந்தபிறகு தங்களிடம் இருசியசிருங்கனுக்கு விசுவாசம் மிகும்பொருட்டு வேசையர் இங்ஙனம் பலவகைக்கனிகளைக் கொணர்ந்து கொடுத்தன ரென்க. தீர்ந்துழி - விகாரம். தருத்தரும்என்பதுஎதுகை நோக்கி மெலிந்தது. இனி, தரும்தரும்என்று அடுக்குத்தொடராகவெடுத்து-மேன்மேலுந்தருகின்றவென்பாருமுளர். பி - ம்:—[1] அருந்தினனரோ. (சங)

**சச.—அம்மகளிர்முனிகுமாரனைத்தம்மிடத்துக்குவருமாறுவேண்ட, முனிவனும்அங்ஙனமே செல்லுதல்.**

இன்னன பல்பக லிறந்த பின்திரு
நன்னுதன் மடந்தையர் நவையின் மாதவன்
றன்னையெம் மிடத்தினுஞ் சார்தல் வேண்டுமென்
[1]றன்னவற் றொழுதனு மவரொ டேகினான்.

(இ - ள்.) இன்னன பல் பகல் இறந்த பின் - இத்தன்மையனவாகிய அநேகநாட்கள் கழிந்தபிறகு, திரு - அழகிய, நல் நுதல் - பிரகாசமுடைய

நெற்றியையுடைய, மடந்தையர் - அந்த விலைமகளிர், நலை இல் மாதவன் தன்னை எம் இடத்தின்உம் சார்தல் வேண்டும் என்று - குற்றமற்ற சிறந்ததவத்தையுடைய அம்முனிவனைநோக்கி '(நாங்கள் உமது ஆச்சிரமத்திற்குவருதல்போலவே) தேவரீரும் எங்கள்ஆச்சிரமத்திற்கு எழுந்தருளுதல் வேண்டும்' என்றுசொல்லி, அன்னவன் தொழுதலும் - அந்தஇருசியசிருங்க முனிவனை வணங்கினவளவில், (அம்முனிவனும்), அவரொடு ஏகினன் - அவ்விலைமகளிரோடுசென்றான்; (எ - று.)—பி - ம்:—[1]அன்னவர்தொழுதலும். (சச)

சரு.—விலைமகளிர் முனிவனையிட்டுக்கொண்டு அங்கதேசத்துக்குப் போகும் வழியிற் செல்லுதல்.

விம்முறு முவகையர் வியந்த நெஞ்சின
ரம்மவி திதுவென வகலு நீணெறி
[1]செம்மையின் முனிவரன் றொடரச் சென்றனர்
தம்மன மெனமருட் டையலார்களே.

(இ - ள்.) தம் மனம் என மருள் தையலார்கள் - தங்கள் நெஞ்சம்போல(ப் பிறரை) மயக்கவல்ல அழகியவிலைமகளிர், விம்முறும் உவகையர் - (முனிவனை யிட்டுக்கொண்டுபோகவேணு மென்ற தமது எண்ணம் நிறைவேறியதனால்) மிகுகின்ற மகிழ்ச்சியையுடையவர்களும், வியந்த நெஞ்சினர் - ஆச்சரியமடைந்த மனத்தை யுடையவரும், 'அம்ம - (முனிவனே!)கேட்பாயாக: இது இது-, எங்கள் ஆச்சிரமம் இதோ இதோ', என - என்று (தமது ஆச்சிரமம் அருகிலுள்ளதாகச் சுட்டிக்) காட்டிக்கொண்டு, செம்மையின் முனிவரன் தொடர - எல்லாநற்குணங்களையுமுடைய அந்தச்சிறந்த முனிவன் (தம்முடன்) தொடர்ந்துவர, அகலும் நீள் நெறி - பரந்த நீண்ட (அங்கதேசத்துக்குச் செல்லும்) வழியிலே, சென்றனர் - போனார்கள்; (எ-று.)

விலைமகளிர் தமது கருத்து முற்றுவதனால் மனமகிழ்ந்து தம்முடைய ஆச்சிரமம் மிக அருகிலுள்ளதாகச் 'சொல்லிக்கொண்டு அம்முனிவன் தம்மைப் பின்பற்றிவர, அங்கதேசத்துவழியிற் சென்றார்க ளென்பதாம். அம்ம- முன்னிலையசைச்சொல்; இது - கேள் என்னும் பொருளைக் குறிப்பிக்கும். இனி, இதனை வேசையரது திறமையை நோக்கிக் கவி வியந்துகூறிய வியப்பிடைச்சொ லெனினுமாம். இதுஇது - அடுக்கு, தேற்றம் பற்றியது. செம்மையின் - நேர்மையுள்ள [கபடமில்லாத] எனினுமாம். மருள் - மருட்டுகின்ற: பிறவினைப்பொருளில்வந்த தன்வினை வினைத்தொகை. தம்மனமென மருள் என்பதற்கு - (முனிவன் உணர்ந்தால் யாதாகச் சபிப்பனோ என்று) தமது மனம் மருளுதல்போலக் கைகால் முதலிய உறுப்புக்கள் நடுங்குகின்ற என்றுமாம். இனி, இச்செய்யுளுக்கு—மருள் - (முனிவனை வஞ்சகமாயழைத்துப் போவதால் என்னதீங்கு நேருமோ? என்று) அச்சங்கொண்ட, தையலார்கள், உவகையரும் நெஞ்சினருமாய், இது இது என்று சொல்ல, நீணெறிக்கண் முனிவரன் தம் மனமெனத் தொடர, சென்றனர் என்று உரைப்பினுமாம். பி - ம்:—[1]செம்மைசேர். (சரு)

சசு.—முனிவன் வருகையில் உரோமபாதன்நகரில் பெருமழை பெய்தல்.

வளநகர் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் கடுவெனக் கருகி [1]வான்முகில்
சளசள வெனமழைத் தாரை கான்றன
குளனொடு நதிகடங் [2]குறைக டீரவே.

(இ - ள்.) முனிவரன் - அந்த இருடியர்தலைவன், வளம் நகர் வரும் முன் - எல்லாவளங்களையுமுடைய அவ்வுரோமபாதன்நகரத்துக்கு எழுந்தருளும் முன்னே, [எழுந்தருளியமாத்திரத்தில் மிகவிரைவில்],வான்முகில்- வானத்து மேகங்கள்,—வானவன் களன் அமர் கடு என கருகி - சிறந்த தேவனாகிய சிவனது கண்டத்திற் பொருந்திய விஷம்போலக் கருநிறமுள்ள தாய், குளனொடு நதிகள் தம் குறைகள் தீர - குளங்கள் ஆறுகள் என்னும் நீர்நிலைகள் (இதுகாறும் நீரில்லாதிருந்த) குறைவுகள் நீங்கும்படி, சள சள என - சள சள வென்னும் ஓசையுண்டாக, மழை தாரை கான்றன - மழை நீர்ப்பெருக்கைச் சொரிந்தன; (எ - று.)

சளசள - ஈரடுக்கொலிக்குறிப்பு : அநுகரணம் : இரட்டைக்கிளவி. வானவன் - பொதுப்பெயர், சிறப்புப்பொரு ளுணர்த்திற்று. குளன், களன்- போலிகள். பி - ம்:—[1]வான்மிசை. [2]குறைவு. (சசு)

சஎ.—மழைபொழிந்ததுகண்டு அரசன் அனுமானித்தல்.

பெரும்புன னதிகளுங் குளனும் [1]பெட்பறக்
கரும்பொடு செந்நெலுங் கவின்கொண் டோங்கிட
விரும்புயல் ககனமீ திடைவி டாதெழுந்
தரும்புனல் சொரிந்தபோ தரசு ணர்ந்தனன்.

(இ - ள்.) நதிகள்உம் - ஆறுகளும், குளன்உம் - தடாகங்களும், பெரு புனல் பெட்பு அற - மிக்கநீரினிடத்துக்கொண்டுள்ள ஆசை நீங்கவும், கரும் பொடு - கரும்புகளும், செந்நெல்உம் - செந்நெற்பயிர்களும், கவின் கொண்டு ஓங்கிட - அழகுபெற்றுச் செழித்து வளரவும், இரு புயல் - கரிய மேகங்கள், ககனம் மீது - ஆகாயத்தின்மேலே, இடை விடாது - இடை விடாமல், எழுந்து - பரவிநின்று, அரு புனல் சொரிந்த - (வெகுநாளாய்) அருமையாகவிருந்த நீரைப் பொழிந்த,போது - சமயத்தில், அரசு - உரோம பாத மகாராசன், உணர்ந்தனன் - (அநுமானப் பிரமாணத்தால்) ஆலோசித் தறிவானானான்; (எ - று.)—அதனை, மேற்கவியிற் கூறுகின்றார்.

முதலடிக்கு - மிக்கநீரைக் கொள்ளு மியல்புள்ள ஆறுகளும் குளங் களும் பெருமை யொழியும்படி யென்று முரைக்கலாம்; பெருமழைப்பெருக் கைத் தம்முட்கொள்ள முடியாதவாறு ஆறுகளும் குளங்களும் சிறியன வாயின வென்பது கருத்து. [1]பெட்புற' என்ற பாடத்திற்கு-பெரும்புனலால் நதிகளும் குளங்களும் (மக்கள்) விரும்புந்தன்மையடைய வென்று பொரு ளாம். செந்நெல் -நீர்வளமிகுந்தவிடத்து வளர்வதொரு பயிர். இரும்புயல் - பெரியமேகமுமாம். அரசு - பண்பாகுபெயர். (சஎ)

சஅ, சகூ.—இதுவும், அடுத்தகவியும்-குளகம்: உரோமபாதன் இருசியசிருங்க முனிவன் வந்தனன்போலு மென்று ஆலோசித்துச், சேனையோடு அம்முனிவனை யெதிர்கொள்ளச் செல்லுதல்.

சஅ. காமமும் வெகுளியுங் களிப்புங் [1]கைத்தெழு
கோமுனி யிவணடைந் தனன்கொல் கொவ்வைவாய்த்
தாமரை மலர்முகத் தரள வாணகைத்
தூமமென் குழலியர் புணர்த்த சூழ்ச்சியால்.

சகூ. என்றெழுந் தருமறை முனிவர் யாரொடுஞ்
சென்றிரண் டியோசனை சேனை சூழ்தர
மன்றலங் குழலியர் நடுவண் மாதவக்
குன்றினை யெதிர்ந்தனன் குவவுத் தோளினன்.

(இ - ள்.) (சஅ) கொவ்வை வாய் - கொவ்வைப்பழம்போற் சிவந்த வாயையும், தாமரை மலர் முகம் - செந்தாமரை மலர்போன்ற முகத்தையும், தரளம் வாள் நகை - முத்துப்போன்ற வெள்ளொளியையுடைய பற்களையும், தூமம் மென் குழலியர் - புகைபோலக் கரிய மென்மையான கூந்தலையுமுடைய விலைமாதர், புணர்த்த - ஆலோசித்துச்செய்த, சூழ்ச்சியால் - தந்திரத்தினால், காமம்உம் வெகுளிஉம் களிப்புஉம் கைத்து எழு கோ முனி - காமம் வெகுளி மயக்கமென்னும் முக்குற்றங்களையும் வெறுத்து உயர்ந்த சிறந்த இருசிய சிருங்கமுனிவன், இவண் - இந்நகரத்தில், அடைந்தனன் கொல் - வந்து சேர்ந்தானோ? (சகூ) என்று-என்றுநினைத்து,—குவவு தோளினன்-திரட்சியையுடைய தோளையுடைய உரோமபாதன்,—அரு மறை முனிவர்யாரொடுஉம்-(அறிதற்கு) அரிய வேதம் வல்ல முனிவர்களெல்லோருடனே, சேனை சூழ்தர - (தன்னுடைய) சேனையும் சுற்றிலும் வாராநிற்க, எழுந்து - புறப்பட்டு, இரண்டு யோசனை சென்று - இரண்டுயோசனைதூரம் போய், மன்றல் அம் குழலியர் நடுவண் - வாசனையையுடைய அழகிய கூந்தலையுடையரான அவ்விலைமகளிரின் நடுவில், மாதவம் குன்றினை-பெரிய தவமயமானதொரு மலைபோன்ற இருசியசிருங்கமுனிவனை, எதிர்ந்தனன் - எதிர்கொண்டான்; (எ - று.)

சஅ.—தூமமென்குழலியர் என்பதற்கு-அகிற்புகையூட்டப்பெற்ற மெல்லியகூந்தலையுடையவ ரெனினுமாம்; "தேக்கண்ணின்னகிலினாவி தேக்கிருங்குழலினாள்" என்றதுகாண்க. கொல்-ஒருதலையையம். "காமம் வெகுளிமயக்க மிவைமூன்ற, னாமங்கெடக் கெடுநோய்" என்றார், திருவள்ளுவனாரும். பி - ம்:—[1]கைத்தவக். சகூ.—"இருக்கையெழலும் எதிர்செலவும்......குடிப்பிறந்தார் குன்றா வொழுக்கமாக்கொண்டார்" என்றவாறு வந்தவரை எதிர்கொள்ளுதல் மரபாதலால், உரோமபாதன் முனிவனை யெதிர்கொள்ளச் சென்றனனென்க. சலியாமையும் பெருமையும் திரண்டுருண்டு நீண்டிருத்தலும் முதலியனபற்றி, குன்று தோளுக்கு உவமையாம். (சஅ, சகூ)

**ரு०.—அப்போது மன்னவன் முனிவனை வணங்கி விலைமகளிரைப்புகழ்தல்.**

வீழ்ந்தன னடிமிசை விழிக ணீர்தர
[1]வாழ்ந்தன மினியென மகிழுஞ் சிந்தையான்
றாழ்ந்தெழு மாதரார் தம்மை நோக்கிநீர்
போழ்ந்தனி ரெனதிடர் புணர்ப்பி னாலென்றான்.

(இ - ள்.) (அரசன்),—இனி வாழ்ந்தனம் என மகிழும் சிந்தையான் - இனி (எல்லா) வாழ்வுகளையும் பெற்றோ மென்று களிக்கின்ற மனத்தை யுடையவனாய், விழிகள் நீர்தர - கண்கள் ஆநந்தபாஷ்பத்தைச் சொரிய, அடி மிசை வீழ்ந்தனன் - (முனிவனது) திருவடிகளில் விழுந்துநமஸ்கரித் தான்; தாழ்ந்து எழும் மாதரார் தம்மை நோக்கி-(தன்னை) வணங்கியெழுந்த விலைமகளிர்களைப் பார்த்து, நீர் எனது இடர் புணர்ப்பினால் போழ்ந்தனிர் என்றான் - 'நீங்கள் என்னுடையதுன்பத்தை உங்களுபாயத்தால் தீர்த்துவிட் டீர்கள்' என்றுசொல்லிப் புகழ்ந்தான்; (எ - று.)

இரண்டாமடி - மத்திமதீபமாகி, முன்வாக்கியத்தோடும் பின்வாக்கியத் தோடும் இயையும். இடர்-மழையின்மைக்குறை. பி - ம்:—[1]வாழ்ந்தனன்.

**ருக.—விலைமகளிரது வஞ்சனையையுணர்ந்தஇருசியசிருங்கமுனிவனது சினத்தை அரசன் தணித்தல்.**

[1]அரசனு முனிவரு மடைந்த வாயிடை
[2]வரமுனி வஞ்சமென் றுணர்ந்த மாலைவாய்
வெருவினர் விண்ணவர் வேந்தன் வேண்டலாற்
கரையெறி யாதலை கடலும் போன்றனன்.

(இ - ள்.) அரசன்உம் முனிவர்உம் அடைந்த ஆயிடை - உரோமபாத மன்னவனும் பலமுனிவர்களும் (தன்னை) வந்துசேர்ந்த காலத்தில், வரம் முனி - சிறந்த இருசியசிருங்கமுனிவன், வஞ்சம் என்று உணர்ந்த மாலை வாய் - (நம்மை இவர்கள் அழைத்துவந்த இது) வஞ்சனை என்று தெளிந்த சமயத்தில்,— விண்ணவர் - தேவர்களும், வெருவினர் - '(இருசியசிருங்க முனிவனதுபெருஞ்சினத்தைக் கண்டு) அஞ்சினார்கள்; வேந்தன் வேண்ட லால் - உரோமபாதமன்னவனதுபிரார்த்தனையால், (இருசியசிருங்கமுனி வன்), கரை எறியாது அலை கடல்உம்-கரையைக் கடந்துமேல்வராமல் அலை யெறியுமியல்புள்ள கடலையும், போன்றனன் - ஒத்திருந்தான்; (எ - று.)

கடலிற்பொங்கியெழுகின்ற அலை கடவுளாணையாற் கடலிலேயேஅடங் குதல்போல,இருசியசிருங்கமன்னவனதுமனத்தினுட்பொங்கியெழுந்தசினம் உரோமபாதமன்னவனதுவேண்டுகோளால் அவன்மனத்துள்ளேயே அடங் கிற்றென்க. கடலும்-உம்மை, உயர்வுசிறப்பு. [1]அரசரும் என்றபாடத்திற்கு- அரசகுலத்தாரும்என்றும், [2]வருமுனிஎன்றபாடத்திற்கு-(மாதரைத்தொடர்ந் து)வந்தமுனி யென்றும் பொருள்காண்க. மாலை - சிறப்புப்பெயர், பொதுப் பொருளுணர்த்திற்று. (சுக)

ருஉ.—இதுவும் அது.

வள்ளுறு வயிரவாண் மன்னன் பன்முறை
யெள்ளரு முனிவனை யிறைஞ்சி யாரினுந்
தள்ளருந் துயரமுஞ் சமைவுஞ் சாற்றலு
முள்ளுறு வெகுளிபோ யொளித்த தாமரோ.

(இ - ள்.) வள் உறு வயிரம் வாள் மன்னன்-தோலுறையில் தங்கிய வச்சிராயுதம்போன்ற வாட்படையையுடைய உரோமபாதராசன்,எள் அறு முனிவனை - பழிப்பில்லாத இருசியசிருங்கமுனிவனை, இறைஞ்சி - வணங்கி, யாரின்உம் தள்ள அரு துயரம்உம் - எவராலும் நீக்குதற்குக்கூடாத (மழைபெய்யாமையால்தன்னாட்டுக்குண்டான) துன்பத்தையும், சமைவுஉம்- (அம்முனிவன்வந்ததனால் இப்பொழுது மழைபெய்து முன்னையதுன்பம்) தணிந்ததையும், பல் முறை சாற்றலும் - அனேகதரஞ் சொல்லிக் (கோபந்தணியுமாறுவேண்டிக்)கொண்டவளவில்,—உள் உறு வெகுளி-(அம்முனிவனது)மனத்தில் மிகுதியாய்ப்பொருந்திய சினம், போய் ஒளித்தது - போய்மறைந்தது; [நீங்கிற்றென்றபடி]; (எ-று.)-ஆம், அரோ-ஈற்றசைகள்.

தன்னைப் பர்ணசாலைக்குஇட்டுக்கொண்டுபோவதாகச்சொல்லி மாதர் வஞ்சித்ததைத் தெளிந்த இருசியசிருங்கன் பெருஞ்சினங் கொண்டானாக, அப்போது உரோமபாதமன்னவன் அவனதுதாளில்விழுந்து, தனதுநாட்டிற் பெரும்பஞ்சம்நேர்ந்ததையும் தனதுபுரோகிதரானமுனிவர்கள் 'ருசியசிருங்க முனிவன் இந்நாட்டில்வந்தால்தான் மழைபொழிந்து பஞ்சம் நீங்கும்'என்று கூறியதையும், அதனால் தான் விலைமகளிரையனுப்பி அழைத்துவருமாறு செய்ததையும், முனிவன்வந்தவுடன் பெருமழைபெய்துபஞ்சம்நீங்கித் தன்னாட்டிலுள்ளார் சுகமடைந்ததையும் எடுத்துச்சொல்லி, 'நாட்டின் பெருநன்மைக்குக் காரணமாயிருந்த நீ நாட்டின்நன்மைக்காகச் செய்த என்னைப் பொறுத்துச் சினந்தணிக' என்றுவேண்ட, அம்முனிவனும் சினந்தணிந்தனனென்க. கீழ்ச்செய்யுளிற்கூறியதையே இச்செய்யுளில் விவரித்துக்கூறி விளக்கினார். பன்முறையிறைஞ்சி யென்று மியைக்கலாம். எள் - முதனிலைத் தொழிற்பெயர். (ருஉ)

ருங—இருசியசிருங்கன் தேரின்மீது ஏறிக்கொண்டு உரோமபாத மன்னவனது நகரத்துக்குச் செல்லுதல்.

அருள்சுரந் தரசனுக் காசி யுங்கொடுத்
திருடரு தேரின்மீ தொல்லை [1]யேறிநற்
[2]பொருடரு முனிவருந் தொடரப் போயினன்
மருளொழி யுணர்வுடை வரத மாதவன்.

(இ - ள்.) மருள் ஒழி உணர்வுஉடை-மயக்கம் நீங்கிய அறிவையுடைய, வரதன் - (தன்னைச் சார்ந்தவர் கேட்ட) வரங்களைக்கொடுக்கவல்லவனாகிய, மா தவன் - மிக்கதவத்தையுடைய அந்த இருசியசிருங்கமுனிவன்,—அருள் சுரந்து - கருணை மிகுந்து, அரசனுக்கு ஆசிஉம் கொடுத்து - உரோமபாத

னுக்கு ஆசீர்வாதத்தையுஞ் செய்து,நல் பொருள் தரு முனிவர்உம் தொடர-சிறந்த விஷயங்களை யுபதேசிக்கவல்ல முனிவர்களும் உடன் வர, உருள்தரு தேரின்மீது ஏறி ஒல்லை போயினன் - சக்கரங்களைப் பொருந்திய (அரசன் தந்த) இரதத்தின்மேல் ஏறிக்கொண்டு விரைவாக (அம்மன்னவனது நகரத்துக்குச்) சென்றான்; (எ - று.)

வரதமாதவன் - உயர்திணையீறு கெட்டது. மருள் - விபரீதஞானம். பி - ம்:—[1] ஏறினன். [2]பொருவரு. (௫௩)

௫௪.—உரோமபாதன் முனிவனுடன் நகரத்தையடைந்து அவனைச் சிங்காதனத்தமர்த்துதல்.

அடைந்தனன் வளநக ரலங்க ரித்தெதிர்
மிடைந்திட முனியொடு வேந்தன் கோயில்புக்
கொடுங்கலில பொற்குழாத் துறையு ளெய்தியோர்
மடங்க[1]லா தனத்திடை முனியை வைத்தனன்.

(இ - ள்.) (நகரத்திலிருந்தவர்கள்), வளம் நகர் அலங்கரித்து - வளப்பமுள்ள அந்த நகரத்தை அலங்காரஞ்செய்து, எதிர் மிடைந்திட - எதிர்கொண்டு நெருங்க,—வேந்தன் - உரோமபாதன், - முனியொடு - அம்முனிவனுடனே, அடைந்தனன் - (நகரத்தை) அடைந்து, கோயில் புக்கு-அரண்மனையைச் சேர்ந்து, ஒடுங்கல் இல் பொன் குழாத்து உறையுள் எய்தி - ஒடுங்குதலில்லாத [விசாலமான] பொன்னாற்செய்யப்பட்ட திரட்சியையுடைய மாளிகையை யடைந்து, ஓர் மடங்கல் ஆதனத்திடை-ஒப்பற்றசிங்காசனத்தில், முனியை - முனிவனை, வைத்தனன்-வீற்றிருக்கச் செய்தான்.

அரசன் ஏவலாளரை முன்னேவிடுத்து அலங்கரிக்குமாறு நகரத்தவர்க்குச் செய்தியனுப்ப, அவரும் அங்ஙனமே நகரையலங்கரித்து எதிர்கொள்ள, அவ்வுரோமபாதமன்னன் முனிவனுடனே நகரத்தையடைந்து அரண்மனையினுள் ஒருமாளிகையிற் செம்பொற்சிங்காசனத்து அம்முனிவனைவீற்றிருக்க வைத்தன னென்க. பொற்குழாத்துறையுள்— "குழுவின்மாடம்" என்றார் சிந்தாமணியாரும். பி - ம்:—[1]ஆசனத்தின்மேல். (௫௪)

௫௫.—மன்னவன் சாந்தையென்னும் மகளை இருசியசிருங்கமுனிவனுக்குப் பல்வகை யுபசாரத்துடனே யீதல்.

*அருக்கிய முதலிய கடன்க ளாற்றிவே
றுரைக்குவ திலதென வுவந்து தானருண்
முருக்கித ழிளமுலை முகந லாடனை
யிருக் கொடு விதிமுறை யினிதி னீந்தனன்

(இ - ள்.) (உரோமபாதன்),—(அப்பொழுது அந்த இருசியசிருங்க முனிவனுக்கு),—உரைக்குவது வேறு இலது என-(குறைவென்று) சொல்லத்தக்கது வேறொன்றுமில்லை யென்னும்படி, அருக்கியம் முதலிய கடன்கள் - (செய்யவேண்டியனவாகிய) அருக்கியம் முதலிய எல்லாவுபசாரங்களை

யும், ஆற்றி - செய்து, உவந்து - மகிழ்ந்து, தான் அருள் முருக்கு இதழ் இள முலை முகம் நலாள்தனை - தான்பெற்ற பலாசமலர்போன்ற அதரத்தையும் இளமையான தனங்களையுமுடைய சாந்தை யென்னும் மகளை, இருக்கொடு - வேதமந்திரத்துடனே, விதி முறை - (கன்னிகாதானஞ் செய்ய வேண்டிய) முறைப்படியே, இனிதின் ஈந்தனன் - அன்போடு கன்னிகா தானஞ் செய்தனன்; (எ - று.)

அருக்கியம் முதலிய உபசாரஞ்செய்து; மன்னவன், இருசியசிருங்கமுனிவனுக்குச் சாந்தையென்பவளை விவாகஞ்செய்து கொடுத்தன னென்க. அர்க்யம் - கைகழுவுநீர். சாந்தையென்ற இவள் தசரதமன்னவனது மகளென்றும், அம்மன்னவனால் உரோமபாதமன்னனுக்குத் தத்தபுத்திரியாகத் தரப்பட்டவளென்றும் அறிக. 'ஶாந்தா' என்னும் வடமொழிப்பெயரை மொழிபெயர்த்து, 'முகம்நலாள்' என்றார்; சாந்தையாம் முகநலாட்டனை யென்று பாட மோதுவாரு முளர். (ருரு)

ருசு.—இருசியசிருங்கமுனிவன் அவ்வுரோமபாதநகரத்துள்ளானென்று வசிட்டன் கூறி முடித்தல்.

வறுமைநோய் தணிதர வான்வ ழங்கவே
யுறுதுயர் தணிந்த[1]தவ் வுலகம் வேந்தருள்
செறிகுழல் போற்றிடத் திருந்து மாதவத்
தறிஞனாண் டிருக்குந னரச வென்றனன்.

(இ - ள்.) வறுமை நோய் தணிதர - (மழையில்லாமையால் நேர்ந்த) பஞ்சமாகிய நோய் தீரும்படி, வான் வழங்க - மேகம் மழையைப் பொழியவே, அ உலகம் - அந்த அங்கதேசம், உறு துயர் தணிந்தது - மிக்கதுன்பம் நீங்கப்பெற்றது; திருந்து மா தவத்து அறிஞன் - திருத்தமான மிக்க தவத்தையுடைய தத்துவஞானியான அம்முனிவன், வேந்து அருள் செறி குழல் போற்றிட - உரோமபாதமன்னவனளித்த நெருங்கிய கூந்தலையுடைய சாந்தையென்பவ ளுபசரிக்க, ஆண்டு இருக்குநன் - (அதுமுதல்) அவ்விடத்தில் தானே இருக்கின்றான்: அரச - தசரதமன்னவனே! என்றனன் - என்று (வசிட்டமுனிவன்) சொல்லி முடித்தான்; (எ - று.)

வறுமை - நுகரப்படும்பொருள் யாவுமில்லாமை; அது, இங்கே பஞ்சத்தைக் காட்டிற்று; அதனை நோய் என்றது, துன்பந்தருந் தன்மையால். செறிகுழல் - அன்மொழித்தொகை. இருக்குநன் - பெயர்ப்பகுபதமாய்நிற்றற்கு உரியது, குறிப்புவினைமுற்றாய் வந்தது. பி - ம்:—[1]இவ்வுலகும். (ருசு)

ருஎ.—வசிட்டனிடத்து விடைபெற்று இருசிய சிருங்கனை அழைத்து வருமாறு தசரதன் சொல்ல, வானவர் மலர்மழை பொழிதல்.

என்றலுமே முனிவரன்ற னடியிறைஞ்சி யீண்டேகிக் கொணர்வெ னென்னாத், துன்றுகழன் முடிவேந்த ரடிபோற்றச் சுமந்திரனே [1]முதல்வ ராய, வன்றிறல்சே [2]ரமைச்சர்தொழ மாமணித்தே ரே

றுதலும் வானோர் வாழ்த்தி, யின்றெமது வினைமுடிந்த தெனச்சொ ரிந்தார் மலர்மாரி யிடைவி டாமல்.

(இ-ள்.) என்றலும்ஏ-என்று (வசிட்டன்)சொன்னவளவிலே,(தசரதன்), முனிவரன் தன் அடி இறைஞ்சி - அவ்வசிட்டமுனிவனது திருவடிகளை வணங்கி, ஈண்டு ஏகி கொணர்வென் என்னா - இப்பொழுதேபோய் (அம் முனிவனை)அழைத்துவருவேனென்று சொல்லி, துன்று கழல் முடி வேந்தர் அடிபோற்ற - நெருங்கிய வீரக்கழலையும் கிரீடத்தையுமுடைய அரசர்கள் (தன்) பாதத்தை வணங்க, சுமந்திரன் ஏ முதல்வர் ஆய வன் திறல் சேர் அமைச்சர் தொழ - சுமந்திரன் முதலான மிக்க புத்திபலம் பொருந்திய மந்திரிமார்கள் வணங்கிநிற்க, மணி மா தேர் ஏறுதலும் - இரத்தினங்களி ழைத்த பெரிய தேரின்மே லேறினவளவில், - வானோர் - தேவர்கள், வாழ்த்தி - (சக்கரவர்த்திக்கு) ஆசீர்வாதஞ்செய்து, 'எமது வினை இன்று முடிந்தது' என - 'நமது துன்பம் இன்றைக்கே யொழிந்தது' என்று கருதி (மகிழ்ந்து), மலர் மாரி - புஷ்பவர்ஷத்தை, இடைவிடாமல் சொரிந்தார் - இடையறாது பொழிந்தார்கள்; (எ - று.)

இருசியசிருங்கமுனிவனை யழைத்துவருமாறு தசரதன்செல்வதாலும், அவனையழைத்துவருவது இராமாவதாரத்திற்குக்காரணமாகின்றயாகத்தைச் செய்வதற்காகவாதலாலும், வானோர் 'இன்றுஎமதுவினைமுடிந்தது' என்று மகிழ்ந்து மலர்மழைபொழிந்தன ரென்க. ஈண்டுக்கொணர்வென் என்றுமாம். அமைச்சர்-அமாத்யர் என்றவடசொல்லின்விகாரம்: (அரசனது) அருகிலிருப் பவரென்றுபொருள் பி-ம்:—[1]முதலாவுள்ள. [2]அமைச்சரொடு. (கஎ)

## ௫அ.—தசரதன் அங்கநாட்டை யடைதல்.

காகளமும் பல்லியமுங் [1]கனைகடலின் மேன்முழங்கக் கா னம் பாட, மாகதர்க ளருமறைநூல் வேதியர்கள் வாழ்த்தெடுப்ப மதுரச் செவ்வாய்த், தோகையர்பல் லாண்டிசைப்பக் கடற்றானை புடைசூழச் சுடரோ னென்ன, வேகியரு நெறிநீங்கி யுரோமபதன் றிருநாட்டை யெதிர்ந்தா னன்றே.

(இ - ள்.) காகளம்உம் - காகளமென்னும்வாத்தியமும், பல் இயமும் - (மற்றும்) பல வாத்தியங்களும், கனை கடலின் மேல் - ஒலிக்கின்ற கடலி னும் அதிகமாக, முழங்க - பேரொலிசெய்யவும், மாகதர்கள்-, கானம் பாட- பாட்டுப்பாடவும், அரு மறை நூல் வேதியர்கள் - அருமையான வேதசாஸ் திரங்களையறிந்த அந்தணர்கள், வாழ்த்து எடுப்ப - ஆசீர்வாதங்களை யெடுத் துச்சொல்லவும், மதுரம் செம் வாய் தோகையர் - இனிப்பான சிவந்த அதரத்தையுடைய மாதர்கள், பல்லாண்டு இசைப்ப - பல்லாண்டுபாடவும், கடல் தானை புடை சூழ - சமுத்திரம்போன்ற சேனை பக்கங்களிற் சுற்றி வரவும்,—சுடரோன் என்ன - சூரியன்போல, ஏகி - சென்று, அரு நெறி நீங்கி - (கடப்பதற்கு) அரிய வழியைக் கடந்து, உரோமபதன் திருநாட்டை

எதிர்ந்தான் - உரோமபாதராசனது அழகிய (அங்க) தேசத்தைச் சார்ந்தான், (தசரதன்); (எ - று.)—அன்றே-ஈற்றசை.

எழுவாய் வருவிக்க. முழங்க பாட எடுப்ப இசைப்ப சூழ ஏகி எதிர்ந்தானென்க. காகளம்-சிறுசின்னம்;இதுகாளமென்றும் வழங்கும். மாகதர்-வைசியனுக்கு க்ஷத்திரியஜாதிஸ்திரீயினிடம் பிறந்த ஸங்கரஜாதியார்; இவர்கள் - அரசர்களின் வீரம் முதலியவற்றைப்புகழ்ந்து ஜீவிப்பவர். இச்சொல்லுக்கு 'இருந்தேத்துவார்' என்று பொருள்கூறுவர், நச்சினார்க்கினியர். அருமறை நூல்வேதியர்-"கமலமென்பொகுட்டுமேவிய வரசரோருகன்" என்றதுபோலக்கொள்க. பல்லாண்டு-பல்லாண்டுவாழ்கஎன்றுவாழ்த்தும் பாடல். கடல்-சேனைக்கு, ஆரவாரமும் அளவிறந்தபரப்பும் அணியணியாவருதலும் பற்றிய உவமை. ஆயிரங்கிரணங்களையுடைமையால், 'சுடரோன்' என்று சூரியனுக்குப்பெயர். ஒளிமிகுதியாலும் தேரின்மீது விரைந்துசெல்வதனாலும், இங்குத் தசரதனுக்குச் சூரியன் உவமையாவன். பி - ம்:—[1]கருங்கடலின்மிக. (ருஅ)

ருகூ.—தசரதனதுவருகையையுணர்ந்தஉரோமபாதன் அவனையெதிர்கொள்ளச் செல்லுதல்.

**கொழுந்தோடிப் படர்கீர்த்திக் கோவேந்த னடைந்தமை சென் றொற்றர் கூறக், கழுந்தோடும் வரிசிலைக்கைக் கடற்றானை புடைசூழக் கழற்கால் வேந்தன், செழுந்தோடும் பல்கலனும் வில்வீச மாகதர்கள் திரண்டு பாட, வெழுந்தோடு முவகையுடன் யோசனைசென் றனரசை யெதிர்கோ ளெண்ணி.**

(இ - ள்.) கொழுந்து ஓடி படர் கீர்த்தி - கொழுந்துவிட்டுப்பரவுகின்ற புகழையுடைய, கோவேந்தன் - தசரதசக்கரவர்த்தி, அடைந்தமை - அருகு வந்துள்ளதை, ஒற்றர் சென்று கூற-ஒற்றாட்கள்போய்ச்சொல்ல, (உடனே), கழல் கால் வேந்தன் - வீரக்கழலையணிந்த பாதத்தையுடைய உரோமபாதன்,— கழுந்து ஓடும் வரி சிலை கை - உறுதிமிக்க கட்டமைந்தவில்லைக் கையிலுடைய, கடல் தானை - சமுத்திரம்போன்ற (தனது) சேனை, புடை சூழ - பக்கங்களிற் சூழ்ந்துவரவும், செழு தோடும் - அழகியதோடென்னுங்காதணியும், பல் கலன்உம் - (மற்றும்) பல ஆபரணங்களும், வில் வீச - ஒளியை வீசவும், மாகதர்கள் திரண்டு பாட - ஸ்துதிபாடகர்கள் கூட்டமாகக்கூடி (த் தன்னை)ப் புகழ்ந்துபாடவும், எழுந்து ஓடும் உவகையுடன் - பொங்கிமிகுகின்ற மகிழ்ச்சியுடனே, அரசை எதிர்கோள் எண்ணி - சக்கரவர்த்தியை யெதிர்கொள்ள நினைத்து, யோசனை சென்றான்-யோசனைதூரம் புறப்பட்டுப்போனான்; (எ - று.)

தசரதன் சக்கரவர்த்தியாதலால்,உரோமபாதன் அவனையெதிர்கொண்டு உபசரிப்பா னாயினனென்க. கொழுந்தோடிப்படர்கீர்த்தி -மேன்மேல்படர்கின்ற புகழ். கீர்த்தியைக் கொடியாக உருவகித்துக்கூறினார். ஒற்றர் - ஆங்காங்கு நிகழுஞ் செய்தியை யுணர்ந்துவந்து தம்மரசனுக்குச் சொல்பவர். கழுந்தோடும் என்பதற்கு - தனுர்த்தண்டம்நீண்டிருக்கப்பெற்ற என்றும்,

(கையிற்பிடித்தலால்) தேய்வுஉண்டாகப்பெற்ற என்றும் பொருள்கூறுவாரு முளர். எழுந்து சென்று னெனினுமாம். எதிர்கோள் - முதனிலைதிரிந்த தொழிற்பெயர், இரண்டனுருபு தொக்குவந்துள்ளது. (௯௯)

௬௦.—எதிர்கொண்டுவணங்கிய மன்னவனைத் தசரதன் தழுவுதல்.

எதிர்கொள்வான் வருகின்ற வயவேந்தன் றனைக்கண்ணுற் றெழிலி நாண, வதிர்கின்ற பொலந்தேர்நின் றரசர்பிரா னிழிந்துழிச் சென் றடியின் வீழ, முதிர்கின்ற பெருங்காத றழைத்தோங்க வெடுத் திறுக முயங்க லோடும், கதிர்கொண்ட சுடர்வேலான் றனைநோக்கி யிவையுரைத்தான் களிப்பின் மிக்கான்.

(இ - ள்.) எதிர்கொள்வான் வருகின்ற - (தன்னை) எதிர்கொண்டு அழைத்துப்போதற்கு வருகின்ற, வய வேந்தன் தனை - வலிமையையுடைய உரோமபாதனை, கண்ணுற்று - பார்த்து,— அரசர்பிரான் - தசரதசக்கர வர்த்தி, எழிலி நாண அதிர்கின்ற பொலம் தேர் நின்று இழிந்த உழி - மேக மும் (ஒப்பாகாமல்) வெள்கும்படி யொலிக்கின்ற பொன்மயமான இரதத்தி னின்று இறங்கியபொழுது,— சென்று அடியின் வீழ - (உரோமபாதன்) போய் (அந்தச்சக்கரவர்த்தியின்) பாதங்களில் விழுந்துவணங்க, (தசரதன்), முதிர்கின்ற பெரு காதல் தழைத்து ஓங்க - விருத்தியடைகின்ற மிக்க அன் பானது செழித்துவளர, எடுத்து - (உரோமபாதமன்னனைக் கைகளால்) எடுத்து, இறுக முயங்கலோடும்-அழுந்தத் தழுவினவளவில்,—களிப்பின் மிக்கான்-ஆனந்தத்தால் மிகுந்தவனாகிய உரோமபாதன்,கதிர்கொண்டசுடர் வேலான்தனை நோக்கி - கூர் நுனியைக்கொண்ட விளங்குகின்றவேலாயுதத் தையுடைய சக்கரவர்த்தியைப்பார்த்து, இவை உரைத்தான் - இவ்வார்த்தை களைச் சொல்லுவானானான்; (எ - று.)—அவற்றை, மேற்கவியிற் கூறுகிறார்.

சக்கரவர்த்தியாதலால் தசரதனை உரோமபாதன் வணங்க, அவ்வரச னைச் சக்கரவர்த்தி தழுவ, பிறகு உரோமபாதமன்னவன் முகமன்கூறத் தொடங்கின னென்க. கதிர்கொண்டசுடர் - ஒளியைக்கொண்ட சூரியன் போன்ற எனினுமாம். எழிலி - எழுச்சியையுடையது: மேகம். (௬௦)

௬௧.—உரோமபாதன் தசரதனுக்கு முகமன் கூறித் தன்னகரத்துக்கு அழைத்துவருதல்.

யான்செய்த மாதவமோ விவ்வுலகஞ் செய்தவமோ யாதோ விங்கண், வான்செய்த சுடர்வேலோ யடைந்ததென மனம்[1]மகிழ மணித்தே ரேற்றித், தேன்செய்த தார்[2]மௌலித் தேர்வேந்தைச் செழுநகரிற் கொணர்ந்தான் றெவ்வ, ரூன்செய்த சுடர்வடிவே லுரோமபத[3]னென் றுரைக்கு முரவுத் தோளான்.

(இ - ள்.) தெவ்வர் ஊன் செய்த சுடர் வடி வேல் உரோமபதன் என்று உரைக்கும் உரவு தோளான் - பகைவர்களை (உயிர் நீங்கின)தசைமாத்திர மாம்படி செய்த விளங்குகின்ற கூர்மையான வேலையுடைய உரோமபாத

னென்று சொல்லப்படுகிற வலிமையையுடைய தோள்களையுடைய அரசன், —(தசரதனை நோக்கி),—'வான் செய்த சுடர் வேலோய்-தேவலோகத்தை நிலைபெறச்செய்த விளங்குகின்ற வேலையுடையவனே! இங்கண் அடைந்தது-(நீ) இவ்விடத்தில் வந்தது, யான் செய்த மா தவம்ஓ - நான்செய்துள்ள பெருந்தவத்தின் பயனோ? இ உலகம் செய் தவம்ஓ - இந்த இராச்சியத்தவர் செய்துள்ள தவத்தின் பயனோ? யாதுஓ-(இவ்விரண்டனுள்) எதுவோ?' என-என்று (முகமன்) கூறி, மனம் மகிழ - (யாவர்) மனமுங்களிக்க, தேன் செய்த தார் மௌலி தேர் வேந்தை - தேனைப்பெருக்குகின்ற பூமாலையைச் சூடிய முடியையுடைய தசரதசக்கரவர்த்தியை, மணி தேர் ஏற்றி - இரத்தினங்கள் பதித்துள்ள தேரில் ஏறிவீற்றிருக்கச் செய்து, செழு நகரில் கொணர்ந்தான் - செழிப்பான (தனது) நகரத்திற்கு அழைத்து வந்தான்.

தேவேந்திரன்து வேண்டுகோளினால் அவனால் அழிக்கமுடியாத சம்பரன் முதலிய அசுரர்களைவென்று தேவலோகத்தைப் பாதுகாத்ததனால், தசரதனை 'வான்செய்த சுடர்வேலோய்' என்றான். மேல், விசுவாமித்திரன், தசரதனை "நீகொண்டன்றளித்தவரசன்றோ புரந்தரனின்றாள்கின்றதரச" என்று கூறுவதும் காண்க. ஊன் செய்த சுடர்வடிவேல் என்பதற்கு - பகைவருடைய ஊனினாற் செய்ததென்று கண்டோர் சொல்லுவதாய் ஆகாயத்தில் விளங்குஞ் சூரியனையொத்துப் பெருமைபொருந்திய வேலென்று உரைப்பினுமாம். இங்கண் - மெலித்தல். கொடியவரை யழித்தலிற் சிறந்த சிவபிரான் சுப்பிரமணியக்கடவுள் யமன் என்னும் இவர்கட்கு வேல் ஆயுத மாதலால், அதனைத் தலைமையாக எடுத்துக்கூறுதல், பெரும்பான்மை வழக்கு. பி - ம்:—[1]மகிழா, மகிழ்ந்து. [2]மவுலி. [3]என. (கக)

கஉ—உரோமபாதன் உபசரிக்கத் தசரதன் மகிழ்தல்.

**ஆடகப்பொற் சுடரிமைக்கு மணிமாடத் திடையொரு மண் டபத்தை யண்மிப், பாடகச்செம் பதுமமலர்ப் பாவையர்பல் லாண்டிசைப்பப் பைம்பொற் பீடத், தேடுதுற்ற வடிவேலோன் றனையிருத்திக் கடன்முறைகள் யாவு [1]மீந்து, தோடுதுற்ற மலர்த்தா ரான் விருந்தளிப்ப வினிதுவந்தான் சுரர்நா டீந்தான்.**

(இ-ள்.) தோடு துற்ற மலர் தாரான்-இதழ்கள்நெருங்கிய பூவினாலாகிய மாலையையுடைய உரோமபாதன்,—ஆடகம் பொன் சுடர் இமைக்கும் அணி மாடத்திடை - ஆடகமென்னும் (உயர்ந்த) பொன்னாலாகிய ஒளி வீசுகின்ற அழகிய தனது அரண்மனையிலே, ஒரு மண்டபத்தை அண்மி - மண்டபமொன்றைச்சேர்ந்து, பாடகம் செம் பதுமம் மலர் பாவையர் பல்லாண்டு இசைப்ப-பாடகத்தையணிந்தசெந்தாமரைமலர்போன்ற[பாதங்களை]யுடைய சித்திரப்பாவைபோலழகிய மகளிர் பல்லாண்டுபாட, பைம்பொன் பீடத்து-பசும்பொன்னினாலாகிய சிங்காதனத்திலே, ஏடு துற்ற வடி வேலோன்தனை-வெற்றிமாலை பொருந்திய கூரிய வேலையுடைய சக்கரவர்த்தியை, இருத்தி - வீற்றிருக்கச் செய்து, கடன் முறைகள் யாஉம் ஈந்து - செய்யத்தக்க கட

மைகளாகிய [கிரமமான] உபசாரங்களெல்லாவற்றையுந் தந்து, விருந்து அளிப்ப - விருந்துணவு இட,—சுரர்நாடு ஈந்தான் - தேவலோகத்தை (இந்திரனுக்கு மீட்டுக்) கொடுத்தவனாகிய தசரதன், இனிது உவந்தான் - இனிமையாக விருப்பத்தோடு அமுதுசெய்தான்; (எ - று.)

ஆடகம் கிளிச்சிறை சாதரூபம் சாம்பூநதம் எனப் பொன் நால்வகைப் படுமென்பர். செம்பதுமமலர்ப் பாவையர் - தாமரையில் வாழும் இலக்குமியைப்போன்ற மகளி ரெனினுமாம். ஏடு - மாலைக்கு, இருமடியாகு பெயர். ஏடு துற்றவடிவேல் - மலரிதழின் வடிவமான வேலெனினுமாம். பி - ம்:—[1] நேர்ந்து. (சுஉ)

**சுக.—உரோமபாதன் தசரதனை வந்த காரியம் வினவியபின், இருசியசிருங்கனை அயோத்தியில் அழைத்துவருவதாகச் சொல்ல, தசரதன் நகரத்துக்கு மீளுதல்.**

**செவ்விநறுஞ் சாந்தளித்துத் தேர்வேந்தன் றனைநோக்கி யிவணீ சேர்ந்த, கவ்வை[1]யுரைத் தருள்கவென நிகழ்ந்தபரி சரசர் பிரான் கழற லோடு, மவ்வியநீத் துயர்ந்தமனத் தருந்தவனைக் கொணர்ந்தாங்கண் [2]விடுப்பெ னென்ற, செவ்விமுடி யோயெனலுந் தே ரேறிச் சேனையொடு மயோத்தி சேர்ந்தான்.**

(இ - ள்.) செவ்வி நறு சாந்து அளித்து - அழகையும் நல்வாசனையையு முடைய சந்தனத்தையுந் தந்து, தேர் வேந்தன்தனை நோக்கி - தசரதனைப் பார்த்து, 'இவண் நீ சேர்ந்த கவ்வை உரைத்தருள்க என - இவ்விடத்தில் நீ வந்த காரியம் (இன்னதென்று) சொல்லியருள்வாயாக' என்று வினவ, அரசர்பிரான் - சக்கரவர்த்தி, நிகழ்ந்த பரிசு-நடந்த செய்கையை, கழறலோடு உம்-சொன்னவளவில்,—(உரோமபாத வரசன்), (தசரதனைநோக்கி), 'ஆன்ற செவ்வி முடியோய்-சிறந்த அழகுள்ள கிரீடத்தை யுடையவனே! அவ்வியம் நீத்துஉயர்ந்த மனத்து அரு தவனை-பொறாமையை யொழித்துச் சிறந்த மனத்தையுடைய அரிய தவமுள்ள இருசியசிருங்கமுனிவனை, ஆங்கண் கொணர்ந்து விடுப்பென் - அவ்விடத்திற் கொண்டுவந்து விடுவேன்', எனலும் - என்றுசொன்னவுடன், (சக்கரவர்த்தி), தேர் ஏறி-தேரின்மேலேறி, சேனையொடு உம் - சேனையுடனே, அயோத்தி சேர்ந்தான் - அயோத்தியாபுரியை யடைந்தான்; (எ - று.)

உண்டபின் சந்தனமளித்தல் மரபாதலின், கீழ்க்கவியில் விருந்திட்டதைக் கூறி, இங்குச் சாந்த மளித்ததைக் கூறினர். அழுக்காறு பிறதீக்குணங்கட்கும் உபலட்சணம்: "அழுக்காறவாவெகுளியின்னாச்சொன்னான்கு, மிழுக்காவியன்றதறம்" எனத் தீக்குணங்களுள் முதன்மைபெறுதலால், அழுக்காற்றைக் கூறினர். ஆங்கண் - நீட்டல். பி - ம்:—[1] உரைத்தருடி. [2] விடுப்பன். (சுங)

**கூச.—உரோமபாதன் இருசியசிருங்கனையணுகி ஒருவரந்தரவேணுமென அம்முனிவன் யாதென வினவுதல்.**

*மன்னர்பிரா னகன்றதற்பின் வயவேந்த னருமறைநூல் [1]வடி
வங் கொண்ட, தன்னமுனி வரனுறையு டனையணுகி யிணையடித்தா
மரைக ளம்பொன், மன்னுமணி முடியணிந்து வரன்முறைசெய் திட
விவணீ வருதற் கொத்த, தென்னையென வடியேற்கோர் வரமருளு
மடிகளென யாவ தென்றான்.

(இ - ள்.) மன்னர் பிரான்-சக்கரவர்த்தி, அகன்றதன் பின்-(அயோத்தி நகர்க்கு) மீண்டபின்பு,— வய வேந்தன் - வலிமையையுடைய உரோமபாதன், அரு மறை நூல் வடிவம் கொண்டது அன்ன முனிவரன் உறையுள் தனை அணுகி-அருமையான வேதசாஸ்திரம் ஒருபுருஷரூபத்தையெடுத்தாற் போன்றுள்ள இருடிசிரேட்டனது இருப்பிடத்தைச் சேர்ந்து, இணை அடி தாமரைகள் அம் பொன் மன்னும் மணி முடி அணிந்து-(அம்முனிவனுடைய) உபயதிருவடித்தாமரைமலர்களை அழகிய பொன்மயமாகப் பொருந்திய இரத்தினங்களைப் பதித்த (தனது) கிரீடத்தின்மேலே தரித்து [சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு], வரன்முறை செய்திட - முறைமைப்படியே (உபசாரங்களைச்) செய்ய,— இவண் நீ வருதற்கு ஒத்தது என்னை என - (முனிவன் அரசனைநோக்கி) 'இவ்விடம் நீ வருதற்குப் பொருந்திய காரணம் என்ன?' என்று வினவ,— (அரசன்), 'அடிகள் - சுவாமிகளே! அடியேற்கு ஓர் வரம் அருளும் - (உமது) அடியவனானஎனக்கு ஒருவரத்தைக் கொடுத்தருள்வீராக' என - என்றுவேண்ட,—யாவது என்றான் - (முனிவன் 'அவ்வரம்) யாது?' என்று (அரசனை) வினவினான்; (எ - று.)

அடிகள் - பாதா: என்னும் வடமொழியின் மொழிபெயர்ப்பு. யாவது- விரித்தல், பி - ம்:—[1] வடிவு. (கூச)

**கூரு.—தசரதசக்கரவர்த்தியின் நகரத்துக்குச் சென்றுவருமாறு உரோமபாதன் முனிவனை வரம் வேண்டுதல்.**

புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை
தன் புகழிற் பூத்த, வற[1]னொன்று திருமனத்தா னமரர்களுக் கிட
ரிழைக்கு [2]மவுண ராயோர், திறலுண்ட வடிவேலான் றசரதனென்
றுயர்கீர்த்திச் செங்கோல் வேந்தன், விறல்கொண்ட மணிமாட
வயோத்திநக ரடைந்திவணீ [3]மீட லென்றான்.

(இ - ள்.) 'புறவு ஒன்றின் பொருட்டு ஆக - ஒரு புறாவின் நிமித்தமாக, துலை புக்க - தராசுத்தட்டி லேறிய, பெருந்தகை தன் - பெருமைக் குணமுள்ள சிபிசக்கரவர்த்தியினது, புகழில் - கீர்த்தியைக் கொண்டுள்ள குலத்திலே, பூத்த - பிறந்த, அறன்ஒன்று திரு மனத்தான்-தருமம்நிலைபெற்ற சிறந்தமனத்தையுடையவனும், அமரர்களுக்கு இடர் இழைக்கும் அவுணர்ஆயோர் திறல் உண்ட வடி வேலான் - தேவர்களுக்குத் துன்பங்களைச் செய்கின்ற

அசுரரானவர்களது வலிமையை யழித்த கூர்மையுள்ள வேலையுடையவனு மாகிய, தெசரதன் என்ற - தசரதனென்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற, உயர் கீர்த்தி செங்கோல் வேந்தன் - சிறந்தபுகழையும் நீதிதவறாத அரசாட்சியையுமுடைய சக்கரவர்த்தியினது, விறல் கொண்ட மணி மாடம் அயோத்திநகர் - பெருமையைக் கொண்ட இரத்தின கசிதமான மாளிகைகளையுடைய அயோத்தியா பட்டணத்தை, அடைந்து - சேர்ந்து, (பின்பு), இவண் நீ மீடல் - இங்கே நீ திரும்பிவருவாயாக', என்றான் - என்று (முனிவனை நோக்கி) வரம்வேண்டினான், (உரோமபாதன்); (எ - று.)

'புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை' என்பதிலடங்கிய கதை:—சிபியென்னுஞ் சக்கரவர்த்தி அரசுபுரிகையில் அவனது மேன்மையைப் பரிசோதித்தற்காகத் தேவேந்திரன் பெரும்பருந்தாகவும் யமன் சிறுபுறாவாகவும் வடிவமெடுத்துப் புறாவைப் பருந்து துரத்திவர, அந்தப்புறாச் சக்கரவர்த்தியைச் சரண மடைய, அரசன் அந்தப்புறாவுக்கு அபயமளிக்க, பின்னேவந்த பருந்து 'என் இரையைக் கொடுத்துவிடு' என்று சிபியைக் கேட்க, சிபிசக்கரவர்த்தி 'அடைக்கலம்புகுந்தபொருளை ஆதரியாது கைவிடுதல் அதிபாதகமாதலால், இதையன்றி எதைக்கேட்டாலும் கொடுப்பேன்' என்ன, பருந்து 'ஆயின்,இந்தப்புறாவினெடையளவு தசை உன்னுடம்பில் அரிந்துகொடு' என்ன, சக்கரவர்த்தி உடன்பட்டு, உடனே தன்னுடம்பிலுள்ள உறுப்புக்களையெல்லாம் ஒவ்வொன்றாக அறுத்துவைத்தும் எடை குறைந்தமையால் முடிவில் தானே தராசுத்தட்டிலேறி எடையை நிறைக்க, உடனே அவ்விருதேவர்களும் நிசவடிவத்துடன் வெளிப்பட்டுச் சிபிசக்கரவர்த்தியைக்கொண்டாடி அவன் வேண்டின வரங்களை அளித்துப் போயினரென்பதாம். இந்தச்சிபியென்பவன் சூரியகுலத்தரசர்களுள் ஒருவன்: இங்குத் தசரதனை இங்ஙனம் சிறப்பித்துக்கூறியது - இந்தக்குலத்தவர் செயலெல்லாம் பிறர்க்குஉதவி செய்தற்பொருட்டாகவே யிருக்கு மென்றற்கு: ஆகவே, இப்படிப்பட்டவர்களின் வேண்டுகோளை நிறைவேற்ற வேண்டுவது நமக்குக் கடமையாகுமென்று குறிப்பித்தவாறு. பெருந்தகை - அன்மொழித்தொகை. ஆயோர் - முதல் வேற்றுமைச் சொல்லுருபு. புகழ் இல் - புகழையுடைய குடி என்றுமாம். மோனைபற்றி, 'தெசரதன்' என நின்றது. என்றுயர்-தொகுத்தல். மீடல் - 'தல்' ஈற்றுவியங்கோள். பி-ம்:—[1]ஒன்றும். [2]அசுரர். [3]மீள்க. (கூகு)

கூகூ.—அரசனது வேண்டுகோட்கு இணங்கி, முனிவன் மனைவியுடன் பயணத்துக்கு வந்த தேரின்மீது ஏறிச்சிறத்தல்.

**அவ்வரந்தந் தனமினித்தேர் கொணர்தியென வருந்தவத்**
**தோ னறைத லோடும், வெவ்வரந்தின் றயில்படைக்குஞ் சுடர்வே**
**லோ னடி[1]யிறைஞ்சி வேந்தர் வேந்தன், கவ்வை[2]யொழிந் துயர்ந்தன**
**னென் றதிர்குரற்றேர் [3]கொணர்ந்திதனிற் கலைவ லாளன், செவ்விறு**
**தற் றிருவினொடும் போந்தேறு கெனவேறிச் சிறந்தான் மன்னோ.**

(இ - ள்.) 'அ வரம் தந்தனம் - அந்த வரத்தைக் கொடுத்தோம்; இனி தேர் கொணர்தி - இப்பொழுது தேரைக் கொணர்வாயாக,' என - என்று, அரு தவத்தோன் - அரிய தவத்தையுடைய முனிவன், அறைதலோடும் - சொன்னவளவில், வெம் அரம் தின்று அயில் படைக்கும் சுடர் வேலோன் - கொடிய அரத்தால் அராவப்பட்டுக் கூர்மையைப் பெற்ற ஒளியையுடைய வேலையுடைய அரசன், அடி இறைஞ்சி-(முனிவனது) திருவடிகளை வணங்கி, வேந்தர் வேந்தன் கவ்வை ஒழிந்து உயர்ந்தனன் என்று - 'சக்கரவர்த்தி துன்பம் நீங்கிச் சிறப்புற்றவனாயினான்' என்று சொல்லி, அதிர் குரல் தேர் கொணர்ந்து - முழங்குகின்ற ஓசையையுடைய இரதத்தைக் கொண்டுவந்து, 'இதனில்-இந்தத்தேரிலே, கலைவலாளன்-நூல்களில்வல்ல இருசியசிருங்க முனிவனே! செவ்வி நுதல் திருவினொடும் - அழகையுடைய நெற்றியை யுடைய இலக்குமிபோன்ற சாந்தையுடனே, போந்து ஏறுக - வந்து ஏறியருள்', என-என்று (உரோமபாதன்) சொல்ல,—ஏறி சிறந்தான் - (இருசிய சிருங்கமுனிவன்) அதிலேறிச் சிறப்புற்றான்; (எ - று.)

கீழ்ச் சாந்தைஎன்பவளுக்கு 'முகநலாள்'என்று பெயர்கொடுத்த ஆசிரியர் இங்கு அப்பெயரின்பரியாயமாக 'செவ்விநுதற்றிரு' என்றார். அரந்தினுதலென்பது-அரத்தினலராவப்படுதலென்னும் பொருளில்வருதலை, "அரந்தினப்பிறந்தபைம்பொன்" என்ற சிந்தாமணியிலுங் காண்க. கலைவலாளன்-அண்மைவிளி; முதல்வேற்றுமை யெனக் கொண்டு, கலைவலாளனேறுக - முன்னிலையிற்படர்க்கைவந்தவழுவமைதியெனினுமாம். ஏறுகென-தொகுத்தல். பி - ம்:—[1] இறைஞ்சா. [2] ஒழித்து. [3] கொணர்ந்ததனில். (கூகூ)

கூஎ.—இருசியசிருங்கமுனிவன் அயோத்திநோக்கிச் செல்லுதல்.

குனிசிலை வயவனுங் கரங்கள் கூப்பிடத்
துனியறு முனிவரர் தொடர்ந்து சூழ்வர
வனிதையு மருமறை [1]வடிவு போன்றொளிர்
முனிவனும் பொறிமிசை நெறியை முன்னினார்.

(இ - ள்.) குனி சிலை வயவன் - வளைத்த வில்லையுடைய வீரனாகிய உரோமபாதன், கரங்கள் கூப்பிடஉம்-கைகளைக்குவித்து வணங்கவும், துனி அறு முனிவரர் - கோபமில்லாத [சாந்தகுணமுடைய] இருடிச்சிரேட்டர்கள், தொடர்ந்து சூழ்வர (உம்)-(தன்னைத்) தொடர்ந்து சுற்றிவரவும்,அரு மறை வடிவு போன்று ஒளிர் முனிவன்உம்-அருமையான வேதத்தின் சொரூபத்தை யொத்து [குற்றமற்று] விளங்குகின்ற இருசியசிருங்கமுனிவனும், வனிதைஉம் - (அவனது) மனைவியாகிய சாந்தையும், பொறிமிசை - தேரின் மீது (ஏறி), நெறியை முன்னினார் - (அயோத்திக்குச் செல்லும்) வழியை நோக்கிச் சென்றார்கள்; (எ - று.)

வயவன் - 'வயம்' அல்லது 'வய' என்பதினடியாகப் பிறந்த பெயர்ப் பகுபதம்; வயம் - வெற்றி, வய - வலி. துனி - பிரபஞ்சத்துயருமாம். தேரின் பரியாயங்களுள் யந்திரமென்பது ஒன்றாகையால், இங்குத் தேரை

'பொற்றி' என்ருர். வயவனும், உம்மையை மாற்றியுரைக்காமல், கதைப்போக்குப்பற்றிவந்த இறந்தது தழுவியதெனினுமாம். பி - ம்:—[1]வடிவம். (௬எ)

௬அ.—அப்போது தேவதைகளின் மகிழ்ச்சி.

அந்தர [1]துந்துமி முழக்கி யாய்மலர்
சிந்தினர் களித்தன ரறமுந் தேவரும்
வெந்தெழு [2]கொடுவினை வீழ்க்கு மெய்ம்முதல்
வந்தெழ வருடரு வானென் றெண்ணியே.

(இ-ள்.) (அம்முனிவன் தேரேறி அயோத்திநோக்கிச்சென்ற மாத்திரத்தில்), அறம்உம் - தருமதேவதையும், தேவர்உம் - இந்திராதிதேவர்களும், 'வெந்து எழு கொடு வினை வீழ்க்கும் மெய் முதல் வந்து எழ - (நெருப்புப்போல) எரிந்தெழுகிற கொடிய (இராக்கதர்களாகிற) தீச்செயல்களை யழிக்கப்போகின்ற உண்மையான முழுமுதற்கடவுள் [திருமால்] (இவ்வுலகில்) வந்துதிருவவதரிக்கும்படி, அருள் தருவான் - (இம்முனிவன்) கருணை செய்வான்,' என்று எண்ணி—, களித்தனர் - பெருமகிழ்ச்சி யடைந்தவர்களாகி, அந்தரம் துந்துமி முழக்கி-வானத்திலுள்ள பேரிகையை யடித்து (ஆரவாரத்தையுண்டாக்கி), ஆய் மலர் சிந்தினர் - ஆராய்ந்தெடுத்த [சிறந்த] (கற்பக விருட்சத்தின்) மலர்களை (மழைபோல அம்முனிவன்மேற்) சொரிந்தனர்.

அறமுந் தேவரும் களித்தனர் - சிறப்பினுலுயர்திணைமுடிபு வந்தது. பி - ம்:—[1]துந்துபி. [2]கொடும்பிணி. (௬அ)

௬௯.—தூதுவர் அயோத்திசேர்ந்து தசரதனுக்கு இருசியசிருங்கன்வருஞ் செய்தி தெரிவிக்க, தசரதன் மகிழ்தல்.

தூதுவ ரவ்வழி யயோத்தி துன்னினர்
மாதிரம் பொருததோண் மன்னர் மன்னன்மு
னோதினர் முனிவர வோத வேந்தனுங்
காதலென் றளவறு கடலு ளாழ்ந்தனன்.

(இ - ள்.) அ வழி - அப்பொழுது, தூதுவர் - தூதர்கள், அயோத்தி துன்னினர் அயோத்திநகரத்தை யடைந்து, மாதிரம் பொருத தோள் மன்னர் மன்னன் முன் - மலைகளையொத்த தோள்களையுடைய தசரதசக்கரவர்த்தியின் முன்னிலையில், முனி வரவு ஓதினர் - (இருசியசிருங்க) முனிவனது வருகையைச் சொன்னார்கள்; ஓத - சொல்ல, வேந்தன்உம் - தசரத சக்கரவர்த்தியும், காதல் என்ற அளவு அறு கடலுள் ஆழ்ந்தனன் - மகிழ்ச்சியென்கிற அளவில்லாத கடலிலே முழுகினான்; (எ - று.)

மாதிரம் பொருத - திக்விசயஞ்செய்த என்றும், காதல் - முனிவனிடத்துள்ள அன்பு என்றுமாம். (௬௯)

எ0.—முனிவனை எதிர்கொள்ளத் தசரதன் தேரேறிப் புறப்படுதல்.

எழுந்தனன் பொருக்கென விரத மேறினன்
பொழிந்தன மலர்மழை யாசி பூத்தன

மொழிந்தன பல்லிய முரச மார்த்தன
விழுந்தன தீவினை வேரி னோடுமே.

(இ - ள்.) (உடனே சக்கரவர்த்தி),— பொருக்கென எழுந்தனன் - (முனிவனை எதிர்கொள்ளும்பொருட்டு)விரைவாகஎழுந்து, இரதம் ஏறினன் - தேரின்மேலேறினான்; (அப்பொழுது), மலர் மழை பொழிந்தன - (தேவர்களது) புஷ்பவருஷங்கள் பொழிந்தன; ஆசி பூத்தன - (முனிவர்களது) ஆசீர்வாதங்கள் உண்டாயின; முரசம் ஆர்த்தன - பேரிகைகள் முழங்கின;பல் இயம் மொழிந்தன-மற்றும்பலவாத்தியங்கள்ஒலித்தன;தீவினை வேரினோடுஉம் விழுந்தன - பாபங்கள் வேரோடு அழிந்துவிழுந்தன; (எ - று.)

சொல்லுதலென்ற பொருளுள்ள சொற்கள் ஒலித்தலென்னும் பொருளில்வருதல், இயல்பு: ஆதலால், 'மொழிந்தனபல்லியம்' என்றார்; "புகன்ற தீங்குழல்" என்றார், சிந்தாமணியாரும். (எ0)

எக-எங:—இதுமுதல் மூன்றுகவிகள்-குளகம்; இருசியசிருங்கமுனிவனைத் தசரதசக்கரவர்த்தி காணுதலைக் கூறும்.

எக. பிதிர்ந்ததெம் மனத்துயர்ப் பிறங்க லென்றுகொண்
டதிர்ந்தெழு [1]முரசுடை யரசர் கோமகன்
முதிர்ந்தமா தவமுடை முனியைக் கண்களா
லெதிர்ந்தனன் யோசனை யிரண்டொ டொன்றினே.

எஉ. நற்றவ மனைத்துமோர் நவையி லாவுருப்
பெற்றிவ ணடைந்தெனப் பிறங்கு வான்றனைச்
சுற்றிய [2]சீரையு முழையின் றோற்றமு
முற்றுறப் பொலிதரு மூர்த்தி யான்றனை.

எங. அண்டர்க டுயரமு மரக்க ராற்றலும்
விண்டிடப் பொலிதரும் வினைவ லாளனைக்
குண்டிகை குடையொடு குலவு நூன்முறைத்
[3]தண்டொடு பொலிதரு தடக்கை யான்றனை.

(இ - ள்.) (எக) அதிர்ந்து எழு முரசு உடை - அதிர்ச்சிபெற்று மிகுதியாகவொலிக்கின்ற பேரிகைகளையுடைய, அரசர் கோமகன் - தசரதசக்கரவர்த்தி,—எம் மனம் துயர் பிறங்கல் பிதிர்ந்தது என்று கொண்டு - 'எமது மனத்திலுள்ள துன்பமாகிய மலை பொடியாய்விட்டது [நீங்கிவிட்டது]' என்று எண்ணி;—(எஉ) நல் தவம் அனைத்தும் ஓர் நவை இலா உரு பெற்று இவண் அடைந் (த) து என பிறங்குவான் தனை - சிறந்த தவங்களெல்லாம் ஒரு குற்றமில்லாதவடிவத்தை யடைந்து இங்கே வந்துள்ளதென்று (கண்டோர்) கருதும்படி விளங்குபவனும், சுற்றிய சீரைஉம் உழையின் தோற்றம் உம் முற்று உற பொலிதரு மூர்த்தியான்தனை - (அரையில்) உடுத்த மரவுரியம் (மேலே தரித்த) மான்றோலும் நிரம்பவிளங்குகின்ற உடம்பையுடையவனும், (எங) அண்டர்கள் துயரம்உம் அரக்கர் ஆற்றல்உம் விண்டிட பொலி

தரும் வினை வலாளனை - தேவர்களது துன்பமும் இராக்கதர்களது வலிமையும் நீங்கும்படி விளங்குகின்ற (யாகத்)தொழில் வல்லவனும், குடையொடு தண்டொடு குண்டிகை குலவு நூல் முறை பொலிதரு தடகையான்றனை - குடையும் பிரமதண்டமும் என்றவற்றுடனே கமண்டலமும் சாத்திரமுறைப்படியே விளங்குகின்ற பெரியகைகளையுடையவனுமான, (எக) முதிர்ந்த மாதவம் உடை முனியை - முற்றின பெருந்தவத்தையுடைய இருசியசிருங்க முனிவனை, யோசனை இரண்டொடு ஒன்றின் - மூன்றுயோசனை தூரம் (எதிர்சென்று), கண்களால் எதிர்ந்தனன்-(தனது) கண்களாற் கண்டான்.

முனிவனது வருகையை யறிந்த தசரதன் 'இனி, நமக்குப் புத்திரருதித்தல் திண்ணம்' என்று மனமகிழ்ந்து, வந்த அந்தமுனிவனை யெதிர்கொண்டு சென்றனனென்க. எஉ-ஆம்பாடலிலுள்ள 'பிறங்குவான்றனை', 'மூர்த்தியான்றனை' என்பனவும், எஙு-ஆம்பாடலிலுள்ள 'வினைவலாளனை', 'தடக்கையான்றனை' என்பனவும்,எக-ஆங்கவியிலுள்ள 'தவமுடைமுனியை' என்பதற்கு விசேடணங்களாக இயையும்: இங்ஙனம் அடைகொளியை [விசேஷ்யத்தை] முதலிற் கூறி, பிறகு அடைமொழிகளைக் கூறியது, வடமொழிநடை. எக:—பிறங்கல் - நெடுந்தூரத்திலுள்ளார்க்கும் விளங்குவதென்றகாரணம்பற்றி, மலைக்குக் காரணக்குறி. பி-ம்:—[1]களிப்புடை. எஉ:—தோற்றம் - தோன்றுவது; தோலுக்கு, இலக்கணை. இம்முனிவர் நெற்றியில் மான்கொம்பை யுடையவ ராதலால், உழையின் தோற்றமும் -மானையொத்த காட்சியுமென்றுஉரைப்பினுமாம்.பி-ம்:—[2]சீரமும். எங:—"நூலேகரகம்...ஆயுங்காலை யந்தணர்க்குஉரிய"என்றதொல்காப்பியச்சூத்திரத்தால்,கமண்டலமும், "ஆயுங்காலை" என்றதனால்,குடையும் ஏகதண்டமும் முனிவர்க்கு உரியனவாத லறிக. தண்டு என்பதற்கு-திரிதண்ட மென்று பொருளுரைத்தலாகாது; அது, துறவிகட்கே யுரியதாதலால். கமண்டலம் - நீர்கொள்ளும் பாத்திரம்;இதனைப்பரிசுத்தியின் பொருட்டு எப்பொழுதும் முனிவர் கையில் தரிப்பர். பி-ம்:—[3]தண்டொடும். (எக - எங)

எச.—தசரதன் முனிவனை வணங்க, அவன் ஆசிகூறுதல்.

**இழிந்துபோ யிரதமாண் டிணைகொ டாண்மலர்**
**விழுந்தனன் வேந்தர்தம் வேந்தன் [1]மெய்ம்மையான்**
**மொழிந்தன னுசிகண் முதிய நான்மறைக்**
**கொழுந்துமேற் படர்தரக் [2]கொளுகொம் பாயினன்.**

(இ - ள்.) (இருசியசிருங்கமுனிவனைக் கண்டவளவில்), வேந்தர்தம் வேந்தன் - தசரதசக்கரவர்த்தி, ஆண்டு - அவ்விடத்தில், இரதம் இழிந்து போய்-(தனது) தேரினின்று இறங்கி (அருகிற்)சென்று, இணை கொள் தாள் மலர் - (அம் முனிவனது)உபயதிருவடித்தாமரைமலர்களிலே, விழுந்தனன்- வீழ்ந்து வணங்கினன்; (வணங்கவும்), முதிய நால் மறை கொழுந்து மேல் படர்தர கொளுகொம்பு ஆயினன் - பழமையான [நித்தியமான] நான்கு வகைப்பட்ட வேதமாகிய கொடிகள் மேலேறிப்படர்தற்குக்கொள்கொம்பா

யுள்ள அம்முனிவன், மெய்ம்மையால் - பொருள்நிரம்பிய மொழிகளால், ஆசிகள் மொழிந்தனன் - ஆசீர்வாதங்களைச் செய்தான்; (எ - று.)

• வேதங்களும் அவற்றிற்கூறிய நல்லொழுக்கங்களும் உலகங்களிலெங்குஞ்செழித்துவளர்தற்குக்காரணமானவ னென்பது,'நான்மறைக்கொழுந்து மேற்படர்தரக் கொளுகொம்பாயினான்' என்றதன் கருத்து. மெய்ம்மை - உண்மை; நிறைமொழிக்கு, இலக்கணை. கொழுந்து - இளங்கொடி. கொளுகொம்பு - கொடிபடர்தற்கு ஆதாரமாகுங்கொம்பு. பி - ம்:—[1] நீர்மையான். [2] கொழுகொம்பு, கொள்கொம்பு. (எச)

எரு.—தசரதன் முனிவனைத்தன்நகரத்துக்கு அழைத்துப்போதல்.

அயல்வரு முனிவரு மாசி கூறிடப்
புயல்பொழி தடக்கையாற் றொழுது [1]பொங்குநீர்க்
கயல்பொரு விழியொடு கலைவ லாளனை
யியல்பொடு கொணர்ந்தன னிரத மேற்றியே.

(இ - ள்.) (தசரதன்),—அயல் வரும் முனிவர்உம் ஆசி கூறிட புயல் பொழி தட கையால் தொழுது - (அந்தஇருசியசிருங்கமுனிவனது) அருகில்வருகின்ற முனிவர்களும் (தனக்கு) வாழ்த்துக்கூறுமாறு மேகம் நீரைப் பொழிவதுபோல (யாசகர்க்குத் திரவியங்களை)ப் பொழிகின்ற கையினாலே வணங்கி, (பின்பு), பொங்கு நீர் கயல் பொரு விழியொடு - மிக்கநீரில் வாழ்கின்ற கயல்மீனையொத்த கருவிழியையுடைய சாந்தையுடனே, கலைவலாளனை - நூல்களில்வல்லவனான கலைக்கோட்டுமுனிவனை, இரதம் ஏற்றி - தேரின்மேலேறி வீற்றிருக்கச்செய்து, இயல்பொடு - முறைமைப்படியே, கொணர்ந்தனன் - (தனது நகரத்துக்கு) அழைத்துக்கொண்டுவந்தான்.

மற்றைமுனிவரையும் அஞ்சலிசெய்து அவர்களிடம் வாழ்த்துக்களைப் பெற்றுக்கொண்டு,தசரதன்,இருசியசிருங்கமுனிவனை அவன்மனைவியுடனே தன்நகரத்துக்கு அழைத்துவந்தன னென்க. மிகவும் மதர்த்துத்தோன்று மென்பதற்காக, 'பொங்கு நீர்க்கயல்' என்றார். கயல் கண்களுக்குப் பிறழ்ச்சியிலும் வடிவிலும் உவமை. கயல்பொருவிழி - அன்மொழித்தொகை. பி - ம்:—[1] பொங்கி. (எரு)

எசு.—முனிவனோடும் மன்னவன் நகர மடைதல்.

அடிகுரன் முரசதி ரயோத்தி மாநகர்
முடியுடை வேந்தனம் முனிவ னோடுமோர்
கடிகையி னடைந்தனன் கமல வாண்முக
வடிவுடை மடந்தையர் வாழ்த்தெ டுப்பவே.

(இ - ள்.) முடிஉடை வேந்தன் - கிரீடத்தையுடைய சக்கரவர்த்தி, கமலம் வாள் முகம் வடிவு உடை மடந்தையர் வாழ்த்து எடுப்ப - தாமரைமலர்போன்ற ஒளியையுடைய முகத்தையும் அழகையுமுடைய மகளிர் பல்லாண்டுபாட, அ முனிவனோடுஉம்-அந்த இருசியசிருங்கமுனிவனுடனே, ஓர்

கடிகையின் - ஒருநாழிகைப்பொழுதினுள்ளே, அடி குரல் முரசு அதிர் அயோத்திமாநகர் - அடிக்கப்படுகின்ற ஒலியையுடைய பேரிகைகள் முழங்குகின்ற அயோத்தியாபுரியை, அடைந்தனன்—; (எ - று.)

கடிகை = கடிகா: இருபத்துநான்குநிமிஷநேரம். அயோத்திமாநகர் - "உலோகமாபாலன்" என்றவிடத்துப்போல, 'மா' - வியங்கோளசையன்றி இசைநிறையாகவந்தது. (எசு)

**எஎ.—வசிட்டனும் இருசியசிருங்கமுனிவனும் அரசவையிற் சேர்தல்.**

**கசட்டுறு வினைத்தொழிற் கள்வ ராயுழ**
**லசட்டர்க ளைவரை யறுவ ராக்கிய**
**வசிட்டனு மருமறை [1]வடிவு போன்றொளிர்**
**[2]விசிட்டனும் வேந்தவை பொலிய [3]மேவினார்**

(இ - ள்.) (பின்பு), கசடு உறு வினை தொழில்-குற்றம்மிக்க தீவினைக்கு ஏதுவாகிய செய்கைகளையுடைய, கள்வர் ஆய்-கள்வர்களையொத்து, உழல்-திரிகின்ற, அசட்டர்கள் ஐவரை - நல்லறிவில்லாத ஐவர்களை, [பஞ்சேந்திரியங்களை], அறுவர் ஆக்கிய - அறுவர்களாகச்செய்த [அழிந்துபோகுபவர்களாகச்செய்த], வசிட்டன்உம் - வசிஷ்டமுனிவனும், அரு மறை வடிவு போன்று ஒளிர் விசிட்டன்உம் - (உணர்தற்கு)அரிய வேதமே ஒருவடிவமெடுத்துவந்தாற்போல் விளங்குகின்ற சிறந்தவனான இருசியசிருங்கமுனிவனும், வேந்து அவை பொலிய-இராசசபை விளக்கம்பெறுமாறு, மேவினார் - (அதிற்) சேர்ந்தார்கள்; (எ - று.)

வசிட்டனும் கலைக்கோட்டுமுனிவனும் ஒருங்கு வந்ததனால், இராசசபை முன்னினும் விளக்கம்பெற்றதென்க. 'ஐவர்' என்றது - பஞ்சேந்திரியங்களை; தொகைக்குறிப்பு: இகழ்ச்சிபற்றிவந்ததிணைவழுவமைதி. 'அசடர்கள்' என்பது எதுகைநோக்கி, 'அசட்டர்கள்' என விகாரப்பட்டது; 'அசடு' என்ற வடசொல்லுக்கு - திறமையற்றவனென்றுபொருள்; சடு - திறமையுள்ளவன். ஐவரை அறுவராக்கியஎன்பது - ஐம்பொறிகளை வலிமையற்றனவாக அடக்கிய என்றவாறு. அறுவர் = அறுபவர்: அழிந்துபோபவர்: வினையாலணையும்பெயர்; இதில் ஐந்துபேர்களை ஆறுபேர்களாக்கிய என்ற பொருளும் பட்டு, முரண்விளைந்தழிவணி [விரோதாபாஸாலங்காரம்] இருத்தல் காண்க. ஐம்பொறிகளை 'கள்வர்' என்றது - தீநெறிச்செலுத்தி ஆன்மாவைக் கொள்ளைகொள்ளுதலால். விசிட்டன் = விசிஷ்டன்: விசேஷ சிஷ்டன்; மிக்கநல்லொழுக்கமுடையவன். பி - ம்:—[1]வழக்குநீங்கலா, வழக்கை நீங்கலா. [2]விசிட்டரும். [3]மேவினன். (எஎ)

**எஅ.-சக்கரவர்த்தி இருசியசிருங்கமுனிவனை ஆசனத்திலமர்த்தி உபசரித்தல்.**

**மாமணி மண்டப மன்னி மாசறு**
**தூமணித் தவிசிடைச் சுருதி யேநிகர்**
**கோமுனிக் கரசனை யிருத்திக் கொள்கட**
**னேமுறத் திருத்திவே றினைய செப்பினான்.**

(இ - ள்.) (சக்கரவர்த்தி), மா மணி மண்டபம் மன்னி - சிறந்த இரத்தினங்கள் பதித்துள்ள அச்சபாமண்டபத்தை(த் தான்) அடைந்து, சுருதிவ நிகர் கோ முனிக்கு அரசனை-வேதத்தையொத்த மேன்மைபொருந்திய இருடிச்சிரேட்டனாகிய இருசியசிருங்கனை, மாசு அறு தூ மணி தவிசு இடை இருத்தி - குற்றமற்ற சுத்தமான இரத்தினங்களிழைத்துச்செய்யப்பட்ட ஆசனத்திலெழுந்தருளப்பண்ணி, கொள்கடன் ஏமுற திருத்தி-(அம்முனிவன்) ஏற்றுக்கொள்ளுதற்குரிய உபசாரங்களை (அம்முனிவன்) மகிழ்ச்சியடையும்படி திருத்தமாகச்செய்து, வேறு - வேறாக [பின்பு என்றபடி], இனைய செப்பினான் - இவ்வார்த்தைகளைச் சொல்வானானான்; (எ - று.)—அவை, மேற் கூறுகின்றார்.

ஏம் - ஏமம் என்பதன் கடைக்குறை. மாமணிமண்டபம் - வேத்தவை. கோஎன்பதைத் தனியே பிரித்து, தசரதசக்கரவர்த்தி யென்பாருமுளர். சுருதி = ஶ்ருதி: எழுதாக்கிளவியாய்க்குருசிஷ்யபரம்பரையாய்க் கேள்விமூலமாக வருவதென்று காரணப்பொருள்படும் வடசொல். (எஅ)

எகூ.—சக்கரவர்த்தி முனிவனைத் துதித்தல்.

**சான்றவர் சான்றவ தரும மாதவம்**
**போன்றொளிர் புனிதநின் னருளிற் பூத்தவெ**
**னான்றதொல் குல[1]மினி யரசின் வைகுமால்**
**யான்றவ முடைமையு மிழப்பின் றாமரோ.**

இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) சான்றவர் சான்றவ - (கேள்வி அறிவு ஒழுக்கம் என்ற இவற்றால்)நிறைந்த மேலோர்க்கும்மேலோனே! தருமம் மா தவம் போன்று ஒளிர்புனித-தருமசொரூபத்தையும் சிறந்ததவத்தின்வடிவத்தையும்போன்று விளங்குகின்ற பரிசுத்தகுணமுடையவனே! நின் அருளின் பூத்த - உனது கருணையைப்பெற்றதனாற் பொலிவடைந்த,என் ஆன்ற தொல் குலம்-எனது பெரிய தொன்றுதொட்டுவருகின்ற வமிசமானது, இனி - இனிமேல், அரசின் வைகும் - (தொடர்ச்சியறாமல்) அரசாட்சியில் நிலைபெறும்; யான் தவம் உடைமைஉம் - யான் முற்பிறப்பிற்செய்த நற்றவத்தையுடையவனான தன்மையும், இழப்பு இன்று ஆம் - பயனற்றதில்லாததாகும்; (எ - று.)

உனதுபேரருளால் எனதுமரபு அற்றுப்போகாமல்வளர்ச்சியுற்று நிலைபெறுமென்பதாம். தவமுடைமையும் யான் இழப்பின்று என்று இயைத்து-தவமுடையவனானதன்மையையும் யான் இழப்பதில்லை யென்பாருமுளர்.
பி - ம்:—[1]இனி தரசின். (எகூ)

அ௦.—முனிவன் மன்னனுக்கு முகமன் கூறுதல்.

**என்னலு முனிவர னினிதி னேக்குறு**
**மன்னவர் மன்னகேள் வசிட்ட [1]னென்னுமோர்**
**நன்னெடுந் தவன்றுணை நவையில் செய்கைநீ**
**நின்னையிவ் வுலகினி னிருபர் நேர்வரோ.**

(இ - ள்.) என்னலும்-என்று (தசரதன்) சொன்னவளவில்,-முனிவரன்-கலைக்கோட்டுமுனிவன்,—இனிதின் நோக்குறா-(தசரதனைக்) குளிரப்பார்த்து, மன்னவர் மன்ன - இராசாதிராசனே! கேள்—; நீ—,வசிட்டன் என்னும் ஓர் நல் நெடும் தவன் துணை - வசிட்டனென்று சிறப்பித்துச் சொல்லுகின்ற நல்ல பெருந்தவமுடைய ஒரு முனிவனை உதவியாகப் பெற்றிருக்கின்றாய்; (அன்றியும்), நவை இல் செய்கை - குற்றமற்றசெய்கையுடையாய்; (ஆதலால்), நின்னை - உன்னை, இ உலகினில் நிருபர் - இவ்வுலகத்திலுள்ள அரசர், நேர்வர்ஓ-ஒப்பரோ? [ஒவ்வார்]; (எ - று.)

வசிட்டமுனிவனையே புரோகிதனாகப்பெற்றிருத்தலோடு குற்றமற்ற செய்கையையுமுடைய உனக்கு, இவ்வுலகத்து எந்தமன்னவரும் நிகரல்லரென்றவாறு. துணை செய்கையென்பவற்றின் பின் அவாய்நிலையால் ஏற்ற சொல் வருவித்துமுடிக்கப்பட்டன. துணை - துணைவனுக்கு, பண்பாகுபெயர். பி - ம்:—[1] என்றெனும், தானெனும். (அ0)

அக.—இருசியசிருங்கமுனிவன், தன்னை வரவழைத்தகாரணம் வினாதல்.

என்றன பற்பல வினிமை [1]கூறிநற்
குன்றுறழ் வரிசிலைக் குவவுத் தோளினாய்
நன்றிகொ [2]ளரிமக நடத்த வெண்ணியோ
வின்றெனை யழைத்ததிங் கியம்பு வாயென்றான்.

(இ - ள்.) என்றன பற்பல இனிமை கூறி - என்று சொல்லப்பட்டனவும் மற்றும் பலவகைப்பட்டனவுமாகிய இன்சொற்களைச் சொல்லி,(பின்பு), 'நல் குன்று உறழ் வரி சிலை குவவு தோளினாய் - அழகிய [பெரிய] மலையையொத்தனவும் கட்டமைந்த வில்லையேந்தினவுமான திரட்சியையுடைய தோள்களையுடைய தசரதனே! இன்று எனை இங்கு அழைத்தது - இப்பொழுது என்னை இவ்விடத்தில் (நீ) வரவழைத்தது, நன்றி கொள் அரி மகம் நடத்த எண்ணிஓ - பலநன்மைகளை(த்தன்னிடத்தே) கொண்ட அசுவமேதயாகத்தை(என்னைக்கொண்டு) நடப்பித்தற்குக்கருதியோ?இயம்புவாய்-சொல்வாய்,' என்றான் - என்று (தசரதனைநோக்கி) வினவினான்; (எ-று.)

'என்றான்' என்பதற்குக் கீழ்க்கவியிலுள்ள 'முனிவரன்' என்பது, எழுவாய். இனிமை - இனியவார்த்தைகளுக்குப் பண்பாகுபெயர். அரி=ஹரி; குதிரை. பி - ம்:—[1]கூறினன். [2]அருமகம். (அக)

அஉ.—தசரதன் தன் புதல்வனில்லாக்குறையை நீக்குமாறு முனிவனை வேண்டுதல்.

உலப்பில்பல் லாண்டெலா முறுக ணின்றியே
தலப்பொறை யாற்றினென் றனயர் வந்தில
ரலப்புநீ ருடுத்தபா ரளிக்கு மைந்தரை
நலப்புகழ் பெறவினி நல்க வேண்டுமால்.

(இ - ள்.) உலப்பு இல் பல் ஆண்டு எலாம் - முடிவில்லாத அநேகவருஷ காலம், உறுகண் இன்றி - யாதொரு துன்பமும் உண்டாகாமல், தலம் பொறை ஆற்றினென் - பூமிபாரத்தைத் தாங்கினேன்; தனயர் வந்திலர் - (என்காலத்துக்குப்பிறகு அங்ஙனம் பூமிபாரத்தைத் தாங்கும்படி) புத்திரர் பிறந்தாரில்லை; (ஆதலால்), இனி—, அலப்பு நீர் உடுத்த பார் அளிக்கும் மைந்தரை - கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்தைக் காக்குந்தன்மையுள்ள புதல்வரை, நலம் புகழ் பெற - சிறந்த கீர்த்தியை (நான்) அடையும்படி, நல்கவேண்டும்-(எனக்குப் பிறக்குமாறு) அருள்புரிதல் வேண்டும்; (எ - று.)

'தனிமரந் தோப்பாகாது,தனிப்பிள்ளை பிள்ளையாகாது'என்பவாதலால், 'தனயர்' எனப் பன்மையாற் கூறினன். உலப்பு - (காலம்) வற்றுதல்: எல்லை யென்றபடி. அலப்புநீர்-கடலுக்கு, வினைத்தொகையன்மொழி; அலை யலைக்குந்தன்மையுள்ள நீரையுடையதென்க: இனி,எதுகை நோக்கி அலம்பு என்பது அலப்பு என வலித்தலாகவந்ததெனக் கொண்டால், ஒலிக்கின்ற நீரையுடையது எனப் பொருள் காணலாம். (அஉ)

அங.—முனிவன் 'புத்திரனை யளிக்கும் யாகத்தைச் செய்யவெழுக' என்னுதல்.

என்றலு மரசநீ யிரங்க லிவ்வுல
கொன்றுமோ வுலகமீ ரேழு மோம்பிடும்
வன்றிறன் மைந்தரை யளிக்கு மாமக
மின்றுநீ யியற்றுதற் கெழுக வீண்டென்றான்.

(இ - ள்.) என்றலும்-என்று (சக்கரவர்த்தி) சொன்னவளவில், (கலைக் கோட்டு முனிவன் தசரதனை நோக்கி),—'அரச - அரசனே! நீ—, இரங்கல் - மனவருத்தப்படாதே; இ உலகு ஒன்றுஉம்ஓ - இந்தப்பூலோகமொன்றை மாத்திரமோ, உலகம் ஈர் ஏழ்உம் - பதினான்குவுலகங்களையும், ஓம்பிடும் - காப்பதற்குஉரிய, வல் திறல் மைந்தரை - மிக்கவல்லமையையுடைய குமாரர்களை, அளிக்கும் - கொடுக்கவல்ல, மா மகம் - பெரிய யாகத்தை, இன்று - இப்பொழுது, ஈண்டு - இவ்விடத்தில், இயற்றுதற்கு - செய்தற்கு, நீ—, எழுக - முயல்வாயாக', என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

முதலில், அசுவமேதயாகஞ்செய்து அதன்பின் புத்திரகாமயாகஞ் செய்ததாக மேற்கூறுவதனாலும், கீழ் "அரிமக நடத்தவெண்ணியோ, வின்றனை யழைத்ததிங்கு" என்றதனாலும், மாமகமென்பதற்கு-அசுவமேத யாகமென்றும் பொருள் கொள்ளலாம்; மா - குதிரை. (அங)

அச.—கட்டளைப்படி வேள்விக்குவேண்டிய யாவுஞ்சித்தமாக, தசரதன் வேள்விச்சாலையிற் புகுதல்.

ஆயதற் குரியன கலப்பை யாவையு
மேயெனக் [1]கொணர்ந்தனர் நிருபர்க் கேந்தலுந்
தூயநற் புனல்படிஇச் சுருதி நூன்முறை
சாய்வறத் [2]திருத்திய சாலை [3]புக்கனன்.

(இ - ள்.) ஆயதற்கு உரியன - அவ்யாகத்துக்குரியனவாகிய, கலப்பை யாவைஉம் - கருவிகளெல்லாவற்றையும், ஏயென - விரைவாக, கொணர்ந்தனர் - (அரசன்கட்டளையால் ஏவலாளர்) கொண்டுவந்தார்கள்; நிருபர்க்கு ஏந்தல்உம் - தசரதசக்கரவர்த்தியும், தூய நல் புனல் படீஇ - பரிசுத்தியையுடைய நல்ல (சரயூநதியின்) தீர்த்தத்திலே நீராடி, சுருதி நூல் முறை-வேத சாஸ்திரங்களின் முறைமைப்படியே, சாய்வு அற திருத்திய - குற்றமில்லாதபடி திருத்தமாக அமைக்கப்பட்டுள்ள, சாலை - யாகசாலையில், புக்கனன் - போய்ச்சேர்ந்தான்; (எ - று.)

கலப்பை - உபகரணம்: இனி, வேள்விச்சாலையமைத்தற்கு நிலம் உழுதற்பொருட்டு உழுபடை வேண்டுவதால், கலப்பை யாவையும் என்றதற்கு-உழுபடை முதலிய எல்லாக்கருவிகளையும் என்றும் உரைக்கலாம். ஏயென - விரைவுக்குறிப்பு. ஏந்தல் - சிறந்துவிளங்குபவன். படீஇ-படிந்து என்பதன்சொல்லிசையளபெடை. சாய்வு-குறைவுமாம். பி - ம்:—[1]கொணர்தலின். [2]திருத்தியே. [3]துன்னினன். (அச)

அரு.—ஒருவருடகாலம் அசுவமேதயாகம் நடத்தல்.

[1]முழங்கழன் மும்மையு முடுகி யாகுதி
வழங்கியே யீரறு திங்கள் [2]வாய்த்தபின்
றழங்கின துந்துமி [3]தாவில் வானகம்
[4]விழுங்கினர் விண்ணவர் வெளியின் றென்னவே.

(இ - ள்.) (கலைக்கோட்டுமுனிவன்),— முழங்கு அழல் மும்மைஉம் - ஆரவாரித்து எழுகின்ற மூன்றுவகை அக்கினியையும், முடுகி - விரைவாக வளர்த்து, ஆகுதி வழங்கி - ஆகுதிகளை ஓமஞ்செய்ய, ஈர் அறு திங்கள் வாய்த்தபின் - (இங்ஙனம்) பன்னிரண்டுமாதஞ் சென்றபின்பு, துந்துமி - தேவவாத்தியங்கள், தழங்கின - ஒலித்தன; விண்ணவர் - தேவர்கள், வெளி இன்று என்ன - வெற்றிடம்சிறிதுமில்லையென்னும்படி, தா இல் வானகம் - கெடுதலில்லாத ஆகாயத்தை, விழுங்கினர் - மறைத்துக்கொண்டு நெருங்கினார்கள்; (எ - று.)

அழல் மும்மை-ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி என்பன. இப்பகுப்பு - இடவேறுபாடும், மந்திரபேதமும், செயல்வேற்றுமையும் பற்றியது. "தெரிமாண்டமிழ்மும்மைத்தென்னம்பொருப்பன்" என்றவிடத்திற்போல, மும்மையென்பது,இங்கு எண்ணின்தன்மையைக்குறியாமல், மூன்று என எண்ணின்கண் நின்றது. ஆஹுதி - வடசொல்; ஓம அக்கினியில் மந்திரபூர்வமாகஇடுகிற நெய்முதலியன. திங்கள் - சந்திரன்; இது - மாதத்துக்கு, ஆகுபெயர்: அமாவாசைக்கு அமாவாசை ஒருமாத மெனக் கொண்டு சந்திரசம்பந்தத்தாற் காலத்தைவரையறுக்கின்ற சாந்திரமானபக்ஷம்பற்றி, மாதத்துக்குத் திங்களென்றும், மதியென்றும் பெயர்வழங்கும். தேவர்கள் பூர்ணாகுதியைப் பார்க்கும்பொருட்டும், ஆகுதிகளை நேரிற்பெறும்பொருட்டும் வானத்தில் வந்துநிறைந்தன ரென்க. தா - உரிச்சொல். பி - ம்:-[1]முழங்கனல். [2]மாய்ந்தபின்றழங்கிய. [3]முழங்கத்தாவில்வான். [4]விழுங்கின. (அரு)

அசு.—இருசியசிருங்கன் அந்த யாகதுண்டத்தில் புத்திரகாமேஷ்டியாகஞ் செய்தல்.

முகமல ரொளிர்தர மொய்த்து வானுளோ
[1]ரகவிரை நறுமலர் தூவி யார்த்தெழத்
தகவுடை முனியுமத் தழலி னுப்பணே
மகவரு ளாகுதி வழங்கி னனரோ.

(இ - ள்.) வான்உளோர் - மேலுலகத்துள்ளதேவர்கள், முகம் மலர் ஒளிர்தர-(திருமாலின்அவதாரஞ்சமீபித்ததென்றமகிழ்ச்சியால் தமது)தாமரை மலர்போன்றமுக ... பெற, மொய்த்து - நெருங்கி, விரை அகம் நறு மலர் தூவி - வாசனையைத் தன்னிடத்தேயுடைய நல்லகற்பகமலர்களைப் பொழிந்து, ஆர்த்து எழ-பேரொலிசெய்து துள்ள,—தகவு உடை முனிஉம்-தகுந்த நற்குணங்களையுடைய இருசியசிருங்கமுனிவனும், அ தழலின் நாப் பண்ண - அந்தஅக்கினியினிடையிலே, மகவு அருள் ஆகுதி - புத்திரரைக் கொடுத்தற்குரிய ஆகுதிகளை, வழங்கினன் - ஓமஞ்செய்தான்; (எ - று.)

அசுவமேதயாகத்தைச்செய்துமுடித்தபின் தசரதன் இருசியசிருங்கமுனிவனைவணங்கி,'எனதுவமிசம்விருத்தியாகுந்தொழிலைச்செய்யவேணுமென்று வேண்ட, முனிவன் சக்கரவர்த்தியை அனுக்கிரகித்துப் பிறகு புத்திரகாமேஷ்டியைச் செய்வித்தா னென்று முதனூலால் விவரம் விளங்கும். அசுவமேதயாகத்தால் புத்திரோற்பத்திக்குத் தடையாயிருந்த பாவங்களைப் போக்கிக்கொண்டு,பிறகு புத்திரகாமேஷ்டியால் புதல்வரைப்பெறலாயினனென்று வடமொழி ஸ்ரீராமாயணவியாக்கியானங்களிற் கூறப்பட்டுள்ளது. தகவு - முனிவன்என்றுசொல்லுதற்குரிய தகுதி. அகவினர் என்றபாடத்துக்கு - கூத்தாடினராய்என்றுரைக்க. பி - ம்:—[1]தொகைவிரை. (அசு)

அஎ.—ஓமாக்கினியினின்று பூதமொன்று சுதைப்பிண்டமேந்தியெழுதல்.

ஆயிடைக் கனலினின் றம்பொற் [1] றட்டமீத்
தூயநற் சுதைநிகர் பிண்ட மொன்றுசூழ்
தீயெரிப் பங்கியுஞ் சிவந்த கண்ணுமா
யேயெனப் பூதமொன் றெழுந்த தேந்தியே.

(இ - ள்.) ஆ இடை - அந்தச்சமயத்தில், சூழ் தீ எரி பங்கிஉம் - சூழ்ந்தெரிகிற அக்கினிபோலச் சிவந்துவிளங்குந் தலைமயிரையும், சிவந்த கண் உம் ஆய் - செந்நிறமுடைய கண்களையு முடையதாக, பூதம் ஒன்று-ஒருபூதமானது, அம் பொன் தட்டம் மீ - அழகிய பொன்மயமான தட்டின்மேலே, தூய நல் சுதை நிகர் பிண்டம் ஒன்று - பரிசுத்தத்தையுடைய இனிய அமிர்தத்தையொத்த ஒருபிண்டத்தை, ஏந்தி-(கையினால்) தாங்கிக்கொண்டு, கனலில் நின்று-ஓமாக்கினியிலிருந்து, ஏயென - விரைவாக, எழுந்தது - மேலே வந்தது; (எ - று.)

வேள்விக்குண்டத்தினின்று அமிர்தபிண்டத்தைத் தட்டிலேந்திக்கொண்டு ஒருபூதம் வெளிவந்த தென்க. வெள்ளிமுடியை யுடையதாகித்

திவ்யபாயசத்தால் நிறைந்த ஸ்வர்ணபாத்திரத்தைக் கொணர்ந்து வந்து ஒரு பூதம் கொடுத்ததாக முதனூலால் விளங்கும். அந்தப்பூதத்தை ப்ராஜாபத்ய புருஷ னென்றும் கூறியிருக்கின்றது. தீயெரிஎன்பதற்கு - (தன்னிடத்த கப்பட்டபொருளைத்)தீக்குமியல்புள்ள எரி யென்க. பிண்டம்-சோற்றுத்தி ரளை. பி - ம்:—[1] தட்டமேல், தட்டின்மீ. (அஎ)

அஅ.—முனிவன் அச்சுதையைப் பட்டமகிஷியர்க்குத்தருமாறு கூறுதல்.

வைத்தது தரைமிசை மறித்து மவ்வழித்
தைத்தது பூதமத் தவனும் [1]வேந்தனை
யுய்த்தநல் லமிர்தினை யுரிய மாதர்கட்
கத்தகு மரபினு லளித்தி யாலென்றான்.

(இ - ள்.) பூதம் - அந்தப்பூதமானது, தரைமிசை வைத்தது - (தான்) கொணர்ந்த அமுதத்தட்டினைப் பூமியிலே வைத்துவிட்டு, மறித்துஉம்-மீண் டும், அ வழி தைத்தது - அவ்வோமாக்கினியினிடத்திலேதானே பாய்ந்து சென்றது; (உடனே), அ தவன்உம் - தவத்தையுடைய அந்த இருசியசிருங்க முனிவனும், வேந்தனை - தசரதனை நோக்கி, 'உய்த்த நல் அமிர்தினை - (பூதத்தாற்) கொணர்ந்து கொடுக்கப்பட்ட நல்ல அமிர்தம்போலினிய உண வை, உரிய மாதர்கட்கு - (உனக்கு) உரிய மனைவிமார்கட்கு, அ தகு மரபி னால் - தகுதியான அம்முறைப்படியே, அளித்தி - கொடுப்பாயாக,' என்றான்- என்று கூறினான்; (எ - று.)

வந்த பூதம் தான் வந்தவழியே மீள, ருசியசிருங்கன், முறைப்படி அந் தச்சுதையைப் பட்டமகிஷியர்க்குத் தருமாறு தசரதனிடம் கூறினனென்க. தைத்தல்-இங்கு, உட்புகுத லென்ற பொருளைத் தந்தது. அக்கினியினின்று எழுந்த பூதமே மனைவிமார்க்கு அந்தப்பாயசத்தைத் தருமாறு கூறியதாக முதனூலி லுள்ளது. உரிய மாதர் - அரசனது மனைவியர் பலருள்ளும் பட்டமகிஷிகளாய்ச் சிறந்த கௌசலை சுமித்திரை கைகேயி என்னும் மூவர். மரபு-முறைமை: மூத்தவளுக்கு முதலிலும் இளையவளுக்குப் பிறகு மென்ற இந்தவரிசை. பி - ம்:—[1] வேந்தன்கை. [2] மரபினின்று. (அஅ)

அகூ.—மன்னவன் கௌசலைக்கு முதலில் அந்தச்சுதையைத் தருதல்.

மாமுனி [1]யருள்வழி மன்னர் மன்னவன்
றாமமென் சுரிகுழற் றொண்டைத் [2]தூயவாய்க்
[3]காமரொண் கௌசலை கரத்தி னோர்பகிர்
தாமுற வளித்தனன் சங்க மார்த்தெழ.

(இ - ள்.) மா முனி அருள் வழி - சிறந்த அந்த இருசியசிருங்க முனி வன் கட்டளையிட்டருளியபடியே, மன்னர் மன்னவன் - தசரதசக்கரவர்த்தி, தாமம் மென் சுரி குழல் தொண்டை தூய வாய் காமர் ஒண் கௌசலை - புகைபோற்கரிய மெல்லிய கடைகுழன்ற கூந்தலையும் கொவ்வைப்பழம் போற் சிவந்த தூய்மையையுடைய வாயையுமுடைய அழகிய ஒளியையுடைய

கௌசல்யாதேவியின், கரத்தின் - கையில், ஓர் பகிர்-ஒருபாகத்தை, சங்கம் தாம் உற ஆர்த்து எழ - சங்கவாத்தியங்கள் தாம் மிகுதியாக வொலிக்க, அளித்தனன் - கொடுத்தான்; (எ - று.)

முறைப்படி அவ்வமுதத்தை யளிக்குமாறு முனிவன் கட்டளையிட்டத ஞல், மூத்தவளான கௌசலைக்கு முதலிற் கொடுத்தன னென்க. ஓர்பகிர் - பாதிப்பகுதி:மூன்றில் ஒருபகுதி யென்பாருமுளர். கௌசலை=கௌஸல்யா: தட்சிணகோசலதேசத்தரசன்மகள். காமர் - காமம் மருவு என்பதன் விகாரம்; விருப்பம் பொருந்திய என்பது, பொருள். பி - ம்:—[1] பணித்திட. [2] செய்யவாய். [3] காமரு. (அகூ)

கூ௦.—கைகேயிக்குச் சுதை யளித்தல்.

கைகயன் றனயைதன் கரத்து மம்முறைச்
செய்கையி னளித்தனன் றேவ ரார்த்தெழப்
பொய்கையு நதிகளும் பொழிலு மோதிமம்
வைகுறு கோசல மன்னர் மன்னனே.

(இ - ள்.) (பின்பு), பொய்கைஉம் நதிகள்உம் பொழில்உம் - குளங்களி லும் ஆறுகளிலும் சோலைகளிலும், ஓதிமம் வைகுறு - அன்னப்பறவைகள் தங்கப்பெற்ற, கோசலம் - (உத்தர) கோசலநாட்டையாளுகின்ற, மன்னர் மன்னன் - தசரதசக்கரவர்த்தி,— கைகயன் தனயைதன் கரத்துஉம்-கேகய தேசத்தரசனதுமகளாகிய கைகேயியின்கையிலும், அ முறை செய்கையின்- அந்தமுறைமையாகிய செய்கையின்படியே [கௌசலைக்குக்கொடுத்த அப் படியே கையிலுள்ளதை இரண்டாகப்பகிர்ந்து ஒருபாதியை], தேவர் ஆர்த்து எழ - தேவர்கள் (மகிழ்ச்சியால்) ஆரவாரஞ்செய்யும்படி, அளித்தனன்—.

தசரதன் கைகேயிக்கும் அந்தச்சுதையில் கையில்மிச்சமாகஉள்ளதிற் பாதியை அளித்தன னென்க. கீழ்ச்செய்யுளில் மூன்றிலொருபகுதியைக் கௌசலைக்குக் கொடுத்ததாக உரைகூறுபவர், அம்முறைச்செய்கையின் என்பதற்கு-கௌசலைக்குக்கொடுத்த அவ்வளவே [மூன்றிலொருபகுதியை] யளித்தன னென்பர். கேகயன் - கேகயநாட்டரசன். கௌசலைக்குப்பாயசத் திற் பாதியைக்கொடுத்ததும், மிச்சமானபாயசத்திற் பாதியை [அதாவது நான்கிலொருபங்கை] ச் சுமித்திராதேவிக்குக் கொடுத்துப் பின்புமிச்சமா யுள்ளதிற் பாதிப்பகுதியை [எட்டிலொருபகுதியை] க் கைகேயிக்குக்கொ டுத்து மற்றும் மிச்சமானபகுதியை [எட்டிலொருபகுதியை] ச் சுமித்திரைக் குத் தசரதன் கொடுத்தா னென்று முதனூலிற் கூறியுள்ளது. அம்முறைப் படியே கூறுவதாயின்,கைகேயிக்குக்கொடுத்ததை மூன்றாவதுகூறி, மற்றும் சுமித்திரைக்குக் கொடுத்ததைக் கூறவேண்டும். (கூ௦)

கூக.—சுமித்திரைக்குச் சுதை யளித்தல்.

நமித்திரர் [1] நடுக்குறு நலங்கொண் மொய்ம்புடை
நிமித்திரு மரபுளான் முன்னர் நீர்மையின்

சுமித்திரைக் களித்தனன் சுரர்க்கு [2]வேந்தினிச்
சமித்ததென் பகையெனத் தமரொ டார்ப்பவே.

(இ - ள்.) நமித்திரர் நடுக்கு உறு நலம் கொள் மொய்ம்பு உடை-பகைவர்கள் (அச்சத்தால்)நடுக்கமடைதற்குக்காரணமான நன்மையைக்கொண்ட வலிமையையுடைய, நிமி திரு மரபு உளான் - நிமியென்னுஞ்சக்கரவர்த்தியின் சிறந்தவமிசத்திலேபிறந்துள்ளவனை தசரதன்,— சுரர்க்கு வேந்து இனி என் பகை சமித்தது என தமரொடு ஆர்ப்ப-தேவர்கட்கரசனை இந்திரன் இனிமேல் எனதுபகை யொழிந்த தென்று (மகிழ்ச்சிகொண்டு) தன்னினத்தவருடனே ஆரவாரிக்கும்படி, முன்னர் நீர்மையின் - முன் (இரண்டு பட்டமகிஷியர்க்கும்) கொடுத்தமுறைப்படியே [கையிலிருந்ததிற்பாதிச் சுதையை], சுமித்திரைக்கு - சுமித்திராதேவிக்கு, அளித்தனன்—;(எ - று.)

சக்கரவர்த்தி முன்னிருவர்க்குப்போலவே சுமித்திரைக்கும் அவ்வமுதத்தை யளித்தன னென்க. முன்னர்நீர்மையின்என்பதற்கு - கீழ்க்கவிகளிற்போலவே, மூன்றிலொருபகுதியை என்று உரைப்பாரு முளர். சுமித்திரைக்குக்கொடுத்த இந்தஅமுதம் இந்திரசித்தைக் கொல்லப்போகின்ற இளையபெருமாளின்திருவவதாரத்துக்கு ஏதுவாதலால், இந்திரன் இனத்தோடு களிப்பானாயினன். சத்துருக்களையடக்குவதல்லது மற்றையோர்க்குத் தீமை செய்யாததென்பார் 'நமித்திரர் நடுக்குறு நலங்கொள் மொய்ம்பு' என்றார். நிமி - சூரியகுலத்தரசன்; இட்சுவாகுமகாராசனுக்குப் பன்னிரண்டாந்தலைமுறையான்: இட்சுவாகுவின் புதல்வனென்று சிலநூல் கூறும். இவன் தன்னைக்கொண்டியாகஞ்செய்யாமல் வேறொருத்தரைக்கொண்டு யாகஞ்செய்ததற்காக வசிட்டமுனிவன்சாபத்தால் உடம்புஇல்லாதவனாகிப் பின்பு புரிந்த தவமகிமையினால் எல்லார்கண்களிலும் தான் இருக்குமாறு வரம்பெற்றவன். ந மித்திரர் = நமித்திரர்: ந என்னும் எதிர்மறைகுறிக்கும்இடைச்சொல் தொடர்ந்த தொடர்மொழி அமித்திரரென்றுதிரிந்துவராமல் இயல்பாய்நின்றது. நடுக்கு - முதனிலைத்தொழிற்பெயர். பி - ம்: [1]நடுக்குற. [2]வேந்தனும். (கக)

கூஉ.—சுமித்திரைக்குப் பின்னும் எஞ்சியதை யளித்தல்.

[1]பின்னுமப் பெருந்தகை பிதிர்ந்து [2]வீழ்ந்தது
தன்னையுஞ் சுமித்திரை தனக்கு நல்கினா
னென்னலர்க் கிடமும்வே றுலகி னோங்கிய
மன்னுயிர் தமக்குநீள் வலமுந் துள்ளவே.

(இ - ள்.) பின்னும்—, அ பெரு தகை - பெருமைக்குணமுடைய அந்தச்சக்கரவர்த்தி,—ஒன்னலர்க்கு - பகைவர்க்கு, இடம்உம் - இடப்புறமும், வேறு உலகின் ஓங்கிய மன் உயிர் தமக்கு - (அவர்களினும்) வேறாகி [பகைவர்களாக இராமல்] உலகமெங்குஞ் சிறந்துள்ள நிலைபெற்ற பிராணிகட்கு, நீள்வலம்உம்-சிறந்தவலப்புறமும், துள்ள-துடிக்கும்படி, பிதிர்ந்து வீழ்ந்தது தன்னைஉம் - (பகுத்துக் கொடுக்கும்போது தட்டிலே) சிந்திவீழ்ந்தவற்றையும், சுமித்திரை தனக்கு-சுமித்திராதேவிக்கு, நல்கினான் - கொடுத்தான்.

பகுத்துக்கொடுத்தபோது தட்டில் சிந்திக்கிடந்த எஞ்சிய சுதையைப் பின்னும் சுமித்திரைக்குத் தசரதன் அளித்தன னென்க. ஆடவர்க்கு வலந்துடித்தல் நன்னிமித்தமும், இடந்துடித்தல் தீநிமித்தமு மாம். ஓங்கிய உயிர் என்றதனால், மக்களுயிரையாயிற்று. இரண்டாகப் பகிர்ந்து ஒருபகுதியைக் கொடுத்ததைக் கீழ்ச்செய்யுள் உணர்த்தியதாகக் கொள்ளின், மற்றைப் பகுதியைக் கொடுத்ததை இச்செய்யுள் கூறு மெனக் கொள்க. இலவணன் முதலியசத்துருக்களை யொழிக்கப்போகின்ற சத்துருக்கினனது திருவவதாரத்துக்கு இந்த அமுதம் காரண மாதலால், அதனை யளிக்கும்போது ஒன்னலர்க்கு இடந்துடித்த தென்க. நாலுவடிவுடன் அவதரிக்கத் திருமால் சங்கற்பித்துள்ளதனால், இரண்டாமுறை சுமித்திரைக்குச் சுதையை அளிக்குமாறு அரசனுக்கு எண்ணமுண்டாயிற்று. ஒன்னலர்=ஒன்றலர்: மரூஉ. பி - ம்:—[1]பின்னர். [2]வீழ்ந்தவைதம்மையும். (கஉ)

கூ௩.— வேள்வி முடிந்திட, தசரதன் யாகசாலையினின்று எழுதல்.

வாம்பரி வேள்வியு [1]மகாரை நல்குவ
தாம்புரை யாவுதி பிறவு மந்தண
னோம்பிட முடிந்தபி னுலகு காவல
னேம்பலோ டெழுந்தன னியாரு மேத்தவே.

(இ - ள்.) வாம் பரி வேள்விஉம் - தாவுகின்ற குதிரையைக்கொண்டு செய்கின்ற அசுவமேதத்தையும், மகாரை நல்குவது ஆம் புரை ஆவுதி பிறஉம் - புத்திரரைத்தருவதற்கு இடமாகிய [புத்திரகாமயாகத்துக்கு உரிய] ஓமங்கள் பிறவற்றையும், அந்தணன் - (இருசியசிருங்க) முனிவன், ஓம்பிட - நன்குசெய்ய,—முடிந்த பின்-அவ்யாகங்கள் முடிந்தபின்பு, உலகு காவலன்-உலகமுழுவதையும் காத்தலில்வல்ல தசரதசக்கரவர்த்தி,—யாரும் ஏத்த - யாவரும் துதிக்க, ஏம்பலோடு - மகிழ்ச்சியுடனே, எழுந்தனன் - (யாகசாலையை விட்டுப்) புறப்பட்டனன்; (எ - று.)

இருசியசிருங்கமுனிவன் யாகவோமம் முடித்ததும், யசமானனாயிருந்த தசரதன் யாகசாலையைவிட்டுப் புறப்பட்டன னென்க. ஆவுதி=ஆஹுதி. புரை - இடம்: உயர்ச்சியுமாம். பி - ம்:—[1]மகவை. (கங)

கூச.—தசரதன் சபாமண்டபத்தை யடைதல்.

[1]முருடரு பல்லிய முழங்கி யார்த்தன
விருடரு முலகமு [2]மிடரி னீங்கின
தெருடரு வேள்வியின் கடன்க டீர்ந்துழி
வருடரு மவையின்வந் தரச னெய்தினன்.

(இ - ள்.) தெருள் தரு-(வேதங்களால்) தெரிவிக்கப்பட்டுள்ள, வேள்வியின் கடன்கள் - யாகத்திற்குஉரிய கடமைகள், தீர்ந்த உழி - நிறைவேறின பொழுது,—முருடு அரு பல்இயம் முழங்கி ஆர்த்தன-மத்தளமும் அருமையான வேறுபலவாச்சியங்களும் மிகவும்பேரொலி செய்தன; இருள் தரும் உலகம்உம் - (அரக்கர் கொடுமையால்) துன்பமடைந்துகிடக்கிற உலகத்தார் யாவரும், இடரின் நீங்கின - (தமது) துன்பத்தினின்றுநீங்கியப் பெற்றனர்;

அரசன்-தசரதசக்கரவர்த்தி, அருள் தரும் அவையின் வந்து - (யாவர்க்கும்) கருணைசெய்தற்கு இடமான சபாமண்டபத்தைச் சேர்ந்து, எய்தினன் - தங்கினன்; (எ - று.)

பூர்ணாகுதிமுடிந்ததும் பூரிகொடுக்குமாறு தசரதசக்கரவர்த்தி ஓலக்க மண்டபத்தை யடைந்தன னென்பதாம். முருடு - மத்தளம்: பத்தலென்று முரைப்ப; "முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தனபணிலம்" என்ற விடத்துங் காண்க. தீர்ந்துழி - தொகுத்தல். பி - ம் :[1] —முருடொடும். [2]இடரும். (கஅ)

கூடு.—மன்னவன் அந்தணர்க்குத் தட்சிணை கொடுத்தல்.

செய்ம்முறை கடன்முறை திறம்ப லின்றியே
மெய்ம்முறை [1]கடவுளுக் கீந்து விண்ணுளோர்க்
கம்முறை யளித்துநீ டந்த ணாளர்க்குங்
கைம்முறை யளித்தனன் கனக மாரியே.

(இ - ள்.) (சக்கரவர்த்தி), செய் முறை-செய்யவேண்டியகடமைகளை, கடன் முறை திறம்பல் இன்றி - அக்கடமைகளைக்கூறும் நூலுக்கு மாறுபாடில்லாமல், மெய் முறை கடவுளுக்கு ஈந்து-உண்மையான (தனது)குலத்துக்குத் தெய்வமாகிய திருமாலுக்கு ஈந்து, விண்உளோர்க்கு அ முறை அளித்து-மற்றைத்தேவர்கட்கும் அந்நூலிற் கூறியபடியே கொடுக்கவேண்டியஹவிர்ப்பாகத்தைக் கொடுத்து [இங்ஙனம் யாகம்முடிந்தவுடன்], நீடு அந்தணாளர்க்குஉம் - பெருமை பொருந்திய பிராமணர்கட்கும், கை - கைகளால், முறை - முறைப்படி, கனகம் மாரி - பொன்மழையை, வழங்கினன்-பொழிந்தான்; (எ - று.)

அந்தணர்க்குத் தட்சிணையீந்தபிறகே வேள்விமுற்றுப் பெறுமாகையால் திருமாலுக்கும் மற்றைத்தேவர்க்கும் ஆகுதி வழங்கி ஓமம் முடித்தபின்பு அந்தணாளர்க்குத் தட்சிணை கொடுத்தனனென்க. இக்ஷ்வாகுமன்னவன் பிரமனைநோக்கித் தவம்புரிந்து திருமாலைப்பெற, அதுமுதல் அக்குலத்து மன்னவர் அப்பரமனைப்பூஜித்துவர, அக்கடவுளே விபீஷணனுக்கு இராமபிரானால் தரப்பட்டுத் திருவரங்கத்தி லெழுந்தருளினனென்பது பிரசித்தமாதலால், தசரதனுக்குத் திருமால் முறைக்கடவு ளாவன். இனி, இரண்டாமடி - வேள்வியை முடித்தபின் தனது குலதெய்வமாகிய ரங்கநாதனைப் பூஜித்ததை 'மெய்முறைக் கடவுளுக்கீந்து' என்பதனாலும், தேவவிருடியரைப்பூஜித்ததை 'விண்ணுளோர்க்கு அம்முறை வழங்கி' என்பதனாலும் கூறினா ரெனக் கொள்வாருமுளர். பி - ம்:[1] —கடவுளர்க்கு. (கஇ)

கூகூ.—மன்னவன் அவப்பிருதஸ்நானஞ் செய்தல்.

[1]வேந்தர்கட் கரசொடு வெறுக்கை தேர்பரி
வாய்ந்தநற் [2]றுகிலொடு வரிசைக் கேற்பன
வீந்தனன் பல்லியந் துவைப்ப வேகிநீர்
தோய்ந்தனன் சரயுநற் றுறைக்க ணெய்தியே.

(இ - ள்.) வேந்தர்கட்கு - அரசர்கட்கு,—அரசொடு-அரசாட்சியுடனே, வெறுக்கை - செல்வமும், தேர் - இரதங்களும், பரி - குதிரைகளும், வாய்ந்த நல் துகிலொடு - அழகியனவாக அமைந்துள்ள சிறந்த ஆடைகளும் (என்னும் இவற்றுள்), வரிசைக்கு ஏற்பன - (அவரவர்) தகுதிக்குத் தக்கனவற்றை, ஈந்தனன் - கொடுத்து,—பல் இயம் துவைப்ப - பலவகை வாச்சியங்களும் ஒலிப்ப, ஏகி - சென்று, சரயு நல் துறைக்கண் எய்தி - சரயூநதியினது நல்லதுறையிலே சேர்ந்து, நீர் தோய்ந்தனன் - நீராடினான், (தசரதன்).

அந்தணர்க்குத் தட்சிணைகொடுத்தபின் அரசர்கட்கும் ஏற்றவாறு அவரவர்க்கு மரியாதைகள்செய்து சரயூநதியைச் சார்ந்து தசரதன் நீராடினனென்க. இது, அவபிரதஸ்நாநமெனப்படும். துறை - நதியில் இறங்குதற்கு உரிய இடம். பி - ம்:—[1]வேந்தருக்கு. [2]துகிலொடவ்வரிசைக்கு. (கசு)

கூள.—அவபிரதம்முடிந்தபிறது அரசவையடைந்து வசிட்டனைத் தசரதன் வணங்குதல்.

[1]முரசினங் கறங்கிட முத்த வெண்குடை
[2]விரசிமே னிழற்றிட வேந்தர் சூழ்தர
வரசவை யடைந்துழி யயனு நாணுற
வுரைசெறி [3]முனிவன்றாள் [4]வணங்கி யோங்கினன்.

(இ - ள்.) (சக்கரவர்த்தி), முரசு இனம் கறங்கிட - பேரிகைகளின்தொகுதி ஒலிக்கவும், முத்தம் வெண்குடை மேல் விரசி நிழற்றிட - முத்துக்களினாலாகிய வெள்ளைக்குடை மேலேநெருங்கி நிழலைச்செய்யவும், வேந்தர் சூழ்தர - அரசர் பலரும் (தன்னைச்) சூழ்ந்து வரவும்,—அரசு அவை அடைந்த உழி - இராசசபையிற் சேர்ந்தஇடத்து, அயன்உம் நாண்உற உரை செறி முனிவன் தாள் வணங்கி - பிரமதேவனும் வெட்கமடையும்படி(வேத) வாக்கியங்கள் நிறைந்த வசிட்டமுனிவனது திருவடிகளை வணங்கி, ஓங்கினன் - (அம்முனிவனது) ஆசிபெற்றெழுந்தான்; (எ - று.)

அவபிரதஞ்செய்துமுடிந்திட்டதும் மீண்டும்சபையையடைந்த தசரதன் தன்குலகுருவைவணங்கி அவனிடத்து ஆசிபெற்றுச் சிறந்தானென்க. [3]முனிவர்தாள் என்றபாடம், மேல் 'வசிட்டனுணையால் இருசியசிருங்கனை வணங்கினன்' என்பதை நோக்குமிடத்துப் பொருத்தமுள்ளதாகத்தோன்றவில்லை. உரைசெறிஎன்பதற்கு - சாபானுக்கிரகமொழிமிகுந்தஎன்றும், கீர்த்திமிகுந்த என்றும் உரைக்கலாம். பி - ம்:—[1]முரசொலி. [2]விரசிநிழற்ற. [4]இறைஞ்சி.

கூஅ.—தசரதன் இருசியசிருங்கனை வணங்கி முகமன்கூறுதல்.

அரியநற் றவமுடை வசிட்ட னுணையா
லிரலைநற் சிருங்கமா விறைவன் றாடொழா
வுரிய[1]பற் பலவுரை பயிற்றி யுய்ந்தனன்
பெரியநற் றவவினிப் பெறுவ தியாதென்றால்.

(இ - ள்.) (பின்புதசரதன்),—அரிய நல் தவம் உடை வசிட்டன் ஆணையால்-(பிறர்க்கு)அரிய சிறந்த தவத்தையுடைய வசிட்டமுனிவனது கட்டளையினால், இரலை நல் சிருங்கம் மா இறைவன் தாள் தொழா - கலைமானின் அழகியகொம்பை(த் தலையிலே)யுடைய சிறந்தமுனிவரான இருசியசிருங்கனுடைய பாதங்களில் வீழ்ந்துவணங்கி, உரிய பல்பல உரை பயிற்றி-(சொல்லுதற்கு)உரிய மிகப்பலவான இன்சொற்களைச் சொல்லி, 'பெரிய நல் தவ - சிறந்த நல்ல தவத்தையுடையவனே!உய்ந்தனன்-(அடியனேன் உமது கருணையினால்) ஈடேறினேன்: இனி பெறுவது யாது-(இதைக்காட்டிலும் யான்)இனிமேல்பெறத்தக்கபேறு யாதுஉளது?' என்றான்-என்றுகூறினான்.

இரலை=கலைமான். சிருங்கம்=கொம்பு. தசரதன் வசிட்டன்மொழிப்படி இருசியசிருங்கனைவணங்கி'புதல்வனில்லாமையால் நரகத்தழுந்துவதாக இருந்த யான் உனதுதிருவருளால் அக்குறையும்நீங்கப்பெற்றதனால் இனி எனக்குயாதொருகுறையுமில்லை' என்றனனென்க. பி - ம்:—[1]நற்பல. (கஅ)

**கக.—இருசியசிருங்கன் உடன்வந்த முனிவரோடு ஏகுதல்.**

**எந்தைநின் னருளினா [1]லிடரி னீங்கியே**
**யுய்ந்தன னடியனே னென்ன வொண்டவன்**
**சிந்தையுண் மகிழ்ச்சியால் வாழ்த்தித் தேர்மிசை**
**வந்தமா தவரொடும் வழிக்கொண் டேகினான்.**

(இ - ள்.) (சக்கரவர்த்தி), 'எந்தை-எமதுதலைவனே! அடியனேன்-நான், நின் அருளினால்—,இடரின்நீங்கி-துன்பத்தினின்று நீங்கி, உய்ந்தனன்-ஈடேறினேன்,' என்ன-என்றுசொல்ல,—ஒள் தவன்-சிறந்ததவத்தையுடைய இருசியசிருங்கன்,சிந்தையுள் மகிழ்ச்சியால்வாழ்த்தி-மனத்திலுள்ளகளிப்புடனே (தசரதனை)ஆசீர்வதித்து, வந்த மா தவரொடும்-(தன்னுடன்) வந்த மிக்க தவமுள்ளமுனிவர்களுடனே,தேர்மிசை-தேரின்மீது(ஏறி),வழிக்கொண்டு-பிரயாணப்பட்டு, ஏகினான்-(உரோமபாதனது நகரஞ்) சென்றான்; (எ-று.)

'எந்தை ... என்ன' என்பது - முன்னைய செய்யுளின் பொருள்அநுவாதம். இச்செய்யுள் சில ஏட்டுப்பிரதிகளி லில்லை. பி - ம்:—[1]இடரும்.(கக)

**௬௦௦.—மற்றை முனிவரும் அரசனை ஆசீர்வதித்துச்செல்லுதல்.**

**வாங்கிய துயருடை மன்னன் பின்னரும்**
**[1]பாங்குடை முனிவர்தாள் பழிச்சி யேத்தல்கொண்**
**டோங்கிய [2]வுவகைய ராசி யோடெழா**
**[3]நீங்கின ரிருந்தன னேமி வேந்தனே.**

(இ - ள்.) வாங்கிய துயர் உடை மன்னன் - நீங்கிய துயரையுடைய [துயரம் நீங்கப்பெற்ற] தசரதன், பின்னர்உம்—, பாங்கு உடை முனிவர் தாள் பழிச்சி - நல்லொழுக்கமுள்ள இருடியரின் பாதங்களை (வணங்கிப்) புகழ,—ஏத்தல் கொண்டு ஓங்கிய உவகையர்-(அரசன் தம்மைக் கொண்டாடிய) கொண்டாட்டத்தைப் பெற்றதனால் மிக்க மகிழ்ச்சியையடைந்த அம்முனிவர்கள், ஆசியோடு எழா - (அரசனை) வாழ்த்துதலுடனே யெழுந்து,

நீங்கினர் - போயினாராக,—நேமி வேந்தன்-அத்தசரதசக்ரவர்த்தி, இருந்தனன் - (சுகமாக) இருந்தான்; (எ - று.)

அரசன் தம்மை வணங்கி முகமன்கூறி உபசரித்துக் கொண்டாடியதனால் மற்றை முனிவர்களும் மகிழ்ந்து ஆசீர்வதித்துச் சென்றாராக, அரசன் இனிதாக இருந்தனனென்பதாம். இச்செய்யுள் சிலபிரதிகளி வில்லை. வாங்கியதுயருடை - வடமொழிநடை. பழிச்சி - எச்சத்திரிபு. பழிச்சியேத்தல் - மிகுதியாகஏத்துதலுமாம். பி-ம்:—[1]பாங்குறுகடன்முறை பலபயிற்றல். [2]உவகையன். [3]நீங்கினன். (க00)

### க0க.—தேவிமார்மூவரும் வயாக்கோள்ளுதல்.

தெரிவையர் மூவருஞ் சிறிது [1]நாட்செலீஇ
மருவிய வயாவொடு வருத்தந் [2]துய்த்தலாற்
பொருவரு திருமுக மன்றிப் பொற்புநீ
டுருவமு மதியமோ டொப்பத் தோன்றினர்.

(இ - ள்.) தெரிவையர் மூவர்உம் - சக்கரவர்த்தியின்தேவிமார்மூன்றுபேரும், சிறிது நாள் செலீஇ-சிலநாள் கழித்து, மருவிய வயாவொடு வருத்தம் துய்த்தலால் - பொருந்தியகருப்பத்தையும் கருப்பத்தைத்தாங்குவதனாலானவருத்தத்தையும் அனுபவித்ததனால், பொருவு அறு திருமுகம் அன்றி - ஒப்பில்லாத அழகிய முகம்மாத்திரமேயல்லாமல், பொற்பு நீடு உருவம்உம்- அழகுமிக்க உடம்பு முழுவதும், மதியமோடு ஒப்ப-சந்திரனோடு ஒக்கும்படி, தோன்றினர் - காணப்பட்டார்கள்; (எ - று.)

இது,கருவுறுதற்குறிகளிற்சேர்ந்த மசக்கைநோயையும் உடல்வெளுத்தலையும் கூறிற்று மசக்கைநோய் உடல்வெளுத்தல் வயிறுபருத்தல் முலைக்கண்கறுத்தல் கண்குழிதல் முதலியன கருப்பக்குறியாத லறிக. முகம் மதியமோடொத்தல் - ஒளியும்அழகும்குளிர்ச்சியும்பற்றி.உருவம் மதியமோடொத்தல் - வெளுத்தநிறத்தால். வயா - கருப்பவதிகட்குச்சிற்சிலபொருள்கள் மேல் தோன்றும் விருப்பம். செலீஇ - செலுத்திஎன்பதுவிகாரப்பட்டுஅளபெடுத்தது. பி - ம்:—[1]நாட்செல. [2]துய்த்தவர். (க0க)

### க0உ-க0ச.—இதுமுதல்மூன்றுகவிகள்-குளகம்; ஸ்ரீராமபிரான் திருவவதரித்ததைக் கூறும்.

க0உ. ஆயிடைப் பருவம்வந் தடைந்த [1]வெல்லையின்
மாயிரு புவிமகண் மகிழ்வி னோங்கிட
வேய்புனர் பூசமும் [2]விண்ணு ளோர்புகழ்
தூயகர்க் கடகமு மெழுந்து துள்ளவே.

க0ங. சித்தரு மியக்கருந் தெரிவை மார்களும்
வித்தக முனிவரும் விண்ணு ளோர்களு
நித்தரு முறைமுறை நெருங்கி யார்ப்புறத்
தத்துற லொழிந்துநீ டறும மோங்கவே.

கOச. ஒருபக லுலகெலா முதரத் துட்பொதிந்
தருமறைக் குணர்வரு மவனை யஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தன டிறங்கொள் கோசலை.

(இ - ள்.)(கOஉ)ஆ இடை-அவ்விடத்து[தேவிமார்கட்கு],பருவம் வந்து அடைந்த எல்லையில் - பிரசவகாலம் வந்தடைந்தபொழுது, மா இரு புவி மகள் மகிழ்வின் ஓங்கிட - மிகப்பெரியபூதேவி மகிழ்ச்சியாற் பூரிக்கவும், வேய் புனர்பூசம்உம் விண்ணுளோர் புகழ் தூய கர்க்கடகம்உம் எழுந்து துள்ள - வேயென்று ஒருபெயரையுடைய புனர்வசுநட்சத்திரமும் தேவர்கள்புகழ்கின்ற பரிசுத்தமானகர்க்கடகலக்கினமும் குதித்துத்துள்ளவும்,— (கOஙு) சித்தர்உம் இயக்கர்உம் தெரிவைமார்கள்உம் வித்தகம் முனிவர்உம் விண்ணுளோர்கள்உம் நித்தர்உம் முறைமுறை நெருங்கி ஆர்ப்புஉற - சித்தர்களும் இயக்கர்களும் (அவருடைய)மனைவிமார்களும் தத்துவஞானமுடைய முனிவர்களும் தேவர்களும் நித்தியசூரிகளும் வரிசைவரிசையாய்நெருங்கி மகிழ்ச்சியினு லாரவாரிக்கவும், நீள் தருமம் தத்துறல் ஒழிந்து ஓங்க - சிறந்ததருமதேவதை மனத்தடுமாற்றம்நீங்கி மகிழ்ச்சிமிகவும்,— (கOச) திறம் கொள்கோசலை-நற்குணங்களைக்கொண்டகௌசல்யாதேவியானவள், ஒருபகல் உலகு எலாம் உதரத்துள்பொதிந்து அருமறைக்கு உணர்வு அரும் அவனை - ஒருகாலத்தில் [பிரளயத்தில்] எல்லாவுலகங்களையும் (தனது) திருவயிற்றினுள்ளே மறைத்துவைத்து அருமையான வேதங்கட்கும் அறிதற்கு அருமையானவனும், அஞ்சனம் கரு முகில் கொழுந்து எழில் காட்டும் சோதியை - மையும் புதியகரியமேகமும் என்னும்இவற்றின் அழகை (த் தன்னிடத்தே) காட்டுகின்ற தேஜோரூபியுமான திருமாலை, திரு உற - (உலகத்திலுள்ளவர்யாவர்க்கும் இக பர) செல்வங்கள்மிகும்படி,பயந்தனள்-பெற்றாள்.

கௌசல்யாதேவி பருவம் வந்தவுடன் புனர்பூசத்தில் கர்க்கடகலக்கினத்தில் திருமாலைப் புதல்வனுகப் பெற்றன ளென்க. இவனே ஸ்ரீராமனெனப்படுவோன். கOஉ.—வேய் என்பது-புனர்பூசத்துக்கு ஒரு பெயர்;வேய் புனர்பூசம் - இருபெயரொட்டு; எதுகைநோக்கியியல்பாயிற்று; இனி 'வேய்' என்று மூங்கிற்குப் பெயராதலால், மூங்கிலினுலியன்ற வில்லின்வடிவத்தைக் கொண்ட புனர்பூசமென்றுமாம்; அன்றி, வினைத்தொகையாக, அழகு பெற்ற புனர்பூச மென்பாருமுளர். நண்டுக்குப்பெயராகிய கர்க்கடகமென்பது - அதன்வடிவத்தைக் கொண்ட இலக்கினத்தைக் குறிக்கும். திருமால் திருவவதரிப்பதற்குத் தாம் இடமாயிருந்தமையால், புனர்பூசமும் கர்க்கடகமும் எழுந்துதுள்ளின வென்க. [2]விண்ணுளோர்களுமென்ற பாடம்கூறியது கூறலாம்; அடுத்த பாடலில் விண்ணுளோர்களும் என்று வருதல் காண்க. பி - ம்:—[1]வேலையின். கOஙு.—சித்தர், இயக்கர்-தேவகணத்துட்பட்டவர். தெரிவை - பருவப்பெயராகாமல், பெண்ணென்றமாத்திரமாய் நின்றது. நித்தியர் - பிறப்புஇறப்புஇல்லாமல் என்றும் ஒருபடிப்பட்டப் பரமபதத்தில் வாழ்பவர். நித்தியரைக்கூறியது - முக்தர்க்கும் உபலட்சணம்: "நசபுநரா

வர்த்ததே [மோட்சலோகத்தவன் மீண்டும் இங்குத் திரும்புவதில்லை]" என்பதற்கு மாறாக, சித்தர் நெருங்கி ஆர்த்தனர் என்றது எங்ஙனம் பொருந்துமெனின்? —அந்தச்சுருதிவாக்கியத்திற்கன்மத்தினால்திரும்பிப்பிறப்பதில்லையென்றுகூறியதேயன்றிக்கருமத்தொடர்பின்றி விருப்பத்தினால் இங்குமுக்தியுலகத்தவர் வருவதை மறுக்கவில்லையென்க. எம்பெருமானது கருணைப்பெருக்கத்தைக் கண்டு, சித்தர் முதலியோர் களிப்புற்றன ரென்றவாறு. க0ச:—இவ்வுலகங்களை யெல்லாம் தன்னுட்கொண்ட கடவுளை இவ்வுலகத்தின் ஏகதேசத்தில் ஓரிடத்திலிருப்பவளாகிய கௌசல்யை தன்வயிற்றிற்கொண்டு பெற்றன ளென்ற இதில், ஆதாரத்தினும் ஆதேயம் மிக்கதாகவந்ததனால், பெருமையணி யாம். [ஆதாரம் - தாங்குவது; ஆதேயம் - தாங்கப்படுவது.] திருவுற - மங்கலம்பொருந்த எனினுமாம். முதலடி - மூற்றுமோனை. (க0உ - க0ச)

**க0ரு.—கைகேயி ஒருபுதல்வனைப் பெறுதல்.**

**ஆசையும் விசும்புநின் றமர ரார்த்தெழ**
**வாசவன் முதலினோர் வணங்கி வாழ்த்துறப்**
**பூசமு மீனமும் பொலிய நல்கினாள்**
**மாசறு கேகயன் மாது மைந்தனை.**

(இ - ள்.) ஆசைஉம் - எல்லாத்திக்குக்களிலும், விசும்புஉம்-ஆகாயத்திலும், நின்று - வந்து நின்று, அமரர் - தேவர்கள், ஆர்த்து எழ - ஆரவாரித்துப் பொங்கவும், வாசவன் முதலினோர் - இந்திரன் முதலான தலைமைத்தேவர்கள், வணங்கி-தொழுது, வாழ்த்துஉற-வாழ்த்துதலைப் பொருந்தவும், பூசம்உம் மீனம்உம் பொலிய-புஷ்யநட்சத்திரமும் மீனலக்கினமும் விளங்கவும், மாசு அறு கேகயன் மாது-குற்றமில்லாத கேகயராசனது மகளான கைகேயி, மைந்தனை நல்கினாள் - புத்திரனைப்பெற்றாள்; (எ - று.)

வாசவன் - அஷ்டவசுக்களுக்குத் தலைவன்: அல்லது, மிக்க செல்வமுள்ளவன் என்பது பற்றியபெயர். வாசவன் முதலினராகிய அமரர்கள் வாழ்த்துற, எட்டுத்திக்குக்களிலுள்ளாரும் மற்றும் விசும்பிலுள்ளாரும் வந்து நின்று ஆர்த்தெழ, கைகேயி பூசத்தில் மீனலக்கினத்தில் ஒரு புதல்வனைப் பெற்றனள்; இவனே பரதனெனப்படுவான்; இவன், சுதரிசனமென்றசக்கராயுதத்தின் அம்சமாவன். பூசம் - புஷ்யம் என்பதன் திரிபு. (க0ரு)

**க0சு.—சுமித்திரை யொருபுதல்வனைப் பெறுதல்.**

**தளையவிழ் தருவுடைச் சயில கோபனுங்**
**கிளையுமந் தரமிசைக் கெழுமி [1] யார்த்தெழ**
**வளைபுகு மரவினோ டலவன் வாழ்வுற**
**விளையவற் பயந்தன ளிளைய மென்கொடி.**

(இ - ள்.) தளை அவிழ் தரு உடை - (அரும்புகள்) முறுக்குவிரிந்துமலர்கின்ற (கற்பக) விருட்சங்களையுடைய, சயிலகோபன்உம் - மலைகளைக்கோபித்துச்சிறகறுத்தவனான இந்திரனும், கிளைஉம் - (அவனது) சுற்றமான மற்

றைத்தேவர்களும், அந்தரம்மிசை கெழுமி-ஆகாயத்திலே நெருங்கி, ஆர்த்து எழ - ஆரவாரித்துக்குதிக்கவும்,—அளை புகும் அரவினோடு - புற்றிலே நுழையுந்தன்மையுள்ள பாம்புடனே [ஆயிலியநட்சத்திரத்துடனே], அலவன்-நண்டும் [கர்க்கடகலக்கினமும்], வாழ்வு உற-வாழ்வையடையவும், இளைய மென்கொடி-(பட்டமகிஷியரில்)இளையவளானமென்மையான பூங்கொடிபோன்ற சுமித்திரை, இளையவன் பயந்தனள் - இளையபெருமாளைப்பெற்றாள்;(எ-று.)

சுமித்திராதேவி ஆயிலியநட்சத்திரத்தில் கடகலக்கினத்தில் ஒருபுதல்வனைப்பெற்றனள்; இவன் லக்ஷ்மணனென்று பெயர்பெறுவன். இவன் ஆதிசேஷன் அமிசமாதலால், ஆதிசேஷனை அதிதேவதையாகக்கொண்டுள்ள ஆயிலியம் இவன் உதித்தற்குப் பொருத்தமான நட்சத்திரமாம். வாழ்வுற - நன்னிலையிலேநிற்க எனினுமாம். முற்காலத்தில் மலைகள் சிறகுடையனவாயிருந்து கண்டவிடமெங்கும் திரிந்து உலகத்தைப் பாழாக்கிவருகையில் உலகத்தவர் முறையிட, இந்திரன் மலைகளின்மீது சினங்கொண்டு அவற்றின் சிறகுகளை வெட்டி வீழ்த்தியதனால், இந்திரனை 'சயிலகோபன்' என்றார். சயிலம் - மைலம்: கல்மயமான தென்பதுபற்றி, மலைக்குக் காரணப்பெயர். கிளை - உவமையாகுபெயர். தசரதன் சுதையைக்கொடுக்கையிலும் கைகேயிக்குக் கொடுத்தபின்பே சுமித்திரைக்குக் கொடுத்ததாக வருவதாலும், இங்கும் 'இளையமென்கொடி' என்பதனாலும், சுமித்திராதேவியைப் பட்டமகிஷியர்மூவரில் இளையவளென்று கம்பர் கருதுகின்றனரோ என்று ஐயம் நிகழ்கின்றது. பி -ம்:—[1] ஆர்ப்புற. (கoசு)

கoஎ.—சுமித்திரை மற்றுமோர் புதல்வனைப் பெறுதல்.

படங்கிளர் பஃறலைப் பாந்த ளேந்துபார்
நடங்கிளர் தரமறை நவில நாடக
மடங்கலு மகமுமே வாழ்வி னோங்கிட
விடங்கிளர் விழியினாள் மீட்டு மீன்றனள்.

(இ - ள்.) படம் கிளர் - படம் விளங்குகின்ற, பல் தலை - அனேகந் தலைகளையுடைய, பாந்தள் - ஆதிசேஷன், ஏந்து - தரிக்கின்ற, பார் - பூமிதேவியானவள், நடம் கிளர்தர - ஆனந்தக்கூத்தாடி விளங்கவும், மறை - வேதங்கள், நாடகம் நவில - நடனஞ்செய்யவும்,—மடங்கல்உம் - சிங்கராசியும், மகம்உம் - மகநட்சத்திரமும், வாழ்வின் ஓங்கிட - (உயர்ந்து) வாழ்வு பெறவும், விடம் கிளர் விழியினள் - விஷம்போலக் கருமையாய் விளங்குகின்ற கண்களையுடைய அச்சுமித்திரை, மீட்டும் ஈன்றனள் - மறுபடியும் (ஒருபுத்திரனைப்) பெற்றாள்; (எ - று.)

சுமித்திரை மகநட்சத்திரத்திற் சிங்கராசியில் மீண்டும் ஒருபுதல்வனைப் பெற்றனளென்க. இவன், சத்துருக்கின னெனப்படுவன்; பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கத்தின் அமிசமாவன். பல் + தலை = பஃறலை: "குறில்வழி ல ள தவ்வணையி னாய்த,மாகவும்பெறூஉம் அல்வழியானே" என்பது விதி. நாடகம் - கூத்து என்ற பொருளில்வந்தது. "பின்பு, சுமித்திரை விஷ்ணுவின்து நாலிலோர்பாகமும் எட்டிலோர்பாகமுமாகிய லக்ஷ்மணன் சத்ருக்நன் என்ற

இரண்டுபுதல்வர்களைப் பெற்றனள்,'' "சுமித்திரையின் புத்திரர்களாகிய லக்ஷ்மணனும் சத்ருக்நனும் ஆஸ்லேஷநட்சத்திரத்தில் மத்யாஹ்நத்தில் கடகலக்நத்திற் பிறந்தனர்'' என்று வால்மீகத்திற் கூறியுள்ளது. பாயசத்தைக் கௌசலைக்குப்பின் ஒருமுறை பெற்றனளாயினும், சுமித்ராதேவி, கைகேயிக்குப்பின்னும் இன்னொருமுறை பாயசம் பெற்றதுகாரணமாக இருவரைப்பெறுவதால், சற்று அருமைப்பட்டுக் கைகேயி புதல்வனைப் பெற்றபின்பே புதல்வரைப் பெறலாயின ளென்று ஸ்ரீ வால்மீகிமுனிவர் கூறியதற்குக் காரணங் காண்க.

ஜநகராசன் முதலிய ஜ்ஞானவான்களிருக்கஅவர்கள்வம்சத்திலவதரிக்காமல் இக்ஷ்வாகுவம்சத்தில் திருமால் அவதரித்தற்குக்காரணம் என்னவெனில்,—"வைஷ்ணவோநঃ குலேஜாதঃ ஸகஸ் ஸந்தாரயிஷ்யதி [வைஷ்ணவனுயிருப்பானொருவன் பிறந்தால், அவன் அக்குலத்திற் பிறந்தாரனைவரையும் ஈடேறச்செய்வான்]'' என்பது சாஸ்திரங்களின் கொள்கையாதலாலும், வெகுகாலம் ஸ்ரீமஹாவிஷ்ணுவை உபாஸித்து அவனுடையமூர்த்திவிசேஷமாகிய ஸ்ரீரங்கநாதனை இக்ஷ்வாகுமன்னவன் பெற அம்மன்னவன் தொடங்கித் தசரதமன்னவன்வரையிலுமுள்ள அரசர்கள் யாவரும் அந்த ஸ்ரீரங்கநாதனையாராதித்துவந்த வைஷ்ணவோத்தமர்களாகையாலும்,அந்தவம்சத்திற் பகவானுக்குஉள்ள உவப்பினுலென்பர். திருமால் இராமன்முதலிய நான்கு திருவுருவத்துடனே திருவவதரித்தது—இராவணனையும் இராவணன் புதல்வனை இந்திரசித்தையும் லவணசுரனையும் கந்தர்வர்களையும் கொல்லுதற்காக என்று ஒருசாரார். பித்ருவசனபரிபாலனம் முதலிய சாமானிய தருமமும் தலைவனுக்கு அடியவன் குற்றேவல் செய்கையாகிற விசேஷதர்மமும், தான் மேல்வீழ்ந்து சேஷி [தலைவன்] யின் குற்றேவலில் மூளாமல் சேஷி உகந்தவடிமையைச் செய்தலாகிற விசேஷதரதருமமும், பகவானது அடிமையைக்காட்டிலும் அவனது அடியார்கட்குக் குற்றேவல் செய்கையாகிற் விசேஷதமதருமமுமாகிற நால்வகைத்தருமங்களையும் தமதுஒழுக்கத்தினுற் காட்டி உலகத்தார்க்கு நன்ஞானத்தை யுண்டாக்குவதற்காக வென்பர், பெரியோர். (க0எ)

க0அ.—அரம்பையர் முதலியோர் கொண்ட மகிழ்ச்சி.

ஆடின ரரம்பைய ரமுத வேழிசை
பாடினர் கின்னரர் துவைத்த பல்லியம்
வீடின ரரக்கரென் றுவக்கும் விம்மலா
லோடின [1]ருலவின ரும்பர் முற்றுமே.

(இ - ள்.) (அப்போது), அரக்கர் வீடினர் என்று உவக்கும் விம்மலால்- 'அரக்கர்கள் அழிந்தார்கள்' என்று மகிழ்கிற பூரிப்பினுல், அரம்பையர் - தேவமாதர்கள், ஆடினர் - (வானத்திற்) கூத்தாடினுர்கள்; கின்னரர் - கின்னரர்கள், அமுதம் ஏழ் இசை - அமிர்தம்போலினிய சப்தசுரங்களை, பாடினர் - பாடினுர்கள்; பல்இயம் - அனேக வாத்தியங்கள், துவைத்த - ஒலித்

தன; உம்பர் - தேவர்கள், முற்றும் ஓடினர் உலவினர் - எங்கும் ஓடியுலாவினார்கள். (எ - று.)

இது, மேலுலகத்தவர் மகிழ்ந்தமையைத் தெரிவிக்கும். பல்லியம் துவைத்த - அனேகவாச்சியங்களை முழக்கினரென்றவாறு. ஏழிசை - குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரம் என்பன: இவை-வடமொழியில், ஷட்ஜம் ரிஷபம் காந்தாரம் மத்திமம் பஞ்சமம் தைவதம் நிஷாதம் எனப்படும். உம்பர்முற்றும் - தேவர்களெல்லாரு மெனினுமாம். பி - ம்:—[1]உலாவினர். (௧௦௮)

**௧௦௯.—பாங்கிமார் புத்திரர்பிறந்ததை அரசனுக்குத் தெரிவிக்க, சோதிடர் நாள்முதலியவை நன்றெனல்.**

ஓடின ரரசன்மாட் டுவகை [1]கூறிநின்
றாடினர் சிலதிய ரந்த ணாளர்கள்
கூடினர் நாளொடு கோளு நின்றமை
நாடின [2]ருலகினி நவையின் றென்றனர்.

(இ - ள்.) சிலதியர் - (சக்கரவர்த்தியினது தேவியரின்) தோழிமார்கள், அரசன்மாட்டு - தசரதனிடத்து, ஓடினர் - (உடனே) விரைந்துசென்று, உவகைகூறி - (புத்திரர்பிறந்த) சந்தோஷசமாசாரத்தைச் சொல்லி, நின்று ஆடினர் - ஆனந்தக்கூத்தாடிநின்றார்கள்; அந்தணாளர்கள் (சோதிடம்வல்ல) பிராமணர்கள், கூடினர் - வந்து சேர்ந்து, நாளொடு - (திருவவதார) நட்சத்திரங்களும், கோள்உம் - (தத்காலத்துக்) கிரகங்களும், நின்றமை - நின்ற நிலைமைகளை, நாடினர் - ஆராய்ந்துபார்த்து, இனி உலகு நவை இன்று என்றனர் - 'இனிமேல் உலகம் தீமையில்லாததாம்' என்று சொன்னார்கள்.

தேவிமார்களின்பாங்கியர் அரசனிடத்துச்சென்று புதல்வர் பிறந்த செய்தி தெரிவிக்க, அப்போது அரசன் பணியாளரையேவிச் சோதிடம் வல்லாரைவருவிக்க, வந்த அந்த அந்தணர்கள் பிறந்தநாள் தத்காலகிரகம் முதலியவற்றை யாராய்ந்து 'இப்புதல்வர்களால் உலகத்துக்குநேர்ந்துள்ள வருத்தம்யாவும் நீங்கும்' என்று புதல்வர்பிறந்த வேளையைப்பாராட்டிக்கூறினரென்க. பி - ம்:—[1]கூர. [2]உலகினினவை, உலகிடைநவை. (௧௦௯)

**௧௧௰.—இராமபிரானது ஜாதகம்.**

†மேடமா மதிதிதி நவமி மீன்கழை
நீடுறு மாலைக்கர்க் கடக நீதிசேர்
ஓடைமா களிறனு னுதய ராசிகோள்
நாடி[1]னே காதசர் நால்வ ருச்சரே.

இதுவும் அடுத்தகவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) நீதி சேர் - நியாயம் பொருந்திய, ஓடை மா களிறு அனான் - நெற்றிப்பட்டத்தையுடைய பெரிய ஆண்யானையைப்போன்ற (காம்பீரியத்தையுடைய) ஸ்ரீராமபிரானது, உதயராசி - திருவவதாரகாலத்தில், மதி -

†இதுவும்அடுத்த கவியும் சிலபிரதிகளிலில்லை.

மாசம்; மேடம்ஆம் - மேஷமாகும்; திதி - திதியானது, நவமி - நவமியென்ப தாம்; மீன் - நட்சத்திரம், கழை - புனர்பூசமாம்; நீடுறு மாலை - சிறந்த லக்கினமும், கர்க்கடகம் - கடகமாம்; கோள் நாடின் - கிரகஸம்பத்தியை ஆராயுமிடத்து, ஏகாதசர் நால்வர் உச்சர் - பதினோராமிடங்களுக்கு உடையவர்களாகிய நான்குபேர் உச்சஸ்தானத்தவர்; (எ - று.)

மேஷம் - சித்திரைமாதம். பிரதமை முதலிய பதினைந்தும் திதியெனப்படும். நவமியெனப் பொதுப்படக் கூறினரேனும், அது சுக்கிலபட்சத்ததென்பதை யறிக. ஸ்வபாநு வருஷத்து மேஷமாஸத்துப் பூர்வபட்சத்து நவமிதிதியில் புனர்வசுநட்சத்திரத்தின் நான்காம்பாதத்தில் புதன்கிழமையில் கடகலக்கினத்தில் ஸ்ரீராமஜநந மென்க. கடகலக்நமென்றதனால், பிறந்தவேளை பகற்பொழுதில் பதினன்குநாழிகைக்குமே லிருக்கலாமென்பது பெறப்படும். ஏகாதசர் - பதினோராமிடத்திற்கு உரியவர்; இங்கு இராமபிரான் பிறந்த இலக்கினஸ்தானமாகிய கடகத்திற்குப் பதினோராமிடமாகிய விருஷபத்திற்கு உரிய சுக்கிரனும், அவ்விடபத்திற்குப் பதினோராமிடமாகிய மீனத்திற்கு உரிய வியாழனும், அம்மீனத்திற்குப் பதினோராமிடமாகிய மகரத்திற்குரிய சனியும், அம்மகரத்திற்குப் பதினோராமிடமாகியவிருச்சிகத்திற்கு உரிய செவ்வாயும் என்ற இவர்.மேடமாமதி என்றதனால்,சூரியனுச்சனென்பது பெறப்படும். ஆகவே, ஸ்ரீவான்மீகிராமாயணம் முதலியவற்றிற் கூறியவாறு ஐவருச்சரென்பது,பெறப்பட்டது.சூரியனுக்குச் சிங்கமும்,சந்திரனுக்குக் கடகமும்,செவ்வாய்க்கு மேஷவிருச்சிகங்களும்,புதனுக்கு மிதுன கன்னிகைகளும், வியாழனுக்குத் தனுசு மீனங்களும்,சுக்கிரனுக்கு விருஷப துலாக்களும், சனிக்கு மகரகும்பங்களும் உரியஸ்தானங்களாமென்பதும், மேஷம் விருஷபம் மகரம் கன்னி கடகம் மீனம் துலாம் என்பன, சூரியன் முதலிய எழுகோள்கட்கும் முறையே உச்சஸ்தானங்களாமென்பதும் சோதிட நூல்களாற் காணத்தக்கன. இந்தஜாதகத்தை இங்ஙனம் அறிக:—

| | | | |
|---|---|---|---|
| சுக் | சூரி,புத | | கேது |
| | இராசி சக்கரம் | | ல<br>குரு-சந் |
| செவ் | | | |
| ராகு | | சனி | |

ஐந்து கிரகங்கள் உச்சத்திருந்தால் ஜாதகமுடையவன் லோகநாயகனென்பதை "உள்ளதொருகிரகமுச்சமேவிற் கிராமணியா முபயமுச்சம் பெறிற் பலவூர்க்கிராமணியுமாவான்,தெள்ளியதோரொரு மூன்று கிரகமுச்சமானாற் கோன்மன்னவனுகிச் சிறிதவனிபுரப்பன், நள்ளியதோரீரண்டு கிரக

முச்சமானனவிலொருமண்டலந் தனக்கு நாயகனேயாவன், புள்ளி செறி யோரைந்துகிரகமுச்சமாஞற் பூலோகநாயகனுமெனப்பலன்கள் புகல்வார்" என்றது முதலான சோதிடநூல்மேற்கோள் கொண்டறிக. மேடமாசம் நவமிதிதி புனர்வசுநட்சத்திரம் அதின்நான்காம் பாதம் குருசந்திரயோகம் லக்கினகுருசந்திரயோகம் ரவிபுதயோகம் சூரியன்முதலியோர் தனித்தனி யுச்சமாயிருத்தல் கடகலக்கினம் முதலியவற்றின் விசேஷபலன்களை விரித்துக் கூறிற் பெருகுமாதலால் விடப்பட்டன. சோதிடம்வல்லார்வாய்க் கேட்டுணர்க. பி-ம்:—[1] ஏகாதச நால்வர். (கக0)

**கககூ.—சோதிடர் மற்றைப்புதல்வருக்கும் ஜாதகமெழுதித்தருதல்.**

என்றனர் சாதக [1]மீசற் கேனையர்
தன்றனக் குந்தகு முறையிற் றூன்றெரிந்
தொன்றிய தமனியத் தெழுதி யோதினர்
வன்றிறற் சுரர்குரு வாழ்த்தெ டுப்பவே.

(இ-ள்.) ஈசற்கு ஸ்ரீராமனுக்கு சாதகம்-ஜாதகத்தை, என்றனர்-என்று சொல்லி எழுதித்தந்த சோதிடர்கள்,—ஏனையர் தன் தனக்கும் - மற்றைப்பரதன் முதலிய புதல்வர்க்கும், தகும் முறையில் தெரிந்து - ஆராயவேண்டிய முறைப்படியே (எல்லாவற்றையும்) ஆராய்ந்து, ஒன்றிய தமனியத்து எழுதி-பொருந்திய பொன்தகட்டிலே யெழுதி, வல் திறல் சுரர் குரு வாழ்த்து எடுப்ப - மிக்கசாமர்த்தியத்தையுடைய தேவகுருவாகிய பிருகஸ்பதியும் வாழ்த்துக்கூற, ஓதினர்-படித்தார்கள்; (எ-று.)

அச்சோதிடர்களின் ஆராய்ச்சிவன்மையைக் கண்டு தேவகுருவும் வாழ்த்தலாயினனென்க. ஏனையர் தன்தனக்கு— ஒருமைப்பன்மை மயக்கம்; 'தம்தமக்கு' என்று பாடமோதுவாருமுளர். பி-ம்:—[1] இறைவற்கு. (ககக)

**ககஉ.—அரசன் புனல்படிந்து தானஞ்செய்துவிட்டுக் குழந்தைகளைப் பார்த்தல்.**

மாமுனி தன்னொடு மன்னர் மன்னவ
[1]னேமுறப் புனல்படீஇ [2]வித்தொ [3]டின்பொரு
டாமுற வழங்கிவெண் சங்க மார்ப்புறக்
கோமகார் திருமுகங் குறுகி நோக்கினன்.

(இ-ள்.) (குமாரர்கள்தோன்றிய செய்தி கேட்டவுடனே), மன்னர் மன்னவன்-தசரதசக்கரவர்த்தி,—ஏம் உற புனல் படீஇ-இன்பம்மிக (ச் சரயு நதியின்) தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து, வித்தொடு இன் பொருள் உற வழங்கி - விதைகளையும் இனியசெல்வத்தையும்மிகுதியாகத்தானஞ்செய்து, வெண் சங்கம் ஆர்ப்பு உற மாமுனிதன்னொடு குறுகி - வெண்மையான மங்கலச்சங்கங்கள் முழக்கத்தைச் செய்ய வசிட்டமுனிவனுடனேயருகிற் போய், கோமகார் திருமுகம் நோக்கினன் - சிறந்த குமாரர்களது அழகிய முகத்தைப் பார்த்தான்; (எ-று.)

பிள்ளை பிறந்தவுடனே தந்தை மகிழ்ச்சியாற்குதித்து நீராடுகிற நீர் தெறிக்கின்ற திவலைகளாற் பிதிருக்கள் தாகந் தணிந்து மகிழ்கின்றன ரென்பது, நூற்றுணிபு. வித்து வழங்குதல் - 'பீஜதானம்' எனப்படும்; இது, சாதகருமங்கூறிற்று. பி-ம்:—[1] ஏமுறு. [2] இதத்தொடு. [3] எண்பொருள். (கக உ)

ககங.—ககரு.—இதுமுதல் மூன்றுகவிகள்-குளகம்; தசரதன் தனக்குப் புத்திரர் பிறந்த மகிழ்ச்சியினாற் செய்த தியாகங்களைக் கூறும்.

ககங. இறைதவிர்ந் திடுக [1] பா ரியாண்டொ ரேழ்நிதி
நிறைதரு சாலைதாழ் நீக்கி யாவையு
முறைகெட வறியவர் முகந்து கொள்கென
வறைபறை யென்றன னரசர் கோமகன்.

ககச. படையொழிந் திடுகதம் பதிக ளேயினி
விடைபெறு குகமுடி வேந்தர் வேதியர்
நடையுறு நியமமு நவையின் றாகுக
[2] கடவுளர் விழாவொடு [3] களிக்க வெங்கணும்.

ககரு. ஆலயம் புதுக்குக வந்த ணாளர்தஞ்
சாலையுஞ் சதுக்கமுஞ் சமைக்க சந்தியுங்
காலையு [4] மாலையுங் கடவு ளர்க்கணி
மாலையுந் தீபமும் வழங்கு கென்றனன்.

(இ - ள்.) (ககச) படை ஒழிந்திடுக-போர்த்தொழில் (எங்கும்) ஒழிவதாக; முடி வேந்தர் இனி தம் பதிகள்ஏ விடை பெறுகுக - (சிறைப்பட்ட) கிரீடமணிந்த அரசர்கள் இனிமேல் தந்தமது தேசங்கட்கே விடைபெற்றுச் செல்லுக; வேதியர் நடை உறு நியமம்உம் நவை இன்று ஆகுக - அந்தணர்களால் (குழந்தைகட்கு அரிஷ்டம் ஒன்றும் நிகழாவண்ணம்) நடத்தப்படும் நியமங்களும் குறைவின்றி நிகழ்க; எங்கண்உம்-எவ்விடத்தும், கடவுளர்-(ஆலயங்களிற் பிரதிட்டைசெய்துவைக்கப்பட்டுள்ள) தெய்வங்கள், விழாவொடு களிக்க - விசேடமாகச்செய்யும் உத்ஸவங்களால் மகிழ்வடையட்டும். (ககரு) ஆலயம் புதுக்குக - தேவாலயங்களை புதுப்பிக்க; அந்தணாளர்தம் சாலைஉம் - பிராமணர்களது அக்கிரகாரங்களையும், சதுக்கம்உம் சந்திஉம் - நாற்றெருக்கூடுமிடங்களையும் முத்தெருக்கூடுமிடங்களையும், சமைக்க - ஏற்படுத்துக; காலைஉம் மாலைஉம் - காலைவேளையிலும் மாலைவேளையிலும், கடவுளர்க்கு - (தேவாலயங்களிலுள்ள) தெய்வங்கட்கு, அணி மாலைஉம் தீபம்உம் - அழகிய மாலைகளையும் திருவிளக்குக்களையும், வழங்குக - சமர்ப்பிக்க,' என்றனன் - என்று கட்டளையிட்டவனை, (ககங)அரசர் கோமகன் - தசரதசக்கரவர்த்தி,—'பார் - இராச்சியம் முழுதும், யாண்டு ஓர் ஏழ் இறை தவிர்ந்திடுக - ஒரு ஏழுவருஷகாலமளவும் வரி நீங்குவதாக; நிதி நிறைதரு சாலை தாழ் நீக்கி யாவைஉம் வறியவர் முறை கெட முகந்து கொள்க - திரவியம் நிறைந்துள்ள பொக்கசங்களில் கதவின்தாழ்களைத் திறந்து கல

லாப்பொருள்களையும் ஏழைகள் முறைமையில்லாமல் [அவரவர் வேண்டிய படி] கவர்ந்து கொள்வாராக,' என - என்று, பறை அறை(க)என்றனன் - (வள்ளுவர்) பறையறைந்திடுக என்றுங் கட்டளையிட்டான்; (எ - று.)

சிறைப்பட்ட அரசரை விடுவிக்குமாறும், அந்தணர்கள் விரதங்களைக் குறைவில்லாமல் நடத்தவும், ஆலயங்களை ஜீர்ணோத்தாரணஞ்செய்து ஆங்காங்குள்ள தெய்வங்கட்கு நாடோறும் இருகாலமும் தீபங்களும் மாலைகளும் சமர்ப்பிக்கவும், விசேடஉத்ஸவங்கள்புரியவும் அந்தணர்கட்கு அக்கிரகாரங்கள் கட்டித் தானஞ்செய்யவும், முச்சந்தி நாற்சந்திகளை ஆங்காங்குத் தக்கவிடங்களில் ஏற்படுத்தவும் கட்டளையிட்டு, தசரதன், 'ஏழுவருஷம் வரி தவிர்க'என்றும்,'பொக்கிஷசாலையைத்திறந்துவிட்டு வறிஞர் ஆங்குள்ள செல்வத்தையெல்லாம் முகந்துகொள்க' என்றும் வள்ளுவர் பறையறைந்து செய்திதெரிவிக்குமாறும் கட்டளையிட்டனனென்பதாம் ஒருபிரதியில் "இறைதவிர்ந்திடுக" என்ற பாடல் "ஆலயம் புதுக்குக" என்றுதொடங்கும் பாடலின்பின் காணப்படுகிறது. ககங.—ஏழுபிறப்புத்தீவினையும் ஒழியும் பொருட்டு 'ஏழியாண்டுஇறைதவிர்க' என்றான். அறை - அறைகஎன்பதன் விகாரம். பி-ம்:—[1]யாண்டேழொடேழ். ககச.—படை-படுக்கும் [அழிக்கும்] தொழில்; அதாவது - போர். தம் பதிகள் விடைபெறுக வேந்தர் என்பதற்கு - (பகைவராயிருந்ததனாற் கவரப்பட்ட) தமதுநாடுகளை மீண்டும் அவர்களேஆட்சிபுரியுமாறு விடப்படட்டும்என்னும் உரைக்கலாம். பி - ம்:—[2]புடைகெழு. [3]பொலிக. ககரு.—புதுக்குதல் - ஜீர்ணோத்தாரணஞ்செய்தல். ஆலயம் - ஆலயமென்பதன்போலி. சதுக்கம்=சதுஷ்கம். சந்தி - முச்சந்தி: ஐஞ்சந்தியும்கொள்ளலாம், திருமுருகாற்றுப்படையில் "சதுக்கமுஞ்சந்தியும்" என்பதற்கு நச்சினார்க்கினியர் உரைத்திருத்தல்காண்க.பி-ம்:—[4]அருள்புரிகடவுளோர். (ககங - ககசு)

ககள.—வள்ளுவர் பறையறைந்து செய்திதெரிவிக்க, நகரத்துமாந்தர் மகிழ்தல்.

என்புழி வள்ளுவ ரியானை மீமிசை
[1]நன்பறை யறைந்தனர் நகர மாந்தரு
மின்பிறழ் நுசுப்பினர் தாமும் விம்மலா
லின்பமென் [2]றளக்கரு மளக்க ரெய்தினார்.

(இ - ள்.) என்புழி - என்று (அரசன்) கட்டளையிட்டபொழுது, வள்ளுவர் - வள்ளுவர்கள், யானைமீமிசை - யானைகளின்மேலேறிக்கொண்டு, நல்பறை அறைந்தனர் - நல்ல பறைகளை முழக்கிச்செய்திதெரிவித்தார்கள்; நகரம் மாந்தர்உம் மின் பிறழ் நுசுப்பினர்தாம்உம் - பட்டணத்துஆண்மக்களும் மின்னலையொத்துவிளங்குகின்ற இடையையுடைய மகளிர்களும், விம்மலால் - மகிழ்ச்சியினால், இன்பம் என்ற அளக்க அரும் அளக்கர் எய்தினார் - ஆனந்தமென்று சொல்லப்பட்ட அளவிடுதற்குஅருமையான கடலில் மூழ்கினார்கள்; (எ - று.)

வள்ளுவர் - முரசறைவோர்; சாதிப்பெயருமாம். மின்பிறழ்நுசுப்பினார் எனவருதலால், மாந்தர் ஆடவரை யுணர்த்திற்று. என்றளக்கரும் - இரண்டு தொகுத்தல்விகாரம். பி - ம்:—[1]வன்பறையறைதர. [2]அளப்பரும். (ககசு)

கக௭.—நகரமாந்தர்களின் களிப்புச்செயல்.

ஆர்த்தனர் முறைமுறை யன்பி னானுடல்
போர்த்தன புளகம்வேர் [1]பொடித்த நீணிதி
தூர்த்தன ரெதிரெதிர் சொல்லி னார்க்கெலாந்
தீர்த்தனென் றறிந்ததோ வவர்தஞ் சிந்தையே.

(இ - ள்.)(சக்கரவர்த்திக்குப் புதல்வர்பிறந்தசெய்தியுணர்ந்த நகரத்துச் சனங்களெல்லோரும்), முறைமுறை - வரிசைவரிசையாக, அன்பினான்- அன்பின்மிகுதியால், ஆர்த்தனர் - ஆரவாரித்தார்கள்; உடல் - அவர்களுடம்பை, புளகம் போர்த்தன - புளகங்கள் மறைத்தன; வேர் பொடித்த - வியர்வைநீர்த்துளிகள் அரும்பின; எதிர் எதிர்-எதிரிலேஎதிரிலே (வந்து), சொல்லினார்க்கு எலாம் - (இச்சுபசெய்தியைச்) சொன்னவர்களுக்கெல்லாம், நீள் நிதி தூர்த்தனர் - மிகுந்ததிரவியத்தைச் சொரிந்தார்கள்; (இங்ஙனஞ்செய்தற்குக்காரணம்), அவர்தம் சிந்தை - அவர்களது மனம், தீர்த்தன் என்று அறிந்ததுஓ - பரிசுத்தனான திருமால் (தானே இங்ஙனம் அவதரித்தான்) என்றுஅறிந்துகொண்டமைபோலும்; (எ - று.)

சாமானியமாகஉண்டாகும்மகிழ்ச்சிபோலன்றி அப்போது அயோத்திமாநகரத்துச்சனங்கள் பெருமகிழ்ச்சியடைந்தனர்; அங்ஙனம் அவர்கள் மனம் மகிழக் காரணம் திருமாலே திருவவதரித்தா னென்பதை அவர்கள் மனம் அறிந்ததுபோலுமெனக் கவி குறிக்கின்றன ரென்க. ஆர்த்தனரென்றமையால் வாக்கும், அன்பினானென்றமையால் மனமும், உடல்புளகம் போர்த்தனவேர்பொடித்த வென்றமையால் காயமும்,ஆகத் திரிகரணங்கள் மகிழ்ச்சியடைந்தது கூறப்பட்டமை காண்க.வேர்=வியர்வை. ஓ-ஐயவினா, அநுமானத்தில் வந்தது. பி - ம்:—[1]பொழிந்த. (கக௭)

ககஅ.—இதுவும் அது.

பண்ணையு மாயமுந் திரளும் பாங்கருங்
கண்ணகன் றிருநகர் களிப்புக் கைமிகுந்
தெண்ணெயுங் களபமு மிழுது நானமுஞ்
சுண்ணமுந் [1]தூவின வீதி தோறுமே.

(இ - ள்.) கண் அகல் திரு நகர் - இடம்பரந்த அழகிய அயோத்தியா பட்டணத்திலே, பண்ணைஉம் - மகளிர்கூட்டமும், ஆயம்உம் - தோழிமார் கூட்டமும், திரள்உம் - ஆடவர்கூட்டமும், பாங்கர்உம்-தோழர்கூட்டமும், களிப்பு கைம்மிகுந்து - மகிழ்ச்சி எல்லைகடக்கப்பெற்று, எண்ணெய்உம் - எண்ணெய்யையும், களபம்உம் - கலவைச்சந்தனக்குழம்பையும், இழுதுஉம் - நெய்யையும், நானம்உம் - கஸ்தூரிப்புழுகையும், சுண்ணம்உம் - வாசனைப்பொடியையும், வீதிதோறும் - தெருக்களிலெல்லாம், தூவின-மிகச்சிந்தின.

"கண்ணன்கேசவன் நம்பிபிறந்தினி, லெண்ணெய்சுண்ண மெதி ரெதிர்தூவிடக், கண்ணன்முற்றங்கலந்தளறாயிற்றே" என்றது, இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. அஃறிணையும் உயர்திணையும்விரவி, மிகுதியினால் 'தூவின' என்னும் அஃறிணைமுடிபேற்றது. பி - ம்:—[1]தூவினர். (ககஅ)

ககக.—வசிட்டன் நாமகரணஞ் செய்யநினைத்தல்.

இத்தகை மாநக ரீரறு நாளுஞ்
சித்த முறுங்களி யோடு சிறந்தே
தத்தமை யொன்று [1]முணர்ந்தில [2]தாவா
மெய்த்தவ னும்ம் [3]விதிப்ப [4]மதித்தான்.

(இ - ள்.) இ தகை - இவ்வாறு, மா நகர் - பெரிய அப்பட்டணத்துச சனங்கள், ஈர் அறு நாளும் - பன்னிரண்டுநாளளவும், சித்தம் உறும் களி யோடு - மனத்தில் மிக்க ஆனந்தத்துடனே, சிறந்து - சிறப்புற்று, தத்தமை ஒன்றும் உணர்ந்தில-(பரவசப்பட்டதனால்)தங்கள் தங்களைச் சிறிதும் அறிந் தனவில்லை; (பிறகுபதின்மூன்றாம்நாளில்), தாவா மெய் தவன் - அழியாத உண்மையான தவத்தையுடைய வசிட்டன், நாமம் விதிப்ப - (அக்குமாரா களுக்குப்) பேரிடுதற்கு, மதித்தான் - ஆலோசித்தான்; எ - று.)

பிறந்த குமாரர்கட்குப்பதின்மூன்றாநாளிலேநாமகரணஞ்செய்யக்கருதி ஆலோசனை உண்டாயிற்றென்க. க்ஷத்திரியர்க்குப் பன்னிரண்டுநாள் சூத காசௌசமென்பதும், அதுகழிந்த பதின்மூன்றாநாளே நாமகரணஞ்செய்ய வேண்டுமென்பதும் விதி. பி - ம்:—[1]உணர்ந்திலர். [2]தாழ்வின், தாவின். [3]விதிக்க. [4]வகுத்தான். (ககக)

கஉ0.—முறையே புதல்வர்நால்வர்க்கும் வசிட்டன் நாமகரணஞ் செய்தல். இதுமுதல் நான்குகவிகளாற் கூறப்படுகின்றது.

கரா [1]மலை யத்தளர் கைக்கரி யெய்த்தே
யராவணை யிற்றுயில் வோயென வந்நாள்
விராவி யளித்தருண் மெய்ப்பொரு ளுக்கே
யிராம னெனப்பெய ரீந்தன னன்றே.

(இ - ள்) கரா மலைய தளர் கை கரி-முதலைபோர்செய்தலால் தளர்ச்சி யடைந்த துதிக்கையையுடைய யானையானது, எய்த்து - (கடவுளின்தன் மையை) அறிந்து, அரா அணையில் துயில்வோய் என - 'ஆதிசேடனாகிய சய னத்திற் பள்ளிகொண்டருள்கின்ற ஆதிமூலமே!'என்று விளிக்க, அ நாள் - அப்பொழுதே, விராவி - (அங்கு) வந்து, அளித்தருள் - (அதனைக்) காத்தரு ளின, மெய் பொருளுக்கு - உண்மைப்பொருளாகிய ஸ்ரீமந் நாராயணனுக்கு, இராமன் என பெயர் ஈந்தனன் - இராமனென்று திருநாமஞ் சாத்தினான், (வசிட்டன்); (எ - று.)

கஜேந்திராழ்வானைக் காப்பாற்றின வரலாற்றை யெடுத்துக்கூறியது. உயர்திணைப்பொருளோடு அஃறிணைப்பொருளோடுவாசியற அடிமைப்பட்ட

பொருள்களைப் பாதுகாக்கின்ற கடவுளின் கருணைமிகுதியை விளக்குதற்கு. கரியென்னும் பெயருக்கே துதிக்கையுடையதென்று பொருளாதலால், கை யென்று அவசியமில்லாத அடைமொழிகொடுத்தது, முதலையின் வாய்ப் பட்ட அவ்யானையின் கைம்மாத்திரம் வெளித்தெரிய மற்றையுறுப்புக்கள் நீர்க்குள் அமிழ்ந்தன என்ற கருத்தைப் புலப்படுத்துதற்பொருட்டு. தளர்கை கரி எனஎடுத்து-தளர்ச்சியையடைந்த யானை யென்றுமாம். எய்த்து-அறிந்து: "எய்யாமையே யறியாமையே" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தையும், "எய்த்துநீர்ச்சிலம்பின்குரன்மேகலை" என்ற சிந்தாமணிக்கு நச்சினார்க்கினிய ருரையெழுதி யிருத்தலையுங் காண்க. அத்திருமாலே இந்த இராமனென்பார் 'மெய்ப்பொருளுக்கே' என்றார். பி - ம்:—[1] மலையப்பொரு.

கைக்கரியளித்த கதை:—விஷ்ணுபக்தனான இந்திரத்யும்ன னென்பவன் ஒருகால் அகஸ்தியமுனிவன் எழுந்தருளுகையில் தன்கருத்து முழுதும் திருமாலைப் பூசிப்பதிலேயே செலுத்தியிருந்ததனால் உபசரியாதிருந்தானாக, முனிவன் அவ்வரசனைச் செருக்குற்றிருந்தனனாக நினைத்து 'யானையாகக் கடவை' என்று சபிக்க, அதனால் அவ்வரசன் யானையாய்விட்டானாயினும் விஷ்ணுபக்தி மாறாமலே யிருந்து, ஒருகால் அருச்சனைக்காகப் பூப்பறித்தற்குத் தாமரைத்தடாகத்திற் போ யிறங்கியபோது சாபத்தினால் முதலையாய்க்கிடந்த ஹூஹூ என்னுங்கந்தருவனாற் கவ்வப்பட்டு, அதை விடுவித்துக்கொள்ள முடியாமல் அந்தக்கஜேந்தரன் 'ஆதிமூலமே!' என்று கூவியழைக்க, உடனே திருமால் கருடாரூடனாய் அங்குஎழுந்தருளித் தனது சக்கராயுதத்தினால் முதலையைத்துணித்து அந்தக்கஜேந்திரனைப் பாதுகாத்தன னென்பதாம். (கஉ0)

கஉக. கரதல முற்றொளிர் நெல்லி கடுப்ப
விரத மறைப்பொருண் மெய்ந்நெறி கண்ட
வரத [1] னுதித்திடு மற்றைய வொளியைப்
பரதனெனப் பெயர் பன்னின னன்றே.

(இ - ள்.) கரதலம் உற்று ஒளிர் நெல்லி கடுப்ப - கையினிடத்துப் பொருந்திவிளங்குகின்ற நெல்லிப்பழத்தை யொக்க, விரதம் மறை பொருள் மெய் நெறி கண்ட - (பலவகை) விரதங்களைக்கூறுகின்ற வேதங்களின் உண்மைப்பொருளை (ஐயந்திரிபற நன்கு) அறிந்த, வரதன் - (தன்தவவலிமையால் வேண்டுவோர்க்கு வேண்டிய) வரங்களைக்கொடுக்கவல்லவசிட்டன், உதித்திடும் - அவதரித்த, மற்றைய ஒளியை - (இராமனுக்குப்) பின்பிறந்த சோதிமயமான குழந்தையை, பரதன் என பெயர் பன்னினன் - பரதனென்று பெயரிட்டழைத்தான்; (எ - று.)

கையில் நெல்லிக்கனியிருப்பின் அதன் வெளிவரைபோல ஊகத்தால் உள்வரைகளும் உணரப்படுதல்போல, வேதத்தின்வெளிப்படைப்பொருளையும் உட்பொருளையும் ஆய்ந்தறிந்தவ னென்பது, முன்னிரண்டடியின் பொருள். விசுவாமித்திரனைச் சேனையோடுஉபசரித்தமை அவனுக்குப்பிராமணியம்உண்டாகும்படி யனுக்கிரகித்தமை சூரியகுலத்துப்புரோகிதனா

யிருந்து அக்குலத்தார்க்குக்குறைவுவராமற் பாதுகாக்கை முதலிய தன்மை பெற்றிருத்தலால், வசிட்டனை, 'வரதன்' என்றார். இனி, 'உதித்திட' என்று பாடங்கொண்டு, கரதலம் உற்றுளிர் நெல்லிகடுப்ப விரதம் மறைப்பொருள் மெய்ந்நெறிகண்ட வரதன் உதித்திட - கையிலங்குநெல்லிக்கனிபோலப் பலவகைவிரதங்களையும் ஓதுகின்ற மறைப்பொருளாகி, உண்மையானஉபாயத்தா லுணரப்படுகின்ற திருமால் இராமனாக உதித்திட, மற்றைய ஒளியை - அவ்வரதனுக்குப் பின்தோன்றிய ஒளிவடிவை என்றும், வேதப்பொருளைத் தத்துவமார்க்கத்தோடுஉணர்ந்தவன் [பரதன்] உதிக்க என்றும் உரைப்பாருமுளர் இராமபிரான் காடேறவும் சக்கரவர்த்தி துஞ்சவும் காவலனில்லாதஇராச்சியத்தை யாளவல்ல தன்மையுடையனாகப் போவதைத் திரிகாலஞானத்தாலுணர்ந்த வசிட்டமுனிவன் அந்த இரண்டாவது குமரனுக்குப் பரதனென்றுநாமகரணஞ் செய்தனனென்க. பி - ம்:—[1] நனித்திட. (கஉக)

கஉஉ. உலக்குநர் வஞ்சக [1]ரும்பரு முய்ந்தார்
நிலக்கொடி யுந்துயர் [2]நீத்தன ளிந்த
விலக்கரு மொய்ம்பின் விளங்கொளி நாம
மிலக்குவ னென்ன விசைத்தன னன்றே.

(இ - ள்.) (இக்குழந்தை பிறந்தபொழுதே), வஞ்சகர் உலக்குநர் - வஞ்சனையை யுடையவர்களாகிய இராக்கதர்கள் அழியுந்தன்மையராவர்: (அதனால்), உம்பர்உம் உய்ந்தார் - தேவர்களும் பிழைத்தார்கள்; நிலம் கொடிஉம் துயர் நீத்தனள் - பூமிதேவியும் துன்பமொழிந்தாள்; விலக்கு அரு மொய்ம்பின் இந்த விளங்கு ஒளி நாமம் - (எவராலும்) விலக்குதற்கு முடியாத வலிமையையுடைய இத்தன்மையதான விளங்குகின்ற சோதிமயமான மகவுக்குப் பெயர், இலக்குவன் - லக்ஷ்மணன் என்பதாம், என்ன இசைத்தனன் - என்று (முனிவன்) கூறினான்; (எ - று.)

இலக்குவன் = லக்ஷ்மணன்: இச்சொல்லுக்கு - உத்தமபுருஷலக்ஷணங்களெல்லாம் அமையப்பெற்றவ னென்றும், பகவத்கைங்கரிய லக்ஷ்மியோடு கூடியவ னென்றும் பொருளாம். கொடி - உவமவாகு பெயர். பூமிபாரம் நீங்குவது திண்ணமென்ற துணிவினால், பூமிதேவி துயர் நீத்தனளென்க. பி - ம்:—[1] உம்பருயர்ந்தார். [2] நீத்தருளிந்த. (கஉஉ)

கஉங. முத்துருக் கொண்டுசெம் முளரிய லர்ந்தா
லொத்திருக் கும்மெழி லுடையவிவ் வொளியா
லெத்திருக் குங்கெடு மென்பதை யெண்ணிச்
சத்துருக் கன்னெனச் சாற்றின னுமம்.

(இ - ள்.) 'முத்து - முத்துக்கள், உரு கொண்டு - (ஒருகுழந்தை) வடிவத்தை யெடுத்து, செம் முளரி அலர்ந்தால் - செந்தாமரைமலர்கள் (தன்னிடம்) மலரப்பெற்றால், (அதனை), ஒத்திருக்கும்-ஒத்திருக்கின்ற, எழில் உடைய - அழகை யுடைத்தான, இ ஒளியால் - இந்தச் சோதிசொரூபத்தால், எ திருக்கும் கெடும் - எல்லாப்பகைகளும் ஒழியும்,' என்பதை—,

எண்ணு - ஆலோசித்து, சத்துருக்கன் என நாமம் சாத்தினன் - சத்துருக்நன் என்று பேரிட்டான், (குலகுரு); (எ - று.)

சத்துருக்கன் = ஶத்ருக்நன்: பகைவரைக்கொல்பவ னென்பது,பொருள். உட்பகையாகிய தூர்க்குணங்களையும் லவணுசுரனுதியோரையும் இவன் ஒழிக்குந்தன்மையனென்பதுபற்றி,இப்பெயரிட்டனன். இராமனது அழகில் ஈடுபடுதலென்பது பாகவதனுகிய பரதாழ்வானிடத்துப் பக்திசெலுத்துவதற்கு இடையூருகுமாதலால் அவ்வகையான அகப்பகையை யொழித்துப் பரதாழ்வானது கைங்கர்யத்திலேயே ஈடுபட்டவ னென்ற காரணம் பற்றி, 'சத்துருக்நன்' என்று பெயரிட்டதாகக் கூறுவர், பெரியோர். முதலடி - இல்பொருளுவமை. சத்துருக்நனது திருமேனிநிறம் வெண்மையாதலால், 'முத்துருக்கொண்டு' என்றும், கைகால் முதலிய அவயவங்களின் தன்மையைப்பற்றி, 'செம்முளரியலர்ந்தால்' என்றும் கூறினர். திருக்கு-குற்றமுமாம்.

கஉச.—நாமகரணஞ்செய்தபோது மன்னவன் பிராமணர்க்கீந்த் தானஞ் செய்தல்.

பொய்வழி யின்முனி புகற்ரு [1]மறையா
லிவ்வழி பெயர்க ளிசைத்துழி யிறைவன்
கைவழி [2]நிதியெனு நதிகலை மறையோர்
மெய்வழி யுவரி நிறைத்தன மென்மேல்.

(இ - ள்.) பொய் வழி இல் முனி - அசத்தியமான நெறியிற் செல்லாத வசிட்டமுனிவன், புகல்தரு மறையால் - (சிறப்பித்துச்) சொல்லப்படுகிற வேதமந்திரங்களைக் கொண்டு, இ வழி பெயர்கள் இசைத்த உழி - இங்ஙனம் பேர்களை யிட்டருளினபோது,—இறைவன் கை வழி நிதி எனும் நதி-சக்கரவர்த்தியினது கைகளினின்று பெருகின திரவியங்களான ஆறுகள், கலை மறையோர் மெய் வழி உவரி - வேதசாஸ்திரம்வல்ல பிராமணர்களின் மெய்ப்பொருள்வழியும் மனமாகிய கடலை, மெல் மேல் நிறைத்தன - மிகுதியாக நிரப்பின; (எ - று.)

தசரதன் தானநீருடனே கொடுத்துவருகிற அளவிறந்த செல்வங்களால் அந்தணர்கள் மனத்திருத்தியடைந்தன ரென்பதாம். மெய்வழியுவரி என்பதற்கு - உடம்பினிடமாகிய கடலை யென்று உரைப்பாருமுளர். மறையால்-வேதவிதிப்படி யெனினுமாம். பி - ம்:—[1] முறையால். [2] நதியொடுநிதி, நிதிபெறுவது. (கஉச)

கஉரு.—தசரதன் இராமனிடத்து அன்புகொண்டிருந்தமை.

காவியு மொளிர்தரு கமலமு மெனவே
யோவிய வெழிலுடை யொருவ னையலதோ
ராவியு முடலமு மிலதென வருளின்
மேவின [1]னுலகுடை வேந்தர்தம் வேந்தன்.

(இ - ள்.) காவி உம் ஒளிர் தரு கமலம் உம் எனஎ - நீலோற்பல மலர்களும் (அவற்றினிடையிடையே விளங்குகின்ற செந்தாமரைமலர்களுமென்று

சொல்லும்படியாகவே, ஓவியம் எழில் உடை - சித்திரித்ததுபோன்ற அழகையுடைய, ஒருவனை அலது - ஒப்பற்ற ஸ்ரீராமபிரானையல்லாமல், ஓர் ஆவிஉம் உடலம்உம் இலது என - (தனக்கு) ஒருயிரும் உடம்பும் வேறில்லையென்னும்படி, உலகு உடை வேந்தர்தம் வேந்தன் - உலக முழுவதையும் ஆளுதலையுடைய தசரத சக்கரவர்த்தி, அருளின் மேவினன் - (மூத்தகுமாரனிடத்துப்) பேரன்போடு பொருந்தியிருந்தான்; (எ - று.)

காவி கரிய திருமேனிக்கும், கமலம் செவ்விய அவயவங்கட்கும் உவமை. கைவல்ல ஓவியன் தன்மனத்தால் எங்ஙனம் கருதுகின்றானோ அங்ஙனம் அழகுபெறச் சித்திரிக்க முடியுமாதலால், 'ஓவிய வெழிலுடை' என்றார். பி - ம்:—[1] உலகிடை. (கஉ௫)

கஉ௬.—குமாரர் வளர்கை.

அமிர்துகு குதலையொ டணிநடை பயிலாத்
திமிரம தறவரு தினகர னெனவுந்
தமரம [1]துடன்வளர் சதுமறை யெனவுங்
குமரர்க ணிலமகள் [2]குறைவற வளர்நாள்.

இதுமுதல் நான்கு கவிகள் - குளகம்.

(இ - ள்.) குமரர்கள்-(அச்சக்கரவர்த்தியின்) குமாரர்கள் நால்வரும்,— அமிர்து உகு குதலையொடு - அமிர்தஞ் சிந்துகின்ற [மிக்க இனிமை நிரம்பிய] மழலைச்சொற்களுடனே, அணி நடை - அழகிய தளர்நடையையும், பயிலா - பழகி, திமிரம்அது அற வரு தினகரன் எனஉம் - இருள் நீங்கும்படி உதித்து வருகிற சூரியன்போலவும், தமரம் அது உடன் வளர் சதுமறை எனஉம் - (சுவரங்களின்) ஒலியுடனே (உலகத்தில்) விருத்தியடைகிற நான்குவேதங்கள்போலவும், நிலம் மகள் குறைவு அற - பூமிதேவியின் குறைவுகளெல்லாம் ஒழிய, வளர்நாள்-வளர்கின்றகாலத்திலே,—(எ - று.)— 'சவுளமொடுபநயம் விதிமுறை தருகுற்று'என அடுத்தகவியோடு தொடரும்.

ஒவ்வொரு குமரரும் பகையிருளை யொழிக்குந் திறனுடையராதலால், அவர்கட்குத் திமிரமதறவருதினகரனை யுவமித்தார். வேதத்திற்கு, உதாத்தம் அநுதாத்தம் ஸ்வரிதம் ப்ரசயம் என்ற ஸ்வரங்கள் முக்கியமாதலால்,'தமரமதுடன் வளர்சதுமறை' என்றார். பி-ம்:—[1]உடன்வரு. [2]குறையற.(கஉ௬)

கஉ௭.—சவுள வுபநயனங்கள் நடத்தியதும் வசிட்டன் பல கலைகளையும் அக்குமாரர்கட்குப் பயில்வித்தல்.

சவுளமொ டுபநயம் விதிமுறை தருகுற்
றிவளவ தெனவொரு [1]கரைபிறி திலவா
[2]வுவடரு மறையினொ டொழிவறு கலையுந்
[3]தவண்மதி புனையர னிகர்முனி தரவே.

(இ -ள்.) (அவர்கட்கு), தவள் மதி புனை அரன் நிகர் முனி - வெண்ணிறமான சந்திரனைத் தரித்த சிவபிரானையொத்த வசிட்டமுனிவன், சவுள

மொடு உபநயம் விதி முறை தருகுற்று - சவுளத்தையும் உபநயனத்தையும் (சுருதி ஸ்மிருதிகளிற் கூறிய) முறைப்படியே செய்வித்து, இ அளவது என ஒரு கரை பிறிது இல ஆ-இவ்வளவினையுடையதென்று ஒரு எல்லை தனியே இல்லையாம்படி, உவள் தரு மறையினொடு ஒழிவு அறு கலைஉம்-அழிதலில்லாத வேதங்களையும் கெடுதலில்லாத மற்றைச் சாஸ்திரங்களையும், தர - சொல்லிக்கொடுக்க, (அவைகளைப்பயின்று),—(எ-று.)—'இயல்பினினடையுற்று' என்று அடுத்த கவியோடு தொடரும்.

சௌளம் - பிறவிமயிர்களைந்து குடுமி வைக்குஞ் சடங்கு. முடியென்ற பொருளுள்ள 'சூடா' என்ற வடமொழியின் தத்திதமாகிய சௌடம் என்பது டகரளகரங்கட்கு அபேதத்தால் 'சௌளம்' என வழங்கும்; அது சவுளம்எனப் போலிபெற்று வந்தது; இது, ஆண்குழந்தைகட்கு மூன்றுமாண்டிற் செய்யப்படும் உபநயனம் - பூணூல்அணிவிக்குஞ் சடங்கு; இது க்ஷத்திரியர்கட்குப் பத்தாமாண்டிற் செய்யப்படுவது. தருகுற்று, கு-சாரியை. இவளவது - தொகுத்தல். உவள் - தூய்மைசெய்கின்ற எனினுமாம். கலை - ஆறங்கமும், மீமாஞ்சை, நியாயம், புராணம், தருமசாத்திரம் என்பனவும்; அறுபத்துநான்குகலையென்பாருமுளர். வெண்மையென்னும் பொருளுள்ள தவளம் என்ற வடசொல் திரிந்துவந்தது. அரன் - சங்காரக்கடவுள். முனிவனுக்குச் சிவனுவமை - முற்றுணர்விலும் நால்வர்க்கு ஒருங்கு உபதேசித்தலிலும்.

**அரன் மதிபுனைந்த கதை:**—சந்திரன் தட்சமுனிவனதுபுத்திரிகளாகிய அசுவினி முதலிய இருபத்தேழுநட்சத்திரங்களையும் மணஞ்செய்துகொண்டு அவர்களுள் உரோகிணியென்பவளிடத்து மிகவும் காதல் கூர்ந்து அவளுடனே எப்பொழுதுங் கூடிவாழ்ந்திருக்க, மற்றைய மகளிரது வருத்தத்தை நோக்கி முனிவன் அவனை 'க்ஷயமடைவாயாக' என்றுசபிக்க, அச்சாபத்தாற் சந்திரன் பதினைந்து கலைகளும் குறைந்து மற்றைக்கலையொன்றையும் இழப்பதற்கு முன்னம் சிவபிரானைச் சரணமடைய, அப்பெருமான் அருள்புரிந்து அவ்வொற்றைக்கலையைத் தன்தலையிலணிந்து மீண்டும் கலைகள் வளர்ந்து வரும்படி அநுக்கிரகித்தனனென்பதாம். பி-ம்:-[1]குறை. [2]உவளரு. [3]தவழ்மதி.

**கஉஅ.—குமாரர்கள் அரசர்க்கு வேண்டிய கலைகளிற் பயிலுதல்.**

யானையு மிரதமு மிவுளியு முதலா
வேனைய பிறவுமவ் வியல்பினி [1]னடையுற்
றூனுறு படைபல சிலையொடு பயிலா
வானவர் தனிமுதல் கிளையொடு [2]வளர.

(இ - ள்.) யானைஉம் - யானையேறுந் தொழிலும், இரதம்உம் - தேரேறுந்தொழிலும், இவுளிஉம் - குதிரையேறுந் தொழிலும், முதல் ஆ - முதலாக, ஏனைய பிறஉம்-(க்ஷத்திரியர்கட்கு உரிய) மற்றையெல்லாத்தொழில்களையும், அ இயல்பினின் - அததற்குஉரிய முறைப்படியே, அடையுற்று-அறியப்பெற்று,—ஊன் உறு படை பல - (பகைவரது) தசை பொருந்துதற்கு உரிய அனேகபடைக்கலங்களை, சிலையொடு - வில்வித்தையுடனே, பயிலா-பயின்று,— வானவர் தனிமுதல் - தேவர்கட்குஒப்பற்றமுதல்வனாகிய திரு

மாலினமிசமான ஸ்ரீராமன், கிளையொடு - தம்பிமார்களுடனே, வளர - (நாளொருமேனியும்பொழுதொருவண்ணமுமாக)வளர்ந்துவர,— (எ-று.)— அருமறைமுனிவரும்...உறுவார் என முடியும்.

'அடைதற்பொருளன, அறிதற்பொருளன' என்னும் வடமொழி நியாயம்பற்றி, அடையுற்று என்பதற்கு - அறியப்பெற்று எனப்பட்டது. ஏனைய-கோவேறுகழுதை ஒட்டகம் முதலியன. பி-ம்:—[1] நடைகற்று. [2] வளர்நாள். (கஉஅ)

கஉகூ.—முனிவர்முதலியோர் இராமனதியோரை யணுகியிருத்தல்.

அருமறை முனிவரு மமரரு மவனித்
[1] திருவும நகருறை செனமுந மிடரோ
டிருவினை துணிதரு மிவர்களி னிவணின்
றொருபொழு தகல்கில முறையென வுறுவார்.

(இ - ள்.) அரு மறை முனிவர்உம் - (உணர்தற்கு)அரிய வேதம்வல்ல முனிவர்களும், அமரர்உம் - தேவர்களும், அவனி திருஉம் - பூமிதேவியும், அ நகர் உறை செனம்உம்-அந்நகரத்தில்வசிக்கின்ற ஜனங்களும், 'இவர்களின்-இவ்வரசிளங்குமரரால்,நம் இடரோடு இரு வினை துணிதரும்-நமது துன்பங்களெல்லாவற்றுடனே (அவற்றிற்குக்காரணமான) புண்ணியபாவரூபமான பெரியகருமங்களும் ஒழியும்; (ஆதலால்), இவண் நின்று ஒரு பொழுது அகல்கிலம்-இவ்விடத்தினின்றும் (நாம்) ஒருபொழுதேனும் நீங்குவோமல்லோம்; முறை - (இதுவே நமக்கு) முறைமையாம்', என - என்றுகருதி, உறுவார்-(அக்குமாரர்வசிக்கின்றஇடத்தில்) வந்துசேர்வார்கள்; (எ - று.)

ஸ்ரீராமன் முதலியோர் பகவானதுஅமிச மாதலால், முனிவர் முதலியோரின் மனம் அக்குழந்தைகளாற் கவரப்பட, அம்முனிவர்முதலியோர் குழந்தைகளிடத்துப் பக்தி கொண்டு அணுகலாயின ரென்க. 'ஒருபொழுது அகல்கிலம், உறை - உறைவோம்' என்று உரைத்து, 'கள்வருநேர்' என்றவிடத்து நேர்வரென்னும் முற்று 'நேர்' என வந்ததுபோல, உறைவோமென்ற முற்று 'உறை' என நின்றதென்றலுமொன்று. அநகர்-தொகுத்தல்: திரு - இலக்குமி; இங்கே, பெண்ணென்ற மாத்திரமாய் நின்றது. பி - ம்:— [1] திருவுறுநகருறைசெனமெனவிடரோ, டிருவினைதுணிதருமிவரினின். ()

கஙௗ.—ஸ்ரீராமனும் இலக்ஷ்மணனும் எப்போதும் ஒருவரையொருவர் பிரியாதிருத்தல்.

ஐயனு மிளவலு மணிநில மகடன்
செய்தவ முடைமைக டெரிதர [1] நதியு
மைதவழ் பொழில்களும் வாவியு மருவி
நெய்குழ லுறுமிழை யெனநிலை திரிவார்.

(இ - ள்.) ஐயன்உம் - (யாவர்க்குந்தலைவனாகிய) ஸ்ரீராமனும், இளவல்உம் - லக்ஷ்மணனும், அணி நிலம் மகள் தன் செய் தவம் உடைமைகள் தெரி

தர - அழகிய பூமாதேவியின் செய்த தவமுடைமைகள் [தவஞ்செய்துள்ள தன்மை] யாவரும் உணரும்படி, நதிஉம் - ஆறுகளிலும், மை தவழ் பொழில்கள்உம் - மேகங்கள் தவழப்பெற்ற சோலைகளிலும், வாவிஉம் - தடாகங்களிலும், மருவி - சேர்ந்து, நெய் குழல் உறும் இழை என - நெய்கின்ற குழலுடனே விடாது பொருந்திய நூலிழைபோல (ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாமல்), நிலை திரிவார்-பூமியிலே சஞ்சரிப்பார்கள்; (எ - று.)

வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத கடவுள் இங்ஙனம் மானுடனாக இங்கு அவதரித்துத் தன் சேவடியால் தீண்டும் பாக்கியம் பூமிதேவிக்குக் கிடைத்தமை யாவர்க்கும் புலனாதலரல்,'நிலமகள் தன்செய்தவமுடைமைகடெரிதர' என்றார். செய்தவமுடைமை தனக்குத் தெரிய என்றுமாம். இளவல் - இளையபெருமாள். பி - ம்:—[1] வனமும். (கங0)

**கஙக.—பரதசத்துருக்கனர் ஒருவரையொருவர் பிரியாதிருக்கை.**

பரதனு மிளவலு மொருநொடி பகிரா
திரதமு மிவுளியு மிவரினு மறைநூ
லுரைதரு பொழுதினு மொழிகில ரெனையாள்
வரதனு மிளவலு மெனமரு வினரே.

(இ - ள்.) பரதன்உம் - பரதாழ்வானும், இளவல்உம் - சத்துருக்கனாழ்வானும், நொடி பகிராது-ஒரு நொடிப்போதும் (ஒருவரையொருவர்) விட்டுப் பிரியாமல், இரதம் உம் இவுளிஉம் இவரின்உம் - தேரின்மீதும் குதிரைகளின்மீதும் ஏறினாலும், மறை நூல் உரைதரு பொழுதின்உம்-வேதசாஸ்திரங்களைக் கற்குங்காலத்தும், ஒழிகிலர் - நீங்காதவர்களாய், எனை ஆள் வரதன்உம் இளவல்உம் என மருவினர் - என்னை அடிமையாகவுடைய ஸ்ரீராமனும் லக்ஷ்மணனும்போலக் கூடியிருந்தார்கள்; (எ - று.)

பரதசத்துருக்கனர் ஒருகணப்பொழுதும்பிரியாத பேரன்புடையராயிருந்ததற்கு வேறுஉவமைஇல்லையென்பார், இராமலட்சுமணரை உவமைகூறினர். இளவல் - இளமையையுடையவன்; அல் - ஆண்பாற்பெயர்விகுதி.

**கஙஉ.—புதல்வர் பகலில் முனிவர்களிடத்திற்சென்றுபழகி, மாலையில் நகரத்தார் மகிழ்ச்சியோடு எதிர்கொள்ள மீளுதல்.**

[1]வீரரு மிளைஞரும் வெறிபொழில் களின்வா
யீரமொ [2]டுறைதரு முனிவர ரிடைபோய்ச்
சோர்பொழு [3]தணிநகர் துறுகுவ ரெதிர்வார்
கார்வர வலர்பயிர் பொருவுவர் களியால்.

(இ - ள்.) (நாள்தோறும்), வீரர்உம் - பராக்கிரமசாலிகளான இராமனும்பரதனும், இளைஞர்உம்-(அவர்கள்)தம்பிமாரானலட்சுமணனும்சத்துருக்கனும், வெறி பொழில்களின்வாய்-வாசனைவீசுகிற (ஊருக்குவெளியிலேயுள்ள) சோலைகளினிடத்து, ஈரமொடு உறைதரு - குளிர்ந்தகருணையோடு வசிக்கின்ற, முனிவரர்இடை - சிறந்தமுனிவர்களிடத்து, போய் - (காலை

யிற்) சென்று, சோர் பொழுது - (சூரியன்) அஸ்தமிக்கின்ற சமயத்தில், அணி நகர் துறுகுவர் - அழகியஅயோத்தியாபட்டணத்துக்குத் திரும்பி வந்துசேருவார்கள்; எதிர்வார்-(அப்பொழுது) அவர்களையெதிர்கொள்கின்ற நகரத்துமாந்தர், களியால் - களிப்பினால், கார் வரவு அலர் - மேகத்தினது வருகையைநோக்கிச் செழிக்கின்ற,பயிர் பொருவுவர்-பயிரை யொப்பார்கள்.

அந்நான்குபுதல்வர்களும் தினந்தோறும் காலைப்பொழுதில் அந்நகரத்துவெளியிலுள்ளசோலைகளிலே வசிக்கும் முனிவர்களிடத்துச் சென்று அவர்களோடு அளவளாவிப் பல நுண்ணியநூற்பொருள்களை வினவிஅறிந்து மாலைப்பொழுதில் நகரத்துக்குத்திரும்பிவர, அவர்களையெதிர்கொள்ளும்நகரத்துமாந்தர் கார்கண்டபயிர்போற் செழிப்பாராயினரென்க. பி-ம்:—[1]வீரனும். [2]உரைதரும். [3]அணிதருதுறைநகரெதிரா. (௧௩௨)

**௧௩௩.—அந்நகரத்துஆடவரும் மகளிரும்மற்றுமுள்ளவரும் இக்குமாரர் வாழ்ச்சியைக்குறித்து இஷ்டதேவதைகளைப் பிரார்த்தித்தல்.**

*ஏழைய ரனைவரு மிவர்தட முலை தோய்
கேழ்கிளர் மதுலகயர் கிளைகளு [1]மினையார்
வாழிய வெனவவர் மனனுறு கடவுட்
டாழ்குவர் கவுசலை தயரத னென்வே.

(இ - ள்.) ஏழையர் அனைவர்உம்-(அந்நகரத்து) மாதர்களெல்லோரும், இவர் தட முலை தோய் கேழ் கிளர் மதுகையர்(உம்)-இம்மாதர்களதுபெரிய தனங்களைப்பொருந்துகின்ற மிக்குவிளங்கும் வலிமையையுடைய ஆடவர்களும், கிளைகள்உம் - (அவர்களது) சுற்றத்தாரும், கவுசலை தயரதன் என-ஸ்ரீகௌசல்யாதேவியும் தசரதமகாராசனும் போலவே, இனையார் வாழிய என - இக்குமாரர்கள் வாழ்வார்களாக வென்று, அவர் மனன் உறு கடவுள் தாழ்குவர்-அவரவர்கள்மனத்திற்பொருந்திய தெய்வத்தை வணங்குவார்கள்.

"ஸர்வாந்தேவாந்நமஸ்யந்தி-ராமஸ்யார்த்தேயஶஸ்விநः" என்றஸ்ரீவால்மீகிராமாயணத்தின்கருத்துக்கொண்டது, இச்செய்யுள். பட்டமகிஷியருள் பிரதானமானவளாதலால், கௌசலையைக் கூறினார். இதனால், தன்மகனென்றும் பிறர்மகனென்றும் வேறுபாடில்லாமல் நால்வரிடத்தும் சமமாகவுள்ள கௌசலையினன்பு விளங்கும்.பி-ம்:—[1]இளையார். (௧௩௩)

**௧௩௪.—முனிவராச்சிரமங்களினின்று திரும்பிவரும் இராமலட்சுமணர்க்கு உலகத்தார்கூறும் உவமை.**

[1]கடல்கரு முகிலொளிர் கமலம தலரா
வடவரை யுடன்வரு செயலென மறையுந்
தடவுத லறிவரு தனிமுத லவனும்
புடைவரு மிளவலு மெனநிகர் புகல்வார்.

(இ - ள்.) மறைஉம் தடவுதல் அறிவு அரு-வேதங்களாலும் ஆராய்ந்து அறிதற்குக் கூடாத, தனி முதலவன்உம் - ஒப்பற்றதலைவனான ஸ்ரீராமனும், புடை வரும் இளவல்உம்-(அவனது) பக்கத்திலே (எப்பொழுதும் விடாது)

வருகின்ற இலட்சுமணனும், (என்ற இவ்விருவரின்வருகை),—கடல் கரு முகில் - கருங்கடல் காளமேகமென்னுமிரண்டனுள் ஒன்று, ஒளிர் கமலம் அது அலரா - விளங்குஞ்செந்தாமரைமலர்த்தொகுதி பூக்கப்பெற்று, வட வரையுடன் வரு செயல் - வடக்கிலுள்ள மகாமேருகிரியுடனே வருகின்ற செய்கைபோலாம்,' என - என்று, நிகர் புகல்வார் - (கண்டோர்கள்) ஒப்புக் கூறுவார்கள்; (எ - று.)

கடலும் கருமுகிலும் பெரியபெருமாளாகிய இராமனுக்கும், மேருமலை இளையபெருமாளுக்கும் நிறம்பற்றிய உவமை. கரு - மத்திமதீபம். கடல் கருமுகிலென்பதற்கு - கடல்நீரை முகத்தலாற் சூல்கொண்ட மேகமென்றுஞ் சொல்லலாம். நனிபுகல்வார் என்று பாடங்கொண்டு - 'முதலவனும் இளவலும் உடன் வருசெயல், கடலாற்றரப்பட்ட முகில் வரையுடன் வரு செயல்', எனஎன நனி புகல்வார் - என்றென்று பலமுறை கூறுவார்கள் என்று உரைத்தலுமொன்று. பி - ம்:—[1] கடறருமுகில். (கநுச)

**கநுரு,கநுசு.—இதுவும் அடுத்தகவியும்-ஒருதொடர்: இராமபிரான் நகரத்தவரைச் சேமம்வினவுதலும், அவர் விடையளித்து ஸ்ரீராமபிரானை வாழ்த்துதலும்.**

**கநுரு.** எதிர்வரு மவர்களை [1]யெமையுடை யிறைவன்
முதிர்தரு கருணையின் முகமல ரொளிரா
வெதுவினை யிடரிலை [2]யினிதினு மனையு
மதிதரு குமரரும் வலியர்கொ லெனவே.

**கநுசு.** அஃதைய நினையெம தரசென வுடையே
மிஃதொரு பொருளல வெமதுயி ருடனேழ்
மகிதல முழுதையு [1]முறுகவி மலரோ
னுகுபக லளவென வுரைநனி [2]புரிவார்.

(இ - ள்.) (கநுரு) எமை உடைஇறைவன்-நம்மை அடிமையாகவுடைய தலைவனான ஸ்ரீராமன், எதிர்வரும் அவர்களை-(தனது)எதிரில்வருகின்ற அந்நகரத்தவர்கள் பலரையும் (நோக்கி), முதிர்தரு கருணையின்-மிக்க அருளுடனே, முகம் மலர் ஒளிரா - தாமரைமலர்போன்ற (தன்) திருமுகம் விளங்கப்பெற்று[முகம்மலர்ந்து], 'வினை எது - (உம்முடைய) தொழில் யாது? இடர் இலை(கொல்) - துன்பமொன்றும் உண்டாகாதிருக்கின்றதா? நும் மனைஉம்-உங்களது மனைவியரும், மதிதரு குமரர்உம் - அறிவுபெற்ற புத்திரர்களும், இனிதின் - சுகமாக, வலியர்கொல் - வலிமையுடையராயிருக்கின்றனரா? என-என்று (அவரவரது குடும்பயோகக்ஷேமங்களை) வினவ,(கநுசு) அஃது-அவ்வினவுக்கு, (அச்சனங்கள்), 'ஐய - தலைவனே! நினை எமது அரசு என உடையேம் - உன்னை எங்களது அரசனாகவுடையோம் (நாங்கள்); (ஆகையால்,எமக்கு),இஃது ஒரு பொருள் அல-இங்ஙனம்ஒருகுறையின்றி வாழ்வது ஒருபெருங்காரியமன்று; எமது உயிருடன் - எங்களது உயிரையும், ஏழ் மகிதலம் முழுதைஉம் - ஏழுதீவுகளாகவுள்ள பூலோகமுழுவதையும்,

இ மலரோன் உகு பகல் அளவு - இந்தப்பிரமன் அழியுங்காலமட்டும்,உறுக-ஆட்சிசெய்தருளுவாயாக', என - என்று, நனி உரை புரிவார் - நன்றாக (வாழ்த்தி) உத்தரங்கூறுவார்கள்; (எ - று.)

இராமபிரான் காலையில்முனிவர்களுறையும் பொழில்களுக்குச் சென்று மாலைக்காலத்து மீண்டுவருகையில், கார்கண்ட பயிர்போல் மகிழ்ச்சியுடன் எதிர்கொள்ளும் நகரத்துமாந்தரை நோக்கி, அவர்கள் தன்னைச்சௌக்கியம் வினவுவதற்கு முன்னமே தான் அவர்களின் யோகக்ஷேமங்களை வினவ, அவர்களும் 'நீ அரசனாக இருக்கையில் எமக்குக் குறை எங்ஙனம் நிகழும்?நீ ஊழிகாலம் வாழ்க' என்றுவாழ்த்துவ ரென்க. கௌரு.—எதுவினை-என்னால் ஆகவேண்டியது யாது உளது? எனினுமாம். தொல் - வினை: இதனை, இலை என்பதனோடுங் கூட்டுக: அன்றி, இலையென்பதே, ஓசைவேறுபாட்டால் வினைப்பொருளைத் தந்ததென்றலு மொன்று; இங்ஙனம் வருவதனை வடநூலார் 'காகு' என்பர். [2]இனிது நுமனை என்ற பாடத்திற்கு-நும்மனை இனிது (கொல்) - நும்மனைவி அல்லது நுமதுவீடு சுகமா? எனப்பொருள்காண்க. மனை - மனைவியையுணர்த்தும்போது, இடவாகுபெயர். நும் அனை என்றும் பிரிக்கலாம். 'பூர்வபாஷீசராகவ:' என்றமுதனூலிற்கு ஏற்ப, ஸ்ரீராமபிரான் காண்போருடன் முற்பட்டுப் பேசுந் தன்மைய னென்பதை, இதில் விளக்கினார். பி - ம்:—[1]எனையுடை. கௌசு.—அஃதைய என்பதற்கு - ஐயனே! அங்ஙனமே [நீ வினவியபடியே இடரிலை, மனையினிது, குமரர் வலியர்] என்றும் உரைக்கலாம். இஃதுபொருளல - ஒருமைப்பன்மைமயக்கம். பி - ம்:—[1]உறுகென. [2]பகர்வார். (கௌரு, கௌசு)

**கௌஎ.—உலகத்தார் புகழ, தம்பிமார் துதிக்க இராமன் இனிதிருத்தல்.**

இப்பரி சணிநக ருறையும் யாவரு
மெய்ப்புகழ் புனைதர [1]விளைய வீரர்க
டப்பற வடிநிழ றழுவி யேத்துற
[2]முப்பரம் பொருளுக்கு முதல்வன் வைகுறும்.

(இ - ள்.) இ பரிசு - இந்தவிதமாக, அணி நகர் உறையும் யாவர்உம் - அழகிய அந்நகரத்திலே வசிக்கின்றவர்களெல்லோரும், மெய் புகழ் புனைதர - (தனது) உண்மையான கீர்த்தியை வருணித்துக்கூறவும், இளைய வீரர்கள் - தம்பிமார்கள், தப்பு அற - தவறுதலில்லாமல், அடி நிழல் தழுவி - (தனது) திருவடியின் சாயையைப் பொருந்தி, ஏத்துஉற - துதிக்கவும், முப்பரம் பொருளுக்கு முதல்வன் - தலைமைத் தேவதைகளாகிய திரிமூர்த்திகளுள்ளுந் தலைவனான ஸ்ரீராமன், வைகுறும் - வாழ்பவனானான்; (எ-று.)

பி - ம்:—[1]இளையவீரரும். [2]முப்பரம் பொருளினும். (கௌஎ)

**கௌஅ.—தசரதன் பெருமகிழ்ச்சியடைந்து அரசாட்சி செய்தல்.**

அரசர்தம் பெருமக னகிலம் யாவையும்
விரசுறு தனிக்குடை விளங்க வென்றிசேர்

முரசொலி கறங்கிட முனிவ ரேத்துறக்
கரைசெய லரியதோர் களிப்பின் வைகுநாள்.

இவுதும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) அரசர்தம் பெரு மகன் - அரசர்களுக்கரசனான தசரதன், அகிலம் யாவைஉம் - உலகம் முழுவதும், விரசு உறு தனி குடை - பொருந்திய (தனது) ஒப்பற்ற ஒற்றைவெண்கொற்றக்குடை நிழலில், விளங்க - பிரகாசிக்கவும், வென்றி சேர் முரசு ஒலி கறங்கிட - ஜயம் பொருந்திய பேரிகைகளின் ஓசை முழங்கவும், முனிவர் ஏத்துற - முனிவர்கள் துதிக்கவும், கரை செயல் அரியது ஓர் களிப்பின் - ஒருகரை கோலுதற்கு அருமையான ஒப்பற்ற ஆனந்தக்கடலிலே, வைகும் நாள் - மூழ்கிவாழுங் காலத்தில்,— (எ - று.)—'மீண்டயம்பொலியஎய்தினன்' என அடுத்தகவியோடு முடியும்.

கரை செயல் - அளவிடுதல். கரை செயலரியது என்றமையால், களிப்புக் கடலெனப்பட்டது. (கந-அ)

திருவவதாரப்படலம் முற்றிற்று.

---

## ரு-ஆவது கையடைப் படலம்

தசரதச்சக்கரவர்த்தி தன் குமாரர்களான இராமலட்சுமணர்களை விசுவாமித்திரமுனிவன்வசத்தில் அடைக்கலமாக ஒப்பித்தசெய்தியைக் கூறும்பாகமென்பது பொருள். கையடை - அடைக்கலம்; "கையடை யடைக்கலம்" என்றது திவாகரம். இங்கு, அடைக்கலமாவது - பத்திரமாகப் பாதுகாத்துவைத்திருந்து பின்பு தம்பக்கல்தருமாறு ஒருவன் தன்பொருளைப் பிறனொருவனிடத்திற் கொடுத்துவைத்தல். இது இப்பொருளதாதலை,சிலப்பதிகாரத்து 'அடைக்கலக்காதை'என்றவிடத்துக் காண்க. கையடைஎன்பது - கை அடை என்றுபிரிந்து,ஒருவனதுகையை [ஸ்வாதீநத்தை]யடைவது என்றாவது, ஒருவனது கையில் [வசத்தில்]சேர்வது என்றாவது பொருள்பட்டுக் காரணக்குறியாகத்தக்கது.

க.—தசரதசக்கரவர்த்தி சபாமண்டபஞ் சேர்தல்.

நனைவரு கற்பக நாட்டு நன்னக
ரனைவரு [1]மணைதர வயிர்க்குஞ் சிந்தையா
னினையவு மரியது விசும்பி னீண்டதோர்
புனைமணி மண்டபம் பொலிய [2]வெய்தினன்.

(இ - ள்.) (ஒருநாள்),— நனை வரு - அரும்புகள் நிறைந்த, கற்பகம் - கல்பகவிருட்சத்தையுடைய, நாடு - சுவர்க்கலோகத்திலேயுள்ள, நல் நகர் - சிறந்த (அமராவதியென்னும்) நகரத்தில் வாழ்கிற,அனைவர்உம்-(தேவர்கள்) எல்லாரும், அணைதர-(இந்திரசபைஇதுவென்னுங் கருத்தினால் தாம்) வந்து சேரும்படி, அயிர்க்கும்-சந்தேகிக்கின்ற, சிந்தையான்-மனத்தைக்கொண்டு,

நினையவும் அரியது-நினைத்தற்கும் அருமையானதும், விசும்பின் நீண்டது- தேவலோகத்தளவும் உயர்ந்துள்ளதுமாகிய, ஓர் - ஒரு, மணி பூனை மண்டபம் - இரத்தினகசிதமான சபாமண்டபம், பொலிய - விளக்கமடையும்படி, எய்தினன் - (தசரதன்) சேர்ந்தான்; (எ - று.)

கீழ்ப்படலத்தினிறுதியில்வந்த 'அரசர்தம்பெருமகன்' என்றதேஇச்செய்யுட்கு எழுவாய். அரசர்தம்பெருமகன் மண்டபம் எய்தினன் என்க. இச்சபா மண்டபத்தைக் காண்கிற தேவர்கள் இதனைத் தங்கள் சபாமண்டபமான சுதர்மை யென்று சங்கித்துத் தாம் இதில் வந்துசேரக் கருதுமாறு உள்ளது என்பது, முதலிரண்டடிகளின் தேர்ந்தகருத்து. சிந்தையான் நினையவும் அரியது என்பது, வேலைத்திறங்களினருமையை விளக்கிநின்றது. 'விசும்பின்நீண்டது' என்றது, அம்மண்டபத்தினது மிக்கஉயர்ச்சியைக் காட்டும்; அத்தேவர்கள் அணைதர அயிர்க்குஞ் சிந்தையராதற்கு, இதுவும் ஒருகாரணம். சிறந்தமண்டபத்தில் வந்துசேர்தலால் ஒருபொலிவுபெறுகின்றனன் தசரதன் என்னலாகாதபடி, அவன் வந்துசேர்தலால் அம்மண்டபத்துக்குப் பொலிவு உண்டாகின்றதென அவனது அழகு முதலிய சிறப்புக்களை உணர்த்துவார், 'மண்டபம்பொலிய எய்தினன்' என்றார். மண்டபத்தின் சிறப்பையும், சக்கரவர்த்தியின் மேம்பாட்டையும் இங்ஙனம் மிகவுயர்த்திக்கூறியது, உயர்வுநவிற்சியணியாம். இவ்வணி முன்னிரண்டடியில் ஐயவணிக்கு அங்கமாய் வந்தது. கற்பகம் - தேவதருஐந்தில் ஒன்று; மற்றவை - சந்தாநம், பாரிஜாதம், மந்தாரம், அரிசந்தநம் என்பன. வேண்டுவார் வேண்டும்பொருள்களை அவர் வேண்டியபடியெல்லாம் கல்பிப்பது [உண்டாக்குவது] என்பது, கல்பகம் என்ற வடசொல்லின் காரணப்பொருள். நனை வரு என்பதற்கு - (மலர்களின்) தேன் பொருந்திய என்றும், (தேன்பெருக்கினால்) நனைந்த என்றும் பொருள்கொள்ளலுமாம். பி - ம்:—[1]மனிதரும். [2]உமேவினன், எய்தியே. (க)

உ.—அந்தச் சக்கிரவர்த்தி சிங்காதனத்தில் வீற்றிருத்தல்.

தூயமெல் லரியணை பொலிந்து தோன்றினன்
சேயிரு விசும்பிடைத் திரியுஞ் சாரணர்
நாயக னிவன்கொலென் றயிர்த்து நாட்டமோ
ராயிர மில்லையென் றையம் [1]நீங்கினர்.

(இ - ள்.) (அம்மண்டபத்தில் சக்கரவர்த்தி), தூய மெல் அரி அணை - தூய்மையையுடைய மென்மையான சிங்காதனத்திலே, பொலிந்து தோன்றினன் - விளங்கி வீற்றிருந்தான்; (அப்பொழுது அவனைநோக்கி), சேய் இரு விசும்பிடை திரியும் சாரணர் - உயர்ந்த பெரிய ஆகாசமார்க்கத்திலே சஞ்சரிக்கின்ற சாரணரென்னுந்தேவசாதியார், நாயகன் இவன்கொல் என்று அயிர்த்து - (தங்கள்) தலைவனான தேவேந்திரன் இவன்தானோ வென்று (முதலிற்) சந்தேகித்து, (பின்பு ஊன்றிப்பார்த்து), நாட்டம் ஓர் ஆயிரம் இல்லை என்று - (இவனுக்கு) ஆயிரங்கண்களில்லை (ஆதலால் இவன் இந்திரனல்லன்) என்று, ஐயம் நீங்கினர் - அச் சந்தேகந் தீர்ந்தார்கள்; (எ-று.)

'இந்திரனுக்குக்கண்கள்ஆயிரம்,தசரதனுக்குக்கண்கள்இரண்டே' எனக் கண்களின்தொகையில்வேறுபாடு ஒன்றுதவிர,மற்றைச் செல்வம் அதிகாரம் அழகுவிளக்கம் முதலியசிறப்புக்களிலெல்லாம் தேவேந்திரனையொத்தவன் தசரதன் என இதனல் விளக்கினர். துணிவைமுடிவிற்கொண்டஐய ...ணி. இந்திரனது கொலுமண்டபத்தோடு தசரதனது அத்தாணிமண்டபத்துக்கு உள்ள ஒப்புமையைத் தேவலோகத்தாரின் சந்தேகமூலமாகக் கீழ்ச்செய்யுளில் விளக்கிப்போந்த ஆசிரியர், அச்சபாமண்டபத்துக்குத் தலைவனுன இந்திரனுக்கும் இச்சபாமண்டபத்துக்குத் தலைவனுன தசரதனுக்கும் உள்ள ஒற்றுமைவேற்றுமைகளை, அத்தேவசாதியில் ஒருவகுப்பினரான சாரணர்களது ஐயந்தெளிவுகளின் மூலமாக இங்கு விளக்கினரென நயங் காண்க.

சாரணர் - பதினெட்டுத்தேவகணங்களுள் ஒருசாரார்: இவ்வடசொல்-(வானத்திற்) சஞ்சரிப்பவ ரென்று காரணப்பொருள்படுதலால், அவ்வேதுப்பொருளையே 'சேயிருவிசும்பிடைத்திரியும்' என்ற அடைமொழிகொண்டு விளக்கினர்; ஆகவே, இங்கு, சாரணர்-வெறும்பெயர்மாத்திரமாய் நின்றது. தவிசின் மென்மையைச் சிங்காசனத்தின்மேலேற்றி, 'மெல்லரியணை' எனப்பட்டது. நாட்டம் - நாடுதற்குக் கருவியானது; நாடுதல் - பார்த்தல்: அம்-கருவிப்பொருள்விகுதி. பி - ம்:—[1] நீங்கவே. (உ)

**ங.—அந்த விசுவாமித்திரமுனிவன் வருதல்.**

**மடங்கல்போன் மொய்ம்பினுன் முன்னர் மன்னுயி**
**ரடங்கலு முலகும்வே றமைத்துத் தேவரோ**
**டிடங்கொணான் முகனையும் படைப்ப னீண்டெனுத்**
**தொடங்கிய [1] துனியுறு முனிவன் றேன்றினன்.**

(இ - ள்.) மடங்கல் போல் மொய்ம்பினுன் முன்னர் - சிங்கம் போன்ற வலிமையையுடையவனுகிய அச்சக்கரவர்த்தியினெதிரில்,—'மன் உயிர் அடங்கல்உம் - நிலைபெற்ற உயிர்களெல்லாவற்றையும், உலகுஉம்-(அவை தங்குதற்கு இடமான) உலகங்களையும், வேறு அமைத்து - வேறே படைத்து, தேவரோடு - (மற்றைத்)தேவர்களுடனே, இடம் கொள் நான்முகனை உம் - (சத்தியலோகமென்னுஞ் சிறந்த) இடத்தைக்கொண்ட நான்குமுகங்களையுடையவனுன பிரமதேவனையும், ஈண்டு - இப்பொழுதே, படைப்பென் - வேறு சிருட்டிப்பேன்,' எனு - என்று, தொடங்கிய-(பிரதிசிருஷ்டி செய்ய) ஆரம்பித்த, துனி உறு - பெருங்கோபம் மிக்க, முனிவன் - விசுவாமித்திரமகாமுனிவன், தோன்றினன் - வந்துசேர்ந்தனன்; (எ - று.)

சகலசீவராசிகளையும் உலகங்களையும் பிரமன்முதலிய தேவர்களையும் இதோசிருஷ்டிக்கிறேனென்று தொடங்கிய பெருஞ்சினத்தவனுன விசுவாமித்திரமுனிவன் அத்தசரதசக்கரவர்த்தியின்சபைக்கு எழுந்தருளினனென்பதாம். இங்கு, அக்கௌசிகமுனிவனது கோபத்தை யெடுத்துக்கூறியது - அவனது தபோபலத்தின் சிறப்பு விளங்க. விசுவாமித்திரன் - பிரமனது புதல்வனுன குசனென்னும் அரசனுடைய புத்திரர் நால்வருட் குசநாபனது மகனுகியகாதியின் குமாரன்;கௌசிகனென்றும்பெயருடையவன். க்ஷத்திரிய

சாதியினனாய் அரசாட்சி செய்துகொண்டிருந்த இவன் தவஞ்செய்து பிரமவிருடியாயின னென்பது, மேல் விளங்கும். மடங்கல் - (பிடரிமயிர்) மடங்குதலையுடையது என ஆண்சிங்கத்துக்குக் காரணக்குறி; தொழி லாகுபெயர்: 'கேஸரீ' என்ற வடசொல்லுக்கும் பொருள் இதுவே. உயிரைப் படைத்தலாவது - உடம்பொடு கூடும்படி செய்தல். உலகு - லோகம். தேவர்என்றவடசொல் - விண்ணுலகத்தில் வாழ்பவரென்றும், எப்பொழு தும் இன்பமுற்றிருப்பவ ரென்றும் காரணப்பொருள்பெறும். இடம் - பெரு மையும், நல்லறிவுமாம். நான்முகன் - நான்குதிசையையும் நோக்கிய நான்கு முகமுடையவன்; உம்மை - இறந்ததுதழுவிய எச்சத்தோடு, உயர்வு சிறப்பு. முன்னர்த் தோன்றினன் என இயையும். பி - ம்:—[1]துனியறுமுனிவன், கோசிகமுனிவன். (ரு)

**சு.—தசரதன் எழுந்து அம்முனிவனை வணங்குதல்.**

**வந்துமுனி யெய்துதலு மார்பினணி யார**
**மந்தர [1]தலத்திரவி யஞ்சவொளி விஞ்சக்**
**கந்தமல ரிற்கடவு ளன்வரவு காணு**
**மிந்திர னெனக்கடி தெழுந்தடி பணிந்தான்.**

(இ - ள்.) முனி வந்து எய்துதலும் - அம்முனிவன் வந்துசேர்ந்த வுடனே,—(சக்கரவர்த்தி),—கந்தம் மலரில் கடவுள்தன் வரவு காணும் இந்திரன் என - நறுமணமுள்ள தாமரைமலரில் தோன்றிய பிரமதேவனது வருகையை நோக்கிய தேவேந்திரன்போல,—மார்பின் அணி ஆரம் அந்தர தலத்து இரவி அஞ்ச ஒளி விஞ்ச கடிது எழுந்து - (தனது) மார்பிலே அணிந் துள்ள இரத்தினஹாரமானது ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்கின்ற சூரியனும் தோற்கும்படி ஒளிமிகுமாறு விரைவாக (ஆசனத்தைவிட்டு) எழுந்திருந்து, அடிபணிந்தான்-(அம்முனிவனது) திருவடிகளை வணங்கினன்; (எ - று.)

கீழ், பிரதிசிருஷ்டிகர்த்தாவும் பிரமவிருடியுமாகிய விசுவாமித்திரன் தசரதனிடம் வந்ததற்கு, படைத்தற்றொழிற்கடவுளான பிரமன் இந்திரனி டத்துவருதலை உவமைகூறி, அப்பிரமன் வரவு கண்ட இந்திரன்போல இக் கௌசிகன் வரவுகண்ட தசரதன் விரைந்தெழுந்து அடிபணியலாயின னென்றார்; "ப்ரஹ்மாணமிவ வாஸவ:" என இச்சந்தருப்பத்தில் இவ்வு வமை வால்மீகத்திலும் கூறப்பட்டுள்ளது. முநி என்ற வடசொல்லுக்கு - (கடவுளை எப்பொழுதும்) தியானஞ்செய்பவன் அல்லது திரிகாலஞான முடையவன் என்று பொருள். விரைவாக எழும்பொழுதுஉண்டாகிற அசை வினால், மார்பிலணிந்துள்ள இரத்தினஹாரம் பளபளவென்று பேரொளி வீசிவிளங்குதல்பற்றி, 'மார்பினணியாரம் ஒளிவிஞ்சக் கடிதெழுந்து' என்றார். இங்கு மார்புக்கு வானத்தோடு ஒப்புமைதோன்றுதலால், அதன்பரப்பு விளங் கும்; மார்புபரந்திருத்தல், உத்தமபுருஷலக்ஷணம். "அஞ்சல் தோல்விப் பெயர்" என்பது பிங்கலந்தையாதலால், அஞ்ச - தோற்கும்படி எனப்பட் டது. 'இரவியஞ்சவொளி விஞ்ச'—பிராசம். பி - ம்:—[1]நிலத்து. (சு)

௫.—தசரதன் கௌசிகனை உபசரித்து இன்சொற்கூறல்.

பணிந்துமணி செற்றுபு குயிற்றி யவிர்பைம்பொ
னணிந்ததவி சிட்[1]டதி லருத்தியொ டிருத்தி
யிணைந்தகம லச்சர ணருச்சனைசெய் தின்றே
துணிந்த[2]தென் வினைத்தொடர் பெனத்தொழுது [3]சொன்னான்.

(இ - ள்.) (சக்கரவர்த்தி, முனிவனை), பணிந்து - வணங்கி,—மணி செற்றுபு குயிற்றி - இரத்தினங்களை நெருக்கமாகப் பதித்து, அவிர் பைம் பொன் அணிந்த - விளங்குகின்ற பசும்பொன்னினால் அழகிதாகச் செய்யப் பட்டுள்ள, தவிசு - ஆசனத்தை, இட்டு - சமர்ப்பித்து, அதில் - அவ்வாசனத் திலே, அருத்தியொடு இருத்தி - (அம்முனிவனை) அன்போடு எழுந்தருளப் பண்ணி,—இணைந்த கமலம் சரண் - (அவனது) இரண்டாகப்பொருந்திய திருவடித்தாமரை மலர்களை, அருச்சனைசெய்து - அருச்சித்து,—என் வினை தொடர்பு இன்றே துணிந்தது என-'எனது ஊழ்வினையின்தொடர்ச்சி இப் பொழுதே அழிந்துபோய்விட்டது' என்று, தொழுது சொன்னான் - கை கூப்பிக்கொண்டே (முகமன்) கூறினன்; (எ - று.)

பெரியோர்க்குச் செய்யவேண்டுவனவான ஷோடச [பதினாறு] உபசா ரங்களுள் ஆசனஞ்சமர்ப்பித்தலை 'தவிசுஇட்டு அதில் அருத்தியொடுஇரு த்தி' என்றதனாற் கூறி, கந்தம் தூபம் தீபம் மந்திரபுஷ்பம் முதலிய பிறவற் றை 'அருச்சனைசெய்து' என்றதனால் தொகுத்து உரைத்தார். பெரியோர் களதுசேர்க்கை தீவினையறுதற்குக் காரணமாதலால், 'இன்றேதுணிந் தது என்வினைத்தொடர்பு' என்று கூறப்பட்டது. வினைத்தொடர்பு - முற்பி றப்புக்களிற்செய்த கருமத்தின் பயன் அதுசெய்த உயிரைப்பிற்பிறப்பிற் சென்றுஅடைவது 'அருத்தியொடிருத்தி'-பிரசம். கீழ்ச்செய்யுளோடு இச் செய்யுள் அந்தாதித்தொடையமையப்பாடப்பட்டது. பி - ம்: —[1] இனிதருத் தியொடு. [2] எம். [3] சொல்லும். (௫)

௬.—மற்றும் தசரதன் கௌசிகனைத் துதிக்க, அம்முனிவன் சக்கரவர்த்தியைப் புகழத்தொடங்கல்.

நிலஞ்செய்தவ மென்றுணரி னன்றுநெடி யோயென்
னலஞ்செய்வினை யுண்டெனினு மன்றுநகர் நீயான்
வலஞ்செய்துவ ணங்கவெளி வந்ததிது முந்தென்
குலஞ்செய்தவ மென்றினிது கூறமுனி கூறும்.

(இ - ள்.) 'நெடியோய் - பெரியோனே! யான் வலம்செய்து வணங்க - நான் பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரிக்கும்படி, நீ - (பிரமவிருடிப்பட்டம் பெற்ற) நீ, நகர் - இந்நகரத்தில், எளி வந்த - எளிதில் எழுந்தருளியதாகிய, இது - இந்நன்மைக்குக் காரணம்,— நிலம் செய் தவம் என்று உணரின் - இத்தேயம் செய்துள்ள தவமோ என்று ஆலோசித்தால், அன்று - (அதுவும்) அமையாது; என் நலம் செய் வினை உண்டு எனின்உம் - யான் செய்துள்ள நல்வினையாயிருக்கு மென்றாலும், அன்று - (அதுவும்) அமையாது; (மற்று

என்னையோ வெனின்,—) 'முந்து என் குலம் செய் தவம் - முன்பு எனது வமிசத்தார் செய்துள்ள தவமேயாம்', என்று—, இனிது கூற - (மற்றும் தசரதன் கௌசிகனை நோக்கி) உபசாரவார்த்தைசொல்ல, முனி கூறும் - விசுவாமித்திரன் சொல்வான்; (எ-று.)—அதனை, மேலிரண்டுகவிகளிற் காண்க.

மிகப்பெரியவரான தேவரீர் இங்குஎழுந்தருளும்பெரும்பேற்றைவிளைத்தற்குப்போதுமான காரணம் இந்நாடுசெய்த தவமென்னலாமென்றால், இது முன்னமேயிருப்பதால் முன்னமேவந்திருக்கவேண்டும்;எனக்கோ அத்துணை தவப்பயன்இராது;இந்த மகாபாக்கியத்துக்கு ஏது,தொன்றுதொட்டுவருகிற என்குலத்துமுன்னோர் யாவரும்செய்து தொகுத்துவைத்துள்ள நல்வினையேயாதல்வேண்டு மென்று துதிமொழி கூறினன், தசரதன் என்பதாம். நெடியோய் - ஞானவ்ருத்தனும் சீலவ்ருத்தனுமானவனே! என்க. (சு)

எ.—இதுவும், அடுத்த செய்யுளும் - ஒருதொடர்; கோசிகன் தசரதனைப் புகழ்தல்.

**என்னனைய [1]முனிவரு மிமையவரு மிடையூறொன் றுடையராறாற், பன்னகமு நகுவெள்ளிப் பனிவரையும் பாற்கடலும் பதுமபீடத், தன்னகருங் கற்பகநாட் டணி[2]நகரு மணிமாட வயோத்தியென்னும், பொன்னகரு மல்லாது புகலுண்டோ விகல்கடந்த புலவுவேலோய்.**

(இ-ள்.) இகல் கடந்த-பகைவரை(ப்போரில்)வென்ற,புலவு வேலோய்- (அவர்களது) தசைபொருந்திய வேலாயுதத்தையுடையவனே!- என் அனைய முனிவர்உம் - என்னைப்போன்ற இருடிச்சிரேஷ்டர்களும், இமையவர்உம்- தேவர்களும், இடையூறு ஒன்று உடையர் ஆனால் - ஒருதுன்பத்தையுடையவர்களாவாராயின்,—(அவர்கட்கு),— பல் நகம்உம் நகு வெள்ளி பனி வரை உம் - பலமலைகளையும் அவமதித்துச்சிரிக்கின்ற வெள்ளிமயமான குளிர்ந்த கைலாசபருவதமும், பாற்கடல் உம் - திருப்பாற்கடலும், பதுமபீடத்தன் நகர்உம் - தாமரைமலரைஆசனமாகவுடையவனானபிரமனது சத்தியலோகமும், கற்பகம் நாடு அணி நகர்உம் - கல்பகவிருட்சத்தையுடைய சுவர்க்கலோகத்திலுள்ள அழகிய அமராவதிபட்டணமும், அணி மாடம் அயோத்தி என்னும் பொன் நகர்உம்-அழகிய உபரிகைகளையுடைய அயோத்தியென்று சிறப்பித்துச்சொல்லப்படுகிற அழகிய இந்நகரமும், அல்லாது - (புகலிடங்களாவன) அல்லாமல், புகல் உண்டுஓ - சரணமடைதற்கு உரிய இடம் (வேறு) உள்ளதோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)

இதனால், முனிவர்க்கும் தேவர்க்கும் துன்பமுண்டானால் அதனைநீக்கும் வல்லமையுள்ளவர் திரிமூர்த்திகளும் இந்திரனும் அயோத்தியரசருமேயன்றி வேறுயாவர்? என்றவாறும். 'நிலவுலகத்தவர் எளிதில்அடையக்கூடிய இடம் அயோத்தி யாதலின்,நின்னிடம் வந்தேன்யான்' என்பது தொனிக்க, அயோத்தி ஈற்றில்வைக்கப்பட்டது. சிவபிரானுக்குஇருப்பிடமான கைலாசகிரி, திருமால்தங்குமிடமான திருப்பாற்கடல், பிரமன்வசிக்குமிடமான சத்

தியலோகம், இந்திரன்வாழுமிடமான அமராவதிபட்டணம் என்றவற்றோடு, தசரதனது இராசதானியான அயோத்தியையும் ஒப்புமையமைய உடன் வைத்துச்சொன்னது, ஒப்புமைக்கூட்டவணியாம். கைலாசத்தின் வெள்ளொளி வீசுதலாகிய தன்மையால் மற்றை மலைகளைச் சிரிப்பதாகக் குறித்தது, தன்மைத்தற்குறிப்பேற்றவணி; இதனால், கைலாசம் மற்றைப்பருவதங்களினும் மிக்கதென்பது பெறப்படுகின்றது. சிரிக்கிறபோது பற்களின் வெள்ளொளி வெளித்தோன்றுதல் இயல்பு. பற்பலஇடையூறுகளைக்கடந்து நெடுங்காலம் இடைவிடாது அரியபெரிய தவத்தைச்செய்து முடித்துப் பிரமவிருடிப்பட்டம் பெற்ற தமது சிறப்பைக்கருதி, 'என்னனைய முனிவரர்' என்றார். அப்படிப்பட்டவர்களுக்கும் நீங்களே கதியென்று தசரதனைப் புகழ்தலில் நோக்காதலால், இது தற்புகழ்ச்சிக்குற்றத்தின்பாற் படாது. 'ஒன்று' என்றது, சிறி தென்றபடி. நகம் - நடத்தலில்லாதது; சலியாதது: அசலம். மீடத்தன்னகர் - எதுகைநோக்கியவிரித்தல். பி - ம்:—[1]முனிவர்களும். [2]கவரும். (எ)

அ. **இன்றளிர்க்கற் பகநறுந்தே னிடைதுளிக்கு நிழலிருக்கை யிழந்து போந்து, நின்றளிக்குந் தனிக்[1]குடையி னிழலொதுங்கிக் குறையிரந்து நிற்ப நோக்கிக், குன்றளிக்குங் [2]குலமணித்தோட் சம்பரனைக் குலத்தோடுந் தொலைத்து நீகொண், டன்றளித்த வரசன்றோ புரந்தரனின் றாள்கின்ற தரச வென்றான்.**

(இ - ள்.) அரச - சக்கரவர்த்தியே! இன் - இனிமையான, தளிர் - துளிர்களையுடைய, கற்பகம் - கல்பகவிருட்சத்தினது, நறுந் தேன் இடை துளிக்கும் நிழல் - வாசனைவீசுகிற தேன் இடையிடையே சிந்தப்பெற்ற நிழலிலே, இருக்கை - அரசுவீற்றிருத்தலை, இழந்து போந்து-இழந்துவந்து, நின் - உன்னுடைய, தளிக்கும் - செழித்துள்ள, தனி குடையின்நிழல் - ஒற்றைவெண்கொற்றக்குடையின் நிழலில், ஒதுங்கி - சேர்ந்து, குறை இரந்து நிற்ப - (தனது) குறையைச்சொல்லி யாசித்துநிற்க, நீ—, நோக்கி - (அதனைப்)பார்த்தருளி [இரங்கி யென்றபடி], குலம் குன்று அளிக்கும் மணி தோள் சம்பரனை-குலபருவதங்களை யொக்கின்ற அழகிய புயங்களையுடைய சம்பரனென்னும் அசுரனை, குலத்தோடும் தொலைத்து-வமிசத்தோடு வேரறுத்து, கொண்டு - (உன்) வசமாக்கிக்கொண்டு, அன்று - அப்பொழுது, அளித்த - கொடுத்தருளிய, அரசுஅன்றோ - அரசாட்சியன்றோ, புரந்தரன் இன்று ஆள்கின்றது-இந்திரன் இப்பொழுதும் ஆண்டுவருவது, என்றான்- என்று (விசுவாமித்திரன் தசரதனைநோக்கிக்) கூறினான்; (எ - று.)

தண்டகாரணியத்தில் வைஜயந்த மென்ற நகரத்திலே இருந்து அரசாண்டுவந்தவனும் திமித்துவசனென்னும் மறுபெயருள்ளவனும் பற்பல மாயைகளில் தேர்ந்தவனுமான சம்பரனென்ற அசுரன் பல அசுரர்களையும் அரக்கர்களையும் உடன்கொண்டு சென்று தேவர்களுடன் பெரும்போர்செய்து அவர்களைப் பலவாறு வருத்தித் தேவராசனை இந்திரனையுமுட்பட வென்று அவனது பொன்னுலகத்தை அபகரித்துக்கொண்டு துரத்திவிட,

அங்ஙனம் அரசிழந்த தேவேந்திரன் தசரதசக்கரவர்த்தியை அடுத்துச் சரண மடைந்து தன்குறையைக்கூறித் தனக்குஉதவிசெய்யுமாறு பிரார்த்திக்க, அவனது அந்நிலையைநோக்கி இரக்கங்கொண்ட தசரதன் அவ்வேண்டுகோட்குஇணங்கிக் கைகேயியையும் உடன் அழைத்துக்கொண்டு இந்திரனுக்கு உதவியாகத் தேவாசுரயுத்தத்தில் தலையிட்டுச் சம்பரனுடன்எதிர்த்துக் கடும் போர்புரிய, அந்த உக்கிரமானயுத்தத்தை ஆற்றமாட்டாத அவன் மாயையால்மறைந்து ஓட்டங்காட்டவே, அவன் சென்றசென்ற திசைகளி லெல்லாம் தசரதன்விடாது தொடர்ந்துசென்று பொருது அவனைச்சுற்றத்துடன் கொன்று, முன்பு அவனாற்கவரப்பட்ட இந்திரனதுஅரசாட்சி தனக்கு உரியதாகப் பெற்றவனாய் மீண்டு, உடனே அவ்வரசாட்சியை இந்திரனுக்குக்கொடுத்தன னென்பது, இங்குஅறியவேண்டியகதை. இங்கு அவ்வரலாற்றைக்கூறியது, கீழ்ச்செய்யுளில் முனிவரர்க்கும் இமையவர்க்கும் புகலிடமாக்க் கூறிய ஐவருள் ஒருவனான நீ அவர்களில் மற்றொருவனான இந்திரனுக்குப் புகலிடமாகுஞ் சிறப்புடையா யென்றற்கும், வேண்டியதைக் கொடுக்கவல்லாயென்றதனாலேயே நான் இங்குவந்தே னென்றற்கும்.

குலபருவதங்கள் - கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிஷதம், ஏமகூடம், நீலகிரி என ஏழாம்; கந்தமாதனமுங் கூட்டி எட்டெனவும்படும். அளிக்கும் - உவமவுருபு. குலம் மணித்தோள் என்று எடுத்து, சிறந்தஇரத்தினாபரணங்களையணிந்த தோ ளென்றுமாம்; இப்பொருளில், மணி - ஆகுபெயர். குலம் - வடசொல். புரந்தரன் என்ற வடமொழிப்பெயர்-(பகைவர்களின்) நகரங்களை அல்லது உடல்களையழிப்பவனென்று பொருள்படும்; புரம் - ஊரும், உடலும். நின்று அளிக்கும் என்றும், புரந்தரன் நின்று ஆள்கின்றது என்றும் பிரித்து உரைத்தலுமாம்; நின்று - நிலைபெற்று. குன்று அளிக்குந் தோள் - மலைகளைக் குழையச்செய்யவல்ல [அவற்றினும்வலிய] தோ ளென்றுமாம். பி - ம்:—[1]குடைக்கீழதின். [2]குருமணி. (அ)

கூ.—தசரதன் கௌசிகனைநோக்கி 'யான் செய்யவேண்டிய பணிவிடை யாது?' எனல்.

**உரைசெய்யு மளவினவன் முகநோக்கி [1]யுள்ளத்தி னொருவ ராலுங், கரைசெய்ய வரியதொரு பேருவகைக் கடல்பெருகக் கரங்கள் கூப்பி,[2]யரசெய்தி யிருந்தபய னெய்தினன்மற் றினிச்செய்வ தருளு கென்று, [3]முரசெய்து கடைத்தலையான் முன்மொழியப் பின்மொழியு முனிவ னுங்கே.**

(இ - ள்.) உரை செய்யும் அளவின்-(அம்முனிவன் இவ்வாறு) சொன்னவளவிலே,—முரசு எய்துகடைத்தலையான்-பேரிகைகள் முழங்குகிற தலைவாயிலையுடையவனான தசரதசக்கரவர்த்தி,—உள்ளத்தின் - மனத்திலே, ஒருவரால்உம் கரைசெய்ய அரியது ஒரு பேர் உவகை கடல் பெருக-எவராலும் அளவிடவொண்ணாத ஒப்பற்ற பெருமகிழ்ச்சியாகிய கடல் பொங்காநிற்க, கரங்கள் கூப்பி - கைகளைக் குவித்து [அஞ்சலிசெய்துகொண்டு], அவன் முகம் நோக்கி - அம்முனிவனது முகத்தைப் பார்த்து, 'அரசு எய்தி

யிருந்த பயன் எய்தினன் - (தேவரீர் எழுந்தருளப்பெற்றதனால்) அரசாட்சி யையடைந்திருந்ததனாலாகிய பயனைப் பெற்றேன்; இனி செய்வது அருளுக - இப்பொழுது (யான்) செய்யவேண்டுவதை நியமித்தருள்வீராக,' என்று—, முன்மொழிய - முன்னே சொல்ல,—ஆங்கு - அப்பொழுது, முனிவன் - விசுவாமித்திரன், பின் மொழியும் - பின்பு சொல்வான்; (எ - று.)—அது அடுத்த செய்யுளிற் கூறுகின்றார். மற்று - வினைமாற்று. 'ஆங்கு'-அசையு மாம்.

கரை செய்ய அரியது - கரைகோலித்தடுக்கவொண்ணாதது எனினு மாம். 'ஒருவராலுங் கரைசெய்யவரியதொரு பேருவகைக்கடல் பெருக' என்றது, உருவகம். செய்வது - கார்யம் என்னும் வடசொல்லின் மொழி பெயர்ப்பு. அருளுகென்று - தொகுத்தல். தலைக்கடை - கடைத்தலை யென இலக்கணப்போலி. முரசெய்துகடைத்தலையான் - கொடைமுரசு, மங் கலமுரசு, வெற்றிமுரசு என்னும் மூவகைமுரசமும் முழங்கப்பெற்ற தலைவா யிலை யுடையா னென்றபடி. முன்மொழியப் பின்மொழியும்—முரண் தொடை. பி - ம்:—[1] உள்ளத்துள். [2] அரைசு. [3] முரைசு. (கூ)

**க0.—வேள்விகாத்தற்கு இராமனை யனுப்புக வென்று கௌசிகன் கூறல்.**

**தருவனத்துள் யானியற்றுந் [1]தகைவேள்விக் கிடையூறாத்**
**தவஞ்[2]செய் வோர்கள், வெருவரச்சென் றடைகாம வெகுளியென**
**நிருதரிடை விலக்கா வண்ணஞ், செருமுகத்துக் காத்தியென நின்**
**[3]சிறுவர் நால்வரினுங் கரிய செம்ம, லொருவனைத்தந் திடுதியென வுயி**
**[4]ரிரக்குங் கொடுங்கூற்றி னுளையச் சொன்னான்.**

(இ - ள்.) 'தரு வனத்துள் - மரங்களடர்ந்த காட்டிலே, யான் இயற் றும்-நான் செய்யப்போகின்ற, தகை வேள்விக்கு - சிறப்பையுடைய யாகத் துக்கு, இடையூறு ஆ - தடையாக (வந்து), தவம் செய்வோர்கள் வெருவர சென்று அடை காமம் வெகுளி என - முனிவர்கள் அஞ்சும்படி (அவர்களி டம்) போய்ச்சேர்கிற காமக் குரோதங்கள் போல, நிருதர் - இராக்கதர்கள், இடை - நடுவிலே, விலக்கா வண்ணம் - தவிர்க்காதபடி, செருமுகத்து காத்தி - யுத்தத்தில் (நின்று) காப்பாயாக, என - என்று கட்டளையிட்டு, நின் சிறுவர் நால்வரின்உம் கரிய செம்மல் ஒருவனை தந்திடுதி - உனது புத்திரர் கள் நால்வருள்ளும் கருநிறமுடைய ஒப்பற்ற ஸ்ரீராமனை (என்னுடன்) அனுப் புவாயாக', என - என்று, உயிர் இரக்கும் கொடுங் கூற்றின் - பிராணனை யாசிக்கின்ற கொடிய யமன் போல, உளைய - (சக்கரவர்த்தியின் மனம்) வருந்தும்படி, சொன்னான் - (விசுவாமித்திரன்) கூறினான்; (எ - று.)—என சொன்னான் என இயையும்.

'ஸ்ரீராமனை என்னுடன் அனுப்புவாயாக' என்று முனிவன்வேண்டியது, சக்கரவர்த்திக்கு, யமன் வந்து 'உன் உயிரைக் கொடு' என்று கேட்டாற் போலிருந்தது என்பதாம். உவமையணி. இராமன் தசரதனுக்கு உயிர் போன்றவ னென்பதை, "ஒவியவெழிலுடையொருவனையலதோ, ராவியு

முடலமுமிலதென்வருளின்,மேவினனுலகுடை வேந்தர்தம்வேந்தன்'' என்று கூறிப்போந்தமை காண்க. தந்தைக்கு மூத்தமகனிடத்து அன்பு மிக்கிருத்தல், இயல்பு. இராமன் கரிய திருமேனிநிற முடைய னாதலால், 'கரியசெம்மல்' எனப்பட்டான். அன்றியும், வேதவழக்கின்படி ராம னென்ற திருநாமம் கருநிறமுடையவ னென்றும் ஒரு பொருள்படு மாதலால், அதன் பரியாயநாமமாக 'கரியசெம்மல்' என்றா ரென்றலும் ஏற்கும். 'தருவனம்' என்றது - சித்தாச்சிரமத்தை. சித்தாச்சிரமம் - தன்னிடத்திற்செய்யுந் தவவேள்விகள் விசேஷமாகச்சித்திபெறும் இடம். விசுவாமித்திரன் நித்தியவாசஞ்செய்வது இமயமலை யென்றும், தலவிசேஷம்பற்றி அவன் அங்கு நின்று சித்தாச்சிரமத்துக்குவந்து வேள்வி செய்துமுடித்துச் சீதாகல்யாணத்துக்குப் பின்பு மீண்டும் இமயத்திற்கே செல்கின்றன னென்றும்உணர்க. காமம் கோபம் லோபம் மோகம் மதம் மாத்ஸர்யம் என்ற ஆறுகுற்றங்களும், தீவழிச்செலுத்திக் கெடுப்பன வாதலால் உட்பகை யென்றும், நித்யசத்ருவென்றுங் கூறப்படும்; அவையனைத்தினுள்ளும் மிகக்கொடிய காமகோபங்கள், தவவேள்விக்கு இடையூறுய்வந்து விலக்குகிற அரக்கர்க்கு உவமை கூறப்பட்டன. புறப்பகைவராகிற அரக்கர்களிற் சிறந்தவர்களான சுபாகு மாரீசன் என்னும் இருவர்க்கும் உட்பகைகளிற் சிறந்த காமக்குரோதங்களை உவமையாக்கருதி, இங்ஙனம் வகுத்துக்கூறின ரென்னலாம். காமம் வெகுளி மயக்கம் என்ற குற்றங்கள் மூன்றனுள் காமவெகுளிகட்குக் காரணமாகிற மயக்கமென்னும் அவிச்சை போல, இச்சுபாகுமாரீசர்கட்குத்தாயான தாடகையைக் கருதுக. யாகத்துக்குத் தீக்ஷைபண்ணிக்கொண்டிருக்கிறவன் கோபத்துக்கு இடங்கொடுக்கலாகா தென்பது விதி யாகையால், யான் கோபங்கொண்டு அவர்களைச் சபித்து அழிக்கத் துணிந்திலே னென்ற கருத்தைத் தொனிக்கவைத்தற்பொருட்டு இங்குஇவ்வுவமைகூறினன்,முனிவன்.இவ்விஷயம்,வால்மீகத்தில் வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளது. காமம்-எனக்கு இதுவேண்டுமென்று ஒரு பொருளின்மீது உண்டாகும் ஆசை; அதுபற்றி அதன்மறுதலையின் மீது செல்லுங் கோபம், வெகுளி. வெருவர, வெருவா - பகுதி. நிருதர் - நைருதர்என்ற வடசொல்லின் விகாரம்; நிருருதியென்ற திக்பாலகனது மரபின ரென்பது, இதன் காரணப்பொருள். காத்தற்கு எழுவாய் - இராமனும், தந்திடுதற்கு எழுவாய் - தசரதனுமாவர். பி - ம்:—[1] தவவேள்வி. [2] செய்வோரை. [3] புதல்வர். [4] ஈர்க்கும். (சo)

கக.—அதுகேட்டுத் தசரதன் மிகவருந்தல்.

எண்ணிலாவ[1] ருந்தவத்தோ னியம்பியசொன் மருமத்தி னெறிவேல் பாய்ந்த,புண்ணிலாம் பெரும்புழையிற் கனனுழைந்தா லெனச் செவியிற் புகுத லோடு,முண்ணிலா விபதுயரம் பிடித்துந்த வாருயிர் நின் றூச லாடக், கண்ணிலான் பெற்றிழந்தா லெனவுழந்தான் கடுந் துயரங் கால வேலான்,

(இ - ள்.) எண் இலா அருந் தவத்தோன்-அளவில்லாத அருமையான தவத்தையுடையவனான விசுவாமித்திரன், இயம்பிய-(இங்ஙனஞ்) சொன்ன, சொல் - வார்த்தையானது, மருமத்தின் எறி வேல் பாய்ந்த புண்ணில் ஆம் பெரும் புழையில் கனல் நுழைந்தால் என - மார்பிலே (பகைவன்) எறிந்த வேலாயுதம் பாய்ந்ததனாலாகிய புண்ணி லுண்டான பெரிய துவாரத்திலே கொள்ளிக்கட்டை நுழைந்தாற் போல [மிகவருத்தந்தரும்படி], செவியில் புகுதலோடும்-(சக்கரவர்த்தியின்) காதுகளில் நுழைந்தவுடனே,—காலன் வேலான் - (பகைவர்க்கு) யமனையொத்த வேலாயுதத்தையுடையவனான அத்தசரதன், உள் நிலாவிய துயரம் பிடித்து உந்த - மனத்திலுண்டான துன்பம் பிடித்து வெளியேதள்ளுதலால், ஆர் உயிர் நின்று ஊசல் ஆட - அரிய உயிரானது ஊஞ்சலாடுவதுபோலப் போவதும்வருவதுமாயிராநிற்க, கண் இலான் பெற்று இழந்தால் என - பிறவிக்குருடன் கண்களைப் பெற்று (மீண்டும்) இழந்தாற்போல, கடுந் துயரம் உழந்தான் - மிக்க துன்பத்தை அனுபவித்தான்; (எ - று.)

புத்திரவாற்சல்யத்தால் இங்ஙனம் மிக்கசோகமுற்றனன் தசரதனென்க. பன்னிரண்டுபிராயமேயுடைய சிறுவனான இராமனை அரக்கரோடு போர்செய்தற்பொருட்டு முனிவன்பின்னே அனுப்புதல் அத்திருமகனுக்கு அபாயகரமாமென்பது, தசரதன் துணிபு. "அதிஸ்நேஹ: பாபஶங்கீ" என்றபடி ஒருபொருளினிடத்து மிக்கஅன்புகொண்டாரது மனம் அப்பொருட்குக் கேடுவருமென்ற சங்கையையே கொள்ளுதல் இயல்பு. அறுபதினாயிரம்வருஷகாலமாகப் பிள்ளையில்லாதிருந்த சக்கரவர்த்தி பின்பு தான் அரிதிற்பெற்றதிருமகனை இப்பொழுது முனிவனுக்குக் கொடுத்தலை அம்மகனை இழக்கின்றவாறு போலக் கருதுகின்றன னாதலின், அதற்கு, இயற்கையிற் கண்ணில்லாதிருந்த பிறவிக்குருடன் தெய்விகமாக ஒருகால் கண்ணைப்பெற்று அதனை உடனே இழத்தலை உவமைகூறினர். பிறவிக்குருடன் மனத்திற் கொள்ளுந் துயரத்தினும், அவன் ஒருகால் கண்களைப் பெற்று உலகத்துப் பொருள்களையெல்லாம் கண்ணுற்று ஆனந்தமடைந்து கொண்டிருக்கும்போது அக்கண்களை மீளவும் இழக்கநேர்ந்தால் அடையும் வருத்தம் மிகவும் அதிகமாவது, வெளிப்படை; அவ்வாறே, பிள்ளையின்றியிருந்தசோகத்தினும், பிள்ளைபெற்று இழக்கநேர்கிற சோகம் பெரிதென்பதும் பிரசித்தமே. புண்ணிலாம் பெரும்புழையிற் கனல்நுழைதல் - மிக்க அன்பினால் இவ்வருமைமகனுக்கு எப்பொழுது என்னதீங்கு நேர்கிறதோவென்றுகவலையுற்றுநிற்கிற நிலையில் அதற்குமேல் இங்ஙனம்விசுவாமித்திரன் வந்துசொன்னது வருத்தத்தின்மேல் வருத்தத்தை விளைப்பதால், உவமை. அன்றியும், தசரதனாற் புத்திரசோகமடைந்த கண்ணிலியான முனிவனொருவன் தன்மனைவியுடன் தீக்குதித்து உயிர்விடும்போது 'நீயும் எம்மைப் போலவே மகப்பிரிவினாலாகிய துயரத்தால் இறக்கக்கடவாய்' என்று இட்ட சாபம் தசரதனது நினைவைவிட்டு என்றும் நீங்காததாக அதுபற்றி அவன் எப்பொழுதும் கவலைகொண்டிருக்கிறபோது கௌசிகன்வந்து 'இராமனைத் தந்திடுதி' என்றது, புண்ணிலாம்பெரும்புழையிற் கனல்நுழைதல் போன்ற

தென்க. இவ்வகையான சோகம் மனத்திற்பொங்குதலால் தசரதன் மூர்ச்சையடைந்தனனே யன்றி, அந்திமகாலம்நேர்ந்திலதாதலின் மரணமடைந்திலன்; இங்ஙனம் மூர்ச்சையும் தெளிவுமாகிற நிலையில் உயிர்போகத்தொடங்குவதும் மீளவருவதுமாய் அலைதல்பற்றி, 'உண்ணிலாவியதுயரம்பிடித்துந்த ஆருயிர் நின்று ஊசலாட' என்றார்.

எண் நிலா எனப்பிரித்து - (ஒருவரது) மனவாராய்ச்சிக்கு அடங்காத என்றும், எண் நிலாவு எனப்பிரித்து - (பெரியோரது) எண்ணத்தில் நிலைபெற்ற என்றும், வரும் தவம் எனப் பிரித்து - மேன்மேல் வளர்கின்ற தவமென்றுங் கூறலாம். மருமம் = மர்மம்: உயிர் நிலை. யமன்போலத் தவறாது கொல்லும்வேலென்பார், 'காலவேல்'என்றார். பி-ம்: - [1] அருங்குணத்தோன்.

**கஉ.—தசரதன் தானேவந்து வேள்விகாப்பதாகக் கூறுதல்.**

**தொடை[1]யூற்றிற் றேன்றுளிக்கு நறுந்தாரா னொருவண்ணந் துயர நீங்கிப், படையூற்ற மிலன்சிறிய[2]னிவன்பெரியோய் பணியிது வேற் பனிநீர்க் கங்கை, புடையூற்றுஞ் சடையானும் [3]புரந்தரனும் நான்முகனும் புகுந்து செய்யு, மிடையூற்றுக் கிடையூறு யான் காப்பென் பெருவேள்விக் கெழுக வென்றான்.**

(இ - ள்.) (பின்பு),-தொடை ஊற்றின் தேன் துளிக்கும் நறுந் தாரான்- தேன்கூடு (தேன்) ஊற்றுவதுபோல (இடையறாது) தேனைச் சிந்துகின்ற வாசனைவீசும் மாலையையுடையவனான சக்கரவர்த்தி,— ஒரு வண்ணம் துயரம் நீங்கி - ஒருவாறு துன்பஞ் சிறிதுதணியப்பெற்று,— (முனிவனை நோக்கி),— 'பெரியோய் - (அறிவொழுக்கங்களாற்) பெரியவனே! இவன் - இந்த ராமன், சிறியன் - இளம்பிராயமுடையவன்: படை ஊற்றம் இலன் - ஆயுதத்தேர்ச்சியில்லாதவன்; (ஆதலால் இவன் வேண்டாம்); இது பணி ஏல் - (அரக்கர்விலக்காதபடி வேள்விகாத்தலாகிய) இதுவே (நினது) கட்டளையானால், பனி நீர் கங்கை புடை ஊற்றும் சடையான்உம் - குளிர்ந்த நீரையுடைய கங்காநதியை ஒருபக்கத்திலே ஒழுகவிட்ட (கபர்த்தமென்னுஞ்) சடைமுடியையுடையவனான சிவபிரானும், நான்முகன்உம் - பிரமனும், புரந்தரன்உம் - இந்திரனும், புகுந்து செய்யும் - தனித்தனியேனும் ஒருங்குகூடியேனும் வந்து செய்யும், இடையூற்றுக்கு - தடைகளுக்கும், இடையூறு ஆ - தடைஉண்டாக, யான் காப்பென் - அடியேன் (வேள்வியைக்) காத்திடுவேன்; பெரு வேள்விக்கு எழுக - பெரிய யாகத்தைச் செய்தற்கு எழுந்தருள்க,' என்றான் - என்று கூறினான்; (எ - று.)

முனிவனுக்குத் தக்கசமாதானஞ்சொல்லி அவனுடன் இராமனை அனுப்பாதிருக்கலா மென்ற ஒருகருத்தினால் அத்துயரம் சிறிதுதணிந்தன னென்றற்கு, 'ஒருவண்ணந் துயரநீங்கி' எனப்பட்டது. இராமனுடைய இளமையையும், அரக்கரையழித்தற்கு வேண்டியவளவு படைக்கலப்பயிற்சி யில்லாமையையும், அவ்விஷயத்தில் தனக்குஉள்ள பெருந்திறமையையும் எடுத்துக்கூறி, 'சிறியவனான இராமன் ஏதுக்கு? நான் வந்து காக்கின்றேன்' என்றான். ஆற்றலாற்பெரியராய சிவபிரான்முதலிய தலைமைத்தேவர்கள் இடையூறு

செய்வராயினும் அவற்றைத் தவிர்ப்பேனெனவே, பிறர்செய்யும் இடையூற்றையொழித்தல் கூறவேண்டாதாயிற்று. 'இடையூற்றுக்குஇடையூறு' என்றதை, "இடும்பைக்குஇடும்பைபடுப்பர்" என்றாற்போலக் கொள்க. சிறியன்-பாலன்; "பதினாறுபிராயமுமாகாதவன்" என்று ஸ்ரீவால்மீகத்திற்கூறியுள்ளது; பன்னிரண்டுபிராயமுள்ளவ னென்று அதற்குக் கருத்துரைப்பர், ஆன்றோர். 'படையூற்றமிலன்' என்பதற்கு - போர்ப்பயிற்சியில்லாதவனென்று பொருளுரைக்கவுந் தகும். பெரியோய் - மகாத்மாவே! என்க.

பிரமனுக்கு உதவியாகப் படைப்புத்தொழில்நிகழ்த்துகிற உபப்பிரமர்கள் ஒன்பதின்மருள் ஒருவனான தக்ஷமுனிவனது யாகத்தைச் சிவபிரான் தனதுஅமிசமான வீரபத்திரக்கடவுளால் அழித்தமைபற்றியும், அழித்தற்கடவுளாதல்பற்றியும், அப்பெருமானை இங்கு முதலில் எடுத்துக்கூறினன். சிவபெருமானது சடையினின்று வெளிப்போந்த தேவகங்காநதி ஜஹ்நுமுனிவனது யாகசாலையை யழித்து அம்முனிவனது வேள்விக்கு இடையூற்றை விளைத்ததாதலால், 'கங்கை புடையூற்றுஞ் சடையான்' என்ற பெயர் கருத்துடையடைகோளியணியாம். சிருஷ்டிகர்த்தாவான பிரமனுக்கு மாறாகப் பிரதிசிருஷ்டிசெய்யத்தொடங்கியது காரணமாய்க் கௌசிகன்மீது அப்பிரமன் அழுக்காறும் கோபமுங்கொண்டு அவன்செய்யும்வேள்வியை அழிக்கவரக்கூடு மென்பது பற்றி, இங்கு நான்முகன்எடுத்துக் கூறப்பட்டனன். 'வேறுஇந்திரனை உண்டுபண்ணுகிறேன்; அல்லது, உலகத்தை இந்திரனேயில்லாமற் செய்துவிடுகிறேன்' என்று சபதங்கூறி, தான் படைக்கிற சுவர்க்கத்துக்குத் திரிசங்குவை இந்திரனாக்க முயன்றவனாதலால், இம்முனிவன்விஷயத்தில் இந்திரனும் இடையூறுசெய்தற்குஉரியனென்க. அன்றியும், இந்திரன் சகரசக்கரவர்த்திமுதலிய பலரது வேள்விகட்கு இடையூறுசெய்தவனுமாதல்காண்க. திரிமூர்த்திகளுள் திருமாலை இங்குக்கூறாதுவிட்டதற்குக் காரணம் 'வேள்வியாய்த் தக்கணையாய்த் தானுமானான்" என்றபடி திருமால் யஜ்ஞமூர்த்தியும் யஜ்ஞபதியும் யஜ்ஞாங்கனுமாயிருந்து பயனளிப்பவனாதலா லென்பர்.

தொடுக்கப்படுவது-தொடை. படை-(பகைவரைப்)படுத்தற்குக்கருவியானது; படுத்தல்-அழித்தல். தொடை-மாலைபோல எனினுமாம். ஊற்றம் - ஊன்றியுணர்தல்; பணி-செய்யவேண்டியகாரியம். [2]அவர்பெரியோரென்ற பாடத்தில், அவர் - அரக்கர். பி - ம்:—[1] ஊற்றும். [3] புரந்தரனும்வெகுண்டெழுந்து, நான்முகனும் புரந்தரனும். (க௨)

கங.—கௌசிகனது பெருங்கோபமும், அதனாலுண்டாகிய குழப்பமும்.

என்றனனென் றலுமுனிவோ டெழுந்தனன்மண் படைத்த
முனி யிறுதிக் கால, மன்றெனவா மெனவிமையோ ரயிர்த்தனர்மேல்
வெயில்கரந்த தங்கு மிங்கு, நின்றனவுந் திரிந்தனமீ நிவந்தகொழுங்
கடைப்புருவ நெற்றி முற்றச், சென்றன[1]வந் ததுநகையுஞ் சிவந்தன
கண் ணிருண்டனபோய்த் திசைக ளெல்லாம்.

(இ - ள்.) என்றனன் - என்று(முனிவன்கருத்துக்குமாறாகத் தசரதன்) சொன்னான்; என்றலும் -என்று சொன்னவளவிலே, மண் படைத்த முனி - உலகங்களை (வேறாகச்) சிருஷ்டிக்கத்தொடங்கியவிசுவாமித்திரமுனிவன், முனிவோடு எழுந்தனன்-கோபத்தோடு எழுந்திருந்தான்; (அப்பொழுதுஅதனை நோக்கி), இமையோர்-தேவர்கள், இறுதி காலம் ஆம் என அன்று என- உல ...முடியுங்காலம் இதுவாகுமென்றும் அன்றென்றும், அயிர்த்தனர் - சந் ... கள்; மேல் வெயில் கரந்தது - ஆகாயத்தில் விளங்குகின்ற சூரிய ... போயிற்று; அங்கும் இங்கும் நின்றனஉம் திரிந்தன - அவ்வுல ... லகத்தும் [எவ்வுலகத்தும்] நிலையாய்நின்ற அசரங்களும் சுழன் ... கடை புருவம் மீ நிவந்த நெற்றி முற்றசென்றன - (அக் முனிவ...து) செழுமையான புருவநுனிகள் மேலேறியனவாய் ...டு மூவதும் பரந்தன;நகையும் வந்தது - (அம்முனிவனுக்குக்கோபத் தாற்) சிரிப்பும் உண்டாயிற்று; கண் சிவந்தன - கண்கள் சிவந்துவிட்டன; திசைகள் எல்லாம் போய் இருண்டன - எல்லாத்திக்குக்களும் இருண்டு போயின; (எ - று.)

தன் வார்த்தைக்குத் தசரதன் குறுக்குச்சொன்னதுபற்றி விசுவாமித்திரன் பெருங்கோபங்கொண்டு ஆசனத்தைவிட்டு எழுந்தவளவிலே, அம் முனிவன் எழுந்தபரபரப்பைக் கண்டு 'இம்முனிவனால் உலகத்துக்கே முடியுங்காலம் வந்துவிடுமோ!' என்று தேவர்கள் சங்கித்தார்கள்;சூரியன் மறைந்தான்; உலகங்கள் நிலைபெயர்ந்து சுழலலாயின; அப்போது முனிவன் புருவத்தைநெறித்துப் பெருஞ்சிரிப்புச்சிரித்துக் கண்சிவந்தவளவிலே, திக்குக்களெல்லாம் இருண்டு...யின என்பதாம். திசைகளெல்லாம் இருண்டு போனமைக்குக் காரணம், அவனது கோபாக்கினியிலுண்டான புகையென்னலாம். மண்படைத்தமுனி இறுதிக்காலம் என்றுஎடுத்து - படைத்தற் கடவுளான பிரமனது முடிவுகாலம் [மகாப்பிரளயகாலம்] என்று உரைத்தலுமாம். இறுதிக்காலம், அன்று என ஆம் - அன்றைக்கு என்னும்படி ஆய் விடுமோ, என - என்று, அயிர்த்தனர் - சங்கித்தார்... னுமாம். வெயில்- சினையாகுபெயராய்ச் சூரியனைக்குறித்தது. நின்ற... அங்கும் இங்கும் திரிந்தன என்று மொழிமாற்றி, நிலைத்திணைப்பொ... ஸ்தாவரங்களும் அங்கும்இங்குமாகச் சுழலலாயின என்றலும் அமை... நெறித்தலும், நகைத்தலும், கண்சிவத்தலும் - கோபக்குறி. 'எ... ன்றது - அநுவாதம். அன்றென ஆமென, அங்கும் இங்கும், நின்... தன, சென்றன வந்தன, சிவந்தன இருண்டன - தொடைமு... இச்செய்யுள் முந்திய செய்யுளோடு அந்தாதித்தொடையமைப் ப...ப்பெற்றுள்ளது. இச் செய்யுள், முழுவதும் கோபகாரியம் விளங்குவதா... ரௌத்ர ஸமென்னும் வேதளிச்சுவைக்கு உதாரணமாகத்தக்கது. பி... [1]வந்தன. (௩௩)

**௩௪.—வசிட்டன் 'இராமனை அனுப்புக' என்றல்.**

கறுத்த மாமுனி கருத்தை யுன்னிநீ
பொ...த்தி யென்றவற் [1]புகன்று நின்மகற்

குறுத்த லாகலா வுறுதி யெய்துநாண்
மறுத்தி யோவெனு வசிட்டன் [2]கூறினன்.

(இ - ள்.) (இவ்வாறு விசுவாமித்திரன் பெருங்கோபங் கொண்டபொழுது),—வசிட்டன்—,—கறுத்த மா முனி கருத்தை உன்னி - கோபங் கொண்ட அவ்விசுவாமித்திரமகாமுனிவனது எண்ணத்தை அறிந்து, நீ பொறுத்தி என்று அவன் புகன்று - 'நீ பொறுத்தருள்வாயாக' என்று அம் முனிவனை நோக்கிச்சொல்லி,—(உடனே தசரதனைநோக்கி), உனது குமாரனுக்கு, உறுத்தல் ஆகலா உறுதி எய்தும் நாள் ... உபப்பிரம... அடைவித்தற்குக்கூடாத பெருநன்மைகள் (தாமாக) வந்து ... சிவபிரான்... தில், மறுத்தியோ - (அவற்றைத்) தடுக்கக்கடவையோ ... அழித்த... கூறினன்—; (எ - று.)

விசுவாமித்திரனது மகிமைகளையெல்லாம் வ... கூடாக அறிந்தவனாதலால், அவனதுகோபத்... சக்கரவர்த்தித்திருமகனுக்கும் என்னதீங்குவரு... அம் முனிவனுக்குச் சமாதானங்கூறி 'இவன் இ... இராமனைத்தரும்படி யாசிப்பதெல்லாம் இ...ாகவே யல்லது வேறன்று: வலியவந்த சீதேவி... தள்ளுதல் போல, இவனால் உனதுகுமாரனு...மகள் நேரவிருப்பதைத் தடுக்கலாகாது'என்று ...க்கலக்கத்தை மாற்றுவானாயின னென்க. அ...லாம், அவன்போகிற வழியில் விடாமல் தடுத்து ...டாது நன்மைநிகழும்படி இடித்துக் கூறவேண்டு...மைச்சர்க்கும் கடமையாதலால், வசிட்டன் இ...சுவாமித்திரனது புருஷகாரத்தால் இராமனுக்கு...தையும் வசிஷ்டன் ஞானக்கண்ணாலுணர்ந்தது... உறுத்தலாகலாவுறுதி யெய்துநாள் மறுத்தியோ'...ம். தனது குமரர்கட்குத் தக்கபருவம் வந்ததென்று...தைக்குறித்து அந்தச்சபையில் ஆலோசிக்கும்போதே விசு...படுவது...ன் அங்குவந்தன னென்பது, முதனூலால் விளங்கும். பி...-அழித்தல் ... [2]கூறுவான். (௧௪)

கரு. ... பெருகு வெள்ளம்போய்
... வேலைவாய் முடுகு மாறுபோ
...ளவில் விஞ்சைவந்
...றெதிர்ந்த தென்னவே.

(இ - ...ன! பெய்யும் மாரியால் பெருகு வெள்ளம் - பெ... பெருகுகின்ற வெள்ளங்கள், போய்—,மொய்கொள் வே...மையைக் கொண்ட கடலிலே, முடுகும் ஆறுபோல் - வி...ம் போல, நின் மகற்கு - உனது குமாரனாகிய ஸ்ரீராமனுக்...நசை-அளவில்லாத வித்...வந்து எய்து-

வந்துசேரும்படியான, காலம் - நற்காலம், இன்று எதிர்ந்தது-இன்றைக்கு நேர்ந்தது,' என்ன-என்றும்(வசிட்டன் சக்கரவர்த்திக்குச்)சொல்ல,—(எ-று) —'குருவின்வாசகங்கொண்டு' என அடுத்த கவியோடு தொடரும். ஆதலே இதுவும் அடுத்த செய்யுளும் - குளகமாம்.

கீழ் தொகுத்துச்சுட்டியதை வகுத்துக்காட்டியவாறாகும், இது. இ கௌசிகமுனிவன்வசத்திலுள்ள அஸ்திரசஸ்திரவித்தைகளனைத்தும் இ னால் இராமனிடம் வந்துசேரப்போகின்றன என்றவாறு; இதற்கு, மழைய னாற் பெருகும் வெள்ளங்களெல்லாம் சென்று ஒருங்கே கடலினிடஞ் சே தலை உவமைகூறினர்; உவமையணி. எல்லாஅஸ்திரங்களும், ப்ருசாசுவ முனிவனுடைய குமாரர்கள்: அங்ஙனம் அவனிடமிருந்துஉண்டான நூ அஸ்திரசஸ்திரவித்தைகளும் அவனால் விசுவாமித்திரனுக்குக் கொடுக்கப் பட்டனவென்று முதனூலால் தெரிகிறது. உபமானமாகிய வெள்ளத்துக் குக்கொ[illegible] 'பெய்யுமாரியாற்பெருகு' என்ற அடைமொழி, உபமேயமாகிய அளவில்விஞ்சைகள் [illegible] அங்ஙனம் பிருசாசுவமுனிவனிடமிருந்து தோன்றி விசுவாமித்திரனி[illegible] [illegible]த்த[illegible]தவை யென்ற கருத்தைக் குறிப்பிக்கும். எவ் வளவுவெள்ளம்பாய்ந்தாலு அவ்வளவையும் தன்துஅகத்துஅடக்கிக்கொள் ளவல்லகட[illegible]லென்பார், 'மொய்[illegible]ள்வேலை' என்றார். இராமனும் அங்ஙன மே எவ்வளவுவித்தைகளையும் [illegible]ரக்[illegible] அகத்துத்தரிக்கவல்லவ னென்பது போதரும். ("ஸமுத்ரஇவ காம்பீ[illegible] டினி[illegible]ன்று ஸ்ரீவால்மீகிபகவானும் இராம பிரானுக்கு ஆழ்ச்சியிற் கடலை உ[illegible] [1]மு[illegible]றியுள்ளார்.) பி-ம்:—[1]வேலையை, வேலைமேல். (கஞ)

கசு.—உடனே தசரதன் [illegible]டன்பட்டு இராமனை வரவழைத்தல்.

குருவின் வாசகங் கொண்டு கொற்றவன்
றிருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென
வருக வென்றன னென்ன லோடும்வந்
தருகு சார்ந்தன னறிவி னும்பரா[illegible]

(இ - ள்.) குருவின் வாசகம் கொண்டு - (இங்ஙனங்கூறிய) குலகுருவா கிய வசிட்டனது வார்த்தையை ஏற்றுக்கொண்[illegible] என்று கொற்றவன் - வெற்றி யையுடையவனான தசரதன், (ஏவலாளரைநோக்கி[illegible] பொருந்[illegible] திருவின் கேள் வனை கொணர்மின் என - '(நீங்கள்) போய் இலக்[illegible] [illegible]ச்சியோ[illegible] னைஸ்ரீராமனை அழைத்துக்கொண்டு வாருங்கள்' என்று கட்டளை[illegible] [illegible]வர்கள் உடனே இராமனிடஞ்சென்று), வருக என்றனன் என்ன[illegible] அழை[illegible] '(சக்கரவர்த்தி உம்மை) வரவேண்டுமென நியமித்தான்' என்று [illegible] சபையை[illegible] [illegible]ாவிலே,—அறி வின் உம்பரான்-யாவரறிவையுங்கடந்துள்ளவனை[illegible] ப்பொருள்[illegible] [illegible]ங்கள். [illegible]ந்து அருகு சார்ந்தனன் - தந்தையருகில் வந்துசேர்ந்தான்; ([illegible]

குரு என்ற வடசொல் - அஜ்ஞானமனவிருளை[illegible] [illegible]வ னென்று உறுப்புப்பொருள்படும்; கு - இருள். குருவாக்கிய[illegible] காள்ளுதல [illegible]ரித்ததனால், கௌசிகனது சாபத்துக்கு உள்ளாகாது மகனுக்கு [illegible]மைபோ[illegible] [illegible]ய மேன்மை பெறுதல் தோன்ற, இங்கே 'கொற்றவன்' என்[illegible]ரு[illegible] [illegible]தியின் செல்

வங்கட்கும் இராச்சியத்துக்கும் உரிய மூத்தமக னாதலால், இராமன் 'திருவின்கேள்வன்' எனத்தக்கான். சீதாகல்யாணம் சமீபித்ததனால், இந்த மங்கலவார்த்தை தசரதன் வாக்கில் வந்த தென்னலாம். 'அறிவினும்பரான்' - "எங்கள்நான்மறைக்குந் தேவரறிவிற்கும் பிறர்க்கு மெட்டாச், செங்கண்மால்," "வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர்தெரிகிலா,ஆதிதேவர் அவர் எம்மறிவினுக்கறிவரோ". 'அறிவினும்பரான் வந்து அருகு சார்ந்தனன்' என்றது - எவர்க்கும் எட்டாத பரத்துவநிலையிலுள்ளவன் இங்கு மேற்கொண்ட மநுஷ்யபாவனைக்கு ஏற்ப, மகன் தந்தையினிடம் ஒழுகவேண்டிய முறை தவறாது நடந்தன னென்றவாறு. இனி, 'அறிவி னும்பரான்' என்பதற்கு - அறிவினால் மேம்பட்டவ னென்று உரைத்தலும் ஒன்று. (கசு)

**கஎ.—இராமனை இலக்குமணனுடன் கௌசிகனிடம் தசரதன் ஒப்பித்தல்.**

வந்த நம்பியைத் தம்பி தன்னொடு
முந்தை நான்மறை முனிக்குக் காட்டிநற்
றந்தை நீதனித் தாயு நீயிவர்க்
கெந்தை தந்தன னியைந்த [illegible]கன்றான்.

(இ - ள்.) (உடனே தசரதன்),—த[illegible]ன்னொடும்-இலக்குமணனுடனே, வந்த நம்பியை - (தன்னருகி[illegible]ஸ்ரீராமனை, முந்தை நால் மறை முனிக்கு காட்டி - அநாதியான [illegible]தங்களிலும்வல்ல விசுவாமித்திரமுனிவனுக்குச் சுட்டிக்காண்[illegible]ந்தை - எமது தலைவனே! இவர்க்கு - இவ்விளங்குமரர்க்கு, நல் தந்[illegible] - நல்லதந்தையும் நீயே; தனி தாய்உம் நீ-ஒப்பற்ற தாயும் நீயே; தந்தனன் (இவர்களை உன்னிடம்) ஒப்பித்தேன்: இயைந்த செய்க-(இவர்கட்கு)ஆகவேண்டிய அநுகூலங்களைச் செய்தருள்வாயாக,' என்றான் - என்றுசொல்லி(அவ்விருவரையும் அம்முனிவனிடம் அடைக்கலமாக)க் கொடுத்தான்; (எ - று.)

இயைந்த செய்[illegible]ன்பதற்கு - (இவர்களைக்கொண்டு உனக்கு ) ஆகவேண்டிய காரியங்க[illegible]செய்துகொள்வாயாக வென்றுசொன்னானெனப் பொருள்கொள்ள[illegible]னும், தனதுமகனால் அம்முனிவனுக்குக் காரியமாவதென்ற என்[illegible]வசிஷ்டன்வார்த்தையால் நீங்கித் தனதுமகனுக்கு அம்முனிவனா[illegible]கள் நிகழவிருக்கின்றன வென்ற கருத்தே தசரதனுக்கு நிலைத்[illegible]ல், அவ்வுரை சிறவாது; 'நல்தந்தைநீ தனித்தாயும்நீ இவர்க்கு எ[illegible]னன்' என்ற அடைக்கலவார்த்தைக்கும், 'கையடைப்படலம்[illegible]படலப்பெயர்க்கும் முற்கூறியவுரையே ஏற்றதாம். கரியசெம்ம[illegible]னத் தந்திடுதி' என்று வேண்டிய முனிவனுக்குத் தசரதன் [illegible]ணனையும் அனுப்பியது என்? எனின்,— இளமை தொடங்கி எ[illegible] விட்டுப்பிரியாது இலக்குமணன் இராமனோடு ஒற்றுமைப்பட்ட[illegible],அவனைஉடன்அனுப்பியமை மாறுபாடாகாதென்க. இங்ஙனம் இ[illegible]மைபற்றியே,பின்பு பரதன்,இலக்குமணனை "யாவர்க்குந்தொழுகு[illegible]மன்பின்பு பிறந்தானு முளனென்னப் பிரியாதான்" என்று கொ[illegible]ங் காண்க. இராமனைத்தருக வென்று முனிவன்

வேண்டியபடி தசரதன் உடனே அவனை அனுப்பாது மறுத்து அம்முனிவன் திறத்தில் அபசாரப்பட்டன னாதலால், அக்குற்றந்தீர அபராதக் காணிக்கையாக இலக்குமணனையும் சேர்த்து அனுப்பினனென்று சமத்காரமான கருத்துக் கூறுதலு முண்டு.

நம்பி - ஆடவரிற் சிறந்தவன்; நமக்குத்தலைவனென்றும், (யாவரும்) நம்பிச் சரணமடையத்தக்கவ னென்றும் இதற்குக் காரணப்பொருள் கூறலாம். பிள்ளையின் உயர்ச்சி மிகுதிக்குப் பிதா காரணமாதலால், 'நல் தந்தை'என்று அடைமொழிகொடுத்து முதவிற் கூறினர்; அன்றி, பெற்றதாயை 'நற்றாய்' என்பதுபோலப் பெற்றதந்தையை 'நற்றந்தை'என்றதாகவுங் கொள்ளலாம். 'தனித் தாய்' என்று சிறப்பித்துக்கூறியது,"தாயொக்கு மன்பின்"என்றபடி மக்களிடத்துத் தாய் அன்பிற்சிறத்தலால். தந்தை இதத்தையே செய்வன், தாய் பிரியத்தையே செய்வள்; ஆகவே, தந்தைசெய்யும் உதவியைத் தாய் செய்யமாட்டாள்;தாய்செய்யும்உதவியைத் தந்தைசெய்யமாட்டான்; அங்ஙனன்றி, அவ்விருவரை[illegible]ர்மைகளையும் இவர்கட்கு நீயேசெய்யக்கடவாயென்பார், 'நல்தந்தை நீ [illegible] [illegible]பம் நீ' என்றார். செய்கென்றான்-தொகுத்தல்.

### கஅ.—கௌசிகன் ம[illegible]யோடு அவர்களுடன் புறப்படல்.

கொடுத்த மைந்த[illegible] [illegible]ண்டு சிந்தைமுன்
னெடுத்த சீற்றம்வி[illegible] [illegible]வாழ்த்திமே
லடுத்த வேள்விபே[illegible] [illegible]டித்து நாமென்
நடத்தன் மேயினு[illegible] [illegible]வைக்க ணீங்கினான்.

(இ - ள்.) (உடனே),— நவைக்கண் நீங்கினான் - (காமம் முதலிய)குற்றங்களினின்று நீங்கியவனான விசுவாமித்திரன்,—கொடுத்த மைந்தரை கொண்டு - (தசரதன்) தந்த குமாரர்களைப் பெற்றுக்கொண்டு,சிந்தை முந்து எடுத்த சீற்றம் விட்டு-மனத்திலே முன்பு மிகுதியாகக்[illegible]காண்ட கோபத்தை யொழித்து, இனிது வாழ்த்தி - (தசரதனை) நன்று[illegible] [illegible]ர்வதித்து,—மேல் - பின்பு,—நாம் போய் அடுத்த வேள்வி முடித்தும் எ[illegible] [illegible]ம் சென்று (செய்தற்கு) அடுத்த யாகத்தை (ச் செய்து) முடிப்போம்' [illegible] (குமாரரைநோக்கிச்) சொல்லி, நடத்தல் மேயினன் - செல்லுதலைப்[illegible] [illegible]கினான்; (எ-று.)

அப்பொழுது கௌசிகன் கோபந்தணிந்து மகிழ்[illegible] [illegible] சக்கரவர்த்திக்கு ஆசீர்வாதஞ்செய்து ஸ்ரீராமலக்ஷ்மணர்களை [illegible]த்துக்கொண்டு யாகத்தைச் செய்துமுடிக்கக்கடவோமென்று அச்[illegible] [illegible]ிட்டுப் புறப்பட்டனனென்பதாம்.நவைக்கண்-ஐந்தனுருபின்நீக்க[illegible] [illegible]ில் ஏழனுருபு வந்தது - உருபுமயக்கம். நவை - காமவெகுளிமயக்[illegible] [illegible]ன்றாமடியிற் பிராசங் காண்க. பி ம்:—[1]முடிப்பதாம். [2]நவைகள். (கஅ)

### கக.—இராமன் ஆயுதங்களை எடுத்துக்[illegible] [illegible]).

வென்றி வாள்புடை விசித்து மெய்ம்[illegible]
லென்றுந் தேய்வுறாத் தூணி [1]யாத்தி[illegible]

[2]குன்றம் போன்றுயர் தோளிற் கொற்றவி
லொன்று தாங்கினு னுலகந் தாங்கினன்.

(இ - ள்.) (அப்பொழுது),—உலகம் தாங்கினன் - எல்லாவுலகங்களையுங் காத்தருளுங்கடவுளான ஸ்ரீராமன்,-வென்றி வாள்புடைவிசித்து-வெற்றியைத்தரவல்ல உடைவாளை இடைப்புறத்திலே கட்டிக்கொண்டு, இரு குன்றம் போன்று உயர் தோளில்-இரண்டுமலைகள்போல உயர்ந்துள்ள இரண்டு தோள்களிலும், மெய்ம்மை போல் என்றும் தேய்வு உறு தூணி யாத்து-சத்தியமென்கிறதருமம் (எப்போதும் பயன்குறைபடாதது) போல எப்பொழுதும் (அம்புகள்) குறைபடுதலில்லாத (இரண்டு) அம்பறாத்தூணிகளைக்கட்டி, கொற்றம் வில்ஒன்று தாங்கினன் - வெற்றியைத்தருகிற ஒரு வில்லை (இடக்கையிற்) பிடித்துக்கொண்டனன்; (எ - று.)

விசுவாமித்திரன் புறப்பட்டவளவிலே, இராமபிரான், யுத்தஸந்நத்தனாய் வாளாயுதத்தை இடைக்கச்சிலே செருகியும் இரண்டு தோள்களிலும் இரண்டு அம்பறாத்தூணிகளைக் கட்டிக்கொண்டும் இடக்கையில் ஒருவில்லையேந்தியவண்ணம் பிரயாணத்துக்குச் சித்தனாய் வந்துநின்றன னென்பதாம். தனதுதலைக்குச் சரியாக உயர்ந்து தோன்றும்படி இரண்டு அம்பறாத்தூணிகளை இரண்டுதோள்களிற் கட்டிக்கொண்டன னென்பதுபற்றி, முத்தலைநாகத்தை உவமைகூறியுள்ளார், ஸ்ரீவால்மீகிபகவான். வில்லை இடக்கையிலேந்தின னென்பது, மேல் தாடகைவதைப் படலத்தில் "சங்குறைகரத்தொரு தனிச்சிலை தரித்தான்" என்பதனாலும் விளங்கும். என்றுந் தேய்வுறாத் தூணி - எடுக்கஎடுக்க அம்புகுறைதலில்லாத அக்ஷயதூணீரம். தூணி-தூணீஎன்ற வடசொல் ஈயீறு இகரமாயிற்று. பலவகையாலும் அறப்பயனை விளக்கி உலகத்தை நல்வழிப்படுத்துவதே காப்பியங்களின் நோக்கமாதலின், இங்கு 'மெய்ம்மைபோல் என்றுந்தேய்வுறாத் தூணி' என உபமானவகையால், வாய்மை இம்மைமறுமைப்பயன்களையெல்லாம் குறைவின்றித் தானேதரவல்லதென்பதை விளக்கினர்.

காத்தற்றொழிற்கடவுளான திருமால் ஸ்ரீராமனாகத் திருவவதரித்துத்தன் பயனாகிற துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலநதருமங்களை இளமைதொடங்கிச் செய்துமுடிக்கவேண்டி இப்பொழுதுஅரக்கரையழித்தற்பொருட்டுப்படைக்கலமெடுக்கலாயின னென்னுங் கருத்துவிளங்க, 'கொற்றவில் ஒன்று தாங்கினன் உலகந்தாங்கினன்' என்றார். இனி, 'உலகந்தாங்கினன்' என்பதற்கு-எல்லாவுலகங்களையும் பிரளயகாலத்திலே வயிற்றினுள் வைத்துக் குறிக்கொண்டு பாதுகாத்தவ னென்ற பொருளும் அமையும். தாங்கினன் என்ற சொல்லை, வினைமுற்றாகவும் வினையாலணையும்பெயராகவும் ஓரடியினுள்ளே இருமுறைபிரயோகித்தது, கவிசமத்காரம்; சொற்பொருட்பின்வருநிலையணி. பி - ம்:—[1]ஆர்த்து. [2]குன்றுபோன்றுள. (௧௧)

உ0.—இராமன் இலக்குமணனுடன் முனிவன்பின்னே செல்லுதல்.

அன்ன தம்பியுந் தானு [1]மையனு
மன்ன னின்னுயிர் வழிக்கொண் டாலெனச்

சொன்ன மாதவற் [2]றொடர்ந்த சாயைபோற்
பொன்னின் மாநகர்ப் புரிசை [3]நீங்கினான்.

(இ - ள்) (ஸ்ரீராமன்),—அன்ன தம்பிஉம் தான்உம் - அப்படிப்பட்ட [தன்னைப்போலவே வாளும் தூணிகளும் வில்லும் தரித்த] தம்பியும் தானுமாக, ஐயன் ஆம் மன்னன் இன் உயிர் வழிக்கொண்டால் என - தந்தையாகிய சக்கரவர்த்தியினது இனிய உயிரானது வெளியிற் பிரயாணப்பட்டாற் போல,—சொன்ன மா தவன் தொடர்ந்த சாயை போல்-(கீழ்க்) கூறிய விசுவாமித்திரமகாமுனிவனை விடாதுதொடர்ந்துசெல்லுகிற நிழல் போல(த்தொடர்ந்து), பொன்னின் மா நகர் புரிசை நீங்கினான் - பொன்மயமான பெரிய அயோத்தியாநகரத்தின் மதிலைக் கடந்து சென்றான்; (எ - று.)

அதேமாதிரியாய் இலக்குமணனும் படைக்கலங்களை யெடுத்துக்கொண்டு உடன்வர, ஸ்ரீராமன் தசரதசக்கரவர்த்தியினது உயிரே புறப்பட்டாற் போலக் கௌசிகமுனிவன்பின்னே நடந்து அயோத்திமாநகரத்தைவிட்டு நீங்கினனென்பதாம். முதலில் விசுவாமித்திரனும், அவன்பின்னே இராமபிரானும், அவன்பின்னே இலக்குமணனுமாகச் சென்றன ரென்று வால்மீகத்தில் வகுத்துக்கூறியுள்ளார். தசரதனுக்கு இராமன் உயிர்நிலை யென்பது முன்னமே விளக்கப்பட்டது. சொன்ன - "அடுத்த வேள்விபோய் முடித்தும் நாம்" என்றுசொன்ன என்றபடி. ஆசிரியன்பக்கல் மாணாக்கன் வழிபாடுசெய்யும்வகையைக் கூறுகின்றவிடத்து "நிழலின் நீங்கான்" என்றபடி, ஸ்ரீராமன் கௌசிகமுனிவனைச் சாயைபோல விடாதுபின்தொடர்ந்து சென்றன னென்றார். இராமனுக்கு விசுவாமித்திரன், மஹாகுரு. தம்பியும் தானும் நீங்கினான் - சிறப்பினால் ஒருமைமுடிபேற்ற பால்வழுவமைதி; [நன் - பொது - உஎ.] சாயை - சாயா: வடசொல்லின் திரிபு. பி - ம்:—[1]ஐயன்பின். [2]தொடர்ந்து. [3]நீங்கினர். (உ0)

உக.—மூவரும் சரயுநதியைச் சார்தல்.

வரங்கண் மாசறத் தவஞ்செய் தோர்கள்வாழ்
[1]புரங்க ணேரிலா நகர நீங்கிப்போ
யரங்கி னாடுவார் சிலம்பி னன்னநின்
றிரங்கு வார்புனற் சரயு வெய்தினர்.

(இ - ள்.) (இங்ஙனம் புறப்பட்ட மூவரும்),—வரங்கள் மாசு அற-(தாம் தாம் பெறும்) வரங்கள் குற்றமில்லாதனவாம்படி, தவம் செய்தோர்கள் - பெருந்தவஞ் செய்துள்ளவர்கள், வாழ் - (அத்தவத்தின் பயனாக) வாழுமிடமான, புரங்கள் - (அமராவதி முதலிய) தேவநகரங்களும், நேர் இலா - ஒப்பாகாத, நகரம் - அயோத்திநகரை, நீங்கி போய் - விட்டுச் சென்று,—அரங்கின் ஆடுவார் சிலம்பின் - நடனசாலையிலே நர்த்தனஞ்செய்கிறமகளிரது காற்சிலம்பு போல, அன்னம் நின்று இரங்கு - அன்னப்பறவைகள் நின்று ஒலிக்கப்பெற்ற, வார் புனல் - பெருகுகிற நீரையுடைய, சுரயு-சரயுநதியை எய்தினர் - அடைந்தார்கள்; (எ - று.)—போய் எய்தினர் என இயையும்.

மூவரும் அயோத்தியாபுரியினெல்லையைக்கடந்து சரயுநதியைச் சார்ந்தன ரென்பதாம். அவர்கள் ஒன்றரையோஜனைதூரம் வழிநடந்து சரயுவின்தென்கரை சேர்ந்தார்க ளென்று முதனூல் வகுத்துக்கூறியுள்ளது.

'வரங்கள் மாசறத் தவஞ்செய்தோர் என்றது, இம்மை மறுமை வீடு களில் அவரவர்வேண்டும் பயன்களை வேண்டியவாறேபெறுவிக்கவல்லசிறப்புடையதான தவத்தைப் பழுதுபடாதபடி செய்துமுடித்துச்சித்திபெற்றவர் என்றபடி. 'வரங்கள்மாசறத் தவஞ்செய்தோர்கள்வாழ் புரங்கள்' என்றதில், ஸ்ரீவைகுண்டநகரமும் அடங்கும். அதுவுமுட்பட இவ்வயோத்தியா புரிக்கு ஈடாகாதென இந்நகர்ச்சிறப்பை விளக்கியவாறும். கீழ்நகரப்படலத்தில் "வரம்பி, லெவ்வுலகத்தோர்யாவருந் தவஞ்செய்தேறுவா னுதரிக்கின்ற, அவ்வுலகத்தோ ரிழிவதற் கருத்திபுரிகின்ற தயோத்திமாநகரம்"என்றதுங் காண்க. பரத்துவத்தினும் சௌலப்பியம் விசேஷமானதென்று பாராட்டிக்கூறுதல் ஆன்றோர் மரபாதலால், அங்ஙனம் அமரர்க்கும் அரியனாய்ப் பரமபதநாதன் எழுந்தருளியிருக்கிற நகரத்தினும், அப்பரமன்தானே அடியவர்க்கெளியனாய்த் திருவவதாரஞ்செய்து வாழ்கிற தலமான திருவயோத்தி மேம்பட்ட தென்க. அங்குச்சிஷ்டபரிபாலநதருமமொன்றே உள்ளது; இங்கோ துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலநரூபமான தருமமிரண்டும் உள்ளது என்பதுங் காண்க. பி - ம்:— [1]புரங்கணேரலா. (உக)

உஉ.—மூவரும் ஒருசோலையை யடைதல்.

கரும்பு கால்பொரக் [1]கழனி [2]வார்ந்ததேன்
[3]வரம்பு மீதிடு மருத வேலிவா
யரும்பு கொங்கையா ரம்மெ லோதிபோற்
சுரும்பு வாழ்வதோர் சோலை [4]வைகினர்.

(இ - ள்.) (அங்கு), கரும்பு கால் பொர - கரும்புகள் காற்றினால் மோதப்பெறுதலால், கழனி வார்ந்த-கழனிகளிற் பெருகின, தேன்- தேனானது, வரம்பு-வயல்வரப்புக்களை, மீதிடும்-கடந்து பாயப்பெற்ற,மருதம்வேலி வாய்-கழனிகளைவேலியாகக்கொண்டதான,அரும்புகொங்கையார் அம் மெல் ஓதி போல் சுரும்புவாழ்வது ஓர்சோலை-தாமரையரும்புபோன்றதனங்களையுடைய மகளிரின் அழகிய மெல்லிய கூந்தலைப் போலக் கரியவண்டுகள் வாழ்தற்கிடமான ஒருசோலையில், வைகினர் - (மூவரும் அன்று) தங்கினர்கள்; (எ-று)

விசுவாமித்திரமுனிவன் முதலிய மூவரும் சரயுவின்தென்கரையை யடைந்தபோது இராப்பொழுது வந்து விட்டதனால், அம்மூவரும் அதன் கரையிலுள்ள சோலையில் தங்கின ரென்க. கரும்புகால்பொரவார்ந்ததேன்- "கரும்பிற் றொடுத்த பெருந்தேன்சிதைந்து" என்பது காண்க. பி - ம்:— [1]கமுகின். [2]வாய்ந்த. [3]வரம்பின், வரம்பை. [4]நண்ணினர். (உஉ)

உ௩.—உதயகாலத்தில் அவர்கள் நதியைக் கடத்தல்.

தாழு மாமழை தழுவு நெற்றியாற்
சூழி யானைபோற் றோன்று மால்வரைப்

பாழி மாமுகட் டுச்சிப் பச்சைமா
வேழு மேறப்போ யாறு மேறினார்.

(இ - ள்.) தாழும் மா மழை தழுவு நெற்றியால்-வந்துதங்குகின்ற பெரிய மேகங்கள் பொருந்திய மேலிடத்தை யுடைமையால், சூழியானை போல் தோன்றும் - முகபடாத்தையணிந்த யானைபோலக் காணப்படுகிற, மால் வரை - பெரிய (உதய)கிரியினது, பாழி மா முகடு உச்சி-வலிமையையுடைய பெரிய சிகரத்தின் நுனியிலே, பச்சை மா ஏழும் ஏற - (சூரியனது) பசுமை நிறமுள்ள குதிரைகளேழும் ஏறுநிற்க [சூரியோதயகாலத்தில் என்றபடி], போய் - (மூவரும்) சென்று, ஆறுஉம் ஏறினார் - நதியைக்கடந்து (அக்கரை) ஏறலானார்கள்; (எ - று.)

கீழ் 'சரயுவெய்தினார்' என்றுகூறி, இங்கு நதியின்பெயர்குறியாமல் ஆறுமேறினார்' என்று பொதுப்படக்கூறியிருத்தலால், இதற்கு, சரயுநதியைத் தாண்டினார்க ளென்று பொருள்கூறுகின்றனர்; அயோத்தியிலிருந்து சித்தாச்சிரமத்துக்குச் செல்லும் மார்க்கத்திலே சரயுநதி இல்லை யாகையால் அவ்வுரைபொருந்தாது. இடங்களின் நிலையையும், முதனூற்போக்கையும் நன்றாகஆராயுமிடத்து, கங்கையைத்தாண்டினார்களென்று கொள்ளுதலே பொருத்தமுடையதாகிறது. பொதுப் பெயராகிய எந்தச்சொல்லையும் அடைமொழி கொடாதுகூறுமிடத்து அச்சொல் அவ்வகையிற் சிறப்புடையபொருளைக்குறித்தல் பெரும்பான்மை இயல்பாதலால், 'ஆறு' என்ற பொதுப்பெயர் - இங்கு, சகலநதிகளினுஞ் சிறந்ததாகிய கங்கையையுணர்த்துதல் கூடுமெனக. அயோத்தியாபுரியின் மேற்குப்பக்கந்தொடங்கி வடக்குப்பக்கமாய்க் கிழக்குப்பக்கமளவும் அந்நகரத்தைச் சூழ்ந்து அப்பால் தென்கிழக்குமுகமாகச் சென்று கங்கையுடன் சேர்கின்றது, சரயுநதி. அதாவது - அயோத்தியின் தெற்குத் தவிர மூன்றுபக்கமும் சரயு அதனைத்தழுவினாற்போலப் பிரதக்ஷிணமாகச் செல்லுகின்றது. தென்கிழக்குநோக்கிப் புறப்பட்டுச் சரயுவின் தென்கரைவழியாய்ச்சென்ற இவர்கள், அந்தச்சரயுவும் கங்கையும் சேருமிடத்தைச் சமீபித்து, அவைசேருமிடத்துக்கு முன்னமே தெற்குமுகமாய்க் கங்கையைக் கடந்து அதன்தென்கரை சேர்ந்து, அக்கங்கைக்குத்தெற்கேயுள்ள தாடகைவனத்தைநோக்கிச்செல்லலானா ரென்று முதனூலால் விளங்கும். மற்றும், அயோத்தியாபுரி கங்கைக்குவடக்கே சரயுவின்தென்கரையில் உள்ள தென்றும்,விசுவாமித்திரன் வேள்விசெய்யுமிடமான சித்தாச்சிரமம் கங்கைக்குத்தெற்கேயுள்ள தென்றும், அந்தஆதிகாவியங்கொண்டே உணரலாகும். இக்கம்பராமாயணத்தில் மேல் வேள்விப் படலத்தின்பின்னர் அகலிகைப்படலத்தில் "சென்றுதீர்ந்தனர் கங்கையை" என்பது, வேள்விமுடித்தபின்பு மிதிலாபுரியைநோக்கிவடக்குமுகமாக வரும்போது இடைப்பட்ட கங்கையைக் கடந்து அதன்வடகரைக்கு மீள்வதைக் கூறுவதாம். ஸ்ரீவால்மீகத்திலும், தாடகைவதத்திற்குமுன்பு கங்கைகடந்து தென்கரைசேர்தலும், வேள்விமுடித்தபின்பு மிதிலையைக்குறித்து வடதிசை நோக்கிய பிரயாணத்தினிடையே கங்கைகடந்து வடகரைசேர்தலுமாகக் கங்கைகடத்தல் இருமுறை கூறப்பட்டுள்ளவாறு காண்க.

இனி, இங்கு 'வரை - அஸ்தமநகிரி யென்று கொண்டு, 'மால்வரைப் பாழி மாமுகட்டுச்சிப் பச்சைமாவேழு மேற'என்பதற்கு-சூரியன் அஸ்தமன மடைய என்று பொருள்கொள்ளுதல், இச்சந்தர்ப்பத்துக்கும் முதனூலுக் கும் இயையாதாம். 'பச்சைமாவேழுமேற' என்றசொல்லமைப்பும் சூரியோத யத்துக்கே இனிதுசேரும். (இப்படலத்துக்குஅடுத்ததான தாடகைவதைப் படலத்தின்நான்காஞ்செய்யுளில் ''அவ்வயிற், சென்றுவந்தெதிரெழுஞ்செந் நெறிச்செல்வரோ, டன்றுறைந்து''என வருவது, மறுநாட்கழிவைப்பற்றி.)

முன்னிரண்டடி - உவமையணி. கரிய பெரிய வலிய யானை - மலைக் கும், அந்த யானையின் முகபடாம் - மலைச்சாரலில் மேற்புறத்தே படிகின்ற மேகத்துக்கும் உவமையெனக் காண்க. ஒற்றைச்சக்கரமுடைய சூரியனது தேர்க்குக் குதிரைகள் ஏழென்றும், காயத்ரீ உஷ்ணிக் அநுஷ்டுப் ப்ருஹதீ பங்க்தி த்ரிஷ்டுப் ஜகதீ என்ற ஏழு சந்தசுகளுமே அக்குதிரைகளாகஅமைந் துள்ளன வாதலால் அவை அப்பெயர்பெறு மென்றும், அக்குதிரைகளின் நிறம் பசுமை யென்றும் புராணம் கூறும். ஏழுமேறப்போ யாறுமேறினர்- மூரண்டோடை. 'தாழுமாமழை' 'பச்சைமாஏழுமேற' என்ற சொற்போக்கு, உதயகிரியின் நெற்றியளவு மேகமண்டலத்துக்குமேலுள்ளதென்றும், அக்கி ரியின் உச்சி சூரியவீதிக்கு மேலுள்ளதென்றும் விளக்கி, அம்மலையின் மிக்க உயர்ச்சியைத் தெரிவித்தல் காண்க. (௨௩)

உ௪.—ஒருசோலையைக் கண்டு இராமன் 'இது யாது?' என்றல்.

தேவு மாதவற் றொழுது தேவர்த
நாவு ளாகுதி நயக்கும் வேள்விவாய்த்
தாவு மாபுகை தழுவு சோலைகண்
டியாவ தீதென்று னெவர்க்கு மேனின்றான்.

(இ - ள்.) (அப்பொழுது),—தேவர் - தேவர்கள், தம் நாவுள் - தமது நாவினிடத்து, ஆகுதி நயக்கும் - ஆகுதியை விரும்பியுண்ணுதற்கு உரிய, வேள்விவாய் - யாகத்திலே, தாவும்-மேலெழுகிற, மா புகை - பெரிய புகை, தழுவு - சூழ்ந்த, சோலை - ஒரு சோலையை, கண்டு - பார்த்து,— எவர்க்கும் மேல் நின்றான் - யாவர்க்கும்மேம்பட்டுநின்றவனான ஸ்ரீராமன்,—'தேவு மா தவன் தொழுது - தெய்வத்தன்மையுள்ள மகாதபஸ்வியான விசுவாமித்திர மாமுனிவனைவணங்கி, ஈது யாவது என்றான் - 'இச்சோலை யாது?' என்று வினவினான்; (எ.- று.)—இதற்கு அம்முனிவன் கூறும் விடை, அடுத்தபட லத்தின் முதல்மூன்றுசெய்யுள்களில் அமைந்துள்ளது.

இங்குக் குறிக்கப்பட்ட சோலை - பூர்வத்திற் சிவபிரான் தவஞ்செய்து கொண்டிருந்த இடமாதலால் ஸ்தாணுவாச்சிரம மெனப்படும்;அங்ஙனம் அப் பிரான் தவஞ்செய்துகொண்டிருந்தபோது மன்மதன் அவனதுதவத்தைக் கெடுக்கமுயன்று அதுபற்றிச்சினங்கொண்ட அவனது நெற்றிக்கண்ணின் நெருப்பினால்நீறுபட்டொழிந்த இடமாதலாற் காமாச்சிரமமென்றும்கூறப்படு வது;அங்ஙனம் மன்மதன் அநங்கனாகுமாறு அவனதுஅங்கம் விழுந்த இடமா தல்பற்றி, அந்நாடு அங்கதேசமெனப்படும். இந்த ஆச்சிரமம் கங்கைக்குவடக்

கேசரயும்கங்கையுஞ் சேர்கிற சங்கமத்துறைக்கு அருகேயிருக்கிறதாகவும், இதைப்பற்றிஇராகவன்விசுவாமித்திரனைவினவியதும் அதற்கு அவன்விடையளித்ததும் அவர்கள் கங்கைகடத்தற்குமுன்னமே நிகழ்ந்ததாகவும் வால்மீகத்தால் தெரிகின்றன. அச்சோலை நெடுந்தூரமளவும் தெரியக்கூடியதாதலால், அதனைப்பற்றிய வினவிடை கங்கைகடந்துசெல்லுகிறபோது நிகழ்ந்ததாகக் கம்பர்கூறுவது, பெரியதொருமாறுபாடாகாது. பரிசுத்தமான அந்த ஆச்சிரமத்திலே பெருந்தவத்தினரான அநேகமுனிவர்கள் வசித்து வேள்விசெய்துகொண்டிருந்தமை பற்றி, 'வேள்விவாய்த்தாவுமா புகைதழுவு சோலை' எனப்பட்டது. அங்ஙனம் தேவர்களை உத்தேசித்து வைதிகாக்கினியில் ஓமஞ்செய்யப்படுகிற ஹவிசுகளை அத்தேவர்கள் பெற்றுஉண்டு மகிழ்பவராகுதலால், 'தேவர்தம்நாவுளாகுதிநயக்கும்வேள்வி' எனப்பட்டது. விசுவாமித்திரனுக்குத் தெய்வத்தன்மை - சாபாநுக்கிரக சக்தி, பிரதிசிருஷ்டிசெய்யும்வல்லமை முதலியன. எவர்க்கும்மேல் நின்றோன் - பரப்ரஹ்மஸ்வரூபி.

தொழுது நயக்கும் என்று இயைத்து, தேவு - தெய்வத்தன்மையுடைய, மா நவன் - திருமகள்கணவனை திருமாலை, தொழுது - வணங்கி, தேவர் தம் நாவுள் ஆகுதி நயக்கும் - தேவர்கட்குநாவாகிற வைதிகாக்கினியிலே (முனிவர்கள்) ஆகுதிகளை விரும்பிச்செய்யப்பெற்ற, வேள்விவாய் - யாகத்திலே என்று பொருள்கூறவும் அமையும். இவ்வுரைக்கு—'என்றோன்' என்றவிடத்து, 'முனிவனைநோக்கி' என்பது எளிதில் வருவிக்கத்தக்கது. இனி, தே உமா நவன் என்று பிரித்து, தெய்வத்தன்மையுள்ள அம்பிகைகொழுநனை சிவபிரானை வணங்கி முனிவர்கள் அன்புடன் அக்கினியில் ஆகுதி செய்யும் வேள்வி யென்று பொருள்கொள்ளுதல் விசேஷம்; அந்த ஸ்தாணுவாச்சிரமத்தில் வசிக்கின்ற முனிவர்கள் தொன்றுதொட்டுச் சிவனது சிஷ்யர்களென்று வால்மீகி கூறியுள்ளதனால், அங்ஙனம் சிவசிஷ்யரான அவர்கள் தங்கள் குருவான சிவபிரானைத் தொழுது முன்னிட்டு வேள்வி செய்கின்றன ரென்றல் மிகப்பொருந்துமாறு காண்க. (உ௬)

கையடைப்படலம் முற்றிற்று.

---

## எ-ஆவது தாடகைவதைப்படலம்.

தாடகையென்னும்இராக்கதியை இராமபிரான் விசுவாமித்திரனது விருப்பத்தின்படி கொன்றருளிய கதையைக் கூறும் பாகமென்பதுபொருள்.

க.—இதுமுதல் மூன்றுகவிகள் - விசுவாமித்திரனதுமறுமொழி.

திங்கண்மே வுஞ்சடைத் [1]தேவன்மேன் மாரவே
[2]ளிங்குநின் றெய்யவு [3]மெரிதரும் நுதல்விழி
பொங்குகோ பஞ்சுடப் பூளைவீ யன்னத
னங்கம்வெந் தன்றுதொட் டனங்கனே யாயினான்.

நான்குகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) மாரன் வேள் - மன்மதனானவன், இங்கு நின்று-இவ்விடத்தி லேயிருந்து, திங்கள் மேவும் சடை தேவன்மேல் - சந்திரன்பொருந்திய சடையையுடைய சிவபிரான்மேலே, எய்ய உம் - (மலரம்புகளைப்) பிரயோ கித்தவளவிலே, எரிதரும் நுதல் விழி பொங்கு கோபம் சுட - (அப்பிரா னது) நெருப்பைச்சொரிகிற(அக்கினிமயமான)நெற்றிக்கண்ணினின்று மிக் கெழுந்த கோபத்தீச் சுடுதலால், பூளை வீ அன்ன தன் அங்கம் வெந்து - பூளைப்பூப்போல் மெல்லியதான தன்னுடம்பு வெந்துபோய்,அன்றுதொட்டு அனங்கன் எ ஆயினான் -அற்றைநாள்தொடங்கி அனங்கனாகவேயானான்.

விசுவாமித்திரன் இராமபிரானைநோக்கி,'நீவினவியது-காமனாச்சிரமமும், சிவபெருமான் யோகாப்பியாசஞ் செய்த இடமுமாம்' என்று மறுமொழி கூறத்தொடங்கி, காமன் சிவபெருமானால் அநங்கனான தன்மையை இந்தச் செய்யுளாற் கூறுகின்றனனென்க. சிவபெருமான் யோகஞ்செய்கையில் அதனைக் கெடுக்குமாறு மன்மதன் அப்பெருமான்மேல் மலரம்புகளைத்தொடு க்க,அப்பரமன் சினந்து தன்நெற்றிக்கண்களைத்திறந்தனனாக,அதனினின்று எழுந்த தீப்பொறி சுட்டதனால் மன்மதன் தன்அங்கத்தையிழந்து அதுமுதல் அநங்கனாயினனென்பதாம். மாரன் - (ஆண்பெண்களை ஆசைநோயால்) மரணவேதனைப்படுத்துங் கடவுள். மாரவேள் மாரனாகியவேள். கோபம் - கோபத்தினாலெழுந்த தீப்பொறிக்கு, இலக்கணை. அனங்கன் - ந + அங்கன். வேள் - விருப்பத்தையுண்டாக்குபவன். பூளைவீ- மிகவும்மென்மையாயிருத்த லில் உவமை. பி - ம்:—[1]தேவர். [2]அங்கமேல். [3]அரியவம்பெய்தவன். (க)

உ. வாரணத் துரிவையான் மதனனைச் சினவுநா
ளீரமற் றங்கமிங் குகுதலா லிவணெலா
மாரணத் துறையுளா யங்கநா டிதுவுமக்
காரணக் குறியுடைக் காமனாச் சிரமமே.

(இ - ள்.) ஆரணத்து உறையுளாய் - வேதங்களை யிருப்பிடமாகவுடைய வனே! [வேதத்தில்வல்லவனே!] வாரணத்து உரிவையான் - யானைத்தோ லைப்போர்வையாகவுடைய பரமசிவன்,மதனனை சினவும் நாள் - மன்மதனைக் கோபித்து எரித்த அக்காலத்திலே, அங்கம்-(அவனது)உடம்பு,ஈரம் அற்று- பசையில்லாமல்[சாம்பராகி],இங்கு உகுதலால்-இவ்விடத்திலேசிந்தியதனால், இவண் எலாம்-இந்த இடமெல்லாம், அங்கம் நாடு-அங்கமென்னுந் தேசமா கும்; இதுஉம் - (நீ வினவிய) இவ்விடமும், அ காரணம் குறி உடை காமன் ஆச்சிரமம் எ - அத்தன்மையதான காரணப்பெயரையுடையகாமாச்சிரம மாகும்; (எ-று.)

இவ்விடங்களெல்லாம், சிவபெருமானது கோபத்தீக்கு இலக்கான மன்மதனது அங்கம் நீறாகி வீழ்ந்த இடத்தைத் தன்னிடத்துக்கொண் டதனால் அங்கநாடு எனப்பெயர் பெறும்; நீ வினவிய இடமும் மன்மதனை அச்சிவபெருமான் சாம்பராக்கிய காரணத்தினால், காமாச்சிரமமென்றுபெயர் பெற்ற இடமாகுமென்பதாம். அக்காரணக்குறியுடைஎன்பதை காமனென் பதனோடுஇயைத்து - அங்கமற்றதால் அநங்கனென்று காரணப்பெயர்

பெற்ற காமனது, ஆச்சிரமம்-வாழிடமாயிருந்ததாகுமெனக் கூறலுமாம். புராணாந்தரங்களில் இமயமலைச்சாரலிற் சிவபிரான் தவநிட்டையிலிருக்கையில் அப்பிரானது தவத்தைக் கெடுக்கமுயன்ற காமன் அநங்கனாயினன் என்று கூறியுள்ளது, கற்பபேதத்தினாற் சமாதானம் கூறத்தக்கது. மதனன்- எல்லாவுயிர்களையும் மதிப்பை [களிப்பை] யடையச் செய்பவன். ஆரணத்துறைபுளாய்-வேதப்பிரதிபாத்யனே! எனினுமாம். ஆரணம் துறைபுளாய் என்றுபிரித்து - வேதமார்க்கத்திலே நிலைநிற்பவனே! என்றுமாம். காமன் - வேட்கையை விளைப்பவன். வாரணத்துரிவையான் என்றதில் அடங்கிய கதை:—அருந்தவமியற்றிப் பெருவரம் பெற்ற கஜாசுரனென்பவன் தேவர் முனிவர் முதலியோரை இடைவிடாது வருத்தித் துரத்த, அஞ்சியோடி வந்து சரணமடைந்த அத்தேவர்முதலியோரது வேண்டுகோளினாற் பரமசிவன் சென்று தன்னையெதிர்த்துப்போர்செய்யவந்த அவ்வசுரனைக் காலாலுதைத்துத்தள்ளிக்கொன்று தோலையுரித்துப் போர்த்தருளின னென்பதாம்: தாருகவனத்து முனிவர்ஏவியயானையினுட்சென்று உருத்திரமூர்த்தி உடல்பிளந்து அதனுரிவையைப்போர்த்துக்கொண்டனனென்பதுமாம். (உ)

ரூ. பற்றவா வேரொடும் பசையறப் பிறவிபோய்
முற்றவா லுணர்வுமேன் முடுகினா ரறிவுசென்
றுற்றவா னவனிருந் தியோகுசெய் தனனெனிற்
சொற்றவா மளவதோ [1]மற்றிதன் றூய்மையே.

(இ - ள்.) பற்று - பாசமும், அவா - ஆசையும், வேரொடும்-வேருடனே, பசை அற - தொடர்ச்சிநீங்கவும்,பிறவி போய் முற்ற - பிறப்புக்களொழிந்துபோகவும்,வால் உணர்வு மேல் முடுகினர் - தத்துவஞானத்தைப்பெறவேணுமென்று விரும்பினவர்களின், அறிவு-உணர்வு,சென்று உற்ற-போய்ச்சேரப்பெற்ற, வானவன் - பரமசிவன், இருந்து - (இவ்விடத்திலே)இருந்து, யோகு செய்தனன் எனின் - யோகாப்பியாசஞ்செய்தா னென்றால், இதன் தூய்மை - இவ்விடத்தினதுசுத்தமானதன்மை, சொற்ற ஆம் அளவதோ - சொல்லக்கூடியதன்மையையுடையதோ? [அன்றென்றபடி]; (எ - று.)

இது, தத்துவஞானத்தைத் தனதுநிலையாலும் உபதேசிக்கவல்ல சிவபிரான் தவஞ்செய்த இடமாகுமென்று அதன்சிறப்பை எடுத்துக்கூறினன் முனிவனென்க. "ஜ்ஞாநம் மஹேச்வராத் இச்சேத் [சிவபெருமானிடத்தினின்று தத்துவஞானத்தைப் பெறக்கடவன்]" என்று நூல்கள் கூறுதலால், தமது பிறவிநோயறுமாறு தத்துவஞானத்தைப் பெறவேணுமென்று விரும்புகின்றவர் சிவபெருமானைச்சேர்வ ரென்பதுபற்றி, 'வாலுணர்வுமேன்முடுகினாரறிவுசென்றுற்றவானவன்' என்றார். பற்று-நான் எனது என்று தோன்றும் அகப்பற்றும் புறப்பற்றும்; அவையாவன - அகங்கார மமகாரங்கள். அவா - ஒன்றைப்பெறவேணுமென்னும்விருப்பம். வேர் - பற்றுஅவாக்களால்தோன்றும் மயக்க மென்னலாம். வேறுவகையாகவுங்கூறுவர். சொற்ற=சொல்ல: செயவெனெச்சம்: பெயரெச்சமன்று. யோகு=யோகம்: இயமம் நியமம் முதலிய எட்டுறுப்புக்களுடனே தவஞ்செய்தல். பி - ம்:—[1] அன்றிதன். (ரூ)

ச.—விசுவாமித்திரன் முதலிய மூவரும் ஒருநாள் அங்குத்தங்கி, மறுநாள் ஒருபாலைவனஞ் சேர்தல்.

என்றவந் தணனியம் பலும்வியந் தவ்வயிற்
சென்றுவந் தெதிரெழுஞ் செந்நெறிச் செல்வரோ
டன்றுறைந் தலர்கதிர்ப் பரிதிமண் டிலமகன்
குன்றி[1]னின் றிவரவோர் சுடுசுரங் குறுகினார்.

(இ - ள்.) என்று அ அந்தணன் இயம்பலும் - என்று அந்தவிசுவாமித்திரமுனிவன்சொல்லியவளவிலே,—(ராமலட்சுமணர்கள்), வியந்து-ஆச்சரியமுற்று, அ வயின் சென்று - (மூவரும்) அந்தஇடத்திலேபோய்,—உவந்து எதிர் எழும் செம் நெறி செல்வரோடு - மகிழ்ந்து (தம்மை) எதிர்கொள்ள வருகின்ற சன்மார்க்கத்தையே செல்வமாகவுடைய முனிவர்களுடனே, அன்று உறைந்து - அன்றைத்தினம்முழுவதும் அவ்விடந்தங்கி, (மறுநாள்), அலர் கதிர் பரிதி மண்டிலம் - பரவி விளங்குகிற கிரணங்களையுடைய சூரியமண்டலம், அகல் குன்றில் நின்று இவர - விசாலமான உதயகிரியில்நின்று மேலேறுகையில், ஓர் சுடு சுரம் குறுகினார் - வெப்பமான தன்மையையுடைய ஒருபாலைநிலத்தை யடைந்தார்கள்; (எ - று.)

அருகேவசிக்கின்றமுனிவர்கள் விசுவாமித்திரன்முதலியமூவர்கள்வருகையையுணர்ந்து எதிர்கொண்டனராக, அம்முனிவர்களுடனே அவர்கள் அங்குத் தானே அன்றுவசித்து மறுநாள் பயணமாகி நடுப்பகலில் ஒருபாலைவனஞ் சேர்ந்தன ரென்பதாம். பாலை-நீர்நிழலின்றிவெப்பம்மிக்கநிலம். ஓர்-ஆராய்தற்குஉரிய என்றுமாம். பி - ம்:—[1] வந்திவர, வந்திழிவது. (ச)

ரு.—இதுமுதற் பன்னிரண்டுகவிகள் - அந்தப்பாலைநிலத்தின் வருணனை.

பரிதிவா னவனிலம் பசையறப் பருகுவான்
விருதுமேற் கொண்டுலாம் வேனிலே [1]யல்லதோ
ரிருதுவே றின்மையா லெரி[2]சுடர்க் கடவுளுங்
கருதின்வே முள்ளமுங் காணில்வே நயனமும்.

(இ - ள்.) பரிதி வானவன்-சூரியதேவன், நிலம் பசை அற-நிலத்திலுள்ள சாரம் முழுவதும்ஒழியும்படி, பருகுவான்-(அதிலுள்ள நீரை) உறிஞ்சும்பொருட்டு, விருது மேல்கொண்டு - வெற்றிக்கொடியை மேலேகொண்டு [உயர்த்தி], உலாம் - சஞ்சரிக்கின்ற, வேனில்ஏ அல்லது - வெயிற்காலமேயல்லாமல், வேறு ஓர் இருது இன்மையால் - வேறொருகாலம் (அந்நிலத்திலே எப்பொழுதும்) இல்லாமையினாலே, எரி சுடர் கடவுள்உம் - பற்றியெரிகின்ற அக்கினிதேவனும், கருதின் - (அந்நிலத்தின்தன்மையை)நினைப்பானாயின், உள்ளம்உம்வேம்- (அவனது) நெஞ்சும் வெந்துபோகும்;காணில்-பார்ப்பானாயின், நயனம்உம் வேம் - கண்களும் வெந்துபோகும்; (எ - று.)

சூரியன் நீராகியசாரமுழுவதையும் உட்கொண்டு உமிழ்ந்த கோது போல்வது, அந்தப்பாலைநில மென்றும், அந்நிலத்தில் வெயிற்காலத்தோடு மழைபனிக்காலங்களோடு வாசியற எப்போதும் இயற்கையாகவே வெப்

பம் மிகுந்துள்ள தென்றும், அவ்வெப்பம் அக்கினியின்வெப்பத்திலும் மிக அதிகமான தென்றும் கூறியவாறு. வேனில் - இளவேனிலும், முதுவேனிலும். இருது=ருது: இரண்டுமாதங்கொண்ட காலம்: அது - இளவேனில் முதுவேனில் கார் கூதிர் முன்பனி பின்பனி என அறுவகைப்படும்; சித்திரைமுதலாக இவ்விரண்டுமாதம் ஒருபருவ மாம். பரிதிவானவன் நிலம் பசையறப் பருகுதலை "நானிலம்வாய்க்கொண்டு நன்னீரறமென்று கோது கொண்ட,வேனிலஞ்செல்வன்சுவைத்துமிழ்பாலை"என்றவிடத்துங் காண்க. வேனிற்காலத்து வெம்மையைத்தருஞ் சூரியனது தன்மையை முதலிரண்டடிகளில் தற்குறிப்பேற்றவணியினால் விளக்கினர்: பின்னிரண்டடி-உயர்வு நவிற்சியணிவகையால் பாலையின்வெம்மையைவிளக்கும். பி - ம்:—[1] அன்றி வேறுருவொன்று. [2] முதற்கடவுளும். (௯)

கூ. [1] படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகருநா
முடியவே [2] முடியமூ டிருளும்வான் முகடும்வேம்
விடியுமேல் வெயிலும்வே மழையும்வே மின்னினோ
டிடியும்வே மென்னில்வே றியாவைவே வாதவே.

(இ - ள்.) படியின்மேல் வெம்மையை - (அப்பாலை) நிலத்திலேயுள்ள வெப்பத்தை, பகரின்உம் - சொன்னாலும், பகரும் நா - சொல்லுகிற நாக்கும், முடிய வேம்-முழுவதும் வெந்துபோம்; முடிய மூடி இருள்உம்- (உலகமுழுவதிலும்) மறைத்துக்கொண்டுபரவுந்தன்மையுள்ள அந்தகாரமும், வான் முகடுஉம் - (அண்டகோளத்தினது) மேல்முகடும், வேம் —; விடியும்ஏல் - உதயமானால், வெயில்உம்-சூரியனும், வேம் - வெந்துபோவான்; மழைஉம்-மேகங்களும், வேம் - வெந்துபோகும்; மின்னினோடு இடிஉம்-மின்னல்களும் இடிகளும், வேம்—; என்னில் - என்றால்,வேறு யாவை வேவாத - (அந்நிலத்தில் வெந்துபோகாதவை வேறெவையுள? [எவையுமில்லையென்றபடி; (எ - று.)

குளிர்ந்தபொருளோடு வெம்மையுள்ள பொருளும், உயரத்திலுள்ள பொருளோடு தாழத்திலுள்ள பொருளும் வாசியற எல்லாப்பொருள்களும் அங்கு நிலவெப்பத்தால் வெந்துபோந்தன்மையனவாம்; அங்ஙனம் மிகப் பயங்கரமாகவுள்ள பாலையினியல்பை எடுத்துக்கூறுதற்கு நாக்குத்தானும் கூசுகின்ற தென்பதாம். "வதிகொண்டதொர் வெவ்வழல் வாய்சொலின் வேம்" என்றார், சிந்தாமணியாரும். தொடர்புயர்வுநவிற்சியணி. இருளும் வேம் - இரவிலும் வெப்பம்மிகு மென்க. [1] படியின் மேலுலகும்வேம் என்ற பாடத்துக்கு - இந்நிலவெப்பத்தினால் இதன்மேலுள்ள உலகும் வேமென்று பொருளாம். பி - ம்:—[2] இரவின். (கூ)

எ. [1] விஞ்சுவான் மழையின்மே லம்பும்வே லும்படச்
செஞ்செவே செருமுகத் [2] தமர்செயுந் திறனிலா
வஞ்சர்தீ [3] வினையினான் மானமா மணியிழந்
தஞ்சினார் நெஞ்சுபோ லென்றுமா றுதரோ.

(இ - ள்.) செரு முகத்து - யுத்தகளத்திலே, செம் சேவே - மிகவும் செவ்வையாக, அம்புஉம் வேல்உம் - (பகைவர்கள்வீசிய) அம்பு வேல் முதலிய ஆயுதங்கள், விஞ்சு வான் மழையின் - மிகுந்த மேகத்தின் மழைத்தாரை போல, மேல் பட - (தங்கள்) மீது பொருந்த, (அவற்றைத் தாங்கி), அமர் செயும் - போர் செய்கின்ற, திறன் - வல்லமை, இலா - இல்லாத, வஞ்சர் - வஞ்சனைக்குணமுடையவர்கள் (செய்யும்), தீவினையினால் - கொடுந்தொழிலால், மானம் மா மணி இழந்து - மானமாகிய சிறந்த இரத்தினத்தை யிழந்து, அஞ்சினர் - (தோற்றவர்களான) வீரர்களின், நெஞ்சு போல் - மனம் போல, என்றும் ஆறாது - (அப்பாலைநிலம்) எப்பொழுதுந் தாபந்தணியாமற் கொதித்துக் கொண்டேயிருக்கும்; (எ - று.)—அரோ-ஈற்றசை.

போர்முகத்தில் தம்மாலியன்றவளவும்பொருது பகைவர்பக்கல்வெற்றி தோல்விகளில் ஒன்றைப்பெறுதல் வீரர்க்கு இயல்பாதலால், அங்ஙனம் பொருது தோற்று மானத்தையிழந்தவரின் மனம் மிகக்கொதியாது; வஞ்சகரது வசப்பட்டு மானத்தையிழந்தவரின் மனமோ எப்போதும் கொதிப்புள்ளதாகும்; அப்படிப்பட்ட மனத்தை எப்போதும் வெப்பந்தணியாத பாலைக்கு உவமை கூறினர். இங்ஙனம் பொருந்திறனிலா வஞ்சகரின் தீவினையினால் வீரர்கள் மானமிழந்ததற்கு - சூதாடிச் செல்வமனைத்தையுந் தோற்ற நளன் பாண்டவர் முதலியோரை உதாரணமாகக் காண்க. மானமாவது - எப்பொழுதும் தம்நிலையினின்று தாழாமையும், ஊழ்வினையினால் தாழ்வு வந்தவிடத்து உயிர்வாழாமையுமாம். மானத்திற்கு மணியையுவமை கூறியது, அருமைக்கும் மிகச்செவ்விதாகக் காத்தற்குஉரியதாந்தன்மைக்கு மென்க. மானம் ஆம் மணி என்றும் பிரிப்பர். மழையின்மேல் - மழையவிஞ்சஎன்றுமாம். பி - ம்:—[1]விஞ்சை. [2]அன்றியே. [3]தீவினைகளான்.(எ)

அ. [1]பேய்பிளந் [2]தொக்கநின் றுலர்பெருங் கள்ளியின்
றாய்பிளந் துக்ககா [3]ரகில்களுந் தழையிலா
வேய்பிளந் துக்கவெண் டரளமும் விடவரா
வாய்பிளந் துக்கசெம் மணியுமே வனமெலாம்.

(இ - ள்.) நின்று உலர் - உலர்ந்து நிற்கிற, பெரு கள்ளியின் தாய் - பெரிய கள்ளிமரத்தினது வைரம்பற்றிய அடியிடம், பேய் பிளந்து ஒக்க - பேய் உடல்பிளந்துநின்றாற் போல, பிளந்து - பிளவுபட்டு, உக்க - (அதினின்று) வெளித்தோன்றிய, கார் அகில்கள்உம் - கருநிறமுடைய அகிற்கட்டைகளும், தழை இலா வேய் பிளந்து - இலைகளில்லாமலுலர்ந்த மூங்கில்கள் பிளந்து, உக்க - (அவற்றினின்று) சிந்திய, வெள் தரளம்உம் - வெண்ணிறமான முத்துக்களும், விடம் அரா வாய்பிளந்து - விஷத்தையுடைய நாகங்கள்(தம்) வாய்திறந்து, உக்க-சிந்திய, செம்மணிஉம் ஏ - சிவந்தநிறமுள்ள மாணிக்கங்களுமே, வனம் எலாம் - அக்காடுமுழுவதும், (நிறைந்துள்ளன); (எ - று.)—வினை வருவிக்க.

அப்பாலையில் அகில் முத்து செம்மணி என்ற இவைகளே உள்ளன வென்க. கள்ளிமுதலியன பாலைநிலத்தின் கருப்பொருள்களாம். மூற்றின

கள்ளியின் உள்ளிருந்து அகிலுண்டாவதை "கள்ளிவயிற்றினகில்பிறக்கும்" என்றதனுலும், மூங்கிலில் முத்துப்பிறத்தலை "கழை கன்னலாவின் பல் கட்செவி கா,ரிந்து வுடும்பு கரா முத்தமீனும்" என்றதனுலுங் காண்க.
பி - ம்:—[1] காய். [2] உக்க. [3] அகிலுமே. (அ)

கூ. பாருமோ டாதுநீ டாதெனும் பாலதே
சூருமோ டாதுகூ டாதரோ சூரியன்
றேருமோ டாது[1]மா மாகமீ [2]தேரினேர்
காருமோ டாதுநீள் காலுமோ டாதரோ.

(இ - ள்.) பார்உம் - பூதேவதையும், ஓடாது - (அந்நிலத்தைவிட்டு ஓடிப்போக முயலுமே யாயினும்) ஓடிப்போகமாட்டாது; (ஏனெனில்), நீடாது எனும் பாலது ஏ - (இடத்தைவிட்டு) அப்புறப்படாததென்னுந் தன்மையையுடையது (ஆதலால்); சூர்உம்-(அந்நிலத்துக்குஉரிய) காளியாகிய தெய்வமும், ஓடாது - (அந்நிலத்தைவிட்டு ஓடிப்போகமுயலுமேயாயினும்) ஓடிப்போகமாட்டாது; (ஏனெனில்), கூடாது அரோ - (நிலத்தெய்வம் நிலத்தைவிட்டு அகல) முடியாதன்றோ? மா மாகம் மீ - (அந்நிலத்துக்கு நேராகப்) பெரிய ஆகாயத்திலே, சூரியன் தேர்உம் - சூரியனது இரதமும், ஓடாது - (அந்நில வெப்பத்தாற் குதிரைகள் சோர்வடைவதனுல்) விரைந்து செல்லமாட்டாது [மந்தகதியாகவே செல்லும்];(வெப்பந்தணிப்பதற்குஉரிய குளிர்ந்த மழையுங் காற்றும் அங்கு இல்லையோ எனின்),—தேரின் - ஆலோசிக்குமிடத்து, நேர் - (அந்நிலத்துக்கு) நேராக, கார்உம் - மேகமும், ஓடாது - (நிலவெப்பத்திற்கு அஞ்சி வானத்திற்) செல்லாது; நீள் கால்உம் ஓடாது - வீசுகின்ற காற்றும் (அங்ஙனமே) செல்லாது; (எ - று.)

பூமி 'அசலா [சலியாதது]' என்று பெயர் பெறுமாதலால், 'பார் நீடாதெனும்பாலது' என்ருர்; நீடுதல் - நீங்குதல். முதலிரண்டடிகளில் ஓடாது என்பதை எச்சமாகக் கொண்டு, பாரும் ஓடாமல், நீடாது - நிலைத்திருக்க முடியாதென்றும்; சூரும் ஓடாமல், கூடாது - (இருக்க) இயலாதென்றும் கூறுவாருமுளர். பாரும்என்பதை ஆகுபெயராகக்கொண்டு -பாலைநிலத்துப் பொருள்தவிர மற்றைநிலத்துப்பொருள், ஓடாது - அவ்விடத்திற்குச் செல்லாது: (ஏனெனின்),—நீடாது எனும் பாலதே - (வேற்றுநிலத்துப் பொருள் அங்குச்சென்ருல்) விருத்தியாகாதென்னும் தன்மையுண்டாயிருத்தலா லெனப் பொருள் காணுவாருமுளர். சூரியன் தேரும் ஓடாது-சூரியன் இரதமும் அந்நிலத்திற்கு நேராகச்செல்லாதெனினுமாம். அந்நிலத்தில்,காலை நண்பகல் மாலை யென்னுங் காலவேறுபாடின்றிக் கொதிப்புமிக்குள்ள தன்மைபற்றி, 'சூரியன்தேருமோடாது 'என்ருர். மாகம்=மஹாகம்.
பி - ம்:—[1] மெய். [2] தேரினேர் சூரிவெம், மாகமீதேறினேர். (கூ)

கஂ0. கண்கிழித் துமிழ்விடக் கனலரா வரசு[1] கார்
விண்கிழித் தொளிருமின் னனையபன் மணிவெயின்
மண்கிழித் திடவெழுஞ் சுடர்கண்மண் மகளுடற்
புண்கிழித் திடவெழுங் குருதியே போலுமே.

(இ - ள்.) கண் கிழித்து உமிழ் விடம் கனல் அரா அரசு-(பார்ப்பவர்) கண்களை (அச்சமுறுத்தி)ப் பிளந்துகொண்டு கக்குகின்ற விஷாக்கினியையுடைய (பாதாளலோகத்திலுள்ள) நாகராசனான ஆதிசேடனது, கார் விண் கிழித்து ஒளிரும் மின் அனைய பல் மணி - கருநிறமுள்ள வானத்தைப் பிளந்துகொண்டு பிரகாசிக்கின்ற மின்னல்களையொத்துவிளங்குகின்ற பலமாணிக்கங்களிலிருந்து, வெயில் மண் கிழித்திட எழும்- சூரியகிரணம் அந்நிலத்தைப்பிளக்க (அவ்வெடிப்புக்களின்வழியாக) மேலெழுகின்ற, சுடர்கள்-சிவந்த ஒளிகள்,-மண்மகள் உடல் புண் கிழித்திட எழும் குருதி ஏ போலும்-பூமிதேவியினது உடம்பிலுள்ளவிரணங்கள் வாய்திறக்க (அவற்றினின்று) வெளியெழுகின்ற செந்நீரையே ஒக்கும்; (எ - று.)

பாலைவனநிலம் நீரற்றுப் பாதலம்வரையும் கமர்வெடித்துக்கிடக்குமென்று கூறியவாறு. நிலவெடிப்பின்வழியாய் மேலெழுந்துவிளங்குகின்ற ஆதிசேடன்முதலியசிறந்தநாகங்களின் மாணிக்ககாந்தியானது, அதிகவெப்பத்தால் பூமிதேவியின் உடலிற்றோன்றிய புண் வெடித்துவிட அப்புண்களிலிருந்து வெளிப்படுகின்ற இரத்தத்தைப்போலுமென்க; இந்தத்தற்குறிப்பேற்றவணியால், நிலவெம்மை தொனிக்கும். கண் கிழித்து-(கோபத்தால் நாகங்களின்) கண்கள்பிதுங்கி எனினும் அமையும்: "திட்டியின்விடத்து நாகம்" என்பர், பின்னும். கண் - பல்லின்துளையென்பாருமுளர். பி - ம்:—[1] கால். (௧0)

௧௧. [1]புழுங்குவெம்பசியொடு புரளும் [2]பேரரா
விழுங்கவந் [3]தெழுந்தெதிர் விரித்த வாயின்வாய்
[4]முழங்குதிண் கரிபுகு முடுகி மீமிசை
வழங்குவெங் கதிர்சுட மறைவு தேடியே.

(இ - ள்.) (அந்நிலத்திலே), புழுங்கு - (மனம்) தவித்தற்குக்காரணமான, வெம் பசியொடு - கொடியபசியுடனே, புரளும் - புரண்டுகொண்டிருக்கின்ற, பேர் அரா - பெரும்பாம்பு, விழுங்க - (அகப்பட்டவற்றை) உட்கொள்ளும்பொருட்டு, எழுந்துவந்து-(தன்னிடம்)விட்டுவந்து, எதிர் விரித்த- எதிரிலே நன்றாகத்திறந்த, வாயின்வாய் - வாயிலே, முழங்கு திண் கரி - கர்ச்சிக்குந்தன்மையுள்ள வலிய யானை, மீமிசை வழங்கு வெம் கதிர் சுட மறைவு தேடி - ஆகாயத்திலேவீசுகின்ற உஷ்ணமான சூரியகிரணங்கள் சுடுவதனால் (அவ்வெப்பத்திற்குஆற்றாமல்) மறைதற்குஇடமானநிழலைத் தேடி, முடுகி புகும் - விரைந்துசென்று நுழையும்; (எ - று.)

வழிதப்பி அங்குச்சேர்ந்து வெம்மையைத் தாங்கமாட்டாமல் நிழலைத் தேடித்திரியும் யானை, பசியினால்தவித்து 'என்னஇரை கிடைக்கும்?' என்று தன்னெதிரேவரும் பெரும்பாம்பின் அங்காந்தவாயிலே புகுமென்பதாம். புழுங்கு - பசியினால்உடல்வியர்க்கின்ற என்பாருமுளர். [1]புழுங்கி. [2]போரரா. [3]எதிரெதிர். [4]முழங்கிவெங்கரி. (௧௧)

௧௨. ஏகவெங் கனலரா சிருந்த [1]காட்டினிற்
காகமுங் கரிகளுங் கரிந்து சாம்பின

மாகவெங் கனலெனும் வடவைத் தீச்சுட
மேகமுங் கரிந்திடை வீழ்ந்த போலுமே.

(இ - ள்.) ஏகம் வெம் கனல் - ஒப்பில்லாத வெப்பமுடைய அக்கினி தேவன், அரசு இருந்த-அரசாட்சிசெய்துவீற்றிருக்குமிடமான, காட்டினில்- அப்பாலைவனத்திலே, காகம்உம் கரிகள்உம் கரிந்து சாம்பின-காக்கைகளும் யானைகளும் (அந்நிலவெப்பத்தால் வெந்து) கரிந்துவிழுந்துகிடப்பவை,— மாகம் வெம் கனல் எனும் வடவை தீ சுட மேகம்உம் கரிந்து இடை வீழ்ந்த போலும் - ஆகாயமுழுவதும்அளாவுகின்ற (அந்நிலத்திற்பொருந்திய) வெவ் விய அக்கினியென்கிற படபாமுகாக்கினி எரிப்பதனால் மேகங்களும்வெந்து கருகி (அந்நிலத்தின்) இடையிடையே வீழ்ந்தனவற்றை யொக்கும்; (எ-று.)

வெம்மையையாற்றமாட்டாமல் வெந்து கரிந்து வீழ்ந்த காகமும் யானைகளும், அந்நிலத்தின்எரியினால் வானத்துச்செல்லும்மேகங்கள் கரிந்து வீழ்ந்தவற்றை யொக்கு மென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. காகம் சிறு மேகத்திற்கும், யானை பெருமேகத்திற்கும் வண்ணமும் வடிவும்பற்றிய உவமை. கனலெனும்வடவை - அபநுதி. மாகவெங்கனல் - சூரிய னெனி னுமாம். பி - ம்:—[1] நாட்டினில். (கஉ)

கங. கானகத் தியங்கிய கழுதின் றேர்க்குலந்
[1] தானகத் தெழுதலாற் றலைக்கொண் டோடிப்போய்
மேனிமிர்ந் தெழுந்திடில் விசும்பும் வேமெனா
வானவர்க் கிரங்கிநீர் வளைந்த தொத்ததே.

(இ - ள்.) கானகத்து இயங்கிய - அவ்வனத்தினிடத்திலே உலா வுகின்ற, கழுதின் தேர் குலம் - கானற்கூட்டமானது,—'தான் - வெப்பம், அகத்து எழுதலால் - அவ்விடத்துத் தோன்றிக்கொண்டிருப்பதனால், தலைக் கொண்டு ஓடி போய் -(அவ்வெப்பம்) அதிகப்பட்டு விரைந்துசென்று, மேல் நிமிர்ந்து எழுந்திடில் - மேலேஓங்கி யெழுமானால், விசும்பும் வேம் - தேவ லோகமும் வெந்துபோமே!', எனா-என்றுகருதி, வானவர்க்கு இரங்கி-தேவர் கள்பக்கலிரக்கங்கொண்டு, நீர் - நீர்க்கடவுள்,வளைந்தது - வளைந்துள்ளதை, ஒத்தது- போன்றது;(எ-று.)

கானல் - நீர்போலக்காணப்படுவது. அங்குக் கானல் தோன்றுவது - 'அவ்விடத்துள்ளவெப்பம்இன்னும் அதிகப்பட்டு வானத்திலும் பரவுமாயின், வானுலகும் வெந்துவிடுமே!' என்று இரக்கங்கொண்டு நீர்க்கடவுள் வெப்பம் மேலேபோகாமலிருக்கும்படி தான் வளைந்ததை யொக்குமெனக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. கழுதின்தேர் - பேய்த்தேர், கானல். கழுது-பேய். இத்தலைக்குஅத்தலையும், அத்தலைக்கு இத்தலையுமாகக்காணப்படுதலால், 'இய ங்கிய' என்றார். விசும்பு - ஆகுபெயர். பி - ம்:—[1] தானகங்கரிதலின். (கங)

கச. ஏய்ந்தவக் கனலிடை யெழுந்த கானற்றேர்
காய்ந்தவக் கடுவனங் காக்கும் வேனிலின்

வேந்தனுக் கரசுவீற் றிருக்கச் செய்ததோர்
பாய்ந்தபொற் காலுடைப் பளிக்குப் பீடமே.

(இ - ள்.) ஏய்ந்த அ கனலிடை எழுந்த கானல் தேர் - (அந்நிலத்திற்) பொருந்திய அவ்வெப்பத்தினின்றுதோன்றிய பேய்த்தேரெனப்படுங் கானலானது, காய்ந்த அ கடு வனம் காக்கும்-கொதிக்கின்ற அந்தக்கொடிய வனத்தை யாள்கின்ற, வேனிலின் வேந்தனுக்கு - கோடையாகிய அரசனுக்கு, அரசு வீற்றிருக்க - அரசாட்சிசெய்யவீற்றிருப்பதற்காக, செய்தது - செய்யப்பட்டதாகிய, ஓர்-, பாய்ந்த பொன்கால் உடை பளிங்கு பீடம்-நீண்ட பொற்கால்களையுடைய படிகக்கல்லினாலாகிய ஆதனத்தையொக்கும்.

அந்நிலத்திற்பரவியுள்ள அக்கினியினாலெழுகிற கானலானது, பொற்காலின்மீதுள்ள பளிங்காசனத்தை யொக்கு மென்றபடி; தற்குறிப்பேற்றவணி. கனலுக்குப் பொற்காலும், வெள்ளியநீர்மயமாய்த்தோன்றுங் கானலுக்கு பளிங்குப்பீடமும்உவமை. (கச)

கரு தாவரு மிருவினை [1]செற்றுத் தள்ளரு
மூவகைப் பகையரண் கடந்து முத்தியிற்
போவது புரிபவர் மனமும் பொன்விலைப்
பாவையர் மனமும்போற் பசையு மற்றதே.

(இ - ள்.) தா அரும் - துன்பம்வருதற்குக் காரணமாகிய, இரு வினை - (நல்வினை தீவினை என்னும்) இருவகைவினைகளை, செற்று - ஒழித்து, தள்ள அரு மூவகை பகை அரண் கடந்து - நீக்குதற்குஅருமையான (காமம் வெகுளிமயக்கம் என்னும்)மூன்றுவகைப்பகைகளாகியமதில்களைத் தாண்டி, முத்தியில் போவது புரிபவர் - மோட்சலோகத்திற் செல்லுதலை விரும்பிய உத்தமஞானியரது, மனம்உம் - உள்ளமும், பொன் விலை பாவையர் மனம் உம் - பொன்னை (த் தமதுஇன்பத்திற்கு) விலையாகக்கொள்ளுகிற வேசைமாதரது நெஞ்சமும், போல் - போல, பசைஉம் அற்றது-சிறிதும் பசையில்லாதது, (அந்நிலம்); (எ - று.)

பாலைநிலத்தின் ஈரமற்றதன்மை, இதனாற்கூறப்படுகின்றது. பசையற்ற தன்மையில் முமுட்சுக்களின் மனத்தையும் வேசையரதுஉள்ளத்தையும் உவமைகூறினார். மனங்களுக்குப் பசை - அன்பு: நிலத்திற்குப்பசை-ஈரம்: இது-சிலேடை. முத்தியிற்போவதுபுரிபவர் - முமுட்சுக்கள். தா அரும் என்று பிரித்து - அறஅழிதற்குஅருமையான எனினுமாம். பி - ம்:—[1] தள்ள. [2] அரணமுங் கடிந்த. (கரு)

கசு பொரிபரற் [1]படர்நிலம் பொடிந்து கீழுற
விரிதலிற் பெரு [2]வழி விளங்கித் தோன்றலா
[3]லரிமணிப் பணத்த[4]ரா வரச னாட்டினு
மெரிகதிர்க் கினிதுபுக் கியங்க லாயதே.

(இ - ள்.) பொரி - (வெப்பத்தினால்) பொரிந்த, பரல் - பருக்கைக் கற்கள், படர் - பரவியுள்ள, நிலம் - அந்தநிலமானது, பொடிந்து-

வெடித்து, கீழ் உற விரிதலின் - பாதாளலோகம்வரையிலும் விரிந்ததனால், பெரு வழி விளங்கி தோன்றலால் - பெரியவழி விளங்கிக்காணப் படுதலால்,—எரி கதிர்க்கு - தபிக்கின்ற சூரியகிரணத்துக்கு, அரி மணி பணத்து அரா அரசன் நாட்டின்உம் - சிவந்தமாணிக்கங்களையுடைய படங்களையுடைய சர்ப்பராசனது இடமாகிய பாதாளலோகத்திலும், இனிது புக்கு இயங்கல் ஆயது - எளிதிற்பிரவேசித்து உலாவும்படி யாயிற்று;(எ-று.)

அங்குக் கமர் மிக்கிருக்கின்றமை, இதனாற் கூறப்படுகின்றது. அரி - அழகுமாம். பி - ம்:—[1]படு. [2]வெளி. [3]அருமணி. [4]அரவரசன். (கசு)

கஎ.—நிலத்தின்வெம்மையால் குமாரர்கள் வருந்துவரேயென முனிவன் சிந்தித்தல்.

எரிந்தெழு கொடுஞ்சுர மினைய தெய்தலு
மருந்தவ னிவர்பெரி தளவி லாற்றலைப்
பொருந்தின ராயினும் பூவின் மெல்லியர்
வருந்துவர் சிறிதென மனத்தி னோக்கினான்.

(இ - ள்.) இனையது - இத்தன்மையதான, எரிந்து எழு - அனல்பற்றியெழுகின்ற, கொடு சுரம் - கொடிய பாலைநிலத்தை, எய்தலும் - (மூவரும்,) அடைந்தவளவிலே, அரு தவன் - விசுவாமித்திரமுனிவன், 'இவர் - இவ் விராமலக்குமணர், பெரிது அளவு இல் ஆற்றலை பொருந்தினர் ஆயின்உம் - சிறந்த அளவில்லாத சக்தியையுடையவர்களானாலும், பூவின் மெல்லியர் - மலரினும் மிகமெல்லிய இயற்கையுடையர்:(ஆதலால்),சிறிதுவருந்துவர்-(நில வெப்பத்தாலும் வழிநடையாலுங்) கிஞ்சித்து வருத்தமடைவர்கள்,' என - என்று, மனத்தில் நோக்கினான் - உள்ளத்திற் கருதுவானானான்; (எ - று.)

இந்தக்குமரர் பேராற்றல்படைத்துள்ளாராயினும், பூவினும் மெல்லியராதலாற் சிறிதுவருந்துவரே யென்று விசுவாமித்திரன் வருந்தினனென்க.

கஅ.—வெம்மைதோன்றாமைக்காக அவர்கட்கு இரண்டு வித்தைகளை முனிவன் உபதேசித்தல்.

நோக்கின [1]னவர்முக நோக்க நோக்குடைக்
கோக்குமா ரருமடி குறுக நான்முக
[2]னாக்கிய விஞ்சைக ளிரண்டு [3]மவ்வழி
யூக்கின னவையவ ருள்ளத் துள்ளினார்.

(இ - ள்.) (விசுவாமித்திரன்அவ்வாறுநினைத்து), அவர் முகம் நோக்கினன் - அவ்விராமலக்குமணர்களதுமுகங்களை (க் குறிப்பாக)ப் பார்த்தான்; நோக்க - (அங்ஙனம்) பார்க்கவே, நோக்கு உடை கோ குமரர்உம்-குறிப்பறியுந்தன்மையையுடைய சக்கரவர்த்தியின்குமாரர்களும், அடி குறுக-(விசுவாமித்திரனது) திருவடிகளைச் சேரஅவ்வளவிலே,— (அம்முனிவன்), நான்முகன் ஆக்கிய விஞ்சைகள் இரண்டும் - பிரமதேவனாலுண்டாக்கப்பட்ட (பலை அதிபலை என்னும்) இரண்டுவித்தைகளையும், அ வழி - அப்பொழுது [அவ்விடத்தில்], ஊக்கினன் - (தெரியுமாறு அவர்கட்கு) உபதேசித்தான்;

அவை - அவ்விரண்டுமெந்திரங்களையும், அவர் - அவ்விருவரும், உள்ளத்து- மனத்திலே, உள்ளினர் - சிந்தித்துக்கொண்டார்கள்; (எ - று.)

"இங்கிதஜ்ஞாஸ்துகோஸலா:" என்றவாறு கோசலதேசத்தவர் குறிப்பறிதலிற் சிறந்தவராதலால், 'நோக்குடைக் குமரர்' என்றார். அவர்முகம் - மத்திமதீபம். பி - ம்:—[1] வாண்முகம். [2] ஆக்கின. [3] அவ்வயி னோக்கினன்.

கக.—அப்பாலைவனம் குமாரர்கட்குக் குளிர்ந்துதோன்றுதல்.

உள்ளிய காலையி னூழித் [1] தீயையு
மெள்ளுறு கொழுங்கன [2] லெரியும் வெஞ்சுரந்
தெள்ளுதண் புனலிடைச் சேற லொத்தது
வள்ளலு முனிவனை வணங்கிக் [3] கூறுவான்.

(இ - ள்.) உள்ளிய காலையின் - (அம்மந்திரங்களை அவர்கள்) சிந்தித்த பொழுதிலே, ஊழி தீயைஉம் எள்ளுறு கொழு கனல் எரியும் வெம் சுரம் - யுகாந்தகாலத்து அக்கினியையும் இகழ்கின்ற மிக்கதீ யெரியப் பெற்ற கொடிய அப்பாலைநிலத்திலே (தாங்கள்) செல்லுதல், தெள்ளு தண் புனலிடை சேறல் ஒத்தது - தெளிவான குளிர்ந்தநீரிலே செல்லுதலை யொத்துக் குளிர்ந்ததாயிருந்தது; (அப்பொழுது), வள்ளல்உம் - வரையாது கொடுக்குந்தன்மையுள்ள ஸ்ரீராமனும், முனிவனை வணங்கி கூறுவான் - கௌசிகமுனிவனை நமஸ்கரித்துச்சொல்லுவானானான்; (எ - று.)—அதனை, அடுத்தகவியிற் காண்க. பி - ம்:—[1] தீயினை. [2] எஞ்சும். [3] சொல்லுவான். (கக)

உ0.—'இந்தஇடம்இங்ஙனம்வெப்பமாயிருத்தற்குக்காரணம் யாது?' என்று முனிவனை இராமன் வினவுதல்.

சுழிபடு கங்கையந் தொங்கன் மௌலியான்
விழிபட வெந்ததோ வேறுதா னுண்டோ
பழிபடர் மன்னவன் படைத்த [1] நாட்டினூங்
கழிவதென் காரண மறிஞ கூறென்றான்.

(இ - ள்.) 'அறிஞ - முற்றுணர்வுடையவனே! (இந்நிலம்), சுழி படு கங்கை அம் தொங்கல் மௌலியான் விழி பட வெந்ததுஓ - நீர்ச்சுழிகள் பொருந்திய கங்காநதியையும் அழகிய(கொன்றைப்)பூமாலையையும் அணிந்த சடைமுடியையுடைய சிவபிரானது நெற்றிக்கண்ணின்பார்வை படுதலால் வெந்துபோயிற்றோ? வேறுதான் உண்டு ஓ - (இங்ஙனம்வெப்பமுடைத்தாயிருத்தற்கு) வேறுயாதாயினுங்காரண முளதோ? பழி படர் மன்னவன் படைத்த நாட்டின் ஊங்கு - நிந்தைகள்நிரம்பிய கொடுங்கோலரசனொருவன்பெற்றுள்ள நாட்டினும் அதிகமாக, அழிவது - (இங்ஙனம்) அழிவடைவதற்கு, என் காரணம் - யாதுகாரணம்? கூறு - சொல்வாயாக,' என்றான் - என்று (ஸ்ரீராமன் விசுவாமித்திரனை) வினவினான்; (எ - று.)

இங்ஙனம் இந்நிலம் வெப்பமாதற்குக்காரணம், காமனையெரித்த சிவபிரானதுவிழித்தீப் பட்டதா?வேறு யாதேனும் உண்டா? என்றுமுனிவனைக் குமரன் வினவினனென்க.பழிபடர்மன்னவன்படைத்தநாடு மிகஅழிவதைத் தண்டகன்வரலாறுமுதலியவற்றிற் காண்க. 'பழிபடாமன்னவன்' என்று

படித்து-வசைச்சொல்லைப்பெறாதமன்னவனுகியதசரதனது, நாட்டின் - நாட்டிற்குள்ளே என்று உரைப்பினுமாம். கங்கையந்தொங்கல்மௌலியானென்பதற்கு - கங்காநதியை அழகியமாலையாக முடியிற்சூடியவ னென்று உரைப்பினுமாம். தொங்கல்-மாலைக்குத் தொழிலாகுபெயர். பி - ம்:—[1]நாட்டிடை.

இதுமுதல் இருபத்துநான்கு கவிகள் - ஸ்ரீராமனதுவினுவிற்கு விசுவாமித்திரன் கூறுகின்ற உத்தரம்: தாடகைவரலாறு:—

உக.—முனிவன் ஓரரக்கியின்வரலாற்றைக் கேட்பாயாக வெனல்.

என்றலு மிராமனை நோக்கி யின்னுயிர்
கொன்றுழல் வாழ்க்கையள் கூற்றின் ரேற்றத்த
ளன்றியு மையிரு நூறு மையன்மா
வொன்றிய வலியின ளுறுதி கேளெனு.†

(இ - ள்.) என்றலும் - என்று வினவியவளவிலே, - (முனிவன்), இராமனை நோக்கி - ஸ்ரீராமனைப்பார்த்து,—'இன் உயிர் கொன்று உழல் வாழ்க்கையள் - நல்ல பிராணிகளைக் கொலைசெய்து உண்டுதிரிகின்ற உயிர் வாழ்வையுடையவளும், கூற்றின் தோற்றத்தள் - யமனது உருவம்போலப் பயங்கரமான உருவமுடையவளும், அன்றிஉம் - அல்லாமலும், ஐ இரு நூறு மையல் மா ஒன்றிய வலியினள் - ஆயிரம் மதயானையடைந்துள்ள வலிமையையுடையவளுமாகிய ஒருத்தியினது, உறுதி - வரலாற்றை, கேள் - கேட்பாயாக,' எனு - என்று சொல்லி,—(எ - று.)—இவ்வினையெச்சம், மேல் நாற்பத்துநான்காங் கவியில் 'என்ருன்' என்னும் வினைமுற்ருேடு முடியும்.

மையல் - மயலென்பதன் போலி: உறுதி - உற்ற செயல்: எனவே, வரலாறு. 'மா' என்ற பொதுப்பெயர் 'மயல்' என்ற அடைமொழியைப் பெற்றதனுல், யானையை யுணர்த்திற்று (உக)

---

†இந்தச்செய்யுளின் ஈற்றடியில், ஒன்றியவலியினளுழித்தீயனுள் என்ற பாடமும், அதன்பின் கீழ்வருஞ்செய்யுளும் சிலபிரதிகளிற் காணப்படுகின்றன:—

கன்னவி றோளினுய் கமலத் தோனருண்
மன்னுயி ரனைத்தையும் வாரி வாய்மடுத்
தின்னுயிர் வளர்க்குமோ ரெரிகொள் கூற்றநே
ரன்னவள் யாவளென் றறையக் கேட்டியால்.

(இ - ள்.) கல் நவில் தோளினுய் - மலைகளையொத்துத் தோன்றுகின்ற திருத்தோளழகையுடைய ஸ்ரீராமனே! கமலத்தோன் அருள்-தாமரைமலரில் தோன்றிய பிரமன் படைத்தருளின, மன் உயிர் அனைத்தைஉம் - நிலைபெற்ற (உலகத்திலுள்ள) உயிர்களை யெல்லாம், வாரி - அள்ளி யெடுத்து, வாய் மடுத்து - வாயிலே போகட்டுக்கொண்டு, இன் உயிர் வளர்க்கும் - இனிய (தன்) உயிரை வளர்க்கின்ற, ஓர் - ஒப்பற்ற, எரி கொள் கூற்றம் - கோபாக்கினியைக் கொண்ட யமனை, நேர் - ஒத்த, அன்னவள் - அந்தப்பெண்ணனவள், யாவள் என்று - யாரென்று, அறைய - (நான்) சொல்ல, கேட்டி - (நீ) கேட்பாயாக; (எ - று.)

உஉ.—இதுமுதல் நான்குகவிகளால், சுகேதுவென்பவன் பிரமனைநோக்கித் தவஞ்செய்து ஒருபெண்மகவைப்பெற்றதனைக் கூறுகின்றார்.

இயக்கர்தங் குலத்துளா னுலக மெங்கணும்
வியக்குறு மொய்ம்பின னெரியின் வெம்மையான்
மயக்கிலன் சரனெனும் வலத்தி னனரு
டயக்கிலன் சுகேதுவென் றுளனோர் தூய்மையான்.

(இ - ள்.) இயக்கர்தம் குலத்து உளான் - யட்சர்களது குலத்திற் பிறந்தவனும், உலகம் எங்கண்உம் வியக்குறும் மொய்ம்பினன் - உலகமுழுதும் ஆச்சரியப்படத்தக்க வலிமையுடையவனும், எரியின் வெம்மையான் - நெருப்புப்போன்ற கோபத்தையுடையவனும், மயக்கு இலன் - மயக்கமில்லாதவனும் [நல்லறிவுடையவனும்], சரன் எனும் வலத்தினன் - குஞ்சரம் [யானை] போன்றவனென்று சொல்லத்தக்க வலிமையையுடையவனும், அருள் துயக்கு இலன் - தளர்ச்சியில்லாத அருளையுடையவனுமாகிய, சுகேது என்ற ஓர்தூய்மையான் - சுகேது என்று பேர் சொல்லப்பட்ட பரிசுத்த குணமுடையானொருவன், உளன் - உள்ளவனானான்,[இருந்தான்]; (எ - று.)

மிக்கவலிமையும் கோபமும்படைத்து யானைபோற் கம்பீரமான தோற்றத்தோடு வெற்றிபூண்டு அருளுக்குக் கொள்கலமாகி யட்சகுலத்துத் தோன்றிய சுகேதுவென்னும் ஒருத்தன் இருந்தன னென்பதாம். சரன் = குஞ்சரனென்பதன் விகாரம்: யானை போன்றவ னென்க. 'மயக்கிலன்சர்ச்சனென்' என்று சில பிரதிகளிற் காணப்படுகின்ற பாடத்தைக்கொண்டால், யட்சகுலத்தில் தோன்றிய சர்ச்சனென்பவனுக்குச் சுகேது என்றுஒரு புதல்வ னிருந்தன னென்று பொருளாம். சுகேது - அழகிய துவசமுடையவனென்று பொருள்படும் வடசொல். (உஉ)

உ௩. அன்னவன் மகவிலா தயருஞ் சிந்தையான்
மன்னெடுந் தாமரை மலரின் [1]வைகுறு
நன்னெடு முதல்வனை வழுத்தி நற்றவம்
பன்னெடும் பகலெலாம் [2]பயின்ற [3]பான்மையான்.

(இ - ள்.) அன்னவன்-அந்தச்சுகேதுவென்பவன், மகவு இலாது அயரும் சிந்தையான் - பிள்ளையில்லாமையால் தளர்கின்ற மனத்தையுடையவனாய், மன் நெடு தாமரை மலரின் வைகுறும் நல் நெடு முதல்வனை - நிலைபெற்ற பெரிய தாமரைமலரிலே தங்குகின்ற நல்ல பெரிய முதன்மூர்த்திகளுள் ஒருவனான பிரமனை, வழுத்தி - துதித்து, பல் நெடு பகல் எலாம் - மிகப்பலவான நாட்களிலெல்லாம், நல் தவம் பயின்ற - சிறந்ததவத்தைச் செய்த, பான்மையான் - தன்மையுடையவனானான்; (எ - று.)

அந்தச் சுகேதுவென்பவன் மகவில்லாக்குறையாற் பிரமதேவனை நோக்கி நெடுநாள் தவம்புரிந்தன னென்க. மக - இளமை: பிள்ளைக்குப் பண்பாகுபெயர். பி - ம்:—[1]வைகிய. [2]பயந்த. [3]பான்மையால். (உ௩)

உ௪. முந்தின னருமறைக் கிழவன் முற்றுநின்
சிந்தனை யென்னெனச் சிறுவ ரின்மையா
னொந்தன [1]னருள்கென நுணங்கு [2]கேள்வியாய்
மைந்தர்க ளிலையொரு மகளுண் டாமென்றான்.

(இ - ள்.) நுணங்கு கேள்வியாய் - நுட்பமான நூற்கேள்விகளையுடையவனே! (அங்ஙனந் தவஞ்செய்கையில்), அரு மறை கிழவன் - அருமையான வேதங்களுக்குரியவனான பிரமதேவன், முந்தினன் - (அவனெதிரில்) தோன்றியவனாய், முற்றும் நின் சிந்தை என் என - 'நிறைவேறவேண்டிய உனது எண்ணம் யாது?' என்று வினவ,—(சுகேது), 'சிறுவர் இன்மையால் நொந்தனன் - புத்திரரில்லாமையால் வருந்தினேன்; அருள்க - (இனிப் புத்திரருண்டாம்படி)கருணைபுரிவாயாக', என - என்று பிரார்த்திக்க,—(பிரமன்), 'மைந்தர்கள் இலை - (உனக்கு) ஆண்மக்களுண்டாவதில்லை; ஒரு மகள் உண்டு ஆம் - ஒரு பெண்மாத்திரமே உளளாவள்', என்றான் - என்று கூறினான்; (எ - று.)

'நுணங்குகேள்வியாய்' என்பது, கதைகூறுகின்ற விசுவாமித்திரமுனிவன் இராமனை விளித்த விளி: கதைகூறுபவர் தாம் கூறுகின்ற கதையிற் கவனக்குறைவு நிகழாதிருத்தற்பொருட்டுக் கதைகேட்பவரை விளித்து மேலும் கதைகூறுதல், இயல்பு. இனி, வரங்கொடுக்குமாறு பிரதியட்சமாக வந்த பிரமதேவன் சுகேதுவை விளித்த விளியுமாம். சுகேதுவின் தவத்துக்கு உவந்த பிரமதேவன் பிரதியட்சமாகி, 'உனக்குவேண்டும் வரம் யாது? என்று வினவ, சுகேது தன்குறையைத் தெரிவிக்க, பிரமதேவன் உனக்குஆண்சந்ததி யுண்டாகாது;பெண்சந்ததி மாத்திரம் ஒன்று உண்டாம்' என்று அருள்புரிந்தன னென்பதாம். நின்சிந்தனை முற்றும் எனமாற்றி - உன் எண்ணம் முழுவது மென்றும், நீ கருதியது முடிவுபெறு மென்றும் உரைக்கலாம். இன்மை யான் என்றும் பிரித்து உரைக்கலாம். பி-ம்:—
[1] அருளென. [2] கேள்வியான். (உ௪)

உ௫. பூமட மயிலினைப் பொருவும் பொற்பொடு
மேமுறு மதமலை யீரைஞ் ஞூறுடைத்
தாமிகு வலியொடுந் [2]தனயை தோன்றுநீ
போவென மலரயன் புகன்று போயினான்.

(இ - ள்.) 'பூ மடம் மயிலினை - (எல்லாமலர்களுள்ளுஞ் சிறந்த) தாமரைமலரில்வாழ்கின்ற என்ஞான்றும்இளமையையுடைய மயில்போலுஞ் சாயலுள்ள திருமகளை, பொருவும் - ஒக்கின்ற, பொற்பொடும் - அழகுடனும், ஏம் உறும் - களிப்புமிக்க, மதம் மலை ஈர்ஐஞ்ஞூறு - ஆயிரம் மதயானைகள், உடை-கொண்டுள்ள, தா மிகு வலியொடும்-(தன்கைப்பட்டார்) வருத்தம் மிகுதற்குக் காரணமான வலிமையுடனும், தனயை-(ஒரு) புத்திரி, தோன்றும் - பிறப்பாள்; நீ போ - நீ (கவலையில்லாமல் உன்னிடஞ்) செல்வாய், என - என்று (ம்), மலர் அயன் - தாமரைமலரில்(வாழ்கின்ற) பிரமன்,

புகன்று - சொல்லி விட்டு, போயினன் - (தன்னுலகு) சென்றான்; (எ - று.) —தாம் - அசை.

*பேரழகும் ஆயிரம்மதயானைவலிமையு முடையவளாய் ஒரு பெண் உனக்குத் தோன்றுவ ளென்று பிரமதேவன் அநுக்கிரகித்துச் சென்றன னென்பதாம். மதமலை - அடையடுத்த உவமவாகுபெயர். மடமை-பேதைமையு மாம். உடைத்து ஆம் மிகுவலி எனப் பிரித்தல், சிறவாது. பி - ம்:— [1] தனயள். (உ௫)

உசு.—பிரமதேவன்வரத்தினாற்பிறந்துவளர்ந்த அப்பெண்ணை, சுகேது சுந்தனென்பவனுக்கு மணஞ்செய்துதருதல்.

*ஆயவ [1] னருள்வழி யலர்ந்த தாமரைச்
சேயவ ளெனவளர் செவ்வி கண்டிவட்
[2] காயவன் யார்கொலென் றாய்ந்து தன்கிளை
நாயகன் சுந்தனென் பவற்கு நல்கினான்.

(இ - ள்.) ஆயவன் அருள் வழி- அப்பிரமதேவனருளிச்செய்தபடியே, (ஒரு பெண்பிறந்து),அலர்ந்த தாமரை சேயவள் என - மலர்ந்த தாமரைமல ரில்வாழ்கின்ற செந்நிறமுடைய இலக்குமிபோல, வளர் - வளர்ந்துவருகிற, செவ்வி-அழகியபருவத்தை, கண்டு-(சுகேதுவானவன்) பார்த்து,—இவட்கு ஆயவன் யார்கொல் என்று ஆய்ந்து - இவளுக்குத் தக்க கணவன் யாவனோ என்று ஆராய்ந்து, தன் கிளை நாயகன் சுந்தன் என்பவற்கு - தனது இனத் தாராகிய யட்சர்களுக்கெல்லாந் தலைவனான சுந்தனென்றுபேர்சொல்லப்பட் டவனுக்கு, நல்கினான் - (அம் மகளை மணஞ்செய்து) கொடுத்தான்; (எ-று.)

இந்தஸுந்தனென்பவன் ஜர்ஜனென்னும்யட்சனதுபுதல்வனென்பது, முதனூலாற் பெறப்படும். பி - ம்:—[1] அருள்வழிப்பிறந்தவாயிழை. [2] ஆயவ ரியாவரென்று. (உசு)

உஎ.—மணமகனும் மணமகளுஞ் சுகித்திருத்தல்.

* காமனு மிரதியுங் கலந்த காட்சியீ
தாமென வியக்கனு மணங்க னாளும்வே
றியாமமும் பகலுமோ [1] ரீறின் றென்னலாய்த்
தாமுறு பெருங்களிச் சலதி மூழ்கினார்.

(இ - ள்.) காமன்உம் இரதிஉம் கலந்த காட்சி ஈது ஆம் என-'மன்மத னும் (அவன்) மனைவியான இரதிதேவியும் சேர்ந்த தோற்றத்தை யொக் கும் இது' என்னும்படி, இயக்கன்உம் - (அந்தச் சுந்தனென்கிற) யட்ச னும், அணங்கு அனாள்உம் - மோகினியையொத்த அத்தாடகையும், வேறு - தனியாக, யாமம்உம் பகல்உம் - இராத்திரியிலும் பகலிலும், ஓர் ஈறு இன்று என்னல் ஆய் - ஒருமுடிவில்லையென்றுசொல்லலாம்படியாய், உறு பெரு களி சலதி மூழ்கினார் - மிக்க பேரானந்தமாகிய கடலில் மூழ்கினார்கள்; (எ-று.)

சுந்தனும் தாடகையும் இரவும் பகலும் முடிவில்லாத இன்பக்கடலு ளாழ்ந்தன ரென்க. அணங்கு - தாக்கணங்கு; தெய்வப்பெண்ணும், திருமக ளுமாம். யாமம் - ஏழரைநாழிகைப்பொழுது; இங்கு அச்சொல் 'யாமிநீ, த்ரியாமா' என்று யாமத்தின்மூலமான பேரையுடைய இரவுக்கு ஆயிற்று; ஆகுபெயர். யாமமும் பகலும் ஓர்ஈறுஇன்றுஎன்னலாய்என்பதற்கு - இரவுக் கும் பகலுக்கும் ஓர்வேறுபாட்டெல்லை இல்லையென்னலாம்படி என்றும் உரைக்கலாம். களி - கலவியின்பம். சலதி = ஜலதி: நீரிருக்குமிடமென்பது பற்றிக் கடலுக்குக் காரணக்குறி. பி - ம்:—[1] ஈறுகாண்கிலார். (உஎ)

உஅ.—அவர்கட்கு மாரீசன் சுபாகு என்னும் இருமக்கள் தோன்றுதல்.

பற்பல நாட்செலீஇப் பதுமை [1]போன்றொளிர்
பொற்பினாள் வயிற்றிடைப் புவன மேங்கிட
[2]வெற்பணி புயத்துமா ரீச னும்விறன்
மற்பொரு சுவாகுவும் வந்து தோன்றினார்.

(இ - ள்.) பின்பு, பல்பல நாள் செலீஇ - அனேகநாட்கள் கழித்து, பதுமை போன்று ஒளிர் பொற்பினாள் வயிற்றிடை - தாமரைமலரில்வாழ் கிற திருமகளையொத்த அழகுடைய அத்தாடகையினது வயிற்றிலே, வெற்பு அணி புயத்து மாரீசன்உம் - மலைகளையொத்த தோள்களையுடைய மாரீச னென்பவனும், விறல் மல் பொரு சுவாகுஉம் - வெற்றியுடைய மற்போரைச் செய்யுந்தன்மையுள்ள சுபாகுஎன்பவனும், புவனம் ஏங்கிட-உலகத்திலுள்ள பிராணிகள் அஞ்சும்படி, வந்து தோன்றினார் - வந்துபிறந்தார்கள்;(எ - று.)

தாடகைக்குப்பிறந்தபுதல்வராகியமாரீசசுபாகுக்கள் நிலவுலகத்திலுள்ள பிராணிகளையெல்லாம் அழிக்குந்தன்மைவாய்ந்தவ ராதலால், 'புவனமேங்கி டத்தோன்றினார்' என்றார். செலீஇ-பிறவினையுணர்த்துமாறுஅளபெடுத்தது. பதுமை = பத்மா: தாமரைமலரில்வாழும்இலக்குமி:ப்ரதிமாஎன்பதன்திரிபெ னக்கொண்டால், சித்திரப்பாவைபோலழகியஎன்றும். சுவாகு = ஸுபாஹு: அழகியதோளுடையவன். அணி - உவமவுருபு. 'விறல்' என்றவிடத்து 'வென்றிசேர்' என்ற பாடம் ஓசைக்குச் சேராது. பி - ம்:—[1] போலிய. [2] வெற்புறழ். (உஅ)

உகூ-ஙo.—இதுவும் அடுத்த கவியும் - குளகம்: அக்குமாரர்களைப்பெற்ற சுந்தனென்பவன் களிப்பினால் அகத்தியமுனிவன் வாழுமிடத்தை யடைந்து மரங்களைப்பறித்துவீசியதைக் கூறும்.

உகூ. [1]மாயமும் வஞ்சமும் வரம்பி லாற்றலுந்
தாயினும் பழகினார் தமக்குந் தேர்வொணா
தாயவர் வளர்வுழி யவரை யீன்றவக்
காய்சினத் தியக்கனுங் களிப்பின் மேன்மையான்,

௩௦. தீதுறு மவுணர்க டீமை தீர்தர
மோதுறு கடலெலா மொருகை மொண்டிடு
மாதவ னுறைவிட மதனின் வந்துநீள்
பாதவ மனைத்தையும் பறித்து வீசினன்.

(இ - ள்.) (உக) ஆயவர் - அம்மக்களிருவரும், மாயம்உம் - (தமது) மாயையையும், வஞ்சம்உம் - வஞ்சனையையும், வரம்பு இல் ஆற்றல்உம் - அளவில்லாதபோர்வல்லமையையும், தாயின்உம் பழகினர் தமக்குஉம் தேர்வு ஒணுது - தாயைக்காட்டிலும்அதிகமாக(நெருங்கி)ப் பழகினவர்களாலும்அறிதல்கூடாதபடி, வளர்வு உழி - வளர்ந்துவருகிற பொழுதிலே,— அவரை ஈன்ற-அவ்விருவரையும்பெற்ற, அ காய் சினத்து இயக்கன்உம் - கொதிக்கின்றகோபத்தையுடைய சுந்தனென்கின்ற அந்தயட்சனும், களிப்பின் மேன்மையான் - சந்தோஷத்தினாலாகிய செருக்கின்மிகுதியை யுடையவனாய்,—(௩௦) தீது உறும் அவுணர்கள் தீமை தீர்தர - துர்க்குணம்மிகுந்த அசுரர்கள்செய்யும் பொல்லாங்கு ஒழியும்படி, மோதுஉறு கடல் எலாம் ஒரு கை மொண்டிடு - (அலைகள்) மோதுதல்மிக்க கடல்முழுவதையும் ஒருகையால் மொண்டுபருகியிட்ட, மா தவன் - மிக்க தவவலிமையுள்ள அகத்தியமுனிவன், உறைவு இடம் அதனின் - எழுந்தருளியிருக்கிற இடத்திலே, வந்து—, நீள் பாதவம் அனைத்தைஉம் பறித்து வீசினன் - உயர்ந்த மரங்களையெல்லாம் வேரோடு பிடுங்கி எறிந்தான்; (எ - று.)

தன்குமாரர்கள் மாயைமுதலியவற்றுடன் வளர்கையில், அவர்களது தந்தையாகியசுந்தன் செருக்குக்கொண்டு அகத்தியனாச்சிரமத்தைக்கிட்டி மரங்களையெல்லாம்பறித்துவீசலாயினனென்க. உக:—மாயம் - மந்திரசக்தியாற் செய்யும் வஞ்சனை. வஞ்சம் - புத்திவலியாற் செய்யுஞ் சூது; கொடுமையுமாம்; "வாளும் பொய்யுங் கொடுமையும்வஞ்சம்" என்பது,பிங்கலந்தை. 'மாயமும்வஞ்சமும்...தாயினும்பழகினர்தமக்கும் தேர்வொணுது ஆயவர்வளர்வுழி'-"தாயினும்பழகினரும்தன்னிலைதெரிக்கலாகா,மாயைவல்லுருவத்தான்" என்பது, இங்கு ஒப்புநோக்கத்தக்கது; இனி, இத்தொடர்க்கு - மாயம் முதலியவைகளில் தங்கள் தாயாகிய தாடகையினும் மிகுதியாகப்பழகியவர்களாய்த் தமக்குள்ளும் ஒருவரோடொருவர் அம்மாயைமுதலியனதெரியவொண்ணாதபடி அவர்கள் வளரும்போது என்று உரைப்பாரு முளர். "ஸுதௌஸுந்தோபஸுந்தயோ:-...மாரீசஶ்ச ஸுபாஹுஶ்ச வீர்யவந்தௌஸுஶிக்ஷிதௌ" (பாலகாண்டம்,ஸர்க்கம்-உ௦, ஶ்லோ உ௫. உசு) என்று மாரீசனை ஸுந்தனுடையபுதல்வனாகவும்,ஸுபாஹுவை உபஸுந்தனுடையபுதல்வனாகவும்:"கஸ்யசித்த்வத காலஸ்ய யக்ஷீவைகாமரூபிணீ - தாடகாநாமபத்ரந்தே பார்யாஸுந்தஸ்யதீமத: - மாரீசோராக்ஷஸ:புத்ரோயஸ்யாஶக்ரபராக்ரம:" (பாலகா. ஸர். உ௫, ஶ்லோ. உ௫, உசு) என்று தாடகை மாரீசனென்றபுத்திரனையே பெற்றாளாகவும் ஸ்ரீவால்மீகிராமாயணத்திற் கூறியுள்ளது. [1]மாயையு ௩௦:—தம்பகைவனாகியவிருத்திராசுரன் மற்றும்பலஅசுரர்களுடனே கடலில்ஒளித்துக்கொண்—

பொழுது, இந்திரன்முதலியதேவர்கள்அகத்தியமாமுனிவனை வந்துபிரார்த்திக்க, அம்முனிவன்கடல்நீரை ஒருகையால் முற்றும் முகந்துபருகி ஒளித்திருந்தஅசுரரை இந்திரன்கொன்றபின் அவன்வேண்டுகோளின்படி மீண்டும் உமிழ்ந்தன னென்பது,'கடலேலாமோநகைமோண்டிடுமோதவன்'என்பதில் அடங்கியவரலாறு. பாதவம்=பாதபம்; தாளால்நீரைஉண்பது: மரம். (உக-ஙo)

ஙக.—அகத்தியமுனிவன்கோபத்தாற் சுந்தன் சாம்பராதல்.

[1]விழைவுறு மாதவம் வெஃகி னோர்விரும்
புழைகலை யிரலையை யுயிருண் டோங்கிய
[2]வழைமுதன் மரனெலா மடிப்ப மாதவன்
றழலெழ விழித்தனன் சாம்ப ராயினான்.

(இ - ள்.) விழைவு உறும் - (எல்லாராலும்) மிகவிரும்பத்தக்க, மா தவம்-பெருந்தவத்தை, வெஃகினோர் - விரும்பிச்செய்பவரான முனிவர்கள், விரும்பு - விரும்புகிற, (ஆச்சிரமத்திலுள்ள), உழை - உழையென்னும் மான்களையும், கலை - கலையென்னும்மான்களையும், இரலையை - இரலையென்னும்மான்களையும், உயிர் உண்டு-(சுந்தன்) கொன்றுதின்று, ஓங்கிய வழை முதல் மரன் எலாம் - உயர்ந்துள்ள சுரபுன்னைமரம்முதலிய மரங்களெல்லாவற்றையும், மடிப்ப-அழிக்க,— மா தவன் - மிக்கதவமுள்ளஅவ்வகத்திய முனிவன்,— தழல் எழ - நெருப்புஎழும்படி, விழித்தனன்-(கோபத்தாற்) கண்திறந்துபார்த்தான்; சாம்பர் ஆயினான் - (உடனே சுந்தன்) நீறாய்விட்டான்; (எ - று.)

ஆச்சிரமத்துள்ள மான்களைக் கொன்று தின்பதையும் மரங்களைப் பறித்தெறிதலையும் சுந்தன் செய்யவே, அகத்தியமுனிவன் அந்தச் சுந்தனை நெருப்பெழச் சினந்துபார்க்க, அந்தச்சுந்தன் சாம்பராயின னென்க. வடமொழியில், க்ருஷ்ணஸாரம் ருருரிஸ்யம்என்பனபோல, உழைமுதலியன-மானின்சாதிபேதம். உழை - புள்ளிமான். கலை - கலைமான். இரலை - புல்வாயெனப்படும். இனி, உழை - பெண்மைப்பெயர், கலை - ஆண்மைப்பெயரென்றுகொள்வாருமுளர். [1]விழைவறு பாடமாயின் - பற்றறுதற்குக்காரணமானஎன்க. பி - ம்:—[2]வழையொடு. (ஙக)

ஙஉ.—கணவனிறந்தமைகேட்டுத் தாடகை தன் குமாரரோடும் அகத்தியனுறைவிடஞ் சேர்கை.

மற்றவன் விளிந்தமை மைந்தர் தம்மொடும்
பொற்றொடி கேட்டுவெங் கனலிற் பொங்குறா
முற்றுற முடிக்குவன் முனியை யென்றெழா
நற்றவ னுறைவிட நண்ணி னாள்.

(இ - ள்.) அவன் விளிந்தமை - (கணவனான)அந்தச்சுந்தன் இறந்ததை, பொன் தொடி - பொன்னாலாகிய தொடியென்னும்கைவளையை யணிந்த தாடகை, கேட்டு - கேள்விப்பட்டு, வெம் கனலின் பொங்குறா - கொடிய அக்கினிபோலக் கோபம்மிகுந்து, முனியை முற்றுற முடிக்குவென் என்று-

'அம்முனிவனை யழியும்படி கொல்லுவேன்' என்று சொல்லிக்கொண்டு மைந்தர் தம்மொடும் - புத்திரரான சுபாகுமாரீசர்களுடனே, எழா - புறப்பட்டு, நல் தவன் உறைவு இடம் அதனை - சிறந்ததவமுள்ள அம்முனிவன் வசிக்கின்ற இடத்தை, நண்ணினள் - சேர்ந்தாள்; (எ - று.) —மற்று-அசை.

அகத்தியனால்தன்கணவன்இறந்தானென்பதைக் கேள்விப்பட்ட அந்தத்தாடகை அம்முனிவனையுண்பேனென்று பேராரவாரஞ்செய்துகொண்டு தனதுபுத்திரரோடும் அம்முனிவன்வாழுமிடத்தைச்சேர்ந்தனளென்க. ()

**௩௩-௩௪.—இதுவும் அடுத்த கவியும்-குளகம்: தாடகை அகத்தியனை யழிக்குமாறு குமாரர்களோடும் முனிந்துசெல்ல, அம்முனிவன் அவர்களை அரக்கராகுமாறு சபித்தல்.**

௩௩. இடியொடு மடங்கலும் வளியு மேங்கிடக்
கடிகெட வமரர்கள் கதிரு [1]முட்குறத்
தடியுடை முகிற் குலஞ் சலிப்ப வண்டமும்
வெடிபட [2]வதிர்த்தெதிர் விளித்து மண்டவே.

௩௪. தமிழெனு மளப்பருஞ் சலதி தந்தவ
னுமிழ்கனல் விழிவழி யொழுக வுங்கரித்
தழிவன செய்தலா லரக்க ராகியே
யிழிகென வுரைத்தன னசனி யெஞ்சவே.

(இ - ள்.) (௩௩) (அங்ஙனம் அடைந்த தாடகையும்சுபாகுமாரீசரும்), இடியொடு - இடியும், மடங்கல்உம் - ஊழித்தீயும், வளிஉம் - ஊழிப்பெருங்காற்றும், ஏங்கிட - அஞ்சவும்,— அமரர்கள் - தேவர்கள், கடி கெட - (அச்சத்தால் தமது) ஒளி யழியவும், கதிர்உம் உட்கு உற - சூரியசந்திரர்களும் பயமடையவும், தடி உடை முகில் குலம் - மின்னல்களையுடைய மேகக்கூட்டம், சலிப்ப - (அச்சத்தால்) நடுங்கவும், அண்டம்உம் வெடிபட - அண்டகோளமும் (அதிர்ச்சியால்) பிளவுபடவும், அதிர்த்து - கர்ச்சித்துக்கொண்டு, எதிர் விளித்து - (முனிவனை)எதிரிலே கூவியழைத்துக்கொண்டு, மண்ட - நெருங்க,—(௩௪) தமிழ் எனும்-தமிழ்ப்பாஷையென்கிற, அளப்பு அரு சலதி - அளவிடுதற்குக்கூடாத கடலை, தந்தவன் - (தென்னாட்டாருக்குக்) கொணர்ந்துகொடுத்தவனாகிய அகஸ்தியமகாமுனிவன், உமிழ் கனல் விழி வழி ஒழுக - வெளிப்படுகின்ற கோபாக்கினி கண்களின் வழியாய்ச் சிந்தாநிற்க, உங்கரித்து - (கோபத்தால்) உங்காரஞ்செய்து, (அவர்களைநோக்கி), '(நீங்கள்), அழிவன செய்தலால் - (பிராணிகள்) அழிதற்குரிய தீச்செய்கைகளைச் செய்வதனால், அரக்கர் ஆகி - ராட்சசர்களாய், இழிக - தாழ்வடைவீராக,' என - என்று, அசனி எஞ்ச - இடியும் வலிமை குறைந்துஒடுங்கும்படி, உரைத்தனன்-(பெருந்தொனியோடு சாபவார்த்தை) கூறினான்; (எ - று.)

௩௩:—இந்தப்பாடல் அந்தத்தாடகை முதலியோர்வரும்போது கோபாவேசத்துடன் வந்ததைத்தெரிவிக்கும்; இதனில்,உருத்திரச்சுவை தோன்

றுதல் காண்க. மடங்கல் - எல்லாப்பொருளையும் மடங்க [அழிய]ச் செய்வது; ஊழித்தீ: யமனென்றும், சிங்கமென்றும் கொள்ளலுமாம். கடி - விளக்கம்: உரிச்சொல். காவலென்றுகொண்டு, அமரர்கள் கடிகெட - திக்பாலகராகிய தேவர்கள் திசைக்காவலொழிந்தோட என்றுமாம். தடி = தடித்: வடசொல். பி - ம்:—[1] உட்கற. [2] அதிர்ந்து. ௩௪:—பூர்வத்தில் இருடியரெல்லாருங்கூடி வடமொழியை யபிவிருத்திசெய்து காசியில் வடமொழிச்சங்கமொன்று ஏற்படுத்த, அச்சங்கப்புலவருளொருவனாகிய அகத்திய முனிவன் மற்றைப்புலவர்களோடு தருக்கஞ்செய்து ஒருநாள் அவர்களோடு மாறுகொண்டு அவர்களிறுமாப்பையடக்கும்பொருட்டுச் சிவபெருமானிடஞ் சென்று தன்கருத்தை வெளிப்படுத்திப் பேசிக்கொண்டிருக்கையில், தான் நின்ற மண்டபமுழுதும் திவ்வியபரிமளமொன்று வீச, அகத்தியன் பரமசிவனை நோக்கி, 'சுவாமி! இவ்வாசனை ஏது?' என்று வினவ, பரமசிவன் அம்முனிவனை அம்மண்டபத்தின் ஓர்மூலைக்கு அழைத்துக்கொண்டுபோய்க் குவியலாய்ப்போட்டிருந்த சில ஏட்டுப்பிரதிகளைக் காட்டவே, அவற்றைக் கண்டமாத்திரத்தில் மதுரமென்றுபொருளுள்ள தமிழ் என்னும் பெயரை அகத்தியன்பலமுறைசொல்ல,உடனேபரமசிவன்'அப்பாஷைக்கு ஆதாரவிதிகள் இவ்வேட்டுப்பிரதிகளிலுள்ளன' என்றுஎடுத்துக்கொடுத்து உபதேசிக்க, உடனே அம்முனிவன் தென்திசைக்குப்போய்ப் பொதியமலையில் வசித்து, அவ்விதிகளைக்கொண்டு 'பேரகத்தியம், சிற்றகத்தியம்' என்னும் இலக்கண நூலைச் செய்து, அவற்றைத் தம்மாணாக்கராகிய தொல்காப்பியன் முதலிய பன்னிருவர்க்குங் கற்பித்தருளித் தமிழ்ப்பாஷையைத் தழைத்தோங்கச் செய்தன னென்பது,'தமிழெனுமளப்பருஞ் சலதிதந்த வன்'என்பதிற் குறித்த வரலாறு. இதனால், வடமொழிபோலத் தென்மொழியும் அநாதியென்றும், வடமொழிக்குப் பாணினிபோலத் தென்மொழிக்கு அகத்தியனும் சிவபிரானிடம் உபதேசம்பெற்று இலக்கண மியற்றியருளினனே யன்றிப் பாஷையைப் புதிதாகஉண்டாக்கவில்லை யென்றும் உணர்க. உங்கரித்தல் - ஹுங்காரத்தால் உரப்புதல். (௩௩-௩௪)

௩௫.—அகத்தியமுனிவனுடைய சாபத்தின்படி தாடகைமுதலிய மூவரும் அரக்கராதல்.

வெருக்கொள வுலகையும் விண்ணு ளோரையு
முருக்கியெவ் வுயிருமுண் டுழலு மூர்க்கரா
மரக்கர்க ளாயின ரக்க ணத்தினி
லுருக்கிய செம்பென வுமிழ்கட் டீயினர்.

(இ - ள்.) அ கணத்தினில்-(முனிவன் சபித்த) அந்தக்ஷணத்திலேயே, (அம்மூவரும்),—உருக்கிய செம்பு என-உருக்கப்பட்டுள்ள செம்புநீர்போல, உமிழ் - வெளிச்சிந்துகின்ற, கண் தீயினர் - கண்களினின்று உண்டாகிற கோபாக்கினியையுடையவர்களாய், வெரு கொள - அச்சங்கொள்ளும்படி, உலகை உம் - இந்நிலவுலகத்திலுள்ள பிராணிவர்க்கங்களையும், விண் உளோரை உம் - மேலுலகத்திலுள்ள தேவர்களையும், முருக்கி - கொன்று, எ உயிர்

உம் உண்டு - எல்லாப்பிராணிகளையும் தின்று, உழலும் - திரிகின்ற, மூர்க்கர் ஆம் - பிடிவாதக்குணமுடையவர்களாகிய, அரக்கர்கள் ஆயினர்-இராக்கதராய் விட்டார்கள்; (எ - று.)—வெரு-வெருவுஎன்ற முதனிலையின் விகாரமான இது, தொழிற்பெயராகவந்தது. (௩௫)

௩௬.—சுமாலியேன்பவனோடு சுபாகுமாரீசர் உறவுகொள்ளுதல்.

ஆங்கவன் வெகுளியு மறைந்த சாபமுந்
தாங்கின ரெதிர்செயுந் தருக்கி லாமையி
னீங்கினர் சுமாலியை [1]நேர்ந்து நிற்கியா
மோங்கிய புதல்வரென் றுறவு [2]கூர்ந்தனர்.

(இ - ள்.) ஆங்கு - அப்பொழுது, அவன் - அம்முனிவனது, வெகுளி உம் - கோபத்தையும், அறைந்த - (அக்கோபத்தாற்) கூறின, சாபம்உம் - சாபத்தையும், தாங்கினர்-ஏற்றுக்கொண்ட அவர்கள், எதிர் செயும் தருக்கு இலாமையின் - (அதற்குப்) பிரதிசெய்தற்குத்தக்க வல்லமையில்லாமையினாலே, நீங்கினர் - (அவ்விடத்தைவிட்டு) நீங்கி, சுமாலியை நேர்ந்து-சுமாலியென்கிற ராட்சசராசனை யடைந்து, நிற்கு யாம் ஓங்கிய புதல்வர் என்று-உனக்கு நாங்கள் சிறந்த புத்திரர்களாவோமென்று கூறி, உறவு கூர்ந்தனர்-(அவனுடனே) உறவு கொண்டாடினார்கள்; (எ - று.)

சுமாலியென்பவன் - இராவணனுடைய தாயாகிய கேகசி யென்பவளது தகப்பன். சுகேசனது மகனான இவன், தன்னுடன்பிறந்தவர்களாகிய மாலியவான் மாலி என்னும் இருவரோடும் மற்றும்பல அரக்கரோடும் இலங்கையிற் குடிபுகுந்து உலகமெங்குமுள்ள முனிவர்களையும் தேவர்களையும் மற்றுமுள்ளோர்களையும் மிகவும் வருத்த, தேவர்களின் வேண்டுகோளினால் திருமால் வந்து போர்செய்து அவர்களை வலியழித்து மாலியைக்கொன்றுவிட, சுமாலியென்பவன் மாலியவன்முதலியவரோடு அஞ்சியோடிப் பாதாலத்திற்குடிபுகுந்தனனாக, அவ்விலங்கையிற் குபேரன்குடிபுகுந்திருக்கையில் இராவணன் பிறந்து வரம்பெற்றபின்பு அக்குபேரனுடன்பொருதற்கு வர,அப்போதுஅந்தக்குபேரன் இராவணனுக்குஅவ்விலங்கையைவிட்டிட்டுச் செல்ல, அங்கு மீண்டும் சுமாலிமுதலிய அரக்கர் இராவணனுடன் குடியேறலாயின ரென்றறிக. அங்ஙனம் சுமாலி பாதலத்திலிருக்கையில் அவனுக்கு அபிமானபுத்திரர்களாயினர் சுபாகுமாரீச ரென்க. வெகுளியும் சாபமும் தாங்கினரென்று பொதுவாகக் கூறியிருப்பினும், தகுதிபற்றி 'நிற்குயாம் ஓங்கியபுதல்வர்' என்றது, சுபாகுமாரீசர்களே யென்க. தருக்கு - இங்கே, வல்லமை. உறவு - பந்துத்வம். பி-ம்:—[1]நெருக்கநிற்குநர். [2]கூறினர். (௩௬)

௩௭.—பிறகு இராவணன் சுபாகுமாரீசர்களை மாமன்மாரேன்று பாராட்ட, அவர்கள் உலகத்தாருக்குத் தீமைபுரிதல்.

அவனொடும் பாதலத் தநேக நாட்செலீஇத்
தவனுறு தசமுகன் றனக்கு மாதுல

ரிவரெனப் புடைத்தழித் துலக மெங்கணும்
பவனனிற் றிரிகுநர் பதகி மைந்தர்கள்.

(இ - ள்.) பதகி மைந்தர்கள் - பாவச்செய்கைகளையேயுடைய அந்தத் தாடகையின் பிள்ளைகளிருவரும், அவனொடு உம் - அச்சுமாலியுடனே, பாதலத்து - பாதாளலோகத்திலே, அனேகம் நாள் செலீஇ - பலகாலங்கழித்து, (பின்பு வெளிப்பட்டு), தவன் உறு தசமுகன் இவர் தனக்கு மாதுலர் என - தவம்மிக்க இராவணன் 'இவர்கள் எனக்குமாமன்மார்கள்' என்று பாராட்ட, உலகம் எங்கண் உம் - எல்லாவுலகங்களையும், புடைத்து அழித்து - அடித்து நாசம்பண்ணி, பவனனின் - (யுகாந்தகாலத்துப் பெருஞ்)சுழல்காற்றுப் போல, திரிகுநர் - அலைகின்றவரானார்கள்; (எ - று.)

அந்தச்சுமாலியுடனே சுபாகுமாரீசர்கள் அந்தப்பாதலத்திலே வெகுகாலங்கழித்துப் பிறகுசுமாலியின்பேரனானஇராவணன் பிறந்துதவம்புரிந்து பலவரங்களைப் பிரமதேவனிடத்திலிருந்துபெற்று இலங்கையைக் குபேரனிடத்தினின்றுமீட்டுச் சுமாலிமுதலியோருடன் வசிக்கையில், அவ்விராவணன் இவர்களைத் தன்மாமன்மாரென்று பாராட்டிஉறவுகொண்டாட, இவர்கள் அவ்விராவணனுடைய தூண்டுதலால் உலகமெல்லாம் திரிந்து புடைத்தழிக்கலாயின ரென்பதாம். 'தசமுகன்றனக்கு' என்பதை ஒருசொல்லாகக் கொண்டு, தசமுகனுக்குஎன்றுஉரைப்பாருமுளர். தசமுகன் - பத்துமுகங்களையுடையவனென்பதுபற்றியபெயர். பதகி - பாதகீ. (கூஎ)

**கூஅ.—புதல்வரைப்பிரிந்து இந்த அந்தத்தாடகை வசித்தல்.**

மிகுந்திறன் மைந்தரை வேறு நீங்குறாத்
தகுந்தொழின் முனிவரன் சலத்தை யுன்னியே
வகுந்துவின் [1]வசுவரி வதிந்த திவ்வனம்
புகுந்தன ளழ[2]லெனப் புழுங்கு நெஞ்சினாள்.

(இ - ள்.) (பின்பு ஒருகாலத்தில் தாடகை), மிகு திறல் மைந்தரை - மிக்கவலிமையையுடைய (தன்) புத்திரர்களை, வேறு நீங்குறா - வேறாகப் பிரிந்து, தகும் தொழில் முனிவரன் சலத்தை உன்னி - தக்க தவச்செயல்களையுடைய இருடிச்சிரேட்டனான அகத்தியமுனிவனது கோபத்தை நினைத்து, அழல் என் புழுங்கும் நெஞ்சினாள் - நெருப்புப்போலக்கொதிக்கின்ற மனமுடையவளாய், வகுந்துவின் வசு அரி வதிந்தது இ வனம் - வழிமுழுவதும் சுவாலையையுடையஅக்கினி குடிகொண்டுள்ளதாகிய இந்தக்காட்டை, புகுந்தனள் - அடைந்தாள்; (எ - று.)

இவ்வனவகுந்துவின் புகுந்தன ளென்று கூட்டினுமாம். வஸு—ஒளி: ஜ்வாலை: அரி - அக்கினி: வடசொற்கள். பி - ம்:—[1]வடவெரிவதிந்ததிவனம், வடவெரிவதிந்ததிவ்வனம். [2]எழ. (கூஅ)

**கூகூ.—இதுவும், அடுத்த கவியும் - தாடகையின் வருணனை.**

மண்ணுருத் தெடுப்பினுங் கடலை வாரினும்
விண்ணுருத் திடிப்பினும் வேண்டிற் செய்கிற்பா

ளெண்ணுருத் தெரிவரும் பாவ மீண்டியோர்
பெண்ணுருக் கொண்டெனத் தெரியும் பெற்றியாள்.

(இ - ள்.) (அவள்), மண் உருத்து எடுப்பின்உம் - பூமிமுழுவதையும் கோபங்கொண்டு எடுக்கவேண்டுமானாலும், கடலை வாரின்உம் - கடல்நீர் முழுவதையும் முகந்துபருகவேண்டுமானாலும்,விண் உருத்து இடிப்பின்உம்- மேலுலகத்தைக்கோபித்து இடித்துவிடவேண்டுமானாலும், வேண்டின் - (தான் செய்ய) விரும்பினால், செய்கிற்பாள் - செய்துமுடிக்கும்வல்லமையுள் ளவள்; எண் உரு தெரிவு அரு பாவம் - அளவும் உருவமும் (இத்தன்மைய என்று) அறியமுடியாத பலபாவங்கள், ஈண்டி - (ஒருங்கு) திரண்டு, ஓர் பெண் உரு கொண்டு என - ஒரு பெண்ணின்வடிவத்தைக் கொண்டாற் போல, தெரியும்-காணப்படுகிற, பெற்றியாள்-தன்மையையுள்ளவள்;(எ-று.)

நிலவுலகைப்பெயர்த்தெடுத்தல் கடலைவாரிப்பருகுதல் மேலுலகை யிடித்துத்தள்ளுதல் என்ற அரும்பெருங்காரியங்களைச் செய்யவேண்டுமென் றாலும் செய்யவல்லவளென்று அந்தத்தாடகையின்வல்லமையைக் கூறிய, வாறு. பின்னிரண்டடி-இவ்வளவுஎன்றுவது இன்னஇன்னஎன்றுவது சொல் லமுடியாதபடி எல்லாப்பாவங்களையும் மிகவுஞ்செய்துள்ளா ளென்று அவள் கொடுஞ்செயலை விளக்கும். எடுப்பினும்வாரினும் இடிப்பினும் என்பவற்றின் பின் தடுப்பவரில்லை என்றுகூட்டி, உரைகூறுதலு மொன்று. இதுமுதல் மூன்றுகவிகள்,சிலபிரதிகளில் "கன்னவில்தோளினாய்" என்று காணப்படும் பாடலின் முன்பாக "என்றலுமிராமனை" என்ற உக - ஆம் பாடலுக்குப் பின் காணப்படுகின்றன. (ருகூ)

சO. *பெருவரை யிரண்டொடும் பிறந்த நஞ்சொடு
முருமுறழ் முழக்கொடு [1]மூழித் தீயொடு
மிருபிறை செறிந்தெழு கடலுண் டாமெனின்
வெருவரு தோற்றத்தண் மேனி மானுமே.

(இ - ள்.) பெரு வரை இரண்டொடுஉம் - பெரிய இரண்டுமலைகளுட னும், பிறந்த நஞ்சொடுஉம் - (வெளிப்பலே) தோன்றிய விஷத்துடனும், உரும் உறழ் முழக்கொடுஉம் - இடியோசையினும்மிக்க பேரொலியுடனும், ஊழி தீயொடுஉம் - பிரளயகாலத்து அக்கினியுடனும் (கூடியதாகி), இரு பிறை செறிந்து - இரண்டுபிறைச்சந்திரன்கள் (தன்னிடத்தே) பொருந்தப் பெற்று, எழு - நடந்துவருகின்ற, கடல்-கடலொன்று, உண்டு ஆம் எனின்- உள்ளதாகுமானால், (அது), வெருவரு தோற்றத்தள் மேனி - (யாவரும்) அஞ்சுதற்குக்காரணமான காட்சியையுடைய அவளது உடலை, மானும் - ஒக்கும்; (எ - று.)

பெரியஇரண்டுதனங்களுடனும் யாவரையும்நடுங்கச்செய்யவல்ல கொடு மையுடனும் பெருங்கர்ச்சனையுடனும் செம்பட்டமயிருடனும் இரண்டுவக்கிர தந்தங்களுடனும்கூடிவருகின்றவளான கரியபெருவடிவம்படைத்த தாட கைக்கு - பெருவரையிரண்டு முதலியவற்றுடன் கூடி வருகின்ற கடல்-(இல்

பொருளுவமையாம். 'உண்டாமெனின்' என்பதும், இதனை விளக்கும். இனி, இந்திரன் மலைச்சிறகுகளை யரிந்தபோது சிலமலைகள் கடலினுள்ளே அமிழ்ந்துதப்பியனவாகவும் கடலிலிருந்து ஹாலாஹலமென்னும் விஷம் தோன்றியதாகவும் நூல்கள்கூறுதலாலும், கடற்கு முழக்கு இயற்கையாக வேயுள்ளதனாலும்,வடவையென்றுசொல்லப்படும்கனல் கடலினிடையேயுள் ளதனாலும் உள்பொருளுவமையாகவேகொள்ளலாமெனின், அக்கடற்கு இருபிறைகள் இல்லாமையுணர்க.'ஊழிக்காற்றொடும்என்றபாடத்தில், ஊழி க்காற்று - அந்தத்தாடகையின்விரைந்த நடைக்கு உவமையாகுமென்க. வெருவுஅரு தோற்றத்தள்-எதற்கும்அஞ்சாத தன்மையுடையவளெனினுமாம்.

சுக.—விசுவாமித்திரன் அவள்பெயர் தாடகையெனல்.

சூடக வரவுறழ் சூலக் கையினள்
காடுறை வாழ்க்கையள் கண்ணிற் காண்பரே
லாடவர் பெண்மையை யவாவுந் தோளினாய்
தாடகை யென்பதச் சழக்கி நாமமே.

(இ - ள்.) கண்ணின் காண்பர் ஏல் ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய் - (தம்தம்)கண்களாற் காண்பார்களாயின் ஆண்மக்களும் பெண் தன்மையை விரும்பும் தோள்களினழகையுடைய ஸ்ரீராமனே! (அவள்),— அரவு சூடகம் உறழ் - நாகம் கங்கணமாகப்பொருந்திய, சூலம் கையினள் - சூலாயுதம்பொருந்திய கைகளையுடையவள்; காடு உறை வாழ்க்கையள் - வனத்தில் வசிக்கின்ற வாழ்வையுடையவள்; அ சழக்கி நாமம் - அந்தக் கொடியவளது பெயர், தாடகை என்பது - தாடகை யென்பதாம்; (எ - று.)

சூடகம்-ஒருவகைக்கைவளை. அவ்வரக்கி தன்கொடுமைவெளிப்படும்படி அரவத்தைச் சூடகமாகப் பூண்டனளென்க. தாடகையென்றசொல் - மலையில்திரிபவளென்றுபொருள்படு மென்பர். "பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம் [ஆடவரின் கண் மனம்என்பவற்றைக் கவருபவன்]" என்று ஸ்ரீவால்மீகிபகவான் அருளிச்செய்தாற்போல 'கண்ணிற்காண்பரேலாடவர்பெண்மையையவாவுந்தோளினாய்' என்றார்:இத்தோளினழகின்சிறப்புநோக்கி, ஆடவரும் மனத்தால் மகளிர்தன்மையையடைந்து அத்தோளினால்தழுவப்படவேணுமென்று காதல்கொள்ளுமாறுஉள்ளவனே! என்க; ஆகவே, மகளிர் இவன்தோளழகிலீடுபட்டுக்காதல்கொள்வரென்பது,கூறவேண்டாதாயிற்று. இங்ஙனம் வருணித்ததன்கருத்தை"நீராடுகின்றதிரௌபதியினுறுப்பழகைக் கண்ணுற்ற மகளிரனைவரும் மனத்தால் ஆண்தன்மையையடைந்தார்கள்" என்று பொருள்பட ஸ்ரீவேதவியாசபகவான்கூறியுள்ள "பாஞ்சால்யா: பத்மபத்ராக்ஷ்யா: ஸ்நாயந்த்யா ஜகநம் கநம்-யாஸ்ஸ்த்ரியோத்ருஷ்டவத்யஸ்தா: பும்பாவம்மநஸாயயு:"என்ற மஹாபாரதஸ்லோகத்தோடு ஒப்பிட்டு உணர்க. 'கண்ணின்' என்று வேண்டாதுகூறினார், அவ்விராமனைக் காண்பதற்குக் கண்கள் தவம்புரிந்திருக்கவேண்டுமென்றற்கு. சழக்கு - குற்றம்: அதனையுடையவள் - சழக்கி. (சுக)

**சஉ.—இவ்விடம் இங்ஙனமானது இவளாலேயே யெனல்.**

[1]உளப்பரும் பிணிப்புறா வுலோப மொன்றுமே
யளப்பருங் குணங்களை யழிக்கு மாறுபோற்
கிளப்பருங் கொடுமைய வரக்கி கேடிலா
வளப்பரு மருதவைப் பழித்து மாற்றினாள்.

(இ - ள்.) உலோபம் ஒன்றும் ஏ - லோபமென்றதுர்க்குணமொன்று மாத்திரமே, உளம் பரு பிணிப்பு உறா - (ஒருவனது) மனத்திலே மிகநிலைத் திருத்தலைப் பொருந்தி, அளப்பு அரு குணங்களை - அளவிடுதற்குக்கூடாத [மிகப்பல] நற்குணங்களையெல்லாம், அழிக்கும் ஆறு போல் - அழியச்செய் யும்விதம்போல், கிளப்பு அரு கொடுமைய அரக்கி-சொல்லுதற்குமுடியாத கொடுந்தன்மையுள்ள ராக்ஷசியாகிய அத்தாடகை,கேடு இலா வளம் பரு மருதம் வைப்பு அழித்து மாற்றினாள்-கெடுதியில்லாத வளங்களையுடையபெரிய மருதநிலத்தை நாசஞ்செய்து (இங்ஙன் பாலைநிலமாக)மாற்றிவிட்டாள்.

அரக்கியொருத்தி மருதம்முழுவதையும்கெடுத்ததற்கு,உலோபகுணமெ ன்றஒன்று நற்குணங்களையெல்லாங்கெடுப்பது உபமானம். உறா-உற்று:செய் யாவென்னும் வாய்பாட்டிறந்தகாலவினையெச்சம்: இனி, ஈறுகெட்டஎதிர் மறைப்பெயரெச்சமாகக்கொண்டு, உளத்தில்மிக்கபந்தங்கொண்டுஇருத்தற் குத்தகாத உலோப மென்று உரைப்பினுமாம். [1]உளர்ப்பரும்என்றபாடத்தி ற்கு-அசைத்தற்குமுடியாத,பிணிப்பு என்க. கிளப்புஅரு-விலக்கவொண்ணாத எனினுமாம். கேடிலா வளம் - ஒருபோதும்மாறாதவளம். வளம் - நீர்வளம் நிலவளம் விளைவு செல்வம்முதலியன. இதனால், மலதகரூசதேசங்கள் தாடகையால் அழிபட்டசெய்தியை விசுவாமித்திரன் இராமனுக்குக் கூறி னான்: அதன்விவரம் முதனூலிற் கூறப்பட்டுள்ளது வருமாறு:— முன்னே விருத்திராசுரனைக் கொன்றதனாலான பிரமகத்தி தேவேந்திரனைப்பிடித்துக் கொள்ள,அதனால் பாவமும் பசியும் அத்தேவேந்திரனுக்குத்தோன்ற, அப் போது முனிவரும்தேவர்களும் புண்ணியதீர்த்தங்களாலும் மந்திரத்தாற்பரி சுத்தமான தீர்த்தங்களாலும்நீராட்டி அவ்விந்திரனது பாவத்தையும் பசியை யும் இங்கேபோக்குவிக்க,அதனாற் பெருமகிழ்ச்சியடைந்த இந்திரன் 'எனது மலத்தையும் [பாவங்களையும்] கரூசத்தையும் [பசியையும்] வாங்கினமையால் இத்தேசங்கள் தனதானியங்களால்நிரம்பி மலதமென்றும்கரூசமென்றும் வழங்குக' என்று வரங்கொடுத்தானாக, அதுமுதல் வளமெல்லாம்நிரம்பி மல தமென்றும் கரூசமென்றும் வழங்கிய இந்தஇடங்கள் ஒன்றரை யோசனைதூ ரம் தகைந்துகொண்டு உயிர்களைப்பீடித்தவண்ணம் தாடகைவாசஞ்செய்யத் தொடங்கியபின் இங்ஙனம் பாழாயினவென்பது. (சஉ)

**சங.—தாடகையினால் விளையுந் தீங்குகள்.**

இலங்கையரசன் [1]பணிய மைந்தொழிடை யூறு
விலங்கல்வலி கொண்டெனது வேள்விகலி கின்றா

அலங்கன் முகிலே யவளிவ் வங்கநில மெங்கும்
குலங்களொ டடங்கநனி கொன்றுதிரி கின்றாள்.

(இ - ள்.) அலங்கல் முகிலே - மாலையணிந்த மேகம்போல்பவனே! அவள் - அத்தாடகை,— இலங்கை அரசன் பணி அமைந்து - இலங்காராசனான இராவணனது ஏவலின்கீழடங்கி, ஓர் இடையூறு ஆ - ஒருபெருந்தடையாக, விலங்கல் வலி கொண்டு - மலையினதுபலம்போன்றபலத்தால், எனது வேள்வி நலிகின்றாள் - என்யாகத்தைக் கெடுக்கின்றாள்; (அன்றியும்), இ அங்கம் நிலம் எங்குஉம் - இந்த அங்கதேசம்முழுவதும் (உள்ளஉயிர்களை); குலங்களொடு அடங்க - வமிசங்களோடு அழியும்படி, நனி கொன்று திரிகின்றாள் - மிகவுங்கொன்றுதிரிகின்றாள்; (எ. - று.)

எனது வேள்விக்கு இடையூற்றைச் செய்பவளும், இவ்வங்கதேசத்து உயிர்களையெல்லாம் கொன்றுதிரிபவளும், இராவணனுணையைக்கைக்கொண்டஅவ்வரக்கியே யென்றனனென்க. விலங்கல்-ஊர்க்கு ஒருபுறமாக விலகியிருப்பதென்பதுபற்றி வந்தது; உவமையாகுபெயராக, யானைகளென்னவுமாம். அலங்கன்முகில் - அடையடுத்த உவமவாகுபெயர். பி - ம்:—[1]பணியின்மைந்தரிடையூறாய். (௪௩)

௪௪.—தாடகையின் செய்தியை முடித்தல்.

[1]முன்னுலக ளித்துமுறை நின்றவுயி ரெல்லாந்
[2]தன்னுயிரெ னக்கருது தன்மையவன் மைந்த
வென்னினியு ணர்த்துவதி னிச்சிறிது நாளின்
மன்னுயிர னைத்தையும்வ யிற்றினிடு மென்றான்.

(இ - ள்.) முன் உலகு அளித்து - பழமையான உலகங்களைக்காத்து, முறை நின்ற உயிர் எல்லாம் - சன்மார்க்கத்திலே நின்ற உயிர்களெல்லாவற்றையும், தன் உயிர் என கருது - தனது உயிரைப்போல எண்ணுகின்ற, தன்மையவன் - நல்ல இயற்கையையுடைய சக்கரவர்த்தியினது, மைந்த - குமாரனே! இனி உணர்த்துவது என் - இன்னும் (அவளைப்பற்றிக்) கூற வேண்டுவது யாது? இனி சிறிது நாளில் - இன்னமும் சிலநாட்களுள், (அத்தாடகை), மன் உயிர் அனைத்தைஉம் வயிற்றின் இடும் - நிலையுள்ள எல்லாவுயிர்களையும் (தன்) வயிற்றிலே யடக்கிக்கொள்வாள் [விழுங்கிவிடுவாள்], என்றான் - என்று (ஸ்ரீராமனுக்கு முனிவன்) சொன்னான்; (எ - று.)

இவளை நீ சங்காரஞ்செய்யாதுவிட்டிடின், இந்த அங்கதேசமேயன்றி, இவ்வுலகமுழுதுமே நாசமாய்விடு மென்றகுறிப்புத் தோன்ற, அவளது கொடுமையைக்கூறி அவள்வரலாற்றை முடித்தனனென்க. அளித்தல்-பகைபிணிமுதலியவற்றால் துன்பம் நேராது பாதுகாத்தல். உடம்பு அழிவதன்றி உயிர் அழியாததாதலால், 'மன்னுயிர்' எனப்பட்டது. 'முறைநின்றவுயிரெல்லாம் தன்னுயிரெனக்கருது' என்றதனால், துன்மார்க்கத்தில் நிற்பவரைப் பகைவர்போலக் கருதி ஒறுத்திடுவனென்பது விளங்கும். பி-ம்:—[1]முன்னுலகழித்து முறைநின்ற, முன்னுலகளித்த முனிதந்த. [2]தன்னுணாவெனக்கருதுதன்மையினன். (௪௪)

சரு.—அத்தாடகி வசிக்குமிடம் எது என்று இராமன் வினவுதல்.

அங்கிறைவ னப்பரிசு ரைப்பவது கேளா
கொங்குறைந றைக்குல[1]ம லர்ச்சென்னிகு லுக்கா
வெங்குறைவ திக்தொழிலி யற்றுபவ ளென்றான்
சங்குறைக ரத்தொருத னிச்சிலைத ரித்தான்.

(இ - ள்.) அங்கு-அப்பொழுது [அவ்விடத்து], இறைவன் - விசுவாமித்திரன், அ பரிசு உரைப்ப - அவ்விதமாகச் சொல்ல, அது கேளா - அதனைக் கேட்டு, சங்கு உறை கரத்து ஒரு தனி சிலை தரித்தான் - (பாஞ்சசன்னியமென்கிற) சங்கந் தங்குகின்ற (தனது இடக்) கையிலே ஒப்பற்ற ஒரு (கோதண்டமென்னும்) வில்லைத் தாங்கிய ஸ்ரீராமன், கொங்கு உறை நறை குலம் மலர் சென்னி குலுக்கா - வாசனைபொருந்திய தேனினையுடைய சிறந்த பூக்களைச்சூடுதற்குரிய (தனது) திருமுடியை அசைத்து, இ தொழில் இயற்றுபவள் எங்கு உறைவது என்றான்-'இக்கொடுந்தொழிலைச் செய்பவள் எவ்விடத்தில் வசிப்பது?' என்று வினவினான்; (எ - று)

முனிவர் தலைவனாதலாலும் பிரமவிருடியாதலாலும், உலகுபடைக்கத் தொடங்கினமையினாலும் இளமையில் அரசுபுரிந்ததனாலும், கௌசிகன் 'இறைவன்' எனப்பட்டான். சென்னி=சென்னி. தலைகுலுக்குதல், உள்ளே கொண்ட வியப்பைப் புலப்படுத்தும். குலம் - தொகுதியுமாம். இராமன் விஷ்ணுவினவதார மென்பதைக் குறிப்பிக்க, 'சங்குறைகரத்தொருதனிச் சிலைதரித்தான்' என்றார். பி - ம்:—[1] மலர்க்குழறுளக்கா.　　(சரு)

சசு.—விசுவாமித்திரன் தாடகையினுறைவிடத்தைக் காட்டுமுன் அவள் எதிர்வருதல்.

கைவரையெ னத்தகைய காளையுரை கேளா
ஐவரைய கத்திடைய டைத்தமுனி யைய
விவ்வரையி ருப்பதவ ளென்பதனின் முன்போர்
மைவரைநெ ருப்பெரிய வந்ததென வந்தாள்.

(இ - ள்.) ஐவரை அகத்திடை அடைத்த முனி - பஞ்சேந்திரியங்களை (ஐம்புலன்களிற் செல்லவொட்டாமல்) மனத்திலே அடக்கிவைத்துள்ள விசுவாமித்திரன், கை வரை என தகைய - துதிக்கையுடைய மலைபோன்ற யானையென்று சொல்லத்தக்க [கம்பீரத்தையுடைய], காளை-இடபம்போன்ற ஸ்ரீராமனது, உரை - வார்த்தையை, கேளா - கேட்டு, (அவ்விராமனை நோக்கி), ஐய - தலைவனே! அவள் இருப்பது - அந்தத் தாடகை யிருக்குமிடம், இ வரை - இந்த மலை, என்பதனின் முன்பு - என்று சொல்வதற்கு முன்னே, ஓர் மை வரை நெருப்பு எரிய வந்தது என வந்தாள்-அஞ்சனமயமானதொரு மலை தீயெரியும்படி வந்ததுபோல வந்தாள், (தாடகை); (எ-று.)

கோபத்துடன் வரும் அந்தத் தாடகைக்கு, நெருப்பெரியவரும் மைவரை உவமை. அத்தாடகையின் செம்பட்டமயிர்க்கு நெருப்பு உவமையெனினுமாம். முன் போர் எனப்பிரித்து, போர் மைவரை - போர்செய்ய

வல்ல அஞ்சனமலையுமாம். மூன்றாவது அடியில், வரை - எல்லையென்க. முதனூலில் மலையில்வாழ்பவ ளெனக் கூறாமையாலும் திரிபு என்னுஞ் சொல்லணிக்கு ஏற்றிருத்தலாலும் இப்பொருளே சிறந்ததாம். (சகு)

சஎ.—தாடகை அங்குவருதலின் வருணனை.

சிலம்புகள் சிலம்பிடைச் செறித்தகழலோடு
நிலம்புகமி தித்தனணெ ளித்தகுழி வேலைச்
[1]சலம்புகவ னற்றறுக ணந்தகனு மஞ்சிப்
பிலம்புக[2]நி லைக்கிரிகள் பின்றொடர வந்தாள்.

(இ - ள்.) சிலம்புகள் - மலைகளை, சிலம்பிடை - (தன்) காற் சிலம்புகளில், செறித்த - (பருக்கைக் கற்களாகப்) பெற்றுள்ள, கழலோடுஉம் - கால்களினால், நிலம் புக - தரை அழுந்தும்படி, மிதித்தனள்-மிதித்துக்கொண்டு, நெளித்த குழி வேலை சலம் புக - (அவ்வாறுநிலம்) நெளித்ததனாலுண்டான குழிகளிலே கடல்நீர் பாயவும், அனல் தறுகண் அந்தகன்உம் அஞ்சி பிலம் புக - நெருப்புப்போன்றபயங்கரமானதன்மையையும் அஞ்சாமையையுமுடைய யமனும் (தன்னைநோக்கிப்) பயந்து குகையிலே ஓடி ஒளிக்கவும், நிலை கிரிகள் பின் தொடர-இடம்விட்டுப்பெயர்தலில்லாத மலைகளெல்லாம் (தான் வருகிறவேகத்தால் இடம்விட்டுப் பெயர்ந்து தன்) பின்னேதொடர்ந்துவரவும், வந்தாள் - (அவ்விடத்துக்கு) வந்தாள்; (எ - று.)

தான் அங்குவரும்போது தன் பாதத்தை ஊன்றிவைக்க, அதன்பாரத்தைத் தாங்கமாட்டாமல் நிலம்குழிபட அந்தக்குழியில் கடல்நீர் புகுமாறும், யமனும் தனது கொடுந்தோற்றத்தைக்கண்டு நடுங்கிப் பிலத்திலொளித்துக் கொள்ளுமாறும், தான் வருகிறவிசையால் அசலங்களாகிய மலைகளும் இடம் விட்டுப்பெயர்ந்து தன்பின்னே தொடருமாறும் வந்தனள் தாடகையென்க. முதலடிக்கு - சிலம்பு இடை செறிக்கப்பெற்ற கழலுடனே, சிலம்புகள்-மலைகள், நிலத்திற்புக மிதித்து என்று உரைப்பினுமாம். செல்லும் விசைக்காற்றினால் மலைகள் பிடுங்குண்டதனாற் பின்னே தொடர்ந்தன வென்க; "அண்ணல் சென்ற வேகத்தா லெழுந்த குன்று" எனக் கடலாவுபடலத்திற் கூறுவதுங் காண்க. அந்தகன் - மரணத்தை யுண்டாக்குங் கடவுள். பி - ம்:—
[1] அலம்புக. [2] நிலக்கிரிகள். (சஎ)

சஅ.—தாடகை விழித்துப் பார்த்தல்.

இறைக்கடைது டித்தபுரு வத்தளெயி றென்னும்
பிறைக்கடைபி[1]றக்கிடம டித்தபில வாயண்
[2]மறைக்கடைய ரக்கிவட வைக்கனலி ரண்டாய்
நிறைக்கடன்மு ளைத்தெனநெ ருப்பெழவி ழித்தாள்.

(இ - ள்.) மறை கடை அரக்கி வேதங்களிற்கூறியசன்மார்க்கத்திற்குப் புறம்பாகிய அந்தராட்சசியானவள்,— இறை கடை துடித்த புருவத்தள் - (கோபத்தாற்) சிறிது நுனிதுடிக்கின்ற புருவங்களையுடையவளும், எயிறு என்னும் பிறை கடை பிறக்கிட மடித்த பிலம் வாயள்-கோரதந்தங்களென்

கிற பிறைச்சந்திரர்கள் கடைவாயிலே வெளிவிளங்கும்படி மடிக்கப்பட்டுள்ள குகையையொத்த வாயையுடையவளுமாய்,—வடவை கனல் இரண்டு ஆய் நிறை கடல் முளைத்து என - படபாமுகாக்கினியானது நீர்நிறைவையுடையகடலிலே இருகூறாகத்தோன்றினாலொக்கும்படி, நெருப்பு எழ விழித்தாள் - நெருப்புப்பொறிகள்பறக்கக் கண்திறந்துபார்த்தாள்; (எ - று.)

தாடகையின்கரியஉடல்-கடலுக்கும், அதிற்கோபத்தாற் சிவந்துதோன்றுங்கண்கள்-வடவைக்கனலுக்கும் உவமையாம். பிறக்கிட=பிறங்கிட: வலித்தல். [2] மறக் கடை என்றபாடத்திற்கு-பாவத்தைச்செய்கிறகீழ்மையையுடைய, அரக்கியென்க. பி - ம்:— [1] பிறங்கிட. (சஅ)

சகூ.—தாடகை யாரவாரித்தல்.

கடங்கலுழ்[1]த டங்களிறு கையொடுகை தெற்றா
[2]வடங்கொளநு டங்குமிடை யாள்[3]மறுகி வானோ
ரிடங்களுநெ டுந்திசையு மேழுலகு [4]மெங்கு
மடங்கலுந டுங்கவுரு மஞ்சநனி யார்த்தாள்.

(இ - ள்.) கடம் கலுழ் - மதநீரொழுகப்பெற்ற, தட களிறு - பெரிய ஆண்யானைகளை, கையொடு கை தெற்றா - துதிக்கையோடு துதிக்கையை முடிந்து, வடம் கொள - ஆரமாக அணிந்திருத்தலால், நுடங்கும் - துவளுகின்ற, இடையாள் - இடையையுடைய அவ்வரக்கி,— வானோர் இடங்கள் உம் - தேவலோகங்களும், நெடு திசைஉம் - நீண்டதிக்குக்களும், ஏழ் உலகுஉம் - ஏழுவகையுலகங்களும், எங்கும் - எல்லாவிடங்களும், அடங்கல்உம் - முழுவதும், மறுகி நடுங்க - கலங்கிநடுங்கவும், உரும் அஞ்ச - இடியோசையும் பயப்படவும், நனி ஆர்த்தாள் - மிகுதியாக ஆரவாரித்தாள்; (எ - று.)

வடம் என்பதற்கு - இடையிலணியுங்கோவையணியென்று உரைத்து, யானைக்கையோடு மற்றொருயானையின்கையைப் பின்னி இடையணியாக அணிதலால் துவள்கின்ற இடையையுடையவளென்று உரைத்தலும் ஒன்று. [2] வடங்களினுடங்குமுலையாள் என்ற பாடத்திற்கு-களிற்றைக் கையோடுகை தெற்றியணிந்தஆரங்களோடு நுடங்குகின்ற தனங்களையுமுடையவளென்க. பி-ம்:-[1] கடுங்களிறு, கருங்களிறு. [3] மறுகும். [4] யாவும். (சகூ)

ருo, ருக.—இரண்டுகவிகள்-ஒருதொடர்; விசுவாமித்திரன் முதலியோரைப் பார்த்துச் சிரித்து, தாடகை வீரவாதங் கூறுதல்.

ருo. ஆர்த்தவரை நோக்கிநகை செய்[1]தெவரு மஞ்சக்
கூர்த்தநுதி முத்தலைப யிற்கொடிய கூற்றைப்
பார்த்தெயிறு தின்றுபகு வாய்முழைதி றந்தோர்
வார்த்தையுரை செய்தன[2]ளி டிக்குமழை யன்னாள்.

ருக. கடக்கரும்வ லத்தெனது [3]காவலிதில் [4]யாவும்
கெடக்கருவ றுத்தனனி னிச்சுவைகி டக்கும்
விடக்கரிதெ னக்கருதி யோ[5]விதிகொ டுந்தப்
படக்கருதி யோபகர்மின் வந்தபரி[6]சென்றே.

(இ - ள்.) (௫௦) இடிக்கும் மழை அன்னாள் - இடியிடிக்கின்ற (மேகத்தைப்போன்ற) அத்தாடகை, ஆர்த்து - (இங்ஙனம்) ஆரவாரஞ்செய்து, அவரை நோக்கி - (முனிவர்முதலிய) அம்மூவரையும் பார்த்து, நகை செய்து - (இகழ்தல்தோன்றச்) சிரித்து, எவர்உம் அஞ்ச - யாவரும் பயப்படும்படி, கூர்த்த நுதி மு தலை அயில் கொடிய கூற்றை பார்த்து-கூர்மையான நுனியைக்கொண்ட மூன்று தலைகளையுடைய(தனது)சூலாயுதமாகிற கொடுந்தன்மையுள்ள யமனைநோக்கிக்கொண்டு, எயிறு தின்று - பற்களைக்கடித்து, பகு வாய் முழை திறந்து-பிளவுபட்ட குகைபோன்ற(தன்)வாயைத் திறந்து (௫௧)'கடக்க அரு வலத்து - (எவராலும்) விலக்குதற்குக்கூடாத பலத்தையுடைய, எனது - என்னுடைய,காவல் - காவலிடமாகிய, இதில் - இவ்வனத்திலே, யாஉம் கெட - எல்லாவுயிர்களும் அழியும்படி, கரு அறுத்தனன் - வேரறச் செய்துவிட்டேன்; (ஆகையால், எனக்கு),இனி- இனிமேல், சுவை கிடக்கும் விடக்கு - இனிமைபொருந்திய மாமிசம், அரிது - (கிடைத்தற்கு) அரியது,' என - என்று, கருதிஓ - நினைத்தோ,(அல்லது),விதிகொடு உந்த - ஊழ்வினை கொண்டுவந்து பிடித்துத்தள்ள, பட கருதிஓ-இறத்தற்கு நினைத்தோ,வந்த பரிசு-(நீங்கள் இங்கே)வந்தவிதம்,பகர்மின்-கூறுங்கள்', என்று-, (௫௦) ஓர் வார்த்தை உரை செய்தனள்—; (எ - று.)

அவரைநோக்கி நகைசெய்தது எள்ளல்பற்றியென்க. நீங்கள் இங்கே வந்தது-மரணத்திற்குக்காரணமான உங்கள் ஊழ்வினை உங்களைக் கழுத்தை நெட்டிதள்ளிக்கொண்டுவந்ததனாலா, அன்றி இங்குஉள்ள உயிர்களையெல்லாம் கொன்றுதின்றுவிட்டு இரைகிடைக்காமற் பசியாலுழல்கின்ற எனக்கு உணவுதரவேண்டுமென்ற கருத்தினாலா என்று தாடகை வினவினள்; இந்த வினவினால், நீங்கள்எனக்கு உணவாவீரென்று கூறியவாறாயிற்று.கரு அறுத்தல்-கருவும் இல்லாதபடி உயிர்களையொழித்தல். பி-ம்.—[1] அவரும். [2] மலைக்குவமையன்னாள். [3] காவலிது. [4] யாரும். [5] விதியினாலோ. [6] என்றாள்.

௫௨.—வேலாயுதத்தை இவர்கள்மீது எறிவேனென்று தாடகை கோபித்தல்.

மேகமவை [1]யிற்றுகவி ழித்தனள் புழுங்கா
மாகவரை [2]யற்றுகவு தைத்தனண் மதித்திண்
பாகமெனு முற்றெயிற தூக்கியயில் பற்றா
வாகமுற வுய்த்தெறிவ னென்றெதி ரழன்றாள்.

(இ - ள்.) (இங்ஙனங்கூறித் தாடகை),மேகம் அவை-மேகங்கள், இற்று உக - பொடியாய்ச் சிந்தும்படி, விழித்தனள் - கண்திறந்துபார்த்து, புழுங்கா - மனம் வெதும்பி, மாகம் வரை அற்று உக - பெரிய ஆகாயத்தை யளாவிய மலைகளும் பொடியாய்ச்சிந்தும்படி, உதைத்தனள் - காலாலுதைத்துக்கொண்டு, மதி திண் பாகம் எனும் முற்று எயிறு - சந்திரனது வலிய கூறென்னத்தக்க பெரிய கோரப்பற்களை, அதுக்கி - கடித்து, அயில் பற்றா ஆகம் உற உய்த்து எறிவன் என்று - இவ்வேலாயுதத்தைப் பிடித்து இவர்கள் மார்

பிலே அழுந்தும்படி வேகமாக எறிவேனென்றுகூறி, எதிர் அழன்றாள் - எதிரிலே நின்று கோபித்தாள்; (எ - று.)

விழித்துப்பார்த்தலால் மேகமும், உதைத்தலாற் பெருமலைகளும் அழிவனவாயின என்று, அவளது கொடுமையையும் வலிமையையும் விளக்கியவாறு. முற்றெயிறு - வளைந்தபல். பி - ம்:—[1]பற்றுபு பிழிந்தனள் விழுங்கா. [2]இற்றுக. (ருஉ)

ருங.—இராமன் பெண்ணென்று அந்தத்தாடகையைக் கோல்லாதிருத்தல்.

அண்ணன்முனி வற்கதுக ருத்தெனினு மாவி
யுண்ணென வடிக்கணைதொ டுக்கிலனு யிர்க்கே
துண்ணெனும்வி னைத்தொழிறொ டங்கியுள ளேனும்
பெண்ணென[1]ம னத்திடைபெ ருந்தகைநி னைந்தான்.

(இ - ள்.) அண்ணல் முனிவற்கு - பெருமையிற்சிறந்த விசுவாமித்திரனுக்கு, அது கருத்து எனின்உம் - அத்தாடகையைக்கொல்வது சம்மதமாயினும்,— பெருந் தகை - பெருமைக்குணங்களையுடைய ஸ்ரீராமன்,— ஆவி உண் என - 'அவளுயிரையொழிப்பாய்' என்று ஏவி, வடி கணை தொடுக்கிலன் - கூர்மையானபாணத்தை யெய்தானில்லை; (ஏனெனில்), உயிர்க்கு ஏ துண்ணெனும் வினை தொழில் தொடங்கி உளள் என்உம் - தங்களுயிர்களுக்கே அச்சந்தருகின்றபாவச்செய்கைகளை (அவள்) செய்யத்தொடங்கியிருக்கின்றவளாயினும், பெண் என - பெண்ணென்று, மனத்திடை - திருவுள்ளத்திலே, நினைந்தான் - எண்ணினான்; (எ - று.)

பேராரவாரஞ்செய்துகொண்டு பெருஞ்சினத்துடன்வந்த தாடகையை இராமபிரான் கொல்லவேணுமென்று முனிவன் கருதினானாயினும், அம்முனிவன் குறிப்பையுணர்ந்தும் அவ்விராமபிரான் பெண்கொலைபெரும்பாவமென்று கருதி வாளாவிருந்தனனென்பதாம். ஆவியுண்ணுதல்-கொல்லுதல். வடிக்கணை - ஆராய்ந்தெடுக்கப்பட்ட அம்பு எனினுமாம். வினைத்தொழில்-போர்த்தொழிலென்பாருமுளர். பி - ம்:—[1]மனத்திறை. (ருங)

ருச.—விசுவாமித்திரன் இராமன் கருத்தறிந்து கூறத்தோடங்குதல்.

வெறிந்த செம்மயிர் வெள்ளெயிற் றாடனை
யெறிந்து கொல்வெனென் றேற்கவும் பார்க்கிலாச்
செறிந்த தாரவன் சிந்தைக் கருத்தெலா
மறிந்து நான்மறை யந்தணன் கூறுவான்.

இதுமுதற் பன்னிரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) வெறிந்த செம்மயிர்-நெருங்கியிருக்கின்ற செந்நிறமான மயிர்களையும், வெள் எயிற்றாள் - வெண்ணிறமான பற்களையுமுடைய தாடகை, தனை-தன்னை, எறிந்து கொல்வென்என்று-(சூலாயுதத்தை)வீசிக் கொல்வேனென்றுகூறி, ஏற்கஉம்-எதிர்த்துவரவும், பார்க்கிலா-(அவளைக்) கொல்ல முயலாத,செறிந்த தாரவன் - நெருங்கியமாலையையுடைய ஸ்ரீராமனது, சிந்தை கருத்து எலாம் - மனத்திலெண்ணம் முழுவதையும்,அறிந்து—

நால்மறை அந்தணன் - நான்குவேதங்களையு மறிந்த கௌசிகன், கூறுவான்-(இராமனைநோக்கிச்) சொல்லுவான்; (எ - று.)

அதனை அடுத்த கவிகளிற் காண்க. செம்மயிர் வெள்ளெயிற்றாள்-முரண்தொடை. பி - ம்:—[1]எயிற்றளயில். (ருச)

ருரு.—இதுமுதல் மூன்றுகவிகளால், முனிவன் இந்தத் தாடகையைப் பெண்ணென்றல் தகாது எனல்.

தீதென் றுள்ளவை யாவையுஞ் செய்தெமைக்
கோதென் றுண்டில ளித்தனை யேகுறை
யாதென் றெண்ணுவ திக்கொடி யாளையும்
மாதென் [1]றெண்ணுவ தோமணிப் பூணினாய்.

(இ - ள்.) மணி பூணினாய்-இரத்தினாபரணங்களை யணிந்த இராமனே! (இவ்வரக்கி), தீது என்று உள்ளவை யாவைஉம் செய்து - பொல்லாங்குகளென்று உலகத்திலுள்ளவை எல்லாவற்றையும் செய்து, எமை - தவசிகளாகிய எங்களை, கோது என்று - சாரமில்லாதபொருள்களென்று கருதி, உண்டிலள் - உண்ணாமல் விட்டிட்டாள்; இத்தனைஏ குறை - உண்ணாமல் விட்ட இவ்வளவே குறைவாயுள்ளது; யாது என்று எண்ணுவது - (இவளை) என்னவென்று கருதுவது? இ கொடியாளைஉம் - கொடுந்தன்மையையுடைய இவளையும், மாது என்று எண்ணுவதுஒ - பெண்ணென்று கருதுவது தகுமோ? (எ - று.)

எவ்வளவு உபத்திரவம் விளைக்கலாமோ அவ்வளவும் இவள் தவசிகளாகிய எங்களுக்கு இழைத்திருக்கின்றாள்; எங்களையே உண்டும் இருப்பாள்: அப்படி உண்ணாதது - எங்கள் உடம்பு தவத்தினால்வாடி இறைச்சியற்றிருத்தலால் இது பசையுள்ளதன்று: 'கோது'என்ற இகழ்ச்சிபற்றியே யன்றி வேறன்று; இப்படிப்பட்ட கொடியவளையும் பெண்ணென்று நினைக்கலாமோ? என்பதாம். மற்றை முனிவரையும் உளப்படுத்தி 'எமை' என்றான். பி-ம்:—[1]எண்ணுதியோ. (ருரு)

ருசு. நாண்மை யேயுடை யார்பிழைத் தானகை
யாண்மை யேபெற்ற வன்றிற லாடவர்
தோண்மை யேயிவள் பேர்சொலத் [1]தோற்குமா
லாண்மை யென்னும [2]தார்வ சத்தாகுமே.

(இ - ள்.) நாண்மைஏ உடையார் பிழைத்தால் - நாணமென்ற குணத்தை முதன்மையாகக்கொண்ட மகளிரைக் கொன்றால், (அது), நகை - (வீரனென்றுபேர்கொண்ட இவன் பெண்வதை செய்தானே' என்று பலரும் பரிகசித்துச்) சிரித்தற்குக் காரணமாம்; இவள் பேர் சொல - இவள்பேரைச் சொன்னமாத்திரத்தில், ஆண்மை ஏ பெற்ற வல் திறல் ஆடவர் - சுத்தவீர குணத்தைக்கொண்ட வலிய பராக்கிரமத்தையுடைய ஆண்மக்களுடைய [பெருவீரருடைய], தோண்மை ஏ தோற்கும் - புயவலிமுழுவதுமே போய்விடும்: (என்றால்), ஆண்மை என்னும் அது ஆர் வசத்து ஆகும் - ஆண்தன்

மையென்பது (இவளிடத்திலே யொழிய) மற்றையாரிடத்தி லிருப்ப தாகும்? (எ - று.)

இராமா! நீ நினைக்கின்றபடி பெண்களைக் கொலைசெய்வது பலரும் ஏளனஞ்செய்யத்தகுந்த தொழில்தான்; பெண்கட்குஉரிய நாணம் சிறிது மின்றி, தன்பெயரைச்சொன்னாலும் அதுகேட்டமாத்திரத்தில் பெருவீரரும் தங்கள்வலிமைமுழுவதையும் இழந்து இவளுடன் பொரப் பின்வாங்குவ ரென்றால், இவளிடத்தில் ஆண்மையுள்ள தென்பதா, மற்றையோரிடத்தில் ஆண்மையுள்ளதென்பதா? நாணம் இல்லாமையால் இவள் பெண்ணல்லள், ஆணே; இங்ஙனம் ஆண்மைநிறைந்துள்ளவளைக் கொல்வது,எப்படிப் பெண் கொலையாகும்? என்று விசுவாமித்திரன் கூறினனென்க. நாண்மை-மகளிர்க் குணங்களுள் முதன்மையானது; அது, பிறஆடவரைக் காணுதற்கும் மனங்கூசுதல். நாண்மை, மை - பகுதிப்பொருள்விகுதி. பிழைத்தலென் பது-இலக்கணையால், கொல்லுதலையுணர்த்திற்று.உடையார்ப்பிழைத்தால் - "இயல்பின் விகாரம்." நாண்மை உடையார்-(இவளுடன் போர்செய்வதற்கு) நாணங்கொண்டு அப்போரைச் செய்யாதொழிந்தவர்கள்தாமே, பிழைத்தார்-உயிர்பிழைத்தார்கள்; [அஞ்சாது எதிர்த்து இவளோடு பொருதவரெல்லாம் இறந்தனரென்றபடி]; நகு வாண்மை ஏ பெற்ற-விளங்குகின்றவாளினாற்செய் யும் போரின் தன்மையையே கொண்டுள்ள, வல் திறல் ஆடவர் என்க.

பி - ம்:—[1]தோற்பரேல். [2]ஆரிடைவைகுமே. (ருஎ)

ருஎ. இந்தி ரன்னிடைந் தானுடைந் தோடினார்
தந்தி ரம்படத் தானவர் வானவர்
மந்த ரம்மிவ டோளெனின் மைந்தரோ
டந்த ரம்மினி [1]யாதுகொ லாண்மையே.

(இ - ள்.) இந்திரன் - தேவேந்திரன், இடைந்தான் - (இவளுக்குத்) தோற்றான்; தானவர் வானவர் - அசுரர்களும் மற்றைத் தேவர்களும், தந்திரம் பட - (தங்கள்) சேனைகளெல்லாம் அழிய, உடைந்து ஓடினார் - (இவளுக்குமுன் நிற்கமாட்டாமல்) தோற்று ஓடிப்போனார்கள்; இவள் தோள் - இவளது புயங்கள், மந்தரம் எனின் - மந்தரகிரிக்கு ஒப்பாகுமென்றால், இனி - இனிமேல், (இவளுக்கு), மைந்தரோடு - ஆண்மக்களுடனே, ஆண்மை - பராக்கிரமத்தில், அந்தரம் யாது - வேறுபாடியாதோ? [எதுவுமில்லை யென்றபடி]; (எ - று.)—கொல் - அசை.

கீழ்ச்செய்யுளில் 'வன்றிறலாடவர் தோண்மையே யிவள்பேர் சொலத் தோற்கும்'என்பதை, இச்செய்யுளில் விவரிக்கின்றார். இந்திராதிதேவரையும் அசுரர்களையும் பறக்கடித்து மந்தரமலைபோற் பருத்த தோள்களை இந்தத் தாடகை பெற்றிருக்கின்றாளென்றால், ஆடவர்க்கும்இவட்கும் வேறுபாடு என்னஉள்ளது?என்றனனென்க. மந்தரத்தைத் தோளுக்கு உவமைகூறியத னால், அம்மலை பாற்கடலைக்கலக்கியதுபோல, இவளதுதோள் சேனைக்கட லைக் கலக்குமென்பது பெறப்படும். ஈற்றடிக்கு, அந்தரம் - முடிவாக, மைந்த ரோடு - ஆண்மக்களிடத்தில், ஆண்மை - ஆண்மைத்தன்மை, இனி - இனி

மேல், யாது - என்ன உள்ளது? [இவளிடத்தில்தான் ஆண்மை நிரம்பியுள்ளது] என்று உரைப்பாருமுள்ளர். பி - ம்:—[1] யாது கொலாமையா. (ருஎ)

ருஅ.—தாடகையைப்பெண்ணெனலாகாதென்ற முனிவன் மற்றுஞ் சொல்லத்தொடங்குதல்.

மன்னர் மன்னவன் காதல மற்றுமொன்
றின்னம் யானுரைக் கின்றது யாதெனின்
முன்னோர் கால நிகழ்ந்த [1]முறைமையீ
தென்ன வோதலுற் றான்றவத் தீறிலான்.

(இ - ள்.) மன்னர் மன்னவன் காதல - சக்கரவர்த்தி திருமகனே! மற்றும் ஒன்று இன்னம் யான் உரைக்கின்றது - வேறும் ஒருசெய்தி இன்னமும் நான் சொல்லவேண்டியது (இருக்கிறது); யாது எனின் - (அது) எதுவென்றால், முன் ஓர் காலம் நிகழ்ந்த முறைமை ஈது - முன்னே ஒருகாலத்தில் நடந்த கிரமம் இதுவாம், என்ன - என்றுசொல்லி, தவத்து ஈறு இலான் - தவத்துக்கு ஒரு எல்லையில்லாதவனாகிய விசுவாமித்திரன், ஓதல்உற்றான் - (அதனைக்) கூறத்தொடங்கினான்; (எ-று.)—அது, மேல் மூன்று கவிகளிற் காண்க. ஈது என்றது - பெண்களாயினும் பொல்லாங்குடையரானாற் கொல்லலாமென்பது. இந்தச்செய்யுள் முதல் நான்குசெய்யுள்கள் சிலபிரதிகளிலில்லை. பி - ம்:—[1] முறைமையது. (ருஅ)

கூ.—மகளிரைப் பொல்லாங்குகருதிக் கொல்லுதற்கு மேற்கோளான இதிஹாஸங்கள்.

பிருகு வென்னும் பெருந்தவன் றன்மனை
வருக யற்கட் கியாதிவல் லாசுரர்க்
குருகு காத லுறவுற வாதலே
கருதி யாவி கவர்ந்தன னேமியான்.

(இ - ள்.) பிருகு என்னும் பெரு தவன்தன் - பிருகு என்கிற பெரிய தவமுள்ள முனிவனுக்கு, மனை வரு - மனைவியாகப் பொருந்திய, கயல் கண் கியாதி - கயல்மீன்போற்பிறழ்கின்ற கண்களையுடைய கியாதியென்பவள், வல் ஆசுரர்க்கு - வலிமையையுடைய அசுரர்களுக்கு, உருகு காதல் உற-மனமுருகுதற்குக்காரணமான அன்பு பொருந்த, உறவு ஆதலே கருதி-துணையானதனை யெண்ணி, நேமியான் - சக்கரபாணியான திருமால், ஆவி கவர்ந்தனன் - அவளுயிரை வாங்கினான் [அவளைக்கொன்றானென்றபடி].

பூர்வத்தில் தேவர்க்கும் அசுரர்க்கும் பெரும்போர் நடந்தபோது, ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் அசுரரைத் துரத்த, அவர்கள் ஓடிப் பிருகுமுனிவனாச்சிரமத்திலே நுழைந்து அம்முனிவனது பத்தினியான கியாதியென்பவளை அடைக்கலமாகப் புக, அவள் அவர்கட்கு அபயங்கொடுத்துத் தன்னாச்சிரமத்தில் மறைத்துக் காத்துவந்தனளாக, அதனையறிந்த உபேந்திரனை திருமால் பகைவரான அசுரரைக் காட்டும்படி வெகுவாய்க் கேட்டும் அவள் இணையாமையால், முற்பட அவள் சிரத்தைக் கொய்து பிற்பட அசுரர்களை

வதைத்தா னென்பது, இந்தச்செய்யுளிற் குறித்த வாலாறு. இந்தக்கியாதி யென்பவள் - அசுரகுருவான சுக்கிரனது தாய். ஆசுரர் - நீட்டல். நேமியான் - கருத்துடையடைகோளி. (௫௯)

௬௦.—இதுவும் அது.

[1]வான கந்தனின் மண்ணினின் மன்னுயிர்
போன கந்தனக் கென்றெணும் புந்திய
தான வள்குமு திப்பெய ராடனை
யூனொ ழித்தனன் வச்சிரத் தும்பர்கோன்.

(இ - ள்.) வானகந்தனில் - தேவலோகத்திலும், மண்ணினில் - பூலோகத்திலும், மன் - பொருந்தியுள்ள, உயிர்-உயிர்களையெல்லாம், தனக்கு போனகம் என்று எணும் - தனக்கு உணவென்று கருதுகின்ற, புந்தியது ஆனவள் - அறிவுடையவளாகிய, குமுதி பெயராள் தனை - குமுதியென்று பெயர் பெற்றவளை, உம்பர் கோன் - தேவராசனான இந்திரன், வச்சிரத்து - வச்சிராயுதத்தினால், ஊன் ஒழித்தனன்-உடலை யொழித்தான் [கொன்றனன்.]

உலகங்களையெல்லாம் பாழடையச்செய்யவேணு மென்று கருதிய விரோசனனுடையமக ளாகிய மந்தரையென்பவளைத் தேவேந்திரன் கொன்றொழித்தானென்று ஸ்ரீவான்மீகத்திற் கூறியுள்ளது. ஆகவே, குமுதிப்பெயராள் என்பதற்கு - பெயரைக்கூறியதெனக்கொள்ளாமல் துர்ப்புத்தியுடையவளென்று பிரசித்திபெற்றவளென உரைகூறுதல், ஏற்கும்.
பி - ம்: - [1]வானகத்தினின். (௬௦)

௬௧.—பொல்லாங்குகருதிப் பெண்கொலை செய்த முன்னையோர் கீர்த்திபெற்றமையைக் காட்டல்.

ஆத லாலரிக் காகண்ட லன்றனக்
கோது கீர்த்தி[1]யுண் டாயவல் லாதிடை
யேத மென்பன வெய்திய வோசொலாய்
தாத டர்ந்துத யங்கிய தாரினாய்.

(இ - ள்.) ஆதலால் - (பெண்கொலை செய்த) அச்செய்கையினால், அரிக்கு - விஷ்ணுவுக்கும், ஆகண்டலன் தனக்கு - இந்திரனுக்கும், ஓது கீர்த்தி - (யாவராலும் எடுத்துச்சிறப்பித்துச்) சொல்லுதற்குரிய புகழ்கள், உண்டாய அல்லாது - உண்டாயினவே யல்லாமல், இடை - இடையிலே, ஏதம் என்பன - குற்றமெனப்படுபவை [பழி], எய்திய ஓ-நேர்ந்தனவோ? சொலாய் - சொல்வாயாக; தாது அடர்ந்து தயங்கிய தாரினாய் - பூந்தாதுகள் நெருங்கி விளங்குகின்ற மாலையையுடையவனே! (எ - று.)

பெண்கொலையால் திருமாலுக்கும் தேவேந்திரனுக்கும் புகழுண்டாயினவேயன்றிப் பழியுண்டாகவில்லை யாதலால், இவளைப் பெண்ணென்றே கொண்டாலும், இவளுடையவதையாற் புகழேயுண்டாகு மென்று விசுவாமித்திரன் இராமனுக்கு எடுத்துக் காட்டியவாறு. அரி - ஹரி: அடியார்களின் பாவங்களை யொழிப்பவன். ஆகண்டலன் - சத்துருக்களை நன்குதண்டிப்பவன். பி - ம்:—[1]உண்டாயதல்லாது, உடையவல்லாது. (௬௧)

**கூஉ.—இத்தாடகைக்கு ஆண்மையில்லையென்று குறைப்படவேண்டா வென்று மீண்டும் முனிவன்கூறுதல்.**

[1]கறங்க டற்றிகி ரிப்படி காத்தவர்
பிறங்க டைப்பெரி யோய்பெரி யோரொடு
மறங்கொ டித்தரை மன்னுயிர் மாய்த்து[2]நின்
றறங்கெ டுத்தவட் காண்மையும் வேண்டுமோ.

(இ - ள்.) கறங்கு - ஒலிக்கின்ற, அடல் - வலிமையையுடைய, திகிரி ஆஞ்ஞாசக்கரத்தினால், படி - பூமியை, காத்தவர் - பாதுகாத்து வந்த சூரிய குலத்தரசரின், பிறங்கடை - வமிசத்திற்பிறந்த, பெரியோய் - பெருமை பெற்றவனே! பெரியோரொடும் மறம் கொடு - பெரியோர்களுடனே பகையைக் கொண்டு,இ தரை மன் உயிர் மாய்த்து - இப்பூமியிற் பொருந்திய உயிர்களையெல்லாம் ஒழித்து, நின்று - (தானொழியாமல்) நிலைபெற்று, அறம் கெடுத்தவட்கு - தருமத்தை யொழித்த இத்தாடகைக்கு, ஆண்மைஉம் வேண்டும்ஓ-ஆண்மையென்பதொன்றும் வேறாக வேண்டப்படுமோ? (எ-று.)

ஆண்மையில்லையே யென்று சிந்தியாமல் அறத்தைக்கெடுத்துப் பெரி யோர்க்குத் தீங்கிழைக்கின்ற இவளது செய்கைக்காகவே இவளை வதைக்க லாமென்று காட்டியவாறு. பிறங்கடை - வழித்தோன்றல். கறங்குதல் - சுழலுதலுமாம். பி - ம்:—[1]கறங்கிடத்திகிரி. [2]நல். (கூஉ)

**கூங.—அத்தாடகை யமனினுங் கொடியவளெனல்.**

சாற்று நாளற்ற[1]தென்றுத ருமம்பார்த்
தேற்றும் விண்ணென்ப[2]தன்றியி வளைப்போ
னாற்றங் கேட்டலுந் தின்னந யப்பதோர்
[3]கூற்றுண் டோசொலாய் கூற்றுறழ் வேலினாய்.

(இ - ள்.) கூற்று உறழ் வேலினாய் - (பகைவர்க்கு) யமனைப்போன்ற வேலையுடைய இராமனே! (யமன்), சாற்றும் நாள் அற்றது என்று - (ஊழ் வினையின்படி) விதித்துக் கூறப்பட்டுள்ள ஆயுள்நாள் முடிந்ததென்று ஆலோசித்து, தருமம் பார்த்து - (உயிர்கள் செய்துள்ள) புண்ணியத்தையும் நோக்கி, விண் ஏற்றும் (அவ்வுயிர்களை) மேலுலகத்துக்குக் கொண்டுசெலுத் துவான், என்பது அன்றி - என்பதுவே யல்லாமல், இவளை போல் - இத் தாடகையைப்போல, நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பது - (பிராணி களின்) கந்தத்தை (உயிர்ப்பினால்) உணர்ந்தமாத்திரத்தில் (அவற்றைத்) தின்னவிரும்புவதாகிய, ஓர் கூற்று - ஒருயமன், உண்டுஓ - (உலகத்தில்) உள்ளதோ? சொலாய் - சொல்வாயாக; (எ - று.)

யமனென்பவனைக் கொடியவனென்று உலகத்தார் கூறுகின்றனர்: அவ் யமனோ ஆயுட்காலம் முடிந்தவரைப்பார்த்து உலகத்தில் தருமம் நிலைநிற்றற் பொருட்டு உயிர்கவர்ந்து அவரவர் வினைக்குஏற்ப விண்ணுலகத்திற்கு அனு ப்புவதோ நரகத்தில் தள்ளி உபத்திரவிப்பதோ, இவ்விரண்டனுள் ஒன்றைச் செய்கின்றான்: இந்தத்தாடகையோ ஏதேனும் ஒருபிராணியின் நாற்றத்தை

மோப்பளாயின், தருமகாரியஞ் செய்துகொண்டிருந்தாலும் அந்தப்பிராணியின் ஆயுள்நாளைக் கருதாது உடனே உயிரொழிக்க வருகின்றாளே! இவள் அந்தயமனிலும் கொடியவளல்லளோ?என்று அவள் கொடுமையை யெடுத்துக்காட்டியவாறு. வெகுதூரத்திலிருந்தாலும் அறியவல்ல ளென்பதற்கு 'நாற்றங் கேட்டலும்' என்றார்: மரபுழுவமைதி. கூற்றுஉறழ்-புகழ்ச்சொல்லைப் பெருக்கிய என்றுமாம். பி - ம்:—[1]எண்ணி. [2]அல்லது. [3]கூற்றுமுண்டு சொல், கூற்றுண்டோ சொலை. (௬௩)

௬௪.—இவளைப் பெண்ணென்பதே தகுதியன்றெனல்.

மன்னும் பல்லுயிர் வாரித்தன் வாய்ப்பெய்து
தின்னும் புன்மையிற் [1]றீமையெ தோவைய
பின்னுந் தாழ்குழற் பேதைமைப் பெண்ணிவ
ளென்னுந் தன்மை யெளிமையின் பாலதே.

(இ - ள்.) ஐய - தலைவனே! மன்னும் பல் உயிர் வாரி-பொருந்தியபல பிராணிகளையும் (கைகளால்) திரட்டி, தன் வாய் பெய்து - தனது வாயிலே போகட்டுக்கொண்டு, தின்னும் - தின்னுகின்ற, புன்மையின் - கீழ்மையைக் காட்டிலும், தீமைஎது ஓ - கொடியதுஎதுவோ? [எதுவும் இன்றென்றபடி]; 'இவள் - இத்தாடகை, பின்னும் தாழ் குழல் பேதைமை பெண் - பின்னப் படுகிற நீண்டுதொங்குகின்ற கூந்தலையும் மடமைக்குணத்தையு முடையாளொருபெண்ணுவள்,' என்னும் தன்மை - என்றுநினைக்கிற தன்மை, எளிமையின்பாலதுஎ - தாழ்வின்பாற்படுவதே [தகுதியன்றென்றபடி]; (எ-று.) —எளிமை - புத்தியின்வலியின்மை. பி - ம்:—[1]தீமையதோ, தீமையதே. ()

௬௫.—விசுவாமித்திரன் நான் ஆராய்ந்துகூறுவதால் நீ தயங்காமல் இவளைக் கோல்லலா மெனல்.

ஈறி னல்லறம் பார்த்திசைத் தேனிவட்
சீறி நின்றிது செப்புகின் றேனலே
னாறி நின்ற [1]தறனன் றரக்கியைக்
கோறி [2]யென்றெதி ரந்தணன் கூறினான்.

(இ - ள்.) ஈறு இல் - அழிவில்லாத, நல் அறம் - நல்ல தருமத்தை, பார்த்து -, இசைத்தேன் - (இவ்வாறு) கூறினேன்; இவள் சீறி நின்று - இவளைக் கோபித்துநின்று, இது செப்புகின்றேன் அலேன் - இவ்வார்த்தை சொல்லுகிறே னல்லேன்; ஆறி நின்றது - நீ (இவள்பக்கல் கோபங்) தணிந்துநின்றது, அறன் அன்று - தருமமன்று; அரக்கியை கோறி - இவ்விராக்கதியைக் கொல்வாயாக, என்று —, எதிர் - (ஸ்ரீராமபிரானது) முன்னிலையில், அந்தணன் - கௌசிகமுனிவன், கூறினான் - சொன்னான்; (எ - று.)

"காய்வதன்க ணுற்றகுணந் தோன்றாதாகும்" என்பதுபற்றி,'சீறிநின்று செப்புகின்றேனலேன்' என்றான். "கொலையிற்கொடியாரைவேந்தொறுத்தற் பைங்கூழ், களைகட்டதனோடுநேர்" என்றகுறள் இங்குக்கருதத்தக்கது. ஆறுதல் - பொறுத்தலுமாம். பி - ம்:—[1] அருள். [2]என்றனனன்னெறி. (௬௫)

**௬௬.—இராமன் முனிவன் ஏவலுக்கு இசைந்ததாகக்கூறுதல்.**

ஐய னங்கது கேட்டற [1]னல்லவு
மெய்தி னாலது செய்கவென் றேவினான்
மெய்ய நின்னுரை வேதமெ னக்கொடு
செய்கை யன்றோ வறஞ்செயு மாறென்றான்.

(இ - ள்.) ஐயன் - ஸ்ரீராமன், அங்கு - அப்பொழுது, அது கேட்டு-அம்முனிவன்வார்த்தையைச் செவியுற்று, (அம்முனிவனைநோக்கி), 'மெய்ய - சத்தியசொரூபியானவனே! அறன் அல்லஉம் - தருமமல்லாதகாரியங்களும், எய்தினால் - (செய்யும்படி) நேர்ந்தால், அது செய்க என்று ஏவினால் - அதனைச்செய்வாயாகவென்று (என்னை நீர்) நியமித்தால்,நின் உரை வேதம் என கொடு - உம்வார்த்தையையே வேதவாக்கியமென்று மனத்திற்கொண்டு [கருதி], செய்கை அன்றோ - செய்வதன்றோ, அறம் செய்யும் ஆறு - தருமஞ்செய்யும்முறைமையாம்,' என்றான் - என்றுகூறினான்; (எ - று.)

எனக்கு உன்னைப்போன்றவர் ஒன்றைஏவினால் அதனைச்செய்யவேண்டுவதுதான் கடமையென்று தன்னிணக்கத்தை இராமன் தெரிவிக்கின்றனன்.
பி - ம்:—[1] அல்லவாயெய்தினும்மிது. (௬௬)

௬௭.—இனித்தாடகையோடு நிகழ்ந்தபோர் கூறப்படுகின்றது:—

**அப்போது தாடகை தன்சூலத்தைச் சினத்தோடு இராமன்மீது ஏவுதல்.**

கங்கைத் தீம்புன னாடன்க ருத்தை[1]யு
மங்கைத் தீயனை யாளும னக்கொளாச்
செங்கைச் சூலவெந் [2]தீயினைத் தீயதன்
வெங்கட் டீயொடு மேற்செல வீசினாள்.

(இ - ள்.) (அப்பொழுது), மங்கை தீ அனையாள்உம் - ஒருபெண்ணின் வடிவங்கொண்டுவந்த அக்கினியையொத்தவளான அத்தாடகையும், கங்கை தீம் புனல் நாடன் கருத்தைஉம் - கங்காநதியினதுமதுரமானநீரைக்கொண்டுள்ள கோசலநாட்டையுடைய ஸ்ரீராமனதுஎண்ணத்தையும்,மனம் கொளா - மனத்திலே கொண்டு [கருதியென்றபடி], செம் கை சூலம் வெம் தீயினை - (தனது) சிவந்தகையிலுள்ள சூலாயுதமாகிய கொடியநெருப்பை, தீய தன் வெம் கண் தீயொடு - கொடிய தனதுபயங்கரமான கண்களினின்றுஎழுகின்ற அக்கினிச்சுவாலையுடனே, மேல் செல - (இராமன்) மேலே செல்லும்படி, வீசினாள் - எறிந்தாள்; (எ - று.)

கோசலதேசத்தின் தென்புறத்திற் கங்காநதி செல்வதுபற்றி,'கங்கைத் தீம்புனனாடன்'என்றார். இச்செய்யுளில் முத்தீக் கூறப்பட்டுள்ளமை காண்க. மங்கைத்தீயனையாள்-இல்பொருளுவமை. பி-ம்:—[1] அம்மங்கை. [2] தீயைய.

**௬௮.—தாடகையின்சூலப்படை இராமன்மீதுவருதல்.**

புதிய கூற்றனை யாள்புகைந் தேவிய
கதிர்கொண் மூவிலைக் காலவெந் தீமுனி

விதியை மேற்கொண்டு நின்றவன் மேலுவா
மதியின் மேல்வருங் கோளென வந்ததே.

(இ - ள்.) புதிய கூற்று அனையாள் - நூதனமானஒருயமனையொத்த தாடகை, புகைந்து எவிய-மனமெரிந்துவீசின, கதிர் கொள் மூ இலை காலம் வெம் தீ - ஒளியைக்கொண்ட மூன்று இலைகளையுடைய சூலாயுதமாகிய கொடிய சங்காரகாலாக்கினியானது, முனி விதியை மேற்கொண்டு நின்றவன்மேல் - விசுவாமித்திரமுனிவனது நியமனத்தை அங்கீகரித்துநின்ற ஸ்ரீராமபிரான்மேலே, உவா மதியின்மேல் வரும் கோள் என-பூர்ணிமாசந்திரன்மேலே (அவனைவிழுங்குதற்கு) வருகிற இராகுவென்கிற கிரகம்போல, வந்தது—; (எ - று.)

இராமசந்திரன்மீது வருஞ் சூலத்திற்கு உவாமதியின்மீதுவரும் இராகுவை உவமைகூறினார். புதியகூற்று - பெண்கூற்று. கதிர் - கூர்நுனியுமாம். பாற்கடல்கடைந்து அமுதத்தையெடுத்தபின்பு அதனைத் தேவர்கட்குப் பகிர்ந்துகொடுக்கையில் சிம்ஹிகையின்புதல்வனான அசுரன் தேவர்களினிடையேநின்று அமுதத்தைப்பெற்று உண்கையில், அருகேநின்ற சூரியசந்திரர்கள் அதனைத்திருமாலுக்குக் கோட்சொல்ல,திருமால் அமுதத்தைக்கொடுத்துவந்த அகப்பைகொண்டு அவனைப்புடைக்க, அவன் உடலும் உடம்பும் வேறுபட்டும் அமுதமுண்டதனாற் சாவாமல் இராகுகேதுக்களென்னும் இரண்டுகிரகங்களாகிச் சிற்சிலகாலத்துச் சூரியசந்திரரைப் பீடிக்கின்றனனென்பது, புராணவரலாறு. (கூஅ)

கூகூ.—அச்சூலத்தை இராமன் துணித்தல்.

மாலு மக்கணம் வாளியைத் தொட்டதுங்
கோல விற்கால் குனித்ததுங் கண்டிலர்
காலனைப்பறித் தக்கடி யாள்விட்ட
சூல [1]மற்றன துண்டங்கள் [2]கண்டனர்.

(இ - ள்.) மால்உம் - விஷ்ணுவின்அவதாரமான இராமனும், அ கணம்- அந்தக்ஷணத்திலே, வாளியை தொட்டதுஉம் - பாணத்தை யெடுத்துப்பிரயோகித்ததையும், கோலம் வில் கால் குனித்ததுஉம் - அழகிய வில்லின் குதையை வளைத்ததையும், கண்டிலர் - (எவரும்) கண்டாரில்லை; காலனை பறித்து - யமனிடத்தினின்றும் பிடுங்கி, அ கடியாள் விட்ட - கொடுந்தன்மையையுடைய அந்தத்தாடகை வீசின, சூலம் - சூலாயுதம், அற்றன - அறுபட்டதனாலாகியனவான, துண்டங்கள் - இரண்டுதுண்டுகளையே, கண்டனர் - (யாவரும்) பார்த்தார்கள்;(எ-று.)

இதனால், இராமபிரான் எளிதிற்றொழில்செய்யுந் திறமுடையனாதல் விளங்கும். காரணகாரியங்களின்விரைவைவிளக்கும்பொருட்டு வாளியைத் தொட்டதனை முன்னும், விற்கால்குனித்தலைப் பின்னுமாகவைத்துக் கூறினார். காலன் - ஆயுட்காலத்தைக்கணக்கிடுபவன். காலனை - உருபுமயக்கம். தாடகையின்சூலம் யமனதுசூலத்தைப்போலுமென்பது, மூன்றுமடியின்

கருத்து. இனி, காலனைப்பறித்தக் கடியாள்விட்ட சூலம் என்பதற்கு-யமனை இடத்தைவிட்டெடுத்துத் தன்மாயையால் ஆயுதமாக்கி எதிரியின்மேல் எறிந்தாற்போன்ற சூலம் என்றுமாம். துண்டம் - துணிபட்டபொருள். விற்கால்-தநுர்த்தண்டம். பி-ம்:—[1]அற்றுறு, அற்றதன். [2]கண்டதே. (சுக)

எ0.—தாடகை கல்மழைபொழிய இராமன் அதனைஅம்புகளால் தடுத்தல்.

அல்லின் மாரிய னையநி றத்தவள்
[1]சொல்லின் மாத்திரை யிற்கட [2]றூர்ப்பதோர்
கல்லின் மாரியைக் கைவகுத் தாளது
வில்லின் மாரியின் வீரன்வி லக்கினான்.

(இ - ள்.) அல் - இருளையும், மாரி - மேகத்தையும், அனைய - ஒத்த, நிறத்து - கருநிறத்தையுடைய, அவள் - அத்தாடகை, சொல்லின் மாத்திரையின் - ஒருசொற்சொல்லுமளவிலே [மிகச்சிறிதுநேரத்திலே], கடல் தூர்ப்பது ஓர் கல்லின் மாரியை - கடலினையும் நிரப்பிவிடும்படியான கற்களின்மழையை, கைவகுத்தாள் - கைகளினால்எடுத்துப்பெய்தாள்; அது - அந்தச்சிலாவருஷத்தை, வீரன் - பராக்கிரமசாலியானஸ்ரீராமன், வில்லின் மாரியின் - வில்லினின்றுவிடப்படுகிறஅம்புமழையால், விலக்கினான் - (தன்மேல்விழவொட்டாது) தடுத்தான்; (எ - று.)

அல்லின், இன் - சாரியை. இனி, அல்லின்மாரி - இரவில்தோன்றிய மேகமெனினுமாம். கைவகுத்து, கை - தமிழுபசர்க்கம். பி-ம்:—[1]சொல்லு. [2]தூர்ப்பன. (எ0)

எக.—பிறகு இராமபாணம் தாடகையின்நெஞ்சில் ஊடுருவிச்செல்லுதல்.

சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரங் கரிய செம்ம
லல்லொக்கு நிறத்தி னாண்மேல் விடுதலும் வயிரக் [1]குன்ற
கல்லொக்கு நெஞ்சிற் றங்கா தப்புறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன [2]பொருளெனப் போயிற் றன்றே.

(இ - ள்.) கரிய செம்மல் - கருநிறமுள்ள ஸ்ரீராமன், சொல் ஒக்கும் கடிய வேகம் சுடு சரம் - (முனிவரது) சாபச்சொல்லை யொத்த மிக்கவிரைவையுடைய சுடுகின்ற ஒரு அம்பை, அல் ஒக்கும் நிறத்தினாள்மேல் - இருளை யொத்த கருநிறத்தையுடைய அத்தாடகையின்மேல், விடுதலும் - பிரயோகித்தவளவில்,—(அந்த அம்பு), வைரம் குன்ற கல் ஒக்கும் நெஞ்சில் தங்காது - வச்சிரமயமான மலையிலுள்ள கல்லைப்போன்ற [உறுதியான] (அவளது) மார்பிலே (தைத்துத்)தங்கியிராமல், அப்புறம் கழன்று - பின்னே உருவி, கல்லா புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் என - படியாத மூடர்களுக்கு நல்லறிவுடையோர் போதித்த அர்த்தம் போல, போயிற்று - போய்விட்டது; (எ - று.)

மேன்மக்கள் கீழோர்க்கு உபதேசிக்கும் உபதேசங்கள் அவர்கள் நெஞ்சில் தங்காமலே போதல்போல, இராமபாணம் அவள் மார்பில் தங்காது ஊடுருவிச் சென்றதென்க. சொல் - முனிவர்களின் சாபச்சொல். தன்

பயனைத் தவறாது அளித்தலில், அம்புக்கு உவமையாயிற்று. சொல் - வசவுச் சொல்லென்று கொண்டு, "ஆறாதே நாவினாற் சுட்டவடு" என்றவாறு ஒருவர் கூறுங் கடுஞ்சொற்போல மிகவுக்கிரமாக வருத்துந்தன்மையுள்ள அம் பென்றுமாம்; "வைவன முனிவர்சொல்லனைய வாளிகள்"என்பர், மேலும். பி - ம்:—[1] மறையென. )

எஉ.—தாடகையிறந்து விழுதல்.

பொன்னெடுங் குன்ற மன்னான் புகர்முகப் பகழி யென்னு
[1]மன்னெடுங் கால வன்காற் றடித்தலு மிடித்து வானிற்
கன்னெடு மாரி பெய்யக் கடையுகத் தெழுந்த மேக
மின்னொடு [2]மசனி யோடும் வீழ்வதே போல வீழ்ந்தாள்.

(இ - ள்.) பொன் நெடு குன்றம் அன்னான் - பொன்மயமான பெரிய மேருமலையை யொத்த கம்பீரத்தன்மையையுடைய ஸ்ரீராமனது, புகர் முகம் பகழி என்னும் - கூர்மையை நுனியிலேயுடைய அம்பென்ற, மன் நெடு வல் காலம் காற்று-நிலைபெற்றபெரிய வலிய ஊழிக்காலத்துக்காற்றானது, அடித்தலும் - வீசினமாத்திரத்திலே, இடித்து வானில் நெடுகல் மாரி பெய்ய கடை யுகத்து எழுந்த மேகம்-இடியிடித்துக்கொண்டு ஆகாசத்திலே பெரிய கல்மழையைப் பொழிதற்கு யுகாந்தகாலத்திலே மேலெழுந்த மேக மானது, மின்னொடும் அசனியோடும் வீழ்வதுஏ போல - மின்னலுட னும் இடியுடனும் கீழ்விழுவதுபோல, வீழ்ந்தாள் - (தாடகை இறந்து) விழுந்தாள்; (எ - று.)

யுகாந்தகாலத்துச் சண்டமாருதம் வீச அக்காலத்து வானத்து நின்ற மேகம் அந்தக்காற்றின் விசையைத் தாங்கமாட்டாது மின்னல் இடிகளு டன் கீழ்விழுவதுபோல, அத்தாடகை தன் நெஞ்சிற்பாய்ந்த இராமபாணத் தின் விசையைத் தாங்கமாட்டாமல் கீழ் வீழ்ந்தன ளென்க. அந்தத்தாடகை யின் வக்கிரதந்தம் மின்னலுக்கும், பெருங்கதறல் இடிக்கும் உவமை. பி - ம்:—[1] அந்நெடுங்காலவெங்காற்று. [2] இடியினோடும். (எஉ)

எஙு.—தாடகையிறந்துவிழுந்ததன் வருணனை.

பொடியுடைக் கான மெங்குங் குருதிநீர் [1]பொங்க வீழ்ந்த
தடியுடை யெயிற்றுப் பேழ்வாய்த் தாடகை தலைக டோறு
முடியுடை [2]யரக்கற் கந்நாண் முந்தியுற் பாத மாகப்
படியிடை [3]யற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை யொத்தாள்.

(இ - ள்.) பொடி உடை கானம் எங்குஉம் - புழுதிகளையுடைய அக் காட்டினிடம் முழுவதும், குருதி நீர் பொங்க - இரத்தவெள்ளம் மிகும்படி, வீழ்ந்த - (கீழே) விழுந்த, தடி உடை எயிறு பேழ் வாய் தாடகை - (பல பிராணிகளின்) தசையையுடைய பற்களையும் திறந்தவாயையுங்கொண்ட தா டகையானவள், தலைகள் தோறும் முடி உடை அரக்கற்கு - பத்துத்தலைகளி லும் கிரீடத்தையுடைய ராட்சசராசனான இராவணனுக்கு, முந்தி (விநாசகா லத்துக்கு) முற்பட்டு, உற்பாதம் ஆக-துர்நிமித்தமாக, அ நாள் - அந்தத்தின

த்திலே, படி இடை அற்று வீழ்ந்த - பூமியிலே அறுந்துவீழ்ந்த, அம்வெற்றி பதாகை ஒத்தாள் - அழகியவெற்றிக்கொடியைப் போன்றாள்; (எ - று.)

தாடகை முதன் முதலில் இராமபிரானால் இறந்து கீழ்விழுந்தது-இராமபிரான் இராவணாதிராட்சசசங்காரத்துக்குத் தொடங்கியாயிற்றென்பதைத் தெரிவிக்கு மென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. உற்பாதம் - பின்னே நிகழுந்தீமையை முந்தித் தெரிவிக்குந் தீநிமித்தம். கொடியறுந்துவிழுதல் - தீநிமித்தமாகும். வீழ்ந்த தாடகையென இயையும். தடி - தசை: தடித் என்ற வடசொல்லின் விகாரமெனில், மின்னலையொத்த, எயிறு என்க. பி - ம்:— [1]பொங்கிவீழ. [2]அரக்கரந் நாள். [3]இற்று. (எ௩)

எச.—தாடகையின்மார்பினின்று பெருகின இரத்தவெள்ளம்.

கான்றிரிந் தாழி யாகத் தாடகை கடின மார்பத்
தூன்றிய பகழி வாயூ டொழுகிய குருதி வெள்ள
மான்ற[1]வக் கான மெல்லா [2]மாயின தந்தி மாலைத்
தோன்றிய செக்கர் வானந் தொடக்கற்று வீழ்ந்த [3]தொத்தே.

(இ - ள்.) கான் திரிந்து ஆழி ஆக - அக்காடானது (தன் தன்மை) வேறுபட்டுக் கடலாம்படி, தாடகை கடினம் மார்பத்து ஊன்றிய பகழிவாய் ஊடு - தாடகையினது வலிமையான மார்பினிடத்திலேதைத்த பாணஞ் சென்ற வழியாக, ஒழுகிய - பெருகின, குருதி வெள்ளம் - இரத்தவெள்ளமானது, அந்தி மாலை தோன்றிய செக்கர் வானம் தொடக்கு அற்று வீழ்ந்தது ஒத்து - மாலைவேளையிற் காணப்படுகிற செவ்வானமானது ஆதாரமின்றி விழுந்ததனை யொத்து,ஆன்ற அகானம் எல்லாம் ஆயினது-விசாலமான அந்தக்காட்டினிடம் முழுவதும் பரவிற்று; (எ - று.)

காடுமுழுவதும் அவள் மார்பிலிருந்து இரத்தவெள்ளம் பெருகிப்பரவியது - அந்திப்போதில்தோன்றிய செவ்வானம் ஆகாயத்திற்பிடிப்பில்லாமையாற் கீழ்வீழ்ந்ததுபோலு மென்றார்; இதுவும், தற்குறிப்பேற்றவணியே. தாடகையுடன்போர்புரிந்தது அந்திக்காலத்துக்குச் சற்றுமுந்தி யென்பது, முதனூலாற்பெறப்படும். ஆன்ற - அகன்ற என்பதன் மரூஉ. பி- ம்:—[1]பேருலகமெல்லாம். [2]ஆயின. [3]ஒத்த. (எச)

எரு.—கவிக்கூற்று.

வாசநாண் மலரோ னன்ன மாமுனி பணிம றுத
காசுலாங் கனகப் பைம்பூட் காகுத்தன் கன்னிப் போரிற்
கூசிவா ளரக்கர் தங்கள் குலத்துயிர் [1]குடிக்க வஞ்சி
யர்சையா லுழலுங் [2]கூற்றுஞ் சுவைசிறி தறிந்த தன்றே.

(இ - ள்.) வாசம் நாள் மலரோன் அன்ன மா முனி - நறுநாற்றத்தையுடைய புதிய தாமரைமலரில்வாழும் பிரமதேவனைப்போன்ற விசுவாமித்திர மாமுனிவனது, பணி - கட்டளையை, மறுத - மறுக்காமற்செய்கின்ற, காசு உலாம் கனகம் பைம் பூண் காகுத்தன் - இரத்தினங்கள்விளங்குகின்ற பசும்

பொன்னுபரணங்களை யணிந்த ஸ்ரீராமபிரானது, கன்னி போரில் - முதற் போரில், வாள் அரக்கர் தங்கள் குலத்து உயிர் குடிக்க அஞ்சி கூசி ஆசையால் உழலும் கூற்றுஉம்-வாள்முதலிய ஆயுதங்களைத்தாங்கிய அரக்கர் குலத்தவரின் உயிரையுண்பதற்குப் பயந்து கூச்சங்கொண்டிருந்து உண்ணவேணுமென்கிற விருப்பத்தோடு திரிந்துகொண்டிருக்கின்ற யமனும், அன்று - அன்றைத்தினத்தில், சிறிது சுவை அறிந்தது - (அரக்கருயிரின்) உருசியைச் சிறிது உணர்ந்தது; (எ- று.)

கன்னிப்போர் - முதற்போர்: இது - குமரிப்போரெனவும்படும். பெண்ணுடன்செய்தபோரென்றபொருளும் தோன்றும். இராவணபயத்தால் இதுவரையிலும் அரக்கருயிரைக் கவரவேணுமென்ற எண்ணமிருந்தும் அங்ஙனங் கவராதிருந்த யமன் இராமன் முதன்முறைசெய்த இந்தத்தாடகாயுத்தத்தில் அவ்வச்சம்நீங்கிச் சிறிதுஅரக்கச்சுவையை யறிந்தன னென்க. தேவர்களை இருதிணையாலுங் கூறலாமாதலால், 'கூற்றுஅறிந்தது' என்றார். காகுத்தன் = காகுத்ஸ்தன்: ககுஸ்தனென்னும்அரசனதுவமிசத்திற்பிறந்தவனென்பதுபற்றி இராமனுக்குப்பெயர். தேவேந்திரன் ஒருகால் தன்னுடையபகைவரையழிக்குமாறுவேண்டிப் புரஞ்செயனென்னுஞ் சூரியகுலத்துமன்னனதுவிருப்பத்தின்படி போர்க்களத்தில் எருத்துவடிவமெடுத்து அந்தப்புரஞ்சயனைத் தாங்கிச்சென்றன னாதலால்,அவ்வரசன் ககுத்ஸ்தனென்று பெயர்பெற்றான்: ககுத் - (தேவேந்திரனாகிய எருத்தின்) முசுப்பு; அதில் ஏறியிருந்தவன் - ககுத்ஸ்தன். காசு - நவரத்தினம். பி - ம்:—[1]குடிப்ப. [2]கூற்றம். (௭௫)

### ௭௬.—தேவர்கள் வந்து தமதுமகிழ்ச்சியைத்தெரிவித்து அஸ்திரங்களையெல்லாம் இராமனுக்குத் தருமாறுசொல்லிச் செல்லுதல்.

யாமுமெம் மிருக்கை [1]பெற்றே முனக்கிடை யூறு மில்லை
கோமகற் [2]கினிய தெய்வப் படைக்கலங் கொடுத்தி [3]யென்னா
மாமுனிக் குரைத்துப் [4]பின்னர் விற்கொண்ட மழைய னான்மேற்
பூமழை பொழிந்து வாழ்த்தி விண்ணவர் போயி னாரே.

(இ - ள்.) (அப்பொழுது), விண்ணவர் - தேவர்கள், யாம்உம் எம் இருக்கை பெற்றேம் - (இனி) நாங்களும் எங்களிருப்பிடங்களைப் பெற்றவராவோம்; உனக்கு இடையூறுஉம் இல்லை - உனக்கும் (வேள்விமுதலிய நற்கருமங்களைச் செய்தற்கு) ஒருதடையு முண்டாகாது; கோமகற்கு இனிய தெய்வம் படைக்கலம் கொடுத்தி - சக்கரவர்த்திதிருமகனுக்கு நல்லதெய்வத்தன்மையையுடைய ஆயுதங்களைக் கொடுப்பாயாக,' என்னா-என்று, மா முனிக்கு உரைத்து - விசுவாமித்திரமகாமுனிவனுக்குச் சொல்லி, பின்னர் - பின்பு, வில் கொண்ட மழை அனான் மேல் - வில்லை (த் தன்னிடத்தே) கொண்டுள்ள காளமேகத்தைப்போன்றுள்ள ஸ்ரீராமபிரான்மீது, பூ மழை பொழிந்து - புஷ்பவருஷத்தைச் சொரிந்து, வாழ்த்தி - ஆசீர்வாதஞ்செய்து, போயினார் - (தத்தமிடங்களுக்குச்) சென்றார்கள்; (எ - று.)

தேவர்கள் அகத்தியனிடம்வந்து 'உன்னிடத்துள்ள தெய்வப்படைக் கலங்களெல்லாவற்றையும் ஸ்ரீராமனுக்குத்தருக' என்று சொல்லி இராமபிரான்மீது மலர்மாரிபொழிந்து சென்றன ரென்பதாம். பெற்றேம்-துணிவினால், எதிர்காலம் இறந்தகாலமாகக்கூறப்பட்ட காலவழுவமைதி. தெய்வப்படைக்கலம் - இந்திரன்முதலிய தேவதைகளை அதிதேவர்களாகக்கொண்ட அஸ்திரங்கள். வில்லையேந்திநிற்கின்ற இராமனுக்கு, இந்திரவில்லைக் கொண்ட முகில் உவமை. பி - ம்:—[1]பெற்றுமுனிக்கு. [2]இனிநீ. [3]என்று. [4]பின்னை. (௭௬)

தாடகைவதைப்படலம் முற்றிற்று.

---

## ௮-ஆவது வேள்விப்படலம்.

விசுவாமித்திரமகாமுனிவனால் செய்யப்படுவதும் ஸ்ரீராமலக்ஷ்மணர்களாற் காக்கப்படுவதுமாகிய யாகத்தினது வரலாற்றை உணர்த்தும் பாகமென்று பொருள். சிலபிரதிகளில், முதற்பதினைந்துபாடல்கள் - கவுசிகையாற்றுப்படலம் என்றும், அப்பால் இருபத்துமூன்றுபாடல்கள் - மாவலி மாண்டபடலம் என்றும், அப்பாலுள்ள இருபத்தொருபாடல்கள்-வேள்விப்படலம் என்றும் எழுதப்பட்டுள்ளன.

க.—விசுவாமித்திரன் இராமனுக்குப் படைக்கலந் தருதல்.

**விண்ணவர்** போய பின்றை **விரிந்தபூ** மழையி னாலே
**தண்ணெனுங்** கான நீங்கித் தாங்கருந் தவத்தின் மிக்கோன்
[1]**மண்ணவர் வறுமை** நோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெ
யண்ணறன் சொல்லே யன்ன படைக்கல மருளி னானே.

(இ - ள்.) விண்ணவர் - (கீழ்த்தாடகையின்வதத்தைக்கண்டு இவர்களருகில்வந்து தமதுமகிழ்ச்சியை வெளிப்படுத்திய) தேவர்கள், போய பின்றை - (தத்தம்இருப்பிடத்திற்கு மீண்டு) சென்றபின்பு,— தாங்கு அரு தவத்தில் மிக்கோன் - (பிறரால்) தரிப்பதற்கு அருமையான பெருந்தவத்திலே மிகுந்தவனாகிய விசுவாமித்திரன், விரிந்த பூ மழையினாலே தண் எனும் கானம் நீங்கி - (அத்தேவர்களினாற் சொரியப்பட்ட) மலர்ந்த பூக்களின் மழையினாற் குளிர்ச்சியடைந்த [இயற்கையில்மிக்கவெப்பத்தையுடைய] அந்தப்பாலைவனத்தை (இராமலக்குமணர்களுடனே) கடந்து, மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்து அன - பூமியிலுள்ளமனிதர்களது தரித்திரமாகிய வியாதிக்கு(த் தீர்க்கும்) மருந்தை ஒத்த, வெண்ணெய் அண்ணல் சடையன்தன் - திருவெண்ணெய்நல்லூரிலுள்ள பெருமையிற்சிறந்த சடையப்பமுதலியினது, சொல்ஏ - வார்த்தையையே, அன்ன-ஒத்த, படைக்கலம் - அஸ்திரங்களை, அருளினான் - (இராமபிரானுக்குக்) கொடுத்தருளினான்.

விரிந்த பூமழைஎனினுமாம். கற்பகமலர்களின் தொகுதியிலுள்ள தேன் மிகுதியால் அவ்வெவ்வியவனமுந் தண்மையடைந்ததென்க. மருந்தைக்கண்டால் வியாதிநில்லாததுபோற்சடையனைக்கண்டால் வறுமைநில்லாதென்ற

கருத்தால், 'மருந்தனசடையன்' என்றார். "அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தால், உவமைக்கு உவமைகூறி அடுக்கி நிறுத்தல் குற்றமாய்முடியு மாதலின், 'மருந்தன' என்பதைச் சொல் லுக்கு அடைமொழியாக்கலாகாது. இனி, மருந்தன படைக்கல மென்றும் இயைக்கலாம்; இவ்வாயுதங்கள் மேல் இராக்ஷசசங்காரஞ்செய்து உலகத்தா ரது துன்பங்களை யொழிப்பதனால். வெண்ணெய்-கடைக்குறைவிகாரம். 'அண்ணல்தன்சொல்லேயன்ன படைக்கலம்' என்றது, அவனதுசொல் எங் கும் எப்பொழுதும் தப்பாமல் தன்பயனைத்தருவதுபோல ஆயுதங்களும் எங் கும் எப்பொழுதுந் தவறாமல் வெற்றியாகியபயனைத் தருவன என்றபடி. 'மண் ணவர் வறுமைநோய்க்கு மருந்தன' என்றதனால், அப்பிரபுவினது உதார குணமும், 'சொல்லேயன்ன' என்றதனால் செல்வாக்கும் சத்தியமும், இரண்டினாலும் பரோபகாரசிந்தையும் வெளியிடப்பட்டன. உவமையணி. பிருசாச்வமுனிவன் தட்சப்ரஜாபதியின்குமாரிகளான ஜயை சுப்பிரபை யென்னும் இருவரை மணந்து அவர்களிடத்தில் சகல அஸ்திரங்களையும் சஸ்திரங்களையும் மக்களாகப் பெற்றன னென்றும், விசுவாமித்திரன் தான் அரசனாக இருக்கையில், அந்த அஸ்திர சஸ்திரங்களையெல்லாம் அம்முனி வனிடத்து அடைந்தன னென்றும் ஸ்ரீவான்மீகத்தா லறியலாம்.

திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப முதலி இந்நூலாசிரிய ராகிய கம்பருக்குப் பலசெல்வமுங்கொடுத்து ஆதரித்துவந்ததனால் தமது நன்றியறி வை விளக்கும்பொருட்டு, இவ்வள்ளலை இதிகாசமாகிய இப்பெருங்காப்பி யத்தில் இடையிடையேபுகழ்ந்துபேசுவர்; இவ்வாறுபுகழேந்திப்புலவர் தமது நளவெண்பாவில் முரணைநகர்ச் சந்திரன்சுவர்க்கியையும், வில்லிபுத்தூராழ் வார் தமது மகாபாரதத்தில் வக்கபாகை வரபதியாட்கொண்டானையும், மண்டலபுருஷன் தனது சூளாமணிநிகண்டில் கிருஷ்ணதேவராயனையும் ஆங்காங்குச் சிறப்பித்துக் கூறியிருக்குமாறு அறிக. பி-ம்:—[1] மண்ணுளோர்.

உ.—படைக்கலங்கள் இராமபிரானை யடைதல்.

ஆறிய வறிஞன் கூறி யளித்தலு மண்ண றன்பா
லூறிய வுவகை யோடு மும்பர்தம் [1]படைக ளெல்லாந்
தேறிய மனத்தான் செய்த நல்வினைப் [2]பயன்க ளெல்லா
மாறிய [3]பிறப்பிற் றேடி வருவபோல் வந்த வன்றே.

(இ - ள்.) ஆறிய - (காமம்முதலியகுற்றங்கள்) தணிந்த, அறிஞன்-திரி காலஞானமுள்ள விசுவாமித்திரன், கூறி - (அவ்வவற்றிற்குஉரிய மந்திரம் முதலியவற்றைச்) சொல்லி, அளித்தலும் - கொடுத்தஅளவில்,—உம்பர்தம் படைகள் எல்லாம் - அந்தத்தேவஅஸ்திரங்கள்யாவும், தேறிய மனத்தான் செய்த நல்வினை பயன்கள் எல்லாம் - (ஐயந் திரிபு அறியாமை என்ற இக் குற்றங்கள் இல்லாமல்) தெளிந்த மனத்தையுடையவனொருவன் (ஒருபிறப் பிற்) செய்த சற்கருமங்களின் பலன்கள் யாவும், மாறிய பிறப்பில் - மறு

பிறப்பிலே, தேடி - (அவனைத்) தேடிக்கொண்டு, வருவ போல் - (அவனிடமே தவறாமல்) வந்துசேர்வனபோல, அண்ணல்தன்பால் - ஸ்ரீராமனிடத்தில், ஊறிய உவகையோடும் - மேன்மேற்சுரந்தெழுந்த மகிழ்ச்சியுடனே, வந்த - வந்துசேர்ந்தன; (எ - று.)

முற்றத்துறந்த விசுவாமித்திரமுனிவனிடத்துச் செய்தொழிலொன்றுமின்றி வாளாவருந்தியிருந்த தெய்வப்படைகள்,ராக்ஷசசங்காரத்திற்கென்று திருவவதரித்து முதலில் தாடகையைக்கொன்று அத்தொழிலைத்தொடங்கிய இராமனிடம் தமக்கு உள்ள தினவை யொழித்துத் திருப்தியடையலாமென்ற கருத்தினாலும் தகுந்த பாத்திரமாதலாலும் மிக்ககுதூகலத்தோடு வந்தடைந்தன வென்க. உவமையணி. ஆறிய - தாடகையின் துன்பந் தீரப்பெற்ற என்றுமாம். ஒவ்வொரு அஸ்திரமும் இந்திரன் முதலியோருள் ஒவ்வொருவரைத் தனக்குஉரிய தேவதையாகக் கொண்டுள்ளதாதலால், 'உம்பர்தம்படைகள்' எனப்பட்டன.இன்னவை நல்லவை இன்னவைதீயவை என்னும் விவேகம் உறுதியாக ஒருவனுக்கு இல்லாமற்போனால் அவன் தீவினைகளைஒழித்து நல்வினைகளையே செய்தல் கூடாதாதலால், 'தேறிய மனத்தான்செய்த நல்வினை' என்றார். தீவினைப்பயன்களும் மறுபிறப்பில் தேடிவருவனவாயினும், அவை, துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ்செய்து எல்லாவுலகத்தார்க்கும் அளவிறந்தநன்மையை அளித்தற்கு உதவுகிற அப்படைக்கலங்களுக்கு உவமையாதற்கு ஏலா வாதலால் ஒழிக்கப்பட்டன. அன்றே-ஈற்றசை: தேற்றமுமாம். அன்றே வந்த என இயைத்து, அப்பொழுதே வந்தன என்றும் உரைக்கலாம். பி-ம்: [1]உபகாரம். [2]உதவிசெய்வான். [3]பிறப்புத். (உ)

௩.—அஸ்திரங்கள்யாவும் வேண்டி இராமனுக்கு அடிமையாதல்.

மேவினம் பிரித லாற்றேம் வீரநீ விதியி னெம்மை
யேவின செய்து நிற்று மிளையவன் போல வென்று
தேவர்தம் படைகள் செப்பச் செவ்விதென் றவனு நேரப்
பூவைபோ னிறத்தி னாற்குப் புறத்தொழில் புரிந்த வன்றே.

(இ - ள்.) தேவர்தம் படைகள்-(விசுவாமித்திரனால்உபதேசிக்கப்பெற்ற) அத்தேவாஸ்திரங்கள், (ஸ்ரீராமனைநோக்கி), 'வீர-பராக்கிரமமுடையவனே! மேவினம் - (நாங்கள் உன்னைவந்து) அடைந்தோம்; பிரிதல் ஆற்றேம் - (இனி உன்னைவிட்டுப்) பிரியமாட்டோம்; நீ விதியின் எம்மை ஏவின - நீ முறைமையாக எங்களை ஏவின தொழில்களை, இளையவன் போல - (உனது) திருத்தம்பியாகிய இலக்குமணன் போல, செய்து நிற்றும் - (தவறாமல்) செய்து நிற்போம்,' என்று—,செப்ப - சொல்ல, அவன்உம் - இராமனும், செவ்விது என்று-நல்லது என்றுசொல்லி, நேர - (அவை தொழில் செய்தற்கு) உடன்பட, (அதுமுதல் அந்தஅஸ்திரங்கள்), பூவை போல் நிறத்தினாற்கு - காயாம்பூப்போற் கருநிறத்தையுடைய ஸ்ரீராமனுக்கு, புறம் தொழில் புரிந்த - வெளியிற்செய்யவேண்டியதிருத்தொண்டுகளைச் செய்துகொண்டிருந்தன; (எ - று.)

விசுவாமித்திரமுனிவன் அஸ்திரமந்திரங்களனைத்தையும் ஸ்ரீராமனுக்கு உபதேசித்து அஸ்திரதேவதைகளை இராமனுக்கு வசப்படுத்தும்படி கருதி ஜபஞ்செய்ய, அத்தேவதைகள்யாவும் தேஜோமயசரீரத்துடன் முனிவனருகேவந்து தக்க ஆச்சிரயங்கிடைத்ததனால் மனமகிழ்ந்து இராமனைநோக்கி 'நாங்கள் உனக்குப் பணிசெய்பவர்' என்று சொல்ல, இராமனும் அங்கீகரித்து, 'யான் நினைக்கும்போது வந்துஉதவுக' என்று பணித்துவிட்டுப் புறப்படுகையில்,மீண்டும் முனிவனைநோக்கி இராமன்'அஸ்திரபிரயோகத்தை உபதேசித்ததுபோல உபஸம்ஹாரமந்திரங்களையும் உபதேசிக்கவேணும்' என்று வேண்ட, அம்மந்திரங்களையும் முனிவன்உபதேசித்து அந்தத்தேவதைகளையும் ஸ்ரீராமனுக்குவசப்படுத்தின னென்று முதினூலால் விவரம் உணரலாம். புறத்தொழில் - குற்றேவலென்றபடி; என்றது, அரக்கர் முதலியோரை அழித்தல் முதலியவற்றை.　　(ங)

**ச.—பின்பு இரண்டுகாவதம் முனிவன் முதலியோர்நடக்க, அங்குத்தோன்றிய பேரரவத்தைக்குறித்து வினவிய இராமனுக்கு முனிவன் கூறத்தொடங்குதல்.**

இனையன நிகழ்ந்த பின்னர்க் காவத மிரண்டு சென்றா
ரனையவர் [1]கேட்க வாண்டோ [2]ரரவம்வந் தணுகித் தோன்ற
முனைவவீ தியாவ தென்று முன்னவன் [3]வினவப் பின்னர்
வினையற நோற்று நின்ற மேலவன் விளம்ப லுற்றான்.

(இ - ள்.) இனையன - இத்தன்மையனவாகிய காரியங்கள், நிகழ்ந்த பின்னர் - நடந்தபின்பு, காவதம் இரண்டு சென்றார் - (இம்மூவரும்) இரண்டு காதவழிதூரம் நடந்துபோனார்கள்; ஆண்டு - அவ்விடத்தில், அனையவர் கேட்க - அவர்கள் கேட்கும்படி, ஓர் அரவம் - ஓசையொன்று, வந்து அணுகி தோன்ற - சமீபித்து வந்து விளங்க, முன்னவன் - (இராகவவீரர்களுள்) மூத்தவனாகிய ஸ்ரீராமன், (விசுவாமித்திரனைநோக்கி), 'முனைவ-பெரியவனே! ஈது யாவது - இவ்வோசை எதனா லுண்டாவது?'என்று வினவ - என்று கேட்க, பின்னர் - உடனே, வினை அற நோற்று நின்ற மேலவன்-கருமங்களொழியும்படி தவஞ்செய்து நின்ற மேன்மையையுடைய அம்முனிவன், விளம்பல் உற்றான்-சொல்லத்தொடங்கினான்; (எ-று.)—அது மேற்கவியிற் கூறுகிறார்.

காவதம், யாவது-காதம், யாது என்பவற்றின் விரித்தல்விகாரம். முனைவன்-முன்னையவன். இனி, முனைவ - முனிவனே யென்றுமாம். முன்னவன் என்பதில், தேவர்முதலிய யாவர்க்கும் முதல்வராகிய திரிமூர்த்திகளுள்ளும் முதல்வன் என்னும் பொருளுந் தோன்றும். காதம் - ஏழரைநாழிகைவழி.
பி - ம்:— [1]காண. [2]அரவம்வந்தெழுந்ததாங்கே, அகனதியணுகித்தோன்ற.
[3]மொழிய.　　(ச)

ரு.—சரயுவிற் கோமதி சங்கமமாகும்பேரொலி யென்று முனிவன் சொல்ல, பின் அவர்கள் வேறொருநதியை யடைதல்.

மானச மடுவிற் றோன்றி வருதலாற் சரயு வென்றே
[1]மேன்முறை யமரர் போற்றும் விழுநதி யதனி னோடு
[2]மானகோ மதிவந் தெய்து மரவம தென்ன வப்பாற்
போனபின் பவங்க டீர்க்கும் புனிதமா நதியை யுற்றார்.

(இ - ள்.) மானசம் மடுவில் - மானசசரசினின்றும், தோன்றி - உற்பத்தியாகி, வருதலால் - வருவதனால், சரயு என்று - சரயு என்று பேர்சொல்லப்பட்டு, மேல் முறை அமரர் போற்றும் - மேன்மையான தன்மையுடைய தேவர்களுஞ் சிறப்பித்துச்சொல்லும்படியான, விழுநதி அதனினோடு உம் - பெரிய அந்நதியோடு, ஆன கோமதி-பொருந்திய கோமதியென்னும்நதி, வந்து எய்தும் - வந்து கலத்தலாலுண்டாகிற, அரவம்அது என்ன - ஓசையாகும் (இது) என்று (கௌசிகமுனிவன்) சொல்ல,—அப்பால் போன பின்-(மூவரும்) அப்புறஞ்சென்றபின்பு, பவங்கள் தீர்க்கும் புனிதம் மா நதியை - (தன்னில் மூழ்கியவரது) பிறப்புக்களை ஒழிக்கின்ற பரிசுத்தமான பெரியதொரு நதியை, உற்றார் - அடைந்தார்கள்; (எ - று.)

பிரமனது மனசினால் நிருமிக்கப்பட்டதனால், மானசமென்று பெயர். சரயு - பொய்கையினின்றும் ஓடிவருகின்றதென்று பொருள்படும். தேவரும் போற்றுவதென நதியின் சிறப்பை அறிவித்தார். இனி, மேல் முறை - மேலிடத்துள்ள, தேவர்எனவுமாம். புனிதமாநதி - கௌசிகியென்பது. இங்குக்கூறிய நதீசங்கமமுங் கிளைக்கதைகளின்அமைப்பின் முறைமையும் முதனூலோடு மாறுபடுகின்றன. தாடகாவதமான பின்பு வாமனாச்சிரமத்தை யடைந்தன ரென்றும், கௌசிகைநதியையடைந்தது - வேள்வியை முடித்தபின்பு மிதிலைக்குப்போகையிலென்றும் முதனூலிற் கூறியுள்ளது.

பி - ம்:—[1] ஈனமிலமரர் போற்றுமிருநதி. [2] ஆனகோசிகை. (ரு)

சு.—இதுமுதற் பத்துப்பாடல்கள் - கௌசிகிநதியின் வரலாறு:— பிரமபுத்திரனான குசன் என்பவனுக்கு நான்குபுதல்வ ரெனல்.

சுரர்தொழு திறைஞ்சற் கொத்த தூநதியாவ தென்று
வர[1]முனி தன்னை யண்ணல் வினவுற மலருள் வைகும்
பிரமன் றளித்த வென்றிப் பெருந்தகைக் குசனென் றோது
மரசர்கோன் [2]மனைவி தன்பா லளித்தவர் நால்வ ராகும்.

(இ - ள்.) சுரர் தொழுது இறைஞ்சற்கு ஒத்த - தேவர்கள் வணங்கித் துதித்தற்குத் தக்க, தூ நதி - பரிசுத்தியையுடைய இந்த நதி, யாவது என்று - எத்தன்மையதென்று, வர முனிதன்னை - சிறந்த முனிவனாகிய விசுவாமித்திரனை, அண்ணல் - சக்கரவர்த்திதிருமகன், வினவுற - கேட்க, (அம்முனிவன் கூறுவான்):—மலருள் வைகும் பிரமன் - (திருமாலினது திருவுந்தித்) தாமரைமலரில் தோன்றிய பிரமதேவன், அன்று அளித்த - ஆதி காலத்திற் பெற்ற, வென்றி பெரு தகை - வெற்றியையும் பெருமைக்குணத்

லதயுமுடைய, குசன் என்று ஓதும் அரசர் கோன் - குசனென்று பெயர் சொல்லப்படுகிற அரசர்களுக்கு அரசன், மனைவிதன்பால் - (தனது) தரும பத்தினியினிடத்தில், அளித்தவர் - பெற்றபிள்ளைகள், நால்வர் - நாலுபேரா வர்; (எ - று.)—இக்கவியில் 'வினவுற' என்னும் வினையெச்சம், மேற் பதினைந்தாங்கவியில் "என்று அம்முனி புகல" என்பதனோடு முடியும். ஆக்வே, பத்துப்பாடல்கள் ஒருதொடர்.

'ஆகும்' என்பது - அசை.புதல்வர்கள் இன்னரென்பதை அடுத்தபாடலினு லறிக. 'நாம் கிட்டிய நதி எது?' என்று கேட்ட இராமனுக்கு அந்தக் கௌசிகன் நதியின் வரலாறு சொல்லத்தொடங்கி, அந்நதி தன்னுடன் பிறந்தவ ளாதலால், தன்மரபைக் கூறத்தொடங்கின னென அறிக. குசன்மனைவி, வைதர்ப்பியென்பவள். வரன் முனி எனப்பிரிக்க: வரம் முனி எனப்பிரித்து, வேண்டுவார்வேண்டும்வரங்களைத் தரும் முனி யெனினும் அமையும். குசனென்பதற்கு - பூமியில்வாழ்பவனென்று பொருள்; கு- பூமி:பிரமபுத்திரனுகையால்அப்பிரமலோகத்திலேயே இருந்துவிடாமல் மனிதர்களைக்காக்கும்பொருட்டு நிலவுலகத்தில் வந்தமைபற்றிய பெய ரென்பர். பிரமன்மகனுகிய இவனை 'அரசர்கோன்' என க்ஷத்திரியனுகக்கூறினது, இராச்சியமாளுதலாகிய அரசர்தொழிலைப் பூண்டதனு லென்க. பி - ம்:— [1]நதி. [2]அளித்தமைந்தருமறையனைய நால்வர், மனைவியின்பா லளித்தவர் நால்வராவர். (௬)

எ.—குசனதுபுதல்வர்நால்வர் நாமதேயமும், அவர்கள் ஆட்சிபுரிந்த நகரும்.

குசன்குச நாபன் கோதில் குணத்தி[1]ன் னூர்த்தன் கொற்றத்
திசைகெழு வசுவென் றோது மிவர்பெய ரிவர்க [2]ட்பமிற்
குசன்கவு சாம்பி நாபன் குளிர்மகோ தயமா தூர்த்தன்
[3]வசையிறன் மவன மற்றை வசுகிரி விரசம் வாழ்ந்தார்.

(இ - ள்.) இவர் பெயர் - இவர்களது நாமம், குசன்—; குசநாபன்—; கோது இல் குணத்தின் - குற்றமில்லாத நற்குணங்களையுடைய, ஆதூர்த்தன்—; கொற்றத்து இசை கெழு - வெற்றியினுற் கீர்த்தி விளங்கிய, வசு—, என்று ஓதும்-என்று சொல்லப்படும்; இவர்கள்தம்மில்-இவர்களுள்,குசன்—, கவுசாம்பி - கௌசாம்பியென்னும் நகரத்திலும், நாபன் - குசநாபன், குளிர் மகோதயம் - (நீர்வளம்முதலியவற்றுற்) குளிர்ந்துள்ள மகோதயமென்னும் நகரத்திலும், ஆதூர்த்தன்—, வசை இல் தன்மவனம் - குற்றமில்லாததருமாரணியமென்னும் நகரத்திலும், மற்றை வசு - மற்றொருவனுகிய வசு என்பவன், கிரிவிரசம் - கிரிவிரசமென்னும் நகரத்திலும், வாழ்ந்தார் - (அரசுபுரிந்து) வாழ்ந்திருந்தார்கள்; (எ - று.)

முதனூலில் மூத்தகுமாரனது பெயர் குசாம்பனென்று கூறப்பட்டுள்ள தாதலால், இங்கே 'குசன்' என்பது - அதன் விகாரம்போலும்; இவனது சம்பந்தம்பற்றியே இவனுண்ட நகரத்துக்கு 'கௌசாம்பி' என்று பெயர் வழங்கிற்று. கவுசாம்பி=கௌசாம்பி: போலி. ஆதூர்த்தன்-ஆதூர்த்தரஜஸ் என்று வால்மீகத்திற் காணப்படுகிறது. நாபன் - முதற்குறைவிகாரம்.

தன்மவனம்-தர்மவநம்: அறம்வளருங்காடென்று பொருளாம். மகோதயம் என்பதற்கு - சிறந்தஅபிவிருத்தியையுடைய தென்றும், கிரிவ்ரஜம் என் பதற்கு - மலைகளின்கூட்டத்தையுடையதென்றும் பொருள்: ஐந்துமலைகளி னிடையிலுள்ள நகரமாதலால், கிரிவ்ரஜம்என்றுபெயர்பெற்றதென்க. நாட் டுக்குக் குற்றமாவது-மிக்கமழை, மழையின்மை, எலி, விட்டில், கிளி, அர சண்மை என்ற இவற்றால் வருவது; இவற்றை வடநூலார் ஈதிபாதையென் பர். பி - ம்:—[1] அதூர்த்தன். [2] தம்முட் குசன்கிரிவிரசு நாபன். [3] இசைகெழு மாண்பின்வந்த வசுவதி வசுவுக்கேய்ந்த. (எ)

அ, கூ.—இதுவும் அடுத்த கவியும் - குளகம்: குசநாபன்மகளிர்களை வாயுதேவன் காதலிக்க, அவர்கள் தந்தையின் அநுமதியின்றி உடன்படோ மென்ன, வாயுதேவன் அவர்கள்முதுகை யொடித்தல்.

அ. [1] அவர்களிற் குசநா பற்கே யையிரு [2] பதின்ம ரஞ்சொற்
றுவரிதழ்த் தெரிவை நல்லார் தோன்றினர் வளரு நாளி
லிவர்பொழிற் றலைக்க ணாயத் [3] தெய்துழி வாயு வெய்திக்
கவர்மனத் தனனா யந்தக் கன்னியர் தம்மை நோக்கி.

கூ. கொடித்தனி மகரங் [1] கொண்டோன் குனிசிலைச் சரத்தா னொந்தே
வடித்தடங் கண்ணீ [2] ரென்னை மணத்திரென் றுரைப்ப வெந்தை [ன்
யடித்தலத் துரைத்து நீரோ டளித்திடி னன்றது [3] மென்ன
வொடித்தனன் வெரிநை வீழ்ந்தா ரொளி[4] வளை மகளி ரெல்லாம்.

(இ - ள்.) (அ) அவர்களில் - அவர்களுள், குசநாபற்கு - குசநாபனென் பவனுக்கு, அம் சொல்-அழகிய சொற்களையும், துவர் இதழ் பவழம்போன்ற (சிவந்த) அதரத்தையுமுடைய, தெரிவை நல்லார் - நற்குணமுடைய பெண் கள், ஐ இருபதின்மர் - நூறுபேர், தோன்றினர்-பிறந்து, வளரும் நாளில் - வளர்ந்துவருகிறகாலத்தில் ஒருநாள், இவர் - இப்பெண்களெல்லாரும், பொ ழில் தலைக்கண் - ஒரு சோலையினிடத்திலே, ஆயத்து - தோழிமார்கூட் டத்துடனே, எய்து உழி - (பூக்கொய்துவிளையாடுதற்குப்) போய்ச்சேர்ந்த பொழுதில், வாயு - வாயுதேவன், எய்தி - (அங்கு) வந்து, கவர் மனத்தனன் ஆய்-(அவர்களால்) இழுக்கப்பட்ட மனத்தையுடையவனாய், அந்த கன்னியர் தம்மை நோக்கி-கலியாணமாகாத அந்தஇளம்பெண்களைப்பார்த்து, (கூ)வடி தட கண்ணீர் - மாவடுவின் பிளவையொத்த பெரியகண்களையுடைய பெண் களே! (யான்),கொடி தனி மகரம் கொண்டோன்-(தனது)துவசத்திலே ஒப் பில்லாத சுறாமீனினது வடிவத்தைக்கொண்டுள்ளமன்மதனது, குனி சிலை- வளைந்த (கருப்பு) வில்லினாலெய்யப்பட்ட, சரத்தால் - மலரம்புகளினால், நொந்தேன் - வருந்தினேன்; (ஆதலால்), என்னை—, மணத்திர் - (நீங்கள்) கலியாணஞ்செய்துகொள்ளுங்கள்,' என்று உரைப்ப-என்று (வாயுபகவான்) சொல்ல,—(அந்தப்பெண்கள் அதற்குஉடன்படாமல்),'எந்தைஅடித்தலத்து உரைத்து - எமது தந்தையினது திருவடிகளில் (இக்கருத்தைவெளியிட் டுச்) சொல்லி, (அதன்பின் அவர் அதற்கு உடன்பட்டு); நீரோடு அளித்தி

டின் - ஜலத்துடனே (தாரைவார்த்து உனக்கு எங்களைக் கலியாணஞ்செய்து) கொடுத்தால், அணைதும் - (பின்பு நாங்கள் உன்னைக்) கூடுவோம்', என்ன - என்றுசொல்ல, (அதுகேட்டுக் கோபித்து வாயுதேவன்), வெரிநை ஒடித்தனன் - (அவர்களுடைய) முதுகுகளை (த் தனது ஆற்றலால்) கூனும்படி ஒடித்தான்; (அதனால்), ஒளி வளை மகளிர் எல்லாம் - ஒளியையுடைய வளையல்களை யணிந்த பெண்கள் யாவரும், வீழ்ந்தார் - (உடனே) கீழே விழுந்தார்கள்; (எ - று.)

குசநாபனென்பவனுக்குக் கட்டழகுடைய நூறுமகளிர்தோன்றிப் பருவம்வாய்த்துத் தோழிமாருடன் பூஞ்சோலையிற் சென்றன ராக,வாயுதேவன் அவர்களின் கட்டழுகுகண்டு காமுற்றுத் தன்னை மணக்குமாறு அவர்களை வேண்ட, அம்மகளிர் 'யாம் தந்தைக்குப்பராதீனராகையால் அவர் கன்னிகாதானஞ் செய்துதந்தால் மணப்போம்' என்ன, வாயுதேவன் தன்வேண்டுகோட்கு அம்மகளிர் இணங்காததுபற்றிச் சினந்து அவர்களது சரீரத்திற் புகுந்து முதுகை முறித்துக் கூனிக ளாக்கின னென்பதாம்.

அ:—குபநாபனது மனைவி கிருதாசியென்னும் அப்ஸரஸ் ஸ்திரீயாவள். தெரிவைநல்லார்-நல்தெரிவையார் என மாறுக. தோன்றினர்-முற்றெச்சம். நல்லார் தோன்றினர் வளருநாளில் பொழிலின்கண் எய்துழி என முடியுமிடத்து, 'இவர்' என வேண்டாமையின், அது மகளிரைச்சுட்டாமல், அங்ஙனம் அழகியவர் இங்ஙனம் வெரிந்ஒடிந்துவீழ்ந்தார் என நூலாசிரியரது இரக்கத்தைத்தெரிவிக்குமாறு பின்னிற்கவியைநோக்கித்தகுதிபற்றிவந்தது. இனி,இவர் பொழில்-மிகவிரும்பப்படும் பொழில் என வினைத்தொகையாகவுமாம். தலை-தலம் என்பதன் விகாரம். அந்தம் எனப்பிரித்து, அழகியவென்றுமாம். 'கன்னியர்தம்மைநோக்கி' என்பது மத்திமதீபம். பி-ம்:— [1]அவர்களுள். [2]பத்தின். [3]எய்துபு.

கூ:—அவர்களுடைய கண்ணழகிலே தான் ஈடுபட்டதனைத் தெரிவித்தற்கு, 'வடித்தடங்கண்ணீர்' என விளித்தான். வடி - வடு; மாவின் இளங்காய்: அதன் உட்பிளவு, வடிவத்தால் உவமை; "வடித்தலைக் கண்" என்றார் சிந்தாமணியாரும். இனி, வடி என்பதற்கு - வடிக்கப்பட்ட அம்பு, அல்லது வேல், அல்லது வாள் எனக்கொண்டு, அதுபோன்ற கண் என்றுமாம்; கூர்மைக்கும், ஆடவரை வருத்துதற்கும் உவமை: வடித்தல் - நெருப்பில்வைத்துக்காய்ச்சியடித்து அராவி வேலைசெய்து கூராக்குதல். 'அடித்தலத்து' என்றது, பிதாவினிடத்துத் தங்களுக்கு உள்ள பக்தி தோன்ற. 'எந்தையடித்தலத்துரைத்து நீரோடளித்திடி னணைதும்' என்றதனால், பெண்களது சுவாதந்திரியமின்மை வெளியிடப்பட்டது. பி-ம்:— [1]கொண்டான். [2]இன்றே. [3]என்றார். [4]வளையார்களெல்லாம். (கூ)

**க0.—அம்மகளிர் தந்தைக்குச்செய்தி தெரிவிக்க, குசநாபன் அவர்களைப் பிரமதத்த னென்பவனுக்கு மணஞ்செய்து தருதல்.**

சமிரண னகன்ற பின்னர் தையலார் தவழ்ந்து சென்றே
யமிர்துகு குதலை மாழ்கி யரசன்மாட் டுரைப்ப வன்னு

நிமிர்குழன் [1]மடவார்த் தேற்றி நிறைதவன் [2]சூளி நல்குந்
திமிரறு பிரம தத்தற் களித்தனன் றிருவ னுரை.

(இ - ள்.) சமீரணன் - வாயு, அகன்ற பின்னர் - (இங்ஙனஞ்செய்து விட்டுப்) போனபின்பு, தையலார் - அழகையுடைய அம்மகளிர், தவழ்ந்து சென்றனர் - (நடக்கமாட்டாமல்) நகர்ந்துகொண்டே போய், அமிர்து உகு குதலை - அமிருதத்தினது இனிமை பெருகுகின்ற மழலைச்சொற்களால், மாழ்கி - வாய்குழறி, அரசன்மாட்டு உரைப்ப - குசநாபனிடம் (நிகழ்ந்த செய்தியைச்) சொல்ல,—அன்னான் - அவ்வரசன்,—நிமிர் குழல் மடவார் தேற்றி- வளர்ந்த கூந்தலையுடைய அவ்விளம்பெண்களை (த் தன் வார்த்தையால்) தேறுதல்செய்து, நிறை தவன் சூளி நல்கும் - நிறைந்த தவத்தையுடைய வனாகிய சூளியென்னும் முனிவன் பெற்ற, திமிர் அறு பிரமதத்தற்கு - (அஜ்ஞான) இருள் நீங்கிய பிரமதத்தனென்னும் அரசனுக்கு, திரு அனையார் - இலக்குமியையொத்த அப்பெண்களை, அளித்தனன் - (கலியாணஞ்செய்து) கொடுத்தான்; (எ - று.)

குசநாபனதுமகளிர் நூற்றுவரும் தந்தையிடஞ்சார்ந்து செய்தி தெரிவிக்க, தந்தை தன்மகளிர் வாயுதேவனைச் சபித்துவிடாமற் பொறுமையுடன் இருந்ததற்கு மனமுவந்து அவர்களைக் கொண்டாடியனுப்பிவிட்டு, மந்திரிமாரோடு ஆலோசித்து, சூளியென்னும் முனிவனது புத்திரனான பிரமதத்தனென்பவனுக்கு அவர்களைக் கன்னிகாதானஞ் செய்தனனென்பதாம். சூளியென்னும் மகாமுனிவன் பிரமசாரியாய்த் தவஞ்செய்து வருகையில் ஊர்மிளையென்பவளது மகளாகிய சோமதையென்னுங் கந்தருவகன்னிகை அவனை வழிபட்டு அவனது அருளைப்பெற்றுத் தனக்கு நல்ல புதல்வனொருவனை அளிக்கவேண்டுமென வேண்ட, முனிவன் அவளுக்கு ஒருமகன் உதிக்கும்படி திருவுள்ளம்பற்றினான்; அவனது தவமகிமையால் உண்டானமைபற்றி, அக்குமாரனுக்குப் பிரமதத்தனென்று பெயர்: (பிரமம் - தவப்பெருமையால், தத்தன்-கொடுக்கப்பட்டவன் என்று பொருள்:) இவன்,சூளியின் மாநஸபுத்திர னென்று அறிக. இவனதுதாய் க்ஷத்ரியஸ்திரீயாதலால், இவன் அரசனாய்க் காம்பிலியாநகரத்தை ஆண்டுவந்தான். சமீரணன் - ஸமீரணன் என்னும் வடமொழியின் விகாரம்; நன்றாகச்சஞ்சரிக்குந்தன்மையுடையவன் என்றுபொருள். 'அமிர்துகுகுதலை' என்றது - தேவாமிருதம் நாவுக்கு இனிமைதருவதுபோலச் செவிக்கு இனிமைதரும் நிரம்பாமென்சொல்லை. திமிர்-திமிரம் என்பதன்விகாரம்.கன்னியர்க்குத் திருமகளுவமம்- அழகிற்கும், செல்வத்திற்கும், நல்வினையுடையோனிடத்துச் சென்றுசேருமளவும் பொதுவாயிருத்தற்கு மென்க. பி - ம்:—[1]மாதர். [2]அருளை. (௬௦)

௧௧.—குசநாபனுக்குக் காதியென்பவன் பிறத்தல்.

அவன்மலர்க் கைக ளிண்டக் கூனிமிர்ந் தழகு [1]வாய்த்தார்
புவனமுற் றுடைய கோவும் புதல்வரில் லாமை வேள்வி
தவர்களிற் புரித லோடுந் [2]தகையுறத் தழலி னுப்பட்
கவனமே கத்து ரங்கக் காதிவந் துதயஞ் செய்தான்.

(இ - ள்.) அவன் - அந்தப்பிரமதத்தன், மலர் கைகள் - (அப்பெண்களின்) செந்தாமரைமலர்போலுங் கைகளை, தீண்ட - தொட்டமாத்திரத்தில், (அப்பெண்கள் யாவரும்), கூன் நிமிர்ந்து - (தங்கள்தங்கள்) முதுகு வளைவு ஒழிந்து (நேராகி), அழகு வாய்த்தார் - அழகுபெற்றார்கள்; (இது நிற்க); புவனம் முற்று உடைய கோஉம் - பூமிமுழுவதையும் (தனது ஆளுகையில்) உடைய குசநாபனென்னும் அரசனும், புதல்வர் இல்லாமை - (தனக்குப்) புத்திரரில்லாமையால், வேள்வி - புத்திரகாமயாக மொன்றை, தவர்களின் - முனிவர்களைக்கொண்டு, புரிதலோடும் - செய்தவளவில், தகை உற - அழகுபொருந்த, தழலின் நாப்பண் - (அந்த) யாகாக்கினியின் மத்தியில், கவனம் வேகம் துரங்கம் காதி - நடையிலே விரைவையுடைய குதிரைச்சேனையையுடைய காதியென்பவன், வந்து உதயம் செய்தான் - வந்து பிறந்தான்; (எ - று.)

பிரமதத்தன் அவர்களைக் கையாற்றீண்டும் பொழுதே அம்மகளிரனைவரும் தமதுகூன் நீங்கப்பெற்று முன்போல் மகாரூபவதிகளாய் விளங்க, அதுகண்ட குசநாபன் மிகவும் மகிழ்ந்து பிரமதத்தனை மனைவியர்முதலியோரோடும் காம்பிலியாநகரத்துக்கு அனுப்பிவிட்டுப் புத்திரனில்லாக் குறையைப் போக்கிக்கொள்ளும் பொருட்டுப் புத்திரகாமயாகஞ்செய்ய அக்கினியினின்று காதி தோன்றின னென்பதாம். காதியினது தேஜஸைக் குறிப்பிக்கும்பொருட்டு, 'காதி வந்து உதயஞ்செய்தான்' என்றார். குசநாபன் யாகஞ்செய்கையில் அவனது தந்தையாகிய குசன் வந்து 'உனக்குக்காதியென்று ஒருபுத்திரன்பிறந்து குலத்தைவிளங்கச்செய்வான்' என்று சொல்லிவிட்டு ஆகாசமார்க்கமாய்ப் பிரமலோகஞ் சென்றானாக, பின்பு கிருதாசியென்ற மனைவியினிடம் காதி பிறந்ததாக ஸ்ரீராமாயணத்திற் கூறப்பட்டுள்ளது. [2]தகைவற என்ற பாடத்துக்கு - (அரசன்) மனவருத்தம் ஒழிய என்று பொருள். அவன் மலர்க்கைகள் தீண்ட-அந்தப்பிரமதத்தனது தாமரைமலர் போலுங் கைகள் பட்டமாத்திரத்தில் என்றுமாம். 'புவனமுற்றுடைய கோவும் புதல்வரில்லாமை' என்ற சேர்த்தியால், உலகையாளுதற்குப் புத்திரரைப்பெற விரும்புவானாயினா னென்க. கவனம் - கமநம்: வடமொழி. கவனவேகம் - பலவகைநடைகளையும் விரைவையு முடைய எனவுமாம்.
பி - ம்:—[1]வாய்ந்தார். [2]தகவுற. (கக)

கஉ.—காதியேன்பவனுக்குத் தானும் கௌசிகியேன்பவளும் பிறந்தமை.

அன்னவன் றனக்கு வேந்த னரசொடு முடியு மீந்து
பொன்னக ரடைந்த பின்னர்ப் புகழ்[1]மகோ தயத்தில் வாழு
மன்னவன் காதிக்கி யானுங் [2]கவுசிகி யென்னு மாது
முன்னர்வந் துதிப்ப வந்த முடியுடை வேந்தர் வேந்தன்.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) அன்னவன்தனக்கு - அந்தக் காதியென்னும் புத்திரனுக்கு, வேந்தன் - குசநாபனென்னும் அரசன், அரசொடு முடிஉம் ஈந்து - இராச்சியத்தையும் (அதனை ஆளுகைக்குச்சூசகமான) கிரீடத்தையுங் கொடுத்து [பட்

டாபிஷேகஞ்செய்துவிட்டு],பொன் நகர் அடைந்த பின்னர்-பொன்மயமான சுவர்க்கலோகத்தை (இறந்து) அடைந்தபின்பு, புகழ் மகோதயத்தில் வாழும் மன்னவன் காதிக்கு - (யாவராலும்) புகழப்படுகிற மகோதயநகரத்தில் வாழ்கிற அரசனாகிய அந்தக்காதியென்பவனுக்கு, யான்உம் - நானும், முன்னர் - (எனக்கு) முன்னே, கவுசிகி என்னும் மாதுஉம் - கௌசிகியென்கிற பெண்ணும், வந்து உதிப்ப - வந்து பிறக்க, அந்த முடி உடை வேந்தர் வேந்தன் - கிரீடத்தையுடைய அரசர்களுக்கு அரசனாகிய அந்தக் காதியென்பவன்,—(எ - று)—'ஈந்தான்' என மேற்கவியோடு இயையும்.

குசநாபன் தன்மகனாகியகாதிக்கு முடிசூட்டிச் சுவர்க்கம்புக்கனனாக, அந்தக்காதிக்குக் கௌசிகியென்பவளும் யானும் தோன்றினோ மென்று விசுவாமித்திரன் கூறுகின்றன னென்க. முடியென்ற சிரசின் பெயர்-அதிலணியுங் கிரீடத்துக்கு இடவாகுபெயர்; கவுசிகி-முதற்போலி: இது-கௌசிகன் என்பதன் பெண்பால்; இதற்கு - குசனதுமரபிற்பிறந்தவளென்று பொருள்; இவளது இயற்பெயர், சத்தியவதியென்பது. பி - ம்:—[1]கவுசாம்பி. [2]கௌசிகி, கௌசிகை. (கஉ)

கங.—கௌசிகியைக் காதி பிருகுவின்புத்திரனை ரிசீகனுக்குமணஞ் செய்விக்க, அவன் இல்லறத்துச் சிலநாளிருந்து பிரமலோகஞ் சேர்தல்.

பிருகுவின் மதலை யாய பெருந்தகைப் பிதாவு மொவ்வா
[1]விரிசிக னென்ப வற்கு [2]மெல்லிய லாளை யீந்தா
னருமறை யவனுஞ் சின்னா ளறம்பொரு ளின்ப முற்றி
விரிமலர்த் தவிசோன் றன்பால் விழுத்தவம் [3]புரிந்து [4]மீண்டான்.

(இ - ள்.) பிருகுவின் மதலை ஆய-பிருகுமகாரிஷியினது புத்திரனை, பெருந்தகை பிதாஉம் ஒவ்வா - பெருந்தன்மையுடைய (தனது) தந்தையாகிய அப்பிருகுவும் (தனக்குத் தவவொழுக்கத்தில்) ஒப்பாகப்பெறாத, இரிசிகன் என்பவற்கு - ரிசீகன் என்னும் முனிவனுக்கு, மெல் இயலாளை-மென்மையான தன்மையையுடைய கௌசிகியை, ஈந்தான் - (என்தந்தை) விவாகஞ்செய்துதந்தான்; அரு மறையவன்உம்-(அறிதற்கு) அருமையான வேதங்களை யுணர்ந்த அந்த ரிசீகனும், சில் நாள் - சிலகாலம், அறம் பொருள் இன்பம் முற்றி - தரும அர்த்த காம மென்னும் மூன்றுபுருஷார்த்தங்களையுஞ் செய்துமுடித்து [சமுசாரத்தில்இருந்து],(பின்பு), விழு தவம் புரிந்து-மேன்மையான தவத்தைச் செய்து, விரி மலர் தவிசோன் தன் பால் - மலர்ந்த தாமரைமலரை ஆசனமாகவுடையபிரமதேவனிடத்தில்[பிரமலோகத்திற்கு], மீண்டான் - (அவனருளாற்) செல்வானானான்; (எ - று.)

பெருந்தகை - மகிமை. மேற்பட்டசாதியிற் பிறந்த ஆடவர் கீழ்ப்பட்ட சாதியிற்பிறந்த மகளிரை மணம்புணர்தல் வழுவன்றாதலால்,பிராமணகுமாரனான ரிசீகன் க்ஷத்திரியபுத்திரியான கௌசிகியை மணந்தான். இரிசிகன் - ரகரத்திற்கு இகரம் மொழிமுதலாகிமுன்வந்தது. பி - ம்:—[1]இருசிகன். [2]மாதையீந்தன னனலந்த. [3]செய்து. [4]போனான். (கங)

**௧௪.—கௌசிகி நதியாகிக் கணவனைத் தொடர, ரிசீகன் உலகத்தார் துன்பம்நீங்கப் பூமியில்நதியாய்ச் செல்லப் பணித்துச் செல்லுதல்.**

காதலன் [1]சேணி னீங்கக் கவுசிகி தரிக்க லாற்றாண்
மீதுறப் படரா லுற்றாள் விழுநதி வடிவ மாகி
மாதவர்க் கரசு நோக்கி மாநிலத் துறுக [2]ணீக்கப்
[3]போதுக நதியா யென்னாப் பூமக [4]னுலகு புக்கான்.

(இ - ள்.) காதலன் - (தனது) கணவனாகிய ரிசீகன், சேணில் நீங்க - (தன்னைவிட்டு) ஆகாசமார்க்கத்திலே செல்ல, கவுசிகி - கௌசிகியானவள், தரிக்கல் ஆற்றாள் - (அக்கொழுநனது பிரிவைப்) பொறுக்கமாட்டாதவளாய், விழு நதி வடிவம் ஆகி - சிறந்ததொரு நதியினது ரூபமாய், மீது உற படரல் உற்றாள் - ஆகாயத்திலே பொருந்த (அவனைவிடாமல்தொடர்ந்து பின்) செல்லத் தொடங்கினாள்; (தொடங்கவே), மா தவர்க்கு அரசு - மிக்க தவத்தையுடைய முனிவர்களுக்குத் தலைவனாகிய ரிசீகன், நோக்கி - (அதனைப்) பார்த்து, 'மா நிலத்து உறுகண் நீக்க - பெரிய நிலவுலகத்திலுள்ள ஜனங்களது (பிறவித்) துன்பங்களை (உன்னிடத்து மூழ்கியதனால்) ஒழிக்கும்பொருட்டு, நதி ஆய் - இந்த ஆற்றின்வடிவமாகவே, போதுக - (பூலோகத்திற்) செல்வாயாக,' என்னா - என்று (அவளுக்கு) நியமித்துவிட்டு, பூமகன் உலகு புக்கான் - (திருமாலின் நாபித்) தாமரைமலரில் தோன்றிய குமாரனான பிரமனது லோகத்திற் சென்றுசேர்ந்தான்; (எ - று.)

கௌசிகி தன்கணவனாகிய ரிசீகமுனியை நன்குவழிபட்டு அம்மகிமையாற் சரீரத்துடன் சுவர்க்கஞ்சேர்ந்து, உலகத்தார்க்கு இம்மைமறுமைப் பயன்களையளிக்கும் பொருட்டு அந்தச் சுவர்க்கத்திலிருந்து மீண்டு இமயமலையினருகிலே நதியாகிப் பெருக, நான் அவளிடத்துள்ள உடன்பிறந்த நண்பினால் அம்மலைச்சாரலில்தானே இனிது வசிப்பவனாகி இப்போதுவேள்விக்காகச் சித்தச்சிரமத்துக்கு வந்துள்ளே னெனக் கூறி விசுவாமித்திரன் கதையைமுடிக்க, பிறகு யாவருந் துயின்றன ரென்று முதனூலால் அறிக. நிலத்து உறுகண்நீக்க என்பதற்கு - இரட்டுறமொழிதலால், பூமியின் (வளமின்மையாகிய)வருத்தத்தை (நீர்ப்பெருக்கத்தால்)ஒழிக்க என்றும் பொருள் கொள்க. [3]போதுகோமதியாய் எனப் பாடமோதி, கௌசிகை கோமதிஎன்னும் இரண்டுபெயரும் ஒருநதியையே குறிக்குமென உரைப்பாரு முளர்.

பி-ம்:—[1]சேணு. [2]நீக்கிப் போதுகபதிநீ. [4]உலகம். (௧௪)

**௧௫.—நதியின் செய்திகேட்டு மகிழ்ந்து சிறிதுநடந்தபின் அங்குத்தோன்றிய சோலையை இராமன் வினவுதல்.**

எம்முனா ணங்கை யிந்த விருநதி யாயி னாளென்
றம்முனி புகலக் கேளா வதிசய மிகவுந் தோன்றச்
செம்மனு மிளைய கோவுஞ் சிறிதிடந் தீர்ந்த பின்னர்
மைம்மலி பொழில்யா தென்ன மாதவன் கூற லுற்றான்.

(இ - ள்.) எம் முனாள் - எமக்கு முன்பிறந்தவளாகிய, நங்கை - பெண்களிற்சிறந்த அக் கௌசிகியென்பவள், இந்த இரு நதி ஆயினாள் - (தன்

கணவன் கட்டளைப்படியே பூலோகத்தில்) இந்தப் பெரிய ஆற்றின் வடிவமானள், என்று—, அ முனி - அந்தவிசுவாமித்திரன், புகல - சொல்ல, கேளா - கேட்டு, அதிசயம் மிகஉம் தோன்ற - மிகவும் (மனத்தில்) வியப்பு உண்டாக, செம்மல்உம் - நன்மைக்குணமுடையஸ்ரீராமனும், இளய கோஉம் - இளையபெருமாளும், சிறிது இடம் நீந்த பின்னர் - கொஞ்சத்தூரங்கடந்தபிறகு,— (ஒருசோலையைக்கண்டு), மை மலி பொழில் யாது என்ன - (உயர்ச்சிமிகுதியால்) மேகங்கள் படிகின்ற இச்சோலை யாரது என்று (ஸ்ரீராமன்) கேட்க,—மா தவன் - மிகுந்த தவத்தையுடைய விசுவாமித்திரன், கூறல்உற்றான் - உத்தரஞ்சொல்லத் தொடங்கினான்; (எ - று.)— அது மேல் இருபத்துநான்கு கவிகளிற் காண்க.

மேகத்துக்குஞ் சோலைக்குஞ் சம்பந்தமில்லாதிருக்கவுஞ் சம்பந்தத்தைக்கற்பித்துக் கூறியது, தொடர்புயர்வுநவிற்சியணி. இனி, மைம் மலி பொழில் - கருநிறம் பொருந்திய சோலை யென்றும், (அடர்த்தியால்) இருள் நிரம்பிய சோலை யென்று மாம். (கஉ)

கக. விசுவாமித்திரன் அச்சோலையின் தன்மை கூறுவானாய் மகாபலிசரித்திரத்தையும், வாமனாவதாரவிருத்தாந்தத்தையும் இது முதல் இருபத்துமூன்று கவிகளாற் கூறலுறுகின்றான்.

அச்சோலையின்சிறப்பு.

தங்கணா யகரிற் 'றெய்வந் தவம் பிறி 'திலவென் றெண்ணு
மங்கைமார் சிந்தை போலத் தூயது மற்றுங் கேளா
யெங்கணான் மறைக்குந் தேவ ரறிவிற்கும் பிறர்க்கு மெட்டாச்
செங்கண்மா லிருந்து மேனாட் செய்தவஞ் செய்த தன்றே.

(இ - ள்.) (இச்சோலை), 'தங்கள்-தங்களுக்கு, நாயகரின்-கணவரைப் பார்க்கிலும், தெய்வம்-கடவுளும், தவம்-தவமும்,பிறிது இல்-வேறு இல்லை', என்று எண்ணும் - என்று நினைக்கிற, மங்கைமார் - பதிவிரதைகளாகிய பெண்களது, சிந்தை போல - மனம்போல, தூயது - பரிசுத்தியையுடையது; மற்றும் கேளாய்-இன்னும் (இதன் தன்மையைக்) கேட்பாயாக; நால் மறைக்கும் - நான்குவேதங்களுக்கும், தேவர் அறிவிற்குஉம் - தேவர்களது புத்திக்கும், பிறர்க்குஉம்-மற்றை முனிவர் முதலியோர்க்கும், எட்டா-சொரும்பறியவொண்ணாத, எங்கள் செம்கண்மால் - சிவந்ததிருக்கண்களையுடைய எங்கள் திருமால், மேல்நாள்-முன் னொருகாலத்தில், இருந்து-வசித்து, செய் தவம் செய்தது - செய்தற்கு உரிய தவத்தைச் செய்யப்பெற்ற இடமாம்.

இது, திருமால் தங்கியிருந்து தவஞ்செய்த பெருமையையுடைய இடமென்றவாறு. மகளிர்க்குத் தங்கள் நாயகரைவிடத் தெய்வமும் தவமும் பிறிதிலஎன்பதனை "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப்பெய்யு மழை,""குலமகட்குத்தெய்வங்கொழுநனே மன்ற"எனபவற்றாலும் அறிக. தெய்வம்-தைவமென்னும் வடமொழித் திரிபு. பிறிதில-ஒருமைப்பன்மைமயக்கம். சோலைக்குத் தூய்மை - பழிபாவங்களுக்கு இடமாகா

மையும், தவச்சித்திக்கு உரிய தானமாதலும்;இது பற்றியே இது'சித்தாச்சிரமம்' எனப்படும்.'மற்றுங்கேளாய்'என்றது,இராமனை நோக்கி முனிவன் கூறியது.'எங்கள்' எனப் பன்மையாக்கூறியது, மற்றை முனிவர்களையும் உளப்படுத்தி. எங்கள் செங்கண்மால் என்றதனால் விசுவாமித்திரனது விஷ்ணுபக்தி வெளியாகின்றது. 'நங்கள்' என்னுமல்'எங்கள்' எனப்படர்க்கையுளப்பாட்டுத் தன்மையாற்கூறியது ஸ்ரீராமபிரான் அத்திருமாலினது திருவவதாரமென்பதுபற்றியாகும் 'எங்கள் நான்மறை யென்றும் எங்களறிவிற்கும் என்றும் இயைக்கலுமாம். இரண்டாமடி - உவமையணி. பி - ம்:—[1]தெய்வந்தான். [2]இலையென்றெண்ணும், இல்லையென்னும். (கசு)

### கஎ.—பலநாள் திருமால் தவஞ்செய்தல்.

பாரின்பால் விசும்பின் பாலும் [1]பற்றறப் படிப்ப தன்னான்
பேரென்பா னவன்செய் மாயப் பெரும்பிணக் கொருங்குதேர்வா
ராரென்பா னமல மூர்த்தி கருதிய தறித றேற்றோ
மீரைம்பா னூழிக் கால மிருந்தவ மியற்றி யிட்டான்.

(இ - ள்.) பாரின்பால் - பூலோகத்திலும், விசும்பின்பால் உம் - தேவலோகத்திலும், (உள்ளவர்கள்), பற்று அற - (தம்தமது சமுசாரபாச) பந்தம் ஒழியும்பொருட்டு, படிப்பது - உச்சரிப்பது, அன்னான் பேர் - அவனது திரு நாமத்தையே, என்பான் - என்றுசொல்லப்படுபவனும், அவன் செய் - அவன் செய்கின்ற, மாயம் - மாயையினாலாகிய, பெரு பிணக்கு - பெரிய மாறுபாட்டை, ஒருங்கு - முழுவதும், தேர்வார்-அறிபவர், ஆர் - யாவருளர், [எவருமில்லை], என்பான்-என்று சொல்லப்படுபவனுமாகிய, அமல மூர்த்தி - பரிசுத்தமான திருவுருவத்தையுடைய அத்திருமால், கருதியது - (திருவுள்ளத்தில்) எண்ணிய பயனை, அறிதல் தேற்றோம் - (நாம்) அறிந்துதெளிகிறோமில்லை; (அவன் இங்கு எழுந்தருளி), ஈர் ஐம்பான் ஊழி காலம் - நூறுஊழியவ்வளவுகாலம், இருதவம்இயற்றியிட்டான் - பெரியதவத்தைச் செய்தான்.

ஸ்ரீமந்திருமால் தவஞ் செய்தானென்றதை,இந்தக்கவியினால் விரித்துக் கூறுகின்றனர். எங்குந் தன்பெயர் யாவராலுஞ்சொல்லப்படுமாறு உள்ள திருமால் என்னபயன் கருதியோ!நெடுங்காலந் தவஞ் செய்திட்டனனென்பதாம். திருமால் தவஞ்செய்யப் பயனாகக் கருதியது-தவஞ்செய்யும்நிலைமை இன்னதென்பதை உலகத்தார் யாவருக்குந் தெரிவிக்கவேண்டு மென்பதுபோலும் ; குருசிஷ்யக்கிரமத்தை உலகத்தார்க்குப் புலப்படுத்தும்பொருட்டுப் பதரிகாச்சிரமத்தில் தானே நாராயணனென்னுங்குருவின் வடிவமும் நரனென்னும் சிஷ்யனதுவடிவமு மாகி நின்றதுபோல. "எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயிற், பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்" என்னுந் தொல்காப்பியச்சூத்திரவிதியினால், 'பாரின்பால்' என உம்மையில்லாதசொல் முன்னும், 'விசும்பின்பாலும்' எனஉம்மையுள்ள சொல் பின்னுமாக வைக்கப்பட்டது. மாயை - கூடாததையுங்கூட்டுவிக்குந்திறம்; அகடிதகடநாசாமர்த்தியம். 'அமலமூர்த்தி' என்பது, யாதொருகுற்றமும் இயற்கையிலே தன்னிடஞ் சேரப்பெறாதவனென்னும் பொருளோடு, தனக்குச்சரீரமாகவுள்ள சரா

சாங்களின் சம்பந்தத்தா லாகிய குற்றமுந் தொடரப்பெறுதவ னென்னுங் கருத்தையும் உடையது. ஐம்பது என்பது,'ஐம்பான்' என ஈறு கெட்டு ஆன் சாரியைபெற்றது. (கஎ)

கஅ.—அக்காலையில் மாவலி விண் மண்களை வேளவுதல்.

ஆனவ னிங்குறை கின்றவந் நாள்வா
யூனமின் ஞாலமொ டுங்கு[1]மெ யிற்று
ணேனமெ னுந்திறன் மாவலி யென்பான்
வானமும் வையமும் வௌவுதல் செய்தான்.

(இ - ள்.) ஆனவன் - அத்தன்மையனாகிய திருமால், இங்கு - இச்சோலையிலே, உறைகின்ற - (தவஞ்செய்து) வசிக்கின்ற, அ நாள்வாய் - அக்காலத்தில், ஊனம் இல் ஞாலம் ஒடுங்கும் - குறைவில்லாமல் நிறைந்த இப்பூலோகமுழுவதும் அடங்கின, எயிறு - வக்கிரதந்தத்தையுடைய, ஆண் ஏனம் எனும் - ஆண்பன்றி [வராகமூர்த்தி] என்று சொல்லத்தக்க, திறல் - வல்லமையையுடைய, மா வலி என்பான் - மகாபலியென்பவன், வானம்உம் - விண்ணுலகத்தையும், வையம்உம் - மண்ணுலகத்தையும், வௌவுதல் செய்தான் - (அதற்கு உரிய அரசர்களிடத்தினின்று தனது ஆற்றலாற்) பறித்துத் தன்வசப்படுத்தினான்; (எ - று.)

திருமால் தவஞ்செய்துகொண்டிருந்த அக்காலத்தில், மஹாபலியென்பவன் தன்வலிமையால் விண்ணையும் மண்ணையும் தன்வசமாக்கிக்கொண்டனனென்பதாம். பூமியைத் தரிப்பதில் வராகமூர்த்திக்குச் சிறிதுஞ் சிரமமில்லாததுபோல எளிதிலே உலகமுழுவதையும் ஆளும் வல்லமையுடையவனாதால், மகாபலி சக்ரவர்த்தி விண் மண் என்ற இரண்டையும் ஆண்டனன். முன்னொருகாலத்திற் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப்போன இரணியாக்கனென்னும் அசுரராசனைத் திருமால் தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளின்படி வராகரூபமாகத் திருவவதரித்துக் கொன்று பூமியைக் கோட்டாற்குத்தி எடுத்துக்கொண்டு வந்து விரித்தருளின னென்பது வரலாறு: ஒருபிரளயத்திற் சமுத்திரஜலத்தில் மூழ்கிப்போன பூமியை ஸ்ரீமகாவிஷ்ணு வராகவடிவங்கொண்டு எடுத்து வந்தனனென்னுங் கதையும் உண்டு: அன்றியும், விஷ்ணு ஆதிவராகரூபியாய்ப் பூமியின்கீழிருந்து அதனைத் தாங்கிநிற்கின்றன னென்றும் புராணங்கூறும். மாவலி - வடசொற்சிதைவு. ஊனமில் - அகண்டமான என்றபடி. பி - ம்:—[1]எயிற்றின், எயிற்றோர். (கஅ)

கக.—மகாபலி வேள்விதொடங்கி அந்தணர்க்குத் தானஞ்செய்ய உறுதிகொள்ளுதல்.

[1]செய்தவன் வானவ ருஞ்செய லாற்று
நெய்தவழ் வேள்வியை முற்றிட நின்று
ஐயமில் சிந்தைய னந்தணர் தம்பால்
வையமும் யாவும் வழங்க வலித்தான்.

(இ - ள்.) ஐயம் இல் சிந்தையன் - (தன்னை எவராயினும் வென்று விடுவரோ என்கிற) சங்கை யில்லாத மனத்தையுடையவனும், செய் தவன் - செய்த தவத்தையுடையவனுமான அந்தச்சக்கரவர்த்தி, வானவர்உம் - தேவர்களும், செயல் ஆற்ரு - செய்துமுடித்தல்கூடாத, நெய் தவழ் வேள்வியை - நெய்யை நிரம்பச்சொரிகின்றதொரு பெருயாகத்தை, முற்றிட - முடித்தற்கு, நின்ருன் - தொடங்கிநின்று, வையம்உம் - பூமியையும், யாஉம் - (கொடுத்தற்கு உரிய) மற்றை யெல்லாப் பொருள்களையும், அந்தணர்தம்பால் - பிராமணர்களிடத்து, வழங்க - தானஞ்செய்ய, வலித்தான் - நிச்சயித்தான்; (எ - று.)

மூவுலகங்களையும் வென்று புகழ்பெற்ற மாவலி அந்தத்தேவர்களின் இராச்சியத்தை மந்திரிகளின் வசம் ஒப்புவித்துத் திருமாலின் ஆராதனரூபமாகிய ஒருவேள்வியைத்தொடங்கி, அந்த வேள்வியில் பிராமணருள் வேண்டுவார்க்கு வேண்டுவன ஈவானுயினு னென்க. ஐயமில்சிந்தையன்என்பதற்கு - தேவர்மூவருள்யாவர் பரதத்துவமோ என்கிற சந்தேகமில்லாதவனென்றுமாம்; இங்ஙனம்கூறின், இவன்செய்கிறது திருமாலின் ஆராதநரூபமானதொரு யாக மென்பது பெறப்படும்.ஐயமாவது-பலதலையாய அறிவு;சந்தேகம். யாகமென்பதுதேவர்களைக்குறித்து அங்கியில் அவிசைச்சொரிவதேயாதலால், தேவசத்துருவாய் அசுரர்தலைவனுன மகாபலி வேள்வியியற்றினுனென்பதுஎவ்வாறு பொருந்து மெனின்,—இவன் செய்யும் வேள்வி இந்திரன்முதலியதேவர்களைக் குறித்ததல்லாமல் திருமாலின் ஆராதனரூபமானதாகையாற் பொருந்து மென்பர். பி - ம்:—[1]செய்தவர், செய்தவம். (கக)

உ௦.—அப்போது தேவர்கள் மாவலிகோடுமையைத் தீர்க்குமாறுவேண்ட, திருமால் உடன்படுதல்.

ஆயத றிந்தனர் வானவ ரந்நாண்
மாயனை வந்து வணங்கி யிரந்தார்
தீயவன் வெந்தொழி றீரென நின்ருர்
நாயக னும்மது செய்ய நயந்தான்.

(இ - ள்.) வானவர் - தேவர்கள், ஆயது - ஆகிய அச்செய்தியை [தான் செய்யும் வேள்வியில் மாவலி அந்தணர் கேட்பதையெல்லாங் கொடுக்கச்சித்தனுயிருத்தலை], அறிந்தனர்-அறிந்து, அ நாள் - அக்காலத்தில், வந்து- (இச்சோலைக்கு) வந்து, மாயனை - திருமாலை, வணங்கி - நமஸ்கரித்து, இரந்தார் - (தமது குறையைச்சொல்லி) யாசித்து, தீயவன் வெம் தொழில் தீர் என - 'கொடியவனுகிய பலியினது கொடுஞ்செய்கையை ஒழித்தருளுவாய்' என்று, நின்ருர் - வேண்டிநின்ருர்கள்; (நிற்கவே), நாயகன்உம் - (யாவர்க்குந்) தலைவனுகிய திருமாலும், அது செய்ய - அத்தேவர்வேண்டுகோளைச் செய்தற்கு, நயந்தான் - விரும்பினுன்; (எ - று.)

தங்களை வெருட்டியோட்டிய மாவலி வேள்விசெய்வது கண்டு அஞ்சிய தேவர்கள் அக்கினிதேவனை முன்னிட்டுக்கொண்டு பெருந்திரளாகவந்து சித்தாச்சிரமத்திலிருந்த திருமாலைக் கிட்டித் துதித்து'பலிசக்கரவர்த்தி செய்

கின்ற சிறந்த யாகம் முடியும்முன்னமே வேண்டியதை யெல்லாந் தருகின்ற அந்த மாவலியினிடஞ் சென்று 'உனது மாயாசக்தியால் உன்மேன்மையை மறைத்து வாமனனாகி எங்களுக்கு க்ஷேமமுண்டாகும்படி செய்யவேணும்' என்று வேண்ட, திருமாலும் அதற்கு உடன்பட்டன னென்று இச்செய்யுளின் கருத்தை விரித்துரைத்துக் கொள்க. மாயன் - மாயையையுடையவன். தேவர்களை ஒருபொருளாக மதியாமல் அக்கிரமமாக அவர்களோடு போர்செய்து வென்று இந்திரனது மூவுலகத்தரசாட்சியைக் கைப்பற்றியவனாதலால், மாவலி 'தீயவன்' எனப்பட்டான். அவனது வெந்தொழிலைத் தீர் என்றது-திரிலோகாதிபத்தியத்தைப் பறித்து அவனை அடக்கிவிடு என்றபடி. நாயகனும்மது-விரித்தல். அது-மகாபலிநிக்கிரகம். தன்னுடைய பக்தனுக்கு இடையூறிழைக்கத் திருவுள்ளங்கொள்ளுதல் திருவருளுடைய திருமாலுக்கு அடுக்குமோ எனில்,—தன்மக்கள்பலருக்கு இடுக்கண் இயற்றுகின்ற மற்றொருவனைத் தண்டிப்பது தந்தைக்குக் கடமையாவதுபோல, தனதுபக்தர்களாகிய இந்திரன்முதலிய தேவர்கட்குத் தீங்குசெய்த பலியைச் சிக்ஷிப்பது கடவுளுக்குக் கடமையேயா மென்க: அன்றியும், அடியவனே யாயினும் அபராதஞ்செய்தவனை ஒறுப்பது உயர்ந்தோர் முறைமையே; "தெய்வ முளதென்பார் தீய செயப்புகின், தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும் - *****இன்புதல்வர்க் கன்றே, பலகாலுஞ் சொல்வார் பயன்" என்பதன் நீதியையும் உணர்க. (௨0)

**௨க.—திருமால் வாமன னாதல்.**

கால நுனித்துணர் [1]காசிப னென்னும்
வாலறி வற்கதி திக்கொரு மகவாய்
நீல நிறத்து நெடுந்தகை வந்தோ
ராலமர் வித்தி னருங்குற ளானான்.

(இ - ள்.) (அங்ஙனம் விரும்பிய), நீலம் நிறத்து நெடு தகை - கரியதிருமேனிநிறத்தையும் பெருமைக்குணங்களையுமுடைய திருமால், (உடனே), காலம் நுனித்து உணர்-முக்காலத்துவிஷயங்களையும் சூட்சுமமாக ஆராய்ந்தறிகின்ற,காசிபன் என்னும்-காசியபனென்கிற,வால் அறிவற்கு-(சுத்தமான) தத்துவஞானத்தையுடையமுனிவனுக்கும்,அதிதிக்கு-(அவரதுமனைவியான) அதிதிதேவிக்கும், ஒரு மகவு ஆய் வந்து - ஒருகுமாரனாய்த்திருவவதரித்து, ஓர் ஆல் அமர் வித்தின் - (பெரிய) ஆல மரமுழுவதும் உள்ளேயடங்கியிருக்கப்பெற்ற (சிறிய) அதன்விதையொன்றுபோல, அரு குறள் ஆனான் - அரிய வாமனவடிவமானான்; (எ - று.)

காசியபமகாமுனிவன் தனதுபத்தினியாகிய அதிதிதேவியோடுகூடி தேவமானத்தால் ஆயிரமாண்டு திருமாலைக்குறித்து நடத்திவந்த விரதத்தை முடித்து, தனக்கு வரந்தருமாறு கண்கூடாகவந்துநின்ற திருமாலைத் துதித்து, 'அசுரர்களையடக்கும்பொருட்டு எனக்கு அதிதிதேவியினிடம் புதல்வனாகப்பிறந்து உபேந்திரனாகி, வருந்துகின்ற தேவர்களின் இடரைப் போக்கவேணும்' என்று வரம்வேண்ட, திருமாலும் அவ்வேண்டுகோட்கு இரங்கி

அங்ஙனமே பிறந்து வாமனனாயினா னென்று கருத்தை விரித்துரைக்க. இங்ஙனம்காசியபமுனிவன் ஆயிரம்வருடம்விரதத்தைமேற்கொண்டுசித்திபெற்ற அவ்விடம் திருமாலின்அநுக்கிரகத்தாற் சித்தாச்சிரமமென்றுபேர்பெற்றதென்க. தேவர்கள் விஷ்ணுவை வேண்டியதும், காசியபமுனிவன் விரதம் முடித்துத் திருமாலைப் புதல்வனாகப்பிறக்குமாறு வேண்டியதும் ஒத்தகாலமென்பர். காசிபன் - காஸ்யபன்என்னும்வடசொற்றிரிபு: இவனை மரீசியென்பவனது புத்திரனென்று முதனூல் கூறும். வாலறிவு - மெய்யுணர்வு. நெடுந்தகை - பண்புத்தொகையன்மொழி. ஆலமர்வித்து - முன் மிகச்சிறியதாயிருந்து பின் மிகப்பெரியதாதல்பற்றி,உவமை;"உறக்குந்துணையதோராலம் வித்தீண்டி, யிறப்பநிழற்பயந்தாஅங்கு" என்பது காண்க. சிறுமையுணர்த்துங் குறளென்னும் பண்புப்பெயர்-ஆகுபெயராய், சிறியவடிவத்தை உணர்த்திற்று. இரண்டடியளவு சிறியது குறள் என்றும், மூன்றடியளவு சிறியது சிந்து என்றும் சொல்லப்படும். இத்தன்மைய குறள் உலகத்தில் அரியதென்பார் 'அருங்குறள்' என்றார். நெடுந்தகை குறளானான் என விரோதாபாசமென்னும் அலங்காரந்தோன்றக் கூறினார்: இதில், கவியின் ஈடுபாடு வெளியாம். பி - ம்:—'காசிபனுக்கும் வாலதிதிக்குமொர்மாமகவாகி. (உக)

**உஉ.—திருமால் கொண்ட வாமனத்திருவுருவம்.**

முப்புரி நூலினன் முஞ்சியன் விஞ்சை
கற்பதொர் நாவ னனற்படு கைய
னற்புத னற்புத ரேயறி யுந்தன்
சிற்பத மொப்பதொர் மெய்க்கொடு சென்றான்.

(இ - ள்.) அற்புதன் - ஆச்சரியகரமான குணங்களையுஞ் செயல்களையுமுடைய திருமால், முப்புரி நூலினன் - மூன்றுவடமாகிய பூணூலையுடையவனும், முஞ்சியன் - முஞ்சிப்புல்லாலாகிய அரைநாணையுடையவனும், விஞ்சை கற்பது ஓர் நாவன்-வேதமந்திரத்தை யுச்சரிக்கின்ற ஒப்பில்லாத நாக்கையுடையவனும், அனல் படு கையன் - அக்கினிபொருந்திய திருக்கையையுடையவனுமாய்,— அற்புதர் அறியும் - வியக்கப்படுகின்ற ஞானவான்கள் மாத்திரமே அறியத்தக்க, தன் சித் பதம் - தனதுஞானசொரூபத்தை, ஒப்பது-ஒத்து (எவர்க்கும் எளிதில் அறிதற்கரியதாய்) உள்ளதான, ஓர் மெய்கொடு - ஒரு (சிறிய) திருவுருவைக் கொண்டு, சென்றான் - (மாவலிபக்கற்) போனான்; (எ - று.)

இச்செய்யுள், மாவலியிடஞ்சென்றபோது திருமால்மேற்கொண்ட பிரமசரியக்கோலத்தை யுணர்த்தும். வடமும் வடத்திற்புரியும் புரியில்நூலிழையும் தனித்தனி மூன்றாயிருத்தலால், முப்புரிநூலென்று யஜ்ஞோபவீதத்துக்குப் பெயர்; "ஒன்பதுகொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்"என்னுந் திருமுருகாற்றுப்படையையும், அதன் நச்சினார்க்கினியருரையையும் இங்கே உணர்க.பார்ப்பாரது வலக்கையில் நெருப்பு இருப்பதென்பது, நூற்றுணிபு. அனற்படுகையன்என்பதற்கு - (சமிதாதானத்தால் பிரதிதினமும் காலைமாலைகளில்) அக்கினியை வளர்க்குங் கையையுடையா னென்றும் உரைக்

கலாம். அற்புதரே என்ற பிரிநிலையேகாரத்தால், பிறர் அறியாரென்பது விளங்கும். முப்புரிநூலினன் என்றது - இங்கே, ஒற்றைப்பூணூலுடையா னென்றபடி. (உ௨)

**உ௩.—அந்தவாமனனை எதிர்கொண்டு மாவலி முகமன்கூறுதல்.**

அன்றவன் வந்த தறிந்துல கெல்லாம்
வென்றவன் முந்தி [1]வியந்தெதிர் கொண்டா
னின்றனி னந்தண ரில்லை [2]நிறைந்தோ
யென்றனி னுயர்ந்தவர் [3]யாருள ரென்றான்.

(இ - ள்.) அன்று - அந்நாளில், அவன் - அவ்வாமனமூர்த்தி, வந்தது - (தன்னிடம்) எழுந்தருளியதை, உலகு எல்லாம் வென்றவன் - எல்லாவுலகங்களையுஞ் சயித்த பலிசக்கரவர்த்தி, அறிந்து-உணர்ந்து, வியந்து-(அவ்வடிவத்தைப் பார்த்து) ஆச்சரியப்பட்டு, முந்தி - முற்பட்டுச்சென்று, எதிர்கொண்டான்-எதிர்கொண்டு அழைத்துவந்து, (அவனைநோக்கி),'நிறைந்தோய் - (எல்லாக்குணங்களாலும்) நிறைந்தவனே! நின்தனின் - உன்னினும் (சிறந்த), அந்தணர் - பிராமணர், இல்லை - (உலகத்தில்) இலர்; (ஆதலால்), என்தனின் - (இப்படிப்பட்ட உன்னை எளிதிலே தரிசிக்கப்பெற்ற) என்னைப்போல, உயர்ந்தவர் - ஈடேறினவர், யார் உளர் - வேறு யாவருளர்? [எவருமில்லை],' என்றான் - என்று (இன்சொல்) சொன்னான்; (எ - று.)

பெரியோரை எதிரேபோய் அழைத்துவந்து உபசரித்தல், மரியாதை. அளவிடப்படாத பிரமதேஜஸை உற்றுநோக்கி உய்த்துணர்ந்து 'நின்றனி னந்தணரில்லை' என்றான். நின்தனின் என்தனின் என்கிற இடங்களில், இன் என்னும் ஐந்தனுருபு - முறையே உறழ்பொருவிலும், ஒப்புப்பொருவிலும் வந்தன. எங்கும் நிரம்பியவனே என்ற பொருளுந் தோன்ற 'நிறைந்தோய்' என்கிற சொல்லைக் கவி உபயோகித்தார். பி - ம்:—[1]விரைந்து. [2]நிறைந்தோர். [3]யாரினி. (உ௩)

**உ௪.—வாமனன் மாவலியைப் புகழ்தல்.**

ஆண்டகை [1]யவ்வகை கூறவ றிந்தோன்
வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி
நீண்டகை யா[2]யினி நின்னுழை வந்தோர்
மாண்டவ ரல்லவர் மாண்பில ரென்றான்.

(இ - ள்.) ஆண் தகை - ஆண்மைக்குணத்தையுடைய மகாபலி, அ வகை கூற - அவ்வாறுசொல்ல, அறிந்தோன் - (எல்லாவற்றையும்) உணர்ந்த வாமனமூர்த்தி, (அவனைநோக்கி), 'வேண்டினர் - விரும்பி யாசித்தவர்களது, வேட்கையின் - விருப்பத்தினும், மேற்பட - அதிகமாக, வீசி - (பொருள்களை) எடுத்தெடுத்து விரைந்துகொடுத்து, நீண்ட-நீளுந்தன்மையுள்ள, கையாய் - கையையுடையவனே! இனி - இனிமேல் [இப்படிப்பட்ட உதாரகுணமுள்ள நீ உளனான பின்பு], நின்னுழை வந்தோர் - உன்

னிடத்து (யாசிக்க) வந்தவர்கள்தாமே, மாண்டவர் - மாட்சிமைப்பட்டவர்கள்; அல்லவர் - உன்னிடம் வராதவர்களோ என்றால், மாண்புஇலர் - சிறப்பில்லாதவராவர்,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

இவனிடம் வந்து இரப்பார் வேண்டுவனவற்றினும் மிகுதியாகப் பெறுதலாலும், பிறரிடம் வேண்டுவனவற்றைப் பெறுதலும் அரிதாதலாலும், 'நின்னுழைவந்தோர்மாண்டவர் அல்லவர்மாண்பிலர்' என்றான். பி - ம்:— [1]அவ்வழி. [2]என. (உச)

உரு.—வாமனன் மூவடிமண் வேண்டிப்பெற, சுக்கிரன் தடுத்தல்.

சிந்தை[1]யு வந்தெதி ரென்செய வென்றா
னந்தணன் மூவடி மண்ணரு ளுண்டேல்
வெந்[2]திற லாயிது வேண்டுமெ னுமுன்
றந்தனெ னென்றனன் வெள்ளித டுத்தான்.

(இ - ள்.) (அதுகேட்டு மாவலி), சிந்தை உவந்து - மனம் மகிழ்ந்து, எதிர் - (அவ்வாமனன்வார்த்தைக்கு) உத்தரமாக, என் செய என்றான் - '(நான்) என்னசெய்யவேண்டும்?' என்றுகேட்டான்; (உடனே), அந்தணன் - வாமனன், (அவனைநோக்கி), 'வெம் திறலாய் - (பகைவர்க்குக்) கொடிய வலிமையையுடையவனே! அருள் உண்டு எல் - (என்பக்கல் உனக்குக்) கருணை உளதானால், மூ அடி மண் இது - (என்காலால்) மூன்றுஅடியளவு நிலமாகிய இது, வேண்டும் - (எனக்குத் தரல்) வேண்டும்,' எனுமுன் - என்று சொல்லிமுடித்தற்குமுன்னே, தந்தனென் என்றனன் - கொடுத்தேனென்று (மாவலி) சொன்னான்; வெள்ளி தடுத்தான் - (அருகிலிருந்த அசுரகுருவாகிய) சுக்கிரன் (அதனைத்) தடுப்பானாயினான்; (எ - று.)

இனி, உண்டேல் - (உன்னிடம்) உள்ளதானால் [கொடுத்தற்கு இசைவதானு லென்றபடி], மூ அடி மண் அருள் - மூன்றடிநிலங் கொடு; [இது வேண்டும்] என்றுமாம்; இவ்வுரைக்கு 'உண்டேல்' என்றது, "இசையா வொருபொருளில்லென்றல் யார்க்கும், வசையன்றுவையத்தியற்கை" என்பதை அநுசரித்துப்போலும். எனுமுன் தந்தனெனென்றனன் என்றது காரணத்தின்முன் காரியம் நடந்ததாகச் சொல்லியது; மிகையுயர்வுநவிற்சியணி; இது, காரியவிரைவைப் புலப்படுத்தும். 'தந்தனென்' - காலவழுவமைதி. வெள்ளி-வெண்ணிறமுடையவன்; சுக்கிரன். பி - ம்:— [1]உவந்தது வென்செய. [2]திறலோய்தர. (உரு)

உசு.—இது, சுக்கிரன் தடுத்துக்கூறிய வார்த்தை.

கண்டதி றத்திது கைதவ மைய
கொண்டனி றக்குற ளென்பது கொள்ளே
லண்டமு முற்று மகண்டமு மேனு
ளுண்டவ [1]னுமி துணர்ந்துகொ ளென்றான்.

(இ - ள்.) 'ஐய - தலைவனே! கண்ட திறத்து இது - (நம்மால் எதிரிற்) பார்க்கப்பட்ட தன்மையையுடைய இவ்வடிவம், கைதவம் - வஞ்சனையாம்;

கொண்டல் நிறம் குறள் என்பது கொள்ளேல் - நீர்கொண்ட காளமேகம் போன்ற கருநிறத்தையுடையதொரு வாமன னென்பதாக எண்ணுதே; அண்டம்உம் - எல்லா வண்டங்களையும், முற்றுஉம் - (அவ்வண்டங்களி லுள்ள) எல்லாப்பொருள்களையும், அகண்டம்உம் - அனைத்தையும், மேல் நாள் - முன் னொரு காலத்தில், உண்டவன் ஆம் - அமுதுசெய்த திருமாலா கும் (இவன்); இது உணர்ந்துகொள்-இந்தரகசியத்தை (நீ) அறிந்துகொள்,' என்றான் - என்று (சுக்கிராசார்யன் மகாபலிக்குச்) சொன்னான்; (எ - று.)

சுக்கிரபகவான் தவமிகுதியால் ஞானக்கண்பெற்றுள்ளவ னாதலால் இக்கடவுளின்மாயையை அறிந்து, 'திருமாலே தனது மாயத்தால் தன்னுரு வத்தை மறைத்து உன்னை வஞ்சிக்க இங்ஙனம் வாமனனாகவந்திருக்கின் றான்; இவனுக்குத் தானஞ்செய்யாதே: செய்தால் உடனே தீங்குவரும்' என்றனனென்க. இங்ஙனம் பின்வருந் தீமைநன்மைகளைத் தெரிவித்தல் புரோகிதர் கடமையாம். பிரளயசமுத்திரத்தில் திருமால் ஒருசிறுகுழந்தை வடிவமாய்ச் சிறியதோர் ஆலிலையின்மேல் உலகங்களையெல்லாந் தனது திரு வயிற்றிலே அடக்கிவைத்துக்கொண்டு அறிதுயி லமர்கின்றன னென்பது, நூற்கொள்கை. கண்டதிறத்து - ஆலோசித்துப்பார்த்ததில் எனினுமாம். பி - ம்:—[1] நீயிது. (உசு)

உஎ.— இதுமுதல் ஏழுகவிகள் - மாவலியினுத்தரம்.

[1]நினைக்கிலை யென்கை நிமிர்ந்திட வந்து
தனக்கிய லாவகை தாழ்வது [2]தாழ்வில்
கனக்கரி யானது கைத்தல மென்னி
னெனக்கிதன் மேனலம் யாதுகொ லென்றான்.

(இ - ள்.) (அதுகேட்டு மாவலி சுக்கிரனை நோக்கி), 'என் கை நிமிர்ந் திட - எனது (கொடுக்கும்) கை உயர்ந்து மேலாக இருக்க, வந்து தனக்கு இயலா வகை தாழ்வது - (அதன்கீழ்) வந்து தனதுபெருமைக்குத்தகாதபடி தாழ்ந்திருப்பது, தாழ்வு இல் கனம் கரியானது கைத்தலம் - ஒருகுறைவு மில்லாத நீர்கொண்டமேகம்போற்கருநிறமுடைய திருமாலினது திருக்கை யிடம்,என்னின்-என்றால், எனக்கு இதன்மேல் நலம் யாது - எனக்கு இதனி னும் மேம்பட்ட நன்மை என்ன இருக்கிறது? [ஒன்றுமில்லை]; நினைக்கிலை- (இதனை நீ) நினைக்கவில்லையே,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

யாவரினுஞ்சிறந்த திருமால்தானே தனதுபெருமையனைத்தையும் இழ ந்து சிறுயாசகனாய் என்னிடம்வந்து ஒருபொருளைவேண்டுவா னானால் அவ னுக்கு அதனைக்கொடுத்துப் பெருமைபெறுதலினும் மிக்கசிறப்பு எனக்கு வேறொன்று உளதோ? என்றான். எல்லாப்பொருளையும் இழந்தாயினுந் தவ றாமற் பெறுதற்கு உரிய பேறு இதுவாகு மென்று பலி கருதினான். [1]நினைக் கிலை என்னும் பாடத்துக்கு - (இவ்வறிவு) உனக்கு உண்டாகவில்லையே என்றுபொருள். 'தனக்கு இயலா வகை' என்றதனால், எம்பெருமானது சௌசீலியமும், 'தாழ்வில்' என்றதனால் பரத்துவமும் வெளியிடப்பட்டவா

ரும். கொல் - அசைநிலை. தனக்கு நற்புத்தி உபதேசிக்க வந்த குருவை இங்ஙனம் உபேக்ஷித்தது, தானத்தினிடத்துள்ள விருப்பமிகுதியா லென்க. பி - ம்:—[2]தாவில். (உஎ)

உஅ. துன்னினர் துன்னல ரென்பது சொல்லார்
முன்னிய நன்னெறி நூலவர் முன்வந்
துன்னிய தான முயர்ந்தவர் [1]கொள்க
வென்னி னிவன்றுணை யாவ ருயர்ந்தார்.

(இ - ள்.) முன்னிய - (யாவராலும்) மதிக்கப்படுகின்ற, நல் நெறி - சந்மார்க்கத்தைச் சொல்லுகிற, நூலவர் - தருமசாஸ்திரத்தை யறிந்த பெரியோர்கள், 'துன்னினர் - (நமக்கு) வேண்டியவர்கள் தாம் (தானஞ்செய்யப்படுதற்கு உரியவர்): துன்னலர் - வேண்டாத பகைவர், (தானஞ்செய்யப்படுதற்கு உரியவரல்லர்),' என்பது - என்னும் வார்த்தையை, சொல்லார்-சொல்லாதவர்களாய், 'உன்னிய தானம் - (தாம்) கருதிய பொருட்கொடையை, உயர்ந்தவர்-மேன்மையையுடையவர்கள், முன் வந்து-(கொடையாளிகளின்) எதிரில் வந்து, கொள்க - பெற்றுக்கொள்ளக்கடவர்,' என்னின் - என்று சொல்வார்களானால் [என்றுசொல்வதனு லென்றபடி], இவன் துணை உயர்ந்தார் யாவர் - இவனுக்குஒப்பாகமேலோர் யாவருளர்? [எவருமில்லை].

'அசுரசாதியாராகிய நாம் அசுரர்க்குத்தானஞ்செய்வது தகுமேயல்லாமல் தேவசாதியிற் சேர்ந்த திருமாலுக்குத் தானஞ்செய்தல் கூடாது' என்னையாயின், வேண்டியவர் வேண்டாதவ ரென்று கருதாமற் சற்பாத்திரங்களிற் கொடுக்கவேண்டு மென்பதே தானவிதி யாதலால் நீ கூறுவது நீதியன்று; சற்பாத்திரங்களை ஆராய்ந்தால் இவனுக்கு மிக்கவராயினும் ஒத்தவராயினும் உளரோ? ஆதலால். தானஞ் செய்தற்கு உத்தமபாத்திரம் இவனே யென்றான். துன்னினர் - நண்பரும் உறவினரும். பி - ம்:—[1]கொள்வார். (உஅ)

உகூ. வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லா
லெள்ளுவ வென்சில வின்னுயி ரேனுங்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால்.

(இ - ள்.) வெள்ளியை ஆதல் - (நீ) வெள்ளியென்று சொல்லப்படுவாயாதலால், விளம்பினை - இவ்வாறு சொன்னாய்; மேலோர் - மேன்மையையுடையவர்கள், வள்ளியர் ஆக - வரையாதுகொடுப்பவராக, வழங்குவது அல்லால் - (யாசகர்கேட்ட எப்பொருளையுங்) கொடுப்பதே யல்லாமல், எள்ளுவ- (அம்மேலோர்களாற் கொடுக்கப்படாதவையென்று விலக்கப் பட்டவையாகிய, சில - சில்பொருள்கள், என் - எவை? [எவையுமில்லை யென்றபடி]; இன் உயிர் ஏனும் - (தனது) இனிய உயிரையேயானாலும், கொள்ளுதல் - யாசித்துப்பெறுதல், தீது - துன்பந்தருவது; கொடுப்பது - (தனது இன்னுயிரையேயாயினும் யாசகர்க்குத்) தானஞ்செய்வது, நன்று-இன்பந்தருவது.

'உன்னிடம் இப்பொழுது யாசகனாய்வந்தவன் மாயவனாதலால், அவன் கேட்டதைக் கொடுத்தல் கூடாது என்பையாயின், எதைக்கேட்டாலுங் கொடுப்பது வள்ளல்களுக்கு உரிய குணமாதலால் அதுவும் அங்கீகரிக்கப் படமாட்டாது' என்கிறான். 'வெள்ளியை' என்பது, சிலேடையாக வெள்ளி யென்னும் பெயரையுடையாய் என்றும், அறியாமையையுடையாய் என்றும் இரண்டு பொருள் படும். வெண்மையாவது - அறிவுமுதிராமை, புல் லறிவுடைமை; இது இப்பொருளதாதலை "வெண்மையில்லை பல்கேள்விமே வலால்" என இந்நூலின் நாட்டுப்படலத்திலும், "வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை, யுடையம்யா மென்னுஞ் செருக்கு," "மேனியைக் காட்டின்வெளுத்ததே," "வீளயுமாற்ற நின் திருவடிவினுமிகவெள்ளையாகிய தென்ன", "வெள்ளைமைகலந்தநோக்கின்" என்றஇடங்களிலுங்காண்க. 'வெ ள்ளியையாதல்விளம்பினை' என்பதில் நீ பொன்னாயின் இங்ஙனஞ்சொல்லாய் என்றும் ஒருகருத்துத் தொனிக்கும். [வெள்ளி - வெண்பொன், ரஜதம்: சுக்கிரன். பொன் - செம்பொன், சுவர்ணம் : (தேவகுருவாகிய) பிருகஸ் பதி] வள்ளியர் - இன்னார்க்குக் கொடுக்கலாம் இன்னார்க்குக் கொடுக்கலா காது என்றும், இன்னதுகொடுக்கலாம் இன்னதுகொடுக்கலாகாது என்றும், இன்னசமயத்துக்கொடுக்கலாம் இன்னசமயத்துக்கொடுக்கலாகாது என்றும் ஒருவரையறைசெய்யாமலும் தமக்கென்று ஒன்றும் வைத்துக்கொள்ளா மலும் யாசகர் எவராயிருப்பினும் அவர் கேட்பன எவையாயிருந்தாலும் அவற்றையெல்லாம் எப்பொழுதுங் கொடுப்பவர். தனதுஉயிர்போவதாயினும் கொடுத்தல் நல்லது, இரத்தல் கூடாது என்பது இதன்கருத்து: இந் நீதியை "இரந்து முயிர் வாழ்தல் வேண்டிற் பரந்து, கெடுக வுலகியற்றி யான்," "சாதலினின்னாத தில்லை யினிததூஉ, மீத லியையாக் கடை" என்னுந்திருக் குறள்களைக்கொண்டும் அறிக. நல்லதுகூறுவார் தீயதும் உடன் கூறினார். "நல்லாறெனினுங் கொளறீது மேலுலக, மில்லெனினு மீதலே நன்று" என்ற குறள் இங்குக் காணத்தக்கது. (உ௯)

௩௦. மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா
தேந்திய கைக்கொ டிரந்தவ ரெந்தாய்
வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனு
மீந்தவ ரல்ல திருந்தவர் யாரே.

(இ - ள்.) எந்தாய் - எனது தந்தைபோன்றவனே! (உலகத்தில்), மாய்ந்தவர் - இறந்தவர்கள், மாய்ந்தவர் அல்லர்கள் - இறந்தவர்களல்லர்; (பின்னை யாவர் இறந்தவர் என்றால்), மாயாது ஏந்திய கை கொடு இரந்த வர் - (தம்) உயிரை விடமாட்டாமல் கைகளை ஏந்தி யாசித்தவர்களே (இறந் தவர்கள்); வீந்தவர் என்பவர் - இறந்தவர்களென்று சொல்லப்படுபவர் வீந்தவர் ஏனும் - இறந்தவர்களேயாயினும், ஈந்தவர் அல்லது - தானஞ் செய்தவர்க ளல்லாமல், இருந்தவர் - (உலகத்தில்) நிலையாயிருந்தவர்கள் யார் ஏ - வேறுயாவருளர்? [எவருமில்லை]; (எ - று.)

இதனால், இரப்பது மரணவேதனையினுங் கொடிதென்பதும், தானஞ் செய்து என்றுமழியாத புகழுடம்புக்குக் காரணமென்பதும் விளக்கப் பட்டன. இரந்து உயிர்வாழ்வார் உயிரோடிருப்பினும் இறந்தவர்களே, ஈந்து வாழ்ந்தார் உயிர் இறப்பினும் உயிரோடிருப்பவர்களே என்பது கருத்து. இறந்தவரை இறந்தவரல்லரென்றுமறுத்து,இரந்தவரிடத்துஅத்தன்மையை யேற்றிக்கூறியதும், ஈந்தவர்இறந்தவராயினும் அவர் புகழுடம்புஅழியாது நிற்றல்பற்றி இறப்பைஅவரிடத்துவிலக்கி,அவரையிருந்தவராகவும்கூறியன- ஒழிப்பணியாம். மாயாது - மனம்மடிதலின்றிஎன்றும், இருந்தவர் - பெரிய தவத்தையுடையவரென்றும் பொருள்படும். இனி,மாயாதேந்தியகைக்கொடு இரந்தவர் வீந்தவரென்பவர் என ஒருவாக்கியமாக்கி முடிப்பினும் அமையும்.

௩௧. அடுப்ப வரும்பழி செய்ஞ்ஞரு மல்லர்
கொடுப்பவர் முன்பு கொடேலென நின்று
தடுப்பவ ரேபகை தம்மையு மன்னர்
கெடுப்பவ [1]ரன்னதொர் கேடிலை யென்றான்.

(இ - ள்.) (ஒருவருக்கு), வரும் பழி - மேன்மேல் வளர்கின்ற பொல் லாங்கை, அடுப்ப - (அவரைச்) சேரும்படி, செய்ஞ்ஞர்உம் - செய்துவருபவர் களும், அல்லர் - (அவருக்குப்) பகைவர்களாகார்; (மற்றுயாவர் பகைவர் எனில்),கொடுப்பவர் முன்பு-(இரப்பவர்க்குத்) தானஞ்செய்யும்அவர்களுக்கு எதிரில், நின்று - விடாதுபொருந்தி, கொடேல் என - தானஞ்செய்யாதே யென்று, தடுப்பவர்ஏ - தடைசெய்பவரே, பகை - (அக்கொடுப்பவருக்குப்) பகைவராவர்; அன்னர் - அங்ஙனம் ஈவதுவிலக்குபவர், தம்மைஉம் கெடுப் பவர் - (பிறரைக் கெடுப்பதுமாத்திரமேயன்றித்)தம்மையுந் தாமே கெடுத் துக்கொள்பவர்கள்; அன்னது ஓர் கேடு இலை - அக்கொடுப்பதுவிலக்குவ தைப்போல்வதொரு தீச்செயல் வேறில்லை, என்றான் - என்று (மாவலி குரு வுக்குக்) கூறினான்; (எ - று.)

கீழ்க்கவியால் ஈவோரின்சிறப்பைக்கூறிய மகாபலி, இதனால், கொடுப் பதைத் தடுப்பதன்கொடுமையைக்கூறுகின்றான். ஒருவர்க்கு மற்றொருவர் கொடுப்பதை இடையிலேயிருந்துதடுப்பவர்,அக்கொடுப்பவரைக்கொடாமை யாலாகிய பாவத்துக்கு இலக்காக்குவதுமன்றி, தாமும் தானம்விலக்கிய பாவத்தின் மிகுதியாற் கெடுவ ரென்பதாம். வெளிப்படையாகத் தீங்குசெய் பவரால் நேர்கிற துன்பத்தினின்று தப்புதல் எளிது; உடனிருந்து கெடுக் கின்ற அனுகூலசத்துருக்களா லாகிற துன்பத்தினின்று தப்புதல் அரிது என்க. தன்னையும் பிறரையும் ஒருங்குகெடுத்தல்பற்றி, 'அன்னதொர் கேடிலை' என்றான். ''ஈவதுவிலக்கேல்'' என ஔவையாரும், ''அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார், வழுக்கியுங் கேடீன் பது'' எனத் திரு வள்ளுவனாருங் கூறியவாற்றையும் அறிக. நீ கொடுப்பதைத் தடுப்பது தகாதுஎன்றுஅறிவுறுத்தியவாறு. இனி, அடுப்ப அரு பழி செய்ஞ்ஞர் என எடுத்து-அடாப்பழியைச் செய்கின்றவர்களும் என்றும் கூறலாம். செய்ஞ் ஞர், ஞ் - பெயரிடைநிலை; தனிக்குறிலைச்சார்ந்தயகரமெய்யின் முன் ஞகரம்

மிக்கது: [நன்-உயிர்-அ.] பகை என்றபால்பகாவஃறிணைப்பெயர் பொருளால் உயர்திணைப்பன்மையை உணர்த்தி, 'தடுப்பவர்' என்பதற்கு ஏற்குஞ்சொல்லாயிற்று. பி - ம்:—[1] இன்னதோர். (௩௧)

௩௨. கட்டுரை [1]யிற்றம கைத்துள போழ்தே
யிட்டிசை கொண்டற னெய்த [2]முயன்றோ
ருட்டெறு வெம்பகை யாவது லோபம்
விட்டிட லென்று விலக்கினர் [3]தாமே.

(இ - ள்.) கட்டு உரையின் - (தருமநூல்களிற் கூறிய) உறுதிவார்த்தையின்படி, தம கைத்து உள போழ்தே - தங்களுடைய செல்வங்கள் தங்கள்வசத்திலிருக்கிற பொழுதில்தானே, இட்டு - (இரப்போர்க்குத்) தானஞ்செய்து, இசை கொண்டு - (அதனால் இம்மையிற்) கீர்த்தியைப்பெற்று, அறன் எய்த - (மறுமையில்) அந்தத்தருமத்தின் பயனாகிய புண்ணியத்தையும் அடைதற்கு, முயன்றோர் - முயற்சிசெய்துவருபவர்களுக்கு, உள் தெறு வெம் பகை ஆவது - உள்ளேயிருந்து அழிக்கின்ற கொடிய பகைவராவார் (யாவரெனின்), உலோபம் விட்டிடல் என்று-உலோபகுணத்தை விட்டிடாதே யென்று சொல்லி, விலக்கினர்தாம் ஏ - (ஒருவர் பிறர்க்குத் தானஞ்செய்யும்பொழுது) செய்யாதேயென்று தடுத்தவரேயாவர்; (எ - று.)

கொடையாளிகட்குப் பகையாகுபவர், அவர் கொடுக்கும்போது உலோபகுணத்தை விடக்கூடாதென்று உபதேசித்து அக்கொடுத்தலுக்குத் தடைசெய்பவர்களே யென்றவாறு. பகையாவது விலக்கினர் - திணைவழுவமைதி; ஈவது விலக்குபவருடைய இகழ்ச்சிவிளங்க உயர்திணையை அஃறிணையாகக் கூறினர். உலோபம் - லகரத்திற்குமுன் உகரம் வந்தது. லோபமாவது - இரப்பவர்க்கு ஈயாமை வைத்துக்கொண்டே இல்லையென்னுதல். உட்பகை - அந்தச்சித்திரம். கொடுப்பது விலக்குகின்றவர்களைக் கொடையாளிகளுக்குப் பகைவரென்று பொதுப்படக் கீழ்க்கவியிற் கூறி, இக்கவியில் அவர்களை உட்பகைவரென்று விசேடித்துக் கூறுகின்றான். அறன்எய்த முயன்றோர்(க்குப்)பகையாவது, உலோபம்;(அதனை),விட்டிடல்-விட்டிடுக,என்று-, விலக்கினர் - (நூலோர்) விலக்கியுள்ளார் என்று உரைகூறினுமாம்: அறஞ்செய்யமுயன்றோரென்பவர் உலோபம் விலக்கினவர்களே யென்று கருத்து. இவ்வுரையில், விட்டிடல் - உடன்பாட்டு வியங்கோள்: தாம்-அசை. விட்டு இடு என்று இருசொல்லாகக் கொண்டு, விட்டு - உலோபகுணத்தையொழித்து, இடல்-தானஞ்செய்யாதே, என்று-என்றுசொல்லி, விலக்கினர் என்று உரைப்பினும் அமையும். பி - ம்:—[1] உத்தம. [2] முயன்றோர்க்கு. [3] மாதே. (௩௨)

௩௩. எடுத்தொரு வருக்கொருவ ரீவதனின் முன்னே
தடுப்பது [1]நினக்கழகி தோ[2]தகவில் வெள்ளி
கொடுப்பது விலக்கு [3]கொடி யோயுனது சுற்ற
முடுப்பதுவு முண்பதுவு மின்றி [4]விடுகின்றாய்.

(இ - ள்.) தகவு இல் - நற்குணமில்லாத, வெள்ளி - சுக்கிரனே ! கொடுப்பது விலக்கு கொடியோய் - தானத்தைத் தடுக்கின்ற கொடுந்தன்மையையுடையவனே! ஒருவர் - (தாதாக்களுள்) ஒருத்தர், ஒருவருக்கு - (யாசகர்களுள்) ஒருத்தருக்கு, எடுத்து - (அவர் விரும்பினதொருபொருளைக் கையில்) எடுத்து, ஈவதனின் முன்ன - கொடுப்பதற்கு முன்பே, தடுப்பது - (வேண்டாமென்று இங்ஙனந்) தடைசெய்வது, நினக்கு - (குருவாகிய) உனக்கு, அழகிது ஒ - அழகுடையதாமோ? [ஆகாதன்றே]; (அன்றியும் நீ இக்கொடுந்தொழிலின்பயனால்), உனது சுற்றம் உடுப்பதுஉம் உண்பதுஉம் இன்றி விடுகின்றாய் - உனது பந்துவர்க்கம் உடுக்கஉடையும் உண்ணஉணவும் இல்லாதபடி ஆய்விடுகிறாய்; (எ - று.)

இதுவரையிற் சுக்கிரனைப் படர்க்கையாகக்கொண்டு கூறிவந்த மாவலி, இப்போது முன்னிலைப்படுத்திக் கூறுகின்றனனென்க. உடுப்பது - உடுக்கப்படுவது; உண்பது - உண்ணப்படுவது: சாதியொருமை. இவ்விரண்டுமில்லாமலெனவே,மற்றைச்செல்வங்களை யிழத்தல் கூறவேண்டாதாயிற்று. 'விலக்குபவனதுசுற்றம்உடுப்பதும்உண்பதும்இன்றிக்கெடும்'எனவே, அவன் கெடுதல்சொல்லப்படாமலேஅருத்தாபத்திப்பிரமாணத்தாற்கொள்ளப்படும். பிறர்பேறுபொறாமை,தன்பேற்றையேயன்றித் தன்சுற்றத்தின்பேற்றினையும் இழப்பிக்குமென்பதாம். "கொடுப்பதழுக்கறுப்பான் சுற்றமுடுப்பதூஉ,முண்பதூஉமின்றிக் கெடும்" என்னுந் திருக்குறளின்கருத்தைக் கூறியது இறுதிவாக்கியம். 'ஈவதனின்முன்னே' என்றது, தடுத்தலின்விரைவுதோன்ற நின்றது. தகவு என்னுஞ்சொல்லுக்கு-அறிவு, உரிமை,ஒழுக்கம், கிருபை, தகுதி, தெளிவு, நன்மை, நீதி முதலனவாகப் பலபொருள்கள் உண்டு. [2] தகைவில் என்று பாடமாயின், (இக்குணமொன்றொழியப் பிறகுணங்களில்) தளர்ச்சியில்லாத என்று பொருள்கொள்க. கொடுப்பது விலக்கு கொடியோய் - கொடுப்பதுவிலக்கக் கொடிகட்டினவனே! என்றும் பொருள்தோன்றும். உடுப்பதுவும், உண்பதுவும் - சிறுபான்மை குற்றியலுகரங் கெடாமற் பொது விதியால் வகரவுடம்படுமெய் பெற்றது. நிச்சயம்பற்றி 'இன்றிவிடுகின்றாய்' என நிகழ்காலமாகக் கூறினார்; காலவழுவமைதி. பி-ம்:—'நினக்கிதழகோ. [3]கொடியோர்தமது. [4]ஒழியுங்காண். (௩௩)

**௩௪.—மாவலி வாமனனுக்கு மூவடிமண் தாரைவார்த்துக்கொடுத்தல்.**

முடியவிம் மொழியெலா மொழிந்து மந்திரி
கொடியனென் றுரைத்தசொ லொன்றுங் கொண்டில
னடியொரு மூன்றுநீ யளந்து கொள்கென
நெடியவன் குறியகை நீரி னீட்டினான்.

(இ - ள்.) (மாவலி), முடிய இம் மொழி எலாம் மொழிந்து-முழுவதும் இத்தன்மையான [கடுமையான]வார்த்தைகளெல்லாவற்றையுஞ்சொல்லி, மந்திரி கொடியன் என்று-(நமது)மந்திரி [சுக்கிராசார்யன்] துர்க்குணமுடையவனென்று கருதி, உரைத்த சொல் ஒன்றும் கொண்டிலன்-(அவன்) சொன்ன

வார்த்தையைச்சிறிதும் ஏற்றுக்கொள்ளாமல்,அடி ஒருமூன்றுஉம் நீ அளந்து கொள்க என - 'மூன்றடிநிலத்தையும் நீயே அளந்து (உன்னுடையதாகப்) பெற்றுக்கொள்வாய்' என்று (வாமனனைநோக்கிச்) சொல்லி, நெடியவன் - உடனே திரிவிக்கிரமனாக நீளப்போகின்ற வாமனனது, குறிய கை - சிறிய கையில், நீரின் - தான ஜலத்தை, நீட்டினான்-தாரைவார்த்துக்கொடுத்தான்.

தனது மந்திரியாகிய சுக்கிரன் துர்க்குணமுடையவனென்று கருதியதனால், அவன் மொழியைக் கொள்ளாமல்,மாவலி வாமனன் வேண்டியபடியே மூவடி நிலம் பெற்றுக்கொள்ளுமாறு தாரைவார்த்துக்கொடுக்கலாயினனென்க. தன்காலால் மூன்றடிநிலம்வேண்டு மென்று கேட்டதனாலும், இரப்பவர்களை அவர்கள்விருப்பத்தின்படி கொள்ள விடுவது மிக்க உதாரமும் அவர்களுக்கு மிகத்திருப்திகரமு மாகு மாதலாலும், 'நீயளந்துகொள்க' என்றான். மந்திரி - ஆலோசனையுடையவன். மாவலிக்குச் சுக்கிரன் குருவும் முதல்மந்திரியுமாவன். அடி - கால்வைத்து அளக்கப்பட்ட நிலத்தைக் குறித்தலால், நீட்டலளவையாகுபெயர். மூன்றும், உம்மை - முற்று. நீரோடு கொடுத்தல் தானமுறையாதலால், நீரின்நீட்டினான். நெடியவன் குறிய கை - முரண்டொடை. மாவலி அளந்துகொள்வாயாகவென்று சொல்லத் திருமால் தனதுகுறுங்கையைத் தானநீரைப்பெறுதற்காக நீட்டியேந்தினனென்றும் உரைக்கலாம். முடிய - முடிவுபெறஎன்றும், கொடியனென்று மந்திரி உரைத்த சொல் என இயைத்து, (திருமால்) கொடிய வஞ்சகனென்று அமைச்சன் சொன்ன வார்த்தையை என்றும் உரைப்பர். (நுச)

நுரு.—வாமனன் திரிவிக்கிரம னாதல்.

கயந்தரு நறும்புனல் கையிற் றீண்டலும்
பயந்தவர் களுமிகழ் குறளன் பார்த்தெதிர்
வியந்தவர் வெருக்கொள விசும்பி னோங்கினா
னுயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே.

(இ - ள்.) கயம் தரு நறு புனல் - குளத்திலுள்ள நல்ல (மாவலி தாரைவார்த்துக்கொடுத்த) நீரானது, கையில் தீண்டலும் - (தனது) கையிற் பட்டமாத்திரத்திலே, பயந்தவர்கள்உம் இகழ் குறளன் - பெற்றவர்களும் இகழ்தற்குரிய குள்ளவடிவமுள்ள வாமனமூர்த்தி, எதிர் பார்த்து வியந்தவர் வெருக்கொள - (எல்லோரும் தனது பேருருவத்தை) எதிரிலேயிருந்து நோக்கி ஆச்சரியப்பட்டவர்களாய் அச்சங்கொள்ளும்படி, உயர்ந்தவர்க்கு உதவிய உதவி ஒப்ப - (நற்குண நற்செய்கைகளாற்) சிறந்தவர்களுக்குச் செய்த தானத்தின் பலன்போல, விசும்பின் ஓங்கினான் - ஆகாயத்திலே உயர்ந்துவளர்ந்தான்; (எ - று.)

மாவலி தாரைவார்த்துக்கொடுத்ததும் வாமனன் பேருருவங்கொண்டன னென்றவாறு. குள்ளனிலுங்குள்ள னானதுபற்றி, 'பயந்தவர்களுமிகழ் குறளன்' என்றார். 'பயந்தவர்களும்' என்ற உம்மை, எத்தன்மைத்தான விகாரரூபமாயிருப்பினும் மக்களை மாதாபிதாக்கள் இகழா ரென்பதுபடநின்றது; 'காக்கைக்குத் தன்குஞ்சு பொன்குஞ்சு' என்பது, பழமொழி.

உயர்ந்தவர்க்கு உதவிய உதவி மிக ஓங்குதலை "அறப்பயனுந், தான் சிறிதாயினுந் தக்கார்கைப்பட்டக்கால், வான் பெரிதாப்போர்த்துவிடும்" என்னும் நாலடியாராலும், "இனைத்துணைத்தென்பதொன்றில்லைவிருந்தின், துணைத் துணைவேள்விப்பயன்" என்னுந் திருக்குறளாலும் அறிக. இப்படிப்பட்ட பெருவடிவம் உலகில் உளதோ என்று கருதுதலால் வியப்பும், அவ்வுருவத்தின் பெருமையைநோக்கி அச்சமும் கொண்டனர். எதிர் பார்த்தவர் வியந்து வெருக்கொள என விகுதிபிரித்துக் கூட்டலும் ஒன்று. விசும்பின் - ஆகாயம்போல உயர்ந்தான் என்றும் உரைப்பர். இது, பண்புவமை.

தன்வார்த்தையைக் கேளாமல் மாவலி வாமனன்கையில் தாரைவார்த்துக் கொடுக்கப் புகுந்தவளவிலே, சுக்கிரன் ஒருசிறுவடிவைக் கொண்டு உதக பாத்திரத்தின் துவாரத்திலே நுழைந்து உதகம்விழாதபடி தகைய, அதனை அறிந்து எம்பெருமான் துவாரசோதனம்பண்ணுபவர்போலத் தனது திருக்கையில் திருப்பவித்திரத்தினுடைய நுனியாலே அந்தத்துவாரத்திற் குத்தின அளவிலே, அந்தத்தருப்பைப்புல்லினாற் சுக்கிரன் ஒருகண் பழுதுபட்டுக் கலங்கி ஒதுங்கிப்போதலும்,நீர் கையில்விழுந்தது என்னுங் கதாசந்தர்ப்பத்தைக் காட்டுவதாகி "குறியவன் கையினீர் விழாமற் குண்டிகை, மறிபட வாமனன் மலர்க்கைத் தர்ப்பையாற், செறிவது நீக்கிடச் சிதைந்து கண்ணுடைந், துறுதுயர்க் கடலிடை யொதுங்கிப் போயினன்" என்று ஒருகவி இக்கவியின்பின் சிலஏட்டுப்பிரதிகளிற் காணப்படினும், பல பிரதிகளிலும் பயிலவழங்காமையின், உரை யெழுதாது விடப்பட்டது; சுக்கிரன் தடுத்தசெய்தியே முதனூலிற் காணப்படவில்லை. (௩௪)

௩௫.—திருமால் மண்விண்களை ஈரடியாலளந்து விடுதல்.

நின்றகான் மண்ணெலா நிரப்பி யப்புறஞ்
சென்றுபா விற்றிலை சிறிது பா[1]ரென
வொன்றவா னகமெலா மொடுக்கி யும்பரை
வென்றகான் மீண்டது வெளி[2]பெ றாமையே.

(இ-ள்.) நின்ற கால் - (நிலவுலகத்திலே) ஊன்றிய (வாமனமூர்த்தியினது) ஒருதிருவடியானது, மண் எலாம் நிரப்பி - பூலோகமுழுவதையும் நிரம்பச்செய்து, பார் சிறிது எனா - பூமி சிறியது என்றகாரணத்தினால், அப்புறம் சென்று பாவிற்று இலை - (அதற்கு) அப்பாற்போய்ப் பரவியதில்லை; வான் அகம் எலாம் - ஆகாயத்தினிடம் முழுவதையும், ஒன்ற - ஒருசேர, ஒடுக்கி - (தன்னுள்) அடங்கச்செய்து, உம்பரை வென்ற - அம்மேலுலகைக் கடந்த, கால் - மற்றொருதிருவடியும், வெளி பெறாமை - வேறு இடம் பெறாததனால், மீண்டது - திரும்பியது; (எ - று.)

தான் மூன்றடி நிலம்வேண்டின திருமால் தனது ஓரடியால் மண்ணுலகையும் மற்றோரடியால் விண்ணுலகையும் அளந்தன னென்பதாம். எம்பெருமானது பாதங்கள் இன்னும் பெரியனவாக வளரக்கூடியனவாயினும் மேலேசெல்வதற்கு இடமில்லாமையால் மண்ணையும் விண்ணையும் அளக்

கையில் ஓரளவோடு நின்றிட்டன வென்க. இங்கு 'எல்லாம்' என்னும்பெயர், ஒருபொருளின் பலவிடங்குறித்துநின்றது. பி - ம்:—[1]என. [2]பெருமையால்.

௩எ.—மூன்றாவதுஅடிக்காகத் திருமால் மாவலிமுடிமேற் பாதம்வைத்தல்.

உலகெலா முள்ளடி [1]யடக்கி யோரடிக்
கலகிலா தவ்வடிக் [2]கன்பன் மெய்யதா
மிலைகுலாந் துழாய்முடி யேக நாயகன்
சிலைகுலாந் தோளினாய் சிறியன் சாலவே.

(இ - ள்.) உலகு எலாம் - எல்லாவுலகங்களையும் [மேலுலகத்தையும் கீழுலகத்தையும்], உள் அடி அடக்கி-(திருமால் தனது) இரண்டடிகளினுள் ளேஅடங்கச்செய்துவிட்டதனால், ஓர் அடிக்கு அலகு இலாது-(மூன்றாவதா கிய) மற்றொரு அடிக்கு (அளத்தற்குரிய) இடம் இல்லாமற் போனமைபற்றி, அ அடிக்கு - அந்த அடிவைப்புக்கு, அன்பன் மெய் அது ஆம்-அன்புடைய மாவலியினது சிரசு இடமாயிற்று; சிலை குலாம் தோளினாய் - வில் விளங்கு கின்ற திருத்தோளுடையவனே! இலை குலாம் துழாய் முடி ஏகநாயகன்- இலைகள் விளங்குகின்ற திருத்துழாய்மாலையை யணிந்த திருமுடியை யுடைய ஒப்பற்ற தலைவனாகிய திருமால், சால சிறியன் - மிகவுஞ் சிறியவன்.

ஒருதிருவடியால் மண்ணுலகத்தையும் மற்றொருதிருவடியால் விண்ணு லகத்தையும் இவ்வாறுஎல்லாவுலகங்களையும் இரண்டடியால் அளந்துவிட்டு, 'மூன்றடி தருகிறேம் என்றாய்; மற்றையோரடிக்கு இடங்காட்டாய்' என்று திருமால் கூற, அதற்கு 'அடியேனது முடியே உள்ளது' என்று மாவலி சொல்ல, எம்பெருமான் அதிற் பாதத்தைவைத்துஅழுத்தி அவனைப் பாதா ளத்திற் செலுத்தினா னென்க: "ஒருகுறளாயிருநிலம் மூவடிமண்வேண்டி யுலகனைத்து மீரடியாலொடுக்கியொன்றுந், தருகவெனாமாவலியைச்சிறை யில்வைத்ததாடாளன்" என்பர் பெரியாரும். பூலோகத்தின் கீழுள்ளபாதாள லோகம் பூலோகத்தில் அடங்குதலால், மூன்றாமடிக்கு வேறு இடம் இன்றா யிற்று. 'உள்ளடி யடக்கி' என்றார், அளக்கும்போது காற்கீழ் அகப்பட்ட உயிர்களுக்குஅபாயம் ஒன்றும்நிகழாதபடிகுறிக்கொண்டுகாத்தமைதோன்ற; வெயில் நிலா விளக்கொளி முதலியன உலகத்திற்பரவுதல்போலத் தேஜோ ரூபமான சுவாமியினதுதிருவடி எங்கும்பரவியதனால், அதன்கீழ்ப்பட்ட பிராணிகளுக்கு அபாயஞ்சிறிதும் உண்டாகவில்லை யென்க: அன்றியும், பக வானதுசரணம் செந்தாமரைமலரினும் மெல்லியததாலால், அது மேலே படு தலால் இன்ப முண்டாகுமே யன்றித் துன்பம் உண்டாகா தென்க. கீழ் 'அலகு' என வந்ததனால், மேல், இடத்தை 'அது' எனச் சுட்டினார். ஆம் - இயல்புபற்றி வந்த காலவழுவமைதி. திருமால் விசித்திரசக்தியுடைய வனாதலால், உலகத்தை அளக்குங்காலத்து அவ்வுலகினளவாய் வளர்ந்து நின்ற அவனது திருவடிதானே மூன்றாமடி அளக்குங்கால் மாவலியின் முடி யினதளவாகக் குறுகிற்றென்க. உத்தம அங்கமாயிருத்தல்பற்றி, தலை 'மெய்' எனப்பட்டது. 'சிறியன்சால' என்றது-அவனது மிக்கபெருமையை விளக்கு வதொரு குறிப்பு; இவ்வுலகத்தை யெல்லாம் ஓரடியுள்ளேயடக்கிய இவ்வடி

வம் சாலச்சிறியதேயென்று வியந்தவாறு. இங்கே "சிறியனென் றென்னிளஞ் சிங்கத்தை யிகழேல் கண்டாய், சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச் சென்றுகேள்" என்னும் பெரியாழ்வார் திருமொழிப் பாசுரத்தின் பொருளை யுணர்க. சாலச் சிறியனே? என்று வினாவாகவுமாம். சிலைகுலாந் தோளினாய் என்றது, முனிவன் இராமனைநோக்கிக் கூறிய விளி; இதற்கு - வில்லைப் பிடித்துள்ள (இடத்)திருக்கையை யுடையாயென்றும், வில்லினை மாட்டிவைத்துள்ள (இடத்)தோளுடையா யென்றும்,வில்வித்தையில் மிகப் பயிற்சியையுடைய புயங்களையுடையா யென்றுங் கருத்துக்கொள்ளப்படும்: அன்றி, (வலிமையாற்) கல்மலையையொத்துவிளங்குந் தோள்களுடையா யென்றும் பொருள்கொள்ளலாம். பி - ம்:—[1] அடக்கிற்றோரடி யலகிலா. [2] அமைந்தமெய்யனே. (௩௭)

௩அ.—திருமால் மூவுலகாட்சியைத் தேவேந்திரனுக்களித்துவிட்டுத் தன் வியூகமூர்த்தியிற் சேர்தல்.

உரிய[1]திந் திரற்கிதென் றுலக மீந்துபோய்
விரிதிரைப் பாற்கடற் பள்ளி மேவினான்
கரியவ னுலகெலாங் கடந்த தாளிணை
திருமகள் கரந்தொடச் சிவந்து [2]காட்டவே.

(இ - ள்.) கரியவன் - கருநிறமுடைய திரிவிக்கிரமமூர்த்தி, இந்திரற்கு இது உரியது என்று - தேவேந்திரனுக்கே இதுஉரியதா மென்றுசொல்லி, உலகம் ஈந்து போய் - திரிலோகாதிபத்தியத்தை (அவனுக்குக்) கொடுத்துவிட்டுச்சென்று, உலகு எலாம் கடந்த தாள் இணை - எல்லாவுலகங்களையும் அளவிட்டுச்சிரமப்பட்ட தனது உபயபாதம்,திருமகள் கரம்தொட - பெரிய பிராட்டியார் (அச்சிரமந் தீரக்) கைகளாற்றெருடுதலால், சிவந்து காட்ட - செம்மைநிறமடைந்து தோன்றும்படி, விரி திரை பாற்கடல் பள்ளி மேவினான் - பரவிய அலைகளையுடைய க்ஷீரசமுத்திரத்திலே (ஆதிசேஷ) சயனத்திற் பொருந்தி யோகநித்திரை கொண்டருளினான்; (எ - று.)

உலகனைத்தையும் உந்தியிற்பூத்தருளியமைபற்றித் தனக்கே உரியதும் தன்னாலே இந்திரனுக்கென்று அளிக்கப்பட்டதுமான திரிலோகத்தை அவனிடத்தினின்றுகவர்ந்துகொண்டு தன்னதென்றுஅபிமானித்தவனைத் திருமால் செருக்கடக்கி அவ்வுலகங்களைப்பறித்து இந்திரனுக்குக்கொடுத்தது சிறிதும் வஞ்சனையாகா தென்க. திரு என்பது கண்டாரால் விரும்பப்படுந் தன்மைநோக்கம்; இப்படிப்பட்ட அழகு உண்டாகையாலே, இலக்குமிக்குத் திருமக ளென்று பெயர். திருமகளது மிகமெல்லிய திருக்கரந் தொடுதலாலும் திருமாலின்அடி கன்றிச்சிவந்துகாட்டும் என, அத்திருவடியின் மென்மைமிகுதி கூறியவாறும். "தாளாலுலகமளந்தவசைவேகொல், வாளாகிடந்தருளும் வாய்திறவான்***ஐந்தலைவாய்நாகத்தணை" என்பதன் கருத்துக்கு ஏற்ப, திருமாலின்திருவடிகளுக்கு உலகமளந்ததனாற் சிரமம் உண்டானதாகக் கற்பனைகூறுவார், 'உலகெலாங்கடந்த தாளிணை திருமகள்

கரந்தொடப்பள்ளிமேவினன்' என்றார். கரியவன் - க்ருஷ்ணனென்பதன் மொழிபெயர்ப்பாம்; இது, அவதாரப்பெயராகாமல் திருமாலுக்குஉரிய பெராக வழங்கும். பி-ம்:—[1]இந்திரற்கென. [2]காட்டிற்றே. (௩௮)

௩௯.—முனிவன் இதுவே வேள்விக்கு ஏற்றஇடமெனல்.

ஆதலா லருவினை யறுக்கு மாரிய
காதலாற் கண்டவர் பிறவி காண்குறார்
வேதநூன் முறைமையால் வேள்வி முற்றுவேற்
கீதலா தில்லைவே றிருக்கற் பாலதே.

(இ - ள்.) அரு வினை அறுக்கும் ஆரிய-(அடியார்களது பிறரால் அழித்தற்கு) அருமையான கருமங்களை வேரோடு அழிக்கின்ற சிறந்த ஸ்ரீராமனே! ஆதலால் - (இந்தச்சோலை திருமால் தவஞ்செய்த இடம்) ஆகையால், காதலால் கண்டவர் பிறவி காண்குறார் - (இச்சோலையை) அன்புடனே பார்த்தவர்கள் (மீண்டும்) பிறத்தலை அடையமாட்டார்கள்; (ஆதலின்), வேதம் நூல் முறைமையால் வேள்வி முற்றுவேற்கு - வேதசாஸ்திரங்களிற் கூறியுள்ள விதிப்படி யாகத்தைச் செய்து முடிக்க வேண்டிய எனக்கு, ஈது அலாது - இவ்வாச்சிரமமே யல்லாமல், இருக்கல்பாலது - (யாகஞ்செய்ய) இருத்தற்கு உரிய இடம், வேறு இல்லை—; (எ - று.)

விஷ்ணுவும் காசியபனும் தவஞ்செய்து சித்திபெற்ற ஆச்சிரமமாதலால், தானும் யாகஞ்செய்து சித்திபெறுதற்கு இதனையே சிறந்தஇடமாகக் கருதினன், முனிவன். ஸ்ரீராமனது ஸர்வசக்திமுதலிய பரத்துவசின்னங்களைச் சிறிதும் உணராமற் சாதாரணமனிதனென்றுகருதிப் புத்திரவாஞ்சையாலே "படையூற்றமிலன் சிறிய னிவன்" என்று கூறுந் தசரதசக்கரவர்த்திக்கு விசுவாமித்திரன் "அஹம் வேத்மி மஹாத்மாநம் [யான்அறிவேன் பரமாத்மாவான ஸ்ரீராமனை] (நீஅறியாய்)" என்று உரைத்த தத்துவஞானபரிபூர்த்தியை யுடையவ னாதலால், 'அருவினையறுக்குமாரிய'என்று விளித்தான். அறுக்கும் என்பதை முற்றாகக்கொண்டு, அருவினை அறுக்கும் - இந்தஆச்சிரமம் போக்குதற்குஅரிய தீவினையையொழித்துத் தொடங்கிய செயலைச் சித்திபெறச்செய்யு மென்றும் உரைக்கலாம். ஆதலால் - இச்சோலையின் வரலாறு இதுவாகையால். பிறவிகாண்குறார் - முத்திபெறுவரென்றபடி; வீடு பெற்றவர்க்குமாத்திரமே மீண்டும் பிறப்பில்லை. வேதநூல்-பண்புத்தொகையாகவேனும், உம்மைத்தொகையாக வேனும் பொருள் கொள்க. முதலடி - முற்றுமோனை. (௩௯)

௪௦.—குமாரர்களைக் காவலாக ஏவி, முனிவன் வேள்விதொடங்குதல்.

ஈண்டிருந் தியற்றுவென் யாகம் யானென
நீண்டபூம் [1]பழுவத்து நெறியி னெய்திப்பின்
வேண்டுவ கொண்டுதன் வேள்வி மேவினன்
[2]காண்டகு குமரரைக் காவ லேவியே.

(இ - ள்.) ஈண்டு இருந்து - இவ்விடத்தி லிருந்துகொண்டு, யான் யாகம் இயற்றுவென் - நான் வேள்வியைச் செய்வேன், எனு - என்று (விசுவாமித்திரன் ஸ்ரீராமனுக்குச்) சொல்லி, நீண்ட பூ பழுவத்து - பெரிய அழகிய அச்சோலையிலே, நெறியின் எய்தி - வழியே நடந்துபோய், பின் - அதன்பின்பு, வேண்டுவ கொண்டு - (யாகத்துக்கு வேண்டிய) உபகரணங்களைச் சேகரித்துக்கொண்டு, காண் தகு குமரரை - (யாவராலும்) கண்டு மகிழத்தக்க ஸ்ரீராமலக்ஷ்மணர்களை, காவல் ஏவி - காவல்காக்க நியமித்து, தன் வேள்வி மேவினுன் - தான்செய்யக்கருதிய யாகத்தைத் தொடங்கினுன்.

ஏவி மேவினுன் எனஇயையும். முனிவன் அரக்கர்களாலுண்டாகுந் தீங்குகளினின்று தனது யாகத்தைக் காக்குமாறு குமாரர்கட்குக் கட்டளையிட்டு யாகஞ்செய்யத் தொடங்கினனென்க. காண்டகுகுமரர் - ஞானத்தாலுணரத்தக்க குமரருமாம். பி - ம்:—[1] பழுவத்தை. [2] காண்வரு. (௬0)

௬௧.—குமாரர்கள் யாகத்தைக் காத்தல்.

எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்றுநாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற விமையிற் காத்தனர்.

(இ - ள்.) மண்ணினை - பூலோகத்தை, காக்கின்ற - அரசாள்கின்ற, மன்னன் - தசரதசக்கரவர்த்தியினது, மைந்தர்கள் - குமாரர்களாகிய ஸ்ரீராமலக்ஷ்மணர்கள்,—விண்ணவர்க்கு - தேவர்கள் பொருட்டு, இரண்டு மூன்று நாள் - ஆறுதினங்களில், முனிவன் ஆக்கிய - விசுவாமித்திரன் செய்த, எண்ணுதற்கு ஆக்க அரிது - (பிறரால் செய்ய) நினைத்தற்குஞ் செய்தற்கும் அருமையுடையதான, வேள்வியை - யாகத்தை, கண்ணினை காக்கின்ற இமையின் - கண்ணைக் காப்பாற்றுகின்ற இமைகள்போல, காத்தனர் - இரட்சிப்பாரானுர்கள்; (எ - று.)

எண்ணுதற்கும் செய்தற்கும் ஆகாததெனவே, வாயினுற் சொல்லுதற்கும் ஆகாதென்பது தானே போதரும். எண்ணுதற்காக்கரிது - எண்ணுமைகள் தொக்கதனுல், வினைச்செவ்வெண்.

எண்ணுதற்கு ஆக்கரிது என்பதை, காத்தனரென்பதனேடு இயைத்து (இவர்செய்கின்றகாவல் பிறரால்) எண்ணுவதற்கும் செய்வதற்கும் அரிதாகுமாறு காத்தனரென்றும், இக்காவல் எண்ணுதற்கும் ஆக்குதற்கும் அரிது என்றுமுற்ருக்கியும் உரைப்பினுமாம். இனி, எண்நுதற்கு - எட்டுப்புருவங்களை [அதாவது நான்குமுகங்களை] யுடைய பிரமதேவனுக்கும், செய்தற்கு அரியது என்று உரைப்பாரும் உளர்; இப்பொருளில், எண்ணுதல் - பண்புத்தொகையன்மொழி. இரண்டு மூன்று நாள் - ஆறு நாள் என்க; பண்புத்தொகை. வேறுவகையாகப் பொருளுரைத்தற்கு இடமிருப்பினும், முதனூலுக்கு ஏற்ப, ஆறுதினமென்று பொருளுரைக்கப் பட்டது. இனி, நாள் என்பதை - நாளைக்குறிக்கின்ற நட்சத்திரங்களுக்கு ஆகுபெயரெனக் கொண்டு, இரண்டு மூன்று நாள் என்பதை உம்மைத்தொகையாக்கி, தன்கட்டளை

யினாற் பூதவுடம்புடனே சுவர்க்கலோகத்திற்குச் சென்ற திரிசங்கு மகாராசனை அவமதித்த தேவர்களைச் செருக்குஅடக்கும்பொருட்டு அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம் என்னும் ஐந்துநட்சத்திரங்களைத் தென்திசையில் விளங்கும்படி செய்த விசுவாமித்திரனது என்று பொருளுரைப்பது, நலிந்து பொருள்கோடலாம். மன்னன் மைந்தர்கள் வேள்வியைக் காத்தனர் என இயையும். இமை கண்ணைக் காத்தல் - புழுதிமுதலியவை வந்து விழாமல் தடுத்தல். மைந்தர்கள் வேள்வியைக் காத்தல் - இராட்சசர்களால் தீங்குநேராமற் காத்தல். 'கண்ணினைக் காக்கின்ற இமையிற் காத்தனர்' என்பதற்குக் கூறிவரும் பொருட்சிறப்புவருமாறு:— மேலிமை கீழிமை என்னும் கண்ணிமை இரண்டில் மேலிமை பெரியது, கீழிமை சிறியது: அன்றியும், மேலிமை அசைந்து கொண்டிருப்பது, கீழிமை அசையாமலிருப்பது: மேலிமைபோலப் பெரியவனாகிய இராமன் நிலைபெயர்ந்து கௌசிகமுனியாச்சிரமத்தின் நாற்றிசையிலும் இராக்கதர்கள்வந்து உபத்திரவஞ்செய்யாமலிருக்கும்பொருட்டுச் சக்கரஞ்சுற்றுவதுபோலச் சுற்றித்திரிந்து காவல் செய்தான்; கீழிமைபோலச் சிறியவனாகிய இலக்குமணன் உள்ளே ஒருவரும் பிரவேசியாதிருக்கும்பொருட்டு ஆச்சிரமத்தின் வாயிலில் அசையாதுநின்றபடி காவல்செய்தான்; இவ்விதமாகக் காவல்செய்யும் அவ்விருவரில் இராமன் ஆச்சிரமத்தின் புறத்திற் சுற்றிவரும்போதெல்லாம் மேலிமை கீழிமையை இமைத்திமைத்துத் தீண்டுவதுபோல வாயிலிலிருக்கின்ற இலக்குவனைக் கையினால் அடிக்கடிதட்டி, 'லக்ஷ்மணா, ஜாக்கிரதை' என்று எச்சரித்துக்கொண்டேவந்தான் என்பது. (௬௧)

**௬௨.—அரக்கர் எப்போது வருவரென்று இராமன் முனிவனை வினாதல்.**

**காத்தனர் திரிகின்ற காளை வீரரின்**
**மூத்தவன் முழுதுணர் முனியை முன்னிநீ**
**தீத்தொழி லியற்றுவ ரென்ற தீயவ**
**ரேத்தருங் குணத்தினாய் வருவதென் றென்றான்.**

(இ - ள்.) காத்தனர் திரிகின்ற - (இவ்வாறு யாகத்தைக்) காவல்செய்துகொண்டு உலாவிவருகின்ற, காளை வீரரில்-இளவெருதுபோன்றஇராகவவீரர்களிருவரில், மூத்தவன் - முன்னவனாகிய ஸ்ரீராமன், முழுது உணர் முனியை முன்னி - யாவும் அறிந்த விசுவாமித்திரனை (அடைந்து அவனை) நோக்கி, 'ஏத்து அரு குணத்தினாய் - (எவராலும்) புகழ்ந்துசொல்லுதற்கு முடியாத நற்குணங்களையுடையவனே! நீ தீத்தொழில் இயற்றுவர் என்ற தீயவர்-கொடுஞ்செயல்களைச் செய்வார்களென்று நீ சொன்ன கொடிய அரக்கர்கள், வருவது—, என்று-எப்பொழுது?' என்றான்-என்றுவினாவினான்; (எ-று.)

இதனால், துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனத்தில் இராமபிரானுக்கு உள்ள ஊற்றம் உணர்த்தப்படுகிறது. காளைவீரர் - இளம்பருவமுடைய சூரர். தீத்தொழில்-கொடுமையாகிய செய்கை; தீப் போன்ற தொழிலுமாம். ஏத்து அரு குணத்தினாய் - (யாவராலும்) புகழப்படுகின்ற (பிறரிடத்து) அருமையான குணங்களையுடையவனே என்றுமாம். "ஏத்தரும்மயிற்குழாம்" என்ற

சிந்தாமணியிற்போல, ஏ தரும் மேனோக்குதலைத் தருகின்ற, குணத்தினை என்றுமாம். கீழ்க்கவியினுரையிற்காட்டிய விசேஷார்த்தத்துக்குப் பொருந்த, காத்தனராகிய காளைவீரரில் திரிகின்ற மூத்தவன் என மொழிமாற்றி உரைத்தலும் ஒன்று. இரண்டாமடி - முற்றுமோனை. (௪௨)

௪௩.—முனிவன் மௌனியாயிருக்க, இராமன் வானத்தைக்காண்கையில் அந்த அரக்கர் ஆரவாரஞ் செய்தல்.

வார்த்தைமா றுரைத்திலன் முனிவன் மௌனியாய்ப்
போர்த்தொழிற் குமரனுந் தொழுது போந்தபின்
பார்த்தனன் விசும்பினைப் பருவ மேகம்போ
லார்த்தன ரிடித்தன ரசனி [1]யஞ்சவே.

(இ - ள்.) (அவ்வினாவிற்கு), முனிவன்-கௌசிகன்,மௌனி ஆய்-மௌனவிரதமுடையவனாய், (அதனால்), மாறு வார்த்தை உரைத்திலன் - உத்தரம் ஒன்றுஞ் சொன்னானில்லை; போர் தொழில் குமரன் உம் - யுத்தச்செய்கையிற்சிறந்த மைந்தனாகிய ஸ்ரீராமனும், தொழுது - (அவனை) வணங்கி, போந்த பின் - (வெளியே) வந்தவுடனே, விசும்பினை பார்த்தனன் - ஆகாயத்தை நோக்கினான்; (அப்பொழுது அங்கு), அசனி அஞ்ச - இடியும் அஞ்சும்படி, பருவம் மேகம் போல் - கார்காலத்து (நீர்கொண்ட) மேகம்போல, ஆர்த்தனர் இடித்தனர் - (அரக்கர்கள்) மிகப் பேராரவாரஞ்செய்தார்கள்.

யாகத்தில் தீட்சைகொண்ட விசுவாமித்திரனை நோக்கி, இராமன் யாகத்தைக் காக்கும்நிமித்தம் 'சுபாகுமாரீசர்முதலியோரை நாங்கள் தடுக்க வேண்டுவது எப்போது?'என்று வினவ, அருகிலிருந்தமுனிவர்கள்'விசுவாமித்திரர் யாகத்தில் தீட்சைகொண்டு அதற்குஉரிய மௌனவிரதத்தைப் பூண்டிருத்தலாற் பேசமாட்டார்; இன்றுமுதல் ஆறுநாள் காக்கவேண்டும்'என்று மறுமொழியுரைத்தனரென்றும்,அதுமுதல் ஐந்துநாள் கழிந்தபின் ஆறுநாள் சுபாகுமாரீசர் முதலிய அரக்கர் வந்தனரென்றும் ஸ்ரீவால்மீகம் கூறும். மௌனம் - பேசாவிரதம். 'பருவ மேகம்போல்' என்பதற்கு - பிரளயகாலத்து மேகம்போல என்றும்உரைக்கலாம். 'மேகம்போல்' என்பதற்கு ஏற்ப, 'இடித்தனர்' என்றார். ஆர்த்தனர் இடித்தனர் - ஒருபொருட்பன்மொழி. அசனி-வடசொல். எல்லாப்பிராணிகளுக்கும் அச்சத்தைவிளைக்கின்ற இடியும் அச்சத்தையடையஎன இராட்சசர்களினது ஆரவாரத்தின் பயங்கரமான தன்மையை வெளியிட்டார். மேகம், அரக்கர்க்கு ஆரவாரத்துக்குமாத்திரமேயன்றிக் கருநிறத்துக்கும் பெருவடிவுக்கும் வானத்தில் நிறைந்து உலாவுதற்கும் உவமை. பி - ம்.—[1]எஞ்ச, என்ன. (௪௩)

௪௪.—அரக்கர் செய்த தீத்தொழில்கள்.

எய்தன ரெறிந்தன ரெரியு நீருமாப்
பெய்தனர் பெருவரை பிடுங்கி வீசினர்
வைதனர் தெழித்தனர் [1]மழுக்கொண் டோச்சினர்
செய்தன [2]ரொன்றல தீய மாயமே.

(இ - ள்.) (அவ்வரக்கர்கள்), எய்தனர் - (அம்புகளைப்) பிரயோகித்தார்கள்; எறிந்தனர் - (வேல்முதலிய ஆயுதங்களை) மேல்வீசினார்கள்; எரி உம் நீர்உம் ஆ(க) பெய்தனர் - நெருப்பும் நீரு மாகச் சொரிந்தார்கள்; பெரு வரை பிடுங்கி வீசினர் - பெரிய மலைகளைப் பெயர்த்தெடுத்து எறிந்தார்கள்; வைதனர் - வசைச்சொற்களைச் சொன்னார்கள்; தெழித்தனர் - அதட்டினார்கள்; மழு கொண்டு ஓச்சினர் - மழுவாயுதத்தைக்கொண்டு வீசினார்கள்; ஒன்று அல தீய மாயம் செய்தனர் - ஒன்றல்லாத [பலவான] கொடிய மாயைகளைச் செய்தார்கள்; (எ - று.)

வரை என்னுங் கணுவின்பெயர், அதனையுடைய மூங்கிலுக்குச் சினையாகுபெயராய், அதுவிளையும் மலைக்குத் தானியாகுபெயராதலால், இருமடியாகுபெயர். மழு - பரசு என்னும் ஆயுதம்; கோடாலி: எரியிரும்புமாம். பி - ம்:—[1]மழுக்கள். [2]ஒன்றலாத்தீய. (௪௪)

௪௫.—அரக்கர்சேனை வானத்தில் வளைந்து பொருதல்.

ஊனகு படைக்கல முருத்து [1]வீசின
கானக [2]மறைத்தன கால மாரிபோன்
மீனகு திரைக்கடல் விசும்பு போர்த்தென
வானக [3]மறைத்தன [4]வளைந்த சேனையே.

(இ - ள்.) உருத்து-கோபித்து, வீசின-(அரக்கர்களால்) எறியப்பட்டனவான, ஊன் நகு படைக்கலம் - (பகைவருடலிற்பாய்தலால் அவர்களது) மாமிசம் (தம்மிடத்து) விளங்கப்பெற்ற ஆயுதங்கள்,காலம் மாரி போல்-கார்காலத்து அல்லதுபிரளயகாலத்துமழைபோல,கான் அகம் மறைத்தன-காட்டினிடம் முழுவதையும் மறைத்துவிட்டன; வளைந்த சேனை-(நாற்புறத்துஞ்) சூழ்ந்த (அரக்கர்) சேனைகள், மீன் நகு திரை கடல் விசும்பு போர்த்து என-மீன்கள் களித்திருக்குமிடமான அலைகளையுடைய கடல் (எழுந்து) ஆகாயத்தை மறைத்தாற்போல, வான் அகம் மறைத்தன - ஆகாயத்தினிடம்முழுவதையும் மறைத்துவிட்டன; (எ - று.)

கருநிறமுடைய அரக்கர் சேனை பல போர்க்கருவிகளுடனே வானத்து எழுந்து வளைந்தது - மீன் மிக்குள்ள கருங்கடல் வானத்து எழுந்து அவ்வானத்தைப் போர்த்ததுபோலு மெனக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. முன்னிரண்டடி - உவமையணி. ரக்ஷாக்நமந்திரத்தை முனிவர் ஜபித்தலால் நிலத்தில் வந்துபொர முடியாது வானத்திலேயே அரக்கர் நின்றனரென்பர். பி - ம்:—[1]வீசினர். [2]மறைத்தது, மறைத்தனர். [3]மறைத்தனர், மறைத்தது. [4]மறங்கொள் சேனையே. (௪௫)

௪௬.—அந்தச்சேனையின் வருணனை.

வில்லொடு [1]மின்னுவாண் மிடைந்து [2]லாவிடப்
பல்லியங் கடிப்பினி னிடிக்கும் பல்படை
யொல்லென வுரறிய வூழிப் [3]போர்ச்சியின்
வல்லைவந் தெழுந்ததோர் மழையும் [4]போன்றவே.

(இ - ள்.) வில்லொடு - விற்களும், மின்னு வாள் -மின்னுகின்ற வாளாயுதங்களும், மிடைந்து - (தம்மில்) நெருங்கி, உலாவிட - சஞ்சரியாநிற்க, (அவற்றைப்பிரயோகித்துக்கொண்டு), பல் இயம் கடிப்பினின் இடிக்கும்- பலவகைவாத்தியங்களைக் குறுந்தடியால் இடிபோலொலிக்கும்படி யடிக்கின்ற, பல் படை - பல (இராக்கத) சேனைகள், ஒல்லென உரறிய - ஒல்லென்று பேரொலிசெய்கின்ற, ஊழி பேர்ச்சியின் வல்லை வந்து எழுந்தது- யுகமுடிவில் (உலகம்) நிலை பெயருங்காலத்தில் (விடாப்பெருமழை பெய்து உலகை அழித்தற்கு) விரைவிற் கிளர்ந்துவந்ததாகிய,ஓர் மழைஉம்-ஒப்பற்ற மேகங்களையும், போன்ற - ஒத்திருந்தன; (எ - று.)

யுகாந்தகாலத்து மேகங்கள் மழையோடும் இடியோடும் வானத்திலெழுந்து வருவனபோல, அரக்கர்சேனைகள் ஆயுதவர்ஷத்தோடும் வாத்திய கோஷத்தோடும் வானத்தி லெழுந்து வந்தன வென்பதாம். 'மழையும்' என்ற உம்மை, இறந்ததுதழுவிய எச்சம்: கீழ் 'கடல்விசும்புபோர்த்தென' என்றதனை நோக்கியதனால். பி - ம்:—[1]பகழி. [2]மீதுலாய். [3]பேர்ச்சியுள். [4]போன்றதே. (சசு)

சஎ.—வந்த அரக்கரை இராமன் இலக்குவனுக்குக் காட்டுதல்.

கவருடை யெயிற்றினர் கடித்த வாயினர்
துவர்நிறப் பங்கியர் சுழல்கட் டீயினர்
பவர்சடை யந்தணன் பணித்த தீயவ
ரிவரென விலக்குவற் கிராமன் காட்டினான்.

(இ - ள்.) 'கவர் உடை எயிற்றினர் - பிளவுபடுதலையுடைய [இரட்டையாக வெளித்தோன்றுகின்ற] கோரதந்தங்களையுடையவர்களும், கடித்த வாயினர் - (பெருங்கோபத்தால் மடித்துக்)கடித்த வாயின்உதட்டையுடையவர்களும், துவர் நிறம் பங்கியர் - செம்மைநிறத்தையுடைய மயிரையுடையவர்களும், சுழல் கண் தீயினர் - சுழலுகின்ற கண்களில் நெருப்புப்பொறியையுடையவர்களும், (ஆகிய), இவர் - இவர்கள், பவர் சடை அந்தணன் பணித்த தீயவர் - நெருங்கிய சடையையுடைய விசுவாமித்திரமுனிவன் சொன்ன கொடிய அரக்கராவர்,' என - என்றுசொல்லி, இராமன் இலக்குவற்கு காட்டினான் - இராமன் இளையபெருமாளுக்குச் சுட்டிக் காண்பித்தான்; (எ - று.)

இனி, கவருடை யெயிற்றினர் - (பிறர்தசைகளைக் கடித்துக்)கவர்தலையுடைய பற்களையுடையவ ரென்றும், துவர் நிறம் - பவழம்போன்ற நிறமென்றுங் கூறலாம். பங்கி - ஆண்மயிர். கோபத்தாற் கண்கள் மிகச்சிவந்திருத்தல்பற்றியும் உருட்டிப்பார்த்தல் பற்றியும், 'சுழல்கட்டீயினர்' என்றார். கட்டீயினர் - கண்களாகிய நெருப்பை யுடையவர்களுமாம். (சஎ)

சஅ.—இலக்குமணன் இராமனிடத்து அவர்களை யிப்பொழுதே துண்டங் காண்பேனெனல்.

கண்டவக் குமரனுங் கடைக்கண் டீயுக
விண்டனை நோக்கித்தன் வில்லை நோக்கினு

னண்டர்நா யகவினிக் காண்டி[1]யீண்டவர்
துண்டம்வீழ் வனவெனத் தொழுது சொல்லினன்.

(இ - ள்.) (உடனே), கண்ட - (அவ்வரக்கர்சேனையைப்) பார்த்த, அ குமரன்உம் - அவ்விளையபெருமாளும், கடைக்கண் தீ உக - (கோபத்தாற்) கடைக்கண்களினின்றும் நெருப்புப்பொறி சிதற, விண்தனைநோக்கி - ஆகாயத்தைப் பார்த்து, தன் வில்லை நோக்கினன் - தனது வில்லையும் பார்த்து, (ஸ்ரீராமனை நோக்கி), 'அண்டர் நாயக - தேவர்தலைவனே! இனி - இப்பொழுதே, ஈண்டு - இவ்விடத்தில், அவர் துண்டம் வீழ்வன - அவர்களது சரீர கண்டங்கள் கீழ்விழுவனவற்றை, காண்டி - பார்ப்பாயாக,' என - என்று, தொழுது சொல்லினன் - வணங்கிச் சொன்னான்; (எ - று.)

'விண்தனை நோக்கித் தன்வில்லை நோக்கினன்' என்றதனால், ஆகாயத்தில்வந்து வளைந்து நிறைந்திருக்கிற அரக்கரனைவரையுங் கணப்பொழுதில் அழிக்கவல்ல வில்வித்தைவல்லமை விளங்குகின்றது.' இனி' என்பது - இப்பொழுதென்னும்பொருளது; "இனிநினைந்திரக்கமாகின்று" என்ற இடத்துப்போல. பி - ம்:—[1] ஈண்டிவர். (௪அ)

௪௯:—யாகசாலையில் அரக்கர் இரத்தம் முதலியன சிந்தாதபடி இராமன் சரகூடம் கட்டுதல்.

தூமவே லரக்கர்தந் நிணமுஞ் சோரியு
மோமவெங் கனலிடை யுகுமென் [1]றுன்னியத்
தாமரைக் கண்ணனுஞ் சரங்க ளேகொடு
கோமுனி யிருக்கையோர் கூட மாக்கினன்.

(இ - ள்.) 'தூமம் - (கோபாக்கினியின் மிகுதியாற்) புகையெழுகின்ற, வேல் - வேலாயுதத்தையுடைய, அரக்கர்தம் - இராக்கதர்களது, நிணம்உம் - (உடம்பின்) மாமிசமும், சோரிஉம் - இரத்தமும், ஓமம் வெம் கனலிடை - (யாகத்தின் வெவ்விய) ஓம அக்கினியிலே, உகும் - விழுதல்கூடும்,' என்று உன்னி - என்றுநினைத்து, அ தாமரைக்கண்ணன்உம் - செந்தாமரைமலர் போன்ற திருக்கண்களையுடைய அவ்விராமபிரானும், சரங்கள் ஏ கொடு - தனது பாணங்களைக்கொண்டே, கோ முனி இருக்கை - சிறந்த கௌசிக முனிவனது இருப்பிடத்துக்கு, ஓர் கூடம் ஆக்கினன் - ஒரு மேல்மறைவைச் செய்தருளினன்; (எ - று.)

காத்தல்தொழிலையேயன்றி அழித்தல்தொழிலைக்கைகொண்ட முக்கட் கடவுட்கும் கூற்றுவனுக்கும் சூலவேல் படையாதலாலும், அசுரர்களை யழித்தற்கென்று அவதரித்த முருகக்கடவுட்கும் வேல் படையாதலாலும், சான்றோரெல்லாம் வேற்படையையே சிறப்பப் பெரும்பான்மை கூறுதல் பற்றி, இங்கு 'தூமவேலரக்கர்' என வேலைக்கூறி, மற்றையாயுதங்களை உபலக்ஷணத்தாற் பெறவைத்தார். அரக்கரதுகோபத்தை வேலின்மேலேற்றி, வேலுக்குத் தூமமென்னும் அடைமொழி கொடுக்கப்பட்டது. இனி, தூமம் வேல் அரக்கர்-புகைநிறமுடையவரும் வேற்படையுடையவருமாகிய அரக்க

ரென்றுமாம். வேல் - அரக்கர்க்குச் சாதியடை. சோரி - (உடம்பினின்று) சொரிவது எனக் காரணப்பெயர். ஓமம் - ஹோமம். கோமுனி - முனியரசன்: இருடிச் சிரேஷ்டன்; அன்றிக்கே, முன் அரசனாயிருந்து இப்பொழுது முனிவனானவன். கூடம்-பந்தர்போகட்டதுபோலவும், வீட்டிற்குக் கூரை வேய்ந்தாற்போலவும் அம்புகளால் இடைவிடாமல் மேலேதொடுக்கும் பின்னற்செறிவு. பி - ம்:—[1] துன்னியே. (௪௯)

**௫௦.—அப்போது முனிவர்கள் அரக்கர்கட்கு அஞ்சி ஸ்ரீராமனை அபயம் வேண்டுதல்.**

நஞ்சட வெழுதலு நடுங்கி நாண்மதிச்
செஞ்சடைக் கடவுளை யடையுந் தேவர்போல்
வஞ்சனை யரக்கரை வெருவி மாதவ
ரஞ்சன வண்ணநின் னபயம்யா மென்றார்.

(இ - ள்.) நஞ்சு - (திருப்பாற்கடல்கடைந்தகாலத்து அதனினின்று தோன்றிய) ஆலாகலவிஷமானது, அட - (யாவரையுங்) கொல்லுமாறு, எழுதலும் - மேலே கிளர்ந்தவளவில், நடுங்கி - (அச்சத்தால்) நடுக்கமுற்று, நாள் மதி செம் சடை கடவுளை அடையும் - புதிய [ஒற்றைக்கலையுள்ள] இளஞ்சந்திரனைத்தரித்த சிவந்த (கபர்த்தமென்னுஞ்)சடையையுடைய பரமசிவனைச் சரணமடைந்த, தேவர் போல் - (இந்திரன்முதலிய) தேவர்கள் போல, மா தவர் - மிக்கதவமுடைய முனிவர்கள் யாவரும், வஞ்சனை அரக்கரை வெருவி - வஞ்சனையையுடைய இராட்சசர்களுக்குப்பயந்து, (ஸ்ரீராமனை அடைந்து), 'அஞ்சனம் வண்ண-மைபோலக் கரிய திருநிறமுடையவனே! யாம் நின் அபயம் - நாங்கள் உனக்கு அடைக்கலம்,' என்றார் - என்று சொன்னார்கள்; (எ - று.)

நின் அபயம் யாம் - பயப்படாதேயுங்கள் என்று சொல்லி உன்னாற் காக்கப்படும்பொருளாவோம் நாங்கள்;உன்னையன்றி வேறுசரணமில்லோம் என்றவாறு. நீலநிறமுள்ளவனும் கடவுளுமாகிய ஸ்ரீராமபிரானுக்குநீலகண்டனாகிய முக்கட்கடவுளும், பூதேவராகிய பிராமணர்க்குத் தேவர்களும், கருநிறமுள்ளவரும் அகப்பட்டாரைக்கொல்லுகின்றவரு மாகிய அரக்கர்க்குக் கரிய கொடிய விஷமும் உவமையெனக் காண்க. பாற்கடலிலிருந்து உண்டான கொடியவிஷமும் குளிர்ந்தசந்திரனும் திருமாலாற் சிவனுக்குக்கொடுத்தருளப்பட்டன வென்பதை மேற்படலத்தில் அறிக. நடுக்கம்-அச்சம்பற்றிய மெய்ப்பாடு. தேவர் என்பதற்கு - விண்ணுலகத்துஉள்ளவ ரென்றும், விளங்குபவ ரென்றும் அவயவப்பொருள். (௫௦)

**௫௧.—முனிவர்கட்கு அபயமளித்து இராமன் அரக்கரைப் பொருது கொல்லுதல்.**

கவித்தனன் கரதலங்[1] கலங்க லீரெனச்
செவித்தல நிறுத்தினன் சிலையின் றெய்வநாண்
புவித்தலங் குருதியின் புணரி யாக்கினன்
குவித்தன னரக்கர்தஞ் சிரத்தின் குன்றமே.

(இ - ள்.) (அப்பொழுது ஸ்ரீராமன்),—(முனிவர்களைநோக்கி), நீர் கலங்கல் என - 'நீங்கள்(ராக்ஷசபயத்தால்)மனக்கலக்கமடையவேண்டாம்'என்று சொல்லி, கரதலம் கவித்தனன் - (தனது) கைகளினிடத்தை அமர்த்தி [அபயஹஸ்தமளித்து], சிலையின் தெய்வம் நாண்-(தனது கோதண்டமென்னும்) வில்லினது தெய்வத்தன்மையையுடைய நாணியை,செவி தலம் நிறுத்தினன் - காதுகளினிடத்திலே நிற்கச்செய்து [வில்லைவளைத்து நாணியைக் காதளவும் இழுத்து அம்பெய்து], புவி தலம் குருதியின் புணரி ஆக்கினன் - பூமியின் இடம் முழுவதையும் (அரக்கர்களது) இரத்தசமுத்திரமாகச் செய்து, அரக்கர்தம் சிரத்தின் குன்றம் குவித்தனன் - இராக்கதர்களது தலைமலைகளைக் குவித்தான் ; (எ - று.)

நாணிக்குத் தெய்வத்தன்மையாவது - ஓசையைக்கேட்டமாத்திரத்திற் பகைவர்களை அஞ்சி நடுங்கிக் கலங்கி யிறக்கச்செய்தல். குருதியின் புணரி ஆக்கினன் என்பதற்கு - இரத்தவெள்ளம் கடல்போலப்பரவிப் பெருகியதென்றும், சிரத்தின் குன்றம் குவித்தனன் என்பதற்கு - அறுபட்டதலைகள் ஒன்றின்மேலொன்று விழுந்து மலையாகக்குவிந்து கிடந்தன வென்றும் கருத்து. பி - ம்—[1] கலங்கலிர். (௬௧)

**ருஉ.—இராமன் அஸ்திரங்களால் மாரீசனைக் கடலில்தள்ளிச் சுபாகுவைக் கொல்லுதல்.**

திருமக ணாயகன் றெய்வ வாளிதான்
வெருவரு தாடகை பயந்த வீரர்க
ளிருவரி னொருவனைக் கடலி னிட்டதங்
கொருவனை யந்தக புரத்தி னுய்த்ததே.

(இ - ள்.) திருமகள் நாயகன்-இலக்குமிக்குக்கொழுநனான ஸ்ரீராமனது, தெய்வம் வாளி - தெய்வத்தன்மையையுடைய அஸ்திரமானது, வெருவரு தாடகை பயந்த வீரர்கள் இருவரின் - (யாவரும்) அஞ்சுதற்குக் காரணமான தாடகையென்பவள் பெற்ற இரண்டுவீரர்களுள், ஒருவனை - ஒருத்தனாகிய மாரீசனை, கடலின் இட்டது - கடலிலே கொண்டுபோய்ப் போகட்டது, ஒருவனை - மற்றொருவனை, அந்தகன்புரத்தின் உய்த்தது - யமலோகத்திற் கொண்டுபோய்ச் சேர்த்தது [கொன்றதென்றபடி] ; (எ - று.)

மாரீசன்மேல் மானவாஸ்திரமும், சுபாகுவின்மேல் ஆக்கினேயாஸ்திரமும், பிறர்மேல் வாயவியாஸ்திரமும் பிரயோகிக்கப்பட்டனவென்று முதனூல் கூறும். திருமாலினது ஏழாவது அவதாரமான இராமபிரானுக்கு விரைவிலேநேரப்போகின்ற திருமகளினது திருவவதாரமான சீதாபிராட்டியினது கலியாணமும் இப்பொழுதுநேர்ந்த ஜயலக்ஷ்மியினது சேர்க்கையுந் தோன்ற, இங்கே 'திருமகள்நாயகன்' என்றார். வாளிக்குத் தெய்வத்தன்மையாவது - குறித்த இலக்குத் தவறாமையும், எய்தவனது கருத்தின்படி தொழில்செய்தலும். வெருவு அரு எனப் பிரித்து - (எவருக்கும் தான்) அஞ்சுதலில்லாத, தாடகை எனினும் அமையும்; இவ்வடைமொழியை வீரர்களுக்குக் கூட்டுதலுமாம். அந்தம்-முடிவு; அதனை யாவர்க்குஞ் செய்பவன்-அந்தகன். (௬௨)

௫௩.—எஞ்சிய அரக்கர் இராமபாணங்கட்கு அஞ்சியோடுதல்.

துணர்த்தபூந் [1]தொடையலான் பகழி தூவினன்
கணத்திடை விசும்பினைக் கவித்துத் [2]தூர்த்தலாற்
பிணத்திடை நடந்திவர் பிடிப்ப ரீண்டென
வுணர்த்தின ரொருவர்மு னொருவ ரோடினார்.

(இ - ள்.) துணர்த்த பூ தொடையலான்-பூங்கொத்துக்களாலமைந்த அழகிய மாலையையுடைய ஸ்ரீராமன், பகழி தூவினன் - (மற்றையிராக்கதர்களின்மேற் பல)பாணங்களைப் பொழிந்தான்; (அப்பாணங்களெல்லாம்), கணத்திடை - க்ஷணப்பொழுதினுள்ளே, விசும்பினை கவித்து தூர்த்தலால் - ஆகாயத்தை மறைத்து முழுவதும் நிறைத்துவிட்டதனால் [சென்று அனேகரைக் கொன்றதனாலென்றபடி], (இறந்தவர் ஒழிந்த அரக்கர்கள்), இவர் ஈண்டு பிணத்திடை நடந்து பிடிப்பர் என உணர்த்தினர் - இவ்விராகவவீரர்கள் இப்பொழுது பிணமலைகளின்மேலே (விரைந்து) நடந்து வந்து (நம்மை உயிரோடு) பிடித்துக்கொள்வார்கள் என்று (ஒருவருக்கொருவர்) தெரிவித்துக்கொண்டவர்களாய், ஒருவர்முன் ஒருவர் ஓடினார் - ஒருவர்க்கு முன் ஒருவராக (யாவரும் விரைந்து) ஓடுவாரானார்கள்; (எ - று.)

இராக்கதர் ஆகாசசஞ்சாரிகளும் மனிதர் பூலோகசஞ்சாரிகளும் ஆதலால், 'பிணத்திடைநடந்து பிடிப்பர்' என்றார். துணர்த்த - குறிப்புப்பெயரெச்சம்; துணர் - பூங்கொத்து; பகுதி. கணம் - வடசொற்றிரிபு. ஈற்றடி - முற்றுமோனை. பி - ம்:—[1]தொடையினன். [2]தூர்த்தது. (௫௩)

௫௪.—படுகளச்சிறப்பு.

[1]ஓடின வரக்கரை யுருமின் வெங்கணை
[2]கூடின குறைத்தலை மிறைத்துக் கூத்துநின்
றாடின வலகையு மையன் கீர்த்தியைப்
பாடின பரந்தன பறவைப் பந்தரே.

(இ - ள்.) ஓடின அரக்கரை - (அங்ஙனம்) ஓடிப்போகத்தொடங்கின இராக்கதரை, உருமின் வெம் கணை-இடிபோற்பயங்கரமான கொடிய இராமபாணங்கள், கூடின - விடாதுபின்தொடர்ந்துசேர்ந்தன; (அதனால்), குறை தலை - (அவ்வரக்கர்களது) தலையற்றஉடம்புகள் [கபந்தங்கள்], மிறைத்து கூத்து நின்று ஆடின-துடித்துநின்று நர்த்தனஞ்செய்தன; அலகைஉம் ஐயன் கீர்த்தியை பாடின - (அங்குப் பிணந்தின்னவந்த) பேய்களும் (தங்களுக்குத் திருப்தியுண்டாக உணவைக்கொடுத்தருளின உபகாரத்தைநோக்கி) ஸ்ரீராமனது புகழைப் பாடல்பாடித் துதித்தன; பறவை பந்தர் பரந்தன - (பிணந்தின்னவந்த கழுகுமுதலிய) பக்ஷிகளாலாகிய பந்தல்கள் பரவின; (எ - று.)

சுத்தவீரனாகிய ஸ்ரீராமபிரான் புறங்கொடுத்து ஓடின அரக்கரைப் பின்பு கொன்றது குற்றமாகுமன்றோ எனின்,—புறங்கொடுப்பதற்கு முன்னமே இராமனெய்த அம்புகள் ஓடத்தலைப்பட்டவர்களினும் விரைந்து சென்று அவர்களை வதைத்தனவே யன்றி, அவர்களோடினபின்பு அவர்

களின்மீது இராகவபிரான் அம்புதொடுத்தானில்லை யென்க. குறைத்தலை - குறைதலையுடைய தலையையுடையது: வேற்றுமைத்தொகையன்மொழி. கோபத்தோடு விரைந்து போர்செய்துநின்ற வீரர்களது உடம்புகள் தலையறு பட்டபின்பு பதைபதைத்துக் கைகால்கள் துடிப்பனவற்றைக் கூத்தாடி நின்றனவாகக் குறித்தார். பறவைப்பந்தர் பரந்தன - பறவைகள் பந்தலிட்டாற்போல மேலே இடைவிடாமற் பரவின என்றபடி. மிறைத்து - விறைத்து எனினுமாம். பி - ம்:—[1] ஓடிய. [2] கூடிய. (௫௪)

௫௫.—வானவர் பூமழைபொழிந்து அந்தரதுந்துமிமுழக்கி வாழ்த்துதல்.

பந்தரைக் கிழித்தன பரந்த பூமழை
யந்தர துந்துமி [1]முகிலி னார்த்தன
விந்திரன் முதலிய வமர ரீண்டினர்
சுந்தர வில்லியைத் தொழுது வாழ்த்தினர்.

(இ - ள்.) பூ மழை -(தேவர்களினால் இராமலக்குமணர்மீது சொரிந்த) புஷ்பவர்ஷங்கள், பந்தரை கிழித்தன பரந்த - (பறவைப்) பந்தலை (இடையிடையே) கிழித்துக்கொண்டு பரவின; அந்தரம் துந்துமி - ஆகாயத்திலே (தேவர்களினால் அடிக்கப்படுகின்ற) பேரிகைகள், முகிலின் ஆர்த்தன- மேகங்கள் (இடிமுழங்குவன) போல முழங்கின; (அப்பொழுது), இந்திரன் முதலிய அமரர் - இந்திராதிதேவர்கள், ஈண்டினர் - (வானத்தில்) திரண்டு வந்து, சுந்தரவில்லியை - அழகிய கோதண்டத்தையுடைய ஸ்ரீராமனை, தொழுது - வணங்கி, வாழ்த்தினர் - மங்கலவாழ்த்துக்கூறினர்; (எ - று.)

'பந்தரைக்கிழித்தன பரந்தபூமழை' என்றது, மலர்மாரியினது மிகுதி தோன்றுதற்கு. வில்லுக்குச்சுந்தரத்தன்மையாவது - இராமனது திருக்கையின் சேர்த்தியா லுண்டான அழகு; அன்றியும், எம்பெருமானுக்கு வில் முதலியன எல்லாம் சத்துருசங்காரகாலத்து ஆயுதகோடியிலேயாயிருந்து அவர்களை அஞ்சுவித்துப் பிறகாலத்து ஆபரணகோடியிலேயாய் அழகுசெய்து நிற்கு மென்ற கருத்தும் விளங்கும். தேவாதிதேவனாகிய ஸ்ரீராமபிரானை அவனிலுங்கீழ்ப்பட்ட தேவர்கள் வாழ்த்துவதுஎன்னெனின்,—மிக்க இளமைப்பருவத்திலேயே துஷ்டராக்ஷசர்கள்பலரைஒருங்கேநாசஞ்செய்து தங்களுக்கு உபகரித்த இராமமூர்த்தியினது திருமேனி கண்ணெச்சில்படாமே நெடுங்காலம் நிலைத்துநிற்கவேண்டுமென்று பரமப்பிரீதி தலையெடுத்ததனாலென்க. ஆழ்வார்முதலியோர் மங்களாசாசனஞ்செய்தலையும் ஸ்ரீவசனபூஷணத்திற் பொங்கும் பரிவினாற் செய்வதாற் பொருந்து மென்று தடைவிடைகளால் நிறுவியதுங் காண்க. அன்றியும், "ஆத்மாநம் மாநுஷம் மந்யே [என்னை மனிதனாகவே யான் நினைக்கிறேன்]" என்று கூறுமவனைத் தேவர்கள்வாழ்த்துவது முறைமையேயாம். பி - ம்:—[1] முழங்கியார்த்தன.

௫௬.—முனிவன் வேள்வியை முற்றுதல்.

புனித மாதவ[1] ராசியின் பூமழை பொழிந்தா
ரனைய கானத்து மரங்களு மலர்மழை [2]சொரிந்த

முனியு மவ்வழி வேள்வியை [3]முறைமையின் முற்றி
யினிய சிந்தைய னிராமனுக் [4]கினையன விசைத்தான்.

(இ - ள்.) புனிதர் மா தவர் - பரிசுத்தரான மிக்கதவமுடைய முனிவர்களும், ஆசியின் பூமழை பொழிந்தார் - ஆசீர்வாதத்தோடு மலர்மாரியைச் சொரிந்தார்கள்;(அன்றியும்), அனைய கானத்து மரங்கள்உம் - அந்தக்காட்டிலுள்ள விருக்ஷங்களும், அலர் மழை சொரிந்த - பூமாரியைப் பொழிந்தன; முனிஉம் - விசுவாமித்திரனும், அ வழி - அப்பொழுது, வேள்வியை - யாகத்தை, முறைமையின் - விதிப்படியே, முற்றி - முடித்துவிட்டு, (உடனே), இனிய சிந்தையன் - இனிமையான மனத்தையுடையவனாய், இராமனுக்கு - இராமசந்திரனுக்கு, இனையன - இத்தன்மையனவான உபசாரவார்த்தைகளை, இசைத்தான் - சொல்வானானன்; (எ - று.)—அதனை மேற்கவியிற் காண்க.

ஆசி-ஆசிஸ்: வடமொழி. ஆசியின் பூமழை பொழிந்தார் என்பதற்கு - ஆசீர்வாதமாகிய மலர்களைச்சொரிந்தா ரென்றுமாம். 'மரங்களும்' என்ற இழிவுசிறப்பும்மை - சித்தாச்சிரமத்திலுள்ள ஓரறிவுயிராகிய விருட்சங்களுக்கும் அக்காலத்தில் எம்பெருமான்பக்கல் உண்டான அன்பின்மிகுதியை விளக்கிற்று. மலர்மழை எனப்பிரித்தல் மோனைத்தொடைக்குப் பொருந்தாது. இராமன் என்னுஞ் சொல்லில் இராத்திரிக்கு அரசன் [அதாவது நிசாபதியாகிய சந்திரன்] என்றும் ஒருபொருள் தொனித்தலால், இரட்டுறமொழிதலாய்ச் சிலிஷ்டரூபகமாக, இராமன் என்பதற்கு - இராமசந்திரன் என்று உரைக்கப்பட்டது; குளிர்ந்ததன்மையாற் சந்திரன்போன்ற இராமனென்க. இனி, இராமன் என்பதை ஈறுகெட்டஎதிர்மறைப்பெயரெச்சத் தொடராகக் கொண்டால், (உலகத்தில் தன்னை யொப்பார் எவரும்) இராத அரச னென்ற அருத்தந் தோன்றும். பி - ம்:—[1]ஆசியம். [2]பொழிந்த. [3]முறைநெறி. [4]இன்னன. (௩௬)

௫௭.—விசுவாமித்திரன் இராமனிடங் கூறிய முகமன்.

பாக்கி யம்மெனக் குளதென நினைவுறும் பான்மை
போக்கி நிற்கிது பொருளென வுணர்கிலென் புவன
மாக்கி மற்றவை யகிலமு மணிவயிற் றடக்கிக்
காக்கு நீயொரு வேள்விகாத் தனையெனுங் கருத்தே.

(இ - ள்.) புவனம் ஆக்கி - எல்லாவுலகங்களையும் (ஆதிகாலத்திற் பிரமரூபியாய்ப்) படைத்தருளி, மற்று - பின்பு [பிரளயகாலத்தில்], அவை அகிலம்உம் - அவ்வுலகங்கள் எல்லாவற்றையும், அணி வயிறு அடக்கி - அழகிய திருவுதரத்திலே அடங்கச்செய்துவைத்து, காக்கும் - காத்தருளுகிற, நீ—, ஒரு வேள்வி காத்தனை - (எனது சிறிய) யாகமொன்றைக் காத்தருளினாய், எனும் கருத்து - என்கிற எண்ணத்தினால், பாக்கியம் எனக்கு உளது என நினைவுறும் பான்மை போக்கி - (பொருளல்லாத என்னை நீ ஒருபொருளாக மதித்துவந்து உன்னால் வேள்வி காக்கப்படுதற்கு ஏதுவானதொரு) நல்வினை எனக்கு இருந்ததென்று (யான்) எண்ணுவேனேயன்றி அத்தன்மையை

ஒழித்து, நிற்கு இது பொருள் என உணர்கிலென் - (சர்வரக்ஷகனுன) உன க்கு இந்தயாகரக்ஷணம் ஒருபெருங்காரியமென்று அறிகிறேனில்லே; (எ-று.)

உலகங்களையெல்லாம்படைத்தளித்தழிக்கும்ஆற்றலுள்ளஉனக்கு இந்த யாகத்தைக்காத்தல் அரியதொருதொழிலாக நினைக்கின்றிலேன்; பின்னை எவ்வாறு நினைப்பேனெனின், எனது பூர்வஜன்மசுகிருதவிசேஷத்தால் நீ இங்ஙனம்வந்து அருள்செய்தாயென்றே கருதுவேன் என்பது கருத்து. இதனால் எம்பெருமானது சர்வசக்தியும், பரத்துவமும், தன்பக்கல்பக்தியை யுடையஅடியார்க்கு மிகஎளியனாகிற சௌலப்பியமும், முற்பிறப்பிற்செய்த பெரியபாக்கியமிருந்தாலன்றிப் பரமாத்துமாவினது பேரருளைப்பெறுதல் முடியாதென்பதும்,அப்படிப்பட்ட பரமபாக்கியம் தனக்குப்பூர்த்தியாகஅமை ந்துள தென்பதும் இவைமுதலியவிசேஷார்த்தங்கள் விசுவாமித்திரனால் வெ ளியிடப்பட்டன. "ஆக்குமாறயனாமுதலாக்கியவுலகங்,காக்குமாறு செங்கண் ணிறை கருணையங் கடலாம், வீக்குமா றரனும்" என்பது சாஸ்திரசித்தாந்த மாதலால், 'புவனமாக்கி மற்றவையகிலமுமணிவயிற்றடக்கிக்காக்குநீ' என் ருர். பிரமன்முதலான சகலதேவர்களு முட்பட யாவும் அழிந்துபோகின்ற யுகாந்தகாலத்தில் ஏகார்ணவமான மகாப்பிரளயசமுத்திரத்திலே ஸ்ரீமகா விஷ்ணு அண்டங்களையெல்லாந் தன்வயிற்றில் வைத்து அடக்கிக்கொண்டு சிறுகுழந்தைவடிவமாய் ஆதிசேஷாம்சமான ஆலிலையின்மீது பள்ளி கொண்டு தனது மாயாசொரூபமான யோகநித்திரையைக் கைக்கொண்டு திருக்கண்வளர்ந்தருளுகின்றன னென்பது, புராணவரலாறு. தன்னுட் சென்றபொருள்களைச் சீரணிக்கப்பண்ணுதல் வயிற்றுக்கு இயற்கையா யிருக்கவும் அங்ஙனஞ்செய்யாமல் எல்லாவுலகங்களுக்கும் பிரளயஆபத்தில் ஒதுங்குதற்கு இடங்கொடுத்து ஒருகுறையும் நேராமற் பாதுகாத்து அவ ற்றை மீட்டும் வெளிநாடுகாண உமிழ்ந்தருளின விசித்திரந் தோன்ற, 'அழ கிய வயிறு' என்ருர். மணிவயிறு என்றும் பிரிக்கலாம்; பொருள் இதுவே: நீலநிறமுள்ள திருவயிறென்றுங் கொள்ளலாம்; "உய்யவுலகு படைத் துண்டமணிவயிறு" என்ருர்பெரியாரும். பாக்கியம்மெனக்கு-விரித்தல்.

௫அ.—'இன்று எனக்குப்பணியாது?' என்று இராமன் முனிவனை வினவுதல்.

என்று கூறிய பின்னரவ் வெழின்மலர்க் கானத்
தன்று தா[1]னுறைந் தருந்தவ முனிவரோ[2]டிருந்த
குன்று போற்குணத் தானெதிர் [3]கோசலை குரிசி
லின்றி யான்செயும் பணியென்கொல் பணியென விசைத்தான்.

(இ - ள்.) என்று கூறிய பின்னர் - இவ்வாறுசொன்னபின்பு, எழில் மலர் அ கானத்து - எழுச்சியையுடைய பூக்களையுடைய அச்சோலையில்தா னே, அன்று - அன்றைத்தினத்தில், அரு தவம் முனிவரோடு - (பிறராற் செய்தற்கு) அருமையான தவத்தைச் செய்துள்ள பல இருடிகளுடனே, உறைந்து இருந்த - வசித்திருந்த, குன்று போல் குணத்தான் எதிர் - மலை கள்போன்ற நற்குணங்களையுடைய விசுவாமித்திரனது முன்னிலையில், கோசலை குரிசில்-கௌசல்யாதேவியினது குமாரனாகிய ஸ்ரீராமபிரான், (மறு

நாட்காலையிலே போய்த் தொழுதுநின்று), 'இன்று யான் செயும் பணி என் கொல் - இன்றைக்கு அடியேன் செய்யவேண்டுங் கட்டளை யாது? பணி - நியமித்தருளுவாயாக,' என - என்று, இசைத்தான் - (அம்முனிவனைநோக்கி) விஞவியருளினன்; (எ - று.)

அக்கானமென இயையும். 'எழிலாவது - வளர்ந்து அமைந்த பருவத்தும் இதுவளர்ந்துமாறியதன்றி இன்னும்வளரு மென்பதுபோன்று காட்டுதல்' என்றார், ஆசிரியர் நச்சினார்க்கினியர்; இதனால், எழில் என்பதற்கு - வளர்ச்சியென்று பொருளென்றும், இச்சொல் தொழிற்பெயரென்றும், எழு - பகுதி, இல் - விகுதி என்றும் அறிக: இதற்கு - அழகு என்னும் பொருளும் உண்டு. குணங்கள் - துறவு, மெய்யுணர்வு, அவாவின்மை முதலியன. சலியாமையும் பெருமையும்பற்றி, குணங்களுக்குக் குன்று உவமைகூறப்பட்டது; "குணமென்னுங்குன்று" என்றார், திருவள்ளுவனாரும். கோசலை குரிசிலென்கிறது - தசரதசக்கரவர்த்தி ஸ்ரீராமனுக்குப் பட்டங்கட்ட முயன்று தன்னெண்ணங் கைகூடாமல் இடையே மரித்தானாக இவளே புதல்வனாற் பெறக்கூடிய இன்பத்தை முழுதும்பெற்றன ளாதலாலும், பட்டமகிஷியின்புதல்வ னென்பதால் இவனே அரசுக்குஉரியவ னெனப் பெறப்படுமாதலாலு மென்பர். பணி என - கூறுவாய் என்று (இராமன்) சொல்ல, இசைத்தான்- (கௌசிகமுனி) கூறுவானானான் என்றுமாம். [3]கோசலக்குரிசில் என்னும் பாடத்துக்கு - கோசலதேசத்து அரச னென்க. பி - ம்:— [1]உவந்து. [2]இருந்தான். (௫௮)

௫௯.—முனிவன் சனகராசனதுவேள்வியைக்காணப்போவோமென்ன, மூவரும் மிதிலைக்குப் புறப்படுதல்.

அரிய யான் [1]சொலி னையநிற் கரியதொன் றில்லை
பெரிய காரிய முளவவை முடிப்பது பின்னர்
விரியும் வார்புனன் மருதஞ்சூழ் மிதிலையர் கோமான்
புரியும் வேள்வியுங் காண்டுநா மெழுகென்று [2]போனார்.

(இ - ள்.) 'ஐய - தலைவனே! யான் அரிய சொலின் - நான் (செய்தற்கு) அருமையையுடையனவென்று சிலகாரியங்களைச் சொன்னால், நிற்கு அரியது ஒன்று இல்லை - உனக்குச் (செய்ய) அருமையானது ஒருதொழிலுமில்லை; பெரிய காரியம் உள - (செய்யத்தக்க) பெருந்தொழில்கள் (சில) உள்ளன; அவை முடிப்பது பின்னர் - அவற்றை நிறைவேற்றுவது பின்பு (ஆகக்கடவது); (இப்பொழுது), விரியும் - பரவிப்பாய்கின்ற, வார் - நீண்ட [மிகுந்த], புனல் - நீர்வளமுள்ள, மருதம் - மருதநிலத்தால் [கழனிகளால்], சூழ் - சூழப்பட்ட, மிதிலையர் - மிதிலாநகரத்திலுள்ள ஜனங்களுக்கு, கோமான்-அரசனாகிய ஜனகமகாராஜன், புரியும்-செய்கின்ற, வேள்விஉம் - யாகத்தையும், நாம் காண்டும்-நாம்போய்ப்பார்ப்போம்: எழுக - புறப்படுவாயாக,' என்று - என்று (விசுவாமித்திரன்சொல்ல), (உடனே), போனார் - (ராமலக்ஷ்மணர்களும் விசுவாமித்திரனும் ஆகியமூவரும்); புறப்பட்டுச்சென்றார்கள்; (எ - று.)

அரிய - பெயர். பெரியகாரியம் என்றது - ராவணசங்காரமும் ராஜ்ய பரிபாலனமும் முதலியவற்றை. நாடும், நாட்டைச்சார்ந்த இடமும் - மருத நிலம். மிதிலை என்றதற்கு - மிதி என்பவனால் ஏற்படுத்தப்பட்டதென்பது பொருள்; விதேகனுனநிமிமகாராஜனது தொடையில் அரணியிட்டுக் கடைந்ததனல் உண்டானமைபற்றி, மிதி என்று ஜனககுலத்தலைவனுக்குப் பெயர். வேள்வியும் என்ற உம்மை - கீழ் விசுவாமித்திரன் செய்த யாகத்தைக்குறித்ததனால், இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. நிலவளம், நீர்வளம் முதலிய பலவளங்களு முடைமை விளங்குதற்கு, 'விரியும்வார்புனன்மருதஞ் சூழ்' என்னும் விசேடணங் கொடுத்தார். 'என்று' என்றபின் 'சொல்ல' என வருவிக்க. இனி, 'என்று'-என்ன என்பதன்திரிபுமாம். பி - ம்:—[1]சொல. [2]போனன். (௩௧)

வேள்விப்படலம் முற்றிற்று.

---

## ௯-ஆவது அகலிகைப்படலம்.

கௌதமமுனிவனது மனைவியும் ஜனகமகாராஜாவுக்குப் புரோகிதனை சதானந்தமுனிவனது தாயு மான அகலியை தேவேந்திரனல் ஏமாற்றப்பட்டு அவனைக்கூடிப் பிறகு கௌதமமுனிவன் சாபத்தினற் கல்லுருவமாகி ஸ்ரீராமலக்ஷ்மணர் விசுவாமித்திரனோடு மிதிலைக்குச் செல்லும்போது ஸ்ரீராமனதுதிருவடித்துகள் பட்டமாத்திரத்திற் சாபம்நீங்கி இயற்கையுருவமடைந்த வரலாற்றைக் கூறும் பகுதி. அகலிகை - அஹல்யா என்னும் வடமொழித் திரிபு; இச்சொல்லுக்கு - அழகில்லாமையில்லாதவ ளென்று பொருள் : மிக்க அழகுடையவ ளென்று கருத்து; ஹல்யம் - அழகின்மை. இந்தப்படலத்திற் காணப்படுகின்ற செய்யுள்கள் அ௬-இல் முதல் ௩௪-செய்யுள்கள் 'துருவாசப்படலம்' என்றும், அதன்பின் ௩௪-செய்யுள்கள் 'கங்கைவரலாற்றுப்படலம்' என்றும், அதன்பின்னுள்ள உ௬-செய்யுள்கள் 'அகலிகைப்படலம்' என்றும், சில ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகின்றன.

க.—முனிவன் முதலிய மூவரும் சோணைநதியை யடைதல்.

* அலம்பு மாமணி யாரத்தோ ட[1]கிலை புளின
நலம்பெய் பூண்முலை நாகிள வஞ்சியா மருங்குற்
புலம்பு மேகலைப் புதுமலர்ப் புனையறற் கூந்தற்
சிலம்பு [2]சூழுங்காற் சோணமாந் தெரிவையைச் சேர்ந்தார்.

(இ - ள்.) அலம்பும் மா மணி ஆரத்தோடு - கழுவப்பெற்ற பெரிய [சிறந்த] இரத்தினங்களும் சந்தனமும், அகில் - அகிலும், அளை-(தன்னிடம்) பொருந்தப்பெற்ற, புளினம் - மணற்குன்றுகளாகிய, நலம் பெய் பூண் முலை - இன்பத்தைத்தருகின்ற ஆபரணங்களையணிந்த தனங்களையும், நாகு இள வஞ்சி ஆம் மருங்குல் - மிகவும் இளமையான நீர்வஞ்சிக்கொடியாகிய இடையையும், புது மலர் புலம்பும் மேகலை-புதிய [அன்றுமலர்ந்த] பூக்களின்

வரிசையாகிய ஒலிக்கின்ற மேகலையென்னும் இடையணியையும், புனை அறல் கூந்தல்-அழகிய கருமணலாகிய கூந்தலையும், சிலம்பு சூழும் கால்-மலையைச் சுற்றிலுஞ் செல்லுகிற வாய்க்கால்களாகிய சிலம்பென்னும் அணியைச்சுற்றிலுமணிந்த பாதங்களையுமுடைய, சோணம் ஆம் தெரிவையை-சோணையென்னும் ஆறாகிய பெண்ணை,சேர்ந்தார்-(மூவரும் போய்) அடைந்தார்கள்.

உருவகவணி; நதியினிடத்துப் பெண்ணினது தன்மை ஏற்றிக்கூறப்பட்டது. நதியென்பது, பெண்பாற்சொல் லாதலால், இங்ஙனங்கூறினார். சோணம் - இது, ஓர்நதம்: கிழக்கிலிருந்து மேற்கே செல்வது; இது வடமொழியில் 'ஶோணம்' என்றும், 'ஶோண' என்றும் வழங்கப்பட்டுள்ளது. இது, மகததேசத்தின்வழியாய்ப் பெருகி வருவதுபற்றி மாகதீயென்னும் பெயரதென்பதும், குசனது புதல்வர் நால்வர் வசுவென்பவனது கிரிவிரசநகரம் இந்நதியின் கரையி லுள்ள தென்பதும் முதனூலால் விளங்கும். 'சிலம்புசூழுங்கால்'என்றவிடத்து,உருவகத்துக்குச் சிலேடையணி அங்கமாக நின்றது; சிலிஷ்டரூபகம். புளினத்துக்கு முத்துமுதலிய இரத்தினங்களுஞ் சந்தனக் கட்டையும் அகிற்கட்டையும் மலையினின்று ஆற்றினாற்கொணர்ந்து கொழிக்கப்பட்டவை யென உணர்க. அலம்பும் - (யாற்றுநீரினால்) அசையப்பட்ட என்றுமாம். மணி - இங்கே, நவரத்தினப்பொதுப்பெயர். விலையுயர்ந்த பெரிய இரத்தினஹாரங்களையுஞ் சந்தனக்குழம்பையும் அகில்தேய்வையையும் அணிவது கொங்கையின் இயல்பாதலால், அதற்கு ஏற்ப, உபமேயமாகிய மணல்மலைக்கு 'மாமணியாரத்தோடகிலளை' என்று அடைமொழி கொடுத்தார். பருமையும் மென்மையும்பற்றி, மணற்குன்று தனத்துக்கு உவமை. ஆரம்-ஹாரம். மென்மைக்கும், ஒல்கிஒசிந்துதளரும்படியான மெல்லிதாந் தன்மைக்கும் வஞ்சிக்கொடியோடு இடை உவமிக்கப்படும். மேகலை-மாதரிடையணியுள் எண்கோவையணி. மேகலைக்கு 'புலம்பு' என்ற விசேஷணத்தைக் கொடுத்ததனால், புதுமலர்கள் தன்மேல் மொய்க்கின்ற வண்டுகளினால் ஆரவாரத்தைப் பெறுவன வென்க. கருமையாலும், அரியுடைமையாலும் கூந்தலுக்கு அறல் உவமையாம். நதிக்கு அடைமொழியாம் பொழுது, 'சிலம்புசூழுங்கால்' என்பதற்கு - ஒலிநிறைந்த கால்வாய்களென்றும்பொருள்கொள்ளலாம்; பெண்ணுக்கு அடைமொழியாம்பொழுது, சிலம்பு - நூபுரமென்னுங் காலணி. பி - ம்:—[1] அகிலணி. [2] அலம்புகாற்சோணையாம். (௧)

உ.—சூரியாத்தமன வருணனை.

நதிக்கு வந்தவ ரெய்தலு மருணன்ற னயனக்
கதிக்கு முந்துறு கலினமான் றேரொடுங் கதிரோ
னுதிக்குங் காலையிற் றண்மைசெய் வான்றன தருவிற்
கொதிக்கும் வெம்மையை யாற்றுவான் போற்கடற் குளித்தான்.

(இ - ள்.) அவர்-(விசுவாமித்திரன் இராமன் லக்ஷ்மணன்என்கிற)அந்த மூவரும், நதிக்கு - சோணையாற்றுக்கு, வந்து எய்தலும் - வந்து சேர்ந்தவளவில்,— கதிரோன் - கிரணங்களையுடைய சூரியன், உதிக்கும் காலையில் -

(மறுநாள் தான்) உதயமாகும்பொழுது, தண்மை செய்வான் - (இம்மூவர்க்கும்) குளிர்ச்சியைச் செய்யும்பொருட்டு, தனது உருவில் கொதிக்கும் வெம்மையை ஆற்றுவான் போல்-தனதுவடிவத்திலே (இயற்கையாக எப்பொழுதும்) கொதிக்கின்ற வெப்பத்தை (இப்பொழுது) தணியச்செய்பவன்போல், அருணன் தன் நயனம் கதிக்கும் முந்துறு கலினம் மான் தேரொடும்-(தன் சாரதியாகிய) அருணனுடைய கண்கள் விரைந்துசெல்லுதலினும் முற்பட்டுச் செல்லுகின்ற கடிவாளத்தைக்கொண்ட குதிரைகளைப் பூட்டிய (தனது) இரதத்துடனே, கடல் குளித்தான் - (மேற்குச்) சமுத்திரத்தில் மூழ்கினன்.

சூரியன்முதலிய கிரகநட்சத்திரதாரகைகள் மேற்கே அஸ்தமித்துக் கிழக்கேஉதிப்பனவற்றை மேல்கடலில் மூழ்கிமறைந்து கீழ்கடலில் மீண்டும் எழுவனவாகக் கூறுதல் கவிமரபு; கண்களுக்குப்புலனாகிற தோற்றமாத்திரத்தைக்கொண்டு இங்ஙனங்கூறுவர். மேற்கிற் சூரியன் அஸ்தமித்தலை அவன் தன்வெம்மையை ஆற்றும்பொருட்டு மேல்கடலில் முழுகியதாக வருணித்தார்; பயன்றற்றுறிப்பேற்றவணி. அருணன்-சூரியன்தேர்ப்பாகன்: காசியபப்பிரமாவினது மனைவிமார்களுள் விநதையென்பவளது புத்திரன்; கருடனுக்கு மூத்தவன்:இவனுக்கு இடுப்புக்குக் கீழ்பட்டஉடம்புறுப்பு ஒன்றும்இன்றெனஅறிக.'அருணன்தன்நயனக்கதிக்கும்முந்துறுகலினமான்' என்றது - தேர்ப்பாகனது கண்களின்பார்வை எவ்வளவு தூரஞ்செல்லுமோ அதைவிட அதிகதூரம் அவன்கண் செல்லுதற்குமுன்னமே செல்லுங் குதிரை யென்க; இதனால், சூரியன்தேர்க்குதிரையினது அதிவேகம் உணர்த்தப்பட்டது. (உ)

**௩.—அன்றிரவு மூவரும் ஒருசோலையில் தங்குதல்.**

கறங்கு தண்புனற் கடிநெடுந் தாளுடைக் கமலத்
தறங்கொ ளுண்மலர்க் கோயில்க ளிதழ்க்கத வடைப்பப்
பிறங்கு தாமரை வனம்விட்டுப் பெடையொடு களிவண்
டுறங்கு கின்றதோர் நறுமலர்ச் சோலைபுக் குறைந்தார்.

(இ - ள்.) கறங்கு தண் புனல் - ஒலிக்கின்ற குளிர்ந்த நீர்நிலைகளிலேயுள்ள, கடி - வாசனையையும், நெடு தாள் - நீண்ட நாளத்தையும், உடை - உடைய, நாள் கமலத்து மலர் - அன்றுமலர்ந்த தாமரையின்மலர்களாகிய, அறம் கொள் கோயில்கள் - (விருந்தாகவருகின்ற வண்டுகளுக்குத் தாகந்தீரத் தேனையளித்தலாகிய)தருமத்தைக்கொண்ட சிறந்தமாளிகைகள்,இதழ் கதவு அடைப்ப - (தமது) இதழ்களாகிய வாயிற்கதவுகளை மூடி விட்டதனால், (அங்குச்சென்று மதுவுண்டு களித்துஉறங்க இயலாமல்), பிறங்கு தாமரைவனம் விட்டு - விளங்குகின்ற அத்தாமரைக்காட்டை நீங்கி, களி வண்டு பெடையொடு உறங்குகின்றது - களிப்பையுடைய ஆண்வண்டுகள் பெண்வண்டுகளுடனே (வந்து) தங்குதற்குஇடமான,ஓர் நறு மலர் சோலை-வாசனைவீசுகின்ற பூக்களையுடைய ஒருசோலையில், புக்கு - பிரவேசித்து, உறைந்தார் - (அன்றிரவு மூவரும்) தங்கினார்கள்; (எ - று.)

தாமரைமலர்களில் தேன்பெறாது மீண்டுவிட்ட வண்டினங்கள் சோலை களிலுள்ளபலவகைப்பூக்களின் தேனை உண்டு களித்தன வென்க. கொடை யாளிகள் ஒருகாலத்து இரக்கவருவார்க்கு இடங்கொடாமல் இற்கதவை அடைத்துவிட்டால் வருபவர் மீண்டு வேற்றிடஞ்சென்று தாம்வேண்டியது பெற்று மகிழ்தலாகிய உலகியற்கையைஉட்கொண்டு,இங்ஙனம்வருணித்தார். பெடையொடுகளிவண்டு எனஎடுத்து,பெடையோடுகூடிக்களிக்கின்றவண்டு எனவுமாம். வநம் என்னும் வடசொல்லுக்கு - நீரென்னும்பொருளும் உண் டாதலால், தாமரைவனம் - தாமரைப்பொய்கையாகவுமாம்; வனம் - பொய் கைக்கு ஆகுபெயர். தாமரை, பகலில்மலர்ந்து இரவிற் குவியும். பெடை- பெண்மைப்பெயர்; இது, பறவைக்கு உரியதாதலை "பேடையும் பெடையு நாடி ளென்றும்", என்னுந் தொல்காப்பியத்தால் அறிக. முதனூலில், முனிவர்முதலியோர் சோணநதியைக்கடந்தபின் பலவனங்களையும் பார்த்த வண்ணம் கங்கையையடைந்தனரென்றும், அந்தக்கங்கைவரலாற்றைக் கேட்டபின் அதன்வடகரையைக்கடந்து பின்பு அங்குள்ளவிசாலையென்னும் பட்டணத்தைக்கண்டன ரென்றும் அதன்வரலாறு கூறத்தொடங்குகையில் பின்வருபவை விசுவாமித்திரனாற் கூறப்பட்டனவென்றும் உள்ளது. (௩)

**௪.—இராமன் அந்தச்சோலையை வினவ, முனிவன் கூறுதல்.**

இனைய சோலைமற் றியாதென விராகவன் வினவ
வினையெ லாமற நோற்றவன் விளம்புவான் மேனாட்
டனய ரானவர்க் கிரங்கியே காசிபன் றனது
மனையு ளாடவம் புரிந்தன ளிவணென வலித்தான்.

(இ - ள்.) (அப்பொழுது), 'இனைய சோலை - இந்தப்பூஞ்சோலை, யாது - எத்தன்மையது?' என - என்று, இராகவன் - ரகுகுலதிலகனாகிய ஸ்ரீராமபிரான், வினவ - கேட்க,—வினைஎலாம் அற நோற்றவன்-கருமங்க ளெல்லாம் ஒழியும்படி தவஞ்செய்தவனாகிய விசுவாமித்திரமுனிவன், விளம் புவான் - விடைகூறுபவனாய்,—'மேல் நாள் - முன்னொருகாலத்தில், காசி பன் தனது மனையுளாள்-காசியபமுனிவனது மனைவியாகிய திதி என்பவள், தனயர் ஆனவர்க்கு இரங்கி - (தனது)புத்திரர்களாகிய அசுரர்களுக்காகச் சோகித்து, இவண் - இவ்விடத்தில், தவம் புரிந்தனள் - தவஞ்செய்தாள்,' என - என்று, வலித்தான் - தெளிவாகச்சொன்னான்; (எ - று.)

காசிபன் மனைவியருள் திதியென்பவள் தனது புத்திரர்களான அசுரர் கள் தேவர்களால் அடியுண்டு மாண்டுபோனதனால், மிகத்துயரமடைந்து இந்திரனைக்கொல்லும் வலிமையுடன் மூவுலகையும் ஆளவல்ல ஒருபுத்திர னைப் பெறுமாறு தன் கணவனிடம் அநுமதிபெற்றுப் பலநாள் தவம்புரிந்த இடம் இது என்று முனிவன்கூறின னென்க. இரகுவென்பவன் ஒருபெரு வேள்விசெய்துபொருளனைத்தையும் வழங்கிவிட்டு வெறுங்கையனாயிருக்கை யில், கௌத்ஸனென்னும் பிராமணன் தன்குருவாகிய வரதந்து முனிவனுக் குக் குருதக்ஷிணைகொடுத்தற்பொருட்டுவந்துயாசிக்க,குபேரனிடத்திலிருந்து

வேண்டியபொருளை அழைப்பித்து அந்தக்கௌத்ஸமுனிக்குக்கொடுத்து இவ்வாறு மிகுந்தவீரமுங் கொடையு முடையவனானதால், இராமபிரானை அவன் வமிசத்துப்பெயராற் கூறினர். (௪)

ரு.—இதுமுதல் இருபத்தைந்துகவிகளால் விசுவாமித்திரன் சோலையின் வரலாற்றை விரித்துக் கூறுகின்றான்.

ஒருவித்தியாதரமகள் திருமகளிடத்து மலர்மாலை பெறுதல்.

அண்ட கோளகைக் கப்புறத் தென்னையா ளுடைய
கொண்ட னீள்பதத் தெய்தியோர் விஞ்சையர் கோதை
புண்ட ரீகமென் பதத்தியைப் புகழ்ந்தனள் புகழ
வண்ட றுமது மாலைகைக் கொடுத்தனண் மகிழ்ந்து.

(இ - ள்.) அண்டகோளகைக்கு அ புறத்து - இவ்வுலகவுருண்டைக்கு அப்பாலுள்ள, என்னை ஆள்உடைய கொண்டல் நீள் பதத்து - என்னை அடிமையாகவுடைய காளமேகம்போன்ற திருமாலினது நீண்ட பரமபதத்திலே, ஓர் விஞ்சையர் கோதை - ஒருவித்தியாதரப்பெண், எய்தி - போய்ச்சேர்ந்து, புண்டரீகம் மென் பதத்தியை - செந்தாமரைமலரை மென்மையான வாசஸ்தானமாகவுடைய இலக்குமியை, புகழ்ந்தனள் - (யாழ்கொண்டு பாடித்) தோத்தரித்தாள்; புகழ - (அங்ஙனம்) தோத்தரிக்க, மகிழ்ந்து - (அத்திருமகள்) திருவுள்ளமுவந்து, வண்டு அறு மது மாலை - வண்டுகள் நீங்காத தேனினையுடைய (தனது) பூமாலையை, கை கொடுத்தனள்-(தனது கூந்தலினின்றும்எடுத்து) அவள்கையில் (வெகுமானமாகக்) கொடுத்தாள்.

திதியின் துயர்க்குக் காரணமாக அசுரர் தேவர்களால் மாண்டதைக் கூறுவதன்நிமித்தம், பாற்கடல்கடைந்து அதினின்றுதோன்றிய அமுதங்காரணமாகத் தேவாசுரர்கட்குப் போருண்டாக அப்போரில் அசுரர் தோற்றனரென்றுகூறுதற்காக, பாற்கடல்கடைந்தவரலாற்றைக் கூறத்தொடங்குகின்றானென்க. பரமபதமடைந்தவர்மீண்டுவருதலில்லையென்பது நூற்கொள்கையாதலாலும், இவ்வித்தியாதரப்பெண் மீண்டுவந்தன ளென்று மேற்கவியிற் கூறுதலாலும்,இங்கு'நீள்பதம்'என்பது-காரணவைகுண்டமென்னும்விஷ்ணுலோகமாம். 'என்னையாளுடையகொண்டல்'எனத் திருமாலைக்கூறியதனால், கம்பர் வைஷ்ணவராதலறிக. விஞ்சையர் - மாலிகாஞ்சனம் முதலிய மாயவித்தையை யுடையவர்; இவர்,பதினெட்டுத்தேவகணங்களுள் ஒருசாதியார். கோதை - பூமாலை; அதுபோல மென்மையையும் அழகையுமுடைய பெண்ணுக்கு உவமையாகுபெயர். புண்டரீகம் என்பது - வெண்டாமரையின்பெயராகக் கூறப்பட்டிருப்பினும், இடப்பொருத்தம் நோக்கிச் செந்தாமரையெனக் கொள்ளத்தக்கது; 'புண்டரீகாக்ஷன்' என்பதிற் போல. பதம் - இடம். இனி, புண்டரீகம் மென் பதத்தி - தாமரைமலர்போல மென்மையான திருவடிகளை யுடையவள் என்றுமாம். புண்டரீகம் என் எனப்பிரித்து - தாமரைமலரெனப்படுகிற என்றும் உரைக்கலாம். மகிழ்ந்து - (மாலையைப்

பெற்ற வித்தியாதரப்பெண்) களித்து, மீளுதலும் என மேற்கவியோடு இயைப்பினும் அமையும். (௫)

௬,எ.—இதுவும், மேலைக்கவியும்-ஒருதொடர்;

அவ்விஞ்சைமகள் அந்தமலர்மாலையைத் துருவாசமுனிவனுக்கு அளித்தல்.

௬. அன்ன மாலையை யாழிடைப் பிணித்தய னுலகங்
கன்னி மீடலுங் [1]கசட்டுற முனியெதிர் காணு
வென்னை யாளுடை நாயகிக் கிசையெடுப் பவளென்
றன்ன டாளிணை வணங்கிநின் றேத்தலு மனையாள்.

எ. உலகம் யாவையும் படைத்தளித் துண்டுமி ழொருவ
னிலகு மார்பகத் திருந்துயிர் யாவையு [1]மீன்ற
திலக வாணுதல் சென்னியிற் [2]சூடிய தெரிய
லலகின் [3]மாமுனி பெறுகென வளித்தன ளளியால்.

(இ - ள்.) (௬) அன்ன மாலையை - அந்தப்பூமாலையை, யாழிடை பிணித்து - (தன்)வீணையிலே கட்டிக்கொண்டு, கன்னி-விவாகமில்லாத அந்தவித்தியாதரப்பெண், அயன் உலகம் மீடலும் - பிரமலோகத்துக்குத் திரும்பி வந்த வளவில்,—கசடு உறு முனி - கோபம்மிக்க துருவாசமுனிவன், (பிரமலோகஞ் சென்றிருந்தவன்), எதிர் காணு-(அவளை) எதிரிலே கண்டு,என்னை ஆள்உடை நாயகிக்கு இசை எடுப்பவள் என்று-என்னை அடிமையாகவுடைய யாவர்க்குந்தலைவியாகிய இலக்குமிக்குக் கீதம்பாடுமவள் இவளென்று அறிந்து, அன்னள் தாள் இணை வணங்கி நின்று - அவளது உபயபாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்து (எழுந்து) நின்று, ஏத்தலும் - துதித்தவளவில், அனையாள் - அவ்விச்சாதரமகள், (எ) 'உலகம் யாவைஉம் - எல்லாவுலகங்களையும், படைத்து - (ஆதிகாலத்திலே பிரமரூபியாய்ச்) சிருஷ்டித்து, அளித்து - (பின்பு தானானநிலையிலே விஷ்ணுரூபியாய்க்) காத்து, உண்டு - (பிரளய காலத்திலே) திருவமுதுசெய்து (திருவயிற்றினுள்ளே கொண்டு), உமிழ் - (பிரளயம்நீங்கியவுடனே மீண்டும்) வெளிப்படுத்தியருளுகிற, ஒருவன் - ஒப்பற்றவனாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியினது, இலகு மார்பு அகத்து - விளங்குகின்ற திருமார்பினிடத்திலே, இருந்து - வீற்றிருந்து, உயிர் யாவைஉம் - எல்லாவுயிர்களையும், ஈன்ற - பெற்றருளின, திலகம் வாள் நுதல் - திலகத்தையணிந்த பிரகாசமான நெற்றியையுடைய திருமகள், சென்னியில் - (தனது) திருமுடியிலே, சூடிய - தரித்திருந்துள்ள, தெரியல்-இம்மலர்மாலையை, அலகு இல் மா முனி - (தவப்பெருமைக்கு ஒரு) அளவில்லாத சிறந்த முனிவனே! பெறுக - (நீ) பெறுவாயாக', என - என்று சொல்லி, அளியால்-அன்போடு, அளித்தனள் - (தன்யாழிற்கட்டியுள்ள பூமாலையை வித்தியாதரமகள் துருவாசமகாமுனிக்குக்) கொடுத்தருளினாள்; (எ - று.)

௬:—இதனால், துருவாசமகாமுனிவனது விஷ்ணுபக்தியும், ஒருவைஷ்ணவன் மற்றொருவைஷ்ணவனைக் கண்டமாத்திரத்தில் தண்டனிட்டு உபசரிக்கவேண்டு மென்பதும், அங்ஙனம் உபசரிக்குங்காலத்து ஆண்பாலார்

பெண்பாலாரென்ற வேறுபாடு கருதப்படாதென்பதும் விளங்கும். கசடு - குற்றம்; தவமுடையார்க்குப் பெருங்குற்றமாகுந் தலைமைபற்றி, இங்கே கோபம் 'கசடு' எனப்பட்டது. துருவாசமகாமுனிவன் அளவிறந்த முன் கோபமுடையவனாதலால், 'கசட்டுறுமுனி' எனப்பட்டான்; வில்லிபுத்தூரார் "சாபத்தாலுஞ் சாபமொழி தன்னால் வளருந் தவத்தாலுங், கோபத்தாலும் பேர்படைத்த கொடிய முனிவன் றுருவாசன்" என்று கூறியது காண்க. மற்றையோர்க்கெல்லாம் பிறரைச் சபிக்கச்சபிக்கத் தவங் குறையும்; இவனோ, அங்ஙனமன்றிக்கே சபிக்கச்சபிக்கத் தவம்வளர்ந்துவருமாறு வரம் பெற்றுள்ளவன்: ஆதலால் எப்பொழுதும் பெருங்கோபமுடையனாய் எல்லோரையுஞ் சபித்தல் இவனுக்கு இயல்பு. இவன் அத்திரிமுனிவனது புத்திரன். பி - ம்:—[1] கசடறுமுனி.

எ:—ஒருவன் - ஏகமூர்த்தி; அத்விதீயன். 'இலகமார்பகத்து' என்ற பாடத்துக்கு - மார்பினிடத்திலே (அது) விளங்கும்படி வீற்றிருந்து என்று உரைகூறுக. உயிர்களெல்லாவற்றையும் படைத்தலால் அவையனைத்துக்குந் தந்தையாகிய திருமாலினது மனைவியாதல்பற்றித் திருமகள் அவற்றுக்கெல்லாந் தாய்முறையாவளாதலால், 'உயிர்யாவையுமீன்ற'என்றாள்; அன்றியும், திருமாலினது திவ்வியசக்தியினது சொரூபமே திருமகளென உணர்க. தெரியல் - விளங்குதல்; விளங்கும்மாலைக்குத் தொழிலாகுபெயர். பி - ம்:—[1] ஈன்றாள். [2] சூட்டிய. [3] மாதவ. (சு, எ)

அ.—அம்மாலையைப்பெற்று மகிழ்ந்து துருவாசன் தேவலோகத்தைச் சேர்தல்.

தெய்வ நாயகி சென்னியிற் [1]சூடிய தெரிய
லைய யான்பெறப் புரிந்ததெத் தவமென வாடி
வெய்ய மாமுனி சென்னியிற் சூடியே வினைபோ
யுய்யு மாறிதென் றுவந்துவந் தும்பர்நா டடைந்தான்.

(இ - ள்.) 'தெய்வம் நாயகி - எல்லாத்தேவர்களுக்குந் தலைவியாகிய திருமகள், சென்னியில் சூடிய - (தனது) முடியிலே தரித்திருந்த, தெரியல்- மாலையை, பெற - (இப்பொழுது) பெற்றதற்கு, யான் புரிந்தது - நான் (முன்னே) செய்துள்ளது, எ தவம் - எப்படிப்பட்ட பெருந்தவமோ? ஐய- (இது எனக்குக்கிடைத்தது) ஆச்சரியம்!' என - என்று எண்ணிக்கொண்டும் சொல்லிக்கொண்டும், வெய்ய மா முனி - (கோபத்தாற்) கொடிய துருவாசமகாமுனிவன், ஆடி - (ஆனந்தத்தால்) நர்த்தனஞ்செய்துகொண்டே, சென்னியில் சூடி - (தனது)முடியிலே (அம்மாலையைத்) தரித்துக்கொண்டு, வினை போய் உய்யும் ஆறு இது என்று - கருமமொழிந்து நற்கதிபெறும் விதம் இதுவாமென்று கருதி, உவந்து வந்து - மகிழ்ந்துகொண்டேவந்து, உம்பர் நாடு அடைந்தான் - தேவலோகத்தைச் சேர்ந்தான்; (எ - று.)

தெய்வநாயகன் - திருமால்; அதன்பெண்பால் - தெய்வநாயகி. ஐய - அம்ம என்பதுபோல வியப்புப்பொருள்கருதுவதோர் இடைச்சொல். இனி, ஐய - ஆச்சரியப்படத்தக்க, தவம் எனலுமாம். ஐய - அசைநிலை என்பாரு

மூளர். உவந்து உவந்து எனப்பிரித்து, மிகுதிபற்றிய அடுக்கெனவுமாம். துருவாசமுனிவன், உருத்திரமூர்த்தியின் அம்சம். பி - ம்:—[1] சூட்டிய. (அ)

**கூ—கஉ —இதுமுதல்நான்குகவிகளால், சுவர்க்கலோகத்தில்தேவேந்திரன் ஐராவதத்தின் மீதிலேறிப் பவனிவருதற்சிறப்பு கண்டு துருவாசன் வியப்படைந்தமை கூறப்படுகின்றது.**

கூ. பெய்யு மாமுகில் வெள்ளியம் பிறங்கன்மீப் பிறழுஞ்
செய்ய தாமரை யாயிர மலர்ந்துசெங் கதிரின்
மொய்ய சோதியை மிலைச்சிய முறைமைபோன் றொளிரு
மெய்யி னோடையி ராவதக் களிற்றின்மேல் விளங்க.

௧0. அரம்பை மேனகை திலோத்தமை யுருப்பசி யனங்கன்
சரம்பெய் தூணியிற் றளிரடி நூபுரந் தழைப்பக்
கரும்பை யுஞ்சுவை [1]கைப்பித்த [2]குதலையர் விளரி
நிரம்பு பாடலோ டாடினர் வீதிக ணெருங்க.

௧௧. நீல மால்வரை தவழ்தரு [1]கதிர்நிலாக் கற்றை
போல வேயிரு புடையினுஞ் சாமரை புரளக்
கோல மாமதி குறைவற நிறைந்தொளி [2]குலாவ
மேலி வர்ந்தென வெள்ளியந் தனிக்குடை விளங்க.

௧௨. தழங்கு பேரியுங் குறட்டொடு பாண்டிலுஞ் [1]சங்கும்
வழங்கு கம்பலை மங்கல கீதத்தை மறைப்ப
முழங்கு நான்மறை மூரிநீர் [2]முழக்கென வுலகை
[3]விழுங்கு மாவரும் விழாவணி கண்டுளம் வியந்தான்.

(இ - ள்.)(கூ)வெள்ளி அம் பிறங்கல் மீ-வெள்ளிமயமான அழகியதொரு மலையின்மேலே, பெய்யும் மா முகில் - மழைபெய்யநிற்பதொரு கரிய [பெரிய] காளமேகம், பிறழும் செய்ய தாமரை ஆயிரம் மலர்ந்து - விளங்குகின்ற சிவந்த ஆயிரந்தாமரைமலர்கள் (தன்னிடத்திலே) மலரப்பெற்று, செம் கதிரின் மொய்ய சோதியை மிலைச்சிய - சிவந்த கிரணங்களையுடைய சூரியனது அடர்த்தியுடைய ஒளியினையுந் தன்மேற்கொண்ட, முறைமை போன்று-தன்மையை ஒத்து, ஒளிரும் - விளங்குகின்ற, மெய்யினோடு - (தனது) [இந்திரனது] உடம்பினால், அயிராவதம் களிற்றின் மேல் - ஐராவதமென்னும் யானையினது மேலிடம், விளங்க-பிரகாசிக்கவும்,—(௧0) கரும்பைஉம்-கருப்புஞ்சாற்றையும், சுவை - (தனது இனிய) உருசியினால், கைப்பித்த - கசப்பாம்படி செய்த,குதலையர்-மழலைச்சொற்களையுடையவர்களாகிய, அரம்பை-ரம்பையும், மேனகை - மேநகையும், திலோத்தமை - திலோத்தமையும், உருப்பசி - ஊர்வசியும், (என்கின்ற தேவதாசிகள்), அனங்கன் சரம் பெய் தூணியின் - மன்மதனது மலரம்புகளைப் பெய்ததொரு தூணீரம் போன்ற, தளிர் அடி - துளிர்போல்மென்மையான (தமது) பாதங்களிலே, நூபுரம் - சிலம்பென்னுங் காலணி,தழைப்ப - ஒலிமிகுமாறு, விளரி நிரம்பு பாடலோடு-

விளரி என்னும் இசை நிறைந்த பாட்டுடனே [வாயாற் பாடல்பாடிக் கொண்டு], ஆடினர் - நர்த்தனஞ் செய்து கொண்டு, வீதிகள் - தெருக்களில், நெருங்க - சமீபத்தில் அடர்ந்துவரவும்,—(கக) மால் நீலம் வரை - பெரியதொரு நீலநிறமுள்ள மலையின் இருபுறத்தும், தவழ்தரு - சஞ்சரிக்கின்ற, கதிர் நிலா கற்றை போல - விளக்கத்தையுடைய சந்திரகாந்தியின் தொகுதியை ஒப்ப, இரு புடையின்உம் - தனது [இந்திரனது] இரண்டுபக்கங்களிலும், சாமரை புரள - சாமரங்கள் அசையவும், கோலம் மா மதி-அழகிய சிறந்த சந்திரன், குறைவு அற நிறைந்து - குறைவில்லாமல் (பதினாறு கலைகளும்) நிரம்பி, ஒளி குலாவ - (தனது) ஒளி விளங்க, மேல் இவர்ந்து என - மேலே தங்கியிருந்தாற்போல, வெள்ளி அம் தனி குடை-வெண்மை நிறத்தையுடைய அழகிய ஒப்பற்ற ஏகசத்திரம், விளங்க - பிரகாசிக்கவும்,—(கஉ) தழங்கு - ஒலிக்கின்ற, பேரிஉம் - பேரிகைகளும், குறட்டொடு - குறடுஎன்னும் வாத்தியங்களும், பாண்டில்உம் - கைத்தாளங்களும், சங்குஉம் - சங்கங்களும், வழங்கு - உண்டாக்குகின்ற, கம்பலை - ஓசையானது, மங்கல கீதத்தை - (பெண்கள்பாடுகின்ற)மங்கலவாழ்த்துப்பாட்டை, மறைப்ப - (பிறர்க்குக் கேட்கவொண்ணாதபடி)மறையச்செய்யவும், முழங்கு நால்மறை - (முனிவர்முதலியோரால்) உத்கோஷித்துச் சொல்லப்படுகிற நான்குவேதங்களின் ஓசையானது, மூரி நீர் முழக்கு என - பழமையான கடலினது பேரொலியை ஒத்திருக்கவும், உலகை விழுங்கும் ஆ (று) - உலகத்தை விழுங்கும்படி, வரும் - (இந்திரன் பவனி)வருகின்ற, விழா அணி - திருவிழாவின் அழகை, கண்டு - (துருவாசமுனி) பார்த்து, உளம் வியந்தான் - மனத்தில் ஆச்சரியமடைந்தான்; (எ - று.)

க:—இக்கவி-இல்பொருளுவமையணி. வெள்ளிமலை-ஐராவதத்துக்கும் மேகம் - இந்திரனுடம்புக்கும், ஆயிரந்தாமரைமலர்கள் - அவனது ஆயிரங்கண்களுக்கும், சூரியகிரணங்கள்-அவன் அணிந்துள்ள கிரீடம்முதலிய ஆபரணங்களின் ஒளிகளுக்கும் அவனது தேககாந்திக்கும் உபமானமாம். பிறங்கல்மீ மேகம்மலர்ந்து மிலைச்சிய முறைமை போன்று என இயையும். வலிமையும் பெருமையும் மதநீரருவியுடைமையும்பற்றி, யானைக்கு மலை உவமையாம். ஐராவதம் - வெண்ணிறமுடையதாதலால், வெள்ளிமலையை உவமை கூறினார். ஐராவதம்-இந்திரனது பட்டத்துயானை; நான்குதந்தங்களுடையது. பிறங்கல்-விளங்குதல்;(நெடுந்தூரத்திலுள்ளாருங் கண்டறியும்படிஉயர்ந்து) விளங்குகின்ற மலைக்குத் தொழிலாகுபெயர். இந்திரனதுநிறம் கருமையாதலால்,மேகம் அவனுடம்புக்கு உவமை கூறப்பட்டது. அயிராவதம் முதற்போலி. வெள்ளியம்பிறங்கல், அம் - சாரியையெனினுமாம். ஆயிர அலர்ந்து எனவும் பதம் பிரிக்கலாம். ஐராவதத்தின்மேல் வீற்றிருத்தலா இந்திரனுக்குச் சிறப்பு உண்டாவது என்பதன்றிக்கே, இந்திரன் வீற்றிரு

௧௦:—இப்பாட்டில்,அரம்பைமுதலியநால்வரைக் கூறியது-மற்றைத்தே வகணிகையர்க்கும், நூபுரம்-மற்றை யணிகளுக்கும், விளரி - மற்றையிசை களுக்கும் உபலட்சணம். அரம்பை - வடசொற்றிரிபு; இவள் - குபேர னது குமாரனான நளகூபரனது போகமாது. திலோத்தமை-அழகியமகளிர் களதுஉடம்பழகுகளில் எள்ளளவெள்ளளவாகஎடுத்துத்திரட்டிப் பிரமதேவ னால் மேலானவளாகப் படைக்கப்பட்டவள் ; திலம் - எள், உத்தமை - மே லானவள். உருப்பசி-ஊர்வசீ:வடமொழிச்சிதைவு ; (பதரிகாச்சிரமத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த நாராயணமகாமுனிவனது) ஊருவினின்று [தொடையினின்று] தோன்றினவள் : இவள், நாராயணமுனிவனது தவத் தைக் கெடுக்கும்படி இந்திரனால் ஏவப்பட்டுவந்த தேவஸ்திரீகளை மோகிப் பிக்கும் பொருட்டு அம்முனிவனாற் சிருஷ்டிக்கப்பட்டவள். மன்மதனுக்கு அம்பு மலராதலை "ஆலைக் கரும்புசிலை யைங்கணைபூ" என்பதனாலும் அறிக. தூணி-தூணீரம் என்னும் வடமொழித் திரிபு; அம்புப்புட்டில்: இது, கணைக் காலுக்கு வடிவுவமை. கரும்பையுஞ் சுவை கைப்பித்த குதலை என்பதற்கு - கைப்புக்குந் தித்திப்புக்குஞ் சுவையில் எவ்வளவு வேறுபாடுஉண்டோ இனி மையிலே அவ்வளவுவேறுபாடு கருப்பஞ்சாற்றுக்குங் குதலைச்சொல்லுக்கும் உண்டென்பது கருத்து; நாவுக்குஇனிமைதருகிற கருப்பஞ்சாற்றினும் பல மடங்குஅதிமாகச் செவிக்கு இனிமைதருகிற குதலை யென்பது தாற்பரியம். கரும்பு - அதன்இரசத்துக்கு ஆகுபெயர். விளரி - ஏழுஇசைகளுள் ஒன்று; அவை - குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. விளரி நிரம்பு பாடலோடு என்பதற்கு - யாழின் நிறைந்தபாட்டோடு ஒக்க என்றும் பொருள்கொள்ளலாம். பி - ம்:—[1]கற்பித்த. [2]குதலையால்.

௧௧:—நீலவரை-நீலரத்தினமயமான மலை யென்றுமாம். நீலகிரி-இந்திர னது நீலமேனிக்கும், நிலாக்கற்றை - வெண்சாமரைக்கும் உவமம். கற்றை- மயிர்முதலியவற்றின் தொகுதி. சாமரம் - சாமரைஎன ஈறுதிரிந்தது; சமர மென்னும் மானினது வாலின்மயிரினாற் செய்யப்பட்டதொரு இராசசின்ன மென்பது பொருள்: தத்திதாந்தவடமொழி. கோலம் ஆம் மதி எனப் பிரித்து-அழகாகிய சந்திரன் என்றுமாம். பி - ம்:—[1]நிறைநிலா, நிறைமதி. [2]குலாவி. [3]மேல்நிவந்து, மேலுயர்ந்து.

௧௨:—'வழங்குகம்பலை மங்கலகீதத்தைமறைப்ப' என்றது-வாய்ப்பாட் டொலியினும்வாத்தியகோஷமும்கைத்தாளவொலியும்அதிகப்பட என்றபடி. இதில், இந்திரனுக்கு மேலேவருகிற தீங்குக்கு அறிகுறியாக 'மங்கலகர மான பாட்டை மறைக்க' என்கிற அருத்தமுந் தொனிவகையால் தோன் றும். பூமிக்குமுன்பே கடல் படைக்கப்பட்டதனால், 'மூரிநீர்' எனப்பட்டது. நீர் - கடலுக்கு ஆகுபெயர்: இனி, மூரிநீர் - பண்புத்தொகையன்மொழி யெனவுமாம். உலகைவிழுங்குமாவரும் என்றதற்கு மிகத்திரண்டு வருகிற என்று கருத்து; இனி,உலகைவிழுங்குமாவரும்மூரிநீர்எனஇயைத்து,பிரளய சமுத்திரகோஷம்போல என்றுமாம். விழா - உற்சவம், ஊர் கோலம், உலாப்போதல். பி - ம்:—[1]சதியின். [2]முழக்கினால். [3]விழுங்கமால். (க-௧௨)

**௧௩.—தான்பெற்றமாலையை இந்திரனுக்குத்தந்ததலும் அவன் தோட்டியால் அதைவாங்கி யானையின்தலைமீது வைக்க அது எடுத்துத் துகைத்தல்.**

தனையொ வாதவன் மகிழ்ச்சியால் வாசவன் றன்கை
வனையு மாலையை நீட்டலுந் தோட்டியால் வாங்கித்
துனைவ லத்தயி ராவதத் தெருத்திடைத் தொடுத்தான்
பனைசெய் கையினாற் பறித்தடிப் படுத்ததப் பகடு.

(இ - ள்.) தனை ஒவாதவன் - தன்னை(ப் பிறர்) ஒப்பாரிலாத துருவாச முனி, மகிழ்ச்சியால் - சந்தோஷத்தால், வனையும் மாலையை - (தான்) தரித்திருந்த அப்பூமாலையை, வாசவன்தன் கை நீட்டலும் - இந்திரனது கையிலே கொடுக்கப்புக்கவளவில், (அவன்), தோட்டியால் வாங்கி-(அதனைத் தன்கையால்வாங்காமல்) அங்குசத்தால் வாங்கி, துனை வலத்து அயிராவதத்து எருத்திடை தொடுத்தான் - விரைந்துசெல்லுகின்ற வலிமையையுடைய (தனது)ஐராவதயானையினது பிடரியிலே வைத்தான் : அ பகடு - அந்த யானையானது, பனை செய் கையினால்-பனைமரத்தையொத்த (தனது) துதிக்கையினால், பறித்து - (அம்மாலையை) இழுத்து, அடி படுத்தது (தன்) காலின்கீழிட்டுத் தேய்த்தது ; (எ - று.)

வாசவன்-அஷ்டவசுக்களுக்குத்தலைவன்;அல்லது,எல்லா வைசுவரியமுமுடையவன். தோட்டி - மாவெட்டி. செய் - உவமவுருபு. ஐராவதத்தினது துதிக்கைக்கு, பனைமரம் - திரண்டுருண்டு நீண்ட வடிவத்தால் உவமை ; ஐராவதம்வெண்ணிறமுடையதாதலால்,நிறம்பற்றிய உவமையாகாது.

௧௪.—துருவாச முனிவனது சினம்.

கண்ட மாமுனி விழிவழி யொழுகு வெங் கனலா
லண்ட கூடமுஞ் சாம்பரா பொழியுமென் [1]றழியா
விண்டு நீங்கினர் விண்ணவ ரிருசுடர் மீண்ட
வெண்டி சாமுக மிருண்டன சுழன்றதெவ் வுலகும்.

(இ - ள்.) கண்ட - (அதனைப்) பார்த்த, மா முனி - துருவாசமகாமுனிவனது, விழி வழி - கண்களின்வழியாக, ஒழுகு-வெளியிற் சிந்துகிற, வெம் கனலால் - கொடிய கோபாக்கினியினாலே, அண்டகூடம்உம்-எல்லாஅண்டகோளங்களும், சாம்பர் ஆய் ஒழியும் - (எரிந்து) சாம்பலாகி அழிந்துவிடும், என்று - என்றுநினைத்து , அழியா - மனம் வருந்தி, விண்ணவர் - தேவர்களெல்லாரும், விண்டு நீங்கினர்-(தத்தமது இடங்களினின்று)பிரிந்து ஓடிப்போனார்கள் ; இரு சுடர் மீண்ட - (சூரியன் சந்திரன் என்னும்) இருசுடர்களும் (மேற்செல்லமுடியாமல்) திரும்பிவிட்டன ; எண் திசா முகம் - எட்டுத்திக்குக்களின் இடமெங்கும், இருண்டன - இருட்சிபெற்றன; எஉலகும் - எல்லாலோகமும், சுழன்றது - சுழற்சியடைந்தது ; (எ - று.)

தங்கள் அரசனை இந்திரன் செய்த தவற்றினால் துருவாசமுனிவன் பெருங் கோபம் கொண்டனனாக, அது கண்ட தேவர்கள் 'இம்முனிவனது

பெருஞ் சீற்றத்தினால் யாதுதீங்குவிளையுமோ?' என்றுஅஞ்சிநடுங்கி எதிர்நிற்கவும்மாட்டாது ஓடிப்பதுங்க, அத்தேவர்களின் இனத்தவரான சூரியசந்திரர்களும் தமதுகதி தடுமாற, அப்போது இருள் எங்கும் மூடியதனால் எல்லாவுலகங்களுஞ் சுழலலாயின வென்பதாம். கண்களில் கோபக்குறி மிக்குத்தோன்றுவதை'விழிவழியொழுகுவெங்கனல்'என்றார்.பி-ம்:—[1] அயரா. (௧௪)

௧௫.—கோபங்கொண்ட துருவாசமுனிவன் இந்திரனைநோக்கிக் கூறத்தொடங்குதல்.

புகையெ ழுந்தன வுயிர்தொறு மெயில்பொடித் தவனி
னகையெ ழுந்தன நிவந்தன புருவநன் னுதலிற்
சிகையெ ழுஞ்சுடர் விழியின [1]னசனியுந் திகைப்ப
மிகையெ ழுந்திடு சதமக கேளென வெகுண்டான்.

(இ - ள்.) உயிர்தொறும்-(அம்முனிவனது) மூச்சுக்களிலெல்லாம்,புகை எழுந்தன - புகைகள் கிளம்பின; எயில் பொடித்தவனில் - திரிபுரத்தைச் சாம்பராக்கின பரமசிவனைப்போல, நகை எழுந்தன - (அம்முனிவனுக்குப் பெருங்கோபத்தால்) சிரிப்புக்கள் உண்டாயின; புருவம் - புருவங்கள், நல் நுதலில் - அழகிய நெற்றியிலே, நிவந்தன - ஏறிவிட்டன; (உடனே அம்முனிவன்), சிகை எழும் சுடர் விழியினன்-சுவாலைகள் மேலோங்குகிறநெருப்பையுமிழ்கின்ற கண்களையுடையவனாய், அசனிஉம் திகைப்ப - இடியும்(இது என்ன ஓசையோ! என்று அஞ்சிப்) பிரமிக்கும்படி,—'மிகை எழுந்திடு சதமக-குற்றம்மிகுந்திட்ட இந்திரனே! கேள்-(யான்சொல்லும் இதனைக்) கேட்பாயாக,' என - என்று, வெகுண்டான் - கோபித்துக்கூறுவானாயினன்; (எ - று.)—அதனை, மேலிரண்டு கவிகளிற் கூறுகின்றார்.

தமது நெட்டுயிர்ப்பிற் புகையுண்டாகவும், திரிபுரசங்காரஞ்செய்த சிவபெருமான் போலக் கோபச்சிரிப்புத் தோன்றவும், புருவங்கள் நெரிந்து நெற்றியி லேறவும், கண்களில் தீப்பொறி பறக்கவும், மிக்கபெருஞ்சினங்கொண்ட துருவாசமுனிவன் இடியையொத்த பெருங்குரலோடு அத்தேவேந்திரனை நோக்கிக் கூறலாயின னென்பதாம்.

உயிர்தொறும் - எல்லாவுயிர்களிடத்தும், புகையெழுந்தன என்றுமாம். நன்னுதல் என்றது - பிரமதேஜசு விளங்குகிற நெற்றி யென்றபடி. 'நண்ணுதல்' என்றுபாடமாயின், நள்நுதல் - நடுநெற்றியென்க. மிகை எழுந்திடு சதமக என்பதற்கு - மிகுந்த ஆடம்பரத்துடனே வருகின்ற இந்திரனே என்று உரைப்பாருமுளர். சதம் - நூறு, மகம் - யாகம்; நூறுஅசுவமேதயாகங்களைச் செய்து இந்திரபதவிபெறுதலால், இவனுக்கு இப்பெயர் வந்தது. எயில் - மதில்; மதில்சூழ்ந்த பட்டணங்களுக்கு ஆகுபெயர். 'அசனியும்' என்ற உயர்வுசிறப்பும்மை, அதனது பேரொலியைக்கேட்டு யாவரும் அஞ்சும் பயங்கரமானதன்மையை விளக்குகின்றது. பி - ம்:—[1] யாவரும்.

எயில்பொடித்தவரலாறு:—தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுந்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்கதவஞ்செய்து மயனென்பவனாற் சுவர்க்க மத்திய பாதாளமென்னும் மூன்றிடத்திலும் முறை

யே பசும்பொன் வெண்பொன் கரும்பொன்களால் அரண்வகுக்கப்பட்டு ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந் தன்மையையுடைய மூன்றுபட்டணங்களைப் பெற்று மற்றும்பல அசுரர்களோடும் அந்நகரங்களுடன் தாம் நினைத்த விடங்களிற் பறந்துசென்று பலவிடங்களையும் பாழாக்கிவருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டு கோளினாற் சிவபெருமான் பூமியைத் தேராகவும், சந்திரசூரியர்களைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்குவேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை நாணாகவும், விஷ்ணுவை வாயுவாகியசிறகமைந்து அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும், மற்றைத்தேவர்களைப் பிறபோர்க்கருவிகளாகவும் அமைத்துக் கொண்டு யுத்தசன்னத்தனாய்ச் சென்று போர்செய்ய யத்தனிக்கையிற் புன்சிரிப்புச் செய்து அசுரரனைவரையும் பட்டணங்களோடு எரித்தருளின னென்பதாம்.

௧௬.—துருவாசமுனிவன் தான் மலர்மாலைபெற்ற வரலாறு கூறுதல்.

பூத நாயகன் புவிமக ணாயகன் பொருவில்
வேத நாயகன் மார்பகத் தினிது[1]வீற் றிருக்கு
மாதி நாயகி விருப்புறு தெரியல்கொண் டணைந்த
மாத ராள்வயின் பெற்றனன் முயன்றமா தவத்தால்.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்) பூதம் நாயகன் - ஐம்பெரும்பூதங்களுக்குத் தலைவனும், புவி மகள் நாயகன் - பூமிதேவிக்குக் கொழுநனும், பொருவு இல் வேதம் நாயகன் - ஒப்பில்லாத வேதங்களுக்குத் தலைவனுமாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவினது, மார்பு அகத்து - திருமார்பினிடத்திலே, இனிது வீற்றிருக்கும் - இனிமையாக எழுந்தருளியிருக்கின்ற, ஆதி நாயகி - (யாவர்க்கும்) முதன்மையான தலைவியாகிய திருமகள், விருப்பு உறு - மிக்கவிருப்பத்தோடு சூடியிருந்த, தெரியல் - இந்தப்பூமாலையை, கொண்டு அணைந்த - பெற்றுவந்த; மாதராள்வயின் - (ஒரு வித்யாதர) மகளினிடத்தே, முயன்ற மா தவத்தால் பெற்றனன் - (நான்) முற்பிறப்பிற்செய்துள்ள பெரிய தவத்தின் மகிமையால் (அவள் கொடுக்கப்) பெற்றேன்; (எ - று.)

பூதநாயகன் - பஞ்சபூதங்களையும் படைத்து அவற்றை நியமிப்பவன்; பூதம்-பிராணிவர்க்கமென்றுமாம். வேதநாயகன்-வேதத்தினாற் பிரதிபாதிக்கப்படுபவன். ஆதிநாயகி-ஸரஸ்வதி; பார்வதி இந்திராணி முதலிய நாயகிகளாவார்யாவர்க்கும் நாயகி யென்றபடி. பி - ம்:—[1]வீற்றிருந்த. (௧௬)

௧௭—துருவாசமுனிவன் தேவேந்திரனுக்குச் சாபமிடுதல்.

இன் று நின்பெருஞ் செல்விகண் டுவகையி னீந்த
மன்ற லந்தொடை யிகழ்ந்தனை நினதுமா நிதியு
மொன்ற லாதபல் வளங்களு முவரிபுக் கொளிப்பக்
[1]குன்றி நீதுய ருறுகென வுரைத்தனன் [2]கொடியோன்.

(இ - ள்.) 'இன்று - இப்பொழுது, நின் பெருசெவ்வி கண்டு - உன்னுடைய (உலாவருகின்ற) பெரிய வைபவத்தைப் பார்த்து, உவகையின் ஈந்த - (இந்தப்பூமாலை உனக்கே உரியதென்று) மகிழ்ச்சியோடு (யான்) கொடுத்த, மன்றல் அம் தொடை - வாசனையையுடைய அழகிய மாலையை, இகழ்ந்தனை - அலட்சியஞ்செய்தாய்; (ஆதலால்), நினது மா நிதிஉம்-உன்னுடைய பெரியநிதிகளும், ஒன்று அலாத பல் வளங்கள்உம் - ஒன்றல்லாத [அநேகமான] பலவகைச்செல்வமும், உவரி புக்கு ஒளிப்ப - கடலிலேபோய்மறைய, குன்றி - பெருமைகுறையப்பெற்று, நீ—,துயர்உறுக - துன்பமடைவாயாக,' என-என்று, கொடியோன் - கடுங்கோபமுடைய துருவாசமுனிவன், உரைத்தனன் - (இந்திரனுக்குச்) சாபங்கொடுத்தான்; (எ - று.)

'யான் முற்பிறப்பிற்செய்த நல்வினையின்பயனாகப்பெற்றதும் செல்வத்திற்குஅதிதேவதையான லக்ஷ்மீதேவியின் மஹாப்ரஸாதமுமான மலர்மாலையை 'இது உனக்கே தக்கது' என்று மனமகிழ்ந்து கொடுக்க, நீ அதனைச் செல்வச்செருக்கினால் அலட்சியஞ்செய்து மதக்களிற்றின்கைப்படும்படி செய்தா யாதலின் அதன்பயனாக உனதுசெல்வங்கள்யாவும் பாற்கடலிற் போய் மறைய, நீ வறுமையினால் துன்பமடைவாயாக' எனச் சபித்தனன், துருவாசமுனிவ னென்பதாம். உவரி - உப்புச்சுவையுடையது; உவர்-பகுதி, இ - பெயர்விகுதி: இச்சொல் - இங்கே பொதுவாய், கடலென்னுமாத்திரையாய் நின்று, பாற்கடலைக்குறித்தது. பி - ம்:—[1]குன்றும். [2]கொதித்தே.

கஅ.—இந்திரனது பொருள்கள் யாவும் பாற்கடலிற் புக்கொளித்தல்.

அரம டந்தையர் கற்பக நவநிதி [1]யமிர்தச்
சுரபி வாம்பரி மதமலை முதலிய தொடக்கற்
றொருபெ ரும்பொரு ளின்றியே [2]யுள்ளன வெல்லாம்
வெருவி [3]யோடிப்புக் கொளித்தன விரிதிரைக் கடலின்.

(இ - ள்.) (துருவாசன் இவ்வாறு சபித்தமாத்திரத்தில், இந்திரனது ஐசுவரியங்களாகிய), அரமடந்தையர் - அரம்பைமுதலிய தேவமாதர்களும், கற்பகம் - கல்பகவிருட்சங்களும், நவ நிதி - ஒன்பதுவகை நிதிகளும், அமிர்தம் சுரபி - பாலைக்கறக்கும் காமதேனுவும், வாம் பரி - தாவுகின்ற (உச்சைச்சிரவமென்னும் வெள்ளைக்) குதிரையும், மதம் மலை - மதத்தையுடைய மலைபோன்ற ஐராவதயானையும், முதலிய-முதலான, உள்ளன எல்லாம் - உள்ள எல்லாப்பொருள்களும், தொடக்கு அற்று - சம்பந்தமொழிந்து, ஒரு பெரு பொருள் இன்றிஏ-ஒரு பெரியபொருளாயினும் (இந்திரன்வசத்தில்) இல்லாமல், வெருவி - அஞ்சி, விரி திரை கடலின் - விரிகின்ற அலைகளையுடைய பாற்கடலிலே, ஓடி புக்கு ஒளித்தன - ஓடிப்போய்மறைந்தன; (எ - று.)

துருவாசமுனிவன் சாபமிட்டவுடனே அதன்படியே தேவலோகத்தில் ஒருபொருளும் மிச்சமில்லாமல் எல்லாப்பொருள்களும் கடலிற்போய்மறைந்தன வென்பதாம். அரமடந்தையர்-அரம்பைமடந்தையர் அல்லது அமரமடந்தையர் என்பதன் விகாரம். நவநிதி - மகாபதுமம், பதுமம், சங்கம், மகரம்,

கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என்பன; இனி நவநிதி என்பதற்கு என்றும் புதியனவான சங்கம் பதுமம் என்னும் இரண்டுநிதிகள் என்றும் பொருள்கொள்ளக்கூடும். பி-ம்:—[1]அமிர்தஞ்சுரபி. [2]உவரிபுக்கொளிப்ப. [3]ஓடினர். விண்ணவர்கண்ணன் மேவாரின், ஓடின வெண்ணெய்வாழ் கண்ணன்மேவாரின், ஓடின கண்ணன்வாழ்வெண்ணெய்மேவாரின். (௧௮)

**௧௯.—அப்போது தேவர்கள் ஒன்றுகூடித் திருமாலைச் சரணமடைதல்.**

வெய்ய மாமுனி வெகுளியால் விண்ணக முதலாம்
வைய மியாவையும் வறுமைநோய் [1]நலிதர வானோர்
தையல் பாகனுஞ் சதுமுகக் கடவுளுங் கூடிச்
செய்ய தாமரைத் திருமறு மார்பனைச் சேர்ந்தார்.

(இ - ள்.) வெய்ய - (கோபத்தாற்) கொடிய, மா - தவமகிமையையுடைய, முனி - துருவாசமுனிவனது, வெகுளியால் - கோபத்தால், விண் அகம் முதல் ஆம் - தேவலோகம் முதலான, வையம் யாவைஉம் - உலகங்களெல்லாவற்றையும், வறுமை நோய் - தரித்திரமாகிற வியாதி, நலிதர - வருத்த,—வானோர் - (அதனைக்கண்ட) தேவர்கள்யாவரும்,—தையல்பாகன்உம் - உமாதேவியை இடப்பக்கத்திலேயுடைய சிவபெருமானோடும், சதுமுகக்கடவுள்உம் - நான்குமுகங்களையுடைய பிரமதேவனோடும், கூடி - சேர்ந்து,—செய்ய தாமரை திரு மறு மார்பனை - சிவந்த தாமரைமலரில் வீற்றிருக்கின்ற இலக்குமியையும் (ஸ்ரீவத்ஸமென்னும்) மறுவையுமுடைய திருமார்பினையுடைய திருமாலை, சேர்ந்தார் - அடைந்தார்கள்; (எ - று.)

துருவாசமுனிவன் சாபத்தால் எல்லாச்செல்வமும் கடலிற்புக்கொளித்ததனால், திரிலோகாதிபதியான இந்திரனுக்கு நேர்ந்த வறுமை அவனாலாளப்படுகிற உலகமனைத்தையும் வருத்தத்தொடங்கவே, அக்கொடுமையைப் பொறுக்கமுடியாமல் தேவர்கள் யாவரும் தமக்குள்தலைவராகிய உருத்திரமூர்த்தியோடும் பிரமதேவனோடுங்கூடிச் சர்வேசுவரனை திருமாலைச் சரணமடைந்தன ரென்பதாம். செல்வத்தையிழந்த தேவர்கள் அச்செல்வத்திற்கு அதிதேவதையான லக்ஷ்மீதேவியின் கணவனை யடைந்தன ரென்க. மாமுனியின் வெய்ய வெகுளி என இயைத்தலும் ஒன்று. மறு-எம்பெருமானது மார்பில் உள்ளதொரு உத்தமலக்ஷணக்குறி. இனி, திரு மறு மார்பு என்பதற்கு-திருமகள் பிறர்மார்பைமறுத்தற்குக்காரணமான மார்பு என்றுமாம்.

**தையல்பாகன் என்பதி லடங்கிய கதை:**—முன்னொரு காலத்திற் கைலாசகிரியிலே சிவபிரானும் உமாதேவியும் ஏகாஸநத்தில் நெருக்கமாக வீற்றிருந்தபொழுது, பிருங்கியென்னும் மகாமுனி பரமசிவனைமாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்ய விரும்பி ஒருவண்டுவடிவ மெடுத்து அவ்வாசனத்தை இடையிலே துளைத்துக்கொண்டு அதன்வழியாக நுழைந்துசென்று அம்பிகையை விட்டுச் சிவபிரானைமாத்திரம் பிரதக்ஷிணஞ் செய்ய, அது கண்ட பார்வதிதேவி தன்பதியை நோக்கி 'முனிவன் என்னைப் பிரதக்ஷிணஞ் செய்யாமைக்கு ஏது என்ன?' என்று வினவ, உருத்திரமூர்த்தி 'இம்மை மறுமை

களில் இஷ்டசித்திபெறவிரும்புபவர் உன்னையும், முத்திபெறவிரும்புபவர் என்னையும் வழிபடுவர் : இது நூல் துணிபு' என்று சொல்ல, அது கேட்ட தேவி 'இறைவன் வடிவத்தைப் பிரிந்து தனியே யிருந்ததனாலன்றோ எனக்கு இவ்விழிவு நேர்ந்தது!'' என்று இரங்கி, தான் சிவபிரானைவிட்டுப் பிரியாதிருக்குமாறு கருதி, புண்ணிய க்ஷேத்திரமான கேதாரத்திற் சென்று தவம்புரிந்து வரம்பெற்று அப்பிரானதுவடிவத்திலே இடப்பக்கத்தைத் தனக்கு இடமாக அடைந்து அவ்வடிவிலேயே தான் ஒற்றுமைப்பட்டு நின்றன ளென்பதாம். இங்ஙனம் வலப்பக்கம் சிவரூபமும் இடப்பக்கம் பார்வதீரூபமுமாகுமாறு தனது வடிவத்தில் ஒருபங்கை அம்பிகைக்குக் கொடுத்துத் தான் ஒருபங்காயுள்ள சிவபிரான், அர்த்தநாரீசுவரமூர்த்தி யாவன். பி - ம்:—[1] நலியவானவரும். (௧௯)

**௨௦.—சரணடைந்த பிரமன் முதலியோர்க்குத் திருமால்அபயமளித்தல்.**

வெஞ்சொன் மாமுனி வெகுளியால் விளைந்தமை விளம்பிக்
கஞ்ச நாண்மலர்க் கிழவனுங் கடவுளர் பிறருந்
தஞ்ச மில்லைநின் சரணமே சரணெனச் [1]சலியா
தஞ்ச லஞ்சலென் றுரைத்தன னுலகெலா மளந்தோன்.

(இ - ள்.) (அடைந்து), நாள் கஞ்சம் மலர் கிழவன்உம் - அன்றுமலர்ந்த தாமரைப்பூவிலே தோன்றிய பிரமனும், கடவுளர் பிறர்உம் -(சிவபிரான் முதலிய) மற்றைத்தேவர்களும், வெம் சொல் மா முனி வெகுளியால் விளைந்தமை விளம்பி -கொடிய சாபச்சொல்லையுடைய சிறந்த முனிவனது கோபத்தால் நிகழ்ந்ததைச் சொல்லி, 'தஞ்சம் இல்லை - (வேறு எங்களுக்குப்) புகலிடம் இல்லை; நின் சரணம்ஏ சரண் - உனது திருவடிகளே அடைக்கலம்,' என - என்று பிரார்த்திக்க,—உலகு எலாம் அளந்தோன் - எல்லாவுலகங்களையும் அளவிட்டருளுந் திருமால், சலியாது - வஞ்சனையில்லாமல் [மனப்பூர்வமாக], (அத்தேவர்களைநோக்கி),—அஞ்சல் அஞ்சல் என்று - 'பயப்படாதேயுங்கள் பயப்படாதேயுங்கள்' என்றுகூறி, உரைத்தனன் - (சிலவார்த்தைகள்) சொல்லியருளுவானாயினன்; (எ - று.)—அதனை, மேலிரண்டுகவிகளிற் காண்க. பி - ம்:—[1] செப்ப. (௨௦)

**௨௧, ௨௨.—இதுவும், அடுத்த கவியும்-ஒருதொடர்: திருமால் பாற்கடலைக் கடையுமாறு கட்டளையிடத் தேவர்கள் மகிழ்தல்.**

௨௧. மத்து மந்தரம் வாசுகி கடைகயி [1]றடைதூண்
[2]மெத்து சந்திரன் சுராசுரர் வேறுவே றுள்ள
கொத்தி ரண்டுபால் வலிப்பவ ரோடதி கொடுத்துக்
கத்து வாரிதி மறுகுற [3]வமிழ்தெழக் கடைமின்.

௨௨. யாமு மவ்வயின் வருதுநீர் கதுமென வெழுந்து
போமி னென்றருள் புரிதலு மிறைஞ்சினர் புகழ்ந்தார்
நாம மின்றெனக் குனித்தனர் நல்குர வொழிந்த
தாமெ னும்பெருங் களிதுளக் குறுதலா லமரர்.

(இ - ள்.) (உக) 'மந்தரம் - மந்தரமலை, மத்து - மத்தாகவும், வாசுகி - வாசுகியென்னும் பாம்பு, கடை கயிறு - கடைகின்ற கயிறாகவும், மெத்து சந்திரன் - குளிர்ந்ததன்மையையுடைய பூர்ணசந்திரன், அடை தூண் - அடைதூணாகவும், வேறு வேறு கொத்து உள்ள சுர அசுரர் - வெவ்வேறு கூட்டமாகப்பிரிந்துள்ள தேவர்களும் அசுரர்களும், இரண்டு பால் வலிப்ப வர் - (வால் தலை என்னும்) இரண்டுபக்கங்களிலும் (கடைகயிற்றைப்) பிடித் திழுத்துக்கடைபவராகவும் (அமைய),ஓடதி கொடுத்து-ஓஷதியைப்பெய்து, கத்து வாரிதி - ஒலிக்கின்ற பாற்கடலை, மறுகுஉற - கலங்கும்படி, அமிழ்து எழ - அமிருதம் உண்டாக, கடைமின் - கடையுங்கள்; (உஉ)—யாம்உம்- நாமும், அவ் வயின்-(பாற்கடல்கடைகின்ற) அவ்விடத்து, வருதும் - வரு வோம்; நீர் - நீங்கள், கதுமென - விரைவாக, எழுந்து போமின் - புறப்பட் டுப் போங்கள்,' என்று—, அருள் புரிதலும் - (திருமால்) திருவாய்மலர்ந் தருளினவளவில்,—அமரர் - தேவர்கள், இறைஞ்சினர் புகழ்ந்தார் - (அத் திருமாலை) வணங்கித் துதித்து, நல்குரவு ஒழிந்தது ஆம் எனும் பெரு களி துளக்குறுதலால் - '(நமது) வறுமை (இனி விரைவில்) நீங்கியதாய்விடும்' என்கிற கருத்தினாலாகிய மிக்க மகிழ்ச்சியானது ஆட்டுதலினால், நாமம் இன்று என - அச்சமில்லை யென்று சொல்லிக்கொண்டு, குனித்தனர் - ஆனந்தக்கூத்தாடினார்கள்; (எ - று.)

தேவர்கட்கு அபயமளித்த திருமால் இழந்த செல்வங்களை மீண்டும் பெறும்பொருட்டுப் பாற்கடலைக் கடையுமாறு அத்தேவர்கட்குக் கட்டளை யிட்டுத் தானும் துணைபுரியுமாறு வருவதாகத் திருவருள்புரிய, அதனைக் கேட்ட தேவர்கள், அப்பெருமானைப் புகழ்ந்து இனித் தங்களது வறுமைத் துன்பந்தீருமென்று துணிவு கொண்டு ஆனந்தக்கூத்தாடினார்க ளென்க

உக:—மத்து - மந்தம் வடமொழியின்திரிபு மந்தரம்-ஸப்தகுலபர்வதங் களிலொன்று; (மற்றவை கைலாஸம் இமயம் விந்த்யம் நிஷதம் ஏமகூடம் நீலகிரி என்பன: கந்தமாதனத்தையுங்கூட்டி,எட்டென்பாருமுளர்.) வாசுகி- அஷ்டமகாநாகங்களுள் ஒன்று; (மற்றவை - அநந்தன், தட்சகன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் என்பன; இவற்றைக் கடவுட்பாம்பென்பர்: இவை - முறையே கிழக்கு முதலிய எட் டுத்திக்குக்களிலுமிருந்து பூமியைத் தாங்குவன; காசியபப்பிரமாவுக்கு அவன் மனைவிமார்களுள் கத்ருஎன்பவளிடம் பிறந்தவை.) அடை தூண் - கடைகயிற்றைச்சார்த்திக் கட்டுந் தூண். தூண் - ஸ்தூணா என்னும் வட மொழியின் திரிபென்பர். மெத்துதல் - நிறைதல்: மெத்தென்றிருத்தலென் பாருமுளர். ஓடதி - ஓஷதீ: இங்கே, அமிருதவல்லியென்னும் மூலிகை. வாரிதி - நீர்தங்குமிடம்: வடசொல். பி - ம்:—[1] அடுதூண். [2] மெய்த்து. [3] அமிர்து. (உஉ)

**உ௩.—திருமாலின் கட்டளைப்படியே தேவர்கள் பாற்கடல் கடைதல்**

மலைபி டுங்கினர் வாசுகி பிணித்தனர் மதியை
நிலைபெ றும்படி நட்டன ரோடதி நிரைத்தா

ரலைபெ றும்படி பயோததி கடைந்தன ரவனி
நிலைத ளர்ந்திட வனந்தனுங் கீழுற நெளித்தான்.

(இ - ள்.) (பின்பு தேவர்கள் திருமாலின் நியமனத்தின்படி அசுரர்களை யுங் கூட்டிக்கொண்டு), மலை பிடுங்கினர் - (மந்தர) கிரியைப்பேர்த்து வந்து, வாசுகி பிணித்தனர் - வாசுகியென்னும்பாம்பாற் கட்டி, மதியை நிலைபெறும் படி நட்டனர் - சந்திரனை(த் தூணாக) நிலைத்துநிற்கும்படி நட்டு, ஓடதி நிரைத்தார் - மூலிகைகளைக் கூட்டமாகப்பெய்து, அலைபெறும்படி - (மிக்க) அலைகளை அடையும்படி, பயோததி கடைந்தனர்-திருப்பாற்கடலைக் கடைந் தார்கள்; (அப்பொழுது தேவர்களும் அசுரர்களும் யாவரும் ஓரிடத்திற் கூடி நின்று கடைதலாலுண்டான அதிபாரத்தால்), அவனி நிலை தளர்ந்திட - பூமி நிலைகுலைய, அனந்தன்உம் - (அதன்கீழிருந்து தாங்குகின்ற) ஆதிசேஷ னும், கீழ் - பாதாளலோகத்தில், உற - மிகவும், நெளித்தான் - உடம்பு நெளித்தான்; (எ - று)

திருமாலின்கட்டளைப்படியே தேவர்கள் அசுரர்களையும் துணைக்கொ ண்டு, வாசுகியின் வாய்ப்புறத்தில் அசுரர்களும் வாற்புறத்தில் தாமுமாகஇரு ந்து மிகவுங்குழம்பும்படி பாற்கடலைக் கடைகையில், கீழிருந்து பூமியைத் தாங்குகின்ற ஆதிசேஷனும் ஒருங்கே பலருந்திரண்டதனாலுண்டான பாரத் தைத் தாங்கமுடியாமல் வருந்தியுடல்நெளித்தனனென்பதாம். தேவர்அசுரர் என்ற இருதிறத்தாருக்கும் 'சாவும் கிழத்தனமும் இல்லாமலிருப்பதற்கு என்னசெய்யலாம்?' என்று ஓரெண்ணமுண்டாக, பாற்கடலைக் கடைந்து ஸாரமாகிய அமிருதத்தைக் கொள்ளவேண்டு மென்று எண்ணமுண்டாய்க் கடலைக் கடைந்தனரென்றே முதனூலிற் காணப்படுகின்றது.

பயஸ் - பால்; உததி - கடல், நீர்தங்குமிடம்: இவ்விரண்டும் வடநூல் விதியின்படி 'பயஉததி' எனப் புணரற்பாலது, ஜலோததி க்ஷீரோததி என் னும் வாய்பாட்டையொத்துத் தமிழில் 'பயோததி' எனப் புணர்ந்து வழங்கு கின்றது; பயோததி என்பது, சரியான வடசொல்லாம். அநந்தன் - பிரளய காலத்தும் அழிவில்லாமல் என்றும் ஒருதன்மையாக நித்தியனாயிருப்பவ னென்று பொருள்; இவன் பூமியின் கீழிருந்து ஆயிரந்தலைகளாலும் பூமி யைத் தாங்குகின்றன னென்பது, நூற்கொள்கை. (உங)

உச.—பாற்கடலைக்கடைதற்குத் திருமால் உதவிபுரிதல்.

திறல்கொ ளாமையாய் முதுகினில் மந்தரந் திரிய
விறல்கொ ளாயிரந் தடக்கைகள் பரப்பிமீ வலிப்ப
[1]மறனி லாமுனி வெகுளியின் மடிந்தன வரவே
[2]யறனி லார்மனத் தடையலா நெடுந்தகை யமைத்தான்.

(இ - ள்.) அறன் நிலார் மனத்து - தருமநெறியில் நில்லாதவருடைய மனத்திலே, அடையலா - சேராத, நெடு தகை - பெருமைக்குணங்களை யுடைய திருமால்,—முதுகினில் மந்தரம் திரிய - (தனது) முதுகின்மேலே மந்தரமலை சுழலும்படி, திறல் கொள் ஆமை ஆய் - வலிமையைக்கொண்ட

தொரு கூர்மாவதாரமாகியும், மீ வலிப்ப-(மந்தரகிரியை) மேலே அழுத்தும் படி, விறல் கொள் ஆயிரம் தட கைகள் பரப்பி - வலிமையைக்கொண்ட (தனது) பெரிய ஆயிரந்திருக்கைகளைப் பரவச்செய்தும், மறன் இலா முனி வெகுளியின் மடிந்தன வர - பாவமில்லாத துருவாச முனிவனது கோபத் தால் நீங்கின பொருள்கள் மீண்டு வரும்படி, அமைத்தான் - (அதற்கு வேண்டிய காரியங்களைச்) செய்தருளினன்; (எ - று.)

மறன் இல் ஆம் எனப்பிரித்து - கோபத்துக்கு இடமான என்றும், மறன் நில்லா எனப் பிரித்து - கோபம் மனத்தில் அடங்கிநிற்கப்பெறாத என்றும், மறன் நிலாம் எனப்பிரித்து - கோபம் உலாவிவிளங்குதற்கிடமான என்றும் பொருள்கொள்ளலாம். நான்காம் அடியில்,அறன் இல்லார் என்றும் பிரிக்கலாம். பக்தியையுடைய அடியவர்களது உள்ளக்கமலத்தில் அவர்கள் நினைத்தவடிவோடு விரைந்துசென்று வீற்றிருத்தலும் அங்ஙனம் அடியவரல்லாதவரது மனத்திற் சென்று சேராமையும் கடவுளது இயல்பு. பி - ம்:—[1] மறமுலாம். [2] அறனிலா. (உச)

உரு.—பாற்கடலில் தோன்றிய அமிர்தத்தைத் தேவர்களே பெறுதல்.

இறந்து நீங்கின யாவையு மெம்பிரா னருளாற்
பிறந்த வவ்வயின் சுராசுரர் தங்களிற் [1]பிணங்கச்
சிறந்த மோகினி மடந்தையா லவுணர்தஞ் செய்கை
துறந்து மாண்டன ராரமிர் தமரர்கள் துய்த்தார்.

(இ - ள்.) இறந்து நீங்கின யாவைஉம் - (முன்னே முனிவர் இட்ட சாபத்தாற் கடலிற்போய்) மறைந்து ஒழிந்த பொருள்களெல்லாம், எம்பிரான் அருளால் - எமது தலைவனாகியதிருமாலினது திருவருளினாலே, பிறந்த - (பாற்கடலினின்று) உண்டாயின; அவ்வயின் - அப்பொழுது, சுர அசுரர் - தேவர்களும் அசுரர்களும், தங்களில் பிணங்க - (அங்கு உண்டான அமுதம் தமக்குச் சேரற்பாலது என்று) தங்களுக்குள்ளே மாறுபட,—சிறந்த மோகினி மடந்தையால்-(அதைக்கண்டு எம்பெருமான்கொண்ட) சிறப்பான கண்டவர்களைமயக்குவதொரு பெண்வடிவத்தால், அவுணர் தம் செய்கை துறந்து மாண்டனர் - அசுரர்கள் (அமுதத்திற்காகப் பிணங்கிய) தமது செய்கையையொழிந்துமடிந்தார்; (அந்தச்சமயத்தில்), அமரர்கள் - தேவர்கள், ஆர் அமிர்து - (பெறுவதற்கு) அருமையாகிய அமிருதத்தை, துய்த்தார் - உண்டார்கள்; (எ - று.)

திருமால் பாற்கடலைக் கடையுமாறு உதவிபுரிந்தபோது, துருவாச முனிவன் சாபத்தாற் கடலிற்சென்றொளித்த தேவலோகத்துப்பொருள்கள் யாவும் மீண்டுந் தோன்றுகையில், அவற்றுளொன்றாகிய அமிருதங் காரண மாகத் தேவர்கட்கும் அசுரர்கட்கும் கலகமுண்டாக, திருமால் மோகினி வடிவமெடுத்து அசுரர்களை வஞ்சனையால் மோஹித்துஒடுங்கச்செய்து தேவர்கட்கே அவ்வமிருதத்தைக் கொடுத்தனனென்பதாம். ஸ்ரீமந்நாரா யணன் தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடையும்போது வாசுகியின் சிரங்களெல்லாம் விஷத்தைக் கக்கிக்கொண்டிருக்கை

யில் ஹாலாஹலவிஷம் முதலில் தோன்ற தேவர்களின் வேண்டுகோளினு லும் திருமாலின் நியமனத்தாலும் சிவன் அதனையுட்கொண்டபின் மீண்டும் கடைகையில், சுழலாநின்ற மந்தரம் அழுந்த, திருமால் அப்பருவதத்துக்குக் கீழே மஹாகூர்மரூபத்தைத்தரித்து அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்து அதனைக் கடலினுள் அழுந்திவிடாதபடி செய்தனனென்றும்: மிகவும் பெரியதான ஒரு திவ்வியரூபத்தினாலே அப்பருவதத்தின் மேற்புறத்தை ஆக்கிரமித்து அதனைப் பலப்படுத்தியருளினனென்றும்: வேறொரு திருமேனியைத் தரித்துத் தேவதைகள்பக்கத்திலேயும் மற்றொரு திருமேனியைத் தரித்து அசுரர்கள்பக்கத்திலேயும் நின்று வாசுகியினுடைய வாலையும் தலையையும் பிடித்து வலமும் இடமுமாகஇழுத்துக்கடைந்தருளினு னென்றும்: அப்பால் தந்வந்திரி அப்ஸரஸ் வாருணி உச்சைஃஸ்ரவஸ் கௌஸ்துபம் முதலியவற்றோடு அமிர்தமும் உண்டாக அதுநிமித்தம் தேவாசுரர்கட்குப் பெரும்போர்விளைய, அத்திருமால் மோகநாகாரமான ஒருஸ்திரீரூபத்தைத்தரித்து அசுரர்களை வஞ்சித்து அமுதத்தைக் கைக்கொண்டு அமரர்களுக்குப் பிரசாதித்தன னென்றும் நூல்கள் கூறும். மோஹிநீ-(தன்னைக்கண்டவரை) மதிமயங்கும்படி செய்யவல்ல கட்டழகுடையதெய்வமகள். பி-ம்:—[1] பிணங்கி.

உ௯.—திருமால் பாற்கடலில்தோன்றிய பொருள்களைப் பங்கிடுதல்.

வெருவு மாலமும் பிறையும் [1]வெவ் விடையவற் கீந்து
தருவும் வேறுள தகைமையும் சதமகற் கருளி
மருவு [2]தொல்பெரு வளங்களும் வேறுற வழங்கித்
திருவு மாரமு மணிந்தனன் சீதர மூர்த்தி.

(இ - ள்.) வெருவும் - (கண்டவர்) அஞ்சும்படியான, ஆலம்உம் - (கொடிய) ஹாலாஹலவிஷத்தையும், பிறைஉம் - (குளிர்ந்த) சந்திரனையும், வெம்விடையவற்கு - பயங்கரமானருஷபத்தை வாகனமாகவுடையசிவபிரானுக்கு, ஈந்து - கொடுத்து,—தருஉம் - பஞ்சதருக்களையும், வேறுஉள தகைமைஉம் - (தேவமாதர் நிதிகள் உச்சைச்சிரவம் ஐராவதம் சிந்தாமணி முதலாக) மற்றுமுள்ள சிறப்புப்பெற்றபொருள்களையும், சதமகற்கு அருளி-நூறு யாகஞ் செய்துள்ளவனாகிய இந்திரனுக்குக் கொடுத்து,—மருவு தொல் பெரு வளங்கள் உம் - மற்றும்பொருந்திய (புஷ்பகம் முதலிய) பழமையான பெரியஐசுவரியங்களையும், வேறு உற வழங்கி - (குபேரன் முதலிய) வெவ்வேறு தேவர்களுக்குப் பொருந்தக்கொடுத்து,—சீதரமூர்த்தி - திருமகளைத் திருமார்பில் தரிக்கின்ற திருமேனியையுடைய திருமால்,—திருஉம் - இலக்குமியையும், ஆரம்உம்-கௌஸ்துபரத்தினத்தையும், அணிந்தனன் - (தான்) தரித்துக்கொண்டான்; (எ - று.)

பாற்கடலில்தோன்றியஅமிருதத்தைத் தேவர்கள்யாவர்க்குங்கொடுத்த திருமால், அதனினின்றுதோன்றிய ஹாலாஹலத்தையும் பிறைச்சந்திரனையும் சிவபிரானுக்கும், கற்பகவிருக்ஷம் முதலியவற்றைத்தேவேந்திரனுக்கும், புஷ்பகம் முதலியவற்றைக் குபேரன்முதலியோர்க்கும் கொடுத்தருளி, இலக்குமியையும் கௌஸ்துபரத்நத்தையும் தானே அணிந்தருளின னென்க.

பிறை - பிறப்பது என இளஞ்சந்திரனுக்குக் காரணக்குறி. விடை, ஆரம், சிதராமூர்த்தி-விருஷம், ஹாரம், ஸ்ரீதராமூர்த்தி. ஆரமென்பது இங்கே, அதற்குக் கருவியாகின்ற இரத்தினத்திற்குக் காரியவாகுபெயர். பி - ம்:—[1]வெள். [2]பல். (உசு)

உஎ.—தேவர்களைக் கொல்லும் புதல்வனைத் தருமாறு திதி தன் கணவனை வேண்டுதல்.

அந்த வேலையிற் றிதிபெருந் துயருழந் தழிவாள்
வந்து காசிபன் மலரடி வணங்கியென் மைந்த
ரிந்தி ராதியர் புணர்ப்பினு [1]விறந்தன ரெனக்கோர்
மைந்த னீயரு ளவர்தமை மடித்தலுக் கென்றாள்.

(இ - ள்.) அந்த வேலையில் - அக்காலத்தில், திதி - (அசுரர்களது தாயாகிய) திதியென்பவள், பெரு துயர் உழந்து அழிவாள் - (புத்திரசோகத்தால்) மிக்க துன்பத்தை அனுபவித்து மனமழிபவளாய், வந்து - (அருகில்) வந்து, காசிபன் மலர் அடி வணங்கி - (தனது கொழுநனாகிய) காசியப முனிவனது தாமரைமலர்போலுந் திருவடிகளை நமஸ்கரித்து, (அவனை நோக்கி), 'என் மைந்தர் - எனதுமக்களாகிய அசுரர்கள், இந்திர ஆதியர் புணர்ப்பினால் - இந்திரன் முதலான தேவர்களது சூதினால், இறந்தனர் - மரணமடைந்தார்கள்; (ஆதலால்), அவர்தமை மடித்தலுக்கு - அத்தேவர்களை அழிப்பதற்கு, எனக்கு ஓர் மைந்தன் நீ அருள் - எனக்கு ஒரு மகனை நீ அளித்தருளுவாயாக,' என்றாள் - என்று பிரார்த்தித்தாள்; (எ - று.)

அமிருதம்நிமித்தமாகத் தேவாசுரர்களுக்குள்நிகழ்ந்த போரில் திருமாலினுதவியினால் தேவர்கள் அசுரர்களைக்கொன்று அமிருதத்தையும் இழந்த சுவர்க்கத்தையும் பெற்று இனிதிருந்தனராக, தன்மைந்தர்கள் தேவர்களா லிறந்ததுகண்டு பெருந்துயரமடைந்த திதி, தன்கணவனைக் கிட்டி உமது புத்திரர்களான தேவர்களால் என் புதல்வர் மாண்டனராதலால் தேவேந்திரனைக்கொன்று மூவுலகங்களையும் ஆளவல்ல ஒரு புதல்வனைப் பெறவிரும்புகின்றேன். என் கருத்துநிறைவேறும்படி அருள் புரிந்து அதற்கு ஏற்பத் தவஞ்செய்யும்படி அநுமதியுந் தருக' என்று வேண்டினளென்க. திருமால் மோகினியவதாரமெடுத்து அசுரர்களைச் செயலொழிந்து மடியச்செய்ததற்குத் தேவர்களதுவேண்டுகோள் காரணமாதலால், 'இந்திராதியர் புணர்ப்பினு லிறந்தனர்' என்றது. பி - ம்:—[1]மடிந்தனர். (உஎ)

உஅ.—தன் கணவன் கட்டளையால் திதி தவஞ்செய்தல்.

என்று கூறலு மகவுனக் களித்தன மினிநீ
சென்று பாரிடைப் பருவமோ ராயிரந் தீர
நின்று மாதவம் புரிதியே னினைவுமுற் றுதியென்
றன்று கூறிடப் புரிந்தன ளருந்தவ மனையாள்.

(இ - ள்.) என்று கூறலும் - இவ்வாறு (திதி) சொன்னவளவில், (காசியபன்), 'உனக்கு மகவு அளித்தனம்-நினக்குப் புத்திரனொருவனைக் கொடுத்தோம்; இனி - இனிமேல், நீ—, பாரிடை சென்று - (தவஞ்செய்தற்குத்

தக்க) பூமியிலே போய், பருவம் ஓர் ஆயிரம் தீர - ஓராயிரம் வருஷகாலங் கழிய, நின்று மா தவம் புரிதி ஏல் - நிலைநின்று பெரிய தவத்தைச் செய்வாயானால், நினைவு முற்றுதி-(உன்) எண்ணம் நிறைவேறப்பெறுவாய்,' என்று-, அன்று கூறிட - அப்பொழுதுசொல்லியருள, அனையாள் - அந்தத் திதி, அரு தவம் புரிந்தனள்-(பிறர்செய்தற்கு) அருமையானதவத்தைச்செய்தாள்.

'நீ வேண்டியபடியே வரங்கொடுத்தோம்: நீ ஆயிரம் வருஷங்கள் நிரம்பும்வரையில் பரிசுத்தமாக இருந்து தவம்புரிந்தாயாயின் உனக்கு இந்திரனைக்கொல்லும் புதல்வன் தோன்றுவான்' என்று அருளி அவளைத் தடவிக் கொடுத்துக் காசியபன் தவத்துக்குச்செல்ல,திதி குசப்லவமென்றுபேர்வழங்கிய இந்த இடத்தில் கடுந்தவம்புரியலாயின ளென்க. நினைவுமுற்றுதி - வினைமுதல்வினைகொண்டது. (உ அ)

**உகூ.—திதி தவஞ்செய்வதுணர்ந்த இந்திரன் அவளுக்கு அடிமையிலமர்ந்து தவச்சோர்வில் அவள்கருப்பத்தைச்சிதைத்தல்.**

கேட்ட வாசவ னன்னவட் கடிமையிற் [1]கிடைத்து
வாட்ட மாதவத் துணர்ந்தவள் வயிற்றுறு மகவை
வீட்டி யேயெழு கூறுசெய் திடுதலும் விம்மி
நாட்ட நீர்தர மருத்தெனு நாமமு நவின்றான்.

(இ - ள்.) கேட்ட - (இச்செய்தியைக்) கேள்வியுற்ற, வாசவன் - இந்திரன், அன்னவட்கு அடிமையில் கிடைத்து - அவளுக்கு அடிமைத்தொழில் செய்யும் வேலையிலே அமர்ந்து, மாதவத்து வாட்டம் உணர்ந்து - (அவள் செய்துவரும்) பெருந் தவத்திலே ஒரு சோர்வை அறிந்து, (அச்சமயத்தில்), அவள் வயிறு உறு மகவை வீட்டி - (தான் நுண்ணிய உருக்கொண்டு) அவளது வயிற்றினுள்ளே (சென்று அங்குத்) தங்கிய கருப்பத்தைப் பிளந்து, எழு கூறு செய்திடுதலும் - ஏழுதுண்டாக்கினவளவில், (அவள்), விம்மி - அழுது, நாட்டம் நீர் தர - கண்களில் நீரைப் பெருக்க, மருத்து எனும் நாமம்உம் நவின்றான் - (இந்திரன் அவள்விருப்பத்தின்படி அக்கண்டங்களுக்குச்) சப்தமருத்துக்களென்னும் பெயரையுங் கூறிப்போனான்; (எ-று.)

திதி யென்பவள் தன்னைக்கொல்லும்புத்திரனைப் பெறத் தவஞ்செய்கின்றா ளென்பதனை யறிந்த தேவேந்திரன் விநயம் முதலிய குணங்களோடு அவளுக்குப் பணிவிடை செய்பவனாக அமர்ந்து நின்றனனாக, திதியின் தவம் முற்றுப்பெறுவதற்குப் பத்துவருஷங்களிருக்கையில் ஒருநாள் நடுப்பகலில் அவள் தலைமாட்டிற் காலைவைத்து உறங்க, அசுசிநேர்ந்த அச்சமயம்பார்த்து இந்திரன் நுண்ணியவுருவங் கொண்டு அவளது வயிற்றினுள்ளே சென்று அவள் கருப்பத்தை ஏழுதுண்டங்களாகப் பிளக்கையில் வயிற்றுக்கரு அழ, திதி கண்விழித்து 'கருவைக் கொல்லவேண்டா' என்ன, இந்திரன் அவள்முன்னேதோன்றி 'தாயே! உமக்குத் தூய்மை தப்பினமையால் நான் கருவை ஏழுதுண்டமாகச்சிதைத்தேன்:என்பிழையைப் பொறுக்கவேண்டும்' என்ன, திதியும் துயரமடைந்து அவ்விந்திரனைநோக்கி 'என் தவற்றினால் என்கருப்பம் துண்டுபட்டது: உன்மீது பிழையில்லை;

என்புத்திரர்களான இவ்வெழுவரும் வாதஸ்கந்தாபிமானதேவதைகளாகி மாருதர்களென்று பேர்பெற்று எங்குஞ் சஞ்சரித்துக்கொண்டிருக்கவேண்டும்' என்ன, தேவேந்திரன் அவ்வேண்டுகோளுக்கிணங்கிஅவ்வேழுதுண்டங் கட்கும் பெயர்தந்து எங்குஞ்சஞ்சரிக்க விடுத்தனனென்க. மருத்து - வாயு. சப்தமருத்துக்களின் பெயர் - ஆவகம், பிரவகம், சம்வகம், உத்வகம், விவகம், பரிவகம், பராவகம் என்பன; இவற்றிற்கு இடம் ஆவகத்திற்கு மேக மண்டலமும், பிரவகத்திற்குச் சூரியமண்டலமும், சம்வகத்துக்குச் சந்திர மண்டலமும், உத்வகத்திற்கு நக்ஷத்திரமண்டலமும், விவகத்திற்குக் கிரக மண்டலமும், பரிவகத்திற்குச் சப்தருஷிமண்டலத்தோடு சுவர்க்கபூமிகளும், பராவகத்திற்குத் துருவமண்டலமும் என்று விஷ்ணுபுராணத்திற் கூறப்பட்டுள்ளன. இனி, எழுமாருதங்களுக்கும் பிரமலோகம், இந்திரலோகம், ஆகாயம், கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்னும் எழும்இடமென்று ஸ்ரீவால்மீகத்திற் கூறியுள்ளது. பி - ம்:—[1]கிடைப்ப. (உக)

௩௦.—விசுவாமித்திரன் இது திதி தவஞ்செய்த இடமென்று காட்டிப் பிறகு சரவணத்தைக் காட்டுதல்.

[1]ஆய திவ்விட மவ்விட மவிர்மதி யணிந்த
தூய வன்றனக் [2]குமைவயிற் றோன்றிய தொல்லை
வாயு வும்புனற் கங்கையும் பொறுக்கலா வலத்த
சேய்வ ளர்ந்தருள் சரவண மென்பதுந் தெரித்தான்.

(இ - ள்.) ஆயது இ இடம் - இங்ஙனமாகிய வரலாற்றையுடையது இந்த இடம்; அ இடம் - அந்த இடம்,—அவிர் மதி அணிந்த தூயவன் தனக்கு-விளங்குகின்ற சந்திரனைத்தரித்த பரிசுத்தனாகியசிவபிரானுக்கு, உமைவயின் - உமாதேவியின்மூலமாக, தோன்றிய - பிறந்த, தொல்லை வாயு உம் புனல் கங்கைஉம் பொறுக்கலா வலத்த - பழமையான வாயுதேவனாலும் நீர்மயமான கங்காதேவியினாலும் பரிக்கமுடியாத வலிமையையுடைய, சேய்-செம்மைநிறமுடைய சுப்பிரமணியக்கடவுள், வளர்ந்தருள் - வளர்ந்தருளிய, சரவணம் - நாணற்காடாகும், என்பதுஉம் - என்பதையும், தெரித்தான் - (கௌசிகமுனி இராமனுக்குத்) தெரிவித்தான்; (எ - று.)

சர+வநம்=சரவணம்; வடநூல் விதிப்படி வருமொழியில் நகரம் ணகரமாயிற்று. அவ்விடமென்றது-எதிரிற்சேய்மையிற்காணப்பட்டதொருசோலையை. சேனாபதிவேணுமென்று வேண்டிய தேவர்களின் வேண்டுகோளினால் வாயுதேவனைச் சகாயமாகக்கொண்ட அக்கினிதேவன் சிவபெருமானது திருமேனியினின்று வெளிப்பட்ட வீரியத்தைத் தாங்கிக் கங்கையில்விட, அக்கங்கையும் தாங்கமாட்டாமல் கைலாயத்தினருகேயிருந்த நாணற்காட்டில்விட, சுப்பிரமணியக்கடவுள் அங்குத்தோன்றிக் கிருத்திகாநட்சத்திரங்கள் முலைகொடுக்கஆறுமுகங்கொண்டு வளரலாயினனென்றறிக. கங்கையையடைந்தும் முனிவனைக் கங்கையின்வரலாற்றைக்கூறுமாறு இராமன் கேட்க, அதனைச்சொல்லத்தொடங்குகையில் இமவானுக்குக் கங்கை பார்வதியென்று இரண்டுபுத்திரிகளெனத்தொடங்கிப் பார்வதி சிவபிரானை மணந்தது குமரக்

கடவுளையுண்டாக்கியது முதலிய வரலாறுகளைக் கூறியதாக வந்துள்ளதன்றிச் சரவணத்தைச் சுட்டிக்காட்டியதாக முதனூலிற் கூறப்படவில்லை. பி - ம்:—[1]ஆயதிப்புறமப்புறத்து. [2]அரிவையில் (௩௰)

௩௧.—சூரியோதய வருணனை.

காலன் மேனியிற் கருகிருள் கடிந்துல களிப்பா
னீல வார்கலித் தேரொடு நிறைகதிர்க் கடவுண்
மாலின் மாமணி யுந்தியி னயனொடு [1]வந்த
மூல தாமரை முழுமலர் முளைத்தென முளைத்தான்.

(இ - ள்.) (பின்பு), காலன் மேனியின்-யமனது உடம்பினிறம்போல, கருகு - கறுத்துள்ள, இருள் - இருட்டை, கடிந்து - நீக்கி, உலகு அளிப்பான் - உலகத்தைக்காப்பவனாகிய, நிறை கதிர் கடவுள் - நிறைந்த கிரணங்களையுடையசூரியபகவான்,தேரொடுஉம்-(தனது) இரதத்துடனே,நீலம் ஆர் கலி - நீலநிறமாகியகடலிலே, மாலின் மா மணி உந்தியின் அயனொடு வந்த மூலம் தாமரை முழு மலர் முளைத்து என-திருமாலினது கரிய அழகிய திருநாபியிலே பிரமனோடு தோன்றிய முதன்மையான பெரிய தாமரைமலர் முளைத்ததுபோல, முளைத்தான் - உதித்தான்; (எ - று.)

திருமால் - கருங்கடலுக்கும், திருமாலின்உந்தி - அக்கடலிற் சூரியன் தோன்றுகிற உதயபருவதமுள்ள இடத்துக்கும், பிரமன் - சூரியனுக்கும், தாமரைமலர்-அவனது தேருக்கும் உவமையெனக்காண்க. பிரமன் செந்நிறமுடையவனாதலால், சூரியனுக்கு உவமையாவன். உலகளிப்பான் - உலகத்தைக்காக்கும்பொருட்டு, முளைத்தான் என்றுமாம். பி-ம்:—[1]மலர்ந்த, வந்து.

௩௨.—மூவரும் கங்கையைக் காணுதல்.

அங்கு நின்றெழுந் தயன்முதன் மூவரு மனையார்
செங்க ணேற்றவன் செறிசடைப் [1]பழுவத்தி னிறைதேன்
பொங்கு கொன்றையீர்த் தொழுகலாற் [2]பொன்னியைப் பொருவுங்
கங்கை யென்னுமக் கரைபொரு திருநதி கண்டார்.

(இ -ள்.) (சூரியோதயமானவுடன்), அயன் முதல்மூவர்உம் அனையார்-பிரமன்முதலான திரிமூர்த்திகளையும் ஒத்தவராகிய விசுவாமித்திரன் முதலிய மூவரும், அங்குநின்று எழுந்து - அவ்விடத்திலிருந்து புறப்பட்டு, செம் கண் ஏற்றவன் செறி சடை பழுவத்தில் நிறை தேன் பொங்கு கொன்றை ஈர்த்து ஒழுகலால் பொன்னியை பொருவும் - (கோபத்தாற்) சிவந்த கண்களையுடைய இடபத்தை வாகனமுங் கொடியுமாகவுடைய சிவபிரானது நெருங்கிய ஜடாடவியிலுள்ள நிறைந்த தேனினால் விளங்குகின்ற (பொன்னிறமுள்ள) கொன்றைமலரை இழுத்துக்கொண்டு பெருகுதலாலே (பொன்னியென்னும் பெயர்பெற்றுப்) பொன்னைக் கொழித்து வருகின்ற காவேரிநதியை ஒக்கின்ற, கங்கை என்னும் - கங்கை யென்கிற, அ-அந்த, கரை பொரு - இருகரைகளிலும் மோதுகின்ற, திரு நதி - அழகிய [மேன்மையான] யாற்றை, கண்டார்-பார்த்தார்கள்; (எ - று.)

பிரமன்-திரிமூர்த்திகளுட்பிரமவிருடிப்பட்டத்தைஅரிதிற்பெற்றவிசுவா மித்திரனுக்கும், விஷ்ணு - அவனது அவதாரவிசேஷமான ஸ்ரீராமனுக்கும், சங்காரக்கடவுளான உருத்திரன் - முன்கோபமுடைய லக்ஷமணனுக்கும் உவமையென உய்த்துணர்க. அப்பொன்னி என்ற சேய்மைச்சுட்டு, அந்நதி யின் சிறப்பை விளக்கிற்று. திருமாலினது உலகமாகியபரமபதத்திற்கு அரு கிலுள்ள விரஜையென்கிற பரிசுத்தமான நதியினது அமிசமாய் நிலவுலகத் தில் திருமாலின் திருப்பதிகளுட் சிறந்த திருவரங்கம்பெரியகோயிலின் இருபாலிலும் மாலைபோலச் சூழ்ந்துள்ள காவேரிநதியை, சுவர்க்க லோக த்தினின்று பூலோகத்துக்கு வந்த கங்காநதிக்கு* உவமையாகக் கூறுதல் சிறப்புடையதாமாறு அறிக. எவரும் தமது நாட்டிலுள்ளதைச் சிறப்பித்துக் கூறுதல் இயல்பாதலால், கவி கங்கைக்குக் காவிரியை உவமைகூறினர்;உப மேயத்தினும் உபமானம் சிறந்திருத்தல்வேண்டு மென்பது, அலங்காரநூ லார் கொள்கை. 'கங்கையிற்புனிதமாய காவிரி''என்றார் பெரியாரும்.''நலந் திகழ் சடையான் முடிக்கொன்றை மலருந் நாரணன் பாதத்துழாயுங், கலந்திழி புனலாற் புகர்படு கங்கை'' என்னும் பெரியார்பாசுரத்துக்கு ஏற்ப, 'செங்கணேற்றவன் செறிசடைப் பழுவத்தி னிறைதேன், பொங்கு கொன் றையீர்த் தொழுகலால்' என்றார். பி - ம்: —[1]பருவத்தின், [2]பொன்னியல்.

ருரு.—இதுமுதல் இருபத்தோன்பதுகவிகள் கங்கையின்வரலாறு:—
முனிவன் சகரனென்றொருவ னுளனெனல்.

இந்த மாநதிக் குற்றுள தகைமைய யாவு
மெந்தை கூறுகென் றிராகவன் வினவுற வெனையாண்
மைந்த நின்றிரு மரபுளா னயோத்திமா நகர்வாழ்
விந்தை சேர்புயன் சகரனிம் மேதினி புரந்தோன்.

(இ - ள்.) 'இந்த மா நதிக்கு - இப்பெரிய யாற்றுக்கு, உற்று உள - அமைந்துள்ள, தகைமைய யாஉம் - பெருமையுடைய வரலாறுக ளனைத் தையும், எந்தை - எனதுதந்தைபோற்சிறந்த முனிவனே! கூறுக-சொல்வா யாக', என்று—,இராகவன்-ஸ்ரீராமன், வினவுற-கேட்க,—(விசுவாமித்திரன் சொல்வான்):—எனை ஆள் மைந்த-என்னைக்காத்தருளின[அடிமைகொண்ட] சக்கரவர்த்திதிருமகனே! நின் திரு மரபு உளான் - உனது [நீ அவதரித்த] மேலான சூரியகுலத்திலே பிறந்துள்ளவனும், அயோத்தி மா நகர் வாழ் பெரிய அயோத்தியையென்னும் பட்டணத்திலே அரசாண்டு வந்த, விந்தை சேர்புயன்-வீரமகள் பொருந்தியதோளுடையவனும் ஆகிய,சகரன்- சகரனென்பவன், இ மேதினி புரந்தோன் - இந்தப் பூமி முழுவதையும் ஒரு வனாய் அரசாண்ட சக்கரவர்த்தி; (எ - று.)—'இக்கவியில் வினவுற' என் பது,மேல் அறுபத்திரண்டாங் கவியில் 'என்று கூறலும்' என்பதனோடு முடியும்.

விசுவாமித்திரன்,தனது வேள்வியை இராமன் காத்ததனாலும்,தான்தத் துவஞானமுடையவனாதலாலும், ஸ்ரீராமனை'எனையாள்மைந்த'என்றான். விந் தை - விந்த்யவாஸிநீயென்பதன் திரிபென்பர்: போருக்குஉரிய தேவதை

காளியாதலாலும், அவளருளே வெற்றிக்குக் காரணமாதலாலும், அவள் வாழிடம் விந்தமலையாதலாலும், வீரத்தைத் தோள்வலியென்பது மரபாதலாலும் 'விந்தைசேர்புயன்' என்றான்: "அந்தரியிருந்த, விந்தமால்வரை", "விந்தைவாழ்வுகூர் விறன்மிகுத்த தோள்," "விந்தத்துறைவாளைபுயத்திருத் திருத்தி" என்பன இங்கு நோக்கத்தக்கன. சகரன் - விஷத்தோடுகூடப்பிறந்தவன்; காரணப்பெயர், கரம் - விஷம். பாகு என்னும் அரசனது மனைவிகளுளொருத்தி கர்ப்பவதி யாயிருக்க, அவளுடையசக்களத்திகண்டு அழுக்காறுகொண்டு அக்கருவை அழிக்கும்பொருட்டு அவளுக்குவிஷத்தைக் கொடுக்க, அந்தவிஷம் அக்குழந்தையைஅழிக்க ஆற்றலில்லாமல் கூடவே யிருக்க, அதனோடு பிறந்தவன். மேதினீ என்னும் வடசொல்லுக்கு- (திருமாலால்வதைக்கப்பட்ட மதுகைடபரென்னும் அசுரர்களது உடம்பின்) மேதசினல் [கொழுப்பினல்] நனைந்த தென்பது பொருள். (௩௩)

**௩௪.—சகரனது புத்திரர்களும் பௌத்திரனும்.**

விறல்கொள் வேந்தனுக் குரியவ ரிருவரில் விதர்ப்பை
பொறையி னல்கிய [1]வசமஞ்சற் கஞ்சுமான் புதல்வன்
பறவை வேந்தனுக் கிளையமென் சுமதிமுற் பயந்த
வறனின் மைந்தர்க [2]ள றுபதி னுயிரர் வலத்தார்.

(இ - ள்.) விறல் கொள் - ஜயத்தைக்கொண்ட, வேந்தனுக்கு - அந்தச் சகரமகாராஜனுக்கு, உரியவர் - உரிய மனைவிமார், இருவரில்-இரண்டுபேர்களுள், விதர்ப்பை - விதர்ப்பதேசத்தரசனது மகளாகிய முதல்மனைவி, பொறையின் நல்கிய - கருப்பத்திற் சுமந்து [பொறுமையோடு] பெற்ற, அசமஞ்சற்கு - அசமஞ்சனென்பவனுக்கு, அஞ்சுமான் - அம்சுமானென்பவன், புதல்வன் - புத்திரனவன்; பறவை வேந்தனுக்கு இளைய மென் சுமதி - பட்சிகளின் அரசனாகிய கருடனுக்குத் தங்கையான மென்மைக்குணமுடைய சுமதியென்னும் இரண்டாம்மனைவி, முன் பயந்த-முன்னேபெற்ற, அறனின்மைந்தர்கள்-தருமவழியையுடைய குமாரர்கள்,அறுபதினுயிரர்-அறுபதினாயிரம்பேர்; (அவர் யாவரும்), வலத்தார் - மிக்கவலிமையுள்ளவர்கள்.

விதர்ப்பை-பிறந்தநாட்டினல்வந்தபெயர்; இவளுக்குக்கேசினியென்பது இயற்பெயர். பொறை - கருப்பம்: பொறுக்கப்படுவ தென்று காரணப்பொருள்;பொறுத்தல்-பரித்தல். சகரசக்ரவர்த்தி தன்மனைவியரிருவரோடும் இமாலயத்தினருகிலிருக்கும் பிருகுப்ரஸ்ரவணமென்னும் மலையிற் சென்று தவம்புரிகையிற் பிருகுமகாமுனி பிரசன்னனாகி 'உன்மனைவியரிருவரில் ஒருத்தி வம்சவிருத்திகரனை புத்திரனொருவனையும் மற்றொருத்தி மகாபலசாலிகளான மக்களறுபதினாயிரவரையும் பெறுவர்' என்று அநுக்கிரகிக்க, அங்ஙனமே கேசினி ஒருபுத்திரனைப் பெற,சுமதி சுரைக்காயைப்போலொரு கர்ப்பபிண்டத்தைப்பெற, வெடித்த அதினின்று அறுபதினாயிரங்குமாரர்கள் தோன்றின ரென்றும்: மூத்தாளது மகன்பெயர் அஸமஞ்ஜனென்றும்: அவன் ஊரிலுள்ளாரது குழந்தைகளைக்கொண்டுபோய்ச் சரயுநதியினீரிற் போகட்டு அவை துடித்துமரிப்பதைக் கண்டு சிரித்து விளையாடுங்கொடுந்தொழிலுடையனாயிருந்ததனல் அவனைத் தந்தை காட்டுக்குத் துரத்திவிட்டா னென்றும் முதனூலிற் கூறப்பட்டுள்ளன. சுமதியென்பதற்கு - நல்லறிவுடையவளென்றும், அம்சுமானென்பதற்கு-ஒளியுடையவனென்றும் பொருள். சுமதி-காசியபமுனிவனுக்கு விநதையினிடம் தோன்றினவள்; கருடனுக்கு உடன்

பிறந்தவள். அறனின்மைந்தர், இன் - சாரியை. மூத்தாள்மகன்போல இளையாள்மக்கள் பாவிகளல்ல ரென்பார், அவர்களை 'அறனின்மைந்தர்' என்றார்; இனி, அறன் இல் மைந்தர் எனப் பிரித்து - தருமமில்லாத மக்க ளென்றுமாம்: மேல் கபிலமுனிவனைக் காரணமில்லாமல் முன்கோபத்தால் ஆராயாது குற்றமுடையனாக்கருதி விரைந்து வைகின்றன ராதலின். பி - ம்:—[1]போசண னென்றொரு. [2]ஆறயுதர் மற்றஞ்சுமானவன்சேய். (௩௪)

௩௫.—சகரன் அசுவமேதஞ்செய்ய, வேள்விக்குதிரையை இந்திரன் ஒளித்தல்.

திண்டி றற்புனை சகரனுந் தனயர்[1]சே வகங்கள்
கண்டு முற்றிய வயமகம் புரிதலுங் கனன்று
வண்டு துற்றதார் வாசவற் குணர்த்தினர் வானோ
ரொண்டி றற்பரி கபிலன திடையினி லொளித்தான்.

(இ - ள்.) திண் திறல் புனை சகரன்உம் - மிக்கவலிமையைப் பொருந்திய சகரமகாராசனும், தனயர் சேவங்கள் கண்டு - (தன்) புத்திரர்களது பராக்கிரமத்தைப் பார்த்து, முற்றிய அயமகம் புரிதலும் - (சிறப்பால்) மிக்க அசுவமேதயாகத்தைச் செய்யத்தொடங்கிய வளவில், வானோர் - தேவர்கள், கனன்று - (அதனைஅறிந்து) கோபங்கொண்டு, வண்டு துற்ற தார் வாசவற்கு - வண்டுகள் நெருங்கிய பூமாலையையுடைய இந்திரனுக்கு, உணர்த்தினர் - (செய்தியை) அறிவித்தார்கள்; (அவ்விந்திரன் உடனே), ஒண் திறல் பரி - பிரகாசமான வலிமையையுடைய அந்தயாகக்குதிரையை, கபிலனது இடையினில்-(பாதாளலோகத்திற்) கபிலமுனிவனது பின்புறத்திலே, ஒளித்தான் - (மாயையாற்கொண்டுபோய்) மறைத்துவைத்தான்; (எ - று.)

பூலோகத்தில் எவனாயினும் ஒருவன் நூறு அசுவமேதயாகஞ்செய்து முடித்துவிட்டால் உடனே அப்பொழுது இருக்கின்ற தேவேந்திரனை அப்பதவியினின்றும் ஒழித்துவிட்டு இவனை இந்திரனாக்கிவிடுவது இயல்பு: ஆனதுபற்றி அசுவமேதயாகத்துக்கு இந்திரன் தன்னாலியன்றவளவு இடையூறுசெய்வது வழக்கம்; அப்படியே சகரன் அம்சுமானைப் பாதுகாப்பவனாக நியமித்துப் பூமிப்பிரதக்ஷிணத்தின்பொருட்டு விடுத்த உத்தமஅசுவத்தை இந்திரன் மாயையாற் கவர்ந்துசென்று, பாதாளலோகத்திலே பெருந்தவஞ்செய்பவனும் தவஞ்செய்கையில் தான் விழித்து நோக்கினால் முதற்பார்வையில் எதிர்நின்றவர் எரிந்திறந்துபோம்படி சங்கற்பித்துள்ளவனும் இவ்வரலாற்றையுணர்ந்தவரெவராலுந் தன் தவத்துக்கு இடையூறு இயற்றப்பெறாதவனும் திருமாலின் அமிசாவதாரமாயுள்ளவனு மாகிய கபிலனென்னும் முனிவனது பின்புறத்தி லுள்ளதொரு மரத்தடியிற் கட்டிப்போயினானென்க. முற்றிய - விதிப்படி இலக்கணங்கள் நிறைந்தஎன்றும், நிறைவேற்றும்பொருட்டென்றும் பொருள்கூறலாம். தத்காலத்தில்தங்களுக்குத்தலைவனாகவுள்ளவனுக்கு விரோதமானகாரியமாதலால், தேவர்கள் தம்மைநோக்கிச் செய்யப்படுகின்ற அசுவமேதயாகத்தைஅறிந்து மகிழாமற் கோபிப்பா

ராயினர். இனி, (இந்திரன்) கனன்று ஒளித்தான் என இயைத்தலுமாம்.
பி - ம்:—[1]சேவகந்தான். (நடு)

**நசு.—அம்சுமான் வேள்விக்குதிரை கவரப்பட்டதைப் பாட்டனிடம் தெரிவித்தல்.**

வாவு வாசிபின் சென்றன னஞ்சுமான் மறுகிப்
பூவி னோரிட மின்றிமே நாடினன் புகுந்து
தேவர் கோமகன் கரந்தமை யறிந்திலன் றிகைத்து
மேவு தாதைதன் றாதைபா லுரைத்தனன் மீண்டு.

(இ - ள்.) வாவு வாசி பின் சென்றனன்-தாவிச்செல்கின்ற குதிரையின் பின்னே (காவலனாகப்) போனவனாகிய, அஞ்சுமான் - அம்சுமான், மறுகி - (குதிரையைக் காணாமல்) கலங்கி, தேவர் கோ மகன் கரந்தமை அறிந்திலன் - தேவராசனான இந்திரன் ஒளித்ததை அறியாதவனாய், திகைத்து - மனம்மயங்கி, பூவின் ஓர்இடம் இன்றிஏ நாடினன் - பூலோகத்தில் ஒரு இடமும் மிச்சமில்லாமல் (முழுவதுஞ் சென்று) தேடிப்பார்த்து, (எங்குங் காணாமல்), மீண்டு புகுந்து-திரும்பி வந்து, மேவு தாதைதன் தாதைபால் - (யாகத்தைமுடிக்க வேணுமென்று) விருப்பங்கொண்டுள்ள தன்தந்தையின் தந்தையான சகரனிடத்து, உரைத்தனன் - (செய்தியைச்) சொன்னான்.

வாசி - வாஜி; வடசொல். பூ - வடமொழி. தாதை - தாத என்னும் வடமொழித் திரிபு. மேவு - அன்புபொருந்திய எனினுமாம். (நசு)

**நஎ.—சகரன் வேள்விக்குதிரை காணாதுபோனதை மக்களிடம்தெரிவிக்க, அவர்கள் பாதலம்வரையில்தோண்டித் தேடிப் பார்த்தல்.**

கேட்ட வேந்தனு மதலையர்க் கம்மொழி கிளத்த
வாட்ட மீக்கொளச் சகரர்கள் வடவையின் மறுகி
நாட்டம் வெங்கனல் பொழிதர நானிலந் [1]தடவித்
தோட்டு நுங்கினர் புவியினைப் பாதலந் தோன்ற.

(இ - ள்.) கேட்ட - (அஞ்சுமான்சொன்னதைக்) கேள்வியுற்ற, வேந்தன்உம் - சகரனும், மதலையர்க்கு - (தனது) குமாரர் அறுபதினாயிரவருக்கு, அம் மொழி கிளத்த - அந்த வார்த்தையைச் சொல்ல, சகரர்கள் - (அது கேட்ட) சகரகுமாரர்கள், வாட்டம் மீக்கொள-மனவருத்தம் அதிகப்பட, வடவையின் மறுகி வடபாமுகாக்கினிபோலக் கோபித்து, நாட்டம் வெம் கனல் பொழிதர - (அக்கோபத்தால்) கண்கள் கொடிய நெருப்பைச் சொரிய, நானிலம் தடவி - பூமிமுழுவதுந் தேடிப்பார்த்து, (யாகக்குதிரையைக் காணாமையால்), பாதலம் தோன்ற-பாதாளலோகந் தெரியும்படி, புவியினை - பூமியை, தோட்டு நுங்கினர் - தோண்டி யெடுத்தார்கள்; (எ - று.)

வேள்விக்குதிரை காணாமற்போனதை அம்சுமான் சகரனுக்கு உணர்த்த, அவன் தன்மக்கள் அறுபதினாயிரவர்க்கு அதனைத் தெரிவிக்க, மகாபலவான்களான அவர்கள் கடுஞ்சினங்கொண்டு பூமிமுழுதுந் தேடிப்பார்த்தும் அக்குதிரையகப்படாமையால் பாதாளலோகத்திலும்தேடுமாறு அப்பாதாள

லோகத்திற்குச்செல்லும் வழியைத் தோண்டியுண்டாக்கின ரென்பதாம். வடவை-படபா: வடமொழி; பெண்குதிரை யென்றுபொருள்: அது-இங்கே அதன் முகத்தி லுள்ள நெருப்புக்கு இடவாகுபெயர். கடலினிடையிலே வாழும் ஒருபெண்குதிரையின் முகத்திலே நெருப்பு எப்பொழுதும் அவியாம லிருக்கின்ற தென்றும், அது மழைநீர்முதலியவற்றாற் கடல் பொங்காதபடி அதிகமாய்வருகிறநீரை உறிஞ்சிநிற்கிற தென்றும், அதுவே பிரளயகாலத்துக்கடலினின்றுவெளிப்பட்டு உலகங்களை எரித்துஅழிக்குமென்றும் புராணங்கள் கூறும். 'தொட்டு' என்பது-எதுகையியைபு நோக்கி நீட்டல் விகாரம்பெற்று 'தோட்டு' என நின்றது. பி - ம்:—[1] துருவி. (௩௭)

௩௮.—சாகரர் பாதலஞ்சென்று கபிலமுனிவன் பின்னே குதிரையைக் கண்டு அவனை வருத்துதல்.

நூறி யோசனை [1]யகலமு மாழமு நுடங்கக்
கூறு செய்தன [2]ரென்பரால் வடகுண திசையி
னேறு மாதவக் [3]கபிலன்பி னிவுளிகண் டெரியிற்
சீறி வைதனர் [4]செருக்கினர் நெருக்கினர் செறுத்தார்.

(இ - ள்.) (அச்சகரகுமாரர்கள்), நூறு யோசனை அகலம்உம் ஆழம்உம் நுடங்க-நூறு யோசனையவ்வளவு அகற்சியும் (மிக்க) ஆழமுமாய்க் குழியும் படி, வடகுண திசையின் - வடகிழக்குத்திக்கிலே, கூறு செய்தனர்-(பூமியைத்) தோண்டுதல்செய்தார்கள், என்பர்-என்று (முதனூலாசிரியர்) சொல்வர்;(அங்ஙனந்தோண்டினபின்பு அவர்கள்),ஏறு மாதவம் கபிலன்பின்-மேன் மேல்வளர்கின்றபெருந்தவமுள்ள கபிலமுனிவன்பின்னே, இவுளி கண்டு-(தம்)குதிரையைப்பார்த்து, எரியின் சீறி - நெருப்புப்போல (உக்கிரமாக) க் கோபித்து, வைதனர் - (அவனைநோக்கி) வசைச்சொற்கள் சொல்லி, செருக்கினர் - கர்வமுடையவர்களாய், நெருக்கினர் - (அம்முனிவனைச் சுற்றிலும்) நெருங்கச்சூழ்ந்து கொண்டு, செறுத்தார்-வருத்தினார்கள்; (எ - று.)

சகரபுத்திரர்கள் பூமியின் வடகிழக்குத்திசையில் நூறுயோசனையகலமும் ஆழமும் பொருந்துமாறு தோண்டி அவ்வழியாகப் பாதாளலோகத்திற்குச் சென்று அங்குத்தவஞ்செய்திருந்த கபிலமுனிவனதுபின்னே குதிரையைக்கண்டு 'இவனே குதிரையைக்கவர்ந்த கள்வன்' என்றுஅநுமானங்கொண்டு சினந்து வருத்தி அம்முனிவனது தவத்திற்கு இடையூறு இயற்றினார்களென்றபடி. யோசனை - வடசொற்றிரிபு; யோசனை, காதம் என்பன - ஒருபொருட்சொற்கள்: அது - ஏழரைநாழிகைவழித்தூரம்; நான்குகுரோசங்கொண்டது. நாற்காதத்தை யோசனையென்பது ஜைநநூல்வழக்கு. பி-ம்:—[1]அகலமாமதலமும். [2]நவமதாய். [3]கபிலனில். [4]தருக்கினர். (௩௮)

௩௯.—கபிலனதுசினத்தாற்சாகரர்சாம்பராக,தூதர்அரசனுக்குஉணர்த்தல்.

மூளும் வெஞ்சினத் தருந்தவன் முனிந்தெரி விழிப்பப்
பூளை சூடித னகையினி லெயில்பொடித் தனபோ

லாளு [1]மைந்தரா றயுதருஞ் சாம்பரா யவிந்தார்
வேள்வி [2]கொண்டநல் வேந்தனுக் குரைத்தனர் [3]வேய்கள்.

(இ - ள்.) மூளும் வெம் சினத்து - பொங்குகின்ற கொடிய கோபத்தை யுடைய, அரு தவன் - அருமையான தவத்தையுடைய அக்கபிலமுனிவன், முனிந்து - சீறி, எரி விழிப்ப - நெருப்புப்போலக் கண்ணைத்திறந்துபார்த்த வளவில், பூளை சூடி தன் நகையினில் எயில் பொடிந்தன போல் - பூளைப்பூவைத் தரித்த பரமசிவனது புன்சிரிப்பினாலே திரிபுரங்கள் சாம்பராயின போல, ஆளும் மைந்தர் ஆறு ஆயுதர்உம் சாம்பர் ஆய் அவிந்தார் - அரசாளுதற்குரிய ராஜகுமாரர்கள் அறுபதினாயிரம்பேரும் சாம்பராகி ஒழிந்தார்கள்; (இச்செய்தியை), வேய்கள்-ஒற்றர்கள், வேள்வி கொண்ட நல் வேந்தனுக்கு- யாகஞ்செய்வதை மேற்கொண்ட நற்குணமுடைய சகரனுக்கு, உரைத்தனர் - (போய்ச்) சொன்னார்கள்; (எ - று.)

பூளைசூடி - பெயர். பூளை என்னுஞ் செடியின் பெயர், அதன்மலருக்கு முதலாகுபெயர். பூளை, கரந்தை, ஊமத்தை, எருக்கு, கூவிளை, கொன்றை என்பவற்றின் மலர்கள் சிவனுக்கு உரியன. பூளை - உழிஞையென்பர்.
பி - ம்:—[1]மைந்தர்களறுபதினாயிரர். [2]கண்ட. [3]வேகர். (நகூ)

சு௦.—புத்திரசோகத்தால் வருந்திய சகரன் கட்டளைப்படி அம்சுமான் குதிரைகோணப் பாதலஞ் சார்தல்.

உழைத்து வெந்துயர்க் [1]கீறுகாண் கிலனுணர் வொழியா
தழைத்து [2]மைந்தனன் மைந்தனை யவர்கழிந் தனரே
யிழைத்த வேள்வியின் றிழப்பதோ [3]வெனவவ னெழுந்து
தழைத்த மாதவக் கபிலன்வாழ் பாதலஞ் சார்ந்தான்.

(இ - ள்.) (அதுகேட்ட சகரன்), உழைத்து - (புத்திரசோகத்தால்) வருந்தி, வெம் துயர்க்கு ஈறு காண்கிலன் - கொடிய தனது துன்பத்திற்கு ஒருமுடிவைக் காணாதவனாய், உணர்வு ஒழியாது - (அங்ஙனமாயினும் தொடங்கியகாரியத்தை முடிப்பதற்கு வேண்டிய விடாமுயற்சியிற் பின் வாங்காதவனாதலால்) அறிவு நீங்காமல், மைந்தன் நன் மைந்தனை அழைத்து - (தனது)புத்திரனதுபுத்திரனான அஞ்சுமானைக் கூப்பிட்டு, 'அவர் கழிந்தனர்ஏல்-அப்புத்திரர்கள் இறந்துபோய்விட்டாராயின், இழைத்த வேள்வி இன்று இழப்பதுஓ - செய்யத்தொடங்கிய யாகத்தை இப்பொழுது (யான்) செய்யாதுவிடுவேனோ?' என-என்று கேட்க,—அவன் - அம்சுமான், எழுந்து - புறப்பட்டு, தழைத்த மா தவம் கபிலன் வாழ் - மிகுந்த பெருந் தவத்தையுடைய கபிலன் வாழ்கின்ற, பாதலம் - பாதாளலோகத்தினிடத்தை, சார்ந்தான் - அடைந்தான்; (எ - று.)

தனதுபுத்திரர் அறுபதினாயிரவரும் இறந்தொழிந்தது கேட்டதனாற் பெருந்துயரடைந்த சகரன் தனது பேரனாகிய அம்சுமானை விளித்து 'மைந்தரைத்தான் இழந்தேனே! யாகத்தையும் இழப்பதோ!!'என்று வருந்திக்கூற, அவ்வரசனதுகருத்தை யுணர்ந்த அம்சுமான் உடனே வேள்விக்

குதிரையைக் கொணர்வதாகச்சொல்லிப் புறப்பட்டுப் பாதலஞ்சென்றன னென்க. கழிந்தனரேல் - கழிந்தனராதலால் என்றபடி; என்னில் என்னும் எதிர்காலவினையெச்சத்தின் திரிபாகிய 'ஏல்' என்றது - இங்கே ஏதுப் பொருளை விளக்கிற்று. பி - ம்:—[1]ஊறு. [2]மைந்தன்றன். [3]என்றனன். (௪0)

௪௧.—சிறுதாதையரின்கதியை யுணர்ந்து திடுக்கிட்ட அம்சுமான் கபில முனிவனிடத்தினின்று வேள்விக்குதிரையைப் பெறுதல்.

விண்டு நீங்கின ருடலுகு பிறங்கல்வெண் [1]ணீறு
கண்டு [2]துண்ணெனு மனத்தினன் கபிலமா முனிதன்
புண்ட ரீக[3]மென் றாடொழு தெழுந்தனன் [4]புகழக்
கொண்டு போகநின் னிவுளியென் றுற்றதுங் குறித்தான்.

(இ - ள்.) (சேர்ந்த அம்சுமான் அவ்விடத்தில்), விண்டு நீங்கினர் - இறந்தொழிந்த தன் சிறுதாதையரது, உடல் - உடம்புகள், உகு - சிந்தின, பிறங்கல் வெள் நீறு-மலைபோன்ற வெண்ணிறச்சாம்பர்க்குவியலை, கண்டு-பார்த்து, துண்ணெனும் மனத்தினன் - திடுகிட்ட நெஞ்சையுடையவனாய், கபில மா முனிதன் புண்டரீகம் மென் தாள் தொழுது - கபிலமகாமுனி வனது தாமரைமலர்போல மென்மையான திருவடிகளிலே விழுந்து வணங்கி, எழுந்தனன் - எழுந்துநின்று, புகழ-(அம்முனிவனைத் துதிக்க),— (கபிலன்), நின் இவுளி கொண்டு போக என்று - 'உனது குதிரையைக் கொண்டுபோவாய்' என்று சொல்லி, உற்றதுஉம் குறித்தான்-நடந்தசெய்தி யையுஞ் சொன்னான்;( எ - று.)

பாதலஞ்சேர்ந்த அம்சுமான் தனது சிறிய தாதையர் இறந்து சாம்ப ராய்க்கிடப்பது கண்டு திடுக்கிட்டு,பிறகு 'இங்கிருக்கும் கபிலமுனிவனிடஞ் சொல்லாமல் வேள்விக்குதிரையைக் கொண்டு சென்றால் தனக்கும் ஏதே னும் தீங்கு நேருமோ?' என்று அஞ்சி அம்முனிவன்பாதத்தில்வீழ்ந்து வணங்கிப் புகழ்ந்து தான் வந்தகாரணத்தைத் தெரிவிக்க, அம்முனி வன் வேள்விக்குதிரையைக் கொண்டுபோமாறு அனுமதிதந்து நடந்த செய் தியையுங் கூறினனென்பதாம். உற்றது - இந்திரன்குதிரையைக் கொணர்ந்து ஒளித்ததும்,அதனைஅறியாது தன்னைவைத சகரகுமாரர்கள் தன்கோபத் தீக்கு இலக்கானதும். பி - ம்:—[1]நீற்றை. [2]துண்ணென்ற. [3]நல். [4]புகல.

௪௨.—சகரசக்கரவர்த்தி யாகத்தைப் பூர்த்திசெய்து, தன்பேரனுக்கு முடிசூட்டிப் பரலோகஞ் சேர்தல்.

பழுதி லாதவ னுரைத்தசொற் கேட்டலும் பரிவாற்
றொழுது வாம்பரி [1]கொணர்ந்தவி [2]சுரர்களுக் கீயா
முழுதும் வேள்வியை முற்றுவித் தரசனு முடிந்தா
னெழுது [3]கீர்த்தியாய் மைந்தனுக் கரசிய லீந்து.

(இ - ள்.) எழுது கீர்த்தியாய் - (யாவராலும் நூல்களிலே) எழுதப்படு கின்ற புகழையுடைய ஸ்ரீராமனே! பழுது இலாதவன் உரைத்த சொல் கேட்டலும்-குற்றமில்லாத அம்முனிவன் சொன்ன வார்த்தையைக் கேட்ட

பின்பு, (அஞ்சுமான்), பரிவால் தொழுது-(முனிவனை) அன்போடு வணங்கி, வாம் பரி கொணர்ந்து - தாவிச்செல்லுந்தன்மையுள்ள அக்குதிரையைக் கொண்டுவர,—அரசன்உம் - சகரனும், சுரர்களுக்கு அவி ஈயா - தேவர்களுக்கு அவிசைக் கொடுத்து, வேள்வியை முழுதுஉம் முற்றுவித்து-யாகத்தை முழுவதும் பூர்த்திசெய்துவிட்டு, (பின்பு), மைந்தனுக்கு அரசு இயல் ஈந்து - அவ்வம்சுமானுக்கு அரசுரிமையைக் கொடுத்து, முடிந்தான் - இறந்தான்.

பழுது - காமம் வெகுளி மயக்கம் முதலியன. கொணர்ந்து-கொணர; எச்சத்திரிபு: கொணு - பகுதி. எழுது கீர்த்தி-யாவரும் அவரவர்மனத்திற் பதியவைத்துக்கொள்ளுங் கீர்த்தி யென்றும், ஆங்காங்கு வெற்றித்தம்பம் நாட்டி நிலைநிற்கஎழுதிய கீர்த்தியென்றுமாம். பி-ம்:—[1] கொணர்ந்தது. [2] சுரர் பதிக்கு. [3] சீர்த்தியாய். (௬௨)

**௬௩.—அம்சுமானுடைய வமிசத்தில் பகீரதன் பிறத்தல்.**

சகரர் [1]தொட்டலாற் சாகர மெனப்பெயர் தழைப்ப
மகர வாரிதி சிறந்தது மகிதல முழுது
நிகரின் மைந்தனே புரந்தன [2]னிவனெடு மரபிற்
பகிர தன்னெனும் [3]பார்த்திபன் [4]வந்தனன் பரிவால்.

(இ - ள்.) சகரர் தொட்டலால் - சகரகுமாரர்கள் தோண்டியதனால், சாகரம் என பெயர் தழைப்ப-சாகரமென்றுபெயர்விளங்க, மகரம் வாரிதி-மீன்களையுடைய கடலானது, சிறந்தது - சிறப்புப்பெற்றது; மகிதலம் முழுதுஉம் - பூமியினிடம்முழுவதையும், நிகர் இல் மைந்தன்ஏ-ஒப்பில்லாத குமாரனாகிய அம்சுமானே, புரந்தனன் - காத்துவந்தான்; இவன் நெடு மரபில் - இவனது நீண்ட [பெரிய] வமிசத்திலே, பகிரதன் எனும் பார்த்திபன்-பகீரதனென்னும் அரசன், பரிவால் - அன்போடு, வந்தனன் - தோன்றினான்.

அம்சுமானது குமாரன் திலீபனும், திலீபனதுமகன் பகீரதனும் என அறிக. பகிரதன் - எதுகை நோக்கிய குறுக்கல். 'பகிரதன் பரிவால் வந்தனன்' என்றது, தனது குலமுன்னோராகிய சகரகுமாரரிடத்து மற்றை அம்சுமான்முதலியோரினும் இவன் அன்புடையனாய் அவர்களை நற்கதி பெறுத்தற் பொருட்டுத் தான் மிகவருந்திப் பலகாலம் அருந்தவம்புரிந்து கங்கைகொணர்ந்த கருணையுடையோனாதலின்; இனி, பரிவால் திகிரியை உருட்டி [அரசாண்டு] என வருங்கவியோடு இயைத்தலுமாம். பார்த்திபன் = பார்த்திவன்: பிருதிவியையாளுபவன்: பிருதிவி - பூமி; பிருதுஎன்னுஞ் சக்கரவர்த்தியாற் சீர்திருத்தப்பட்டமைபற்றி வந்த காரணக்குறி. ஸாகரம்-வடமொழித்தத்திதாந்தநாமம். மகரம்-சுறாமீன்: அல்லதுமுதலை: இது-மற்றை நீர்வாழுயிர்களுக்கும் உபலக்ஷணம். பகிரதன்னெனும் - விரித்தல். பி-ம்:—[1] தொட்டதால். [2] அவன். [3] பார்த்திவன். [4] வந்தவதரித்தான். (௬௩)

**௬௪.—பகீரதன் ப்ரபிதாமகர் செய்தி கேட்டலும், வசிஷ்டனைவினவத் தொடங்கல்.**

உலகம் யாவையும் பொதுவறத் திகிரியை யுருட்டி
யிலகு மன்னவ [1]னிருந்துழி யிறந்தமை வினவ

வலகி றொன்முனி ¹யுரைத்திடக் கேட்டன னரசன்
றிலக மண்ணுற வணங்கிநின் றொருமொழி செப்பும்.

(இ - ள்.) உலகம் யாவைஉம் - எல்லாவுலகங்களிலும், பொது அற - (அவை பலஅரசர்க்குப்) பொதுவாயிருக்குந்தன்மை நீங்கித் தன்னொருவனுக்கே உரியனவாம்படி, திகிரியை உருட்டி - ஆஜ்ஞாசக்கரத்தைச் செலுத்தி, இலகும் - விளங்குகின்ற, மன்னவன் - பகீரதசக்கரவர்த்தி, இருந்த உழி - அரசாண்டிருந்தபொழுது,-(ஒருநாள்),-இறந்தமை வினவ-(சகரர்கள்) மரித்தசெய்தியை (என்னென்று) கேட்க, அலகு இல் தொல் முனி உரைத்திட - (தவமகிமைக்கு ஒரு) எல்லையில்லாத பழமையான வசிட்டமுனிவன் (நடந்ததைச்) சொல்ல, அரசன்-பகீரதன்,கேட்டனன்-கேட்டு,திலகம் மண் உற வணங்கி நின்று - (தனது நெற்றியிலுள்ள) திலகம் நிலத்திலேபடும்படி (தனதுகுலகுருவாகிய அம்முனிவனைச் சாஷ்டாங்கமாக) நமஸ்கரித்து (எழுந்து) நின்று, ஒரு மொழி செப்பும்-(அவனைநோக்கி) ஒருவார்த்தை கூறுவான்; (எ - று.)—அதனை மேலிற்கவியிற் காண்க.

பகீரதன் தன்குலகுருவாகிய வசிட்டனிடத்தில் தன் முன்னோர்களின் வரலாறு கேட்டுவருகையில், அம்முனிவன் சாகரர்களின்வரலாற்றைக் கூற, அது கேட்ட பகீரதன் தன்குருவினிடம் ஒன்று கூறலாயின னென்க.
பி - ம்:—¹ இறந்தன. ² இறந்தனவுரைத்திடவரசன். (௪௪)

௪௫—பகீரதன் ப்ரபிதாமகர்க்கு நற்கதியுண்டாம்வகையை வினவ, வசிஷ்டன் கூறத்தொடங்குதல்.

கொடிய மாமுனி வெகுளியின் மடிந்தவெங் குரவர்
முடிய நீணிர யத்தினி லழுந்திடு முறைமை
கடியு மாறெனக் கருந்தவ ¹மதற்குறு கரும
மடிகள் ²சொற்றுக வென்றலு மந்தண னறைவான்.

(இ-ள்.) 'கொடிய மாமுனி-கோபத்தாற் கொடுமையையுடைய கபிலமாமுனிவனது, வெகுளியின் - கோபத்தினால், மடிந்த - இறந்து போன, எம் குரவர் - எமது குலத்து முன்னோர்கள், முடிய - முழுவதும், நீள் நிரயத்தினில் - பெரிய நரகத்திலே, அழுந்திடும் - ஆழ்ந்துவருந்துகிற, முறைமை - தன்மையை, கடியும் ஆறு - நீக்கும்படி, எனக்கு அரு தவம் அதற்கு-யான் அருமையான தவத்தைச் செய்தற்கு, உறு - இசைந்த, கருமம் - தொழிலை, அடிகள் - சுவாமிகளே! சொற்றுக - சொல்லியருள்வீராக,' என்றலும் - என்றுபிரார்த்தித்தவளவில், அந்தணன்-அழகியஅருளையுடைய வசிட்டன், அறைவான் - சொல்பவனானான்; (எ - று.)—அது மேற் கவியிற் காண்க.

இக்கவிக்கு மடிந்த எம் முன்னோர் நரகத்திலழுந்திடுந் தன்மையை நீக்கும் விதமே எனக்கு அருந்தவ மாகும்: அதற்கு இசைந்தகாரியத்தைச் சொல்லவேண்டும் என்று உரைப்பினுமாம். முனிவர்களது கோபத்தாலும் சாபத்தாலும் இறந்தவர்களுக்குநற்கதியில்லையென்பது நூற்றுணிபு, குரவர்-குருஎன்பதன் பன்மையாகிய குரவஃஎன்னும் வடசொல்லின் திரிபு.அடிகள்-

ஆசிரியர்; பெரியவர் என்று பொருள்: பாதா: என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. அடிகள்-அண்மைவிளி. பி-ம்:—[1] அமைக்குறு. [2] சாற்றுக.

௬௬.—வசிட்டமுனிவன் உபாயம் கூறுதல்.

வைய மாளுடை மன்னவர் மன்னவ மடிந்தோ
ருய்ய நீடவ மொழிவறு பகலெலா மொருங்கே
செய்ய [1]நாண்மலர்க் கிழவனை நோக்கினீ செய்தி
நைய லென்றினி துரைத்தன னவையறு முனிவன்.

(இ - ள்.) 'வையம் ஆள் உடை மன்னவர் மன்னவ - பூலோகத்தை அரசாளுதலையுடைய அரசர்களுக்கு அரசனே! மடிந்தோர் உய்ய - இறந்த (உன்) ப்ரபிதாமகர் நற்கதிபெறும்படி, நீ—, செய்ய நாள் மலர் கிழவனை நோக்கி - சிவந்த புதிய தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய பிரமனைக் குறித்து, ஒழிவு அறு பகல் எலாம்-முடிவில்லாத [அனேக] நாள், ஒருங்குஏ-ஒருசேர [இடைவிடாமல் என்றபடி],நீள் தவம் செய்தி - பெரிய தவத்தைச் செய்வாயாக; நையல் - மனம்வருந்தாதே', என்று—, நவை அறு முனிவன் - குற்றமற்ற வசிட்டன், இனிது உரைத்தனன் - இனிமையாகச் சொல்லியருளினான்; (எ - று.)

வசிட்டன் பகீரதனைநோக்கி 'சக்கரவர்த்தீ! உனதுமூதாதையர் நற்கதியடைதற்பொருட்டு வருந்தாதே; பிரமனைநோக்கி நீ தவஞ்செய்க: செய்தாயானால், உனது எண்ணம் நிறைவேறுதற்கு வழியேற்படும்'எனக் கூறினானென்பதாம். மலர்க்கிழவன் - நாபீகமலத்துக்கு உரியவன்: நாபீகமலத்தில் வாழும் முதியவனுமாம். பி - ம்:—[1] நான்மறை. (௬௬)

௬௭.—பகீரதன் தவஞ்செய்யப் பிரமன் பிரதியட்சமாதல்.

ஞாலம் யாவையுஞ் சுமந்திரன் றன்வயி னல்கிக்
[1]கோலு மாதவத் திமகிரி மருங்கினிற் குறுகிக்
கால மோர்பதி னாயிர மருந்தவங் கழிப்ப
மூல தாமரை முழுமுதற் கிழவன்முந் தினனே.

(இ - ள்.) (உடனே பகீரதன்), ஞாலம் யாவைஉம் - (தான் ஆள்கின்ற) உலகம் முழுவதையும், சுமந்திரன்தன் வயின் - (தனது முதல்மந்திரியான) சுமந்திரனென்பவனிடம், நல்கி - (அரசாளும்படி) கொடுத்து [ஒப்பித்துவிட்டு என்றபடி], கோலும் மா தவத்து - பெரிய தவத்தைச் செய்தற்குரிய இடமாகிய, இமகிரி மருங்கினில் - இமவத் பருவதத்தினிடத்திலே, குறுகி - போய்ச்சேர்ந்து, காலம் ஓர் பதினாயிரம் - ஒருபதினாயிரம் வருடகாலத்தை, அரு தவம் கழிப்ப-அருமையான தவத்தைச் செய்து கழிக்க,—(பின்பு), மூல தாமரை - அனாதியான (விஷ்ணுவினது திருநாபித்) தாமரை மலரிலே தோன்றின, முழுமுதல் கிழவன் - எல்லாப்பிராணிகளுக்கும் முதல்வனாகிய பிரமதேவன், முந்தினன் - (எதிரிற்) பிரதியட்சமானான்; (எ-று.)

வசிட்டன் மொழிப்படி இமயமலைச்சாரலிற் பதினாயிரமாண்டு பகீரதன் தவஞ்செய்ய, பிரமன் பிரதியட்சமாயின னென்க. சுமந்திரனென்பது ஒருவனது பெயரன்றென்றும், தொழில்பற்றி வந்த பெய ரென்றும் அறிக : அத்தொழிலின் தன்மை, 'அரசனது சங்கமத்தாவரச்சொத்துக்களில் வரவு செலவுகள் இவ்வளவென்றும் மிச்சம் இவ்வளவென்றும் அறிவித்தல்' என்று வடமொழிஅர்த்தசாஸ்திரங்களிற் கூறப்பட்டுள்ளது. சுமந்திரன் என்பதற்கு - நல்ல ஆலோசனையுடையவ னென்று பொருள். இமகிரி - பனிமயமான மலை. இங்கே 'காலம்' என்றது, அகண்டமாய்ச்செல்லுகின்ற காலத்தினது ஒருகண்டமாகிய வருடத்தை. முழுமுதல் மூலதாமரைக் கிழவன் என இயைத்து - முதலாவார்யாவர்க்கும் முதலாகிய திருமாலின் திருவுந்தியந்தாமரைக்கு உரியவ னென்றுமாம். கோலுமாதவத்து - மாதவத்தைக் கோலு மென மாறுக. "பந்திக் கமலத் தடஞ்சூ ழரங்கர் படைப்பழிப்பு, சிந்தித் திடுவது மில்லைகண் டீ ரத்திசைமுகனே, யுந்திக் கமலம் விரிந்தால் விரியு முகக்கடையின், முந்திக் குவியி லுடனே குவியுமிம் மூதண்டமே" ஆதலால், 'மூலதாமரை' எனப்பட்டது. பி - ம்:—[1] கோலம். (௬௭)

௬௮.—அப்பிரமதேவன் கங்காநதியால் நின்முன்னோர் நற்கதி பெறுவ ரெனல்.

நின்பெ ருந்தவம் வியந்தன நினதுநீள் குரவர்
முன்பி றந்தன ரருந்தவன் முனிவினு தலினன்
மன்பெ ரும்புவி யதனில்வா னதி[1]கடி தணுகி
யென்பு தோயுமே லிருங்கதி பெறுவரென் றிசைத்தான்.

இதுவும், மேலைக்கவியும் - பிரமன் வார்த்தை.

(இ - ள்.) (எதிர்ப்பட்ட பிரமன் பகீரதனைநோக்கி), 'நின் பெரு தவம் வியந்தனம் - உனது சிறந்த தவத்தை(க் கண்டு யாம்) ஆச்சரியப்பட்டோம்; நினது நீள் குரவர் - உனது எண்ணில்அதிகரான [அறுபதினாயிரவரான] குலத்துமுன்னோர்கள், முன்பு-,அரு தவன் முனிவின் இறந்தனர் ஆதலினால் - அரியதவத்தையுடையகபிலமுனிவனது கோபத்தால் மரணமடைந்தார்களாகையால், மன் பெரு புவியதனில் வான் நதி கடிது அணுகி என்பு தோயும் எல் - நிலைபெற்ற பெரிய பூலோகத்தில் ஆகாசகங்காநதியானது விரைவிலே வர (அதன் புண்ணியதீர்த்தத்தில் அவர்களது பொடியான) எலும்பு படியுமானால், (அப்பொழுததான்), இரு கதி பெறுவர் - பெரிய உரியகதியை அடைவார்கள்', என்று இசைத்தான் - என்றுசொன்னான்.

முனிவன் கோபத்தினால் அகாலமிருத்துவடைந்த நின்மூதாதையர் நரகம் நீங்கி ஈடேறுதற்கு உரிய உபாயம், ஆகாயகங்கையின் நீரிலே அவர்களெலும்புபடிதலே யென்று பிரமன் கூறின னென்க. கதி - இறந்தபின்பு அடையும் பதவி. பி - ம்:—[1] கடந்து. (௬௮)

௪௯.—கங்கையைத் தாங்குமாறு சிவபிரானை நோக்கித் தவஞ் செய்யப் பகீரதனுக்குக் கட்டளையிட்டுப் பிரமன் செல்லுதல்.

மாக நன்னதி புவியிடை [1]வருகின்மற் றவடன்
வேக மாற்றுதல் கண்ணுதற் கன்றிவே றரிதாற்
றோகை பாகனை நோக்கிநீ யருந்தவந் தொடங்கென்
றேகி னானுல கனைத்துமெவ் வுயிர்களு [2]மீந்தான்.

(இ - ள்.) 'மா கம் நல் நதி - பெரிய ஆகாயத்திலுள்ள சிறந்த கங்காநதியானது, புவியிடை வருகின் - பூமியிலே வருமாயின், அவள்தன் வேகம் ஆற்றுதல் - அந்நதியினது வேகத்தைப் பொறுத்துத் தாங்குதல், கண்ணுதற்கு அன்றி -,(நெருப்புக்) கண்ணை நெற்றியிலுடைய சிவனுக்கு எளிதாயிருப்பதல்லாமல், வேறு அரிது-மற்றையோருக்கு அருமையுடையதாம்: ஆல் - ஆதலால், தோகை பாகனை நோக்கி - மயில்போலுஞ்சாயலையுடைய உமாதேவியை (வாமபாகத்திற்கொண்ட) சிவனைக் குறித்து, நீ—, அருதவம் தொடங்கு - அருமையான தவத்தைச் செய்யத்தொடங்குவாய்', என்று - என்று(ம் பகீரதனுக்குச்) சொல்லியருளி, உலகு அனைத்துஉம் எ உயிர்கள்உம் ஈந்தான் - உலகங்களெல்லாவற்றையும் எல்லாவுயிர்களையும் படைத்தவனாகிய பிரமதேவன், ஏகினான்-(தன்னுலகத்திற்குச்)சென்றான்; (எ - று.)

'ஆகாயகங்கை நேரே பூமியில் விழுந்தால் அதன்வேகத்தைப் பூமியினால் தாங்கமுடியாதாகையாலும், அதனைத் தாங்கும் வல்லமை சிவபிரானொருவனுக்கே உள்ளதாதலாலும், கங்கையைத் தாங்குமாறு நோற்றுச் சிவபிரானிடம் முதலில் வரம் பெறுக'என்றுங் கூறிப் பிரமன் அந்தர்த்தானமாயின னென்க. வேறு - வேற்றோர்க்குப்பண்பாகுபெயர். 'உயிர்கள்' என்றது - பிராணிராசிகளை; ஆன்மாக்களையன்று: ஜீவாத்மாக்கள் பரமாத்மாவைப்போல நித்திய மாதலாலென்க. பி-ம்:—[1]நடக்கின். [2]ஈன்றான்.(௪௯)

௫௦.—பகீரதன் சிவபிரானைநோக்கி நோற்று வரம்பெற்றுக் கங்கையைக் குறித்து நோற்றல்.

மங்கை பாகனை நோக்கிமுன் மொழிந்தன வருடந்
[1]தங்கு மாதவம் புரிதலுந் தழனிறக் கடவு
ளங்கு வந்துநின் கருத்தினை முடித்துமென் றகன்றான்
கங்கை யைத்[2]தொழக் காலமை யாயிரங் கழித்தான்.

(இ - ள்.) (அதுகேட்டு உடனே பகீரதன்), மங்கை பாகனை நோக்கி - பார்வதீதேவியை இடப்பக்கத்திலுடைய பரமசிவனைக்குறித்து, முன் மொழிந்தன வருடம் - முன்னேசொல்லப்பட்டவவ்வளவு [பதினாயிரம்] வருஷகாலம், தங்கு மா தவம் புரிதலும் - நிலைபெற்ற பெரிய தவத்தைச் செய்தவளவில், தழல் நிறம் கடவுள் - நெருப்புப்போன்ற செந்நிறத்தையுடைய சிவபிரான், அங்கு வந்து - (அவன் தவஞ்செய்துநின்ற) அவ்விடத்து வந்து,

நின் கருத்தினை முடித்தும் என்று - 'உனது கருத்தை நிறைவேற்றுவோம்' என்றுசொல்லி, அகன்றான் - போய்விட்டான்; (அதன்பின்பு), கங்கையை தொழ - கங்காதேவியை (ப் பிரதியட்சமாகப்பெற்று)வணங்குதற்கு, காலம் ஐயாயிரம் கழித்தான் - ஐயாயிரவருஷகாலம் (தவத்திலே) போக்கினான்.

பிரமன் கட்டளைப்படியே பகீரதன் சிவபிரானைநோக்கிப் பதினாயிரம் வருடந் தவஞ்செய்ய,அப்பால் அச்சிவபிரான் பிரதியட்சமாகி அவன் வேண்டியபடி கங்கையைத் தான் நேரே பூமியில் விழாது தாங்குவதாக வரமளித்துச் செல்ல, பின்பு அப்பகீரதன் பூமியில் வரும்படி இசைவதற்காகக் கங்காதேவியை நோக்கித் தவம் புரியலாயினனென்க. வந்துஎன்பது, என்று என்பதனோடு இயைந்தது; 'முடித்தும்' என்பதனோடு இயைந்ததாக்கி, கங்கைபூலோகத்துக்குவருகிறஅவ்விடத்துக்குயாம்வந்து உன்னெண்ணத்தைப் பூர்த்திசெய்வோமென்றுமாம்.'நின்கருத்து' என்றது - கங்கை பூமிக்குவரும்போது சிவன் தாங்கவேண்டு மென்றதை. பி-ம்:—[1] தங்கி. [2] தொழா. (௩௦)

௩௧—கங்காதேவி பிரதியட்சமாகி 'கங்கையின்வேகத்தைச் சிவபிரானலுந் தாங்குதல் முடியா தாகையால் அவன் கருத்தையறிய மீண்டுந்தவம்புரிக' என்றுசொல்லிப் போதல்.

ஒருமடக்கொடி [1]யாகிவந் துனதுமா தவமென்
பொருபு னற்கொடி வரினவள் வேகமார் பொறுப்பா
ரரனு ரைத்தசொல் விநோதமற் றின்னுநீ யறிந்து
பெருகு நற்றவம் [2]புரியென [3]வரநதி பெயர்ந்தாள்.

(இ - ள்.) (பின்பு), வர நதி - (எல்லாநதிகளுள்ளுஞ்) சிறந்தநதியாகிய கங்காதேவி, ஒரு மடம் கொடி ஆகி - இளமையான கொடிபோன்ற ஒரு பெண்ணின் வடிவமாய், வந்து - (அவ்வரசனது எதிரில்) தோன்றி, 'உனது மா தவம் என் - (என்னைநோக்கிச் செய்கின்ற)நின்பெருந்தவம் என்னபயன் கருதியது? பொரு புனல் கொடி - (அலைகள்) மோதுகின்ற நீர்மயமான கங்காநதி, வரின் - வந்தால், அவள் வேகம் ஆர் பொறுப்பார் - அவளது விரைவைத் தாங்கவல்லவர் ஆர்? [எவருமில்லை யென்றபடி]; அரன் உரைத்த சொல் விநோதம் - சிவபிரான் (உன்கருத்தை நிறைவேற்றுவதாகச்) சொன்ன வார்த்தை விளையாட்டாம்; (ஆதலால்),இன்னும் நீ அறிந்து- மீளவும் (அவன்கருத்தை) நீ (நன்றாய்) அறிதற்கு, பெருகு நல் தவம் புரி - மேன்மேல்வளர்கின்ற சிறந்த தவத்தைச் (சிவனைநோக்கிச்) செய்வாய்' என - என்றுசொல்லிவிட்டு, பெயர்ந்தாள் - சென்றாள்; (எ - று.)

'உனது மாதவம் என்' என்றது-என் வேகத்தைப் பொறுப்பாருண்டானால் யான்வருதற்குத்தடையில்லையென்று அவனது பிரார்த்தனையை அங்கீகரித்தபடியாம். 'பொருபுனற்கொடிவரின் அவள்'என்றது - தன்னைப்பிறள் போற்கூறிய படர்க்கை. அரன்-ஹரன்:(யுகாந்தகாலத்தில் எல்லாப்பிராணிகளையும்) அழித்தற்குரிய கடவு ளென்றும், எப்பொழுதும் தன்னைச் சரணமடைந்த அடியார்களது அருந்துயரை அழிப்பவ னென்றும் பொருள்

கொள்ளப்படும். கங்கை தனதுவேகத்தைப் பொறுக்கும்ஆற்றல் சிவபிரானுக்கு இல்லையென்று கருதிச் செருக்கி, 'அவன் சொன்னபடிசெய்யான்' என்றாள். மற்று-வினைமாற்று. அறிந்து=அறிய: எச்சத்திரிபு; இனி (யான் கூறியதை) உணர்ந்து என்றும் உரைக்கலாம். பி - ம்:—[1] ஆக. [2] புரிகென. [3] வானதி. (௫௧)

௫௨, ௫௩.—இதுவும் மேற்கவியும் குளகம்; பகீரதன் சிவபிரானைநோக்கி மீண்டு தவம்புரிதலும் அப்பிரான் பிரதியட்சமாகி அபயமளித்துச் செல்லப் பின்னும் கங்கையைநோக்கித் தவம்புரிதல்.

௫௨. கரந்தை மத்தமோ டெருக்கலர் கூவிளை கடுக்கை
நிரந்த பொற்சடை நின்மலக் கொழுந்தினை நினையா
வரந்தை யுற்றவ னிரண்டரை யாயிர[1]மாண்டு
புரிந்து நற்றவம் பொலிதர [2]வரைமகள் புனிதன்.

௫௩. எதிர்ந்து நின்னினை வென்னென விறைஞ்சியெம் பெரும
வதிர்ந்து கங்கையீ தறைந்தன ளென்றலு மஞ்சேல்
பிதிர்ந்தி டாவகை காத்துமென் றேகிய பின்றை
முதிர்ந்த மாதவ மிரண்டரை யாயிர முடித்தான்.

(இ - ள்.) (௫௨) அரந்தை உற்றவன் - (கங்கைசொன்ன வார்த்தையைக் கேட்டுத்) துன்பமடைந்தவனாகிய பகீரதன், கரந்தை - கரந்தைச் செடியின் பூவும், மத்தமோடு-ஊமத்தம்பூவும், எருக்குஅலர்-எருக்கம்பூவும், கூவிளை-வில்வபத்திரமும், கடுக்கை - கொன்றைப்பூவும், நிரந்த-கலந்துநிறைந்த, பொன் சடை - பொன்னிறமான (கபர்த்தமென்னுஞ்) சடையினையுடைய, நின்மலம் கொழுந்தினை - குற்றமில்லாத அக்கினிச்சுவாலைவடிவமான பரமசிவத்தை, நினையா - தியானித்து, புரிந்து - விரும்பி [பக்தியுடனே யென்றபடி], இரண்டுஅரைஆயிரம் ஆண்டு - இரண்டாயிரத்தைந்நூறுவருடம், நல் தவம் பொலிதர - நல்ல தவத்திலே விளங்க, (பின்பு), வரைமகள் புனிதன்- பார்வதியின் கணவனான பரிசுத்தமூர்த்தியான பரமசிவன், (௫௩) எதிர்ந்து- பிரதியட்சமாகி, (பகீரதனை நோக்கி), நின் நினைவு என் என - உனது எண்ணம் என்னவென்று கேட்க, (அவ்வரசன்), இறைஞ்சி - வணங்கி, 'எம் பெரும - எமதுதலைவனே! கங்கை - கங்காநதியானவள், அதிர்ந்து - முழங்கிவந்து, ஈது - (அரன்உரைத்த சொல் வினோதம் என்ற) இவ்வார்த்தையை, அறைந்தனள் - சொல்லினாள்,' என்றலும் - என்றுசொன்னவளவில், (உருத்திரமூர்த்தி அவனைநோக்கி), 'அஞ்சேல் - (நீ) பயப்படாதே; பிதிர்ந்திடாவகை - (கங்கைநீர் சிறிதும்) சிந்தாதபடி, காத்தும் - (அதனைத் தடுத்துப் பூமியை) இரட்சித்தருள்வோம்' என்று - என்றுசொல்லி, ஏகிய பின்றை - சென்றபின்பு, இரண்டுஅரை ஆயிரம் - இரண்டாயிரத்தைந்நூறுவருஷம், முதிர்ந்த மா தவம் - சிறந்த பெருந்தவத்தை, முடித்தான் - (மீண்டும் கங்கையைநோக்கிச் செய்து) நிறைவேற்றினான்; (எ - று.)

கங்கையின் சொல்லைக் கேட்டதனாற் கலக்கமடைந்த பகீரதன் சிவபிரானைநோக்கி நோற்க, அவன் மீண்டும்பிரசன்னனாகி 'கங்கையின்சொல்லுக்காகக் கலங்காதே; நாம் அதனைச் சிந்தாவகை காக்கவல்லோம்'என உறுதி கூற, மீண்டும் கங்கையைநோக்கித் தவம்புரியலாயின னென்க. கரந்தைமத்தம்கடுக்கை என்னும் மூன்றும் - அதனதன் மலர்க்கும், கூவிளை-அதன் இலைக்கும் முதலாகுபெயர். கரந்தை - ஓர்பூடு. மத்தம்=உன்மத்தம்: முதற்குறை. கூவிளை என்பது - 'கூவிள' எனவும், 'கூவிளம்' எனவும் வழங்கும். கொழுந்து - அனற்பிழம்பு. இமயமலைக்கு உரிய ஆண்தெய்வம் உமாதேவியை நோக்கிப் பலகாலந் தவம்புரிந்து 'எனக்கு ஒருகால் நீ மகளாகத்தோன்றி உனக்குத் தந்தையாகும் பெருமையைத்தந்தருளல் வேண்டும்' என்று பிரார்த்திக்க, அவ்வேண்டுகோளை நிறைவேற்றும்பொருட்டு அம்பிகை தக்ஷன்மகளான உருவத்தை ஒழித்த பொழுது மலையரசனுக்கு மகளாக' அவதரித்தன ளென்பது புராணகதை; பருவதத்தின்மக ளானதனால், கௌரிக்குப் பார்வதியென்று ஒருபெயர். பி - ம்:—[1] வருடம். [2] வரையுறை.

௫௪.—பகீரதனுடைய தவச்சிறப்பு.

பெருகு நீரொடு பூதியும் வாயுவும் பிறங்கு
சருகும் வெங்கதி ரொளியையுந் [1] துய்த்துமற் [2] றதையும்
பருக லின்றியு முப்பதி னாயிரம் பருவ
முருகு காதலின் மன்னவ னருந்தவ [3] முயன்றான்.

(இ - ள்.) மன்னவன் - பகீரதராசன், பிறங்கு சருகுஉம்-விளங்குகின்ற (உலர்ந்த) இலைகளையும், பூதிஉம் - சாம்பலையும், பெருகும் நீரொடு - வழியுந் தன்மையுள்ள ஜலத்துடனே, வாயுஉம் - காற்றையும், வெம் கதிர் ஒளியைஉம் - வெவ்விய சூரியகிரணத்தையும், துய்த்துஉம் - (முதலில்) உண்டுவந்தும்,மற்று - பின்பு, அதைஉம் பருகல் இன்றிஉம் - (நீர் முதலிய) அவ்வுணவுகளுளொன்றை உண்ணுதலுமில்லாமலும், முப்பதினாயிரம் பருவம் - முப்பதினாயிரம் வருஷகாலம், முருகு காதலின் - முதிர்ந்த அன்புடனே, அரு தவம் முயன்றான் - அரிய தவத்தைச் செய்தான்; (எ - று.)

இதனால், பகீரதன் பிரமனைக்குறித்துப் பதினாயிரமும், சிவனைக்குறித்துப் பதினாயிரமும், கங்கையைக்குறித்து ஐயாயிரமும், மீண்டும் சிவனைக்குறித்து இரண்டரையாயிரமும் மீண்டும் கங்கையைக்குறித்து இரண்டரையாயிரமும் ஆக முப்பதினாயிரம் வருஷகாலம் இடைவிடாது நெடுந்தவம்புரிந்த அருமையைக் கவி வியந்து கூறுகிறார். பருவம் - ஆண்டு; ருதுவன்று. அந்தப்பகீரதன் தான் தவஞ்செய்த நாள்களில் முதலிற் சருகையும்,பின்பு சாம்பலையும்,பிறகு நீரையும்,பின்னர்க்காற்றையும் அப்பால் வெயிலையும் உண்டுபின்புஅவ்வெயிலைத்தானும்உண்ணாமலிருந்தன னென்க. "பாடக்ரமாபேட்சயா அர்த்தக்ரமஸ்ய பலீயஸ்த்வம் [சொல்முறையினும் பொருட்பேர்க்கு முறை வலியுடைத்து]" என்ற நியாயம் பற்றி, சருகு பூதி நீர் வாயு வெயில் என முறைப்படுத்திஉரைக்கப்பட்டது. பூதி-புழுதியுமாம்.

அது - சாதியொருமை; [2] அவை என்றும், எதை என்றும் பாடம். நீருக்கு உரிய குடித்தலென்னும்பொருளைத் தருகிற பருகலென்னுஞ் சிறப்புவினை, இங்குப் பொதுவினையாய் நின்றது. பி - ம்:—[1] துய்த்ததுதனையும், துய்த் தன்னவைதமையும். [3] உழந்தான். (ருச)

ருரு—கங்கையைச் சிவபிரான் தனது சடையி லொளித்தல்.

உந்தி யம்புயத் துதித்தவ னுறைதரு முலகு
மிந்தி ராதிய ருலகமு நடுக்குற விரைத்து
வந்து தோன்றினள் [1]வரநதி மலைமகள் கொழுநன்
சிந்தி டாதொரு சடையினிற் கரந்தனன் சேர.

(இ - ள்.) (பகீரதன் மீண்டுந் தவம்முடித்தபின்பு), வர நதி-சிறந்த நதியான கங்கை, உந்தி அம்புயத்து உதித்தவன் உறைதரும் உலகும் - (திருமாலின்) திருநாபீகமலமலரிலேதோன்றின பிரமன் வசிக்கிற சத்திய லோகமும், இந்திர ஆதியர் உலகம்உம் - இந்திரன் முதலான தேவர்களது (சுவர்க்கம்முதலிய) லோகமும், நடுக்கு உற-நடுங்குதலடையும்படி, இரைத்து - ஆரவாரித்து, வந்து தோன்றினள் - (பூலோகத்தில்) வந்து சேர்ந்தாள்; (அங்ஙனஞ்சேர்கையில்), மலைமகள் கொழுநன்-பார்வதீபதியான பரமசிவன், ஒரு சடையினில் - (தனது) ஒப்பற்ற சடையிலே, சிந்திடாது-(அக்கங்கைநீர் சிறிதும்) வெளிச்சிந்தாதபடி, சேர - முழுவதையும், கரந்தனன் - மறைத்தருளினான்; (எ - று.)

அம்புயம் - அம்புஜம்; நீரிற் பிறப்பது. ஒரு சடையினில்-தனதுசடையின் ஒருபாகத்திலே என்றுமாம். பி - ம்:—[1] வானதி. (ருரு)

ருசு.—பகீரதன் திகைத்துநிற்க, அவனைத்தேற்றிச்சிவன் ஒருசிறிது பூமியிற் கங்கையை விடுதல்.

புன்னு னித்தரு பனியென வரநதி புனிதன்
சென்னி யிற்கரந் [1]தொளிதர வணங்கினன் றிகைத்து
மன்ன னிற்றலும் வருந்தனஞ் சடையள்வா னதியின்
றென்ன விட்டன னொருசிறி தவனிபோந் திழிந்தாள்.

(இ - ள்.) புல் நுனி தரு பனி என - புல்லின்நுனியிலே தங்கிய பனிநீர்த்துளிபோல, வர நதி - சிறந்த கங்காநதி, புனிதன் சென்னியில் - பரிசுத்தனான சிவனது சிரசிலே, கரந்து ஒளிதர - மறைந்து ஒளிக்க, மன்னன் - பகீரதன், திகைத்து - (நதியைக் காணாமல்) மனமயங்கி, வணங்கினன் நிற்றலும் - (சிவபிரானை) நமஸ்கரித்து நின்றவளவில், (அக்கடவுள் பகீரதனைநோக்கி), 'வருந்தல் - மனம்வருந்தாதே; வான் நதி - ஆகாசகங்காநதி, இன்று - இப்பொழுது, நம் சடையள் - நமது சடையினிடத்துள்ளாள்' என்ன - என்றுகூறி, ஒரு சிறிது விட்டனன் - மிகச்சிறியதொரு பாகத்தை வெளிவிட, அவனி போந்து இழிந்தாள் - (கங்கை) தரையிலே வந்து இறங்கினாள்; (எ - று.)

நிலத்திற் கங்கை இழியாவிட்டால், கங்கை தேவலோகத்திலிருந்ததோடு சிவபிரான்சடையி லிருப்பதோடு வாசியில்லை யாதலால், பகீரதன் திகைத்துநின்றான். போந்து-புகுந்து; மரூஉமொழி. பி-ம்:—[1] ஒளித்திட. (௬௬)

௫௭, ௫௮.—இதுவும், மேற்கவியும்: தளக்கம்பகீரதன்பின்னே வந்த கங்கையைச் சன்னுமுனிவன் பருகிப் பகீரதன்வேண்டுகோளால் வெளிவிட, அக்கங்கை சகரரின் உடற்சாம்பரை நனைத்தல்.

௫௭. இழிந்த கங்கைமுன் மன்னவன் விரைவொடு மேகக்
கழிந்த மன்னவர் கதிபெற முடுகிய கதியா
லழுந்து மாதவச் சன்னுவின் வேள்வியை யழிப்பக்
கொழுந்து விட்டெரி வெகுளியன் குடங்கையிற் கொள்ளா.

௫௮. உண்டு வந்தனன் மறைமுனிக் கணங்கள் கண் டுவப்பக்
[1] கண்டு வேந்தனும் வணங்கிமுன் னிகழ்ந்தன கழறக்
கொண்டு போகெனச் செவிவழிக் கொடுத்தனன் குதித்து
விண்டு நீங்கின ருடலுகு பொடியின்மே வினளே.

(இ - ள்.) (௫௭) இழிந்த கங்கை முன் - (இங்ஙனம்) இறங்கின கங்காநதிக்கு முன்னே, மன்னவன் விரைவொடு உம் ஏக - பகீரதன் வேகமாய்ச் செல்ல, (அக்கங்கை), கழிந்த மன்னவர் கதி பெற முடுகிய கதியால் -(முன்னே) இறந்த சகரராசர்கள் நற்கதியைப்பெறும்பொருட்டு(த் தான்)விரைந்து செல்கின்ற நடைவேகத்தால், அழுந்து மா தவம் சன்னுவின் வேள்வியை அழிப்ப - (பெருந்தவத்திலே) மனம்பதிந்துள்ள ஜஹ்நு என்னும் முனிவனது யாகத்தை அழிக்க, (அவன்), கொழுந்துவிட்டு எரி வெகுளியன் - சுவாலைவிட்டு எரிகின்ற கோபாக்கினியையுடையவனாய், குடங்கையில் கொள்ளா - (தனது) அகங்கையிலே (அக்கங்கைநீர்முழுவதையும்) முகந்து கொண்டு,—(௫௮)மறை முனி கணங்கள் கண்டு உவப்ப-(தன்னுடனிருந்த) வேதம்வல்ல முனிவர்களின்கூட்டங்கள் பார்த்து மகிழும்படி, உண்டு உவந்தனன் - குடித்துக்களித்தான்; வேந்தன்உம்-பகீரதனும், கண்டு-(அதனைப்) பார்த்து,வணங்கி-(முனிவனை)நமஸ்கரித்து,முன் நிகழ்ந்தன கழற-முன்னே நடந்த செய்திகளெல்லாவற்றையும் (ஆதியோடந்தமாய்ச்)சொல்ல,(அதுகேட்டுஅம்முனிவன்இரங்கி),கொண்டுபோகுஎன-(ஆனால்)அழைத்துக்கொண்டு போவாய் என்றுசொல்லி, செவி வழி - காதின்வழியாக, கொடுத்தனன் - (நதியைக்) கொடுத்தருளினான் [நீரைப் பெருக விட்டா னென்றபடி]; (உடனே கங்கையானவள்), குதித்து - (அவன்செவியினின்றும்) இறங்கி, விண்டு நீங்கினர் உடல் உகு பொடியில் மேவினள் - (முன்) இறந்துபோன சாகரர்களது உடம்புகள் சிந்தின சாம்பரிலே போய்ச் சேர்ந்தாள்; (எ - று.)

சிவபிரான் சிறிதுவிடப் பூமியிலிறங்கிய கங்கை சாகரரை நற்கதிபெறுவித்தற்பொருட்டு அப்பகீரதனது பின்னாகவே விரைந்துசென்று வழியிலிருந்த ஜஹ்நுமுனிவனதுயாகத்தையழிக்க, அம்முனிவன் வெகுண்டு அக்கங்கையைப்பருகிவிட, பகீரதன் அம்முனிவனைப்பணிந்து குறையிரந்து

நிற்க, முனிவன் இரக்கங்கொண்டு தன்காதின் வழியாகக் கங்கையை வெளிவிட, கங்காதேவியும் சாகரர் நற்கதியடையுமாறு அவரதுஉடல்கள் சாம்பராய்க் கிடந்த இடத்தின்மீது சென்றன வென்பதாம். ஜஹ்நுமுனிவன் பருகி வெளிவிட்ட காரணம்பற்றிக் கங்கைக்கு 'ஜாஹ்நவீ' என்று ஒரு பெய ருண்டாயிற்று. உண்டு - பொதுவினை, இங்குச் சிறப்பாய்நின்றது. உவப்புக்குக்காரணம், தன்வேள்வியை அழிக்க வந்த யாற்றைத் தான் அழித்துவிட்டது. மறைமுனிக்கணங்கள் - வேதங்களைத் தாம் ஓதுதலும், பிறர்க்கு ஓதுவித்தலும், அவற்றின் விதிப்படி ஒழுகுதலு முடைய முனிவர் குழாமென்றபடி. குதித்து - மகிழ்ந்து என்றுமாம். பி-ம்:—[1]கண்ட. (௩௮)

௩௯.—சாகரர் நற்கதியடைந்ததுகண்டு தேவர்கள் மலர்மாரிபொழிய, பகீரதன் அயோத்திக்கு மீளுதல்.

நிரய முற்றிய சகரர்க ணெடுங்கதி செல்ல
விரைம லர்ப்பொழிந் [1]தார்த்தன விண்ணவர் குழாங்கண்
முரச முற்றிய பல்லிய முறைமுறை [2]முழங்க
வரச னப்பொழு தணிமதி லயோத்திமீண் டடைந்தான்.

(இ-ள்.) (உடனே), நிரயம் முற்றிய சகரர்கள் - (முன்னே) நரகத்திற்போய் நிரம்பிய சகரகுமாரர்கள், நெடு கதி செல்ல - உயர்ந்த நற்பதவியிலே சென்று சேர, (அதுகண்டு மகிழ்ந்து), விண்ணவர் குழாங்கள் - தேவசமூகங்கள், விரை மலர் பொழிந்து - வாசனையையுடைய (கற்பகவிருக்ஷங்களின்) மலர்களை(ப் பகீரதன்மேற்) சொரிந்து, ஆர்த்தன - ஆரவாரஞ்செய்தன; முரசம் - பேரிகைகளும், முற்றிய பல் இயம் - நிறைந்த வேறுபல வகை வாத்தியங்களும், முறைமுறைமுழங்க-வரிசைவரிசையாகக்கோஷிக்க, அரசன் - பகீரதன், அப் பொழுது—, அணி மதில் அயோத்தி மீண்டு அடைந்தான் - அழகிய மதில்களையுடைய அயோத்தியாபுரிக்குத் திரும்பி வந்து சேர்ந்தான்; (எ-று.)—முறைமுறை - அடுக்கு, மிகுதிப்பொருளது.
பி-ம்:—[1] ஆர்த்தனர். [2] துவைப்ப. (௩௯)

௪௦.—கங்கையின் சிறப்பு.

அண்ட [1]கோளகைப் புறத்தது யகிலமன் றளந்த
புண்ட ரீகமென் [2]பதத்திடைப் பிறந்துபூ மகனார்
கொண்ட தீர்த்தமா [3]யரன்கொளப் பகீரதன் கொணர
மண்ட லத்துவந் தடைந்ததிம் மாநதி மைந்த.

(இ-ள்.) மைந்த - சக்கரவர்த்திதிருமகனே! இ மா நதி - இந்தப் பெரிய கங்காநதி, அண்டகோளகை புறத்தது ஆய் அகிலம் அன்று அளந்த புண்டரீகம் மெல் பதத்திடை - இவ்வண்டவுருண்டைக்கு அப்புறத்திலுள்ளதாய் உலகமனைத்தையும் (திரிவிக்கிரமனாகி) அக்காலத்தில் அளந்து சென்ற திருமாலினது தாமரைமலர்போன்ற மென்மையான திருவடியிலே,

பூமகனார் கொண்ட தீர்த்தம் ஆய் - (அத்திருமாலின் நாபித்) தாமரைமலரிலே தோன்றிய குமாரனாகிய பிரமதேவன் (தன்கைக்கமண்டலத்தினின்று சேர்த்துக்) கொண்ட ஸ்ரீபாததீர்த்தமாகி, பிறந்து - தோன்றி, பகிரதன் கொணர - பகீரதன் கொண்டுவர, அரன் கொள - சிவபிரான் ஏற்றுக் கொள்ள, மண்தலத்து - பூலோகத்திலே, வந்து அடைந்தது - வந்து சேர்ந்தது; (எ - று.)

திருமால் உலகமளந்தகாலத்தில் மேலே சத்தியலோகத்திலே சென்ற அப்பரமனது திருவடியைப் பிரமன் தன்கைக்கமண்டலதீர்த்தத்தாற் கழுவி விளக்க. அந்த ஸ்ரீபாததீர்த்தமே கங்காநதியாகப்பெருகியதென்று உணர்க. பெரியாழ்வார் "சதுமுகன் கையிற் சதுப்புயன் றாளிற் சங்கரன் சடையினிற் றங்கிக், கதிர்முக மணிகொண்டிழிபுனற் கங்கை" என்று அருளிச்செய்தவாறுங் காண்க. பி - ம்:—[1] கோளகைக்கப்புறத்து: [2] மலரிடை. [3] புகிரதன் றவத்தினால். (கூ0)

**கூக.—பாகீரதி சானவி என்ற கங்கையின் பெயர்கட்குக் காரணம்.**

**சகரர் தம்பொருட் டருந்தவம் [1]பெரும்பக றள்ளிப்**
**பகிர தன்கொணர்ந் திடுதலாற் பகிரதி யாகி**
**மகித லத்திடைச் சன்னுவின் செவிவழி வரலா**
**னிகரில் சானவி யெனப்பெயர் படைத்ததிந் நீத்தம்.**

(இ - ள்.) இ நீத்தம் - இந்தக் கங்காநதியின் நீர்வெள்ளமானது,—சகரர் தம் பொருட்டு - சகரகுமாரர்களை நற்கதிசெலுத்துதனிமித்தம், பெரு பகல் அரு தவம் தள்ளி - அனேக நாட்களை அருமையானதவத்திலே கழித்து, பகிரதன் - பகீரதனால், கொணர்ந்திடுதலால் - கொண்டுவரப்பட்டதனால், பகிரதி ஆகி - பாகீரதியென்னும் பெயருடையதாய், மகிதலத்திடை - பூலோகத்திலே, சன்னுவின் செவி வழி வரலால் - ஜஹ்நுமுனிவனது காதுகளின் வழியாக வந்ததனால், நிகர் இல் சானவி என பெயர் படைத்தது - ஒப்பில்லாத ஜாஹ்நவி என்று ஒருபெயரையும் பெற்றது; (எ - று.)

சகரர் - ஸாகரர்: பகிரதி - பாகீரதீ: சானவி - ஜாஹ்நவீ: வடசொற் சிதைவுகள். பகல் - நாளுக்கு ஆகுபெயர். பி - ம்:—[1] நெடும்பகல். (கூக)

**கூஉ, கூஙு.—இதுவும், மேற்கவியும் குளகம்: கங்கையைக்கடந்து, விசாலையையடைந்து அந்நகராவாசன் கௌரவிக்க, பின்பு மூவரும் மிதிலையை யடைதல்.**

**கூஉ. என்று கூறலும் வியப்பினொ டுவந்தன ரிறைஞ்சிச்**
**சென்று தீர்ந்தனர் கங்கையை விசாலைவாழ் சிகரக்**
**குன்று போற்புயத் தரசன்வந் தடியிணை குறுக**
**நின்று நல்லுரை விளம்பிமற் றவ்வயி னீங்கா.**

**கூங.** பள்ளி நீங்கிய பங்கயப் பழனநன் னாரை
[1]வெள்ள வான்கனை களைவுற [2]கடைசியர் மிளிர்ந்த

கள்ள வாணெடுங் கண்ணிழல் கயலெனக் கருதா
வள்ளி நாணுறு மகன்பணை மிதிலைநா டடைந்தார்.

(இ - ள்.) (கூஉ) என்று கூறலும் - என்று (விசுவாமித்திரன்) சொல்லி யருளியவளவில், வியப்பினொடு உவந்தனர் இறைஞ்சி - (கேட்ட ராமலக்ஷ் மணர்) ஆச்சரியத்துடனே மகிழ்ந்து (கங்கையை) வணங்கி, சென்று-(பின்பு மூவரும்) புறப்பட்டுப்போய், கங்கையை நீந்தனர் - கங்காநதியைக் கடந்து, விசாலை வாழ் சிகரம் குன்று போல் புயத்து அரசன் வந்து அடி இணை உறுக - (அவ்விடத்திலே) விசாலாநகரத்தில் வாழ்கின்ற சிகரத்தையுடைய மலைபோன்ற தோள்களையுடையானொரு அரசனெதிர்கொண்டுவந்து(விசுவா மித்திரனது) உபயபாதத்திற் சேர்ந்து வணங்க, நின்று - (மூவரும் அங்கே சிறிதுபொழுது) நின்று, நல் உரை விளம்பி-(அவனோடு) இன்சொற்சொல்லி விட்டு, மற்று பின்பு, அ வயின் நீங்கா - அவ்விடத்தினின்று நீங்கி,— (கூஙு) பள்ளி நீங்கிய - நித்திரை ஒழிந்த [சிறிதும் குவிதலின்றி நன்குமலர்ந்த என்றபடி], பங்கயம் - தாமரைகளையுடைய, பழனம் - கழனி களிலே, நல் நாரை-நல்ல நாரைகள், வெள்ளம் வான் களை களைவுறு கடை சியர் - நீர்ப்பெருக்கத்திலேதோன்றுகிற சிறந்த களைகளைப் பறிக்கின்ற உழவர்மகளிரது, மிளிர்ந்த கள்ளம் வாள் நெடு கண் - பிறழ்கின்ற வஞ்சனை யையுடைய வாளாயுதம்போன்ற நீண்ட கண்களினது, நிழல் - சாயையை, கயல் என கருதா-கயல்மீன்களென்று நினைத்து அள்ளி - மூக்கினாற் குத்தி யெடுத்து, நாணுறும் - (அவை தாம்நினைத்தபடி மீனல்லாமையால்) வெட்க மடைதற்கு இடமான, அகல் பணை - பரந்த மருதநிலஞ்சூழ்ந்த, மிதிலை நாடு - மிதிலாநகரத்தைத் தன்னுள்ளேகொண்ட விதேகநாட்டை, அடைந் தார் - (மூவரும்) சேர்ந்தார்கள்; (எ - று.)

கூஉ:—இக்ஷ்வாகுமகாராசனுக்கு அலம்புசையென்பவளிடம் பிறந்த விசாலனென்பவனால் ஏற்படுத்தப்பட்டதனாலும் விசாலமாயுள்ளதனாலும், இந்நகரத்துக்கு விசாலையென்று பெயர். இம்மூவரும் கங்கையைக்கடந்து விசாலையென்ற நகரத்தைச் சார, அந் நகரத்தரசன் விசுவாமித்திரன் வரு கையைக் கேள்வியுற்று எதிர்கொண்டு அழைத்துப்போய் உபசரித்து இராமலக்குமணர்களை விசாரித்து அறிந்து அவர்களையுஞ் சற்கரித்து அனு ப்ப, பின்பு மூவரும் விதேகநாட்டைச் சேர்ந்தனரென்க. அப்போது அங்கு இருந்தவன் இட்சுவாகுவமிசத்த ரசனாகிய சுமதியென்பவன். கங்கை யென்பதற்கு - (விஷ்ணுபாதத்தி லிருந்து) பூமியையடைந்த தென்று பொருள்.

கூஙு:—பங்கயம் - நீர்ப்பூங்கொடிகள் பலவற்றிற்கும் உபலக்ஷணம். தாமரைமுதலியனவன்றி வேறு களை இன்றாதலால், 'வான்களை' என்றார். முதலடிக்கு - பழனங்களிலே பங்கயமலர்களிலே பள்ளிநீங்கிய நாரை என்று இயைத்து, அப்பொழுதுதான் துயில்நீங்கிய நாரைக ளாதலால் இன்னமுந் தூக்கத்தெளிவை நன்குபெறுமற் கண்ணிழலைக் கயலெனக் கருதினவென் றும் உரைக்கலாம். பெண்கள் கண்களுக்குக் களவுத்தன்மையாவது - ஆட

வருள்ளத்தை மயக்கிக் கவர்ந்து கொள்ளைகொள்ளுதல். காதளாவிய கண்க ளென்பார், 'நெடுங்கண்' என்றார். கண்களுக்குக் கயலுவமை - வடிவமும், பிறழ்ச்சியும் பற்றி. வாள் - ஒளியையுடைய என்றுமாம். உபமேயமாகிய கண்களின் நிழலை உபமானமாகிய கயல்மீ னென்று நாரைகள் மயங் கியனவாகக் கூறியது, மயக்கவணி. வெள்ளம்-மிகுதியாகிய களை எனினு மாம். அந்நாட்டிலுள்ள கீழ்ச்சாதிப்பெண்களது அழகும் இத்தன்மைய தென்றுகூறி,சீதைமுதலிய கட்டழகுடையமகளிர் வாழ்தற்கிடமான அந்நக ரத்தின் சிறப்பை விளக்குகின்றார். பி - ம்:—[1]மெள்ள. 'கடைச்சியர். (௬௩)

**௬௪.—அந்நாட்டுச் சோலைகளின் வருணனை.**

**வரம்பில் வான்சிறை மதகுகண் முழவொலி வழங்க**
**வரும்பு நாண்மல [1]ரசோகங்க ளலர்விளக் கெடுப்ப**
**நரம்பி னன்றதேன் றாரைகொ ணறுமலர் யாழிற்**
**சுரும்பு பாண்செயத் தோகைநின் றாடுவ சோலை.**

(இ - ள்.) வரம்பு இல் - அளவிறந்தனவான, வான் சிறை - பெரிய அணையின், மதகுகள்—, முழவு ஒலி - மத்தளவோசையை, வழங்க-கொடுக் கவும்,—அசோகங்கள் - அசோகமரங்கள், அரும்பு நாள் மலர் - தோன்றுகி ன்ற புதிய பூக்களாகிய, அலர் விளக்கு - விளங்குகின்ற விளக்குக்களை, எடுப்ப-ஏந்தவும்,—நரம்பின் நான்ற தேன் தாரை கொள் - (யாழின்) நரம்பு போல ஒழுகுகின்ற தேனினொழுக்கைக் கொண்ட, நறுமலர்-நன்மணம்வீசும் மலர்களாகிய, யாழில் - வீணைகளிலே, சுரும்பு - வண்டுகள், பாண் செய - பாடுதலைச் செய்யவும்,—சோலை - அந்நாட்டுச்சோலைகளில், தோகை - மயில்கள், நின்று ஆடுவ - (நிலைபெற்று) ஆடுவன; (எ - று.

மயில்களிடத்து ஆடும்மகளிரின் தன்மையை யேற்றிக்கூறினர். வழங்க, எடுப்ப, செய்ய, ஆடுவ என வினைமுடிக்க. சோலைகளிலுள்ள மதகுகளில் நீர்பாய்தலினாலுண்டாகிற ஒலியை மத்தளவொலியாகவும், அசோகமலர் களை விளக்கின் ஒளிப்பிழம்பாகவும், தேன்தாரையை யாழ்நரம்பாகவும், மலரை யாழாகவும், வண்டுகளைப் பாடகராகவும், மயில்களைக் கூத்தாடும் மகளிராகவும் உருவகப்படுத்தினர். சிறை - நீரைத்தடுத்துக்கட்டிய அணை. தனதுநிழலினால் தண்மையையுஞ் செழுமையால் இனிமையையுந் தந்து தன்னைக்காண்பவரது மனத்திலுள்ள சோகத்தை [சோர்வை] ஒழித்தலால், அசோக மென்று பெயர். அலர்விளக்கு - வினைத்தொகை. அலராகிய விளக்கு என்று உரைத்து, அரும்புநாண்மலரை அசோகத்திற்கு இயற்கை யடையாக்கினும் அமையும். தோகைநின்றாடுவ சோலை என எடுத்து, மயில் கள்நின்று ஆடப்பெறுவன சோலைகள் என்றுமாம். பி - ம்:—[1]அசோகுகள்.

**௬௫.—கழனிகளின் சிறப்புக் கூறப்படுகின்றது.**

**பட்ட வானுதன் மடந்தையர் பார்ப்பெனுந் தூதா**
**லெட்ட வாதரித் துழல்பவ ரிதயங்கள் [1]வெறுப்ப**
**வட்ட நாண்மரை மலரின்மேல் வயலிடை மள்ளர்**
**கட்ட [2]காவியங் கட்கடை [3]கழிப்பன கழனி.**

(இ - ள்.) பார்ப்பு எனும் தூதால் - (தங்கள்) பார்வையென்கிற தூதி னல், எட்ட - (தங் கணவரைச்) சேர்தற்கு, ஆதரித்து - விரும்பி, உழல் பவர் - சஞ்சரித்துத்திரிபவராகிய, பட்டம் - பொற்பட்டமணிந்த, வாள் நுதல் - பிரகாசமான நெற்றியையுடைய, மடந்தையர் - உழவர்மகளிரது, இதயங்கள் - மனங்கள், வெறுப்ப - வெறுப்பையடையும்படி, வயலிடை - வயல்களிலே, மள்ளர் - உழவர்கள், வட்டம் நாள் மரை மலரின்மேல் - வட்டவடிவான புதிய தாமரைமலர்களின்மேல், கட்ட - களைபறித்தெறிந்த, காவி - கருங்குவளைமலர்களாகிய, அம் கண் கடை - அழகிய கண்களின் கடைசிகள், கழிப்பன மிகப்பெறுவன: கழனி - கழனிகள்; (எ - று.)

மிகுந்த நீர்வளமுள்ள கழனிகளிலே அப்பொழுதுமலர்ந்த செந்தாமரைமலர்களின்மேலே களைபிடுங்குபவர்களாற் பறித்தெறியப்பட்டு விழுந்து கிடக்கின்ற கருங்குவளைமலர்கள் பெண்களின் அழகிய முகத்தினிடத்தே பொருந்திய கண்களை ஒத்திருக்கு மென்றபடி. தமது குளிர்ந்த கண்பார்வையால் உழவரை வசப்படுத்தி அணையவந்த உழத்தியர் அக்கழனியிற் பல விடத்துந் தாமரைமலரின்மேற் கருங்குவளைமலர் படிந்திருத்தலைக் கண்டு, தமக்குமுன்னமே அவ்வாடவர்களை வசீகரிப்பதற்கு வேறுசிலமகளிர் அவர்களைக் கண்களால் நோக்குகின்றன ரென மயங்கி, இனித் தமதுகருத்துக் கைகூடுமோ கூடாதோ என்கிற ஐயத்தின் மிகுதிப்பாட்டால் மனம் வெறுப்பாராயின ரென்க. இது - மயக்கவணியின்பாற்படும். இனி, இச்செய்யுளுக்கு—மகளிர்களுடைய பார்வையாகிய தூதினல் அழைக்கப்பட்டு அவர்களைச் சேரவிரும்பித் திரிகிற ஆடவர்களுடைய மனம் வெறுக்கும்படி தாமரையின்மேற் காவிகள் மிகுந்துள்ளன என்று பொருளுரைத்தலும் ஒன்று; இவ்வுரைக்குக் கருத்துவருமாறு:—தாமரைப்பூவிற் பொருந்திய நீலமலர்களை நோக்கித் தம்மைக் குறிப்பாகக் கண்காட்டி யழைக்கின்ற மகளிரது முகமெனமயங்கி அருகில்வந்த ஆடவர்கள் அவற்றை உற்றுப்பார்த்து அவை முகமுங் கண்ணுமாகாமல் பூக்களாயிருக்கின்றமையை அறிந்து தமது ஆசை வீணாயினதனல் மனவெறுப்புறபவராவ ரென்பதாம். மடந்தையர் - மகளிரென்றமாத்திரமாய் நின்றது; இப்பருவத்துக்கு வயதெல்லை - பதினன்குமுதற் பத்தொன்பதளவும். பார்ப்பு - தொழிற்பெயர்; மகளிர் பார்வை. குறிப்புநோக்கத்தால் தமதுகருத்தை ஆடவர்க்குப் புலப்படுத்துதலும் அவரையழைத்தலும் முதலியன செய்தலால், அதனைத் தூதாக உருவகப்படுத்தினர். உழல்பவர் பலராதலால், இதயமும் பலவாயின. பி - ம்:—[1]கொதிப்ப. [2]காவிகள். [2]காட்டுவ, கவிப்பன. (௬௫)

௬௬.—நீர்நிலைகளின் சிறப்பு.

தூவி யன்னந்த மினமென்று நடைகண்டு தொடரக்
கூவு மென்குயிற் குதலையர் குடைந்ததண் புனல்வா
போவில் குங்குமச் சுவடுற வொன்றொடொன் றாடிப்
பூவு றங்கினும் புள்ளுறங் காதன பொய்கை.

(இ - ள்.) கூவும் மெல் குயில் குதலையர் - (இனிப்பாகக்) கூவுகின்ற மென்மையான குயிலின் குரல்போன்ற மழலைச்சொற்களையுடைய மகளிர்கள், தூவி அன்னம் நடை கண்டு தம் இனம் என்று தொடர - சிறகழகையுடைய அன்னப்பறவைகள் (தமது) நடையழகைப் பார்த்துத் தங்கள் இனமான அன்னப்பறவையென்று மயங்கிப் பின்தொடரும்படி (மந்தகதியிலே அழகாக நடந்துசென்று), குடைந்த - மூழ்கிவிளையாடின, தண் புனல்வாய் - குளிர்ந்த நீரினிடத்திலே, ஓவு இல் குங்குமம் சுவடு உற - நீங்குதலில்லாத குங்குமக்குழம்பின்சுவடுகள் (தம்மேற்) பொருந்துதலால், ஒன்றொடு ஒன்று ஊடி - ஒன்றோடொன்று கலகப்பட்டு, பூ உறங்கினஉம் புள் உறங்காதன - (அந்நீரிலுள்ள தாமரைமுதலிய)மலர்கள் உறங்கினாலும் (அவற்றிலுள்ள) பறவைகள் உறங்காமல் ஒலித்துநிற்கப்பெறுவன: பொய்கை - (அம்பிதிலைநாட்டிலுள்ள) நீர்நிலைகள்; (எ - று.)

குளங்களிலே மகளிர்கள் இறங்கிச் சலக்கிரீடைசெய்கின்ற பொழுது அவர்களுடம்பில் அணிந்துள்ள குங்குமக்கலவை அங்குப்பொருந்திய பறவைகளின் உடம்பின்மீது படிதலால், அப்பறவைகள் தம்மில் ஒன்றையொன்று நோக்கும்பொழுது இவ்வடையாளத்தால் தம் இனமானவற்றையே பிறசாதிப்பறவைகளென மயங்கித் தமக்குள் மாறுபடுவனவாயின வென்பது கருத்து: மயக்கவணி; முதலடியில் அன்னங்கள் மகளிரைத் தமதுஇனமெனக் கருதினதும், இவ்வணியேயாம். வேற்றுப்புட்களைக், கண்டமாத்திரத்தில் அவற்றோடு கலகப்படுதல் பறவைகளின் இயல்பு. இனி, ஊடி என்பதற்கு - (கலவியிற்) பிணங்கி யெனப் பொருள்கொண்டு, சிவந்தகுங்குமக்குறியும் குங்குமமணமும் பொருந்திய ஆண்பறவைகளைப் பெண்பறவைகள் கண்டு அவற்றை வேறுபேடையோடு புணர்ந்துவந்தனவாகக் கருதிப் பிணங்கின வென்று உரைப்பாரும் உளர். நிறம் வேறுபடுதலும் நன்மணமுறுதலும் கலவிக்குறியாம். பூவுக்கு உறக்கம் - இதழ்குவிதல்; புள்ளுக்கு உறக்கம் - கவலையின்றி இளைப்புத்தீரத் தூங்குதல். மென்மை - செவிக்கினிமை. (௬௬)

**௬எ.—யாறுகளின் சிறப்பு.**

**முறையி னின்முது மேதியின் முலைவழி பாலுந்**
**துறையி னின்றுயர் மாங்கனி தூங்கிய சாறு**
**மறையு மென்கரும் [1]பாடிய வமுதமு மழிதே**
**நறையு மல்லது நளிர்புனல் [2]பெருகலா நதிகள்.**

(இ - ள்.) முறையின் - ஒன்றன்பின் ஒன்றாக,—முது மேதியின் முலை வழி பால்உம் - முதிர்ந்த எருமைகளின் முலைகளினின்று பெருகுகிற பாலும், துறையில் நின்று உயர் மா கனி தூங்கிய சாறுஉம் - கரைகளிலே பொருந்தி ஓங்கிவளர்ந்துள்ள மாமரங்களின் பழங்களினின்று பெருகின இரசமும், அறையும் மென் கரும்பு ஆடிய அமுதம்உம் - வெட்டப்படுகின்ற சுவையினிய கரும்புகளை (ஆலையில்வைத்து)ஆடுவதனா லுண்டான அமிருதம் போலினிய சாறும், அழி தேம் நறையும் - (தேன்கூடுகள்) சிதைதலாற்

பெருகுகிற மணமுள்ள தேனும், அல்லது - (என்கிற இவை மாறிமாறிப் பெருகுவதே) அல்லாமல், நளிர் புனல் பெருகலா - குளிர்ந்த நீர் பெருக இடம்பெறாதன: நதிகள் - (அந்நாட்டு) யாறுகள்; (எ - று.)

முறையினின் என்பது - தூராந்வயம். பாலும் சாறும் அமுதமும் நறையும் முறையினிற் பெருகுவதல்லது புனல்பெருகலாதன நதிகள் என்க. முதுமேதி-கருவுற்றுப்பருவநிரம்பிக் கன்றீன்றஎருமை யென்றபடி "கருமேதிக னைரினின்றகன் றுள்ளிட வுண்முலை, தாரை கொள்ளத் தழைப்பன சாலியே" எனக் கீழ் நாட்டுப்படலத்துக் கூறியவாறு கழனிகளிலே சஞ்சரிக்கின்ற எருமைகள் ஊரிலேயுள்ள தத்தங்கன்றுகளை அன்போடு நினைக்கும்பொழுது அவற்றின் முலைகளினின்று மிகுதியாகப் பால் சுரந்து பெருகுகின்றதென்க. உயர்மாங்கனி - முப்பழங்களுள் முதலதாய்ச் சிறந்த மாம்பழம் என்றுமாம். சாறு - ஸாரமென்னும் வடமொழித் திரிபு. அறைதல் வெட்டுதலாதலை, "அறையுறு கரும்பின் றீஞ்சேறு" என்றவிடத்துங் காண்க. நதிகளை வருணிக்கின்ற வியாஜத்தால், எருமைகள் தாமாகப் பால் சுரக்கின்ற வளத்தையும், மாமரச் சோலைவளப்பத்தையும், கரும்புமிகுதியையும், தேன்பெருக்கையுந் தெரிவித்தார். பி-ம்:—[1]ஆட்டிய. [2]பெருகல. ()

**கூஅ—நீரோடைகளின் சிறப்பு.**

*இழைக்கு நுண்ணிடை யிடைதர முகடுயர் கொங்கை
மழைக்கண் மங்கைய ரரங்கினில் [1]வயிரியர் முழவ
முழக்கு மின்னிசை வெருவிய மோட்டிள [2]மூரி
யுழக்க வாளைகள் பாளையிற் குதிப்பன வோடை.

(இ - ள்.) இழைக்குஉம்-(பஞ்சின்) நூலிழையைக் காட்டிலும், நுண் - நுட்பமானதாகவுள்ள, இடை - இடையானது, இடைதர - (பாரத்தைப் பொறுக்கமாட்டாமல் மெலிந்து பின்வாங்கும்படி, முகடு உயர் - (மலைச்) சிகரம்போல ஓங்கியுள்ள, கொங்கை - தனங்களையும், மழை கண் - மழை போலக் குளிர்ந்த கண்பார்வையையுமுடைய, மங்கையர் - மங்கைப்பருவமுடைய இளம்பெண்கள், (நர்த்தனஞ்செய்கின்ற) அரங்கினில் - நாடகசாலையிலே, வயிரியர் - (உடனிருக்கும்) பாடகர்கள், முழவம் முழக்கும் - மத்தளத்தை முழங்கச்செய்வதனாலுண்டாகிற, இன்இசை - இனிமையான ஓசைக்கு, வெருவிய - பயந்துஓடுகிற, மோடு இள மூரி - பெரிய இளமையான எருமைகள், உழக்க - (போய்விழுந்து) கலக்குவதனால், (அதற்கு அஞ்சி), வாளைகள் - வாளைமீன்கள், பாளையில் - (பக்கங்களிலுள்ள தெங்கு கமுகு முதலியவற்றின்) பாளைகளின்மேல், குதிப்பன - தாவிப் பாயப்பெறுவன: ஓடை - (அவ்வூரிலுள்ள) நீரோடைகள்; (எ - று.)

அரங்கில் மகளிராடும்பொழுது வயிரியர் மத்தளம் முழக்க அதற்குஅஞ்சிய எருமைகள் ஓடிச்சென்று ஓடைகளில்விழுந்து அவற்றின்நீரைக் கலக்க அவற்றிலுள்ள வாளைகள் பாளைகளிற் பாயுமென்க. இதில் மீன்களின்செழுமையுங்காண்க. "ஏழாண் டியற்றியோ ரீராருண்டிற், சூழ்கழன் மன்னற்குக் காட்டல் வேண்டி," 'பன்னிரண்டாண், டேய்ந்ததற்பி னுடனுடன் பாடலமு

கிம்மூன்றும், வாய்ந்தவரங் கேற்றல் வழக்கு" என்றவாறு பன்னிரண்டு பிராய நிறைந்த இளமகளிர் நிருத்தத்திற்குச் சிறந்தவ ரென்பது இலக்கண மாதலால், அதற்கு ஏற்ப 'மங்கையர்' என்றார். வயிரியர் என்றது, தண்ணுமையாசிரியரை. பி - ம்:—[1]மகரயாழ். [2]எருமை. (சுஅ)

சுகூ—குளங்களின் சிறப்பு.

படைநெ டுங்கண்வா ளுறைபுகப் படர்புனன் மூழ்கிக்
கடைய முன்கடற் செழுந்திரு வெழும்படி காட்டி
மிடையும் [1]வெள்வளை புள்ளொடு மொலிப்பமெல் லியலார்
குடைய வண்டினங் கடிமலர் குடைவன குளங்கள்.

(இ - ள்.) மெல் இயலார் - மென்மையான தன்மையையுடைய மகளிர், நெடு கண்-(தமது) நீண்ட கண்களாகிய, வாள் படை - வாளாயுதங்கள், உறை புக - (இமைகளாகிய) உறைகளினுள்ளே பொருந்திமறையும்படி, [கண்களை மூடிக்கொண்டு], படர் புனல் மூழ்கி - பரந்த நீரிலே இறங்கி ஸ்நாநஞ்செய்து, (தாம் எழுந்திருக்கும்பொழுது ;) முன் கடல் கடைய செழு திரு எழும் படி காட்டி - முன்னே திருப்பாற்கடலைக் கடைந்தகாலத்தில் (அங்கிருந்து) அழகிய இலக்குமி அவதரித்து மேலெழுந்ததன்மையைத் தோற்றுவித்து, மிடையும் வெள் வளை புள்ளொடும் ஒலிப்ப - நெருங்கி யணிந்துள்ள வெண்ணிறமான கைவளையல்கள் நீர்ப்பறவைகளோடு சமமாக ஒலிக்கும்படி, குடைய - சலக்கிரீடைசெய்யாநிற்க —வண்டு இனம் - வண்டுகளின் கூட்டங்கள், கடி மலர் - வாசனையையுடைய பூக்களை, குடைவன - குடைந்து மதுபானஞ்செய்து களித்திருக்கப்பெறுவன: குளங்கள் - (அங்குள்ள) தடாகங்கள்; (எ - று.)

மகளிர் கைவளையல்கள் ஒலிக்க நீரைத் துழாவிக்கொண்டு புனலினின்று மேலெழுவது-பாற்கடல்கடைகையில் திருமகள் அக்கடலினின்று மேலெழுவது போலுமென்க. கடற் செழுந்திருவெழும்படி காட்டி மெல்லியலார் குடைவன குளங்கள் என்றவிடத்துக் காட்சியணி காண்க. பாற்கடல் - குளத்துக்கும், திருமகள் - அந்நாட்டுமகளிர்க்கும் உவமை. கண்களை 'வாள்' என்றதற்கு ஏற்ப இமைகளை 'உறை' என்றார். உருவகவணி. 'வெள்வளை' என்றது - சங்கு, யானைத்தந்தம் இவற்றை அரிந்து செய்யப்பட்டவற்றை. முன் எழும் - இயல்புபற்றிவந்த காலவழுவமைதி. பி-ம்:—[1]ஒள்வளை. (சுகூ)

எ௦.—மிதிலையையடைந்து விசுவாமித்திரன் அகலியை கல்லாய்க்கிடக்கும் மேட்டைக் காணுதல்.

இணைய நாட்டினை யினிதுசென் றிஞ்சிசூழ் மிதிலை
புணையு நீள்கொடிப் புரிசையின் புறத்துவந் திறுத்தார்
மணியின் மாட்சியை யழித்திழி மாதவப் பன்னி
கணையு மேட்டுயர் கருங்கலோர் வெள்ளிடைக் கண்டார்.

(இ - ள்.) இனைய - இத்தன்மையதான, நாட்டினை - விதேகநாட்டை, இனிது சென்று - (ஸ்ரீராமலட்சுமணர்களும் விசுவாமித்திரனும்) இனிமையாகப் போயடைந்து, இஞ்சி சூழ் மிதிலை புனையும் - பலமதில்களாற் சூழப்பட்டுள்ள மிதிலாநகரத்தை அலங்கரிக்கின்ற, நீள் கொடி புரிசையின் - உயர்ந்த துவசங்களையுடைய வெளிமதிலினது, புறத்து - வெளியிலே, வந்து இறுத்தார் - வந்து தங்கினவர்களாய்,—மனையின் மாட்சியை அழித்து இழி - இல்லறவாழ்க்கைக்குஉரிய சிறந்தஒழுக்கமாகியகற்பை அழியச்செய்து (அதனால்) இழிவையடைந்த, மா தவன் பன்னி - மிகுந்த தவத்தினையுடைய கௌதமமகாமுனிவனது பத்தினியாகிய அகலியையின் சாபரூபமாய், கனையும் மேடு உயர் - நெருங்கின மேடாக உயர்ந்துதோன்றுகிற, கருங் கல் - கரியகல்லை, ஓர் வெள் இடை - ஒருவெற்றிடத்திலே, கண்டார் - ; (எ - று.)

விசுவாமித்திரன்முதலியோர் அம்மிதிலையின் மதிற்கு வெளியேதங்கியபோது கௌதமமுனிவனது மனைவி அகலியை கல்லாய்க்கிடக்கும் இடத்தைக் கண்டன ரென்க. இஞ்சி - மதிலுறுப்பு எனக்கொண்டு, இஞ்சிசூழ் புரிசைஎன இயைத்து உரைத்தலுமாம்.. மா தவன் + பன்னி = மாதவப் பன்னி: உயர்திணையிற் சில விகாரமாயிற்று பன்னி = பத்நீ. (எ0)

**எக.—அகலியை சாபவடிவம் நீங்கி முன்னையவடிவம் பெறுதல்.**

**கண்ட கன்மிசைக் காகுத்தன் கழற்றுகள் கதுவ**
**வுண்ட பேதைமை மயக்கற வேறுபட் டுருவங்**
**கொண்டு மெய்யுணர் பவன்கழல் கூடிய தொப்பப்**
**பண்டை வண்ணமாய் நின்றனண் மாமுனி பணிப்பான்.**

(இ - ள்.) கண்ட கல்மிசை - (அங்ஙனம் அவ்விடத்திற்) பார்க்கப்பட்ட சிலையின்மேலே, காகுத்தன் கழல் துகள் கதுவ - ஸ்ரீராமபிரானது திருவடித்தூளி போய்ப் பட்டதனால்,—உண்ட பேதைமை மயக்கு அற - (தான்) உள்ளத்திற்கொண்டுள்ள அஜ்ஞானமயக்கம் நீங்கும்படி, மெய் உணர்பவன் - தத்துவஞானத்தை யடைந்தவன், வேறுபட்டு உருவம் கொண்டு - தனது அஜ்ஞாநநிலை மாறி நிசவடிவமடைந்து, கழல் கூடியது ஒப்ப - (எம்பெருமானுடைய) திருவடியை அடைதலை யொக்க, பண்டை வண்ணம் ஆய் நின்றனள் - (அவ்வகலிகை) முன்னைய ரூபமாய் எழுந்து நின்றாள்; மா முனி - (அதனைக்கண்ட) சிறந்த விசுவாமித்திர முனிவன், பணிப்பான் - (ஸ்ரீராமனைநோக்கிச்) சொல்வான்; (எ - று.)—அது மேற் கவியிற் கூறுகிறார்.

கதுவ நின்றனள் என இயையும். எம்பெருமான் திருவடிசேர்பவர் கருமமொழிந்து புலையனும்விரும்பாத இப்புன்புலால்யாக்கையை ஒழித்து ஒளிமயமானஉருவத்தை அடைவதுபோல, இராமனது திருவடிப்பொடி சேர்ந்த இவள் சாபமொழிந்து கல்லுருவம்மாறி நல்லுருவம் பெற்றாளென்க. கழற்றுகள் - ஸ்ரீபாதரேணு. பேதைமைமயக்கு - அவித்தையின் தொடர்ச்சி. மெய்யுணர்தலாவது - பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீதஐயங்களாலன்றி உண்மையாக அறிதல். உருவம் - ரூபம்.

வேறுபட்டு உருவங்கொள்ளுதல் - பஞ்சபூதமயமான இந்தக் கர்மசரீரமொழிந்து தேஜோமயமான திவ்வியதேகத்தைப் பெறுதல்; இது, முத்திபெறுவோர்க்கு உள்ளது. மூன்றாமடியில், மெய்யுணர்புகொண்டு அவன் கழல் கூடியது என இயைத்து - (ஒருவன்) தனது தத்துவஞானத்தால் அகாரவாச்யனை திருமாலினது திருவடியை அடைந்தது என்று உரைப்பாருமுளர். இனி, மெய்யுணர்பவன் - மெய்யுணர்வினையுடைய எம்பெருமான் எனக்கொண்டு, ஒருவன்என வருவித்து உரைத்தலும் ஒன்று. மிதிலைக்கு அருகிற் செல்லும்போது ஆச்சிரமமொன்று பாழாயிருப்பதுகண்டு அதைக் குறித்து இராமன் வினவ, விசுவாமித்திரன் அகலிகையின் வரலாறு கூறி அவ்வாச்சிரமத்திற் செல்லுமாறு வேண்ட, சாபவிமோசனமுண்டாகுமாறு இராமன் அங்குச்சென்றானென்றுமுதனூல் கூறும் முதலடி-முற்றுமோனை.

**எஉ.—சாபம் நீங்கிப் பெண்ணாய்நின்றவளை முனிவன் இராமனுக்கு இன்னாளென் றறிவித்தல்.**

**மாயிரு விசும்பிற் கங்கை மண்மிசை யிழித்தோன் மைந்த**
**மேயின வுவகையோடு மின்னென வொதுங்கி நின்றா**
**டீவினை நயந்து செய்த தேவர்கோன் றனக்குச் செங்க**
**ணாயிர மளித்தோன் பன்னி யகலிகை யாகு மென்றான்.**

(இ - ள்.) 'மா இரு விசும்பின் - மிகவும் பெரிய ஆகாசத்திலிருந்து, கங்கை - கங்காநதியை, மண்மிசை - பூலோகத்திலே, இழித்தோன் - இறக்கிக்கொண்டுவந்த பகீரதசக்கரவர்த்தியினதுவமிசத்திற்பிறந்த, மைந்த - குமாரனே! மேயின உவகையோடு - பொருந்தின மகிழ்ச்சியுடனே, மின் என ஒதுங்கி நின்றாள் - மின்னற்கொடிபோல (நாணத்தால்) ஒருபுறத்தே ஒதுங்கிநின்ற இவள், (யாரெனில்), தீவினை நயந்து செய்த - (பிறன்மனை புணர்தலாகிய) கொடுந்தொழிலை விரும்பிச்செய்த, தேவர்கோன் தனக்கு - தேவர்களுக்குத் தலைவனான இந்திரனுக்கு, செம் கண் ஆயிரம் அளித்தோன் - சிவந்த ஆயிரங்கண்களைக் கொடுத்த கௌதமமகாமுனிவனது, பன்னி - பத்நியாகிய, அகலிகை ஆகும் - அகலிகையென்பவளாம்,' என்றான் - என்று (கௌசிகமுனிவன்) கூறினான்; (எ - று.)

இப்போது சிலைவடிவம் நீங்கிப் பெண்வடிவத்துடன் இங்கு நிற்பவள் கௌதமமுனிவனது பத்தினியாவளென்று ஸ்ரீராமனுக்கு முனிவன் தெரிவித்தனனென்க. கண்ணாயிரமளித்ததை மேலே காண்க. மின் - ஒளிக்கும், மெல்லிய உருவத்துக்கும் உவமை. (எஉ)

**எ௩.—கௌதமன்மனைவிக்குக் கல்லாதமாறு நேர்ந்ததற்குக்காரணம் யாதென்று ஸ்ரீராமன் விசுவாமித்திரனை வினவுதல்.**

**பொன்னை[1]யேர் சடையான் கூறக் கேட்டலும்[2]பூமின்கேள்வ**
**னென்னையே பென்னை யேயிவ் வுலகிய லிருந்த வண்ண**
**முன்னையூழ் வினையி னாலோ நடுவொன்று முடிந்த துண்டோ**
**வன்னையே யனையாட் [3]கிவ்வா றடுத்தவா றருளு கென்றான்.**

(இ - ள்.) பொன்னே ஏர் சடையான் - (செந்நிறவொளியாற்) பொன்னினையொத்த சடையினையுடைய கௌசிகமுனிவன், கூற-(இவ்வாறு) சொல்ல, கேட்டலும் - கேட்டவுடனே, பூ மின் கேள்வன் - தாமரைமலரில் வாழ்கிற மின்னல்போன்ற திருமகளுடைய அன்புள்ள கொழுநனான ஸ்ரீராமபிரான், (ஆச்சரியமுற்று முனிவனைநோக்கி), 'இ உலகு இயல் இருந்த வண்ணம்-இந்தலோகத்தினது இயற்கை இருந்தவிதம், என்னே என்னே - எத்தன்மையது எத்தன்மையது!! முடிந்தது - இங்ஙனம் நேர்ந்தது, முன்னை ஊழ்வினையினாலோ - முற்பிறப்பிற்செய்த கருமத்தின் சம்பந்தத்தினாலா? நடு ஒன்று உண்டோ - (அல்லது இதற்குக்காரணமாய்) இடையிலே நேர்ந்ததொரு செய்கை உள்ளதா? அன்னை அனையாட்கு - (உலகுக்கெல்லாந்) தாயையே ஒத்த அகலிகைக்கு, இ ஆறு அடுத்த ஆறு - இந்தப்படி நேர்ந்த காரணத்தை, அருளுக-கூறியருளுவாயாக,' என்றான் என்றவினைவினான்.

சீதாகலியாணம் சமீபித்திருத்தலால், 'பூமின்கேள்வன்' என்றார். பூ மின் கேள்வன் என்பதற்கு - பூமியினிடத்து அவதரித்த மின்னல்போன்ற ஜாநகியின் கொழுநனுக்குபவ னென்றும் பொருள்கொள்ளலாம்; பூ - வடசொல். மின் - உவமையாகுபெயர். என்னையே என்னையே - அடுக்கு, அதிசயம் பற்றியது. பி-ம்:—[1] நேர்சடை, ஏய்சடை. [2] பூமிகேள்வன். இங்ஙன்.

எசு.—இதுமுதல் ஒன்பது கவிகள் அகலிகையின் சாபவரலாறு:—

இந்திரன் முனிவனில்லாச்சமயத்து அகலிகையைச் சேர்தல்.

*அவ்வுரை யிராமன் கூற வறிஞனு மவனை நோக்கிச்
செவ்வியோய் கேட்டி மேனாள் செறிசுடர்க் குலிசத் தண்ண
லவ்விய மவித்த சிந்தை முனிவனை யற்ற நோக்கி
நவ்விபோல் விழியி னாடன் வனமுலை நணுக லுற்றான்.

(இ- ள்.) அ உரை - (கீழ்க்கூறிய) அந்த வார்த்தையை, இராமன் - ஸ்ரீராமன், கூற - சொல்ல (கேட்டு), அறிஞன் உம் - முற்றுமறிந்த விசுவாமித்திரனும், அவனை நோக்கி - அந்தஇராமபிரானைப்பார்த்து, 'கூறுவானானான்); செவ்வியோய் - எல்லா நன்மைகளையும் உடையவனே! கேட்டி - (யான் கூறுவதைக் கருத்தோடு) கேட்பாயாக; மேல் நாள் - முன்னொரு காலத்திலே, செறி சுடர் குலிசத்து அண்ணல் - மிகுந்த ஒளியையுடைய வச்சிராயுதத்தை யேந்திய பெருந்தன்மையுடைய தேவேந்திரன், அவ்வியம் அவித்த சிந்தை முனிவனை அற்றம் நோக்கி - பொறாமை முதலிய துர்க்குணங்களையொழித்த மனத்தையுடைய கௌதம முனிவன் ஆச்சிரமத்தில் இல்லாத சமயத்தைப் பார்த்து, நவ்வி போல் விழியினாள் தன் வனம் முலை நணுகல் உற்றான் - (அங்குச்சென்று அவனது மனைவியாகிய) மான்பார்வை போன்ற பார்வையையுடைய அகலிகையினது அழகிய தனங்களைச் சேர விரும்புபவனானான்; (எ - று.)

முதலடிக்கு முடிக்குஞ்சொல் வருவித்து உரைக்கப்பட்டது. அறிஞன் - திரிகாலஞானி. கௌசிகன் உடனுக்குடனே கேள்விகட்கு விடைகளைத்

தடையின்றிக் கூறி வருவதனால்,'அறிஞன்' என்றார். செவ்வி-நற்குணம்:அழகுமாம். அவ்வியம் என்னுஞ் சொல்லுக்கு - (மனங்) கோணுதல் என்றுபொருள்; அது,இங்கேபிறராக்கம்பொறாமையை உணர்த்திற்று:இதனை "அவ்விய நெஞ்சத்தா னாக்கம்" என்னுந் திருக்குறளில் 'கோட்டத்தினைப் பொருந்திய மனத்தை யுடையவனது ஆக்கம்: கோட்டம் - ஈண்டு, அழுக்காறு' எனப் பரிமேலழகர் உரைத்தவாற்றால் அறிக. இது, மற்றைத்தீக்குணங்களுக்கும் உபலட்சணம். நவ்வி - பெண்மான்; அதன்பார்வைக்கு, முதலாகு பெயர். எல்லாவுறுப்புக்களுள்ளுஞ் சிறந்த கண்களின் அழகைக் கூறியது, மற்றையங்கங்களின் அழகுக்கும் உபலட்சணம்.

பிரமதேவன், பூர்வத்தில் ரூபத்திலுங் குரலிலும் பேதமில்லாமல் ஒருபடிப்படவே பிரஜைகளைப் படைத்துவந்தான்; பின்பு, ஒருவர்க்கொருவர் வேற்றுமையின்றியிருப்பது நலமன்றெனக் கருதி முன்படைத்த பிரஜைகளுக்கு அந்தந்த அங்கங்களிலுள்ள சிறப்பையெல்லாம் எடுத்து அழகுமிகுந்த பெண்ணொருத்தியைச் சிருஷ்டித்து அவளுக்கு அகலியையென்று பெயரிட்டான்; [ஹலம் என்றால் விரூபம், அதாவது - கண்ணுக்கு இனியாதது; அதனாலுண்டானது - அஹல்யம், அதாவது - அழகின்மை; அஃதில்லாதவளாதலின், அகலியை.] அப்பொழுது இந்திரன் இம்மேலான மங்கைக்குத் தக்க கணவன் தானேயன்றி வேறில்லையெனச் செருக்குற்று அவளைத் தனக்குத் தாரமாக எண்ணினான்; இங்ஙனம் இந்திரன் பிரமனது சங்கற்பத்திற்கு மாறாக எண்ணிக் கர்வித்திருந்தனனாதலால், பிரமதேவன் அவளை அவனுக்குக்கொடாமற் கௌதமமுனிவனிடங் கொடுத்து 'இவளைப் பாதுகாத்து வருக' எனக் கட்டளையிட்டான்; அவ்வாறே அவன் வெகுகாலம் பாதுகாத்துப் பின் படைத்தற்கடவுளிடங் கொணர்ந்துவிட்டான்; அவனுடைய மனஞ் சபலப்படாமலிருந்ததையும் தவநிட்டையையும் கண்டு நான்முகக்கடவுள் உவந்து அம்முனிவனுக்கே அவளைத் தாரமாக்கினான்; இந்திரனே பொறாமைகொண்டு வேற்றுருவத்தால் அவளைக் கற்பழிக்கலுற்றானென்க. (௭௪)

௭௫.—இதுவும் அது.

தையலா ணயன வேலு மன்மதன் சரமும் பாய
வுய்யலா முறுதி நாடி யுழல்பவ னொருநா ளுற்ற
மையலா லறிவு நீங்கி மாமுனிக் கற்றஞ் செய்து
பொய்யிலா வுள்ளத் தான்ற னுருவமே கொண்டு புக்கான்.

(இ - ள்.) தையலாள் நயனம் வேல்உம் - அகலிகையினது கண்களாகிய வேலாயுதங்களும், மன்மதன் சரம்உம் - மன்மதனுடைய பாணங்களும், பாய - (தன்மேற்) பாய்வதனால், (மிகவருந்தி), உய்யல் ஆம் உறுதி நாடி - (அவளைச்சேர்ந்து அக்காமநோய்நீங்கிப்)பிழைக்கும்படியானதொரு தவறாத உபாயத்தைத் தேடி, உழல்பவன் - அலைபவனாகிய அவ்விந்திரன், ஒரு நாள் - ஒரு தினத்தில், உற்ற மையலால் அறிவு நீங்கி-(வரம்புகடந்து) மிகுந்த காமமயக்கத்தால் நல்லறிவுகெட்டு, மா முனிக்கு அற்றம் செய்து - பெருமை

பொருந்திய அக்கௌதமமுனிக்குப் பிரிவையுண்டாக்கி, பொய் இலா உள்ளத்தான் தன் உருவமே கொண்டு - பொய்யில்லாத மனத்தையுடைய அக்கௌதம முனிவனது வடிவத்தையே தான் எடுத்துக்கொண்டு, புக்கான் - (அம்முனிவனாச்சிரமத்தினுட்) சென்றான்; (எ - று.)

கீழ்க்கவியிற் கூறியதை, இதனால் விவரித்துக் கூறுகின்றனர். 'முனிக்கு அற்றஞ்செய்து' என்றதனால்-கோழிபோலக் கூவிக் காலைக்கடன் கழித்தற்பொருட்டு முனிவனைப் பிரியச்செய்தமையை உணர்த்தினா ரென்ப. பெண்களது கண்களுடையகுறிப்புநோக்கமும் மன்மதபாணமும் காமத்தை மூட்டி மனத்தை வருத்துவதில் ஒன்றற்கொன்று இனமாகும்;"ஆசலம் புரியைம்பொறிவாளியுங், காசலம்பு முலையவர்கண்ணெனும், பூசலம்புநெறியின் புறஞ்செலா" என்றார் முன்னும். (௭௰)

**௭௧.—அகலியை அவனை இந்திரனென்றுணர்ந்தும் உடன்பட்டிருக்க, வெளிச்சென்றிருந்த கௌதமமுனிவன் வருதல்.**

[1] *புக்கவ ளோடுங் காமப் புது[2]மண மதுவின் றேற
லொக்கவுண் டிருத்த லோடு முணர்ந்தன ளுணர்ந்த பின்னுந்
தக்கதன் றென்ன[3] வோரா டாழ்ந்தன ளிருப்பத் தாழா
முக்கண னனைய வாற்றன் முனிவனு முடுகி வந்தான்.

(இ - ள்.) புக்கு - (இங்ஙனம் இந்திரன் வேற்றுருவங்கொண்டு) சென்று, அவளோடும் - அவ்வகலிகையுடனே, காமம் புது மணம் மதுவின் தேறல் - காமவின்பமாகிய புதிய வாசனையையுடைய மதுவினது தெளிவை, ஒக்க உண்டிருத்தலோடும் - சமமாகத் தான் அனுபவித்துக்கொண்டிருக்கையில், உணர்ந்தனள்-('தன்னோடு இரமிப்பவன் கணவனல்லன்;இந்திரன்' என்று அகலிகை) அறிந்தாள்; உணர்ந்த பின்னும் - அறிந்த பின்பும், தக்கது அன்று என்ன ஓராள் - (இத்தீச்செயல் தனக்குத்) தகுதியானதன்றென்று ஆலோசித்து அதனை விலக்காதவளாய், தாழ்ந்தனள் இருப்ப - (அக்கொடுஞ்செய்கைக்குத் தான்) கீழ்ப்படிந்திருக்க, (அச்சமயத்தில்), தாழா முக்கணன் அனைய ஆற்றல் முனிவனும் - (ஒருவாற்றாலுங்) குறைவில்லாத மூன்று திருக்கண்களையுடைய பரமசிவனையொத்த ஸர்வசக்தியையுடைய அக்கௌதமமுனிவனும் முடுகி வந்தான் - விரைவாய் மீண்டுவந்துவிட்டான்; (எ - று.)

முடுகிவருவதற்குக் காரணம் - தான் எழுந்து புறப்பட்டுப்போனது நடுநிசியாகிய அகால மென்றும், அவ்வாறு தான் செல்லும்படி இந்திரன் வஞ்சனை செய்தானென்றும் ஞானக்கண்ணால் அறிந்தமை. காமம் - சிற்றின்பம். காமம் புதுமணம்மது-ஆசைமிகுதியாலுண்டாகிறபுதியபுணர்ச்சியின்பமாகிய மதுஎன்றுமாம்.பிறன்மனைவிழைதலும்மதுபானமும் ஒழுக்கத்தையும் உணர்வையும் அழித்தலில் ஒன்றோடொன்று ஒப்பனவாதலால், இங்கே இவ்வாறு உருவகப்படுத்தினார். இன் தேறல் என்று எடுத்து உரைப்பினுமாம். காமப் புதுமணமானது மதுவின்தேறலை, ஒக்க - ஒத்திருக்க, (அதனை) உண்டிருத்தலோடும் என்றும் உரைக்கலாம். தாழ்தல் - (ஆசைப்பெருக்கத்தால்)

உடன்பட்டு ஒழுகுதல். தாழா வந்தான் - காலதாமதமில்லாமல் மீண்டு வந்துசேர்ந்தான் என்று உரைப்பினும் அமையும். முக்கணன் - சூரியன் வலக்கண்ணும், சந்திரன் இடக்கண்ணும், அக்கினி நெற்றிக்கண்ணும் ஆக முச்சுடரையும் மூன்றுகண்ணாகவுடைய இறைவன் என்றபடி. இங்கே பிற பெயர்களாற் கூறாமல் 'முக்கணன்' என்ற திருநாமத்தாற் கூறியது-சங்காரத்தொழிலை நடத்தும்பொருட்டு நெற்றித்திருநயனத்தைத் திறந்துள்ள உருத்திரமூர்த்தியையொப்ப முனிவன் பெருங்கோபங்கொண்டு வந்தானென்பதை உணர்த்த. பி - ம்:—[1]புக்கவனோடும். [2]நலம். [3]தேராள். (எசு)

**எஎ.—அகலியை நடுங்கிநிற்க, இந்திரன் அஞ்சிப் பூனையாய்ப் போகத் தொடங்குதல்.**

(கிரு)

சரந்தரு சாப மல்லாற் றடுப்பருஞ் சாபம் வல்ல
வரந்தரு முனிவ னெய்த வருதலும் வெருவி மாயா
நிரந்தர முலகி னிற்கு நெடும்பழி பூண்டா ணின்றாள்
புரந்தர னடுங்கி யாங்கோர் பூசையாய்ப் போக லுற்றான்.

(இ - ள்.) சரம் தரு சாபம் அல்லால் - (தடுக்கக்கூடிய) பாணங்களைத் தொடுக்கின்ற வில்லின்தொழிலி லல்லாமல், தடுப்பு அரு சாபம் - (எவராலும்) தடுப்பதற்கு முடியாத சாபத்தைக் கொடுத்திடுவதிலே, வல்ல - திறமையையுடைய, வரம் தரு - (வேண்டுவார்வேண்டும்) வரங்களையெல்லாங் கொடுக்கவல்ல, முனிவன் - கௌதமன், எய்த வருதலும் - (ஆச்சிரமத்தைச்) சேர வந்தவளவில்,—நிரந்தரம் உலகில் மாயா நிற்கும் நெடு பழி பூண்டாள் - எக்காலத்திலும் உலகமுழுவதிலும் அழியாமல் நிலைத்திருக்கும்படியான பெரிய பழிச்செய்கையை மேற்கொண்டவளாகிய அகலியை, வெருவி நின்றாள் - பயந்துநின்றாள்; புரந்தரன் - இந்திரன், நடுங்கி - (செய்யத்தகாத தொழிலைச் செய்ததனாலுண்டான அச்சத்தால் மனமும் உடம்பும்) நடுங்குதலையடைந்து, ஓர் பூசை ஆய் - ஒரு பூனையின் வடிவங்கொண்டு, ஆங்கு - அவ்விடத்தினின்று, போகல் உற்றான்-செல்லத்தொடங்கினான்; (எ-று.)

"சாபமே சபித்தல்வில்லாம்" என்பது நிகண்டு. சரந்தரு, தடுப்பருஎன்னும் அடைமொழிகள்-சாபம் என்னுஞ்சொல்லின் பொருளை வெளிப்படையாக்கவந்தன; பிறதுறிப்பு. தடுக்கக்கூடிய வில்லம்பினுந் தடுக்கக்கூடாத சொல்லம்பு மிகக்கொடியதென்பார், 'சரந்தருசாபமல்லால் தடுப்பருஞ் சாபம்'என்றார். முனிவரது சாபத்தைக் கடவுளருங் கடக்குந் தன்மையரல்லர் என அறிக. வெகுண்டும் அருள்கொண்டுங் கூறுகின்ற சாபம் அநுக்கிரகம் என்னும் இரண்டுவகைப்பட்ட நிறைமொழிகளிலுஞ் சிறந்தவனென்பது தோன்ற, 'சாபம்வல்ல வரந்தரு முனிவன்' என்றார். "என்ஞான்றும் விளியாது நிற்கும் பழி''என்பவாதலால், 'மாயாநிரந்தர முலகி னிற்கு நெடும்பழி' என்றார். நிரந்தரம் - இடைவிடுதலில்லாமல். பிறரை வஞ்சிப்பதில் வல்லதாதலால், பூனையின் வடிவத்தை யெடுத்தான். (எஎ)

எஅ.—இந்திரனுக்குக் கௌதமன் சாபங்கொடுத்தல்.

தீவிழி சிந்த நோக்கிச் செய்ததை யுணர்ந்து [1]செய்ய
தூயவ னவனை நின்கைச் சுடுசர மனைய சொல்லா
லாயிர மாதர்க் குள்ள வறிகுறி யுனக்குண் டாகென்
றேயின னவையெ லாம்வந் தியைந்தன விமைப்பின் முன்னம்.

(இ - ள்.) (அப்பொழுது), செய்ய தூயவன் - நடுநிலைமையையுடைய பரிசுத்தனாகிய அக்கௌதமமுனிவன், விழி தீ சிந்த நோக்கி - கண்கள் நெருப்புப்பொறியைச் சொரியும்படி கோபித்துப்பார்த்து, செய்ததை உணர்ந்து - (அவ்விருவருஞ்) செய்த தீக்காரியத்தை யறிந்து, நின் கை சுடு சரம் அனைய சொல்லால் - நினது திருக்கையால் ஏவப்படுகிற வெவ்விய அம்பை யொத்த சொல்லினால், அவனை - அவ்விந்திரனை, ஆயிரம் மாதர்க்கு உள்ள அறிகுறி உனக்கு உண்டாக என்று - 'பெண்களுக்கு அடையாளமாகவுள்ள குறி ஆயிரம் உனக்கு (உடம்பு முழுவதிலும்) உண்டாகக்கடவன' என்று, ஏயினன் - (சாபம்) ஏவினான் [சபித்தான்]; அவை எலாம் இமைப்பின் முன்னம் வந்து இயைந்தன - (அவ்வாறே) அப்பெண்குறிகளாயிரமும் கண்ணை மூடித் திறக்குங்காலத்துக்குள்ளே வந்து (அவனுடம்பிற்) பொருந்தின.

செய்தது - இடக்கரடக்கல். யாதொரு சம்பந்தமுமில்லாத இந்திரனுக்குச் சாபங்கொடுத்ததோடு மிகுந்த சம்பந்தமுடைய தன்மனைவிக்குஞ் சிறிதும் பட்சபாதமின்றிச் சாபங்கொடுத்தவனாதலால் 'செய்ய தூயவன்' என்றார். இந்திரன் ஒரு பெண்ணின்குறியில் விழைவுகொண்டு தீச்செயல் புரிந்தமையால் அதனிடத்து வெறுப்புண்டாகும்பொருட்டு அக்குறிகள் ஆயிரந் தோன்றுமாறு சபித்தனன். இங்ஙனம் சபித்ததாகக் கூறியது, பிறநூல் மேற்கோள்கொண்டாகும். உபமான உபமேயங்களை மாற்றி, இங்கே 'நின் கைச்சுடுசர மனைய சொல்' என்றார். ராமபாணம்பகைவரைக் கொல்லுதலாகிய தன்பயனை விரைவிலே கொடுப்பதுபோல முனிவர்சொல் கொடியவரை அழித்தலாகியதன்பயனைத் தவறாமல் விரைவிலே தந்தேவிடுமென்க. ஏயினன் = ஏவினன். பி - ம்:—[1]வெய்ய. (எஅ)

எகூ.—அகலிகைக்குக் கௌதமன் சாபங் கொடுத்தல்.

எல்லையி னாண மெய்தி யாவர்க்கு நகைவந் தெய்தப்
புல்லிய பழியி னோடும் புரந்தரன் போய பின்றை
மெல்லிய லாளை நோக்கி விலைமக ளனைய நீயுங்
கல்லிய லாதி யென்றான் கருங்கலாய் மருங்கு வீழ்வாள்.

(இ - ள்.) புரந்தரன் - தேவேந்திரன், எல்லை இல் நாணம் எய்தி - (தனது உடம்பு முழுவதும் கெட்டுவிட்டதனால்) அளவில்லாத வெட்கத்தை அடைந்து, யாவர்க்கும் நகை வந்து எய்த - (தனது நிலைமையைக் கண்டவர்கள் கேட்டவர்கள்) எல்லோருக்கும் சிரிப்பு வந்து பொருந்தும்படி, புல்லிய பழியினோடும் - (தனக்கு) நேர்ந்த பழியுடனே, போய பின்றை - (தன் உலகத்துக்குப்) போனபின்பு,— (முனிவன்), மெல் இயலாளை நோக்கி - மென்

மையான தன்மையையுடைய (தன்) மனையாளைப் பார்த்து, விலைமகள் அனைய நீஉம் கல் இயல் ஆதி என்றான் - '(தீயொழுக்கத்தால்) வேசியை ஒத்த நீயுங் கல்வடிவமாவாய்' என்று சபித்தான்; கருங்கல் ஆய் மருங்கு வீழ்வாள் - (உடனே அவள்) கருங்கல்வடிவமாய் அவ்விடத்திலே விழுபவளானாள்; (எ-று.)

கருங்கல்லாகுமாறு சபித்ததாகப் பாத்மபுராணத்தி லுள்ளது. நகைப்பு- இகழ்ச்சிகாரணமாகப் பிறப்பது. புல்லிய பழி - இழிவான நிந்தை யென்றுமாம். விலைமகள் - எவரிடத்தும் விருப்பமில்லாமல் அவரவராற் கொடுக்கப் படும் விலைப்பொருளையேவிரும்பி அதற்குத் தனது இன்பத்தைவிற்கும்மகள்.

**அ௦.—அகலிகை வேண்ட, கௌதமமுனிவன் சாபவிமோசனவகை கூறுதல்.**

**✓ பிழைத்தது [1]பொறுத்த லென்றும் பெரியவர் கடனே [2]யென்ப**
**ரழற்[3]றருங் கடவு ளன்னாய் [4]முடிவிதற் கருளு கென்னத்**
**தழைத்துவண் டிமிருந் தண்டார்த் தசரத ராம னென்பான்**
**கழற்றுகள் கதுவ விந்தக் கல்லுருத் தவிர்தி யென்றான்.**

(இ - ள்.) (அங்ஙனம் விழுகிறவள் அம்முனிவனை நோக்கி), 'அழல் தரும் கடவுள் அன்னாய் - (தனது நெற்றிக்கண்ணினின்றும் புன்சிரிப்பி னின்றும்) நெருப்பைப் புறப்படவிடுகிற உருத்திரமூர்த்தியை யொத்த திற மையையுஞ் சினத்தையு முடைய முனிவனே! பிழைத்தது பொறுத்தல் என்றும் பெரியவர் கடன் ஏ என்பர் - (சிறியோர்) பிழைசெய்ததைப் பொறுப்பது எப்பொழுதும் பெரியோர்களுடைய கடமையேயா மென்று (நூலோர்) கூறுவர்; (ஆதலால்), இதற்கு முடிவு அருளுக என்ன - இச்சாபத்துக்கு ஒரு முடிவை அனுக்கிரகிப்பாயாக' என்று வேண்ட, (அவ்வேண்டு கோளுக்கு இரங்கி அக்கௌதமன்); 'தழைத்து வண்டு இமிரும் தண் தார் தசரதராமன் என்பான் கழல் துகள் கதுவ - செழிப்புள்ளதாய் வண்டுகள் ஒலித்தற்குஇடமான குளிர்ந்த பூமாலையையுடைய தசரதகுமாரனான ஸ்ரீராம னது திருவடித்தூளி (உன்மேற்) படியும்பொழுது, இந்த கல் உரு தவிர்தி - இந்தக் கருங்கல்வடிவத்தை நீங்குவாய்,' என்றான் - என்று சாபவிமோசனம் அருளினான்; (எ - று.)

"சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம், பெரியோராயிற் பொறுப்பது கடனே" என்றார் பிறரும். பொறுத்தல் - க்ஷமித்தல். என்றும் - அவர்கள் செய்தபிழை பெருந்தீங்கைப்பயந்தபொழுதும் என்றபடி. அழல்தருங் கட வுள்-அக்கினிபோன்ற செந்நிறத்தைப் பொருந்திய சிவன் என்றுமாம்; இனி, அக்கினிதேவனை யொத்த தூய்மையுடையா னென்றும் உரைக்கலாம். பி - ம்:—[1]பொறுக்கையென்ப பெரியவர் தகைமை. [2]என்பால். அன்பால். [3]பெருங்கடவுள். [4]முடிவதற்கு, முடிவெனக்கு. (அ௦)

**அக.—பிரமனை முன்னிட்டுத் தேவர்கள் வேண்ட, இந்திரன்சாபத்தை ஒருவாறு முனிவன் போக்குதல்.**

**✓ அந்தவிந் திரனைக் கண்ட வமரர்கள் பிரமன் முன்னா**
**வந்துகௌ தமனை வேண்ட மற்றவை தவிர்த்து மாறாக்**

**சிந்தையின் முனிவு தீர்ந்து சிறந்தவா யிரங்கண் ணுக்கத்**
**தந்தம துலகு புக்கார் தையலுங் கிடந்தாள் கல்லாய். †**

(இ - ள்.) (இது நிற்க), அந்த இந்திரனை கண்ட அமரர்கள் - அத்தே வேந்திரனைப்பார்த்த தேவர்கள், பிரமன் முன் ஆ வந்து-பிரமதேவனைமுன் னிட்டுக்கொண்டு வந்து, கோதமனை வேண்ட - (இந்திரனது சாபத்துக்கு நிவிருத்தியருளும்படி) அக்கௌதமமுனிவனைப் பிரார்த்திக்க, (அம்முனி வன்), மாறு சிந்தையில் முனிவு தீர்ந்து - (என்றும்) மாறுபடாத தனது திரு வுள்ளத்திலே கோபந்தணிந்து, அவை தவிர்த்து - (அவனுடம்பில் உண் டான) அந்த ஆயிரம் குறிகளை ஒழித்து, சிறந்த ஆயிரம் கண் ஆக்க - மேன்மையான ஆயிரங்கண்க ளாகும்படி அநுக்கிரகிக்க (பின்பு தேவர்கள்), தம் தமது உலகு புக்கார் - தங்கள் தங்களது லோகத்துக்குப் போய்ச்சேர்ந் தார்கள்; தையல்உம் கல் ஆய் கிடந்தாள் - அழகிய அகலிகையும் சிலாரூப மாய் விழுந்து கிடந்தாள்; (எ - று.)

பிரமனை முன்னிட்டுச் சாபவிமோசனம் பெற்றுத் தேவர்கள் செல்ல, இவள் இங்ஙனங் கல்லாய்க்கிடக்கலாயின ளென்று விசுவாமித்திரன்கூறின னென்க. "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணம்" என்பது தோன்ற, 'மாறுசிந்தையின் முனிவுதீர்ந்து' என்றார். 'சிறந்த ஆயிரங்கண்' என்றது - உறுப்புக்களனைத்தினுங் கண் சிறப்புறுதலாலும், ஆயிரங் கண்கள் கடவுளையொழியப் பிறருக்கு இல்லாமையாலு மென்க. 'கௌத மன் இந்திரனை ஆண்குறி யிழக்கும்படியும் அகலிகையை அரூபியாகி உணவில்லாமற் பலநாள் சாம்பலிலே கிடக்கும்படியுஞ் சபித்திட்டனன்' என்று முதனூலாகிய வால்மீகிராமாயணத்திற் கூறியிருப்பினும், நல்லிசைப் புலவராகிய கம்பர் வழி நூலிலக்கண விதிப்படி இங்கே வரலாற்றைச்சிறிது வேறுபடுத்திக் கூறினா ரென்க. (அக)

அஉ.—விசுவாமித்திரன் இராமனைப் புகழ்தல்.

**இவ்வண்ண நிகழ்ந்த வண்ண மினியிந்த வுலகுக் கெல்லா**
**முய்வண்ண மன்றி மற்றோர் துயர்வண்ண முறுவ துண்டோ**
**மைவண்ணத் தரக்கி போரின் மழைவண்ணத் தண்ண லேயுன்**
**கைவண்ண மங்குக் கண்டேன் கால்வண்ண மிங்குக் கண்டேன்.**

---

† இந்தப் பாடலிற்குப் பிரதியாகச் சில ஏடுகளில் "வண்ணவார் குழலி னாட்கும் வானவர் தமக்குமாகெ, னெண்ணிநான் செய்த குற்ற முனிவ நீ பொறுத்தியென்னப், பண்ணிய வுறுப்பிற்கோடல் பத்துநூ றவையும்போக, வண்ணிய விண்ணில்வாழிம் தாயிரநயனமென்றான்"என்று ஒருபாடல்காண ப்படுகின்றது. இந்திரன் அகலிகையைத் தான் சேரவேண்டிப் பெருவிருப் பங்கொண்டிருந்தானாயினும், கௌதமமுனிவன் கடுந்தவம் புரிந்தானாக அந் தக் கடுந்தவத்தினால் தேவர்கட்கு உண்டான தாபந்தீர்தற்பொருட்டே தீத்தொழில் புரிந்தா னென்பது முதலடியிற் கருதத்தக்கது. கோடல் - கோணுதல். பத்துநூறு - ஆயிரம்.

(இ - ள்.) இ வண்ணம் - இந்தவிதம், நிகழ்ந்த வண்ணம் - (முற்காலத்தில்) நடந்த முறையாம்; இனி - இனிமேல் [நீ திருவவதரித்த பின்பு என்றபடி], இந்த உலகுக்கு எல்லாம் உய் வண்ணம் அன்றி - இவ்வுலகத்திலுள்ள எல்லாப்பிராணிவர்க்கத்திற்கும் (துன்பம் நீங்கி) உஜ்ஜீவிக்குந் தன்மையேயல்லாமல், மற்று ஓர் துயர் வண்ணம் உறுவது உண்டோ - அதற்கு வேறுபட்டதொரு துன்பத்தின் வகையை அடைவது உளதாகுமோ? [ஆகாதென்றபடி]; மழை வண்ணத்து அண்ணலே - மேகம்போன்ற திருமேனிநிறத்தையுடைய ஸ்ரீராமனே! அங்கு - அவ்விடத்தில் [வருகிற வழியிலென்றபடி], மை வண்ணத்து அரக்கி போரில் - அஞ்சனம்போன்ற கருநிறத்தையுடைய (தாடகையென்னும்)இராட்சசியோடு செய்தயுத்தத்தில், உன் கை வண்ணம் கண்டேன் - உனது கையின்திறத்தைப் பார்த்தேன்; இங்கு - இவ்விடத்தில், கால் வண்ணம் கண்டேன் - (உனது) திருவடியினது திறத்தைப் பார்த்தேன், (என்று விசுவாமித்திரன் இராமனைத்தோத்திரித்து அகலிகையின் வரலாற்றைக் கூறிமுடித்தான்); (எ - று.)

அசேதனமான கல்வடிவம் இராகவபிரானது திருவடித்துகள் பட்டமாத்திரத்தில் நல்வடிவம்பெற்றதனால் அம்மூர்த்தியினது திருவடியை யடைந்த சேதநர்கள் இக்கருமசரீரமொழிந்து திவ்வியசரீரம் பெறுவ ரென்பது கூறாமலே பெறப்படுதலால், 'இனி யிந்த வுலகுக்கெல்லா, முய்வண்ண மன்றி மற்றோர் துயர்வண்ண முறுவ துண்டோ' என்றார். 'மழைவண்ணத் தண்ணல்' என்றது - கைம்மாறுகருதாது கருணைமழைபொழிவதில் மேகம் போன்ற குணத்தையுடையவன் இராமன் என்னும்பொருளையுங்கொண்டது. 'கைவண்ண மங்குக் கண்டேன் கால்வண்ண மிங்குக் கண்டேன்' என்றதனால், துஷ்டநிக்கிரகசக்தியையும் சிஷ்டபரிபாலநசக்தியையும் கூறினார். ()

அ௬.—இராமன் அகலிகையை வணங்கிச் செல்லுதல்.

தீதிலா வுதவி செய்த சேவடிக் கரிய செம்மல்
கோதிலாக் குணத்தான் சொன்ன பொருளெலா [1]மனத்திற் கொண்டு
மாதவ னருளுண் டாக [3]வழிபடு படரு ழுதே
போதுநீ [4]யன்னை யென்று பொன்னடி வணங்கிப் போனான்.

(இ - ள்.) தீது இலா - குற்றமில்லாத, உதவி - உபகாரத்தை, செய்த - (அகலிகைக்குச்) செய்தருளின, சே அடி - சிவந்த திருவடிகளையுடைய, கரிய செம்மல் - கருநிறமுடைய ஸ்ரீராமன், கோது இலா குணத்தான் சொன்ன பொருள் எலாம் மனத்தில் கொண்டு - குற்றமில்லாத நற்குணங்களையுடைய கௌசிகமுனிவன் சொன்ன செய்திமுழுவதையுந் திருவுள்ளத்திலே கொண்டு, (அகலிகையைநோக்கி), 'அன்னை - தாய்போன்றவளே! மா தவன் அருள் உண்டாக - மிகுந்த தவத்தையுடைய கௌதமனது கருணை (உன்பக்கல்) உண்டாகும்படி, நீ—, வழி படு - (அம்முனிவனுக்குப்) பணிவிடை செய்வாய்; படர் உழுதே - (இடையிலே நேர்ந்த) துன்பத்தை

நினைத்து வருந்தாதே: போது - செல்க', என்று - என்றுசொல்லி, பொன் அடி வணங்கி - (அவளுடைய) அழகியபாதங்களை நமஸ்கரித்து, போனன்- (அப்பாற்) செல்லலானன்; (எ - று.)

முனிபத்தினியாதலால், அகலிகையைத் தாசரதி வணங்கினன். 'தீதிலா வுதவி' என்றது - பிறருக்குத் தீமை பயவாததும், கைம்மாறு கருதாததும், முன்செய்தவுதவியை நோக்காதது மான உபகாரம் என்றபடி. சேவடிக் கிரிய செம்மல் - மூன்றாவதோடை. செம்மல் - பெருமையிற் சிறந்தவன்; ஆண்பாற்சிறப்புப்பெயர். பொன்னடி - பொன்னணியணிந்த பாத மென்றுமாம்; பொன் - கருவியாகுபெயர். பி - ம்:—[1] மனத்திற்கொண்டான். [2] உண்டாகில். [3] வழிபடர்படருறூதே, வழிபடுபெழியுறூதே. [4] என்று போற்றிப் புகழ்ந்துடன் கொண்டுபோனர், அன்னையென்னப் பொன்னடி வணங்கப் போனள். (அ௩)

அ௪, அ௫.—இதுவும் அடுத்த கவியும் குளகம்: கௌதமமுனிவனாச்சிரமத்தை விசுவாமித்திரன்முதலியோர் அடைந்து அவனா லுபசாரம் பெற்றபின் விசுவாமித்திரன் அகலிகையை யங்கீகரிக்குமாறு சொல்லுதல்.

அ௪. அருந்தவ னுறையு டன்னை [1] யனையவ ரணுக லோடும்
விருந்தினர் தம்மைக் காணு [2] மெய்ம்முனி வியந்த நெஞ்சன்
பரிந்தெதிர் கொண்டு புக்குக் கடன்முறை [3] பழுதுறாமற்
புரிந்தபின் காதி செம்மல் புனிதமா தவனை நோக்கி.

அ௫. அஞ்சன வண்ணத் தான்ற னடித்துகள் கதுவா முன்னம்
வஞ்சிபோ லிடையாண் [1] முன்னை வண்ணத்த ளாகி நின்று
ணெஞ்சினாற் [2] பிழைப்பி லாளை நீ[3] யழைத் திடுக வென்னக்
கஞ்சமா [4] முனிவ னன்ன முனிவனுங் கருத்துட் கொண்டான்.

(இ-ள்.) (அ௪) அரு தவன் உறையுள் தன்னை-(பிறருக்கு) அருமையான தவத்தைச்செய்துள்ள கௌதமமுனிவனது ஆச்சிரமத்தை, அனையவர்-அவர்கள் [விசுவாமித்திரனும் இராமலட்சுமணரும்], அணுகலோடும் - போய்ச் சேர்ந்தவளவில், மெய் முனி - தத்துவஞானத்தையுடைய கௌதமமுனிவன், விருந்தினர் தம்மை காணு-விருந்தாளிகளாகிய அவர்களை நோக்கி, வியந்த நெஞ்சன்-அதிசயமுற்ற மனத்தையுடையவனாய்,பரிந்து-அன்புகொண்டு, எதிர்கொண்டு புக்கு - எதிரேபோய் அழைத்துவந்து, கடன் முறை பழுது உறாமல் - (அதிதிகளுக்குச் செய்யவேண்டு) கடமையாகிய உபசார முறைமை குறைவுபடாமல், புரிந்தபின் - செய்தபின்பு, காதி செம்மல்-காதியென்னும் இராசரிஷியினது குமாரனாகிய விசுவாமித்திரன், புனிதன் மாதவனை நோக்கி - பரிசுத்தனான அம்முனிவனைப் பார்த்து;—(அ௫) அஞ்சனம் வண்ணத்தான் தன் - மைபோற் கரிய திருநிறத்தையுடைய ஸ்ரீராமபிரானது, அடி துகள் - திருவடிப்பொடி, கதுவா முன்னம் - (தன்)மேற்படுதற்கு முன்பே [பட்டவுடனேயென்றபடி], வஞ்சிபோல் இடையாள் - வஞ்சிக்

கொடிபோல் மெல்லிய இடையினையுடைய அகலியை, முன்னை வண்ணத்தள் ஆகி நின்றாள் - பழையவடிவத்தையுடையவளாய் எழுந்துநின்றாள்; நெஞ்சினால் பிழைப்பு இலாளை - மனத்தோடுபொருந்திய குற்றம் இல்லாத இவளை, நீ அழைத்திடுக - நீ அழைத்துச் சேர்த்துக்கொள்வாயாக, என்ன - என்று (கௌசிகன்) கூற,—கஞ்சம் மா முனிவன் அன்ன முனிவனும் - தாமரைமலரிலே வாழ்கின்ற சிறந்த பிரமதேவனையொத்த சிறப்பையுடைய கௌதம முனிவனும், கருத்துள் கொண்டான் -(அவ்வார்த்தைகளை) மனத்திலே ஏற்றுக்கொண்டான்; (எ - று.)

அ௪:—உறைஉள்-தங்கும் இடம். மனைவி இந்திரன் என்ற இருவர்களைச் சபித்தபின்பு அச்சாபத்தினால் நேர்ந்த பாவத்தைப் போக்கிக்கொள்ளுமாறு இமயமலைச்சாரலிற் றவஞ்செய்யச்சென்ற கௌதமன் தனது ஞானக்கண்ணினால் மனைவியின் சாபவிமோசனத்தை யுணர்ந்து அங்குவந்து விருந்தினரை உபசரித்தன னென்று முதனூல் கூறும். விருந்தினருடைய வருகைக்கு மனமுவப்பது நன்மக்கள் இயல்பாதலால், 'விருந்தினர் தம்மைக்காணு மெய்ம்முனி வியந்த நெஞ்சன் உரிந்து' என்றார். வியந்தநெஞ்சன் - இத்தகையசிறந்த விருந்தினர் தன்னிடம்வருகைக்குக் காரணமாய்த் தான் முன் செய்துள்ள பெருந்தவம் யாதோவென்றுஆச்சரியமுற்ற மனத்தவனானான் என்றபடி. இனி, உடனிருந்து விருந்தினரை உபசரித்தற்கு உதவியாகிய தனதுவாழ்க்கைத்துணையைப் பிரிந்த நாள் முதல் யாதொரு விருந்தினரையும் தன்பக்கல் வரக்காணாத அம்முனிவன் இப்பொழுது அவ்வில்வாழ்க்கைத்துணைவியுடனே விருந்தினரும் வருதலைக் கண்ணுற்று வியந்தவனானா னென்றுமாம். பி-ம்:—[1] அணுகினன். [2] விம்மலால். [3] யாவும்பண்ணி.

அ௫:—பின்பு உணர்ந்தனளாயினும், குற்றம்நேர்தற்குமுன் மனப்பூர்வமாகக் குற்றஞ்செய்யத்தொடங்காத இவளை அங்கீகரிக்கவேணுமென்று விசுவாமித்திரன் சொல்ல, கௌதமன் அந்த விசுவாமித்திரனது கொள்கைக்கு உடன்பட்டு அகலிகையை அங்கீகரிப்பவனானா னென்பதாம். இராமனது பாததூளி படுதற்குமுன்னமே அகலியை பழையவடிவங்கொண்டா ளெனக் காரணத்திற்கு முன்னமே காரியம் உண்டானதாகச் சொன்னது, மிகையுயர்வு நவிற்சியணி: நெஞ்சினாற் பிழைப்பிலாள்-மனப்பூர்வமாகக் குற்றத்தைத் தொடங்கிச் செய்யாதவள். முனிவன் - மௌநசீலன்; கடவுளை எப்பொழுதும் இடைவிடாது தியானஞ் செய்பவன். பி - ம்:—[1] பண்டை. [2] பிழையிலாளை. [3] அளித்திடுதி. [4] மலரோன். (அ௪, அ௫.)

அ௬.—அகலிகையைக் கௌதமனிடஞ் சேர்ப்பித்தபின்பு விசுவாமித்திரன் முதலிய மூவரும் மிதிலாநகரின் மதிலைப் பார்த்தல்.

குணங்களா [1] லுயர்ந்த வள்ளல் கோதமன் கமலத் [2] தாள்கள்
வணங்கினன் வலங்கொண் டேத்தி மாசறு கற்பின் மிக்க
வணங்கினை யவன்கை யீந்தாண் டருந்தவ னேடும் வாச
மணங்கிளர் சோலை நீங்கி [3] மணிமதிற் கிடக்கை கண்டார்.

(இ - ள்.) குணங்களால் உயர்ந்த வள்ளல் - எல்லா நற்குணங்களினாலுஞ் சிறப்புற்ற வரையாது கொடுக்குந்தன்மையையுடைய ஸ்ரீராமன், கோதமன் கமலம் தாள்கள் வணங்கினன் - கௌதமனது தாமரைமலர்போன்ற திருவடிகளை நமஸ்கரித்து, வலம்கொண்டு - பிரதக்ஷிணஞ்செய்து, ஏத்தி - துதித்து, மாசு அறு கற்பின் மிக்க அணங்கினை அவன் கை ஈந்து - குற்றமற்ற பதிவிரதாதருமத்தையுடைய அந்தத்தெய்வப்பெண்ணை [அகலிகையை] அம்முனிவனது வசத்திலே கொடுத்து, ஆண்டு - அப்பொழுது, அரு தவனோடும் - அரியதவத்தையுடைய விசுவாமித்திரமுனிவனுடனே, வாசம் மணம் கிளர் சோலை நீங்கி - மிகுந்த வாசனை வீசுகின்ற அந்தச் சோலையினின்றும் புறப்பட்டு, மணி மதில் கிடக்கை கண்டார் - நவரத்தினங்களும் இழைத்துள்ள (மிதிலாநகரத்தினது) மதில்களின் நிலைமையை (மூவரும்) பார்த்தார்கள்; (எ - று.)

வாசம் என்பதைச் சோலையென்பதனோடு இயைத்து, கௌதமமுனிவனது வாசஸ்தான [இருப்பிட]மான ஆச்சிரமமென்றும் உரைக்கலாம். மணி - அழகும், உறுதியுமாம். பி - ம்:—[1] அண்ணல். [2] பாதம். [3] மணிமதின் மிதிலை, மணிமதிற் கிடங்கை.  (௮௬)

அகலிகைப்படலம் முற்றிற்று.

---

## ௧०-ஆவது மிதிலைக்காட்சிப் படலம்.

சனகமகாராசாவினது தேசமாகிய விதேகநாட்டினது இராசதானியான மிதிலாநகரத்தினது தோற்றத்தைச் சக்கரவர்த்திதிருமகனும் இளையபெருமாளும் கௌசிகமாமுனிவனும் கண்ட வரலாற்றை முக்கியமாகக் கூறுவதொரு நூற்கூறுபாடென்பது இதற்குப் பொருள். மிதிலையென்னும் நகர்ப்பெயர்க்குக் காரணம், கீழ் வேள்விப்படலத்தின் இறுதிச் செய்யுளினுரையிற் கூறப்பட்டது. காட்சி - தோற்றம்; அல்லது, காணுதல். இந்தப்படலத்திற் காணப்படுகின்ற செய்யுள்கள்—௧௫௭-இல் முதல் முப்பத்தொன்பதுசெய்யுள்கள் மிதிலைகாண்படலமென்றும், அதன்பின் நாற்பத்துமூன்றுசெய்யுள்கள் கைக்கிளைப்படலமென்றும், அதன்பின் எழுபத்துமூன்று செய்யுள்கள் விசுவாமித்திரப்படலமென்றும், அதன்பின்னுள்ள இரண்டுபாடல்கள் அதன்மேற் படல மாகிய வரலாற்றுப்படலத்தைச் சேர்ந்தனவாகவும் சில ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகின்றன.

க.—இதுமுதல் இருபத்தொரு பாடல்களால் மிதிலாநகரத்தின் வருணனை கூறப்படுகின்றது.

**கொடிகளின் காட்சி.**

**மையறு மலரி னீங்கி யான் செய்மா தவத்தின் வந்து**
**செய்யவ ளிருந்தா ளென்று செழுமணிக் கொடிக ளென்னுங்**
**கைகளை நீட்டி யந்தக் கடிநகர் கமலச் செங்க**
**ணையனை யொல்லை வாவென் றழைப்பது போன்ற தம்மா.**

(இ - ள்.) அந்த கடி நகர் - காவலையுடைய அம்மிதிலாநகரமானது, 'செய்யவள் - செந்நிறமுடையதிருமகள், மை அறு மலரின் நீங்கி - குற்றமில்லாத தாமரைமலரை விட்டுநீங்கி, யான் செய் மா தவத்தின் - நான் செய்த பெரிய தவப்பேற்றினால், வந்து இருந்தாள் - (என்னிடத்தில்) வந்து அவதரித்திருக்கிறாள்,' என்று - என்று சொல்லி, செழு மணி கொடிகள் என்னும் கைகளை நீட்டி-பெரிய அழகிய துவசங்களென்கிற (தன்)கைகளை உயரஎடுத்து,(அவற்றால்), கமலம் செம் கண் ஐயனை - தாமரைமலர்போன்ற சிவந்த திருக்கண்களையுடைய ஸ்ரீராமபிரானை, ஒல்லை வா என்று - விரைவில் வருவாயாகவென்று, அழைப்பது-அழைப்பதை, போன்றது-ஒத்தது.

இராமபிரான் அந்நகரத்தினருகிற் செல்லும்போது அந்நகரத்துமதில்களின்மேலுள்ள கொடிகள் அசைவது, ஸ்ரீமகாலக்ஷ்மி தன்பக்கல் சீதாபிராட்டியாராகத்திருவவதரித்து வளர்ந்துவருவதைக் குறிப்பாகச்சொல்லி அந்நகரம், அவளுக்குக் கொழுநனாதற்குஏற்ற ஸ்ரீமகாவிஷ்ணுவின் திருவவதாரமான ஸ்ரீராமனை விரைவில்வந்து அவளைமணம்புணருமாறுகைகாட்டியழைப்பதை யொத்திருந்த தென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. இது, 'கொடிகளென்னுங் கைகள்' என்கிற உருவகத்தை அங்கமாகக்கொண்டு வந்தது. தாமரைமலருக்குக் குற்றம் - மலர்ந்து பின் குவிதலும், வாட்டமடைதலும். 'மலரினீங்கிவந்து செய்யவ ளிருந்தாள்' என்றதனால், திருமகளாருக்குச் செந்தாமரைமலரினுஞ் சிறந்த இனிய வாசஸ்தானமாகி அம்மிதிலாநகரம் திருவுள்ளத்துக்கு மிகப்பாங்காகவிருக்கு மென்பதை யுணர்த்தினார். திருமகள் தனது இயற்கையான இடத்தைவிட்டுத் தன்னிடம் விரும்பி வந்து வீற்றிருத்தற்கு ஏற்ற தகுதி நல்வினையினாலன்றிக் கூடாதாதலின், 'யான்செய்மாதவத்தின்வந்து' எனப்பட்டது. மணிக்கொடிகள் - இரத்தினங்களிழைத்துச் செய்யப்பட்ட தண்டத்தோடு கூடிய துவசங்களென்றுமாம்; இப்பொருளில், மணி - கருவியாகுபெயர். (௯)

௨.—இதுவும் அது.

நிரம்பிய மாடத் தும்பர் நிரைமணிக் கொடிக ளெல்லாந்
தரம்[1]பிற ரின்மை யுன்னித் தருமமே தூது [2]செல்ல
வரம்பில்பே ரழகி னாளை மணஞ்செய்வான் வருகின் றானென்
றரம்பையர் விசும்பி னாடு மாடலி[3]னாடக் கண்டார்.

(இ - ள்.) 'பிறர் தரம் இன்மை உன்னி - (சீதாபிராட்டியைத் திருக்கலியாணஞ்செய்து கொள்ளுதற்கு ஸ்ரீராமபிரானைத்தவிர) வேறொருவரும் தகுதியுடையவ ரில்லாமையை நினைத்து, தருமம் ஏ தூது செல்ல - தருமதேவதைதானே தூதுபோய் மணம்புணர்விக்க, (அவ்விராமமூர்த்தி), வரம்பு இல் பேர் அழகினாளை மணஞ்செய்வான் வருகின்றான் - எல்லையில்லாத சிறந்த அழகினையுடைய ஜானகியைத் திருக்கலியாணஞ்செய்யும் பொருட்டு வருகின்றான்,' என்று - என்று (மகிழ்ந்து), அரம்பையர் விசும்பின் ஆடும் ஆடலின் - தேவமகளிர் ஆகாசத்தில் (ஆனந்தத்தால்) ஆடுகின்ற ஆட்டம் போல, நிரம்பிய மாடத்து உம்பர் நிரை மணி கொடிகள் எல்லாம் ஆட -

(அந்நகரத்தில்) நிறைந்துள்ள உபரிகைவீடுகளின்மேலே வரிசையாகவுள்ள அழகிய துவசங்கள் யாவும் (காற்றில்) ஆட, கண்டார் - (அதனை மூவரும்) பார்த்தார்கள்; (எ - று.)

இக்கவியிற் கூறியது, மாடமாளிகைகளின்மீதுள்ள துவசங்களின் காட்சி; கீழ்க்கவியிற் கூறியது, மதில்களின்மீதுள்ள கொடிகளின் தோற்றம் என வேறுபாடு காண்க. கொடிகளசைதலை, தருமதேவதை தூண்ட இராமபிரான் சீதாபிராட்டியை மணஞ்செய்ய வருதற்காகத் தேவமாதர்களாடுதலாகக் குறித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. "வெங்கதிர் நெற்றி தோய்ந்து விளங்குபொற் கொடியி னீட்டம், மங்குல்வா னிழியும் வானமடந்தையர் வடிவு காட்ட" என்றது ஒப்புநோக்கத்தக்கது. உருவத்திலும் குலத்திலும் குணத்திலும் ஒத்த சிறப்புடைய ஆண்பெண்கள் ஒருவரையொருவர் மணம்புணர்தல் தருமத்தின்பயனாதலால், 'தரம்பிறரின்மையுன்னித் தருமமே தூதுசெல்ல' என்றார். தருமமே, ஏ - பிரிநிலை. இரண்டாமடிக்கு - இந்நன்மணத்தைக் கூட்டிமுடிப்பதற்குத் தூதுசெல்ல வல்லவர் பிறரில்லாமையைக் கருதி அறக்கடவுள்தானே தூதுபோயழைக்க என்றும் உரைக்கலாம். நிரம்பிய மாடம் - (தொழில்) முற்றின மாளிகைகள் என்றுமாம். பி - ம்:—[1] பிறிதின்மை. [2] செப்ப. [3] ஆடல்கண்டார். (௨)

.௩—யானைகள் போர்புரியுங் காட்சி.

*தயிருறு மத்திற் காம சரம்படத் தலைப்பட் [1]டூடு
முயிருறு காத லாரி னொன்றையொன் றொருவ கில்லா
செயிருறு மனத்த வாகித் தீத்திரள் செங்கண் சிந்த
வயிரவான் [2]மருப்பி யானை மலையென [3]மலைவ கண்டார்.

(இ - ள்.) தயிர் உறு மத்தின் - தயிரைக்கடைதற்குப் பொருந்தும் மத்துப்போல, காமன் சரம் பட - மன்மதனது பாணம் வந்து உறுத்துதலால், தலைப்பட்டு - (ஒருவரோடொருவர் புணரத்) தொடங்கி, ஊடும் - (அக்கூடுதலின்பஞ் சிறக்கும்பொருட்டு விளையாட்டாக ஒருவரோடொருவர்) மனஸ்தாபப்படுகிற, உயிர் உறு காதலாரின் - (ஒருவர்க்கொருவர்) உயிரையொத்தஅன்பையுடைய ஸ்திரீபுருஷர்போல,—வயிரம் வால் மருப்பு யானை - வயிரம்போலுறுதியான வெண்ணிறமானதந்தங்களையுடைய யானைகள் இவ்விரண்டு, செயிர் உறு மனத்த ஆகி - கோபம்மிகுந்த மனத்தினையுடையவையாய், செம் கண் தீ திரள் சிந்த - (தத்தமது கோபத்தாற்) சிவந்த கண்கள் நெருப்புத்திரளை உமிழும்படி, ஒன்றை ஒன்று ஒருவகில்லா - ஒன்றையொன்று விட்டுநீங்காதவையாய், மலை என - இரண்டுமலைகள் (ஒன்றோடொன்றுபோர்செய்வன)போல, மலைவ-போர்செய்வனவற்றை, கண்டார்-.

இவ்வியானைகள் அந்நகரத்துள்ள மைந்தர்களால் விநோதார்த்தமாக ஒன்றோடொன்று சண்டைக்கு விடப்பட்டன வென அறிக; இங்ஙனம் விடுதலை "கரியொடு கரியெதிர் பொருத்தி...பொழுதுபோஞ் சிலர்க்கச் சேணகர்" எனக் கூறியதனாலும் அறிக. ஆண்பெண்கள் மனத்திலே பகைமை

யில்லாதிருக்கவும் புணர்ச்சிக்காலத்து லீலையாக ஒருவரோடொருவர் கலக்கப் படுவதுபோல யானைகள் மனத்திற் பகைமையில்லாதிருக்கவும் வெளிக்குத் தற்காலத்தில் விரோதத்தை விளைத்துக்கொண்டு போர்செய்தன வென்க: உவமையணி. மத்துத் தயிரைக்கலக்குவதுபோல மன்மதபாணம், மனத்தைக் கலக்குதலால், உவமை கூறினர். வயிரம் - கருவியாகுபெயரெனக்கொண்டு, வச்சிரரத்தினங்களழுத்திய பூண்களையுடைய, மருப்புஎன்றும், உயிருறு - வளர்கின்ற என்றும், வான் மருப்பு எனப் பிரித்து, சிறந்த தந்த மென்றும் உரைக்கவும் அமையும். பருமையும் வலிமையும் கம்பீரமான தோற்றமும் மதமழைபொழிதலும் பற்றி, யானைக்கு மலை உவமை. பி-ம்:— [1] ஓடும். [2] கணையத்தியானை. [3] மலையக். (௩)

௪.—வெண்ணிறக்கொடிச்சீலைகளின் காட்சி.

பகற்கதிர் மறைய வானம் பாற்கடல் கடுப்ப நீண்ட
துகிற்கொடி மிதிலை மாடத் தும்பரிற் றுவன்றி [1]நின்ற
முகிற்குலந் தடவுந் தோறு நனைவன முகிலிற் சூழ்ந்த
வகிற்புகை கதுவுந் தோறும் [2]புலர்வன வாடக் கண்டார்.

(இ - ள்.) பகல் கதிர் மறைய - பகற்பொழுதிற்குக் காரணமான சூரியனது கிரணங்கள் மறையவும், வானம் பால் கடல் கடுப்ப - ஆகாசம் திருப்பாற்கடலையொத்துத் தோன்றவும், மிதிலை மாடத்து உம்பரில் துவன்றி நின்ற - மிதிலா பட்டணத்தின் உபரிகைவீடுகளின்மேல் நெருங்கிநின்றனவாகிய, நீண்ட துகில் கொடி - உயர்ந்த வெள்ளைக் கொடிச்சீலைகள், முகில் குலம் தடவும் தோறும் நனைவன - மேகக்கூட்டம் (தம்மைவந்து) வருடும் பொழுதெல்லாம் (அதன்நீரால்) நனைவனவும், முகிலின் சூழ்ந்த அகில் புகை கதுவும் தோறும் புலர்வன - மேகம்போலச் சூழ்ந்துகொண்ட அகிற்கட்டையின் புகை (தம்மேல் வந்து) பொருந்தும்பொழுதெல்லாம் உலர்வனவுமாய், ஆட - அசைய, கண்டார்—; (எ - று.)

இதனால், கொடிகளின் அடர்த்தியும், மிகுதியும், மேகமண்டலத்தையளாவும் உயர்ச்சியும், அகிற்புகையின்மிகுதிப்பாடும்உணர்த்தப்பட்டன. துகிற்கொடி நனைவதும் அகிற்புகையால் உலர்ந்து முன்னையநிலையை யடைவதும் கூறியது-தோல்லுருப்பெறலணியின்பாற்படும்; வடமொழியிற் பூர்வரூபம் என்பர். 'முகிற்குலந் தடவுந்தோறும் நனைவன' என்றதில் மேகத்துக்குங் கொடிக்குஞ் சம்பந்தத்தைக் கற்பித்துக் கூறினது, தொடர்புயர்வு நவிற்சியணி. 'முகிலிற்சூழ்ந்த அகிற்புகை கதுவுந்தோறும் புலர்வன' என்றதனால், அகிற்புகைமிகுதிக்குக் காரணமான செல்வச் சிறப்புக் குறிப்பிக்கப்பட்டது. அகிற்புகை - அந்நாட்டுமகளிராற் கூந்தலுக்கும் ஆடைக்கும் நன்மணமூட்டுதற்பொருட்டு மூட்டப்பட்டது. 'பாற்கடல் கடுப்ப' என்ற உபமானத்தால், துகிற்கொடி - வெண்ணிறமுடையதெனப்பட்டது. இச்செய்யுள்''நிரம்பிய''என்னும்இரண்டாஞ்செய்யுளின்பின் இருத்தல் நேர். பி-ம்:— [1] நின்று. [2] புலர்வனவாக. (௪)

**௫.—அம்மூவரும் மிதிலாநகரத்தினுட் செல்லுதல்.**

**ஆதரித் [1]தமுதிற் கோறோய்த் தவயவ மமைக்குந் தன்மை**
**யாதெனத் திகைக்கு மல்லான் மதனற்கு [2]மெழுதவொண்ணாச்**
**சீதையைத் தருத லாலே திருமக ளிருந்த செய்ய**
**போதெனப் பொலிந்து தோன்றும் பொன்மதின் மிதிலை புக்கார்.**

(இ - ள்.) ஆதரித்து - (பிராட்டியின் திருமேனியையொத்ததொரு சித்திரவுருவத்தை எழுத) விரும்பி, அமுதில் கோல் தோய்த்து - அமிர்தத்திலே எழுதுகோலைத் தோய்த்துக்கொண்டு, அவயவம் அமைக்கும் தன்மை யாது என திகைக்கும் அல்லால்-வடிவத்துறுப்புக்களைச் சித்திரிக்கும்விதம் (அறியாமையால் அவ்வகை) யாதோ என்று திகைத்துநிற்பனேயல்லாமல், மதனற்குஉம் எழுத ஒண்ணா - (சிறந்த கட்டழகையுடைய) மன்மதனுக்கும் எழுதமுடியாத (பேரழகையுடைய), சீதையை - ஜானகியை, தருதலால் - பெற்றதனாலே, திருமகள் இருந்த செய்ய போது என பொலிந்து தோன்றும் - இலக்குமி வீற்றிருக்கின்ற செந்தாமரைமலர்போல விளங்கிக்காணப்படுகிற, பொன் மதில் மிதிலை-பொன்னினாலாகிய மதில்களையுடைய மிதிலா பட்டணத்தில், புக்கார் - (மூவரும்) பிரவேசித்தார்கள்; (எ - று.)

உலகத்தார் யாவரது அழகையும் வரையறுத்துணர்ந்த மன்மதன் தானே சீதையின் வடிவத்தைச் சித்திரத்தி லமைக்க விரும்பி அமிருதத்திலெழுதுகோலைத் தோய்த்தெடுத்துக்கொண்டு எழுதத்தொடங்கினாலும் அவளது அவயவங்களுளொன்றைக்கூடச் சரிவரஎழுதமுடியாதென அவளது கட்டழகை வருணித்தார். ஜனகமகாராஜன் வேள்விச்சாலையமைப்பதற்காகப் பூமியை யுழுதபொழுது கலப்பையுழுபடைச்சாலில் அகப்பட்டவளாதலால், சீதையென்று திருநாமம்; ஸீதா - உழுபடைச்சால்: இது, இங்கே இடவாகுபெயர். இதனால், அயோநிஜத்துவம் உணர்த்தப்படுகிறது. மதனற்கும், உம்மை-உயர்வு சிறப்பு. மிதிலைக்கு மற்றை நகரங்களெல்லாவற்றினுஞ் சிறப்பு, சீதையைத்தருதலாகுமென்க. பி - ம்:-[1] அமுது. [2] எழுதலாகா. (௫)

**௬.—அவர்கள் அந்நகரத்துவீதியிற் சென்றமை; மூன்றுகவிகளாற் கூறப்படுகின்றது.**

**சொற்கலை முனிவ னுண்ட சுடர்மணிக் கடலுந் [1]துன்னி**
**யற்கலந் திலங்கு பன்மீ னரும்பிய வானும் போல**
**விற்[2]கலை நுதலி னாரு மைந்தரும் வெறுத்து நீத்த**
**பொற்கலன் கிடந்த மாட நெடுந்தெரு [3]வதனிற் போனார்.**

(இ - ள்.) சொல் கலை முனிவன் உண்ட சுடர் மணி கடல்உம் - சொற்களின் வடிவமான நூல்களை யுணர்ந்த அகத்தியமுனிவனாற் பருகப்பட்டு (நீர்வற்றிக்)கிடந்தஒளியையுடைய இரத்தினங்களுக்கு இருப்பிடமான சமுத்திரமும், அல் கலந்து துன்னி இலங்கு பல் மீன் அரும்பிய வான்உம் போல - இராக்காலத்திலே பொருந்தி நெருங்கி விளங்குகிற பல நட்சத்திரங்கள்

தோன்றின ஆகாசமும் போல, வில் கலை நுதலினாரும் மைந்தரும் வெறுத்து நீத்த பொன் கலன் கிடந்த - ஒளியினையுடைய பிறைச்சந்திரன்போன்ற நெற்றியையுடைய மகளிர்களும் ஆடவர்களும் வெறுப்புற்றுக் கழற்றியெறிந்த பொன்மயமான ஆபரணங்கள் விழுந்துகிடக்கப்பெற்ற, மாடம் நெடு தெரு அதனில் - பெருவீடுகளையுடைய நீண்ட இராசவீதியிலே, போனார் - (அவர்கள்) சென்றார்கள்; (எ - று.)

ஆடவரும் மகளிரும் கலனை வெறுத்தற்குக் காரணம்-சம்போக காலத்தில் இறுகப்புல்லுதற்கு இடையூறாதலால். 'அளவுக்குவிஞ்சினால் அமுதமும் விடமாம்' என்றபடி ஆபரணங்கள் அளவுகடந்து அநேகமாயிருத்தலால் அவற்றை வெறுத்ததாகவுங் கொள்ளலாம்: அன்றி, ஊடல்மிகுதியு மாம். அந்நகரத்தில் யாவரும் மிக்க பெருஞ்செல்வவான்க ளாதலால் வீதியில் விழுந்துகிடக்கிற ஆபரணங்களை விரும்பியெடுக்கும் வறியவரெவருமிலராதல்பற்றி, 'கிடந்த' என்றார்-இது செல்வமிகுதியைச் சொல்லுதலால், வீறுகோளணியாம். அகத்தியன் தமிழ்ப்பாஷையி னிலக்கணவிதிகளைச் சிவபெருமானிடம் உபதேசம் பெற்று 'பேரகத்தியம், சிற்றகத்தியம்' என்னும் இலக்கணநூல்களை இயற்றித் தன் மாணாக்கராகிய தொல்காப்பியன் முதலிய பன்னிருவர்க்குங் கற்பித்தருளித் தமிழ்ப்பாஷையைத் தழைத்தோங்கச்செய்தவ னாதலால், 'சொற்கலை முனிவன்' என்றார். மணிக்கடல்-ரத்நாகரம். 'முனிவனுண்ட மணிக்கடல்' என்றது - அங்ஙனம் அகத்தியன் நீர்முழுவதையுங் குடித்தருளினபொழுது அதனுள் முன் மறைந்து கிடந்த பலவகையிரத்தினங்களும் வெளிப்படையாக விளங்குங் கடல் என்றவாறும். அல் - இருள்: இரவிற்கு ஆகுபெயர். கலை - சந்திரகண்டம். வில் கலை நுதலினார்-வில்லின்தன்மையைத் தோற்கச்செய்த [வளைந்த] புருவங்களையுடையாருமாம். பி - ம்:—[1] துன்றி. [2] குலாம். [3] அரிதிற் போனார். (சு)

ஏ. [1]தாறுமாய் தறுகட் குன்றந் தடமத வருவி தாழ்ப்ப
வாறுமாய்க் கலின மா[2]வி லாழியா லழிந்தோ ராறாய்ச்
சேறுமாய்த் தேர்க ளோடத் துகளுமா யொன்றோ டொன்று
மாறுமா றாகி வாளா கிடக்கிலா மறுகிற் சென்றார்.

(இ - ள்.) தாறு மாய் - (களிப்புமிகுதியால்) இருப்புமுட்கோலை முறிக்கின்ற, தறுகண் - அஞ்சாமையையுடைய, குன்றம் - மலைபோன்ற யானைகள், தட மத அருவி - மிகுந்த மதநீர்ப்பெருக்கை, தாழ்ப்ப சொரியவிடுவதனால், ஆறும் ஆய்-ஒரு நதியும்தோன்றி, கலினம் மா விலாழியால்-கடிவாளம் பூண்டுள்ள குதிரைகளின் வாய்நுரையால், அழிந்து - (அவ்யாற்றின் தன்மை) மாறி, ஓர் ஆறு ஆய் - வேறொருவகையாகி, தேர்கள் ஓட-இரதங்கள் இடைவிடாது சஞ்சரித்தலால், சேறும் ஆய்-(நீர் சிறிது உலர்ந்தபின்) சேறுமாகி, துகளும் ஆய் - புழுதியுமாகி, ஒன்றோடு ஒன்று மாறு மாறு ஆகி - (இங்ஙனம் அடிக்கடி) ஒன்றுடனொன்று மிகமாறுபடுந்தன்மையையுடையதாய், வாளா கிடக்கிலா - (சிறிதுபொழுதாயினும்) ஒருதன்மைத்தாக இராத, மறுகில் - பெருவீதியில், சென்றார் - போனார்கள்; (எ - று.)

யானையின் மதநீரால் ஓராறுதோன்ற, அதனோடு குதிரையின் வாய் நுரை கலந்து அத்தன்மை சிறிது வேறாகி, தேர்கள் இடைவிடாது ஓடுதலால் தூளி மிகுதியாகவிழுந்து முதலிற் சேறும் பின் காய்ந்து அவ்விடம் புழுதியுமாக இங்ஙனமே மீண்டும்மீண்டும் யானைமுதலிய செல்லுதலால் மாறிமாறி நதிமுதலிய வுண்டாகும் வீதியிற் சென்றாரென்க. மறுகு-குறுந்தெரு என்பாருமுளர். யானையைக்குன்றமென்றதற்கு ஏற்ப, 'அருவி' என்றார். அழிந்தோராறாய்-அந்நதியழிந்து வேறோர்நதியாகியென்று உரைப்பாருமுளர். [1]தாறுபாய் தறுகட்குன்றத் தடமத வருவி தாழ,தாறுபாய் தறுகண்யானை ...தாழ்ப்ப. விலாழியுமிழிந்து. (எ)

அ.*தண்டுத லின்றி யொன்றித் தலைத்தலைச் சிறந்த காத
லுண்டபின் கலவிப் போரி னொசிந்தமென் மகளி ரேபோற்
பண்டரு கிளவி யார்தம் புலவியிற் பரிந்த கோதை
வண்டொடு கிடந்து தேன்சோர் மணிநெடுந் தெருவிற் சென்றார்.

(இ - ள்.) தண்டுதல் இன்றி - நீங்குத லில்லாமல்,தலை தலை - (கொழுநன் மனைவி யென்கிற) இரண்டிடத்திலும், ஒன்றி - ஒருதன்மையதாய், சிறந்த-மிக்கிருந்த, காதல் - ஆசையின்பயனான காமவின்பத்தை, உண்ட பின்- (ஆடவரும் மகளிரும்) ஒக்கஅனுபவித்தபின்பு,கலவி போரின்-அப்புணர்ச்சியாகிய யுத்தத்திலே, ஒசிந்த - இளைத்துக்கிடந்த, மெல் மகளிர் போல் - மென்மையானதன்மையையுடைய மாதர்கள்போல,பண் தரு கிளவியார்தம் புலவியில் பரிந்த கோதை - இராகத்தையொத்து இனிய சொற்களையுடைய பெண்களது ஊடல்களிலே (அவர்களாற்) கழற்றியெறியப்பட்ட பூமாலைகள், வண்டொடு கிடந்து-(தம்மேல்மொய்த்த) வண்டுடனே கீழேவிழுந்து கிடந்து, தேன் சோர் - தேன்வழியப்பெறுதற்குஇடமான, மணி நெடு தெருவில் - அழகிய பெரிய வீதியில், சென்றார்—; (எ - று.)

புணர்ச்சியினிறுதியில் மெலிந்து கொழுநரோடு துயில்கிற மாதர்கள் போல, பூமாலைகள் வண்டுடனே வாடிக்கிடக்கின்றன வென்பதாம். மாலை தேன்சோர்தற்கு ஏற்ப, மகளிர்க்குக் காமச்செவ்வியால் வெயர்வரும்புதல் கொள்க. இடையிலேமாறுகிற அன்பும் ஒருதலைக்காமமும் புணர்ச்சியின்பத்துக்குக் காரணமாகுஞ் சிறப்புடையனவல்ல வாதலால், 'தண்டுதலின்றி யொன்றித் தலைத்தலைச் சிறந்த காதல்'என்றார். தலைத்தலை-அடுக்கு,தொறுப் பொருளது. கலவியை 'போர்'என்றது - ஆடவரும் மகளிரும் ஒருவரையொருவர் எதிர்ந்து சோர்வின்றி ஊக்கத்தோடு செய்தலால். பரிந்த - அற்ற எனினுமாம். மென்மகளிர்-மெல்லியலார்; அபலைக ளென்றபடி விசுவாமித்திரன் முதலிய மூவரும் பலதெருக்கள் வழியாகச்செல்லுதலைக் குறிப்பிக்க, கவி மூன்றுபாடல்கூறின ரென்னலாம். அம்மிதிலையின் தெருக்கள் பல்வகைப்பட்டிருக்கு மென்பது, இதனால் அறியக்கிடத்தலுங் காண்க. பண் தரு, தரு - உவமவுருபு. (அ)

கூ.—நடனசாலைக் காட்சி.

நெய்திர ளரம்பிற் றந்த மழலையி னியன்ற பாட
றைவரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்கக்

தனாலும், அரங்கினமைதி 'ஆடகவரங்கு' என்றதனாலுங் கூறப்பட்டன. பருத்தசரீரமுடையார் அபிநயத்திற்கு உரியவரல்லரென்பது நாடகநூல் மரபாதலின், 'ஐயநுண்ணிடையார்' என்றார். 'மனத்தின்வழிக்கண்செல்ல' என்றது'கண்வழிமனஞ் செல்ல'என்றது,பயிற்சிமிகுதியை விளக்கிற்று.(௯)

**௧௦.—மாதர்கள் ஊசலில் வீற்றிருந்து ஆடுங் காட்சி.**

† பூசலி னெழுந்த வண்டு மருங்கினுக் கிரங்கிப் பொங்க
மாசுறு பிறவி போல வருவது போவ தாகிக்
காசறு பவளச் செங்காய் மரகதக் [1]கமுகிற் பூண்ட
வூசலின் மகளிர் மைந்தர் சிந்தையோ [2]டுலவக் கண்டார்.

(இ - ள்.) மாசு உறு பிறவி போல வருவது போவது ஆகி - குற்றம் மிகுந்த பிறப்புப்போல (மாறிமாறி மேல்கீழாய் ஓடியோடி) வருவதும் போவதுமாய், காசு அறு பவளம் செம் காய் மரகதம் கமுகில் பூண்ட-குற்ற மற்ற பவழம்போலச் சிவந்தநிறமான காய்களையுடைய மரகதரத்தினம் போலப் பசுநிறமான பாக்குமரங்களிலே பூட்டப்பட்டுள்ள, ஊசலின்-ஊஞ்சல்களிலே, மகளிர் - பெண்கள், பூசலின் எழுந்த வண்டு மருங்கினுக்கு இரங்கி பொங்க - ஆரவாரத்தோடு மேலெழுந்த வண்டுகள் (தமது) இடையின் மென்மைக்காக இரங்கி ஒலிக்க, மைந்தர் சிந்தையோடு - ஆடவர்களது மனத்துடனே, உலவ - ஆட, கண்டார்—;(எ - று.)

பிறப்புக்கும் ஊசலுக்கும் ஒப்புமை கூறப்படுவதை ''உருமாறிப்பலபிறபும் பிறந்துஞ் செத்து மூச லாடுவது'' என்ற இடத்தும் காண்க. மகளிர்கள் ஊசலில் வீற்றிருந்து விசையாக ஆடும்பொழுது, அவ்வதிர்ச்சியால் அவர்களுடம்பிலணியப்பட்டுள்ள பூமாலைகளில் மொய்த்திருந்த வண்டுகள் மேலெழுந்து பேரொலிசெய்தலைப் பார்த்தால், அவ்வண்டுகள் இம்மாதரது மெல்லியஇடை இவ்விசையாட்டத்தைப் பொறுக்கமாட்டாதென்பதற்காக இரக்கமுற்று வாய்விட்டு அரற்றுவதுபோலுமெனக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. மூன்றாமடிக்கு-பவழத்தாலமைக்கப்பட்ட செங்காய்களோடு கூடிய மரதகரத்தினத்தா லியன்ற பாக்குமரங்களிற் பூட்டிய ஊசல்' என்றும் உரைப்பர். இங்ஙனம் மகளிர் ஊசலாடும்பொழுது அவ்வழகை நோக்கி ஆடவர்மனம் காதல்மிகுதியால் அவர்களைவிடாது தடுமாறுதலால், '**மைந்தர்சிந்தையோடுலவ**' என்றார். பி - ம்:—[1]கமுகு. [2]உலாவ. (௧௦)

**௧௧.—கடைத்தெருவின் காட்சி.**

[1]வரப்பறு மணியும் பொன்னு மாரமுங் கவரி வாலுஞ்
[2]சுரத்திடை யகிலும் மஞ்ஞைத் தோகையுந் தும்பிக் கொம்புங்
[3]குரப்பணை யிரப்பு மள்ளர் குவிப்புறக் கரைக டோறும்
[4]பரப்பிய பொன்னி யன்ன வாவணம் பலவுங் கண்டார்.

---

† இதுமுதல் இந்தவிருத்தம் முடியுமளவுமுள்ள பாடல்கள், முன்பின்னாக மாறிமாறி ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகின்றன.

கைவழி நயனஞ் செல்லக் கண்வழி மனமுஞ் செல்ல
வையநுண் ணிடையா ராடு மாடக வரங்கு கண்டார்.

(இ - ள்.) நெய் திரள் நரம்பின் - நெய்யினெழுக்குப்போலத் திரண்ட வடிவமாகவுள்ள யாழ்நரம்பி னிசைபோல, தந்த - (கேட்டற்கினியதாகப்) பாடப்பட்ட, மழலையின் இயன்ற - மழலைச்சொற்போல் (இனிய தந்தமது கண்டத்தொனியாற்) பொருந்திய, பாடல் - வாய்ப்பாட்டிசையும், தைவரு மகரவீணை - (கைவிரலால்) தடவிவாசிக்கப்படுகிற மகரவீணையினிசையும், தண்ணுமை - மத்தளத்தின் ஒலியும், தழுவி - (மாறுபடாமல் ஒன்றோடொன்று) இணங்கி, தூங்க - ஒலிக்கவும்,—கைவழி நயனம் செல்ல - (பலவகையாகக் குறிப்புக்காட்டுகிற தமது) கைகள் செல்லும்வழியே (தமது) கண்களின் குறிப்புநோக்கஞ் செல்லவும், கண்வழி மனம்உம் செல்ல - அக்கண்களின் பார்வைசெல்லும்வழியே மனத்தின்குறிப்புஞ் செல்லவும்,(அபிநயஞ் செய்துகொண்டு), ஐயம் நுண் இடையார் - (உண்டோஇல்லையோவென்று காண்பவர்கள்) சந்தேகப்படுவதற்குரிய நுட்பமான இடையையுடைய மங்கைமார், ஆடும் - நருத்தனஞ்செய்கின்ற, ஆடகம் அரங்கு - பொன்னாற்சமைக்கப்பட்டுள்ள நடனசாலைகளை, கண்டார்—; (எ - று.)

பாட்டுப்பாடிக்கொண்டு அபிநயத்துடனே ஆடுதல் செய்யுமிடத்துச் செய்யும் முறைமைதான் நான்குவகைப்படும்; கையும், கருத்தும், மிடறும், சரீரமும் என: என்னை? "அவைதாங், கையே கருத்தே மிடறே சரீரமென், றெய்தமுன்பமைத்த விவையெனமொழிப" என்றாராகலின்; இவைநான்கினுள் 'கைவழி நயனஞ்செல்ல' என்றதனால் கையின்தொழிலையும், 'கண்வழிமனமுஞ்செல்ல' என்றதனால் கருத்தின்தொழிலையும், 'மழலையினியன்ற பாடல்' என்றதனால் மிடற்றின்தொழிலையும், 'ஆடும்' என்றதனால் சரீரத்தின் தொழிலையுங் கூறினார். நெய் திரள் நரம்பின் மழலையின் இயன்ற என்பதற்கு-(கறைபிடியா திருத்தற்பொருட்டு) நெய்பூசப்பட்டுள்ள திரண்ட வடிவமாகவிருக்கிற யாழ்நரம்பி லெழுப்பிய இன்னோசைபோன்ற (பண்) முற்றுப்பெற்ற, பாட லென்றும் உரைக்கலாம். மழலை-சாரீரவோசைக்கு உவமையாகுபெயர். மழலையின் இயன்ற - நிரம்பாத மெல்லிய குதலைச் சொற்களால் அமைந்த என்றுமாம். பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்னும் யாழ்வகைநான்கினுட் பத்தொன்பது நரம்பு கட்டினது மகரயாழ்; "ஒன்று மிருபது மொன்பதும் பத்துடனே, நின்ற பதினான்கும் பின்னேழுங் - குன்றாத, நால்வகை யாழுக்கு நன்னரம்பு சொன்முறையே, மேல்வகைய நூலோர் விதி." மகரம் - சுறா மீன்: அதனது அங்காந்த வாய்போல வளைந்த நுனி அமைக்கப்படுதலால், மகரவீணையென்று பெயர்பெற்றதுபோலும். நாடகசாலைக்கு உரிய கூத்தி, இயலாசிரியன், ஆடலாசிரியன், இசையாசிரியன், குழலோன், தண்ணுமை முதல்வன், அரங்கு என்னும் இவைமுதலியவற்றின் அமைதிகளுள் யாழாசிரியன் தண்ணுமையோன் இவர்களமைதி 'தைவரு மகரவீணை தண்ணுமை தழுவித்தூங்க' என்றதனாலும், கூத்தியமைதி 'ஐயநுண்ணிடையார்' என்ற

(இ - ள்.) வரம்பு அறு மணிஉம் - அளவில்லாத இரத்தினங்களையும், பொன்உம் - பொன்னையும், ஆரம்உம் - முத்துக்களையும், கவரி வால்உம் - கவரியென்னும் மானினது வாலையும், சுரத்திடை அகில்உம் - காடுகளிலே யுண்டாகிற அகிற்கட்டைகளையும், மஞ்ஞை தோகைஉம் - மயிற்பீலிகளையும், தும்பி கொம்புஉம் - யானைத்தந்தங்களையும், குரம்பு அணை நிரப்பும் மள்ளர் குவிப்புற கரைகள் தோறும் பரப்பிய - (கழனிகளுக்கு) வரப்புக்களாகிய கரைகளைச் செய்துமுடிக்கும் உழவர்கள் (கூட்டங்கூட்டமாகக்) குவித்து வைக்கும்படி கரைகளிலெல்லாம்பரவச்செய்கிற, பொன்னி - காவிரிநதியை, அன்ன - து, ஆவணம் பலஉம் - கடைகள்பலவற்றையும், கண்டார் —.

மணிமுதல் யானைத்தந்தமீறாகச் சொல்லப்பட்ட பொருள்களைத் தனித்தனிப் பக்கங்களிற் குவித்துவைத்தலால், கடைவீதி, கழனிக்குவரம்புகளைச்செய்யும் மள்ளர் குவித்துவைக்குமாறு மணிமுதலியபொருள்களை மலைகளிலிருந்து கொழித்துக்கொணரும் காவேரிநதியை யொக்கு மென்பதாம். கடைக்கு மணிமுதலியன வணிகராற் சேர்த்துவைக்கப்பட்டன. அகில் - சந்தனமரம்போல இயற்கையில்வாசனையுடையதொரு மரம். "கள்ளிவயிற்றினகில்பிறக்கும்" என்றபடி வயிரம்முற்றின கள்ளிச்செடியின் பிளப்பினின்று இவ்வகிற்கட்டை தோன்றுத லுண்டாதலின், 'சுரத்திடை யகில்' என்பதற்கு - (கள்ளிச்செடிகள் வேரூன்றிச்செழித்து வளர்தற்கிடமான) பாலைநிலத்திலே தோன்றிய அகிற்கட்டை யென்றும் பொருள் கொள்ளலாம். சுரம்-ஜ்வரம்என்னும்வடமொழித்திரிபு; வெப்பமுடைய நிலமென்றுபொருள்.

பி - ம். — [1] வரம்பறு, வரப்புறு. [2] சுரம்படை. [3] குரம்பணை. [4] பரம்பிய. (கக)

### கஉ.—மகளிர் கீதம்பாடுமிடங்களின் காட்சி.

வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ மாடகம் பற்றி வார்ந்த
கள்ளென நரம்பு வீக்கிக் [1] கையொடு மனமுங் கூட்டி
வெள்ளிய முறுவ [2] றோன்ற விருந்தென மகளி ரீந்த
தெள்விளிப் பாணித் தீந்தேன் செவிமடுத் தினிது சென்றார்.

(இ - ள்.) மகளிர் - (அந்நகரத்துப்) பெண்கள், வள் உகிர் தளிர் கை நோவ - கூர்மையான நகங்களையுடைய தளிர்போல்மெல்லிய தமது செங்கைவிரல்கள் நோகும்படி, மாடகம் பற்றி - வீணையின்முறுக்காணிகளைப் பிடித்துத் திருகி, வார்ந்த கள் என நரம்பு வீக்கி - ஒழுகுகின்ற தேன்தாரை போன்ற அவ்யாழ்நரம்புகளை இறுகக்கட்டி, கையொடு மனம்உம் கூட்டி - (அந்நரம்புகளின்மேல் வருடச்செல்லுகின்ற) கைவிரல்களின் குறிப்புடனே மனத்தையும் பதியவைத்து, வெள்ளிய முறுவல் தோன்ற - வெண்ணிறமான (தமது) புன்சிரிப்பு வெளிப்பட, விருந்து என - புதிதாய்வந்தவர்க்கு இனிய உணவிடுதல்போல, ஈந்த - கொடுத்த, தெள்விளி பாணி தீம் தேன் - தெளிவான இசையோடுகூடிய பாட்டாகிற இனிப்புள்ள தேனை, செவி மடுத்து - காதுகளாற் பருகிக்கொண்டு, இனிது சென்றார் - (மூவரும்) இன்பமாக வழிச்சென்றார்கள்; (எ - று.)

மகளிர் பாடும் பாடல் செவியில்விழ இனிய அப்பாடலைக் கேட்டவண்ணம் விசுவாமித்திரன் முதலியமூவருஞ் சென்றாரென்க. மாடகம்பற்றி நரம்பு வீக்குதலால் கைக்கு நோவுண்டாகிறதென் மகளிரது மிக்கமென்மை தன்மையைத் தெரிவித்தார். யாழ்நரம்புக்குத்தேனொழுக்கு உவமையாதலை "தீந்தேன், றுளக்கறவொழுகி யன்ன துய்யறத் திரண்டதிண்கோல்", "தீந்தே, னணிபெற வொழுகியன்ன வமிழ்துறழ் நரம்பி னல்யாழ்", "தேம்பெய், தமிழ்துபொதிந் திலிற்று மடங்குபுரி நரம்பின்" என்றஇடங்களிலுங் காண்க. கோடு, பத்தர், ஆணி, நரம்பு, மாடகம் என்பன - யாழுறுப்புக்கள்; இவற்றை "கோடே பத்தர் ஆணி நரம்பே, மாடக மெனவரும் வகையின தாகும்"என்பதனா லறிக. மாடகமென்பது-நால்விரலளவானபாலிகைவடிவாய் நரம்பைவீக்குங் கருவி. கையொடு மனமுங் கூட்டி என்றது - கீதத்திலொழியப் பிறிதொன்றில் மனம்வையாமல் மனோவேகமாகக் கையை விசைபடச்செலுத்தி யென்று கூறியவாறும். 'வெள்ளிய முறுவல்தோன்ற' என்றதனால், அதிக சிரமமில்லாமல் அரிய கீதங்களையும் உல்லாசமாக எளிதிற் பாடவல்ல தன்மை உணர்த்தப்பட்டது. மந்தஹாஸஞ் செய்யுங்காலத்துப் பற்களின் வெள்ளொளி சிறிது வெளித்தோன்றுதலால், 'வெள்ளிய முறுவல் தோன்ற' என்றார். "அணிமணி யெயிறுந் தோன்றா" என்றும், "பண்ணளவும் வாய்தோன்றா பற்றெரியா" என்றுங் கூறியது உள்ளாளப் பாட்டென்னும் ஒருவகைக்கீதத்துக்கே யுரியதோ ரிலக்கணமாமென அறிக. தெள்விளி - ஓரிராகமுமாம். செவிமடுத்தல்-வாயாலுண்டல்போலக் காதால் நிரம்பக்கேட்டுமகிழ்தல். இத்தகைய இனியகீதத்தைக் கேட்டதனாலுண்டாகிற ஆனந்தத்தால் வழிநடந்துசெல்லுமிளைப்புத் தீர்தல்பற்றி, 'இனிது சென்றார்' என்றது. பாணித் தீந்தேன் - நாவுக்கு இனிமைதருந் தேன்போலக் காதுக்கு இனிமைதரும் பாட்டென்றபடி. பி - ம்:—[1] கண்ணொடு. [2] தோன்றா. (௧௨)

**௧௩.—குதிரைகள் மண்டலகதியிலே சுழன்றோடுங் காட்சி.**

**கொட்புறு கலினப் பாய்மா [1]குலான்மகன் முடுக்கி விட்ட**
**மட்கலத் [2]திகிரி போல வாளியின் வருவ மேலோர்**
**நட்பினி [3]னிடைய றாவாய் ஞானிக ளுணர்வி னொன்றாய்க்**
**கட்புலத் திலைய வென்று தெரிவில [4]தெரியக் கண்டார்.**

(இ - ள்.) குலால் மகன் முடுக்கி விட்ட - குயவனால் விசையாகச் சுழற்றிவிடப்பட்ட, மண் கலம் திகிரி போல - மண்ணினாற் செய்யப்படும் பாத்திரங்களுக்குத் துணைக்கருவியாகிய சக்கரம்போல, வாளியின் வருவ - வட்டகதியாய் ஓடிவருவனவும், மேலோர் நட்பினின் இடைஅறா ஆய் - பெரியோர்கள் (ஒருவர்க்கொருவர் செய்யுஞ்) சிநேகம் (இடையில்விட்டு நீங்காமைபோல) இடையில்விட்டு நீங்காதனவுமாய், ஞானிகள் உணர்வின் ஒன்று ஆய் - தத்துவஞானமுடையார்களது அறிவு (பல பொருள்களிலுஞ் செல்லாமல் ஒருபொருளினிடத்திலேயே செல்லுதல்)போல ஒருதன்மையுடையனவுமாகி, கண் புலத்து இனைய என்று தெரிவு இல - கண்ணின்பார்வைக்கு இத்

தன்மையனவென்று அறிதல்கூடாதனவான, கொட்பு உறு கலினம் பாய் மா - சுழன்றோடுதல் மிகுந்து கடிவாளம்பூண்டு பாய்ந்துசெல்லுந்தன்மை யுள்ளகுதிரைகள், தெரிய - தோன்ற, கண்டார்—; (எ - று.)

இடையில்நிற்காமலும் வழியைவிட்டுவிலகாமலும் குதிரைகள் மண்டலமாக ஓடுவதனைக் கண்டன ரென்க. "கூட்டுற முடுக்கிவிட்ட குயமகன் றிகிரிபோல,வாட்டிறல் தேவதத்தன்கலினமா...திரியுமன்றே" என்ற சிந்தாமணி இங்கு ஒப்புநோக்கத்தக்கது. குதிரைக்கு இடையறுமை - இடையிடையே நிற்காமலோடுதல்; ஒன்றுதல் - வழிவிட்டு விலகாமல் ஒழுங்காகச் செல்லுதல். குதிரைஒவ்வொன்றாயிருந்தும் அதனதன்செல்லுகை பலவிடத்தும்ஒருங்கேகாணப்படுதலால், இத்தன்மையவென்று அறியப்படாதாயிற்று. 'மேலோர் நட்பினி னிடையறுவாய்' என்பதற்கு-மேலோர் வெவ்வேறிடத்திருந்தாலும் அவரதுநட்பு இடையறுதிருத்தல்போலக் குதிரை ஒவ்வொரு சமயத்து ஒவ்வோரிடத்துஇருந்தாலும் அதன்கதிவிரைவினால் இடையறுது காணப்படுகிறதென்றும், 'ஞானிகளுணர்வினென்றாய்' என்பதற்கு-ஞானிகளறிவு தான் ஒன்றாயிருந்துஞ் சிறிதுபொழுதிலே பலபொருள்களிடத்துஞ் செல்லுதல்போலக் குதிரை ஒவ்வொன்றாயிருந்துஞ் சிறிதுகாலத்தினுள்ளே பலவிடத்துஞ் செல்லுந் தன்மையதென்றும் பொருள்கொள்ளலாம். புலம்-விஷயம். கண்ணின்புலம் - காட்சி. 'தெரிவில தெரிய' என்றதனால், நுண்ணறிவுடையராதலால் பிறர்கண்ணுக்குப் புலப்படாதன இவர்கண்ணிற்குப் புலப்பட்டன வென்க. "இருவகைச்சாரியு மெதிர்ந்துவட்டமாய் வருவழி ஞெகிழிபோன் மறுகெலாமொரு, துரகதமேநிலை நின்ற தோற்றமொத், தொருவற நடத்தினு ரொருகணத்தினே" என்னுந் திருவிளையாடற்பாட்டுக் கருத்தை இங்கே உணர்க. இனி, வாளியின் வருவ என்பதற்கு - அம்புபோல் நேராக ஓடுவன எனக் கொண்டு, மட்கலத்திகிரிபோலவருவன மேலோர்நட்பினி னிடையறுதுள்ளன: வாளிபோல்வருவன ஞானிகளுணர்வினென்றாயுள்ளன என்று முறைநிரனிறைப்பொருள்கோள் பட உரைப்பாருமுளர். குலால்மகன்-குலாலனாகிய மனிதன்; இருபெயரொட்டு:குலாலமகன்என்பதன் விகாரம். கலம்-காரியம்;அதற்குமுதற்காரணம்-மண்; துணைக்காரணம் - திரிகை. மேலோர் நட்பு இடையறுமையை "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்,பின்னீர பேதையார்நட்பு" என்னுந் திருக்குறளாலும், "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசைவரிசையா நந்தும்" என்னும் நாலடியாரினாலும் அறிக. பி - ம்:—[1] குயமகன். [2] திரிகை. [3] இடையறுது. [4] திரிய.

(௧௩)

**௧௪.—மாடங்களில் மாதர்களின் காட்சி.**

**வாளரம் பொருத வேலும் மன்மதன் சிலையும் வண்டின்**
**கேளொடு கிடந்த நீலச் சுருளுஞ்செங் கிடையுங் கொண்டு**
**நீளிருங் களங்க நீக்கி நிலாமணி மாட நெற்றிச்**
**சாளரந் தோறுந் தோன்றுஞ் சந்திர வுதயங் கண்டார்.**

(இ - ள்.) வாள் அரம் பொருத வேல்உம் - அரமென்னும் வாள்விசே டத்தால் அராவப்பட்ட வேலாயுதத்தையும், மன்மதன் சிலைஉம் - மன்மத னது வில்லையும், வண்டின் கேளொடு கிடந்த நீலம் சுருள்உம் - வண்டுக்கூட் டினத்தோடுபொருந்தியுள்ள நீலரத்தினச்சுருளையும்,செம் கிடைஉம்-சிவந்த கிடையென்னுஞ் சடையையும், கொண்டு-(தன்னிடத்தே) கொண்டு, நீள் இரு களங்கம் நீக்கி - நெடுங்காலமாகவுள்ள பெரிய (தனது) களங்கத்தை யொழித்து நிரை மணிமாடம் நெற்றி சாளரம் தோறுஉம்தோன்றும்-வரிசை யாகவுள்ள இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற உபரிகைவீடுகளின்மேலிடத்தி லிருக்கிற பலகணிவாயில்கள்தோறுங் காணப்படுகிற, சந்திர உதயம் - பூரணசந்திரனது உதயத்தை, கண்டார் —; (எ-று.)

உபரிகைமேற் சாளரங்கள் தோறும் நிற்கின்ற மகளிரது முகங்களைப் பார்த்தார்க ளென்க. உருவகவுயர்வுநவிற்சியணி. வேல் - கண்களுக்கும், சிலை-புருவத்துக்கும், வண்டொடு கிடந்த நீலச்சுருள் - கூந்தலுக்கும், செங் கிடை - அதரத்துக்கும், சந்திரோதயம் - முகமண்டலத்துக்கும் உவமை "வாளரந்துடைத்த வைவே லிரண்டுடன் மலைந்தவேபோ, லாள் வழக் கொழியநீண்ட வணிமலர்த்தடங்க ணெல்லாம்" என்றார் சிந்தாமணி யிலும். அர வாள் - ஒருவகைவாள். வாள் அரம்-ஒளிபொருந்திய அரமுமாம். "கடைகுழன்றகருங்குழல்கள்" ஆதலால், நீலச்சுருளை உவமை கூறினர். கிடை-கிடைச்சியெனவும்,நெட்டியெனவும்படும். வண்டின்கேளொடுகிடந்த நீலச் சுருள் என்பதற்கு - வண்டுகளுக்கு உறவாகிய பூக்களோடு பொருந்தி யுள்ள பின்மயிர்ச்செருகையும் என்று உரைப்பாரு முளர். நீள் களங்கம் - இயற்கையாகவுள்ள மறு வென்றபடி. (கச)

கரு.—மதுபானஞ்செய்து ஊடிய மாதர்களது முகக்காட்சி.

பளிக்குவள் ளத்து வார்த்த பசுநறுந் தேறன் மாந்தி
வெளிப்படு நகை யவாகி [1]வெறியன மிழற்று கின்ற
வொளிப்பினு மொளிக்க வொட்டா வூடலை யுணர்த்து மாபோற்
களிப்பினை யுணர்த்துஞ் செவ்விக் கமலங்கள் பலவுங் கண்டார்.

(இ - ள்.) பளிக்கு வள்ளத்து வார்த்த - ஸ்படிகமயமான கிண்ணத் திலே வார்க்கப்பட்டுள்ள, பசு நறு தேறல் - புதிய வாசனைவீசுகிற தெளி வான மதுவை, மாந்தி - குடித்து, வெளிப்படு நகைய ஆகி - வெளியிலே காணப்படுகிற சிரிப்பையுடையனவாய், வெறியன மிழற்றுகின்ற - வெறி கொண்ட வார்த்தைகளைப் பேசுகிற, ஒளிப்பின்உம் ஒளிக்க ஒட்டா ஊடலை உணர்த்தும் ஆ (று) போல் களிப்பினை உணர்த்தும் - மறைத்துவைக்க முயன்றாலும் மறைத்துவைக்கமுடியாத பிணக்கத்தை அறிவிக்கும் வகை யாகக் களிப்பை வெளிப்படுத்துகிற, செவ்வி கமலங்கள் பலஉம் - அழ கிய செந்தாமரைமலர்கள் பலவற்றையும், கண்டார்—;(எ - று.)

தாம் கொழுநரோடு கொண்ட ஊடலை மறைத்துவைக்க முயன்று அது முடியாமல் வெளிப்படுத்தத்தொடங்கி அதுவுஞ்செய்யாமற் களிப்பை

வெளிப்படுத்துகிறு ரெனக் கட்குடியிஞலாகிய உணர்வுமயக்கத்தைக் கூறி ஞர் கமலங்கள்என்றது,மகளிர்முகங்களை. காரணமின்றிச்சிரித்தலும்,கலக் கானபேச்சுக்களைப்பேசுதலும், மறைத்துவைக்கத்தக்கஇரகசியமானபொ ருளை வெளிப்படுத்துக் கூறிவிடுதலும், களிப்புமிகுதலும்-கட்குடித்தவரது இயல்பு. போல் - ஒப்பில்போலி. இனி, உவமைச்சொல்லாகவேகொண்டு, ஊடல்உள்ளே யிருக்கையில் அதனை மறைக்கவேணுமென்று நினைக்கையி லும் அது வெளிப்படுதல்போலக் களிப்பினையும் வெளிப்படுத்துமென்க. பி - ம்:—[1]வெறியினை நிகழ்த்துகின்ற. (கரு)

### க்சூ.—மகளிர் பந்தாடுங் காட்சி.

*மெய்வரு போக மொக்க வுடனுண்டு விலையுங் கொள்ளும்
பையர வல்கு லார்த முள்ளமும் பளிங்கும் போல
மையரி நெடுங்க ணோக்கம் படுதலுங் கருகி வந்து
[1]கைபுகிற் சிவந்து காட்டுங் கந்துகம் பலவுங் கண்டார்.

(இ - ள்.) மெய் வரு போகம் - உடம்பின்சேர்க்கையா லுண்டாகிற காமவின்பத்தை, ஒக்க உடன் உண்டு - (ஆடவர்களோடு) ஒக்கத் தாமும் அனுபவித்து, விலைஉம் கொள்ளும் - (அவ்வின்பத்திற்காகத் தாம் ஆடவர்க ளிடமிருந்து அக்கிரமமாக) விலைப்பொருளையும் வாங்குகிற, பை அரவு அல் குலார்தம் - பாம்பின் படத்தையொத்த அல்குலையுடைய வேசையர்களது, உள்ளம்உம்-மனமும், பளிங்குஉம்-கண்ணுடியும், போல—, மை அரி நெடு கண் நோக்கம் படுதலும் கருகி - மையிடப்பட்டுள்ள செவ்வரிபரந்த நீண்ட (தமது) கண்களின் கரிய பார்வை படுகிறபொழுது கருமைநிறமடைந்து, வந்து கை புகின் சிவந்து காட்டும் - தமது சிவந்த கைகளிடம் வந்து பொ ருந்திஞல் (அப்பொழுது) செந்நிறத்தையடைந்து தோற்றுகின்ற, கந்துகம் பலஉம் - பந்துகள் பலவற்றையும், கண்டார்—;(எ - று)

தமக்கு இயற்கையானகுணத்தைக்காட்டாமல் தம்மிடம்வந்து சேர் ந்து தமக்குப்பொருள்தரும் ஆடவர்களதுகுணத்தையே தாமுங்கொண்டு வெளிக்குக்காட்டுகிற விலைமாதரது மனம்போலவும், தனது இயற்கைநிறத் தைக்காட்டாமல் தன்னையடுத்தபொருளினது நிறத்தைத்தானே கொண்டு காட்டுகிற ஸ்படிகம்போலவும், பந்துகள் தமது இயல்பான நிறத்தைக் காட் டாமல் மகளிர்களது கண்ணெளி தம்மைவந்துஅடுக்குங்காலத்து அதஞற் கறுத்தும் கைகளைத் தாம் அடுக்குங்காலத்து அவற்றினெளியாற் சிவந்துங் காணப்படுகின்றன வென்பதாம்; இது, பிறிதின்குணம்பெறலணி: வடமொ ழியில் தத்குணலங்காரம்எனப்படும். வரைவின்மகளிர் குணப்பண்பு மாறு தலை "பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்" என்றதஞலும், பளிங்கு நிறம்வேறுபடுதலை"அடுத்தது காட்டும்பளிங்குபோல்"என்றதஞலும் அறிக. இங்கு எடுத்த பந்து இயற்கையில் வெண்ணிறத்ததுபோலும்;அந்நிற மே மற்றையநிறங்களை எளிதிற் பற்று மாதலின். பின்னிரண்டடிகளால்,மக ளிர்கண்களது மிக்ககருநிறமும், கைகளின் மிக்கசெந்நிறமும் வெளிப்படு

கின்றன. 'விலையும்' என்ற உம்மை - இருவரும் ஒருவரோடொருவர் சேர்ந்து பெறும் இன்பத்தில் ஆடவர்களால் தாம்பெறும் இன்பத்திற்காக அவர்களுக்குத் தாம் சிறிதொருபொருளுந்தராமலே தம்மால் அவர்கள்பெறும் இன்பத்திற்காகத் தாம்மாத்திரம் அவர்களிடம் பெரும்பொருள் வாங்குகின்ற வேசையர்களது கொடுமையை விளக்கிற்று. பி-ம்:—[1] கையற. (கசு)

கஎ.—மகளிர் சூதாடுமிடங்களின் காட்சி.

**கடகமுங் குழையும் பூணு மாரமுங் கலிங்க நுண்ணூல்**
**வடகமு மகர யாழும் [1]வட்டினி கொடுத்து வாசத்**
**தொடையலங் கோதை சோரப் பளிக்குநாய் சிவப்பத் தொட்டுப்**
**படைநெடுங் கண்ணார் [2]வட்டாட் டாடிடம் பலவுங் கண்டார்.**

(இ - ள்.) கடகம்உம் - கைவளைகளையும், குழைஉம் - காதணிகளையும், பூண்உம் - மற்றும் பலஆபரணங்களையும், ஆரம்உம்-ரத்தினஹாரங்களையும், நுண் நூல் கலிங்கம் வடகம்உம்-மெல்லியநூல்களாற்செய்யப்பட்ட கலிங்கதேயத்துவிலையுயர்ந்த மேற்போர்வைகளையும்,மகரயாழ்உம்-மகரவீணைகளையும்,வட்டினி கொடுத்து-பந்தயப்பொருளாக வைத்து வாசம் தொடையல் அம் கோதை சோர-நல்மணமுள்ள பூமாலைகளையணிந்த அழகிய(தமது)கூந்தல் தளரும்படி, பளிங்கு நாய் சிவப்ப தொட்டு - பளிங்கினாற்செய்யப்பட்ட நாய்வடிவமானகாய்கள் செந்நிறமடையும்படி (அவற்றைத் தமதுசெங்கைகளால்) தொட்டு, படை நெடு கண்ணார் - வேல்போன்ற நீண்டகண்களையுடைய மாதர்கள், வட்டு ஆட்டு ஆடு - சூதாட்ட மாடுகிற, இடம் பலஉம்-இடங்கள் பலவற்றையும், கண்டார்—;(எ - று.)

சூதாடுதல் கூறியதனால் அவர்க்கு யாதொருகவலையுஞ் சிறிதுமில்லாமை விளங்கும். கலிங்க நுண்ணூல் வடகம்-"விலைவரம்பறியலாகா வின்னுரைக்கலிங்கம்" என்பது, சிந்தாமணி. பளிங்குநாய்-'பலகைசெம்பொனாகப்பளிங்குநாயாகப் பரப்பி". வட்டு - சூதாடுகருவி; "அரங்கின்றி வட்டாடியற்றே,""கட்டளை யன்ன வட்டரங் கிழைத்து". கோதை சோர்தல், ஆடும்பொழுது உண்டாகும் இளைப்பினால். படை - வாளுமாம். பி - ம்:—[1] வட்டிகை. [2] ஆடும்பண்ணைகள். (கஎ)

கஅ.—பெண்கள் நீர்நிலைகளில் நீராடுங் காட்சி.

**பங்கயங் குவளை யாம்பல் படர்கொடி வள்ளை நீலஞ்**
**செங்கிடை தரங்கம் [1]கெண்டை சினைவரா லினைய தேம்பத்**
**[2]தங்கள்வே றுவமை யில்லா வவயவந் தழுவிச் [3]சாலு**
**மங்கையர் விரும்பி யாடும் வாவிகள் பலவுங் கண்டார்.**

(இ - ள்.) பங்கயம் - தாமரைமலர்களும், குவளை - கருநெய்தல்மலர்களும், ஆம்பல் - செவ்வாம்பல்மலர்களும், படர் கொடி வள்ளை - பரவின வள்ளைக்கொடியி னிலைகளும், நீலம் - நீலோற்பலமலர்களும், செம் கிடை- சிவந்த கிடையென்னுஞ்சடைகளும், தரங்கம் - நீரலைகளும், கெண்டை -

கெண்டைமீன்களும், சினை வரால் - சூல்கொண்ட வரால்மீன்களும், இனைய - இவைபோல்வன பிற நீர்வாழ்பொருள்கள் பலவும், தேம்ப-(மகளி ரவயவங்களுக்கு ஒப்பாகாமையால்) வருந்தும்படி. தங்கள் வேறு உவமை இல்லா அவயவம் தழுவி-தங்களுக்கு(த் தாங்களேயன்றி) வேறு உபமானம் பெறாத (தங்கள்து முகம்முதலிய) அவயவங்களோடு பொருந்தி, சாலும் மங் கையர் - சிறந்த மகளிர்கள், விரும்பி ஆடும் - விரும்பி நீராடுகின்ற, வாவி கள் பலவும் - தடாகங்கள் பலவற்றையும், கண்டார்—; (எ - று.)

மங்கையர் நீராடும் நீர்நிலைகளைக் கண்டன ரென்க. தாமரை-முகத்துக் கும், குவளையுங் கெண்டையும் - கண்ணுக்கும், ஆம்பல்-வாய்க்கும், வள்ளை- காதுக்கும், நீலம் - கூந்தலுக்கும், கிடை - அதரத்துக்கும், அலை - வயிற்று மடிப்புக்கும், வரால்மீன் - கணைக்காலுக்கும் ஒப்பாகாமையால் வருந்து மென்க. இப்படலத்தில் மேல் "பட்டாபூங் குவளை நாண்மலரோ நீலோற்ப லமோ பானலோ" என்பதனாலும், குவளையும் நீலமும் வெவ்வேறென்பது பெறப்படும். 'சினைவரால்' என்றது - அதற்கு வயிறு பருத்திருத்தல்போல, உபமேயமான கணைக்காலுக்குப் பின்புறத்து மேற்பங்கு பருத்திருத்தலால். 'இனைய' என்றது, சங்கம்-கண்டத்துக்கும், கெளிற்றுமீன்-கைவிரலுக்கும், நீர்ச்சுழி-நாபிக்கும், நண்டு-முழங்காலுக்கும், ஆமை-புறங்காலுக்கும், பாசி- கூந்தலுக்கும், முத்தம் -தந்தத்துக்கும், நீர்க்குமிழி - கொங்கைக்கும், இன் னுஞ்சிலபொருள் - இன்னுஞ்சில அவயவங்களுக்கும் ஒப்பாகாவென்னுங் கருத்தால். வாவி-வாபீ: வடசொல். பி - ம்:—[1] ஞெண்டு. [2] தங்களையுவமை யான வையகத்தகைமை.[3] சான்ற. (கரு)

**கக.—மைந்தர் வாட்பயிற்சிசெய்யும் இடங்களின் காட்சி.**

* **இயங்குறு புலன்க ளங்கு மிங்குங்கொண் டேக வேகி**
**மயங்குபு திரிந்து நின்று மறுகுறு முணர்வி தென்னப்**
**புயங்களிற் கலவைச் சாந்தும் புணர்முலைச் சுவடு நீங்காப்**
**[1] பயங்கெழு குமரர் வாளாட் டாடிடம் பலவுங் கண்டார்.**

(இ - ள்.) இயங்குறு புலன்கள் - (பலவிடத்தும்) செல்லுதற்குரியபஞ் சேந்திரியங்கள், அங்குஉம் இங்குஉம்கொண்டு ஏக - அததற்குரிய பலவிஷ யங்களிலும் இழுத்துக்கொண்டு செல்ல, ஏகி-(அவற்றின்வழியிலே)சென்று, மயங்குபு திரிந்து நின்று மறுகுறும் - மயக்கமடைந்து அலைந்துகொண்டே கலங்குகிற, உணர்வு இது என்ன - சிற்றறிவை ஒக்கும் இதுவென்று சொல் லும்படி, கலவை சாந்துஉம் புணர்முலை சுவடுஉம் புயங்களில் நீங்கா பயம் கெழுகுமரர் வாளாட்டு ஆடு-(குங்குமப்பூ முதலிய வாசனைப்பொருள்களோடு கூடிய)கலவைச்சந்தனக்குழம்பும் (ஒன்றோடொன்று)நெருங்கிய மகளிர் தன ங்கள் (இறுகத்தழுவுங்காலத்து) மேற்பொருந்தியதனாலாகிய தழும்பும் தம் தோள்களில் நீங்கப்பெறாத (கல்வி செல்வம் முதலிய) பயன்கள் மிக்க இள மைந்தர்கள் வாள்களை (எங்குஞ்) சுழற்றி யாடுதல் செய்கின்ற, இடம் பல உம் - பல இடங்களையும், கண்டார்—;(எ - று.)

பொறிகளுக்குரியபுலன்கள்பலவற்றின் வழியிலே சென்று சுழலும் அறிவு, மைந்தர்கள் சுழற்றும்பொழுது எங்குஞ்சுற்றுகிற வாளுக்கு உவமை. என்ன என்பது, வாளாட்டு ஆடு என்பதனோடு இயையும். மூன்றமடி - அவ் வீரர்கள் யௌவனமுள்ளவரென்பதைக் காட்டும். பி - ம்:—[1]வயங்கெழில்.

௨0.—இளமைந்தர்களின் காட்சி.

**வெஞ்[1]சுட ருருவிற்றன்ன மேனியர் வேண்டிற் றீயு**
**நெஞ்சின ரீசன் கண்ணி னெருப்புறு வனங்க னன்னார்**
**செஞ்சிலைக் கரத்தர் மாதர் புலவிகள் திருத்திச் [2]சேந்த**
**குஞ்சியர் [3]சூழ நின்ற மைந்தர்தங் [4]குழாங்கள் கண்டார்.**

(இ - ள்.) வெம் சுடர் உருவிற்று அன்ன மேனியர் - வெம்மையுள்ள சூரியன் வடிவமெடுத்து (இவ்வுலகத்திலே) பொருந்தினுலொத்த மிக்கவொளியையுடைய உடம்பையுடையவர்களும், வேண்டிற்று ஈயும் நெஞ்சினர் - (வேண்டுவோர்) வேண்டும்பொருள்களைத் தருகிற (அருளோடுகூடிய) மனமுடையவர்களும், ஈசன் கண்ணின் நெருப்பு உறு அனங்கன் அன்னார் - சிவபிரானது நெற்றிக்கண்ணின் நெருப்புக்கு இலக்காகி எரிபட்டு அங்கத்தையிழவாமல் (தனது) இயற்கைவடிவத்தோடுகூடியுள்ள மன்மதனை (அழகில்) ஒத்தவர்களும், செம் சிலை கரத்தர் - வில்லையேந்திய சிவந்த கையையுடையவர்களும், மாதர் புலவிகள் திருத்தி சேந்த குஞ்சியர் - மகளிரது ஊடல்களைத் தணித்து (அதனுற்) சிவந்த முடியையுடையவர்களு மாகிய, சூழ நின்ற மைந்தர்தம் குழாங்கள் - சுற்றுப்பக்கங்களிற் பொருந்தியுள்ள யௌவனபுருஷர்களது கூட்டங்களை, கண்டார்—; (எ - று.)

கூடும்பொழுதுதோறும் அவ்வின்பஞ் சிறத்தற்பொருட்டு ஊடுதலால், 'புலவிகள்' எனப் பன்மையாற் கூறினர். ஈசன்கண்ணினெருப்புறுவனங்கன் - இல்பொருளுவமை. மாதர்புலவிகள் திருத்திச் சேந்த குஞ்சியரென்றது - ஸம்போககாலத்தில் மாதர்கள் கொண்ட ஊடலைத் தீர்க்கும்பொருட்டு மைந்தர்கள் அவர்களது அடிகளிலே தமதுமுடிபடும்படி விழுந்து வணங்க அப்பொழுது அவர்கள்காலிலணியப்பட்டுள்ள செம்பஞ்சுக்குழம்பு இவர்களது தலைமயிரிலே படுதலால்: கலவிவேளையில் மாதர்க்கு இதஞ்செய்வதே முக்கிய மென்றும், மற்றவேளையில் ஒருவர்க்கொருவர் செய்யும் மரியாதை அப்பொழுது வேண்டுவதன் றென்றும் நூற்கொள்கை; இங்ஙனம் ஊடல்தணிக்க வணங்குவதைப் பெரிய காப்பியங்களிலும் காண்க. குஞ்சி - ஆண்மயிர். வேண்டின் தீயும் நெஞ்சினர் எனப் பிரித்து, காமவேட்கை கொண்டால் அப்பொழுது அதனுல் எரிகின்ற மனத்தை யுடையவர்கள் என்று உரைப்பாரு முளர். பி - ம்—[1]சின முருவிற் றென்னும். [2]தேய்ந்த. [3]சுழலாநின்ற. [4]குழாமும். (௨0)

௨௧—மகளிர் பூக்கொய்துவிளையாடுஞ் சோலைகளின் காட்சி.

**பாகொக் குஞ்சொற் பைங்கிளி யோடும் பலபேசி**
**மாகத் தும்பர் மங்கையர் நாண மலர்கொய்யுங்**

தோகைக் கொம்பி னன்னவர்க் கன்ன நடைதோற்றுப்
போகக் [1]கண்டு வண்டின மார்க்கும் பொழில்கண்டார்.

(இ - ள்.) பாகு ஒக்கும் - சருக்கரைப்பாகையொத்து இனிய, சொல் பல - பலசொற்களை, பைங் கிளியோடும் - பச்சைக்கிளிகளுடனே, பேசி - பேசிக்கொண்டு, மாகத்து உம்பர் மங்கையர் நாண - பெரிய ஆகாயத்தின்மீதுள்ள தெய்வப்பெண்களெல்லாரும் (தமதுவடிவழகுக்குத்தோற்று) வெள்கும்படி, மலர் கொய்யும் - பூக்களைப் பறிக்கின்ற, தோகை கொம்பின் அன்னவர்க்கு - (சாயலில்) மயிலையும் (மெல்லியஉருவத்திற்) பூங்கொம்பையும் ஒத்த மாதர்களுக்கு, அன்னம் நடை தோற்று போக - நடையழகிலே அன்னம் (ஒப்பாகாமல்) தோல்வியடைந்து பின்செல்ல, கண்டு வண்டு இனம் ஆர்க்கும் - (அதனைப்) பார்த்து வண்டுகளின் கூட்டம் ஆரவாரஞ்செய்தற் கிடமான, பொழில்-சோலைகளை, கண்டார்—; (எ - று.)

உயர்ந்தவர் வெல்லவும் இழிந்தவர் தோற்கவுங் கண்ட மத்தியஸ்தர் வென்றவர்க்கு மகிழ்ச்சியும் தோற்றவர்க்கு அவமதிப்பும் உண்டாம்படி ஆரவாரஞ்செய்த லியல் பாதலால், இயற்கையிற் பேரொலிசெய்கின்ற வண்டுகளை அன்னம் மகளிர்நடைக்குத்தோற்றுப் போனதற்காக ஆரவாரித்தன வெனக் குறித்தார். கொம்பின் - இன்சாரியைநிற்க, இரண்டனுருபுதொக்கது. தோகைக் கொம்பினன்னவர் - தோகையையுடைய கொம்பை யொத்தவ ரெனவு முரைக்கலாம்; கூந்தலையுடைய மாதர்க்கு உவமை. இனி, இராமன்முதலிய மூவரும் பூக்கொய்யும் மகளிர்க்கு அன்னம் நடைதோற்றுப் போதலைக் கண்டு அச்சோலையையுங் கண்டார்களென்றும் உரைத்தல்கூடும். இக்கிள்ளைகள் இம்மாதரிடம் இன்சொற்பயில வந்தன. பி-ம்— [1] கண்டே.

௨௨.—சனகன் அரண்மனைமதிலைச் சூழ்ந்துள்ள அகழியைக் காணுதல்.

உம்பர்க் கேயும் மாளிகை யொளி நிழல்பாய
விம்பர்த் தோன்றுந் [1]நாகர்த நாட்டி னெழில் காட்டிப்
பம்பிப் பொங்குங் கங்கையி னாழ்ந்த படைமன்ன
னம்பொற் கோயிற் பொன்மதில் சுற்றும் மகழ்கண்டார்.

(இ - ள்.) உம்பர்க்கு - (இந்திராதி) தேவர்களுக்கு, ஏயும்-(தங்குதற்கிடமாகப்) பொருந்திய, மாளிகை - பெருவீடுகளின், ஒளி - வரிசையினது, நிழல் - சாயை, பாய - (தன்னிடத்தே)படியும்படி, இம்பர் தோன்றும் நாகர் தம் நாட்டின் எழில் காட்டி - இவ்விடத்தே காணப்படுகிற தேவலோகத்தினது அழகை (த்தன்னிடத்தே) காண்பித்து, பம்பி பொங்கும் கங்கையின் ஆழ்ந்த-(அலைகள்) மிகுந்து மேலே (நீர்) பொங்குகிற கங்காநதிபோல ஆழமாகவுள்ள, படை மன்னன் அம் பொன் கோயில் பொன் மதில் சுற்றும் அகழ் - சேனைகளையுடைய சனகராசனது அழகிய பொன்மயமான அரண்மனையின் சுற்றிலுமுள்ள பொன்னினாலாகிய அகமதிலைச் சூழ்ந்துள்ள அகழியை, கண்டார்—; (எ - று)

மிகவுமழகிய பொன்மயமான பெரியவீடுகளின் வரிசைகளோடு கூடிய அரண்மனையைச் சூழ்ந்துள்ள அகழி, பொன்மயமான அமராவதிபட்டணத்தினது பிரதிபிம்பத்தைத் தனது நடுவிலே செவ்விதாக விளங்கக் காட்டுவதொரு பெரிய நீர்நிலையை யொக்குமென்பது, முதலிரண்டடிக்குக்கருத்து; இதனை "குடவளைக்குலம் வயிறுளை ந் தினமணி கொழிக்கும், நடுவில் வானக ருருவுகாட் டியதுபோன்ம் மதில்சூழ், கடிகொண் மாநக ரந்நிழல் கதுவிடா தகன்ற, புடைகொ ணீர்நக ருடுத்தலை பொங்குபே ரகழி" என்பதனோடு ஒப்பிடுக. இனி, தெளிவுமிகுதியால் தேவலோகத்தினிழல் தன்னிடத்தே காணப்பட, அத்தெளிவோடுகூடிய ஆழமிகுதியால் சர்ப்பசாதியாரது பாதாளலோகத்தின் அழகையும் இங்கே காணும்படி காட்டி யென்றும் பொருள்கொள்ளலாம். நாகர் - தேவரும் உரகரும். படை - ஆயுதமுமாம். ஏயும்மாளிகை, தோன்றுநாகர், சுற்றும் மகழ் - விரித்தல்விகாரங்கள். கங்கையி னாழ்ந்த என்பதற்கு - கங்காநதியினீர் பாய்தலால் ஆழமாகவுள்ள வென்றுங் கொள்ளலாம். நாகர்தநாட்டினெழில்காட்டி அம்பொற்கோயிற் பொன்மதில்சுற்றும் அகழ் என இயைத்துவிட்டு, மூன்றாமடியில் - கங்கை வெள்ளம்போல ஆழ்ந்துள்ள பெருஞ்சேனை யெனினும் அமையும். பி-ம்:—[1]நாகநன்னாட்டின். (௨௨)

**௨௩.—அரண்மனையிலுள்ள கன்னிமாடத்தைக் காணுதல்.**

**பொன்னின் சோதி போதினி னாற்றம் பொலிவேபோற்**
**றென்னுண் [1]டேனிற் றீஞ்சுவை செஞ்சொற் கவியின்பங்**
**கன்னிம் மாடத் தும்பரின் மாடே [2]கழிபேடோ**
**டன்னம் மாடு முன்றுறை கண்டங் கயனின்றார்.**

(இ - ள்.) பொன்னின் சோதி - பொன்னும் (அதனிடத்து) ஒளியும், போதினின் நாற்றம் பொலிவு - பூவும் (அதனிடத்து) நறுமணமும் அழகும், தென் உண் தேனின் தீம் சுவை-வண்டுகளுண்ணும்படியான தேனும் (அதனிடத்து) இனிய உருசியும், செம் சொல் கவி இன்பம் - திருத்தமான சொற்களினாலமைந்த செய்யுளும் (அதனிடத்து) இரசமும், போல்-(என்னுமிவை)போல, (ஒன்றையொன்று விட்டுப்பிரியாமல்), கழி பேடோடு அன்னம் ஆடும் - (அன்பிலே) மிகுந்த பெட்டையன்னங்களுடனே ஆணன்னங்கள் கூடிவிளையாடப்பெற்ற, கன்னி மாடத்து உம்பரின்மாடு முன்துறை- கன்னியாமாடத்தினது மேலிடத்தின் முன்பக்கத்தை, கண்டு - பார்த்து, அங்கு அயல் நின்றார் - (மூவரும்) அவ்விடத்தருகிற் சென்றுநின்றார்கள்.

இவ்வன்னங்கள் அக்கன்னிகாமடத்துச் சீதாபிராட்டியுடன் விளையாடுவனபோலும். தென் - தேன்என்பதன் குறுக்கல்விகாரம். இனி, தென் உண் - அழகைக் கொண்ட என்றுமாம். பேடு - பேடையென்பதன் விகாரம்; இது பறவைக்குரியபெண்பெயர். இனி, இக்கவிக்கு - பொன்னில் ஒளி (பொலிதல்) போலவும் மலரில் நறுமணம் பொலிதல்போலவும் தேனில் இன்சுவை (பொலிதல்) போலவும் செஞ்சொற்கவிகளில் இன்பம் (பொலிதல்) போலவும் (ஒளிமுதலியவற்றோடு விளங்குபவளாகிய) கன்னியாமாடத்

தின்மீது தோழிப்பெண்களுடனே அன்னம்போன்ற சீதை விளையாடுகின்ற முன்னிடத்தைப் பார்த்து அவ்விடத்திற்குப் பக்கத்திலே நின்றார்கள் என உரைத்தலும் பொருந்தும்: "பொன்னின்சோதி பூவின்வெறிசந்துபொதிசீதம், மின்னினிழலன்னவள்" என்பர் மேலும். "கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றறியு மைம்புலனு, மொண்டொடியாள் கண்ணேயுள" என்பவாதலால், ஊற்றை உபலக்கணத்தாற் கொள்ளலாம். பி - ம்:—[1] தேறல். [2] களி. (உங)

உச.—சீதாபிராட்டியாரைப் பற்றிய கவிக்கூற்று.

செப்புங் காலைச் செங்கம லத்தோன் முதல்யாரு
மெப்பெண் பாலுங் கொண்டுவ மிப்போ ருவமிக்கு
மப்பெண் டானே யாயின போதிங் கயல்வேறோ
ரொப்பெங் கேகொண் [1]டெவ்வகை நாடி யுரைசெய்வேம்.

(இ - ள்) செப்பும் காலை - (அச்சானகிப்பிராட்டிக்கு உவமை) சொல்லப்புகுமிடத்து, செம் கமலத்தோன் முதல் யார்உம் எ பெண்பால்உம் கொண்டு உவமிப்போர் உவமிக்கும் அப்பெண் தான்ஏ ஆயின போது - சிவந்த தாமரைமலரில் வாழ்கிற பிரமதேவன் முதல் (சாதாரணமனிதரீறாக) உள்ளவரெவரும் எந்தப்பெண்ணுக்கும் உவமைகொண்டு சொல்ல வேண்டியவர்கள் உவமையாக எடுத்துச்சொல்லுகிற அந்த(ப்பெண்களுட் சிறந்த) திருமகள்தானே (சீதையாக இவ்விடம்) வந்துள்ளபொழுது [வந்திருத்தலாலென்றபடி], இங்கு அயல் வேறு ஓர் ஒப்பு எங்கே நாடி எ வகை கொண்டு உரைசெய்வேம் - இவ்விடத்து அத்திருமகளைவிட வேறொரு உவமைப்பொருளை எவ்விடத்திலேதேடி எவ்வாறு எடுத்துச்சொல்வோம்?

எல்லாப்பெண்களுக்கும் யாவராலும் உபமானமாகவெடுத்துச்சொல்லப்படுகிறஇலக்குமிதானே இங்குச்சீதையாயவதரித்திருத்தலால், இவளுக்கு அவ்விலக்குமியையொழிய வேறுஉவமையெடுத்துச்சொல்லமுடியாதென்பதாம். 'உரைசெய்வேம்' - கவிகளுக்குரியபன்மை. தெய்வமகளிர் தொடக்கமாகிய எல்லாரும் அடங்குதற்கு, 'எப்பெண்பாலும்' என்றார். பி - ம்:—[1] ஏவரை. (உச)

உரு.—இதுமுதல் பத்துப்பாடல்கள்-சீதையின் வருணனை.

† உமையா ளொக்கும் மங்கைய ருச்சிக் கரம்வைக்குங்
கமையாண் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணா
ரிமையா நாட்டம் பெற்றில மென்றா ரிருகண்ணா
லமையா தென்றா ரந்தர வானத் தவரெல்லாம்.

(இ - ள்.) உமையாள் ஒக்கும் மங்கையர் - பார்வதீதேவிமுதலிய சிறப்புடையமாதர்களும், உச்சி கரம் வைக்கும் - (தங்கள்] தலைமேற் கைகளைவைத்துக்கூப்பி அஞ்சலிசெய்தற்கு உரிய கமையாள் - பொறுமைமுத

† "பொன் சேர்மென்கால்" என்று தொடங்கும் ௩௧ - ஆம் பாடல் சிலபிரதிகளில் இருபத்தைந்தாவது பாடலாகவுள்ளது.

விய நற்குணங்களையுடைய சானகிப்பிராட்டியினது, மேனி - திருமேனி யழகை, கண்டவர் - பார்த்தவரெவரும், காட்சி கரை காணார் - அவ்வழகின் எல்லையை முழுவதுங் காண முடியாதவர்களானார்: (அவர்களுள் நிலவுலகத் துள்ள மானிடர்களெல்லாரும்), இமையா நாட்டம் பெற்றிலம் என்றார் - (இதனை முழுவதும் பார்ப்பதற்குத் தேவர்கள்போல நாம்) இமைமூடப் பெறாதகண்களைப் பெற்றோமில்லையே என்று இரங்கினார்கள்;அந்தரம் வான த்தவர் எல்லாம் - (இமையாநாட்டம்பெற்றுள்ள) மேலுலகத்தில் வாழுந் தேவர்களெல்லாருமோ வென்றால், இரு கண்ணால் அமையாது என்றார் - (இவ்வழகைப்பார்க்க) நமது இரண்டுகண்களால் முடியாது என்று குறை கூறுபவரானார்கள்; (எ - று.)

நிலவுலகத்தவர் சீதையினழகைக் காணுமாறு இமையாநாட்டம் பெற் றோமில்லையே யென்று வருந்த, வானத்தவர் எமக்கு இமையாநாட்டம்இருந் தும் அவை யிரண்டேயாயினமையால் இவளழகை முற்றிலும்ஒருங்கே பார்க்கப் போதா வென்று குறையுற்றன ரென்க. "ஆயிரங்கண்ணிலாதார்ச் கழகுகாண்பரிய நங்கை", "கண்டு கண்ணோராக் காமர்காரிகை" என்றார் பிறரும். சீதையைக் காணும்போது அவளிடத்துப் பக்தி தோன்றுதலால் மங்கையர் கைகூப்புவ ரென்க. ஒக்கும் - ஒப்பில்போலி; உவமவுருபாகவே கொண்டு உரைப்பாரு முளர். உச்சிக்கரம்வைத்தல் - திரியங்கநமஸ்காரம். கமை - க்ஷமா: வடமொழித்திரிபு. கரை என்றதற்கு ஏற்ப, காட்சியைக் கட லென்க. வானத்து அவர் என்றும் பிரிக்கலாம். (௨௭)

௨௮. வென்றம் மானைத் தாரயில் வேலுங் கொலைவாளும்
பின்றம் [1]மானப் பேர்கய லஞ்சப் பிறழ்கண்ணாள்
[2]குன்றம் மாடக் கோவி னளிக்குங் கடலன்றி
[3]யன்றம் மாடத் தும்ப ரளிக்கும் மமுதன்னாள்.

(இ - ள்.) அம் மானை வென்று - (புலவர்கள் உவமை கூறுகின்ற) அழ கிய மானை ப் பார்வையிலே) சயித்து, தார் அயில் வேல்உம் கொலைவாள்உம் பின்ற-வெற்றிமாலையையணிந்த கூர்மையையுடைய வேலாயுதமும் கொலைத் தொழிலிற்பயின்ற வாளாயுதமும் (ஒப்பாகாமற்) பின்னிடும்படியாகவும், மானம் பேர் கயல் அஞ்ச - (பிறமகளிர் கண்களுக்கெல்லாம் உவமையாகக் கூறப்படுஞ்) சிறப்பையுடைய பெரிய கயல்மீன்களும் (ஒப்பாக முன்னிற்க மாட்டாமல்) அஞ்சிப் பின்னிடும்படியாகவும், பிறழ் - பிறழ்கின்ற, கண் ணாள்-கண்களையுடைய சானகிப்பிராட்டி,—குன்றம் ஆட கோவின் அளிக் கும் கடல் அன்றி அன்று அ மாடத்து உம்பர் அளிக்கும் அமுது அன் னாள் - (மந்தர)மலை (தன்னிடத்தே)சுழலக் கோவென்னும்ஆரவாரத்தோடு (அமுதத்தை) ஈன்ற கடலினு லல்லாமல் அக்காலத்திலே அந்தக்கன்னியா மாடத்தினது மேலிடத்தாற் பெறப்பட்டதொரு அமிர்தத்தை ஒத்தவள்.

கடல் தான் ஒன்றினாற் கடையப்பட்டு மிகநலிந்து பெற்ற அமுதம் இந் தச் சீதைக்கு ஒப்பாகாது; மாடத்தின்மேலிடம் ஒருசிறந்த தேவாமிர் தத்தை எளிதிற்பெற்றாற் போல்பவள் இவ ளென்பது, கருத்து. பின்

றம்மான், குன்றம்மாட - விரித்தல். தார் அயில் என்னும் அடைமொழிகளை வாளோடும், கொலையென்னும்அடைமொழியை வேலோடுங் கூட்டுக. கோ - ஒலிக்குறிப்பு. முதலடியில், அ மானை என்று பிரித்து, அகரச்சுட்டு-பிரசித்திபற்றி வந்த தெனினுமாம். கோவின் குன்றம் ஆட கடல் அளிக்கும் அமுது அன்றி - திருமாலால் மந்தரமலை (அழுந்தாமல்) மத்தாகச் சுழல அக்காலத்துப் பாற்கடல் அளித்த அமுதமல்லாமல் என்றுமாம். பி - ம்:— [1] மானில். [2] அன்றவ்வானத்தும்பரளிக்கும் மமுதன்றி, குன்றம்மாடக்கோவின ளிக்கும்மமுதன்றி. [3] இன்றிம்மாடத்திம்பரளிக்கும். (உசு)

**உஎ.*பெருந்தே ரல்குற் பெண்ணிவ ளொப்பா ளொருபெண்ணைத்**
**தருந்தா [1]னென்றா ளுன்முக னின்னுந் தரலாமே**
**யருந்தா வந்தத் தேவ ரிரந்தா லமிர்தென்னும்**
**மருந்தே யல்லா தென்னினி நல்கும் மணியாழி.**

(இ - ள்.) பெரு தேர் அல்குல் பெண் இவள் ஒப்பாள் ஒரு பெண்ணை த(ா)ரும் என்றால் - 'பெரிய தேர்த்தட்டினைப்போன்ற அல்குலையுடைய இப்பெண்ணைப்போல்பவ ளொருபெண்ணைப் படைத்துக்கொடும்' என்று (தேவர் முதலிய யாவரும் வந்து) வேண்டினாலும், நான்முகன் இன்னும் தரல் ஆம் ஏ - (படைத்தற்கடவுளாகிய)நான்குதிசையிலும் நான்குமுகங்களை யுடைய பிரமதேவனால் தான் இனியாகிலும் படைத்தல்கூடுமோ?[கூடாது]; அருந்தா அந்த தேவர் இரந்தால் - (அமிர்தத்தை யொழிய வேறொன்றை) உண்ணாத அப்படிப்பட்ட சிறப்பையுடைய தேவர்கள் (வந்து) பிரார்த்தித்தாலும், மணி ஆழி-இரத்தினங்களுக்கு ஆகரமான கடல், அமிர்து என்னும் மருந்து ஏ அல்லாது இனி என் நல்கும் - அமிர்தமென்கிற திவ்வியௌஷதத்தையே மீண்டுங் கொடுப்பதல்லாமல் வேறெதைக் கொடுக்கவல்லது? [ஒன்றையுங் கொடுக்கவல்லதன்று]; (எ - று.)

அமுதத்திற் சிறந்த பொருளைக் கடலால் தரமுடியாதவாறு போல,இவளைப்போற் சிறந்தமங்கையைப் பிரமனாற் படைத்தலியலா தென்று எடுத்துக் காட்டுவமையணிபடக் கருத்துக் காண்க. இதனால், சீதாபிராட்டி பிரமனாற் படைக்கத்தக்கவளு மல்லள்: க்ஷீரசமுத்திரராசனிடத்தினின்று தோன்றத்தக்கவளுமல்லள்: அயோநிஜை என்பது குறிப்பிக்கப்பட்டது. "சமைத்தவரை யின்மை மறைதானு மெனலாமச், சுமைத்திரண் முலைத் தெரிவை ஆய்வடிவு கண்டார்" என்பர் மேலும். நான்முகன் என்னும்பெயரைப் பண்புத்தொகையாகக்கொள்ளாமல் வினைத்தொகையாகக் கொண்டு, நான்முகன் என்பதற்கு-(தன்னைவந்தடைந்து வேண்டுவாரது வேண்டுகோளைமுடிக்கும் வன்மையில்லாமையாலுண்டானஅவமானத்தால்) தொங்குதலடைந்தமுகத்தையுடையவன்என்றுந்தொனிப்பொருளுரைப்பர். தரலாமே, ஏ-எதிர்மறை. 'இன்னும்'என்றதனால்,இதுவரையிலும் படைக்கப் படவில்லையென்பது உணர்த்தப்பட்டது; 'இன்னும்'-இவளது வடிவழகைக் கண்டபின்பாயினும் என்றுமாம். தரும்என்பதைப்படர்க்கைவினைமுற்றாகக் கொண்டு, இப்பிராட்டியை யொத்த பெண்ணைப் பிரமன் தான் படைக்க

வல்லனென்று கூறுவார் சிலருளராயின் அவன் இன்னும் படைக்கலாமே யென்று உரைத்து, பிரமசிருஷ்டியில் இவளையொத்த பெண் எங்குங் காணப்படாமையால் பிரமன் இவளைப்போன்ற பெண்ணைப் படைக்குந்திற முடையவனல்லனென்பதுபோதரு மெனக் கொள்ளினுமாம். அருந்தாவந்து அத்தேவர் இரந்தால் எனப் பிரித்து - அந்தத்தேவர்கள் (முன்பெற்ற அமிர்தம் முழுவதையும்) நுகர்ந்துவிட்டுவந்து மீண்டும் யாசித்தா லென்றும், அந்தத்தேவர்கள் (தமக்குஅரிதிற்கிடைத்த அமுதத்தைக்கூட) உண்ணாமல் அவாவோடுவந்து வேண்டினால் என்றும், அத்தேவர்கள் (எதையும்)உண்ணாமல்வந்து தவஞ்செய்துநின்று பிரார்த்தித்தால் என்றும் பொருள்கள் கொள்ளலாம். பாற்கடல் பசிமாத்திரத்தையடக்கும் மருந்தையே தரவல்ல தல்லாமல், அவாவையடக்கித் திருப்திசெய்யவல்ல பொருளைத் தரவல்ல தன்றென்க. 'இனி' என்றது, முன் திருமகளைத் தந்துவிட்டதைக் கருதி.
பி - ம்:—[1] இன்னநான்முக னென்றால்.　　(௨௭)

௨௮. அனையாண் மேனி கண்டபி னண்டத் தரசாளும்
[1]வினையோர் மேவும் மேனகை யாதிம் மிளிர்வேற்கண்
ணினையோ ருள்ளத் தின்னலி னோர்தம் முகமென்னும்
பனிதோய் வானின் வெண்மதிக் கென்றும் பகலன்றே.

(இ - ள்.) அண்டத்து அரசு ஆளும் வினையோர் மேவும் மேனகை ஆதி மிளிர் வேல் கண் இனையோர் - விண்ணுலகத்தில் அரசாட்சிசெய்கிற நல்வினையையுடைய இந்திராதிதேவர்கள் விரும்பித்தழுவுகிற மேனகைமுதலிய ஒளிசெய்கிற வேலாயுதம்போன்ற கண்களையுடைய இத்தெய்வப்பெண்கள், அனையாள் மேனி கண்ட பின் - அந்தச்சீதாபிராட்டியினது (பெருஞ்சிறப்பையுடைய) திருமேனியழகைப் பார்த்தபின்பு, உள்ளத்து இன்னலினோர் - (தத்தம்அழகெல்லாங்கூடி அவளது அழகொன்றுக்கு ஈடாகாதென்று அறிந்து) மனத்தில்துன்பத்தையுடையவர்களானார்கள்; தம் முகம் என்னும்-அந்தமேனகைமுதலியமாதரின் முகமண்டலமென்கிற, பனி தோய் வானின் வெண் மதிக்கு-குளிர்ச்சிநிறைந்த ஆகாயத்தில்விளங்குகிற வெண்ணிறமுள்ள சந்திரமண்டலத்துக்கு, என்றும் பகல் அன்றே - (பகல் இரவு என்கின்ற) எப்பொழுதும் பகற்பொழுதாகவேயிருக்கும்; (எ - று.)

மேனகைமுதலிய தேவமாதர் சீதையின் மேனியழகைக் கண்டு 'நம்மழகு இதற்கு ஈடாகாது' என்று மனம் அழுங்க, அதனால் அவர்கள்முகம் பகற்சந்திரன்போல எப்போதும் ஒளி மழுங்கியிருக்கு மென்பதாம். பி-ம்:—
[1] வினையோன்.　　(௨௮)

௨௯. மலர்மே னின்றிம் மங்கையிவ் வையத் திடையைகப்
பலகா லுந்தம் மெய்ந்நனி வாடும் படிநோற்றா
ரலகோ வில்லா வந்தண ரோநல் லறமேயோ
வுலகோ வானோ வும்பர்கோ லோவீ துணரேமால்.

(இ - ள்.) இ மங்கை - இத்தன்மைய பிராட்டி, மலர் மேல் நின்று - செந்தாமரைமலரின் மேலிடத்தினின்று (இறங்கி), இ வையத்திடை வைக - இப்பூலோகத்திலே தங்கியிருக்கும்பொருட்டு, பல காலும் - அநேககாலமாய், தம் மெய் நனி வாடும் படி - தத்தமது உடம்பு (விரதங்களால்) மிகவும் வாட்டமடையும்படி, நோற்றார் - (அரிய பெரிய) தவஞ் செய்தவர்கள், அலகு இல்லா அந்தணர் ஓ - அளவிறந்த பிராமணர்கள்தாமோ? நல் அறம் ஏ ஓ - நல்லதருமதேவதைதானோ? உலகு ஓ - இந்நிலவுலகமேயோ? வான் ஓ - விண்ணுலகந்தானோ? உம்பர் கொல் ஓ - எல்லாத்தேவர்களுமேயோ? ஈது உணரேம் - இதன் உண்மையை அறிகிறோமில்லை; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

சீதாபிராட்டி தான் சிறையிருந்து தேவர் அந்தணர்முதலியோர்க்குப் பேரிடரிழைத்துவந்த இராவணாதியரைச்சங்கரிக்கும்படி செய்வதனால், பூதேவராகிய வேதியர் முதலியோரால் வருந்திச்செய்யப்பட்ட தவத்தின் பயனாலேயே அப்பிராட்டி பூமியில் வாழ்கிறாளென்று சொல்லும்படியுள்ளதென்பதுகருத்து. ஈதுணரேம் - கவிக்கூற்று. 'அலகோ' என்பதில் ஓவும், 'உம்பர்கொல்' என்பதில் கொல்லும் - அசைநிலை. ஏ - பிரிநிலை. (உகூ)

ரு0. [1]தன்னே ரில்லா மங்கையர் செங்கைத் [2]தளிர்மானே
யன்னே தேனே யாரமிர் தேயென் றடி[3]போற்றி
முன்னே முன்னே மொய்ம்மலர் தூவி முறை[4]சாரப்
பொன்னே சூழும் பூவி னொதுங்கிப் பொலிகின்றாள்.

(இ - ள்.) தன் நேர் இல்லா மங்கையர் - தன்தனக்குத் தனித்தனி வேறு உவமைபெறாத கட்டழகையுடைய தோழிமார்பலர், 'செம் கை தளிர் மானே - சிவந்த தளிர்போலுங் கைகளையுடைய மான்போன்றவளே! அன்னே - தாயே! தேனே - (இனிமையில்) தேன்போல்பவளே! ஆர் அமிர்தே - (பெறுதற்கு) அரிய அமிர்தம்போல்பவளே!' என்று - என்று விளித்து, அடி போற்றி - (மெத்தென்றிருத்தலாற்)பாதங்களைப் பேணி, முன் ஏ முன் ஏ மொய் மலர் தூவி முறை சார - (நடந்துசெல்லவேண்டிய) முன்னிடங்களிலெல்லாம் நெருங்கின பூக்களைக் கொண்டுவந்து சொரிந்து முறைமையாக நிரம்பிநிற்க, (அம்மலர்களின்மேல்), பொன் ஏ சூழும் பூவின் - மகரந்தப்பொடிநிரம்பியுள்ள (தூவிய)அந்தப்பூவிலே, ஒதுங்கி - நடந்து, (பிராட்டி), பொலிகின்றாள் - விளங்குகிறாள்; (எ - று.)

தோழிமார் அடிபோற்றித் தூவிச்சார, அவர்கள்தூவிய மலர்களில் பாதம் வைத்து நடக்கின்றாளெனப் பிராட்டியின் மென்மை கூறியவாறு. பொன் - மகரந்தத்துக்கு, உவமவாகுபெயர். "கரும்பேதேனே யமிர்தே காமர்மணியாழே, யரும்பார்மலர்மேலணங்கே மழலையன்னம்மே, சுரும்பார் சோலைமயிலேகுயிலே சுடர்வீசும், பெரும்பூண் மன்னன்பாவாய் பூவாய் பிணைமானே," "அம்மெல்லனிச்சம்மலருமன்னத்தூவியும், வெம்மையா மென்றஞ்சி மெல்லமிதியாத, பொம்மென்னிலவப்பூம்போதன நின்னடி போற்றி, யிம்மென்கலையா ரிடுவென்றேத்தவொதுங்கினாள்" என்ற சிந்தா

மணிச்செய்யுளும். அவற்றினுரையும் இங்குக் காணத்தக்கன. அடிபோற்றி-திருவடிபரவியென்றுமாம். இனி, மொழிமாற்றுப்பொருள்கோளாக 'பொன்னே சூழும்பூவில்' என்பதைப் பூவே சூழும்பொன்னின்என்று அந்வயித்து-தாமரைமலரிலேவாழ்கிற இலக்குமிபோலஎனினுமாம். தன்னேரில்லா மங்கையர்'எனத் தோழிமாரைச் சிறப்பித்துக் கூறியதனால்,தலைமகளதுசிறப்புத் தானே விளங்கும் அன்னே - அன்னையென்பதன்விளி. "அனிச்சமு மன்னத் தின்றூவியுமாத, ரடிக்கு நெருஞ்சிப்பழம்"என்னுந் திருக்குறளின் கருத்தை இங்கே தெரிந்துகொள்க. முன்னே முன்னே - அடுக்கு, தொறுப்பொருளது. பி-ம்:—[1]தந்நேரில்லா. [2]தனிமானே. [3]போற்ற. [4]சாற்ற,சால. (ருO)

ருக. *பொன்சேர் [1]மென்காற் கிண்கிணி யாரம் புனையாரங்
கொன்சே ரல்குன் மேகலை [2]தாங்கிக் கொடியன்னார்
தன்[3]சேர் கோலத் தின்னெழில் காணச் சதகோடி
[4]மின்சே விக்க மின்னர செனனும் படிநின்றாள்.

(இ - ள்.) பொன் சேர் - பொன்னினாலாகிய, மென் கால் கிண்கிணி-மெல்லிய பாதங்களிலணிகிற சதங்கைகளையும், ஆரம் - இரத்தினமாலைகளையும், புனை ஆரம் - சூடுதற்குரிய பூமாலைகளையும், கொன் சேர் அல்குல் மேகலை - பெருமை பொருந்திய அல்குலின்மேலிடத்தணியும் மேகலையென்னும் ஆபரணத்தையும், தாங்கி-தரித்து,—கொடி அன்னார்-பூங்கொடியைப்போன்ற தோழிப்பெண்கள் பலர், தன் சேர் கோலத்து இன் எழில் காண-தன்னிடத்துப்பொருந்தியவடிவத்தினது இனியஅழகை விரும்பிப்பார்த்து நிற்க, (அவர்களின் இடையிலே), சதம்கோடி மின் சேவிக்க மின் அரசு என்னும்படி - நூறுகோடி மின்னல்கள் (சுற்றிலுமிருந்து வணங்கிக்) குற்றேவல் செய்ய (அவற்றினிடையே நின்றதொரு) மின்னலினரசென்று உவமை சொல்லும்படி, நின்றாள் - (பிராட்டி) நின்றிருந்தாள்; (எ - று.)

'தன்சேர்கோலத்தின்னெழில்காண' என்றதனால், பெண்டிரும் விரும்பும்படியான பிராட்டியின்பேரழகு பெறப்பட்டது. கிண்கிணி - கிண்கிண் என்று ஒலிப்பது; கிங்கிணீயென்னும் வடமொழித்திரிபென்பர். மேகலை - மாதரிடையணிகளுள் எண்கோவையணி. சதகோடி - வச்சிராயுதத்தின், மின் - ஒளி என்றுமாம். ஈற்றடி - இல்பொருளுவமை மின்னரசு - சிறந்த மின்னல். பி - ம்:—[1]அங்கால். [2]தாங்கும். [3]சேர்வொக்கத்தன். [4]மின்சேவிக்கும். (ருக)

ருஉ. கொல்லும் வேலுங் கூற்றமு மென்னும் மிவையெல்லாம்
வெல்லும் வெல்லும் [1]மென்னு மதர்க்கே விழிகொண்டாள்
சொல்லுந் தன்மைத் தன்றது குன்றுஞ் சுவருந்திண்
கல்லும் புல்லுங் கண்டுரு கப்பெண் கனிநின்றாள்.

(இ - ள்.) கொல்லும் - (யாவரையுங்) கொல்லவல்ல, வேல்உம்-வேலாயுதமும், கூற்றம்உம் - யமனும், என்னும் - என்று சொல்லப்படுகிற, இவை எல்லாம் - இவையெல்லாவற்றையும், வெல்லும் வெல்லும் - நன்றாகச் சயி

த்துவிடும், என்னும் அதற்கே - என்று சொல்லுகிற அச்சொல்லுக்காகவே, விழி கொண்டாள் - கண்களைக்கொண்ட அப்பிராட்டியினது, அது - அங்ஙனம்நின்றநிலைமை,—சொல்லும் தன்மைத்து அன்று-(எம்போலியரால்வருணித்துச்) சொல்லிமுடிக்குந் தன்மையுடையதன்று; (ஏனெனின்), பெண் கனி - பெண்ணுருக்கொண்ட கனிபோன்ற அப்பிராட்டி, குன்றுஉம் - மலைகளும், சுவர்உம் - சுவர்களும், திண் கல்உம் - வலிய கற்களும், புல்உம் - புல்லுகளும், (இப்படிப்பட்ட அசேதனங்களும்), கண்டு உருக - (தன் அழகைப்) பார்த்து உருக்கமடையும்படி, நின்றாள் —; எ - று.)

தாம் இருந்தவிடத்திலிருந்தபடியே காமநோயை யுண்டாக்கி ஆடவரை வருத்துதலால், ஒருவரிருக்குமிடத்துச் சென்று வருத்துந் தன்மையுள்ள வேலும் கூற்றமும் கண்ணுக்கு உவமையாகா வென்க. 'கொல்லும்'என்னும் அடைமொழியைக் கூற்றத்தோடுங் கூட்டுக. வெல்லும்வெல்லும் - அடுக்கு, துணிவுப்பொருளது. கண்டுஉருக - காணாதது காண்பதுபோலக் கூறப்பட்டது; ஒருவகைவழுவமைதி. திண்மையைக் குன்று சுவர்களுக்குங் கூட்டலாம். பி - ம்:—[1]என்ன மதர்க்கும். (ருஉ)

ருங. வெங்[1]களி விழிக்கொரு விழவு மாயவர்
கண்களிற் காணவே களிப்பு நல்கலான்
மங்கையர்க் கினியதோர் மருந்து மாயவ
ளெங்கணு யகற்கினி யாவ தாங்கொலோ.

(இ - ள்) வெம களி விழிக்கு ஒரு விழவுஉம் ஆயவர் - (பார்க்கும் ஆடவர்களது) விருப்பத்தோடுகூடியகளிப்பையுடைய கண்களுக்கு ஒரு சிறந்த திருவிழாவை யொத்து உற்சாகத்தையுண்டாக்குகின்ற (அழகுடைய) மங்கைமார்பலர், கண்களின் காண்எ - (தத்தமது) கண்களால் தன்னைப் பார்க்குந்தோறும், களிப்பு நல்கலால்-(அவர்களுக்கும் தான்) களிப்பைத்தருவதனால்,மங்கையர்க்கு இனியது ஓர் மருந்துஉம் ஆயவள்-(அப்)பெண்களுக்கெல்லாம் இனிப்பைத்தருவதொரு சிறந்த அமிர்தத்தைப்போன்ற பிராட்டி, இனி எங்கள் நாயகற்கு யாவது ஆம் கொல்ஒ - இனிமேல் (தன்னைக் காணப்போகிற) எங்கள்தலைவனான இராமபிரானுக்கு எத்தன்மைய பொருளாவளோ? (எ - று.)—இது, கவிக்கூற்று.

ஆடவர்கண்களுக்கெல்லாம் களிப்பைத் தருகின்ற பெண்களும் பிராட்டியின்அழகைக்கண்டு களிப்புறுகின்றார்க ளென்றால், புருஷோத்தமனாகிய ஸ்ரீராமபிரானுக்கு இவளழகு எத்தன்மையதாகுமோ?என்று கருத்து. "பெண்டிரு மாண்மை வெஃகிப் பேதுறு முலையினாள்" என்றாற்போலக் கூறினார். விழவும், மருந்தும், உம்மைகள் - உயர்வுசிறப்பு. விழவுமாய் அவர் கண்களிற் காண எனவும் பிரித்து உரைக்கலாம். பி - ம்:—[1]களியினுக்கு.

ருச. இழைகளுங் குழைகளு மின்ன முன்னமே
மழைபொரு கண்ணிணை மடந்தை மாரொடும்

[1]பழகிய வெனினுமிப் பாவை தோன்றலா
லழகெனு மவையுமோ ரழகு பெற்றவே.

(இ - ள்.) குழைகள்உம் - காதணிகளும், இழைகள்உம் - (மற்றைய ஆபரணங்களும், இன்ன-என்னுமிவை. முன்னம்ஏ - (இப்பிராட்டி அவதரிப்பதற்கு) முந்தியே, மழை பொரு கண் இணை மடந்தைமாரொடுஉம் பழகிய எனினும் - (குளிர்ச்சியால்) மழையையொத்த இரண்டுகண்களையுடைய (பல அழகிய) மகளிர்களுடனே பழகியவையாயிருந்தாலும், இ பாவை தோன்றலால் - இப்பிராட்டி அவதரித்ததனால், அழகு எனும் அவைஉம் ஓர் அழகு பெற்ற - (பிறர்க்கு) அழகைத்தருவனவென்று சொல்லப்படும் அவ்வணிகலன்களும் தாம் அழகைப் (புதுமையாகப்) பெற்றன; (எ - று.)

ஆபரணங்கள் பிறமகளிருடம்பிலெல்லாம் அணியப்பட்டு அவர்க்கு அழகைத் தரும்;அவை இவளுடம்பிலணியப்பட்டுத் தாம்அழகைப்பெற்றன வென்பது கருத்து. இதனால், பிராட்டியினது ஆபரணங்களுக்கு அழகுகொடுக்கும் பேரழகு அறிவிக்கப்பட்டது; "பூணுக் கழகளிக்கும் பொற்றொடி" என்றார் பிறரும்: 'ஆபரணங்களுக்கு அழகுகொடுக்கும் பெருமாள்' எனத் திருமாலுக்கு ஒருவிருது இருத்தலுங் காண்க. மின்ன என்றும் பிரிக்கலாம். பாவை - உவமவாகுபெயர்; சித்திரப்பதுமைபோ லழகியவள்; கண்மணிப்பாவைபோலரியவள்; கொல்லிப்பாவைபோல்பவள். [1]பழகியதெனினுமிப்பாவை தோன்றலால், அழகெனுமழகுள் என்றபாடத்துக்கு - அழகென்றுகொண்டாடப்படுகின்ற அவ்வழகும் குழைகள் முதலிய இப்படிப்பட்ட இழைகள்போலவே பாவைமாரொடும் பழகியதாயினும், தான் அவர்கட்கு அழகுசெய்ததேயன்றித் தான் அவரால் அழகுபெறவில்லை; இப்போது இப்பெண் தோன்றலால் தானும் ஓரழகு பெற்றதென்க.

நடு.—இதுமுதல் இருபத்தாறுபாடல்களால், இராமபிரானுஞ் சீதாதேவியும் ஒருவரையொருவர்கண்டு மிக்ககாதல்கொண்டதன்மை கூறப்படுகிறது.

எண்ணரு நலத்தினா ளிணைய ணின்றுழிக்
கண்ணொடு கண்ணிணை [1]கவ்வி யொன்றையொன்
றுண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
வண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்.

(இ - ள்.) எண் அரு நலத்தினாள் - (மனத்தினால்) நினைத்தற்குமரிதான அழகையுடைய பிராட்டி, இணையள் நின்ற உழி - இத்தன்மையளாய் நின்றபொழுது, கண்ணொடு கண் இணை கவ்வி - ஒருவர்கண்ணிணையோடு மற்றொருவர்கண்ணிணை பற்றி,ஒன்றை ஒன்று உண்ணஉம் - ஒன்றையொன்று கவர்ந்துஅனுபவிக்கவும், உணர்வுஉம்-இருவரறிவும், நிலைபெறாது-(தத்தமிடங்களில்) நிலைபெற்றிராமல், ஒன்றிட - (ஒன்றையொன்று கூடி) ஒற்றுமைப்படவும், அண்ணல்உம் நோக்கினான் அவள்உம் நோக்கினாள்-

இராமபிரானும் (பிராட்டியைப்) பார்த்தான், பிராட்டியும் (இராமனைப்) பார்த்தாள்; (எ - று)

இராமபிரான் கண் சீதைமீது விழ, அவள்கண் இராமபிரான்மீது விழ, அப்போது இருவர் மனவுணர்ச்சியும் ஒற்றுமைப்பட்டு ஒருதன்மைத்தான காதலைக் கொண்ட தென்க. பொதுநோக்கினால் உணர்வுஒற்றுமைப்பட்டமை, கூறப்பட்டது. 'எண்ணரு' என்றதனால், சொல்லுதற்குங் காண்டற்கும் அருமை கூறுமலே விளங்கும். முதலிரண்டடியிற் கூறியது - சட்சுப்பிரீதியென்றும், மூன்றாமடியிற்கூறியது - மஜஸ்ஸங்கமென்றும் வடமொழியாளர் கூறுவர். வில்லையிறுப்பதற்குமுன் சீதை இராமன் இவர்கள் ஒருவரையொருவர் கண்டதாக முதனூலிற் கூறப்படவில்லை; இது கம்பர் தமது கற்பனாசக்தியாற் கூறுமவற்றுள் ஒன்றாகு மென்க. பி-ம்:—[1]கௌவி. (௩௫)

௩௬. *நோக்கிய நோக்கெனு நுதிகொள் வேலிணை
யாக்கிய மதுகையான் றோளி னாழ்ந்தன
வீக்கிய கனைகழல் வீரன் செங்கணுந்
தாக்கணங் கனையவ டனத்திற் றைத்தவே.

(இ - ள்.) நோக்கிய நோக்கு எனும் - (அவ்வாறு பிராட்டி) பார்த்த பார்வை யென்கிற, நுதி கொள் வேல் இணை - கூர்மையைக் கொண்ட இரண்டு வேலாயுதங்கள், ஆக்கிய மதுகையான் தோளின் ஆழ்ந்தன - வளர்ந்த வலிமையையுடைய இராமனது புயங்களிலே அழுந்தின; வீக்கிய கனை கழல் வீரன் செம் கண்உம்-கட்டப்பட்ட ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய வீரனான இராமனது சிவந்த கண்களும், தாக்கு அணங்கு அனையவள் தனத்தில் தைத்த - மோகினியென்னும் பெண்தெய்வத்தை யொத்த பிராட்டியினது கொங்கைகளிலே மூழ்கின; (எ - று.)

இதனால், ஓராவிற்கு இருகோடு தோன்றினாற்போல ஒத்தகாமத்தராயின ரென்றவாறு: "கண்ணொடுகண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க ளென்னபயனுமில" என்ற குறள், கருதத்தக்கது. மகளிர்க்குத் தனம்போல ஆடவர்க்குத் தோள் வேட்கைவிளைக்குஞ் சிறந்தவுறுப்பாம். தாக்கணங்கு-வினைத்தொகை: காணும் ஆடவர்க்கு வேட்கையைவிளைத்து அதனால் அவரைத் தாக்குகிற தேவதை; இனி, இச்சொல்லுக்கு - இலக்குமியெனவும் பொருள் உரைப்பர். (௩௬)

௩௭. பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்
தொருவரை யொருவர்தம் முள்ள மீர்த்தலால்
வரிசிலை யண்ணலும் வாட்க ணங்கையு
மிருவரு மாறிப்புக் கிதய மெய்தினார்.

(இ - ள்.) பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து - (தம்முள் ஒருவரழகை ஒருவர்) அனுபவித்த கண்பார்வையென்கிற கயிற்றினாற் கட்டி, ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால் - ஒருவரை மற்றொருவரது மனம் இழுத்தலினால், வரி சிலை அண்ணல்உம் வாள் கண் நங்கைஉம் இரு

வரும் - கட்டமைந்த வில்லையுடைய ஆடவரிற்சிறந்த இராமனும் வாள் போலுங்கண்களையுடைய மகளிரிற்சிறந்தசீதையும் என்னும் இவ்விருவரும், மாறி புக்கு இதயம் எய்தினர் - மாறிப்புகுந்து (ஒருவர்)மனத்தை (யொருவர்) அடைந்தார்; (எ - று.)

தலைமகனுக்கு விற்படை கூறியதற்கு ஏற்ப, தலைமகளுக்கு வாட்படை கூறினார்போலும்: இங்ஙனம் இருதலையிலுஞ் சிறிதும் வேறுபாடுதோன்றாது கூறிவருவதனால், தம்பதிகளது ஒப்புமை பெறப்படும். (ந௭)

ந௮. மருங்கிலா நங்கையும் வசையி லையனு
[1]மொருங்கிய விரண்டுடற் குயிரொன் றாயினர்
கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினாற் பேசல் வேண்டுமோ.

(இ - ள்.) மருங்கு இலா நங்கைஉம் - இடையில்லாத [நுண்ணிய இடையையுடைய] சீதையும், வசை இல் ஐயன்உம் - குற்றமில்லாத இராமனும், (ஒருவர்மேலொருவர் கொண்ட மிக்க அன்பினால்), ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆயினர் - ஒற்றுமைப்பட்ட இரண்டு உடம்புகளுக்கு ஒருயிரென்னும்படியானார்கள்; கரு கடல் பள்ளியில் கலவி நீங்கி போய் பிரிந்தவர் கூடினால் பேசல்வேண்டும்ஓ - பெரிய திருப்பாற்கடலிலே ஆதிசேஷசயனத்திலே (ஒருவரோடொருவர்கூடியிருந்த)கூட்டம் நீங்கி(த்தனித்தனி) பிரிந்துபோனவர்கள் (மீண்டும் ஓரிடத்திற்) கூடினால் (அவர்களுக்கு உண்டாகுங் காதலைச்) சொல்லுதல் வேண்டுமோ? [வேண்டா, கூறாதே பெறப்படும் என்றபடி]; (எ - று)

இராமபிரானும் சீதையும் ஒருவரையொருவர் கண்டமாத்திரத்தில் இரண்டுடற்கு ஒருயிர் தோன்றினாற்போல மனவொற்றுமைப் பட்டார்களென்று முன்னடிகளிற் கூறியதை, பின்னடிகள் சமர்த்தித்து நிற்பது, தொடர்நிலைச்செய்யுட்குறிப்பணியாம். திருப்பாற்கடலிற் பள்ளியினின்று பிரிந்தவர் இப்போது ஒருவரையொருவர் காணநேர்ந்ததனால் இங்ஙனமாயின ரென்றவாறு. மருங்கிலா என்ற இடத்து, இன்மை-சிறுமைமேலது. கருங்கடல் - கருமை, பெருமைமேலது; இனி, கரிய கட லென்றுமாம்: திருப்பாற்கடல் வெளுத்த நிறத்த தாயினும் திருமாலினது திருமேனியின் நிழலீட்டாலே கறுத்த நிறத்த தாதலால், 'கருங்கடல்' என்றாரென்க; "நீலக் கடலு ணெடுங்காலங் கண்வளர்ந்தான்," "கருந்தண் மாகடற் கண்டுயின்றவன்," "நீலக் கடல்கடைந்தாய்" என்றார், ஆழ்வார்களும். ஒருங்கிய-இறந்தகாலப் பெயரெச்சம். பி - ம்:—[1] ஒருங்குற. (ந௮)

நகூ. அந்தமி லழகனை யணுகி லாமைபாற்
பைந்தொடி யோவியப் பாவை போன்றனள்
சிந்தையு நிறையுமெய்ந் நலனும் பின்செல
மைந்தனு முனியொடு மறையப் போயினன்.

(இ - ள்.) அந்தம் இல் அழகனை - எல்லையில்லாத அழகையுடைய இராமனை, அணுகிலாமையால் - (அப்பொழுது உடனே) தழுவப்பெறாத மனவருத்தத்தால், பைந்தொடி ஓவியம் பாவை போன்றனள் - பசும்பொன்னாலாகிய தொடியென்னும் வளையையுடைய பிராட்டி சித்திரப்பதுமை போல அசைவற்றுநின்றாள்; சிந்தைஉம் நிறைஉம் மெய் நலன்உம் பின் செல-(அவளது) மனத்தினினைப்பும் மனவுறுதியும் உடம்பினழகும் (தன்) பின்னே வரும்படி, மைந்தன்உம் முனியொடு மறைய போயினன் - இராமபிரானும் விசுவாமித்திரமுனிவன் பின்னேகண்மறையச்சென்றான்;(எ-று.)

சானகியின்மனம் இராமன் பின்னேயே சென்றதென்றும், இராமன் மறைந்துபோனதனால் மனத்துள்ளே அடக்கவேண்டியவைகளை அடக்கிவைக்கும் பெண்மைக்குணம் அவளிடத்து இல்லையாய்த் தன்மனக் காதலைஅவள்வெளிப்படுத்தத்தொடங்கிவிட்டாளென்றும்,இவ்வாறுண்டான காமவிகாரத்தால் அவளது மேனியழகுங் குறைவுபட்டதென்றும் மூன்றுமடிக்குக்கருத்து. ஸங்கல்பம்[ஒன்றைநினைத்தல்], லஜ்ஜாத்யாகம் [நாணுறுதல்],கார்ஶ்யம்[உடலிளைப்பு] என்ற மதனாவஸ்தைகள் கூறப்பட்டன.(ருக)

சுo. [1]பிறையெனு நுதலவள் பெண்மை யென்படு
நறைகம ழலங்கலா னயன கோசர
மறைதலு மனமெனு மத்த யானையி
னிறையெனு மங்குச நிமிர்ந்து போயதே.

(இ - ள்.) நறை கமழ் அலங்கலான் - நல்லவாசனைவீசுகிற பூமாலையையுடைய இராமபிரான், நயன கோசரம் மறைதலும் - (பிராட்டியின்) கண்ணின் பார்வைக்கு விஷயமாகுகை மறைந்தமாத்திரத்தில், மனம் எனும் மத்தம் யானையின் - (அவளது) மனமென்கிற மதம்பிடித்த யானையினது, நிறை எனும் அங்குசம் - உறுதிப்பாடென்கிற மாவெட்டி, நிமிர்ந்து போயது - நிமிர்ந்துபோயிற்று; (போகவே), பிறை எனும் நுதலவள் பெண்மை என் படும் - பிறைச்சந்திரனெனத்தக்க நெற்றியை யுடைய அவளது (நாணம்முதலிய) பெண்மைக்குணங்கள் என்ன நிலைமையை யடையும்? [அவையும் ஒழிந்தன வென்பதாம்]; (எ - று.)

பெண்குணங்கள்-நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலியன. பாகன் கண்ணுக்கு மறைந்தமாத்திரத்தில் மதம்பிடித்தபெருயானை தன் காதில் மாட்டியிழுத்துத் தன்னையடக்குகிற அங்குசத்தை நிமிரப்பண்ணித் தள்ளிவிட்டுத் தான் விரும்பினவழியே செல்லுதல்போலத் தனக்குரிய தலைவனை இராகவமூர்த்தி மறைபட்டமாத்திரத்திற் பிராட்டியின் மனம் தன்னையடக்கிவைக்கும்நிறையென்னும் உறுதிக்குணத்தையொழித்துத்தான்விரும்பிய வழியே சென்றதென்க. பின்னடிகள்-உருவகம். பி - ம்:—[1]பிறையன.

சுக. மாலுற வருதலு மனமு மெய்யுந்தன்
னூலுறு மருங்குல்போ லுடங்கு வாணெடுங்
காலுறு கண்வழிப் புகுந்த காதனோய்
பாலுறு பிரையெனப் பரந்த தெங்குமே.

(இ - ள்.) மால் - திருமாலினது திருவவதாரமாகிய இராமபிரான், உற வருதலும் - (எதிரிலே) பொருந்த வந்தருளினமாத்திரத்தில், மனம்உம் மெய்உம்-நெஞ்சமும் உடம்பும், நூல்உறு தன் மருங்குல்போல்-நூலிழையை யொத்த நுண்ணிய தனது இடைபோல, நுடங்குவாள்-தளரப்பெறுகின்றவளாகிய அந்தச்சீதாபிராட்டியினது, நெடு கால் உறு கண்வழி புகுந்த காதல் நோய் - நீண்ட வாய்க்காலை யொத்த கண்களின்வழியே உட்சென்ற காமநோயானது, பால் உறு பிரை என- பாலிற் பொருந்திய பிரைபோல, எங்கு உம் பரந்தது - (உடம்பு) முழுவதும் பரவிற்று; (எ - று.)

பிரை - பாலையுறைவிக்குஞ் சிறுமோர்த்துளி; அது, தான் பாலிலே முதலில் ஓரிடத்திற்சேர்ந்து உடனே அப்பால்முழுவதையும் மாற்றுவது போலக் காமநோய் முதலிற் கண்வழியே யுட்சென்று உடனே உடம்பு முழுவதும் பரவிற் றென்பதாம். நீர் ஓரிடத்திற்போய்ச் சேர்ந்து பரவுதற்கு வாய்க்கால் வழியாவதுபோல ஆசைமனத்திற்போய்ப்பரவுதற்குக் கண் வழியாதலால், 'காலுறு கண்' எனப்பட்டது. கண்களுக்குக் கால்வாயை உவமை கூறியதற்கு ஏற்ப, காதலேய்க்கு நீர்ப்பெருக்கை உவமையாகக் கொள்ளலாம். இராமனைப்பார்த்தமாத்திரத்திலேயுண்டானஆசையினாற் பின்பு சீதையின் உடம்புமுழுவதுங் காமாக்கினி பரவிற்றென்க. வருத்தத்தை விளைத்தலால்,காமம் நோயெனப்பட்டது; இது மனோவியாதியெனப்படுதல்காண்க. நெடுமையை உபமானமாகிய காலுக்கும் உபமேயமாகிய கண்ணுக்குங் கூட்டுக. இரண்டுமூன்றாமடிகளில், உறு - உவமவுருபு. மால் உற வருதலும் என்பதற்கு-ஆசை மிகுதியாக வந்தவுடன் என்றும், நெடுங் கால் உறு கண் என்பதற்கு - வெகுதூரம்வரையிலும் உற்றுப்பார்க்குந்தன்மையுள்ள கண் என்றும் உரைப்பாரு முளர். நூல் உறு மருங்குல்-(சாமுத்திரிக)சாத்திரவிலக்கணப்படியே அமைந்துள்ள இடை என்று உரைத்தல் சிறக்கும். (சக)

சஉ. நோமுறு நோய்நிலை நுவல கிற்றில
[1]ஊமரின் மனத்திடை யுன்னி [2]விம்முவாள்
காமனு மொருசரங் கருத்தி லெய்தனன்
வேமெரி யதனிடை விறகிட் டென்னவே.

(இ - ள்.) நோம் - (பிராட்டி காமநோயால்) வருந்துவாள்; உறும் நோய் நிலை நுவலகிற்றிலள் - (ஒருகாலைக்கொருகால் தன்னிடம்) மிகுகின்ற அக்காமவியாதியின்நிலைமையை ஒருவரோடுஞ்) சொல்லமாட்டாதவளாய், ஊமரின் மனத்திடை உன்னி விம்முவாள் - ஊமைகள்போல மனத்திடத்திலேயே நினைந்து கலங்குவாள்; (அப்பொழுது), காமன்உம்-மன்மதனும், ஒரு சரம்-ஒரு பாணத்தை, கருத்தில் - (அவளது) மனத்திலே, வேம் எரியதனிடை விறகு இட்டு என்ன-எரிகிற நெருப்பிலே விறகைப் போகட்டாற்போல, எய்தனன் - பிரயோகித்தான்; (எ - று.)

மன்மதன் தனது ஐங்கணைகளுள் நினைப்பை மிகுவிப்பதும் முதற்கணையுமாகிய தாமரைமலரை எய்தன னென்பார், 'ஒருசரங் கருத்திலெய்தனன்' என்றார்; இதனை "நினைக்குமரவிந்தம்" என்பதனாலும் அறிக. இனி,

ஒரு சரம் - ஒப்பற்ற ஐந்துபாணங்களை யென்றுமாம். ஊமர் - வாய்ப்பேச்சற்றவர். நான்காமடி, காமாக்கினியை யிருத்தலை விளக்கும். பி - ம்:—[1] ஊமனின். [2] விம்மினாள். (சஉ)

சஙு. நிழலிடு குண்டல மதனி னெய்யிடா
[1]வழலிடா மிளிர்ந்திடு மயில்கொள் கண்ணினாள்
சுழலிடு கூந்தலுந் துகிலுஞ் சோர்தரத்
தழலிடு வல்லியே [2]போலச் சாம்பினாள்.

(இ - ள்.) நிழல் இடு குண்டலம்அதனின் - ஒளிவீசுகிற காதணிவரையிலும் (சென்று) [மிகநீண்டு என்றபடி], நெய் இடா அழல் இடா மிளிர்ந்திடும் அயில் கொள் - நெய் மேலேதடவப்பெறாமலும் நெருப்பிலே வைத்துக் காய்ச்சப்படாமலுங் கூர்மையாய்விளங்குவதொரு வேல் உளதாயின் அதனையொக்கின்ற, கண்ணினாள்-கண்களையுடைய வைதேகி,—சுழல் இடு கூந்தல்உம் துகில்உம் சோர்தர - (தனது) கடைகுழன்ற கூந்தலும் உடையும் நெகிழும்படி, தழல் இடு வல்லி ஏ போல - நெருப்பிலேபோகடப்பட்ட பூங்கொடிபோல, சாம்பினாள் - வாடினாள்; (எ - று.)

நெய்யிடா அழலிடா மிளிர்ந்திடும் அயில்-இல்பொருளுவமை. கொள்-உவமவுருபு. சுழலிடு கூந்தல் என்பதற்கு - சுருண்டவடிவமாக அலங்கரித்துப் பின்னிமுடிக்கப்பட்ட கூந்த லென்று மாம்: அங்ஙனம் முடித்தல் பனிச்சையெனப்படும்: அது, ஐம்பாலி லொன்று. பி-ம்:—[1] அழலிடை. [2] என்ன. (சஙு)

சச. தழங்கிய கலைகளு நிறையுஞ் சங்கமு
மழுங்கிய வுள்ளமு மறிவு மாமையு
மிழந்தவ ளிமையவர் கடைய யாவையும்
வழங்கிய கடலென வறிய ளாயினாள்.

(இ - ள்.) தழங்கிய கலைகள்உம் - ஒலிக்கின்ற மேகலாபரணங்களையும், நிறைஉம் - மனவுறுதியையும், சங்கம்உம் - சங்கினாலாகிய வளையல்களையும், மழுங்கிய உள்ளம்உம் - வாட்டமடைந்த மனத்தையும், அறிவுஉம் - அறிவையும், மாமைஉம் - உடம்பின் பளபளப்பையும், இழந்தவள் - (அப்பொழுது காமவிகாரத்தால்) இழந்துநின்ற பிராட்டி,—இமையவர் கடைய யாவைஉம் வழங்கிய கடல் என - தேவர்கள் கடைந்தபொழுது (தன்னிடத்துள்ள சிறந்த பொருள்கள்) எல்லாவற்றையுங் கொடுத்துவிட்ட கடல் போல, வறியள் ஆயினாள் - யாதொரு சிறந்தபொருளுந் தன்னிடமில்லாதவ ளானாள்; (எ - று.)

மகளிர்க்குச் சிறந்த ஆபரணங்களாகிய மேகலைமுதலியவற்றையும், குணங்களாகியநிறைமுதலியவற்றையும்பிராட்டி யிழந்ததனால்,'வறியளாயினள்'என்றார். காமவேதனையால் உடம்பு மெலிதல்பற்றி, மேகலைகளுங் கைவளைகளுங் கழன்றன. தழங்கிய கலைகள்-சிறப்பித்துக்கூறப்படுகிற ஆடைகளுமாம்; 'கலைகள்' எனப்பன்மையாகக் கூறினது, உள்ளாடை [அந்தரீயம்]

மேலாடை [உத்தரீயம்] என மகளிரும் ஈருடையுடுத்தல் மரபாதலி னென்க. சங்கம்-வளைக்குக் கருவியாகுபெயர். அழுங்கிய எனப் பதம்பிரித்து முரைக் கலாம். இமையவர் - கண் இமையாதவர்; இமையில் விசேஷமுடையவர்: இமயமலையில்வாழ்பவர். 'மேகலைகள்' எனப் பன்மையாற்கூறுதல், எட்டுக் கோவையுடைமையைக் கருதி. (சுச)

சுரு. *கலங்குழைந் துகநெடு நாணுங் கண்ணற
நலங்குழை தரநகின் முகத்தி னேவுண்டு
மலங்குழை யெனவுயிர் வருந்திச் சோர்தரப்
பொலங்குழை மயிலைக்கொண் டரிதிற் போயினார்.

(இ - ள்.) கலம் குழைந்து உக - ஆபரணங்கள் நெகிழ்ந்து விழவும், நெடு நாண்உம் கண் அற - மிகுந்த நாணமும் (தன்னிடத்திலிருந்து) ஒழியவும், நலம் குழைதர - அழகு மாறவும், நகில் முகத்தின் ஏஉண்டு - (தனது) கொங்கைகளினிடத்திலே மன்மதபாணத்தால் அடிபட்டு, மலங்கு உழை என - (வேடனது அம்பாலடிபட்டு) வருந்துகிற மான்போல, உயிர் வருந்தி சோர்தர-உயிரும் வருந்துதலடைந்து (சீதை)வாடிநிற்க, அதைக்கண்ணுற்ற தோழிமார்),—பொலம் குழை மயிலை-பொன்னாலாகியகுழையென்னுங்காதணியை யணிந்த மயில்போலுஞ் சாயலையுடைய அச்சீதையை, அரிதின் கொண்டு போயினார்-சிரமப்பட்டு அழைத்துக்கொண்டுபோனார்கள்; (எ-று.)

சீதை காமநோயால்வருந்துவதுகண்டு பரிகாரஞ்செய்தற்காகத் தோழிமார் அதற்கு ஏற்றவிடத்துக்கு அவளை யரிதில் இட்டுக்கொண்டுபோயினரென்க. 'நகில் முகத்தின்' என இடங் குறித்ததனால், ஏ வுண்டென்பது - பசலைநிறத்தைத்தருவதாகிய மாம்பூவாகிறபாணத்தா லெய்யப்பட்டு என்க. "நீள்சூதங்கொங்கை" என்பது, இரத்தினச்சுருக்கம்: இதன்குணம், நிறம் மாறுதல்: "நீள்பசலை மாம்பூ" என்றது காண்க. (சுரு)

சுசு. காதொடுங் [1]குழைபொரு கயற்க[2] ணங்கைதன்
பாதமுங் கரங்களு மனைய [3]பல்லவந்
தாதொடுங் குழையொடு மடுத்த தண்பனிச்
சீதநுண் டுளிமல ரமளிச் சேர்த்தினார்.

(இ - ள்.) குழை காதொடுஉம் பொரு கயல் கண் நங்கைதன் - குழையென்னும் அணியையணிந்த காதுடனே (ஒன்றோடொன்று) போர்செய்கிற கயல்மீன்போற் பிறழுங் கண்ணிணையுடைய பிராட்டியினது, பாதம்உம் - திருவடிகளையும், கரங்கள்உம் - திருக்கைகளையும், அனைய ஒத்த, பல்லவம் குழையொடுஉம் - பல்லவமென்னும் ஒருபெயருள்ள மென்மையான செந்தளிர்களுடனும்,தாதொடுஉம் - பூந்தாதுகளுடனும், அடுத்த - பொருந்திய, தண் பனி சீதம் நுண் துளி-மிகக்குளிர்ச்சியான நுட்பமான பனிநீர்த்துளிகள் தெளிக்கப்பட்டுள்ள, மலர் அமளி - பூக்களாலாகிய படுக்கையில், சேர்த்தினார் - (சானகியைப்) படுக்கவிட்டார்கள்; (எ - று.)

பல்லவக் குழை - மென்மையான தளி ரென்றபடி. சீதையின் வெம்மையைத் தணிப்பித்தற்குப் பூந்தாதுகளையும் தளிர்களையுங் கீழேயிட்டு மேலே மலர்பரப்பிய படுக்கையை யமைத்தனர், பாங்கிய ரென்க. [3]பல்லவத் தாதொடும் என்ற பாடத்துக்கு - பல்லவம்போன்ற [மெத்தென்றுள்ள] மகரந்தப்பொடியோடும் என்க. பி-ம்:—[1]கடைபொரு. [2]கண்மங்கை. (சகூ)

சஎ. நாளறு நறுமல ரமளி நண்ணினள்
பூளைவீ புரைபனிப் புயற்குத் தேம்பிய
தாளதா மரைமலர் ததைந்த பொய்கையும்
வாளரா நுங்கிய மதியும் [1]போலவே.

(இ - ள்.) பூளை வீ புரை பனி புயற்கு தேம்பிய தாள தாமரை மலர் ததைந்த பொய்கைஉம் - பூளைப்பூவையொத்த [மெல்லிய வெண்ணிறமான] பனிமழைக்கு வாடின நாளத்தோடுகூடிய தாமரைப்பூக்கள் நெருங்கின தடாகத்தையும், வாள் அரா நுங்கிய மதிஉம் - வாள்போற்கொடிய பாம்பினால் விழுங்கப்பட்ட சந்திரனையும், போல - ஒத்து (அம்மலர்ப்படுக்கை) வாட்டத்தையுடையும்படி, நாள் அறு நறு மலர் அமளி நண்ணினள் - நாள் கழியாத [அன்றுமலர்ந்த] வாசனைவீசுகிற பூக்களைக்கொண்டுபரப்பப் பட்டுள்ள அப்படுக்கையிற் (பிராட்டி) சேர்ந்தாள்; (எ - று.)

பாங்கிமார்அமைத்த மலர்ப்படுக்கையைச் சீதாப்பிராட்டி சேர, அவளது மேனிவெப்பத்தால் அந்தப்படுக்கை தீய்ந்துவிட்டதென்பதாம். [1]போன்றனளென்றபாடத்துக்கு - பனிப்புயலால் தாமரைப்பொய்கை ஒளியிழப்பதுபோலவும், கிரகணந்தீண்டியசந்திரன் ஒளிகெடுவதுபோலவும் வெம்மை மிகுதலாற் சீதை முன்னினும் ஒளிகெட்டன ளென்க. பூளை - ஓர்செடி. கிரகணகாலத்திற் சந்திரமண்டலத்தை மறைக்கிற பூமியின்சாயையை இராகு கேதுக்களென்னும் பாம்புகளாகக் கூறுதல், புராணநூல்வழக்கு. தாமரை பனிக்கு வாடுதல் இயல்பு. (சஎ)

சஅ. மலைமிசைத் தடத்துகு மழைக்க ணாலிபோன்
முலைமுகட் டுதிர்ந்தன நெடுங்கண் முத்தினஞ்
சிலைநுதற் [1]கடையுறை செறிந்த [2]வேர்வுதன்
னுலைமுகப் [3]புகைநிமி ருயிர்ப்பின் [4]மாய்ந்ததே.

(இ - ள்.) மலை மிசை தடத்து உகும்-மலையினது மேலிடத்திலே சிந்துகிற, மழைக்கண் ஆலி போல் - மேகத்தினிடத்தே தோன்றுகிற மழைநீர்த்துளிகள்போல, முலை முகடு - (பிராட்டியினது) கொங்கைகளின் நுனியிடத்திலே, நெடு கண் முத்து இனம் - (அவளது) நீண்ட கண்களினின்று பெருகுகிற முத்துக்களின் திரளையொத்த நீர்த்துளிகள், உதிர்ந்தன - சிந்தின; சிலை நுதற்கடை உறை செறிந்த வேர்வு - வில்லை [புருவத்தை]க் கொண்ட (அவளது) நெற்றியிடத்திலே துளியாகவுண்டாகிப் பொருந்திய வேர்வையானது,-உலை முகம் புகை நிமிர் தன் உயிர்ப்பின் - (கொல்ல

னது) உலைக்களத்திலே யெழுகிற புகைபோல (வெப்பமிக்கு) வெளிப்படு கிற அவளது பெருமூச்சுக்காற்று வீசுவதனால், மாய்ந்தது - வறண்டுபோயிற்று; (எ - று.)

காமவேதனையை யாற்றமாட்டாது கண்களிலிருந்துநீர்பெருக, நெட்டுயிர்ப்பினால் நெற்றியில்தோன்றும் வேர்வைநீரும்மறைந்தனவென்க. முத்து- உவமையாகுபெயர். பி-ம்:—[1]கடையுறச்செறித்த. [2]வேற்கணுள்புகைதரும், புகைநிகர். [3]மாய்ந்தவே. (சஅ)

சகூ. *கம்பமில் கொடுமனக் [1]கான வேடன்கை
யம்பொடு சோர்வதோர் மயிலு மன்னவள்
வெம்புறு [2]மனத்தனல் வெதுப்ப மென்மலர்க்
கொம்பென வமளியிற் குழைந்து சாய்ந்தனள்.

(இ - ள்.) கம்பம் இல் - கலங்குத லில்லாத, கொடு மனம் - வலிய மனத்தையுடைய, கானம் வேடன் - காட்டில்வசிக்கின்ற வேடனது, கை - கையினாலெய்யப்பட்ட, அம்பொடு - அம்பினால், சோர்வது - தளர்ந்து கீழ் விழுவதாகிய, ஓர் மயில்உம்-ஒரு மயிற்பறவையையும் அன்னவள் - ஒத்தவளான பிராட்டி, வெம்புறு மனத்து அனல் வெதுப்ப - கொதிக்கிற (தன்) மனத்திற் பொருந்திய காமாக்கினி எரிப்பதனால், மெல் மலர் கொம்பு என - (நெருப்பினா லெரிக்கப்படுவதொரு) மேன்மையான பூங்கொம்புபோல, அமளியில் - அம்மலர்ப்படுக்கையிலே, குழைந்து - வாடி, சாய்ந்தனள்.—

வேடனம்பினாலெய்யப்பட்ட மயிற்பறவை தளர்ந்துவீழ்வதுபோலச் சீதாபிராட்டி மன்மதன் மலர்க்கணையால் அடிபட்டுச் சோர்ந்து வீழ்ந்தனளென்க. அங்ஙனம்வாடிய அச்சீதைக்கு அனலால்வாடிய பூங்கொம்பை உவமை கூறினார்: உவமையணி. "தழலிடுவல்லியேபோலச் சாம்பினாள்" என்றார். கீழும் *கம்பம் - சலனம்; இங்கே, நிலைமாறுதல். கம்பம் இல் மனம்-உயிர்களை வருத்துவதிற் சிறிதும் இரக்கமில்லாத நெஞ்சமென்றபடி. அம்பொடு, ஒடு - கருவிப்பொருளில் வந்தது; "ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்" என்றவிடத்துப்போல. பி-ம்:—[1]காமவேடன். [2]வனத்தனல். (சகூ)

ருO. சொரிந்தன நறுமலர் [1]சுறுக்குண் டேறின
பொரிந்தன கலவைகள் [2]பொறியிற் சிந்தின
வெரிந்தவெங் கனல்சுட விழையிற் கோத்தநூல்
பரிந்தன கரிந்தனபல்ல வங்களே.

(இ - ள்.) (அப்பொழுது), சொரிந்தன நறு மலர் - (படுக்கையாகப்) பெய்யப்பட்டுள்ள வாசனையுள்ள மலர்கள், சுறக்கு உண்டு ஏறின - (அவளுக்கு மென்மையைச் செய்யமாட்டாமல், கூர்மையாய் (உடம்பில்) தைத்தன; பொரிந்தன கலவைகள் - (அவளது உடம்பிற் பொருந்திய காமாக்கினியாற்) பொரிந்துபோயினவையாகிய கலவைச்சந்தனங்கள், பொறியின் சிந்தின - நெருப்புப்பொறிகள்போல உதிர்ந்தன; எரிந்த வெம் கனல் சுட - (அவளது உடம்பிற் பற்றி) எரிகிற வெவ்விய காமத்தீச் சுடுதலால், இழை

யில் சேர்த்த நூல் பரிந்தன - ஆபரணங்களிற் கோக்கப்பட்டுள்ள நூல்கள் அற்றுநீங்கின; பல்லவங்கள் கரிந்தன-(சயனத்திற் பரப்பப்பட்டுள்ள) தளிர்கள் கரிந்துபோயின; (எ - று.)

'எரிந்தவெங்கனல்சுட' என்னுங் காரணத்தைப் பிற வாக்கியங்களோடுங் கூட்டுக. 'பொரியிற்சிந்தின என்ற பாடத்துக்கு - நெற்பொரிகள்போலச் சிதறின வென்று பொருள். சுறுக்குண்டு-கூர்மையையடைந்து. பொரிதல்-தீய்ந்துபொடிதல். [1]சுருக்கொண்டு என்றும் பாடம்; அப்பாடத்துக்கு - சுருசுரு என்னும் ஓசைபடத் தீந்துகொண்டுபோயின வென்க. (ஙு0)

ருக. தாதியர் செவிலியர் தாயர் தவ்வையர்
மாதுய [1]ருழந்துழந் தழுங்கி மாழ்கினர்
யாதுகொ லிதுவென வெண்ண தேற்றலர்
போதுட னயினிநீர் சுழற்றிப் [2]போற்றினர்.

(இ - ள்.) (பிராட்டியினது), தாதியர் - தாதிமார்களும், செவிலியர் - செவிலிமார்களும், தாயர் - ஐவகைத்தாய்மார்களும், தவ்வையர் - தவ்வைமார்களும், மா துயர் உழந்து உழந்து அழுங்கி - (அவளுக்கு உண்டான நோயைநோக்கிப்) பெருந் துன்பத்தை மிகவும் அனுபவித்தலினால் மிக வருந்தி, மாழ்கினர் - மனங்கலங்கினவர்களாகி, இது யாது கொல் என எண்ணல் தேற்றலர் - இந்நோய் எந்நோயோ என ஆலோசித்து அறியமாட்டாதவர்களாய், போதுடன் அயினி நீர் சுழற்றி போற்றினர் - (பலவகை) மலர்களோடுகூடிய ஆலத்திநீரைச் சுற்றி (அவளுக்கு)க்கண்ணெச்சிற்கழித்தனர்.

சீதையின் கருத்திற் பொருந்திய காமநோயை யறியாமல் திருஷ்டிதோஷத்தாலுண்டான நோயெனக்கருதி அதற்குப்பரிகாரமாக மங்களாலத்தி சுற்றினார்கள். அயினிநீர்-கண்ணூறு அச்சம்முதலியவற்றாலுண்டாகிய குற்றம் களையும் நீர்; அயினி - செஞ்சோறு; அதனோடுகூடிய நீராதலின் அயினிநீரெனப்பட்டது: இதனை வடநூலார் நீராஜநமென்பர். ஆட்டுவாள், ஊட்டுவாள், ஓலுறுத்துவாள், நொடிபயிற்றுவாள், கைத்தாய் எனத் தாயர் ஐவகைப்படுவர்; பாராட்டுந்தாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய் என்றுங் கூறுவர். தாதியர்-அடியவன் என்னும்பொருளதாகிய தாஸன் என்பதன் பெண்பாலான தாஸீ என்பதன் திரிபாகிய தாதி என்பதன் பன்மை: எனவே, பரிசாரிகைப்பெண்களாவர். செவிலியர் - வளர்க்குந்தாய்மார். 'தாயர்' என்றது பிறதாய்மார்களை. 'தவ்வை' என்பது-தமக்கையென்னும் பொருளதாதலின், 'தவ்வையர்' என்றது-ஐவகைத் தாய்மாரின் மக்களாய்ச் சீதைக்குமூத்தவர்களை:சிந்தாமணியில் "கலம்புரி" என்று தொடங்கும் பாடலில் "தாயர் தவ்வையர்" என்பதற்கு இங்ஙனமே ஆசிரியர் நச்சினார்க்கினியருரைத்துள்ளார். தேற்றலர் - தேறலர்: தன்வினைப் பொருளது. பி - ம்:—[1] உழந்தனர்விழுந்து. [2]போக்கினர். (ஙுக)

ருஉ. அருகினின் றசைக்கின்ற வால வட்டக்கா
லெரியினை மிகுத்திட விழையு மாலையுங்

கரிகுவ தீகுவ கனல்வ காட்டலா
லுருகுபொற் பாவையு மொத்துத் தோன்றினாள்.

(இ - ள்.) அருகில் நின்று அசைக்கின்ற ஆலவட்டம் கால் - சமீபத்திலே யிருந்து (தோழிமார்) அசைக்கின்ற ஆலவட்டங்களினால்தோன்றுங் காற்றானது, எரியினை மிகுத்திட - காமாக்கினியை வளர்த்திட, இழையும் மாலையும்-(பிராட்டியணிந்த) ஆபரணங்களும் பூமாலைகளும், கரிகுவ - கரிந்துபோவனவும், தீகுவ - தீந்துபோவனவும், கனல்வ - எரிவனவுமாக, காட்டலால்-ஆய்விடுதலால், (பிராட்டி);—உருகு பொன் பாவையும் ஒத்து - (நெருப்பிற்பட்டு) உருகுகிற பொன்னினாலாகிய பிரதிமையையும் போன்று, தோன்றினாள் - காணப்பட்டாள்; (எ - று.)

தான் அணிந்த மாலை அணி என்றஇவை காமவனலால் கருகுதல் தீதல்களாக, அக்காமவனலில் நிற்கும் பிராட்டி நெருப்பினிடைப்பட்ட பொன்பாவை போன்றனளென்க: தற்குறிப்பேற்றவணி. ஆலவட்டம்-வட்டவடிவமான தொருவகைப்பெருவிசிறி: தாலவ்ருந்தமென்றவடசொல்லின்சிதைவு. விசிறிக்காற்றுப் படுதலால் நெருப்புவளர்தலியல்பாதலின், 'ஆலவட்டக்கால் எரியினை மிகுத்திட' என்றார். கரிகுவ, தீகுவ என்றவற்றில், கு - சாரியை; கரிதல் - நிறங்கருகாமையவேதல் என்றும், தீதல் - நிறங்கருக்காமை என்றுஞ் சிறிதுபொருள் வேறுபாடு கொள்க. பாவையும் என்றஉம்மை, கீழ்வந்த சில உவமைகளை நோக்குதலால், இறந்ததுதழுவியது. (௫௨)

௫௩. அல்லினை வகுத்ததோ ரலங்கற் காடெனும்
வல்லெழு வல்ல[1]வேன் மரக தப்பெருங்
கல்லெனு மிருபுயங் கமலங் கண்ணெனும்
வில்லொடு மிழிந்ததோர் மேக மென்னுமால்.

(இ - ள்.) (பிராட்டி), ஓர் அலங்கல் காடு அல்லினை வகுத்தது எனும் - (இராமனது மயிர்முடியை) இருளைக்கொண்டுஅமைக்கப்பட்டதொருபூமாலையோடுகூடிய காடு என்பாள்; இரு புயம் - (அவனது) இரண்டுதோள்களை, வல் எழு - வலிய தூண்கள்: அல்லஏல் - (அவை) அல்லவாயின், மரகதம் பெரு கல் - ஒப்பற்ற மரதகரத்தினமயமான பெரிய மலைகளேயாம், எனும்- என்பாள்; கண்-(அவனது) திருக்கண்களை, கமலம் எனும் - செந்தாமரை மலரென்பாள்; (அவனது திருவடிவத்தை) வில்லொடும் இழிந்தது ஓர் மேகம் என்னும் - இந்திரவில்லுடனேகூட (வானத்தினின்று பூமியிலே) இறங்கினதொரு மேக மென்பாள்; (எ - று.)

இது, சீதாபிராட்டி இராமபிரானிடத்துத் தன்மனஞ்சென்று அப்பிரானைப் பற்றி வாய்பிதற்றுவதைக் கூறும். மேல்ஆறுகவிகளும் - இங்ஙனமே வருவன. குழலின்கருமையும் மயிர்களின்அடர்த்தியும் பற்றி, 'அல் வகுத்ததோர்காடு' என்றது. 'அலங்கற்காடு' என்றது, பூமாலை சூடுவதனால். எழு - இருப்புத்தூண். தோள்கள் திரண்டுருண்டு நீண்டிருத்தல்பற்றியும் பருத்துயர்ந்துமிகவலியனவா யிருத்தல்பற்றியும் இங்ஙனங்கூறியது. இரா

மன் கோதண்டமுங்கையுமா யிருந்ததனால்,'வில்லொடுமிழிந்ததோர் மேகம்' என்றாள்; "விற்கொண்ட மழையனான்" என்றார் கீழும். பி - ம்:—[1]ஓர்.

ருசு. நெருக்கியுட் புகுந்தரு நிறையும் பெண்மையு
முருக்கியென் னுயிரொடு முண்டு போனவன்
பொருப்புறழ் தோள்புணர் [1]புண்ணி யத்தனு
கருப்புவில் லன்றவன் காம னல்லனே

இதுமுதல் எட்டுக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நெருக்கி உள் புகுந்து - நெருக்கி (என்மனத்தினுள்ளே) வந்துசேர்ந்து, அரு நிறைஉம் - அழித்தற்கரிய (எனது) மனவுறுதியையும், பெண்மைஉம் - (நாணம்முதலிய பிற) பெண்மைக்குணங்களையும், உருக்கி - கரையச்செய்து, (அவற்றை), என் உயிரொடுஉம் - எனது உயிருடனே, உண்டு போனவன் - கவர்ந்துகொண்டுசென்ற புருஷோத்தமன், (மன்மதனேயென்றால்), பொருப்பு உறழ் தோள் புணர் புண்ணியம் தனு கரும்பு வில் அன்று-(அவனது) மலையோடுமாறுபடுகிற தோளிற் சேர்ந்த நல்வினையுடைய வில் கரும்புவில்லன்று: (ஆதலின்), அவன் காமன் அல்லன்-அவன் மன்மதனல்லன்; (எ - று.)

இராமபிரானது கட்டழகைக்கண்டு 'இவன் மன்மதனோ?' என்று முதலில் ஐயுற்றுப் பிறகு கையிற் கருப்புவில்லன்றி மூங்கில்வில்லையே கொண்டிருத்தலாற் காமனல்லனென்று தெளிந்தவாறு. இதனால், இராமபிரானது பேரழகு தொனிக்கும். இது - ஐயமுந் தெளிவுங் கூறிற்று. நெருக்கியுட் புகுதல் - பலாத்காரமாகப் பிரவேசித்தல். "நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை" என்னுங் கலித்தொகையடியால், நிறையென்றுசொல்லப்படுவது பிறரறியாதபடி மனத்துஅடக்கற்பாலனவற்றை அடக்கியொழுகுதலென அறிக. 'தோள்புணர் புண்ணியத்தனு' என்றதனால், அவனுடைய தோளைப் புணர்தற்கு முன்னைய நல்வினையிருந்தாலொழியக் கூடாதெனத் தான் இரங்கினமை யேற்படும். தனு - தநுஸ். 'உயிரொடும்' என்றது, உயிரினுணர்வை. பி - ம்:—[1]புண்ணியத்தது. (ருச)

ருரு. பெண்வழி நலனொடும் பிறந்த நாணொடு
மெண்வழி யுணர்வுநா னெங்குங் காண்கிலன்
மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
கண்வழி நுழையுமோர் கள்வ னேகொலாம்.

(இ - ள்.) பெண் வழி நலனொடுஉம்-பெண்ணிடத்து இயல்பாகவுள்ள அழகையும், பிறந்த நாணொடுஉம் - (பெண்கட்கு உரியதனமாக) உடன்தோன்றிய நாணத்தையும், எண் வழி உணர்வுஉம்-(எனது) மனத்திலுள்ள அறிவையும், நான் எங்குஉம் காண்கிலன்-(அம்மைந்தன் வந்துபோனபின்பு) யான் எங்குங் காண்கிறேனில்லை; (ஆதலால்), அடி வருந்த மண்வழி நடந்து போனவன் - திருவடிகள்வருந்தும்படி தரையிலே நடந்துசென்ற அவ்விளமகன், கண்வழி நுழையும் ஓர் கள்வன் ஏ கொல் ஆம் - கண்களின்வழியாக உள்ளே செல்லவல்லானொரு கள்ளனே போலும்; (எ - று.)

அம்மைந்தனை யான் கண்டவுடனே எனது நலன் நாண் உணர்வுஎன்ற இவற்றை யிழந்தேன்; ஆகையால், அம்மைந்தன் கண்ட கண்வழியே கவர்ந்து செல்லவல்ல விசித்திரக்கள்ளன் போலு மென்கின்றனள், சீதாபிராட்டி யென்க. "கள்வன் கொல் யானறியேன் கரியா னொருகாளை" என்றார், திருமங்கையாழ்வாரும். எண்வழிபுணர்வு - எண்ணத்தின்வழியே செல்கின்ற அறிவு என்றுமாம். மூன்றாமடியினால், அவனுக்கு நடப்பதனால் அடி வருந்துமே யென்று இவளுக்குஉண்டான இரக்கம் வெளியாகின்றது. (ருரு)

ருசு. இந்திர நீலமொத் திருண்ட குஞ்சியுஞ்
சந்திர வதனமுந் தாழ்ந்த கைகளுஞ்
சுந்தர மணிவரைத் தோளு மேயல
முந்தியென் னுயிரையம் முறுவ லுண்டதே.

(இ - ள்.) (எனது உயிரைப்பருகினது), இந்திரநீலம் ஒத்து இருண்ட குஞ்சிஉம் - இந்திரநீலவிரத்தினத்தையொத்துக் கறுத்தநிறமாகவுள்ள (அவனது) மயிர்முடியும், சந்திரன் வதனம்உம்-சந்திரமண்டலம்போன்ற திருமுகமண்டலமும், தாழ்ந்த கைகள்உம் - தொங்குகின்ற திருக்கைகளும், சுந்தர மணி வரை தோள்உம்ஏ - அழகிய நீலவிரத்தினமலைகள்போன்ற திருத்தோள்களும் என்னுமிவையே, அல - அல்ல: (பின்னை யாது எனின்)? - அ முறுவல் - அந்தப்புன்சிரிப்பு, முந்தி - (இவையெல்லாவற்றிற்கும்) முற்பட்டு, என் உயிரை உண்டது - எனது உயிரைக் கவர்ந்தது; (எ - று.)

இந்திரநீலம் - சிறந்தசாதிநீலமணி. தாழ்ந்த கை - முழங்காலளவும் நீண்டு தொங்குங் கை; ஆஜாநுபாகு: இது, உத்தமபுருஷலட்சணம். மணியென்பது - நவமணிகளுக்குப் பொதுப்பெயராகியும் சிலவிடங்களிலே நீலமணிக்குச் சிறப்புப்பெயராகியும் வருதலால், நீலமணியெனப் பொருள் கூறப்பட்டது; 'மணிவண்ணன்' என்றவிடத்துப்போல. உண்டது-கொள்ளைகொண்டது என்றபடி. அம் முறுவல்-அழகிய புன்சிரிப்புஎனினுமாம்.(ருசு)

ருஎ. படர்ந்தொளி பரந்துயிர் பருகு மாகமுந்
தடந்தரு தாமரைத் தாளு மேயல
கடந்தரு மாமதக் களிநல் யானைபோ
னடந்தது கிடந்ததென் னுள்ள நண்ணியே.

(இ - ள்.) (எனது மனத்திற் பதிந்தது),-படர்ந்து ஒளி பரந்து உயிர் பருகும் ஆகம்உம் - விசாலமாய் ஒளிபரவிக் காண்பாருயிரைக் கொள்ளையிடுகின்ற (அவனது) திருமார்பும், தடம் தரு தாமரை தாளும்ஏ - பெருமையைக் கொண்ட செந்தாமரைமலர்போலுந் திருவடிகளும் என்னுமிவையே, அல - அல்ல: கடம் தரு மா மதம் களி நல் யானை போல் நடந்தது - கன்னஞ் சுரக்கின்ற மிக்க மதம்பெருகப்பெற்ற களிப்பையுடைய சிறந்த ஆண்யானை போல (க் கம்பீரமாக அப்பெருமான்) நடந்துசென்ற நடையழகு, என் உள்ளம் நண்ணி கிடந்தது - எனது மனத்திற்பொருந்தி (எப்பொழுதும் நீங்காது) பதிந்துள்ளது; (எ - று.)

யான் கண்ட மைந்தனது பரந்த திருமார்பும் தாமரைத்தாள்களும் போலவே, அவனது நடையழகும் என்மனத்திற் பதிந்துள்ளதென்று இராமபிரானது நடையழகில் ஈடுபட்டமையை இதனால் தெரிவிக்கின்றனளென்க. தடந்தருதாமரை-தடாகம்பூத்த தாமரை யெனினும் இழுக்காது; பறிக்கப்பட்டு வாடிப்போகாத அன்றலர்ந்த மல ரென்றபடி. நல்யானை - அழகிய யானை; உத்தமகஜலட்சணம்முழுவதும் அமையப்பெற்றுள்ள யானை. (௫௭)

௫௮. உரைசெயிற் றேவர்தம் முலகு ளானலன்
விரைசெறி தாமரை யிமைக்கு [1]மெய்ம்மையான்
வரிசிலைத் தடக்கையன் மார்பி னூலின
னரசிளங் குமரனே யாகல் வேண்டுமால்.

(இ - ள்.) உரை செயின் - (அவ்வாண்மகன்இன்னானென்று) சொல்லப் புக்கால், தேவர்தம் உலகு உளான் அலன் - தேவலோகத்திலுள்ளானொரு தேவ னல்லன்: (ஏனெனில்), விரை செறி தாமரை இமைக்கும் மெய்ம்மையான் - வாசனைமிகுந்த செந்தாமரைமலர்போலுந் திருக்கண்கள் இமைத்தல்செய்யுந் தன்மையையுடையவன்(ஆதலால்); வரி சிலை தட கையன்-கட்டமைந்த வில்லை யேந்திய பெரிய கையையுடையவனும், மார்பில் நூலினன் - திருமார்பிற் பூணூலையுடையவனுமாகிய அவன், அரசு இள குமரனே ஆகல் வேண்டும் - இளமைப்பருவமுடையானொரு ராஜகுமாரனாகவே யிருத்தல் வேண்டும்; (எ - று.)

சீதாபிராட்டி இராமபிரானைக் கண்டபோது முதலில் தேவனோ என ஐயமுற்றுப் பின் கண்ணிமைத்தல் முதலிய குறிகளை நோக்கித் தேவனல்லன் மானுடனென்றும், பின்னும் வில்லும் முப்புரிநூலும் முதலியவற்றை நோக்கி அம்மானுடருள்ளும் ராஜகுமாரனே யென்றும் உய்த்துணர்ந்து தெளிந்தமை கூறப்பட்டது. இளங்குமரன் - யௌவன குமாரன்.

இப்பாட்டு, கீழ் "நெருக்கியுட் புகுந்து" என்னும் ஐம்பத்துநான்காம் பாட்டின்பின் இருத்தல் சிறப்பு; அங்ஙனம் இருக்குமாயின் ஐம்பத்தைந்தாம் பாட்டில் 'மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்' என்றதனோடு நன்கு பொருந்துமாறு காண்க. பி - ம்:—[1]மெய்ம்மையால். (௫௮)

௫௯. பிறந்துடை நலநிறை பிணித்த வெந்திரங்
கறங்குபு திரியுமென் கன்னி மாமதி
லெறிந்தவக் குமரனை யின்னுங் கண்ணிற்கண்
டறிந்துயி ரிழக்கவு [1]மாகுமே கொலாம்.

(இ-ள்.) பிறந்து உடை-(என்னோடுகூடவே) பிறந்து (என்னைப்)பிரியாதுள்ள, நலம் - நல்ல பெண்மைக்குணங்களும், நிறை-மனவுறுதியும் ஆகிய, பிணித்த எந்திரம் - கட்டமைந்த யந்திரங்கள், கறங்குபு திரியும் - சுழன்று திரிதற்கிடமான, என் கன்னி மா மதில் - எனது கன்னித்தன்மையாகிய பெரிய மதிலை, எறிந்த - அழித்துச்சென்ற, அ குமரனை-அந்தக்குமாரனை,

இன்னும் கண்ணின் கண்டு அறிந்து - இன்னமும் ஒருகாற் கண்களாற் கண்டு அனுபவித்து, உயிர் இழக்கஉம் ஆகும்எகொல்ஆம் - (அதன்பின் என்)உயிரை இழக்கவாயினுங் கூடுமோ? (எ - று.)

கன்னித்தன்மை மனத்தினுள்ளே ஒரு புருடனுஞ் செல்லவொண்ணாதபடி காத்தலால் அதனை 'மதில்' என்றும், நிறையும் பிறநற்குணங்களும் அக்கன்னித்தன்மைக்குக் காவலாய் நின்று உறுதிதருதலால் அவற்றை 'எந்திரம்' என்றும் உருவகப்படுத்திக்கூறினாள்; இங்கே "காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னும், நாணுத்தாழ் வீழ்த்த கதவு" என்னுந் திருக்குறளின் பொருள்விசேடத்தைக் கேட்டுணர்க. எந்திரம் - யந்த்ரம்: மதிலிற்பொறி. நான் கண்ட அம்மைந்தனை மணந்துஅணைந்துபுணர்தல்கூடாவிட்டாலும்ஒருகால் கண்ணாரக்கண்டு களித்திட்டபின் என்னுயிர்போவதானாலும் எனக்கு உடன்பாடே: அங்ஙனமாயினும் நேரிடுமோ? என்று சீதை வேண்டுகின்றனளென்க. 'உயிரிழக்கவும்' என்றது, இங்ஙனம் காதல்நோய் கைவிஞ்சின பின்பு அவனையணைதல் கூடாவிட்டால் தான் இறந்துபடுதல் திண்ணமென்னுந் தேற்றத்தால். 'கண்ணின்'என வேண்டாது கூறினது இப்பொழுது மனத்தாற் காணுதலாலும், அதுமாத்திரத்திலே தான் திருப்திப்படாமையாலு மென்க. இப்பொழுது தான் உணர்வை இழந்திருத்தலால், இனி அவனைக் கண்டபின்புதான் அவ்வுணர்வு மீண்டு வரு மென்னுங் கருத்தால், 'கண்டறிந்து' என்றாள். பி-ம்:—'ஆகவேண்டுமோல். (௫க)

கூ൦. என்றிவை யினையன ¹விளம்பு மெல்லையி
னின்றனன் ²னிவனெனு நீங்கி னான்னெனுங்
கன்றிய மனத்துறு காம வேட்கையா
லொன்றல பலநினைந் ³துருகுங் காலையே.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) என்ற இவை இனையன விளம்பும் எல்லையில் - என்ற இவற்றையும் இவைபோல்வனபிறவற்றையும் சீதாபிராட்டி கூறுகின்றபொழுதில், (உருவெளிப்பாட்டில்அவ்வீரன்எதிரிலே தோன்றினனாக), இவண் நின்றனன் எனும் - (நான் முன்புகண்ட மைந்தன் இதோ) இங்குநின்றருளினனென்பாள்; நீங்கினான் எனும் - (உடனே அவ்வுருவம் மறைதலால்) நீங்கிவிட்டான் என்பாள்; (இவ்வாறு அப்பிராட்டி), கன்றிய மனத்து உறு காமம் வேட்கையால் - வெதும்பின மனத்தில் மிகுந்த காமவிருப்பத்தால், ஒன்று அல பல நினைந்து - ஒன்றல்லாதனவாகிய பலவற்றை எண்ணியெண்ணி, உருகும் காலை - மனமுருகும் பொழுதில்,—(எ - று.)—'கதிரவன் கடலில் மூழ்கினான்' என மேலிற் கவியோடு இயையும்.

காமவேட்கை - காமனாலுண்டாகியவேட்கையென்றேனும், காமமாகிய வேட்கை யென்றேனும் கொள்க. அளவிறந்தனவென்னுங் கருத்துப்பட, 'ஒன்றலபல' என்றது. ஒருதன்மையதான எண்ணம் பலவற்றையும் பலதன்மையதான எண்ணம் பலவற்றையும் ஒருங்கே நினைந்தாள் என்று கூறினு

மாம். காலே - காலமென்பதன் விகாரம். பி - ம்:—[1] எண்ணுமென்வயின், விளம்பும் வந்தெதிர். [2] அவனெனும். [3] உணங்கும். (சுO)

சுக.—சூரியாஸ்தமனவருணனை.

அன்னமென் னடையவட் கமைந்த காமத்தீத்
தன்னையுஞ் [1] சுடுவது தரிக்கி லானென
நன்னெடுங் கரங்களை நடுக்கி யோடிப்போய்
முன்னைவெங் கதிரவன் கடலின் மூழ்கினான்.

(இ - ள்.) அன்னம் மெல் நடையவட்கு - அன்னப்பறவையின் நடைபோன்ற மெதுவான நடையையுடைய சீதாபிராட்டிக்கு, அமைந்த - (உடம்பு முழுவதிலும்) பொருந்தின, காமம் தீ - காமமாகிய நெருப்பு, (மேலெழுந்து), தன்னைஉம் சுடுவது - (இயற்கையில் வெப்பமான கிரணங்களையுடைய) தன்னையும் வந்து எரிப்பதை, தரிக்கிலான் என - பொறுக்கமாட்டாதவன்போல, முன்னை வெம் கதிரவன் - பழமையான உஷ்ணகிரணனாகிய சூரியன், நல் நெடு கரங்களை நடுக்கி - (தனது) சிறந்த நீண்ட கைகளை [கிரணங்களை] நடுங்கச்செய்துகொண்டு, ஓடி போய் - விரைவாகச்சென்று, கடலில் மூழ்கினான் - (மேற்குக்) கடலிலே நீராடினான்; (எ - று.)

சூரியனது உதயாஸ்தமனங்களைக் கீழ்கடலில் உதயகிரியிலே எழுவதாகவும் மேல்கடலிலே அஸ்தகிரியிலே மறைவதாகவுங் கூறுதல், கவிமரபு. இயற்கையிலே மறைகிற சூரியனைச் சீதையின்காமத்தீச் சுடுதலால் வெதும்பிக் கடலில் மூழ்கினதாக வருணித்தது, ஏதுத்தற்குறிப்பேற்றவணி. அன்னம் என் நடை - அன்னப்புள்ளென்று சொல்லத்தக்க நடையென்றுமாம். 'தன்னையும்' என்றமையால், பிறரைச்சுடுதல்தானேவிளங்கும். வெப்பம் முதலியவற்றால் துன்பமுறுவார்க்குக் கைகள் நடுங்குதல் இயல்பு. சூரிய கிரணங்கள் நடுங்குவனவாகக் கூறியது, பளபளக்குங்கால் அவைதாம் அசைவனவாகக் காணப்படுதலே. 'முன்னை வெங்கதிரவன்' என்றது, படைப்புக்காலந்தொடங்கியுள்ளவ னென்றவாறும். 'முன்னை' என்ற அடைமொழியால், சூரியன் தான் நெடுங்காலமாகஇருந்தும் இத்தன்மைய காமத்தீத் தன்னைச்சுடுதலை இதுகாறுங் கண்டறியா னென்றும், 'அவட்கமைந்த காமத்தீ' எனவே, பிறமங்கையர்க்கமைகிற காமத்தீ அவனைச சுட்டதில்லையென்றும கூறியவாறு. பி - ம்:—[1] சுடவது. (சுக)

சுஉ.—இதுவும் அடுத்தகவியும் - அந்திமாலைவருணனை.

விரிமலர்த் தென்றலாம் வீசு பாசமு
மெரிநிறச் செக்கரு மிருளுங் காட்டலா
லரியவட் கனறரு மந்தி மாலையாங்
கருநிறச் செம்மயிர்க் காலன் றோன்றினான்.

(இ - ள்.) விரி மலர் தென்றல் ஆம் - மலர்ந்த பூக்களிற் படிந்துவருகிற தென்றற்காற்றாகிய, வீசு பாசம்உம் - மேலெறிவதற்குஉரிய பாசாயுதத்தையும், எரி நிறம் செக்கர்உம் - நெருப்புப்போற் செந்நிறத்தையுடைய

செவ்வானமாகிய செம்மயிரையும், இருள் உம் - இருளாகிய கருநிறத்தையும், காட்டலால் - (தன்னிடத்தே) தோன்றக் காண்பித்தலால், அரியவட்கு அனல் தரும் - (உலகத்தில்) அருமையானவளாகிய அப்பிராட்டிக்குக் காமாக்கினியை வளர்க்கின்ற, அந்தி மாலை ஆம் கரு நிறம் செம் மயிர் காலன்-அந்திக்காலமென்கிற கரியநிறத்தையுஞ் சிவந்தமயிர்களையு முடைய யமன், தோன்றினன் - வந்தான்; (எ - று)

பிராட்டி காமவேதனையால் வருந்தியிருக்கும்பொழுது அவ்வேதனையை மிகவளர்ப்பதாகிய அந்திப்பொழுது வந்தது, யமன்வந்து காணப்பட்டதுபோல அவளுக்கு மிகப்பயங்கரமாக விருந்த தென்பதாம். பாசமும் காட்டலால் காலன் - பாசம் முதலியவற்றைத் தன்னிடத்துக் காணுமாறு கொண்டிருத்தலால் அந்திமாலை காலனென்று சொல்லத்தக்க தென்க. தென்றல் - தெற்கிலிருந்துவருங் காற்று; தென்றலைக் காலபாசமென உருவகப்படுத்தினது, தெற்கில் வெகுதூரத்தினின்று வந்து மேல் வீசுதலால். பாசம் - கயிற்றுவடிவமான யமனாயுதம். 'செக்கர்' என்பதற்கு - முதலிற் செந்நிறம் என்று பொருள்; செவ்வானத்துக்குப் பண்பாகுபெயர். இரண்டாமடியில் செக்கரும் இருளும் வைத்த முறைப்படியே நான்காமடியில் செம்மயிரையும் கருநிறத்தையும் ஒன்றன்பின் ஒன்றாக வையாதது - எதிர் நிரனிறைப்பொருள்கோளின்பாற்படும். அரியவள் - பிறமங்கையர்க்கு அருமையான குணங்களை யுடையவ ளென்றும், செந்நிறமுடைய ளென்றும், திருமாலுக்கேயுரியவ ளென்றும், கிளிபோன்றவ ளென்றும் பொருள்கள் படும்; (அரி - செந்நிறம், திருமால், கிளி முதலிய பலபொருள்கொண்ட ஒரு பெயர்த்திரிசொல்.) இரண்டு அந்திகளுள்ளனவாதலின் இன்னதென விளங்கும்பொருட்டு அந்திமாலை' என்றார். ஈற்றடி - மூரண்டோடை. (சுஉ)

சுங. மீதறை பறவையாம் பறையுங் கீழ்விளி
யோதமென் 'சிலம்பொடு முதிரச் செக்கரும்
பாதக விருள்செய்கஞ் சுகமும் பற்றலாற்
சாதக மென்னவுந் [2]தழைத்த மாலையே.

(இ - ள்.) மீது அறை பறவை ஆம் - மேலே [ஆகாயத்திலே] ஒலிக்கின்ற பறவைகளாகிய, பறைஉம் - பறையென்னும் வாத்தியத்தையும், கீழ் விளி - கீழே [பூமியிலே] ஒலிக்கின்ற, ஓதம் என் - கடலெனப்படுகிற [கடலாகிய], சிலம்பொடுஉம் - காற்சிலம்பையும், செக்கர் - செவ்வானமாகிய, உதிரம்உம் - இரத்தத்தையும், பாதகம் செய் இருள் -(பிராட்டிபோலக் காமவேதனைகொண்டார்க்குத்) துன்பத்தை வளர்க்கிற இருளாகிய, கஞ்சுகம் உம் - கருஞ்சட்டையையும், பற்றலால் - கொண்டிருப்பதனால், மாலை - அந்தமாலைப்பொழுதானது சாதகம் என்னஉம் - ஒருவகைப் பூதம்போலவும், தழைத்த(து) - விருத்தியடைந்தது; எ - று)

மாலைக்காலம் கையிற்பறையொலிக்கக் காலிற்சிலம்பணிந்து கருஞ்சட்டைதரித்துக் கையில் உதிரத்தை யேந்திநிற்கும் பூதம்போன்றிருந்த தென்பதாம்; தற்குறிப்பேற்றம். இனி, சாதகம் - க்ஷுத்ரதேவதைகளைக்

கைவசப்படுத்திக்கொண்டு அவற்றினுதவியால் அற்புதங்காட்டும் மாயவித்தைக்காரச்சாதியென்று கொண்டுரைப்பினுமாம். அந்தச்சாதி கையிற் பறையும் காலிற் சிலம்பும் [கையிலொருவகைச்சலங்கையும்] இரத்தக்குறியும் கருஞ்சட்டையுமுடைத்தாயிருத்தல், இயல்பு. உதிரச்செக்கரும், பாதகவிருள் செய் கஞ்சுகமும் என்றவிடத்து அந்வயம் மாற்றியுரைக்கப்பட்டது. மென் சிலம்பு என எடுத்து - மெல்லோசையுடைய சிலம்பு என்றும் உரைப்பர். உதிரம் = ருதிரம்: வடமொழி. பாதகம் - பாதுகம் என்னும் வடமொழித் திரிபு; பாதகமென்னும் வடமொழியெனக்கொண்டு, பாவம்போலக் கருநிறமுள்ள இருளினாற்செய்த உடம்பின் மேற்சட்டையென்றும் உரைக்கலாம்; பாவத்தைக் கருநிறமுடையதென வருணித்தல், கவிசமயம். 'சாதகமென்னவும்' என்ற உம்மை - இறந்தது தழுவியது. சாதகமென்னவும் என்பதற்கு - (யமனது) உபகரணம்போலவும் என்றுமாம். பி - ம்:—'சிலம்பரு. [2]தகைத்தம் மாலையே. (கூடு)

கூச.—அந்தியாலையை நோக்கிச் சீதாபிராட்டி வருந்திக்கூறுதல்.

கயங்களென்னுங் கனறோய்ந்து கடிநாண் மலரின் விடம்பூசி
யியங்கு தென்றன் மன்மதவே ளெய்த புண்ணி னிடைநுழைய
வுயங்கு முணர்வு நன்னலமு முருகிச் சோர்வா ளுயிருண்ண
வயங்கு மாலை வானோக்கி யிதுவோ கூற்றின் வடிவென்றாள்.

(இ - ள்.) கயங்கள் என்னும் கனல் தோய்ந்து - குளங்கள் என்கிற நெருப்புக்களிலே படிந்து (உடம்பு காய்ந்து), கடி நாள் மலரின் விடம் பூசி - வாசனையையுடைய புதிய பூக்களினின்று (மகரந்தமாகிய) விஷத்தையெடுத்துமேலே பூசிக்கொண்டு, இயங்கு தென்றல் - சஞ்சரிக்கின்ற தென்றற்காற்று (ஆகிய கூர்வேலானது); மன்மதவேள் எய்தபுண்ணின் இடை நுழைய - (பிராட்டியினுடம்பில்) மன்மதன் (அம்புகளை) எய்ததனாலாகிய புண்களின் துளைகளிலே தைத்து உட்செல்ல, (அதனால்), உயங்கும் உணர்வும் நல் நலமும் உருகி சோர்வாள் - வருந்துகிற அறிவும் சிறந்த பெண்மைக்குணங்களும் அழிந்து தளர்பவளாகிய அச்சானகியானவள்,—உயிர் உண்ண வயங்கும் மாலை வான் நோக்கி - (தனது) உயிரைக் கவரும்பொருட்டு வந்துவிளங்குகிற மாலைப்பொழுதோடுகூடிய வானத்தைப்பார்த்து, இதுவோ கூற்றின் வடிவு என்றாள் - யமனது பயங்கரமான ரூபம் இதுதானோவென்று எண்ணி அஞ்சினாள்; (எ - று.)

மன்மதனம்புகளால் துளைக்கப்பட்டு முன்னமே வருந்திக்கிடக்கின்ற சீதையின் உடம்பில் புண்ணில் வேலுருவியதுபோலத் தென்றல் தாக்கிச் செல்ல, அதனால் வருத்தம் மிக விஞ்சிய அப்பிராட்டி வானத்து அந்திமாலை தோன்றியதைக்கண்டு கூற்றின்வடிவம் இங்ஙனம்தான் இருக்கும்போலுமென்று வருந்தினளென்க. மாலையும்தென்றலும் பிறர்க்கெல்லாம் இன்பத்தைச்செய்வனவாயினும், தமக்கு இஷ்டமானவரைச்சேராத தலைவன் தலைவிகளுக்குக் காமத்தை வளர்த்து வருத்தலால் இங்ஙனங்கூறினது. (கூச)

௩௫.—கவி இரங்கிக் கூறுவது.

கடலோ மழையோ முழுநீலக் கல்லோ காயா நறும்போதோ
படர்பூங் குவளை நாண்மலரோ நீலோற் பலமோ பானலோ
இடர்சேர் மடவா ருயிருண்ப தியாதோ வென்று தளர்வாண்முன்
மடல்சேர் தாரா னிறம்போலு மந்தி மாலை வந்ததுவே.

(இ - ள்.) 'கடல்ஓ - கருங்கடலோ, மழைஓ - காளமேகமோ, முழு நீலம் கல்ஓ - சிறந்த பெரிய இந்திரநீலத்தின் மலையோ, காயா நறு போதுஓ - காயாமரத்தின் வாசனையுள்ள பூவோ, படர் பூ குவளை நாள் மலர்ஓ-படர்ந்த அழகிய கருங்குவளைக்கொடியினது அன்றலர்ந்த பூவோ, நீலோற்பலம்ஓ - நீலோற்பலமலரோ, பானல்ஓ - கருநெய்தல் மலரோ, இடர் சேர் மடவார் உயிர் உண்பது யாது ஓ - பலவகைத் துன்பங்களும் வந்தடைதற்கிடமான இளம்பெண்களது உயிரைக் கவர்வது(கீழ்க்கூறிய இவற்றுள்) எதுதானோ?' என்று - என்று நினைந்து, தளர்வாள் முன் - (மனமும் உடம்புந்) தளர்பவளாகிய அப்பிராட்டியி னெதிரிலே, மடல் சேர் தாரான் நிறம் போலும் அந்தி மாலை வந்தது - பூவிதழ்கள்பொருந்திய வெற்றிமாலையையுடைய இராமபிரானது திருநிறத்தையொத்த மாலைப்பொழுது வந்து சேர்ந்தது.

இக்கவியை, "கயங்க ளென்னும்" என்கிற கீழ்க்கவியின்முன் வைத்தல், பொருத்தமுடையது. இச்செய்யுளில் கடல்முதலாகப் பான லீறுகச் சொல்லப்பட்டுள்ள பொருள்களேழும் ஸ்ரீராமனது திருமேனிநிறத்துக்கு உவமையாகுவன வாதலால், இரங்கிக்கூறினர். இரண்டாமடியிற் கூறிய மூவகை நீர்ப்பூக்களும் ஒன்றோடொன்று சிறிதுவேறுபாடுள்ள சாதிபேத மென உணர்க. பெண்பிறப்புப் பெருந்துன்பத்துக்குஇடமாவ தென்று விரக வேதனை யுற்ற மகளிர் கூறுவதை "பெண்பிறந்தா ரெய்தும் பெருந்துயர் காண்கிலேனென்று, ஒண்சுடரோன் வாரா தொளித்தான்" எனத் திருவாய் மொழியிலுங் காண்க. ஈற்றேகாரம் - இரக்கம். (௩௫)

௩௬.—மாலைப்பொழுதைக்குறித்துப் பிராட்டி யிரங்கல்.

மைவா னிறத்து மீனெயிற்று வாடை யுயிர்ப்பின் வளர்செக்கர்ப்
பைவா யந்திப் படவரவே [1]யென்னை வளைத்துப் பகைத்தியா
லெய்வா னொருவன் கையோயா னுயிரு மொன்றே யினியில்லை
யுய்வா னுறவிப் பழிபூண [2]வுன்னோ டெனக்குப் பகையுண்டோ.

(இ - ள்.) வான் - ஆகாயத்துப் பரவிய,மை நிறத்து - கருநிறத்தையும், மீன் - நட்சத்திரங்களாகிய, எயிறு - விஷப்பற்களையும், வாடை - தென்றற் காற்றாகிய, உயிர்ப்பின் - மூச்சுக்காற்றையும், வளர் செக்கர் - பரவிய செவ்வானமாகிய, பை வாய் - விஷப்பையையுடைய வாயையுமுடைய, அந்தி - மாலைப்பொழுதாகிய, படம் அரவே - படத்தோடுகூடிய பெரிய நாகமே! (நீ), என் - என்னகாரணத்தால், நா வளைத்து பகைத்தி-நாவினால் (என்னை) வளைத்துப் பற்றி வருத்துகிறாய்? எய்வான் ஒருவன் - (என் மீது அம்புகளை) எய்பவனாகிய ஒப்பற்ற மன்மதனொருத்தன், கை ஓயான் - (அவ்வெய்

தற்சொழிலில்) கை சிறிதுந் தளர்கிருனில்லே; உயிர்உம் ஒன்றே - (எனக்கு) உள்ளதும் ஒருயிரேதான்; இனி இல்லே - (அதனே அவன்கவர்வானுைல் உனக்குக் கவர) வேருேருயிரில்லே; உய்வான் உற - (அம்மன்மதனுக்குத்) தப்பிப்பிழைப்பதாக யானிருக்க, இ பழி பூண - (இச்சமயத்து) இப்பெண் கொலேப்பெரும்பழியை (நீ) ஏற்பதற்கு, உன்னுேடு எனக்கு பகை உண்டு ஓ - உனக்கும் எனக்கும் (பரஸ்பரம்) விரோதமுள்ளதோ? [இல்லேயே].

அச்சந்தருதலால் இருளேக் கருநிறமாகவும், பளபளத்தலால் விண்மீனே எயிருகவும், அனல்வீசுதலால் வாடையை உயிர்ப்பாகவும், தன்னேவிழுங்கு வதுபோலுதலாற் செவ்வானத்தை வாயாகவும், கொல்லவருதலால் மாலே யைப் பாம்பாகவும் உருவகப்படுத்திஞள். ஒருபுறத்திலோ மன்மதன் முன் னமேபிடித்து உயிர்கவர முயல்கிருன்;நீயும் மற்ருெருபுறத்து வந்துதோன்றி ஞய்; எனது உயிர்ஒன்றேயாதலின், அவன்முயற்சி பயன்பட்டுவிட்டால் உனது பிரயத்தினம் வீணுய்முடியுமே; அன்றி, அவனிடத்தினின்று தப்பிப் பிழைக்க முயல்கின்ற எனது முயற்சி கைகூடுமாயின் அப்போது நலிவதற் காக இங்ஙனம் நீ செய்வதாயிருந்தால்,பெண்பழியைக்கட்டிக்கொள்ளுமாறு உனக்கு என்மேற் பகைமூள யாது காரணம்? ஒன்றுமில்லேயே: ஆதலின், நீ இப்பொழுதே அப்பாற்செல் என்பது பின்னடிகளின் கருத்து. மை - அஞ்சனம்; கருநிறத்துக்கு, உவமையாகுபெயர்போலும். மீன் - விண்மீன். வாடை - வடக்கிற்செல்லுங்காற்று என்ருயினும், கூடாதார் வாடுதற்குக் காரணமான காற்று என்ருயினும் ஏதுப்பெயராகக்கொள்க: இங்ஙனங் கொள்ளாது வடக்கிலிருந்து வருங் காற்றெனக் கொள்ளுதல், கீழ் "விரி மலர்த்தென்றல்", "இயங்குதென்றல்" என்று வந்தவற்ருேடு மாறுகொளக் கூறலாம். 'நா' என்றது - மாலேப்பொழுதிற் காணப்படும் ஒருவகைச்சிறு செவ்வொளியை. [1]இன்ஞவிளேத்து என்னும் பாடத்துக்கு - துன்பங்களேச் செய்து என்று பொருள். பி - ம்:—[2]என்னுேடெனக்குப் பகையுண்டோ, உன்னுேடென்னபகையுண்டோ. (சுசு)

சுஎ.—இருளேநோக்கிப் பிராட்டி புலம்புதல்.

ஆல முலகிற் பரந்ததுவோ வாழி கிளர்ந்த தோவவர்தந்
நீல நிறத்தை யெல்லோரு நினேக்க வதுவாய் நிரம்பியதோ
கால னிறத்தை யஞ்சனத்திற் கலந்து [1]குழைத்துக் காயத்தின்
மேலு நிலத்து மெழுகியதோ [2]விளேக்கு மிருளாய் விளேந்ததுவே.

(இ - ள்.) விளேக்கும் இருள் ஆய் விளேந்தது - (தனிப்பட்டவர்க்குத் துன்பத்தை) வளர்க்கின்ற இருளுருவமாய் விருத்தியடைந்தது,— ஆலம் உலகில் பரந்தது ஓ - ஹாலாஹலவிஷம் உலகமுழுவதிலும் பரவியதுதானே? ஆழி கிளர்ந்தது ஓ - கருங்கடல் மேற்பொங்கிவந்ததுதானே? அவர்தம் நீலம் நிறத்தை எல்லோர்உம் நினேக்க அதுஆய் நிரம்பியது ஓ - அப்புருஷோத்தம ஞரது திருமேனியின் நீலநிறத்தை(உலகத்தில்) யாவரும் நினேத்தலால் (எங் கும்) அந்நிறமேயாகி வியாபித்ததுதானே? காலன் நிறத்தை அஞ்சனத்தில் கலந்து குழைத்து காயத்தின்மேலும் நிலத்துஉம் மெழுகியது ஓ - யமனது

கருநிறத்தை மையோடு கலந்துகுழைத்து (அதனை) வானத்தின்மீதும் பூமியின்மீதும் (முழுவதும்) பூசியதுதானோ? (எ - று.)—எ - இரக்கம்.

ஆலமும் காலனிறமும், யாவர்க்கும் அச்சஞ்செய்வன. ஆழி, விரகிகளுக்கு வருத்தம்விளைப்பது; எம்பெருமானது திருநிறம் பிராட்டிக்குக் காதற்றுன்பம் விளைப்பது; ஆதலால், இக்கரியபொருள்கள் அச்சத்தையும் வருத்தத்தையும் விளக்கும் இருளுக்கு உவமையாக்கப்பட்டன: ஐயவுவமையணி. ஹாலாஹலவிஷம் - பாற்கடலைக்கடைந்தபொழுது அதனினின்றும் பிறந்தது. காயம் - ஆகாசமென்னும் வடமொழித் திரிபாகிய ஆகாயமென்பதன் முதற்குறை. இளைக்கும் இருள்எனப்பிரித்து - (தனித்துஉறைபவர்) மெலிதற்குக்காரணமான இருளென்று முரைப்பர். பி - ம்:—[1] குழைத்தாகாயத்தின். [2] விளங்கும். (௩௭)

௩௮.—பிராட்டி அன்றிற்பறவையை நோக்கி இரங்கியது.

**வெளிநின் றவரோ போய்மறைந்தார் விலக்க வொருவர் தமைக்காணே**
**னெளியள் பெண்ணென் றிரங்காதே யெல்லி யாமத் திருளூடே**
**யொளியம் பெய்யு மன்மதனா [1]ருனக்கிம் மாய முரைத்தாரோ**
**வளியென் செய்த [2]தீவினையே யன்றி லாகி வந்தாயோ.**

(இ - ள்.) (ஓ பறவையே!), வெளி நின்றவர் ஓ போய் மறைந்தார் - (எனது கண்ணின்முன்னே சிறிதுபொழுது) வெளிப்பட்டுத்தோன்றிய தலைமகனாரோ (இப்பொழுது) மறைந்துசென்றார்; விலக்க ஒருவர் தமை காணேன் - (அங்ஙனம் அவரைப் போகவொட்டாமல் எனக்காகத்) தடுப்பதற்கு ஒருவரையுங் காணப்பெற்றேனில்லை; எளியள் பெண் என்று இரங்காது - (இங்ஙனங் கதியற்ற) எளிமையையுடையவளாகிய ஒருபெண்ணென்றுகருதி (என்விஷயத்திற் சிறிதும்) இரக்கங்கொள்ளாமலே, எல்லி யாமத்து இருளூடு - இராத்திரிகாலத்து இருளிடையிலே, ஒளி அம்பு எய்யும் - மறைந்துநின்று அம்புகளை (என்மீது) பிரயோகிக்கின்ற, மன்மதனார் - காமதேவர், உனக்கு இ மாயம் உரைத்தார் ஓ - உனக்கு இந்தக்கொடுவஞ்சனையை உபதேசித்தாரோ? (அல்லது), அளியென் செய்த தீவினையே அன்றில் ஆகி வந்தாய் ஓ-எளியேன் (முற்பிறப்பிற்) பண்ணின பாவமே! (நீ இப்பிறப்பில்) அன்றிற்பறவையுருவங்கொண்டு (வருத்த) வந்தனையோ? (எ - று.)

அன்றிலென்னும் புள் எப்பொழுதும் ஆணும்பெண்ணுங் கூடியே நிற்கும்: கணநேரம் ஒன்றையொன்றுவிட்டுப் பிரிந்தாலும் அத்துயரத்தைப் பொறாமல் ஒன்றையொன்று இரண்டுமூன்றுதரங் கத்திக்கூவி அதன்பின்புந் தன் துணையைக்கூடாவிட்டால் உடனே இறந்துபடும். இது வடமொழியில் கிரௌஞ்சமென்றும், தமிழிற் குருகெனவும்படும்; பகல்முழுவதும் புணர்ந்திருந்து இரவிற்பிரிந்து வருந்துவதாகிய (சக்கரவாகப்பறவையும் அன்றிலெனப்படுவதுண்டு.) அன்றிற்பறவை இரவில் துணையைப்பிரிந்து வருந்தி அந்நிலைவாற் கூவுகிற குரலோசை தலைவரைப்பிரிந்து வருந்துகிற மகளிர்க்கு அவ்வருத்தத்தை வளர்ப்பதாகக் கூறுவது கவிமரபு. இச்செய்யுள் அங்ஙனம் வருந்தின தலைவி அன்றிலைக்குறித்து இரங்கியது.

'விலக்க ஒருவர்தமைக் காணேன்' என்பதற்கு - நீ கூவுவது என்னை வருத்துவதைத் தடுப்பதற்கு ஒருவரையுங்காண்கிலே னென்று முரைக்கலாம்; என்கண்ணெதிரிற் காணப்பட்டவர் மறைந்துபோகாதிருப்பின் உன் குரல் எனக்குத் துன்பம் பயவா தென்பது கருத்து. இனி, விலக்க வொருவர்தமைக் காணேன் என்பதற்கு - (எனக்கு உண்டான காமநோயை) நீக்குவதற்கு ஒருவரையுங்காண்கிலே னென்று உரைத்தலு மொன்று; தாதியர் முதலிய பலர் அருகிலிருந்தும் அவர்கள் தன்கருத்தின்குறிப்பையறிந்து அதனைப் பூர்த்திசெய்யமாட்டாமையின் இங்ஙனங் கூறியது. இனி, முதலடிக்கு - வெளியிலே நின்ற தாதிமார் முதலியவர்களோ போய்மறைந்தார்: ஆதலால் நீ என்முன்வருவதைத் தடுக்க ஒருவரையுங் காண்கிலே னென உரைப்பினும் அமையும்; பலரிருப்பினும் இங்ஙனங் கூறுதல், துன்பஞ்செய்யும் அன்றிலொன்றே அவள் கண்முன் பட்டு அத்துன்பத்தையொழிக்கக் கூடியவரெவரும் எதிர்ப்படாமையா லென்க. யாமம் என்னும் ஏழரைநாழிகையின் பெயர், இங்குப் பொதுவாய்க் காலமென்னும் பொருளை யுணர்த்திற்று. ஒளி-ஒளிந்து என்னும் வினையெச்சத்தின் விகாரம்; பெயர்ச்சொல்லாக, ஒளியையுடையஎன்றுஉரைப்பாருமுளர். மன்மதனுர் என்ற பன்மை, வெறுப்புப்பற்றினது. இம்மாயம் - இருளில்நின்று எனக்குத் தீங்கிழைக்கும் வித்தை. உரைத்தாரோ - சொல்லிக்கொடுத்தாரோ என்றபடி. அளியென் - பிறரால் அருள்செய்யத்தக்க எளியவள் யான்; அளித்தல் - இரங்குதல். பி - ம்.—[1] உமக்கிம்மாற்ற முரைத்தாரோ. [2] தீவினையாலன்றிலீரும் வந்தீரோ. (கூ அ)

௬௯.—தோழிமார் செய்த உபசாரம்.

**ஆண்டங் கனையா ளினையநினைந் தழுங்கு [1]மெல்வை யகல்வானந்**
**தீண்ட நிமிர்ந்த பெருங்கோயிற் சீத மணியின் வேதிகைவாய்**
**நீண்ட சோதி நெய்விளக்கம் வெய்ய வென்றங் கவைநீக்கித்**
**தூண்டல் செய்யா மணிவிளக்கின் சுடரா [2]லிரவைப் பகல்செய்தார்.**

(இ - ள்.) ஆண்டு - அவ்விடத்திலே, அனையாள் - அப்பிராட்டி, இனைய நினைந்து - இவற்றையும் இவைபோல்பவற்றையும் எண்ணி, அங்கு - அவ்வாறு, அழுங்கும் எல்வை-வருந்தும்பொழுது, (தோழிமார்), அகல் வானம் தீண்ட நிமிர்ந்த பெரு கோயில் - நெடுந்தூரத்திலுள்ள மேலுலகத்தையுந் தொடும்படி உயர்ந்துள்ள பெரிய சிறந்த அக்கன்னியாமாடத்து, சீதம் மணியின் வேதிகைவாய் - குளிர்ந்த சந்திரகாந்தக்கல்லினுற் செய்யப்பட்ட மேடையிலே, நீண்ட சோதி நெய் விளக்கம் - மிகுந்த ஒளியையுடைய நெய்யினு லேற்றப்படுகிற விளக்குக்கள், வெய்ய என்று - வெப்பமுடையன வென்று கருதி, அங்கு அவை நீக்கி - அவ்விடத்திலே அவற்றையொழித்துவிட்டு, தூண்டல் செய்யா மணி விளக்கின் சுடரால் - தூண்டுதல் செய்யவேண்டாத இரத்தினதீபங்களின் காந்தியால், இரவை பகல் செய்தார் - இராப்பொழுதைப் பகல்போல வெளிச்சமுண்டாம்படி செய்தார்கள்; (எ - று.)

நெய்பெய்து ஏற்றின விளக்கும் சீதையின் வெப்பத்தை மிகுவிக்கு மென்று தோழிமார் அவற்றையெல்லாம் அப்பாற் படுத்திவிட்டு, மணிவிளக்கினால் அங்கு வெளிச்சமுண்டாம்படி செய்தன ரென்க. அங்கனையாள் என ஒருசொல்லாக எடுத்து, பெண்ணிற்சிறந்தவளென்று முரைக்கலாம்; 'அங்கநா' என்பதன் திரிபாகிய அங்கனையென்பது, பெண்பால்விகுதிபெற்று வந்தது. 'அகல்வானம்' என்பதற்கு - பஞ்சபூதங்களுள் தன்னையொழிந்த நான்குபூதங்களுந் தன்னிடத்தே அகன்றுவிரிதற்குக்காரணமான ஆகாய மென்று உரைப்பர், ஆசிரியர் நச்சினார்க்கினியர். இப்பாட்டுக்குத் தகுதிநோக்கி எழுவாய் வருவிக்கப்பட்டது. பி - ம்:—[1] வேலை. [2] இருளை. (சுக)

எ0.—இதுவும் அடுத்த கவியும் - சந்திரோதயவருணனை.

**பெருந்திண் ணெடுமால் வரைநிறுவிப் பிணித்த பாம்பின் மணித்[1]தாம்**
**விரிந்த திவலை [2]யுதிர்ந்த மணி விசும்பின் மீனின் மேல்விளங்க [பின்**
**வருந்த வமரர் கலக்கியநா ளமுத நிறைந்த பொற்கலச**
**மிருந்த திடைவந் தெழுந்ததென வெழுந்த தாழி வெண்டிங்கள்.**

(இ - ள்.) பெரு திண் நெடு மால் வரை நிறுவி-சிறந்த வலிய உயர்ந்த பெரிய மந்தரமலையை (மத்தாக) நாட்டி, பிணித்த - (அதிற்) கட்டப்பட்ட, பாம்பின் - (வாசுகியென்னும்) பாம்பாகிய, மணி தாம்பின் - முறுக்கேறிய கடைகயிற்றால், விரிந்த திவலை உதிர்ந்த மணி விசும்பின் மீனின் மேல் விளங்க - (வெளியிலே தெறித்துப்) பரவிய நீர்த்துளிகளும் சிதறின இரத்தினங்களும் வானத்தே காணப்படுகிற நக்ஷத்திரங்களைக்காட்டிலும் அதிகமாய் விளங்கும்படி, அமரர் - தேவர்கள், அருந்த-(தாம்) உண்ணுவதற்காக, கலக்கிய நாள் - (திருப்பாற்கடலைக்) கடைந்திட்ட காலத்தில், அமுதம் நிறைந்த பொன் கலசம் இருந்தது இடை வந்து எழுந்தது என-(அக்கடலிலிருந்ததாகிய) அமிருதம்நிறைந்த பொன்மயமான கலசமானது அதனிடையிலே எழுந்து தோன்றியதுபோல, வெள் திங்கள் - வெண்ணிறமுள்ள சந்திரமண்டலம், ஆழி-கருங்கடலினின்று, எழுந்தது - உதித்தது; (எ - று.)

கடலினிடையே தோன்றிய சந்திரனைப் பாற்கடலினிடையே தோன்றிய அமுதம்நிறைந்தபொற்கலசமாகக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. சந்திரகிரணத்தால் வெண்ணிறமடைதல்பற்றி, கருங்கடலுக்குப் பாற்கடல் ஒப்பாம். சந்திரன் அமிர்தகிரண னாதலால், அவனுக்கு அமிர்தகலசத்தை உவமைகூறுதல் அடுக்கும். சந்திரமண்டலம் வெண்ணிறத்ததாயினும், உதிக்குங்காலத்துச் செந்நிறத்ததாக்காணப்படுதலின், பொற்கலசமென்றார்; இனி, பொன் கலசம் - அழகிய கலச மெனினுமாம்: அன்றி, அமுதம் நிறைந்த பொற்கலசம் - அமிருதம்நிரம்பி மேல்வழியப்பெற்ற பொற்பாத்திரமுமாம். மணித்தாம்பு-உறுதியுள்ள கயிறு; அழகிய கயிறென்றும், மாணிக்கத் தோடுகூடிய கயிறென்றும் உரைக்கலாம். இரண்டாமடியில், மணி விசும்பின் உதிர்ந்த மீனின் மேல்விளங்க என அந்வயம் மாற்றி, கடலினின்று பரந்த நீர்த்துளிகள் கரிய ஆகாயத்தினின்று சிந்தின விண்மீன்களினும் பலவாய் விளங்க என்றும், உதிர்ந்த விரிந்த திவலை என மொழிமாற்றி-கடலினின்று

சிதறிப் பரவின நீர்த்திவலைகள் ஆகாயத்து நக்ஷத்திரமண்டலத்துமேலுந் தெறித்துவிளங்க என்றும் பொருள்கொள்ளலாம். ஆழி வெண்டிங்கள் - வட்டவடிவமாகியசந்திரனென்று முரைப்பர். தேவர்களைஇருதிணையாகவுஞ் சொல்லலாமென்பது இலக்கணமாதலால், இங்கு 'எழுந்தது'என அஃறிணை யாற்கூறினர். மூன்ருமடியில் வருந்த எனப் பிரித்தல் மோனைத்தொடைக் குப் பொருந்தாது. பி - ம்:—[1] தாம்பால் [2]பொதிந்த. (எ௦)

எக. வண்டா [1]யயனுன் மறைபாட மலர்ந்த தொருதா மரைப்போது
பண்டா லிலையின் மிசைக்கிடந்து பாரு நீரும் பசித்தான்போ
லுண்டா னுந்திக் கடல்பூத்த தோதக் கடலுந் தான்வேருேர்
வெண்டா மரையின் மலர்பூத்த தொத்த தாழி வெண்டிங்கள்.

(இ - ள்.) அயன் - பிரமதேவன், வண்டு ஆய் - வண்டை யொத்து (மேலேறிவீற்றிருந்து),நால் மறை பாட-நான்குவேதங்களையும் பாடாநிற்க, மலர்ந்தது - மலர்ந்ததாகிய, ஒரு தாமரை போது - ஒரு செந்தாமரை மலர், பண்டு-முற்காலத்திலே, ஆல் இலையின் மிசை கிடந்து பார்உம் நீர்உம் பசித் தான் போல் உண்டான் உந்தி கடல்-(பிரளயப்பெருங்கடலில்) ஆலிலையின் மேலே பள்ளிகொண்டு உலகங்களையும் கடல்களையும் (எல்லாவற்றையும்) பசியடைந்தவன்போல உட்கொண்டருளின திருமாலினது நாபியாகிய கட லினின்று, பூத்தது - உண்டாயிற்று: (அதனை நோக்கி), ஓதம் கடல்உம்- அலைகளையுடைய கடல் தானும், தான் வேறு ஓர் வெண் தாமரையின் மலர் பூத்தது ஒத்தது - தான் வேருெரு வெண்டாமரைப்பூவைப் பூத்ததையொத் திருந்தது, ஆழி வெண் திங்கள் - கடலினின்றுஉதித்த வெண்ணிறமான சந்திரமண்டலம்; (எ - று.)

திருமாலின் திருவுந்திக்கடல் ஒருதாமரைமலரைப் பூத்ததைக் கண்டு கருங்கடலும் தான்ஒருதாமரைமலரைப் பூத்ததுபோன்றது, கடலிற் சந்திர னுதித்த தென்க: தற்குறிப்பேற்றவணி. ஒருவர் ஒருகாரியத்தைச் செய் தால் பிறரும் அதனை விரும்பிச் செய்தலும் அங்ஙனஞ்செய்யும்போது சிறிதுவேறுபாடு காட்டுதலும் உலகத்தாரதுதன்மை யாதலால், உந்திக் கடல்போலச் செந்தாமரைபூவாது இக்கடல் வெண்டாமரை பூத்ததென்றூர். சந்திரனுகிய வெண்டாமரைமலருக்குக் களங்கம் வண்டெனக் கொள்க. வண்டுக்கு ரீங்காரம்போலப் பிரமனுக்கு வேதங்களை முகங்களாற் பாடுதல். மலரின்நடுவில் ஏகதேசத்தில் வண்டு மொய்த்தல்போலப் பிரமன் பூவின் ஏகதேசத்தில்அடங்கிக்கிடந்தா னெனத் திருமாலினதுநாபீகமலத்தின் பெருமையைத் தெரிவித்தார். உந்தியை 'கடல்' என்றதனுல், நாராயண னது நாபியின்பெருமை நன்கு விளங்கும். பாரையும் நீரையும் சோறுந் தண் ணீருமாகக் கொள்க. 'பசித்தான்போல்' என்றதனுல்,கடவுளுக்குப் பசியில் லாமை பெறப்பட்டது. கலைநிறைந்த சந்திரமண்டலம், இதழ்விரிந்த வெண் டாமரைமலரை யொக்கும். தாமரை பூப்பது நீர்நிலையி லாதலின்,உந்தியைக் கடலாக உருவகப்படுத்தினது. பி - ம்:—[1] அயனுர். (எக)

எஉ.—இதுமுதல் மூன்றுகவிகள் - நிலாக்கற்றையின் வருணனை.

புள்ளிக் குறியிட் டென[1]வொண் மீன் பூத்த வானம் பொலிகங்கு
னள்ளிற் [2]சிறந்த விருட்பிழம்பை நக்கி [3]நிமிரு நிலாக்கற்றை
கிள்ளைக் கிளவிக் கென்னுங்கொல் கீழ்பாற் றிசையின் [4]மிசைவைத்த
வெள்ளிக் கும்பத் திளங்கமுகின் பாளை போன்று [5]விரிந்துளதால்.

(இ - ள்.) புள்ளி குறி இட்டு என - புள்ளிகளை அடையாளமாக இட்டாற்போல, ஒள் மீன் பூத்த - பிரகாசமான நட்சத்திரங்கள் விளங்கப்பெற்ற, வானம் - ஆகாயத்தினிடத்தே, பொலி - விளங்குகிற, கங்குல் நள்ளில் சிறந்த இருள் பிழம்பை நக்கி நிமிரும் - இராத்திரியினது நடுப்பொழுதிலே மிகுகின்ற இருட்கூட்டத்தை யுண்டு சிறக்கின்ற, நிலா கற்றை - சந்திரனது நிலவின்தொகுதியானது, கீழ் பால் திசையின் மிசை வைத்த-கிழக்குத்திக்கிலே மேலிடத்திலே வைக்கப்பட்ட, வெள்ளி கும்பத்து - வெள்ளிமயமானதொரு பூர்ணகும்பத்தின் பக்கலிலே யுள்ள, இள கமுகின் பாளை போன்று - இளமையான பாக்குமரத்தின் வெண்ணிறமான பாளையையொத்து, விரிந்து உளது - பரவியுள்ளது; (இது), கிள்ளை கிளவிக்கு என் ஆம் கொல் - கிளிமொழிபோலுங் கிளர்மொழிகளையுடைய பிராட்டிக்கு யாதாய் முடியுமோ? (எ - று.)

சந்திரனுடைய நிலாக்கற்றை வெள்ளிக்கும்பத்து நாட்டிய வெண்பாளைக் கமுகுபோலுமென்றார்; தற்குறிப்பேற்றவணி. பூரணகும்பம் வைத்துப் பாளைக்கமுகுநாட்டுதல், மங்களம். வெள்ளிக்கும்பம் - சந்திரனுக்கும், கமுகம்பாளை - நிலாக்கற்றைக்கும் உவமை. புள்ளியைக் குறியிடுதல், உலகவியற்கை. நிலா இருட்பிழம்பைநக்குதல், தனது ஒளியா லென்க. கிள்ளைக்கிளவி - உவமைத்தொகையன்மொழி. 'என்னுங்கொல்' என்றது - மிக்க துன்பத்தைச்செய்யும் என்பதுபட நின்றது. பி-ம்:—[1]பன்மீன். [2]செறிந்த. [3]நிமிர்ந்த [4]மேல். [5]விரிந்துள.   (எஉ)

எங. வண்ண மாலைக் கைபரப்பி யுலகை வளைந்த விருளெல்லா,
முண்ண வெண்ணித் தண்[1]மதியத் துதயத் தெழுந்த நிலாக்கற்றை,
விண்ணு மண்ணுந் திசையனைத்தும் விழுங்கிக் கொண்ட விரிநன்
னீர்ப், பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன் புகழ்போ லெங்கும்
பரந்துளதால்.

(இ - ள்.) வண்ணம் மாலை கை பரப்பி - செந்நிறமுள்ள மாலைப்பொழுதாகிய (தனது) செங்கையை விரித்து நீட்டி, உலகை வளைந்த இருள் எல்லாம் - உலகத்தைச்சூழ்ந்துள்ள இருள்முழுவதையும், உண்ண எண்ணி - புசித்து உட்கொள்ளக்கருதி, தண் மதியத்து உதயத்து எழுந்த - குளிர்ந்த சந்திரனது உதயத்திலே வெளிப்புறப்பட்ட, நிலா கற்றை - நிலாவின் திரளானது, விண் உம் மண் உம் திசை அனைத்து உம் விழுங்கி கொண்ட - விண்ணுலகமும் மண்ணுலகமும் எல்லாத்திக்குகளுமாகிய உலகமுழுவதையும் (தன்னுடையதாக்கி) விழுங்கிவிட்ட, விரி நல் நீர் பண்ணை வெண்ணெய் சடையன்

தன் புகழ் போல் - பரவிய நல்ல நீர்வளத்தையுடைய கழனிகளையுடைய திருவெண்ணெய்நல்லூரில் வாழ்கிற சடையப்பவள்ளலினது கீர்த்திபோல, எங்கும் பரந்துஉளது - எவ்விடத்தும் பரவிற்று; (எ - று.)

இருளென்பது மாலைக்காலமாகிய கையைப்பரப்பி உலகம் முழுவதையும் வளைத்துக்கொள்ள அவ்விருள்முழுவதையும் உண்ண வெண்ணித் தோன்றிய சந்திரனது நிலாத்தொகுதியானது, சடையன்புகழ்போலப்பரந்ததென்பதாம். உவமையணி. கீர்த்தியை வெண்ணிறமுடையதாக வருணித்தல்கவிசமயம். 'விண்ணு மண்ணுந் திசையனைத்தும் விழுங்கிக்கொண்ட' என்பது-புகழுக்கு அடைமொழி. பி-ம்:—[1]மதியமதனுணிமிர்ந்த நெடுநிலா.

௭௪. நீத்த மதனின் முளைத்தெழுந்த நெடுவெண் டிங்க ளெனுந்
தச்சன், மீத்[1] தன் கரங்க ளவைபரப்பி[2] மிகுவெண் ணிலவாம் வெண்
சுதையாற், காத்த கண்ணன் மணியுந்திக் கமல நாளத் திடைப்பண்டு,
பூத்த வண்டம் பழையதென்று புதுக்கு வானும் போன்றுளதால்.

(இ - ள்.) நீத்தம் அதனில் முளைத்து எழுந்த - கடல்வெள்ளத்திலே உதித்து மேலெழுந்த, நெடு வெண் திங்கள் எனும் - பெரிய வெண்ணிறமுள்ள சந்திரனென்கிற, நெடு தச்சன்-சிறந்த சிற்பியானவன் தன் கரங்கள் அவை மீ பரப்பி - தனது கிரணங்களென்கிற கைகளை மேலே பரவச்செய்து, மிகு வெள் நிலவு ஆம் வெள் சுதையால் - மிகுந்த வெள்ளிய நிலாவாகிய வெண்ணிறமுள்ள சுண்ணச்சாந்தினால், காத்த கண்ணன் மணி உந்தி கமலம் நாளத்திடை பண்டு பூத்த அண்டம் பழையது என்று புதுக்குவான்உம் - காத்தற்றொழிலையுடைய திருமாலினது அழகிய நாபீகமலத்தினது நாளத்தினிடமாக முன்புதோன்றின அண்டகோளம் (இப்பொழுது) பழையதாய்விட்டதென்று கருதி அதனைத் தான் புதுப்பித்தலையும், போன்று உளது - ஒத்துள்ளது: (நிலாக்கற்றை எங்கும்பரவினது); (எ-று.)

வீடு அழுக்கடைந்து பழமையானதாகத் தோன்றும்போது அதற்குச் சுண்ணம்படித்துப் புதுப்பிக்கும் உலகவழக்கத்தை யனுசரித்துத் திருமால் படைத்த இவ்வண்டமே பழமையானதாகத்தோற்றியதுபற்றி அதனை முழுவதையும் சுதைகொண்டு புதுப்பிப்பதுபோலச் சந்திரன் நிலாக்கற்றை எங்கும் பரவிற்றென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. புதுக்குவான்-தொழிற்பெயர்: வினையாலணையும்பெயராகக்கொள்வாருமுளர். தச்சன் - தொழிலாளி யென்ற பொருளில் வந்தது. நெடுந்தச்சன் - ஸர்வசக்தனாகிய நாராயணனால் படைக்கப்பட்ட அண்டகோளமுழுவதையும் தானொருவனே புதிதாக்கவல்ல ஆற்றலுடைய சிற்பியென்றவாறும். தச்சன் = தக்ஷன்: சுதை - ஸுதா: வடசொற்றிரிபு. கிருஷ்ணன் என்பதன்சிதைவாகிய கண்ணனென்பது, திருமாலின் ஓரவதாரப்பெய ரன்றிக்கே திருநாமமாயிரத்தெட்டனுளொன்றுமாம். பி - ம்: —[1]தண். [2]விரிந்தநிலவாம். (௭௪)

௭௫. அப்போது தாமரைதவிய ஆம்பல் மலர்தல்.

விரைசெய் கமலப் பெரும்போது விரும்பிப் புகுந்த திருவினொடுங்
குறைசெய் வண்டின் குழாமிரியக் கூம்பிச் சாம்பிக் குவிந்துளதா

னுரைசெய் திகிரி தனையுருட்டி யொருகோ லோச்சி யுலகாண்ட
வரச னொதுங்கத் தலையெடுத்த [1]குறும்பு போன்ற தாக்காம்பல்.

(இ - ள்.) (இங்ஙனஞ் சந்திரன் உதித்தபொழுது), விரை செய் பெரு கமலம் போது - வாசனையைவீசுகின்ற பூவிற்சிறந்த தாமரைமலரானது,— விரும்பி புகுந்த திருவினொடும் - (தன்னை) விரும்பி (த் தன்னிடம்) வந்து சேர்ந்துவீற்றிருக்கிற திருமகளுடனே, குரை செய் வண்டின் குழாம் இரிய - ஒலித்தலைச்செய்கின்ற வண்டுகளின் கூட்டமும் (தன்னைவிட்டு) நீங்கிப் போகும்படி, கூம்பி - இதழ்குவிந்து, சாம்பி - வாடி, குவிந்துளது - மூடிக்கொண்டுள்ளது; அரக்கு ஆம்பல் - செவ்வாம்பல்மலரானது,—உரை செய் திகிரிதனை உருட்டி ஒரு கோல் ஓச்சி உலகு ஆண்ட அரசன் ஒதுங்க தலையெடுத்த குறும்பு போன்றது - சிறப்பித்துச்சொல்லப்படுகின்ற ஆஜ்ஞா சக்கரத்தை(எங்குந்தடையில்லாதபடி)உருளச்செய்துஒப்பற்ற செங்கோலைச் செலுத்தி உலகமுழுவதையும் அரசாண்டுவந்த சக்கரவர்த்தி ஒழிந்தமாத்தி ரத்தில் தலையெடுக்கிற குறுநிலமன்னன்போலத் தலையெடுத்துமலர்ந்தது.

சூரியன் அத்தமித்தவுடனே தாமரைகுவிதலும் ஆம்பல்மலர்தலுமாகிய இயல்பை வருணித்தார். ஒற்றைத்தேராழியை யுருட்டி ஒப்பற்றகிரணத் தை வீசி உலகமுழுவதும் ஆட்கொண்ட சூரியன் ஒதுங்குதல் ஆம்பல்தலை யெடுத்தற்குக் காரணமாகு மென்பது, பின்னிரண்டடிகளில் விளங்கிற்று; இனி, ஆம்பலாகிய குறுநிலமன்னனுக்குத் தாமரையை அரசனாகக் கூறு தலும் ஒன்று. குறும்பு - சிற்றூர்; குறும்பனுக்கு ஆகுபெயர். பி - ம்:— [1]குறும்பர். சிலபிரதிகளில் இச்செய்யுள் எ௩-ஆவது பாடலாகவுள்ளது. (எ௰)

எகூ.—சந்திரோபாலம்பனம்.

[1]நீங்கா மாயை யவர்தமக்கு நிறமே தோற்றுப் புறமேபோ
யேங்காக் கிடக்கு மெறிகடற்கு மெனக்குங் கொடியை யானுயே
யோங்கா நின்ற விருளாய்வந் துலகை விழுங்கி மென்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பி னிடையே யெழுந்த வெண்ணெருப்பே.

(இ - ள்.) ஓங்காநின்ற - அதிகப்படுகிற, இருள் ஆய் - இருளின் வடிவ மாய், வந்து—, உலகை விழுங்கி - உலகமுழுவதையுங் கவர்ந்து, மெல் மேல்உம் வீங்காநின்ற - மேலும்மேலும் விருத்தியடைகிற, கரு நெருப்பின் இடையே - கருநிறமுள்ளதொரு தீயினிடையிலே, எழுந்த - தோன்றிக் காணப்பட்ட, வெள் நெருப்பே - வெண்ணிறமுள்ள தொரு தீயே! நீங்கா மாயை அவர் தமக்கு - நீங்காதமாயையையுடைய அப்புருடோத்தமனுக்கு, நிறம் ஏ தோற்று - நிறத்தினால் தோல்வியடைந்து புறம்ஏ போய் -(உலகத் திற்குப்) புறம்பாகச்சென்று, ஏங்கா கிடக்கும் - புலம்பிக்கொண்டிருக்கிற, எறி கடற்குஉம் - அலைவீசுகிற கடலுக்கும், எனக்குஉம்-(காமவேதனையால் வருந்துகிற) எனக்கும், கொடியை ஆனாய் ஏ - (நீ) கொடுந்தன்மையுடையை யாயினையே!! (எ - று.)

விரகநோய்கொண்டபிராட்டி மேலுதித்தசந்திரனைநோக்கி நிந்திக்கின்றனளென்க. பிரிந்தார்க்குத் தென்றல் சந்திரன் முதலிய காமோத்தீபகப் பொருள்கள் துயரத்தைவிளைத்தலால், அன்னார் அவற்றை வெறுத்துக்கூறுதல், இயற்கை.'கருநெருப்பி னிடையேயெழுந்த வெண்ணெருப்பு'என்றது மிக்க கரிய இருளிடையே தோன்றிய வெள்ளியசந்திரமண்டலத்தை. காதல்நோயால் வருந்துகிற தனக்குச் சந்திரகாந்தி அவ்வருத்தத்தை மேன்மேல்மூட்டி எரித்தலால், நெருப்பெனப்பட்டது; இதுபற்றியே 'எனக்குங் கொடியையானாயே' என்றதும். நீங்காமாயையவர்தமக்கு நிறமேதோற்றுப் புறமேபோ யெங்காக்கிடக்கு மென்றது-கடலோடு இயைவதன்றி எனக்கும் என்பதனோடும் இயையு மெனக்கொண்டு - இராமபிரானைக் கண்டதுமுதல் தனது மாமையிழந்து தனியிடத்துச் சீதையிரங்குவதனால் இங்ஙனங் கூறுகின்றாளெனக் கொள்க.விரகிகள் எதிர்ப்பட்டபொருளையும் தம்மைப்போலவேயிருப்பனவாகக் கருதுதல் இயற்கை யாதலால், கடலும் தன்னைப் போல் நிறந்தோற்று எங்கிக்கிடப்பதாகக் கூறுகின்றாள் பிராட்டி: "காமுற்ற கையறவோ டெல்லே யிராப்பகல், நீமுற்றக்கண்டுயிலாய் நெஞ்சுருகியேங்குதியால், தீமுற்றத்தென்னிலங்கை யூட்டினான்றாணயந்த, யாமுற்றதுற்றாயோ வாழிகனைகடலே"என்றபெரியார்பாசுரம் இங்குக்கருதத்தக்கது. சந்திரோதயமானமாத்திரத்தில் கடல்நீர் பொங்கிப் பேராரவாரஞ்செய்தலின், 'எறிகடற்குங் கொடியை யானாயே' என்றாள். 'நீங்காமாயையவர்' என்றது, தன் கண்ணெதிரிற்காணப்பட்டு உடனே மறைந்துநின்று தன்னை வருத்துதலால்.'மாயையவர்தமக்கு நிறமேதோற்று'என்றது-கடலின்கருநிறத்தினும் இராமபிரானது திருநிறம் மிகக்கறுத்துள்ளதனால். ஒருவர்க்கு ஒருவிஷயத்தில் தோற்றவர் வெளியில் தனியிடத்திலேசென்று அழுதுகொண்டுகிடத்தல், இயல்பு; அங்ஙனங் கடல் கிடப்பதாகக் குறித்தாள். 'அவர்' என்றது-நெஞ்சறிசுட்டு. [1]நீங்காமமையவர் என்ற பாடத்துக்கு - விட்டுநீங்காத இயற்கையழகையுடையவர் என்று பொருள். (எசு)

எஎ.—இதுவும் அது.

கொடியை யல்லைநீ யாரையுங் கொல்கிலாய்
[1]மடுவி லின்னமு தத்தொடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணொடென் றாலெனைச்
சுடுதி யோகடற் றோன்றிய திங்களே.

(இ - ள்.) கடல் தோன்றிய திங்களே - (குளிர்ந்த) சமுத்திரத்தினிடத்து உதித்த சந்திரனே! நீ—, கொடியை அல்லை-(இயற்கையிற்) கொடுந்தன்மையுடையாயல்லை: (அது எவ்வாறுதெரிகின்றதென்னில்),—யாரைஉம் கொல்கிலாய் - (உலகத்தில்) எவரையுங் கொல்லுகிறாயில்லை யாகையால்; (அன்றியும் நீ), மடுவில் - பாற்கடலினின்றும், இன் அமுதத்தொடுஉம் - இனிமையான அமிர்தத்துடனும், பிடியின் மெல் நடை பெண்ணொடு - பெண்யானையினது மென்மையான நடையையுடைய திருமகளுடனும், வந்தனை - பிறந்தாய், என்றால்—, எனை சுடுதி ஒ - என்னைச் சுடுவாயோ?

[1]மடிவில் என்றபாடத்துக்கு - மரணமில்லாமைக்குக் காரணமான இனிய அமிர்தமென்க. எல்லோரையுங் கொல்லுந்தன்மையுடையனல்லனாத லாற் கொடுந்தன்மையுடையவனல்லாதவனும், கடலினின்றுதோன்றினவ னாதலால் இயற்கையிற் குளிர்ச்சியோடு கூடினவனும், அமிர்தத்தோடு கூடப் பிறந்தவனாதலாற் சேர்க்கையாலுண்டாகுங் கொடுமைக்கும் இடமில்லாதவ னும், பெண்ணோடுகூடப் பிறந்தவனாதலாற் பெண்ணிடத்து அன்புவைத் திருக்கத்தக்கவனு மாகிய நீ பெண்ணாகிய என்னை வருத்துவது தகு தியோ? என்றாள். அன்பில்லாதவனைநோக்கி 'நீ ஆணோடுபெண்ணோடு பிறந்திலையோ' என்று கூறும் உலகவழக்குப்பற்றி, 'பெண்ணொடுபிறந்த நீ என்னைவருத்தலாமோ?'என்கிறாள். இயற்கைக்குணம், தொழில்,பிறப்பிடம், சேர்க்கை, உடற்பிறப்பு என்னும் இவையொன்றிலுந் தீமையில்லாமை சந் திரனுக்குக் கூறப்பட்டது. சுடுதற்குக் காரணமில்லாதிருக்கையிலும் காரி யம் நிகழ்கின்றதே யென்று விபாவனையணி தோன்றக் கூறுகின்றாள். இது, பிறிதாராய்ச்சியணி யெனவும்படும். பி - ம்:—[1]வடுவில். (எஎ)

எஅ.—இதுமுதல் மூன்றுபாடல்கள் - பிராட்டியினது விரககுாபத்தைக் கூறும்

*மீது மொய்த்தெழு வெண்ணில வின்கதிர்
மோது [1]மத்திகை மென்முலை மேற்பட
வோதி மப்பெடை வெங்கன லுற்றெனப்
போது மொய்த்தம ளிப்புரண் டாளரோ.

(இ - ள்.) மீது - ஆகாயத்தின்மேலே, மொய்த்து எழு - நெருங்கியெ ழுகிற, வெள் நிலவின் கதிர் - வெண்மையான சந்திரனது கிரணமாகிய, மோது மத்திகை - அடிக்குந்தன்மையுள்ள சம்மட்டி, மெல் முலைமேல் பட- மென்மையான தனங்களின்மீது படுதலால், (பிராட்டி), ஓதிமம் பெடை வெம் கனல் உற்று என - பெட்டையன்னமொன்று வெவ்விய நெருப்பி னிடத்துப் பொருந்தினாற்போல, போது மொய்த்த அமளி புரண்டாள்-செந் தாமரைமலர்கள் நெருங்கிநிறைந்த படுக்கையில் விழுந்துபுரண்டாள்;(எ-று.)

இதனால், சந்திரகாந்தியோடு மலர்ப்பஞ்சணைமெத்தையும் வெப்பந் தருந் தன்மை வெளிப்படுத்தப்பட்டது. தாமரைமலர்ப்படுக்கையில் பிராட்டி புரண்டது, பெடையன்னம் நெருப்பினிடத்துப்பொருந்தியதுபோலு மென் றார்: உவமையணி. மொய்த்தமளி-தொகுத்தல். பி-ம்:—[1] மத்திகைபோல்.

எகூ. நீக்க மின்றிநி மிர்ந்தநி லாக்கதிர்
தாக்க வெந்துத ளர்ந்து[1]ச ரிந்தனள்
சேக்கை யாகிம லர்ந்தசெந் தாமரைப்
பூக்கள் [2]பட்டவப் பூவையும் பட்டனள்.

(இ - ள்.) நீக்கம் இன்றி - நீங்குத லில்லாமல், நிமிர்ந்த - (எங்கும்) பரவியுள்ள, நிலா கதிர் - சந்திரகிரணம், தாக்க - மேல்மோதுதலால், (பிராட்டி),— வெந்து-(உடல்) வெதும்பி, தளர்ந்து-(மனந்)தளர்ந்து, சரிந்த

னள் - கீழ் விழுந்தாள்; சேக்கை ஆகி மலர்ந்த செம் தாமரை பூக்கள் - (அவளுக்குத்) திருப்பள்ளிமெத்தையாய் விரிந்துள்ள செந்தாமரைமலரின் இதழ்கள், பட்ட - (அவளது தேகதாபத்தால்) தீந்தன; அ பூவைஉம் பட்டனள் - கிளிபோல்இன்சொற்களையுடைய அப்பிராட்டியும் மிகவருந் தினாள்; (எ - று.)

[2]பட்டது என்ற பாடத்துக்கு - அப்பிராட்டிக்குத் தங்குமிடமாய் விரிந்துள்ள செந்தாமரைமலர்கள் அவ்விராத்திரிகாலத்தில் அடைந்த தன்மையை அப்பிராட்டியும் அடைந்தாள் என்று பொருள்; அப்பூக்கள் பட்டதன்மையாவது - கூம்பிச் சாம்பி இதழ்குவிந்து பொலிவழிந்து வாடி யொடுங்கியது. பூவை - உவமையாகுபெயர். பூவை - நாகணவாய்ப் புள்ளுமாம். பி - ம்:— [1]சரிந்தன. (எக)

௲௦ * வாச மென்கல வைக்களி வாரிமேற்
பூசப் பூசப் புலர்ந்து [1]புழுங்கினள்
வீச வீச வெதும்பினள் மென்முலை
யாசை நோய்க்கு மருந்துமுண் டாங்கொலோ.

(இ - ள்.) வாசம் - வாசனையையுடைய, மெல்-மென்மையான, கலவை களி - கலவைச்சந்தனக்குழம்பை, வாரி - அள்ளியெடுத்து, மேல் பூச பூச - (தோழிமார்கள்) தன்னுடம்பின்மேற் பூசுந்தோறும், புலர்ந்து - (உடம்பு) வெதும்பி, புழுங்கினள் - தவித்தாள்; வீச வீச - (ஆலவட்டம்முதலியவற் றைக்கொண்டு) வீசுந்தோறும், மெல் முலை வெதும்பினள் - மென்மையான தனங்களில் வெப்புமடைந்தாள்; ஆசை நோய்க்கு மருந்துஉம் உண்டு ஆம் கொல் ஒ - காமவியாதிக்குத் தீர்க்கவல்லதொருமருந்தும் (உலகத்தில்) உள்ளதோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)

சீதையினது தாபத்தைத் தணிக்கும்பொருட்டுத் தோழிமார் செய்யுஞ் சீதோபசாரங்கள்யாவும் அவளுக்கு விரகவேதனையை விருத்திசெய்தன என்பதாம். பிராட்டி மிக்கதாபமடைந்தா ளென்னுஞ் சிறப்புப்பொருளை, 'ஆசைநோய்க்கும் மருந்துண்டோ' என்னும் பொதுப்பொருளால் விளங்க வைத்தலால், வேற்றுப்பொருள்வைப்பணி. ஆசைநோய்க்கு வேறுபரிகார மில்லாமை-"நீருட், குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி, யொளிப்பினுங் காமஞ் சுடும்" என்னும் நாலடியாரினாலும் அறிக. தலைவனுந் தலைவியுங் கூடியிருக்குங் காலத்து இன்பஞ்செய்யும் பொருளனைத்தும் பிரிந்துள்ள காலத்தில் துன்பஞ் செய்வனவா மென்க. மென்முலையென்பதை அன் மொழித்தொகை யாக்கி, பிராட்டியென்னலுமாம். பி - ம்:—[1]புழுங்கின. ()

அக.— தோழிமார் பிராட்டிக்குச் செய்த உபசாரம்.

தாயரிற்பரி சேடியர் தாதுகு
வீய ரித்தளிர் மெல்லணை மேனியிற்
காயெ ரிக்கரி ய[1]க்கரி யக்கொணர்ந்
தாயி ரத்தினி ரட்டிய டுக்கினர்.

(இ - ள்.) மேனியில் - (பிராட்டியினுடைய) திருமேனியிலே, காய் - கொதிக்கின்ற, எரி-காமாக்கினியினால், தாது உகு வீ அரி தளிர் மெல் அணை - மகரந்தப்பொடிகள் சிந்தப்பெற்ற பூக்களைக்கொண்டும் மெல்லிய தளிர்களைக்கொண்டும் அமைக்கப்பட்டுள்ள மென்மையான (அவளுடைய) திருப்பள்ளிமெத்தைகள், கரிய கரிய - கருகிக்கொண்டேயிருக்க, (அப்பொழுதெல்லாம்), தாயரின் பரி சேடியர்-தாய்மார்கள் (தங்கள் குழந்தைகளிடத்துக்கொள்ளும்)அன்பைக்காட்டிலும் மிகுந்த அன்பைக்கொண்ட (பிராட்டியின்) பாங்கிமார், ஆயிரத்தின் இரட்டி கொணர்ந்து அடுக்கினர் - இரண்டாயிரம் படுக்கைமெத்தைகளை ஒன்றன்பின் ஒன்றாகக் கொண்டுவந்து மேல்மேலடுக்கி அமைத்துவந்தார்கள்; (எ - று.)

சேடியர் அன்போடு அடிக்கடி படுக்கைகளை மாற்றிக்கொண்டேயிருந்தார்களென்பதாம். 'ஆயிரத்தினிரட்டி' என்றது - மிகப்பலவென்னுமாத்திரையாய் நின்றது; "தெவ்வோ ரெழுபது கோடி யுறும்" என்னுந் திருக்குறளிற் போல. இரட்டுதலையுடையது, இரட்டி; இ - கருத்தாப்பொருள் விகுதி: இரட்டுதல் - இரண்டாதல். தாயரின் - தாய்மார்போல என்றுமாம். சேடி - வடசொல். அரி - செந்நிறமுமாம்: இனி, அடர்த்தியையுடைய தளிர் என்றும், வண்டுகள்மொய்க்குந் தளிர் என்றும், பொன்னிறமான தளிர் என்றும், ஒளியுள்ள தளிர் என்றும் உரைக்கலாம். கரியக் கரிய - தீந்துபோகுந்தோறும். பி - ம்:—[1]கொணர்ந்தாரவர். (அக)

அஉ.—கவிக்கூற்று: சீதைநிலையிவ்வாறாக, இனி, இராமபிரான் நிலைமைச் சொல்வோமெனல்.

கன்னி [1]நன்னக ரிற்கமழ் சேக்கையு
ளன்ன மின்னண மாயின [2]ளாயவண்
மின்னின் மின்னிய மேனிகண் டானெனச்
சொன்ன வண்ணலுக் குற்றது சொல்லுவாம்.

(இ - ள்.) கன்னி நல் நகரில் - அழகிய கன்னியாமாடத்திலே, கமழ் சேக்கையுள் - வாசனைவீசுகிற பூம்பள்ளிமெத்தையிலே, அன்னம் - அன்னப்பேடுபோன்ற பிராட்டி, இன்னணம் ஆயினள் - இவ்வாறு விரகதாபப்படுபவளானாள்; (இதுநிற்க: இனி), ஆயவள் - இங்ஙனமான அப்பிராட்டியினது, மின்னின் மின்னிய மேனி - மின்னல்போல விளங்குந் திருமேனியை, கண்டான் என சொன்ன - பார்த்தானென்று கீழ்ச்சொல்லப்பட்ட, அண்ணலுக்கு - இராமபிரானுக்கு, உற்றது - நேர்ந்தசெய்தியை, சொல்லுவாம் - சொல்லத்தொடங்குவோம்; (எ- று.)—அது மேற் காண்க.

நகர் - இடவாகுபெயராய், மாளிகையென்னும்பொருளைத் தந்தது; அக்கன்னியாமாடமொன்றே ஒருபெரியநகரம்போல அலங்காரமாகவிருந்ததென்னுங் கருத்தால், அதனை 'நகர்' என்றதாகவுங் கொள்க. பி - ம்:—[1]நன்மனையில். [2]ஆன்றவள். (அஉ)

அரு.—விசுவாமித்திரன் முதலிய மூவரும் ஜநகராசனுல்எதிர்கோள்ளப் பட்டு, அவன்காட்டிய மாளிகையில் தங்குதல்.

ஏகி மன்னனைக் கண்டெதிர் [1]கொண்டவ
னோகை யோடு மினிதுகொண் டுய்த்திடப்
போக பூமியிற் பொன்னக ரன்னதோர்
மாக மாடத் [2]தனைவரும் வைகினர்.

(இ - ள்.) அனைவர்உம் - விசுவாமித்திரன்முதலிய அம்மூவரும், ஏகி - (அரண்மனையினுள்ளே) சென்று, மன்னனை - ஜனகமகாராசனை, கண்டு - பார்த்து, அவன் - அவ்வரசன், ஓகையோடுஉம் - மகிழ்ச்சியுடனே, எதிர் கொண்டு - எதிரில்வந்து உபசரித்து, இனிது - இனிமையாக, கொண்டு - அழைத்துக்கொண்டுபோய், (அதன்பின்), போக பூமியில் பொன் நகர் அன்னது ஓர் மா கம் மாடத்து உய்த்திட - (நல்வினைப்பயனாகிய) இன்பத்தை யனுபவிக்கும் பதவிகளிற் (சிறந்த) பொன்மயமான அமராவதிபட்டணத் தைப் போலச் சிறந்ததொரு பெரிய வானத்தையளாவிய மாளிகையிலே செலுத்த, வைகினர் - தங்கியிருந்தார்கள்; (எ - று.)

ஓகை - உவகை யென்பதன் மருஉ. போகபூமியிற் பொன்னகர் - போகபூமியி லுள்ள அழகிய கோயிலெனினுமாம். பி-ம்:—[1]கொண்டபின். [2]அனையவர்.

(அரு)

அசு.—அங்குச் சதாநந்தமுனிவன் வருதல்.

வைகு [1]மவ்வுழி மாதவம் யாவுமோர்
செய்கை கொண்டு நடந்தெனத் தீதறு
மொய்கொள் வீரன் முளரியந் தாளினால்
[2]மெய்கொண் மங்கை யருண்முனி மேவினான்.

(இ - ள்.) வைகும் அ உழி - (அவர்கள்) தங்கியிருந்த அம்மாளிகை யிடத்தில்,— மா தவம் யாஉம் ஓர் செய்கை கொண்டு நடந்து என-(உலகத் திலுள்ள) சிறந்த தவங்கள் முழுவதும் ஒருமனிதவடிவத்தை யெடுத்துக் கொண்டு நடந்துவந்து சேர்ந்தாற்போல, தீது அறு மொய் கொள் வீரன் முளரி அம் தாளினால் மெய் கொள் மங்கை அருள் முனி - குற்றமில்லாத வலிமையைக் கொண்ட [சிறந்த] வீரனான ஸ்ரீராமனது செந்தாமரைமலர் போன்ற அழகிய திருவடித்தூளியால்(சாபவடிவமொழிந்து தனது) உண்மை வடிவத்தை யடைந்த அகலியாதேவி (முன்னே) பெற்றருளின குமாரனாகிய சதானந்தமுனிவன், மேவினான் - வந்தருளினான்; (எ - று.)

கௌதமமுனிவனுக்கு அகலியையினிடம் தோன்றிய சதாநந்தமுனி வன் விசுவாமித்திரன்முதலியோர் வருகையை யறிந்து அவர்கள் தங்கிய மாளிகையைச் சேர்ந்தனனென்க. இந்தச் சதாநந்தன் - ஜனககுலபுரோகி தன். மாதவம்யாவும் ஓர்செய்கைகொண்டு நடந்தென முனி மேவினு னென்க; இல்பொருளுவமை. வலிமைக்குக் குற்றம்-தோல்வி. பி - ம்:— [1]அவ்வழி. [2]மெய்கொணங்கை.

(அசு)

அரு.—தன்னைவணங்கிய இராமனை வாழ்த்திச் சதாநந்தன் விசுவாமித்திரனருகு சார்தல்.

வந்தெ திர்ந்த முனிவனை வள்ள லுஞ்
சிந்தை யார வணங்கலுஞ் சென்றெதி
ரந்த மில்குணத் தானெடி தாசிக
டந்து [1]கோசிகன் றன்மருங் கெய்தினான்.

(இ - ள்.) வந்து எதிர்ந்த முனிவனை - (இங்ஙனம்) வந்துதோன்றிய அம்முனிவனை, வள்ளல்உம் - வரையாது அருள்செய்யும் இராமபிரானும், சிந்தை ஆர - மனம் மகிழ, வணங்கலும் - நமஸ்கரித்தவுடனே,—அந்தம் இல் குணத்தான் - எல்லையில்லாத நற்குணங்களையுடைய அச் சதானந்த மகாமுனிவன், ஆசிகள் நெடிது தந்து - (இராமனுக்கு) ஆசீர்வாதங்களை மிகுதியாகச் செய்து, சென்று எதிர்- (தன்னை)வந்து எதிர்கொண்ட, கோசிகன் தன் மருங்கு-விசுவாமித்திரனது அருகில், எய்தினான்-அடைந்தான்.

அப்போது இராமன் இலக்குமணனுடனே சதானந்தமுனிவனை வணங்க, அம்முனிவன் அவர்களை வாழ்த்திவிட்டு, தன்னை யெதிர்கொண்ட விசுவாமித்திரனது அருகிற் சேர்ந்தன னென்க. இராமனைக்கூறியது - இலட்சுமணனுக்கும் உபலட்சணம். எதிர்சென்று ஆசிதந்துஎன்று இயைத்து உரைப்பினுமாம். இங்கு 'வள்ளல்' என்றது - அகலிகைக்கு அருளினதைக் கருதி குணம்-மெய்யுணர்வு. அவாவின்மை, தூய்மை முதலியன. பி - ம்:— [1]கோசிகற் சார்வுறச் சாற்றுவான், கோசிகன்றன் மருங்கெய்தலும். (அரு)

அசா.—சதாநந்தன் விசுவாமித்திரனை நோக்கி முகமன் கூறுதல்.

† கோத மன்றரு கோமுனி கோசிக
மாத வன்றனை மாமுக நோக்கியிப்
போது நீயிவட் போதவிப் பூதல
மேது செய்த தவமென் றியம்பினான்.

(இ - ள்.) கோதமன் தரு கோ முனி - கௌதமமுனிவன் பெற்றருளிய சிறந்த இருடியாகிய சதானந்தன்,கோசிகன் மாதவன்தனை மா முகம் நோக்கி - மிக்க தவத்தையுடைய அக்கௌசிகமுனிவனைத் திருமுகத்தைப் பார்த்து; 'இ போது நீ இவண் போத - இப்பொழுது நீ இவ்விடத்து வரும்படி, இ பூதலம்-இந்த மிதிலாநகரத்தினிடமானது, செய்த தவம் - பண்ணியுள்ள புண்ணியம், ஏது - யாதோ?,' என்று இயம்பினான் - என்று (உபசார வார்த்தை) கூறினான்; (எ - று.)

"பாததூளிபடுதலா லிவ்வுலகம் பாக்கியஞ் செய்ததே" எனவும், "திரிதலாற் றவமுடைத்தித் தரணிதானே" எனவும், "கருதிநீ யெய்தற், கென்ன மாதவஞ் செய்ததிச் சிறுகுடில்" எனவும் பிற ஆசிரியர்கள் கூறியுள்ளவாறு சதாநந்தன் கூறின னென்க. (அசா)

† இதுவும், அடுத்தசெய்யுளும் சில ஏட்டுப்பிரதிகளிலில்லை.

அஎ.—விசுவாமித்திரன் கூறத்தொடங்குதல்.

பூந்தண் சேக்கைப் புனிதனை யேபொரு
வேய்ந்த கேண்மைச் சதானந்த [1]னென்றுரை
வாய்ந்த மாதவன் மாமுக நோக்கிநூ
றோய்ந்த சிந்தைக் கௌசிகன் சொல்லுவான்.

(இ-ள்.) (இங்ஙனம் முகமன்கூறின), தண் பூ சேக்கை - குளிர்ந்த தாமரைமலராகிய ஆசனத்தையுடைய, புனிதனை ஏ - பரிசுத்தகுணமுள்ள பிரமதேவனையே, பொருவு ஏய்ந்த - உவமையாகப் பொருந்திய, கேண்மை- (எல்லாவுயிர்களிடத்தும்) நட்பையுடைய, சதானந்தன் என்று உரை - சதானந்தனென்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற, வாய்ந்த மா தவன் - பலித்த மிக்கதவத்தையுடைய மகாமுனிவனது, மா முகம் நோக்கி-சிறந்த திருமுகத்தைப் பார்த்து, நூல் தோய்ந்த சிந்தை கௌசிகன் - சாஸ்திரங்களிலே முழுகின மனத்தையுடைய விசுமாமித்திரன், சொல்லுவான்-(ஒருவார்த்தை) சொல்லுபவனானான்; (எ - று.)—அது மேற்காண்க.

பிரமன் - வேதமோதுதலிலும், நல்லொழுக்கத்திலும், பெருந்தவமுடைமையிலும், பிராமணர்க்குத்தலைமைபூணுதலிலும்முனிவனுக்குஉவமை. சதானந்த னென்பதற்கு - மிகுதியான ஆனந்தத்தை யுடையவ னென்று பொருள்; கடவுளையே எப்பொழுதுந் தியானஞ்செய்துகொண்டு அதனாற் பரமானந்தமடைபவ னென்பது கருத்து. சத ஆனந்த எனப்பிரிக்க. ஆனந்தம் - பெருமகிழ்ச்சி. வாய்ந்த மாதவன் - பொருந்தின மிக்க தவத்தையுடையான் என்றும்உரைப்பர். நூல் தோய்ந்த சிந்தை - ஸகலசாஸ்திரங்களையும் முழுவதுமுணர்ந்த மன மென்றபடி. 'தோய்ந்த' என்னுஞ் சொல்லுக்கு ஏற்ப, நூலைக் கடலாக் கொள்க. கேண்மை-அருளென்றவாறும். பி - ம்:—
[1] என்றெனும், என்றெனும். (அஎ)

அஅ.—இராமனது பெருமையைச் சதாநந்தமுனிவனுக்கு விசுவாமித்திரன் தெரிவித்தல்.

வடித்த மாதவ கேட்டியிவ் வள்ளறா
னிடித்த வெங்குரற் றாடகை யாக்கையு
மடுத்தென் வேள்வியு நின்னன்னை சாபமு
முடித்தென் னெஞ்சத் திடர்முடித் தானென்றான்.

(இ-ள்.) 'வடித்த மா தவ - (நூல்களில்) தெளிந்தெடுக்கப்பட்ட பெரிய தவத்தைச் செய்துள்ள சதானந்தமுனிவனே! கேட்டி - (யான் கூறுவதைக்) கேட்பாயாக; இ வள்ளல் தான் - வரையாதருளுந்தன்மையையுடைய இந்த ஸ்ரீராமபிரான், இடித்த வெம் குரல் தாடகை யாக்கைஉம் - இடியையொத்த பயங்கரமான கண்டத்தொனியையுடைய தாடகை யென்னும் அரக்கியினது உடம்பையும், என் வேள்விஉம் - எனது யாகத்தையும், நின் அன்னை சாபம்உம் - உனது தாயான அகலிகையினது சாபத்தையும்,

அடுத்து - ஒன்றன்பின் ஒன்றாக, முடித்து - முடிவுசெய்து, என் நெஞ்சத்து இடர் முடித்தான் - எனது மனத்தின் துயரத்தை ஒழித்தவனுவன்', என்றான் - என்று (கௌசிகமுனிவன்) கூறியருளினான்; (எ - று.)

தாடகையின்யாக்கையை முடித்தல் - கொல்லுதல். வேள்வியை முடித்தல் - நிறைவேறச்செய்தல்; சாபத்தை முடித்தல் - ஒழியச்செய்தல்; இடரை முடித்தல்-நீக்குதல்: முடித்தலென்ற சொல் பலபொருளில் வந்தது - சொற்பின்வருநிலையணி. அடுத்தென் என்பதை - அடுத்த என் என்பதன் தொகுத்தல்எனக்கொண்டு - (தன்னைத் துணையாக) அடுத்தவனாகிய எனது என்றும் பொருளுரைப்பர். விசுவாமித்திரன் வந்ததையுணர்ந்த சனகராசன் சதாநந்தமுனிவனை முன்னிட்டுக்கொண்டு விசுவாமித்திரனை யணுகி உபசரித்து அளவளாவியபின்பு இராமலட்சுமணரைப்பற்றி வினவ, விசுவாமித்திரமுனிவன் அவர்களைப்பற்றித் தெரிவித்ததாக முதனூலி லுள்ளது.(அஅ)

**அகூ.—உனதருளிருக்கையில் இவ்வீரன் எதையுஞ் செய்யாக்கூடு மென்று சதாநந்தன் கூறுதல்.**

என்று கோசிகன் கூறிட வீறிலா
வன்ற போதனன் மாதவ நின்னருள்
இன்று தானுள தேலரி தி[1]யாதிந்த
வென்றி வீரர்க் கெனவும் விளம்பிமேல்.

இதுமுதல் நாற்பத்தொன்பது கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) என்று கோசிகன் கூறிட - என்று விசுவாமித்திரன் சொல்ல, ஈறு இலா வல் தபோதனன் - எல்லையில்லாத உறுதியான தவத்தையே செல்வமாகக்கொண்டுள்ள சதானந்தமுனிவன், (விசுவாமித்திரனைநோக்கி), 'மா தவ - மிக்க தவமுடையவனே! நின் அருள் - உனது கருணை, இன்று - இப்பொழுது, உளது எல்-(இக்குமாரரிடம்) இருப்பதானால், இந்த வென்றி வீரர்க்கு - வெற்றியையுடைய வீரர்களாகிய இவர்களுக்கு, அரிது - அருமையான காரியம், யாது - என்ன இருக்கிறது? [ஒன்றுமில்லை]', எனஉம் விளம்பி-என்றுஞ் சொல்லி,—மேல் - பின்பும்,—(எ - று.)—'வள்ளறன்னை முகம் நோக்கி' என மேல் இயையும்.

இராமன் இன்னானென்பதையும் அப்பிரானது வீரச்செய்கை முதலியவற்றையும் சிவதனுசைப்பார்க்கவந்திருப்பதையும் சனகராசனுக்கு விசுவாமித்திரன் தெரிவித்தபின்பு, சதானந்தன் தனது தாயின் சாபவிமோசனம் முதலியவற்றை விசுவாமித்திரனாலுணர்ந்ததும் ஸ்ரீராமனை நோக்கி 'விசுவாமித்திரனை முன்னிட்டு இங்கு வந்தது எனது பாக்கியமே; இம்முனிவனே அளவிடமுடியாத மகிமையுள்ளவன்' என்றுசொல்லி அம்முனிவனுடைய வரலாற்றைக் கூறத்தொடங்கியதாக முதனூலி லுள்ளது. தபோதனன் - யாவருஞ் செல்வத்தை விரும்பிப் பாதுகாப்பதுபோலத் தான் தவத்தை விரும்பிப் பாதுகாக்கும் முனிவன். வீறு இலா எனப் பிரித்து, தனக்கு மேம்படுவதொன்றில்லாத என்றும் உரைக்கலாம். பி - ம்:— [1]யாவையிவ் வென்றி. (அக)

**கூo.—விசுவாமித்திரனதுசரிதையைக் கூறக்கருதிச் சதாநந்தன் இராமனது முகத்தைப் பார்த்தல்.**

† எள்ளில் பூவையு மிந்திர நீலமு
மள்ளல் வேலையு மம்புத சாலமும்
விள்ளும் வீயுடைப் பானலு [1]மேவுமெய்
வள்ள றன்னை மதிமுக நோக்கியே.

(இ - ள்.) எள் இல் பூவைஉம் - பழிப்பதற்கிடமில்லாத [மிகச்சிறந்த] காயாமலரையும், இந்திரநீலம்உம் - இந்திரநீலரத்தினத்தையும், அள்ளல் வேலைஉம் - குழைசேற்றோடுகூடிய கருங்கடலையும், அம்புத சாலம்உம் - மேகக்கூட்டத்தையும், விள்ளும் வீ உடை பானல்உம் - மலர்கிற பூக்களையுடைய நீலோற்பலத்தையும், மேவும் - (உவமையாகப்) பொருந்துகிற, மெய் - திருமேனியையுடைய, வள்ளல்தன்னை - இராமபிரானை, மதி முகம் நோக்கி - சந்திரமண்டலம்போன்ற திருமுகத்தைப் பார்த்து,—(எ - று.)— "யாதுமக்கரிதென்றனனீறிலான்" என மேல் நூற்றுமுப்பத்தேழாங்கவியில் இவையும். பி - ம்: [illegible] போன்ற. (கூo)

**கூக. — இதுமுதல் நாற்பத்தாறுகவிகள் சதாநந்தமுனிவன் கூறும் விசுவாமித்திரமுனிவனது வரலாறு:—**

**விசுவாமித்திரன் அரசனாயிருந்தமை.**

நறும லர்த்தொடை [1]நாயக நானுனக்
கறிவு றுத்துவென் [2]கேளிவ் வருந்தவ
னிறையெ னப்புவிக் கீறில்ப லாண்டெலா
முறையி னிற்[3]புரந் தேயருண் முற்றினான்.

(இ - ள்.) நறு மலர் தொடை - வாசனைவீசுகிற பூக்களினாலாகிய மாலையை யணிந்த, நாயக - (யாவர்க்குந்) தலைவனான ஸ்ரீராமனே! நான் உனக்கு அறிவுறுத்துவென் - யான் உனக்கு (ஒருசெய்தியை)த் தெரிவிப்பேன்; கேள் - (அதனைக்) கேட்பாயாக; இ அரு தவன் - (பிறர்க்குச்செய்தற்கு) அரிய தவத்தைச் செய்துள்ள இக்கௌசிகமுனிவன், (ஆதியிலே), புவிக்கு இறை என - பூலோகத்துக்கு ஒருஅரசனாகி, ஈறு இல் பல் ஆண்டு எலாம் - எல்லையில்லாத அநேகவருஷகாலமளவும், முறையினில் புரந்து - அரசநீதி முறைமைப்படி பாதுகாத்து, அருள் முற்றினான்- (எல்லாவுயிர்களிடத்துங்) கருணை மிகுந்திருந்தான்; (எ - று.)

ஆசிரியனது மகிமையைச் சீடன் உணரவேண்டுவது அவசியமென்ற கருத்தினால் வில்வித்தை முதலியவற்றில் ஸ்ரீராமனுக்கு ஆசிரியனான விசுவாமித்திரனது மகிமையைச் சதாநந்தன் இராமனுக்கு உணர்த்தலாயினனென்பர். நறுமலர்த்தொடை யெனப் பொதுப்படக்கூறியதனால், வெற்றிக்குரிய வாகைப்பூமாலையும் அரசர்கள்குலத்துக்குரிய இயற்கைப்பூமாலை

† இச்செய்யுள், சிலபிரதிகளி லில்லை.

யும் பெறப்பட்டன; "படையுங் கொடியும்" என்று தொடங்குந் தொல்காப் பியச்சூத்திரத்தில் 'தாரெனவே போர்ப்பூவும் அடையாளப்பூவும் அடங்கின' ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரைத்தவாற்றை அறிக. 'நாயக' என்பது- தேவர்முதலிய யாவர்க்குந் தலைவனே யென்னும் பொருளோடு,சக்கரவர்த்தி குமாரனே யென்னும் பொருளையு முடையது. அறிவுறுத்துவென்-ஞாபிப்பே னென்றபடி. வருந்தவன் எனப்பிரித்து, வளருந்தவமுடையான் எனவுமாம். பி - ம்:— [1]நாதனைநோக்கி யொன்று. [2]நிற்கிவ்வருந்தவன். [3]புரிந்து. (கூக)

கூஉ.—அப்போது ஒருகால் விசுவாமித்திரன் வேட்டையாடிக் காடுசென்று வசிட்டனாச்சிரமஞ் சார்தல்.

அரசின் வைகி யறனி னமைந்துழி
விரசு கானிடைச் சென்றனன் வேட்டைமே
லுரைசெய் [1]மாதவத் தோங்கு வசிட்டனாம்
பரசு வானவன் பாலணைந் தானரோ.

(இ - ள்.) (இங்ஙனம் இவன்),—அரசின் வைகி-அரசாட்சியிலே பொரு ந்தி, அறனின் அமைந்த உழி - தருமமுறைப்படி இருந்துள்ளபொழுதில், (ஒருநாள்), வேட்டை மேல்-வேட்டையாடுதலினிமித்தம், விரசு கானிடை சென்றனன் - நெருங்கிய வனத்தினிடத்தே போய், (அங்கு), உரைசெய் மா தவத்து ஓங்கு வசிட்டன் ஆம் பரசு வானவன்பால் - சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற மிக்கதவத்திலே சிறந்தவசிட்டனாகிய(யாவராலும்)துதிக் கப்படுகிற தேவமுனிவனிடத்து, அணைந்தான் - சேர்ந்தான்; (எ - று.)

தரணிமுழுதுந் திரிவதாகக் கோலிச் சேனையோடும் விசுவாமித்திரன் பயணப்பட்டுப் பலதேசங்களையுஞ் சுற்றிக்கொண்டு வசிட்டமுனிவனாச் சிரமஞ் சேர்ந்தா னென்று முதனூல் கூறும். வேட்டை - துஷ்டமிருகங் களையும் பறவைகளையும் நாசப்படுத்துந் தொழில். பரசுவான் என்ற எடுத்து- துதிக்கும்பொருட்டு என்று உரைப்பாருமுளர். பி - ம்:— [1]மாதவத்தோங்கு வசிட்டனை, நான்மறை மாதவத் தோங்கருன். (கூஉ)

கூங.—விருந்திடுமாறு கருதிய வசிட்டனாணையால் காமதேனு கௌசிக ராசனுக்கு உணவுகளைச் சுரத்தல்.

அருந்ததி கணவன் வேந்தற் கருங்கடன் முறையி னாற்றி
யிருந்தரு டருதி யென்ன விருந்துழி யினிது நிற்கு
விருந்தினி யமைப்பெ னென்னாச் சுரபியை விளித்து நீயே
சுரந்தரு ளமிர்த மென்ன வருங்முறை சுரந்த தன்றே.

(இ - ள்.) (அப்பொழுது), அருந்ததி கணவன்-அருந்ததிக்குக் கொழுந னை வசிட்டமாமுனிவன், வேந்தற்கு - இந்தக்கௌசிகராசனுக்கு, அரு கடன் - (செய்தற்கு) அருமையான (செய்யவேண்டுங்) கடமைகளை, முறை யின் ஆற்றி - கிரமமாகச் செய்து, இருந்து அருள் தருதி என்ன - (இங்கே) வீற்றிருந்து கருணைபுரிவாயாக வென்று சொல்ல,—இருந்த உழி - (கௌசி

கன் அவ்வாறே அவ்விடம்) இருந்தபொழுது, இனி நிற்கு விருந்து இனிது அமைப்பென் என்று-இப்பொழுது உனக்கு விருந்துணவை இனிமையாகச் செய்விப்பேன் என்று (வசிட்டன்) கூறி, சுரபியை விளித்து - (உடனே) காமதேனுவை அழைத்து, நீஏ அமிர்தம் சுரந்தருள் என்ன - அமிருதம் போலினிய உணவு முதலியவற்றை நீயே (இவற்காக இப்பொழுது) சுரந்திடுவாயாக வென்று கட்டளையிட, (அத்தெய்வப்பசு), அருள் முறை - (வசிட்டன்) நியமித்தருளினபடியே, அன்றே - அப்பொழுதே, சுரந்தது - (எல்லாப்பொருள்களையுங்) கறந்திட்டது; (எ - று.)

அருந்ததி - வசிட்டர் மனைவி; கற்புநிலைமையில் மிகச்சிறந்தவள்: பாதிவிரத்தியத்திற்கு இவளையே எல்லாமகளிர்க்கும் உவமையெடுத்துக்கூறுவர். அருங் கடன் - அரசர்க்கு முனிவர் செய்யத்தகும் உபசாரங்கள். ஸுரபி - வடசொல்: இது-பாற்கடல்கடைந்தகாலத்து அதனினின்று தோன்றியது; வேண்டுவார்வேண்டும் பொருளனைத்தையும் உடனே சுரந்தளிப்பது: இப்பசு தானாகவே வசிட்டமாமுனிவனிடம் வந்துசேர்ந்திருந்தது. ()

கூசு.—அறுசுவையுணவையும் புஷ்பசந்தனங்களையும் காமதேனு சுரந்துதர, கோசிகராசன் சேனையோடும் பெறுதல்.

அறுசுவைத் தாய வுண்டி யரசநின் னனிகத் தோடும்
பெறுகென வளித்து வேந்தோ டியாவருந் துய்த்த [1]பின்றை
[2]நறுமலர்த் தாரும் வாசக் கலவையு நல்க லோடு
முறுதுயர் தணிந்து மன்ன னுய்த்துணர்ந் துரைக்க லுற்றான்.

(இ - ள்.) (உடனே வசிட்டன் இக்கௌசிகனைநோக்கி), 'அரச - ராஜனே! அறு சுவைத்து ஆய உண்டி - ஆறுவகைப்பட்ட உருசிகளையுடைய இவ்வுணவுகளை, நின் அனிகத்தோடுஉம் - உனது சேனையிலுள்ள ஜனங்களுடனே, பெறுக - (நீயும்) பெற்று உண்பாயாக', என - என்றுசொல்லி, அளித்து - (காமதேனு சுரந்தவற்றையெல்லாங்) கருணையோடு கொடுத்து, வேந்தோடு யாவர்உம் துய்த்த பின்றை-கௌசிகமன்னனும் மற்றைச்சனங்களெல்லோரும் உண்டபின்பு, நறு மலர் தார்உம் - நல்வாசனையையுடைய பூமாலைகளையும், வாசம் கலவைஉம்-நறுமணமுள்ள கலவைச்சந்தனத்தையும், நல்கலோடுஉம் - (வசிட்டன் யாவர்க்குங்) கொடுத்தருளினவுடனே,— மன்னன்-இவ்விசுவாமித்திரராசன், உறு துயர் தணிந்து-மிகுந்த சிரமந் தீர்ந்து, உய்த்து உணர்ந்து - ஆலோசித்தறிந்து, உரைக்கல்உற்றான் - (வசிட்டனை நோக்கி ஒருவார்த்தை) சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அதனை மேல் இரண்டு கவிகளிற் காண்க.

காமதேனு உணவுமுதலியவற்றைச் சுரக்கவே, வசிட்டன் விசுவாமித்திரனுக்கும் அவனது சேனைகட்கும் அவற்றை யளித்தன னென்க. அறுசுவை - உப்பு, புளிப்பு, துவர்ப்பு, தித்திப்பு, கார்ப்பு, கைப்பு என்பன. அநீகம் - வடசொல்: விகாரம். உறுதுயர் - வழிநடையாலும் வேட்டைத் தொழிலாலும் நேர்ந்த இளைப்பு. பி - ம்:—[1]பின்னர். [2]நறைகமழ்மலரும்.

கூரு.—இதுவும் அடுத்தகவியும் - கோசிகன் 'இந்தச்சுரபியை எனக்குத் தருக' என்ன, வசிட்டன் 'வேந்தால் நீயே இட்டுக்கொள்' என்பதைத் தெரிவிக்கும்.

மாதவ வெழுந்தி லாய்நீ ¹வயப்புடைப் படைகட் கெல்லாங்
²கோதறு மமிர்த மிக்கோ வுதவிய கொள்கை தன்னாற்
றீதறு குணத்தான் மிக்க செழுமறை தெரிந்த நூலோர்
மேதகு பொருள்கள் யாவும் வேந்தருக் கென்கை தன்னால்.

(இ - ள்.) மா தவ - மிக்கதவத்தை யுடையவனே! நீ எழுந்திலாய் - நீ (உனது இருப்பிடத்தைவிட்டு) எழுந்திருந்தாயுமில்லை; (இப்படியிருக்கவும்), இ கோ - இந்தத்தெய்வப்பசு, கோது அறும் அமிர்தம் - குற்றமில்லாத நல் லுணவுகளை, வயம் புடை படைகட்கு எல்லாம் - வெற்றியையுடைய (எனது) பக்கத்திலுள்ள சேனைகளெல்லாவற்றுக்கும், உதவிய - கொடுத்த, கொள்கை தன்னால் - சிறப்புத்தன்மையுடைமையாலும், தீது அறு குணத்தால் மிக்க செழு மறை தெரிந்த நூலோர் [நூல் தெரிந்தவர்] - குற்றமற்ற நற் குணங்களா லுயர்ந்த சிறந்த வேதம்முதலிய சாஸ்திரங்களை அறிந்தவர்கள், மேதகு பொருள்கள் யாஉம் வேந்தருக்கு என்கை தன்னால்-மேன்மைபொருந் திய எல்லாப்பொருள்களும் அரசருக்கேயுரியனவென்று சொல்லுதலினா லும், (எ - று.)—இது, மேற்கவியோடு குளகம்.

நான்காமடியிற் கூறியது - "ரத்நஹாரீச பார்த்திவஃ [சிறந்தபொருளைக்கொள்ளுதற்கு உரியவன்அரசன்]" என்கிற நியாயம். முன்னிரண்டடிகள் -அந்தக் காமதேனு இரத்தினம் [சிறந்த பொருள்] என்பதையும், பின்னிரண் டடிகள் - சிறந்த பொருளைக் கொள்ளுதற்கு உரியார் அந்தணரல்லர், அரசரே யென்பதையும் தெரிவித்தன: இவ்விரண்டு ஏதுக்களும் விசுவாமித் திரனால் அந்தப்பசு தனக்கேயுரிய தென்பதைக் காட்டக்கூறியன. 'தீதறு குணத்தால் மிக்க' என்னும் அடைமொழியை, மறைக்காவது நூலோருக் காவது கூட்டுக. மறைக்குச் செழுமை - அறம்பொருளின்பம் வீடென்னும் சதுர்வித புருஷார்த்தங்களையும் அளிக்கும் வன்மை. கோ - வடமொழி.
பி - ம்:—¹வயமுடை. ²கோதறவமுதத்தோடு முதவிய. (கூகு)

கூகூ. நிற்கிது தகுவ தன்று ¹னீதருஞ் சுரபி தன்னை
யெற்கரு ளென்ற லோடு மியம்பலன் யாதும் பின்னர்
வற்கலை ²யுடையென் யானோ வழங்கலென வருவ தாகிற்
கொற்கொள்வே லுழவ நீயே கொண்டகல் கென்று கூற.

(இ - ள்.) நிற்கு - உனக்கு, இது - இப்பசு, தகுவது அன்று - தகுதி யுடையதன்று; ஆல் - ஆதலால், நீள் தரும் சுரபிதன்னை - சிறப்பு மிக்க காமதேனுவை, எற்கு அருள்- எனக்குக் கொடுத்திடுவாயாக, என்றலோடும்- என்று (கௌசிகன்) சொன்னமாத்திரத்திலே,-யாதுஉம் இயம்பலன்-(வசிட் டன் சிறிதுநேரம்) ஒன்றுஞ்சொல்லமாட்டாதவனாய், பின்னர் - பின்பு, கொள் கொள் வேல் உழவ - (பகைவர்க்கு) அச்சத்தைத்தருதலைக் கொண்ட

வேலாயுதத்தையுடைய வலிய அரசனே! வற்கலை உடையென் யானோ - மரவுரியை ஆடையாகவுடைய முனிவனாகிய நானோ, வழங்கலென் - (இதனைப் பிறர்க்குக்) கொடுக்கும் உரிமையுடையேனல்லேன்; வருவது ஆகில் - (அது உன்னிடம்) வருவதானால், நீஏ கொண்டு அகல்க - நீயே அழைத்துக் கொண்டு போவாயாக', என்று கூற - என்று சொல்ல,—(எ - று.)—'பார்த்திபன் பிணித்தனன்' என வருங் கவியோடு குளகமாக இயையும்.

ஆல் - ஆதலால் என்பதன்விகாரம். இத்தகைய சிறப்பையுடைய பசு முனிவனிடத்து இருப்பதனாற் பெரும்பயன் பட்டிலது: அரசனாகிய தன்னிடத்து இருந்தால் அதனைக்கொண்டு தான் மிக்கபயனை யடையலாம் என்று கருதின பேராசையால் இங்ஙனங் கௌசிகன் கூறினான். கௌசிகனது ஆசைப்பெருக்கத்தை நோக்கி உண்டான வெறுப்பினால், முன்னர் வசிட்டன் யாதும் பேசாதவனானான். காமதேனு தானாகவே வசிட்டனிடம் வந்து சேர்ந்ததாகலின், அதனைப் பிறர்க்குக்கொடுக்கும் அதிகாரம் அவனுக்கு இல்லையாயிற்று. 'வற்கலையுடையென் யானோ வழங்கலென்' என்றதனால், முனிவர்க்கு அரசர் பசுமுதலியபொருள்களைக் கொடுத்திடுவது மரபேயொழிய, முனிவர் அரசர்க்குக் கோதானஞ்செய்வது தக்கதன்றென்ற கருத்தைக் குறிப்பாகத்தெரிவித்தான். விசுவாமித்திரன் தான் வேண்டியபொருள்களையெல்லாந் தருவதாகவும் இந்தக்காமதேனுவைமாத்திரம் தனக்குக்கொடுத்துவிடுமாறும் மிகவும்நெருக்கிப் பலபடச்சொல்லிக் கேட்கவும் வசிட்டமுனிவன் இசையாது நிற்க, தானே வலியக் கௌசிகன் கவரத்தொடங்கினனென்று முதனூலிலுள்ளது. கொல்கொள் வேல் எனப் பிரித்து, கொலைத்தொழிலைக் கொண்ட வேலென்றும், கொல்லனது உலைக்களத்திற் சமைக்கப்பட்டவேலெனறும் பொருள்கொள்ளலாம். வேல் உழவன் - பகைவரது உடம்பாகிய விளைநிலத்தைத் தனது வேலாயுதமாகிய கலப்பையைக்கொண்டு உழுது போராகிய பயிரைச் செய்து வெற்றியாகிய பயனை விளைப்பவனென்றபடி. வற்கலை - வல்கலா: வடசொல். யானோ, ஓ-இழிவுசிறப்பு. அகல்கென்று - விகாரம். பி - ம்:— [1]நீடிருஞ்சுரபி, நீளருஞ்சுரபி. [2]உடையோன். (கசு)

கஎ.—காமதேனுவை விசுவாமித்திரன் வலியக்கைப்பற்ற, அது வசிட்டனையணுகி நீ என்னைக் கோசிகனுக்குக் கொடுத்தாயோவெனல்.

பணித்தது புரிவெ னென்னாப் பார்த்திப னெழுந்து [1]பொங்கிப்
பிணித்தனன் சுரபி தன்னைப் பெயர்வுழிப் பிணியை வீட்டி
மணித்தடந் தோளி னாற்குக் கொடுத்தியோ மறைகள் யாவுங்
கணித்தவெம் பெரும வென்னக் கலைமறை முனிவன் சொல்வான்.

(இ - ள்.) (அதுகேட்டு), பார்த்திபன்-கௌசிகராசன், பணித்தது புரிவென் என்னா - (முனிவன்) சொன்ன காரியத்தைச் செய்திடுவேனென்று, எழுந்து - இருப்பிடம்விட்டு எழுந்து, பொங்கி - உற்சாகங்கொண்டு, சுரபி தன்னை-அந்தக்காமதேனுவை, பிணித்தனன் - கட்டிக்கொண்டு, பெயர்வுழி -

புறப்படும்பொழுதில், (அந்தப்பசு), பிணியை வீட்டி-கட்டை யறுத்துவிட்டு, (வசிட்டனைநோக்கி), 'மறைகள் யாவும் கணித்த எம்பெரும-வேதங்களெல்லாவற்றையும் ஆராய்ந்தறிந்த எமது தலைவனே! மணி தட தோளினாற்கு-அழகிய பெரிய தோள்களையுடைய விசுவாமித்திரனுக்கு, கொடுத்திஒ-(என்னைக்) கொடுத்திட்டாயோ?' என்ன - என்று வினவ,-கலை மறை முனிவன் - வேதமுதலிய எல்லாக்கல்விகளையும் அறிந்த வசிட்டன், சொல்வான்-உத்தரஞ்சொல்பவனானான்; (எ - று.)—அது மேற்கவியிற் காண்க.

நீ சொன்னபடியே செய்வேனென்று விசுவாமித்திரன் அந்தக்காமதேனுவைக் கட்டியிழுத்துக்கொண்டு போகத்தொடங்க, அது அந்தப் பிணிப்பையறுத்துவிட்டு வசிட்டனையணுகி "நீ என்னை இந்தஅரசனுக்குக் கொடுத்தாயா?" என்றுவினவ, முனிவன் கூறலாயின னென்க. பணித்து அது என இரண்டு சொல்லாகப்பிரித்து, அதுபுரிவென் என்றுப் பணித்தனன இயைத்து,உரைப்பாருமுளர். பெயர்வுழி யென்பதை-பெயர்வு உழி எனப்பிரிக்க; இனி, பெயர் உழி யெனப் பிரித்து, வகரமெய்-உடம்படுமெய்யல்லாதமெய் [மெய்யீற்றுடம்படுமெய்]' எனினும் ஒக்கும். வீட்டுதல்-விடுவித்தல். மணி-கருவியாகுபெயராய், இரத்தினாபரணங்களுமாம். வேதங்கள் அனந்தமாதலால், 'மறைகள் யாவும்' என்றார். கலைமறை - பலசாகைகளோடு கூடிய வேதம் என்றும், அஞ்ஞானத்தையொழிக்கும் வேதம் என்றும் பொருள் கொள்ளலாம். 'மணித்தடந்தோளினாற்குக்கொடுத்தியோ மறைகள்யாவுங் கணித்த வெம்பெரும்' என்றதனால் 'வேதம்வல்ல அந்தணன் அரசனுக்குக் கொடுத்தல் தகாது' என்பது தெரிவிக்கப்பட்டது. பி - ம்:—[1]போகி.(கள)

## கஅ.—வசிட்டனுடைய மறுமொழியைக் கேட்டுக் காமதேனு தன்னுடல்மயிரைச் சிலிர்த்தல்.

கொடுத்திலென் யானே [1]மற்றக் குடைகெழு வேந்தன் றானே
பிடித்[2]தகல் வுற்ற தென்னப் பெருஞ்சினங் கதுவு நெஞ்சோ
டிடித்தெழு முரச வேந்தன் சேனையை யானே யின்று
முடிக்குவென் காண்டி யென்னா [3]மொய்ம்மயிர் சிலிர்த்த தன்றே.

(இ - ள்.) 'யான் ஏ கொடுத்திலென் - (உனது உடன்பாடில்லாமல் உன்னை) நானே (கௌசிகனுக்குக்) கொடுத்தேனில்லை; அ குடை கெழு வேந்தன்தான் ஏ பிடித்து அகல்வுற்றது-வெற்றிக்குடை விளங்குகிற அவ்வரசன்தானே (உன்னைப்) பிடித்துக்கொண்டு போகத்தொடங்கினசெய்கையீது', என்ன - என்று(வசிட்டன்) விடைகூற, (அதுகேட்டு அப்பசு), பெரு சினம் கதுவும் நெஞ்சோடு - மிகுந்த கோபம் மூண்ட மனத்துடனே, இடித்து எழும் முரசம் வேந்தன் சேனையை யான்ஏ இன்று முடிக்குவென் காண்டி என்னா - 'இடியையொத்து ஒலியெழுகிற பேரிகைகளையுடைய இவ்வரசனது சைனியத்தை நானே இப்பொழுது அழித்துவிடுவேன், பார்ப்பாய்' என்று (வசிட்டன் முன்னிலையில்) சொல்லிச் சபதஞ்செய்து, அன்றே மொய் மயிர் சிலிர்த்தது-அப்பொழுதே நெருங்கிய தன்னுடம்பின்மயிர்களைச் சிலிர்த்தது; (எ - று.)

'வருவதாகில் கோவைக்கொண்டகல்க' என்று வசிட்டன் கௌசிகனிடம் கூறினனாதலால், 'நான் கொடுக்கவில்லை: வேந்தனே உன்னைக்கொண்டகல்வுற்றான்' என்று மறுமொழி யுரைக்க, கோசிகனது செருக்குக்கண்டு சினந்த அந்தச்சுரபி 'நானே அவன் சேனையை முடித்துவிடுகிறேன்' என்று சொல்லித் தன்னுடம்புமயிரைச் சிலிர்த்த தென்க. சிலிர்த்தல் - மயிர்க்கூச்சுக்கொள்ளல். அகல்வுற்றது - தொழிற்பெயர், வினைமுற்றின் தன்மைப்பட்டு நின்றது; இதனை வடநூலார் 'பாவேப்ரயோகம்' என்பர். மூன்றாமடியில் 'யானே' என்றது பிறருதவியில்லாமலே என்றபடி. பி ம்:— [1]மற்றிக்குடை, மற்றைக்குடை. [2]அகல்வுற்றான். [3]முனிந்துமெய். (கூஅ)

கூகூ.—பலவகைவீரர்கள் அச்சுரபியினிடந்தோன்றிக் கோசிகன்படையை யழிக்க, கோசிகன்புதல்வர் வெகுளுதல்.

பப்பர [1]ரெயினர் சீனர் சோனகர் முதல பல்லோர்
கைப்படை யதனி னோடுங் கபிலைமாட் டுதித்து வேந்தன்
றுப்புடைச் சேனை யாவுந் [2]தொலைவுறத் துணித்த லோடும்
வெப்புடைக் கொடிய மன்னன் றனயர்கள் வெகுண்டு மிக்கார்.

(இ - ள்.) (அங்ஙனம் மயிர்சிலிர்த்தவுடனே), பப்பரர் - பப்பரர்களும், எயினர் - வேடர்களும், சீனர் - சீனர்களும், சோனகர் - சோனகர்களும், முதல - முதலான, பல்லோர் - பல மிலேச்சகணங்கள், கை படைஅதனினோடும்-(தங்கள் தங்கள்) கைகளிற் கொண்ட ஆயுதங்களுடனே, கபிலைமாட்டு உதித்து - அப்பசுவினிடத்துத் தோன்றி, வேந்தன் துப்பு உடை சேனை யாஉம் - அக்கௌசிகராசனது வலிமையையுடைய சேனைகளெல்லாவற்றையும், தொலைவு உற அழியும்படி, துணித்தலோடுஉம்-வெட்டித்தள்ளினவளவிலே, வெப்பு உடை கொடிய மன்னன் தனயர்கள் - கோபதாபமுடைய கொடியவர்களாகிய கௌசிகராசனது குமாரர்கள், வெகுண்டு மிக்கார் - கோபித்து நெருங்கிமிகுந்தார்கள்; (எ - று.).

அந்தச் சுரபியினுடைய சிலிர்த்தமயிரிலிருந்து பப்பரர்முதலியவீரர்கள் தோன்றிக் கோசிகனதுசேனைகளை மிச்சமில்லாமலொழித்தார்களாக, அதுகண்டு கோசிகனது குமாரர்கள் சினங்கொண்டு ஒருங்கேதிரண்டன ரென்க. பப்பரம், சீனம், சோனகம் என்பன - மிலேச்சஜாதிபேதங்கள்; இவர்கள் வாழ்ந்த நாடுகள் ஐம்பத்தாறுதேசங்களில் வழங்குகின்றன. கபிலா, தநயர் - வடசொற்கள். கொடிய என்பதை மன்னனுக்கு அடைமொழியாக்கலும் ஒன்று. பி - ம்:— [1]யவனர் சீனரவந்திகர். [2]துணித்தனர், தொலைவுற.

சு00.—கோசிகன்புதல்வர் நூற்றுவருந் வசிட்டன்மீது சினந்து அவனது விழித்தீயா லிறந்துபடுதல்.

[1]சுரபியின் வலியி தன்றாற் சுருதிநூ லுணர வல்ல
மாமுனி வஞ்ச மென்று [2]மற்றவன் சிரத்தை பின்னே
யரிந்து மென்னப் பொங்கி யடர்த்தன [3]ரடர வன்று
னெரியெழ விழித்த லோடு மிறந்தனர் குமர ரெல்லாம்,

(இ - ள்.) (கோபம்மிக்க கௌசிககுமாரர்கள்), 'இது சுரபியின் வலி அன்று - இங்ஙனம் பசுவினிடத்து மிலேச்சர்தோன்றி நமதுசேனையை யழித்தது காமதேனுவினது பல மன்று; சுருதி நூல் உணர வல்ல வரன் முனி வஞ்சம் - வேதசாஸ்திரங்களை யறியவல்ல சிறந்தவனான முனிவனது மாயையேயாம்', என்னா - என்றுசொல்லி, அவன் சிரத்தை இன்னே அரிகுதும் என்ன - அவனது தலையை இப்பொழுதே அறுத்திடுவோமென்று வீர வாதங்கூறி, பொங்கி - சினங்கொண்டு, அடர்த்தனர் - எதிர்த்து நெருங்கினார்கள்; அடர - (அவ்வாறு) நெருங்க, (அப்பொழுது), அன்னான் - அவ் வசிட்டமுனிவன்,எரி எழ விழித்தலோடும்-நெருப்புப்புறப்படும்படி (கோபத்தோடு கண்களால் அவர்களை) விழித்துப்பார்த்தமாத்திரத்தில், குமரர் எல்லாம்-விசுவாமித்திரபுத்திரர்யாவரும், இறந்தனர்-மரித்தார்கள்; (எ - று.)

விசுவாமித்திரராசன் வலிய அந்தக்காமதேனுவைக் கட்டி யிழுத்துக் கொண்டு போகத் தொடங்குகையில், அது அந்தக்கட்டை உதறிவிட்டு வசிட்டனிடஞ்சென்று முறையிட, அம்முனிவன் 'அரசனும் விருந்தாளியு மான இவனை என்னுடையதவவலிமையால் தண்டிப்பது தகுதியன்று: மேலும் இவனுடைய சேனை கடல்போற் பரந்திருக்கின்றதே; பிராமணனை யான் என்ன செய்யலாம்?' என்ன, காமதேனு முனிவனை நோக்கி பிரமதேசசின்வலிக்கு முன்னே அரசனது பலம் ஒருபலமோ! நீர் எனக்கு மகிமையைக் கற்பித்துக் கட்டளை கொடுத்தால் நான் இந்தச்சேனைகளையெல்லாம் நாசஞ்செய்து விடுகிறேன்' என்ன, முனிவனும் கட்டளை கொடுக்க, அந்தக்காமதேனு தனது உடம்பின் பலபகுதிகளிலிருந்து பலவகை வீரரை யுண்டாக்கி விசுவாமித்திரனதுசேனைகளை யொழிக்க, அப்போது விசுவாமித்திரராசனது புத்திரர் நூற்றுவர் வசிஷ்டமுனிவனது யோகமகிமையால் தான் இங்ஙனம் விளைந்த தென்று அம்முனிவன்மீது சினந்து செல்ல, வசிட்டமுனிவன் தனது உங்காரத்தால் அவர்கள்யாவரையும்அழித்தன னென்று முதனூலிற் கூறியுள்ளது. பி - ம்:—[1]சுரபிதன். [2]மற்றிவன். [3]அடர்ப்ப. (சoo)

**கoக.—அப்போதுவிசுவாமித்திரன் உக்கிரங்கொண்டு வசிட்டன்மேல் அம்பெய்ய, அவன் தன் பிரமதண்டத்தை எதிருமாறு ஏவுதல்.**

ஐயிரு [1]பதின்மர் மைந்த ரவிந்தமை யரசன் காணா
நெய்[2]பொழி கனலிற் பொங்கி நெடுங்கொடித் தேர்க டாவிக்
கைதொடர் கணையி னோடுங் கார்முகம் வளைய வாங்கி
யெய்தனன் முனியுந் தன்கைத் தண்டினை யெதிர்க வென்றான்.

(இ - ள்.) (அப்பொழுது), அரசன் - இக்கௌசிகராசன், ஐ இரு பதின்மர் மைந்தர் அவிந்தமை - (தனது) புத்திரர் நூறுபேர் இறந்ததை, காணா - கண்டு, நெய் பொழி கனலின் பொங்கி - நெய்நிறையவார்க்கப்பட்ட நெருப்புப்போல மிக உக்கிரமாக எழுந்து, நெடு கொடி தேர் கடாவி - உயர்ந்த துவசத்தையுடைய (தனது) இரதத்தை (முனிவனெதிரில் அருகிற்) செலு

த்தி, கார்முகம் வளைய வாங்கி - வில்லையெடுத்து நன்ருகவளைத்து, கை தொடர் கணையினேடும் - (தனது) கையினல் ஒன்றன்பின் ஒன்ருக வரிசையாகவெடுத்து விரைவில் விடப்படுகிற அம்புகளால், எய்தனன் - (வசிட்டன்மீது) எய்யத்தொடங்கினன்; முனிஉம் - வசிட்டமுனிவனும், தன் கை தண்டினை - (தனது) கையிலுள்ள பிரமதண்டத்தைநோக்கி, எதிர்க என்ருன் - (நீ அவ்வாயுதங்களை) எற்றிடுவாய் என்று நியமித்தான்; (எ - று.)

கணையினேடு, ஒடு உருபு இங்குக் கருவிப்பொருளது: உம்மை - இசைநிறை. கார்முகம் - ஒருசொல்; போர்த்தொழிலில் வல்லமைபெற்றது என்றுபொருள்படும் வடமொழித்தத்திதாந்தநாமம். வளையவாங்குதல் - ஒரு பொருட்பன்மொழி. தண்டு - ப்ருஹ்மதண்டம். பி - ம்:—[1] பத்தின். [2] சொரி. (கOக)

**கOஉ.—விசுவாமித்திர னெய்த படைகளையெல்லாம் அந்தப்பிரமதண்டம் விழுங்கிவிட, சிவனையடைந்து கௌசிகன் ஓர்அஸ்திரத்தைப் பெறுதல்.**

கடவுளர் படைக ளீருக் கற்றன படைகள் யாவும்
விடவிட [1]முனிவன் றண்டம் விழுங்கிமேல் விளங்கல் காணு
வடவரை வில்லி தன்னை வணங்கினன் வழுத்த லோடு
மடலுறு படையொன் றீயா வன்னவ னகன்ருனன்றே.

(இ - ள்.) கடவுளர் படைகள் ஈறு ஆ - (சாதாரணபாணங்கள் முதல்) தேவர்களது அஸ்திரங்க ளிறுதியாக, கற்றன படைகள் யாஉம் - (தாம்) அறிந்து பழகின ஆயுதங்க ளெல்லாவற்றையும், விட விட - (கௌசிகன்) பிரயோகித்துக்கொண்டேவர, முனிவன் தண்டம்-வசிட்டனது பிரமதண்டமானது, விழுங்கி - (அவற்றையெல்லாம்) உட்கொண்டு, மேல் விளங்கல்- மேன்மையாக விளங்குதலை, காணு - (கௌசிகன்) பார்த்து,—வட வரை வில்லிதன்னை வணங்கினன் வழுத்தலோடும் - வடக்கின்கணுள்ள மகா மேருகிரியாகிய வில்லை (த் திரிபுரசங்காரகாலத்திற்) கொண்ட உருத்திர மூர்த்தியை (த் தியானித்து) நமஸ்கரித்துத் துதித்தமாத்திரத்திலே, அன்னவன் - அச்சிவபிரான், (பிரதியட்சமாகி), அடல் உறு படை ஒன்று ஈயா - வலிமைமிக்க அஸ்திரமொன்றைக் கொடுத்துவிட்டு, அகன்ருன்-நீங்கினன்.

விட விட - விடும்பொழுதுதோறும்; அடுக்கு, தொறுப்பொருளது. தோத்திரப்பிரியனுதலால், வழுத்தலோடும் படையொன்று ஈந்தருளினன். பி - ம்:— [1] வேந்தன். (கOஉ)

**கOங.—சிவனதுபடையைக் கௌசிகன் பிரயோகிக்க, வசிட்டன் அதனை யுண்டு விளங்குதல்.**

விட்டனன் படையை வேந்தன் விண்ணுளோ [1]ருலகை யெல்லாஞ்
சுட்டன னென்ன வஞ்சித் துளங்கினர் [2]முனியுந் தோன்றிக்
கிட்டிய படையை யுண்டு கிளர்ந்தன னிளரு மேனி
[3]முட்டவெம் பொறிகள் [4]சிந்தப் பொருபடை [5]முரணை திற்றே.

(இ - ள்.) வேந்தன் - விசுவாமித்திரராசன், படையை - அந்த ருத்திராஸ்திரத்தை, விட்டனன்-(வசிட்டன்மீது) பிரயோகித்தான்; விண் உளோர் - (அதனைக்கண்ட) மேலுலகத்திலுள்ள தேவர்களும், உலகை எல்லாம் சுட்டனன் என்ன - (இதனால்) எல்லாவுலகங்களையும் எரித்தவனுவானிவனென்று, அஞ்சி துளங்கினர் -பயந்து நடுங்கினர்கள்; (ஆயினும்): முனிஉம்- வசிட்டமுனிவனேவெனில், தோன்றி - எதிரில்வந்து, கிட்டிய படையை உண்டு - சமீபித்துவந்த அந்த அஸ்திரத்தைத் தான் உட்கொண்டு, கிளரும் மேனி முட்ட வெம் பொறிகள் சிந்த - (அவ்வஸ்திரத்தின் சுவாலையினால்) விளங்குகிற (தனது) உடம்புமுழுவதிலுமிருந்து வெவ்விய நெருப்புப்பொறிகள் வெளிப்படும்படி, கிளர்ந்தனன் - (இயற்கையாக முன்னமேயுள்ள பிரமதேஜசோடு இப்பொழுது இவ்வஸ்திரச்சுடரையுங்கொண்டு) மிக்கு விளங்கினான்; பொரு படை முரணது இற்று - (பிறரையெல்லாம்) போர்செய்து அழிப்பதற்குஉரிய ருத்திராஸ்திரத்தினது வலிமை (வசிட்டன்விஷயத்தில்) இங்ஙனமாயிற்று; (எ - று.)—ஏற்றேகாரம் - தேற்றம்; இரக்கமுமாம்.

தனது சேனையும் புத்திரரும் நாசமாய்விட்டது கண்ட கோசிகன் உற்சாகங்குன்றி அந்தப்போரில் இறவாதுதப்பின . தன்புத்திர னொருவனுக்குப் பூமியைப் பாதுகாக்குமாறு பட்டங்கட்டிவிட்டுத் தான் இமயமலையைச் சார்ந்து சிவபிரானைநோக்கிக் கடுந்தவம்புரிய, சிலகாலஞ் சென்றபின் உருத்திரமூர்த்தி பிரதியட்சமாகி வேண்டிய வரத்தைக் கேட்குமாறு அருள, கௌசிகன் வில்வித்தைகளைச் சாங்கமாக அவற்றிற்கு உரிய ரஹஸ்யங்களுடனே தனக்குத் தோன்றுமாறும், எல்லா அஸ்திரங்களும் தோன்றுமாறும் தனது மற்றுமுள்ள கருத்துக்கள் முற்றுமாறும் திருவருள்புரியும்படி வேண்டி அந்தக்கடவுளின்அருளைப் பெற்று அளவிடமுடியாத செருக்குடனே வசிஷ்டனுடைய ஆச்சிரமத்துக்குச் சென்று பலவகைப்படைகளைப் பிரயோகிக்க, வசிஷ்டமுனிவனும் சினங்கொண்டு பிரமதண்டத்தைக் கையிலேந்தி முன்னே நிற்க, கௌசிகன் பலதெய்விக அஸ்திரங்களையெல்லாம் பிரயோகிக்கவும், அவற்றையெல்லாம் பிரமதண்டம் விழுங்கிவிடவே இறுதியில் பிரமாஸ்திரத்தைப் பிரயோகிக்க, அதையும் தனது பிரமதண்டத்தா லடக்கிவிட்டு வசிஷ்டன் விளங்கிநிற்க, முனிவர்களனைவரும் வசிட்டனைப் புகழ்ந்து துதிக்க, வசிட்டமுனிவன் சினந்தணிந்தன னென்று முதனூலிற் கூறியுள்ளது. சுட்டனன் - தெளிவுபற்றிய காலவழுவமைதி. இற்று என்பதை - இறந்தகால வினையெச்சமாகக் கொண்டு, இற எனச் செயவெனெச்சமாத்திரித்து, விளங்குகிற தனது உடம்பிலிருந்து வெவ்விய அனற்பொறிகள் எழுந்துசென்றுதாக்கும்படி போர்செய்யவல்ல அந்த அஸ்திரத்தினது பலம் அழியுமாறு வசிட்டன் தான் அதனை உண்டு கிளர்ந்தான் என உரைப்பினும் அமையும். பி - ம்:—[1] படையை. [2] முனியும்வந்து. [3] முட்டி. [4] சிந்தி. [5] முரணிதிற்ற, முரணதற்ற. (கOரு)

**கOசு.—பிரமதேஜசைப் பெறக் கருதிக் கௌசிகன் தவத்திற்குச்செல்லல்.**

கண்டன னரசன் [1]காணுக் கலை[2]மறை முனிவர்க் கல்லாற்
றிண்டிறல் [3]வலியுந் தேசு முளவெனல் [4]சீரி தன்றென்

மண்டல முழுதுங் காக்கு மொய்ம்பொரு வலி[5]யன் றென்னா
வொண்டவம் புரிய வெண்ணி யும்பர்கோன் றிசையை யுற்றான்.

(இ - ள்.) அரசன் - இந்தக் கௌசிகராசன், கண்டனன் - (அந்தருத்திராஸ்திரமும் வீணாய்விட்டதைப்) பார்த்தான்; காணா - பார்த்து, 'திண்திறல் வலிஉம் - மிகவும் அதிகமான பலமும், தேசுஉம் - ஒளியும், கலை மறை முனிவர்க்கு அல்லால் - வேதசாஸ்திரங்களையறிந்த முனிவர்களுக்குமாத்திர முள்ளனவே யல்லாமல், (பிறருக்கு), உள எனல் - உள்ளன வென்று கருதுதல், சீரிது அன்று - அழகுடையதல்ல; மண்டலம் முழுதுஉம் காக்கும் மொய்ம்பு - பூலோகமுழுவதையும் அரசாளுகின்ற வலிமை, ஒருவலி அன்று - (முனிவர்வலிமைக்குமுன்) ஒருவலிமையாகமாட்டாது,' என்னா - என்று நிச்சயித்தறிந்து, ஒள் தவம் புரிய எண்ணி - ஒளியுள்ளதான [சிறந்த] தவத்தைச் செய்யநினைத்து, உம்பர் கோன் திசையை உற்றான் - தேவராசனான இந்திரனது திக்காகிய கீழ்த்திசையை அடைந்தான்; (எ - று.)

பிறகு அரசராற்றலினும் முனிவராற்றல் மிகச்சிறப்பையுடைய தென்பதைத் தெளிவாக அறிந்து, கௌசிகன், அந்த ஆற்றலைத் தான் பெறக்கருதித் தவஞ்செய்யப்போனா னென்பதாம். முதன்முதலில் தவஞ்செய்யுமாறு கௌசிகன் சென்றது தென்திசையென்று முதனூல் கூறும். "ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து, வேந்தனும் வேந்து கெடும்" என்னுந் திருக்குறளினாலும் அரசவலிமையினுந் தவவலிமையுடையார்க்குள்ள சிறப்புத்தெள்ளிதின் விளங்கும். திண்டிறல்வலி - ஒருபொருட்பன்மொழிகள். திறல் வலி - வெற்றிக்குக்காரணமான வலிமையுமாம். பி - ம்:—[1]கண்ணால். [2]மறையவர்கட்கு. [3]வலிய. [4]சீரிதம்மா. [5]நன்றென்னா. (௧௦௪)

௧௦௫.—கௌசிகன் புரியுங் கடுந்தவத்தைக் கெடுக்குமாறு இந்திரன் திலோத்தமையை யேவுதல்.

மாண்டமா தவத்தோன் செய்த வலனையே மனத்தி னெண்ணிப்
பூண்டமா தவத்த னாகி யரசர்கோன் பொலியு நீர்மை
காண்டலு மமரர் வேந்தன் றுணுக்குறு கருத்தி னோடுந்
தூண்டின னரம்பை மாருட் டிலோத்தமை யெனுஞ்சொன் மானை.

(இ - ள்.) (இவ்வாறு), அரசர் கோன் - அரசர்களுக்கு அரசனாகிய கௌசிகன், மாண்ட மா தவத்தோன் செய்த வலனை ஏ மனத்தின் எண்ணி - மாட்சிமைப்பட்ட பெருந்தவத்தையுடைய வசிட்டமுனிவன்பெற்ற வெற்றிச் செய்கையையே மனத்தி லிடைவிடாது சிந்தித்து, பூண்ட மா தவத்தன் ஆகி - (தான்) மேற்கொண்ட சிறந்த தவச்செய்கையை யுடையவனாய், பொலியும் - விளங்குகிற, நீர்மை - தன்மையை, காண்டலும் - பார்த்தவளவிலே,—அமரர் வேந்தன் - தேவர்களுக்கரசனாகிய இந்திரன், துணுக்குறு கருத்தினோடுஉம் - அச்சம் மிகுந்த கருத்துடனே, அரம்பைமாருள் திலோத்தமை எனும் சொல் மானை - ரம்பைமுதலிய தெய்வப்பெண்களுள் திலோத்தமையென்னும் பெயருள்ள புகழினையுடைய மான்போன்றபார்வையையுடைய பெண்ணை, தூண்

டினன் - (அக்கௌசிகனது தவத்தைக் கெடுத்தற்பொருட்டு அவன்பால்) ஏவியனுப்பினுன்; (எ - று.)

வசிட்டன் தன்னைவென்று தோற்கடித்ததனால் அவமானம் மனத்தை வருத்திக்கொண்டிருக்க, கௌசிகன் அவனைவெல்லத்தக்க பிரமதேசசைப் பெறும்பொருட்டுத் தேவேந்திரனுந் துணுக்குறுமாறு கடுந்தவம் புரிந்தன னென்க. இந்திரன் மனந்திடுக்கிடுதற்குக்காரணம், மிக்கதவத்தைச் செய்பவரது கபாலத்தினின்று ஒருவகைத்தீ மேலெழுந்து தன்னுலகத்தையெரிக்குமென்னு மச்சம். சொல் புகழாதலை "சொன்மாண்பமைந்தகுழு" எனச் சிந்தாமணியிலுங் காண்க. (௧௦௫)

௧௦௬.—கௌசிகன் அப்போது சிற்றின்பத்துழன்றுப் பிறகுவெறுத்தல்.

*அன்னவண் மேனி காணு வனங்கவேள் சரங்கள் பாயத்
தன்னுணர் வழிந்து காதற் சலதியி னழுந்தி வேந்தன்
பன்னரும் பகறீர் வுற்றுப் [1]பரிணதர் [2]தெரித்த நூலி
னன்னய முணர்ந்தோ னாகி நஞ்செனக் கனன்று நக்கான்.

(இ - ள்.) வேந்தன் - கௌசிகன், அன்னவள் மேனி காணு-அந்தத் திலோத்தமையின் உடம்பழகைக்கண்டு, அனங்கன் வேள் சரங்கள் பாய - மன்மதனது பாணங்கள் (தன்மேற்)படுதலால், தன் உணர்வு அழிந்து-தனது நல்லறிவுகெட்டு, காதல் சலதியின் அழுந்தி-(அவளது காமவின்பமாகியகடலிலே மூழ்கி, பன் அரு பகல் தீர்வுற்று-சொல்லுதற்குஅருமையான அநேக நாள்கள் கழியப்பெற்று, (அதன்பின்), பரிணதர் தெரித்த நூலின் நல் நயம் உணர்ந்தோன் ஆகி - புத்திமான்கள் ஆராய்ந்துகூறின சாஸ்திரங்களின் நல்ல பொருளை அறிந்தவனாய், நஞ்சு என கனன்று - (அவ்வின்பத்தை) விஷத்தைப்போல வெறுத்து, நக்கான் - சிரித்தான்; (எ - று.)

அந்தத்திலோத்தமையைக் கண்டதும் விசுவாமித்திரன் காமவசப்பட்டு அவளுடன் சிற்றின்பம் அனுபவித்துப் பிறகு ஒருபாற் சினமும் ஒருபால் தனதுசெய்கையில் வெறுப்புங்கொண்டு சிரிக்கலாயினனென்க. சிரித்தற்குக்காரணம் - தான் செய்யக்கூடாத ஒழுக்கத்தைச் செய்துவிட்டதைக் கருதியமை. பரிணதர் - அறிவின் பக்குவதசையையடைந்தவர். பி-ம்:— [1]பருணிதர். [2]தெரிந்த. (௧௦௬)

௧௦௭.—திலோத்தமையைச் சபித்திட்டுக் கௌசிகன்
தவம்புரியத் தென்திசை சார்தல்.

விண்முழு தாளி செய்த வினையென வெகுண்டு நீபோய்
மண்மக ளாதி யென்று மடவர றன்னை யேவிக்
கண்மலர் [1]சிவப்ப வுள்ளங் கறுப்புறக் கடிதி னேகி
யெண்மரின் [2]வலிய னுப வெமன்றிசை தன்னை யுற்றான்.

(இ - ள்.) விண் முழுது ஆளி செய்த வினை என-(இங்ஙனந்தான் தவம் அழிந்தது) தேவலோகமுழுவதையும் அரசாள்பவனாகிய இந்திரன் செய்த

வஞ்சனைச்செய்கையினுலாகுமென்று(அறிந்து)வெகுண்டு-கோபங்கொண்டு, நீ போய் மண் மகள் ஆதி என்று மடவரல்தன்னை ஏவி - நீ பூலோகத்திற் சென்று மானுடமகளாகப்பிறப்பா யென்றுசொல்லி அத்திலோத்தமையைச் சபித்திட்டு, கண் மலர் சிவப்ப-தாமரைமலர்போலும்(தன்) கண்கள்(கோபத் தால்) செந்நிறமடையவும், உள்ளம் கறுப்பு உற - மனங் கோபத்தையடைய வும், கடிதின் ஏகி - (அவ்விடத்தைவிட்டு) விரைவாகச் சென்று, எண்மரின் வலியன் ஆய எமன் திசைதன்னை உற்ருன் - அஷ்டதிக்குப்பாலகர்களுள் வலிமையையுடையவனுகிய யமனது திக்கான தென்திசையை அடைந் தான், (கௌசிகன்); (எ - று.)

தனது தவம் நிலைகுலைதற்குக்காரணமான திலோத்தமையைச் சபித் திட்டு, கௌசிகன் அத்திசையைவிட்டுத் தென்திசையிற் றவம்புரியுமாறு சென்றன னென்க. மடவரல் - இளமைப்பருவத்தின் வருகையையுடைய வள்: வேற்றுமைத்தொகையன்மொழி. எண்மர் - தொகைக்குறிப்பு. யமன்- யாவரையுமடக்குபவன். கண்மலர் சிவப்ப வுள்ளங்கறுப்புற - தொடை முரண். பி-ம்:— [1]சேப்ப. [2]வலிதென்றெண்ணும் யமன்றிசை யதனை.(கoஎ)

**கoஅ.—அப்போது திரிசங்கு வசிட்டனைக்கிட்டி இச்சரீரத்தோடு சுவர்க்கஞ்செல்ல வருளுமாறு வேண்ட, அவன் மறுத்தல்.**

*தென்றிசை யதனை நண்ணிச் செய்தவஞ் [1]செய்யுஞ் செவ்வி*
*வன்றிற லயோத்தி வாழு [2]மன்றிரி சங்கு வென்பான்*
*றன்றுணைக் குருவை நண்ணித் தனுவொடுந் துறக்க மெய்த*
*வின்றெனக் கருளு கென்ன [3]யானறிந்திலனெ தென்ருன்.*

(இ - ள்.) (இங்ஙனங் கௌசிகன்), தென்திசையதனை நண்ணி-தெற் குத்திக்கை விரும்பியடைந்து, செய் தவம் செய்யும் செவ்வி-செய்தற்குரிய தவத்தைச்செய்யும்பொழுதில், -வல் திறல் அயோத்தி வாழும் மன் திரிசங்கு என்பான் - மிக்கவலிமையையுடைய அயோத்தியாபட்டணத்தில்வாழ்கிற அரசனுன திரிசங்குவென்பவன், தன் துணை குருவை நண்ணி - (எல்லாக் காரியங்களிலுந்) தனக்குத் துணையான ஆசிரியனுகிய வசிட்டனை யடுத்து, தனுவொடுஉம் துறக்கம் எய்த இன்று எனக்கு அருளுக என்ன - இந்தப்பூத வுடம்புடனே சுவர்க்கலோகத்தையடையும்படி இப்பொழுது எனக்கு அருள் செய்வாயாக வென்று பிரார்த்திக்க, (வசிட்டன்), யான்—, அது-அங்ஙனம் இச்சரீரத்தோடு சுவர்க்கஞ்சேர்க்கவல்ல செயலை, அறிந்திலேன் - அறி யேன், என்ருன்-என்று (அவ்வரசன் வேண்டுகோளைமறுத்துக்) கூறினுன்.

திரிசங்கு தனதுகுலகுருவாகிய வசிட்டனை வரவழைத்து 'இந்தச்சரீ ரத்தோடு சுவர்க்கஞ் செல்லுமாறு அருள்க' என்று வேண்ட, வசிட்டன் அங்ஙனஞ் செல்லுதல் இயலாதென்று மறுத்துக் கூறின னென்க. திரி சங்கு - சூரியவமிசத்திற் பிரசித்திபெற்ற ஓரரசன்; இராமனது வமிசபிதா: இவனது மகன் தான், சத்திய அரிச்சந்திரன். தநு-வடசொல். 'தென்றிசை யதனை நண்ணிச் செய்தவஞ் செய்யுஞ் செவ்வி திரிசங்குவென்பான் ஓர்நாள் கௌசிகப்பேர்க்கோனினிதுறையுஞ் சோலைகுறுகினன்' என மேல் ககஉ-

ஆங் கவியோடு தொடரும். திரிசங்கு = த்ரிஶங்கு: த்ரய்யாருணி யென்னும் மன்னவனுக்குப் புதல்வனாகிச் சத்தியவிரதனென்று இயற்பெயர்கொண்ட இவன் பிராமணகன்னிகையைக்கவர்ந்தது தந்தையின்சொல்லை மீறியது, குருவான வசிட்டமுனிவனது தேனுவைவதஞ்செய்தது, ஜலத்தினாற் புரோட்சித்துப்பரிசுத்தமாக்கப்படாத மாமிசத்தையுண்டது என்கிற மூன்று குற்றங்களையுடையவனாயினமை பற்றி 'த்ரிசங்கு' எனப்பட்டான். பி - ம்:— [1]செலுத்தும்வைகல். [2]மன்னவன் றிரிசங்கென்பான். [3]ஆண்டிறந்தெய்து கென்றான். (௧0அ)

௧0௯.—திரிசங்கு வேறுபுரோகிதனைநாடி யாகம்புரிவே, னென்னனை வசிட்டன் நீசனாதுமாறு அவனைச் சபித்தல்.

நினக்கொலா தாகி னைய நீணிலத் தியாவ ரேனு
மனக்கினி யாரை நாடி வகுப்பல்யான் வேள்வி யென்னச்
சினக்கொடுந் திறலோய் [1]முன்னர்த் [2]தேசிகற் பிழைத்து வேறோர்
நினக்கித னாடி நின்றாய் நீசனாய் விடுதி யென்றான்.

(இ - ள்.) (அதுகேட்ட திரிசங்கு தனது குலகுருவான வசிட்டனை நோக்கி), 'ஐய - தலைவனே! நினக்கு ஒலாது ஆகின் - (என்னை இவ்வுடம்புடன் சுவர்க்கமேற்றும் இச்செய்கை) உனக்கு முடியாதாயின், நீள் நிலத்து - பெரிய பூலோகத்திலே, யாவர்என்உம் மனக்கு இனியாரை நாடி - எவராயினும் (என்)மனத்துக்கு இஷ்டரானவரைத்தகுதியாகத் தேடி, யான் வேள்வி வகுப்பல் - நான் (அவரைக்கொண்டு அதற்குரிய) யாகத்தைச் செய்வேன்', என்ன - என்றுசொல்ல,-(வசிஷ்டன் கோபங்கொண்டுஅவனைநோக்கி), 'சினம் கொடு திறலோய் - கோபத்தையும் (பகைவர்க்குப்) பயங்கரமான வலிமையையு முடையவனே! முன்னர் தேசிகன் பிழைத்து - பழமையான (உனது சிறந்த)ஆசிரியனிடத்தில் அபசாரப்பட்டு அவனைவிட்டு, வேறு ஓர் நினக்கு இதன் நாடி நின்றாய் - உனக்கு இஷ்டனான வேறொருகுருவை (நீ) தேடிநின்றாய் (ஆதலால்), நீசன் ஆய் விடுதி - புலையனாய்விடுவாயாக', என்றான் - என்று சபித்தான்; (எ - று.)

வசிட்டன் நிராகரிக்கவே, திரிசங்கு குருபுத்திரர்களைச் சார்ந்து வசிட்டன் நிராகரித்ததைச்சொல்லித் தன் கருத்தை முற்றுவிக்குமாறு வேண்ட, அவர்களும் கடிந்து கூற, திரிசங்கு என்குருவும் எனது குருவின்புதல்வராகிய நீங்களும் என்கருத்தை முற்றுவிக்க முடியாதென்று நிராகரித்ததனால் என் கருத்தை நிறைவேற்றுவிக்க வல்ல வேறொருகுருவைத் தேடிக்கொள்ளுகிறேன்' என்ன, அந்தவசிட்டகுமாரர்கள்நூற்றுவரும் அரசனை நோக்கி 'மதிகேடனே! நீ குலகுருவை விட்டு வேறொரு புரோஹிதரை யடுக்குமாறு நினைத்தாயாதலால், சண்டாளனாகக் கடவாய்' என்று சபித்துவிட்டுத் தமது ஆச்சிரமஞ்சேர்ந்தனரென்று முதனூல் கூறும். இதனால், பரம்பரையான ஆசிரியன் தகுந்தவனாயிருக்க அவனை விட்டுப் பிறனொருகுருவைத் தேடுதல் கூடா தென்பது போதரும். இதன் = ஹிதன்: உயர்திணைப்பெயர்.

நீசன்-கடைப்பட்டவன்; இங்கே - சண்டாளன். தேசிகன் - தன்னைப்படர்க்கைபோற் கூறினது; வழுவமைதி. பி-ம்:- [1] முன்னைத். [2] தேசிகற்றப்பி.

௧௧௦.—சாபத்தின்படி திரிசங்கு சண்டாளனாதல்.

மலருளோன் மைந்தன் [1] மைந்த வழங்கிய சாபந் தன்னா
லலரியோன் றானு நாணும் [2] வடிவிழந் தரசர் கோமான்
புலரியங் கமலம் போலும் பொலிவொரீஇ வதனம் பூவிற்
பலருமாங் கிகழ்தற் கொத்த படிவம்வந் துற்ற தன்றே.

(இ - ள்.) மைந்த - சக்கரவர்த்திதிருமகனே! மலருளோன் மைந்தன் - தாமரைமலரில்வாழ்கிறபிரமதேவனது மானசபுத்திரனான வசிட்டன், வழங்கிய - இட்ட, சாபந்தன்னால் - சாபத்தினால், அரசர் கோமான் - அரசர்களுக்கரசனாகிய திரிசங்குமகாராசனுக்கு, அலரியோன் தான்உம் நாணும் வடிவு இழந்து - சூரியபகவானும் வெள்குதற்குக் காரணமான (மிகுந்த ஒளியையுடைய) அரசவடிவம் நீங்கி, புலரி அம் கமலம் போலும் வதனம் பொலிவு ஒரீஇ - சூரியோதயகாலத்தில் மலர்கிற அழகிய தாமரைமலர் போன்ற திருமுகத்தின் அழகு கெட்டு, பூவில் பலர்உம் இகழ்தற்கு ஒத்த படிவம் ஆங்கு அன்றுஏ வந்து உற்றது - பூலோகத்தில் எல்லோரும் இகழ்வதற்கு உரிய சண்டாளவடிவம் அவ்விடத்து அப்பொழுதே வந்துபொருந்திற்று; (எ - று.)

தனது மேனி ஒளி முகப்பொலிவு யாவும் நீங்கித் திரிசங்கு சண்டாள வடிவத்தை யடைந்தனனென்க. மைந்த-இராமனைச்சதானந்தன் அழைத்த விளி. அலரி ஆயிரங்கிரணங்களோடு கூடிவிளங்குபவன். பி-ம்:— [1] மைந்தின், சீறி [2] ஒளி. (௧௧௦)

௧௧௧.—ஊர்சேர்தலும் யாவரும் சீசீ யென்னத் திரிசங்கு காடுசேர்தல்.

காசொடு முடியும் பூணுங் [1] கரியதாங் கனகம் போன்றுந்
தூசொடு மணியு முந்நூ றோறருந் தோற்றம் போன்று
மாசொடு கருகி மேனி வனப்பழிந் திடவூர் வந்தான்
[2] சீசியென் றியாரு மெள்ளத் திகைப்பொடு பழுவஞ் சேர்ந்தான்.

(இ - ள்.) காசொடு - இரத்தினஹாரங்களும், முடிஉம் - கிரீடமும், பூண்உம் - மற்றையாபரணங்களும், கரியது ஆம் கனகம் போன்றுஉம் - கரும்பொன்னாகிய இரும்பை யொத்து (க் கறுத்தநிறத்தை யடைந்து)ம், தூசொடுஉம் - (உடுத்த ஆடைகளும் அணியும் முந்நூல்-தரித்துள்ள முப்புரிநூலும், தோல் தரும் தோற்றம் போன்றுஉம் - தோலினாலாகிய தன்மையை யொத்தும், மேனி - உடம்பானது, மாசொடு கருகி -அழுக்குடனே கூடிக் கறுத்து, வனப்பு அழிந்திட - அழகுகெட, ஊர் வந்தான் - (வசிட்டனாச்சிரமத்திலிருந்து திரிசங்குமகாராசன் தனது) அயோத்திநகரத்துக்கு வந்து, சீசி என்று யார்உம் எள்ள-(அங்கே எல்லோர்உம்)சீசீயென்று தன்னையிகழ்தலால், திகைப்பொடு பழுவம் சேர்ந்தான் -கலக்கத்துடனே காட்டை யடைந்தான்; (எ - று.)

பூண்ட அணிகலங்கள் இரும்பினாலியன்றனவாகவும் உடுத்த உடை தோலாகவும் மாற, உடல்கருகித் தோன்ற, திரிசங்குராசன் முன்னையவடிவம் நீங்கிச் சண்டாளவடிவத்துடனே அயோத்தி சேர, நகரத்தவர் சீசியென்று இகழ்ந்ததனால் நகரத்தைவிட்டுக் காடுசேர்ந்தன னென்பதாம். சீசி- இகழ்ச்சிக்குறிப்பு. பி - ம்:—[1]கரிய. [2]சீசியுற்று. (கககூ)

**ககஉ.—ஒருகால் கௌசிகனுறையுளைத் திரிசங்குசேர்ந்து தன்செய்தி தெரிவித்தல்.**

கானிடைச் சிறிது வைகல் கழித்தோர்நாட் கௌசி கப்பேர்க்
கோனினி துறையுஞ் சோலை குறுகினன் குறுக வன்னா
னீனனீ யாவ னென்னை நேர்ந்ததிவ் விடையி னென்ன
மேனிகழ் பொருள்க ளெல்லாம் விளம்பினன் வணங்கி வேந்தன்.

(இ - ள்.) கானிடை - காட்டினிடத்திலே, சிறிது வைகல் கழித்து - சிலநாட்களைப் போக்கி, ஓர் நாள் - ஒருதினத்தில், கௌசிகன் பேர் கோன் இனிது உறையும் சோலை குறுகினன் - கௌசிகனென்று பேருள்ள இவ்வரசன் இனிமையாக (த் தவஞ்செய்து) வசிக்கிற சோலையை (த் திரிசங்கு நாடிச்) சமீபித்தான்; குறுக - சமீபித்தமாத்திரத்தில், அன்னான் - அக்கௌசிகன், 'ஈனன் நீ யாவன் - சண்டாளனாகிய நீ யார்? இ இடையின் நேர்ந்தது என்னை - இந்த விடத்தில் வந்தது என்ன காரணம்?' என்ன-என்று வினவ, வேந்தன் - திரிசங்கு, வணங்கி - (கௌசிகனை) நமஸ்கரித்து, மேல் நிகழ் பொருள்கள் எல்லாம் விளம்பினன் - முன்நடந்த செய்திக ளனைத்தையுஞ் சொன்னான்; (எ - று.)—வசிட்டனுக்கு விரோதி யாதலால் விசுவாமித்திரனைத் திரிசங்கு நாடி யடைந்தான். (ககஉ)

**ககா.-இவ்வுடலோடு சுவர்க்கஞ்சேருமாறு வேட்பிப்பேனென்று கோசிகன் முனிவர்களை வரவழைக்க, வசிட்டகுமாரர்கள் வருதற்குமறுத்தல்.**

[1]இற்றிதோ வெனநக் கன்னான் யானிரு வேள்வி முற்றி
மற்றுல களிப்பெ னென்னா மாதவர் தம்மைக் கூவச்
சுற்றுறு முனிவர் யாருந் தொக்கனர் வசிட்டன் மைந்தர்
கற்றில மரசன் வேள்வி கனற்றுறை புலையற் கீவான்.

(இ - ள்.) அன்னான் - அதுகேட்ட கௌசிகன், இற்றிது ஓ என-இவ்வளவுதானா என்று அலட்சியமாகச்சொல்லி, நக்கு - சிரித்து, இரு வேள்வி முற்றி மற்று உலகு அளிப்பென் என்னா - நான் பெரியதொரு யாகத்தை (உனக்காக)ச் செய்துமுடித்துத் தேவலோகத்தை (இவ்வுடலோடு சேருமாறு உனக்குத்) தந்திடுவே னென்று சொல்லி, மாதவர்தம்மை கூவ-மிக்க தவமுள்ள முனிவர்களை (யாகத்தின்பொருட்டு) அழைக்க, சுற்றுறு முனிவர் யார்உம்-(கௌசிகனுள்ள இடத்துக்குச்) சுற்றுப்பக்கங்களிலுள்ள முனிவர்களெல்லோரும், தொக்கனர்-வந்துகூடினார்கள்; (அப்பொழுது), வசிட்டன் மைந்தர்-வசிட்டமுனிவனுடைய குமாரர்கள், 'அரசன் - க்ஷத்திரியஜாதியானொருத்தன், புலையற்கு - ஒரு சண்டாளனுக்காக, கனல் துறை - அக்கினியினிடத்திலே, வேள்வி - யாகத்தை, ஈவான் - செய்துதருதலை, கற்றி

லம் - (யாங்கள் எந்தநூலிலும்) படித்தோமில்லை',— (எ - று.)— 'என்றுரைத்து யாங்கள் ஒல்லோமென்றனர்' என மேற்கவியோடு முடியும்.

நகுதல், வசிட்டரை யிகழ்தல் காரணமாகப் பிறந்தது. இரு - இங்கே சிறிதுபொழுது தங்கியிரு என்றும் உரைக்கலாம். மற்றுலகு - இவ்வுலகத்திலும் மற்றையதாகிய லோகம்; பரலோகம். க்ஷத்திரியனுக்கு யாகஞ்செய்தலையொழியச் செய்விக்கும்உரிமை யில்லையென்னும் நூற்கொள்கைக்கு மாறாக விசுவாமித்திரன் யாகஞ்செய்விக்குமாறு புரோகிதனாதலும் யாகஞ்செய்கின்ற யஜமானன் சண்டாளனாதலும் என்றும் நிகழாத செயலாதலால், வசிட்டகுமாரர்கள் கௌசிகன் அழைத்ததற்கு இணங்கவில்லையென்க. ஈவான் - தருதற்குரிய விதியை யென்க. இற்றிதோ - இற்றே: ஒருசொல்; "இற்றிதுவோ விவர்சேவகம்" என்பர் பின்னும். பி - ம்:— [1]இற்றதோ. ()

**கக௪.—வசிட்டகுமாரர்களைச் சபித்துவிட்டுக் கௌசிகன் வேள்வி தொடங்குதல்.**

**என்றுரைத் தியாங்க ளொல்லோ மென்றன ரென்னப் பொங்கிப்**
**புன்றொழிற் கிராத ராகிப் போகெனப் புகறலோடு**
**மன்றவ ரெயின ராகி யடவிக டோறுஞ் சென்றார்**
**நின்றுவேள் வியையு முற்றி [1]நிராசனர் வருக வென்றான்.**

(இ - ள்.) என்று உரைத்து - என்று சொல்லி, யாங்கள் ஒல்லோம் என்றனர்-நாங்கள் (இந்தக்காரியத்துக்கு) உடன்பட்டுவரமாட்டோம்என்று சொன்னார்கள் (வசிட்டகுமாரர்கள்); என்ன - என்றுசொல்ல, (அதனைக் கேட்டறிந்து கௌசிகன்,) பொங்கி - கோபித்து, (அவர்களைக்குறித்து), புன் தொழில் கிராதர் ஆகி போக என - இழிவான தொழில்களையுடைய வேடர்களாய்விடக்கடவீர்க ளென்று, புகறலோடும்-(சாபவார்த்தை) கூறினவளவிலே, அன்று - அப்பொழுதே, அவர் - அந்த வசிட்டபுத்திரர்கள், எயினர் ஆகி - (அவ்வாறே) வேடர்களாய், அடவிகள் தோறும் சென்றார்- காடுகள்தோறும் போய்விட்டார்கள்; நின்று - (விசுவாமித்திரனே தொடங்கினகாரியத்திற் சிறிதுஞ் சலியாமல்)நிலைநின்று, வேள்வியைஉம் முற்றி - யாகத்தையும் முடிக்கத்தொடங்கி, நிராசனர் வருக என்றான் - (ஆகுதி பெற்று உண்ணுதற்பொருட்டுத்) தேவர்களே! (நீவிர்) வருவீராவீர்என்று (அவர்களை) அழைத்திட்டான்; (எ - று.)

விசுவாமித்திரனுடைய சிஷ்யர்கள் பலவிடங்கட்குஞ்சென்று வேள்விக்கு அந்தணர்களை யழைக்க,அந்தணர் யாவரும் வர,மஹோதயனென்றமுனிவனும் வசிட்டகுமாரர்நூற்றுவரும்'க்ஷத்திரியனொருவன் சண்டாளனுக்கு யாகஞ் செய்விக்கிறது மிகநன்று: இந்த வேள்வியில் எங்ஙனம் தேவர்கள் அவிர்ப்பாகம் பெறுவார்கள்? சண்டாளன் அன்னத்தை எங்ஙனம் புசிப்பார்கள்?' என்றுநற்போலச் சொல்லி வரமாட்டோமென்ன, அதனை அச்சீடர்கள் கௌசிகனிடஞ் சொல்ல, பெருஞ்சினங்கொண்ட கௌசிகன் 'மஹாநுபாவர்களின் தேஜோவிசேஷத்தினால் எத்தொழிற்கும் எவ்வகைத் தீங்கும் உண்டாகாதென்ற நியாயத்தை மறந்து என்னை யிகழ்ந்ததனால், வசிஷ்டகுமாரர்கள் முஷ்டிகரென்னும் ஈனசாதியினராகி உலகத்தில் வெகு

காலம் உழலுக' என்றும், மஹோதயன் 'வேடனாகி யுழலுக' என்றும் சொல்லி, தான் அத்வர்யுவாக நின்று யாகஞ்செய்யத்தொடங்கி அவிசுபெறு மாறு தேவர்களைக் கூவின னென்றுமுதனூலாலறிக. நிராசனர்-நிராசநரென் பதன் விகாரம்; உணவைவேண்டாதவரென்றுபொருள். இது-இங்கேஅண் மைவிளி; முன்னிலையிற்படர்க்கைவந்தஇடவழுவமைதியாகவுங்கொள்ள லாம். அடவி, கிராதர் - வடசொற்கள். பி - ம்:— [1] நித்தரை. (௧௧௪)

**௧௧௫.—கௌசிகன் தன்தவமகிமையால் திரிசங்குவை வானத்துஏற்றுதல்.**

[1] அரசனிப் புலையற் [2] கென்னே யனற்றுறை [3] முற்றி யெம்மை
விரசுக வல்லை யென்பான் விழுமிதென் றிகழ்ந்து நக்கார்
புரசைமாக் [4] களிற்று வேந்தைப் போகநீ துறக்கம் யானே
யுரைசெய்தேன் றவத்தி னென்ன வோங்கினன் விமானத் தும்பர்.

(இ - ள்.) (அவ்வாறு அழைக்கப்பட்ட தேவர்கள்), 'அரசன் - இவ்வர சன், இ புலையற்கு-இந்தச்சண்டாளன் பொருட்டாக, அனல் துறை முற்றி- அக்கினியிற்செய்யப்படும் யாககாரியத்தை நிறைவேற்றத் தொடங்கி, எம்மை - நம்மை, வல்லை விரசுக என்பான் - விரைவில் வருவீராக என்று அழைப்பவனானான்: என்னே - (இது) என்னவிபரீதம்? விழுமிது - (இச் செயல்) சிறப்புடையது,' என்று - என்று கூறி, இகழ்ந்து - நிந்தித்து, நக் கார் -பரிகசித்துச் சிரித்தார்கள்; (ஆயினும் கௌசிகனோ விடாமல்), புரசை மா களிறு வேந்தை - கழுத்திடுகயிற்றையுடைய பெரிய யானைச்சேனையை யுடைய அத்திரிசங்குராசனைநோக்கி, 'நீ துறக்கம் போக - நீ சுவர்க்கத் துக்குச் சென்றுசேர்ந்திடுவாயாக; யான் ஏ தவத்தின் உரை செய்தேன் - (பிறரொருவருடைய அனுமதியை வேண்டாமல்) நானே (எனது) தவத்தி னாற் கட்டளைகூறினேன்', என்ன - என்றுசொல்ல, (அவ்வாறே திரிசங்கு), விமானத்து உம்பர் ஓங்கினன் - (கௌசிகனது தவவலிமையால் வந்து கிடைத்ததொரு) விமானத்தின்மேலேறி உயரச்சென்றான்; (எ - று.)

மந்திரங்களைச்சொல்லி வெகுநேரமாக அழைத்தும் அவிர்ப்பாகத்தைப் பெறுமாறு தேவர்கள் வாராமையால், கௌசிகன் பெருஞ்சினங்கொண்டு ஓமஞ்செய்யும் அகப்பையை யுயரவெடுத்து 'யாகம் இருக்கட்டும்: என்தவத் தின்பயனால் இச்சரீரத்துடனே சுவர்க்கஞ் செல்லுக' என்ன, முனிவர்யாவ ரும் பார்த்துக்கொண்டிருக்கையில் திரிசங்கு சுவர்க்கஞ் சேர்ந்தன னென்க. விழுமிது - இகழ்ச்சிக்குறிப்பு; எதிர்மறையிலக்கணை. களிறு - தேர்குதிரை காலாள்களுக்கு உபலக்ஷணம்: இனி, களிற்றுவேந்து - யானையையொத்த அரசனுமாம். விமானம்-தேவர்வாகனம். பி - ம்:— [1] அரசனும். [2] இன்னே. [3] முற்றவெம்மை. [4] களிற்றின். (௧௧௫)

**௧௧௬.—தேவர்கள் திரிசங்குவைத் தள்ளிவிட, வானத்தினின்று கீழ்விழுகின்றஅவனை நிறுத்துமாறு கௌசிகன் செய்தல்.**

ஆங்கவன் றுறக்க மெய்த வமரர்கள் வெகுண்டு நீச
னீங்குவந் [1] திடுவ தென்னே யிருநிலத் திழிக வென்னத்

[2] தாங்கலில் [3] கவிழ்வான் மற்றுத் தாபத சரண மென்ன
வோங்கின னின்னில் லென்ன வுரைத்துரு மொக்க நக்கான்.

(இ - ள்.) ஆங்கு - அவ்வாறு, அவன் - அவ்வரசன், துறக்கம் எய்த - சுவர்க்கலோகத்தை யடைய, (அதுகண்டு), அமரர்கள் - தேவர்கள், வெகுண்டு - கோபித்து, 'நீசன் ஈங்கு வந்திடுவது என்ஐ - சண்டாளன் இவ்விடத்தே (அவ்வுடம்போடு) வந்து சேர்வது என்ன அநீதி? இரு நிலத்து இழிக - பெரிய பூலோகத்தில்தானே இறங்கிச்சேர்ந்திடுவானாக', என்ன - என்று கூறித் தள்ள,-தாங்கல் இல் கவிழ்வான்-(தன்னைத்)தாங்குவதொரு ஆதாரமில்லாமல் தலைகவிழவிழுபவனாகிய அந்தத்திரிசங்கு, (கௌசிகனை நோக்கி), தாபத சரணம் என்ன - முனிவனே! (நீயே எனக்குப்) புகலிடமென்று கூறி (அங்கிருந்து) கூவ, (அதுகேட்ட கௌசிகன்), நில் நில் என்ன -(அவ்விடத்தே) நிற்பாயாக நிற்பாயாக என்று, ஓங்கினன் உரைத்து- உரக்கச்சொல்லி, உரும் ஒக்க நக்கான் - இடிமுழக்கத்தையொக்கும்படி சிரித்திட்டான்; (எ - று.)

தேவேந்திரன் தேவர்களோடு கூடி 'குருசாபத்தினால் நீசனாகிய நீ இங்கு இருக்கத்தக்கவனல்லன்; தலைகீழாக விழுந்திடுக' என்ன, திரிசங்கு விழுகையில் கதறினனாக, அதுகேட்ட கௌசிகன் 'அங்குத்தானே நில்' என்று சொல்லித் தவமகிமையால் அவனை வானத்திலே தான்கண்ட இடத்தில்தானே நிறுத்தினனென்க. சிரித்தது, தேவர்களின்மீது உண்டான வெகுளியினாலாகியது. தாபத-தாபஸ என்பதன் திரிபு; தவஞ்செய்பவனே! என்றுபொருள். சரணம் - வடசொல்; காத்திடுபவனென்றுபொருள். தாங்கலில் - பூமியில்என்றும், ஓங்கினன்-தான் எழுந்து என்றும் உரைப்பர்.
பி - ம்:—[1] அடைவது. [2] தாங்குதலின்றி. [3] வீழ்வான். (ககசு)

**கக௭.—தேவர்கள்மீது சினத்தினால் கௌசிகன் பிரதிசிருட்டி செய்யத் தொடங்குதல்.**

பேணலா திகழ்ந்த விண்ணோர் பெரும்பத முதலா மற்றைச்
சேண்முழு தமைப்ப லென்னாச் செழுங்கதிர் கோணா டிங்கண்
மாணொளி கெடாது தெற்கு [1] வடக்கவாய் வருக வென்று
தாணுவோ டேர்வ [2] வெல்லாஞ் சமைக்குவெ னென்னும் வேலை,

(இ - ள்.) (அங்ஙனங் கோபித்த விசுவாமித்திரன்), 'பேணலாது - (எனதுவார்த்தையை) மதிக்காமல், இகழ்ந்த-(என்னையுந் திரிசங்குவையும்) அவமதித்த, விண்ணோர் - இந்திராதி தேவர்களது, பெரு பதம் முதல் ஆ - பெரிய பதவி முதலாக, மற்றை சேண் முழுது - மற்றை விண்ணுலக முழுவதையும், அமைப்பல் - வேறுபடைப்பேன்', என்னா-என்றுசொல்லி, 'செழு கதிர் - (என்னாற் படைக்கப்பட்டு என்னுடைய ஆஜ்ஞைக்கு உட்படும்) செழுமையான கிரணங்களையுடைய சூரியனும், திங்கள்-சந்திரனும், கோள்- மற்றைக்கிரகங்களும், நாள் - நட்சத்திரங்களும், மாண் ஒளி கெடாது-மாட்சிமைப்பட்ட ஒளி அழியாமல் [எப்பொழுதும் மிக்கஒளியோடு கூடியே], தெற்கு வடக்க ஆய் வருக-தெற்குத்திக்கில்உதயமும்வடக்குத்திக்கில்அஸ்த

மனமும் உடையவையாகிச் சஞ்சரித்துவரக்கடவன', என்று-என்று கட்டளையுமிட்டு, 'தாணுவோடு - நிலையியற்பொருள்களுடனே, ஊர்வ - இயங்கியற் பொருள்களும், எல்லாம்-ஆகிய எல்லாவற்றையும், சமைக்குவென்-(இப்பொழுதே) படைத்திடுவேன்', என்னும் வேலை - என்று தொடங்கும் பொழுது,—(எ - று.)—'நறைத்தருவுடைய கோனும்...மற்றைக்கடவுளர் பிறருந் தொக்கு' என மேற்கவியோடு குளமாகச் செல்லும்.

தாணு - ஸ்தாணு என்னும் வடசொற் றிரிபு; அசையாதன என்றுபொருள். இங்கே 'கோள்' என்றது-நவக்கிரகங்களுட்சிறந்த இருசுடர்களாகிய சூரிய சந்திர ரொழிந்த அங்காரகன், புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு, கேது என்னும் எழுவரை. நாள் என்றது - தினத்தைத் தெரிவிக்கிற அசுவினிமுதலிய ஒளிகளுக்கு ஆகுபெயர். காலபேதத்தாலும் ஸ்தானபேதத்தாலும் இப்பொழுதுள்ள கிரகம்முதலியவற்றிற்கு நேரிடுகிற ஒளிக்குறைவு தமது படைப்பிற்குஉட்பட்டவற்றிற்கு ஒருகாலுங் கூடாதென்பார், 'மாணொளிகெடாது' என்றார். பி - ம்:— [1]வடக்கதாய். [2]யாவும். (௧௧௭)

௧௧௮.—அப்போது தேவர்கள்திரண்டுவந்து கௌசிகனைச் சாந்தப்படுத்துதல்.

நறைத்தரு வுடைய கோனு நான்முகக் கடவு டானுங்
கறைத்தரு களனு மற்றைக் கடவுளர் பிறருந் தொக்குப்
பொறுத்தருண் முனிவ நின்னைப் புகல்புகுந் தவனைப் [1]போற்று
மறத்திற னன்று தாரா கணத்தொடு மமைக வென்னுன்.

(இ - ள்.) நறை தரு உடைய கோன்உம் - தேனினையுடைய கற்பகச் சோலையை இடமாகவுடைய தேவராசனான இந்திரனும், நான்முகக்கடவுள் தான்உம் - நான்குமுகங்களையுடைய பிரமதேவனும், கறை தரு களன்உம்- விஷக்கறுப்புப் பொருந்திய ஸ்ரீகண்டத்தையுடைய உருத்திரமூர்த்தியும், மற்றை கடவுளர் பிறர்உம் - மற்றைச்சாதாரணதேவர்களோடு ஏனைமுனிவர் முதலியோரும், தொக்கு-ஒருங்குகூடி, (கௌசிகனைநோக்கி), 'முனிவ-ராஜரிஷியே! பொறுத்தருள்-(தேவர்கள் உன்னை அவமதிப்புச்செய்ததைப்) பொறுத்தருளுவாயாக; நின்னை புகல் புகுந்தவனை போற்றும் அறம் திறன் நன்று - உன்னைச் சரணமடைந்தவனைக் கைவிடாது காப்பாற்றியருளுகிற தருமமார்க்கத்தின் கூறுபாடு மிக நன்றாயிருந்தது; அன்னான் தாரா கணத்தொடுஉம் அமைக-அந்தத்திரிசங்குமகாராசன் நக்ஷத்திரங்களின் தொகுதியுடனே பொருந்தியிருக்கக்கடவன்; (எ - று.)—'என்னா' என மேற்கவியோடு குளகமா யியையும்.

புகல் - சரணமடையுமிடம்; தொழிலாகுபெயர். யாவரினுஞ்சிறந்த தேவாதிதேவ னாதலால், திருமால் ஈண்டு வரவில்லை. பி-ம்:— [1]காத்த. ()

௧௧௯.—கடவுளர் சாந்தப்படுத்திச் சென்றபின் கௌசிகன் மேற்றிசையையடைந்து தவம்புரிதல்.

அரசமா தவனீ யாதி யைந்துநா டென்பால் வந்துன்
புரைவிளக் கிடுக வென்னக் கடவுளர் போய பின்னர்

[1]நிரைதவன் விரைவி [2]னேகி நெடுங்கடற் [3]கிறைவன் வைகு
[4]முரவிட மதனை நண்ணி யுறுதவ முஞற்றுங் காலை.

(இ - ள்.) அரசன் மா தவன் நீ ஆதி - நீ சிறந்த ராஜரிஷியாவாய்; ஐந்து நாள் தென்பால் வந்து உன் புரை விளக்கிடுக - (வடக்கேயுள்ள இருபத்தேழு நக்ஷத்திரங்களுள்) ஐந்து நக்ஷத்திரங்கள் தெற்குத்திக்கில் வந்திருந்து உனது பெருமையைத் தெரிவிக்கக்கடவன,' என்னு - என்றுசொல்லி, (கௌசிகனைச் சமாதானப்படுத்திவிட்டு), கடவுளர் போய பின்னர் - (இந்திரன்முதலிய) தேவர்கள் புறப்பட்டுப்போனபின்பு, நிரை தவன் - ஒழுங்காகிய தவத்தையுடைய கௌசிகன், விரைவின் ஏகி - துரிதமாகச் சென்று, நெடு கடற்கு இறைவன் வைகும் உரவு இடமதனை நண்ணி - பெரிய கடலுக்குத் தலைவனாகிய வருணன் (திக்குப்பாலகனாகத்) தங்கப்பெற்ற வலிய மேற்குத்திசையினிடத்தை அடைந்து, உறு தவம் உஞற்றும் காலை - மிக்க தவத்தைச் செய்யும்பொழுது,—(எ - று.)—'செவ்விய குரிசில்தானும்...பாதமது உச்சி சேர்த்தான்'என்மேல் கஉ௩-ஆம் கவியில் குளகமாகத்தொடரும்.

திரிசங்குவைக்கீழ்வீழ்த்தியதை நிறுத்திய கௌசிகன் பெருஞ்சினத்துடனே திரிசங்கு இருக்குமிடத்தில் வேறொருசுவர்க்கத்தைப் படைக்க முயன்று தென்திசையில் வேறாகச் சப்தரிஷிகளைப்படைத்து பின்வேறொரு இந்திரனைப்படைப்பதினும் திரிசங்குவே அதற்குஇந்திரனாகலாமென்று தீர்மானித்து இந்திரனுக்குப் பரிவாரமாகத்தக்க தேவர்களைப் படைக்கமுயல, அதுகண்ட தேவர்கள் முதலியோர் அம்முனிவனிடம்வந்து இன்சொல்லினாற் சினந்தணிவித்து 'குருசாபத்தினாற் கேடடைந்த இவன் இந்தவுடலுடனே துறக்கஞ்சேரத் தக்கவனல்லனே' என்ன, கௌசிகன் 'இவ்வுடம்புடன் துறக்கமேற்றுவதாக வாக்களித்துவிட்டதனால் இவ்விடத்தையே இச்சரீரத்தோடு துறக்கமாகக்கொண்டு சாசுவதமாக இருக்குமாறும் நான் படைத்த நட்சத்திரங்கள் யாவும் சாசுவதமாக இருக்குமாறும் அருள்புரிக' என்ன, அவர்களும் இசைந்தனரென்று முதனூலிற் கூறியவிவரம் காணத்தக்கது. ஐந்துநக்ஷத்திரங்கள் - அநுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம் என்பன; படைப்புக்காலந்தொடங்கி வடதிசையிலிருந்த இவை விசுவாமித்திரனுக்காகத் தென்திசையில் வந்தன வென்பர். பி-ம்:— [1]நிறைதவன். [2]எய்தி. [3]அரசன். [4]உறைவிடம். (கககூ)

கஉ௦.—அப்போது அம்பரீடன் நரமேதத்திற்கு ஆள்தேடிக் காடுசெல்லுதல்.

குதை [1]வரி சிலைவாட் டானைக் கோமக னம்ப ரீடன்
சுதைதரு மொழியன் வையத் துயிர்க்குயி ராய தோன்றல்
வதைபுரி புருட மேதம் வகுப்பவோர் மைந்தற் கொள்வான்
[2]சிதைவிலன் [3]கனகந் தேர்கொண் டடவிக டுருவிச் சென்றான்.

(இ - ள்.) குதை - குதையையுடைய, வரி - கட்டமைந்த, சிலை - விற்களையும், வாள் - வாட்களையுமுடைய, தானை - சேனையையுடைய, கோமகன்-

இராசகுமாரனும், சுதை தரு மொழியன் - தேவாமிருதத்தை யொத்த இன்சொற்களையுடையவனும், வையத்து உயிர்க்கு உயிர் ஆய தோன்றல் - உலகத்திலேயுள்ள பிராணிவர்க்கங்களுக்கெல்லாம் உயிரையொத்த [அன்பில் மிகுந்த] பெருமையிற் சிறந்தவனுமாகிய, அம்பரீடன் - அம்பரீஷனென்பவன், வதை புரி புருடமேதம் வகுப்ப - (ஒருமனிதனைக்) கொன்று ஓமஞ் செய்வதாகிய புருஷமேதத்தைச் செய்வதற்காக, ஓர் மைந்தன் கொள்வான்- ஒரு சிறுவனை வாங்கும்பொருட்டு, சிதைவு இலன் - (செய்யவேண்டும் முயற்சியிற்) குறைவற்றவனாய், கனகம் தேர்கொண்டு - (மிகுந்த) பொன்னைத் தேர்மேல் (நிறைத்துவைத்துக்) கொண்டு, அடவிகள் துருவி சென்றான் - காடுகள்தோறுந் தேடிப்போனான்; (எ - று.)

யாகஞ்செய்துவரும்பொழுது அவ்வியாகபசு காணப்படாமற்போய் விடுமாயின் அதற்கீடாக ஒருமனிதனைக்கொன்று ஓமஞ்செய்து வேள்வியை நிறைவேற்றவேண்டுமென்பது நூற்றுணிபாதலின், இந்திரனால் யாகபசு கவரப்பட்ட அயோத்திமன்னவனாகிய அம்பரீஷன் தனது உபாத்தியாயர் மொழிப்படியே அங்ஙனஞ் செய்யலுற்றானென்க. வரி - நீட்சியுமாம். வையத்துயிர்க்கு உயிராயதோன்றலா யிருப்பினும் வைதிககாரியத்தில் ஊற்றமுடையவனாதலால், அதனைமுடிக்கும்பொருட்டு ஆள் தேடுபவனானான்: யாகத்திற் செய்யப்படும் இமிசை இமிசையன்றென்பது, நூல்துணிபு. பி - ம்:— [1]ரு. [2]சிதைவில. [3]கனகத்தேர்கொண்டு. (கஉ0)

கஉக.—அம்பரீடன் ரிசீகமுனிவனையணுக, தன்னைப்போற்றுவாரில்லாத அவனது நடுக்குமாரன் கூறத்தொடங்குதல்.

நற்றவ ரிசிகன் வைகு நனை வரும் பழுவ நண்ணிக்
கொற்றவன் வினவ லோடு மிசைந்தனர் குமரர் தம்முட்
பெற்றவ ளிளவ லெற்கே யென்றனள் பிதாமுன் னென்றான்
மற்றைய மைந்த னக்கு மன்னவன் றன்னை நோக்கி.

(இ - ள்.) கொற்றவன் - (அங்ஙனஞ்சென்ற) வெற்றியையுடைய அம்பரீஷமகாராசன், நல் தவம் ரிசிகன் வைகும் நனை வரும் பழுவம் நண்ணி - சிறந்த தவவொழுக்கத்தையுடைய ரிசீகனென்னும் முனிவன் வசிக்கின்ற பூவரும்புகள்மலர்தற்கிடமான சோலையை அடைந்து, வினவலோடும் - (தான் வந்த செய்தியைச்சொல்லி அவனுடையபிள்ளையை விலைக்குக்) கேட்டவளவில், இசைந்தனர் குமரர்தம்முள் இளவல் எற்கே என்றனள் பெற்றவள்-பொருந்தின (தமது)புத்திரர்மூவருள் இளையவன் எனக்கேயுரியவன் [அவனை விற்கமுடியாது] என்றுசொன்னாள் தாயாகிய ரிசீகர்மனைவி; பிதா முன் என்றான் -தந்தையாகிய ரிசீகன் மூத்தவன் (எனக்கேயுரியவன்) என்று சொன்னான்: மற்றைய மைந்தன்-எஞ்சிநின்ற நடுக்குமாரனாகிய சுனச்சேபனென்பன், நக்கு - (தாய்தந்தையரிருவரும் பெற்றுவளர்த்த தன்னை விலைப்படுத்தச் சித்தராயிருத்தலை நோக்கிச்) சிரித்து, மன்னவன் தன்னை நோக்கி - (தான்)அம்பரீடராசனைப்பார்த்து,—(எ - று)—'என்று தொழுது தேரினேறிப் படர்தலோடும், என அடுத்த கவியோடு குளகமாக இயையும்.

உபாத்தியாயர் மொழிகேட்டு அனேகவாயிரம்பசுக்களைக் கொடுத்து நரபசுவைக்கொள்ளுமாறு தேடிச்சென்ற அம்பரீடன் பலஇடங்களிலுந் தேடிக்கொண்டு ரிசீகனென்னும் முனிவன் மனைவியோடு இனிது தங்கும் பிருகுதுங்கமென்றமலையையடைந்து,அவ்விரிசீகனைக்கண்டமாத்திரத்திற் பெருமகிழ்வடைந்து தன்கருத்தைத் தெரிவிக்க, ரிசீகன் தன்மூத்தகுமாரனைக் கொடுக்க இசையாதிருக்க, ரிசீகன் மனைவி ஈற்றுப்புதல்வனாகிய சுனகனைத் தர இசையாதவளாக, நடுப்பிள்ளையாகிய சுனச்சேபன் 'முதல்வனைத் தந்தையும் ஈற்றவனைத் தாயும் விலைக்குத்தாரேனென்று சொன்னதனால், என்னை நீ விலைக்குப்பெற்றுக் கொள்ளலாம்' என்ன, அரசன் நூறாயிரம்பசுக்களைக்கொடுத்து அந்தச்சுனச்சேபனை வாங்கிக்கொண்டு அயோத்திநகரம் நோக்கிச் செல்லலாயின னென்ற விவரத்தைக் காண்க. இச்செய்யுளால், மூத்தமைந்தனிடத்துத் தந்தையும் இளையமைந்தனிடத்துத் தாயும் அன்புகொள்ளுதல் உலகவியற்கை யென்பதும், புத்திரரை விற்பதற்குங்கூட உரிமையுண்டு பெற்றோர்களுக் கென்பதும், "தம்பொருளென்ப தம்மக்கள்," "மக்கட் பேற்றிற் பெரும்பே றில்லை" என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற புத்திரபாக்கியத்தையும் விற்கத் துணியச்செய்யும் பொருளாசை யென்பதும் விளங்குகின்றன. நனை வரும் பழுவம் - (சுற்றிலுமுள்ள மரங்களின் பூக்களினின்று துளிக்கிற தேனினால் எப்பொழுதும்) நனைந்திருக்கிற ஆச்சிரமவன மென்றுங் கொள்ளலாம். முன்-முன்பிறந்த மகனுக்குக் காலவாகுபெயர். நக்கு - தந்தைதாயரது செல்வநசையைநோக்கிப் பரிகாசமாகச்சிரித்து. ரிசிகன் - கௌசிகைகொழுநன். (கஉக)

**கஉஉ.—அம்பரீடன் சுநச்சேபன் சொற்படி அவனை வாங்கிக்கொண்டு செல்கையில் உச்சிப் போதாதல்.**

**கொடுத்தருள் வெறுக்கை வேண்டிற் றொற்கமாம் விழுமங் குன்ற**
**வெடுத்தெனை வளர்த்த தாதைக் கென்றவற் றொழுது வேந்தன்**
**றடுப்பருந் தேரி [1]னேறித் [2]தடையிலாப் படர்த லோடுஞ்**
**சுடர்க்கதிர்க் கடவுள் வானத் துச்சியஞ் சூழல் புக்கான்.**

(இ - ள்.) 'எனை எடுத்து வளர்த்த தாதைக்கு-என்னை எடுத்துவளர்த்த தந்தையாகிய ரிசீகனுக்கு, ஒற்கம் ஆம் விழுமம் குன்ற - வறுமையாகிய துன்பங் கெடும்படி, வேண்டிற்று வெறுக்கை கொடுத்தருள் - (அவன்) விரும்புமளவினதாகிய பெருஞ்செல்வத்தை (எனக்குவிலையாகக்) கொடுத்தருள்வாயாக', என்று - என்று (அரசனைநோக்கிக்) கூறி, அவன் தொழுது - அந்தத்தந்தையை வணங்கி, வேந்தன் தடுப்பு அரு தேரின் ஏறி - அரசனது தடையில்லாத [எவராலுந்தடுத்தற்குமுடியாத] இரதத்தின்மேல் ஏறிக்கொண்டு, தடை இலா படர்தலோடும் - (தன்னால் ஒருசிறிது) தடையுமில்லாமல் (தான்அவ்வரசனுடனே) செல்லுகையில், சுடர் கதிர் கடவுள் வானத்து உச்சி அம் சூழல் புக்கான் - (மிகுந்த) ஒளியையுடைய கிரணங்களோடு கூடிய சூரியபகவான் ஆகாயத்தில் நடுவாகிய அழகிய இடத்தை அடைந்தான்; [சூரியன் உச்சிவானத்து வந்தான்]; (எ-று.)

ஒற்கம் - தளர்ச்சி; தொழிற்பெயர்: ஒல்கு - பகுதி; இது - பலவகைத் தளர்ச்சிக்குங்காரணமான தரித்திரத்தைக் காட்டிற்று: காரணம் காரியமாக உபசரிக்கப்பட்டது. 'எடுத்து என்னை வளர்த்த தாதைக்கு' என்றதனால், தன்னைவிற்றுத் தந்தைக்குச் செல்வமீவதைச் சுனச்சேபன் தந்தை தன்னை எடுத்துவளர்த்த உதவிக்குக் கைம்மாறாகக் கருதினானென்க. என்றவற்றெழுதுஎன்றவிடத்து, எனவவற்கீந்து என்றும் பாடம். பி - ம்:—[2]எற்றி. [3]தாண்டுமொத்தாண்டிச்செல்ல, கடவினன்கடவலோடும். (கஉஉ)

கஉங.—உச்சிக்கடனைச்செய்யச்செல்கையில் சுனச்சேபன் மாதுலனைக்கண்டு வணங்குதல்.

அவ்வயி னிழிந்து வேந்த னருங்கடன் முறையி னாற்றச்
செவ்விய குரிசி றானுஞ் சென்றன னியமஞ் செய்வா
னவ்விய மவித்த சிந்தை முனிவனை யாண்டுக் காணாக்
கவ்வையி னோடும் பாத கமலம துச்சி சேர்த்தான்.

(இ - ள்.) (அப்பொழுது), வேந்தன் - அம்பரீடன், அவ்வயின் - (கௌசிகன் தவஞ்செய்துகொண்டிருந்த) அந்த இடத்திலே, இழிந்து - (தேரினின்று) இறங்கி, அரு கடன் முறையின் ஆற்ற - (செய்தற்கு) அரிய மாத்தியான்னிகச்சடங்கைக் கிரமப்படி செய்யாநிற்க, செவ்விய குரிசில் தான்உம் - நற்குணநற்செய்கைகளையுடைய குமாரனான சுனச்சேபனும், நியமம் செய்வான் - (நடுப்பகற்பொழுதிற் செய்வதற்குரிய) வைதிகநியமத்தைச் செய்யும்பொருட்டு, சென்றனன் - (அங்கு இறங்கிப்) போனான்; (போனவன்), ஆண்டு - அவ்விடத்திலே, அவ்வியம் அவித்த சிந்தை முனிவனை - பொறாமைமுதலிய துர்க்குணங்களை யொழித்த மனத்தையுடைய கௌசிகராஜரிஷியை, காணா-கண்டு, கவ்வையினோடுஉம் - துன்பத்துடனே, பாத கமலம்அது உச்சி சேர்த்தான் - (அவனுடைய) திருவடித்தாமரைமலர்களை (த் தனது) தலைமேற்சூடினான் [சாஷ்டாங்கமாகத் திருவடிகளில் விழுந்து தண்டனிட்டான்]; (எ - று.)

நியமம் - (அறநூல்களிற் செய்யவேண்டுவதென்று) நியமிக்கப்பட்ட தொழில். கமலமது-சாதியொருமை: அது-பகுதிப்பொருள் விகுதி. கவ்வை-இங்கே, மரணபயம். (கஉங)

கஉச—சுனச்சேபனென்பவன் தன்துறையைக்கௌசிகனிடந்தெரிவித்தல்.

விறப்பொடு வணக்கஞ் செய்த விடலையை யினிது நோக்கிச்
சிறப்புடை முனிவ னென்னே தெருமரல் செப்பு கென்ன
வறப்பொரு [1]ளுணர்ந்தோ யென்ற [2]னன்னை நும் முன்னை யென்னை
யுறப்பொருள் கொண்டு வேந்தற் [3]குதவின [4]ரென்று னுற்றேன்.

(இ - ள்.) விறப்பொடு வணக்கம் செய்த விடலையை-மரணபயத்துடனே (தன்னை) வணங்குதல்செய்த அந்தக்குமாரனை, சிறப்பு உடை முனிவன் - சிறந்த குணங்களையுடைய கௌசிக முனிவன், இனிது நோக்கி - இனிமை

யாகப்பார்த்து, 'தெருமரல் என்னே - (நீ இங்ஙனங்) கலங்குதல் யாதுகாரணத்தால்? செப்புக-சொல்வாயாக', என்ன - என்று சொல்ல,—உற்றோன்-(அவனைச் சரணமாக) வந்தடைந்த சுனச்சேபன், 'அறம் பொருள் உணர்ந்தோய் - தருமசாஸ்திரங்களின் அருத்தத்தை அறிந்தவனே! நும் முன்னை - உமது முன்பிறந்தவளாகிய, என்தன் அன்னை - என்னுடைய தாயும், என் ஐ - எனது தந்தையும், உற பொருள் கொண்டு-மிகுதியாகச் செல்வத்தைப் பெற்றுக்கொண்டு, வேந்தற்கு - இந்த அம்பரீஷராஜனுக்கு, உதவினர் - (புருஷமேதத்தின்பொருட்டு என்னை) விலைக்குக் கொடுத்துவிட்டார்கள்', என்றான் - என்று (நடந்த செய்தியைச்) சொன்னான்; (எ - று.)

[3]உதவினனென்ற பாடத்திற்கு, என்னை என்பதை ஒருசொல்லாகக் கொண்டு செயப்படுபொருளாக்குக. 'சிறப்பு' என்றது - எல்லா நற்குணங்களுள்ளுஞ் சிறந்ததாகிய தன்னைச்சரணமடைந்தவனைக்கைவிடாது காக்கும் உறுதியும் அதற்குஉரிய தவவொழுக்கமும்.முன்னை,ஐ-பெயர்விகுதி. அறம்-அறநூல்களுக்குக் காரியவாகுபெயர். பி - ம்:—[1]உணர்ந்தமேலோய். [2]அன்னையர் தானுமீன்றோன், அன்னையு மத்தன்றானும். [4]உவகைவேண்டி. ()

கஉரு.—கௌசிகன் சுநச்சேபனுக்கு அபயமளித்துத் தன் மக்களில் ஒருவன் அவனுக்குப் பதிலாகச் செல்கவெனல்.

**மைத்துன னோடு முன்னாள் வழங்கிய முறைமை கேளாத்**
**தத்துற லொழிநீ யானே தடுப்பெனின் னுயிரை யென்னாப்**
**புத்திரர் தம்மை நோக்கிப் போகவேந் தோடு மென்ன**
**வத்தகு முனிவன் கூற வவர்மறுத் தகறல் காணா.**

(இ - ள்.) முன்னாள்-(தனது) முன்பிறந்தவளும், மைத்துனனோடு-(அவளது கணவனாகித் தனது) மைத்துனனான ரிசீகனும், வழங்கிய-(இங்ஙனம் பிள்ளையை விலைக்குக்) கொடுத்துவிட்ட, முறைமை-செய்கையை, கேளா - கேட்டு, அ தகு முனிவன் - தகுதியையுடைய அக்கௌசிகமுனிவன், (சுனச்சேபனை நோக்கி) 'நீ தத்து உறல் ஒழி - நீ துன்பம்அடைதலை நீங்குவாயாக; யான் எ நின் உயிரை தடுப்பென் - நானே உனது உயிரைக் காப்பேன்', என்னா - என்று (அபயவார்த்தை) கூறி, புத்திரர் தம்மை நோக்கி - (தனது) குமாரர்களைப்பார்த்து,வேந்தோடுஉம்போக என்ன கூற-(உங்களில் ஒருவன்) இவ்வரசனுடனே (நரமேதத்தின்பொருட்டு இவனுக்குஈடாகப்) போகுக வென்று சொல்ல, அவர் மறுத்து அகறல் காணா - அம்மைந்தர்கள் எல்லோரும் (அக்கட்டளையை) மறுத்துவிட்டு நீங்குதலைக் கண்டு, —(எ - று.)—'கண்சிவந்தனன்' என மேற்கவியோடு குளகமா யியையும்.

தாய்தந்தையர்களாற் கைவிடப்பட்டுத் தன்னைச் சரணமாகவடைந்த மருமகனுக்கு அபயமளித்து, 'என் புத்திரரில் எவரேனும் இவனுக்குப் பதிலாகச் செல்லுக' என்ன, அதற்கு எவரும் உடன்படாதவராயினரென்க. தடுத்தல் - காத்தலென்றபொருளில் வந்தது. மைத்துனன்-இங்கே, உடன்பிறந்தவளது கணவன். புத்திரர்-முன் வசிட்டராலிறந்தவர்போக, மிருந்த

வணங்கிப் பட்டம்பெற்றவன் ஒருத்தனும், அதன்பின் தென்திசையிற் பட்டமகிஷியோடு தவஞ்செய்கையிற்பிறந்த ஹவிஷ்யந்தன் மதுஷ்யந்தன் த்ருடநேத்ரன் என்ற மூவருமாக நால்வருளரென்று முதனூலாலறிப்படும். (கஉ௫)

**கஉ௬.—மறுத்த தன்குமாரர்களைக் கௌசிகன் சபித்தல்.**

**எழுங்கதி ரவனு நாணச் ¹சிவந்தன னிருக ணெஞ்சம்**
**புழுங்கினன் வடவை தீய மயிர்ப்புறம் பொறியிற் றுள்ள**
**வழுங்கலில் சிந்தை யீர்நீ ரடவிக டோறுஞ் சென்றே**
**யொழுங்கறு புளிஞ ராகி யுறுதுய ருறுக வென்றான்.**

(இ - ள்.) எழும் கதிரவன்உம் நாண - உதித்துவிளங்குகிற சூரியனும் வெள்கும்படி, இரு கண் சிவந்தனன்-(தனது) இரண்டுகண்களுஞ் செந்நிறமடைந்து, நெஞ்சம் புழுங்கினன் - மனந்தவித்தவனாய், வடவை தீய மயிர் புறம் பொறியின் துள்ள-படபாமுகாக்கினியும் தீந்துபோம்படி (தனது) உடம்பின்மேலுள்ள உரோமத்துவாரங்கள் அனற்பொறிகளால் மிக, (இங்ஙனங் கௌசிகன் பெருங்கோபங்கொண்டு தன்புதல்வரைநோக்கி), 'அழுங்கல் இல் சிந்தையீர் - இரக்கமில்லாத மனமுடையவர்களே! நீர் - நீங்கள், அடவிகள்தோறுஉம் சென்று-காடுகளிலெல்லாம் போய், ஒழுங்கு அறு புளிஞர் ஆகி - நாகரிக மில்லாத வேடர்களாய், உறு துயர் உறுக - மிக்க துன்பத்தை அடைவீராக', என்றான் - என்றுசொல்லிச் சபித்தான்; (எ - று.)

'தந்தையின் வசனத்தை மீறிய நீங்கள் வசிட்டபுத்திரர்களைப்போல் முஷ்டிகஜாதியர்களாகி நாயின்மாமிசத்தையுண்டுகொண்டு ஆயிரமாண்டுகள் புவியில் உழல்வீராக' என்று சபித்ததாக முதனூலால்விளங்கும். எழுங் கதிரவன் - மிகுந்த கிரணமுடைய சூரியனென்றுங் கொள்ளலாம்; அவன்நாணுதற்குக் காரணம் - கௌசிகனதுகண்களின் செந்நிறம் அவனது மண்டலத்தின் செந்நிறத்தினும் மிக்கிருத்தலும், தனதுகோபதாபம் அவனது கிரணதாபத்தினும் அதிகப்படுதலும். மயிர்ப்புறம் பொறியின் துள்ள என்பதற்கு-புறமயிர்கள் தீப்பொறிபோற் பறக்க என்று கூறினாருமுளர். புளிஞர் - புளிந்தர் என்னும் வடமொழித்திரிபு. பி - ம்: — ¹சிவந்தனவிரு. (கஉ௬)

**கஉ௭.—பிறகு இரண்டு மந்திரங்களை அந்தச்சுநச்சேபனுக்குக் கௌசிக னுபதேசித்தல்.**

**மாமுனி வெகுளி தன்னான் மடிகலா மைந்தர் நால்வர்**
**தாமுறு சவர ராகச் சபித்தெதிர் சலித்த சிந்தை**
**யேமுற லொழிக வின்னே பெறுகென விரண்டு விஞ்சை**
**¹கோமரு கனுக்கு நல்கிப் பின்னருங் ²குறிக்க லுற்றான்.**

(இ - ள்.) மா முனி வெகுளிதன்னால் - சிறந்த வசிட்டமகாமுனிவனது கோபத்தால், மடிகலா - இறவாத, மைந்தர் நால்வர் தாம்-(தனது) புத்திரர் நாலுபேரும், உறு சவரர் ஆக-(இழிகுணம்) பொருந்திய வேடர்களாகும்படி, சபித்து - (விசுவாமித்திரன்) சாபங்கொடுத்துவிட்டு, (அதன்பின்பு), எதிர் -

(தனது) எதிரில் நின்ற, கோ மருகனுக்கு - சிறந்த (தனது) மருமகனாகிய சுனச்சேபனுக்கு, 'சலித்த சிந்தை எம் உறல் ஒழிக - கலங்கின (உனது) மனத்திலே துன்பப்படுதலை நீங்குவாயாக; இன்னே இரண்டு விஞ்சை பெறுக - இப்பொழுதே இரண்டு மந்திரங்களை (என்னிடம்) உபதேசம் பெறுவாயாக', என - என்றுகூறி, நல்கி - (இரண்டு மந்திரங்களைச் சொல்லிக்) கொடுத்து, பின்னர்உம் - மீண்டும், குறிக்கல் உற்றான் - கூறுபவனானான்; (எ - று.)—அது மேற்கவியிற் கூறுகிறார்.

சவரர் - சபரர் என்னும் வடமொழித் திரிபு. எமுறல்=எம்மமுறல். விஞ்சை=வித்யா. பி - ம்:—[1]கோமருமகற்கு. [2]குணிக்கல். (கஉஎ)

கஉஅ —செய்யவேண்டியதை உபதேசித்துச் சுநச்சேபனைக் கௌசிகன் விடைகொடுத்து அனுப்புதல்.

**அரசனோ டேகி யூபத் தணைக்குபிம் மறையை யாய்தி**
**விரசுவர் விண்ணு ளோரும் விரிஞ்சனும் விடைவ லோனு**
**முரைசெறி வேள்வி முற்று முனதுயிர்க் கீறுண் டாகா**
**பிரச மென்றாரோ யென்னப் பழிச்சொடும் பெயர்ந்து போனான்.**

(இ - ள்.) 'பிரசம் மெல் தாரோய் - தேனினையுடைய மென்மையான பூமாலையை யுடையவனே! அரசனொடு ஏகி - அம்பரீஷராஜனுடனே, சென்று, யூபத்து அணைக்குபு-யூபஸ்தம்பத்திற் கட்டும்போது, இ மறையை ஆய்தி - இந்த மந்திரங்களை எண்ணுவாயாக; (அவ்வாறு எண்ணினால்), விண்உளோர்உம்-தேவர்களும், விரிஞ்சன்உம் - பிரமனும், விடை வேலான் உம் - ரிஷபத்தை (வாகனமாகக்கொண்டு ஏறி நடத்துதலில்) வல்ல உருத்திரனும், விரசுவர் - (அவ்வியாகசாலைக்கண் தம் அவிர்ப்பாகத்தைப்பெற) வந்துசேர்வார்கள்; உரை செறி வேள்வி முற்றும் - புகழ்மிகுந்த யாகமும் பூர்த்தியாம்; உனது உயிர்க்கு ஈறு உண்டாகா(து) - உன்னுடைய பிராணனுக்கும் அபாயமுண்டாகமாட்டாது,' என்ன - என்று (தன் மருமகனை நோக்கிச்) சொல்ல, (அதுகேட்டு அவன்), பழிச்சொடுஉம் பெயர்ந்து போனான் - துதிசெய்தலுடனே (அவ்விடத்தைவிட்டு) நீங்கி (அரசனுடனே) சென்றான்; (எ - று.)

யூபம் - யாகபசுவைக் கட்டுந் தூண். இரண்டு மந்திரங்களுள் ஒன்று பலியை யுண்பவனாகிய தேவேந்திரனையும், மற்றொன்று யூபஸ்தம்பத்தின் தேவதையாகிய உபேந்திரனையும் துதிப்பன. விடை-வ்ருஷம்; வடசொல். உண்டாகா-உண்டாகாது: விகாரம். அரசன் முனிகுமாரனைச் சந்தனம் மாலை முதலியவற்றாற் செவ்வையாக அலங்கரித்து நரமேதத்துக்காக அழைத்துக்கொண்டுபோனானதலால், கௌசிகன் அவனை 'பிரசமென்றாரோய்' என விளித்தான். பழிச்சு-முதனிலைத்தொழிற்பெயர். விண்ணுளோரென்பதை உயர்வுப்பன்மையாகக்கொண்டு, மேற்கவியில் வருதற்கேற்பப் பரமபதத்திலிருப்பவனான திருமா லென்னலும் ஒன்று. (கஉஅ)

**௧௨௯.—சுநச்சேபனுயிர்க்குத் தீங்கில்லாமலே யாகம்முடிதலும், விசுவாமித்திரன் வடதிசை செல்லுதலும்.**

**மறைமுனி யுரைத்த வண்ண மகத்துறை மைந்த னுயச்**
**சிறையுறு கலுழ னன்னஞ் சேமுதற் பிறவு மூரு**
**மிறைவர்தொக் கமரர் சூழ விளவற னுயிரும் வேந்தன்**
**முறைதரு மகமுங் காத்தார் வடதிசை முனியுஞ் சென்றான்.**

(இ - ள்.) மறை முனி உரைத்த வண்ணம் - வேதங்களை யறிந்த கௌசிகமுனிவன் கூறியபடியே, மகம் துறை - யாகத்தினிடத்திலே, மைந்தன் - அந்தக்குமாரன், ஆய - (அம்மந்திரங்களைத்) தியானிக்க, (அப்பொழுது), சிறை உறு கலுழன் - இறகுவளம்பொருந்திய கருடனும், அன்னம் - ஹம்ஸமும், சே - ரிஷபமும், முதல் - முதலிய, பிறஉம்-மற்றை வாகனங்களையும், ஊரும் - ஏறிச்செலுத்துகிற, இறைவர் - (திருமால் பிரமன் உருத்திரன் முதலிய) தலைமைத் தேவர்கள், அமரர் சூழ - மற்றைத் தேவர்கள்(தம்மைச்) சுற்றிலும் வரும்படி, தொக்கு - (அவ்வேள்விச்சாலையில்) வந்துசேர்ந்து, இளவல்தன் உயிர்உம் - அக்குமாரனது பிராணனையும், முறை தரு வேந்தன் மகம் உம் - வைதிகவிதிப்படியே செய்யப்படுகிற அவ்வரசனது அந்தயாகத்தையும், காத்தார் - (அழியாதபடி) பாதுகாத்திட்டார்கள்; முனிஉம் வடதிசை சென்றான் - கௌசிகமுனிவனும் (மேற்குத்திக்கில் தனதுதவம் முடியாமையால்) வடக்குத்திக்கைநோக்கிப் போனான்.

கலுழன், அன்னம் - வடசொற் சிதைவுகள். 'பிறவும்' என்றது-இந்திரன் அக்கினி யமன் முதலியோர்க்கு ஊர்திகளாகிய வெள்ளையானை ஆட்டுக்கடா எருமைக்கடா முதலியவற்றை. மகம் - வடசொல். (௧௨௯)

௧௩௰.—வடக்கில் கௌசிகன் கடுந்தவம்புரிய, எல்லாவுலகுஞ்சலித்தல்.

**வடாதிசை முனியு நண்ணி மலர்க்கர நாசி வைத்தாங்**
**கிடாவு பிங்கலை யானைய விதயத்து டெழுத்தொன் றெண்ணி**
**விடாதுபற் பருவநிற்ப மூலமா முகடு விண்டு**
**தடாதிருட் படலை மூடச் சலித்ததெத் தலமுந் தாவி.**

(இ - ள்.) முனிஉம் - கௌசிகமுனிவனும், வடா திசை நண்ணி - வடக்குத்திக்கை அடைந்து, ஆங்கு - அவ்விடத்திலே, மலர் கரம் நாசி வைத்து-தாமரைமலர்போன்ற (தனது)கையின்விரல்களை மூக்கின்மேல் வைத்து, இடாவு பிங்கலையால் நைய - இடைகலையானது பிங்கலையோடு அடங்கும்படி, (பிராணாயாமஞ்செய்து), இதயத்தூடு எழுத்து ஒன்று எண்ணி-(தனது) மனத்திலே ஏகாட்சரமாகிய பிரணவமகாமந்திரத்தைத் தியானஞ்செய்துகொண்டு, பல் பருவம் விடாது நிற்ப-அநேகவருஷகாலம் (தவவொழுக்கத்தினின்று) நீங்காமல் நிலைநின்றிருக்க, (அப்பொழுது), மூலம் மா முகடு விண்டு - மூலாக்கினியினாலே (அவனது) பெரிய கபாலம் வெடித்துவிரிந்து, (அதனின்று), இருள் படலை-இருளின் கூட்டத்தையொத்த புகைத்திரள்,

தடாது - தடுக்கப்படாமல், தாவி - மேலெழுந்து, மூட - (எங்கும்) மறைக்கத்தொடங்கினதனால், எ தலம் உம் - எல்லாவுலகமும், சலித்தது - நடுங்கிற்று; (எ - று.)

வடதிசையென்பது வடாதிசையென எதுகை நோக்கி விகாரப்பட்டது. இந்திரியங்களையொடுக்கி இடைகலையால் வாயுவை யிரேசித்துப் பதினாறுமாத்திரை யளவு பூரித்து அறுபத்துநான்குமாத்திரையளவு கும்பித்த அவ்வாயுவைப் பிங்கலையால் அறுபதுமாத்திரையளவு இரேசித்துச் சுஷும்நையிற் செலுத்திப் பிராணாயாமஞ் செய்யுங்காலத்துச் சுவாசபந்தனத்தால் மூக்கின் துவாரங்கள் வருந்து மென்பார், 'இடாவுபிங்கலையால் நைய' என்றார். இடை பிங்கலை என்பன - தசநாடிகளிற் சேர்ந்தவை; இவை - கத்திரிகைக்கால்போல ஒன்றோடொன்று பின்னிநிற்கும் மூக்கின் நாடிகள். இடைகலை - இடமூக்கால்வருஞ் சுவாசம்; வடமூக்கால் வருஞ் சுவாசம்-பிங்கலை. மூச்சை வெளிவிடுதல் - இரேசகம். உள்வாங்குதல் - பூரகம்; கும்பகம்- பிராணவாயுவைச் சமப்படுத்தியடக்கல். இடாஎன்னும் வடசொல், உகரச்சாரியைபெற்று 'இடாவு' என நின்றது. பிங்கலா - ஆவீறு ஐயாயிற்று. முகடு-தலையோட்டின்உச்சி. படலம் - படலையெனத் திரிந்தது. 'பிங்கலையால்' என்பதில் ஆல் உருபு, ஒடுஎன்பதன் பொருளது; "தாங்குகையா லோங்குநடைய" என்பதிற்போல. மூலமாமுகடுவிண்டு - அண்டகோளத்தின் மேல்முகட்டையுங் கடந்து என்றுமாம். பி - ம்:—[1] தாநைய.

கஅக,—கஅஉ.— இரண்டு கவியும் - குளகம்; கோசிகனது தவக்கனலினிற் புகைவிம்முதலைத் தெரிவிக்கும்.

கஅக. எயிலெ ரித்தவன் யானையு ரித்தநாட்
பயிலு றுத்துரி [2]போர்த்தநன் பண்பெனப்
புயல்வி ரித்தெழுந் தாலெனப் பூதலங்
[3]குயிலு றுத்திக் கொழும்புகை விம்மவே.

கஅஉ. தமந்தி ரண்டுல கியாவையுந் தாவுற
நிமிர்ந்த வெங்கதிர்க் கற்றையு நீங்குறக்
[4]கமந்த மாதிரக் காவலர் கண்ணொடுஞ்
சுமந்த நாகமுங் கண்[5]சும் புளித்தவே.

(இ-ள்.) (கஅக)எயில் எரித்தவன்-திரிபுரத்தை யெரித்த சிவன், யானை உரித்த நாள்-யானையை யுரித்த காலத்தில், பயில் உறுத்து - (உடம்போடு) செறியச்செய்து, உரி போர்த்த-(அவ்யானையின்) தோலை மேலே போர்த்துக்கொண்ட, நல் பண்பு என - நல்ல தன்மை போலவும், புயல் - மேகங்கள், விரித்து எழுந்தால் என - எங்கும் பரவி யெழுந்தாற்போலவும், பூதலம் குயிலுறுத்தி - பூமியிடமுழுவதையும் நெருங்கச்செய்து, கொழு புகை - மிகுந்த (அந்தமூலாக்கினியின்) தூமமானது, விம்ம - மிகுதியாக,—(கஅஉ) தமம் - இருள், திரண்டு - மிகுதியாய் ஒருங்குகூடி, உலகு யாவை உம்-எல்லாவுலகங்

களிலும், தாவுற - சென்றுபரவ, (அதனால்), நிமிர்ந்த வெம் கதிர் கற்றை உம் நீங்குற - பரந்த வெவ்விய (சூரியனது) கிரணங்களின் தொகுதியும் மறைப்பட்டொழிய கமந்த மாதிரம் காவலர் கண்ணுடு உம் - (மேலுலகத்திலே) நிறைந்துள்ள திக்குப்பாலகர்களது கண்களுடனே, சுமந்த நாகம் கண் உம் - (கீழுலகத்திலேயிருந்து பூமியைத்) தாங்குகிற திக்கு யானைகளின் கண்களும், சும்புளித்த - கூசின; (எ - று.)

கநக.—யானை - தாருகவனத்து முனிவர் ஏவினதென்றாயினும், கஜாசுர னென்றாயினுங் கொள்க. உரி-செயப்படுபொருள்விகுதி புணர்ந்துகெட்டது: கெடாக்கால் உரிவையென நிற்கும். விரித்து - விரிந்து என்பதன் வலித்தல். குயிலுறுத்தல்-அடைத்தல், நிறைத்தல். எயில்என்னும் மதிலின் பெயர்-பட்டணத்துக்கு ஆகுபெயர். பி - ம்:—[1]போர்த்திடும், [2]குயில்வு.

கந உ.—கௌசிகனது கபாலத்தினின்று கிளர்ந்தெழுந்த புகைமிகுதியா லுண்டான இருளடர்த்தியால் மேலுலகத்திலுள்ள தேவர்களது இமையாக்கண்களும், கீழுலகத்திலுள்ள திக்கஜங்களது தறுகண்களும் கூசியமை கூறவே, நிலவுலகத்தாரதுகண்கள் கூசியமை தானே பெறப்படும். தமம்= தமஸ். கமந்த - கமஎன்னும் உரிச்சொ லடியாகப் பிறந்த இறந்தகாலப்பெயரெச்சம்: "கமநிறைந் தியலும்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தால், கம என்பது நிறைந்துண்மைப்பொருளதோர் உரிச்சொல்லா மென உணர்க. மாதிரக் காவலர் - (எட்டுத்) திக்குக்களையுங் காப்பவர்; கிழக்காதிமுறையேயுள்ளஇந்திரன், அக்கினி, யமன்,நிருருதி,வருணன்,வாயு,குபேரன்,ஈசானன் என இவர். நாகம் - மலையில் வாழ்வது: நகம்-மலை. பூமியின் கீழ் ஒவ்வொரு திக்கிலும் ஒவ்வொருயானை யிருந்து பூமியைத்தாங்கிநிற்கின்ற தென்பது, நூற்கொள்கை. [1]கமைந்தஎன்னும்பாடத்துக்கு - பொறுமையுள்ள வென்க. சுமந்த நாகம் - ஆதிசேஷனும் அஷ்டமகாநாகங்களுமாம். பி - ம்:— [1]கமந்து. [2]கண்சும்புளிக்கவே. (கநக, கநஉ)

கநந.—உலகத்து அப்போது தோன்றிய மாறுபாடு.

**திரிவ நிற்ப செகதலத் தியாவையும்**
**வெருவ லுற்றன வெங்கதிர் மீண்டன**
**கருவி யுற்ற ககனமெ லாம்புகை**
**யுருவி யுற்றிட வும்பர் துளங்கினர்.**

(இ - ள்.) கருவி - (உலகமும் உலகத்துயிர்களும் வாழ்வதற்குத்) துணைக்காரணமான மேகங்கள், உற்ற - நிறைந்துள்ள, ககனம் எலாம் - ஆகாயமுழுவதிலும், புகை - புகையானது, உருவி உற்றிட - (அங்ஙனஞ்) சென்று நிறைந்ததனால், செகம் தலத்து - உலகத்தினிடத்திலே, திரிவ - சஞ்சரிப்பனவாகிய பொருள்களும், நிற்ப - (சஞ்சரியாமல்) நிலைநிற்பனவாகிய தாவரப்பொருள்களும் யாவை உம் - (ஆகிய) எல்லாப்பொருள்களும், வெருவல் உற்றன - அஞ்சுதலை யடைந்தன; வெம் கதிர் - உஷ்ணமான சூரியகிரணங்களும், மீண்டன - (வெளியிற் சென்று விளங்கமாட்டாமல்)

திரும்பிவிட்டன; உம்பர் - தேவர்களும், துளங்கினர் - (அச்சத்தால்) நடுக்க முற்றார்கள்; (எ - று.)—கருவி - மின்னு முழக்கு இவற்றின் தொகுதி யெனினுமாம். (கஅ௩)

கஅ௪.—தேவர்கள் யாவரும் கோசிகனிடத்து வருதல்.

**புண்ட ரீகனும் புட்டிருப் பாகனுங்**
**குண்டை யூர்தி குலிசியு மற்றுள**
**வண்டர் தாமும்வந் தவ்வயி [2]னெய்திவே**
**றெண்ட போதனன் றன்னை யெதிர்ந்தனர்.**

(இ - ள்.) (பின்பு), புண்டரீகன்உம் - தாமரைமலரில்வாழ்கிற பிரமதேவனும், புள் திரு பாகன்உம் - கருடாழ்வானுக்குச் சிறந்த பாகனாகிய திருமாலும், குண்டை ஊர்திஉம் - இடபத்தை வாகனமாகவுடைய சிவனும், குலிசிஉம் - வச்சிராயுதமுடைய இந்திரனும், மற்று உள அண்டர் தாம்உம் - மற்றுமுள்ள தேவர்களும், வேறு வந்து அவ் வயின் எய்தி - தனித்தனி வந்து அவ்விடத்திற் சேர்ந்து, எண் தபோதனன்தன்னை - (யாவராலுஞ்) சிறப்பித்து எண்ணப்படுகிற தவத்தையே செல்வமாகவுடைய அக்கௌசிகமுனிவனை, எதிர்ந்தனர் - சந்தித்தார்கள்; (எ - று.)

புள் - ஈண்டு பறவைக்கரசாகிய கருடன். குண்டையூர்தி - பண்புத்தொகையன்மொழி. குலிசம் - வச்சிராயுதம். வேறு எண் என எடுத்து - (மற்றைமுனிவர்களினுஞ் சிறப்பாகத்) தனியேபிரித்து எண்ணப்படுகிற என்றும், தான்பிறந்த க்ஷத்திரியசாதியினின்றும் வேறாகிய பிராமணஜாதியனாகும்படி எண்ணுகிற என்றும் உரைக்கலாம். படைத்தல் காத்தல் அழித்தல் என்னுந் தொழில்களின் முறைமைப்படி பிரமவிஷ்ணுருத்திரர்களை வைத்தார். பி - ம்:—[1]புட்டரும். [2]எய்தியே. (கஅ௪)

கஅ௫.—வந்த தேவர்கள் கௌசிகனை நீ பிரமவிருடியானாய் எனல்.

**பாதி மாமதி சூடியும் பைந்துழாய்ச்**
**சோதி யோனுமத் [1]தூய்மல ராளியும்**
**வேத பாரகர் வேறிலர் [2]நீயலான்**
**மாத போதன வென்ன வழங்கினர்.**

(இ - ள்.) மா பாதி மதி சூடிஉம் - சிறந்த கலைகுறைந்த பிறைச்சந்திரனை முடியிலணிந்துள்ள சிவனும், பைந் துழாய் சோதியோன்உம் - பசுமையான திருத்துழாயை யணிந்த ஒளிவடிவமான திருமாலும், அ தூய் மலர் ஆளிஉம் - அத்திருமாலினது பரிசுத்தமான நாபித்தாமரைமலரைத் தங்குமிடமாகவுடைய பிரமனும், (என்னுந் திரிமூர்த்திகளும் அம்முனிவனை நோக்கி), 'மா தபோதன - சிறந்த தவத்தையே செல்வமாகவுடைய முனிவனே! வேதபாரகர் நீ அலால் வேறு இலர் - வேதங்களின்கரையைக் கண்டு உணர்ந்தவர் நீ யல்லாமல் (உலகத்தில்) வேறொருவரு மில்லை', என்ன வழங்கினர் - என்று (உபசாரவார்த்தை) கூறினார்கள்; (எ - று.)

இதனால், நீ பிரமவிருடியாவாய் என்றதை, தேவர்களுணர்த்தினர். விசுவாமித்திரன் தென்திசையில் ஆயிரமாண்டுகடுந்தவம்புரிந்து பிரமனால்ராஜரிஷியெனப்பேர்பெற்றும் பிராமணத்வம்பெறாமையால்மீளத்தவம்புரிய, அங்குத் திரிசங்குவைச் சுவர்க்கமேற்றிப் பிறகு மேற்கே புஷ்கரக்ஷேத்திரத்தில் தவம்புரிந்து அங்குச்சுநச் சேபனைப்பாதுகாத்துப் பின்னும் தவம்புரிகையில் மேனகையினிடத்துமோகங்கொண்டுதவநிலைகுலைய, அதனைவிட்டு வடக்கே கௌசிகிநதிக்கரையில் கடுந்தவம்புரிந்து பிரமதேவனால்மஹர்ஷியெனப்பட்டம்பெற்றும் ஐம்பொறிகளைவென்றவனென்றபெயரைப்பெறாமையாற் கடுந்தவம்புரிகையில் தேவர்களின்சூழ்ச்சியால் அரம்பைதவத்தைக்கெடுக்கவர முனிவன் அவளைப்பதினாயிரமாண்டுகல்லாகக்கிடக்குமாறு சபித்துவிட்டுக் கோபத்திற்குவசமாகிச்சபித்ததற்காகஇரங்கி, கீழ்த்திசையையடைந்து ஆயிரமாண்டு தவஞ்செய்து பின் பாரணைசெய்ய அன்னத்தைச்சித்தமாக்க அங்கு இந்திரன் அந்தணவடிவங்கொண்டுவந்துகேட்க அவனுக்குஅதைஅளித்திட்டுப் பிறகு பின்னுங்கடுந்தவம்புரிய, தேவர்கள் அவனதுதவக்கனலைப் பொறுக்கமுடியாமல் பிரமதேவனைப்பிரார்த்திக்க, அவன்தேவர்களோடு முனிவனையடைந்து பிரமரிஷியாவாயென்று கூற, விசுவாமித்திரன் வசிட்டனும் கூறவேண்டுமென்ன, தேவர்களின் வேண்டுகோளினால் வசிட்டனும் விசுவாமித்திரனைப் பிரமரிஷியாகமதித்து நண்புபூண்டனனென்பது, முதனூலால் விளங்கும். பி - ம்:—[1]தூமலர். [2]நின்னலால். (கருடு)

**கருசு.—தேவர்கள் தம்மிடஞ் சேர்தல்.**

**அன்ன வாசகங் கேட்டுணா ரந்தணன்**
**சென்னி தாழ்த்திரு [1]செங்கம லங்குவித்**
**துன்னு நல்வினை யுற்றதென் றோங்கினான்**
**றுன்னு தேவர்தஞ் சூழலுட் போயினார்.**

(இ - ள்.) அன்ன வாசகம் - (தேவர்களின்) அந்த வார்த்தையை, கேட்டு உணர்-செவியுற்றறிந்த, அந்தணன் - கௌசிகமுனிவன், சென்னி தாழ்த்து - தலைவணங்கி, இரு செம் கமலம் குவித்து - இரண்டு செந்தாமரைமலர்கள்போலுங் கைகளைக் கூப்பி, [வந்த தேவர்களைத் திருவடிகளில் விழுந்து தெண்டனிட்டு], 'உன்னும் நல்வினை-(யாவராலுங்) கருதப்படுகிற நல்ல புண்ணியத்தின் பயன், உற்றது-(இப்பொழுதே எனக்குவந்து) பொருந்திற்று', என்று-என்றுசொல்லி, ஓங்கினான்-பூரிப்புற்று நின்றான்; (பின்பு), துன்னு தேவர் - (அங்கு வந்து) பொருந்தின தேவர்கள், தம் சூழலுள்போயினார்- தத்தமிடத்திற்குச் சென்றார்கள்; (எ - று.)—பி - ம்:—[1]செங்கரமும்.

**கருஎ.—கௌசிகன்சரிதையைச் சதாநந்தன் முடித்திடல்.**

**ஈது முன்னர் நிகழ்ந்த திவன்றுணை**
**மாத வத்துயர் மாண்புடை யாரிலை**
**நீதி வித்தகன் றன்னரு [1]ணோர்ந்தனிர்**
**யாது மக்கரி தென்றன னீறிலான்.**

(இ - ள்.) 'முன்னர் நிகழ்ந்தது ஈது - முன்னே நடந்தவரலாறு இதுவாம்; இவன் துணை-இக்கௌசிகனுக்கு ஒப்பாக, மா தவத்து உயர் மாண்பு உடையார் - பெரியதவத்தினாற்சிறந்த மகிமையுடையவர், இலை - (வேறெவரும்) இல்லை; நீதி வித்தகன்தன் அருள் நேர்ந்தனிர் - நியமந்தவறாத மெய்யுணர்வுக்கு இருப்பிடமாகவுள்ள இம்முனிவனது கருணையை (நீங்கள்) பெற்றுள்ளீர்கள்; (ஆதலால்), உமக்கு அரிது யாது - உங்களுக்கு அருமையான

காரியம் யாதுள்ளது? [ஏதுவுமில்லை]', என்றனன் - என்று (ராமலக்ஷ்மணர்களை நோக்கிச்) சொல்லிமுடித்தான்: ஈறு இலான் - (நற்குணங்களுக்கு) ஒரு எல்லையில்லாத சதானந்த மகாமுனிவன்; (எ - று.)

சதானந்தனென்னும் பெயரின் பொருளை உட்கொண்டு, ஈறு இலான் - (ஆனந்தத்துக்கு) முடிவில்லாதவன் என்றும் உரைக்கலாம். பி - ம்:— [1] நேர்ந்தனையாதுளிற்கு. (கஙஎ)

**கஙஅ.—சதாநந்தன் குமாரர்களை வாழ்த்திவிட்டுப்போதல்.**

**என்று கோதமன் காதலன் கூறிட**
**வென்றி [1]வீரர் வியப்பொ[2]டு வந்தெழா**
**வொன்று மாதவன் றாடொழு தோங்கிய**
**பின்றை[3] யேத்திப் பெயர்ந்தனன் றன்னிடம்.**

(இ - ள்.) என்று கோதமன் காதலன் கூறிட - என்று (இவ்வாறு) கௌதமமுனிகுமாரனாகிய சதாநந்தமுனிவன் சொல்ல, வென்றி வீரர் - வெற்றியையுடைய வீரர்களாகிய ராமலக்ஷ்மணர்கள், வியப்பொடு - (கதை கேட்டதனாலுண்டான) அதிசயத்துடனே, உவந்து எழா - களிப்புற்றெழுந்து, ஒன்று மா தவன் தாள் தொழுது ஓங்கிய பின்றை - பொருந்தின சிறந்த தவத்தையுடைய அச்சதாநந்தமுனிவனது திருவடிகளில் விழுந்து வணங்கி யெழுந்தபின்பு, ஏத்தி தன் இடம் பெயர்ந்தனன் - (அச்சதாநந்த முனிவன் சக்கரவர்த்திதிருக்குமாரர்களை) வாழ்த்திவிட்டுத் தன்னிடத்துக்குப் போயினன்; (எ - று.)—பி - ம்.—[1] வீரன். [2] உவந்திடத்துன்று. [3] அம்முனிப்பேர்ந்தனன். (கஙஅ)

**கஙகூ.—முனிவனும் இலக்குமணனும் தமது படுக்கையைச் சேர, இராமன் சீதையையெண்ணியவண்ண மிருத்தல்.**

**முனியுந் தம்பியும் [1]போய்முறை யாற்றமக்**
**கினிய பள்ளிக [2]ளெய்தினர் பின்னிருட்**
**கனியும் போல்பவன் கங்குலுந் திங்களுந்**
**தனியுந் தானுமத் தையலு மாயினன்.**

(இ - ள்.) முனிஉம் - விசுவாமித்திரமுனிவனும், தம்பிஉம் - இலக்குமணனும். போய்—, முறையால்-முறைமைப்படியே, தமக்கு இனிய பள்ளிகள் - தந்தமக்கு இனிமையான படுக்கையிடங்களை, எய்தினர் - அடைந்தார்கள்; பின் - பின்பு. இருள்கனிஉம் போல்பவன்-இருள்மயமானதொரு பழத்தை யொப்பவனாகிய இராமபிரான், கங்குல்உம் - இராத்திரியும், திங்கள்உம் - சந்திரனும், தனிஉம் - தனிமைப்பாடும், தான்உம்—, அ தையல் உம் - அச்சீதாபிராட்டியும், ஆயினன் - ஆனான்; (எ - று.)

இராமபிரான் அவ்விராத்திரிகாலத்திலே சந்திரனது வெண்ணிலா விளங்குஞ்சமயத்திலே தான் தனிமையாய்ப் படுக்கவிருந்தபொழுது உருவெளிப்பாட்டாற் சானகிப்பிராட்டி உடன்தோன்றிநின்றா ளென்பது, கருத்து. போல்பவன் கங்குலுந் திங்களுந் தனியுந்தானுமத்தையலுமாயினன் - "தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்" என்பதிற்போலத் திணைவிரவித் தலைமைபற்றி உயர்திணையொருமைமுடி பேற்றது. கருநிறத்தாலும், யாவராலும் விரும்பப்படுதலாலும், இருட்கனியை உவமை கூறினார். இருட்கனி-முற்றிய இருள்; உம்மை-இசைநிறை. பி - ம்:—[1] மொய்ம்முறையால். [2] எய்தியபின். (கஙகூ)

கச௦.—இதுமுதல் எட்டுப்பாடல்கள் - இராமபிரான் சீதையின் உருவெளிப்பாட்டை நோக்கி உள்ளத்திற்கூறும் வார்த்தைகள்:

**விண்ணி னீங்கிய மின்னுரு விம்முறை**
**பெண்ணி னன்னலம் பெற்றதுண் டேகொலோ**
**வெண்ணி னீதல தென்றறி யேனிரு**
**கண்ணி னுள்ளுங் [1]கருத்தினுங் காண்பெனால்.**

(இ - ள்.) விண்ணின் நீங்கிய மின் உரு - மேகத்தினின்று நீங்கின மின்னலின் வடிவம், இ முறை - இந்தப்படி, பெண்ணின் நல் நலம் பெற்றது உண்டுஏகொல் ஓ - பெண்ணினது நல்ல அழகை அடைந்துள்ள தன்மை உண்டோ? எண்ணின் ஈது அலது என்று அறியேன் -ஆராயுமிடத்து (இது) இத்தன்மையதென்றும் (இது) இத்தன்மையதல்லாததென்றும் அறிகிறேனில்லை; இரு கண்ணினுள்உம் கருத்தின்உம் காண்பென் - இவ்வடிவத்தை (எனது) இரண்டு கண்களிலும் மனத்துள்ளுங் காண்கின்றேன், (யான்);(எ - று.)

இருகண்ணினுள்ளுங் கருத்துள்ளுங் காண்பென் - புறக்கண்ணினாலும் அகக்கண்ணினாலும் பார்க்கிறேன். மனத்தில்தோன்றிய உரு உடனே வெளியிலுந் தோன்றியதனால், இங்ஙனங் கூறியது. ஏ, கொல், ஓ என்னும் மூன்று இடைச்சொற்களில் ஒன்று வினாவும் மற்றவை அசையுமாம். பி-ம்:- [1]கருத்தினும். (கச௦)

கசக [1]வள்ளற் சேக்கைக் கரியவன் வைகுறும்
[2]வெள்ளப் பாற்கடல் போன்மிளிர் கண்ணினா
ளள்ளற் பூமக ளாகுங்கொ லோவென
துள்ளத் தாமரை யுள்ளுறை கின்றதே.

(இ - ள்.) வள்ளல் சேக்கை கரியவன் - சர்ப்பங்களுட்சிறந்த ஆதிசேஷனைப் படுக்கையாகவுடைய கருநிறமுடைய திருமால், வைகுறும் - பள்ளிகொண்டுறைகின்ற, வெள்ளம் பாற்கடல் போல - வெள்ளமாகிய திருப்பாற்கடல்போல, மிளிர் - விளங்குகிற, கண்ணினாள் - கண்களையுடைய நங்கை, எனது உள்ளம் தாமரையுள் உறைகின்றது - எனது மனமாகிய தாமரைமலரினுள் வந்து வசிக்கின்றதனால், அள்ளல் பூ மகள் ஆகும் கொல் ஓ - சேற்றிலுண்டாகிற தாமரைமலரிலேயே (எப்பொழுதும்) வாழ்கிற திருமக ளாவளோ? (எ - று.)—உள்ளத்தாமரை - இருதயகமலம்.

பாற்கடலினிடையே பள்ளிகொண்டருளுகிற கருநிறமுடைய திருமால் - வெண்ணிறமுள்ள பெரியகண்ணினிடையே பொருந்திய கருநிறமுடைய கண்மணிக்கும், அத்திருமாலுக்குச் சுற்றிலுமுள்ள பாற்கடல் வெள்ளம் - அக்கருமணியைச் சூழ்ந்துள்ள வெண்ணிறப்பரப்புக்கும் உவமையாம். அள்ளற்பூ - பங்கஜம். இங்குந் தாமரையில் வந்து தங்கியதனால், என்றுந் தாமரையில் தங்குந் திருமகளோ என்று ஐயமுற்றான்; ஐயவணி.

வள்ளல்-வளைந்து செல்லுந் தன்மையுள்ள சர்ப்பராஜன்: வளையென்றபகுதி 'வள்' என விகாரப்பட்டதென்னலாம். பி - ம்:—[1]வள்ளற்செங்கைக்கரியவன். [2]வெள்ளை. (கசக)

கசஉ. அருளி லாளெனி னும்மனத் தாசையால்
வெருளு நோய்[1]விடக் கண்ணின் விழுங்கலாற்
றெருளி லாவுல கிற்சென்று நின்றுவாழ்
பொருளெ லாமவள் பொன்னுரு [2]வாயவே.

(இ - ள்.) அருள் இலாள் எனின்உம் - (அவள் என்பக்கல்)கருணையில்லாதவளாயினும், மனத்து ஆசையால் - (எனது) மனத்தில் (அவள்பக்கலுண்டான)காதலினாலும், வெருளும் நோய் விடம் கண்ணின் விழுங்கலால்-(யாவரும்) அஞ்சுதற்குக்காரணமான காமநோயைத் தருகிற விடம்போன்ற தன்கண்களால் (அவள் என்னை) உட்கொண்டதனாலும், தெருள் இலா உலகில் சென்று நின்று வாழ் பொருள் எலாம் - தெளிவில்லாத இவ்வுலகத்திலே சரமாகியும் அசரமாகியும் வாழ்கிற எல்லாப்பொருள்களும், அவள் பொன் உரு ஆய - அந்நங்கையினது பொன்மயமான அழகியவடிவமாய் விட்டன; (எ - று.)

காதல்மிகுதியால் எங்கும் அவள்வடிவமே காணப்படுதலால், இங்ஙனங் கூறியது. முன்னிரண்டடிகட்கு - அவள் கருணையற்றவளாயிருந்தும் நான் மனத்திற் காதலோடு எனது காதல்நோய் கெடுமாறு கண்களால் அவளை விழுங்கியதனா லென்று உரைகூறுவாரு முளர். 'அருளிலாள்' என்றது - தன்னை யுடனேவந்து தழுவித் தனக்குப்புணர்ச்சியின்பத்தைத் தந்து மகிழ்வியாது தாமதஞ்செய்து வருத்துதலால். பிராட்டி திருமேனியின் திருநிறம் உருக்கியபொன்னின் நிறத்தை யொக்கு மாதலின், 'பொன்னுரு' எனப்பட்டது. "இருள்தருமா ஞாலம்" எனப் பெரியார் பணித்தாற்போல, 'தெருளிலாவுலகு' என்றார். பி - ம்:—[1]கெடக்கண்ணின் விளங்கலால். [2]ஆனவே. (கசஉ)

கசங. *பூணு லாவிய பொற்கல சங்களென்
னேணி லாகத் [1]தெழுதல [2]வென்னினும்
வாணி லாமுறு வற்கனி வாய்மதி
காண லாவதோர் காலமுண் டாங்கொலோ.

(இ - ள்.) பூண் உலாவிய - (ஆரமுதலிய) ஆபரணங்கள் அசையப்பெற்ற, பொன் கலசங்கள் - பொன்னினாலாகிய கலசங்களை யொத்த (அந்நங்கையின்) கொங்கைகள், என் எண் இல் ஆகத்து - எனது பெருமையில்லாத மார்பிலே, எழுதல என்னின்உம் - தழுவிப்பதியாமற்போயின வாயினும்,—வாள் நிலா முறுவல்-ஒளியையுடைய சந்திரகாந்திபோன்ற புன்சிரிப்பையும், கனி வாய் - கொவ்வைப்பழம்போன்ற அதரத்தையு முடைய, மதி - (அவளது முக) சந்திரனை, காணல் ஆவது ஓர் காலம் - (மீண்டும்) பார்க்கக்கூடியதொரு காலமேனும், உண்டுஆம்கொல்ஓ - உண்டாகுமா? (எ - று.)

அவளது காடாலிங்கன சம்போகசுகம் எனக்குக் கைகூடாவிட்டாலும், அவளது முகதரிசனமாயினும் இன்னொருகாற் கூடினாற் போதுமென அப் பிராட்டியிடத்துத் தனக்கு மிகுதியாகவெழுந்த காதலை வெளியிடுகின்றான். இதனை கீழ் ருகூ - ஆம் பாட்டில் வந்த பிராட்டியின் வார்த்தையோடு ஒப்பிடுக. கலசம், மதி - உவமவாகுபெயர்கள். இத்தகைய சிறப்புடையமங்கையின் கொங்கைகளைத் தழுவப்பெறும் பாக்கியத்தைப் பெறாமையின், தனது மார்பை 'ஏணிலாகம்' என வெறுத்தான். வாள் நிலாம் எனப் பிரித்து-ஒளி பொருந்திய என்றுமாம்; நிலாம் = நிலாவும். பி - ம்:—[1] அழுந்தில. [2] ஆயினும்.

கசச. * வண்ண மேகலை தேரொன்று வாணெடுங்
கண்ணி ரண்டு [1]சுதிமுலை தாமிரண்
[2]டுண்ணி வந்த நகையுமென் றொன்றுண்டா
லெண்ணுங் [3]கூற்றினுக்[4]கித்தனை வேண்டுமோ.

(இ - ள்.) வண்ணம் மேகலை - அழகிய மேகலையென்னும் ஆபரணத்தையணிந்த, தேர் ஒன்று - தேர்த்தட்டுப்போன்ற அல்குலொன்றும், வாள் நெடு கண் இரண்டு - வாளாயுதம்போன்ற நீண்ட கண்களிரண்டும், சுதி முலை தாம் இரண்டு - பருத்த தனங்களிரண்டும், உள் நிவந்த நகை என்ற ஒன்றுஉம் - வாயினுள்ளே (அடங்கிச்) சிறந்த புன்சிரிப்பு என்ற ஒன்றும், உண்டு - (அவளிடம்) உள்ளன; எண்ணும் கூற்றினுக்கு இத்தனை வேண்டும்ஓ - (யாவராலும்) மதிக்கப்படுகிற யமனுக்கு (என்னைக்கொல்ல) இத்தனைகருவிகளும் வேண்டுமோ? (எ - று.)

சீதையினுடைய அல்குல் கண் முலை நகைஎன்ற இவற்றுள் ஒவ்வொன்றும் என்னை வருத்துகின்றதென்பது கருத்து. தேர் - உவமையாகுபெயர். எண்ணுங் கூற்று - (என்னைக்கொல்ல) எண்ணுகிற யமனுமாம். பி - ம்:— [1] கதிர்முலை. [2] உண்ணவந்தநகையொன்றுண்டாமெனின், உண்ணிவந்த நகையுமுண்டாமெனின். [3] கூற்றெனக்கு. [4] இத்துணை. இச்செய்யுள் சிலபிரதிகளில் கசகூ - ஆவதுசெய்யுளாகஉள்ளது. (கசச)

கசரு. [1]கன்ன லின்கருப் புச்சிலை யான்விரை
பொன்னை முன்னிய பூங்கணை[2]மாரியா
லென்னை யெய்து தொலைக்குமென் றாலினி
வன்மை யென்னுமி தாரிடை [3]வைகுமே.

(இ - ள்.) கன்னல் இன் கரும்பு சிலையான் - சாறு இனிமையாக இருக்கப்பெற்ற (மெல்லிய) கரும்பைவில்லாகவுடைய மன்மதன், விரை பொன்னை முன்னிய பூ கணை மாரியால் - விரைவாக இத்திருமகளைக்குறித்து (என் மீது) பிரயோகிக்கிற புஷ்ப பாண மழையால், எய்து—, என்னை - (எவர்க்கும் வலிதொலையாத) என்னை, தொலைக்கும் - வலிமையழிப்பான், என்றால்—, இனி - இனிமேல், வன்மை என்னும் இது - வலிமையென்றுசொல்லப்படுகிற இக்குணம், ஆரிடை வைகும் - யாரிடத்திலே தங்கும்? (எ - று.)

இதுகாறும் வலிய வில்லம்புகளோடு வலியஉடம்பையுமுடைய வீர ரெவர்க்கும் வலிதொலையாத யான் இப்பொழுது மெல்லியகருப்புவில்லையும் மலரம்புகளையு முடைய அனங்கனுகிய மன்மதனுக்கு வலிமையிழக்கும்படி யாயிற்றே யென்று இரங்கினன். கன்னலின் கரும்பு, இன்-சாரியை யாகக் கொண்டு, கன்னலெனப்படுகிற கரும்பு எனினுமாம். விரை - விரைந்து; வினையெச்சவிகாரம்; பெயர்ச்சொல்லாக, இயற்கைநறுமணமுடைய எனி னுமாம். பி - ம்:—[1]கன்னல் வார்சிலை கால்வளைத் தேமதன். [2]வாளியால். [3]வைகுமோ. (௧௪௫)

௧௪௬. கொள்ளை கொள்ளக் கொதித்தெழு பாற்கடற்
பள்ள வெள்ள மெனப்பட ருந்நிலா
வுள்ள வுள்ள வுயிரைத் துருவிட
வெள்ளை வண்ண விடமுமுண் டாங்கொலோ.

(இ - ள். கொள்ளை கொள்ள - (உலகமுழுவதையுங்) கொள்ளையிடு தற்கு, கொதித்து எழு - பொங்கி யெழுகின்ற, பால்கடல் பள்ளம் வெள் ளம் என - திருப்பாற்கடலினது ஆழமாகியநீர்வெள்ளம் போல, படரும் - (உலகெங்கும்) பரவியுள்ள, நிலா - சந்திரகாந்தியானது, உள்ள உள்ள - (யான் அந்தமங்கையை) நினைக்குந்தோறும், உயிரை துருவிட - (எனது) உயிரைத் துளைப்பதனால், வெள்ளை வண்ணம் விடம்உம் உண்டுஆம் கொல் ஓ-வெண்ணிறத்தையுடையதொரு விஷமும் உலகத்தில் இருக்கிறதோ? (என்ற ஐயம் எனக்குஉண்டாகிறது);(எ - று.)

'துருவிட'என்ற எச்சத்திற்குஏற்ப, முடிக்குஞ்சொல் வருவித்து உரைக் கப் பட்டது. நஞ்சம் கரியநிறமுடைய தென்பது உலகத்திற்பிரசித்தம்; அங் ஙனன்றி வெளியநிறத்தையுடையதொரு விஷம் போலுமென்று ஸ்ரீராமன் நிலாவைக்கூறியது, தலைமகளைத் தழுவப்பெறுது தனித்துள்ள தன்னை மரணவேதனைசெய்து வருத்துவதனு லென்க: இது - சந்திரோபாலம்பனம். கொள்ளை கொள்ளுதல் - தன்வசமாக்குதல். 'கொள்ளைகொள்ளக்கொதித் தெழு' என்னும் அடைமொழியை நிலாவோடு கூட்டி-(என்னுயிரை யானும் அறியாமற்) கவர்ந்துபோவதற்குச் சீறியெழுகின்ற நிலா வென்றும் உரைக்க லாம். பி - ம்:—[1]உள்ளமுள்ள வுயிரைத்துருவிட, உள்ளுமுள்ளுற்றுயிரைத் தொடருமால், உள்ளுமுள்ளுற்றுயிரைத்துருவிடும். (௧௪௬)

௧௪௭. [1]ஏகு நல்வழி யல்வழி யென்மன
[2]மாகு மோவதற் காகிய காரணம்
பாகு போன்மொழிப் பைந்தொடி கன்னியே
யாகும் [3]வேறிதற் கையுற வில்லையே.

(இ - ள்.) ஏகும் நல் வழி அல் வழி - செல்லுதற்குரிய சன்மார்க்கமல் லாத தீயநெறியில், என் மனம் ஆகும் ஓ - எனது (பரிசுத்தமான) மனம் செல்லுமோ? [செல்லாது என்றபடி]; அதற்கு ஆகிய காரணம் - (அப்படி யிருக்கவும் என்மனம்) இம்மங்கைபக்கற் காதல்கொண்டு சென்றதற்குப்

பொருந்திய காரணம், பாகு போல் மொழி பைந்தொடி கன்னி ஏ ஆகும்-கருப்பஞ்சாறுபோலினிய சொற்களையும் பசிய பொற்றொடியையு முடைய இந்நங்கை கலியாணமாகாத ராஜகன்னிகையே யாவள்; இதற்கு வேறு ஐயுறவு இல்லை - இம்முடிவுக்கு வேறாகச் சந்தேகப்படவேண்டுவ தொன்று மில்லை; (எ - று.)—இச்செய்யுள் - "அண்ணலிவ்வண்ணமயலுழந்து தளரு மெல்லை" என கஙo - ஆஞ்செய்யுளோடு தொடரும்: மேல் வருங் கவிகள் இரண்டும்-இடைப்பிறவரல்கள்.

தனது மனம் சீதையினிடத்துச் சென்றதனால் அவள் கலியாணமா காத அரசகன்னிகையாயிருக்கவேண்டு மென்று ஸ்ரீராமன் கருதினன். இதனால், சற்புருஷர்களுக்குப் பரிசுத்தமான தங்களது சிறந்த மனச்சாட்சி யே முக்கியமான பிரமாணமாம் என்பது புலப்படுகின்றது. சாகுந்தலநாட கத்தில் ஸ்ரீகாளிதாசமகாகவி, இக்கருத்தை "ஸ்தாம்ஹி ஸந்தேஹபதேஷு வஸ்துஷு ப்ரமாண மந்தஃ கரணப்ரவ்ருத்தயஃ" என்று கூறியது ஒப்பு நோக்கத்தக்கது. நல்வழியல்லாதவழி - இங்கே, பிறன்மனைவியைவிழை தல். பி - ம்:—[1]ஆகும். [2]ஏகுமோவிதற்காகிய, ஏகுமேயதுவே யிதன். [3]ஆசைக்கொரையுறவு. (கசஎ)

கசஅ.—இதுவும், மேலைக்கவியும் - சந்திராஸ்தமனவருணனை.

கழிந்த கங்கு லரசன் கதிர்க்குடை
விழுந்த தென்னவு மேற்றிசை யாள்சுடர்க்
கொழுந்து சேர்நுதற் கோதறு சுட்டிபோ
யழிந்த தென்னவு மாழ்ந்தது திங்களே.

(இ - ள்.) கழிந்த - காலங்கழிந்து இறந்துபோன, கங்குல் அரசன் - இராத்திரிகாலமாகிய அரசனது, கதிர் குடை - ஒளியையுடைய ஒற்றை வெண்கொற்றக்குடையானது, விழுந்தது என்னஉம் - கீழே விழுந்தது போலவும்,—மேல் திசையாள் - மேற்குத்திக்காகிய பெண்ணினது, சுடர் கொழுந்து சேர்- இளமையான ஒளிபொருந்திய, நுதல் கோது அறு சுட்டி-நெற்றியிலணிந்துள்ள குற்றமற்ற வட்டவடிவமான சுட்டியென்னு மாபரண மானது, போய் அழிந்தது எனஉம் - அழிந்துபோயினதுபோலவும், திங்கள்-சந்திரமண்டலம், ஆழ்ந்தது - (மேல்கடலில்) மூழ்கிமறைந்தது; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி. 'கங்குலரசன்' எனவும், 'மேற்றிசையாள்' என வும், அஃறிணைப்பொருள்களினிடத்து உயர்திணைத்தன்மையை யேற்றிக் கூறியது-வடநூன்முறைமைபற்றி; வருங்கவியில் 'ஈசனுமதி', 'ஆசைமாதர்' என வருவனவற்றையும்இவ்வாறே கொள்க. (கசஅ)

கசகூ. வீசு கின்ற நிலாச்சுடர் வீந்ததா
லீச னுமதி யேகலுஞ் சோகத்தாற்
பூசு வெண்கல வைப்புனை சாந்தினை
யாசை மாத ரழித்தன ரென்னவே.

(இ - ள்.) ஈசன் ஆம் மதி - (தந்தமக்குக்) கொழுநனாகிய சந்திரன், ஏகலும் - (தம்மைப்பிரிந்து) போயின அளவிலே,—ஆசை மாதர் - திக்குக்களாகிய (அவனுடைய) விருப்பமுள்ள மனைவியர், பூசு வெள் கலவை புனை சாந்தினை - (தந்த முடம்பில் முன்பு அக்கொழுநனால்) பூசப்பட்டுள்ள அழகிய வெண்ணிறமுள்ள கலவைச்சந்தனத்தை, சோகத்தால் - (அவனைப்பிரிந்த) துயரத்தால், அழித்தனர் என்ன - அழித்துவிட்டார்கள் போல, வீசுகின்ற நிலா சுடர் வீந்தது - (சந்திரன்அத்தமித்தமாத்திரத்தில்) முன்பு எத்திக்கிலும்) பரவியுள்ள (அவனது) ஒளியாகிய நிலா ஒழிந்தது.

இதுவும் - தற்குறிப்பேற்றவணியே. ஆசை - ஆஶாஎன்னும் வடமொழித் திரிபு. திக்கின் பெயராகிய ஆசை யென்பது பெண்பா லாதலால் 'ஆசைமாதர்' என்றார்: ஆசைமாதர் - இரட்டுறமொழிதலால், விருப்பமுள்ள மகளி ரென்ற பொருளையுந் தந்தது. (கசக)

கரு௦.—சூரியோதய வருணனை.

**ததையுமலர்த் தாரண்ண லிவ்வண்ண மயலுழந்து தளருமேல்வை, சிதையுமனத்[1] திடருடைய செங்கமல முகமலரச் செய்யவெய்யோன், புதையிருளி[2]னெழுகின்ற புகர்முகயானையினுரிவைப்போர்வை போர்த்த, வுதையகிரி யெனுங்கடவு ணுதல்கிழித்த விழியேபோலுதயஞ் செய்தான்.**

(இ - ள்.) ததையும் மலர் தார் அண்ணல் - நெருங்கின பூக்களால் தொடுக்கப்பட்ட மாலையையுடைய புருஷோத்தமனாகிய ஸ்ரீராமன், இ வண்ணம் - இந்த விதமாக, மயல் உழந்து - காமமயக்கத்தால் வருந்தி, தளரும் எல்லை - தளர்ச்சியடைகிற பொழுதில், செய்ய வெய்யோன் - செந்நிறமுடைய உஷ்ணகிரணனாகிய சூரியன், சிதையும் மனத்து இடர் உடைய செம் கமலம் முகம் மலர - (கொழுநனாகியதன்னைப் பிரியப்பெற்றதனால்) நிலைகுலைகின்ற (தன்) நெஞ்சத்திலே சோகத்தையுடைய செந்தாமரை மலர்களாகிய தன் மனைவிமாரது முகங்கள் (தான் வந்து கூடப்பெற்ற ஆனந்தத்தால்) மலர்ச்சியைப்பெறும்படி, புதை இருளின் எழுகின்ற புகர் முகம் யானையின் உரிவை போர்வை போர்த்த உதையகிரி எனும் கடவுள் நுதல் கிழித்த விழிஏ போல் - ஆழ்ந்த இருளாகிய உயர்ந்துதோன்றுகின்ற செம்புள்ளிகளையுடைய முகத்தோடுகூடிய யானையினது தோலாகிய போர்வையைத் (தன்மேல்) தரித்துள்ளஉதயபர்வதமாகிய உருத்திரமூர்த்தியினது நெற்றியினின்று திறந்துதோன்றின நெருப்புத் திருக்கண்போல, உதயம் செய்தான் - உதித்தலைச் செய்தான்; (எ - று.)

சூரியனைக் கண்டமாத்திரத்தில் தாமரை மலர்தலும், அவனைப் பிரிந்த மாத்திரத்தில் அது குவிதலு மாகிய இயல்புபற்றித் தாமரைக்கொடிகளாகிய பெண்களுக்குச் சூரியனைத் தலைவனாகக் கூறுதல், கவிமரபு; இதனை 'நளிநீநாயகன்' என்னும் வடமொழிப்பெயராலும் அறிக: இம்மரபுபற்றியே, இங்கு 'சிதையுமனத் திடருடைய செங்கமல முகமலரச் செய்யவெய்யோன் உத

யஞ் செய்தான்' என்றது. இனி இதற்கு - நிலைகுலைகிற தன் மனத்திலே தலைவியைக்கூடாத துன்பத்தையுடைய (இராமபிரானது) செந்தாமரைமலர் போன்றமுகம் தான் உதித்தலால் (துயிலொழிந்து) மலர்ந்துவிளங்கும் படி என்றும் உரைக்கலாம். மிகுந்த கரிய இருளிலே மறைந்துள்ள உயர்ந்த உதயகிரிக்கு - கருநிறமுடைய யானையின்தோலை மேற்போர்த்துள்ள பரம சிவனும், அம்மலையின் சிகரத்திலே உதித்துவிளங்குகிற சூரியமண்டலத் திற்கு - அச்சிவபிரானது நெற்றியில் திறந்துவிளங்கும் நெருப்புநயனமும் உவமையெனக் காண்க. கரிய இருளின்மீது விளங்குகிற சிவந்த நக்ஷத்திரங் களைக் கரியயானையின் முகத்தில் நிறைந்துள்ள செம்புள்ளிகளாகக்கொள்க. முகத்தில் அடர்த்தியாகவுள்ள செம்புள்ளிகளை யுடையதாதல், உத்தமயானை யிலக்கணம். தளருமேல்வை செய்யவெய்யோன் உதயஞ்செய்தான் என இயையும். எதுகைநோக்கி உதையகிரியென வந்தது. பி - ம்:—[1]இடருடை யச் செங்கமலம். [3]எதிர்நின்ற. (௧௫௦)

௧௫௧.—வேயில் பாவுதலின் வருணனை.

**விசையாடற் பசும்புரவிக் குரமிதிப்ப வுதயகிரி விரிந்த தூளி,**
**பசையாக மறையவர்கைந் நறைமலரு நிறைபுனலும் பரந்து பாய,**
**வசையாத நெடுவரையின் முகடுதொறு மிளங்கதிர்சென் [1]றளைந்து**
**வெய்யோன், றிசையாளு மத[2]கரியைச் சிந்தூர மப்பியபோற் [3]சிவந்த**
**மாதோ.**

(இ - ள்.) விசை - வேகத்தையும், ஆடல் - வலிமையையுமுடைய, பசு புரவி - (சூரியனது ஒற்றைத்தனியாழித்தேரிற் பூட்டப்பட்டுள்ள) பச்சை நிறமுடைய குதிரைகளின், குரம் - குளம்புகள், மிதிப்ப - மிதித்தெழுப்பிய தனால், உதயகிரி - உதயபர்வதத்திலே, விரிந்த - பரவிய, தூளி - செந் துகள், பசை ஆக - ஈரமாய் நனையும்படி, மறையவர் கை நறை மலர்உம் நிறை புனல்உம் - (காலைக்கடன்கழிக்கின்ற) அந்தணர்களது கைகளாலெடுத் திடப்படுகிற தேன்நிறைந்த மலர்களும்(கைந்)நிறைந்த நீர்களும், பரந்துபாய- பரவிப்பாய்ந்திட, (இங்ஙனம் பிராமணர்களாற் கையிலெடுத்து அருச்சிக்கப் பட்ட பூக்களினின்று வழிகிற தேனினாலும் அவர்கள்கையால் எடுத்துவிடப் பட்ட அர்க்கியஜலத்தினாலும் நன்றாக நனைந்துள்ள உதயகிரியிற்பொருந்திய செந்தூளியைக்கொண்டு), வெய்யோன்-உஷ்ணகிரணனான சூரியன், திசை ஆளும் மதம் கரியை சிந்தூரம் அப்பிய போல்-(தனக்குரிய)கிழக்குத்திக்கை யிடமாகக்கொண்ட மதயானைக்குச் சிந்தூரத்திலகத்தை யப்பியனபோல, அசையாத நெடு வரையின் முகடுதொறுஉம் இள கதிர் சென்று அளைந்து சிவந்த - சலித்தலில்லாத பெரிய அவ்வுதயகிரியின் சிகரங்களிலெல்லாம் இளமையான சூரியகிரணங்கள் போய்ப்படிந்து செந்நிறமாய் விளங்கின.

கிழக்கிலுள்ள உயர்ந்த உதயகிரியின் பரந்த சிகரத்திற் பரவி விளங்கு கிற செந்நிறமுள்ள சூரியகிரணம், பெரிய கிழக்குத்திக்கு யானையின் பரந்த முகத்தில் தீட்டப்பட்ட சிந்தூரத்திலகத்தைப் போலு மென்பதாம்; தற்

துறிப்பேற்றவணி. சந்தியாவந்தனகாலத்தில் மந்திரபூர்வமாகப் பிராமணர்கள் கைகளால் எடுத்துவிடுகிற அர்க்கியஜலம் தான் வச்சிராயுதவடிவமாய் விரைந்துசென்று மேல்விழுந்து,சூரியனையெப்பொழுதுஞ் சூழ்ந்துகொண்டு அவனது சஞ்சாரத்துக்குத் தடைசெய்துவருத்துகிற மந்தேகர் என்னும் அசுரர்களை அழிக்கின்றதென்பது வேதமுடிபு; ஆதலின், 'உதயகிரி விரிந்த தூளிபசையாக மறையவர்கைந்நறைமலரு நிறைபுனலும் பரந்துபாய' எனப் பட்டது. அசையாத் நெடுவரை - அசலம். அர்க்கியஜலத்தில் மலர்களையுங் கூட்டத் தூவுதல் மரபு. 'மறையவர்கைம்மலர்நறையும்' எனப் பாடமோதுதல் நேராம். பி - ம்:—[1]அணவவேய்ந்த. [2]கரிகள். [3]திகழ்ந்த. (௧௫௧)

௧௫௨.—பொய்கைகளில் தாமரைகள் மலர்ந்து விளங்குதல்.

**பண்டுவருங் குறிபகர்ந்து [1]பாசறையிற் பொருள்வயினிற் [2]பிரிந்து போன, வண்டுதொடர் நறுந்தெரிய லுயிரனைய கொழுநர்வர மணித்தே ரோடுங்,கண்டுமனங் களிசிறப்ப வொளிசிறந்து மெலி [3]வகலுங் கற்பி னார்போற், புண்டரிக முகமலர வகமலர்ந்து பொலிந்தனபூம் பொய்கை யெல்லாம்.**

(இ - ள்.) பண்டு - (தம் தலைவியரைப் பிரிவதற்கு) முன்னமே, வரும் குறி பகர்ந்து - (தாம் மீண்டு) வருங் காலத்தின் எல்லையை (அத்தலைவியரோடு) சொல்லி, பாசறையின் - பகைவர்மீது போர்செய்ய எழுதல் காரணமாகவாயினும், பொருள்வயினின் - செல்வப்பொருளையீட்டுதல் காரணமாகவாயினும், பிரிந்து போன - (தலைவியரைப்) பிரிந்துசென்ற, வண்டுதொடர் நறு தெரியல் உயிர் அனைய கொழுநர் - வண்டுகள் இடைவிடாது தொடர்ந்துமொய்த்தற்குரிய நன்மணமுள்ள பூமாலைகளையுடைய (தமது) உயிரையொத்த தலைவர், மணி தேரோடுஉம் வர - அழகிய (தேரின்மீ தேறிக்கொண்டு அத்) தேருடனே மீண்டுவர, கண்டு - (அதனைப்) பார்த்து, மனம் களி சிறப்ப - மனத்திலே களிப்பு உண்டாகிமிக, ஒளி சிறந்து - (தலைவரைப் பிரிந்தகாலத்துத் தம்முடம்பினீங்கியுள்ள) ஒளி (இப்பொழுது) வந்துகூடி மிகப்பெற்று, மெலிவு அகலும் - தளர்ச்சிநீங்கின, கற்பினார்போல் - கற்புநிலைமையையுடைய மனைவிமார்போல,—புண்டரிகம் முகம் மலர - (தம்மை முந்தினநாட்பிரிந்துசென்ற தம் கொழுநனாகிய சூரியன் தேருடனே மீண்டு வரக் கண்டு மகிழ்ந்து)தாமரைக்கொடிகளாகிய தலைவிமார் தமது மலர்களாகிய முகங்கள் மலர்ச்சிபெற, (அதனால்), பூ பொய்கை எல்லாம் அகம் மலர்ந்து பொலிந்தன - அழகிய நீர்நிலைகள்யாவும் உள்ளிடஞ் செழித்து விளங்கின; (எ - று.)

வினைவயிற்பிரிவினாலேனும் ஓதற்பிரிவினாலேனும் பிரிந்துசென்ற கணவர் மீண்டுவந்துகூட மகிழ்ந்துநிற்குங் கற்புடையமகளிரை, சூரியனைக் கண்டதனால் மலர்ந்திருக்கப்பெற்ற தாமரைகளையுடைய பொய்கைகட்கு உவமை கூறினார். பாசறை - படைவீடு; பகைமேற்சென்றோர் உறையுமிடம். உயிரனையகொழுநர் - பிராணநாயகர். மணித்தேர் - அடிக்கும் மணிகள் கட்டியதேரும், இரத்தினங்கள் பதித்துள்ள தேரும், உறுதியாகவுள்ள

தேருமாகவுமாம். பி - ம்:— [1]பாசறையும் பொருள்வயினும். [2]பரிந்து. [3]அகற்றும். (கருஉ)

கருங.—சூரியகிரணங்கள் பரவுதலின் வருணனை.

**எண்ணரிய மறையினொடு கின்னரர்க ளிசைபாட வுலக மேத்த, விண்ணவரு முனிவர்களும் வேதியருங் கரங்குவிப்ப வேலை யென்னு, மண்ணுமணி முழவதிர [1]வானரங்கி னடம்புரிவா ளிரவி [2]யான, கண்ணுதல்வா னவன்கனகச் சடை[3]விரிந்தா லெனவிரிந்த கதிர்க ளெல்லாம்.**

(இ - ள்.) எண் அரிய - (இத்தன்மையவென்று) அளவிடுவதற்கு அருமையான, மறையினொடு - வேதங்களுடனே, கின்னரர்கள் - கின்னரர்களும், இசை பாட-கானம்பாடவும், உலகம் ஏத்த உலகத்திலுள்ள உயர்ந்தோர்யாவருந் துதிக்கவும், விண்ணவர்உம்-தேவர்களும், முனிவர்கள்உம் - தவஞ்செய்த இருடிகளும், வேதியர்உம் - சாதாரணபிராமணர்களும், கரம் குவிப்ப-கைகூப்பி வணங்கவும், வேலை என்னும்-கடலென்கிற, மண்ணும் அணி முழவு - மார்ச்சனையமைக்கப்பட்ட அழகிய மத்தளம், அதிர - ஒலிக்கவும்,—வான் அரங்கின் - ஆகாயமாகிய நடனசபையிலே, நடம் புரி - திருநிருத்தஞ்செய்தருளுகிற, வாள் இரவி ஆன-ஒளியையுடைய சூரியனாகிய, கண் நுதல் வானவன் - நெருப்புக்கண்ணை நெற்றியிலுடைய உருத்திரதேவனது, கனகம் சடை - பொன்னிறமான சடைகள், விரிந்தால் என-பரந்து விளங்கினாற்போல, கதிர்கள் எல்லாம்-(செந்நிறமுள்ள) கிரணங்கள் யாவும், விரிந்த - (எங்கும்) பரவின; (எ - று.)

உருவகவுவமையணி. வானத்தின்மீது தோன்றிவிளங்குகிற சூரியனது கிரணங்கள் பரவுதல், வானத்தையளாவி ஓங்கியுயர்ந்துள்ள சிவபிரானது செஞ்சடை விரிதலை யொக்கு மென்பதாம். சூரியனுதிக்குங்காலத்தும் சிவபிரான் திருநடனம் புரிந்தருளும்பொழுதும் அந்தணர்களால் உத்கோஷித்துச் சொல்லப்படுகிற வேதமுழக்கம் எங்கும் எழுதலும், கின்னரரென்னுந் தேவசாதியார் இசைபாடுதலும், எல்லாச்சமயத்தோரும் புகழ்தலும், தேவர் முனிவர் வேதிய ராதியர் கைகூப்பி நமஸ்காரஞ்செய்தலும் நிகழுமென்க. சிவபிரானது நடனத்துக்கு மிருதங்கநாதம்போலச் சூரியனுக்குச் சமுத்திரகோஷம். கின்னரர் - இசைபாடுவதோர் தேவசாதி. சூரியன் உலகத்தார் யாவராலும் புகழப்படுவதனை "பலர்புகழ் ஞாயிறு" எனத் திருமுருகாற்றுப்படையிற் கூறியவாற்றாலு மறிக. மண்ணுதல் - முழவில் அடிக்கப்படுங் கண்ணிடத்தைப் பதமாக அமைத்தல். சிவனுக்கு அம்பலம்போல, சூரியனுக்கு அம்பரம். சூரியனை நடம்புரிவதாகக்கூறியது. அவனது கிரணங்கள் பளபளக்குங்காலத்து அசைவதாகத் தோன்றுதல்பற்றி; "மாயிருஞாலத் துயிர்காண வானரங்கிற், பாயிரு ளென்னும் படாம்வாங்கிச் - சேய்நின், றறைந்தா ரணம்பாட வாடிப்போய் வெய்யோன், மறைந்தான் குடபால் வரை" என்றது, இங்குக் காணத்தக்கது. பி - ம்:— [1]விசும்பரங்கின். [2]என்னும். [3]விரித்தாலென விரித்த. (கருங)

கருசு.—இராமபிரான் திருப்பள்ளியெழுதல்.

கொல்லாழி நீத்தங்கோர் குனிவயிரச் சிலைதடக்கைக் கொண்ட கொண்ட, [1]லெல்லாழித் தேரிரவி யிளங்கரத்தா லடிவருடி யனந்த றீர்ப்ப, வல்லாழிக் கரைகண்டா ளுயிரவாய் மணிவிளக்க மழலுஞ் சேக்கைத்,தொல்லாழித் துயிலாதே துயராழி [2]நெடுங்கடலுட் டுயில் கின்றானே.

(இ - ள்.) ஆயிரம் வாய் மணி விளக்கம் அழலும் - ஆயிரம்முகங்களை யுடைய (ஒவ்வொருதலையிலுமுள்ள) மாணிக்கமாகிய தீபங்கள் சொலிக்கப் பெற்ற, சேக்கை - (ஆதிசேஷனாகிய) சயனத்திலே, தொல் ஆழி - பழமை யான திருப்பாற்கடலிலே, துயிலாது - பள்ளிகொண்டருளாமல், [பாற் கடலுட் பாம்பணையிற் பள்ளிகொள்ளுதலை விட்டு இங்குவந்து இராமனாய்த் திருவவதரித்து], துயர் ஆழி நெடு கடலுள் - (பிராட்டியைச்சேராமையினா லுண்டாகிய) துன்பமாகிற ஆழ்ந்துள்ள பெரிய கடலினிடையிலே, துயில் கின்றான் - மயங்கிக்கிடக்கின்றவனும், அங்கு - திருப்பாற்கடலிலே, கொல் ஆழி-(கொடியவரைக்) கொல்லவல்ல சக்கராயுதத்தை, நீத்து - நீக்கிவிட்டு, ஓர் குனி வயிரம் சிலை தட கை கொண்ட-ஒப்பற்ற வளைவாகிய உறுதியான (கோதண்டமென்பதொரு)வில்லைப் பெரிய திருக்கையிலே கொண்டு (இங்கு) எழுந்தருளிய, கொண்டல் - மேகம்போன்றவனுமாகிய சக்கரவர்த் தித்திருமகன்,எல்-ஒளியையுடைய,ஆழிதேர்-ஒற்றைச்சக்கரத்தைக்கொண்ட இரதத்தையுடைய, இரவி - சூரியன், இள கரத்தால்-(தனது) இளமையான கிரணங்களாகிய மெல்லிய கைகளால், அடி வருடி - திருவடிகளை மென்மை யாகப் பிடித்துத்தடவி, அனந்தல் தீர்ப்ப - நித்திரையை யொழிக்க, அல் ஆழி கரை கண்டான் - இரவாகிய கடலுக்கு ஒரு எல்லையைப் பார்த்தான்.

சூரியனுதித்து அவனதுகிரணங்கள் வெளிப்பட்டு விளங்கினமாத்திரத் தில் இராமபிரான் பள்ளியுணர்ந்தருளினனென்பதாம். ஒருவரையொருவர் தழுவப்பெறாத தலைவன்தலைவியர்க்கு இராமுழுவதுந் தூக்கம்பிடியாமல் அவ்விராக்காலமொன்றே அநேகயுககாலம்போலக் காணப்படுமாதலால், 'அல்லாழி' என்றார். உயர்ந்தோரைத் துயிலுணர்த்தவேண்டுபவர் தமது மெல்லியகைகளால் அவரது திருவடிகளைவருடித் துயிலெழுப்புதல் முறை மையாதலால், 'இரவி யிளங்கரத்தா லடிவருடி யனந்தல் தீர்ப்ப' எனப்பட் டது. இளங்கரம் - சிலிஷ்டரூபகம். 'சென்றாற் குடையாம் இருந்தாற்சிங் காதனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள் - என்றும், புணையாம் மணி விளக்காம் பூம்பட்டாம் புல்கும், அணையாம் திருமாற்கு அரவு'' என்றதனால், எம்பெருமானுக்குச்சயனமாகவுள்ள திருவனந்தாழ்வான் தானே தனது ஆயி ரந்தலைகளிலுமுள்ள மாணிக்கங்களின் சோதியால் இரத்தினதீபமாகியும் விளங்குமென்று கூறப்படுதலின், 'ஆயிரவாய் மணிவிளக்க மழலுஞ் சேக் கை' எனப்பட்டது. துன்பத்தை 'கடல்' என்றது, அளவற்ற தென்னுங் கருத்தால். இரவி=ரவி: வடசொல். கொண்டல் - உவமையாகுபெயர்.

பி - ம்:— [1]செல்லாழி. [2]தடங்கடலுள், இடைக்கிடந்து. (கஙிச)

கருரு.—ஸ்ரீராமன் முனிவனுடனும் தம்பியுடனும் சனகனது வேள்விச்சாலை சார்தல்.

ஊழி[1]பெயர்ந் தெனக்கங்கு லொருவண்ணம் புடைபெயா வுறக்க நீத்த,சூழியா னையினெழுந் தொன்னியமத் துறைமுடித்துச் சுருதி யன்ன, [2]வாழிமா தவற்பணிந்து மனக்கினிய தம்பியொடும் வம்பின் மாலை, தாழுமா மணிமௌலி[3]த் தார்ச்சனகன் பெருவேள்விச் சாலை சார்ந்தான்.

(இ - ள்.) ஊழி பெயர்ந்து என-கற்பகாலங் கழிந்தாற்போல, கங்குல்-அவ்விராத்திரிகாலமானது, ஒரு வண்ணம்-ஒருவாறு, புடை பெயர - (தன்) நிலையில்நின்றும் நீங்க [கழிய], (அவ்விடியற்காலத்திலேயே ஸ்ரீராமபிரான்), உறக்கம் நீத்த சூழி யானையின் - தூக்கத்தைவிட்டெழுந்த முகபடாத்தை யுடைய யானைபோல, எழுந்து - துயிலுணர்ந்து (கம்பீரமாக) எழுந்து, தொல் நியமம் துறை முடித்து-பழமையான (தனது வருணாச்சிரமங்களுக்கும் அக்காலத்துக்கும்உரிய) நித்தியகருமானுஷ்டானவகைகளை நிறைவேற்றி, சுருதிஅன்ன மா தவன் பணிந்து-வேதத்தின்வடிவத்தையேயொத்த கௌசிகமுனிவனை வணங்கி, (அவனுடனும்), மனக்கு இனிய தம்பியொடுஉம் - (தன்)மனத்துக்கு இனிய தம்பியாகிய லக்ஷ்மணப்பெருமாளோடும், வம்பின் மாலை தாழும் மா மணி மௌலி தார் சனகன் பெரு வேள்வி சாலை சார்ந்தான் - வாசனையையுடைய பூமாலைகள் தொங்குகிற சிறந்த ரத்தினகிரீடத்தையும் பூமாலையையு முடைய சனகமகாராசனது பெரிய யாகசாலையை அடைந்தான்; (எ - று.)

'ஊழிபெயர்ந்தெனக் கங்கு லொருவண்ணம் புடைபெயர'என்றதனால், காமிகளுக்கு இராக்காலம் நீட்டித்துநிற்றல் விளக்கப்பட்டது. மாதவன்-திருவாராதனமாகிய திருமாலென்று உரைப்பாரு முளர். வாழி - அசை.

பி-ம்:—[1]போந்தென. [2]வாழும். [3]சனகனுறை. (கருரு)

கருசு—சனகன் வீற்றிருத்தல்.

முடிச்சனகர் பெருமானு முறையாலே [1]மறைவேள்வி முற்றிச் சுற்று, மிடிக்குரலின் முரசியம்ப [2]விந்திரன்போற் சந்திரன்றோய் கோயி லெய்தி, [3]யெடுத்தமணி மண்டபத்து ளெண்டவத்து முனிவ ரொடு மிருந்தான் பைந்தார், வடித்தகுனி வரிசிலைக்கைம் மைந்தனுந் தம் பியுமருங்கி னிருப்ப மாதோ.

(இ - ள்.) முடி சனகர் பெருமான்உம் - கிரீடத்தையுடைய சனககுலத்தார்க்குத் தலைவனாகிய அச்சனகமகாராஜனும், (அப்பொழுது), முறையால்-வேதவிதிமுறைப்படியே, மறை வேள்வி முற்றி - வேதமந்திரங்களோடு கூடிய யாககாரியத்தை முடித்துவிட்டு,-சுற்றும் இடி குரலின் முரசு இயம்ப-எல்லாப்பக்கங்களிலும் இடிமுழக்கம்போன்ற தொனியையுடைய பேரிகைகள் ஒலியாநிற்க,—இந்திரன் போல்-தேவேந்திரன்போல,—சந்திரன் தோய் கோயில் எய்தி - சந்திரமண்டலத்தையளாவி யுயர்ந்துள்ள அரண்மனையை

அடைந்து, எடுத்த மணி மண்டபத்துள் - (அங்கே) உயர்த்திக்கட்டப்பட்டுள்ள நவரத்தினகசிதமான மண்டபத்திலே, எண் தவத்து முனிவரொடும் - (யாவராலும்) மதித்தெண்ணப்படுகிற நற்றவத்தையுடைய விசுவாமித்திர முனிவனுடனே, பை தார் வடித்த குனி வரி சிலை கை மைந்தன்உம் தம்பிஉம் - பசிய வெற்றிப்பூமாலையைச் சூடிய சிறந்தெடுத்த வளையுமியல்புள்ள கட்டமைந்த வில்லையேந்திய கையையுடைய சக்கரவர்த்தித்திருமகனும் (அவனது) திருத்தம்பியாகிய இளையபெருமாளும், மருங்கின் இருப்ப - (தனது) பக்கத்திலே வீற்றிருக்க, இருந்தான் - (தான்) வீற்றிருந்தான்; (எ - று.)

சனகன் தனதுவேள்விமுடிந்ததும் அரண்மனையிலோலக்கமண்டபத்திலே விசுவாமித்திரனும் இராமலட்சுமணரும் உடனிருக்கத் தங்கினனென்க. சந்திரன் தோய் கோயில் - (தன்னிற்பதிக்கப்பட்டுள்ள இரத்தினங்களின் குளிர்ந்த ஒளியால்) சந்திரமண்டலத்தை யொத்துவிளங்கும் இராசமாளிகை என்றுமாம். சிலைக் கைம் மைந்தன் - வில்லின்வலிமையோடு தோள்வலியையுமுடையவன் என்றவாறுமாம். எண்தவம் - (எம்பெருமானைத்) தியானஞ்செய்வதாகிய தவம் என்றுமாம். முனிவரொடும், பலர்பால் - உயர்வுப்பன்மை. முனிவர்களுடனே என்று உரைப்பாருமுளர். எய்தி - (யாகசாலையினின்று) வந்துசேர்ந்து. மறைமுறையாலே வேள்விமுற்றி என்றும் இயைக்கலாம். பி - ம்:—[1]பெரு. [2]இந்திரனில். [3]படித்த. (௬௫)

௬௬.—இராமலட்சுமணர்களை யாவரோவென்று சனகன் வினவ, முனிவன் கூறுதல்.

இருந்தகுலக் குமரர்தமை யிரு[1]கண்ணின் [2]முகத்தழகு பருகநோக்கி,யருந்தவனை யடிவணங்கி [3]யாரிவரை யுரைத்திடுமி னடிகளென்ன, விருந்தினர்க ணின்னுடைய வேள்விகா ணியவந்தார் வில்லுங் காண்பார், பெருந்தகைமைத் [4]தயரதன்றன் புதல்வரென வவர்தகைமை பேச லுற்றான்.

(இ - ள்.) (அங்ஙனம்வீற்றிருந்த சனகமகாராசன்), இருந்த குலம் குமரர்தமை - (தன்னருகில்) வீற்றிருந்த உயர்குலத்துதித்த சக்கரவர்த்தி குமாரர்களை, இரு கண் இன் முகத்து அழகு பருக - (தனது) இரண்டுகண்களும் (அவர்களது) இனிய முகத்தின் அழகை முழுவதும் உண்ணும்படி, நோக்கி - (நன்றாகப்)பார்த்து, (உடனே), அரு தவனை - அரிய தவத்தையுடைய விசுவாமித்திரமுனிவனை, அடி வணங்கி - திருவடிகளில் விழுந்து தண்டனிட்டு, (அவரைநோக்கி), 'அடிகள் - சுவாமிகளே! யார் - (இக்குமாரர்கள்) யாவர்? இவரை உரைத்திடுமின் - இவர்களை (இத்தன்மையரென்று) எடுத்துச் சொல்லுவீராக', என்ன - என்றுகூற, (கௌசிகமுனிவன்), 'விருந்தினர்கள் - (உன்பக்கல்) புதியராய்வந்த இவர்கள், பெரு தகைமை தயரதன்தன் புதல்வர் - கம்பீரமான சிறந்த குணத்தையுடைய தசரதசக்கரவர்த்தியின் திருக்குமாரர்கள்; நின்னுடைய வேள்வி காணிய வந்தார் - உனது யாகத்தைப் பார்க்கும்பொருட்டு வந்தார்கள்; வில்உம் காண்பார் - (நின்னிடமுள்ள சிவ) தனுசின் வலிமையையும் (பார்க்கவேண்டுமென்றுமாற்) பார்ப்

பார்கள்', என - என்றுகூறி, அவர் தகைமை - அச்சக்கரவர்த்திகுமாரர்க ளின் மகிமையை, பேசல்உற்றான் - சொல்லத்தொடங்கினான்; (எ - று.)— அதனை மேலிற்படலமுழுவதிலுங் காண்க; இது மேற்படலத்துக்குத் தோற்றுவாய் செய்தவாறும்.

அடிகள் - பெரியவரென்னும் பொருளுள்ளது; பாதா: என்னும் வட சொல்லின் மொழிபெயர்ப்பு: இது, இங்கே அண்மைவிளி. இங்கே குறித்த சிவவில் சனகமகாராசனாற் சீதைக்குக் கன்னியாசுல்கமாக வைக்கப்பட்ட தென வுணர்க. குமரர்தமைநோக்கி யென இயையும். பி - ம்:—[1]கண்ணும். [2]முகந்தழுகுபருகி. [3]யாரையிவர். [4]சிறுவரென. (கருஎ)

மிதிலைக்காட்சிப் படலம் முற்றிற்று.

## கக - ஆவது குலமுறைகிளத்துபடலம்

சூரியவமிசத்தரசர்களது மகிமையைக் கௌசிகமுனிவன் சனமகா ராசனுக்குக் கூறுகின்ற செய்தியைச் சொல்லும் பாகமென்று பொருள். குல முறை - பிரவரம். குலம் - இங்கே, ராமலக்ஷ்மணர்பிறந்த குலம். முறை - குணம்; இங்கே, பெருமை. இனி, முறை - முறைமையுமாம். கிளத்துதல் - கூறுதல். வரலாற்றுப்படலம் என்று சிலபிரதிகளில் இந்தப்படலத்திற்குப் பேர் காணப்படுகின்றது.

க.—மனுவும் பிருதுவும்.

**ஆதித்தன் குலமுதல்வன் மனுவினையா ரறியாதார்**
**பேதித்த வுயிரனைத்தும் பெரும்பசியால் வருந்தாமற்**
**சோதித்தன் வரிசிலையா னிலமடந்தை முலைசுரப்பச்**
**சாதித்த பெருந்தகையு மிவர்[1]குலத்தோர் தராபதிகாண்.**

(இ - ள்.) ஆதித்தன் குலம் முதல்வன் - சூரியவமிசத்தில் தோன்றிய முதற்புத்திரனான, மனுவினை - மனுச்சக்கரவர்த்தியை, அறியாதார் ஆர் - (உலகத்தில்) அறியாதவர் யாவருளர்? [எவருமில்லை, எல்லோரு மறிவ ரென்றபடி]; பேதித்த உயிர் அனைத்துஉம் - பலவகைப்பட்ட பிராணிவர்க் கங்களெல்லாம், பெரு பசியால் வருந்தாமல் - பெரிய பசியினால் வருத்தப் படாதபடி, சோதி தன் வரி சிலையால் - ஒளியையுடைய தனது கட்டமைந்த வில்லினால், நிலம் மடந்தை முலை சுரப்ப - பூமிதேவி முலைப்பால் சுரந்திடும் படி, சாதித்த - (அரியகாரியத்தை) முயன்று செய்துமுடித்த, பெரு தகை உம் - பெருமைக்குணமுடையவனும், இவர் குலத்து ஓர் தராபதி காண் - இக் குமாரரதுவமிசத்திலேதோன்றின அரசனேயென்று அறிவாய்; (எ - று.)

இந்தப்படலத்துள்ள உக-கவிகளும்-விசுவாமித்திரமுனிவன் இராமபிரா னது முன்னையோர் பெருமையையும் தன்மையையும் சனகராசனுக்கு உணர் த்தவேண்டி கூறுகின்றவை: ஆகவே, இவை-ஒருதொடர். இப்பாடலுக்கு விசுவாமித்திரன் என்ற எழுவாய் வருவித்து, இறுதிச் செய்யுளிலுள்ள உரை த்தான் என்பதோடு முடிக்க.

ஆதியிற் பிரமதேவன் பிரஜைகளைப்படைக்க நினைத்து ஒன்பது புத்திரரை மனத்தினாற் சிருஷ்டித்தான்; அவர்கள், பிரமனுக்குச் சமானமாகையால் நவப்பிரஜாபதிகளென்றும், படைப்புத்தொழிலிற் பிரமதேவனுக்கு உதவியாய்நின்றவராதலால் உபப்பிரமாக்களென்றும் உயர்த்திக்கூறப்படுவார்கள்; அவர்களில் தட்சப்பிரஜாபதியினுடைய புத்திரிகள் பலருள் ஒருத்தியான அதிதியென்பவள், மரீசிப்பிரஜாபதியினது குமாரனான காசியபமகாமுனிவனது மனைவிகளுள் ஒருத்தியாயினாள்; அவ்வதிதிதேவியினிடம் விவஸ்வான் என்று ஒரு பெயருள்ள சூரியன் தோன்றினான்; மற்றைத் தேவர்கள்பலரும் அவளது குமாரர்களே யாவர்: ஆதலால், சூரியனுக்கு ஆதித்யனென்றும், மற்றைத்தேவர்களுக்கு ஆதிதேயரென்றும் பெயர் வழங்கிற்று. அந்தச்சூரியனது குமாரன், மனு; இவன் - விவஸ்வானது புத்திரனாதலால், வைவஸ்வதமனுவென்று கூறப்படுவன்; இவன்தான், இராமபிரானது வமிசத்துக்கு ஆதிபுருஷன்; இந்தமனு, மனுக்கள் பதினால்வருள் ஏழாவனாவன்; இம்மனுவினது அந்தரமே [வைவஸ்வத மன்வந்தரமே] இப்பொழுது நடக்கின்றது. இந்தமனு நல்லொழுக்கத்திலேயேயொழுகி எல்லா நற்குணங்களோடுங் கூடிப் பிரசித்திபெற்றவனாதலால், 'இவனை யாரறியாதார்' என்றது.

பெருந்தகை - பிருதுசக்கரவர்த்தி. வேனன் என்னும் அரசன் குணவீனனாய்த் துஷ்டசுவபாவனாய் ஸ்ரீமகாவிஷ்ணுவை நிந்தித்து யாகம் தானம் முதலிய சற்காரியங்களைச் செய்யவொட்டாது தகைந்து முனிவர்கள் எவ்வளவு நற்புத்தி கூறியதையுங் கொள்ளாமலிருக்கவே, அவர்கள் அவனைக் குசைதருப்பைகளினாலே அடித்துக்கொன்று, அவனுடைய வமிசவிருத்திக்காக அவனிடம் ஒருபுத்திரனை உண்டாக்கவேண்டுமென்று ஆலோசித்து அவனுடைய வலக்கையைக் கடைந்து அக்கினியுண்டாக்கி அதிற் பிரமனைக்குறித்து யாகஞ்செய்ய, அவ்வேள்வியிற் பிருதுஎன்பவன் நாராயணாம்சமுடையவனாய் உதித்தான்; வேனன் இறந்துபோனதனாற் சிலகாலம் அராஜகமாயிருந்த பூமியிலுள்ள ஜனங்கள் யாவரும், இப்பிருதுமகாராஜன் பிரமதேவனாற் பட்டாபிஷேகஞ்செய்யப்பட்டுப் பூமண்டலமுழுவதையும் அரசாளத்தொடங்கினபொழுது இவனிடம்வந்து 'ஓ மகாராஜனே! நீ இராச்சியாபிஷேகஞ் செய்வதற்குமுன்னே பூமண்டலம் அராஜகமாகிச் சகலஓஷதிவருக்கங்களையுந் தனக்குள்ளே இழுத்துக்கொண்டது; ஆனதனால் இப்போது ஆஹாரங்களில்லாமற் பிரஜைகள் பசித்துன்பத்தாலே நாசத்தை யடைகிறார்கள்; பசியினாற் பீடிக்கப்படுகிற எங்களுக்குப் பிழைக்கும்படி ஓஷதிகளையுண்டாக்கி அன்னபானங்களைக் கொடுத்துக் காத்தருளவேண்டும்' என்று முறையிட, அதனைக்கேட்டு அம்மன்னவன் அவ்வாறேஆகுகவெனச் சொல்லித் தான் பிறந்பொழுது தன்னுடனே ஆகாசத்திலிருந்து விழுந்த அஜகவமென்கிற முதல்வில்லையுந் திவ்வியமான பாணங்களையுங் கவசத்தையுந் தரித்தவனாய்க் கோபம் மூண்டு பூமியின்மேல் எதிர்த்துவந்தான்; அப்பொழுது பூதேவி பசுரூபத்தைத்தரித்துப் பயந்தோடினாள்; அவனும் விடா

மற் பின்தொடர்ந்துபோனுன்; பின்பு அந்தப்பூதேவி சகலலோகங்களிலும் ஓடிப்பார்த்தும் எங்குஞ்சரணங்காணுமையால் அவ்வரசனடியையே யடைந்து 'உலகத்திலுண்டான ஒஷதிவருக்கங்கள்யாவும் என்னிடத்தில் பாலின் வடிவாக இருக்கின்றன; தகுந்த ஒருகன்றையுண்டாக்கிக் கொடுத்தால் அதனிடத்து அன்பினுல் அவற்றைச் சுரந்து கொடுக்கிறேன்; நான் கொடுக்கிற பால் பூமிமுழுவதும் பரவும்பொருட்டு, மேடுபள்ளமாயிருக்கிற இடம் சமமாகும்படி மலைகளை விலக்கி நிரவவேண்டும்' என்று கூறினுள்; அரசன் அவ்வாறே மலைகளையெல்லாந் தன்வில்லினுனியால் அப்பால் தள்ளிப் பூமண்டலத்தைச் சமமாகச்செய்து சுவாயம்புவமனுவைக் கன்றுகவைத்துத் தனதுகையைப் பாத்திரமாகச்செய்து பசுவடிவங்கொண்ட பூமியினிடத்திருந்து சகல ஓஷதிகளையுங் கறந்து பெய்து பூமிமுழுவதும் பரவச்செய்தான்; அதனுற் பிரஜைகள் சந்தோஷமடைந்து அவனுண்டாக்கின ஆகாரத்திஞலே வலிமையைப்பெற்று ஜீவித்துவரலாஞர்கள்; இவனுற் சீர்திருத்தப்பட்டமைபற்றிப் பூமிக்குப் பிருதிவியென்கிற பெய ருண்டாயிற்று: (இச்சக்கரவர்த்தியை ஆதிமனுவாகிய சுவாயம்புவமனுவினது சந்ததியில் தோன்றினவனுகப் புராணங்கள் பலவற்றிலுங் கூறியிருப்பினும் நல்லிசைப் புலவராகிய கம்பர் இங்ஙனம் வைவச்சுவதமனு வமிசத்தவனுகக் கூறியது கற்பபேதத்தாற் போலும்; வைவச்சுவதமனுவமிசத்திலும் பிருது வென்னும் பெயருடையானேர் அரசன் உண்டு.) பெருந்தகை - பண்புத்தொகையன்மொழி. பேதித்த உயிர் - நால்வகைத்தோற்றத்து எழுவகைப் பிறப்பினவாய்ப்பகுக்கப்பட்டுள்ளபிராணிவகைகள். பி-ம்:—'குலத்தாபதி

உ.—இட்சுவாகுமன்னவன்.

பிணி[1]யரங்க வினையகலப் பெருங்காலந் தவம்பேணி
மணியரங்க நெடுமுடியாய் மல[2]ரயனை வழிபட்டுப்
பணி[1]யரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாங்காண
வணியரங்கந் தந்தானை யறியாதா ரறியாதார்.

(இ - ள்.) மணி - நவரத்தினங்களும், அரங்கு - அழுத்திப்பதிக்கப்பெற்ற, அம் - அழகிய, நெடு முடியாய் - பெரிய கிரீடத்தையுடைய சனகமகாராசனே! பிணி அரங்க - நோய்கள் கெடவும், வினை அகல - (அவற்றிற்குக்காரணமாகிய கொடிய) ஊழ்வினைகள் ஒழியவும், பெரு காலம் - அநேகவருஷகாலம், தவம் பேணி - தவத்தை விரும்பிச்செய்து, மலர் அயனை - தாமரைமலரில்தோன்றிய பிரமதேவனை, வழிபட்டு - வணங்கிப்பூசித்து, (அவனருளால்), பணி அரங்கம் பெரு பாயல் பரம் சுடரை (அப்பிரமனது திருவாராதனத்திலிருந்த) ஆதிசேஷனது உடம்பினிடத்தைப் பெரியதிருப்பள்ளிமெத்தையாகக்கொண்டுள்ள எல்லாவொளிகளினும் மேம்பட்ட ஒளிவடிவமான நம்பெருமானை, யாம் காண- எம்போலியருந் தரிசித்துஉய்யும்படி, அணி அரங்கம் - அழகிய ஸ்ரீரங்கவிமானத்துடனே, தந்தானை-(சத்தியலோகத்திலிருந்து பூலோகத்துக்குக்) கொண்டு

வந்த இவ்வம்சத்த ஞகிய இக்ஷ்வாகுமகாராசனை, அறியாதார் - (உலகத்தில் அறியாதவர்கள், அறியாதார் - அறிவில்லாதவரேயாவர்; (எ - று.)

'அறியாதா ரறியாதார்' என்றதனால், இக்ஷ்வாகுமகாராஜன் அறிவுடையார்யாவராலும் அறியப்பட்ட மிகப்பிரசித்திபெற்ற ஓரரச னென்றும், அறிவுபடைத்ததற்குப்பயன் அப்பெருந்தகைமன்னனது மகிமையை அறிதலேயாமென்றும், எல்லாமறிந்தும் அவனையறியாதவர் அறிவிலாரென்றும் விளக்கிய வாறும். (ஸ்ரீவைகுண்டம், திருப்பாற்கடல், யோகியரது உள்ளக் கமலம் என்னுமிவற்றிலுங்காட்டில் திருமால்) திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்கு மிட மாதல்பற்றி, ரங்கமென்று இவ்விமானத்துக்குப்பெயர். ரங்கமென்னும் வடமொழி, அரங்கமென வந்தது. பிரணவாகாரமான இந்த ஸ்ரீரங்கவிமானத்திலே ஆதிசேஷசயனத்திலே திருமகளும் நிலமகளுந் திருவடிவருடப் பள்ளிகொண்டருளுந் திருமால் ஆதியிற் சத்தியலோகத்திற் பிரமதேவனது திருவாராதனத்திருவுருவமா யிருந்தான்; வைவச்சுவதமனுவானவன் ஒருகால் தும்மும்பொழுது அவனது மூக்கினின்று பிறந்த புத்திரனுகிய இட்சுவாகு மன்னவன், பிரமதேவனைநோக்கிப் பலகாலம் அரும்பெருந்தவம்புரிந்து அத்தேவனருளால் அவ்வெம்பெருமானைத் தான் பெற்றுத் திருவயோத்திக்கு எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்து பிரதிஷ்டைசெய்து ஆராதானம்பண்ணிவந்தான்; அந்த ஸ்ரீரங்கநாதனே இட்சுவாகுமுதல் இராமபிரானீருகவுள்ள இரவிகுலமன்னவரெல்லோர்க்குங் குலதெய்வமாகி விளங்கினுன்; இராமபிரான் தனது பட்டாபிஷேகத்தின் பின்பு சுக்கிரீவன் முதலியோரை விடைகொடுத்து ஊருக்கு அனுப்பும்பொழுது தனதுதிருவாராதனமான அந்நம்பெருமாளைவிபீஷணுழ்வானிடங் கொடுத்து ஆராதித்துவரும்படி நியமித்தனுப்பினுன்; அங்ஙனமே அவ்வரக்கர்பெருமான் அவ்வமரர்பெருமானை அவ்விமானத்துடனே யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு இலங்கைநோக்கிச் செல்லும்பொழுது இடைவழியிலே உபயகாவேரிமத்தியிலே பெருமான் புடைபெயராது விமானத்துடனே நிலைநின்றருளினுர்: அந்தத்தலமே நூற்றெட்டுத்திருமால்திருப்பதிகளுள்ளுஞ் சிறந்த திருவரங்கம்பெரியகோயிலென்னுஞ் சோழநாட்டு முதற்றிருப்பதியாம். பரஞ்சுடர் - சூரியன் சந்திரன் அக்கினி யென்னும் முச்சுடர்களினும் மேம்பட்ட ஒளியுருவம். பணி - படமுடையது. பாயல் அல் - சாரியை. அரங்க-அழுந்த; அழிய. திரிபணி. பி - ம்:—[1]அரக்கு. [2]அயனே வழிபட்ட.

**ஙு.—ககுத்ஸ்தன்.**

தான்றனக்கு வெலற்கரிய தானவரைத் தலை[1]துமித்து
வான்றரக்கிற் றிகொலென்று குறையிரப்ப வரங்கொடுத்தாங்
கேன்றெடுத்த சிலையினு யிகல்புரிந்த விவர்குலத்தோர்
தோன்றலைப்பண் [2]டிந்திரன்காண் விடையேறுய்ச் சுமந்தானும்.

(இ - ள்.) தான் - தேவேந்திரன்தான், தனக்கு வெலற்கு அரிய - தன்னுற் செயித்தற்குக்கூடாத, தானவரை - அசுரர்களை, தலை துமித்து - தலையைத் துணித்து [கொன்றுஎன்றபடி], வான் தர கிற்றிகொல் - தேவலோ

கத்தை (அவர்களிடத்திருந்து எனக்கு மீட்டுக்)கொடுக்கவல்லேயோ? என்று-என்றுசொல்லி, குறை இரப்ப - (தனது) குறையைக்கூறிப் பிரார்த்தித்து நிற்க, வரம் கொடுத்து - (அங்ஙனமேசெய்வதாக வாக்களித்து அவனுக்கு) அவ்வரத்தைக்கொடுத்து, ஆங்கு என்று - அப்பொழுதே (அச்செய்கையை) மேற்கொண்டு, எடுத்த சிலையினன் ஆய் - கையிற்பிடித்த வில்லையுடையவனாய், இகல் புரிந்த - (அசுரர்களோடு) போர்செய்த, இவர் குலத்து ஓர் தோன்றலே-இக்குமாரர்கள்அவதரித்த வமிசத்திற்பிறந்த ஓரரசனே, பண்டு - முன்காலத்தில், விடை ஏறு ஆய் - எருதின் வடிவமாய், சுமந்தான்உம் - அப்பொழுது) சுமந்துநின்றவனும், இந்திரன்காண் - தேவராஜனான அவ்விந்திரனே யாவன்; (எ - று.)

முன்னொருகாலத்திலே தேவர்க்கும் அசுரர்க்கும் கொடியயுத்தமுண்டாகி அதில் மகாபலவான்களான அசுரர்களாலே தேவர்கள் வெல்லப்பட்டவராய் ஆபத்சகாயரான ஸ்ரீமந்நாராயணனை ஆராதித்தார்கள்; அவ்வெம்பெருமான் பிரசன்னனாகி அவர்களை நோக்கி 'நான் பூமியில் புரஞ்சயனென்னும் புரவலனது உருவத்திற் பிரவேசித்து அவ்வசுரரைச்சங்கரிப்பேன்:நீவிர் அவ்வரசனை உங்களுக்குத் துணைக்கொள்ளுங்கள்' என்று நியமித்தார்; தேவர்கள் அவ்வாறே இக்ஷ்வாகுகுமாரனான சசாதனென்பவனது மகனான புரஞ்சயனிடம்வந்து வேண்ட, அவன், தனக்குத் தேவேந்திரன் வாகனமாய்நிற்பின் அவன்மீதேறிப் போர்செய்து பகைவரையொழிப்பேனென்று கூறவே, தேவராசன் தடைசொல்லாது உடனே விருஷபரூபியாகிநிற்க, பின்பு அப்புரஞ்சயன் அவ்வெருத்தின்முசுப்பின்மேல்ஏறி வீற்றிருந்து அசுரர்யாவரையும் எளிதிற் சங்கரித்தான்: இந்திரனை வாகனமாகக்கொண்டதனால் இந்திரவாகன னென்றும், எருதுவடிவமான இந்திரனது ககுத்எனப்படுகிற முசுப்பின்மேல் ஏறிஇருந்ததனால் ககுஸ்த்தனென்றும் இவனுக்குப் பெயருண்டாயிற்று; இவன்வமிசத்துப்பெயரால் இராமபிரான் காகுத்தனெனப்படுவன்.

நிற்றி - முன்னிலையொருமைமுற்று; ஆற்றலுணர்த்தும் இடைச்சொல்லான நில் - பகுதி. 'சுமந்தானும்' இறந்ததுதழுவிய எச்சம். 'இகல் புரிந்த' என்றது - அவ்வசுரர்கள் தேவர்களை வென்றது போல வஞ்சனையால் வெல்லாது வீரத்தாலேயே அவர்களை இவன் வென்றமையை விளக்கிற்று. பி-ம்:-[1] நமித்தென். [2] இந்திரனே தொல்லேறுய்ச்சுமந்தானே. (ரு)

ச.—பாற்கடல் கடைந்து அமுதளித்தவன்.

அரசனவன் பின்னோரை யென்னுலு மளப்பரிதா
லுரைகுறுக நிமிர்கீர்த்தி யிவர்குலத்தோ னொருவன்கா
ணரைதிரை மூப் பிவை[1]மாற்றி யிந்திரனு நந்தாமற்
குரைகடலை நெடுவரையாற் கடைந்[2]தமுது கொடுத்தானும்.

(இ - ள்.) அரசன் அவன் பின்னோரை - அந்தக்ககுத்தமகாராசனது குலத்திற் பின்தோன்றிய அரசர்களை, அளப்பு என்னுலும் அரிது - (இத்தன்

மையரென்று) அளவிட்டுச்சொல்லுதல் என்றாலும் முடியாது; நரை - மயிர் வெளுத்தலும், திரை - உடம்பு தோல்சுருங்குதலும், மூப்பு - (இவற்றிற்குக்காரணமான) கிழத்தனமும், இவை - என்னு மிவற்றை, மாற்றி - ஒழித்து, இந்திரன்உம் - தேவேந்திரனும், (மற்றைத்தேவர்களும்), நந்தாமல் - மரணமடையாதபடி, குரை கடலை நெடு வரையால் கடைந்து அமுது கொடுத்தான்உம் - ஒலிக்கின்ற திருப்பாற்கடலைப் பெரிய (மந்தர) மலையைக் கொண்டு கடைந்து (அதிலிருந்து) அமிருதத்தை(எடுத்துத் தேவர்க்கு)க் கொடுத்தருளினவனும், உரை குறுக நிமிர் கீர்த்தி இவர் குலத்தோன் ஒருவன் காண் - (பாஷையிற்) சொற்கள் குறைவுபடும்படி அதிகமாகவுள்ள கீர்த்தியையுடைய இக்குமாரர்களது குலத்தில் அவதரித்த ஓரரசனே.

இப்பாட்டிற்குறித்த அரசன் இன்னனென்பது எவ்வாற்றாலும் எமக்கு விளங்கவில்லை; கையெழுத்துப்பிரதிகளில் இப்பாட்டையடுத்து 'நிமி' என்னும் பெயர் எழுதப்பட்டுள்ளது; ஆயினும் அதற்கு ஆதாரமும் வரலாற்று விவரமும் ஏற்படவில்லை; இங்ஙனமே இப்படலத்தில் இன்னும் இரண்டொன்று உண்டு; இவை விளங்கினால் வெளியிடப்படும். தேவர்களும் அசுரர்களும் திருமாலின்நியமனத்தால் அமிருதத்தைப்பெற்றுண்டு பிணிபசிமூப்பிறப்புத்துன்பங்களைஒழித்து வாழும்பொருட்டு மந்தரமலையை மத்தாகநாட்டி வாசுகியைக் கடைகயிறாகப்பூட்டிச் சந்திரனை அடைதூணாக நிறுத்தித் திருப்பாற்கடலைக் கடையத்தொடங்கினபொழுது அதற்கேற்ற ஆற்றலிலராய்க் கவலைபுற்றுநிற்க, அக்காலத்து வாலியென்னும் வானரராஜன்சென்று அவர்களைவிலக்கித் தானொருவனாகவே அப்பாம்பாகிய தாம்பின் வாலையுந் தலையையும் இரண்டுகைகளிலுங்கொண்டு சிரமமில்லாமல் எளிதில் வலியப்பிடித்திழுத்துக் கடைந்து காரியத்தைமுடித்து அதனின்றெழுந்த அமிருதத்தைத் தேவர்களுக்குக் கொடுத்ததாக ஒருகதை காஞ்சிப்புராணத்திலும் இக்கம்பராமாயணத்திலும் உத்தரகாண்டத்திலும் பெருக்கமாகவுஞ் சுருக்கமாகவுங் கூறப்பட்டுள்ளதுபோலப் பாற்கடல்கடைந்த அக்காலத்துச் சூரியகுலத்தரசனொருவன்சென்று உதவிபுரிந்து அமுதமளித்ததாக ஒருகதையை எந்தநூலிலேயோ கண்டு ஆசிரியர் இவ்வாறு கூறியிருக்கவேண்டுமெனக் கருதப்படுகிறது. 'என்றாலும்' என்ற உம்மை - உயர்வுசிறப்பு: இதனால், விசுவாமித்திரன் நெடுங்காலம் பெருந்தவஞ்செய்து அரிதிற்பெற்ற தனது உணர்வின் உயர்ச்சியைத் தெரிவித்தான். 'உரை குறுக நிமிர் கீர்த்தி' என்றது-இக்குமாரர்களது பெரும்புகழ் சொல்லுக்கு அடங்காது: இவர்கள்கீர்த்தியைக்கூறுதற்கு வேண்டியவளவு சொற்கள் உலகத்திற் கிடையா என்றவாறும். 'இந்திரனும்' என்ற உம்மை - பிறதேவர்களைத் தழுவியதனால், எச்சப்பொருளதே; உயர்வுசிறப்பாகக் கொண்டால், தேவராசனுக்குப் பிழைப்புண்டாக அமுதுகொடுத்தான் மனிதராசனென்ற சிறப்பு விளங்கும்: மனிதர்க்குத் தேவர் அருள்செய்தல் இயல்பேயன்றித் தேவர்க்கு மனிதர் அருளுதல் அரியதொன்றாமாறு காண்க. பி - ம்:—[1]எய்தி. [2]அமுதம். (௪)

ரு.—மாந்தாதா.

[1]கருதலரும் பெருங்குணத்தோ [2]ரிவர்[3]முதலோர் கணக்கிறந்தோர்
திரிபுவன முழுதாண்டு சுடர்நேமி செல[4]நின்றோர்

பொருதுறைசேர் வேலினாய் புலிப்போத்தும் புல்வாயு
மொருதுறையி னீருண்ண வுல[5]காண்டோ னுளனொருவன்.

(இ - ள்.) பொருது உறை சேர் வேலினாய் - போர்புரிந்து பின்புஉறையினிடஞ் சேர்கின்ற வேலாயுதத்தையுடைய சனகமகாராசனே! சுடர் நேமி செல - ஒளியையுடைய தமது ஆஜ்ஞாசக்கரம் (எங்குந்தடையில்லாமற்) செல்லும்படி, திரி புவனம் முழுது ஆண்டு நின்றோர் - மூன்றுலோகங்களையும் முழுவதும் அரசாண்டுநின்றவர்களும், கருதல் அரு பெரு குணத்தோர் - நினைப்பதற்குங் கூடாத (சீவகாருணியம் முதலிய) சிறந்த குணங்களையுடையவர்களு மாகிய, இவர் முதலோர் - இக்குமாரர்கள்குலத்து முன்னரசர்கள், கணக்கு இறந்தோர் - அளவற்றவர்கள்; (இவர்குலத்துள்), புலி போத்துஉம் புல்வாய்உம் ஒருதுறையில் நீர் உண்ண உலகு ஆண்டோன் - (இயற்கையிற் பகைமையுடைய) ஆண்புலிகளும் மான்களும் (அப்பகையின்றி) ஒருநீர்த்துறையிலேயே (வந்திறங்கி) நீர்பருகும்படி உலகத்தை அரசாண்ட அரசன், ஒருவன் உளன் —; (எ - று.)

புலிப்போத்தும் புல்வாயும் ஒருதுறையில் நீருண்ண - பெரியவை சிறியவற்றை நலியாதபடி என்றவாறும். கருத லருமை கூறவே, சொல்லலருமை தானே விளங்கும். அரசனாணையினிடத்துத் தமக்குள்ள அச்சத்தால் எவையுந் தம்மால் நலியத்தக்கவற்றையும் நலிந்தில வென அரசாட்சி நீதிமுறைமை விளங்கும். 'இங்ஙனம் அரசாண்டவன் மாந்தாதா' என்று கையெழுத்துப்பிரதிகளில் இப்பாட்டின்பக்கத்தி லெழுதியிருப்பதனால் தெரிகின்றது; கதையொன்றுங் காணப்படவில்லை. இவன் அரசாண்டகாலத்தில் எங்குஞ் சத்துவகுணமே தலையெடுத்து நின்றதனால் விவேகமில்லாத மிருகங்கள் முதலிய பிராணிகளுக்குக்கூட ஒன்றன்மேலொன்றுக்கு அன்பும்அருளுமுண்டாயினவேயன்றி ரஜோகுண தமோகுண காரியங்களாகிய கொலை பகை அச்சம் முதலியன உண்டாயினவில்லை யென்க. போத்து - ஆண்பாற்பெயர்; "பெற்ற மெருமை புலி மரை புல்வாய், மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே" என்றதனால், 'புலிப்போத்து' எனப்பட்டது. புல்வாய் - புல்லையுண்ணும்வாயையுடையதெனக் காரணப்பெயர்: வேற்றுமைத்தொகையன்மொழி. பொருதுறைசேர் வேலினாய் - "உறையோடும் நெடுவேலாய்" என்பர்மேலும். உறை - படைக்கூடு. பி - ம்:—[1]கருதரிய. [2]அவன். [3]பின்பு. [4]நின்றோன் [5]ஆண்டானொருவன் காண். (௫)

௬.—முசுகுந்தன்.

மறைமன்னு மணிமுடியு மாரமும்வா ளொடுமின்னப்
பொறைமன்னு வானவருந் தானவரும் [1]பொருமொருநாள்
விறன்மன்னர் தொழுகழலா யிவர்குலத்தோன் விற்பிடித்த
வறமென்ன வொருதனியே திரிந்தமரா பதிகாத்தோன்.

(இ - ள்.) விறல் மன்னர் தொழு கழலாய் - வெற்றியையுடைய அரசர்கள்பலரும் வணங்குகிற பாதங்களை யுடையவனே! பொறை மன்னு வான

வர்உம் - பொறுமைமிகுந்த தேவர்களும், தானவர்உம்-(பொறுமையில்லாத) அசுரர்களும், பொரும் - (முன்னே ஒருவரோடொருவர்) போர்செய்த, ஒரு நாள் - ஒருகாலத்தில், இவர் குலத்தோன் - இக்குமாரர்களது குலத்தின ஞகிய ஓரரசன், மறை மன்னு மணி முடிஉம்-வேதவிதிப்படி (அபிஷேகஞ் செய்யப்பட்டுப்) பொருந்தின (தனது) நவரத்தினகசிதமான கிரீடமும், ஆரம் உம் - ஹாரங்களும், வாளொடு - ஒளியுடனே, மின்ன - விளங்கும்படி, வில் பிடித்த அறம் என்ன - கையில் வில்லேந்திவந்த தருமதேவதைபோல, ஒரு தனியே திரிந்து - தானொருவனுகவே (ஆயுதமுங்கையுமாய் மேலுல கத்துச்சென்று) சஞ்சரித்து, அமராபதி காத்தோன் - (இந்திரனது) அமரா வதிபட்டணத்தைக் காத்துநின்றான்; (எ - று.)

இங்ஙனந் தேவாசுரயுத்தத்திற் புகுந்து தேவர்களுக்கு உதவியாய் அசுரர்களை வென்ற வரலாறு சூரியவமிசத்தரசர்கள்பலர்க்கு நூல்களில் ஆங் காங்குக் கூறப்படினும் இங்குக்குறித்தவன் முசுகுந்தசக்கரவர்த்தி யெனத் தோன்றுகின்றது. இவன் பூலோகத்தி லரசாண்டு வீற்றிருக்கையில், தேவ லோகத்தில் அசுரர்கள் தேவர்களைச் சூழ்ந்து பெரும்போரியற்றிப் புறங் கொடுத்தோடும்படி துரத்தியடிக்க, இந்திராதிதேவர்கள் முன்நிற்கமாட்டா தவராய் இவனைச் சரணமடைந்து துதித்து வேண்ட, இவன் உடனே வா னுலகத்திற்சென்று போர்செய்து அசுரர்களைக் கொன்று பகையொழித்துச் சுப்பிரமணியக்கடவுள் தேவசேனுபதியாய்வருகிறவரையிலும் வானுலகத் தைக்காத்து இந்திரனது இளைப்பைத் தீர்த்திருந்தான். பின்பு, பல நாளா கத் தூக்கமில்லாமல் அலுத்திருந்ததனுல் நெடுங்காலந் துயிலும்படி தேவர் களிடம் வரம்பெற்று மண்ணுலகத்துக்குவந்து ஒருகுகையிலே படுத்து நித் திரைசெய்திருந்து துயிலுணர்ந்தபொழுது ஸ்ரீகிருஷ்ணபகவானது சேவை யைப் பெற்று அவனருளால் முத்தியுலகத்தைப் பெற்றான். வாள் - ஆயுதமு மாம். மறை-சிற்பநூலுமாம். வானவர்க்கு 'பொறைமன்னு' என்னும் அடை மொழி கொடுத்ததற்கு எற்பத் தானவர்க்கு, 'பொறையில்லாத' என்னும் அடைமொழி வருவிக்கப்பட்டது. விற்பிடித்த அறம் - இல்பொருளுவமை. அமராபதி - வடசொற்றிரிபு; தேவர்களையுடையதென்பது பொருள். 'அமரர்பதி' என்றும் படிக்கலாம். பி - ம்:—[1]பொருதநாள். (சு)

எ.—சிபிசக்கரவர்த்தி.

இன்னுயிர்க்கு மின்னுயிரா யிரு[1]நிலங்காத் தாரென்று
பொன்னுயிர்க்குங் கழலவரை யாம்போலும் [2]புகழ்கிற்பா
மின்னுயிர்க்கு நெடுவேலா யிவர்குலத்தோன் மேற்பறவை
மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறாக [3]வழங்கினனுல்.

(இ - ள்.) மின் உயிர்க்கும் நெடுவேலாய் - மின்னல்போன்ற ஒளி உண் டாவதற்கு இடமான நீண்ட வேலையுடைய சனகனே! பொன் உயிர்க்கும் கழலவரை - அழகை விளக்குகிற வீரக்கழலையுடைய இக்குலத்தரசர்களை. இன் உயிர்க்குஉம் இன் உயிர் ஆய் இரு நிலம் காத்தார் என்று - (உலகத்தி

னுள்ள) இனிமையான உயிர்களெல்லாவற்றுக்கும் (தனித்தனி) இனிய உயிரை ஒத்திருந்து பெரிய பூலோகத்தை அரசாண்டார்களென்றுசொல்லி, புகழ்கிற்பாம் - புகழவல்லோம், யாம் போலும் - நாமே போலும்?[புகழவல்லேமல்லேம் யாமென்றபடி]; இவர் குலத்தோன் - இக்குமாரர்களது குலத்தினனாகிய அரசனொருத்தன், மேல்-முன்காலத்தில், பறவை மன் உயிர்க்கு - ஒருபறவையினது நிலைபெற்ற உயிருக்கு, மாறுஆக - ஈடாக, தன் உயிரை வழங்கினன் - தனது உயிரைக் கொடுத்தான்; (எ - று.)

இதனாற் கூறப்பட்டவன், சிபிச்சக்கரவர்த்தி; இவனதுசரித்திரம் கையடைப்படலத்திற் கூறப்பட்டது. இவன் நூறுஅசுவமேதயாகம் புரிந்து நான்காமனுவந்தரத்தில் இந்திரனாக வீற்றிருந்தான். இன்னுயிர்க்கு மின்னுயிராய் என்றது - யாவர்க்கும் ஜீவனாதாரமா யென்றபடியாம். பொன்னுயிர்த்தல் - பொன்னினொளியைக் காலுதலுமாம். போலும் என்னும் ஒப்பில்போலி, எதிர்மறைப்பொருள் தந்தது. பி-ம்:—[1]நிலமுங் காத்தளித்த, நிலங்காத்தவரென்று. [2]புகழ்கின்றாம். [3]வழங்கினான். (எ)

அ.—சாகரர்.

[1]இடனோட்ட வினநெடிய வரையுருட்டி [2]யிவ்வுலகந்
திடனோட்ட மென[3]க்கிடக்கும் வகையிரங்கித் தெவ்வேந்த
[4]ருடனோட்ட நெடுவேலா யிவர்குலத்தோ ருவரிநீர்க்
கடனோட்டா ரெனின்வேறோர் கட்டுரையும் வேண்டுமோ.

(இ - ள்.) தெவ் வேந்தர் உடல் தோட்ட நெடு வேலாய் - பகைமையையுடைய அரசர்களது உடம்பைத் துளைத்த நீண்ட வேலாயுதத்தையுடைய அரசனே! இவர் குலத்தோர் - இக்குமாரர்களது வமிசத்து அரசர், இரங்கி- (தங்கள் தந்தையினது அசுவமேதயாகத்துக் குதிரை காணப்படாமற் போனதற்காக) மனவிரக்கமுற்று, நெடிய வரை - பெரியமலைகளை, இடறு ஓட்டம் இனம் (என)- காலாலிடறத்தக்க தேங்காயோடுகளின் வகைகளைப் போல, உருட்டி - (அப்பாற்) புரட்டித்தள்ளி, இ உலகம்-இந்தப்பூலோகம், திடறு ஓட்டம் என கிடக்கும் வகை - மேடான இடமாக இருக்கும்படி, உவரி நீர் கடல் தோட்டார்-உப்புச்சுவையுடைய நீரையுடைய கடலை(த் தம் வலிமையால்) தோண்டினார்கள், எனின் - என்றால், வேறு ஓர் கட்டு உரை உம் வேண்டுமோ - (இக்குலத்தினர்பெருமைக்கு) வேறு எடுத்துச்சொல்ல வேண்டுவதொரு உறுதிமொழியும் வேண்டுமோ?[வேண்டுவதில்லை];(எ-று.)

இதிற் கூறப்பட்டவர், சகரகுமாரர்கள்; இவர்கள் தோண்டின பள்ளமே பின்பு கங்கை முதலிய நீர்களால் நிறைந்து கடலாயிற்றென்க. மூன்றுநான்காமடிகளிலுள்ள தோட்ட, தோட்டார் என்பவை - தொட்ட தொட்டார் என்பவற்றின் எதுகைநோக்கிய விகாரங்கள். முதலடியில், ஓட்டம்-ஓடு என்பது டகரவொற்றிரட்டி அம்முச்சாரியைபெற்ற பெயர். இரண்டாமடியில், ஓட்டம் - நீரோடிப்போவதற்குஉரிய இடமென்னும் பொருளால், மேட்டையுணர்த்திற்று; ஆகவே, திடனோட்டமென்பது - ஒருபொருட்பன்

மொழியாம். இனி இதற்கு - தோண்டலளவைத்திடர் அதாவது குளமுதலிய நீர் நிலைகளைத் தோண்டும்பொழுது அளவுதோன்ற வைப்பதொரு மேட்டுக்குறி யென்றும், திடல் - மேடும், தோட்டம் - பள்ளமும் என்றும்; முதலடியில் இடறு ஓட்ட எனப்பிரித்து - தடைகளொழியவென்றும்,இரண்டாமடியில் திடல் தோட்டம் எனப்பிரித்து - மேட்டிடம் என்றும் பொருள் கூறுவாருமுளர். நான்கடியிலும் 'இடறொட்டவினம்', திடறொட்டமென, உடறொட்ட, கடறொட்டார்' எனக் குறுக்கலாகவே பாடங்கொண்டாலும் இப்பொருள் செவ்விதாகவே யேற்படும். பி - ம்:—[1]இடறோட்டியெனும். [2]இவ்வுலகின். [3]நிறுவித்தேன்விரிதார், கிடந்ததெனவிரங்கா, கிடக்கும் வகையிறங்கி. [4]உடறோட்டு. (அ)

௯.—பகீரதசக்கரவர்த்தி.

தூநின்ற சுடர்வேலோ [1]யனந்தனே சொல்லானேல்
யானின்று [2]புகழ்ந்துரைத்தற் கெளிதோவே டவிழ்கொன்றைப்
பூநின்ற மவுலியையும் புக்களைந்த புனற்கங்கை
வானின்று கொணர்ந்தானு மிவர்குலத்தோர் மன்னவன்காண்.

(இ - ள்) தூ நின்ற சுடர் வேலோய் - (பகைவரது) தசை பொருந்தி நின்ற ஒளியையுடைய வேலாயுதத்தையுடைய மன்னவனே! அனந்தன் ஏ சொல்லான்எல் - (ஆயிரம்முகத்தையும் இரண்டாயிரம் நாவையுமுடைய) ஆதிசேஷனே (இவர்குலத்தினரது சிறப்பைச்) சொல்லவல்லனல்லனென்றால், யான் நின்று புகழ்ந்து உரைத்தற்கு எளிதுஓ - (இவர்கள் சிறப்பு ஒரு முகத்தையும் ஒருநாக்கையுமுடைய) யான் (தளர்ச்சியடையாது) நிலைநின்று புகழ்ந்துசொல்லுதற்கு எளியதோ? [அன்றென்றபடி]; ஏடு அவிழ் - இதழ்கள் விரிகின்ற, கொன்றை பூ - கொன்றைமரத்தின் மலர்கள், நின்ற-சூடப்பட்டு நின்ற, மவுலியைஉம் - திருமுடியையுடைய சிவபிரானையும், புக்கு அளைந்த - வந்துபொருந்தின, புனல்-புண்ணியதீர்த்தத்தையுடைய, கங்கை- கங்காநதியை, வான்நின்று - தேவலோகத்திலிருந்து, கொணர்ந்தான்உம் - (இவ்வுலகத்துக்குக்) கொண்டுவந்தவனும், இவர் குலத்து ஓர் மன்னவன் காண் - இக்குமாரரது குலத்திற்பிறந்த ஓரரசனேயாவன்; (எ - று.)

அனந்தன் - நித்தியன். யான் இன்று என்றும் பதம்பிரிக்கலாம். மவுலியையும் என்ற உம்மை - உயர்வு சிறப்பு; முற்றுமுணர்ந்தவனாகிய சிவபிரானுக்குந் தூய்மைதரவல்லது கங்காதீர்த்த மென்றதாம். கொணர்ந்தமன்னவன் - பகீரதசக்கரவர்த்தி. பி - ம்:—[1]அனந்தனுக்குஞ் சொலற்கரிதேல். [2]புகழ்ந்தேதத்தற்கெளிதே (௯)

௰—நூறு அசுவமேதயாகஞ் செய்தவன்.

கயற்கடல்சூ ழுலகெல்லாங் கைந்நெல்லிக் கனியாக்கி
யியற்கைநெறி முறையாலே யிந்திரற்கு மிடரியற்றி
முயற்கறையின் மதிக்குடையா யிவர்குலத்தோன் முன்னொருவன்
செயற்கரிய பெருவேள்வி யொருநூறுஞ் செய்தமைத்தான்.

(இ - ள்.) முயல் கறை இல் மதி குடையாய் - முசலென்று சொல்லப் படுகிற களங்கம் இல்லாத பூர்ணசந்திரமண்டலம்போல விளங்குகிற வெண் கொற்றக்குடையையுடையவனே! இவர் குலத்தோன் முன் ஒருவன் - இக் குமாரர்களது குலத்திலே முன்னே தோன்றிய ஒரு அரசன், கயல் கடல் சூழ் உலகு எல்லாம் - மீன்களையுடைய கடலினாற் சூழப்பட்டுள்ள நிலவுலக முழுவதையும், கை நெல்லி கனி ஆக்கி - உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல எளிதில் தன்கைவசப்படுத்தி, இந்திரற்குஉம் இடர் இயற்றி - தேவேந்திரனுக்கும் (அப்பதவியை யிழப்பதாகிய) துன்பத்தை யுண்டாக்க லுற்று, செயற்கு அரிய பெரு வேள்வி ஒரு நூறுஉம் - (பிறரால்) செய்வ தற்கு அருமையான பெரிய ஒப்பற்ற நூறு அசுவமேதயாகங்களையும், இய ற்கை நெறி முறையால் - சாஸ்திரங்களிற் கூறப்பட்டுள்ள விதிமுறைமை சிறிதும் வழுவாமல், செய்து அமைத்தான் - செய்து முடித்தான்; (எ-று.)

இவ்வரசன் இன்னானென்று துணிந்து கூறக்கூடவில்லை; நகுஷன் என்று ஓரரசன் நூறு அசுவமேதயாகஞ்செய்து முடித்துத் தேவேந்திர பத வியைப் பெற்றானென்று ஒருகதை பிரசித்தமாகவுண்டு; அவ்வரசன்தான் இங்குக்குறித்தவ னென்று சிலர் துணிந்து கூறுகின்றனர்; "சதமகம் புரிய ருந் தவத்தோ, னகுடநாமவே னராதிப னாகருக்கரசாய், மகுட மேந்திய குரிசி லாயுவின் திருமைந்தன்" என மகாபாரதத்தில் அவ்வரசனைச் சந் திரவமிசத்தானாகக் கூறப்பட்டுள்ளது; சூரியகுலத்திலும் நகுஷனென அப் பெயர்கொண்ட அரசனொருவ னுண்டு. இப்பாட்டிற் குறிக்கப்பட்டவன் சகரசக்கரவர்த்தியெனவுங் கொள்ளலாம். "சகரமகாராசன் எங்கும் எப்போ தும் தன் ஆஜ்ஞைக்குப் பங்கம்வராதபடி சகலதுவீபசமுத்திராதிகளோடு கூடின இந்தப்பூமியை நீதியோடு பரிபாலனஞ்செய்துகொண்டு வாழ்ந்திருந் தான்"என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற் கூறப்பட்டிருப்பதனால், இப்பாட்டில்- 'கயற்கடல்சூழுலகெல்லாங் கைந்நெல்லிக்கனியாக்கி' எனக் கூறியிருப்பது சகரசக்கரவர்த்திக்குப் பொருந்து மெனக் கருத இடங்கொடுக்கின்றவாறு உணர்க. நிலவுலகத்தில் ஒருவன் நூறு அசுவமேதயாகஞ் செய்துமுடித்தால் தேவலோகத்தில் அப்பொழுதுள்ள இந்திரனை அப்பதவியினின்று தள்ளி விட்டு அம்மனிதனுக்கு இந்திரபதவியைக் கொடுப்பது மரபாதலால், 'இந் திரற்குமிடரியற்றி' எனப்பட்டது. கயல் என்னும் ஒருசாதிமீனின் சிறப் புப்பெயர், இங்கு நீர்வாழ்பொருள்களுக்கெல்லாம் உபலக்ஷணம். கைந் நெல்லிக்கனி - கரதலாமலகம். சந்திரனிடத்துள்ள களங்கத்தை முயலென் றும், மானென்றும், மறுவென்றும், பூச்சாயையென்றும் இங்ஙனம் பலவாறா கக் கூறுவது கவிசமயமாதலால், 'முயற்கறை' என்றார். அசுவமேதயாகம் நிறைவேறவொட்டாதபடி பெரிய இடையூறுகளை இந்திரன் செய்து வரு வது வழக்கமாதலால், அதனை 'செயற்கரிய பெருவேள்வி' என்றார். (௧0)

கக.—இரதுமகாராஜன்.

சந்திரனை வென்றானு முருத்திரனைச் சாய்த்தானுந்
துந்துவெனுந் தானவனைச் சுடுசரத்தாற் றுணித்தானும்

வந்தகுலத் திடைவந்த ரகுவென்பான் வரிசிலையா
லிந்திரனை வென்றுதிசை யிருநான்குஞ் [1]செருவென்றான்

(இ - ள்.) சந்திரனை வென்றானும் - சந்திரனைச் சயித்தானொரு அரச னும், உருத்திரனை சாய்த்தானும் - உருத்திரபகவானைத்தோற்கடித்தா னொரு அரசனும், சுடு சரத்தால் துந்து எனும் தானவனை துணித்தானும் - (பகைவரை) எரிக்கவல்ல பாணத்தால் துந்துவென்னும் அசுரனைக்கொன் றானொரு அரசனும், வந்த - பிறப்பதற்கிடமான, குலத்திடை - (இக்குமரர் களது) குலத்திலே, வந்த - பிறந்த, ரகு என்பான் - இரகுவென்னும் மகா ராசன், வரி சிலையால் - கட்டமைந்த வில்லினால், இந்திரனை வென்று - தேவேந்திரனைச் சயித்து, திசை இரு நான்குவும் - எட்டுத்திக்கிலுள்ளாரை யும், செரு வென்றான் - போரில் வெற்றிகொண்டான்; (எ - று.)

† "சந்திரன் தனது குருவான பிருகஸ்பதியின் மனைவியாகிய தாரை யைக் கூடி அவளை விடாதிருக்க, அதுகாரணமாய்த் தேவர்கள் குருவின் பக்கத்திலும் அசுரர்கள் சந்திரன்பக்கத்திலுஞ் சேர்ந்து போர்புரிய, தேவர் கள் அவ்வசுரர்க்கு உடைந்து ஓடினர்; பின்பு குரு சூரியவமிசத்தானாகிய திலீபமகாராசனை வேண்ட, அவன் சென்று அசுரர்களைக்கொன்று சந்தி ரனை வென்று 'சந்திரஜேதா' என்னும் பெயர் பூண்டானாகலின், 'சந்திரனை வென்றானும்' என்றவன், திலீபன். பகீரதசக்கரவர்த்தி அசுவமேதஞ்செய் வதற்குப் பரியைவிடுப்ப, ஆறுமுகன் அப்பரியைக் கவர்ந்துசெல்ல, பகீரதன் சென்று தன்னை எதிர்த்த சிவனை வென்றானாகலின், 'உருத்திரனைச்சாய்த் தானும்' என்றவன், பகீரதன்: இவ்வாறு கந்தபுராணம் சனத்குமாரசங்கிதை யிற் கூறப்பட்டது."

சூரியகுலத்திற் பிறந்த குவலயாசுவனென்பவன், ஸ்ரீவிஷ்ணுதேசோப லம் பொருந்தினவனாய், உதங்கமகாரிஷிக்குப் பகைவனாயிருந்த துந்து என் கிற அசுரனைத் தன் இருபத்தோராயிரம் புத்திரரோடு கூடிச்சென்று கொன் றதனால், 'துந்துமாரன்' என்கிற பெயரைப் படைத்தான்; இந்தத்துந்துவென் னும் அசுரன் கடலில் முழுகி மறைந்து மிகநெடிதாகப் பெருமூச்சுவிட்டு அக்காற்றாற் கடல்நீரையும் மணலையும் நிரம்ப வெளிவீசித் துயரிழைத்தத னாற் கொல்லப்பட்டானென்க. ரகுமகாராஜன் இரந்திரனுமுட்படும்படி திக் விஜயஞ்செய்தமை உலகப்பிரசித்தம். 'சந்திரனேயென்றானும்' என்ற பாடத் துக்கு, - விஷ்டராச்சுவனென்னுஞ் சூரியகுலத்தரசனது மகனாகிய யுவனாச் சுவனென்க; சந்திரனது அமிசமாய்ப்பிறந்தவனாதலால், இவனுக்குச் சாந் திரனென்று ஒருபெயர் உண்டு. 'உருத்திரனைச் சாய்த்தானும்' என்றவிடத்து 'சதுமுகனைச் சாய்த்தானும்' எனவும், 'சதமகனைச்சாய்த்தானும்' எனவும் பாடங்களுண்டு; அவற்றிற்கு - முறையே பிரமனைவென்றவனென்றும், இந் திரனையழித்தவ னென்றும் பொருளாம்: அவற்றிற்கும் நூல்களில் நோக்கு

† இது, ம-ா-ா-ஸ்ரீ கவித்தலம் - துரைசாமிமூப்பனாரால் செய்யப் பட்ட ஸ்ரீமத்கம்பராமாயண அருங்கவிவிளக்கத்திற் கண்டது.

மிடத்துக் கதைகள் கிடைக்கவுங்கூடும். ரகு - வடமொழி திரியாமல் நின்றது; "ராசமாபுரி" என்றதுபோல. இவன்பெயரால் இக்குலத்துக்கு 'ரகுகுலம்' என்றும், இக்குலத்துதித்த இராமபிரானுக்கு 'ராகவன்' என்றும் பெயர்கள் பிரசித்தமாக வழங்குவதைக் கொண்டும், காளிதாசமகாகவி வடமொழியில் இவன்பெயரால் 'ரகுவம்சம்' என ஒருகாவியஞ் செய்திருத்தலைக்கொண்டும் இவ்வரசனது பெருமையை யுணர்க. பி-ம்:—[1]செலுத்தினன்.

கஉ.—அசமகாராசன்.

வில்லென்னு நெடுவரையால் வேந்தென்னுங் கடல்கலக்கி
யெல்லென்னு மணிமுறுவ லிந்துமதி யெனுந்திருவை
யல்லென்னுங் [1]திருநிறத்த வரியென்ன [2]வசனென்பான்
மல்லென்னுந் திரள்புயத்துக் கணி[3]யென்ன வைத்தானே.

(இ - ள்.) அசன் என்பான் - (இவர்குலத்தில் தோன்றிய) அஜனென்னும் மகாராஜன், வில் என்னும் நெடு வரையால் - தனது தனுசென்கிற பெரிய மந்தரமலையாகிய மத்தினால், வேந்து என்னும் கடல் - பகையரசர்களென்கிற பாற்கடலை, கலக்கி - கலங்கச்செய்து [கடைந்து என்றபடி], எல் என்னும் மணி முறுவல் - ஒளிவடிவமென்று சொல்லத்தக்க அழகிய புன்சிரிப்பையுடைய, இந்துமதி எனும் திருவை - இந்துமதியென்கிற இலக்குமி போன்றவளை, அல் என்னும் திரு நிறத்த அரி என்ன - இருளெனத்தக்க கரிய திருநிறத்தையுடைய திருமால் போல, மல் என்னும் திரள் புயத்துக்கு அணி என்ன வைத்தான் - மற்றொழிலின்வடிவமெனத்தக்க திரண்ட (தன்) தோள்களுக்கு ஒருஆபரணமாக அணிந்தான்; (எ - று.)

அசன் என்பதற்குப் பிரமனென்றும் ஒருபொருள் உள்ளதாதலால் முன்னே அரி மந்தரகிரியைக்கொண்டு திருப்பாற்கடலைக் கடைந்து அதில் தோன்றிவிளங்கிய திருமகளைத் தன் திருமார்பில் வைத்துக்கொண்டதனை நோக்கி, அயன் தானும் அதுபோலவே வில்லாகிய மலையைக்கொண்டு பகைவேந்தராகிய கடலைக் கடைந்து அதில் *தனக்குக்கிடைத்த இந்துமதியாகிய இலக்குமியைத் தன்தோளில் வைத்துக்கொண்டா னென, ஒருவகைக் கவிசாதுரியந் தோன்றக் கூறினர். வேந்தென்னுங்கடல் கலக்குதல்- இந்துமதியானவள் சுயம்வரகாலத்திற் பிறஅரசர்களையிகழ்ந்து அஜமகாராஜனை யுவந்து மாலைசூட்ட அதனைக்கண்டுபொறாமைகொண்டு திரண்டுசூழ்ந்து போர்விளைத்த அரசர்கள்கூட்டத்தை யழித்தது. நல்வினையுடையார் பாற்சென்று சேருமளவும் பலர்க்கும் பொதுவாயிருத்தலாலும் பேரழகுடைமையாலும் செல்வச்சிறப்பாலும் கன்னிகையாகிய இந்துமதிக்குத் திருமகள் உவமை. அரி - ஹரி: அடியவர்துயரத்தை யழிப்பவர்; கொடியவர்செருக்கைக் கெடுப்பவர். மல் - ஆயுதமின்றிக்கே உடல்வலிமையாற் போர்செய்தல்; அத்தொழிலில்மிகப்பயின்று வலிமைகொண்டு திரண்டிருண்ட தோள்களை அத்தொழிலின்வடிவ மெனக் குறித்தார். இச்செய்யுளில் உருவகவணி உவமையணியை அங்கமாகக்கொண்டு வந்தது. மணி முறுவல் எனப்

பிரித்து - முத்துப்போல வெள்ளொளியுடைய புன்னகை யென்றுங் கொள்ளலாம். இந்துமதியின் சுயம்வரவரலாற்றை இரகுவமிசகாவியத்திற் பார்க்கக் காணலாம். பி - ம்:—[1]கரு. [2]அசன். [3]ஆக (கஉ)

கங.—தசரதனும் அவன் புத்திரர்இவ ரென்பதும்.

**அயன்புதல்வன் றயரதனை யறியாதா ரில்லையவன்**
**பயந்தகுலக் குமரரிவர் தமையுள்ள [1]பரிசெல்லா**
**நயந்துரைத்துக் கரையேற நான்முகற்கு மரிதாம்பல்**
**லியந்துவைத்த கடைத்தலையா யானறிந்த படிகேளாய்.**

(இ - ள்.) பல் - அநேகமான, இயம் - வாத்தியங்கள், துவைத்த - முழங்குதற்கு இடமான, கடைத்தலையாய் - தலைவாயிலையுடைய சனகராசனே! அயன் புதல்வன் - (கீழ்க்கூறிய) அஜமகாராஜனது புத்திரனாகிய, தயரதனை - தசரதசக்கரவர்த்தியை, அறியாதார் - அறியாதவர்கள், இல்லை- (உலகத்தில்) ஒருவருமில்லை; அவன் பயந்த-(லோகப்பிரசித்தனான) அந்தத் தசரதசக்கரவர்த்தி பெற்ற, குலம் குமரர் - சிறந்தகுமாரர்களாகிய, இவர் தமை - இவர்களுடைய சிறப்பை, உள்ள பரிசு - உள்ளபடியே, எல்லாம் - முழுவதும், நயந்து உரைத்து - விரும்பிக்கூறி, கரை ஏற - (இவர்களது புகழ்க்கடலின்) கரையைச் சேர்தற்கு, நான்முகற்குஉம் - நான்குமுகங்களையுடைய பிரமதேவனுக்கும், அரிது ஆம் - அரியதாகும்; யான் அறிந்த படி கேளாய் - (ஆயினும் அதனை) நான் அறிந்திருக்கிறவிதமாய் (ஒருவாறு சிறிது சொல்லக்) கேட்பாயாக; (எ - று.)

திரிமூர்த்திகளுளொருவனாகிய நான்குமுகங்களையுடையபிரமதேவனுக்கும் ஒருவாறு உணர்த்தக்கூடுமேயன்றி முழுவதுமறிந்துகூற முடியாத இக்குமாரர்களது வரலாற்றை ஒருமுகமுடைய மனிதனாகிய யான் எங்ஙனம் முழுவதுங் கூறற்பாலேன்? அல்லேனாயினும், நீ கேட்டதனால் ஒருபடியாகக் கூறலுறுவே னென, ராமமகிமையினது வாசாமகோசரமான தன்மையை வெளியிட்டார். பி - ம்:—[1]படியெல்லாம். (கங)

கச.—இதுமுதல் இப்படலம் முடியுமளவும் கரு - கவிகளால் தசரதபுத்திரர் வரலாறு கூறப்படுகின்றது.

தசரதன் மகவின்றி வருந்துதல்.

**துனியின்றி யுயிர்செல்லச் சுடராழிப் படைவெய்யோன்**
**பனிவென்ற படியென்னப் பகைவென்று படிகாப்போன்**
**றனுவன்றித் துணையில்லான் றருமத்தின் கவசத்தான்**
**மனுவென்ற நீதியான் மகவின்றி வருந்துவான்.**

(இ - ள்.) துனி இன்றி உயிர் செல்ல - துன்பமில்லாமல் (உலகத்திலுள்ள) உயிர்கள்யாவும் வாழும்படி, சுடர் ஆழி படை வெய்யோன் பனி வென்ற படி என்ன - விளங்குகிற (திருமாலினது) சக்கராயுதம்போன்ற சூரியன் பனியை (எளிதில் ஒழித்து) வெற்றிகொண்ட தன்மைபோல, பகை

வென்ற - பகையரசர்களை (அலட்சியமாக அழித்து) வெற்றிகொண்டு, படி காப்போன் - உலகத்தைக் காத்தருள்பவனும், தனு அன்றி துணை இல்லான் - (தன்) கைவில்லேயேயல்லாமல் வேறுஉதவியை(ப் போர்வெற்றிக்கு) வேண்டாதவனும், தருமத்தின் கவசத்தான் - தருமமாகிய கவசத்தையுடையவனும், மனு வென்ற நீதியான் - (தருமசாஸ்திரஞ் செய்தருளின) மனுச்சக்கரவர்த்தியையும் நீதிநெறியிற் செயித்தவனுமாகிய அந்தத்தசரதன், மகவு இன்றி வருந்துவான் - புத்திரபாக்கியமில்லாமையால் மனவருத்தப்படுந்தன்மையனானன்; (எ - று.)

சூரியன் - சக்கரவர்த்திக்கும், பனி - பகையரசர்க்கும் உவமை: இருந்த இடமுந் தெரியாதபடி இவன் இளமையிலேயே பகையினத்தையுந் தன்னொளியாற் கெடுத்தானென்க. 'துனியின்றியுயிர்செல்ல' 'படிகாப்போன்' என்பன - உபமானஉபமேயம் இரண்டுக்கும் பொது. தனுவன்றித் துணையில்லான் - அசகாயசூரன். தருமத்தின் கவசத்தான்-அறமொன்றையே தன்னைக் காக்கும் அரணாகக் கருதிக் குறைவற நன்றாக ஓம்புபவன். மனுஎன்ற நீதியான் எனப்பிரித்து, மனு இவனேயென்று சொல்லத்தக்க செங்கோன் முறைமை யுடையா னென்றுமாம். (கச)

கரு.—தசரதன் ரிசியசிருங்கனூற் புதல்வரில்லாத்துறையை நீக்கக் கருதுதல்.

* சிலைக்கோட்டு நுதற்குதலைச் செங்கனிவாய்க் கருநெடுங்கண்
விலைக்கோட்டும் பேரல்குன் மின்னுடங்கு மிடையாரை
மூலைக்கோட்டு [1]விலங்கென்றங் குடனணுகி முன்னின்ற
கலைக்கோட்டுப் பெயர்முனியாற் றுயர்நீங்கக் கருதினன்.

(இ - ள்.) சிலை கோடு நுதல்-விற்போல வளைந்துள்ள நெற்றியையும், குதலை செம் கனி வாய்-(குழந்தைகளின்) மழலைச்சொற்போலினிய சொற்களையே பேசுகிற சிவந்த கொவ்வைப்பழம்போன்ற அதரத்தையும், கரு நெடு கண் - கரிய நெடிய கண்களையும், விலைக்கு ஓட்டும் பேர் அல்குல் - விலைப்பொருளுக்குக்கொடுக்கின்ற பெரிய அல்குலையும், மின் நுடங்கும் இடையாரை - மின்னற்கொடிபோலத் துவள்கிற சிற்றிடையையுமுடைய வேசையரை, முலை கோடு விலங்கு என்று - தனங்களாகிய கொம்புகளையுடைய சில மிருகங்க ளென்று கருதி, அங்கு உடன் அணுகி - அவ்வாச்சிரம விடத்திலிருந்து அவ்விலைமாதர்களுடனே கூடிவந்து, முன்நின்ற - (ரோமபாதமகாராசனது) முன்னே எழுந்தருளிநின்ற, கலைக்கோட்டு பெயர் முனியால் - கலைக்கோட்டுமுனிவனென்கிற திருநாமத்தையுடைய முனிவனைக் கொண்டு, துயர் நீங்க கருதினன் - (தசரதசக்கரவர்த்தி புத்திரரில்லாமையால்விளைந்த) துன்பத்தினின்று (தான்) நீங்கும்படி நினைத்தான்; (எ - று.)

இக்கலைக்கோட்டுமுனிவன் தான் தலையிற் கொம்புடையவனாதலால், மாதர்களை மார்பிற்கொம்புடையவ ராகக் கருதினன்போலும். பி - ம்:—
[1]விலங்கென்றுதொடர்ந்தணுகி. (கரு)

### ௧௬. தசரதன் இருசியசிருங்கனைப் புதல்வருண்டாக அருள்புரிய வேண்டுதல்.

* தார்காத்த நறுங்குஞ்சித் தனயர்களென் றவமின்மை
வார்காத்த வனமுலையார் மணி[1]வயிறு வாய்த்திலரா
னீர்காத்த கடல்[2]காத்த நிலங்காத்தே னென்னிற்பின்
பார்காத்தற் குரியாரைப் பணிநீயென் றடிபணிந்தான்.

(இ - ள்.) என் தவம் இன்மை - எனது (முற்பிறப்பிற்செய்த) நற்றவமில்லாமையால், தார் காத்த நறு குஞ்சி தனயர்கள் - பூமாலையையணிகிற இயற்கைமணமுள்ள முடியையுடைய புத்திரர்கள், வார் காத்த வனம் முலையார் மணி வயிறு வாய்த்திலர் - கச்சையணிந்த அழகிய தனங்களையுடைய என்மனைவிமாரது அழகிய கருப்பத்தில் தோன்றினாரில்லை; ஆல்-ஆதலால், நீர் காத்த கடல் காத்த நிலம் காத்தேன் என்னின் பின் - நீர்நிறைந்த கடல் சூழ்ந்த நிலவுலகம்முழுவதையும் அரசாண்டுவந்த எனக்குப் பின்பு, பார் காத்தற்கு உரியாரை - இந்நிலவுலகத்தைப்பாதுகாப்பதற்குஉரிய நற்புத்திரர்களை, நீ பணி என்று - (நான்பெறும்படி) நீ அருள்செய்வாயாக என்று கூறி, அடி பணிந்தான் - (தசரதமகாராஜன் அக்கலைக்கோட்டுமகாரிஷியினது) திருவடிகளில் வணங்கினான்; (எ - று.)—காத்தேன் - பெயர்.

பி - ம்:—[1]வயிற்றில் வந்திலரால். [2]புடைசூழ். (௧௬)

### ௧௭.—இருசியசிருங்கன் புத்திரரைத் தர வேள்விக்குரியவற்றைச் சமைக்கப் பணித்தல்.

அவ்வுரைகேட் டம்முனியு மருள்சுரந்த [1]வுவகையனா
யிவ்வுலக மன்றி[2]யே [3]யெவ்வுலகு மினிதளிக்குஞ்
செவ்வியிளஞ் [4]சிறுவர்களைத் தருகின்றே னினித்தேவர்
வவ்விநுகர் பெருவேள்விக் குரியவெலாம் வருகென்றான்.

(இ - ள்.) அ உரை கேட்டு -(தசரதனது) அந்தவார்த்தையைக்கேட்டு, அ முனிஉம் - அந்தரிசியசிருங்கமுனிவனும், அருள் சுரந்த உவகையன் ஆய் - கருணையோடுகூடியெழுந்த களிப்பை யுடையவனாகி, (அவ்வரசனை நோக்கி), 'இ உலகம் அன்றிஏ - இந்தப்பூலோகமொன்றைமாத்திரமேயல்லாமல், எ உலகுஉம் - எல்லாலோகங்களையும், இனிது அளிக்கும் - இனிமையாக (எளிதிற்) காத்திடும்படியான, செவ்வி இள சிறுவர்களை - அழகிய இளமையானகுமாரர்களை, தருகின்றேன் - (உனக்கு யான் இப்பொழுது) கொடுத்திடுகிறேன்; இனி—, தேவர் வவ்வி நுகர் பெரு வேள்விக்கு உரிய எலாம் - தேவர்கள் (அவிசுகளைப்) பெற்றுஉண்பதற்கிடமான பெரியயாகத்தைச் செய்வதற்கு உரிய பொருள்கள்யாவும், வருக - (இங்கு) வந்து சேரக்கடவன', என்றான் - என்றுகூறினான்; (எ - று.)

விரைவுந்தெளிவும்பற்றி 'தருகின்றேன்' என நிகழ்காலமாக்கூறியது. 'எவ்வுலகு மினிதளிக்கும்' என்ற அடைமொழியால், காத்தற்றொழிற்குரிய கடவுளாகிய திருமாலின் அமிசமானவர்களென்பது தோன்றுகின்றது.

பி - ம்:—[1]உவகையினால். [2]மற்றை. [3]எவ்வுலகுங் காத்தருளும். [4]குரிசிலரை. (கஎ)

கஅ.—இருசியசிருங்கன் வேள்வியை நடப்பிக்க, சுதையேந்தி வேள்வித்தீயினின்று பூதமொன்று தோன்றுதல்.

காதலரைத் தரும்வேள்விக் குரியவெலாங் [1]கடிதமைப்ப
மாதவரிற் பெரியோனு மற்றதனை முற்றுவித்தான்
சோதி[2]மணிப் பொற்கலத்துச் சுதையனைய வெண்சோறோர்
பூதகணத் தரசேந்தி யனலினின்றும் [3]புறப்பட்ட.

(இ - ள்.) (அவ்வாறே சக்கரவர்த்தியும்), காதலரை தரும் வேள்விக்கு உரிய எலாம்-புதல்வர்களைக் கொடுத்திடுவதான யாகத்துக்கு உரிய பொருள்களெல்லாவற்றையும், கடிது அமைப்ப - விரைவாக வருவித்துவைக்க, மாதவரில் பெரியோன்உம் - மிக்கதவமுடைய முனிவர்களிற் சிறந்த கலைக்கோட்டுமுனிவனும், அதனை முற்றுவித்தான் - அந்த வேள்வியைச்செய்து முடித்தான்; அனல்நின்றுஉம் - அந்த யாக ஓமாக்கினியினின்றும் ஓர் பூதம் கணத்து அரசு - பூதவினங்களுக்கு அரசுஆனஒரு சிறந்த பூதமானது, சோதி மணி பொன் கலத்து - ஒளியையுடைய அழகிய பொன்மயமான தட்டிலே, சுதை அனைய வெண் சோறு - அமிர்தத்தையொத்த வெண்ணிறமான உணவை [பாயசத்தை], ஏந்தி - எடுத்துக்கொண்டு, புறப்பட்ட(து)- வெளிப்பட்டது; (எ - று.)—பி - ம்:—[1]கடிதமைத்தான். [2]நிறப்பரிகலத்து. [3]புறப்பட்டான். (கஅ)

கக.—தசரதன் அச்சுதையை மனைவியர்க்குக் கொடுத்தல்.

பொன்னின்மணிப் பரிகலத்திற் புறப்பட்ட வின்னமுதைப்
பன்னுமறைப் பொரு[1]ளுணர்ந்த பெரியோன்றன் பணியினாற்
றன்னனைய நிறைகுணத்துத் தசரதனும் [2]வரன்முறையா
னன்னுதலார் மூவருக்கு நாலுகூ றிட்டளித்தான்.

(இ - ள்.) பொன்னின் மணி பரிகலத்தில்-பொன்னினாலாகிய அழகிய பாத்திரத்துடனே, புறப்பட்ட - (அக்கினியினின்று) வெளிப்பட்ட, இன் அமுதை - இனிய அந்த உணவை, பன்னு மறை பொருள் உணர்ந்த பெரியோன் தன் பணியினால் - சிறப்பித்துக்கூறப்படுகிற வேதங்களின் பொருள்களை யறிந்த (அறிவொழுக்கங்களிற்) பெரிய அக்கலைக்கோட்டுமுனிவனது கட்டளையால், தன் அனைய நிறை குணத்து தசரதன்உம்-தன்னை(த்தானே) யொத்த [வேறுவமை பெறாத] நிறைந்த நற்குணங்களையுடைய தசரதனும், வரல்முறையால் - கிரமப்படி, நல்நுதலார் மூவருக்குஉம் - அழகியநெற்றியையுடைய (கௌசலியை முதலிய) பட்டமகிஷிகள் மூன்றுபேருக்கும், நாலுகூறு இட்டு அளித்தான் - நாலுபங்காக்கிக் கொடுத்தான்; (எ - று.)

மூன்றுபங்கை மூன்றுபேருக்குங் கொடுத்து, பங்கிடும்பொழுதுசிதறிவிழுந்தவற்றையுஞ் சுமித்திரைக்குக் கொடுத்ததாகக் கீழ்த்திருவவதாரப்படலத்திற் கூறப்பட்டுள்ளமையுங் காண்க. பி-ம்:—[1]தெரிந்த. [2]முறையாலே.

உ௦.—கோசலை இராமனைப் பெறுதல்.

விரிந்திடுதீ வினை[1]செய்த [2]வெவ்வியதீ வினையாலு
மருங்கடையின் மறையறைந்த வறஞ்செய்த[3]வறத்தாலு
மிருங்கடகக் கரதலத்திவ் வெழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க் கவுசலையென் பாள்பயந்தாள்.

(இ - ள்.) விரிந்திடு தீவினை செய்த - (உலகத்திற்) பரவிய பாவங்கள் பண்ணின, வெவ்விய தீவினையால்உம்-கொடியபாவத்தாலும், அரு - (அறிவதற்கு) அருமையான, கடைஇல் - எல்லையில்லாத, மறை - வேதங்களில், அறைந்த - கூறப்பட்டுள்ள, அறம் தருமங்கள், செய்த - பண்ணின, அறத்தால்உம் - தருமத்தாலும், செம் கனி வாய் - சிவந்த கொவ்வைப்பழம் போன்ற வாயையுடைய, கவுசலைஎன்பாள் - (தசரதன்மனைவிகளுள் மூத்தவளான) கௌசலியாதேவி யெனப்படுபவள், இரு கடகம் கரதலத்து - பெரிய கடகமென்னும் அணியையணிந்த கைகளினிடங்களையும், எழுது அரிய திரு மேனி - சித்திரத்திலெழுதுதற்கும்முடியாத அழகிய உடம்பையுமுடைய, இ கரு கடலை - கரியகடல்போன்ற நிறமுடைய இந்த ராமனை, பயந்தாள் - பெற்றாள்; (எ - று.)

பாவமழியவும் புண்ணியம்வளரவும் இராமன் திருவவதரித்தா னென்பார், 'தீவினைசெய்த தீவினையாலும் அறஞ்செய்த வறத்தாலும் பயந்தாள்' என்றார்; துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனங்களைச் செய்வதனால், பாவவிநாசமும் புண்ணிய அபிவிருத்தியும் உண்டாவன. அரு கடையின்என எடுத்து, அறிதற்குஅருமையான (வேத)முடிவாகிற உபநிஷத்துக்களையுடைய என்றுமாம். கடல் - உவமவாகுபெயர். பி - ம்:—[1]அகல. [2]மெய்ம்மை செய்நல். [3]தவத்தாலும். (உ௦)

உக.—கைகேயி பரதனைப் பெறுதல்.

தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும்
பள்ளமெனுந் தகையானைப் பரதனெனும் பெயரானை
யெள்ளரிய குணத்தாலு மெழிலாலு மிவ்விருந்த
வள்ளலையே யனையானைக் கேகயர்கோன் மகள்பயந்தாள்.

(இ - ள்.) தள்ள அரிய - (அறிந்தவர்களால்) விலக்குவதற்குக்கூடாத, பெரு நீதி - சிறந்த நியாயங்களாகிய, தனி ஆறு-ஒப்பற்ற பெரு நதிகள், புக- (தன்னிடத்து)வந்து சேர்தலால்,மண்டும்-நிறைந்திருக்கிற, பள்ளம் எனும் - ஆழமாகிய கடலென்று சொல்லத்தக்க, தகையானை - நற்குணங்களையுடையவனும், எள் அரிய - (யாவராலும்)இகழ்வதற்குக்கூடாத, குணத்தால்உம்- நற்குணங்களாலும், எழிலால்உம் - அழகினாலும், இ இருந்த வள்ளலை ஏ - இங்கு வந்து வீற்றிருக்கிற இந்த ஸ்ரீராமபிரானையே, அனையானை-ஒத்தவனுமாகிய, பரதன் எனும் பெயரானை - பரதனென்னும் பெயருள்ள குமாரனை, கேகயர்கோன் மகள் - கேகயதேசத்தரசனது மகளாகிய கைகேயி, பயந்தாள் - பெற்றாள்; (எ - று.)

நீதியாறுபுகமண்டும்பள்ளம் - யாற்று நீர்நிறைந்த கடல்போல நீதிநிரம்பின அரசனென்றபடி. (உக)

உஉ.—சுமித்திரை லட்சுமணசத்துருக்னரைப் பெறுதல்.

**அருவலிய திறலினரா யறங்கெடுக்கும் [1]விறலரக்கர்**
**வெருவருதிண் டிறலார்கள் வில்லேந்து [2]மேனிற்செம்பொற்**
**பருவரையு நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்க**
**ளிருவரையு [3]மிவ்விருவர்க் கிளையாளு மீன்றெடுத்தாள்.**

(இ - ள்.) அரு வலிய திறலினர் ஆய் - (பிறரால் வெல்லுதற்கு) அருமையான வலிமையையுடைய வெற்றியையுடையவர்களாய், அறம் கெடுக்கும் - தருமத்தை யழிக்கின்ற, விறல் - வீரத்தன்மையையுடைய, அரக்கர் - இராக்கதர்களெல்லோரும், வெருவரு - அஞ்சுதற்குக் காரணமான, திண் திறலார்கள் - மிக்கவலிமையுடையவர்களும், செம் பொன் பரு வரைஉம் - சிவந்த பொன்மயமான பருத்த மகாமேருமலையும், நெடு வெள்ளி பருப்பதம் உம் - உயர்ந்த வெள்ளிமயமான கைலாசமலையும்; வில் ஏந்தும் எனின் - (கையில் தனித்தனி) வில்லையெடுத்து நிற்குமாயின், போல்வார்கள் - (அவற்றை) ஒப்பவர்களுமாகிய, இருவரைஉம் - (லக்ஷ்மணன் சத்துருக்னன் என்னும்) இரண்டுபுத்திரர்களையும், இ இருவர்க்கு இளையாள்உம் - (கௌசலியை கைகேயி என்று கீழ்க்கூறிய இந்த) இரண்டுமனைவிகளுக்கும் இளையவளாகிய சுமித்திரையும், ஈன்று எடுத்தாள் - பெற்றெடுத்தாள்; (எ - று.)

இலக்குமணனது நிறம் பொன்னிறமாதலாலும், சத்துருக்கனனது நிறம் வெண்ணிறமாதலாலும், இருவரும் வில்லேந்தும் வீரராதலாலும், 'வில்லேந்துமேனிற் செம்பொற்பருவரையு நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்' என உவமை கூறினர்; இல்பொருளுவமை. இளையபெருமாளது நிறம் பொன்னிறமாதலைக் கீழ்த் திருவவதாரப் படலத்தில் "வடவரையுடன்வரு செயலென" என்றதனாலும், சத்துருக்கனுழ்வானது நிறம் வெண்மையாதலை "முத்துருக் கொண்டு செம்முளரியலர்ந்தால்" என்றதனாலும் அறிக. பி-ம்:- [1]அடல். [2]எழில். [3]இருவர்க்கங்கு. (உஉ)

உங.—புதல்வரின் வளர்ச்சி.

**தலையாய [1]பேருணர்விற் கலைமகட்குத் தலைவராய்ச்**
**[2]சிலையாயுந் தனுவேதந் தெவ்வரைப்போற் பணிசெய்யக்**
**கலையாழிக் கதிர்த்திங்க ளுதயத்திற் கலித்தோங்கு**
**மலையாழி யெனவளர்ந்தார் மறைநான்கு மனையார்கள்.**

(இ - ள்.) மறை நான்குஉம் அனையார்கள் - நான்குவேதங்களையுமொத்த அக்குமாரர்கள் நால்வரும்,—தலை ஆய பெரு உணர்வின் - முக்கியமான விஷயங்களையெல்லா மறியவல்ல மூதறிவில், கலைமகட்கு தலைவர் ஆய் - சரசுவதிதேவிக்கும் மேம்பட்டவர்களாய், சிலை ஆயும் - வில்வித்தைத் திறத்தை யாராய்ந்து கூறுவதான, தனு வேதம் - தநுர்வேதமானது,

தெவ்வரை போல் பணிசெய்ய - (தங்கள்) பகைவர்கள் (தோற்றுவந்து தங்களிடம் குற்றேவல் செய்வது)போல(த் தங்களுக்குக்) குற்றேவல் செய்யும்படி,—கலை ஆழி கதிர் திங்கள் உதயத்தில் கலித்து ஓங்கும் அலை ஆழி என - கலைகள்நிறைந்த வட்டவடிவமான ஒளியையுடைய பூர்ணசந்திரனது உதயகாலத்திலே ஒலித்துப்பொங்குகிற அலைகளையுடைய கடல்கள்போல, வளர்ந்தார் - வளர்ந்துவந்தார்கள்; (எ - று.)

பிறைச்சந்திரன் தினத்துக்குத்தினம் வளர்ந்து காண்பதுபோல அப்புத்திரர்கள் வளர்ந்தன ரென்க. தலையாய பேருணர்வு - தத்துவஞான மென்னலாம். கலைமகட்குத்தலைவராய் - நான்குபுதல்வரும் சரசுவதிகொழுநனான நான்குமுகங்களையுடைய பிரமதேவனையொத்து என்றுமுரைக்கலாம். மறைநான்குமனையார்களென்றது - அறம்பொருளின்பம் வீடென்னும் நாற்பொருட்பயன்களையும் அளிக்குந்தன்மைய ரென்றவாறும். பி - ம்:—[1]பொருளுணர்வின். [2]சிலையானை தனுவேதம், சிலையானைதேர்வேந்தர். (உங)

உச.—புதல்வரின் வித்தியாப்பியாசம்.

திறையோடு மரசிறைஞ்சுஞ் செறிகழற்காற் றசரதனும்
பொறையோடுந் தொடர்மனத்தான் புதல்வரெனும் பெயரேகா
ணுறையோடு நெடுவேலா யுபநயன விதிமுடித்து
மறை[1]யோடு வித்திவரை வளர்த்தானும் வசிட்டன்காண்.

(இ - ள்.) உறை ஓடும் நெடு வேலாய் - (பகைவரில்லாமையால்) உறையிலேயே தங்குகிற நீண்டவேலாயுதத்தையுடையவனே! (இக்குமாரர்கள்), திறையோடு உம் அரசு இறைஞ்சும் - கப்பங்களுடனேவந்து எல்லாவரசர்களும் வணங்குதற்கிடமான, செறி கழல் கால் - நெருங்கின வீரக்கழலையணிந்த பாதங்களையுடைய, தசரதன் ஆம் - தசரதசக்கரவர்த்தியாகிய, பொறையோடு உம் தொடர் மனத்தான் - பொறுமைக்குணத்துடனே பொருந்தின மனத்தையுடையவனது, புதல்வர் - புத்திரர்கள். எனும் பெயர் ஏ காண் - என்கிறபெயரொன்றுமாத்திரமே; உபநயனம் விதி முடித்து - வேதவிதிப்படி செய்யவேண்டிய உபநயனச்சடங்கை (இவர்களுக்குச்) செய்வித்து, மறை ஓடுவித்து-வேதங்களை விரைவிற் பயிலும்படிசெய்து, இவரை வளர்த்தான்உம் - இவர்களை வளர்த்தலையுஞ்செய்தவன், வசிட்டன்காண் - வசிட்டமாமுனிவனே; (எ - று.)

பெறுதற்குக்காரணமானதுகொண்டு தசரதனைத் தந்தையென்பதன்றி, புதல்வர்க்கு இதங்களை நாடிச்செய்தல் தந்தையின்கடமையாதலாலும்அங்ஙனம் இந்தக்குமாரர்களது நன்மையை நாடிச் சகலகலைகளிலும்வல்லவராகுமாறு வளர்த்ததனாலும் வசிட்டனே இவர்கட்குத் தந்தையெனத் தக்கானென்றவாறு நூல்களிற் பிரதானமாகிய வேதத்தைக்கூறியது, அதன்அங்கமும் உபாங்கமுமாகிய எல்லாக்கல்விகளுக்கும் உபலட்சணம். பி - ம்:—[1]ஓதுவித்து. (உச)

உரு.—விசுவாமித்திரன் தன் வேள்விகாக்க ராமலக்ஷ்மணரை யழைத்துப்போதல்.

ஈங்கிவரா லென்வேள்விக் கிடையூறு கடிதியற்றுந்
தீங்குடைய கொடியோரைக் கொல்விக்குஞ் சிந்தையனுப்
பூங்கழலார்க் கொண்டுபோய் வனம்புக்கேன் புகாமுன்னந்
தாங்கரிய பேராற்றற் றாடகையே தலைப்பட்டாள்.

(இ - ள்.) என் வேள்விக்கு-எனது யாகத்துக்கு, கடிது - விரைவாக, இடையூறு - தடைகளை, இயற்றும் - செய்கிற, தீங்கு உடைய - கொடுஞ் செயலையுடைய, கொடியோரை - தீக்குணமுள்ள இராக்கதர்களை, ஈங்கு இவரால் - இங்கேயுள்ள இவ்விராமலக்ஷ்மணர்களைக்கொண்டு, கொல்விக்கும் - கொலைசெய்விக்கவேண்டுமென்கிற, சிந்தையன்ஆய் - கருத்தையுடையவனாகி, பூ கழலார் - பூப்போல் மெல்லியபாதங்களையுடைய இக்குமாரர்களை, கொண்டுபோய் - (தசரதனிடத்திலிருந்து அழைத்துக்) கொண்டு சென்று, வனம் புக்கேன்-தபோவனத்தினுட் சேர்ந்தேன்; புகா முன்னம் - சேர்தற்கு முன்பே [சேர்ந்தவுடனேஎன்றபடி], தாங்கு அரிய பேர் ஆற்றல்- (பிறரால்) பொறுப்பதற்குக்கூடாத மிக்கவலிமையையுடைய, தாடகைஏ - தாடகையென்னும் அரக்கியே, தலைப்பட்டாள்-முதலில் எதிர்த்துவந்தாள்.

பூங்கழலார் என்றபெயர், சொல்லுவான்குறிப்பால் இவர் என்னுஞ் சுட்டுப்பெயர்மாத்திரமாய்நின்றது. 'பூங்கழலார்க்கொண்டுபோய் வனம்புக்கேன்'என்பதில் இவரது மெல்லியஅடிகளை நுதிபோற் பரற்பாயும்வனத்தில் நடக்கும்படி செய்தேனே! என்றஇரக்கமும்; 'பேராற்றற்றாடகையே தலைப்பட்டாள்' என்பதில் கன்னிப்போரிலேயே வெல்லவேண்டியவர் இத்துணையாற்றல் படைத்தவராக இருக்கவேண்டுமோ? என்ற இரக்கமும் தோன்றும்.

உசு.—இராமபிரான் தாடகைமீது எய்த அம்பு.

அலையுருவக் கடலுருவத் தாண்டகைதன் னீண்டுயர்ந்த
நிலையுருவப் புயவலியை நீயுருவ நோக்கையா
வுலையுருவக் கனலுமிழ்கட் டாடகைதன் னுரமுருவி
மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றொருவாளி.

(இ - ள்.) ஐயா - அரசனே! அலை உருவு - அலைகள் பாய்ந்துவருவதற்கிடமான, அ கடல் - அத்தன்மையதானகடல்போன்ற, உருவத்து - கரிய திருமேனிநிறத்தையுடைய, ஆண்தகைதன் - ஆண்மைக்குணமுள்ள இந்த ஸ்ரீராமனது, நீண்டு உயர்ந்த - நீட்சியுடையனவாயுயர்ந்துள்ள, நிலை உருவம் புயம் - நிலையான இயற்கையழகையுடைய தோள்களினது, வலியை - பலத்தை, நீ உருவ நோக்கு - நீ நன்றாகஆராய்ந்து பார்ப்பாயாக; ஒரு வாளி - (இராமனது தோள்வலியா லெய்யப்பட்ட) அம்பு ஒன்றுதானே, உலை உருவம் கனல் உமிழ் கண் தாடகைதன் - உலைக்களத்திலேயுள்ள (செந்நிறமான நெருப்பைச் சொரிகிற கண்களையுடைய தாடகையினது, உரம் உருவி - மார்பைத்துளைத்து, மலை உருவி - (அடுத்துநின்ற) மலைகளையுந்

துளைத்து, மரம் உருவி - பல்மரங்களையுந் துளைத்து மண் உருவிற்று-(எதிர் நிற்கும் பொருளில்லாமையால்) பூமியைத் துளைத்துப் பாய்ந்தது; (எ - று.)

இவனைச் சிறுபையலென்று அலட்சியமாகக் கருதாதே; இவனது ஒரு வாளி செய்த செயலினால் இவன்வீரம் எத்தன்மையதென்று ஆராய்ந்துபாரென்றான், முனிவன். அக்கடல் - உலகறிசுட்டு. அலை உருவம் கடலென்று பிரித்துஉரைப்பினுமாம். கனல் - கோபாக்கினி. (உ௬)

உஎ.—தாடகையுடன் சுபாகுமாரீசரைவென்றபின்
வேள்விமுடித்துத் தான் மிதிலைக்கு வந்தமை.

செக்கர்நிறத் தெரிகுஞ்சிச் சிரக்குவைகள் பொருப்பென்ன
வுக்கனவோ முடிவில்லை யோரம்பி னெடுமரக்கி
மக்களிலங் கொருவன்போய் வான்புக்கான் மற்றையவன்
புக்கவிட மறிந்திலேன் போந்தனனென் வினைமுடித்தே.

(இ - ள்.) செக்கர் நிறத்து-செவ்வானம்போன்ற நிறத்தைக்கொண்ட, எரிகுஞ்சி-நெருப்புப்பற்றியெரிகின்றாற்போன்ற செம்மயிர்களையுடைய, சிரம் குவைகள் - (எனது வேள்விக்கு இடையூறுஇயற்றிய அரக்கர்களின்) தலைகளின் குவியல்கள், பொருப்பு என்ன உக்கன ஒ -, மலைகள்போல அறுபட்டுவிழுந்து கீழ்ச்சிதறியவற்றிற்கோ, முடிவு இல்லை - ஒரு எல்லையில்லை; அங்கு - அப்பொழுது [அவ்விடத்தில்], அரக்கி மக்களில் ஒருவன் - அந்தத் தாடகையின்குமாரரிருவரு ளொருவனாகிய சுபாகு, ஓர் அம்பினொடும் - (இவ்விராமபிரான்) அம்பொன்றை யெய்தமாத்திரத்தில், போய் வான் புக்கான்-இறந்துசென்று மேலுலகத்திற்சேர்ந்தான்; மற்றையவன் - மற்றொரு புத்திரனான மாரீசன், புக்க இடம்-(இவன் எய்த அம்பினால்) போய்விழுந்த இடத்தை, அறிந்திலேன் - (யான்) அறிந்தேனில்லை; என் வினை முடித்து - (இங்ஙனம் இடையூறு அகற்றப்பட்ட பின்னர்) என் (யாக) காரியத்தைக் குறைவில்லாமற் பூர்த்திசெய்து, போந்தனன் - இங்கே வந்தேன்; (எ - று.)

உவமையாகிய பொருப்பு - இந்திரனால் சிறகறுப்புண்டு கீழ்வீழ்ந்தவை.

உ அ.—அஸ்திரங்கள் இராமலட்சுமணர்க்கு ஏவல்செய்யுந்தன்மை.

[1] ஆய்ந்தேற வுணரைய வயற்கேயு மறிவரிய
[2] காய்ந்தேவி னுலகனைத்துங் கடலோடு மலையோடுந்
தீந்தேறச் சுடுகிற்கும் படைக்கலங்கள் செய்தவத்தா
[3] லீந்தேனு மனமுட்க விறற்கேவல் [4] செய்குனவால்.

(இ - ள்.) ஐய - அரசனே! அயற்குஉம் அறிவுஅரிய-பிரமதேவனுக்கேயானாலும் அறிதற்குமுடியாத இவ்விராமபிரானது மகிமைகளை, ஆய்ந்து ஏற உணர் - ஆராய்ந்துமுழுவதும்அறிவாயாக; காய்ந்து ஏவில் கோபங்கொண்டு பிரயோகித்தால், உலகு அனைத்துஉம் - எல்லாவுலகங்களையும், கடலோடுஉம் - கடல்களுடனும், மலையோடுஉம் - மலைகளுடனும், தீந்து ஏற - கரிந்துபோம்படி, சுடுகிற்கும் - எரிக்கவல்ல, படைக்கலங்கள் - ஆயுதங்கள்

[அஸ்திரசஸ்திரங்கள்], செய் தவத்தால் ஈந்தேன்உம் - செய்த தவப்பயனுற் பெற்றுக்கொடுத்த யானும், மனம் உட்க - மனம் வெள்கும்படி, இவற்கு ஏவல் செய்குன - இவ்விராமபிரானுக்குக் குற்றேவல்செய்கின்றன;(எ - று.)

செய்தவத்தாலீந்தேன் என்றது - மிகுந்த தவத்தின்பயனு லொழிய இராமனுக்குப் படைக்கல மீயும் பெருமை எனக்குக்கிடைத்திராது என்னுங் கருத்தைப் புலப்படுத்தினவாறும். செய்குன - செய்குவன: விகாரம். ஈந் தேனும் மனமுட்க என்றது - தன்னிடத்திற்காட்டிலும் இராமனிடத்தில் அஸ்திரங்கள் மிக்க அன்புகொண்டு தொண்டுபூண் டொழுகினமையால். பி - ம்:—[1]ஆய்ந்தோர்க்குமுணர்வரிய. [2]காய்ந்தேயிங்கு. [3]ஈந்தேனுன்மன முட்காது, ஈந்தேனுமனமுட்காது. [4]செய்குந, செய்தன. (உஅ)

உகூ.—இராமனது மகிமையை இங்ஙனம் முனிவன் கூறிமுடித்தல்.

கோதமன்றன் பன்னிக்கு முன்னையுருக் கொடுத்ததிவன்
போது[1]நின்ற தெனப்பொலிந்த பொலன்கழற்காற் பொடிகண்டாய்
காதலென்ற னுயிர்மேலு மிக்கரியோன் பாலுண்டா
லீதிவன்றன் வரலாறும் புயவலியு [2]மெனவுரைத்தான்.

(இ - ள்.) கோதமன்தன் பன்னிக்கு - கௌதமமகாமுனிவனது பத்தினியான அகலியைக்கு, முன்னை உரு கொடுத்தது-(சாபவடிவத்தை யொழித்துப்) பழைய [நிஜ] வடிவத்தைத் தந்தருளியது, இவன் - இவ்விராமனது, போது நின்றது என பொலிந்த - செந்தாமரைமலர் பொருந்திநின்றது போல விளங்குகிற, பொலன் கழல் கால் பொடி கண்டாய் - பொன்னலாகிய வீரக்கழலையணிந்த திருவடியின் தூளியேகாண்; என்தன் - எனக்கு, உயிர்மேலும் - (என்) உயிரினிடத்திலுள்ளதைக்காட்டிலும், இ கரியோன் பால் - கருநிறமுள்ள இந்த இராமனிடத்தில், காதல் - அன்பு, உண்டு - மிகுதியாகவுண்டு; இவன்தன் வரலாறுஉம் - இவ்விராகவபிரானது திவ்விய சரித்திரமும் புயம் வலிஉம் - புஜபலமும், ஈது - இதுவாம், என - என்று, உரைத்தான் - (கௌசிகமுனிவன் சனகமகாராஜனுக்குத் தயரதன்றன் புதல்வர் தகைமையைக்) கூறிமுடித்தான்; (எ - று)

கண்டாய் - தேற்றப்பொருளுணர்த்தும் முன்னிலையிடைச்சொல். இராமன்என்னுஞ் சொல்லுக்குக் கருநிறமுடையவ னென்னும் பொருளுமொன்றுஉளதாதலால், 'கரியோன்'என்றார். பன்னி - பத்நீ: வடசொற் சிதைவு. வரலாறீது, புயவலியீது எனத் தனித்தனிக் கூட்டுக: ஈது - சாதியொருமையுமாம். பி - ம்:—[1]வென்றது. [2]என்று. (உகூ)

குலமுறைகிளத்துபடலம் முற்றிற்று.



## கஉ-ஆவது கார்முகப்படலம்.

கார்முகத்தைப்பற்றிய படலம் என விரியும்: ஸ்ரீராமபிரான் சிவபிரானது வில்லை நாணேற்றத்தொடங்கி முறித்தமையைக் கூறும் பகுதியென்க. கார்முகம் - வில்; போர்செய்தலாகிய தொழிலுக்கு ஏற்றது என்பதுபற்றி வந்த வடமொழித்தத்திதாந்தநாமம்.

க.—கன்னியாசுற்கமாகத் தான் சிவதநுசை வைத்திருப்பதைச் சனகமகாராசன் தெரிவித்தல்.

[1]மாற்றமா றுரைப்பதென் மாய விற்குநான்
றோற்றவா [2]றெனமனந் துளங்கு கின்றதா
னேற்றன ணங்கையு நொய்தி னையன்வி
லேற்றுமே லிடர்க்கட லேற்று மென்றனன்.

(இ - ள்.) (அப்போது சனகன் விசுவாமித்திரனை நோக்கி),—மாயம் விற்கு - விசித்திரத்தன்மையமைந்த வில்லைக் கந்நியாசுல்கமாக வைத்ததனால், தோற்ற ஆறு - (மனத்திற்) கருதியபடி முடிக்கக்கூடாமலிருப்பதைக் குறித்து, மாறு மாற்றம் - வேறு ஒருவார்த்தை, நான்—, உரைப்பது என் - சொல்லத்தக்கது யாதிருக்கின்றது? என - என்று, மனம் - (என்னுடைய) மனம் துளங்குகின்றது - மிகவுஞ் சஞ்சலப்படுகின்றது; ஐயன் - அழகிய இந்தச்சிறுவன், நொய்தின்-விரைவாக, வில் ஏற்றும் ஏல் - (கந்யாசுல்கமாகவைத்துள்ள) இந்தச் சிவதநுசை நாணேற்றுவனேயானால், இடர் கடல் ஏற்றும் - (என்னையும்) துக்கசாகரத்திலிருந்து கரையேற்றினவனாவன்; நங்கைஉம் - (சீதையென்ற) எனது மகளும், நோற்றனள் - (முற்பிறவியில்) தவஞ்செய்திருப்பவளாவள், என்றனன் - என்று கூறினான்; (எ - று.)—ஆல்—ஈற்றசை: துயரத்தைக்குறிக்கும் இடைச்சொல்லுமாம்.

உமது மொழியினால் இவ்விராமபிரானது குலச்சிறப்பையும் புயவலிமையையும் கேட்டதனால், சீதையை இவ்விராமனுக்கு மணஞ் செய்து தரவேணுமென்று கருதினாலும், நான் முன்பு ஆலோசனையில்லாமல் சிவதனுசை முறித்தாற்கே இவளைப் பாணிக்கிரகணஞ் செய்து தருவதென்று ஒருநியமம் ஏற்படுத்தியதுபற்றி, நினைப்பதைச் செய்யக்கூடாதவனாயிருத்தல் குறித்து என்மனம் மிகவுஞ் சஞ்சலப்படுகின்றது. இப்போது கொணரப்போகின்ற சிவதநுசை இவ்வையன் நாணேற்றுவனே யாகில், அப்போது என்துயரும் நீங்கும்; இந்தச்சீதையும் நோற்றவளாவள்' என்று, தான் கந்யாசுல்கமாகச் சிவதநுசை வைத்திருத்தலை மிக்கவருத்தத்தோடு தெரிவிக்கின்றனன், சனகன் எவராலும்வளைக்கமுடியாது இருத்தல் பற்றி,'மாயவில்'என்றான்.மிதிலைக்காட்சிப்படலத்தினீற்றில் 'வில்லுங் காண்பார்' என்று இந்த இராமலட்சுமணர்கள் வருகை வேள்வியைக்காண்பதோடு வில்லுங்காண்பதற்காக என்று விசுவாமித்திரன் கூறியதனால், சனகன் 'மாற்றமாறுரைப்பதென்' என்றானுமாம்.ஐயன்-ஐ யென்ற உரிச்சொல்லினடியாகப் பிறந்தபெயர்ப்பகுபதம்; ஆர்ய னென்ற வடசொல்லின் விகாரமாகக்கொண்டு உரைத்தலுமொன்று. பி - ம்:—[1]மாற்றம்யா துரைப்பது. [2]எண. (க)

உ.—சனகராசன் ஏவலாளரையேவ, அவர்கள் வில்வைத்துள்ள இடத்தைநோக்கிச் செல்லுதல்.

என்றன [1]னேன்றுதன் னெதிர்நின் றுரையக்
குன்றுறழ் வரிசிலை கொணர்மி னீண்டென
நன்றென வணங்கினர் நால்வ ரோடினர்
பொன்றிணி கார்முகச் சாலை புக்கனர்.

(இ - ள்.) என்றனன் - என்றுசொன்ன சனகராசன், ஏன்று தன் எதிர் நின்றுரை-(அரசன்கட்டளையைச்செய்யவேணுமென்று)உடன்பட்டு(த் தனது) எதிர்நின்ற ஏவலாளரைநோக்கி, 'குன்று உறழ் அ வரி சிலை ஈண்டு கொணர்மின்' என - மலையையொத்த அந்தக்கட்டமைந்த (சிவ) தனுசை இங்கே கொண்டுவாருங்கள் என்று கட்டளையிட,— நால்வர் - நான்கு ஏவலாளர், நன்று என வணங்கினர் - நல்லதென்றுசொல்லி உடன்பட்டு (அரசனை) வணங்கிவிட்டு, ஓடினர் - விரைந்துபோய், பொன் திணி கார்முகம் சாலை புக்கனர் - பொற்கட்டமைந்த சிவதனுசுவைத்துள்ள விற்சாலைக் குட் சென்றார்கள்; (எ - று.)

தான் கன்னியாசுற்கமாகச் சிவதனுசை வைத்திருப்பதைத்தெரிவித்த சனகராசன் வில்லுங்காண்பார் என்று விசுவாமித்திரன் மொழிந்ததனால் அதனை அவ்விராமலக்குமணர்க்குக் காட்டும்படி அங்கே அச்சிலையைக் கொண்டுவருமாறு ஏவலாளர்க்குக் கட்டளையிட, அக்கட்டளையைச் சிரமேற் கொண்டு நால்வர் ஏவலாளர் அச்சிவதநுசு வைத்திருக்குமிடம் நோக்கிச் சென்றனரென்க. நன்று என்பது, உடன்பட்டதைக் குறிப்பிக்குஞ்சொல் லாய் வந்தது. பி - ம்:—[1]என்ற. (உ)

ங.—அந்தச்சிவதநுசைப் பலர் சுமந்துவருதல்.

[1]உறுவலி யானையை யொத்த மேனியர்
செறிமயிர்க் கல்லெனத் திரண்ட தோளின
ரறுபதி னாயிர ரளவி லாற்றலர்
தறிமடுத் திடையிடைத் தண்டிற் றாங்கினர்.

(இ - ள்.) (விற்சாலையிற்புக்க ஏவலாளர் அரசன்கட்டளையைத் தெரிவித்ததனால்,)—உறு வலி யானையை ஒத்த மேனியர் - மிக்க வலிமையையுடைய யானையையொத்த திடசரீரத்தை யுடையவரும், கல் என திரண்ட மயிர் செறி தோளினர் - மலைபோலத்திரண்டு மயிர்நெருங்கிய தோள்களையுடையவரும், அளவு இல் ஆற்றலர் - அளவிடமுடியாத வல்லமையையுடையவர்களுமாகிய, அறுபதினாயிரர் - அறுபதினாயிரம் வீரர்கள், இடையிடை தறி மடுத்து - (அவ்வில்லின்) நடுவிடங்களில் தூண்களைவைத்து, தண்டில்-(அத்தூண்களோடு நெடுகக்கட்டிய) தண்டுகளிலே, தாங்கினர்-(தமது தோள் களைக்கொடுத்துச்) சுமந்துவரலானார்கள்; (எ - று.)

சென்றஏவலாளர் மன்னவன்கட்டளையைத் தெரிவிக்க, சுமந்துவருவதற்கென்று ஏற்பட்டிருக்கும் பணியாளர் அறுபதினாயிரவர் வாகனத்தைச்

சுமந்துவருவதுபோலக்குறுக்கேபிணைத்தமரங்களில் நீண்டதண்டாயத்தைச் சேர்த்துக் கட்டி அந்தச்சிவதநுசைச் சுமந்துவரலானார்க ளென்க: விசுவாமித்திரமுனிவன் தநுசை இராமனுக்குக் காட்டுமாறு கேட்டுக்கொண்டதனால், சனகமன்னவன் தனதுமந்திரிமார்க்குக் கட்டளையிட, அன்னார் எட்டுச்சக்கரத்தைக்கொண்டதாய் அந்தச்சிவதநுசு வைக்கப்பட்டிருந்த இருப்புப்பெட்டியை ஐயாயிரவர் ஆட்களைக்கொண்டு இழுப்பித்துக்கொணர்ந்தன ரென்று முதனூலிலுள்ளது. முதனூலுக்கு ஏற்ப, அறுபதினாயிரர் எனப்பிரித்து - பாதிபாக அற்ற பதினாயிரர் அதாவது ஐயாயிரவ ரெனப் பொருள் கூறுவாரு முளர். பி - ம்:— [1]உறுவலியனைவருமொத்தகாட்சியர், உறுவலியனைவருமொத்த மேனியர். (௩)

௪.—சிவதநுசு அங்குவந்துசேர்தல்.

நெடுநில மகண்முது காற்ற நின்றுயர்
தடநிமிர் வடவரை தானு நாணுற
விடமிலை யுலகென வந்த தெங்கணுங்
கடல்புரை திருநக ரிரைத்துக் காணவே.

(இ - ள்.) நெடு நிலம் மகள் முதுகு ஆற்ற-நீண்டபூமிதேவி (வெகுகாலமாக அந்தத்தநுசைத் தாங்கியிருந்ததனால் வலியெடுத்த தனது)முதுகின்நோவையாற்றிக்கொள்ளவும்,—நின்று உயர் தடம் நிமிர் வட வரை தான் உம் நாண்உற-நிலைபெற்றோங்கிய பெருமைமிகுந்த மேருமலையும் (இவ்வில்லின் தோற்றத்தைக்கண்டு) வெட்கமடையவும்,-கடல் புரை திரு நகர் இரைத்து காண - சமுத்திரத்தையொத்துப் பரந்துள்ள நகரத்தில் வாழும் மாந்தர் திரண்டுபேரிரைச்சல்செய்துகொண்டுவந்து பார்க்கும்படியும்,—உலகு எங்கண் உம் இடம் இலை என - உலகத்தில் எங்கும் வெற்றிடமில்லையென்று சொல்லும்படி [மிக்கஇடத்தைத்தான்கவர்ந்துகொண்டு], வந்தது -(அந்தச் சிவதநுசு சுமக்கப்பட்டு) வந்தது; (எ-று.)

உலகத்தவர் திரண்டு ஆரவாரத்துடன் காணுமாறு பெருந்தோற்றத்துடன் அந்தச்சிவதநுசு ஆயிரக்கணக்கானபணியாளரால் தாங்கப்பட்டு வந்த தென்க. ஓரிடத்தில்தானே, அவ்வில் வைக்கப்பட்டிருந்ததனால் அதனைத் தாங்கி மிகவும் வருத்தப்பட்டிருந்த நிலமகளின் முதுகு இப்போது அவ்விடத்தினின்று எடுத்துப் பணியாளராற் சுமந்துபோகப்பெற்றதனால், ஆறலாயிற்றென்று முதலடியின்கருத்தைவிரித்துரைத்துக்கொள்க. வேறுவகையாக அந்வயித்துக்கூறுவது பொருத்தமற்றதாம். முதலடிக்கு- சனங்கள் வில்லைச் சுமந்துகொண்டு போகையில் அவர்கள் கால்வைத்தபோது பாரத்தினால் வருந்தி நீங்கிச்சென்றவிடத்து நிலமகள் முதுகாற்றுவ ளெனினுமாம். நகர் - நகரத்தவர்க்கு, ஆகுபெயர். (௪)

ரு.—இதுமுதல் ஐந்துகவிகள் - அதுகண்ட மிதிலாநகரவாசிகள் பற்பலவாறு கூறுவதைத் தெரிவிக்கும்.

சங்கொடு சக்கரந் தரித்த [1]செங்கைய
சிங்கவே றல்லனே லிதனைத் தீண்டுவா

வனெங்குள ஞெருவனின் [3]றேற்றி னிச்சிலை
மங்கைதன் றிருமணம் வாழுமா லென்பார்.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) சங்கொடு சக்கரம் தரித்த செங்கைய - சங்குசக்கரங்களைத் தாங்கிய கையையுடைய, சிங்கம் ஏறு அல்லன் எல்- ஆண்சிங்கம்போன்ற திருமால், (நாணேற்றி) வளையாமற்போவானேயானல், இதனை - இந்தச்சிவ தநுசை, தீண்டுவான் ஒருவன் - தொடுதற்குத்தான் தகுதியுள்ளவொருவன், எங்கு உளன் - (வேறு) எங்கேயுள்ளான்? இன்று - இன்றைத்தினம், (அத் திருமால்வந்து), இ சிலை ஏற்றின் - இந்தவில்லை நாணேற்றி வளைப்பானுனல், மங்கைதன் திரு மணம் - சீதாபிராட்டியின் விவாகம், வாழும் - வாழ்ச்சிபெறும், என்பார் - என்றுசொல்பவர்களும்,—(எ - று.)

திருமாலைத்தவிர வேறொருவரால் இத்தநுசைத் தீண்டுத லென்பதும் முடியாதாகையால், அத்திருமால்வந்து இன்றுநாணேற்றினுல் சீதையின் திருமணம் பெருவாழ்வாக நடக்கு மென்றனரென்க; இப்போது விசுவாமித் திரமுனிவனோடு வந்துள்ளவன் திருமாலாயிருப்பின், இஃது அவனால் நாணேற்றப்பட்டுச் சீதையின்மணம் நாம்இதற்குமுன் எண்ணியிருந்தது போல இல்லையாகாது இனிதுநிறைவேறுமென்று கூறியவாறு."என்றுமினி மணமுமிலையென்றிருந்தோமிவனேற்றின், நன்றுமலர்க்குழற்சீதைநலம்பழு தாகாதென்றான்"என்று மேல் சனகன் கூறுவதாக வருவதுங் காண்க. ஒருவன்நின்று என்றும் பிரிக்கலாம். பி - ம்:— [1]தாங்கிய, செங்கையச். [2]எங்குளவொருவன். [3]ஏற்றும். (௫)

௬. கைதவந் தனுவெனல் கனகக் குன்றென்பா
ரெய்தவன் யாவனோ வேற்றிப் பண்டென்பார்
[1]செய்ததத் திசைமுகன் றீண்டி யன்றுதன்
மொய்தவப் பெருமையின் முயற்சி யாலென்பார்.

(இ - ள்.) (இதனை), தனு எனல் - வில்லென்று சொல்லுதல், கைதவம் - வஞ்சனைச்சொல்லே: (இது), கனகம் குன்று - பொன்மலையாகிய மேருவாகும், என்பார் - என்றுசொல்பவர்களும்,— அ திசை முகன்- அந்தப்பிரமதேவன், செய்தது -(இதனை)இயற்றியது, தீண்டி அன்று-(தன் கையாற்) பரிசித்துஅல்ல; (பின்னையெவ்வாறு இயற்றியதென்றால்),— தன் மொய் தவம் பெருமையின் முயற்சியால் - (தனது) நிறைந்த பெருமை பெற்ற தவத்தின்மகிமையினாலாகும், என்பார் - என்றுசொல்பவர்களும்,— (இதனை)—, பண்டு ஏற்றி எய்தவன் யாவன் ஓ என்பார் - முற்காலத்தில் நாணேற்றியெய்தவன் எவனோ? என்றுகூறுபவர்களும்,—(எ - று.)

முதலடியில், தனுவினிடத்து அத்தன்மையைமறுத்து மேருவின்தன்மையை யேற்றிக்கூறியது - அவநுதியணியாம். 'இத்துணைப்பெரியதநுசைப் பிரமதேவன் தன்கையால் இயற்றவில்லை தன்தவவலிமையின்மகிமையினாலியற்றினனென்பது' இரண்டுமூன்றாமடிகளிற் கூறியபொருள். பின்னிரண்டடிகளில் அன்றுஎன்பதைஇடைச்சொல்லாகக்கொண்டு, அன்று - அக்கா

லத்தில்[முற்காலத்தில்], திசைமுகன் தன் மொய்தவப்பெருமையின் முயற்சியினாலே தீண்டிச்செய்தது என்பாருமென்று உரைப்பினுமாம். இரண்டாமடி நான்காமடியாகச் சிலஏட்டுப்புத்தகங்களிற் காணப்படுகின்றது.பி-ம்:—[1]செய்தவத்திசைமுகன், செய்தவன்றிசைமுகன். (சு)

எ. [1]திண்ணெடு மேருவைத் திரட்டிற் றோவென்பார்
வண்ணவான் கடல்பண்டு கடைந்த மத்தென்பா
ரண்ணல்வா ளரவினுக் கரச னோவென்பார்
விண்ணிடு நெடியவில் வீழ்ந்த தோவென்பார்.

(இ - ள்.) (இந்தவில்),—திண் நெடு மேருவை-வலிய நெடிய மேருவை, திரட்டிற்றுஓ - திரட்டிச்செய்ததோ, என்பார் - என்பவர்களும்,—வண்ணம் வான் கடல் பண்டு கடைந்த மத்து என்பார் - அழகிய நீண்ட பாற்கடலை முன்பு கடைந்த மத்தாகிய மந்தரமலையே (இங்ஙனம் ஆயிற்று) என்றுசொல்பவர்களும்,—அண்ணல் வாள் அரவினுக்கு அரசன்ஓ என்பார் - பெருமை பொருந்திய ஒளியுள்ள பாம்புகட்கு அரசனாகிய ஆதிசேடன்தானோ என்று கூறுபவர்களும்,—விண் இடு நெடிய வில் வீழ்ந்தது ஓ என்பார் - ஆகாயத்தில் இடுகின்ற நீண்ட இந்திரதநுசு தவறி அங்குநின்று கீழேவிழுந்துவிட்டதோ என்று சொல்பவர்களும்,—(எ - று.)

அந்தவில்லைக் கண்டவர்களிற் சிலர் 'மேருதான் திரண்டதோ!' என்றும், மற்றுஞ்சிலர் 'பாற்கடலைக்கடைந்தமந்தரமலை இங்ஙனமாயிற்றோ!' என்றும், பின்னுஞ்சிலர் 'ஆதிசேடனே இங்ஙனம் உருக்கொண்டுவந்திருக்கின்றானோ!' என்றும், வேறுசிலர் 'வானவில் தவறி அங்குநின்று தரையில்வீழ்ந்ததோ!' என்றும் இவ்வாறு அதனைக்குறித்துப் பலர் பலபடியாகப்புனைந்துகூறினரென்க. இரண்டுமூன்றாவது அடிகள் சிலஏட்டுப்பிரதிகளில் மாறிக்காணப்படுகின்றன. பி - ம்:—[1]திண்ணெனுமேருவை. (எ)

அ என்னிது கொணர்கென வியம்பி னானென்பார்
மன்னவ ருளர்கொலோ மதிகெட் டாரென்பார்
முன்னையூழ் வினையினான் [1]முடிக்கி லாமென்பார்
கன்னியு மிச்சிலை காணு மோவென்பார்.

(இ - ள்.) இது கொணர்க என என் இயம்பினான் என்பார் - 'இந்தவில்லைக்கொண்டுவருக என்று எதற்காகச்சொன்னான் இவ்வரசன்?' என்று சொல்பவர்களும்,-மதி கெட்டார் மன்னவர் உளர் கொல்ஓ என்பார்-'(இதனைக் கன்னியாசுற்கமாகவைத்த இவனைப்போல) அறிவுகேடரான அரசர் வேறுஎவரேனும் இருக்கின்றார்களா?'என்றுசொல்பவர்களும்,— முன்னை ஊழ் வினையினால் முடிக்கில் ஆம் என்பார் - 'முற்பிறவியிற்செய்துள்ள நல்வினையினால் ஒருகால் காரியம் கைகூடினாற் கைகூடலாம்' என்றுசொல்பவர்களும், கன்னிஉம் இ சிலை காணும் ஓ என்பார் - 'சீதையாகியகன்னிகையும் (சுல்கமாகவைத்துள்ள) இந்தவில்லைக் கண்டிருப்பளோ!' என்பவர்களும்,—(எ - று.)

இந்தச்சிலையைவளைத்து நாணேற்றுத லென்பது செய்யமுடியாத தொரு செயலாதலால், 'இது கொணர்கென என்னியம்பினன்?' என்றும், 'மன்னவ ருளர்கொலோ மதிகெட்டார்' என்றும் கூறலாயினர். இந்தச் சீதைக்குமணம்ஆகித் தீரவேண்டுமென்றுநல்விதிவலிமை யேற்பட்டாலன்றி இப்போது அரசன் குறித்துள்ள சுல்கம் முற்றுப்பெறுதென்பது, மூன்று மடியின் பொருள். கன்னியாசுல்கமாகவைத்துள்ள இந்தத்தநுசைக் கண்டால், சீதை இப்போது எந்நிலையிலிருப்பாளோ? அவள் இதனைக் காண வில்லைபோலு மென்பது, நான்காமடியின் பொருள். பி - ம்:—[1]முடிக்கலாம்.

கூ. இச்சிலை யுதைத்தகோற் [1]கிலக்க மியாதென்பார்
[2]நச்சிலை நங்கைமே னாட்டும் வேந்தென்பார்
நிச்சய மெடுக்குங்கொ னேமி யானென்பார்
சிற்சிலர் விதிசெய்த தீமை[3]தா னென்பார்.

(இ - ள்.) இ சிலை - இந்தவில், உதைத்த - (தன்னிடத்தினின்று) வெளிப்படுத்திய, கோற்கு - அம்புக்கு, இலக்கம் - குறியாக வாய்வது, யாது - எது உள்ளது? என்பார் - என்று சொல்வார்களும், வேந்து - சனகராசன், ந சிலை - பெருமைபெற்ற இந்த வில்லை, நங்கை மேல் - நங்கையின் திறத்துக்காகவே, நாட்டும் - நிலைநிறுத்தியுள்ளான், என்பார் - என்றுசொல்வார்களும், நேமியான் சக்கராயுதத்தைத்தாங்கிய திருமால்போன்ற இந்த இராகவன், நிச்சயம் எடுக்கும் கொல் என்பார் - நிச்சயமாக இந்த வில்லையெடுத்து வளைப்பானோ? என்றுசொல்வார்களும், சிற்சிலர்—,—விதிசெய்த - ஊழ்வினை விளைத்த, தீமைதான் - தீம்புதான் (எவ்வாறுயிருந்தது !) என்பார் - என்று வருந்துபவர்களும் (ஆனார்கள்); (எ - று.)

இத்துணைப்பெரிதாகவுள்ள வில்லுக்கு எற்ற இலக்கு இவ்வுலகிலேயே யில்லையே யென்று சிலர்கூற, வேறுசிலர் 'இது வளைத்து இலக்கின்மேலெய்வதற்காக அமைந்த வில் அன்று; சீதையின் விவாகத்திற்குச் சுல்கமாக இருக்கும்பொருட்டே அமைந்தது'என்று மாறுகூற, 'இந்த இராகவன் தவறாது எடுப்பனோ?' என்று சிலர்வருந்த, மற்றுஞ்சிலர் 'சீதையின் விவாகம் இனிது நடைபெற அதனைக்காணவேணுமென்று எதிர்பார்த்திருக்கிற நம்முடைய தீவினைப்பயனே இங்ஙனம் ஒருவில்லின்வடிவாக அமைந்துள்ளது' என்று வெறுத்துக்கூறலாயின ரென்க. இனி இரண்டாமடிக்கு - சனகராசன் சீதையின் விவாகத்துக்குச் சுல்கமாக நாட்டினனே என்று சிலர்கூறலானரென்றும், மூன்றாமடிக்கு - நேமியான் தான் நிச்சயமாக இந்த வில்லை எடுப்பனோ? என்றும் கூறலு மொன்று. ந - உயர்வுகுறிக்கும்இடைச்சொல். பி - ம்:—[1]இலக்கியாதென்பார். [2]நற்சிலை. [3]ஆமென்பார். (கூ)

கம.—வந்த வில்லைக் கண்ட மன்னவர் விதிர்விதிர்த்தல்.

மொய்த்தன ரின்னண மொழிய மன்னன்மு
றுய்த்தனர் நிலமுது குளுக்கிக் கீழுற

வைத்தனர் வாங்குந ரியாவ ரோவெனக்
கைத்தலம் விதிர்த்தனர் கண்ட வேந்தரே.

(இ - ள்.) மொய்த்தனர் - (அங்கு) நெருங்கிக் கூடியிருந்த மிதிலா நகரத்துச் சனங்கள், இன்னணம் மொழிய - கீழ்க்கூறியவாறு பலபடியாகச் சொல்லிக்கொண்டிருக்க,— (அதனைச்சுமந்துவந்த பணியாளர்), மன்னன் முன் உய்த்தனர் - சனகராசன் முன் கொண்டுபோய், நிலம் முதுகு உளுக்கி கீழ் உற வைத்தனர் - நிலமகளின் முதுகுப்பக்கம் (அதன் சுமையைத் தாங்கமாட்டாமல்) நெளிந்து குழிந்துபோம்படி (பூமியின்மீது அந்த வில்லை) வைத்தார்கள்; கண்ட வேந்தர் - (அந்த வில்லைக்) கண்கூடாகப் பார்த்த (அப்போது அங்கிருந்த) அரசர் யாவரும், வாங்குநர் யாவர் ஓ என - (இந்தவில்லை) வளைக்கப்போகின்றவர் யாவரோ? [எவராலும் வளைக்க முடியாது] என்று சொல்லி, கைத்தலம் விதிர்த்தனர் - (அந்த வில்லைத் தொடுவதற்கும் கூசிக்) கைநடுக்க மெடுத்தனர்; (எ - று.)

நகரத்துச்சனங்கள் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில், சனகராசன்முன் அந்தவில்லைப் பணியாளர் வைக்க, அப்போது அங்குவந்திருந்த அரசர்கள் அந்தவில்லைப் பார்த்து இவ்வில்லை வளைக்க எவராலாகுமென்று சொல்லிய வண்ணம் அவ்வில்லைத் தொடுதற்குங் கூசிக் கைநடுக்கங் கொண்டன ரென்பதாம். இன்னணம் = இன்னவண்ணம்: மரூஉ. (௬0)

௧௧.—சதாநந்தமுனிவன் கூறத் தொடங்குதல்.

போதக மனையவன் பொலிவு நோக்கியவ்
வேதனை தருகின்ற வில்லை நோக்கித்தன்
மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய
கோதமன் காதலன் கூறன் மேயினன்.

(இ - ள்.) போதகம் அனையவன் பொலிவு நோக்கி - யானைக்கன்றை யொத்தவனாகிய ஸ்ரீராமனது அழகைக் கண்டு, (அவனுக்குத் தன்மகள் சீதையைவிவாகஞ்செய்விக்கவேணுமென்றுவிரும்பி), அ வேதனை தருகின்ற வில்லை நோக்கி - (எவர்க்கும்வளைக்கவொண்ணாதபடி பெரு)வருத்தத்தைத்தருகின்ற தநுசு(கன்னியாசுல்கமாகவைக்கப்பட்டிருப்பதனால் தன் விருப்பின்படிசெய்யமுடியாமல் இடையூறாக)இருப்பதைப் பார்த்து, தன் மாதினை நோக்குவான் - (அந்தோ கணவனாதற்குஉரியவன்வந்திருந்தும் மணம்முடிக்கமுடியாமல்இருக்கின்றதே! இவள் கன்னிகையாகவேமூப்பளோ?என்று மனக்கவலையோடு)தன்மகளைப் பார்ப்பவனாகிய சனகராசனது, மனத்தை - (குழப்பமடைந்துள்ள) மனத்தை, நோக்கிய - உணர்ந்த, கோதமன் காதலன் - கௌதமரிஷியின்புத்திரனாகிய சதாநந்தமுனிவன், கூறல் மேயினன் - சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அதனை மேலே காண்க.

இராமனதுபேரழகையும், அவனுக்குத் தன்மகளை மணமகளாக்கலாமென்றால் கன்னியாசுல்கமாகத் தநுசுஒன்றுஇடையேயிருப்பதையும், தன்மகளின் மணப்பருவம்கழியப்பெறுவதையும் கண்டு சனகமன்னவன் மனந்தடு

மாறிநிற்க, அம்மன்னவனதுபுரோகிதனாகிய சதானந்தமுனிவன் விசுவாமித்திரமுனிவனிடத்து ஒன்றுகூறத்தொடங்கினனென்க. போதகம் - பத்து வயதுள்ளயானைக்கன்று. 'போதகமனையவன் பொலிவு நோக்கி' என்பதில், அவ்விராமபிரான் சீதைக்குஏற்றகணவனென்றுதோன்றினும் வில்லைவளைத்தலாகிய இவ்வரியதொழிலில் அப்பிரானையேவுவது அவனதுசௌகுமாரியத்துக்குத் தகாதெனக்கருதினன் மன்னவனென்பதும் தோன்றும். இங்ஙனம் மன்னவன் தடுமாறுகையில், சதாநந்தமுனிவன் தான் இராமபிரானதுமகிமையைக் கண்டறிந்துள்ளானாதலால், திருமாலின்அவதாரமூர்த்தியாகிய இப்பிரானால் இவ்வில்லைவளைத்தல் எளிதில்முடியுமென்றுதேறி, அப்பிரானை உடனே அச்செயலைச்செய்யுமாறுசொல்லாது அதன்வரலாற்றைக்கூறி இங்ஙனம் பெருமைபெற்ற இவ்வில்லை வளைத்தற்கு இவனே தக்கவனெனத் தான் தெளிந்தமையை ஈற்றில் தெரிவிக்கின்றனனென்க. வில்லின்வரலாற்றைச் சனகராசன் கூறுவதாக முதனூலி லுள்ளது. (கக)

கஉ.—இதுமுதல் கங-கவிகளால்,வில் சீதை இவர்களின் வரலாற்றைச் சதானந்தன்கூறி இராமன் இந்தவில்லை வளைக்கவேண்டுமெனல்.

இமையவில் வாங்கிய வீசன் பங்குறை
யுமையினை யிகழ்ந்தன னென்ன வோங்கிய
கமையறு சினத்தனிக் கார்மு கங்கொளாச்
[1]சமையுறு தக்கனார் வேள்வி சாரவே.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) இமையம் வில் வாங்கிய ஈசன் - மேருமலையை வில்லாக வளைத்த சிவபிரான், பங்கு - (தன்) இடப்பக்கத்திலே, உறை - வாழ்கின்ற, உமையினை - பார்வதீதேவியை, இகழ்ந்தனன் - (தந்தையாகிய தக்கன்) அவமதித்தான், என்ன - என்ற காரணத்தால், ஓங்கிய - பொங்கியெழுந்த, கமை அறு சினத்தன்-பொறுமையற்றகோபத்தையுடையவனாய், இ கார்முகம் கொளா - இந்தவில்லையெடுத்துக்கொண்டு, சமை உறு தக்கனார் வேள்வி சார - பொறுமைபொருந்திய தட்சப்பிரசாபதி யாகஞ்செய்யுமிடத்தைநோக்கிச்சேர,—(எ - று.) 'உக்கன பல்லொடு கரங்கள்' என அடுத்த கவியோடு தொடரும்.

மலையரசனாதலால் மேருவின்தொழிலை இமயத்துக்குஏற்றி 'இமையவில்வாங்கிய ஈசன்'என்றார்:''இமயவில்வாங்கியஈர்ஞ்சடையந்தணன்''என்ற கலித்தொகையையும் காண்க: அன்றியும், மந்தரம் மேரு இமயம் கைலாசம் என்பன அபேதமாகக்கூறப்படுதலைத் தமிழ்நூல்களிற் காணலாம். இப்பாடலிற் கூறியக்தை:—சிவபெருமான் தன்னைநோக்கித்தவம்புரிந்த சதியென்றுபேர்படைத்த தட்சன்மகளைத் தானேகிட்டிப் பின்பு தட்சன் தாரைவார்த்துக்கொடுக்கமணம்புரிந்ததும் மறைந்துவிட்டுப் பிறகுஅவனையறியாமல் அவளை மயக்கி அழைத்துக்கொண்டு போனதுமல்லாமல், தட்சன் அந்தச்சிவனையும் தன் புதல்வியையும் பார்க்கக் கயிலைக்குச் சென்றபோது தன்கணங்களைக் கொண்டு அவனை அவமானப்படுத்தினன்;

அப்போது தன்மகளாகிய தாட்சாயணியும் வந்து விசாரியாமலிருந்துவிட்ட தனால், தட்சமுனிவன் மருமகனையும் மகளையும் அழையாது யாகஞ்செய்யத் தொடங்கினன்: அங்ஙனம் அம்முனிவன் யாகஞ்செய்வதை நாரதனாலறிந்த தும், சதி சிவபிரானிடத்து அரிதில் அநுமதிபெற்றுத் தக்கமுனிவன் வேள்விசெய்யுமிடத்துக்கு ஆடம்பரத்தோடு வர, அவளைக்கண்ட தட்சன் 'உன்னை யார் வரச்சொன்னது? நான் உங்களைப் பார்க்கவந்தபோது உன் கணவனாகிய பித்தன் என்னை யவமதித்தா னாதலால், நான் அந்தச்சிவனுக்கு அவிர்ப்பாகங் கொடேன்: நீயும் என்னெதிரில் நிற்கவேண்டா' என்ன, சதிதேவி மனங்கொதித்து 'உன் யாகமும் நிறைவேறாமல் நீயும் நசிப்பாய்' என்று சபித்துவிட்டு, திருக்கயிலை சார்ந்து சிவபிரானுக்குத் தன்கருத்தைத் தெரிவிக்க, தன் அமிசத்தினால் அந்தச்சிவன் வீரபத்திரக்கடவுளையுண்டாக்கி த் தக்கன் செய்யும்யாகத்தையழிக்குமாறு செலுத்தின னென்க. 'சமைவுறு என்றபாடத்திற்கு - நடந்துகொண்டிருந்த என்றுபொருள். (௬உ)

௬௩. [1]உக்கன பல்லொடு கரங்க [2]ளோடினர்
புக்கனர் வானவர் புகாத சூழல்க
டக்கனல் வேள்வியிற் றழலு மாறின
முக்கணெண் டோளவன் முனிவு மாறினான்.

(இ - ள்.) (அவ்வேள்விக்குவந்திருந்ததேவர்களிற்சிலருடைய), பல் லொடு கரங்கள் - பற்களும் கரங்களும், உக்கன-கீழேசிந்தின: (அன்றி யும்), வானவர் - (அங்குவந்திருந்த) தேவர்கள், ஓடினர் - ஓடி, புகாத சூழல் கள் புக்கனர் - (அதுவரையிற்) புகுந்திராதஇடங்களிற் போய்ப் பதுங்கிக் கொண்டார்கள்; தக்கன் நல் வேள்வியில் தழல்உம் - தட்சபிரசாபதியின் யாகாக்கினிகளும், மாறின-அழிந்திட்டன; (இங்ஙனமெல்லாம்ஆனபின்பே), முக்கண் எண் தோளவன்-மூன்றுகண்களையும் எட்டுத்தோள்களையுமுடைய சிவபிரான், முனிவு மாறினான் - (தனது) கோபந்தணிந்தான்; (எ - று.)

தனதுமனைவியையவமதித்தகாரணத்தினாற் சினங்கொண்ட சிவபிரான் அவ்வேள்வியை நடத்தற்குஉதவிய தேவர்கள்மீதும் பெருஞ்சினங்கொண்டு அவர்களை நிலைகெட்டோடச்செய்து யாகாக்கினிகளையும்அழித்தபின்பே தன் சினந் தணிந்தன னென்க. பல்உக்கது - சூரியனுக்கு. கரம் - மற்றையுறுப் புக்கட்கும்உபலட்சணம். சிவபெருமான் தான் ஏவியனுப்பிய வீரபத்திரன் யாகசாலையிற்புகுந்து தேவர் முதலியோரைச் சின்னபின்னப்படுத்தி யாகத் தைத் தொமிசஞ்செய்தபின்பு தானே சதிதேவியோடுஇடபாரூடனாய்வந்து அவ்வேண்டுகோளினால் தன்சினம்நீங்கி யாகத்தில் இறந்துபோன தேவர் கள் முதலியோரைப்பிழைப்பித்து அருள்செய்தன னென்க. காருகபத்தியம் ஆகவனீயம் தட்சிணாக்கினி என அக்கினி மூன்றுஆகையால், 'தழலு மாறி ன' என்று பன்மையாற் கூறினார். 'ஆறின' என்றும் பிரிக்கலாம். பி - ம்.— [1]உக்கனர். [2]ஓடின. (௬௩)

௬௪. தாளுடை வரிசிலை சம்பு வும்பர்தந
நாளுடை மையினவர் நடுக்க நோக்கியிக்

கோளுடை விடையனுன் குலத்துட் டோன்றிய
வாளுடை யுழவனோர் மன்னன் பால்வைத்தான்.

(இ-ள்.) சம்பு - (தன்சினம்மாறிய) சிவபிரான்,—அவர் நடுக்கம் நோக்கி-(தான்எய்யாமற்கையில் வெறுமனே வில்லைவைத்திருந்தாலும்) அத்தேவர்கள் நடுங்குவதைப் பார்த்து, உம்பர் தம் நாள் உடைமையின்-தேவர்கள் இன்னும் தாம் வாழவேண்டிய ஆயுள்நாளை யுடையவராயிருத்தலினால், தாள் உடை வரி சிலை - வலியஅடித்தண்டையுடைய கட்டமைந்த அவ்வில்லை, இ கோள் உடை விடைஅனுன் குலத்துள் தோன்றிய - இந்த வலிமைகொண்ட இடபம்போன்றவனாகிய சனகராசனது குலத்திலேபிறந்த, வாள்உடைஉழவன் - வாளாயுதத்தைக்கொண்டு போர்க்களத்தில்உழுபவனை, ஓர் மன்னன்பால் - ஓரரசனிடத்தில், வைத்தான் - கொடுத்தான்.

சிவபெருமான் சினம்மாறியபின்பும் இவ்வில்லைக் கையிற்கொண்டிருக்கையில் 'நம்மையொழித்துவிடுவானோ?' என்று வானவர் நடுநடுங்கிநிற்க, அதுகண்டபரமசிவன் சனகராசனது குலத்துத்தோன்றிய பூர்வீகராசனொருவனிடம் இதனைவைத்துப்போக, அது பரம்பரையாக இவ்வரசனுக்குக் கிடைத்ததென வில்வந்த வகையைக் கூறியவாறு. சிவபெருமான் வில்லைத் தந்தமன்னவன் பெயர் தேவராதனென்பது. கோபம்மாறாது இவ்வில்லைப் பின்னும் சிவபெருமான்வைத்திருப்பின் தேவர்கள் அழிந்திருப்பரென்பது, 'உம்பர்தம்நாளுடைமையின் ஓர்மன்னன்பால்வைத்தான்' என்பதன்கருத்து. ''வில்லேருழவர்'' என்றாற்போல 'வாளுடையுழவன்' என்றார். (கச)

கரு. *கார்முக வலியையான் †கழறல் வேண்டுமோ
வார்சடை யரனிகர் வரத நீயலால்
யாருள ரறிபவ ரிவற்குத் தோன்றிய
தேர்முக வல்குலாள் செவ்வி கேளெனு.

(இ-ள்.) கார்முகம் வலியை யான் கழறல் வேண்டும் ஓ - இந்தவில்லின் வல்லமையை யான் எடுத்துச் சொல்லவேண்டுமோ? வார் சடை அரன் நிகர் வரத - நீண்டசடைமுடியையுடையனான அந்தச்சிவபிரானை யொத்த முனிவனே! நீ அலால் - நீயே யல்லாமல், அறிபவர் - (இதன் வலிமையை) உண்மையாக அறியக்கூடியவர், யார் உளர் - எவர் இருக்கின்றனர்? [எவருமில்லை]; இவற்கு - இந்தச்சனகமன்னவனுக்கு, தோன்றிய - (புத்திரியாக) அவதரித்த, தேர் முகம் அல்குலாள் - தேர்த்தட்டைப்போன்ற நிதம்பத்தையுடையவளான சீதையின், செவ்வி - வரலாற்றை, கேள் - கேட்பாயாக. எனு - என்று சொல்லி,—(எ - று)—இந்தச் செய்யுளிலுள்ள 'எனு' என்பது, இருபத்துநான்காங் கவியிலுள்ள 'என்றான்' என்ற முற்றைக்கொண்டு முடியும்.

'கார்முகவலியை யான் கழறவேண்டுமோ' என்றதன்கருத்து - அறுபதினாயிரவர் சுமந்துவர நேரே கண்டதனால் நமக்கே தெரியு மென்பது. திரிமூர்த்தியருள் ஒருவனாகிய சிவபிரானையொத்த நமக்கு இந்தச் சிவதநு

சின் வல்லமை தெரியுமேயல்லாது எம்போலியர்க்கு முழுவதும் அறிந்து சொல்லமுடியாதென்பது, இரண்டு மூன்றாவதடிகளின் பொருள். இவ்வாறு வில்லின்வரலாற்றையும், உறுதித்தன்மையையும் கூறிய சதாநந்தமுனிவன், அவ்வில்லை நாணேற்றியவர்க்கு மனைவியாதற்கு உரிய சீதையின் வரலாற்றைக் கூறத் தொடங்குகின்றன னென்க. [2]இதற்குத் தோன்றிய என்ற பாடத்திற்கு - குலத்து முன்னோர் வைத்துக்கொண்டிருந்த இந்த வில்லைக் கன்னியாசுல்கமாக வைத்துப் பயன்பெறுமாறு அவதரித்த என்று பொருள் காண்க. வரதன் - வரத்தைக் கொடுப்பவன்: இவன் அப்படிப்பட்டவனு தலைக் கீழ்வந்த இம்முனிவனதுவரலாற்றா லறியலாம். இப்போது இங்ஙனம் விளித்தது - சீதையை மணந்துகொள்ளுதற்கு ஏற்ற கொழுநன் கிடைக்கவேணுமே யென்றிருக்கின்ற எங்கட்கு அவ்வரத்தைத் தருமாறு இராமபிரானை இங்கு அழைத்துக்கொண்டு வந்திருக்கின்றா யென்ற பொருளைக் குறிப்பிக்கும்: ஆகவே, 'வரத' என்றது - கருத்துடையடைகோளியாம். பி - ம்:—[1] கழற. (கக)

கசு. இரும்பனைய [1]கருநெடுங்கோட் டிணையேற்றின் பணை[2]யேற்ற
பெரும்பியலிற் [3]பளிக்குநுகம் பிணைத்ததனோ டணைத்தீர்க்கும்
வரம்பின்மணிப் பொற்கலப்பை வயிரத்தின் கொழுமடுத்திட்
டுரம்பொருவி [4]னிலம்வேள்விக் கலகில்பல சாலுழுதேம்.

(இ - ள்.) வேள்விக்கு - வேள்விசெய்வதன்பொருட்டு (ச் சாலையமைத்தற்காக), இரும்பு அனைய கரு நெடு இணை கோடு - இரும்பையொத்த [வலிய] பெரிய நீண்ட இரண்டுகொம்புகளையுடைய, ஏற்றின் - எருதின், பணை ஏற்ற பெரும் பியலில் - பருமைதங்கிய பெரிய பிடரியின்மேல், பளிக்கு நுகம் பிணைத்து-பளிங்கினாற்செய்த நுகத்தடியைப்பூட்டி, அதனோடு அணைத்து ஈர்க்கும் வரம்பு இல் மணி பொன் கலப்பை - அந்த நுகத்தடியோடுசேர்க்கப்பட்டு இழுத்துக்கொண்டுபோகப்படுகின்றதான எல்லையில்லாத [பல] இரத்தினங்கள்பதித்த பொற்கலப்பையில், வயிரத்தின் கொழு மடுத்திட்டு - வயிரத்தாற்செய்த கொழுவைச் சேர்த்து, உரம் பொருவு இல்பலத்தினால் ஒப்பில்லாத [உழுதற்குஅரிதாகி உறுதியாயிருக்கின்ற], நிலம் - பூமியை, அலகு இல் பல சால் - அளவில்லாதபலசால், உழுதேம் -(நாங்கள்) உழுதோம்; (எ - று.)

வேள்விசெய்வதன்பொருட்டு நிலத்தை யுழுததை, இதனாற் கூறுகின்றான். அரசனை உளப்படுத்தி, 'உழுதேம்' என்று பன்மையாற் கூறினான். பி - ம்:—[1] கருந்திரள். [2]ஏற்றை. [3]பிணித்த. [4]நிலமகளை. (கசு)

கஎ. உழுகின்ற கொழுமுகத்தி னுதிக்கின்ற [1]கதிரினொளி
பொழிகின்ற புவிமடந்தை [2]யுருவெளிப்பட் டெனப்புணரி
யெழுகின்ற தெள்ளமுதோ டெழுந்தவளு மிழிந் [3]தொதுங்கித்
தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினள்.

(இ - ள்.) உழுகின்ற கொழு முகத்தின் - உழுந்தொழிலைச் செய்கின்ற கொழுவின் முனையிலிருந்து,—உதிக்கின்ற கதிரின் ஒளி பொழிகின்ற-உதய

...ங்கின்ற சூரியன்போன்ற ஒளியை வெளிவீசுகிற, புவிமடந்தை உரு - பூமிதேவியின் திருவுருவம், வெளிப்பட்டு என - வெளிப்பட்டாற்போல,— புண்ணரி எழுகின்ற தெள் அமுதோடு எழுந்தவள் உம் இழிந்து ஒதுங்கி தொழுகின்ற நல் நலத்து - பாற்கடலிலிருந்து தோன்றின தெள்ளியஅமுதத்தோடு உடன்பிறந்தவளான இலக்குமியும் (தாழ்வடைந்து) ஒதுங்கிநின்று கைகூப்பித் தொழுகின்ற மிக்கஅழகையுடைய, பெண் அரசி - பெண்களின் நாயகமாகிய இந்தச்சீதை, தோன்றினாள்—; (எ - று.)

கொழுமுகத்தின் தோன்றினாள்என்க. இலக்குமியினும்பேரழகுபடைத்தவளென்பது, பின்னிரண்டடியிற் கூறிய பொருள். பி - ம்:—[1]கதிரொளிபோல். [2]திரு. [3]ஒதுங்க, ஓங்கி. (கஎ)

கஅ. குணங்களைஎன் கூறுவது கொம்பினைச்சேர்ந் தவையுய்யப்
பிணங்குவன வழகிவளைத் தவஞ்செய்து பெற்றதுகாண்
கணங்குழையா ளெழுந்ததற்பின் கதிர்வானிற் கங்கையெனு
மணங்கிழியப் [1]பொலிவிழந்த வாறொத்தார் [2]வேறுள்ளார்.

(இ - ள்.) குணங்களை - (இந்த மாதின்) குணங்களைப்பற்றி, என் கூறுவது - என்னவென்று (யான்) சொல்லுவது? [என்னால் உள்ளபடியறிந்து சொல்லமுடியாது];(ஏனென்னில்),அவை - அந்தக்குணங்களென்பன யாவும், கொம்பினை - கொம்புபோல் மெல்லியலான இந்தச்சீதையை, சேர்ந்து - (தாம்) அடைந்து, உய்ய - நல்வாழ்வு பெறுமாறு, பிணங்குவன - (ஒன்றோடொன்று) மாறுபட்டு (என்னைக் கைக்கொள்ளவேணும் என்னைக் கைக்கொள்ளவேணும் என்று) மேல் விழுகின்றன; அழகு - அழகுஎன்பதோ, தவம் செய்து - தவத்தைச்செய்து, இவளை பெற்றது - இவளை யடைந்திட்டது; கணம் குழையாள் எழுந்ததன் பின் - திரண்ட குழையென்னுங் காதணியைப்பூண்ட இந்தச்சீதை பிறந்த பிறகு, வேறு உள்ளார் - மற்றைமங்கையர் யாவரும், கங்கை எனும் அணங்கு கதிர் வானின் இழிய பொலிவு இழந்த ஆறு - கங்கையென்று சொல்லப்படுகின்ற தெய்வநதி சூரியனியங்குகின்ற வானத்திலிருந்து (இந்தப்பூமியில்) இறங்கிவந்ததனால்(தமது)அழகையிழந்த மற்றைநதிகளை, ஒத்தார்-போன்றார்கள்[தமது பொலிவையிழந்தனர்];(எ-று.)

முதலிரண்டடிகளினால் இந்தச்சீதை நற்குணங்கட்கெல்லாம் இருப்பிடமானவளென்றும் பேரழகுபடைத்தவளென்றும் கூறி, இப்படிப்பட்ட சீதை தோன்றிய பிறகு இவட்குமுன்னே குணங்களினாலேனும் அழகினாலும் எந்தமகளிரும் முன்நிற்கமாட்டாது. பொலிவிழந்தமையை உவமைமுகத்தாற் பின்னிரண்டடிகளால் விளக்கினார். கொம்பு - உவமவாகுபெயர். காண் - தேற்றம். பி - ம்:—[1]பொலிவழிந்த [2]வேறற்றார். (கஅ)

க௯. சித்திரமிங் கிது[1]வொப்ப தெங்குண்டு செய்வினையால்
வித்தகமும் விதிவசமும் வெவ்வேறே புறங்கிடப்ப
வத்திருவை யமரர்குல மாதரித்தா ரெனவறிநு
வித்திருவை நிலவேந்த ரெல்லாரும் [2]காதலித்தார்.

(இ - ள்.) அறிஞ - புலவோனே!—செய் வினையால் வித்தகம்உம் - (தாஞ்) செய்யவேண்டிய தொழிலினுற் காட்டவேண்டிய தநுர்வித்தையி லுள்ள அறிவும், விதிவசம்உம் - ஊழ்வினையின் அதீனமும், வேறுவேறு எ புறம் - மிகவேருன இடத்திலே, கிடப்ப - இருக்கையில்,—அ திருவை குலம் அமரர் ஆதரித்தார் என - திருப்பாற்கடலினின்று தோன்றிய அந்த மகாலட்சுமியைக் கூட்டமாகத்திரண்ட தேவர்கள் விரும்பினதுபோல, இ திருவை - (எமக்குக் கிடைத்த)இந்தச்சீதையை, நிலம் வேந்தர் எல்லார்உம்- பூமிக்குத்தலைவரான அரசர் யாவரும், காதலித்தார் - விரும்பினர்கள்; இது ஒப்பது - இந்தச்செய்தியை ஒப்பதாகிய, சித்திரம் - ஆச்சரியம், இங்கு - இவ்வுலகத்தில், எங்கு உண்டு - எங்கேயுள்ளது? [எங்குமில்லை]; (எ - று.)

'சிவதநுசைவளைத்தவர்க்கே சீதை உரியவள்' என்று ஏற்படுத்தியிருக் கவும் அவளைப் பெறுதற்குரிய உரிமையோடு இராமபிரான் அவதரித்திருக் கவும் தம்மிடத்துஅவ்வகைத்திறமைசற்றுமில்லாத பாக்கியவீனரானமற்றை நிலவேந்தர்கள் ஸ்ரீமகாவிஷ்ணுவுக்குஉரிய ஸ்ரீமகாலட்சுமியைத் தேவர்கள் விரும்பினதுபோல விரும்பினர்களே! இது என்ன ஆச்சரியம் என்றவாறு. செய்வினையால் வித்தகம் - சிவதநுசையெடுத்துவளைத்து நாணேற்றி அம்பு எய்யக்கூடியதிறமை. சித்திரம் இங்கு இது வொப்பது எங்குஉண்டு என்ப தற்கு - இவ்விடத்திலுள்ள இந்தச்சீதையினுருவை ஒப்பதாகிய சித்திரமா னது எவ்விடத்திலுள்ளது? என்று உரைகூறுவாருமுளர். பி - ம்:—[1]என் னத் தேங்குண்டு, என்னத்தேம்புண்டு. [2]ஆதரித்தார். (கக)

௨௦. கலித்தானைக் கடலோடுங் கைத்தானக் களிற்றரச
ரொலித்[1]தாழி யெனவந்து [2]மணமொழிந்தார்க் கெதிருடுத்த
புலித்தானைக் களிற்றுரிவைப் போர்வையான் [3]போர்வில்லை
[4]வலித்தானே மங்கைதிரு மணத்தானென் றியாம்வலித்தேம்.

(இ - ள்.) கை - துதிக்கையும், தானம்-மதசலத்தையுமுடைய, களிறு- யானைபோன்ற, அரசர் - அரசர்கள், கலி தானை கடலோடுஉம் - பேராரவா ரத்தையுடைய சேனுசமுத்திரத்தோடு, ஆழி என ஒலித்து வந்து - கடல் போலப் பெருமுழக்கஞ்செய்துகொண்டுவந்து, மணம் மொழிந்தார்க்கு - மணத்தைக்குறித்துப் பேசினவர்கட்கு, எதிர் - மறுமொழியாக, புலி தானை உடுத்த களிறு உரிவை போர்வையான் போர் வில்லை - புலித்தோலை ஆடை யாகவுடுத்து யானைத்தோலைப் போர்வையாகக்கொண்டுள்ளவனுகிய சிவ பெருமான் (தான்செய்த) போரி லுபயோகித்த வில்லை, வலித்தான்எ-(தன்) வலிமைகொண்டுவளைத்தவனே, மங்கை திருமணத்தான் - இந்தச்சீதையின் திருமணத்திற்கு மணமகனுதற்கு உரியவன், என்று—, யாம்—, வலித்தேம்- உறுதியாகச்சொன்னேம்; (எ - று.)

தங்களுடைய ஆர்ப்பரவைக் கண்டு பிரமித்துச் சனகராசன் தன் மகளைத் தமக்குத் தரவேண்டுமென்ற கருத்தோடு வந்துநின்ற அரசர்கட்கு நாங்கள் கொண்டுள்ள உறுதியைத் தெரிவித்தோமென்று சதானந்தமுனி

வன் கூறுகின்றனன். பி - ம்:—[1]ஆளி, ஆனை. [2]மகண்மொழிந்தார்க்கு. [3]வரி. [4]வலித்தானை. (உ0)

உக. வல்வில்லுக் காற்றார்கண் மாரவேள் வளைகரும்பின்
மெல்வில்லுக் [1]காற்றாராய்த் [2]தாமெம்மை விளிகுற்றார்
கல்வில்லோ [3]டுடன்வந்த கணங்குழையைக் காதலித்துச்
சொல்வில்லா லுலகளிப்பாய் போர்செய்யத் தொடங்கினார்.

(இ - ள்.) சொல் வில்லால் உலகு அளிப்பாய் - சொல்லாகிய வில்லைக் கொண்டு உலகத்தவரைப் பாதுகாப்பவனே! வல் வில்லுக்கு ஆற்றார்கள் - (இந்த) வலியவில்லைவளைப்பதற்கு வலிமையற்றஅவ்வரசர்கள், மாரன் வேள் வளை கரும்பின் மெல் வில்லுக்கு ஆற்றார் ஆய் - மன்மதனது வளைந்த கரும்பாகிய மெல்லியவில்லைத் தாங்குதற்கும் வலிமையற்றவராய்,—கல் வில்லோடு உடன் வந்த கணம் குழையை காதலித்து - மலைபோன்ற வில்லோடுவந்துள்ள [சிவதநுசுக்குப்பணையமான] திரண்டகுழையென்னுங் காதணியைப் பூண்ட சீதையை மிகவிரும்பி,— தாம் - அவ்வரசர்கள், எம்மை விளி குற்றார் - எம்மையழைத்து, போர் செய்ய தொடங்கினர்—; (எ - று.)

பேராரவாரத்துடன்வந்த அரசர்கட்கு'சிவதநுசைமுறித்தவர்க்கேசீதை யுரியவள்' என்று யாம் உறுதியாகச்சொல்லிவிட்டதனால் அவர்கள் வில்லைக் கொணருமாறுசொல்ல, தம்வேண்டுகோளின்படி கொணரப்பட்ட வில்லைத் தொட்டுஅசைப்பதற்கும் அவர்கட்கு முடியாமற் போனமையால்,அந்தச்சிவதநுசை வளைத்தற்கு வலியற்ற அவ்வரசர்கள், சிவதநுசைக்கன்னியாசுல்கமாகக் கொண்டஅந்தச்சீதையின்மீது மிக்கவிருப்பத்தினாலும் தாம்அவமானமடைந்ததனாலும் பெருஞ்சினங்கொண்டு யாவரும் ஒன்றுசேர்ந்து எம்மையழைத்துப்போர்செய்யலானார்க ளென்பதாம். கல்வில்லோடுஎன்பதை'போர் செய்யத்தொடங்கினர்' என்பதனோடுஇயைத்துப் பொருள்காண்பாருமுளர். பி-ம்:—[1]ஆற்றார்கள். [2]தாமுமனம், தாமேன்மை. [3]உலகளித்த, உலகீந்த. ()

உஉ [1]எம்மன்னன் பெருஞ்சேனை [2]யீவுதனை மேற்கொண்ட
செம்மன்னர் [3]புகழ்வேட்ட பொருளேபோற் றேய்ந்ததாற்
பொம்மென்ன வண்டலம்பும் புரிகுழலைக் காதலித்த
வம்மன்னர் சேனைதம தாசைபோ லாயிற்றால்.

(இ - ள்.) எ மன்னன் பெரு சேனை - எமதுசனகமகாராசனது பெரிய சேனை, ஈவுதனை மேற்கொண்ட செம் மன்னர்-கொடுக்குந்தொழிலை மேற்கொண்டுள்ள நேர்மைக்குணமுடைய அரசரின், புகழ் வேட்ட பொருள் ஏ போல் - புகழையே விரும்பியுள்ள செல்வம்போல, தேய்ந்தது - வரவரக் குறையலாயிற்று; (ஆயினும்), பொம்மென்ன வண்டு அலம்பும் புரி குழலை - பொம்மென்றஒலியுண்டாகுமாறு வண்டுகள்ஒலிக்கப்பெற்ற கடைகுழன்றுள்ள கூந்தலையுடைய சீதையை,காதலித்த-விரும்பிய, அ மன்னர் சேனை - அந்தஅரசர்களின்சேனை, தமது ஆசை போல் - தமதுவிருப்பம் (பயனற்

றது)போல, ஆயிற்று-(தாம்மேற்கொண்ட கருமம்) கைகூடாமற் போயிற்று; (எ - று.)—ஆல் இரண்டும் - அசைகள்.

புகழை நாடிக் கொடைத்தொழிலை மிகுதியாகக்கொண்ட வேந்தரின் பொருள் வரவரக் குறைவுற்றாலும் பொலிவுபெறுவதுபோலச் சனகராசனுடையசேனை பலமன்னர்சேனைகளுடன் எதிர்த்துப் பொருவதால் வரவரக் குறைவுறினும் பெருமைபெற்று விளங்க, சீதையைக் காதலித்து அவளைப்பெறுமையாற் சினங்கொண்டு ஒன்றுசேர்ந்து பொரத்தொடங்கிய மன்னவர்களின் சேனை அவர்களாசை பயனின்றிப்போனதுபோல வெற்றியாகியபயனைப் பெறவில்லை யென்பதாம். இனி, இச்செய்யுட்கு - பொருள் குறைவதுபோலச் சனகராசன்சேனை வரவரக்குறையலாயிற்று; சீதையைக் காதலித்த மன்னர்சேனை அவர்களாசைவளர்வதுபோல வளரலாயிற்றென்று கூறினுமாம். பி - ம்:—[1]இம்மன்னன். [2]ஈவதனை. [3]பொருளே போற்புகழ்வாய்ப்ப, புகழ்வேட்டபொருளேபோற்போயிற்றால். (உஉ)

உரு. மற்காக்கு மணிப்புயத்து மன்னனிவன் மழவிடையோன்
விற்காக்கும் [1]வாளமருண் மெலிகின்றா னெனவிரங்கி
யெற்காக்கு முடிவிண்ணோர் படையீந்தா ரெனவேந்த
ரற்காக்கை கூகையைக்கண் டஞ்சினவா மெனவகன்றார்.

(இ - ள்.) எல் காக்கும் முடி - ஒளியைக்கொண்ட கிரீடத்தையணிந்த, விண்ணோர் - தேவர்கள், 'மல் காக்கும் மணி புயத்து மன்னன் இவன் - வலிமையை (த் தம்மிடத்தே) கொண்டிருக்கும் அழகிய புஜங்களையுடைய இந்தச்சனகராசன், மழ விடையோன் விற்கு - இளமையான விடபத்தைவாகனமாகக்கொண்ட சிவபிரானது வில்லைக் கன்னியாசுற்கமாக வைத்ததற்காக, ஆக்கும் - செய்யப்படுகின்ற, வாள் அமருள் - கொடிய போரில், மெலிகின்றான் - (வரவரத்) தளர்ச்சியடைகின்றான்,' என - என்ற காரணத்தினால், இரங்கி - இரக்கங் கொண்டு, படை - சதுரங்கசேனையை, ஈந்தார் என - கொடுத்தனராக (அதனையறிந்த), வேந்தர் - பகையரசர், அல் - இரவில், காக்கை - காக்கைகள், கூகையை - கோட்டானை, கண்டு - பார்த்து, அஞ்சின என - அஞ்சியவற்றை யொப்ப, அகன்றார் - அஞ்சியோடினார்கள்; (எ - று.)—ஆம் - அசை.

எதிர்த்த அரசர் முதலில் தாம் வெற்றியையடையாமற் போனாலும் மாற்றானொருவனே யாதலால், பலராயுள்ள தாம் பின்னுஞ் சிலநாள் பொருதால் வெல்லலாமென்ற கருத்தோடு விடாது பொருதுகொண்டிருக்க, பல அரசர்சேனைகளுடன் பொருகையில் அவர்களோடு பின்வாங்காமல் நின்று பொரமுடியாதபடி சனகமன்னவன் சேனை குறைந்து வருவது கண்ட தேவர்கள் அஞ்சாது எதிர்நின்று பொரும்படி படையைத் தந்தனராக, அதனையறிந்த மாற்றரசர் 'இனி இவ்வரசனுடன் பொரமுடியாது' என்று அஞ்சியோடினரென்பதாம். மாற்றரசர்கள் ஓரியாண்டு மிதிலையை முற்றுகை செய்து பொருததனால் சனகராசனுடைய படை வலிகுறையத்தொட

ங்க, அப்போது அம்மன்னவன் மனவருத்தமடைந்து வானவர்களைத் தன் தவத்தினால் மகிழ்வடையச் செய்ய,மனமுவந்த அவ்விண்ணோர் சதுரங்க சேனைகளை அம்மன்னவனுக்குத் தர, எதிர்த்த மன்னவர்யாவரும் அப்படைகளால் தாக்குண்டு நிலைகெட்டோடினரென முதனூலினால் விவர முணர்க.
பி - ம்:—[1]வாளமரின். (உங)

உச. அன்றுமுத லின்றளவு மாருமிந்தச் சிலை[1]யருகு
சென்றுமிலர் [2]போயொளித்த தேர்வேந்தர் திரிந்துமில
ரென்றுமினி [3]மணமில்லை யென்றிருந்தே மிவனேற்றி
னன்றுமலர்க் குழற்சீதை நலம்பழுதா காதென்றான்.

(இ - ள்.) அன்று முதல் இன்று அளவும்—,ஆர் உம்-எந்தமன்னவரும், இந்த சிலை அருகு - இந்தச்சிவதனுசின் சமீபத்தில், சென்று உம் இலர்-போயுமிலர்; போய் ஒளித்த தேர் வேந்தர் - இரிந்தோடி யொளித்துக் கொண்ட தேர்வீரரான மன்னவர், திரிந்து உம் இலர் - திரும்பிவந்தாருமில்லை; இனி —,என்று உம் - என்றைக்கும், மணம் - (சீதைக்கு) விவாகம், இல்லை—, என்று—, இருந்தேம்—; இவன் ஏற்றின் - இந்த இராமபிரான்(இந்தச்சிவதனுசை)நாணேற்றினானால்,(அது),நன்று-நன்மையைத் தருவதாகும்; (அப்போது), மலர் குழல் சீதை - மலரையணிந்த கூந்தலையுடைய சீதையின், நலம் - அழகு பழுது ஆகாது - வீணாகாது, என்றான் - என்று கூறிமுடித்தான்; (எ - று.)

'ஐயன் வில்லேற்றுமே லிடர்க் கடலேற்றும், நோற்றனணங்கையும்' என்று சனகன் கூறியதை ஒட்டிச் சதாநந்தன்கூறி முடித்தன னென்க.
பி - ம்:—[1]மருங்கு. [2]போயொளித்தார். [3]மணமுமில்லை. (உச)

உரு.—சதாநந்தமுனிவன்மொழிப்படிசெய்யுமாறு விசுவாமித்திரமுனிவன் குறிப்பிக்க, இராமபிரான் அவ்வில்லை நோக்குதல்.

[1]நினைந்தமுனி பகர்ந்தவெலா நெறியுன்னி [2]யறிவனுந்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப் போரேற்றின் முகம்பார்த்தான்
வனைந்தனைய திருமேனி வள்ளலு[3]மம் மாதவத்தோன்
நினைந்தவெலா நினைந்தந்த நெடுஞ்சிலையை நோக்கினான்.

(இ - ள்.) அ முனி - அந்தச்சதாநந்தமுனிவன், நினைந்து - ஆலோசித்து, பகர்ந்த எலாம் - (சொன்ன) எல்லாவற்றையும், அறிவன்உம் - பேரறிவுடைய விசுவாமித்திரமுனிவனும், நெறி உன்னி-முறையே ஆலோசித்து, (தான்சதாநந்தமுனிவன்கூறிய சொல்லுக்கு உடம்பட்டதைக் குறிப்பிக்குமாறு), சடை புனைந்த தன் முடி துளக்கி - சடையை யணியாகக்கொண்ட தனது தலையை யசைத்து, போர் ஏற்றின் முகம் பார்த்தான் - போர்செய்ய வல்லஇடபம்போன்ற இராமபிரானது முகத்தை ('இவ்வில்லை நீ முறிப்பாயாக' என்ற கட்டளை பார்வையில் தோன்றுமாறு) பார்த்தான்; வனைந்த(து) அனைய திரு மேனி வள்ளல்உம் - சித்திரத்திலெழுதினாற் போன்ற [பேரழகுபடைத்த]திருமேனியையுடைய உதாரகுணமுள்ள அவ்விராமபிரானும்,

அ மாதவத்தோன் நினைந்த எலாம் நினைந்து -பெருந்தவத்தையுடையவனான அந்தவிசுவாமித்திரன் எண்ணியுதையெல்லாம் (தானும்) நினைந்து, (பிறகு), அந்த நெடுஞ் சிலையை நோக்கினான்-நீண்ட அந்தவில்லைப்பார்த்தான்;(எ-று.)

அறிவன்முடித்துளக்கியது - வில்லினது திண்மையைப்பற்றியவியப்பினாலாகும். மாதவத்தோன்நினைந்தவை - வந்த இடத்தில் பெற்றாருடைய அநுமதியில்லாமல் மணந்துகொள்ளுதற்குஉரிய சுற்கத்தை வெல்லுமாறு ஓரிராசகுமாரனை யேவுவது முறையாகுமா என்பதுமுதலியனவென்னலாம். வினைந்தனைய=வினைந்ததனைய அல்லது வினைந்தாலனைய என்க வில்லை நோக்கியது - இந்தவில்லை எந்தஇடத்தில் எப்படிப்பிடித்துஎடுக்கலாமென்ற ஆலோசனையினால். பி - ம்:—[1]நினைந்து.[2]அறிந்தவனும். [3]மாதவத்தோனும்.

உசு.—இராமபிரான் சிவதநுசுஉள்ளவிடத்தை யணுகலுறுதல்.

பொழிந்தநெய் யாகுதி வாய்வழி பொங்கி
யெழுந்த கொழுங்கன லென்ன வெழுந்தா
னழிந்தது வில்லென விண்ணவ ரார்த்தா
ரொழிந்தன ராசிகண் முப்பகை வென்றார்.

(இ - ள்.) பொழிந்த நெய் ஆகுதி வாய் வழி - சொரிந்த நெய்யாகிய ஆகுதிவீழ்ந்தஇடத்தினின்று, பொங்கி எழுந்த - கிளர்ந்து மேலெழுந்த, கொழு கனல் என்ன - நன்குஎரிகின்ற அக்கினிபோல, எழுந்தான் - (இராமபிரான் சிவதநுசுவைத்துள்ளஇடம்நோக்கிச்) செல்லலானான்; (அப்போது), விண்ணவர் - தேவர்கள், (இவ்விராமன் வில்லைத் தவறாதுமுறிப்ப னென்ற துணிவினால்), வில் அழிந்தது என - சிவதநுசு இற்றுப்போயிற்றென்று, ஆர்த்தார் - ஆரவாரஞ்செய்தார்கள்; முப்பகை வென்றார் - (காமம் வெகுளி மயக்கம் என்ற) மூன்றுஉட்பகையைவென்றஇருடியர், (இராமபிரானுக்கு), ஆசிகள் - வாழ்த்துக்களை. மொழிந்தனர் - கூறினார்கள்; எ - று.)

காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாற்சரியம்என்றுவடநூலார் கூறும்உட்பகையாறையும் காமம் வெகுளி மயக்கம் என மூன்றாக அடக்கிக் கூறுதல், தமிழ்வழக்காதலைப் பரிமேலழகருரையாலும் தெளியலாம். (உசு)

உஎ.—மங்கையரின் மனப்பாங்கு.

தூய தவங்க டொடங்கிய தொல்லோ
னேயவன் வல்வி[1]விறுப்பதன் முன்னஞ்
சேயிழை மங்கையர் சிந்தைதொ றெய்யா
வாயிரம[2]வில்லை யனங்க னிறுத்தான்.

(இ - ள்.) தூய தவங்கள் தொடங்கிய தொல்லோன் ஏயவன் - பரிசுத்தமான தவங்களைச்செய்யும்பழையோனாகிய விசுவாமித்திரமுனிவனாலேவப்பட்டவனான ஸ்ரீராமன், வல் வில் இறுப்பதன் முன்னம்-வலியவில்லை வளைக்கும்படி கையிலெடுத்துமுறிப்பதற்குமுன்னமே, அநங்கன் - மன்மதன், சேய் இழை மங்கையர் சிந்தை தொறு எய்யா- செவ்விய ஆபரணங்களையணிந்த மாதர்களின் மனங்கள்தோறும் (மலரம்புகளை) எய்து, ஆயிரம் வில்லை - மிகப்பலவலியவிற்களை, இறுத்தான் - முறித்தான்; (எ - று.)

ஸ்ரீராமன் சிவதநுசைக் கையிலெடுப்பதற்குச் செல்லும்போது கண்ட மங்கையர் பலரும் மன்மதனதுமலர்க்கணைக்கு இலக்காயின ரென்க. மன்ம தனுக்குக் கரும்பு வில்லாதலால், அவ்வில் எய்கையில்எளிதில்முறியுமென்க. மன்மதன்கணைக்குஇலக்காயினரென்றமையால் இவர்கள் குலமாத ரல்லர் போலும். பி - ம்:—[1]எடுப்பதன் [2]வல்வில். (உஎ)

உஅ.—இதுமுதல்நான்குகவிகள் - அப்போது ஸ்ரீராமனைக்கண்ட மாதர்கள்பலவாறுகூறுதலைத்தெரிவிக்கும்.

காணுநெ டுஞ்சிலை கால்வலி தென்பார்
நாணுடை நங்கை நலங்கிளர் செங்கேழ்
பாணியி வன்படர் செங்கை [1]படாதேல்
வாணுத [2]னங்கையும் வாழ்வில ளென்பார்.

(இ - ள்.) (சிலமாதர்), - காணும் நெடுஞ் சிலை கால் வலிது என்பார் - காணப்படுகின்ற நீண்ட இவ்வில் அடி வலிமையையுடையதென்றுசொல்வார்; (சிலமாதர்),—நாண் உடை நங்கை - நாணத்தை யணிகலமாகக்கொண்ட பெண்ணாகியசீதையின், நலம் கிளர் செங் கேழ் பாணி-அழகுவிளங்குகின்ற செந்நிறமுள்ள கையில், இவன் படர் செங் கை படாது எல் - இவ்விரா மனது பரவியசெந்நிறமுள்ள கை படாமற்போனால் [இராமபிரான் சீதை யைப் பாணிக்கிரகணஞ் செய்துகொள்ளாமற்போனால்], வாள் நுதல் நங்கைஉம் - ஒளியுள்ளநெற்றியையுடைய சீதையும், வாழ்வு இலள் - நல் வாழ்ச்சிபெறாதவளாவள், என்பார்—; (எ - று.)

இவை, சீதையினிடம் அன்புள்ள மகளிர் கூறுஞ் சொற்க ளென்க. நங்கை யும்என்ற உம்மை - இராமனும் வாழ்வில னென்ற பொருளைக் காட்டு மென்னலாம். நங்கைவாழ்விலள்என்பதற்கு - சீதை மணமின்றிக் கன்னி யாகவேயிருக்கவேண்டியவள்தா னென்று கருத்துக்கொள்ள இடமுண்டு. பி - ம்:—[1]புகாதேல் [2]சீதையும். (உஅ)

உகூ. கரங்கள் குவித்திரு கண்கள் பனிப்ப
விருங்களி றிச்சிலை யேற்றில னாயி
னரந்தை நறைக்குழ னங்கையு நாமு
[1]முருங்கெரி யிற்புக மூழ்குது மென்பார்.

(இ - ள்.) (சிலமாதர்), கரங்கள் குவித்து - (தமதுஇரண்டு)கைகளையும் (இஷ்டதேவதைகளைநோக்கிக்) குவித்தவண்ணமிருந்து, 'இரு களிறு - பெரிய மதயானைபோன்ற இராமன், இ சிலை-இந்தவில்லை,இரு கண்கள் பனி ப்ப- (எங்களுடைய) இரண்டுகண்களும் உவகைநீரைச் சொரியும்படி, ஏற்றி லன் ஆயின் - நாணேற்றாமற் போவானேயானால், நரந்தம் நறை குழல் நங் கைஉம் - கத்தூரியின்மணம் கமழ்கின்ற கூந்தலையுடைய பெண்ணாகிய சீதையும், நாம்உம்—, முருங்கு எரியில் - எரித்துஅழிக்குந்தன்மையுள்ள அக்கினியில், புக - உடல்அழுந்தும்படி, மூழ்குதும்-பிரவேசிப்போம், என்

பார்-; (எ-று)-முருக்கெரிஎன்பது மெலித்தல்விகாரம்பெற்று, முருங்கெரி யெனவந்தது. மூன்றமடி-முற்றுமோனை. பி - ம்:—[1]முருங்கெரியுள். (உகூ)

ருo. வள்ளன் மணத்தை மகிழ்ந்தன னென்றாற்
கொள்ளென முன்பு கொடுப்பதை யல்லால்
[1]வெள்ள மணைத்தவன் வில்லை யெடுத்திப்
பிள்ளைமு னிட்டது பேதைமை யென்பார்.

(இ - ள்.) வள்ளல் - உதாரகுணமுடையசனகராசன், மணத்தை - (சீதையின்) விவாகத்தை(ச் செய்ய), மகிழ்ந்தனன் என்றால் - விரும்பியவனாக இருப்பானேயானால், (இந்தஇராமபிரானைக் கண்டவுடனே), முன்பு - முதலில்தானே, கொள் என கொடுப்பதை அல்லால் - 'இந்தச்சீதையை மணந்துகொள்க' என்று (கன்னிகாதானஞ்செய்து) கொடுப்பதை (ச் செய்யாமல்) விட்டிட்டு, வெள்ளம் அணைத்தவன் வில்லை எடுத்து இ பிள்ளை முன் இட்டது - கங்கைநீர்ப்பெருக்கை (த் தன்சடைமுடிமேது) சேர்ந்து நிற்கச்செய்தவனாகியசிவபெருமானது வில்லைக் கொணரச்சொல்லி (அதனை நாணேற்றிவளைக்குமாறு) இந்தசிறுவன்முன்னே வைத்தது, பேதைமை என்பார் - அறியாமைத்தனமென்பார் (சிலமாதர்;) (எ - று.)

சனகராசன் சிவதநுசைவளைக்கவேணுமென்றதனால், ஒன்று சீதையின் விவாகத்திலாவது அம்மன்னவன் விருப்பமில்லாதவனாக இருக்கவேணும்: ஒன்று மூடனாகவாவதுஇருக்கவேணு மென்று சிலமங்கையர் கூறினரென்க. [1]வெள்ளைமனத்தவன்என்றபாடத்துக்கு-அறிவற்றமனமுள்ள அந்தச்சனகனென்க. (ருo)

ருக. *ஞான முனிக்கொரு நாணிலை யென்பார்
கோனிவ னிற்[1]கொடி யோனிலை யென்பார்
மானவ னிச்சிலை கால்வளை யானேற்
பீன [2]தனத்தவள் [3]பேறில ளென்பார்.

(இ - ள்.) ஞானம் முனிக்கு - தத்துவஞானமுள்ளவனாகிய விசுவாமித்திரமுனிவனுக்கு, ஒரு நாண் - ஒப்பற்ற நாணமென்ற குணம், இலை-இல்லை, (அதனால்தான் உலகத்தவர் நம்மைப்பற்றி யென்சொல்வார்களோ?' என்ற எண்ணம் சிறிதுமின்றி இந்தப்பெரியவில்லை வளைத்துநாணேற்றும்படி இந்தச்சிறுவனுக்கு அநுமதிதந்தான்), என்பார் - என்று (சிலமாதர்) கூறுவார்; கோன் இவனில் - (இந்தச்சிறுவனை வில்லைவளைக்குமாறுகூறிய) இந்தவரசனைக்காட்டிலும், கொடியோன் - கொடியவனொருத்தன், இலை-இல்லை, என்பார்—; மானவன் - பெருமையையுடையோனாகிய இந்த இராமன், இசிலை - இந்தச்சிவதநுசை, கால்வளையான் ஏல் - இரண்டுமுனைகளையும் வளையாமற்போவானேயானால், (அப்போது), பீனம் தனத்தவள் -பருத்த தனங்களையுடையவளான இந்தச்சீதை, பேறு இலள் - நல்வாழ்வையிழந்தவளாவள், என்பார்—; (எ - று.)

ஞானமுனியென்பது-உலகநடையறியாதவ னென்ற குறிப்பு. மானம்-பெருமை: அதனையுடையவன் - மானவன். இனி, மநுவென்பவனதுமரபிலுதித்தவனென்றுபொருள்கூறின், தத்திதாந்தநாமமாம். பீனதனத்தவள் பேறில ளென்பதனால், இவள்கொங்கைகள் வாளாமூக்கவேண்டுவதே யென்று இரங்கியவாறு. பி-ம்.—[1]கொடியாரிலே. [2]தனத்திவள். [3]பேறிலி. ()

கஉ.—இராமபிரான் வில்லினிடத்திற்கு நடத்தல்.

தோகைய ரின்னன சொல்லிட நல்லோ
ரோகை விளம்பிட வும்ப ருவப்ப
மாக மடங்கலு மால்விடை யும்பொன்
னாகமு நாகமு நாண நடந்தான்.

(இ - ள்.) தோகையர் - மயில்போன்ற சாயலையுடையமாதர், இன்னன சொல்லிட - இவைபோன்றவைகளைச் சொல்லிக்கொண்டிருக்கையில்,—நல்லோர்-சாதுஜனங்கள் [முனிவர்கள்], ஓகை விளம்பிட - சந்தோஷவார்த்தைகளைச் சொல்லவும், மாகம் அடங்கலும் உம்பர் உவப்ப-வானுலகம்முழுவதிலும் தேவர் மகிழ்ச்சியடையவும்,—(ஸ்ரீராமன்)-மால் விடைஉம் பொன் நாகம்உம் நாகம்உம் நாண - பெரிய இடபமும் பொன்மலையாகியமேருவும் யானையும் வெள்கும்படி, நடந்தான் - (வில்லுள்ளஇடத்தைநோக்கி) நடந்து சென்றான்; (எ - று)

கீழ் உகூ - ஆஞ் செய்யுளில் இராமபிரான் எழுந்ததை வருணித்த கவி, இந்தச்செய்யுளால் அப்பிரான் நடந்தமையை வருணிக்கின்றனர். நடக்கும்போதுள்ள பெருந்தோற்றத்தைக்கண்டு மேருமலையும், இவனைப்போலக் கம்பீரமாக நடக்கமுடியாமைபற்றி விடையும் யானையும் நாணின வென்க. நாகமென்பது - மலை, யானை என்ற இருபொருளு முடையதாதலை, "நாகம் விண் குரங்குபுன்னை நற்றாசு மலை பாம்பியானை" என்பதனாலு மறிக. மாக மடங்கலும் என்பதை மாகம்மடங்கலும் எனப்பிரித்து - மிகச்சிறந்த சிங்கமும் என்று உரைப்பினுமாம்: இப்பொருளில் பெருவானம்என்றுபொருளுள்ள 'மாகம்'என்றசொல்-இலக்கணையால், சிறந்ததென்ற பொருளைத் தந்தது: மாகம்=மஹாகம். (கஉ)

கங.—இராமபிரான் சிவதநுசை இலேசாக எடுத்தல்.

ஆடக மால்வரை யன்னது தன்னைத்
தேடரு மாமணி சீதை யெனும்பொற்
சூடக வால்வளை சூட்டிட நீட்டு
மேடவிழ் மாலையி தென்ன வெடுத்தான்.

(இ - ள்) மால் ஆடகம் வரை அன்னது தன்னை - பெரிய பொன்மலையையொத்ததாகிய அந்தச்சிவதநுசை,—'இது—,தேட அரு மா மணி சீதை எனும் பொன் சூடகம் வால் வளை சூட்டிட - தேடிப்பெறுதற்கு அருமையான சிறந்த இரத்தினம்போன்றவளும் சீதையெனப்படுபவளுமான பொன்னாற்செய்த சூடகமென்றகையணியையும் வெண்ணிறச்சங்குவளையையு

முடையவளுக்குச் சூட்டும்பொருட்டு, நீட்டும் - நீட்டுதற்குஉரிய, ஏடு அவிழ் மாலை - இதழ்கள்மலர்கின்ற மாலையாகும்,' என்ன - என்று எண்ணுமாறு, (இலேசாக), எடுத்தான்—; (எ - று.)

மன்னர்பலரும் தொடவும்மாட்டாமற் பின்வாங்கிய அந்தச்சிவதநுசை இராமபிரான் சீதைக்குச் சூட்டுமாறுவைத்திருக்கும் மலர்மாலையையெடுப்பதுபோல மிகஇலேசாக எடுத்தன னென்க. இராமன் சிவதநுசையெடுத்தது சீதையைமணத்தற்குக்காரணமாவதால் அதனைச் சீதையைச்சூட்டுதற்கு நீட்டும் மாலைபோலு மென்றார். பொற்சூடகவால்வளை - அன்மொழித்தொகைப்பன்மொழித்தொடர். பெருந்தோற்றத்தா லன்றிச் சிவபிரானுக்கு வில்லாகஉதவியதன்மையாலும், அந்தவில் மேருமலையை யொக்கும். இதனால், இராமபிரானது பெருவீரம் விளக்கப்பட்டது. (நடு)

நசு.—இராமபிரான் அவ்வில்லைமுறித்ததனுற் பேரோசை தோன்றுதல்.

தடுத்திமை யாம லிருந்தவர் தாளின்
மடுத்தது நாணுதி வைத்தது நோக்கார்
[1]கடுப்பினி லியாரு மறிந்திலர் கையா
னெடுத்தது கண்டன ரிற்றது கேட்டார்.

(இ - ள்.) தடுத்து இமையாமல் இருந்தவர்யாரும் - (பார்ப்பதற்குத்) தடைசெய்வதனுல் (அங்ஙனந் தடைசெய்யாமலிருக்கும்பொருட்டுக்) கண்களைக் கொட்டாமலேயிருந்து பார்த்துக்கொண்டிருந்த சபையோர்எவரும், தாளில்மடுத்ததும்-(ஸ்ரீராமன் தனது)பாதங்களால்(அவ்வில்லின்முனையை) மிதித்ததையும், நாண் நுதி வைத்ததும்-(அவ்வில்லை வளைத்து)நாணை மற்றொரு முனையில் வைத்ததையும், கடுப்பினில் - செயலின்வேகத்தால்,நோக்கார் - காணமாட்டாதவராகி, அறிந்திலர் - அறியாதவராயினர்; (ஆயினும்), கையான் எடுத்தது கண்டனர்-(இராமபிரான் தனது)கையினால்(அவ்வில்லை) எடுத்ததைப் பார்த்தார்கள்; இற்றது கேட்டார் - (அவ்வில்) முறிந்துபோனதனால் தோன்றிய பெருஞ்சத்தத்தைக் கேட்டார்கள்; (எ - று.)

'கண்ணைக்கொட்டினேமானால் இராமபிரான் வில்லையெடுத்து நாணேற்றுவதை எங்கே காணமற்போய்விடுவோமோ?' என்ற எண்ணத்தினாற் கண்கொட்டாதுபார்த்திருந்த அங்குவந்திருந்தவர்கள், இராமன்வில்லையெடுத்ததையும் உடனே அதுமுறிந்தசத்தத்தையுங் கேட்டனரே யன்றி, அதனை வளைத்து நாணேற்றியதைக் காணமாட்டாதவ ராயின ரென்க. இதனால் ஸ்ரீராமனது விரைந்துதொழில்செய்யுந்திறமை வெளியாம்; மிகச்சிறுவனாகிய ராமனுக்குப் பலஆயிரக்கணக்கானவர் தூக்கிவரும்படி பெருந்தோற்றத்துடனிருந்த சிவதநுசின் முனையை வளைக்க எவ்வாறு இயலுமெனத் தோன்றுஞ் சங்கைக்கு, இராமனதுதாள் ஒருமுனையிற் பட்டமாத்திரத்தில் அப்பிரானதுமகிமையால் வில்லின்மற்றொருமுனை தானேவளைந்து வரலாயிற்றெனப் பெரியோர்சமாதானம்கூறியுள்ளார். இமையாமல்தடுத்து இருந்தவரென்று மாற்றி - (இமைக்கின்ற இமையை) இமைக்கவொட்டாமல் தடுத்து இருந்தவரெனினுமாம். பி - ம்:—[1]கடுப்பினை. (நசு)

கரு.—அப்பேரோசையினால் மூவுலகத்தும் தோன்றிய அச்சம்.

ஆரிடைப் புகுது நாமென் றமரர்கள் கமலத் தோன்றன்
பேருடை யண்ட கோளம் பிளந்த[1]தென் றேங்கி நைந்தார்
பாரிடை யுற்ற தன்மை பகர்வதென் பாரைத் தாங்கி
[2]வேரெனக் கிடந்த நாக மிடியென வெருவிற் றன்றே.

(இ - ள்.) (அவ்வில் முறிந்ததனாலுண்டான ஓசையைக்கேட்ட), அமரர்கள் - தேவர்கள், கமலத்தோன்தன் பேர் உடை அண்டகோளம் பிளந்தது என்று ஏங்கி - பிரமதேவன்படைத்த பெருமைபெற்ற இவ்வண்டகோளமே பிளந்ததென்றுகருதி ஏக்கங்கொண்டு, ஆர் இடை நாம் புகுதும் என்று - எவரிடத்தில் நாம் இப்போது அடைக்கலம்புகுவோமென்று மனத்தடுமாற்றங்கொண்டு, நைந்தார் - வருந்தினார்கள்; பாரிடை உற்ற தன்மை பகர்வது என் - (இங்ஙனம் மேலுலகத்துள்ளவரான தேவர்களே வருந்தினாரானால்) இவ்வுலகத்தாரிடத்து நேர்ந்த தன்மையைப்பற்றி நாம் சொல்லவேண்டுவது என்ன இருக்கின்றது? [இவ்வுலகத்தவர்அஞ்சி நடுநடுங்கினார்களென்பது சொல்லாமலே விளங்கு மென்றபடி]; பாரை தாங்கி - இந்தப்பூமியின் கீழிருந்து இதனைத்தாங்கிக்கொண்டு, வேர் என கிடந்த - இப்பூமியின்வேர்போலவிருக்கின்ற, நாகம் - ஆதிசேஷனென்னும் நாகம், இடி என - இடியென்பது தான் தன்மீதுவிழுகின்றதென்று கருதி, வெருவிற்று - மிகவும் அச்சமடைந்தது; (எ - று.)—அன்றே-தேற்றம்.

அவ்வில் இற்றதனால்தோன்றிய ஓசை சுவர்க்கம் பூமி பாதலம் என்னும் மூவுலகத்தார்க்கும் அச்சம்விளைத்தபடியை விளக்கினார் கமலத்தோன்தன் பேருடையண்டம் - பிரமாண்டம். மேலும்கீழும்பட்டதன்மையைக் கூறியதனால், நடுவிலுள்ள பார் பட்டதன்மை கூறாமலே விளங்குமாகையால்,'பாரிடையுற்றதன்மைபகர்வதென்' என்றார்ரெனினுமாம். [2]வேரிடை என்றபாடத்திற்கு - அடிப்புறத்தி லெனக. பி - ம்:—[1]ஆமென்று (கரு)

கசா.—விண்ணவர்முதலியோரின் மகிழ்ச்சி.

பூமழை சொரிந்தார் விண்ணோர் பொன்மழை பொழிந்த மேகம்
[1]பாமமார் கடல்கள் எல்லாம் பன்மணி தூவி யார்த்த
கோமுனிக் கணங்க ளெல்லாங் கூறின வாசி கொற்ற
நாமவேற் சனகற் கின்று நல்வினை பயந்த [2]தென்னா.

(இ - ள்.) கொற்றம்-வெற்றியையும், நாமம் வேல்-(பகைவர்க்கு அச்சந்தரும் வேலினையுமுடைய, சனகற்கு-சனகமகாராசனுக்கு, இன்று—, நல்வினை - (முற்பிறப்பிற்செய்த) புண்ணியம், பயந்தது - பயனையளித்தது, என்னா - என்றுஎண்ணி, (அதனால்), விண்ணோர் - தேவர்கள், பூ மழை சொரிந்தார் - மலர்மாரிபொழிந்தார்கள்; மேகம் - வானம், பொன் மழை பொழிந்த - பொன்மழையைச் சொரிந்தது; பாமம் ஆர் கடல்கள் எல்லாம் - நுரைபொருந்திய கடல்கள் யாவும், பல் மணி தூவி ஆர்த்த-பலவகைஇரத்தினங்களைச்சிந்தி யாரவாரித்தன; கோ முனி கணங்கள் எல்லாம் - சிறந்த முனிவரின் கூட்டம்யாவும், ஆசி கூறின - வாழ்த்துமொழிகளைச் சொல்லின.

இராமபிரான் கன்னியாசுல்கமாகவைத்திருந்த சிவதநுசை வளைத்து நாணேற்றிச் சீதையின்விவாகத்தைக் குறித்துக் கவலைகொண்டிருந்த சனகராசனது துயரத்தைப் போக்கியதனால், விண்ணோர் முதலியோர் நாமவேற்சனகற்கு இன்று நல்வினைபயந்ததென்று மகிழ்ந்து பூமழைபொழிதல் முதலியவற்றைச் செய்தன ரென்க. பொழிந்த = பொழிந்தது. மேகம் என்பதைப் பால்பகாவஃறிணையாகக்கொண்டால், 'பொழிந்த' என்பது அன்சாரியை பெறாத பலவின்பால்முற்றாம் மேகங்கள் ஏழாதலை "சம்வர்த்தமாவர்த்தம் புட்கலாவர்த்தஞ், சங்காரித்தந்துரோணங்காளமுகி, நீலவருணமேழ்மேகப் பெயரே" என்பதனாலறிக. பாம் அம் ஆர் என்றுபிரித்து 'பாம்' என்பதை 'பாவும்' என்ற எச்சம் ஈற்றுயிர்மெய்சென்றதாக்கி, பாம் - பரவிய, அம் ஆர் - அழகுபொருந்திய என்றுமாம். பி - ம்:—[1]பாமமா. [2]என்றார். (௩௬)

௩௭.—நகரத்தாரின் மகிழ்ச்சி.

மாலையு மிழையுஞ் சாந்துஞ் சுண்ணமும் வாச நெய்யும்
வேலைவெண் முத்தும் பொன்னுங் காசுநுண் டுகிலும் வீசிப்
பால்வளை [1]யமிர்த ளாய பல்லியந் துவைப்ப முந்நீ
[2]ரோல்கிளர்ந் துவாவுற் றென்ன வொலிநகர் கிளர்ந்த தன்றே.

(இ - ள்.) நகர் - அந்தமிதிலாநகரமானது,— பால் வளை - வெண்ணிறமுள்ள சங்கமும், அமிர்து அளாய பல் இயம் - அமுதத்தின்இனிமைகலந்த பலவகைவாச்சியங்களும், துவைப்ப - ஒலித்துக்கொண்டிருக்கையில்,— மாலைஉம் - மலர்மாலைகளையும், இழைஉம் - அணிகலங்களையும், சாந்துஉம் - சந்தனத்தையும், சுண்ணம்உம் - நறுமணப்பொடியையும், வாசம் நெய்உம் - நறுமணம்பொருந்திய புழுகையும், வேலை வெள் முத்துஉம் - சமுத்திரத்தில் தோன்றும் வெண்ணிறமுத்தையும், பொன்உம் - ஸ்வர்ணத்தையும், காசுஉம்- இரத்தினங்களையும், நுண் துகில் உம் - நுண்ணிய ஆடைகளையும், வீசி - (ஒருவர்க்கொருவர்) வழங்கி,— உவா உற்று - பருவகாலம்வந்ததனால், முந்நீர் ஒல் கிளர்ந்து என்ன - கடல் ஆரவாரத்தால் மிகுந்தாற்போல, ஒலி கிளர்ந்தது - ஆரவாரம்மிக்கது; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

இராமபிரான் சிவதநுசைமுறித்ததனால் இனிச் சீதாவிவாகம் நடக்கப்போகின்றதென்ற பெருமகிழ்ச்சியால் மிதிலாநகரத்தவர் மாலை முதலியவற்றை வீசிப் பேராரவாரஞ் செய்தன ரென்க. வாசநெய் - நறுமணமுள்ள நெய்யென்பாருமுளர். கிளர்ந்து = கிளர்ந்தால்: எச்சத்திரிபு: கிளர்ந்ததென்பதன்விகாரமுமாம். ஒல் - ஒலமென்பதன் கடைக்குறை. பி - ம்:—[1]வயிர்களார்ப்ப. [2]ஓலம்வந்து. (௩௭)

௩௮.—மாதரின் கொண்டாட்டம்.

நல்லியன் மகர வீணைத் தேனுக நகையுந் தோடும்
வில்லிட வாளும் வீச வேல்கிடந் தனைய நாட்டத்
தெல்லியன் மதிய மன்ன முகத்திய ரெழிலி தோன்றச்
சொல்லிய பருவ நோக்குந் தோகையி னாடி னாரே.

(இ - ள்.) வேல் கிடந்து அனைய நாட்டத்து - வேற்படை தங்கினாற் போன்ற கண்களையும், எல் இயல் மதியம் அன்ன முகத்தியர் - இரவில் விளங்குகின்ற சந்திரன்போன்ற முகத்தையுமுடைய மங்கைமார்,—சொல்லிய பருவம் - (மேகம் வருமென்று) சொல்லப்பட்டகார்ப்பருவத்தில், எழிலி தோன்ற - (வானத்தில்)மேகங்கள் காணப்பட, நோக்கும் - (அதனைக்)காண்கின்ற, தோகையின் - மயிலைப்போல,—நல் இயல் மகரம் வீணை தேன் உக - நல்லிலக்கணமமைந்த மகரயாழின்ஓசையாகிய தேன் சிந்தவும், நகை உம் தோடு உம் - புன்முறுவலும் காதணியும், வில்இட(உம்)வாள்வீச உம் - (முறையே) ஒளியைப்பரப்பிவீசவும், ஆடினர்-ஆடினார்கள்; (எ - று)

கார்ப்பருவத்தில் எழிலிதோன்றத் தோகை ஆடுவதுபோல், வில்லிறுத்த ஓசைகேட்டு மங்கையர் ஆடினரென்க. வில்லையும் வாளையும் வீசிக்கொண்டு மகளிராடினரென்ற பொருளும் இதில் தோன்ற வைத்த நயம் கருதத்தக்கது. பல்லொளி இடைவிடாது தோன்றுவதை 'வில்லிட' என்றும், தோடு என்னுங்காதணியினொளி விட்டுவிட்டுப் பிரகாசித்தலை'வாள்வீச' என்றும் கூறினர். (௩அ)

**௩௯.—மகிழ்ச்சியால் மாதர் புலவி நீங்குதலும், வறியவர் வேந்தன் செல்வத்தை வாரிக்கொள்ளலும்.**

உண்ணற வருந்தி னாரிற் சிவந்தொளிர் கருங்கண் மாதர்
புண்ணுறு புலவி [1]நீங்கக் கொழுநரைப் [2]புல்லிக் கொண்டார்
வெண்ணிற மேக மேன்மேல் விரிகடல் பருகுமாபோன்
[3]மண்ணுறு வேந்தன் செல்வம் வறியவர் முகந்து கொண்டார்.

(இ - ள்.) உண் நறவு அருந்தினாரில் - (அறிவைக்) கொண்டுபோய்விடுகின்ற கள்ளைக்குடித்தவர்போல, சிவந்து ஒளிர் கரு கண்-செந்நிறங்கொண்டு விளங்குகின்ற (மையெழுதியதனாற்) கறுத்துள்ள கண்களையுடைய, மாதர்-மகளிர், புண் உறு - (மனம்) புண்பட்டுள்ள, புலவி - (தாங்கொண்ட)ஊடல், நீங்க - நீங்கியதனால், கொழுநரை - (தமது) கணவரை, புல்லிக்கொண்டார்-தழுவிக்கொணடார்கள்; மேல் மேல் விரி கடல் - மேலும்மேலும் (அலை) விரிகின்ற கடலிலே, வெள் நிறம் மேகம் பருகும ஆபோல் - வெண்ணிற மேகம் நீரைப் பருகுவதுபோல, மண்ணுறு வேந்தன் செல்வம் - அழகிய [நியாயவழியாகச் சம்பாதித்துள்ள] சனகராசனது செல்வத்தை, வறியவர்-தரித்திரர், முகந்துகொண்டார் - (அரசன்கட்டளைப்படியே)வாரிக்கொண்டு செல்லலானார்கள்; (எ - று.)

மகளிர்க்குப் புலவியினாற் கண்கள்சிவத்தல், இயல்பு. வில்லிறுத்தலோசை செவிப்பட்டதனாற் சீதையின்மணம் நிகழப்போகின்றதென்ற பெருமகிழ்ச்சியாற்புலவிகொண்டமகளிரும் அப்புலவி நீங்கித் தங்கணவரைத் தழுவிக்கொண்டன ரென்பது, முன்னிரண்டடியின் பொருள். உட்புறம்முழுவதுஞ் சிவந்து இமைப்பக்கம் கறுத்திருந்த கண்ணென்பார் 'சிவந்தொளிர் கருங்கணல்லார்' என்றார். சிவந்தொளிர்கருங்கண் - முரண்டொடை. மண்ணுறு வேந்தன் - பூலோகவரசனுமாம். பி - ம்:—[1]நீங்கி. [2]தழுவிக்கொண்டார். [3]மண்ணுறை, மண்ணிறை. (௩௯)

சுo.—பலவகைப்பாடல்கள் ஆங்குநிகழ, வானவர் வியப்புக் கொண்டிருத்தல்.

வயிரியர் மதுர கீத மங்கைய ரமுத கீதஞ்
[1]செயிரியர் மகர யாழின் றேம்பிழி தெய்வ கீதம்
[2]பயிர்கிளை வேயின் கீத மென்றிவை பருகி விண்ணோ
ருயிருடை யுடம்பு மெல்லா மோவிய மொப்ப நின்றார்

(இ - ள்.) வயிரியர் - கூத்தர்களுடைய, மதுரம் கீதம் - இனியபாடல்களும், மங்கையர் அமுதம் கீதம் - மடந்தையரின் இனியபாடல்களும், செயிரியர் மகரயாழின் தேம் பிழி தெய்வம் கீதம்-நரம்புக்கருவியை வாசிப்பவரின் மகரயாழிலிருந்துதோன்றுகின்றஇனிமைசொட்டுகின்ற தெய்வத்தன்மையுள்ள பாடல்களும், வேயின் பயிர் கிளை கீதம் - புல்லாங்குழலிலிருந்து ஒலிக்கின்ற பலதிறப்பட்ட பாடல்களும், என்ற இவை - என்ற இவற்றையெல்லாம், பருகி - செவியாரக்கேட்டு, விண்ணோர் - தேவர்கள், உயிர் உடை உடம்பு எல்லாம்உம் - உயிரையுடைய சரீரமுழுவதும், ஓவியம் ஒப்ப நின்றார் - சித்திரத்துக்குச் சமானமாக அசைவற்று நின்றார்கள்; (எ - று.)

பாடலின்இனிமையி லீடுபட்டு விண்ணவர் எழுதுசித்திரங்கள்போல நின்றன ரென்க. வேய் இன் கீதம் என்றும் பிரிக்கலாம். கிளை - ஏழுசுரங்களிலொன்று எனக்கொள்ளவுமாம். பி - ம்:—[1]செயிரறு. [2]பயிரியர். (சுo)

சுக.—வானவமகளிர் ஆங்குவந்து மானுடமகளிரைத் தழுவிநிற்றல்.

ஐயன்வில் லிறுத்த வாற்றல் காணிய வமரர் [1]நாட்டுத்
தையலா ரிழிந்து பாரின் மகளிரைத் தழுவிக் [2]கொண்டார்
செய்கையின் வடிவி னாடல் பாடலிற் றெளித றேற்றார்
மையரி நெடுங்க ணோக்க மிமைத்தலு மயங்கி நின்றார்.

(இ - ள்.) அமரர் நாட்டு தையலார் - விண்ணுலகத்து மடந்தையர்,— ஐயன் வில் இறுத்த ஆற்றல் காணிய - இராமபிரான் வில்லைமுறித்த வல்லமையைக் காணும்பொருட்டு, இழிந்து - (வானத்திலிருந்து பூமியின்மீது) இறங்கி, செய்கையின் வடிவின் ஆடல் பாடலின் தெளிதல் தேற்றார் - (செய்யுஞ்) செய்கையினாலும் வடிவத்தினாலும் ஆடல்பாடல்களினாலும் (தமக்கும் அந்த மண்ணுலகத்துமகளிர்க்கும்) வேறுபாடு உணரமுடியாதவர்களாகி, பாரின் மகளிரை - மண்ணுலகமடந்தையரை, (வானுலகத்து மடந்தையரென்றேகருதி), தழுவிக்கொண்டார் - (உவகைமிகுதியால்) ஆலிங்கனஞ் செய்துகொண்டார்கள்; (அப்போது அம்மடந்தையரின்), மை அரி நெடு நோக்கம் கண் - மையுண்டு செவ்வரிபரந்து நீண்ட பார்வையுள்ள கண்கள், இமைத்தலும் - இமைகொட்டினவுடனே, மயங்கிநின்றார் -(வானவமகளிர் கண்கொட்டுகின்றார்களே! இதுஎன்னபுதுமை!! என்று) பிரமித்து நின்றார்கள்; (எ - று.)

வானத்தினின்றுஇறங்கிவந்த வானவமகளிர் செய்கைமுதலியவற்றால் ஒத்திருந்தமைபற்றிப் பூவுலகத்துமடந்தையரைத் தம்மவரெனக்கருதி உவ

கைமிகுதியால் தழுவிக்கொண்டு, அம்மகளிர் கண்ணிமைத்தலும் திகைத்து நின்றனரென்க: மயக்கவணி. பி - ம்:—[1]நாட்டில். [2]நின்றூர். (சக)

சஉ —இதுவும் அடுத்த கவியும் - அந்நகரத்தார் பேருவகைகோண்டுகூறியவற்றைத் தேரிவிக்கும்.

**தயரதன் புதல்வ னென்பார் தாமரைக் கண்ண னென்பார்**
**புயலிவன் மேனி யென்பார் பூவையும் பொருவு மென்பார்**
**மயலுடைத் துலக மென்பார் [1]மானுட னல்ல னென்பார்**
**கயல்பொரு கடலுள் வைகுங் கடவுளே காணு மென்பார்.**

(இ - ள்.) (அந்நகரத்துச்சனங்களிற்சிலர்),—'(இவன்),தயரதன்புதல்வன்—,' என்பார் - என்றுகூறுவார்கள்; (சிலர்), தாமரைக்கண்ணன் என்பார்-'(இவன்) செந்தாமரைக்கண்ணனாகிய திருமாலே' என்பார்கள்; (சிலர்), இவன் மேனி புயல் என்பார் - 'இவனது திருமேனி காளமேகமே' என்பார்; பூவைஉம் பொருவுஉம் என்பார் - (அன்றியும்) காயாம்பூவையும் ஒத்திருக்கு மென்பார்கள்; (சிலர்), '(இவன்), மானுடன்அல்லன்-மனிதனல்லன்,' என்பார்—; (பின்னையாவனென்றால்),—கயல் பொரு கடலுள் வைகும் கடவுள்ஏ காணும் என்பார் - 'கயல்மீன்கள் (ஒன்றோடொன்று) பொருகின்ற திருப்பாற்கடலுள்தங்கிநிற்கின்ற திருமாலேயாவன்' என்பார்; மயல் உடைத்து உலகம் என்பார் - '(இவனை) மானுடனென்று சொல்லுகின்ற உலகத்தவர் அறியாமையையுடையவராவர்' என்பார்; (எ - று.)—பூவையும், உம்மை- இறந்ததுதழுவியது. பி - ம்:—[1]மானிடன். (சஉ)

சரு. **நம்பியைக் காண நங்கைக் காயிர நயனம் வேண்டுங்**
**கொம்பினைக் காணுந் தோறுங் குரிசிற்கு மன்ன தே[1]யாற்**
**றம்பியைக் காண்மி னென்பார் தவமுடைத் துலக மென்பா**
**[2]ரிம்பரிந் நகரிற் றந்த முனிவனை யிறைஞ்சு மென்பார்.**

(இ - ள்.) (மற்றுஞ்சிலர்), 'நம்பியை காண - ஸ்ரீராமனது வடிவழகைக் காண்பதற்கு, நங்கைக்கு - சீதாபிராட்டிக்கு, ஆயிரம் நயனம் - ஆயிரங் கண்கள், வேண்டும்—; கொம்பினை - கொம்புபோன்றசீதையின்வடிவழகை, காணும் தோறும் - பார்க்கும்போதெல்லாம், குரிசிற்குஉம் - ஆண்களிற்சிறந்தவனானஇராமபிரானுக்கும், அன்னதுஏ - (ஆயிரங்கண்கள்வேண்டுமென்பது) அத்தன்மையதே; தம்பியை காண்மின்-(தமையனிருக்கட்டும்;) (அவனது) தம்பியான இவன்வடிவழகு (எவ்வாறுள்ளது?) அதனைக் காண்மின்கள்', என்பார் - என்றுசொல்வார்; உலகம் தவம் உடைத்து என்பார்- '(இப்படிப்பட்டபேரழகுள்ளவர்களைப் பெற்றதனால்) இந்தப்பூலோகம் தவஞ்செய்துள்ளது'என்பார்; (மற்றுஞ்சிலர்), 'இம்பர் - இவ்வுலகில், இ நகரில் - இந்தமிதிலாபுரியில், தந்த - (இக்குமாரர்களை) அழைத்துவந்த, முனிவனை - விசுவாமித்திரமுனிவனை, இறைஞ்சும் - (யாவரும்) கும்பிடுங்கள்', என்பார்—; (எ - று.)

பேரழகுடைய அரசகுமாரர்களை இங்கு அழைத்துக்கொண்டுவந்தவரிடத்தில் நன்றிபாராட்டி வணங்கவேண்டு மென்றனர். நம்பிக்குஉவமை

கூறுமையாலும், சீதையை 'கொம்பினை' என்று உவமைச்சொல்லாற்கூறி, 'சூரிசிற்கும்அன்னதே' என்று அவள்வடிவழகை அதிதேசத்தால் கூறியதனாலும், சீதாபிராட்டியைவிட இராமபிரான் அழகு விஞ்சியவனென்பது, பெறப்படும். இப்படிப்பட்ட மஹாபுருஷர்தோன்றுவதற்குப் பூமிதேவியின் நற்றவமே காரண மென்க. பி - ம்:—[1]ஆம். [2]இம்பரிவ்வுலகில். (சரு)

சச.—கவிக்கூற்று: இனிச்சீதையின்செய்தி சொல்வோமெனல்.

*இற்றிவ ணின்ன தாக மதியொடு மெல்லி நீங்கப்
பெற்றுயிர் பின்னுங் காணு[1]மாசையாற் சிறிது பெற்ற
சிற்றிடைப் பெரியகொங்கைச் சேயரிக் கரியவாட்கட்
பொற்றொடி மடந்தைக் கப்பா லுற்றது புகல லுற்றாம்.

(இ - ள்.) இவண் - இவ்விடத்தில் [இராசசபையில்], இற்று - இச்செய்தி, இன்னது ஆக - இப்படியிருக்க; மதியொடும் - சந்திரனோடும், எல்லி - இரவு, நீங்கப்பெற்று - கழியப்பெற்று, பின்னும் காணும் ஆசையால் - மறுபடியும் (இராமபிரானைக்) காணவேணுமென்கிற விருப்பினால், உயிர் சிறிது பெற்ற - உயிரைச் சிறிது பெற்றுள்ள, சிறு இடை பெரிய கொங்கை சேய் அரி கரிய வாள் கண் பொன் தொடி மடந்தைக்கு - சிறுத்தஇடையையும் பெருத்துள்ளதனங்களையும் செவ்வரி பெற்றுக் கறுத்த வாளாயுதம்போன்ற கண்களையும் பொன்னாற்செய்ததொடியென்னும் வளையலையுமணிந்த பெண்ணாகிய சீதைக்கு, அப்பால் - அவ்விடத்து [கன்னிமாடத்து], உற்றது - நேர்ந்ததை, புகலல் உற்றாம் - சொல்லத்தொடங்கினோம்.

இரவிற் சீதைவருந்தியதை மிதிலைக்காட்சிப்படலத்திற் காணலாம். அங்ஙனம்வருந்தியவண்ணம் சீதையிருக்கையில் பெருவேதனைக்குக்காரணமான சந்திரனும் இரவும் நீங்க, மீண்டும் இராமனைக் காணலாமென்ற ஓராசையால் போருந்தருணத்ததான உயிரைச் சற்றுத்தாங்கியிருக்கின்ற அந்தச் சீதைக்குஉற்றதை இனிக்கூறுவோமென்று கவி கூறுகின்றனர். 'ஆக'- வியங்கோள்முற்று. மூன்றாமடியில் தொடைநயம் காண்க. பி - ம்:—[1] ஆசையின். (சச)

சரு.—சீதை மலரணையினின்று பளிக்குமாடத்து மற்றோர் மலரணையிற் சேர்தல்.

ஊசலா டுயிரி னோடு முருகுபூம் பள்ளி நீங்கிப்
பாசிழை மகளிர் சூழப் போயொரு பளிக்கு மாடக்
காசிறு மரையின் பொய்கைச் சந்திர காந்த மீன்ற
[1]சீதநீர் தெளித்த மென்பூஞ் [2]சேக்கையை யரிதிற் சேர்ந்தாள்.

(இ - ள்.) (சீதாபிராட்டியானவள்),—ஊசல் ஆடு - போவதும்வருவதுமானநிலையி லுள்ள, உயிரினோடும் - பிராணனுடனே, உருகு பூ பள்ளி நீங்கி - (தன்னுடம்பு) உருகுதற்குக்காரணமான மலர்ப்படுக்கையை விட்டு, பசு இழை மகளிர் சூழ போய் - பசும்பொன்னாபரணங்களைப்பூண்ட மகளிர்

சூழ்ந்துவர (அவ்விடத்தைவிட்டுப்) போய்,—காசு இல் தாமரையின் பொய்கை-குற்றமற்ற தாமரைத்தடாகத்தின் கரையிலுள்ள, ஒரு பளிங்கு மாடம் ஒருபடிகத்தினலியன்ற மாளிகையில், சந்திரகாந்தம் ஈன்ற சீதம்நீர் தெளித்த மெல் பூ சேக்கையை - சந்திரகாந்தக்கற்கள் வெளிக்கான்ற குளிர்ந்த நீரைத்தெளித்த மெல்லியபூம்படுக்கையை, அரிதில் சேர்ந்தாள் - வருந்திச் சேர்ந்தாள்; (எ - று.)

முன்னிருந்த மலர்ப்பள்ளியை விட்டுச் சீதை தாமரைத்தடாகத்தின் கரையிலிருக்கும் ஒருபளிக்குமாடத்தில் அமைத்துள்ளதாய் அத்தடாகக் கரையிற்பதித்த சந்திரகாந்தக்கற்கள் வெளிக்கக்குகின்ற குளிர்ந்தநீர்தெளிக்கப்பெற்ற மலர்ப்படுக்கையை மிக அரிதிற் சேர்ந்தன ளென்க. உருகுபள்ளி என்பதற்கு - தன்னுடலின்வெப்பத்தா லுருகுகின்ற படுக்கையென்றும், தாமரையின்பொய்கைச் சேக்கை - தாமரைப்பொய்கையினிடையேயுள்ள சேக்கையென்றும் கூறுவாரு முளர். சந்திரகாந்தம்-சந்திரனைக்கண்டவிடத்து நீரைக் காலுவதோர் கல் விசேடம். பளிங்குஎன்னும்மென்றொடர் வேற்றுமையில் இனவன்றொடராயிற்று. பி - ம்:—[1] தேசுநீரளிக்கும். [2] சேக்கைய் தருகில்.  (சுரு)

சுசு.—இதுமுதலோன்பது கவிகள் - பிரிவுத்துயரால் சீதை பலவகையாக இரங்குதல்.

பெண்[1]ணிவ [2]ணுற்ற தென்னும் பெருமையா லருமை யான
வண்ணமு மிலைகளாலே காட்டலால் வாட்டந் [3]தீர்ந்தேன்
றண்ணறுங் கமலங் காளென் றளிர்நிற முண்ட கண்ணி
னுண்ணிறங் காட்டி நீரென் னுயிர்தர வுலோவி னீரே.

(இ - ள்.) தண் நறு கமலங்காள் - குளிர்ந்த நன்மணமுள்ள தாமரைக் கொடிகாள்! பெண் - ஒருபெண்ணுக்கு, இவண் - இப்போது இவ்விடத்தில், உற்றது - (பிரிவுத்துயர்) நேர்ந்துள்ளது, என்னும் - என்றுகருதுகின்ற, பெருமையால் - பெருந்தன்மை (நுமக்கு) உண்டானதால், அருமை ஆன வண்ணம்உம் - (அவ்விராமபிரானது) காணக்கிடைத்தற்குஅரிய திருமேனி நிறத்தையும், இலைகளாலே—, காட்டலால் - காட்டுவதால், வாட்டம் தீர்ந்தேன் - மனவாட்டந் தீரப்பெற்றேன்; நீர் - (அங்ஙனமுள்ள) நீர், என் தளிர் நிறம் உண்ட - என்னுடைய தளிர்போன்ற அழகியநிறத்தைக் கவர்ந்துசென்ற, கண்ணின் - (அவ்விராமபிரானது) திருக்கண்களின், உள் நிறம் காட்டி - உட்புறத்தின்நிறத்தையும் (உங்களதுமலர்களாலே) காணச்செய்து, என் உயிர் தர - எனதுபோகின்ற உயிரை மீட்பதற்கு, உலோவினீரே - பின்வாங்கினீரே! (இது என்னகாரணம்பற்றி?) (எ - று.)

தாமரையின்இலைகள் அவ்விராமபிரானுடைய திருமேனிக்கு ஒப்பாக இருத்தலால்அப்போலிப்பொருளைக்கண்டு தான் சிறிதுஆறியிருக்கஇடனேற்பட்டும், தான் அழகழிந்து உடல்முழுதும் பசலைபோர்க்கும்படி தன்மனத்தை அவனுடைய கண்ணழகு கவர்ந்ததனால்'தளிர்நிறமுண்டகண்' என்றும், அத்திருக்கண்களின் அழகைக் காட்டினால்தான் ஆறியிருக்கலாமாகையா

லும் தாமரையின்மலர்கள் அதனைப்பெருமையாலும் 'கண்ணின் உள் நிறங் காட்டி என்னுயிர்தர வுலோவினீரே' என்றும் சீதை கூறலாயினள். உலோ வுதல் - உலோபகுணங்கொள்ளுதல். உயிரென்றது, இராமனையென்பாரு முளர். பி - ம்:—[1]இவள். [2]உற்றவாறு பேணியே கருமையான. [3]தீர்த்த.

௬௭. நாணுலாவு மேருவோடு நாணுலாவு பாணியுந்
தூணுலாவு தோளும்[1]வாளி யூடுலாவு தூணியும்
வா[2]ணிலாவி னூலுலாவு மாலைமார்பு மீளவுங்
காணலாகு மாகினாவி [3]காணலாகு மேகொலாம்.

(இ - ள்.) (அந்தஸ்ரீராமனுடைய தோளழகைக்கண்டு), நாண் உலாவு மேருவோடு - வெட்கங்கொள்கின்ற மேருமலைபோன்ற வில்லுடனே, நாண் உலாவு - (அவ்வில்லின்) நாணியில் உலாவுகின்ற, பாணிஉம் - திருக்கையும், தூண் உலாவு தோள்உம் - தூணையொத்த தோள்களும், வாளி ஊடு உலாவு தூணிஉம் - அம்புகள் உட்புறத்திலே தங்கியுள்ள தூணீரமும், வாள் நிலாவின் நூல் உலாவு மாலை மார்புஉம் - ஒளிபொருந்திய நிலவைப்போன்ற பூணூல் அலேகின்ற வெற்றிமாலைசூட்டிய திருமார்பும், மீளஉம் காணல் ஆகும் ஆகின் - மறுபடியும் காணக்கிடைக்குமானால், ஆவி காணல் ஆகும் - என்னுயிரை (ப் போகவொட்டாது தடுத்துக்) காணக்கூடும்; (எ - று.)— ஏ, கொல், ஆம் - அசைகள்.

ஸ்ரீராமனுடையதிருக்கைகள் முதலானவற்றை மீளக்கண்டால்தான் என்னாவி தங்குமென்று சீதை தன்னிலையைக்கூறுகின்றனளென்க. சிவ தநுசாகஇருந்த மேருமலை அச்சிவதநுசைத் தனது பரிசமாத்திரத்தால் இறச் செய்த கையைக் கண்டால் நாணுமென்பாள் 'நாணுலாவு'என்று மேருவுக்கு அடைமொழிகொடுத்தாளெனினுமாம். டங்காரத்தொனியை யெழுப்புமாறு வில்லின்நாணியில் ஸ்ரீராமனது திருக்கை செல்லுமாதலால், 'நாணுலாவு பாணி' எனப்பட்டது. தூணுலாவு,உலாவு-உவமவாசகம்."கொங்கைமேல்... ஒருநாள் தங்குமே லென்னாவி தங்கும்" என்ற பெரியார்பாசுரம் இங்கு நினைவுக்குவருகிறது.'காணலாகுமாகி னாவிகாணலாகும்'என்றதனால்,காணக் கிடையவாயின் உயிரிழப்பேனென்று கூறியவாறாயிற்று. பி - ம்:—[1]வாளி யோடு. [2]நிலாவுநூலுலாவு. [3]காணலாகுமாகுமே. (௬௭)

௬௮. விண்டலங் கலந்திலங்கு திங்களோடு மீதுசூழ்
வண்டலம் பலங்கறங்கு பங்கியோடும் வார்சிலைக் [விளை
கொண்டலொன் றிரண்டுகண்ணின் மொண்டுகொண் டென்னு
யுண்டதுண்டெ னெஞ்சினின்று [1]மூண்டதென் றுமுண்டரோ.

(இ - ள்.) விண் தலம் கலந்து இலங்கு திங்களோடுஉம் - ஆகாயத்தினிடத்தைச்சேர்ந்து விளங்குகின்ற சந்திரனோடும், மீது சூழ் வண்டு அலம்பு அலங்கல் தங்கு பங்கியோடுஉம் - (அத்திங்களின்) மேற்புறத்திற் கவிந்து கொண்டுள்ள வண்டுகள்ஒலிக்கின்ற மாலைகள் தங்கிய கூந்தலோடும்கூடிய, வார்சிலை கொண்டல் ஒன்று-நீண்டசிலையைத்தரித்த மேகமொன்று,இரண்டு

தண்ணின் - (தன்னுடைய) இரண்டுகண்களினால், என் ஆவியை மொண்டு கொண்டு - என்னுடைய உயிராகியநீரை முகந்து, உண்டது உண்டு-பருகி விட்டதென்பது நிகழ்ந்ததுண்டு; அது - அந்தமேகம், என் நெஞ்சின்—, இன்றும் உண்டு - (நீங்காமல்) இப்போதும் இருக்கின்றது; என்றும் உண்டு - என்றைக்கும் (என்நெஞ்சைவிட்டுநீங்காமல்) தங்கியிருக்கும்.

முகத்தை 'திங்கள்' என்றும், இராமபிரானை 'வார்சிலைக்கொண்டல்' என்றும் உருவகத்தாற்கூறினாள். பி-ம்:—[1]உண்டதுண்டதுண்டரோ. (சஅ)

சகூ. பஞ்சரங்கு தீயினாவி [1]பற்றியோடு கொற்றம்வாய்
வெஞ்சரங்க ணெஞ்சரங்க வெய்யகாம னெய்யவே
சஞ்சலங்க லந்தபோது தையலாரை யுய்யவந்
தஞ்சலஞ்ச லென்கிலாத வாண்மையென்ன வாண்மையே.

(இ-ள்.) வெய்ய காமன்-கொடுமையையுடைய மன்மதன், பஞ்சு அரங்கு தீயின் - பஞ்சையழிக்கின்றஅக்கினியைப்போல, ஆவி பற்றி - என்னுயிரினைப் பற்றிக்கொண்டு, ஓடு-ஓடுகின்ற, கொற்றம் வாய்-வெற்றிவாய்ந்த,வெம், சரங்கள் - கொடியஅம்புகளை, நெஞ்சுஅரங்க - (என்) மனம் அழியும்படி எய்ய - பிரயோகித்தலால், சஞ்சலம்கலந்தபோது-துன்பம்வந்தடைந்துள்ள இப்போது, உய்ய வந்து - (நான்) உயிர்பிழைக்கும்படி (என்னருகே) வந்து, தையலாரை - (அவ்வாறுவருந்துகின்ற) பெண்பாலாகிய என்னைக்குறித்து, அஞ்சல் அஞ்சல் என்கிலாத - 'அஞ்சாதே! அஞ்சாதே!!' என்றுசொல்லி அபயமளிக்கமாட்டாத, ஆண்மை - பௌருஷம், என்ன ஆண்மை-என்ன ஆண்தன்மை! (எ - று.)

தையலாரைஎன்று சீதை தன்னைப் படர்க்கைப்பன்மையாற் கூறுகின்றாள். ஆண்மைமக்கமுகுவருந்துகின்ற தையலாரையணுகி அஞ்சலென்று அபயப்பிரதானஞ்செய்வதேயாகையால், அங்ஙனஞ்செய்யாத இந்த ராமனது ஆண்மை என்னஆண்மை! என்று வெறுப்பினால் இயற்பழிக்கின்றனள், சீதையென்க. பி - ம்:—[1]பற்றநீடுகொற்றவில். (சகூ)

ருo *இளைக்கலாத கொங்கைகா ளெழுந்துவிம்மி யென்செய்தீர்
முளைக்கலா மதிக்கொழுந்து போலும்வாண் முகத்தினான்
[1]வளைக்கலாத விற்கையாளி வள்ளன்மார்பி னுள்ளுறத்
திளைக்கலாகு மாகிலான செய்தவங்கண் செய்ம்மினே.

(இ - ள்.) இளைக்கலாத கொங்கைகாள் - இளைபாமலிருக்கின்ற [மேன்மேற்பருக்கின்ற] தனங்களே! எழுந்து விம்மி - மேன்மேலெழுந்து பருத்து, என்செய்தீர்-என்னகாரியஞ்செய்தீர்? முளைக்கலா மதி கொழுந்து போலும் வாள் முகத்தினான் - (வானத்தில்) தோன்றுதலில்லாத [என்றும் ஒரு படியாயுள்ள] சந்திரனையொத்த ஒளியுள்ள முகத்தையுடையவனும், வளைக்கலாத வில் கை ஆளி - (பிறரெவராலும்) வளைக்கமுடியாதபடி அரிதாயிருந்த சிவதநுசை (யெடுத்துவளைத்துக்) கையாண்டவனுமாகிய, வள்ளல்-உதாரகுணம்படைத்த ஸ்ரீராமனுடைய, மார்பின் உள் - மார்பினுள்ளே, உற

திளைக்கல் ஆகும் ஆகில் - இறுகத் தழுவுதல் (உங்கட்குக்) கைகூடும்வகை ஏற்படுமாயின், ஆன - (அதற்கு) ஏற்ற, செய் தவங்கள்-செய்யத்தக்க தவங்களை, செய்ம்மின் - செய்யுங்கள்; (எ - று.)

கொங்கைமுளைத்தெழுவதன்பயன் அவன்மார்பகத்திற் புல்லப்பெறுதலே யாதலால், அந்தநிலை கிடைத்தற்கு ஏதேனும் உபாயம் இருப்பின் அதனைச் செய்யுங்கள்; அங்ஙனம் யாதுஞ்செய்யாது நீவிர் எழுந்து விம்முவதாற் பயனில்லை யென்று தனதுபருத்தெழுந்த தனங்களைநோக்கிக் கூறுகின்றனள், சீதையென்க. முளை கலா மதிக்கொழுந்து என்று பிரித்து முளைத்தலையுடைய கலைபொருந்திய இளஞ்சந்திரன்என்று உரைகூறி, முகமென்பது நெற்றியைக்காட்டு மெனக் கொள்வாரு முளர். உள்ளுறத்திளைத்தல்-உள்ளேபொருந்தக் குடைதலுமாம். (ருо)

**ருக.** *எங்குநின் றெழுந்ததிந்த் விந்துவந்தெ னெஞ்சுலா
வங்கி[1]யன் றனங்கனெய்த வம்பின்வந்த சிந்தைநோய்
பொங்குகின்ற கொங்கைமேல் விடம்பொழிந்த தென்னினுங்
கங்குல்வந்த [2]திங்களன் றகங்களங்க மில்லையே.

(இ - ள்.) என் நெஞ்சு அங்கு - என்மனமாகிற அவ்விடத்து, உலாஇயன்ற - உலாவுதலைப்பொருந்திய, அனங்கன் - மன்மதன்,எய்த - செலுத்திய, அம்பின் - அம்பினால், வந்த - தோன்றிய, சிந்தை நோய்-மனோவியாதி, பொங்குகின்ற - மிக்குவெளித்தோன்றுகின்ற, கொங்கைமேல் - (என்) தனங்களின்மீது, விடம் பொழிந்தது என்னின்உம் - விஷத்தைப் பெய்ததென்றாலும், (இது), கங்குல் வந்த திங்கள் அன்று - (நேற்று இரவில்தோன்றி வருத்திய சந்திரனன்று; (ஏனெனில்), அகம் களங்கம் இல்லை - இதன் மத்தியில் களங்கம் காணப்படவில்லை; இந்த இந்து-இந்தச் சந்திரன், எங்குநின்று வந்து எழுந்தது - எங்கிருந்துவந்து தோன்றிற்றோ? (எ - று.)

உருவெளித்தோற்றத்தில் இராமபிரானது முகசந்திரன் தோன்ற, அதனைச் சந்திரனென்றுகருதிய சீதை இந்தச்சந்திரனும் நஞ்சுபொழிந்ததாலும் இதன்நடுவிலே களங்கத்தைப்பெற்றிராமையால்,இது இரவில்தோன்றிய சந்திரனன்று; இந்தச்சந்திரன் இராக்காலமல்லாத இப்போதுஎவ்வாறு தோன்றிற்றோஎன்று சீதை துயருற்றனளென்க.காமவேதனையால்தனங்கள் வெதும்பித்தோன்றுதலால், 'சிந்தைநோய்பொங்குகின்ற கொங்கை' எனப்பட்டது. 'இயன்றவனங்கன்' என்பது தொகுத்தல்விகாரமடைந்து, 'இயன்றனங்கன்' என வந்தது. இயன்று எனப் பிரிப்பினுமாம். சூரியனைநோக்கிக் கூறுவதாக இச்செய்யுட்குக்கருத்துக்கூறுதல் பொருந்தாதெனத் தோன்றுகின்றது. பி - ம்.—[1]என்றனங்கன். [2]திங்களின்னகம். (ருக)

**ருஉ.** அடர்ந்துவந் தனங்கனெஞ் சழன்றுசிந்து மம்பெனும்
விடங்குடைந்த [1]மெய்யினின்று வெந்திடா [2]தெழுந்துவெங்
கடந்துதைந்த காரியானை யன்னகாளை [3]தாளடைந்
திடன்றொடர்ந்து போனவாவி [4]வந்தவாறெ னுள்ளமே.

(இ - ள்.) உள்ளமே - (என்)மனமே! அனங்கன் - மன்மதன், அடர்ந்து வந்து - நெருங்கிவந்து, நெஞ்சு அழன்று - மனம்கொதித்து, சிந்தும் - சொரிகிற, அம்பு எனும் விடம் - அம்பெனப்படுகின்ற விஷத்தினால், குடைந்த - குடையப்பெற்ற, மெய்யினின்று - உடம்பிலிருந்து, வெந்திடாது எழுந்து - வேகாதுவெளிப்பட்டு, வெம் கடம் துதைந்த கார் யானை அன்ன காளை தாள் அடைந்து - உஷ்ணமான மதப்பெருக்கு நிறைந்த கறுத்த யானையையொத்த ஸ்ரீராமனது அடிச்சுவட்டைப் பற்றி, உடன் தொடர்ந்து போன - கூடத் தொடர்ந்துசென்ற, ஆவி - என்னுயிர், வந்த ஆறு - மீண்டுவந்தவிதம், என் - என்ன காரணம்? (எ - று.)

'போனவுயிர் திரும்பிவராது' என்று உலகத்திற் பிரசித்தமா யிருக்க, அனங்கனெய்த அம்பால் வெந்த உடம்பிலிருந்து எழுந்த என்னுயிர் தொடர்ந்துசென்று விஷ்ணுபதத்தை [விஷ்ணுபதம் - ஸ்ரீராமன்திருவடி, வானம் என்ற இருபொருளை யுடையது.] யடைந்தும் இப்போது பாதைப்படுமாறு மீண்டுவந்ததே? இது என்னவியப்பு! என்று சீதை நெஞ்சோடு இரங்கிக் கூறுகின்றன ளென்க. பி - ம்:—[1]மெய்யுணின்று. [2]எழுந்த. [3]முன்னடந்து, காலடைந்து. [4]வந்தவாவென். (ருஉ)

ருங. விண்ணுளே யெழுந்தமேக மார்பினூலின் மின்னொடும்
மண்ணுளே யிழிந்ததென்ன வந்துபோன மைந்தனு
ரெண்ணுளே யிருந்தபோதும் [1]யாவரென்று தேர்கிலேன்
கண்ணுளே யிருந்தபோது மென்கொல்காண் கிலாதவே.

(இ - ள்.) விண்ணுள் எழுந்த மேகம் - வானத்தில்தோன்றிய மேகமானது, மின்னொடு-மின்னலுடனே, இ மண்ணுள் இழிந்தது என்ன - இந்தப் பூமியிலே யிறங்கியுள்ளதென்று சொல்லும்படி, மார்பின் நூலின் - திருமார்பிலணிந்த முப்புரிநூலுடனே, வந்து - (என் கண்காண) வந்து, போன -, மைந்தனார் - குமாரர், எண்ணுள் இருந்த போதும் - (என்) மனத்தினுள்ளே வதிந்த காலத்தும், யாவர் என்று தேர்கிலேன் - யார் அவரென்று ஆராய்ந்து அறிந்துகொண்டேனில்லை; கண்ணுள் இருந்த போதும் - கண்ணுக்கெதிரே காணப்படுகின்ற இப்போதும், காண்கிலாத(து)-இன்னாரென்று அறிந்துகொள்ளமுடியாமைக்குக் காரணம், என் கொல் - யாதோ? (எ - று.)

பூணூலைத்தரித்த இராமபிரானுக்கு மின்னோடுள்ள மேகம் உவமை. மிதிலாநகரின் வீதியிற்சென்றபோது இராமபிரானைக் கன்னிமாடத்திலிருந்துகண்ட சீதையின்மனத்தில் அங்ஙனமே அவ்வுரு பதிந்திருத்தலால், 'எண்ணுளேயிருந்தபோதும்' என்றும், இப்போதும் கண்முன்னேநிற்பது போல அவ்வுருத் தோன்றுவதால் 'கண்ணுளேயிருந்தபோதும்' என்றும் கூறுகின்றாள். கண்ணுளேயிருந்தபோது என்பதற்கு - கண்டபோது என்று கருத்துக்கொள்ளின், எண்ணுளே யிருந்தபோது என்பதற்கு - என்னுளே யிருக்கின்ற இப்போது என்று பொருள் கொள்ளவேணும்: இப்பொருளில், இருந்த என்பது - இயல்பினால் நிகழ்காலம் இறந்தகாலமாகவந்த இடவழுவமைதி யென்க. "இன்னாரென்றறியேன், அன்னே யாழியொடும், பொன்னார்

சார்ங்கமுடையவடிகளை, யின்னாரென்றறியேன்" என்றது, இங்குநோக்கத் தக்கது. இனி, இராமபிரானை இன்னானென்று அறியவேணுமென்று ஆவல் கொண்ட சீதை அங்ஙனம் அறியலாகாமைக்கு வருந்திக் கூறுகின்றன ளெனினுமாம். பி - ம்:—[1]யாவனென்று. (ருரு)

ருச. பெய்கடற் பிறந்தயல் [1]பிறக் கொணு மருந்துபெற்
றையபொற் கலத்தொடங்கை விட்டிருந்த [2]வாதர்போன்
மொய்கிடக்கு மண்ணறோண் முயங்கிடாது [3]முன்னமே
கைகடக்க விட்டிருந்து கட்டுரைப்ப தென்கொலோ.

(இ - ள்.) பெய் கடல் பிறந்து - (பலவளங்களையும்) தந்த திருப்பாற் கடலிலே தோன்றி, அயல் பிறக்க ஒணு - வேறிடத்தில் தோன்றமுடியாத, மருந்து - தேவாமிருதத்தை, பெற்று - காணப்பெற்றும் (அவ்வமிருதத்தை), ஐய பொன் கலத்தொடு - அழகிய பொற்கலத்தோடு, அம் கை விட்டிருந்த - அழகியகையிற்கொள்ளாமல் விட்டிருந்த, ஆதர் போல் - மூடர்போல,— மொய் கிடக்கும் அண்ணல் தோள் - வலிமைதங்கியிருக்கப்பெற்ற பெருமை யிற்சிறந்த ஸ்ரீராமனது தோளை (க் காணப்பெற்றும்), முன்னம் ஏ முயங்கி டாது-(காணப்பெற்ற) அப்போதே தழுவிக்கொள்ளாமல், கைகடக்க விட் டிருந்து - கைகழிந்துபோகும்படி விட்டிருந்து, கட்டுரைப்பது - இப்போது பலமொழிகளைக்கட்டிக் கூறுவது [புலம்புவது], என் கொல் - எதுக்காக ? [யாதொருபயனுமில்லை யென்றபடி]; (எ - று.)

அமிருதம் கண்ணிற்பட்டால் உடனே அஃதுள்ள பொற்கலத்தோடு கைப்பற்றுவது முறையாயிருக்க, அங்ஙனஞ்செய்யாது கைகழியவிட்ட மூடர்போல, கண்ணால்நுகரும்அமுதமாகிய ஸ்ரீராமனைக் காணக்கிடைத் தபோது உடனே யான் தழுவிக்கொள்ளாமற் கைகழியவிட்டு இப் போது பலபேச்சுக்களைச் சொல்லிப் புலம்புவதிற் பயன் சிறிதுமில்லை யென்பதாம். ஆதர் - பசுப்போன்றவர்: அறிவில்லாதவர் (வஞ்சனையாற் பணயம்வென்ற கத்துருவினிடத்தில் அடிமைப்பட்டிருந்த விநதையானவள் தன்அடிமைத்தன்மையை விடுவிக்கத் தன்மகவான கருடனைக் கொண்டு அமிருதத்தைக் கலசத்தோடு கத்துருவினிடஞ் சேர்ப்பிக்க,அப்போது அமி ருதத்தைப் பெற்றும் உண்ணாமல் நாகர் கலசத்தோடு கைவிட்ட செய்தி இங்கு முதலிரண்டடிகளிற் கருதத்தக்கது.) பி - ம்:—[1]பெறற்கொணு. [2]தன்மைபோல். [3]முன்னமென். (ருச)

ருரு.—கவிக்கூற்று.

*என்று கொண்[1]டு ணைந்துநைந் திரங்கிவிம்மி விம்மி[2]யே
பொன்றிணிந்த கொங்கைமங்கை யிடரின்மூழ்கு போழ்தின்வாய்
குன்ற[3]மன்ன சிலைமுரிந்த கொள்கைகொண்டு குளிர்மனத்
தொன்றுமுண் கண்மதிமுகத் தொருத்திசெய்த துரைசெய்வாம்.

(இ - ள்.) பொன் திணிந்த கொங்கை மங்கை - தேமல்நெருங்கிய தனங்களையுடைய சீதை, என்றுகொண்டு உள் நைந்து நைந்து - என்று

(பல்வாறு) சொல்லி மனம் மிகவும்நைந்து, இரங்கி - இரக்கங்கொண்டு, விம்மி விம்மி - அழுது, இடரில் மூழ்கு போழ்தின் வாய் - துன்பத்தில் அழுந்தும்பொழுதில்,—குளிர் மனத்து ஒன்றும் உண் கண் மதி முகத்த ஒருத்தி - குளிர்ந்த [உவந்த] மனத்தோடுகூடியவளும் மையுண்டகண்களை யும் சந்திரன்போன்ற முகத்தையு முடையவளுமான ஒருதோழி, குன்றம் அன்ன சிலை முரிந்த கொள்கை கொண்டு-மலையையொத்த சிவதநுசுமுரிந்த செய்தியை யறிந்துகொண்டு,செய்தது-செய்ததை,உரைசெய்வாம்—;(எ-று) —அதனை மேலேகாண்க.

சீதை கீழ்க்கூறியவாறு பலபடி மனம்வருந்தி இரங்கிப் புலம்புகையில், சீதையின்சேடியொருத்தி சனகன்வேள்விச்சாலையில் ஸ்ரீராமன் சிவதநுசை யிறுத்ததை யறிந்துகொண்டு செய்ததை இனிச் சொல்வோ மென்று கவி கூறுகின்றனர். 'கன்னியாசுல்கமாக வைத்திருந்த சிவதநுசு முறிக்கப் பட்டுச் சீதையின் விவாககாலம் வரப்போகிறதா?' என்று காத்திருந்தவட்கு அது நேர்பட்டது தெரிந்ததனால் அச்சேடி குளிர்மனத்த ளாயினள். அந்தச் சேடியின்பெயர் மாலையென்பது அடுத்தசெய்யுளால் விளங்கும். அடுக்குக் கள் - மிகுதிப்பொருளன. என்றுகொண்டு, கொண்டு - அசை. பி - ம்:— [1]நைந்து. [2]அப். [3]என்ன. (ருரு)

ருசு.—சேடியொருத்தி சீதையுள்ளவிடம் வருதல்.

வடங்களுங் குழைகளும் வான வில்லிடத்
[1]தொடர்ந்து பூங்[2]குழல்களும் துகிலுஞ் சோர்தர
நுடங்கிய மின்னென நொய்தி னெய்தினா
ணெடுந்தடங் கிடந்தகண் ணீல மாலையே.

(இ - ள்.) நெடு தடம் கிடந்த - பெரிய தடாகத்திற் கிடந்த, நீலம் கண் மாலை - கருங்குவளைமலர்போன்ற கண்களையுடைய மாலையென்பவள், —வடங்கள்உம் குழைகள்உம் வானவில் இட-(தன்கழுத்திற்பூண்ட) ஆரங் களும் காதணிகளும் வானவில்லைப்போன்று பலநிறவொளிகளை விட்டுவிட்டு வீசவும், தொடர்ந்து பூ குழல்கள்உம் துகில்உம் சோர்தர - ஒன்றோடொ ன்றுசேர்ந்து மலரணிந்தகூந்தல்களும் ஆடையும் அவிழ்ந்து சரியவும்,— நுடங்கியமின் என - துவண்ட மின்னல்போல, நொய்தின் - விரைவாக, எய்தினாள் - வந்தாள்; (எ - று.)

சீதைக்குத் திருமணம்நடக்கும்படி ஸ்ரீராமன் வில்லிறுத்தமகிழ்ச்சியான செய்தியை விரைவில் தெரிவிக்கவேணுமென்று வடங்களும்குழைகளும் வானவில்லிடவும், குழலும்ஆடையும் அவிழ்ந்துசரியவும் சேடி சீதையிருக்கு மிடத்துக்கு விரைந்துவந்தன ளென்க. நீலமாலையென்று அச்சேடிக்குப் பெயரென்றுகொள்ளின்,நெடுந்தடங்கண்என்பதற்கு-மிகவும்நீண்டகண்களை யுடைய என்க பி - ம்:—[1]தொடங்குபு. தொடர்ந்தபூங்.[2]கலைகளும்குழலும்.

ருஎ.—சீதை வந்தசேடியை மகிழ்ச்சிச்செய்தியென்னென்று வினவுதல்.

வந்தடி வணங்கிலள் வழங்கு மோதைய
ளந்தமி லுவகைய ளாடிப் பாடினள்

சிந்தையுண் மகிழ்ச்சியும் புகுந்த செய்கையும்
சுந்தரி சொல்லெனத் தொழுது சொல்லுவாள்.

(இ - ள்.) (அந்தச்சேடி), வந்து அடி வணங்கிலள் - (வழக்கம்போல்) வந்ததும் அடிவணங்கினாளில்லை; வழங்கும் ஓதையள் - ஆரவாரஞ்செய்பவளும், அந்தம் இல் உவகையள் - எல்லையற்ற மகிழ்ச்சியையுடையவளுமாகி, ஆடி பாடினாள் - நடனஞ்செய்து மங்கலகீதம்பாடலானாள்; (அதைக்கண்ட சீதை அவளைநோக்கி), 'சுந்தரி - அழகியவளே! சிந்தையுள் மகிழ்ச்சிஉம் - மனத்திலுள்ள சந்தோஷத்தையும், புகுந்த செய்கைஉம் - (அங்ஙனம்பெருமகிழ்ச்சிக்குக்காரணமாக) நடந்துள்ள செயலையும், சொல் - சொல்வாயாக,' என - என்றுகேட்க,—(அந்தச்சேடி), தொழுது - (சீதையை) வணங்கி, சொல்லுவாள் - உரைப்பவளானாள்: (எ - று.)—அதனை மேல் நான்குகவிகளிற் காண்க.

தலைவியைக்கண்டவுடன் வணங்கவேண்டுவது முறைமையாயிருக்க, பெருமகிழ்ச்சியால் அவ்வாறு அந்தச்சேடி செய்யாமல் ஆடிப்பாடிக்கொண்டிருந்து, பிறகு சீதை கேட்கச் சொல்லலாயினள். பி-ம்:—[1] ஓகையள். (௫௭)

௫௮.—அந்தச் சேடி நான்குகவிகளால்
ஸ்ரீராமன் சிவதநுசையிறுத்தசெய்தியைக் கூறுகின்றாள்.

கயரத துரகமாக் [1] கடலன் கல்வியன்
றயரத னெனும்பெயர்த் தனிச்செ னேமியான்
புயல்பொழி தடக்கையான் புதல்வன் பூங்கணை
[2] மயல்விளை மதனற்கும் வடிவு மேன்மையான்.

(இ - ள்.) கயம் ரதம் துரகம் மா கடலன் - யானை தேர் குதிரைஇவை மிகுதியாகப்படைத்தவனும், கல்வியன் - பெருங்கல்வியாளனும், புயல் பொழி தடக் கையான்-(நீருள்ளஇடம் இல்லாதஇடம்என்றுபாராது) மேகம் மழைபொழிவதுபோல் (இன்னார்இனையாரென்றுபாராது செல்வத்தைப்) பொழிகின்ற நீண்ட கையையுடையவனும், தயரதன் எனும் பெயர் தனி செல் நேமியான் - தசரதனென்று பெயர்கொண்டு (உலகத்தைப்பொதுக்கடிந்து) தனிச்செங்கோல்செலுத்துகின்ற சக்கரவர்த்தியின், புதல்வன் - புத்திரன், பூ கணை மயல் விளை மதனற்கும் வடிவு மேன்மையான்-மலரம்புகளைக்கொண்டு காமமயக்கத்தையுண்டாக்குகின்ற மன்மதனைக்காட்டிலும் வடிவழகையுடையவன் (ஒருவனுளன்); (எ-று.)—இதனால், தசரதசக்கரவர்த்தியென்று ஒருவன் உண்டென்றும், அவனுக்கு இராமன்என்று ஒரு புத்திரனுண்டென்றும் கூறியவாறு. பி - ம்:—[1] கடவும். [2] மயறரு. (௫௮)

௫௯. மராமர மிவையென வளர்ந்த தோளினா
னராவணை யமலனென் றயிர்க்கு மாற்றலா
னிராமனென் பதுபெய ரிளைய கோவொடும்
பராவரு முனியொடும் பதிவந் தெய்தினான்.

(இ - ள்.) (அந்தக்குமாரன்),—இவை மராமரம் என வளர்ந்த தோளினான் - இவை சாலவிருட்சம்போலுமென்று சொல்லுமாறு வளர்ச்சிபெற்ற

தோள்களையுடையவன்; அரா அணை அமலன் என்று அயிர்க்கும் ஆற்றலான்-திருவனந்தாழ்வானாகிய படுக்கையிற்பள்ளிகொண்டிருக்குங் குற்றமற்ற கடவுளாகியதிருமால் தான் (இங்ஙனம் திருவவதரித்தானோ) என்று கண்டவர் ஐயுறுகின்ற பெருவல்லமைபடைத்தவன்; (அவனுக்கு), பெயர்—, இராமன் என்பது—; (அவன்), இளையகோவொடும் - தம்பியாகிய அரசகுமாரனுடனும், பராவு அரு முனியொடும் - துதித்தற்கு அருமையான [மிக்கமகிமையையுடைய] விசுவாமித்திரமுனிவனுடனும், பதி-(நமது) நகரத்தை, வந்து எய்தினான் - வந்துசேர்ந்தான்; (எ - று.)

இதனால், அந்தத் தசரதசக்கரவர்த்தியின் குமாரனாகிய அவன்பெயர் இராமனென்றும்,அவன்விசுவாமித்திரன் அழைத்துவரத்தம்பியுடனேவந்து இந்நகரத்தைச் சேர்ந்தானென்றுங் கூறியவாறாயிற்று. இரண்டாமடி-முற்று மோனை. பரா வரும் எனப் பிரித்தால்-யாவராலுந்துதிக்கப்படுகின்ற என்று பொருளாம். பி - ம்:—[1]வலிய. (௫௯)

௬0. பூணியன் மொய்ம்பினன் புனித னெய்தவில்
காணிய வந்தன னென்னக் காவல
னாணையி னடைந்தவில் லதனை யாண்டகை
[1]நாணினி தேற்றினா னடுங்கிற் றும்பரே.

(இ - ள்.) 'பூண் இயல் மொய்ம்பினன் - வலயங்களையணிந்த தோள்களையுடையவனான அக்குமாரன், புனிதன் எய்த வில் காணிய - பரிசுத்தமூர்த்தியாகியசிவபெருமான் அம்பெய்த தனுசைக் காணும்பொருட்டு, வந்தனன் - வந்துள்ளான்', என்ன-என்று (விசுவாமித்திரமுனிவன்) சொல்ல,— காவலன் - சனகராசனுடைய, ஆணையின் - கட்டளையினாலே, அடைந்த - (உடனே அங்கு) வந்துசேர்ந்த, வில் அதனை - அந்தவில்லை (வளைத்து), ஆண் தகை - ஆண்மைக்குணமுள்ள அக்குமரன், இனிது நாண் ஏற்றினான்- வெகுஎளிதாக நாணேற்றினான்; உம்பர்-மேலுலகமும், நடுங்கிற்று-; (எ-று.)

'வந்தார் வில்லுங்காண்பார்' என்று கீழ் மிதிலைக்காட்சிப்படலத்தில் விசுவாமித்திரன் கூறியதையொட்டி, 'வில்காணியவந்தனனென்ன' என்று கூறுகின்றனள். நாணேற்றப்பற்றிய விசையால் உம்பரும் நடுங்கிற்றென்க. உம்பர் என்பதன்பின் உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. பி-ம்:—[1]நாணியின். (௬0

௬க. மாத்திரை யளவிற்றாண் மடுத்து முன்பயில்
[1]சூத்திர மிதுவெனத் தோளின் வாங்கினா
னேத்தின ரிமையவ ரிழிந்த பூமழை
வேத்தவை நடுக்குற முறிந்து வீழ்ந்ததே.

(இ - ள்.) மாத்திரை அளவில் - ஒருநொடிப்போதில், தாள் மடுத்து - (அவ்வில்லின் ஒருபக்கத்துமுனையைக்) காலால் மிதித்துக்கொண்டு, முன் பயில் சூத்திரம் இது என - முன்பழகின யந்திரம் இது என்று (கண்டவர்) கருதும்படி, தோளின் வாங்கினான்- (அவ்விராமன்(தன்) தோள்வலிமையால்

வளைத்திட்டான்; (அப்போது), இமையவர் - தேவர்கள், ஏத்தினர் - (அவ்விராமபிரானைப்) புகழ்ந்தார்கள்; பூமழை - மலர்மாரி, இழிந்த(து)-(வானத்தினின்று) பொழிந்தது; (அவ்வில்), வேந்து அவை நடுக்குஉற -இராசசபை நடுநடுங்கும்படி, முறிந்து வீழ்ந்தது - பிளவுபட்டுக் கீழேவிழுந்திட்டது.

அவை - அவையிலுள்ளார்க்கு, ஆகுபெயர். வேந்து+அவை=வேத்தவை: மென்றொடர் வேற்றுமையில் வன்றொடராயிற்று. பி - ம்:—[1]சூத்திரி யிதுவென. (௬௧)

**௬௨.—சீதையின் ஐயம் நீங்குதல்.**

கோமுனி யுடன்வரு கொண்ட லென்றபின்
றாமரைக் கண்ணினா னென்ற தன்மையா
லாமவ னேகொலென் றைய நீங்கினாள்
வாம[1]மே கலையிற வளர்ந்த தல்குலே.

(இ - ள்.) கோமுனியுடன் வரு கொண்டல் என்ற பின் - சிறந்த விசுவாமித்திரமுனிவனுடனே வந்த மேகம்போன்றவனென்று கூறியபிறகு, தாமரைக்கண்ணினான் என்ற தன்மையால்-செந்தாமரைக்கண்ணனாகிய திருமாலைப்போன்ற ஆற்றலுடையவனென்றுசொல்லிய வகையினால், (சீதை) ஆம் அவன்ஏகொல் என்ற ஐயம் நீங்கினாள் - (என் காதலுக்கு) இடனாகிய அந்தஆடவனாகஇருப்பானோ? என்றசந்தேகம் நீங்கப்பெற்றாள்;வாமம் மேகலை இற - அழகிய மேகலையற்றுப்போகும்படி, அல்குல் வளர்ந்தது - இடைபருத்தது; (எ - று.)

சீதை சேடியின்வார்த்தையால் வில்லிறுத்தவன் தான் கண்ட ஆடவனேயென்று துணிந்து மனத்திருந்த சங்கை நீங்கினளாக, அப்போது வேட்கையின்மிகுதியால் அல்குல் வளர்ந்த தென்க. அல்குல்என்பதற்கு - பெண்குறியென்று உரைகூறுவாருமுளர். பி - ம்:—[1]மேகலையினுள். (௬௨)

**௬௩.—சீதையின் உறுதி.**

* இல்லையே நுசுப்பெனப் பாருண் டென்னவு
மெல்லியன் முலைகளும் விம்ம விம்முவாள்
சொல்லிய குறியினத் தோன்ற லேயவ
னல்லனே லிறப்பனென் றகத்து ளுன்னினாள்.

(இ - ள்.) இல்லையே நுசுப்புஎன - (காண்பவர் இவட்கு) இடைஇல்லையென்றுசொல்ல, (அதனைத்தடுத்து), பார் - பாரிலுள்ள விவேகிகள், உண்டு என்னஉம் - (இடை) இருக்கின்றது என்று சொல்லவும் மெல் இயல் முலைகள்உம் விம்ம விம்முவாள் - சுகுமாரத்தன்மைபொருந்திய தனங்களும் பருக்க (த் தானும்) உடல் பூரிப்பவளாய், (சீதை), 'சொல்லிய குறியின் - (இவள்) சொன்ன அடையாளங்களால், (வில்லைமுறித்தவன்), அ தோன்றல் - (நான் கன்னிமாடத்திலிருந்து கண்டுகாதலித்த) அந்த ஆடவனே யாவன்;அவன் அல்லன் எல்-(அப்படி) அவனாக இராமற்போனால் இறப்பன்-(நான்) உயிரைவிட்டொழிப்பேன்', என்று—, அகத்துள் - (தன்) மனத்துக்குள், உன்னினாள் - உறுதி கொண்டாள்; (எ- று.)

இடை உண்டோ இல்லையோஎன்று ஐயமுறவேண்டியநிலையிலிருக்கையில், அந்நிலை பின்னும் அதிகப்படுமாறு அல்குலேயன்றி முலையும் வளர்ந்ததென்பது முன்னிரண்டடியின் பொருள். முதல் உம்மை - இசைநிறை. இரண்டாவது உம்மை 'வளர்ந்ததல்குல்' என்று கீழ்வந்ததுநோக்கிய இறந்ததுதழுவியஎச்சம். பி - ம்:—[1]என்பருண்டுண்டென்னவும். (௬௩)

௬௪.—சனகராசன் முனிவனிடத்துக் கூறத்தொடங்குதல்.

[1]ஆசையுற் றயர்பவ ளன்ன ளாயினள்
பாசடைக் கமலத்தோன் படைத்த வில்லிறு
மோசையிற் பெரியதோ ருவகை [2]யெய்தியக்
கோசிகற் கொருமொழி சனகன் கூறுவான்.

(இ - ள்.) ஆசை உற்று - காதல் விஞ்சி, அயர்பவள் - வருந்துபவளாகியசீதை, அன்னள் ஆயினள் - அவ்வாறானநிலையிலிருந்தனள்; (அதுநிற்க); சனகன் - சனகராசன், பாசு அடை கமலத்தோன் படைத்த வில் இறும் ஓசையில் பெரியது ஓர் உவகை எய்தி - பசுமையான இலைகளைக் கொண்ட தாமரையின்மலரில் தங்குகின்றவனான பிரமதேவன் நிருமித்த தநுசு இற்ற ஓசையைக்கேட்டு மிக்கஒப்பற்ற மகிழ்ச்சியையடைந்து, அ கோசிகற்கு - அந்தவிசுவாமித்திரனுக்கு, ஒரு மொழி கூறுவான்—;(எ - று.) —அதனை அடுத்த கவியிற் காண்க.

'வில்வளைத்தலென்பதுநிகழுமா?' என்றுஏக்கங்கொண்டிருந்த சனகன் வில்லிறுத்த ஓசையைக் கேட்கவே பேருவகையெய்தினவனாய், இத்தொழில் நிகழ்தற்குக்காரணனான விசுவாமித்திரமுனிவனைநோக்கி ஒன்றுகூறலாயினனென்க. பி - ம்:—[1]ஆசையால், ஆசையின். [2]எய்திய கோசிகற்கு. (௬௪)

௬௫.—சனகன் கூறிய மொழி.

உரைசெயெம் பெருமவுன் புதல்வன் வேள்விதான்
விரைவினின் றொருபகன் முடித்தல் வேட்கையோ
முர[1]செறிந் ததிர்கழன் முழங்கு தானையவ்
வரசையு [2]மிவ்வழி யழைத்தல் வேட்கையோ.

(இ-ள்.) எம் பெரும-எமது பெருமானே!உன் புதல்வன் வேள்வி தான் - உன்னாலழைத்துவரப்பெற்ற குமாரனது விவாகம், விரைவின் இன்று ஒரு பகல் முடித்தல் வேட்கைஓ - காலதாமதமில்லாமல் இன்றைத்தினத்திலேயே செய்துதீரவேணுமென்று விருப்ப மா? (அல்லது),முரசு எறிந்து - (செய்திதெரிவிக்க எங்கும்) முரசமென்னும் பறையைச்சாற்றி, (பலரையும் வரவழைத்து), அதிர் கழல் முழங்கு தானை அ அரசைஉம் இ வழி அழைத்தல் - அதிர்கின்றவீரக்கழலையும் கர்ச்சித்துக்கொண்டிருக்கிற சேனைகளையுமுடைய அந்தத்தசரதமன்னவனையும்இந்தநகரத்துக்குவரவழைத்து(அந்தச் சக்கரவர்த்தியனுமதியின்மீது விவாகத்தை) நடத்துதல், வேட்கைஓ - (நுமக்கு) விருப்பமா? உரை செய் - (இவ்விரண்டில் எது விருப்பமென்று ஆலோசித்துச்)சொல்வாய்;(என்று சனகன் விசுவாமித்திரனை வினவினன்).

இப்போதே விவாகத்தை நடத்தவேணுமா? அன்றி, நமக்குவேண்டிய பலர்க்குஞ் செய்திதெரிவித்துத் தசரதசக்கரவர்த்திக்கும் செய்திதெரிவித்து அம்மன்னவனையும் வரவழைத்துப் பின் விவாகத்தை நடத்தவேணுமா? உமது விருப்பத்தைச்சொல்லுக என்று சனகராசன் விசுவாமித்திரமுனிவனைக் கேட்கின்றன னென்க. பி - ம்:—[1]அறைந்து. [2]இவ்வுழி. (௬௪)

௬௬.—விசுவாமித்திரன்மொழிப்படி தசரதனுக்குச் சனகன் தூது அனுப்புதல்.

மல்வலா னவ்வுரை பகர மாதவ
னொல்லையி லவனும்வந் துறுத னன்றென
வெல்லையி லுவகையா னியைந்த வாறெலாஞ்
சொல்லுகென் றோலையுந் தூதும் போக்கினான்.

(இ - ள்.) மல் வலான் அ உரை பகர - மற்போரில்வல்லசனகராசன் அவ்வார்த்தையைச் சொல்ல,—மாதவன் - விசுவாமித்திரமுனிவன், ஒல்லையில் அவன்உம் வந்து உறுதல் நன்று என - விரைவில் அந்தத்தசரதனும் வந்துசேர்தல் நல்லதென்று (தன் கருத்தைத்) தெரிவிக்க, எல்லை இல் உவகையான் - (இவ்வளவென்று) அளவிடமுடியாத மகிழ்ச்சியையுடைய சனகராசன், இயைந்த ஆறு எலாம் சொல்லுக என்று - 'நடந்தவிவரங்களையெல்லாம் போய்த் தசரதசக்கரவர்த்தியினிடஞ் சொல்லுவீராக' என்று சொல்லி, ஓலைஉம் தூதுஉம் - திருமணப்பத்திரிகையையும் தூதுவரையும், போக்கினான் - அனுப்பினான்; (எ - று.)

சுபஸ்யசீக்ரம் என்றவாறு விவாகத்தை நாளோட்டாமல் விரைவிற் செய்யவேண்டுமென்பது முறையாமாயினும், பெற்றோருடையஅநுமதியில்லாமல் விவாகத்தைநடத்துவது முறையன்றுஎன்றுகருதிய விசுவாமித்திரன் 'ஒல்லையில் அவனும்வந்துறுதல்நன்று' என்றுசொல்ல,சனகராசனும் உடன்பட்டுத் தசரதனிடத்துச் செய்திசொல்லி மணவோலையைத்தருமாறு தூதுவரை யனுப்பின னென்க. சொல்லுகென்று - தொகுத்தல். (௬௬)

கார்முகப்படலம் முற்றிற்று.

## ௰௩-ஆவது எழுச்சிப்படலம்.

சனகராசனது தூதுவரால் திருமணவோலை தரப்பெற்றுச் செய்தியுணர்ந்த தசரதன் தனதுபரிவாரங்களோடு மக்களது திருமணத்தின்பொருட்டு மிதிலைநகருக்கு எழுந்த செய்தியைக் கூறும் பிரிவு.

௧.—சனகராசன்தூதுவர் தசரதசக்கரவர்த்தியின் அரண்மனைவாயிலையடைதல்.

கடுகிய தூதருங் காலிற் காலிற்சென்
[1]றிடிகுரன் முரசதி ரயோத்தி யெய்தினா
ரடியிணை தொழவிட மின்றி [3]மன்னர்த
முடியொடு முடிபொரு வாயின் முன்னினார்.

(இ - ள்.) (அவ்வாறு சனகமன்னவனு லனுப்பப்பட்டு), கடுகிய - விரைந்துபோகவெண்ணிய, தூதர்உம்-தூதர்களும், காலில் - (தமது) கால் வலியினுல், காலின் சென்று - காற்றுப்போல விரைந்துசென்று, இடி குரல் முரசு அதிர் அயோத்தி எய்தினர் - அடிக்கப்படுகின்ற பேரொலியையுடைய பேரிகைகள்முழங்குகின்ற அயோத்திமாநகரத்தையடைந்தவர்களாய்,-அடி இணை தொழ இடம் இன்றி-அந்தச்சக்கரவர்த்தியினது பாதங்களைத்தொழும் பொருட்டு (உட்புக) இடங்கிடைக்காமையால், மன்னர் தம் முடியொடு முடி பொரு - அரசரது கிரீடத்தோடுகிரீடம்உராயப்பெற்ற, வாயில் - அரண்மனை வாயிலை, முன்னினர் - முற்பட்டு நின்றூர்கள்; (எ - று.)

தூதர் சனகனதுகட்டளையால்விரைந்து அயோத்தியடைந்து பலமன்னவர் தசரதசக்கரவர்த்தியின்பாதங்களைத்தொழும்படி ஒருவரதுமுடி மற்றொருவரதுமுடியோடுஉராய மிகவும் நெருக்கப்பட்டுக் காத்திருக்கும் அரண்மனைவாயிலை யடைந்தன ரென்க. இடியையொத்தகுரலென்று பொருள் கூறின், இடிக்குரலென்று வரவேண்டுவது செய்யுளோக்கி, இடிகுரலென்று இயல்பாகவந்த தென்க. பி - ம்:—[1]அடி. [2]தொழுமிடமன்றி. [3]மன்னவர்.

உ.—சென்ற தூதுவர் சக்கரவர்த்தியைக் கிட்டிச் செய்திகூறுதல்.

முகந்தனர் திருவருண் முறையி[1]னெய்தினர்
திகழ்ந்தொளிர் கழலிணை தொழுது செல்வனைப்
புகழ்ந்தன ரரசநின் புதல்வர் [2]போயபின்
நிகழ்ந்ததை யிது வென நெடிது கூறினர்.

(இ - ள்.) திருவருள் முகந்தனர் - (தம்வருகையை வாயில்காவலர்மூலமாகச்சக்கரவர்த்திக்கு அறிவித்து உள்ளேவருக என்று குறிப்பிக்குஞ்சக்கரவர்த்தியின்) அருளப்பாட்டைப் பெற்றவராய், (அந்தச்சனகமன்னன்தூதர்), —முறையின் எய்தினர் - (அரசரிடத்துச்செல்லவேண்டிய) முறைப்படியே சென்று, திகழ்ந்து ஒளிர் கழல் இணை தொழுது - மிகவும்விளங்குகின்ற (அந்தச்சக்கரவர்த்தியின்) உபயபாதங்களை வணங்கி, செல்வனை புகழ்ந்தனர் - ஸ்ரீமானுன அந்தத்தசரதசக்கரவர்த்தியைப் புகழ்ந்து, 'அரச - அரசே! நின் புதல்வர் - உனது புத்திரர், போய பின் - (விசுவாமித்திரமுனிவனுடன்) சென்றபின்பு, நிகழ்ந்ததை - நிகழ்ந்தவிசேஷமானசெய்தி, இது இதுவாகும்', என - என்று, நெடிது-விஸ்தாரமாக, கூறினர் - (இராமபிரான் சீதையின்விவாகத்துக்குக் கன்னியாசுல்கமாகச் சனகமன்னவன் ஏற்படுத்திய சிவதநுசைமுறித்தசெய்தியைக்) கூறினர்கள்; (எ - று.)—பி - ம்:—[1]முன்னினர். [2]போன. [3]எனு. (உ)

ந.—தூதுவர் சனகன்விடுத்தஓலையைக் கொடுக்க, சக்கரவர்த்தி வாசிக்குமாறு சொல்லுதல்.

கூறிய தூதருங் கொணர்ந்த வோலையை
யீறில்வண் புகழினு யிதுவ தென்றனர்
வேறொரு புலமகன் விரும்பி வாங்கினன்
மாறதிர் கழலினன் வாசி யென்றனன்.

(இ - ள்.) கூறிய தூதர் உம் - (இராமனது வீரச்செயலைக்கூறிய) தூதர்களும், கொணர்ந்த ஓலையை - (தாம் கொண்டுவந்த திருமணப்பத்திரிகையைச்சுட்டி, 'ஈறு இல் வண் புகழினாய் - முடிவில்லாத செழித்த குணங்களையுடையவனே! அது - அந்தச்சனகராசன்கொடுத்த திருமுகம், இது - இதுவாகும்', என்றனர் - என்றுசொல்லி(த் தமது அரசன் எழுதிய திருமுகத்தை நீட்டி)னர்; வேறு ஒரு புலம் மகன் - (அங்கேயுள்ள ஓலையைவாசிப்பதற்கு என்று) வேறாக நியமிக்கப்பட்டிருந்த ஒரு அறிஞனானவன், (சக்கரவர்த்தியின் கட்டளையினால்), விரும்பி வாங்கினான்-மகிழ்ச்சியோடு (அந்தஓலையை) வாங்கிக்கொண்டான்; மாறு அதிர் கழலினான் - (ஒன்றுக்கொன்று)மாறாக ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த சக்கரவர்த்தி, வாசி என்றனன் - வாசிப்பாயாக என்று கட்டளையிட்டான்; (எ - று.) (௩)

௪.—அவ்வோலைச்செய்தியைக்கேட்டதும், தசரதனதுதோள்பூரித்தல்.

இலைமுகப் [1]படத்தவ னெழுதிக் காட்டிய
தலைமகன் சிலைத்தொழில் செவியிற் சார்தலு
நிலைமுக வலயங்க ணிமிர்ந்து [2]நீங்கிட
மலையென வளர்ந்தன வயிரத் தோள்களே.

(இ - ள்.) இலை முகம் படத்து - பனையோலையினிடமாகிய படத்தில், அவன் எழுதி காட்டிய - அந்தச்சனகராசன் எழுதிக்காண்பித்த, தலைமகன் சிலை தொழில் - (தனது) மூத்தமகனாகிய இராமனது வில்வித்தையின் தொழில் திறம், செவியில் சார்தலும்-(தன்) காதிற்பட்டவுடனே, (அந்தத்தசரத சக்கரவர்த்தியினது); வயிரம் தோள்கள் - வயிரம்போல மிகவும் உறுதியான தோள்கள், நிலை முகம் வலயங்கள் நிமிர்ந்து நீங்கிட - நிலையான இடத்தைக் கொண்ட தோள்வளைகள் வாய்விண்டு கழன்றுபோகும்படி, மலை என வளர்ந்தன - மலைபோலப் பருத்து ஓங்கின; (எ - று.)

தனது மூத்தகுமாரனதுவீரச்செயலை வேறொருமன்னவன் புகழ்ந்து எழுதியதைச் சக்கரவர்த்தி கேள்வியுற்றுத் தோள்பூரித்தனனென்க.
பி - ம்:—[1]படத்தவர். [2]நீங்கின. (௪)

ரு.—தசரதமன்னவன் மொழி.

வெற்றிவேன் மன்னவன் றக்கன் வேள்வியிற்
கற்றைவார் சடைமுடிக் கணிச்சி வானவன்
முற்றவே [1]ழுலகையும் வென்ற மூரிவி
லிற்றபே [2]ரொலிகொலன் றிடித்த தீங்கென்றான்.

(இ - ள்.) வெற்றி வேல் மன்னவன்-வெற்றியைத்தருகின்ற வேலாயுதத்தையுடைய தசரதசக்கரவர்த்தி,— கற்றை வார் சடை முடி கணிச்சி வானவன் - தொகுதியான நீண்ட சடைமுடியையும் மழுப்படையையுமுடைய கடவுளாகிய சிவபெருமான், தக்கன் வேள்வியில் - தட்சபிரசாபதியின்யாகத்தையழித்தபோது, ஏழ் உலகை முற்ற உம் வென்ற - ஏழுலகத்தவரையும் முழுதும் வெல்வதற்குக் காரணமாயிருந்த, மூரி வில் - வலிமை

பெற்ற வில், இற்ற - முறிந்ததனாலான, பேர் ஒலி கொல் - பேரோசை தானோ, அன்று ஈங்கு இடித்தது - அன்றைத்தினம்ஒருபெருஞ்சத்தம் இங்குக் கேட்டதே அது? என்றான் - என்று கூறினான்; (எ - று.)

'நாலைந்துநாள்கட்குமுன் நாம் சபையிலிருக்கையில் ஒருபேரொலி இன்னதென்று நமக்குத்தெரியாமல் திடீரென்றுகேட்டதே, அந்தப்பேரொலி நமதுபுதல்வன் சிவதனுசை யிறுத்ததனால்தோன்றிய பேரொலிபோலும்' என்று சக்கரவர்த்தி கூறினனென்க. யாகத்துக்குவந்திருந்த மேலேழுலகத்தில்வாழ்பவராய்ச் சிறந்த தேவர்முதலியோர்யாவரையும் வென்றதனால் 'முற்றவேழுலகையும்வென்ற' எனப்பட்டது. பி - ம்:—[1]உலகெலாம். [2]ஒலிகொலாம், ஒலிகொலோ. (ரு)

**சுா.—சக்கரவர்த்தி வந்த தூதுவர்க்குப் பெருமகிழ்ச்சியால் அணிகலன் முதலியன அளித்தல்.**

என்றுரைத் தெதிரெதி ரிடைவி டாதுநேர்
துன்றிய கனைகழற் றூதர் கொள்கெனப்
பொன்றிணி கலன்களுந் தூசும் போக்கினன்
குன்றென வுயரிய குவவுத் தோளினன்.

(இ - ள்.) குன்று என உயரிய குவவு தோளினன் - [illegible] மலைபோலத் திரண்ட தோள்களையுடையவனான தசரதசக்கரவர்த்தி, என்று எதிர் எதிர் உரைத்து - என்று (வசிட்டர்முதலாயினார்) முன்னிலையில் மறுமொழி சொல்லி,— நேர் துன்றிய கனை கழல் தூதர் கொள்க என - '(ஒன்றோடொன்று) ஒத்த ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த தூதுவர்பெற்றுக் கொள்ளட்டும்' என்று, பொன் திணி கலங்கள்உம் - பொன்னாற் செய்யப்பட்ட அணிகலங்களையும், தூசுஉம் - ஆடைகளையும், இடைவிடாது போக்கினன் - இடைவிடாமல் மேன்மேலும் கொடுப்பித்தான்; (எ - று.)

தனதுகுமாரனதுவீரச்செயலைக்கேட்டபெருமகிழ்ச்சியால் தூதுவர்க்கு அணிகலம்முதலியன கொடுப்பித்தானென்க. (சா)

**எ.—சக்கரவர்த்தி தன்சேனைமுதலியன முந்திச்செல்லப் பறைசாற்றுமாறு கட்டளையிடல்.**

[1]வானவன் குலத்தெமர் வரத்தி னால்வரும்
வேனில்வே ளிருந்தவம் மிதிலை நோக்கிநஞ்
சேனையு [2]மரசருஞ் செல்க முந்தென
வானைமே [3]லணிமுர சறைகென் றேவினான்.

(இ - ள்.) வானவன் குலத்து எமர் வரத்தினால் - சூரியபகவானது குலத்துத்தோன்றிய எமதுமுன்னோர்கள்பெற்ற புண்ணியப்பயனாக, வரும் - தோன்றிய, வேனில் வேள் - வேனிலைநண்பனாகக்கொண்ட மன்மதன் போன்ற இராமன், இருந்த - தங்கியிருக்கின்ற, அ மிதிலை நோக்கி - அந்த மிதிலாபட்டணத்தைக்குறித்து, 'நம்—, சேனைஉம் - , அரசர்உம் - அரசகுமாரரும், முந்து - முன்னதாக, செல்க - செல்லட்டும்,' என - என்று,

ஆனைமேல் —, அணி முரசு - அழகிய பறையை, அறைக - (வள்ளுவர்) அறையட்டும், என்று—, ஏவினன்-(தசரதசக்கரவர்த்தி)கட்டளையிட்டான்.

செய்திதெரிவிக்க யானைமேல் முரசேற்றிச் சாற்றுவித்தல், மரபு. வேனில்வேள் - வசந்தகாலமன்மதனெனினுமாம். வானவன்-வானிற்சஞ் சரிக்கும் கடவுள். பி - ம்:—[1]வானவர்குலத்துநற்றவத்தினால். [2]மாதரும். [3]மணமுரசு. (எ)

அ.—வள்ளுவர் பறைசாற்றுதல்.

வாம்பரி விரி[1]திரைக் கடலை வள்ளுவன்
றேம்பொழி துழாய்முடிச் செங்கண் [2]மாலவ
னாம்பரி சுலகெலா மளந்து கொண்டநாட்
சாம்புவன் றிரிந்தெனத் திரிந்து சாற்றினான்.

(இ - ள்.) தேம் பொழி துழாய் முடி - தேனைச்சொரிகின்ற திருத் துழாய்மாலையை முடியி லணிந்த, செங்கண் மாலவன்-புண்டரீகாட்சனாகிய திருமால், ஆம் பரிசு - தன்னதாகக்கொள்ளும்முறைமைக்கேற்ப, உலகு எலாம் அளந்து கொண்ட நாள் - (சுவர்க்கம் மத்திமம் பாதாளம் என்ற) மூவுலகங்களையும் (தனது மூன்றடிகளால்) அளந்துகொண்ட காலத்தில், (அவ்வெற்றியை), சாம்புவன் - சாம்பவான், திரிந்து என-பலமுறைதிரிந்து (பறையறைந்து) தெரிவித்தாற்போல,—வாம் பரி விரி திரை கடலை - தாவுகின்ற குதிரைகளாகிய திரைகளையுடைய (சேனா) சமுத்திரத்துக்கு, வள்ளுவன்—, திரிந்து—,சாற்றினான்-(முரசறைந்து)செய்திதெரிவித்தான்.

வள்ளுவன் ஆனைமேல்முரசேற்றியறைந்து, இராமபிரானுடைய திரு மணத்தின்பொருட்டுச் சேனையிலுள்ளார் முந்திச்செல்லுமாறு அரசன்கட் டளையிட்டிருப்பதைத் தெரிவித்தன னென்க. சேனையைக்கூறியது அரசர்க் கும்உபலட்சணம். ஆம்பரிசுஎன்பதற்கு தனதுமூவடிக்குள் ஆகும்படிஎன்று உரைத்தலும்ஒன்று. பி - ம்:—[1]தரு. [2]வானவன். (அ)

கூ.—அதுகேட்டசேனையிலுள்ளார்யாவரும் களிப்பு மிகுதல்.

சாற்றிய முரசொலி செவியிற் சாருமுன்
கோற்றொடி மகளிருங் கோல மைந்தரும்
வேற்றரு குமரரும் வென்றி வேந்தருங்
காற்றெறி கடலெனக் களிப்பி னோங்கினார்.

(இ - ள்.) சாற்றிய முரசு ஒலி - அறைந்த பேரிகையின் பேரோசை, செவியில் சாரும் முன் - காதில் வீழ்வதற்குமுன்னம், கோல் தொடி மக ளிர்உம் - அழகிய தொடியென்னும்வளையலையணிந்த மாதரும், கோலம் மைந்தர்உம் - அழகிய ஆடவரும், வேல் தரு குமரர்உம் - வேலைச்செலுத்த வல்ல குமாரர்களும், வென்றிவேந்தர்உம் - வெற்றிபொருந்திய அரசரும், காற்று எறி கடல் என - காற்றினால்மோதப்படுகின்ற கடல்போல, களிப் பின் - பெருமகிழ்ச்சியால், ஓங்கினார் - பூரித்தார்கள்; (எ - று.)

சேனையைச்சேர்ந்தவர்யாவரும் அம்முரசறைதலாற் செய்திதெரிந்து பெருமகிழ்ச்சியால் உடல்பூரித்தனரென்க. குமாரரென்றது, காலாட்படை வீரரை. மைந்தர்என்றது, மகளிரின் கணவரை. மகளிரும் மைந்தரும் சதுரங்கசேனைகட்குப் பணிசெய்வதற்காக அமைந்தவரென்னலாம். கோல் தொடி - திரண்டதொடியுமாம். இந்தச்செய்யுள் சிலஏட்டுப்பிரதிகளிலில்லை.

கஃ0.—சேனை யெழுதல்.

விடைபொரு நடையினான் சேனை வெள்ளமோர்
[1]ரிடையிலை யுலகினி லென்ன வீண்டிய
கடையுக முடிவினி லெவையுங் காற்படப்
புடைபெயர் கடலென வெழுந்து போயதே.

(இ - ள்.) உலகினில்—, ஓர் இடை - சிறிதிடமும், இலை - இல்லை, என்ன - என்றுசொல்லுமாறு, ஈண்டிய - நெருங்கிய, விடை பொரு நடையினான் சேனை வெள்ளம் - இடபத்தையொத்த கம்பீரமான நடையையுடையவனாகிய தசரதசக்கரவர்த்தியின் சேனையின்கூட்டமானது,— கடையுகம் முடிவினில் - கடையியாகவருகின்றயுகாந்தகாலத்தில், எவைஉம் - எல்லாப்பொருளும், கால் - பெருங்காற்றினால், பட - அழிந்துவிட, (அப்போது), புடை பெயர் - (தன்) இடத்தைவிட்டுப்பெயர்ந்துவந்த, கடல் என - சமுத்திரம்போல, எழுந்து போயது - புடைபெயர்ந்துபோயிற்று; (எ - று.)

'பிரளயகாலத்திலே முதலில் ஆதிசேஷனுடைய ஆயிரமுகங்களினின்று பெரிய மூச்சுக்காற்றுஎழுந்து நெடுந்தூரம்வீசி உலகங்களையும் உலகத்துள்ள பிராணிவர்க்கங்களையும்உலரச்செய்யும்; பின்பு காலாக்கினிருத்திரமூர்த்தியும்கடலிடையேயுள்ளவடவையும்உலகங்களையெல்லாம்எரிக்கும்; பிறகு அண்டகடாகத்திற்கு வெளியேயுள்ளதான பெரும்புறக்கடல்வெள்ளம் புகுந்து உலகங்களையெல்லாம் அழிக்கும்' என்ற நூற்கொள்கை இங்கு, அறியத்தக்கது. பி - ம்: —[1]இடமிலை யுலகினி. [2]கால்பட.　　(கஃ0)

கக.—ரதகஜ வருணனை.

சில்லிட முலகெனச் செறிந்த [1]தேர்கடாம்
புல்லிடு சுடரெனப் பொலிந்த வேந்தரா
லெல்லிடு கதிர்மணி யெறிக்கு மோடையால்
வில்லிடு முகிலெனப் பொலிந்த வேழமே.

(இ - ள்.) உலகு சில் இடம் என செறிந்த தேர்கள் தாம் - உலகமானது சொற்பமானஇடத்தையேயுடையதென்றுகூறும்படி மிகநெருங்கிய தேர்கள், வேந்தரால் - (தம்மீது ஏறியுள்ள) அரசரால், புல்லிடு சுடர் என - (தம்மிடத்துப்) பொருந்திய சூரியனையுடையதுபோல, பொலிந்த - விளங்கின; எல் இடு கதிர் மணி எறிக்கும் ஓடையால் - ஒளிவீசுகின்ற கிரணங்களையுடைய இரத்தினங்கள் விளங்குகின்ற முகபடாத்தையணிந்திருத்தலால், வேழம் - யானைகள், வில் இடும் முகில் என - வானவில்லிடப்பட்ட மேகம்போல, பொலிந்த - விளங்கின; (எ - று.)

தேர்மீதுஏறிய அரசர்க்குத் தேர்மீதுவிளங்குஞ் சூரியனும், பலவகை யிரத்தினங்களிழைத்துச்செய்யப்பட்ட ஒடையையணிந்த யானைகட்கு இந் திரவில்லோடுகூடிய முகிலும் உவமை. பி-ம்:—[1]தேர்களும். (கக)

கஉ.—குடைகோடிகளின்வருணனை.

[1]கால்விரிந் தெழுகுடை கணக்கி லோதிமம்
பால்[2]விரிந் திடையிடைப் பறப்ப போன்றன
[3]மேல்விரிந் தெழுகொடிப் படலை விண்ணெலாந்
தோ லுரிந் துகுவன போன்று [4]தோன்றுமால்.

(இ - ள்.) (அச்சேனையினிடையே பிடிக்கப்படுவனவாய்), கால் விரிந்து எழு குடை-காம்பினின்று விரிந்துஓங்கியுள்ள குடைகள்,-கணக்கில் ஓதிமம்-அளவற்ற அன்னப்பறவைகள், பால் விரிந்து - பால்போன்றவெண்ணி றம் பரவுமாறு, இடைஇடை-நடுநடுவே,பறப்ப-பறப்பவற்றை,போன்றன—; மேல் விரிந்து எழு கொடி படலை - வானத்தில் விரிந்தெழுகின்ற துவசங்க ளின்கூட்டம், விண் எலாம் தோல் உரிந்து உகுவன போன்று-ஆகாயம் முழுதும் தோல்உரியப்பெற்றுச் சிந்துவனவற்றையொத்து, தோன்றும்-காணப்படும்; (எ - று.)—ஆல் - அசை.

வெண்ணிறக்குடைகள் பிடிக்கப்படுபவை - அன்னப்பறவைகள் தமது வெண்ணிறம்பரவ வானத்துப் பறந்துபோவதையும், வெண்கொடியாடு பவை-வானம் தோலுரிக்க அவை அங்குநின்று உகுவனவற்றையும் போலு மென்றார். கால்விரிந்து என்பதற்கு-கம்பிகள்விரிந்து என்பாருமுளர். பி-ம்:-[1]கானிமிர்ந்துயர். [2]விரிந்ததுவெனப்பறப்பபோன்றன, சிறைவிரித்துவிண் பறப்பபோன்றன. [3]மேனிரைத்தன. [4]தோன்றுமே. (கஉ)

கங.—யானைச்சேனைமீது வெண்கொடியாடலின் வருணனை.

நுடங்கிய துகிற்கொடி நூழைக் கைம்மலைக்
கடங்கலுழ் சேனையைக் கடலி தாமென
விடம்பட வெங்கணு [1]மெழுந்த வெண்முகி
றடம்புனல் பருகிடத் தாழ்வ போன்றவே.

(இ - ள்.) நுடங்கிய துகில் கொடி-யானைச்சேனைமீது (பிடிக்கப்பட்டு) அசைகிற வெண்டுகிற்கொடிகள்,— கடம் கலுழ் நூழை கைம் மலை சேனையை-மதமொழுகுகின்ற துளையுள்ள துதிக்கையையுடையயானைச்சேனையை, இது கடல் ஆம் என - இது சமுத்திரமாகுமென்று மயங்கி, இடம் பட எங் கண் உம் எழுந்த வெள் முகில் - இடம் மறையும்படி (வானத்திலே) எம் மருங்கும் எழுந்தனவாகிய வெண்ணிறமேகங்கள், தட புனல் - மிக்க (கட லின்) நீரை, பருகிட - குடிக்கும்பொருட்டு, தாழ்வ - இறங்குவனவற்றை, போன்ற-ஒத்தன; (எ - று.)

மதமொழுகுகின்ற யானைச்சேனை கடலை யொத்திருக்க, அவ்யானைச் சேனைமீது தொங்கி யாடுகின்ற வெண்டுகிற்கொடிகள் அக்கடலின்நீரைப்

பருகுமாறுவந்த வெண்மேகத்தைப்போலு மென்க. நற்றுறிப்பேற்ற வணி. இடம்பட - விசாலமாக எனினுமாம். பி - ம்:—[1] எழுந்து. (கங)

கச.—சேனையிலுள்ளார் அணிந்த ஆபரணம் முதலியவற்றின் வருணனை

இழையிடை யிளவெயி [1]லெறிக்கு மவ்வெயில்
தழையிடை நிழல்கெடத் தவழு மத்தழை
மழையிடை [2]யெழில்கெட மலரு மம்மழை
குழைவுற முழங்கிடுங் குழாங்கொள் பேரியே.

(இ - ள்.) இழை இடை-(அந்தச்சேனையிலுள்ளவர் பூண்ட) ஆபரணங்களினிடங்களிலிருந்து, இள வெயில் எறிக்கும்-இளவெயில் வீசும்; அ வெயில்-அந்த வெயில், தழை இடை நிழல் கெட - (அந்தச்சேனையிற்பிடிக்கப்படும்) பீலிக்குடைகளினிடத்துத்தோன்றும் நிழல் ஒழியும்படி, தவழும் - (எங்கும்) பரவும்; அ தழை-அந்தப்பீலிக்குடைகள், மழைஇடை எழில்-மேகத்தினிடமுள்ள அழகு, கெட - ஒழிய, மலரும் - மலர்ந்துவிளங்கும்; அ மழை குழைவுற - அந்தமேகம் தளர்ச்சியடையும்படி [அம்மேகத்திலிருந்துதோன்றும் இடியோசை தாழ்வடையும்படி], குழாம் கொள் பேரி - கூட்டமாகவிருக்கின்ற பேரிகைகள், முழுங்கிடும் - ஒலித்திடும்; (எ - று.)

இழை இளவெயிலெறிக்க, அவ்வெயில் மயிற்பீலிக்குடைகளாலுண்டாகின்றநிழலை யொழிக்க, அம்மயிற்பீலிக்குடைகள் மழையினெழில்கெட மலர்ந்துவிளங்க, அம்மழை தளர்ச்சியடையுமாறு வானத்து இடியோசையினும்பேரொலியுண்டாகப் பேரிகைகள் முழங்கு மென்க. இந்தச்செய்யுளில் கீழ்க்கீழ்க்கூறியபொருளைவிட்டிட்டு மேன்மேற் சொன்னபொருளைப் பற்றியது. ஏகாவலியணியாம்: ஒற்றைச்சரமாலையணியெனவும்படும். இடை=இடம். பி - ம்:—[1] எறிப்ப. [2] நிழல். (கச)

கரு.—குதிரையிலும் யானையிலும் மகளிர்நர்தலின் வருணனை.

* [1] மன்மணிப் புரவிகண் மகளி ரூர்வன
வன்னமுந் தியதிரை யாறு போன்றன
பொன்னணி புணர்முலை புரிமென் கூந்தலார்
மின்னென மடப்பிடி மேகம் போன்றவே.

(இ - ள்.) மகளிர் ஊர்வன - மகளிர் ஏறிக்கொண்டுசெல்வனவாகிய, மணி மன் புரவிகள் - கிங்கிணிமாலைபூண்ட குதிரைகள், அன்னம் உந்திய திரை ஆறு போன்றன-அன்னப்பறவைகளைத்தாங்கிச்செல்வனவாகிய அலைகளையுடைய யாற்றைப் போன்றன; பொன் அணி புணர் முலை புரி மென் கூந்தலார் - பொன்னாபரணங்களையணிந்தவரும் (ஒன்றோடொன்று) சேர்ந்த தனங்களையும் முறுக்குப்பொருந்தியமெல்லியகூந்தலையு முடையவருமான மகளிர், மின் என - மின்னல்போலத்தோன்ற, மடம் பிடி-(அவர்கள் ஏறிச்செல்கின்ற) இளம்பெண்யானைகள், மேகம் போன்ற-மேகத்தையொத்தன.

கிங்கிணியின்ஓசை அன்னத்தின்குரலையும், குதிரைகள் திரையையும், மகளிர் அன்னப்பறவையையும் போலுதலால், கிங்கிணிகள் சத்திக்க மகளி

ரேறிச்செல்லுங் குதிரைச்சேனைகள் அன்னமுந்தியதிரையாற்றைப்போலு மென்றார்; தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]மன்னணி. (கரு)

கசு.—சேனைசெல்லும் வழிவருணனை.

* இணை[1]யெடுத் திடையிடை நெருக்க வேழையர்
துணைமுலைக் குங்குமச் சுவடு மாடவர்
மணிவரைப் [2]புயங்களிற் சாந்து மாழ்கிமெல்
லணையெனப் பொலிந்ததக் கடல்செ லாறரோ.

(இ - ள்.) இடை இடை - (அந்தச்சேனைசெல்லும்) இடங்களிலெல்லாம், (சனத்திரள்மிகுதியால்), இணை யெடுத்து - (ஒருவர்மீதுஒருவர்) படுதல்பொருந்தி, நெருக்க - நெருக்குதலால், ஏழையர் துணை முலை குங்குமம் சுவடும்-மங்கைமாரின் (ஒன்றோடொன்று) ஒத்த தனங்களிலணிந்த குங்குமக்குழம்பும், ஆடவர் மணி வரை புயங்களிற் சாந்தும் - புருஷர்களுடைய அழகிய மலைபோன்ற கைகளிற்பூசியசந்தனக்குழம்பும், மாழ்கி - (கீழேயுதிர்ந்து) அழிந்துபோய், அ கடல் செல் ஆறு - அந்தச் சேனாசமுத்திரம் செல்கின்ற வழியானது, மெல் அணை என-(ஆடவரும் மங்கையரும் கலவி நிகழ்த்தும்) மெல்லிய படுக்கைபோல, பொலிந்தது-விளங்கிற்று; (எ-று.)

செல்லும்வழிமுழுதும் சனத்திரளின்நெருக்கத்தால் அந்தச்சேனையிலுள்ள ஆடவரும் மகளிரும் ஒருவர்மீது ஒருவர் பட்டு நெருக்க, அந்தச்சேனையிற்செல்லும்மங்கைமார் அணிந்திருந்த குங்குமக்குழம்பும் ஆடவரணிந்திருந்த சந்தனச்சேறும் ஆங்காங்கு உதிர்ந்துகிடக்க, அவ்விடங்கள்முழுதும் மங்கைமாரோடு ஆடவர் கலவிநிகழ்த்திய அணைபோலத் தோன்றிற்றென்று வருணித்தார்; தற்குறிப்பேற்றவணி. ஆடவர் தத்தம்மனைவிமாரோடுசேர்ந்து செல்கின்றமை கஅ-ஆஞ்செய்யுளில் நன்குவிளங்கும். பி - ம்:—[1]அடுத்து. [2]புயத்துமென்சாந்துமாறுபோய். (கசு)

கஎ.—மகளிர் கொங்கைமீது முத்துமணிவடங்களை யணிந்திருத்தல்.

* முத்தினன் முழுநில வெறிக்கு மொய்ம்மணிப்
பத்தியா லிளம்வெயில் பரப்பும் பாகினுந்
தித்தியா நின்றசொற் சிவந்த வாய்ச்சிய
ருத்தரா சங்கமிட் டொளிக்குங் கூற்றமே.

(இ - ள்.) பாகினும் தித்தியாநின்ற சொல் சிவந்த வாய்ச்சியர்-பாகைக்காட்டிலும் இனிமைமிகுந்த பேச்சுக்களையுடைய செந்நிறவாயைப்பெற்றுள்ள மகளிருடைய, உத்தராசங்கம் இட்டு ஒளிக்கும் - மேலாடையிட்டு மறைத்துவைத்துள்ள, கூற்றம் - யமன்போல (ஆடவர்க்கு) மரணவேதனையையுண்டாக்குகின்ற தனங்கள்,—முத்தினால் - முத்துவடத்தையணிந்துள்ளதனால், முழு நிலவு எறிக்கும் - பூர்ணசந்திரனது ஒளியை வீசும்; மொய் மணி பத்தியால் - நெருக்கமாகப்பதித்துள்ள இரத்தினங்களின்தொகுதியையுடைய மணிவடங்களால், இள வெயில் பரப்பும் - காலைவெயில்போன்ற ஒளியைப் பரவவீசும்; (எ - று.)—உத்தராஸங்கம் - மேலாடை: வடசொல்

தனங்களை உருவகவகையால் 'கூற்றம்' என்றார். தனங்களில் நிலவுவெயில் என்ற இரண்டுந் தோன்றுமென்ற நயங் கருதத்தக்கது. (கஎ)

கஅ.—மகளிர்பக்கத்து ஆடவர்செல்லுதல்.

வில்லினர் வாளினர் வெறித்த குஞ்சியர்
[1]கல்லினைப் பழித்துயர் கனகத் தோளினர்
வல்லியின் மருங்கினர் மருங்கு மாப்பிடி
புல்லிய களிறென மைந்தர் போயினார்.

(இ - ள்.) வெறித்த குஞ்சியர் - (மலர்மாலைமுதலியவற்றையணிதலால்) நறுமணம்வீசுகின்ற கூந்தலையுடையவரும், கல்லினை பழித்து உயர் கனகம் தோளினர் - மலையையும் (தமக்குஒப்பாகாதென்று) இகழ்ந்து மேம்பட்ட பொன்னணிகளைப்பூண்டவருமாகிய, மைந்தர்-ஆடவர்,—வில்லினர்-வில்லையேந்தியவரும், வாளினர் - வாட்படையையேந்தினவருமாகி,—மா பிடி புல்லிய களிறு என - பெருமைபெற்றபெண்யானையைத்தழுவிச்செல்லும் ஆண் யானைபோல,— வல்லியின் மருங்கினர் மருங்கு - கொடிபோன்றஇடையையுடைய (தம்) மனைவியர்பக்கத்தில், போயினார்—; (எ - று.)

மடவார்பக்கத்தே செல்லும் ஆடவர்க்குப் பிடி புல்லிய களிறு உவமை. வில்லினர், வாளினர்-குறிப்புமுற்றெச்சம். பி-ம்:—[1]கல்லினையழித்து. (கஅ)

கக.—மகளிர்செல்லுஞ் சிவிகை வருணனை.

மன்றலம் புதுமலர் மழையிற் சூழ்ந்தெனத்
துன்றிருங் கூந்தலார் முகங்க டோன்றலா
லொன்றலா முழுமதி [1]யூரு மானம்போற்
சென்றன [2]வாலவர் சிவிகை யீட்டமே.

(இ - ள்.) மன்றல் அம் புது மலர் மழையில் சூழ்ந்து என - நறுமணத்தையுடைய அழகிய புதியமலர்கள் மேகத்திற்சூழ்ந்திருந்தாற்போல, துன்று-(மலர்கள்)நெருங்கிய, இரு கூந்தலார்-மிக்க கூந்தலையுடையமகளிரின், முகங்கள் தோன்றலால் - (மற்றை கைகால்முதலிய உறுப்புக்கள் தோன்றாமல்) முகங்கள்மாத்திரம் காணப்படுவதனால், ஒன்று அலா முழு மதி-ஒன்றல்லாத [மிகப்பலவான] பூர்ணசந்திரன், ஊரும்-ஏறிச்செல்லுகின்ற, மானம்போல்-விமானங்களைப்போல, அவர் சிவிகை ஈட்டம் - அம்மகளிர் ஏறிச்செல்லுகின்ற பல்லக்குகளின்கூட்டங்கள், சென்றன—; (எ - று.) ஆல் - ஈற்றசை.

கூந்தலின்மேல் மலர்சூழ்ந்திருப்பது, மழையில் மலர் சூழ்ந்திருப்பது போலு மென்க; இல்பொருளுவமை. சிவிகையில் தமதுமுகம்மாத்திரம் தெரிய முட்டாக்கிட்டவண்ணம் மகளிர் ஊர்ந்துசெல்வதால், அச்சிவிகைகள் பூர்ணசந்திரர்பலர் ஏறிச்செல்லும் விமானங்களைப் போலுமென்றார்;தற்குறிப்பேற்றவணி. இதனையும் இல்பொருளுவமையென்னலுமாம். மானம் - விமானமென்பதன் முதற்குறை. பி-ம்:—[1]ஊர்விமானம். [2]தானவான். (கக)

உ0—யானைகளின் வருணனை.

மொய்திரைக் கடலென முழங்கு மூக்குடைக்
கைகளிற் றிசைநிலைக் களிற்றை யாய்வன

மையலுற் றிழிமத மழை யருமையாற்
றொய்யலைக் கடந்தில சூழி யானையே.

(இ - ள்.) இழி - பெருகுகின்ற, மதம் மழை - மதப்பெருக்கு, அருமையால் - நீங்காமையினால், தொய்யலை - (அம்மதமழையால்) தோன்றிய சேற்றினை, கடந்தில-கடந்துஅப்பாற்செல்லமாட்டாதனவாகிய,சூழி யானை-முகபடாத்தையுடைய யானைகள், மையல் உற்று - மயக்கத்தையடைந்து, மொய் திரை கடல் என முழங்கும் மூக்கு உடை கைகளின் - நெருங்கிய அலைகளையுடைய சமுத்திரம்போலப் பேரொலிசெய்கின்ற நாசித்துவாரத்தை முனையிற்கொண்ட (தமது) கைகளினாலே, திசை நிலை களிற்றை - எட்டுத்திக்கிலும்நிலையாகநிற்றலையுடைய யானைகளை, ஆய்வன-(தாம் பொருதற்குத்) தேடுவனபோலத்தோன்றுகின்றன; (எ - று.)

யானைகள் பேரொலி செய்தவண்ணம் மதச்சேற்றிலழுந்தி அப்பாற் போகமாட்டாமையால் மயங்கிக் கையைநீட்டித் துழாவுவது,திக்கஜங்களைப் பொருதற்காகத் தேடுவதுபோன்றிருந்த தென்க; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. மையல் - மயலென்பதன்போலி. (உ0)

உக.—குதிரை வருணனை.

*சூருடை நிலையெனத் [1]தோய்ந்துந் தோய்கிலா
வாருடை வனமுலை மகளிர் சிந்தைபோற்
றாரொடுஞ் சதியொடுந் தாவு மாயினும்
பாரிடை மிதிக்கில பரியின் [2]பந்தியே.

(இ - ள்.) பரியின் பந்தி - குதிரைகளின்கூட்டம்,—சூர் உடை நிலை என-தெய்வத்தின்தன்மைபோலவும், தோய்ந்துஉம் தோய்கிலா வார் உடை வனம் முலை மகளிர் சிந்தைபோல் - (வெளிநோக்கிற்கு) மிக்கஅன்புற்றிருந்தும் (அகத்தில்) அன்புகொள்ளாத (விலை)மகளிரின்மனம்போலவும்,-தாரொடுஉம் சதியொடுஉம் தாவும் ஆயின்உம்-கிங்கிணிமாலைகணகணவென்று ஒலிப்பத் தாளவொற்றுக்குஏற்பஅடிவைத்துப் பாய்ந்துசெல்லுமாயினும், பாரிடை மிதிக்கில - பூமியில் மிதிக்கவில்லை; (எ - று.)

குதிரைகள் தாளவொற்றுக்குஇயைய அடிகளைவைத்துப்பாய்ந்துசெல்லுமாயினும் பூமியில்அடிவைக்குங்காலத்தைவிடத் தாவிச்செல்லுகின்ற நேரமே மிகுதியாகஇருத்தலால் அவை பூமியைமிதிக்கும்வேளை காண்டற்கும் அரிதாயிற்றென்றவாறு. தாம்செல்லுகின்ற புவியில் குதிரைகளின்பாதம்படாமலிருத்தற்குத் தேவதைகளின் பாதம் பூமியிற்பதியாமலிருப்பதையும், வேசியரதுமனம் ஒருவர்மீது அன்புகொள்ளாமலே செல்வதையும் உவமையாகக் கூறினார். இனிஇப்பாடலுக்கு மகளிர்சிந்தைபோல் பரியின்பந்தி தாவுமாயினும் சூரின்நிலையெனப்பாரிடைமிதிக்கிலஎன்று உரைப்பாருமுளர். பி-ம்:— [1]தோய்ந்து. [2]வெள்ளமே. (உக)

உஉ.—ஆடவரொடு ஊடல்கொண்டமகளிர் தனியே செல்லுதல்.

ஊடிய மனத்தின ருருத நோக்கினர்
நீடிய வுயிர்ப்பினர் [1]நெரிந்த நெற்றியர்

தோடவிழ் கோதையுந் துறந்த கூந்தல
ராடவ ருயிரென வருகு போயினர்.

(இ - ள்) ஊடிய மனத்தினர் - (தம்முடையஆடவர்மீது) பிணக்குக் கொண்ட மனத்தையுடையரான சிலமகளிர்,—உருத நோக்கினர்-கண்பார்வையை(த் தம் கணவர்மீது)செலுத்தாதவரும், நீடிய உயிர்ப்பினர்-பெருமூச்செறிபவர்களும், நெரிந்த நெற்றியர் - கோபத்தினால்) புருவம்நெரிந்தேறப்பெற்ற நெற்றியையுடையவரும், தோடு அவிழ் கோதைஉம் துறந்த கூந்தலர் - இதழ்கள்மலர்ந்த மலர்மாலையையும்வெறுத்துக் கூந்தலில் அணியாமல் விட்டிருப்பவர்களுமாகி, ஆடவர் உயிர்என - அவ்வாடவரது உயிரே (இங்ஙனம் பெண்ணுருக்கொண்டதோ) என்று சொல்லுமாறு, அருகு - (அவ்வாடவரது) சமீபத்தில்தானே, போயினர்—; (எ - று.)

ஊடல்கொண்டமகளிரின்இயற்கையை முதல்மூன்றடிகளிற்கூறியது - தன்மைநவிற்சியணி. உருதநோக்கினர் - அன்பில்லாதநோக்கினையுடையவரென்பாருமுளர். பி - ம்:—[1]நெறித்த. (உஉ)

உங.—யானைகள்செல்லுதல்.

மாறெனத் தடங்களைப் பொருது மாமர
மூறுபட் [1]டிடவிடை யொடித்துச் சாய்த்துரா
யாறெனச் [2]சென்றன வருவி பாய்கவுட்
டாறெனக் கன[3]லுகு தறுகண் யானையே.

(இ - ள்) அருவி பாய் கவுள் - அருவிபோல மதம்பாய்கின்ற கதுப்பினையும், தாறு என கனல் உகு - இருப்புமுள்ளென்றுசொல்ல (அச்சொல்லைக்கேட்டமாத்திரத்துக் கோபாக்கினியைக்கக்குவனவுமான, தறுகண் - அஞ்சாமைக்குணமுள்ள, யானை—,—மாறு என - (தமக்கு)மாறானவையென்று (மதமயக்கத்தால்) கருதி, தடங்களை பொருது - மலையடிப்பக்கங்களை மோதி, [இருகரைகளையும்மோதி], மா மரம் - பெரியமரங்களை, ஊறுபட்டிட இடை ஒடித்து - முறியும்படி நடுநடுவே யொடித்தும், சாய்த்து - கீழேமுறித்துத்தள்ளியும், உராய் - (அம்மரங்களின்மீது) உராய்ந்துகொண்டும், ஆறு என சென்றன - ஓராறுசெல்வதுபோலச் சென்றன; (எ - று.)

தடங்களைப்பொருவதும் மரங்களையூறுபட ஒடிப்பதும் சாய்ப்பதும் உராய்வதும் யானைக்கும்ஆறுக்கும் ஒத்திருத்தலால், யானைசெல்வது ஆறு செல்வதுபோலுமென்றார். 'தடங்களைப்பொருது' என்பதற்குச் சிலேடைவகையால்பொருளுரைக்கப்பட்டது; அவ்வாறுகூறாமல் தடம் கரையென்றேகூறிஇரண்டற்கும்இயைத்தலுமொன்று. பாகர்முதலியோர் தாறுஎன்ற சொல்லைச்சொல்லினும் கண்களாற்கனலுமிழ்வனவென்று யானைகளின்தன்மையைக்கூறினார். பி - ம்:—[1]இடையிடையொழிய. [2]செல்வன. [3]உமிழ். ()

உச.—தசரதசக்கரவர்த்தியின் சேனைப்பெருக்கம்.

உழுந்திட விடமிலை யுலக மெங்கணு
[1]மழுந்திய வுயிர்க்கெலா [2]மருட்கொம் பாயினு

னெழுந்தில னெழுந்திடைப் படருஞ் சேனையின்
கொழுந்துபோய்க் கொடிமதின் மிதிலே கூடிற்றே.

(இ - ள்.) அழுந்திய உயிர்க்கு எலாம் - (துன்பத்துள்) ஆழ்ந்திருக்கின்ற பிராணிகளுக்கெல்லாம், அருள் - கருணைபுரிகின்ற, கொம்பு ஆயினன் - ஊன்றுகோல்போன்றிருப்பவனாகிய தசரதசக்கரவர்த்தி, எழுந்திலன் - (இன்னும் தனதுஇருக்கையைவிட்டு) எழுந்து புறப்படவில்லை; (அப்படியிருக்கையில்), உலகம் எங்கண்உம் உழுந்திட இடம் இலை - உலகத்தில் எங்கும் ஒருஉழுந்தைவைக்கவும் இடமில்லை,(என்றுசொல்லும்படி),எழுந்து-(அயோத்தியினின்று) புறப்பட்டு, இடை - (அயோத்திக்கும் மிதிலாபுரிக்கும்) இடையிலே, படரும் - செல்கின்ற,சேனையின் கொழுந்து-சேனையின் முன்னணியானது, போய்—, கொடி மதில் மிதிலை-கொடிகட்டிய மதிலாற் சூழப்பெற்ற மிதிலாநகரத்தை, கூடிற்று - சேர்ந்தது; (எ - று.)

தனதுசேனைமுழுதும் முன்செல்ல அதன்பின்னால் தான் புறப்படவேணுமென்ற கருத்தையுடைய தசரதசக்கரவர்த்தி இன்னும் புறப்படாமலிருக்கையிலேயே புறப்படஆரம்பித்த அவனுடையசேனையின் முன்னணியானது மிதிலாநகரத்தைச்சேர்ந்த தென்க உயர்வுநவிற்சியணி. இதனால் சேனை முழுதும் ஒரேகாலத்துஎழுந்தால் அயோத்தியிலிருந்து மிதிலைவரையிலும் நின்றாலும் நிற்க இடம்போதா தென்க.இந்தச்செய்யுளில் உலகம் என்பது-அயோத்திக்கும் மிதிலைக்கும் இடையேயுள்ள பூமியின்பகுதியைக் காட்டும்;இங்ஙனம் உலகமென்றசொல்பூமியின்பகுதியைக்காட்டுவதை"மாயோன் மேயகாடுறையுலகமும்" என்ற இடத்துங் காண்க. அருட்கொம்பு-பற்றுக் கோடுமாம். பி - ம்:—[1] அழுந்தலின். [2] கொழுகொம்பானவன். (உச)

உரு.—பண்டியில்விளங்கிய மகளிர்முகம்.

கண்டவர் மனங்கள்கை [1]கோப்பக் காதலின்
[2]வண்டிமிர் கோதையர் வதன ராசியாற்
பண்டிகள் [3]பண்டிகள் பரிசிற் செல்வன
புண்டரீ கத்தடம் போவ போன்றவே.

(இ - ள்.) கண்டவர் மனங்கள் காதலின் கைகோப்ப - (தம்மைக்) கண்ட ஆடவரின்மனங்கள் ஆசையினாற் கவிந்துகொள்ள, பண் திகள் பரிசில் செல்வன-பூட்டப்பட்டுவிளங்குகின்ற தன்மையோடுசெல்கின்ற, பண்டிகள்—,—வண்டு இமிர் கோதையர் - வண்டுகள் ஒலிக்கப்பெற்ற மயிர்முடியையுடைய மகளிரது, வதனம் ராசியால் - முகங்களின்கூட்டங்களினால், புண்டரீகம் தடம் போவ - தாமரைமலரையுடைய தடாகங்கள்செல்வதை, போன்ற - ஒத்துத்தோன்றின; (எ - று.)

மகளிரையேற்றிச்செல்கின்ற பண்டிகள் - அம்மகளிரின்முகம் தாமரை போலுதலால், புண்டரீகத்தடம்போவபோலத் தோன்றினவென்றார்; தற்குறிப்பேற்றவணி. பண் திகள் - அலங்காரம்விளங்குகின்ற, பண்டிகள் எனினுமாம். திகழென்பது, மடக்கென்னுஞ்சொல்லணிபற்றி ளகரப்போலி பெற்று வந்தது. இனி, பண்டிகள்பண்டிகள் - பன்மைபற்றிய அடுக்குஎனினுமாம். பி-ம்.—[1] கொடுப்பவேறிய. [2] வண்டமர். [3] பண்டிகழ். (உரு)

உசு.—பண்டியிற்செல்லுகின்ற ஒருமாதின்கடைக்கணேக்கம்.

பாண்டிலின் வைத்தவோர் பாவை தன்னெடு
மீண்டிய வன்பின னேகு வானிடைக்
காண்டலு நோக்கிய கடைக்க ணஞ்சன
மாண்டகைக் கினியதோ ரமுத மாயதே.

(இ - ள்.) பாண்டிலின் வைத்த - பண்டியிலேற்றப்பட்டுள்ள, ஓர் பாவை-ஒருபெண், ஈண்டிய அன்பினன்-மிக்கஅன்புடையவனுகி, தன்னெடும் ஏகுவானிடை - (பண்டியைப்பற்றியவண்ணம்) தன்னுடன் தொடர்ந்து ஓடிவருகின்ற இளைஞனிடத்து, காண்டலும் - (தன்) பார்வையைச் செலுத்தினவிடத்து, நோக்கிய-(அவனைப்)பார்த்த, கடைக்கண் - அந்தக்கண்ணின் ஓரத்திலெழுதியுள்ள, அஞ்சனம் - மையானது, ஆண்தகைக்கு - (அவ்வாறு அன்போடு அந்தப்பாவையால் பார்க்கப்பட்ட அந்த) ஆடவனுக்கு, இனியது ஓர் அமுதம் ஆயது - இனியதாகிய ஒப்பற்ற அமிருதத்தையுண்டது போன்றிருந்தது; (எ - று.)

ஓராடவன் பண்டியைப்பின்பற்றியோடிவர, அவன்மீது அம்மாது கடைக்கண்பார்வையைச் செலுத்தினளாக, அங்ஙனஞ்செலுத்திய மாதின் கடைக்கண்ணிலெழுதிய அஞ்சனத்தை அவ்வாடவன்கண்டது அமிருதத்தையுண்டதுபோன்று அவனுக்குநீண்டவழியோடிச்சென்றதனால் விளைந்த அயர்ப்புமுதலியவற்றைப் போக்கி இன்பம் விளைத்த தென்க.பி - ம்:— [1]ஆயிற்றே. (உசு)

உஎ.—மாதைப் பிரிந்துசெல்கின்ற ஓராடவன்.

பிள்ளைமா னேக்கியைப் பிரிந்து போகின்று
னள்ளனீர் மருதவைப் பதனி [1]னன்னமாம்
புள்ளுமென் றாமரைப் [2]பூவு [3]நோக்கினு
னுள்ளமுந் தானுநின் றூச [4]லாடினன்.

(இ - ள்.) பிள்ளை மான் நோக்கியை - இளமான்போன்றகண்களையுடைய (தன்) மனைவியை, பிரிந்துபோகின்றான் - பிரிந்துசெல்கின்றவனை ஓராடவன், அள்ளல் நீர் மருதம் வைப்பு அதனில் - சேற்றையும் நீரையுங் கொண்டுள்ள மருதநிலத்தில், அன்னம் ஆம் புள்உம் - அன்னப்பறவையையும், மெல் தாமரை பூவும் - மெல்லிய தாமரைமலர்களையும், நோக்கினான் - பார்த்து, (அதனால் தன்மனைவியின்நடையும் பாதங்களும் நினைவுக்குவர), உள்ளம்உம் தான்உம் நின்று-மனமுந்தானுமாக இருந்து, ஊசல் ஆடினன்-சஞ்சலப்படுவானாயினன்; (எ - று.)

மருதநிலத்தில் தாமரைப்பூவையும் அன்னத்தையும் காணவே தன்மனைவியின் பாதமும் நடையழகும் தன்நினைவிற்குவர, ஓராடவன், தன்னுடன் தன்மனைவிவர அவளது பாதங்களையும் நடையழகையும் தான் கண்டு மகிழ்தற்குமுடியாதுபோனமைபற்றி வருந்தினனென்க: சனத்திரளின் நெருக்கத்தால் உடன்வரமுடியாமல் தனிப்பட்ட ஆடவன் அன்னத்தையும் தாமரை

மலரையும் பார்க்கவும் முறையே அம்மனைவியின நடையையும்பாதங்களின் மென்மையையும் நினைத்து, மனைவி நடந்துகால்வருந்தின் ஆற்றுவார்யாவர்? எனத் தன்னுள்ளம் வருந்தினனென்று இச்செய்யுட்குக் கருத்துக்கூறுதலு மொன்று. பி-ம்:-[1]அன்னத்தின். [2]போதும். [3]நோக்கினின்று. [4]ஆடுவான்.

உஅ.—இதுவும் அடுத்தகவியும்-சேனையின் வருணனை.

அங்கண் ஞாலத் தரசு [1]மிடைந்தவா
பொங்கு வெண்குடை சாமரை போர்த்தலாற்
கங்கை யாறுகடுத்தது காரெனச்
சங்கு பேரி முழங்கிய தானையே.

(இ - ள்.) சங்கு - சங்கவாத்தியமும், பேரி - பேரிகையும், கார் என முழங்கிய - மேகம்இடிப்பதுபோலப் பெருஞ்சத்தமுண்டாகும்படி யொலித்த, தானை - அச்சேனையானது,—பொங்கு வெண்குடை சாமரை போர்த்தலால் - விளங்குகின்ற வெண்ணிறக்குடைகளும் சாமரைகளும் நிரம்பப்பெற்றதால், கங்கையாறு - கங்காநதியை, கடுத்தது - ஒத்தது; அம் கண் - அழகியஇடமுள்ள, ஞாலத்து - பூமியில், அரசு - அரசசின்னங்கள், மிடைந்த - நெருங்கிய, ஆ - வகை, (என்னவியப்பு!!) (எ - று.)

சங்கமும் பேரிகையும் முழங்குகின்ற அந்தச்சேனையில் அரசசின்னங்களாகிய வெண்குடைகளும் வெண்சாமரங்களும் நெருங்கி எங்கும் ஒரே வெண்ணிறமாகத் தென்பட்டதனால், அந்தச்சேனை கங்காநதிபோலத்தோன்றிற் றென்பதாம். இங்ஙனம் சேனைமுழுதும் குடைசாமரைநிரம்பிக் கங்காநதிபோலத்தோன்றியவியப்பைப் பாராட்டி 'ஞாலத்து அரசு மிடைந்தவா' என்றார். கங்காநதி வெண்ணிறத்தோற்றமுள்ளதென்பது, இங்கே அறியத்தக்கது. [1]மிடைந்தவரென்றும்படிக்கலாம்: அங்ஙனம் படிப்பின் மிடைந்தவராகிய அரசரின் குடைகளுஞ் சாமரங்களும போர்த்தலாற் கங்கையாற்றைத் தானை கடுத்த தென்க. (உஅ)

உகூ. அமர [1]ரஞ்சொ லணங்கனை யாருயிர்
கவருங் கூர்நுதிக் கண்ணெனுங் காலவேல்
குமரர் [2]நெஞ்சுட் குளிப்ப வழங்கலாற்
சமர பூமியு மொத்தது தானையே.

(இ - ள்.) தானை-அந்தச்சேனையானது,—அம் சொல் அமரர் அணங்கு அனையார் - இனியமொழியையுடையவரும் சிறந்ததேவமங்கையரையொத்தவருமான மகளிர், உயிர் கவரும் கூர் நுதி கண் எனும் காலன் வேல் - (தமக்குஇலக்கானவருடைய) உயிரைக் கவரவல்ல கூரியமுனையையுடைய கண்ணென்றுசொல்லப்படுகின்ற யமனுக்குஉரிய வேற்படையை, குமரர் நெஞ்சுள் - ஆடவரின்இதயத்தில், குளிப்ப வழங்கலால் - தைக்கும்படியேவுவதனால், சமரம் பூமிஉம் - யுத்தகளத்தையும், ஒத்தது—; (எ - று.)

வேற்படையை இதயத்துக் குளிப்பவழங்குதல், யுத்தகளத்துநிகழுந் தொழிலாம். கண்ணெனும்வேல் - உலகத்தில்கண்ணென்றுதவறாகவழங்

கப்படுகின்றதேயன்றி உண்மையில் அவை கண்களல்ல, வேற்படையே யென்றபடி: இங்ஙனம் கண்ணில் கண்ணின்தன்மையை மறுத்து வேற்படைத்தன்மையை யேற்றிக்கூறியது - அபநுதியணியாம். பி-ம்:—[1] அஞ்சவ்வணங்கனையார். [2] நெஞ்சுகுளிப்ப. (உகூ)

### ௩௦.—வீரர்களின் தோள்முதலியவை நெருங்குதல்.

தோண்மி டைந்தன [1] தூண மிடைந்தென
வாண்மி டைந்தன [2] வான்மின் மிடைந்தெனத்
தாண்மி டைந்தன [3] தம்மி மிடைந்தென
வாண்மி டைந்தன வாளி [4] மிடைந்தென.

(இ - ள்) தூணம் மிடைந்து என - கற்றூண்கள் நெருங்கியிருந்தாற்போல, தோள் மிடைந்தன - (வீரர்களின்) தோள்கள் நெருங்கின; வான் மின் மிடைந்து என - வானத்தில் மின்னல்நெருங்கியிருந்தாற்போல, வாள் மிடைந்தன - (அவர்களின்) வாட்படைகள் நெருங்கின; தம்மி மிடைந்து என - தாமரைமலர்நெருங்கினாற்போல, தாள் மிடைந்தன-(அவ்வீரர்களின்) பாதங்கள் நெருங்கின; ஆளி மிடைந்து என - சிங்கங்கள் நெருங்கினாற்போல, ஆள் மிடைந்தன - காலாட்படைகள் நெருங்கின; (எ - று.)

காலாட்படையிற்சேர்ந்தவர் விவேகம்நிரம்பாதவரா யிருப்ப ராதலால், அவர்களை அஃறிணையாக, 'ஆள்மிடைந்தன' என்றார். 'ஆண்' என்றும்பிரிக்கலாம். தம்மி - தாமரையையுணர்த்துந்தெலுங்குச்சொல். [3] தம்மின் என்ற பாடத்திற்கு - வீரர்கள் ஒருவரோடொருவர் கைகலந்தாற்போல, தாள் மிடைந்தன - அவர்கள்பாதங்களும் நெருங்கினஎன்க. பி-ம்:—[1] தூணி மிடைந்தன. [2] மின்னின்வயங்கிட. [3] தம்மின்மிடைந்தன. [4] மிடைந்தவே.

### ௩௧.—இதுமுதல் ஆறுசெய்யுள்களில் ஒவ்வொன்றும்-ஒவ்வொரு இளைஞனது செயலைக் கூறும்.

* வார்கு லாமுலை வைத்தகண் வாங்கிடப்
பேர்கி லாது பிறங்கு முகத்தினன்
றேர்கி லானெறி யந்தரிற் சென்றொரு
மூரி மாமத யானையை முட்டினான்.

(இ - ள்.) (ஒருமாதின்), வார் குலாம் முலை - கச்சையணிந்த தனங்களில், வைத்த கண்-வைத்த கண்களை, வாங்கிட பேர்கிலாது [பேர்ந்துவாங்கிடாது]-(அவற்றை) விட்டுவாங்காமல், பிறங்கு - விளங்குகின்ற, முகத்தினன்-முகத்தையுடையஒருத்தன், நெறி தேர்கிலான் - (தான் செல்லவேண்டிய) வழியைக் காணமுடியாதவனாகி, அந்தரில் சென்று - குருடர்போலப் போய், ஒரு மூரி மா மதம் யானையை - ஒருவலிமையுள்ள பெரியமதயானையின்மீது, முட்டினான் - முட்டிக்கொண்டான்; (எ - று.)

கொங்கைகளில்அழுந்தின தன்கண்ணை அவ்விடத்தினின்று மீட்கமுடியாமையால், ஒருத்தன் போகும் வழியி லிருந்த ஒருமதயானையில் முட்டிக்

கொண்டானென்பதாம். கண்வேறொன்றிற்சென்றால்எதிரிலிருக்கும்பொருளுந்தெரியாதிருத்தல், இயற்கை. அந்தர்-வடசொல். (௩௧)

௩௨. சுழிகொள் [1]பாய்பரி துள்ளவோர் தோகையாள்
வழுவி வீழலுற் றாளையோர் வள்ளறு
னெழுவி னீள்புயத் தாலெடுத் தேந்தினுன்
றழுவி நின் [2]றொழி யான் [3]றரை மேல்வையான்.

(இ - ள்.) சுழி கொள்-(நல்லிலக்கணமாகிய) சுழிகளமைந்த, பாய் பரி-பாய்ந்துசெல்லுந்தன்மையுள்ள (தானேறியிருந்த) குதிரை, துள்ள - துள்ளிப்பாய, ஓர் தோகையாள் வழுவி வீழல் உற்றாளை - மயில்போன்ற சாயலையுடையளாகித் தவறி (அந்தக்குதிரையினின்று) விழத்தொடங்கிய ஒருத்தியை, ஓர்வள்ளல் - உதாரகுணமுடைய ஒருத்தன், தான்—, எழுவின் நீள் புயத்தால் எடுத்து ஏந்தினுன் - இருப்புத்தூண்போன்ற நீண்டகையினுலெடுத்துத் தாங்கியவனுய், தரைமேல் வையான் - பூமியில்விட்டிடாமல், தழுவிநின்று ஒழியான் - தழுவியவண்ணமே அசையாதுநின்றிட்டான்.

குதிரை துள்ளிப்பாய்ந்ததனுல் அதன்மேலேறியிருந்தஒருத்தி தவறிக்கீழேவிழத்தொடங்க, அப்போது அருகேயிருந்த ஆடவன் அவளைத் தன் கையாற்பிடித்துக்கொண்டு தழுவியவண்ணம் நின்றானேயொழியப் புவியின் மீது அவளை விட்டில னென்பதாம். பி - ம்:—[1]வாம்பரி. [2]ஒழிந்தான். [3]தரைதான். (௩௨)

௩௩. * துணைத்த தாமரை நோவத் [1]தொடர்ந்தடர்
கணைக்க ருங்கணி னுளையோர் காளைதான்
பணைத்த வெம்முலைப் பாய்மத யானையை
யணைக்க நங்கைக் ககலிட மில்லென்றான்.

(இ - ள்.) துணைத்த தாமரை நோவ - இரண்டாகிய தாமரைமலர்கள் [பாதங்கள்] நோகும்படி, தொடர்ந்து - பின் தொடர்ந்து நடந்துவந்து, அடர் - (தன்னை) வருத்துகின்ற, கணை கரு கணினுளை - அம்பையொத்த கருங்கண்ணையுடைய ஒருத்தியை (ப் பார்த்து), ஓர் காளை - ஒரு வாலிபன், 'நங்கைக்கு - இந்தப்பெண்ணின், பணைத்த வெம் முலை - பருத்த விரும்பத்தக்க தனங்களாகிய, மதம் பாய் யானையை - மதநீர்பெருகப்பெற்ற யானையை, அணைக்க - கட்டுவதற்கு ஏற்ற, அகல் இடம் - விசாலமான இடம், [மார்பாகியஇடம்], இல் - இல்லை, என்றான்—; (எ - று.)

ஒருவர்மார்பில் அடங்காதவாறு பருத்துள்ளது, இம்மங்கையது தனங்களென்றவாறு. நடந்தவண்ணம் மதனநோய் தனக்குத்தோன்றும்படி தன்கண்களினுற் பார்ப்பவளென்பான் 'தாமரைநோவத் தொடர்ந்தடர் கணைக்கருங்கணினுளை' என்றான். கணைக் கணினுள் - உவமத்தொகை. அகலிடம் - மார்பிடமாகியஅகன்ற இடமென்க. மார்புஎன்றபொருளில் அகலம்என்றசொல் கடைக்குறையாய் 'அகல்' என்று வந்ததென்னலாம். இச்செய்யுளில் உருவகவணி காண்க. பி - ம்:—[1]தொடர்ந்துறும். (௩௩)

ஙச. சுழியுங் குஞ்சி மிசைச்சுரும் பார்த்திடப்
பொழியு [1]மாமத யானையிற் போகின்றான்
கழிய கூரிய வென்றொரு காரிகை
விழியை நோக்கித்தன் வேலையு நோக்கினான்.

(இ - ள்.) சுழியும் குஞ்சி மிசை சுரும்பு ஆர்த்திட—சுழிந்துள்ள (தனது) மயிர்மேல் வண்டுகள் ஆரவாரிக்கும்படி, மா மதம் பொழியும் யானையின் - மிக்கமதநீரைச்சொரிகின்ற மதயானைபோல, போகின்றான் - செல்பவனாகிய ஒருகாளை, ஒரு காரிகை விழியை - அழகிய ஒரு பெண்ணின் கண்களை, கழிய கூரிய என்று நோக்கி - மிகவுங்கூர்மையானவை யென்றுபார்த்து, (அக்கண்களைப்போல் இவ்வேற்படைக்குக் கூர்மையிருக்கிறதாஎன்று பார்க்குமாறு), தன் வேலைஉம் நோக்கினான் - தன் வேற்படையையும் பார்த்தான்.

ஆர்த்திடப்போகின்றான் என்க: ஆர்த்திடஎன்பதை 'பொழியும்'என்பதனோடுஇயைத்து, மதத்தை மத்தகத்தினின்று பொழிதலால், அங்குத் தோன்றிய குஞ்சிமிசைச் சுரும்பு ஆரவாரிக்கு மென்னவுமாம். வீரர் கையிற் கொள்ளும் வேற்படையினும் அந்தமாதின்கண்கள் மிகக்கூரியனவென்க. இதனால், உயிரிற்பாய்ந்து துளைக்கும் இயல்பை யுடைய கண்களைவிட,உடல் தசையில்மாத்திரம்பாய்ந்து துளைத்துச்செல்லும் வேல் இழிந்ததென்று அவ்வீரன் கருதியமை பெறப்படும். பி - ம்:—[1]மும்மதயானையின். (ஙச)

ஙரு. * தரங்க வார்குழற் றாமரைச் சீறடிக்
கருங்கண் வாளுடை யாளையோர் காளைதா
னெருங்கு பூண்முலை [1]நீள்வளைத் தோளினீர்
மருங்கு லெங்கு [2]மறந்துவைத் தீரென்றான்.

(இ - ள்.) தரங்கம் வார் குழல் - அலைபோலச் சுருண்டு நீண்ட கூந்தலையும், தாமரை சிறு அடி - தாமரைமலர்போன்ற சிறியபாதங்களையும், வாள் கருங் கண் - வாட்படைபோன்ற கருநிறமுள்ள கண்களையும், உடையாளை- உடையவளான ஒருமாதை, ஓர் காளை - ஒரு இளையவன், 'நெருங்கு பூண் முலை நீள் வளை தோளினீர் - நெருங்கிய ஆபரணமணிந்த தனங்களையும் நீண்ட வளையலையணிந்த தோள்களையு முடையவரே! (நீர்),—மருங்குல் - (நுமது) இடையை, எங்கு - எவ்விடத்து, மறந்துவைத்தீர் - மறந்துவைத்திட்டீர்?' என்றான் - என்றுவினாவினான்; (எ - று.)

அங்குச்சென்ற மாதுடன் உரையாடவிரும்பிஇந்தஇளைஞன் இவ்வாறு வினாவினன். இந்தவினாவினால், அந்தமங்கையின்இடை கண்ணுக்குப்புலனாகாதவாறு அத்துணை நுண்மையாகவுள்ளதென நயப்புக்கூறியவாறு. பி-ம்:- [1]நேர்வளை. [2]மறந்ததுநீர். (ஙரு)

ஙசு. கூற்றம் போலுங் கொலைக்கணி னாலன்றி
மாற்றம் பேசகி லாளையோர் [1]மைந்தனன்று
னற்று நீரிடை [2]யங்கைக ளாலெடுத்
தேற்று வாருமை யாவர்கொ லோவென்றான்.

(இ - ள்.) கூற்றம் போலும் - யமனைப் போல, கொலை - (தன்னிடத்து அகப்பட்டாரைக்) கொல்லுந்தன்மையுள்ள, கணினல் அன்றி - கண்சாடையினலல்லாமல், (வாயைத்திறந்து), மாற்றம் பேசுகிலாளை - பேச்சுப் பேசாத ஒருமங்கையைப் (பார்த்து), ஓர் மைந்தன் - ஓராடவன், ஆறு நீரிடை - (வழியேயுள்ள) ஆற்றின் நீரில், உமை - உம்மை, அம் கைகளால் எடுத்து - அழகிய கைகளாலெடுத்து, ஏற்றுவார் - (கரை) ஏற்றவல்லவர், யாவர்கொல் - யாவர்தாமோ? என்றான் - என்றுவினவினன்; (எ - று.)

யாற்றைக்கடக்கும்போது உம்மைக் கரையேற்றுவிக்க மைந்தன் வேணுமே; அப்போது வாய்திறந்துபேசினல்தான் உம்மை யாற்றைக்கடத்துவே னென்றால் பேசித் தீரவேணுமே; இந்தமௌனவிரதம் அப்போது நீங்கியொழியாதோ? என்று வினவியபடியாம். அன்றி, பேச்சுக்குஉரியவனல்லாதவன் தீண்டுதற்குஉரியவனவனே? என்று வினவியவாறுமாம். மைந்தன் - கணவனென்னலாம். தனது கைகளை அங்கையென்றான், அவளைத் தீண்டும்பேற்றைப் பெறுதலால். பி - ம்:—[1]வள்ளரன் [2]கையினல். (நகூ)

நஎ.—சேனையிலிருந்த ஒட்டகம்

**தள்ள ரும்பரந் தாங்கிய வொட்டகந்**
**தெள்ளு [1]தேங்குழை யாவையுந் தின்கில**
**வுள்ள மென்னத்தம் வாயுமு லர்ந்தன**
**கள்ளுண் மாந்தரிற் கைப்பன தேடியே.**

(இ - ள்.) தள்ள அரு - இறக்குவதற்கு அருமையான, பரம் - பெரும் பாரத்தை தாங்கிய - சுமந்துசென்ற, ஒட்டகம் —, தெள்ளு தேன் குழையாவை உம் - தெளிந்த இனியதளிர்கள் எவற்றையும், தின்கில - தின்றனவாய், கைப்பன தேடி - கைக்கின்ற வேப்பிலைமுதலியவற்றைத் தேடி, கள் உண் மாந்தரில் - கள்ளைப்பருகும்மைந்தர்போல, உள்ளம்என்ன தம் வாய்உம் உலர்ந்தன - (தம்) நெஞ்சு உலர்ந்தாற்போல வாயும் உலர்ந்தனவாயின; (எ - று.)

கள்ளைத்தவிர வேறு பால்முதலிய இன்சுவைப்பண்டம் எவற்றையும் வேண்டாத கள்ளுண்மாந்தர் வேம்பின்இலையையன்றி இன்சுவைத்தளிரெதையும் வேண்டாத ஒட்டகத்துக்கு, நெஞ்சும்வாயும்உலர்ந்துபோகப் பெறுதலிலும் உவமையாவர். பி - ம்:—[1]தேன்கரும்பியாவையும். (நஎ)

நஅ.—பப்பரர் பலபண்டங்களைக் காவிற் சுமந்து செல்லுதல்.

**அரத்த நோக்கின ரற்றிரண் மேனியர்**
**பரித்த காவினர் பப்பர ரேகினர்**
**திருத்து [1]கூடத்தைத் திண்கணை யத்தொடு**
**மெருத்தி னேந்திய மால்களி றென்னவே.**

(இ - ள்.) அரத்தம் நோக்கினர் - செந்நிறக்கண்களையுடையவரும், அல் திரள் மேனியர் - இருள் திரண்டாற்போன்ற [கறுத்த] உடம்புடையவருமாகிய, பப்பரர் - பப்பரசாதியார், — திருத்து கூடத்தை - (தம்மைத்) திருத்துதற்குஉரிய சம்மட்டியை, திண் கணையத்தொடும் - வலிய கணைய

மரத்தோடும், எருத்தின் ஏந்திய-(தமது) பிடரியினால்தாங்கிய, மால் களிறு என்ன - மதமயக்கங்கொண்ட யானைபோல, பரித்த காவினர் - காவு கொண்டு பாரத்தைச் சுமப்பவர்களாய், ஏகினார் - சென்றார்கள்; (எ - று.)

கணையத்தொடும் கூடத்தை எருத்திற் சுமந்த களிறு, பாரத்தைக் காவி னாற்சுமக்கும் பப்பரர்க்கு ஏற்ற உவமையாம். தாழ்குலத்தவரான இவர் பாரத் தைச் சுமக்கும்போது அதனால் வருத்தந்தோன்றாமைக்காகக் கட்குடித்தது பற்றி அவர்கள்கண்கள் செந்நிறமாகஇருத்தலால் 'அரத்தநோக்கினர்' என் றார். கணையம் - யானைகள்ஒன்றோடொன்றுபிணங்கிமுட்டாதபடி இடையே கிடத்தும் மரம். பி - ம்:—[1] கூடத்தில். (௩அ)

௩௯.—மங்கைமார்களின் கண்கள்.

பித்த யானை பிணங்கிப் பிடியிற்கை
வைத்த மேலிருந் தஞ்சிய மங்கைமா
ரெய்த்தி டுக்கணுற் றார்புதைத் தார்க்கிரு
கைத்த லங்களிற் கண்ணடங் காமையே.

(இ - ள்.) பித்தம் யானை - வெறிபிடித்த ஓரியானை, பிணங்கி - மாறு பட்டு, பிடியில் கைவைத்த (து) - பெண்யானைமீது (தன்) கையைநீட்டிற்று; (அப்போது), மேல்இருந்து அஞ்சிய - (அந்தப்பெண்யானையின்மேல்) ஏறி யிருந்து அச்சமடைந்த, மங்கைமார் - மகளிர்,— புதைத்தார்க்கு - (தம்மு டையஅச்சத்தைத் தவிர்த்தற்காகக் கண்களை) மூடத்தொடங்கியவர்க்கு, இரு கைத்தலங்களில் - இரண்டுகைகளுக்குள், கண் அடங்காமை - (தமது) நீண்டகண்கள் அடங்காமையால், எய்த்து - மனம்மெலிந்து, இடுக்கண் உற்றார் - வருத்தமடைந்தார்கள்; (எ - று.)

ஒருகளிறு வெறிகொண்டு அடங்காமல் பெண்யானைமீது தன்கையை நீட்டுதலும், அப்பெண்யானைமேலேறியிருந்த மகளிர் அஞ்சினராக, 'இவர் இந்த ஆண்யானையின்கை பெண்யானைமீதுபடுவதைக் காணுதலாலல்லவோ அச்சப்படுகின்றார்கள்; இவர்களுடையகண்களை நம்முடையகைகளால் மூடி விட்டோமானால் அப்போது இவர்கள் ஆண்யானையின்கை பெண்யானையின் மீது படுவதைக் காணாராதலால் அச்சங்கொள்ளார்' என்று கருதி அம்மங் கைமாரின் இருகண்களையும் சேடியர் மூடத்தொடங்க, அவர்கண்கள் கை களினால்மூடமுடியாது அவற்றினும் பெரியனவாக இருந்ததனால் அம்மங்கை யர் தமது அச்சம்மிக மெலிந்துதளர்வாராயினரென்க. எய்த்திடுக்கணுறுதல், கண்ணைமூடத்தொடங்கியவர்செயலெனப் பொருள்கூறினுமாம். தம்கண் களைத் தாமே கைத்தலங்களால் மூடத்தொடங்கி எய்த்து இடுக்கணுற்றா ரென்றலும் ஒன்று. (௩௯)

௪௦.—சிந்தரும் மடவாருடன் செல்லுதல்.

வாம மேகலை யாரிடை வாலதி
பூமி தோய்பிடிச் சிந்தரும் போயினர்

காமர் தாமரை நாண்மலர்க் கானத்து
ளாமை மேல்வருந் தேரையி னுயரோ.

(இ - ள்.) காமர் - அழகிய, தாமரை நாள் மலர் கானத்துள் - தாமரையின் அன்றுபூத்த மலர்களின் தொகுதியுள், ஆமைமேல் வரு தேரையின் ஆய்-ஆமைமீது ஏறிவருகின்ற தேரைபோன்ற தோற்றத்தைப்பெற்றவராய்,- வாலதி பூமி தோய் - வால்கள் பூமியிற் படியப்பெற்ற, பிடி - பெண்யானைகளில், வாமம் மேகலையாரிடை-அழகியமேகலாபரணம்பூண்ட மடவாரோடு சிந்தரும்—, போயினர் - சென்றார்கள்; (எ - று.)—அரோ - ஈற்றசை.

மகளிர் தாமரைமலர்த்தொகுதிபோல்விளங்க, அவர்களிடையேவருஞ் சிந்தர் தேரைபோலவும் பெண்யானைகள் ஆமைபோலவும் விளங்கு மென்க. சிந்தர் - மூன்றடியுயரமுள்ளவர். [குறளர் - இரண்டடியுயரமுள்ளவர்.] குறள் சிந்துக்களைச் சேவகராகவும் மெய்காப்பாளராகவும் அந்தப்புரத்தில்வைத்துக்கொள்வ ரெனக் கவிகள் கூறுவர். தேரையைச் சிந்துக்கு உவமையாகக் கூறுவதை "தேரைநடப்பனபோற் குறள்சிந்தினடோருநடந்தன" என்பதிலும் காண்க. வாலதி பூமியில்தோய்தல், உத்தமவிலக்கணமென்பர். (சo)

சக.—குதிரை ஒருமாதை மேற்கொண்டு ஓடுதல்.

இம்பர் நாட்டின் றரமல்ல ளீங்கிவ
ளும்பர் கோமகற் கென்கின்ற தொக்குமாற்
கம்ப மாவரக் கால்கள் வளைத்தொரு
கொம்ப னாளைக்கொண் டோடுங் குதிரையே.

(இ - ள்.) கம்பம் மா வர - கட்டுத்தறியிற் கட்டப்பட்டுள்ளயானை தொடர்ந்துவர, (அதற்கு அகப்படாமல்), கால்கள் வளைத்து - (தமது) கால்களை வளையவளையவைத்து, ஒரு கொம்பு அனாளை கொண்டு-பூங்கொம்புபோன்ற ஒருத்தியைச் சுமந்துகொண்டு, ஓடும்-ஓடுகின்ற, குதிரை - குதிரையானது,- ஈங்கு - இங்கே, இம்பர் நாட்டின் தரம் அல்லள் - இவ்வுலகத்திலே (வாழ்க்கைப்படுதற்கு) உரியவளல்லளாகிய, இவள்—, உம்பர் கோமகற்கு - தேவர்களின் அரசனான இந்திரனுக்கு (உரியவள்), என்கின்றது - என்றுகருதிச் செல்வதை, ஒக்கும் - ஒத்திருக்கும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

ஒருமாதையேற்றிக்கொண்டு குதிரைதாவிச் செல்கையில் வானத்திற் செல்வதுபோலத்தோன்றுவதனால், 'தேவர்களின்அரசனான இந்திரனுக்கு உரியவள் இவள்' என்று தேவேந்திரனிடம் அம்மாதை எடுத்துச்செல்வது போலத் தோன்றிற்றென்றார்; தற்குறிப்பேற்றவணி. (சக)

சஉ.—மகளிரின் செலவு.

சந்த வார்குழல் [1]சோர்பவை தாங்கலார்
சிந்து மேகலை சிந்தையுஞ் செய்கலா
ரெந்தை வில்லிறுத் தானெனு [2]மின்சொலை
மைந்தர் பேச மனங்களித் தோடுவார்.

(இ - ள்.) சோர்பவை சந்தம் வார் குழல் - அவிழ்வனவாகிய அழகிய நீண்ட கூந்தலே, தாங்கலார் - (முடியுமாறு கைகளினால்) ஏந்திக்கொள்ளாமலும், சிந்தும் மேகலை சிந்தைஉம் செய்கலார்-(அறுந்து சிந்துகின்ற மேகலையின் கோவைவயை(ப்பொறுக்கியெடுக்குமாறு) எண்ணுதலுஞ்செய்யாதவர்களுமாகிச்செல்கின்ற மடந்தைமார்.—எந்தை வில் இறுத்தான் எனும் இன் சொலே மைந்தர் பேச - எனதுஅப்பனாகியஸ்ரீராமன் சிவதநுசைமுறித்தானென்கின்ற இனியசொல்லை ஆடவர்சொல்ல, (அதனைக்கேட்டு), மனம் களித்து - மனம்மகிழ்ந்து, ஓடுவார் - (அப்பிரானது திருமணத்தைக்கருதி) விரைந்துசெல்பவரானார்கள்; (எ - று.)

தமது ஆட்வர் சொல்லுகின்ற ஸ்ரீராமனதுபிரதாபம் களிப்பையூட்டத் திருமணத்தைக்காணவேணுமென்றபேராதரத்தால் கூந்தல்சோர்தல்முதலியவற்றையும்கருதாது மகளிர் விரைந்துசெல்லலாயினரென்க. சந்தம் - மயிர்ச்சாந்து என்று கொள்வாருமுளர். எந்தை - அன்புபற்றியமரபுவழுவமைதி. பி - ம்:—[1]சோர்ந்தவை. [2]சொலார். (சுஉ)

சுங.—அந்தணர் செல்லுதல்.

குடையர் குண்டிகை தூக்கினர் குந்திய
நடையர் நாசி புதைத்தகை நாற்றலர்
கடக ளிற்றையுங் காரிகை யாரையு
மடைய வஞ்சிய வந்தணர் முந்தினார்.

(இ - ள்.) கடம் களிற்றைஉம் - மதயானையையும், காரிகையாரைஉம்- மகளிரையும், அடைய - சேர்ந்துசெல்வதற்கு, அஞ்சிய - அச்சங்கொண்டுள்ள, அந்தணர் - பிராமணர்கள்,— குடையர் - குடைபிடித்தவரும், குண்டிகை தூக்கினர் - கமண்டலத்தை யேந்தியவர்களும், குந்திய நடையர் - இடையிட்டுவைக்கின்ற நடையையுடையவர்களும், நாசி புதைத்த கை நாற்றலர் - மூக்கிற்புதையவைக்குந்தன்மையுள்ளகையைத் தொங்கவிடாதவர்களுமாகி, முந்தினார் - முற்பட்டுநடக்கலானார்கள்; (எ - று.)

ஸ்ரீராமனதுதிருமணத்தைக் காண அந்தணர் செல்வதை இதனாற் கூறுகின்றார். 'கடகளிற்றையும்காரிகையாரையும்அடையஅஞ்சியவந்தணர்' என்றதனால், 'யானையினிடம்அணுகிச்செல்வதென்றால் என்ன தீங்குவிளையுமோ?' என்றுஅஞ்சுவதுபோலக் காரிகையாரை அணுகிச்செல்வதென்றாலும் அதனால் என்னவிளையுமோஎன்று அஞ்சுபவர்களானஅந்தணர் என்றபடி: இதனால், கடவுளையே மனனஞ்செய்பவர்களாய்ப் [illegible] பெரியோ[illegible] அவ ரென்பது, பெறப்படும். வெளியே செல்லு[illegible] கொண்டுசெல்லவேண்டுமென்று தருமசாத்திர[illegible] தமதுஅடிவைப்பினால் தரையில் ஊர்ந்துசெல்லு[illegible] னும் ஊறுவிளையுமோ?' என்றும், 'அசுத்திக்குக்க[illegible] னுங் கீழே கிடக்குமோ?' என்றும், மிக்ககருத்தோ[illegible] வைப்பவரென்பார் 'குந்தியநடையர்' என்றார். குந்து நடத்தல். பிராணயாமத்தைப் பல்கால் பயில்வதால் 'ந[illegible]

ரூர். கை இடைக்குக்கீழ்ப்பட்டஇடத்திற்படுமாயின் அபரிசுத்தமா மாதலால், கையைத்தொங்கவிடாமல் தூக்கியவண்ணஞ்செல்கின்றனரென்பார் 'கைநாற்றலர்' என்றார்: இனி, நாசிபுதைத்தகைநாற்றலர்என்பதற்கு - ஸ்ரீராமனது திருவுருவத்தைத் தமதுஉள்ளத்தேயிருத்தி ரேசகபூரககும்பகங்களைச் செய்துகொண்டேசெல்கின்றன ரென்பது, பொருந்தாது; ஓரிடத்து இருந்தவண்ணமே பிராணாயாமஞ்செய்யவேண்டுமென்பது விதியாதலின். (௬௩)

௬௪.—நங்கைமார் செயல்.

நாறு பூங்குழ [1]னங்கையர் [2]கண்ணினீ
ரூர னேர்வந் துருவு வெளிப்பட
மாறு கொண்டனை வந்தனை யாகில்வந்
தேறு தேரெனக் கைக ளிழிச்சுவார்.

(இ - ள்.) நாறு பூ குழல் நங்கையர் - மணக்கின்ற மலரையணிந்த கூந்தலையுடைய மங்கைமார், கண்ணின் - (தமது) கண்களில், நீர் ஊரன் உருவு நேர் வந்து வெளிப்பட - நீர்வளமுள்ள கோசலதேசாதிபதியான ஸ்ரீராமனது உருவம்வந்து வெளிப்பட்டுத் தோன்ற,-(இராமனேநேரேவந்துவிட்டதாகக்கருதி அவ்வுருவத்தைப்பார்த்து), மாறு கொண்டனை வந்தனை ஆகில்- (நீயே எம்மை) எதிர்கொண்டுவந்தாயானால், வந்து—, தேர் ஏறு - (இந்த) இரதத்தில்ஏறிக்கொள்,' என-என்றுசொல்லி, கைகள் இழிச்சுவார்-(தமது) கையைத் தாழ்த்திச்சாடைகாட்டுவார்கள்; (எ - று.)

ஸ்ரீராமனைப்பற்றிய தியானத்துடனேயே செல்வதனால் சிலமங்கைமார் கண்கட்குப் பாவனைமிகுதியால் இராமபிரான் தம்மெதிரேவந்திருப்பதாகத் தோன்ற, அங்ஙனந்தோன்றிய வுருவத்தை நோக்கி, 'நீயே எம்மை எதிர்கொண்டாயே; வந்து இந்தத்தேரி லேறுக' என்று தமதுகைகளைத்தாழ்த்தியழைக்கலாயின ரென்க. இனி,இச்செய்யுட்கு-மாதர்கள் தம்மோடுபிணங்கிச்சென்ற தமதுகணவர்களுடைய உருவத்தை உருவெளிப்பாட்டிலே கண்டு உரைத்ததாகக் கூறுவாரு முளர்: இந்தப்பொருளில்; மாறுகொண்டனை என்பதற்கு - மாறுபாடுகொண்டுபோயினை யென்க. [2] கண்கணீரூறு நேர் வந்து என்ற பாடத்துக்கு - கண்களிலிருந்துசுரக்கின்றநீரூற்றுக்கு [நீரூற்றுச்சுரக்கின்ற கண்களுக்கு]எதிரேவந்து என்க. பி-ம்:—[1]நங்கையொர்.

௬௫.—பேரொலியால் ஒருவர்பேசியது ஒருவர்க்குத் தெரியாமை.

குரைத்த தேருங் களிறுங் குதிரையு
வார்முர சுந்நிமிர்ந் தெங்கணு
ராலி யாலிடை யாவரு
ணர்ந்தில ரூமரி னேகினர்.

- ஒலித்த, தேர்உம் - தேர்களும், களிறுஉம்-யானை
திரைகளும், நிரைத்த வார் முரசுஉம் - வரிசையான
ும், எங்கண்உம் நிமிர்ந்து இரைத்த பேர்ஒலியால் -
த்பேரொலியினால், இடை - அவ்விடத்திலே(செல்லு

கின்ற), யாவர்உம்—, உரைத்த உணர்ந்திலர் - (ஒருவர்) சொல்வதை (மற்ரொருவர் இன்னதென்று) அறியமாட்டாதவராகி, ஊமரின் எகினர் ஊமைகளைப்போல(ப் பேசாமற்)செல்லலாயினர்; (எ - று.)

தேர்முதலியன செல்லுவதாலும் முரசங்கள் அடிக்கப்படுவதனாலும் பேரொலி தோன்ற, அந்தப்பேரொலியில் ஒருவர்சொல்வது மற்ரொருவர்க்குத் தெரியாமையால் ஒருவரோடொருவர் பேசுவதையொழித்து ஊமர்கள் செல்வதுபோல மெள்ளமாகச் செல்லலாயினரென்பதாம். உரைத்த-பெயர். உரைத்துஎனப்பிரித்து - உரைத்துஉணர்ந்திலர் - சாடையினால் ஒருவர்கருத்தையொருவர் அறிந்தனரேயன்றிப் பேசித்தெரிந்துகொள்ளவில்லையென்றுமாம். பி - ம்:—[1]திரைத்து, நெளிந்து. (சுகு)

சசு.—செல்லும் மகளிர்திரளின்வருணனை.

நுட்சி லம்பி [1]வனைந்தன நுண்டுகில்
கட்சி லம்புக ருங்[2]குழ லார்குழு
வுட்சி லம்புசி லம்பவொ துங்கலாற்
புட்சி லம்பிடு பொய்கையும் போன்றதே.

(இ - ள்.) நுண் சிலம்பி வனைந்து அன - நுண்ணியசிலம்பிப்பூச்சி இழைத்த நூற்கூட்டையொப்ப, நுண் - மிகவும் மெல்லியவான, துகில் - ஆடைகளையணிந்த, கள் சிலம்பு கரு குழலார் - வண்டுகள் மொய்த்துஒலிக்கின்ற கரியகூந்தலையுடைய மகளிரின், குழு-கூட்டம்,—சிலம்பு உள் சிலம்ப ஒதுங்கலால் - (தம் பாதங்களிலணிந்த) நூபுரங்கள் உள்ளிடுபரலால் ஒலிக்க நடந்துசெல்வதனால், புள் சிலம்பிடு பொய்கைஉம் - பறவைகள் ஒலிக்கின்ற தடாகத்தையும், போன்றது—; (எ - று.)

குழலார்குழு போன்றதென்க. இனி, குழு என்பதனை ஒதுங்கலால் என்பதோடு இயைத்து, அதிகாரத்தால் 'தானை' என்று எழுவாய்வருவித்து, முடித்தலுமொன்று. சிலம்பிவனைந்தது நுண்டுகிலுக்கு உவமையாகக் கூறப்படுவதை "பவளக் கொம்பு முழுமெய்யுஞ், சிலம்பிவலந்ததுபோற்போர்வை போர்த்து" என்ற சிந்தாமணியிலுங் காண்க. பி - ம்:—[1]அலர்ந்தன, வலந்தன. [2]குழன்மங்கைமார். (சசு)

சஎ.—ஆடவர்கண்கள் மகளிர்கண்களைக் கண்டு மகிழ்தல்.

தெண்டி ரைப்பர வைத்திரு வன்னவர்
நுண்டி ரைப்புரை நோக்கிய நோக்கினைக்
கண்டி ரைப்பன வாடவர் [1]கண்களி
வண்டி ரைப்பன யானை மதங்களே.

(இ - ள்.) தெள் திரை பரவை திரு அன்னவர் - தெள்ளிய அலைகளையுடைய திருப்பாற்கடலிலிருந்துதோன்றிய இலக்குமியையொத்த மகளிர், நுண் திரைபுரை நோக்கிய நோக்கினை - நுண்ணியதிரைச்சீலையின் துவாரத்தினூற்கண்ட பார்வையை, கண்டு—, ஆடவர் கண் இரைப்பன - ஆண்மக்களுடையகண்கள் மகிழ்ந்துஆரவாரஞ்செய்யலாயின; ஆனை மதங்கள்

(கண்டு) - ஆனைகளின்மதநீரைக் கண்டு, களி வண்டு - களிப்புள்ள வண்டுகள், இரைப்பன - (மகிழ்ச்சிகொண்டு) ஆரவாரஞ் செய்வன; (எ - று.)

மகளிர் தம்முடையமுகம் பிறஆடவர்க்கு நன்குதெரியாதபடி முட்டாக்கிட்டவண்ணம் எப்போதும் செல்வராதலால், அங்ஙனஞ்செல்கின்ற மகளிர்களுடைய கண்கள் முகத்தைமூடிய ஆடையின் புரைவழியாக வெளிப்பட அதனைக்கண்ட இளம்பருவமுள்ளஆண்மக்களின்கண்கள்யானையின் மதநீரைக்காணப்பெற்ற வண்டுகள்போல் மகிழ்ந்தன என்க. யானையின் மதநீரைக்கண்டு வண்டுகள் மகிழ்தலும், மகளிர் கண்களைக்கண்டு ஆடவர்கண்கள் மகிழ்தலும் சேனையில் நிகழ்வன வாதலால், வர்ணியங்களான அவ்விரண்டனையும் தனித்தனி ஒன்றுபடக் கூறியது - தொடர்புயர்வுநவிற்சியணியாம். இனி, அரசமகளிர் தம்மைச்சுற்றித் திரையிட்டுக்கொண்டு செல்வது மரபாதலால், அங்ஙனம் செல்லுகையில் வழியையறியுமாறு திரைச்சீலையிலுள்ள புரைவழியாகக் காண்கின்றனரென்று கொள்ளலுமாம். பி - ம்:—¹கண்களே. (சஎ)

சஅ.—நூபுரமும் குதிரையும் ஒலித்தல்.

உழைக லித்தன வென்ன வுயிர்த்துணை
நுழைக லிக்கருங் கண்ணியர் நூபுர
விழைக லித்தன வின்னிய மாவெழு
மழைக லித்தென வாசிக லித்தவே.

(இ - ள்.) உயிர் துணை நுழை - ஆடவருயிரளவும் ஊடுருவிச்செல்கின்ற கலி-வலியமைந்த, கரு கண்ணியர் - கரிய கண்களையுடையமாதரார் பூண்ட, நூபுரம் இழை - சிலம்பென்னும் அணிகள், உழை கலித்தன என்ன - உழையென்கிறசுரம் ஒலித்தாற்போல, கலித்தன - ஒலித்தன—; (அங்ஙனம் ஒலித்தவற்றுக்கு), இன் இயம் ஆ - இனிய பக்கவாத்தியமாக, எழு மழை கலித்து என வாசி கலித்த - (வானத்தில்) எழுகின்றமேகம் இடித்தாற்போலக் குதிரைகள் கனைத்தன; (எ - று.)

ஒருவர்பாடுகையில் அதனைச் சிறப்பித்தற்காக மத்தளம்முதலிய வாச்சியங்கள் முழக்கப்படுவது, மரபு: அங்ஙனம்வாசிக்கப்படுபவை, பக்கவாச்சியமென்னப்படும். மாதர்காலணி ஏழிசைகளுள் உழையென்னும் இசைபோல் ஒலிக்க அவ்விசைக்குப் பக்கவாச்சியமாகுமாறு வாசிகள் கலித்தன வென்க. இனி முதலிரண்டடிகட்கு, உழைகலித்தனஎன்ன-மான்கள்செருக்கியெழுந்தனஎன்றுசொல்லும்படி (தோன்றுகின்ற), உயிர் துணை நுழை கலி கரு கண்ணியர் - ஆடவர்உயிர்வரையும் துளைத்துச்செல்லுகின்ற மதர்த்த கரிய கண்களையுடையமகளிர்என்று உரைத்தலுமாம். நான்காமடியில், கலித்தனஎன்றபாடத்திற்கு - நூபுரவிழை ஒலிக்க அதற்குப்பக்கவாச்சியமாக, மழை - மேகம், கலித்தன—ஒலித்தனஎன்றும், மூன்றுநான்காமடிகளிரண்டிலும்கலித்தெனஎன்றபாடத்திற்கு - நூபுரவிழைகலித்தாற்போலவும், இன்னியமாக [இன்னியம்போல] ஒலிக்கின்ற மழை கலித்தாற்போலவும், வாசி கலித்தன என்க. (சஅ)

சகூ.—மகளிர்நோக்கினைச் சிலஆடவர் வியத்தல்.

மண்க ளிப்பந டப்பவர் [1]வா ணுத
லுண்க ளிக்கம லங்களி னுள்ளுறை
திண்க ளிச்சிறு தும்பி யெனச்சிலர்
கண்[2]க ளித்தன கா மன் களிக்கவே.

(இ - ள்.) மண் களிப்ப நடப்பவர் - பூமிதேவி மனம்மகிழும்படி (மெல்லஅடிவைத்து)நடக்கின்ற மகளிரின், வாள் நுதல் - ஒளிபொருந்திய முகத்தைப்பார்த்து) '(இவை), களி உண் கமலங்களினுள் - களிப்புக் கொண்ட [செழிப்புள்ள] தாமரைமலர்களினுள்ளே, உறை - தங்கிய, திண் களி சிறு தும்பி - வலிய களிப்புக்கொண்ட சிறியவண்டுகள்', என - என்று கருதி, காமன் களிக்க சிலர் கண் களித்தன - மன்மதன் மகிழ்ச்சியடையுமாறு (சிலஆடவரின்)கண்கள் களிப்படைந்தன; (எ - று.)

சிலஆடவர்கண்கள் மகளிரின்கண்வனப்பில் ஈடுபட்டு, 'காதற்கடவுளானமன்மதன் மகிழும்படி 'இவை தாமரைமலரினுள்ளவண்டுகளே!' என்று எண்ணிக் களித்துக்கிடந்தன என்பதாம். இம்மங்கைமார் அதிரநடவாமல் பூமேல்அடிவைப்பதுபோல மெல்ல அடிவைத்தலால், மண் களிப்பதாயிற்று. இனி, 'மண்களிப்ப நடப்பவர்'என்பதற்கு - இவர் என்மீது நடக்கப்பெற்றேனேயென்று மண்மகள் களிக்குமாறு அழகுவாய்ந்தவ ரென்று கருத்துக் கூறுவாருமுளர். நுதல் - முகத்திற்கு, இலக்கணை. இனி, இச்செய்யுட்கு - மகளிர்முகங்களை ஆடவர் கண்கள் மிக்கவிருப்போடு நோக்கினதைக்கூறுவதாகப்பொருள்கொள்ளலுமாம்: மகளிர் நுதலாகியகமலங்களிலே யுறைகின்ற தும்பிபோல ஆடவர்கருவிழிகள் மகிழ்ச்சிகொண்டு எழுந்துசென்றன என்க.

பி - ம்:—[1]வாண்முகவொண். [2]களிப்பன. (சகூ)

ருo.—தூளிகள் நெருங்குதல்.

எண்ண மாத்திர மும்மரி தாமிடை
வண்ண[1] மாத்துவர் வாய்க்கனி வாய்ச்சியர்
திண்ண [2]மாத்தொளிர் செவ்விள நீரிழி
சுண்ண [3]மார்த்தன தூளியு [4]மார்த்தவே.

(இ - ள்.) எண்ணம் மாத்திரம்உம் - கருதலளவைக்கும், அரிது ஆம் - அரிதாகிய, இடை - இடையையும், வண்ணம் மா துவர் வாய் - அழகிய சிறந்த பவழம்போன்ற வாயையும், கனி வாய்ச்சியர் - முக்கனிச்சாறு போன்ற [இனிய] சொல்லையுமுடையாரான மாதராரின், திண்ணம் ஆத்து ஒளிர் - உறுதியாகக்கட்டப்பட்டு விளங்குகின்ற, செவ்விள நீர் - செவ்விளநீரையொத்த தனங்களினின்று, இழி - உதிர்ந்த, சுண்ணம் - நறுமணப்பொடிகளும், ஆர்த்தன - (அவ்விடமெல்லாம்) நிறைந்தன; தூளிஉம்-(செல்லுஞ்சேனைகளாலெழுப்பப்பட்ட) தூசியும், ஆர்த்த-(எங்கும்) நிறைந்தன.

முதலிரண்டடிகள், மகளிர்வருணனை. மடவாரின் நறுங்கலவைப்பொடியும் சேனைகளெழுப்பிய தூளியும் எங்கும் நிறைந்தன வென்க. சுண்ணம்

தூளி என்ற இரண்டும் ஆர்த்தன என்ற ஒருபொதுத்தன்மையைத்தனித் தனி பெற்றுவந்தது, தொடர்முழுதுவமையென்னும் ப்ரதிவஸ்தூபமாலங் காரமாம். எண்ணமாத்திரமும் மரிதாமிடை-இடையுள்ளதென்று எண்ணுவ தற்கும் இயலாதவாறு அத்துணைச்சூட்சுமமாகவுள்ளது இடை யென்று இடையின் மிக்க நுண்ணியதன்மையைக் காட்டக்கூறிய உயர்வுநவிற்சி. கனி - கொவ்வைப்பழம்போன்ற [செந்நிறமான], வாய்ச்சிய ரெனினுமாம். பி - ம்:—[1] ஆர்த்ததுவர்க்கனி. [2] ஆர்த்து. [3] ஆத்தன. [4] ஆத்தவே. (ருo)

ருக.—சென்றவரின் பெருந்திரள்.

[1] சித்தி ரத்தடந் தேர்மைந்தர் மங்கைய
[2] ருய்த்து ரைப்ப நினைப்ப வுலப்பில
ரித்தி றத்தின ரெத்தனை யோபலர்
மொய்த்தி ரைத்து வழிக்கொண்டு முன்னினர்.

(இ - ள்.) உய்த்து உரைப்ப நினைப்ப உலப்பு இலர் - ஊகித்துணர்ந்து சொல்வதற்கும் நினைத்தற்கும் முடியாதபடி அளவில்லாதவராகி, சித்திரம் தட தேர் மைந்தர் மங்கையர் - சித்திரவேலையமைந்த பெரிய தேரிற்சென்ற மைந்தரும் மங்கையருமாகிய, இ திறத்தினர் எத்தனைஓ பலர் - இப்படிப் பட்டவர் எத்தனையோபலபேர், மொய்த்து - நெருங்கி, இரைத்து - பேராரவாரஞ்செய்து, வழிக்கொண்டு முன்னினர் - செல்லும்வழியைக் குறிக்கொண்டு முற்பட்டுச்சென்றார்கள்; (எ - று.)

கீழ்க்கூறியவாறு பலபடியாக ஆடவரும் மகளிரும் பலப்பலவாகத்திரண்டு செல்லலாயின ரென்க. பி - ம்:— [1] சித்திரப்புயமைந்தர் தெரிவையர். [2] உய்த்துரைப்பின். (ருக)

ருஉ.—எழுந்த தூளியின் வருணனை.

குசையுறு பரியுந் தேரும் வீரருங் குழுமியெங்கும்
விசையொடு [1] கடுகப் பொங்கி வீங்கிய தூளி [2] விம்மிப்
பசையுறு துளியின் றாரைப் பசுந் [3] தொளை யடைத்த மேகந்
திசைதொறு நின்ற யானை மதத்தொளை [4] செம்மிற் றன்றே.

(இ - ள்.) குசை உறு பரிஉம் தேர்உம் வீரர்உம் - கடிவாளம் பூண்ட குதிரையும் தேரும் வீரர்களும், எங்குஉம் குழுமி-எவ்விடத்துங் கூடி, விசையொடு கடுக - வேகத்துடனே விரைந்துசெல்ல, (அதனால்) பொங்கி வீங்கிய - மிகவும் அதிகமாகமேலெழுந்த, தூளி - தூசியானது, விம்மி - பெருகி,—மேகம் - மேகத்தின், பசை உறு துளியின் தாரை பசு தொளை - ஈரம் பொருந்திய நீர்த்துளியின் தாரைகள் வெளிப்பட்டுவருதற்குஉரிய பசிய தொளைகளை, அடைத்த(து) - தூர்த்து; (அன்றியும்), திசைதொறும் நின்ற யானை - (கிழக்குமுதலிய எட்டுத்) திக்குக்களிலும் காவலாகிநிற்கின்ற திக் கஜங்களின், மதம் தொளை-மதநீர்வெளிப்பட்டுவருந் துவாரங்களையும், செம்மிற்று - தூர்த்துவிட்டது; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

குதிரை தேர்வீரர் ஆகிய எல்லாம் கூடி விரைந்துசெல்வதனுல், தூளிப் படலம் மிகுதியாகஎழுந்து வானத்திலும் எட்டுத்திசைகளிலும் பரவிற் றென்பதாம். தூளி - மேகத்தின் பசையுறுதுளியின்றூரைப் பசுந்தொளை யையும், யானைமதத்தொளையையும் தூர்த்ததென்று கூறியது, உயர்வுநவிற் சியணி. பி-ம்:—[1]முடுகெ. [2]விம்ம. [3]துளை. [4]செறித்த, செறிந்தது. (ருஉ)

ருங.—யானையின் மதநீர்ப்பெருக்கு.

கேடகத் தடக்கை யாலே கிளரொளி வாளும் பற்றிச்
சூடகத் தளிர்க்கை மற்றைச் சுடர்மணித் தடக்கை பற்றி
யாடகத் தோடை யானை [1]யழிமதத் திழுக்க லாற்றிற்
பாடகக் காலி னாரைப் பையப்பயக் கொண்டு போனார்.

(இ - ள்.) (அங்குச் சென்ற வீரர்கள்),—கேடகம் தட கையால்ஏ-கேட கத்தைப்பற்றியுள்ள இடக்கையினுல்தானே, கிளர் ஒளி வாள்உம் பற்றி - விளங்குகின்ற ஒளியையுடைய வாளையும்பிடித்துக்கொண்டு,—மற்றை சுடர் மணி தட கை - விளங்குகின்ற இரத்தினக்கடகங்களையணிந்த பெரிய மற் றொருகையினுலே [வலக்கையினுலே], பாடகம் காலினாரை - பாடகமணி ந்த தாள்களையுடைய (தமது) மனைவிமாரை, சூடகம் தளிர் கை பற்றி - சூடகமென்னும் அணியையணிந்த தளிர்போன்ற கையைப் பிடித்துக்கொ ண்டு,—ஆடகத்து ஓடை யானை அழி மதத்து இழுக்கல் ஆற்றில் - பொன் னாலியன்ற நெற்றிப்பட்டத்தையணிந்த யானைகளின் பெருகுகின்ற மதத்தி னுலுண்டாகிய வழுக்கலுள்ள வழியில், பயபய-மெல்ல, கொண்டுபோனார்- அழைத்துக்கொண்டுசென்றார்கள்; (எ - று.)

எழுவாய் வருவிக்க. யானைகள் மதநீரைமிகுதியாகச் சொரிவதனுல் செல்லும்வழிகளெல்லாம்கெட்டுச் சேற்றுவழியாய்விட, அவ்வழியாக நட ந்துசெல்லஇயலாமல் தம்மனைவியர் வருந்துகையில் இடக்கையில் கேடகத் தையும் வலக்கையில் வாளையும் ஏந்திச்சென்றவீரர் இரண்டையும் இடக்கை யில்தானேகொண்டு. வலக்கையால் தம்மனைவியரின்கையைப்பற்றி அவர் களை மெல்லநடத்திச் செல்லலாயின ரென்க. அழிதல் பெருகுதலென்னும் பொருளதாதலை "அழியும்புன லஞ்சன மாநதியே" என்ற சிந்தாமணியிலுங் காண்க. பய-பையஎன்பதன்போலி. பி - ம்:—[1]இழிமதத்தொழுகல். (ருங)

ருச.—நெய்தல்முதலியமலர்களைப் பறித்துத்தருமாறு மகளிர் கேட்டல்.

செய்களின் மடுவி னன்னீர்ச் சிறைகளி னிறையப் பூத்த
நெய்தலுங் [1]குமுதப் பூவு நெகிழ்ந்தசெங் கமலப் போதுங்
கைகளு முகமும் வாயுங் கண்களுங் காட்டக் கண்டு
கொய்[2]திவை தருதி ரென்று கொழுநரைத் [3]தொழுதொன் றூரால்.

(இ - ள்.) செய்களில் - வயல்களிலும், மடுவில் - மடுக்களிலும், நல் நீர் சிறைகளில் - நல்ல குளங்களிலும், நிறைய பூத்த—, நெய்தல்உம் - நெய்தற் பூவும், குமுதம்பூஉம்—, நெகிழ்ந்த செங் கமலம் போதுஉம் - மலர்ந்த செந் தாமரைமலர்களும், (ஆகியஇவை), (தம்முடைய) கைகள்உம் - கைகளையும்,

முகம்உம் - முகத்தையும், வாய்உம் - வாயையும், கண்கள்உம் - கண்களையும், காட்ட—, கண்டு - பார்த்து, 'இவை - இந்த்நெய்தற்பூமுதலியவற்றை, கொய்து தருதிர் - பறித்துத்தருவீராக', என்று—, கொழுநரை-(தமது)கணவரை, தொழுகின்றார்-வணங்கிக்கேட்பவரானார்கள், (மகளிர்கள்); (எ - று.) —ஆல் - ஈற்றசை.

எழுவாய் வருவிக்க.மகளிர் தமதுகண்கள்முதலியவற்றைப்போற் செய்கள்முதலியவற்றிலேவிளங்கும் நெய்தல்முதலியவற்றைப் பறித்துத்தருமாறு தங்கணவரைக் கேட்டன ரென்க. நெய்தல் கண்களுக்கும், குமுதம் வாய்க்கும்,கமலப்போது கை முகம் என்றவற்றுக்கும் உவமையாம். நெய்தல்முதலியனஉவமானங்களாகிய கண்கள்முதலியவற்றோடு மாறி இயைவது-எதிர்நிரனிறை. நீரைக்கட்டிவைத்திருத்தலால்,குளத்தை 'நீர்ச்சிறை' என்றார். [3]தொழுகின்றாரும் என்றபாடத்துக்கு-தொழுகின்றவர்களும்,அங்கே யுள ரென்று வருவித்து முடிக்க. பி - ம்:—[1]கமலப்போது நெகிழ்ந்தசெங்குமுதப்போதும்.[2]அவை. (ருச)

ருரு.—யானை வருவதென்று மகளிர் நிலைகெட்டு ஓடுதல்.

பந்தியம் புரவி நின்றும் பாரிடை [1]யிழிந்தோர் வாசக்
குந்தள பாரஞ் சோரக் குலமணிக் கலன்கள் சிந்தச்
சந்தநுண் டுகிலும் வீழத் தளிர்க்கையா லணைத்துச் சார
வந்தது வேழ மென்ன மயிலென விரியல் போவார்.

(இ - ள்.) பந்தி அம் புரவி நின்றுஉம் - சாலையில் கட்டுதற்குஉரிய அழகிய குதிரையிலிருந்து, பாரிடை இழிந்தோர் - பூமியிலிறங்கின மகளிர்,- 'வேழம் சார வந்தது என்ன - யானை அருகேவந்ததாக, வாசம் குந்தளம் பாரம் சோர-நறுமணமுள்ள (தமது)கூந்தற்றொகுதி அவிழ்ந்து தொங்கவும், குலம் மணி கலன்கள் சிந்த - சிறந்த இரத்தினங்கள்பதித்த ஆபரணங்கள் கீழேவீழ்ந்திடவும்,—சந்தம் நுண் துகில்உம் வீழ தளிர் கையால் அணைத்து- அழகிய அரையாடையும் அவிழத்தொடங்க (அதனைமாத்திரம் தமது) தளிர்போன்ற கைகளால் (அவிழ்ந்துவிழவொட்டாமல்) தழுவிக்கொண்டு, மயில் என-மயிற்பறவைகள் செல்வதுபோல, இரியல் போவார் - நிலைகெட்டுச் செல்லலானார்கள்; (எ - று.)

குதிரையினின்றும் இறங்கின மகளிர் அருகே யானை வந்ததாக அது கண்டு அஞ்சி. தமது கூந்தல்விரிந்ததையும் ஆபரணங்கள் சிந்துவதையும் பொருள்செய்யாது அரையாடையவிழ்ந்ததனால் மானபங்கம் நேரிடப்போகிறதேயென்ற கருத்தினால் அதனைமாத்திரம் அவிழ்ந்துவிழவொட்டாமற் கைகளால் தழுவிக்கொண்டு இருந்த இடத்தைவிட்டு மயில்கள்போல நிலைகெட்டு ஓடலாயின ரென்க. இம்மகளிர் தமதுமானத்தை முக்கியமாகப் பார்ப்பவ ரென்பது, இங்கு வெளியாம். பந்தி - வரிசையாகச்செல்லுகின்ற, புரவி என்னவுமாம். வந்தது என்ன - வந்துவிட்டதென்று பிறர்சொல்ல எனினுமாம். பி - ம்.—[1]இழிந்து. (ருரு)

ருகூ.—குடை முதலியவற்றின் மிகுதி.

குடையொடு களிறுந் தொங்கற் குழாங்களுங் கொடியின் காடு
மிடையிடை மயங்கி யெங்கும் வெளிகரந் திருளைச் செய்யப்
படைகளு முடியும் பூணும் [1]படர்வெயில் பரப்பிச் செல்ல
விடையொரு கணத்தி னுள்ளே யிரவுண்டு பகலு முண்டே.

(இ - ள்.) குடையொடு - குடைகளும், களிறுஉம் -யானைகளும், தொங்கல் குழாங்கள்உம் - பீலிக்குஞ்சங்களின் தொகுதிகளும், கொடியின் காடு உம் - கொடிக்காடுகளும், இடை இடை மயங்கி - ஒன்றோடொன்று கலந்து, எங்கும் வெளி கரந்து - எந்தஇடத்திலும் வெற்றிடமில்லாதவாறு மறைத்து, இருளை செய்ய - இருளையுண்டாக்கவும்,—படைகள்உம்-(வில் வாள்முதலிய) படைக்கலங்களும், முடிஉம் - கிரீடங்களும், பூண்உம் - ஆபரணங்களும், படர் வெயில் பரப்பி செல்ல - பரந்த வெயிலைப் பரப்பிக்கொண்டு போகவும்,—இடை - (அந்தச்சேனைத்தொகுதி செல்லும்) இடத்தில், ஒரு கணத்தின்உள் - ஒருகணப்பொழுதிற்குள், இரவு உண்டு பகல்உம் உண்டு - இரவு உள்ளதாகப் பகலும் உள்ளதாயிற்று; (எ - று.)

குடைமுதலியன இருளையுண்டாக்குதலாலும், படைக்கலம்முதலியன வெயிலை யுண்டாக்குதலாலும், இரவும் பகலும் ஒருகணப்பொழுதிலே யுண்டாயின வென்க. பி - ம்:—[1]ஆரமும்பகலைச் செய்ய.　　　(ருகூ)

ருஎ.—மகளிர்க்காக ஆடவர்திரள் விலகிவழிவிடுதல்.

முருக்கிதழ் முத்த மூரன் முறுவலார் முகங்க ளென்னுந்
திருக்கிளர் கமலப் போதிற் றீட்டின கிடந்த கூர்வா
ணெருக்கிடை யறுக்கு நீர்க ணீங்குமி னீங்கு மென்றென்
றருக்கனி லொளிரு மேனி யாடவ ரகலப் [1]போவார்.

(இ - ள்.) 'முருக்கு இதழ் - பலாசம்பூப்போன்ற வாயையும, முத்தம் மூரல் - முத்துக்கள்போன்ற பற்களையும், முறுவலார் - புன்சிரிப்பையுங்கொண்ட மாதராருடைய, முகங்கள் என்னும் - முகங்களென்று சொல்லப்படுகின்ற, திரு கிளர் கமலம் போதில் - அழகுவிளங்குகின்ற தாமரைமலரிலே, தீட்டின கிடந்த-தீட்டியனவாய்த்தங்கி யுள்ள, கூர் வாள் - கூரியவாட்படையானது, நெருக்கு - ஆடவர்நெருங்கியுள்ளதை, இடை அறுக்கும் - ஊடுருவிச்சென்றுபோக்கும்: (ஆதலால்,) (ஆடவர்களே!) நீர்கள்—, நீங்குமின் நீங்கும் - விலகியிருங்கள் விலகியிருங்கள்,' என்று என்று- என்றுசொல்லியவண்ணம், அருக்கனில் ஒளிரும் மேனி ஆடவர் - சூரியனைப்போலவிளங்குகின்ற உடம்புபடைத்த ஆடவர், அகல போவார் - விலகிவழிவிட்டுச்செல்பவரானார்கள்; (எ - று.)

மகளிர்வருவதைக்கண்டு நெருக்கமாக இருந்த ஆடவர் தமதுபருவத்துக்குஏற்ப, 'இம்மகளிர் முககமலங்களிற்கூரியவாள் நமதுநெருக்கை யறுக்கும்: ஆதலால், விலகுங்கள்' என்று பிறருக்குச்சொல்லியவண்ணம் யாவரும் விலகி வழிவிட்டன ரென்க. முறுவலாரை யெழுவாயாக்கி யுரைத்தலுமொன்று. நெருக்கு - முதனிலைத்தொழிற்பெயர் பி - ம்:—[1]போனார். (ருஎ

௫அ.—மகளிர் போகமுடியாது நிற்கை.

நீந்தரு நெறியி னுற்ற நெருக்கினற்[1]சுருக்குண் டற்றுக்
காந்தின மணியு முத்துஞ் சிந்தின கலாபஞ் சூழ்ந்த
பாந்தளி னல்கு லார்தம் பரிபுரம் புலம்பப் பைம்பொற்
பூந்தளி ருறைப்ப மாழ்கிப் போக்கரி தென்ன நிற்பார்.

(இ - ள்.) நீந்த அரு-கடப்பதற்கு அருமையான, நெறியின் உற்ற - வழியிலே யுள்ள, நெருக்கினல் - (சன) நெருக்கத்தினல், சுருக்குண்டு அற்று - (கழுத்திலணிந்தமணிவடங்கள்)சுருக்குவீழ்ந்து அற்றுப்போய்,காந்தின மணிஉம் முத்துஉம் - பிரகாசிக்கின்ற இரத்தினங்களும் முத்துக்களும், சிந்தின - சிதறிக்கிடப்பவை,— கலாபம் சூழ்ந்த பாந்தளின் அல்குலார் - பதினறு கோவையணி சூழப்பெற்றதும் பாம்பையொத்ததுமான அல்குலையுடைய மகளிர், தம்பைம்பொன் பரிபுரம் புலம்ப பூந்தளிர் உறைப்ப - தாம் பூண்ட பசும்பொன்னிலாலியன்றநூபுரமும்(பாதங்கட்குநேர்ந்தவருத்தத்தைக்கண்டு புலம்புமாறு அழகியபாதங்களிலே யுறுத்த, மாழ்கி - தடுமாறி, போக்கு - நடந்துசெல்லுவது, அரிது - தமக்கு இயலாது, என்ன - என்று, நிற்பார் - போதலைவிட்டு நிற்பவராயினர்; (எ - று.)

அல்குலார், நெருக்கினலற்றுச்சிந்தின மணியும் முத்தும் தளிர்போல் மெல்லியபாதங்களிலே யுறைப்பதனலே போக்குஅரிதென்று நிற்பவராயின ரென்க. நெருக்கினற் சுருக்குண்டு முத்தாரமும் மணியாரமும் அற்றுச்சிந்தினவென்க.நடந்துசெல்லும்போது நூபுரம்ஒலிப்பது,அவர்கள் தளிர்ப்பாதங்களில் மணிமுத்துக்கள் உறைப்பதற்குவருந்திப் புலம்பினபோலு மென்றர். பரிபுரம் புலம்பஎன்றஇடத்துத் தற்குறிப்பேற்றத்தைத் தெரிவிக்கும் உருபு தொக்குவந்தது. உருவகமாகப் பாதங்களைத் தளிரென்றே கூறினர். பி - ம்:— [1]சுருக்குண்டற்ற. (௫அ)

௫௯.—பண்டியிற் கட்டிய எருதுகள் வாச்சியவொலியால் அறுத்துக்கொண்டு செல்லுதல்.

கொற்ற[1]நல் லியங்க ளெங்குங் கொண்டலிற் றுவைப்பப் [2]பண்டிப்
பெற்றவே றன்னப் புள்ளிற் பேதையர் வெருவி நீங்க
முற்றுறு பரங்க ளெல்லா முறைமுறை பாசத் தோடும்
பற்றற வீசி [3]யேகி யோகியிற் பரிவு தீர்ந்த.

(இ - ள்.) கொற்றம் நல் இயங்கள் - வெற்றிபொருந்திய சிறந்த வாச்சியங்கள், எங்குஉம் - எல்லாவிடத்தும், கொண்டலின் துவைப்ப - மேகம் இடிப்பதுபோலப் பேரொலிசெய்ய (அதனல் மருட்சியடைந்த), பண்டி பெற்றம்ஏறு - பண்டிகளிற்கட்டிய சிறந்த எருதுகள், அன்னம் புள்ளின் பேதையர் வெருவி நீங்க - அன்னப்பறவைகள்போல மகளிர் பயந்துநீங்கவும், முற்று உறு பரங்கள் எல்லாம் முறை முறை பாசத்தோடுஉம் பற்று அற வீசி - (தம்மீது) நிரம்பப்பொருந்திய சுமைக ளெல்லாம் வரிசைவரிசையாக

(அவற்றைக் கட்டிய)கயிறுகளோடும் தொடர்புஇல்லாமல் அற்றுப்போக (அப்பண்டங்களைச்) சிதறிவிழச்செய்திட்டு, ஏகி - போய், யோகியின் - தவ சியைப்போல, பரிவு தீர்ந்த - வருத்தம் நீங்கின; (எ - று)

பண்டங்களைப்பெய்துகட்டிய பண்டிகளிற் பூட்டப்பெற்ற சிறந்த எருதுகள் பலவாச்சியங்கள் பேரொலிசெய்ததனால் வெருண்டுபோய் வண்டியிற் பெய்தபொருள்களெல்லாம் கட்டற்றுவீழும்படி தம்முடையகட்டையும் அறுத்துக்கொண்டு மூர்க்கத்தனமாகச் சென்றனவென்பதாம். பாசம்நீங்குதல் பரிவுதீர்தல் என்ற இரண்டு தன்மையால், யோகி, பெற்றவேற்றுக்கு உவமை. யோகிக்குப் பாசம்தீர்தல் - ஆசையொழிதல்: எருத்துக்குப்பாசம் தீர்தல் - கட்டியகயிறு அற்றுப்போதல். யோகிக்குப் பரிவுதீர்தல் - பிறவித்துயரம்நீங்குதல், எருத்துக்குப்பரிவுதீர்தல் - சுமைத்துயரம் நீங்குதல்.
பி - ம்:—[1]பல். [2]மண்டி. [3]செல்லும்.　　(ருகூ)

கூ0—நீர்நிலையில் யானைகள் அமிழ்ந்து கரையேறாதுநிற்றல்.

*காற்செறி வேகப் பாகர் கார்முக வுண்டை பாரா
வார்ச்சிறைக் கொங்கை யன்ன கும்பமு மருப்புங் காணப்
பாற்செறி கடலிற் றோன்றும் [1]பனைக்கைம்மால் யானை யென்ன
நீர்ச்சிறை பற்றி யேறா நின்றகுன் றனைய வேழம்.

(இ - ள்.) குன்று அனைய வேழம் - மலையையொத்த யானைகள், நீர் சிறை பற்றி - நீர்நிலையைக்கண்டு, (அதிலிறங்கி), பாகர் கால் செறி வேகம் கார்முகம் உண்டை பாரா-(தம்)பாகரெறிந்த காற்றுப்போலும் பொருந்திய வேகத்தையுடைய வில்லுண்டையை இலட்சியஞ்செய்யாமல், வார் சிறை கொங்கை அன்ன கும்பமும் மருப்பும் காண - கச்சுக்களினுள்ளேயிருக்கின்ற தனங்களையொத்த (தமது) மத்தகமும் தந்தங்களும் வெளியேதெரியவும், பால் செறி கடலில் தோன்றும் பனை கை மால் யானை என்ன-பாற்கடலிற்றோன்றிய பனைமரம்போலுந் துதிக்கையையுடைய பெரியஐராவதமென்ற யானைபோல(த்தோன்றிக்கொண்டு),ஏறா- கரையேறாமல், நின்ற - (அந்நீர்நிலையில்தானே) நின்றன; (எ - று.)

செல்லும்வழியில் நீர்நிலையைக்கண்டவுடன் அதிலிறங்கியயானைகள் தமது பாகர் கரையேறுமேறு வில்லுண்டையால் அடிக்கவும் அதனையும் இலட்சியஞ்செய்யாது தமதுமத்தகமும் தந்தங்களும் வெளித்தெரியுமாறு அந்த நீர்நிலையில்தானே துளைந்துகொண்டிருந்தன வென்க. பாற்கடலினின்று வெளியேறவிருந்த ஐராவதயானையை இந்த நீர்நிலையிற்கிடக்கும் யானைகட்கு உவமைகூறினர். பி - ம்:—[1]பணை.　　(கூ0)

கூக.—யாழ்வாசிப்பவர் குதிரைமீதேறிச் செல்லுதல்.

அறலியற் கூந்தற் கண்வா ளமுதுறு குமுதச் செவ்வாய்
விறலிய ரோடு நல்யாழ்ச் செயிரியர் புரவி மேலார்
நறைசெவிப் பெய்வ தென்ன [1]நைவள வமுதப் பாடன்
முறைமுறை பகர்ந்து போனார் கின்னர மிதுன மொப்பார்.

(இ - ள்.) கின்னரம் மிதுனம் ஒப்பார் - கின்னரமிதுனங்களையொப்பவராகிய,-அறல் இயல் கூந்தல் - கருமணலையொத்த கூந்தலையும், வாள் கண் - வாள்போன்ற கண்களையும், அமுது உகு குமுதம் செவ்வாய்-அமுதம் சிந்துவதுபோன்ற இன்சொற்களைச்சொல்லுகின்ற செவ்வாம்பல்போன்ற செவ்வாயையுமுடையரான, விறலியரோடு - பாடினியருடனே, நல் யாழ் செயிரியர் - சிறந்தவீணைவாசித்தலில்வல்ல பாணர்கள், புரவி மேலார் - குதிரைமீது ஏறினவர்களாய்,—செவி நறை பெய்வது என்ன - காதுகளினுள்ளே தேனைச் சொரிவதுபோல, நைவளம் அமுதம் பாடல் - நைவளமென்றபண்ணோடு கூடிய இனிய பாடலை, முறை முறை பகர்ந்து - பாடவேண்டிய முறைபிறழாது பாடியவண்ணம், போனார்—; (எ - று.)

பாணர்கள் விறலியரோடு குதிரைமீதேறி, முறைதவறாது இனிமையாகப்பாடிக்கொண்டு செல்லலாயின ரென்பதாம். நைவளம் - நட்டபாடையென்னும்ராகமென்பார். 'நனைவளர் மேகப் பாடல் முறைமுறை நணுகப் போனார் என்ற பாடம்-குளிர்ச்சிமிக்க மேகராகக்குறிஞ்சிப்பாடல் முறைப்படி பொருந்தச்சென்றார்க ளென்று பொருள்படும்; இந்தப்பாடத்திற்கு - வெவ்விய கோடைக்காலத்துப்பாடினும் மேகங்களைக்கூட்டி மழைபெய்விக்கவல்ல தாதலால், 'நனைவளர் மேகப்பாடல்' என்றாரெனக. கின்னரம் - ஆணும்பெண்ணுமாகஇருப்பது: ஒருதேவசாதி: இசையறிபறவை யென்றலுமுண்டு. (௬௧)

௬௨.—யானைகளின் செலவு.

அருவிபெய் வரையிற் பொங்கி யங்குச நிமிர வெங்கு
[1]மிரியலிற் [2]சனங்கள் சிந்து மிளங்களிச் [3]சிறுகண் யானை
[4]விரிசிறைத் தும்பி [5]வேறோர் வார்மதந் தோய்ந்து மாதர்
சுரிகுழற் படிய [6]வேற்றின் பிடியொடுந் தொடர்ந்து [7]செல்ப.

(இ - ள்.) அங்குசம் நிமிர - (பாகன்கையிலிருந்த) மாவெட்டி யோங்க, (அதுகண்டு), அருவி பெய் வரையின் பொங்கி - அருவிநீரைப்பொழிகின்ற மலைபோன்றதோற்றத்தோடு கிளர்ந்தெழுந்து, இரியலின் - நிலைகெட்டு ஓடுவதனால், எங்குஉம் சனங்கள் சிந்தும் - எல்லாவிடத்தும் ஜநங்களைச்சிதறவடிக்கின்ற, இள களி சிறு கண் யானை - இளமையையும் மதக்களிப்பையும் சிறியகண்களையுமுடைய யானைகள், விரி சிறை தும்பி வேறு ஓர் வார் மதம் தோய்ந்து - (மதத்தின்மீதுமொய்த்துள்ள) விரிந்த சிறகுகளையுடைய வண்டுகள் வேறொரு (யானையின்) பெருகுகின்ற மதநீரிற் படிந்து, மாதர் சுரி குழல் படிய - மாதரின் நெறிந்தகூந்தலிற் படியுமாறு, வேற்றின்பிடியொடுஉம் தொடர்ந்து செல்ப - வேறோர் பெண்யானையைத் தொடர்ந்து செல்வனவாயின; (எ - று.)

யானைப்பாகர் அங்குசத்தை யோங்குவதனால் நிலைகெட்டுச்சனங்கள்சிதறும்படிஓடலுற்ற யானைகள் தமதுவேகத்தினால் தம்மைவிட்டு வேற்றுயானை மதநீரிற் படிந்த வண்டுகள் அவ்யானைமதநீரினும் நறுமணம்மிக்கிருத்தலால் மீண்டுவந்து மாதர்கூந்தலிற்படியுமாறு மகளிரேறிச்செல்லும் வெவ்வேறு

யானைகளைச் சேர்ந்த பெண்யானையைத் தொடர்ந்துசெல்ல லாயின வென்ப தாம். மகளிர்பெண்யானைமீது ஏறிச்செல்வ ரென்க. இனி, இந்தச்செய்யுளில் மாதர்என்பதை எழுவாயாக்கி, சனங்கள் சிந்தும் யானை இரியலின், (அவற்றின்மீது மொய்த்த) தும்பிவேறோர்வீழ்மதத்தில், தோய்ந்து - படிய விரும்பி, சுரி குழல் படிய - (தமது) சுரிந்துள்ளகுழலிற்படியுமாறு, பிடியொடும் தொடர்ந்து செல்ப - பிடியானைபோன்ற நடையுடனே செல்வார்க ளென்று பொருள்கூறினுமாம். பி - ம்:— [1]இரிதர. [2]சினங்கள் சிந்தும், சனங்கள் சிந்த. [3]செங்கண். [4]வரிசிறை. [5]மற்றோர் வீழ்மதம். [6]ஒற்றிப்பிடியையும், வெற்றிப்பிடியோடு. [7]செல்வார். (கூஉ)

கூங.—அரசன்நேயமங்கையர் புறப்படுதல்.

நிறைமதித் தோற்றங் கண்ட நீனெடுங் [1]கடலி தென்ன
பறைபறை துவைப்பத் தேரு மானையு மாடன் மாவுங்
[2]கறைகெழு வேற்க ணாரு மைந்தருங் [3]கவினி யொல்லை
நெறியிடைப் படர வேந்த னேயமங் கைய[4]ரெ ழுந்தார்.

(இ - ள்.) நிறை மதி தோற்றம் கண்ட நீல் நெடுங் கடல் இதுஎன்ன - பதினாறுகலைகளும் நிரம்பிய சந்திரனது உதயத்தைக்கண்ட நீலநிறமுள்ள கடல்போலும் இது என்றுசொல்லும்படி, அறை பறை துவைப்ப-(குணில் கொண்டு) எறியப்படுகின்ற பறைகள் ஒலிக்கவும்,—ஆனைஉம்—,தேர்உம்—, ஆடல்மாஉம் - ஆடுந்தன்மையுள்ள குதிரையும், கறை கெழு வேல் கணார்உம்- இரத்தக்கறைவிளங்குகின்ற வேற்படைபோன்ற கண்களையுடையவரான மகளிரும், மைந்தர்உம் - ஆடவரும், கவினி - அழகுபொருந்தக்கூடி, ஒல்லை - விரைவாக, நெறியிடை படர - வழியிற்செல்லவும்,—வேந்தன் நேயம் மங்கையர் - அரசனது அன்பிற்குஉரிய மங்கைமார், எழுந்தார் - புறப்பட்டார்.

கடல் இதென்னப் படர வென்க. பறையறைதலாற் பேராரவாரமுண்டாகப் பெருமகிழ்ச்சியுடனே செல்லுகின்ற தேர் ஆனைமுதலிய சதுரங்கக் கட்கு,பூர்ணசந்திரனைக்கண்டு பேராரவாரத்துடனே பொங்கியெழுங் கடலை உவமை கூறினர். சதுரங்கசேனைகள் தமக்குமுன்னேசெல்ல, அரசனது நேயமங்கையர் பிரயாணப்பட்டன ரென்க. நேயமங்கையரென்றது - அரசனால்மணக்கப்பட்டு அவனது அன்பிற்குஉரியவரான மகளிர்யாவரையுங் காட்டும். தோற்கருவியாகிய பறையைக்கூறியது - மற்றைத்துளைக்கருவி முதலியவற்றிற்கும் உபலட்சணம். நீல்-கடைக்குறை. பி - ம்:— [1]கடலிற்றாகி. [2]விறல்கெழு. [3]விரவி. [4]தாஞ் செல்வார். (கூங)

கூச —கைகேசி சிவிகைமீது செல்லுதல்.

பொய்கையங் கமலக் கானிற் பொலிவதோ ரன்ன மென்னக்
கைகயர் வேந்தன் பாவை கணிகைய [1]ரணியி னீட்ட
மையிரு நூறு [2]சூழ வாய்மணிச் சிவிகை தன்மேற்
றெய்வமங் கையரு நாணத் தேனிசை முரலப் போனாள்.

(இ - ள்.) பொய்கை அம் கமலம் கானில் - தடாகத்தின் மலர்ந்தஅழகிய தாமரைக்காட்டிலே, பொலிவது - விளங்குவதாகிய, ஓர் அன்னம் என்ன - அன்னப்பறவைபோல, கைகயர் வேந்தன் பாவை - கேகயவரசனது மகளாகிய கைகேயி,கணிகையர் அணியின் ஈட்டம் ஐயிருநூறு சூழ-வேசைமங்கையரின் அணியணியாகவுள்ள ஆயிரக்கணக்கான கூட்டம் (தன்னைச்)சுற்றிநிற்கவும், தெய்வமங்கையர்உம் நாண - தேவலோகத்துமங்கையரும் (தனது சிறப்பைக்கண்டு)வெட்கமடையவும், தேன் இசை முரல - (மலர்களில் மொய்த்துள்ள) வண்டுகள் இன்னிசைபட ஒலிக்கவும், ஆய் மணி சிவிகைதன்மேல் - ஆராய்ந்து பதிக்கப்பெற்ற மணிகளாலியன்ற சிவிகையில்,போனாள் —; (எ - று.)

தாமரைமலர்போன்ற கைகால் முதலிய உறுப்புக்களையுடைய கணிகையர் ஆயிரவர்சூழச் செல்லும் கைகேயிக்கு, கமலக்கானிற்பொலியும் அன்னத்தை உவமை கூறினர். பி - ம்:—[1]ஈட்டம்பொங்கி. [2]சூழ்ந்த. (௬௪)

௬௫.—கஞ்சுகமாக்கள் மாதராரைக் காத்துச்செல்லுதல்.

காரண மின்றி யேயுங் கனலெழ விழிக்குங் கண்ணார்
[1]வீர வேத் திரத்தார் [2]தாழ்ந்து விரிந்தகஞ் சுகத்து மெய்யார்
தாரணி புரவி மேலார் தலத்துளார் [3]சலித்த சொல்லா
ராரணங் கனைய மாத ரடிமுறை காத்துப் போனார்.

(இ - ள்) காரணம் இன்றி ஏ உம் கனல் எழ விழிக்கும் கண்ணார் - காரணமில்லாமலிருக்கையிலும் நெருப்புப்பொறி மேற்கிளம்ப விழிக்குங் கண்களையுடையவரும், வீரம் வேத்திரத்தார் - (தமது) வீரம் தோன்றுமாறு பிரப்பங்கோலைக் கையிற்கொண்டிருப்பவரும், தாழ்ந்து விரிந்த கஞ்சுகத்து மெய்யார் - (பாதம்வரையில்) தொங்கிப் பரவியிருக்கிற சட்டையை(த் தம்) உடம்பிலணிந்துள்ள வருமான கஞ்சுகமாக்கள்,—தார் அணி புரவி மேலார்- கிங்கிணிமாலையையணிந்த குதிரையின்மீது ஏறிவருபவரும், தலத்து உளார்- பூமியின்மீதுநடந்துவருபவரும், சலித்த சொல்லார்—(கிளிமுதலியவை தோற்றுப்) பின்னடைகின்ற இன்சொல்லையுடையவருமான, ஆர் அணங்கு அனைய- அரிய உருவமுள்ள தெய்வமங்கையரையொத்த, மாதர் - மகளிரின், அடி - பாதங்களை, முறை - முறைப்படி, காத்துப்போனார்—;(எ - று.)

அரசனது நேயமங்கையர் கைகேயி என்ற இவர்கள் குதிரைமீது இவர்ந்தும் தாள்களால்நடந்துஞ் செல்லும்போது கனலெழவிழிக்குங் கண்முதலியவற்றையுடைய கஞ்சுகமாக்கள் அவர்களைப் பாதுகாத்துச்சென்றனரென்க. இனி, இச்செய்யுட்கு - கஞ்சுகமாக்களாகியமாதர் பரியின்மீது ஏறினவரும் தலத்தில்நடந்துவருபவருமாகிக் கைகேயியின்பாதங்களைக்காத்துச் சென்றனரென்று உரைத்தலும் ஒன்று. காரணமின்றிக் கனலுதல் - பிறர் அணுகாமலிருத்தற்பொருட்டு. மாதரென்பது கைகேயியையே காட்டுமென்னலும் ஒன்று. பி - ம்:—[1]வீரர். [2]கேள்விவிருதர். [3]தடித்த கதித்த.

கைகேசி சுமித்திரை கௌசலை யென்ற மூவர் சென்றதை முறையே தெரிவிப்பனவாகிய "பொய்கையங்கமலக்கானில்" (௬௪), "விரிமணித்தார்

கள்" (சுசு), "வெள்ளெயிற்றிலவச்செவ்வாய்" (சுஅ) என்ற பாடல்கள் வரிசையாகவும், அவற்றின்பின்னே "செங்கையின்மஞ்ஞை" (சுஎ), "காரணமின்றியேயும்" (சுகு),"கூனுடுகுறளும்" (சுக) என்பன வரிசையாகவும் சில பிரதிகளி லுள்ளன. (சுகு)

சுசு.—சுமித்திரை செல்லுதல்.

விரிமணித் தார்கள் பூண்ட [1]வேசரி வெரிநிற் றோன்று
மரிமலர்த் தடங்க ணல்லா ராயிரத் திரட்டி சூழக்
குருமணிச் சிவிகை தன்மேற் கொண்டலின் மின்னி தென்ன
விருவரைப் பயந்த நங்கை யாழிசை முரலப் போனாள்.

(இ - ள்.) விரி மணி தார்கள் பூண்ட - (ஒளி) விரிந்த கிங்கிணிமாலைகளைப் பூண்ட, வேசரி - கோவேறுகழுதையின், வெரிநில் - முதுகில்(ஏறி), தோன்றும் - காணப்படுகின்ற, அரி மலர் தட கண் நல்லார் - செவ்வரி பரந்துள்ளனவும் தாமரைமலரையொத்தனவுமாகிய பெரியகண்களையுடைய மகளிர், ஆயிரத்து இரட்டி சூழ - இரண்டாயிரவர் (தன்னைச்)சுற்றிலும்வர,—இருவரை பயந்த நங்கை - (இலக்குமணன் சத்துருக்கனன் என்ற) இரட்டைப்பிள்ளைகளைப்பெற்றவளான சுமித்திராதேவி, கொண்டலின் மின் இது என்ன - 'நீர்கொண்ட மேகத்தில்தோன்றுகின்ற மின்னலாகும் இவ்வுருவம்' என்று கண்டோர் கருதும்படி, குரு மணி சிவிகை தன் மேல் - பருத்த நீலமணிகளழுத்திச்செய்யப்பட்டுள்ள சிவிகையின்மீது, யாழ் இசை முரல - வீணைகானம்முழங்க, போனாள்—; (எ - று.)

நீலமணிச்சிவிகையிலிருக்குஞ் சுமித்திராதேவிக்குக் கொண்டலில் தோன்றும் மின்னல், உவமை.சிவிகையிற் சுமித்திராதேவிசெல்ல, இரண்டாயிரம்மங்கைமார் கோவேறு கழுதையின்மீதுஏறி அவளைச் சூழ்ந்து சென்றன ரென்க. பி - ம்:—[1] வெல்பரி. (சுசு)

சுஎ.—அந்தச் சுமித்திரையை மகளிர் சூழ்ந்து செல்லுதல்.

[1]செங்கையின் மஞ்ஞை யன்னஞ் சிறுகிளி பூவை பாவை
சங்குறை [2]கழித்த வன்ன சாமரை முதல தாங்கி
[3]யிங்கல தெண்ணுங் காலிவ் வெழுதிரை வளாகந் தன்னின்
மங்கைய ரில்லை யென்ன மடந்தையர் மருங்கு போனார்.

(இ - ள்.) 'எண்ணுங் கால் - ஆலோசிக்குமிடத்து, இ எழு திரை வளாகந்தன்னில் - இந்த ஏழுகடல்களாற்சூழப்பட்ட பூமண்டலத்திற்குள், இங்கு அலது - இவ்விடத்திலல்லாமல், மங்கையர் - மகளிர், இல்லை - வேறிடத்திலில்லை', என்ன - என்று (கண்டவர் கருதுமாறு) [அவ்வளவு பெருந்திரளாக], மடந்தையர் - மகளிர்கள்,—செம் கையில் - (தமது) அழகிய கையில், மஞ்ஞை - மயிலும், அன்னம் - அன்னப்பறவையும், சிறு கிளி - சிறிய கிளியும், பூவை - நாகணவாய்ப் பறவையும், பாவை - பிரதிமையும், சங்கு உறை கழித்த அன்ன சாமரை-சங்கத்தினை (அப்போது தான்) உறை

யிலிருந்து எடுத்தாற் போன்ற [மிகவும்வெண்மைநிறமுள்ள] சாமரையும், முதல - முதலியவற்றை, தாங்கி - தாங்கிக்கொண்டு, மருங்கு - (அந்தச் சுமித்திராதேவியின்) பக்கத்திலே, போனர்—; (எ - று.)

இதனல், சுமத்திராதேவியினுடைய பாங்கிமார்களான மடந்தையர் மிகப்பலர் தமதுகைகளில் மயிற்பறவைமுதலியவற்றைத் தாங்கிக்கொண்டு உடன்சென்றமையைக் கூறுகின்ரூர். திரை - கட்டுக்கு, ஆகுபெயர். சிலபிரதிகளில், இந்தச்செய்யுள், கௌசல்யாதேவிசென்றமையைத் தெரிவிக்கின்ற "வெள்ளெயிற்று" என்றுதொடங்கும் பாட்டுக்குப்பின்னே காணப்படுகின்றது. பி - ம்:—[1]செங்கையால். [2]கழித்தது. [3]இங்கிதனெண்ணுங்காலமற்றெழுவள்ளாகத்தெல்லே, இங்கல தெண்ணுங்கான்மற்றெழுதிரைவள்ளாகத்தெங்கும். (கூஎ)

கூஅ.—கௌசலாதேவி செல்லுதல்.

வெள்ளெயிற் றிலவச் செவ்வாய் முகத்தைவெண் மதிய மென்று
கொள்ளையிற் [1]றிரளு மீன்கள் குழுமிய [2]வனைய வூர்தி
தெள்ளரிப் [3]பாண்டி பாணிச் செயிரிய ரிசைத்தேன் சிந்த
வள்ளலைப் பயந்த நங்கை வானவர் வணங்கப் போனள்.

(இ - ள்) வெள் எயிறு - வெண்ணிறமுள்ள பற்களையும், இலவம் செவ்வாய்—இலவம்பூப்போலுஞ் செந்நிறமுள்ள அதரத்தையுமுடைய, முகத்தை - (கௌசலாதேவியினுடைய) முகத்தை, வெள் மதியம் என்று - வெண்ணிறமுள்ள சந்திரனென்றுகருதி, கொள்ளையில் திரளும் மீன்கள் குழுமிய அனைய - மிக்ககூட்டமாகவுள்ள நட்சத்திரங்கள் ஒருங்கேகூடினற்போல, (பலமணிகள்பதிக்கப்பெற்றுள்ள), ஊர்தி - சிவிகையாகிய வாகனத்திலே,— வள்ளலை பயந்த நங்கை - (அடியார்க்கு) வரையாது கொடுக்குந்தன்மையுள்ள ஸ்ரீராமபிரானைப்பெற்ற மகளிரிற்சிறந்தவளான கௌசல்யாதேவி, தெள் அரி பாண்டி பாணி செயிரியர் - தெளிந்தவண்டுகளினிசையையொத்த பாண்டியென்னும்பண்ணேடுகூடிய இசைப்பாட்டில்வல்லபாடகர், இசை தேன் சிந்த - இசையாகியதேனைச் சொரியவும், வானவர் வணங்க - தேவர்கள் (தன்னைக்கண்டு) வணங்கவும், போனள்—;(எ - று.)

கௌசல்யாதேவியார் ஏறிச்சென்ற சிவிகையிற் பலமணிகளழுத்தியிருப்பதை, கவி, அந்தக்கௌசலையாரின்முகத்தைச் சந்திரனென்று மயங்கி வானத்திற்சிதறிக்கிடந்த நட்சத்திரங்கள் ஒருங்குசேர்ந்துவந்ததை யொக்குமென்ரூர்; மயக்கவணியை யங்கமாகக்கொண்டுவந்த தற்குறிப்பேற்றவணி. பிரதானபட்டமகிஷி செல்வதனல்,செயிரியர் இசைப்பாட்டைப் பண்ணேடு பாடலாயினர். ஸ்ரீமகாவிஷ்ணுவை மகனகப்பெற்றெடுத்த மாண்புடையவளாதலால், கௌசலையை வானவர் வணங்கின ரென்க. பி - ம்:—[1]சுற்றும், சுற்றி. [2]அனையவாகி. [3]பாண்டில்.

(கூஅ)

**சுகூ.—கூனர்முதலியவரும் பலமகளிரும் அந்தக்கௌசலையைத் தொடர்ந்துசெல்லுதல்.**

கூனொடு குறளுஞ் சிந்துஞ் சிலதியர் குழாமுங் கொண்ட
பானிறப் புரவி யன்னப் புள்ளெனப் பாரிற் செல்லத்
தேனொடு மிஞிறும் வண்டுந் தும்பியும் [1]பரந்த செய்ய
பூநிறை கூந்தன் மாதர் புடை[2]புடை நடையிற் போனார்.

(இ - ள்.) கூனொடு - கூனர்களும், குறள் உம் - குறளரும், சிந்து உம்-சிந்தரும், சிலதியர் குழாம் உம் - தோழியர்கூட்டமும், கொண்ட - ஏறிய பால் நிறம் புரவி - பால்போன்ற [வெள்ளிய] நிறத்தைக்கொண்ட குதிரைகள், அன்னம் புள் என - அன்னப்பறவைகள்போல, பாரில் செல்ல - பூமியில் நடந்துபோக,—தேனொடு - தேன்வண்டுகளும், மிஞிறு உம் - ஞிமிறும், வண்டு உம் - மற்றைவண்டுகளும், தும்பி உம் - தும்பியென்னும் வண்டுகளும், பரந்த - பரவியுள்ள, செய்ய பூ - அழகியமலர்கள், நிறை - நிறைந்துள்ள, கூந்தல் - மயிர்முடியையுடைய, மாதர் - மகளிர், புடைபுடை - பக்கங்களிலெல்லாம், நடையில் போனார் - நடந்துசென்றார்கள்; (எ - று.)

கீழ்க்கவியிற் கௌசலாதேவி சென்றதைக் கூறிய கவி, இந்தக்கவியில், அன்னாள் கூன்முதலியவர் புரவிமீதேறியும் மகளிர்பலரும் கால்நடையாகவும் பக்கத்திற் சென்ற வகையைக்கூறுகின்றார். தேன்முதலியவை வண்டின் சாதிபேதங்களாதலைச் சீவகசிந்தாமணியாலும், அங்கு நச்சினார்க்கினியர்கூறிய உரையாலும் உணர்க. பி - ம்:— [1]தொடர்ந்து செல்ல, பந்தர் செய்ய. [2]பிடிநடையில், மடப்பிடியில். (சுகூ)

**எ0.—மற்றும்பலமங்கையர் அந்தக்கௌசலையைத் தொடர்ந்து வாகனத்தின்மீதேறிச் செல்லுதல்.**

*துப்பினின் மணியிற் பொன்னிற் சுடர்மரகதத்தின் முத்தி
னொப்பற வமைத்த [1]வைய மோவியம் போல வேறி
முப்பதிற் றிரட்டி கொண்ட [2]வாயிர முகிழ்மென் கொங்கைச்
செப்பருந் திருவி னல்லார் [3]தெரிவையர் சூழப் போனார்.

(இ - ள்.) முகிழ் மெல் கொங்கை - (தாமரை) அரும்புபோன்ற மெல்லிய தனங்களையுடையவராகி, செப்ப அரு திருவின் நல்லார் - சொல்லுவதற்குமுடியாதபடி இலக்குமியினும் பேரழகுபடைத்தவரான, முப்பதிற்று இரட்டி ஆயிரம்கொண்ட - அறுபதினாயிரமென்னும் எண்ணைக் கொண்ட, தெரிவையர் - மகளிர்,—துப்பினின் - பவழத்தினாலும், மணியின் - இரத்தினங்களினாலும், பொன்னில் - சுவர்ணங்களினாலும், சுடர் மரகதத்தின் - ஒளியைவிடுகின்ற மரகதத்தினாலும், முத்தின் - முத்துக்களினாலும், ஒப்பு அற அமைத்த - (தமக்கு)வேறுபொருள் ஒப்பற்றனவாகும்படி இயற்றப்பட்டுள்ள, வையம் - வண்டியில், ஓவியம்போல ஏறி - சித்திரப்பதுமை யேறுவதுபோல ஏறி,— சூழ போனார் - (அந்தக் கௌசல்யாதேவியைச்) சூழ்ந்து சென்றார்கள்;(எ - று.)

அறுபதினுயிரம் மங்கையர் பலவகையரதனங்களினுலியன்ற வண்டிக ளிலேறிக்கொண்டு கௌசலாதேவியைச் சூழச்சென்றனரென்க. நவரத்தி னங்களிற்சேர்ந்த பவழம் முதலியவற்றைத் தனியேஎடுத்துக்கூறியிருத்த லால்,'மணி'என்றது - அவைக்ளொழிந்த மற்றையிரத்தினங்களைக்காட்டும். பி - ம்:—[1]தேரினேவியம்போல, பைம்பூணேவியம்புகழ. [2]ஆயிரர். [3]தேர் மிசை. (எ0)

எக.—வசிட்டமுனிவன் செல்லுதல்.

செவிவயி னமுத கேள்வி தெவிட்டினர் தேவர் நாவி
னவிகையி னளிக்கு நீரா [1]ராயிரத் திரட்டி சூழக்
கவிகையி னீழற் கற்பி னருந்ததி கணவன் [2]முத்துச்
சிவிகையி னன்ன மூருந் திசைமுக னென்னச் சென்ருன்.

(இ - ள்.) கற்பின் அருந்ததி கணவன் - (எல்லாமங்கையர்க்கும் உவ மையாகின்ற) பதிவிரதாதருமத்தையுடைய அருந்ததீதேவியின் கணவனை வசிட்டமுனிவன்,—செவிவயின் அமுதம் கேள்வி தெவிட்டினர் - (தமது) காதின்மூலமாக அமுதம்போலினிய நூற்கேள்விகளைத் தெவிட்டுமாறு மிகு தியாகஉட்கொண்டவரும், தேவர் நாவின் அவி கையின் அளிக்கும் நீரார் - தேவர்கள் (தமது)நாவினுற் சுவைக்கின்றஅவிசை (த் தமது) கைகளினுற் கொடுக்கின்றதன்மையையுடையவர்களுமாகிய அந்தணர்,ஆயிரத்து இரட்டி சூழ -இரண்டாயிரம்பேர்(தன்னைச்)சுற்றிவர,—கவிகையின்நீழல் -குடைநிழ லிலே,—முத்து சிவிகையின் - முத்துக்கள்பதித்துச்செய்யப்பட்ட பல் லக்கிலே(ஏறி), அன்னம் ஊரும் திசைமுகன் என்ன - அன்னப்பறவையை வாகனமாகக்கொண்டு ஏறிச்செல்லுகின்ற பிரமதேவன்போல, சென்ருன்.

வெண்ணிறமுத்துபபல்லக்கிலேறிச்செல்லுகின்ற பிரமகுமாரனை வசி ட்டமுனிவனுக்கு, வெண்ணிறப்பறவையாகிய அன்னத்திலேறிச்செல்லும் பிரமதேவனை உவமைகூறினர். அங்ஙனஞ்செல்லுகின்றவசிட்டமுனிவனை மிக்கநூற்கேள்வியையுடைய பலஇருடியர் சூழ்ந்துசென்றன ரென்க. பி-ம்:- [1]ஐயிருகோடி, ஆயிரகோடி. [2]வெள்ளை, முத்தின். (எக)

எஉ.—பாதசத்துருக்கனர் வசிட்டமுனிவன்பின்னே செல்லுதல்.

பொருகளி றிவுளி பொற்றேர் பொலங்கழற் குமரர் முந்நீ
ரருவரை சூழ்ந்த தென்ன வருகு[1]முன் பின்னுஞ் செல்லத்
திருவளர் மார்பர் தெய்வச் சிலையினர் தேரர் வீர
ரிருவரு முனிபின் போன விருவரு மென்னப் போனர்.

(இ - ள்.) பொரு களிறு - போர்செய்தற்குரிய யானைகளும், இவுளி - குதிரைகளும், பொன் தேர் - அழகிய தேர்களும், பொலன் கழல் குமரர் - பொன்னலாகிய வீரக்கழலையணிந்த காலாட்படைகளும், (ஆகியஇவைகள்), முந்நீர் அரு வரை சூழ்ந்தது என்ன - சமுத்திரமானது (அளத்தற்கு) அரிய மலையைச் சூழ்ந்ததுஎன்னும்படி, அருகு முன் பின்உம் செல்ல - (தம் முடைய) சமீபமாக முன்புறத்திலும் பின்புறத்திலும் நடந்தவண்ண

மிருக்க,—திரு வளர் மார்பர் - ஜயலட்சுமிதங்கப்பெற்ற மார்பையுடைய வரும், தெய்வம் சிலையினர் - தெய்வப்படைகளையெய்யவல்ல அம்பையுடைய வர்களும், தேரர் - அதிரதரும், வீரர்-மகாவீரர்களுமாகிய, இருவர்உம்- (பரதன் சத்துருக்கினன் என்ற) இவ்விருவரும், முனி பின் போன இரு வர்உம் என்ன - விசுவாமித்திரமுனிவனது பின்னேபோன (இராமன் இலக்கு மணன்என்ற)இருவரும்போல, போனார்- (வசிட்டமுனிவன்பின்னே)போனார்

வசிட்டமுனிவன் பின்னேசெல்லுகின்ற பரதசத்துருக்கினர்கட்கு, விசுவாமித்திரமுனிவன்பின்னே சென்ற இராமலக்குமணரை யுவமை கூறி னார். நால்வகைச்சேனைகட்குக் கடலும், பரதசத்துருக்கினர்கட்கு அருவரை யும் உவமையாகும். பி - ம்:—[1] பின்முன்னும். (எஉ)

எங.—தசரத சக்கரவர்த்தி புறப்படுதல்.

நித்திய நியம முற்றி நேமியான் பாதஞ் சென்னி
வைத்தபின் மறைவ லோர்க்கு வரம்பறு மணியும் பொன்னும்
பத்தியா னிரையும் பாரும் [1]பரிவுட னல்கிப் போனான்
முத்தணி வயிரப் பூணான் மங்கல முகூர்த்த நன்னாள்.

(இ - ள்.) முத்து அணி வயிரம் பூணான் - முத்துக்களினாலும் அழகிய வயிரக்கற்களினாலுமியன்ற ஆபரணங்களையணிந்தவனாகிய தசரதசக்கர வர்த்தி,— நித்தியம் நியமம் முற்றி - (தனது) நித்தியக்கடன்களை முடித்து விட்டு, நேமியான் பாதம் சென்னி வைத்த பின் - சக்கராயுதத்தையுடையவ னாகிய திருமாலின் திருப்பாதங்களை (த் தனது) முடியிலே வைத்தபின்பு, [தனதுகுலதெய்வமாகிய திருமாலைவணங்கியபின்பு],— மறைவலோர்க்கு - அந்தணர்க்கு, வரம்பு அறு - எல்லையில்லாத, மணிஉம் - இரத்தினமும், பொன்உம் - சுவர்ணமும், பத்தி ஆன் நிரைஉம் - வரிசையாகஉள்ள பசுக் கூட்டமும், பார்உம் - பூமியும், (ஆகியஇவற்றை), பரிவுடன் - மனவுவப் போடு, நல்கி - தானஞ்செய்து, மங்கலம் முகூர்த்தம் நல் நாள் - மங்கலமான நல்லமுகூர்த்தநாளில், போனான் - புறப்பட்டான்; (எ - று)

தசரதசக்கரவர்த்தி நித்தியக்கடனைமுடித்துக் குலதேவதையை வணங் கிவிட்டு நல்லநாளில் நல்லமுகூர்த்தத்தில் பொன்மணிமுதலியவற்றை அந்த ணர்கட்கு உதகதாரைவார்த்துத் தானஞ்செய்து பின்பு மிதிலைக்குப் புறப் படலாயினனென்க. நேமியான்-இட்சுவாகுமன்னவனுக்குப் பிரமதேவனால் அளிக்கப்பட்ட திருமால். பி - ம்:—[1] நீருடன். (எங)

எச.—தசரத சக்கரவர்த்தியின் புறப்பாட்டுச் சிறப்பு.

இருபிறப் பாள ரெண்ணா யிராமணிக் கலச மேந்தி
யருமறை வருக்க மோதி யறுகுநீர் [1]தெளித்து [2]வாழ்த்த
[3]வரன்முறை வந்தார் கோடி [4]மங்கல மழலைச் [5]செவ்வாய்ப்
பருமணிக் [6]கலாபத் தார்பல் லாண்டிசை [7]பரவப் போனான்.

(இ - ள்.) இரு பிறப்பாளர் எண்ணாயிரர் - எண்ணாயிரம் அந்தணர்கள், மணி கலசம் ஏந்தி - இரத்தினகும்பங்களைக் கையிலேந்திக்கொண்டு, அரு

மறை வருக்கம் ஓதி - உணர்தற்கரிய வேதமந்திரங்களின் தொகுதிகளை ஓதியவண்ணம், அறுகு நீர் தெளித்து வாழ்த்த - அறுகம்புல்லால் மந்திர நீரைத்தெளித்துவாழ்த்தவும், மங்கலம் மழலை செவ் வாய் பரு மணி கலாபத்தார் - மங்கலகரமான மழலைச்சொல்லைச்சொல்லுகின்ற செந்நிறவாயையுடைய பருத்தமணிகள் அழுத்திச்செய்யப்பட்ட மேகலாபரணத்தைப்பூண்டவர்களாகிய, வரன்முறை வந்தார் கோடி - பரம்பரையாக அரசர்க்குப் பல்லாண்டுபோடுங்குலத்திற்பிறந்தவர்களாகிய கோடிக்கணக்கானஸ்திரீகள், பல்லாண்டு இசை பரவ-பல்லாண்டுபாடலைப்பாடிக்கொண்டுவரவும், போனான்-.

தசரதசக்கரவர்த்தி செல்லும்போது அந்தணர் வேதமந்திரங்களைச் சொல்லி மந்திரநீராற் புரோக்ஷிக்க, மங்கையர் பலர் பல்லாண்டுபாடினரென்க. "ஜந்மநா ஜாயதே ஶூத்ர:, கர்மணா ஜாயதே த்விஜ:" "[பிறப்பினாற் சூத்திரனாகப்பிறந்தாலும் உபநயனகர்மத்தினால் த்விஜனாகிறான்]" என்றபடி அந்தணனுக்கு அந்தண்மை [பிராமணத்துவம்] உபநயனத்தினால் வருமென்ற நூற்கொள்கைபற்றி, உபநயனத்திற்குமுன் ஒருபிறப்பும் உபநயனத்திற்குப்பின் ஜ்ஞானப்பிறப்பாகிய மற்றொருபிறப்பும் ஆகிய இருபிறப்புஇருத்தலால், அவ்வாறான அந்தணரை 'இருபிறப்பாளர்' என்றார்; இவ்விருபிறப்பு பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் என்ற மூன்றுவருணத்தவர்க்கும் உளதாயினும், சிறப்பினால், இருபிறப்பாளரென்றது-பிராமணரையே குறித்தது. பி - ம்:—[1]அளித்து. [2]சூழ, வாழ்த்தி. [3]வருமுறை. [4]மங்கையர். [5]சொல்லார். [6]கலாபமார்ப்பப்பலாண்டிசை. [7]பாடி. (எச)

எரு.—பெருந்திரளான அரசர் திரண்டுவந்து தசரதசக்கரவர்த்தியை நெருங்குதல்.

கண்டில னென்னை யென்பார் கண்டன னென்னை யென்பார்
குண்டலம் வீழ்ந்த தென்பார் குறுகரி தினிச்சென் றென்பா
ருண்டுகொ லெழுச்சி யென்பா ரொலித்தது சங்க மென்பார்
மண்டல வேந்தர் வந்து [1]நெருங்கினர் மயங்கி மாதோ.

(இ - ள்.) சங்கம் ஒலித்தது என்பார்- (சிலர்)சங்கவாத்தியம் ஒலித்தது (இதுஎன்னையோ?) என்பார்களும், எழுச்சி உண்டு கொல் என்பார் - (சிலர் அரசர்க்கரசன்)புறப்பாடு உளதுபோலுமென்பார்களுமாகி,—மண்டலம்வேந்தர் - பெருந்திரளான அரசர், மயங்கி வந்து - (ஒன்று) கூடிவந்து,—(சிலர்), என்னை கண்டிலன் என்பார் - எம்மை (இந்தஇராசாதிராசன்) காணவில்லையென்பாரும், என்னை கண்டனன் என்பார்-(சிலர் எம்மைக்) கடாக்ஷித்தானென்பாரும், குண்டலம்வீழ்ந்ததுஎன்பார் - (சிலர் எமது) குண்டலம் கீழ்வீழ்ந்திட்டதே யென்பாரும், இனி சென்று குறுக அரிது என்பார் - (சிலர்) இனிப்போய் (அந்தமன்னர்மன்னவனைக் கிட்டுதல்) அருமையானதென்பாருமாகி, நெருங்கினர் - (தசரதசக்கரவர்த்தியை) நெருங்கினார்கள்; (எ - று.)— மாதோ-ஈற்றசை.

தசரதசக்கரவர்த்தியினது புறப்பாட்டிற்காகச் சங்கவாத்தியம் முழங்குதலும், தசரதனதுசேவைக்காக அவ்வயோத்திமாநகரில் வந்து காத்

திருந்த பெருந்திரளான அரசர்களிற் சிலர் சங்கவாச்சியத்தின் முழக்கத்திற்குக்காரணம் இன்னதென்று தெரியாது வினவ, அதன்காரணத்தை ஊகித்துணர்ந்த சிலமன்னவர் 'அரசனதுஎழுச்சி உள்ளதுபோலும்'என்று மறுமொழிகூற, அப்பொழுது அம்மன்னவர் யாவரும் அரசனுடன்செல்லுமாறு உறுதிகொண்டு புறப்பட, அங்ஙனம் புறப்பட்டவிசையால் சில மன்னவர்களுடைய காதிலணியுங் குண்டலங்கள் கீழ் வீழ்ந்திடவே, அதுகண்டு அவர்கள் 'குண்டலங் கீழ் வீழ்ந்திட்டதே' என்று சொல்லி அதனை எடுத்து அணிந்துகொண்டு புறப்பட, அதற்குள் சக்கரவர்த்தி வெகுதூரஞ் சென்றுவிட்டதனால் அவர்கள் 'இனிக்குறுகுதல் அரிதுபோலும்' என்று சொல்லிக்கொண்டே விரைந்துசெல்ல, முந்தியே புறப்பட்டுச் சக்கரவர்த்தியைச் சார்ந்த அரசர்கள் அவ்வரசர்க்கரசனது கடாட்சத்திற்குத் தாம் பாத்திரமாகாததுகுறித்து வருந்திக்கொண்டும் அவனதுகடாட்சத்திற்குப் பாத்திரமான மன்னவர் மகிழ்ச்சிகொண்டும் அப்போதுநெருங்கலாயின ரென்க. தொழிற்பெயர்த்தன்மைப்பட்ட 'குறுக' என்ற செயவெனெச்சத்தின் அகரவீறு தொக்கது-விகாரம். பி-ம்:—[1]நெருங்கினர் மயங்கவென்பார் என்ற பாடத்துக்கு, இந்தச்செய்யுளைச் சனங்கள் கூறிய கூற்றாகப் பொருளுரைக்கவேண்டும்; அது சிறப்பின்மையறிக. (எரு)

எசு.—தசரதன் சென்ற சிறப்பு.

பொற்றொடி மகளி ரூரும்[1]பொலன்கொடார்ப் புரவி வெள்ளஞ்
[2]சுற்றுறு கமலம் பூத்த தொடுகடற் றிரையிற் செல்லக்
கொற்றவேன் மன்னர் செங்கைப் பங்கயக் குழாங்கள் [3]கூம்ப
மற்றொரு கதிரோ னென்ன மணிநெடுந் தேரிற் போனான்.

(இ - ள்.) பொன் தொடி மகளிர் ஊரும் - பொன்வளையல்களையணிந்த மகளிர் ஏறிச்செல்லுகின்ற, பொலன் கொள் தார் புரவி வெள்ளம் - பொன்னாலியன்ற கிண்கிணிமாலையையணிந்த குதிரைகளின்கூட்டம், சுற்றுறு கமலம் பூத்த தொடு கடல் திரையில் செல்ல - சுற்றிலும்பொருந்திய தாமரைமலர் மலரப்பெற்ற (சகரர்களால்) தோண்டப்பட்ட சமுத்திரத்தின் அலைகள்போலச் செல்லாநிற்க,—கொற்றம் வேல் மன்னர் செம் கை பங்கயம் குழாங்கள் கூம்ப - வெற்றிபொருந்திய வேலாயுதத்தையுடைய அரசர்களின் செந்நிறக்கைகளாகிய தாமரைக்கூட்டங்கள் குவியாநிற்க,— மற்று ஒரு கதிரோன் என்ன-வேறொருசூரியன்போல, மணி நெடும் தேரில்-மணிகள்கட்டியநீண்டதேரிலே, போனான் - ஏறிச்சென்றான்; (எ - று.)

செல்ல, கூம்ப, போனான் என்க. மகளிரையுடையபுரவிவெள்ளம், கமலம்பூத்த திரைகடற்கு உவமை. கமலம்பூத்த கடல்—இல்பொருளுவமை. மகளிரது கை கால் முதலிய அவயவங்கள் தாமரைமலரையும், புரவிகள் கடல்திரையையும் ஒக்கும்;தாமரைமலர்களை மலர்விக்குஞ்சூரியனினும்வேறுபட்டுத் தாமரைமலர்களைக் குவிக்கும் ஒருசூரியன் இந்தத்தசரதசக்கரவர்த்திக்கு ஒப்பாவனென்பார் 'செங்கைப்பங்கயக்குழாங்கள்கூம்ப மற்றொருகதிரோன்என்ன'என்றார். பி - ம்:—[1]பொலன்கொடேர். [2]சுற்றுபு. [3]கூப்ப.(எசு)

எஎ.—அப்போதுஎழுந்த தூளியின் வருணனை.

ஆர்த்தது விசும்பை முட்டி [1]மீண்டகன் றிசைக ளெங்கும்
போர்த்தததங் கொருவர் தம்மையொருவர்கட் புலங்கொ ளாமைச்
[2]சேர்த்தது [3]செறிந்த தோடித் திரைநெடுங் கடலை யெல்லாந்
தூர்த்தது சகர ரோடு [4]பகைத்தெனத் தூளி வெள்ளம்.

(இ - ள்.) தூளி வெள்ளம் - (அப்போது தசரதனுடன்சென்ற சதுரங்கசேனைமுதலியவற்றா லெழுப்பப்பட்ட) புழுதிகளின்தொகுதி,—ஆர்த்தது - நிரம்பியதாய், விசும்பை முட்டி - ஆகாயத்தைத் தாக்கி (மேலே செல்ல இடம்பெறாமையால்), மீண்டு - திரும்பி, அகல் திசைகள் எங்கும் - விசாலமான திக்குக்களிலெல்லாம், போர்த்தது-மூடிக்கொண்டது; அங்கு - அங்கே, ஒருவர் தம்மை ஒருவர் கண் புலம் கொளாமை - ஒருவரையொருவர் கண்களாற் பார்க்கமுடியாதபடி, சேர்த்தது செறிந்தது - மிகுதியாக நெருங்கிற்று; (பின்புஅது), ஓடி - விரைந்து சென்று, சகரரோடு பகைத்து என - சகரபுத்திரர்களோடு பகைமைகொண்டதுபோல, திரை நெடு கடலை எல்லாம் - அலைகளையுடைய கடலையெல்லாம், தூர்த்தது-தூர்த்துவிட்டது;()

சகரர்வெட்டியகடலைத் தூர்த்ததனால், 'தூளிவெள்ளம் பகைத்தெனத் தூர்த்தது' என்றார்; கடலைத்தூர்த்தலில்லாமலிருக்கவும் தூளிவெள்ளத்தின் மிகுதியை விளக்கக் கடலைத் தூர்த்ததாகக்கூறியது, தொடர்புயர்வுநவிற்சியணி. அங்ஙனம்தூர்த்ததற்கு 'பகைத்தென'என்று காரணங் கற்பித்துக் கூறியது, ஏதுத்தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]அகன்பெருந்திசைகளெல்லாம். [2]தீர்த்தது. [3]செறிந்தகோடி. [4]பகையென. (எஎ)

எஅ.—தசரதசக்கரவர்த்தி சென்ற வகை.

சங்கமும் பணையுங் கொம்புந் தாளமுங் காளத் தோடு
மங்கல பேரி செய்த பேரொலி மழையை யோட்டத்
தொங்கலுங் குடையுந் தோகைப் பிச்சமுஞ் சுடரை யோட்டத்
திங்கள்வெண் குடைகண் டோடத் தேவரு மருளச் சென்றான்.

(இ - ள்.) சங்கம்உம் - சங்கவாச்சியமும், பணைஉம் - வேய்ங்குழலும், கொம்புஉம் - ஊதுகொம்புகளும், தாளம்உம்—, காளத்தோடு - எக்காளமும், மங்கலம் பேரி - மங்கலத்தைத்தெரிவிக்கும் பேரிகையும், செய்த—, பேர் ஒலி - பெருஞ்சத்தமானது, மழையை - மேகத்தினின்றுதோன்றும் இடியை, ஓட்ட - அடக்கவும்,—தொங்கல்உம் - பீலித்தொங்கல்களும், குடைஉம் - குடைகளும், தோகை பிச்சம்உம் - மயில்தோகையாற்செய்த பிச்சமும், சுடரை ஓட்ட - சூரியனதுவெயிலைத் தடுக்கவும், திங்கள் வெண் குடை கண்டு ஓட - சந்திரன்ஆங்குப்பிடிக்கப்படுகின்ற வெண்கொற்றக் குடையைக்கண்டுவெள்கி அப்பாற் செல்லவும்,தேவர்உம் மருள சென்றான்- (தான் செல்லுஞ்சிறப்பைக்கண்டு) தேவர்களும் மனம்மருளும்படி (வெகு மேன்மையுடன்) போனான், (தசரதன்); (எ - று.)

தொங்கல்முதலியன—அரசர்செல்லும்போது பிடிக்கப்படும் விருதுகள். தொங்கல் பிச்சம்என்பன மயில்தோகையாற்செய்த குடைகட்குப்பேராயினும், வடிவவேற்றுமைபற்றி வெவ்வேருக வழங்கப்பட்டனவென்பர். இரவிலும் பகலிலுஞ் செல்லுதலால் 'சுடரைஓட்ட', 'திங்கள்ஓட' என்றார். தசரத சக்கரவர்த்தி,சேனைகள்பின்தொடர ரிஷிகளோடுகூடப் புறப்பட்டு நான்கு நாட்களில் வழிகடந்து ஐந்தாநாள் விதேகதேசத்தையடைந்தனனென்று முதனூலிற் கூறியுள்ளது.　(எஅ)

எகூ.—பலவகை யோசைக ளெழுதல்.

மந்திர கீத வோதை வலம்புரி முழங்கு மோதை
யந்தண ராசி யோதை யார்த்தெழு முரசி னோதை
கந்துகொல் களிற்றி னோதை கடிகையர் [1]கவிதை யோதை
யிந்திர திருவன் செல்ல வெழுந்தன திசைக [2]ளெல்லாம்.

(இ - ள்.) இந்திரன் திருவன் - இந்திரனது செல்வம்போன்ற செல்வத்தையுடைய தசரதசக்கரவர்த்தி, செல்ல - செல்லுகையில் - மந்திரம் கீதம் ஓதை - மங்களார்த்தமாக அந்தணர்களோதுகின்ற வேதமந்திரங்களுடைய கானத்தினோசையும், வலம்புரி முழங்கும் ஓதை - வலம்புரிச்சங்கம் முழங்குகின்ற ஓசையும், அந்தணர் ஆசி ஓதை - அந்தணர்கள் வாழ்த்துகின்ற வாழ்த்தொலியும், ஆர்த்து எழு முரசின் ஓதை - ஆரவாரித்தெழுகின்ற முரசவாத்தியத்தினோசையும், கந்து கொல் களிற்றின் ஓதை - கட்டுத்தறியைமுறிக்கின்ற யானைகளின் பிளிறலும், கடிகையர் கவிதை ஓதை - (அரசனுக்குநாழிகையையறிவிக்கின்ற) கடிகைமாக்களின் நாழிகைதெரிவிக்கும் பாடலினோசையும், (ஆகியஇவைகள்), திசைகள் எல்லாம் எழுந்தன - திக்குக்களிலெல்லா மெழுந்தன; (எ - று.)

'மந்திரகீதவோதை'என்பதற்கு - இனிய இசைப்பாட்டின் ஒலி எனினுமாம். இப்பொருளில் மந்திரம்என்பது - மந்த்ர[ ] என்ற வடசொல்லின் விகாரம். பி - ம்:— [1]கவியினோசை. [2]எங்கும்.　(எகூ)

அ0.—தசரதசக்கரவர்த்தி சென்ற சிறப்பு.

நோக்கிய [1]திசைக டோறுந் தன்னையே நோக்கிச் [2]செல்லும்
வீக்கிய கழற்[3]கால் வேந்தர் விரிந்தகை மலர்கள் கூப்பத்
தாக்கிய களிறுந் தேரும் புரவியும் படைஞர் தாளு
மாக்கிய தூளி விண்ணு மண்ணுல காக்கப் போனான்.

(இ - ள்.) நோக்கிய திசைகள் தோறுஉம் - காண்கின்ற திக்குக்களிலெல்லாம், தன்னை நோக்கி செல்லும் கழல் வீக்கிய கால் வேந்தர்-('எப்போதுஇம்மன்னர்மன்னவனது கடாட்சத்திற்குப்பாத்திரமாவோம்' என்ற கருத்துடன்) தன்னையே பார்த்துக்கொண்டு செல்லுகின்ற வீரக்கழலைக்கட்டிய பாதங்களையுடைய அரசர்கள், விரிந்த கை மலர்கள் கூப்ப - (தனது பார்வைவிழுந்தோறும்) மலர்ந்த தாமரைமலர்போன்ற (தமது) கைகளைக் கூப்பவும்,-தாக்கிய களிறுஉம் தேர்உம் புரவிஉம் படைஞர் தாள்உம் -

(ஒன்றோடொன்று)முட்டிச்செல்லுகின்ற யானைகளும் இரதங்களும் குதிரைகளும் காலாட்படைகளின்பாதங்களும், ஆக்கிய - மேலெழுப்பிய, தூளி - புழுதிகள், விண் உம்-வானத்தையும், மண் உலகு ஆக்க - (இந்தப்) பூலோகம் போல மண்மயமாகச்செய்ய, போனான்—; (எ - று.)

தசரதமன்னவனது பார்வைவிழும்போதெல்லாம் அவனையே காண்கின்ற மன்னவரது கை குவிகின்றனஎன்பது, முன்னிரண்டடிகளிற் கூறிய விஷயம். 'தாள்' என்பதை, களிறுமுதலியவற்றோடெங்கூட்டி யுரைக்கலாம்; அங்ஙனம் உரைக்குமிடத்து, தேர்த்தாள்என்றது-தேர்ச்சக்கரத்தை யெனக; சக்கரம் தேர்நடத்தற்குத் தாள் போலுதலால்,அதனைத் தேர்த்தாளென்னல் தகும். பி - ம்:—[1]திசைகளெல்லாம். [2]செல்ல. [3]கான் மன்னர். (அ0)

அக.—தசரதசக்கரவர்த்தியுடன்சென்ற சேனையின் மிகுதி.

வீரருங் களிறுந் தேரும் புரவியு மிடைந்த சேனை
பேர்விட மில்லை மற்றோ ருலகில்லை [1]பெயர்வதாக
நீருடை யாடை யாளு நெளித்தனண் முதுகை யென்றாற்
பார்பொறை நீக்கி னானென் [2]றுரைப்பதெப் பரிசுமன்னோ.

(இ - ள்.) வீரர்உம் - காலாள்வீரரும், களிறுஉம்-யானையும், தேர்உம்—, புரவிஉம் - குதிரையும், (என்ற நால்வகையுறுப்பும்), மிடைந்த - நெருங்கியுள்ள, சேனை—,பெயர்வது ஆக - இவ்விடத்தைவிட்டு அப்பாற்செல்வதென்றாலும் - பேர்வு - நிலைபெயர்ந்து செல்லுதற்கு, இடம்-, இல்லை—; (ஏனென்றால்), உலகுஇல்லை - அவைசெல்லுமாறு வேறு, உலகமில்லை; நீர் உடை ஆடையாள்உம்-கடலை உடுத்தற்குஉரிய ஆடையாகக்கொண்டுள்ள பூமிதேவியும், (அந்தச்சதுரங்கசேனையின்பாரத்தைப்பொறுக்கமாட்டாமல்), முதுகை நெளித்தனள்-(தன்)முதுகைநெளியச்செய்தாள்; என்றால்—, (இந்தச்சக்கரவர்த்தி),பார் பொறை-பூமியின்சுமையை,நீக்கினான் - போக்கினான்,என்று—, உரைப்பது - (அறிவுடையோர்) கூறுவது,எ பரிசு - எவ்வாறு? (எ - று.)

அப்போது தசரதசக்கரவர்த்தியுடன்புறப்பட்ட சேனை பேர்வதற்கும் இடமில்லாதவாறு பூலோகமுழுதும்நின்றிட்டது; அந்தச்சேனைபாரத்தைத் தாங்கமாட்டாது பூமிதேவியும் தன்முதுகை நெளித்தன ளென்பதாம். தசரதசக்கரவர்த்தி தன்னாட்சியாற் பூமிபாரத்தைநீக்கினா னென்பது எங்ஙனம் பொருந்தும்?இவனது சதுரங்கசேனை நெருங்கியபோது அப்பாரத்தைப் பொறுக்கமாட்டாமற் பூமி தத்தளித்ததே! என்று தசரதசக்கரவர்த்தியைப் பழிப்பார்போன்று அந்தச்சக்கரவர்த்தியின் திரண்டசேனையின் மிகுதியை வருணித்தார்; வஞ்சப்புகழ்ச்சியணி; வடநூலார் வ்யாஜஸ்துதி யென்பர். பி - ம்:— [1]பெயர்க்கலாகா. [2]உரைத்ததும்பழுது. (அக)

அஉ.—சேனையுடன்சக்கரவர்த்தி இந்துசயிலத்தின் சாரலில் தங்குதல்.

* இன்னண மேகி மன்னன் சேனை யிரண்டு சென்றான்
பொன்வரை போலு மிந்து சயிலத்தின் சாரல் புக்கான்

மன்மதக் களிறு மாதர் கொங்கையு மார னம்பும்
தென்வரைச் சாந்து நாறுஞ் சேனையு மிறுத்த தன்றே.

(இ - ள்.) மன்னன் - அரசர்க்கரசனாகிய தசரதசக்கரவர்த்தி, இன்னணம் - இவ்வகையாக, ஏகி - புறப்பட்டு, யோசனை இரண்டு சென்றான் - இரண்டுயோசனைத்தூரம் சென்றவனாகி, (பின்பு), பொன் வரை போலும் - சுவர்ணமயமாகவுள்ள மேருமலையை யொத்த, இந்துசயிலத்தின் - சந்திர சைலமலையின், சாரல் - தாழ்வரையில், புக்கான் - புகுந்தான்; மன்மதன் களிறும் - மன்மதனது யானையென்றுசொல்லப்படுகின்ற இரவை யொத்த [கறுத்த] மாதர்களின் கூந்தலும், மாதர் கொங்கைஉம் - மாதர்களது தனங்களும், (முறையே), மாரன் அம்புஉம் - மன்மதனது அம்புகளாகியமலர்களாலும், தென் வரை சாந்துஉம் - தெற்குத்திசையிலுள்ள பொதியமலையிலிருந்து தோன்றுகின்ற சந்தனத்தின்தேய்வையாலும், நாறும் - நறுமணம் வீசுதற்குஇடமாகவுள்ள, சேனைஉம் - அந்தச்சதுரங்கசேனையும், இறுத்தது - (அந்தமலையின் சாரலில்) தங்கிற்று; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

சதுரங்கசேனை செல்லும்போது அதிலுள்ள வீரர் தமதுமனைவியருடன் செல்லுகின்றன ராதலால், அச்சேனைவீரரின்மங்கைமாரது கூந்தல் நறுமலராலும், கொங்கைகள் சந்தனக்கலவையாலும் பரிமளம் வீச, அந்தச்சேனை மலைச்சாரலில் தங்கிற்றென்றார். மன்மதனதுகளிறு இருளாதலை "ஆலைக் கரும்புசிலை...வேலைகடிமுரசங்கந்தூல்களிறு குயில்காளம்" என்பதனாலும் அறிக. கங்குலைப்போன்ற மகளிர் கூந்தலைக் கங்குலாகவே கூறினார். (அஉ)

எழுச்சிப்படலம் முற்றும்.

---

## கச.—ஆவது வரைக்காட்சிப் படலம்.

தசரதசக்கரவர்த்தியுடன்சென்ற சேனைகள் சந்திரசைலமென்னும் மலையைக் கண்டதைப் பற்றிக் கூறும்பகுதி யென்பது, பொருள். சில பிரதிகளில், இந்தப் படலத்துக்குப் பெயர் சந்த்ரசைலப்படல மென்று காணப்படுகின்றது.

### க.—சில யானைகளை மரங்களிற் கட்டுதல்.

*கோவை யார்வட கொழுங்குவ டொடிதர நிவந்த
ஆவி வேட்டன வரிசிலை யனங்கன்மேற் கொண்ட
பூவை வாய்ச்சியர் முலைசிலர் புயத்தொடும் பூட்டத்
தேவ தாரத்துஞ் சந்தினும் பூட்டின சிலமா.

(இ - ள்.) கோவை ஆர் - முத்துவடம் முதலியவை நிரம்ப அணியப் பெற்றுள்ளனவும், வட கொழுங் குவடு ஒடிதர நிவந்த - வடதிசையிலேயுள்ள செழித்த மேருமலையும் (தமக்கு ஒப்பாகாமல்) தோற்றுப் போய்விடும்படி ஓங்கியனவும், ஆவி வேட்டன - (தமது காதலரின்) உயிரை(க் கொள்ளை கொள்ள) விரும்பியனவும், வரி சிலை அனங்கன் மேல் கொண்ட - கட்ட

மைந்த வில்லையுடைய மன்மதனைத் தம்மிடத்துக் கொண்டிருப்பனவுமாகிய, முலை - (தமது) கொங்கைகளை, பூவை வாய்ச்சியர் - நாகணவாய்ப்புள்ளின் சொல்லையொத்த இனிய சொல்லைச் சொல்லுகின்ற மடந்தையர், சிலர் புயத்தொடும் பூட்ட - சில ஆடவர்களுடைய புயங்களோடு அணைக்க,— கோவை ஆர் வடம் கொழு குவடு ஒடிதர நிவந்த - ஆகாயத்தையளாவிய ஆல மரத்தினது செழித்த கிளைகள் ஒடியும்படி ஓங்கியனவும், ஆவி வேட்டன - (தண்ணீர்பருகும்படி) தடாகத்தை விரும்பியனவும், வரி சிலை அனங்கன் மேல் கொண்ட - கட்டமைந்தவில்லையுடைய மன்மதன்போன்றவீரனை(த் தம்)மீது கொண்டிருப்பனவுமான, சில மா-சிலயானைகள், தேவதாரத்தும் - தேவதாரமரங்களிலும், சந்தினும் - சந்தனமரங்களிலும், பூட்டின - கட்டப் பட்டன; (எ - று.)

யானைகளின்மீதிருந்த மகளிர் தம் கொங்கைகள் தமது கணவரின் புயங்களிற்படுமாறு அவரைத்தழுவியவண்ணம் கீழிறங்க,பிறகுஅவ்யானைகள் தேவதாரம் முதலிய மரங்களிற் கட்டப்பட்டன வென்பதாம். மலைச்சாரலி லிறங்கித் தங்குவதைவருணிக்கின்ற இவ்விடத்து மாதர்கள் யானையினின்று கணவரைத்தழுவிய வண்ணம் இறங்கியதும், யானைகள் தேவதாரம் சந்தனம் என்ற மரங்களிற் கட்டப்பட்டதும் என்ற இவையிரண்டும் முக்கியமான அமி சங்களாதலால், அவற்றைக் கூறுமிடத்துவந்த சிலேடையணி வர்ணியத் தைப்பற்றிய தென்க. கொங்கைக்கும் யானைக்கும் சிலேடைப்பொருள் படச்சொன்ன இதில் தேவதாரு சந்தனம் என்ற மரங்களிலே யானைகள் பூட்டப்பட்டன போல, மகளிராற் கொங்கைகள் ஆடவர்புயங்களிற் பூட்டப் பட்டன என்ற உவமைப்பொருள் தொனிக்கும்.

கோவை - முத்துச்சரம் முதலியன. 'வடக்கு' என்ற திசைப் பெயர் கொழுங்கவடு என்ற தொடரோடு புணர்கையில் ஈற்றுஉயிர் மெய்யும் ககர வொற்றுங் கெட்டது. குவடு - மலையும், மரக்கிளையும். தனங்கள் தமது காத லர்க்குக் காமவேதனையை மிகுதியாக உண்டாக்குதலால், 'அனங்கன் மேற் கொண்ட' என்றும், 'ஆவிவேட்டன' என்றும் கூறினர். ஆகாயமென்னும் பொருளுள்ள கோ என்ற வடசொல் இரண்டனுருபேற்றுக்கோவையென வந்தது. வடம் - ஆல் என்ற பொருளை யுணர்த்தும் வடசொல். முலைக்கு விசேடணமாம் போது ஆவிவேட்டன என்பதற்கு - அகிற்புகையை விரும் பின என்றும், வரி சிலை அனங்கன் மேற்கொண்ட என்பதற்கு-கட்டமைந்த கருப்பம் வில்லையும் மன்மதனையும் தொய்யிலாக மேலே யெழுதப் பெற் றுள்ளன என்றும் கூறினுமாம். (க)

உ.—இதுமுதல் ஆறுகவிகள் சிலயானைகளின் தன்மையைத் தெரிவிக்கும்.

நேரொ டுங்கலில் பகையினை நீதியால் வெல்லுஞ்
சோர்வி டம்பெறு வுணர்வினன் சூழ்ச்சியே போலக்
[1]காரொ டுந்தொடர் கவட்டெழின் மராமரக் குவட்டை
வேரொ டுங்கொடு கிரியென நடந்ததோர் வேழம்.

(இ - ள்.) ஓர் வேழம் - ஒரு யானையானது,—நேர் ஒடுங்கல் இல் பகையினை - நேராக அடங்குதலில்லாத சத்துருவை, நீதியால் வெல்லும் - அரச தந்திரத்தினாற் சயிக்கின்ற, சோர்வு இடம் பெறா உணர்வினன் சூழ்ச்சியே போல - தவறுதலுக்கு இடமில்லாதவாறு நல்லுணர்வையுடைய அரசனது ஆலோசனையைப் போல (ஆலோசனையுள்ளதாய்),—காரொடுஉம் தொடர் கவடு - மேகமண்டலத்தையளாவுகின்ற கிளைகளையுடைய, எழில் - அழகுடைய, மராமரம் குவட்டை - (தான் கட்டுண்டுள்ள) மராமரத்தின்அடிப்பகுதியை, வேரொடுஉம் கொடு - வேரோடு பறித்துக்கொண்டு, கிரிஎன - மலைபோல, நடந்தது—; (எ - று.)

மராமரத்தைக் கட்டுத்தறியாகக் கொண்டு கட்டப்பெற்ற மதயானையொன்று, தான் கட்டப்பட்டுள்ள அடிமரத்தை யொடித்துக்கொண்டு அப்பாற்செல்லமுடியாமையால் தான் அப்பாற்செல்லும்படி அம்மரத்தையே வேரோடுபறித்துக்கொண்டுசென்ற தென்பதாம். அவ்வாறு தந்திரமாகத் தான் கருதியதை வேழம் நிறைவேற்றியதற்கு, நேரேநின்றுபொருதுஒடுக்க முடியாத பகையரசரைத் தமதுஉணர்வின்வல்லமையால்வெல்லும் மன்னவரது சூழ்ச்சியை உவமைகூறினர். 'உணர்வினன்சூழ்ச்சியேபோல' என்று கூறப்பட்டிருப்பினும், சோர்விடம்பெறாச் சூழ்ச்சி யுணர்வினன்போல வேழம் நடந்தது என்று மாற்றிப் பொருளுரைக்க. நேர் - வலிமையென் பாருமுளர். குவடு - திரட்சி: திரண்டமரத்தின்பருத்தஅரைக்கு, ஆகுபெயர். பி - ம்:—[1]வாரொடுந்தொடர்கவட்டொடு. (உ)

ரு. திரண்ட தாணெடுஞ் செறிபணை மருதிடை யொடியப்
புரண்டு பின் [1]வரு முரலொடு போனவன் போல
வுருண்டு காறொடர் பிறகிடு தறியொடு மொருங்கே
யிரண்டு மாமர மிடையிற நடந்ததோ ரியானை.

(இ - ள்.) திரண்ட தாள் - திரண்டுள்ள அடிப்பாகத்தையும், நெடு செறி பணை - நீண்ட நெருங்கிய கிளைகளையுமுடைய, மருது - இரட்டை மருதமரங்கள், இடை ஒடிய - நடுவேமுறிந்துவிழும்படி, புரண்டு பின் வரும் உரலொடு போனவன் போல - புரண்டு(தன்)பின்னேவருகின்ற உரலோடும் (அந்த மருதமரங்களின்இடையே) போன கிருட்டிணபகவான்போல,—ஓர் யானை-ஒருயானையானது,—உருண்டு கால் தொடர் பிறகிடு தறியொடுஉம் - உருண்டவண்ணம் பின்னங்காலைத்தொடர்ந்து பின்னேவருகிற கட்டுத்தறியோடும், ஒருங்கே இரண்டு மா மரம் இடை இற - ஒருசேர இரண்டு மாமரங்கள் தம்முடைய நடுப்பாகம் முறிந்துவிழும்படி, நடந்தது - போயிற்று;

பாகன் தன்னைக் கட்டியிருந்த கட்டுத்தறியைப் பேர்த்து இழுத்துக்கொண்டு விரைந்துசெல்கையில் அக்கட்டுத்தறி மோதியதனால் இரண்டு மாமரங்களை முறிந்துவிழும்படிசெய்த ஒரு யானைக்கு, தன் தாயாற் கட்டப்பட்ட உரலை ஈர்த்துக்கொண்டு செல்லுகையில் அதனால்மோதப்பட்டு இரட்டை மருதமரம் முறிந்து விழச்செய்த ஸ்ரீகிருஷ்ணபகவானை உவமைகூறினர்; உவமையணி. பி - ம்:—[1]வரவுரலொடு. (ரு)

௪. கதங்கொள் சீற்றத்தை யாற்றுவா னினியன கழறிப்
பதங்கொள் பாகனு மந்திரி யொத்தனன் பன்னூல்
விதங்க ளாலவன் மெல்லென மெல்லென விளம்பு
மிதங்கள் கேள்கிலா [1]விறைவனை யொத்ததோ ரியானை.

(இ - ள்.) கதம் கொள் சீற்றத்தை ஆற்றுவான் - கறுக்கொள்ளுதற்குக் காரணமான கோபத்தைத் தணிக்கும்பொருட்டு, இனியன கழறி - (அவ்யானைக்கு) இதமான சொற்களைச் சொல்லி, பதம் கொள் - பக்குவமாக (அதனை) வசப்படுத்தப் பார்க்கின்ற, பாகன்உம்,—மந்திரி ஒத்தனன் - (தன் விருப்பின்படியே மாறானவழியிற் செல்லுகின்ற அரசனை வசப்படுத்தப் பார்க்கின்ற) மந்திரியைப் போன்றனன்; (அப்போது அந்தப் பாகனது இன்சொற்களைக் கொள்ளாது வெறிகொண்ட), ஓர் யானை - யானையானது,— பல்நூல் விதங்களால் - பல சாஸ்திரங்களிற் கூறியுள்ள முறைமைக்கு ஏற்ப, அவன்-அந்த மந்திரி, மெல்லென மெல்லென விளம்பும் - (மன்னவனுடைய மனங்கொள்ளுமாறு) மெல்லமெல்லச் சொல்லுகின்ற, இதங்கள் - நன்மைபயக்குஞ் சொற்களை, கொள்கிலா-செவிகொடுத்துக் கேட்காத [மாறானவழியிற்செல்லுகின்ற],இறைவனை - அரசனை, ஒத்தது—.

பாகனுடைய இன்சொல்லைக் கேளாது மதவெறி கொண்ட யானைக்கு, மந்திரியின் இதச்சொல்லைக் கேளாது மாறுவழியில் நடக்கின்ற மன்னவனை உவமை கூறினர்: இதுவும் முன்னைய அணியே. பி - ம்:—[1]மன்னனை. (௪)

௫. மாறு [1]காண்கில தாய்நின்று மழையென முழங்குந்
[2]தாறு பாய்கரி வனகரி தண்டத்தைத் தடவிப்
பாறு பின்செலக் காலெனச் செல்வது பண்டோ
ராறு போகிய வாறுபோ மாறுபோன் றதுவே.

(இ - ள்.) மாறு காண்கிலது ஆய் நின்று - (தன்னுடைய) பகையைக் காணப்பெறாமல் நின்று, மழை என முழங்கும்-மேகம் இடியிடிப்பதுபோல ஒலிக்கின்ற, தாறு பாய் கரி - இருப்புமுள்ளாற் குத்தப்பெற்ற (அந்தச் சேனையிலுள்ள) ஒரு யானையானது, வனம் கரி தண்டத்தை தடவி-காட்டியானை சென்ற வழியைப் பின்பற்றி, பாறு பின் செல - பருந்துகள் (தன்னைப்) பின்தொடர்ந்துவர, கால் என செல்வது - காற்றைப்போல விரைந்து செல்வது,—பண்டு ஓர் ஆறு போகிய ஆறு போம் ஆறு - முன்பு ஓர்நதி சென்ற வழியே செல்லுகின்ற ஆற்றை, போன்றது - ஒத்தது; (எ - று.)

தான் உள்ளஇடத்திற்குச் சிறிதுதூரத்திலே காட்டியானை சென்றதாக, மோப்பத்தினால் அதனையுணர்ந்த சேனையின்யானையொன்று வெறிகொண்டு தன்பகையான காட்டியானையை யடக்க விரும்பியும் காணப்பெறாமையால் வீரிட்டு அந்தக்காட்டியானை சென்றவழியைப் பின்பற்றிச்சென்ற தென்க: அவ்வாறு சென்ற யானைக்கு,ஓரியாறுசென்றவழியே வெள்ளப்பெருக்கினாற் கரைபுரண்டுவந்த மற்றோர்யாறு செல்வதை உவமை கூறினர். வேற்றுப்புலத்து யானையின்மணம்பட்டால் மதவெறிகொள்ளுதல், யானையின் இயல்பு.

அங்ஙனம் மதவெறிகொண்டு சேனையின்யானை செல்லும்போது இடைவழியே கைக்கு அகப்பட்ட பிராணிகளைக்கொன்றுகொண்டேசெல்வதனால், அவ்யானையின்பின்னே பாறு செல்வதாயிற்று. தண்டம்என்பது நான்காவது உபாயத்தையும் யானைசெல்லும்வழியையும்காட்டு மென்பதை "தந்திரமுங் கரிசெல்வழியுந் தண்டம்" என்ற பிங்கலந்தையாலும் அறிக. [2]தாருகாய்கரி என்ற பாடம் - கட்டுத்தறியைக் கண்டு கோபிக்குந் தன்மையுள்ள யானை யென்க. பி - ம்:—[1]காணுமதாய். (ரு)

சூ. பாத்த யானையின் பதங்களிற் படுமத நாற
காத்த வங்குச நிமிர்ந்திடக் கால்பிடித் தோடிப்
பூத்த வேழிலைம் பாலையைப் பொடிப்பொடி யாகக்
காத்தி ரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததோர் களிறு.

(இ - ள்.) பாத்த யானையின் பதங்களில் - (அணியணியாகப்)பிரித்துள்ள யானைகளைக்கட்டிய இடங்களில், படு - தோன்றுகின்ற, மதம் - மதநாற்றம் போன்ற நாற்றம், நாற - (ஏழிலைம்பாலைமரங்களிலிருந்து) வீசியதனால், (அதனைத் தாங்கமாட்டாமல்), ஓர் களிறு - ஒரு யானையானது,—காத்த அங்குசம் நிமிர்ந்திட - (தன்னை மீறவொட்டாமல்) தடுக்கின்ற(பாகன்கையிலுள்ள)அங்குசமானதுஅப்பாற்போய்விடும்படி,கால் பிடித்து ஓடி - (மதமணம்வந்த)வழியைப்பற்றிக்கொண்டு ஓடிப்போய், (அவ்வாறுமதமணம்வருவதற்குக் காரணமாயிருந்த), பூத்த ஏழிலைம்பாலையை - பூப்பூத்துள்ளஏழிலைம்பாலைமரத்தை, பொடிப்பொடி ஆக-மிகச்சிறியதூளாகும்படி, காத்திரங்களால் - முன்னங்கால்களால், தலத்தொடும் தேய்த்தது - தரையோடுதேய்த்துவிட்டது; (எ - று.)

அந்தச்சேனைதங்கிய சந்திரசைலமென்றமலைச்சாரலில் ஏழிலைம்பாலைமரங்கள்பூத்து இருந்ததனால் அம்மரத்தினிடத்திலிருந்துயானையின்மதமணம் போன்ற மணம் வீசியதாக, யானைக்கூடத்திலிருந்துள்ள யானைகளில்ஒன்று மோப்பத்தினால் அதனையுணர்ந்து மதவெறிகொண்டு பாகனுக்கு அடங்காமல் அங்குசத்தையும் அப்பால்தள்ளிவிட்டு மதமணம்வந்தவழியை நாடிச் சென்று அவ்வேழிலைம்பாலையுள்ளவிடத்தைச் சேர்ந்து அந்தமரத்தைப்பொடிபொடியாகஆய்விடுமாறு தன்முன்னங்கால்களாற் பூமியில்தேய்த்த தென்பதாம். ஏழிலைம்பாலைமரம் பூப்பூத்ததாயின் அது மதமணங்கமழு மென்பதும், அதனால் யானை மதவெறிகொண்டு வேறோர் மதயானையைக்கண்டால் வெறிகொண்டு அதனையடக்குவதுபோல் அம்மரத்தையழிக்குமென்பதும் இங்குஉணரத்தக்கன. கால் - காற்றுமாம். பாத்த=பகுத்த. 'ஏழிலைப்பாலை' என்பது, ஏழிலைம்பாலையென்று விகாரம்பெற்றுவந்தது: இது, வடமொழியில் 'ஸப்தபர்ணீ' எனப்படும். காத்திரமென்றவடசொல் யானையின்முன்னங்காலென்னும் பொருளில் வரு மென்பதை "யாக்கையு முறுப்பும் யானைமுன்காலும்,...காத்திர மாகும்" என்ற நிகண்டினாலும் அறிக. (சு)

எ. அலகி லானைக ளனேகமு [1]மவற்றிடை மிடைந்த
திலக வாணுதற் பிடிகளுங் குருளேயுஞ் செறிந்த
யுலவை நீள்வனத் தூதமே [2]யொத்தவவ் வூதத்
தலைவ னேயொத்துப் பொலிந்தது சந்திர சயிலம்.

(இ - ள்.) அலகு இல் ஆனைகள் அனேகம்உம்-கணக்கில்லாத பலப்பல ஆண்யானைகளும், அவற்றிடை மிடைந்த திலகம் வாள் நுதல் பிடிகள்உம் - அவ்யானைகளினிடையே நெருங்கியுள்ள சிந்தூரத்திலகந்தீட்டிய ஒள்ளிய நெற்றியையுடைய பெண்யானைகளும், குருளைஉம் - யானைக்கன்றுகளும், செறிந்த - நெருங்கியிருந்தவை,—உலவை நீள் வனத்து - மரங்கள் மிகுதியாயுள்ள அவ்வனத்திலே, ஊதமே ஒத்த - (தாம்) யூதத்தை யொத்திருந்தன; சந்திர சயிலம் - அந்தச் சந்திர சைலமானது, அ ஊதம் தலைவனே ஒத்து பொலிந்தது-அந்தயூதத்தின்பதியை யொத்து விளங்கிற்று; (எ - று.)

அங்குத் தங்கிய ஆண்யானைகளும் பெண்யானைகளும் அவற்றின் கன்றுகளும் யூதமாக அமைய, அம்மலை யூதபதியைப்போன்று விளங்கிற்றுஎன்றவாறு. யூதம் - காட்டிற்-சஞ்சரிக்கும் யானைகளின்கூட்டம். இந்தவருணனையால், யூதங்கட்கும் யூதபதிக்கும் எத்துணைவேறுபாடு விளங்குமோ அம்மாத்திரமே அந்தச்சந்திரசயிலத்துக்கும் யானைகட்கும் வேற்றுமை தோன்றிற் றென்பது பெறப்படும்: ஆகவே, அவ்யானைகள்யாவும் சிறு குன்றுகளோடு வேறுபாடுதோன்றுவண்ணம் இருந்தன என்க. உலவை - மரம்; "மரமும் மரத்தின்கோடும் காற்றுமுலவை" என்பது, நிகண்டு. ஏகாரங்கள் இசைநிறை: தேற்றமெனினுமாம். ஊதம்=யூதம்: ஊதபதி - யூதபதி: யானையரசு. பி - ம்:—[1]அவற்றொடு. [2]ஒத்தன. (எ)

அ.—மலைச்சாரலில் தேர் செல்லுதல்.

தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு மவர்த
மருண்ட [1]புன்மையை மாற்றுவ ரெனு [2]மிது வழக்கே
யுருண்ட வாய்தொறும் பொன்னுரு ளுரைத்துரைத் [3]தோடி
யிருண்ட கல்லையுந் [4]தந்நிற மாக்கிய விரதம்.

(இ - ள்.) 'தெருண்ட மேலவர் - தெளிந்த அறிவையுடைய பெரியோர், சிறியவர் சேரின்உம் - சிறியவரை(த் தாம் போய்ச்) சேர்ந்தாலும், மருண்ட அவர்தம் புன்மையை - புத்திமாறுபட்டங்கொள்ளுதற்குக் காரணமான அவருடைய இழிகுணத்தை, மாற்றுவர் - போக்குவர்', எனும் - என்று சொல்லுகின்ற, இது - இச்சொல், வழக்கே - முறைமையானதே: (ஏனெனின்),—இரதம் - இரதங்கள்,—பொன் உருள் உருண்ட வாய் தொறுஉம் - பொன்னாலியன்றசக்கரங்கள் உருண்டுசென்ற இடங்கள்தோறும், உரைத்து ஓடி - (பொன்னை) உரைத்தவண்ணம் ஓடிச்சென்று, இருண்ட கல்லைஉம் - கருநிறம்பொருந்திய பாறைகற்களையும், தம் நிறம் ஆக்கிய - தம்முடைய பொன்னிறமாகவே செய்தன; (எ - று.)

தேரின் பொன்னிறவுருளே சென்றதனால், ஆங்குள்ள பாறைகள் பொன் னிறத்தை யடைந்தனவென்பதாம்: இக்கருத்தில், ஒருபொருள் தன்னிறத் தைவிட்டு உயர்ந்த வேறொருபொருளின் உருவத்தைப்பெற்றதாகக்கூறியது-பிறிதின்குணம் பெறலணியாம். பின்னிரண்டடியிற்கூறிய சிறப்புப்பொருள் முன்னிரண்டடியிற்கூறிய பொதுப்பொருளைச் சமர்த்தித்து நின்றது-வேற்றுப் பொருள்வைப்பணியாம் 'சேரினும்' என்ற எதிர்மறையும்மை அவர் சேரார் என்ற பொருளைக் காட்டும்: இதனை இழிவுசிறப்பாகக் கொள்ளலுமாம். பி - ம்:—[1] தன்மையை. [2] அது. [3] ஓட. [4] தன்னிறம், பொன்னிறம். (அ)

கூ.—யானைதேர்களிலிருந்து கீழிறங்கின மகளிரினருகே மயில்கள் சஞ்சரித்தலின் வருணனை.

கொவ்வை நோக்கிய வாய்களை யிந்திர கோபங்
கவ்வி நோக்கின வென்றுகொல் [1]காட்டின மயில்க
ணவ்வி நோக்கியர் நலங்கொண்மே கலை [2]பொலஞ் சாயற்
செவ்வி [3]நோக்கின திரிவன போல்வன திரிந்த.

(இ - ள்.) காட்டு இனம் மயில்கள் - காட்டில்வாழ்கின்ற கூட்டமான மயிற்பறவைகள்,—கொவ்வை நோக்கிய வாய்களை - கோவைப்பழத்தை யொத்த [செந்நிறமாகவுள்ள] (மகளிரின்) வாய்களை, இந்திரகோபம் கவ்வி நோக்கின என்று கொல் - இந்திரகோபப்பூச்சிகளைக் கவ்வியிருந்தாற்போன்ற அழகையுடையன என்று நினைத்ததனால்தானோ, நலம் கொள் மேகலை - அழகைக் கொண்ட மேகலாபரணத்தைப் பூண்ட, நவ்வி நோக்கியர் - மான்கண்கள்போன்ற கண்களைப் பெற்ற மகளிருடைய, பொலம் சாயல் செவ்வி - பொன்னையொத்த சாயலின் அழகை, நோக்கின திரிவன போல்வன - (எங்ஙனமுள்ள தென்று) பார்த்த வண்ணம் திரிவன போல்வனவாகி, திரிந்த - திரிந்தன; (எ - று.)

மகளிரது வாய்கள் இந்திரகோபமென்னும் பூச்சிகள் கவ்வினாற் போன்ற காட்சியை யுடையனவாயிருத்தல் கண்டு, மயில்கள், இவர்களின் சாயல் எங்ஙனமுள்ளன வென்று நோக்குதலின்பொருட்டே திரிவன போன்று திரிந்தனவென்றார்: காட்டில் இனம்இனமாக மயில்கள் திரிவதற்குக் கவி ஒருகாரணங் கற்பித்துக்கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணியாம். மயில் மகளிர்க்குச்சாயலில் உவமைகூறப்படுவது வழக்கமாதலால், வாய்களைப்பற்றிக்கருதிய மயில்கள் சாயற்செவ்வியைக் கருத்தோடுநோக்கத் திரிந்தன வென்க. இனி வேறு ஒருசாரார்கூறும்உரை வருமாறு:—தாம் கவரவேண்டுமென்று கொவ்வைப்பழங்கருதியிருந்த மகளிரின்செவ்வாயினழகை இந்திரகோபமென்னும்பூச்சிகள் தாம்கவர்ந்து பார்த்துக்கொண்டுள்ளனஎன்று காட்டிலுள்ளமயில்கள் கருதியதனால்தானோ (அவ்விந்திரகோபங்களை உண்ணவிரும்பித் தாம் அதற்காகத் திரிவது தோன்றாவண்ணம்) அப்பெண்களின் மேகலையினழகைப் பார்க்கத்திரிவனபோல் திரிந்தன என்பது.

இனி இச்செய்யுட்கு - (மகளிரின்)கோவைப்பழம்போன்ற வாய்களைப் (பார்த்து),மயில்கள் இவ்வாய்கள் இந்திரகோபத்தைக்கவ்வியுள்ளதனால் இங்ஙனம் செந்நிறமாகத்தோன்றுகின்றன என்று கருதியதனால்தானோ (தாமும் அவ்விந்திரகோபத்தைக்கவ்விக்)காட்டியனவாய், பிறகு நவ்விநோக்கியரான அந்தமகளிரது மேகலையின் சாயல் தம்கலாபத்தின் கண்களைப்போலிருத்தலால் அவற்றைநோக்கித் திரிவனபோல்வனவாகித் திரிந்தனஎன்று உரை கூறலுமொன்று. இவ்வுரைக்கு-மடந்தைமாரின் கோவைப்பழம்போல்இயற்கைச்செந்நிறத்தையுடைய வாய்களை நோக்கி, 'இந்திரகோபத்தைக்கவ்வியதனால்தான் இவை இங்ஙனமுள்ளன' என்றுகருதினாற்போலத் தாம் இந்திரகோபத்தைக் கவ்வின என்ற இடத்தும் ஓர்அதுத்தற்குறிப்பேற்றவணி காண்ஸாம். மழைக்காலத்துஉண்டாவதனால், மழைக்கடவுளாகிய இந்திரனால் காக்கப்படுவதுஎன்னும்பொருள்பட, 'இந்திரகோபம்'என்ற பெயர் அந்தப் பூச்சிக்கு வந்தது. அப்பூச்சி மிக்கசெந்நிறமாக விருக்கும். பி - ம்:—[1]காட்டினமயில்கள், [2]பொலி. [3]நோக்கிய. (௯)

க௰.—குதிரையினின்று இறங்கிய மகளிர் மரநிழலில் தங்குதல்.

உய்க்கும் வாசிக [1]ளிழிந்திள வன்னத்தி னொதுங்கி
மெய்க்க லாபமுங் குழைகளு மிழைகளும் விளங்கத்
தொக்க மென்மர நிழல்படத் துவன்றிய சூழல்
புக்க மங்கையர் பூத்தகொம் பாமெனப் பொலிந்தார்

(இ - ள்.) உய்க்கும் வாசிகள் - செலுத்தப்பட்ட குதிரைகளினின்று, இழிந்து - இறங்கி, இள அன்னத்தின் ஒதுங்கி - இளவன்னங்கள்போல மெல்லநடந்து, தொக்க மெல் மரம் நிழல் பட துவன்றிய சூழல் புக்க - அடர்ந்த மெல்லிய மரங்களின் நிழலுண்டாகும்படியமைந்த இடத்திற்போய்ச் சேர்ந்த, மங்கையர் - மகளிர்;— மெய் - (தமது) உடம்புகளில், கலாபம்உம் - இடையணிகளும், குழைகள் உம் - காதணிகளும், இழைகளும் - மற்றையாபரணங்களும், விளங்க - பிரகாசிப்பதனால், பூத்த கொம்பு ஆம் என - (மலர்கள் நிறையப்)பூத்துள்ளபூங்கொம்புஎன்றுசொல்லும்படி, பொலிந்தார் - விளங்கினார்; (எ - று.)

குதிரைகளினின்றுஇறங்கி மரநிழலடர்ந்தஇடத்தில் தங்கிய மகளிர் பலவகையாபரணங்களைப் பூண்டிருத்தலாற் பூங்கொம்புபோலப்பொலிந்தனரென்க. பூங்கொடிகளும் தாம்படருமாறு மரத்தின்கீழ்ச் செல்லும். கலாபம் - பதினாறுகோவையுள்ள இடையணி. பி - ம்:—[1]இழிந்தனர். (௰)

கக.—வழிவந்தஇளைப்பினால் மங்கையர் பளிக்குப்பாறையில் துயிலுதல்.

தளங்கொ டாமரை யெனத்தளி ரடியினு முகத்தும்
வளங்கொண் மாலைவண் டலமர வழிவருந் தினராய்
விளங்கு தம்முருப் பளிங்கிடை வெளிப்பட வேறோர்
துளங்கு பாறையிற் றேழிய ரயிர்த்திடத் துயின்றார்.

(இ-ள்.) (சூழல்புக்க மங்கையர்),— வழி வருந்தினர் ஆய் - (வெகு தூரம்) பிரயாணஞ்செய்ததனுல் வருத்தமடைந்தவராய், வளம் கொள் மாலை வண்டு - வளப்பமுள்ள [செழிமையுடன்வளர்ந்துள்ள] தொகுதியான வண் டுகள், தளம் கொள் தாமரை என - இதழ்நெருக்கமாகக்கொண்டுள்ள தாமரைமலராகக்கருதி, தளிர் அடியின்உம் முகத்துடம் - தளிரையொத்த (அவரது) பாதங்களிலும் முகத்திலும், அலமர - சுழன்றுகொண்டிருக்க,— விளங்கு தம் உரு - பிரகாசிக்கின்ற தமது உருவம், தோழியர் அயிர்த்திட பளிங்கிடை வெளிப்பட - (தமது) தோழியர் (பிரதிபிம்பத்தைக்கண்டு இது தான் நமதுதலைவியின்உருவமோஎன்று) ஐயங்கொள்ளும்படி பளிக்குப்பா றைகளில் பிரதிபிம்பம்தோன்றவும், வேறு ஓர் துளங்கு பாறையில் - வே றொருவிளங்குகின்ற பளிங்குப்பாறையிலே, துயின்றார் - படுத்து உறங்குவா ராயினர்; (எ - று.)

மங்கையர் வெகுதூரம் பிரயாணம்வந்த இளைப்பினுல் ஒருபளிக்குப் பாறையிற் படுத்துஉறங்கின ரென்றவாறு. அவ்வாறுபடுத்துஉறங்குகையில் அவரதுஉருவம் வேறொருபளிக்குப்பாறையிற் பிரதிவிம்பித்தலால் அந்தப் பிரதிவிம்பத்தையே தோழியர் 'இது,நமததலைவியின்உருவம்' என்றுமயங்க, அம்மங்கைமாரின் அடிகளையும் முகத்தையும் கண்டு வண்டுக்கூட்டங்கள் தாமரைமலரென்று அவற்றில்மொய்க்குமாறு சுழல்வதாயின வென்க. வண்டு களும் தோழியரும் மயங்கினரெனக் கூறியது - மயக்கவணியாம். தோழியர் காண்கின்றபளிங்கினும் மங்கைமார் துயின்ற பளிக்குப்பாறை வேறுதலால், 'வேறோர்துளங்குபாறையில்'எனப்பட்டது. "அலமரல்தெருமர லாயிரண்டுஞ் சுழற்சி" என்பது, தொல்காப்பியம். வளம் கொள் - தேன்வளத்தைக் கொண்ட என்றுமாம். (கக)

கஉ.—சிலமகளிர் சூழலிற் புகுதல்.

பிடிபுக் [1]காயிடை மின்னொடும் பிறங்கிய மேகம்
படிபுக் காலெனப் படிதரப் பரிபுரம் புலம்பத்
துடி[2]புக் காவிடைத் திருமக டாமரை துறந்து
குடி[3]புக் காலெனக் குடிபுக்கார் [4]கொடியன்ன மடவார்.

(இ - ள்.) மின்னொடும் பிறங்கிய மேகம் - மின்னல்களோடும் விளங்கிய மேகங்கள், அ இடை - அந்தச் சந்திரசயிலமலைப் பக்கத் தில், படி புக்கால் என - பூமியிற் சேர்ந்தாற்போல, பிடி புக்கு படி தர - பெண்யானைகள் (ஆங்குச்) சேர்ந்து (பூமியிற்) படிந்துநிற்க, (அவற் றின்மீதுஏறியிருந்த), கொடி அன்ன மடவார் - பூங்கொடியையொத்த (சில) மகளிர், (கீழிறங்கி),— துடி புக்கா இடை திருமகள் தாமரை துறந்து குடி புக்கால் என - உடுக்கையென்னும்பறையும் உவமையாகப்பெறுத இடை யையுடைய இலக்குமி (தனதுவாழிடமான) தாமரைமலரைவிட்டு (அங்குக்) குடிபுகுந்தாற்போல, பரிபுரம் புலம்ப - (தமது தாள்களிலணிந்த) நூபுரம் (கலீர்கலீரென்று) ஒலிக்க (நடந்து), குடி புக்கனர் - (தங்குமாறுஏற்படுத் திய விடுதியிற்) குடிபுகுந்தார்கள்; (எ - று.)

பெண்யானைகளின்மீது ஏறிவந்த சில்மகளிர் அவை பூமியிற்படிந் திருக்க அவற்றினின்றுஇறங்கி அங்கு ஓர்குழலிற் குடி புகுந்தனரென்க. மகளிரைத் தாங்கியபிடிகட்கு, மின்னலைத்தாங்கிய மேகங்கள் உவமை. யானை பூமியிற் படிந்தபின் இறங்குதல், இயல்பு. மகளிரில் ஒவ்வொருத் தரும் தனித்தனி திருமகளையொத்திருந்தன ரென்க. மூன்றாமடியில், புகாஎன்பது விரித்தல்விகாரம் பெற்றுவந்தது. பி - ம்:— [1]ஆவிடை. [2]புக்காயிடை. [3]புக்காளென. [4]கொடியிடை. (௬௨)

௬௩. [1]உண்ணமுத முந்தியெனை யோநகர் கொணர்ந்த
துண்ணெனு முழக்கின துருக்கர் தரவந்த
மண்மகடன் மார்பினணி வன்னசர மென்னப்
[2]பண்ணியல் வயப்[3]பரிகள் பந்தியி னிரைத்தார்.

(இ - ள்.) உண் அமுதம் உந்தி - உண்ணுதற்குஉரிய உணவுப்பொருள் களை யூட்டி, எனை ஓ நகர் கொணர்ந்த - எந்தெந்தநகரத்திலிருந்தோ கொண்டுவரப்பெற்றனவும், துண்ணெனும் முழக்கின - (கேட்பவர்) திடுக் கிடக்கூடிய சத்தமுடையனவும், துருக்கர் தர வந்த - துருக்கர்கள் கொணர்ந்துவந்தனவுமான, பண்இயல்-அலங்கார மமைந்த, வய பரிகள்-வலி மைபொருந்திய குதிரைகளை, மண்மகள்தன் மார்பின் அணி வன்னசரம் என்ன-பூமிதேவியின் மார்பிலணிந்த பலரத்தினங்களையுடைய நவரத்தின ஹாரம்போல, பந்தியின் - குதிரைச்சாலையில், நிரைத்தார் - ஒழுங்காகக் கட்டினார்கள்; (எ - று.)

பலநிறங்களையுடைய குதிரைகள் வன்னசரம்போலும். துருக்கராற் காட்டிற்பிடிக்கப்பட்டுப் பலநகரங்களில் ஏற்றஉணவளித்து வளர்க்கப்பட்ட குதிரைகள் அங்குவந்தனவென்க. [1]உண்ணமுதவுந்தியன வொண்ணகரு ணிறந்த என்ற பாடத்துக்கு - (தேவர்கள்) உண்ணுதற்குஉரிய திருப்பாற் கடலிலே தோன்றியன என்றுபொருளாம். அமுதவுந்தி - பாற்கடல். பி - ம்:— [1]உண்ணமுதமூட்டி யிளையோர்நகர்கொணர்ந்த. [2]பண்ணுறு, பண்ணமை. [3]புரவி. (௬௩)

௬௪.—ஆங்காங்குத்தங்குவதற்குஏற்ப வசதிகளைப் பணியாளர் அமைத்தல்.

நீர்[1]திரை [2]நிரைத்தவென நீடிரை நிரைத்தா
ரார்கலி [2]நிரைத்தவென வாவண நிரைத்தார்
கார்நிரை யெனக்களிறு காவிடை நிரைத்தார்
மாருத [2]நிரைத்தவென வாசிக ணிரைத்தார்.

(இ - ள்.) நீர் திரை நிரைத்த என - நீரலைகள் ஒழுங்காக நிறுத்தப்பட் டன வென்னும்படி, நீள் திரை நிரைத்தார் - நீண்டதிரைகளை (ஆங்காங்கு) ஒழுங்காகக்கட்டினார்கள்; ஆர்கலி நிரைத்த என - கடல்கள் ஒழுங்காக அமைக்கப்பட்டன என்னும்படி, ஆவணம் - கடைத்தெருக்களை, நிரைத்தார் —; கார் நிரைத்த என - குமகங்கள் ஒழுங்காக நிறுத்தப்பட்டனவென்னும் படி,களிறு - யானைகளை, காவிடை நிரைத்தார் - சோலைகளிடையே வரிசை

யாகக்கட்டினார்கள்; மாருதம் நிரைத்த என - காற்றுக்களை வரிசையாக நிறுத்தினாற்போல, வாசிகள் நிரைத்தார் - குதிரைகளை ஒழுங்குபடக்கட்டினார்கள்; (எ - று.)

வந்தவர்கள் ஆங்காங்கு வசிக்குமாறு திரைகளைக்கட்டியும், வேண்டிய பொருள்களைக் கொள்ளுமாறு கடைகள் அமைத்தது மன்றி, உடன்வந்த யானைகுதிரைகளையும் அவ்வவற்றிற்குத் தக்க தலங்களில் வரிசையாகக் கட்டின ரென்பதாம். ஓசையின்பம்நோக்கி 'நீர்திரை' என இயல்பாயிற்று. ஆவணம் = ஆபணம். விரைந்துசெல்லுந்தன்மைபற்றி, வாசிக்கு மாருதத்தை உவமைகூறினார். பி - ம்:—[1]நிரை, நுரை. [2]நிரைத்ததென. (கச)

கரு.—முரசோலிமுதலியவற்றால் அரசன்தங்கியவிடம்இன்னதென்று உணர்தல்.

நடிக்குமயி [1]லென்னவரு நவ்வி[2]விழி யாரும்
வடிக்குமயில் வீரரு மயங்கினர் திரிந்தா
ரிடிக்குமுரசக்குரலி [3]னெங்குமுரல் சங்கின்
கொடிக்களி னுணர்ந்தரசர் கோநக ரடைந்தார்.

(இ - ள்.) நடிக்கும் மயில் என்ன வரும் நவ்வி விழியார்உம் - ஆடுந்தன்மையுள்ள மயில்போன்று வருகின்ற மான்பார்வைபோன்ற பார்வையையுடைய மங்கைமாரும், வடிக்கும் அயில் வீரர்உம் - காய்ச்சியடித்துக் கூராக்கப்பட்ட வேலாயுதத்தையேந்திய வீரர்களும், மயங்கினர் திரிந்தார் - (தாம் புகவேண்டியஇடம் இன்னதென்றுதெரியாமல்) மயங்கித்திரிந்து, (பின்பு), இடிக்கும் முரசம் குரலின் - ஒலிக்கின்றமங்களமுரசின் ஒலியாலும், எங்கும் முரல் சங்கின் - எவ்விடத்தும் [வெகுதூரம்வரையிலும்] (ஒலிகேட்கும்படி) சத்திக்கின்ற மங்களச்சங்கினாலும், கொடிக்களின் - (ஏற்றசின்னத்தையுடைய)கொடிகளாலும், உணர்ந்து-(அரசன்மனை இதுதானென்று) தெரிந்துகொண்டு, அரசர் கோநகர் - சக்கரவர்த்திதங்கிய இடத்தை, அடைந்தார்—.

ஆங்காங்குத் தங்கும்படி பலகூடாரங்கள் அமைக்கப்பட்டதனால் தசரதசக்கரவர்த்திதங்கிய இடத்திற் போகவேணுமென்று கருதிய மங்கையரும் வீரரும் 'இதுதான் அரசன் தங்கிய மாடம்' என்று உணரமுடியாமல் மயங்கி அலைந்து பிறகு முரசம்முதலிய சின்னங்களால் ஊகித்து உணர்ந்து அதனைச் சேர்ந்தன ரென்பதாம். பி - ம்:— [1]அன்னவரும். [2]அனையாரும். [3]எங்கும். (கரு)

கசா.—ஆடவர் தம்மங்கைமார்மீது படிந்த தூசியைப் போக்குதல்.

மிதிக்கநிமிர் [1]தூளியின மறைக்கமணி மெய்யைச்
சுதைக்கணு ரையைப்பொருவு தூசுகொடு [2]தூய்தா
யுதிர்த்தன ரிளங்குமர [3]ரோவியரி லோவம்
புதுக்கின ரெனத்தருண மங்கையர் பொலிந்தார்.

(இ - ள்.) மிதிக்க நிமிர் தூளி இனம் - (யானைமுதலியவை) செல்வதனால் மேலெழுந்த புழுதிக்கூட்டம், மணி மெய்யை மறைக்க - (தமது மனை

விமாரின்) அழகிய உடம்பை மறைத்ததாக (அப்போது), இள குமரர்-(அம் மங்கைமாரின்கணவரான) இளமையையுடைய குமாரர்கள், சுதைக்கண் நுரையை பொருவு - பாலில்தோன்றுகின்ற நுரையையொத்த, தூசு கொடு - ஆடைகளைக்கொண்டு, தூய்து ஆ - சுத்தமாக [படிந்த தூளியினம் நீங்கும் படி], உதிர்த்தனர் - போக்கினார்கள்; (அதனால்), தருணம் மங்கையர் - இள மையையுடைய மடந்தைமார், ஓவியர் இல் ஓவம் புதுக்கினர் என - சித்திரக் காரர் வீட்டிலெழுதியசித்திரத்தைப் புதுப்பித்தாரென்று சொல்லும்படி, பொலிந்தார் - விளங்கினார்கள்; (எ - று.)

அங்குத்தங்கினபோது, கணவர்கள் தமதுமங்கையர்மீதுபடிந்திருந்த தூளியினத்தைத் தமதுஆடைகளாற் போக்க, அதனால் அம்மங்கையர் சித்தி ரக்காரரால் மாசுதீர்த்துப் புதுப்பிக்கப்பட்ட சித்திரம்போல விளங்கினரென் றவாறு. பி - ம்:— [1]தூளியின்விளக்கமறு. [2]தூசை. [3]ஓவியரின். (கசு)

கஎ.—அரசகுமாரர் யானைகளினின்றிறங்கிப் படமாடஞ்சேர்தல்.

தாளுயர் தடக்கிரி யிழிந்துதரை சேருங்
கோளரியெ னக்[1]கரிகள் கொற்றவ ரிழிந்தார்
பாளைவிரி யொத்துலவு சாமரை படப்போய்
[2]வாளெழ நிரைத்தபட மாடமவை புக்கார்.

(இ - ள்.) கொற்றவர் - (யானையைவாகனமாகக்கொண்ட) அரசகுமா ரர்கள், தாள் உயர் தட கிரி இழிந்து தரை சேரும் கோள் அரி என - தாழ் வரை உயர்ந்திருக்கப்பெற்ற பெரியமலையிலிருந்துஇறங்கிப் பூமியைச்சேரும் வலியசிங்கத்தைப்போல, கரிகள் இழிந்தார் - யானையினின்றுகீழிறங்கியவ ராய்,— பாளை விரி ஒத்து உலவு சாமரை பட - விரிந்தபாளைக்குச்சமான மாகி (த் தமதுஇருபுறங்களிலும்) அசைகின்ற சாமரைவீசப்பெற, போய்—, வாள் எழ நிரைத்த படம் மாடம் அவை - ஒளியெழும்படி ஒழுங்காக அமை த்த கூடாரங்களில், புக்கார் - புகுந்தார்கள்; (எ - று.)

அரசகுமாரர்கள் யானையினின்றுஇறங்கி வெண்சாமரைகள் தமது இரு புறத்திலும் வீசப்பெறக் கூடாரங்களிற் புகுந்தன ரென்பதாம். யானைகளி னின்றுஇறங்கிய கொற்றவர்க்கு - மலையினின்றுஇறங்கிய கோளரிஉவமை. 'தாளுயர்' என்பதைக் கரிகட்குங்கூட்டிப் பொருளுரைக்க. பி - ம்:— [1]கரி கொள். [2]வாளெழினிதைத்த, வாளெழுநிரைத்த. (கஎ)

கஅ.—படயூடத்தில் மகளிர்முகம்விளங்குதல்.

[1]தூசினொடு வெண்பட முடைக்குடில்க டோறும்
வாசநகை மங்கையர் [2]முகக்கண் மழைவானின்
[3]மாசின்மதி யின்கதிர் [4]வழக்குநிழ லெங்கும்
வீசுதிரை வெண்புனல் [5]விழுங்கியது போலும்.

(இ - ள்.) வெண் தூசினொடு - வெண்ணிறமுள்ள ஆடைகளினாலியன்ற, படம் உடை குடில்கள்தோறும் - விருதுக்கொடியையுடைய கூடாரங்களி லெல்லாம், நகை வாசம் மங்கையர் - புன்சிரிப்பையும் இயற்கைமணத்தையு

முடைய மகளிரின் முகங்கள்—,—மழை வானில் - மேகங்கள் சஞ்சரிக்கின்ற ஆகாயத்திலேயுள்ள, மாசுஇல் மதியின் கதிர் வழங்கும் நிழல் - குற்றமில்லாத சந்திரனுடைய ஒளிவீசுந்தன்மையுள்ள பிரதிபிம்பங்கள், எங்கும் - எல்லாவிடங்களிலும் [பலஇடங்களிலும்], வீசு திரை வெண் புனல் - (சமுத்திரத்தினது) வீசப்படுகின்றஅலைகளின் வெண்ணிறமுள்ள நீர், விழுங்கியது - தம்முட்கொண்டிருப்பதை, போலும் - ஒத்திருக்கும்; (எ - று.)

வெண்ணிறக்கூடாரங்களி னுள்ளே மகளிர்முகங் கள் தோன்றுவது - கடலின்வெண்புனலில் ஒளிவீசுந்தன்மையமைந்த சந்திரபிம்பங்கள் அமைந்திருப்பதுபோலு மென்றவாறு; தற்குறிப்பேற்றவணி: "கோடியும் ...யானைமுகபடாமும் படமே" என்றதனால், படம்என்ற சொல்-துவசமென்னும் பொருளு முள்ள தென்க. இனி, தூசினெடுஎன்பதற்கு - தூசிப்படிந்த என்றேனும் (இடையிடையே) கயிறுகொண்டுகட்டிய என்றேனும்உரைத்து, படமுடைக்குடில் - துகிலினாலியன்ற கூடார மெனினுமாம். பி - ம்:—[1]தூசினெடு. [2]முகம்பொலிவ. [3]காசின்மதியின். [4]வயங்கு. [5]விளங்கியன, விழுங்கியன. (கஅ)

கக.— ஒருபுறம் புழுதியுடனே வரும் யானையின் வருணனை.

மண் ணுற விழுந்துநெடு வானுற [1]வெழுந்து
கண் ணுதல் பொருந்தவரு கண்ணனின் வருங்கா
ருண்ணிற நறும்[2]பொடியை வீசியொரு பாகம்
வெண்ணிற நறும்பொடி புனைந்தமத வேழம்.

(இ - ள்.) மண் உற விழுந்து - புழுதி (தன்மீது) படியும்படி (பூமியில்) விழுந்து, நெடு வான் உற எழுந்து-நீண்டஆகாயத்திற்பொருந்தும்படி மேலெழுந்து, கார் நிறம் உண் நறு பொடியை ஒருபாகம் வீசி-(தனது) கருநிறத்தை மறைக்கின்ற நறுமணமுள்ள புழுதியை ஒருபகுதியில்மாத்திரம் தள்ளிவிட்டு, ஒருபாகம் வெள் நிறம் நறு பொடி புனைந்த - ஒருபகுதியில்மாத்திரம் வெண்ணிறமுள்ள நறியபொடியை யணிந்த, மதம் வேழம் - மதயானையானது,— கண் நுதல் பொருந்த வரு கண்ணனின்-சிவபெருமான் (தன்னுடைய வலப்பாகத்திலே) பொருந்திநிற்க வருகின்ற திருமால்போல, வரும்—; (எ - று.)

ஒருபாகத்திற்படிந்த வெண்புழுதி படிந்தபடியே யிருக்க, மற்றொரு பகுதியிற்படிந்த வெண்புழுதியைத் தன்துதிக்கையால் துடைத்துவிட்டு வருகின்ற யானைக்கு, வெண்ணிறவிபூதியை யுடலெங்கும்பூசிய சிவபெருமானைத் தனது வலப்பாகத்திலேகொண்டு கார்நிறமேனியுடன் விளங்கும் திருமாலை யுவமைகூறினர்; தற்குறிப்பேற்றவுவமையணி. திருமால் தன் வலப்பாகத்திற் சிவபெருமானைக் கொண்டிருக்கின்றா னென்பதை "வலத்தனன் றிரிபுரமெரித்தவன்" என்ற பெரியார்பாசுரத்தாலும் அறிக. இனி, சங்கரநாராயணமூர்த்தியை அவ்யானைபோலுமென உரைகூறுவாருமுளர். வருகின்ற வேழம் உயரமான தென்பதை விளக்க 'நெடுவானுற வெழுந்து' என்றார். பி - ம்:—[1]வயங்கும். [2]பொடியும். (கக)

உ0.—குதிரைகள் படிந்த புழுதியை யுதறிவிட்டு நிற்றல்.

தீயவரொ டொன்றிய திறத்தரு நலத்தோ
ராயவரை யந்நிலை யறிந்தனர் துறந்தாங்
கேயவரு நுண்பொடி படிந்துட [1]னெழுந்தொண்
பாய்பரி விரைந்துதறி நின்றன [2]பரந்தே.

(இ-ள்.) தீயவரொடு ஒன்றிய-தீக்குணமுடையவரோடு (ஆராய்ச்சியில்லாமல்) நட்புக்கொண்ட, அரு திறத்து நலத்தோர்-அருமையான சாமர்த்தியத்துடன்கூடிய நல்லவர்கள், ஆயவரை - அந்தத் தீயவரை, அ நிலை - அந்த அளவிலே, அறிந்தனர்-(பழக்கத்தால்) அவர் தீயகுணத்தை அறிந்தவர்களாய், துறந்த ஆங்கு - கைவிட்டாற்போல,—ஒள் பாய் பரி - ஒள்ளியபாய்கின்ற குதிரைகள், ஏய அரு நுண் பொடி படிந்து - (தம்மீது) பொருந்திய மிகவுஞ்சிறிய புழுதியிலே படிந்து, (பிறகு), உடன் எழுந்து - உடனே எழுந்து, விரைந்து உதறி - விரைவாகஉதறிவிட்டு, பரந்துநின்றன - பரவியிருந்தன; (எ - று.)

அங்குவந்த குதிரைகள் புழுதியிலே படிந்து பிறகு அந்தப் புழுதிகளையெல்லாம் உதறிவிட்டு நின்றமைக்கு, நற்குணமுடையோர் முதலிலே தீயவரோடு தாம் உணராமையால் நட்புச்செய்து விட்டுப் பிறகு அவருடைய தீக்குணத்தைத் தாம் உணர்ந்தமையால் அவருடைய நட்பை அறத்துறத்தலை யுவமை கூறினர்: உவமையணி. வழிவந்த இளைப்பைப் போக்குமாறு குதிரைகளைப் புழுதியிலே புரளவிடுதலும், புழுதியிற்புரண்ட குதிரைகள், அப்புழுதி உதிர்ந்து விடுமாறு உடம்பை யுதறுதலும், இயல்பு. துறந்து =துறந்தால்: எச்சத்திரிபு. ஆங்கு - உவமவுருபு. பரி - பால் பகாவஃறிணைப் பெயர். பி - :—[1]எழுந்தே. [2]பரிந்தே. (உ0)

உக.— கட்டையறுத்துக்கொண்ட சில குதிரைகள் அடங்கிவருதல்.

மும்மைபுரி வன்கயிறு கொய்துசெயன் மொய்ம்பாற்
றம்மையு முணர்ந்துதரை கண்டுவிரை கின்ற
வம்மையினொ டிம்மையை யறிந்துநெறி [1]செல்லுஞ்
செம்மையவ ரென்னநனி சென்றன துரங்கம்.

(இ - ள்.) மும்மை புரி வல் கயிறு - (மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை யென்று) மூவகையாகச் செய்யப்படுகின்ற வலிய பாசத்தை, கொய்து - அறுத்து [போக்கி], செயல் மொய்ம்பால் - (தாம்) செய்கின்ற யோகத்தின் வலிமையால், தம்மை உணர்ந்து - தமது [ஆன்மாவினது] ஸ்வரூபத்தை [ஆன்மா மலமற்றதென்றும் ஞானாநந்த மயமானதென்றும் கடவுளுக்கு அடிமை யென்றும்] தெரிந்து, (அதனோடு நில்லாமல்), தரை கண்டு - (தாம் செல்ல வேண்டிய) நிலமாகிய மோட்சத்தின் தன்மையையும் உணர்ந்து, (அதனையடையுமாறு), விரைகின்ற-, அம்மையினொடு இம்மையை அறிந்து நெறி செல்லும் - மறுமைப்பயனையும் இவ்வுலகப்பயனையு முணர்ந்து நன்னெறிக்கட் செல்லுகின்ற, செம்மையவர் என்ன - நற்குணமுடைய

யோகியரைப்போல்,—துரங்கம் - குதிரைகள், மும்மை புரி வன்கயிறு கொய்து - (தம்மைக்கட்டிய) முப்புரியாக அமைந்த கயிற்றை யறுத்துக் கொண்டு, செயல் மொய்ம்பால்- பாகனது வல்லமையால், தம்மைஉம் உணர்ந்து - தாம் செய்ய வேண்டியவை இன்னவை யென்று அறிந்தனவாய், தரை கண்டு - (தாம் இருக்கவேண்டிய) இடத்தையறிந்து, விரைகின்ற - விரைவைக்கொண்டனவாகி, நனி சென்றன - மிகவும்அடங்கித் திரும்பிவந்தன.

குதிரைகள் தாம் முதலிற்கயிற்றை யறுத்துக்கொண்டுஓடத்தொடங்கிப் பின்பு தம்மைச்செலுத்துகின்ற சாரதிகளின்வல்லமையால் தாம்செய்யவேண்டியஇன்னவையென்பதையும் தாம்இருக்கவேண்டியஇடம் இன்னவென்பதையும்உணர்ந்து விரைந்துமீண்டுவந்தன; அவ்வாறு மீண்டுவந்த குதிரைகட்குயோகியரை உவமைகூறினர்; சிலேடை மூலமாகவந்த உவமையணி. யோகியரைப்பற்றிக்கூறுகையில் மும்மைபுரிவன்கயிறுகொய்துஎன்பதற்கு- ஆணவம் மாயை கன்மம்என்னும் மூன்றுமலங்களையும் அறுத்துஎன்றும், தரைகண்டு என்பதற்கு - இம்மண்ணுலகவாழ்வு நிலையற்றதென்பதையுணர்ந்துஎன்றும் உரைத்தலுமொன்று. இச்செய்யுள் குதிரைகள் வேகமாகச்செல்வதைக்குறிக்குமெனக்கொண்டு உரைகூறுவாருமுளர். பி - ம்:—[1]முன்னி. (உக)

உஉ.—திரைச்சீலையினுள் மகளிர்கண்கள் பிறழ்ந்துவிளங்குதல்.

விழுந்தபனி யன்னதிரை வீசுபுரை தோறுங்
கழங்குபயின் மங்கையர் கருங்கண் மிளிர்கின்ற
தழங்கு[1]கழி சிந்திய [2]தரம்பயி றரங்கத்
தெழுந்திடை பிறழ்ந்தொளிர் கொழுங்கயல்க ளென்ன.

(இ - ள்.) கழி சிந்திய தரம் பயில் தழங்கு தரங்கத்து -கழியிலேபோய் விழுமாறு மேன்மைபொருந்திய [உயர்ந்தெழுகின்ற] ஒலிக்கின்ற அந்த அலைகளினின்று, எழுந்து - மேலெழுந்து, இடை - அவ்விடத்திலே, பிறழ்ந்து ஒளிர் - (தமதுஉடல்) பிறழ்ந்துவிளங்குகின்ற, கொழு கயல்கள் என்ன -கொழுத்த கயல்மீன்களென்றுசொல்லும்படி,—விழுந்த பனிஅன்ன திரை வீசு புரைதோறும் - (ஆகாயத்தினின்று)விழுந்த பனியையொத்துத் தோன்றுகின்ற திரைச்சீலைகள் (காற்றினால்) மோதப்படுகின்ற இடங்களிலெல்லாம், கழங்கு பயில் மங்கையர் கரு கண் - கழற்காயாடுகின்ற மடந்தையரின் கரியகண்கள், மிளிர்கின்ற-பிறழ்ந்துவிளங்குவனவாயின; (எ-று.)

காற்றினால் திரைச்சீலைகள் வீசியெறியப்படும்போது அங்குள்ள மடந்தைமாரின் கண்கள், அலைவீசும்போது ஆங்குஎழுந்துதோன்றுகின்ற கயல் மீன்கள்போலப் பிறழ்ந்துவிளங்கின வென்பதாம். தற்குறிப்பேற்ற உவமையணி. இந்தவருணனையில், அலைகின்ற திரைச்சீலைக்கும் அலைக்கும் உவமை யென்க. வெண்ணிறத்திரைக்குப் பனி உவமையாதற்கு ஏற்கும். (உஉ)

பி - ம்:—[1]துளி, தளி. [2]சலம்.

உ௩.—சிறிதுதோண்ட ஆற்றில் ஊற்றுநீர் தோன்றுதல்.

வெள்ளநெடு வாரியற ¹வீசியுள வேனும்
கிள்ளவெழு கின்றபுனல் கேளிரின் விரும்பித்
தெள்ளுபுன லாறுசிறி தேயுதவு கின்ற
வுள்ளதும றாதுதவும் வள்ளலையு மொத்த.

(இ - ள்.) தெள்ளு புனல் ஆறு - தெளிந்த நீரையுடைய நதிகள், வெள்ளம் நெடு வாரி அற - (தன்னிடத்திருந்த) வெள்ளமாகிய மிக்கநீர் இல்லாதபடி, வீசி உள என்உம் - வரண்டு போயிருந்தனவாயினும், கிள்ள எழுகின்ற புனல் - தோண்டத் தோண்ட (ஊற்றாகத்) தோன்றுகின்ற நீரை, சிறிது ஏ உதவுகின்ற - சிறிது சிறிதாகவே உதவுவனவாயின; (அதனால், அவைகள்), (தான் மிக்க செல்வத்தோடு இருந்த காலத்தில் வேண்டியவாறெல்லாம் கொடுத்துத் தன்செல்வம் வரண்ட காலத்திலும்), உள்ளது-(தன்னிடத்து) உள்ள பொருளை, மறாது - (கொடுக்கமாட்டேன் என்று) மறுத்துச் சொல்லாமல், கேளிரின் விரும்பி - உறவினரைக் கண்டால் விரும்புவது போல (இரப்போரைக் கண்டால் அவரிடத்து) விருப்பங்கொண்டு, உதவும் - கொடுக்குந் தன்மையுள்ள, வள்ளலைஉம் - உதாரகுணமுள்ள கொடையாளியையும், ஒத்த - ஒத்திருந்தன; (எ - று.)

வெள்ளநீர் இருந்த காலத்துப் பலர்க்கும் வேண்டியபடி யெல்லாம் உதவி, நீர்வற்றிய காலத்தும் தோண்டத் தோண்ட மெல்லமெல்ல ஊற்று நீரை உதவுகின்ற ஆறுகட்கு வள்ளலை உவமை கூறினர். உம்மை - இசைநிறை. வெள்ளமாகிய நெடுவாரியை, அறவீசி - (நீர்ப்பெருக்கு இருந்த காலத்து) மிகுதியாக (உலகத்தார்க் கெல்லாம்) அளித்து என்றுமாம். பி - ம்:—¹வீசியில. (உ௩)

உ௪.—ஆடவர் படமாடங்களிற் புகுதல்.

துன்றிநெறி பங்கிக¹டு ளக்கி²யழ லோடு
மின்றிரிவ வென்னமணி யாரமிளிர் மார்பர்
மன்றன்மண நாறுபட மாடநுழை கின்றார்
குன்றின்முழை தோறுநுழை கோளரிக ளொத்தார்.

(இ - ள்.) துன்றி - நெருங்கி, நெறி - நெறித்த, பங்கிகள் - தலைமயிர்களை, துளக்கி - அசைந்துவிளங்கச் செய்துகொண்டு,—அழலோடுஉம் மின் திரிவ என்ன-அக்கினியுடனே மின்னல்கள் திரிவன என்று சொல்லுமாறு, மணி ஆரம் மிளிர் - இரத்தினங்கள் பதித்த ஹாரங்கள் விளங்குகின்ற, மார்பர் - மார்பையுடைய வீரர்கள்,—மன்றல் மணம் நாறும் - புதுமணம் வீசுகின்ற, படம் மாடம் - (தம் தமக்கு உரிய) கூடாரங்களில், நுழைகின்றார் - புகுகின்றவராய்,— குன்றில் - மலையிலே, முழை தோறும் நுழை - குகைகளிலே புகுகின்ற, கோள் அரிகள் - கொல்லுந் தன்மையுள்ள சிங்கங்களை, ஒத்தார்—; (எ - று.)

பங்கிகள் துளக்கி நுழைகின்றார் என்க. ஆங்கு அடிக்கப்பட்ட கூடாரங்களிற் புகுகின்ற வீரர்கட்கு, குகைகளிற் புகுகின்ற சிங்கம் உவமை. வீரர் நடந்து செல்லும்போது, அவர்கள் மார்புகளில் இரத்தின வாரங்கள் விளங்குவதை அக்கினியும் மின்னலும் ஆங்குத் திரிவதுபோலு மென்றார். மன்றன்மணம் - மீமிசைச்சொல்லுமாம். பி - ம்:—[1] துளங்க. [2] எழிலோடு.

உரு.—யானைகள் நீரைக் கலக்குதல்.

நெருங்கயி லெயிற்றனைய செம்மயிரி னெற்றிப்
பொருங்குலிக மப்பியன போர்மணிக ளார்ப்ப
பெருங்களி றலைப்புனல் கலக்குவன [1]பெட்குங்
கருங்கடல் கலக்குமது கைடவரை யொத்த.

(இ - ள்.) நெருங்கு அயில் எயிறு அனைய - நெருங்கியுள்ள வேலாயுதத்தையும் கோரப்பற்களையும் ஒத்த [கூர்மையான], செம் மயிரின் - செந்நிறமுள்ள மயிரைக்கொண்ட, நெற்றி - நெற்றியிலே, பொரும் குலிகம் அப்பியன - (தமக்குத் தாமே) நிகரான [மிகச்சிவந்த] இங்குலிகம் அப்பியுள்ளனவான, பெரு களிறு - பெரியயானைகள், போர் மணிகள் ஆர்ப்ப - (ஒன்றோடொன்று) மாறுபட்டனவாய் மணிகள் ஒலிக்க, அலை புனல் கலக்குவன - அலைகளையுடைய வெள்ளநீரைக் கலக்குபவை,—பெட்கும் - (யாவரும் விரும்பிக்காண்கின்ற, கரு கடல் - கருநிறமுள்ள கடலை, கலக்கும்—, மது கைடவரை - மதுகயிடவரென்கின்ற அசுரர்களை, ஒத்த-ஒத்தன; (எ-று.)

யானைகள் மணிகள்ஒலிக்குமாறுசென்று அலைபுனலைக் கலக்கின; அவ்வாறுகலக்கின யானைகட்குக் கடலைக்கலக்கிய மதுகயிடவரை உவமை கூறினார். ஒன்றோடொன்றுமாறுபட்டு ஒலிப்பதனால், 'போர்மணிகள்' என்றார். அயிலும் எயிறும் கூர்மையால், மயிர்க்கு உவமையாயின. யானை நெற்றியில் அலங்காரமாக இங்குலிகத்தை அப்பியுள்ளாரென்க. பி - ம்:—[1] பெட்டு.

மதுகயிடவர் கடலைக்கலக்கிய வாலாறு:—முன்னர்மகாப்பிரளயம் நேர்ந்ததாகப் பின்பு திருமால் உலகங்களை முன்போலப்படைக்கவிரும்பி நான்முகக்கடவுளைத் தனதுநாபிகமலத்திற்படைத்து வேதங்களையும் அவனிடத்துக்கொடுக்க, அக்கடவுள் படைத்தல்தொழிலை நடத்த முயன்றுகொண்டிருக்கையில் முன்னமே திருமாலினிடத்தினின்று ரஜோகுணதமோகுணங்களையுடையராய்த்தோன்றியிருந்த மது கைடபன்என்னும் அசுரரிருவரும் அங்குவந்து பிரமனைக்கண்டு அவனிடத்திருந்த வேதங்களையெல்லாம் பறித்துக்கொண்டு அந்தப்பிரளயக்கடலின் வடகிழக்குத்திசையாகப் பாதலத்தை யடைந்தன ராக, பிரமன் 'கண்ணிழந்தேன், பொருளிழந்தேன்' என்று மிகவும் துயருற்றுத் திருமாலைக் கிட்டித் துதித்துத் தனக்கு நேர்ந்த குறையைத் தீர்க்குமாறு வேண்ட, அத்திருமால் குதிரைமுகமுள்ளஉருவத்தைக்கொண்டு உத்கீதமென்ற பண்ணை அந்தப்பிரளயப்பெருங்கடலெங்ம் முழங்கும்படி பாட, இனியஅவ்வோசை காதில்விழப்பெற்ற மதுகைடபர்கள் வேதத்தை ஓர்புறத்தில் வைத்திட்டு அந்தக்கீதம்வந்தவழியே வா அப்

போது திருமால் அந்தவேதங்களையெல்லாம்மீட்டுப் பிரமனுக்கு ஹம்ஸரூபி யாயிருந்து உபதேசித்தானாக, கீதம்வந்தவழியைப்பற்றிக்கொண்டுவந்த அவ்வசுரர்கள் ஒருவரையும் அங்குக்காணுமையால் மீண்டு தாம் வேதங்களை வைத்தவிடத்திற் போய்ப் பார்க்க, அங்குஅவ்வேதங்களைக் காணுமையால் விரைவுகொண்டு அதனைக்கவர்ந்துபோனவர் யாவரென்று அந்தப்பிரளயக் கடலில் தேடி, அங்கே ஆதிசேஷசயனத்தில் திருமால் பள்ளிகொண்டு யோகநித்திரைசெய்திருத்தலைக்கண்டு 'இவனே வேதங்களைக் கவர்ந்துகொண்டு சென்றவன்' என்று அறுதியிட்டு அப்பிரானோடு போர்புரியுமாறு துயிலெழுப்ப அப்பிரான் அவர்களைச் சேமம்விசாரித்து 'உமக்கு வேண்டும் வரங்களைக் கேண்மின்' என்ன, அவர்கள், செருக்கின்மிகுதியால் 'உனக்கு வேண்டும் வரம் கேள், தவறுமற் கொடுப்போம்' என்ன, திருமால் 'நீவிர் என்னாற்கொல்லப்படவேண்டும்' என்ன, அவர்கள் 'நாங்கள் பொய்சொல்லாதவர்களாதலால் அங்ஙனமே வரமளித்தோம்; எங்களாலேயே எங்கட்கு நாசம் விளைந்தது; பிரபுவே! வேறொன்றினுலும்மூடப்படாத இடத்தில் எங்கட்கு மரணம்உண்டாகுமாறு ஒருவரம் அளிக்க' என்ன, திருமால் அங்ஙனமே வரமளித்துத் தனதுதொடையே வேறொன்றினும் மூடப்படாத இடமென்று பார்த்து அங்கே அந்த மதுகைடபர்களின் சிரசைவைத்துச் சக்கராயுதத்தா லறுத்தொழித்தன னென்பதாம். (௨௫)

௨௬.—மதயானைகள் நீர்நிலையைவிட்டு ஏறுமை.

*[1]ஒக்கநெறி யுய்ப்பவ ருரைத்தகுறி கொள்ளாப்
பக்க[2]வின மொத்தய லலைக்கநனி பாரா
[3]மைக்கரி மதத்த[4]விலை மாதர்கலை யல்குற்
புக்கவரை யொத்தன புனற்சிறைக ளேறு.

(இ-ள்.) மதத்த-மதத்தையுடைய, மை கரி-கருநிறமுள்ள யானைகள்,—ஒக்க - தகுதியாக, நெறி உய்ப்பவர் - நல்வழியிலேசெலுத்தும் பாகர்கள், உரைத்த - தெரிவித்த, குறி-குறிப்புரைகளை, கொள்ளா - ஏற்றுக்கொள்ளாமலும், பக்கம் - இருபக்கங்களிலும், இனம் - தம்மினமான யானைகள்,ஒத்து-ஒருசேரநின்று, அயல் அலைக்க - வெளியேசெல்லுமாறு வருத்தவும், நனி பாரா-சிறிதும் இலட்சியஞ்செய்யாமலும், புனல் சிறைகள் ஏறு - நீர்நிலைகளினின்று கரையேறுதனவாகி,—ஒக்க நெறி உய்ப்பவர் உரைத்த குறி கொள்ளா - தகுதியாக நல்வழியிலே செலுத்துகின்ற பெரியோர்கூறுங் கட்டுரைகளைக் கேளாமலும்,பக்கம் இனம் ஒத்து அயல் அலைக்க நனி பாரா - (தன்)பக்கங்களிலே தன்னினமானதோழர் ஒருசேரநின்று(மீண்டு)வெளியே செல்லுமாறு இடித்துக்கூறவும் அதனைஇலட்சியஞ்செய்யாமலும்,விலை மாதர் கலை அல்குல் புக்கவரை - வேசியருடைய மேகலையணிந்த அல்குலிலே ஈடுபட்டு அழுந்தின காமுகரை, ஒத்தன—:(எ - று.)

நெறியுய்ப்பவரின்குறியைக் கொள்ளாமலும் இனம்அலைக்கப் பாராமலும் சிறையில் அழுந்துவதனால், மதயானைக்குக் காமுகரை உவமைகூறினர். கலை=மேகலையென்பதன்திரிபு: இனி, கலையல்குல்-, சிறந்த

ஆடையையணிந்த இடையையுடைய எனினுமாம். கொள்ளர், பாரா - எச்சங்கள். எரு - பெயர். கொள்ளா, பாராஎன்பவற்றையும் பெயராகக்கொள்ளுமிடத்து அவற்றின் முன் வரும் வல்லினம் இயல்பாயினவாகப் பாடங்கொள்க. பி - ம்:— [1]ஒக்கமிசையுற்றவர். [2]இனமொய்க்கயல். [3]கைக்கரி. [4]வரை மாதர். (உசு)

உஎ.—சேனையோடுதசரதன் தங்கின இடத்தின் வருணனை.

**துகிலிடை மடந்தையரொ டாடவர் துவன்றிப்**
**பகலிடைய வட்டிலின் மடுத்தெரி[1]பரப்பு**
**மகிலிடு கொழும்புகை [2]யழுங்கலின் முழங்கா**
**[3]முகில்படு நெடுங்கடலை யொத்துளதம் மூதூர்.**

(இ - ள்.) துகில் இடை மடந்தையரொடு - சிறந்தஆடைகளையணிந்த இடையையுடைய மகளிரோடு, ஆடவர் - புருஷர், துவன்றி - நெருங்கி, பகல்இடைய-சூரியனொளியும் மழுங்கும்படி, அட்டிலின் மடுத்த எரி பரப்பும் அகில் இடு கொழு புகை அழுங்கலின் - மடைப்பள்ளியினின்று கொணர்ந்த நெருப்பிலே பரப்பிய அகிற்கட்டைகளினின்று உண்டாகிய மிக்கபுகை நெருங்குவதனால், முழங்கா முகில் படு நெடு கடலை - இடியிடித்தலில்லாத மேகங்கள் தங்கப்பெற்ற நீண்ட சமுத்திரத்தை, அ முது ஊர் - (அவர்கள் தங்கிய) அந்தப்பழைய இடமானது, ஒத்துளது—;(எ - று.)

அகிற்புகை மிகுதியாகத் தங்கிய அவ்விடத்திற்கு, முகில் படு கடலையுவமை கூறினர். இவ்வருணனையால், அவ்விடத்தின் பரப்பும், அவ்விடத்திலுள்ளார் எழுப்பிய அகிற்புகையின் மிகுதியும் விளங்கும். வட்டில் என்று பிரித்து புகையிடுகின்ற வட்டில்போல்வடிவுள்ள தூபமுட்டி யென்பாருமுளர். அந்தச் சேனையிலுள்ளார் தாம் தங்குவதற்காக அப்பொழுது தான் ஏற்படுத்திய அந்த இடத்தை மூதூர் என்றது - பழமையாய்த் தாம்வாழும் ஊரில் எவ்வகைச் சௌகரியங்கள் கிடைக்குமோ அவ்வளவு சௌகரியமும் அங்கு அவர்கட்குக் கிடைத்துள்ளன வென்பதை விளக்க. பி - ம்:— [1]பரக்க. [2]வழுங்கலின். [3]முகில்சுடு. [4]முன்னீர். (உஎ)

உஅ.—சேனையிலுள்ள ஆடவர்மகளிரின் பேரழகு.

**கமருறு பொருப்பின் வாழும் விஞ்சையர் காண வந்தார்**
**தமரையு மறியார் நின்று திகைப்புறுந் தகைமை சான்ற**
**குமரரு மங்கை மாருங் குழுமலா லெழுவி விண்ணின்**
**றமரர்நா டிழிந்த தென்னப் பொலிந்ததவ் வனீக வெள்ளம்.**

(இ - ள்.) காண வந்தார் - (அவ்வனீக வெள்ளத்தைக்) காணவந்தவர்களான, கமர் உறு பொருப்பின் வாழும் விஞ்சையர் - பிளப்புப் பொருந்திய மலையிலே வாழ்கின்ற வித்தியாதரர்களும், தமரைஉம் அறியார் நின்று திகைப்பு உறும்-தம்மைச் சேர்ந்தவர்களையும் மறந்துநின்று திகைப்புறுதற்குக் காரணமான, தகைமை - அழகு, சான்ற - மிக்குள்ள, குமரர் உம் - குமாரர்களும், மங்கைமார்உம் - மகளிரும், குழுமலால் - கூடியிருத்தலால்,-அ அனீகம்வெள்ளம்-அந்தச் சேனையின் பெருக்கு,-அமரர் நாடு விண்

நின்று வழுவி இழிந்தது என்ன - தேவலோகமே ஆகாயத்தினின்று தவறிக் கீழேயிறங்கினது போல, பொலிந்தது - விளங்கிற்று; (எ - று.)

பேரழகுள்ளவ ரென்று பெயர் படைத்த வித்தியாதரரும் பிரமித்துப் பார்க்கும்படி கட்டழகு வாய்ந்த மைந்தரும் மகளிரும் குழுமிய அவ்வனீக வெள்ளம் திரண்டு தங்கிய அவ்விடம், தேவலோகமே இங்கேவந்து தங்கிற்றோ என்று கண்டவர் சங்கைகொள்ளும்படி யிருந்த தென்பதாம்; அந்தச்சேனையிலிருந்த ஆடவரும் மகளிரும் தெய்வலோகத்து ஆண் பெண்கள் போலப் பேரழகு வாய்ந்திருந்தனரே யன்றிச் சாதாரணமானுடர்போல இல்லை யென்றவாறு. மானுடசஞ்சார மில்லாத இடத்து இயங்குந் தன்மையுடையார் விஞ்சையரென்பார் 'கமருறு பொருப்பின் வாழும் விஞ்சையர் என்றார். தமரையும் அறியார் என்பதற்கு - தம்மவரோடு அந்தச் சேனையிலுள்ளாரோடு வேற்றுமையை யுணரமாட்டாதவரா யென்றுமாம். (உஅ)

உகூ.—மளிகர் சஞ்சரித்தல்.

வெயினிறங் குறையச் சோதி மின்னிழல் பரப்ப †முன்னாந்
துயிலினர் செவ்வி யாருந் துனியுறு முனிவி னோடுங்
குயிலொடு மினிது பேசிச் சிலம்பொடு மினிது கூவி
மயிலினந் திரிவ வென்னத் திரிந்தனர் மகளி ரெல்லாம்

(இ - ள்.) மகளிர் எல்லாம் - மகளிர்யாவரும்,— முன் ஆம் துயிலினர் - (தாம் வருவதற்கு) முன்னமே உறங்கிவிட்ட ஆடவரிடத்து, செவ்வி ஆரும் துனி உறு முனிவினோடும் - அழகுபொருந்திய ஊடலாகஅமைந்த கோபத்துடனே,— குயிலொடும் இருந்து பேசி - குயிலென்னும்பறவையுடனேயிருந்து இனிதாகஉரையாடி. சிலம்பொடும் இனிது கூவி - (தாம் நடக்கும்போது ஒலிக்கின்ற) சிலம்பென்னும் அணியுடனே இனிமையுண்டாக ஒலிசெய்து, வெயில் நிறம் குறைய சோதி மின் நிழல் பரப்ப - வெயிலின் நிறமும்(தமக்குமுன்னே)மழுங்கும்படி (அணிந்துள்ள ஆபரணங்களின்) ஒளி மின்னலையொத்த ஒளியைப் பரப்ப, மயில் இனம் திரிவ என்ன (கண்டவர்) மயிற்பறவைகளின்கூட்டம் திரிகின்றனவென்று கருதுமாறு, திரிந்தனர் - (அங்கே) சஞ்சரித்தார்கள்; (எ - று)

மகளிர்கள் தாம் பள்ளியறையைச் சார்தற்குமுன்னமே தமதுகணவர் வழிவந்த களைப்பால் உறங்கினராக, அவர்கள்மீது ஊடல்கொண்டவராய் அவர்கள் துயிலுணர்ந்தபிறகு தமது ஊடல் அவர்கட்குப்புலப்படுமாறு அவர்களோடுபேசாமல் அருகேயிருந்து இனிதுகூவுகின்ற குயிலோடும்பேசி, தாம் நடக்கும்போது சிலம்புகள் ஒலிக்கவும் தாம்பூண்ட அணிகள் பேரொலி செய்யவும் மயில்கள் உலாவுவதுபோல அங்கே உலாவலாயினரென்பதாம். வெயினிறங்குறையச் சோதி மின்னிழல் பரப்பமுன்னாள், துயிலுணர் செவ்வியோரும் என்றுபாடமோதி, 'முன் நாள் - முன்நாளில், (கணவரோடு ஊடல்கொள்ளாது கலவியைச்செய்ததனால்), துயில் உணர் - (நித்திரை வரப்பெற்றுத்துயின்றபிறகு) கண்விழித்தெழுந்த, செவ்வியோர்உம் - அழகையுடையவரும், துனி உறு முனிவினோரும் - ஊடல்புரிந்து கண்

துயிலா)த மனவெறுப்பையடைந்தவருமாகிய, மகளிர் எல்லாம் - எல்லாமகளிரும் என்று உரைக்க. இவ்வுரையில், அம்மலையைச்சார்ந்த சோலைமுதலியவற்றின் வளங்கள் தம்மைக் கண்டோர்க்கு மனவெறுப்பையும் நீக்கிப் பெருங்களிப்பைத் தருமென்பார், கணவரோடுகலத்தலால் மனமகிழ்ச்சியுடனிருக்கும்மகளிருடனே கணவரோடுஊடல்கொண்ட மகளிரையும் ஒருங்குசேர்த்து 'மகளிரெல்லாம் பேசி கூவி திரிந்தனர' என்றார். சோதி - (மகளிரின் உடம்பின்) ஒளிஎனலுமாம். சிலம்பொடும் கூவி என்பதற்கு - மலையோடும் இனிமையாகக்கூவி என்றுஉரைப்பாருமுளர். பி - ம்:—[1]முன்னம். ()

௩௦.—ஆடவர் சஞ்சரித்தல்.

[1]தாளிணை கழல்க ளார்ப்பத் தாரிடை யளிக ளார்ப்ப
வாள்புடை யிலங்கச் செங்கேழ் மணியணி வலய மின்னத்
தோளென வுயர்ந்த குன்றின் சூழல்க ளினிது நோக்கி
வாளரி [2]திரிவ வென்னத் திரிந்தனர் மைந்த ரெல்லாம்.

(இ - ள்.) மைந்தர் எல்லாம் - வீரகுணமுள்ளவரான ஆடவர்யாவரும்,— தாள் இணை கழல்கள் ஆர்ப்ப - (தமது) உபயபாதங்களில் வீரக்கழல்கள் ஆரவாரிக்கவும், தார் இடை அளிகள் ஆர்ப்ப-(தாம்அணிந்த)மலர்மாலைகளில் (அங்குள்ளதேனைப் பருகும்படி) வண்டுகள் ஆரவாரஞ்செய்து மொய்க்கவும், வாள் புடை இலங்க-வாளாயுதங்கள் (இடையின்)பக்கத்திற் பிரகாசிக்கவும், செங் கேழ் மணி அணி வலயம் மின்ன - செந்நிறமுள்ள அரதனங்கள்பதித்துச்செய்யப்பட்ட அழகிய தோள்வலயங்கள் விட்டுவிட்டுப் பிரகாசிக்கவும் - தோள் என உயர்ந்த குன்றின் சூழல்கள் இனிது நோக்கி - (தமது)தோள்களைப்போல வுயர்ந்த அம்மலையின் சுற்றுப்பக்கங்களை நன்றாகப்பார்த்தவண்ணம், வாள் அரி திரிவ என்ன - கொடியசிங்கங்கள் திரிவனபோல, திரிந்தனர் - உலாவலானார்கள்; (எ - று.)

ஆடவர் மலையின்சுற்றுப்பக்கங்களைக் காணுமாறு சஞ்சரிக்கலாயினரென்பதாம். மைந்தர், ஆர்ப்ப, இலங்க, மின்ன, அரிஎனத் திரிந்தனரென்க. தோளெனவுயர்ந்தகுன்று-எதிர்நிலையணி. பி - ம்:—[1]தாளிடை. [2]திரிவது.

௩௧.—கவிக்கூற்று.

சுற்றிய கடல்க ளெல்லாஞ் சுடர்மணிக் கனகக் குன்றைப்
பற்றிய [1]வளைந்த வென்னப் பரந்துவந் திறுத்த சேனை
கொற்றவர் தேவிமார்கண் மைந்தர்கள் கொம்ப னார்வந்
[2]துற்றவர் [3]காண லுற்ற மலைநிலை யுரைத்து மன்றே.

(இ - ள்.) சுற்றிய கடல்கள் எல்லாம் - (பூமியை நாற்புறத்திலுஞ்) சூழ்ந்துகொண்டுள்ள கடல்கள்யாவும்,சுடர் மணி கனகம் குன்றை - ஒளிவிடுகின்ற இரத்தினங்களையுடைய மேருபருவதத்தை, பற்றிய - கவர்ந்துகொள்ளும்பொருட்டு, வளைந்த என்ன - வளைந்துகொண்டனஎன்றுசொல்லும்படி, சேனை - அந்தசேனைகள், பரந்துவந்து - பரவிவந்து, இறுத்த - (அந்தச் சந்திரசைலத்தின்சாரலில்) தங்கின; (அந்தச்சேனைகளிலுள்ள), கொற்றவர்-

அரசர்களும், தேவிமார்கள்-(அவ்வரசரின்) மனைவியரும், மைந்தர்கள்-அரச குமாரர்களும், கொம்பு அனார் - பூங்கொம்பையொத்த அரசகுமாரிகளும், வந்து உற்று - வந்துசேர்ந்து, காணல் உற்ற-காணுதற்குப்பொருந்திய, மலை-அந்தச்சந்திரசைலத்தின், நிலை - தன்மையை, உரைத்தும் - இனிச் சொல்லு வோம்; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

மலையினடியைச்சுற்றிச் சேனை தங்கியது, மேருமலையைக்கவருமாறு நாற்கடல்களும் வளைந்தன போலு மென்றார்; தற்குறிப்பேற்றவுவமையணி. அவ்வாறு தங்கிய ஆடவர் முதலியோர் காணலுற்ற மலையின்தன்மையைக் கூறுவோமென்று கவி பின்னிரண்டடிகளினால் மேற்சொல்லப்போவதைத் தெரிவித்தார். பி-ம்:—[1]வளைந்தது. [2]உற்றது. [3]காணலுற்றவ்வரை. (௩௧)

௩௨.—இதுமுதற்பதினைந்துகவிகள் - சந்திரசைலத்தின் வருணனை.

பம்புதேன் மிஞிறு தும்பி பரந்திசை பாடி [1]யாடு
மும்பர்வா னகத்து நின்ற [2]வொளிதரு தருவி னோங்குங்
கொம்புகள் பனைக்கை நீட்டிக் குழையொடு மொடித்துக் கோட்டுத்
தும்பிக ளுயிரே [3]யன்ன துணைமடப் பிடிக்கு நல்கும்.

(இ - ள்.) கோடு தும்பிகள்-தந்தங்களையுடைய ஆண்யானைகள்,—பம்பு தேன்-நெருங்கிய தேனில்மொய்க்கின்ற, மிஞிறு-மிஞிறுகளும், தும்பி-தும்பிகளும், பரந்து-பரவி, இசை பாடி-சங்கீதசுரங்களைப் பாடிக்கொண்டு, ஆடும்-ஆடுதற்கு இடனான, உம்பர் வானகத்து நின்ற ஒளிதரு தருவின் - மேலிடமாகிய வானுலகத்திலேயுள்ள ஒளிவிடுகின்ற கற்பகதருவினுடைய, ஓங்கும் கொம்புகள் - உயர்ந்த கிளைகளை, பனை கை நீட்டி - (தமது) பனைமரம்போன்ற கைகளைநீட்டி, குழையொடும் ஒடித்து - தளிர்களோடும் முறித்து, உயிர் ஏ அன்ன துணை மடம் பிடிக்கு - உயிருக்குச்சமானமான (தமது) மடப்பத்தையுடைய பெண்யானைக்கு, நல்கும் - கொடுக்கும்.

ஆண்யானை கற்பகதருவின் கிளைகளைத் தமதுமடப்பிடிக்குக்கொடுக்குமென்ற இந்தத்தொடர்புயர்வுநவிற்சியணியில்,இம்மலை மிகவோங்கியுள்ள தென்பதும் இங்கிருந்தபடியே சுவர்க்கசுகத்தையும் அநுபவித்தலாகுமென்பதும் பெறப்படும். தும்பியும் மிஞிறும், வண்டின் சாதிபேதம்; இதனை "இரங்கிசை மிஞிறொடு தும்பி தாதூத" என்னுங் கலித்தொகையாலு முணர்க. பி - ம்:—[1]ஆடும். [2]ஒளிவளர். [3]என்ன. (௩௨)

௩௩. பண்மலர் பவளச் செவ்வாய்ப் பனிமலர்க் குவளை யன்ன
கண்மலர்க் கொடிச்சி மார்க்குக் கணித்தொழில் புரியும் வேங்கை
யுண்மலர் வெறுத்த தும்பி புதியதே னுதவு நாகத்
தண்மல ரென்று வானத் தாரகை தாவு மன்றே.

(இ - ள்.) பண் மலர் பவளம் செவ் வாய் - இராகங்கள் தோன்றுகின்ற பவழம்போன்ற செந்நிறவாயினையும், பனி குவளை மலர் அன்ன கண் மலர்-குளிர்ந்த குவளைமலரையொத்த கண்களாகிய தாமரையையு முடைய, கொடிச்சிமார்க்கு - குறிஞ்சிநிலப்பெண்களுக்கு, கணி தொழில் புரியும் -

மௌகூர்த்திகரின் தொழிலைச் செய்வதான, வேங்கை-வேங்கைமரத்தினது, உண் மலர்-(தேனை)உண்டமலர்களின்மீது, வெறுத்த-வெறுப்புக்கொண்ட, தும்பி - வண்டுகள்,—புதிய தேன் உதவும் நாகம் தண் மலர் என்று - புதிய தேனைத் தருகின்ற சுரபுன்னைமரத்தின் குளிர்ந்தமலரென்று நினைத்து, வானம் தாரகை - ஆகாயத்தில் விளங்குகின்ற நட்சத்திரங்களின்மேல், தாவும் - தாவாநிற்கும்; (எ - று.)—அன்றே - ஈற்றசை; தேற்றமுமாம்.

மலரின்தேனையுண்டதனால் தேன்நீங்கிய அவ்வேங்கைமலரைவெறுத்த தும்பி, வானத்தில் விளங்குந் தாரகைகளைக் கண்டு அவற்றைச் சுரபுன்னை மலராக மயங்கி அவற்றின்மீது தாவுமென்றார்; மயக்கவணி. யையங்கமாகக் கொண்டுவந்த தொடர்புயர்வுநவிற்சியணி. கணி - முகூர்த்தமறிவிப்போன். மௌகூர்த்திகன் 'இன்னகாலத்து இந்தத்தொழிலைச்செய்க' என்றுவிதிப் பதுபோலவேங்கை தான் மலர்ந்து 'தினைப்புனங் கொய்க' என்று விதித் தலால், 'கணித்தொழில்புரியும் வேங்கை' என்றார்;இதனை "பொன்வேங்கை தினைப்புனங்கொய்யவென்று, தாதிடங்கொண்டுபொன்வீசித் தன்கள்வாய் சொரியநின்று, சோதிடங்கொண்டிதெம்மைக் கெடுவித்தது தூமொழியே" என்ற திருக்கோவையாராலும் அறிக. (ருரு)

ருசு. மீனெனும் பிடிக ளோடும் விளங்கும்வெண் மதிநல் வேழங்
கூனல்வான் கோடு நீட்டிக் குத்திடக் குமுறிப் பாயுந்
தேனுகு மடையை மாற்றிச் செந்தினைக் குறவர் முந்தி
வானநீ ராறு பாய்ச்சி யைவனம் வளர்ப்பர் மாதோ.

(இ - ள்.) மீன் எனும் பிடிகளோடும் - நட்சத்திரங்களாகிய (தன்) பெண்யானைகளுடனே, விளங்கும் - பிரகாசிக்கின்ற, வெண் மதி நல் வேழம் - வெண்ணிறமுள்ள சந்திரனாகிய சிறந்த யானை, கூன் நல் வான் கோடு நீட்டி குத்திட - வளைவாகிய அழகிய சிறந்த பிறைநுனியாகிய தந்தங் களின்நுனியைநீட்டி(த் தேன்கூடுகளை)க்குத்தியதனால்,(அவைகளினின்று), குமுறி பாயும் - பேரொலிசெய்து பாய்கின்ற, தேன் - தேனினது, உகு மடையை - பாய்கின்ற மடையை, மாற்றி - மறித்து, செந் தினை குறவர் - செந்தினைக்கொல்லைகளையுடைய குறவர்கள், முந்தி - விரைந்து, வானம் ஆறு நீர் பாய்ச்சி - ஆகாசகங்காநதியின்நீரைப் பாயச்செய்து, ஐவனம் - மலைநெற்பயிரை, வளர்ப்பர் - வளரச்செய்வார்கள்; (எ - று.)

பிறைச்சந்திரனது கோடுகளாற் குத்தப்பெற்ற தேன்கூடுகளினின்று தேன் பாய்ந்துகொண்டிருக்க, குறவர் அதனைமாற்றி, ஆகாசகங்காநதியின் நீரைத் தமது ஐவனநெற்பயிருக்குப் பாய்ச்சுவரென்றார்; இத்தொடர்புயர்வு நவிற்சியணியால், மலையின் ஓங்கியதன்மையும் மலைவளனும் பெறப்படும். யானை தனது கோடுகளால் இருள்முதலியவற்றைக் குத்துதல் இயல்பு. மதி முதலியவற்றை வேழம்முதலியனவாகக்கூறியது - உருவகவணி. மதி நல்வேழம் வான்கோடு நீட்டி - வானாகிய வேழமானது மதியின்கோடாகிய கோட்டாற் குத்தியெனினுமாம். கோடு - பிறைக்கோடாகிய தந்தம். குற

வர்க்குச் செந்தினைசிறத்தலின் அவரை செந்தினைக் குறவர்'என்றார்.மடை-நீர்பாயும்படி வாய்க்கால்களில்அவ்வப்போது இடும்அணை. பி-ம்¹விளைப்பவர்.

௩௫. குப்புறற் கருமை யாலக் குலவரைச் சாரல் வைகி
யொப்புறத் துளங்கு கின்ற வுடுபதி யாடி யின்க
ணிப்புறத் தேயுங் காண்பார் குறத்திய ரியைந்த கோல
மப்புறத் தேயுங் காண்பா ரரம்பைய ரழகு மாதோ.

(இ - ள்.) குப்புறற்கு அருமையால் அ குலம் வரை சாரல் வைகி - கடந்துசெல்வதற்குக் கூடாதபடியினால் அந்தச்சிறந்தமலையின் தாழ்வரையில் தானே தங்கி, ஒப்பு உற துளங்குகின்ற - (எப்போதும்) ஒருபடியாக விளங்குகின்ற, உடுபதி-சந்திரனாகிய, ஆடியின்கண்-கண்ணாடியிலே,—குறத்தியர்—,இயைந்த-(தமதுமனத்துக்குப்) பிடித்தபடி பூண்ட, கோலம்-அலங்காரத்தை,இ புறத்துஉம் - இந்தப்பக்கத்திலும் காண்பார்—; அரம்பையர் - (வானுலகத்துத்) தேவமாதர்,அழகு - (தாம் புனைந்த) அலங்காரத்தை,அ புறத்துஉம் காண்பார்—;(எ - று.)—புறத்தேயும் என்ற ஈரிடங்களிலுமுள்ள ஏகாரங்கள் - இசைநிறை.

சந்திரனை அப்பாற்செல்லவொட்டாது ஓங்கி இம்மலை தடுத்தலால், இம்மலைச்சாரலில்தானே அந்தச்சந்திரன் தங்கினனாக, அம்மண்டலத்தின் ஒருபுறம் குறத்தியர் தமதுகோலத்தைக் காணுமாறு உதவ, மற்றோர்புறம் வானுலகத்துமகளிர் தமதுகோலத்தைக் காணுமாறு பயன்படுவதாயிற்றென்க; தொடர்புயர்வுநவிற்சியணி. சந்திரன் அசுவினிமுதலிய இருபத்தேழுநட்சத்திரங்கட்குங்கணவனென்பது, நூற்கொள்கையாதலால் அவனை 'உடுபதி'என்றார்: இது-வடசொற்றொடர்: உடு-நட்சத்திரம். பதி-கணவன்.

௩௬. உதியுறு துருத்தி யூது முலையுறு தீயும் வாயி
னதிவிட நீரு நெய்யு முண்கிலா தாவி யுண்ணுங்
கொதிநுனை வேற்கண் மாதர் குறத்தியர் நுதலி னோடு
மதியினை வாங்கி யொப்புக் காண்குவர் குறவர் மன்னோ.

(இ - ள்.) உதி உறு - (காற்றூத) தோன்றுதல் பொருந்திய, துருத்தி - உலைத்துருத்தியால், ஊதும் - ஊதப்படுகின்ற, உலை - (கொல்லனுடைய) உலைக்களத்திலே, உறு - மிகுதியாகப் பொருந்திய, தீஉம் - நெருப்பையும்,- வாயின் - அலகிலே, அதி விடம் நீர்உம் - மிக்க விஷநீரையும், நெய்உம் - நெய்யையும், உண்கிலாது - கொள்ளாமலே, ஆவி உண்ணும் - (காதலித்த ஆடவரது) உயிரைக் கொள்ளவல்ல, கொதி நுனை வேல் - கொதிக்கின்ற முனையையுடைய வேலாயுதத்தையொத்த, கண் - கண்களையுடைய, மாதர் குறத்தியர் - அழகிய குறமகளிரது, நுதலினோடு - நெற்றியோடு, குறவர் - குறவர்கள், மதியினை வாங்கி - அர்த்தசந்திரனை யெடுத்து, ஒப்பு காண்குவர் - ஒப்புப் பார்ப்பார்கள் ; (எ - று.)—மன்ஓ - ஈற்றசை.

குறவர் அருகேயிருக்கின்ற பிறைச்சந்திரனைப் பிடித்துத் தமது மனைவியரின் நெற்றியோடு சேர வைத்து இரண்டற்குமுள்ள ஒற்றுமை

-யைக் காண்ப ரென்க; தொடர்புயர்வுநவிற்சியணி. நுதலுக்குப் பிறைச்சந்திரனே உவமை கூறப்படுதலால், மதியென்பது - இங்கே பிறைச்சந்திரனைக் காட்டு மென்னலாம். மாதர் குறத்தியர் - மாதராகிய குறத்தியர் எனினுமாம். வேற்படை, கூராக்கப்படுதற்காகக் கொல்லனுலைக்களத்திலே காய்ச்சியடிக்கப்படுதலும் துருப்பிடியாம லிருத்தற்காக நெய்பூசப்படுதலும், பாய்ச்சும்பொழுது தவறாமற் பகைவருயிரைக் கொல்லுதற்காக நஞ்சூட்டப்படுதலும் உடையதாகிப் பகைவரது உயிரை உண்கின்றதனால், இந்தக் கண்ணாகிய வேல் அங்ஙனம் எந்தச்செயலேயும் வேண்டாமலே ஆடவரது உயிரையுண்ணவல்ல தென்று, சாதாரண வேற்படையினும் வேறுபாடு தோன்ற, 'உலையுறுதீயும் அதிவிடநீரும் நெய்யும் உண்கிலாது ஆவியுண்ணும்...வேற்கண்' என்றார்: வேற்றுமையணியை யங்கமாகக் கொண்டுவந்த உவமையணி. வேலாகியகண்ணெனின் திரிபுஎன்னும்பரிணாமாலங்காரமாம்.

நஎ. [1]பேணுதற் கரிய சீயக் [2]குருளையம் பிடிக ளீன்ற
காணுதற் கினிய வேழக் கன்றொடு களிக்கு முன்றில்
கோணுதற் குரிய திங்கட் குழவியுங் குறவர் தங்கள்
வாணுதற் கொடிச்சி மாதர் மகவொடு தவழு மாதோ.

(இ - ள்.) அம் பிடிகள் ஈன்ற - அழகிய பெண்யானைகள் பெற்ற, காணுதற்கு இனிய -, வேழம் கன்றொடு - யானைக்கன்றுகளுடனே, முன்றில் - (சிறிய குடிசைகளின்) முன்னிடங்களிலே, பேணுதற்கு அரிய-விரும்புவதற்கு அருமையான [கொடிய], சீயம் குருளை - சிங்கக் குட்டிகள், களிக்கும் - மனமகிழ்ந்து விளையாடும்; (அன்றியும்), கோணுதற்கு உரிய திங்கள் குழவிஉம் - வளைந்திருக்குந் தன்மையைக் கொண்ட இளஞ்சந்திரனும், குறவர்தங்கள் வாள் நுதல் கொடிச்சி மாதர் மகவொடு - குறவர்களுடைய ஒளிபொருந்திய நெற்றியையுடைய (மனைவியராகிய) குறத்தியர் பெற்ற குழந்தைகளுடன், தவழும் - தவழாநிற்கும்; (எ - று.)

முன்னிரண்டடிகள் நிலத்தின்தன்மையால் இயற்கைப்பகையாயினவும் அப்பகைமையொழிந்து நட்புப்பூண்டு ஒழுகினவென்பதை விளக்கும். பின்னிரண்டடிகளில், இளஞ்சந்திரனோடு குறத்தியர்மகவுந் தவழு மென்றமையால், மலையினோங்கிய தன்மையும் நிலத்தன்மையாலே குறச்சாதிமக்களும் மிக்க அழகுவாய்ந்துள்ளாரென்பதும் பெறப்படும். பி - ம்:—[1]பேணுதற்குரிய. [2]குருளையும். (நஎ)

நஅ. அஞ்சனக் கிரியி னன்ன வழிகவுள் யானை [1]கொன்ற
வெஞ்சினத் தரியின் றிண்காற் சுவட்டொடு விஞ்சை வேந்தர்
குஞ்சியங் தலத்து நீலக் குலமணித் தலத்து மாதர்
பஞ்சியங் கமலம் பூத்த பசுஞ்சுவ டுடைத்து மன்னோ.

(இ - ள்.) (அம்மலையானது),—குலம் நீலம் மணி தலத்துஉம் - சிறந்த இந்திரநீலக்கற்களாலமைந்த தம்மிடத்தும், விஞ்சை வேந்தர் குஞ்சி அம் தலத்துஉம் - (தன்னிடத்துவாழ்கின்ற) வித்தியாதரவரசர்களுடைய அழ

கியமயிர்முடியுள்ள சிரத்தினிடத்திலும், (முறையே),—அஞ்சனம் கிரியின் அன்ன அழி கவுள் யானை - மைம்மலையையொத்த (மதநீர்) இடையறுதொழுகப்பெற்ற கதுப்பினையுடைய யானைகளை, கொன்ற—, வெம் சினத்து அரியின் - கொடுங்கோபத்தையுடைய சிங்கத்தினது, திண் கால் சுவட்டொடு - வலிய கால்கள்வைக்கப்பெற்றதனுலான தடங்களுடனே, மாதர் பஞ்சி அம் கமலம் பூத்த பசு சுவடு - மனைவிமார்களின் செம்பஞ்சு ஊட்டிய அழகிய பாதகமலங்கள் படுதலாலுண்டாகிய ஈரமுள்ள சுவடுகளையும், உடைத்து - உடையது;(எ - று.)—மன் ஒ - ஈற்றசைகள்.

அம்மலையின் இடங்களெல்லாம் சிங்கங்கள்திரிந்ததனுலான சுவட்டுடன் விளங்க, அம்மலையில்தங்கிய வித்தியாதரருடைய சிரங்கள் ஊடல்கொண்ட மனைவிமாரை வணங்குகையில் அம்மாதர்கள் ஊடல் மிகுதியால் அவ் விஞ்சையரைத் தமது செம்பஞ்சு ஊட்டிய பாதகமலங்களால் உதைத்துத் தள்ளுவதனுல் அந்தச் செம்பஞ்சினிறத்தோடுகூடிய பாதச்சுவட்டுடன் விளங்குமென்பதாம். இவ்வருணனையால், சிங்கங்குலாவும் பெருமையையுடையது அம்மலை யென்றும், வித்தியாதரரும் இன்பமனுபவித்தற்குரிய இட மென்றும் கூறியவாருயிற்று. பி - ம்:—[1]பொன்ற. (௩௮)

௩௯. செங்கயலனைய நாட்டஞ் [1]செவியுரு முறுவறேன்ரு
பொங்கிருங் கூந்தல் சோரா புருவங்க ணெரியா பூவி
னங்கையு மிடறுங் கூட்டி நரம்பளைந் தமுத மூறு
மங்கையர் பாடல் கேட்டுக் கின்னர மயங்கு மாதோ.

(இ - ள்.) செங் கயல் அனைய நாட்டம் செவி உரு - அழகிய கயல்மீனையொத்த கண்கள் காதுவரையிற் சென்று சேராதனவும், [கண்விழிகள் சலியாதனவும்] முறுவல் தோன்ரு - பல்லினொளி வெளித்தோன்ருதனவும், பொங்கு இரு கூந்தல் சோரா - மிகவுந்திரண்டுள்ள மயிர்முடி குலைந்து விழாதனவும், புருவங்கள் நெரியா-புருவங்கள் வளைந்து தோன்ருதனவுமாக, பூவின் அம் கைஉம் மிடறுஉம் கூட்டி — தாமரை மலரையொத்த அகங்கையும் குரலையும் ஒருவழிப்படுத்தி, நரம்பு அளைந்து - நரம்பைத் துழாவி (அதனுல் உண்டாக்குகின்ற), அமுதம் ஊறும் - அமிருதம்போல இனிமையான, மங்கையர் பாடல் - மடந்தையரின் பாடலை, கேட்டு -, கின்னரம்—கின்னரமென்னும் பறவையும், மயங்கும் - திக்பிரமையடைந்து நிற்கும்; (எ-று.)

'அங்கையும் மிடறுங் கூட்டி நரம்பளைந்து' என்றது - மிடற்றுக்குரலுக்கு ஏற்பக் கைத்தொழில்புரிந்து நரம்பில் இன்னேசையுண்டாக்கி யென்றவடி. "கருங்கொடிப் புருவமேரு கயனெடுங் கண்ணுமாடா, வருங்கடி மிடறும் விம்மா தணிமணியெயிறுந்தோன்ரு, விருங்கடற் பவளச் செவ்வாய் திறந்திவள் பாடினளோ, நரம்பொடு வீணைநாவி னவின்றதோ வென்று நைந்தார்" என்ற சிந்தாமணிச் செய்யுளையும், அங்கு நச்சினர்க்கினியர் "இது பதினெரு வகையிலும், உள்ளாளப்பாட்டுப் பாடுங்கால் இடைபிங்கலையை யியக்க மறுத்து மூலாதார முதல் பிரமரந்திர மளவும் இயக்கமாக்கி நடுவு தொழில் வரப் பாடுத லென்றறிக" என்று கூறி, "கண்ணிமை

பா கண்டந்துடியா கொடிறசையா, பண்ணளவும் வாய்தோன்று பற்றெரியா - வெண்ணிலிவை, கள்ளார் நறுந்தெரியற்கைதவனே கந்தருவ, ருள்ளாளப்பாட லுண்ர்'' என்று மேற்கோள் காட்டியதையும் உணர்க. 'செவியுற,' 'தோன்ற,' 'சோர,' 'நெரிய' என்று பாடமோதி, நாட்டஞ் செவி புகவும் முறுவல் தோன்றவும், கூந்தல் சோரவும், புருவங்கள் நெரியவும் என்று பொருள் கூறுதலு முண்டு. கின்னரமென்பது - இசையின் குற்றங்களையும் குணங்களையும் அறியவல்லதாய் எப்போதும் ஆணும் பெண்ணுமாக நிற்கும் ஒருவகைப் பறவை யென்பர். பி - ம்:—[1]செவிபுகா. (௩௯)

சO. கள்ளவிழ் கோதை மாதர் காதொடு முறவு செய்யுங்
கொள்ளைவாட் கண்ணி ஞர்தங் குங்குமக் குழம்பு தங்குந்
தெள்ளிய பளிக்குப் பாறைத் தெளிசுனை [1]மணியிற் செய்த
வள்ளமு நறவு மென்ன வரம்பில [2]பொலியு மன்றே.

(இ - ள்.) கள் அவிழ் கோதை - தேனைச் சொரிகின்ற மலர்மாலையை யணிந்த, மாதர் - அழகிய, காதொடுஉம் உறவு செய்யும் கொள்ளை வாள் கண்ணினார் தம் - காதுடனுறவுசெய்கின்ற (ஆடவருயிரைக் கவரவல்ல) வாள்போன்ற கண்களையுடைய மகளிரணிந்த, குங்குமம் குழம்பு - குங்குமச்சேறு, தங்கும் - தங்கப்பெற்ற, தெள்ளிய பளிங்கு பாறை தெளி சுனை - தெளிவான நிறத்தையுடைய பளிக்குப்பாறையினாலியன்ற தெளிந்த சுனைகள், வரம்பு இல - எல்லையில்லாதவை [மிகப்பல], மணியில் செய்த வள்ளம் உம் நறவுஉம் என்ன - செம்மணியினாலியன்ற கிண்ணங்களும் கள்ளும் போல, பொலியும் - விளங்காநிற்கும்; (எ - று.)

பளிக்குப்பாறையினாலியன்ற சுனையிலே செந்நிறக்குங்குமக்குழம்பு தங்குவதனால் அப்பளிக்குப்பாறை செம்மணிபோல் தோன்ற, அவ்வகைச் சுனையிலே தெளிந்த நீர் நறவுபோலத் தோன்று மென்க: தற்குறிப்பேற்றவுவமையணி. குங்குமக்குழம்பினாற் பளிக்குப்பாறைக்குச் செம்மணியின் தன்மை நேர்ந்ததாகக் கூறியது - பிறிதின்குணம்பெறலணியாம். கள்ளவிழ் கோதை,மாதர் என்பனஇரண்டும் கண்ணினார்க்கு அடைமொழியாம். காதொடுமுறவுசெய்யுங்கண்-காதுவரையில்நீண்டகண். [1]மணியிற் றேய்த்த என்றபாடத்துக்கு, தேய்த்த-இழைக்கப்பட்டஎன்க. பி - ம்:—[2]பொலிவ. ()

சக ஆடவ ராவி சோர வஞ்சன வாரி சோர
வூடலிற் சிவந்த நாட்டத் தும்பர்தம் மரம்பை மாதர்
[1]தோடவிழ் கோதை நின்றுந் துறந்தமந் தார மாலை
வாடல [2]நறவ ருது வயின்வயின் வயங்கு மாதோ.

(இ - ள்.) ஆடவர் ஆவி சோர - (தமது) கணவரின் உயிர் வருந்தித் தளருமாறு, அஞ்சனம் வாரி சோர ஊடலில் சிவந்த - (தீட்டியுள்ள) மையுடனே கண்ணீர்பெருகியவண்ணமாகப் புலவியினாலே செந்நிறத்தையடைந்த, நாட்டத்து - கண்களையுடைய, உம்பர்தம் அரம்பை மாதர் - தே

வர்களுடைய (மனைவியராகிய) தேவதாஸ்திரீகள், கோதை நின்று துறந்த - (தமது) மயிர்முடியிலிருந்து கழற்றியெறிந்த,தோடு அவிழ் மந்தாரம் மாலை - இதழ்கள் அலர்ந்த மந்தாரமலர்கொண்டு தொடுக்கப்பெற்ற மாலைகள், வாடல-வாடாதனவாகி, நறவு அறுது-தேனும் நீங்காமல் [புதுமையுடனே], வயின் வயின் - அந்தந்தவிடங்களிலே, வயங்கும் - விளங்காநிற்கும்:(எ - று.)

தேவமாதர்கள் ஊடல்கொண்டவராய்த் தமதுகணவர்வருந்துமாறு சிவந்த கண்களினின்று கரைந்தமையுடனே கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு தமதுமயிர்முடியிலிருந்து கழற்றியெறிந்த மந்தாரமலர்மாலைகள் அந்தமலையிற் பலவிடங்களிலுங் காணப்படுமென்பதாம். இதனால் இந்தச்சந்திரசைலம் தேவலோகத்திற்கு அண்மையிலுள்ளதென்பது, பெறப்படும். தெய்வமலர் மாலையாதலால், வாடாமலும் நறவுஅறாமலும் இருந்தன. பி-ம்.—[1]தோடலர். [2]நறவறாத. (௬௧)

௬௨. மாந்தளி ரனைய மேனிக் குறத்தியர் மாலை சூட்டிக்
[1]கூந்தலங் கமுகின் பாளை குழலினோ டொப்புக் காண்பா
ரேந்திழை யரம்பை மாத ரெரிமணிக் கடகம் வாங்கிக்
காந்தளம் போதிற் பெய்து கைகளோ டொப்புக் காண்பார்.

(இ - ள்.) மா தளிர் அனைய மேனி குறத்தியர் - மாந்தளிரையொத்த உடல்நிறத்தோடுகூடிய குறப்பெண்கள், மாலை சூட்டி - மலர்மாலையையணிவித்து (பிறகு), கூந்தல் கமுகின் பாளை - கூந்தற்கமுகின் பாளைகளை, குழலினோடு - (தம்) கூந்தலோடு, ஒப்பு காண்பார் - உவமைகாண்பார்கள்; ஏந்து இழை அரம்பை மாதர் - தரித்த ஆபரணங்களையுடைய தெய்வ மகளிர், எரி மணி கடகம் வாங்கி - நெருப்புப்போலச் செந்நிறமாகவொளிவிடுகின்ற இரத்தினங்கள்பதித்த கடகமென்னும்அணியைக் கழற்றி, காந்தள் போதில் பெய்து - காந்தளின்மலர்களிலே யணிந்து, கைகளோடு - (தம்) கைகளுடனே, ஒப்பு காண்பார் - உவமைகாண்பார்கள்; (எ - று.)

குறத்தியர் கூந்தற்கமுகின் பாளைகளிலே மலர்மாலையை யணிந்து அவை தமது கூந்தலினோடு ஒப்பாவதைக் காண, தெய்வமகளிர் தமதுகடகத்தைவாங்கிக் காந்தளிலேயணிந்து அம்மலர் தமது கைக்கு ஒப்பாவதைக் காண்பாராயின ரென்க. இதனால், மண்ணுலகத்தவரும் விண்ணுலகத்தவரும் மகிழ்தற்கு இம்மலை இடனாயுள்ள தெனக் கூறியவாறு. கூந்தலங்கமுகு, காந்தளம்போது, அம் - சாரியை. பி - ம்:—— [1]கூந்தலின்கமுகின்.

௬௩. சரம்பயில் சாப மென்னப் புருவங்க டம்மி [1]னாட
நரம்பினோ டினிது பாடி நாடக மயிலோ [2]டாடு
மரம்பையர் வெறுத்து நீத்த வயிர்மணிக் கோவை யாரம்
[3]வரம்பில கடுவன் பூண மந்திகண் டுவக்கு மாதோ.

(இ - ள்.) சரம் பயில் சாபம் என்ன புருவங்கள் தம்மின் ஆட - அம்பு பொருந்திய வில்லைப்போலப் புருவங்களானவை தம்மிலே துடிக்க, நரம்பினோடு - யாழ்நரம்பினோடு(மாறுபடாமல்), இனிது பாடி - இனிமையாகப்

பர்டி, மயிலோடு நாடகம் ஆடும் - மயில்களோடு (ஒப்ப) நடனமாடுகின்ற, அரம்பையர் - வானுலகமகளிர், வெறுத்து - (கணவர்மீது) வெறுப்பை [ஊடலை] உட்கொண்டு, நீத்த - கழற்றியெறிந்த, வரம்பு இல - எல்லையில்லாதனவான [மிகப்பலவான], அவிர் மணி கோவை - விளங்குகின்ற இரத்தினச்சரங்களையும், ஆரம் - முத்தாகாரங்களையும், கடுவன் - ஆண்குரங்குகள், பூண - அணிய, மந்தி-பெண்குரங்குகள், கண்டு—, உவக்கும் - மகிழாநிற்கும்.

தேவமகளிர் ஊடல்கொண்டு கழற்றியெறிந்த இரத்தினமாலை முதலியவற்றை ஆண்குரங்குகள் பூண்டனவாக,அதுகண்ட பெண்குரங்குகள் கண்டு மகிழு மென்க. சரம்பயில்சாபம் - புருவத்திற்கு வடிவினாலும் தொழிலினாலும் உவமம். பி - ம்:—[1]ஆடா. [2]ஆடி. [3]மரம்பயில். (௩௩)

சச. [1]சாந்துயர் தடங்க டோறுந் தாதுரா கதத்திற் சார்ந்த
கூந்தலம் பிடிக ளெல்லாங் குங்கும் மணிந்த போலுங்
காந்தின மணியின் சோதிக் கதிரொடுங் கலந்து [2]பூசச்
சேந்துவா னகமெப் போதுஞ் செக்கரை யொக்கு [3]மன்றே.

(இ - ள்.) சாந்து உயர் தடங்கள் தோறூஉம் - சந்தனமரங்கள் ஓங்கி வளரப்பெற்ற மலைச்சாரல்கடோறுமுள்ள, தாது ராகத்தின் - காவிக்கற்களாகிய செந்நிறக்கற்களில், சார்ந்த—, கூந்தல் அம் பிடிகள் எல்லாம் - புறமயிரையுடைய அழகிய பெண்யானைகளெல்லாம், குங்குமம் அணிந்த போலும் - குங்குமக்குழம்பை யணிந்தவற்றை யொத்திருக்கும்; காந்து இனம் மணியின் சோதி - பிரகாசிக்கின்ற தொகுதியான பதுமராகவிரத்தினங்களின் இயற்கைச் செந்நிறவொளியானது, கதிரொடூஉம் கலந்து பூச - (சாணைபிடித்தலாற் செயற்கையாகவுண்டாகின்ற) கிரணங்களோடுஞ் சேர்ந்து பூசுதலாலே, வான் அகம் - ஆகாயத்தினிடம், எ போதும்—, சேந்து - செந்நிறமடைந்து, செக்கரை ஒக்கும்-செவ்வானத்தைப் போலும்; (எ - று.)

காவிக்கற்களிற் சார்வதினாற் கருநிறமுள்ள யானைகள் குங்குமக்குழம்புபூசப்பெற்றாற்போலத் தோன்றுமென முன்னிரண்டடிகளிற் கூறினர். பதுமராகக்கற்களின் இயற்கையொளியுடனே செயற்கையொளியும் வானத்திற் சேர்தலால் வானம் எப்போதும் செவ்வானத்தையொத்திருக்கு மென்பது, பின்னிரண்டடிகளிற் கூறிய விஷயம். சோதிக்கதிர்என்பதற்கு-(மணியினது) பேரொளியாகத்தோன்றுகின்ற கிரணம்என்று உரைத்தலுமொன்று. கதிரொடும் என்பதற்கு - சூரியகிரணத்தோடு மென்று கூறுதற்குப் பொருத்தமில்லாமை காண்க. பி - ம்:—[1]சாந்துசாய். [2]வீச. [3]மாதோ. (௩௪)

சரு. நிலமகட் கணிக ளென்ன நிரைகதிர் முத்தஞ் சிந்தி
மலைமகள் கொழுநன் சென்னி வந்துவீழ் கங்கை மான
வலகில்பொன் னலம்பி யாரஞ் [1]சேர்ந்துசோ ரருவி மாலை
யுலகளந் தவன்றன் மார்பி னுத்தரீ யத்தை யொத்த.

(இ - ள்.) நிலம் மகட்கு - பூமிதேவிக்கு, அணிகள் என்ன - (இவை) ஆபரணமாகுமென்னுமாறு, நிரை கதிர் முத்தம் - வரிசையான கிரணங்களை

யுடைய முத்துக்களை, சிந்தி - சிதறி, மலைமகள் கொழுநன் சென்னி வந்து வீழ் கங்கை மான - பார்வதீதேவியின்கணவனான சிவபிரானது திருமுடியிலேவந்துவீழ்கின்ற கங்கையையொப்ப (வெண்ணிறத்தையுடையதாய்), அலகு இல் பொன் அலம்பி ஆரம் சேர்ந்து சோர் - அளவற்றபொன்னைக் கொழித்துக்கொண்டு முத்துக்களுடன்சேர்ந்து விழுகின்ற, அருவி மாலை - மலையருவியின்வரிசை, உலகு அளந்தவன்தன் மார்பின் உத்தரீயத்தை - இவ்வுலகையளந்தருளின திரிவிக்கிரமனானதிருமாலினது மார்பிலணிந்த உத்தரீயத்தை, ஒத்த - ஒத்திருந்தன; (எ - று.)

சந்திரசைலம் உலகளந்தநெடுமாலை யொத்திருக்க, அதில்வீழ்அருவி அந்தநெடுமால் மார்பிலணிந்த உத்தரீயத்தையொக்கு மென்றார்; தற்குறிப்பேற்றவுவமையணி. அம்மலையருவிகள் பூமிதேவிக்கு அணியாகுமாறு முத்துக்களைச்சிந்துமென்று முதலடியிற்கூறினார். திருமால்முத்தாகாரம் பூண்ட மார்பிற் பொற்பட்டாடையையணிந்திருப்பனென்க. பி-ம்:—[1] சார்ந்துவீழ்.

௪௬.—இதுமுதல்ஏழுகவிகள் - பலவகைநிகழ்ச்சிகளைச் சென்றோர் காணுதலைத் தேரிவிக்கும்.

கோடுலா நாகப் [1]போதோ டிலவங்க மலருங்கூட்டிச்
சூடுவார் களிவண் டோச்சித் தூநறுந் தேற [2]லுண்பார்
கேடிலா மகரயாழிற் கின்னர மிதுனம் பாடும்
பாடலா லூட னீங்கும் பரிமுக மாக்கள் கண்டார்.

(இ - ள்.) கோடு உலாம் நாகம் போதோடு - கொம்புகளிற்பூத்துள்ள சுரபுன்னைமலர்களோடு, இலவங்கம் மலர்உம் கூட்டி - இலவங்கமலரையுஞ் சேர்த்து, சூடுவார் - அணிகின்றவர்களும், களி வண்டு ஓச்சி தூ நறு தேறல் உண்பார் - மதக்களிப்புள்ள வண்டுகளையோட்டிவிட்டுப் பரிசுத்தமாகியநல்ல கள்ளைப்பருகுபவர்களுமாகிய அங்குத்தங்கியவர்,—கேடு இலா மகரயாழில் - குற்றமற்றமகரவீணை போல, கின்னரமிதுனம் பாடும் — இரட்டையாகவுள்ள கின்னரமென்னுந் தேவசாதிகள்பாடுகின்ற,பாடலால்-பாடலினாலே ஊடல் நீங்கும்-(தாம்கொண்ட) புலவி நீங்கப்பெற்ற, பரிமுகம் மாக்கள் - குதிரை முகத்தை யுடைய தெய்வமக்களை, கண்டார்—; (எ - று.)

பூக்கொய்து சூடித் தேறலையுண்பவரான அங்குத் தங்கிய சேனையைச் சார்ந்தவர்கள், கின்னர மிதுனங்கள் பாடுவதையும், அப்பாடலால் பரிமுக மாக்கள் ஊடல் நீங்குவதையுங் கண்டனரென்பதாம். கின்னரம் - மானுட முகத்தையும் குதிரையினுடலையும் படைத்த தேவசாதி விசேடம். பரிமுக மாக்கள் என்பது - குதிரை முகத்தையும், மானுட வுடலையும் படைத்ததோர்சாதி விசேடம். மேல், பூக்கொய்படலம் உண்டாட்டுப்படலம் என்றவற்றுக்குத் தோற்றுவாயாக, 'நாகப்போதோடிலவங்க மலருங்கூட்டிச் சூடுவார் தூநறுந்தேறலுண்பார்' என்று ரென்பர். பி-ம்:-[1] பூவோடு. [2] கொள்வார்.

௪௭. *பொருகளிப் புற்ற மைந்தர் பேரெழி லாகத் தோடும
பொருந்துணைக் கொங்கை யன்ன பொருவில்கோங் கரும்பின் மாடே

மருங்கெனக் குழையுங் கொம்பின் மடப்பெடை வண்டுந் தங்கள்
கருங்குழற் களிக்கும் வண்டும் கடிமணம் புணரக் கண்டார்.

(இ - ள்.) பெரு களிப்பு உற்ற-மிக்க மகிழ்ச்சி பொருந்திய, மைந்தர்-இளமையுள்ள ஆடவருடைய, பேர் எழில் ஆகத்தோடு - மிக்க அழகை யுடைய மார்பிலே, பொரும் – தாக்குகின்ற, துணை - இரட்டையாகிய, கொங்கை - தனங்களை, அன்ன - ஒத்த பொருவு இல் - (வேறு) உவமையைப் பெறாத, கோங்கு அரும்பின் மாடு - கோங்கரும்புகளி னருகிலே,— மருங்கு என குழைபும்-(அம்மகளிரின்) இடையைப் போலத் துவள்கின்ற, கொம்பின் - பூங்கொம்பில்வாழுந்தன்மை கொண்ட மடம் பெடை வண்டும் - இளமையையுடைய பெண்வண்டுகளும், தங்கள் கரு குழல் களிக்கும் வண்டும் - தமது கருமையாகிய கூந்தலிலே படிந்து களிக்கின்ற ஆண் வண்டுகளும், கடி மணம் புணர - புதுமணஞ் செய்து கொள்வதையும், கண்டார் - பார்த்தார்கள்; (எ - று.)

தமது தனம் போன்ற கோங்கரும்பில் மொய்த்திருந்த பெண்வண்டுகளும் தமது கருங்குழலிற் படிந்த ஆண்வண்டுகளும் கடிமணம்புணர்வதை அங்குத்தங்கிய மகளிர் கண்டன ரென்க. இளமையையுடைய ஆடவர்க்கும் மகளிர்க்கும் இன்பப்பகுதி காணப்படுதல், இயல்பேயாம். கோங்கரும்புக்கு, முன்னிரண்டடிகள் அடைமொழி. பி - ம்:—[1]களிறேயும். (சஎ)

சஅ. படிகத்தின றலமென் றெண்ணிப் படர்சுனை [1]முடுகிப் புக்க
சுடிகைபூங் கமல மன்ன சுடர்[2]மதி முகத்தி னார்தம்
வடகத்தோ டுடுத்த[3]தூசு மாசினீர் [4]நனைப்ப நோக்கிக்
[5]கடக்கை யெறிந்து தம்மிற் கருங்கழல் வீரர் நக்கார்.

(இ - ள்.) படர் சுனை-பரவிய நீர்ச்சுனையை, படிகத்தின் தலம் என்று எண்ணி - படிகக்கற்கள்படுத்த இடமென்று மாறுகக்கருதி, முடுகி புக்க-விரைவாகச் சென்ற, சுடிகை பூங் கமலம் சுடர் மதி அன்ன முகத்தினார்தம்-நுதலணியையணிந்த அழகியதாமரைமலரையும் ஒளிவிடுகின்ற சந்திரனையுமொத்த முகத்தையுடைய மகளிரின், வடகத்தோடு - மேலாடையோடு, உடுத்த தூசை - (அரையிற்கட்டிய) சேலையையும். மாசு இல் நீர் - கலக்கமற்ற [தெளிவான] நீர், நனைப்ப - நனைத்ததாக, நோக்கி - (அது)கண்டு, கடகம் கை எறிந்து - கடகம்பூண்ட (தமது)கைகளைக் கொட்டி, கரு கழல் வீரர்-பெரிய வீரக்கழலையணிந்த வீரர்கள், தம்மில் - தமக்குள்ளே, நக்கார்-சிரித்தார்கள்; (எ - று.)

மகளிர் சுனையுள்ள இடத்தைப் பளிக்குத்தலமென்று மாறுகக்கருதிச் சென்றதனால் தமது ஆடை நனையப்பெற்றன ராக, அதுகண்ட வீரர் தமக்குள் கைகொட்டிச் சிரித்தன ரென்க. பளிங்குத்தலத்திற்கும் சுனைத்தலத்திற்கும் வேறுபாடு தோன்றாமையால் மாதர் மயங்கினர்: இங்கு மயக்கவணியும், பொதுவணியும் கலந்திருப்பது - கலவையணியாம். பி – ம்:— [1]முடுக. [2]மணி. [3]தூசைமாசினீர், தூசுமாசில. [4]நனையக்கண்டு. [5]கடகத்தை. (சஅ)

சகூ. பூவணை பலவுங் கண்டார் பொன்னரி மாலை கண்டார்
மேவருங் கோப மன்ன வெள்ளிலைத் தம்பல் கண்டா
ராவியி னினிய கொண்கர்ப் பிரிந்தறி வழிந்த விஞ்சைப்
பாவையர் வைகத் தீய்ந்த பல்லவ சயனங் கண்டார்.

(இ - ள்.) (அன்றியும்),—பூ அணை பலஉம் கண்டார் - மலர்ப்படுக்கை பலவற்றையும் கண்டார்; பொன்னரிமாலை கண்டார் - (புலவியினாலோ அல்லது புணர்ச்சியினாலோ கீழ்விழுந்துள்ள) பொன்னரிமாலைகளைக் கண்டார்கள்; மேவரும் கோபம் அன்ன - விருப்பமுண்டாகின்ற இந்திரகோபத்தை யொத்த, வெள் இலை தம்பல் - வெற்றிலைத்தம்பலங்களை, கண்டார்—; ஆவியின் இனிய கொண்கர் பிரிந்து - தம்முயிரைக்காட்டிலும் இனியராகிய கணவரைப்பிரிந்து, அறிவு அழிந்த-மதியையிழந்த [மூர்ச்சையையடைந்த], விஞ்சைப்பாவையர் - வித்தியாதரமகளிர், வைக - தங்குவதனால், தீய்ந்த - தீய்ந்துபோன, பல்லவம் சயனம் - தளிர்ப்படுக்கைகளையும், கண்டார்—.

பூவணைமுதலியவற்றைத் தனித்தனியிடத்திலே கண்டனரென்பது தோன்ற, தனித்தனி 'கண்டார்' என்றார். தம்பல் = தம்பலம்: வெற்றிலை பாக்குமுதலியவற்றைமென்று உமிழ்ந்தது. கொண்கர்ப்பிரிந்து - இரண்டாம்வேற்றுமைத்தொகையாதலின், இயல்பின்விகாரம். (சகூ)

ருo. *பானலங் கண்க ளாடப் பவளவாய் முறுவ லாட
பீனவெம் முலையி னிட்ட பெருவிலை யார மாடத்
தேனமுரன் றளகத் தாடத் திருமணிக் குழைக ளாட
வானவர் மகளி ராடும் வாசநா றூசல் கண்டார்.

(இ - ள்.) பானல் அம் கண்கள் ஆட - கருங்குவளைமலர்போன்ற கண்கள் பிறழவும், பவளம் வாய் முறுவல் ஆட - பவளம்போன்ற (தமது) வாயிலே புன் சிரிப்புத் தோன்றவும், பீனம் வெம் முலையின் இட்ட பெருவிலை ஆரம் ஆட - பருத்துள்ளனவும் (ஆடவர்) விரும்புவனவுமான தனங்களிலே மிக்கவிலைபெற்ற முத்தாரங்கள் அசையவும், தேன் அளகத்து முரன்று ஆட - தேன்வண்டுகள் கூந்தலிலே ஒலித்துக்கொண்டு சுழலவும், திருமணி குழைகள் ஆட - சிறந்தஇரத்தினங்கள்பதித்த குழையென்னுங் காதணி (செவிகளிலே) அசையவும், வானவர் மகளிர் ஆடும் - தெய்வமகளிரேறியாடுகிற, வாசம் நாறு ஊசல் - பரிமளம்வீசுகின்ற ஊசல்களை, கண்டார்—.

தெய்வமகளிர் கண்கள்முதலியனஆட ஊசலாடுவதையுஞ்சென்றவர் கண்டனரென்க. ஆடஎன்றசொல் ஒருபொருளில் பலமுறைவந்தது-சொற்பொருட்பின்வருநிலையணியாம். ஊசலாடுகிறஇயற்கையை வருணித்தது - தன்மைநவிற்சியணி. (ருo)

ருக. *சுந்தர வான மாதர் துவரிதழ்ப் பவள வாயு
மந்தமில் சுரும்புந் தேனு மினிறுமுண் டல்குல் விற்கும்
பைந்தொடி மகளிர் கைத்தோர் பசையில்லை யென்ன விட்ட
மைந்தரி னீத்த தீந்தேன் வள்ளங்கள் பலவுங் கண்டார்.

(இ - ள்.) அல்குல் விற்கும் பைந் தொடி மகளிர் - (தமது) அல்குலை விலைக்குவிற்கின்ற பசும் பொன்னாற்செய்ததொடியென்னும் அணியையணிந்த விலைமகளிர், (உள்ள செல்வத்தையெல்லாம் பறித்துக்கொண்டபின்பு), ஓர் பசை இல்லை என்று - (இவனை வைத்துக்கொண்டிருத்தலிற்) சிறிதும் பயனில்லையென்று கருதி, கைத்து-வெறுத்து, விட்ட-உபேட்சித்துவிட்ட, மைந்தரின் - ஆடவரைப் போல,— சுந்தரம் வதனம் மாதர் துவர் இதழ் பவளம் வாய்உம் - அழகிய முகத்தையுடைய மடந்தையரின் சிவந்த இதழோடுகூடிய பவழத்தையொத்த வாயும், அந்தம் இல் சுரும்புஉம் தேன்உம் மிஞிறுஉம் - எல்லையில்லாத [மிகப்பலவான] சுரும்புமுதலியனவும், உண்டு - குடித்து, நீத்த - கைவிட்டிட்ட, தீம் தேன் வள்ளங்கள் பலஉம் - இனிய நறவக்கிண்ணங்கள் பலவற்றையும், கண்டார்—; (எ - று.)

மகளிரும் வண்டுச்சாதிகளும் இனிச் சிறிதும் பசையில்லையென்னு மளவும் பருகிய தேன்கிண்ணங்கள் பல அங்குக் கிடப்பதைக் கண்டனரென்க. அவ்வாறு கிடக்கும் தேன் வள்ளங்கட்கு, கையிற் பொருளுள்ளவரையிலும் தம்மிடம்வைத்துக்கொண்டிருந்து இனி இவனிடத்திற் பசையில்லையென்று உணர்ந்ததும் விலைமகளிராற் கைவிடப்படும் மைந்தரை உவமை கூறினர்; உவமையணி. வாயும், சுரும்பும் தேனும் மிஞிறும் உண்டு நீத்த வள்ளம் என இயையும். கைத்து - பொருள்எனினுமாம்.　　(ருக)

ருஉ.* அற்பக லாக்குஞ் சோதிப் பளிக்கறை யமளிப் பாங்கர்
மற்பக மலர்ந்த திண்டோள் வானவர்[1] மணந்த கோல
[2] விற்பகை நுதலி னார்தங் கலவியின் வெறுத்து நீத்த
கற்பக மீன்ற மாலை கலனொடுங் கிடப்பக் கண்டார்.

(இ - ள்.) அல் பகல் ஆக்கும் சோதி - இரவையும் பகலாக்கவல்ல பேரொளியையுடைய, பளிங்கு அறை - பளிக்குப்பாறையினாலியன்ற, அமளி பாங்கர் - படுக்கையிலே, மல் பக மலர்ந்த திண் தோள் வானவர் - மற்றொழில் வேறிடத்திலில்லையாம்படி பரந்த வலிய தோள்களையுடைய தேவர்களால், மணந்த - கூடப்பெற்ற, கோலம் - அழகிய, வில் பகை நுதலினார் - (தம்முடைய புருவங்களினால்) வில்லோடு பகைக்கின்ற நெற்றியையுடைய தெய்வமகளிர், தம் கலவியின் - தமது புணர்ச்சிக்காலத்தில், வெறுத்து நீத்த - வெறுப்புக்கொண்டு கழற்றியெறிந்த, கற்பகம் ஈன்ற மாலை - கற்பகதருக்கள் தந்த மலர்மாலைகள், கலனொடுஉம் - அணிகலங்களோடும், கிடப்ப - வீழ்ந்து கிடக்க, கண்டார்—; (எ - று.)

பளிக்குப்பாறையிலே தேவர்களாற் கூடப்பெற்ற தெய்வமகளிர் அவ்வானவரை இறுகத்தழுவிக்கொள்வதற்கு இடையீடா யிருக்கின்றன என்று கருதித் தாம் அணிந்திருந்த கற்பகமலர்மாலைகளையும் கலன்களையும் வெறுத்துக் களைந்தெறிந்தன ரென்க. பி - ம்:—[1] மலர்ந்த. [2] விற்பகர்.　　(ருஉ)

ருங,ருச.—இரண்டுகவிகள் - ஒருதொடர்: சேனையோடு சென்ற மடவாரின் செயிதியைத் தெரிவிக்கும்.

ருங. கையென மலர வேண்டி யரும்பிய காந்த ளுக்கிப்
[1] பையர விதுவென் றஞ்சிப் படைக்கண்கள் புதைக்கின் றாரும்

நெய் [2]திரள் வயிரப் பாறை நிழலிடைத் தோன்றும் போதைக்
கொய்திவை தருதி ரென்று கொழுநரைத் தொழுகின் றாரும்.

௫௪. பின்னங்க ளுகிரிற் செய்து [1]பிண்டியந் தளிர்கைக் கொண்ட
சின்னங்கண் முலையி னப்பித் தேமலர் கொய்கின் றாரும்
வன்னங்கள் பலவுந் தோன்ற மணியொளிர் [2]மலையி னில்லா
வன்னங்கள் புகுந்த வென்ன வகன்சுனை குடைகின் றாரும்.

(இ - ள்.) (௫௩) கை என மலர வேண்டி அரும்பிய - (மானுடரின்) கை போல மலரவிரும்பி அரும்பாகவுள்ள, காந்தள் - காந்தளை [காந்தளின் அரும்பை], நோக்கி - பார்த்து, இது பை அரவுஎன்று அஞ்சி - இது படத்தையுடைய பாம்பு என்று கருதியதனால் அச்சங்கொண்டு, படை கண்கள் - வேற்படை போன்ற (தமது) கண்களை, புதைக்கின்றார்உம் - மூடிக்கொள்பவரும்,— நெய் திரள் வயிரம் பாறை - நெய்ப்புக்குணந்திரண்டுள்ள வயிரத்தினமயமான பாறைகளின், நிழலிடை - ஒளியில், தோன்றும் - பிரதிவிம்பிக்கின்ற, போதை - மலரை, (உண்மையானமலரென்று மயங்கியதனால்), இவை கொய்து தருதிர் என்று கொழுநரை தொழுகின்றார்உம் - 'இந்தமலர்களைப்பறித்துத் தாருங்கள்'என்று(தமது)கணவரை வணங்கிக் கேட்பவரும், (௫௪) பிண்டி அம் தளிர் - அசோகின் அழகியதளிர்களை, உகிரில் - (தமது) நகங்களினால், பின்னங்கள் செய்து - சிறுசிறுதுண்டுகளாகக் கிள்ளி, கை கொண்ட - கையிற்கொண்டனவாகிய, சின்னங்கள் - சிறுதகடுபோலுள்ள அத்தளிர்த்துண்டங்களை, முலையின் அப்பி - முலையிலே அழகுபடப்பொருத்தி,தேன் மலர்-தேனோடுகூடிய மலர்களை, கொய்கின்றார்உம் - பறிப்பவர்களும்,—வன்னங்கள் பலஉம் தோன்ற - பலவகைவர்ணங்களும் தோன்றும்படி, மணி - நவரத்தினங்களும், ஒளிர் - விளங்குகின்ற, மலையின் - மலையிலே, நில்லா - நிலைபெற்றுவாழாத, அன்னங்கள் - அன்னப்பறவைகள், புகுந்த என்ன - (இப்போது) புகுந்தனஎன்று (காண்பவர்) கருதும்படி, அகல் சுனை - பரவிய சுனையிலே, குடைகின்றார்உம் - முழுகுபவரும் (ஆயினர், அந்தச் சேனையிற்சென்ற மாதரார்); (எ - று.)

(௫௩)காந்தள் மலர்ந்தால் கைபோன்றிருக்குமென்க. காந்தள் அரும்பைப் பையரவாகவும், வயிரப்பாறையில் பிரதிபிம்பமாகத்தோன்றும்போதை உண்மையானபோதாகவும் மகளிர் மயங்கியதாகக் கூறியது - மயக்கவணியாம். பிரதிபிம்பமாகத்தோன்றிய மலரை உண்மையானமலரென்றே கருதினரென்றமைக்கு ஏற்ப, நெய்திரள்வயிரப்பாறையைத் தெளிந்தநீர்நிறைந்த காசயனைமயங்கினரெனவுங்கொள்க. பி - ம்:—[1]பையரவிவை. [2]தவழ்.

(௫௪)தளிரிலைகளைக் கயல்மீன் காமவல்லிமுதலியவடிவம்படக் கிள்ளிக் கொங்கையில் அப்புதல், அலங்காரத்திற்காக. இங்ஙனம் மகளிர் செய்தல் பண்டைக்காலத்துவழக்கமாதலை "கொழுமடற்குமரிவாழைத் துகிற்சுருள் கொண்டுதோன்றச், செழுமலர்க்காமவல்லி செருக்கயற்சிற்பமாகக், கழுமணிச்செம்பொனாழிக் கைவிர லுகிரிற் கிள்ளி, விழுமுலைச்சூட்டிநின்றார்

விண்ணவர்மகளிரொத்தார்'' என்ற சிந்தாமணியாலும் அறிக. மலர்கொய்தல் சுனைகுடைதல் என்பவற்றைச் செய்வாராயினர், சென்றமாத ரென்க. எழுவாய் பயனிலைகள் வருவித்து முடிக்கப்பட்டன. அன்னப்பறவை மருத நிலத்துக் கருப்பொரு ளாதலால், 'மலையினில்லா' என்றருமாம். பிண்டியந் தளிரை உகிரில் சின்னங்கள் பின்னங்கள்செய்து என்றுகூட்டி உரைத்தலு மொன்று. பி - ம்:—[1]பிண்டியந்தளிரில். [2]குயிலினல்லார். (ருச)

ருரு.—ஒன்பது கவிகள் - மலையின்வருணனை.

ஈனு மாமழை யிளந்தளி ரேயொளி
யீனு மாமழை யிளந்தளி ரேயிடை
மானும் வேழமு நாகமு மாதர்தோண்
மானும் வேழமு நாகமு மாடெலாம்.

(இ-ள்.) இடை-(அந்தமலையின்) நடுப்பாகத்தில், (உள்ளது),-ஈனும்-தளிர்க்கின்ற, மாமழை இளந் தளிர் ஏய் - மாமரத்தின் இளைய தளிரையொத்த, ஒளி ஈனும்-ஒளி தருகின்ற, மாமழை-பொன்னின், இளந்தளிர்ஏ - மெல்லியதகடேயாம்; மாடெலாம்-(அம்மலையின்) பக்கங்களிலெல்லாம், மான்உம்-, வேழம்உம்-யானையும், நாகம்உம்-பாம்பும், மாதர் தோள் மானும் வேழம்உம் - மகளிரின் தோளையொத்து (நெய்ப்புப் பசுமை சுற்றுடைமை முதலிய) தன்மையைக் கொண்ட மூங்கில்களும், நாகமும்-சுரபுன்னைமரங்களும். (உள்ளன); (எ-று.)

பயனிலை வருவித்துஉரைக்கப்பட்டது. இதுமுதல் ஒன்பதுகவிகளில், யமகமென்னுஞ் சொல்லணி அமைந்திருத்தல் காண்க. தமிழில் மடக்குஎனப்படும். (வடமொழியில் ஶிஶுபாலவதம் முதலிய காவியங்களிலும் வரைக்காட்சி கூறுமிடத்து யமகமென்னுஞ்சொல்லணிபடக் கூறியிருப்பது, இங்கு நினைவிற்கு வருகின்றது.) இப்பாடலுக்கு - மாமரத்தின்கீழ் மானும், மூங்கிலின்கீழ் யானைகளும், சுரபுன்னைமரத்தின்கீழ் நாகங்களும் தங்கியுள்ளன என்று கருத்துக் கூறினாருமுளர். மாதர்தோள்மானும்வேழம் - எதிர்நிலையுவமையணி. (ருரு)

ருசு. திமிர மாவுடற் குங்குமச் சேதகந்
திமிர மாவொடுஞ் சந்தொடுந் தேய்க்குமா
லமர மாதரை யொத்தொளி ரஞ்சொலா
ரமர மாதரை யொத்ததவ் வானமே.

(இ - ள்.) திமிரம் மா - இருள்போன்ற கருநிறத்தையுடைய காட்டுப் பன்றிகள், உடல் - (தம்) உடலிலே, குங்குமம் சேதகம் - (அங்குத்தங்கிய மாதரார் சேமித்துவைத்த) குங்குமக்குழம்பின்சேறு, திமிர - நிரம்பியதனால், (அச்சேறுபோகுமாறு), மாவொடுஉம் - மாமரத்திலும், சந்தொடுஉம்-சந்தனமரத்திலும், தேய்க்கும் - (தம்முடம்பை) உராயச்செய்யும்; (அந்த இடத்தில்), அமரர் மாதரை ஒத்து ஒளிர் அம் சொலார் - தேவமாதரை யொத்துவிளங்குகின்ற அழகியசொல்லையுடைய மகளிர், அமர - பொருந்தி

யிருத்தலால்,மாதரை-அந்தப்பெரிய மலைப்பூமியானது,அ வானம் ஏ ஒத்தது- (தேவமகளிர்தங்கப்பெற்ற) அந்தச்சுவர்க்கத்தையே யொத்து விளங்கிற்று; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

கரும்பன்றி தன்னுடலிற் குங்குமச்சேறுபோக மாமரத்திலும் சந்தன மரத்திலுந் தேய்க்கும்; தேவமங்கையரையொத்தபெண்கள் அங்குவாழ்த லால், அம்மலை தேவருலகம்போன்றிருக்குமென்றவாறு. - திமிரமா - சேனை யிலுள்ள யானையென்னலு மொன்று. திமிர - உதிர எனினுமாம். வானத் தின் சிறப்புத் தோன்ற 'அவ்வானம்' என உலகறிசுட்டாற் கூறினர். மாவொ டும் சந்தொடும் - வேற்றுமைமயக்கம். இந்தப்பாடலும் அடுத்தபாடலும் - சில ஏட்டுப்பிரதிகளில், ௫அ, ௫௯-ஆவது பாடல்களாகக் காணப்படுகின் றன. (௫௬)

௫எ. பேர வாவொடு மாசுணம் பேரவே
பேர வாவொடு மாசுணம் பேரவே
யார வாரத்தி னோடு மருவியே
யார வாரத்தி னோடு மருவியே.

(இ - ள்.) பேர் அவாவொடு - (இரையை விரும்பியதனால்) மிக்க ஆவ லோடு, மாசுணம் பேர - பெரும்பாம்புகள் (தம்மிருப்பிடம்விட்டுச்) செல்வத னால், வே பேர-மூங்கில்கள் வேரற்றுவிழ, (அங்ஙனம்மூங்கில்கள் வேரற்று விழுவதுகண்டு அஞ்சியதனால்), ஆவொடு மா சுணம் பேர - (காட்டுப்) பசுக்கள் ஓடுவதனாலானபுழுதிகள் பறக்கையில்,—அருவி - அம்மலையின் நீரருவிகள், ஆர - மிகவும், ஆரத்தினோடும் மருவி - முத்துக்களோடு கலந்து, ஆரவாரத்தின் - பேரிரைச்சலோடு, ஓடும் - ஓடாநிற்கும்; (எ - று.)

ஒருபுறத்திற் புழுதிகள் பறக்க, மற்றொருபுறத்தில் அருவி ஓடாநிற்கும் அம்மலை யென, மலையின்சிறப்புக் கூறியவாறு. புழுதிகள் பறப்பதற்குக் கார ணம்-மூங்கிற்பொதும்பினிடையிலிருந்த மலைப்பாம்புகள் இரையை ஆவலோ டுவிரும்பித் தம்மிடம்விட்டுச்செல்லுகையில் மூங்கில்கள் வேரற்றுவிழுந்தன வாக, அதைக்கண்ட காட்டுப்பசுக்கள் வெருவியோடியதனாலென்க. இனி, இச்செய்யுட்குச் சிறிதுவேறுபாடுபடப் பொருள் கூறுவாருமுளர். (௫எ)

௫அ. * புகலும் வாளரிக் கண்ணியர் [1]பொற்புயம
புகலும் வாளரிக் கண்ணியர் பூண்முலை
யகிலு மாரமு மாரவங் கோங்குமே
யகிலு மாரமு மாரவங் கோங்குமே.

(இ - ள்.) புகலும் வாள் அரிக்கு அண்ணியர் - சிறப்பித்துச் சொல்லு கின்ற வாள்போற்கொடிய சிங்கத்தையொத்த ஆடவர்களின், பொன் புயம் - அழகியதோள்களில், வாள் அரி கண்ணியர் - ஒளிபொருந்திச் செவ்வரிபர ந்த கண்களையுடைய மடவாரின், பூண் முலை - ஆபரணமணிந்த தனங்கள், புகலும் - சேர்தலும்,—அகில்உம்-(அந்தமுலைகளிலணிந்திருந்த) அகில்தேய் வையும், ஆரம்உம் - முத்துவடமும், ஆர - மிகவும், அங்கு - அப்புயங்களில்,

ஓங்கும்-சிறக்கும்; அகிலும் - (புயத்திற்கு ஒப்பாகின்ற) அம்மலைகளினிடங்களிலும், ஆரமும் - சந்தனமரங்களும், மாரவம் (உம்) - குங்குமமரமும், கோங்குஉம் - கோங்கிலவமரங்களும், (பொருந்தியிருக்கும்); (எ - று.)

மாதரார் தழுவுகையில் அவர்களணிந்த அகிலும் ஆரமும் ஆடவரது புயங்களிற்சேர்ந்து மிகச்சிறக்குமென்பது, முதல் மூன்றடிகளின் பொருள். இங்ஙனம் புயத்தை வருணித்து மலையினிடத்தை வருணித்ததனால், புயத்திற்கு மலையோடு ஒப்புமை பெறப்படும். அகில் - அகிலமென்ற வடசொல்லின்விகாரம்: பூமியென்றுபொருளுள்ள இச்சொல்-பூமியின்ஏகதேசமாகிய மலைப்பகுதியைக்காட்டிற்றென்க. இனி,முதலடியில் வாள்அரி கண்ணியர் என்றேபிரித்து - ஒளிபொருந்திய வண்டுகள்மொய்க்கின்ற மாலைசூடிய வீரரென்றும், ஒளிபொருந்திய பொன்னரிமாலையணிந்தவரென்றும் உரைத்தலுமாம். மாரவம் - மரவமென்பதன் நீட்டல். ஈற்றடியிற் பயனிலை வருவிக்கப்பட்டது;இனி,ஈற்றடியில், 'மே'என்றுபிரித்து'கொள்வாருங் கள்வருநேர்' என்றவிடத்து 'நேர்வர்'என்பது'நேர்'என்று வினையடிமாத்திரம்நின்றது போல, 'மேவும்'என்பது வினைப்பகுதிமாத்திரம்நின்றதெனஉரைத்தலுமொன்று. பின்னிரண்டடிகட்கு வேறுவகையாகப் பொருள் கூறுவாருமுளர். பி - ம்:—[1]தோளிணை. (ருஅ)

ருகூ. துன்ன ரம்பை நிரம்பிய தொல்வரை
துன்ன ரம்பைய ரூருவிற் றோன்றுமாற்
கின்ன ரம்பயில் கீதங்க [2]ளென்னலாங்
கின்ன ரம்பயில் கின்றன ரேழைமார்.

(இ-ள்.) தொல் வரை-அடர்த்தியாகவுள்ள பழையஅந்தமலையில், துன்னு அரம்பை - நெருங்கிமுளைத்துள்ள வாழைகள், நிரம்பிய - நிரம்பியவை,— துன்னு - (அங்கு) அணுகுகின்ற, அரம்பையர் - அமரமகளிரின், ஊருவின் - துடைபோல, தோன்றும்—; (அங்கு), ஏழைமார் - மகளிர், கின்னரம் பயில் கீதங்கள் என்னல் ஆம் கின்னரமென்ற தேவசாதிகள் பழகிப்பாடுகின்ற பாட்டென்றுசொல்லத்தக்க (இன்னோசையையுடைய), கின்னரம் - யாழை, பயில்கின்றனர் - வாசிக்கின்றனர்;(எ - று.)—ஆல் - ஈற்றசை.

மகளிரின் ஊருவுக்குப் பிரசித்தவுபமானமாகச் சொல்லப்படும் வாழையை இங்கு உபமேயமாகக்கொண்டு,அரம்பையரின் ஊருவை அவ்வாழைக்கு உபமானமாகக்கூறியது—எதிர்நிலையுவமையணி. கின்னரம் - யாழென்னுமல் வேறோரிசைக்கருவி யென்னலுமுண்டு. [2]என்னவாங் கின்னரம் என்ற பாடத்துக்கு, ஏழைமார் கின்னரம்பயில் கீதங்கள் என்ன, ஆங்கு-அவ்விடத்தில், இன் நரம்பு - யாழின் இனிய நரம்பை(த் தடவி வாசித்து), அயில்கின்றனர் - (அவற்றினின்று தோன்றுகின்ற இனிய இசையை) அனுபவிக்கின்றனரென்று பொருள் காணலாம். பி - ம்:—[1]சூழ்வரை. [2]என்னவே, அன்னவாக. (ருகூ)

சுo. ஊழு மாகட மாவுமு லூங்கமலா
மூழு மாகட மாமத மோடுமே

யாறு சேர்வன மாவரை யாடுமே
யாறு சேர்வன மாவரை யாடுமே.

(இ - ள்.) மா கடம் - பெரிய காட்டிலுள்ள, மா - மாமரங்கள், ஊறு உற - சேதமடையும்படி, ஊங்கு எலாம் - அம்மலையினிடங்களி லெல்லாம், ஊறும்ஆ - மேன்மேற்சுரக்கு மாறு, கடம் மா-யானைகளின், மதம்-மதநீர்ப் பெருக்கு, ஓடும் - ஓடாநிற்கும்; (அந்தப் பெருக்கினால்), ஆறு சேர் வனம் - வழிகளிற்றிரண்ட காட்டிலுள்ள, ஆ வரை - ஆச்சாமரமும் மூங்கிலும், ஆடும் - (வேர்பறிந்து) அசையாநிற்கும்; ஆறு - அம்மலையாறுகளில், சேர்வன - (நீருண்ணுதற்குச்) செல்பவை, வரை யாடு உம் - மலையாடுகளும், மாமற்றைமிருகங்களுமாம்; (எ - று)

காட்டிலுள்ள மரங்கள் சேதமடையும் படி யானை மதங்கள் பாய்வதனால், ஆச்சாமுதலியன ஒருபுறத்தில் வேர்பறிந்து வீழாநிற்க, மற்றொருபுறத்தில் நீருண்ணுமாறு மலையாறுகளில் வரையாடுமுதலிய வனமிருகங்கள் செல்லு மென்பதாம். முன்னிரண்டடிகளில் தொடர்புயர்வுநவிற்சியணி காண்க. இப்பாடலுக்கு வெவ்வேறுவகையாகப் பிரித்து உரைப்பாருமுளர்.

சுக. கல்லி யங்கு கருங்குற மங்கையா
கல்லி யங்கசும் காமர் கிழங்கடா
வல்லி யங்க ணெருங்கு மருங்கெலாம்
வல்லி யங்க ணெருங்கி மயங்குமே.

(இ - ள்.) கல் இயங்கு கருங் குறம் மங்கையர்—மலையில் வாழ்கின்ற கருநிறமுள்ள குறத்தியர், அங்கு - அம்மலையில், கல்லி அகழ் - வெட்டித் தோண்டி, காமர் கிழங்கு எடா - அழகிய கிழங்கை யெடுப்பதற்காக, வல்லியங்கள் நெருங்கு மருங்குஎலாம் - புலிகள் நெருங்கிவாழ்கின்ற மலைப்பக்கங்களிலெல்லாம், வல் இயங்கள் - வலிய பறைகள், நெருங்கி - மிகுந்து, மயங்கும் - ஒலிக்கும்; (எ - று.)

குறத்தியர் கிழங்கெடுக்க வேண்டிய பருவமென்று உணர்த்துவதற்காக மலைவாழுங் குறவர் பலவகைத் தோற்கருவிகளை முழக்குவ ரென்பதாம். கருமை - வலிமையுமாம். எடா - செய்யாவென்னும் வாய்பாட்டு உடன்பாட்டெச்சம்; எடுக்க என்னும் பொருளில்வந்தது. இனி, ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சமெனக்கொண்டு, எடுக்கவொட்டாமல் மருங்கெலாம் வல்லியங்கள் நெருங்கும்; (பின்பு), வல்இயங்கள் நெருங்கியொலித்தலினால், (அவை) மயக்கமுற்றோடும் என்றலும் ஒன்று; அன்றி, எடா-எடுக்காத, வல்லி நெருங்கும் அம் கண் மருங்கு எலாம் - கொடிகள்நெருங்கிய அழகியஇடத்தையுடைய பக்கங்களிலெல்லாம், வல்லியங்கள் - புலிகள், நெருங்கி மயங்குமென்று கூறுவாருமுளர். அகழ் - அகழ்ந்து: வினைப்பகுதி வினையெச்சப்பொருள்பட்டுவந்தது: 'வரிப்புனைப்பந்து' என்றஇடத்துப் போல. (சுக)

சுஉ. கோளி பங்கய மூழ்கக் குளிகயங்
கோளி பங்கய [1]மூழ்க்கக் குலைந்தவர

ளாளி பொங்கு [2]மரம்பையி ரோதியே
யாளி பொங்கு மரம்பைய ரோதியே.

(இ - ள்.) கோள் - வலிமையையுடைய, இபம்-யானைகள், கயம் - (அம்மலையிலுள்ள) கயத்தில், மூழ்க - மூழ்குவதனால், (அக்குளக்கரையிலுள்ள), குளிர் கய கோளி - குளிர்ச்சியைத் தருகின்ற பெரிய ஆலமரமும், (அக்குளத்திலுள்ள), பங்கயம் - தாமரையும், ஊழ்க குலைந்த-பதனழிந்துகெட்டன: ஆளி-சிங்கங்கள், பொங்கும்-உக்கிரங்கொண்டு உலாவுகின்ற, மரம் பையிர் - மரங்கள் அடர்ந்துள்ள, ஓதி - அம்மலையில், ஏய் - தங்கிய, அரம்பையர் - தேவமாதருடைய, ஓதி - கூந்தலில், ஆளி - வண்டுகள், பொங்கும் - மகிழ்ச்சிகொண்டுதங்கும்; (எ - று.)—ஆல் - அசை.

யானைகள் அம்மலையின்கயத்திலே துளைவதனால் அந்தநீர்நிலையிலுள்ள தாமரையும் அக்கயத்தின் கரையிலுள்ள கோளியாலமும் அழிந்தனவாக, ஒருசார் அரம்பையர் தங்குவதனால் அவர் கூந்தலிலுள்ள கற்பகமலரின் தேனைப் பருகி வண்டுகள் களித்துநிற்குமென்க. பூவாதேகாய்க்கும் மரமென்று பொருள்படுவதான'கோளி' என்னுஞ்சொல் 'குளிர்கய'என்ற அடைமொழி பெற்றுவந்ததனால், தனதுநிழலாற் குளிர்ச்சியைத் தரும் பெருமரமான ஆலமரத்தைக் காட்டிற்று. ஊழ்க்கஎன்ற செயவெனெச்சம் யமகம்நோக்கி, 'ஊழ்க'என விகாரப்பட்டு வந்ததென்க. மூன்றாமடியில் 'பயில்' என்ற வினைப்பகுதி லகரரகரங்களை அபேதகமாய்வழங்கும் மரபுபற்றி ரகாமாகத் திரிகையில் மொழிமுதல் அகரத்துக்கு ஐகாரம்போலியாய்வர'பையிர்'என்று வந்தது. நான்காமடியில் ஆளி - அளிஎன்ற வடசொல்லின் நீட்டல். ஓதியென்பது பெண்மயிர் மலை யென்னும் பொருளிலும் வருமென்பதை "மலையும்பெண்பான்மயிரும் பூசையும், ஓதினவன்பெயரு மோதியென்றுரைப்பர்" என்ற நிகண்டுவினால் அறிக. இபம் - வடசொல். இபமும் கயமும் [யானைக்கன்றும்] மூழுக, கயம் கோளி பங்கயம் -குளத்தைவாழுமிடமாகக்கொண்ட தாமரை, மூழ்க - முழுவதும், குலைந்த என்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1]எங்குங்குலைந்தவால். [2]அருவரையூடிழிந்து. (சாஉ)

சாரு. ஆக மாலைய மாகவு ளாள்பொலி
வாக [1]மால யுளாரென லாகுமாண்
மேக மாலை [2]மிடைந்தன மேலெலா
மேக மாலை கிடந்தது கீழெலாம்.

(இ - ள்.) (அம்மலையில்), மேகம் மாலை - மேகங்களின் வரிசைகள், மேல் எலாம் - மேலிடம்முழுவதும், மிடைந்தன-நெருங்கியுள்ளவை, மேக - தங்கியிருக்க, கீழ்எலாம் - கீழிடங்களில், மாலை - மலர்மாலை, கிடந்தது—; (அதனால்), (அந்தமாலையானது),—ஆகம் ஆலயம் ஆக உளாள் பொலி-(திருமாலின்) திருமேனியைக் கோயிலாகக்கொண்ட இலக்குமி விளங்குகின்ற, வாக - அழகையுடைய, மால் - திருமால், உளார் - தங்கியிருக்கின்றனர்,எனல் - என்றுசொல்லுதல், ஆகும் - பொருந்தும்; (எ - று.)—ஆல்—ஈற்றசை.

தேற்றமுமாம்' மாலை என்பதில், ஐகாரம்-சாரியை. 'ஆகமாலயமாகவுளாள் பொலி, வாகமாலெனதாகிய தம்மலை' என்றும் பாடமுண்டு.

அம்மலையின் மேற்புறத்திலெல்லாம் மேகங்கள் வரிசைவரிசையாகப் படிந்திருக்கக் கீழ்ப்புறத்தில் மலர்மாலை கிடத்தலால், அம்மலை பலரால் அருச்சிக்கப்பட்ட மலர்மாலையைப் பூண்ட கருநிறத்திருமால்போல விளங்குமென்பதாம். நான்காமடியிலுள்ள மாலையென்பதற்கு - இலக்கணையாக மாலைக்காலத்துக்கதிரொளியெனக்கொண்டு, மேகமாலை திருமால்போலவும், அம் மேகமாலையினடிப்பகுதியிற்படும் மாலைக்கதிரொளி அத்திருமாலின் திருவரையிற் சாத்திய பீதாம்பரம்போலவுந் தோன்றுமெனக் கருத்து உரைத்தலு மொன்று. ஆலயம்=ஆலயம்: யமகத்திற்காக வந்தது. அழகு என்னும் பொருளுள்ள வாகுஎன்ற சொல் திரிந்து பெயரெச்ச விகுதியேற்று 'வாக' என வந்தது; இது - குறிப்புப்பெயரெச்சம். மேக - மேவு என்பதுவுகரங்கெட்டு, குச்சாரியையும் அகரவிகுதியும் பெற்றுவந்ததென்க. இனி, பொலிவுஆகஎனப்பிரித்து - பொலிவுதோன்ற வீற்றிருத்தலால் என்றும், நான்காமடியில் மேகமாலை என்பதற்கு - முத்தக்காசு என்னும் புல்வரிசை என்றும் கம் - சிரசில், மே - பொருந்திய, மாலை மலர்மாலை என்றும் உரைத்தாருமுளர். பி - ம்:— [1]மாலெனலாகிய தம்மலை. [2]மிடைந்தது கீழெலாம். (கூந)

கூச.—சேனையில்வந்த மாதரும் மைந்தரும் அங்கு விளையாடுதல்.

பொங்கு தேனுகர் பூமிஞி றாமென
வெங்கு மாதரு மைந்தரு மீண்டியத்
துங்க மால்வரைச் சூழல்க ளியாவையுந்
தங்கி நீங்கலர் தாமினி [1]தாடுவார்.

(இ - ள்.) பொங்கு - பெருகுகின்ற, தேன் நுகர் - தேனையுண்கின்ற, பூ - பூவில்மொய்க்கின்ற, மிஞிறு ஆம் என - வண்டுகள்போல, எங்கும் - எல்லாப்பக்கங்களிலும், மாதர்உம் - மகளிரும், மைந்தரும் - ஆடவரும், ஈண்டி - நெருங்கி, அ துங்கம் மால் வரை சூழல்கள் யாவைஉம் தங்கி - ஓங்கிய பெரிய அம்மலையின் சாரல்களிலெல்லாம் வசித்து, நீங்கலர் - (அம் மலையைவிட்டுப்)பிரியமனமில்லாதவராய், இனிது ஆடுவார் - இனிமையாக விளையாடலானார்கள்; (எ - று.)

வண்டுகள் மலர்களில்மொய்த்து ஆங்குள்ள தேனை நுகர்வதுபோல, மைந்தரும் மாதரும் அம்மலைச்சாரல்களிலெல்லாம் மொய்த்து, ஆங்காங்குள்ள வளங்களை நுகரலாயினரென்பதாம். பி - ம்:—[1]ஆடினார். (கூச)

கூரு.—சேன்றவர் அம்மலைவளத்தில் ஈடுபட்டிருத்தல்.

இறக்க மென்பதை யெண்ணில ரெண்ணுங்காற்
பிறக்கு மென்பதோர் பீழைய தாதலாற்
றுறக்க மெய்திய தூயவ ரேயென
மறக்க [1]கிற்றில ரன்னதன் மாண்பெலாம்.

(இ - ள்.) (அங்குத் தங்கிய ஆடவரும் மகளிரும்), 'இறக்கம் என்பதை - (அம்மலையைவிட்டு) இறங்குதலென்பதை, எண்ணுங்கால் - எண்ணினால், அது - அச்செயல், ஓர் - ஒப்பற்ற, பீழை - துன்பத்தை, பிறக்கும் - உண்டாக்கும்,' என்பது ஆதலால் - என்பதாகிய ஒரு காரணத்தால், எண்ணிலர் - (அம்மலையைவிட்டு இறங்குவதை மனத்தினாலும்) நினையாதவரானார்கள்; (அன்றியும் அவர்கள்),—துறக்கம் எய்திய தூயவர் என - விண்ணுலகவின்பத்தைநுகர்கின்ற பெரியவர்போல, அன்னதன் - அம்மலையின், மாண்பு எலாம் - வளங்களையெல்லாம், மறக்ககிற்றிலர் - மறந்திலர்; (எ - று.)

துறக்கம்புக்க பெரியோர் அதன்சிறப்பை யெண்ணுவதன்றி வேறெதையும் மனத்தினாலும் கருதாதவாறுபோல, அம்மலையைச்சேர்ந்த மகளிரும் ஆடவரும் அம்மலைவளத்தி லீடுபட்டிருந்தனரேயன்றி அதனை விட்டு அப்பாற்செல்ல நினைக்கவுமில்லை யென்பதாம். பி - ம்:—[1] கிற்கிலர். (௬௫)

௬௬.—அந்திக்கால வருணனை.

மஞ்சார் மலைவா ரணமொத்தது வானி னோடும்
வெஞ்சா யையுடைக்கதி ரங்கதன் மீது பாயும்
பஞ்சா னனமொத் ததுமற்றது பாய [1]வூறுஞ்
செஞ்சோ ரியெனப் பொலிவுற்றது செக்கர் வானம்.

(இ - ள்.) மஞ்சு ஆர் மலை - மேகந் தங்கப்பெற்ற அத்தமயமலையானது, வாரணம் ஒத்தது - யானையைப் போன்றிருந்தது; வானின் ஓடும் வெம் சாயை உடை கதிர் - ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற உஷ்ணமான கிரணங்களையுடைய சூரியன், அதன்மீது பாயும் - அந்தயானையின்மீது பாய்கின்ற, பஞ்சானனம் ஒத்தது - சிங்கத்தைப் போன்றிருந்தது; செக்கர் வானம் - செவ்வானமானது, அது பாய - அந்தச் சிங்கம் (யானையின்மீது) பாய்ந்ததனால், ஊறும் - சுரக்கின்ற, செஞ் சோரி என - செந்நிறமுள்ள இரத்தம் போல, பொலிவு உற்றது - விளங்கிற்று; (எ - று.)

அப்போது அந்திப்பொழுதாகவே, சூரியன் அத்தகிரியைச் சேரச் செவ்வானம் தோன்றியதை, ஒருயானையின்மீது சிங்கம்பாய்ந்ததனால் எங்கும் செந்நிறச்சோரி ஊறியதைப் போன்றதென வருணித்தார்; தற்குறிப்பேற்றவணி. 'மஞ்சார்மலை' எனப் பொதுப்படக் கூறினாரேனும் மேல்'செக்கர்வானம்' என வருவதனால், அத்தகிரியெனக் கொள்க. பஞ்சானநம்என்ற வடசொல் - பரந்தமுகமுள்ளதெனப் பொருள்படும். பி - ம்:—[1] ஏறும். (௬௬)

௬௭.—அவ்வந்திக்காலத்துச் சந்திரசைலத்தின்தோற்றம்.

திணியார் சினைமா மரமியா வையுஞ் செக்கர் பாயத்
தணியாத நறுந்தளி [1]ரீன்றன போன்று [2]தாழ
வணியா ரொளிவந்து நிரம்பலி னங்க மெங்கு
மணியா லியன்றம் மலையொத்த[3]தவ் வாசில் குன்றம்.

(இ - ள்.) திணி ஆர் சினை மா மரம் யாவைஉம் - வலிமை பொருந்திய கிளைகளையுடைய பெரியமரங்களெல்லாம், செக்கர் பாய - செவ்வானத்தி

ஞளி (தம்மீது) வீசுவதனுல், தணியாத நறு தளிர் ஈன்றன போன்று தாழ - குறையாத சிறந்ததளிர்களைப் புதிதாக வுண்டாக்கிறுற்போன்று தழைந்துநிற்க,—அங்கம் எங்கும் - அணி ஆர் ஒளி வந்து நிரம்பலின் - தன் னுடல்முழுவதும் அழகுபொருந்திய அந்தச் செந்நிறவொளி வந்து நிறைதலி ஞல், அ ஆசு இல் குன்றம்-குற்றமற்ற அந்தமலையானது, மணியால் இயன்ற மலை ஒத்தது - செந்நிறமுள்ள அரதனங்களாலிழைக்கப்பட்டுள்ள மலையைப் போன்றது; (எ - று)

செவ்வானம் வீசப்பெறுதலாற் செந்தளிர் புதிதாக வுண்டாகப்பெற் ருற் போன்ற மரங்கள் பலவும் கவியப்பெற்ற அந்தச் சந்திரசைலம், செந்நிறமணிகொண்டு இழைக்கப்பட்டதுபோல விளங்கிற்றென்பதாம்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. அளக்கலாகாவளவுமுதலிய மலைக்கு உரிய தன்மைகளிற் குறைவற்ற தென்பார் 'மையில்குன்றம்' என்றூர். இயன்றம்மலை - விரித்தல். பி - ம் :—[1]தந்தன. [2]தாழா. [3]அம்மையில். (கூஎ)

கூஅ.—சந்திரசைல வருணனை.

கண்ணுக் கினிதாகி விளங்கிய காட்சி யாலு
மெண்ணற் கரிதாகி யிலங்கு சிரங்க ளாலும்
வண்ணக கொழுஞ்[1]சந் தனஞ்சேர்ந்தது[2]மார் பணிந்த
வண்ணற் கரியோன் றனை யொத்தததவ் வாசில் குன்றம்.

(இ - ள்.) கண்ணுக்கு இனிது ஆகி விளங்கிய காட்சியால்உம் - கண் ணுக்குஅழகுடையதாகித்தோன்றுகின்ற தோற்றப்பொலிவாலும், எண்ண ற்கு அரிது ஆகி இலங்கு சிரங்களால்உம் - எண்ணுதற்குஅருமையாகுமாறு [ஆயிரக்கணக்காக] விளங்குகின்ற முடிகளையுடைமையாலும், வண்ணம் சேர்ந்தது கொழுஞ் சந்தனம் மார்பு அணிந்த அண்ணல் கரியோன்தனை - அழகு சேர்ந்த செழித்த சந்தனத்தை(த் தன்)மார்பிலே கொண்டபெருமை பெற்ற திருமாலை, அ ஆசு இல் குன்றம் - குற்றமற்ற அந்தமலை, ஒத்தது—.

கண்ணுக்கு இனிய காட்சியுடைமை, முடியாயிரமுடைமை, சந்தன த்தைமார்பிலேயணிகை என்ற இத்தன்மைகளால், அந்தச்சந்திரசைலமலை திருமாலையொத்த தென்றூர்; சிலேடைமூலமாகவந்த உவமையணி. மேலைப் பாடலில் சந்திரசைலத்தில் யாவரும்இரவில் தங்கினரென்று கூறுவதற்காக அம்மலையை இங்கு வருணிக்கின்றனர். மலைக்கு, சிரம் - சிகரம்: சந்தனம் - சந்தனமரம்: மார்பு-நடுவிடம். பி - ம்:—[1]சந்தனச்சேதகம். [2]மார்பணிந்து. ()

கூகூ.—மலையில் தங்குதல்.

ஊனும் முயிரு மனையா ரொருவர்க் கொருவர்
தேனும் மினிறுஞ் சிறுதும்பியும் பம்பி யார்ப்ப
வானை யினமும் பிடியும் மிகலாளி யேறு
மானுங் கலையும் மெனமால் வரைவந் திழிந்தார்.

(இ - ள்.) ஒருவர்க்கு ஒருவர் ஊனும் உயிர்உம் அனையார் - பரஸ்பரம் உடம்பும்உயிரும்போல்பவராய் நட்புக்கொண்ட ஆடவரும் மகளிரும், ஆனைஇனம்உம் பிடிஉம் இகல் ஆளி ஏறும் மான்உம் கலைஉம் என-ஆண்

யானையினமும் பெண்யானைகளும் வலிமையுள்ள ஆண்சிங்கங்களும் (பெண் சிங்கங்களும்)பெண்மான்களும் ஆண்மான்களும்போல,தேன்உம் மிஞிறுஉம் சிறு தும்பிஉம் பம்பி ஆர்ப்ப - தேன்முதலியவண்டின்சாதிகள் நெருங்கி யாரவாரிக்க, மால் வரை வந்து இழிந்தார் - பெரியமலையின் அடிப்புறத்தில் வந்துதங்கினார்கள்; (எ - று.)

ஒருவர்மீதொருவர் பேரன்புகொண்டு அங்குச்சேனையோடுவந்த ஆடவரும்மகளிரும், இராப்போது வருவதனால், ஆனைமுதலியனபோன்ற தோற்றத்தோடு தாம்பூண்ட மலர்மாலைகளிலுள்ள தேனைப் பருகுவதிலுள்ள நசையால் தேன்முதலியனநெருங்கி யாரவாரிக்க, அம்மலையினடிவாரத்தில்வந்து தங்கினரென்பதாம். யானை பிடிஎனவும், மான் கலைஎனவும் வந்ததற்கு ஏற்ப ஆளியேற்றைக்கூறினாரேனும் பெண்சிங்கத்தையும் கொள்க. (கூகூ)

## எ0.—இருள் பரத்தல்.

கால்வா னகத்[1]தே ருடை[2]வெய்யவன் காய்க டுங்கட்
கோன்மாய் கதிர்ப்புல் லுளைகொல்சினக் கோள ரிம்மா
மேல்பான் மலையிற் புகவீங்கிருள் வேறி ருந்த
மால்யானை யீட்டம் மெனவந்து பரந்த தன்றே.

(இ-ள்.) கால் வானகம் தேர் உடை - ஒற்றைச்சக்கரத்தைக்கொண்ட ஆகாயத்திலே (உலாவுகின்ற) தேரையுடைய, வெய்யவன்-சூரியனாகிய, காய் கடுங் கண் - காய்கின்ற கடுமையையுடைய [விழித்துப்பார்த்தலினாலேயே எரிக்கவல்ல கொடிய] கண்ணையும், கோல் மாய் கதிர் புல் உளை-(பிறரெறி கின்ற) அம்பு மறைந்துவிடுவதற்குஇடமான கிரணங்களாகிய புல்லிய புறமயிரையுமுடைய, [கால் வால் நகத்து ஏர்உடை - தாளில் வெண்ணிறமாகிய நகத்தின் அழகையுடைய,] கொல் சினம் கோள் அரி மா-கொல்லவல்ல சினத்தையும் மிடுக்கையுமுடைய சிங்கம், மேல் பால் மலையில் புக-மேற்குப் புறத்திலுள்ள அத்தகிரியிற் புகுந்ததனால்,—வீங்கு இருள்-மிக்கஇருளானது, வேறு இருந்த மால் யானை ஈட்டம் என - வேறாகப்பதுங்கியிருந்த பெரிய யானைகளின்கூட்டம்போல, வந்து பரந்தது - வந்து பரவிற்று; (எ - று).

சிங்கம் வேறுமலையிற் சென்றுவிட்டாற் பதுங்கியிருந்த யானைக்கூட்டம் பிறகு வெளிவருதல்போலச் சூரியன்அஸ்தமிக்கவே இருள்எங்கும் பரவிற்றென்பதாம். உருவகவணியும் உவமையணியும் சேர்ந்துவந்தன. வெய்யவனாகிய அரிமாஎனக. வெய்யவனை அரிமாவாக உருவகஞ் செய்ததற்கு ஏற்ப அவனுக்குஉரிய உஷ்ணத்தைக் காய்கடுங்கணாகவும், அவனது கதிர் களை உளைமயிராகவும் உருவகஞ்செய்தனர். 'கால்வானகத்தேருடை' என்ற தொடர்-சிலேடையுருவகம். [2]வெம்மையின் என்றபாடத்திற்கு, கோள்-சூரியனாகிய அரிமாவென்க. பி-ம்:-[1]தேரொடும். (எ0)

## எக.—தீப மேற்றப்படுதல்.

மந்தார முந்து மகரந்த மணங்கு லாவு
மந்தா ரரசர்க் கரசன்ற னனீக வெள்ள

நந்தா தொலிக்குந் நரலைப்பெரு வேலை யெல்லாஞ்
செந்தா மரைபூத் தெனத்தீப [1]மெடுத்த வன்றே.

(இ - ள்.) மந்தாரம் மூந்து மகரந்தம் மணம் குலாவும் - மந்தாரமலரின் முற்பட்டுவெளிவருகின்ற தேனின் மணம் எங்கும்வீசப்பெற்ற, அம் தார் - அழகிய மாலையையணிந்த, அரசர்க்கு அரசன்தன் - தசரதசக்கரவர்த்தியின், அனீகம் வெள்ளம் - வெள்ளமென்னுமளவினையுடைய சேனையாகிய, நந்தாது ஒலிக்கும் நரலை பெரு வேலை எல்லாம் - குறையாமலொலிக்கின்ற பேரொலியையுடைய பெருங்கடலினிடம் முழுதும், செந் தாமரை பூத்து என - செந்தாமரைமலர் பூத்தாற்போல, தீபம் எடுத்த - விளக்குக்கள் ஏற்றப்பட்டன; (எ - று.)—தன் - சாரியை. அன்றே - ஈற்றசை.

சேனை தங்கியிருந்த இடமுழுதும், தீபங்கள் ஏற்றப்பட்டதனாற் கடல் முழுதும் செந்தாமரைமலர் பூத்தாற்போல விளங்கின வென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. சம்பராசுரனை வென்று இந்திரனுடன் ஓராசனத்தில் வீற்றிருந்தவ னாதலால், தசரதசக்கரவர்த்தியை, 'மந்தாரமூந்து மகரந்த மணம்குலாவும் அந்தார் அரசர்க்கரசன்' என்றார். பி - ம்:—[1] எடுத்தது. (எக)

எஉ.—நட்சத்திரம் புடைசூழச் சந்திரன் விளங்குதல்.

[1]தண்ணாற் கடலிற் றளிசிந்து தரங்க நீங்கி
விண்ணிற் சுடர்வெண் மதிவந்தது மீன்கள் சூழ
வண்ணக் கதிர்வெண் [2]ணிலவீன்றென வாலு கத்தூ
டொண்ணித் திலமீன் றொளிர்வால்வளை யூர்வ தொத்தே.

(இ - ள்.) வண்ணம் கதிர் ஈன்ற வெண் நிலவு என - அழகிய கிரணங்களினால்தோன்றிய வெண்மைநிறமுள்ள நிலவோடொப்பாக(த் தோன்றும்), வாலுகத்துஊடு - வெண்மணலினிடையிலே, ஒள் நித்திலம் ஈன்று ஒளிர் - நல்லநிறமுள்ள முத்துக்களைப்பெற்று விளங்குகின்ற, வால் வளை - வெண்ணிறமுள்ள சங்கம், ஊர்வது ஒத்து - சஞ்சரிப்பதுபோன்று,—தண் நல் கடலில் - குளிர்ச்சிபொருந்திய அழகியகடலிலே, தளி சிந்து - திவலையை வெளிவீசுகின்ற, தரங்கம் - அலைகளினின்று, நீங்கி - வெளிப்பட்டு, சுடர் வெண் மதி - பிரகாசிக்கின்ற வெண்ணிறமுள்ள சந்திரன், மீன்கள் சூழ - நட்சத்திரங்கள் (தன்னைச்) சுற்றிலுமிருக்க, விண்ணில் வந்தது - ஆகாயத்திலே வந்துவிளங்கலாயிற்று; (எ - று.)

சமுத்திரத்தினின்று வெளிப்பட்டு ஆகாயத்தில் நிலவினடுவே நட்சத்திரங்கள் பிரகாசிக்கத் தோன்றுஞ் சந்திரன், சமுத்திரத்தினின்று வெளிப்பட்டு வெண்மணலிலே முத்துக்கள் சூழ்ந்துவிளங்க இடையேதோன்றும் வெண்ணிறச்சங்கத்தை யொத்த தென்பதாம்: தற்குறிப்பேற்றவணி. [1]தண்ணக்கடலென்ற பாடத்திற்கு-தண்ணங்கடலென்றதன்விகாரமெனக் கொண்டு, தண் அம் கடல்என்க. பி - ம்:—[2] நிலவின்றிரள்வாலுகத்தோடு.

எங.—அப்போது மகளிர்முகம் மகிழ்ச்சியால் விளங்குதல்.

மீனாறு வேலை யொருவெண்மதி யீனும் வேலை
நோனா ததனை நுவலற்கருங் கோடி வெள்ளம்

வானு டியரிற் பொலிமாதர் முகங்க ளென்னு
மானு மதியங் கண்மலர்ந்த[1]தனீக வேலை.

(இ - ள்.) மீன் நாறு வேலை - மச்சங்களின் புலால்நாற்றம் வீசப்பெற்ற சமுத்திரமானது, ஒரு வெண் மதி ஈனும் வேலை - ஒருவெண்ணிறமுள்ளசந்திரனைப் பெறுங் காலத்தில், அதனை நோனாது - அச்செயலைப் பொறுக்காமல், அனீகம் வேலை - சேனாசமுத்திரமானது, வான் நாடியரின் பொலி - தேவலோகத்துமாதர்போல விளங்குகின்ற, மாதர் - மகளிருடைய, முகங்கள் என்னும் - முகங்களென்றுசொல்லப்படுகின்ற, நுவலற்கு அரு கோடி வெள்ளம் ஆனா மதியங்கள் - அளவிட்டுச்சொல்லமுடியாத கோடிவெள்ளக்கணக்கான [மிகப்பலவான] (கலை) குறைதலில்லாத சந்திரன்களை, மலர்ந்தது - பெற்றது; (எ - று.)

மீன்கடல் ஒருசந்திரனை ஈன்றதுகண்டு பொறாமைகொண்டு, சேனாசமுத்திரம் மாதரார்முகமென்கின்ற பலசந்திரரைப் பெற்ற தென்பதாம். முடைக்கடற்குப் படைக்கடல் பின்வாங்கவில்லையென்க. அப்நுதியணியையங்கமாகக் கொண்டுவந்த ஏதுத்தற்குறிப்பேற்றவணி; இயற்கையில் இராப்போதில் மகளிரின்முகசந்திரன் விளங்குவதற்கு, கடல் ஒருசந்திரனையீன்றதுகண்டு சேனைக்கடல் பொறாமைகொண்டதாகக் காரணங் கற்பித்துக் கூறியது காண்க. அனீகவேலைக்குச் சாதாரணவேலையினும் மேன்மைதோன்றுதற்காக வேறுபாடுபடக் கூறியது, வேற்றுமையணி. பி - ம்:— [1]அனீகவெள்ளம். (எங)

## எச.—பலவகைச்சங்கீதவொலி.

மண்ணும் முழவின வொலிமங்கையர் பாட லோதை
பண்ணும் நரம்பிற் [1]பயிலாவிசைப் பாணி யோதை
கண்ணும் முடைவே யிசைகண்ணுள ராட றோறும்
விண்ணும் மருளும் படிவிம்மி [2]மயழுந்த வன்றே.

(இ - ள்.) கண்ணுளர் - நாடகமாடுவோரின், ஆடல் தோறும் - ஆடுமிடங்களிலெல்லாம்,—மண்ணும் முழவின் ஒலி - மார்ச்சனையமைந்த மத்தளத்தின் ஓசையும், மங்கையர் பாடல் ஓதை - மாதர்களின் பாடலோசையும், பண்ணும் நரம்பின் பயிலா இசை - பாடும்பண்ணுக்குஏற்ப வீக்கப்படுகின்ற நரம்பினது பயிலாத [அபூர்வமான] இசையும், பாணி ஓதை - கைகளினால் தாளமிடுவதனாலான ஓசையும், கண் உடை - கணுக்களைக்கொண்ட, வேய் - புல்லாங்குழலின், இசை - சங்கீதவோசையும், விண் உம் மருளும் படி - விண்ணுலகத்தவரும் திகைப்படையும்படி, விம்மி எழுந்த - மிகுதியாகத்தோன்றின; (எ - று.)—அல் றே - ஈற்றசை.

பண்ணல்-பாடகினைத்த பண்ணுக்கு இணை கிளை பகை நட்புஆன நரம்புகள் பெயருந் தன்மைமாத்திரை யறிந்துவீக்குதல்; இது-இசைக்கலைத்தொழிலெட்டனுள்ஒன்று. பாணி - பாட்டு மாம். கண்ணும், உம் - இசைநிறை. பி - ம்:—[1]பகையாவியல். [2]எழுந்தது. (எச)

எரு.—மாதர் அலங்காரம்.

*மணியின் [1]னணிநீக்கி வயங்கொளி முத்தம் வாங்கி
யணியும் முலையா ரகிலாவி புலர்த்து நல்லார்
தணியும் மதுமல் லிகைத்தாமம் வெறுத்து வாசந்
[2]திணியும் மிதழ்ப்பித் திகைக்[3]கத்திகை சேர்த்து வாரும்.

(இ - ள்.) மணியின் அணி நீக்கி ஒளி வயங்கு முத்தம் வாங்கி அணியும் முலையார் - இரத்தினங்களிழைத்த ஆபரணங்களைக் களைந்துவிட்டு ஒளி விளங்குகின்ற முத்தமாலையை(த்தமது தோழிமாரிடத்தினின்று) வாங்கி முலைமீது அணிபவரான, அகில் ஆவி புலர்த்தும் நல்லார் - அகிற்புகையால் (தொய்யில்முதலியவற்றை) உலர்த்தும் மகளிர்,—தணியும் மது மல்லிகை தாமம் வெறுத்து - குளிர்ந்த தேனையுடைய மல்லிகைமாலையை வெறுப்புக் கொண்டு களைந்துவிட்டு, வாசம் திணியும் இதழ் பித்திகை கத்திகை - நறுமணம் நெருங்கிய இதழையுடைய கருமுகைமாலையை, சேர்த்துவார் - அணிவாராயினர்; (எ - று.)—உம் - அசை. வினைமுற்றுவருவித்து உரைத்தலும், சேர்த்துவாரேஎன்றுபாடங் கொள்ளுதலுமாம்.

குளிர்ச்சிக்காக இரத்தினாபரணங்களைநீக்கி முத்தாகாரத்தை மார்பில் அணிந்து தனங்களில் எழுதியதொய்யில்முதலியவற்றை அகிற்புகையால் உலர்த்தும் மகளிர், மல்லிகைமாலையை நீக்கிக் கருமுகைமாலையை அணிவாரயினரென்க. கத்திகை-தொடைவிசேடம்; மலர்நெருங்கிய மார்பின்மாலையென்பர். பி - ம்:—[1] ஒளி. [2] தணியும். [3] பத்திகை. (எரு)

எசு.—அப்போது தோன்றிய பலவகையோதை.

*புதுக்கொண்ட வேழம் பிணிப்போர்புனை பாடலோதை
மதுக்கொண்ட மாந்தர் மடவாரின் மிழற்று மோதை
பொதுப்பெண்டி ரல்குற் புனைமேகலைப் பூச லோதை
கதக்கொண்ட யானை களிபாற்களிக் கின்ற வோதை.

(இ - ள்.) (அந்தமலையினிடத்தில்), புதுக்கொண்ட - புதிதாகப்பிடித்துக்கொண்டுவந்த, வேழம் - யானைகளை, பிணிப்போர் - கட்டுபவர், புனை - (தாம் பாடுமாறு இனிதாக) அமைத்த, பாடல் - பாடலின், ஓதை - ஓசையும்,—மது கொண்ட மாந்தர் - மதுவையுண்ட ஆடவர், மடவாரின் - (தமது) மனைவியரிடத்து, மிழற்றும் - (காமக்குறிப்புத்தோன்றுமாறு) பேசுகின்ற, ஓதை - பேச்சினோசையும்,—பொதுப்பெண்டிர் - வேசையர், அல்குல் - (தமது) இடையிலே, புனை - அலங்கரித்துக்கொண்டுள்ள, மேகலை-இடையணியின், பூசல் - காமப்போரிலேயுண்டாகின்ற, ஓதை - ஓசையும்,—கதம் கொண்ட யானை - மதவெறிகொண்ட யானைகள், களியால் - மதக்களிப்பினாலே, களிக்கின்ற - தம்முடல் தெரியாமற்செய்கின்ற, ஓதை - வீரிடுகின்ற ஓசையும்,—(எ - று.)—உள்ளன என வினைமுற்று வருவித்து உரைக்க.

எஎ.—கஞ்சுல் கழிந்த வகை.

உண்ணு வமுதன்ன கலைப்பொரு ளுள்ள துண்டும்
பெண்ணு ரமுதம் மனையார்மனத் தூடல் பேர்த்தும்

பண்ணார்ந்த பாடல்செவிமாந்திப் பயன்கொ ளாடல்
கண்ணா [1]னினிதுய்க் கவுங்கங்குல் கழிந்த தன்றே.

(இ - ள்.) உண்ணு - (வாயினால்) உண்ணப்படாத, அமுது அன்ன - அமிருதத்தையொத்த, கலை உள்ளது பொருள் - மன்மதசாஸ்திரத்திற் கூறியுள்ளவிஷயத்தை. உண்டும் - நேரேயனுபவித்து உணர்தலாலும்,—பெண் ஆர் அமுதம் அனையார் - பெண்களுள் கிடைத்தற்குஅரிய அமிருதத்தை யொத்த மாதர்களுடைய, மனத்து - நெஞ்சில்தோன்றிய, ஊடல் - புலவியை, பேர்த்தும் - போக்குவதனாலும்,—பண்ஆர்ந்த பாடல்-இசைக்குப் பொருந்தின பாடல்களை, செவி மாந்தி - காதினாற்கேட்டு, பயன் கொள் - (அப்பாடலின்) பொருளைக்கொண்ட, ஆடல் - நர்த்தனத்தை, கண்ணான் - (தமது) கண்களினால், இனிது துய்க்கவும் - நன்குஅனுபவித்தலாலும், கங்குல் - அன்றிரவு, கழிந்தது - (அச்சேனையிலிருந்த ஆடவர்க்கு) நீங்கியது.

அச்சேனையிலிருந்த ஆடவர்களுட்சிலர் மதனசாஸ்திரத்திற்கூறியபடி கரணம்முதலியவற்றால் இன்பத்தையனுபவித்தும், சிலர் தமது மனைவிமாரின்புலவியைப் போக்கியும், சிலர் இனிய சங்கீதங்களோடு நடக்கும் ஆடலைக் கேட்டுங் கண்டுங் களித்தும் அவ்விரவைக் கழித்தன ரென்பதாம். பாடலின்பயனைக்கொண்ட ஆடலாவது-பாடற்பொருளை அபிநயித்துக்காட்டும் அபிநயநாடகம். இனிதுதுய்க்க என்பது - இனிதுய்க்க என்று விகாரப்பட்டது. பி - ம்:—[1]நனி. (எஎ)

வரைக்காட்சிப்படலம் முற்றிற்று.

---

## கரு—ஆவது பூக்கோய்படலம்

தசரதன் தன்சேனையோடு சோணையாற்றைச்சேர்ந்து அவ்வாற்றங் கரையிலிருந்த சோலையிற் றங்கினனாக, உடன்சென்றமகளிர்முதலியோர் அச்சோலையிற் பூப்பறித்தலைக் கூறும் பகுதி.

க.—சூரியோதய வருணனை.

மீனுடை யெயிற்றுக் கங்குற் கனகனை வெகுண்டு வெய்ய
கானுடைக் [1]கதிர்க ளென்னு மாயிரங் கரங்க ளோச்சித்
தானுடை யுதய மென்னுந் தமனியத் [2]தறியி னின்று
மானுட மடங்க லென்னத் தோன்றினன் வயங்கு வெய்யோன்.

(இ - ள்.) மீன் உடை கங்குல் - (வெண்மைநிறங்கொண்ட) நட்சத்திரங்களையுடைய (கருநிறமுள்ள) இரவாகிய, எயிறு கனகனை - கோரதந்தங்களையுடைய இரணியனை, வெகுண்டு - கோபித்து,—கான் உடை வெய்ய கதிர்கள் என்னும்-தொகுதியைக்கொண்ட வெப்பமுள்ள கிரணங்களென்று சொல்லத்தக்க, ஆயிரம் கரங்கள் ஓச்சி - ஆயிரங்கைகளை வெளிக்காட்டிக் கொண்டு,—தான்உடை உதயம் என்னும்-தான்தோன்றுமிடமாகக் கொண்

ளுள்ள உதயகிரியென்கிற, தமனியம் தறியின்நின்று - பொற்றூணிலிருந்து மானுட மடங்கல் என்ன - நரசிங்கமூர்த்திபோல, வயங்கு வெய்யோன் - விளங்குகின்ற சூரியன், தோன்றினன்-உதயமானான்;(எ - று.)

நரசிங்கமூர்த்தி கோரதந்தத்தையுடைய இரணியகசிபுவென்னும் அசுரனைக் கொல்லுதற்காகக் பல கைகளை வெளிக்காட்டிக்கொண்டு பொற்றூணினின்று தோன்றியதுபோல, சூரியபகவான் நட்சத்திரங்களுடன் பிரகாசிக்கும் இருள்கொண்ட இரவை யொழிப்பதற்காகத் தனது ஆயிரங்கிரணங்களை வெளிநீட்டிக்கொண்டு உதயகிரியினின்று தோன்றின னென்க. உருவகவணியை யங்கமாகக்கொண்டுவந்த உவமையணி. அசுரரைக் கருநிறமுள்ளவராகக்கூறுதல் மரபாதலால், இருள்நிறைந்த கங்குலை அசுரனாகக் கொண்டார். அசுரனது வெண்ணிறக் கோரப்பல்லுக்கு, வெண்ணிறமீன்கள் உவமையாம். கான் அடர் தியாதலை "கானுடைக்கழனிச்செங்கெநற்கதிர்" என்றவிடத்துங் காண்க. பி - ம்:—[1]நகங்களென்னுமாயிரங் கதிர்கள். [2]தறியுணின்று. (க)

உ.—மன்னவன் சேனையுடன் சோணையாற்றை யடைதல்.

முறையெலா [1]முடித்த பின்னர் மன்னனு மூரித் தேர்மே
லிறையெலாம் வணங்கப் போனா னெழுந்துடன் சேனை வெள்ளங்
குறையெலாஞ் சோலை யாகிக் குழியெலாங் கழுநீ ராகித்
துறையெலாங் கமல மான சோணையா றடைந்த தன்றே.

(இ - ள்.) முறை எலாம் முடித்த பின்னர் - (தான் செய்யவேண்டிய) நித்தியக்கடனெல்லாஞ் செய்துமுடித்தபிறகு, மன்னன்உம் - தசரதசக்ரவர்த்தியும், மூரி தேர் மேல் - வலிய இரதத்தின்மீதேறி, இறைஎலாம் வணங்க - அரசரெல்லாரும் வணங்கிநிற்க, போனான் - புறப்பட்டான்; உடன் - அவனுடனே, எழுந்து - (தானும்) புறப்பட்டு, சேனை வெள்ளம் - சேனைத்தொகுதி,—குறை எலாம் - (தான் செல்லாத) மேட்டுத்திடர்நிலங்களிலெல்லாம், சோலைஆகி - சோலையையுடையதாகியும், குழி எலாம் - பள்ளம் வீழ்ந்த இடங்களிலெல்லாம், கழுநீர் ஆகி - செங்கழுநீர்க்கொடிகளையுடையதாகியும், துறைஎலாம் - நீர்த்துறைகளிலெல்லாம், கமலம் ஆன - தாமரைக்கொடியையுடையதுமான, சோணை ஆறு - சோணையென்னும்நதியை, அடைந்தது—;(எ - று.)

அரசன்பிரயாணப்பட்டபோது உடனெழுந்துசென்ற சேனைவெள்ளம், சோணையாற்றையடைந்ததென்றதனால், அரசனும் சோணையாற்றையடைந்தானென்பது, பெறப்படும். மன்னனும்என்ற உம்மை சேனைவெள்ளம்என்பதைத்தழுவுவதால், எதிரதுதழுவிய வெச்சம். குறை-மண்திடர். அன்றே - ஈற்றசை. பி - ம்:—[1]முடித்துமன்னர். (உ)

ங.—சூரியன்உச்சியையடைய, அரசர்முதலியோர் அங்கேயுள்ள சோலையைச் சேர்தல்.

அடைந்தவ ணிறுத்த பின்ன ரருக்கனு மும்பர்ச் [1]சார
மடந்தையர் குழாங்க ளோடு மன்னரு மைந்தர் தாமும்

குடைந்துவண் டுறையு மென்பூக் [2]கொய்தினி தாட மைதீர்
தடங்களு மடுவுஞ் சூழ்ந்த தண்ணறுஞ் சோலை சார்ந்தார்.

(இ - ள்.) அவண்-அந்தச்சோணையாற்றின் கரையிடத்தை, அடைந்து-சேர்ந்து, (சேனைவெள்ளமானது), இறுத்த பின்னர் - தங்கினபின்பு,—அருக்கன்உம் - சூரியனும், உம்பர் சார - ஆகாயத்தினுச்சியைச் சேர, மன்னர்உம் - அரசரும், மைந்தர்தாம்உம் - அரசகுமாரர்களும், மடந்தையர் குழாங்களோடுஉம்-(தம்தமது) மனைவிமாருடனே, வண்டு குடைந்து உறையும் மெல் பூ கொய்து இனிது ஆட - வண்டுகள் கிண்டிக்கொண்டு தங்குகின்ற மெல்லிய மலர்களைக்கொய்து நீரில் இனிதாக விளையாடுமாறு, மை தீர் தடங்கள்உம் மடுஉம் சூழ்ந்த தண் நறுஞ் சோலை - குற்றமற்ற தடாகங்களும் மடுக்களும் சுற்றியிருக்கப்பெற்ற குளிர்ந்த நன்மணமுள்ளசோலையை, சார்ந்தார்—; (எ - று.)

சூரியனுச்சியையடைந்த நேரத்தில் மன்னவரும் அரசகுமாரர்களும் மடந்தைமாரோடு மலர்கொய்துபுனல்விளையாடுமாறு நீர்நிலைகள் சூழ்ந்துள்ள சோலைகளைச் சேர்ந்தன ரென்பதாம். அருக்கனும், உம்மை - எதிரதுதழுவியது; மன்னரும் மைந்தர்தாமும் என்ற உம்மைகள்-எண்ணுப்பொருளோடு இறந்தது தழுவியன. மைந்தர் என்பது மன்னரும் என்பதையடுத்து நிற்றலால், மன்னர்குமாரரைக்குறித்தது. 'மைதீர்' என்பது, தடங்கள் மடு என்ற இரண்டனோடும் இயையும். தடங்கட்கும் மடுக்கட்கும் மைதீர்கை - ஆடவரும் மகளிரும் இறங்கியாடுதற்கு ஏற்றனவாயமைந்திருக்கை. பி - ம்:— [1]சேர்ந்தான். [2]கொய்துநீராட. (௩)

௪.—மாதர்கள் சோலையைச்சார்கையில், மயில்களும் அன்னங்களும் அப்பாற் போதல்.

திண்சிலை புருவ மாகச் சேயரிக் கருங்க ணம்பாற்
புண்சில செய்வ ரென்று போவன போன்ற மஞ்ஞை
[1]பண்சிலம் பளிக ளார்ப்ப நாணினாற் பறந்த போன்ற
ஒண்சிலம் [2]பார்ப்ப மாத ரொதுங்குதோ [3]றொதுங்கு மன்னம்.

(இ - ள்.) (மாதர்கள் சோலையிற்சென்றபோது அவர்களைக்கண்டு அப்பாற்சென்றனவான), மஞ்ஞை - மயில்கள், '(இந்த மடந்தைமார்), புருவம் திண் சிலை ஆக - (தமது) புருவங்கள் வலிய வில்லாக, சேய் அரி கருங் கண் அம்பால் - செவ்வரிபரந்த கரிய கண்களாகிய அம்புகளைக்கொண்டு, சில புண் செய்வர் - (நம்மிடத்துச்)சிலபுண்களை யுண்டாக்குவர்,' என்று-என்றுநினைத்து, போவன போன்ற-(அப்பாற்)செல்வனவற்றை யொத்திருந்தன; மாதர் - அந்தமங்கையர், ஒள் சிலம்பு ஆர்ப்ப - அழகிய சிலம்பென்னுங் காலணிகள் ஒலிசெய்ய, ஒதுங்கு தோறு - நடக்கும்போதெல்லாம், பண் சிலம்பு அளிகள் ஆர்ப்ப ஒதுங்கும் - இராகத்தையொலிக்கின்ற வண்டுகள் ஆரவாரித்து (மலர்களிலிருந்து) வெளிவரும்படி (மலருள்ள இடங்களிற்) பதுங்குவனவான, அன்னம் - அன்னப்பறவைகள், நாணினால் - (நடையழகில் அம்மடவார்க்குத் தோற்றதனாலுண்டான) வெட்கத்தினால், பறந்த போன்ற - பறந்து(அப்பாற் பதுங்கச்)செல்வதனை யொத்திருந்தன; (எ-று.)

மாதர் நெருங்குவதைக் கண்டு மயில்களும் அன்னப்பறவைகளும் அப்பாற்போதலை, மயில்கள்'தம்மைக் கண்ணம்புகளாற் புண்செய்வரோ?' என்ற அச்சத்தினாற்பறந்துபோவனவாகவும்,அன்னப்பறவைகள் அம்மாதரது நடையழகுக்குத் தாம் தோற்ற நாணத்தாற் பறந்து பதுங்கப் போவனவாகவும் காரணங் கற்பித்துக்கூறினர்; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. மயில்கள் சாயலால் மகளிரைச்சிறிது ஒத்தபோதிலும், அவர்களுடையகண்ணழகு தமது பீலிக்கண்களுக்கு இல்லையாதல்பற்றி அம்மயில்கள்வருந்துமென்பதை,'சில புருவமாகக் கண்ணம்பாற் புண்செய்வர்' என்று கருதியனவாகக் கூறினரென்னலாம். [1]பண்சிலம்பணி வாயார்ப்ப நாணினாற்பறந்த கிள்ளை என்ற பாடத்துக்கு—பண்கள் தொனிக்கின்ற (மாதருடைய) அழகிய வாயினாற் பேச(அப்பேச்சினினிமைக்குத் தோற்ற)கிளிகள் நாணினாற்பறந்துசென்றன என்று உரைத்து, ஈற்றடிக்கு—ஒள்ளிய [அழகிய] சிலம்பென்னுங் காலணி ஒலிக்க மாதர் நடக்கும்போதெல்லாம் (அவரிடத்துநின்று நடையைக் கற்குமாறு) அன்னப்பறவைகள் (பின்னே) நடந்து செல்லுமென்று உரைகூறுக. பி - ம்:—[2]அரற்ற. [3]ஒதுங்குகின்றார். (௬)

ரு.—மாதர்கள் தோழியரோடும் ஆடுதலை ஆடவர் நோக்குதல்.

செம்பொன்செய் சுருளுந் [1]தெய்வக் குழைகளுஞ் சேர்ந்து மின்னப்
பம்புதே னலம்ப [2]வொல்கிப் பண்ணையி னாட னோக்கிக்
கொம்பொடுங் கொடிய னாரைக் [3]குறித்தறிந் துணர்த றேற்றார்
வம்பவி [4]ழலங்கன் மார்பின் மைந்தரு மயங்கி நின்றார்.

(இ - ள்.) செம் பொன் செய் சுருள்உம் - செம்பொன்னினாற்செய்த ஓலையென்னுங் காதணிகளும், தெய்வம் குழைகள்உம் - தெய்வத்தன்மையமைந்த குழையென்னுங் காதணிகளும், சேர்ந்து மின்ன - ஒன்றுசேர்ந்து மின்னவும், பம்பு தேன் அலம்ப - (தாம் சூடிய மாலைகளில்) நிரம்பமொய்த்துள்ள வண்டுகள் ஒலிக்கவும், ஒல்கி - அசைந்து, பண்ணையின் - தோழியர் கூட்டத்தோடு, ஆடல் - (மகளிர்) ஆடுவதை, நோக்கி—, வம்பு அவிழ் அலங்கல் மார்பின் மைந்தர்உம் - மணம்விரிகின்ற மாலையையணிந்த மார்பையுடைய ஆடவரும், கொடிஅனாரை - பூங்கொடிபோன்ற அந்தமகளிரை, கொம்பொடுஉம் குறித்து அறிந்து உணர்தல் தேற்றார் - பூங்கொம்புகளோடு (வேறுபாட்டை) ஊகித்துத்தெரிந்துகொண்டு (இவை பூங்கொம்பு இவர் மகளிர் என்று) பிரித்தறிய முடியாதவராய், மயங்கினின்றார் - பிரமித்து நின்றார்கள்; (எ - று.)

செம்பொன்சுருளும் தெய்வக்குழைகளும் மின்னவும் தேன் ஒலிப்பவும் ஒல்கித் தோழியரோடு விளையாடும்மகளிர், சுருளும் குழைகளும் மின்னவும் தேனொலிப்பவும் காற்றினால் ஒல்கும் பூங்கொடிகள்போன் றிருத்தலால், பகுத்தறியுந்தன்மையுள்ள ஆடவராலும் 'இவை பூங்கொம்புகள், இவர்கள் மகளிர்' என்று பகுத்துணர்தல்முடியாதவாறாயிற்றென்பதாம். ஒப்புமைபற்றி வேறுபாடு அறியக்கூடாமையைக் கூறிய இது - மறைவணியாம்: வடமொழியிலே மீலிதாலங்காரமெனப்படும். மகளிர்காதணியைத்தெய்வக்குழையென்றது - தெய்வத்தாலாக்கப்பட்டதுபோன்ற தொழிற்சிறப்புஉடைமையால்.

பூங்கொம்புகட்குச் செம்பொன்செய் சுருள் - செம்பொன்னிறலியன்றன போல்விளங்குவனவாய் மலராதகுவிந்தநிலையி லிருக்குந் தளிர் குழை-தளிர்; தேன் - மலரிலுள்ள மதுவைப் பருகுவதற்கு மொய்ப்பன: இவை - பூங் கொம்பு மகளிரென்ற இரண்டிடத்தும் உள்ளன. பண்ணையின்-மகளிர்கூட் டம்போலஎனினுமாம். பி - ம்:— [1]தேயக். [2] ஓங்கி. [3] குறிப்புணர்ந்தறிதல். [4] அலங்கன்மாலை. (௬)

சூ.—குயில்கள் நாணி யொடுங்குதல்.

பாசிழைப் பரவை யல்குல் பண்டரு கிளவி தண்டேன்
மூசிய கூந்தன் மாதர் மொய்த்தபே ரமலை கேட்டுக்
கூசின வல்லபேச நாணின குயில்க ளெல்லாம்
வாசகம் வல்லார் முன்னின் றியாவர்வாய் திறக்க வல்லார்.

(இ - ள்.) குயில்கள் எல்லாம்—,—பசு இழை பரவை அல்குல் - பசும் பொன்னிறலியன்ற மணிகள்பதித்துச்செய்தஅணிகளைப் பூண்ட பரந் துள்ள அல்குலையும்,பண் தரு கிளவி - இராகமாக வெளிப்படுகின்ற பேச்சுக் களையும், தண் தேன் மூசிய கூந்தல் - குளிர்ச்சியாகிய (மலரிலுள்ள) தேன் பரவிய கூந்தலையுமுடைய, மாதர் - மகளிர், மொய்த்த - நெருங்கிவந்த, பேர் அமலை - பேரொலியை, கேட்டு—, கூசின அல்ல - அச்சங்கொண்டதனால் வாய்மூடினவல்ல; பேச நாணின-(அம்மகளிர்முன் பேசுதற்கு)வெட்கங்கொ ண்டு வாய்மூடியிருந்தன; வாசகம் வல்லார் முன் நின்று - இனிமையாகப் பேசவல்லவர்கள் முன்னிலையிலிருந்துகொண்டு, வாய் திறக்கவல்லார் யாவர்—? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

அச்சோலையில் இனிதுவாழ்ந்திருந்த குயில்கள், மாதர்கள் அங்கு நெரு ங்கிவந்தபோது உண்டான பேரொலிகேட்டு அஞ்சி வாய்மூடினவல்ல; அவர்கள் பேச்சினினிமைக்குமுன் தமதுகுரல் சிறந்துதோன்று என்றுநாணி யே வாய்மூடின என்பதாம். குயில்கள் நாணங்கொண்டே வாய்மூடின என்று முதல் மூன்றடிகளிற் கூறிய சிறப்புப்பொருளை, 'இனிதாகப்பேசவல்லார் முன்னே எவரும் வாய்திறவார்'என்று ஈற்றடியிற்கூறிய பொதுப்பொருளாற் சமர்த்தித்துக்கூறினர்;இவ்வாறு கூறினது - வேற்றுப்பொருள்வைப்பணி யாம். யாவரென்றவினா-எவருமில்லையென்ற எதிர்மறைப்பொருளைக் குறிக் கும். (சு)

எ.—மகளிர் மலர்பறித்துயாறு கொம்புகளைத் தாழ்த்த, அம்மலர்க் கொம்புகள் பூச்சொரிந்தவண்ணந்தாழ்தல்.

நஞ்சினுங் கொடிய நாட்ட [1]மமுதென நயந்து நோக்கிச்
செஞ்செவே கமலக் கையாற் றீண்டலு நீண்ட கொம்பர்
தஞ்சிலம் படியின் மென்பூச் சொரிந்துடன் றாழ்ந்த வென்றால்
வஞ்சிபோன் மருங்கு லார்மாட் டியாவரே [2]வணங்க லாதார்.

(இ - ள்.) (மகளிர்), நஞ்சின்உம் கொடிய நாட்டம்-விஷத்தைக்காட்டி லுங்கொடிய (தமது)கண்களைக்கொண்டு, அமுது என - (காண்பவர் இனி மைமாத்திரத்தால்) அமுதென்று கருதும்படி, நயந்து நோக்கி-விரும்பிப்பார்

த்து, கமலம் கையால்-(தமது)தாமரைமலர்போன்ற கையினால், செஞ்செவே நீண்டலும் - செவ்வனே [நன்றாகப்] பிடித்துத் தாழ்த்தியவுடனே, நீண்ட கொம்பர்-நீண்டுவளர்ந்த பூங்கொம்புகள்,தம் சிலம்பு அடியில் மெல் பூ சொரிந்து அம்மகளிருடைய சிலம்பணிந்த பாதங்களில் மென்மையான மலர்களைச்சொரிந்தவண்ணம், உடன் தாழ்ந்த-உடனே[தாமதமின்றித்]தாழ்ந்து நின்றன; என்றால்—,—வஞ்சி போல் மருங்குலார் மாட்டு-நீர்வஞ்சிக்கொடி போல் (நுண்ணிய) இடையையுடைய மகளிரிடத்து, வணங்கலாதார் - வணங்காமல்நிற்பவர், யாவர்ஏ - யாவர்தாம் ? [எவருமிலர்]; (எ - று.)

பார்க்கும்போது இனிமைதருவனவாயிருப்பினும் பிறகு மரணவேதனையை விளைக்குந்தன்மையன வாதலால், 'நஞ்சினும் கொடியநாட்டம் அமுதெனநோக்கி' எனப்பட்டது. மகளிர் தம்கையாற் பூங்கொம்புகளைத் தாழ்த்த, அவை மலர்சொரிந்தவண்ணம் தாழ்ந்தன வென்க. இங்ஙனம் அஃறிணைப்பொருளாகிய பூங்கொம்புகளே தாழ்ந்தன வென்றால்,உயர்திணைப் பொருளாகிய ஆடவர் அவர்களிடத்துத் தாழ்வ ரென்பது தானேபெறப் படுமென்றார். இங்ஙனம் ஒருபொருளைக் கைமுதிகநியாயமென்னுந் தண்டாபூபிகாநியாயத்தாற் பெறவைப்பது - தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. பி - ம்:—[1]அமுதினும். [2]வணங்கிலாதார், வளைகிலாதார். (எ)

அ.—இதுவும் அது.

அம்புயத் தணங்கி னன்னா ரம்மலர்க் கைகள் தீண்ட
வம்பிய லலங்கற் பங்கி வாளரி மருளுங் கோளார்
தம்புய வரைகள் வந்து தாழ்வன தளிர்த்த மென்பூங்
கொம்புகள் தாழு மென்றல் கூறலாந் தகைமைத் தொன்றோ.

(இ - ள்.) அம்புயத்து அணங்கின் அன்னார் - தாமரைமலரில்தங்குகின்ற தெய்வமகளாகிய இலக்குமியையொத்த அம்மகளிரின், அம் மலர் கைகள் தீண்ட-அழகிய தாமரைமலர்போன்ற கைகளால் தீண்டப்படுதலால் வம்பு இயல் அலங்கல் பங்கி வாள் அரி மருளும் கோளார் தம் - வாசனை பொருந்திய மலர்மாலையையணிந்த மயிர்முடியையும் வாள்போற்கொடிய சிங்கமும் மருட்சியடையும் வலிமையையுங்கொண்ட ஆடவருடைய, புயம் வரைகள் - மலைபோன்ற தோள்கள், வந்து—, தாழ்வன - வணங்கிநிற்பனவாயின; 'தளிர்த்த மெல் பூங் கொம்புகள் - தளிர்த்துள்ள மென்மையான மலர்களைக்கொண்ட பூங்கொம்புகள், தாழும்-(அம்மகளிர் கைப்படுவதனால்) தாழ்ந்துநிற்கும்', என்றல் - என்று பாராட்டுதல், கூறல் ஆம் தகைமைத்து ஒன்றுஓ-விசேடமாக எடுத்துக்கூறவேண்டியதொரு விஷயமோ? (எ - று.)

சிங்கம்போற் பெருவலிபடைத்த ஆடவரே மகளிர்கைதீண்டப்பெறுவதனால் வணங்கலாயின ரென்றால், மெல்லியபூங்கொம்புகள் தாழ்தல் விசேடமாகப் பாராட்டிச்சொல்லவேண்டியதொருபொருளோ? அல்ல என்பதாம். இதுவும் - தண்டாபூபிகாநியாயம்படக் கூறப்பட்டதனால், தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறணியே. கீழ்ச்செய்யுளில் ஓரறிவுயிராகியபூங்கொம்பும் மகளிர்கைப்பட்டதனால் வணங்குவனவாயினவென்றால் ஆறறிவுயிராகிய

மக்கள் வணங்குதல் முறையேயென்று கூறிய கவி, போராற்றல்படைத்த வீரரே மகளிர்கை தீண்ட வணங்கினரென்றால், மெல்லிய பூங்கொடிகள் வணங்கியமைபற்றிப் பாராட்டிச் சொல்லவேண்டுமோ? என்று மாற்றிக் கூறிய நயம் பாராட்டத்தக்கது. கோளார் - தன்மையுடையவரெனக் கூறி, உடல்வலிமை கம்பீரநடை போர்க்கஞ்சாமை முதலிய தன்மைகளில் வீரர்க்குச் சிங்கம் உவமை என்று கொள்ளவுமாம். ஓகாரம் - எதிர்மறை.

கூ.—வண்டுகள் மகளிரிடத்து மொய்த்தல்.

நதியினுங் குளத்தும் பூவா நளினங்கள் குவளை யோடு
மதிநுதல் வல்லி பூப்ப நோக்கிய [1]மழலைத் தும்பி
யதிசய மெய்திப் புக்கு வீழ்ந்தன வலைக்கப் போகா
புதியன கண்ட போழ்து விடுவரோ புதுமை பார்ப்பார்.

(இ - ள்.) நதியின்உம் - ஆறுகளிலும், குளத்துஉம் - குளங்களிலும், பூவா - மலராத, மதி நுதல் - சந்திரன்போன்ற முகமாகிய, நளினங்கள்- தாமரைமலர்களை, குவளையோடு - குவளைமலர்களுடனே, வல்லி - பூங் கொடிகள், பூப்ப - (தம்மிடத்து) மலரச்செய்துநிற்க, நோக்கிய - (அதனைக்)கண்ட, மழலை தும்பி - இன்னோசையையுடைய வண்டுகள், அதிசயம் எய்தி - ஆச்சரியத்தையடைந்து, புக்கு - புகுந்து, வீழ்ந்தன - மொய்த் தனவாய், அலைக்க போகா - (கைகளினால்) ஓட்டவும் போகாவாயின; புதுமை பார்ப்பார் - புதியபொருளை நாடிநிற்பவர், புதியன கண்ட போது - புதுமையுள்ளபொருளைக் கண்டபோது, விடுவர்ஓ—? (எ - று.)

நளினங்கள் என்றது - முகங்களையும், குவளையென்றது - கண்களையும், வல்லியென்றது - மகளிரையும் காட்டும். நதியினும் குளத்தும் பூவா நளினங்கள் என்றது - வேற்றுமையணியுடன் வந்த உருவகநவிற்சியணி. மதிநுதல்வல்லியென்றே இயைத்து - அர்த்தசந்திரன்போன்ற நெற்றியையுடைய பூங்கொடியென்று சாதாரணமான கொடியினும் வேற்றுமைதோன்றக் கூறியதாகவும் கொள்ளலாம். நீரில்தோன்றும் தாமரைமலரையும் கருங்குவளைமலரையும் பூங்கொடிகள் அபூர்வமாகப்பூத்தது கண்டு ஆச்சரியமடைந்த தும்பிகள் கைகளாலோச்சவும் அவற்றைவிட்டு விலகாமற் றங்கின என்ற சிறப்புப்பொருளை, ஈற்றடியிற்கூறிய பொதுப்பொருள் சமர்த்தித்து நின்றது—வேற்றுப்பொருள்வைப்பணியாம். "மழலை வரிவண்டுகளிசை பாடும்," "மழலைவண்டுழலும்" என்பவாதலால், 'மழலைத்தும்பி' என்றார்.

பி - ம்:—[1]மாலை. (கூ)

கய.—சிலபூங்கொம்புகள் வளைய, சில வளையாது நிற்றல்.

உலந்தரு[1]வயிரத் திண்டோ ளொழுகி[2]வா ளொளிகொண் மேனி
மலர்ந்தபூந் தொடையன் மாலை மைந்தர்பான் மயிலி னன்னார்
கலந்தவர் போல வொல்கி யொசிந்தன சிலகை வாரா
புலந்தவர் [3]போல நின்று வளைகில பூத்த கொம்பர்.

(இ - ள்.) உலம் தரு வயிரம் திண் தோள் ஒழுகி - திரண்டகல்லையொத்து உறுதிபொருந்திய திண்ணிய தோள்கள் ஒழுங்காக அமையப்பெற்று, வாள் ஒளி கொள் - மிக்கவொளியைக்கொண்ட, மேனி - உடம்பையுடைய, மலர்ந்த பூ தொடையல் மாலை மைந்தர்பால் - மலர்ந்த மலர்கொண்டுதொடுக்கப்பெற்ற மாலையையணிந்த ஆடவரிடத்தில், மயிலின் அன்னார் கலந்தவர்போல - கலந்தவரான மயிலையொத்த சாயலையுடைய மகளிர்போல, சில - சில கொடிகள், ஒல்கி ஒசிந்தன - மெலிந்து துவண்டன; (சில) பூத்த கொம்பர் - பூத்துள்ள சிலபூங்கொம்புகள், கை வாரா - கைக்குஎட்டாதனவாகி[வசப்படாமல்], புலந்தவர் போல நின்று வளைந்தில - ஊடல்கொண்டவர்போல வளையாமல் நேராகவே நின்றன; (எ - று.)

கைக்கெட்டினகொம்புகள் வளைந்து நிற்க, கைக்கெட்டாதவை வளையாமல் நேராகவே நின்றனவெனக். அங்ஙனம் கைக்கு எட்டிய பூங்கொடிகட்கு ஆடவரோடு புணர்ந்த மகளிரையும், கைக்கெட்டாமல் நின்ற பூங்கொடிகட்கு ஆடவர்க்கு வசப்படாமற் புலவிகொண்டு மிறைத்து நிற்கும் மகளிரையும் உவமைகூறினர்: உவமையணி. பி - ம்.—:[1]வயிரத்தோண்மேலொழுக. [2]வார்நறையின் மல்கும், வாரொளிகொண்மேனி. [3]போலநின்றவுளசில. (௧0)

கக.—மகளிர் பூங்கோடிகளை யலங்கரித்தல்.

பூவெலாங் கொய்து கொள்ளப் [1]பொலிவில துவள நோக்கி
[2]யாவையாங் கணவர் கண்ணுக் கழகில வினையென் றெண்ணிக்
கோவையும் வடமு நாணுங் குழைகளுங் குழையப் பூட்டிப்
பாவையர் பனிமென் கொம்பை நோக்கினர் பரிந்து நிற்பார்.

(இ - ள்.) (மலர்நிறைந்தபோது அழகுபொருந்தியிருந்த பூங்கொம்புகள்),—பூ எலாம் கொய்து கொள்ள - (தாங்கள் அவற்றிலுள்ள) மலர்களையெல்லாம் பறித்துக்கொண்டதனால், பொலிவு இல துவள - (மலர்களின்றிப்) பொலிவிழந்து துவண்டு தோன்றுவதை, நோக்கி - பார்த்து,— பாவையர் - சித்திரப்பதுமைபோன்ற மகளிர், 'இவை - இந்தப்பூங்கொம்புகள், கணவர் கண்ணுக்கு - கணவர்களுடைய பார்வைக்கு, யாவைஆம் - எவ்வாறுதோன்றும்? அழகுஇல - அழகில்லாதனவாகவே (தோன்றும்)', என்று எண்ணி-என்றுநினைத்து,—(தாம்பூண்டிருந்த), கோவைஉம் - மணிமாலையையும், வடம்உம் - முத்துவடத்தையும், நாண்உம் - அரைவடத்தையும், குழைகள்உம் - காதணிகளையும், குழைய - (அவை) துவளும்படி, பூட்டி - அணிந்து, (பிறகு), பனி மென் கொம்பை - குளிர்ந்த மெல்லிய அந்தப்பூங்கொம்பை, பரிந்து நோக்கினர் நிற்பார் - விரும்பிப்பார்ப்பவராய் நிற்கலானார்கள்; (எ - று.)

'மலர்கள் பறிக்கப்பெற்றதனால் வாடித்தோன்றுகின்ற பூங்கொம்புகள் தம் கணவர்கண்ணுக்கு இனியனவாய்த் தோன்றாவே' என்று மகளிர் தம் அணிகலங்களால் அலங்கரித்து அவற்றை மகிழ்ந்து நோக்கினரென்க. தாம்

அழகு இழப்பதையும் நோக்காது கணவர்களிப்பையே முக்கியமாகக்கருதி அலங்கரித்தன ரென்றதனுல், தம்நலங்கருதாத தகையர் அம்மகளி ரென்பதும், கணவர்கண்ணுக்கு இனிமையாகத்தோன்றுவதே தமது கடமையென்று கொண்டுள்ளாரென்பதும் பெறப்படும். பி-ம்:—[1]பொலிவுள. [2]யாவதாம். ()

கஉ.—மகளிர்கூந்தலில் வண்டுகள் மொய்த்தல்.

துறும்போதி னிற்றேன் றுவைத்து[1]ண்டுழ றும்பி [2]யீட்ட
நறுங்கோதை யோடு நனைசின்னமு நீத்த நல்லார்
வெறுங்கூந் தன்மொய்க்கின் றனவேண்டல வேண்டு போது
முறும்போக மேலோர் நலனுள்வழி யுண்ப ரன்றே.

(இ - ள்.) துறும் போதினில் - அடர்ந்துள்ள மலர்களில், துவைத்து - மிதித்து, தேன் உண்டு உழல் - தேனையுட்கொண்டு சஞ்சரிக்கின்ற, தும்பி ஈட்டம் - வண்டுகளின்கூட்டம்,—நறு கோதையோடு நனை சின்னம் உம் நீத்த நல்லார் - நறுமணமுள்ளமலர்மாலையோடு தேனையுடைய விடுதிப் பூக்களையும் நீக்கிய மாதர்களுடைய, வெறு கூந்தல் - வெறுமையாகிய கூந்தலில், மொய்க்கின்றன - மொய்ப்பனவாயின; வேண்டுபோதுஉம் வேண்டல - (தாம்) இதுவரையும் விரும்பி (நுகர்ந்து) வந்த மலர்களையும் விரும்பினவல்ல; மேலோர் - பெரியோர், நலன் உள் வழி - நல்லகுணமுண்டான இடத்தில், உறும் போகம் - அடையத்தக்க இன்பங்களையெல்லாம், உண்பர் அன்றே - அநுபவிப்பார்களல்லவோ? (எ - று.)

முன்பு பூங்கொம்பின் மலர்களில் மொய்த்து மதுவை நுகர்ந்திருந்த வண்டுகளின் கூட்டம் அங்கு மாதரார் வந்து மலர்களைப்பறித்தபோது அம்மலர்களைவிட்டு அம்மகளிரின் வெறுங்கூந்தலில்தானே மொய்ப்பனவாயின வென்க. மகளிரின்கூந்தல் மலர்முதலியனவற்றை நீத்து இருந்தும் அங்கே தும்பிகள் மொய்த்தற்குக் காரணம் அக்கூந்தலில் இயற்கையாகவே மணமிருத்தலா லென்க. 'மகளிரின் வெறுங்கூந்தலில் வண்டுகள் மொய்த்தன' என்ற சிறப்புப்பொருளை 'நலனுள்ளவிடத்துப் போகத்தை நுகர்தல் மேலோரியல்பு' என்ற ஈற்றடியிற் கூறிய பொதுப்பொருள் சமர்த்தித்து நின்றது; வேற்றுப்பொருள்வைப்பணி. சின்னம் - விடுபூ. பி - ம்:—[1]உண்டுறு. [2]எல்லாம். (கஉ)

கங.—ஒரு மடந்தையின் புலவி.

மெய்ப்போதி னங்கைக் கணியன்னவள் [1]வெண்ப ளிங்கிற்
பொய்ப்போது தாங்கிப் பொலிகின்றதன் மேனி நோக்கி
யிப்பாவை யெங்கோற் குயிரன்னவ ளென்ன வுன்னிக்
கைப்போதி னேடு நெடுங்கண்பனி [2]கார நின்ருள்.

(இ - ள்.) மெய்-(தனது) உடம்பினழகினுல், போதில் நங்கைக்கு-மலர்மகளான இலக்குமிக்கு,அணி அன்னவள்-ஆபரணம்போன்றவளானஒருத்தி, வெண் பளிங்கில் போது தாங்கி பொலிகின்ற தன் பொய் மேனி-வெண்மைநிறமுள்ள பளிக்குப்பாறையிலே (கையிலே) மலர்தாங்கியவண்ணம் விளங்கு

இன்ற தன்னுடையபிரதிபிம்பமானஉடலை,நோக்கி - பார்த்து,—'இ பாவை - இந்தப்பெண், எம் கோற்கு உயிர் அன்னவள் - எனதுகணவனுக்கு உயிர் போல அன்பிற்கிடனானவள்', என்ன உன்னி - என்றுநினைத்து, நெடு கண் பனி கார - (தனது) நீண்டகண்களிலிருந்து நீர் பெருக, கை போதினோடு - கையில்தாங்கியமலருடனே,நின்றாள்—; (எ - று.)

பளிங்கில் ஒருமடந்தையின் மேனி தோன்றுவதையும் அதனைத் தன்மனைவியினுண்மையுருவமென்றே கருதித் தன்கணவன் அன்புசெய்த லையும் கண்கூடாகக்கண்ட ஒருமாது, தன்கணவன் வேற்றுமாதினிடத்துக் காதல்கொண்டானென்று மாறுகக்கருதியதனால், துயரடைந்து கண்ணீ ருகுக்கலாயினள்: இப்பொருளில், மயக்கவணி தொனித்தல் காண்க. இனி, தன்மேனிநிழலைக்கண்டு இங்கே வேறொருமாது இருக்கின்றா ளென்று மாறுகக் கருதிய ஒருமாது, 'இவளை நம்கணவன்கண்டால் நம்மைவிட்டு இம்மங்கையையே யாதரிப்பனே! இவள் அழகு நமக்கு இல்லையே!' என்று எண்ணி அழுதன ளெனக் கருத்துக்கூறுதலுமொன்று. பொய்மேனி என இயையும். கார=கால: இது, திசைச்சொலென்கின்றனர். பி - ம்:—[1]மென் பளிங்கில். [2]சோரநின்றாள். (க௬)

கஎ.—மற்றொரு மடந்தையின் வருத்தம்.

கோளுண்ட திங்கண் முகத்தாளொரு [1]கொம்பொர் மன்னன்
றோளுண்ட மாலை யொருதோகையைச் [2]சூட்ட நோக்கித்
தாளுண்ட [3]கச்சிற் றிடையுண்ட முலைக்கண்மீது
வாளுண்ட [4]கண்ணீர் மழையுண்டென வார நின்றாள்.

(இ - ள்.) கோள் உண்ட திங்கள் முகத்தாள் ஒரு கொம்பு - மேகத் தாற்சூழப்பட்ட சந்திரனையொத்த முகத்தையுடையவளான ஒப்பற்றபூங் கொம்புபோன்ற ஒருத்தி, ஓர் மன்னன் தோள் உண்ட மாலை ஒருதோகையை சூட்டல் நோக்கி - ஓரரசன் தன்தோளிலணிந்துள்ள மாலையைக் கழற்றி மயில்போலுஞ்சாயலையுடைய ஒருத்திக்கு [தன்மனைவிக்கு] அணிவதைக் கண்டு, தாள் உண்ட கச்சு இற்று இடை உண்ட முலைக்கண்மீது - முடி யமைந்த கச்சு அற்று இடையையும் முறியச்செய்த முலைக்கண்களில், வாள் உண்ட கண் நீர் மழை உண்டு என வார - வாளாயுதத்தையொத்த கண்களி லிருந்து நீர் மழைபோலப் பெருக, நின்றாள்—; (எ - று.)

ஒருபுருஷன் தன்மனைவிக்கு மாலைசூட்டியதுகண்டு தன் கணவன் தன க்கு அவ்வாறு செய்யாமைகருதிப் புலம்பின ளென்க. இனி, ஒரு மன்னவன் தன்மனைவியரிருவருள் ஒருத்திக்கு மாலைசூட்ட மற்றொருத்தி தன்கணவன் தன்னை அவ்வாறு செய்யாமல் உபேக்ஷித்ததுபற்றிப் பொறாது வருந்தினா ளென்னலுமாம். கூந்தல்சுற்றியிருக்கப் பெற்ற முகத்துக்கு, முகில்சூழ்ந் துள்ள மதியுவமை. கோள் முகிலென்னும் பொருளதாதலை "கோளொடு குளிர்மதி வந்துவீழ்ந்தென" என்ற சிந்தாமணிக்கு நச்சினார்க்கினியர் கூறிய உரையாலு மறிக. கோள்உண்டதிங்கள் என்னுந் தொடர்க்கு - இரா குவினால் ஒருபுறம்பற்றப்பட்ட திங்கள் என்று உரைகூறி, மயிர்முடியை

யொருபுறங்கொண்ட முகத்திற்கு-இராகுவினுற்பற்றப்பட்ட முகம் உவமை யென்னலுமாம். கோள் - ஒளியுமாம். வாளுண்ட, உண்ட - உவமஉருபு. பி - ம்:—[1] கொம்பு.[2] கச்சாற்றகையுண்ட.[3] மூலைக்கணுவி.[4] கண்ணின். (கச)

கரு—ஒருத்தி கணவன் மறைந்துநிற்க அலமருதல்.

மயில்போல் வருவாண் மனங்காணிய காதன் மன்னன்
செயிர்தீர் மலர்க்காவி னோர்மாதவிச் சூழல் சேரப்
பயில்வா ளிறைபண்டு பிரிந்தறி யாள்ப தைத்தா
ளுயிர்நாடி யொல்கும் முடல்போ லலமந் துழன்றாள்.

(இ - ள்.) காதல் மன்னன் - (தன் மனைவியினிடத்து) ஆசையுள்ள ஓரரசன், மயில் போல் வருவாள் மனம் காணிய - மயில்போன்றசாயலோடு வருகின்ற தன்மனைவியின் மனநிலையை ஆராய்ந்தறியுமாறு, செயிர் தீர் மலர் காவின் ஓர் மாதவி சூழல் சேர - குற்றமற்ற அந்தப்பூஞ்சோலையி லுள்ள ஒரு குருக்கத்திபடர்ந்தபந்தலிற்போய்ச் சேர்ந்திருக்க,—பயில்வாள்- (தன்கணவனோடு இடைவிடாது) பழகுபவளும், பண்டு இறை பிரிந்து அறி யாள் - இதற்கு முன்பு (தன்) கணவனை ஒருபோதும் பிரிந்திராதவளுமான அவனுடைய மனைவி, பதைத்தாள் - துடித்து, உயிர் நாடி ஒல்கும் உடல் போல் அலமந்து உழன்றாள் - (தனக்குஉரிய) உயிரைத் தேடிக்கொண்டு தளரும் உடம்புபோல மனஞ்சுழன்று திரியலானாள்; (எ - று.)

இடைவிடாமல் மனைவியோடு இருந்த ஒரு மன்னவன் 'தான் பிரிந்தால் தன்மனைவி எவ்வாறு இருப்பள்?'என்பதை யறியுமாறு ஒருமாதவிப் பந்தலில் மறைந்திருந்தனனாக, இதற்குமுன்பு ஒரு போதும் கணவனைப் பிரியாத அவள் அப்போது பிரிந்த கணவனைத் தேடுபவளாய் உழன்றன ளென்க. அவ்வாறு திரிகின்றவட்கு உயிரை நாடித் திரியும் உடலை உவமைகூறினார்: இவ்வுவமையால், அந்தமாது தன்கணவனை உயிர்போலப் பாவித்திருந்தா ளென்பது, பெறப்படும். உயர்நாடியொல்கும் உடல்—இல்பொருளுவமை. சூழல் - கொடிவீடு: வடமொழியில் 'லதாக்ருஹம்' எனப்படும். (கரு)

கசு.—ஊடிய ஒருத்தி தனக்கு எட்டாதமலரைப் பறித்துத்தருமாறு தூயிலை வேண்டுதல்.

மைதாழ் கருங்கண்கள் சிவப்புற வந்து தோன்ற
நெய்தாவும் வேலா னொடுநெஞ்சு புலந்து நின்றா
ளெய்தாது நின்ற மலர்நோக்கி யெனக்கி [1]தீண்டக்
கொய்தீதி யென்றோர் குயிலைக்கரங் கூப்பு கின்றாள்.

(இ - ள்.) மை தாழ் கருங் கண்கள் - மைதங்கிய கரிய கண்களில், சிவப்பு - செந்நிறம், உற வந்து தோன்ற - மிகவும் வந்து தோன்றும்படி, நெய் தாவும் வேலானொடு நெஞ்சு புலந்து நின்றாள் - நெய்பூசப்பெற்ற வேலாயுதத்தையுடைய கணவனோடு மனத்திற் பிணக்குக்கொண்டிருந்த ஒருத்தி,—எய்தாது நின்ற மலர் நோக்கி - (தன் கைக்கு) எட்டாமலிருந்த மலர்களைப்பார்த்து, (அம்மலர்மீதுஉள்ள விருப்பத்தினால்), 'இது எனக்கு

ஈண்ட கொய்து ஈதி-இம்மலர் எனக்குக் கிடைக்குமாறுபறித்துத்தருவாய்', என்று—,ஓர் குயிலை - குயிலென்னும் ஒருபறவையை, கரம் கூப்புகின்றாள் - கைகூப்பித்தொழுவாளானாள்;(எ - று.)

தன்கணவனோடு பிணங்கியதனால் மலரைப்பறித்துத்தருமாறு அவனைக் கேளாமல் குயிலைக் கேட்டனளென்க. தோன்றப் புலந்து என இயையும். பி - ம்:—[1] ஈண்டு (கசு)

கஎ.—ஒரு மாதின் ஊடல்

*செம்மாந்த தெங்கி னிளநீரையொர் செம்ம னோக்கி
யம்மாவிவை மங்கையர் [1]கொங்கையி னாய வென்ன
வெம்மாதர் கொங்கைக் கிவையொப்பன வென்று ரேழை
விம்மா வெதும்பா வெயரா முகம் வெய்து யிர்த்தாள்.

(இ - ள்.) செம்மாந்த - ஓங்கிவளர்ந்த,தெங்கின்-தென்னமரத்திலுள்ள, இளநீரை - இளநீர்க்காயை, ஓர் செம்மல் - ஒருதலைவன், நோக்கி - பார்த்து, 'அம்மா - ஆச்சரியம்! இவை - இவ்விளநீர்கள், மங்கையர் கொங்கையின் ஆய - மகளிரின் தனங்கள்போலத் தோன்றியுள்ளன', என்ன-என்றுகூற,— (அதுகேட்ட), ஓர் ஏழை - ஒருபேதைமைக்குணமுடைய பெண்ணாகிய அவன் மனைவி, 'எ மாதர் கொங்கைக்கு இவை ஒப்பன - இவ்விளநீர்கள் எந்த மடவாள் கொங்கைக்கு ஒப்பாகுவன?' என்று - என்றுசொல்லி, வெதும்பா - மனங்கொதித்து, விம்மா - அழுது, முகம் வெயரா - முகம் வெயர்த்து, வெய்து உயிர்த்தாள் - வெப்பமாக மூச்சுவிட்டாள்; (எ - று.)

'மங்கையர் கொங்கை' எனப் பன்மையாகக் கூறியதனால் தனது கணவன் தன்னிடத்தேயன்றிப் பிறமங்கையரிடத்தும் காதல்கொண்டுள்ளவனென்று கருதியதனால், அவன்மனைவியாகிய மடந்தை வருந்தினளென்க. கணவன் பொதுப்படக்கூறியதைப் பலமாதரைக் கண்டவனென்று கருதி மனைவி புலந்தாள். பி - ம்:—[1] கொங்கைகளாகும். (கஎ)

கஅ.—மற்றொருத்தியின் புலவி.

போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்கொ டிண்டோண்
மாரன் னனையான் மலர்கொய் திருந் தானை வந்தோர்
காரன்ன கூந்தற் குயிலன்னவள் கண்பு தைப்ப
வாரென்ன லோடும் மனலென்ன [1]வெதும்பு கின்றாள்.

(இ - ள்.) போர் என்ன வீங்கும் பொருப்பு அன்ன பொலம் கொள் திண் தோள் - போரென்றுசொன்னமாத்திரத்திற் பூரிக்கின்றனவாய் மலையையொத்தனவான அழகைக்கொண்ட வலிய தோள்களையுடையவனும்; மாரன் அனையான் - மன்மதனையொத்தவனுமான, மலர் கொய்து இருந்தானை - புஷ்பங்களைப்பறித்துக்கொண்டிருந்த (தன்) கணவனை, ஓர் கார் அன்ன கூந்தல் குயில் அன்னவள் - மழையையொத்த கூந்தலையுடையவளாய்க் குயிலையொத்த குரலையுடையவளான ஒருத்தி, வந்து - நெருங்கி வந்து, கண் புதைப்ப - கண்ணை மூடினளாக, (அப்போதுஅவன்)

ஆர் என்னலோடும்-(என்னைக் கண்ணைமூடியவர்) யாவர்? என்று வினவிய வுடனே, அனல் என்ன வெதும்புகின்றாள் - நெருப்புப்போல வெப்பமாக மூச்சுவிடுபவளானாள்; (எ - று.)

கண்ணைமூடியவுடனே 'தன் கண்ணைமூடியவள் இன்னாள்' என்று திண்ணமாகத் தெரிந்துகொள்ளவேண்டிய கணவன் 'ஆர்?' என்று வினவியதனால், 'இவனிடத்து நம்மைப்போல விளையாடுதற்குஉரிய மகளிர் பலர் இருக்கின்றனர்போலும்' என்று கருதி, புலந்து வெய்துயிர்த்தன ளென்க. பி - ம்:—[1]உயிர்த்தயிர்த்தாள். (சஅ)

சகூ.—ஒரு ஆடவனதுசெயல்.

ஊற்றார் நறைநாண் மலர்மாத ரொருங்கு வாசச்
சேற்றால் விளையாத செந்தாமரைக் கைக ணீட்டி
[1]யேற்றார்க் குதவா னிடையேந்தின னின்றொ ழிந்தான்
மாற்றா னுதவான் [2]கடுவச்சையன் போலொர் மன்னன்

(இ - ள்.) ஓர் மன்னன் - ஓரரசன்,—ஒருங்கு-ஒருசேர, சேற்றால் விளையாத வாசம் செந் தாமரை கைகள் நீட்டி - சேற்றில்தோன்றாதனவான வாசனையுள்ள செந்தாமரைமலர்களையொத்த கைகளை நீட்டியவண்ணம், மாதர்- (தனது) மனைவிமாராகிய, ஏற்றார்க்கு - (மலர்களைவேணுமென்று), கேட்டவர்க்கு, நறை ஊற்று ஆர் நாள் மலர் - தேனூற்றுப்பொருந்திய அன்றுமலர்ந்த மலர்களை, உதவான் - கொடாமல், இடைஏந்தினன் - (அவ்விருவர்க்கும்) நடுவே (தன்கையில்தானே) தாங்கினவனாகி, மாற்றான் உதவான் கடு வச்சையன் போல் - (தன்னையடைந்து இரந்தவர்க்குக் கொடுக்க) மறுக்காமலுங் கொடாமலும் இருக்கின்ற கொடிய உலோபியைப்போல, நின்றொழிந்தான் - நின்றிட்டான்; (எ - று.)

'மாதரொருங்கு' என்றமையால், 'இருவர் மாதர்' எனப்பட்டது. தனது மனைவியர் இருவரும் ஒருசேரக் கேட்டதனால், தலைவன், தான் பறித்த மலர்களைச் சமமாகப்பகுத்து அவ்விருவர்க்குந் தந்தாலும் 'நமதுகணவன் உன்னிடத்துச் சிறப்பாகக் காதல்வைத்துள்ளேனென்று இதுவரை கூறிவந்தது பொய்யே' என்றுகூறி இருவரும் புலப்பரேயென்று கருதியதனாலும், தாராமற்போய்விட்டாலும் 'நம்மை இவன் அவமதித்தானென்று இருவரும் ஊடுவரே' என்று கருதியதனாலும் கொடுக்கவும் மறுக்கவும் மாட்டாமல் அவர்களிடையே வாளாநின்றான்: அவ்வாறுநின்ற கணவனுக்குக் கொடைப் பயனைக் கொள்ளவேணுமென்று ஒருசார்உள்ள எண்ணத்தினால் ஏற்றாரை மறுக்காமலும் பணத்திலுள்ள பெருநசையாற் பிறர்க்குக்கொடுக்க உடன்படாமலுமிருக்கும் உலோபியை யுவமை கூறினார். உலோபி இரப்பவர்க்கு இல்லையென்று கூறிவிட்டால் ஏற்பவன் வேறோரிடத்துச்சென்று இரந்து பெறக்கூடு மாதலால் அதற்கும் இடமில்லாதவாறு மறுக்காமலும் கொடாமலுமிருக்கின்ற உலோபியை'கடுவச்சையன்'என்றார். பி - ம்:—[1]ஏற்றாரை நோக்கான். [2]நெடு. (சகூ)

௨0.—மாற்றவள்பேரைக் கணவன் கூற ஒருத்தி கொண்ட வருத்தம்.

தைக்கின்ற வேனோக் கினடன்னுயி ரன்ன மன்னன்
மைக்கொண்ட கண்ணா [1]ளெதிர்மாற்றவள் பேர்வி ளம்ப
மெய்க்கொண்ட [2]மானந் தலைக்கொண்டிட விம்மி மென்பூக்
கைக்கொண்டு மோந்தா ளுயிர்ப்புண்டு கரிந்த வன்றே.

(இ - ள்.) தன் உயிர் அன்ன மன்னன் - தனது உயிரையொத்தவனான தலைவன், மை கொண்ட கண்ணாள் எதிர் - மைதீட்டப்பெற்ற கண்களை யுடையவளான (தன்)மனைவியினெதிரே, மாற்றவள் பேர் விளம்ப-சக்களத் தியின்பேரைச் சொல்லினானாக,—தைக்கின்ற - (மார்பிலே, உருவுகின்ற, வேல்-வேற்படைபோன்ற, நோக்கினள் - கண்களையுடையவளான ஒருத்தி,- மெய் கொண்ட மானம்-உண்மையாகக்கொண்டுள்ள மானம், தலைக்கொண் டிட - தலையையெடுக்கவொட்டாமற்செய்ய, (அதனால்), விம்மி - அழுது, மெல் பூ-மெல்லியமலர்கள், கைக்கொண்டு மோந்தாள் - (தம்மைக்) கையிலே கொண்டு மோந்த அம்மங்கையின், உயிர்ப்பு உண்டு - பெருமூச்சுவீசியத னால், கரிந்த - கரிந்துபோயின; (எ - று.)

ஒருமன்னவன் சோர்வினால் தன்னுடையமனைவியொருத்தியினெதிர் மாற்றவள்பேரைச் சொல்லியழைத்தானாக, அதுகேட்ட அம்மங்கை மிகவும் மானத்தைப்பாராட்டுபவளாதலால், பிறமாதர்முன் தான் அவமானமடைந் ததனால் தலையிறக்கங்கொண்டு கண்ணீர்விட்டுத் தன்நிலை பிறர்க்குத்தெரி யாதிருக்கவேணு மென்ற கருத்தினால் தன்கையிற்கொண்டபூவை மோந்த வண்ணம் குனிந்துநிற்க, அவளுடையஉள்ளத்தின்வெதுப்பினால் மோந்த அந்தமலர்கள் கரிந்துபோயினவென்பதாம். தலைக்கொண்டிட என்பதை ஒருசொல்லாகக்கொண்டு, மிகஎனினுமாம். பி - ம்:—[1]வர. [2]நாணம். (௨0)

௨௧.—ஓரரசன் தனதுதேவிமார்முன்னிலையில் திரிதல்.

திண்டே ரரசன் னொருவன்குலத் தேவி மார்த
மொண்டா மரைவாண் முகத்துண்மிளி ருண்க ணெல்லாங்
கண்[1]டா தரிப்பத் திரிவான்மதங் கவ்வி [2]யுண்ண
வண்டா தரிக்கத் திரிமா மதயானை யொத்தான்.

(இ - ள்.) குலம் தேவிமார்தம் - உயர்குலத்துப்பிறந்த (தன்) மனைவி யரின், ஒள் தாமரை வாள் முகத்துள் - அழகிய தாமரைமலர்போன்ற ஒளிபொருந்திய முகங்களில், மிளிர் - விளங்குகின்ற, உண் கண் எல் லாம் - மையுண்டகண்கள்யாவும், கண்டு - (தன்கட்டழகைப்)பார்த்து, ஆத ரிப்ப - விருப்பங்கொள்ளும்படி, திரிவான் - திரிபவனாகிய, திண் தேர் அர சன் ஒருவன் - வலியதேரையுடைய ஓரரசன்,—மதம் கவ்வி உண்ண வண்டு ஆதரிக்க திரி - (தன்) மதநீரைக் கவ்வியுண்ணும்பொருட்டு வண்டுகள் விரும்புமாறு திரிகின்ற, மா மதம் யானை - மிக்க மதங்கொண்டயானையை, ஒத்தான்; (எ - று.)

மதநீரையுண்ணும்பொருட்டு வண்டுகள்ஆதரிக்கும்படி திரிகின்ற மத யானை, கட்டழகைக்காணும்பொருட்டு மகளிரின்கண்கள் ஆதரிக்கும்படி

திரிகின்ற அரசனுக்கு ஏற்ற உவமையாம்; உவமையணி. தேவிமார் என்று கூறியதனால், இவன் பலமகளிரைமணந்துள்ளவ னென்பது பெறப்படும்.
பி - ம்:—[1]ஆதரிக்க. [2]உண்ணும். (௨௧)

௨௨.—ஒரு மன்னவன்மீது அவன்தேவியர்இருவரும் புலத்தல்.

சந்திக் கலாவெண் மதிவா ணுத லாட னக்கும்
[1]வந்திக் கலாகும் மடவாட்கும் வகுத்து நல்கி
நிந்திக் கலாகா வுருவத்தின [2]னிற்க மென்பூச்
சிந்திக் [3]கலாபம் மயிலிற்கண் சிவந்து [4]போனார்.

(இ - ள்.) நிந்திக்கல் ஆகா உருவத்தினன் - பழிக்கத்தகாத உருவத்தையுடைய ஓரரசன்,—சந்தி கலா வெள் மதி வாள் நுதலாள்தனக்கும் - சந்தியாகாலத்தில் தோன்றுகின்ற சிலகலைகளைமாத்திரங்கொண்ட வெண்ணிறமுள்ள பிறைச்சந்திரன்போன்ற நெற்றியையுடைய (தனது) ஒருமனைவிக்கும், வந்திக்கல் ஆகும் மடவாட்கும் - (அருந்ததிமுதலியமகாபதிவிரதைகளும்) வணங்குதற்குஉரியவளான மற்றொரு மனைவிக்கும், வகுத்து நல்கி நிற்க - (தான் கொய்த மலர்களைச் சரிசமமாகப்) பகிர்ந்துகொடுத்து நிற்கையில்,—(அவ்விருவரும்), மெல் பூ சிந்தி - (அவன் தந்த) மெல்லிய மலர்களைக் கீழேகொட்டிவிட்டு, கண் சிவந்து - (அவன்மீதுள்ள சினத்தினால்) கண்கள் சிவக்கப்பெற்று, கலாபம் மயிலின்-தோகையையுடையமயிலைப்போல, போனார் - (அவன்முன்நிற்கவிருப்பமில்லாது அப்பால்) போய்விட்டனர்; ()

இதுவரையில் கணவன் 'என்மீதுதான் மிகுகாதல் கொண்டுள்ளான்' என்று கருதியிருந்த மகளிரிருவரும், அப்போதுஇருவரிடத்தும் சமனாகவுள்ளானென்பது தோன்றச் சரிசமமாகத் தன்கணவன் கொய்த மலர்களைப் பகிர்ந்துகொடுக்கவே, தம்மிடத்துச் சிறப்பாகக் காதல்வையாமையை யுணர்ந்து கண்கள் சிவந்திடச் சினந்து அவன்தந்த மலர்களையும் சிந்திவிட்டுப் போயின ரென்க. 'வகுத்து'என்பதற்கு ஏற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. பி - ம்:—[1]வந்திக்கலாகுஞ் சுடர்வாட்கணினாட்கு, வந்திக்கலாகும் மடவாட்கும்வகுத்து. [2]நின்றபோழ்தும், நிற்பப்போது. [3]கலாபமயில், புதுப்பூவயில். [4]போனாள். (௨௨)

௨௩.—இதுமுதற் பன்னிரண்டு கவிகள்-அப்போது பல்வகையினரான ஆடவரிடத்தும் மகளிரிடத்தும் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறும்.

வந்தெங் குந்[1]தன் மன்னுயி ரேயோ பிறிதொன்றோ
கந்தந் துன்றுஞ் சோர்குழல் [2]பேணாள் கலை[3]பேணா
ளந்தந் தோறு மற்றுகு முத்த மவை [4]பாராள்
சிந்துஞ் சந்தத் தேமலர் [5]தேடித் [6]திரிவாளும்.

(இ - ள்.) கந்தம் துன்றும் - இயற்கைமணம் நிரம்பியுள்ள, சோர் குழல்-அவிழ்ந்துள்ள கூந்தலை, பேணாள்-ஆதரித்துப்பாதுகாவாமலும், [முடிந்திடாமலும்],கலை பேணாள்-(அரையிலுடுத்த) ஆடைகள் அவிழ்தலையும்பொருட்படுத்தாமலும், அந்தம் தோறும் அற்று உகும் முத்தம்அவை பாராள் -

(அந்தச்சோலையின்) எல்லேவரையிலும் முத்துச்சரங்கள் இற்றுச் சிதறிய முத்துக்களையும் மதியாமலும், (இவள் தேடுவது), தன் மன் உயிர் ஏ ஓ - தனது (உடம்பில்)தங்குந் தன்மையுள்ள உயிரைத்தானே, (அன்றி), பிறிது ஒன்று ஓ-வேறுமுக்கியமானதொரு பொருளைத்தானே, (என்று கண்டவர் கருதும்படி), எங்கு உம் வந்து - (அந்தச்சோலையின்) எல்லாவிடத்தும்வந்து, சிந்தும் சந்தம் தேன் மலர் தேடி திரிவாள் உம்-தேனைச்சிந்துவனவான அழகிய வாசனைபொருந்திய மலர்களை நாடித் திரிபவளும்,—(எ - று.)

அப்போது ஒருமடந்தை தனது குழல் சோர்வதையும் ஆடைகுலேவதையும் முத்துமாலைகளிலிருந்து முத்துக்கள் சிந்துவதையும் கூடக் கவனியாமல், 'தன்உயிரையோ அன்றி அதனினுஞ்சிறந்த வேறு ஒன்றனையோ இவள் தேடுகின்றனள்' என்று கண்டவர் கருதுமாறு மலர்களைத்தேடித்திரிபவளாயின ளென்க. பி - ம் :—[1]தம். [2]காணர். [3]பேணர். [4]பாரார். [5]நாடி. [6]திரிவாரும். (உங)

உச. யாழொக் குஞ்சொற் பொன்னனை யாளோ ரிகன்மன்னன்
றாழத் தாழா டாழ்ந்த மனத்தா டளர்கின்றா
ளாழத் துள்ளுங் [1]கள்ள நினைப்பா ளவனின்ற
சூழற் கேதன் கிள்ளையை யேவித் தொடர்வாளும்.

(இ - ள்.) யாழ் ஒக்கும் சொல்-யாழினிசையையொத்து இனியசொல்லையுடைய, பொன் அனையாள்-திருமகளையொப்பவளான ஒருத்தி,—ஓர் இகல் மன்னன் - ஒப்பற்ற வலிமையையுடைய தன்கணவனை அரசன், தாழ - (தன்னை) வணங்கிநிற்கவும், தாழாள் - (முதலில்தான்) மனம் இளகாதவளாகியிருந்து, (பின்புஅந்தமன்னவன் அப்பாற்சென்றுவிடவே), தாழ்ந்த மனத்தாள் - இளகின மனமுடையவளாய், தளர்கின்றாள் - மிகவும்தளர்ந்து ஆழத்து உள்ளும் கள்ளம் நினைப்பாள் - ஆழ்ந்துஎண்ணுகின்ற வஞ்சகமான எண்ணத்தைக் கொண்டவளாய்,—அவன் நின்ற சூழற்கு ஏ தன் கிள்ளையை ஏவி-அந்தக்கணவன் தங்கிநின்றஇடத்திற்கே தன்கிளிப்பிள்ளையை முந்துற அனுப்பிவிட்டுப்பிறகு, தொடர்வாள் உம் - (அதனைத்) தொடர்பவள்போலச் செல்லுகின்றவளும்,—(எ - று.)

கணவன் தன்னைவணங்கிநிற்கவும் அவன்மீதுகொண்டிருந்த ஊடலினால் அவனை மதியாதிருந்துவிட்டு, அவன் தலைவியான தன்னிடத்து முகம் பெறாமையால் அவ்விடத்தினின்றுவிலகித் தன்னிடத்தைச்சேரவே, பிறகு தான் மனமிளகித்தளர்ந்து'ஒருகால்வேறொருமங்கையைத் தன்கணவன்சேர்ந்துவிடுவானோ'என்ற எண்ணத்தையும் கொண்டு, 'தானேகணவனைநாடிச் செல்வதுஎன்றால் அது தன்தலைமைக்கு இழுக்காம்'என்ற கருத்தினால் முதலில் தன்கிளியை அவனுள்ளவிடத்துக்குப் போக்கி, அக்கிள்ளையைத் தேடிச் செல்பவள்போலக் கணவனுள்ளவிடத்துக்கு ஒருதலைவி சென்றன ளென்பதாம். கணவன்மீதுஐயங்கொண்டனளென்பதை 'ஆழத்துள்ளுங் கள்ளநினைப்பாள்'என்றார். பி - ம்:—[1]கள்ளநினைவாள். (உச)

உரு. *அந்தா ராகத் தைங்கணை நூறா யிரமாகச்
சிந்தா நின்ற [1]சிந்தையி னான்செய் குவதோரான்
மந்தா ரங்கொண் டீகுதி யோமா தவி[2]யென்றோர்
சந்தார்[3]கொங்கைத் தார்[4]குழ லாள்பாற் [5]றளர்வானும்.

(இ - ள்.) அம் தார் ஆகத்து - அழகிய மலர்மாலையையணிந்தமார்பிலே, ஐங் கணை நூறுஆயிரம் ஆக - (மன்மதனுடைய) பஞ்சபாணங்கள் இலட்சக் கணக்காகவிழ, (அதனால்), - சிந்தாநின்ற சிந்தையினான் - சிந்துகின்ற மனத் தையுடையவனான ஒருமன்னவன்,—செய்குவது ஓரான் - (தான்)செய்ய வேண்டிய செயல் இன்னதென்று ஆராய்ந்தறியமாட்டாதவனாகி, 'மாதவி - மாதவிக்கொடியே! மந்தாரம் கொண்டு ஈகுதிஓ - (நீ) மந்தாரமலரைப்பூத் துத்தரவல்லையோ?' என்று - என்றுசொல்லி, ஓர் சந்து ஆர் கொங்கை தார் குழலாள்பால் - சந்தனக்குழம்பையணிந்த தனங்களையும் மலர்மாலைசூடிய கூந்தலையுமுடையவளான ஒருத்திபொருட்டாக, தளர்வான்உம்-மனம்வாடி நிற்பவனும்,—(எ - று.)

மன்மதனது மலர்க்கணைகளால்ஏவுண்ட ஓராடவன் தன்காதலி ஊடி நீங்கினமைபற்றித்தான் செய்குவதை யோராமையால் அந்தத் தார்குழலாள் பொருட்டாகத் தளர்ந்து, 'மாதவி! மந்தாரம் ஈகுதியோ?' என்று பித்தன் போலப் பிதற்றின னென்க. இவன் அங்ஙனம் பிதற்றினதற்குக் காரணம் மன்மதன்கணைக்கு இலக்கானமையென்பார் 'ஐங்கணை நூறாயிரமாகச் சிந்தா நின்ற சிந்தையினான்' என்றார். இதனால், அவ்வாடவனது உன்மாதாவஸ் தையைக் கூறியவாறு. இனி, 'இவள் இதுவரையும் இன்முகத்தினளாய் இன்பந்தந்து இப்போது தன்னியற்கைமாறித் துன்பந் தராநின்றனள்; இது தகுமோ?' என்பதையுணர்த்த,'மாதவிக்கொடியே! நீ உன் இயற்கைப்பூவைப் பூவாது மந்தாரமலரைப்பூத்துத் தருவாயோ' என்று கூறினனென மூன்றா மடிக்குக் கருத்துக்காணலுமாம்; அவ்வாடவன் மனைவியினிடத்துக் காத லாற்கூறுகின்றானேயன்றி அவளை யிழித்துச்சொல்லவேணுமென்னுங் கருத் திலனென்பதை விளக்க, கவி, 'சந்தார்கொங்கைத் தார்குழலாள்பாற் றளர்வான்' என்றார். இனி, இப்பாடலுக்கு, மன்மதனது கணைக்கு இலக் கான ஆடவன் தனக்கு முகங்கொடாத மாதினிடத்துச்சென்று 'நீ இந்த மந்தாரமலரைப்பெற்றுக்கொண்டு உன்னிடத்திலுள்ள குருக்கத்திமலரைத் தருவாயா?' என்று இரந்துபின்னிற்றலென்னுந்துறை படக் கேட்டதாகப் பொருள்காணலுமொன்று. பி - ம்:—[1]சிந்தையினார் செய்குவதோரார். [2]என்ன. [3]தொங்கற்றாழ். [4]குழலார். [5]தளர்வாரும். (உரு)

உகூ. நாடிக் கொண்டாள் குற்ற நயந்தாண் [1]முனிவாற்றா
னூடிக் [2]காணக் காட்டு நலத்தா [3]னுடனில்லாள்
தேடித் தேடிச் [4]சேர்த்த செழும்பூ நறுமாலை
சூடிச் சூடிக் கண்ணடி நோக்கித் துவள்வானும்.

(இ - ள்.) குற்றம் நயந்தாள் நாடி கொண்டாள் - (தன்கணவன்மீது) குற்றத்தை விரும்பித் தேடிக் கற்பித்துக்கொண்டு, முனிவு ஆற்றாள் - (அதனால்தோன்றிய) சினம் ஆறப்பெறாமல், ஊடி - (நேரேவந்த கணவன்மீது) ஊடல் கொண்டு, காண - (அதனைத் தன்கணவன்)காணுதலால், காட்டும்-தோன்றிய,நலத்தாள்-இன்பத்தையுடைய ஒருத்தி,உடன்-உடனே, நில்லாள்-(அந்தஊடியநிலையில்)நில்லாதவளாய்,—தேடி தேடி சேர்த்தசெழு பூ நறு மாலை சூடி சூடி - பலவிடங்களிலுஞ் சென்று தேடிச் சேர்த்த வளமான மலர்களைக் கொண்டு தொடுத்த நறுமணமுள்ள மாலைகளைச் சூடிக்கொண்டு, கண்ணடி நோக்கி - கண்ணடியிலே (இவ்வொப்பனை நன்குஅமைந்துள்ளதா ?என்று) பார்த்து, துவள்வாள்உம் - (அதனை நுகர்வதற்குக் கணவன்வாராமையால்) வாடுகின்றவளும்,—(எ - று.)

கணவன்மீது குற்றத்தையேறிட்டு அவன்வந்தபோது ஊட, அக்கணவன் தன்மனைவியினிடத்து முகம்பெறாமையாற்சென்றுவிட்டானாக, பிறகு அவ்வூடல் தானாகவேதணிந்து தேடிச்சேர்த்தமலர்களைக்கொண்டு தொடுத்த மாலையைச் சூடிக் கண்ணடியில் அழகுபார்த்துத் தன்கணவன் தன் னொப்பனையைக்கண்டு களிக்குமாறு அப்போதுவாராமையால் ஒருத்தி வாடுபவளாயினளென்க. பி - ம்:—[1]முனிவாறாள். [2]காட்டக்காணும். [3]உடனில்லாள். [4]செய்த. (உசு)

உஎ. மறலிக் [1]கூணாம் வன்கதிர் வேலா னிடையேவந்
துறவிக் கோலம் [2]பெற்றிலெ னென்றா லுடன்வாழ்விப்
பிறவிக் கொல்லே னெஃசெய்வ திப்பே ரணி[3]யென்னா
விறலிக் கீவா ளொத்திழை யெல்லாம் விடுவாளும்.

(இ - ள்.) 'மறலிக்கு ஊண் ஆம் - யமனுக்கு உணவுகிடைத்தற்குக் காரணமாகிய, வல் கதிர் வேலான்-வலிய ஒளியுள்ள வேலாயுதத்தையுடைய (என்) கணவன், இடையே வந்து உற - என்னிடம்வந்து பொருந்துமாறு, இ கோலம் - இந்த அலங்காரத்தை, பெற்றிலென் - பெற்றேனில்லை, என்றால் - என்பது நேர்படுதலால், உடன் வாழ்வு இ பிறவிக்கு ஒல்லேன் - இந்தப்பிறவியில் இந்தவுடலுடன்வாழ்வதனை இனிஉடன்படேன்; இ பேர் அணி என் செய்வது - இந்தச்சிறந்த அலங்காரம் என்னபயனைத் தருவது?' என்னா-என்று சொல்லி,— இழை எல்லாம்-(தன்)அணிகலங்களையெல்லாம், விறலிக்கு ஈவாள் ஒத்து - விறலிக்கு ஈபவள்போன்று, விடுவாள்உம்-(தன்) அணிகலங்களை யெல்லாம் கழற்றி நீக்குபவளும்,—(எ - று.)

ஒருத்தி, தன்னை அணிகலங்களாற் புனைந்துகொண்டு தன்கணவன் வருகையை நோக்கியவண்ணம் நெடுநேரம் இருந்தும் காரியவயத்தனாய்ப் பிரிந்துசென்ற அக்கணவன் தன்னிடத்துவந்து சேரப்பெறாமையால் நெஞ்சம்புண்பட்டு, 'கணவனை இவ்வலங்காரத்தோடு கூடப் பெறாவிடின் நான் இப்பிறவியில் இவ்வுடலோடு இருப்பது எற்றுக்கு?'என்று நொந்து தன் அணிகலங்களைக் கழற்றி, இறக்கத்துணிந்தவர் தமதுஅணிகலங்களைத் தமது

விருப்பத்திற்கு இடனானவர்கையிற் கொடுப்பதுபோல் விறலிகையிற் கொடுத்துவிடுவாளாயின ளென்க. காரியவயத்தனாய்ச்சென்ற கணவன் கொடிய விலங்குகளால் ஊறுபடுவானல்ல னென்பாள், அவனை, 'மறலிக்கு ஊணும் வன்கதிர் வேலான்' என்றும், தான் அக்கணவனைப் புல்லுதற்கே அக்கோலம் புனைந்தது; மகளிர் அணிபூணுதல் கணவன் கண்டுமகிழ்தற்கே; அஃது கூடாமற்போயின் கொண்டகோலம் பயனற்றதாம் என்பாள் 'இடையே வந்துற இக்கோலம் பெற்றிலெ னென்று லுடன்வாழ்விப்பிறவிக்கொல்லேன்; என்செய்வதிப்பேரணி' என்றும் கூறினாள். பி - ம்:—[1]ஊட்டும். [2]பெற்றில. [3]என்றோர். (உஎ)

உஅ. *வம்பிற் பொங்குங் கொங்கை சுமக்கும் வலியின்றிக்
[1]கம்பிக் கின்ற நுண்ணிடை நோவக் [2]கசிவாரும்
பைம்பொற் கிண்ணம் மெல்விர றாங்கிப் பயில்கின்ற
கொம்பிற் [3]கிள்ளைப் பிள்ளை யொளிக்கக் [4]குழைவாளும்.

(இ - ள்.) பயில்கின்ற கொம்பில் கிள்ளைப்பிள்ளை ஒளிக்க - நெருங்கியுள்ள பூங்கொம்பிலே (தான்வளர்த்த) கிளிப்பிள்ளை ஒளிந்துகொள்ளவே, (அதைத்தேடியவண்ணம்), வம்பில் பொங்கும் - கச்சுக்குஅடங்காது வெளிப்பட்டுத்தோன்றுகின்ற, கொங்கை - தனங்களை, சுமக்கும் - பொறுக்கவல்ல, வலி - வல்லமை, இன்றி - இல்லாமல், கம்பிக்கின்ற - நடுங்குகின்ற, நுண் இடை - மெல்லிய இடை, நோவ - வருந்தும்படி,—கசிவு ஆரும் பைம் பொன் கிண்ணம் மெல் விரல் தாங்கி - இளகுந்தன்மைபொருந்திய பசும்பொன்னினாற்செய்த கிண்ணத்தை (த் தனது) மெல்லியகைவிரல்களினால் தாங்கிக்கொண்டு, குழைவாள் உம்-ஒல்கியொசிந்து செல்பவளும்.—

ஒருத்தி தான் வளர்த்த கிளிப்பிள்ளை பூங்கொம்பில் மறைந்துகொண்டதனால் அதற்குப் பாலூட்டுமாறு பைம்பொற்கிண்ணத்தைக் கையிலேந்தியவண்ணம் அதனைத்தேடிக்கொண்டு தன்னிடை நோவ ஒல்கி யொசிந்து செல்வாளாயின ளென்க. பயில்கின்ற கிள்ளைப்பிள்ளை கொம்பில் ஒளிக்க என்று இயைத்து - பேச்சுப்பழகுகின்ற கிளிப்பிள்ளை பூங்கொம்பிலே யொளித்துக்கொள்ள எனினுமாம். பி - ம்:— [1]கம்பிக்குந்தம். [2]கசிவாளும். [3]பிள்ளைக்கிள்ளை. [4]குழைவாரும். (உஅ)

உகூ. தன்னைக் கண்டாண் மென்னடை கண்டா [1]டமரேபோற்
றுன்னக் கண்டா டோழமை [2]யென்றா டுணையென்றா
ளுன்னைக் கண்டா ரெள்ளுவர் பொல்லா தடுநீயென்
றன்னக் கன்னிக் காமடை யளிப்பா [3]னமைவாளும்.

(இ - ள்.) தன்னை கண்டாள் - அன்னத்தைக் கண்ட ஒருத்தி, மென் நடைகண்டாள் - (அதனுடைய) மென்மையான நடையைக்கண்டும், தமர் எபோல் துன்ன கண்டாள் - (தன்னுடைய) உறவினர்போலே (அது) நெருங்குவதையும் கண்டவளாய், தோழமை என்றாள் - (இது நம்மோடு) நட்புக்கு வருகின்றதுஎன்றுசொல்லி, துணை என்றாள்-(எனக்குத்)துணையாகுமென்றான்

சொல்லியவளாய், (பிறகு அவ்வன்னத்தை நோக்கி'), 'உன்னை கண்டார் - எள்ளுவர்-(நீ ஆடையின்றியிருத்தலால் உன்னைப்)பழிப்பார்கள்;பொல்லாது-(நீ இவ்வாறு ஆடையின்றி யிருப்பது) அழகியதன்று; நீ உடு - நீ (இந்த ஆடையைத்) தரித்துக்கொள்வாய்.' என்று - என்றுசொல்லி, அன்னம் கன்னிக்கு - இளமையுள்ள அன்னப்பேட்டுக்கு, ஆடை அளிப்பான் - ஆடை கொடுக்கும்படி, அமைவாள்உம் - உடன்படுபவளும்,— (எ - று.)

ஒருத்தி தன்நடையோடொத்த மென்மையான நடையுடனே அருகே வந்த அன்னப்பேட்டைக் கண்டு தோழமைபூண்டு தன்தோழிமாரிடத்து அன்புசெலுத்துவதுபோல அன்புசெலுத்தி, அதற்கு ஆடையளித்தன ளென்க. இது அன்புபற்றிச்செய்த செயலாகும். [3]அமைவாரும் என்று பாடமோதி,'தன்னைக்கண்டாள்' முதலிய ஒருமையோடு அமைவாரும்,என்ற பன்மைவந்தது எண்வழுவமைதி யென்றும், அவ்வாறு பலமங்கையர் தனித் தனி அங்ஙனம்செய்ததனால் இவ்வாறுகூறிய தென்றும் உரைவகுப்பாரும் உளர். பி - ம்:—[1] தமர்போல. [2] கண்டாள். (உகூ)

௩௦. * பாகொக் குஞ்சொன் [1]னுண்கலை யாடன் படரல்கு
லாகக் [2]கண்டோ ராடர வாமென் றயனண் ணுந்
தோகைக் கஞ்சிக் கொம்பி னொதுங்கித் துணரீன்ற
சாகைத் தன்கைக் கண்கள் புதைத்துத் தளர்வாளும்.

(இ - ள்.) பாகு ஒக்கும் சொல் - பாகையொத்த [மதுரமான] சொல் லையுடைய, நுண் கலையாள் - மெல்லிய ஆடையையணிந்திருந்த ஒருத்தி, தன் படர் அல்குல் - தனது பரந்தஅல்குலை, ஆக - கண்கூடாக, கண்டு - பார்த்து, '(இது), ஓர் ஆடு அரவு ஆம் - படமெடுத்துஆடுகின்ற பாம்பை ஒக்கும்,' என்று-என்றுகருதி, (பாம்புக்குப்பகையாதலால்), அயல் நண்ணும் தோகைக்கு அஞ்சி - அருகேதங்கியிருந்த மயிற்பறவையினிடத்து அச்சங் கொண்டு, கொம்பின் ஒதுங்கி - பூங்கொம்பிலே பதுங்கி, (நாணத்தினால்), துணர் ஈன்ற சாகை தன் கை - பூங்கொத்துக்களையுண்டாக்கின கிளையை யொத்த தனது கைகளால், கண்கள் புதைத்து - (தன்னுடைய) கண்களை மூடி, தளர்வாள்உம் - தளர்ச்சியடைபவளும்,—(எ - று.)

நுண்ணியகலைமூலமாகத் தனதுஅல்குல் தோன்ற அதனைக்கண்ட ஒருமாது, அவ்வல்குல் பாம்பின்படம்போலஇருப்பதுகண்டு பாம்பிற்குப் பகையாகியமயில் அருகேயிருத்தலால் அஞ்சி, அவ்விடம்விட்டுப் பூங்கொம் பில் ஒதுங்கித் தனதுஅல்குல்தோன்றஇருப்பதற்கு வெள்கித் தான் பிறரு டையமுகத்தைப்பார்த்தற்கும் நாணித் தன்கைகளால் தனது கண்களை மூடிக்கொள்ளலாயின ளென்க. நாணம்மிக்கபோது பிறரைப்பார்க்கவெள் குபவர் தம்கண்களைமூடிக்கொள்ளுதல், இயல்பு இனி, அருகேநிற்பாருடைய கண்களைத் தன்னைப்பார்க்கவொட்டாது மூடித்தளர்ந்தாளென்று உரைகூறு வாரு முளர். பி - ம்:—[1] பைந்தொடியாடன். [2] கண்டோள். நான்காமடியில் 'சாகைத்தங்கைக்கண்கள்புதைத்தேதளர்வாரும்' என்கின்றபாடம் முதலடி யில் 'நுண்கலையாடன்' என்ற ஒருமையோடு மாறுபடுதலாற் சிறவாது. ()

௩௧. பொன்னே தேனே பூமக ளேகா ணெனையென்றுத்
தன்னே [1]ரில்லா ளங்கொரு [2]கொய்பூந் தழை[3]மூழ்கி
யின்னே யென்னைக் காணுதி நீயென் றிகலித்தன்
னன்னீ லக்கண் கையின் மறைத்து [4]நகுவாளும்.

(இ - ள்.) தன் நேர் இல்லாள் - தன்னைஒப்பாரைப் பெறாத ஒருத்தி, 'பொன்னே - பொன்போலருமையானவளே! தேனே - தேன்போலினிமையானவளே! பூமகளே - இலக்குமிபோலப் பேரழகுபடைத்தவளே! எனை காண் - (நான் மறைந்துகொள்ளுகிறேன், நீ) என்னைக் கண்டுபிடிப்பாய்,' என்று - என்று (தன்தோழியைநோக்கிச்) சொல்லி, அங்கு - அந்தச் சோலையில், ஒரு கொய் பூ தழை மூழ்கி - கொய்வதற்குஉரிய [மிகவும் அடர்த்தியாகஉள்ள] பூங்கொம்பின்தழையிலே மறைந்திருந்து, (அவள் தன்னைக் கண்டுபிடிக்காமற்போனதனால் மெல்லவந்து), 'நீ இன்னே என்னை காணுதி- நீ இப்போதேஎன்னைக் காண்பாய்',என்று இகலி - என்று மாறுபட்டுச்சொல்லி, தன் - அவளுடைய, நல் நீலம் கண் - அழகிய கருங்குவளைமலர்போன்ற கண்களை, கையில் மறைத்து - (தன்) கையால் மூடி, நகுவாள்உம் - சிரிப்பவளும்,—(எ - று.)

ஒருத்தி, மறைந்துபிடிக்கும் விளையாட்டை யாடுபவளாய்த் தன் தோழியை விளித்து 'நான் மறைந்துகொள்ளுகிறேன், நீ பிடி; பார்ப்போம்' என்று ஒருஅடர்ந்தபூங்கொம்பின்தழையில் மறைந்துநிற்க, அத்தோழியும் இவளுள்ளவிடத்தைத் தேடிப் பிடிக்கமாட்டாதவளாக, பிறகு மெல்ல அவளுடைய பின்புறமாகவந்து அவள்கண்களைத் தன்கைகளால் மூடி, 'இப்பொழுது கண்டுபிடிப்பாயா?' என்று அவளைப் பரிகசித்துச்சொல்லின ளென்க. இனி, தான்மறைந்துநிற்கையில் தன்னைக் கண்டுபிடிப்பது அருமையானகாரணத்தால் 'நீ என்னைக்காணாய்' என்றும், 'இன்னே என்னைக் காணுதி நீ' என்றுஞ்சொல்லி, அவள்கண்டுபிடிக்கமுடியாமல்நின்றநிலையில் அவளைக்காணவும் நாணித் தன்கண்களை மூடிக்கொண்டுநகுவாளாயின ளென்றலும் ஒன்று. இகலுதல் - விளையாட்டினில் தனக்குஉள்ள வல்லமையை வியந்துகூறி மாறுபடுதல். பொன்னேமுதலியமூன்றுவிளிகளும் - உவமவாகுபெயர்கள். பி - ம்:— [1]இல்லான். [2]கொய்யற்றழை. [3]மூழ்க. [4]நகுவாரும். (௩௧)

௩௨. வில்லிற் கோதை நாணுற [1]மிக்கோ [2]னிகலங்கம்
புல்லிக் கொண்ட தாமரை மென்பூ மலர்தாங்கி
[3]யல்லிற் கோதை மாதர் [4]முகப்பே ரரவிந்தச்
செல்வக் கானிற் செங்கதி ரென்னத் [5]திரிவானும்.

(இ - ள்.) மிக்கோன் - மேம்பாடுடையஒருத்தன், வில்லில் நாண் கோதை உற-(தன்) வில்லினுடைய நாணி (தன்) கைவிரற்கவசத்திற் பொருந்த (ஒருகையில் வில்லைத்தாங்கிக்கொண்டும்), இகல் அங்கம் - வலிமையுள்ள (மற்றொரு) கையில், புல்லிகொண்ட தாமரை மெல் பூ தாங்கி - பொருந்

திய மெல்லிய தாமரைப்பூவை தாங்கிக்கொண்டும், அல்லின் கோதை மாதர் முகம் பேர் செல்வம் அரவிந்தம் மலர் கானில் - இருள்போன்ற கூந்தலை யுடைய மாதராரது முகங்களாகிய வளமுள்ள தாமரைமலர்க்காட்டில், செங் கதிர் என்ன - செந்நிறமுள்ள சூரியன்போல (அவற்றிற்குமலர்ச்சியையுண் டாக்கிக்கொண்டு), திரிவான்உம் - திரிபவனும்,— (எ - று.)

ஒருகையில் தன்வீரத்திற்குஅறிகுறியாக நாணேற்றியவில்லையும் மற் றொருகையில்காதற்குறிப்புத்தோன்றதாமரைமலரையும்வைத்துக்கொண்டு, மகளிர் தன்னைக்கண்டு முகவிகாசமடையுமாறு ஆடவனொருவன் திரிவானு யினனென்க. கோதை - வில்நாண்தாக்காதுமுன்னங்கையிலிடுங் கவசம். கதிரவனைக் கண்ட அரவிந்தமலர் மலருமியல்பின தென்பது, பின்னிரண் டடிகளிற்கருதத்தக்கது. [2]இலவங்கம் புல்லிக்கொண்ட என்றபாடத்திற்கு- இலவம்பஞ்சுபோன்றமென்மைத்தன்மை பொருந்தப்பெற்றஎன்றேனும் (நறுமணமுண்டாகுமாறு) இலவங்கமலர் செருகப்பெற்றஎன்றேனும் உரை கூறுவர். கதிருக்குச்செம்மை, இயற்கையடைமொழி. பி - ம்:—[1]மிக்கோர். [3]அல்லிக்கோதை. [4]முகம்மாம். [5]திரிவாரும். (௩௨)

௩௩. செய்யிற் [1]கொள்ளுந் தெள்ளமு தச்செஞ் சிலையொன்று
கையிற் பெய்யுங் காமனு நாணுங் கவினர்த
மையற் பேதை மாதர் மிழற்று மழலைச்சொ
றெய்வப் பாடல் சொற்கலை யென்னத் [2]தெரிவாரும்.

(இ - ள்.) செய்யில் கொள்ளும்-வயலிலிருந்து அறுத்துக்கொள்ளப்படு கின்ற, தெள் அமுதம் செஞ் சிலை ஒன்று-தெளிவான [இனிமைமிக்க] இரச த்தோடுகூடிய கரும்பாகிய செந்நிறமுள்ள வில்லொன்றை, கையில் பெய் யும் - (தன்) கையிலே கொண்டுள்ள, காமன்உம் - மன்மதனும், நாணும் - வெள்குவதற்குக்காரணமான, கவினர் - அழகையுடைய ஆடவர்கள்,—மை யல்-(கேட்டோர்க்குக்) காமமயக்கத்தையுண்டாக்கவல்ல,பேதை தம் மாதர் மிழற்றும் மழலை சொல் - பேதைமைக்குணமுடைய தமது மனைவிமார் கூறுகின்ற நிரம்பாமென்சொல்லாகிய, தெய்வம் பாடல் - தெய்வத்தன்மை யுள்ள பாடல்களை, சொல் கலை என்ன - பாராட்டிச்சொல்லப்படுதலை யுடைய சாஸ்திரத்தைப்போல, தெரிவார்உம் - ஆராய்பவரும்,— (எ - று.)

கையிற் கருப்புவில்லையேந்திய மன்மதனும் நாணும் கட்டழகு வாய்ந்த ஆடவர் தமதுமாதரார்கூறுகின்றனவாய்த் தேவகானம்போலினிய மழலைச் சொற்களைத் தாம் அவரிடத்துக்கொண்டஅன்பின்மிகுதியால் சாஸ்திரங்க ளையாராய்வதுபோலப் பாராட்டி யாராயலாயின ரென்பதாம். ஈற்றடிக்கு, மாதர்மிழற்றும்மழலைச்சொல்லைத் தெய்வப்பாடலையும் சொற்சொரூபமான கலைகளையும் போல ஆராய்வாருமென்றும், வேதமாகியசொற்கலைபோலஆரா ய்வாருமென்றும் பொருள்காணலுமாம். பி - ம் :—[1]கொய்யுஞ் செங்குமுத ஞ்செஞ்சிலையொன்றும். [2]திரிவாரும். (௩௩)

௩௪. சோலைத் தும்பி மென்குழ லாகத் தொடைமேவுங்
கோலக் கொண்ட மன்மத வாயன் குறியுய்ப்ப

நீலத் துண்கண் மங்கையர் சூழ நிரையாவின்
மாலைப் போதின் மால்விடை யென்ன வருவாரும்.

(இ-ள்.) சோலை-சோலைகளிலேயுள்ள, தும்பி-வண்டுகளினொலி, மெல்குழல் ஆக - மெல்லிய இசையையுடைய புல்லாங்குழலோசையாகவும்,-தொடைமேவும் கோலைகொண்ட-தொடுத்தல்பொருந்திய அம்பைக்கொண்டுள்ள [நேர்மைபொருந்திய கொம்பைக் கையிலேகொண்ட], மன்மதன் ஆயன் - மன்மதனாகிய இடையன், குறி உய்ப்ப - (வீட்டிற்குத்திருப்பவேண்டுவதற்கு உரிய)அடையாளத்தை(க்குழலோசைமூலமாக)த்தெரிவிக்க,மாலை போதில்-மாலைக்காலத்திலே, நிரை ஆவின் மால் விடை என்ன - தொகுதியாகிய பசுக்களின் நடுவிலே பெரியவிடபங்கள் வருவதுபோல, நீலத்து உண் கண் மங்கையர் சூழ வருவார்உம் - கருங்குவளைமலர்போன்ற மையுண்டகண்களை யுடைய மடந்தைமார் (தம்மைச்)சுற்றிலும்வர அவர்கள்நடுவே வருபவரும்,-

மாலைக்காலத்தில் இடையன் பசுக்கள் திரும்புவதற்குத் தன் குழலோசை கொண்டு குறிசெய்ததனால் ஆக்கள்யாவும் திரண்டு சூழ்ந்துவர அவற்றின் இடையே விடபங்கள் வருவதுபோல, மாலைக்காலத்து மன்மதன் கோலைக் கொண்டெய்து 'நீங்கள் இன்பம் அனுபவிக்கவேண்டியகாலம் இது' என்று தெரிவிக்க, ஆங்காங்குப் பூக்கொய்யச்சென்ற மடவார் திரண்டு தமது கணவர்நடுவே வர அவர்களைச்சூழ்ந்து தாம் தங்கியஇல்லத்தில் இன்பம் அனுபவிக்குமாறு வரலாயினரென்க. உருவகவணியை அங்கமாகக்கொண்டு வந்த உவமையணி. தொடைமேவுங் கோலைக்கொண்ட என்றதொடரில் சிலேடை உருவகத்திற்கு அங்கமாகவந்தது. குறி-குறிப்பிடமுமாம். ஆயனுக்குச்சேரும்போது, தொடைமேவும் கோல் என்பதற்கு-பலசாகைகளைச் சேர்த்துக்கட்டப்பட்டகோல் என்று உரைத்தாருமுளர். தொடை - மலர்மாலையெனினுமாம். தும்பி, குழல்-அவற்றினின்று தோன்றும்ஒலிக்கு ஆகுபெயர். இருபத்துமூன்றுஞ்செய்யுளிலுள்ள 'திரிவாளும்' என்பதுமுதல் ஒவ்வொரு செய்யுளிலும் உள்ள தொடர்வாளும் முதலியவற்றை ஒன்றுசேர்த்து 'ஆயினார்' என்று ஒருவினை வருவித்துமுடிக்க. இவ்வாறு மலர்கொய்து ஆடுகையில் மாலைக்காலம்வர யாவரும் திரண்டு தாம் தங்கியஇடத்துக்குத் தமது கணவருடன்திரும்பினமை இதனாற் கூறப்பட்டது. (௩௪)

௩௫.—மாதர்களின் அழகின் சிறப்பு.

ஊக்க முள்ளத் துடைய முனிவராற்
காக்க லாவது காமன்கை வில்லெனும்
வாக்கு மாத்திர மல்லது வல்லியிற்
பூக்கொய் வாள்புரு வக்கடை போதுமே.

(இ-ள்.) 'உள்ளத்து - மனத்தில், ஊக்கம் உடைய - (தவஞ்செய்வதில்) முயற்சியுள்ள, முனிவரால் - இருடியரால், காமன் கை வில் - மன்மதன் (தன்) கையிலேந்திய வில், காக்கல் ஆவது - காப்பதற்கு ஏற்றது', எனும் - என்று (உலகத்திலே) சொல்லப்படுகின்ற, வாக்கு மாத்திரம் அல்லது-வாய்ச்சொல்மாத்திரம் பிரசித்தமாக இருக்கிறதேயன்றி, (உண்மையை

நோக்குமிடத்து), வல்லியில் - பூங்கொடிகளினின்று, பூ கொய்வாள் - பூப்பறிக்கின்ற ஒரு மடந்தையின், புருவம் கடை - புருவத்தின் நுனியே, (அம்முனிவர்களின் ஆற்றலையொழித்தற்கு), போதும் - அமையும்; (எ - று.)

'மன்மதன் ஆசைநோயுண்டாகுமாறு வில்லில் நாணியேற்றி அம்பெய் தற்குத் தம்மை இலக்காக்காமற் பாதுகாக்கும் வல்லமை முனிவர்கட்கு உண்டு' என்று உலகவார்த்தை மிகவும் பரவியிருந்தபோதிலும், அது சொல் லளவாக இருப்பதன்றித் தொழிலளவில் இல்லை; இது மன்மதனது வில் லுக்கு உவமையாகின்ற பூக்கொய்த மடவாரின் புருவக்கடைக்கு இலக் கானமுனிவரும் தம்மனத்தைக் கொள்ளைகொடுத்து ஆற்றலைத் தோற்றலி னால் விளங்கு மென்பதாம். ஊக்கம்-வலிமையுமாம். பற்றைத்துறந்த முனிவ ரும் மடவாரின் புருவக்கடைக்குத் தம்மாற்றலைத் தோற்பரென்ற இத னால், இல்வாழ்வாராகிய மன்னர்முதலியோர் அவர் திறத்து வேட்கை மிகக் கொள்வாராயினரென்பதைப் பெறவைத்தார். வில்காத்தல்-வில்லையெய்வத னால் விளையும்வேட்கைநோயைக் காத்தல். (நரு)

நசு.—இதுவும், அடுத்தகவியும் - பூப்பறிக்கும்போதும் ஆடவர் மனைவியர்மேற் காதல்கொண்டிருந்தமையைத் தெரிவிக்கும்.

* நாறு பூங்குழ னன்னுதல் புன்னைமே
லேறி னான்மனத் தும்பர்சென் றேறினா
[1]ளூறு ஞானத் துயர்ந்தவ ராயினும்
வீறு சேர்முலை மாதரை வெல்வரோ.

(இ - ள்.) புன்னைமேல் ஏறினான் மனத்து உம்பர் - புன்னைமரத்தின் மீது ஏறிய (தன்) கணவன் மனத்திலே, பூ நாறு குழல் நல் நுதல் - மலர் மணம் வீசுகின்ற கூந்தலையும் அழகியநெற்றியையுமுடைய ஒருத்தி, சென்று—, ஏறினாள் - சேர்ந்தாள்: (இது தக்கதே): ஊறு - மேன்மேல் தோன்றுகின்ற, ஞானத்து - அறிவினால், உயர்ந்தவர் ஆயின்உம் - மிகவும் மேன்மைபெற்றவராயிருந்தபோதிலும், வீறு சேர் முலை மாதரை - பெருமை சேர்ந்த தனங்களையுடைய மகளிரை, வெல்வர்ஓ - வெல்லத்தக்கவரோ?

மிகவும் ஞானத்தவராலும் பெண்ணாசை நீக்குவதற்கு அரியதென்றால், பூப்பறித்தற்கு ஏறிய ஓராடவன் தன்மனைவியினிடத்துக் காதலால் அம் மனைவியைக் கருதியிருந்தானென்பதில் வியப்பில்லை யென்றவாறு; முன்னி ரண்டடிகளிற் கூறிய சிறப்புப்பொருளைப் பின்னிரண்டடிகள் சமர்த்தித்து நின்றன; இது - வேற்றுப்பொருள்வைப்பணியாம். கணவன் மனத்துஉம் பரேறுதல்-கணவனால் எப்போதும் மனத்திற்கொள்ளப்படுதல். பி - ம்:— [1]ஊறின்ஞானத்து. (நசு)

நஎ. சினையின் மேலிருந் தானுருத் தேவரால்
வனைய வும்[1]மரி யாள்வனப் பின்றலை
நினைவு நோக்கமு நீக்கலன் கைகளா
னனையு நாண்முறி யுங்கொய்து நல்கினான்.

(இ - ள்.) சினையின்மேல் இருந்தான் - பூங்கிளையின்மேலே யிருந்த கணவன்,—உரு தேவரால் வரையஉம் அரியாள் வனப்பின்தலை-தேவர்களா லும் எழுதமுடியாத உருவச்சிறப்பையுடையவளின் அழகில்தானே, நினைவு உம் நோக்கம்உம் நீக்கலன் - (தான்வைத்திருந்த) நினைப்பையும் கண்பார் வையையும் நீக்காதவனாய் [அவளுடைய அழகில்தானே கண்ணும் மனமுஞ் செல்லப்பெற்று], கைகளால் - (மலர்களைப்பறிக்கவேணுமென்று நீட்டிய) கைகளினாலே, நனைஉம் நாள் முறிஉம் கொய்து - பூவரும்புகளையும் புதிய தளிரையும் பறித்து, நல்கினான் - கொடுத்திட்டான்;(எ - று.)

ஒருவன் பூமரத்தின் கிளைமீதுஏறியும் கட்டழகியாகிய தன்காதலிமீது காதலால் அவளையே நினைப்பதும் பார்ப்பதுமாக இருந்தபடியால் தான் பறிப்பவை இன்னவையென்று பாராமையால் கைநீட்டிப் பூப்பறிக்கத்தொ டங்கிப் பூவுடனே அரும்புகளும் தளிர்களும் கொய்தனனென்பதாம். நாள் முறி - நாட்பட்டதளிர் என்பாருமுளர். பி - ம்:—[1] அரியான். (௩எ)

௩அ.—தன்மனைவியின் கோபத்தால் ஒருத்தன் தடுமாறுதல்.

வண்டு வாழ்குழ லாண்[1]முக நோக்கியோர்
தண்டு போற்புயத் தான்றடு மாறினா
னுண்டு கோபமென் றுள்ளத் துணர்ந்தவள்
தொண்டை வாயிற் றுடிப்பொன்று சொல்லவே.

(இ - ள்.)ஓர் தண்டுபோல் புயத்தான் - ஒப்பற்ற தண்டாயுதம் போன்ற புஜத்தைப்பெற்றிருந்த ஒருத்தன்,—வண்டு வாழ் குழலாள் முகம் நோக்கி - வண்டுகள்தங்கப்பெற்ற கூந்தலையுடையவளின் முகத்தைப் பார்த்து, அவள் தொண்டை வாயில் துடிப்பு ஒன்று சொல்ல - அம்மனைவியினது ஆதொண் டைக்கனிபோற் சிவந்த வாயிலே தோன்றிய துடிப்பு ஒன்றுமே தெரிவிக் கவே,-கோபம் உண்டு என்று உள்ளத்து உணர்ந்து - (இவளுக்குக்) கோ பந்தோன்றியுள்ளதென்பதை மனத்திற் செவ்வனேயறிந்து, தடுமாறினான் - (அதனை நீக்கும் வகைதெரியாமல்) மனத்தடுமாற்றமடைந்தான்; (எ - று.)

ஒருத்தன் தன்மனைவியினது முகத்தைப்பார்க்கையில் அவள் வாயில் தோன்றியதுடிப்பொன்றுமே அவளது கோபத்தைத் தெரிவித்ததனால் அத னைத் தீர்க்கும்வகை தெரியாமல் மனந்தடுமாறின னென்பதாம். 'தண்டு போல்புயத்தான்' என்றதனால், அவன் தன் மாலையை வேறொருத்திக்குச் சூட்டி வறியதோளனாயுள்ளா னென்பது பெறப்படுமென்றும், இங்ஙனம் அவன் வேறொருத்திக்கு மாலைசூட்டியதே அவள் புலத்தற்குக் காரண மென்றும் கூறுவர். பி - ம்:—[1] முகம்வாடிட. (௩அ)

௩கூ.—பூக்கோய்தலில் நெடுநேரம் போதுபோக்கியபின் யாவரும் புனல்விளையாட்டுக்குச் செல்லஎண்ணுதல்.

ஏயுந் தன்மைய ரிவ்வகை யாரெலாந்
தூய தண்ணிழற் சோலைத் துறுமலர்
மேயுஞ் செய்கை வெறுத்தனர் வெண்டிரை
பாயுந் தீம்புனற் பண்ணைசென் றெய்தினர்.

(இ - ள்) ஏயும் தன்மையர் - (கீழ்க்கூறியவாறு பூக்கொய்வதும் புலவி கொள்ளுதலும் முதலிய) செய்கையை மேற்கொண்டவரான, இ வகையார் எலாம்-இப்படிப்பட்ட ஆடவரும் மகளிரும், தூய தண் நிழல் சோலை துறு மலர் வேயும் செய்கை வெறுத்தனர் - பரிசுத்தமான குளிர்ந்த நிழலைத் தருகின்ற சோலையிலே நெருங்கியமலரைப் பறித்துச்சூடுகின்ற தொழிலை (நெடு நேரஞ்செய்ததனால்) வெறுப்புக்கொண்டவர்களாய், வெண் திரை பாயும் தீம் புனல் பண்ணை - வெண்ணிறமான அலைகள் பாயப்பெற்ற இனிய நீரில் விளையாடுவதிலே, சென்று - (மனம்)போனதனால், எய்தினர் - (அந்நீர்விளையாடலை) மேற்கொள்ளலானார்கள்; (எ - று.)

இதுகாறும் பூக்கொய்தலைப் பிரதானமாகக்கூறிவந்த கவி, இதனால் அடுத்த படலத்துக்குத் தோற்றுவாய் செய்தன ரென்க. (௩௯)

பூக்கோய்படலம் முற்றிற்று.

---

## கசு-ஆவது புனல்விளையாட்டுப்படலம்.

பூக்கொய்த மகளிரும் ஆடவரும் நீர்நிலைகளில் விளையாட்டுநிகழ்த்தியமையைக் கூறும் பகுதி. நீர்விளையாட்டுப்படலம் என்று சில பிரதிகளில் இந்தப்படலத்திற்குப் பெயர் காணப்படுகின்றது.

க.—மகளிரும் ஆடவரும் நீர்நிலையை நோக்கிவருதல்.

புனைமலர்த் தடங்க ணோக்கிப் பூசல்வண் டார்த்துப் பொங்க
வினையறு துறக்க நாட்டு விண்ணவர் கணமு நாண
1வனகரு மணங்க ளுரு மம்மலர்ச் சோலை நின்று
வனகரி பிடிக ளோடும் வருவன போல வந்தார்.

(இ - ள்.) அனகர்உம் - குற்றமற்றவரான ஆடவரும், அணங்கு அனார் உம் - தெய்வமகளிரையொத்த மகளிரும்,—வினை அறு துறக்கம் நாட்டு - குற்றமற்ற சுவர்க்கலோகத்திலுள்ள, விண்ணவர் கணம்உம் நாண - தேவர்களின்கூட்டமும் (தம்முடைய அழகைக்கண்டு) வெட்கமடையவும், பூசல் வண்டு ஆர்த்து பொங்க - ஆரவாரஞ்செய்யுந் தன்மையுள்ள வண்டுகள் ஒலித்து எழவும்,—அ மலர் சோலை நின்று - அந்தப் பூஞ்சோலையிலிருந்து, புனை மலர் தடங்கள் நோக்கி - அலங்கரிக்கின்ற மலர்களைக்கொண்ட நீர்நிலைகளை நோக்கி,—வனம் கரி பிடிகளோடுஉம் வருவன போல - காட்டில் வாழுந்தன்மையனவான ஆண்யானைகள் (தமது)பெட்டையோடும் வருபவற்றையொப்ப, வந்தார்— ; (எ - று.)

ஆடவரும் மகளிரும் நீர்நிலைகளை நோக்கிவருகையில், ஆண்யானைகள் பெண்யானைகளுடன் வருவனபோன்றிருந்த தென்க. ஆடவரும் மகளிரும் வந்த விசையால் மலர்களில்மொய்த்திருந்த வண்டுகள் ஆர்த்துப்பொங்கின.

துறக்கத்திற் சேர்பவரின் தொழிலாகிய வினையறுதலைத் துறக்கத்தின் மேலேற்றி,'வினையறுதுறக்கநாடு' என்றார்; இதனை, இடத்துநிகழ்பொருளை இடத்தின்மேலேற்றிக் கூறிய உபசாரவழக் கென்க. பி - ம்:—[1] ஈனமலர்க் குழலார்மைந்தர் நறுமலர். (க)

உ.—மகளிர் விளையாடுமாறு நீரில்மூழ்கியதன் வருணனை.

அங்கவர் பண்ணை நன்னீ ராடுவா னமைந்த தோற்றங்
கங்கைவார் சடையோ னன்ன மாமுனி கனல மேனாண்
[1]மங்கையர் கூட்டத் தோடும் வானவர்க் கிறைவன் செல்வம்
[2]பொங்குபாற் கடலிற் செல்லுந் தோற்றமே போன்ற தன்றே.

(இ - ள்.) அங்கு - அந்தநீர்நிலையினிடத்து, அவர் - அந்த ஆடவரும் மகளிரும், நல் நீர் பண்ணை - நல்ல நீர்விளையாட்டை, ஆடுவான் - செய்வதற்கு, அமைந்த - பொருந்திய, தோற்றம் - காட்சியானது,—மேல் நாள் - முற்காலத்தில், கங்கை வார் சடையோன் அன்ன மா முனி - கங்காநதி பெருகுதற்குக்காரணமான சடைமுடியையுடைய சிவபிரானையொத்த துருவாசமுனிவன், கனல - கோபித்ததனால், வானவர்க்கு இறைவன் செல்வம் மங்கையர் கூட்டத்தோடும் பொங்கு பாற்கடலில் செல்லும் - தேவர்கட்குத்தலைவனான இந்திரனது ஐசுவரியமெல்லாம் தேவமாதராகிய அரம்பையரின் கூட்டத்துடனே(பலவளங்களும்)மிகுந்த திருப்பாற்கடலிலேசென்று சேர்கின்ற, தோற்றம் - காட்சியை, போன்றது - ஒத்தது; (எ - று.)— அன்றே - தேற்றம்: ஈற்றசையுமாம்.

அணிகலங்களையணிந்தவராய்த் தேவமாதரையொத்த மடவார் நீரில் மூழ்கியது, துருவாசமுனிவனுடைய சாபத்தால் தேவேந்திரனதுசெல்வம் கடலிற்புக்கொளித்தபோது தேவமங்கையர்கூட்டம் பாற்கடலிற்புக்கொளித்ததைப் போலு மென்றவாறு;தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]மங்கைமார் செல்வத்தோடும். [2]பொங்குமாகடலுள். (உ)

ந.—மாதர்களின் கண்களும் முகங்களும், நீர்நிலையிற் குவளைமலர்களும் தாமரைமலர்களும்.

மையவாங் குவளை யெல்லா மாதர்கண் மலர்கள் பூத்த
[1]கையவா முருவத் தார்தங் கண்மலர் குவளை பூத்த
செய்யதா மரைக ளெல்லாந் தெரிவையர் முகங்கள் பூத்த
தையலார் முகங்கள் செய்ய தாமரை பூத்த வன்றே.

(இ-ள்.) மை அவாம் குவளை எல்லாம்-கருமைநிறம்பொருந்திய குவளை மலர்களெல்லாம், மாதர் கண் மலர்கள் பூத்த-அம்மடந்தைமாரின் கண்மலர்களைப்போலப் பூத்தன; கைய ஆம் உருவத்தார்தம் கண் - அலங்காரத்தையுடையனவாகிய உருவங்களையுடைய அம்மடந்தைமாரின் கண்கள், மலர் குவளை பூத்த - மலர்ந்துள்ளகுவளைமலர்கள்போல விளங்கின; செய்ய தாமரைகள் எல்லாம் - செந்தாமரைமலர்களெல்லாம், தெரிவையர் முகங்கள்

பூத்த - மடந்தையரின்முகங்களைப்போலப் பூத்தன; தையலார் முகங்கள் - அம்மாதர்களுடைய முகங்கள், செய்ய தாமரை பூத்த - செந்தாமரை மலர் போல விளங்கின; (எ - று.)—அன்றே - தேற்றம்.

குவளைமலர் மடந்தைமாரின்கண்களைப்போல் தோன்ற, மடந்தைமாரின் கண்கள் குவளைமலர்போலத் தோன்றினஎன்பது முன்னிரண்டடிகளிலும், தாமரைமலர்கள் மடந்தைமாரின்முகங்கள்போ லிருக்க, மடந்தைமாரின்முகங்கள் தாமரைமலர்கள்போலவிளங்கினஎன்பது பின்னிரண்டடிகளிலும் கூறியபொருள்: இங்ஙனம் இந்தச்செய்யுளில், உபமேயஉபமானங்களை ஒன்றற்குஒன்று உபமானஉபமேயங்களாகச் சொல்லியது உபமேயோபமாலங்காரம்; இதனை - புகழ்பொருளுவமை யென்றும், இதரேதரமென்றுங் கூறுவர்: இங்ஙனம்கூறுவது, வேறே உபமானங்கள் கிடையாஎன்று தெரிவிப்பதன்மூலமாக வர்ணியங்களான கண் முதலியவற்றின் சிறப்பைத் தெரிவிக்கும். அவாம்=அவாவும். மைய என்றும்பிரிக்கலாம். கை அவாம் என்றுபிரித்து-(சாமுத்திரிக நூலிற்கூறியுள்ள) ஒழுங்கைக்கொண்டுள்ள என்றும் உரைகூறுவர். பி - ம்:—[1]கையவாம்புயத்தார். (௩)

௪.—இதுமுதல் எட்டுக்கவிகள்—ஒருதொடர்: மகளிர்களின் நீர்விளையாட்டுச்செயலை விவரிக்கும்.

தாளையேய் கமலத் தாளின் மார்புறத் தழுவு வாருந்
தோளையே பற்றி வெற்றித் [1]திருவெனத் தோன்று வாரும்
[2]பாளையே விரிந்த தென்னப் பரந்துநீ ருந்து வாரும்
வாளைமீ னுகள வஞ்சி மைந்தரைத் தழுவு வாரும்.

(இ - ள்.) தாளை ஏய் - நாளத்தைப்பொருந்திய, கமலத்தாளின் - தாமரைமலரில்வாழுந் திருமகள்போல, மார்பு உற தழுவுவார்உம்-(தமது) கணவனுடைய மார்பகத்தையழுந்தத் தழுவிநிற்பவரும்,—தோளை ஏ பற்றி -(தம் கணவனுடைய) தோள்களையே பிடித்துக்கொண்டு, வெற்றி திரு என தோன்றுவார்உம்-வெற்றிக்குஉரிய திருமகளைப்போலக் காணப்படுபவரும்,-பாளை ஏ விரிந்தது என்ன - பாளைவிரிந்தாற்போல, பரந்து நீர் உந்துவார் உம் - பரவிவிழுமாறு நீரை முகந்துவீசுவாரும்,—வாளை மீன் உகள - வாளைமீன்கள் துள்ள, அஞ்சி - பயந்து, மைந்தரை - (தமது) கணவரை, தழுவுவார்உம் - தழுவிக்கொள்பவரும்,—(எ - று.)

சிலமகளிர் கணவர்மார்பைத் தழுவிநின்றதனால் இலக்குமியையும், சிலமகளிர் ஆடவர்தோளைப்பற்றி நிற்றலால், வெற்றித்திருவையும் போல்வரென்க. முதலடிக்கு, தாளைஏய் - (தமது) பாதங்களையொத்த, கமலம் - தாமரையை, தாளின் - (அம்மலரின்) நாளத்தில், மார்புஉற (தமது)மார்பு பொருந்த, தழுவுவாரும் என்று பொருள்கூறுவாரும் உளர். நீரைப் பரவ இறைக்கும்போது பாளை மலர்ந்து நிற்பதுபோலத் தோன்றும். அஞ்சும் இயல்பினராதலால், வாளைமீன் அருகில்துள்ளவும் மகளிர் ஆடவரைத் தழுவினர். பி - ம்:—[1]திருவுற. [2]பாளைவீ. (௪)

ரு. வண்டுணக் கமழுஞ் சுண்ணம் வாசநெய் நானத் தோடுங்
கொண்டெதிர் வீசு வாருங் கோதைகொண் டோச்சு வாருந்
தொண்டைவாய்ப் பெய்து தூநீர் கொழுநர்மேற்[1] றூகின் றாரும்
புண்டரீ கக்[2]கை கூப்பிப் புனல்[3]முகந் தெறிகின் றாரும்.

(இ - ள்.) வண்டு உண கமழும் - வண்டுகள் மேல்விழுந்துண்ணும்படி நறுமணம்வீசுகிற, சுண்ணம் - வாசனைச்சுண்ணத்தை, வாசம் நெய் நானத் தோடும் கொண்டு-நறுமணமுள்ள புழுகுதைலத்துடனே கஸ்தூரியையும் கொண்டு, எதிர் வீசுவார்உம் - எதிர்க்கெதிராகத் தூவுவாரும், கோதை கொண்டு ஓச்சுவார்உம் - மலர்மாலையைக்கொண்டு வீசுவாரும்,—தூ நீர்-பரிசுத்தமான நீரை, தொண்டைவாய் பெய்து -கோவைக்கனிபோன்ற (தமது) வாயிலே சேர்த்து, கொழுநர்மேல் - (தமது)கணவர்மேல், தூகின்றார்உம் - தூவுகின்றவரும்,— புண்டரீகம் கை கூப்பி - தாமரைமலர்போன்ற (தமது) கைகளை (ஒருசார்) குவித்து, புனல் முகந்து - நீரைமொண்டெடுத்து, எறிகின்றார்உம் - (பிறர்மீது)எறிகின்றவர்களும்,—(எ - று.)

புனல்விளையாட்டில் ஒருவர்மீதுஒருவர் சுண்ணம்முதலியவற்றைத் தூவி மாறுபடுதலும், இயற்கை. இதனை, "கண்ணிகொண்டெறிய பஞ்சிக் காறளர்ந்தசைந்துசோர்வார், சுண்ணமுஞ்சாந்தும்வீழத் தொழுதனரிரந்து நிற்பா, ரொண்மலர்மாலையோச்ச வொசிந்துகண்பிறழ வொல்கி, வெண்ணெயிற்குழைந்துநிற்பார் வேற்கணாரயினாரே" என்ற சிந்தாமணியாலும் அறிக. தொண்டைஎன்பதற்கு-நீர்தூவுகருவியின் தொண்டைவரையிலும் என்று உரைத்தலும் ஒன்று. பி - ம்:—[1] தூக்கின்றாரும், தூர்க்கின்றாரும். [2] கை கூட்டி. [3] முகத்திறைக்கின்றாரும். (ரு)

சு * மின்னொத்த விடையி னாரும் [1]வேயொத்த தோளி னாருஞ்
சின்னத்தி னளக பந்தி திருமுக மறைப்ப நீக்கி
யன்னத்தை [2]வருதி யென்னோ டாடவென் றழைக்கின் றாரும்
பொன்னொத்த முலையின் வந்து பூவொற்ற வுளைகின் றாரும்.

(இ - ள்.) மின் ஒத்த இடையினார்உம் - மின்னலையொத்த [நுண்ணியவாய் ஒல்கியொசியுந்தன்மையுள்ள] இடையையுடையவரும், வேய் ஒத்த தோளினார்உம்-இளமூங்கிலையொத்து(ப் பசியவாய்நெய்த்துச்சுற்றுத்திரண்டு)ள்ள தோளையுடையவருமாகிய சிலமகளிர்,—சின்னத்தின் அளகம் பந்தி திருமுகம் மறைப்ப - விடுபூவையணிந்த மயிர்த்தொகுதி (தமது) அழகிய முகத்தை (நீரில் மூழ்கியெழுந்திருக்கையில்) மறைத்ததாக,நீக்கி - (அதனை) விலக்கி, அன்னத்தை என்னோடு ஆட வருதி என்று அழைக்கின்றார்உம் - (அருகில்வாழும்) அன்னப்பறவையைப்பார்த்து 'என்னோடு விளையாடுமாறு வருவாயாக' என்று அழைக்கின்றவரும், பொன் ஒத்த முலையின் பூ வந்து ஒற்ற உளைகின்றார்உம் - (சுணங்குபரந்திருத்தலாற்) பொன்னிறத்தைக் கொண்ட தனங்களின்மீது நீர்மலர்கள்வந்து பட (அவற்றையுந்தாங்கமாட்டாது) வருந்துகின்றவர்களும்,— (எ - று.)

மகளிருடையஇடைமுதலிய உறுப்புக்களில் ஈடுபட்டுப் புனல்விளையாட்டயர்கின்ற ஆடவர்மொழியைத் தம்மொழியாகக்கொண்டு, கவி 'மின்னொத்தவிடையினரும் வேயொத்ததோளினரும்' என்றார். இங்ஙனம்கொள்ளாது 'அம்மகளிரிற் சிலர் இடையொன்றுமே சிறந்தவர், சிலர் தோளொன்றுமே சிறந்தவர்' என்ற கருத்தினாற் கவி கூறினாரல்லர். வந்து-சொல்விழுக்காட்டால்வந்தது: அசையென்னலாம். புனல்விளையாட்டை நிகழ்த்துதையில் ஆங்குள்ள நீர்ப்பூக்கள் தமது தனங்களின்மீதுபடினும் அதனையும் ஆற்றாதவரென, அம்மடந்தைமாரின் மென்மையை விளக்கியபடி. பி - ம்:—[1]விடமொத்தவிழியினரும். [2]வருகவென்ன. (சு)

எ. [1]பண்ணுளர் பவளத் தொண்டை பங்கயம் பூத்த தன்ன
வண்ண [2]வாய்க் குவளை யொண்கண் மருங்கிலாக் கரும்பி னன்னா
ருண்ணிறை கயலை நோக்கி யோடுநீர்த் தடங்கட் கெல்லாங்
கண்ணுள வாங்கொ லென்று கணவரை வினவு வாரும்.

(இ - ள்.) பண் உளர் - இசையைப் பயில்கின்ற, பவளம் தொண்டை பங்கயம் பூத்தது அன்ன - பவளத்தையும் கொவ்வைக்கனியையும் மலர்ந்ததான தாமரையையு மொத்துள்ள, வண்ணம் வாய் - அழகிய வாயையும், குவளை ஒண் கண் - கருங்குவளைமலர்போன்ற அழகிய கண்களையுமுடைய, மருங்கு இலா-இடையற்றவர்போன்றுள்ள [நுண்ணியஇடையைப்பெற்றுள்ள], கரும்பின் அன்னார் - கரும்பைப்போன்று (தங்கணவர்க்கு) இனிமைபயப்பவரான (சில) மாதர்கள்,—உள் நிறை கயலை நோக்கி - (தடாகத்தின்) உட்புறத்திலேவாழ்கின்ற கயல்மீன்களைப் பார்த்து, ஓடும் நீர் தடங்கட்கு எல்லாம் - ஓடுந்தன்மையுள்ள நீரைக்கொண்ட தடாகங்களுக்கெல்லாம், கண் உள ஆம் கொல் என்று—(மனிதரைப்போலக்) கண்கள் உள்ளனவோ? என்று, கணவரை - (தமது) கணவரை, வினவுவாரும் - கேட்பவர்களும்,—(எ - று.)

தடாகங்களில் உலவுங் கயல்மீன்களைப்பார்த்த மகளிர் அக்கயல்மீன்களைக் கண்களென்று எண்ணினாராய் "பேதைமையென்பது மாதர்க்கணிகலம்" என்பதற்குஏற்பத் தமதுபேதைமைக்குணந் தோன்றுமாறு, தம் கணவரை நோக்கி, 'நீர்த்தடங்கட்கெல்லாங் கண்ணுளவாங்கொல்' என்று வினாவின ரென்க. நீர்க்கு 'ஓடும்' என்ற அடைமொழிகொடுத்தது, அதன் இயற்கைத்தன்மையை விளக்கவென்க. பி - ம்:—[1]பண்ணுள. [2]வாட்குவளையொண்கண், வாய்க்குவளைவாட்கண். (எ)

அ. *[1]தேனகு நறவ மாலை செறிகுழற் றெய்வ [2]மன்னா
டனுடைக் கோல மேனி தடத்திடைத் தோன்ற நோக்கி
நானக நகுகின் றாளிந் நன்னுத றோழி யாமென்
றானமில் [3]முலையி னார முளங்குளிர்ந் [4]துதவு வாளும்.

(இ - ள்.) தேன் நகும் நறவம் மாலை - வண்டுகள் மகிழ்வதற்குக் காரணமான தேனையுடைய மலர்மாலையை யணிந்த, செறி குழல் - அடர்ந்த

கூந்தலையுடைய, தெய்வம் அன்னாள் - தேவமகளையொத்த ஓர் மங்கை, தான்உடை - தான்கொண்ட, கோலம் மேனி - அழகிய உடம்பு, தடத்திடை தோன்ற - தடாகத்தின்நீரில் பிரதிபிம்பித்துக்காணப்பட, நோக்கி - (அதனைப்)பார்த்து, (அவ்வுருவத்தை அங்கேவாழ்கின்ற ஒரு மடந்தையின் உருவமென்றுநினைந்து), இ நல் நுதல் நான் நக நகுகின்றாள் தோழிஆம் என்று - இங்கே காணப்படுகின்ற இந்த அழகியநெற்றியை யுடையபெண் நான் சிரிக்கும்போது(தானும்)சிரிக்கின்றாளாதலால் என்தோழியாவ ளென்றுசொல்லி, உளம் குளிர்ந்து - மனமுவந்து, ஊனம் இல் முலையின் ஆரம் - குற்றமற்ற முலைமீதணிந்துள்ள முத்தாகாரத்தை,உதவுவாள்உம்-கொடுக்கின்றவளும்,—

நீரில்தோன்றும் தனதுபிரதிபிம்பத்தைக் கண்ட ஒருத்தி அவ்வுருவம் தான் சிரிக்கும்போது சிரித்தவண்ணம் நிற்பதாலும், தாம் மகிழ்ந்தபோது தாமும் மகிழ்ச்சிகொள்வது நட்புக்குஇலக்கணமாதலாலும், அந்தப்பிரதிபிம்பத்தை அங்ஙனமுள்ள தோழியாகக்கொண்டு தனதுமுத்தாகாரத்தை அவ்வுருவத்துக்கு மனமுவந்து உதவலாயினளென்க. பி - ம்:—[1]தேனுகு. [2]அன்னார். [3]விலையின். [4]உதவுவாரும். (அ)

கூ. குண்டலந் திருவில் வீசக் குலமணி யார மின்ன
[1]விண்டொடர் வரையின் வைகு மென்மயிற் கணங்கள் போல
[2]வண்டுழல் கோதை மாதர் மைந்தர்தம் வயிரத் திண்டோட்
டண்டுக டழுவு [3]மாசைப் புனற்கரை [4]சார்கின் றாரும்.

(இ - ள்.) வண்டு உழல்-வண்டுகள் சுழல்வதற்குக்காரணமான, கோதை-மலர்மாலையையணிந்த, மாதர் - மகளிர்,—மைந்தர்தம் வயிரம் திண் தோள் தண்டுகள் தழுவும் ஆசை - (தம்)கணவருடைய உறுதியான வலிய தண்டாயுதம்போன்ற தோள்களைத் தழுவவேணுமென்ற விருப்பத்தினால், விண் தொடர் வரையின் வைகும் மெல் மயில் கணங்கள் போல - வானத்தை யளாவுகின்ற மலையிலே தங்குந்தன்மையுள்ள மெல்லிய மயில்களின்கூட்டம் செல்வதுபோல,—குண்டலம் திரு வில் வீச-(தமது செவியிலணிந்த) குண்டலங்கள் அழகிய ஒளியை வீசவும், குலம் மணி ஆரம் மின்ன - சிறந்தமுத்துக்களினாலியன்ற ஆரங்கள் (மார்பிற்) பிரகாசிக்கவும், புனல் கரை சார்கின்றார்உம் - நீர்நிலையின் கரையைநோக்கி நடந்துசேர்பவர்களும்,—(எ - று.)

மாதர்கள் தமதுகணவரதுதோளைத் தழுவவேணுமென்ற விருப்பத்தால் புனற்கரையிலுள்ள அவரைநோக்கி மயிற்கணங்கள் செல்வதுபோலத் தோன்றுமாறு நடந்துசென்றனர்; அவ்வாறுசெல்கையில், அவர்கள் செவியிலணிந்திருந்த குண்டலங்கள் வில்வீச, மார்பிலணிந்த ஆரங்கள் மின்னலாயினவென்க. வரையின்வைகும் என்பது, மயிற்கணங்களுக்கு இயற்கையடைமொழி: மயில் குறிஞ்சிநிலப்பறவையாதலின் இவ்வாறு கூறினர். இனி, புனற்கரை மலைபோலு மென்றுகொண்டு, வரையின்வைகும் மயிற்கணங்கள்போலத்தோன்றுமாறு தங்கணவரின் தோளைத் தழுவும்படி புனற்கரையில் மகளிர் சேரலாயின ரென்ற கருத்துப்படப் பொருள் கூறலுமாம். பி - ம்:—[1]விண்டொடு. [2]வண்டொளிர். [3]ஆசையாற்கரை. [4]சார்கிலாரும். (கூ)

கo. அங்கிடை யுற்ற குற்றம் யாவதென் றறித <sup>1</sup>தேற்றுஞ்
செங்கய லனைய நாட்டஞ் சிவப்புறச் சீறிப் போன
மங்கையோர் கமலச் சூழன் மறைந்தனண் மறைய மைந்தன்
பங்கய முகமென் [2]றோரா னையுற்றுப் [3]பார்க்கின் றானும்.

(இ - ள்.) அங்கு - அவ்விடத்துநிகழ்ந்த புனல்விளையாட்டில், இடை - நடுவே, உற்ற - (கணவனால்) நேர்ந்த, குற்றம் - தவறு, யாவது என்று - எது என்று, அறிதல் தேற்றும் - தெளிவாகஅறியமாட்டோம்: (அங்ஙனமிருக்கையில்), செம் கயல் அனைய நாட்டம் - செவ்வரிபரந்த கயல்மீனையொத்த கண்கள், சிவப்பு உற - முழுதுஞ்செந்நிறமாகும்படி, சீறி போன - சினங்கொண்டு சென்ற, மங்கை - ஒருபெண், ஓர் கமலம் சூழல் - தாமரைமலர்நிறைந்த ஓரிடத்தில், மறைந்தனள் - மறைந்திருந்தாள்; மறைய - (அங்ஙனம்) மறைந்திருந்தாளாக, மைந்தன் - (அவளுடைய) கணவன், பங்கயம் முகம் என்று ஓரான் - '(இது) தாமரை, (இது நமதுமனைவியின்) முகம்' என்று ஆராய்ந்து நிச்சயிக்க முடியாதவனாய், ஐயுற்று - ஐயங்கொண்டு, பார்க்கின்றான் உம்,—

ஒருமங்கை இன்னகாரணத்திற்காகச் சினந்தா ளென்று எவராலுந் தெரிந்துகொள்ளமுடியாதபடி திடீரென்று சினங்கொண்டு தாமரைநிறையப்பூத்தவிடத்தில் மறைந்துநிற்க, அவளை நாடி ஆங்குச்சென்ற கணவன் தன்மனைவியின்முகத்துக்கும் தாமரைமலர்க்கும் வேற்றுமைதெரியாமையால் தயங்கலாயின னென்க. 'மாதர் பங்கயமுகமென்றோராதையுற்றுப்பார்க்கின்றாரும்' என்று பாடம் இருப்பின், இதுவும் மகளிரையே கூறியதாகி முன்பின்பாடலோடு ஒத்துநிற்கும். பார்க்கின்றானல் என்று முற்றாகப் பாடம் காணப்படுவது பொருத்தமற்றதாகத்தோன்றுகின்றது. பி-ம்:— [1]தேற்றா. [2]ஓராது. [3]பார்க்கின்றாரும். (கo)

கக.* பொற்றொடி தளிர்க்கைச் சங்கம் வண்டொடு புலம்பி யார்ப்ப
[1]யெற்றுநீர் குடையுந் தோறு மேந்துபே ரல்கு னின்று
கற்றைமே கலைக ணீங்கிச் சிறடி கவ்வக் காலிற்
சுற்றிய நாக மென்று துணுக்கத்தாற் [2]றுடிக்கின் றாரும்.

(இ - ள்.) தளிர் கை பொன் தொடி சங்கம் - தளிர்போன்ற கைகளிலணிந்த பொன்னாலியன்ற தொடிகளும் சங்கவளையல்களும், வண்டொடு - (அணிந்துள்ள மலர்மாலைகளில் மொய்க்கின்ற) வண்டுகளுடனே, புலம்பி ஆர்ப்ப - மாறுபட்டு ஆரவாரிக்க, எற்றும் நீர் - அலைமோதுகின்ற நீரிலே, குடையும் தோறுஉம் - மூழ்கும்போதெல்லாம், ஏந்து பேர் அல்குல் நின்று - உயர்ந்தபெரிய நிதம்பங்களிலிருந்து, கற்றை மேகலைகள் நீங்கி - தொகுதியாகிய [பலகோவையாகவுள்ள] மேகலையென்றஇடையணிகள் நழுவிவிழுந்து, சிறு அடி கவ்வ - (தமது) சிறியபாதங்களைக் கதுவும்போது, காலில் சுற்றிய நாகம் என்று - (தமது) பாதங்களிற் சுற்றிக்கொண்ட பாம்பென்று கருதி, துணுக்கத்தால் - பேரச்சத்தினால், துடிக்கின்றார் உம் - நடுங்குகின்றவர்களும், (ஆயினார்கள்); எ - று.)

சிலமகளிர், தாம் நீரிற்குடைகையில் தமது இடையிலணிந்திருந்த மேக லைகள்நழுவிக் காலைக்கௌவத் தம்மை அரவம்கவ்வியதென்றுகருதிப் பேர ச்சங்கொண்டு நடுங்கலாயின ரென்க; மயக்கவணி. நான்காம் பாடல் முதல் தழுவுவாரும் முதலியனவாகவந்த உம்மீற்றுஉயர்திணைச்சொற்களை இந்தப் பாடல்வரையிற் சேர்த்து, ஒருமுடிபு கொடுத்து முடிக்க. பி - ம்:—[1]எற்றி. [2]துவள்கின்றாரும். (கக)

கஉ.—மூன்றுகவிகள் - மகளிர்சூழநின்ற ஆண்மகன் வருணனை.

குடைந்துநீ ராடு மாதர் குழாம்புடை சூழ வாழித்
தடம்புயம் பொலிய வாண்டோர் தார்கெழு வேந்த னின்றான்
கடைந்தநா ளமிழ்தி னோடுங் கடலிடை வந்து தோன்று
மடந்தையர் சூழ நின்ற [1]மந்தரம் போல மாதோ.

(இ - ள்.) கடைந்த நாள் - (அமுதம் எழவேணுமென்று) கடைந்த காலத்தில், கடலிடை அமிழ்தினோடும் வந்து தோன்றும் - திருப்பாற்கட லின் நடுவிலே அமிர்தத்தோடு எழுந்துதோன்றிய, மடந்தையர் - தேவமங் கையர், சூழ நின்ற-(தன்னைச்)சுற்றிலுமிருக்க ஓங்கிநின்ற, மந்தரம் போல - மந்தரபர்வதத்தைப்போல,—ஆண்டு - அவ்விடத்தில், ஆழி தடம் புயம் பொ லிய - வட்டவடிவாகிய அங்கதத்தையணிந்த பெரிய புயங்கள் பொலிவு பெறுமாறு, தார் கெழு ஓர் வேந்தன் - மாலைவிளங்கப்பெற்ற ஓரரசன், நீர் குடைந்து ஆடும் மாதர் குழாம் புடை சூழ - நீரில்மூழ்கி விளையாடல்புரி கின்ற மகளிரின்கூட்டம்(தன்)பக்கமெல்லாஞ் சூழ்ந்துநிற்க, நின்றான்—; ()

வாசுகியென்னுங் கடைகயிற்றினாற் சுற்றப்பட்ட மந்தரமலைக்கு அங்க தம்பூண்ட வேந்தனும், அம்மலையைச்சூழ்ந்து நின்ற தெய்வமகளிர்க்கு அவ் வேந்தனைச்சூழ்ந்துநின்ற மானிடமகளிரும் உவமையாவர். ஆழி - வட்ட வடிவமாகிய தோள்வளைக்கு ஆகுபெயர். 'வாழி'எனஎடுத்து அசையெனக் கூறலுமாம். பி - ம்:—[1]மந்தரமலையும் போன்றான். (கஉ)

கந. தொடியுலாங் கமலச் செங்கை தூநகை துவர்த்த செவ்வாய்க்
கொடியுலா [1]மருங்கு னல்லார் குழாத்தொரு குரிசி னின்றான்
கடியுலாங் கமல வேலிக் கண்ணகன் [2]கானி யாற்றுப்
பிடியெலாஞ் சூழ நின்ற பெய்ம்மத யானை யொத்தான்.

(இ - ள்.) தொடி உலாம் - தொடியெனப்படும் வளையலை யணிந்த, கம லம் செம் கை - தாமரைமலர்போன்ற அழகிய [அல்லது சிவந்த]கைகளை யும், தூ நகை துவர்த்த செவ் வாய் - வெண்ணிறமமைந்த சிரிப்புடன் கூடிய மிகச்சிவந்த வாயையும், கொடி உலாம் மருங்குல் - படர்கொடியை யொத்த இடையையுமுடைய, நல்லார் - மகளிருடைய, குழாத்து - கூட்டத் திலே, நின்றான் - நின்றவனாகிய, ஒரு குரிசில் - ஒப்பற்ற அரசனொருவன்,— கடி உலாம் கமலம் வேலி - வாசனைவீசுகின்ற தாமரைக்கொடி வேலி யாக அமையப்பெற்ற, கண் அகல் கான் யாற்று - இடமகன்ற காட்டாற்

றிலே, பிடி எலாம் சூழ நின்ற - பெண்யானைகள் பலவும் (தன்னைச்)சூழ்ந் திருக்கத்(தான்)தனியேயுள்ள, மதம் பெய் யானை - மதமொழுகப்பெற்ற ஆண்யானையை, ஒத்தான் - போன்றான்:(எ - று.)

நீர்நிலையில் மகளிர்சூழநின்ற குரிசிலுக்கு, காட்டாற்றிலே பெண் யானைகள் சூழநின்ற ஆண்யானை உவமை யென்க. தூய்மையென்ற பல்லின் குணம் அப்பற்களின்தொழிலாகிய நகையின்மேலேற்றிக் கூறப்பட்டது. பி - ம்:—[1]மருங்குலார்தம். [2]கானயாற்று. (கங)

கச. கானமா மயில்க ளெல்லாங் களிகெடக் களிக்குஞ் சாயற்
சோனைவார் குழலி னார்தங் குழாத்தொரு தோன்ற னின்றான்
வானயா றதனை நண்ணி வயின்வயின் வயங்கித் தோன்று
மீனெலாஞ் சூழ நின்ற விரிகதிர்த் திங்க ளொத்தான்.

(இ - ள்.) கானம் மா மயில்கள் எல்லாம் - காட்டில் வசிக்குந்தன்மையுள்ள மயில்கள் யாவும், களி கெட - (தமது)மதக்களிப்பு ஒழியும்படி, களிக்கும் - செருக்குவதற்குக்காரணமான, சாயல் - சாயலையுடைய, சோனை வார் குழலினார்தம் - இடைவிடாது மழைபொழிகின்ற காளமேகம்போன்ற நீண்ட கூந்தலையுடைய மகளிரின், குழாத்து - கூட்டத்தில், நின்றான் - நின்றவனாகிய, ஒரு தோன்றல் - ஓரரசன்,—வானம் யாறு அதனை நண்ணி - ஆகாயகங்காநதியைச் சார்ந்து, வயின் வயின் வயங்கி தோன்றும் - (அவ்வாகாய கங்காநதியின்) பலவிடங்களில் விளங்கித்தோன்றுகின்ற, மீன் எலாம் சூழ நின்ற-பலநட்சத்திரங்கள் சூழப்பெற்றுள்ள, விரி கதிர் திங்கள்- பரந்த கிரணங்களையுடைய சந்திரனை, ஒத்தான்—;(எ - று.)

பலமகளிர்சூழ நீர்நிலையில்நிற்கின்ற வேந்தனுக்கு - ஆகாயகங்காநதியைச்சார்ந்து அவ்விடத்துப் பலநட்சத்திரங்கள்சூழ விளங்குஞ் சந்திரனையும் உவமைகூறினர். சோனை - இடைவிடாது மழைபொழியுங் காளமேகம். வானயாறு எனவந்ததனால், வயின்வயினென்பதற்கு - அவ்யாற்றின் பலவிடங்களி லென்க. (கச)

கரு.—பலமகளிரினிடையே சிறந்துதோன்றும் ஒருத்தியின் வருணனை.

மேவலாந் தகைமைத் தல்லால் வேழவிற் றடக்கை வீரற்
கேவெலாங் காட்டு கின்ற விணைநெடுங் கண்ணொ ரேழை
பாவைமார் [1]பயந்த கோலப் பண்ணையிற் பொலிவாள் வண்ணப்
பூவெலா மலர்ந்த பொய்கைத் தாமரை பொலிவ தொத்தாள்.

(இ - ள்.) வேழம் வில் தட கை வீரற்கு - கரும்புவில்லைக்கொண்ட பெரிய கைகளையுடைய மகாவீரனாகிய மன்மதனுக்கு,(உரிய), மேவல் ஆம் தகைமைத்து அல்லால் - விருப்பமாகியகுணம்மாத்திரமல்லாமல், ஏ எலாம்- அம்புகளெல்லாவற்றையும், காட்டுகின்ற - தருகின்ற, இணை நெடு கண்- இரட்டையாகிய நீண்டகண்களையுடைய, ஓர் ஏழை - மடந்தையொருத்தி, பாவைமார் பயந்த கோலம்-வண்ணமகளிர் அலங்கரித்த அழகிய அலங்காரத்தோடு கூடிய, பண்ணையில் - மகளிர்கூட்டத்திற்குள், பொலிவாள் -

விளங்குபவளாய்,—வண்ணம் பூ எலாம் மலர்ந்த - அழகிய (குவளை செய்தல் முதலிய) நீர்ப்பூக்கள் பலவும் மலர்ந்துள்ள, பொய்கை - தடாகத்திலே, தாமரை - தாமரைமலர்,பொலிவது-விளங்குவதை, ஒத்தாள்—; (எ - று.)

ஆங்கு மகளிர்கூட்டத்துள் ஒருத்தி மிகச்சிறந்துவிளங்கித் தோன்றிய தற்கு, பொய்கையில் நீர்ப்பூக்கள்பலவற்றினிடையே தாமரைமலர் விளங்கு வதை உவமைகூறினர். தம்முடைய வலையிற்பட்டவர்க்குக் காமத்தை யுண்டாக்குவதனோடு நில்லாமல் மன்மதனுடைய பஞ்சபாணங்களின் செய லையும் செய்யவல்ல கண்களையுடையா ளென்பார் 'மேவலாந்தகைமைத் தல்லால் . . . ஏவெலாங்காட்டுகின்ற . ., கண்ணொரேழை' என்றார்.மேவல்-காமம். தகைமைத்து,து - பகுதிப்பொருள்விகுதி. வேழமென்பது - கரும்பு என்ற பொருளுமுடையதாதலை "குஞ்சரமுங் கொறுக்கைச்சிப்பெயரும், இசையுங் கரும்பு மூங்கிலும் வேழம்"என்ற நிகண்டினாலும் அறிக. மன்மத னுக்கு அரவிந்தம்முதலியஐந்தும் அம்பாமென்பதையும், அவற்றின் செயல் இவையென்பதையும் "நினைக்கு மரவிந்த நீள்பசலை மாம்பூ, அனைத்துணவு நீக்கு மசோகு—வனத்திலுறு, முல்லை கிடைகாட்டு மாதே முழுநீலங், கொல்லு மதனம்பின் குணம்" என்ற இரத்தினச்சுருக்கத்தா லறியலாம். மன் மதனை வீரனென்றது - தான் ஒருவனாகிக் கருப்புவில்லையும் மலரம்புகளை யுங்கொண்டு அஞ்சாதநெஞ்சுபடைத்தபெருவீரரையும்வெல்லுதலாலென்க. பயத்தல் என்ற வினை - இலக்கணையால், அலங்கரித்தல்என்ற பொருளைத் தந்தது. பி - ம்:—[1]பரந்த. (கரு)

கசுா.—நீரிடைத்தோன்றும் மகளிரின்முகம்.

மிடலுடைக் கொடிய வேலே யென்னவாண் மிளிர்வ வென்னச்
சுடர்முகத் துலாவு கண்ணு டோகையர் சூழ நின்றாண்
மடலுடைப் போது காட்டும் வளர்கொடி பலவுஞ் சூழக்
கடலிடைத் தோன்று மென்பூங் கற்பக வல்லி யொத்தாள்.

(இ - ள்.) மிடல் உடை கொடிய வேல்ஏ என்ன - வலிமையையுடைய கொடிய வேற்படையேயாகும் இவை என்று சொல்லும்படியும், மிளிர்வ வாள் என்ன - விளங்குவனவாகிய வாட்படையேயாகும் இவை யென்று சொல்லுமாறும், சுடர் முகத்து உலவு கண்ணாள் - விளங்குகின்ற முகத் திலே பிறழ்ந்துதோன்றுகின்ற கண்களையுடையவளாகி, தோகையர் சூழ நின்றாள் - மயில்போன்ற சாயலையுடைய தோழிமாராற் சூழப்பெற்றுநின்ற ஒருமாது,—மடல் உடை போது காட்டும் வளர் கொடி பலஉம் சூழ - இதழ் களையுடைய மலர்களைத் தோற்றுவிப்பனவான வளருந்தன்மையுள்ள பல கொடிகளும் சூழ்ந்திருக்க, கடலிடை தோன்றும் - பாற்கடலிலிருந்து வெளிவந்த, மெல் பூ கற்பகவல்லி - மெல்லியமலர்களைக்கொண்ட காமவல் லியை, ஒத்தாள்—; (எ - று.)

பார்வை ஆடவர்மார்பி லூடுருவிச்சென்று பெருவருத்தம் விளைத்தல் பற்றி வேற்படையும், தோற்றத்தில் வாளலகுபோலிருந்து ஆடவர்க்கு

வருத்தம் விளைத்தல்பற்றி வாட்படையும், மடவார்கண்களுக்கு உவமையாகும். தோகையர் சூழ நின்றவளுக்கு, வளர்கொடிபலவுஞ்சூழ்ந்த காமவல்லி இல்பொருளுவமையாம். (கசு)

கஎ — நீரில்மூழ்கிய ஒருமாதின் வருணனை.

*தேரிடைக் கொண்ட வல்குற் றெங்கிடைக் கொண்ட கொங்கை
யாரிடைச் சென்றுங் கொள்ள வொண்கிலா வழகுங் கொண்டாள்
வாரிடைத் தனமீ தாட மூழ்கினாள் வதன மைதீர்
நீரிடைத் தோன்றுந் திங்க ணிழலெனப் பொலிந்த தன்றே.

(இ-ள்.) தேர் இடை கொண்ட அல்குல் - தேரினிடத்தினின்று எடுத்துக்கொண்ட அல்குலையும், தெங்கு இடை கொண்ட கொங்கை-தென்னமரத்திலிருந்து எடுத்துக்கொண்ட தனங்களையும், ஆரிடை சென்றும் கொள்ள ஒண்கிலா அழகும் - எவரிடத்திற்போனாலும் கொள்ளமுடியாத பேரழகையும், கொண்டாள் - கொண்டவளும், வார் இடை தனம் - கச்சினிடத்திலிருக்குந் தனங்கள், மீது ஆட-வெளியிலே தோன்றுமாறு, மூழ்கினாள் - மூழ்கினவளுமாகிய ஒருபெண்ணின், வதனம்-முகமானது,— மை தீர் நீரிடை தோன்றும் - குற்றமற்ற நீரிலே தோன்றுகின்ற, திங்கள் நிழல் என - சந்திரனுடைய பிரதிபிம்பம்போல, பொலிந்தது-விளங்கிற்று.

தேர்த்தட்டுப்போன்ற அல்குலையும், இளநீர்க்காய்போன்ற தனங்களையும், எவர்க்கும் இல்லாப்பேரழகையும் படைத்தவள் மூழ்கினமாது என்பார் 'தேரிடைக்கொண்டவல்குல் . . . அழகுங் கொண்டாள் . . . மூழ்கினாள்' என்றார். நீருக்கு மை தீர்கை—கலக்கமின்றித் தெளிவாயிருக்கை, அசையாதுநிற்கை முதலியன. அன்றே-ஈற்றசை: தேற்றமுமாம். (கஎ)

கஅ.—வெள்ளம் பரவுகை.

மலைக டந்த புயங்கண் மடந்தைமார்
கலைக டந்தக [1]லல்குல் கடம்படு
முலைக டந்தமின் முந்தி நெருங்கலா
னிலைக டந்து பரந்தது நீத்தமே.

(இ-ள்.) மலை கடந்த புயங்கள் - மலைகளையும் வென்று ஓங்கிய தோள்களும், கலை கடந்து அகல் மடந்தைமார் அல்குல் - வஸ்திரத்துக்குள் அடங்காமல் அகன்றுள்ள மடந்தைமாரின் அல்குலும், கடம் படு முலைகள் - குடத்தையொத்த (அம்மடந்தைமாரின்) தனங்களும், தந்தமில் முந்தி-ஒன்றோடொன்று இகலி முற்பட்டு, நெருங்கலால் - நெருங்குவதனால், நீத்தம்-வெள்ளம், நிலை கடந்து பரந்தது-தன்னிலையைக்கடந்து பரவலாயிற்று.

புயங்கள் முதலியவை நெருங்குதலால், வெள்ளம் நிலைகடந்து பரவலாயிற்றென்க. கடம் - வடசொல். பி - ம்:—[1]அல்குல்கடாம்படு, அல்குல் கடாம்பட. (கஅ)

கசு.—மகளிராடும் பொய்கையின் வருணனை.

*செய்ய வாய்வெளுப் பக்கண் சிவப்புற
[1]மெய்ய ராக மழியத் துகினெகத்

தொய்யின் மாமுலை மங்கையர் தோய்தலாற்
பொய்கை காதற் கொழுநரும் போன்றதே.

(இ - ள்.) செய்ய வாய் - (செம்பஞ்சூஊட்டுதல் முதலியவற்றால்)செந்நிறமமைந்த வாய்,வெளுப்ப - வெண்ணிறத்தையடையவும், கண் சிவப்பு உற - கண்கள் செந்நிறத்தையடையவும், மெய் அராகம் அழிய - உடம்பிற் பூசிய சந்தனம் அழியவும், துகில் நெக - அரையாடை நழுவவும், தொய்யின் மா முலை மங்கையர் - தொய்யிலையணிந்த பருத்த முலையையுடைய மங்கைமார், தோய்தலால் - படிதற்கு இடமாயிருத்தலினால், பொய்கை - நீர்நிலை, காதல் கொழுநர்உம்-காதலோடு அணையப்படுகின்ற கணவரையும், போன்றது - ஒத்தது; (எ - று.)

கொழுநரைத் தோயுங்கரணவிசேடத்தில், மகளிர்க்கு அதரபானத்தால் வாய்வெளுத்தலும் கண்சிவத்தலும் உடம்பில்பூசிய சந்தனம் அழிதலும் துகில் நெகிழ்தலும் இயற்கை. சந்தனத்திற்கு அங்கராகமென்று பெயராதலால், அதனை 'மெய்யராகம்'என்றார். தொய்யில் -.சந்தனம் குங்குமம் முதலியவற்றாலெழுதுங்கோலம் பி -ம் :—[1]நெய். (கசு)

உ0.—மகளிர்நீராடுதலினால் மீனும் சிறத்தல்.

ஆன தூயவ ரோ[1]டுட னாடினர்
ஞான நீரவ ராகுத னன்றரோ
தேனு நாவியுந் தேக்ககி லாவியு
மீனு நாறின வேறினி வேண்டுமோ.

(இ - ள்.) ஆன தூயவரோடு - பரிசுத்தமான ஞானமுடையவரோடு, உடன் ஆடினர் - ஒருசேரவிருந்து பழகின சாதாரணமானவரும், ஞானம் நீரவர் ஆகுதல் - ஞானகுணத்தையுடையவராகுவது, நன்று - தக்கதொன்றேயாம்; (அதற்குஏற்ப), மீன்உம் - (மகளிர் ஆடிய பொய்கையில் வாழும்)மச்சமும்,—தேன்உம் நாவிஉம் தேக்கு அகில் ஆவிஉம் நாறின - தேன்மணமும் கஸ்தூரிமணமும் தேக்கின்புகையின்மணமும் அகிலின்புகைமணமும் வீசலாயின;வேறு இனி வேண்டும்ஓ - வேறொருதாரணமும் (இதற்குச்)சொல்லவேண்டுமோ? (எ - று.)—அரோ - தேற்றம்.

நல்லவரோடுகூடியவர் அவருடையநல்லகுணத்தைப்பெறுவரென்பதை விளக்க, புலால்நாற்றமுள்ள மீனும் நல்லாரோடு [மகளிரோடு] பழகுதலால் அவர்கூந்தலிலுள்ள தேன்முதலியவற்றின் மணத்தைப்பெற்றதென்றார்; முதலிற் பொதுப்பொருளைக் கூறி,அதனாற் பொய்கைவாழ் மீன்கள் மணங்கமழலாயின என்ற சிறப்புப்பொருளைச் சமர்த்தித்தார்; வேற்றுப்பொருள் வைப்பணி. ஓகாரம் - எதிர்மறை. பி - ம்:—[1]இனிதாடினுலான. (உ0)

உக.—ஆடவரும் மகளிரும் ஊடிய புனலின் வருணனை.

மிக்க வேந்தர்த மெய்[1]யழி சாந்தொடும்
புக்க மங்கையர் குங்குமம் போர்த்தலா

லொக்க நீல முகிற்றலை யோடிய
செக்கர் வானக [2]மொத்ததத் தீம்புனல்.

(இ - ள்.) மிக்க வேந்தர்தம் - பெருமைமிகுந்த தலைவருடைய, மெய் - உடம்பிலே (பூசப்பெற்று), அழி - அழிக்கப்பெற்ற, சாந்தொடும் - செஞ்சந்தனக்குழம்போடும், புக்க-(தன்னிடத்து)விளையாடுமாறு வந்த, மங்கையர் - மடந்தைமார் (அணிந்திருந்து அழிக்கப்பெற்ற), குங்குமம் - குங்குமக் குழம்பும், போர்த்தலால் - (தன்னிடத்து) நிரம்பியதனால்,—அ தீம் புனல் - (அவர்கள் விளையாடல் நிகழ்த்துகின்ற) அந்தஇனியநீர்வெள்ளம்,—நீலம் முகில்தலை-நீலநிறமுள்ள மேகத்தில், ஒக்க ஓடிய-ஒருசேரப் பரவிய, செக்கர் வானகம் - செவ்வானத்தை, ஒத்தது—; (எ - று.)

கருநிறமாகத்தோன்றுகின்ற நீரில் செஞ்சந்தனச்சேறும் குங்குமக் குழம்புங் கலந்ததனால், அந்நீர் கருநிறமுகிலிற் காணப்படுஞ் செவ்வானம் போன்றதென்பதாம்; தற்குறிப்பேற்றவுவமையணி. பி - ம்:—[1]வழி. [2]ஒத்ததுதீம்புனல். (உக)

உஉ.—பூசியகலவைநீங்கப்பெற்ற மகளிரின் வருணனை.

காக துண்ட நறுங்கல வைக்களி
யாக முண்ட தடங்கலு நீங்கலாற்
[1]பாக டைந்த பனிக்கனி வாய்ச்சியர்
வேக டஞ்செய் மணியென மின்னினார்.

(இ - ள்.) ஆகம் உண்டது - உடம்பிற் பூசிய,காகதுண்டம் நறு கலவை களி அடங்கலும் - அகிலோடுகூடிய நறுமணமுள்ள சந்தனச்சேறுயாவும், நீங்கலால் - (நீரில்விளையாடியதுபற்றி) அழிந்திட்டதனால்,—பாகு அடைந்த பனி கனி வாய்ச்சியர் - பாகின்தன்மையுள்ள இன்சொற்கள்பொருந்திய குளிர்ந்த கோவைப்பழம்போன்ற வாயையுடைய மகளிர்,—வேகடம் செய் மணி என - சாணைபிடித்த இரத்தினம்போல, மின்னினார் - விளங்கினார்.

மகளிரின்பெருநலத்தை மறைத்துக்கொண்டிருந்த அகிற்கூட்டுச்சந்தனம் நீரா லழிந்ததனால், அம்மகளிர் சாணைபிடித்த இரத்தினம்போல விளங்கின ரென்க. இதனால்,அம்மகளிரின் இயற்கைப்பேரழகைப் பெறவைத்தார். பாகு - இன்சொல்லுக்கு, ஆகுபெயர். காகதுண்டம் - அகில்: வடசொல். 'பாகடர்ந்த' என்ற பாடத்திற்கு - பாகைப்பகைத்த என்று பொருள்கூறி, பனிக்கனிவாய்ச்சியர் என்பதற்கு - குளிர்ச்சியாகிய முக்கனிச்சாற்றின் சுவையமைந்தசொல்லையுடைய மாதர் என்றும், பாகு அடர்ந்த - பாகின் இனிமைநிறைந்த, பனி - சொல்லையுடைய, கனிவாய்ச்சியர் என்றும் பொருள் கூறுவர்: பன்னப்படுவதுபற்றி, பனி - சொல்லாகும். (உஉ)

உங.—தான் ஒருவனதுதோளிலெழுதிய சந்தனக்கோலம் அவியுமாறு சினத்தல்.

பாய ரித்திற லான்பசுஞ் சாந்தினாற்
றாய பொற்புயத் துப்பொதி தூக்குறி

மீய ரித்து விளர்க்கவொர் மெல்லியல்
சேய ரிக்கருங் கண்கள் சிவந்தவே.

(இ - ள்.) பசுஞ் சாந்தினால் - ஈரமாயுள்ள சந்தனக்குழம்புகொண்டு, பாய் அரி திறலான் - பாய்கின்ற சிங்கம்போன்ற வல்லமையையுடைய ஒரு வீரனுடைய, தூய பொன் புயத்து - பரிசுத்தமான பொன்னாபரணங்களை யணிந்த தோள்களிலே, பொதி - எழுதிய, தூ குறி - தூய்மையான கோலத்தை, (நீர்வெள்ளம்), மீ அரித்து - மேலே(பட்டு) அழித்தலாலே, விளர்க்க - (புயங்கள்) தொய்யிற்கோலம் நீங்கியனவாய்விட,—(அதுகண்ட), ஒர் மெல்லியல் - ஒருபெண்ணின், சேய் அரி கருங் கண்கள் - செவ்வரிபரந்த கரியகண்கள், சிவந்த - செந்நிறத்தையடைந்தன; (எ - று)

நீர்விளையாடல் நிகழ்ந்தபோது நீர்வெள்ளத்தால் ஒருவீரனது தோளில் ஒருத்தி செஞ்சந்தனக்குழம்புகொண்டு எழுதியகோலம் அழிந்ததாக,அழிந்த நிலையில் அவனை அம்மங்கைபார்த்து 'மற்றொருத்தியோடு புணர்ந்ததனால் தான் இவன்தோளில் யான் எழுதிய சந்தனக்கோலம் அழிந்தது' என்று ஊடல்கொண்டு, அச்சினத்தினாற் கண்கள் சிவந்தன வென்க. தான் அன்போடெழுதியதை அழியுமாறுசெய்ததனாற் புலந்து கண்சிவந்தாளெனினுமாம். செஞ்சந்தனக்கோலம் நீங்கியதனாற் றோள்கள் தனது வெண்ணிறத்தையடைய,வெண்ணிறக்கண்கள் செஞ்சந்தனமணிந்த அந்தத்தோள்களின் செந்நிறத்தைக்கொண்டன என்று மாற்றுநிலையணியென்னும் பரிவர்த்தனாலங்காரந் தோன்றக் கூறிய நயம் பாராட்டத்தக்கது. பசுஞ்சாந்து வெளுக்கஎன்ற இடங்களிற்பசுமைவெண்மைகள் முறையேஈரத்தையும், செம்மை நீங்கிய தன்மையையும் உணர்த்தும். ஈற்றடியில் முரண்டோடைகாண்க.

உச.—ஒருத்தியின் காமத்தீயாற் புனலுஞ் சுடுதல்.

* கதம்ப நாள்விரை கள்ளவிழ் தாதொடுந்
ததும்பு பூந்திரைத் தண்புனல் சுட்டதா
னிதம்ப பாரத்தொர் நேரிழை காமத்தால்
வெதும்பு வாளுடல் வெப்பம் வெதுப்பவே.

(இ - ள்.) காமத்தால் வெதும்புவாள் - காமவேதனையால் வெப்பங்கொண்டவளும்,நிதம்பம் பாரத்து ஒர் நேர்இழை - நிதம்பபாரத்தைக்கொண்டவளுமான அழகிய ஆபரணத்தையுடைய மடந்தையொருத்தியின்,உடல் வெப்பம் - உடம்பின்தாபம், வெதுப்ப - சுட்டதனாலே,—கதம்பம் - நறுமணப்பொடியைக்கொண்டனவும், நாள் - அன்றுமலர்ந்தனவும், விரை - மணத்தோடுகூடியனவுமாகி, கள் அவிழ் - தேன்சிந்தப்பெற்று, தாதொடும் ததும்பு - கேசரங்களோடு நிரம்பியுள்ள, பூ - மலர்களைக்கொண்ட, திரை தண் புனல் - அலைகளோடுகூடிய (அப்புனல்விளையாட்டிற்குஉதவிய) குளிர்ந்த நீர்த்தடமும்,சுட்டது - வெப்பங்கொண்டது;(எ - று.)

ஆல் - வியப்புக் குறிக்கும். ஒருத்தியின்காமத்தால் நீர்த்தடமே வெப்பமடைந்தமையை வியந்தவாறு; தேற்றப்பொருளதாகக் கொள்வாருமுளர்.

தண்புனல் என்பதனீற்றிற் சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. நிதம்பம் - இடையின்பின்புறக்கீழ்ப்பக்கம். கதம்பம் - கலவைச்சாந்தும், நறுவிரை - புதியவாசனைத்திரவியமும் என்று உரைப்பினுமாம். (உச)

உரு.—ஒருத்திகூந்தலில் ஒருவன் நீர்முகந்து எற்றுதல்.

தைய லாளையோர் தாரணி தோளினு
னெய்கொ ளோதியி னீர்முகந் தெற்றினன்
செய்ய தாமரைச் செல்வியைத் தீம்புனல்
கையி னாட்டுங் களிற்றர சென்னவே.

(இ - ள்.) செய்ய தாமரை செல்வியை - செந்தாமரைமலரில் வீற்றிருக்குந் திருமகளை, தீம் புனல்-இனியநீரை, கையின்-தன்கையினாலே (முகந்து), ஆட்டும் - நீராட்டுகின்ற, களிறு அரசு என்ன - சிறந்தயானைபோல,—ஓர் தார் அணி தோளினன் - ஒப்பற்ற மாலையையணிந்த தோள்களையுடைய ஓரரசன், (தன்கையினால்), நீர் முகந்து - நீரையள்ளியெடுத்து, தையலாளை-ஒர்பெண்ணினது, நெய் கொள் ஓதியில் - எண்ணெய்பூசியகூந்தலிலே, எற்றினன் - வீசினன்;(எ - று.)

ஓரரசன் தன்கையினாலே நீரைமொண்டெடுத்து ஒருத்திகூந்தலிலே சொரிந்தது, ஐராவதமென்ற யானையரசு தன்கையினாலே நீரைமொண்டு இலக்குமியை நீராட்டுவதுபோலு மென்றார். (உரு)

உசூ.—தாமரைமலர்மீதிருந்த அன்னப்பறவையின் வருணனை.

களியு மென்னடை தோற்க நடந்தவ
[1]ரளிகொள் சீறடி யொத்தன வாமென
விளிவு தோன்ற மிதிப்பன போன்றன
நளின மேறிய நாகிள வன்னமே.

(இ - ள்.) நளினம் ஏறிய - தாமரைமலர்மீது ஏறியிருந்த, நாகு இள அன்னம் - மிக்கஇளமையையுடைய அன்னப்பறவைகள்,—'களியும் - (நாம்) இகலிநடக்கின்ற,மெல் நடை - (நமது)மெல்லியநடையும், தோற்க - தோற்றுப்போம்படி [மிகஅழகாக], நடந்தவர் - நடந்தமடந்தைமாரின், அளி கொள் சிறு அடி - மென்மையைக்கொண்ட சிறியஅடியை, ஒத்தன-(இவை) ஒத்திருக்கின்றன', என - என்று எண்ணியதனால், விளிவு தோன்ற - (தம் மனத்திலுள்ள) கோபம் தோன்றுமாறு,மிதிப்பன - அத்தாமரைமலரை மிதிப்பவற்றை,போன்றன - ஒத்திருந்தன;(எ - று.)—ஆம் - அசை.

தமக்குப்பகையான ஒருவனுக்குத் தீங்குசெய்யஇயலாவிட்டால் தம் மனத்துள்ளபகைக்குப் பரிகாரமாக அவனைச்சேர்ந்தார்க்குத் தீங்கிழைக்கும் உலகவியற்கைக்குஏற்ப, தம்மை நடையழகால்வென்ற மகளிர்திறத்துத் தம்மாற் செய்யக்கூடியது யாதொன்றும் இல்லாமையால் அன்னப்பறவைகள் அம்மங்கைமாரின் பாதங்களையொத்த தாமரைமலர்களைத் தம்மனத்துக் கோபந்தீர மிதித்தனபோலுமென்று, தாமரைமலரின்மீது அன்னமிருப்

பதை வருணித்தார்; தற்குறிப்பேற்றவணி. இவ்வணி விறல்கோளணியெனப் படும் பிரத்யநீகாலங்காரத்துடன் கலந்துவந்தது. வலிமையுள்ள மாற்றானைச் சார்ந்தவரிடத்துத் தன்திறலைக் காட்டுவதாகக்கூறுவது-விறல்கோளணியினிலக்கணமாம். பி - ம்: —[1]ஒளி. (உசு)

உஎ.—ஆடவரின் காமவேட்கை.

*எரிந்த சிந்தைய ரெத்தனை யென்கெனோ
வரிந்த கூருகி ராலழி [1]சாந்துபோய்த்
தெரிந்த கொங்கைகள் செவ்விய நூல்புடை
[2]வரிந்த பொற்கல சங்களை மானவே.

(இ - ள்.) அழி சாந்து போய் - (நீரினால்) சந்தனம் அழிந்துபோய், அரிந்த கூர் உகிரால் - அரிந்த கூரிய உகிரோடு [நகக்குறிகளோடு], தெரிந்த - காணப்பட்ட, கொங்கைகள் - ஸ்தநங்கள், செவ்விய நூல் புடை வரிந்த - அழகிய நூலைப் பக்கங்களிற் சுற்றியுள்ள, பொன் கலசங்களை மான - பொற்கலசங்களையொத்திருக்க, (அதுகண்டு), எரிந்த சிந்தையர் - (மனத்திற்) காமவெப்பத்தைக்கொண்ட ஆடவர், எத்தனை என்கெனோ - எத்தனைபேரென்று எண்ணிச்சொல்ல (யான்) வல்லேனோ? [வல்லேனல்லேனென்றபடி]; (எ - று.)

மகளிர் புனல்விளையாடுகையில் தனங்களின்மீது பூசிய சந்தனம் யாவும் அழிய, நகக்குறிகளோடுகூடிய அவரது தனங்கள் நூல்சுற்றிய ஸ்வர்ண கலசங்கள்போலத் தோன்ற, அவற்றைக்கண்ட ஆடவர்க்குக் காமவேட்கை மிக அதனால் வருந்திய ஆடவர் மிகப்பலரென்றவாறு. ஓகாரம் - இரக்கப் பொருளது. உகிரால், 'ஆல்' - உடனிகழ்ச்சிப்பொருளது. இனி, உகிரால் சாந்துஅழிந்துபோகத் தெரியும் (தேமலையுடைய) தனம் என்று உரைப்பாருமுளர். பி - ம்: —[1]சாந்தினால். [2]வரிந்தவங்கலசங்களை. (உஎ)

உஅ —ஒருத்தி கண்சாடையாற் பேசுதல்.

தாழ நின்ற [1]ததைமலர்க் கையினா
லாழி மன்னொரு வன்னுரைத் தானது
வீழி யின்கனி வாயொரு மெல்லிய
ேறாழி கண்ணிற் கடைக்கணிற் சொல்லினாள்.

(இ-ள்) ஆழி மன் ஒருவன்-ஆஞ்ஞாசக்கரத்தையுடைய மன்னவனொருவன், (தனது), தாழ நின்ற-மிகநீண்டுநின்ற, ததை மலர் கையினால் - இதழ்களடர்ந்த தாமரைபோன்ற கைச்சாடையினால், உரைத்தான்-(செய்தியைக்) குறிப்பித்தான்; அது - அதற்கு, வீழியின் கனி வாய் ஒரு மெல்லியல் - வீழிப்பழம்போன்ற வாயையுடைய ஒருத்தி, தோழி கண்ணில் கடைக்கணில் சொல்லினாள்-தோழியின் கண்மூலமாகக் கடைக்கண்சாடையினால் பதில்தெரிவித்தாள்; (எ - று.)

ஓரரசன் தன்வேட்கையைக்குறிப்பித்துத் தான் அம்மங்கையைக் கிட்டுதற்குஉரிய இடத்தையும் பொழுதையும் கைச்சாடையினால் வினவ, அம்

மங்கையும் தன்தோழியைக்கொண்டு கடைக்கண்சாடையாக அவ்வரசனது வேண்டுகோட்கு மறுமொழிசொல்வித்தன ளென்க. இம்மங்கை மறுமொழி யுரைத்தது, தன்கடைக்கண்ணினாலன்று, தோழியின் கடைக்கண்மூலமாக என்பதற்கு 'தோழிகண்ணிற் கடைக்கணில்' என்றார். தோழிகண்ணில்-கண்ணுக்கு எனினுமாம். பி - ம்:—[1] தகைமலர் கையினால். (உஅ)

உகூ.—நீராடுகையில் நீரில்மூழ்குந் தாமரைமலர் வருணனை.

தள்ளி யோடி யலைதடு மாறலாற்
றெள்ளு [1]நீரின் முழுகுசெந் தாமரை
புள்ளி மானனை யார்முகம் போல்கிலா
[2] துள்ளி ணாணி யொளிப்பன போன்றவே.

(இ - ள்.) தள்ளி - (தங்நிலையினின்று) தள்ளப்பட்டு, ஓடி - (கரையின்மீது) பரந்துசென்று (மீண்டு), அலை தடுமாறலால் - (நீர்நிலையின்) அலைகள் தடுமாறுவதனால், தெள்ளு நீரில் - தெளிவாகவுள்ள (அந்தநீர்நிலையின்) புனலில், முழுகு - அமிழ்ந்துபோகின்ற, செந்தாமரை - செந்தாமரை மலர்கள்,—புள்ளி - பெருமைபெற்ற, மான் அனையார் - (மருண்டநோக்கினால்) மானையொத்தவராகிய மகளிரின், முகம் போல்கிலாது - முகத்தையொத்திருக்கமாட்டாமல், உள்ளின் நாணி - (தம்) மனத்திற்குள் வெட்கங்கொண்டு, ஒளிப்பன - மறைவனவற்றை, போன்ற—; (எ - று.)

பலமகளிர்குடைந்துநீரில்ஆடுவதனால் அந்நீர்நிலை தன் அலைகள் கரையில் மோதுவதும் மீள்வதுமாகி இங்ஙனம் தடுமாறுவதனால் அந்நீர்நிலையில் முழுகிய தாமரைமலர்களை, கவி, அப்போது நீராடவந்த மகளிரின் முகத்தைக் கண்டு அவற்றிற்குத் தாம் ஒப்புமையாகமாட்டாமையால் நாணங்கொண்டு மறைவனவாகக் கற்பித்தார்; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]நீரிடைமூழ்கு. [2]உள்ளம். (உகூ)

௩௦.—நீராடல்நிகழ்த்திக் கரையேறி யாவரும் ஆடையாபரணங்களை யணிதல்.

இனைய [1]வெய்தி யிரும்புன லாடிய
வனைகருங் [2]கழன் மைந்தரு மாதரு
மனைய நீர்வறி தாகவந் தேறினார்
புனை நறுந்துகில் பூணொடுந் தாங்கினார்.

(இ - ள்.) இனைய எய்தி - இப்படிப்பட்டதன்மைகளை யடைந்து, இரு புனல் ஆடிய-பெரிய(நீர்நிலையில்) நீரில் விளையாட்டைநிகழ்த்திய, வனை கரு கழல் மைந்தர்உம் - பூண்ட பெரிய வீரக்கழலையுடைய ஆடவரும், மாதர் உம் - மகளிரும்,—அனைய நீர் வறிது ஆக - அந்த [தாம் நீராடிய] நீர்நிலை (தம்மைப் பிரிதலால்) வெளிச்சென்றுதோன்றுமாறு, வந்து - (அந்நீர்நிலையை) விட்டுவந்து, ஏறினார் - (கரைமீது) ஏறியவர்களாய், புனை - (தாம்) அணிதற்குஉரிய, நறு துகில் - நல்லஆடைகளை, பூணொடுஉம் - ஆபரணங்களோடு, தாங்கினார் - அணிந்துகொண்டார்; (எ - று.)

நீர்விளையாடல் நிகழ்ந்தபின்பு யாவரும் கரையேறி ஆடையாபரணங்களை யணிந்தன ரென்க. 'தாங்கினர்' என்றதனால், அம்மகளிர்களின் மென்மைத்தன்மையும், உலகநடையையொட்டியொழுகவேண்டு மென்று பிறர்களைப்போலத் தாமும் துகில் அணிகளைப் பூண்டனரென்பதும், அவர்கள் அத்துகிலணிகளால் அலங்கரிக்கவேண்டாதபடி இயற்கையழகு படைத்தவரென்பதும் பெறப்படும். பி - ம்:—[1]வெய்தவரும். [2]குழன்மாதருமைந்தரும்.

நுக.—புனலாடிய ஆடவரையும் மகளிரையும் நீங்கிய நீர்நிலையின்வருணனை.

மேவி னார் [1]பிரிந் தாரந்த வீங்குநீர்
தாவு தண்மதி தன்னொடுந் தாரகை
யோவு வானமு முண்ணிறை தாமரைப்
பூவெ லாங்குடி [2]போன தும் போன்றதே.

(இ - ள்.) மேவினார் - (அந்நீர்நிலையில்) விரும்பி ஆடல்நிகழ்த்திய ஆடவரும்மகளிரும், பிரிந்தார் - (அந்நீர்நிலையைவிட்டுப்) பிரிந்துசென்றார்கள்; (அதனால்), அந்த வீங்கு நீர் - மிகுந்தநீரைக்கொண்ட அந்தநீர்நிலை, தாவு தண் மதிதன்னொடும் - தவழ்ந்துசெல்லுகின்ற குளிர்ந்த சந்திரனுடனே, தாரகை - நட்சத்திரங்களும், ஓவு - நீங்கப்பெற்ற, வானம்உம் - ஆகாயத்தையும், உள் நிறை தாமரைப்பூ எலாம் குடிபோனதுஉம் - உள்ளேநிறையமலர்ந்திருந்த தாமரைமலர்கள் யாவும் நீங்கப்பெற்றதையும், போன்றது—; (எ - று)

தன்னிடத்து நீராடவந்த மகளிரும் ஆடவரும் தன்னைவிட்டு நீங்கியதால் அந்நீர்நிலை வெறிதாகத்தோன்றிற்றென்று கீழ்ச்செய்யுளிற்கூறிய கவி, இங்கு அதனை உவமானமுகத்தால் விளக்கினர்; புனலாடவந்த ஆடவராலும் மகளிராலும் அலங்காரம்பெற்றிருந்த நீர்நிலை அவர்களைநீங்கியதனால், சந்திர நட்சத்திரங்களைநீங்கிய வானத்தையும், தாமரைமலர்களை நீங்கிய நீர்நிலையையும்போல வெறிதாகத்தோன்றியதென்பதாம். பி-ம்:—[1]பிரிந்தார்க்கும். [2]போனவும். (நுக)

நுஉ.—சூரியாத்தமன வருணனை.

மானி னோக்கியர் மைந்தரொ டாடிய
வான நீர்விளை யாடலை நோக்கினான்
றானு மன்னது காதலித் தானென
மீன வேலையை வெய்யவ னெய்தினான்.

(இ - ள்.) மானின் நோக்கியர் - மான்போன்ற கண்பார்வையையுடைய மகளிர், மைந்தரொடு - ஆடவரொடு, ஆடிய - நிகழ்த்திய, ஆன-தக்க, நீர்விளையாடலை - புனல்விளையாட்டை, நோக்கினான் - கண்டுகொண்டிருந்தவனாகிய, வெய்யவன்-உஷ்ணகிரணனான சூரியன்,—தான்உம்—, அன்னது-அவ்வாறு நீர்விளையாடலை, காதலித்தான் என - விரும்பினான்என்று தோன்றும்படி, மீனம் வேலையை-மீன்கள் நிரம்பியுள்ள சமுத்திரத்தை, எய்தினான்-அடைந்தான்; (எ - று.)

மைந்தரும் மகளிரும் புனல்விளையாடியது கண்டிருந்த சூரியன்தானும் புனல்விளையாடவிரும்பினன்போலக் கடலைச்சார்ந்தனனென்பதாம். சூரியன் அஸ்தமிக்குமாறு மேல்கடலினிடம்அடைந்தது குறித்து, கவி, இங்ஙனம் வருணித்தார்; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. பொழுதுபட்டதென்று கருத்து. (௩௨)

௩௩.—சந்திரோதயவருணனை.

ஆற்ற லின்மையி னாலழிந் தேயுந்தம்
வேற்று மன்னர்த மேல்வரும் வேந்தர்போ
லேற்று மாதர் [1]முகங்களொ டெங்கணுந்
தோற்ற சந்திரன் மீளவுந் தோற்றி னான்.

(இ - ள்.) ஆற்றல் இன்மையினால் - (தமக்குள்ளதிராசரை வெல்வதற்கு ஏற்ற) வலிமை யில்லாமையினால், அழிந்தும்-(தாம்)தோற்றுப்போயிருந்தும், தம் வேற்று மன்னர்தம் மேல் - தமது மாற்றரசர்மீது, வரும் - (மீண்டும் போர்புரியும்படி) வருகின்ற, வேந்தர் போல் - அரசர்போலவே,—எங்கணும் - எல்லாவிடத்தும், மாதர் முகங்களொடு ஏற்று - மாதரார்முகத்தோடு எதிர்த்துநின்று, (அவற்றிற்குமுன்னே நிற்கமாட்டாமல்), தோற்ற - தோற்றுமறைந்துபோன, சந்திரன்—, மீளவும்—, தோற்றினான் - (அம்முகங்களோடு எதிர்க்குமாறு) உதயமானான்; (எ - று.)

சந்திரன் முன்னாள் அஸ்தமித்ததற்குக் காரணம் - மடவார்முகங்கட்குத்தோற்றமையே யென்றும், இன்று மீண்டும்உதித்ததற்குக் காரணம்- அம்மடவார்முகங்களை யெதிர்ப்போமென்ற எண்ணமெனவும் கற்பித்துக் கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணியாம்; இவ்வணிக்கு 'ஆற்றலின்மையினால் அழிந்தும் தம்வேற்றுமன்னர்மேல்வரும் வேந்தர்போல்' என்ற உவமையணி அங்கமாகவந்தது. பி - ம்:—[1] முகங்கள் கண்டெங்கணும். (௩௩)

புனல்விளையாட்டுப்படலம் முற்றிற்று.

---

## கஎ.—உண்டாட்டுப்படலம்.

தசரதனுடன் சென்ற சேனைகள் கள்ளுண்டு மகிழ்ந்து இன்பமனுபவித்ததைத் தெரிவிக்கும் பாகமென்பது பொருள்.

க.—இதுமுதல் நான்குகவிகள் - நிலா எங்கும்பரத்தலின் வருணனை.

* வெண்ணிற நறைநிறை வெள்ள மென்னவும்
[1]பண்ணிறஞ் செறிந்திடைப் பரந்த தென்னவு
முண்ணிறை காமமிக் கொழுகிற் றென்னவுந்
தண்ணிறை நெடுநிலாத் தழைத்த தெங்குமே,

(இ - ள்.) வெள் நிறம் நறை நிறை வெள்ளம் என்னஉம் - வெண்மையான நிறத்தையுடைய கள்ளின் நிறைந்த வெள்ளம்போலவும், பண் நிறம் செறிந்து இடை பரந்தது என்னஉம் - இசையானது உருவத்தைப்பெற்று உலகத்திற் பரவியதுபோலவும், உள் நிறை காமம் மிக்கு ஒழுகிற்று என்ன உம் - (எல்லாப்பிராணிகளிடத்தும்) உட்புறத்துநிரம்பியுள்ள காமம் (உள்ளே அடக்கமுடியாதபடி) அதிகப்பட்டு வெளியிலே ஒழுகினாற்போலவும், தண் நிறை நெடுநிலா - குளிர்ச்சிநிறைந்த பெருநிலவானது, எங்கும்-எல்லாவிடத்தும், தழைத்தது - செழித்துநிரம்பியது; (எ - று.)

உலகெங்கும் நிலாப்பரவியது - வெண்ணிறமிகுதியாற் கள்ளின் வெள்ளம் பரவியதுபோலுமெனவும், இன்பமிகுதியால் பண் நிறஞ்சிறந்து பரவியதுபோலுமெனவும், ஆண்பெண்கட்குக் காதல்மிகுதலால் காமம் மிக்கொழுகியதுபோலுமெனவும் உத்பிரேட்சித்தார்; தற்குறிப்பேற்றவணி. [1]பண்ணிறம் செறிந்தபால் என்றபாடத்துக்கு - பண்ணின்தன்மை [இனிமை] மிக்குள்ள பால் என்க. பி - ம்:—[2]தண்ணிறநெடு. (க)

உ. * கலந்தவர்க் கினியதோர் கள்ளு மாய்ப்பிரிந்
துலந்தவர்க் குயிர்[1]சுடு விடமு மாயுடன்
புலந்தவர்க் குதவிசெய் புதிய தூதுமாய்
மலர்ந்தது நெடுநிலா மதனன் வேண்டவே.

(இ - ள்.) கலந்தவர்க்கு-(ஆண்பெண்களாகச்) சேர்ந்திருப்பவர்கட்கு, இனியது ஓர் கள்உம் ஆய்-(மனத்திற்கு) இனிமையையுண்டாக்குகின்ற கள்போல மகிழ்ச்சிவிளைவிப்பதாயும்,—பிரிந்து உலந்தவர்க்கு - பிரிந்துவருந்துபவர்கட்கு உயிர் சுடு விடம்உம் ஆய்-(உண்டாரது)உயிரைவாட்டுகின்ற நஞ்சுபோல்வதாகியும், உடன் புலந்தவர்க்கு-கணவருடனே(ஊடலாற்)பிணங்கினவர்கட்கு, உதவி செய் புதிய தூதுஉம் ஆய்-(புலவியைப்போக்கிக்கூடுமாறு) உதவுகின்ற புதிய தூதுபோல்வதாகியுமுள்ள, நெடு நிலா - மிக்கநிலவானது, மதனன் வேண்ட - மன்மதன் வேண்டிக்கொண்டதனால், மலர்ந்தது - (எங்கும்) பரவிற்று; (எ - று.)

கலந்தார்க்கு உற்சாகத்தை விளைத்தலாற் கள்ளையும் பிரிந்தார்க்கு மரணவேதனையை விளைத்தலால் விடத்தையும்போன்ற நிலா, ஊடல்கொண்ட ஆடவர்மகளிர்என்ற இருவர்திறத்தும் ஒருபடிப்படத் தான் பட்டமாத்திரத்துக் காமவேட்கையைவிளைத்தலாற் புதியதூதுபோலு மென்றார்: பிணக்கங்கொண்டாரிடத்துச்சென்று இங்கிதமாகப்பேசிக் கூட்டிவைக்குந் தூதுவரது தன்மையினும் நிலவின்தன்மை வேறுபட்டிருப்பது காண்க. மதனனுக்கு உதவுதலால், 'மதனன்வேண்ட' என்றது. நிலவினிடத்துக் கள் முதலிய பொருள்களின் தன்மையை யேற்றிக் கூறியது - பலபடப்புனைவணியாம். பி-ம்:—[1]தொடர். (உ)

ங. ஆறெலாங் கங்கைபோ யாப வாழிதாங்
கூறுபாற் கடலையே யொத்த குன்றெலா

மீறிலான் கயிலையை யியைந்த வென்னினி
[1]வேறியாம் புகல்வது நிலவின் வீக்கமே.

(இ - ள்.) (நிலவுபரவியதனால்),—ஆறு எலாம் - நதிகள்யாவும், கங்கை ஏ ஆய - கங்காநதியாகவே தோன்றின; ஆழி தாம் - சமுத்திரங்கள்யாவும், கூறு பாற்கடலை ஒத்த - சிறப்பித்துச்சொல்லப்படுகிற பாற்கடலையே போன்றன; குன்று எலாம் - மலைகள் யாவும், ஈறு இலான் கயிலையை இயைந்த - இறுதியில்லாத கடவுளாகிய சிவபெருமானது திருக்கைலாய மலையை யொத்தன; நிலவின் வீக்கம் - நிலவின்மிகுதியைக்குறித்து, இனி வேறு யாம் புகல்வது என் - இனி வேறாக நாம் சொல்லவேண்டுவது என்ன இருக்கின்றது? (எ - று.)

வெண்ணிறநிலா மிகவும்பரந்ததனால், யமுனை சரசுவதி முதலிய நதிகள் யாவும் வெண்மைநிறம்பெற்று அவ்வாறுள்ள கங்கைபோலவும், உவர்க்கடல்முதலிய கடல்கள்யாவும் பாற்கடல்போலவும், மலைகள்யாவும் வெள்ளிமயமான கைலாசமலைபோலவும் வெண்ணிறமாகவிளங்கினவென்க: பிறிதின்குணம்பெறலணி. யுகாந்தகாலமளவும் நின்று சங்காரத்தொழிலை நடத்துங் கடவு ளாதலால், சிவபிரானை 'ஈறிலான்'என்றார். பி - ம்:—[1]வேறுநாம். (௩)

௪. எள்ளருந் திசைகளோ டியாரும் யாவையுங்
கொள்ளைவெண் ணிலவினாற் கோலங் கோடலால்
வள்ளுறை வயிரவாண் மகர கேதனன்
வெள்ளணி யொத்தது வேலை ஞாலமே.

(இ - ள்.) எள் அரு திசைகளோடு - பழிப்பில்லாத திக்குக்களுடனே, (அத்திக்குக்களிலுள்ள), யார்உம் யாவைஉம் - உயர்திணையான மானிடரும் அஃறிணையான மற்றைப்பொருள்களும், கொள்ளை வெள் நிலவினால் - மிகுதியாயுள்ள வெள்ளியநிலாவினாலே, கோலம் கோடலால் - வெண்ணிறத்தைப் பெறுதலால்,—வேலை ஞாலம் - கடலாற்சூழப்பட்ட இந்நிலவுலகம், வள் உறை வயிரம் வாள் மகரகேதனன்-தோலுறையிலே யிடப்படுகின்ற உறுதியாகிய வாளையுடைய மீனக்கொடியோனாகிய மன்மதனுடைய,வெள் அணி-பிறந்தநாளிலொப்பனையைப் பூண்டுள்ளதை, ஒத்தது—;(எ - று.)

உலகமுழுதுமுள்ள எல்லாப்பொருளின்மீதும் நிலாப்பெருக யாவும் வெண்மையாகத் தோன்றுவதனால், இந்தஞாலமே மன்மதன் அப்போது தோன்றியதன்நிமித்தம் வெள்ளணியை யணிந்ததுபோலு மெனக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. பிறந்தநாளைக்கொண்டாடுகையில் வெள்ளணி யணிதல் மரபாதலையும், அவ்விராக்காலம் மன்மதன்தோன்றுதற்குஇடனாதலையும் அறிக. மகரகேதனன் - சுறாமீனைக்கொடியிற்கொண்டுள்ளவன். மகரகேதனன் வெள்ளணிஎன்பதற்கு, வேறுவகைப்பொருள் கூறுவது பொருந்துமாயிற் கொள்க. (௪)

௫.—மகளிர் முத்துப்பந்தர்முதலியஇடத்துச் சேர்தல்.

தயங்குதா ரகைபுரை தரள நீழலு
[1]மியங்குகார் மிடைந்த[2]கா வெழினிச் சூழலுங்
கயங்கள்போன் றொளிர்பளிங் கடுத்த கானமும்
வயங்குபூம் பந்தரு மகளி ரெய்தினர்.

(இ - ள்.) தயங்கு தாரகை புரை தரளம் நீழல்உம் - விளங்குகின்ற நட்சத்திரங்களையொத்த முத்துக்களினாலியன்ற பந்தர்களின் நிழலிலும், இயங்கு கார் மிடைந்த கா எழினி சூழல்உம் - (வானத்திற்) சஞ்சரிக்கின்ற மேகம் நெருங்கித்தங்குகின்ற சோலைகளாகிய இடுதிரைகளையுடைய இடங்களிலும், கயங்கள் போன்று ஒளிர் பளிங்கு அடுத்த கானம்உம் - கசங்களின் தெளிவான நீரைப்போல விளங்குகின்ற பளிக்கறைகள்பொருந்திய தோட்டங்களிலும், வயங்கு பூ பந்தர்உம் - விள்ங்குகின்ற மலர்ப்பந்தல்களிலும், மகளிர்—, எய்தினர் - போய்ச்சேர்ந்தார்கள்; (எ - று.)

சோலைகள் தழைந்து பரந்திருத்தலால், அந்தக்காவை 'எழினிச்சூழல்' என்றார்: இனி, காவிலுள்ள எழினிச்சூழ லென்பாருமுளர். கயம் - நீருள்ள மடு. பளிங்கை நீருக்கு உவமைகூறுவது, மரபு: "மணிநீரகயம்," "ஈர்ந்த நுண் பளிங்கெனத் தெளிந்த வந்தணீர்" என்பன முதலியனகாண்க. கயங்கள் - நீர்க்கு, இலக்கணை. கயங்கள் போன்றொளிர் பளிங்கு-எதிர்நிலையணி. பளிங்கு - பளிக்கறைக்கு, ஆகுபெயர்: பளிக்குப்பாறையுமாம். பி - ம்:— [1]இயங்குதார், இயங்குகால். [2]தாள். (௫)

௬.—மகளிர் கள்ளைப்பருகத் தொடங்குதல்.

பூக்கம ழோதியர் போது [1]பொங்கிய
[2]சேக்கையின் விளைசெருச் செருக்குஞ் சிந்தையா
ராக்கிய வமிழ்தென வம்பொன் வள்ளத்து
வாக்கிய பசு[3]நறை மாந்தன் மேயினர்.

(இ - ள்.) பூ கமழ் ஓதியர் - மலர்கள் நறுமணம்வீசுகின்ற கூந்தலையுடையவரான மகளிர், போது பொங்கிய சேக்கையின் - மலர்கள் மிகுதியாகப் பரப்பப்பெற்ற படுக்கைகளிலே, விளை - தோன்றுகின்ற, செரு - கலவிப்போரிலே, செருக்கும் - களிக்கவேணுமென்கின்ற, சிந்தையார் - மனமுடையவர்களாய்,—ஆக்கிய அமுது என - (திருப்பாற்கடலைக்கடைந்து) உண்டாக்கிய அமிர்தம்போல, அம் பொன் வள்ளத்து வாக்கிய பசு நறை - அழகிய பொற்கிண்ணத்து வார்க்கப்பெற்ற புதிய மதுவை, மாந்தல் மேயினர் - பருகத்தொடங்கினர்கள்; (எ - று.)

மகளிர் மலர்ப்படுக்கையிற் கலவிப்போரிற்களிக்கும்பொருட்டுமதுவைப் பருகலானா ரென்க. பி - ம்:— [1]போக்கிய. [2]சேக்கையின்பச்செரு. [3]நரு.

௭.—இதுவும் அது.

மீனுடை [1]விசும்பினர் விஞ்சை நாட்டவ
ரூனுடை யுடம்பின ருருவ மொப்பிலார்

மானுடை நோக்கினர் வாயின் மாந்தினர்
தேனுடை மலரிடைத் தேன்பெய் தென்னவே.

(இ - ள்.) மீன் உடை விசும்பினர்-நட்சத்திரங்களைக்கொண்ட வானுலகத்துமகளிரும், விஞ்சைநாட்டவர் - வித்தியாதரமகளிரும், உருவம் ஒப்பு இலார் - (தமது)உருவத்துக்கு ஒப்பாகப்பெறாதவரான, ஊன்உடை உடம்பினர் - மாமிசத்தினலியன்ற உடம்புபடைத்தவரான, மான் உடை நோக்கினர் - மான் தோற்றுப்போவதற்குக்காரணமான கண்ணழகுபடைத்த அம்மகளிர்,—தேன்உடை மலரிடை-வண்டுகள் மொய்க்கின்ற மலர்களினிடையே, தேன் பெய்து என்ன - தேனை வார்த்தாற்போல, வாயில் மாந்தினர் - (தமது) வாயில்(மதுவைக்கொண்டு)பருகினர்கள்; (எ - று.)

வானவமகளிர் விஞ்சைமகளிர் என்ற இவர்களினும் அம்மகளிர் அழகு விஞ்சியவ ரென்பது, முதல்மூன்றடிகளிற் கூறிய பொருள். மகளிர் வாயிற்கொண்ட மது, மலரிற்பெய்த மதுவை யொக்கும். மலருக்கு 'தேனுடை' என்பது,இயற்கையடை. பி - ம்:—†வானுடை. (எ)

அ.—மது.

உக்கபால் புரைநிலா வுண்ட வள்ளமுங்
†கைக்கொளின் னொளிபடச் சிவந்து காட்டத்தன்
மைக்கணுஞ் சிவந்ததோர் மடந்தை வாய்வழிப்
புக்கதே னமிர்தமாய் [2]பொலிந்த போன்றவே.

(இ - ள்.) உக்க பால் புரை நிலா-சிந்தியபாலையொத்த சந்திரகிரணம், உண்ட - படப்பெற்ற, வள்ளம்உம் - (நறவைக்கொண்ட) கிண்ணமும், கைகொள் இன் ஒளி பட - (அந்நறவைப்பருகுவதற்காக எடுத்தவளுடைய) கைகொண்டுள்ள அழகிய செந்நிறவொளி படுதலால், சிவந்து காட்ட - செந்நிறமாகத்தோன்ற, ஓர்மடந்தை வாய் வழி புக்க தேன் அமிர்தம்ஆய் பொலிந்த போன்ற - ஒப்பற்ற அம்மடந்தையின் வாயிலேகொண்ட மது அமிர்தமாக விளங்குவதையொத்தது; (அப்போது அதனைப்பருகுதலால்), தன்மை கண் உம் - அம்மங்கையின் மையெழுதப்பெற்ற கண்ணும், சிவந்தது - செந்நிறமாய்விட்டது; (எ - று.)

ஒருத்தி மதுவைப்பருகுமாறு கிண்ணத்தைக் கையிற்கொள்ள, அவளது கைகளின் செவ்வொளியால் அந்தக்கள்ளேயன்றிக் கள்ளைக்கொண்ட கிண்ணமும் செந்நிறவொளியாய்த்தோன்ற, அந்தக்கள்ளை அம்மடந்தை வாயிற்கொண்டபோது முன்னிருந்த செந்நிறம்நீங்கி இயற்கைவெண்ணிறத்தைப் பெற்றது; அதனைக் கவி தேன் அமிர்தமாய்ப் பொலிந்ததுபோலு மென வருணிக்கின்றார். மது கையின் செந்நிறவொளியால் தேன்போலத்தோன்றி, மீண்டும் வெண்ணிறத்தையடைந்து அமுதத்தையொத்த தென்க. தோல்லுருப்பேறலணி. அங்ஙனமுள்ள கள்ளைப்பருகியதால் கள்ளுக்கு முன்னிருந்த செந்நிறம் கண்ணிற் பாய்ந்தாற்போல அம்மங்கையின் கருங்கண்ணுஞ் சிவந்த தென்க. கள்ளுண்டார்க்குக் கண்கள் சிவத்தல், இயல்பு. வாய்வழி, வழி -ஏழனுருபு. பி - ம்:—†கைக்கொள்வாள். [2]இரிந்த. (அ)

௯.—உண்ட கள் காமத்தை மூட்டுதல்.

தாமமு நானமுந் ததைந்த தண்ணகிற்
றாம[1]முண் குழலிய ருண்ட தூநறை
யோமவெங் குழியுகு நெய்பி[2]னுள்ளுறை
காமவெங் கனலினைக் கனற்றிக் காட்டிற்றே.

(இ - ள்.) தாமம்உம் நானம்உம் ததைந்த தண் அகில் தூமம் உண் குழலியர் - மாலையும் புழுகுநெய்யும் நிரம்பிய குளிர்ந்த அகிற்புகை யூட்டப் பெற்ற கூந்தலையுடைய மகளிர், உண்ட - பருகிய, தூ நறை - வெண்ணிற முள்ள மது,—வெம் குழி உகு ஓமம் நெய்பின் - (அக்கினி நிரம்பி) வெப்பத் தைக்கொண்ட தீக்குழியிலே சொரிந்த ஓமநெய் (அக்கனலை வளர்ப்பது) போல, உள்உறை வெம் காமம் கனலினை கனற்றி காட்டிற்று - உள்ளே பொருந்திய கொடிய காமாக்கினியை மூளச்செய்து வெளியிலே தோன்றச் செய்தது; (எ - று.)

உண்ட மது காமத்தை மிகுவித்ததென்க. ததைந்த என்ற பெயரெச்சம் 'குழலியர்' என்பதில், குழல் என்பதனோடு இயையும். தீயுள்ள குண்ட மென்பார் 'வெங்குழி' என்றார். "காமம்-நீருட்குளிப்பினும் சுடும்" என்ப வாதலால், "காமவெங்கனல்' என்றார். பி - ம்:—[1]மெல். [2]உள்ளுறும். (௯)

௧0.—ஒருத்தி மதுவில் தோன்றுந் தன்னிழலைத் தோழியெனக் கருதுதல்.

விடனொக்கு நெடிய நோக்கி னமிழ்தொக்கு மின்சொ லார்த
மடனொக்கு மடனு முண்டே வாணுத லொருத்தி [1]காணத்
[2]தடனொக்கு [3]நிழலைப் பொன்செய் தண்ணறுந் தேறல் வள்ளத்
துடனொக்க [4]வுவந்து நீயு முண்ணுதி தோழி யென்றாள்.

(இ-ள்.) வாள் நுதல் ஒருத்தி-ஒளிபொருந்திய நெற்றியைக்கொண்ட ஒரு மடந்தை, தடன் ஒக்கும் நிழலை-பெருமைபொருந்திய (தனது)நிழலை,பொன் செய் தண் நறு தேறல் வள்ளத்து காணா-பொன்னாற்செய்யப்பட்ட குளிர்ந்த மணமுள்ள கள்தெளிவையுடைய கிண்ணத்திலே கண்டு,'தோழி-தோழியே! நீஉம்—,உடன்ஒக்கஉவந்து உண்ணுதி - எம்முடனே ஒத்திருந்து மகிழ்ந்து தேறலையுண்பாய்', என்றாள் - என்றுகூறினாள்: விடன் ஒக்கும் நெடிய நோக்கின் அமிழ்து ஒக்கும் இன் சொலார் தம்-விடத்தையொத்த [மரணவேதனை யையுண்டாக்குகின்ற] நீண்ட கண்களையும் அமிழ்தத்தையொத்து இனியன வாகவுள்ள சொற்களையுமுடைய மடந்தைமாரின், மடன் ஒக்கும் மடன்உம்- அறியாமையையொத்த அறியாமையும், உண்டே - எங்கேனும் உள்ளதோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

மதுவினுள்தோன்றுந் தன்னிழலை வேறொருத்தி அங்குஇருப்பதாக மயங்கி 'தோழி! நீயும் எம்முடன்ஒத்துக் களித்துண்க' என்றதனால், இம் மடவார்க்குஉள்ள மடமை எங்கும் இராதென்கிறார். முதலிரண்டடிகளைப் பின்னடிகள் சமர்த்தித்துநின்றது, தொடர்நிலைச்செய்யுட்குறியணி. விடன், மடன், தடன் - போலிகள். பி - ம்:— [1]காண, தான்றன். [2]சடன், சடம். [3]நிழலும்பொன்செய், நிழலைக்கண்டே. [4]நுகர்ந்தபோதே, வந்தாய்நீயும். ()

கக.—மதுவினுள் தன்முகந் தோன்ற, வேறொருத்தி மதுவைப்பருகுவதாக மயங்கி ஒருத்தி கூறுதல்.

*அச்சநுண் மருங்கு லாளோ ரணங்கனை ளளக பந்தி*
*நச்சுவேற் கருங்கட் செவ்வாய் [1]நகைமுக மதுவுட் டோன்றப்*
*பிச்சிநீ யென்செய் தாயிப் பெருநற விருக்க வாளா*
*வெச்சிலை நுகர்தி யோவென் றெயிற்றரும் பிலங்க நக்காள்.*

(இ - ள்.) அச்சம் நுண் மருங்குலாள் ஓர் அணங்கு அனாள்-(கண்டவர் இதுமுறிந்துபோமோஎன்று)அஞ்சுவதற்குக்காரணமாகி மிக நுண்ணியதாக வுள்ள இடையைக்கொண்ட தெய்வப்பெண் போன்ற ஒருத்தி, அளகம் பந்தி நஞ்சு வேல் கருங் கண் செவ்வாய் நகை முகம் - கூந்தலின்தொகுதியையும் விஷம்பூசிய வேற்படைபோன்ற கரியகண்களையும் செந்நிறவாயையுமுடைய சிரிப்போடுகூடிய (தனது)முகம், மதுவுள் தோன்ற - கள்ளினுள்ளே பிரதிபலிக்க, (வேறொருபெண் தான்பருகும் நறவைப் பருகுவதாக மயங்கி), (அந்தப்பிரதிவிம்பத்தைப்பார்த்து),—'பிச்சி-பித்தம்பிடித்தவளே! நீ என் செய்தாய் - நீ என்ன காரியம் செய்தாய்? இ பெரு நறவு இருக்க - இதோ சாடியிலே மிகுதியாகக் கள்ளிருக்க, (அதனையெடுத்துப் பருகாமல்), வாளா-பயனில்லாமல் [நிரம்பப்பருகமுடியாதவாறு என்றபடி], எச்சிலை நுகர்திஓ - (எனது) எச்சிலான இந்தக்கள்ளைப் பருகக்கடவாயோ?'என்று—, எயிறு அரும்பு இலங்க - பற்களாகிய முல்லையரும்புகள் வெளித்தோன்றிவிளங்க, நக்காள் - சிரித்தாள்; (எ - று.)— நீ என்செய்தாய் - நீ செய்தகாரியம் தகுதியற்றதென்றபடி. பி - ம்:—[1]நளிர். (கக)

கஉ.—கிண்ணத்தில் நிலாவீச, நறவு நிறைந்திருப்பதாக்கருதிப்பருக ஒருத்தி வாய்வைத்துப் பின் நாணுதல்.

புறமெலா நகைசெய் தேசப் பொருவரு மேனி வேறோர்
மறமுலாங் கொலைவேற் கண்ணாண் மணியின்வள் ளத்து வெள்ளை
நிறநிலாக் [1]கற்றை பாய நிறைந்தது போன்று தோன்ற
[2]நறவென வதனை வாயின் வைத்தன [3]ணாணுட் கொண்டாள்.

(இ - ள்.) பொரு அரு மேனி - ஒப்பற்ற உடம்பையும், வேறு ஓர் மறம் உலாம் கொலை வேல் கண்ணாள்-(எங்கும் இதுவரையுங்கண்டிராத)வேறொருவகையான [புதிய] கொடுமையுலாவுகின்றனவாய்க் கொலைத்தொழிலைச் செய்யும் வேற்படைபோன்றனவான கண்களையுமுடைய ஒருத்தி, மணியின் வள்ளத்து - (கள்ளையெடுத்துப்பருகுமாறு கையிற்கொண்ட) இரத்தினமயமான கிண்ணத்திலே,வெள்ளை நிறம் நிலா கற்றை பாய-வெண்மைநிறமுள்ள நிலாத்தொகுதி பாய்வதனால், நிறைந்தது போன்று தோன்ற - (அந்தமணிக் கிண்ணம் மதுவினால்) நிறையப்பெற்றதுபோன்று காணப்பட, நறவு என - (மணிக்கிண்ணத்துவீழ்ந்த நிலவை) மதுவெனக்கருதி, புறம் எலாம் நகை செய்து ஏச - பக்கத்திலுள்ளவரெல்லாம் சிரித்துப் பரிகாசஞ்செய்யும்படி,

அதனை வாயின் வைத்தனள் - (மதுவைப் பருகும்பொருட்டு) அந்தமணிக் கிண்ணத்தை (த் தன்)வாயிலே வைத்துக்கொண்டு, (மதுவானது சுவைக்கு மாறு வாயிலே விழாமையால்), உள் நாண் கொண்டாள் - தன்னுள்ளே நாணமடைந்தாள்; (எ - று.)

வாயில் மதுவிழாமையாலும் பிறர் சிரித்துஎசுவதனாலும் தான் ஏமாந்த தற்கு நாணமடைந்தன ளென்க. பி - ம்:—[1] கதிர்கள். [2]கறையிலாததனை. [3]நாணுக்கொண்டாள். (கஉ)

கங.—கட்சாடியுட் பிரதிபிம்பித்த தன்கண்ணை வண்டென மயங்கி ஒருத்தி ஓச்ச முயலுதல்.

யாழ்க்குமின் குழற்கு மின்ப [1]மளித்தன விவையா மென்னக்
கேட்குமென் மழலைச் [2]சொல்லோர் கிஞ்சுகங் கிடந்த வாயா
டாட்கருங் குவளை தோய்ந்த [3]தண்ணறைச் சாடி யுட்டன்
வாட்கணி னிழலைக் கண்டாள் வண்டென வோச்சு கின்றாள்.

(இ - ள்.) 'யாழ்க்குஉம் - வீணையினிசைக்கும், இன் குழற்குஉம்-இனிய வேய்ங்குழற்கும், இன்பம் - (கேட்டற்கு) இனிமையாயிருத்தலை, இவை - இம்மழலைச்சொற்கள், அளித்தன - தந்தன', என்ன - என்றுசொல்லுமாறு, கேட்கும் - (இனிதாக) ஒலிக்கின்ற, மெல் மழலை சொல் - மெல்லிய மழலைச்சொற்களையுடைய, ஓர் கிஞ்சுகம் கிடந்த வாயாள்-முருக்கமலர்போன்ற வாயையுடையவளாகிய ஒருத்தி,—தாள் கருங் குவளை தோய்ந்த தண் நறை சாடியுள் - நாளத்தையுடைய கரியகுவளைமலர் போகடப்பட்டுள்ள குளிர்ந்த கள்ளைப் பெய்துள்ள சாடியில், தன் வாள் கணின் நிழலை கண்டாள்-தன்னுடைய வாட்படைபோன்றகண்ணின் நிழலைப் பார்த்து, வண்டு என - (அதனை)வண்டென்று மயங்கி, ஓச்சுகின்றாள் - ஓட்டலானாள்; (எ - று.)

கட்சாடியுள் மணத்திற்காகத் தாமரை குவளைபோன்ற மலர்களையிட்டு வைத்தல்,வழக்கமென்பர். அங்ஙனமே நறுச்சாடியு ளிடப்பட்ட குவளைமலர் மீது தன்கண்ணினில்பாய நறுச்சாடியிலிட்டகுவளையில் வண்டுமொய்ப்ப தாக மயங்கி ஒருத்தி ஓச்சத்தொடங்கின ளென்பதாம்; மயக்கவணி. இனி, நறுச்சாடியிலே தோன்றிய கண்ணிழலை வண்டெனமயங்கியதாகக்கொள் ளலு மொன்று.யாழ் வேய்ங்குழல் என்ற இசைக்கருவிகளோடு தன்குரலைச் சேர்த்துப் பாடுகையில் அவை மிகவும் இனியனவாகத் தோன்றுதலால், 'யாழ்க்கும் குழற்கும் மழலை இன்பமளித்தன' என்றார். ஆம்-அசை. பி-ம்:—[1]அருளின. [2]சொல்லாள். [3]தோற்க. (கங)

கச.—ஒருத்தி கள்ளினுள்தோன்றுஞ் சந்திரனுக்கு அறிவுறுத்துதல்.

களித்தகண் மதர்ப்ப வாங்கோர் கனங்குழை கள்ளி னுள்ளால்
வெளிப்படு கின்ற காட்சி வெண்மதி நிழலை நோக்கி
யளித்தன னபயம் வானத் தரவினை யஞ்சி நீவர்
தொளித்தனை [1]யஞ்ச லென்றாங் [2]கினியன [3]வுணர்த்து கின்றாள்,

(இ - ள்.) ஆங்கு - அவ்விடத்து, ஓர் கனங்குழை - பொன்னினாலியன்ற குழையென்னுங் காதணியையணிந்த ஒரு பெண், கள்ளின் உள்ளால் - கள்ளினுள்ளே, வெளிப்படுகின்ற - பிரதிபிம்பமாகத்தோன்றுகின்ற, காட்சி வெண் மதி - அழகையுடைய வெண்மைநிறமுள்ள சந்திரனது, நிழலை - பிரதிபிம்பத்தை, களித்த கண் மதர்ப்ப நோக்கி - மதக்களிப்புத் தோன்றுகின்ற கண்கள் களிக்கும்படி பார்த்து, '(சந்திரனே!) நீ—, வானத்து அரவினை அஞ்சி - வானத்திலுள்ள இராகுஎன்னும் பாம்புக்குப்பயப்பட்டு,வந்து ஒளித்தனை - (இந்தமதுவுக்குள்ளே) வந்து ஒளித்திருக்கிறாய்; (ஆகையால் யான் உனக்கு), அபயம் அளித்தனன் - அபயம்கொடுத்தேன்; அஞ்சல் - பயப்படாதே', என்று - என்றுசொல்லி, இனியன - இனிய சிலசொற்களை, உணர்த்துகின்றாள் - அறிவுறுத்துபவளானாள்; (எ - று.)

ஒருத்தி, கள்ளுண்ட மயக்கத்தாற் சாடியிலுள்ள கள்ளினுள்ளே பிரதிபிம்பமாகத்தோன்றுஞ் சந்திரனை உண்மையான சந்திரனே இராகுவுக்கு அஞ்சி அங்குவந்து ஒளித்திருப்பதாகக்கொண்டு அபயமளித்துச் சில உணர்த்தலானாளென்க.உணர்த்துகின்றாளென்ற சொல்லினாற்றலால், 'பிறருக்கு இன்னாதவற்றை ஒருவன் முற்பகலிற்செய்தால் அவ்வின்னாப்பயன் பிற்பகலில் தானே தீப்பயனைவிளைக்குமென்பதையும்,இன்னாசெய்யப்பட்டவரிடத்துச்சென்று குறையிரக்குங்காலமும் நேர்தல்கூடுமென்பதனையும் உணராமல், யான் கணவனைப் பிரிந்த காலத்திலும் ஊடிய காலத்திலும் நீ வெவ்வியநிலாவை என்மீதுவீசி வருத்தினையன்றோ! அங்ஙனஞ்செய்த நீ வானத்துஅரவுக்கு அஞ்சி எமதுமதுச்சாடியுள்ளே பதுங்குங் காலமும் வந்ததல்லவா? இனியாவது நீ முன்போற்செய்யாது நல்லொழுக்கத்தை மேற்கொள்க'என்று அறிவுறுத்தினாள் என்ற கருத்துத்தோன்றுமென்பர்.ஆங்கு- அசை: இனி, என்ற ஆங்கு எனப்பிரித்து, என்ற ஆங்கு இனியன - என்றாற்போன்ற இனியசொற்களை யெனினுமாம். பி - ம்:—[1] நவெங்கல், ஆங்கொல். [2] இனையன. [3] உரைத்துநின்றாள். (௧௪)

௧௫.—ஒருத்தி நிலவை மதுவென்றுமயங்கிக் கிண்ணத்தில் ஏற்க முயலுதல்.

அழிகின்ற வறிவி னாலோ பேதைமை யாலோ [1]வாற்றிற்
சுழியொன்றி நின்ற தன்ன வுந்தியா [2]ளொருத்தி செந்தேன்
பொழிகின்ற பூவின் வேய்ந்த பந்தரைப் [3]புரைத்துக் கீழ்வந்
திழிகின்ற கொழுநி லாவை நறவென வள்ளத் தேற்றாள்.

(இ - ள்.) ஆற்றில் சுழி ஒன்றி நின்றது அன்ன - யாற்றுநீரில்தோன்றுகிற நீர்ச்சுழியானது ஓரிடத்தில் நிலைத்துநிற்பதையொத்த, உந்தியாள் ஒருத்தி - நாபியையுடையஒருத்தி,—செம் தேன் பொழிகின்ற பூவின் வேய்ந்த பந்தரை புரைத்து கீழ்வந்து இழிகின்ற கொழு நிலாவை - செந்நிறத்தேனைப்பொழிகின்ற மலர்களால் வேயப்பெற்ற பந்தலைத் துளைத்துக்கொண்டு கீழேவந்திறங்குகின்ற செழிப்புள்ள நிலாவை, அழிகின்ற அறிவினாலோ - மதுவுண்ட மயக்கத்தாற்கேடடைகின்றஅறிவைப் படைத்தகாரணத்தினாலோ,(அன்றி), பேதைமையாலோ-மடவார்க்குரிய பேதைமைக்குணத்தினாலோ, நறவு என - மதுவென்று மயங்கி,வள்ளத்து ஏற்றாள் - கிண்ணத்தில் ஏற்கப்பார்த்தாள்

ஒருத்தி மலர்ப்பந்தலின்வழியாகக் கீழே வந்துஇருக்கின்ற நிலவை மதுவென்றுமயங்கிக் கிண்ணத்திலேற்றனளென்க; மயக்கவணி. அங்ஙனம் அவள் மயங்கியதற்குக் காரணம்-மதுஉண்ட மயக்கமோ அல்லது மடவார்க்குரிய இயற்கைப்பேதைமைக்குணமோ எனக் கவி உத்பிரேட்சிக்கின்றனர். சிலபிரதிகளில் இரண்டாவது அடி 'சுழி நின்ற தன்னவுந்தித் தோகையங் கொருத்தி செந்தேன்' என்று காணப்படுகின்றது. பி - ம்:— [1]ஆற்று. [2]தூய. [3]கிழித்து. (கஓ)

கசு.—ஒருத்தி மதுவுண்ட மயக்கத்தாற் சொல்லுஞ்செயலுந்தடுமாறுதல்.

மின்னென நுடங்கு கின்ற மருங்குலா ளொருத்தி [1]வெள்ளை
யின்[2]னமிழ் தனைய [3]வின்சொ லிடைத்தடு மாறி [4]யென்னே
வன்னமே கலையை நீக்கி மலர்த்தொடை யல்குல் சூழ்ந்தாள்
பொன்னரி மாலை கொண்டு புரிகுழல் புனைய லுற்றாள்.

(இ - ள்.) மின் என நுடங்குகின்ற மருங்குலாள் ஒருத்தி - மின்னல் போல அசைகின்ற இடையையுடைய ஒருபெண்,— வெள்ளை இன் அமிழ்து அனைய இன் சொல் இடை தடுமாறி - வெண்மைநிறமுள்ள இனிய அமிர்தத்தையொத்த இனியபேச்சு(கள்ளுண்ட மயக்கத்தால் பேசத்தொடங்கிய) இடையில் குழறப்பெற்று, அல்குல் வன்னம் மேகலையை நீக்கி மலர் தொடை சூழ்ந்தாள் - (தனது) இடையில் (அணிந்திருந்த) அழகிய மேகலையென்னும் அணியைக் களைந்துவிட்டு(அந்தஇடத்தில்) மலர்கொண்டு தொடுக்கப்பெற்ற மலர்மாலையைச் சூழஇட்டாள்; (அன்றியும்), பொன்னரிமாலை கொண்டு புரி குழல் புனையல் உற்றாள் - பொன்னரிமாலையென்னும் அணியைக்கொண்டு நெறிப்புள்ள கூந்தலை அலங்கரிக்கத்தொடங்கினாள்; என்னே—! (எ - று.)

ஒருத்தி பேசத்தொடங்கி மதுவுண்டமயக்கத்தால் இடையில் அப்பேச்சு குழறிப்போகப் பெற்றது மல்லாமல், அணியவேண்டியவற்றையும் இடம் மாறி அணியலாயின ளென்க. அல்குல் - இடை. பி - ம்:—[1]மெல்ல. [2]அமிர்து, அமுது. [3]தீஞ்சொல். [4]ஏய்ந்த, என்ன. (கசு)

களஎ.—ஒருத்தி கள்ளினுள்தோன்றுந் தன்முகத்தைச் சந்திரனெனமயங்குதல்.

கண்மணி வள்ளத் துள்ளே களிக்குந்தன் முகத்தை நோக்கி
விண்மதி மதுவி னாசை வீழ்ந்ததென் றொருத்தி யுன்னி
யுண்மகிழ் துணைவ னோடு மூடுநாள் வெம்மை நீங்கித்
தண்மதி யாதி யாகி றருவனிந் நறவை யென்றாள்.

(இ - ள்.) ஒருத்தி—,—கள் மணி வள்ளத்து உள்ளே - கள்ளையுடைய மணிகளிழைத்துச் செய்யப்பட்ட கிண்ணத்துள்ளே, களிக்கும் தன் முகத்தை நோக்கி - மதர்த்துள்ள தன்முகம் பிரதிபிம்பிப்பதைக் கண்டு, விண் மதி மதுவின் ஆசை வீழ்ந்தது என்று உன்னி - வானத்துத்தோன்றுகின்ற சந்திரன் மதுவிலுள்ள ஆசையினால் (கள்ளினுள்வந்து)விடப்பதாகநினைத்து, (அச் சந்திரனைநோக்கி), 'உள் மகிழ் துணைவனோடும் ஊடும் நாள் வெம்மை

நீங்கி - மனம்மகிழ்தற்குக் காரணமான கணவனோடு(யான்)ஊடல்கொள்ளுங் காலத்து (உனது இயற்கைத்தன்மைக்குமாறாக) வெம்மையாகவாகும் தன்மையை நீங்கி, தண்மதி ஆதி- தட்பத்தையுடைய சந்திரனுவாய்; ஆகில்.- அங்ஙனம் இருப்பதாயிருந்தால், இ நறவை தருவன்-இந்த மதுவை(ப் பருகும்படி நான் உனக்கு அனுமதி) தருவேன்', என்றாள்—; (எ - று.)

ஒருத்தி நோக்கி உன்னி என்றாள் என்க. மணிக்கிண்ணத்து மதுவினுள் தோன்றுந் தன்முகத்தை மதுவினிடத்துவிருப்பத்தால்வந்துகிடக்குஞ் சந்திரனென மயங்கி, ஊடல்நிலையில் தண்மதியாயிருப்பதாக உறுதிதந்தால் யான் இந்நறவைப் பருகவிடுவேனென்றாள். பி - ம்:—[1]ஆகில்யானும். (௧௭)

௧௮.—ஒருத்தி மதுவைக் கீழேசிந்திவிட்டு மதிமயக்கத்தால் உணராது மதுப்பருகக் கிண்ணத்தை வாயிதழில்வைத்துக்கொள்ளுதல்.

எள்ளொத்த கோல மூக்கி னேந்திழை யொருத்தி முன்கை
தள்ளத்தண் ணறவை யெல்லாந் தவிசிடை யுகுத்துந் தேரா
ளுள்ளத்தின் மயக்கந் தன்னா[1]லுட்புறத் துண்டென் றெண்ணி
வள்ளத்தை [2]மறித்து வாங்கி மணிநிற விதழின் வைத்தாள்.

(இ - ள்.) எள் ஒத்த கோலம் மூக்கின் ஏந்து இழை ஒருத்தி - எள்ளுப்பூப்போன்ற அழகியநாசியையுடைய அணிகலம்பூண்ட ஒருத்தி,—முன் கை தள்ள தண் நறவை எல்லாம் தவிசு இடை உகுத்தும் தேராள்-முன்னங்கை நடுங்குவதனால் குளிர்ந்த மதுவையெல்லாம் (தன்) ஆசனத்திற் சிந்திவிட்டும் உணராதவளாய்,— உள்ளத்தில் மயக்கம்தன்னால் - மனத்திலுள்ள (மது வுண்ட) மயக்கத்தினால், உள் புறத்து உண்டு என்று எண்ணி - (கிண்ணத்தின்) உட்புறத்திலே (மது) இருக்கின்றதென்று கருதி, வள்ளத்தை மறித்து வாங்கி - மதுக்கிண்ணத்தை மீண்டும் கையிற்கொண்டு, மணி நிறம் இதழின் வைத்தாள் - (அம்மதுவைப்பருகுமாறு அக்கிண்ணத்தைப்) பதுமராகமணி போன்ற செந்நிறமுள்ள அதரத்தில் வைத்துக்கொண்டாள்; (எ - று.)

கள்ளுண்டதனால் முன்னங்கை நடுங்கிற்று. [1]உப்புறத்து என்றபாடத்துக்கு, உ புறத்து உண்டென்றெண்ணி - (கிண்ணத்தின்) மேற்புறத்திலே மதுவுள்ளதென்று கருதி, வள்ளத்தை மறித்துவாங்கி - மதுக்கிண்ணத்தைக் கீழ்மேலாகக்கொண்டு என்க. பி - ம்:—[2]மறித்தும். (௧௮)

௧௯.—வண்டுகட்கு அஞ்சி ஒருத்தி செங்கழுநீர்மலரின்நாளத்தால் மதுப்பருகுதல்.

வான்றனைப் பிரித லாற்றா வண்டினம் வச்சை மாக்க
[1]ளேன்றமா நிதியம் வேட்ட விரவல ரென்ன வார்ப்பத்
தேன்றரு கமலச் செவ்வாய் திறந்தன னுகர நாணி
யூன்றிய கழுநீர் நாளத் தாளினு லொருத்தி யுண்டாள்.

(இ - ள்.) வான் தனை பிரிதல் ஆற்றா வண்டு இனம்-ஆகாயமளவும் பிரிய மாட்டாமல் மொய்த்துக்கொண்டுள்ள வண்டுகளின்கூட்டம், வச்சைமாக்கள் ஏன்ற மா நிதியம் வேட்ட இரவலர் என்ன - உலோபிகளிடத்துப் பொ

ருந்திய பெருஞ்செல்வத்தை(ப் பெறும்பொருட்டு)விரும்பிவந்துள்ள யாசகர் கள்போல,ஆர்ப்ப-ஆரவாரித்துநிற்க,—ஒருத்தி—,—தேன் தரு கமலம் செவ் வாய் திறந்தனள் நுகர நாணி - தேனைச்சொரிகின்ற தாமரைமலர்போன்ற (தனது) செந்நிறவாயைத் திறந்து மதுவைப்பருகுவதற்குக் கூசி, ஊன்றிய கழுநீர் நாளம் தாளினுல் - கிண்ணத்திலூன்றவைத்த செங்கழுநீரின் உள் துளையுள்ள தண்டினுல், உண்டாள் - பருகலானுள்; (எ - று.)

வண்டு மொய்ப்பதனுல் வாயைத்திறந்து பருகினுல் வண்டுகள் அங்கும் வந்து மொய்த்து ஆர்க்கக்கூடுமென்று கூசிச் செங்கழுநீர்த்தண்டினுற் பருக லானு ளென்க. பி - ம்:—[1]என்றவர், ஆன்றமா. (௧௯)

உ0.—ஒருத்தி கள்ளுண்ணு தொழிதல்.

புள்ளுறை கமல வாவிப் பொருகயல் வெருவி யோட
வள்ளுறை [1]கழித்த வாள்போல் [2]வசியுற வயங்கு கண்ணுள்
கள்ளுறை மலர்மென் கூந்தற் களியிள மஞ்ஞை யன்னு
ளுள்ளுறை யன்ப னுண்ணு [3]னெனநற வுண்ண லெண்ணுள்.

(இ - ள்.) புள் உறை கமலம் வாவி பொரு கயல் வெருவி ஓட - நீர்ப்பற வைகள் வாழ்கின்ற தாமரைத்தடாகத்திலுள்ள (ஒன்றோடொன்று) மோது கின்ற கயல்மீன்கள்(ஒப்பாகாமல் தாம்)நிலைகெட்டு ஓடும்படி,வள்உறை கழி த்த வாள் போல் வசி உற வயங்கு - தோலாற்செய்த உறையினின்றும் உருவிஎடுத்த வாட்படைபோலக் கூர்மை மிகவிளங்குகின்ற, கண்ணுள்-கண் களையுடையவளும், கள் உறை மலர் மெல் கூந்தல் களி இள மஞ்ஞை அன் னுள் - தேன் தங்கிய மலரையணிந்த மெல்லியகூந்தலையுடைய களித்த இள மயிலை ஒப்பவளுமாகிய ஒருத்தி, உள் உறை அன்பன் உண்ணுன் என - (தனது) மனத்தினுள் (எப்போதும்) தங்குகின்ற(தனது)காதலன்(மதுவை) உண்ணுனென்ற காரணத்தினுல், நறவு உண்ணல் எண்ணுள் - (தானும்)மது ப்பருகுதலை உண்ணுதவளாயினுள்; (எ - று.)

மதுப்பருகாத்தன்மையைக்கொண்ட கணவனையுடைய ஒருத்தி தானும் கணவனுெழுக்கத்துக்குஏற்ப மதுப்பருகாதவளாயினளென்க. இனி, அன் பன் தனது உள்ளத்தில் நீங்காதவனுயிருத்தலாலும் தான் மதுவைப்பரு கின் மதுப்பருகும் பழக்கமில்லாத தனதுஉள்ளத்துள்ள அக்கணவன்மேல் தான் பருகும் அம்மது படு மாதலாலும் அஞ்சி மதுப்பருகாளாயினள் என்று கருத்துக் கொள்ளுதலு மொன்று. உள்ளத்துள்ளகணவ னென்றது - தான் எப்பொழுதும் கணவனைச் சிந்தனையிற் கொண்டிருத்தலால். வெளியுள்ள கணவன் மதுப்பருகுவனேயன்றி உள்ளக்கணவன் மதுப்பருக முடியாதவ னுத லறிக. உண்ணுதல் என்னும்பொதுவினை, பருகுதல் என்னும் சிறப்புப் பொருளைத் தந்தது. பி - ம்:—[1]கழிந்த. [2]வரியுற,வசையற. [3]என்றுன்னி நறவை யுண்ணுள். (உ0)

உ௧.—மதுப் பருகியதனுற் கண்சிவத்தல் முதலியன தோன்றுதல்.

கூற்றுறழ் நயனங்கள் சிவப்பக் கூனுத
லேற்றிவா ளெயிறுக ளதுக்கி யின்றளிர்

மாற்றருங் காதல மறிக்கு மாதொரு
சீற்றமா மபிநயந் தெரிக்கின் றாரினே.

(இ - ள்.) ஒருமாது - ஒருத்தி, சீற்றம் ஆம் அபிநயம் தெரிக்கின்றாரின்-வெகுளிக்குஉரிய அபிநயத்தைக் காட்டுபவர்போல,கூற்று உறழ் நயனங்கள் சிவப்ப - (தமக்குஇலக்கானூர்க்கு மரணவேதனையைவிளைத்தலால்) யமனையொத்த கண்கள் செந்நிறமடையவும், கூன் நுதல் ஏற்றி-வளைவு நெற்றியில் தோன்றுமாறு(புருவங்களை நெரித்து)மேலேற்றி, வாள் எயிறுகள் அதுக்கி-ஒளிபொருந்திய பற்களைக் கடித்து; இன் தளிர் மாற்று அரு காதலம்-இனிய தளிரினழகை(த் தமக்குமுன்னே தலையெடுக்கவொட்டாதபடி) போக்குகின்ற அருமையான கைத்தலங்களை, மறிக்கும் - தட்டுவாள்; (எ - று.)

கண்சிவத்தல் முதலியன - கட்குடித்தோர்க்கும் வெகுட்சிகொண்டோர்க்குந் தோன்றுவன. வெகுண்டோனவிநயம் இன்னதென்பதை "வெகுண்டோனவிநயம்விளம்புங்காலை, மடித்தவாயு மலர்ந்தமார்பும், துடித்தபுருவமுஞ் சுட்டியவிரலும், கன்றினவுள்ளமொடு கைப்புடைத்திடுதலு, மன்னரோக்கமொ டாய்ந்தனர்கொளலே" என்பதனு லறிக. மறித்தல்-புடைத்தலென்றபொருளில் வந்தது: தடுத்தலென்றுகொள்வாரு முண்டு. (உக)

உஉ.—இதுவும் அது.

துடித்தவான் றுவரிதழ்த் தொண்டை தூநிலாக்
கடித்தவா லெயிறுக ளதுக்கிக் கண்களால்
வடித்தவெங் குருதிவேல் விழிக்கு மாதர்மெய்
பொடித்தவேர் புறத்துகு [1]நறவம் போன்றதே.

(இ - ள்.) துடித்த வான் துவர் இதழ் தொண்டை - துடிக்கின்ற மிக்க சிவப்புள்ள அதரமாகிய கொவ்வைக்கனியை, தூ நிலா கடித்த வால் எயிறுகள் அதுக்கி - வெண்ணிறமுள்ள நிலாவைக்கோபித்த வெள்ளிய பற்களாற் கடித்து,வடித்த வெம் குருதி வேல் கண்களால் விழிக்கும் - கூர்மையாக்கப்பெற்றுக் கொடிய (பகைவரின்)இரத்தந்தோயப்பெற்ற வேற்படைபோல(த் தன்) கண்களினுல் விழித்துப்பார்க்கின்ற, மாதர் - ஒருபெண்ணின்,மெய் பொடித்த வேர் - உடம்பில்தோன்றிய வேர்வைநீர், புறத்து உகு நறவம் போன்றது-(உடம்பின்)வெளியேசிந்துகின்ற மதுவையொத்தது; (எ - று.)

கள்ளுண்டார்க்கு உடல்வேர்த்தலும் உண்டு: அங்ஙனம் ஒருத்திக்கு உடம்புவெயர்த்ததனை, பருகிய மது உள்ளடங்காமல் வெளியேசிந்துகின்றது போலு மெனக் குறித்தார்: தற்குறிப்பேற்றவணி. கடித்த=கடிந்த: விகாரம். பி - ம்:—[1]நாணம். (உஉ)

உங.—இதுவும் அது.

கனித்திர ளிதழ்[1]பொழி செம்மை கண்புக
நினைப்பதொன் றுரைப்பதொன் [2]றுமொர் நேரிழை
[3]தனித்தட மரைமலர் முகத்த சாபமுங்
குனித்தது பனித்தது குழவித் திங்களே.

(இ - ள்.) கனி திரள் இதழ் பொழி செம்மை - கொவ்வைக்கனிபோன்று திரண்ட அதரங்களினின்று வெளிப்படுகின்ற செந்நிறம், கண் புக - கண்ணிற் சேர, நினைப்பது ஒன்று உரைப்பது ஒன்று ஆம் ஓர் நேர்இழை - (மனத்தில்) நினைப்பதொன்றும் (வாயினாற்) சொல்வது ஒன்றுமாகித் தடுமாறுகின்ற ஒரு பெண்ணினது, தனி தடம் மரை மலர் முகத்த சாபம்உம் - ஒப்பற்ற தடாகத்தினின்று (அன்றுபறித்த) தாமரைமலர்போன்ற முகத்திலுள்ள புருவமாகிய வில்லும், குனித்தது - வளைந்தது; குழவி திங்கள் (உம்) - நெற்றியாகிய பிறைச்சந்திரனும், பனித்தது - வெயர்த்தது; (எ - று.)

ஒருத்தி, கண்சிவக்க உரைதடுமாறப் புருவம்வளைய நுதல்வியர்த்தன ளென்க. அஷ்டமீசந்திரனை நெற்றிக்கு உவமை கூறுவர். புருவத்தைச் சாதியொருமையாகக்கொண்டு 'சாபம்குனித்தது' என்றார். கண்செந்நிறமானதை, இதழ் செந்நிறத்தைமிகுதியாகச்சிந்துவதாற் சிவந்ததுபோலுமென்று குறித்தார். பி-ம்:—[1]பொதி. [2]ஆயொர். [3]தனிச்சுடர்தாமரைமுகத்து. (உக)

உச.—மதுப்பருகுகை கலவியை யொத்தல்.

* இலவிதழ் துவர்விட வெயிறு[1]தேன்வர
மூலமிசைக் கச்சொடு கலையு மூட்டற
வலைகுழல் [2]சோர்தர வசதி [3]யாடலாற்
கலவிசெய் கொழுநருங் கள்ளு மொத்தவே.

(இ - ள்.) இலவு இதழ் - இலவம்பூவையொத்த அதரமானது, துவர் விட - (தனக்குஉரிய) செந்நிறத்தை நீங்கவும், எயிறு தேன் வர - பற்களினின்று தேன்போன்ற நீர் பெருகிவரவும், முலைமிசை கச்சொடு - முலைமீ தணிந்த கச்சுடனே, (அரைமீதணிந்த), கலைஉம் - ஆடையும், மூட்டு அற - முடிச்சு அவிழவும், அலை குழல் சோர்தர - அலையுந்தன்மையுள்ள கூந்தல் அவிழ்ந்துதொங்கவும், அசதி ஆடலால் - பரிகாசச்சிரிப்புத்தோன்றுவதனால், கொழுநர் செய் கலவிஉம் கள்உம் ஒத்த - கணவர்செய்கின்றகலவியும் கள்ளும் ஒத்திருந்தன; (எ - று.)

வாயிதழ் செந்நிறம்மாறுதலும், வாய்ப்பற்களினின்று இன்சுவைநீர் தோன்றுதலும், கச்சும்கலையும் மூட்டறுதலும், குழல்சோர்தலும், அசதியாடுதலும் - கலவியிலும் மதுப்பருகுகையிலும் தோன்றுவனவாம். கலை - மேகலையுமாம். அசதி - ஹஸிதி: வடசொல்: சிரிப்புஎன்பதுபொருள். அசதியாடுதலென்பது - பரிகாசமாகச்சிரித்தலென்ற பொருளில்வருதலை "ஒறுக்கப்படுவாரிவரென்றங்கசதியாடி" என்ற இடத்துங் காண்க. இனி, அயர்தியென்பது அசதியெனத் திரிந்துவந்ததாகக் கொள்ளின், அசதியாடலால்என்பதற்கு - உடல்தளர்ச்சியடைதலால் என்று பொருள் காணலாம். பி - ம்:—[1]தேனுக. [2]சரிதர. [3]ஆட்டலால். (உச)

உரு.—ஒருத்தி கணவனிடத்துத் தூதனுப்புதல்.

கனை[1]கழற் காமனாற் கலக்க முற்றதை
யனகனுக் கறிவியென் றறியப் போக்குமோ

ரினமணிக் ²கலையினு டோழி நீயுமென்
மனமெனத் ³தாழ்த்தியோ வருதி யோவென்றாள்.

(இ - ள்.) கனை கழல் காமனால் - ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த காமதேவனால், கலக்கம் உற்றதை - (யான்) நோய் கொண்டிருப்பதை, அனகனுக்கு - குற்றமற்ற (என்) கணவனுக்கு, அறிவி - தெரிவிப்பாயாக, என்று - என்று (தன்தோழியினிடஞ்) சொல்லி, அறிய போக்கும் - (தன் நிலையைத் தன்கணவன்) தெரிந்துகொள்ளும்படி (தன்பாங்கியை) யனுப்பத் தொடங்கிய, ஓர் இனம் மணி கலையினாள் - கூட்டமாகிய இரத்தினங்கள் பதித்த மேகலையைப்பூண்ட ஒருதலைவி,(தன்தோழியைப்பார்த்து), 'தோழி-தோழியே! நீஉம்—, என் மனம் என தாழ்த்திஓ - என்மனம்போல (அக் கணவனிடத்திலேயே) தாமதித்துவிடுவாயோ? வருதிஓ - (செய்திசொன்ன வுடனே மீண்டு) வருவாயோ?' என்றாள் - என்றுவினவினாள்; (எ - று.)

அனகன் - நாயகன்; பிரிவுத்துயரையறியாதவ னென்ற குறிப்பு: பிரிவுத்துயரையறிந்திருப்பின் என்னைத் துயருற விடானென்பது கருத்து. பி - ம்—¹கடற்கள்வனால். ²கலையினாய். ³தாழ்தியோ. (உடு)

உசு.—ஒருத்தியின் கணவனிடத்துத் தூது.

மானமர் நோக்கியோர் மதுகை வேந்தன்பா
லானதன் பாங்கிய ராயி னாரெலாம்
போனவர் போனவர் ¹தொடரப் போக்கினா
²டானுமங் கவர்கள்பின் றமிய ளேகினாள்.

(இ - ள்.) மான் அமர் நோக்கி-மான்விரும்புகின்ற கண்ணழகையுடைய ஒருத்தி,—ஓர்மதுகை வேந்தன்பால்-ஒப்பற்றவலிமையையுடைய(தன்)கணவனிடத்தில், ஆன தன் பாங்கியர் ஆயினார் எலாம் - (தனக்கு) அநுகூலமாகவுள்ள தன்தோழிமார்களாயுள்ளவரையெல்லாம், போனவர் போனவர் தொடர போக்கினாள் - பின்னே சென்றவர்கள் (முன்னே) சென்றவரைத் தொடர்ந்துநிற்க அனுப்பிவிட்டாள்; (பின்னும் அக்கணவனிடம் அனுப்புவதற்குத் தோழிமார் இல்லாமையால்), தான்உம்—, அவர்கள் பின் - அந்தத் தோழிமார் யாவருக்கும்பின்னே, தமியள் ஏகினாள் - தனிப்பட்டவளாய்ச் சென்றாள்; (எ - று.)—அங்கு - அசை; அப்போதுமாம்.

தோழிமார் யாவரும் கணவனிடத்துத் தூதாகஅனுப்பப்பட்டு மீண்டு வாராமையால், இறுதியில் தானே அக்கணவனுள்ளஇடம் நாடிச்சென்றாளென்க. தோழிமார்கள் திரும்பிவாராமைக்குக் காரணம், அவர்கள்தாமும் அவனை நாடியமைபோலும். பி -ம்:—¹தொடர்ந்து. ²அவர்பினே. (உசு)

உஎ.—ஒருத்தி கணவன்பெயரையெல்லாஞ் சொல்லுங் கிளியை மகிழ்ந்து புல்லுதல்.

விரைசெய்பூஞ் ¹சேக்கையி னடுக்கை மீமிசை
கரைசெயா வாசையங் கடலு ளாளொரு

பிரசமென் குதலையாள் கொழுநன் பேரெலா
முரைசெயுங் கிள்ளையை யுவந்து [2]புல்லினாள்.

(இ - ள்.) விரை செய் பூ சேக்கையின் அடுக்கை மீமிசை - மணம்வீசுகின்ற மலர்ப்படுக்கையின் அடுக்குக்களிலே, கரை செயா ஆசை அம் கடல் உளாள் - கரைசெய்துதடுக்கமுடியாத காதலாகிய கடலில் மூழ்கியவளான, ஒரு பிரசம் என் குதலையாள் - தேனென்று சொல்லத்தக்க [மிகஇனிமையான] குதலைச்சொற்களையுடைய ஒருத்தி, கொழுநன் பேர் எலாம் உரைசெயும் கிள்ளையை-(தன்)கணவனது பேர்களையெல்லாம்(தான் கற்றபடியே) சொல்லுங் கிளியை, உவந்து புல்லினாள்-மனமகிழ்ந்து தழுவிக்கொண்டாள்.

கணவன் பேர்எலாம் - கணவனுடைய இடுகுறிப்பெயரையேயன்றி எழில் குணம் ஆண்மை வெற்றிமுதலியவற்றினாலாகிய சிறப்புப்பெயர்களையுமென்றபடி. பி - ம்:— [1]சேக்கையந்தெப்பம், சேக்கையின்றெப்பம், சேக்கையினடுத்த. [2]சீறினாள். (உஎ)

உஅ.—ஒருத்தி தன்கிளியை வெறுத்தல்.

மன்றனா றொருசிறை யிருந்தோர் வாணுத
றன்றுணைக் கிள்ளையைத் தழீஇயென் னாவியை
யின்றுபோய்க் கொணர்கிலை யென்[1]செய் வாயெனக்
கன்றிலோ டொத்தியென் றழுது சீறினாள்.

(இ - ள்.) ஓர் வாள் நுதல்-ஒருபெண்,மன்றல் நாறு ஒரு சிறை இருந்து-மணம்வீசுகின்ற ஓரிடத்திலிருந்துகொண்டு, தன் துணை கிள்ளையை - தனக்குத் துணையாகவுள்ள கிளியை, தழீஇ - தழுவிக்கொண்டு, 'என் ஆவியை - எனதுபிராணநாயகனை, இன்று போய் கொணர்கிலை - இன்றைக்குப்போய் அழைத்துவந்தாயில்லை; என்செய்வாய் - (எனக்கு வேறு)என்ன உதவியைச் செய்யப்போகிறாய்? [உன்னால் எனக்கு ஒருதவியுஞ் செய்யமுடியாது]; எனக்கு அன்றிலோடு ஒத்தி-எனக்கு(நீ)அன்றிற்பறவையோடு ஒத்து(க்குரலினால்) வருத்தம்விளைக்கின்றாய்', என்று - என்றுசொல்லி, அழுது - புலம்பி, சீறினாள் - சீற்றங்கொண்டாள்; (எ - று.)

அன்றிற்பறவை தன்குரலால் வருத்துதல்போலக் கிளியும் அவன்பெயரைப் பிரிந்தநிலையிற் பன்முறைசொல்லி வருத்துதலால், 'எனக்கு அன்றிலோடொத்தி'என்றாள். அன்றிலென்பது, ஒருபறவை; அது, எப்பொழுதும் ஆணும்பெண்ணும் இணைபிரியாதுநிற்கும். எப்பொழுதும் ஆணும் பெண்ணுமான அன்றில் ஒன்றோடொன்று வாயலகைக்கோத்துக்கொண்டு உறங்கும்பொழுது அவ்வாயலகு தம்மில் நெகிழ்ந்தவளவிலும் அதனையும் பொறாமல் துயிலுணர்ந்து அப்பிரிவுத்துயரால் மெலிந்து பெருந்தொனியாகக்கத்துகிற குரல் - காமோத்தீபகமாய்ப் பிரிந்த காமுகரை வருத்துமென்றல், கவிமரபு. பி - ம்:—[1]செய்தாய். (உஅ)

௨௯.—இளையாள்பெயரைச் சொல்லித் தன்னைக்கணவன் அழைக்க ஒருத்தி கொண்ட வருத்தம்.

வளைபயின் முன்கையோர் [1]மயில னுடனைக்
கிளையவள் பெயரினைக் கொழுந னீதலு
முளையெயி றிலங்கிட முறுவல் வந்தது
களகள வுதிர்ந்தது கயற்க ணாலியே.

(இ - ள்.) கொழுநன் - (தன்)கணவன், இளையவள் பெயரினை-தனக்கு இளையாள் பெயரை, ஈதலும் - (இட்டுத்தன்னை) அழைத்தலும், வளை பயில் முன் கை ஓர்மயில்அனுள்தனக்கு - பொன்வளைகள் நெருங்கிய முன்னங்கை களையுடைய மயில்போற்சாயலையுடைய ஒருத்திக்கு, முளை எயிறு இலங்கிட- முளையையொத்தபற்கள் வெளிவிளங்க, முறுவல்வந்தது - சிரிப்புஉண்டாயி ற்று; கயல் கண் - கயல்மீன்போலுங் கண்களில், ஆலி - நீர்த் துளி, களகள உதிர்ந்தது - களகளவென்று சிந்தியது; (எ - று.)

கணவன் மாறுடி இளையாள்பெயரைச்சொல்லித் தன்னையழைக்கவே, ஒருமாதுக்கு அவன்மீதுள்ளசினத்தினால் நகையும், பிறமாதினிடத்துத் தன் கணவன் பேரன்புடையானென்பதைக் கருதியதனாலான வருத்தத்தினால் கண்ணீரும் தோன்றினவென்க. பி - ம்:—[1]மயிலனாட்குத்தன். (௨௯)

௩0—ஒருத்தன் மனைவியினூடலைத் தீர்க்க முயலுதல்.

*செற்றமுன் புரிந்ததோர் செம்மல் வெம்மையாற்
பற்றலு மல்குலிற் பரந்த மேகலை
யற்றுகு [1]மணியின்[2]முன் பவனி சேர்ந்தன
பொற்றொடி யொருத்திகண் பொருத முத்தமே.

(இ - ள்.) முன் செற்றம் புரிந்தது ஓர் செம்மல்-முன்னே குற்றத்தைச் செய்துள்ள ஒருஆண்மகன்,வெம்மையால் - (தன்மனைவிகொண்டுள்ள ஊட லைத்தீர்க்கும்) விருப்பத்தினால், அல்குலில் பரந்த மேகலை பற்றலும் - நிதம்பத் திற் பரக்கவணிந்த மேகலையென்னும்அணியை(க்)கையினாற்பிடித்தபோது, (அங்ஙனம் மேகலையிற் பற்றப்பட்ட), பொன் தொடி ஒருத்தி-பொன்னினா லியன்ற தொடியென்னும்வளையலையணிந்த அந்தமாதின்,கண் பொருத முத் தம் - பொருது கண்ணாற்சொரிந்த முத்துப்போன்ற கண்ணீர்த்துளிகள், அற்று உகு மணியின்முன்பு - அறுபட்டுக் கீழேசிந்திய மேகலைமணிகட்கு முன்னே, அவனி சேர்ந்தன- பூமியில்விழுந்தன; (எ - று.)

செற்றம்புரிந்தது ஓர்செம்மல் - புரிந்ததாகியசெற்றத்தையுடைய ஓர் செம்மலென்க.ஒருத்தியின்திறத்து முன்னர்த்தீங்குஇழைத்த ஒருமகன் அவ ளது ஊடலைத் தீர்க்கக்கருதி அவளணிந்தமேகலையைப் பற்ற, அவள் பொரு மற் கண்ணீர் சிந்தின ளென்க. பற்றியதனாலறுபட்ட மணி சிந்துதலுக்கு முன்னே கண்ணீர் சிந்தியதாகக்கூறியது - மிகையுயர்வுநவிற்சியணி. பி - ம்:—[1]முத்தின். [2]முன். (௩0)

௩க.—இதுமுதல் உச - கவிகள் - மதுவுண்ட மகளிர் நிலைமையைத் தெரிவிப்பன.

தோடவிழ் கூந்தலா ளொருத்தி தோன்றலோ
டூடுகே னோவுயி[1]ருருகு நோய்கெடக்
கூடுகே னோவவன் குணங்கள் வீணையிற்
பாடுகே னோவெனப் பலவும் பன்னினாள்.

(இ - ள்.) தோடு அவிழ் கூந்தலாள் ஒருத்தி - பூவிதழ்கள்மலரப்பெற்ற கூந்தலையுடைய ஒருபெண், (என்னுடைய கணவன் என்னிடத்துவருவானானால்); தோன்றலோடு-(வந்த) அக்கணவனுடனே, ஊடுகேன் ஓ - (பிரிந்து எனக்குநோய்செய்ததைக்குறித்துப்) பிணக்கங்கொள்ளக்கடவேனோ? உயிர் உருகும் நோய் கெட கூடுகேன் ஓ - (என்) உயிர்உருகுதற்குக்காரணமாகிய (எனக்குவிளைந்துள்ள) காமநோய் ஒழியும்படி கலவிசெய்யக்கடவேனோ? அவன் குணங்கள் வீணையில் பாடுகென்ஓ - (அவனுக்கு மகிழ்ச்சியுண்டாகுமாறு) அவனதுகுணங்களை யாழிலிட்டுப் பாடக்கடவேனோ? யாதுசெய்யக் கடவேன்?) என - என்று, பலஉம் - (தான் செய்யக்கடவ)பலவற்றையும் பற்றி,பன்னினாள்-மனத்துள்ஆராயலானாள்; (எ - று.)—பி - ம்:—[1]உருக்கு.

௩உ. மாடகம் [1]பற்றிய மகர [2]வீணைதன்
றோடவிழ் மலர்க்கரஞ் சிவப்பத் தொட்டனள்
பாடினா ளொருத்திதன் [3]பாங்கி மார்களோ
[4]டூடின துரைசெயா ளுள்ளத் துள்ளதே.

(இ - ள்.) ஒருத்தி—,—தன் பாங்கிமார்களோடு - தன் தோழிமார்களுடனே, ஊடினது - (தன்கணவனோடு தான்)ஊடல்கொண்டுள்ளதை, உரை செயாள் - வாய்திறந்துசொல்லாதவளாய்,—மாடகம் பற்றிய மகரவீணை - முறுக்காணியமைந்த மகரவீணையை, தன் தோடு அவிழ் மலர் கரம் சிவப்ப தொட்டனள்-இதழ்மலரப்பெற்ற தாமரைமலர்போன்ற தன் கை செந்நிறமடையும்படி தொட்டு, உள்ளத்து உள்ளது பாடினள் - (தன்) மனத்திலுள்ளதைப் பாடலின்மூலமாகத் தெரிவித்தாள்; (எ - று.)

ஊடல்நிகழ நிமித்தமாயிருந்த நாயகனுக்குத் தக்க மதி தோன்றுமாறு ஏற்றசெயல்புரிகவென்று குறிப்புணரவல்ல பாங்கிமாரிடத்து நேரே கூறுதற்கு நாணி இங்ஙனஞ்செய்தனள். இனி உள்ளத்துள்ளது என்பதை உரைசெயாள்என்பதனோடு இயைத்து, 'நாயகன்பிரிந்த குற்றத்தைப் பாங்கிமாரோடு உரைசெயின் அவர்கள் தன்னிடம்வைத்த அன்பு மிகுதியால் அவனைத் தூற்றுவா ரென்றஞ்சிப் பாடிப் போதுபோக்கினா ளென்று கருத்துக் காண்பாருமுளர். மென்மையால் வீணையைத்தொடவும் கரங்கள் சிவந்தன. பி - ம்:—[1]பற்றினள். [2]வீணையின். [3]பாங்குளார்களோடு. [4]ஊடினள். ()

௩௩. குழைத்த[1]பூங் கொம்பனா ளொருத்தி கூடலை
யிழைத்தன [2]ளதுவவ ளிட்ட போதெலாம்

பிழைத்தலு மனங்கவேள் பிழைப்பி ³லம்பொடு
முழைத்தன ளுயிர்த்தன ளுயிருண் டில்லென.

(இ - ள்.) குழைத்த பூ கொம்பு அனாள் ஒருத்தி - தளிர்த்த பூங் கொம்பையொத்த ஒருபெண், (தன் நாயகன் வாராமையால்), - கூடலை இழைத்தனள் - கூடற்சுழிகளைக் கீறினாள்; அவள் இட்ட போது எலாம் - அவள் கீறியபோதெல்லாம், அது பிழைத்தலும் - அக்கூடற்சுழி கூடாமல் தவறிப்போதலும், உயிர்த்தனள்-பெருமூச்சுவிட்டவளாய், அனங்கன்வேள் பிழைப்பு இல் அம்பொடு உம் - மன்மதனது குறிதவறுதலில்லாத மலரம்பு தாக்குவதனால் அவற்றுடனே, உயிர் உண்டு இல் என உழைத்தனள் - (தன் நிலையைக் கண்டவர் இவளுக்கு) உயிர்உண்டோ இல்லையோ என்று ஐயுறுமாறு வருந்தினாள்; (எ - று.)

கூடலாவது - 'நாயகனைக்கூடுதல்நேருமோ, நேராதோ?'என்பதை யறிதற்காகக் கண்களைமூடிக்கொண்டு மணலிலே வட்டமாகச் சுழித்தல். அங்ஙனம் சுழிக்கும்போது இருதலையும் பொருந்துமாயின் கணவனைக்கூடுதல் நேருமென்றும், பொருந்தாதாயின் நேராதென்றும் உணரப்படும். இதனை "தெள்ளியார்பலர் கைதொழுந் தேவனார், வள்ளல் மாலிருஞ்சோலைமணாளனார், பள்ளிகொள்ளுமிடத் தடிகொட்டிடக், கொள்ளுமாகினீ கூடிடு கூடலே" "செருவேலான், பொன்றுங்கணியகலம் புல்லப்பொருந்துமேற், குன்றுதுகூடுகெனக் கூறிமுத்தவார்மணன்மே, லன்றுங்கணி யிழையாளாழியிழைத்தாளே" முதலிய விடங்களிலுங் காணலாம். அம்பொடு, ஒடு - இங்கே, கருவிப்பொருளது. பி - ம்:—¹மென். ²அவ்வவள், அவளது. ³அம்பினால்.

௩௪. பந்தணி விரலினா ளொருத்தி ¹பையுளாள்
சுந்தர னொருவன்பாற் றூது போக்கினாள்
வந்தன னெனக்கடை யடைத்து மாற்றினாள்
சிந்தனை ²தெரிந்திலஞ் சிவந்த நாட்டமே.

(இ - ள்.) பந்து அணி விரலினாள் ஒருத்தி - பந்தை அழகுசெய்கின்ற விரலையுடைய ஒருத்தி, பையுளாள் - பிரிவுத்துயரத்தை மிகுதியாகக்கொண்டவளாய்,—சுந்தரன் ஒருவன்பால் - ஒப்பற்றகட்டழகையுடைய கணவனிடத்து, தூது போக்கினாள் - (தன்தோழியைத்) தூதுஅனுப்பினவளாய், வந்தனன் என - (அக்கணவன்) வந்தானாக, கடை அடைத்து மாற்றினாள் - (அவன் உள்ளேவரமுடியாதபடி) வாயிற்கதவைமூடித் தடுத்தாள்; சிந்தனை தெரிந்திலம் - (இங்ஙனம்செய்தஅவளது) எண்ணம் (இன்னதென்று யாம்) அறிந்திலோம்; நாட்டம் சிவந்த - (அவளது) கண்கள் சிவந்தன; (எ - று.)

தூதுவிடுத்துக் கணவன்வந்தபோது கதவடைத்து மறுத்ததனால், தூதினாலன்றி விருப்பத்தால் நீ வந்தாயில்லையென்று மீண்டும் ஊடிக் கதவை மூடினாளென்றுகருத்துக் காண்க; சிவந்தநாட்டம் என்றதனால், இக்கருத்து வெளியாம். இவள் கைவிரல்கொண்டு பற்றுவதனாற் பந்து அழகுபெறுவதென்பார் 'பந்தணிவிரலினாள்'என்றார். பி - ம்:—¹பையுளால். ²தெரிந்தில.

ந௫. உய்த்தபூம் பள்ளியி னூட னீங்குவான்
சித்தமுண் [1]டொருத்திக்க தன்பன் றேர்கிலான்
பொய்த்ததோர் மூரியா னிமிர்ந்து போக்கினு
ளெத்தனை யிறந்தன கடிகை யீண்டென்றாள்.

(இ - ள்.) ஒருத்திக்கு—,உய்த்த பூ பள்ளியின்-(பாங்கியால்) அமைக்கப் பட்ட மலர்ப்படுக்கையில்,ஊடல் நீங்குவான் - (தான் கொண்ட) ஊடல் நீங் கும்படி, சித்தம் உண்டு - எண்ணமுண்டாயிற்று: அது-அதனை, அன்பன் - (அவளது) கணவன், தேர்கிலான்-அறியாதவனானான்; (அப்போது அம்மங் கை), பொய்த்தது ஓர் மூரியால் - பொய்யான ஒரு சோம்பல் முரிப்பினால், நிமிர்ந்துபோக்கினள் - (கைகால்களை) நிமிர்த்தவளாய், எத்தனை கடிகை ஈண்டு இறந்தன என்றாள் - இப்பொழுது எத்தனைநாழிகை கழிந்தன என்று வினாவினாள்; (எ - று)

ஒருத்தி ஊடல்நீங்கிக் கணவனைக் கூடவேணுமென்னும் விருப்பத்துட னே மலர்ப்படுக்கையிற் பொய்யுறக்கங்கொண்டிருக்க, அவள்கணவன் அத னையுணராது'இவளைத் தீண்டின் சீறுவளோ?'என்றுஅஞ்சி வாளாஅருகேகிட க்க, அவள் அனந்தலிற் சோம்பல்முரிப்பவள்போல் அபிநயித்துக் கைகால் கள் கணவன்மீது படவும் பேசுதற்கு இடமுண்டாகவும், அரைத்தூக்கத்தி லருகேயிருப்பவரை வினவுபவள்போல 'இப்பொழுது எத்தனை நாழிகை கழிந்தது?'என்று வினவினளென்க; இவ்வினாவில், காலத்தை இங்ஙன் வீணேகழிப்பாருண்டோ என்று ஒருபொருள் தொனிப்பதுங் காண்க. மூரி- சோம்பல்: சோம்பல்முரிப்புக்கு, ஆகுபெயர். நிமிர்ந்துபோக்கினள் - ஒரு சொல். பி - ம்:— [1]ஒருத்தி தனன்பன். (ந௫)

ந௬. விதைத்தமென காதலின் வித்து மெய்ந்நிறை
யிதைப் [1]புன[2]நனைத்திட [3]முளைத்த வேயெனப்
பதைத்தன ளொருத்தன்மே லொருத்தி பஞ்சடி
யுதைத்தலும் பொடித்தன வுரோம ராசியே.

(இ - ள்.) ஒருத்தி-,-பதைத்தனள் - (ஊடலாற்) பதைபதைத்தவளாகி, ஒருத்தன்மேல்-ஒப்பற்றதன்கணவன்மேல், பஞ்சு அடி உதைத்தலும் - செம் பஞ்சுஊட்டியபாதங்களைக்கொண்டுஉதைத்தவுடனே,நிறைமெய்இதைபுனம் (ஊடற்காரணமாகிய எரு) நிறைந்த உடம்பாகிய புதுக்கொல்லையில், நனைத்திட - (உதையாலுண்டாகிய இன்பமாகிய நீர்) நனைக்க, விதைத்த மென் காதலின் வித்து முளைத்த என - விதைக்கப்பட்ட மெல்லிய காதலா கிய விதைகள் முளைத்தன போல, உரோமராசி பொடித்தன-(உடலிலுள்ள) மயிர்க்கூட்டம் சிலிர்த்தன; (எ - று.)

ஒருத்தி ஊடலினால் தன்கணவனை யுதைக்க, அவள்பாதம் தீண்டப் பெற்ற மகிழ்ச்சியால் அக்கணவனது உடலெங்கும் மயிர்ச்சிலிர்ப்புத் தோன் றின வென்க. உரோமராசி பொடித்ததை, காதல்வித்து முளைத்ததுபோலும் எனக்குறித்தார்; உருவகவணியையங்கமாகக்கொண்டுவந்த தற்குறிப்பேற்ற

வணி. ஐம்பொறிகளாலும் இன்பங்கள் விளையு மாதலின் காதல்வித்து முளைத்த வெனப் பன்மையாகக்கூறினர். பி - ம்:—[1]புனல். [2]நனைத்தலின். [3]முளைத்ததே. (ருசு)

ருஎ. * பொலிந்தவாண் முகத்தினன் பொங்கித் [1]தன்னையு
மலிந்தபே [2]ருவகையன் மாற்று வேந்தரை
நலிந்தவா ளுழவனோர் நங்கை கொங்கைபோய்
மெலிந்தவா நோக்கித்தன் புயங்கள் வீங்கினன்.

(இ - ள்.) மாற்று வேந்தரை நலிந்த வாள் உழவன்-பகையரசரை வருத்திய வாட்படையையுடைய ஒருவீரன், ஓர் நங்கை கொங்கை போய் மெலிந்த ஆ நோக்கி-(தன் மனைவியாகிய) ஒப்பற்றபெண்ணினது தனங்கள்(தான் தழுவியதனால்) தம்மியற்கை நீங்கி மெலிவடைந்ததைப் பார்த்து, பொங்கி - மனக்கிளர்ச்சியடைந்து, தன்னை உம் மலிந்த பேர் உவகையன் - தன்னையும் விஞ்சின பெருமகிழ்ச்சிபடைத்தவனும், வாள் பொலிந்த முகத்தினன்-ஒளி விளங்குகின்ற முகத்தையுடையவனுமாகி, தன் புயங்கள் வீங்கினன் - தன் தோள்கள் பூரிக்கப்பெற்றான்; (எ - று.)

ஒருவீரன் தான் தழுவியதனால் தன்மனைவியின் கொங்கைகள் மெலிய, மகிழ்ந்துபுயங்கள் பூரித்தனனென்க. இனி மாற்றவரைத் தொலைக்குநிமித்தம் சிலநாள் பிரிந்திருந்த வீரனொருவன் தன்மனைவி பிரிவுத்துயரால் கொங்கை மெலியப்பெற்றிருத்தல்கண்டு அவளதுகாதலைமெச்சிப் பெருமகிழ்ச்சியாற் புயங்கள் பூரிக்கப்பெற்றன னெனினுமாம். 'கொங்கைபோய் மெலிந்தவா நோக்கித் தன்புயங்கள் வீங்கினன்' என்ற தொடரில், ஒருவர் வருந்த அது கண்டு மற்றொருவர் பூரிக்கின்ற உலகவியற்கை வெளியாதல் காண்க. பி - ம்:—[1]தன்னினும். [2]உவகையின், உவகையான். (ருஎ)

ருஅ. ஏய்ந்தபே ரெழிலின னொருவ னெய்தினன்
வேய்ந்தபோ லெங்கணு மனங்கன் வெங்கணை
பாய்ந்தபூம் பள்ளியிற் படுத்த பல்லவந்
[1]தீய்ந்தன நோக்கினன் [2]றிகைக்குஞ் சிந்தையான்.

(இ - ள்.) ஏய்ந்த பேர் எழிலினன் ஒருவன் - பொருந்திய பேரழகையுடையானொருத்தன், எய்தினன் -(பிரிவுத்துயருறும் தன்நாயகிஇருக்குமிடத்தைச்)சேர்ந்து, அனங்கன் வெம் கணை எங்கண் உம் வேய்ந்த போல் பாய்ந்த பூ பள்ளியில்-மன்மதனது கொடிய அம்புகள் எங்கணும்பரவ மூடியுள்ளன போலப் பரவிய மலரின்படுக்கையில், படுத்த-பரப்பிய, பல்லவம் - தளிர்கள், தீய்ந்தனநோக்கினன்-தீய்ந்தவற்றைப் பார்த்தவனாய், திகைக்கும் சிந்தையான் - திகைப்படைந்த மனமுள்ளவனானான்; (எ - று.)

சைத்தியோபசாரமாகப் பாங்கிமார் மலர்ப்படுக்கையில் பலதளிர்கள் கொண்டு பரப்ப, அதிற்சாய்ந்த தலைவியின் காமவெப்பத்தால் அத்தளிர்களும் தீய்ந்துபோனதுகண்டு ஒருத்தன் திகைப்படைந்தனனென்க. ஆங்கு இருந்த மலர்ப்படுக்கை, மன்மதன்எய்த மலரம்புகள் அவ்விடமெங்கும்

மூடினபோலு மென்பது - அனங்கன் வெங்கணை யெங்கணும் வேய்ந்த போற் பாய்ந்த பூம்பள்ளி என்பதன் கருத்து; இது-தன்மைத்தற்குறிப்பேற்ற வணி. பி - ம்:—[1]தேய்ந்தவா. [2]தளிர்க்கும். (ருஅ)

ருகூ. *ஊட்டிய சாந்துவெந் துலரும் வெம்மையா
னாட்டினை யளித்திநீ யென்று நல்லவ
ராட்டுநீர்க் கலசமே யென்ன [1]லானவோர்
வாட்டொழின் [2]மைந்தற்கோர் மங்கை கொங்கையே.

(இ - ள்.) ஊட்டிய சாந்து வெந்து உலரும் வெம்மையான்-அப்பப்பெற்ற சாந்து வெந்து உலர்வதற்குஏதுவாகிய வெம்மையோடுகூடிய, மங்கை கொங்கை-ஓர்பெண்ணினது தனம்,—வாள் தொழில் மைந்தற்கு - வாட்படைகொண்டுசெய்யும்போர்த்தொழிலில்வல்ல ஓர்வீரனைக்குறித்து, 'நீ நாட்டினை அளித்தி என்று-நீ தேசத்தைக் காப்பாயாக என்றுசொல்லி, நல்லவர் ஆட்டு நீர் கலசம் என்னல் ஆன-பெரியோர் பட்டாபிஷேகஞ் செய்வதற்காகவைத்துள்ள பொற்கலசம் போன்றன; (எ - று.)

பகையரசரைப் படைக்கலங்கொண்டு வென்று தன்நாட்டாரைப் பாதுகாத்தற்பொருட்டு நாயகன் போர்க்குச் சென்றதனால் தான் அவனைப்பிரிந்து காமவெப்பத்தோடு வருந்தும் ஒருத்தியின் தனங்களை, கவி, போரில் பகைவென்றுவரும் வீரனை நீராட்டும்பொருட்டுப் பெரியோர் அமைத்துவைத்துள்ள பொ[...]சங்கள்போலு மென்று குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1][...] மன்னர்க்கு. (ருகூ)

சுo. பயிறு[...]ணி பரந்த மேகலை
வயிர[...]ணவை வாங்கி நீக்கினு
ளுயி[...]வன்பாற் போக வுன்னினாள்
செயி[...] திங்களைத் தீய [2]நோக்கினாள்.

(இ - ள்.) (ஒருத்தி), உயிர் உறு தலைவன்பால் போக உன்னினாள்-உயிரையொத்த(தன்)கணவனிடத்துப் போய்ச்சேர நினைத்தவளாய், பயிர் உறு கிண்கிணி - ஒலித்தலைச்செய்கின்ற கிண்கிணியும், பரந்த மேகலை-பரவிய மேகலையும், (என்ற), வயிரம் வான் பூண் அவை - வயிரமணிகள்கொண்டு செய்யப்பட்ட சிறந்த அந்த ஆபரணங்களை, வாங்கி நீக்கினாள் - கழற்றிப் போக்கினவளாய்,செயிர் உறு திங்களை தீய நோக்கினாள்-குற்றமுள்ள சந்திரனைத் தீய்ந்துபோம்படி உக்கிரமாக விழித்துப்பார்த்தாள்; (எ - று.)

ஒருத்தி காமவேட்கை விஞ்சித் தன்கணவனுள்ளவிடம் தானே தேடிச் செல்லக்கருதியவளாய்ச் சிலம்பும்மேகலையும்அணிந்துசென்றால் அவற்றினொலியால் தன்னைப் பிறர் கவனிக்கக்கூடுமென்றுகருதி அவற்றைக்கழற்றிவிட்டுச் செல்லத்தொடங்க, அப்பொழுது பிரிவுத்துயருக்குக் காரணமாகுஞ் சந்திரன் நிலாவை வீசிப் பிறருக்குப் புலப்படாவண்ணம்செல்லவேணுமென்றெண்ணியிருந்த தன்போக்கிற்குத் தடையாயிருந்ததனால் அவன் தீய்ந்துபோம்படி உக்கிரங்கொண்டுவிழித்துப்பார்த்தனளென்க. பிரிவுத்துயரை விளைத்த

சந்திரன் அதுதீரக் கணவனிடத்துச்செல்லவும் ஒட்டாது தடைசெய்தலால் 'செயிருறுதிங்கள்' எனப்பட்டான். பி - ம்:—[1]வான்பூணணி, வெண்பூ ணவை. [2]நோக்கினுள். (சூ0)

சுக ஏனுமிவ் [1]வன்மையை யென்னென் றுன்னுது
மாலைமென் [2]கரும்பனு னொருவற் காங்கொரு
சோலைமென் குயிலனுள் சுற்றி வீக்கிய
மாலையை நிமிர்ந்தில வயிரத் தோள்களே.

(இ - ள்.) ஆலை மென் கரும்பு அனுன் ஒருவற்கு - ஆலையிற்பட்ட மெல்லிய கரும்புபோல (க் காமநோய்க்குஉட்பட்டு) வருத்தமடைந்த ஒருவனுக்கு, ஆங்கு - அவ்விடத்தில், ஒரு சோலை மெல் குயில் அனுள் - சோலையிலுள்ள மெல்லிய குயில்போலுங் குரலையுடைய ஒருத்தி, சுற்றி வீக்கிய - சுற்றிக்கட்டிய, மாலையை—,வயிரம் தோள்கள்-வச்சிராயுதம்போலும் உறுதியையுடைய (அவனது) தோள்கள், நிமிர்ந்தில - மீறி நிமிரமாட்டிற்றில: ஏனும் - பொருந்திய,இ வன்மையை - இம்மாலையினதுவன்மையை, என் என்று உன்னுதும் என்னவென்று நினைத்துச்சொல்லக்கடவோம்? (எ - று.)

ஒருத்தி ஊடல்காரணமாக ஒருவனதுதோள்களில் மலர்மாலைகொண்டு சுற்றிக்கட்ட,அவ்வீரனது தோள்கள் அக்கட்டை மீறிக்கொண்டு நிமிரமாட்டாமற் போயின; இங்ஙன் வீரனுடைய தோள்களையும் நிமிரவொட்டாதபடி பூமாலை கட்டுவது என்னஆச்சரியமென்று வியந்துகூறியவாறு;இங்குக் காரணம் கட்டுதற்குரிழிலைச் செய்வதற்கு வன்மையற்றதாகஇருக்கக் காரியம் பிறந்ததாகக் கூறியது-பிறிதுாராய்ச்சியணியாம்:வடநூலார் விபாவனுலங்காரமென்பர். அங்ஙனம் அவ்வீரன்தோள் மலர்மாலைக்குக் கட்டுண்டுநின்றது, அவள்மனத்தைத் தன்வயப்படுத்தவென்க. தன்கொங்கையைத் தழுவுதற்கு உரியதோள்கள் தழுவாதிருந்த குற்றத்திற்காக அம்மாது கட்டினள் போலும். பி - ம்:—[1]வண்மை. [2]கரும்பிலா. (சுக)

சஉ. சோர்குழ லொருத்திதன் வருத்தஞ் [1]சொல்லுவான்
மாரனை நோக்கியோர் மாதை நோக்கினுள்
காரிகை [2]யிவளவள் கருத்தை நோக்கியோர்
வேரியந் [3]தெரியலான் வீடு நோக்கினுள்.

(இ - ள்.) சோர் குழல் ஒருத்தி - சோர்ந்த கூந்தலையுடைய ஒருநங்கை, தன் வருத்தம்-தன்னுடைய வருத்தத்தைச்சொல்லுவான் - சொல்லும்பொருட்டு, மாரனை நோக்கி-(சித்திரபடத்திலெழுதியிருந்த)மன்மதனைப்பார்த்து, ஓர்மாதை நோக்கினுள்-(தன்)பாங்கியைப்பார்த்தாளாக,காரிகை இவள்-இங்ஙனம் பார்க்கப்பட்ட அப்பாங்கி, அவள் கருத்தை நோக்கி-அங்ஙனம்பார்த்தவளுடையகருத்தை யறிந்து, ஓர் வேரி அம் தெரியலான் - தேன்பெருகுகின்ற அழகியமாலையையணிந்த ஒப்பற்ற ஆடவனது, வீடு நோக்கினுள்-வீட்டைப் பார்த்தாள்; (எ - று.)

மன்மதனது மலரம்புகளாலெய்யப்பட்டு வருந்தாநின்ற ஒரு பெண் தனதுவருத்தத்தைத் தெரிவிக்கும் குறிப்போடு மாரனை நோக்கிப் பாங்கியையும் நோக்க, அவள் அக்கருத்தைத்தெரிந்துகொண்டு நின்கணவன்பாற் சென்று அவனை அழைத்துவருவே னென்பதைக் குறிப்பாக உணர்த்துமாறு வேரியந்தொடையலான்வீட்டை நோக்கின ளென்க. இங்குப் பிறருணராதபடி குறிப்பினாலேயே ஒருவர்க்கொருவர் தெரிவித்தமையைக்கூறியது - நுட்பவணியின்பாற் படும். பி-ம்:—[1]சொல்லுவாள். [2]அவள். [3]தொடையலான். (சஉ)

சஙூ. சினங்கெழு [1]வாட்கையோர் செம்மல் பாலொரு
கனங்குழை மயிலனாள் கடிது போயினாண்
மனங்குழை நறவமோ மாலை தான்கொலோ
வனங்கனோ யார்கொலோ வழைத்த[2] தூதரே.

(இ - ள்.) சினம் கெழு வாள் கை ஓர் செம்மல்பால்-வெகுளிபொருந்திய வாளையேந்திய கையையுடைய ஓரரசனிடத்து,ஒரு கனம் குழை மயில் அனாள்-பொன்னாற்செய்த குழையென்னுங்காதணியை யணிந்த மயில்போலுஞ் சாயலையுடைய ஒருத்தி, கடிது போயினாள் - விரைந்து செல்லலானாள்: (அங்ஙனம் அவள் தானே செல்லுமாறு), அழைத்த தூதர் - அழைத்த தூதுவர்,—மனம் குழை நறவம் ஓ - மனத்தைக் குழையச்செய்யவல்ல மதுவோ, மாலை ஓ - இராப்பொழுதோ, அனங்கன் ஓ - மன்மதனோ, யார்கொல் ஓ - இவற்றுள்யாரோ? (அறியேன்); (எ - று.)—தான், கொல் - அசைகள்.

நறவம்முதலியவை காதல்நோயைவிளைத்துக் கணவனைத் தேடிக்கொண்டு தானே கடிதுசெல்லும்படி மாதைத் தூண்டின வென்பது கருத்து. பி - ம்:—[1]விற்கை. [2]தூதரோ. (சஙூ)

சச. தொகுதரு காதற்குத் தோற்ற சீற்றத்தோர்
வகிர்மதி நெற்றியாண் மழைக்க ணாலிவந்
துகுதலு முற்றதெ னென்று கொற்றவ
னகுதலு நக்கன ணாணு [1]நீங்கினாள்.

(இ - ள்.) தொகுதரு காதற்கு - நிறைந்த காதலுக்குமுன்னே, தோற்ற - தோற்றுப்போன, சீற்றத்து - வெகுளியையுடைய, ஓர் வகிர் மதி நெற்றியாள்-பிளவுபட்ட சந்திரனை [பிறைச்சந்திரனை] யொத்த நெற்றியையுடைய ஒருத்தியின், மழை கண் ஆலி வந்து உகுதலும்-(தனது பிரிவுத்துயர் தோன்ற) மழைபோலுங்குளிர்ந்த கண்களினின்று நீர்த்துளிவந்து சிந்துதலும், உற்றது என் என்று கொற்றவன் நகுதலும் - உனக்கு நேர்ந்தது என்னென்று வினவியவண்ணம் (தன்) கணவன் சிரித்தவளவில், நக்கனள் - (தானும்) சிரித்தவளாய், நாண் உம் நீங்கினாள் - நாணமும் நீங்கப்பெற்றாள்.

தன் கணவனிடத்து ஊடல்கொண்ட ஒருத்தி தன் காதல்மிகுதி சீற்றத்தைக் குறைத்துப் பிரிவுத்துயரை மிகுவித்ததனாற் கண்ணீரைப்பெருக்கினளாக, அப்போது அவளது கணவன் 'இங்ஙனம் புலம்புமாறு நினக்கு

நேர்ந்தது என்னையோ?" என்று வினவியவண்ணம் அவளதுகருத்தை யறிந்தவனாய்ச் சிரிக்க, அம்மங்கையும் நாணம் நீங்கித் தானும் உடன்சிரிக்கலாயினளென்க. பி - ம்:—[1] நீக்கினாள். (௪௪)

௪௫. பொய்த்தலை மருங்குலா ளொருத்தி புல்லிய
கைத்தல [1]நீக்கினள் கருத்தி னீக்கலள்
சித்திரம் போன்றவச் செயலொர் தோன்றற்குச்
சத்திர மார்பிடைத் தைத்த தொத்ததே.

(இ - ள்.) பொய் தலை மருங்குலாள் ஒருத்தி-இல்லையாதலைத் தன்னிடத்தேகொண்ட [மிக நுண்ணிய] இடையையுடைய ஒருத்தி, கருத்தின் நீக்கலள்- (தன்)மனத்தினின்று (கணவனை) நீக்காதவளாய்,புல்லிய கை தலம் நீக்கினள்-(புறத்தே தன்கணவனைத்)தழுவிய கையை எடுத்துவிட்டனள்: சித்திரம் போன்ற அ செயல் - விசித்திரத்தன்மையுள்ளதான அந்தச்செய்கையானது, ஓர் தோன்றற்கு - ஒரு ஆடவனுக்கு, சத்திரம் மார்பிடை தைத்தது ஒத்தது - ஆயுதம் மார்பிற் பொத்தியதுபோல் வருத்தத்தை விளைத்தது.

பிணங்குதற்கு அறிதற்குஉரிய தான காரண மின்றியும் மதுப்பருகிய மயக்கத்தால் மனப்பூர்வமாகவன்றிப் புல்லிய கையை ஒருத்தி நீக்கிவிட, அச்செயல் கணவனுக்கு மிகவும் வருத்தத்தை விளைத்ததென்க. கைத்தலம் நீக்கியமை கணவன் எதிர்பாராதிருக்கையில் அவன்வியப்படையும்படி நிகழ்ந்ததாதலால், 'சித்திரம்போன்ற வச்செயல்' என்றார். சத்திரம் - ஶஸ்த்ரம்: வடசொல். பொய்த்து அலைஎன்றுபிரிப்பினுமாம். போன்ற-ஒப்பில்போலி. பி-ம்:—[1] நீத்தவன் கருத்தைநோக்கினள்,நீக்கிலள் கருத்தினீக்கினள். (௪௫)

௪௬. மெல்லிய லொருத்திதான் விரும்புஞ் சேடியைப்
புல்லிய கையினள் போதி தூதெனச்
சொல்லுவா னுறு[1]முறு நாணிற் சொல்லல
ளெல்லையில் பொழுதெலா மிருந்து விம்மினாள்.

(இ - ள்.) மெல் இயல் ஒருத்தி - மெல்லியதன்மையை யுடையவளான ஒருபெண், தான் விரும்பும் சேடியை - தன்விருப்பத்திற்கிடனான ஒருபாங்கியை,புல்லிய கையினள்-தழுவிய கையையுடையவளாய், தூது போதி என - தூதுபோவாயென்று, சொல்லுவான் உறும் - சொல்லவருவாள்: உறு நாணில் சொல்லலள் - மிக்க நாணம் தலையெடுப்பதாற் சொல்லமாட்டாள்: எல்லை இல் பொழுது எலாம் - அளவில்லாதகாலம் முழுதும், இருந்து - (இங்ஙனம் தூதுபோமாறு பாங்கியினிடம் சொல்லவருவதும் நாணத்தாற்சொல்லாது ஒழிவதுமாக)இருந்து,விம்மினாள் - (தன்மனத்திற்குள்ளேயே) அழுங்கினாள்.

ஒருத்தி தன்தோழியினிடத்து 'நீ தூதுபோவாய்' என்று சொல்லவருவதும் நாணத்தாற் சொல்லாதொழிவதுமாகவே தன்காலத்தை வருத்தத்தோடு போக்கினா ளென்க. பி - ம்:—[1] உறநாணும். (௪௬)

சஎ. ஊறுபே ரன்பினு ளொருத்தி [1]தன்னுயிர்
மாறிலாக் காதலன் [2]செயலை மற்றொரு
நாறுபூங் கோதைபா [3]னவில நாணுவாள்
வேறு[4]வே றுளசில மொழிவி ளம்பினாள்.

(இ - ள்.) ஊறு பேர் அன்பினாள் ஒருத்தி-மேன்மேற்சுரக்கின்ற பேரன்பையுடையாளொருபெண், தன் உயிர் மாறு இலா காதலன் - தனக்கு (நாயகியாகிய உயிரையன்றி) வேறோருயிரைப் பெறாதவனாகிய கணவனது, செயலை - (செய்த பிழைச்)செயலை, மற்று ஒரு நாறு பூ கோதைபால் நவில - நறுமணம் வீசுகின்ற மலர்மாலையையணிந்த வேறொருத்தியினிடத்துச் சொல்லுவதற்கு, நாணுவாள் - நாணங்கொண்டவளாய், வேறு வேறு உள சில மொழி - வெவ்வேறாகவுள்ள சிலவார்த்தைகளை, விளம்பினாள் - சொல்லினாள்; (எ - று.)—பி - ம்:—[1]அங்கொரு. [2]செலவை, செவ்வி. [3]சொல்லநாணுவாள். [4]வேறுறச்சில. (சஎ)

சஅ. [1]கருத்தொரு தன்மைய துயிருமொன்று[2]த
மருத்தியு மத்துணை யாய [3]நீரினா
ரொருத்தியு [4]மொருவனு முடலு மொன்றெனப்
பொருந்தின [5]ரிவரெனப் புல்லி னாரரோ.

(இ - ள்.) கருத்து ஒரு தன்மையது - (இவர்களுடைய) மனமும் ஒரே தன்மையையுடையது; உயிர்உம் ஒன்று-(வெவ்வேறுடலிற் பொருந்தியிருப்பினும் இவ்விருவருக்கும்) உயிரும் ஒன்றேயாம்; தம் அருத்திஉம் அ துணை ஆய நீரினார் - (ஒருவர்மீது ஒருவர்கொண்டுள்ள) தமது காதலும் (கருத்துமுதலியனபோல) ஓரளவிற்பட்ட தன்மையுடையவரான, ஒருவன்உம் ஒருத்திஉம் - கணவனும் மனைவியுமாகிய அவ்விருவரும், இவர் உடல்உம் ஒன்று என பொருந்தினர் என-இவர்களிருவர்க்கும் உடலும் ஒன்றே என்னுமாறு (தம்மைச்) சேரவிட்டனரென்று (கண்டோர்) நினைக்கும்படி, புல்லினார்-(இருவருளரென்று தோன்றாதவாறு இறுகத்) தழுவிக்கொண்டார்கள்; (எ-று.)

இதுவரையில் கருத்து முதலியவற்றால் ஒருமித்த மனைவியுங் கணவனுமாகிய இவர் இருவர்க்கும் உடலுமொன்றே என்று கண்டோர் கருதுமாறு இறுகத்தழுவினரென்க. பி - ம்:—[1]உருத்தெரிதன்மைய. [2]தாம். [3]தன்மையால். [4]ஒருத்தனுமுடம்பும். [5]ஆமென. (சஅ)

சகூ. வெதிர்பொரு தோளினா ளொருத்தி வேந்தன்வந்
தெதிர்தலுந் தன்மன மெழுந்து முன்செல
[1]மதிமுகங் கதுமென வணங்கி னா[2]ளது
[3]புதுமையா தலினவற் கச்சம் பூத்ததே.

(இ - ள்.) வெதிர் பொரு தோளினாள் ஒருத்தி - மூங்கிலையொத்த தோளையுடைய ஒரு பெண், வேந்தன் வந்து எதிர்தலும் - (தன்)கணவன் வந்து எதிர்ப்பட்டவளவில், தன் மனம் எழுந்து முன் செல - (அவனிடத்து விருப்

பத்தால்) தன்மனமானது (தன்னிடத்தைவிட்டுப்) புறப்பட்டு அவன்பாற் செல்லவும், மதி முகம் கதுமென வணங்கினாள் - (தனது) மதிபோன்ற முகம் (அவனைக் கண்ணெடுத்துப்பாராமலிருக்குமாறு) விரைவாக வணங்கி நின்றாள்; அது புதுமை ஆதலின் - அவ்வாறு அவள் முகம் வணங்கநின்றது (இதுவரையில் அவளிடத்துக்) காணாதிருந்தசெய லாதலால், அவற்கு அச்சம் பூத்தது - அக்கணவனுக்கு அச்சம் உண்டாயிற்று; (எ - று.)

கணவனிடத்துத் தனக்கு விருப்பமுளதாகவும் அவன் காலவரையறை நீட்டித்துவந்த குற்றம் பற்றிய சினத்தால் ஒருத்தி முகம்வணங்க நின்றாளாக, அதனால் அவளது கணவன் அச்சமடைந்தன னென்க. பி - ம்:—
[1]கதிர்முகம். [2]அவள். [3]புதுமையாலது. (சுகூ)

ருo. துனிவரு நலத்தொடு சோர்கின் றாளொரு
குனிவரு நுதலிக்குக் கொழுந னின்றியே
தனி[1]வரு தோழியுந் [2]தாயை யொத்தன
[3]ளினியபூந் தென்றலு மிரவு மென்னவே.

(இ - ள்.) துனி வரு நலத்தொடு - ஊடலினால்வருகின்ற இன்பத்தைக் கருதி, சோர்கின்றாள் - (தன்கணவன் வரும்போது அவனிடம் ஊடல்கொண்டு பின்பு) வருந்துகின்றவளாகிய, ஒரு குனிவரு நுதலிக்கு - வளைந்தநெற்றியையுடைய ஒருத்திக்கு, கொழுநன் இன்றி தனிவரு தோழிஉம் - (தூதாகச்சென்றும்) கணவனை அழைத்துவராமல் தனியே திரும்பிவந்த பாங்கியும், இனிய பூ தென்றல்உம் இரவுஉம் என்ன - (கணவனைக்கூடியகாலத்து) இனிதாகத்தோன்றுகின்ற அழகிய தென்றற்காற்றும் இராப்பொழுதும்போல, (வருத்தத்தை விளைப்பவளாயிருந்து நின்று), தாயை ஒத்தனள் - தாயைப்போலிடித்துக்கூறுபவளானாள்; (எ - று.)

கணவன் வந்தபோது அவனிடத்து ஊடல்கொண்டு அவன் போய்விட்டபிறகு மிகவும்வாடி ஒருத்தி தன்தோழியைத் தூதனுப்பினளாக, அப்போது கணவன் இசைந்துவராமையால் கணவனில்லாக் காலத்துவரும் தென்றலும் இரவும்போலக் கணவனை அழைத்துவருதலின்றித் தனித்துவந்த அத்தோழியைக்கண்டு தலைவி மிகவும்வருந்த, அந்தத்தோழி 'நீ இவ்வாறு சோர்தல் பெண்மைக்குத் தக்கதன்றென்று தாயைப்போல் அறிவுகொளுத்தி இடித்துக் கூறினளென்க. தலைவி விரும்பியபடி புரிபவளென்பார் 'தோழியும்' என்று உயர்வுசிறப்பும்மை கொடுத்துக் கூறினார். பி - ம்:—
[1]வரும். [2]தாயும். [3]இனிவரு. (ருo)

ருக. ஆக்கிய காதல ளொருத்தி [1]யந்தியிற்
றாக்கிய தெய்வமுண் டென்னுந் தன்மைய
ளாக்கின னின்றனை [2]னுவன்ற தோர்கிலள்
போக்கின தூதினோ டுணர்வும் போக்கினாள்.

(இ - ள்.) ஆக்கிய காதலள் ஒருத்தி - (நாயகனுடைய குணம் செயல் முதலியவற்றால்) உண்டாக்கப்பட்ட காதலையுடையளான ஒருத்தி, அந்தியில்

தாக்கிய தெய்வம் உண்டு என்னும் தன்மையள்-அந்திக்காலத்திலே தாக்குந் தன்மையுள்ள தெய்வம் தாக்கிற்றென்று சொல்லத்தக்க தன்மையடைந் தவளாய், நோக்கினள் நின்றனள் - (விழித்த கண் இமையாமல்) நிலையாணி யிட்டகண்ணோடு நிற்பவளும், நுவன்றது ஓர்கிலள்-(எதிர்நிற்பவர்) சொன்ன து (இன்னதென்பதை) அறியும் வல்லமையற்றவளுமாகி, போக்கின தூதி னோடு உணர்வுஉம் போக்கினாள் - (தன்கணவனிடத்து) அனுப்பிய தூதி னுடனே தன்னுணர்வையும் போக்கிவிட்டாள்; (எ - று.)

தாக்கிய தெய்வம் - தாக்கணங்கு கணவன்மீது காதல்விஞ்சிய ஒருத்தி தனது கணவனிடம் தூதுபோக்கி அத்தூது மீண்டுவருமளவும் பொறுத்தி ருக்கமாட்டாது உணர்வு ஒழிந்து,தெய்வத்தால்தாக்கப்பட்டவள்போல் விழி த்தகண் விழித்தவண்ணமே நின்று முன்னிற்பவர் சொல்வது இன்னதென் பதையும் அறியாதவளாயின ளென்க. பி - ம்:—[1]அந்தியுள். [2]நுவன்ற கேட்கிலள். (ருக)

ருஉ. மறப்பிலள் கொழுநனை வரவு நோக்குவாள்
பிறப்பினோ டிறப்பெனப் பெயருஞ் [1]சிந்தையா
டுறப்பரு முகிலிடைத் தோன்று மின்னெனப்
புறப்படும் புகுமொரு பூத்த கொம்பனாள்.

(இ - ள்.) மறப்பிலள் கொழுநனை வரவு நோக்குவாள்-(தன்)கொழுநனை மறவாதவளாய் [எப்போதுஞ் சிந்திப்பவளாய்] (அவன்) வரவை யெதிர்பார்ப் பவளான, ஒரு பூத்த கொம்பு அனாள் - மலர்களலரப்பெற்ற பூங்கொம்பு போன்ற ஒருத்தி, பிறப்பினோடு இறப்பு என பெயரும் சிந்தையாள் - பிறப் பும் இறப்பும்போல(க் கணவன் வருவான் என்பதனால் மகிழ்ச்சியையும் வரா மையால் வருத்தமும்) மாறிமாறி வரப்பெற்ற மனத்தையுடையவளாய், முகி லிடை தோன்றும் துறப்பு அரு மின் என-மேகத்தினிடையே காணப்படுவ தாய்(அதைவிட்டு)அப்பாற் படுத்துவதற்கு அரியதான மின்னல்போல, புறப் படும் - (கணவன்வருகையை நோக்கி வீட்டின்) வெளியே வந்துபார்ப்பாள்: புகும் - (அவன் வாராமையாலுண்டான வருத்தத்தினால் வீட்டினுள்) புகு ந்து வருந்திநிற்பாள்; (எ - று.)—பி - ம்:—[1]சிந்தையால். (ருஉ)

ருங. *எழுதருங் கொங்கைமே லனங்க னெய்தவம்
புழுதவெம் புண்களில் வளைக்கை யொற்றினா
ளழுதனள் சிரித்தன ளற்றஞ் [1]சொல்லினா
டொழுதன ளொருத்தியைத் தூது [2]வேண்டியே.

(இ - ள்.) (ஒருத்தி),—எழுத அரு கொங்கைமேல் அனங்கன் எய்த அம்பு உழுத வெம் புண்களில்-எழுதுவதற்கு அரிய [மிக அழகிய] தனங்களில் மன்மதன் எய்த அம்புகள் துளைத்ததனால்தோன்றிய கொடிய புண்களில், வளை கை ஒற்றினாள் - வளையல்களையணிந்த (தன்) கைகளை (வைத்து வைத் து) ஒற்றியவளாய், அழுதனள்-(வருத்த மிகுதியால்) அழுதாள்; சிரித்தனள்- (தனக்கு நேர்ந்த நிலையைக்குறித்துச்) சிரித்து, அற்றம் சொல்லினாள் -

(தன்) துன்பத்தைச் சொல்லினவளாய், ஒருத்தியை தூது வேண்டி தொழுதனள் :- தன்பாங்கி யொருத்தியைத் (தன் கணவனிடத்துத்) தூதுசெல்லுமாறு இரந்து வணங்கினுள்; (எ - று.)

புண்ணோவு மிகுகையிற் கையை வைத்து வைத்து ஒற்றுதல் இயல்பு. சிரிப்பு, தனக்கு நேர்ந்த எளிவரவு பற்றியது. பி - ம்:—[1]சொல்லலள் வேண்டினுள், வேண்டுவாள். (ருங)

ருச. ஆர்த்தியு முற்றது மறிஞர்க் கற்றந்தான்
வார்த்தையி னுணர்த்துதல் [1]வறிதன் றேவெனு
வேர்த்தனள் வெதும்பினண் மெலிந்து [2]சாய்ந்தனள்
பார்த்தன ளொருத்திதன் [3]பாங்க னுளையே.

(இ - ள்.) ஒருத்தி—,—'உற்றதுஉம்-(தனக்கு)நேர்ந்துள்ளதும் [பிரிந்த கணவன் வராமல் தாமதிப்பதும்], ஆர்த்திஉம் - (அதனால் தனக்கு நேர்ந்துள்ள) வருத்தமும் ஆகிய, அற்றம் - தன் குறையை, அறிஞர்க்கு - (கண்கூடாகப் பார்ப்பதனுல்) உணர்ந்திருப்பவர்கட்கு, வார்த்தையின் - வாய்வார்த்தை மூலமாக, உணர்த்துதல்-தெரிவித்தல், வறிதுஅன்றே-வீணல்லவோ?', என-என்று கருதி, (தான் உற்றதையும் தன் ஆர்த்தியையும் பாங்கிக்கு வாய்விட்டுக்கூருமல்), வேர்த்தனள் - உடல் வியர்த்து, வெதும்பினள் - மனம் வெதும்பி, மெலிந்து - மிகவாடி, சாய்ந்தனள் - (அணையிற்) சாய்ந்தவளாய், தன் பாங்குஅனுளை பார்த்தனள் - (நீ இக்காலத்தில் கணவனை வருவித்தற்குரிய வகையை நாடாமல் இங்ஙனம் உபேட்சிப்பது தகுதியோ என்னும் குறிப்புத் தோன்றத்) தன்பக்கத்திலுள்ள அந்தத்தோழியைப்பார்த்தாள்; (எ - று.)—
பி - ம்:—[1]அரிதன்றேமனம், வறிதன்றேவெனும். [2]சோர்ந்தனள். [3]பாங்கினுளையே. (ருச)

ருரு.—மன்மதனுக்கு அப்போது களிப்புஉண்டாதல்.

தனங்களி னிளையவர் தம்மின் மும்மடி
கனங்[1]கன மிடையிடை களிக்குங் கள்வனுய்
மனங்களி [2]னுழைந்தவர் மாந்து தேறலை
யனங்கனு மருந்தின னுதல் [3]வேண்டுமால்.

(இ - ள்.) தனங்களின் இளையவர் தம்மின் - தனங்களையுடைய இளம் பெண்களைக்காட்டிலும், மும்மடி - மூன்று மடங்கு, கனம் கனம் - மிகவும் அதிகமாக, இடை இடை-அவ்வவ்விடங்களில், களிக்கும் - (மன்மதன்) களிப்புக்கொண்டுதிரிவானுனன்;(அங்ஙனம்அவன் திரிதற்குக்காரணம்),கள்வன் ஆய் - திருடன்போன்று (பிறருக்குத்தெரியாமல்), மனங்களில் நுழைந்து - (ஆங்குள்ள ஆடவர்மகளிர் என்ற இருதிறத்தாரின்) நெஞ்சினுள்ளே புகுந்து, அவர் மாந்து தேறலை - அவர்கள் பருகின கள்தெளிவை, அனங்கன்உம் அருந்தினன் ஆதல்வேண்டும்-அந்தமன்மதனும் பருகியிருத்தல் வேண்டும்.

மதுப்பருகின மயக்கத்தால் தாம் மீது போர்த்த போர்வை விலகியதையும் உணராமல் தனங்கள் வெளித்தெரிய நிற்கின்ற மகளிரென்பார் 'தனங்

களினிளையவர்' என்றார். இடை யிடை என்றது-தரளநீழல், எழினிச்சூழல், பளிங்கடுத்தகானம், பூம்பந்தர் என்று இப்படலத்தில் ஐந்தாஞ்செய்யுளிற் கூறிய இடங்களை. பி - ம்:—[1]களி. [2]நுழைதர. [3]வேண்டுமோ. (ருரு)

ருசு.—இதுமுதல்பத்துக்கவிகள் - மதுவுண்ட ஆடவர்க்கும் மகளிர்க்கும் உண்டான கூடல்ஊடல் முதலியவற்றைத் தெரிவிக்கும்.

*நறைகம ழலங்கன் மாலை [1]நளிர்நறுங் குஞ்சி மைந்தர்
துறையறி கலவிச் செவ்வித் தோகையர் தூசு வீசி
நிறையக லல்குல் புல்குங் [2]கலைபழித் தகல நீத்தா
ரறைபறை யனைய நீரா ரருமறைக் காவ ரோதான்.

(இ - ள்.) நறை கமழ் அலங்கல் மாலை நளிர் நறு குஞ்சி மைந்தர் - தேன் மணம் வீசுகின்ற அசையுந்தன்மையுள்ள மலர்மாலை சூடிய குளிர்ந்த நறிய குடுமியையுடைய ஆடவர்கள்,—துறைஅறி - கரணவகைகளையறிந்த, கலவி செவ்வி தோகையர்-புணர்ச்சிக்குரிய பக்குவத்தையுடைய மகளிரின், தூசு - ஆடைகளை, வீசி - அப்பால் எறிந்துவிட்டு, (அவ்வளவோடு நில்லாமல்), நிறை அகல் அல்குல் புல்கும் கலை பழித்து அகல நீத்தார்-நிறைந்து அகன்ற அல்குலை நெருங்கிச்சூழ்ந்த மேகலையென்னும் இடையணியையும் வெறுத்து அப்பாலெறிந்தார்கள்; (இது தக்கதே); அறை பறை அனைய நீரார் - ஒலிக் கின்ற பறைபோன்ற [எப்போதும் வாய்விட்டுக்கத்துந் தன்மையையுடைய] வர்கள், அரு மறைக்கு ஆவர்ஓ - வெளிப்படுத்தற்குக்கூடாத இரகசியச் செயல் நிகழும்போது உடனிருக்கத்தக்கவர்களோ? [தக்கவரல்லரன்றோ?]

ஆடவர் மகளிருடன் புணரும்போது அவர்களது ஆடையை யகல நீத்தது முறையே; அம்மகளிரிடையிலணிந்த மேகலையை நீத்ததுஎன்னெனின், புணர்ச்சி நிகழும்போது அவ்வணிகலம் ஒலித்துப் பிறர்க்கு அச்செயலைப் புலப்படுத்துமென்று கருதியதனு லென்க. நான்காமடி மூன்றாமடியைச் சமர்த்தித்துநின்றது, வேற்றுப்பொருள்வைப்பணி. பி - ம்:—[1]நளி. [2]கலன் கழித்து. (ருசு)

ருஎ. பொன்னருங் [1]கலனுந் தூசும் புறத்துள துறத்தல் [2]வம்போ
நன்னுதலொருத்தி தன்பா லகத்துள நாணு நீத்தா
ளுன்னருந் துறவு பூண்ட வுரனுடை யொருவ னேபோற்
றன்னையுந் துறக்குந் தன்மை காமத்தே தங்கிற் றன்றே.

(இ - ள்.) புறத்து உள-(உடலின்)வெளிப்புறத்துள்ளனவாகிய, பொன் அரு கலன் உம்-பொன்னாலாகிய அழகிய மேகலாபரணத்தையும், தூசுஉம் - ஆடையையும், துறத்தல் - (ஒருத்தி) துறந்தாளென்பது, வம்புஓ - புதுமையோ? நல் நுதல் ஒருத்தி - அழகிய நெற்றியையுடைய ஒருபெண், தன்பால்- தன்னிடத்து, அகத்து உள நாண் உம் - உடலின் உள்ளேயுள்ள நாணத்தையும், நீத்தாள் - விட்டிட்டாளே; உன்ன அரு துறவு பூண்ட உரன் உடை ஒருவன் போல்-(மனத்தினால்) நினைப்பதற்கும் அருமையாயுள்ள துறவுத்தொழிலை மேற்கொண்ட மனவுறுதியையுடைய சந்நியாசியைப்போல, தன்னை

உம் துறக்கும் தன்மை - தான் என்று சொல்லத்தக்கதையும் துறந்துவிடக் கூடிய நிலைமை, காமத்து ஏ தங்கிற்று அன்றே-காமத்தினிடத்திலேயே தங்கியுள்ளதல்லவா? (எ - று.)

ஒருத்தி கலவி நிகழுமாறு ஆடையையும் மேகலையையும் கழற்றி எறிந்து நாணமின்றிக் கிடந்தா ளென்பதாம். மகளிர்க்குணங்களுள் மிகச்சிறந்த நாணத்தையே நீத்தவள் கலையுந் தூசையும் நீத்ததிற் புதுமையில்லை யென்பது, முன்னிரண்டடிகளின் பொருள். இவ்வடிகள் - கைமுதிக நியாயம்பற்றி வந்ததனால், தொடர்நிலைச்செய்யுள்பொருட்பேறணியாம். ஒருத்தி நாணத்தைநீத்தா ளென்ற சிறப்புப்பொருளைத் தன்னையே துறக்குந் தன்மை காமத்தே தங்கிற்றன்றே என்ற பொதுப்பொருள் கொண்டு சமர்த்தித்தது — வேற்றுப்பொருள்வைப்பணியாம். சந்நியாசிக்குத் தன்னைத் துறத்தல் தன்னுயிரினிடத்தும் பற்றின்றி யிருத்தல்; காமங்கொண்ட மகட்குத் தன்னைத்துறத்தல் - தானென்று சொல்லுமாறு மகளிர்க்குணங்களுட் சிறந்த நாணத்தைத் துறத்தல். பி - ம்:—[1]கலையும். [2]வம்பே. (௫எ)

௫அ. பொருவறு மதனன் போல்வா னொருவனும் பூவின் [1]மேலைத்
திருவினுக் குவமை சொல்வா ளொருத்தியுஞ் சேக்கைப் போரி
லொருவருக் கொருவர் தோலா ரொத்தன ருயிரு மொன்றே
யிருவர்த முணர்வு மொன்றே யென்றபோ தியாவர் வெல்வார்.

(இ - ள்.) பொரு அறு மதனன் போல்வான் ஒருவன்உம் - (தனக்கு எவரையும்) ஒப்பாகப்பெறாதவனான மன்மதனுக்குஉவமை சொல்லத்தக்கவனாகிய ஆடவனொருத்தனும், பூவின் மேலை திருவினுக்கு உவமை சொல்வாள் ஒருத்திஉம் - தாமரைமலர்மேலிருப்பவளாகிய இலக்குமிக்கு உவமையாதற்குஏற்ற மேன்மையையுடையவளாகிய ஒரு நங்கையும், சேக்கை போரில் - படுக்கையில்நிகழ்ந்த கலவிப்போரிலே, ஒருவருக்கு ஒருவர் தோலார் ஒத்தனர் - ஒருத்தருக்கு ஒருத்தர் பின்னிடையாதவராய்ச் சமமாகவிருந்தனர்;(இதுதக்கதே); இருவர்தம் உயிர்உம் ஒன்றுஏஉணர்வுஉம் ஒன்று என்றபோது - அவ்விருவர்க்கும் உயிரும் உணர்ச்சியும் ஒன்றேயாகவிருக்குமென்றால், யாவர் வெல்வார் - யாவர் வெல்லுவார்கள்? (எ - று.)

ஒருபொருள் தன்னைத்தானே வெல்லுதலென்பது நிகழ்தற்குரியதல்லாத செய லாதலால், யாக்கையால் அந்த மாதும் மகனும் வேறுபட்டுத் தோன்றினும், உயிரும் உணர்வும் ஒன்றேயான அவ்விருவரும் கலவிப்போரிலும் ஒத்திருந்தனரென்பதாம். ஒருவருக்கொருவர் தோலாரொத்தனர் என்ற தொடரைப் பின்வரும் வாக்கியஞ்சாதித்துநின்றது - தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம். திருவினுக்கு உவமைசொல்வாளென்று பின்வந்ததற்குஏற்ப, மதனன்போல்வானென்பதற்கு-மதனனுக்கு ஒப்பாகச் சொல்லத்தக்கவனென்று பொருள் கூறப்பட்டது; இவை-எதிர்நிலையணி. இவற்றால், ஆடவனும் நங்கையும் மதனன் இலக்குமி இவர்களினும் விஞ்சிய எழிலையுடையவரென்பது, பெறப்படும்:உபமேயத்தினும் உபமானம் சிறந்திருக்கவேணுமென்பது, அணிநூலுடையார்கொள்கை. பி - ம்:—[1]மேலத்திருவினுக்கு. (௫அ)

ருகூ. கொள்ளைப்போர் வாட்க ணாளங் கொருத்தியோர் குமர னன்
[1]வள்ளற்று ரகலந் தன்னை மலர்க்கையாற் புதைப்ப நோக்கி [ளுன்
யுள்ளத்தா ருயிரன் னாண்மே லுதைபடு மென்று [2]நீர்நுங்
கள்ளத்தாற் [3]புதைத்தி ரென்னு முன்னையிற் கனன்று மிக்காள்.

(இ - ள்.) கொள்ளை போர் வாள் கணாள் ஒருத்தி -(உயிரைக்) கொள்ளை கொள்ளுதலையுடைய போரிற் பயில்கின்ற வாட்படைபோன்ற கண்களையுடையாளொருத்தி,—அங்கு - அவ்விடத்து, (ஊடலினால் தன்மார்பிலே உதைக்கப்புகுந்தாளாக), ஓர் குமரன்அன்னான் - முருகக்கடவுளையொத்தவனா [மிகஅழகிய] (அவளது)கணவன், '(நமதுவலியமார்பிலுள்ள அவளது அனிச்சம்பூப்போலும் மெல்லிய தாளிற் பட்டால் முட்போலப்பொத்துமே' என்ற கருத்தினால்), வள்ளல் தார் அகலம்தன்னை மலர் கையால் புதைப்ப-செழுமையையுடைய மாலையையணிந்த (தனது) மார்பைத் தாமரைமலர் போன்ற கையால் மூட,நோக்கி-(அதனை அவள்)கண்டு, உள்ளத்து ஆர் உயிர் அன்னாள்மேல் உதைபடும் என்று நீர் நும் கள்ளத்தால் புதைத்திர் என்னா - '(நுமது)மனத்துக்குள்ளே பொருந்திய உயிர்போன்ற ஆசைநாயகியின்மேல் என்னுதை படுமென்று அஞ்சி நீர் உமது வஞ்சனைக்குணத்தால் (மார்பைக் கையைக்கொண்டு) மூடுகின்றீர்'என்று சொல்லி, முன்னையில் கனன்று மிக்காள் - முன்னினும் மிகவும் அதிகமாகச்சீறினாள்; (எ - று.)

ஒருத்தி தன்புருஷனது மார்பில் ஊடலா லுதைக்க, அவன் தன்மார்பிலிருக்கிற முத்தாரஞ்சேர்ந்த பதக்கங்கள் அவள் காலில் உறுத்துமென்று அவள் கால்படாமுன்னமே கையினாலே மூடிக்கொண்டான். அது கண்டு அவள் உமது இருதயத்திலிருக்கிற ஸ்திரீயின்பேரில் உதைபடுமென்றல்லவா நீர் மூடிக்கொண்டீரென்று முன்னினும் அதிகமாகக் கோபங்கொண்டனளென்க. [1]வள்ளத்தார் என்ற பாடத்துக்கு வளம் என்பது வள்ளம் என விகாரம்பெற்று நின்றதென்க. பி - ம்:—[2]நீரின். [3]புதைத்தி. (ருகூ)

கூO. *பாலுள பவளச் செவ்வாய்ப் [1]பணைமுலை நிகர்த்த மென்றோள்
வேலுள நோக்கி னாளோர் மெல்லியல் வேலை யன்ன
[2]மாலுள சிந்தை யானோர் மழையுள தடக்கை யாற்கு
மேலுள வரம்பை மாத ரென்பதோர் விருப்பை யீந்தாள்.

(இ-ள்.) பால் உள பவளம் செவ் வாய் பணை முலை நிகர்த்த மெல் தோள் வேல் உள நோக்கினாள் ஓர் மெல் இயல்-பாலின்சுவையமைந்த பவளம் போன்ற செந்நிறமுள்ள வாயையும் பருத்ததனங்களையும் (ஒன்றையொன்று) நிகர்த்த மெல்லிய தோள்களையும் வேற்படையையொத்த கண்களையுமுடையவளான மெல்லிய தன்மையையுடைய ஒருத்தி,—வேலை அன்ன மால் உள சிந்தையான் ஓர் மழை உள தட கையாற்கு-கடலையொத்த காதலைக்கொண்ட நெஞ்சத்தையுடையவனாகிய ஒப்பற்ற (கைம்மாறு கருதாது கொடுக்குந்தன்மையால்) மேகத்தையொத்த நீண்ட கையையுடைய ஒரு மகனுக்கு, மேல்

உள அரம்பை மாதர் என்பதுஓர் விருப்பை-வானத்திலுள்ள அரம்பைமாது ஆவள் இவள் என்று கருதுதற்கேற்ப ஒப்பற்றவிருப்பத்தை, ஈந்தாள் - தந்தாள்; (எ - று.)

காரியப்பெயரைக் காரணப்பெயரால் உணர்த்தியதாகக் கொண்டு, விருப்பமென்பதற்கு - இன்பமென்று பொருளுரைப்பாருமுளர். பி - ம்:— [1]பல்வளைபணைத்த. [2]மாலுளர். (கூ0)

கூக. *புனத்துறை மயிலனுள் கொழுநன் பொய்யுரை
நினைத்தனள் சீறுவா ளொருத்தி நீடிய
[1]சினத்தொடு காதல்கள் செய்த போரிடை
மனத்துறை காதலே வாகை கொண்டதே.

(இ - ள்.) புனத்து உறை மயில் அனுள் - மலைக்கொல்லையில்வாழ்கின்ற மயிலையொத்தவளாகிய, கொழுநன் பொய் உரை நினைத்தனள் சீறுவாள் ஒருத்தி - கணவனது பொய்ம்மொழியை நினைத்துக் கோபிக்கின்றவளாகிய ஓர் நங்கையினது, நீடிய சினத்தொடு காதல்கள் செய்த போரிடை - (மனத்திற்கொண்ட)மிக்க வெகுளியோடு காதல்கள்செய்த போரில், மனத்து உறை காதல் ஏ - (அவளது) மனத்தில்தங்கிய ஆசையே, வாகை கொண்டது - வெற்றிபெற்றது; (எ - று.)

கணவன் முன்னர்ப் பொய்த்த காரணத்தாற் சினங்கொண்ட ஒருத்திக்கு மனத்திற்காதலும் மிகுதலினலே கணவனுேடூடிக் கூடாமலிருக்கவேணுமென்ற கருத்தோடு கூடவேணுமென்ற கருத்தும் மாறித்தோன்ற, முடிவில் ஊடலைவிட்டுக் கூடலானு ளென்பதாம். [1]சினத்தினைக்காதலன்சேக்கை என்ற பாடத்திற்கு — கணவனுடைய பொய்யுரையினுல் மனத்திற் சினம்மூண்டு ஊடல்கொண்ட ஒருத்தி (கலவைப்போர்க்குஉரிய அத்தருணத்திற் காதல்விஞ்சியதனுல்) மனத்திற்கொண்ட சீற்றத்தையும் மறந்து கணவனேடு கலவிக்கு இணங்கினளென்க. பி - ம்:— [1]சினத்தொடுகாதலன்சேக்கை. (கூக)

கூஉ. *கொலையுரு[1]வமைத்தெனக் கொடிய நாட்டத்தோர்
கலையுரு வல்குலாள் கணவற்[2]புல்குவாள்
சிலையுரு வழிதரச் செறிந்த மார்பிற்றன்
முலையுரு வினவென முதுகை நோக்கினுள்.

(இ-ள்.) கொலை உரு அமைத்துஎன கொடிய நாட்டத்து ஓர் கலை உருவு அல்குலாள் - கொலைத்தொழில்செய்யும்பொருளை உருவஞ்செய்து வைத்தாற்போன்ற மிகக்கொடிய கண்களையுடைய கலையை உருவிப்புறப்படுகின்ற கடித்தடத்தையுடைய ஒருத்தி, கணவன் புல்குவாள்-(தன்) கணவனை இறுகத்தழுவுபவளாய், சிலை உரு அழிதர செறிந்த மார்பில் - மலையும் (தன்) உருவம் தோற்கும்படி (உயர்ந்துபரந்து)திண்ணியதாகவுள்ள (அக்கணவன்) மார்பில், தன் முலை உருவின என முதுகை நோக்கினுள் - தனது தனங்கள் ஊடுருவிச்சென்றனவோஎன்றுகருதி(அவனது)முதுகைப்பார்த்தாள்;(எ-று.)

மிகவும் இறுகப்புல்லினமையால் ஒருகால் தனது தனங்கள் கணவன் மார்பைத் துளைத்து அவனது முதுகின் புறத்து வந்தனவோ வென்று ஐயுற்று அதனைப் பார்த்தாள். மிகவும் இறுகத் தழுவினுளென்பதை விளக்குவதற்காக, கவி, இங்ஙனம் தொடர்புயர்வுநவிற்சியணிவகையாற் கூறினர். பி - ம்:—[1] அமைந்தன, அமைத்தன. [2] புல்லுவாள். (௩௨)

௩௩. *குங்கும [1]முதிர்ந்தன கோதை சோர்ந்தன
சங்கின [2]முரன்றன கலையுஞ் [3]சாய்ந்தன
பொங்கின [4]சிலம்புகள் பூச லிட்டன
மங்கைய ரிளநல மைந்த ருண்ணவே.

(இ - ள்.) மங்கையர் இள நலம் மைந்தர் உண்ண - மாதர்களுடைய புதிய இன்பத்தை ஆடவரனுபவித்தலால், குங்குமம் உதிர்ந்தன - (அவர்கள் மார்பிலணிந்திருந்த) குங்குமத்தொய்யில்கள் உதிர்ந்தன; கோதை சோர்ந்தன - கூந்தல்கள் அவிழ்ந்து வீழ்ந்தன; சங்கு இனம் முரன்றன - (கையிலணிந்த) சங்கவளையல்கள் ஆரவாரித்தன; கலைஉம் சாய்ந்தன - மேகலைகளும் தளர்ந்தன; சிலம்புகள் பொங்கின பூசல் இட்டன - சிலம்பென்னுங் காலணிகள் மிகுந்துஒலிசெய்தன; (எ - று.)

மங்கையரிளநலமென்றது-மங்கையருண்டாக்கிய புதியஇன்பமென்க: இதனுற் புருடாயிதமென்னுங் கரணங் கூறியவாருயிற்று. அதற்கேற்ப, குங்குமமுதிர்தல் கோதைசோர்தல்முதலியன கூறப்பட்டிருத்தல் காண்க. பி - ம்:—[1] திமிர்ந்தன. [2] ஆர்த்தன. [3] சாற்றின. [4] சிலம்பொலி. (௩௩)

௩௪. துனியுறு புலவியைக் காதற் சூழ்சுடர்
பனியெனத் [1]துடைத்தலும் பதைக்குஞ் [2]சிந்தையாற்
புனை[3]யிழை யொருமயில் பொய்யு றங்குவாள்
கனவெனு நலத்தினுற் கணவற் புல்லினுள்.

(இ - ள்.) காதல்-காமமானது, துனி உறு புலவியை-துயரம் மிகுதற்குக் காரணமான ஊடலை, சூழ் சுடர் பனி என துடைத்தலும் - சூழ்ந்த கிரணங்களையுடைய சூரியன் பனியைப்போக்குவது போலப் போக்குதலும்,—புனை இழை ஒரு மயில் - ஆபரணங்களை யணிந்த மயில்போலுஞ் சாயலையுடைய ஒருத்தி,—பதைக்கும் சிந்தையால் - பதறுகின்ற மனத்தோடு [மனமுடையவளாய்], பொய் உறங்குவாள் - பொய்யேயுறங்குபவளாய், கனவு எனும் நலத்தினுல் - கனவு என்கிற நல்ல உதவியினுல், கணவன் புல்லினுள் - கணவனைத் தழுவினுள்; (எ - று.)

ஊடல்கொண்ட ஒருத்தி காதல்விஞ்சியதனுல் மனத்திலுள்ள கோபம் போய்விட, மனம் பதறித் தானே கணவனைச்சென்று தழுவுதற்கு நாணிப் பொய்யுறக்கங்கொண்டு கனவில் அஞ்சினவள் போன்று அருகிலிருந்த கணவனைப் புல்லினுளென்க. நாணமற்றுத் தானே கணவனைப்புல்லினுளென்று பிறர் ஏசாமலிருத்தற்குக் கனு மிகவும் உதவியதனுல், 'கனவெனும் நலத்தினுல்' என்ருர். சூழ் சுடர் - வினைத்தொகையன்மொழி. பி - ம்:—[1] துறத்தலும். [2] சிந்தையாள். [3] குழல். (௩௪)

௬௫. வட்டவாண் முகத்தொரு மயிலு மன்னனுங்
கிட்டிய போதுடல் கிடைக்கப் புல்லினர்
விட்டிலர் கங்குலின் விடிவு கண்டில
ரொட்டிய வுடல்பிரிப் புணர்கி லாமையால்.

(இ - ள்.) வட்டம் வாள் முகத்து ஒரு மயில்உம் - வட்டமாகிய ஒளி பொருந்திய முகத்தையுடைய மயில்போல்வா ளொருத்தியும், மன்னன்உம் - ஒருபுருஷனும், கிட்டிய போது - (ஒருவர்க்கொருவர்) நெருங்கியபோது, கிடைக்க-(இறுகத்தழுவுவதற்கு ஏற்ற தருணம்) வாய்த்ததனால், உடல்-(தமது) உடம்புகளினால்,புல்லினர் - இறுகத்தழுவியவர்களாய்,—ஒட்டிய உடல்-ஐக்கியப்பட்ட (தமது) உடம்பை, பிரிப்பு - பிரிக்கும்வகையை, உணர்கிலாமையால் - அறியமாட்டாமையால், விட்டிலர் - (தழுவியதை, விடாதவராயினர்); கங்குலின் விடிவு கண்டிலர் - இரவுவிடிந்ததென்பதையும் அறியாதவராயினர்; (எ - று.)

பலநாளாகப் பிரிந்திருந்த மயிலனை ளொருத்தியும் மன்னவனொருவனும் தருணம் வாய்த்ததனால் தழுவிப் பொழுதுபுலரவும் பிரியமாட்டாராயின ரென்றவாறு. (௬௫)

௬௬.—கங்குற்போது கலவியாற்கழிதல்.

*அருங்களி மால்களி றனைய வீரர்க்குங்
கருங்குழன் மகளிர்க்குங் கலவிப் பூசலா
னெருங்கிய வனமுலை சுமக்க நேர்கலா
மருங்குல்போற் றேய்ந்ததம் மாலைக் கங்குலே.

(இ - ள்.) அரு களி - (தணித்தற்கு)அரிய களிப்பினையுடைய, மால் களிறு அனைய வீரர்க்குஉம் - மதமயக்கங்கொண்ட ஆண்யானைகளையொத்த வீரர்கட்கும், கரு குழல் மகளிர்க்குஉம்-கரியகூந்தலையுடைய மாதர்கட்கும், கலவி பூசலால் - கலவிப்போரினை நிகழ்த்துவதனால், அ மாலை கங்குல் - மாலையென்றுவழங்கப்படுகின்ற அந்த இரவானது, நெருங்கிய வன முலை சுமக்க நேர்கலா மருங்குல் போல் -(ஒன்றோடொன்று)நெருங்கியுள்ள அழகிய தனங்களைச் சுமப்பதற்கு வல்லமையமைந்திராத (மாதர்களின்) இடையைப்போல, தேய்ந்தது - (வரவரக்)குறைந்தது; (எ - று.)

கங்குற்போது கழிந்ததேயன்றி, வீரர்க்கும் மகளிர்க்கும் கலவிப்போரினால் நிகழ்ந்த இன்பம் கழிந்தில தென்றவாறு. வேட்கைச்செயல் பலவும் நிகழ்தற்கு இடனாயிருந்ததுபற்றி, 'அம்மாலைக்கங்குல்' என்றார். (௬௬)

௬௭.—சந்திர னத்தமித்தலும், சூரியனுதித்தலும்.

கடையுற நன்னெறி காண்கி லாதவர்க்
கிடையுறு திருவென விந்து [1]நந்தினன்
படர்திரைக் கருங்கடற் பரமன் மார்பிடை
சுடர்[2]மணிக் கரசென விரவி தோன்றினன்.

(இ - ள்.) நல் நெறி - புண்ணியச்செயல்களை, கடை உற காண்கிலாதவர்க்கு - முடிவுபொருந்த [பூர்ணமாக]ச் செய்யாதவர்கட்கு, இடை உறு திரு என-நடுவே (சிலகாலம்) சேர்ந்த செல்வம் (அழிவது)போல, இந்து நந்தினன் - சந்திரன் அத்தமித்தான்; பரமன் மார்பிடை சுடர் மணிக்கு அரசு என - எல்லாக்கடவுளரினுஞ் சிறந்த முழுமுதற்கடவுளாகிய திருமாலின் திருமார்பிலே ஒளிவிளங்குகின்ற அரதனசிரேட்டமாகிய கௌஸ்துபவிரத்தினம் (தோன்றுவது) போல, படர் திரை கரு கடல் - பரவிய அலைகளையுடைய கரிய கடலிலே, இரவி - சூரியன், தோன்றினன்—; (எ - று.)

பூர்ணமாகப் புண்ணியஞ்செய்யாமற் சொற்பமாகப் புண்ணியஞ்செய்பவர்க்கு அவர்செய்த நல்வினைக்கேற்பச் சிறிதுகாலஞ் செல்வந் தோன்றிப் பின்புபோய்விடுதல் இயல்பு; அதனைச் சந்திரன் தோன்றி அஸ்தமித்தற்கு உவமை கூறினர். கரிய கடலிலே சோதிமயமான சூரியன் தோன்றியதற்கு,கரியவனான திருமாலின் திருமார்பிலே கௌத்துபவிரத்தினம்விளங்குவதை உவமைகூறினர். உவமையணி. பி - ம்:—[1] நந்திட. [2] மணியரசென.

உண்டாட்டுப்படலம் முற்றிற்று.

---

## கஅ-ஆவது எதிர்கோள்படலம்.

சனகராசன் தனதுபரிவாரங்களுடனேவந்து தசரதசக்கரவர்த்தியைச் சேனையுடனே எதிர்கொண்டு உபசரித்து அழைத்துப்போகின்ற செய்தியைக் கூறும் பாகம். எதிர்கொள்ளுதல் - எதிரில்வந்து அளவளாவி உடன்கொண்டு செல்லல்; இது, மரியாதை. இவ்வெதிர்கோளில் இராமலட்சுமணர் தசரதனை யெதிர்ந்ததும் அடங்கு மென்பர். இது, எதிர்கோட் படலம் என்று சிலபிரதிகளிற் காணப்படுகின்றது.

க.—தசரதன் சேனையுடன் கங்கையை யடைதல்.

அடாநெறி [1]யறைதல் செல்லா வருமறை யறைந்த நீதி
விடாநெறிப் புலமைச் செங்கோல் வெண்குடை வேந்தர் வேந்தன்
[2]படாமுக மலையிற் [3]றேன்றும் பருவமொத் தருவி [4]பல்குங்
கடாநிறை யாறு பாயுங் கடலொடுங் கங்கை சேர்ந்தான்.

(இ - ள்.) அடா - (அந்த அந்த வருணங்களுக்கும் ஆச்சிரமங்களுக்கும்) பொருந்தாத, நெறி - ஒழுக்கவழிகளை, அறைதல் - கூறுந்தொழிலிலே, செல்லா - சிறிதும்போகாத, அரு மறை - (அறிதற்கு) அருமையான வேதங்களிலே, அறைந்த - கூறப்பட்டுள்ள, நீதி - நியாயங்களை, விடா - நீங்கிநடவாத, நெறி - நல்லொழுக்கவழியையும், புலமை - தேர்ந்தஅறிவையும், செம் கோல் - முறைபிறழாத அரசாட்சியையும், வெள் குடை - வெண்கொற்றக்குடையையுமுடைய, வேந்தர் வேந்தன்-அரசர்களுக்கு அரசனான

தசரதசக்கரவர்த்தி,—படாம் முகம் மலையில் - முகபடாத்தையுடைய மலை போன்றயானைகளிடத்தினின்று, தோன்றும் - உண்டாகிற, பருவம் ஒத்து அருவி பல்கும் - மழைக்காலத்தையொத்து அருவிகளாகப் பெருகுகிற, கடாம் - மதசலங்களாகியநீர், நிறை-நிரம்பின, யாறு - நதிகள், பாயும் - (தன்னிடத்தே வந்து) பாயப்பெற்ற, கடலொடும் - (சேனை) சமுத்திரத்துடனே, கங்கை - கங்காநதியின் கரையை, சேர்ந்தான் - வந்தடைந்தான்.

முகபடாத்தையுடைய மலை யெனவே, யானையாயிற்று; இது, பிறகுறிப் பின்பாற்படும்: முகில் - உவமவாகுபெயர். மலையில் தோன்றி மலையருவி முகமாக எக்காலத்தும் இடைவிடாது பெருகுகிற சீவநதிகள் தன்னிடம் பாயப்பெற்ற கடல்போல, யானைகளினின்றுதோன்றிப் பெருவெள்ளமாக எப்பொழுதும் இடைவிடாது பெருகுகிற மதநீர்த்தாரைகள் வந்து பரவிய சேனை என்க; உருவகவணி. கடல் - உவமவாகுபெயர். கங்கை கடலிற் சேர்வ தன்றிக்கே இங்கே கடல் கங்கையைச் சேர்ந்த தென ஒருவகைச் சாதுரியந்தோன்றக் கவி கூறினார். பின்னடிகளில், 'படாமுகப் பனைக்கை நால்வாய்ப் பாகடுஞ் சீற்றத்துப்பிற், கடாமதயானைச்சேனை' என்றும் பாடமுண்டு. பி - ம்:—[1]அறிதல். [2]முகிலில். [3]தோன்றி. [4]நல்கும். (க)

உ.—சேனையிலுள்ளார் அந்தக்கங்கைநீரைப் பருகுதல்.

கப்புடை நாவி னாகர் உலகமுங் கண்ணிற் றோன்றத்
துப்புடை மணலிற் றாகிக் கங்கைநீர் [1]சுருங்கிக் காட்ட
வப்புடை யனீக வேலை யகன்புனன் முகந்து மாந்த
வுப்புடைக் கடலுந் தெண்ணீ ருண்ணசை யுற்ற தன்றே.

(இ - ள்.) கப்பு உடை - இரண்டாகப் பிளவுபடுதலையுடைய, நாவின் - நாக்கையுடைய, நாகர் - சர்ப்பசாதியாரது, உலகம்உம் - லோகமான பாதாளமும், கண்ணில் தோன்ற - கண்களுக்குத் தெரியுமாறு, துப்பு உடை மணலிற்று ஆகி - தூய்மையையுடைய மணலை யுடையதாய், கங்கை - கங்காநதி, நீர் சுருங்கி காட்ட - தண்ணீர் குறைவடையும்படி, அம்பு உடை அனீகம் வேலை அகல் புனல் முகந்து மாந்த - பாணம் முதலிய ஆயுதங்களையுடைய அச்சேனைசமுத்திரம் மிகுந்த (அந்நதியின்) நீரை எடுத்துப் பருகியதனால், உப்பு உடை கடல்உம்-உப்புத்தன்மையையுடைய உவர்நீர்க் கடலும், அன்று - அப்பொழுது, தெள் நீர் உண் நசை உற்றது - தெளிவான (அக்கங்கையின்) நீரைப் பருகவேண்டு மென்கிற விருப்பத்தை யடைந்தது.

பாதாளலோகம் வரையில் ஆழமுள்ளதாய் எப்பொழுதும் நீர் வெள்ளம் கடலிற்சென்றுசேருந் தன்மையதான பெரியஅக்கங்காநதியிலே தசரதசக்ரவர்த்தியினுடைய சேனைகளிலுள்ள யானைகளும் குதிரைகளும் வீரர்களும் இறங்கித் தாம்தாம் விரைவாகவந்த இளைப்பு நீங்கும்பொருட்டு அந்நீரை நிரம்பப் பருகவே, நதியில் நீர்குறைந்து மணல்தோன்றி அந்த ஆறு அப்பொழுது கடல்வரையிற்சென்று சேராதாயிற் றென்பதாம். எப்பொழுதும் இனிய கங்கைநீரைப்பருகிச் சுவையறிந்துள்ள கடல் அப்பொழுது அந்நீரைப் பெறாமையால் தாகமுற்ற தென்றார்: தொடர்புயர்வுநவிற்சியணி.

கடலிற்செல்லுங் கங்கையை, சேனைக்கடல் வந்துசேர்ந்து அதனிடஞ் சேரவொட்டாமற் செய்ததென இதில் ஒருவகைச் சமத்காரந் தோன்றுதலுங் காண்க. கடல் தான் நீர்நிரம்பியதாயினும், உப்புச்சுவையுடைமையால், வேறு தண்ணீரை விரும்ப வேண்டியதாயிற்று: இக்கருத்தைத் தருதலால், 'உப்புடை' என்பது - கருத்துடையடைமொழி; சாபிப்பிராய விசேடணம். கடல் - அதிலுள்ள நீர்வாழுயிர்களுக்கு ஆகுபெயராக உரைத்தலும் ஒன்று. நாகருலகமும், கடலும் என்ற உம்மைகள் - முறையே மிகக்கீழாகவுள்ள தன்மையையும் மிகநீர்நிரம்பின தன்மையையும் விளக்கியதனால்,உயர்வுசிறப்புக்கள். அம்பு-மற்றை ஆயுதங்களுக்கும் உபலக்ஷணம். சேனையைக் கடலாக உருவகப்படுத்தினதற் கேற்ப, அடைமொழியாகிய 'அப்புடை' என்பதற்கு - நீரையுடைய என்றும் பொருள்கொள்க; அம்பு - நீரைக்குறிக்கும்வடசொல். தாயான விநதை தன்சக்களத்தியான கத்துருவினிடத்து அடிமைபூண்டிருந்ததை ஒழிப்பதற்குக் கருடபகவான் தேவலோகத்திலிருந்து அருமையாகக்கொணர்ந்து வைத்த அமிருத கலசத்திலிருந்து சிந்தின அமுதத்தை நக்குகையில் அமுதகலசத்தை வைக்கும்போது பரப்பிய தருப்பைகளினூற் கீறுண்டு அக்கத்துருவின் மக்களான நாகங்களின் நாக்கு ஆதியிற் பிளவுப்பட்டன வென்பது, புராணகதை. பி - ம்:—[1]சுருக்கி. (உ)

ந.—கவிக்கூற்று: தசரதன்வந்துசேர்ந்ததும் சனகன் செய்ததைச் சொல்வோமெனல்.

ஆண்டுநின் றெழுந்து போகி யகன்பணை மிதிலை யென்னு
மீண்டுநீர் நகரின் பாங்க ரிருநிலக் கிழவ னெய்தத்
தாண்டுமாப் புரவித் தானைத் தண்ணளிச் சனக னென்னுந்
தூண்டரு வயிரத் தோளான் செய்தது சொல்ல லுற்றாம்.

(இ - ள்.) இரு நிலம் கிழவன் - பெரிய பூமிமுழுவதுக்கும் உரிய அரசனான தசரதன்,ஆண்டு நின்று எழுந்து போகி - அக்கங்காநதியினிடத்தினின்றும் புறப்பட்டுச் சென்று,அகல் பணை மிதிலை என்னும் - விசாலமான கழனிகள் சூழ்ந்துள்ள மிதிலையென்றுபெயர்கூறப்படுகிற, ஈண்டு நீர் நகரின்- மிகுந்த நீர்வளத்தையுடைய பட்டணத்தின், பாங்கர் - அருகிலே, எய்த - சேர்ந்தவளவிலே,—தாண்டும் மா புரவி தானை - பாய்ந்துசெல்லுகிற பெரிய [சிறந்த] குதிரைச் சேனைகளையும், தண் அளி - குளிர்ந்த கருணையையுமுடைய, சனகன் என்னும் - ஜனகன் என்கிற, தூண் தரு வயிரம் தோளான் - தூண்களையொத்த உறுதியான தோள்களை யுடைய சிறந்த அரசன், செய்தது - செய்தகாரியத்தை, சொல்லல் உற்றாம் - (இனிச்) சொல்லத்தொடங்கினோம்; (எ - று.)

கிழவன் - வயதுமுதிர்ந்தவனென்றுமாம்; இத்தனை பெரிய பூலோகத்தில் அறுபதினாயிரம்பிராயம் வாழ்ந்திருந்த வயோவ்ருத்தன் தசரதனையொழிய வேறொருவன் இலனன்றே. அளியாவது - அன்புகாரணத்தால் தோன்றும்அருள்.தூண் தரு, தரு-உவமவுருபு. செய்தது - சாதியொருமை.

௪.—சனகராசன் தசரதசக்ரவர்த்தியை எதிர்கோள்ள வெழுதல்.

**வந்தன னரச னென்ன மனத்தெழு முவகை [1]பொங்கக்**
**கந்தடு களிறுந் தேருங் கலினமாக் கடலுஞ் சூழச்**
**சந்திர னிரவி தன்னைச் சார்வதோர் தன்மை தோன்ற**
**விந்திர திருவன் றன்னை யெதிர்கொள்வா னெழுந்து வந்தான்.**

(இ - ள்.) (*தசரதசக்கரவர்த்தி தனது மிதிலாநகரியின் அருகில்வந்து சேர்ந்த செய்தியைத் தூதர்சொல்லக் கேட்டறிந்த சனகமகாராசன்*), அரசன் வந்தனன் என்ன மனத்து எழும் உவகை பொங்க - தசரதமகாராசன் வந்துவிட்டானென்ற காரணத்தால் (தனது) மனத்திலே உண்டாகிற களிப்பு மிகாநிற்க, கந்து அடு களிறுஉம் தேர்உம் கலினம் மா கடல் உம் சூழ - கட்டுத்தறியைமுறிக்கிற மதயானைகளும் தேர்களும் கடிவாளத்தை யுடைய குதிரைகளாகிய கடல்களும் (தன்னைச்) சூழ்ந்துவர, - சந்திரன் இரவி தன்னை சார்வது ஓர் தன்மை தோன்ற - சந்திரன் சூரியனை வந்தடைவதொரு விதத்தை யொப்ப, இந்திர திருவன்தன்னை எதிர்கொள்வான் எழுந்து வந்தான் - தேவேந்திரன்போன்ற செல்வத்தையுடைய தசரதனை எதிர்கொள்ளும்பொருட்டுப் புறப்பட்டுவந்தான்; (எ - று.)

மதயானை கட்டுத்தறியை முறிப்பது, இயல்பு. ஒன்றன்பின்ஒன்றாக வரிசைப்படநிற்கின்ற குதிரையொழுங்கு, இடைவிடாத கடலின் அலையையொத்துப் பரவுமென்க. கலினமா-கடிவாளத்தையுடையவிலங்கு: எனவே,குதிரையாயிற்று. 'கலினமாக்கடல்' என்பதை உம்மைத்தொகையாகக்கொண்டு, குதிரைச்சேனையும் காலாட்சேனையுமென்றும் உரைக்கலாம்; உரைக்கவே, சதுரங்கசேனையும் அடங்கும். சந்திரன் ஜனகனுக்கும், சூரியன் தசரதனுக்கும் உயர்வுதாழ்வையுணர்த்தும் உவமையாம். பி - ம்:—[1]பொங்கி. (௪)

௫.—தசரதன்சேனை மிதிலாநகரியையடைய, சனகன்சேனை யெதிர்கோள்ளுதல்.

**கங்கைநீர் நாடன் சேனை மற்றுள கடல்க ளெல்லாஞ்**
**சங்கின மார்ப்ப வந்து சார்வன போலச் சாரப்**
**[1]பங்கயத் தணங்கைத் தந்த பாற்கட லெதிர்வ தேபோன்**
**மங்கையைப் பயந்த மன்னன் வளநகர் வந்த தன்றே.**

(இ - ள்.) கங்கை நீர் நாடன் சேனை - கங்காநதியினதுஜலம் பாயப்பெற்ற கோசலநாட்டைத்தங்குமிடமாகவுடைய தசரதனது சேனைகள், மற்றுஉள கடல்கள் எல்லாம் சங்கு இனம் ஆர்ப்ப வந்து சார்வன போல-(பாற்கடலையொழிந்த) வேறுள்ளகடல்கள்யாவும் சங்குகளின்கூட்டம் (தம்மிடத்திலே) ஆரவாரிக்க வந்து (திருப்பாற்கடலை) அடைவனபோல், சார-வந்து சேர,- மங்கையை பயந்த மன்னன் வளம் நகர்-பெண்களிற்சிறந்த சீதாபிராட்டியை(த் தனது மகளாக)ப்பெற்ற சனகராசனது பலவளங்களையுமுடைய நகரத்திலுள்ள சேனையானது, பங்கயத்து அணங்கை தந்த பாற்கடல் எதிர்

வது போல் - செந்தாமரைமலரில்வாழ்கின்ற பெண்களிற்சிறந்த திருமகளைப் பெற்ற திருப்பாற்கடலானது (மற்றைக்கடல்களை) எதிர்கொள்வதுபோல, வந்தது-(தசரதனதுசேனைகளை எதிர்கொள்ள)வந்தது; (எ-று.)

சனகராசன்சேனை தசரதன்சேனையை யெதிர்கொண்டது - திருப்பாற்கடல் மற்றைக்கடல்களை யெதிர்கொள்வதுபோலு மென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. பாற்கடலைச் சனகன்சேனைக்கும், மற்றைக்கடல்களைத் தசரதன்சேனைக்கும் உவமைகூறியதனால், தசரதமன்னனுடைய சேனைகளின் மிகுதி பெறப்படும். நகர்-நகரத்துச்சேனைக்கு ஆகுபெயர்; நகரத்துச்சனங்களென்று உரைத்தலு மொன்று. ஈற்றடியில் 'மங்கையைப் பயந்த மன்னன் சேனைவந் தெதிர்ந்ததன்றே' என்ற பாடம் சிறக்கும். 'கங்கைநீர்நாடன்' என்றதனால், கோசலதேசத்தினதுஎல்லை கங்காநதிவரையிலும் என்று அறிக. இனி கங்கைஎன்பதற்கு - சரயுஎன்றும்பொருள்கூறுவர்;சரயூநதிக்கு ராமகங்கை யென்றும் ஒருபெயருண்டு; அன்றியும், கங்கை என்பது - எல்லா நதிகளுக்கும் பொதுப்பெயராகவும் வழங்கும்.மற்று உள கடல்கள்-உவர்நீர், கருப்பஞ்சாறு, கள்,நெய், தயிர், நன்னீர் என்னும் இவற்றின் மயமானவை. 'சங்கின மார்ப்ப' என்பதனை உபமேயத்துக்குங் கொள்க. சீதை இலக்குமியினமிசமாதலால், மங்கையைப்பயந்தமன்னனுக்குப் பங்கயத்தணங்கைத் தந்த பாற்கடல் உவமை கூறப்பட்டது. பி - ம்:—[1]பங்கயத்திருவை. (கு)

சு.—தசரதமன்னவன்சேனையின் வருணனை.

இலைகுலா வயிலின னணிகமே ழெனவுலா
நிலைகுலா மகரநீர் நெடியமா கடலெலா
மலகின்மா களிறுதேர் புரவியா ளெனவிரா
யுலகெலா நிமிர்வதே [1]பொருவுமோ ருவமையே.

(இ - ள்.) இலை குலாவு அயிலினன் - அரசிலைவடிவமாக விளங்குகிற (கூரிய) வேலாயுதத்தையுடைய தசரதசக்கரவர்த்தியினது, அனிகம்-சேனைக்கு,—ஏழ் என உலாம் நிலை குலாம் மகரம் நீர் நெடிய மா கடல் எலாம்-ஏழு என்னும் எண்ணைக்கொண்டதாகி நிலைபெற்றுவிளங்குகிற சுறாமீன்களையுடையநீரோடுகூடிய நீண்ட அகன்ற கடல்கள்யாவும், அலகு இல் மா களிறு தேர் புரவி ஆள் என விராய் - அளவில்லாத பெரிய யானைகளும் தேர்களும் குதிரைகளும் காலாட்களும் என்னும் நான்குவகை வடிவுடன் கலந்து,உலகு எலாம் நிமிர்வதே - உலகமுழுவதிலும் பொங்கிப் பரவுவதுவே, பொருவும் ஓர் உவமை - தக்கதொரு உபமானமாம்; (எ - று.)

ஏழ்கடல்களும் கஜரததுரகபதாதியென்னும் நால்வகைப்படைகளின் வடிவத்தைக்கொண்டு உலகெங்கும் பரவினாற்போலச் சக்கரவர்த்தியினது சதுரங்கசேனைகள் பரவின என்பதாம்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. மகரம் - கடலில்மாத்திரமே வாழுந் தன்மையதான சுறவமீன்; "கடல்வாழ் சுறவம்"என்றார் ஆசிரியர்தொல்காப்பியனார்: இது கடலில் மாத்திரமே

வாழுவ தாதல்பற்றி 'மகராலயம்' என்று கடலுக்கு ஒருபெயர். நெடியமா - ஒருபொருட்பன்மொழியு மாம். அயிலினன் - சனகனுமாம். பி-ம்:—[1]பொருவபேருவமையே.

எ.—சேனைகளிலுள்ள அரசுசின்னங்களின் வருணனை.

தொங்கல்வெண் குடை[1]தொகைப் பிச்சமுட் படவிரா
வெங்கும்விண் புதைதரப் பகல்மறைந் [2]திருளெழப்
பங்கயஞ் செய்யவும் வெளியவும் பலபடத்
தங்குதா மரையுடைத் தானமே [3]போலுமே.

(இ - ள்.) தொங்கல் வெண் குடை - மாலைகளையுடைய வெண்கொற் றக்குடைகளும், தொகை பிச்சம் - தொகுதியான மயிற்பீலிக்குஞ்சங்களும், உட்பட - உள்பட, [இவைமுதலிய சாமரம் கொடி மகரதோரணம் என்னும் அரசசின்னங்கள்], விராய்-கலந்து, (அதனால்), எங்கும் விண் புதைதர - எவ்விடத்தும் ஆகாயம் மறைவதனால், பகல் மறைந்து இருள் எழ - சூரியனொளி மறைபட்டு இருளுண்டாக, (அச்சேனை), பங்கயம் செய்யவும் வெளியவும் பல பட தங்கு தாமரை உடை தானமே போலும் - தாமரை மலர்கள் செந்நிறத்தனவும் வெண்ணிறத்தனவு மாக அனேகந்தோன்றி மிகப் பொருந்திய தடாகத்தை ஒக்கும்; (எ - று.)

நிறவேறுபாடும் குளிர்ச்சியும் பற்றிய உவமை. முன்னே 'பங்கயம் என வந்ததனால், 'தாமரையுடைத்தானம்' என்பது - நீர்நிலையை உணர்த்தி, வெ[illegible]பெயர்[illegible]த்திரையாய் நின்றது. தொங்கல் - குடையைச்சுற்றிலும் [illegible]ாகத்தொங்கவிடப்பட்டுள்ள பட்டுநூற்சரங்கள். பிச்சம் என்னும் மயிலதோகையின் பெயர் - அதனாலாகிய ஓர்வகை யலங்காரத்தூக்குக் கருவியாகுபெயர். இனி, தொங்கல் - மயிற்பீலிக்குஞ்சமென்றும், பிச்சம்- மயிற்பீலிக்குடை யென்றும் உரைப்பாரு முளர். தொகை - அவ்வெண் குடைகளின் இனமாகிய செந்நிறக்குடைகளென்றும் உரைப்பர். பி - ம்:— [1]துவர்க்கவிகை. [2]இருள்செய. [3]சாலுமே. (எ)

அ.—தசரதமன்னவனது கோடிமுதலிபன வெற்றித்திருவோடு விளங்குதல்.

கொடியுளா ளோதனிக் குடையுளா ளோகுலப்
படியுளா ளோகடற் படையுளா ளோபகர்
மடியிலா வரசினன் மார்புளா ளோவளர்
முடியுளா ளோதெரிந் துணர்கிலா முளரியாள்.

(இ - ள்.) முளரியாள் - செந்தாமரைமலரில்வாழ்கின்ற திருமகள்,— பகர் மடி இலா அரசினன் - சொல்லப்படுகிற சோம்ப லில்லாத அரசாட்சி முறைமையையுடைய சக்கரவர்த்தியினது, கொடி - துவசத்திலே, உளாள் ஓ - இருக்கின்றனளோ? தனி குடை உளாளோ - ஒப்பற்ற ஒற்றை வெண் கொற்றக்குடையிலே இருக்கின்றனளோ? குலம் படி உளாளோ - பரம்பரையாகவருகின்ற (அவனது) இராச்சியத்திலே யிருக்கின்றனளோ? கடல் படை உளாளோ - கடல்போலப்பரந்த சேனையிடத்தே இருக்கின்றனளோ?

மார்பு உளாளோ - மார்பிலேவீற்றிருக்கின்றனளோ? வளர் முடி உளாளோ- (அழகு) வளர்ந்த கிரீடத்திலே இருக்கின்றனளோ? தெரிந்து உணர்கிலாம்- (இன்ன இடத்தா ளென்று) ஆராய்ந்து(ஐயந்தீர) அறிகிறோமில்லை; (எ-று.)

இங்ஙனம் ஐயப்பொருள்படக்கூறினாலும், கொடிமுதல் முடியீறாகச் சொல்லப்பட்ட அரசனதுபொருள்கள் ஒவ்வொன்றும் வெற்றித்திரு வீற்றிருக்கும் இடமாக இருந்தன என வருணித்ததாகவே கருத்துக்கொள்க. படி - பூமி. குலப்படி - வமிசபரம்பரையாகவருகிற தான்பிறந்த அக்குலத்துக்கு உரிய நற்குணநற்செய்கைகளுமாம். பகர் என்பதை மடியென்பதனோடு கூட்டினால் - இழிவாகக்கூறப்படுகிற என்றும், அரசு என்பதனோடு கூட்டினால்-சிறப்பித்துக்கூறப்படுகிற என்றும் பொருள்கொள்க. "மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான், றாஅய தெல்லா மொருங்கு" எனத் தெய்வப்புலவர் கூறியுள்ளபடி தசரதன் சோம்புதலென்னுந் தீக்குணத்தை முற்றுமொழித்துத் தன் மெய்ம்முயற்சியினாலேயே திக்குவிசயஞ்செய்து எல்லாவரசரையுங் கீழ்ப்படுத்தி நிலவுலகமுழுதும் அரசாண்டு சக்கரவர்த்தியாயின சிறப்புத் தோன்ற, 'பகர் மடியிலா வரசினான்' என்றார். உத்தமவிலக்கணமமையப்பெற்றுள்ள மார்பிலே திருமகள்வீற்றிருக்கின்றன ளென்பது, சாமுத்திரிகநூலார் கொள்கை யாதலின், 'மார்புளாளோ' என்றது. முனரியாள்- வெற்றித்திரு. (அ)

கூ.—பலவகை யொலிகளின் வருணனை.

*வார்முகங் [1]கெழுவுகொங் கையர்கரும் [2]குழலின்வண்
டேர்முழங் கரவமே ழிசைமுழங் கரவமே
தேர்முழங் கரவம்வெண் டிரைமுழங் கரவமே
கார்முழங் கரவம்வெங் கரிமுழங் கரவமே.

(இ - ள்.) ஏழ் இசை முழங்கு அரவம் - (அச்சேனையிலுள்ள பலவகை வாத்தியங்கள்) எழுவகைப்பட்ட சுரங்களை ஒலிக்கின்ற ஓசை,—வார் முகம் கெழுவு கொங்கையர் கரு குழலின் வண்டு ஏர் முழங்கு அரவம் - கச்சினிடத்தில் நிறையப்பொருந்தின தனங்களையுடைய மகளிர்களது கருமையான கூந்தலிலே வண்டுகள் அழகாகஒலிக்கின்ற இசையையே ஒக்கும்; தேர் முழங்கு அரவம் - (அச்சேனையில்) தேர்கள் ஒலிக்கின்ற ஓசை,—வெள் திரை முழங்கு அரவமே - வெண்ணிறமான அலைகளையுடைய கடல்கள் ஒலிக்கின்ற ஆரவாரத்தையே ஒக்கும்; வெம் கரி முழங்கு அரவம் - பயங்கரமான யானைகள் கர்ச்சிக்கின்ற பேரோசை, கார் முழங்கு அரவமே - கார்காலத்து மேகங்கள் ஒலிக்கிற இடிமுழக்கத்தையே ஒக்கும்; (எ - று.)—மதயானைகளின் உடம்பு சூடுகொண்டிருக்கு மென்ப ராதலால், 'வெங்கரி' என்றார். வெங்கரிஎன்பதில் வெம்மை-வெப்பமுமாம். பி - ம்:—[1]கெழுமு. [2]குழலாள்.

க0.—சேனை யெழுப்பிய தூளி.

சூழுமா கடல்களுந் திடர்படத் துகடவழ்ந்
தேழுபா ரகமுமுற் றுளதெனற் கெளிதரோ

வாழியா னுலகளந் தன்றுதாள் சென்றவப்
பூழையூ டேபொடித் தப்புறம் [1]போயதே.

(இ - ள்.) துகள் - (அச்சேனை நடந்து செல்லுதலாற் பூமியிலிருந்து மேலெழுப்பப்பட்ட) தூளி,—சூழும் மா கடல்கள் உம் திடர் பட - (உலகத்தைச்)சூழ்ந்துள்ள பெரிய கடல்களெல்லாமும் மேடாகும்படி, தவழ்ந்து-பரவிச்சென்று,ஏழு பார் அகம் உம் உற்று உளது எனற்கு - மேலேழுலகங்களிலிடத்திலும் போய்ப் பொருந்தி நிரம்பியுள்ளதென்று சொல்வதற்கு, எளிது அரோ - மிகஎளியதேயாம்; (ஏனெனில்), ஆழியான் - சக்கராயுதத்தையுடைய திருமால், உலகு அளந்த அன்று - லோகங்களை அளவிட்ட அந்தக் காலத்தில், தாள் சென்ற - (அவனது) திருவடியொன்று மேலேதுளைத்துச் சென்ற, அ பூழை ஊடே - அந்த (அண்டகடாகத்து மேல்முகட்டுத்) துளை வழியிடையிலே, பொடித்து - நுழைந்துசென்று, அ புறம் போயது - (இவ்வண்டத்துக்கு) வெளியிடத்திலும் பரவிற்று; (எ - று.)—ஏ - தேற்றம்.

திரிவிக்கிரமனான திருமாலின் திருவடிபட்டுத் தொளையான வழியின் மூலமாக அச்சேனையெழுப்பிய தூளி வெளியிலுஞ் சென்றதனால், இந்தப் பூமிமுழுவதும் அது நிரம்பிற்றென்று கூறுவதற்குச் சிறிதுந் தடையில்லையென்றவாறு. தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. இனி இச்செய்யுளில் எளிதரோ என்பதை எளிதுஅர்ஓ என்று பிரித்து, அர் என்பதை அசையென்றேனும் எளிது என்னும் குற்றியலுகரத்தின்மீதுவந்த போலியென்றேனுங்கொண்டு, இப்பாரகத்தில்தான் சேனையின்தூளி சூழ்ந்தது என்று சொல்லுதற்கு அது அவ்வளவு சொற்பமானதோ? அத்தூளி இவ்வண்டகடாகத்துக்கு அப்பாலும் பரவுமாறு மிக்கதன்றோ என்று உரைப்பாருமுளர். ஜம்புமுதலிய த்வீபங்களேழையும் உப்புக்கடல் முதலிய ஏழு கடல்கள் சூழ்ந்துள்ளன என்பது புராணநூற்கொள்கை யாதலால், 'சூழு மாகடல்' எனப்பட்டது. அளந்தன்று - பெயரெச்சவீறு தொகுத்தல். பூழை - புழை என்பதன் நீட்டல். பி - ம்:—[1]போர்த்ததே. (௧௦)

௧௧.—துடைகளும் அணிகலன்களும்.

மன்னெடுங் குடைமிடைந் தடையவான் மறைதரத்
துன்னிடுந் நிழல்வழங் கிருடுரப் பெளிதரோ
[1]பொன்னிடும் புவியிடும் புனைமணிக் கலனெலா
மின்னிடும் வில்லிடும் வெயிலிடுந் [2]நிலவிடும்.

(இ - ள்.) மன் நெடு குடை - (அச்சேனையிற்) பொருந்திய உயர்ந்த [நீண்ட பெரிய] குடைகள், மிடைந்து-நெருங்கி, (அதனால்), வான் அடைய மறைதர - ஆகாயம்முழுவதும் மறைவுபட, துன்னிடும் - அங்குநிறைந்த, நிழல் - நிழலானது, வழங்கு - உண்டாக்கித்தருகிற, இருள் - இருளை, துரப்பு - ஒழித்தல், எளிது அரோ - எளியதேயாம்; (அது எங்ஙனமெனில்), புவி இடும்-அந்தப்பூமியிலுள்ளார் [சேனைகள்] அணிந்துள்ள, பொன் இடும்-பொன்னினாற் செய்யப்பட்ட, புனை - அழகிய, மணி - இரத்தினங்கள் பதிக்கப்

பட்டுள்ள, கலன் எலாம் - ஆபரணங்கள்யாவும், மின் இடும் - மின்னலோடொத்த ஒளியை வீசும்; வில் இடும் - இந்திரவில்லோடொத்த ஒளியை வீசும்; வெயில் இடும் - சூரியகாந்தியோடொத்த ஒளியை வீசும்; நிலவு இடும்- சந்திரகாந்தியோடொத்த ஒளியை வீசும்; (எ - று.)

ஆபரணகாந்தியால் எளிதில் இருள் ஒழிந்த தென்பது கருத்து. எளிதரோ என்பதற்கு எளிதன்று என்று பொருளுரைத்து, புனை கலன் யாவும் மின்முதலியவற்றை வெளிக்காலுமாயினும், குடைவழங்கிருளைத்துரப்பது முடியாததாயிற்றென்னுங் கருத்துப்பட வுரைப்பாருமுளர். மின் முதலியன, இரத்தினாபரணங்களின் பலநிறமுள்ள ஒளிவேறுபாட்டை யுணர்த்தும். பூவி - சேனைக்குஇடவாகுபெயர். இனி, பொன்னிடும் என்பதற்கு - அழகு பொருந்திய என்றும், பொன்னுணயங்களையும் விலைகொடுத்துப் பெறுதற்குரிய என்றும்; புவியிடும் என்பதற்கு - பூமிமுழுவதையும் விலையாகக்கொடுத்தற்குரிய என்றும், சேனைசெல்லும் பூமியிலேசிந்துகிற என்றும்; புனை என்பதற்கு - அணிதற்குரியஎன்றும்; மணி என்பதற்கு - அழகியஎன்றும் பொருளுரைக்கலாம். இந்திரவில், பலவகைவருணமுடையது. பி - ம்:—[1]பொன்னெடும் முடிமுதற் புனையணி கலமெலாம், பொன்னிடம் பூணிடும் புனைமணிக்குலமெலாம். [2]நிலவொடே. (கக)

கஉ.—சனகமன்னவன் வரும் வழியின் வருணனை.

தாவின்மன் னவர்பிரான் வர[1]முரட் சனகனு
மேவருஞ் சிலையினு னெதிர்வருந் நெறியெலாந்
தூவுதண் சுண்ணமுங் கனகநுண் டூளியும்
[2]பூவின்மென் றாதுகும் பொடியுமே பொடியெலாம்.

(இ - ள்.) தா இல் - குற்றமில்லாத, மன்னவர் பிரான் - அரசர்களுக்கரசனாகிய தசரதசக்கரவர்த்தி, வர - (தனதுநகரத்திற்கு) வருகையில், முரண் சனகன் ஆம் - வலிமையையுடைய சனகனாகிய, ஏ வரும் சிலையினன் - அம்புகள் தொடுத்தற்குப் பொருந்தும் வில்லையுடைய சிறந்தவீரனான அரசன், எதிர் வரும் - எதிர்கொண்டுவருகிற, நெறி எலாம் - வழிமுழுவதிலும், - தூவு தண் சுண்ணம்உம்-(மங்களகரமாக மேலே) தூவப்படுகிற குளிர்ந்த வாசனைப்பொடிகளும், கனகம் நுண் தூளிஉம்-(ஆபரணங்களிலிருந்து சிந்துகிற) நுட்பமான பொற்பொடிகளும், பூவின் மெல் தாது உகும் பொடிஉம்ஏ - மலர்களினின்று சிந்துகிற மெல்லிய மகரந்தப்பொடிகளும் ஆகிய இவையே, பொடி எலாம் - பலவகைத்தூளிகளாம்; (எ - று.)

செல்வச்சிறப்பைக் கூறியதனால், இது - வீறுகோளணி. ஏவு அரு சிலை எனப் பிரித்து - வளைத்து அம்புதொடுத்தற்கு அருமையான வில் என்றுங் கொள்ளலாம். சுண்ணத்திற்குத் தண்மை - நாற்றவினிமை. பூ - அவர்கள் மாலையிலுள்ளன. பி - ம்:—[1]அருள். [2]பூவினுண். (கஉ)

கங.—வழியிலுள்ள சேறுகளின் தன்மை.

நறுவிரைத் தேனுநா னமுநறுங் குங்குமச்
செறியகிற் றேய்வையும் மான்மதத் தேக்கரும்

வெறியுடைக் கலவையும் [2]விரவுசே றுறமிகு
செறிமதக் கலுழிபாய் சேறுமே சேறெலாம்.

(இ - ள்.) நறு விரை தேன்உம் - நல்ல பரிமளத்தையுடைய [பூக்களினின்றுசிந்துகிற]மதுவும், நானம்உம்-(கூந்தலினின்றுஒழுகுகிற)கத்தூரிப் புழுகும், நறு குங்குமம் செறி அகில் தேய்வைஉம் - நல்வாசனையையுடைய குங்குமப்பூவோடு கூடின அழுத்தமான அகிற்கட்டைத்தேய்வினாலாகிய குழம்பும், மான்மதம் தேக்கர்உம் - கஸ்தூரியின்பெருக்கமும், வெறி உடை கலவைஉம்-பரிமளத்தையுடைய பலவகை வாசனைப்பொருள்களுங் கலந்த சந்தனமும்; விரவு - சேர்தலாலுண்டாகின்ற, சேறு - சேறுகளுடனே, உற மிகு செறி மதம் கலுழி - மிகவும் அதிகமாகி நெருங்கிச்செல்லுகின்ற மத நீர்ப்பெருக்கு, பாய் - பாய்வதனாலுண்டான, சேறுஉம்ஏ - சேறுகளே,சேறு எலாம் - (அவ்வழியிலுள்ள) சேறுகள் யாவுமாம்; (எ - று.)

நானம் என்பதை ஸ்நாநம் என்னும் வடமொழியின் திரிபாகக்கொண்டு, நீராடுதற்குரிய பூச்சுக்கள் என்றும் உரைக்கலாம். குங்குமம் - தனியே குங்குமக்குழம்புமாம். அகில் - சந்தனம்போல வாசனையுடையதொரு மரம்; இது - முதிர்ந்து வைரம்பற்றின கள்ளிச்செடியினிடையி லுண்டாவது முண்டு. தேக்கர் - தேங்குஎன்னும் முதனிலை திரிந்த தேக்கு என்னும் வன்றொடராகிய தொழிற்பெயர் போலியாக அர் பெற்று நின்றது: நிறை வென்றுபொருள். கலுழி - கலங்கனீர். பி - ம்:—[1]நாவியும். [2]விரவுசெஞ் சாந்தமும். (௧௩)

௧௪.—நிழல்களின் தன்மை.

மன்றலங் கோதையார் மணியினும் பொன்னினுஞ்
சென்றுவந் துலவுமச் சிதைவிலா நிழலினேர்
வென்றதிண் கொடியொடுங் நெடுவிதா னமும்விராய்
நின்றவெண் குடைகளின் நிழல்களே நிழலெலாம்.

(இ - ள்., மன்றல் அம் கோதையார் - பரிமளத்தையுடைய அழகிய கூந்தலையுடைய மகளிரது, மணியின்உம்-இரத்தினவாபரணங்களினின்றும், பொன்னின்உம் - பொன்னுபரணங்களினின்றும், சென்று வந்து உலவும் - வெளித்தோன்றிவந்து விளங்குகிற, அ சிதைவு இலா நிழலின் ஏர் - அழிதலில்லாத அந்த ஒளிகளின் அழகை(த் தம்முட்கொண்டுள்ள), வென்ற திண் கொடியொடுஉம் - வெற்றிக்கு அறிகுறியான வலிய துவசங்களோடும், நெடு விதானம்உம் - உயர்ந்த மேற்கட்டிகளோடும், விராய் நின்ற - கலந்து நின்ற, வெள் குடைகளின்-வெண்கொற்றக்குடைகளினுடைய, நிழல்கள்ஏ- சாயைகள்தாமே, நிழல் எலாம் - (அவ்வழியிலுள்ள) நிழல்கள்யாவுமாம்.

கொடி முதலியவற்றின் நிழல்கள் கோதையாரின் மணி பொன் இவற்றினாலாகிய அணிகலங்களினொளியைத் தம்முட்கொண்டு விளங்குகின்றன வென்பதாம். இனி, அச்சேனைகளின் மேலிடமுழுவதிலும் குடைகளும் கொடிகளும் மேற்கட்டிகளும் பரவியுள்ளதனால் அவற்றின் நிழல்களே

வெளித்தோன்றுகின்றன; அவற்றின்கீழுள்ள யானை குதிரை வீரர்முதலிய வற்றின் சாயைகள் தெரிவனவில்லை. ஆனால் அச்சேனைகளின் இடையே யுள்ள மகளிரது சிறந்தகாந்தியையுடையஆபரணங்களில் எல்லா நிழல்களும் பிரதிபலித்துப் பிரதிபிம்பமாகத்தோன்றும் என்று கூறுதலும் ஒன்று. மகளிர் - சேனைவீரர்களது மனைவிமாரும், அரசன் மனைவியின் பரிவாரங் களுமாவர். கோதையார் - வெற்றிப்பூமாலையை யுடையஆடவருமாம். மணி, பொன் - கருவியாகுபெயர்கள். மணியினும் பொன்னினும் - மணிபொன் இவற்றாலியன்றுள்ள வாகனங்களினால்என்று உரைப்பாருமுளர். சென்று வந்து உலவுதல், அசைதலினாலாகும். நிழலின் சேர் எனப்பிரித்து - அந் நிழல்களோடு பொருந்தின என்றும் உரைக்கலாம்; அப்பொழுது கொடி என்பதனோடு இயையாமல் நிழல்கள் என்பதனோடு இயையும். பி - ம்:— [1]அத்திசைகுலாம். (கச)

கரு.—தசரதசக்கரவர்த்திசேனையினிடம் சனகமன்னவன்சேனை வந்து சேர்தல்.

மாறிலா மதுகையான் வருபெருந் தானைமே
லூறுபே ருவகையா னனிகம்வந் துற்றபோ
தீறி[1]லோ தையினொடும் மெறிதிரைப் [2]பரவைமே
லாறுபாய் கின்றதோ ரமலைபோ [3]லானதே.

(இ - ள்.) மாறு இலா மதுகையான் - ஒப்பில்லாத வலிமையையுடைய தசரதனது, வரு பெரு தானை மேல் - வருகின்ற பெரிய சேனையின் மேலே [சேனையைநோக்கி], ஊறு பேர் உவகையான் அனிகம் - மேன்மேற்பொங் குகின்ற பெருங்களிப்பையுடைய சனகனது சேனை, வந்து உற்ற போது - வந்துசேர்ந்த அப்பொழுது, ஈறு இல் ஓதையினொடும் எறி திரை பரவை மேல் ஆறு பாய்கின்றது போல் ஓர் அமலை ஆனது - எல்லையில்லாத ஓசை யுடனே வீசுகின்ற அலைகளையுடைய கடலின்மேலே ஆறு பாய்கின்றதனா லுண்டாகிற ஓசைபோல ஒருபேராரவாரம் உளதாயிற்று; (எ - று.)

மாறுஇலாமதுகை - (போர்முகத்தில்) மாறுபடுதலில்லாத வலிமை என வுமாம்; பெருமையுஞ் சிறுமையுந்தோன்ற, உவமையிற் கடலும் நதியுங் கூறி னார். பி - ம்:— [1]ஓதையினுலா. [2]பரவைவாய். [3]ஆயதே. (கரு)

கசு.—தசரதசக்கரவர்த்தியின் முன்பு சனகன் தேரில்வந்துசேர்தல்.

கந்தையே பொருகரிச் சனகனுங் [1]காதலோ
டுந்தவோ தரியதோர் [2]தன்மையோ டுலகுளோர்
தந்தையே யனையவத் தகவினான் முன்புதன்
சிந்தையே பொருநெடுந் தேரின்வந் தெய்தினான்.

(இ - ள்.) கந்தை - கட்டுத்தறியை, பொரு - முறித்துத்தள்ளுகிற, கரி- யானைச்சேனையையுடைய, சனகன்உம் - சனகராசனும், காதலோடு உந்த - (தன்) ஆசையினால் முன்செலுத்தப்படுதலால், ஓத அரியது ஓர் தன்மை யோடு - சொல்லிமுடிப்பதற்குக்கூடாத ஒப்பற்ற கீழ்வந்தசிறப்புத்தன்மை

யுடனே, உலகு உளோர் தந்தைஎ அனைய அ தகவினன் முன்பு - உலகத்திலேயுள்ளயாவர்க்கும் பிதாவையேயொத்த சிறப்பையுடைய அத்தசரதனது எதிரில், தன் சிந்தைஎ பொரு நெடு தேரின்-தனது மனத்தையே யொத்த பெரிய தேரின்மேலே, வந்து எய்தினன் - வந்துசேர்ந்தான்; (எ - று.)

காதலோடு, ஓஎன்னும் மூன்றுமுருபு - கருத்தாப்பொருளது. மக்களைத்தீயொழுக்கத்திற்செல்லவொட்டாதுதண்டித்து நல்லொழுக்கத்திலேயேசெலுத்துதலால், 'உலகுளோர் தந்தையேயனைய வத்தகவினன்' என்றார். தகவு - தகுந்தகுணங்களுக்குத்தொழிலாகுபெயர். மனம் நினைத்தமாத்திரத்தில் நினைத்தவிடத்தில் விரைந்துசென்றுசேருதல்போல விரைந்துசெல்லுந் தேரென்பதாம். சகலலோகசொரூபியான திருமாலுக்கு இவ்வவதாரத்தில் தந்தையாயினதால், தசரதனை 'உலகுளோர்தந்தையேயனையவத்தகவினன்' என்றது. பி - ம்:—[1]காதலே. [2]பெருமையோடு. (கசு)

கஎ.—சனகன் தேரினின்றிறங்கித் தசரதனைச் சார, அம்மன்னவன்தழுவுதல்.

[1]எய்தவந் திருநெடுந் தேரிழிந் [2]தினியதன்
மொய்கொடிண் சேனைபின் னிற்கமுன் சேறலுங்
கையின்வந் தேறெனக் கடிதின்வந் தேறினா
னையனும் முகமலர்ந் தகமுறத் தழுவினன்.

(இ - ள்.) எய்த வந்து - (இங்ஙனம் சனகன் தசரனது) அருகில் வந்து, இரு நெடு தேர் இழிந்து - (தான் ஏறியிருந்த) மிகப் பெரிய தேரினின்று இறங்கி, இனிய தன் மொய் கொள் திண் சேனை பின் நிற்க - அழகியதனது அடர்த்தியைக்கொண்ட வலிய சேனை பின்னேநிற்க, முன் சேறலும் - முன்னே தான் சென்றவளவிலே,—கையின் வந்து ஏறு என - (தசரதன் தனது) கையை முன்னேகொடுத்து அதன்குறிப்பால் (இத்தேரின்மீது) ஏறுக என்று தெரிவிக்க, கடிதின் வந்து ஏறினன் - (சனகன் அங்ஙனமே) விரைவாக வந்து (அத்தேரின்மேல்) ஏறினன்; (அப்பொழுது), ஐயன்உம் - சிறந்த அரசனான தசரதனும், முகம் மலர்ந்து - முகமலர்ச்சிபெற்று, அகம் உற - (அம்மலர்ச்சி) மனத்திலும் பொருந்த, தழுவினன் - (சனகனை) அணைத்துக்கொண்டான்; (எ - று.)

'நெஞ்சு' என்பதுபோல 'அகம்' என்னும் மனத்தின்பெயர் - தானியாகு பெயராய் மார்பையுணர்த்திய தெனக் கொண்டு, அகமுறத்தழுவினன் - மார்பிலேபொருந்த ஆலிங்கனஞ்செய்தான் என்று முரைக்கலாம். பி - ம்:—[1]எய்தவத். [2]இனைய. (கஎ)

கஅ.—சனகனைச் சேமம்விசாரித்துத் தசரதன் மிதிலைசேர்தல்.

தழுவிநின் றவனிருங் கிளையையுந் தமரையும்
வழுவில்சிந் தனையினன் வரிசையின் னளவளா
வெழுக[1]முந் துறவெனு வினிதுவந் [2]தெய்தினா
னுழுவைமுந் தரியனு னெவரினும் முயரினன்.

(இ - ள்.) உழுவை முந்து அரி அனான் - புலியினால் முன்வந்து எதிர் கொள்ளப்படுகிற சிங்கத்தை யொத்தவனும், எவரின்உம் உயரினான் - (உலகத்தில்) எல்லோரினுஞ் சிறந்துள்ளவனு மாகிய தசரதன், தழுவி நின்று - (அங்ஙனம் சனகனை) அணைத்து நின்று, அவன் - அச்சனகனது, இரு கிளை யைஉம் - பெரிய [மிகுந்த] பந்துவர்க்கத்தையும், தமரைஉம் - அவனைச் சேர்ந்தவர்களான நண்பர்களையும், வழுவு இல் சிந்தனையினான் - குற்றமில்லாத எண்ணத்துடனே, வரிசையின் - முறைமையாக, அளவு அளாய் - க்ஷேமம்விசாரித்து, (அதன்பின்பு), முந்துற எழுக எனா - முன்னேசெல்லுவாயாக வென்றுகூறி, இனிது வந்து எய்தினான் - இனிமையாக (அச்சனகனோடுகூடவே மிதிலாநகரம்) வந்து சேர்ந்தான்; (எ - று.)

இனி, தழுவிநின்றவன் எனஎடுத்து - தழுவிநின்றவனாகிய தசரதன் எனப் பெயராகவுங்கொள்ளலாம். இனி, பலபுலிகளினுஞ் சிறந்த சிங்கமொன்றுபோலப் பல அரசர்களினுஞ்சிறந்த சனகன் தன்னைத் தழுவிநின்றவனாகிய தசரதனது பந்துமித்திரர்களை க்ஷேமம்விசாரித்து விரைவாக வர வேண்டுமென்று உபசாரமொழிகூறி இனிமையாக அவனுடன் கூடவே வந்துகொண்டிருந்தான் என்றும் இச்செய்யுளுக்குப் பொருளுரைக்க இடமுண்டு. சேனைகளின் முன்னே நிற்குந் தசரதனுக்கு,உழுவைமுந்து அரி உவமையெனினுமாம். இனிது உவந்து எனப் பதம்பிரித்துக் கூறலுமாம். வரிசை - மரியாதையுமாம். பி - ம்:— [1]முந்துகவெனா, முந்துறவெனா. [2]ஏவினான். (கஅ)

கசு.—இராமனும் தசரதனை வழியிலெதிர்கொள்ள வருதல்.

இன்னவா றிருவரு மினியவா றேகவத்
துன்னுமா நகரினின் [1]றெதிர்வரத் துன்னினான்
றன்னையே யனையவன் றழலையே யனையவன்
பொன்னின்வார் சிலையிறப் புயநிமிர்த் தருளினான்.

(இ - ள்.) இன்ன ஆறு - இந்தப்படி, இருவர்உம் - (தசரதன் சனகன் என்னும்) இரண்டுபேரும், இனிய ஆறு - இனிமையானவிதமாய், ஏக - (மிதிலைக்குச்) செல்ல, (அப்பொழுது), தன்னைஏ அனையவன் - (வேறு உவமை தனக்கு இல்லாமையால்) தன்னையே தான் ஒத்திருப்பவனும், தழலைஏ அனையவன் பொன்னின் வார் சிலை இற புயம் நிமிர்த்து அருளினான் - (தன்னுடம்பின்நிறத்தாற் சிவந்த) நெருப்பையே யொத்தவனாகிய உருத்திரமூர்த்தியினது பொன்னிறமான நீண்டவில் ஒடியும்படி (தனது) தோளை உயர எடுத்தருளினவனுமாகிய ஸ்ரீராமபிரான், துன்னும் மா அ நகரின்நின்று - பொருந்தின பெரிய அந்த மிதிலாநகரத்தினின்று, எதிர் வர துன்னினான் - (தன்தந்தையை) எதிர்கொண்டு அழைத்துவருதலைப் பொருந்தினான்.

'இன்னவா றிருவரு மினியவா றேக' என்பதுகொண்டு, இரண்டுபேரும் ஒருதேரின்மீதே சென்றனரென்று தொனிப்பொரு ளுரைப்பர். தன்னையேயனையவனென்பதைத் தழலையேயனையவனென்பதனுக்கு அடைமொழியாக்கலும் ஒன்று. இனியஆறு - இனியவழியிலுமாம். முதலடி - முற்றுமோனை. பி - ம்:— [1]எதிர்கொள. (கசு)

உ௰.—இராமன் எதிர்கொண்ட வகை.

தம்பியுந் தானுமத் தானைமன் னவனகர்ப்
பம்புதிண் புரவியும் படைஞரும் புடைவரச்
செம்பொனின் பசுமணித் தேரின்வந் தெய்தினு
னும்பரும் மிம்பரும் முரகருந் தொழவுளான்.

(இ - ள்.) உம்பர்உம் - மேலுலகத்தவராகிய தேவர்களும், இம்பர் உம் - இந்நிலவுலகத்தவராகிய மனிதர்களும், உரகர்உம் - கீழுலகத்தவராகிய நாகர்களும், (ஆக மூன்றுலோகத்துமன்னுயிர்களும்), தொழ - (தன்னை) வணங்க, உளான் - (யாவரினுஞ்) சிறந்துள்ளவனுகிய (திருமாலின் அம்சமான) இராமபிரான்,—பம்பு திண் புரவிஉம்-நெருங்கின வலிய குதிரைச்சேனையும், படைஞர்உம் - சேனைவீரர்களும், புடை வர - (தனது) பக்கங்களிலே சூழ்ந்துவர, அ தானை மன்னவன் நகர் - (பல) சேனைகளை புடைய சனகனது அந்தமிதிலாநகரத்தினின்று, தம்பிஉம் தான்உம் - தானும் (தன்) தம்பியுமாக, செம் பொனின் பசு மணி தேரின் - சிவந்த பொன்னினுற் செய்யப்பட்டுப் பசுநிறமான (மரகத) ரத்தினங்கள் பதிக்கப் பட்டுள்ள தேரின்மேல் (ஏறி), வந்து எய்தினன்-(தந்தையைஎதிர்கொள்ள) வந்துசேர்ந்தான்; (எ - று.)

'இராமன் தானும் தம்பியும் வந்துஎய்தினன்' - சிறப்புப்பற்றிவந்த பால்வழுவமைதி; இராமனுடன்கூடவந்த குதிரைச்சேனையும் வீரர்களும் சனகனைச் சேர்ந்தவர்களே. இங்ஙனம் இருவரோடுந் தனித்தனிவரும்படி மிக்குள்ள சேனைப்பெருக்க முடையான் சனகனென்பது தோன்ற, அவனை இங்கே 'தானைமன்னவன்' என்றது. 'தானைமன்னவனெதிர்' என்ற பாடத் திற்கு - தசரதனது எதிரிலே யென்று பொருள். செம்பொனின் பசுமணித் தேர் - முரண்டொடை. தம்பி-இங்கே, இலக்குமணன்; இளைய பெருமாள்.

உக.—இராமலக்ஷ்மணருடன் சென்ற சேனை.

யானையோ [1]இரதமோ இவுளியோ பிடிகளோ
வானபே ருறையிலா நிறைவையா ரறிகுவார்
[2]தானையோர் சனகனே வலிநெடுந் தாதைமுன்
போன[3]போ ருழவர்தம் புடைவரும் படையினே.

(இ - ள்.) நெடு தாதை முன் போன போர் உழவர்தம் புடை - பெருமைக்குணமுடைய (தம்)தந்தையானதசரதனது எதிரிலே சென்ற போர்த் தொழில்செய்வதில்வல்ல வீரரான இராமலட்சுமணரென்னும் இருவரது பக்கத்திலே, தானை ஏர் சனகன் ஏவலின் வரும் - சேனையினழகு பொருந் திய சனகனது கட்டளையினு லுடன்வருகின்ற, படையின் - சேனைகளிலே, யானை ஓ - யானைகளோ, இரதம் ஓ - தேர்களோ, இவுளி ஓ - குதிரைகளோ, பிடிகள் ஓ - பெண்யானைகளோ, (இவற்றுள் எவையோ மிக்குள்ளன?) ஆன பேர் உறை இலா நிறைவை - பொருந்தின பெரிய உறையென்னுங் குறிப் பிலக்கமிட்டுமெண்ணமுடியாத (அவ்யானை முதலியவற்றின்) நிறைவை, யார்

அறிகுவார் - அறிந்துகூறவல்லவர் யாவருளர்? [எவருமில்லை: ஒவ்வொரு வகையும் அளவற்றிருந்தன வென்றபடி]; (எ - று.)

உறை - ஓரிலக்கக்குறிப்பு; அதாவது - பொருள்களை எண்ணுங்காலத்து ஒவ்வொருபெரிய எண்ணுக்கு ஒவ்வொன்றுவிழுக்காடு வைக்குங்குறி: "எண்குறிப்பெண்ணிப் பொலிந்துழியிடுவதும்...உறையெனல்" என்பது, நிகண்டு. ஈற்றடியில், பேர் - புகழுமாம் பி - ம்:—[1]பிடிகளோ விரதமோ விவுளியோ. [2]தானைவேள். [3]பேரிருவர். (௨௧)

௨௨.—இராமன் தசரதனை யணுகுதல்.

காவியுங் குவளையுங் கடிகொள்கா யாவுமொத்
தோவியஞ் [1]சவிகெடப் பொலிவதோ ருருவொடே
தேவருந் தொழுகழற் சிறுவன்முன் பிரிவதோ
ராவிவந் தென்னவந் தரசன்மா டணுகினன்.

(இ - ள்.) காவிஉம் - நீலோற்பலமலரையும், குவளைஉம் - கருங்குவளை மலரையும், கடி கொள் காயாஉம் - வாசனையைக்கொண்ட காயாம்பூவையும், ஒத்து - போன்று, ஓவியம் சவி கெட - சித்திரத்திலெழுதும் உருவமும் (தனது அழகிய வடிவத்தின் முன்) அழகுகெட்டதாகத் தோன்றும்படி, பொலிவது - விளங்குவதான, ஓர் உருவொடே - ஒப்பற்ற வடிவத்துடனே, தேவர்உம் தொழு கழல் - தேவர்களும் வணங்கும்படியான திருவடிகளையுமுடைய, சிறுவன்-(சக்கரவர்த்தித்) திருமகனான ஸ்ரீராமன், முன் பிரிவது ஓர் ஆவி வந்து என்ன - முன்னே (தசரதனை விட்டு) நீங்கினதொரு உயிர் (மீண்டும் அவனுடம்பில்) வந்துசேர்ந்தாற்போல, அரசன்மாடு வந்து அணுகினன் - தசரதசக்கரவர்த்தியினிடம் வந்துசேர்ந்தான்; (எ - று.)

விசுவாமித்திரன் தசரதனிடம் இராமனைக்கூட அனுப்பும்படி கேட்டபோதும், அங்ஙனமே அழைத்துக்கொண்டு போனபோதும் ஸ்ரீராமனுக்குத் தசரதனது உயிரையே உவமானமாகக் கூறிப்போந்த கவி, இங்கு இராமன் தசரதனை மீண்டடைந்ததற்கும் உயிர் உடம்பைவந்துஅடைந்ததையே உவமைகூறினர். மனத்திற்குத் திருப்தியுண்டாகுமளவுங் கலைத்துக்கலைத்துச் சீர்திருத்தி மிகஅழகிதாக எழுதக்கூடிய சித்திரவடிவமும் இராமபிரான்திருமேனியின் இயற்கைச் சௌந்தரியத்துக்கு முன்னே பயனற்றதா மென அழகு மிகுதியை வருணித்தார். 'தேவரும்' என்ற உம்மை - அவர்களது அறிவு ஆயுள் சிறப்பு இவற்றின் மிகுதியை விளக்கிற்று. 'சிறுவன்' என்றது, அவதாரவிசேஷத்தைக் கருதி. பி - ம்:—[1]சுவை. (௨௨)

௨௩.—தன்னைப் பணிந்த இராமனைச் சக்கரவர்த்தி தழுவுதல்.

அனிகம்வந் தடிதொழக் கடிதுசென் றரசர்கோ
னினியபைங் கழல்பணிந் தெழுதலுந் தழுவினன்
மனுவெனுந் தகையன்மார் பிடைமறைந் தனமலைத்
தனிநெடுஞ் சிலையிறத் தவழ்ந்தடங் கிரிகளே.

(இ - ள்.) (இராமன்), அனிகம்வந்து அடி தொழ - (சக்கரவர்த்தியின்) சேனைகள் வந்து (தன்னுடைய) திருவடிகளை வணங்க, (பிறகு), கடிது சென்று - விரைவாகக் கிட்டி, அரசர் கோன் இனிய பைங் கழல் பணிந்து - தசரதசக்கரவர்த்தியினது (பார்ப்பதற்கு) இனிமையான பசும்பொன்னாற் செய்த வீரக்கழலையணிந்த பாதங்களை (த்தான்) வணங்கி, எழுதலும்-எழுந்திருந்தவளவிலே,— தழுவினன் - (சக்கரவர்த்தி தனது திருக்குமாரனை) அணைத்துக்கொண்டான்; (அப்பொழுது), மனு எனும் தகையன் மார்பிடை - ஆதிமனுச்சக்கரவர்த்தியென்று சொல்லத்தக்க சிறப்புத்தன்மையையுடைய தசரதனது மார்பினிடையிலே, மலை தனி நெடு சிலை இற தவழ் தட கிரிகள் - மேருமலையாகிய ஒப்பற்ற பெரிய சிவவில் ஒடியும்படி முன்சென்ற பெரிய (இராமனது தோள்களாகிய) மலைகள், மறைந்தன - மறைந்து போயின; (எ - று.)

அனிகம்வந்து அடிதொழக் கடிதுசென்று என்பதற்கு - சனகனது சேனைகள் தன்பாதங்களை வணங்கிக்கொண்டு தன்னுடனேவரத் தான் விரைவாகச் சென்று என்றும் பொருள் கூறலாம். மநு - வடசொல். இக்குலத்துக்கு ஆதியான வைவச்சுவதமனுவை யாதல், மனுக்கள்பதினால்வருள் முதல்வனான சுவாயம்புவமனுவையாதல் கொள்க; இவர் நீதியில் மிகச் சிறந்தவர். 'மார்பிடைத் தோள்கள் மறைந்தன' என்றதனால், உத்தமலக்ஷணமான பரந்தமார்புடைமை விளங்கும். மலையை முறித்த மலை என்று இராமனது திருத்தோள்களைக் குறித்த நயம் கருத்தக்கது. கிரிகள் - உவமையாகுபெயர். இப்பாடலுக்குப்பின் சிலபிரதிகளில் "காதலோ" என்று தொடங்கும் ந௩-ஆவது பாடல் காணப்படுகின்றது. (உ௩)

உச.—இலட்சுமணன் வணங்க அவனைத் தசரதன் தழுவுதல்.

இளையபைங் குரிசில்வந் தடிபணிந் தெழுதலுந்
தளைவருந் தொடையன்மார் புறவுறத் தழுவினன்
களைவருந் துயரறக் ககனமெண் டிசையெலாம்
விளைதரும் புகழினா னெவரினும் [1] மேன்மையான்.

(இ - ள்.) களைவு அரு - (வேறொருவரால்) நீக்குவதற்கு அருமையான, துயர் - (சம்பரன்முதலிய அசுரர்களால் உலகத்தார்க்குநேர்ந்த) துன்பம்முழுவதும், அற - நீங்கியதனால், ககனம் - ஆகாயத்திலும், எண் திசை - எட்டுத்திக்குக்களிலும், எலாம் - எல்லாவிடங்களிலும், விளை தரும் - பரவிய, புகழினன் - கீர்த்தியையுடையவனும், எவரின்உம் மேன்மையான் - எல்லோரினுஞ் சிறப்பையுடையவனு மாகிய அத்தசரதச்சக்கரவர்த்தி,—இளைய பைங் குரிசில் வந்து அடி பணிந்து எழுதலும்- (பின்பு) பசும்பொன்னிறமான இளையபெருமாள் வந்து (தன்னுடைய) திருவடிகளை வணங்கி எழுந்தவளவிலே, தளை வரும் தொடையல் மார்பு உற -(பூக்களைக் கொண்டு)கட்டுதல் பொருந்தின மாலையை யணிந்துள்ள (தனது) மார்பிலே பொருந்த, உற தழுவினன் - நன்றாக அணைத்துக்கொண்டான்.

'பைங்குரிசில்' என்பதில், பசுமை - அழகுமாம். பை - படம்; ஆகுபெயராய்ப் பாம்பையுணர்த்தியதாகக் கொண்டால், ஆதிசேஷனது அமிச

மான அரசகுமாரனென்று பொருளாம். தேவர்களுக்கு இடரியற்றிய சம்பரனைப் பின்தொடர்ந்து அவன் சென்ற வுலகங்களிலெல்லாம் உடன்சென்றதனால், ககனமெண்டிசையெலாம் தசரதன் புகழ் எளிதிலேவிளைவதாயிற்று. தான் அரசுசெய்து வீற்றிருக்கிற பூலோகத்திலே புகழ்பரவுதல் எளியதேயாதலால், அதனைக்கூறுமற் பிறவிடங்களிற்பரவியதை முக்கியமாகக்கூறினார். களை வரும் துயர் அற விளை தரும் புகழினான் என்பதற்கு-பயிருக்குக் களைபோலப் புகழுக்கு விரோதமாய்எழுகிற பழியாகிய துன்பம் ஒழிய(த் தடையின்றி) விளைகிற புகழாகிய பயிரையுடையான் என்றும் உரைக்கலாம்; இவன்புகழைக் கேட்ட மாத்திரத்திலே பகைவரெல்லாம் அஞ்சிஒடுங்குதலால், நீங்குதற்கரிய பகைத்துன்பங் கெடும்படிவிளைகிற புகழை யுடையவனுமாம். இந்தச்செய்யுளும் அடுத்தசெய்யுளும் சிலஏட்டுப்பிரதிகளிலில்லை. பி - ம்:—[1]மிகுதியான். (உச)

உரு.—இராமன் தாயாரைவணங்க அவர் பேருமகிழ்ச்சி கொள்ளுதல்.

கற்றைவார் சடையினான் கைக்கொளுந் தனுவிறக்
கொற்றநீள் புயநிமிர்த் தருளுமக் குரிசில்பின்
பெற்றதா யரையுமப் பெற்றியிற் றொழுதெழுந்
துற்றபோ தவர்மனத் துவகையா ருரைசெய்வார்.

(இ - ள்.) கற்றை வார் சடையினான் - தொகுதியான நீண்ட சடையையுடைய சிவபிரான், கை கொளும் - கையிலே வைத்துக்கொண்டிருந்துள்ள, தனு - வில், இற - முறியும்படி, கொற்றம் நீள் புயம் நிமிர்த்தருளும் - வெற்றியையுடைய நீண்ட தோளை முன்செலுத்தியருளின, அ குரிசில் - பெருமையிற்சிறந்த அந்தஸ்ரீராமபிரான், பின் -பின்பு, பெற்ற தாயரைஉம்- (தன்னைப்)பெற்ற தாயாகிய கௌசலையை (அவளுக்குஇளைய)கைகேயி சுமித்திரை முதலிய (தசரதன்மனைவியரான) தன்தாய்மார்களையும், அ பெற்றியின் -(முன்னே தசரதனைவணங்கின) அந்த முறைமையாகவே, தொழுது - நமஸ்கரித்து, எழுந்து உற்ற போது - எழுந்திருந்து (அவர்களருகிற்) பொருந்தினபொழுது, அவர் மனத்து - அவர்களதுஉள்ளத்தில் (உண்டான), உவகை - மகிழ்ச்சியை, உரை செய்வார் - (அளவிட்டு இவ்வளவினதென்று) சொல்லவல்லவர், யார் - யாவர்உளர்? (எ-று.)

தசரதன்மனைவிமார்யாவரும் இராமனைக்கண்டமாத்திரத்திற் சொல்லிமுடிக்கக்கூடாத கரையற்ற பரமானந்தமடைந்தார்களென்க. (உரு)

உகூ.—தன்னை வணங்கிய பரதனை இராமன் புல்லுதல்.

உன்னுபே ரன்புமிக் கொழுகியொத் தொண்கணீர்
பன்னுதா ரைகடாத் தொழுதெழும் பரதனைப்
பொன்னின்மார் புறவணைத் [1]துயிருறப் புல்லினான்
றன்னையத் தாதைமுன் [2]றழுவின னென்னவே.

(இ - ள்.) உன்னு - (எப்பொழுதும் இராமபிரானையே) நினைக்குந் தன்மையுள்ள, பேர் அன்பு - சிறந்த பக்தி, மிக்கு - (மனத்திலே) மிகுந்து,

ஒழுகி ஒத்து - (அங்குஅடங்காமல் மேல்வழிந்து) பெருகினாற்போல, ஒள் கண் நீர் பன்னு தாரைகள் தர - ஒளிபொருந்திய கண்களின் நீர் அடர்ந்த தாரைகளாகப்பெருக, தொழுது - (தன்னை) நமஸ்கரித்து, எழும் - எழுந்த, பரதனை-பரதாழ்வானை,—(ஸ்ரீராமன்), அ தாதை தன்னை முன் தழுவினால் என்ன - அப்படிப்பட்ட [சிறப்பையுடைய] தந்தையாகியதசரதன் தன்னை முன்னே தழுவினாற்போல, பொன்னின் மார்பு உற-பொன்னாபரணங்களை யணிந்துள்ள(தன்)மார்பிலேஅழுந்த, அணைத்து-அணைத்துக்கொண்டு, உயிர் உற-உயிரோடுபொருந்த, புல்லினான் - தழுவினான்; (எ - று.)

பொன் இன் மார்பு - திருமகளுக்கு இனிமையாக உள்ள திருமார்புமாம். உயிருற - யாவர்க்கும்உயிரிடத்துஉண்டாகும் அன்பு தனக்குப் பரதனிடம் உண்டாக. தக்க உவமை இன்மையின், தன்னைத் தாதை முன் தழுவியதையே உவமைகூறினார். பி - ம்:—[1] உயிரென. [2] தழுவினானென்னவே.

உஎ.—இலட்சுமணசத்துருக்கனர், பரதன் இராமன் இவர்திருவடிகளை வணங்குதல்.

கரியவன் பின்புசென் றவனருங் காதலிற்
பெரியவன் றம்பியென் றினையதோர் பெருமையப்
பொருவருங் குமரர்தம் [1] புனைநறுங் குஞ்சியா
லிருவர்பைங் கழலும்வந் திருவரும் வருடினார்.

(இ - ள்.) கரியவன் பின்பு சென்றவன் - கருநிறமுடைய ஸ்ரீராமனது பின்னே தொடர்ந்துசென்றவனான இலக்குமணனும், அரு காதலில் பெரியவன் தம்பி - (பிறராற்பெறுதற்கு) அருமையான ஸ்ரீராமபக்தியிலே பெரியவனான பரதனது பின்செல்லுந் தம்பியான சத்துருக்கனும், என்று இனையது ஓர் பெருமை - என்று இத்தன்மையதானதொரு ஒப்பற்ற மகிமையையுடைய, அ பொருவு அரு குமரர் இருவர்உம் - ஒப்பில்லாத அந்தக்குமாரர்களிரண்டுபேரும், வந்து - (அருகில்)வந்து, தம் புனை நறு குஞ்சியால் - தமது அழகிய வாசனைவீசுகிற மயிர்முடியையுடைய சிரசினால், இருவர் பைங் கழல் உம் வருடினார் - (முறையே பரதன் இராமன் என்னும்) இரண்டுபேரது பசும்பொன்னாலாகிய வீரக்கழலையுடைய பாதங்களையும் வணங்கினார்கள்.

'அடியைமுடியால்' வருடுதல் எனவே, சாஷ்டாங்க நமஸ்காரமாயிற்று. கரியவன்பின்னே சென்றவனான இலக்குமணன் பரதனையும், அருங்காதலிற் பெரியவன்தம்பியான சத்துருக்கனன் இராமனையும் வணங்கினார் என எதிர்நிரனிறைப்பொருள்கோள்வகையாற் பொருள்கொள்க. இராமனது அடுத்த தம்பி பரதனும் இலக்குமணனது தம்பி சத்துருக்கனனும் ஆயினும், இளமைதொடங்கி இராமனை இலக்குமணனும் பரதனைச் சத்துருக்கனனும் விட்டுப்பிரியாமல் மிக்கநட்புக்கொண்டொழுகினார்கள் எனக் கூறிப்போந்தாராதலால், அதனைத்தழுவி இங்கே 'கரியவன்பின்புசென்றவன்,' 'அருங்காதலிற் பெரியவன்தம்பி' என்ற பெயர்களாற் கூறினார். இதனால் இலக்குமணனது இராமகைங்கரியமும், பரதனது பகவத்பக்தியும், சத்ருக்நனது பாகவதசேஷத்வமும் வெளியாகின்றன. பி - ம்:—[1] புகை.

உஅ.—நான்குகுமாரர்களும் விளங்கிய வகை.

கோல்வருஞ் செம்மையுங் குடைவருந் தண்மையுஞ்
சால்[1]வருஞ் செல்வமென் றுணர்பெருந் தாதைபோன்
மேல்வருந் தகைமையான் மிகவிளங் கினர்கடா
நால்வரும் பொருவினுன் மறையெனுங் நடையினர்.

(இ-ள்.) 'கோல் வரும் செம்மைஉம்-அரசாட்சிமுறைமையிலே பொருந்தின நீதியும், குடை வரும் தண்மைஉம் - ஆளுகையிலே பொருந்தின குளிர்ந்த கருணையும், சால் வரும் செல்வம்-(தனக்கு)மிகப்பொருந்தின செல்வமாகும்,' என்று உணர்-என்று அறிந்து(தண்ணளியுடனேசெங்கோல்)செலுத்துகிற, பெரு - மகிமையையுடைய, தாதைபோல் - (தங்கள்) தந்தையான தசரதன்போல, மேல் வரும் தகைமையால்-மேலாக வருகின்ற [சிறந்த] குணத்தோடு, பொருவு இல் நால் மறை எனும் நடையினர் நால்வர்உம் - ஒப்பில்லாத நான்குவேதங்கள் நல்லொழுக்கமென்று கூறுவதை(த் தமது)ஒழுக்கமாகக்கொண்ட அந்தநான்குகுமாரரும், தாம் மிக விளங்கினர்கள்-; (எ-று.)

உலகத்தில் தம் குமாரராற் சிறப்புறுந் தந்தையரும் அங்ஙனமே தந்தையெயராற் சிறப்புறுங் குமாரரும்பல ருளராதல் இயல்பன்றே; அங்ஙனமின்றி ஈண்டுத் தசரதனது பெருமைக்கு ஏற்ற குமாரர்களும் குமாரர்களது தகுதிக்கு ஏற்ற தந்தையுமாகி விளங்கினர்களென்பது கருத்தாம். கோல்வருஞ் செம்மை - ஒருபாற்கோடா நடுநிலைமை; நிஷ்பக்ஷபாதத்தன்மை. தண்மை - அருளுக்குப் பண்பாகுபெயர். யாவருஞ் செல்வத்தையே விரும்பிப் பாதுகாப்பதுபோலத் தசரதன் செங்கோலையுந் தண்குடையையுமே பேணிப்போற்றுபவ னென்பது, முன்னடிகளின் பொருள்; பொருளனைத்தையும் இழக்கவரினுஞ் செங்கோலுந் தண்குடையுந் தவறாதவன்: எத்துணைச் செல்வம் வருவதாயிருந்தாலும் செங்கோல அருள் இவை சிறிதும் பிழைபடாதவ னென்றவாறு. பி - ம்:—[1]பெருஞ்செல்வம். (உஅ)

உகூ.—தசரதன் தனதுசேனைமுதலியவற்றை முற்கொண்டு செல்லுமாறு இராமனுக்குப் பணித்தல்.

சான்றெனத் தகையசெங் கோலினு னுயிர்கடா
மீன்றநற் றாயெனக் கருதுபே ரருளினு
னுன்றவிச் செல்வ[1]மித் தனையு[2]மொய்த் தருகுறத்
தோன்றலைக்[3] கொண்டுமுற் செல்கெனச் சொல்லினுன்.

(இ - ள்.) சான்று என தகைய செங்கோலினன் - (யாவர்க்கும்) சாக்ஷியென்றுசொல்லத் தகுதியையுடைய செங்கோன்மையையுடையவனும்,உயிர்கள் தாம் ஈன்ற நல் தாய் என கருது பேர் அருளினன் - எல்லாவுயிர்களும் தாம்தாம் தம்மைப்பெற்ற (அன்புள்ள) தாயென்று எண்ணும்படியான மிகுந்த கருணையையுடையவனுமாகிய அச்சக்கரவர்த்தி, ஆன்ற இ செல்வம் இ தனையும் மொய்த்து அருகு உற - நிறைந்த இந்த(ச் சேனை குடை கொடி

சாமரம் முதலிய) சிறப்புக்க ளிவ்வளவும் நெருங்கி அருகிலே பொருந்த, கொண்டு முன் செல்க என - அழைத்துக்கொண்டு முன்னே செல்வாயாக வென்று, தோன்றலை - (ஸ்ரீராமனுகிய) குமாரனைநோக்கி, சொல்லினன்—.

பகைவர் நண்பர் அயலார் என்னும் மூன்றுதிறத்தாரிடத்துஞ் சிறிதும் வேறுபாடின்றி நடுவுநிலைதவருமல் நீதியுள்ளபடியே சொல்லி யொழுகுதலால், 'சான்றெனத்தகையசெங்கோலினன்' என்றார். "அரிசினத்தாலீன்ற தாயகற்றிடினும் மற்றவட, னருணினைந்தேயழுங்குழவியது என்ற வாறு குழந்தை தன்பெற்றதாய் தன்னைச்சினத்தால் அகற்றினுலும் அத் தாயிடத்து அன்புகொண்டிருத்தல் இயல்பாதலால், 'உயிர்கடாமீன்றநற்று யெனக் கருதுபே ரருளினன்' எனக் கூறியது. பி - ம்:—[1]அத்தனையும். [2]ஒத்து. [3]தோன்றல். (௨௯)

௩௦.—அப்போது சேனை யடைந்த மகிழ்ச்சி.

காதலோ வறிகிலங் கரிகளைப் பொருவினர்
தீதிலா வுவகையுஞ் சிறிதரோ பெரிதரோ
கோதைசூழ் குஞ்சியக் குமரர்வந் தெய்தலுந்
[1]தாதையோ டொத்ததத் தானையின் றன்மையே.

(இ - ள்.) கரிகளை பொருவினர் - யானைகளை யொத்த அச்சேனைவீரர்களது, காதல்ஓ-(அந்தச்சக்கரவர்த்தியின் குமாரர்களிடத்துள்ள) அன்பின் தன்மையையோ, அறிகிலம் - (இவ்வளவென்று வரையறுத்து) அறியமாட்டு கிறேமில்லை; தீது இலா உவகைஉம் - (அவ்வீரர்களுக்கு அக்காலத்து உண்டான) குற்றமில்லாத மகிழ்ச்சியும், சிறிது அரோ பெரிது அரோ - சிறியதோ பெரியதோ? (அதனையும் அறிகிறேமில்லை); (பின்னை யாம் அறிவது தான் எதனையெனின்), கோதை சூழ் குஞ்சி அ குமரர் வந்து எய்தலும் - மாலைகளைச் சூடின மயிர்முடியையுடைய அந்தத்திருக்குமாரர்கள் வந்து சேர்ந்தவளவிலே, அ தானையின் தன்மை - அந்தச்சேனையி னியல்பானது, தாதையோடு ஒத்தது - (இராமலட்சுமணர்களைக் கண்டமாத்திரத்தில்) தந்தையான சக்கரவர்த்தியின் மகிழ்ச்சியோடு ஒத்தது; (எ - று.)

சேனைகளைக்கொண்டு செல்கவென்று தசரதன் கட்டளையிட்டவுடனே, முன்செல்லுமாறு ஸ்ரீராமன் தன்தம்பியரோடு சேனைகளைச் சார, இராமலட்சுமணரைக்கண்ட தசரதசேனையாரும் பரதசத்துருக்கனரைக் கண்ட சனகசேனையாரும் ஒருங்கு கொண்ட ஆனந்தத்தின் அளவை இச் செய்யுளாற் பொதுப்படக்கூறினர். காதலோ, ஓ - உயர்வுசிறப்பு. உவகையில் தீதுள்ள உவகையு முண்டாதலால், அதனையொழித்தற்கு 'தீதிலா வுவகை' என்றார். சிறிதரோ, பெரிதரோ—அரோ என்னும் இடைச்சொல் - ஐயப்பொருளை யுணர்த்திற்று; இனி, அர்-சாரியையென்றலும், குற்றியலுகரப்போலியென்றலும் ஒன்று. கரிகளைப்பொருவினர் என்பது - முன்னும் பின்னும் இரண்டுவாக்கியங்களிலுஞ் சென்று கூடிநிற்றலால், மத்திமதீபம்; தமிழில் தாப்பிசைப்பொருள்கோளாம். பி - ம் :—[1]தாதையாது. (௩௦)

கூக.—தம்பியர் மருங்குதொடர்ந்துவர, இராமன் தேரின்மேற்செல்லுதல்.

தொழுதிரண் டருகுமன் புடையதம் பியர்தொடர்ந்
தழிவில்[1] சிந் தையினுவந் தாடன்மா மிசைவரத்
தழுவு[2] சங் குடனெடும் பணைதழங் கிடவெழுந்
தெழுதருந் தகையதோர் தேரின்மே லேகினான்.

(இ - ள்.) இரண்டு அருகும் - (தனது) இருபக்கங்களிலும், அன்பு உடைய தம்பியர் - அன்பையுடைய (இலக்குமணன் முதலிய) தம்பிமார்மூவரும், தொழுது - வணங்கி, தொடர்ந்து - விடாதுசின்று, அழிவு இல் சிந்தையின் உவந்து - (என்றுந் தமையனார்திறத்தில் அன்பு) அழிதலில்லாத மனத்திலே மகிழ்ச்சிகொண்டு, ஆடல் மா மிசை - வெற்றியையுடைய குதிரைகளின்மேலே, வர - ஏறிவரவும், தழுவு சங்குடன் நெடு பணை தழங்கிட-(கைகளால்) தழுவியெடுத்து (வாயில்வைத்து) ஊதப்படுகிற [பெரிய] சங்கவாத்தியங்களுடனே பெரிய பேரிகைகள் முழங்கவும், எழுந்து - (இராமபிரான் தான்) புறப்பட்டு, எழுதரும் தகையது ஓர் தேரின் மேல் - உயர்ந்து நிற்குந் தன்மையையுடையதொரு இரதத்தின்மேல் (ஏறி), ஏகினான் - சென்றான்.

இலட்சுமணனும் தேரிலேறியதை உபலட்சணத்தாற் கொண்டு, பரத சத்துருக்கனர் ஆடன்மாமிசை இருமருங்குவர, இராமலட்சுமணர் தேரின் மீது ஏகினாரென வுரைத்தலும் ஒன்று. அழிவுஇல்சிந்தை - தைரியவுறுதி நிலை அழிதலில்லாத மனமுமாம். ஆடல்மா - ஆடுந்தன்மையுள்ள குதிரையுமாம். உத்தம இலக்கண மமைந்த குதிரைக்கு 'ஆடன்மா' என்றும், 'நம்பிரான்' என்றும் பெயர்கள் வழங்கும். தழுவு சங்கு-(பிறவாத்தியங்களினிசையோடு மாறுபடாமல் அதனைத் தன் இசையால்) தழுவுஞ் சங்கு என்றும். எழுது அரு எனப் பிரித்து - (சித்திரத்திலும்) எழுதவொண்ணாத [மிகஅழகிய]என்றுமாம். பி - ம்:—[1]சிந்தையினோடும். [2]சங்கொடு. (கூக)

கூஉ.—இராமன் மிதிலைநகர்வீதியி லெய்துதல்.

பஞ்சிசூழ் மெல்லடிப் பாவைமார் பண்ணைசூழ்
மஞ்சுசூழ் நெடியமா ளிகையின்வந் திடைவிராய்
நஞ்சுசூழ் விழிகள்பூ மழையின்மேல் விழநடந்
திஞ்சிசூழ் மிதிலைமா வீதிசென் றெய்தினான்.

(இ - ள்.) பஞ்சி சூழ் - செம்பஞ்சுக்குழம்பு நிரம்ப ஊட்டப்பட்டுள்ள, மெல் அடி - மென்மையான பாதங்களையுடைய, பாவைமார் - சித்திரப்பிரதிமைபோலழகிய மகளிர்களது, பண்ணை - கூட்டங்கள், சூழ் - (அவ்வூரிற்) சுற்றிலுமுள்ள, மஞ்சு சூழ் நெடிய மாளிகையின் - மேகங்கள் சூழ்ந்துதங்கப்பெற்ற உயர்ந்த உபரிகைவீடுகளின்முன்புறத்திலே, வந்து—, இடை விராய் - இடந்தோறும் நெருங்கிப்பொருந்தி, நஞ்சு சூழ் விழிகள் - விஷம் நிறைந்தாற்போன்ற (அவரது கரிய) கண்கள், பூ மழையின் - புஷ்பவர்ஷம் போல, மேல் விழ - (தன்) மேலே விழும்படி, (இராமபிரான்), நடந்து - சென்று, இஞ்சி சூழ் மிதிலை மா வீதி சென்று எய்தினான் - மதில்கள் சூழ்ந்துள்ள மிதிலாபட்டணத்திற் பெரிய வீதிகளிற் போய்ச்சேர்ந்தான்.

மேகத்துக்கும் மாளிகைகளுக்குஞ் சம்பந்தமில்லாமலிருக்கவுஞ் சம்பந்தத்தைக் கற்பித்துக் கூறியது - தொடர்புயர்வுநவிற்சியணி. இதனால், மாளிகைகளின் உயர்வு தொனிக்கின்றது. 'நஞ்சுசூழ்விழி' என்றது - கண்ணின் இயற்கைக்கருமையையும், மைதீட்டுதலாலாகிய செயற்கைக்கருநிறத்தையும், ஆடவர்க்கு ஆசைநோயையுண்டாக்கி மயக்கந்தருந்தன்மையையும் பற்றி. 'பூமழையின்மேல் விழ என்றதனால் - இம்மகளிர்கள்தாமே இராமன்மேற் பூமழைபொழிந்தார்க ளென்பதும் பெறப்படலாம். கீழ்க்கவியில் 'தேரின்மேலேகினான்'என வந்ததனால், இக்கவியில் 'நடந்து' என்றது - கால்களால்நடந்து என்னும் பொருளை யுணர்த்தாமல் 'சென்று' என்னும் பொருள் மாத்திரத்தை யுணர்த்திற்று பண்ணை - கூட்டமென்னுமாத்திரையாய் நின்றது. (கஉ)

கங —அந்நகரத்துமாளிகைகளின் வருணனை.

*சூடகந் துயல்வரக் கோதைசோர் தரமலர்ப்
பாடகம் பரதநூல் பகரவெங் கடகரிக்
கோடரங் கிடவெழுங் குவிதடங் கொங்கையா
ராடரங் [1]கல்லவே யணியரங் கயலெலாம்.

(இ - ள்.) அணி அரங்கு அயல் எலாம் - அழகிய (அந்நகரத்துவீதிகளிலுள்ள) மாளிகைகளின் இடமெல்லாம்,—சூடகம் துயல்வர - (தமது)கைவளைகள் அசையவும், கோதை சோர்தர - கூந்தல் தளர்ந்து சரியவும், மலர் பாடகம் பரதம் நூல் பகர - செந்தாமரைமலர்போல் மெல்லிய பாதங்களிலணிந்த பாடகமென்னும் ஆபரணங்கள் நாட்டியசாஸ்திரத்திற்கூறப்பட்ட தாளஅடைவுவிதி முறைமையை (த் தம் ஒலியால்) வெளியிடவும், வெம் கடம் கரி கோடு அரங்கிட எழும் குவி தட கொங்கையார் - வெம்மையான மதத்தையுடைய யானைகளின் தந்தங்கள் அழகுகெடும்படி மேலெழுந்து வளர்ந்த குவிந்த பெரிய தனங்களையுடைய மகளிர், ஆடு அரங்கு அல்ல - நர்த்தனஞ்செய்கின்ற நாட்டியசாலைக ளல்ல; (எ - று.)

அந்நகரத்துமாளிகைகளில் மகளிர்கள் அழகாக அசைந்துநடந்துவந்து நிற்கின்ற ஒவ்வொரு இடமும், வளையசைதலினாலும் கோதை சோர்தலினாலும் பாடகமொலித்தலாலும் நாட்டியசாஸ்திரத்திற் கூறிய உத்தம விலக்கணம் முழுவதுமமைந்த இளமங்கையர் நடனஞ்செய்யுமிடத்தையே ஒத்திருந்த தென்பதாம். மாளிகையினிடங்கள் நாடகசாலை போலுதலால், அவற்றை 'ஆடரங்கு அல்ல' என்று மறுத்துக்கூறவேண்டுவதாயிற்று. கோதை-மாலையுமாம். மலர் - உவமையாகுபெயர். பாடகம் - பாதகடகமென்னும் வடசொல்லின் விகாரம். 'பாடக மலர்' என மொழிமாற்றி, கால் பரதநூல் பகர என்றலுமாம். பாவம், ராகம், தாளம் என்னும் மொழிகளின் முதலெழுத்துக்கள் தொடர்ந்து ஒருமொழியாகிய 'பரதம்' என்பது - அம்மூன்றையுமுடைய நாட்டியத்துக்குப் பெயராய்வழங்கிற் றென்று உரைப்பர்; பாவம் - உட்கருத்துநிகழ்ச்சி. இங்கே, நூல் - காரணவாகுபெயர். அல்லவேயெனவெடுத்து - தேற்றமெனினுமாம். அணியரங்கு - அலங்கரிக்கப்பட்ட மாளிகை யெனவுமாம். பி - ம்:—[1]அல்லவே ளணியரங் கவணெலாம்,

ருச.—கவிக்கூற்று: மகளிர் அடைந்த நிலையைக் கூறுவோமெனல்.

[1]பேதைமார் முதல்கடைப் பேரிளம் பெண்கடா
[2]மேதியார் மாரவே [3]ளேவவந் தெய்தினு
ராதிவா னவர்பிரா னணுகலா [4]லணிகொள்கா
ரோதியார் வீதிவா யுற்றவா றுரைசெய்வாம்.

(இ - ள்.) ஆதி - (யாவர்க்கும்) முதன்மையான, வானவர் பிரான் - தேவர்க்கெல்லாம் முதற்றேவனான திருமாலின் திருவவதாரமான ஸ்ரீராம பிரான், அணுகலால் - அருகில்வந்து சேர்தலால், பேதைமார் முதல் - பேதைப்பருவத்தினர்முதலாக, பேரிளம்பெண்கள் கடை - பேரிளம்பெண்பருவத்தின ரிறுதியாக, ஏதி ஆர் மாரவேள் ஏவ வந்து எய்தினர் - ஆயுதங்கள் நிரம்பின மன்மதன் ஏவியதனால் வந்துசேர்ந்தவர்களான, அணி கொள் கார் ஓதியார் - அழகைக் கொண்ட கரிய கூந்தலையுடைய மாதர்களியாவரும், வீதிவாய் - (அந்நகரின் நெடுந்)தெருக்களிலே, உற்ற ஆறு - அடைந்த நிலைமையை, உரைசெய்வாம் - (இனிச்)சொல்லுவோம்; (எ - று.)

இதனால், மேற்படலத்துக்குத் தோற்றுவாய் செய்தார். பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் எனப் பெண்களின்பருவம் ஏழுவகைப்படும்; இவர்க்கு முறையே வயசெல்லை - ஐந்துமுதல் ஏழளவும் பேதை; எட்டுமுதற் பதினொன்றளவும் பெதும்பை; பன்னிரண்டுமுதற் பதின்மூன்றளவும் மங்கை; பதினான்குமுதற் பத்தொன்பதளவும் மடந்தை; இருபதுமுதல் இருபத்தைந்தளவும் அரிவை: இருபத்தாறுமுதல் முப்பத்தொன்றளவும் தெரிவை: முப்பத்திரண்டுமுதல் நாற்பதளவும் பேரிளம்பெண் எனக் காண்க. ஏதி - ஹேதி: வடமொழி. எல்லாவுயிர்களுக்குந்தலைவனான இராமபிரானிடத்தில் வேட்கைகொள்ளுதல் மகளிர் கற்புக்குக் குறைவுபாடாகா தென்பதை உய்த்துணர்க; இத்தன்மை தோன்றும்பொருட்டே 'ஆதிவானவர்பிரானணுகலால்' என்றாரென்க. கார் ஓதி - மேகம்போலுங் கூந்தலுமாம். பி - ம்:—[1]பேதையார் முதலினோர். [2]ஏதிலா, ஏதியான். [3]எய்ய. [4]அணிகொடார். (ருச)

எதிர்கொள்படலம் முற்றிற்று.

---

## கசு-ஆவது உலாவியற்படலம்.

மிதிலாபட்டணத்துவீதியிலே இராமபிரான் உலாப்போகின்றகாலத்து நிகழ்ந்ததைக் கூறும் பாகம். உலாவியநற்படலம் என்று சில பிரதிகளில், இப்படலத்திற்குப் பெயர் எழுதப்பட்டுள்ளது. உலா - ஊர்கோலம்.

க.—மகளிர் எங்கும் மொய்த்தல்.

மானினம் வருவ போன்று மயிலினந் திரிவ போன்று
மீனின [1]மிளிர்வ போன்று மின்னின மிடைவ போன்றுந்
தேனினஞ் [2]சிலம்பி யார்ப்பச் [3]சிலம்பினம் புலம்ப வெங்கும்
பூநனை [4]கூந்தன் மாதர் பொம்மெனப் புகுந்து மொய்த்தார்.

(இ - ள்.) பூ நனை கூந்தல் மாதர் - (தேன் நிரம்பின) பூக்களைச் சூடுதலால் ஈரமாகியுள்ள கூந்தலையுடைய (அந்நகரத்து) மகளிர்கள் பலரும்,— மான் இனம் வருவ போன்றும் - மான்களின்கூட்டங்கள் வருவனவற்றை யொத்தும், மயில் இனம் திரிவ போன்றும் - மயிற்பறவைகளின் கூட்டங்கள் சஞ்சரிப்பனவற்றை யொத்தும், மீன் இனம் மிளிர்வ போன்றும் - நட்சத்திரங்களின் கூட்டங்கள் விளங்குவனவற்றையொத்தும், மின் இனம் மிடைவ போன்றும் - மின்னல்களின் கூட்டங்கள் நெருங்கினவற்றை யொத்தும், தேன் இனம் சிலம்பி ஆர்ப்ப - (தாம்அணிந்துள்ள பூமாலைகளில் மொய்த்துள்ள) வண்டுகளின் கூட்டங்கள் ரீங்காரஞ்செய்து ஆரவாரிக்கவும், சிலம்பு இனம் புலம்ப - (கால்களில் அணிந்துள்ள) சிலம்பு என்னும் அணிகளும் அதன்இனமான பிறகாலணிகளும் ஒலிக்கவும், எங்கும்-, பொம்மென - விரைவாக, புகுந்து மொய்த்தார் - வந்து நெருங்கினார்கள்.

"மயில்கண் டன்ன மடநடை மகளிர்" எனவும், "மயிலெனப்போந்து" "நடைமயிலே" எனவும் கூறியிருத்தலின், மயிலுவமை சாயலோடு நடைக்குங் கொள்ளலாம். பொம்மென - விரைவுக்குறிப்பு; ஒலிக்குறிப்பாயின், பொம்என்னும் ஓசை யுண்டாக என்க. இச்செய்யுளில் உவமையணியும் தன்மைநவிற்சியணியும் வேறுபாடுவிளங்கச் சேர்ந்திருத்தலால், சேர்வையணி. பி-ம்:—[1]மிளிரவ்வானின். [2]பம்பி. [3]நூபுரஞ்சிலம்பியேங்க. [4]கோதை.

உ.—மகளிர் மொய்த்த வகை.

விரிந்துவீழ் கூந்தல் பாரார் மேகலை யற்ற நோக்கார்
சரிந்தபூந் துகில்க டாங்கா ரிடைதடு மாறத் தாழார்
நெருங்கினர் [1]நெருங்கிப் புக்கு நீங்குமி [2]னீங்கு மின்னென்
றருங்கல மனைய மாதர் தேனுக ரளியின் மொய்த்தார்.

(இ - ள்.) அருகலம் அனைய மாதர் - (அந்நகரத்துக்குப்) பெறுதற்கரிய ஆபரணங்களையொத்து அழகுசெய்கிற அம்மகளிர்,—விரிந்து வீழ் கூந்தல் பாரார் - (தாம் விரைந்துநடந்துசெல்லுங்காலத்து) அவிழ்ந்துவிழுகிற தத்தங்கூந்தலைக் கவனியாதவர்களும், மேகலை அற்ற நோக்கார் - தத்(தம்) மேகலாபரணங்கள் அறுந்துசிந்துவனவற்றை இலட்சியஞ்செய்யாதவர்களும், சரிந்த பூ துகில்கள் தாங்கார் - அவிழ்ந்துதளர்கிற பூப்போல் மெல்லிய (தத் தம்) பட்டாடைகளை ஏந்தக்கருதாதவர்களும், இடை தடுமாற தாழார்- (தத் தம் நுண்ணிய) இடை நிலைகுலைதலையடைய (அதைநோக்கித்) தாமதியாதவர்களுமாகி,நெருங்கினர்-(இராமனது)அருகில்வந்தவர்களாய், நெருங்கி புக்கு - (தம்மில்) அடர்ந்துசென்று, நீங்குமின் நீங்குமின் என்று-(வழிவிட்டு) விலகுங்கள் விலகுங்கள் என்று (ஒருவரையொருவர்) கூறிக்கொண்டு, தேன் நுகர் அளியின் - மதுவைப்பருகவருகிற வண்டுகள்போல, மொய்த்தார் - (மிக்க ஆசையோடு இராமனைச்) சூழ்ந்துகொண்டார்கள்; (எ - று.)

இராமனைக் காணுதற்குச்செல்லுதலிலுள்ள பரபரப்பினால், மகளிர் அவிழ்ந்துவீழ்கூந்தலைப்பார்த்தல் முதலியன செய்யாராயினரென்க. பூந்

துகில் - பூக்களின்வடிவமாகச் சித்திரமமைக்கப்பட்டுள்ள சேலை என்றுமாம். நீங்குமின் நீங்குமின், அடுக்கு - விரைவுப்பொருளது. பி - ம்:—[1]நெருங்க. [2]நீங்குமென்றென்று. (உ)

ங.—இதுமுதல் மூன்றுகவிகள் - இராமனைக் காணவந்த மகளிரின் தன்மை.

கண்ணினாற் காத லென்னும் பொருளையே [1]காண்கின் றோமிப்
பெண்ணினீர் மையினா லெய்தும் பயனின்று பெறுது மென்பார்
மண்ணினீ ருலந்து வான மழையற வறந்த காலத்
துண்ணுநீர் கண்டு வீழு முழைக்குலம் பலவு மொத்தார்.

(இ - ள்.) கண்ணினால்-(நமது) கண்களாலே, காதல் என்னும் பொருளை - ஆசையென்னும்பொருளின் வடிவத்தையே, காண்கின்றோம் - (இங்கு இப்பொழுது) பார்க்கிறோம்; (ஆதலால்), இ பெண்ணின் நீர்மையினால் எய்தும் பயன் - இந்தப்பெண்பிறப்பின்தன்மையால் அடையும் பயனை, இன்று பெறுதும்-இன்றைத்தினந்தான் பெறுவோம், என்பார்-என்று கருதுபவர்களாய்,—(இராமன்வருதலைக்கண்டு ஓடிவருகிற அம்மகளிர்),— மண்ணில் நீர் உலந்து - பூமிமுழுவதிலுந் தண்ணீர்வறண்டு, வானம் மழை அற வறந்த காலத்து - ஆகாயத்திற்செல்லுகிற மேகங்களின் மழையும் (பலநாளாக) இல்லாமற் காய்ந்துபோன காலத்திலே, உண்ணும் நீர் கண்டு-பருகுதற்குஉரிய நல்லதீர்த்தத்தை (ஓரிடத்தில்) பார்த்து, வீழும் - (அதனைக் குடித்தற்கு) விரும்பி (அங்குவந்து) சேருகிற, உழை குலம் பலஉம் - மான் கூட்டங்கள் பலவற்றையும், ஒத்தார் - போன்றார்கள்; (எ - று.)

மிகுந்ததாகமுடைய பிராணிகளுக்கு அருமையாகக்கிடைக்கிற நல்ல நீரினிடத்து எவ்வளவுஆசை உண்டாகுமோ அவ்வளவு மிகுந்த வேட்கை இராமபிரானிடத்து அம்மாதர்க்கெல்லாம் அப்போது உண்டாயிற்று என்பதாம். ஆசையேவடிவமெடுத்ததுபோன்றது, இராமன் திருமேனியென்க. அழகுநிறம்பின உத்தமபுருஷனைக் கண்ணாரக்கண்டு களித்தலே பெண் பிறப்புப் படைத்ததற்குப் பயனா மென்றார். வைசேடிகர், பொருள் பண்பு தொழில் சாதி விசேடம் இயைபு என்பனவற்றை அறுவகைப்பொருளென்றாற்போல, இங்கே காதலாகிய குணம் பொருளெனப்பட்டது; "சினத்தைப் பொருளென்று கொண்டவன்" எனத் திருவள்ளுவனார் வெகுளியைப் பொருளாகக் கூறியவாறுங் காண்க: பொருள் - பதார்த்தம். பெள் என்னும் பகுதிக்கு - விரும்புதல் என்று பொருளாதலால், விரும்பப்படுந் தன்மைபற்றி, அது ஈறு திரிந்து'பெண்'எனப் பெயராயிற்று; ஆளுந்தன்மை பற்றிய ஆள்என்பது ஆண்என ஈறுதிரிந்து வழங்குமாறும் அறிக. உண்ண லென்பது பொதுவினையாயும் வருமாதலால், 'உண்ணுநீர்' என்றார். பி-ம்:— [1]காண்கின்றோரும். (ந)

ச. பள்ளத்துப் பாயு நன்னீ ரனையவர் பானல் பூத்த
[1]வெள்ளத்துப் பெரிய கண்ணார் மென்சிலம் [2]பலம்ப மென்பூத்

தள்ளத்தம் மிடைக ணோவத் தமைவலித் தவன்பாற் செல்லு
முள்ளத்தைப் பிடித்து நாமென் றோடுகின் றுரு மொத்தார்.

(இ - ள்.) பள்ளத்து பாயும் நல் நீர் அனையவர் - பள்ளமான இடத்திலே பாயுந்தன்மையதான தெளிவான நீர்போல (யாவர்மனமும் வந்து விழுதற்கு இடமான ஸ்ரீராமமூர்த்தியினிடத்துச் சென்றுவிழுந்த சுத்தமான மனத்தின்) தன்மையை யுடையவர்களாகிய, பானல் பூத்த வெள்ளத்து பெரிய கண்ணார் - கருங்குவளைப்பூப்போல மலர்ந்துள்ளவையும் கடல்வெள்ளத்தினும் பெரியவடிவமுடையவையு மாகிய கண்களையுடைய அம்மகளிர்,— மென் சிலம்பு அலம்ப - மெல்லியசிலம்பென்னும் அணிகள் காலிலொலிக்கவும், மெல் பூ தள்ள - மென்மையான பூமாலைகள் (தமது உடம்பில்) அசையவும், தம் இடைகள் நோவ - தங்களது நுண்ணிடைகள் (நடையின்விரைவால்) வருந்துதலையடையவும், தமை வலித்து அவன்பால் செல்லும் உள்ளத்தை நாம் பிடித்தும் என்று ஓடுகின்றார்உம் ஒத்தார்-தம்மை(ப் பின்னேவர) இழுத்துக்கொண்டு அவனிடத்து (முன்னே) சென்றுசேருகிற (தமது)மனத்தை நாம் பிடிப்போம் என்று (அதனைத்தொடர்ந்து) ஓடுகின்றவர்களையும் ஒத்து (இராமனிடம்) விரைவாகச் சென்றார்கள்; (எ - று.)

இராமனைக் காணும்பொருட்டு மகளிர் மனோவேகமாகச் சென்றார்களென்பது, இக்கவியின் கருத்து. இன்றியமையாத அந்தக்கரணமாதலால், மனத்தை அவசியந் தேடிப்பிடிக்க வேண்டியதாயிற்று. சிற்றின்பத்தைப் பள்ளமடை யென்ப ராதலால், 'பள்ளத்துப் பாயு நன்னீ ரனையவர்' என்று ஒப்புமை சொல்லப்பட்டது. இராமன் கம்பீரமானதன்மையிற் கடல்போல்வான் என்று ஸ்ரீவால்மீகிபகவானுங் கூறியுள்ளாராதலால், பள்ளம் இராமனுக்கு உவமைகூறப்பட்ட தென்பாருமுளர். வெள்ளத்துப்பெரியகண் - உத்தம இலக்கணப்படி பெரியனவாயுள்ள கண்கள் என்றபடி; இது - அதிசயோக்தி: "கடலினும் பெரிய கண்கள்" என்பர் மேலும். மென்சிலம்பு - காலில்உறுத்தாதபடி மென்மையாகச்செய்யப்பட்ட சிலம்பு; இனி ஓசையினியசிலம்பும், சிறிய சிலம்பும், கண்ணுக்கினிய சிலம்பும் ஆகவுமாம். மென்பூத்தள்ள-மெல்லிய தாமரைமலர்போன்ற பாதங்கள் தள்ளாட என்றுமாம். சில பிரதிகளில் இச்செய்யுள் மூன்றாவதாகக் காணப்படுகின்றது. பி - ம்:— [1]வெள்ளத்தும்பெரிய. [2]அலம்பு. (௪)

௫. அரத்தமுண் டனைய மேனி [1]யகலிகை களித்த தாளும்
விரைக்கருங் குழலிக் காக வில்லிற நிமிர்ந்து வீங்கும்
வரைத்தடந் தோளுங் காண மறுகினின் வீழு மாத
ரிரைத்துவந் [2]தமிழ்தின் மொய்க்கு மீயின மென்ன லானார்.

(இ - ள்.) அரத்தம் உண்டு அனைய மேனி அகலிகை களித்த தாள்உம்- செந்நிறத்தையுட்கொண்டாற்போன்ற [செந்நிறமான] வடிவத்தையுடைய அகலிகை களிப்படைதற்குக்காரணமான(இராமனது)திருவடிகளையும்,விரை கரு குழலிக்கு ஆக வில் இற நிமிர்ந்து வீங்கும் வரை தட தோள்உம் - (இய

ற்கை செயற்கை) வாசனைகளையுடைய கரிய கூந்தலையுடைய சீதாபிராட்டியாரைப் பெறுவதற்காகச் சிவதநுசு ஒடியும்படி உயர்ந்து பூரித்த மலைபோன்ற பெரிய (அவனது) திருத்தோள்களையும், காண - பார்த்துக்களிப்பதற்கு, மறுகினின் வீழும் - அவ்விராசவீதியிலே வந்தடைகிற, மாதர் - மகளிர்கள்,—இரைத்து வந்து அமிழ்தின் மொய்க்கும் ஈ இனம் என்னல் ஆனார் - ஆரவாரஞ்செய்துகொண்டுவந்து அமிருதத்திலேமொய்க்கிற ஈக்களின்கூட்டமென்று (உவமை) சொல்லும்படி யானார்கள்; (எ - று.)

'வெல்லப்பானையில் ஈ மொய்க்கிறதுபோல' என்ற உலகவழக்குங் காண்க. ஈக்கள் இரைத்துவருதற்குக் காரணம் - இத்தகைய அமிருதம் கிடைத்ததே என்னுங் களிப்பு. உபமானத்தில் 'இரைத்துவந் தமிழ்தின் மொய்க்கும்' என்றதனால், உபமேயத்திலும் மகளிர் வரும்பொழுது இராமனதுவடிவழகையும் மகிமையையும் புகழ்ந்துகூறி வந்தார்கள் என்க. எத்தனை ஈக்கள் ஒருங்கேகூடி முழுவதையுந் தாமே பருகிவிடவேண்டுமென்று பேராசை தனித்தனிகொண்டு நுகர்ந்தாலும் அமிருதத்தின்சுவை குறைபடாததுபோல இவ்விராமாமிருதமும் எத்தனைமகளிர் ஒருங்குகூடி வந்து திருமேனியழகைக் கண்களாற் பருகக் கருதினாலும் முடிவுபோகாததென்று அறிக. பி - ம்:—[1]அகலிகைக் களித்த. [2]அமிர்தை. (ரு)

கூ.—இராமபிரானை மகளிர் காணுதல்.

வீதிவாய்ச் செல்கின் றான்போல் விழித்திமை யாது நின்ற
மாதரார் கண்க ளூடே வாவுமான் றேரிற் [1]செல்வான்
யாதினு முயர்ந்தோர் தன்னை யாவர்க்குங் கண்ண னென்றே
யோதிய பெயர்க்குத் தானே யுறுபொரு ளுணர்த்தி விட்டான்.

(இ - ள்.) வீதிவாய் செல்கின்றான் போல் - (அந்நகரத்து) வீதியினிடத்திலே போகிறவன்போல, விழித்து இமையாது நின்ற மாதரார் கண்களூடே - இமைத்தலுஞ்செய்யாமல் விழித்துக்கொண்டுநின்ற அம்மகளிரது கண்களிடத்திலே, வாவும் மான் தேரில் செல்வான் - தாவிப்பாய்கின்ற குதிரைகளைப் பூட்டிய தேரின்மீது செல்பவனான அவ்விராமன்,—யாதின் உம் உயர்ந்தோர் தன்னை கண்ணன் என்று ஓதிய பெயர்க்கு உறு பொருள் தான் ஏ யாவர்க்கு உம் உணர்த்திவிட்டான் - எல்லாப்பொருள்களினுஞ்சிறந்த பெரியோர்கள் தன்னைக் கண்ணனென்று கூறியுள்ள திருநாமத்துக்குத் தகுந்த பொருளைத் தானே எல்லோர்க்கும் அறிவித்துவிட்டான்; (எ - று.)

கருநிறமுடைமையாலும், யாவர்மனத்தையுங் கவர்ந்துஇழுக்குந்தன்மையாலும், க்ருஷ்ணன் என்னும் வடமொழியின் திரிபாகக் கண்ணனென்று திருமாலுக்கு நூல்களிற் பெயர்வழங்கும்; இதனைத் தமிழ்மொழியாகவே கொண்டால், (யாவரிடத்துங்) கண்ணோட்டமாகிய அருளை யுடையவனென்றும், (யாவர்க்குங்) கண்ணையொத்து அருமையாய்நிற்பவ னென்றும், ஞானக்கண்ணை அளிப்பவ னென்றும், எல்லாவிடத்தும் உள்ளவ னென்றும் பொருள்கள் படும்: இப்போது அத்திருநாமத்துக்கு, எல்லாமகளிருடைய கண்வழியிற் செல்லுதலாற் கண்ணன் என்று பொருள்சொல்லும்படி யாயிற்று என்

பதாம். கண்ணன் என்ற சொல்லுக்கு இயல்பாகவுள்ள பொருளை யொழித்து வேறொருபொருளைக் கற்பித்துக்கூறிய இது பிறிதுநிலைநவிற்சியணி யெனப்படும்: பெயர்ச்சொற்களுக்கு உறுப்பாற்றலான் மற்றொருபொருளைத் தந்து உரைப்பது, இதனிலக்கணம். இது, வடமொழியில் நிருக்தி யெனப்படும். செல்கின்றான்போல் என்றது - அநுவநுதியணி. கண்களை இமைத்தால் அவ்வளவு காலம் எம்பெருமான் வடிவழகு காணப்படாமல் மறைபடுமாதலால், அதனிடத்துள்ள ஆர்வத்தால் இமையாதுநிற்பாராயினர். யாது- சாதியொருமை. யாதினும் - எல்லாநூல்களிலும் என்றுமாம். யாவர்க்கும் கண்ணன், யாவர்க்கும் ஒதிய என்று இயைத்தலுமாம். கண்ணன் என்பது இங்கே, அவதாரப்பெயரன்றிக்கேவந்த காரணப்பெயர். பி - ம்:— [1]போனான். (௬)

எ.—கவிக்கூற்று.

எண்கடந் [1]தலகி லாதின் றேகுறு மிவன்றே ரென்று
பெண்கடந் தம்மி னொந்து பேதுறு கின்ற [2]காலை
மண்கடந் தமரர் வைகும் வான்கடந் தானைத் தான்றன்
கண் [3]கட வாது காத்த காரிகை பெரிய ளேகாண்.

(இ - ள்.) 'இவன் தேர் - இவ்விராமபிரானது இரதம், எண் கடந்து - மனோவேகத்தையும் அதிக்கிரமித்து, அலகு இலாது - (தன்வேகத்துக்கு ஒரு) அளவுஇல்லாமல், இன்று ஏகுறும் - இப்பொழுது செல்லாநிற்கும்', என்று - என்று எண்ணியுங் கூறியும், பெண்கள்-(அந்நகரத்துப்) பெண்கள் யாவரும், தம்தம்மில் நொந்து பேது உறுகின்ற காலை - தங்களிலே தாங்கள் வருந்திக் காமவிகாரத்தை அடைகிற சமயத்திலே,—மண் கடந்து அமரர் வைகும் வான் கடந்தானை-(முன்னே) பூலோகத்தை அளவிட்டு(உடனே)தேவர்கள் தங்குகிற மேலுலகத்தையும் அளவிட்ட பெரியவனை அவ்விராமனை, தான் தன் கண் கடவாது காத்த - தான் தனது கண்களை விட்டுநீங்கவொட்டாமற் பாதுகாத்துக்கொண்ட, காரிகை - அழகுடைய சிறந்தமகள், பெரியள்ஏ காண் - (எல்லாமங்கையரினுஞ்) சிறந்தவளேயாவள்; (எ-று.)— ஏ - தேற்றம்: காண் - ஈற்றசை; காண்-தேற்றமாயின், ஏ - பிரிநிலை.

இங்ஙனங் கவி கூறினது - உலகத்து அழகையுடைய மகளிர்பலரும் தன்னை விரும்பிவந்தடையவும் அவர்களுள் ஒருத்தியினிடத்தாயினுங் காதல் கொள்ளாத இராமபிரான் எப்பொழுதுந் தன்னைவிட்டுநீங்காமல் தன்கண்ணெதிரிலேயே காணப்பட்டு நிற்கும்படி அவனைக் கொழுநனாகக் கொள்ளப்போகிற ஜானகீதேவியின் சிறப்பை எடுத்து விளக்கிய தென்றாவது, இராமபிரான் தம்நோக்கத்தைவிட்டு அகலுங்காலத்துப் பலமகளிர் பிரிவாற்றாமையால் வருந்திநிற்க, அப்பொழுது மறைந்துசென்ற இராமனது திருமேனியழகை உருவெளித்தோற்றத்தாற் கண்ணெதிரிலே நீங்காமற் கண்டுநின்று முன்போலவே களிக்கின்றா ளொருமகளைக் கற்பனைமுகத்தாற் சிறப்பித்த தென்றாவது கொள்க. இம்மகளிரிடத்து இராமனுக்குக் காதலெழாமல் இவர்களுக்கு மாத்திரம் அவனிடத்து வேட்கையுண்டான ஒருதலைக்காம

மாதலால் 'பெண்கள் தந்தம்மில் நொந்து' எனப்பட்டது. பேத - பேதம்: வடமொழி. எல்லாவுலகங்களையும் அளவிட்ட பெரியவனைத் தனது சிறிய கண்களினுள்ளே அடக்குதல் அரியதொன்றாமாறு அறிக. இங்ஙனம் பெரிய பொருள் ஒன்றுள் அடங்குவதாகக்கூறுவது, பெருமையணி யெனப்படும். பி - ம்:— [1] ஏகிலாது. [2] வேலை. [3] கடவாமல். (எ)

அ.—இராமபிரானிடத்து ஈடுபட்ட ஒருமங்கையின் வருணனை.

**பயிரொன்று கலையுஞ் சங்கும் பழிப்பறு நலனும் பண்புஞ்**
**செயிரின்றி யலர்ந்த பொற்புஞ் சிந்தையு முணர்வுந் தேசும்**
**வயிரஞ்செய் பூணு நாணு மடனுந் தன்னிறையு மற்று**
**முயிரொன்று மொழிய வெல்லா முகுத்தொரு தெரிவை நின்றாள்.**

(இ - ள்.) (அம்மகளிர்களுள்), ஒரு தெரிவை - (வேட்கைபிறந்த பருவமாகிய) தெரிவைப்பருவத்தை யுடைய ஒருபெண், தன் - தனது, பயிர் - பயிர்ப்புஎன்னும் பெண்மைக்குணத்தையும், ஒன்று கலைஉம் - பிரியாதுபொருந்தின சேலையையும், சங்குஉம்- சங்கவளையல்களையும், பழிப்பு அறு நலன் உம் - நிந்திப்பதற்கு இடமில்லாத நற்செய்கையையும், பண்புஉம்-இயற்கைக் குணத்தையும், செயிர் இன்றி அலர்ந்த பொற்புஉம்-குற்றமில்லாமல் மிக்கு விளங்குகிற அழகையும், சிந்தைஉம் - மனத்தையும், உணர்வுஉம் - அறிவையும், தேசுஉம்-ஒளியையும், வயிரம் செய் பூண்உம் - வச்சிரமென்னும் இரத்தினங்களை யமைத்துச் செய்த ஆபரணங்களையும், நாண்உம் - இலச்சையையும், மடன்உம் - மடமைக்குணத்தையும், நிறைஉம் - மனவடக்கத்தையும், மற்றுஉம் - இன்னுமுள்ள அச்சம் முதலிய பெண்மைக்குணங்களையும், உயிர் ஒன்றுஉம் ஒழிய எல்லாம் - (இங்ஙனந்) தன்னுடைய உயிரொன்றைத் தவிர எல்லாவற்றையும்,உகுத்து நின்றாள் - சிந்தவிட்டு(த் தான் தனியே)நின்றாள்.

இராமன் கண்பார்வையைவிட்டு மறைந்தமாத்திரத்திலுண்டான சோர்வினால் ஒருத்திக்கு ஆடை தளர்ந்துவிழுந்தது; அம்மாத்திரத்திலுண்டான உடம்பின்மெலிவால் கைவளைகள் கழன்றன; அம்மனத்துயரத்தால் உடம்பின் அழகும் நாணம் மடம் பயிர்ப்பு முதலிய பெண்மைக்குணங்களும் பிறசெயற்கைக்குணங்களும் உடம்பினொளியும் ஒழிந்தன; மனம் மயங்கிற்று; அறிவு அழிந்தது; மனத்திலுண்டான வெறுப்பால் ஆபரணங்கள் கழற்றி யெறியப்பட்டன; இங்ஙனந் தன்வசமில்லாமல் உள்ளமும் உடம்புங் காம பரவசப்பட்டதனால், 'மனத்திலடக்கிவைக்கத்தக்கவை இன்னவை; அங்ஙனம் அடக்கிவைக்கவேண்டாமல் வெளியிடத்தக்கவை இன்னவை' என்ற பகுப்பில்லாமல் மனத்துத் தோன்றுவனவற்றையெல்லாம் வெளியிட்டுக் கூறும்படியாயிற்று; இவ்வாறு இவையனைத்தும் ஒழிந்ததைச் சிறிதும் உணராமல் திகைத்துநின்றாள், ஒரு பருவமுதிர்ந்தபெண் என்பதாம். நாணாவது - தகாதவற்றில் உள்ளமொடுங்குதல். பயிர்ப்பாவது - பரபுருஷனுடைய ஆடை முதலியன மேற்படுவதிலுண்டாகும் அருவருப்பு நிறையாவது - மனத்துஅடக்கற்பாலனவற்றைப் பிறரறியாதபடி அடக்குதல். பயிரென்பதில், எண்ணும்மை - விகாரத்தால் தொக்கது. இனி, பயிரொன்றுகலைஎன்ப

தற்கு - பயிர்ப்பென்னுங்குணம்போலப் பிரியாதுபொருந்திய ஆடையென்றும் உரைப்பாரும் உளர். பயிர் என்பதைப் பயில் என்பதன் போலி யெனக் கொண்டு, நீங்காமற்பொருந்தின ஒப்பற்ற ஆடை யென்றும் உரைக்கலாம்.

கூ.—இதுவும் அது.

* குழை¹யுறு மிளிருங் கெண்டை கொண்டலி னாலி சிந்தத்
தழை¹யுறுக் கரும்பின் சாபத் தனங்கவேள் சரங்கள் பாய
விழை¹யுறுப் புண்ண றாத விளமுலை யொருத்தி சோர்ந்து
மழை¹யுறு மின்னி னன்ன மருங்குல்போ னுடங்கி நின்றாள்.

(இ - ள்.) குழை - குழையென்னுங்காதணியின்மீது, உறு - பொருந்தி, மிளிரும் - பிறழ்ந்துவிளங்குகிற, கெண்டை - கெண்டைமீன்கள்போன்ற கண்கள், கொண்டலின் - மேகம் (மழைநீர்த்துளிகளைப் பெய்தல்)போல, ஆலி சிந்த-கண்ணீர்த்துளிகளைப் பெருகவிடாநிற்க,—தழைஉறு இன்கரும்பு சாபத்து அனங்கன் வேள் சரங்கள் பாய - தழையில்லாத (சுவை) இனிய கரும்பாகிய வில்லையுடைய மன்மதனது அம்புகள்(தன்மேற்)பாய்ந்ததனால், இழை உறு புண் அறாத - நூலிழையும் இடையிலே நுழையும்படிவெற்றிடமில்லாமல் விரணங்கள் (எங்கும்) நீங்காமல்நிறைந்திருக்கப்பெற்ற, இள முலை - இளமையான தனங்களையுடைய, ஒருத்தி - ஒருமகள்,—சோர்ந்து - தளர்ந்து, மழை உறு மின்னின் அன்ன மருங்குல் போல் - மேகத்தில் தோன்றாமல் (பூமியில்தோன்றுவதொரு) மின்னலையொத்த (தனது) இடை போலவே, நுடங்கி நின்றாள் - (உடம்பு) முழுதுந் துவண்டுநின்றாள்;(எ-று.)

காதளவும் நீண்டுசென்றுலாவுங் கண்களென்பார், 'குழையுறு மிளிருங் கெண்டை'என்றார். கெண்டை - உவமவாகுபெயர். கண்ணீர்சிந்துதலுக்கும் சோர்ந்துநுடங்கிநிற்றற்குங் காரணம் - இராமனைத் தனக்குத் தலைவனாகப் பெற்றுக் கூடிக் களிக்க இயலாவிடினும் இன்னுஞ் சிறிதுபொழுது கண்ணிற்கண்டு களிப்பதற்குங்கூடாமல் அவன் விரைவில் மறைந்தமை. இழையுறு என்பதை முலைஎன்பதனோடு இயைத்து, நடுவே நூலிழையும் நுழைய வொண்ணாத நெருங்கின தனமென்றும் பொருள்கூறலாம். மழையுறுமின் -இல்பொருளுவமை. முன்னேஇடைமாத்திரமே சுருங்கியிருந்தது, இப்பொழுது உடம்புமுழுவதும் அங்ஙனமாயிற்றுஎன்றார்; "மாலுற வருதலு மனமுமெய்யுந்தன், னூலுற மருங்குல்போ னுடங்குவாள்" என்றார், கீழ் மிதிலைக்காட்சிப்படலத்திலும். இடையிலிருந்த நுண்மை உடம்புமுழுதுஞ் சென்றதாகக் கூறிய இது - முறையிற்படர்ச்சியணியின் பாற்படும்.
பி - ம்:—¹அறு. (கூ)

சுo.—இராமபிரானை மகளிர்நோக்கியதைப் பற்றிய கவிக்கூற்று.

பஞ்சணி விரலி னார்தம் படைநெடுங் கண்க ளெல்லாஞ்
செஞ்செவே யையன் மெய்யிற் கருமையைச் சேர்ந்த வோதா
மஞ்சன மேனி யான்றன் மணிநிற மாத ரார்த
மஞ்சன நோக்கம் பார்க்க விருண்டதோ வறிகி லேமால்.

(இ - ள்.) பஞ்சு அணி விரலினார்தம் - பஞ்சுபோல்மெல்லிய அழகியவிரல்களையுடைய அம்மகளிர்களது, படை நெடு கண்கள் எல்லாம் - வேலாயுதம் போன்ற பெரிய கண்கள்யாவும், தாம் ஐயன் மெய்யில் கருமையை செம் செவே சேர்ந்தஓ - தாங்கள் இராமனது மேனியிலுள்ள கருநிறத்தை மிகவும் நன்றாக அடைந்தனவோ? (அல்லது), மஞ்சு அன மேனியான் தன் மணி நிறம் - மேகத்தையொத்த திருமேனியையுடைய அவ்விராமனது அழகிய திருநிறம், மாதரார்தம் அஞ்சனம் நோக்கம் பார்க்க இருண்டதுஓ - அம்மகளிர்களது மைதீட்டிய கருங்கண்கள் பார்த்தலினாற் கறுப்படைந்ததோ? அறிகிலேம் - (இவ்விரண்டுள் ஒன்றை யாம் துணிவாக) அறிகின்றோமில்லை.

தற்குறிப்பேற்றவணி. இதனால், இராமனது திருமேனியின் மிக்க கருநிறமும், அம்மகளிர்களது கண்களின் மிக்ககருநிறமும் நன்கு உணர்த்தப்பட்டன. இங்ஙனங்கூறியதனால், பெண்கள்யாவரும் தந்தங் கண்கள் அவ்விராமனது உடம்பில் நன்குபதியுமாறு நன்றாக நோக்கினாரென்பது போதரும். பஞ்சணிவிரல் - செம்பஞ்சுக்குழம்பை யணிந்தவிரல் என்றுமாம். (கo)

கக.—ஒருத்தியின் மன்மதோபாலம்பனம்.

மாந்தளிர் மேனி யாளோர் வாணுதன் மதன னெங்கும்
பூந்துணர் வாளி மாரி பொழிகின்ற பூசு னோக்கி
வேந்தர்கோ னாணை நோக்கான் வீரன்வில் லாண்மை பாரா
னேந்திழை யாரை யெய்வான் யாவனோ வொருவ னென்றாள்.

(இ - ள்.) மா தளிர் மேனியாள் - மாமரத்தின்தளிர்போலச் சிவந்த மெல்லிய உடம்பையுடையவளாகிய, ஓர் வாள் நுதல் - ஒளியையுடைய நெற்றியையுடைய ஒருபெண், மதனன் எங்கும் பூ துணர் வாளி மாரி பொழிகின்ற பூசல் நோக்கி - மன்மதன் (தங்கள்மேல்) எவ்விடத்தும் பூங்கொத்துக்களாகிய பாணவர்ஷத்தைச் சொரிகின்ற போர்த்திறத்தைப் பார்த்து, 'வேந்தர்கோன் ஆணை நோக்கான் - தசரதசக்கரவர்த்தியினது ஆஜ்ஞையின் சிறப்பை மதியாதவனும், வீரன் வில் ஆண்மை பாரான் - சுத்தவீரனை இராமபிரானது விற்றொழிற்றிறமையையும் மதியாதவனும், ஏந்து இழை யாரை எய்வான் - தரித்த ஆபரணங்களையுடைய (மெல்லிய) மகளிரை அம்பெய்து வருத்துபவனாகிய, ஒருவன் - இவ்வொருத்தன், யாவன்ஓ - யாரோ?' என்றாள் - என்றுகூறினாள்; (எ - று.)

வேந்தர்கோனாணைக்கு அஞ்சுதலும் வீரன்வில்லாண்மைக்கு நாணுதலுமில்லாமல் மெல்லியராய் அபலைகளெனப்படுகிற மகளிரை இரக்கமின்றி எய்து வருத்துதல் பெரியதோர் இழுக்காதலின் அருள் நாணம் அச்சம் இவை அற்ற இவன் எவனோ என்றாளென்க. தசரதன் சக்கரவர்த்தியாதலால், அவனாணை ஜனகராஜனுடையநகரத்திலுஞ் செல்லும். இனி, வேந்தர்கோன் - ஜனகமகாராஜனுமாம். (கக)

கஉ.—இதுமுதல் ஆறுகவிகள் - இராமனைக் காணச்சென்ற மாதர்களின் நிலைமையைக் கூறுவன.

[1]சொன்னலங் கடந்த காமச் சுவையையோ ருருவ மாக்கி
[2]யின்னலந் தெரிய வல்லா ரெழுதிய தென்ன நின்றாள்
பொன்னையும் பொருவு நீராள் புனைந்தன வெல்லாம் [3]போகத்
தன்னையுந் தாங்க லாதாள் துகி[4]லொன்றுந் தாங்கி நின்றாள்.

(இ - ள்.) பொன்னைஉம் பொருவும் நீராள் - (எல்லாமகளிரினுஞ் சிறந்தவளாகக் கூறப்படுகிற) திருமகளையும் ஒக்கும் அழகின்தன்மையுடையவளும், புனைந்தன எல்லாம் போக - தான்அணிந்துள்ள(வளைமுதலிய)ஆபரணங்களெல்லாங் கழன்று விழுந்துவிட, தன்னைஉம் தாங்கலாதாள் - தன் உடம்பையுந் தான் தாங்கும் வலிமையில்லாதவளும், துகில் ஒன்றுஉம் தாங்கி நின்றாள்-(தனது) ஆடையொன்றைமாத்திரமே (அவிழ்ந்துவிழாதபடி அருமையாகத்) தரித்துநின்றவளுமாகிய ஒருமகள், இன் நலம் தெரிய வல்லார் - காண்டற்கு இனிய (சித்திரத்தின்) சிறப்புமுழுவதையும் அறியவல்ல ஓவியக்காரர், சொல் நலம் கடந்த காமம் சுவையை ஓர் உருவம் ஆக்கி - சொல்லையும் எல்லாவின்பங்களையுங் கடந்துநின்ற காமவின்பத்தையே ஒருபெண்வடிவமாக அமைத்து,எழுதியது என்ன - எழுதினதுபோல, நின்றாள்—;(எ-று.)

காமமாவது - ஒருகாலத்து ஒருபொருளால் ஐம்புலன்களும் அனுபவிக்கும்படியான சிற்றின்பம். அகத்துநிகழும் அவ்வின்பம் தான் பிறர்க்கு வெளிப்படையாக இத்தன்மையதென்று வாயாற்கூறுதற்கு அரியதொன் றாதலாலும் உலகத்துஉள்ள மற்றைப்பொருள்கள் பலவற்றாலு முண்டாகிற இன்பமெல்லாம் இவ்வின்பத்துக்குமுன் ஒருபொருளாகத் தோன்றா தாதலாலும் 'சொல்நலங்கடந்த காமம்' எனப்பட்டது. இனி, சொல் நலங்கள் தந்த எனப் பிரித்து - இன்பநூல்களிற் கூறப்படுகிற நயங்களைத்தருகின்ற காமமென்றுங் கொள்ளலாம். இது - நவரசங்களுளொன்றாய்ச் சிருங்காரரசமெனச் சிறப்பித்துக் கூறப்படுதலால், 'காமச்சுவை' எனப்பட்டது. இன் நலம் தெரியவல்லார் - இன்பத்தின் நன்மைகளை அறியவல்லவ ரென்றும், கண்ணுக்கு இனியதாகிய அழகின் எல்லையை உணரவல்லவரென்றும் உரைக்கலாம். வேட்கைநோயால் வருந்துவார்க்கு உடன்பிறந்ததான உடம்பும் ஒருபாரமாகத்தோன்று மாதலின், 'தன்னையுந் தாங்கலாதாள்'என்றது இதுவும் அடுத்தசெய்யுளும்-சிலபிரதிகளில் மாறிக்கிடக்கின்றன.பி-ம்:—[1]தொன்னயந்தொடர்ந்த. [2]இன்னயம். [3]போக்கி. [4]ஒன்றுதாங்கிக்கொண்டாள். ()

கஙூ. விற்றங்கு புருவ நெற்றி வெயர்வரப் பசலை [1]விம்மச்
சுற்றெங்கு மெறிப்ப வுள்ளஞ் சோரவோர் தோகை நின்றாள்
கொற்றஞ்செய் கொலைவே[2]லென்னக் கூற்றெனக் கொடிய[3]கண்ணுண்
மற்றொன்றுங் காண்கி லாதா டமியளே வள்ள லென்றாள்.

(இ - ள்.) கொற்றம் செய் கொலை வேல் என்ன - வெற்றியை விளைக்கின்ற கொல்லுதற்றொழிலையுடைய வேலாயுதம் போலவும், கூற்று என -

யமன் போலவும், கொடிய - கொடுந்தன்மையையுடைய, கண்ணாள் - கண்களையுடையவளாகிய, ஓர் தோகை - மயில்போலுஞ்சாயலையுடையாளொரு மகள்,—வில் தங்கு புருவம்-வில்லின்தன்மை பொருந்தின [வளைவான](தன்) புருவங்களிலும், நெற்றி - நெற்றியிலும், வெயர் வர - வேர்வைநீ ரொழுகவும்,பசலை - பசப்புநிறம், சுற்று எங்குஉம்-(தன்னுடம்பின்)புற முழுவதிலும், விம்ம எறிப்ப - மிகுதியாகப் பரவிவிளங்கவும், உள்ளம் சோர - மனந்தளரவும், நின்றாள் - நின்றவளாய், மற்று ஒன்றுஉம் காண்கிலாதாள் - (தன்மனம் இராமனிடஞ்சேர்ந்ததனால்) அவனையொழிய அவனுடன்சென்ற சேனை முதலிய வேறொருபொருளையும் பாராதவளாய், வள்ளல் தமியன்ஓ என்றாள்- இராமப்பிரபு தனியனாயுள்ளானோ? என்று(கூறி அவனது தனிமைக்குக்) கவன்றாள்; (எ - று.)

இங்கே 'வள்ளல்' என்றது - தாம் யாதொருமுயற்சியுஞ் செய்யாமலிருக்கவும் அவ்விராமபிரான் தானே தன்னருளால் வீதியில்வந்து தன்னழகை யாவருங் கண்ணாரக்கண்டு களித்திடும்படி கொடுத்தருளிய உபகாரத்தை நோக்கி. தமியனோ என்ற ஓகாரம் - வினாவகையால் இங்கே இரக்கத்தை யுணர்த்திற்று. மனம் ஒன்றினிடத்து ஊன்றப்பெற்றார்க்குப் பிறிதொரு பொருளுங் கட்புலப்படா தாதலால், 'மற்றொன்றுங்காண்கிலாதாள்' என்றது. 'தமியனோவள்ளல்' என ஆதரத்தோடு வினவியது, தான் அருகிற் சென்று தழுவும்பொருட் டாகவுமாம். விற்றங்கு என்னும் அடைமொழியை நெற்றிக்கும், கொற்றஞ்செய்கொலை என்னும் அடைமொழியைக் கூற்றுக்குங் கூட்டலாம். நெற்றிவளைவுக்கும் வில்வளைவை உவமைகூறுவது உண்டு. பசலையாவது - விரும்பிய காதலனைச் சேரப்பெறாத துன்பத்தால் உளதாவதொரு நிறவேறுபாடு. பி-ம்:—[1] மின்ன. [2] அன்னகூர்நுதி. [3] கண்ணால். (௬௩)

௬௪. * மைக்கருங் கூந்தற் செவ்வாய் வாணுத லொருத்தி யுள்ள
நெக்கன ளுருகு கின்றா ணெஞ்சிடை வஞ்சன் வந்து
புக்கனன் போகா வண்ணங் கண்ணெனும் புலங்கொள் [1]வாயுஞ்
சிக்கென [2]வடைத்தேன் றோழி சேருது மமளி யென்றாள்.

(இ - ள்.) மை கரு கூந்தல் - அஞ்சனம்போலக் கருநிறமான கூந்தலையும், செவ் வாய் - செந்நிறமான அதரத்தையும், வாள் நுதல் - பிரகாசமான நெற்றியையுமுடைய, ஒருத்தி - ஒருபெண்,—உள்ளம் நெக்கனள் உருகுகின்றாள் - (இராமபிரான்விஷயத்தில் தனது) மனம் நெகிழ்ந்து உருகுகின்றவளாய், (தன்பாங்கியைநோக்கி), 'தோழி - தோழியே! வஞ்சன் - வஞ்சனையையுடைய அவ்வள்ளல், நெஞ்சிடை - (என்) மனத்தினுள்ளே, வந்து புக்கனன் - (கண்வழியாக) வந்து பிரவேசித்து அகப்பட்டுக்கொண்டான்; போகா வண்ணம் - (அவன் இனி) நீங்கிப்போகாதபடி, கண் எனும் புலம் கொள் வாய்உம் - கண்ணென்கிற உறுப்பாகிற அவன்வந்த வழியையும், சிக்கென அடைத்தேன்-உறுதியாகக் கதவைமூடியடைத்துவிட்டேன்; அமளி சேருதும் - (இனி அவனுடன் இன்பநுகருதற்குப்) படுக்கையைச் சேர்வோம்', என்றாள் - என்றுகூறினாள்; (எ - று.)

"கண்வழிநுழையுமோர் கள்வன்" ஆதலால், அவன் வெளிச்செல்லாதபடி கண்ணெனும் புலங்கொள்வாயை அடைத்தனள். இதனைத் தோழியை அழைத்துக் கூறினது, கண்களை முழுவதும் மூடிக்கொண்டு பார்வையில்லாமலிருக்கிற தன்னைக் கைப்பிடித்து அழைத்துக்கொண்டு படுக்கையிற் சேர்த்து உதவிசெய்யவேண்டுமென்கிற நோக்கத்தால். அங்ஙனமாயினும் 'என்னை நீ அமளிசேர்ப்பி' எனக்கூறாமல் 'சேருதும் அமளி' என உளப்பாட்டுத் தன்மைப்பன்மைமுகமாகக் கூறினது, தனதுஇன்பத்தைத் தோழி தனக்குநேர்ந்த இன்பமாகக் கருதுபவளாதலால். இனி, தோழியும் இராமனிடம் வேட்கைகொண்டவ ளாதலாலும், அவளுக்கு ஒரு ஆசையைக் காட்டினாலொழிய அவள் இச்சமயத்தில்வந்து தனக்கு உதவாளாதலாலும் இங்ஙனங் கூறினாளென்றலும் ஒன்று: இங்ஙனம் சக்களத்தியாக ஒருத்தியைக் கூட்டிக்கொள்ள உடன்படுதல் உலகத்தில் உண்டோ எனின்,—இவனைவிடாது தழுவுதற்கு வேறுஉபாயம் இன்று என்னுங்கருத்தால் இங்ஙனங் கூறினாளென்க: அன்றியும், காமபித்துக்கொண்டவர்வார்த்தையில் இவ்வளவு ஆராய்ச்சி வேண்டா என்றும் உணர்க. சிக்கென - இறுக்கக்குறிப்பு; விரைவுக்குறிப்பாகவுங் கொள்ளலாம். கண்ணாகிய வாசலுக்கு இமையைக் கதவென்க. தனது நாணம் முதலியவற்றைத் தனக்குத்தெரியாதபடி கவர்ந்து சென்றானென்ற எண்ணத்தாலும், ஒருகால் உள்ளத்தும் ஒருகால் வெளியிலும் ஒருகால் இரண்டிடத்துந் தோன்றிநின்றும் இன்பநுகர இடங்கொடாததனாலும், 'வஞ்சன்' என்றாள். புலம் - இந்திரியம். கண்ணாற்கண்டமாத்திரத்தில் மனத்தில் அவனுருவம் பதிந்து காதல் விளைதலால்,கண்ணை நெஞ்சுக்கு வழியென்றது. பி - ம்:—[1]வாயில். [2]அடைத்துந்தோழீ. (௧௪)

௧௫. தாக்கணங் [1]கனைய மேனி தைத்தவேள் சரங்கள் பாராள்
வீக்கிய கலனுந் தூசும் வேறுவே றான தோரா
ளாக்கிய பாவை யன்னா ளொருத்தியாண் டமலன் மேனி
[2]நோக்குறு வாரை யெல்லா மெரியெழ நோக்கு கின்றாள்.

(இ - ள்.) ஆக்கிய பாவை அன்னாள் ஒருத்தி - (அருமையாகச்) சித்திரிக்கப்பட்ட சித்திரப்பதுமையையொத்தவளான ஒருமகள்,—தாக்கு அணங்கு அனைய மேனி தைத்த வேள் சரங்கள் பாராள் - மோகினியென்னும் பெண்தெய்வத்தின் வடிவத்தையொத்த (தனது) உடம்பிலே பாய்ந்த மன்மதபாணங்களையும் மதியாதவளாய், வீக்கிய கலன்உம் தூசுஉம் வேறு வேறு ஆனது ஓராள் - (தான்) இறுகஅணிந்துள்ள ஆபரணங்களும் (இறுக உடுத்துள்ள) ஆடையும் (தன்னுடம்பினின்று) வெவ்வேறாகி நீங்கியதையும் அறியாதவளாய்,—ஆண்டு அமலன் மேனி நோக்குறுவாரை எல்லாம் எரி எழ நோக்குகின்றாள் - அவ்விடத்தில் [அப்பொழுது] குற்றமற்ற இராமபிரானது திருமேனியை அன்போடு பார்ப்பவர்களையெல்லாங் கண்களினின்று கனற்பொறிபுலப்படச் சினந்துநோக்குகின்றவளானாள்; (எ - று.)

அமலன்மேனியை நோக்குவாரை எரியெழ நோக்கக்காரணம், தன்னொருத்தியையே இராமனுக்குத் தக்க மனைவியாகத் தான் கருதியதனால்;

தன்னைப்போன்ற மகளிரிடத்து உண்டாகும் அழுக்காறு; பலரும் ஒருங்கு வியந்து நோக்குதலால் அப்பெருமானது திருமேனிக்குக் கண்ணெச்சிற் படுமோ என்ற எண்ணமுமாம். பி-ம்:—[1] அனையாள். [2] நோக்குகின்றாரை. ()

கசு. களிப்பன மதர்ப்ப நீண்டு கதுப்பினை [1] யளப்ப கள்ள
மொளிப்பன வெளிப்பட் டோடப் பார்ப்பன சிவப்புள் ளூற
[2] வெளுப்பன கறுப்ப வான வேற்கணா ளொருத்தி யுள்ளங்
[3] குளிர்ப்பொடு காண வந்தாள் [4] வெதுப்பொடு கோயில் புக்காள்.

(இ - ள்.) களிப்பன - (இயற்கையிற்) களிப்புத்தோன்றுவனவும், மதர்ப்ப - செழிப்பையுடையனவும், நீண்டு கதுப்பினை அளப்ப - நீளமாய்ச் சென்று கன்னங்களை அளந்திடுவனவும், கள்ளம் ஒளிப்பன-(பிறர்மனத்தை அபகரிக்கும்) வஞ்சனைத்தன்மையை மறைத்துள்ளனவும், வெளிப்பட்டு ஓட பார்ப்பன - (விரைந்த நோக்கத்தால்) வெளியேவந்து ஓடிப்போக வழி பார்ப்பவைபோன்றவையும், சிவப்பு உள் ஊற -(உத்தமவிலக்கணமான சில ரேகைகளின்) சிவந்தநிறம் உள்ளே பொருந்த, வெளுப்பன - (சிலபாகம்) வெளுத்திருப்பவையும், கறுப்ப - (சிலபாகம்) கறுத்திருப்பவையும், ஆன - ஆகிய வேல் கணாள் - வேலாயுதம்போல் [நீண்டுநுனிகூரிய கொடிய] கண்களையுடையவளான, ஒருத்தி - ஒருமகள், உள்ளம் குளிர்ப்பொடு காண வந்தாள் - குளிர்ந்த மனக்களிப்புடனே (இராமனைப்) பார்க்க வந்து, வெதுப்பொடு கோயில் புக்காள் - (கண்டபின் அவனிடங்காதல்கொண்டு அவனைச் சேரப்பெறுமையாலாகிய) காமவெப்பத்துடனே (தன்) மாளிகையினுட் சென்றாள்; (எ - று.)

வெளிப்பட்டோடப்பார்ப்பன என்பதற்கு - (ஒளித்தகள்ளம்) வெளிப்பட்டுப்பரக்கப்பார்ப்பன என்று உரைத்தாருமுளர். பி - ம்:—[1] அளப்பக் கன்னம். [2] விளர்ப்பன. [3] குளிர்ப்பொடும். [4] வெதுப்பொடும்.　(கசு)

கஎ. *கருங்குழற் பாரம் வார்கொள் கனமுலை கலைசூ ழல்கு
னெருங்கின மறைப்ப வாண்டோர் நீக்கிடம் பெறாது விம்மும்
பெருந்தடங் கண்ணி காணும் பேரெழி லாசை தூண்ட
மருங்குலின் [1] வெளிக ளூடே வள்ளலை நோக்கு கின்றாள்.

(இ - ள்.) (தனக்குமுன்னேவந்து நெருங்கியுள்ள பலமாதர்களது), கரு குழல் பாரம்-கருமையான கூந்தலின் தொகுதியும், வார் கொள் கனம் முலை-கச்சையணிந்த பருத்த [புடைபரந்த] தனங்களும், கலை சூழ் அல்குல் - மேகலாபரணம் சுற்றிலும் அணியப்பட்டுள்ள (பரந்த) அல்குலும், நெருங்கின - நெருக்கமுற்றவையாய், மறைப்ப - (இராமன்திருமேனியை) மறைத்தலினால், ஆண்டு ஓர் நீக்கு இடம் பெறாது - (அக்குழல் முதலியவை யுள்ள) அந்த இடங்களிலே (பார்ப்பதற்குரிய) வெற்றிடவழியொன்றையும் பெறமாட்டாமல், விம்மும் - விசனத்தையடைந்த, பெரு தட கண்ணி - மிகவும் பெரிய கண்களையுடையாளொருமகள்,—பேர் எழில் காணும் ஆசை தூண்ட - (அவ்

விராமன்து) மிக்க அழகைப் பார்க்கவேண்டு மென்கிற விருப்பம் (தன்னை) ஏவுதலால், மருங்குலின் வெளிகள் ஊடே - (அம்மாதர்களது) நுண்ணிய இடைகளுள்ள வெளியிடங்களிலே, வள்ளலை நோக்குகின்றாள் - இராமனைப் பார்க்கின்றவளானாள்; (எ - று.)

"அகலல்குல்தோள் கண்ணென மூவழிப் பெருகி, நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி" என்றபடி பருத்திருக்கவேண்டிய அவயவங்கள் பருத்தும் சிறுத்திருக்கவேண்டிய அவயவங்கள் சிறுத்துமுள்ள அங்ககரமாதரது ஒப்பில்லாத உத்தமவிலக்கணம் இதனால் உணர்த்தப்பட்டது. பி - ம்:—[1]வெளியினூடே. (கஎ)

கஅ.—இராமன் உலாப்போன வீதிகளின் தன்மை.

*வரிந்த[1]வா ளனங்கன் வாளி மனங்[2]கழன் றனவு மாத [ஞ்
செரிந்தபூ [3]ணினமுங் கொங்கை வெயர்த்தபோ திழிந்த சாந்து
சரிந்தமே கலையு முத்துஞ் சங்கமுந் தாழ்ந்த கூந்தல்
விரிந்தபூந் தொடையு மன்றி வெள்ளிடை யரிதவ் வீதி.

(இ - ள்.) வரிந்த - (தனதுஉடையின்மேற்) கட்டிய, வாள் - வாளாயுதத்தையுடைய, அனங்கன் - மன்மதனது, வாளி - புஷ்பபாணங்கள், மனம் கழன்றனஉம் - (மகளிர்களது) நெஞ்சிலே தைத்து ஊடுருவி வெளிவிழுந்தவையும், மாதர் எரிந்த பூண் இனம்உம் - அம்மகளிர்களது (விரகதாபம் மிக்க உடம்பிலே படுதலால்) தீந்துசிந்துகிற ஆபரணங்களின் கூட்டமும், கொங்கை வெயர்த்த போது இழிந்த சாந்துஉம்-(அவர்கள்) தனங்கள் (காமநோயால்) வியர்வையடைந்தபோது (அங்குநின்று) கரைந்தொழுகிய சந்தனமும், சரிந்த - (உடனே மிக இளைத்துப்போன அம்மகளிருடம்பினின்று) கழன்று கீழ்விழுந்த, மேகலைஉம் - மேகலாபரணங்களும், முத்துஉம்-முத்துமாலைகளும், சங்கம்உம் - சங்குவளையல்களும், தாழ்ந்த கூந்தல் விரிந்த பூ தொடைஉம் - (அவர்களது) நீண்ட கூந்தல் (தளர்ந்து அவிழ்தலால் அதினின்று) வீழ்ந்த பூமாலைகளும், அன்றி - (என்னும் இவை எங்கும் கீழே இடைவிடாது கிடப்பனவே) அல்லாமல், அ வீதி - அந்த மிதிலாநகரத்து ராஜவீதிகளிலே, வெள் இடை அரிது - (கீழ்க்கூறிய இவற்றுள் ஒன்றாயினும் விழுந்திருக்கப்பெறாத) வெற்றிடம் (அப்பொழுது) இல்லையாயிற்று.

மாதர் என்பதைப் பிறவிடத்துங் கூட்டுக. எரிந்த - விளங்குகின்ற எனினுமாம். பி - ம்:—[1]தார். [2]கழன்றுகவும். [3]இளமென். (கஅ)

கக.—இராமனைக் கண்ட மாதர் தாம் தாம் கண்ட கண்ட உறுப்பில் தானே மனம்பதிந்தமை.

தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமல மன்ன
தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கைகண் டாரு மஃதே
வாள்[1]கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டா
[2]ரூழ்கொண்ட சமயத் தன்னா னுருவுகண் டாரை யொத்தார்.

(இ - ள்.) (அம்மகளிர்களுள்), தோள் கண்டார் - (இராமனது) தோளழகை (முந்திக்)கண்டவர்கள், தோள்ள கண்டார்-(அத்தோள்களினழகுக்கு ஒருஎல்லை இல்லாமையினால் அத்தோளைக்கண்டகண் பிறிதொன்றிற் செல்லாமைபற்றி அத்)தோளழகையே பார்த்துக்கொண் டிருந்தார்கள்; தோடு கழல் கமலம் அன்ன தாள் கண்டார் - அணிந்த வீரக்கழலையுடைய தாமரை மலர்களை யொத்த (அவ்வெம்பெருமானது) திருவடிகளின் அழகை (முந்திப்) பார்த்தவர்கள், தாள்ள கண்டார் - (அவ்வாறு) அத்திருவடிகளையே பார்த்துநின்றார்கள்; தட கை கண்டாரும் - பெரியதிருக்கைகளினழகை முந்திப்பார்த்தவர்களும், அஃதுஎ - அங்ஙனமே; [அவற்றையே விடாது பார்த்துக்கொண்டிருந்தார்கள்]; (ஆதலால்), வாள் கொண்ட கண்ணார் - வாளை யொத்த கண்களையுடைய மகளிர்களுள், வடிவினை முடிய கண்டார் யாரே - (அப்பிரானது) திருமேனியழகு முழுவதையும் பார்த்தவர் யாவருளர்? [எவரும்இல்லை]; (அங்ஙனம் பகவானதுசொரூபத்தை முழுவதும்பாராமல் ஒவ்வொருபகுதியைமாத்திரம் பார்த்தவர்கள்), ஊழ் கொண்ட சமயத்து அன்னான் உருவு கண்டாரை ஒத்தார் - (தாம்தாம் தனித்தனி ஒவ்வொரு) முறைமையைக் கொண்ட மதங்கள்பலவற்றிலேகூறப்படுகிற அவ்வெம்பெருமானதுவடிவங்கள் பலவற்றினுள் ஒவ்வொருவடிவத்தையே கண்ட ஒவ்வொரு மதத்தினரைப் போன்றனர்; (எ - று.)

இதனால், ஒவ்வொருமதத்துக்குஉரிய தெய்வம் ஒவ்வொன்றும் ஒன்றான பரமனது அங்கங்களேயா மென்பதும் கூறியதாயிற்று. ஒப்புயர்வற்ற இறைவனொருவன்தானே பலவகைமதங்களுக்குஉரிய பலதேவர்களின் வடிவமாகி நின்று அவ்வம்மதத்தினராற் பயபக்திவிசுவாசங்களுடனே செய்யப்படுகிற பூசைமுதலியவற்றைப் பெற்று அவ்வவர்க்கு நற்கதி அளிக்கிறா னென்பது, நூற்கொள்கை; "தொல்லையி னொன்றேயாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப், பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற் பரந்த தன்றே" எனக் கீழும் இவ்வுண்மைதோன்றக் கூறினர். சமயதெய்வங்களுள் ஒவ்வொன்றன் உருவத்தையாகிலும் முடிவுபோகக் காண்பது அரிதாதலின், அவ்வுபமானத்துக்குஏற்ப உபமேயத்திலும் மகளிர் ஒவ்வோருறுப்பினழகையும் முடியக்காணாராயினரென்க. வாள்கொண்ட, கொண்ட - உவமவுருபு. ஊழ் கொண்ட சமயம் - (ஒன்றோடொன்று) மாறுபாடுகொண்ட மத மெனினுமாம். இனி, நான்காமடிக்கு - எம்பெருமான் பெரியவிசுவரூபத்தைக் கொண்டுநின்ற அக்காலத்தில் அவ்வுருவத்தின் ஒவ்வொருபாகத்தையே கண்டவர்களை யொத்தார்களென்றுமாம்; ஊழ்-பெருமை. பி-ம்:—[1] வாள்கண்ட. [2] ஊழ்கண்ட. (கக)

உ0.—இராமனை ஒருத்தி உள்ளத்துக்கொண்டதைப்பற்றிய கவிக்கூற்று.

தையல் சிற்றிடை யாளொரு தாழ்குழ
லுய்ய மற்றவ ளுள்ளத் தொடுங்கினான்
வைய முற்றும் வயிற்றி னடக்கிய
வைய னிற்பெரி யாரினி யாவரே.

(இ - ள்.) தையல் - அழகுடையவளும், சிறு இடையாள் - நுண்ணிய இடையையுடையவளு மாகிய, ஒரு தாழ் குழல் - தாழ்ந்தகூந்தலையுடையா ளொருமகள், உய்ய - (வருந்தாமற்) பிழைத்திடும்படி, அவள் உள்ளத்து ஒடுங்கினன் - (இராமபிரான்) அவளது மனத்திலே அடங்கியிருந்தான்; வையம் முற்றும் வயிற்றின் அடக்கிய-உலகமுழுவதையும் (தன்)திருவயிற்றிலே (ஒருகாலத்து) அடக்கிவைத்த, ஐயனின் - தலைவனான அவ்வெம்பெருமானினும், பெரியார் - பெரியவர், இனி யாவர் - வேறு யாவருளர்? (எ- று.)

அடங்கியிருந்ததனற் பெருமை விளங்கு மென்பார் 'ஐயனிற் பெரியாரினியாவரே' என்றார். இது - தொடர்நிலைச்செய்யுட்குறிபணியின்பாற்படும். உலகங்களையெல்லாம் தன்திருவயிற்றிலடக்கவல்ல பெரியவன் அணுரூபமான மனத்தில் இயற்கையருளால் அடங்கியிருந்தானென்க.

உக.—இதுமுதல் பத்துக்கவிகள் - உலாச்சென்ற இராமனைக் கண்ட ஒவ்வொருத்தி பட்ட நிலையைத் தனித்தனிக் கூறும்.

அலம்பு பாரக் குழலியொ ராயிழை
சிலம்பு மேகலை [+]யும்மொலி செய்திட
நலம்பெய் கொம்பி னடந்துவந் தெய்தினள்
புலம்பு சேடியர் கைம்மிசைப் போயினள்.

(இ - ள்.) அலம்பு பாரம் குழலி - (மிகுந்தபாரத்தால்) அசைகின்ற தொகுதியான கூந்தலையுடையவளாகிய, ஓர் ஆய் இழை - ஆராய்ந்தெடுத் தணிந்த ஆபரணங்களை யுடையா ளொருமகள், சிலம்புஉம் மேகலைஉம் ஒலி செய்திட (தனது) சிலம்பென்னுங்காலணியும் மேகலையென்னும்இடையணியும் ஒலித்தலைச்செய்யும்படி, நலம் பெய் கொம்பின் - அழகுமிகுந்த பூங்கொம்புபோல, நடந்து வந்து எய்தினள் - (இராமனைக் காணும்பொருட்டு ஒழுங்காக)நடந்துவந்து சேர்ந்தவள்,—(வந்தவிடத்துஇராமன ழகைக்கண்டு காமுற்று அவன்பக்கல்கொண்ட விரகவேதனையாற் பரவசப்பட்டு), புலம்பு சேடியர் கைம் மிசை போயினள்-(தன்வருத்தத்தைக்கண்டு இவளுக்கு என்னாகுமோவென்று)சோகிக்கிற தோழிமாரது கைகளின்மேலே சென்றாள்.

தோழியர் இரண்டுபுறத்துங் கைகொடுத்துத்தாங்க அக்கைகளின் ஆதாரத்திலே போனா ளென்பதாம். அலம்பு - (பூக்களின் தேன்) தளும்புகிற என்றும், (வண்டுகள்) ஒலிக்கின்ற வென்றுங் கொள்ளலாம். பி -ம்:— [1]பேரொலி. (உக)

உஉ. *அருப்பு மென்முலை யாளங்கொ ராயிழை
யிருப்பு [1]நெஞ்சினை யேனுமொ ரேழைக்காப்
பொருப்பு வில்லைப் பொடிசெய்த புண்ணியா
கருப்பு வில்லிறத் தாட்கொண்டு காவென்றாள்.

(இ - ள்.) அங்கு-அவ்விடத்து [அல்லது அப்பொழுது],அரும்பு மெல் முலையாள்-(தாமரை அல்லது கோங்கின்) அரும்புபோன்ற மெல்லிய தனங்களை யுடையவளாகிய, ஓர் ஆய் இழை - ஆராய்ந்தணிந்த ஆபரணங்களையு

டையா ளொருமகள்,—(இராமனைநோக்கி), 'இரும்பு நெஞ்சினை என்னும் - இரும்புபோல்வலிய மனத்தை யுடையா யாயினும், ஓர் ஏழைக்கு ஆ - ஒரு இளம்பெண்ணுக்காக [சீதையைமணஞ்செய்யும்பொருட்டு], பொருப்பு வில்லை பொடி செய்த புண்ணியா - மகாமேருமலையின் அமிசமான சிவதனுசை யொடித்தெறிந்த நல்வினையுடையவனே! கரும்பு வில் இறுத்து ஆள்கொண்டு கா - (மன்மதனது) கரும்பாகிய வில்லையும் ஒடித்து(என்னையும்) அடியவளாக [மனைவியாக] அங்கீகரித்துக் காத்தருள்வாயாக', என்றாள்-என்று கூறினாள்; (எ - று.)

இராமன் செல்லும்போது கண்ட ஒருத்தி இங்ஙனம் முன்னிலைப்படுத்திக் கூறியது, இது. இனி, இராமன் சென்றபின்பு உருவெளிப்பாட்டால் இராமபிரான் தன்கண்ணெதிரே காணப்படுதலாற் கூறியதாகக் கொள்வாருமுளர். மன்மதனதுமேனியை எரித்தழித்த ஆற்றலுடைய சிவபிரானது வில்லை ஒடித்தெறிந்தவனுக்கு அச்சிவனால் எளிதிலழிக்கப்பட்ட மன்மதனது வில்லை யொடித்தல் அரியதொருதொழிலாகா தென்பதும், மிக வலிய மலைவில்லைப் பொடிசெய்தவனுக்கு மிகஎளியகருப்புவில்லை முறித்தொழித்தல் எளிதே யென்பதும் தோன்ற, இங்ஙனங் கூறினாள். எந்த மகளிரிடத்தும் அருள்புரியாதவனாயின் உன்னை நான் நிர்ப்பந்திக்கச் சிறிதும் நியாயமிராது: அங்ஙனமின்றி, ஒருமகளுக்கு உதவினவனாதலால், மற்றொரு மகளான எனக்கும் உபகரித்தால் வருங் குற்றம் யாதோ வென்பாள், 'பொருப்புவில்லைப் பொடிசெய்தபுண்ணியா'என்றுவிளித்தாள்: கருத்துடையடைகோளியணி. அரும்பு முதலிய மென்றொடர்கள் வன்றொடராயின. ஏழை - மடமைக்குணமுடையவள்: மெல்லியலாள். பின்மூன்றடிகள், சில பிரதிகளில் "இருப்பு நெஞ்சினராயு மொரேழைக்காப், பொருப்புவில்லைப் பொடிசெய்த புண்ணியர், கருப்புவில்லிறக் கற்றிலரோவென்றாள்" என்று காணப்படுகின்றன. பி - ம்:—[1]நெஞ்சினையேயும். (உஉ)

உ௩. மைத வழ்ந்த கருங்கணொர் வாணுதல்
செய்த வன்றனித் தேர்மிசைச் சேறல்விட்
டெய்த [1]வந்தெதிர் நின்றமை தானிது
கைத வங்கொல் கனவுகொ லாமென்றாள்.

(இ - ள்.) மை தவழ்ந்த கரு கண் - மைநிரம்பத்தீட்டப்பட்டுள்ள (இயற்கையிற்)கரிய கண்களை யுடைய, ஓர் வாள் நுதல் - ஒளியமைந்தநெற்றியையுடையாளொருமகள், 'செய் தவன் - செய்துமுடித்துச் சித்திபெற்ற தவத்தையுடைய இவ்விராமன், தனி தேர்மிசை சேறல் விட்டு - ஒப்பற்ற இரதத்தின்மேலே செல்லுதலை யொழிந்து, எய்த வந்து எதிர் நின்றமை இது - நெருக்கமாகவந்து என்கண்ணெதிரில் நின்றதாகிய இச்செய்கை, கைதவம் கொல்-மாயைதானோ? (அல்லது), கனவு கொல் - சொப்பனாவத்தைதானோ?' என்றாள் - என்றுகூறினாள்; (எ - று.)—தான், ஆம்-அசைகள்.

இங்ஙனங் கூறியது உருவெளித்தோற்றத்தில் இராமனைக்காணுதலாலென்க. இத்தகைய பேரழகும் பெருமிதமும் முதலியன மூற்

பிறப்புக்களிலாவது இப்பிறப்பிலாவது அரும்பெருந்தவம்புரிந்தார்க்கு அன்றிப் பிறர்க்கு எளிதிற்கிடைப்பனவல்லவென்னுங் கருத்தால், 'செய் தவன்' என்றாள். செய் தவன் - தவஞ்செய்தவன்; இது - வடமொழிநடை: 'வீதராகர்' என்பதுபோல. இனி, செய்தவன் என்பதற்கு - (என்னை இங்ஙனஞ்) செய்தவன் என்று உரைத்தலும் ஒன்று. தனி - வேறொருவருந்துணையில்லாமல் என்றுங் கொள்ளலாம்; இங்ஙனங் கூறுதல், புருஷோத்தமனான இராமபிரானொருவனையொழிய அவன்புடையிற்செல்லும் பலருந் தன்கண்ணில் ஒருபொருளாகப் புலப்படாததனாலென்க. பி - ம்:—[1]வந்து நின்றானுமெய்தாதிது. (உங)

உச. * மாதொ ருத்தி மனத்தினை யல்லதோர்
தூது பெற்றில ளின்னுயிர் சோர்கின்றாள்
போத ரிக்கட் பொலன்குழைப் பூண்முலைச்
சீதை யெத்தவஞ் செய்தன ளோவென்றாள்.

(இ - ள்.) மாது ஒருத்தி - ஒரு மகள், மனத்தினை அல்லது ஓர் தூது பெற்றிலள் - (தன்) மனத்தைத்தவிர (இராமனிடம் விரைந்து செல்ல) வேறொருதூதையும் பெறாதவளாய், இன் உயிர் சோர்கின்றாள் - (இராமவிரகத்தால் தனது) இனிமையானஉயிர் தளர்ந்தொழியப் பெறுகிறவள்,—'போது - தாமரைமலர்போன்ற, அரி - (சிவந்த) இரேகைபரவிய, கண் - கண்களையும், பொலன் குழை - பொன்னாலாகிய குழையென்னுங் காதணிகளையும், பூண் முலை - ஆபரணங்களையணிந்த தனங்களையுமுடைய, சீதை - சானகிப்பிராட்டி, எ தவம் செய்தனள் ஓ - (இவ்விராமனை மணஞ்செய்துகொள்ளுதற்கு) என்னபெருந்தவத்தைச் செய்தாள்கொல்லோ?' என்றாள் - என்று கூறிஇரங்கினாள்; (எ - று.)

சீதை செய்த தவம் இன்னதென்று தெரிந்தால் யானும் அதனையேசெய்து இவனைக்கூடுவேனென்பது,உட்கோள். சீதையின்கண்கள் இராமனழகைக் களிக்கக் கண்டும் அவள்காதுகள் அவனுடைய இன்சொல்லை மகிழக் கேட்டும் அவள்கொங்கைகள் பூரிக்க அவனுடம்பை அணைந்தும் இங்ஙனம் பயன்படுவனவாமென்ற கருத்தால், 'போதரிக்கட் பொலன்குழைப் பூண் முலை' என்று அடைமொழி கொடுத்தாள். யாதொருதூதுமின்றிச் சீதை இராமனைப் பெற்றதனால், அது எத்தவத்தின்பயனோஎன வியக்கவேண்டியதாயிற்று. 'செய்தனள்' என இறந்தகாலத்தாற் கூறியதனால், முன் பலபிறப்புக்களிலுஞ்செய்துள்ள தவங்களெல்லாம் இவ்வொரு பிறப்பிலே வந்து பலித்தனவாதல்வேண்டு மென்பதாம். 'செய்தனளோ'என்ற ஓகாரத்தால், அரியதவத்தைவருந்திச் செய்தற்கு ஏலாதது பிராட்டியின் தேகசௌகுமாரியமென இரங்கியவாறும். "நெஞ்சை யொளித்தொரு வஞ்சகமில்லை," "ஆரிருக்கினுமென் னெஞ்சமல்லதொரு வஞ்சமற்றதுணையில்லை" என்பவாதலால், மனத்தினையல்லதோர் தூதுபெற்றில ளாயினாள்; அன்றியும், எல்லாமகளிரும் இவள்போலவே இராமவாஞ்சைகொண்டுள்ளா ராதலால், தூதுசெல்ல ஒருத்தியும் அமைந்திலளென்க. (உச)

உரு. பழுதி லாவொரு பாவையன் னாள்பதைத்
தழுது வெய்துயிர்த் தன்புடைத் தோழியைத்
தொழுது சோர்ந்தயர் வாளிந்தத் தோன்றலை
யெழுத லாங்கொலிம் மன்மத னாலென்றாள்.

(இ - ள்.) பழுதுஇலா ஒரு பாவை அன்னாள் - (எந்தவுறுப்பிலும் இலக்கணக்) குற்றம் (சிறிதும்) இல்லாத சித்திரப்பிரதிமையொன்றை (அழகில்) ஒத்தவளொருமகள், பதைத்து - (இராமவிரகத்தால்) துடித்து, அழுது - சோகித்து, வெய்து உயிர்த்து - வெப்பமுடையதாகப் பெருமூச்சு விட்டு, சோர்ந்து - தளர்ந்து, அயர்வாள்-வருந்துபவளாய், அன்பு உடை தோழியை தொழுது - (தன்னிடத்தில்) அன்புடையவளும் (தன்னுடைய) அன்புக்கு விஷயமானவளுமான (தனது) உயிர்த்தோழியொருத்தியை நோக்கிக் கை கூப்பிவணங்கி, இந்த தோன்றலை இ மன்மதனால் எழுதல் ஆம் கொல் என்றாள் - இந்த இராமனை (அழகிற் சிறந்த) இந்தமன்மதனைக் கொண்டு(சித்திரத்தில்) எழுதுவித்தல் (உன்னால்) ஆகுமாஎன்று வினவினாள்; (எ - று.)

எழுதல்=எழுதுவித்தல். தன் கருத்துக்கு ஒத்த தலைவனான இராமனை நேரில்தழுவி ஆனந்தமடையக்கூடாவிடினும் அவனுடைய திருமேனியுருவத்தைச் சித்திரத்தில் எழுதுவித்து அதனைக் கண்டாயினுங் களித்து உய்ந்திருக்கக் கருதினாளொரு தலைமகள், அதற்குஏற்ற சித்திரக்காரன் மன்மதனேயென்று துணிந்து, அவனைக்கொண்டெழுதுவித்தற்குத்தக்க முயற்சி செய்யுந் தருணத்தில் தனதுதேகம் மிகவும் பரவசப்படுதலினால், தோழியை அத்தொழிலை நிறைவேற்றும்படி வேண்டினாளெனக. காரியகௌரவத்தால், தன்னினும் இழிந்த தோழியைத் தொழுதாள். இனி, தொழுது - (இராமனைக்குறித்துத் திக்குநோக்கித்) தண்டன்சமர்ப்பித்து என்று உரைத்து, தோழியை (நோக்கி) 'இந்தத்தோன்றலை இம்மன்மதனால் எழுதலாங்கொல்' என்றதாகவுங் கொள்ளலாம்: இவ்வுரைக்கு - நம்மால் வரையறுத்தறியப்பட்ட அழகையுடைய மன்மதனாலும் இராமனது எல்லையற்ற சௌந்தரியத்தையுடைய திருமேனி எழுதவொண்ணாதென்பது கருத்து. 'இம்மன்மதன்' என்றது, எளியாரை வலிதொலைக்கிற அவனது ஆற்றலின்மை தோன்ற நின்றது. அழுதல் முதலியன-காமதாபத்தாலாகும் மெய்ப்பாடுகள்.

உசு. வண்ண [1]வாயொரு வாணுதன் மானிடற்
கெண்ணுங் காலிவ் விலக்கண மெய்திட
வொண்ணு மோ[2]வி துணர்த்துகின் றே[3]னிவன்
கண்ண னேயிது கண்டிரும் பின்னென்றாள்.

(இ - ள்.) வண்ணம் வாய் - அழகியவாயையுடைய, ஒரு வாள் நுதல் - ஒள்ளிய நெற்றியை யுடையாளொரு மகள்,—(பிறரைநோக்கி), 'எண்ணுங்கால் - ஆராயுமிடத்து, மானிடற்கு - மனிதனொருவனுக்கு, இ இலக்கணம் - இப்படிப்பட்டவடிவழகையுடைய உத்தமலட்சணம், எய்திட ஒண்ணுமோ - பொருந்தக்கூடியதோ? [அன்றென்றபடி]; (ஆதலால்), இவன் கண்ணனே -

இவன் திருமாலேயாவன்; இது உணர்த்துகின்றேன் - இந்தவிஷயத்தை (இப்பொழுது அனுமானப்பிரமாணத்தாற்கண்டு உங்களுக்குத்) தெரிவிக்கின்றேன்; இது பின் கண்டிரும் - இதன்உண்மையை (நீங்கள்) பின்பு பிரதியட்சமாகப் பார்த்திடுவீர்', என்றாள் - என்று கூறினாள்; (எ - று.)

மானிடர்க்கு இவ்விலக்கண மெய்திடவொண்ணாமை, பிரதியட்சப் பிரமாணத்தால் அறியப்பட்டது; அதுகொண்டு அனுமிக்கப்பட்டது, இவன் கண்ணனேயென்பது. ஏ - தேற்றத்தோடு பிரிநிலை. இவ்வாய்வார்த்தை மற்றையெல்லோர்வார்த்தையினும் மிக அழகிதாயிருத்தலால், இவளுக்கு 'வண்ணவாய்' என்ற அடைமொழியைக் கவி கொடுத்தார். பி - ம்:—[1]வாள் பொரு. [2]ஒன்று. [3]மலர். (உசு)

உஎ. கனக நூபுரங் கைவளை யோடுக
மனநெ கும்படி வாடியொர் வாணுத
லனக னிந்நக ரெய்திய [1]தாதியிற்
[2]சனகன் செய்த தவப் [3]பய னாலென்றாள்.

(இ - ள்.) ஓர் வாள் நுதல் - ஒள்ளிய நெற்றியை யுடையா ளொருமகள்,—கனகம் நூபுரம் - (தனது) பொன்மயமான காற்சிலம்புகளும், கைவளையோடு - கையிலணிந்த வளையல்களும், உக - (உடம்பிளைத்ததனால்) கழன்றுவிழவும், மனம் நெகும்படி - நெஞ்சம் நெகிழ்ந்துருகவும், வாடி - வாட்டமடைந்து, 'அனகன் இ நகர் எய்தியது - குற்றமற்றவனான இவ்விராமபிரான் இந்தமிதிலாபட்டணத்தை யடைந்தது, ஆதியில் சனகன் செய்த தவம் பயனால் - இச்சனகராசன் முன்செய்திருந்த தவத்தின் பயனாலேயாகும்', என்றாள் - என்று கூறினாள்; (எ - று.)

இராமன்வந்தஇடம் சனகராசதானியாதலாலும், இவனால் மணஞ்செய்யப்படும் பிராட்டி சனகன்மகளாதலாலும், 'சனகன்செய்ததவப்பயனால்' என்றது. [2]சனகர் என்ற பாடத்துக்கு, இவ்விராமன் வருகைக்கு ஏற்றகாரணமாகக்கூடியது ஒருவன்செய்த தவத்தின்பயனாகா தென்னுங் கருத்தால், சனகர் எனப் பன்மையாகக் கூறினதாகக்கொள்க; சனகர் - விதேகவமிசத்தவர்; உயர்வுப்பன்மையுமாம். பி - ம்:— [1]ஆதலின். [3]பயனும். (உஎ)

உஅ. நனிவ ருந்தி நலங்குடி [1]போயிடப்
பனிவ ருங்கணோர் பாசிழை யல்குலாண்
முனிவ ருங்குல மன்னரு மொய்ப்பறத்
தனிவ ருங்கொல் கனவின் றலையென்றாள்.

(இ - ள்.) பனி வரும் கண் - நீர்த்துளி பெருகுகின்ற கண்களையும், ஓர் பாசு இழை அல்குலாள் - பசும்பொன்னாலாகிய (மேகலைமுதலிய) ஆபரணங்கள் சூழ்ந்த இடையையுமுடையா ளொருமகள்,—நலம் குடி போயிட - (தன்) அழகுமுழுவதும் (இவ்வளவுநாளாய்த் தான்) குடியிருந்த [வசித்த] இடமான தன்னுடம்பைவிட்டு நீங்கிப்போம்படி, நனி வருந்தி - (இராமகாமத்தால்) மிக வருத்தமுற்று, '(இவ்வள்ளல்), முனிவர்உம் குலம் மன்னர்உம்

மொய்ப்பு அற - பலமுனிவர்களும் உயர்குலத்தில்தோன்றிய பல அரசர்களும் (இப்பொழுது சூழ்ந்திருத்தல்போலச்) சூழ்தலில்லாமல், கனவின்தலை- (என்னுடைய) கனவினிடத்து, தனி வரும் கொல் - தனியாய்வருவானோ?' என்றாள் - என்று கூறினாள்; (எ - று.)

யான் நினைக்கிறபடி தனியேவந்தால் அவனை நான் வலியத்தழுவி ஆனந்திப்பே னென்பது, குறிப்பெச்சம். கனவிலாயினும் அப்பிரானது ஆலிங்கனத்துக்கு விரும்பினாள். இதனால், அவளது காதமிகுதி செவ்விதின் விளங்கும். பாசிழை - பசுநிறப் பட்டாடையு மாம். பி - ம்:—[1]போய்விட.().

உகூ. புனங்கொள் கார்மயில் போலியொர் [1]பொற்கொடி
மனங்கொள் காதன் மறைத்தலை யெண்ணினா
ளனங்க வே[2]ள தறிந்தன னற்றந்தான்
மனங்கள் போல முகமு [3]மறைக்குமே.

(இ - ள்.) புனம் கொள் கார் மயில் போலி-காட்டினிடத்தை (த் தனக்குத்) தங்குமிடமாகக் கொண்டு வசிக்கிற கார்காலத்துக்களிக்கும் மயிலையொப்பவளாகிய, ஓர் பொன் கொடி - பொன்னாலாகிய பூங்கொடிபோல்வா ளொருத்தி, மனம் கொள் காதல் மறைத்தலை எண்ணினாள் - (இராமன் விஷயத்தில் தன்)மனத்திலேகொண்ட ஆசையை வெளித்தோன்றாமல் அகத்தேமறைத்துவைத்தலைக் கருதினாள்; அனங்க வேள் - மன்மதகுமரன், அது அறிந்தனன் - அம்மறைபொருளை அறிந்துவிட்டான்; (எங்ஙனமெனின்), அற்றம் தான் மனங்கள் போல முகமும் மறைக்கும்ஏ-இரகசியப்பொருளை மனங்கள்போல முகங்களும் மறைப்பனவாமோ? [ஆகா என்றபடி].

இராமனிடம் தான் காதல்கொண்டதை ஒருத்தி மறைக்கத்தொடங்கினாளாயினும், அவள் முகக்குறிப்பால் அதனை அறிந்து மன்மதன் அவளை வருத்தத்தொடங்கினானென்பதாம். "முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங், காயினுந் தான்முந் துறும்", "முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி, யுற்ற துணர்வார்ப் பெறின்"என்பவற்றிற்கு ஏற்ப 'அற்றந்தான் மனங்கள்போல முகமு மறைக்குமே' எனப்பட்டது. பின்வாக்கியத்திற் கூறிய பொருள் முன்வாக்கியத்திற் கூறிய பொருளைவிளக்கியதனால், இது-தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம். இராமனது காளமேகம்போன்ற கரியதிருமேனியைக் கண்டு களித்ததனால், இவளுக்குக் கார்காலத்துக் களிக்கும் மயில் உவமிக்கப்பட்டதென்க. கார்காலத்து மயில்களித்தல், இயல்பு. ஏ - எதிர்மறை. பி - ம்:—[1]பொற்றொடி. [2]அனங்கனன்ன. [3]மறைக்குமோ. (உகூ)

௩0. *இணைநெ டுங்க ணை [1]ரிந்து முகத்திடு
வணைய ணைந்திடி யுண்ட வராவெனப்
புணர்ந லங்கிளர் கொங்கை புழுங்கிட
வுணர்வ ழுங்க வுயிர்த்தன ளாவியே.

(இ - ள்.) இணை நெடு கண் - (தம்மில் ஒன்றோடொன்றொத்த) இரண்டு நீண்ட கண்களையுடைய,—ஓர் இந்துமுகத்தி - சந்திரனையொத்த முகத்தையுடையாளொருமகள்,—(இராமனைக்கண்டு காமவிகாரங்கொண்டு தளர்ந்து நிற்கவும் இருக்கவும் மாட்டாமல்), பூ அணை அணைந்து - மலர்களைக் கொண்டு பரப்பப்பட்ட படுக்கையைச் சேர்ந்து, இடி உண்ட அரா என - இடியோசையைக் கேட்ட பாம்புபோல, புணர் நலம் கிளர் கொங்கை புழுங்கிட - (ஒன்றோடொன்று) நெருங்கிய அழகுமிக்குவிளங்குகின்ற (தனது) தனங்கள் வியர்க்கவும், உணர்வு அழுங்க - அறிவு கெடவும், ஆவி உயிர்த்தனள் - பெருமூச்செறிந்துகொண்டிருந்தாள்; (எ - று.)

பூஅணை - புஷ்பசயனம்; காரணப்பெயர். இடியோசையைக் கேட்ட மாத்திரத்திற் பாம்பு மிகஅஞ்சி அழியு மென்பது, நூற்றுணிபு பி - ம்:—[1] ஏந்திழையேந்து. (கூo)

கூக.—நங்கைமார் வருந்துவதுதறித்து இரங்கிய கவியின் கூற்று.

ஆம்ப லொத்தமு தூறுசெவ் வாய்ச்சியர்
தாம்ப தைத்துயி ருட்டடு மாறுவார்
தேம்பு சிற்றிடைச் சீதையைப் போற்சிறி
தேம்பல் [1]பெற்றில ரெங்ஙன முய்வரே.

(இ - ள்.) ஆம்பல் ஒத்து - செவ்வாம்பல்மலரைப் போன்று, அமுது ஊறு - அமிருதம்போன்றஇனிமைசுரத்தற்குஇடமான, செவ் வாய்ச்சியர் - சிவந்த அதரத்தையுடைய அம்மகளிர்பலரும்,—தாம் பதைத்து-தாம் (தனித்தனி இராமவாஞ்சையால் மனமும் உடம்புந்) துடித்து, உள் உயிர் தடுமாறுவார் - உடம்பினுள்ளே உயிர் நிலைகலங்குதலை யடைபவரானார்கள்; தேம்பு சிறு இடை - (மற்றையவயவங்களின்பாரத்தால்) வருந்துகிற (இயற்கையிற்) சிறிய இடையையுடைய, சீதையை போல் - சானகிப்பிராட்டியைப்போல, ஏம்பல் - மகிழ்தற்குக் காரணத்தை, சிறிது பெற்றிலர் - சிறிதும்பெறாத இவர்கள், எங்ஙனம் உய்வர்-எவ்வாறு பிழைத்திடுவர்? (எ - று.)

இது, தொடர்நிலைச்செய்யுட்குறிப்பணியின்பாற்படும். இராமபிரான் சிவதநுசை முறித்ததனால் தனக்கேகொழுநனாவா னென்ற தெளிவு உண்டானதனால், சீதை மகிழ்ந்து பிழைத்திருக்கலாயிற்று; இம்மகளிர்களுக்கு அப்படிப்பட்ட ஆறுதலொன்று மில்லாமையால், பிழைத்தல் அரிதா மென்பதாம். ஏம்பல்-காரியம், காரணமாகஉபசரிக்கப்பட்டது. பி - ம்:—[1] உற்றிலர்.

கூஉ.—ஒருத்தியின் இரக்கமொழி.

வேர்த்து மேனி தளர்ந்துயிர் விம்மலோ
டார்த்தி யுற்ற மடந்தைய ராரையுந்
தீர்த்த [1]னித்தனை சிந்தையிற் செங்கணிற்
[2]பார்த்தி லானுட் பரிவில னேவென்றாள்.

(இ - ள்.) '(இராமவிஷயத்திற் காதல்கொண்டு அதனால் ஒருமகள்), மேனி வேர்த்து - உடம்பு வியர்வையடைந்து, உயிர் தளர்ந்து - உயிர் நிலைகுலையப்பெற்று, விம்மலோடு - துயரத்துடனே, ஆர்த்தி உற்ற - வருந் துதல்மிக்க, மடந்தையர் ஆரைஉம் - மகளிரெவரையும், தீர்த்தன் - பரிசுத்த னை இவ்விராமன், செம்கணின் சிந்தையின் இத்தனை பார்த்திலான்-(தனது) சிவந்த திருக்கண்களால் சிறிதும் காதலோடு நோக்கினானுமில்லை (தனது) திருவுள்ளத்தாற் சிறிதேனும் கருதினானு மில்லை; உள் பரிவு இலன்ஓ - (அப்பிரான்)மனத்தில் அன்பு (சிறிதும்) இல்லாதவனோ?' என்றாள் - என்று கூறினாள்; (எ - று)

ஏகபத்திநீவிரதமுடையவனாதலால், இராமன் மடந்தையராரையுஞ் சிந் தையிற் செங்கணிற் பார்த்திலானாயினான்; இதுபற்றியே இவனை 'தீர்த்தன்' என்றது. கண்ணாற்கண்டபின்பு மனத்தாலாசைப்படுதல் முறைமையாயி னும், புறத்துறுப்பாகிற கண்ணின் காட்சிச்செய்கைக்கு அகத்துறுப்பாகிய மனத்தின் கருத்துநிகழ்ச்சி காரணமாதலால், அதனை முன்வைத்து 'சிந்தை யிற் செங்கணிற் பார்த்திலான்' என்றது. தன்பாற் காதல் கொண்டவ ரைத் தான் காதலியாமை சிறிதும் அன்பில்லாமை யென்ற கருத்தால், 'இத்தனைபரிவிலனோ' என்றாள். இனி, போன செய்யுளையும் இச்செய்யுளை யும் ஒருதொடராக்கி, ஒருத்தி இரங்கிக்கூறியதாக உரைப்பினும் அமை யும். பி - ம்:—[1] எட்டுணை, நிந்தனை. [2] பார்த்திலன் னுட்பரிவு. (௩௨)

௩௩.—மடவார் பலருங் காமங்கொண்ட நிலை.

வையம் பற்றிய மங்கைய ரெண்ணில
ரையன் பொற்புக் களவிலை யாதலா
லெய்யும் பொற்சிலை மாரனு மென்செய்வான்
கையம் பற்றுடை வாளினுங் கைவைத்தான்.

(இ - ள்.) வையம் பற்றிய மங்கையர் எண் இலர் - அந்நகரத்தினிடத் திற்பொருந்தின மாதர்களோ அளவில்லாதவர்கள்; ஐயன் பொற்புக்கு அளவு இலை - இராமனது சௌந்தரியத்துக்கோ ஒரு எல்லையில்லை; ஆதலால் - ஆகையால், எய்யும் பொன் சிலை மாரன்உம்-(அம்மாதர்களின்மேல்)அம்பெய் கிற அழகிய வில்லையுடைய மன்மதனும், என் செய்வான் - யாதுசெய்வான்? கை அம்பு அற்று - (தன்) கையிலுள்ள மலரம்புகளெல்லாம் ஒழிந்துபோய், (அதனால்), உடைவாளின்உம் கை வைத்தான் - (தனது இடையுடையின் மேல் இறுக்கிக்கட்டப்பட்டுள்ள) உடைவாளையும் எடுத்து (அம்மாதர்மேல் எறிதற்பொருட்டு) அதிலுங் கைவைத்தான்; (எ - று)

இராமனது அளவற்றசௌந்தரியத்தில் ஈடுபட்டுக் காமநோய்கொள் ளாத மகளிர் அங்குஇல்லையாயின ரென்பதாம். ஈற்றடி - வருணனைமுகத் தால், மன்மதனது கைசலியாத போர்த்திறத்தை உணர்த்திற்று. வையம் - பூமி. இனி, வையம்பற்றியமங்கையர் என்பதற்கு - (இராமனைக்காணுமாறு அவன்) தேரைச்சூழ்ந்து தடுத்த மகளிரென்று உரைகூறலுமாம். போர்முத லிய பெருந்தொழிலொன்றை இடைவிடாது செய்பவர் தொழில் செய்யுங்

காலத்துக் கைவழுக்குற்றால் மணலைக் கைக்கொண்டு திமிர்ந்து அவ்வழுக்கை ஒழித்துப் பின்பு தமது தொழிலைச்செய்யும் இயல்பின்படி, மலரம்புகளிலுள்ள தேன்வழிதலாற் கைவழுக்குற்ற மன்மதன் அம்மலரம்பையொழித்துத் தனது உடைவாளாகிய தாழம்பூவின் பராகத்தைத் திமிர்தற்கு அதிற் கைவைத்ததாக இச்செய்யுளின் ஈற்றடிக்கு விசேஷார்த்தங் கூறுவர். (ந௩

ந௪.—மண்ணுலகத்து மாதரன்றி விண்ணுலகத்து மாதரும் இராமனிடத்துக் காதல்கொண்டமையைக் கூறுங் கவிக்கூற்று.

நான வார்குழ ஞரிய ரோடலால்
வேனில் வேளொடு மேலுறை வார்களோ
டான பூச லறிந்தில மம்புபோய்
வான நாடியர் மார்பினுந் தைத்தவே.

(இ - ள்.) நானம் வார் குழல் நாரியரோடு அலால் - கஸ்தூரிப்புழுகையணிந்த நீண்ட கூந்தலையுடைய அந்நகரத்து மகளிரோடு (மன்மதனுக்கு நடந்த போரையே) அல்லாமல், வேனில் வேளொடு மேல் உறைவார்களோடு ஆன பூசல் அறிந்திலம் - வசந்தகாலத்துக்குரிய மன்மதனுக்கு மேலுலகத்தில் வாழ்கிற தெய்வப்பெண்களோடு நடந்த போரை (விவரித்துச்சொல்ல) அறிந்தோமில்லை; (ஆயினும்), அம்பு போய் வானம் நாடியர் மார்பின்உம் தைத்த - மன்மதபாணங்கள் சென்று ஆகாயத்துள்ள சுவர்க்கலோகத்தை இடமாகவுடைய தெய்வப்பெண்களது மார்புகளிலும் பாய்ந்தன.

இராமபிரான் இங்ஙனம் உலாப்போதலைத் தேவமாதர்களும் ஆகாயத்திலேவந்துகண்டு அவனிடத்துக் காதல்கொண்டார்களென்பதாம். மன்மதனுக்கு வசந்தகாலத்திலே போர்த்தொழிலில் ஊக்கம்மிகுதியாக உண்டாவதுபற்றி அவன் அப்போது யாவரையும் மிக்ககாமவருத்தமடையச்செய்தலால், 'வேனில்வேள்' எனப்பட்டான்; இங்கே, வேனில் - இளவேனில். வேளொடு - உருபுமயக்கம். மானிடர் தன்மையை யறிந்திருத்தல்பற்றி இராமபிரான் உலாச்செய்கையில் இம்மண்ணுலகத்து மங்கையர் பட்ட பாட்டைத் தம்மால் ஒருவாறு விவரித்துக்கூற இயன்றது; அங்ஙனம் தேவமாதர்களின் மனநிலையை யறிந்து கூறுதல் மானுடரான தமக்கு இயலாததுபற்றி வானுலகத்து மங்கையரும் மன்மதபாணத்துக்கு இலக்காயினரென்று இவ்வளவு சொல்ல வியலுமேயல்லாது மற்றைப்படி அவர்கள் பட்ட பாட்டைத் தம்மாற் சொல்ல வியலாதென்பார் 'மேலுறைவார்களோடான பூசலறிந்திலம்' என்றார். (ந௪)

ந௫.—ஒருத்தி இராமனைப் பழித்தல்.

[1] மருண்ம யங்கு மடந்தையர் மாட்டொரு
பொருண யந்திலன் போகின்ற தேயிவன்
கருணை யென்பது கண்டறி யான்பெரும்
பரிணை தன்கொல் படுகொலை யானென்றாள்.

(இ - ள்.) 'மருள் மயங்கும் மடந்தையர்மாட்டு - (தன்விஷயத்தில்) மோகத்தால் மயங்குகிற மகளிரெவரிடத்தும், ஒரு பொருள் நயந்திலன் - ஒருபொருளையும் விரும்பிப்பெறாதவனாய், போகின்றதுஏ-(இவன்இங்ஙனஞ்)

செல்லுகிறது தகுதியோ? இவன் கருணை என்பது கண்டு அறியான் - இவன் அருளென்னுங் குணத்தின் தன்மையைச் சிறிதும் அனுபவித்தறிகிறு னில்லை; பெரு பரிணதன் கொல் - (மகளிரைச் சிறிதும்விரும்பாத இவன் காமமொழித்த) சிறந்த தத்துவஞானியோ? (சீதாவிவாகத்தின்பொருட்டுச் செல்கின்றதனால் அப்படிப்பட்டவனல்லன்போலும்); (பின்னை எவ்வகை யான் எனின்), படு கொலையான் - கொடிய கொலைத்தொழிலைச்செய்பவனு யிருத்தல்கூடும்,' என்றாள் - என்றுகூறினாள், (ஒருத்தி); (எ - று.)

மடந்தையர்களுடைய உடல் உயிர் செல்வம் முதலிய பொருள்கள் பலவற்றுள் இவன் எதைக்கேட்டாலும் அவர்கள் கொடுத்தற்குச்சித்தராயிரு த்தல்தோன்ற, 'மடந்தையர்மாட் டொருபொருள் நயந்திலன்' என்றது. ஒருபொருள் - அவர்களது காட்சி வடிவம் அவயவம் பேச்சு முதலிய ஒன் றையும் என்றுமாம். 'போகின்றதே' என்ற ஏகாரம் - அது தகுதியன் றென் பதை விளக்கும்; இங்ஙனம் ஓசைவேறுபாட்டாற் பொருள்கொள்வதை வட நூலார் 'காகு' என்பர். பெரும் பரிணதன் கொல் - வயது முதிர்ந்த நிலைமை யுடையானோ என்றும் உரைக்கலாம். பரிணதன் - வடசொல்: பக்குவதசை யடைந்தவன். பெண்கொலை பெரும்பாவமாதலால், 'படுகொலை' எனப்பட் டது. பி - ம்:—[1]மருணயந்த. (கூரு)

கூசா.—இதுமுதல் ஆறுகவிகள் - பின்னும் ஒவ்வொருத்தி பட்ட தன்மையைத் தனித்தனிக் கூறும்.

*தொய்யில் வெய்ய முலைத்[1] துடி போலிடை
[2]நையு நொய்ய மருங்குலொர் நங்கை[3]தான்
கையு மெய்யு [4]மறிந்திலள் கண்டவ
ருய்யு [5]முய்யு மெனத்தளர்ந் தோய்வுற்றாள்.

(இ - ள்.) தொய்யில் - சந்தனக்கோலத்தையுடைய, வெய்ய - வெப் பத்தையுடைய, முலை - தனங்களையும், துடி போல் இடை நையும் நொய்ய மருங்குல் - (மேலுங் கீழும் அகன்று நடுவுசிறுத்துள்ள) உடுக்கையென்னும் வாத்தியவிசேஷத்தின் வடிவம்போல(க் கொங்கைமுதலிய மேலவயவங்க ளும் அல்குல் முதலிய கீழவயவங்களும் பருத்து) நடுவுசிறுத்துள்ள மென் மையான இடையையு முடைய, ஓர் நங்கை - பெண்களிற்சிறந்தவ ளொரு த்தி,—கைஉம் மெய்உம் அறிந்திலள்-(காமமயக்கத்தால் தான் நடக்கவேண் டிய) ஒழுக்கத்தையும் தன்னுடம்பின் தன்மையையும் அறியாதவளாய், கண் டவர் உய்யும் உய்யும் என - (தன்னிலைமையைப்) பார்த்த பிறர் (தன்னைப் பற்றி 'இவள்) பிழைத்திடுவாள் பிழைத்திடுவாள்' என்று (ஒருவரோடு ஒரு வர் தைரியங்) கூறும்படி, தளர்ந்து - (மனமும்உடம்பும்) தளர்ச்சியடைந்து, ஓய்வு உற்றாள் - அழிதலை யடைந்தாள்; (எ - று.)

உய்யுமுய்யும் - அடுக்கு, ஐயப்பொருள்குறிக்கின்றது; இனி, ஓசைவேறு பாட்டால், உய்யுமோஉய்யுமோவென்று சந்தேகிக்கும்படி யென்று உரைப் பினும் அமையும். பி - ம்:—[1]தடி. [2]நைய நொய்தின் வருத்தின. [3]தன் [4]உணர்ந்திலள். [5]உய்யாள். (கூசா.)

௩எ. பூக வூசல் புரிபவர் போலொரு
[1]பாகின் மென்மொழி தன்மலர்ப் பாதங்கள்
சேகு [2]சேர்தரச் சேவகன் றேரின்பி
னேகு மீளு மிதென்செய்த வாறரோ.

(இ - ள்.) ஒரு பாகு இன் மென் மொழி-(கருப்பஞ்சாற்றின்)பாகுபோல் இனிய மென்மையான பேச்சுக்களை யுடையா ளொரு மகள்,—பூகம் ஊசல் புரிபவர் போல் - பாக்குமரத்திற் பூட்டப்பட்ட ஊஞ்சலில் விரும்பி யாடு பவர்போல,தன் மலர் பாதங்கள் சேகு சேர்தர - தனது தாமரைப்பூப்போல் மெல்லிய கால்கள் காய்ப்பைஅடையும்படி, சேவகன் தேரின் பின் ஏகும் - சுத்தவீரனான இராமனது இரதத்தின்பின்னே (பலகால்) செல்லுபவளா னாள்; மீளும் - (உடனே) திரும்பிவருபவளானாள்; இது என் செய்த ஆறு - இது யாதுசெய்தவிதம்? (எ - று.)—அரோ - ஈற்றசை: வியப்புமாம்.

எனவே, காமநோயாலாகிய தடுமாற்றத்தின்காரியம் இது வென்ப தாம். "காசறு பவளச் செங்காய் மரகதக் கமுகு பூண்ட, வூசலின் மகளிர் மைந்தர் சிந்தையோ டுலவக் கண்டார்" எனக் கீழ் மிதிலைக்காட்சிப்படலத் தில் வந்த கவியாலும், பூஞ்சோலைகளிற் பாக்குமரத்தில் ஊஞ்சல்கட்டப் படுவது மரபாதலையும் மனத்தடுமாற்றத்துக்கு ஊசலாட்டம் உவமைகூறப் படுவதையும் அறிக. நாவுக்கினிய பாகுபோலக் காதுக்கினிய செஞ்சொ லென்க. அடிமைத்தொழில் செய்பவனென்றுபொருளுள்ள வடமொழித் திரிபாகிய சேவகனென்பது - காவலாளனுக்குப் பெயராய் வழங்கி, வீர னென்னும்பொரு ளுணர்த்திற்று: சேவகன் பின்னேசென்றது, அவனைத் தழுவவேண்டுமென்று எழுந்த காதல்மிகுதியால்; பின்பு மீண்டது, இடை யிலேதோன்றிய நாணத்தாலும் அங்ஙனந்தழுவப்பெறாமையினாலு மென்க.

பி - ம்:—[1]பாகுபோன் மொழியாள். [2]தோய்தர. (௩எ)

௩அ. பெருத்த காதலிற் பேதுறு மாதரி
னொருத்தி மற்றங் கொருத்தியை நோக்கியென்
கருத்து [1]மவ்வழிக் கண்டது ண்டோவென்று
ளருத்தி யுற்றபின் னாணமுண் டாகுமோ.

(இ - ள்.) பெருத்த காதலின் - (வரம்புகடந்து) மிகுந்த வேட்கையி னால், பேது உறு - மதிமயக்கமடைந்த, மாதரின் - அம்மகளிர்களுள்ளே, ஒருத்தி - ஒருமகள், அங்கு - அவ்விடத்து [அப்பொழுது], மற்று ஒருத்தி யை நோக்கி - வேறுஒருமகளைப் பார்த்து, அ வழி என் கருத்துஉம் கண்டது உண்டுஒ என்றாள் - '(நீங்கள்சென்ற) அவ்விடத்தில் (இராமபிரானதுவடி வத்தைமாத்திரமேயன்றி) எனது மனத்தையும் பார்த்ததுண்டோ?' என்று வினவினாள்; அருத்தி உற்ற பின் நாணம் உண்டு ஆகும் ஒ - ஆசைமிகுந்த பின்பு வெட்கம் (அங்கு) உள்ளதாமோ? (எ-று.)—உள்ளதாகா தென்றபடி.

'ஆசைவெட்கமறியாது' ஆதலால், இங்ஙனம் வெட்கமின்றி வினவினா ளென்பதாம். இது - தொடர்நிலைச்செய்யுட்குறியணி; இச்செய்யுளில் முதன்

மூன்றடிகளிற்கூறிய பொருளை நான்காமடியிற்கூறிய பொருள் சமர்த்தித்து நிற்றல் காண்க. பரமாணு ரூபமாய்க் கட்புலப்படாத நெஞ்சத்தைக் கண்ட துண்டோ என வினவியது காதற்பித்தினு லெனக. பி-ம்:—[1]இவ்வழி. (௩௮)

௩௯. நங்கை யங்கொரு பொன்னயந் தாருயத்
தங்க ளின்னுயி ருங்கொடுத் தார்தம
ரெங்க ளின்னுயி ரெங்களுக் கீகிலா
வெங்க [1]ணெங்கண் விளைந்த திவற்கென்றாள்.

(இ - ள்.) அங்கு - அவ்விடத்து [அப்பொழுது], நங்கை ஒரு பொன் - பெண்களிற் சிறந்தவளான இலக்குமிபோன்றவளொருத்தி,—'தமர் - (இவ் விராமனது) குலத்தினர், நயந்தார் உய தங்கள் இன் உயிர்உம் கொடுத் தார் - (தம்மை)விரும்பிச்சரணமடைந்தவர்கள் பிழைத்திடும்படி தங்களது இனியஉயிரையும் (அவர்க்குத்) தானஞ் செய்துள்ளார்கள்; (அங்ஙனமிரு க்க), எங்கள் இன் உயிர் எங்களுக்கு ஈகிலா வெம் கண் - எங்களுடைய (சொந்தமான) இனிய உயிர்களையே எங்களுக்குக் கொடுத்திடாத கொடுந் தன்மை, இவற்கு - இவ்விராகவமூர்த்திக்கு, எங்கண் விளைந்தது - எவ்வகை யால் உண்டாயிற்றோ?' என்றாள் - என்றுகூறினாள்; (எ - று.)

நயந்தாருய்யத் தங்களின்னுயிருங்கொடுத்தார் - சிபிச்சக்கரவர்த்தி முதலியோர். 'குலத்திலில்லாதகுணங் கொண்டாலும் வாராது' என்ற பழ மொழியைத்தழுவி, வமிசபரம்பரையிலில்லாத கொடுமையுண்டாதற்கு வழி யாதோ வென்கிறாள். எங்களின்னுயிரை எமக்கீகிலா வெங்கண்மை இராமனி டத்து இருப்பதாக இவள் கூறினது, காமநோய்மிக்க தம்மைப்போன்ற மகளிர்பலரது மனமும் இராமன்பின்னேயே நீங்கிப்போய் மீண்டு வாராது மரணவேதனைப்படுதலாலென்க. பொன் - பொன்போ லருமையானவ ளென்றும் உரைப்பர். பி - ம்:—[1]எங்ஙன். (௩௯)

௪௰. நாமத் தாலழி வாளொரு நன்னுதல்
[1]சேமத் தார்வில் லிறுத்தது தேருங்காற்
றாமத் தார்குழற் றூமொழித் தோகைபாற்
காமத் தாலன்று கல்வியி னாலென்றாள்.

(இ - ள்.) நாமத்தால் அழிவாள் - (காமதாபத்தாலுண்டான) அச்சத் தால் நிலைகுலைபவளான, ஒரு நல் நுதல் - அழகிய நெற்றியையுடையா ளொருமகள்,—'சேமத்து ஆர்வில் இறுத்தது தேரும்கால் - ஆயுதசாலையிலே போற்றி வைக்கப்பட்டிருந்த சிவதனுசை (இவ்விராமன்) முறித்ததன் கார ணத்தை ஆலோசிக்குமிடத்து, தாமத்து ஆர் குழல் தூ மொழி தோகை பால் காமத்தால் அன்று - அகிற்புகையிலே பொருந்தின கூந்தலையும் சுத்த மான பேச்சையு முடைய மயில்போலுஞ்சாயலுள்ள சீதையினிடத்து விரு ப்பத்தினாலன்றுபோலும்: கல்வியினால் - (தனது) விற்றொழிற்றிறமையைக் காட்டும்பொருட்டினாற்போலும்', என்றாள் - என்றுசொன்னாள்; (எ - று.)

வில்லையொடித்தது அம்மங்கையினிடத்துக் காமத்தினாலேயே யாகு மானல் வலியவந்துசேர்கிற இம்மகளிர்களும் சிலரையேனும் இவன் காத லிக்கக்கூடும்; அஃது இல்லாமையால் அது பயிற்சிவிசேடத்தை விளக்குங் கருத்தாலேயே யென்பதாம். சேமம் - காவலுள்ளவிடம்; இது க்ஷேமமென் னும் வடசொல்லின் திரிபுபோலும். தூமத்து ஆர் குழல் - புகையூட்டிய கூந் தல்; புகையையொத்த [கருநிறமான] கூந்தல் என்றும் உரைக்கலாம். நாமத் தால் அழிவாள் என்பதற்கு - (இராமனென்னுந்) திருநாமத்தின் பொரு ளுக்கு ஏற்ப அவன் விஷயத்திலே காதற் களிப்புகொண்டு மனமழிபவ ளென்றும் உரைப்பர் பி - ம்:—[1]சேமத்தால். [2]தூமத்தாழ். (சo)

சக. ஆர முந்துகி லுங்கல னியாவையுஞ்
சோர வின்னுயிர் [1]சோருமொர் சோர்குழல்
கோர வில்லிமுன் னேயெனைக் [2]கொல்கின்ற
மார வேளின் வலியவர் யாரென்றாள்.

(இ - ள்.) ஆரம்உம் - முத்துமாலையும், துகில்உம் - சேலையும், கலன் யாவைஉம் - மற்றை யாபரணங்களெல்லாமும், சோர - (தன்னுடம்பிலிரு ந்து) தளர்ந்துவிழ, இன் உயிர் சோரும் -இனிமையான (தன்) உயிருந் தளர் ந்துவிழும் நிலைமையையடைந்த, ஓர் சோர் குழல்-தளர்ந்த கூந்தலையுடையா ளொருமகள், கோரம் வில்லி முன்னே எனை கொல்கின்ற மாரவேளின் வலிய வர் யார் என்றாள் - பயங்கரமான வில்லை யேந்திய இவ்விராமனது முன்னி லையிலேயே (அஞ்சாது நின்று வில்வளைத்து அம்பெய்து வருத்தி) என்னைக் கொல்லுகிற இந்த மன்மதன்போல வலிமையுடையார் (உலகத்தில் வேறு) யாவர்(உளர்?) [எவருமில்லை] என்று கூறினாள்; (எ - று.)

மன்மதன் மகளிரை அம்பெய்து வருத்துதற்கு ஆதாரமே இராமனழகு ஆதலால், இவ்வில்லியின்முன் அவன்வில்வன்மை சென்றதென்று அதனைப் பாராட்டுகின்றாள். சோர்குழல் - அவிழ்த்துவிட்டால் நிலமட்டில் தாழ்ந்து தொங்குங்கூந்தல்; (கண்ட ஆடவர்க்கு மதிச்) சோர்வை யுண்டாக்குங் கூந்தலுமாம். கோரவில்லி என்பதற்கு - அச்சம் விளைக்கும்அரனதுவில்லை முறித்தவனென்று உரைப்பாரு முளர். பி-ம்:—[1]சோர. [2]கொல்கின்றான்.

சஉ.—இராமபிரான் சபாமண்டபத்தைச் சேர்தல்.

மாத ரின்னண [1]மொய்த்திட வள்ளல்போய்க்
கோதில் சிந்தை வசிட்டனுங் கோசிக
வேத பாரனு மேவிய மண்டப
[2]மேதி மன்னர் குழாத்தொடு மெய்தினான்.

(இ - ள்.) மாதர் - பலபருவத்து மகளிரும், இன்னணம் மொய்த்திட - இவ்வாறு வந்து (தன்னையடைந்து) நெருங்க, வள்ளல் - இராமபிரான்,— போய் - சென்று, கோது இல் சிந்தை வசிட்டன்உம் - குற்றமில்லாத மன த்தையுடைய வசிஷ்டமகாமுனிவனும், கோசிக வேதபாரன்உம் - கௌசிக முனிவ னென்கிற வேதத்தின்கரையை யறிந்தவனும், மேவிய - வந்து வீற்

றிருக்கின்ற, மண்டபம்-சபாமண்டபத்தை, எதி மன்னர் குழாத்தொடு உம் - படைக்கலங்களைக்கொண்ட அரசர்களது கூட்டத்துடனே, எய்தினன் - அடைந்தான்; (எ-று.)

சிந்தைக்குக் கோதின்மை - தீக்குண மொன்று மில்லாமை; இனி, கோது - தவத்துக்கு விரோதமான கூடாவொழுக்கமுமாம். பாரன் - பாரகன்; விகாரம்: பாரம் - அக்கரை; வேதத்தின் முடிவான வேதாந்தப் பொருளை யறிந்தவன் விசுவாமித்திர னென்க. பி - ம். [1]எய்திட. [2]எதில்.

சங.—இராமன் வசிட்ட விசுவாமித்திரரை வணங்குதல்.

திருவி னாயகன் மின்றிரிந் தாலெனத்
[1]துருவின் மாமணி யாரந் துயல்வரப்
பருவ மேகம் [2]படிந்தது போற்படிந்
திருவர் தாளு முறையி னிறைஞ்சினன்.

(இ - ள்.) திருவின் நாயகன்-இலக்குமிகொழுநனான ஸ்ரீராமன்,—மின் திரிந்தால் என - மின்னல் (இடம்விட்டுப்பெயர்ந்து) உலாவினாற்போல, துருவு இன் மா மணி ஆரம் துயல்வர - தேடியெடுத்துப் பதித்த அழகிய சிறந்த இரத்தினவாரங்கள் (தன்மார்பில்) அசைந்து புரளும்படி, பருவம் மேகம் படிந்தது போல் - கார்காலத்து (நீர்கொண்ட கரிய) மேகம் (பூமியிலே வந்து) படிந்தாற்போல, படிந்து - கீழேதாழ்ந்து, இருவர் தாள்உம் - (வசிட்டன் விசுவாமித்திரன் என்னும்) இரண்டுபேரது திருவடிகளையும், முறையின் - முறையே, இறைஞ்சினன் - வணங்கினான்; (எ - று.)

முன்னே குலகுருவான வசிட்டனை நமஸ்கரித்து, இராமன், பின்பு அஸ்திரசஸ்திர வித்தையில் தனக்கு ஆசிரியனாகிய கௌசிகனை நமஸ்கரித்தானென்க. எல்லாச்செல்வங்களுக்கும் உரிய தலைவனானவன் இங்ஙனம் முனிவர்களைத் தண்டன்சமர்ப்பித்தானென எம்பெருமானது பரத்துவத்தோடு தன் அவதாரத்துக்கு ஏற்பக்கொண்ட சௌலப்பியமும் இங்கு விளங்கும். 'படிந்து இறைஞ்சினன்'என்றதனால்,எட்டுறுப்பும் நிலத்தில் தோயத் தீர்க்கதண்டனிட்டானென்க. துருவுதல் - தேடுதல். இனி, துருவு - துளைபடுதல் என்றுமாம். துரு - குற்றம் எனினுமாம். துரு - பொன்னுலாகிய, வில் - ஒளியையுடைய என்று உரைத்தலும் ஒன்று. சீதாகலியாணஞ் சமீபித்திருத்தலால், 'திருவினாயகன்' என்ற பெயராற் கூறினர். முறையின் - நூல்களிற் கூறிய விதிமுறைமைப்படி என்னலுமாம். பி - ம்:—[1]துருவு. [2]படிவது. ()

சச.—முனிவர்களிடம் ஆசிபெற்று இராமன் தம்பியரோடு ஆசனத்து அமர்தல்.

[1]இறைஞ்ச வன்னவ ரேத்தின ரேவவோர்
நிறைஞ்ச பூந்தவி சேறி நிழற்கள்போற்
புறஞ்செய் தம்பிய ருட்பொலிந் தானரோ
வறஞ்செய் காவற் கயோத்தியிற் றோன்றினன்.

(இ - ள்.) அறம் செய் காவற்கு அயோத்தியில் தோன்றினன் - தருமத்தை (அழியாதபடி) காத்தல்செய்வதற்காகவே திருவயோத்தி நகரத்திலே திருவவதரித்தவனான ஸ்ரீராமன்,—இறைஞ்ச (தான் இங்ஙனம் வசி

ட்ட கௌசிகரை) வணங்க, அன்னவர் ஏத்தினர் ஏவ - (உடனே) அவர்கள் ஆசீர்வதித்து (இவ்வாசனத்தில் வீற்றிருவென்று) நியமிக்க, ஓர் நிறைஞ்ச பூ தவிசு ஏறி - (அங்ஙனமே தான்) ஒப்பற்ற (அழகு) நிறைந்த பூப்போல் விசித்திரவேலைசெய்யப்பட்டுள்ள ஆசனமொன்றின்மேல் ஏறி யிருந்து, நிழற்கள் போல் புறஞ் செய் தம்பியருள் பொலிந்தான் - (தனது) சாயைகள்போலத் (தன்னைவிடாமல் தொடர்ந்து தன்பக்கங்களிலே யிருந்து தன் திருமேனிக்குக்) காவல்செய்கிற (தன்) தம்பிமார் மூவர்களினிடையிலே விளங்கினான்.

துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனத்தின்பொருட்டே திருமால் ஆதியஞ் சோதியுருவை யங்குவைத்து இங்குப்பிறந்தா னென்பதும், எம்பெருமானது திருவவதாரம் இச்சாமாத்திரத்தாலுண்டாவதன்றிக் கருமசம்பந்தத்தாலாகுவதன் றென்னும் இரகசியப்பொருளும் இதிற்பெறப்படும். ஈற்றடியில், செய் என்னும் முதனிலைத்தொழிற்பெயர் மாற்றப்பட்டது; "ஓஒதல் வேண்டு மொளி மாழ்குஞ் செய்வினை" என்றவிடத்துப்போல. ஏத்தினர் - புகழ்ந்தவராய் என்றும் உரைப்பர். நிறைஞ்ச=நிறைந்த: போலி. நிறைஞ்ச - (சிற்பவித்தை) நிரம்பின என்று உரைத்தால், பூந்தவிசு-அழகிய ஆதனமெனக் கொள்ளலாம். புறஞ்செய்தல் - புறந்தருதல்,போற்றல்: அழகுசெய்தலுமாம்;"புறஞ் செய்மேகலை" எனக் கோலங்காண்படலத்து வருதலுங் காண்க. இச்செய்யுள் சிலபிரதிகளி வில்லை. (சுச)

சுரு.—தசரதசக்கரவர்த்தி அந்தமண்டபத்தைத் தமரோடுஞ் சார்தல்.

ஆன மாமணி மண்டப மன்னது
தானை மன்னன் றமரொடுஞ் சார்ந்தனன்
மீனெ லாந்[1] தன பின்வர வெண்மதி
வானி லாவுற வந்தது மானவே.

(இ - ள்.) (அதன்பின்பு), மீன் எலாம் தன பின் வர - எல்லாநட்சத்திரங்களும் தன்னுடையபின்னே வர, வெள் மதி - வெண்மைநிறமுடைய சந்திரன், வான் நிலாவுற வந்தது - ஆகாயம் விளங்கும்படி (அங்கு) வந்து சேர்ந்ததை, மான - ஒக்கும்படி, தானை மன்னன் - சேனைகளையுடைய தசரதசக்கரவர்த்தி,— தமரொடும் - தன் சுற்றத்தாருடனே, ஆன மா மணி மண்டபம் அன்னது - பொருந்தின சிறந்த இரத்தினங்களையுடைய அந்த மண்டபத்தை, சார்ந்தான் - அடைந்தான்; (எ - று.)

ஒளியையுடையவிண்மீன்களுக்குத் தலைவனான சந்திரன் - க்ஷத்திரிய தேஜசையுடைய மன்னவர்க்கெல்லாந் தலைவனான தசரதனுக்கும், சந்திரன் பின்செல்லும் நட்சத்திரங்கள் - தசரதன் பின்வரும் அரசகுலத்தார்க்கும், அகன்ற வானம் - பரந்தமண்டபத்துக்கும் உவமையாம். உபமானத்தில் 'வான் நிலாவுற' என்றதனால், தசரதனால் அம்மண்டபம் பொலிவுற்றதென்பது, தொனிக்கும். ஆன மா மணிமண்டபம் அன்னது-அத்தன்மையதாகச் சிறந்த (ஸ்ரீவைகுண்டநகரத்துத்) திருமாமணிமண்டபத்தை யொத்த மண்டபம் என்றுமாம். பரமபதத்தில் திருமாலின் அத்தாணிமண்டபத்துக்குத் திருமாமணிமண்டபமென்று பெயர். பி - ம்:—[1] வரப்பின்வரும். (சுரு)

சகூ.—தசரதன் ஆசனத்துஅமர்தல்.

வந்து மாதவர் பாதம் வணங்கிமேற்
சிந்து தேமலர் மாரி சிறந்திட
வந்த ணாளர்க ளாசியொ டாசன
மிந்தி ரன்முக நாணுற வேறினன்.

(இ - ள்.) (சக்கரவர்த்தி), வந்து - (அவ்வாறு) வந்து, மா தவர் பாதம் வணங்கி - சிறந்த [பெரிய] தவத்தையுடைய வசிட்டகௌசிகமுனிவர்களது திருவடிகளை நமஸ்கரித்து, மேல் சிந்து தே மலர் மாரி சிறந்திட - (தன்)மேலே (பலராலுஞ்) சொரியப்படுகிற தேனினையுடைய பூக்களின் மழை மிகாநிற்க, அந்தணாளர்கள் ஆசியொடு - பிராமணர்களாற் செய்யப்பட்ட ஆசீர்வாதங்களுடனே [ஆசீர்வாதங்களையும்பெற்று என்றபடி], ஆசனம் - (தனக்குரிய)ஆசனத்தை, இந்திரன் முகம் நாண் உற - தேவேந்திரனும் (கம்பீரத்தன்மை முதலியவற்றில் தனக்கு ஒப்பாகாமையால்) முகங்கவிழ்ந்து வெட்கமடையும்படி, ஏறினன் - ஏறிவீற்றிருந்தான்; (எ - று.) (சகூ)

சஎ, சஅ, சகூ.—மூன்றுக்விகள் - ஒருதொடர்; பலதேசத்து மன்னவரும் வந்து சேர்ந்தமையைத் தெரிவிக்கும்.

சஎ. கங்கர் கொங்கர் கலிங்கர் [1]குலிங்கர்கள்
சிங்க ளாதிபர் சேரலர் தென்னவ
ரங்கர் சீனர் குலிந்த ரவந்திகர்
வங்கர் மாளவர் சோளர் [2]மராடரே.

சஅ. மான மாகதர் மச்சர் மிலேச்சர்க
ளேனை [1]வீர விலாடர் [2]விதர்ப்பர்கள்
[3]சீனர் தெங்கணர் [4]செஞ்சகர் சோமகர்
[5]சோன கேசர் துருக்கர் குருக்களே.

சகூ. ஏதி யாதவ [1]ரேழ்திறற் கொங்கணர்
சேதி [2]ராசர் தெலுங்கர் கருநட
ராதி வானங் கவித்த வவனிவாழ்
சோதி நீண்முடி மன்னருந் துன்னினர்.

(இ-ள்.) (சஎ)கங்கர் - கங்கதேசத்தரசர்களும், கொங்கர் - கொங்குநாட்டரசர்களும், கலிங்கர் - கலிங்கதேசத்தரசர்களும், குலிங்கர்கள் - குலிங்கதேசத்தரசர்களும், சிங்கள அதிபர் - சிங்களதேசத்தரசர்களும், சேரலர் - சேரநாட்டரசர்களும், தென்னவர் - தென்னாடாகிய பாண்டியநாட்டின் அரசர்களும், அங்கர் - அங்கதேசத்தரசர்களும், சீனர் - சீனதேசத்தரசர்களும், குலிந்தர் - குலிந்ததேசத்தரசர்களும், அவந்திகர் - அவந்திதேசத்தரசர்களும், வங்கர் - வங்கதேசத்தரசர்களும், மாளவர்-மாளவதேசத்தரசர்களும், சோளர் - சோழநாட்டரசர்களும், மராடர் - மராடதேசத்தரசர்களும்,

(சஅ) மானம் - பெருமையையுடைய, மாகதர் - மகததேசத்தரசர்களும், மச்சர் - மத்ஸ்யதேசத்தரசர்களும், மிலேச்சர்கள்-மிலேச்சதேசத்தரசர்களும், ஏனை வீரம் இலாடர் - மற்றுமுள்ள வீரமமைந்த இலாடதேசத்தரசர்களும், விதர்ப்பர்கள் - விதர்ப்பதேசத்தரசர்களும், சீனர் - மகாசீனதேசத்தரசர்களும், தெங்கணர்-தெங்கணதேசத்தரசர்களும், செம் சகர் - செம்மையான சகநாட்டரசர்களும், சோமகர் - சோமகதேசத்தரசர்களும், சோனக ஈசர் - சோனகநாட்டரசர்களும், துருக்கர் - துருஷ்கதேசத்தரசர்களும், குருக்கள் - குருநாட்டரசர்களும், (சகூ) ஏதி - ஆயுதங்களையுடைய, யாதவர் - யதுகுலத்து வீரர்களும், ஏழ் திறல் கொங்கணர் - ஏழுபகுப்பையுடைய கொங்கணதேசத்தரசர்களும், சேதி ராசர் - சேதிதேசத்தரசர்களும், தெலுங்கர் - தெலுங்கதேசத்தரசர்களும், கருநடர் - கன்னடதேசத்தரசர்களும், (இவ்வாறு), ஆதிவானம் கவித்த அவனி வாழ் சோதி நீள் மூடி மன்னர்உம் - (பஞ்சபூதங்களுள்) முதலதாய் (மற்றை நான்குபூதங்களுக்குக்) காரணமான ஆகாயத்தாற் கவியப்பட்டுள்ள பூமிமுழுவதிலும் வாழ்கிற ஒளியையுடைய நீண்டகிரீடத்தையுடைய அரசர்கள்பலரும், துன்னினர் - (அம்மண்டபத்தில்வந்து) நெருங்கினர்கள்; (எ - று.)

சஎ.—சேரலர் என்பதில், அல்-அல்வழிச்சாரியை; இதன்ஒருமை, சேரலன்: ஈறுகெட்டு 'சேரல்' எனவும் வழங்கும். சேரல்-சேரனென்பதன் திரிபென்பாருமுளர். இச்செய்யுளில் உம்மைதொக்குவந்தன வெல்லாம், பெயர்ச்செவ்வெணெனப்படும். இக்கவியில் அடைமொழியில்லாமை ஒருஅழகாம். பி - ம்:—[1] தெலுங்கர். [2] விராடர்.

சஅ.-சீனசோனகதேசங்களிலுள்ள இச்சாதியார், வசிட்டனையெதிரிட்ட விசுவாமித்திரசேனையாரை அழிக்கும்பொருட்டு அப்பொழுது வெகுளிகொண்ட காமதேனுவினால் தன்னுடம்பின்மயிர்சிலிர்த்தவற்றினின்று உண்டாக்கப்பட்டவரென்பதைக் கீழ்மிதிலைக்காட்சிப்படலத்திற் கூறியதனால் அறிக. மிலேச்சர், சகர் என்பவரும் இத்திறத்தினரேயாவ ரென்பது பிறநூலால் விளங்கும். மீன்கள் எங்கும் நிரம்பும்படி நீர்வளத்தை மிகுதியாக வுடைமையின், மச்ச மென்பது காரணப்பெயர்போலும். கீழ்க்கவியில் 'சீனர்' என்று ஒருதரம் வந்ததனால், இங்கேசீனரென்பது மகாசீனரென்று உரைக்கப்பட்டது; சீனம், மகாசீனம் என்பன வேறுவேறுநாடுகளாதல் வடநூலால் விளங்கும். இனி, இச்செய்யுளில், [3] சேனர்தெங்கணர் என்றபாடத்துக்கு - சூரசேனதேசத்தரசர் என்று உரைக்கவேண்டும்; சேனர் - முதற்குறை விகாரம். தெங்கணம் என்பதைத் தக்ஷிணமென்னும் வடமொழியின்திரிபாகக்கொண்டால், தென்னாடுகளின்அரசர்க ளென்று பொருளாம். சோமகமென்பது, குலத்தின்பெயராக வழங்கும். சோனகேசர்-வடமொழிப்புணர்ச்சி. சந்திரகுலத்திற் பிரசித்தனாயிருந்த குரு என்னும் அரசன் காரணமாக அத்தேயம் குருநாடெனப்படும். பி - ம்:—[1] வீரராட்டர். [2] விராடர்கள். [4] சிந்துகர். [5] சோனர்.

சகூ.—கீழிரண்டுகவிகளிலும் இக்கவியிலும் அரசர்களைப் பன்மையாற் கூறினது, அவரவர்கள் தத்தஞ்சுற்றத்தாருடனே வந்துள்ளாரென்பதை

விளக்கும்பொருட் டென்க. யாதவர்-யதுவின்வமிசத்தார்; யதுவென்பவன்- சந்திரகுலத்தில் யயாதியென்னும் அரசனது குமாரன்; பூரு என்பவனது உடன்பிறந்தவன். ஏழ் திறற் கொங்கணர் "கொங்கணமேழுநீங்கி" என்பர், ஆறுசெல்படலத்தும். இனி, ஏழ் திறற் கொங்கணர் என்பதற்கு-அகங்காரமின்மை, தானம், விரதம், சிநேகம், நல்லுணர்வு, பொறுமை, உற்சாகம் என்னும் ஏழு புண்ணியவகைகளையுடைய கொங்கணரென்று உரைப்பாரும், ஏழ்திறல் என்பதை 'எழுதிறல்' என்பதன்விகாரமாகக்கொண்டு மேன்மேல்வளர்கின்ற வலிமை யென்று உரைப்பாருமுளர். பி - ம்:— [1]ஏழ்வகை. [2]ராசரு முட்படச் சேண்விளங்கு. (சஎ-சக)

ரு௦.—சக்கரவர்த்தியின் பக்கங்களில்வீசுஞ் சாமரையின் வருணனை.

தீங்[1]க ரும்பினுந் தித்திக்கு மென்சொலார்
தாங்கு சாமரை மாடு தயங்குவ
வோங்கி யோங்கி வளர்ந்துயர் கீர்த்தியின்
பூங்கொ ழுந்து [2]பொலிவன போன்றவே.

(இ - ள்.) தீம் கரும்பின்உம் தித்திக்கும் மென் சொலார் - இனிப்பான கருப்பஞ்சாற்றைக்காட்டிலும் மிகஇனிதாயுள்ள மிருதுவான பேச்சுக்களையுடைய மகளிர், தாங்கு - வீசுகிற, சாமரை - சாமரங்கள், மாடு தயங்குவ - (தசரதசக்கரவர்த்தியின்) பக்கங்களிலே விளங்குபவை, — ஓங்கி ஓங்கி வளர்ந்து உயர் கீர்த்தியின் பூ கொழுந்து பொலிவன போன்ற - மேலுலகங்களெல்லாவற்றிலுஞ் சென்று பரவி (மற்றையெல்லோர் புகழினும்) மேம்பட்டுள்ள (அத்தசரதனது) கீர்த்தியாகிய பெருமரத்தின் அழகான இளந்தளிர்கள் விளங்குவனவற்றை ஒத்திருந்தன; (எ - று.)

சொல்வடிவமாகவுள்ள கீர்த்திக்கு உருவமில்லையாயினும் அதனை உருவமுடையதுபோல வெண்ணிறமுடையதென்று வருணித்தல் கவிமரபாதலால், வெண்சாமரங்களை இங்ஙனம் வருணித்தார்; தற்குறிப்பேற்றவணி. ஓங்கியோங்கி - அடுக்குத்தொடர். ஓங்கிவளர்ந்துயர் - ஒருபொருட்பன்மொழி. பி - ம்:— [1]கரும்பினில். [2]படர்வன. (ரு௦)

ருக.—தசரதனுக்கு மகளிர் பல்லாண்டுபாடுதல்.

சுழலும் வண்டு மிஞிறுஞ் சுரும்புஞ்சூழ்ந்
துழலும் [1]வாச மதுமல ரோதியர்
குழலி னேடுறக் கூறுபல் லாண் [2]டொலி
மழலை யாழிசை யோடு மலிந்தவே.

(இ - ள்.) சுழலும் - சுழன்றுமொய்க்குந் தன்மையையுடைய, வண்டு உம் - வண்டுகளும், மிஞிறு உம் - மிஞிறுகளும், சுரும்பு உம் - சுரும்புகளும், சூழ்ந்து உழலும் - சுற்றிக்கொண்டு திரிதற்கிடமான, வாசம் - நறுமணத்தையும், மது மலர்-தேனையுடைய பூக்களையுமுடைய, ஓதியர் - கூந்தலையுடைய

மகளிர்கள், குழலினோடு உற - வேய்ங்குழலினோசையோடு பொருந்த, கூறு-(தசரதசக்கரவர்த்தியின்பொருட்டுச்) சொல்லிப்பாடுகின்ற,பல்லாண்டு ஒலி - பல்லாண்டிணோசைகள், மழலை யாழ் இசையோடு மலிந்த-(அம்மகளிரது) குதலைச்சொல்லோடொத்து வீணையின் கீதங்களுடனே மிக்கன.

பல்லாண்டு-இன்னும் பலவருஷங்கள்இவ்வுலகத்தில் உய்ந்துவாழ்ந்திட வேண்டுமென்று பாடும் வாழ்த்துப்பாட்டுகள். மகளிர் பல்லாண்டு பாடுதலை, "பண்ணேர் மொழியாரைக் கூவிமுளையட்டிப் பல்லாண்டு கூறுவித்தேன்" என்ற பெரியார்வாக்கினாலும் அறிக. இம்மாதர், தசரதனுடைய பரிவாரங்கள். மழலை - நிரம்பாமென்சொல். கண்டத்தொனியும் கருவியோசையும் வேறுபாடு தோன்றாதபடி சிறக்கப் பாடுங் கீதமென்பதுதோன்ற,'குழலினோடுறக்கூறுபல்லாண்டொலி மழலையாழிசையோடுமலிந்த' என்றார். பி - ம்:— [1]தும்பியும்பம்பறல். [2]இசை. (ருக)

ருஉ.—தசரதனுடைய வெண்குடையின் வருணனை.

வெங்க [1]ணானையி னான்றனி வெண்குடை
திங்க டங்கள் குலக்கொடி சீதையா
மங்கை மாமணங் காணிய வந்தருள்
பொங்கி [2]யோங்கித் [3]தழைப்பது போன்றதே.

(இ - ள்.) வெம் கண் - கொடுந்தன்மைதோன்றும் பயங்கரமான கண்களையுடைய, ஆனையினான் - யானைச்சேனையையுடைய சக்கரவர்த்தியினது, தனி வெண் குடை - ஒப்பற்ற வெண்கொற்றக்குடையானது,—திங்கள் - சந்திரன், தங்கள் குலம் கொடி சீதை ஆம் மங்கை மா மணம் காணிய வந்து தங்கள் வமிசத்திலே தோன்றின பூங்கொடிபோல்மெல்லிய சீதையாகிய மகளினது சிறந்த திருக்கலியாணமகோத்ஸவத்தைக் கண்டுகளிப்பதற்காக (இங்கே) வந்து, அருள் பொங்கி ஓங்கி தழைப்பது - கருணை மிகுந்து உயர்ந்து பூரித்துவிளங்குவதை, போன்றது—; (எ - று.)

இதனால், சீதை அவதரித்துவளர்ந்த சனகவமிசம் சந்திரகுலம் என்றதாயிற்று. தங்கள் என்ற பன்மை, தன்பரம்பரையாரை உளப்படுத்தல் கருதினது. பி - ம்:— [1]ஆனையனான். [2]பொங்கி. [3]தழைப்பனபோன்றவே. ()

ருங.— தசரதனது சேனைநெருக்கத்தின் வருணனை.

ஊடு பேர்விட மின்றியொன் றாம்வகை
நீடு மா[1]கடற் றானை நெருங்கலா
லாடன் மாமத வானைச் சனகர்கோ
னாடெ லாமொரு நன்னக ராயதே.

(இ - ள்.) ஊடு பேர்வு இடம்இன்றி - (தாந்தாம் இருந்த) இடத்தினின்று நிலைபெயர்ந்துநீங்கிச்செல்லுதற்குரிய வெற்றிடைவெளி சிறிதும் இல்லாதபடி, ஒன்று ஆம் வகை-ஒருதன்மைத்தாய் ஒருங்குகூடும்படி, நீடு மா கடல் தானை நெருங்கலால் - உயர்ந்தபெரியகடல்போற்பரந்த (சக்கரவர்த்தியின்)சேனை (அந்நாட்டினிடம்முழுவதிலும்)நெருக்கமாகப்பரவியிருந்

ததனால்,—ஆடல் மா மதம் ஆனை சனகர்கோன் நாடு எலாம் - வெற்றிவலி மையையுடைய பெரிய மதயானைச்சேனையையுடைய சனககுலத்தார்க்குத் தலைவனான அந்தச்சனகமகாராசனது விதேகதேசத்தினிடமெல்லாம், ஒரு நல் நகர் ஆயது - (ஜநநெருக்கம்மிக்க) அழகிய பட்டணமொன்றைப் போலவே யிருந்தது; (எ - று.)—நாடுமுழுதும் ஒரேநகரென்னுமாறு சேனை நெருங்கிற்றென்க. பி - ம்:—[1]களியானை. (ருக)

ருச.—சனகன் யாவரையும் உபசரித்த வகை.

[1]ஒழிந்த வென்னினி யொண்ணுதற் றாதைதன்
பொழிந்த காதல் தொடரப் பொருளெலா
மழிந்து [2]வந்துகொண் டாடலி னன்புதா
னிழிந்து ளார்க்கு மிராமற்கு மொத்ததே.

(இ - ள்.) ஒண் நுதல் தாதை - பிரகாசமான நெற்றியையுடைய சீதையின் தந்தையான சனகமகாராசன், தன் பொழிந்த காதல் தொடர-தனது வரம்புகடந்துமிகுந்த ஆசை பொருந்த, பொருள் எலாம் அழிந்து - (தனது) செல்வமுழுவதையுஞ் சொரிந்து, உவந்து - மகிழ்ச்சிகொண்டு, கொண்டாடலின் - நன்குமதித்துப் பாராட்டினவிஷயத்தில், அன்பு-(அச்சனகமகாராசனுடைய)அன்பு, இழிந்து உளார்க்குஉம் - தாழ்ந்த சனங்களிடத்திலும், இராமற்குஉம் - ஸ்ரீராமசந்திரமூர்த்தியினிடத்திலும், ஒத்தது - சமமாகவே யிருந்தது; இனி ஒழிந்த என் - இதற்குமேல் மற்றுங்கூறவேண்டுவனவாய் மிச்சமாகவுள்ளன யாவை? [ஒன்றுமில்லை யென்றபடி]; (எ - று.)

தனது ஒப்புயர்வற்றமருமகனை இராமனுக்கு எவ்வளவுஅன்புடனே தகுந்தஉபசாரங்களைச் சனகன் செய்தானோ, அவ்வளவுஉபசாரங்களை அந்தக் கலியாணத்துக்குவந்த மகாராசர்கள்முதலாக அடிமைப்பரிவாரங்க ளீறாக யாவருக்குஞ் சிறிதும்பட்சபாதமின்றி மிக்கஅன்புடனேசனகன்செய்திட்டானென்பதாம். ஒழிந்த-பெயர். அழிதல் - சொரிதலென்னும் பொருளதாதலை, "அழியும் மதுமாலையார்" என்றவிடத்துக்கு நச்சினார்க்கினியர் கூறிய உரையாலும் அறிக. ஞானச்செல்வங்களில் மிகச்சிறந்த இராசவிருடிகளாகிய சனககுலத்தாருள் எம்பெருமானுக்குப் பெண்ணை வளர்த்துக்கொடுத்துப் பெரும்புகழ்படைத்த பரமபாக்கியவான் இவனேயாதலால், அச்சிறப்புத்தோன்ற, இவனை 'ஒண்ணுதற்றாதை' என்றது. பின்வரும்வாக்கியமொன்றனாலேயே சனகனது அன்புமுழுவதுஞ் செவ்விதாக உணர்த்தப்படுதலின், 'ஒழிந்த வென்னினி'என்றார். இழிந்துளாரை முன்னும் இராமனை அதன்பின்னுமாக வைத்துள்ளதனால், இராமனினும் மற்றைமாந்தரை அவ்விராசன் மிகுதியாக உபசரித்தா னென்பதும் ஒருவாறு தோன்றும். மூன்றாமடியில்,வந்து என்றுபிரித்து - எதிர்கொண்டுவந்து என்றுமாம். இழிந்துளார்க்கு, இராமற்கு - உருபுமயக்கம். இனி, இச்செய்யுளுக்கு - சனகன் கொண்டாடியதனால் இராமனுக்கு அவன்திறத்தில் எவ்வளவு அன்பு உண்டாயிற்றோ அவ்வளவுஅன்பு இழிந்துளாருமுள்பட எல்லோர்க்கும் உண்டாயிற்று என்று உரைத்தலுமொன்று. பி - ம்:—[1]ஒழிந்தது. [2]செய்து.

இந்த உலாவியற்படலத்திற் கூறிய உலா, இக்காலத்து ஜாநவாஸம் என்றும் எதிர்க்கொளு என்றும் வழங்குவதாகிய மணமகனைவிவாகத்திற்கு முந்திஊர்வலஞ்செய்வித்தலைக் குறிக்குமென்க; "வாரணமாயிரஞ் சூழவலஞ் செய்து, நாரண நம்பிநடக்கின்றான்" என்று திருமணத்துக்குமுன்பு உலா வருவதனை ஆண்டாள் அருளிச்செய்திருத்தலுங் காண்க. (௫௪)

உலாவியற்படலம் முற்றிற்று.

## உ0.—ஆவது கோலங்காண்படலம்.

சீதாபிராட்டியாருக்கு அவருடைய தோழிமார் பலவகை அலங்காரங் களைச்செய்கிற செய்தியைக் கூறும் பாகம். கோலம் - அலங்கரிப்பு.

இங்குக் கோலங்கண்டது நிச்சயதாம்பூலமென்னுஞ் சடங்கை நிகழ்த் தும்பொருட்டென்க; இவ்விஷயம் இப்படலத்து ௬0, ௬௪-ஆம்பாடல்களால் விளங்கும். எதிர்கொள்படலம் தவிர, வரைக்காட்சிமுதல் கோலங்காண்பட லம் வரையிலுமுள்ள படலங்கள் பெருங்காப்பியவிலக்கணம் அமைவதற்கா கக் கம்பரால் தமது கற்பனுசக்திகொண்டு அமைக்கப்பட்டனவாகும்.

க.—வசிட்டன் சீதையை யழைத்துவருமாறு சனகனிடங் கூறுதல்.

[1]தேவியர் மருங்கு சூழ விந்திர னிருக்கை [2]சேர்ந்த
வோவிய முயிர்பெற் றென்ன வுவந்தர சிருந்த காலைத்
தாவில்வெண் கவிகைச் செங்கோற் சனகனை யினிது நோக்கி
மாவிய னோக்கி னாளைக் கொணாகென வசிட்டன் சொன்னான்.

(இ - ள்.) ஓவியம் உயிர் பெற்று என்ன - சித்திரப்பிரதிமைகள் உயிரைப்பெற்று இருந்தாற்போல, தேவியர் மருங்கு சூழ - (தனது) மனைவிமார் பலர் பக்கங்களிலே சூழ்ந்துநிற்க, இருக்கை சேர்ந்த இந்திரன் (என்ன) - (தான்)அரசுவீற்றிருக்குஞ் சிங்காதனத்தை யடைந்த தேவேந் திரன்போல, அரசு - தசரதசக்கரவர்த்தி, உவந்து இருந்த காலை - (அம் மண்டபத்திற் சீரிய சிங்காதனத்திலே) மகிழ்ச்சியோடு வீற்றிருந்த சமயத் தில்,—வசிட்டன் - வசிஷ்டமகாமுனிவன், தா இல் வெண் கவிகை - குற்ற மில்லாத வெண்கொற்றக் குடையையும், செம் கோல் - நீதிதவறாத அர சாட்சியையுமுடைய, சனகனை - சனகமகாராசனை, இனிது நோக்கி - இனி மையாகப் பார்த்து, மா இயல் நோக்கினாளை கொணர்க என - மாவடுப்போ ன்ற தன்மையையுடைய கண்களையுடைய சானகியை அழைத்துவருவாயாக வென்று, சொன்னான் - நியமித்தருளினான்; (எ - று.)

இந்திரன் இருக்கைசேர்தல் - தசரதன் ஆசனத்து வீற்றிருத்தற்கு உவமை. ஓவியமுயிர்பெற்றென்ன - இல்பொருளுவமை. தசரதசக்கரவர்த் தியின் மனைவிமார் அறுபதினாயிரவரென்று கம்பரும் ஒட்டக்கூத்தரும் கூறி யுள்ளார்கள்; வடமொழிநூல்கள் சிலவற்றில் முந்நூற்றறுபதுபேரென்று கூறப்பட்டுள்ளது. இனி, முன்னிரண்டடிகட்கு - இந்திரனது இருப்பிடத்

தைச்சார்ந்துள்ள சித்திரப்பதுமைகள் உயிர்பெற்றாற்போலத் தனது தேவி மார்கள் பக்கங்களிலே சூழத் தசரதன் மகிழ்ந்து வீற்றிருந்தபொழுது என்றும், இந்திரனது சிங்காசனத்தை யடைந்துள்ளதொரு சித்திரப்பாவை தேவிமார் தன்மருங்கிலே சூழ்ந்துநிற்க உயிரைப்பெற்றுவீற்றிருந்தாற்போல அரசன் தனக்குரியதோர் ஆசனத்திலே மௌனியாய் வீற்றிருந்தவளவிலே என்றும் பொருள்கொள்வாரும் உளர். மா - மாவடுவுக்கு முதலாகுபெயர். மாவியனோக்கினள் என்பதற்கு-மானின்தன்மைபோன்ற விழியின் தன்மையையுடையவளென்றும் உரைக்கலாம். இச்செய்யுளில் சொற்களைத் துணித்துப் பிறவிடத்து எடுத்துக்கூட்டியது, செய்யுளுறுப்பு இருபத்தாறினும் மாட்டு என்னும் உறுப்பாம். பி - ம்:—[1]தேவியல். [2]செய்த. (க)

௨.—சனகனேவிய மாதரார் சீதையையழைத்துவருமாறுசென்று தாதியரிடஞ் சொல்லுதல்.

உரைசெயத் தொழுத கைய னுவந்தவுள் ளத்தன் பெண்ணுக்
கரசியைத் தருதி ரீண்டென் றாயிழை யவரை யேவக்
கரைசெயற் கரிய காதல் கடாவிடக் கடிது சென்றார்
பிரசமொத் தினிய சொல்லார் பேதைதா தியரிற் சொன்னார்.

(இ - ள்.) உரை செய - (இவ்வாறு வசிட்டன்) கூறியருள, (அதுகேட்டுச் சனகன்), தொழுத கையன் - கூப்பிவணங்கின கைகளையுடையவனாய், உவந்த உள்ளத்தன் - மகிழ்ந்த மனத்தையுடையவனாய், பெண்ணுக்கு அரசியை ஈண்டு தருதிர் என்று - 'பெண்களுக்கெல்லாந் தலைவியான சீதையை இங்கே அழைத்துவாருங்கள்' என்று, ஆய் இழையவரை ஏவ - ஆராய்ந்தெடுத்தணிந்த ஆபரணங்களையுடைய சிலமாதர்களைக்கட்டளையிட,--பிரசம் ஒத்து இனிய சொல்லார்-தேனினையொத்து இனிப்பானசொற்களையுடைய அம்மாதர்கள்,—கரை செயற்கு அரிய காதல் கடாவிட-அளவிடுவதற்கு அருமையான (சீதைபக்கலுள்ள) அன்பு தூண்டுதலால், கடிது சென்றார் - விரைவாகப்போனவர்களாய், பேதை தாதியரின் சொன்னார் - இளம்பெண்ணான அந்தச்சீதையின் தோழிமார்களிடஞ் (செய்தியைச்)சொன்னார்கள்; (எ-று.) —தாதி - தாஸீ: அடிமைத்தொழில்செய்பவளென்றுபொருள். (௨)

௩.—தோழிமார் சீதையையலங்கரிக்கலானமையைக் கூறுதல்.

[1]அமிழிமைத் துணைகள் கண்ணுக் கணியென [2]வமைக்கு மாபோ
லுமிழ்சுடர்க் கலன்க ணங்கை யுருவினை மறைப்ப தோரா
ரமிழ்தினைச் சுவைசெய் தென்ன வழகினுங் கழகு செய்தா
ரிமிழ்திரைப் பரவை ஞால மேழைமை யுடைத்து மாதோ

(இ - ள்.) (அச்சீதையின் தோழிமார்கள்),—அமிழ் இமை துணைகள் கண்ணுக்கு அணி என அமைக்கும் ஆ போல் - (கண்கள்) மறைதற்குக் காரணமான (மேலிமை கீழிமை என்னும்) இரண்டு இமைகளும் கண்களுக்கு அழகென்று (கடவுளால் இயற்கையில்) அமைக்கப்பட்டிருக்கும் விதம் போல, உமிழ் சுடர் கலன்கள் நங்கை உருவினை மறைப்பது ஓரார் - வீசு

கின்ற ஒளியையுடைய ஆபரணங்கள் பிராட்டியின் (அழகிய) வடிவத்தை மறைக்குமே யென்னுந் தன்மையை ஆராயாதவர்களாய்,—அமிழ்தினை சுவை செய்து என்ன - (இயற்கையிலே மிகுந்த இன்சுவையுடைய) தேவாமிருதத்துக்கு(ச் சர்க்கரை கற்கண்டு முதலியவற்றைக்கொண்டு புதிதாக) உருசியமைக்கத்தொடங்கினாற்போல, அழகினுக்கு அழகு செய்தார் - (இயற்கையிலே மிகுந்த) அழகையுடையதொரு பொருளுக்கு (ஆபரணம் முதலியவற்றாற் புதிதாக ஓர்) அழகுசெய்யத்தொடங்கினார்கள்; இமிழ் திரை பரவை ஞாலம் ஏழைமை உடைத்து - ஒலிக்கின்ற அலைகளையுடைய கடல் சூழ்ந்த நிலவுலகத்து உள்ள ஜனங்கள் (இங்ஙனம்) அறியாமையையே யுடையவர்கள்; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசைகள்.

இது - வேற்றுப்பொருள்வைப்பணி; இறுதியடி - பொதுப்பொருள், மற்றை மூன்றடிகள் - சிறப்புப்பொருள். இவ்வணி இங்கே உவமையைத் தனக்கு அங்கமாகக்கொண்டு வந்தது. அழகிய கண்களை மறைப்பனவாயினும் இமைகள் கண்களுக்கு அழகுசெய்வனவென்று கருதப்படுதல்போல, இயற்கையிலழகிய பிராட்டியின் வடிவத்தை மறைப்பனவாயினும் ஆபரணங்களை அவ்வடிவத்துக்கு அழகுசெய்வனவாகக் கருதினது, சிற்றறிவுடைய மாந்தரியற்கை யென்பதாம். அழகினுக்குஅழகு செய்தல் இன்றியமையாததன் றென்றபடி; "முற்ற, முழுமணிப்பூணுக்குப் பூண்வேண்டா யாரே, யழகுக்கழகுசெய் வார்" என்றார் பின்னோரும். சொல்லின் தன்மையால், 'ஞாலமேழைமையுடைத்து' என்று அஃறிணையொருமையாற் கூறப்பட்டது. இயற்கையழகோடு செயற்கையழகுங் கூடி அழகின்மேல் அழகாதற்பொருட்டு இங்ஙனஞ் செய்தனரென்பதை விளக்க, 'அமிழ்தினைச்சுவைசெய்தென்ன' என்றார். பி - ம் :—[1]தமிழ் [2]தழைக்கும். (௩)

சு.—கூந்தலில் மாலைசூட்டுதல்.

கண்ணன்றன் [1]னிறந்தன் னுள்ளக் கருத்தினை நிறைத்து மீதிட்
டுண்[2]ணின்றுங் கொடிக ளோடி யுலகெங்கும் பரந்த [3]தன்ன
வண்ணஞ்செய் கூந்தற் பார வலயத்து [4]மழையிற் றோன்றும்
விண்ணின்ற மதியின் மென்பூஞ் சிகழிகைக் கோதை வேய்ந்தார்.

(இ - ள்.) கண்ணன்தன் நிறம் - திருமாலின் கரிய திருநிறம், தன் உள்ளம் கருத்தினை நிறைத்து-பிராட்டியினது மனத்தின் எண்ணத்தை நிரப்பி, மீதுஇட்டு - மேலிட்டு, உள் நின்றும் கொடிகள் ஓடி - அவ்விடத்தினின்றுங் கொடிகளாகப் படர்ந்து, உலகு எங்கும் பரந்தது அன்ன - உலகமுழுவதும் பரவியதனைப்போன்ற, வண்ணம் செய் கூந்தல் பாரம் வலயத்து-அழகைச் செய்கின்ற தலைமயிர்த்தொகுதிவட்டத்திலே, மழையில் தோன்றும் விண் நின்ற மதியின் - மேகத்தினிடையிலே தோன்றுகிற ஆகாயத்திலே பொருந்தின சந்திரன்போல, மெல் பூ சிகழிகை கோதை வேய்ந்தார் - மென்மையானபூக்களால் தொடுக்கப்பட்ட சிகழிகையென்னும் மாலையை(ப் பிராட்டிக்குத் தோழிமார்) சூட்டினார்கள்; (எ - று.)

'உலகெங்கும் பரந்ததன்ன' என்றது, இக்கூந்தல்மயிர்த்தொகுதியை அவிழ்த்துவிட்டால் உலகமுழுவதிலும் பரவக்கூடிய அவ்வளவு நீண்ட தன்மையுடையது என்றவாறும். கூந்தல் பின்னிச் சுருண்ட வடிவமாக முடிக்கப்பட்டுள்ளதனால், 'கூந்தற்பார வலயம்' எனப்பட்டது. 'கண்ணன் றன்னிறம்...உலகெங்கும் பரந்ததன்ன...கூந்தற்பாரம்'—தன்மைத்தற்குறிப் பேற்றவணி. சீதை திருமாலை எப்போதும் எண்ணமிட்டுக்கொண்டிருத்தலால் 'தன்னுள்ளக்கருத்தினை நிறைத்து' என்றார். கூந்தலுக்கு - மேகமும், மாலைக்குச் சந்திரனும் உவமை. சிகழிகை - ஒருவகை மாலை. பி - ம்:—[1]நிறத்தின். [2]நின்ற. [3]என்ன. [4]மழையுள். (சு)

ரு.—சுட்டி பூட்டு என்னும் அணிகளை யணிதல்.

விதியது வகையால் வான [1]மீனினம் பிறையை வந்து
கதுவுறு கின்ற தென்னக் கொழுந்தொளி கனலத் தூக்கி
மதியினை[2]த் தந்த மேக மருங்குநா வளைப்ப தென்னப்
பொதியிரு ளளக பந்தி [3]பூட்டிய பூட்டு மிட்டார்.

(இ - ள்.) விதியது வகையால் - ஊழ்வினையினது தன்மையினால், வானம் மீன் இனம் - ஆகாயத்திலேயுள்ள நட்சத்திரங்களின் கூட்டம், வந்து—, பிறையை கதுவுறுகின்றது என்ன - பிறைச்சந்திரனைச் சூழ்ந்து கொள்கிறவிதம்போல, கொழுந்து - சுட்டியென்னும் அணியை, ஒளி கனல- (தனது) ஒளி நிறையும்படி, தூக்கி - கட்டி,—மதியினை தந்த மேகம் மருங்கு நா வளைப்பது என்ன - சந்திரனாகியகன்றைப் பெற்ற மேகமாகிய தாய் (அதனை நக்கும்பொருட்டு அதைநோக்கி) வெளிப்புறத்திலே நாக்கை வளைத்து நீட்டவிடுவதுபோல, பொதி இருள் அளகபந்தி பூட்டிய பூட்டுஉம் இட்டார்-நெருங்கிநிறைந்த இருள்போன்ற முன்நெற்றிமயிரினொழுங்கிலேபூட்டுதற்குஉரிய பூட்டென்னும் ஆபரணத்தையும் (தோழிமார்) அணிந்தார்கள்.

நெற்றியின்மீது மயிரினின்று தொங்கவிடப்பட்டுள்ள சுட்டி - வான மீனினம் பிறையைவந்து கதுவுறுகின்றது போலும். கொழுந்து - வயிர மணிகளினாலியன்றசுட்டி: வேறோரணியுமாம். பின்னடியிற் கூறிய பூட்டு என்றது - தலைக்கோலத்தின் [தலைசாமானின்] உறுப்பாய் நெற்றிக்கு மீது வட்டமாய்க் கட்டப்படும் பதுமராகக்கற்களினாலியன்ற ஓர் ஆபரணத்தைக் குறிப்பதுபோலும். மதியினைத் தந்தது எனவே, மேகம் தாயாயிற்று. கொழுந்து ஒளி என்பதை-ஒளிக்கொழுந்து என்றுமாற்றி, கொழுந்து கனலப் பூட்டு தூக்கியிட்டாரென்று அந்வயித்து-சுட்டிகட்டியதையே இக்கவிகூறுமென்று கொள்ளலுமொன்று. இப்பொருளில், பூட்டு - சுட்டியாம். "கருங்கொண்மூ வாய்திறந்த மின்னு" என்றாற்போல, 'மதியினைத்தந்தமேகம்'எனத் தோற்ற மாத்திரத்தால் உவமைகூறினார். பி - ம்:—[1]மீனிளம்பிறையின்மீது. [2]நக்க. [3]பூட்டுவ பூட்டும். (ரு)

சா.—தழையையணிதல்.

வெள்ளத்தின் சடிலத் தான்றன் வெஞ்சிலை யிறுத்த வீரன்
றள்ளத்தன் னாவி சோரத் தனிப்பெரும் பெண்மை தன்னை

யள்ளிக்கொண் டகன்ற காளை யல்லன்கொ லாம்கொ லென்பா
ளுள்ளத்தி னூச 1லாடுங் குழைநிழ லுமிழ விட்டார்.

(இ - ள்.) வெள்ளத்தின் சடிலத்தான் தன் - கங்கைநீர்வெள்ளத்தைத் தரித்த சடையையுடைய சிவபிரானது, வெம் சிலை - பயங்கரமான வில்லை, இறுத்த - ஒடித்த, வீரன் - வீரனானவன், தன் ஆவி தள்ள - தனது உயிர் நிலை தடுமாறவும், சோர - (தன்னுடம்பு) தளரவும், தனி பெரு பெண்மை தன்னை அள்ளிக்கொண்டு-ஒப்பற்ற சிறந்த தனது பெண்தன்மையை (ச்சில நாட்களின்முன்) கவர்ந்தெடுத்துக்கொண்டு, அகன்ற - அப்பாற்சென்ற, காளை அல்லன் கொல் - இளையவனல்லனோ? ஆம் கொல் - (அவ்விளையவன்) தானேயோ?என்பாள் - என்றுகருதுபவளான பிராட்டியினது,உள்ளத்தின்- மனம்அலைவதுபோல, ஊசல் ஆடும் - ஊஞ்சல்போல அசைகின்ற, குழை - குழையென்னுங் காதணிகளை, நிழல் உமிழ - ஒளிவீசும்படி, இட்டார்- (அச்சீதையின் காதுகளிலே தோழிமார்) தரிப்பித்தார்கள்; (எ - று.)

சானகி இராமனை ஒருகால் வீதியிலேகண்டு காதல்கொண்டு நிலை குலைந்ததைக் கீழ் மிதிலைக்காட்சிப்படலத்தில் "சிந்தையு நிறையுமெய்ந் நலனும் பின்செல, மைந்தனு முனியொடு மறையப்போயினன்" என்றது முதலியவற்றாலும், ஒருவீரன் சிவவில்லை ஒடித்தானென்ற செய்தியைக் கேட்ட மாத்திரமே யன்றிப் பிராட்டி இன்னானென்று காணாமையால் ஐயங் கொண்டுள்ளா ளென்பதை "அவனல்லனே விறப்பனென்றகத்து ளுன்னி னாள்" என்றதனாலும் அறிக. பி - ம்:—[1]ஆட. (சு)

எ.—கழுத்துக்கு அணியணிதல்.

கோனணி சங்கம் வந்து குடியிருந் தனைய கண்டத்
தீனமில் கலன்க டம்மி லியைவன வணிதல் செய்தார்
மானணி நோக்கி னார்த மங்கலக் கழுத்துக் கெல்லாந்
தானணி யான போது தனக்கணி யாது மாதோ.

(இ - ள்.) மான் அணி நோக்கினார்தம் மங்கலம் கழுத்துக்கு எல்லாம் தான் அணி ஆன போது தனக்கு அணி யாது - மான்பார்வையை யொத்த பார்வையையுடைய உலகத்து மகளிரெல்லோரது மங்கலநாணோடுகூடிய கண்டங்களுக்கெல்லாம் பிராட்டி தான் ஒப்பற்ற அலங்காரமாயிருக்கும் போது தன்கண்டத்துக்கு அணியாவது யாதோ? [எதுவுமில்லையென்றபடி]; (இங்ஙனம் மிகச்சிறந்ததாய்), கோன் அணி சங்கம் வந்து குடியிருந்து அனைய - (யாவர்க்குந்) தலைவனான திருமால் (தனது இடத்திருக்கையிலே) தரித்துள்ள (பாஞ்சசனியமென்னுஞ்) சங்கமானது (இங்கே) வந்து குடி யிருந்தாற்போன்ற, கண்டத்து - (பிராட்டியின்) கழுத்திலே, ஈனம் இல் கலன்கள்தம்மில் இயைவன - குற்றமற்ற ஆபரணங்களிற் பொருந்துவன வற்றை, அணிதல் செய்தார் - அணிந்தார்கள்; (எ - று.)

இயற்கையில் மிக்கவழகுடைய பிராட்டியின்கண்டத்துக்கு அழகைத் தருஞ் சிறப்புடைய ஆபரணம் ஒன்றும் உலகத்தில் இல்லையாயினும், தோழி மார் உலகவழக்கப்படி அதில் ஆபரணங்களை யணிந்திட்டார்களென்பதாம்,

சாதாரணசங்கம் உவமையாதற்கு ஏலாமையால், கோனணி சங்கத்தை யுவமை கூறினர். சங்கம் - கண்டத்துக்கு, வளைந்தவடிவத்தாலும் வழுவழுப்பாலும் உவமை. உலகத்தில் எல்லாமகளிர்களது வாழ்க்கைக்கும் அவர்களது மாங்கலியத்துக்கும் பிராட்டியே முக்கியகாரணமென்க. மானணி நோக்கினர் மங்கலக்கழுத்துக்கெல்லாம் தான் அணியாதலே, மகளிர் மங்கல நாணைத் திருமங்கலியமென்பதனாலும் அறியலாம். (எ)

அ.—ஆரமணிதல்.

* கோணிலா வான மீன்க ளியைவன கோத்த தென்கோ
வாணிலா வயங்கு செவ்வி வளர்பிறை [1]வகிர்ந்த தென்கோ
நாணிலா நகையி னின்ற நளிர்நிலாத் தவழ்ந்த தென்கோ
பூணிலா முலைமே லார முத்தையான் புகல்வ தென்னே.

(இ - ள்.) பூண் நிலாம் முலைமேல் ஆரம் முத்தை - ஆபரணங்கள் விளங்குதற்குக் காரணமான (அப்பிராட்டியின்) தனங்களின்மேல் (அப்பொழுது தோழிமார் தரித்த) முத்துமாலையை,— கோண் இலா - (தத்தமக்கு உரிய சஞ்சாரத்தில்) தவறுதலில்லாத, வானம் மீன்கள் - ஆகாயத்துவிளங்கும் நட்சத்திரங்களுள், இயைவன - (ஒன்றற்கொன்று இனமாகப்) பொருந்தின சிலவற்றை, கோத்தது - ஒருங்குசேர்த்துக் கோவைப்படுத்தின வடமாகும் இது, என்கு ஓ - என்று சொல்வேனோ? வாள் நிலா வயங்கு செவ்வி - (இயற்கையில்) ஒளியையுடைய (தன்) கிரணத்தோடுகூடி விளங்கும் அழகிய தோற்றத்தையுடைய, வளர் பிறை - (கலைகள் நிரம்பி) வளருந்தன்மையுள்ள சந்திரனை, வகிர்ந்தது - பிளந்து கூறுபடுத்தின பாகமாகும் இது, என்கோ - என்று சொல்வேனோ? நாணில் ஆம் நகையில் நின்ற - இலச்சையுடனே கூடின (தனது) புன்சிரிப்பிற் பொருந்திய, நளிர் நிலா - குளிர்ந்த சந்திர காந்திபோன்ற காந்தி, தவழ்ந்தது - சுற்றுப்பக்கங்களிற்பரவியதாகும்இது, என்கோ - என்றுசொல்வேனோ? யான் புகல்வது என் ஓ - நான் என்னவென்று வருணித்துச் சொல்லுவது? (எ - று.)

இங்ஙனம் பலபடிப்படக் கூறியிருப்பினும், அம்முத்துவடம் இம்மூன்று வகையையும் ஒத்திருந்ததென்பது கருத்து. 'என்கோ' என்பது - ஐயப்பொருளோடு வியப்புப்பொருளுந் தோற்ற நின்றது. என்கு - என்பேன்; தன்மை முற்று: இனி, என்கோ - என்கவோ என்பதன் விகாரமெனக் கொண்டு, என்று சொல்லக்கடவேனோ வென்றுமாம். பி - ம்:—[1] வதிந்தது.

கூ.—இதுவும் அது.

*மொய்கொள்[1]சீ றடியைச் சேர்ந்த முளரிக்குஞ் செம்மை யீந்த
தையலா [2]ளமிழ்த மேனி தயங்கொளி தழுவிக் கொள்ள
வெய்யபூண் முலையிற் [3]சேர்ந்த வெண்[4]முத்தஞ் சிவந்த வென்றாற்
[5]செய்யரைச் சேர்ந்து ளாருஞ் செய்யராய்த் திகழ்வ ரன்றே.

(இ - ள்.) மொய் கொள் - (செம்மைநிறத்தில் எனக்கு ஒப்பாகமாட்டீர்களென்று) போரைச் செய்கின்ற, சிறு அடியை - சிறிய (தனது) பாதங்

களை, சேர்ந்த - (ஒப்பாகாமையால் தோற்றுச்) சரணமடைந்த, முளரிக்கும் - செந்தாமரைமலர்களுக்கும், செம்மை ஈந்த - செந்நிறத்தைக் கொடுத்த, தையலாள் - அழகையுடைய பிராட்டியினது, அமிழ்தம் மேனி - அமிருதம் போலருமையான செந்நிறத்திருமேனியிலே, தயங்கு - விளங்குகிற, ஒளி - செந்நிறவொளி, தழுவிக்கொள்ள - (தம்மேல்வந்து) பொருந்துதலால், வெய்ய பூண் முலையில் சேர்ந்த வெள் முத்தம் சிவந்த - விருப்பத்தைத் தருகிற ஆபரணங்களையணிந்த தனங்களிலே பொருந்தின வெண்ணிறமான முத்துக்களும் செந்நிறமடைந்தன; என்றால் - (இதுஎங்ஙனம் பொருந்தும்?) என்றால், செய்யரை சேர்ந்துளார்உம் செய்யர் ஆய் திகழ்வர் அன்றே - செம்மைக்குணமுள்ளவர்களைச் சேர்ந்துள்ளவர்களுஞ் செம்மைக் குணமுள்ளவர்களாய் விளங்குவார்களன்றோ? (எ - று.)

முதல் மூன்றடிகளிற் கூறிய சிறப்புப் பொருளை 'செய்யரைச் சேர்ந்துளாருஞ் செய்யராய்த் திகழ்வர்' என்ற ஈற்றடி சமர்த்தித்து நின்றது; இது, வேற்றுப்பொருள்வைப்பணி. உபமானத்திற் செம்மை - நற்குணத்துக்கும், உபமேயத்திற் செம்மை - சிவந்த நிறத்துக்கும் பெயராம். இங்ஙனம் பண்புமாத்திரத்தால் ஒத்தலை "புறங்குன்றி கண்டனைய ரேனும்" என்னுந் திருக்குறளிலுங் காண்க. மகளிர்பாதம் சிறுத்திருத்தல், உத்தமவிலக்கணம். மொய் - போர். பிராட்டியின் திருநிறம் அப்பொழுது உருக்கிய மாற்றுயர்ந்த பொன்னின் வருணத்தை ஒத்திருக்குமென்க. பி - ம்:— [1]சீரடி. [2]பவளமேனி. [3]பெய்த. [4]முத்துஞ்சிவந்து மெய்யில். [5]செய்யவர்ச்.

கO.—தோள்கட்கு அணிகலங்களை யணிதல்.

* கொமையுற வீங்கு கின்ற குலிகச்செப் பனைய கொங்கைச்
சுமையுற நுடங்கு கின்ற நுசுப்பினாள் பூண்செய் தோளுக்
கிமையுற விமைக்குஞ் செங்கே ழினமணி முத்தி னோடு
மமையுற வமைவ துண்டா மாகினொப் பாகு மன்றே.

(இ - ள்.) கொமை உற - திரட்சி பொருந்த, வீங்குகின்ற - மேன்மேற் பூரிக்கிற, குலிகம் செப்பு அனைய கொங்கை - இங்குலிகக்கலசங்களை யொத்த தனங்களின், சுமை உற - பாரம் மிகுதலால், நுடங்குகின்ற - (மேன்மேல்) துவளுகின்ற, நுசுப்பினாள் - இடையையுடைய பிராட்டியினது, பூண் செய் தோளுக்கு - (ஏற்ற) ஆபரணங்களை யணிந்த தோள்களுக்கு, இமை உற இமைக்கும் செம் கேழ் இனம் மணி முத்தினோடுஉம் உற அமைவது அமை உண்டு ஆம் ஆகின் ஒப்பு ஆகும் - (பார்ப்பவர் கண்கள் ஒளிமிகுதியைக் கண்டு கூச்சமடைந்து) இமை மூடுதல் செய்யும்படி விளங்குகிற சிவந்த ஒளியையுடைய கூட்டமான பதுமராகக்கற்களோடும் முத்துக்களோடும் மிகுதியாகப் பொருந்துவதொரு மூங்கில் உண்டாகுமானால் அதுவே சமானமாகும்; (எ - று.)—அன்றே - தேற்றம்.

மூங்கில் பல ரத்தினங்களோடும் முத்துக்களோடுங் கூடிவிளங்கினால் அப்பொழுது அரதனாபரணங்களையும் முத்தாபரணங்களையும் அணிந்த பிராட்டியின் தோளுக்கு உவமையாம் என்றவாறும். இங்ஙனம் தோளை

வருணிப்பதுபோலக் கூறியிருப்பினும், சந்தர்ப்பத்திற்கு ஏற்ப, தோளில் பதுமராகம் முத்து இவைகளாலியன்ற அணிகளைப் பூட்டினரென்பதையே கருத்தாகக் கொள்க. கொமை - கொம்மை: கொமை - வட்டமென்பாரு முளர். மிகச்சிவந்த குலிகச்செப்பு - மிகச்சிவந்த பிராட்டியின் தனங் களுக்கு, வடிவத்தாலும் நிறத்தாலும் உவமையாம். (௧0)

கக.—கையிற் கடகமணிதல்.

தளையவிழ் கோதை யோதிச் சானகி தளிர்க்கை யென்னு
முளரிக ளிராமன் செங்கை முறைமையிற் றீண்ட நோற்ற
வளியன கங்குற் போதுங் குவியல வாகு மென்றாங்
கிளவெயில் சுற்றி யன்ன வெரிமணிக் கடக [1]மிட்டார்.

(இ - ள்.) 'தளை அவிழ் - (மலர்கள்) முறுக்குவிரிதற்கு இடமான, கோதை - பூமாலையைச் சூடிய, ஓதி - கூந்தலையுடைய, சானகி - சீதா பிராட்டியினது, தளிர் கை என்னும் - தளிர்கள்போல்மெல்லிய கைகளென் கிற, முளரிகள் - செந்தாமரைமலர்கள், இராமன் செம் கை - ஸ்ரீராமபிரா னது சிவந்த கைகளால், முறைமையின் - சாத்திர முறைமைப்படி, தீண்ட - தொடப்படுவதற்கு, நோற்ற - தவஞ்செய்துள்ளன; அளியன - (இவை யாவ ராலும்) அன்பு பாராட்டத்தக்க தன்மையையுடையன; கங்குல் போதுஉம் குவியல ஆகும் - இராத்திரிகாலத்திலும் குவியாதனவாம்,' என்று - என்று கருதி, (அவற்றிற்குப் பாதுகாவலாக), ஆங்கு - அக்கைகளிலே, சுற்றி அன்ன - (இரட்சையைச்) சூழக்கட்டினாற்போன்ற, இள வெயில் எரி மணி கடகம் - இளவெயில்போல் விளங்குகிற பதுமராகமணிகள்பதித்துள்ள கடகமென்னும் ஆபரணங்களை, இட்டார் - (பிராட்டியின்கைகளிலே தோழி மார்) இட்டார்கள்; (எ - று.)

கடகமணிந்தது - யாவரும் அன்பு செய்தற்கு உரிய சீதையின் கை கட்கு யாதொரு குறைவும் நேராதபடி இரட்சை கட்டினாற்போலு மெனக் குறித்தார். இளவெயிலைச் சுற்றினாற்போன்ற கடகம் என்று உரைப்பாரு முளர். மிகச்சிறந்த தவப்பயன்இருந்தாலன்றி ஒருமகளுக்கு இராமபாணிக் கிரகணம் நேராதாதலால், 'நோற்ற' என்றது. பி - ம்:— [1]வேய்ந்தார், சேர்த்தார். (௧௧)

கஉ.—கொங்கையில் தொய்யி லெழுதுதல்.

*சில்லிய லோதி கொங்கைத் திரண்மணிக் கனகச் செப்பில்
வல்லியு மனங்கன் வில்லும் மான்மதச் சாந்திற் றீட்டிப்
பல்லிய னெறியிற் பார்க்கும் பரம்பொரு ளென்ன யார்க்கு
மில்லையுண் டென்ன நின்ற விடையினுக் கிடுக்கண் செய்தார்.

(இ - ள்.) சில் இயல் ஓதி - சில வகைகளாகவகுத்து அலங்கரிக்கப்படு கிற கூந்தலையுடைய சானகியினது, கொங்கை - தனங்களாகிய, மணி திரள் கனகம் செப்பில் - நீலமணியொன்றை அடியிலே பதிக்கப்பட்டுள்ள திரண்ட பொன்மயமான கிண்ணங்களிரண்டைக் கவிழ்த்துவைத்தாற்

போன்ற தனங்களிலே, வல்லிஉம் - பூங்கொடியையும், அனங்கன் வில்உம்- மன்மதனது தனுசான கரும்பையும், மான்மதம் சாந்தின் தீட்டி - கஸ்தூரி சேர்ந்த சந்தனக்குழம்பினாலே எழுதி, பல் இயல் நெறியின் பார்க்கும் பரம்பொருள் என்ன யார்க்குஉம் இல்லை உண்டு என்ன நின்ற இடையினுக்கு - பலவகைப்பட்ட சமயங்களாற் பார்க்கப்படுகிற எல்லாப் பொருள்களினும் மேம்பட்ட பொருளான கடவுளின் வடிவம் (உண்டென்றும் இல்லையென்றும் எல்லோர்க்கும் சந்தேகிக்கப்பட்டு நிற்றல்) போல உண்டோ இல்லையோ என்று யாவர்க்கும் ஐயமுண்டாம்படி நிற்கின்ற(அப்பிராட்டியின்) சிறுமெல்லிடைக்கு, இடுக்கண் செய்தார் - (அத்தொய்யிற்பாரத்தால்) வருத்தத்தை விளைத்தார்கள்; (எ - று.)

சில்லியலோதி - அன்மொழித்தொகை. முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை என இங்ஙனம் சில பகுப்புக்களாகக் கூந்தல் அலங்கரிக்கப்படுதலால், 'சில்லியலோதி' எனப்பட்டது: இனி, குளிர்ச்சி பொருந்திய கூந்தலென்றும், மென்மைத்தன்மை பொருந்திய கூந்தலென்றுமாம்; சில் - ஒருவகை ஆபரணமென்றுங் கூறுவர். மணி - கொங்கையின் கருங்கண்ணுக்கும், பொற்செப்பு - செய்ய கொங்கைக்கும் உவமை. கடவுளின்வடிவம் எவர்க்கும் எதிரிற் புலப்படாமையால் 'இல்லை' எனவும், காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கடவுளின் உண்மை அநுமானபிரமாணத்தால் அறியவேண்டுதலின் 'உண்டு' எனவுங் கூறப்படும்; அதுபோலவே, மிக நுண்ணிய இடையின் வடிவம் கட்புலப்படாமையால் 'இல்லை' என்றும், மேலுங்கீழுமுள்ள கொங்கை கூந்தல் அல்குல் முதலிய காணப்படுகிற அவயவங்களின் உண்மைகொண்டு அநுமானப்பிரமாணத்தால் அறிய வேண்டுதலால் 'உண்டு' எனவுங் கூறப்படு மென்க. பரம் பொருள் - பரமாத்துமா. பல்லியனெறி - த்வைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம் முதலிய பலமதங்களிலும் கூறப்படுகிற பிரதியட்சம், அநுமாநம், சப்தம் முதலிய பிரமாணங்களின் முறைமை; யுக்திவாதம். (கஉ)

கங.—இடையில்மேகலையும் தாரகைச்சும்மையும் அணிதல்.

நிறஞ்செய்கோ சிகநுண் டூசு நீவிநீ வாத வல்குற்
புறஞ்செய்மே கலையுந் தாழத் தாரகைச் சும்மை பூட்டித்
திறஞ்செய்கா சீன்ற சோதி பேதைசே யொளியிற் [1]றீர்ந்த
கறங்குபு திரியத் [2]தாழுங் கண்விளக் [3]கற்று நின்றார்.

(இ - ள்.) நிறம் செய்-வருணவொளியைச் செய்கின்ற, கோசிகம் நுண் தூசு நீவி - பட்டாகிய நுட்பமான [மிகமெல்லிய] ஆடையின் கொய்சகத்தை, நீவாத-நீங்காத, அல்குல் புறம்-இடைக்கு,செய் மேகலைஉம்-(அழகு) செய்கின்ற மேகலாபரணத்தையும், தாழ - அதன் கீழ்ப்பட, தாரகைச் சும்மை - தாரகைச்சும்மை யென்னும் மணிவடத்தொகுதியையும், பூட்டி - (தோழிமார்) அணிந்து,—திறம் செய் காசு ஈன்ற சோதி - (அவ்வாபரணங்களின்) பலவகைப்பட்ட இரத்தினங்கள் வெளிவிட்ட ஒளிகள், பேதை சேய் ஒளியின் தீர்ந்த கறங்குபு திரிய - இளம்பெண்ணாகிய அச்சீதையினது

சிவந்த தேககாந்தியினின்றும் வேறுபட்டனவாய் (நாற்புறத்திலுஞ்) சுழன்று உலாவ, தாம்உம் - (அலங்காரஞ் செய்த) தாமும், கண் விளக்கு அற்று நின்றார் - (அவ்வொளிமிகுதியைக் கண்டு) கண்களிெனொளியை இழந்து நின்றார்கள்; (எ - று.)

தூசும் நீவியை நீவாத அல்குலைப் புறஞ்செய்கின்ற தாரகைச்சும்மையும் தாழ என்று இசையத்து உரைத்தலும் ஒன்று. தாரகைச்சும்மை - நட்சத்திரத்தொகுதிபோல முத்துக்கூட்டத்தாலாகியதொரு ஆபரணம்; உவமையாகுபெயர். பேதை சேயொளியில் தீர்ந்த என்பதற்கு - பிராட்டியின் சிவந்த ஒளிமிகுதியால் ஆபரணகாந்திகள் அவ்விடம்விட்டு நீங்கினவாய் என்றும் உரைப்பர். பி - ம்:— [1]சேர்த்தி. [2]யாரும். [3]உற்று. (கங)

கச.—பாதங்களிற் சிலம்பு அணிதல்.

* [1]ஐயவா மனிச்சப் போதி னதிகமு நொய்ய வாடற்
பையர வல்கு லாடன் பஞ்சின்றிப் பழுத்த பாதஞ்
செய்யபூங் கமல மன்னச் சேர்த்திய சிலம்பு சால
நொய்யவே நொய்ய [2]வென்றோ பலபட நுவல்வ தம்மா.

(இ - ள்.) ஐய ஆம் அனிச்சம் போதின் - (எல்லாமலர்களினும் மிகவும்) மெல்லியனவாகிய அனிச்சமலர்களைக் காட்டிலும், அதிகம்உம் நொய்ய - மிகவும் மெல்லியனவும், ஆடல் பை அரவு அல்குலாள்தன் பஞ்சு இன்றி பழுத்த-ஆடுதலையுடைய பாம்பின்படத்தையொத்த அல்குலையுடைய பிராட்டியினது செம்பஞ்சுக்குழம்பு ஊட்டப்படாமலே சிவந்துள்ளனவுமாகிய, பாதம் - திருவடிகள், செய்ய பூ கமலம் மன்ன - செந்தாமரைமலர்களை ஒத்திருக்க, சேர்த்திய - (அச்சீர்ப்பாதங்களிலே தோழிமார்களால்) இடப்பட்ட, சிலம்பு - சிலம்பென்னுங் காலணிகள், பல பட நுவல்வது - பல படிப்பட அடிக்கடி ஒலிப்பது,—சால நொய்யவே நொய்ய என்றோ - (அத்திருவடிகள்) மிகவும் மெல்லியனவேயாம் மெல்லியனவேயாம் என்று தானோ? அம்மா - ஆச்சரியம்! (எ - று.) — அம்மா - வியப்பிடைச்சொல்.

சிலம்பணியின் ஒலியைக் காலின்மிக்கமென்மையைக் கூறுவதாக வருணித்தார்; தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]ஐயவாய். [2]அன்றோ, என்றே.

கரு.—கண்கட்குத் தோழிமார் மையிடுதல்.

[1]நஞ்சிடை யமிர்தங் கூட்டி நாட்டங்க ளாக வென்னச்
செஞ்செவே நீண்டு மீண்டு சேயரி சிதறித் தீய
வஞ்சமுங் களவு மின்றி மழையென மதர்த்த கண்க
ளஞ்சன நிறமோ வண்ண லவண்ணமோ வறித றேற்றும்.

(இ - ள்) நஞ்சு இடை அமிர்தம் கூட்டி - விஷத்தை இடையிலே வைத்துச் சுற்றிலும் அமிருதத்தைப்பெய்து, (அதனால்), நாட்டங்கள் ஆன என்ன - (பிராட்டியின்) கண்கள் அமைந்தன என்று சொல்லும்படி, செம் செவே நீண்டு - கோணலின்றி நேராக (நெடுந்தூரம் காதளவும்) நீண்டு சென்று, மீண்டு - (அப்பால் இடமில்லாமையால்) திரும்பிவந்து, சேய் அரி சிதறி - (உத்தமவிலக்கணமாகிய) சிவந்த இரேகைகள் சில சிந்தப்பெற்று,

தீய வஞ்சம்உம் களவுஉம் இன்றி-கொடியவஞ்சனையுங் கள்ளத்தனமும் இல்லாமல், மழை என - மழைபோலக் குளிர்ந்ததன்மையுடையனவாய், மதர்த்த – செழிப்புக்கொண்டு வளர்ந்த, கண்கள் - (பிராட்டியின்) கண்களில், (அப்பொழுது பொருந்தினது),[1] அஞ்சனம் நிறம் ஓ - (இடப்பட்ட மையின் கருநிறந்தானோ? அண்ணல் வண்ணம் ஓ - இராமபிரானது திருமேனியின் கருநிறந்தானோ? அறிதல் தேற்றும் - ஐயமின்றித் தெளிய அறிகிலோமில்லை; (எ - று.)

நஞ்சும் அமிருதமும் சேர்த்துச்சொல்லப்படுதலால், அவை - பாற்கடலிற்பிறந்த ஆலாகலவிஷமும், தேவாமிருதமுமாம். "அமிழ்தினின் விளர்த்துள்நஞ்சினிற் கருகி யையரி சிதறி மைதோய்ந்து, கமலமென் மலரைவனம்புகுத்திய வேற்கண்ணிணை" என்றார் பிறரும். நஞ்சு - கண்ணின் கருவிழிக்கும், அமிர்து - அதன் சுற்றுப்புறத்து வெண்ணிறப் பரப்புக்கும் உவமையாம். இராமபிரானொருவனிடத்தி லொழிய மற்றையெவரிடத்தும் பொதுநோக்கமேயன்றிக் காதற்சிறப்புநோக்கம் இல்லாமையால், 'தீய வஞ்சமுங் களவு மின்றி' எனப்பட்டது. பி - ம்:—[1] நஞ்சினோடு. (கரு)

கசு.—நெற்றியில் திலகமிடுதல்.

மொய்வளர் குவளை பூத்த முளரியின் முளைத்த மூந்நாண்
மெய்வளர் மதியி னுப்பண் மீனுண்டே [1]லனைய தேய்ப்ப
வையக மடந்தை மார்க்கு நாகர்கோ தையர்க்கும் வானத்
தெய்வமங் கையர்க்கு மெல்லாந் திலகத்தைத் திலகஞ் செய்தார்.

(இ - ள்.) மொய் வளர் - (இதழ்கள்) நெருங்கிச் செழிப்பாய் வளர்ந்த, குவளை-இரண்டுநீலோற்பலமலர்கள், பூத்த - (தன்னிடத்தே) பூக்கப்பெற்ற, முளரியின் - ஒரு செந்தாமரைமலரினிடத்தே, முளைத்த - உதித்துவிளங்குகிற, மெய் வளர் மூந்நாள் மதியின் நாப்பண் - (நாள்தோறுங் கலைகள் கூடி) உடம்புவளருந்தன்மையையுடைய மூன்றாநாட்பிறைச்சந்திரனது நடுவிலே, மீன் உண்டு ஏல் - நட்சத்திரமொன்று உண்டாயிருக்குமானால், அனையது ஏய்ப்ப - அதனை ஒக்கும்படி, வையகம் மடந்தைமார்க்குஉம் நாகர் கோதையர்க்கும் வானம் தெய்வம் மங்கையர்க்குஉம் எல்லாம் திலகத்தை திலகம் செய்தார்-(நடுவுலகமாகிய) பூலோகத்திலே யுள்ள மனிதப்பெண்களுக்கும் (கீழுலகமாகிய)பாதாளலோகத்திலேயுள்ள நாககன்னிகைகளுக்கும் (மேலுலகமாகிய) சுவர்க்கலோகத்திலே யுள்ள தேவதாஸ்திரீகளுக்கும் இங்ஙனம் மூன்றுலோகங்களிலு முள்ள பெண்களெல்லோர்க்கும் திலகம்போலச் சிறந்தபிராட்டியைத்(தோழிமார் நெற்றியில்)திலகமிட்டுஅலங்கரித்தார்கள்.

கருங்குவளைமலர்கள் - திருக்கண்களுக்கும், செந்தாமரைமலர் - முகமண்டலத்துக்கும், மூன்றாம்பிறைச்சந்திரன் திருநெற்றிக்கும், பிறையின் மத்தியிலே விளங்குவதொரு நட்சத்திரம் - அந்நெற்றியினடுவிலே நூதனமாக இடப்பட்ட பளபளவென்றிருக்குந் திலகப்பொட்டுக்கும் உவமையாமெனக் காண்க. திலகம் நெற்றிக்கு அழகுசெய்வதுபோலப் பிராட்டிபெண்களுக்கெல்லாம் அழகை விளைப்பவ ளென்க, திலகமில்லாத

நெற்றி அழகில்லாதவாறுபோலப் பிராட்டியொருத்திபிறவாளாயின் பெண் பால்வகைக்கே உலகத்துப் பெருமையின்றா மென்பதாம். மூந்நாள் - திரு தீயையென்னுந் திதி. 'திலகத்தைத் திலகஞ்செய்தார்' என்றதனால், இவர் கள் செய்த அலங்காரமெல்லாம் பிராட்டிதிறத்தில் இன்றியமையாதனவல்ல வென்றவாறும். முதலிரண்டடிகள் - தற்குறிப்பேற்றவணி; இல்பொருளு வமையணி யென்பாரு முண்டு. பி - ம்:—[1] அன்னது. (௧௬)

௧௭.—பலவகைப் பூக்களை சூட்டி யலங்கரித்தல்.

சின்னப்பூச் செருகு மென்பூச் சேகரப் போது கோதில்
கன்னப்பூக் கஞல மீது கற்பகக் கொழுந்து மான
மின்னப்பூஞ் சுரும்பும் வண்டு மிஞிறுந் தும் பிகளும் [1]பம்பப்
புன்னைப்பூந் தாது மானும் பொற்பொடி யப்பி விட்டார்.

(இ - ள்.) பூ சுரும்புஉம் வண்டுஉம் மிஞிறுஉம் தும்பிகள் உம் பம்ப -அழகிய சுரும்புகளும் வண்டுகளும் மிஞிறுகளும் தும்பிகளும் நெருங்கி மொய்க்குமாறு, சின்னம் பூ - விடுபூவும், செருகும் மென் பூ - (தலைமயிர்ப் பின்னலின் இடையிலே) செருகத்தக்க மெல்லிய பூவும், சேகரம் போது - தலைமயிர்முடிமேலே சூடுதற்குரிய மாலையாகிய பூவும், கோது இல் கன்னம் பூ - குற்றமில்லாத காதுகளிலே வைத்திடுதற்குரிய பூவும், என்னும் இவை- என்னுமிவற்றை, கஞல - (அங்கங்கு)நிறைந்து விளங்கும்படி, (அவ்வவற்றை அணிதற்குரிய இடங்களிலே அணிந்து), மீது -(அவற்றின்)மேலே, கல்பகம் கொழுந்து மான - (அம்மலர்கள் பொன்னிறமான) கற்பகவிருட்சத்தின் இளந்தளிர்களை ஒக்கும்படி, மின்ன - விளக்கமுண்டாக, புன்னை பூ தாது மானும் பொன் பொடி அப்பிவிட்டார்-புன்னைமலர்களின் மகரந்தப்பொடி களை ஒக்கின்ற பொற்பொடிகளைக் கைகளாலெடுத்து அப்பியிட்டார்கள்.

சின்னப்பூ என்பதற்கு - இடையிடையே கிள்ளிக்கிள்ளி விசித்திர வேலைப்பாடு அமைக்கப்பட்ட பூ என்றும், அடையாளப் பூ என்றும் உரைப் பர். சேகரம் - தலையணி; வடசொல். கன்னப்பூஎன்பதற்கு-கபோலங்களில் ஒட்டியணிதற்குரிய அணியென்று உரைப்பாரு முளர்.பொற்பொடிக்கு, புன் னைப் பூந்தாது-நிறத்தா லுவமை. அலங்கரித்துமுடிந்தமைதோன்ற, 'அப்பி விட்டார்' என்றது. "துணையோ ராய்ந்த விணையீ ரோதிச், செங்கால் வெட் சிச் சிறிதழ் யிடையுடுபு, பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித், தெய்வ வுத்தி யொடு வலம்புரி வயின்வைத்துத், திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல், மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத், துவர முடித்த துகளறு முச்சிப், பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட், டுளைப்பூ மருதி னொள்ளிணர் அட்டிக், கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும், பிணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக, வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர், நுண்பூ ணாகந் திளைப்ப" என்னுந் திருமுருகாற்றுப்படை இங்கே காணத்தக்கது. பி - ம்:—[1] பம்பும். (௧௭)

கஅ.—சீதைக்கு அணிகளையணிந்தபின் தோழியர் இரட்சை செய்தல்.

நெய்வளர் விளக்க மாட்டி நீரொடு பூவுந் தூவித்
தெய்வமும் பராவி வேத பாரகர்க் கீந்து செம்பொ
னையவி நுதலிற் சேர்த்தி [1]யாய்நிற வயினி சுற்றிக்
[2]கைவளர் மயில னானை வலஞ்செய்து காப்பு மிட்டார்.

(இ - ள்.) (இங்ஙனம் அலங்கரித்த அத்தோழிமார் பிராட்டிக்குத் திருஷ்டிதோஷபரிகாரத்தின்பொருட்டு), நெய் வளர் விளக்கம் ஆட்டி - நெய்யைக்கருவியாகக்கொண்டுவளர்க்கப்பட்ட தீபத்தைச் சுழற்றிக்காட்டி, நீரொடு பூஉம் தூவி - சுத்தநீர்த்தத்துடனே பூக்களையும் (பலியாக) முன் இறைத்து, தெய்வம்உம் பராவி - இஷ்டதேவதைகளைக்குறித்துப் பிரார்த்தனையுஞ்செய்து, வேதபாரகர்க்கு செம் பொன் ஈந்து - வேதங்களைக்கரை கண்டறிந்த பிராமணர்களுக்குச் சிவந்த பொன்னணையங்களைத் தானஞ் செய்து, ஐயவி நுதலில் சேர்த்தி - சிறுவெண்கடுகுப்பொடிகளை நெற்றியிலே தரிப்பித்து, ஆய் நிறம் அயினி சுற்றி - ஆராய்ந்தெடுத்த செந்நிறத்தையுடைய ஆலத்திநீரைச் சுழற்றி, கை வளர் மயில் அனானை வலம்செய்து - கைகளிலே எடுத்துவளர்க்கப்பட்ட மயிற்பறவையைப் போன்ற சாயலையுடைய (தம்மாலெடுத்து வளர்க்கப்பட்ட) பிராட்டியை வலப்புறத்தாற் சூழ்ந்துவந்து, காப்புஉம் இட்டார் - (வேறுவிதமான) இரட்சாபந்தனத்தையுஞ் செய்தார்கள்; (எ - று.)

விளக்கம் மாட்டி - விளக்கையேற்றி என்பாருமுளர். அயினி - சோறு; அதனோடுகூடிய மஞ்சள்நீருக்கு ஆகுபெயர். வலம்செய்துசுற்றி என இயைத்து - ஆலத்திநீரைப் பிரதட்சிணமாகச்சுழற்றி என்று உரைப்பாருமுளர். காப்புஇடுதல் - ஆலத்திநீரைக் கைவிரலால் தொட்டு நெற்றியிற் காப்பாக இடுதலுமாம். காப்பு - விபூதிக்காப்புஎன்றும் உரைப்பர். இவையெல்லாம், கண்ணெச்சில்கழித்தற்கு உபயோகிப்பன. பி - ம்:— [1]வானிற வயினி. [2]கைவளை. (கஅ)

ககூ.—வண்ணமகளிர் சீதையினழகைக் கண்டு காழறுதல்.

கஞ்சத்துக் களிக்கு மின்றேன் கவர்ந்துணும் வண்டு போல
வஞ்சொற்கள் கிள்ளைக் கெல்லா மருளினா ளழகை மாந்தித்
தஞ்சொற்கள் குழறித் தத்தந் [1]தகைதடு மாறி நின்றார்
மஞ்சர்க்கு மாத ரார்க்கு மனமென்ப தொன்றே யன்றோ.

(இ - ள்.) கஞ்சத்து - தாமரைமலரிலிருந்து, களிக்கும் இன் தேன் கவர்ந்து - களிப்பை விளைத்தற்குக் காரணமான இனிமையான தேனைக் கொள்ளைகொண்டு, உணும் - பருகுகின்ற, வண்டு போல - வண்டுகள் போல, (அவ்வண்ணமாதர்கள்), அம் சொற்கள் கிள்ளைக்கு எல்லாம் அருளினாள் அழகை மாந்தி - அழகிய சொற்களைக் கிளிகளுக்கெல்லாங் கற்பித்தருளிய அப்பிராட்டியினது அழகைப் பருகி, (அதனால் அவளிடத்துஉண்டான காதலால்), தம் சொற்கள் குழறி - தங்கள் தங்க

ளது(இயற்கையான)பேச்சுக்கள் குளறி, தத்தம் தகை தமோறி நின்றார்-தங்கள் தங்களது (நாணம் முதலிய) இயற்கைக்குணம் மாறுபட்டுநின்றார்கள்; மஞ்சர்க்குஉம் மாதரார்க்குஉம் மனம் என்பது ஒன்றுஏ அன்றுஓ-(உலகத்தில்)ஆடவர்களுக்கும் மகளிர்களுக்கும் மனமென்னும்பொருள் ஒருதன்மையதேயாமன்றோ? (எ – று.)

வண்டுகள் தாமரைமலரின்மதுவை வாயாற்பருகிக் களித்தல்போலத் தோழிமார் இயற்கையழகுடன் செயற்கையழகுங்கூடி விளங்கிய அப்பிராட்டியின் அளவுக்குவிஞ்சின சௌந்தரியத்தைக் கண்ணாற்பருகிக் களித்து அப்பிராட்டியினிடத்து ஆடவர் காதல்கொள்ளுமாறுபோலவே காதல்கொண்டாரென்பதாம். முதல்மூன்றடிகளிற்கூறிய சிறப்புப்பொருளை ஆடவர்க்கும் மகளிர்க்கும் மனமென்பது ஒருதன்மைத்தேயா மென்று ஈற்றடியிற் பொதுப்பொருளாற் பெறவைத்தார்; வேற்றுப்பொருள்வைப்பணி. இக்கருத்துத்தோன்றவே,கீழ் மிதிலைக்காட்சிப்படலத்தில் "கண்களிற்காணவே களிப்புநல்கலான், மங்கையர்க் கினியதோர் மருந்து மாயவள்" என்றார். "பெண்டிருமாண்மை வெஃகிப் பேதுறுமுலையினாள்", "வடிவுநோக்கி, ஆண் விருப்புற்றுநின்று ரவ்வளைத் தோளினாரே" எனச் சிந்தாமணி நூலார் கூறியவாறுங் காண்க. கொஞ்சுகிற கிளிமொழியினும் இனியமொழியாளென்பார், 'சொற்கள் கிள்ளைக்கெல்லாமருளினாள்'என்றார்.பி - ம்:—[1] நிலை.

௨௦.—இதுவும் அது.

*இழைகுலா முலையி னாளை யிடையுவா மதியி னோக்கி
மழைகுலா வோதி நல்லார் களிமயக் குற்று நின்றா
ருழைகுலா நயனத் தார்மாட் டொன்றொன்றே விரும்பற் கொத்த
தழகெலா மொருங்கே கண்டால் யாவரே யாற்ற வல்லார்.

(இ - ள்.)மழை குலாவு ஓதி நல்லார் - மேகம்போல(க் கறுத்தநிறத்தனவாய்) விளங்குகிற கூந்தலையுடைய அழகிய தோழிப்பெண்கள், இழை குலாம் முலையினாளை - (தம்மிலணியப்பெற்ற) ஆபரணங்கள் விளங்குதற்குக் காரணமான தனங்களையுடைய அச்சானகிப்பிராட்டியை, இடையுவா மதியின் நோக்கி - பௌர்ணமிதிதியில்தோன்றுகிற சந்திரனைப்போலப் பார்த்து, களி மயக்கு உற்று நின்றார் - களிப்பினாலாகிற மயக்கத்தை அடைந்து நின்றார்கள்; உழை குலாம் நயனத்தார் மாட்டு-(உலகத்திலுள்ள) மான்விழிபோலவிளங்குகிற கண்களையுடைய பெண்களிடத்தெல்லாம், ஒன்று ஒன்றே விரும்பற்கு ஒத்தது - ஒவ்வொரு அவயவமே மிகுதியாய் விரும்புதற்கு ஏற்ற கட்டழகையுடையதாயிருக்கும்; (அப்படியிருக்க), அழகு எலாம் ஒருங்குஏ கண்டால் - (உலகத்திலேயுள்ள) எல்லாவழகுகளையும் ஓரிடத்திலே பார்த்தால், ஆற்ற வல்லார் யாவர்ஏ - (அதனிடத்துக் காதல்கொள்ளாமல்)பொறுத்திருக்கவல்லவர் யாவருளர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

பிராட்டி சர்வாங்கசுந்தரியாதலால், அவளைக்கண்டமாத்திரத்தில் மகளிருங் காதல்கொண்டுநின்றார்களென்பது கருத்து. இதுவும் - வேற்றுப்

பொருள்வைப்பணி. "அனுமதிபவ்வம் பூரணையிடையுவா" என்பது நிக ண்டு. ஒன்றேன்றே - குணம் செய்கை வடிவு நடை சாயல் முதலியவற்றில் ஒவ்வொன்றுதானே யென்றும் உரைப்பர். (௨0)

உக.—சீதையின் வருணனை.

சங்கங்கை யுடைமை யாலுந் [1]தாமரைக் கோயி லாலு
மெங்கெங்கும் பரந்து [2]வெவ்வே றுள்ளத்தி னெழுதிற் றென்ன
வங்கங்கே தோன்ற லாலு மருந்ததி யனைய கற்பி
னங்கையு [3]நம்பி யொத்தா ளுமினிப் புகல்வ தென்னே.

(இ - ள்.) சங்கு அம் கை உடைமையால்உம்-(ஸ்ரீபாஞ்சசன்னியமென்னுந்) திருச்சங்கை அழகிய (இடத்) திருக்கையிலே கொண்டிருத்தலாலும் [சங்கவளையல்களை அழகிய கைகளிலே யுடைத்தாயிருக்குந்தன்மையாலும்],தாமரைகோயிலால்உம்-(தியானிப்பவர்களது இருதய)கமலத்தை(த்தனக்கு)வாழிடமாகக்கொண்டிருத்தலாலும்[செந்தாமரைமலரைத்தனக்குத் தங்குமிடமாகப் பெற்றிருத்தலாலும்], எங்கு எங்குஉம் பரந்து-எல்லாவிடங்களிலும் பரவி, வெவ் வேறு - தனித்தனியாக, உள்ளத்தின் எழுதிற்று என்ன - (அவரவர்) மனத்திலெழுதியதுபோல, அங்கு அங்கு தோன்றலால் உம் - அவ்வவ்விடங்களிலே காணப்படுதலாலும், அருந்ததி அனைய கற்பின் நங்கைஉம்-அருந்ததிதேவியையொத்த பதிவிரதாதருமத்தையுடைய பெண்களிற்சிறந்த பிராட்டியும், நம்பி ஒத்தாள் - ஆடவரிற் சிறந்த இராமபிரானைப்போன்றாள்; இனி நாம் புகல்வது என்ஓ-இனிமேல் (இதனினும் வேறாகப்பிராட்டிக்கு)நாம் சொல்லக்கூடிய உபமானப்பொருள் யாதுஉள்ளதோ?

சிலேடைபற்றிவந்த உவமையணி. சங்கம் என்றும் பிரிக்கலாம். தாமரைக்கோயிலாலும் என்பதற்கு - தாமரைமலர் வடிவாகக் கோடிட்டு எழுதப்படுகிற யந்திரத்தில் மந்திரபலத்தால் வந்து எழுந்தருளுந் தன்மையாலும் என்றும் உரைக்கலாம். எம்பெருமானுக்கு எங்கெங்கும் பரந்து வெவ்வேறுள்ளத்தினெழுதிற்றென்ன அங்கங்கே தோன்றல்,சர்வாந்தர்யாமித்துவத்தால்; பிராட்டிக்கு இங்ஙனமாதல், இயற்கையழகின் மிகுதியோடு செயற்கையழகின்மிகுதியும் உடைமைபற்றி யாவர்மனத்திலும் பதிந்திருத்தலால். ஒப்புயர்வில்லாத பிராட்டிக்கு அருந்ததியைஉவமைகூறியது,கற்பென்னுங் குணமொன்றுக்கு மாத்திரமே யென்று அறிக; அன்றியும், அவளதுகொழுநனதுகுலகுருவின்மனைவியாதல்பற்றி ஒழுக்கத்துக்கு உவமைகூறினரென்னினுமாம். மகளிரில் உவமையில்லாமையால், புருஷோத்தமனையே உவமைகூறினர்; இங்ஙனம் பிராட்டிக்குப் பிரானை உவமைகூறியதனால், தலைமகனுக்கும் தலைமகளுக்கும் அழகு குணம் செயல் முதலிய சிறப்புக்களனைத்திலும் உள்ள ஒப்புமை உணர்த்தப்படுகிறது: இதனால், சீதாராமரது அனுரூப தாம்பத்தியத்தை விளக்கியவாறும். பி - ம்:—[1]தாமரைக்கண்ணதாலும். [2]பல்வேறு. [3]ஒத்தானுமினி. (உக)

உஉ.—தோழிமார் சீதையைச் சூழ்ந்து செல்லுதல்.

பரந்தமே கலையுங் கோத்த பாதசா லகமு நாகச்
சிரஞ்செய்நூ புரமும் வண்டுஞ் சிலம்பொடு [1]சிலம்பி யார்ப்பப்

புரந்தரன் கோற்கீ [2]ழானோ ரரம்பையர் புடைசூழ்ந் தென்ன
வரம்பறு [3]மழலைத் தீஞ்சொன் மடந்தையர் தொடர்ந்து சூழ்ந்தார்.

(இ - ள்.) பரந்த - பரவின, மேகலைஉம் - மேகலையென்னும் இடையணியும், கோத்த - கோக்கப்பட்ட, பாதசாலகம்உம் - பாதஜாலமென்னுங் காலணியும், நாகம் சிரம் செய் - பாம்பின்தலைவடிவாக முகப்பு அமைக்கப்பட்ட, நூபுரம்உம் - நூபுரமென்னுங் காலணியும், வண்டுஉம் - கைவளையல்களும், சிலம்பொடு - சிலம்பென்னுங்காலணியும், சிலம்பி ஆர்ப்ப - ஒலித்து ஆரவாரிக்கும்படி, புரந்தரன் கோல்கீழ் ஆனோர் அரம்பையர் புடை சூழ்ந்து என்ன-தேவேந்திரனது அரசாளுகையின் கீழ்ப்பட்டவர்களாகிய அரம்பை முதலிய தெய்வப்பெண்கள் பக்கங்களிலே சூழ்ந்து நின்றாற்போல, வரம்பு அறு மழலை தீம் சொல் மடந்தையர் - அளவிறந்தவர்களும் (ஒலியினிய) குதலைச் சொற்களை யுடையவர்களுமாகிய தோழிப்பெண்கள் பலர், தொடர்ந்து சூழ்ந்தார் - (பிராட்டியின்பக்கங்களில்) இடைவிடாது சூழ்ந்து சென்றார்கள்; (எ - று.)

பாதசாலகம், நூபுரம், சிலம்பு இம்மூன்றும் - காலணியின்பேதங்கள். தோழிமார் அழகில் அரம்பையரையொப்ப ரெனவே தலைவியினது அழகின்சிறப்புத் தானே விளங்கும். அரம்பையர்க்கு 'புரந்தரன் கோற்கீழானோர்' என்ற அவசியமில்லாத அடைமொழியைக் கொடுத்தது, உபமேயமாகிய தோழிமார் இந்திரனுக்குஒப்பான சனகமகாராசனுக்குக் கீழ்ப்பட்டவரென்ற சிறப்பை விளக்கும்பொருட் டென்க. வண்டு - அணிந்த பூமாலைகளில் மொய்க்கின்ற அறுகாற்பறவைகளுமாம். சிலபிரதிகளில் 'புரந்தரன்றனக்குற்றாளையரம்பையர் புடைசூழ்ந்தென்ன' என்று மூன்றாமடி காணப்படுகின்றது. பி - ம்:—[1]புலம்பி. [2]ஆணை. [3]சும்மை. (உஉ)

உ௩.—சீதை நடந்துசெல்லுதற் சிறப்பு.

சிந்தொடு குறளுங் கூனுஞ் சிலதியர் குழாமுந் தெற்றி
வந்தடி வணங்கிச் சுற்ற மணியணி விதான நீழ
லிந்துவின் கொழுந்து விண்மீ னினத்தொடும் வருவ தென்ன
நந்தலில் விளக்க மன்ன நங்கையு நடக்க லுற்றாள்.

(இ - ள்.) சிந்தொடு - சிந்தர்களும், குறள்உம் - குறளர்களும், கூன்உம்-கூனர்களும், சிலதியர் குழாம்உம் - தோழிமார்கூட்டங்களும், தெற்றி வந்து - (ஒருவர்முன் ஒருவராய்) நெருங்கி வந்து, அடி வணங்கி - (பிராட்டியின்)திருவடிகளை நமஸ்கரித்து, சுற்ற - சூழ்ந்துநிற்க, மணி அணி விதானம் நீழல் - இரத்தினங்களா லலங்கரிக்கப்பட்ட மேற்கட்டியினது நிழலிலே, இந்துவின் கொழுந்து விண் மீன் இனத்தொடுஉம் வருவது என்ன - இளஞ்சந்திரன் நட்சத்திரக்கூட்டத்துடனேவருவதுபோல, நந்தல் இல் விளக்கம் அன்ன நங்கைஉம் - அழிதலில்லாததீபத்தை யொத்த (தேககாந்தியையுடைய) பெண்களிற்சிறந்த பிராட்டியும், நடக்கல் உற்றாள் - (சபாமண்டபத்தைநோக்கி) நடந்துசெல்லத்தொடங்கினாள்; (எ - று.)

குறள், சிந்து, கூன் - இவை சொல்லால் அஃறிணையாயினும், ஆகு பெயர்ப்பொருளால் உயர்திணை யென்க. குறள் - உறுப்புக்குறையெட்டி னுள் ஒன்று; சிந்தும் அதில் அடங்கும். மணி யணி - இரத்தினங்க ளிழைத்த காம்புகள் பொருந்தின வென்றுமாம். விதானம், இந்து - வட சொற்கள். பிறைச்சந்திரன் - இளம்பருவமுடைய சீதைக்கும், விண்மீனி னம் - தோழிமார்கூட்டத்துக்கும் உவமை. எண்ணெய் திரி முதலியவை களைக்கொண்டு அமைத்து ஏற்றப்பட்ட விளக்குப்போலாது, இயற்கையில் விளங்குந் தீவிகை போன்றவள் சீதை யென்பது 'நந்தலில் விளக்க மன்ன நங்கை' என்பதன்பொருள். நந்தலில் - எஞ்ஞான்றும் ஒருபடிப்படத் தூண்டு தல் வேண்டாத என்றுமாம்; செயற்கையழகைவேண்டாத வடிவத்துக்கு உவமை. (உஙு)

உசு.—இதுமுதல் நான்கு கவிகள் - சீதை செல்லுதலின் வருணனை.

வல்லியை யுயிர்த்தநில மங்கையிவள் பாத
மெல்லிய வுறைக்குமென வஞ்சிவெளி யெங்கும்
பல்லவ மலர்த்தொகை பரப்பின ளெனத்தன்
னல்லணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள்.

(இ - ள்.) வல்லியை உயிர்த்த நிலம் மங்கை - பூங்கொடிபோன்ற (மெல்லிய அழகிய) சீதாபிராட்டியைப் பெற்ற பூமிதேவி, இவள் பாதம் மெல்லிய உறைக்கும் என அஞ்சி - 'இவளது மிகமென்மையன வான திரு வடிகளிலே (தரை) உறுத்தி வருத்தக்கூடும்' என்றுகருதிப் பயந்து, வெளி எங்குஉம் பல்லவம் மலர் தொகை பரப்பினள் என - (இவள் நடந்து செல் லும்) வெளியிடமுழுவதிலும் (மென்மையான) தளிர்களின் தொகுதியையும் பூக்களின்தொகுதியையும் பரப்பிவைத்துள்ளா ளென்று சொல்லும்படி, தன் நல் அணி மணி சுடர் தவழ்ந்திட - தனது சிறந்த ஆபரணங்களி லுள்ள இரத்தினங்களின் காந்தி முன்னே பரவிச்செல்ல, (பிராட்டி), நடந்தாள் - (காலால்) நடந்துசென்றாள்; (எ - று.)

கொடி தரையிலே தோன்றுதல் இயல்பாதலால் 'வல்லியை யுயிர்த்த நிலமங்கை' என்றார். மெல்லிய-வினையாலணையும்பெயர்; முற்றாகவுமுரைக்க லாம். அநேகவிதமான இரத்தினங்களின் பலவகைக் காந்திகளும் பரவு வதால், 'பல்லவ மலர்த்தொகை பரப்பினளென' எனப்பட்டது. தற்குறிப் பேற்றவணி. (உசு)

உரு. தொழுந்தகைய மென்னடை தொலைந்துகளி யன்ன
[1]மெழுந்திடை விழுந் [2]துயர்வ தென்னவய லெங்குங்
கொழுந்துடைய சாமரை குலாவவொர் கலாபம்
[3]வழங்கநிழன் மின்னவரு மஞ்ஞையென வந்தாள்.

(இ - ள்.) களி அன்னம் - (தன்னோடொப்ப நடக்கக் கருதி உடன் வந்த) களிப்பையுடைய அன்னப்பறவைகள், தொழும் தகைய மெல் நடை தொலைந்து - (யாவராலும்) வணங்கத்தக்க (சிறந்த) மென்மையான (தனது)

நடைக்குத்தோற்று, இடை விழுந்து எழுந்து அயர்வது என்ன - இடையிடையே கீழ்விழுந்தும் (மீண்டும் அரிதின்) எழுந்தும் (மீண்டும் விழுந்தும்) வருந்துவதுபோல, கொழுந்து உடைய சாமரை அயல் எங்கும் குலாவ - இளையஒளியையுடைய சாமரங்கள் (தனது) இரண்டு பக்கங்களிலெல்லாம் விளங்க,—ஒர் கலாபம் நிழல் வழங்க மின்ன வரும் மஞ்ஞை என - ஒப்பற்ற கலாபமானது ஒளியைக் கொடுக்க விளக்கமுண்டாக நடந்துவருகிற மயில்போல, வந்தாள் - சீதாபிராட்டி வந்தாள்; (எ - று.)

வீசப்படுஞ் சாமரைகள் அன்னங்கள் எழுந்து இடைவிழுந்து அயர்வதனையொக்குமெனக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. மஞ்ஞை வரும்போது கலாபம் [=தோகை] ஒளிவழங்க வருவதுபோலச் சீதையும் கலாபம் [=இடையணி] ஒளிவழங்க வந்தனளென்க; சிலேடையையங்கமாகக் கொண்டுவந்தஉவமையணி. பி - ம்:—[1] விழுந் திடையெழுந்து. [2] அயர்வது, உயர்வ. [3] வழங்கு. (உ௫)

உ௬. மண்முத லனைத்துலகின் [1]மங்கையரு ளெல்லாங்
கண்மணி யெனத்தகைய கன்னியெழில் காண
வண்ணன்மர பிற்சுட ரருத்தி[2]யொடு தானவ்
விண்ணிழிவ [3]தொப்பதொர் விதானநிழல் வந்தாள்.

(இ - ள்.) மண் முதல் - பூலோகம் முதலிய, அனைத்து உலகின் - எல்லா வுலகங்களிலுமுள்ள, மங்கையருள் எல்லாம் - இளம்பெண்களெல்லோருள்ளும் கண்மணி என தகைய - கண்ணின் இடையிலுள்ள கருமணிபோல அருமையாகச் சிறந்தவள் (இவள்) என்று சொல்லத்தக்க, கன்னி - கலியாணமாகாத இளம்பெண்ணான பிராட்டியினது, எழில் - அழகை, காண - (நேரிற்) பார்க்கும்பொருட்டு, அண்ணல் மரபின் சுடர் - (இவளுக்குக் கொழுநனாகும்) இராமபிரானது திருக்குலத்துக்கு ஆதிபுருஷனான சூரியன், அருத்தியொடு - மிக்கவிருப்பத்துடனே, தான் அ விண் இழிவது - தான் அந்த ஆகாயத்தினின்று இறங்கி வருவதை, ஒப்பது-ஒத்திருக்குந் தன்மையுள்ளதான [மிகஅதிகமான ஒளியையுடைய], ஒர் விதானம் நிழல் - ஒரு மேற்கட்டியின் நிழலிலே, வந்தாள் - (பிராட்டி) நடந்துவந்தாள்; (எ - று.)

தனதுகுலத்துப்பேரனானவனுக்குமனைவியாகுமவளது அழகைக்காண விருப்பமுண்டாவது ஒவ்வொருகுடும்பத்திலும் மூத்தோர்க்கு இயற்கையாதல்பற்றி, அவ்வியற்கையை இங்குச் சூரியன்மேல் ஏற்றிக்கூறினர்; தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1] மங்கையர்கள். [2] தொடர. [3] ஒத்தது. (உ௬)

உஎ. கற்றைவிரி [1]பொற்சுடர் பயிற்றுறு கலாபஞ்
சுற்றுமணி புக்கவிழை மிக்கிடை துவன்றி
விற்றவழ வாணிமிர மெய்யணிகண் மின்னச்
சிற்றிடை நுடங்கவொளிர் சீரடி பெயர்த்தாள.

(இ - ள்.) கற்றை விரி - தொகுதியாக விரிந்த, பொன் சுடர் பயிற்றுறு - பொன்னொளி அடர்ந்திருக்கப்பெற்ற, கலாபம் - பதினாறு கோவை

யணியும், சுற்றுஉம் - (தன் இடைக்குச்) சுற்றிலும், மணி புக்க இழை - இரத்தினங்கள் பதிக்கப்பட்டுள்ள மற்றுமுள்ள ஆபரணங்களும், மிக்கு - மிகுந்து, வில் தவழ - (அவற்றின்) ஒளி (எங்கும்) பரவாநிற்க, இடை துவன்றி - நடுவிலே நெருங்கி, வாள் திமிர - (தனது) தேககாந்தி விளங்கவும், மெய் அணிகள் மின்ன - (தனது) திருமேனியிலணிந்துள்ள ஆபரணங்கள் விளங்கவும், சிறு இடை நுடங்க - (இயற்கையிலேயே) மிக நுண்ணியதான (தனது) இடை (ஆபரணபாரத்தாலும் நடக்கிற இளைப்பாலும்) துவளவும், ஒளிர் சிறு அடி பெயர்த்தாள் - விளங்குகிற சிறிய (தனது) ப்பாதங்களை எடுத்துவைத்து நடந்தாள்; (எ - று.)

இனி, [1]பொற்சுடர் மயிர்த்துறுகலாபம் என்ற பாடத்துக்கு-தொகுதியாக விரிந்துள்ளதும் பொன்னாலாகிய நுனிமயிர்கள்போன்ற நுண்ணொளிகள் பொருந்தியுள்ளதுமான கலாபமென்னும் பதினெட்டுக்கோவையிடையணியும் இரத்தினங்களிழைத்துள்ள மற்றுஞ்சிலஇடையணிகளும் பிராட்டியின் இடைக்குச் சுற்றிலும் மிகுதியாய் நிறைந்துஒளி வீசவும் என்க.(உஎ)

உஅ.—சீதை மண்டபத்தை யடைதல்.

பொன்னினொளி பூவின்வெறி [1]சாந்துபொதி சீத
மின்னி[2]னிழ லன்னவடன் [3]மேனியொளி மான
வன்னமு மரம்பையரு மாரமிர்து நாண
மன்னவை யிருந்தமணி மண்டப மடைந்தாள்.

(இ - ள்.) அன்னவள் - அப்பிராட்டி, தன் மேனி ஒளி - தனது (இயற்கையான) தேககாந்தி, பொன்னின் ஒளி - பொன்னில் (இயற்கையாகவுள்ள) காந்தியையும், பூவின் வெறி - பூவினிடத்து (இயற்கையாகவுள்ள) பரிமளத்தையும், சாந்து பொதி சீதம் - சந்தனத்தினிடத்தில் (இயற்கையாகப்) பொருந்தியுள்ள குளிர்ச்சியையும், மின்னின் நிழல் - மின்னலில் (இயற்கையாயுள்ள) பளபளப்பையும், மான-ஒத்து(க் குளிர்ச்சியான தன்மையுடையதாய் நெடுந்தூரத்திற்சென்று) விளங்கவும்,—அன்னம்உம்-(தன்நடைக்குத் தோற்று)அன்னப்பறவையும், அரம்பையர்உம் - (தன் அழகுக்குத்தோற்றுத்) தெய்வப்பெண்களும், ஆர் அமிர்துஉம்-(தன்இனிமைக்குத்தோற்று) அருமையான தேவாமிருதமும், நாண - வெள்கவும், மன் அவை இருந்த மணி மண்டபம் அடைந்தாள் - இராசசபைவீற்றிருந்த இரத்தினகசிதமான அந்தமண்டபத்தை வந்தடைந்தாள்; (எ - று.)

மேனி ஒளி என்றது - வெறி முதலியவற்றிற்கும் உபலட்சணம். பொன்னினிறமும் மலரின்நறுமணமும் சந்தின்தண்மையும் மின்னலினொளியும் பிராட்டியினிடம் அமைந்துள்ளன வென்க; "பொன்னின் சோதி போதினி னாற்றம் பொலிவேபோற், றென்னுண் டேனிற் றீஞ்சுவை செஞ்சொற் கவியின்பம்" என்ற செய்யுளின் கருத்தைக் கருதி,முதலிரண்டடிக்கு இவ்வாறுபொருளுரைக்கப்பட்டது. இனி, (தான் அணிந்த) ஆபரணங்களிலுள்ள பொன்னின் ஒளியும் (தான் சூடியுள்ள) பூக்களிலுள்ள நறுமணமும் (தான்பூசியுள்ள) சந்தனத்தின் தண்மையும் மின்னலொளிபோன்ற (தனது)

தேககாந்தியும் (வேறுஒப்புமையில்லாமையால் ஒன்றையொன்று) ஒத்து எங்கும்நிரம்ப என்று உரைப்பினும் அமையும். அமிருதம் நாணுதல்-கண்ணுக்கு இனியதாகிய மென்மையோடு தன்னை நுகர்ந்தார் பிறிது நுகராமல் தடுக்குந் தன்மையிலும், அமிருதத்துக்கு அருமை - பெறுதற்கருமையோடு தன் சுவைமுழுவதையுந் தெவிட்டுதலில்லாமல் நுகர்ந்துமுடித்தற்கருமையிலு மென்க. அன்ன அடல் மேனி எனப் பிரித்து - இந்நான்கையும் ஒத்த சிறப்பையுடைய (தனது) உடம்பினொளி என்றுமாம். பி - ம்:—[1] சந்துபொழி. [2] எழில். [3] மேனியது. (௨௮)

௨௯.—ஆடவரும் மகளிரும் சீதையின் திருமேனியழகைக் கண்கொட்டாது காணுதல்.

* சமைத்தவரை யின்மைமறை தானுமென லாமச்
சுமைத்திரண் முலைத்தெரிவை தூய்வடிவு கண்டா
ரமைத்திரள்கொ டோளியரு மாடவரு மெல்லா
மிமைத்தில ருயிர்த்திலர்கள் சித்திர மெனத்தாம்.

(இ - ள்.) சமைத்தவரை இன்மை - (தன்னை) உண்டாக்கினவரொருவரையும் உடைத்தாகாமையால், மறை தான் உம் எனல் ஆம் - வேதவடிவம் தானென்றுசொல்லத்தக்க, அ சுமை திரள் முலை தெரிவை - பாரமான திரண்ட தனங்களையுடைய அப்பிராட்டியினது, தூய் வடிவு - பரிசுத்தமான திருமேனியை, கண்டார் - பார்த்தவர்களாய், அமை திரள் கொள் தோளியர்உம் - இளமூங்கில்போன்ற திரட்சியைக்கொண்ட தோள்களையுடைய மாதர்களும், ஆடவர்உம் - புருஷர்களும், எல்லாம் - எல்லோரும்,—(மிகஆச்சரியமுற்று அதனால் திகைப்படைந்தவர்களாய்), சித்திரம் என - சித்திரப்பிரதிமைகள்போல, இமைத்திலர் - (கண்ணை) இமைத்தல்செய்யாதவர்களும், உயிர்த்திலர்கள் - உயிரோடுகூடியிருப்பதன்காரியமாகியசெய்கையற்றவர்களு மானார்கள்; (எ - று.)

அயோநிஜையான பிராட்டிக்கு, அபௌருஷேயமான வேதம் உவமை: வேதமும் கடவுளால் ஆதியில் வெளியிடப்பட்டதுமாத்திரமேயன்றி ஒருவராலும் உண்டாக்கப்படாமல் நித்தியமான தன்மையதாம்; பிராட்டியும் ஜனகனால் எடுத்துவளர்க்கப்பட்டதுமாத்திரமேயன்றி ஒருவருடைய கருப்பத்திலிருந்தும் உண்டாகாதவளாய்த் தனது இச்சாமாத்திரத்தாற் பூமியில் தோன்றிக் காணப்பட்டவளாவளெனக் காண்க. (௨௯)

௩௦.—இராமன் சீதாபிராட்டியைக் கண்டு களித்தல்.

அன்னவளை யல்லளென வாமென வயிர்ப்பான்
கன்னியமிர் தத்தையெதிர் கண்டகடல் வண்ண
னுன்னுயிர்நி லைப்பதொர ருத்தியொடு மைத்தாண்
டின்னமிர்தெ ழுக்களிகொ ளிந்திரனை யொத்தான்

(இ - ள்.) (தனக்குமனைவியாகப்போகிற சனகராசகுமாரி), அன்ன வளே அல்லள் என - (முன் தான் கன்னிமாடத்தின்மேலே கண்டு காதல் கொண்ட) அம்மங்கை யல்லளோ என்றும், ஆம் என - அம்மங்கையே யாவ ளோஎன்றும், அயிர்ப்பான் - சந்தேகித்துவருபவனாய், கன்னி அமிர்தத்தை எதிர் கண்ட - அமிருதமயமானதொரு கன்னிகை போன்ற சீதாபிராட்டி யின் அழகியவடிவத்தை எதிரிலே பார்த்த, கடல் வண்ணன் - கடல் போலுங் கருநிறத்தையுடைய இராமபிரான்,—(அம்மகளேயாவளென்று அறிந்து ஐயமொழிந்ததனா லுண்டான பெருமகிழ்ச்சியால்), உன்னு உயிர் நிலைப்பது ஓர் அருத்தியொடு உழைத்து ஆண்டு இன் அமிர்து எழ களி கொள் இந்திரனை ஒத்தான் - (தன்னுடம்பைவிட்டு) மேலெழுகின்ற உயிர் (அவ்வாறு எழாமல்) நிலைத்திருக்கவேண்டுமென்பதொரு விருப் பத்தோடு (திருப்பாற்கடல்கடையும் முயற்சியிலே) மிகவருந்தி அவ்விடத்தி லிருந்து இனிமையான அமிருதம் உண்டாகக் (கண்டு) களிப்பைக்கொண்ட தேவேந்திரனைப் போன்றான்; (எ - று.)

இராமனுக்கு இந்திரன் - கருமைநிறத்தாலும், தேவர்க்குத் தலைமை பூணுதலாலும், அரக்கரையழிக்கமுயலுதலாலும்; சீதைக்கு அமிருதம்-யாவ ராலும் விரும்பப்படுதலாலும், முன் பாற்கடலில் தோன்றியதனாலும், இன் பம்பயத்தலாலும் உவமை. அன்னவளை, ஐ - சாரியை. (௩௦)

௩௧.—இராமனுக்குச் சீதையைக் கண்டதனாலாய வியப்பு.

நறத்துறை முதிர்ச்சியுறு நல்லமுது பில்குற்
றறத்தின்விளை வொத்துமுக டுந்தியரு குய்க்கு
நிறத்துவரி தழ்க்குயினி னைப்பினிடை யல்லாற்
புறத்தும்[1]முள தோவென மனத்தொடு புகன்றான்.

(இ - ள்.) 'நறத்து உறை - தேனினிடத்தே தங்குகின்ற, முதிர்ச்சி உறு - முதிர்ந்த, நல் அமுது - சிறந்த தேவாமிருதத்தை, பில்குற்று - துளித்து, அறத்தின் விளைவு ஒத்து - (செய்) புண்ணியத்தின் விளைபயனைப் போன்று, முகடு உந்தி அருகு உய்க்கும் - (அக்கன்னியாமாடத்தின்) மேலி டத்தினின்று கொணர்ந்து இங்கே செலுத்தப்பட்ட, துவர் நிறம் இதழ் குயில் - செந்நிறத்தையுடைய அதரத்தையுடைய குயிலின்குரல்போன்ற இன்குரலுள்ள மங்கை, நினைப்பினிடை அல்லால் - (என்) மனத்தினுள்ளே யல்லாமல், புறத்துஉம் - வெளியிலும், உளதுஓ - இருக்கின்றனளோ?' என-என்று, மனத்தொடு புகன்றான்-(இராமபிரான் தன்) மனத்தினுடனே சொன்னான்;(எ-று.)—இங்ஙனங் கருதினானென்றபடி.

இங்ஙனம் அருமையான பொருள் புண்ணியபரிபாகத்தாலன்றிப் பிறி தொன்றாற் பெறுதல் இன்றெனக் கருதினான். இதனால், இராமன் எப் பொழுதும் சானகியையே மனத்திற்கொண்டுள்ள தன்மை விளங்கும். "பானிலத்துறையுந் தீந்தே னனையவா யமிர்தமூற" என்றாற்போல, 'நறத் துறை முதிர்ச்சியுறு நல்லமுதுபில்குற்று' என்றார். நறத்து-நற என்பது அத்

துச்சாரியை பெற்றுவந்தது. முன்பு கன்னிமாடத்தின்மீது கண்ட சீதையை அருகே கண்டதனால் 'முகடுந்தியருகுய்க்குங்...குயில்' என்றான். குயில் - உவமையாகுபெயர். பி - ம்:—[1] உளளோ. (௩௧)

௩உ.—வசிட்டமுனிவனது மகிழ்ச்சி.

எங்கள்செய் தவத்தினி னிராமனென வந்தோன்
சங்கினொடு சக்கர முடைத்தனி முதற்பே
ரங்கணர சாதலினவ் வல்லிமலர் புல்லு
மங்கையிவ ளாமென வசிட்டன்மகிழ் வுற்றான்.

(இ - ள்.) (அப்பிராட்டியைக்கண்டு), வசிட்டன் - வசிட்டமகாமுனிவன், 'எங்கள் செய் தவத்தினின் - யானும் என்போன்ற முனிவர்களுஞ் செய்துள்ள தவத்தின் பயனால், இராமன் என வந்தோன்-ஸ்ரீராமனாகத் திருவவதரித்தவன், சங்கினொடு சக்கரம் உடை தனி முதல் பேர் அம் கண் அரசு ஆதலின் - சங்கம் சக்கரம் என்னுந் திவ்வியாயுதங்களை யுடைய ஒப்பற்ற முதற்கடவுளாகிய பெரிய அழகிய திருக்கண்களையுடைய யாவர்க்குந் தலைவனான ஸ்ரீமகாவிஷ்ணுவேயாதலால், அ அல்லி மலர் புல்லும் மங்கை இவள் ஆம் - செந்தாமரைமலரைத் தங்குமிடமாகக்கொண்டு அதிற்பொருந்திய ஸ்ரீமகாலட்சுமியே இவளாவள்', என - என்று கருதி, மகிழ்வு உற்றான்-மகிழ்ச்சிமிகப்பெற்றான்; (எ - று.)

முனிவர்பிரானாகிய இவன் ஞானக்கண்ணுடைய னாதலால், இங்ஙனம் உண்மையை யறிந்தான். தண்டகாரணியத்தில் வசிப்பவர்களான முனிவர்கள் அரக்கர்களாலுண்டான வருத்தங்களை ஒழிக்கும்பொருட்டுத் திருமாலைக்குறித்துச் செய்த தவத்தின்பயனாகவே இவ்வவதாரம் நிகழ்ந்ததாதலின், 'எங்கள் செய்தவம்' என உளப்பாட்டுத்தன்மைகொடுத்துக்கூறப்பட்டது. யாவர்க்கும் முதல்வரான திரிமூர்த்திகளுள்ளுந் தலைவனாதலின், 'தனிமுதல்' எனப்பட்டான். அல்லி - தாமரை: "அல்லிமாதர்", "அல்லிசேரணங்கு" என்பன காண்க. (௩உ)

௩௩.—சீதையை மணாட்டுப்பெண்ணாகப்பெறுதற்குத் தசரதன் மகிழ்தல்.

துன்றுபுரி கோதையெழில் கண்டுலகு சூழ்வந்
தொன்றுபுரி கோலொடு தனித்திகிரி யுய்ப்பா
னென்றுமுல கேழுமர செய்தியுள னேனு
மின்றுதிரு வெய்தியது [1]வென்வயம தென்றான்.

(இ - ள்.) உலகு சூழ் வந்து - உலகமுழுவதிலுஞ் சுற்றிவந்து, ஒன்று புரி - (பகை நொதுமல் நட்புஎன்னும்முத்திறத்தாரிடத்தும்) ஒரேதன்மையாகப் பொருந்தின, கோலொடு - செங்கோலுடனே, தனி திகிரி - தனிமையான ஆஜ்ஞாசக்கரத்தையும், உய்ப்பான் - செலுத்துபவனான தசரதசக்கரவர்த்தி, துன்று புரி கோதை எழில் கண்டு - அடர்ந்த நெறித்த கூந்தல்மயிரையுடைய சீதையினது அழகைப்பார்த்து, 'என்றும் உலகு எழும் அரசு

எய்தி உளன் என்உம் - எப்பொழுதும் ஏழுலகங்களிலும் அரசாட்சியை (யான்) அடைந்துள்ளேனுயினும், இன்று-இப்பொழுதுதான், என் வயமது- என் வசத்ததாக, திரு - செல்வத்திற்குஉரிய தெய்வம், எய்தியது - கிட்டியது, என்றான் - என்றுகருதினன்; (எ - று.)

சகலலோகசாமிராச்சியம் தனக்கு முன்னமேதொடங்கி இருந்ததாயினும், இத்தகையநல்லிலக்கணமுடையாளை மணப்பெண்ணுகப் பெற்ற பிறகே எல்லாச்செல்வமும் தன்வயத்ததாகுமெனக் கருதினனென்பதாம். உலகேழ் - ஏழுதீவுகளுமாம் உளன் - தன்மையொருமைக்குறிப்புமுற்று; "உளனு வென்னுயிரை யுண்டு" என்றவிடத்துப்போல. இனி, இச்செய்ளுக்கு-சகலலோகங்களிலுஞ்சென்றுவந்தாலும் ஒன்ருகவேயுள்ள கௌமோதகியென்னுங் கதையையும் சுதரிசனமென்னுஞ்சக்கரத்தையும் பகைவர்மீது செலுத்துபவனுன இத்திருமால் இயற்கையிலே எப்பொழுதும் எல்லாவுலகங்களையும் அரசாளுந்தொழிலுடையனுயினும் இப்பொழுது இவ்வவதாரவிசேஷத்தில் இச்செல்வத்தைப்பெற்றது என்னபாக்கியவச மென்று, வசிட்டன் பிராட்டியின் திருமேனியிலமைந்துள்ள உத்தமவிலக்கணத்தை நோக்கிக்கருதினுனென உரைப்பினும்அமையும்; உத்தமவிலக்கணமுழுவதும்நிரம்பினமகளை மணஞ்செய்துகொண்டவன் சகலலோகாதிபத்தியத்திற்கும் உரியவனு மென்பது, சாமுத்திரிகநூலார்கொள்கை: இதனை "திருமக ளிவளைச் சேர்ந்தான் றெண்டிரை யாடை வேலி, யிருநில மகட்குஞ் செம்பொனேமிக்கு மிறைவ ளுகும்" என்னுஞ் சிந்தாமணியாலும் உணர்க; இவ்வுரைக்கு, உள னென்பது - படர்க்கை யொருமை. பி - ம்:—[1] எமக்கெனநினைத்தான். என்னவயமென்ருன். (௩௩)

௩௪.—தசரதன் முதலிய சிலர் தவிர ஏனையோர் சீதையைக் கைகூப்பித்தொழுதல்.

நைவள நவிற்றுமொழி நண்ணவர லோடும்
வையநுகர் கொற்றவனு மாதவரு மல்லார்
கைகடலை புக்கன கருத்துளது மெல்லாந்
தெய்வமென வுற்றவுடல் சிந்தைவச மன்றே

(இ - ள்.) நைவளம் நவிற்றும் மொழி - நைவளமென்னுங் குறிஞ்சியாழ்ப்பண்ணின்வகையை யொப்பப் பேசுகின்ற இன்சொற்களையுடைய அப்பிராட்டி, நண்ண வரலோடுஉம் - சமீபமாக வந்தமாத்திரத்திலே, வையம் நுகர் கொற்றவன்உம் மாதவர்உம் அல்லார்-பூலோகத்தை (அரசாண்டு) அனுபவிக்கிற வெற்றியையுடைய தசரதசக்கரவர்த்தியும் மிக்க தவத்தையுடைய(வசிட்டன் விசுவாமித்திரன்முதலிய)முனிவர்களுமல்லாதவர்களின், கைகள் - கைகளெல்லாம், தலை புக்கன - (அவளைவணங்குதற்கு) அவரவர் தலையின்மீது (தன்னியல்பிலேசென்று) சேர்ந்தன; (ஏனெனில்), கருத்து- (யாவரது) மனமும், உளதுஉம் எல்லாம் - மற்றுமுள்ள (புத்திமுதலிய) அந்தக்கரணங்களெல்லாமும்,தெய்வம் என உற்ற - (அவளைத்)தெய்வமென்

றே கருதின: உடல் சிந்தை வசம் அன்றோ - உடம்பு (எண்ணுந்தன்மையுள்ள) மனத்தின் வசப்பட்ட தன்றோ? (எ - று.)

இது - தொடர்நிலைச்செய்யுட்குறியணி. யாவரும் பிராட்டியைத் தெய்வமென்றே கருதியதனாற் கைகூப்பிவணங்கினார்களென்பதாம். அங்ஙனம் வணங்குதலில் மாதவரை யொழித்தது, அவர்கள் குருமார்களாதலால், தான் வணங்குதற்கு உரியவர் தவிர மற்றையோர்யாவரும் சீதையை வணங்கினரென்க. வையநுகர்கொற்றவன் என்றதில் - இரட்டுறமொழிதலால், ஜனகனும் இராமனும்அடங்குவர்; வையநுகர் கொற்றவன் என்பதற்கு-எல்லாவுலகங்களையும் (பிரளயகாலத்தில்) உண்டருளுகிற இராமபிரான் என்றும் பொருள்கொள்ளப்படும் கைகளிரண்டையுந் தலைமேல்வைத்துவணங்குதல், திரியங்கநமஸ்காரமாம். உளதெல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம்.

௧௫.—வணங்கவேண்டியவரை வணங்கிச் சீதை தந்தையருகிற்றுங்குதல்.

மாதவரை முற்கொள வணங்கிநெடு மன்னன்
பாதமல ரைத்தொழுது கண்கள்பனி சோருந்
தாதையரு கிட்டதவி சிற்றனியி ருந்தாள்
போதினைவெ றுத்தரசர் பொன்மனை புகுந்தாள்.

(இ - ள்.) போதினை வெறுத்து -(தனக்குஇயற்கையில் வாழுமிடமான) செந்தாமரைமலரை வெறுப்பினால் நீங்கி, அரசர் பொன் மனை புகுந்தாள் - ஜனககுலத்தரசனது அழகிய மாளிகையிலே வந்துசேர்ந்த திருமகளின் அவதாரமான அப்பிராட்டி,—மாதவரை முன்கொள வணங்கி-சிறந்த தவத்தையுடைய (வசிட்டன்முதலிய) முனிவர்களை முன்னே நமஸ்கரித்து, நெடு மன்னன் பாதம் மலரை தொழுது-(பின்பு)யாவரினுஞ் சிறந்தஅரசனாகிய தசரத சக்கரவர்த்தியினது தாமரைமலர்போலுந்தாள்களை நமஸ்கரித்து, கண்கள் பனி சோரும் தாதை அருகு இட்ட தவிசில்-கண்களினின்று ஆனந்தக்கண்ணீர் சொரிபவனான தன்தந்தையினது சமீபத்திலே இடப்பட்டதொரு ஆசனத்திலே, தனி இருந்தாள் - தனித்துவீற்றிருந்தாள்; (எ - று.)

இச்செய்யுளின்ஈற்றடியால், சனகமகாராஜன் திருமாளிகை பிராட்டிக்குத் தாமரைமலரினும்திருவுள்ளத்துக்குமிகப்பாங்காகி மிகமெல்லிய இடமாமென்பதுவிளங்கும். முள்ளரையுடைமை,சேற்றிற்பயிலுதல், இரவிற்குவிதல் மழைபனிக்காலங்களில்வாடுதல் முதலிய தாமரைமலர்க்குள்ள குற்றங்களொன்றும் சனகன்திருமாளிகைக்கு இல்லை யென்பார், தாமரைமலர்மாளிகைவெறுத்துச் சனகனரண்மனைக்குத் திருமகள் விருப்பத்தோடு வந்ததாகக் கூறினார். திருமால் தனது பரத்துவநிலையைத் துறந்து மறந்து சக்கரவர்த்திகுமாரனாகி மனித நிலைமையை ஏற்றிருத்தற்கு ஏற்ப, பிராட்டியும் மானுடமகளின் வடிவங்கொண்டு அவதரித்து வளர்தலால், ராஜகன்னிகைக்குரிய முறைப்படியே முற்பட முனிவர்களைவணங்கிப் பிற்படத் தனதுமாமனைத் தொழுதன ளென்க. (௧௫)

௩௬.— சீதையினழகுகண்டு வசிட்டன் வியந்துகூறிய மொழி.

அச்சென நினைத்தமுத லந்தண [1]னினைந்தான்
பச்சைமலை யொத்தபடி வத்தட லிராம
னச்சுடை வடிக்கண்மலர் நங்கையிவ ளென்று
லிச்சிலை கிடக்கமலை யேழையு மிறுனே.

(இ - ள்.) 'இவள் - இம்மங்கை, நஞ்சு உடை-உள்ளேவிஷத் தன்மையை யுடைய, வடி கண்-மாவடுவின்பிளவுபோன்ற கண்களையுடைய,மலர்நங்கை-தாமரையில் வாழும் இலக்குமியாவள்', என்றால்—, (இவளிடத்திலுண்டாகுங் காதல் மிகுதியினால்), பச்சை மலை ஒத்த படிவத்து அடல் இராமன் - பசுமை நிறத்தையுடையதொரு மலையையொத்த வடிவத்தை யுடைய வலிமையோடுகூடிய இராமபிரான், இ சிலை கிடக்க மலை ஏழை உம் இறுன்ஒ - இந்த மேருமலையாகிய ஒருவில் இருக்கட்டும் ஏழுமலைகளையும் வேண்டுமென்றாலும் முறிக்கமாட்டானோ? (என்று), அச்சு என நினைத்த முதல் அந்தணன்-அச்சாணியென்று (யாவராலும்)நினைக்கப்படுகிற சிறப்பை யுடைய வசிட்டமகாமுனிவன்,நினைந்தான்-வியப்புடனெண்ணினன்;(எ-று.)

என்று என ஒருசொல் வருவிக்க. அச்சு-தேரிற் சக்கரங் கோக்கும்மரம். அது கீழேயிருந்து பெரியதேரைத் தாங்கிநிற்றல்போல இம்முனிவன் பெரிய சூரியகுலத்துக்குச் செய்தற்குரியஅரியகாரியங்களை எளிதிற்செய்துமுடித்து அதனைத்தாங்குதலால், 'அச்சென நினைத்தமுதலந்தணன்' எனப்பட்டான். இனி, அந்தணன் - விசுவாமித்திரனென்றுஉரைப்பாரு முளர். இராமனுடைய வடிவத்துக்கு மலை - அழித்தற்கு அருமையும், கம்பீரத்தன்மையும், நெடுந்தூரத்தாராலும் அறியப்படுதலும் பற்றி உவமையாம். கண்டவர்களால் மலையப்படுதல் பற்றி, மலையென்று பெயர்: மலைதல் - அஞ்சுதல். 'கிடக்க' என்பது, அலட்சியமாய்ச் சொன்னவார்த்தை: எளிமையை யுணர்த்துகின்றது. மலையேழ்-சப்தகுலபருவதங்கள். இனி, இத்தகைஅழகிய பெண் தன்னை மணஞ்செய்துகொள்ளுவ ளென்றால் இவ்விராமனொருவன் இருக்கட்டும்: இந்தவில்லாகியமலையை ஒருவலியில்லாதவனும் முறியானோ? என்றுஉரைகூறுவாருமுளர்; இவ்வுரைக்கு - ஏழைஎனஎடுத்து, வலியற்றவனென்க. "அச்சிலையுணர்ந்த மு தலந்தணனினைத்தான், பச்சிலையையொத்த படிவத்தடலிராம, னச்சிலையயிற் கண்மலர்நங்கை" என்று முதன்மூன்றடிகளிற் பாடங் காணப்படுகின்றது. பி - ம்:—[1]இருந்தான். (௩௬)

௩௭.— சீதை இராமனைக் கடைக்கண்ணாற்கண்டு ஐயம் நீங்குதல்.

[1]எய்யவில் வளைத்ததுமி றுத்ததுமு ரைத்து
மெய்வினை விடத்துமுத லையம்விட லுற்று
ளையனை யகத்துவடி வேயல புறத்துங்
கைவளை திருத்துபு கடைக்கணி னுணர்ந்தாள்.

(இ - ள்.) எய்ய - (அம்பை) எய்தற்கு உபயோகமாம்படி, வில் வளைத்ததுஉம் - (இராமபிரான்) சிவதநுசை வளைக்கத்தொடங்கியதையும், இறுத்

ததூஉம்-(அதனை) ஒடித்துவிட்டதையும், உரைத்தூஉம்-(பலர்) சொல்லக்கேட்டிருந்தும், மெய் விளைவு இடத்து -(அவ்வெம்பெருமானது) திருமேனியின் தன்மைவிஷயத்திலே, முதல் ஐயம் - (இங்ஙனம் முறித்தவன் முன்னே என்னுற் கன்னியாமாடத்திலிருந்து காணபட்டவனோ அல்லனோ என்று) பழமையாக உண்டாகியுள்ள சந்தேகத்தை, வீடல் உற்றாள் - (இப்பொழுது சானகிப்பிராட்டி) ஒழிக்கத் தொடங்கினவளாய்,—ஐயனை - அவ்விராமனை, அகத்து வடிவுஏ அல - தன்மனத்திலே நிலைபெற்ற வடிவத்தால் (முன்னே தான்பார்த்திருந்தது)மாத்திரமேயல்லாமல், புறத்தூஉம் - வெளியிலும், கை வளை திருத்துபு-கைகளில் அணிந்துள்ள வளையல்களை ஒழுங்குபடுத்தத்தொடங்கி(அந்தவியாசத்தால்),கடைக்கணின் உணர்ந்தாள்-கடைக்கண்ணாலே (அவ்விராமவடிவத்தை) எதிரிற்பார்த்தறிந்தாள்; (எ - று.)

முன்னே இராமபிரான் இலக்குமணனுடனே கௌசிகமுனிவன்பின்னே மிதிலாநகரத்து வீதியிற் செல்லும்பொழுது அவனது வடிவழகைப் பார்த்து அவனைஇன்னானென்று அறியாமலே அவனிடத்து மிகுந்த காதல் கொண்ட சீதை, பின்பு ஒருவீரனான ராசகுமாரன் வில்லையெடுத்துவளைத்து முறித்தானென்ற செய்தியைப் பலர்சொல்லக்கேட்டு அதுமுதல் அவ்வீரன் முன் தன்னாற் காணப்பட்டவனாயிருந்தால் நலமாயிருக்கு மென்று கருதி, அவன்தானோ அல்லனோ என்று ஐயப்பட்டுநின்றவள், இப்பொழுது அவ்வையத்தைத் தீர்க்கநினைந்து, நாணத்தாற் கவிழ்ந்து நிலத்தைநோக்கிநின்ற தன் கண்பார்வையைத் தன்கைவளையல்களைமுறைப்படுத்துகிறதென்கிற வியாசத்தாற் புறத்தேசெல்லவிட்டு இராமனைநேரிற்பார்த்து, சிலநாளாய்த் தன்மனத்துள்ளேநிலைத்துள்ள அவ்வடிவமும் இப்பொழுது இங்கே காணப்படுகிற இவ்வடிவமும் ஒன்றேயா மென்று அறிந்து, சந்தேகமொழிந்து ஆனந்தமடையலுற்றாளென்பதாம். 'அகத்துவடிவேயல' என்றதனால், எப்பொழுதும் பிராட்டி இராமனையே கருதியிருந்தனளென்பது, பெறப்படும். பி - ம்:—[1] எய்வினைவி லிற்றது மெடுத்ததும். (௧௭)

௧௮.—சீதை இராமனைக் கண்டு உடல் பூரித்தல்.

கருங்கடை நெடுங்கணொளி யாறுநிறை கண்ணப்
பெருங்கடலின் மண்டவுயிர் பெற்றினி துயிர்க்கு
மருங்[1]கல னணங்கரசி யாரமிழ் தனைத்து
மொருங்குட னருந்தினரை யொத்துட றடித்தாள்.

(இ - ள்.) கரு நெடு கடைக்கண் - இயற்கையிற்கருமையான நீண்ட (தனது) கண்ணின்கடையினது, ஒளி - பார்க்குமொளியாகிய, யாறு - நதியானது, நிறை (அழகாகியநீர்)நிரம்பின, கண்ணன் பெரு கடலின்-ஸ்ரீராமபிரானாகிய பெரிய கடலிலே, மண்ட - நெருங்கிப்பாய்வதனால், [இராமனை நேரிற் கண்ணாரக்கண்டதனால்], உயிர் பெற்று- (வில்லைமுறித்தவன் முன்னே தன்னாற் காணப்பட்ட கட்டழகுடையவனோ அல்லனோ என்ற ஐயத்தால் உடம்பினின்று நீங்கியும் நின்றும் ஊசலாடுகிற) உயிரை (அவ்வைய மொழிந்ததனால் உடம்பில்) நிலைக்கப்பெற்று, இனிது உயிர்க்கும் -

(முன்னே வெய்தாக விடப்பட்டுவந்த பெருமூச்சு ஒழிந்து இப்பொழுது களிப்பால்) இனிமையாக மூச்சுவிடுகிற, அரு கலன் அணங்கு அரசி-(பிறர்க்குப்பெறுதற்கு) அருமையான ஆபரணங்களை அணிந்துள்ள சிறப்புடை மகளிர்யாவர்க்குந் தலைவியான அச்சீதை, (ஆனந்தமிகுதியால்), ஆர் அமிழ்து அனைத்துஉம் ஒருங்கு உடன் அருந்தினரை ஒத்து - பெறுதற்கு அருமையான (தாம்பெற்ற) அமிருதமுழுவதையும் (வேறொருவருக்கில்லாமல் தாமே) விரைவில் உண்டவரைப் போன்று, உடல்தடித்தாள்-திருமேனி பூரித்தாள்.

உடம்புபருத்தல், மிக்ககளிப்பாலுண்டாகும் மெய்ப்பாடு. கண்ணன் + பெருங்கடல் = கண்ணப்பெருங்கடல்; உயர்திணையீறு விகாரம். அருங்கலன் - கற்புமாம். கண்ணனுக்குப் பெருங்கடலை உவமைகூறினதனால், அழகுக்கு அளவில்லாமை போதரும். பெருங்கடல் - பெரும்புறக்கடல். பி - ம்:—[1] கலமனங்கசர மற்றமை பிழைத்துத், தருங்கலிடை பெற்றனளை.

ருகூ.—சீதை துயரம்நீங்கிப் பேரானந்த மடைதல்.

கணங்குழை கருத்திலுறை கள்வனென [1]லானன்
வணங்குவி லிறுத்தவ னெனத்துயர் மறந்தா
ளணங்குறு மவிஞ்சைகெட விஞ்சையி னகம்பா
டுணர்ந்[2]தறிவு முற்றுபய னுற்றவரை யொத்தாள்.

(இ - ள்.) கணம் குழை - பலவாய்த்திரண்ட குழையென்னுங் காதணியையுடைய சீதாபிராட்டி, 'கருத்தின் உறை கள்வன் எனல் ஆனன் - (கன்னிமாடத்திலிருந்து கண்டநாள்முதல்) தன்மனத்தினுள்ளே பொருந்தின வஞ்சனையுடையா னென்று சொல்லுதற் கேற்ற தலைமகன்தானே, வணங்கு வில் இறுத்தவன் - வளையுந்தன்மையுள்ள சிவதனுசை முறித்தவனவன்'என-என்று(ஐயந்தீர)அறிந்து, துயர்மறந்தாள்-(முன்னேதான்கொண்டுள்ள சந்தேகத்தா லாகிய) துன்பத்தை மறந்தவளாய்,—அணங்கு உறும் அவிஞ்சை கெட விஞ்சையின் அகம் பாடு உணர்ந்து - பிறவித்துன்பம் பொருந்துதற்குக்காரணமான அவித்தியையென்கிற அஜ்ஞானம் கெட வித்தியையென்கிற தத்துவஞானத்தால் மனத்திலுள்ள (பரம்பொருளின்) தன்மையைக் (கட்புலப்படக்) கண்டறிந்து, அறிவுமுற்று பயன் உற்றவரை - அவ்வறிவு முதிர்வதனாலாகிற பிரயோசனமாகிய முத்தியுலகத்து நிரதிசயவானந்தத்தை யடைந்தவரை, ஒத்தாள்— ; (எ - று.)

'கள்வனெனலானன்' என்றது,அவன் நெருக்கி உட்புகுந்து அருநிறையையும் பெண்மையையும் உருக்கி உயிரொடும் உண்டுபோனதனால். அவிஞ்சை, விஞ்சை—அவித்யா, வித்யா: வடமொழித்திரிபு. அகம்பாடு - மனத்தில்தோன்றும்வடிவம். கடவுள் தானேயெனத்தோன்றுதலென்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1] ஆமவ். [2] அறிவுமுற்றபயன். (ருகூ)

சு0.—தசரதன் 'விவாகம் என்று?' எனக் கௌசிகனை வினவுதல்.

கொல்லுயர் களிற்றரசர் கோமக னிருந்தான்
கல்விகரை யுற்றமுனி கௌசிகனை மேலோய்

வல்லிபொரு சிற்றிடை மடந்தைமண நாளா
[1]மெல்லையி னலத்தபக லென்றுரைசெய் கென்றான்.

(இ - ள்.) கொல்-(பகைவரைக்) கொல்லுந் தொழிலிலே, உயர்-சிறந்த, களிறு - யானைச்சேனையையுடைய, அரசர் கோமகன் - அரசர்களுக்கு அரசனான தசரதசக்கரவர்த்தி, இருந்தான் - (அம்மண்டபத்திற் சீரியசிங்காதனத்தில்) வீற்றிருந்தவன்,—கல்வி கரை உற்ற முனி கௌசிகனை - படிப பாகிற கடலினது கரையை யறிந்த முனிவனான விசுவாமித்திரனைப் பார்த்து, 'மேலோய் - மேன்மைக்குணமுடையவனே! வல்லி பொரு சிறு இடை மடந்தை மணம் நாள் ஆம் - பூங்கொடியை யொத்த மெல்லிய இடையையுடைய மகளிரிற்சிறந்தசானகியினது கலியாணத்துக்கு உரிய நாளாகிய, எல்லை இல் நலத்த பகல் - அளவில்லாத நன்மையையுடைய தினம், என்று-எந்தத்தினம்? உரைசெய்க-சொல்லியருள்க', என்றான்-என்றுவினவினான்.

உலகத்தில் ஒவ்வொருஆண்பெண்களதுகலியாணம் அவ்விருவரது சுற்றத்தார்நண்பர் முதலிய சிலர்க்கே மகிழ்ச்சிவிளைப்பதாம்; அங்ஙனமன்றி இச்சீதாராமவிவாகம் உலகத்துயிர்களெல்லோர்க்கும் மிக்ககளிப்பை விளைத்தலால், 'எல்லையினலத்தபகல்' எனப்பட்டது. இராவணாதி ராட்சசசங்கார மூலரூபமான உலகத்துநன்மைக்கெல்லாம் சீதாவிவாகம் பரம்பரையாக ஏதுவாதல்பற்றியும், 'எல்லையினலத்தபகல்' என்றதாகக் கொள்க. தசரத சக்கரவர்த்தி வந்து சேர்ந்தபோது அவனை எதிர்கொண்ட ஜனகன் மண நிச்சயச்சடங்கை நாளைசெய்வோமென்று சொல்லி விடைபெற்றுச் சென்று, தூதர்மூலமாகத் தன்தம்பியாகியயுதாசித்தை வரவழைத்தபின்பு மறுநாளில் தசரதனைப் புரோகிதன்முதலியவரோடுவருமாறு சுதாமனென்னும் மந்திரியையனுப்பிவரவழைக்க புரோகிதர்முதலோர்சூழவந்த தசரதன் 'வசிட்டமுனிவர் என்வமிசமுறையைச் சொல்லுவர்' என்ன, அங்ஙனமே அம்முனிவன் குலமுறையைச்சொல்லி'இப்படிப்பட்டவமிசத்திற்பிறந்தகுமாரர்க்கு உனதுபுதல்விகளைக்கொடுத்தல்தகும்' என்ன, ஜனகன் தன்குல முறையைத் தானே சொல்லித் தன்புதல்விகளை இராமலட்சுமணர்க்குக்கொடுப்பதாக உடன்பட,விசுவாமித்திரன்'உமதுதம்பியின்புதல்வியரைப் பரதசத்துருக்கினருக்கு அளிக்கவேண்டும்' என்ன, ஜனகன் அதற்கும் சம்மதித்து 'நாளைக்குஅடுத்த தினமாகிய பங்குனியுத்திரத்தினன்றுநால்வருக்கும் விவாகம்நடக்கட்டும்' என்று கூறினனென்று முதனூலி லுள்ளது; கோலம் புனைந்து சீதையைவருவித்த விஷயம் அங்குக்கூறபடவில்லை.நிச்சயச்சடங்கு நடந்தது விவாகதினத்திற்கு முந்திய தினத்துக்கும் முந்திய தினமாகிய மகாநட்சத்திரத்தினன்று என்பதும் முதனூலாலறியலாம். பி-ம்:—[1]எல்லை நலமுற்ற.. (௪௦)

௪௧.—கௌசிகன் 'திருமணம் நாளைக்கு' என மறுமொழி கூறுதல்.

வாளையுக ளக்கயல்கள் [1]வாவுமதின் மேதி
மூளைமுது கைக்[2]கிழிய மூரியவ ரான்மீன்
பாளைவிரி யக்குதிகொள் பண்ணைவள நாடா
நாளை [3]யென வுற்றபக னற்றவ னுரைத்தான்.

(இ - ள்.) 'வாளை உகள - வாளையென்னும் பெருமீன்கள் துள்ளிக் குதித்தலாலும், கயல்கள் வாவும் அதின்-கயலென்னுஞ் சிறுமீன்கள் தாவிப் பாயுமதனாலும், மேதி மூளை முதுகை கிழிய - எருமைகளினது மூளைகளும் முதுகுகளும் முறையே கிழிபட, மூரிய வரால் மீன் - வலிமையையுடைய (நடுத்தரமான) வராலென்னும் மீன்கள், பாளை விரிய-(பக்கங்களிலேயுள்ள கமுகு தெங்கு முதலிய மரங்களின்) பாளைகள் விரியும்படி, குதிகொள்- குதித்தலைக் கொண்ட, பண்ணை வளம் - கழனிகளின் வளங்களையுடைய, நாடா - கோசலநாட்டையுடைய அரசனே! உற்ற பகல் - (கலியாணத்துக் குப்)பொருந்தின நாள், நாளை - நாளைத்தினமாகும்', என - என்று, நல் தவன் - சிவந்த தவத்தையுடைய கௌசிகமுனிவன், உரைத்தான்—.

இதனால், நாளை வதுவை மணமென்று நாளிட்டமை கூறப்பட்டது. வாளைமுதலிய மீன்களும் எருமைகளும் மிகுந்த நீர்வளத்தையுடைய மருதநிலத்து வாழு முயிர்களாம். இனி, கிழிய - கிழிக்க எனக் கொண்டு, வாளைகள் தாம் குதித்தலால் எருமைகளின் மூளைகளையும், கயல்கள் தாம் குதித்தலால் எருமைகளின் முதுகுகளையுங் கிழிக்கவென்றும் உரைக்கலாம். இனி,கயல்கள் வாவுதற்கும் வரால்மீன் குதிப்பதற்கும் வாளைகள் உகளுதல் காரணமாக உரைக்கவும் அமையும். பி-ம்:—[1]வாவிபடி. [2]கதுவ. [3]மண முற்றதென. (௬௧)

ௌ௨.—தசரதன் தன்மாளிகை சேர்தல்.

சொற்றபொழு தத்தரசர் [1]கைதொழு தெழத்தன்
னொற்றைவயி ரச்சுரிகொள் சங்கினொலி பொங்கப்
பொற்றட முடிப்புது வெயிற்பொழி தரப்போய்
[2]நற்றவ ரனுச்சையொடு நன்மனை புகுந்தான்.

(இ - ள்.) சொற்ற பொழுதத்து - இங்ஙனம் (கௌசிகன்) சொன்ன பொழுது, - (தசரதன்), அரசர் கை தொழுது எழ - மற்றையரசரெல்லோரும் எழுந்திருந்து கைகூப்பி அஞ்சலிசெய்து (தன்னை) வணங்கவும், தன் ஒற்றை வயிரம் சுரி கொள் சங்கின் ஒலி பொங்க - தனக்குஉரியதான ஒப் பற்ற வச்சிரத்தினப்பூணணிந்த உட்சுழிதலைக்கொண்ட ஜயசங்கவாத்தியத்தினது ஓசை மிகவும், பொன் தட முடி புது வெயில் பொழிதர-பொன் னினாலாகிய (தனது) பெரிய கிரீடத்தினது இளஞ்சூரியகிரணம்போன்ற ஒளி பாய்ந்துவிளங்கவும், போய் - சென்று, நல் தவர் அனுச்சையொடு நல் மனை புகுந்தான் - சிறந்த முனிவர்களின் அநுமதியைப்பெற்றுக் கொண்டு (தனக்குரிய) சிறந்தமாளிகையினுட் சேர்ந்தான்; (எ - று.)

வயிரம் - முதிர்ச்சியுமாம். சுரிகொள்சங்கு - வலம்புரிச்சங்கு. எம் பெருமானைத் தனக்கு மகனாகப்படைத்த சிறப்பையுடைய சக்கரவர்த்தி தங்குமிடமாதற்கு ஏற்ற பாக்கியமுடைமையின்'நன்மனை'என்றார்; இம்மனை, மிதிலையிற் சனகனால் தசரதன்பொருட்டு அளிக்கப்பட்டது. பி - ம்:— [1]கைதொழ வெழுந்தான். [2]நற்றவ ரநுச்சைகொடு, நற்றபனனுச்சிதொடு.

சஙு.—யாவரும் செல்லச் சூரியன் அத்தமித்தல்.

அன்னமரி திற்பிரிய வண்ணலு [1]மகன்றப்
பொன்னினெடு மாட[2]வரை புக்கனன் மணிப்பூண்
மன்னவர் பிரிந்தனர்கள் மாதவர்கள் போனார்
மின்னுசுட [3]ராதவனு மேருவின் மறைந்தான்.

(இ - ள்.) அன்னம் - அன்னப்பேடைபோன்ற சீதாபிராட்டி, அரிதின் பிரிய - (இராமனைவிட்டுப் பிரியமனமில்லாமல்) அருமைபாகப் பிரிந்து செல்ல, அண்ணலஉம்-இராமபிரானும், அகன்று - (அங்ஙனமே அம்மண்டபத்தைவிட்டு) நீங்கி, அ பொன்னின் நெடு மாடம் வரை புக்கனன் - பொன்னினாலாகிய உயர்ந்த அந்த மாளிகையாகிற மலையினுள்ளே சென்று சேர்ந்தான்; மணி பூண் மன்னவர் - இரத்தினாபரணங்களையணிந்துள்ள அரசர்களெல்லோரும், பிரிந்தனர்கள் - தனித்தனி பிரிந்து (அவரவரிடத்துக்குச்) சென்றார்கள்; மா தவர்கள் - பெருந்தவமுடைய முனிவர்களும், போனார் - சென்றார்கள்; மின்னு சுடர் ஆதவன்உம்-விளங்குகின்ற ஒளிக்குத்தலைவனான சூரியனும், மேருவில் மறைந்தான் - (பொன்மயமான) மகாமேருகிரியிலே மறைந்துசென்றான்; (எ - று.)

கீழ்த்தசரதனும்இராமனும்முதலியோர் தந்தமக்குரிய இடத்தில்மறைந்துசென்றதனால் அதனைநோக்கிச் சூரியன் தானும் தனக்குரியதோரிடத்தில் மறைந்துசெல்லக்கருதினான்போலப் பலருங்கைதொழுதுவணங்கச் சங்கநாதம்மிக வெயில்பொழிய மிகநெடிய பொன்மயமான மேருகிரியிலே மறைந்தானென்பதாம். முதலடியிறுதியிலுள்ள அகரச்சுட்டு, முன் ஜனகன் இராமலக்ஷ்மணர்க்கும்விசுவாமித்திரனுக்கும் இடமாகக் கொடுத்ததொரு மாளிகையைக்குறித்ததென்று கொள்ளலாம். மேரு - வடசொல். இது, பூமத்தியிலிருப்பதொருமலை யென்று புராணங் கூறும். ககோளசாஸ்திரரீதியாலுண்டாகிற சூரியன்முதலியோரதுசஞ்சாரத்தையும் உதயஅஸ்தமனங்களையும் மேருகிரியைப் பிரதட்சிணம் செய்வதாகவும் கீழ்கடலில் உதயகிரியிலே தோன்றி மேல்கடலில்அஸ்தமனகிரியிலேமறைவதாகவுங்கூறுதல் கவிமரபு. மேரு-அத்தகிரியெனினுமாம். பி - ம்.—[1] அகன்றோர். [2] மனை [3] நாயகனும்.()

கோலங்காண்படலம் முற்றிற்று.

---

## உக.—ஆவது கடிமணப்படலம்.

இராமன் முதலியோரது சிறப்பான கலியாணத்தையுணர்த்தும் பாகம். பின்னே 'மணம்' என வந்ததனால், முன்னே 'கடி' என்றது - விவாகத்தை யுணர்த்தாமற் சிறப்பையுணர்த்திற்று. கடிமணம்-புதுமையானமணமுமாம்.

க.—சனகனது உபசாரத்தினால் யாவரும் மகிழ்ந்திருத்தல்.

இடம்படு புகழ்ச்சனகர் கோனினிது பேணக்
கடம்படு களிற்றரச ராதியிடை கண்டோர்

தடம்படு [1]புயத்தசிறு தம்பியர்கள் [2]காறு
முடம்பொடு துறக்கநக ருற்றவரை யொத்தார்.

(இ - ள்.) இடம் படு புகழ் - விரிந்த புகழையுடைய, சனகர் கோன் - சனகராசன், இனிது பேண - இனிமையாக உபசரித்தலினால், கடம் படு களிறு அரசர் ஆதி-மதநீரொழுகுகின்ற ஆண்யானைச்சேனையையுடைய அரசர்கள் முதலாக, தட படு புயத்த சிறு தம்பியர்கள் காறும்-பெருமைபொருந்தின தோள்களையுடைய (ஒவ்வொருஅரசகுலத்திலுஞ்) சிறிய தம்பிமார்கள் வரையிலும், இடை கண்டோர் - நடுவிலேகாணப்பட்டவர்களெல்லோரும், உடம்பொடு துறக்கம் நகர் உற்றவரை - இந்த உடம்புடனே சுவர்க்கலோகத்து இராசதானியான அமராவதிநகரத்தையடைந்தவர்களை, ஒத்தார்-.

தேவலோகத்தில் அமிருதமுண்ணுதலாலும் பிறவாற்றாலும் அடையும் அளவில்லாதஆனந்தத்தை, இவ்வுலகில் மிதிலாநகரத்திலே சனகமன்னவன் செய்த உபசாரங்களால் எல்லோரும் அடைந்து களிப்புமிக்கார்களென்பதாம். இடம்படு - மிகப்பெரிதான என்றும் பொருள்கொள்ளலாம்; இச்சொல் 'இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினும்'' என்னும் நாலடியாரிலும் இப்பொருளில்வருதல்காண்க. 'இடைகண்டோர்' என்றதில்,அமைச்சர் சேனைத்தலைவர் முனிவர் முதலியோரை அடக்கவேண்டும். இனி, இச்செய்யுளுக்கு, அரசர் ஆதி - தசரதர் முதலாக, இடை கண்டோர் - இடையிலுள்ள இராமபரதர்களும், சிறு தம்பியர்கள் காறும் - இறுதித்தம்பிமாரான இலக்குமண சத்துருக்கனரும் என்று உரைப்பாரும் உளர். பி - ம்:—[1] திறத்த [2]தாமும்.

உ.—சீதையின் நிலைமை.

தேடரு நலத்தபுன லாசை[1]தெற லுற்றார்
மாடொர்தட முற்றதனை யெய்தும்[2]வகை காணா
ரீடழி வுறத்தளர்வொ டேமுறுவ ரன்றே
யாடக வளைக்குயிலு மந்நிலைய ளானாள்.

(இ - ள்.) தேடு அரு நலத்த புனல் - தேடிப்பெறுதற்கு அருமையான நல்ல தண்ணீரினிடத்து (உண்டான), ஆசை - விருப்பத்தால் [தாகத்தால்], தெறல் உற்றார்-வருத்தப்படுதலையடைந்தவர், மாடு ஒர் தடம் உற்று-பக்கத்திலே ஒருகுளத்தை(த் தெய்வகதியால்) நேரப்பெற்று, அதனை எய்தும் வகை காணார் - அக்குளத்தினுள்ளிடத்தை இறங்கியடைந்து தண்ணீருண்ணும் வழியைக் காணாதவராயின், (அவர்),ஈடு அழிவு உற-(தம்)வலிமைமுழுவதும் அழிதலையடைய, தளர்வொடு - தளர்ச்சியுடனே, ஏம் உறுவர் அன்றே - கலக்கத்தையடைவார்களன்றோ? ஆடகம் வளை குயில்உம் அ நிலையள் ஆனாள் - பொன்னாலாகிய வளையல்களையணிந்த குயில்போலின்குரலையுடைய சானகிப்பிராட்டியும் (அப்பொழுது) அந்தத்தன்மையுடையளானாள்.

தேடிப்பெறுதற்கரிய பலவகைநன்மைகளையுடையகொழுநனை அனுபவிக்கவேண்டு மென்கிற காதலைத் தணிப்பதற்குஉரிய மருந்தாகிய இராமபிரானை அருகிற்காணப்பெற்றும் அவனை அப்பொழுதே அடைந்து

கலந்து அனுபவிக்கும்வழி இல்லாமையால் பிராட்டி தனதுநாணம்நிறைமுதலியவற்றின்வலிமையழியத் தளர்ச்சியோடு கலங்குபவளானு ளென்பதாம். உவமையணி. எம் - ஏமம்என்பதன்விகாரம். ஏமம் - மயக்கமும், பைத்தியமும், மூர்ச்சையு மாகவுமாம். பி - ம்:—[1]தெறவெய்தார். [2]வழிகாணுது.

௩.—இதுமுதல் ஒன்பதுகவிகள் காமவேதனைகோண்ட பிராட்டி மனத்திலே நினைத்தவற்றையுஞ் சோன்னவற்றையுங் கூறும்.

உரவே துமிலா [1]ருயிரீர் துமெனக்
கரவே புரிவா ருளரோ கதிரோன்
வரவே யெனையா ளுடையான் வருமே
யிரவே கொடியாய் விடியா யெனுமால்.

(இ - ள்.) இரவே கொடியாய் - கொடுந்தன்மையையுடைய இராத்திரியே! 'உரவு ஏதும் இலார் - வலிமைசிறிதுமில்லாதவர்களது, உயிர் - உயிரை, ஈர்தும் - அறுத்திடுவோம்', என-என்றுவீரவாதஞ்செய்து, கரவு ஏ புரிவார் - வஞ்சனையையே செய்பவர்கள், உளர்ஓ - (உலகத்தில்) இருக்கின்றார்களோ? [இல்லை, நீமாத்திரமே அங்ஙனஞ்செய்கிறு யென்றபடி]; கதிரோன் வரவு ஏ எனைஆள்உடையான் வரும்ஏ-(நாளைச்) சூரியனுதித்தமாத்திரத்திலே என்னையடிமையாகவுடையஇராமபிரான் (என்னருகில்) வந்தருள்வானே: விடியாய் — (அங்ஙனம் அவன்வரும்படி நீ) பொழுதுவிடிவாயாக, எனும் — என்றுகூறுவாள், (சானகி); (எ - று.)

இது-கேளாதது கேட்பதுபோலச் சொல்லப்பட்ட மரபுவழுவமைதி. உரவேதுமிலார் - மெல்லியலாரானமகளிரென்றபடி; அபலைகளென்று வடமொழியிற்பெண்களுக்குஒருபெயர். உலகத்தில் எவ்வளவுகொடுமையுடையவர்களும் தம்மோடொத்தவருந் தம்மினும்மிக்கவருமாகிய வலியாருடன் எதிர்த்து அவரை அழிக்கத்தொடங்குவரே யன்றித் தம்மினுங்கீழ்ப்பட்ட வலியில்லாதாரை அழிக்கமாட்டார்கள்; அன்றியும், பெரும்பாவமாகிய பெண்கொலையையும் புரியமாட்டார்கள் என்பாள், இங்ஙனங்கூறினாள். 'கரவேபுரிவார்' என்றது, தன்னை வருத்துகிறவழி இன்னதென்றுதெரியாதபடி இராத்திரிப்பொழுது வருத்துதலால். [1]உயிரீதுமெனு என்றபாடத்துக்கு - வலிசிறிதுமில்லாதவரது உயிரைமாத்திரம் அவர்க்குக்கொடுத்திடுவோம்என்று முதலிலேஉறுதிமொழிகூறி ஆசைகாட்டிப் பின்புஅங்ஙனங்கொடாது உலோபஞ்செய்பவர் இல்லை யென்று பொருள்கொள்க. 'கொடியாய்' என்னுஞ் சொல்லில் - (என்போலியரைவருத்தக்) கொடிகட்டிவந்தவனே யென்ற பொருளுந் தொனிக்கும். நாளையுதயத்தில் என்னுடைய தலைவன்வந்திடுவான்; என்னைஅவனில்லாதகாலத்தில்அநீதியாய்வருத்துகிற உன்னை அவன்வந்தால்தண்டித்துவிடுவான்; அதற்குள் நீ விரைவில் மறைந்துபோ என்ற தாற்பரியத்தையும் இச்செய்யுளிற் காண்க. காமநோய் பகலினும் இரவில் மிகுதல் இயல்பு; அன்றியும், ஓரிராத்திரிப்பொழுதே விரகவேதனையுற்றார்க்குப் பல யுககாலம்போல நீட்டித்துத்தோன்றுமாதலின், அதனைக் குறித்து இங்ஙனம் இரங்கிக்கூறவேண்டியதாயிற்று. (௩)

ச. கருநா யிறுபோல் பவர்கா லொடு போய்
வருநா ளயலே வருவாய் மனனே
பெருநா ளுடனே பிரியா [1] துழல்வா
யொருநா டரியா தொழிவா ருளரோ.

ஒன்பதுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) மனனே - (என்) மனமே! கரு நாயிறு போல்பவர் - கருமை நிறத்தையுடையதொரு சூரியனை ஒப்பவராகிய இராமபிரானது, காலொடு - திருவடியுடனே, போய் - (நீ இன்று விடாது தொடர்ந்து) சென்று, வரும் நாள் - (அவர் மீளவும்) வருகிற நாளிலே, அயலே வருவாய்-அவரருகிலேயே வருவதாயிருக்கிறாய்; பெரு நாள் உடனே பிரியாது உழல்வாய் - அநேக நாளாக [நான்பிறந்தநாள் முதலென்றபடி] (என்னைவிட்டு) நீங்காமல் என்னோடுகூடவே சஞ்சரித்துவருந்தன்மையையுடையவனே! ஒருநாள் தரியாது ஒழிவார் உளர்ஓ - (நினைத்தபலனைப் பெறுங் காலஞ் சமீபித்திருக்கையில்) ஒருதினம் பொறுத்திருக்காமல் விட்டுநீங்குபவர் (உலகத்தில் உன்னையொழிய வேறுஎவராயினும்) உளரோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

இவ்வளவுகாலமாக என்னுடன்கூடவே நீ பழகியிருந்து நான் என் காதலுக்கு இடனான புருஷனை நாளையதினம் அடைந்து களிப்பதாயிருக்கையில் இன்று நீ என்னைவிட்டு நீங்குதல் தகாது என்பதாம். 'கருநாயிறு' என இல்பொருளுவமை கூறியதனால், உலகத்துஉள்ளபொருள்களுள்ஒன்றும் இப்புருஷோத்தமனுக்கு ஒப்பாகாமை பெறப்படும். 'போல்பவர்காலொடு போய்' என்றதனால், பிராட்டிக்கு இராமபாதாரவிந்தங்களிலுள்ள பக்தி வெளியிடப்பட்டது. ஈற்றிரண்டடிகளுக்கு - பலநாள் அவருடனே பிரியாமற்கூடியிருக்குந்தன்மை நாளைநேர்வதாயிருக்கையில் ஒருநாளைப்பொழுது பொறாமல் நீங்கலாமோ எனக் கருத்துக்கொள்ளினும் அமையும். காலொடு- அவர்சென்றவழியோடு என்றுமாம். பி - ம்:—[1]ஒழிவாய். (ச)

ரு. [1]கனையேழ் கடல்போல் [2]கருநா ழிகைதான்
வினையேன் வினையால் விடியா [3]விடினீ
[4]தனியே பறவாய் [5]தகவே துமிலாய்
பனைமே லுறைவாய் பழி[6]பூ ணுதியோ.

(இ - ள்.) பனை மேல் உறைவாய் - பனைமரத்தின்மேலிருக்கின்ற அன்றிற்பறவையே! கனை ஏழ் கடல் போல் - ஒலிக்கின்ற ஏழுகடல்கள்போல மிகப்பெரிய, கரு நாழிகை - இரவு, வினையேன் வினையால் - (இராமபிரானைக்கூடி வாழவேண்டுமென்னும்) முயற்சியையுடையஎனது தீவினைப்பயனால், விடியாவிடின் - விடியாமற்போனால், [விடியாது நீட்டிக்கிற இக்காலத்திலே யென்றபடி], நீ—, தகவு ஏதுஉம் இலாய்-நீதியென்பது சிறிதும்இல்லாமல், தனியே பறவாய் - (உன் துணையைப்பிரிந்து)தனித்துப் பறந்து, பழி பூணுதி ஓ - (என்னைக்கொல்லுதலாலாகிற) பழியை ஏற்றுக்கொள்ளுகிறாயோ? (எ - று.)

இப்பாட்டு, தலைவனைக் கூடாது வருந்துஞ் சீதை அன்றிலைக்குறித்து இரங்கியது. உலகத்தில்ஒருவர் மற்றொருவரைவெல்லவேண்டுவதாயின் அவ

துணைவரோடு கூடிநின்றுவாழ்ந்திருக்குங்காலத்தில் இவருந்துணைவரோடுகூடிச்சென்று நேரிற் பொருது அழிப்பது நீதியாம்; அங்ஙனமன்றி, எவர்க்குந் தெரியாமல் இருளிலே தனியே இருக்கிறவரை ஒருவர் தனியே வந்து கொன்றுவிட்டுப்போவது தகுதியன்று என்பாள், 'தகவேதுமிலாய்' எனக் கூறினள். கருநாழிகை - அன்மொழித்தொகை. பறவாய் - பறவையே யென விளியுமாம். அன்றிற்பறவையைப் பனைமரத்தில் வாழ்வதாகவே கவிகள் பலவிடத்துங் கூறுவர். பி - ம்:—[1]நனை. [2]வரு. [3]விடுநீ. [4]தனியோ. [5]ஓர்தயாவிலையே, தகவோதுயிலாய். [6]பூணுதியே. (௬)

ரு. அயில்வே லனல்கால் வன[1]வா நிழலாய்
வெயிலே [2]யெனநீ விரிவாய் நிலவே
செயிரே தமிலா ருடறேய் வுறுவா
ருயிர்கோ ளுறுவா ருளரோ வுரையாய்.

(இ - ள்.) அயில் வேல் - கூர்மையையுடைய வேலாயுதத்தின் கொடுமையையும், அனல் - நெருப்பின்வெப்பத்தையும், கால்வன ஆம் - வெளிவீசுவனவான, நிழல்ஆய்-ஒளிகளென்னும்பொருள்களாய், வெயில்ஏ என-(சுடுந்தன்மையாற்) சூரியகாந்தியேபோல, விரிவாய்-(எங்கும்) பரவுந்தன்மையையுடையையாகிய, நிலவே-சந்திரகாந்தியே! செயிர் ஏதுஉம் இலார் - குற்றஞ்சிறிதும்இல்லாதவர்களும், உடல் தேய்வுஉறுவார் - தம்முடம்பு (நாளுக்குநாள்)மெலிவையடையும் மெல்லியலாரு மாகியவர்களது, உயிர் - உயிரை, கோள் உறுவார் - (உடம்பினின்று நீக்கிக்) கைக்கொள்ளுந்தொழிலைப் பொருந்துபவர், உளர் ஓ - (இவ்வுலகில் உன்னையொழிய வேறொருவர்) இருக்கின்றனரோ? நீ உரையாய் - நீ சொல்வாய்; (எ - று.)

நினக்கு யாதொருகுற்றமும்புரியாதவளும் இயற்கையில் அபலையும் இப்பொழுது சிலநாளாய் இராமவாஞ்சையால் நாளுக்குநாள் மெலிபவளுமான எனது உயிரை நீ மரணவேதனைப்படுத்துதல் சிறிதுந்தகாது என்பதாம். சந்திரகாந்திமுதலிய சிலபொருள்கள் ஒருவரோடொருவர் கூடிய தலைவன் தலைவியர்க்கு மிகுந்த மகிழ்ச்சியையும் அங்ஙனங்கூடாது பிரிந்து நின்றவர்க்கு மிக்க வருத்தத்தையும் விளைப்பனவாம். வலிமை சிறிதும் இல்லாமல் தம்முடம்பு நாள்தோறும் இளைத்துவருபவர் அதற்குப்பரிகாரமொன்றுந் தேடாமற் பிறரைக் கொல்லமுயலும் உறுதி உலகத்தில் உண்டோ சொல் என்றும்உரைக்கலாம்; சந்திரன் தேய்பிறைக்காலங்களில் நாடோறும் ஒவ்வொருகலைகுறைந்து காணப்படுதலினால் அவனை 'உடறேய்வுறுவார்' என்றது. பி - ம்:—[1]ஆய்நிழலாம், வாணிலவால். [2]எனவே. (ரு)

எ. மன்றற் குளிர்வா சம்வயங் கனல்வாய்
மின்[1]றொத் துநிலா நகைவீழ் மலயக்
குன்றிற் குலமா முழையிற் குடிவாழ்
தென்றற் புலியே யிரைதே டுதியோ.

(இ - ள்.) மன்றல் குளிர் வாசம் வயங்கு - பரிமளத்துக்குங் குளிர்ச்சிக்கும் இடமாக விளங்குகிற, அனல் வாய் - வெப்பம்வீசும்வாயையுடைய, மின்

தொத்து நிலா நகை - ஒளியின்தொகுதிவடிவான சந்திரகாந்தியாகிய பற்களோடு கூடிய, வீழ் - (கூடியுள்ளவர்களால்) விரும்பப்படுகிற, மலயம் குன்றில் குலம் மா முழையில் குடி வாழ் - பொதியமலையிலே சிறந்த பெரிய குகையிலே நிலையாக வாழ்கிற, தென்றல் புலியே - தென்றற்காற்றாகிய புலியே! இரை தேடுதியோ - (நீ என்னுயிரை) இரையாகத் தேடுகிறாயோ?

கொடுமைபற்றித் தென்றலைப் புலியாக உருவகப்படுத்தினதற்கு ஏற்ப வாயும் பல்லும் கூறப்பட்டன. வயங்கு,வாய், நகை, வீழ், வாழ் இவை-தென்றலுக்கு அடைமொழி. காற்றுக்கு வாய்-அதன்முதல்வருகை. பிறர்க்குக் குளிர்ந்திருத்தலால் 'குளிர்வாசம்' என்றும், தனக்குவெய்யதாயிருத்தலால் 'அனல்வாய்' என்றும், தன்னைத் தென்றல்வருத்துதற்கு நிலா உதவியாயிருத்தலால் 'நிலாநகை' என்றும், கூடியவரால் விரும்பப்படுதலால் 'வீழ்' என்றும், தனக்கு மிக்கஅச்சத்தைவிளைத்துவருத்தலால்'புலி' என்றுங் கூறப்பட்டது. புலிக்கு மலைக்குகையில்வாழ்தல்இயல்பாதலின், 'மலயக்குன்றிற் குலமாமுழையிற் குடிவாழ் தென்றற்புலி' என்றார். மலயமலை, தென்திசையிற் பாண்டியநாட்டி லுள்ளது. வாசம் - வாழிடம்; வடசொல். மன்றல் வாசம் என ஒருபொருட்பன்மொழியாகக்கொண்டு, மிக்கமணமெனினுமாம். பி - ம்:—[1]தொக்க. (எ)

அ. தெருவே திரிவா ரொருசே வகனா
ரிருபோ தும்விடா ரிதுவென் னைகொலாங்
கருமா முகில்போல் பவர்கன் னியர்பால்
வருவா ருளரோ குலமன் னவரே.

(இ - ள்.) தெருவே திரிவார் - வீதியிலேசஞ்சரிப்பவரும், கரு மா முகில் போல்பவர் - கரிய அழகிய காளமேகம்போல்பவருமாகிய, ஒரு சேவகனார்-ஒப்பற்றவீரரொருவர் [இராமபிரான்], இரு போதும் விடார் - (பகல் இரவு என்னும்) இரண்டுபொழுதிலும் (என்னை) விடுகின்றாரில்லை: இது என்னைகொல்ஆம் - இது என்னமுறைமையாம்? குலம் மன்னவர் - உயர் குலத்தில் தோன்றிய அரசர்களுள், கன்னியர்பால் வருவார் - கலியாணமாகாதஇளம்பெண்களினிடம் வருபவர், உளர்ஓ - (உலகத்தில்) உண்டோ?

என்றது, உருவெளித்தோற்றத்தால் இராமன் எப்பொழுதுஞ் சீதைக்குக் கட்புலப்படுவதுபற்றி யென்க. 'தெருவேதிரிவார்' என்றது - முன்பு கௌசிகமுனிவன்பின்னே இராசவீதியில் நடந்துசென்றபொழுது தான் அவ்விராமபிரானைக்கண்டு காதல்கொண்டதனாலும், பின்பு எல்லாமகளிரும் வேட்கை விஞ்சும்படி வீதியில் உலாப்போந்ததனாலும். (அ)

௯. தெருளா வினைதீ யவர்[1]சே ரலர்தோ
[2]ளருளா நெறியோ டுமவா வதுவோ
கருளார் கடலோ கரை[3]காண் பரிதா
லிருளா னதுதா னெனையூ ழிகொலாம்,

(இ - ள்.) தெருளா - (எவராலுந்) தெளிந்து நம்புதற்குக் கூடாத' வினை - (பெண்களின்மனத்தைக்கொள்ளைகொள்ளுதல்முதலிய) தொழில்களில், தீயவர் - கொடியவராகிய அப்புருஷோத்தமனுர், அருளா நெறியோடும் - (என்பக்கல்) கருணைசெய்யாத வழியுடனே, சேரலர்-(என்னைவந்து) கூடாதவராயுள்ளார்: தோள் - (அப்படிப்பட்டவருடைய) தோள்களை, அவாவதுஒ - (யான்) விரும்புவது தகுதியோ? [அன்றென்றபடி]; கருள் ஆர் கடல்ஒ - கருமைநிறம் மிகுந்த சமுத்திரமோ, கரை காண்பு அரிது - எல்லை காணுதல் கூடாதது; இருளானதுதான் - இராக்காலமொன்றுதான், எனை ஊழி கொல் ஆம் - எத்தனையுககாலந்தானே? (எ - று.)

இது - கடலையும் இரவையுங்குறித்து இரங்கியது. வினை தீயவர் சேரலர் என்பதில்-கொடுந்தொழிலையுடையபாவிகளுக்கு அணுகப்படாதவர் என்னும்பொருளுந் தொனிக்கும். அருளா நெறி-அருள்செய்யாத வழியிலே, அவா ஓடுமதுவோ-ஆசை விரைந்துசெல்வது பயன்படுமோ என்றும் உரையிடலாம். கடலும் காமோத்தீபகப்பொருள்களுள் ஒன்று. இருள்-இரவுக்கு ஆகுபெயர். [1]சேர்நரகோ என்ற பாடத்துக்கு, இருளானது,-தெருளா-நல்லறிவில்லாத, வினைதீயவர் [தீய வினையவர்] - தீவினையாளர், சேர்கின்ற நரகமோ? அருளாத அவ்விராமனதுவழியிற் செல்லும் ஆசையோ? கடலோ? ஊழிகாலமோ? என்னே? கரைகாண அரிதாயிருக்கிறதே! என்று, இரவைக் குறித்து இரங்கியதாக உரைக்க. பி - ம்:—[1]அருளான். [2]காணரிதால். (கூ)

சு0. பண்ணோ வொழியா பகலோ புகுதா
தெண்ணோ தவிரா விரவோ விடியா
துண்ணோ வொழியா வுயிரோ வகலா
கண்ணோ துயிலா விதுவோ கடனே.

(இ - ள்.) பண்ஒ ஒழியா - இசைகளோ அடங்குகின்றனவில்லை; பகல்ஒ புகுதாது - பகற்பொழுதோ விரைவில்வருகின்றதில்லை; எண்ஒ தவிரா - எண்ணங்களோ நீங்குகின்றனவில்லை; இரவுஒ விடியாது - இராத்திரியோ விடிகிறதில்லை; உள் நோவு ஒழியா-மனவருத்தங்களோ தவிர்கின்றனவில்லை; உயிர்ஒ அகலா - (என்) உயிர்களோ (உடம்பைவிட்டு) நீங்குகின்றனவில்லை; கண்ஒ துயிலா - கண்களோ தூங்குகின்றனவில்லை; இதுஒ கடன் ஏ - இங்ஙனம்வருந்துவதோ எனது கடமை? (எ - று.)

ஓகாரங்கள் - இரக்கங் குறிக்கும்; சிறப்புமாம். புணர்ந்தார்க்குக் களிப்பைப் பயப்பதாகிய கீதம் தணந்தார்க்குத் தவிப்புத் தருவதாம். பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் எனப் பிராணவாயுக்கள் ஐந்தாதலால் 'உயிரோவகலா' எனப் பன்மையாற் கூறப்பட்டது. இனி, அகலா=அகலாது; தொகுத்தலெனினுமாம். பி - ம்:—[1]நோய். (சு0)

சுக. இடையே வளைசோ ரவெழுந் துவிழுந்
தடலைப் மதனன் சரமஞ் சினையோ
வுடலோய் வுறநா ளுமுறங் கலையால்
கடலே யுரைநீ யுமொர்கன் னிகொலாம்.

(இ - ள்.) கடலே - சமுத்திரமே! (நீ), இடைஏ வளை சோர - உன்னி டத்தினின்றும் வளைகள் விழும்படி, எழுந்து விழுந்து - (முன்னே) எழுந்தி ருந்து (உடனே அங்ஙனமெழுந்திருக்க வலியில்லாமற்) கீழ்விழுந்து, உடல் ஓய்வு உற - உடம்பு தளர்ச்சியையடைய, நாள்உம் - தினந்தோறும், உறங் கலை - (இராக்காலத்திலு முட்பட என்போலவே சிறிதுந்)தூங்குகிறுயில்லை; ஆல் - ஆதலால், நீஉம் ஒர் கன்னிகொல் ஆம் - (என்னைப்போல) நீயும் கலி யாணமாகாத ஒருபெண்ணோ? அடல் எய் மதனன் சரம் அஞ்சினை ஓ-கொல் லும்வலிமைபொருந்தின மன்மதனது பாணத்துக்குப் பயந்தாயோ? உரை-.

இக்கவியை "காமுற்ற கையறவோ டெல்லே யிராப்பகல், நீமுற்றக் கண்டுயிலாய் நெஞ்சுருகி யேங்குதியால், தீமுற்றத் தென்னிலங்கை யூட்டி ஞன் தாள்நயந்த, யாமுற்ற துற்றுயோ வாழி கனைகடலே" என்னுந் திரு வாய்மொழிப்பாசுரத்தோடு ஒப்பிடுக. எம்பெருமானையணைந்து புணர வேண்டுமென்று காதல்கொண்ட சீதை அதுபெறுமையால் மிகக் கொடிய விரகவேதனைகொண்டு ஆற்றுமையாற் கடலைநோக்கி இரங்கிக் கூறியது, இது. இரங்கல் நெய்தல்நிலத்துக்குஉரிய துறையாதலால், அந்நிலத்துப் பொருளாகிய கடலைக்குறித்து இரங்கினதாகக் கூறுவது, கவிமரபு. கட லும், காமம்வளர்த்துவருத்தும்பொருள்களு ளொன்று. கடலுக்கு வளை சோர்தல்-வெள்ளியசங்குகள்சிந்துதலும், பிராட்டிக்குக் கையிலணிந்தவெள் ளியசங்குவளைகள் உடம்புமெலிதலாற் கழன்றுவிழுந்துவிடுதலும்; கடலுக்கு எழுந்துவிழுதல் - அலைகள்மேலெழுந்துமடங்கிக்கீழ்விழுதலும், பிராட் டிக்கு எழுந்திருக்கமுயன்று அதுமாட்டாமற்கீழேவிழுந்திடுதலும்; கடலுக்கு உடல்ஓய்வுறுதல் - அதனுடம்பாகியநீர் தள்ளாடுதலும், பிராட்டிக்கு உடம் பில்வலியொழிதலும்; கடலுக்கு உறங்காமை-அல்லும்பகலும் அனவரதமும் ஒழியாது அலைத்துக்கொண்டும்ஒலித்துக்கொண்டுமிருத்தலும், பிராட்டிக்கு வேதனைமிகுதியால்இரவுமுழுவதிலுங்கூட நித்திரைபெறுமையும் என இரு வகையாகப் பொருள்கொள்க. இது-கடலுக்குந் தலைமகளுக்குஞ் சிலேடை யாக உவமைகூறினதனுல், சிலேடையுவமையணி. இடையே - இராம னைத்தழுவுதற்கு இடையிலுள்ளபொழுதிலே யென்றும் பொருள்கொள்ள லாம். மன்மதன் எல்லாவுயிர்களையுந் தன்வசப்படுத்தும் பேராற்றலுடையவ ஞதலால், 'அடலேய்மதனன்' எனப்பட்டான். 'நீயும்' என்றஉம்மை - என் போல என இறந்தது தழுவிய எச்சப்பொருள் காட்டுவதோடு, மன்மத னுக்கு உதவியாய் அவனுக்குப்பேரிகையெனப்படுகிற நீயும் என உயர்வு சிறப்புப்பொருளையும் உணர்த்தும்; முதியபெரிய நீயு மென்றுமாம். (கக)

கஉ.—கவிக்கூற்று: பிராட்டி இங்ஙனம் வருந்துகையில் இராமன் நினைந்ததைச் சொல்வோயெனல்.

எனவின் னனபன் னியிருந் [1]துளைவா
டினியுன் னிநலங் கொடுசேர் வுறு[2]கான்
மனைதன் னில்வயக் குமரம்[3]வை கிருள்வா
யனகன் [4]னினைகின் றனயா மறைவாம்.

(இ - ள்.) என - என்று, இன்னன பன்னி - இத்தன்மையனவான வார்த்தைகளைப் பலதரமு மெடுத்துச்சொல்லி, இருந்து - படுக்கைகொள்ளாமலிருந்துகொண்டு, உளைவாள் - (பிராட்டி) வருந்துபவளாய், துனி உன்னி - (தனக்குநேர்ந்த) துன்பத்தையே கருதி, நலம் கொடு-(தன்பெண்மைக்குஉரிய நாணம்முதலிய) நற்குணங்களையும் (விடமாட்டாமல் உறுதியாகக்) கொண்டு, சோர்வு உறு - தளர்ச்சிமிகுகிற, கால் - அவ்விராக்காலத்திலே மனை தன்னில் - (தனது) திருமாளிகையிலே, வயங்குறும் வைகு இருள்வாய் - நிறைந்துகாணப்படுகிற நிலைபெற்ற இருளிலே, அனகன் - குற்றமற்றவனான இராமபிரான், நினைகின்றன - மனத்திற்கருதிக்கூறுவனவற்றை, யாம் - நாம், அறைவாம்-(இனிக்) கூறுவோம்; (எ - று)—பி-ம்:—[1]இளையாள். [2]நாள். [3]வைகுறுபோது. [4]நினைகின்றதை. (கஉ)

கங.—இதுமுதல்ஆறுகவிகள்-இராமன் மனத்துநினைவனவற்றைக்கூறும்.

முன்கண் டுமுடிப் பருவேட் கையினா
லென்கண் [1]டுணைகொண் டிதயத் தெழுதிப்
பின்[2]கண் டுமொர்பெண் கரைகண் டிலெனான்
மின்கண் டவரெங் கறிவார் [3]வினையே.

எழுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) முன் கண்டு - முன்னே (ஒருகால் அம்மங்கையைக் கன்னியாமாடத்திலே) பார்த்து, முடிப்பு அரு வேட்கையினால் - அழிப்பதற்கு முடியாத [எல்லையற்ற] பெருங்காதலால், என் கண் துணை கொண்டு - எனது இரண்டு கண்களாகிய எழுதுகோல்களைக் கொண்டு, இதயத்து எழுதி - என் மனத்திலே(அவளது அழகியவடிவத்தை நிலைப்பட நன்றாக)எழுதிவைத்து, பின் கண்டும்-(அதுமாத்திரமேயன்றிப்) பின்பு (இன்று)நேரிலே பார்த்தும், ஒர் பெண் கரை கண்டிலென் - அந்த ஒப்பற்ற பெண்ணினது அழகாகிய கடலைக் கரைகண்டறிந்தேனில்லை; (ஏனெனில்), மின் கண்டவர் எங்கு வினை அறிவார் - மின்னலை (அருகிலே கண்ணெதிரிலே) கண்டவர்கள் (அவ்வொளிமிகுதியால் தாம் திகைப்படைதலேயல்லாமல்) எங்ஙனம் பிறதொழில்களை அறிவார்கள்? [அறியார்என்றபடி]; (எ - று.)

யானும் மின்னலைப்போலமிக்கவொளியோடு இயற்கையிலேகூடிவிளங்குகிறசீதையை இருதரங் கண்டும் எப்பொழுதுங் கருதியு மிருந்தும் திகைப்பையடைந்தேனேயன்றி அப்பெண்வடிவத்தினழகி னெல்லையை யறிந்தேனில்லை யென்றவாறு. பெண் - பெண்ணின் அழகுக்கு ஆகுபெயர். 'கரைகண்டிலென்' என்றதனால், அழகு கடலாகக் கொள்ளப்பட்டது. இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணியின்பாற்படும். ஆல் - இரக்கம்: நானென்றும்பிரிக்கலாம். பி-ம்:—[1]துணையோடு. [2]கண்டதொர். [3]வினைவே.

கச. திருவே யனையாண் முகமே [1]தெரியின்
கருவே கனியே விளைகா மவிதைக்
கொருவே மதியே யிதுவென் செய்தவா
வொருவே னெடுநீ யுறவா கலையோ.

(இ - ள்.) திருவே அனையாள் முகமே - இலக்குமியேபோன்ற சீதையினது முகமண்டலம்போன்றவனே! தெரியின் - ஆலோசிக்குமிடத்து, கருவே கனியே விளை காமம் விதைக்கு எருவே - காய்களையும் பழங்களையுமுண்டாக்குகிற காமமாகிய விதை செழித்துவளர்தற்கு முக்கிய உதவியாய் எருவையொத்திருப்பவனே! மதியே - சந்திரனே! இது என் செய்த ஆ-இது என்னகாரியஞ் செய்தவகை? ஒருவேனொடு நீ உறவு ஆகலை ஓ - (இஷ்டமான மங்கையைப் பெறாக் கூடாமல் தனித்துள்ளவனாகிய ஒருத்தனான என்னோடு நீ நண்பாகமாட்டாயோ? (எ - று.)

துணையின்றித் தனிப்பட்டவர்க்கு உறவாகி உதவிசெய்தல் உலகத்தில் அருளுடையார்யாவர்க்கும் இயல்பாயிருக்க, நீ அங்ஙனந்தனிப்பட்ட எனக்குத் துணையாய்நின்று என்துயரைத் தீர்க்காமையோடு சமயம்பார்த்துப் பகைமைபூண்டு என்னைவருத்துதலுஞ்செய்கிற இது அடாது என்றபடி. தனது காதல்நோயின் நிலைமையை வெளியிட்டு வாயாலெடுத்துக்கூறி விவரித்தற்குக் கூசி 'இதுஎன்செய்தவா' எனச் சுட்டுவகையாற் குறித்தார். முதலில் சந்திரனை 'திருவேயனையாண்முகமே' எனக்கூறிவிளித்தது, தனக்கு அப்பிராட்டியின் திருமுகமண்டலத்தினிடத்து மிகுதியாகவுள்ள ஆசையை வெளியிடுவதோடு, சந்திரனுக்கு மிக்க சிறப்பாமெனக் கருதியதுந் தோன்ற நிற்கும். இனி, சந்திரன் பிராட்டியின்முகத்துக்கு ஒத்ததாய் எதிரிலேநின்று மேன்மேல் ஆசையைவிளைத்துத் தன்னை மிகவருத்தலாலுமாம். சேராவிடத்து நுகர்தற்குஉரியதல்லாத காயின்தன்மையையும்,சேரக்கூடினவிடத்து நுகர்வார்க்கு மிகவும் இனிமைசெய்யுங் கனியின்தன்மையையும் விளைத்தலால், 'கருவேகனியே விளை காமவிதை' எனப்பட்டது; "காமங், கனியுங் கருக்காயு மற்று" என்பர் திருவள்ளுவனாரும். 'காமவிதைக்கு எருவே' என்றது, பயிரை மிகச்செழிப்பாக எரு வளரவிடுதல்போலச் சந்திரன் காமநோயை விருத்திசெய்தலால். இனி, விளை காமவிதைக்கு - விளையுந்தன்மையதான காமமாகிய விதைக்கு, கருவே-உற்பத்திகாரணமே! எருவே - துணைக்காரணமே! கனியே - அதன்காரியமே!' என்றும் உரையிடலாம்; சந்திரன் ஆதியில் காமமுண்டாதற்குக் காரணமாதலும், பின்னர் அது வளர்தற்குக் கருவியாதலும்,அதனின்பத்தை நுகர்வார்க்குக் களிப்பை விளைத்தலுங் காண்க. நீ சானகியின் முகத்தையொத்து அதற்கு உறவாகி அது என்னை வருத்துவதுபோலவே நீயும் என்னை வருத்துகிறாய் என்றும், இங்ஙனம் அவளுக்கு உதவியாகி என்னை வருத்துகிற நீ எனக்குச் சற்று உறவாய் நின்றால் நானும் அவளை வருத்தி விரைவிற்கூடுவேனே என்றும் இப்பொருள்கள் 'ஒருவேனொடு நீ யுறவாகலையோ'என்ற இறுதியடியில் தோன்றும். ஆராயாது சாதாரணமாக நோக்குங்காலத்து அவள் முகம்மாத்திரமே என்னை வருத்துவதென்று தோன்றுகின்றது; உய்த்துநோக்கினாலோ நீயும் உடனின்று கொடுமை விளைத்தல் உணரப்படும் என்பார், 'தெரியின்' என்றார். இது-குளிர்ச்சியுடைய நீ வெப்பஞ்செய்வது. பி - ம்:—[1]உயிரின்.

(கச)

கடு. கழியா வுயிருந் தியகா ரிகைதன்
விழிபோ லவளர்ந் தகுவீ கிலதா
லழிபோ ரிறைவன் படவஞ் சியவன்
பழிபோ லவளர்ந் ததுபா யிருளே.

(இ - ள்.) பாய் இருள்-(உலகமெங்கும்) பரவிய இருளானது,—கழியா உயிர் உந்திய-(வேறு எவற்றாலும் என்னுடலினின்று)நீங்கப்பெறாத(எனது) உயிரை வெளித்தள்ளும்பொருட்டு, காரிகைதன் விழி போல - கட்டழகுடைய சீதையினது கண்கள் வரையறையின்றி வளர்ந்திருத்தல்போல, வளர்ந்தது - அளவில்லாமல் வளர்ந்துள்ளது; வீகிலது - குறையுந் தன்மையதன்று; (அன்றியும்), இறைவன் அழி போர் பட அஞ்சியவன் பழி போல வளர்ந்தது - (பலநாளாகத் தனக்குப் பொருள்முதலிய பலவுதவிகளைச் செய்து தன்னைக்காத்துவந்த) தலைவன் அழிதற்கிடமானபோரிலே (பகைவரால்) இறந்துபோக (அவனுக்கு உதவிசெய்யாமல் தன்னுயிரைப் பாதுகாத்தற்பொருட்டுப்) பயந்தோடிப்போன ஒரு சேனைவீரனது பழி அளவின்றி வளர்தல்போல மேன்மேலும் வளர்ந்தது; (எ - று.)

உவமையணி. "கடலினும் பெரிய கண்கள்" ஆதலால், காரிகைதன் விழி உவமைகூறப்பட்டது. கழியா - (உடம்பினின்று) கழித்து என்றும் கொள்ளலாம். உயிர் உந்திய-உயிரைத்தள்ளிய என்றும் உரைத்தலும் உண்டு.

கசு. நினையா யொருகா னெடிதோ நெறிதான்
வினவா தவர்பால் விடைகொண் டிலையோ
புனமா னனையா ரொடுபோ யினவென்
மனனே யெனைநீ யுமறந் தனையோ.

(இ - ள்.) புனம் மான் அனையாரொடு போயின என் மனனே - வனத்திலே (யதேச்சையாய்த் திரிகின்ற) மான்பேட்டை (விழியின்பார்வையிலே) ஒத்துள்ள அந்நங்கையாருடனே சென்ற என்மனமே! ஒரு கால் நினையாய் - (அவர்பின் தொடர்ந்து கூடவே சென்ற நீ என்னை) ஒரு தரமும் நினைக்கின்றாயுமில்லை; நெறி தான் நெடிதோ - (நீ சென்றுள்ள இடத்தின்)வழிதான் நீண்டுள்ளதோ? வினவாதவர்பால் விடை கொண்டிலையோ - (நீ யார்? ஏன் இங்குவந்தாய்? என்றுகூட உன்னை) விசாரியாத அவரிடத்திலிருந்து (இவ்வாறு நீ) மீளாமலிருப்பையோ? எனை நீ உம் மறந்தனையோ - என்னை நீயும் மறந்துவிட்டாயோ? (எ - று.)

'நீயும்' என்ற உம்மை, அக்கன்னிகை மறந்துவிட்டதுமாத்திரமேயல்லாமலென்ற பொருளோடு "நெஞ்சையொளித்தொரு வஞ்சகமில்லை" எனக் கூறியுள்ளபடி உற்றதுணையாய்க் கணப்பொழுதும்விட்டுநீங்குதற்குக் கூடாத நீயும் என உயர்வுசிறப்புப்பொருளையும் உணர்த்தும். நினையாய் ஒரு கால் என்பதற்கு - ஒருதரம் என்னை நீ நினைக்கவாவது வேண்டும் என்றும் பொருள்கொள்ளலாம்; அவளிடஞ்சென்று கூடிக் கலந்துள்ள நீ என்னை ஒரு கால் நினைத்தாலும், பரமாநந்தகரமா மென்பதாம். நெடிதோ நெறி

தான் - அணுமாத்திரையாய் நினைத்தமாத்திரத்தில் எவ்வளவு தூரத்திலுள்ள பொருளையுஞ் சென்று சேரத்தக்க உனக்கு இது ஒருதூரமன்றென்றபடி. வினவாதவர்பால் விடைகொண்டிலையோ - ஒரு பொருளாகக் கருதி அன்புடன் யோகக்ஷேமங்களை உசாவுதல் செய்யாதவரை உடனே விட்டு நீங்காமல் இங்ஙனங் கூடவே தொடர்ந்துதிரியும் பித்தர் உன்னையொழிய வேறுஎவரும் உலகத்தில்இல்லையென்றபடி. அவர்பால்வினவாது விடைகொண்டிலையோ எனப் பிரித்து, அவரிடம் உத்தரவு கேளாமல் அவரைவிட்டு மீண்டுவாராயோ என்றுங் கொள்ளலாம். (கசு)

கஎ. தன்னோக் கெரிகா றகைவா ளரவின்
பன்னோக் கினதென் பது [1]பண் டுகொலாம்
மென்னோக் கினுநெஞ் சினுமென் றுமுளார்
மென்னோக் கினதே கடுவல் விடமே.

(இ - ள்.) 'கடு வல் விடம் - மிகவுங்கொடிய வலிமையையுடைய விஷமானது,—தன் நோக்கு எரி கால் தகை வாள் அரவின் பல் நோக்கினது - தனதுகண்களினின்று நெருப்புப்பொறியையுமிழ்கிற (கோபத்) தன்மையையுடைய வாள்போற்கொடியபாம்பினது பல்லைஇடமாகக்கருதிஅங்குள்ளது', என்பது - என்கிறவிஷயம், பண்டு கொல் ஆம் - இதற்குமுன்பு உண்மைபோலும்; (இப்பொழுதோ அக்கொடியவிஷம்),—என் நோக்கின்உம் நெஞ்சின்உம் என்றுஉம் உளார் மெல் நோக்கினதுஏ - எனது கண்பார்வையிலும் எனது மனத்திலும் எப்பொழுதும் நீங்காது உள்ளவராகிய அந்நங்கையாரது மெல்லிய பார்வையினிடத்ததே யாம்; (எ - று.)

அக்கண்ணின்பார்வை தனக்குக் காதல்நோயை விளைவித்து மரணவேதனைசெய்ததால், இராமபிரான் இங்ஙனம்கூறுகின்றான்: அபநுதியணி. நோக்கில் உளளாதல் - உருவெளிப்பாடுகாணுதலால். நெஞ்சில் உளளாதல் - எப்பொழுதும் இடைவிடாது அவளையே தான் சிந்தித்தலால். மெல்நோக்கு-கடைக்கண்பார்வை யென்றபடி; பொது நோக்கன்றிக்கே குறிப்பு நோக்கு. பி - ம்:—[1]பண்பு. (கஎ)

கஅ. [1]கல்லார் மலர்சூழ் [2]கழிவார் பொழிலோ
டெல்லா முளவா யினுமென் மனமோ
[3]சொல்லா ரமுதின் சுவையோ டினிதா
மெல்லோ தியர்தாம் விளையா டிடமே.

(இ - ள்.) கல் - மலையிடங்களும், ஆர் மலர் சூழ் கழி - (தேன்) நிறைந்த பூக்கள் சுற்றிலுமிருக்கப்பெற்ற கழிக்கரையிடங்களும், வார் பொழிலோடு - நீண்ட சோலையிடங்களும், எல்லாம் - மற்றும் பல இடங்களும், உள ஆயின்உம் - உலகத்தில் (தனக்குச்சொந்தமாக) உள்ளனவானாலும், சொல் ஆர் அமுதின் சுவையோடு இனிது ஆம் எல் ஓதியர் தாம் விளையாடு இடம் - பேசுஞ்சொற்கள் பெறுதற்கரியஅமிருதத்தினதுஉருசியினும்இனியதாகப்பெற்ற ஒளியையுடைய கூந்தலையுடைய அந்நங்கையார் தாம் விளையாடுதற்குஉரிய இடம், என் மனம்ஓ - எனதுமனந்தானோ? (எ - று.)

இங்ஙனங் கூறினது - எப்பொழுதும் தனதுமனத்திலே பெருமாட்டி உறைந்து விளையாடுதலா லென்க. இனி, கல்லார் என்பதை - கல்லாரமென்பதன் விகார மெனக்கொண்டு, செங்கழுநீர்மலர்கள் நிறைந்த கழி யென்றுமாம். [2] களிவார்பொழில் என்ற பாடத்துக்கு-களிப்பைத்தருகிற பெரிய சோலையென்க. சுவையோடு - உருபுமயக்கம். மெல் ஓதியர் எனப் பதம் பிரிப்பினுமாம். பி - ம் — [1] வல்லோர்புனைமாளிகை. [3] கல்லோவெனு நெஞ்சொருகன்னியராம். (கஅ)

**கக.—நாளைத்திருமணமென்று முரசுஅறையுமாறு சனகன் கட்டளையிடுதல்.**

[1] வானவர் பெருமானும் மனநினை வினனாகத்
[2] தேனகு குழலாடன் றிருமண வினைநாளை
பூநகு [3] மணிவாசம் புனைநக ரணிவீரென்
றானையின் மிசை[4] யானை [5] யணிமுர [6] சறைவித்தான்.

(இ - ள்.) வானவர் பெருமான்உம் - தேவர்களுக்கு ஆதிதேவனான திருமாலின்திருவவதாரமூர்த்தியாகிய ஸ்ரீராமபிரானும், மனம் நினைவினன் ஆக - மனத்திலே (இங்ஙனங்) கருதியுள்ளவனாக,— (அன்றையிராத்திரியின் கடையாமத்திற் சனகராசன்) 'தேன் நகு குழலாள் தன் திரு மணம் வினை - வண்டுகள் மகிழ்தற்கிடமான கூந்தலையுடைய சீதையினது திருக்கலியாண மகோற்சவம், நாளை - நாளைக்காகும்; (அதன்பொருட்டு), பூ - பூக்களாலும், நகு மணி - விளங்குகின்ற இரத்தினங்களாலும், வாசம் - சீலைகளாலும், புனை நகர் - (இயற்கையில்) அழகியதான அம்மிதிலாபட்டணத்தை, அணிவீர் - (புதிதாக) அலங்கரிப்பீர்கள்', என்று-என்றுசொல்லி, ஆணை-(தனது) கட்டளையை, ஆனையின்மிசை - யானையின்மேலேவைத்து, அணிமுரசு - அழகியபேரிகை மூலமாக, அறைவித்தான் - (வள்ளுவரைக்கொண்டு)அடிப்பித்துத் தெரிவித்தான்; (எ - று.)

வண்டுகள் மகிழ்தல் - கூந்தலிலுள்ள இயற்கைத் தெய்வமணத்தை மோந்து உட்கொள்ளுதலாலும், கூந்தலிற் சூடப்பட்டுள்ள பூக்களின் தேனைப் பருகுதலாலு மென்க. இனி, தேன் நகு (பூக்களின்) மது விளங்குகிற என்றும் உரைக்கலாம். வாசம் - வாசனைப்பண்டமுமாம். பி - ம்: — [1] மானவர். [2] தேனமர். [3] மலர். [4] யாணர், ஆன. [5] மணி, மணம். [6] அறைகென்றான். (கக)

**உ௦.—அந்நகரத்தவர் நகரத்தையலங்கரிக்க இரவுகழிதல்.**

முரசறை தலுமான முதியரு மிளையோரும்
விரைசெறி குழலாரும் விரவினர் விரைகின்றா
ருரைசெறி [1] கிளையோடு முவகையி [2] னுயர்கின்றார்
கரை[3]செறி வரிதாகு மிரவொரு கரைகண்டார்

(இ - ள்.) முரசு அறைதலும் - (அரசன்கட்டளைப்படியே வள்ளுவர்கள்) பேரிகை மூலமாகச் செய்தியறிவித்தவுடனே, மானம் முதியர்உம் - பெருமையையுடைய வயதுமுதிர்ந்தவரும், இளையோர்உம் - வயதிற் சிறிய

வரும்,விரை செறி குழலார்உம் - வாசனைமிகுந்த கூந்தலையுடைய மகளிரும், (ஆக அந்நகரத்தவரெல்லோரும்),—விரவினர் - (தம்மிற்) கூடினவர்களாய், விரைகின்றார் - (நகரை அலங்கரிப்பதற்குத) துரிதப்படுபவர்களாகி, உரை செறி கிளையோடுஉம் - (தம்மோடு மனங்கலந்து) பேசுதல் மிக்க உறவினர்களுடனே, உவகையின் உயர்கின்றார் - (சீதாகலியாணத்தைக்குறித்து உண்டான) களிப்பினால் மிகுந்தவர்களாய், கரை செறிவு அரிது ஆகும் இரவு ஒரு கரை கண்டார் - கரைசேர்தற்கு அருமையான அவ்விராத்திரியாகிய கடலினின்று ஒரு கரையை அடைந்தார்கள்; (எ - று.)

எனவே, இராப்பொழுது கழிந்து சூரியோதயகாலம் சமீபித்தது என்பதாம். ஒருவரையொருவர் சிலநாளாக விரும்பி உடன்கூடி மணப்பதாக இருக்கிற சீதாராமர்க்கு அவ்விராத்திரிப்பொழுது நீட்டித்தல்போல, அத்திருமணத்தைக்கண்டு மகிழ்வதாக இருக்கிற அந்நகரத்துச்சனங்களுக்கும் அவ்விரவு நீடித்ததாகத் தோன்றுமாதலால், 'விரவினர் விரைகின்றார் கரை செறி வரிதாகு மிரவொரு கரைகண்டார்' என்றது. உரை செறி கிளை-குசலம்விசாரித்தல் மிகுந்த உறவினர் என்றும், புகழ்மிகுந்த சுற்றத்தார் என்றும் கொள்ளலாம். 'கரை' என்றதற்கு ஏற்ப, இரவு 'கடல்' எனப்பட்டது. பி - ம்:—[1]களியோடும். [2]உயர்வாரும். [3]செயல். (உ0)

உக —சூரியோதயவருணனை.

அஞ்சன வொளியானு மலர்மிசை யுறைவாளு
மெஞ்சலின் மணநாளைப் [1]புணர்குவ ரெனலோடுஞ்
செஞ்சுட ரிருள்கீறித் தினகர ளொருதேர்மேன்
மஞ்சனை யணிகோலங் காணிய வெனவந்தான்.

(இ - ள்.) 'அஞ்சனம் ஒளியான்உம் - மைபோற்கரிய திருமேனிநிறத்தையுடைய திருமாலின் அமிசமான இராமபிரானும், அலர் மிசை உறைவாள்உம் - தாமரைப்பூவின்மேலே வாழ்கின்ற திருமகளின் அமிசமான சீதாதேவியும், நாளை-நாளைக்கு, எஞ்சல் இல் மணம் புணர்குவர் - (ஒருவாற்றானும்) குறைவில்லாத திருமணஞ்செய்து கூடுவார்கள்,' எனலோடும் - என்று (முரசறைந்து வள்ளுவர் செய்தி) தெரிவித்தவளவிலே,—தினகரன்-சூரியன்,—மஞ்சனை - (தனது) வமிசகுமாரனான ஸ்ரீராமனுடைய, அணி கோலம்-அழகிய திருக்கலியாணக்கோலக்காட்சியை, காணிய என - பார்த்தற்கு(வந்தவன்)போல, செம் சுடர் இருள் கீறி - சிவந்த (தனது) கிரணங்களால் இருளாகியதிரையைக் கிழித்துக்கொண்டு, ஒரு தேர்மேல் - ஓரிரதத்தின்மேல், வந்தான் - உதித்தான்; (எ - று.)

இயற்கையாகச் சூரியன் உதித்தற்கு, தனது வமிசபரம்பரையில் தோன்றின இராமனது கலியாணத்தைப் பார்த்தற்கு வந்ததாகக் காரணங் கற்பித்துக் கூறினர்: ஏதுத்தற்குறிப்பேற்றவணி. மஞ்சன் - போலி. ஒரு தேர்-ஒற்றைத்தனியாழியோடுகூடிய எழ்புரவிபூண்ட இரதம். பி-ம்:—[1]புரிகுவர். (உக)

உஉ.—இதுமுதற் பதினாறுகவிகள் - ஒருதொடர்; அந்நகரத்தவரின் செய்கையைக் கூறுவன.

தோரண நடுவாருந் தூணுறை பொதிவாரும்
பூரண குடமெங்கும் [1]புனை துகில் புனைவாருங்
காரணி நெடுமாடங் கதிர்மணி யணிவாரு
மாரண மறைவாணர்க் கின்னமு தடுவாரும்.

(இ - ள்.) (அந்த மிதிலாபட்டணத்துச் சனங்கள் அப்பொழுது), தோரணம் நடுவார்உம் - தோரணங்களை நாட்டுபவர்களும், தூண் உறை பொதிவார்உம் - கம்பங்களுக்கெல்லாம் (சித்திரித்த பட்டுச்சீலைகளாலாகிய) உறைகளை யிட்டு மூடி அலங்காரஞ்செய்பவர்களும் பூரண குடம் எங்கும் புனை துகில் புனைவார்உம் - பூரணகும்பங்களிலெல்லாம் மேலே அழகிய ஆடையை அணிபவர்களும், கார் அணி நெடு மாடம் கதிர் மணி அணிவார்உம் - மேகங்கள் வந்துபொருந்தப்பெற்ற உயர்ந்த உபரிகைவீடுகளை ஒளியையுடைய இரத்தினங்களையிழைத்தகலசங்களையிட்டு அலங்கரிப்பவர்களும், ஆரணம் மறை வாணர்க்கு இன் அமுது அடுவார்உம் - வேதங்களிற் கூறப்பட்ட இரகசியப்பொருள்களையெல்லாம் அறிந்துவாழ்கின்ற சிறந்த அந்தணர்களை உண்பித்தற்பொருட்டு இனிமையான அமிருதம்போன்ற உணவுகளைச் சமைப்பவர்களும்,—(எ - று.)

பூரணகும்பத்தின்மேற்புறத்துச் சந்தனம் அக்ஷதை இவற்றைச் சுற்றிலும் அப்புதலும் நூல்சுற்றுதலும் வஸ்திரம் அணிதலும் மாவிலைக்கொத்து தேங்காய் இவற்றைவாய்ப்புறத்து வைத்தலும். மரபு நெடுமாடங் கதிர்மணியணிதல் - உபரிகைகளின்மேல் இரத்தினகலசங்களை அமைத்தலுமாம். இரண்டாமடிக்கு - எங்கும் பூரணகும்பங்களையும் அழகியகொடிச்சீலைகளையும் அழகிதாக அமைப்பவரென்றும் சொள்ளத்தகும். பி - ம்:—[1]பொலிதரநிரைவாரும், புனைதுகில்வனைவாரும். (உஉ)

உங. அன்னமென் னடையாரும் மழவிடை யனையாருங்
கன்னிநன் னகர்வாழை கமுகொடு நடுவாரும்
[1]பன்னரு நிரைமுத்தம் பரியன தெரிவாரும்
பொன்னணி யணிவாரும் மணிபணி புனைவாரும்.

(இ - ள்.) அன்னம் மெல் நடையார்உம்-(அந்நகரத்திலுள்ள) அன்னப்பறவையின் நடைபோல் அழகிய மந்தகதியையுடைய மகளிர்களும், மழவிடை அனையார்உம்-இளமையான காளை[எருது]களின் நடையைப்போன்ற கம்பீரமான கதியையுடைய ஆடவர்களும், கன்னி நல் நகர்-அழியாமையையுடைய அழகிய அந்தப்பட்டணத்திலெங்கும், வாழை கமுகொடு நடுவார்உம் - வாழைமரங்களையும் பாக்குமரங்களையும் கொண்டுவந்து நாட்டுபவர்களும், பன் அரு நிரை முத்தம் பரியன தெரிவார்உம் - சிறப்பித்துச்சொல்லி முடித்தற்குக்கூடாத [மிகச்சிறந்த] கூட்டமான முத்துக்களுள் பருத்தனவற்றை ஆராய்ந்தெடுத்துஅணிந்துகொள்பவர்களும், பொன் அணி அணி

வார்உம் - பொன்னினாலாகிய ஆபரணங்களையெல்லாம் எடுத்து அணிந்து கொள்பவர்களும், மணி அணி புனைவார்உம் - இரத்தினங்கள்பதித்துள்ளன வாகியஆபரணங்களையெல்லாம்எடுத்துஅணிந்துகொள்பவர்களும்,-(எ-று.) - கன்னி நன்னகர் - பிராட்டிவாழுஞ் சிறந்த நகரமென்றுங் கொள்ளலாம். அன்னம்என்நடையார்என்று பிரித்தும்உரைக்கலாம். பி - ம்:—[1]இன்னிசைதெரிவாரு மிளமுலையவரோடும். (உகூ)

உ௪. சந்தன மகினாறுஞ் சாந்தொடு தெருவெங்குஞ்
சிந்தினர் திரிவாருஞ் செழுமலர் சொரிவாரு
மிந்திர தனு[1]நாணு மெரிமணி நிரைமாடத்
தந்தமில் விலையாரக் கோவைக ளணிவாரும்.

(இ - ள்.) நாறும் - பரிமளம் வீசுகின்ற, சந்தனம் - சந்தனக்குழம்பையும், அகில் சாந்தொடு - அகிற்கட்டைத்தேய்வைக்குழம்பையும், தெரு எங்கும் - வீதிகளிலெல்லாம், சிந்தினர் திரிவார்உம் - சிந்திக்கொண்டேதிரிபவர்களும், செழு மலர் சொரிவார்உம் - சிறந்த பூக்களை (வீதிகளிலெல்லாம்) பெய்பவர்களும், இந்திரதனு நாணும் எரி மணி நிரை மாடத்து - (பலநிறங்களையுடைய) இந்திரவில் வெட்கப்படும்படியான (பலவகை நிறமாக) விளங்குகிற இரத்தினங்கள் பதிக்கப்பட்டுள்ள வரிசையாகிய உபரிகைவீடுகளின் வெளியிலே,அந்தம் இல் விலைஆரம் கோவைகள் அணிவார்உம்-அளவில்லாத விலையையுடைய முத்துவடங்களை அணிபவர்களும்,-(எ-று.)பி-ம்:—[1]நாண.

உரு. தளங்கிளர் மணிகாலத் தவழ்சுட [1]ருமிழ்தீப
மிளங்குளிர் முளையார்நற் பாலிகை யினமெங்கும்
விளிம்புபொன் [2]வகைநாற வெயிலொடு நிலவீனும்
பளிங்குடை யுயர்திண்ணைப் பத்தியின் வைப்பாரும்.

(இ - ள்.) தளம் கிளர் மணி கால தவழ் சுடர் உமிழ் தீபம் - கனமாய் விளங்குகின்ற இரத்தினங்கள் வெளிவீசுதலாற் பரவுகின்ற ஒளியோடு பொருந்திய இரத்தினதீபங்களையும், குளிர் இள முளை ஆர் நல் பாலிகை இனம் - குளிர்ந்த இளமையான விதைமுளைகள் பொருந்தின நல்ல பாலிகைக்கிண்ணங்களின் வகைகளையும், எங்குஉம்-(அந்நகரில்)எவ்விடத்திலும், விளிம்பு பொன் வகை நாற வெயிலொடு நில ஈனும் பளிங்கு உடை உயர் திண்ணை பத்தியின் - ஓரங்களிலெல்லாம் (அமைக்கப்பட்ட) பொன்னின் வகைகள் விளங்க (அவற்றின்) சூரியகாந்திக்கொப்பான செந்நிறக்காந்தியுடனே (தான்) சந்திரகாந்திக்கு ஒப்பான வெண்ணிறக்காந்தியை வீசுகிற ஸ்படிகக்கற்கள்படுக்கப்பட்டுள்ள உயர்ந்த திண்ணைகளின் வரிசைகளிலே, வைப்பார்உம் - வைப்பவர்களும்,—(எ - று.)

தீபங்களையும் பாலிகைகளையும் மாதரார் திண்ணையில் வைப்பாராயினரென்க. சுடர் என்பது - மணித்தீபத்தையும், உமிழ் பம் என்பது - தீவிளக்குக்களையும் உணர்த்துமெனினுமாம். முதலடிக்கு, தளம் கிளர் - அடித்

தலத்திலேபொருந்திய, மணி-இரத்தினங்கள், தவழ் சுடர் காலுமாறு ஒளி யையுமிழ்கின்றதீப மென்றுஉரைத்தலு மொன்று. பி - ம்:—[1]இமிழ். [2]நிரை, விரை. (உரு)

உசா. மந்தர மணிமாட முன்றிலின் வயினெங்கு
[1]மந்தமி லொளிர்முத்தி [2]னகனிரை [3]யொளிவீச
[4]யிந்திர னெடுவானம் மீனலர் குவதென்னப்
பந்தரி னிழல்வீசப் படர்வெயில் கடிவாரும்.

(இ - ள்.) மந்தரம் மணி மாடம் - மந்தரமலைபோன்ற [மிகப்பெரிய] அழகிய வீடுகளின், முன்றிலின் - முன்புறத்தினது, வயின் எங்கும் - இடம் முழுவதிலும், இந்திரன் நெடு வானம் மீன் அலர்குவது என்ன - தேவேந் திரனதுஆளுகைக்குஉட்பட்ட பெரியஆகாயத்திலேயுள்ள நட்சத்திரங்களெ ல்லாம் ஒருங்குவிளங்கினாற்போல, அந்தம் இல் ஒளிர் முத்தின் அகல் நிரை ஒளி வீச - அளவில்லாத விளங்குந்தன்மையனவான முத்துக்களின் பெரிய கூட்டங்கள் ஒளியை வீசாநிற்க, (முத்துப்பந்தரிட்டு), பந்தரின் நிழல் வீச - அந்தமுத்துப்பந்தலின் சாயை பரவுதலினால், படர் வெயில் கடிவார்உம்- எங்கும்பரவுகிற வெயிலைத் தடுப்பவர்களும்,—(எ - று.)

வெயில்விழாதபடி முத்துப்பந்த ரிட்டன ரென்க. பி - ம்:—[1]நந்தல். [2]நகை. [3]ஒளிநாறி, உகநாளின். [4]அந்தரநெடுவானின். (உசா)

உஎ. வயிரமி னொளியீனும் மரகத மணிவேதிச்
செயி[1]ரற வொளிர்தீபஞ் சிலதியர் கொணர்வாரும்
வெயில்[2]விர வியபொன்னின் மிடைகொடி மதிதோயு
மெயி[3]லினி னடுவாரு மகிலெரி யிடுவாரும்.

(இ - ள்.) வயிரம் - வச்சிரரத்தினங்கள், இன் ஒளி ஈனும் - விளங்கு கிற ஒளியை(ச் சுற்றிலும்) வீசப்பெற்ற, மரகதம் மணி வேதி - மரகதமென் னும் பச்சையிரத்தினங்கள் பதிக்கப்பட்டுள்ள மேடைகளிலே, செயிர் அற ஒளிர் தீபம் - குற்றமில்லாது பிரகாசிக்கிற விளக்குகளை, சிலதியர் - வேலைக் காரிகள், கொணர்வார்உம் - கொண்டுவந்து வைப்பவர்களும், வெயில் விர விய பொன்னின் மிடை கொடி - சூரியகாந்திக்குச்சமானமான காந்தி பொருந்திய [சிறந்த] பொன்னினாலாகிய காம்போடுகூடிய கொடிகளை, மதி தோயும் எயிலினில் - சந்திரமண்டலத்தை யளாவிய [மிகவுயர்ந்த] மதில்களின்மேலே, நடுவார்உம்-நாட்டுபவர்களும், அகில் எரி இடுவார்உம் - (எங்கும்) அகிற்கட்டைகளைத் தீயிலிட்டுப் புகைப்பவர்களும்,—(எ - று.)— வயிரம் இன் ஒளி என்றும் பிரிக்கலாம். பி - ம்:—[1]அறம். [2]விரிமிளிர். [3]வயினணிவாரும். (உஎ)

உஅ. பண்டியி னிறைவாசப் பனிமலர் கொணர்வாருந்
தண்டலை யிலையோடு கனிபல தருவாருங்
குண்டலம் [1]வெயில்வீசக் குரகதங்கள் புரிவாரு
முண்டைகொண் மதவேழத் தொடைகளணிவாரும்

(இ - ள்.) பண்டியில் நிறை வாசம் பனி மலர் கொணர்வார்உம் - வண்டிகளிலே நிறைந்த வாசனையையுடைய குளிர்ந்த பூக்களைக் கொண்டு வருபவர்களும், தண்டலை இலையோடு கனி பல தருவார்உம் - சோலைகளிலேயுள்ள (வாழை முதலிய) இலைகளையும் (பலவகைப்) பழங்களையுங் கொண்டுவருபவர்களும், குண்டலம் வெயில் வீச குரவைகள் புரிவார்உம் - (தங்களது) குண்டலமென்னுங் காதணிகள் வெயில்போன்ற ஒளியை வீசும்படி குரவைக்கூத்துக்களை (ப் பலகாலும்) ஆடுபவர்களும், உண்டை கொள் மதம் வேழத்து ஓடைகள் அணிவார்உம்-உணவுத்திரளையை உட்கொண்ட மதயானைகளின் நெற்றியிலே பட்டங்களை அணிபவர்களும்,—(எ-று)— இலை - வெற்றிலையுமாம். குரவை-கைகோத்தாடல். பி - ம்:—[1]ஒளி. (௨௮)

௨௯. கலவைகள் புனைவாருங் [1]கலைநல தெரிவாரும்
மலர்குழன் [2]மலைவாரும் மதி[3]முக மணியாடித்
திலகமு மிடுவாருஞ் சிகழிகை யணிவாரு
மிலவிதழ் பொலிகோல மெழில்பெற விடுவாரும்.

(இ - ள்.) கலவைகள் - கலவைச்சந்தனங்களை, புனைவார்உம் - பூசிக்கொள்பவர்களும், கலை நல - நல்ல ஆடைகளை, தெரிவார்உம் - ஆராய்ந்தெடுத்து உடுத்துக்கொள்பவர்களும், மலர்-பூக்களை, குழல் - கூந்தலிலே, மலைவார்உம் - சூட்டிக்கொள்பவர்களும், மணி ஆடி முன்-அழகிய கண்ணாடியின் முன்னிலையிலே, மதி முகம்-சந்திரன்போன்ற (தமது) முகத்திலே, திலகம் இடுவார்உம் - திலகத்தை இட்டுக்கொள்பவர்களும், சிகழிகை - சிகழிகையென்னும் ஒருவகைமாலையை, அணிவார்உம் - தரித்துக்கொள்பவர்களும், இலவு இதழ் - இலவம்பஞ்சுமரத்தின்பூப்போலச்சிவந்த (தங்கள்) அதரத்திலே, பொலி கோலம் - (அது) விளங்குதற்குக்காரணமான அழகிய செந்நிறக் கோலத்தை, எழில் பெற - அழகுபொருந்த, இடுவார்உம் - தரித்துக்கொள்பவர்களும்,—(எ - று.)—இவையெல்லாம் மாதர்செயல்.

மணி - பளிங்குமாம். ஈற்றடிக்கு - செம்பஞ்சுக்குழம்பின்கோலத்தை அழகு பெற (த்தமது பாதங்களில்) இடுபவர்களு மெனவும் உரைக்கலாம். பி - ம்:—[1]கலன். [2]மிலைவாரும். [3]முகமதில். (௨௯)

௩௰ தப்பின மணிகாசுஞ் சங்கமு மயிலன்னா
ரொப்பனை புரி[1]போது மூடலி னுகுபோதுந்
துப்புற [2]ழிளவாசச் சுண்ணமு முதிர்தாதுங்
குப்பைக ளெனவாரிக் கொண்டனர் களைவாரும்.

(இ - ள்.) மயில் அன்னார் - மயிற்பறவையை யொத்த சாயலையுடைய மகளிர், ஒப்பனை புரி போதுஉம்-அலங்காரஞ்செய்துகொள்ளுகிற பொழுதிலும், ஊடலின் உகு போதுஉம் - (கொழுநரோடு) ஊடுதல்கொள்ளுங்காலத்து வெறுத்தெறிகிற பொழுதிலும், தப்பின - (அவர்களினின்று) நீங்கி வீழ்உதிர்ந்தனவான, மணி-முத்துக்களையும், காசுஉம்-மற்றும்பலவகையிரத்தினங்களையும், சங்கம்உம் - சங்கவளையல்களையும், துப்பு உறழ் இள வாசம்

சுண்ணம்உம் - பவழத்தையொத்துச் சிவந்த மென்மையான வாசனையையுடைய கந்தப்பொடிகளையும், உதிர் தாதுஉம்-சிந்துந்தன்மையனவான பூந்துகள்களையும், குப்பைகள் என - குப்பைகளாக, வாரி கொண்டனர் களைவார்உம் - குவியலாகத்திரட்டி எடுத்துக்கொண்டுபோய்(வீடுகளினின்று அப்பால் எறிந்து) நீக்குபவர்களும்,—(எ - று.)—இதுவும் மகளிர்செய்கையே.

அந்நகரத்தில் யாவரும் இப்படிப்பட்டபெருஞ்செல்வவான்களாதலால் விழுந்தவற்றை விரும்பியெடுக்கும் வறியவர் எவரும் இலராதல்பற்றி, 'குப்பைகளென வாரிக் கொண்டனர்களைவாரும்' என்றார். குப்பையின்தன்மையே இதுவானால் ஆபரணமுதலியவற்றின் தன்மை எப்படிப்பட்டதோ என ஊகித்துக்கொள்க. மணி - இரத்தினப்பொதுப்பெயரும், காசு-பொன்பெயரு மாகலாம். சங்கம் - கருவியாகுபெயர். ஒப்பனை புரி போது என்பதற்கு - ஒப்பனைபுரிந்து மிஞ்சிய மலரென்றலு மொன்று. ஊடலின் உகு போதும் என்பதற்கு-ஊடல்கொண்டகாலத்திற் சிந்தின மலர்களையும் என்றும் உரைப்பாருமுளர். பி - ம்:—[1]போதத்து. [2]நிறவாசச். (ரு0)

ருக. மன்னவர் வருவாரும் மறையவர் நிறைவாரு
மின்னிசை மணியாழி னிசைமது நுகர்வாருஞ்
சென்னியர் திரிவாருஞ் சிலதியர் செறிவாருங்
கன்னலின் மணவேலைக் கடிகைக ளெரிவாரும்.

(இ - ள்.) மன்னவர் வருவார்உம் - அரசர்கள் வந்துசேர்பவர்களும், மறையவர் நிறைவார்உம் - பிராமணர்கள் வந்து நிறைபவர்களும், இன் இசை மணி யாழின் இசை மது நுகர்வார்உம்-(காதுக்கு)இனிய சுவரங்களையுடைய அழகிய வீணையின் கீதமாகிய மதுவை(ச் செவியாகிய வாயால்) உட்கொள்ளுபவர்களும், சென்னியர் திரிவார்உம் - பாணர் (எங்குஞ்) சஞ்சரிப்பவர்களும், சிலதியர் செறிவார்உம் - பரிசாரிகைப்பெண்கள் (எங்கும்) நெருங்கிவந்து கூடுபவர்களும், கன்னலின் மணம் வேலை கடிகைகள் தெரிவார்உம் - நாழிகைவட்டிலாகிய கருவியைக்கொண்டு சீதாகலியாணச் சடங்குகள்நடப்பதற்கு ஏற்பட்டிருக்கும் நாழிகைகளை ஆராய்பவர்களும்,—

மதுபானம் பரவசப்படுத்திக் களிப்பைத்தருவதுபோலச் சங்கீதமும் மனத்துக்கு மிக்ககளிப்பைவிளைத்தலால், 'இசைமது' எனப்பட்டது. சென்னி - தலை; யாவராலுஞ் சிரமேற்கொண்டு நன்குமதிக்கத்தக்கவர் எனப் பாணர்க்கு ஏதுப்பெயர்போலும். சிலதியர்செறிதல், பலர்க்குங் குற்றேவற்றொழில் செய்தற் கென்க. (ருக)

ருஉ. [1]கணிகையர் தொகுவாருங் கலைபல பயில்வாரும்
பணியணி யினமுத்தம் [2]பலவித நிலமன்ன
ரணிநெடு முடியொன்றொன் [3]றகைறதலி னுகுமம்பொன்
மணிமலை [4]தொகுமன்னன் [5]வாயிலின் மிடைவாரும்.

(இ - ள்.) கணிகையர் - விலைமாதர்கள், தொகுவார்உம் - திரளாகக் கூடுபவர்களும், கலை பல பயில்வார்உம் - பலவகைப்பட்ட [அறுபத்துநாலு

வகையாகவுள்ள] கலைத்தொழில்களிற் பழகுபவர்களும், பல விதம் நிலம் மன்னர் - அனேகவகைப்பட்ட தேசங்களின் அரசர்கள், பணி அணி இனம் முத்தம் - (தத்தம்) ஆபரணங்களிற் பொருந்தின கூட்டமான முத்துக்கள் (சிந்துகிறவையும்), அணி நெடு முடி ஒன்று ஒன்றுஅறைதலின் உகும் அம் பொன் மணி - அழகிய நீண்ட (தத்தமது) கிரீடங்கள் ஒன்றோடொன்று தாக்குதலாற் சிந்துகிற அழகிய பொன்களும் இரத்தினங்களும், மலை தொகும் - முத்துமலைகளும் பொன்மலைகளும் இரத்தினமலைகளும் போலக் குவிந்துகிடக்கும்படியான, மன்னன் வாயிலில் - சனகமகாராசனது அரண்மனைவாயிலிலே, மிடைவார்உம் - நெருங்குபவர்களும், —(எ - று.)—பி - ம்:— [1]கணிதர்கள். [2]பலபலவிதமன்னர். [3]அறைதலுமுகுபொன்னின். [4]தொடும் வாயின், தொகவாயின், எனமன்னன். [5]மறையவர்வருவாரும். (௩௨)

௩௩. கேடகம் வெயில்வீசக் கிளரயி லிலவீனக்
கோடுயர் நெடுவிஞ்சைக் குஞ்சர மதுபோல
வாடவர் திரிவாரு மரிவையர் களி[1]கூருந்
நாடக நவில்வாருந் நகையுயிர் கவர்வாரும்.

(இ - ள்.) கேடகம் - (தமது இடக்கையிலேபிடித்த) கேடகமென்னும் ஆயுதவிசேடம், வெயில் வீச - வெயில்போன்ற ஒளியை எறிக்கவும், கிளர் அயில் - (தமதுவலக்கையிலே) விளங்குகின்ற கூர்மையையுடைய வாளாயுதம், நிலவு ஈன - நிலாப்போன்ற ஒளியை வீசவும், கோடு உயர் நெடு விஞ்சை குஞ்சரம் அது போல - (தனது) தந்தங்கள் உயர்ந்திருக்கப்பெற்ற மிக்க போர்க்கல்வித்திறத்தையுடைய யானைபோல, ஆடவர் திரிவார்உம் - புருஷர்கள் (கம்பீரமாகச்)சஞ்சரிப்பவர்களும்,—அரிவையர்-பெண்கள், களி கூரும் நாடகம் நவில்வார்உம் - களிப்புமிகுதற்குஇடமான நர்த்தனங்களை ஆடிப்பழகுபவர்களும், நகை உயிர் கவர்வார்உம் - (தமது) புன்சிரிப்பினால் (ஆடவர்களது) உயிரைக் கொள்ளைகொள்பவர்களும்,—(எ-று.)—அயில் - வேலுமாம். பி - ம்:—[1]கூர. (௩௩)

௩௪. கதிர்மணி யொளிகாலக் கவர்பொரு டெரியாவா
றெதிர்[1]சுடர் தரமின்னுற் றெழுதலி னிமையோரு
மதுவிரி குழலாரும் மதிலுடை நெடு[2]வான
மதுவிது வெனவோரா தலமர லுறுவாரும்.

(இ - ள்.) கதிர் மணி ஒளி கால - விளங்குகின்ற இரத்தினங்கள ஒளியை வீசுதலால், கவர் பொருள் தெரியா ஆறு - (கண்ணுக்குப்) புலனாதற்குரிய பொருள்கள் கட்புலப்படாதவகை, எதிர் சுடர் தர - எதிரொளி பிரதிபலிக்கும்படி, மின் உற்று எழுதலின் - (அந்தகாரமுழுவதிலும்) காந்தி நிறைந்து பரவியிருத்தலால், இமையோர்உம் - தேவர்களும், மது விரி குழலார் உம் - (பூக்களின்) தேன் பெருகுதற்கு இடமான கூந்தலையுடைய (தெய்வப்) பெண்களும், மதில் உடை நெடு வானம் அது இது என ஓராது - மதில்களை

யுடைய பெரிய (தங்களுக்குரிய பொன்மயமான) தேவலோகம் அதுவோ இதுவோ என்று அறியமாட்டாமல், அலமரல் உறுவார்உம் - மனச்சுழற்சியையடைபவர்களும்,—(எ - று.)

எங்கும் பொன்னொளி வீசுதலால் மிதிலாநகரம் பொன்னகரம்போன்றது என்றதாம். அது, இது - விண்ணுலகமும், மிதிலையும். கவர்தல் - நயனேந்திரியத்துக்கு விஷயமாக்குதல். பி - ம்:—[1]எதிர்தர, சுடரது. [2]நாகம்.

௩௫. தேர்மிசை வருவாருஞ் சிவிகையில் வருவாரு
மூர்தியில் வருவாரு [1]மொள்ளியணி நிரையோடைக்
கார்மிசை வருவாருங் கரிணியில் வருவாரும்
பார்மிசை வருவாரும் பண்டியில் வருவாரும்

(இ - ள்.) தேர்மிசை வருவார்உம் - தேர்களின்மேல் வருபவர்களும், சிவிகையில் வருவார்உம் - பல்லக்குகளின்மேல் வருபவர்களும், ஊர்தியில் வருவார்உம் - (இங்குக் கூறப்படாத பிற)வாகனங்களின்மேல் வருபவர்களும், ஒளி மணி நிரை ஓடை கார்மிசை வருவார்உம் - பிரகாசத்தையுடைய இரத்தினங்களின்கூட்டம் பதிக்கப்பட்டுள்ள நெற்றிப்பட்டத்தையுடைய மேகம்போற்கரிய ஆண்யானைகளின்மேல் வருபவர்களும், கரிணியில் வருவார்உம் - பெண்யானைகளின்மேல் வருபவர்களும், பார்மிசை வருவார்உம் - பூமியின்மேல் நடந்துவருபவர்களும், பண்டியில் வருவார்உம் - பண்டிகளின்மேல் வருபவர்களும்,—(எ - று.)

ஊர்தி - குதிரை என்பாரு முளர். ஒளி மணிநிரையோடைக்கார் - யானை: பிறகுறிப்பு. கரிணி - கரிஎன்பதன் பெண்பால். பின்னே 'கரிணி' என வந்ததனால்,முன்னே 'கார்' என்றது ஆண்யானையாம். பி ம்:—[1]ஒளிர். ()

௩௬. முத்தணி யணிவாரும் மணியணி முனிவாரும்
பத்தியி னிமிர்செம்பொற் பலகலன் மகிழ்வாருந்
தொத்துறு தொழின்மாலை சுரிகுழ லணிவாருஞ்
சித்திர [1]நிரைதோயுஞ் செந்துகில் புனைவாரும்.

(இ - ள்.) முத்து அணி அணிவார்உம் - முத்தாபரணங்களைப் (புதிதாகப்) பூண்பவர்களும், மணி அணிமுனிவார்உம் - (முன்னே அணிந்துள்ள) இரத்தினாபரணங்களை வெறுத்துநீக்குபவர்களும், பத்தியின் நிமிர் செம்பொன் பல கலன் மகிழ்வார்உம் - ஒழுங்காக உயர்ந்த செம்பொன்னாலாகிய பலவகையாபரணங்களை மகிழ்ந்து அணிபவர்களும், தொத்து உறு தொழில் மாலை சுரி குழல் அணிவார்உம்-பூங்கொத்துப்பொருந்திய விசித்திரவேலைப்பாடு அமைந்த மாலையைக் கடைகுழன்ற கூந்தல்மயிரிலே சூடுபவர்களும், சித்திரம் நிரை தோயும் செம் துகில் புனைவார்உம் - சித்திரவேலைகளின் ஒழுங்கு அமைந்த செந்நிறப்பட்டாடையை உடுப்பவர்களும்,—(எ - று.)— சிலபிரதிகளில் மூன்றுநான்காமடிகள் மாறிக் கிடக்கின்றன. பி - ம்:— [1]நிறைதெய்வச் செந்துகில்.

(௩௬)

௬எ. *விடநிகர் விழியாரு மமுதெனு மொழியாருங்
கிடைபுரை யிதழாருங் கிளர்நகை[1] யொளியாருந்
தடமுலை பெரியாருந் தனியிடை சிறியாரும்
[2]பெடையன நடையாரும் [3]பிடியென வருவாரும்.

(இ - ள்.) விடம் நிகர் விழியார்உம் - விஷத்தையொத்த கண்களையுடையவர்களும், அமுது எனும் மொழியார்உம் - அமிருதமென்றுசொல்லத்தக்க இன்சொற்களையுடையவர்களும், கிடை புரை இதழார்உம்-செஞ்சடையை யொத்த அதரத்தையுடையவர்களும், கிளர் நகை வெளியார்உம்-விளங்குகின்ற புன்சிரிப்பின் ஒளியையுடையவர்களும், தட முலை பெரியார்உம்-விசாலமான தனங்கள் பருத்துள்ளவர்களும், தனி இடை சிறியார்உம்-ஒப்பற்ற இடை சிறுத்துள்ளவர்களும், பெடை அனம் நடையார்உம் - அன்னப்பேடையின் நடையைப்போன்ற நடையையுடையவர்களும் ஆகிய அழகிய மகளிர்கள், பிடி என வருவார்உம் - பெண்யானைகள்போல நடந்துவருபவர்களும், (ஆயினர்); (எ - று.)

'ஆயினர்' என வினை வருவித்துமுடிக்கப்பட்டது. புரை - உவமவுருபு. பி - ம்:—[1]வெளியாரும். [2] பிடியென. [3]பெடையென. (௬எ)

௬அ.—பல செல்வமும் நிறைந்து அம்மணநாள் சிறத்தல்.

உண்ணிறை நிமிர்செல்வ மொருதுறை செலவென்றுங்
கண்ணுற லரிதென்றங் [1]கருதுத லரிதம்மா
வெண்ணுறு சுடர்வானத் திந்திரன் முடி[2]சூடும்
மண்ணுறு திருநாளை யொத்ததம் மணநாளே.

(இ - ள்., உள் நிறை நிமிர் செல்வம் - அந்தமிதிலாநகரத்தினுள்ளே (அப்பொழுது) நிறைந்த சிறந்த செல்வம்முழுவதையும், ஒரு துறை செல - (வேறு) ஓரிடத்திற் பொருந்த, கண் உறல் - கண்களால் நோக்குதல்; என்றுஉம் - எப்பொழுதும் அரிது - அருமையையுடையதாம்; கருதுதல் - (அவற்றை ஒருசேர மனத்தால்) எண்ணுதலும், என்றுஉம் - எப்பொழுதும், அரிது-அருமையையுடையதே; அம்மா-ஆச்சரியம்! அ மணம் நாள்-அந்தக் கலியாணதினம்,-எண்ணுறு சுடர் வானத்து இந்திரன் முடி சூடும் மண்ணுறு திரு நாளை ஒத்தது - (யாவராலும்) நன்குமதிக்கப்படுகிற ஒளியையுடைய தேவலோகத்திலே தேவேந்திரன் கிரீடத்தைச்சூடுகிற அலங்காரமமைந்த சிறந்ததினத்தையே போன்றது; (எ - று)

ஒரு துறை செல - ஒரு முடிவு பொருந்த என்றலும் ஒன்று. கருதுத லரிது - அதுவேகாரியமாய் நினைக்கவேண்டுமென்றாலும் நினைத்துப்பார்க்க முடிவது அரியதாம். பி - ம்:—[1]கருதுதல். [2]சூட. (௬அ)

௬௯.—தசரதன் கலியாணமண்டபத்தை யடைதல்.

கரைதெரி வரியது கனகம் வேய்ந்தது
வரைஎன வுயர்ந்தது மணியிற் செய்தது

நிரைவளை மணவினை நிரப்பு மண்டப
மரசர்த மரசனு மணுகன் மேயினான்.

(இ - ள்.) கரை தெரிவு அரியது - (நீளம் அகலம் முதலியவற்றின்) எல்லை அறிதற்கு அருமையானதும், கனகம் வேய்ந்தது - பொற்றகடுகளால் மேலேமூடப்பட்டுள்ளதும், வரை என உயர்ந்தது - மலைபோல உயர்ந்துள்ளதும், மணியின் செய்தது - இரத்தினங்கள் பதித்துச் செய்யப்பட்டது மாகிய, நிரை வளை மணம் வினை நிரப்பும் மண்டபம் - ஒழுங்காகிய பல வளையல்களையுடைய சீதையினது கலியாணகாரியத்துக்குரிய பொருள்களை நிரப்பிவைத்துள்ள மண்டபத்தை, அரசர்தம் அரசன்உம்-அரசர்களுக்கு அரசனான தசரதனும், அணுகல் மேயினான் - அடைதலைப்பொருந்தினான்.

சஂ.—தசரதன் ஏகின விதம்.

வெண்குடை யிளநிலா விரிக்க மின்னெனக்
கண்குடை [1]யினமணி வெயிலுங் கான்றிடப்
பண்குடை வண்டினம் பாட வாடன்மா
மண்குடை தூளிவிண் மறைப்ப வேகினான்.

(இ - ள்.) வெண் குடை-வெண்கொற்றக்குடைகள், இள நிலா விரிக்க - இளமையான சந்திரகாந்திபோன்ற காந்தியை வீசவும், மின் என - மின்னல்போல, கண் குடை - (பார்ப்பவர்களது) கண்களைக் குடைந்துகூசச் செய்கிற, இனம் அணி - கூட்டமான ஆபரணங்கள், வெயில்உம் கான்றிட - (நிலாவையேயன்றி) வெயிலுக்கு ஒப்பான ஒளியையும் வீசவும், குடை வண்டு இனம் - (மாலைகளின் பூக்களிலே) குடைந்துமொய்க்குந்தன்மையன வான வண்டுகளின் கூட்டங்கள், பண் பாட - கீதம்பாடவும், ஆடல்மா - வெற்றியையுடைய குதிரைகள், மண் குடை - பூமியை(க் கால்களினால்) அழுத்துதலாலுண்டாகிற, தூளி-புழுதிகள், விண் மறைப்ப - ஆகாயத்தை மறைக்கவும், ஏகினான்-(தசரதன்) சென்றான்; (எ - று.) பி-ம்:—' மணியிள.

சக.—அப்போது முரசம் முதலியன ஆர்த்தல்.

மங்கல முரசின மழையி னார்த்தன
சங்குகண் முரன்றன தாரை [1]போரெனப்
பொங்கின மறையவர் புகலு நான்மறை
கங்குலி னொலிக்கு[2]மா கடலும் போன்றவே.

(இ - ள்.) (அப்பொழுது), மங்கலம் முரசு இனம் - மங்களகரமான பேரிகைகளின் கூட்டம், மழையின் ஆர்த்தன - மேககர்ச்சனைபோல ஒலித்தன; சங்குகள் - சங்கவாத்தியங்கள், முரன்றன - ஒலித்தன; தாரை-தாரையென்னும் ஊதுகருவிகள், போர் என பொங்கின - யுத்தத்தில் ஒலிப்பன போல மிக்கொலித்தன; மறையவர் புகலும் - பிராமணர்கள் எடுத்துச் சொல்கிற, நால் மறை-நான்கு வேதங்கள், கங்குலின் ஒலிக்கும் மா கடல்உம் போன்ற - இராத்திரிகாலத்தில் மிக்கொலிக்கிற பெரிய கடலின் ஓசையை

யும் ஒத்தன; (எ - று.)—மங்கலமுரசு, கொடைமுரசு, வெற்றிமுரசு என முரசு பலவகைப்படுதலின், இங்கு 'மங்கலமுரசினம்' என்றார். போர்-அநு கரணவொலியென்பாரும் உளர். பி-ம்:—[1]பொம்மென. [2]அக்கடலும். (௪௧)

௪௨.—சேனைகளும் மன்னவரும் அத்தசரதனுடன் வருதல்.

பரந்ததேர் களிறுபாய் புரவி பண்ணையிற்
றரந்தர நடந்தன தானை வேந்தனை
நிரந்தரந் தொழுதெழு நேமி மன்னவர்
புரந்தரன் புடைவரு மமரர் போன்றனர்.

(இ - ள்.) பரந்த - பரவின, தேர் - இரதங்களும், களிறு - யானைகளும், பாய் புரவி - பாய்ந்துசெல்லுந்தன்மையனவான குதிரைகளும், பண்ணையின் - கூட்டங்கூட்டமாய், தரம் தரம் - இனம் இனமாக, நடந்தன - சென்றன; தானை வேந்தனை - சேனையையுடைய தசரதசக்கரவர்த்தியை, நிரந்தரம்-இடைவிடாமல் [எப்பொழுதும்], தொழுது எழும் - வணங்கியெழுகின்ற, நேமி மன்னவர் - ஆஜ்ஞாசக்கரத்தையுடைய அரசர்கள், புரந்தரன் புடை வரும் அமரர் போன்றனர் - இந்திரனது பக்கங்களிலே வருகிற தேவர்களை ஒத்தார்கள்; (எ - று.)—பண்ணை - சிறப்புப்பெயர், பொதுப்பொருளை யுணர்த்திற்று. (௪௨)

௪௩.—யாவரும் ஆசனத்துஅமர்தல்.

அனையவன் மண்டப மணுகி யம்பொனின்
புனைமணி [1]யாதனம் பொலியத் தோன்றினான்
[2]முனைவரு மன்னரு முறையி னேறினார்
சனகனுந் தன்கிளை தழுவ வேறினான்.

(இ - ள்.) அனையவன் - அத்தன்மையனாய்வந்த தசரதசக்கரவர்த்தி, - மண்டபம் அணுகி-விவாகமண்டபத்தையடைந்து (அங்கு), அம் பொனின் புனை மணி ஆதனம் - அழகிய பொன்னினாலமைத்து இரத்தினங்கள் பதிக்கப்பட்டுள்ள ஆசனத்திலே, பொலிய - (அவ்வாசனம்) விளங்கும்படி, தோன்றினான் - ஏறி வீற்றிருந்தான்; முனைவர்உம் - முனிவர்களும், மன்னர்உம் - அரசர்களும், முறையின் - (அவரவர்க்குரிய) முறைமைப்படி, ஏறினார்-(தத்தம்தகுதிக்கு ஏற்ற ஆசனங்களில்) ஏறி வீற்றிருந்தார்கள்; சனகன் உம் - சனகராசனும், தன் கிளை தழுவ - தனது பந்துவர்க்கஞ் சூழ்ந்து நிற்க, ஏறினான் - (ஓர் ஆசனத்தில்) ஏறி வீற்றிருந்தான்; (எ-று.)—பி - ம்:—[1]ஆசனம். [2]முனிவரும். (௪௩)

௪௪.—இதுமுதல் மூன்று கவிகள்-மண்டபத்தின்வருணனை.

மன்னரு முனிவரும் வானு ளோர்களு
மன்னமென் னடையனங் கனைய மாதருந்
துன்னினர் [1]துவன்றலிற் சுடர்கள் சூழ்வரும்
பொன்மலை யொத்ததப் பொருவில் கூடமே.

(இ - ள்.) மன்னர்உம் - அரசர்களும், முனிவர்உம் - முனிவர்களும் வான் உளோர்கள்உம்-மேலுலகத்துள்ள தேவர்களும், அன்னம் மெல் நடை அணங்கு அனைய மாதர்உம் - அன்னப்பறவையின்நடைபோல் மென்மையான நடையையுடைய திருமகளையொத்த மாதர்களும், துன்னினர் துவன்றலின் - நெருங்கிவந்து நிறைதலால், அ பொருவு இல் கூடம் - (வேறு) ஒப்புமையில்லாத அந்தக்கலியாணமண்டபமானது, (அப்போது), சுடர்கள் சூழ் வரும் பொன் மலை ஒத்தது-(சூரியன்முதலிய) எல்லாவொளிகளாலும் வலஞ்செய்துவரப்பெறும் பொன்மயமான மேருமலையை ஒத்தது; (எ - று.)

கூடத்துக்கு - மேருவும், அதில்எங்கும்நிறைந்த மன்னராதியோர்க்கு - சுடர்களும் உவமை. தேவாதிதேவனாகிய திருமால் தேவர்களுக்குப்பகைவரான அரக்கரை அழித்தற்பொருட்டு அவர்கள்வேண்டுகோளால் திருவவதரித்துத் திருமகளை மணம்புணர்தலால், தேவர்களும் அத்திருமணத்துக்கு வந்தனரென்க. 'மாதர்' எனப்பொதுப்படக்கூறியதில், தேவமகளிரையும் அடக்கலாம். பி- ம்:—[1]துவன்றினர்.　(சுசு)

சரு. புயலுள மின்னுள பொருவின் மீனுள
வியன்மணி யினமுள [1]சுடரி ரண்டுள
மயன்முதற் றிருத்திய மணிசெய் மண்டப
மயன்முதற் றிருத்திய வண்ட மொத்ததே.

(இ - ள்.) மயன் - மயனென்னும் அசுரத்தச்சனால், முதல்-ஆதிகாலத்திலே, திருத்திய - திருத்தமாக அமைக்கப்பட்டுள்ள, மணி செய் மண்டபம் - இரத்தினங்களைப்பதித்துச் செய்யப்பட்ட அம்மண்டபத்திலே, புயல் உள - (அப்பொழுது கைம்மாறுகருதாமலீயுந்தன்மையுள்ள ஆடவர்பலர் வந்துகூடியுள்ளதனால்) மேகங்கள் உள்ளன; மின் உள - (ஒள்ளிய மெல்லிய உடம்பையுடைய மகளிர்பலர் வந்துகூடியுள்ளதனால்)மின்னல்கள் உள்ளன; பொருவு இல் மீன் உள - (பிரதான அரசர்கள்பலர் வந்துகூடியுள்ளதனால்) ஒப்பில்லாத நட்சத்திரங்கள் உள்ளன; இயல் மணி இனம் உள - (அவர்களது பரிசனவருக்கங்கள் பல வந்துகூடியுள்ளதனால்) ஒழுங்கான தாரகைகளின் இனங்கள் உள்ளன; சுடர் இரண்டு உள - (தசரதனும் சனகனும் வந்து கூடியுள்ளதனால்) சூரியசந்திரமண்டலங்கள் உள்ளன; (ஆதலால் அம்மண்டபம்), அயன் முதல் திருத்திய அண்டம் ஒத்தது - (மேகங்களையும் மின்னல்களையும் நட்சத்திரங்களையும் தாரகைகளையும் சூரியசந்திரர்களையும் தன்னிடத்தில் உடையதாகப்) பிரமதேவனால் ஆதிகாலத்திலே அழகாகப் படைக்கப்பட்ட அண்டகோளத்தை ஒத்திருந்தது; (எ - று.)

நக்ஷத்திரங்கள் - அசுவினிமுதலியஇருபத்தேழும், தாரகை - பிற அளவிறந்த நட்சத்திரங்களுமாம், இரத்தினம்போல அழகும் விளக்கமும் உடையனவாக வானத்திலே பிரகாசித்தலால், தாரகைகள்'மணியினம்'எனப்பட்டன. இனி, இவை-சூரியனொழிந்த மற்றையேழுகிரகங்களென்றுங் கொள்ளலாம். "சந்திரனிரவி தன்னைச் சார்வதோர் தகைமை தோன்ற, இந்திரன் மகன் றன்னை யெதிர்கொள்வா னெழுந்து போந்தான்" எனக் கீழ் எதிர்

கொள்படலத்திலும் சனகதசரதர்க்கு முறையே சந்திரசூரியரை உவமை கூறிப்போந்தவாறு உணர்க. வள்ளல்களைப் புயலென உவமைமுகத்தாற் கூறினர் புயல், மின் என்றது இராமனையுஞ் சீதையையுமென உரைக்கலாகாது; இச்சமயத்தில் அவர் அம்மண்டபத்தில் வந்திலராதலால். இனி, புயல் - மகளிர் கூந்தல்; மின் - அவர்களிடை, மீன் - விழி, மணியினம் - ஆபரணம் எனக் கொண்டு பொருளுரைப்பாருமுளர். இம்மண்டபம் மேகம் மின்னல் முதலியவற்றை அளாவி ஓங்கியுயர்ந்துள்ளதாதலால், இங்ஙனங்கூறப்பட்டதென்று உரைத்தலும் ஒன்று. பொருவில் மீன் எனப் பிரித்து - மாறுபடுகிற ஒளியையுடையனவான மீனெனவுங்கொள்ளலாம். புயல் உள மின் என எடுத்து, மேகத்திலுள்ள மின்னலென்றுமாம். பி - ம்:— [1]சுடருமீன்றன, சுடருமீன்றுள. (சரு)

சசு. எண்டவ முனிவரு மிறைவர் யாவரு
மண்டரும் பிறரும்புக் கடங்கிற் றாதலின்
மண்டபம் வையமும் வானும் வாய்மடுத்
துண்டவன் மணியணி யுதர மொத்ததே.

(இ - ள்.) எண் - (யாவராலும்) நன்கு மதிக்கத்தக்க, தவம் - தவத்தையுடைய, முனிவர்உம் - (வசிட்டன் கௌசிகன் முதலிய) இருடிகளும், இறைவர் யாவர்உம் - (தசரதன் சனகன் முதலிய) அரசர்களெல்லோரும், அண்டர்உம் - தேவர்களும், பிறர்உம் - மற்றையோரும், புக்கு அடங்கிற்று - வந்துசேர்ந்து (தன்னிடத்தில்) அடங்கப்பெற்றுள்ளது, (அம்மண்டபம்); ஆதலின்,—மண்டபம் - அந்தமண்டபமானது,—வையம்உம் வான்உம் வாய் மடுத்து உண்டவன் மணி அணி உதரம் ஒத்தது - மண்ணுலகமும் விண்ணுலகமு முட்பட அண்டமுழுவதையும் (பிரளயகாலத்திலே) தன் திருவாயிலேயிட்டு உட்கொண்டருளிய திருமாலினது நீலமணியினிறமுள்ள அழகிய திருவயிற்றை ஒத்திருந்தது; (எ - று.)—கீழ் நகரப்படலத்தில் "ஊழியி னிறுதி யுறையுளோ" என உவமைகூறியவாற்றை இங்கே உணர்க. (சசு)

சஎ.—கவிக்கூற்று.

தராதல முதலுல கனைத்துந் தள்ளுற
விராவின குவிந்தன விளம்ப வேண்டுமோ
வராவணை [1]துறந்துபோந் தயோத்தி யெய்திய
விராகவன் செய்கையை யியம்பு வாமரோ.

(இ - ள்.) தராதலம் முதல் - பூலோகம் முதலான, உலகு அனைத்து உம் - எல்லாலோகத்துச்சனங்களும், தள்ளுற - (சீதாராமவிவாகத்தைத் தாம் தாம் பார்க்கவேண்டுமென்று தனித்தனி எழுந்த ஆசை தம்மைத்) தூண்டிச் செலுத்துதலால், விராவின குவிந்தன - (ஒன்றோடொன்று) நெருங்கினவாய் (அம்மண்டபத்தில்) வந்துகூடின; (என்றால்), விளம்ப வேண்டும் ஓ - அதனைத் தனித்தனி எடுத்துச்) சொல்லவேண்டுமோ? [வேண்டாவென்ற

படி]; அரா அணை துறந்து போந்து - ஆதிசேஷனாகிய சயனத்தை நீங்கி வந்து, அயோத்தி எய்திய - அயோத்தியென்னும் நகரத்தில் அவதரித்த, இராகவன் - ஸ்ரீராமபிரானது, செய்கையை - செய்தியை; இயம்புவாம் - (இனிக்) கூறத்தொடங்குவோம்; (எ - று.)—அரோ - ஈற்றசை.

அந்தஇடத்து எல்லாவுலகத்தவரும் திருமணத்தைத் தரிசிக்கவந்தனர்: அங்ஙனம் வந்ததைப்பற்றித் தனித்தனிச்சொல்லவேண்டுவது அவசியமில்லையாதலால் அதனையொழித்து இனி இராமன் செய்தியைச்சொல்லுவோமென்பதாம். தள்ளுற - பூமி தள்ளாடஎனினுமாம். பி - ம்:—[1]பாழ்பட.

சஅ, சகூ, ருo.—இதுமுதல் மூன்றுகவிகள் குளகம் - இராமபிரான் தீர்த்தங்களில்நீராடித் திருமண்தரித்துக் குலதெய்வத்தை வணங்குதலைக் கூறும்.

சஅ. சங்கினந் தவழ்கடலேழிற் [1]றந்தன
சிங்கலி [2]லருமறை தெரிந்த தீர்த்தங்கள்
கங்கையே [3]முதலிய கலந்த நீரினான்
மங்கல மஞ்சன மரபி [4]னாடியே.

சகூ. என்றுநான் முகன்முதல் யாரும் யாவையு
நின்றபே ரிருளினை நீக்கி நீணெறி
சென்றுமீ ளாக்குறி சேரச் சேர்த்திடு
தன்றிரு நாமத்தைத் தானுஞ் சாத்தியே.

ருo. கோதறு தவத்துத்தன் குலத்து ளோர்தொழு
மாதியஞ் [1]சோதியை யடிவ ணங்கினான்
கா[2]தியல் கயல்விழிக் கன்னி மார்களை
வேதியர்க் கருமறை விதியி னல்கியே.

(இ - ள்.) (சஅ) சங்கு இனம்-சங்குகளின் கூட்டங்கள், தவழ்-(தம்மிடத்திலே) தவழப்பெற்ற, கடல் ஏழின் - ஏழுகடல்களினின்றும், தந்தன - கொணர்ந்துவந்துகொடுக்கப்பட்டனவாகிய, தீர்த்தங்கள் - தீர்த்தங்களினாலும், சிங்கல் இல் அரு மறை தெரிந்த - அழிதலில்லாத [நித்தியமான] அறிதற்கரிய வேதங்களில் ஆராய்ந்துசிறப்பித்துக்கூறப்பட்ட, கங்கை ஏ முதலிய கலந்த நீரினால் - கங்காநதிமுதலியவற்றிற் பொருந்தின தீர்த்தங்களினாலும், மரபின் - சாஸ்திரவிதிப்படி, மங்கலம் மஞ்சனம் ஆடி - (இராமபிரான் தான்) மங்கலஸ்நானஞ்செய்து, (சகூ) என்றுஉம் - எப்பொழுதும், நான்முகன் முதல் யார்உம் - பிரமதேவன் முதலாகவுள்ள உயர்திணையோரெல்லோரையும், யாவைஉம் - மற்றை அஃறிணைப்பிராணிவருக்கமனைத்தையும், நின்ற பேர் இருளினை நீக்கி - (அவ்வுயிரைவிடாதுசூழ்ந்து) நின்ற (கருமமாகிய) பெரிய இருளை ஒழித்து, நீள் நெறி சென்று மீளா குறி சேர - நெடுந்தூரமாகிய வழியிலேபோய் மீளாதஉலகமாகியபரமபதத்தினிடத்தையடையும்படி, சேர்த்திடு - (அவ்வவ்வுயிர்களை அங்குச்) சேர்க்கவல்ல, தன்

திருநாமத்தை - தனக்குஉரிய திருமண்காப்புக்குறியை, தான்உம் சாத்தி - (அப்பொழுது) இராமபிரான்தானும் தரித்து, (௫௦) காது இயல்-காதுவரையிலும் பொருந்துகிற [மிகநீண்ட], கயல் விழி - கயல்மீன்போற் பிறழ்கின்ற கண்களையுடைய, கன்னிமார்களை - கன்னிப்பெண்களை, வேதியர்க்கு - வேதம்வல்ல அந்தணர்க்கு, அரு மறை விதியின் - அறிதற்கரிய வேதத்திற் கூறிய விதிப்படி, நல்கி - கொடுத்து, கோது அறு தவத்து தன் குலத்துளோர் தொழும் ஆதி அம் சோதியை - குற்றமற்ற தவமுடைமையினாலே தனதுகுலத்திலுள்ள அரசர்களெல்லோரும் பெற்றுவணங்கிவருகிற [தனதுகுலதெய்வமான] முதன்மையான அழகிய ஒளியையுடைய ஸ்ரீரங்கநாதனை, அடி வணங்கினான்-திருவடிகளை நமஸ்கரித்தான்; (எ-று.)
௬அ:—பி - ம்:—[1]தந்தவும். [2]நான்மறை. [3]முதலவும். [4]ஆடினான்.

௬௯.—தன்னைநெற்றியிலேதரித்த பிராணிகளனைத்தையும் இறுதியிற் கருமமொழித்து மீளுதலில்லாத முத்தியைப் பெறுவிப்பது திருமண்காப்பென்னும் ஊர்த்துவபுண்டர மென்க. நீணெறி - அர்ச்சிராதிமார்க்கம். நின்ற பேரிருள் - அழியாதுநின்ற மூலப்பிரகிருதியுமாம். மேல்நோக்கி உயர்ந்துசெல்லுந்தோற்றத்தையுடைய திருமண்காப்பு, எல்லாப்பதவிகளினும் மேம்பட்டு உயர்ந்துள்ள முத்தியைத் தான் கொடுத்தற்கு அறிகுறியாமென்பர். சுவர்க்கமுதலியபதவிகளை அடைந்தவர்கள்போலச் சிலகாலம் இன்பநுகர்ந்து பின்பு மீண்டும் இவ்வுலகத்தில் இழிந்து வருதல் முத்திபெற்றவர்க்கு இல்லையா மாதலால், 'மீளாக்குறி' என்று அதற்கு ஒருபெயர் கூறினர். தன் திருநாமம் - எம்பெருமானது திருவடிவடிவமாக இடப்படும் அழகிய நாமம்; விஷ்ணுசமயசம்பந்தத்துக்கு அறிகுறியாக அணியப்படும் நாமம். உலகத்தில் எல்லோர்க்கும் குருசிஷ்யக்கிரமத்தை இத்தன்மைத்தென்று தெரிவித்தற்பொருட்டுத் திருமால் தானே பதரிகாச்சிரமத்தில் நாராயணனென்னுங் குரு நரனென்னும்மாணக்கனுக்குத் தத்துவமுபதேசிப்பதாக இரண்டுவடிவங்கொண்டு நின்றதுபோலவும், தவஞ்செய்யும்விதம் இத்தகையதென்று உணர்த்தும்பொருட்டு விஷ்ணு வாமனரூபியாய்ச் சித்தாச்சிரமத்தில் தவஞ்செய்திருந்ததுபோலவும், யாவருந் திருமண்காப்பை யணிந்து உய்யும்நெறியை அறிவிக்கும்பொருட்டு இராமன் தன் திருநாமத்தைத் தானுஞ் சாத்தின னென்க. இங்ஙனங் கூறியதனால், கம்பர் வைணவச்சமயத்தராதல் பெறப்படு மென்பர். இனி, இச்செய்யுளுக்கு - தனது அழகியதிருப்பெயரைத் தான் ஜபஞ்செய்து என்று உரை கூறுவாரு முளர்; என்றது, அஷ்டாக்ஷரஜபமாம்: அவ்வுரைக்கு'சாற்றி' எனப் பாடங்கொள்ளவேண்டும். இச்செய்யுள்-சில பிரதிகளில் ௬௬ - ஆவது செய்யுளாகவும், சிலபிரதிகளில் ௬எ - ஆவது செய்யுளாகவுங் காணப்படுகின்றது.

௫௦.—இச்செய்யுளில், முதலிரண்டடி-இராமன்குலதெய்வந்தொழுதலையும், பின்னிரண்டடி - கன்னியாதானஞ் செய்தலையுங் கூறிற்று. பிரணவாகாரமான ஸ்ரீரங்கவிமானத்தி லெழுந்தருளியுள்ள ஸ்ரீரங்கநாதனே, இட்சுவாகுமுதல் இராமபிரானீறாகவுள்ள சூரியகுலவரசரெல்லோர்க்குங் குல

தெய்வமாகிவிளங்கினன்; அவ்வெம்பெருமானே, இச்செய்யுளில் 'ஆதியஞ்சோதி'எனக் குறிக்கப்பட்டவன். தசரதன் தான் மிதிலைக்கு வரும்போது ஸ்ரீரங்கநாதனையும் உடன் எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்தானென்றும், ஸ்ரீராமன் ஸ்ரீரங்கநாதனைத் தன்மனத்தினால் தியானித்து வணங்கினானென்றுமது கொள்க. ஆதியஞ்சோதி - தனதுஅவதாரத்துக்கு முதன்மையான ஒளிவடிவம். பி - ம்:—[1] சுடரினை. [2] இகல். (௫௦)

௫க.—இதுமுதற் பதினெட்டுக் கவிகள் - ஸ்ரீராமன்கோலம் புனைந்ததைக் கூறும்.

[1] அழிவரு தவத்தினோ டறத்தை யாக்குவா
னொழிவருங் கருணையோ ருருவு கொண்டென
வெழுதரு வடிவுகொண் டிருண்ட மேகத்தைத்
தழுவிய நிலவெனக் கலவை சாத்தியே.

இதுமுதல் ஐந்துகவிகள் - குளகம்.

(இ - ள்.) அழி வரு - (தன்னைக்காப்பவரில்லாமையால் இராவணன் முதலிய இராக்கதரால்) அழிந்துவருகின்ற, தவத்தினோடு - தவத்தையும், அறத்தை - தருமத்தையும், ஆக்குவான் - மீண்டும்வளர்த்திடுவதற்கு, ஒழிவு அரு கருணை - நீங்குதலில்லாத [கடவுளுக்கு இயற்கையான] அருளானது, ஓர் உருவு கொண்டு என - ஒருமனிதவடிவத்தை எடுத்துவந்தாற்போல, எழுது அரு வடிவு - (சித்திரத்தில்) எழுதுதற்குங்கூடாத [மிகஅழகிய] தனதுதிருமேனியிலே, இருண்ட மேகத்தை தழுவிய நிலவு என - கறுத்த நிறத்ததான மேகத்தைத் தழுவுகிற வெண்ணிலாப்போல, கலவைகொண்டு சாத்தி - கலவைச்சந்தனத்தை எடுத்துத் தரித்து, - (எ - று.)

இதனால், கலவைச்சாந்து அணிந்தமை கூறப்படுகின்றது. எம்பெருமானது திருமேனியை நோக்கினமாத்திரத்திலே அவனது இயற்கைக்கருணைமிகுதி வெளித்தோன்றுதலால், 'கருணையோருருவுகொண்டென' எனப்பட்டது. 'அழிவரு தவத்தினோ டறத்தை யாக்குவான்' என்றது, துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனத்தின்பொருட்டே திருவவதாரமாதலால். முன்னே 'தவம்' என வந்ததனால், பின்னே அறம் என்றது-அஃதொழிந்தபிறவற்றை. அழிவு அரு - அழிதற்குத்தகாத என்றும் உரைக்கலாம். பி - ம்:—[1] அழிவருந்தவத்தினோடு. (௫க)

௫௨. மங்கல முழுநிலா மலர்ந்த திங்களைப்
[1] பொங்கிருங் கருங்கடல் பூத்த தாமெனச்
செங்கிடைச் சிகழிகைச் செம்பொன் மாலையுந்
தொங்கலுந் துயல்வரச் சுழியஞ் [2] சூடியே.

(இ - ள்.) மங்கலம் - மங்கலகரமான [அழகிதான], முழு நிலா - பூர்ணமான (தனது) கலைகளோடு (கூடி), மலர்ந்த - விளங்குகின்ற, திங்களை - சந்திரமண்டலத்தை, பொங்கு இரு கரு கடல் பூத்தது ஆம் என - (நீர்)பொங்குந்தன்மையதான பெரிய கரியகடல்(தன்னிடத்தே)பூக்கப்பெற்

றதுபோலு மென்று உவமைகூறும்படி, செம் கிடை சிகழிகை - சிவந்த கிடையென்னுஞ்சடையினால்தொடுத்த மாலையும், செம் பொன் மாலைஉம்- சிவந்த பொன்னினாற் செய்யப்பட்ட மாலையும், தொங்கல்உம் - பூமாலையும், துயல்வர-அசையும்படி, (அவற்றை), சுழியம் சூடி-சுழிபெறமுடிக்கப்பட்ட (தனது மயிர்) முடியிலே (வட்டமாகத்) தரித்து,—(எ - று.)

இதனால் பலவகைமாலைகளையணிந்தமைகூறப்படுகின்றது. பொங்கிருங் கருங்கடல்-அசைகிற பெரிய திருக்குழற்றொகுதிமுடிக்கும், முழுநிலா மலர்ந்ததிங்கள் - அம்மயிர்முடியைச் சுற்றிலும் வட்டமாகச் சூடின ஒள்ளிய பல வகைமாலைவளையத்துக்கும் உவமை. சுழியம் - காரணப்பெயர்; அம்-சுருத் தாப்பொருள்விகுதி யென்றாவது அசையென்றாவது அறிக. பி - ம்:— [1]பொங்கிய. [2]சூட்டியே. (௫௨)

௫௩. ஏதமி லிருகுழை யிரவு நன்பகற்
காதல்கண் டுணர்ந்தன கதிருந் திங்களுஞ்
சீதைதன் கருத்தினைச் செவியி னுள்ளுறத்
தூதுசென் றுரைப்பன போன்று தோன்றவே.

(இ - ள்.) இரவு - இராத்திரிகாலத்திலும், நல் பகல் - விளக்கமுடைய பகற்காலத்திலும், காதல் கண்டு உணர்ந்தன - (பிராட்டி படுகிற) காதல் நோயை(ப் பிரதியட்சமாக)ப்பார்த்து அறிந்தவையாகிய, கதிர்உம் - சூரியனும், திங்கள்உம் - சந்திரனும், தூது சென்று - தூதாகப்போய், செவியின் உள் உற - (இராமனது) காதுகளி னுள்ளே பொருந்தும்படி, சீதை தன் கருத்தினை - அச்சீதையினது எண்ணத்தை, உரைப்பன போன்று - சொல்வனவற்றை ஒத்து, ஏதம் இல் இரு குழை - குற்றமில்லாத இரண்டுகுண்டலங்கள், தோன்ற - (தன்காதுகளிலே) விளங்க,—(எ - று.)

இதனால், குண்டலமணிந்தமை கூறப்படுகின்றது. இருகாதுகளிலும் குண்டலந்திகழ்வது, சூரியசந்திரர் சீதையின்கருத்தினை இரகசியமாய்ச் சொல்லுதற்கு இராமனதுசெவியை வந்தடைந்திருப்பதுபோலு மென்றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இரவுபகல்களை வைத்த முறைமைக்கு ஏற்ப, திங்களுங்கதிரும் என நிறுத்தாதது, எதிர்நிரனிறைப்பொருள்கோள். குண்டலத்துக்குச் சூரியசந்திரர் வட்டவடிவாலும் மிக்கஒளியாலும் உவமம்.

௫௪. கார்விடக் கறையுடைக் கணிச்சி வானவன்
வார்சடைப் புடையினோர் மதிமி லைச்சத்தான்
சூர்சுடர்க் குலமெலாஞ் சூடி னானென
வீரபட் டத்தொடு திலக மின்னவே.

(இ - ள்.) கார் விடம் கறை உடை - கருநிறத்ததான விஷத்தின் கருநிறத்தை(க் கண்டத்திலே) யுடைய, கணிச்சி வானவன் - மழுவென்னும் படையையுடைய தேவனாகிய சிவனது, வார் சடை புடையின் - நீண்ட சடையின் மேலிடத்திலே, ஓர் மதி மிலைச்ச - ஒற்றைக்கலையிளஞ்சந்திரனொன்றைச் சூடியருள, (அது கண்டுஇகலி), சூர் சுடர் குலம் எலாம் தான்

சூடினன் என - தெய்வத்தன்மையுள்ள (சூரியன் அக்கினி முதலிய) ஒளிகளின் இனங்களையெல்லாந் தான் தலைமேல்தரித்துள்ளவன்போல, வீரபட்டத்தொடு திலகம் மின்ன - (நெற்றியின்மேலிடத்தணியும்) வீரபட்டிகையென்னும் ஆபரணமும் திலகமென்னும் ஆபரணமும் விளங்க,— (எ - று.)

இதனால், வீரபட்டமும், திலகமும் அணிந்தமை கூறப்படுகின்றது. சிவன் மதியென்னுஞ்சுடலரயணிவதுகண்டு அவனொடுஇகலி மற்றைவானத்துத்தோன்றுஞ்சுடர்களையெல்லாந் தான் சூடினன்போல வீரபட்டம் திலகம்என்பவற்றை இராமன்அணிந்துவிளங்கினனென்பதாம். தற்குறிப்பேற்றம். சுர்-தெய்வம். வீரபட்டம் - வெற்றியுடைவீரர் அதற்கு அறிகுறியாக நெற்றிமேலணியும் பொற்றகடு. திலகம்-இங்கே, நெற்றிக்குறிப்பொட்டன்று: சுட்டியென்றுதிவாகரம். (ருச)

ருரு. சக்கரத் தயல்வருஞ் சங்க மாமென
[1]மிக்கணி கழுத்தணி தரள வெண்கொடி
மொய்க்குமென் குழலினாண் முறுவ லுள்ளுறப்
[2]புக்கன [3]நிறைத்துமெய் [4]பொடித்த போன்றவே.

(இ - ள்.) சக்கரத்து அயல் வரும் சங்கம் ஆம் என - (திருமாலின்சுதரிசனமென்னுஞ்) சக்கராயுதத்தின் அருகிலே வருகிற (பாஞ்சசன்னியமென்னுஞ்) சங்கமாம் இது வென்று உவமைகூறும்படி, மிக்கு அணி - (தனது திருமுகமண்டலத்தின்கீழே) மிக அழகியதாய்விளங்குகிற, கழுத்து - கண்டத்திலே, அணி - தரித்த, தரளம் வெள் கொடி - கொடிபோன்ற வெண்ணிறமானமுத்துமாலைகள், மொய்க்கும் மெல் குழலினாள் முறுவல்-அடர்ந்த மெல்லிய கூந்தலையுடைய சீதையினது புன்சிரிப்புக்கள், உள் உற புக்கன - (தன்) மனத்திலேபொருந்தப் புகுந்தனவாய், நிறைத்து - (அவ்வுள்ளிடம் முழுவதையும்) நிரப்பி, மெய் பொடித்த - (அங்குஅடங்காமல் தனது)திருமேனியின்மேலே வெளிப்பட்டுத்தோன்றியவற்றை, போன்ற—; (எ - று.)

இதனால், முத்துமாலையணிந்தமை கூறப்படுகின்றது. பல் சிறிது வெளித்தோன்றும் வெண்ணிறமான சீதையின் புன்சிரிப்பின்ஒளிகள் இராமன் உடம்பின்மேற் பரவினாற்போன்றன முத்துமாலைக ளென்க. தற்குறிப்பேற்றவுவமையணி. சக்கரம் - முகத்துக்கும், சங்கம் - கண்டத்துக்கும், ஒளியும்வடிவும்பற்றிய உவமை. சங்கம் - கண்டத்துக்கும், சக்கரம் - முத்துமாலைக்கும் உவமையாகப்பொருளுரைக்கவுங் கூடும். பி-ம்:—[1]மிக்கொளிர். [2]புக்கென. [3]நிறைந்துமேல். [4]பொடிப்ப. (ருரு)

ருசா. பந்திசெய் வயிரங்கள் பொறியிற் பாடுற
வந்தமில் சுடர்மணி யழலிற் றோன்றலாற்
சுந்தரத் தோளணி வலயந் தொல்லைநாண்
மந்தரஞ் சுற்றிய வரவை மானுமே.

(இ - ள்.) பந்தி செய் - ஒழுங்காகப் பதிக்கப்பட்டுள்ள, வயிரங்கள் - வச்சிரரத்தினங்கள், பொறியின் - (பாம்பின்படப்) புள்ளிகள்போல, பாடு

உற - ஒளி பொருந்த, அந்தம் இல் சுடர் மணி - எல்லையில்லாத செந்நிற மாய் விளங்குகின்ற மாணிக்கங்கள், அழலின் - அக்கினிபோல [செந்நிற மாக], தோன்றலால் - காணப்படுதலினால், சுந்தரம் தோள் அணி வலயம் - அழகிய தோள்களில் அணிந்த (தோள்) வளைகள், தொல்லை நாள் மந்தரம் சுற்றிய அரவை மானும் - முன்னொருகாலத்திலே [பாற்கடல்கடைந்தகால த்தில்] (மத்தாகிய) மந்தரகிரியைச் சுற்றிநின்ற கடைகயிறாகிய (வாசுகி யென்னும் பாம்பை) ஒக்கும்; (எ - று.)

இதனால், தோள்வளையணிந்தமை கூறப்படுகின்றது. தோளுக்கு-மந்த ரமும், அதைச்சூழ்ந்துள்ள கேயூரமென்னும் ஆபரணத்துக்கு-மந்தரத்தைச் சூழ்ந்த வாசுகியும் உவமையாம். உவமையணி. பந்திசெய் என்பதைச் சுடர் மணியோடுங்கூட்டுக. பாடு - பாடம்; பளபளப்பு. அழலில் - (அம்பாம்பின் கண்களினின்றும் வெளியாகிற விஷத்)தீப்போல என்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1] சுடரொளியழலத்தோன்றலால். [2] அரவம். (ருசு)

ருஎ. கோவையின் பெருவட முத்தங் கோத்தன
காவல்செய் தடக்கையி னடுவட் காந்துவ
மூவகை யுலகிற்கு முதல்வ னாமென
வேவரும் பெருங்குறி யிட்ட [1]போன்றவே.

(இ - ள்.) முத்தம் கோத்தன - முத்துக்களைக் கோத்திட்டனவாகிய, கோவை இன் பெரு வடம் - ஒழுங்கான கண்ணுக்கினிய பெரிய வடங்கள், காவல் செய் தட கையின் நடுவண் காந்துவ - (பகைவரையழித்து எல்லா வுயிர்களையும்) காத்தல்செய்கிற பெரிய கைகளின் நடுவிடத்திலே (அணியப் பட்டு)விளங்குபவை,—மூவகை உலகிற்குஉம் முதல்வன் ஆம் என ஏ வரும் பெரு குறி இட்ட போன்ற - மூன்றுவகைலோகங்களுக்கும் அனாதியான தலைவன் இவ்விராமபிரானேயாவ னென்று உயர்ச்சிபொருந்திய பெரிய அடையாளம் இட்டவற்றை யொத்தன; (எ - று.)

இதனால், வாகுவலயத்தின்கீழே கைகளிற்கட்டப்படும் முத்துக்குஞ்சங் களை யணிந்தமை கூறப்படுகின்றது. கோவைவடம் மூன்றாதலால், இங் ஙனங் கூறினார்போலும். உலகம் பதினான்காயிருக்க 'மூவகையுலகு' என் றது, மேல் கீழ் நடு என்கிற நோக்கத்தாலென்க; அல்லது, கிருதகம் அகி ருதகம் கிருதகாகிருதகம் என மூவகைப்பட்ட உலகம் என்றுங்கொள்ள லாம்: கிருதகம் - கீழேழுலகமும், மேலேழுலகங்களில் பூலோக புவர்லோக சுவர்லோகங்களும்: அகிருதகம்-ஜநலோக தபோலோக சத்தியலோகங்கள்: கிருதகாகிருதகம் - மஹர்லோகம். பூமி பாதாளம் முதலாயின ஒவ்வொரு கற்பத்திலுங் கடலால்மூடப்பட்டுஅழிந்து மீண்டும் செய்யப்படுவனவென் றும், ஜநலோகதபோலோகசத்தியலோகங்கள்ஒவ்வொருகற்பத்திலும் அழி யாமல் பிரமனுடைய மகாப்பிரளயம் வரையிலும் நிற்பனவென்றும், மஹர் லோகம் கற்பப்பிரளயத்திற் சூனியமாகிப் பிரளயம்நீங்கியபின்பு படைக்கப் படுகின்ற உயிர்கள் தங்கப்பெறுவதென்றும் புராணங் கூறும். ஏவரும் - எல்லாருமென்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1] போலுமே. (ருஎ)

ரு௮. மாண்டபொன் மணியணி வலயம் வந்தெதிர்
வேண்டினர்க் குதவுவான் [1]விரும்பிக் கற்பக
மீண்டுதன் கொம்பிடை யீன்ற தாமெனக்
காண்டகு தடக்கையிற் கடக மின்னவே.

இதுமுதல் நான்குகவிகள் - குளகம்.

(இ - ள்.) கற்பகம்-கல்பகவிருட்சமானது, எதிர்வந்து வேண்டினர்க்கு உதவுவான் விரும்பி - (தன்) எதிரிலே வந்து விரும்பிக்கேட்டவர்களுக்குக் கொடுக்க விருப்பங்கொண்டு, மாண்ட பொன் மணி அணி வலயம் - மாட்சிமைப்பட்ட [சிறந்த] பொன்னினாலும் இரத்தினங்களாலும் ஆகிய அழகிய வளைகளை, ஈண்டு தன் கொம்பிடை-செழித்துவளர்கிற (தனது) பூங்கொம்பிலே, ஈன்றது ஆம் என - உண்டாக்கிவைத்தாற்போல, காண்தகு தடகையில் - (யாவராலும் விரும்பி இடைவிடாது) காணத்தக்க [மிகஅழகிய] பெரிய (இராமபிரானது) திருக்கையிலே, கடகம் மின்ன - கடகமென்னுங் கைவளைகள் விளங்க,—(எ-று.)—கடகம் பூண்டமை கூறப்படுகின்றது. கற்பகம்-இராமனுக்கும், அதன்கொம்பு கைக்கும்உவமை. பி - ம்:—[1]வேண்டி.

ருகூ. [1]தேனுடை மலர்மக [2]டிளைக்கும் மார்பினிற்
றானிடை விளங்கிய [3]தகையி னாரந்தான்
மீனெடு சுடர்விட விளங்கு [4]மேகத்து
வானிடு வில்லென வயங்கிக் காட்டவே.

(இ - ள்.) தேன் உடை மலர் மகள்-தேனினையுடைய பூக்களிற்சிறந்த செந்தாமரைமலரில் வாழ்கிற திருமகள், திளைக்கும் - இடைவிடாதுபயிலுதற்கிடமான, மார்பினில்-(இராமபிரானது) திருமார்பிலே, இடை-நடுவிலே, விளங்கிய-விளங்குகிற, தகையின் ஆரம் - அழகையுடைய (பலவகையிரத்தினமும் பதித்த) ஆரமானது, மீனெடு சுடர் விட விளங்கும் மேகத்து - மின்னலால் ஒளியுண்டாக விளங்குகிற மேகத்தினிடையிலே, வான் இடு வில் என - ஆகாயத்திலே காணப்படுகிற இந்திரவில்போல, வயங்கி காட்ட - விளங்கித் தோன்ற,—(எ - று.)

மார்பில் மணிவடமணிந்தமை கூறப்படுகின்றது. திருமகள்விளங்குந் திருமாலின் கரியதிருமார்பு - ஆகாயத்தில் மின்னல்விளங்குங் காளமேகத்துக்கும், மார்பிலணிந்த பன்னிறவிரத்தினமாலை - மேகத்துத்தோன்றும் பன்னிறவானவில்லுக்கும் உபமேயமாம். 'மின்' என்பது எதுகை நோக்கி 'மீன்'என நீட்டல்விகாரம்பெற்றது. பி-ம்:—[1]தேனுகு. [2]தெரிக்கும். [3]தகவில். [4]மேகத்தின். (௫௯)

௬0. நணுகவு நிமிரவு நடக்கு [1]ஞானத்த
ருணர்வினி னௌிதிக ழுத்த ரீயந்தான்
றணிவருங் [2]கருணைதன் கழுத்திற் சாத்திய
மணியுமிழ் கதிரென மார்பிற் றோன்றவே,

(இ - ள்.) நணுகஉம்-(ஒருபொருளை விரும்பிச்சேரவேண்டுமென்றுற்) சேரவும், நிமிரஉம்-(ஒருபொருளை விட்டு நீங்கி) அப்பாற் (செல்லவேண்டு மென்றுற்) செல்லவும், நடக்கும்-சுவாதீனமாகியொழுகுகின்ற, ஞானத்தர்-தத்துவஞானத்தையுடையவர்களது, உணர்வினின் - (குற்றமற்ற) தூய அறிவுபோல, ஒளி திகழ் - (இயற்கையிலே) ஒளிகூடிவிளங்குகிற, உத்தரீயம் - உத்தரீயமானது,—தணிவு அரு கருணை தன் கழுத்தில் சாத்திய மணி உமிழ் கதிர் என - அடங்குதலில்லாதுமேன்மேற்பெருகுகிற அருளின்வடிவமானது தனது கண்டத்திலே தரித்த முத்துவடம் வீசிய ஒளிபோல, மார்பில் தோன்ற - தனதுமார்பிலே விளங்க [வெண்பட்டுத்தரீயத்தை இராமபிரான் தான் மேலேதரித்து என்றபடி];—(எ - று.)

இதனுல்,உத்தரீய மணிந்தமை கூறப்படுகின்றது. உத்தரீயம் - மேலாடை: வடசொல். இதற்கு எதிர்மொழி, அந்தரீயம்; அது - உள்ளாடை. நணுகவு நிமிரவு நடக்குஞானத்தர் என்பதற்கு - தன்னில் அடங்கியிருக்கவும் அடங்காதுவிரிந்திருக்கவும் பொருந்திய சிறந்த ஞானமுடையவ ரென்று பொருளுரைப்பாரு முளர். தத்துவஞானம் - மெய்யுணர்வு; அதாவது - பிறப்பு வீடுகளையும் அவற்றின்காரணங்களையும் விபரீதஐயங்களாலன்றி உண்மையால் அறிதல். கீழ் நிக - ஆங்கவியில் “ ஒழிவருங்கருணையோருருவுகொண்டென” என்றுராதலின், இங்கே ‘தணிவருங்கருணை’ என்றுர். கதிர் உமிழ் மணிஎனமொழி மாற்றியும் உரைக்கலாம். பி-ம்:—[1]ஞானத்தானுணர்வென வொளிர்தனி. [2]கலனென்ன. (சுO)

சுக. மேவருஞ் [1]சுடரென விளங்கு மார்பினூ
லேவருந் தெரிந்தினி [2]துணர்மி னீண்டெனத்
தேவரு முனிவருந் தெரிக்க லாமுதன்
மூவருந் [3]தானென முடித்த தொத்ததே.

(இ - ள்.) மேவு அரு சுடர் என - (மிக்கஒளியுடைமைபற்றி எவராலும் அருகில்) வந்துசேர்தற்குக்கூடாத (சூரியசந்திர அக்கினியராகிய) முச்சுடர்கள்போல, விளங்கும் - பிரகாசிக்கிற, மார்பின் நூல் - திருமார்பிலணியும் பூணூலானது, - தேவர்உம் முனிவர்உம் தெரிக்கலா முதல் மூவர்உம் தான் என - தேவர்களும் முனிவர்களும் (இன்னதென்று) அறிவித்தல்கூடாத முதன்மையான திரிமூர்த்திகளின்சொரூபமுந் தானேயா மென்று, ஈண்டு ஏவர்உம் தெரிந்து இனிது உணர்மின் என - இவ்விடத்தில் எல்லோரும் ஆராய்ந்து இனிமையாக அறியுங்க ளென்று, முடித்தது ஒத்தது - (அதற்கு அறிகுறியாக) மூன்று ஒன்றுய் முடியப்பட்டதை ஒத்தது; (எ - று.)

மூன்றுவடங்கள்கூடினதாய்ப் பிரமமுடிபொருந்தினதாய்ப் பிரமசரிய வாச்சிரமத்திற்குஏற்ப ஒற்றையாயுள்ள யஜ்ஞோபவீதத்தை இங்ஙனம் வருணித்தார். பி-ம்:--[1]சுடரொளி. [2]உணரும். [3]தானெனுமூத்தம், தானென முடிந்தது. (சுக)

சுஉ. சுற்று[1]நீ டமணியச் சோதி பொங்கமே
லொற்றைமா மணியுமி ழுதர பந்தன

மற்றுமோ [2]ரண்டமு மயனும் வந்தெழப்
பொற்றடந் தாமரை [3]பூத்த போன்றதே.

(இ - ள்.) சுற்றுஉம் - சுற்றுப்பக்கங்களிலெல்லாம், நீள் தமணியம் சோதி பொங்க - மிக்க பொன்னின் ஒளி விளங்க, மேல் ஒற்றை மா மணி உமிழ் - மேலே ஒன்றாகிய பெரிய இரத்தினம் ஒளி வீசுதற்கு இடமான, உதர பந்தனம்-உதரபந்தனமென்னும் அணியானது,—மற்றுஉம் ஓர் அண்டம்உம் அயன்உம் வந்து எழ பொன் தட தாமரை பூத்த (து) போன்றது-(இவ்வண்டங்களேயன்றி வேறும் ஓர் அண்டகோளமும் அதற்குரியானொரு பிரமனும் (தன்னிடத்திலே) வந்து தோன்றும்படி பொன்மயமானதொரு பெரியதாமரைமலரை (எம்பெருமான்திருநாபி) மலர்ந்ததை ஒத்தது;(எ-று.)

இதனால், உதரபந்தனம் அணிந்தமை கூறப்படுகின்றது. உதரபந்தனம் - அரையாடை நழுவி விழாதபடி வயிற்றின்மீது அணியும் ஓரணியாம். இராமபிரான் அவ்வணியை யணிந்தது-திருநாபி அயனும் அண்டமுந்தோன்றும் ஒருதாமரையைப் பூத்ததுபோல் விளங்கிற்றென்றார்: தற்குறிப்பேற்றவணி. பொற்றாமரையென்றமையின், 'மற்றுமோரண்டமு மயனும்' என்றார். சுற்றுநீடமணியச்சோதியை அண்டகோளமாகவும், ஒற்றைமாமணியொளியைப் பிரமதேவனாகவுங் கருதினார்போலும். கடவுள் தனது சங்கற்பத்தினாற்படைத்த அண்டம் பொன்னிறமானதென்று நூல்கள்கூறுவது, இங்குக் கருதத்தக்கது. பூத்த - பெயர். பி - ம்:—[1]நீடணிமணிச்சோதி. [2]அண்டமொடயனும். [3]பூத்ததொத்ததே, பூப்பதொத்ததே. (சஉ)

சுங. மண்ணுறு சுடர்மணி வயங்கித் தோன்றிய
கண்ணுறு கருங்கட லதனைக் கைவளர்
தண்ணிறப் பாற்கட றழீஇய தாமென
வெண்ணிறப் பட்டொளி விளங்கச் சாத்தியே.

இதுமுதல் ஆறுகவிகள் - குளகம்.

(இ - ள்.) மண் உறு சுடர் மணி வயங்கி தோன்றிய - சாணை பிடிக்கப்பட்டு விளங்குகின்ற ஒளியையுடைய இரத்தினங்கள் விளங்கிக்காணப்படுதற்கிடமான, கண்ணுறு கரு கடலதனை - பெருமைமிகுந்த கரிய கடலை, கை வளர் தண் நிறம் பால் கடல் - (அலைகளாகிய) கைகள் வளரப்பெற்ற குளிர்ந்த நிறத்தையுடைய திருப்பாற்கடலானது, தழீஇயது ஆம் என - தழுவியதாகும் (இது) என்று சொல்லும்படி, வெள் நிறம் பட்டு - வெண்மை நிறத்தையுடைய பட்டாடையை, ஒளி விளங்க - ஒளி விளங்கும்படி, சாத்தி-(பலவகையிரத்தினாபரணங்கள் பொருந்தப்பெற்ற கரிய தனதுதிருமேனியின் திருவரையிலே) தரித்து, [உடுத்தென்றபடி],—(எ - று.)

இதனால், வெண்பட்டாடை யணிந்தமை கூறப்படுகிறது. மணிவயங்கு கருங்கடல் - அணிகளைப் பூண்ட இராமனுக்கும், பாற்கடல்-வெண்ணிறப் பட்டுக்கும் உவமை; தற்குறிப்பேற்றவணி. தழீஇயது - சொல்லிசையளபெடை

பெடை. கை-பக்கமும், நிறம் - குணமுமாம். கண்ணூறு - எல்லாவிடத்திலும் பொருந்திய என்றும், யாவர்கண்ணிலும்படுகிற என்றும் உரைக்கலாம்.(சுங)

சுச. சலம்வரு தரளமுந் தயங்கு நீலமு
மலம் வரு நிழலுமி ழும்பொற் கச்சினுற்
குலம்வரு கனகவான் குன்றை நின்றுடன்
வலம்வரு கதிரென வாளும் வீக்கியே.

(இ - ள்.) சலம் வரு தரளம்உம் - கடல்நீரிலே தோன்றிய முத்துக்களும், தயங்கு நீலம்உம் - விளங்குகிற நீலரத்தினங்களும், அலம் வரு நிழல் உமிழ்-மிகுதிபொருந்திய ஒளியை வீசுதற்கிடமான, அம் பொன் கச்சினல் - அழகிய பொன்னினலாகிய கச்சென்னும் இடையணியினல்,குலம் வரு கனகம் வான் குன்றை நின்று உடன் வலம் வரு கதிர் என - சிறப்புப்பொருந்தியபொன்மயமான பெரிய மேருமலையைச் சேர வலம்வந்து (ஓரிடத்து) நிற்கின்ற சூரியனைப்போல, வாள் உம் வீக்கி-உடைவாளென்னும் ஆயுதத்தையும் (இடையிலே) கட்டி,—(எ - று.)

இதனல், உடைவாளை முத்தும்நீலமணியும்பதித்தபொற்கச்சினுற் கட்டியமை கூறப்பட்டது. எம்பெருமானுடைய திவ்வியாயுதங்கள்யாவும் பகைவரோடு போர்செய்புங்காலத்து ஆயுதகோடியிலேசேர்ந்தாலும் அன்பர்க்கு அழகையும் ஆனந்தத்தையுஞ் செய்து ஆபரணகோடியிலேயாகி விளங்குமென்பது நூற்றுணிபுஆதலால், உடைவாளை ஆபரணங்களு ளொன்ருகச் சேர்த்து இங்குக்கூறினர். எம்பெருமானது திருமேனி கருநிறத்ததாயினும் ஆபரணகாந்திகளாற் பொன்னிறத்ததாய் விளங்குதலின், கனகவான்குன்று அதற்கு உவமைகூறப்பட்டது. கனகக்குன்று - திருவரைக்கும், கதிர் - உடைவாளுக்கும் உவமை. நின்று வலம்வரு - வலம்வந்துநிற்கிற எனப் பிரித்துக்கூட்டப்பட்டது. சலம் வருதரளம் - (நீலரத்தினத்தொளியோடு) மாறுபடுதல் பொருந்தின முத்து என்றுமாம். அலம் - போதுமென்னும் பொருளதான வடமொழியிடைச்சொல்: இங்கு, மிகுதிப்பொருளது. (சுச)

சுரு. முகைவிரி சுடரொளி முத்தின் பத்திவான்
றொகைவிரி பட்டிகைச் சுடருஞ் சுற்றிடத்
தகையுடை வாளெனுந் தயங்கு வெய்யவ
னகையிள வெயிலெனத் தொங்க னற்றியே.

(இ - ள்.) முகை விரி - அரும்பிப் பரவுகிற, சுடர் ஒளி - பிரகாசமான கிரணத்தையுடைய, முத்தின் பத்தி வான் தொகை - முத்துக்களினுடைய வரிசைகளின் மிகுந்த தொகுதிகளா லாகி, விரி - விரிந்த, பட்டிகை - அரைப்பட்டிகையென்னும் ஆபரணத்தினது, சுடர்உம் - வெண்மையான ஒளியும், சுற்றிட - சுற்றிலுஞ்சூழ்ந்துபொருந்த, தகை உடைவாள் எனும் தயங்கு வெய்யவன் நகை இள வெயில் என - அழகையுடைய உடைவாளாகிய விளங்குகிற சூரியனது ஒளியாகிய இளமையான வெயில் போலத்தோன்றும்படி, தொங்கல் நாற்றி - தொங்குவதாகிய இரத்தினமாலையை (அவ்வாளின் அருகில்) தொங்கவிட்டு,—(எ - று.)

இதனால், அரைப்பட்டிகையணிந்தமையும் வாளின்பக்கத்து மணிமாலை தொங்கவிட்டமையும் கூறப்படுகின்றன. முகை விரி - முகைத்து விரிகின்ற. முகை - கூட்டமென்னலுமொன்று. (கூரு)

கூகூ. காசொடு [1]கண்ணிழல் கஞலக் கைவினை
[2]யேசறு கிம்புரி யெயிறு வெண்ணிலா
வீசலின் மகரவாய் [3]விளங்கு மின்னென
வாசையை யொளிகளா லளந்துகாட்டவே.

(இ - ள்.) காசொடு - இரத்தினங்களினொளியுடனே, கண் நிழல் - (பார்ப்பவர்) கண்களின் ஒளியும், கஞல-(தன்னிடம்பொருந்தி) மிகுந்துநிரம்பும்படி, கை வினை ஏசு அறு - கைகளாற்செய்யப்படுகிற விசித்திரவேலைப் பாட்டிலே குற்றமில்லாத, கிம்புரி - கிம்புரி யென்னும் ஆபரணமானது, எயிறுவெள் நிலா வீசலின்-(தன்)எயிற்றிலிருந்து வெண்ணிறமான சந்திரகாந்தி போன்ற ஒளியை வீசுதலால், மகரவாய்-அந்தக்கிம்புரி, விளங்கும் மின் என-பிரகாசிக்கிற மின்னல்போல, ஆசையை ஒளிகளால் அளந்து காட்ட - திக்குகளின் எல்லையை (இவ்வளவினதென்று தனது) கிரணங்களால் அளவிட்டுக் காண்பிக்கவும்,—(எ - று.)

இதனால், குறங்குசெறியென்னும் ஆபரணம் அணிந்தமை கூறப்படுகின்றது. குறங்கு செறி - துடையிற் பொருந்துவது. சுறாமீனினது அங்காந்த வாயின்வடிவமாகச்செய்து அமைக்கப்படுதலின்,இது,மகரவாயெனவும்படும்; "ஒளிதிகழ்ந்து,மாழைகொண் மணிமகரங் கௌவி வீற்றிருந்தனவே"என்ற சிந்தாமணியையுங்காண்க. கிம்புரி - மகரவாயென்னும் பொருளதாதலை, நெடுநல்வாடையில்"கிம்புரிப்பகுவாயம்பணம்"என்றவிடத்து 'மகரவாயாகப் பகுத்தவாயினையுடைய பந்தல்'என்ற உரையாலுமுணர்க.எயிறுவெண்ணிலா வீசுவது, அவ்வெயிற்றிலிருந்து முத்துச்சரம்தொங்கவிடப்படுதலாலென்பர். இனி, கிம்புரி - மகரவாயின் ஒருறுப்புஎன்றும், கிம்புரி யெயிறு-(கீழ்க்கூறிய உடைவாளினது) பூணுகை அமைந்த யானைத்தந்தமெனக்கொண்டு, அது வெண்ணிலாவை வீசுதலால்,மகரவாய் விளங்கும்மின் என - கடலிலேவிளங்கும் மின்னல்போலவென்றும் பொருள்கூறுவாருமுளர். ஆசையை யொளிகளா லளந்துகாட்டல் - திக்குகளின்எல்லை எவ்வளவுதூரம் உண்டோ அவ்வளவுதூரமுந் தனதுஒளிபரவிச்செல்லுதல். கிம்புரியினது அங்காந்தவாயினிடத்திலேயுள்ள பற்களின் வெள்ளொளி, மகரமீனினதுவாயிலே மின்னல் விளங்கினாற்போலவிருக்குமெனக் கூறலுமுண்டு. காண்பவர்வேட்கை எவ்வளவோ அவ்வளவும் ஒளிசென்று பரவின வென ஈற்றடிக்குத் தொனிப்பொருள் கொள்ளலுமாம். (குறங்குசெறியென்பது - மகளிர் தொடையில் அணிவதாகச் சிந்தாமணி சிலப்பதிகாரம் முதலிய பழையநூல்களில் வந்துள்ளது. மகரவாய்என்று மகளிர் முகத்துக்குமேலேமுடியில் அணியும் அணியாகவும் பண்டை நூல்களில் வந்துள்ளது. பி - ம்:— [1]தண்ணிழல். [2]ஏசலில். [3]விளங்கும்வாண்முகம், (கூகூ)

கூஎ. இனிப்பரந் துலகினை யளப்ப தெங்கெனத்
தனித்தனித் தடுப்பன போலுஞ் [1]சால்பின
நுனிப்பரு நுண்வினைச் சிலம்பு நோன்கழல்
[2]பனிப்பருந் தாமரைப் பாதம் பற்றவே.

(இ - ள்.) பரந்து உலகினை அளப்பது இனி எங்கு என - பரந்தவடிவமுடையனவாகி (இத்திருவடிகள்) உலகங்களை அளவிடுதல் இனிமேல் எப்படி ஆகுவது? (பார்ப்போம்) என்று கருதியுங் கூறியும், தனி தனி தடுப்பன போலும் சால்பின - தனியேதனியே தடைசெய்வன போன்ற தகுதியுடையனவாய், நுனிப்பு அரு நுண் வினை சிலம்பு நோன் கழல் - (இத்தன்மைத்தென்று) ஆராய்ந்தறிதற்குமுடியாத நுட்பமான செய்தொழிலையுடைய சிலம்பென்னும்ஆபரணமும் வலிய வீரக்கழலும், பனி பரு தாமரை பாதம் பற்ற - குளிர்ந்த பருத்த [பெரிய] செந்தாமரைமலர்போன்ற திருவடிகளை (ச் சுற்றிலும்) பொருந்தவும்,—(எ - று.)

இதனால்,சிலம்பும் கழலும் அணிந்தமை கூறப்படுகின்றது. சீர்பாதங்களைச்சுற்றிலுஞ் சூழ்ந்துள்ளனவற்றை, அவற்றின்வளர்ச்சியைத்துணிந்து தடுப்பனவாகக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. இனி - தம்மாற்சுற்றிலும் அழுந்தப்பற்றப்பட்டபின்பு என்றபடி. பனிப்பு அரு எனப் பிரித்து- (சரணமடைந்த அடியவர் பிறவிப்பெருந்துயர்க்கு)அஞ்சிநடுங்குதல்வேண்டாத பாதமென்றுமாம். சிலம்பு-ஒலிக்கிற, கழலெனினுமாம். பி - ம்:—[1] சார்பின. [2] பனிப்புறும். (கூஎ)

கூஅ. இன்னண மொளிர்தர விமைய வர்க்கெலாந்
தன்னையே யனையதோர் கோலந் தாங்கினன்
பன்னக மணிவிளக் கழலும் பாயலு
ளன்னவர் தவத்தினு [1]லனந்த னீங்கினன்.

(இ - ள்.) இன்னணம் - இவ்வாறு, ஒளிர்தர - விளங்கும்படி, இமையயவர்க்கு எலாம் - தேவகாரியநிமித்தமாய், தன்னை ஏ அனையது ஓர் கோலம் தாங்கினன்-(வேறுஒப்புமையில்லாமையால்) தன்னை ஏ தான் ஒப்பதாகிய ஒரு சிறந்த அலங்காரத்தைத் தரித்தான்: (யாவனெனில்), மணி விளக்கு அழல்உம் - (தனது) மாணிக்கங்களாகிய தீபங்கள் ஒளிவிளங்கப்பெற்ற, பன்னகம்-ஆதிசேஷனாகிய, பாயலுள்-சயனத்தினிடத்திலே, அனந்தல் - யோகநித்திரைகொள்ளுதலை, அன்னவர் தவத்தினல் - அத்தேவர்கள் செய்த தவத்தின் பயனால், நீங்கினன் - ஒழிந்துநின்ற திருமாலின் அமிசமான இராமபிரான்; (எ - று.)

சீதாகலியாணம் இராவணசங்காரத்துக்குத் தான் நேரே காரணமாகாதாயினும் பரம்பரையாகக் காரண மாதலால், 'இமையவர்க்கெலாம்' எனப்பட்டது. இமையவர்க்கெலாந் தன்னையே யனையது எனக்கூட்டி - தேவர்களுக்கெல்லாந் தலைமைபூண்டிருக்கிற தன்னையேபோல எல்லா அலங்காரங்களுக்குந் தலைமைபூண்டு நிற்பதோர் அலங்காரத்தைத் தரித்தான் என்று உரைப்பாருமுளர். "மணிவிளக்காம் * * * திருமாற்கு அரவு" எனப் பெரியாரும் பணித்துள்ளதனால், 'பன்னகமணிவிளக்கழலும்பாயலுள்' எனப்பட்

டது. தேவர்களின் வேண்டுகோளால் அரக்கரையழிப்பதன்பொருட்டுப் பாற்கடலுட் பாம்பணையிற் பள்ளிகொள்ளுதலை யொழித்துவிட்டு இராமனைத் திருவவதரித்துள்ளவனென்பது, பின்னிரண்டடியின் கருத்து. அத்திருவனந்தாழ்வான் தானே இங்கு இலக்குமணனாய்த்திருவவதரித்து இராமனைக் கணப்பொழுதும் விட்டுப் பிரியாமல் சகலவிதகைங்கரியங்களுஞ் செய்து உடன்பொருந்தி நிற்பதனால், 'பன்னகநீங்கினான்'என்னாமல்,'பன்னகப் பாயலுளனந்த னீங்கினான்' என்றார். பி - ம்:— 'அனந்தர். (கூஅ)

**கூகூ.—இராமபிரான்கொண்டகோலத்தின் வருணிக்கமுடியாத்தன்மை.**

முப்பரம் பொருளிற்குண் முதலை மூலத்தை
யிப்பரந் துடைத்தவ ரெய்து மின்பத்தை
யப்பனை யப்பினு ளமிழ்தந் தன்னையே
யொப்பனை யொப்பனை யுரைக்க வொண்ணுமோ.

(இ - ள்.) முப் பரம் பொருளிற்குள் - (மற்றையெல்லாப்பொருள்களினும் மேம்பட்ட திருமால் பிரமன் சிவன் என்னுந் திரிமூர்த்திகளாகிய) மூன்று பரம்பொருள்களுள், முதலை - (பிரமன் சிவன்என்னும் மற்றையிரு பொருள்களுக்கும்) முதல்வனாய்நிற்பவனும், மூலத்தை - (இவ்வுலகங்களுக்கு) ஆதிகாரணமானவனும், இ பரம் துடைத்தவர் எய்தும் இன்பத்தை - இவ்வுலகத்துச்செய்கைகளின்சம்பந்தத்தைத் துறந்தவர்கள் (பரமபதத்திற் சென்று) அடைகிற நிரதிசயப்பேரானந்தமயனானவனும், அப்பனை - (யாவர்க்குந்) தந்தையாகுபவனும், அப்பினுள் அமிழ்தந்தன்னை ஒப்பனை - பாற்கடலிற்பொருந்திய தேவாமிருதத்தையே (தனக்கு)உவமையாகவுடையவனுமாகிய (திருமாலின் அமிசமான) இராமபிரான் செய்துகொண்ட, ஒப்பனை - அலங்காரம், உரைக்க ஒண்ணும் ஓ - (இத்தன்மைத்தென்று) எடுத்துச் சொல்லிமுடிக்கக்கூடியதன்மையதோ? [அன்றென்றபடி]; (எ - று.)

'முப்பரம் பொருளிற்குண் முதலை' என்றது - மூவர்க்கும்முதலாம் பொருள் வேறுஉண்டென்று கூறுந் துரீயப்பிரமவாதத்தை ஒழித்தற்கு. பரம் - பூமிபாரமாகிய (கருமசம்பந்தத்தாலான) பூதவுடம்பென்றும் உரைக்கலாம். அமிழ்தந்தன்னையே ஒப்பன் - நாவுக்குஇனிய அமிருதம்போல எல்லாக்கரணங்களுக்குமினிய கடவுளென்றபடி. திருமால் பாற்கடலிற் பள்ளிகொண்டுவாழ்பவனாதலால், 'அப்பினுளமிழ்தம்' என்றது. ஒப்பனை என்னுஞ் சொல் இரண்டனுள், முந்தினது - ஒப்பன் என்பதன் இரண்டாம்வேற்றுமை; பிந்தினது - திரிபில்பெயர். பரம், வியூகம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமி என்னும் எம்பெருமானது ஐவகைநிலைகளுள் பரமபதத்தில் நிற்கும் பரத்துவம் 'இப்பரந்துடைத்தவரெய்துமின்பத்தை' என்றதனாலும், படைத்தல் காத்தல் அழித்தல் தொழில்களுக்கு முறையே உரிய சங்கர்ஷணன் அநிருத்தன் பிரத்தியும்நன் என்னும் மூவரோடு அவர்களுக்கு முதன்மை பூணும் வாசுதேவனுமாகிப் பாற்கடலிலே நிற்கும் வியூகநிலைமை 'முப்பரம் பொருளிற்குண்முதலை மூலத்தை' என்றதனாலும்,எல்லாப்பொருள்களினுள்ளுங் கரந்துறைகிற அந்தர்யாமித்துவமும் அவதாரவடிவமாய்நிற்கும் விபவ

நிலைமையும், 'அப்பினுளமிர்தந்தன்னையே யொப்பனை' என்றதனுலும், "செப்பார் திண்வரைசூழ் திருவேங்கடமாமலை யென், அப்பா" என்றபடி திருவேங்கடம் முதலிய திருப்பதிகளுள் விக்கிரகவடிவமாய்நிற்கும் அர்ச்சை நிலைமை 'அப்பன்' என்றதனுலுங் கூறப்பட்டன வென்பது, இச்செய்யுளுக் குச் சம்பிரதாயவுரை. ஒப்பன் என்றது-இங்கே விசேடியமாதலின்,விபவாவ தாரமுணர்த்தும். ஒப்பனை யென்ற இரண்டாம்வேற்றுமைக்குப் பொருந் தின வெனு ஒருமுடிக்குஞ்சொல் வருவிக்க. இச்செய்யுள் கவிக்கூற்று.

பி - ம்:—[1]அமுதை. (சுகூ)

எ௦.—இராமபிரான்அந்தணாளர்க்குத்தானஞ்செய்துவிட்டுத்தேர்மீதுஏறுதல்.

பல்பதி ஞயிரம் பசுவும் பைம்பொனு
மெல்லையி னிலனெடு மணிகள் யாவையு
நல்லவர்க் குதவின னவிலு நான்மறைச்
செல்வர்கள் [1]வழுத்துறத் தேர்வந் தேறினன்.

(இ - ள்.) (பின்பு), பல் பதினுயிரம் பசுஉம்-அனேகம்பதினுயிரங்கணக் குள்ளபசுக்களையும், பைம்பொன்உம் - பசும்பொன்னையும், எல்லை இல் நில னொடு - வரம்பில்லாத நிலங்களையும், மணிகள் யாவைஉம் - நவரத்தினங் களையும், நல்லவர்க்கு - நல்லொழுக்கமுடைய அந்தணர்களுக்கு, உதவி னன் - தானஞ்செய்தவனுகி, (ஸ்ரீராமன்), நவிலும் நால் மறை செல்வர் கள் வழுத்துற-(சிறப்பாக)எடுத்துச்சொல்லப்படுகிற நான்குவேதங்களையே செல்வமாகவுடைய அவ்வந்தணர் துதிக்க, தேர் வந்து ஏறினன்—; (எ-று.)

இதனுல், இராமபிரான் செய்த கோதானமும், சுவர்ணதானமும், பூதா னமும், இரத்தினதானமும் கூறப்பட்டன. நல்லவர் - அந்தணர். வழுத்துற- ஆசி சொல்லஎனினுமாம். பி - ம்:—[1]முந்துறத்தேரொன்று. (எ௦)

எக.—இதுவும், அடுத்த கவியும் - இராமபிரானேறிய தேரின் வருணனை.

பொற்றிர [1]ளச்சது வெள்ளிச் சில்லிபுக்
குற்றது வயிரத்தி னுற்ற தட்டது
சுற்றுறு நவமணி சுடருந் தோற்றத்த
தொற்றையா ழிக்[2]கதிர்த் தேரொ [3]டொத்ததே.

(இ - ள்.) பொன் திரள் அச்சது - பொன்னுலாகிய திரண்ட அச்சை யுடையதும், வெள்ளி சில்லி புக்கு உற்றது - வெள்ளியினுலாகிய சக்கரங் கள் தகுதியாய்ப்பொருந்தப்பெற்றதும், வயிரத்தின் உற்ற தட்டது - வச் சிரரத்தினத்தினுற் செய்யப்பட்டுப்பொருந்தின தட்டையுடையதும், சுற்று உறு நவ மணி சுடரும் தோற்றத்தது - சுற்றிலும்பொருந்திய நவரத்தினங் கள் (நெடுந்தூரத்தளவும்) விளங்குகிற காட்சியையுடையதுமாகிய அவ்விரா மன்தேர், ஒற்றை ஆழி கதிர் தேரொடு ஒத்தது-ஒற்றைச்சக்கரத்தையுடைய சூரியனது இரதத்தோடு ஒத்துவிளங்கிற்று; (எ - று.)

சூரியன்தேர் - ஒளிக்கும், சலியாதுவிரைந்துசெல்லுதற்கும், எம்பெரு மான் எழுந்தருளியிருக்கும் இடமாதற்கும் உவமை. தேரொடு-உருபுமயக்கம்.

பி - ம்:—[1]அச்சுருள். [2]தனி. [3]ஒப்பதே. (எக)

எஉ. நூல்வருந் தகையன நுனிக்கு [1]நோன்மைய
சால்பெருஞ் செவ்விய தரும மாதிய
நாலையு மனையன புரவி நான்கொரு
[2]பாலமை யுணர்ந்தவன் பக்கம் [3]பூண்டவே.

(இ - ள்.) நூல் - அசுவசாஸ்திரங்களிலே, வரும் - கூறப்பட்டுவருகிற, தகையன - உத்தமவிலக்கணங்களுடையனவும், நுனிக்கும் - கூர்ந்தறிதற்கு ஏற்ற, நோன்மைய - வல்லமையையுடையனவும், சால் பெரு செவ்விய - நிரம்பின பேரழகையுடையனவும், தருமம் ஆதிய நாலைஉம் அனையன-அறம் முதலிய நான்கு புருஷார்த்தங்களையும் போன்று (யாவராலும் அடைய) விரும்பப்படுபவையுமாகிய, புரவி நான்கு - நான்குகுதிரைகள், ஒரு பாலமை உணர்ந்தவன் பக்கம் பூண்ட - உலகவியற்கைமுழுவதையும் (ஐயந்திரிபற) அறிந்த ஒப்பற்றஸ்ரீராமனுக்கு உரிய தேரிலே பூட்டப்பட்டுள்ளன; (எ-று.)

பாலமையுணர்ந்தவன் பக்கம் பூண்ட என்பதற்கு – கோல்கொள்ளு முரிமையையுணர்ந்தவனது அபிப்பிராயத்தைக் கொண்டன வென்றும் உரைக்கலாம். பாலமை = பான்மை. பி - ம்:—[1]தன்மைய. [2]பாலமை யுணர்ந்தன. (எஉ.)

எங.—இராமன் தம்பியர்உபசரிக்கத் தேரின்மீது சென்றமை.

அனையதோர் [1]தேரினி லருண னின்றெனப்
பனிவரு மலர்க்கணப் பரதன் கோல்கொளக்
குனிசிலைத் [2]தம்பிபின் கூட வேனைய
னினியபொற் கவரிகா லியக்க வேகினான்.

(இ - ள்.) அனையது ஓர் தேரினில் - அத்தன்மையதொரு தேரின் மேலே, அருணன் நின்று என-(சூரியனது தேர்ப்பாகனாகிய) அருணனென்பவன் நின்றாற்போல, பனி வரு மலர் கண் அ பரதன் - ஆனந்தக்கண்ணீர் ததும்புகின்ற (தேன்நிறைந்த) செந்தாமரைமலர்போன்ற கண்களையுடைய அந்தப்பரதன், கோல் கொள - (முன்னே சாரதியாய்நின்று) குதிரைசெலுத் துங்கோலைக் கையிலேகொள்ளவும், குனி சிலை தம்பி - வளைத்தற்குரிய வில்லையுடைய தம்பியான இலக்குமணனும், பின் கூட ஏனையன் - அவனு டன்கூட மற்றொருதம்பியான சத்துருக்கனும், இனிய பொன் கவரி கால் இயக்க - கண்ணுக்கினிய பொற்காம்பு அமைந்த சாமரங்களைக் காற்றுண் டாம்படி வீசவும், ஏகினான் - (இராமபிரான்) சென்றருளினான்; (எ - று.)

கீழ்ச் சூரியன்தேரை உவமை கூறினதற்கு ஏற்ப, தேர்ப்பாகனுக்குச் சூரியன்தேர்ப்பாகனை உவமைகூறினார். அருணன் - காசியபமுனிவனது மனைவிமார்களுள் விநதையென்பவளது மூத்தகுமாரன்; கருடபகவானது தமையன்: இவன் - இடைக்குக் கீழ்ப்பட்ட உறுப்பொன்று மில்லாதவன்; ஆனதுபற்றி, 'அநூரு' என்று ஒருவடமொழிப்பெயர் இவனுக்கு உண்டு: அருணன்என்பதற்கு-செந்நிறமுடையான்என்பதுபொருள். தம்பி பின்கூட - இலக்குமணன் பின்னேநின்று திருமேனிக்காவல்செய்யவும், ஏனையன்

இனிய பொன் கவரி கால் இயக்க - சத்துருக்கனன் குளிர்ந்த அழகிய சாமரைகளை வீசவும் என்று உரைத்தலுமாம். குனி சிலைத் தம்பி என்றது - இராமபிரானது திருமேனிக்காவலில் தனக்குள்ள ஊக்கமிகுதியால், பகையில்லாமலிருக்கையிலும் வில்லை வளைத்துக் கையிற்பிடித்துநிற்குந் தகுதியையுடையான் என்றபடி. பி - ம்:—[1]தேர்மிசை யையனின்றனன். [2]தம்பியர் கூடவெய்தினின்று. (எங)

எச.—இராமபிரானழகை யாவருங் கண்கொட்டாது பார்த்தல்.

அமைவரு மேனியா னழகி னுயதோ
கமையுறு மனத்தினாற் [1]கருத வந்ததோ
சமைவுற வறிந்திலந் தக்க தாகுக
விமையவ ராயினா ரிங்கு ளாருமே.

(இ - ள்.) அமைவு அரு மேனியான் - (பிறருக்கு) அமைதல் அருமையான சிறந்த திருமேனியையுடைய ஸ்ரீராமனது, அழகின் - மிகுந்த அழகினாலே, ஆயதுஓ - ஆகியதோ? கமை உறு மனத்தினால் கருத - பொறுமை பொருந்தின (தம்) மனத்தால் அவ்விராமனழகையே நினைக்க அதனால், வந்ததுஓ - வந்தநிலைமையோ? சமைவு உற அறிந்திலம் - (இவ்விரண்டுளொன்றைத்) தகுதி பொருந்த அறிந்தோமில்லை; தக்கது ஆகுக - (இவ்விரண்டனுள்) தகுந்தது எதுவோ அது காரணமாகுக; (அதன் காரியம்யாதெனில்), இங்கு உளார்உம் இமையவர் ஆயினார் - (இராமனைக்கண்ட) இந்நிலவுலகத்திலேயுள்ள மனிதர்களும் கண்ணிமையாமையால் தேவர்களைப்போன்றனர்.

மிகவழகியதொரு பொருளைக் கண்ணாற் காணுமிடத்தும் யாதாயினுமொருபொருளையே மனத்திலூன்றியுய்த்துநோக்குமிடத்தும் கண்ணிமையாமை, மாந்தரியல்பு. இரண்டாமடிக்கு - எப்பொழுதும் இராமதியானஞ்செய்வதனால் தேவத்தன்மை இம்மனிதர்க்கு வந்துகிடைத்ததோ என்றும் பொருள்கொள்ளலாம். இங்குளாரும் என்ற உம்மை - இழிவுசிறப்போடு, இறந்தது தழுவிய எச்சம். பி - ம்:—[1]கவர. (எச)

எரு.—தேவர்கள் ஆனந்தக்கூத்தாடுதல்.

வரம்பறு [1]முலகினை வலிந்து மாய்வின்றித்
திரம்பயி லரக்கர்தம் வருக்கந் தேய்வின்று
நிரம்பிய தெனக்கொடு நிறைந்த தேவரு
மரம்பையர் குழாத்தொடு மாடன் மேயினார்.

(இ - ள்.) 'வரம்பு அறும் உலகினை வலிந்து - எல்லையில்லாத உலகங்களெல்லாவற்றையும் வருத்தி, மாய்வு இன்றி - (தாம் எவராலும்) அழிதலில்லாமல், திரம் பயில் - நிலைபெறுபொருந்திய, அரக்கர்தம் வருக்கம் - இராக்கதரது கூட்டம், தேய்வு - அழிவையடைதல், இன்று நிரம்பியது - இன்றைத்தினமே நிறைவேறிற்று,' என கொடு - என்று (மனத்திலே) எண்ணிக்கொண்டு, நிறைந்த தேவர்உம் - (அங்கு வானத்திலேவந்து) நிரம்பின

தேவர்களெல்லோரும், அரம்பையர் குழாத்தொடும் - அரம்பைமுதலிய தேவமாதர்களின் கூட்டத்துடனே, ஆடல் மேயினர் - ஆனந்தக்கூத்தாடுதல் பொருந்தினர்கள்; (எ - று.)

சீதாகலியாணம் இராக்கதசங்காரத்துக்கு காளடைவிலே ஏதுவாவதனால், அதனை மனத்தால்நோக்கித் தேவர்கள் இங்ஙனங் களிப்பா ராயினரென்க. நிரம்பியது - விரைவுந் தெளிவும்பற்றிய காலவழுவமைதி. தேவரும் - உயர்வுசிறப்போடு இறந்ததுதழுவிய எச்சப் பொருள்பட நின்றது; இதனால், நிலவுலகத்து ஆடவரும் மகளிரும் ஆடல்மேயின ரென்பதும் பெறப்படும். பி - ம்:—[1]உலகினின்வளர்ந்துதேய்வின்றி. (எரு)

எசு.—இதுவும் அடுத்தகவியும் - அந்நகரத்து மகளிரின் களிப்புச்செயல்.

சொரிந்தனர் [1]மலர்மழை சுண்ணந் தூவினர்
விரிந்தொளிர் காசுபொன் றூசு வீசினர்
பரிந்தன ரழகினைப் பருகி னர்கொலாந்
[2]தெரிந்திலந் திருநகர் மகளிர் செய்கையே.

(இ - ள்.) (அந்நகரத்து மகளிர்யாவரும்),—பூ மழை சொரிந்தனர் புஷ்பவருஷங்களைப் பெய்தார்கள்; சுண்ணம் தூவினர் - வாசனைப்பொடிகளை மேலே தூவினார்கள்; விரிந்து ஒளிர் - (ஒளி) பரவிவிளங்கப்பெற்ற, காசு - இரத்தினங்களையும், பொன் - சுவர்ணங்களையும், தூசு - ஆடைகளையும், வீசினர் - (யாவர்க்கும் மகிழ்ச்சியாற்) கொடுத்தார்கள்; (இதற்குக்காரணம்), அழகினை பரிந்தனர் பருகினர் கொல் ஆம் - (இராமனது) சௌந்தரியத்தை விரும்பிக் குடித்தார்கள்போலும்: திரு நகர் மகளிர் செய்கை தெரிந்திலம் - அழகிய அந்நகரத்துள்ள மாந்தர்களது இத்தன்மைய செய்கைகளுக்கு (இதையன்றி வேறு)காரணத்தை அறிந்தோமில்லை; (எ - று.)—பி - ம்:—[1]பூ. [2]தெரிந்திலரந்நகர். (எசு)

எஎ வள்ளலை நோக்கிய மகளிர் மேனியி
னெள்ளரும் [1]பூணெலா மிரிய நிற்கின்று
ருள்ளன யாவையு முதவிப் பூண்டவுங்
[2]கொள்ளையிற் [3]கொள்கெனக் கொடுக்கின் றாரினே.

(இ - ள்.) உள்ளன யாவையும் உதவி - (தம்பால்) உள்ள பொருள்களெல்லாவற்றையுந் தானஞ்செய்துவிட்டு, பூண்டவும்-(தாம்) அணிந்துள்ள ஆபரணங்களையும், கொள்ளையின் கொள்க என - 'மிகுதியாகக் கொள்வீர்களாக' என்று (பெறுபவரைநோக்கிக்) கூறி, கொடுக்கின்றாரின் - கொடுப்பவர்கள்போல, வள்ளலை நோக்கிய மகளிர் - இராமனைப்பார்த்த பெண்கள் யாவரும், மேனியின் எள்ள அரு பூண் எலாம் இரிய நிற்கின்றார்-(இராமனிடத்துண்டான வேட்கைமிகுதிபற்றி உடம்பு இளைத்தலால் தமது) உடம்பிலே பழிப்பற்ற ஆபரணங்களெல்லாங் கழன்றுவிழ நின்றார்கள்; (எ - று.)

உவமையணி. கொள்ளையிற் கொடுக்கின்றாரின் - கொள்ளைகொடுக்கின்றவர்போல என்றுங் கொள்ளலாம். பி-ம்:—[1]பூணின. [2]கொள்ளென. [3]கொள்ளையிற்கொடுக்கின்றரொத்தார். (எஎ)

எஅ.—இராமன் மணமண்டபத்தைச் சார்தல்.

எஞ்சலி னுலகத் துள்ள வெறிபடை [1]யரச வெள்ளங்
குஞ்சரக் குழாத்திற் சுற்றக் கொற்றவ னிருந்த கூடம்
வெஞ்சினத் தனுவ லானு மேருமால் [2]வரையிற் சேருஞ்
செஞ்சுடர்க் கடவு ளென்னத் [3]தேரிடைச் சென்று சேர்ந்தான்.

(இ - ள்.) எஞ்சல் இல் உலகத்து உள்ள - குறைவில்லாத பூலோகத்திலே யுள்ள. எறி படை அரச வெள்ளம் - வீசுகிற ஆயுதங்களையுடைய அரசர்களின் கூட்டம், குஞ்சரம் குழாத்தின் - யானைகளின்கூட்டம் போல, சுற்ற - சுற்றிலும் நிற்க, கொற்றவன் - வெற்றியையுடைய தசரத சக்கரவர்த்தி, இருந்த - வீற்றிருக்கப்பெற்ற, கூடம் - அந்தக்கலியாண மண்டபத்தை, வெம் சினம் தனு வலான்உம் - (பகைவர்மீது) கொடிய கோபத்தையுடைய வில்லின் தொழிலிலே வல்ல ஸ்ரீராமனும், மால் மேரு வரையில் சேரும் செம் சுடர் கடவுள் என்ன - பெரிய மகாமேருகிரியிலே போய்ச்சேருகிற சிவந்த கிரணங்களையுடைய சூரியபகவான்போல, தேரிடை சென்று சேர்ந்தான் - தேரின்மேலே போய்ச்சேர்ந்தான்; (எ - று.)

சூரியகுலத்துக்குத் தலைவனாகிய இராமபிரானுக்கு, அக்குலத்து ஆதி புருஷனாகிய சூரியனையே உவமையாகப் பலவிடத்துங் கூறிப்போவர். வெள்ளம் - ஓர்பெருந்தொகையுமாம். பி - ம்:—[1]அரசர். [2]வரையைச் சூழ்ந்த. [3]தேரின்மேல். (எஅ)

எகூ.—இதுவும் அடுத்தகவியும் குளகம்: இராமபிரான் தேரினின்று இழிந்து மண்டபத்தைச் சார்ந்தபோது சீதை ஆங்கு வருதலைக் கூறும்.

இரதமாண் டிழிந்த பின்ன ரிருமருங் கிரண்டு கையும்
பரதனு மிளைய கோவும் பரிந்தன ரேந்தப் பைந்தார்
வரதனு மெய்தி மைதீர் [1]மாதவர்த் தொழுது நீதி
விரதமெய்த் தாதை பாதம் வணங்கிமா டிருந்த வேலை.

(இ - ள்.) பை தார் வரதன்உம்-பசுமையான பூமாலையையுடைய வேண்டுவார்வேண்டும்வரங்களையருள்பவனான ஸ்ரீராமபிரானும், ஆண்டு இரதம் இழிந்த பின்னர் - அவ்விடத்திலே தேரினின்று இறங்கினபின்பு, இரு மருங்கு இரண்டு கைஉம் பரதன்உம் இளைய கோஉம்பரிந்தனர் ஏந்த-இரண்டு பக்கங்களிலும்(தனது)இரண்டுதிருக்கைகளையும்பரதனும்(அவனுக்கு)இளைய அரசனான இலக்குமணனும் அன்புகொண்டு (தம்கைகளால்) ஏந்தாநிற்க, எய்தி - (அம்மண்டபத்தினிடத்தை)அடைந்து, மை தீர் மாதவர் தொழுது-குற்றமில்லாத பெருந்தவத்தையுடைய (வசிட்டன்கௌசிகன்முதலிய)முனிவர்களைவணங்கி, நீதி விரதம் மெய் தாதை பாதம் வணங்கி-(முறைமை தவறாது) நீதிசெலுத்துதலையேமுக்கியவிரதமாகக் கொண்டுள்ள சத்தியகுணத்தையுடைய தனது தந்தையான தசரதனது திருவடிகளையும் வணங்கி, மாடு இருந்த வேலை - (அத்தந்தையினது) பக்கத்திலே வீற்றிருந்தபொழுதில், —(எ - று.)—சீதாபிராட்டி வந்தாள் என மேலைக்கவியோடு இயையும்.

பைந்தார், பசுமை - குளிர்ச்சியுமாம். பைந்தார் - வெற்றிப்பூமாலையும், திருத்துழாய்மாலையுமாம். கைகளைக் கைகளால் ஏந்துதல் - கைலாகு கொடுத்த லென்பர். இது-ஒருவகை உபசாரம். பி - ம்:—[1]மாதவற்றெழுது.

அ௦* சிலையுடைக் கயல்வாட் டிங்க ளேந்தியோர் செம்பொற் [1]கொம்பர்
முலையிடை முகிழ்ப்பத் [2]தேர்மேன் [3]முன்றிசை முளைத்த தன்ன
ளலைகடற் பிறந்து பின்னை யவனியிற் றோன்றி மீள
மலையிடை யுதிக்கின் றாள்போன் மண்டப மதனில் வந்தாள்.

(இ - ள்.) சிலை உடை-வில்லை மேற்புறத்திலேயுடைய, கயல்-(இரண்டு) கயல்மீன்களை யிடையிலே பெற்ற, வாள் - ஒளியையுடைய, திங்கள் - பூர்ணசந்திரமண்டலமொன்றை,ஏந்தி-(தான்மேலே)தரித்து,ஓர்செம்பொன் கொம்பர் - சிவந்த பொன்மயமானதொரு பூங்கொம்பு, முலை இடை முகிழ்ப்ப - கொங்கைகளாகிய அரும்புகள் (தன்னிடத்திலே) அரும்ப, தேர்மேல் முன் திசை முளைத்தது-தேரின்மேலே கிழக்குத்திக்கிலே தோன்றியதனை, அன்னாள்-போன்றவளான சானகி, அலை கடல் பிறந்து-அலைகள் அலைதற்கிடமான திருப்பாற்கடலிலே (முன்னே திருமகளாகத்)தோன்றி, பின்னை அவனியில் தோன்றி - பின்பு பூமியிலே (சீதையாக) அவதரித்து, மீள மலையிடை உதிக்கின்றாள் போல் - மீண்டும் ஒருமலையினிடத்தே பிறக்கிறவள் போல,மண்டபமதனில் வந்தாள்-அம்மண்டபத்தில்வந்துசேர்ந்தாள்,(எ-று.)

வில் - புருவத்துக்கும், கயல் - கண்ணுக்கும், திங்கள்-முகத்துக்கும், பூங்கொம்பு - திருமேனிக்கும் உவமையாம். 'தேர்மேல் முன்திசை முளைத்தது' என்றது. சூரியன்முதலியசுடர்கள் தேரின்மீது கீழ்த்திசையிலே உதிக்கும் மரபுபற்றி. உபமானத்தில் 'தேர்மேல்' என்றதனால், உபமேயத்தில் ஊர்தியின்மீதுவந்தாளெனவுங் கொள்ளலாம். தேர்-அல்குலைக் காட்டு மென்பாருமுளர். பி - ம்:—[1]கொம்பு. [2]தேரின். [3]மீமிசை. (அ௦)

அக.—வானவர் அந்தமணநாளைக் கொண்டாடுதல்.

நன்றிவா னவரெலா மிருந்த நம்பியைத்
துன்றிருங் கருங்கட றுவைப்பத் [1]தோன்றிய
மன்றலங் கோதையாண் மாலை சூட்டிய
வன்றினு மின்றுடைத் தழகென் றாரரோ.

(இ - ள்) நன்றி - (செல்வம் இன்பம் முதலிய) நல்ல சிறப்புக்களையுடைய, வானவர் எலாம் - தேவர்களெல்லோரும். இருந்த நம்பியை-(அங்கு) வீற்றிருந்த இராமபிரானைநோக்கி, துன்று இரு கரு கடல் துவைப்ப தோன்றிய மன்றல் அம் கோதையாள் மாலை சூட்டிய அன்றின்உம் இன்று அழகு உடைத்து என்றார் - நிறைந்த பெரிய கரிய பாற்கடலைக் கடைதலால (அங்குப்) பிறந்த வாசனையையுடைய அழகிய கூந்தலையுடைய திருமகள் (திருமாலுக்கு) மணமாலைசூட்டின அந்த நாளைக்காட்டிலும் இந்த நாள் (மிக்க) அழகியதென்று தம்மிற்கூறினார்கள்; (எ - று.)—பி - ம்:—[1]தோன்றியும்.

அஉ.—கவிக்கூற்று: கலியாணச் சிறப்பைத் தம்மாற் கூறமுடியாதெனல்.

ஒலிகட லுலகினி லும்பர் நாகரிற்
பொலிவது மற்றிவள் பொற்பென் றலிவண்
மலிதரு மணம்படு திருவை வாயினன்
மெலிதரு [1]முணர்வினென் விளம்பு கேனரோ.

(இ - ள்.) 'ஒலி கடல் உலகினில் - ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட பூலோகத்திலுள்ளாரது அழகுகளைக்காட்டிலும், உம்பரில் - மேலுலகத்துள்ள தேவர்களது அழகுகளைக்காட்டிலும், நாகரில் - கீழுலகத்துள்ள நாகரது அழகுகளைக்காட்டிலும், இவள் பொற்பு - இச்சீதையினது அழகு, பொலிவது - மிக்குவிளங்குவது', என்றால்—, இவள் - இவளது, மலிதரு - நிறைந்த, மணம் படு - கலியாணகாலத்திலுண்டாகிய, திருவை-விபவத்தை, நான், மெலிதரும் உணர்வின் - சிற்றறிவுகொண்டு, வாயின் என் விளம்புகேன்-(எனது) வாயால்என்னவென்றுசொல்லிமுடிக்கவல்லேன்? (எ - று.)

ஒன்றை நன்றாகத் தான்உணர்ந்தாலொழியப் பிறர்க்கு வாயாற்சொல்லி விளக்குத லரிதாதலின், 'மெலிதருமுணர்வி னென்விளம்புகேனரோ' என்றார்; எனவே, வாக்கிற்கும் அறிவிற்கும் எட்டாதது, சீதாகலியாணச்சிறப்பென்றதாம். வாயி னென வேண்டாதுகூறினது, எதனையுங்கூறவிரைகிற அதனது இயல்பை விளக்கும்பொருட்டென்க. இவளது அழகே உலகத்துப் பெண்பால்வகை முழுவதிலும் பொருந்துவதென்றும் முதலிரண்டடிக்குப் பொருளுரைக்கலாம். [1]உணர்வினன் என்றபாடத்துக்கு அரோ என்பது ஓ என்னும் இடைச்சொல்லின் பொருளில் வந்ததென்றேனும், 'அர்' அசை எனக்கொண்டேனும் உரைப்பர். வாயினால் என்றும் பிரிக்கலாம். (அஉ)

அங.—இந்திரன்முதலிய தேவர் கலியாணச்சிறப்பைக் காணத் தேவிமாரோடு வருதல்.

இந்திரன் சசியொடு மெய்தி னா[1]னிளஞ்
சந்திர மௌலி[2]யுந் தைய லாளுடன்
வந்தனன் மலரயன் [3]வாக்கி னாளுட
னந்தரம் புகுந்தன னழகு காணவே.

(இ - ள்.) அழகு காண - (பெருமாள்பிராட்டியிவர்களது திருமணக் கோலத்தின்) அழகைச் சேவிக்கும்பொருட்டு, அந்தரம் - ஆகாயத்திலே, இந்திரன் சசியொடும் எய்தினன் - இந்திரன் இந்திராணியுடனே வந்து சேர்ந்தான்;இள சந்திரன் மௌலிஉம் தையலாளுடன் வந்தனன்-பிறையை முடியிலணிந்த சிவனும் (தன்) மனைவியான உமாதேவியுடனே வந்துசேர்ந்தான்; மலர் அயன் வாக்கினாளுடன் புகுந்தனன் - தாமரைமலரில் வாழ்கிற பிரமன் (தன்மனைவியான) கலைமகளுடனே வந்துசேர்ந்தான்; (எ - று.)
—பி - ம்:—[1]நிகர். [2]தன் பாகத்தாளொடும், [3]வாக்கினாளொடும். (அங)

அசு.—வசிட்டன் விவாகச்சடங்குக்குஉரிய உபகரணங்களைக்கொண்டு அந்தணருடன் வருதல்.

நீந்தருங் கடலென நிறைந்த வேதியர்
தோய்ந்தநூன் மார்பினர் சுற்றத் தொன்னெறி
வாய்ந்தநல் வேள்விக்கு வசிட்டன் [1]மையற
[2]வேய்ந்தன கலப்பையோ டினிதி னெய்தினான்.

(இ - ள்.) நூல் தோய்ந்த மார்பினர் - முப்புரிநூலைப்பூண்ட மார்பினை யுடையவர்களும், நிறைந்த வேதியர் - நிரம்பின வேதம் வல்லவரு மாகிய அந்தணர்கள், நீந்து அரு கடல் என - கடப்பதற்குஅரிய கடல்போல [எல்லையில்லாமலென்றபடி], சுற்ற - சுற்றிலும் வர, வசிட்டன் - வசிட்டமகா முனிவன், தொல் நெறி வாய்ந்த நல் வேள்விக்கு - பழமையான முறைப்படி பொருந்தின சிறந்த அத்திருக்கலியாணத்தை நடத்துதற்கு, மை அற ஏய்ந்தன கலப்பையோடு - குற்றமில்லாமல் (சாஸ்திரவிதிப்படி) பொருந்தினவான (சடங்குக்குஉரிய) உபகரணங்களுடனே, இனிதின் எய்தினான் - மகிழ்ச்சியுடனே வந்துசேர்ந்தான்; (எ - று)—பி - ம்: —[1]மெய்யுற. [2]ஏய்ந்த நற்றருப்பையோடு. (அசு)

அரு.—வசிட்டன் திருமணச்சடங்குக்கு ஆயத்தஞ்செய்தல்.

[1]தண்டுலம் [2]விரித்துநற் றருப்பை [3]சாத்தியே
மண்டலம் விதிமுறை வகுத்து [4]மென்மலர்
கொண்டவை சொரிந்தெரி குழூஉம [5]மூட்டினன்
பண்டுள மறைநெறி [6]பரவிச் செய்தனன்.

(இ - ள்.) (வசிட்டமகாமுனிவன்), தண்டுலம் விரித்து - அரிசியைக் கீழே பரப்பி, நல் தருப்பை சாத்தி-நல்லதருப்பைகளை (உரியஇடங்களில்) அமைத்து, மண்டலம் விதி முறை வகுத்து - (அக்கினிவைத்தற்குரிய) தானத்தை வேதவிதியின் ஒழுங்கின்படியே ஏற்படுத்தி, மெல் மலர் கொண்டு அவை சொரிந்து-மென்மையான பூக்களைக் கொணர்ந்து அவற்றைச் சுற்றிலுந் தூவி, எரி குழூஉம மூட்டினன் - ஓமாக்கினியைக் குவிந்தெரியும் படிவளர்த்து, பண்டு உள மறை நெறி பரவி - அநாதியாகவுள்ள வேதமந்திரங்களை முறைப்படி கூறி, செய்தனன் - (அத்திருக்கலியாணச்சடங்கைச்) செய்தான்; (எ - று.)

தண்டுலம்-அரிசி; என்றது, அக்ஷதையை: வடசொல். இனி, [1]தண்டிலம் எனப் பாடங்கொண்டு, ஸ்தண்டிலமென்னும் வடசொல்லின் திரிபாய், மண லென்று பொரு ளுரைத்தல் சிறப்பாம். சீவகசிந்தாமணியில் இலக்கணையாரிலம்பகத்தில் "தருமணல் தருப்பை யார்ந்த சமிதையிம் மூன்றி னாலும் விரிமல ரணிந்த கோலவேதிகை யியற்றி" என்றது முதலாகக் கூறியவற்றையும், அங்கு ஆசிரியர்நச்சினார்க்கினியர் 'தண்டிலமாவது - அக்கினியைப் பிரதிஷ்டிக்குமிடத்தே சதுரமாகப் பரப்புகின்ற மணல்' என்றது முதலாகக் கூறியவற்றையும் இங்கே அறிக. தருப்பை சாத்தி என்றது-

வேதிகையில் அக்கினியைப் பிரதிஷ்டிப்பதற்குமுன்பு தண்டிலத்தைக் கற்பித்து அட்சதையிட்டு மேற்கே தொடங்கிக் கிழக்கேமுடியுமாறு தெற்கில் விளிம்பிலும் நடுவிலும் வடக்கில் விளிம்பிலும்,தெற்கே தொடங்கி வடக்கே முடியுமாறு மேற்கில்விளிம்பிலும் நடுவிலும் கிழக்கில் விளிம்பிலும் தருப்பைகளாற் கீறுகின்ற கீற்றுக்களையும், தண்டிலத்திலே அக்கினியைப்பிரதிஷ்டித்துத் தருப்பைகளை நான்குவிளிம்பிலுஞ் சூழவைத்தலையும், செய்தனன்-பிறகாரியங்களையுங் குறைவறச்செய்தான் என்க. நாற்புறத்தும் வைக்கப் படுந் தருப்பம் பரிஸ்தரணமெனப்படும். இராமன்முதலியோரின் நன்மையின்பொருட்டு வசிட்டன் ஓமஞ்செய்ததைக்கூறுவது, இதுஎனக்கொள்ளலுமொன்று. பி - ம்:—[2]விரித்தனன். [3]சாத்தினன். [4]வெண்மலர். [5]மூட்டினர். [6]பரிவின். (அ௫)

அ௬.—சீதையும் இராமனும் மணத்தவிசில் ஏறியிருத்தல்.

மன்றலின் வந்து மணத்தவி சேறி
வென்றி நெடுந்தகை வீரனு மார்வத்
தின்றுணை யன்னமு மெய்தி யிருந்தா
ரொன்றிய போகமும் யோகமு மொத்தார்.

(இ - ள்.) மன்றலின் வந்து - கலியாணத்தின்பொருட்டுவந்து, மணம் தவிசு ஏறி - அக்கலியாணத்துக்குரியஆசனத்திலேறி, வென்றி நெடு தகை வீரன்உம் - வெற்றியையும் பெருமைக்குணத்தையுமுடைய வீரனுன ஸ்ரீராமனும், ஆர்வத்து இன் துணை அன்னம்உம் - (அவ்விராமனிடத்து) அன்பையுடைய இனிய துணையாகிய நடையாலன்னத்தையொத்த சீதையும், எய்தி இருந்தார் - நெருக்கமாய்வீற்றிருந்தவர்கள்,—ஒன்றிய போகம்உம் யோகம் உம் ஒத்தார் - (ஒன்றோடொன்று) நெருக்கமாய்ப்பொருந்தின பேரின்பத்தையும்(அதற்குஉபாயமான)யோகநிலைமையையும்முறையேஒத்திருந்தார்கள்.

இராமன் போகத்தையும் சீதை யோகத்தையும் ஒத்தார் என வரிசையாகத் தொடர்ந்து பொருள்படுதலால், முறைநிரனிறைப்பொருள்கோள். "வேரி மாறாத பூமே விருப்பாள் வினைதீர்க்குமே" என்றபடி, பிராட்டிபுருஷகாரமாக எம்பெருமானையடைந்து பேறுபெறுதல் முறைமையாதலின், உபேயமான போகத்தை இராமனுக்கும் உபாயமான யோகத்தைப் பிராட்டிக்கும் உவமைகூறினர்; இங்ஙனம் உவமைகூறினதனால், பரத்துவவிஷயத்திலே பெருமாளுக்கும் பிராட்டிக்கு முள்ள வேறுபாடு தெற்றெனவிளங்கும். போகமும் யோகமும் - இன்பத்தையும் அத்ருஷ்டத்தையும் என்றும் உரைப்பர். மார்வத்து என்று எடுத்து - திருமாலின்திருமார்பில்வசிக்குமியல்புள்ள இலக்குமியினமிசமானசீதையும் என்றுஉரைத்தலும்ஒன்று. மனைவியென்பவள் இல்வாழ்வான்செய்யுங்கடமைகட்கெல்லாம் உடனிருந்துஉதவவேண்டுதலின், 'இன்துணையன்னம்' என்றது. (அ௬)

அ௭.—சனகன் சீதையை இராமனுக்குத்தாரைவார்த்துக்கொடுத்தல்.

கோமகன் முன்சன கன்குளிர் நன்னீர்
பூமக ளும்பொரு ளும்மென நீயென்

மாமக டன்னொடு மன்னுதி யென்னாத்
தாமரை யன்ன தடக்கையி னீந்தான்.

(இ - ள்.) கோ மகன் முன் - தசரதசக்கரவர்த்தியினது திருக்குமாரனான ஸ்ரீராமனுக்கு எதிரே (நின்று), சனகன் - சநகமகாராசன், 'நீ—, பொருள்உம் பூமகள்உம் என - பரம்பொருளாகிய திருமாலும் தாமரைமலரில்வாழும் திருமகளும்போல, என் மா மகள் தன்னொடு - எனது அழகிய மகளான சீதையுடனே, மன்னுதி - நிலைபெற்றுவாழ்க', என்னா - என்று கூறி, குளிர் நல் நீர் - குளிர்ந்த நல்ல ஜலத்தைத்தாரைவார்த்து, தாமரை அன்ன தட கையின் - செந்தாமரைமலரையொத்த பெரிய (அவ்விராமனது) வலத்திருக்கையிலே, ஈந்தான் - கொடுத்தான்; (எ - று.)

பூமகளும் பொருளுமென நீயென்மாமகடன்னொடு மன்னுதி - எதிர்நிரனிறைப்பொருள்கோள். சீதைக்குத்திருமகளையும் இராமனுக்குத் திருமாலையும் உவமைகூறியது, அவதாரநிலையில்வேறுபட்டுத்தோன்றுதலால். 'பூமகள்' என்பதில், இரட்டுறமொழிதலால், பூமிதேவியென்னும்பொருளுந் தோன்றும்; "வாயு மனைவியர் பூமங்கையர்க ளெம்பிராற்கு" என்றார், பிறரும். இனி, பூமகளும் பொருளுமென என்பதற்கு - பூமிதேவியும் (அதிலிருக்கும் பயிர்முதலிய) செல்வமும் ஒன்றையொன்றுவிடாதவாறுபோல வென்றும், இலக்குமிசெல்லுமிட மெல்லாம் செல்வம் நிரம்புதல்போல என்றும் உரைப்பாருமுளர். பூமகளும்பொருளும்மென என்றதில், உமையுஞ் சிவனும்போல, சரச்சுவதியும்பிரமனும்போலஎன்ற உபமானங்களும் அடங்குமென்பர். பரம்பொருள்-பரப்ரஹ்மம். பொருளும்மென - விரித்தல். (அஎ)

அஅ.—அப்போது வாழ்த்தொலி முதலியன ஒலித்தல்.

அந்தண ராசி யருங்கல மன்னார்
தந்தபல் லாண்டிசை தார்முடி மன்னர்
வந்தனை வானவர் வாழ்த்தொலி போல
முந்திய சங்க [1]முழங்கின மாதோ.

(இ - ள்.) (சனகன் சீதாபிராட்டியை இராமனுக்குப் பாணிக்கிரகணஞ் செய்யுமாறு கன்னிகாதானஞ்செய்தபொழுது), அந்தணர் ஆசி-பிராமணர்களது ஆசீர்வாதவொலியும், அரு கலம் அன்னார் தந்த பல்லாண்டுஇசை-(உலகத்துக்கு) அருமையான ஆபரணங்களையொத்து அழகுசெய்கின்ற மகளிர் பல்லாண்டுபாடுகிற ஓசையும், தார் முடி மன்னர் வந்தனை வானவர் வாழ்த்து ஒலி - பூமாலையை யணிந்த மயிர்முடியையுடைய அரசர்களும் (பிறரால்) வணங்குதற்குரிய தேவர்களும் வாழ்த்துகின்ற ஓசையும், போல - (என்னும் இவை) போல, முந்திய சங்கம் - சிறந்த சங்கவாத்தியங்களும், முழங்கின - ஆரவாரித்தன; (எ - று.)—மாதோ - ஈற்றசை.

மன்னர்களது வந்தனமும் வானவர்களது வாழ்த்தொலியும்போல வென்றுங் கொள்ளலாம் எனவே, யாவும் ஒலித்தன வென்பதாம். பி - ம்:—

[1]முழங்கொலி.  (அஅ)

அகூ.—தேவர்முதலியோர் பூமாரிமுதலியன பொழிதல்.

வானவர் பூமழை மன்னவர் பொற்பூ
வேனையர் தூவு மிலங்கொளி முத்தந்
தானகு நாண்மல ரென்றிவை தம்மான்
மீனகு வானின் விளங்கிய திப்பார்.

(இ - ள்.) வானவர் பூ மழை - தேவர்கள்சொரிந்த கற்பகமலர்மாரியும், மன்னவர் பொன் பூ - அரசர்கள்சொரிந்த பொன்னாலாகியமலர்களும், ஏனையர் தூவும் இலங்கு ஒளி முத்தம் தான் நகு நாள் மலர் - மற்றையோர் சொரிகிற விளங்குகிற ஒளியையுடைய முத்துக்களும் தானுகமலர்ந்தபூக்களும், என்ற இவைதம்மால் - என்ற இவைகளால், இ பார் - இந்தப்பூமியானது, மீன் நகு வானின் - நக்ஷத்திரங்களால் விளங்குகிற ஆகாயம்போல, விளங்கியது - பிரகாசித்தது; (எ - று.)—'ஏனையர்தூவும்' என்பதை 'நாண் மலர்' என்பதனோடும் கூட்டுக. (அகூ)

கூ0.—இராமன் ஓமஞ்செய்து சீதையைப் பாணிக்கிரகணஞ் செய்தல்.

வெய்ய கனற்றலை வீரனு மந்நாண்
மையறு மந்திர [1]முற்றும் வழங்கா
நெய்யமை [2]யாகுதி யாவையு [3]நேர்ந்தான்
றைய றளிர்க்கை தடக்கை பிடித்தான்.

(இ - ள்.) வீரன்உம் - சுத்தவீரனான இராமனும், அ நாள் - அப்பொழுது, மை அறு மந்திரம் முற்றுஉம் வழங்கா-குற்றமற்ற மந்திரம் முழுவதையுங் கூறி, வெய்ய கனல் தலை - வெவ்விய அக்கினியினிடத்திலே, நெய் அமை ஆகுதி யாவைஉம் நேர்ந்தான் - நெய்யினாலமைந்த ஆகுதிகளெல்லாவற்றையும் முறைப்படிபெய்து, தையல் தளிர் கை தட கை பிடித்தான் - அழகிய சானகியினது தளிர்போல்மெல்லிய கையை(த் தனது)பெரிய திருக்கையாற் பிடித்தான்; (எ - று.)

[1]மும்மை என்ற பாடத்திற்கு, மந்திரத்தை யுச்சரித்து நெய்யை மும்முறை மண்ணி யென்க: "நெய்யை முனைமுதிர் தருப்பை தன்னன், மந்திரித்தமையமுக்கான் மண்ணி" என்பது, சிந்தாமணி. பி - ம்:—[2]ஆவுதி. [3]நேர்ந்தே. (கூ0)

கூக.—சீதை இராமனுடன் தீவலம் வருதல்.

இடம்படு தோளவ னோடியை வேள்வி
தொடங்கிய வெங்கனல் சூழ்வரு போதின்
மடம்படு சிந்தையண் மாறு பிறப்பி
னுடம்புயி ரைத்தொடர் கின்றதை யொத்தாள்.

(இ - ள்.) இயை வேள்வி தொடங்கிய - (அந்தச் சமயத்துக்குப்) பொருத்தமான ஓமம முதலிய வைதிகச் செய்கைகளைச் செய்யத்தொடங்கின, இடம்படு தோளவனோடு - விசாலம்பொருந்தின தோள்களையுடைய

இராமனுடனே, வெம் கனல் சூழ்வரு போதின் - வெவ்விய அக்கினியை வலம்வருகிறபொழுதிலே,(அவனைப் பின்தொடர்கிற), மடம்படு சிந்தையள்- (பெண்களுக்குஉரிய) பேதைமைக்குணம் இயல்பிலேயமைந்த மனத்தை யுடைய சீதை, மாறு பிறப்பின் உடம்பு உயிரை தொடர்கின்றதை ஒத்தாள்- மாறிவருமியற்கையையுடைய பிறப்புக்களிலே (உயிர்உடம்பைத்தொடர்கிற மரபை யொழித்து) உடம்பு உயிரைத்தொடருமாயின் அதனைப் போன்றாள்.

இல்பொருளுவமை. ஒப்பற்ற பிராட்டிக்கு அபூதோபமானமே கூறு தற்கு ஏற்றதாம். தொடங்கிய என்னும் பெயரெச்சம், தோளவ னென் னும் முடிக்குஞ்சொல்லுக்குப் பின் வந்தது, செய்யுளாதலின். இனி, தொடங்கிய என்பதை எதிர்காலவினையெச்சமாக்கொண்டு, இயை வேள்வி தொடங்குகையிலே இடம்படுதோளவனோடு வெங்கனல் சூழ்வரு போதி லென்றலுமாம். உடம்பு - சீதைக்கும், உயிர்-பிராணநாயகனான இராமனுக் கும் உவமை. (கூக)

கூஉ.—சீதையும் இராமனும் தீவலம்வந்தபின் அம்மிமிதித்து அருந்ததி காணுதல்.

வலங்கொடு தீயை வணங்கினர் வந்து
[1]பொலம்புரி நூலவர் செய்பொருண் முற்றி
யிலங்கொளி யம்மி மிதித்தெதிர் [2]நின்ற
கலங்கலில் கற்பி னருந்ததி கண்டார்.

(இ - ள்.) பொலம் புரி நூலவர் - அழகிய முப்புரிநூலாலமைந்த காப்பு நாணைப்பூண்ட அந்த இராமனும் சீதையும், தீயை வலங்கொடு வந்து வணங் கினர் - ஓமாக்கினியைப் பிரதட்சிணஞ்செய்துவந்து நமஸ்கரித்து, செய் பொருள் முற்றி - மற்றுஞ்செய்யத்தக்கசடங்குகளையும் செய்துமுடித்து, இலங்கு ஒளி அம்மி மிதித்து - விளங்குகின்ற ஒளியையுடைய அம்மிக்கல் லைக் காலால் மிதித்து, எதிர் நின்ற கலங்கல் இல் கற்பின் அருந்ததி கண் டார் - எதிரிலே நின்ற கலங்குதலில்லாத கற்புநிலைமையையுடைய அருந்ததி நட்சத்திரத்தைப் பார்த்தார்கள்; (எ - று.)

சீதாராமர்கள் ஒருவரையொருவர் மணந்து அபேதமாய்க் கலந்துநின்ற தன்மை விளங்க, வலங்கொடுவணங்கினர்வந்து முற்றி மிதித்துக் கண்டார் என ஒற்றுமைநயப்படுத்திக் கூறினர். தீயைவலங்கொடுவந்து வணங்கின ரென்றது, இருவர்க்குமுள்ள தொழில். செய்பொருள் முற்றி யென்றது, இராமனுக்குஉரியது. இலங்கொளி யம்மிமிதித்து என்பதும், எதிர்நின்ற கலங்கலில் கற்பினருந்ததி கண்டார் என்பதும் - இராமபிரான் செய்விக்கச் சீதை செய்தற்கு உரியன. செய்பொருள் - இலாசஹோமம் முதலியன. [1]பொலம்பொரிசெய்வன என்ற பாடம், இலாசஹோமஞ் செய்ததைக்குறிக் கும். அம்மிமிதித்தல் அசுமாரோபணமெனப்படும். கலியாணகாலத்தில் மண மகளது பாதத்தைப்பிடித்து மணமகன் அம்மியில் வைப்பது, கல்லின் தன் மையைத் திருஷ்டாந்தமாக எடுத்துக்காட்டிக்கற்புநிலைமையை வலியுறுத்தற் கென்பர்; அருந்ததியைக் கொழுநன் மனைவிக்குக் காட்டுதலும், கற்பின்

நிலைமைக்கு ஓர் எடுத்துக்காட்டாகவே யென்க. அருந்ததி என்பவள், வசிட்டமுனிவனுடைய மனைவி; கற்புடையார் பலரினும் இவளுக்கு மேன்மையென்னையெனின், நட்சத்திரநிலையிலுங் கணவனைப் பிரியாதிருக்கை: அதனை இங்ஙன மறிக: வடக்கில் சப்தரிஷிமண்டலமென்று இரண்டாயிரத்தெழுநூறு வருஷங்களுக்கு ஒரு சுற்றுச் சுற்றுகிற நக்ஷத்திரக்கூட்டமொன்று இருக்கின்றது; அதில் நான்கு நக்ஷத்திரங்கள் நீண்டசதுரமாய்ப் பெட்டிப்பண்டிபோலிருக்கின்றன; அவற்றின் முன்புறத்து அடியில் நடுவளைந்த ஏர்க்காலைப்போல மூன்று நக்ஷத்திரமிருக்கின்றன; அவற்றில் நடு நக்ஷத்திரம் வசிட்டநட்சத்திரமென்பதாம் அதனடியிற்கிட்டினதாய் நுட்ப நோக்கினுற் காணப்படத்தக்கதொரு நக்ஷத்திரமிருக்கின்றது; அதுதான் அருந்ததிநக்ஷத்திரம். வசிட்டன் நேரே வந்திருத்தலால், அருந்ததியும் நட்சத்திரரூபமாகவன்றி நேரே வந்துள்ளாளென்பது தோன்ற 'எதிர் நின்ற வருந்ததி' என்றனரென்பர் பொலம்புரிநூலவர்-அந்தணர் என்றுகொண்டு, இப்பாடலுக்கு எழுவாய் வருவிப்பாரு முளர். பி - ம்:—[1]நின்று. (கூஉ)

கூங.—இராமன் பெரியோரை வணங்கிச்
சீதையோடு தன் மாளிகை புகுதல்.

மற்றுள செய்வன செய்து மகிழ்ந்தார்
முற்றிய மாதவர் தாண்முறை சூடிக்
கொற்றவனைக்கழல் கும்பிட லோடும்
[1]பொற்றொடி கைக்கொடு நன்மனை புக்கான்.

(இ - ள்.) (ஸ்ரீராமபிரான்), மற்று உள செய்வன செய்து - இன்னுஞ் செய்யத்தக்கனவாகவுள்ள சடங்குகளையெல்லாஞ் செய்துமுடித்து, மகிழ்ந்தார் முற்றிய மாதவர் தாள் முறை சூடி - (தனதுவிவாகத்தைக்கண்டு) மகிழ்ச்சிகொண்டவர்களாகிய (வசிட்டன் விசுவாமித்திரன் முதலிய)பெருந்தவமுடைய முனிவர்களது திருவடிகளை முறைமைப்படி தலைக்கணியாக அணிந்து [சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு], கொற்றவனை கழல் கும்பிடலோடும் - வெற்றியையுடைய (தன் தந்தையான) தசரதசக்கரவர்த்தியையும் பாதங்களிலே விழுந்து நமஸ்கரித்தவுடனே, பொற்றொடி கை கொடு நல் மனை புக்கான்-பொன்னாலாகியதொடி யென்னும்வளையையுடைய சீதையின் கையைப்பிடித்துக்கொண்டு நல்ல தன் மாளிகையினுட் சென்றான். ()

கலியாணமானவுடனே தன்னிடஞ்சென்று சிலசடங்கை முடிக்க வேண்டுமென்பது நூன்மரபாதலின், 'நன்மனைபுக்கான்' என்றார்: அங்ஙனஞ் செய்யப்படுஞ் சடங்கை 'ப்ரவிஸ்யஹோமம்' என்ப. அருந்ததிகாட்டுதல் ப்ரவிஸ்யஹோமத்துக்குப்பின்னரே நிகழ்வதாகும். மகிழ்ந்தாரென்பதைமுற்றாகக்கொண்டால், சீதாராமர்கள் எழுவாயாவர். பி - ம் :—[1]பொற்றொடியை. (கூங)

**௬௪.—பலவகை மங்கலவொலி.**

ஆர்த்தன பேரிக ளார்த்தன சங்க
மார்த்தன நான்மறை யார்த்தனர் வானோ
ரார்த்தன பல்கலை யார்த்தன பல்லாண்
டார்த்தன வண்டின மார்த்தன [1]வேலை.

(இ - ள்.) (அப்பொழுது), பேரிகள் - மங்கலபேரிகைவாத்தியங்கள், ஆர்த்தன - ஆரவாரஞ்செய்தன; சங்கம் - சங்கவாத்தியங்கள், ஆர்த்தன—; நால்மறை - நான்குவேதங்களின் கோஷங்கள், ஆர்த்தன—;வானோர் - தேவர்கள், ஆர்த்தனர் - (ஆனந்தத்தால்) ஆரவாரித்தார்கள்; பல் கலை - அநேகமானநூல்கள், ஆர்த்தன—;பல்லாண்டு-(மகளிர்) பல்லாண்டுபாடுகிற இசைகள், ஆர்த்தன—;வண்டு இனம் - (பூமாலைகளில் மொய்க்கிற) வண்டுகளின்கூட்டம், ஆர்த்தன—,வேலை - கடல்களும், ஆர்த்தன—; (எ - று.)

உலகமுழுவதுக்கும் நன்மையைவிளைப்பனவாகி மகிழ்ச்சிக்குக்காரணமான செயல்கள் நிகழும்பொழுது ஒருநல்நிமித்தமாகக் கடல்கள் தெளிந்து ஆரவாரிக்குமென வருணிப்பது கவிமரபாதலால், 'ஆர்த்தனவேலை' என்றார்; இனி, ஆர்த்தனவேலை என்பதற்கு - (முழங்கின) கீழ்க்கூறிய பேரிமுதலியனவெல்லாம் ஆரவாரிக்கின்ற கடல்களைப்போன்றன வென்றும் உரைகொள்ளலாம். மனுமுதலிய தருமநூல்களிற்கூறப்பட்டுள்ள அறநெறிகளினின்று தவறினவர்களைத் தண்டித்துஅவ்வொழுக்கவழி வழுவாதாரைக் காத்தருளும் இராமபிரானது திருமணத்தகுதியை நோக்கி அக்கலைகள் மகிழ்ந்து இரைத்தனவாகக் கூறுவார், 'ஆர்த்தன பல்கலை' என்றார். பி - ம்:— [1]அண்டம். (௬௪)

**௬௫.—இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்; இராமனும் சீதையும், கைகேயிமுதலிய மூவரையும் வணங்குதல்.**

கேகய மாமகள் கேழ்கிளர் பாதந்
தாயினு மன்பொடு தாழ்ந்து [1]வணங்கி
யாயத னன்னை யடித்துணை சூடித்
தூய சுமித்திரை தாடொழ லோடும்.

(இ - ள்.) (இராமன்), கேகயன் மா மகள் கேழ் கிளர் பாதம் - கேகயராசனது சிறந்த குமாரியான கைகேயியினது ஒளிமிகுந்த திருவடிகளை, தாயின்உம் அன்பொடு தாழ்ந்து வணங்கி - (தனது)பெற்ற'தாயான கௌசலியாதேவியினிடத்து வைத்துள்ள அன்பைக்காட்டிலும் மிகுந்த அன்புடனே (முன்னே) சாஷ்டாங்கமாகவிழுந்து நமஸ்கரித்து, (பின்பு), ஆய தன் அன்னை அடி துணை சூடி-பொருந்தின தனது தாயான கௌசலியையினது உபயதிருவடிகளைத் தலைக்கணியாகக்கொண்டு வணங்கி, (அதன்பின்பு), தூய சுமித்திரை தாள் தொழலோடும்-மனத்தூய்மையையுடைய சுமித்திராதேவியினது திருவடிகளை நமஸ்கரித்தவளவிலே,— (எ - று.)

'கௌசலியைக்கு இராமனிடத்திற்காட்டிற் பரதனிடத்திலும், கைகேயிக்குப் பரதனிடத்திற்காட்டில் இராமனிடத்திலும் இயல்பிலே அன்பு மிகுதியென்று மேல் அயோத்தியாகாண்டத்தில் விளக்குபவர், அதற்கு ஏற்ப, இங்கே இராமனுக்கு கௌசலியையிடத்திற்காட்டிற் கைகேயியிடத்தில் அன்பு மிகுதியென்றும், அதனால் அவளை முந்தி இராமன் வணங்கினனென்றுங் கூறினர்; பிதிருவாக்கியபரிபாலனத்தையே முக்கியவிரதமாகக்கொள்ளுந் தகுதியையுடைய இராமன் அத்தந்தையான தசரதனது உள்ளத்துக்கு மிகப்பாங்கான இளையதேவியினிடம் தான் மிகுந்த அன்பையுடையனாதல் இயல்பேயாம். பி - ம்.—[1]வணங்கா. (கூகு)

கூசா. அன்னமு மன்னவ ரம்பொன் மலர்த்தாள்
சென்னி புனைந்தனள் சிந்தை [1]யுவந்தார்
கன்னிய ருந்ததி காரிகை [2]காண
நன்மக னுக்கிவ ணல்லணி யென்றார்.

(இ - ள்.) அன்னம்உம் - (நடையில்) அன்னப்பேடுபோன்ற சானகியும், அன்னவர் - அத்தேவிமார் மூவரது, அம் பொன் மலர் தாள்-அழகியபொன் போலருமையான திருவடித்தாமரைமலர்களை, சென்னி புனைந்தனள் - தலைக்கு அணியாகக்கொண்டு வணங்கினள்; (அப்பொழுது அவர்கள்), சிந்தை உவந்தார் - மனம் மகிழ்ந்தவர்களாய், 'கன்னி அருந்ததி காரிகை காண - கற்பழிவில்லாத அருந்ததியாகிய அழகியமங்கையும் (நல்லொழுக்கத்துக்கு ஓர்இலக்கியமாக இவளைப் பார்க்கும்படி, இவள் நல் மகனுக்கு நல் அணி - இந்தச்சீதை (நமது) சிறந்த குமாரனான இராமசந்திரனுக்கு நல்ல ஆபரணம்போல்வாள்', என்றார் - என்று கூறினர்கள்; (எ - று.)

பிள்ளைக்குஏற்றபெண் ணென்பார், 'நன்மகனுக்கிவள் நல்லணி' என்றார். 'கன்னி - இக்கன்னியானவள், அருந்ததி - அருந்ததி போல்வாள்; காரிகை - கட்டழகுடையவள். காண் - அசை. நம் நன் மகனுக்கு இவள் அணி' என்று உரைத்தலு மொன்று. பி - ம்:—[1]மகிழ்ந்தார். [2]நாண. (கூசா)

கூஎ.—சீதையைப்பற்றிய கைகேயிமுதலியோரின் கொண்டாட்டமொழி.

சங்க வளைக்குயி லைத்தழி நின்றா
ரங்கண னுக்குரி யாருள ராவார்
பெண்க ளினிப்பிற ரெங்குள ரென்றார்
கண்கள் களிப்ப மனங்கள் களிப்பார்.

(இ - ள்.) (அத்தேவிமார்கள்),— சங்கம் வளை குயிலை - சங்கினாலாகிய வளையையணிந்த குயில்போலின்குரலையுடைய சானகியை, தழீ நின்றார் - தழுவிநின்றவர்களாய், 'அம் கணனுக்கு உரியார் உளர் ஆவார் பெண்கள் இனி பிறர் எங்கு உளர் - அழகிய திருக்கண்களையுடைய இராமனுக்குஉரிய மனைவியாதற்கேற்றவர்களான பெண்கள் இவளையொழிய வேறு ஒருவர் இனி எவ்விடத்திருக்கிறார்கள்? [எங்குமிலரென்றபடி]', என்றார் - என்று

சொல்லி, கண்கள் களிப்ப மனங்கள் களிப்பார் - (இவளைக் காண்டலால் தமது) கண்கள் களிப்பையடைய (இவளை மருமகளாகப்பெற்றதனால்) தங்கள் மனங்களுங் களிப்படைபவரானார்கள்; (எ - று.)

சங்கவளை-கூட்டமாகியவளையென்றுமாம்; "இனவளை," "நிரைவளை," "குலவளை" என்றாற்போல. தழி - தழுவி யென்பதன் விகாரம். (கூஎ)

**கூஅ.—கைகேயிமுதலியோர் தம்மருமகளுக்குப் பொன் முதலிய ஈதல்.**

எண்ணில கோடிபொன் னெல்லையில் கோடி
வண்ண வருங்[1]கல மங்கையர் வெள்ளங்
கண்ணக [2]னாடொடு காசுயர் தூசும்
பெண்ணி னணங்[3]கனை யாள்பெறு கென்றார்.

(இ - ள்.) (மேலும்), 'எண் இல கோடி பொன் - அளவில்லாத கோடிக் கணக்கான பொற்காசுகளையும், எல்லை இல் கோடி வண்ணம் அரு கலம் - அளவில்லாத கோடிக்கணக்கான அழகிய கிடைத்தற்கு அரிய ஆபரணங்களையும், மங்கையர் வெள்ளம் - (பரிவாரத்துக்குஉரிய) பெண்களின் கூட்டத்தையும், கண் அகல் நாடொடு - இடமகன்ற (சில) தேயங்களையும், காசு உயர் தூசும் - விலை மிக்க பட்டாடைகளையும், பெண்ணின் அணங்கு அனையாள் - பெண்களுக்குத்தெய்வம்போலச் சிறந்த சானகி, பெறுக - பெறுவாளாக', என்றார்-என்று கூறிக் கொடுத்தார்கள், (கைகேயி முதலியோர்); (எ - று.)

மணமகள் வணங்கும்போது பொன்முதலியன ஈதல், மரபு. காசு - இரத்தினங்களையும், உயர்தூசும் - சிறந்த சேலைகளையும் என்றுமாம். பி-ம்:- [1]கலன். [2]நாடுயர்காசொடு. [3]அனையாய். (கூஅ)

**கூகூ.—இராமன் மனைவியோடு பாயலில் தங்கியிருத்தல்.**

நூற்கட லன்னவர் சொற்கட னோக்கி
மாற்கட லன்ன மனத்தவ ளோடுங்
[1]காற்கடல் போற்கரு ணைக்கடல் பண்டைப்
பாற்கட லன்னதொர் [2]பாய லணைந்தான்.

(இ - ள்.) கால் கடல் போல் - காற்றினால் அலைவீசப்படுகிற கடல் போலக் கருநிறமுள்ள, கருணை கடல் - அருள்வெள்ளத்துக்குத் தங்குமிடமான இராமமூர்த்தி, நூல் கடல் அன்னவர் சொல் கடன் நோக்கி-(நீர்நிரம்பின)கடல்போலச் சாஸ்திரங்கள் நிரம்பின பெரியோர்களது (தருமசாத்திரங்களிற் கூறியுள்ள) சொற்களின் முறைமையைநோக்கி [முறைமைப்படி], மால் கடல் அன்ன மனத்தவளோடும்-(தன்பக்கலுண்டான)வேட்கைக்குக் கடல்போன்ற மனத்தையுடைய சீதையுடனே, பண்டை பால் கடல் அன்னது ஓர் பாயல் அணைந்தான் - பழமையாகத் தான் பள்ளிகொள்ளும் பாற்கடலிலேயுள்ள ஆதிசேஷசயனத்தை யொத்ததொரு [வெண்ணிறமான] சிறந்த திருப்பள்ளிமெத்தையைச் சேர்ந்தான்; (எ - று.)

இது, ஸமாவேசநமென்ற சடங்கைக் குறிக்கு மென்பர். ஸமாவேச நம் - மனைவியுடனிருத்தல். ப்ரவிஸ்யஹோமம் ஆன பின்பு ஸேஷஹோமம் முடியுமளவும் 'நான்கு நாளும் மணமகன் மனைவியுடனிருக்கவேண்டுமென் பது, அறநூலறிந்தோர் சொல் லென்பார், 'நூற்கடலன்னவர் சொற்கட லுேக்கி...பாயலணைந்தான்' என்றார். சிந்தாமணி நளவெண்பா முதலிய நூல்களிற்போல மனைவியுடன் கூடியிருந்த தனையே கூறுமெனக் கொள் ளலு மொன்று. காற்கடல் - கால்பெற்றெழுந்துநடந்துசெல்லுங் கடல் என இல்பொருளுவமையுமாம். பி - ம்:—[1]கார்க்கடல். [2]பள்ளி. (கூகூ)

க00.—பங்குனியுத்தரத்தில் சீதாவிவாகம் வசிட்டனால் நடந்ததென்பது.

பங்குனி யுத்தர மான பகற்போ
தங்க ணிருக்கினி லாயிர நாமச்
சிங்க மணத்தொழில் செய்த திறத்தான்
மங்கல வங்கி [1]வதிட்டன் [2]வளர்த்தான்.

(இ - ள்.) பங்குனி உத்தரம் ஆன பகல் போது - பங்குனிமாசத்து உத்திர நக்ஷத்திரங்கூடியுள்ள அன்றையதினத்திலே, அங்கண்-அவ்விடத்திலே, ஆயிரம் நாமம் சிங்கம் - ஆயிரந்திருநாமங்களையுடைய சிங்கம்போற்சிறந்த ஸ்ரீராமபிரான், மணம் தொழில் செய்த திறத்தால் - விவாகச்சடங்கைச் செய்த முறைமைக்கு ஏற்ப, வதிட்டன் - வசிஷ்டமகாமுனிவன், இருக்கினில் - வேதவிதிப்படி, மங்கலம் அங்கி - மங்களகரமான ஓமாக்கினியை, வளர்த்தான் - வளர்த்திட்டான்; (எ - று.)

இராமபிரான் திருமணச்சடங்கு பங்குனியுத்தரநாளில் நடந்ததாக, அந்த விவாகத்திற் செய்யவேண்டிய அக்கினிகாரியங்களையெல்லாம் வசிட்டமுனிவன் குறைவின்றிச் செய்துமுடித்தனனென்பதாம். பங்குனி - பால்குநமென்னும் வடமொழியின் சம்பந்தமானது; (உத்திர) பல்குநீநக்ஷத்திரத்தோடுகூடிய பௌர்ணமியையுடைமையால், இம்மாதத்துக்கு இப்பெயர். இருக்கினிற் சொல்லிய ஆயிரநாமமுமாம். இருக்கினில் மணத்தொழில் செய்த வென்றும் இயைக்கலாம். பி - ம்:—[1]வசிட்டன். [2]வகுத்தான். ()

க0க.—இராமனுடைய தம்பிமாரும் ஊர்மிளை முதலியோர்களை மணஞ்செய்துகொள்ளுமாறு ஜநகராசன் ஏற்பாடு செய்தல்.

வள்ள றனக்கிளை யோர்க டமக்கு
மெள்ளலில் கொற்றவ [1]னெம்பி யளித்த
வள்ளன் மலர்த்திரு வன்னவர் தம்மைக்
கொள்ளு மெனத்தம ரோடு குறித்தான்.

(இ - ள்.) எள்ளல் இல் கொற்றவன் - பழிப்புஇல்லாத வெற்றியையுடைய சனகன், எம்பி - எனதுபின்பிறந்தவனான தம்பி, அளித்த - பெற்ற, அள்ளல் மலர் திரு அன்னவர்தம்மை - சேற்றிலுண்டாகிற செந்தாமரைமலரில்வாழ்கிற திருமகளைப்போன்ற மகளிர் மூவரையும், வள்ளல் தனக்கு இளையோர்கள் தமக்குஉம் - வரையாதருளுந்தன்மையுள்ள ஸ்ரீராமபிரானது

தம்பிமார் மூவர்க்கும், 'கொள்ளும் - விவாகஞ்செய்துகொள்ளுங்கள்,' என - என்று, தமரோடு - (தசரதசக்கரவர்த்திமுதலிய) உறவினர்களுடனே, குறித்தான் - மணம்பேசிநிச்சயித்தான்; (எ - று.)

தமர் - தம்மைச்சேர்ந்தவர்; சம்பந்திகள். சிவவில்லை முறித்துச் சீதையை மணஞ்செய்தருளிய உபகாரத்தை நோக்கி, இங்கே 'வள்ளல்' என்றார். இளையோர்கள் - லக்ஷ்மணபரதசத்துருக்கனர். சீதையைவளர்த்த பின்பு சனகனுக்குப் பிறந்தபெண், ஊர்மிளை. அவனது தம்பியின்பெயர் குசத்துவசனென்பது, மேற்கவியால் விளங்கும். அவனதுபெண்கள்-மாண்டவி சுருதகீர்த்தி என இருவர். அள்ளல்மலர்என்றது, பங்கஜமென்னும் வடமொழிப்பெயரின் பொருள்பற்றி. பி - ம்:—[1]யான்பின். (கoக)

கoஉ.—ஊர்மிளைமுதலியமூவரை இலக்குமணன்முதலிய மூவரும் மணந்துகொள்ளுதல்.

கொய்ந்நிறை [1]தாரன் குசத்துவ சப்பேர்
நெய்ந்நிறை வேலவன் மங்கையர் நேர்ந்தார்
மைந்நிறை கண்ணியர் வானுறை நீரார்
மெய்ந்நிறை மூவரை மூவரும் வேட்டார்.

(இ - ள்.) கொய் நிறை தாரன் - (பூக்களைக்) கொய்துதொடுத்து நிறைந்த மாலையையுடைய சனகனும், குசத்துவசன் பேர் நெய் நிறை வேலவன் - குசத்துவசனென்னும் பெயரையுடைய[சிறந்த]நெய் நிரம்பப்பூசப்பட்டுள்ள வேலாயுதத்தையுடைய (அவன்தம்பியான) அரசனும் ஆகிய இவர்களது, மங்கையர் - பெண்களும், நேர்ந்தார் - (குலம் குணம் செயல் வடிவம் அறிவு முதலியவற்றில்) தமக்கு ஏற்றவர்களும், மை நிறை கண்ணியர் - மை நிரம்பத்தீட்டப்பட்ட கண்களையுடையவர்களும், வான் உறை நீரார் - தேவலோகத்தில் வசிக்கின்ற (தெய்வமகளிர்களது) தன்மையுடையவர்களும்ஆகிய, மெய் நிறை மூவரை - பருவம்நிரம்பின மூன்றுமகளிரையும், மூவர்உம் - (லக்ஷ்மணபரதசத்துருக்கனரென்னும்) மூன்றுபேரும், வேட்டார் - திருமணஞ்செய்துகொண்டார்கள்; (எ - று.)

கொய்ந்நிறைதாரன் என்றது - கீழ்ச்செய்யுளில் 'எள்ளலில்கொற்றவன்'என்றதை நோக்கிய சுட்டு. இதனைக் குசத்துவசனுக்கு அடைமொழியாக்கியுரைத்தல் பலவாற்றானும் பொருந்தாமையை உய்த்துநோக்கி அறிக. ஸாங்காஸ்யமென்ற நகரத்திற்கு அதிபதியான சுதந்வாவென்பவன் சிவவில்லையும் சீதையையும் தனக்குத் தந்துவிடுமாறு தூதர்மூலம் சொல்லியனுப்பி, ஜனகன்மறுத்ததனால் அவன்மிதிலையின்மேற்படையெடுத்து இந்தமுற்றுகை செய்ய, ஜநகராசன் அவனை உயிரொழித்து அந்தச் சாங்காசியநகரத்துக்குத் தன் தம்பியாகிய குசத்துவசனை அரசனாக்கிவைத்தனனென்பது, முதனூலாற் பெறப்படும். மைந் நிறை கண்ணியர் - கரியவண்டுகள்மொய்க்கும் மாலையுடையாரென்றுமாம். மெய் - இலக்கணையாய்ப் பருவத்தை யுணர்த்திற்று. மெய்ந்நிறை மூவர் - உண்மையொழுக்கத்தையும் நிறையென்னும் பெண்மைக்குணத்தையுமுடைய மூவருமாம். நேர்ந்தார் - சனகனால் மண

மக்களாகுமாறு ஒப்புக்கொள்ளப்பட்டவரெனினுமாம். லக்ஷ்மணன் ஊ
மிளேயையும், பரதன் மாண்டவியையும், சத்துருக்கனன் சுருதகீர்த்தியையும்
பங்குனியுத்தரத்தினன்றே மணம்புரிந்தனரென்க. பி - ம்:—1 தார்க்குவசத்
துவசப்பேர். (௧0௨)

௧0௩.—வேந்தன் செய்த தியாகம்.

வேட்டவர் வேட்டபின் வேந்தனு மேனாள்
கூட்டிய சீர்த்தி கொடுத்தில னல்லா
லீட்டிய மெய்ப்பொரு ளுள்ளன வெல்லாம்
வேட்டவர் வேட்டவை வேண்டள வீந்தான்.

(இ - ள்.) அவர் - அவர்களெல்லோரும், வேட்டு - (ஒருவரையொருவர்) விரும்பி, வேட்ட பின்-மணஞ்செய்துகொண்ட பின்பு, வேந்தன்உம் - தசரதசக்கரவர்த்தியும், மேல் நாள் கூட்டிய சீர்த்தி கொடுத்திலன் அல்லால் - முன்னே அநேகஆயிரம்வருஷகாலமாகச் சேர்த்துவைத்த (தனது) மிகுந்த கீர்த்தியொன்றைமாத்திரமே (பிறர்க்குக்) கொடுத்தானில்லையேயல்லாமல், ஈட்டிய மெய் பொருள் உள்ளன எல்லாம் - (தன்னால் வெகுகாலமாகச்) சேர்க்கப்பட்டுள்ள (பொன் மணி ஆடை ஆபரணம் முதலான பலவகை) வடிவமுடைய பொருள்கள் யாவையாவை உள்ளன அவையெல்லாவற்றையும், வேட்டவர் வேட்டவை வேண்டு அளவு ஈந்தான் - விரும்பினவர் விரும்பினவைகளை விரும்பியவளவு கொடுத்திட்டான்; (எ - று.)

இச்செய்யுளில் 'வேந்தன்' என்பதற்கு - சனகமகாராசனென்று உரைத்தல், வருங்கவியில் 'வேந்தன்' என்பதனோடு மாறுகொளக்கூறலாம். சீர்த்தி - மிகுபுகழ். 'சீர்த்திகொடுத்திலன்' என்றதனால், இத்தகைய சிறந்த புகழ் உலகத்தில் வேறுஎவர்க்கும் இல்லையென்றும், அப்புகழ் இவ்வகைத் தானத்தால் ஒப்புயர்வறவளர்ந்த தென்றும் கூறியவாறும். மெய்ப்பொருள் - அழிவுபடாத செல்வமுமாம். (௧0௩)

௧0௪—கவிக்கூற்று: தசரதன் சிலநாள் வசிட்டர் முதலியவரோடு தங்கியபின் நிகழ்ந்ததைச் சொல்வோமெனல்.

ஈந்தள வில்லதொ ரின்ப நுகர்ந்தே
யாய்ந்துணர் கேள்வி யருந்தவ ரோடும்
வேந்தனு மந்நகர் வைகினன் மெள்ளத்
தேய்ந்தன நாள்சில செய்த துரைப்பாம்.

(இ - ள்.) வேந்தன்உம் - தசரதசக்கரவர்த்தியும், ஈந்து - (அவ்வாறு) தானஞ்செய்து, அளவு இல்லது ஒர் இன்பம் நுகர்ந்து-அளவில்லாத ஒப்பற்றதொரு இன்பத்தை அனுபவித்து,ஆய்ந்து உணர் கேள்வி அரு தவரோடும்- ஆராய்ந்தறிந்த நூற்கேள்விகளையும் அருமையானதவத்தையுமுடைய முனிவர்களுடனே, அ நகர் வைகினன் - அந்த மிதிலாநகரத்திலே வாழ்ந்திருந்தான்;(இப்படியிருக்க), சில நாள் மெள்ள தேய்ந்தன - சில தினங்கள் மெல்லக் கழிந்தன; செய்தது உரைப்பாம்-(அதன்) பின்பு செய்ததை மேற்கூறுவோம்; (எ - று.)—அதனை மேலிற்படலத்திற் காண்க.

அருந்தவரோடும் என்ற எச்சவும்மை மக்கள்முதலியவரோடும் என்ற பொருளைக் காட்டும். மெள்ளத்தேய்ந்தன - ஆனந்தாதிசயத்தால் நாள்கள் கழிவது தெரியாதபடி கழிந்தன என்க. (௧0௯)

கடிமணப்படலம் முற்றிற்று.

---

## உ௨.—ஆவது பரசுராமப்படலம்.

தசரதன் குமாரர்களுடனும் மற்றுஞ் சுற்றம்பரிவாரம் சேனைமுதலியவற்றுடனும் மிதிலையினின்று மீண்டு அயோத்திக்குவருகையில் வலியவந்து எதிர்த்த பரசுராமனை ஸ்ரீராமன் வெற்றிகொண்டசெய்தியைக்கூறும் பாகம். பரசு-கோடாலியென்னும் ஆயுதம். வில்லையும் கலப்பையையும் ஆயுதமாகவுடைய தசரதராமபலராமர்களினும் வேறுபாடுவிளங்க, 'பரசுராமன்' எனப் பெயர். இவன், விஷ்ணுவின் ஆறுவது திருவவதாரம்; இவன், ஆவேசாவதாரம்; ஸ்ரீராமகிருஷ்ணவதாரங்கள்போல அமிசாவதாரமன்று: அதுபற்றியே இவனிடத்து ஆவேசித்திருந்த சக்தி அமிசாவதாரமான ரகுராமனால் கவர்ந்துகொள்ளப்பட்டது. இவன், எழுசிரஞ்சீவிகளுள் ஒருவன்; (மற்றையவர் - அசுவத்தாமா, பலிசக்கரவர்த்தி, வியாசன், அநுமான், விபீஷணன், கிருபன் என்பவர்.)இட்சுவாகுவமிசத்தவனான ரேணுஎன்னும் அரசனது மகளாகிய ரேணுகையென்பவளிடம் குசிகவமிசத்து விசுவாமித்திரனது உடன்பிறந்தவளான கௌசிகையென்பவளுடைய குமாரனாகிய ஜமதக்கினி முனிவனுக்குப் பிறந்தவன், இவன். இவன், பிராமணகுமாரனாயினும், கோபம் தாபம் போர் வெற்றி பல பராக்கிரமம் முதலிய க்ஷத்திரியாசாரமுடையவனானது,தன்னுற்பத்திக்கு ஏதுவான சருவினது பேதத்தாலெனக் காண்க. [சரு - மந்திரபூர்வகமாகநிருமிக்கப்பட்ட ஒருவகைச்சோறு.]

க.—இராமபிரானும் சீதையும் அங்குப்போகம் நுகர, விசுவாமித்திரன் தவஞ்செய்யச் செல்லுதல்.

தானுவதோர் வகையேநனி சனகன்றரு [1]தையலுந்
நானுவித [2]முறுபோகமு நுகர்கின்றவந் நாள்வா
யானுமறை நெறி[3]மாதவ முனிகோசிக னருளிப்
போனான்வட திசைவாயுயர் பொன்மால்வரை புக்கான்.

(இ - ள்.) சனகன் தரு தையலும் - சனகராசன்வளர்த்த பெண்ணான சீதையும், தான் - இராமனும், ஆவது ஓர் வகையே - தக்கவகையாக, நனி - நன்றாய், நானுவிதம் உறு போகம்உம் நுகர்கின்ற - பலவகையாய்மிக்க சுகங்களையெல்லாம் அநுபவிக்கின்ற, அ நாள்வாய் - அந்தக்காலத்திலே, மா தவம் முனி கோசிகன் - பெருந்தவத்தையுடைய விசுவாமித்திரமுனிவன்,— ஆனு மறை நெறி அருளி - அழிதலில்லாத [நித்தியமான] வேதங்களிற் கூறியமுறைப்படி (அவர்களுக்கு ஆசீர்வாதங்களை) அருளோடுசெய்துவிட்டு, போனான் - சென்று, வடதிசைவாய் உயர் பொன் மால் வரை-வடக்குத்திக்

கிலே உயர்ந்துவிளங்குகிற அழகிய பெரிய இமயமலையிலே, புக்கான்-(தவஞ் செய்தற்பொருட்டுப்)போய்ச்சேர்ந்தான்; (எ - று.)

இதனால், மேற் பரசுராமன் சினந்துவந்து எதிர்க்கும்பொழுது கௌசிகன் அருகிலில்லை யென அறிக. தான் ஆவதுஒர்வகையே என்பதற்கு - (தனக்குத்) தானே உவமையாகுவதொருவழியினால் என்றும்,(கருமவசத்தாலல்லாமல் இச்சாமாத்திரத்தால்) தானே இங்ஙனந் திருவவதரித்த விதத்துக்கு ஏற்ப என்றும் உரைப்பாருமுளர். இனி, இராமன் தான் தகுந்ததொரு முறைமையால் சீதையையும் பலவகையின்பங்களையும் அநுபவிக்கிறபொழுது என உரைத்தலும் ஒன்று. பி-ம்:—[1]தயலும், குயிலுடனே. [2]வரு. [3]ஆசிகள். (க)

உ.—தசரதசக்கரவர்த்தி ஊர்க்கு மீண்டுசெல்லுமாறு யாவருடனும் பிரயாணமாதல்.

அப்போதினின் முடிமன்னவ னணிமாநகர் செலவே
யிப்போது நமனிகந் [1]துணை யெழுகென்றினி திசையாக்
கைப்போதக நிகர்காவலர் குழுவந்தடி [2]கதுவ
வொப்போதரு தேர்மீதினி லினிதேறின னுரவோன்.

(இ - ள்.) அ போதினில் - அந்நாட்களிலே ஒருநாள், உரவோன் - எல்லாவலிமைகளையுமுடையவனாகிய, முடி மன்னவன் - கிரீடத்தையணிந்துள்ள தசரதசக்கரவர்த்தி, 'அணி மா நகர் செல - அழகிய பெரிய அயோத்தியாநகரத்துக்கு மீண்டுசெல்லும்பொருட்டு, இ போது - இப்பொழுது, நம் அனிகம் - நமதுசேனை, துணை எழுக - நம்முடன்கூடப் பிரயாணம் புறப்படுக,' என்று—, இனிது இசையா - இனிமையாகக் கூறி, (சனகனிடம் விடை பெற்றுக்கொண்டு), கை போதகம் நிகர் காவலர் குழு வந்து அடி கதுவ - துதிக்கையையுடையயானையைப்போன்ற அரசர்களின் கூட்டம் வந்து (தனது) பாதங்களை வணங்கி நெருங்கிச்சூழ்ந்துவர, ஒப்பு ஓது அரு தேர் மீதினில் இனிது ஏறினன் - உவமைசொல்லுவதற்கு முடியாததொரு இரதத்தின்மேல் இனிமையாக ஏறினான்; (எ - று.)

அனிகம் துணை எழுக - சேனையும் மற்றும்உடன்வரும் உறவினராதியோரும் என்றுமாம். பி - ம்:—[1]தனை. [2]தழுவ. (உ)

ங.—தசரதன் அயோத்திக்குச்செல்லும்வழியிற் சேர்தல்.

தன்மக்களு மருமக்களு நனிதன்கழ றழுவ
மன்மக்களு மயன்மக்களும் வயின்மொய்த்திட மிதிலைத்
தொன்மக்களு மனமுக்குயிர் பிரிவென்பதொர் துயரின்
வன்மைக்கடல் புகவுய்ப்பதொர் வழி[1]புக்கனன் மறவோன்.

(இ - ள்.) மறவோன் - எல்லாவலிமைகளையுமுடைய தசரதன்,—தன் மக்கள் உம் மருமக்கள் உம் தன் கழல் நனி தழுவ - தனது குமாரர்கள் நால்வரும் மருகிமார்நால்வரும் தனது பாதங்களை நன்றாகவணங்கி உடன்வரவும், மன் மக்கள் உம் அயல்மக்கள் உம் வயின் மொய்த்திட - இராசகுமாரர்

களும் மற்றை முனிவர்முதலியோரும் பக்கங்களிலே நெருங்கிவரவும், மிதிலை தொல் மக்கள்உம் மனம் உக்கு உயிர் பிரிவு என்பது ஓர் துயரின் வன்மை கடல் புக - மிதிலாநகரத்தில் நெடுங்காலமாகவாழ்கின்ற சனங்களெல்லோரும் (தம்மைப் பிரிதலால்) மனம்நெகிழ்ந்து உயிர் உடம்பைவிட்டுப்பிரியுந்துன்பமெனத்தக்கதொரு துன்பமாகிய வலியகடலை யடையவும், உய்ப்பது ஓர் வழிபுக்கனன் - (மிதிலையினின்று அயோத்திக்குச்) செலுத்துவதொருவழியை யடைந்தான்; (எ - று.)

மருமக்கள்-மருமகளென்பதன்பன்மை. தசரதனும் அவனதுகுமாரர்களும் மிதிலாநகரத்தவர்களுக்குப் புதியவராயிருந்தும் மிக்க அன்புகொண்டார்களாதலால், தசரதராதியோர்பிரிவுக்கு மிகவருந்தினரென்க. எல்லாச் சனங்களுக்குந் தம்தம் உயிரினிடத்திலுள்ள அவ்வளவு அன்பு தசரதராதியோரிடத்து உளதாயிற்றென்பதாம். பி - ம்:—[1]சென்றனன். (ங)

ச.— ஸ்ரீராமன் தேவியோடு தம்பிமாரோடுஞ் செல்லுதல்.

முன்னேநெடு முடிமன்னவன் முறையிற்செல மிதிலை
நன்மாநக ருறைவார்மன நனிபின்செல நடுவே
தன்னேர்புரை தருதம்பியர் தழுவிச்செல் மழை[1]வாழ்
மின்னேபுரை யிடையாளொடு மினிதேகினன் வீரன்.

(இ - ள்) நெடு முடி மன்னவன் - பெரியகிரீடத்தையணிந்த தசரதசக்கரவர்த்தி, முறையின் - (தனக்குஉரிய) முறைப்படி, முன்னே செல - முன்னேபோகவும், மிதிலை நல் மா நகர் உறைவார் மனம் - அழகியபெரிய மிதிலாநகரத்தில் வாழுஞ் சனங்களது மனம், நனி பின் செல - (தன்) பின்னே மிகுதியாகவரவும், நடுவே—, தன் நேர் புரை தரு தம்பியர் தழுவி செல - தன்னைநேராகவொத்த தம்பிமார் தழுவிவர, மழை வாழ் மின்எ புரை இடையாளொடுஉம் - மேகத்திலேவாழ்கிற மின்னலையேயொத்த இடையையுடைய சானகியுடனே, வீரன் - மகாவீரனான ஸ்ரீராமன், இனிது ஏகினன்- இனிமையாகச்சென்றான்; (எ - று.)

தன்நேர்புரைதருதம்பியர் - தன்னைத்தானே யொத்த தம்பிமார் என்றும், தன் எர் எனப்பிரித்து - தனதுஅழகையொத்த தம்பிமார் என்றும் உரைப்பாருமுளர். பி - ம்:—[1]வாய். (ச)

ரு.—தசரதன் அபசகுனமாவது கண்டு வழியிடை நிற்றல்.

ஏகும்மள வையின்வந்தன வலமும்மயி லிடமுங்
காகம்முத லியமுந்திய தடைசெய்வன கண்டா
னாகம்மன னிடையிங்குள திடையூறென நடவான்
மாகம்மணி யணிதேரொடு நின்றானெறி [1]வந்தான்.

(இ - ள்.) ஏகும் அளவையின் - (இங்ஙனஞ்) செல்லுஞ்சமயத்தில், மயில் (முதலிய)-மயில் முதலிய சில பறவைகள், வலம்உம் வந்தன -*(தாம் சுபசகுனமாக) வலப்பக்கமாகவும் வந்தன; காகம் முதலிய - காகம் முதலான சில பறவைகள், இடம்உம் -(தீய சகுனமாக) இடப்பக்கமாகவும், முந்

திய - முற்பட்டுச் செல்வனவாகி, தடைசெய்வன-தடை செய்வனவாயின; (இவற்றை), கண்டான் - பார்த்தவனாகிய, நாகம் அனன்-(கம்பீரமான தன்மையால்) யானையைப்போன்ற தசரதசக்கரவர்த்தி, இங்கு இடை இடையூறு உளது என - இவ்வழியிலே தடைஇருக்கிற தென்று கருதி, நடவான் - அப்பால் செல்லாதவனாய், நெறி வந்தான் மாகம் அணி அணி தேரொடும் நின்றான் - வழியில்வந்தவன் பெரிய ஆகாயத்தைஅளாவிய [மிகவுயர்ந்த] அழகிய (தனது) தேருடனே நின்றுவிட்டான்;(எ - று.)

வலியன், கருடன், காடை, கழுகு, ஆந்தை, உடும்பு, கீரி, குரங்கு இவை இடமாதல் - உத்தமம். நாரை, விச்சுளி, காக்கை, செம்போத்து, கிளி, கொக்கு, மயில், கோழி, ஓணான், புள்ளிமான், புனுகுபூனை, புலி, நரி, இவை வலமாதல் உத்தமம். இவை மாறி வலமும் இடமுமானால், சகுனத்தடையாகும். சகுனத்தடை தோன்றியதனால் சக்கரவர்த்தி அஞ்சி மேலே நடவாதவனாயினனென்க. முந்தியதடைஎனப் பெயரெச்சமாக எடுத்து, மிகுந்ததடையென்றும் உரைப்பர். நாகம் மனன் - சலியாதமலைபோன்ற அரசன் என்றுமாம். பி - ம்:—[1]சென்றான். (கு)

கூ.—சக்கரவர்த்தி ஓர் நிமித்திகனை வினவ, அவன் இடையூறு வந்து கழியுமெனல்.

நின்றேநெறி யுணர்வானொரு நினைவாளனை யழையா
நன்றோபழு துளதோ[1]நடு வுரைநீநய மென்னக்
குன்றேபுரை தோளானெதிர் புள்ளின்குறி கொள்வா
னின்றேவரு மிடையூறது நன்றாய்விடு மென்றான்.

(இ - ள்.) நின்று - (சக்கரவர்த்தி இவ்வாறு பிரயாணத்தை நிறுத்தி) நின்று, நெறி உணர்வான் ஒரு நினைவு ஆளனை அழையா - (சகுனசாஸ்திரங்களின்) முறைமையைஅறிபவனொருஆராய்ச்சியுள்ளநிமித்திகனை அழைத்து, 'நன்று ஓ-(இச்சகுனத்தாலுண்டாகும் பயன்)நல்லதுதானோ? பழுதுஉளதுஓ (இதனாலுண்டாகுந்) தீங்கு உள்ளதோ? நீ—,நயம் - உண்மையை, நடு-நடுவு நிலைமையுடனே [மாறிக்கூறுதலில்லாமலென்றபடி], உரை - சொல்வாய்,' என்ன - என்றுகூற,—குன்றே புரை தோளான் எதிர் - மலையையேயொத்த தோள்களையுடைய அச்சக்கரவர்த்தியினெதிரிலே, புள்ளின் குறி கொள்வான் - பறவைகளின் நிமித்தங்களை அறியுந்தன்மையனான அந்நிமித்திகன், 'இடையூறு இன்றுஏ வரும் - இப்பொழுதே தடை உளதாம்; அது நன்றாய் விடும் - அது (முடிவிலே) நல்லதாகிவிடும்,' என்றான்—; (எ - று.)

காகம் முதலியன இடமானதனால் இடையூறு வருமென்றும், மயில் முதலியன வலமானதனால் அது நன்மையாய்முடியு மென்றும் நிமித்திகன் கூறினனென்க. வசிட்டமுனிவனே நிமித்தத்தின் தன்மைகளை யறிந்து இங்ஙனங் கூறினதாக முதனூலி லுள்ளது. அங்ஙனமே உடனே பரசுராமன் வந்து தடைசெய்வதும், அவனை ஸ்ரீராமன் வெற்றிகொள்ளுவதுங் காண்க. பி - ம்:—[1]நயமுரைநீ நடு. (கூ)

எ.—இதுமுதல் ஒன்பது கவிகள் - பரசுராமன் வருவதைத் தெரிவிக்கும்.

என்னும்[1]மள வினில்வானக மிருள்[2]கீறிட வொளியாய்
மின்னும்படி புடைவீசிய சடையான்[3]மழு வுடையான்
பொன்னின்மலை வருகின்றது போல்வானனல் கால்வா
னுன்னுந்தழல் விழியானுரு மதிர்கின்றதொ[4]ருரையான்.

இதுமுதல் பன்னிரண்டு கவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) என்னும் அளவினில்-என்றுசொல்லுமளவிலே, வான் அகம் இருள் கீறிட ஒளி ஆய் மின்னும்படி புடை வீசிய சடையான் - ஆகாயத்தினிடத்தே பொருந்துகிற இருள் சிதைந்தொழியும்படி ஒளிசெய்து விளங்குமாறு பக்கங்களிற் பரவிவீசுகிற சடையையுடையவனும், மழு உடையான் - கோடாலிப்படையையுடையவனும், பொன்னின் மலை வருகின்றது போல்வான் - பொன்மயமான மகாமேருகிரி நடந்துவருகின்றதனை ஒப்பவனும், அனல் கால்வான்-(தனது மேனியினின்றும் சுவாசத்தினின்றும்) நெருப்பையுமிழ்பவனும், உன்னும் தழல் விழியான் - (கண்டவர் யாவராலும் இது வென்னென்று சங்கித்துக்) கருதத்தக்க நெருப்பையுமிழுங் கண்களையுடையவனும், உரும் அதிர்கின்றது ஓர் உரையான் - இடிபோலமுழங்கும் ஒப்பற்ற சொல்லையுடையவனும்,—(எ - று.)

இவையெல்லாம், மேல்வரும்பரசுராமனுக்கு அடைமொழி. இச்செய்யுளில் 'என்னும்மளவினில்'என்பது, மேல் பதினோந்தாஞ்செய்யுளில் 'மழுவாளவன் வந்தான்' என்பதோடு இயையும். இப்பாடல் முதல் வருவனவாகிய 'சடையான்' முதலியன 'மழுவாளவன்' என்பதற்கு அடைமொழிகளாம். கூ, க0, கக - பாடல்கள் - இடைப்பிறவரல்கள்: அவற்றிலுள்ள 'கருத'(கூ),'புகைய, திரிய, படர' (க0), ஒப்ப' (கக) என்ற வினையெச்சங்களும் 'மழுவாளவன் வந்தான்' என்பதனையே கொண்டுமுடியும். பி-ம்:— [1]அளவையின். [2]கீறிடுமொளியான், கீறிடவெளியாய். [3]மிடன்மழுவான். [4]மொழியான். (எ)

அ. கம்பித்தலை யெறிநீருறு கலமொத்துல குலைபத்
தம்பித்துயர் திசையானைக டளரக்கடல் சலியா
வெம்பித்திரி தரவானவர் வெருவுற்றிரி தரவோர்
செம்பொற்சிலை [1]தெறியாவயில் முகவாளிக டெரிவான்.

(இ - ள்.) அலை எறி நீர் உறு கலம் ஒத்து - அலைகளைவீசுகின்ற கடல் நீரினிடையிலே அகப்பட்டுக்கொண்ட மரக்கலத்தைப்போன்று, உலகு கம்பித்து உலைய - உலகங்களும் உலகத்திலுள்ள சராசரவருக்கங்களும் நடுங்கி நிலைகெடும்படியாகவும், தம்பித்து உயர் திசை யானைகள் தளர -(எட்டுத்திக்கிலுந்) தூண்களையொத்து(க் கீழிருந்து பூமியைத் தாங்குகிற) சிறந்த திக்கஜங்களுந் தளர்ச்சியடையவும், கடல் சலியா வெம்பி திரிதர - கடல் பொங்கிக் கொதித்து நிலைவேறுபடவும், வானவர் வெருவுற்று இரிதர - மேலுலகத்துள்ள தேவர்களும் பயம்மிகுந்து இடம்விட்டோடவும், ஓர் செம்

பொன்சிலை தெறியா அயில் முகம் வாளிகள் தெரிவான்-செம்பொன்மயமானதொரு வில்லை வளைத்துநாணேற்றித்தெறித்துக் கூர்மையையுடைய நுனியையுடையபாணங்களை ஆராய்ந்தெடுப்பவனும்,-(எ - று.)

இச்செய்யுளில் முதல்மூன்றடிகளிற் கூறிய செயல்களெல்லாம், பரசுராமன் வில்லைவளைத்து அம்புதொடுக்குமாறு நாணியை ஏற்றி அந்நாணியைக் கைவிரலால் தெறிப்பதிலுண்டாகிற ஒலியின் அதிர்ச்சியால் நிகழ்வன. தம்பித்து - அசைவற்றுநின்று என்றுமாம். செம்பொற்சிலை-பொன்போலருமையானவில் என்றுமாம். பி - ம்:—[1]தரியா. (அ)

கூ. விண்கீழுற வென்றோபடி மேல்கீழுற வென்றோ
வெண்கீறிய வுயிர்யாவையும் யமன்வாயிட வென்றோ
புண்கீறிய குருதிப்புனல் [1]பொழிகின்றன புரையக்
கண்கீறிய கனலான்[2]முனி வியாதென்றயல் [3]கருத.

(இ - ள்.) விண் கீழ் உற என்றோ - சுவர்க்கலோகம் பூமியில்வந்து விழுந்திடவேண்டுமென்றுதானோ? படி மேல் கீழ் உற என்றோ - பூலோகம் ஆகாயத்தின்மேற்சென்று பொருந்தவேண்டுமென்றுதானோ? எண் கீறிய உயிர் யாவைஉம் யமன்வாய் இட என்றோ-கணக்கையொழித்த [அளவற்ற] பிராணிகளெல்லாவற்றையும் (சங்காரத்தொழில் புரிபவனை) யமனது வாயிலே போகடவேண்டுமென்றுதானோ? புண் கீறிய குருதி புனல் பொழிகின்றன புரைய - புண்வாய்விட்டு வருகிற இரத்தமாகிய செந்நீர் சொரிகின்றவற்றை யொக்கும்படி, கண் கீறிய கனலான்-கண்களினின்று வெளிப்படுகிற கோபாக்கினியையுடைய அவ்வந்தண வீரனது, முனிவு - பெருங்கோபத்திற்குக்காரணம், யாது - (இவற்றுள்) எதுவோ? என்று—, அயல் - அயலிலுள்ளவரெல்லாரும், கருத - எண்ணமிடவும்,—

மேல்கீழுற - கீழ்மேலாகப் பொருந்த: கவிழ எனினுமாம். எண்கீறிய- (பிரமனால் அல்லது சித்திரகுத்தனால்) கணக்கிலெழுதப்படுகிற என்றும் உரைகொள்ளலாம். இதனால் பரசுராமனது பெருங்கோபமும் போராற்றலும் விளக்கப்பட்டன. பி-ம்:—[1]பொழிகின்றது. [2]முனிவேது. [3]கருதேம்.

௬0. போரின்மிசை யெழுகின்றதொர் [1]மழுவின்சிகை புகையத்
தேரின்மிசை மலைசூழ்வரு கதிருந்திசை திரிய
நீரின்மிசை வடவைக்கனல் நெடுவானுற முடுகிப்
பாரின்மிசை வருகின்றதொர் படிவெஞ்சுடர் படர.

(இ - ள்.) போரின் மிசை எழுகின்றது ஒர் மழுவின் சிகை புகைய- யுத்தமேதொழிலாக அதன்மேல் எழாநிற்குந் தன்மையுள்ள தொரு ஒப்பற்றகோடாலிப்படையினதுகொழுந்து [பரசாயுதத்தின் நுனியினின்று எழுகிற அக்கினிச்சுவாலை] புகையவும், தேரின்மிசை மலை சூழ்வரு கதிர்உம் திசை திரிய-(தனது எழ்புரவிபூண்ட ஒற்றைத்தனியாழித்) தேரின்மேலே யேறி (ஆகாயமார்க்கத்திலே) மகாமேருகிரியை (நாள்தோறும்) வலஞ்செய்துவருகிற சூரியனும் (தனது உக்கிரத்தன்மையை நோக்கி அஞ்சிநடு

ங்கித்) திக்குத்தமோறிச் செல்லவும், நீரின்மிசை வடவை கனல் நெடு வான் உற முடுகி பாரின் மிசை வருகின்றது ஒர் படி-கடல்நீரினிடையே மேலெழுந்துதோன்றுந்தன்மையதான படபாமுகாக்கினி ஆகாயத்தையளாவ ஓங்கி விரைந்து வளர்ந்தெழுந்து பூமியின்மேலே வருகின்றதொருவிதம் போல, வெம் சுடர் படர - (தனது உடலினின்று) வெவ்விய ஒளி [தேஜசு] வெளிப்பரவவும்,—(எ - று.) பி - ம்:—[1]முனிவின். (௧0)

௧௧. பாழிப்புய முயர்திக்கிடை யடையப்புடை [1]படருஞ்
சூழிச்சடை முடிவிண்டொட வயல்வெண்மதி தோற்ற
[2]வாழிப்புன லெரிகானில மாகாயமு மழியு
மூழிக்கடை [3]முடிவிற்றிரி யுமைகேள்வனை யொப்ப.

(இ - ள்.) பாழி புயம் - வலிமையையுடைய (தனது) தோள்கள், உயர் திக்கிடை அடைய - உயர்ந்த திக்குக்களின் எல்லையிடையிலே சென்றுபரவவும், புடை படரும் சடை முடி சூழி - பக்கங்களிலெல்லாம் பரவியதன்மையையுடைய சடையோடு கூடிய மயிர்முடியினது உச்சி, விண் தொட - ஆகாயத்தையளாவவும், வெள் மதி-வெண்ணிறமுள்ள சந்திரன், அயல் தோற்ற-(தனது) அருகிலே தோன்றவும், ஆழி புனல் எரி கால் நிலம் ஆகாயமும் அழியும் ஊழி கடைமுடிவில் - கடல்வடிவமானநீரும் அக்கினியும் காற்றும் பூமியும் வானமும் (என்னும் பஞ்சபூதங்களும்) அழிவதான கற்பத்தின் அந்தகாலத்திலே, திரி - நடமாடுகிற, உமை கேள்வனை - உமாதேவி கொழுநனை உருத்திரமூர்த்தியை, ஒப்ப-(தான்) ஒத்திருக்கவும்,—(எ - று.)

சர்வசங்காரகாலத்தில் நடனஞ் செய்யும் உருத்திரமூர்த்தி, அடங்காதளவிறந்த பெருஞ் சீற்றத்திலும் பல்லுயிரையும் பதைக்கக்கொல்லுங் கொடுமையிலும் பாசுராமனுக்கு உவமை. இச்செய்யுளில் இவனுக்கு உமைகேள்வனை உவமைகூறினதற்கு, கீழ்ச்செய்யுளில் 'மழுவின் சிகைபுகைய,' 'திசைதிரிய,' 'வெஞ்சுடர்படர' என்றவற்றையுங் காரணமாகக் கொள்ளலாம். சூழி - உச்சி; இது, சடைமுடிச்சூழியென மாற்றப்பட்டது. ஐம்பெரும் பூதங்களைச் செய்யுள்நோக்கிப் பிறழவைத்தார். பி - ம்:—[1]படர. [2]ஆழிப் பொருபுனலே முதல். [3]முடிவிற்றனி. (௧௧)

௧௨. அயிர்[1]சுற்றிய கடன்மாநில மடையத்தனி படருஞ்
செயிர்சுற்றிய படையானடன் மறமன்னவர் திலக
னுயிருற்றதொர் [2]மரமாமென வோராயிர முயர்தோள்
[3]வயிரப்பணை துணியத்[4]தொடு வடிவாய்மழு வுடையான்.

(இ - ள்.) அயிர் - மணல்களோடுகூடி, சுற்றிய - (நாற்புறத்துஞ்) சூழ்ந்துள்ள, கடல் - கடலினிடையேயுள்ள, மா நிலம் அடைய - பெரியபூலோகம் முழுவதிலும், தனி படரும் - ஒப்பில்லாமற்பரவுந்தன்மையுள்ள, செயிர் சுற்றிய படையான்-வலிமைமிகுந்த சேனையையுடையவனும்,--அடல் மறம் மன்னவர் திலகன் - பலபராக்கிரமங்களையுடைய அரசர்களுக்கெல்லாம் அழகு செய்யுந்திலகம்போலச் சிறந்ததலைவனுமாகிய கார்த்தவீரியார்ச்சுனன், உயிர்

உற்றது ஓர் மரம் ஆம் என - உயிரோடுகூடிப்பொருந்தியதொரு பெருமரத்தை யொத்துநிற்க, ஓர் ஆயிரம் உயர் தோள் வயிரம் பணை - (அவ்வருச்சுனனது) ஒரு ஆயிரக்கணக்கான உயர்ந்ததோள்களாகிய வைரம்பற்றின கிளைகளெல்லாம், துணிய - வெட்டுப்படும்படி, தொடு - கையாலோங்கியெடுத்து வீசின, வடி வாய் மழு உடையான் - கூர்மையான நுனியையுடைய பரசுவென்னும் ஆயுதத்தை யுடையவனும்,—(எ - று.)

செயிர் - கோபம், அடல் - வெற்றி, மறம் - கோபம் எனினுமாம். சந்திரவமிசத்திற்பிறந்த யயாதிமகாராசனது மூத்தகுமாரனும் யதுவின் குலத்தவனுகிய கிருதவீரியனது குமாரனை அருச்சுனகார்த்தவீரியன் அத்திரிகுமாரனுய் விளங்குகிற நாராயணுமிசமான தத்தாத்திரேயமகாமுனிவனை ஆராதித்து அவனுடைய அநுக்கிரகத்தினுல் ஆயிரந்தோள்களுடைமை, போரில்வெற்றி, பூமியை முறைப்படிகாத்தல், பகைவர்களால் அவமானப்படாமை, சகலலோகங்களுங் கொண்டாடும்படியான மகாபுருஷனுல் மரணம் முதலிய பலவரங்களைப் பெற்று, பலவேள்விகளையும் இயற்றி, தனது மரபிற் சில தலைமுறைகளின்முன் தோன்றினவனுன மகிஷ்மானென்னும் அரசனுல் உண்டாக்கப்பட்ட மாகிஷ்மதிபட்டணத்தைப் பலகாலம் அரசாண்டுவரும்போது, ஒருகால் தான் நருமதையாற்றிற் சலக்கிரீடைசெய்துகொண்டு மதுபானத்தால் மதித்திருக்கையில், திக்குவிசயஞ்செய்துவருகிற இராவணன் தன்னை எதிர்க்கக் கண்டு அவனைத் தனது ஆற்றலால் எளிதிற் கட்டித் தனதுபட்டணத்திற் கொண்டுபோய்ச் சிறைச்சாலையில் வைத்து.பின்பு அவனது மூதாதையாகிய புலஸ்தியமகாமுனிவனது வேண்டுகோளால் அவனைச் சிறைவிடுத்து, அம்முனிவனருளால் 'ராவணஜித்' என்கிற பெரும்பெயரைப் பெற்றுன். இவன் ஒருகாலத்தில் சேனையுடனே வனத்திற் சென்று வேட்டையாடிவந்து இப்பரசுராமனது தந்தையான ஜமதக்கினிமகாமுனிவனுடைய ஆச்சிரமத்தை யடைந்து முனிவனநுமதியால் அங்குவிருந்துண்டுமகிழ்ந்து மீளுகையில் ஓமதேனு முனிவனுக்குப் பலவளங்களையும் எளிதிற்சுரந்தளித்தலைக் கண்டதனுல் அதனிடம்ஆசைகொண்டு அப்பசுவை அம்முனிவனனுமதியில்லாமற் பலாத்காரமாகக் கவர்ந்துபோக,அதனை அறிந்த இப்பார்க்கவராமன் பெருங்கோபங்கொண்டு ஆயுதங்களுடனே சென்று கார்த்தவீரியார்ச்சுனனுடன் போர்செய்து அவனைப் பதினெரு அட்செளகினிசேனையுடனே நிலைகுலைத்து அவனது ஆயிரந்தோள்களையும் தலையையும் தனது கோடாலிப்படையால் வெட்டிவீழ்த்தி வெற்றிகொண்டானென்பது வரலாறு. பி - ம்:—[1]துற்றிய. [2]மறமா. [3]வயிரக்கிரி. [4]தெறும். (கஉ)

கங. நிருபர்க்கொரு பழிபற்றிட நிலமன்னவர் குலமுங்
கருவற்றிட மழுவாள்கொடு களைகட்டுயிர் கவரா
விருபத்தொரு படிகா[1]லெழு கடலொத்தலை [2]யெறியுங்
குருதிப் [3]புனலதனிற்புக முழுகித்தனி குடைவான்.

(இ - ள்.) நிருபர்க்கு - அரசர்களுக்கு, ஒரு பழி-ஒப்பற்ற பழியொன்று, பற்றிட - பொருந்துதலால், நிலம் மன்னவர் குலம்உம் - பூலோகத்திலுள்ள அரசர்களது கூட்டம்முழுவதும், கரு அற்றிட - வேரற்றொழியும்படி, இருபது ஒரு படி கால் - இருபத்தொருதலைமுறை, மழு வாள் கொடு - (தனது) மழுவாயுதத்தைக்கொண்டு, உயிர் கவரா - (அவ்வரசர்களது) உயிரை (உடம்பினின்று) எடுத்துவிட்டு [கொன்று என்றபடி], களை கட்டு - (இங்ஙனம் பூமியிலுள்ள) களைகளைப் பறித்து, எழு கடல் ஒத்து அலை எறியும் குருதி புனல்அதனில் - பொங்கியெழுகிற கடலைப் போன்று அலைவீசுகிற அவர்களிரத்தவெள்ளத்தில், புக - (தன்னுடம்பு) அமிழும்படி, முழுகி - மூழ்கி, தனி - தனியே, குடைவான் - நீராடுபவனும்,—(எ - று.)

பரசுராமன் கார்த்தவீரியார்ச்சுனனைக் கொன்றதும், அவனது குமாரர்கள் பழிக்குப்பழிவாங்கவேண்டுமென்று நிச்சயித்துப் பரசுராமனில்லாத சமயம்பார்த்துப் பர்ணசாலையினுட் சென்று அவனது தந்தையாரைத் தலைதுணித்துப் போக, பின்புவந்த பரசுராமன் அதனை யறிந்து பெருஞ்சினங்கொண்டு சென்று அவ்வருச்சுனகுமாரர்களையும் உலகத்திலுள்ள செருக்குக்கொண்ட அரசர்கள்பலரையும் அழித்தொழித்துச் சகலக்ஷத்திரியவமிசவிநாசகாரணனாயினா னென்பது வரலாறு.ஜமதக்கினிமுனிவனது தலையைக் கார்த்தவீரியார்ச்சுனகுமாரர் துணித்திட்டபோது அம்முனிவன் மனைவியான ரேணுகாதேவி இருபத்தொருமுறை தன்மார்பி லடித்துக்கொண்டு புலம்பினதுபற்றி அரசர்களை இருபத்தொருதலைமுறை பரசுராமன் ஒழித்திட்டா னென்றும், பரசுராமன் தான் முதலில் வீரவாதமாகப் பிரதிக்ஞை செய்தபடி அவ்வரசர்களது இரத்தவெள்ளத்தால் ஸ்யமந்தபஞ்சகமென்று ஐந்துதடாகங்களை யேற்படுத்தி அவற்றில் தந்தைக்குத் தருப்பணஞ்செய்திட்டா னென்றும் பாகவதத்திற் கூறியுள்ளது. ஒருபழி - நிரபராதியான முனிவனைக்கொன்றது.பயிர்வளர்ச்சிக்குத் தடையான களைகளைப் பறித்தல் நன்மையாமாறுபோல அறநெறியொழுக்கத்துக்குத் தடையாகுங் கொடியவரை யொழித்தல் நன்மையாமென்பார், 'களைகட்டு' என்றார். எழுகடல் - ஏழுகடலென்றும், காலெழுகட லென எடுத்து - காற்றினாற் கிளர்ந்தெழுங் கடலென்றும் உரைக்கலாம். பி -ம் :—[1]உமிழ். [2]பெருகும். [3]குரைபுனலில்.

கச. கமையொப்பதொர் தவமுஞ்சுடு கனலொப்பதொர் சினமுஞ்
சமையப்பெரி துடையா[1]னெதிர் தளர்வுற்றிடை தவிரு
மமையத்துயர் பறவைக்கினி தாரும்வகை சீறுச்
சிமயக்கிரி யுருவத்தனி வடிவாளிக டெரிவான.

(இ - ள்.) கமை - பொறுமை யென்னுஞ் சிறந்த குணத்தின் வடிவத்தையே, ஒப்பது - ஒத்திருப்பதான, ஓர் தவம்உம் - ஒப்பற்றதொருதவத்தையும், சுடு கனல் - இயற்கையிற் சுடுந்தன்மையுள்ள அக்கினியை, ஒப்பது - ஒத்துக்கொடியதாயிருப்பதான, ஓர் சினம்உம் - ஒப்பற்றதொரு கோபத்தையும், பெரிது - மிகுதியாக, சமைய-(தன்னிடத்தே) பொருந்த, உடையான் - உடையவனும், எதிர் தளர்வுற்று இடை தவிரும் அமையத்து - தன்னெதி

ரிலே தளர்ச்சியையடைந்து (முருகக்கடவுள்) நடுவிலே விட்டுநீங்குஞ் சமயத்திலே, சீரு - (தான்) சிறந்தங்கொண்டு, உயர் பறவைக்கு இனிது ஆறு ஆம் வகை - (வானத்தில்) உயரப் பறந்துசெல்லுகிற பட்சிகளுக்கு இனிமையானவழியாகும்படி, சிமயம் கிரி - சிகரத்தையுடைய (கிரௌஞ்ச) பருவதத்தை, உருவ - துளைத்து ஊடுருவிச்செல்லுமாறு, தனி வடி வாளிகள் - ஒப்பற்ற கூர்மையையுடைய அம்புகளை, தெரிவான் - ஆராய்ந்தெடுத்தெய்யுந்தன்மையுடையவனும்,—(எ - று.)

பரசுராமனும் சுப்பிரமணியனும் பரமசிவனிடம் வில்முதலிய ஆயுதப்பயிற்சியைச் செய்து முடித்தபின்பு, இவர்களுள் உயர்வுதாழ்வு அறியும் பொருட்டுச் சிவபிரான் உமாதேவியின் முன்னிலையிலே இவர்களுக்குக் கிரௌஞ்சமலையைச் சுட்டிக்காட்டி 'இதனைத் துளைத்திடுக' என்று நியமிக்க, முன்னர் முருகமூர்த்தி அம்புகளைத்தொடுத்து அதனைத் துளைக்கமாட்டாமற் போகவே, பரசுராமன் பராக்கிரமத்தோடு அம்பெய்து அதனைத் துளையிட்டுக்காட்ட, அதன்பின் முருகக்கடவுள் வேலாயுதத்தை வீசியெறிந்து அம்மலையைப் பிளந்திட்டன னென்றும்;மிகப்பெரிய கிரௌஞ்சமலைக்குத்தென் திசையிலுள்ள அன்னப்பறவைகள் அத்தேயங்களில் மழைபனிக்காலங்களில் தமக்கு இனிய வாசஸ்தானமான தாமரைமலர்கள் நிலைகுலையும்பொழுது அவ்விடங்களைவிட்டுப்புறப்பட்டு கிரௌஞ்சமலையிற் பரசுராமனாலுண்டாக்கப்பட்ட துவாரத்தின்வழியாய்ப் பறந்து சென்று இமயமலைப் பிராந்தத்திலுள்ளமானசசரசை யடைந்து சிலகாலம் அங்கு வாழ்ந்திருந்து பின்பு அவ்வழியாகவே மீண்டு இப்பால் வருகின்றன வென்றும் வரலாறு காண்க. இனி, (தோலாடையும் சடைமுடியும் முதலிய) தவவேஷத்தையுங் கடுங்கோபத்தையுமுடைய சிவபிரானது சந்நிதானத்திலே யென்றும், தவமுஞ் சினமுடைய குமாரக்கடவுளெதிரே யென்றும் உரைப்பாருமுளர். அமையம்-ஸமயமென்னும் வடமொழித்திரிபு; எதிர்தளர்வுற்று இடைதவிரும் அமையத்து என்பதற்கு - (பறவைகள்)நேரில்(வழியில்லாமற் குன்றுமுட்டி)இடையே தளர்ச்சியடைந்துநீங்கும் பொழுதி லென்று உரைப்பாருமுளர். பி-ம்:— [1]நடைதராலுற்றிடைதளரும், எதிர்கள்ளுற்றிடைதளரும். (கச)

கரு. சையம்புக நிமிரக்கட றழுவும்படி சமைவான்
[1]மையின்னுயர் மலைநூறிய மழுவாளவன் வந்தா
னையன்றனை யரிதிற்றரு மரசன்னது கண்டான்
வெய்யன்வர நிபமென்னைகொ லெனவெய்துற [2]மெல்லை.

(இ - ள்.) சையம் - (மேலோங்கியுயர்ந்துள்ள) மலைகள், புக - (நிலத்தினுள்ளே) அடங்கிச்செல்லவும், கடல் - கடல்கள், நிமிர - மேற் பொங்கியெழவும், தழுவும்படி - (அவற்றை) எளிதிற்செய்யுமாறு, சமைவான் - முயலவேண்டுமென்றால் முயலவல்லவனாகிய, மையின் உயர் மலை நூறிய மழுவாளவன் மேகங்களையுடைத்தாய் உயர்ந்துள்ள (கிரௌஞ்ச) கிரியை அழித்திட்ட கோடாலிப்படையையே தனக்கு நிரூபகமாகவுடைய பரசுராமன், வந்தான் - (இவர்களுக்கு எதிரில் அருகில்) வந்துசேர்ந்தான்; ஐயன்தனை

அரிதின் தரும் அரசன் - (யாவர்க்குந்) தலைவனான ஸ்ரீராமபிரானை அருமையாக(த் தனக்குமகனாகப்)பெற்ற தசரதசக்கரவர்த்தி, அது கண்டான் - அதனைப்பார்த்து, வெய்யன் வர நிமித்தம் என்னைகொல் என - கொடியவனான இவன் (இங்கு இப்பொழுது எதிரில்) வந்திடுதற்குக்காரணம் யாதோ என்று கருதி, வெய்துஉறும் எல்லை-கொடியவருத்தத்தை அடையுஞ் சமயத்தில்,—

'சையம்புகநிமிரக்கடல்தழுவும்படிசமைவன்ா' என்பதை "மண்ணுருத் தெடுப்பினுங் கடலைவாரினும், விண்ணுருத்திடிப்பினும் வேண்டிற் செய்கிற்பான்" என்றாற்போலக்கொள்க.பரசுராமன் சர்வக்ஷத்திரியசங்காரஞ்செய்து பூலோகம்முழுவதையுந் தன்னுடையதாக்கினபின்பு, அப்பூமிமுழுவதையுங் காசியபமுனிவனுக்குத் தானஞ்செய்துவிட, பின்னொருகாலத்தில் அம்முனிவன் பரசுராமனைக் கருவபங்கஞ்செய்யும்பொருட்டு 'எனக்குத் தானஞ்செய்திட்ட விடத்திலே நீ வசித்திருத்தல் தகுதியோ?' என்ன, உடனே பரசுராமன் நீங்கி மேல்கடலிற்சென்று வருணனைவேண்டி அவனனுமதியின்மேற் சையமலையினின்று தனதுகோடாலிப்படையை வலிமையோடு வீசியெறிந்து அதுசென்று விழுந்தஅவ்வளவு இடத்தைக் கடல் ஒதுங்கி அப்பாற்சென்று தனக்கென்று அளிக்கப் பெற்று அங்குத் தங்குபவனானா னென்னும் வரலாறு பற்றி, சையம்புக நிமிரக்கடல் தழுவும்படி சமைவான் என்பதற்கு -(தனக்கு முன்புவாஸஸ்தானமாயிருந்த) மகேந்திரமலையினின்று செல்லத் தென்கடலோடு மேல்கடல் அப்பாற்படப்போம்படி செய்பவனென்றும் உரைகூறலாம்; அவ்விடம், பரசுராமக்ஷேத்திர மெனப்படும். மழுவாளவன் - பெயர் மாத்திரை. மையின்னுயர் மலைநூறியஎன்பது, கீழ்க்கவியின் அனுவாதம்; இவனது ஆற்றலை நன்குவிளக்குதற்கு மீண்டுங் கூறியதென்க: இதனால், கூறியது கூறலென்னுங் குற்றமாகாமை காண்க. மையின்னுயர்மலை - மேகமண்டலத்தையளாவிய மலையுமாம். 'மழுஆளவன் என்றும் பிரிக்கலாம். பி - ம்:—[1]மையின்று. [2]எல்லை, வேலை.  (கஙி)

கசு.—சினந்துவரும்பரசுராமனை இராமன் 'இவன்யாரோ?' எனல்.

பொங்கும்படை யிரியக்கிளர் [1]புருவங்கடை நெரிய
[2]வெங்கண்பொறி சிதறக்கடி துருமேறென விடையாச்
சிங்கம்மென வுயர்தேர்வரு குமரன்னெதிர் சென்றா
னங்கண்[3]ணா சவனும்மிவ னாரோவெனு மளவில்.

(இ - ள்.) பொங்கும் - மகிழ்ந்துசெல்லுகின்ற, படை - (தசரதனது) சேனைகள், இரிய - பயந்தோடும்படி, (பரசுராமன்), கிளர் புருவம் கடை நெரிய - விளங்குகின்ற (தன்) புருவங்கள் நுனியிலே நெறிப்படையவும், வெம் கண் பொறி சிதற - பயங்கரமான கண்கள் நெருப்புப்பொறிகளைச் சிந்தவும், கடிது - விரைவாக, உருமஏறு என - பேரிடிபோல, விடையா - பெருங்கோபங்கொண்டு, சிங்கம் என உயர் தேர் வரு குமரன் எதிர் சென்றான் - சிங்கம்போலக் கம்பீரமாக உயர்ந்ததேரின்மீது வருகின்ற சக்கரவர்த்தி திருக்குமாரனான இராமபிரானது எதிரிலே போனான்; (அப்பொ

ழுது), அம் கண் அரசு அவன் உம்-அழகிய திருக்கண்களையுடைய யாவர்க்குந் தலைவனான ஸ்ரீராமனும், இவன் ஆர் ஓ எனும் அளவில் - இவன் யாவனோ வென்று நினைக்கின்றவளவிலே,— (எ - று.)—அரசன் அடிமேல் விழலும் என மேலைக்கவியோ டியையும்.

விடை ஆ என இருசொல்லாகக்கொண்டு, சிங்கத்தின்முன் விருஷபஞ் செல்லுவதையொத்து என்று முரைக்கலாம். சிங்கமென என்னுமுவமையைப் பரசுராமனுக்குக் கொள்ளலு மொன்று. புருவங் கடைநெரிதலும் கண் பொறிசிந்தலுங் கோபக்குறிப்பு. பி - ம்:—[1]புருவக்கடை. [2]எங்கும்.... இடியா. [3]அழகனும். (௧௬)

கஎ.—தசரதன் வணங்கிவேண்டவும்உபேட்சித்துப் பரசுராமன் இராமனெதிர்நின்று இவை கூறுதல்.

✓ அரசன்னவ னிடைவந்தினி தாராதனை புரிவான்
விரைசெய்முடி படிமேலுற வடிமேலுற [1]விழலுங்
கரைசென்றில னனையானெடு முடிவின்கனல் கால்வான்
முரசின்குரல் படவீரன தெதிர்நின்றிவை மொழிவான்.

(இ - ள்.) அரசன் - தசரதசக்கரவர்த்தி, அவன்இடை வந்து - அப் பரசுராமனிடத்திலேவந்து, இனிது ஆராதனை புரிவான்-இனிமையாக (அவனுக்கு)அதிதிபூசை செய்பவனாய், விரை செய் முடி படிமேல் உற-(பூமாலை) நறுமணம்வீசுதற்கிடமான (தனது) சிரசு பூமியிலே பொருந்தும்படி, அடிமேல்-(அப்பரசுராமனது) திருவடிகளிலே, உற விழலும் - நன்றாக விழுந்து தண்டன்ஸமர்ப்பித்த அளவிலும், அனையான் - அப்பரசுராமன், கரை சென்றிலன் - (தனது கோபமாகிய கடலுக்கு) ஒருகரையையடையாதவனாய் [சினஞ்சிறிதுந்தணியாதவனா யென்றபடி], நெடு முடிவின் கனல் கால்வான்- பெரிய கல்பாந்தகாலத்துத்தீயை வெளிவீசுபவனாய், முரசின் குரல் பட- முரசவாத்தியத்தினது முழக்கத்துக்கு ஒப்பானதொனி யுண்டாக, வீரனது எதிர் நின்று - சுத்தவீரனான ஸ்ரீராமனதுஎதிரில்நின்று, இவை மொழிவான் - இவ்வார்த்தைகளைக் கூறுபவனானான்; (எ-று.)—அதனை மேற்கவியிற்காண்க.

அரசன் அவன் என எடுத்து - அரசனாகிய அவன் என்றுங் கொள்ளலாம். கரைஎன்றதற்கு ஏற்ப, கோபக்கடலென வருவிக்கப்பட்டது. புரிவான் - செய்யும்பொருட்டென்றுமாம். பி - ம்:—[1]விழவும். (௧எ)

௧அ.—பரசுராமன் 'உன் தோள்வலியைச் சோதிக்கவந்தேன்' எனல்.

✓ இற்றோடிய சிலையின்றிற மறிவன்னினி யானுன்
பொற்றோள்வலி நிலைசோதனை புரிவானசை யுடையேன்
செற்றோடிய திரடோளுறு தினவுஞ்சிறி துடையேன்
மற்றோர்பொரு ளிலையிங்கிது வரவென்றன னுரவோன்.

(இ - ள்.) யான்—,—இற்று ஓடிய சிலையின் திறம் அறிவன் - (முன்னமே) முறிந்தொழிந்துள்ள (நீ முறித்த சிவனுடைய) வில்லின் தன்மையை அறிவேன்: இனி உன் பொன் தோள் வலி நிலை சோதனை புரிவான் நசை

உடையேன்- இப்பொழுது உனது பொன்னுபரணங்களை யணிந்த தோளி னது வலிமையின் தன்மையை ஆராய்ச்சிசெய்ய விருப்பையுடையேன்; செற்று ஓடிய திரள் தோள் உறு தினவுஉம் சிறிது உடையேன்-(அரசர்களை) அழித்துமேம்பட்ட திரண்டதோள்களிற் பொருந்தின தினவையுஞ் சிறிது உடையவனுயிருக்கிறேன்; இங்கு என் வரவு இது - இவ்விடம் எனது வரு கைக்குக்காரணம் (உன்தோள்வலியைப் பரீட்சித்து என்தோளின் தினவைச் சிறிது தீர்த்துக்கொள்ளவேண்டுமென்கிற) இதுவேயாம்; மற்றுஉம் ஓர் பொ ருள் இலை - வேறு ஒருகாரணமுமில்லை: (எ - று.)

உன் பொற்றோள் என்றது - உனதுதோள் கண்ணுக்கு அழகிதாகி ஒழுங்காக அமைந்ததுமாத்திரமேயன்றித் திறமையுடையதன்று என்றபடி. தினவு - போர்எங்கேனும் நேரிடுமோவென்று நாடுந்தன்மை. செற்றோடிய - பகைவர்களையழித்துப் பலகாலங்கழியப்பெற்ற எனறவாறுமாம். இற்றோ டியசிலையின்திற மறிவன் என்றதனுல், சிவவில்லைமுறித்துவிட்டேனென்று செருக்குக்கொள்ளாதே யென்றதாம். (க௮)

கக௯.—தசரதன் பரசுராமனிடம் அபயந்தரவேண்டுதல்.

அவனன்னது பகரும்மள வையின்மன்னவ [1]னயர்வான்
புவனம்முழு வதும்வென்றொரு முனிவற்கருள் புரிவாய்
சிவனும்[2]மய னரியும்மலர் சிறுமானிடர் பொருளோ
இவனும்மென துயிரும்முன தபயம்மினி யென்றான்.

(இ - ள்.) அவன் - அந்தப்பரசுராமன், அன்னது - கீழ்க்கூறிய அவ் வார்த்தையை, பகரும் அளவையின் - (ஸ்ரீராமனைநோக்கிச்) சொல்லுஞ் சம யத்தில்,—மன்னவன் - தசரதசக்கரவர்த்தி, அயர்வான் - மனந்தளர்பவ னுய், (பரசுராமனை நோக்கி), புவனம் முழுவதுஉம் - பூலோகம்முழுவதை யும், வென்று - (எல்லா அரசர்களையுமழித்துச்) சயித்து (த் தன்னதாக்கிக் கொண்டு), ஒரு முனிவற்கு - ஒப்பற்ற காசியபனென்னும் முனிவனுக்கு, அருள் புரிவாய் - கருணைகொண்டு தானஞ்செய்திட்டவனே! சிவன்உம் அயன் அரிஉம் - சிவன் பிரமன் விஷ்ணு என்னுந் திரிமூர்த்திகளும், அலர் - (உனக்கு ஒரு) பொருளல்லர்: (என்றால்),சிறு மானிடர் பொருள்ஓ - அற்பர் களாகிய மனிதர்கள் (உனக்கு) ஒருபொருளாகுவரோ? [ஆகாரென்றபடி]; இவன்உம் - இந்தராமசந்திரனும், எனது உயிர்உம் - என்னுடைய பிராண னும், இனி - இப்பொழுது,உனது அபயம் - உனது அடைக்கலப்பொருள்,' என்றான் - என்று துதித்துக்கூறினுன்; (எ - று.)

பூமிமுழுவதையுந் தானஞ்செய்திட்ட நீ எங்களுக்கு இந்த அபயப்பிர தானஞ்செயல் வேண்டு மென்பதாம். தனது உயிரினுஞ் சிறந்தவன் இராம னென்றும் தன்னுயிர் உளதாவது இராமன் உளனுனபின்பே யென்றும் கருத்துக்கள் விளங்க, 'எனதுயிரும்' என்பதற்கு முன் 'இவனும்' என் றான். அபயம் - வடசொல்; பயப்படாதேயென்றுசொல்லிக் காக்கத்தக்க வஸ்துஎன்று பொருள். இங்கே, திருமாலும் பரசுராமனுக்கு நேராகானெ

னக்கூறினது, தோத்திரமாதலின். சிறுமானிடர் - சின்னுட்பல்பிணிச் சிற்றறிவினர்; திரிமூர்த்திகளிற் சேர்ந்தவரல்லாத இவ்விளம்பிராயமுள்ள மக்கள். பி - ம்:—[1]அறைவான். [2]அரியயனும். (கசு)

**௨௦.—இதுமுதல் நான்குகவிகள் - இராமன்மீது சினங்கொண்டு அழியாதுவிட்டிடுமாறு பலபடியாகத் தசரதன் வேண்டுதல்.**

விளிவார்விளி வதுதீவினை விழைவாருழை யன்றே
களியா[1]லிவ னயர்கின்றன வுளவோகன லுமிழு
மொளிவாய்மழு வுடையாய்பொர [2]வுரியாரிடை யல்லா
[3]லெளியாரிடை வலியார்வலி யென்னாகுவ தென்றான்.

(இ - ள்.) 'கனல் உமிழும் - நெருப்பைச் சிதறுகிற, ஒளி வாய் மழு உடையாய் - ஒளியமைந்த மழுவென்னும் படையை யுடையவனே! விளிவார் விளிவது தீவினை விழைவாருழை அன்றே - (ஒருவர்)இறத்தற்குஉரியவராய் இறப்பது கொடியபாவச்செய்கைகளை விரும்பிச்செய்யுங் கொடியவர்களிட மன்றே? [நல்வினைகளையேவிரும்பிச்செய்பவனுன உன்னிடம் நாங்கள் கொலையுண்பதுண்டோ வென்றவாறு]; இவன் களியால் அயர்கின்றன உளஓ - இந்த இராமசந்திரன் (செல்வம் கல்வி குலம் அதிகாரம் முதலிய காரணங்களினுற் செருக்குக்கொண்டு) அக்களிப்பினுல் அறிவுசோர்ந்து (உன்திறத்திற்) செய்த அபசாரங்கள் (யாவையாயினும்) உள்ளனவோ? (சொல்); பொர உரியாரிடை அல்லால் எளியாரிடை வலியார் வலி என் ஆகுவது - போர்செய்தற்குஉரிய வலியவர்களிடத்திலேயல்லாமல் வலியற்ற எளியவர்களிடம் வலிமையுடையாரது வலிமை யாது பயன்படுவதாம்?' என்றான் - என்று (தசரதன் பரசுராமனைநோக்கிக்) கூறினன்; (எ - று.)

எளியவரை மெலியவர் எதிர்ப்பது பயனற்றதொழிலென்பதாம். இனி, முதலடிக்கு - (உன்னால்) இறக்கத்தக்கவர் இறப்பது (உனக்குக்) கொடுந் தொழிலை விரும்பிச்செய்தவருளன்றோ ஆகவேண்டுவது? எனவும் உரையிடலாம். அயர்கின்றன - உனக்குச்செய்யவேண்டும் உபசாரங்களில் மறந்திட்டனவென்றபடி. பி - ம்:—[1]இவணயர்கின்றவும். [2]உரியாருழை. [3]எளியாருழை. (௨௦)

௨௧. நனிமாதவ முடையாயிது பிடிநீயென நல்குந்
தனிநாயக முலகேழையு முடையாயிது தவிராய்
பனிவார்கடல் புடைசூழ்படி நரபாலரை [1]யருளா
முனிவாறிலை முனிகின்றது முறையோவென [2]மொழிவான்.

(இ - ள்.) 'நனி மா தவம் உடையாய் - மிகுதியாகப் பெருந்தவத்தை யுடையவனே! நீ இது பிடி - நீ இந்தப்பூமிதானமேற்றுக்கொள்', என - என்று கூறி, நல்கும் - (காசியபமுனிவனுக்குக்) கொடுத்திட்ட, உலகு ஏழைஉம் - ஏழுதீவுகளின்வடிவமாகவுள்ள பூலோகம்முழுவதையும், தனி நாயகம் உடையாய்-(ஒப்புயர்வற்றுத்) தனியே யரசாளுமுரிமையைப்பெற்றிருந்தவனே! இது தவிராய்-(எம்மைக்கோபித்து அழித்தலாகிய)இச்செய்கை

யை நீங்கியருள்வாய்; பனி வார் கடல் புடை சூழ் படி - குளிர்ச்சியாயுள்ள நீண்ட கடலினால் நாற்புறத்துஞ்சூழப்பட்டுள்ள பூலோகத்தில் வாழ்கிற, நரபாலரை - மனிதர்களைக் காப்பவரான (என்போன்ற சில) அரசர்களை, அருளா - கருணை செய்து, முனிவு ஆறினை - (முன்னே க்ஷத்திரியர்மீது கொண்ட) கோபந் தணிந்தாய்;(அப்படிப்பட்ட நீ),முனிகின்றது -(மறுபடி) கோபிக்கிற இது, முறைஒ - நீதியாமோ? என-என்று கூறி, மொழிவான்- (மற்றுஞ்சில வார்த்தைகளைப் பரசுராமனைநோக்கித் தசரதன்) கூறுபவனானான்; (எ - று.)—அதனை மேலிரண்டுகவிகளிற் காண்க.

'நனிமாதவமுடையாய்' என்றது - காசியபனைநோக்கிப் பரசுராமன் கூறிய விளி:பரசுராமனைநோக்கித் தசரதன் விளித்ததாகக்கொள்ளினுந் தவறாகாது. நரபாலரையருளா - அரசர்கள்விஷயத்தில் கருணைகொண்டுகொல்லாமல் என்றபடி. சகலபூமிதானஞ்செய்த வள்ளன்மையுடைய நீ எங்களுக்குப் பிராணப்பிரதானஞ் செய்யலாகாதோ எனவேண்டியபடியாம். பி-ம்:— [1]அருளான். [2]மொழியாய், மொழியா.　　(உக)

உஉ. புறனின்றவ ரிகழும்படி நடுவின்றலை புணராத்
திறனின்றுயர் வலி[1]யென்னதொ ரறனின்றரு செயலோ
வறனின்றத னிலைநின்றுயர் புகழொன்றுவ தன்றோ
மறனென்பது மறவோயிது வலியென்பது வலியோ.

(இ - ள்.) புறன் நின்றவர் - பக்கங்களிலே நின்றவர் (யாவரும்), இகழும்படி - இகழ்ச்சிசெய்யும்படி, நடுவின் தலை புணரா திறன் நின்று - நடுவு நிலைமையிலே பொருந்தாத வகையிலே நின்று, உயர் - உயர்ச்சிபெற்ற, வலி - வலிமை, என் - யாதுபயனுள்ளதாம்? [ஒருபயனுமில்லாததென்றபடி]; அது - அவ்வலிமை, ஒர் அறனின் தரு செயல்ஒ - தருமவழியாகவந்ததொருசெய்கையாகுமோ? [ஆகாதென்றபடி]; அறன் நின்றதன் நிலை நின்று - (உலகத்தில்) நிலைபெற்றதான தருமநெறியினது நிலைமையிலே பொருந்திநின்று, உயர் புகழ் ஒன்றுவது அன்றோ - சிறந்தகீர்த்தியைப் பொருந்துவதல்லவோ, மறன் என்பது - வலிமையென்று சிறப்பித்துக் கூறப்படுவது? மறவோய்-பலபராக்கிரமங்களையுடையவனே! இது-(சரணமடைகிற எம்மையழிக்கத்தொடங்குகிற தருமவழியல்லாத) இச்செய்கை, வலி என்பது வலிஒ - வலிமையென்று சிறப்பித்துக் கூறப்படுவதொரு வலிமையாகுமோ? [ஆகாதென்றபடி]; (எ - று.)

எத்துணைக்குற்றஞ் செய்தவராயினும் தம்மைச் சரணமடைவராயின் அவரைக் காத்தருளவேண்டும். இது, தருமசாஸ்திரத்திற் கூறப்பட்டுப்புகழையுண்டாக்குவதாகிப் பெரியோர்பலரது அனுஷ்டானத்திலும் வந்த நடுவு நிலைமையாம்; வீரமெனப்படுவது, அறத்திற்கு மாறுபடாமல் திறமையைக் காட்டிப் புகழைப்பெறுவதே: எதிர்த்துப்போர்செய்யமாட்டாது அஞ்சி யடைக்கலம்புகுந்தவரை ஆதரியாதுவிடுதல், வீரமெனப்படாமல் புகழையும் புண்ணியத்தையும் ஒழித்துப் பழியையும் பாவத்தையுமே பரவச்செய்யும்;

ஆதலால், உயிரளிக்கும்படி உன்னை வேண்டுகிற எம்மை உபேட்சிக்கலாகாது என்பதாம். பி - ம்:—[1]என்பதொரறிவின். (உஉ)

உங. சலத்தோடிமை யிலனென்மக னனையானுயிர் தபுமே
லுலத்தோடெதிர் தோளாயென துறவோடுபி [1]ருகுவே
னிலத்தோடுயர் [2]கதிவா [3]னுற நெடியாயுன தடியேன்
குலத்தோடற முடியேலிது குறைகொண்டனெ னென்றான்.

(இ - ள்.) என் மகன் - எனது புத்திரன், சலத்தோடு இயைவுஇலன்-(உன்னிடத்தில்) பகைமையோடு பொருந்தினவனல்லன்; அனையான் உயிர் தபும்எல் - (அவனது) உயிர் (உடம்பைவிட்டு) ஒழியுமாயின், உலத்தோடு எதிர் தோளாய் - திரண்ட கற்றூணோடு ஒத்த தோள்களையுடையவனே! (யான்), எனது உறவோடு - என்னுடைய சுற்றத்தாருடனும், நிலத்தோடு - (எனது) நாட்டாருடனும், உயர் கதி வான் உற - உயர்ந்த பதவியான விண்ணுலகத்தை யடையும்படி, உயிர் உகுவேன் - உயிரொழிவேன் [இறந்திடுவேன்]; நெடியாய் - பெருமைக்குணமுடையவனே! உனது அடியேன் - உன்னுடைய அடியவனாகிய யான், குலத்தோடு அற - இனத்தோடு ஒழிந்து போம்படி, முடியேல் - (எம்மை) அழித்திடாதே; இது குறை கொண்டனென் - இவ்வேண்டுகோளை உன்னிடஞ் செய்துகொண்டேன், என்றான் - என்று (தசரதன் பரசுராமனைநோக்கிக்) கூறினான்; (எ-று.)—சலத்தோடு இயைவிலன்-உனது கோபத்துக்கு ஏற்றதகுதி யில்லாதவ னென்றுமாம். பி - ம்:—[1]அகலா, அகல்வேன். [2]கதிர். [3]உறும். (உங)

உச.—தன் வேண்டுகோளைப் பொருள்படுத்தாது இராமனிடத்துப் பரசுராமன் செல்லக்கண்டு தசரதன் மூர்ச்சித்தல்.

என்னுவடி விழுவானையு மிகழாவெரி விழியாப்
பொன்னார் [1]கலை [2]யணிவானெதிர் புகுவானிலை யுணராத்
தன்னாலொரு செயலின்மையை நினையாவுயிர் [3]தளரா
மின்னாலயர் வுறும்வாளர வெனவெய்துற லுற்றான்.

(இ - ள்.) என்னா-என்றுசொல்லிப்பிரார்த்தித்து, அடி விழுவானைஉம்-(தன்) பாதங்களில் விழுந்து வணங்குகிற தசரதனையும், இகழா - ஒரு பொருளாகமதியாமல், எரி விழியா-நெருப்புப்புறப்பட விழித்துப்பார்த்து, பொன் ஆர் கலை அணிவான் எதிர்-பொன்னினாலாகிய ஆடையை [பீதாம்பரத்தை]த் தரித்துள்ளவனான ஸ்ரீராமனது எதிரிலே, புகுவான் - செல்பவனான பரசுராமனது, நிலை - கொடிய நிலைமையை, உணரா - (தசரதன்) கண்டறிந்து, தன்னால் ஒரு செயல் இன்மையை நினையா - (இதற்குஎதிராகத்) தன்னாற்செய்யத்தக்கதொருதொழிலில்லாமையை நினைத்து, உயிர் தளரா - (தனது) உயிர் தளர்ச்சியடையப்பெற்று, மின்னால் அயர்வுஉறும்வாள்அரவு என - (இடியுடனெழுகிற) மின்னலைநோக்கித் தளர்ச்சியடைகிற கொடிய நாகம்போல, வெய்து உறல் உற்றான் - கொடுந்துன்பத்தை யடைதலை [மூர்ச்சித்தலை]ப் பொருந்தினான்; (எ - று.)—பி - ம்:—[1]சிலை. [2]உரவோன். [3]அழியா. (உச)

உரு.—இராமனைக்கிட்டிய பரசுராமன் சிவதநுசின் வரலாற்றைக் கூறலுறுதல்.

மானம்முடை முடிமன்னவன் [1]மதி[2]சார்வுறன் மதியான்
றானந்நிலை [3]யுறுவானுறு வினையுண்டது தவிரா
[4]னானம்முடை யுமையண்ணலை யந்நா[5]ளுறு சிலைதா
னூனம்முள ததன்[6]மேனிலை [7]கேணீயென வுரைப்பான்.

(இ - ள்.) (பரசுராமன்), மானம்உடை முடி மன்னவன்-மானத்தையே முக்கியமாகக்கொண்ட கிரீடாதிபதியான தசரதன், மதி சோர்வு உறல்-(மூர்ச்சித்து) அறிவையிழத்தலை, மதியான் - கருத்திற்கொள்ளாதவனாய், அ நிலை தான் உறுவான் உறு வினை உண்டது தவிரான்-(மதிசோர்வுறுதலாகிய) அந்த நிலைமையைத் தான் (விரைவில்) அடைவதற்குப் பொருந்தின ஊழ்வினை (தன்னைச்) சூழ்ந்துகொண்டதை விலக்கும்வகையற்றவனாய், (ஸ்ரீராமனை நோக்கி), ஆனம் உடை உமை அண்ணலை-டக்கை என்னும் வாத்தியத்தை யுடைய உமாதேவிகொழுநனான சிவபிரானை, அ நாள் உறு-அக்காலத்திலே [முன்காலத்திலே] பொருந்தின, சிலை - வில்லானது, ஊனம் உளது-வலிக் குறை வுடையது: (அதனால் அதனை நீ முறித்திட்டாய்); அதன் மேல் நிலை-அவ்வில்லினது பழையவரலாற்றினிலைமையை, நீ கேள் என-நீகேட்பாயாக வென்று கூறி, உரைப்பான் - சொல்லுபவனானான்; (எ-று)—அதனை, மேல் ஆறுகவிகளிற் காண்க.

மானம் - பெருமைகுறைபடாமை. ஆனம் - ஆனகம் என்னும் வடமொழியின்விகாரம்; நானம் எனப் பதம் பிரித்தால் - கங்காநதி வெள்ள மென்று பொருள்படும். உண்டு அது எனப்பிரித்தும் உரைக்கலாம். பி-ம்:-[1]நிலை. [2]சோரவும். [3]அழிவான். [4]ஆனம்முறையிலன். [5]இறு. [6]மெய்ந்நிலை. [7]கேளென்றுரைபுரிவான். (உரு)

உசு.—இதுமுதல் ஆறுகவிகள் - சிவதநுசின் வரலாறு.

ஒருகால்வரு கதிராமென வொளிகால்வன வுலையா
வருகார்தவழ் வடமேருவின் வலிசால்வன வைய
மருகாவினை புரிவானுள னவனா[8]லமை வனதா
மிருகார்முக முளயாவையு மேலாதன மேனாள்.

(இ - ள்.) ஒருகால் வரு கதிர் ஆம் என - ஒற்றைச்சக்கரத்தையுடைய தேரின்மீது வருகிற சூரியமண்டலமாகும் இவை யென்றுசொல்லும்படி, ஒளி கால்வன = ஒளியை வீசுவனவும் உலையா - (எளிதில்) அழிக்கப்படாதனவும், வரு கார் தவழ் வட மேருவின் வலி சால்வன - (ஆகாயத்தே) சஞ்சரித்துவருகிற மேகங்கள் தவழ்தற்குஇடமான வடதிசைக்கணுள்ள மகாமேருமலையினது வலிமை பொருந்துவனவும், வையம் அருகா வினை புரிவான் உளன் அவனால் அமைவன நிலவுலகத்தார்க்கு நணுகிப்பார்ப்பதற்கும் முடியாத (தெய்வத்தன்மையுள்ள) சிற்பநிர்மாணத்தொழிலைச் செய்பவ

ஞன (தேவசிற்பியான)விச்சுவகருமனுற் செய்யப்பட்டமைந்தனவும்,யாவை உம் ஏலாதன - எவற்றையும் (தமக்கு உவமையாகப்) பொருந்தாதனவுமாகிய, இரு கார்முகம் - இரண்டுவிற்கள், மேல் நாள் - முன் காலத்தில், உள-உள்ளன; (எ - று)—அருகுதல்-குறைதலுமாம். மிகச்சிறந்த இரண்டு தநுசுகளை விசுவகர்மன் நிருமித்தன னென்றவாறு. பி-ம்:—[1]மேனாள். [2]அமைவனவாம். (உசு)

உஎ. ஒன்றினை யுமைபாள் கேள்வ னுவந்தனன் மற்றை யொன்றை
நின்றுல களந்த நேமி [1]நெடியவ னங்கை கொண்டா
னென்றிது வுணர்ந்த விண்ணோ ரிரண்டினும் [2]வன்மை யெய்தும்
வென்றிய தியாவ தென்று விரிஞ்சனை வினவ [3]வந்நாள்.

இதுவும், மேற்கவியும்-குளகம்.

(இ - ள்.) அவ்விரண்டுவிற்களுள்), ஒன்றினை - ஒருவில்லை, உமையாள் கேள்வன் - உமாபதியான உருத்திரமூர்த்தி, உவந்தனன் - விரும்பியெடுத்துக்கொண்டான்; மற்றை ஒன்றை - மற்றொருவில்லை, நின்று உலகு அளந்த நேமி நெடியவன் - திரிவிக்கிரமனாய்நின்று உலகங்களையளவிட்ட சக்கராயுதத்தை யேந்திய யாவரினும் பெரிய திருமால், அம் கை கொண்டான் - (தனது)அழகிய கையில் எடுத்துக்கொண்டான்; என்ற இது உணர்ந்த விண்ணோர் - என்ற இச்செய்தியை அறிந்த தேவர்கள், இரண்டின்உம் வன்மை எய்தும் வென்றியது யாவது என்று-இவ்விரண்டுவிற்களுள்ளும் வலிமையாலடையும்வெற்றியையுடையது எந்தவில்லாகு மென்று, விரிஞ்சனை வினவ - பிரமனைக்கேட்க, அந்நாள்-அக்காலத்தில்,—(எ-று.)—அவன் 'அமர்மூட்டி விட்டான்' என மேற்கவியோடியையும்.

அவ்விரண்டுவிற்களையும் விட்டுணுவும் சிவனும் கைக்கொண்டாராக, 'இவ்விருவிற்களுள் வலியதுஎது?' என்று வினவுகிறவியாசத்தால் தேவர்கள் அச்சமயத்து இவ்விருவரிலும் மேம்பட்டவர் யாவரென்று பிரமனை வினவினரென்க. பி - ம்:—[1]நெடியமானெறியில். [2]மேன்மை. [3]அன்னான். (உஎ)

உஅ. சீரிது தேவர் தங்கள் சிந்தனை யென்ப துன்னி
வேரியங் கமலத் தோனும் [1]விளைவதோர் [2]வினையந் தன்னால்
யாரினு முயர்ந்த மூலத் தொருவரா மிருவர் தம்மை
மூரிவெஞ் சிலைமே லிட்டு மொய்யமர் மூட்டி விட்டான்.

(இ - ள்.) வேரி அம் கமலத்தோன்உம் - பரிமளத்தையுடைய அழகிய தாமரைமலரில் வாழ்கின்ற பிரமதேவனும், தேவர்தங்கள் சிந்தனை சீரிது என்பது உன்னி - (இவ்வகையாராய்ச்சி செய்யக்கருதுகிற) தேவர்களது எண்ணம் சிறப்புடையதென்று நினைத்து, விளைவது ஓர் வினையந்தன்னால் - பயன்விளைதற்குஉரியதான உபாயத்தினால் [தந்திரமாக என்றபடி], யாரின்உம் உயர்ந்த மூலத்து ஒருவர் ஆம் இருவர்தம்மை - யாவரினுஞ்சிறந்த ஒப்பற்றமுதற்கடவுள ரென்னப்படுகிற அரிஅரனென்னும் இருமூர்த்திகளை, மூரி வெம் சிலை மேல் இட்டு - வலிமையையுடைய விற்களை வியாஜம்

வைத்து, மொய் அமர் மூட்டிவிட்டான் - (ஒருவரோடொருவர்) வலியபோரைச்செய்யுமாறு தூண்டிவிட்டான்;(எ-று.)—பி - ம்:—[1]இயைவது [2]வினயந்தன்னல். (௨௮)

௨௯. இருவரு மிரண்டு வில்லு [1]மேற்றின ருலக மேழும்
வெருவரத் திசைகள் பேர வெங்கனல் பொங்க மேன்மேற்
செருமலை கின்ற போழ்திற் றிரிபுர மெரித்த தேவன்
வரிசிலை யிற்ற தாக மற்றவன் முனிந்து மன்னோ.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) இருவர்உம் - அரி அரன் என்னும் இரண்டுபேரும், இரண்டு வில்உம் ஏற்றினர் - இரண்டுவிற்களையும் நாணேற்றி, உலகம் ஏழ்உம் வெருவர - ஈரேழுலகங்களும் அச்சமடையவும், திசைகள் பேர - திக்குகள் நிலைதடுமாறவும், வெம் கனல் பொங்க - வெவ்விய கோபாக்கினி மேலெழவும், மேல்மேல்-மேலேமேலே, செரு மலைகின்ற போழ்தில்-(ஒருவரோடொருவர்) போர்செய்கிற சமயத்திலே, திரிபுரம் எரித்த தேவன் வரி சிலை இற்றது ஆக - மூன்றுபட்டணங்களை யெரித்தொழித்த சிவபிரானது கட்டமைந்தவில் சிறிது முறிபட்டதாய்விட, மற்று - பின்பு, அவன் - அப்பரமசிவன், முனிந்து - கோபங்கொண்டு,—(எ - று )—'மீட்டும்போர்தொடங்கும்வேலை' என மேற்கவியி லியையும். பி - ம்:—[1]ஏந்தினர். (௨௯)

௩0. மீட்டும்போர் தொடங்கும் வேலை விண்ணவர் விலக்க வல்வி
னீட்டினன் றேவர் கோன்கை நெற்றியிற் கண்ணன் வெற்றி
காட்டிய கரிய மாலும் கார்முகந் தன்னைப் பாரி
லீட்டிய தவத்தின் மிக்க விரிசிகற் கீந்து போனான்.

(இ - ள்.) மீட்டும் போர் தொடங்கும் வேலை - (உருத்திரமூர்த்தி) மறுபடியும் போரைச் செய்யத்தொடங்குமளவில், விண்ணவர் - தேவர்கள், விலக்க - (போரை) விலக்கிட, நெற்றியில் கண்ணன் - நெற்றியில் (நெருப்பு) விழியையுடைய சிவன், வல் வில் - வலிய (அந்தத் தனது) வில்லை, தேவர்கோன் கை நீட்டினன் - தேவர்களுக்கரசனான இந்திரனது கையிலே கொடுத்திட்டான்; வெற்றி காட்டிய கரிய மால்உம் - வெற்றியை (இப்பொழுது) வெளிக்குக்காண்பித்த கருநிறமுடைய திருமாலும், கார்முகந்தன்னை-(தனது)வில்லை, பாரில் ஈட்டிய தவத்தின்மிக்க இரிசிகற்கு-நிலவுலகத்திலே (தான்)செய்துசேர்த்த தவத்தாற் சிறந்த இருசிகனென்னும் முனிவனுக்கு, ஈந்துபோனான் - கொடுத்துவிட்டுச் சென்றான்; (எ - று.)

'வல்வில்' என்றது, முன்னே வலிமையுடையதாயிருந்த வில் என்றபடி; அன்றி, அறுபதினாயிரம்பேர்கூடி அருமையாக எடுத்துவரத்தக்கதும் இராமபிரானொருவனையொழியப் பிறரால்எடுக்கவும் வளைக்கவும் முடியாததுமான வலிமையுடைய தென்றபடியுமாம்: இகழ்ச்சியாகவுமாம். இங்கே 'நெற்றியிற் கண்ணன்' என்றது, நெற்றியிலுள்ள நெருப்புக்கண்ணும அப்பொழுது பயனற்றதாயிற் றென்னுங் கருத்தை விளக்குதற்கு; இவ்வரலாறு கூறுகிற

விடத்தில் ஸ்ரீவால்மீகிராமாயணத்தில் "த்ரிலோசந:" என்று உபயோகித் திருப்பதும், ஸ்ரீகோவிந்தராஜரென்ற வ்யாக்யாதா அங்கு 'த்ருதீயலோசநமும் நிரர்த்தமாகச்செய்யப்பட்டது' என விசேடவுரை அருளிச்செய்திருத்தலுங் காண்க. அன்றியும், இந்தப்போரில் ஸ்ரீமகாவிஷ்ணுவினது உங்காரத்தால் சிவனும் சிவவில்லும் பங்கஞ்செய்யப்பட்டனவென்று ஸ்ரீராமாயணத்திற் கூறப்பட்டுள்ள கருத்தை விளக்குவார், 'வெற்றிகாட்டிய கரிய மால்' என்றாரென உணர்க. இதனால், கீழ்க்கவியில் 'வரிசிலையிற்றதாக மற்றவன் முனிந்து' என்பதற்கு - மற்றவன்முனிந்து வரிசிலையிற்றதாக என மாற்றி - மற்றையவனுகிய திருமால் கோபித்தலாற் சிவனதுவில்முறிபடவென வுரைத்தல் முதனூலோடு பொருந்தும். திருமால் மேம்பட்டவனென்று விளங்கியதனால் மீண்டும்போரைத்தொடங்கவொட்டாது விண்ணோர் விலக்கினர்.

கீழ்க்கார்முகப்படலத்தில், சிவபிரான் இவ்வில்லையெடுத்துக்கொண்டு தக்கன்வேள்வியைச்சார்ந்து அதனை அழித்தபின்பு ஜனககுலத்து த் தேவராதனென்னும் அரசனிடம் வில்லைவைத்திட்டானெனக் கூறியதனோடு இதுபொருந்துமாறு என்னையெனின்,—விசுவகருமனால் நிருமிக்கப்பட்ட வில்லிரண்டனுள் ஒன்றைத் திருமால் திருவுள்ளமுவந்து எடுத்துக்கொள்ள, மற்றொன்றைத் தேவர்வேண்டுகோளாற் சிவபிரான் எடுத்துச்சென்று அதனுதவியால் திரிபுரசங்காரஞ்செய்திட்டு அதன்பின் தக்ஷயாகவிநாசமுஞ்செய்துபின்னர்த் தக்கன் வேள்விமுடிவில் தேவர்கருத்தாற் பிரமன் தூண்டிவிடச் சிவவிஷ்ணுக்களது யுத்தம் நடந்ததென்றும்,அதனிறுதியில் வில்லைச் சிவன் இந்திரன்மூலமாகச் சனககுலத்தரசனிடம் வைத்திட்டானென்றும் உய்த்துணர்ந்துகொள்க. தேவாதிதேவனான திருமால் இங்ஙனந் தேவர்கள்தூண்டப் போர்செய்திட்டது இச்சாமாத்திரத்தாற் செய்ததொரு திருவிளையாடலாமெனக் காண்க. இவ்வரலாற்றால், சிவவில்லைக்காட்டிலும் விஷ்ணுவில்லுக்கும் சிவனைக்காட்டிலும் விஷ்ணுவுக்கும் உள்ளஏற்றம் பரசுராமனால் விளக்கிக்கூறப்பட்டவாறு நோக்குக. இருசிகன்-பரசுராமனது தந்தையான ஜமதக்கினிமுனிவனதுபிதா; 'பாரிலீட்டிய தவத்தான் மிக்க' என்னும் அடைமொழியை இரிசிகனுக்குக் கொடுத்தது, விஷ்ணுவினால் தன்னிடம் வில்லை வைத்திடுதற்கு ஏற்ற தவமுடையானிவனென்றற்கு. (௩௦)

௩க. இரிசிக னெந்தைக் கீய வெந்தையு மெனக்குத் தந்த
வரிசிலை [1]யிது நீ நொய்தின் வாங்குதி யாயின் [2]மைந்த
குரிசில்க ணின்னோ டொப்பா ரில்லையான் குறித்த போரும்
புரிகிலே னின்னோ டின்னம் புகல்வது கேட்டி [3]யென்றான்.

(இ - ள்.) இரிசிகன் - அந்த ருசீகமுனிவன், எந்தைக்கு - எனதுதந்தையான ஜமதக்கினிமகாமுனிவனுக்கு, ஈய - கொடுக்க, எந்தைஉம் - என் தந்தையான அந்தச்சமதக்கினியும், எனக்கு தந்த - எனக்குக்கொடுத்தருளிய; வரி சிலை - கட்டமைந்த வில்லாகிய, இது - இதனை, மைந்த - சிறுவனே! நீ நொய்தின் வாங்குதி ஆயின் - எளிதில்எடுத்துவளைப்பாயாயின், நின்னொடு ஒப்பார் குரிசில்கள் இல்லை - உன்னுடன்ஒப்பவரான அரசர் (உல

கத்தில் எவரும்) இலர்; யான் குறித்த போர்உம் புரிகிலென் - நான் (உன்னுடன் இப்பொழுது செய்வதாக) நினைத்துள்ள போரையுஞ் செய்யாதொழிவேன்; நின்னோடு இன்னம் புகல்வது கேட்டி - உன்னுடன் இன்னமும் (நான்) சொல்வதை (நீ கருத்தோடு) கேட்பாயாக, என்றான் - என்று (ரகுராமனை நோக்கிப் பிருகுராமன் பின்னும்) கூறலானான்; (எ - று.)— அதனை அடுத்த மூன்றுகவிகளிற் காண்க. பி - ம்:—[1]இதனைவல்லே. [2]மன்னகுரிசில்கள், மன்னர்குரிசிலே, மைந்தகுரிசிலும். [3]போலாம். (௩௧)

௩௨.—இதுமுதல் மூன்று கவிகள் குளகம்: பரசுராமன் தான் வந்த காரணத்தைக் கூறுதலைத் தெரிவிக்கும்.

ஊனவில் லிறுத்த மொய்ம்பை [1]நோக்குவ தூக்க மன்றால்
மானவ மற்றுங் கேளாய் வழிப்பகை [2]யுடைய தும்பா
லீனமி லெந்தை சீற்ற நீக்கினா னென்ன முன்னோர்
தானவ னனைய மன்னன் கொல்லயான் சலித்து மன்னோ.

(இ - ள்.) ஊனம் வில் இறுத்த மொய்ம்பை நோக்குவது ஊக்கம் அன்று - (முன்னமே) பழுதுபட்டுக்கிடந்ததொரு சிவவில்லை (நீ) முறித்திட்ட வலிமையை(ப் பெரியதாகக்) கருதிமதிப்பது சிறப்பாகாது; மானவ - (வைவச்சுவத) மனுவினது குலத்தவனே! மற்றுஉம் கேளாய் - (இன்னமும் நான் சொல்வதைக்) கேட்பாயாக; உம்பால் வழி பகை உடையது - (க்ஷத்திரியர்களாகிய) உங்களிடத்து (எனக்குப்) பழமையாகப் பகைமை உள்ளது; (ஏனெனில்), முன் - முன்னொருகாலத்திலே, ஓர் தானவன் அனைய மன்னன் - தனுகுலத்தவனை அசுரனை யொத்த [கொடுந்தன்மையையுடைய] ஓரரசன், ஈனம் இல் எந்தை சீற்றம் நீக்கினான் என்ன - குற்றமற்ற எனதுதந்தை 'கோபத்தையொழித்தவன்' என்றுகருதியுங்கூறியும், கொல்ல - (என்தந்தையைக்) கொன்றுவிட, யான் - நான், சலித்து - கோபங்கொண்டு, (எ - று.)—'வேந்தையெல்லாங் களைகட்டு' என மேற்கவியோடு தொடரும்.

இனி, மானவஎன்பதற்கு - மனிதர்தலைவனே! என்றும், யானென்னும் அபிமானமுடையானே! என்றும் உரைகொள்ளலாம். ஈனமிலெந்தை - நிரபராதியான ஜமதக்கினி. மன்னன் - கார்த்தவீரியார்ச்சுன னென்றுவது, அவன்மக்களுளொருவ னென்றுவது கொள்க. கார்த்தவீரியனே ஜமதக்கினியைக் கொன்றதாகவுஞ் சில நூல் கூறும். சலித்து - பிதிருசோகத்தால் மனம் நிலைகலங்கி வருந்தி யெனவுமாம். பி-ம்:—[1]நோக்குமீது. [2]உடையன்.

௩௩. மூவெழு முறைமை பாரின் முடியுடை வேந்தை யெல்லா
[1]மேவெழு மழுவின் வாயால் வேரறக் [2]களைகட் டன்றோர்
தூவெழு குருதி வெள்ளத் துறையிடை முறையி னெந்தைக்
காவன கடன்க ணேர்ந்தே னருஞ்சின மடங்கிப் போந்தேன்.

(இ - ள்) மூ எழு முறைமை - இருபத்தொருதலைமுறை, பாரில் முடி உடை வேந்தை எல்லாம் - நிலவுலகத்திலுள்ள கிரீடத்தையுடைய அரசர்

களையெல்லாம், மேவு எழு மழுவின் வாயால் - விரும்பியெழுகிற கோடாலி யென்னும் படையினது கூர்நுனியினால், வேர் அற - வேரோடெஅற்றுப்போம் படி, களை கட்டு - (பயிர்க்குக்களைபறித்தல்போலத் துஷ்ட)நிக்கிரகஞ்செய்து, அன்னார் - அவ்வரசர்களது, தூ எழு குருதி வெள்ளம் துறையிடை - தசையினின்று பெருகுகின்ற இரத்தநீர்வெள்ளத்தினாலான நீர்த்துறையிலே, முறையின் - (வேத) விதிப்படி, எந்தைக்கு ஆவன கடன்கள் நேர்ந்தேன்-எனதுதந்தைக்குச் செய்யவேண்டுவனவான நீர்க்கடன்களைச்செய்து முடித்தேன்; (அதுமுதல்), அரு சினம் அடக்கி போந்தேன்-(தடுப்பதற்கு) அரிய(எனது) கோபத்தை அடக்கிவந்துள்ளேன்; (எ-று.)—வேரற-இஷ்ட ஜநபந்துவர்க்கமெல்லாம் அழிய. கடன்கள் - ஜலதருப்பணங்கள். குருதி வெள்ளத்துறை-சியமந்தபஞ்சகம். பி - ம்:—[1]வேவெழு. [2]களைந்திட்டு. ()

௬௪. உலகெலா முனிவற் கீந்தே னுறுபகை யொடுக்கிப் போந்தே
னலகின்மா தவங்கள் [1]செய்தோ ரருவரை யிருந்தே னாண்டைச்
சிலையைநீ யிறுத்த வோசை செவியுறச் சீறி வந்தேன்
மலைகுவென் வல்லை யாயின் [2]வாங்குதி தனுவை யென்றான்.

(இ - ள்.) உலகு எலாம் - (என்னால் வெல்லப்பட்ட) பூலோகம் முழுவதையும், முனிவற்கு - காசியபமகாமுனிவனுக்கு, ஈந்தேன் - தானஞ்செய்தேன்; உறு பகை ஒடுக்கி போந்தேன் - மிக்கபகைவர்களையெல்லாம் ஒடுங்கச்செய்துவந்தேன்; அலகு இல் மா தவங்கள் செய்து - அளவில்லாத பெரிய தவங்களை இயற்றியவண்ணம், ஓர் அரு வரை இருந்தேன் - அருமையான மகேந்திரமலையிலே தங்கியிருந்தேன்; நீ சிலையை இறுத்த ஓசை - நீ சிவவில்லை முறித்திட்டதனாலாகிய ஒலி, ஆண்டை - அவ்விடத்து, செவி உற - காதுகளிலேபட [கேட்டதனால்], சீறி வந்தேன் - கோபங்கொண்டு இங்குவந்தேன்; வல்லை ஆயின்-(நீ) வலிமையுடையையாவையானால், மலைகுவென் - (உன்னுடன்) போர்செய்வேன்; இ தனுவை வாங்குதி - இந்த வில்லை வளைத்திடு, என்றான் - என்று (பரசுராமன் ஸ்ரீராமனைநோக்கிக்) கூறினான்; (எ - று.)

உறுபகையொடுக்கிப்போந்தேன் என்பதற்கு-(காமம் கோபம் லோபம் மோகம் மதம் மாற்சரியம் என்னும்) மிக்க பெரிய உட்பகையாறையும் அடங்கச்செய்துவந்தேன் என்றும் உரைக்கலாம்; இவையாறும் அரிஷட்வர்க்கமெனப்படும். ஆண்டை - அம்மிதிலையில்என்று உரைப்பாருமுளர். பி-ம்:— [1]செய்தென். [2]வாங்கிடித். (௬௪)

௬௫.—ஸ்ரீராமன் 'வில்லைத்தருக' என்றுகூறிவாங்கிவளைத்து, பரசுராமனைநோக்கிச் சொல்லுதல்.

என்றன னென்ன நின்ற விராமனு முறுவ லெய்தி
நன்றொளிர் முகத்த னாகி நாரணன் வலியி னாண்ட
வென்றிவிற் றருகவென்னக் கொடுத்தனன் வீரன் [1]கொண்டான்
றுன்றிருஞ் சடையோ னஞ்சத் தோளுற வாங்கிச் சொல்லும்.

(இ - ள்.) என்றனன் - என்று (இவ்வாறுபரசுராமன்) கூறினன்; என்ன-என்றுசொல்ல, நின்ற இராமன்உம் - (எதிரில்) நின்ற ஸ்ரீராமனும், முறுவல் எய்தி - புன்சிரிப்பையடைந்து, நன்று ஒளிர் முகத்தன் ஆகி - நன்றாக விளங்குகின்ற திருமுகமண்டலத்தை யுடையவனாய், நாரணன் வலியின் ஆண்ட வென்றி வில் தருக என்ன - 'திருமால் வலிமையினால்எடுத்துப்பயின்ற வெற்றியைத்தருவதான அவ்வில்லை (என்னிடம் இப்பொழுது) கொடுத்திடுவாய்' என்றுகூற, கொடுத்தனன்-(பரசுராமன்)கொடுத்திட்டான்; வீரன்-சுத்தவீரனான ஸ்ரீராமன்,-கொண்டான்-(அவ்வில்லை) வாங்கிக்(கையிற்) கொண்டவனாகி, துன்று இரு சடையோன் அஞ்ச - நெருங்கிய பெரிய சடையினையுடைய அப்பரசுராமன் அஞ்சும்படி, தோள் உற வாங்கி-(அத்தனுசைத்தன்) தோள்வலிமைபொருந்த வளைத்து, சொல்லும்-(பரசுராமனைநோக்கிச் சிலவார்த்தை) சொல்பவனானான்; (எ - று.)—அதனை மேற் காண்க.

இங்கே, முறுவல் - வீரத்தெழுந்த வெகுளிநகை; மனத்துள்ள தைரியவொளி முகத்தின் மூலமாக வெளிவிளங்குவ தென்பார், 'நன்றொளிர் முகத்தனாகி' என்றார். வென்றி வில் - சிவவில்லைக்காட்டிலும் மேம்பட்ட வில்; 'நாரணன்வலியினாண்ட வென்றிவில் தருக'என்றதனால்,'திருமாலுக்கு உரிய வில் இதுகாறும் அவனதுஆவேசாவதாரமானஉன்னிடத்திருந்தது, இனி அதனை அவனது அமிசாவதாரமான என்னிடந் தந்துவிடு' என்றும்;'அவ்வில் திருமாலிடம் இருக்கையில் சிவனையும் சிவவில்லையும் ஜயித்தது; உன்னிடத்திருக்கையில் பலஅரசர்களையும் அவர்கள்படைக்கலங்களையும் ஜயித்திட்டது; அதை என்னிடத்துங் கொடுத்திடுவையானால், அது உடனே உன்னையும் உனது ஆற்றலையும் வென்றுவிடும்' என்றும் கூறியவாறும். வென்றிவில்-தன்னைக்கையிலெடுத்துப்பிடிப்பார்யாவராயினும் அவர்க்கு வெற்றியைவிளைக்குஞ்சிறப்பையுடைய தனுசென்க. இங்குப் பரசுராமனை 'துன்றிருஞ் சடையோன்' என்று குறித்ததனால், அவ்வில் முன் திருமால்கையிலிருக்கையிலே சடைமுடியையுடைய சிவபிரான் அதற்கு அஞ்சினதுபோல, இப்பொழுது ஸ்ரீராமன்கையிலிருக்கையில் அச்சிவனது மாணாக்கனாகிய சடைமுடியுடையபரசுராமபிரான்அஞ்சினனென்பதுதோன்றும். பி-ம்:—¹கொண்டத்.

௩௬.—ஸ்ரீராமன் 'இவ்வில்லிற்குஇலக்கமாவதுயாது?' என்று வினவுதல்.

பூதலத் தரசை யெல்லாம் பொன்றுவித் தனையென் றாலும்
வேதவித் தாய மேலோன் மைந்தனீ விரதம் பூண்டா
யாதலிற் கொல்ல லாகா தம்பிது பிழைப்ப தன்றால்
யாதிதற் கிலக்க மாவ தியம்புதி விரைவி னென்றான்.

(இ - ள்.) பூதலத்து அரசை எல்லாம் - பூலோகத்திலுள்ள அரசகுலத்தார் யாவரையும், நீ பொன்றுவித்தனை என்றால்உம் - நீ (முன்பு) அழியச்செய்திட்டாயாயினும், வேதவித்து ஆய மேலோன் மைந்தன் - வேதங்களைஅறிந்திட்டவனான மேன்மையையுடைய ஜமதக்கினிமகாமுனிவனது புத்திரன்; (அன்றியும்), விரதம் பூண்டாய் - தவவேஷத்தை மேற்கொண்டுள்ளாய்; ஆதலின் - ஆகையால், கொல்லல் ஆகாது- (உன்னைக்) கொல்லு

தல் கூடாது; (ஆயினும்), அம்பு இது பிழைப்பது அன்று-(என்கைவில்லில் வைக்கப்பட்ட) இவ்வம்பு (கொடுமைவிளைக்காமல்) தவறுவதன்று; ஆல் - ஆதலால், இதற்கு இலக்கம் ஆவது யாது - இவ்வம்புக்கு (இப்பொழுது) குறிப்பொருளாவது எது? விரைவின் இயம்புதி - துரிதத்திற் சொல்லுவாய்,' என்றான்-என்று (தசரதராமன் பரசுராமனைநோக்கி)வினவினான்;(எ-று.)

க்ஷத்திரியவமிசத்தைப் பெரும்பான்மையும் வேரறுத்திட்ட உன்னை வதைத்துப் பழிக்குப்பழிவாங்கவேண்டுவ தாயினும், நீ வேதியன்மகனுந் தவவொழுக்கமுடையனு மாதல்பற்றி உன்னைஇப்பொழுதுஉயிரொழியாது விடக்கருதுகிறே னென்றான். வேதவித் - வடசொல். இவனை வேதவித்தென்றது, வேதவித்தாய மேலோன் மைந்தன் என்றது - அந்தண குலத்துதித்த இவனதுஒழுக்கம் வேதவிதிக்குச் சிறிதும் ஒத்ததன் றென்னுங் கருத்தால். 'மேலோன்மைந்தன்' என்றது - முதன்மையான பிராமணஜாதியிற் பிறந்து அதற்குக்கீழ்ப்பட்ட க்ஷத்திரியஜாதியாசாரத்தைக் கொண்டவனாதலால். விரைவின்-எனதுஅம்பு வில்லினின்றும் வெளிப்பட்டு உனக்கு அபாயத்தை உண்டாக்குவதற்குமுன்னமேயென்றபடி. (௩௯)

௩௭.—இதுவும் மேற்கவியும்-பாசுராமன் ஸ்ரீராமனைத் துதிப்பன.

நீதியாய் முனிந்திடே லீங்கி யாவர்க்கு
மாதியா னறிந்தனெ னலங்க னேமியாய்
வேதியா விறுவதே யன்றி வெண்மதிப்
பாதியான் பிடித்தவில் பற்றப் போதுமோ.

(இ - ள்.) நீதியாய் - நியாயவழியையுடையவனே! முனிந்திடேல் - (நீ என்னிடத்தில்) கோபங்கொள்ளாதே; நீ இங்கு யாவர்க்குஉம் ஆதி - நீ இவ்வுலகங்களிலெல்லோர்க்கும் முதல்வனாவாய்; யான் அறிந்தனென் - நான் (அவ்வுண்மையை இப்பொழுதே பிரதியட்சமாக அனுபவித்து) அறிந்தேன்; அலங்கல் நேமியாய் - திருத்துழாய்மாலையையணியுஞ் சக்கராயுதத்தைக்கொண்ட திருமாலினமிசமானவனே! வெள் மதி பாதியான் பிடித்த வில் - வெண்மையான சந்திரனது துண்டத்தைத் தரித்துள்ள பரமசிவன் (முன்பு) கையிற்பற்றிய வில்லானது, வேதியா இறுவதுஏ அன்றி - வேறு வேறாய் முறிபடுவதேயல்லாமல், பற்ற போதும் ஓ - (பேராற்றலுடைய உனதுகையிற்) பிடித்தற்கும் போதுவதோ? [அன்றென்றபடி]; (எ - று.)

நீதி ஆய் - நியாயவழியைஆராய்ந்தறி என்றும், ஆதியானென ஒரு சொல்லாக்கொண்டு - முதற்றலைவ னென்றும் உரைத்தலு மொன்று. வேதியா - பேதியா; பேதம் என்னும் வடசொல்லடியாப்பிறந்த உடன்பாட்டிறந்தகாலவினையெச்சம். இனி, வேதியா - வேதங்களாற்புகழப்படுபவனே! என உரைத்து விளியாக்கினுமமையும். திருமாலினது அமிசமல்லாத மற்றவரால் இதனைக் கையிற் பிடித்தல் முடியுமோ? என்று கூற்றடிக்குப் பொருள் காணலாம். (௩௭)

௩௮. பொன்னுடை வனைகழற் பொலங்கொ [1]டாளினும்
மின்னுடை நேமியா னுதன் [2]மெய்ம்மையா

மெ[?]ன்னுள தூலகினுக் கிடுக்கண் யான்றந்த
வுன்னுடை வில்லுமுன னுரததக் [3]கீடன்றால்.

(இ - ள்.) பொன் உடை வினை கழல் - பொன்னாற்செய்யப்பட்டுள்ள அலங்கரிக்குந்தன்மையுடைய வீரக்கழலையும், பொலம்-அழகையும், கொள்-கொண்ட, தாளினாய் - பாதங்களையுடையவனே! (நீ), மின் உடை நேமி யான் ஆதல் - ஒளியையுடைய சக்கராயுதத்தைக்கொண்ட திருமாலாகவே யிருப்பது, மெய்ம்மை - உண்மையாம்; ஆல் - ஆதலால், உலகினுக்கு-(உன்னைக்காவலனாகப்பெற்ற இந்த) உலகததுக்கு, இடுக்கண் - (அரக்கர் முதலியோரால் உளதாகுந்)துன்பம், என் உளது - (இனி) யாதுஉள்ளது? [ஒன்றுமில்லை]; யான் தந்த உன்னுடை வில்உம் - நானதந்த உனதுவில்லும், உன் உரத்துக்கு ஈடு அன்று - உனதுவலிமைக்கு ஏற்றதாகாது; (எ - று.)

பொன்உடை - பொன்னைத் தனக்கு முதற்காரணமாகவுடைய என்றபடி. பொலம் கொள் - பொன்னாலாகிய பிறஆபரணங்களையுங்கொண்ட என்றுமாம். உன்னுடைய வில் - திருமாலினது தனுசுஎன்றபடி; இப்பொழுது உன்னுடையதாகிவிட்ட வில் எனினுமாம். மின் உடை நேமி என்பதற்கு - பிறஒளிகளையெல்லாம் (தன்னொளியால்) அழிக்குந்தன்மையுள்ள திருவாழி யென்னலுமாம். பி - ம்:—[1]தோளினாய், தாரினாய். [2]மெய்ம்மையே. [3]என்றான். (௩௮)

௩௯.—பரசுராமனது தபோபலம் இராமன்வளைத்தவில்லின் அம்புக்கு இலக்காதல்.

எய்தவம் பிடைபழு தெய்தி டாமலென்
செய்தவ மியாவையுஞ் சிதைக்க வே[1]யெனக்
[2]கையவ ணெகிழ்தலுங் கணையுஞ் சென்றவன்
மையறு தவமெலாம் வாரி மீண்டதே.

(இ - ள்.) 'எய்த அம்பு - (உன்னாலிப்பொழுது) எய்யப்படுகிற பாணமானது. இடை பழுது எய்திடாமல் - இடையிலே பழுதுபடாதபடி, என் செய் தவம் யாவைஉம் சிதைக்க - யான்செய்துள்ள தவங்களெல்லாவற்றையும் அழிக்கக்கடவது,' என - என்று (பரசுராமன்) கூற, அவண் கை நெகிழ்தலும் - அப்பொழுது (ஸ்ரீராமனது) கை சிறிது தளர்ந்தவளவிலே, கணை உம் - அம்பும், சென்று - (வில்லினின்றுவிரைந்து) போய், அவன் மை அறு தவம் எலாம் வாரி - அப்பரசுராமனது குற்றமற்ற தவம் முழுவதையும் வாரிக்கவர்ந்துகொண்டு, மீண்டது—; (எ - று.)

இராமபிரான் வில்லைவளைத்ததும் பரசுராமனைநோக்கி, 'உனதுதாள்களுக்குஉள்ள நடக்கும்வல்லமையையோ, ஒப்பில்லாத் தவத்தினாற்சம்பாதித்துள்ள நல்லுலகங்களையோ, இவற்றில் எதை இதற்கு இலக்குஆக்குவது? உனக்குவிருப்பமானதைச் சொல்' என்ன, பரசுராமன் 'நான் மனோவேகமாய் மகேந்திரமலைக்குச் செல்லவேண்டியிருத்தலால், என்தவத்தினாற் சமபாதித்த உலகங்களையே இலக்குஆக்குக' என்றுகேட்டுக்கொள்ள, அங்

யனமே இராமன் தன்னம்புக்குப்பரசுராமனது தவத்தை இலக்காக்கின னென்று முதனூலாலுணர்க. ஆகவே, இங்குத் தவம் என்றது-நல்லுலகங்களைப் பெறுவதற்குக்காரணமாகிய தவப்பயனை. இதனால், அருவத்தையும் இலக்காக்கொள்ளவல்லது இராமபாணமென்று அறிக. பி - ம்:—[1]என. [2]கையவணெகிழ்த்தலும், கையவணெகிழ்த்தனன். (௩௯)

௪௰.—பரசுராமன் விடைபெற்றுச் செல்லுதல்.

எண்ணிய பொருளெலா மினிது முற்றுக
மண்ணிய மணிநிற வண்ண வண்டுழாய்க்
கண்ணிய யாவர்க்குங் களைக ணாகிய
புண்ணிய விடையெனத் தொழுது போயினான்.

(இ - ள்.) (அப்பொழுது பரசுராமன் ஸ்ரீராமனைநோக்கி), 'மண்ணிய மணி நிற வண்ண - சுத்தஞ்செய்யப்பட்ட நீலமணியினது நிறம்போன்ற திருமேனிநிறத்தையுடையவனே! வண் துழாய் கண்ணிய - அழகிய திருத்துழாய்மாலையை யுடையவனே! யாவர்க்குஉம் களை கண் ஆகிய புண்ணிய - எல்லோர்க்கும் புகலிடமாகிற பரிசுத்தகுணமுடையவனே! எண்ணிய பொருள் எலாம் இனிது முற்றுக - (நீ) நினைத்தகருமங்கள்யாவும் இனிமையாக எளிதில்முடியக்கடவன; விடை - (எனக்கு இப்பொழுது) விடையளிப்பாயாக,' என - என்று கூறி, தொழுது-வணங்கி, போயினான்—; (எ - று.)— புண்ணிய - நல்வினையின்வடிவுபோன்றவனே! என்றுமாம். (௪௰)

௪௧.—ஸ்ரீராமன் தசரதனைச்சார்ந்து தொழுது துயர்நீங்கச்செய்தல்.

அழிந்தவன போனபி னமல னையுணர்
வொழிந்தன னுயிருலைந் துருகு [1]தாதையைப்
[2]பொழிந்தபே ரன்பினாற் றொழுது முன்புபுக்
கிழிந்தவான் றுயர்க்கடற் கரைநின் றேற்றினான்.

(இ - ள்.) அவன் - அப்பரசுராமன், அழிந்து போன பின் - தோற்றுப் போய்விட்டபின்பு, அமலன் - குற்றமற்ற ஸ்ரீராமன்,—ஐ உணர்வு ஒழிந்தனன் உயிர் உலைந்து உருகு தாதையை - (பரசுராமனிடத்துப் பயத்தினால்) ஐம்புலவுணர்ச்சியையும் நீங்கினவனாய் உயிர்வருந்தி [மூர்ச்சித்து]த் தளர்கின்ற (தன்) தந்தையான தசரதனை, பொழிந்த பேர் அன்பினால் - வெளிப்படுகின்ற மிக்க அன்பினால், தொழுது - வணங்கி, முன்பு புக்கு - அவன் கண்ணெதிரே சென்று, இழிந்த வான் துயர் கடல் நின்று கரைஎற்றினான் - (அவன்) இறங்கி அமிழ்ந்திருந்த பெரியதுக்கசாகரத்தினின்று (அவனைக்) கரையேறச்செய்திட்டான்; (எ - று.)

இங்ஙனம் பரசுராமனைவெற்றிகொண்டுஅனுப்பியஸ்ரீராமன் தன்தந்தையின் மனத்துயரத்தையொழித்து அவனைக் களிப்படைவித்தா னென்பதாம். அழிந்தவன் என ஒருபெயராக எடுக்கவுமாம். பரசுராமனாலுண்டானபீடை ஒழிந்தவுடனே தசரதராமன் கிரகணத்தினின்றுவிடுபட்ட சந்திரசூரியர் போலக் குறைவறமிகவிளங்கினா னென்பார், இங்கே 'அமலன்' என்றார். ஐயுணர்வு - செல்லும் புலன்கள்வேறுபட்டால் ஐந்தாகிய உணர்வு; அது,

மனம்: இதனை "ஐயுணர்வெய்தியக்கண்ணும்பயமின்றே" என்னுந் திருக்குறளின் பரிமேலழகருரையாலும் அறிக. காண்டல், கேட்டல், மோத்தல், பரிசித்தல், சுவைத்தல்என்னும் ஐம்பொறிகளின்உணர்வுகளும் அழிந்துஎன்றவாறுமாம். பரசுராமன் புறப்பட்டுப்போனபின் ஸ்ரீராமன் அந்தவில்லை வருணனிடங்கொடுத்திட்டு வசிட்டன்முதலிய இருடியரைவணங்கிவிட்டு, பரசுராமன் வந்ததனால் திகைப்படைந்திருந்த தசரதனையணுகி, 'பரசுராமன் போனான்; இனி அயோத்திக்குச்செல்லலாம்' என்ன, தசரதன் புதல்வனைக் கட்டியணைத்து உச்சிமோந்து உடம்பெல்லாம்மயிர்க்கூச்சுண்டாகப்பேரானந்தமடைந்து தானும் தன் புதல்வரும் மறுபிறவி பிறந்தனராகவெண்ணினானென்று முதனூலிற் கூறியுள்ளது. பி - ம்:—[1]தந்தையை. [2]மொழிந்த.

சஉ.—தசரதன் களிப்புக்கடலு ளாழ்தல்.

வெளிப்படு முணர்வினன் [1]விழும நீங்கியே
தளிர்ப்புறு மதகரித் தானை யானிடைக்
குளிப்பருந் துயர்க்கடற் கோடு கண்டவன்
களிப்பெனுங் கரையிலாக் கடலு ளாழ்ந்தனன்.

(இ - ள்.) வெளிப்படும் உணர்வினன் - (முன்னே அழிந்துபோன) அறிவு (மீண்டுந்) தோன்றிவிளங்கப்பெற்றவனாய், விழுமம் நீங்கி - துன்பம் ஒழிந்து, தளிர்ப்பு உறும் - மனவெழுச்சியையடைகிற, மத கரி தானையான்- மதம்பிடித்தயானைச்சேனையையுடைய தசரதன், இடை குளிப்பு அரு துயர் கடல் கோடு கண்டவன்-இடையிலே (மூழ்குவதற்கு) அருமையான துன்பமாகிற பெருங்கடலின் எல்லையைக் கண்டறிந்தவன், (பின்பு), களிப்பு எனும் கரை இலா கடலுள் ஆழ்ந்தனன் - களிப்பென்கிற கரையில்லாத கடலினிடையே மூழ்கினான்; (எ - று.)

முதலடிக்கு-உடம்பைவிட்டுவெளியேசென்றிருந்த உயிரினுணர்ச்சியையுடையவன் அத்துன்பந்தணிந்து என்றும் உரைக்கலாம். தசரதன் மிக்க துன்பந்தணிந்து பேரானந்தமடைந்தானென்பதாம். பி - ம்:—[1]விம்மல்.

சஙு.—தசரதன் உச்சிமோந்து ஆனந்தக்கண்ணீர் நுகுத்தல்.

பரிவறு [1]சிந்தையப் பரசு ராமன்கை
வரிசிலை வாங்கிபோர் வசையை நல்கிய
வொருவனைத் தழுவிநின் றுச்சி மோந்துதன்
னருவியங் கண்ணெனுங் கலச மாட்டினான்.

(இ - ள்.) பரிவு அறு சிந்தை-அன்பு சிறிதுமில்லாத மனத்தையுடைய, அ பரசுராமன் - அந்தப்பரசுராமனது, கை - கையிலிருந்த, வரி சிலை - கட்டமைந்த வில்லை, வாங்கி - (அவனிடத்தினின்று) வாங்கிக்கொண்டு, ஓர் வசையை நல்கிய - ஒப்பற்றபழிப்பை (அவனுக்குக்) கொடுத்திட்ட, ஒருவனை - ஒப்பற்ற ஸ்ரீராமபிரானை, (தசரதன்), தழுவிநின்று - (தன்கைகளாலணைத்து நின்று, உச்சி மோந்து - (அவனது) உச்சியை(த் தான்) மோந்

திட்டு, தன் அம் கண் அருவி எனும் கலசம் ஆட்டினன் - தனது அழகிய கண்களினின்று வெளிப்படுகிற ஆனந்தக்கண்ணீர்ப்பெருக்காகிற கும்ப தீர்த்தங்களால் (அவனை) நீராடுவித்தான்; (எ - று.)

இச்செய்யுளின் இரண்டாம் அடி - ஒன்றைக்கொடுத்து ஒரு பொருளை மாற்றிக்கொண்டதாகக் கூறினமையால், பரிவர்த்தனையென்னும் மாற்று நிலையணியாம். கலசம் - சிறுபாத்திரத்தில் வைக்கப்பட்ட சுத்தமான தீர்த்தத்துக்கு ஆகுபெயர். தந்தை மகனைத் தழுவுங்காலத்துத் தந்தையின் ஆனந்தக்கண்ணீர் மைந்தனுடம்பின்மீது வழிந்ததை,மைந்தனுக்குத் தந்தை மங்களஸ்நாநஞ்செய்வதாகக் குறித்தார். பி - ம்:—1சிந்தனை. (சங)

சச.—தசரதனது உள்ளநிகழ்ச்சி.

பொய்ம்மையில் சிறுமையிற் புரிந்த வாண்டொழின்
மும்மையி னுலகினுன் முடிக்க லாவதோ
மெய்ம்மையிச் சிறுவனே வினை [1]செய் தோர்களுக்
கிம்மையு மறுமையு மீயு மென்றனன்.

(இ - ள்.) சிறுமையில் - இளம்பிராயத்திலே, பொய்ம்மைஇல் - வஞ்சனை சிறிதும்இல்லாமல், புரிந்த - (இக்குமாரன்) செய்துமுடித்த, ஆண் தொழில் - ஆண்மைக்குஉரிய பராக்கிரமச்செய்கை, மும்மையின் உலகினுல் முடிக்கல் ஆவதுஓ - மூன்றுஉலகங்களி லுள்ளாராலும் (ஒருங்குகூடியாயினுஞ்) செய்துமுடித்தற்குக் கூடியதோ? [அன்றென்றபடி]; இ சிறுவன் ஏ - இவ்விளங்குமாரனே, வினை செய்தோர்களுக்கு - நல்வினைதீவினைகளைச்செய்திட்டபிராணிகளுக்கு,இம்மைஉம் மறுமைஉம் ஈயும்-(அவரவர்வினைக்கேற்ப)இம்மைப்பயனையும் மறுமைப்பயனையும் அளித்தருளும்;மெய்ம்மை-(இது) உண்மை,' என்றனன் - என்று (தசரதன்) கருதினான்; (எ - று.)

மூவுலகத்துக்கும் எப்பொழுதும் அருமையான தொழிலை இவன் இளமையிலேயே செய்ததனால், இவன் பகவானுடைய அமிச மெனத்தசரதன் உண்மை கருதினான். பி - ம்:—[1]செய்தாருக்கும். (சச)

சரு.—ஸ்ரீராமன் வைஷ்ணவவில்லை வருணதேவன்கையிற்கொடுத்திட்டுச் சேனைமுதலியவற்றோடு அயோத்தி சேர்தல்.

பூமழை பொழிந்தனர் புகுந்த [1]தேவருள்
வாமவேல் வருணனை மான வெஞ்சிலை
சேமியென் [2]றுதவித்தன் சேனை யார்த்தெழ
நாமநீ ரயோத்திமா நகர நண்ணினான்.

(இ - ள்.) (அப்பொழுது), பூ மழை பொழிந்தனர்-புஷ்பவர்ஷத்தைச் சொரிந்தவர்களாய், புகுந்த - (அங்குஅருகில்) வந்துசேர்ந்த, தேவருள் - தேவர்களுள்ளே, வாமம் வேல் வருணனை - அழகிய வேலாயுதத்தையுடைய வருணதேவனைப்பார்த்து, (ஸ்ரீராமன்), மானம் வெம் சிலை சேமி என்று - 'பெருமையையுங் கொடுமையையு முடைய இவ்வில்லை (நீ நன்றாகக்) காப்

பாற்றிவைப்பாய்' என்றுகூறி, உதவி - (அவ்விஷ்ணுவில்லை அவனிடத்தே) கொடுத்துவிட்டு, தன் சேனை ஆர்த்து எழ - தனது சேனைகள் ஆரவாரஞ் செய்துகொண்டு கூடவேபிரயாணப்பட்டுவர, நாமம் நீர் அயோத்தி மா நகரம் நண்ணினன்-பிரசித்தமான நீர்வளமுள்ள அயோத்திமாநகரைச் சென்றடைந்தான்; (எ - று.)—பி - ம்:—[1]தேவர்கள். [2]உதவினன்.

இவ்வில்லை வருணன் பின்பு கரன்முதலிய ராக்ஷசர்களின் வதத்திற்கு உதவும்பொருட்டு அகத்தியமகாமுனிவன் மூலமாக ஸ்ரீராமனுக்குக் கொணர்ந்துகொடுப்பது, ஆரணியகாண்டத்தில் அறிவிக்கப்படும். நாமநீர் - (பகைவர்க்கு) அச்சத்தைத் தருகின்ற (அகழி) நீருமாம். (ருகு)

சுகூ.—இதுவும் அடுத்த கவியும் - தசரதன் பரதனை நோக்கி மாதாமகன் விருப்பின்படி கேகயநாட்டிற்குச்சென்றுவர அநுமதிதருதலைக் கூறும்.

நண்ணின ரின்பத்து வைகு நாளிடை
மண்ணுறு முரசினம் வயங்கு தானையவ்
[1]வண்ணலப் பரதனை நோக்கி யாண்டகை
யெண்ணருந் தகையதோர் பொருளி யம்புவான்.

(இ - ள்.) நண்ணினர் - (யாவரும் அயோத்தியை) அடைந்தவர்களாய், இன்பத்து வைகும் நாளிடை - இன்பத்திலே தங்கியிருக்கும்பொழுதில், (ஒருநாள்), ஆண் தகை - ஆண்மைக்குணமுள்ளவனான, மண் உறு முரசு இனம் வயங்கு தானை அ அண்ணல் - மார்ச்சனையமைந்த பேரிகை வாத்தியங்களின்கூட்டம் விளங்குதற்கிடமான சேனையையுடைய அத்தசரதன், அ பரதனைநோக்கி—, எண் அரு தகையது ஓர் பொருள் இயம்புவான் - (எவராலும்) நினைத்துப்பார்ப்பதற்குங் கூடாத (சிறப்பையுடையதொரு) விஷயத்தைக் கூறுபவனானான்; (எ - று.)—அது மேற்கவியில் வரும்.

மார்ச்சனை - வாத்தியங்களில்அடிக்கப்படுமிடத்தைத் தகுதியாகஅமைத்தல். எண் அருந் தகையது - (யாவராலும்) நன்குமதிக்கத்தக்க அருமையான தன்மையையுடையதென்றுமாம். 'அப்பரதன்' என்பதிற் சுட்டு, இராமபக்தியிற் சிறந்தவ னென்பதை உணர்த்தும். பி - ம்:—[1]அண்ணலே. (சுக)

சுஎ. [1]ஆணைநின் றன்முது தாதை யையநிற்
காணிய விழைவதோர் கருத்த னாதலாற்
கேணியில் வளைமுரல் கேக யம்புகப்
பூணொளிர் [2]மார்பநீ போதி யென்றனன்.

(இ - ள்.) 'ஐய - ஐயனே! ஆணை - (தன்நாட்டிற்செலுத்தும்) ஆஜ்ஞையையுடைய, நின்தன் முது தாதை - உன்னுடைய மூதாதையான கேகயதேசாதிபதி, நின் காணிய விழைவது ஓர் கருத்தன் - உன்னைப்பார்க்கவிரும்புவதோரெண்ணத்தையுடையவன்; ஆதலால்-ஆகையினால்,பூண் ஒளிர் மார்ப- ஆபரணங்கள்விளங்குதற்குக் காரணமான மார்பையுடையவனே! கேணியில் வளை முரல் கேகயம் புக-குளங்களிலே சங்குகள் ஒலித்தற்கிடமான (நீர்வள

த்தையுடைய) கேகயதேசத்தை அடைதற்கு, நீ போதி - நீ செல்லுவாய்', என்றனன்-என்று (தசரதன் பரதனைநோக்கிக்) கட்டளையிட்டான்; (எ-று.)

முதுதாதை - பாட்டன்; என்றது, பரதனுக்கு மாதாமகனை. கேணி - நீர்நிலைக்கெல்லாம் உபலக்ஷணம்; சிறுகுளத்தைக் கேணியென்பது, அருவா நாட்டிலிருந்து வந்து வழங்கிய திசைச்சொல். பரதனைப்பார்க்க விரும்பிய தனது தந்தையான கேகயராசனது கட்டளையால் இந்தயுதாசித்து அயோத்தி சேர்ந்து தசரதன் முதலியோர் ஸீதாகல்யாணத்தின் பொருட்டு மிதிலை சென்றிருப்பதையறிந்து இராமன் முதலியோர்க்குச் சமாவர்த்தனமென்ற சடங்கு நடந்த அன்றைத்தினமே மிதிலையைவந்து சேர்ந்தனனென்றும், அதுமுதல் பரதனையழைத்துச்செல்வதற்காகக் காத்திருந்தனனென்றும் முதனூலால் அறிக. பி - ம்:—[1]ஆணையினின்முது. [2]மார்பினாய். (சுஎ)

சுஅ.—இராமபிரானைவணங்கிவிட்டுப் பரதன் கேகய நாட்டிற்குப் புறப்படுதல்.

ஏவலு மிறைஞ்சிப்போ யிராமன் சேவடிப்
பூவினைச் சென்னியிற் புனைந்து போயினா
னாவியங் கவனல தில்லை யாதலா
லோவலி லுயிர்பிரிந் துடல்சென் றென்னவே.

(இ - ள்.) ஏவலும் - (சக்கரவர்த்தி) கட்டளையிட்டவளவிலே, (பரதாழ்வான்), இறைஞ்சி போய் - (தந்தையை) வணங்கிச்சென்று, இராமன் சே அடிபூவினை-ஸ்ரீராமபிரானது சிவந்ததிருவடித்தாமரைமலர்களை, சென்னியில் புனைந்து - (தன்)தலையின்மேற்கொண்டு சூடி வணங்கி, அங்கு அவன் அலது ஆவி இல்லை ஆதலால் ஓவல் இல் உயிர் பிரிந்து உடல் சென்று என்ன - அவ்விடத்திலுள்ள அந்த ஸ்ரீராமனையல்லது(தனக்கு வேறு)உயிர் இல்லையாகையால் (ஒருபொழுதும்) நீங்குதற்குத்தகாதஉயிரைவிட்டுப்பிரிந்து உடம்பு தனியே சென்றாற்போல, போயினான் - (இராமனை விட்டுச்) சென்றான்.

'உயிரைவிட்டுப்பிரிந்து உடம்புசென்றென்ன' என்றது, இல்பொருளுவமையாம். உடம்பு - பரதனுக்கும், உயிர் - இராமனுக்கும் உவமை. பரதனுக்குஎல்லாச்சிறந்தபொருளும் இராமனேயாதலை மேல்அயோத்தியாகாண்டத்திற் பரதன் "எந்தையும் யாயு மெம்பிரானு மெம்முனு, மந்தமில்பெருங்குணத்திராம னாதலால், வந்தனையவன்கழல் வைத்தபோதலாற், சிந்தைவெங்கொடுந்துயர் தீர்கலாதென்றான்" என்பதனாலும் அறிக. அங்கு - அப்பொழுது எனவுமாம். உயிர்பிரிந்து-உயிர்பிரியப்பெற்று என்றும் உரைக்கலாம்.

சுகூ.—யுதாசித்துத் தன்னருகுவரத் தம்பியோடும் பரதன் கேகயநாட்டைச் சேர்தல்.

உளைவிரி புரவித்தே ருதாசித் [1]தென்றெனும்
வளை[2]முர ருனையான் மருங்கு போதப்போ
யிளையவன் றன்னொடு மேழு நாளிடை
[3]நளிர்புனற் கேகய நாடு நண்ணினான்.

(இ - ள்.) உளை விரி-பிடரிமயிர்கள் பரவப்பெற்ற, புரவி-குதிரைகளை யும், தேர் - தேர்களையுமுடைய, உதாசித்து என்று எனும் - யுதாஜித்தென்று சிறப்பித்துக்கூறப்படுகிற, வளை முரல் தானையான் - சங்கவாத்தியங்கள் முழங்குதற்கிடமான சேனையையுடைய அரசன், மருங்கு போத - (தன்) அருகில் வர, இளையவன்தன்னொடும் - தம்பியான சத்துருக்கனனுடனே, போய் -, ஏழு நாளிடை - ஏழுநாட்களிலே, நளிர் புனல் கேகயம் நாடு நண்ணினன்-குளிர்ந்தநீர்வளத்தையுடைய கேகயதேசத்தை(ப் பரதன்) அடைந்தான்; (எ - று.)

'இளையவன்தன்னொடு நண்ணினன்'என்றதனால், கைகேயியின் தந்தை சத்துருக்கனனைக் காணவேண்டுமென்னுங் கருத்தைச் சிறிதும் உடையனல்லனா யிருக்கையிலும், சத்துருக்கனன் யுதாசித்தினாலாவது பரதனாலாவது அழைக்கவும்படாமலே தந்தைதாய்தமையன்முதலியோரது கட்டளையுமில்லாமலே பரதன்பக்கல் தனக்கு இயற்கையாகவுள்ள பக்தியைத் தவிர வேறுகாரணமில்லாமல் வடிவத்தை நிழல் விடாது தொடர்ந்து செல்லுதல்போல அப்பரதனுடனே அவனது அங்கமாய்ச்சென்றனனென்ற தன்மை புலப்படும். 'யுதாசித்துமருங்குபோத' என்றதனால், பரதனது மாமனையே சத்துருக்கனன் தனக்கும் மாமனாகக்கருதினனென்பதும், 'கேகய நாடு நண்ணினன்' என்றதனால், பரதனுக்கு அபிமதமான இடமே தனக்கும் அபிமதமான இடமெனக்கருதினனென்பதும் பெறப்படும். பாகவதர்க்கு உத்தேசியமான தலமே முமுட்சுக்களுக்கு உத்தேசியமான தலமாமென்பதை இதனால்அறிக. 'கதைநிகழ்ச்சிவகையாலுஞ்சொற்போக்கினாலுஞ் சிறந்த தத்துவப்பொருள்களைக் குறிப்பாலுணர்த்திக்கொண்டுபோதல் உத்தமகாவியவிலக்கணமாம்' என்றமுறைமைப்படி, இம்மகாகாவியத்தில் இங்கே இங்ஙனஞ் சத்துருக்கனனது செய்தியைக் கூறியதனால், 'பகவத்கடாக்ஷம் பெற்றுச் சிறந்தபதவியடையவேண்டுவராயின், பாகவதபாரதந்திரிய முடையவராகுக' எனக் குறிப்பா லுபதேசிக்கப்பட்டவாற்றை உணர்க.தமதுசிறுமையின் எல்லையையும் எம்பெருமானது பெருமையின் எல்லையையும் உய்த்துணர்ந்து பகவானைத் தாம் நேரிலடைந்து அடிமைபூணுதல் அரிதெனக் கருதிப் பாகவதர்க்குத் தொண்டுசெய்யவேண்டுதல் நூல்முறைமை யாதலின், சத்துருக்கனன் இராமனைத்தொடராது பரதனைத் தொடர்ந்தான். இதனால், லக்ஷ்மணன் பரதன் மற்றும் அயோத்தியிலுள்ள ஜனங்கள் என்னும் அனைவரைக்காட்டிலுஞ் சத்துருக்கனனுக்கு உள்ள பாகவதசேஷத்வமாகிய சிறப்பு விளங்கும். அயோத்தியிலாயின் இராமபக்தனான பரதனுக்கு மற்றும் பலர் கைங்கரியஞ் செய்தல் கூடும்: அவன் செல்லுங் கேகயநாட்டிலாயின் தானொருவனே பரதகைங்கரியஞ்செய்யலாமெனக் கருதிப் பேரானந்தத்தோடு இவன் சென்றனனென்க.

இராமபிரானிடத்து விசேஷபக்தியையுடையனாகி அவனையலது உயிர்லனாகிய பரதன் பிதிருவாக்கியபரிபாலனத்தின்பொருட்டுஇராமனைப்பிரிந்து கேகயஞ்சேர்ந்து எங்ஙனம வாழ்ந்தனனென்னின்,—இராமனதுபேரபிமானத்துக்கு விஷயமான சத்துருக்கனனது சேர்க்கையாலேயே யென்க; இக்

கருத்து விளங்குவான் வேண்டியன்றே, 'இளையவன் மூத்தவனொடுங் கேகய நண்ணினன்' என்னாது 'இளையவன்றன்னொடும் (மூத்தவன்) கேகய நண்ணினன்' எனக் கவிச்சக்கரவர்த்தியான கம்பர் கூறினது: இராமனைப் பிரிந்த தனது உயிர்வாழ்க்கையின்பொருட்டே பரதன் அவ்விராமனது திருவுள்ளத்துக்கு மிகப்பாங்கான சத்துருக்கனனை உடனழைத்துச்சென்றனனென்க. இதனால், பரதன் ராமசத்துருக்கனர்களைக்காட்டிலுஞ் சிறப்பாகத் தனதுமாமனைக் கொள்ளாமை காண்க.

உதாசித்து - வடசொற்றிரிபு. யுதாஜித் என்பதற்கு - போரால் (பகைவரை)வெல்பவனென்று பொருள். உளை - தலையாட்டமென்றஆபரணமுமாம். பி - ம்:—[1]என்றெனும். [2]மூரல்சேனையான். [3]நளி. (௯௯)

௱.—கவிக்கூற்று: மேற்காண்டத்துக்குத் தோற்றுவாய்.

ஆனவன் போனபின் னரசர் கோமக
னூனமில் [1]பேரர சுய்க்கு நாளிடை
வானவர் செய்தமா தவமுண் டாதலான்
மேனணி நிகழ்ந்தன விளம்பு வாமரோ.

(இ - ள்.) ஆனவன் போன பின் - அப்பரதன் சென்றபின்பு, - அரசர் கோமகன்-இராசாதிராசனான தசரதன், ஊனம் இல் பேர் அரசு உய்க்கும் நாளிடை - குற்றமில்லாத பெரிய அரசாட்சியைச் செலுத்திக்கொண்டிருக்குங்காலத்தில், வானவர் செய்த மா தவம் உண்டு ஆதலால் - தேவர்கள் (ராவணாதிராக்ஷசசங்காரத்தின்பொருட்டுச்) செய்துள்ள பெருந்தவம் உள்ளதாதலால், மேல் நனி நிகழ்ந்தன - பின்பு மிகுதியாக நடந்த செய்திகளை, விளம்புவாம் - (இனி மேற்காண்டத்திற்) கூறுவோம்; (எ - று.)

மேல்நனி நிகழ்ந்தன - தசரதன் இராமனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்யச்சித்தனானதும், மந்தரை கலகத்தால் மனந்திரிந்த கைகேயியால் அது தடைப்பட்டதும், இராமன் வனவாசஞ்செய்ய நேர்ந்ததும் முதலியன. ஊனமில் பேரரசு - வருணாச்சிரமதருமங்கள் வழுவாமலும் எளியார் வலியாரால் நலிவுபடாமலும் நிகழுஞ் சகலலோகசாமிராச்சியம். பி - ம்:—[1]பார். (௱)

பரசுராமப்படலம் முற்றிற்று.

---

## பாலகாண்டம் முற்றுப்பெற்றது.

---

# பாலகாண்டத்து

## அரும்பதவகராதி முதலியன*.



அகத்தியன் கடலை மொண்டு பருகிய கதை, தாடகை - 30.
அகம்பாடுணர்தல், கோலங் - 39.
அகலிடம்-மார்பு, பரந்த இடம்: எழுச் - 33.
அகலியை சாபம் நீங்கி முன்னை நிலையடைந்ததற்குஉபமானம், அகலி-71.
அகவிருள், காப்பு-5.
அகவிரை நறுமலர், திருவ-86.
அகழ்-அகழி, மிதிலை-22.
அகழி சேனையையொத்தல்,நகர-19.
அகழியிற் பங்கயமிருத்தலின் வருணனை, நகர-16.
அகழியின் வருணனை, மிதி-22.
அகன்கிடங்கைச சூழ்கிடந்த சோலை × ஆழியைச் சூழ்கிடந்த இருட்பிழம்பு, நகர - 21.
அகில் - அகருமரம், மலையினிடம்: வரைக் - 58.
அகில்படுமூதூர் × முகில்படு கடல், வரைக் - 27.
அகிற்சாந்து-அகிற்றேய்வை, கடிம. 24.
அகிற்றேய்வை, எதிர் - 13.
அங்கதன், திருவ - 27.
அங்கணன், கடிம - 97.
அங்கம் - சரீரம், தாடகை - 2.
அச்சநுண்மருங்குலாள், உண் - 11.
அச்சம்பூத்தது, உண் - 49.
அச்செனநினைத்தவந்தணன், கோலங் - 36.
அசட்டர் - அசடர், திருவ - 77.
அசதி - சிரிப்பு, சோர்வு, உண் - 24.
அசமஞ்சன், அகலி - 34.
அசன்[அயன்] பகைக்கடல்கலக்கி இந்துமதியென்னுந் திருவைப்பெற்றது, குலமு - 12.
அசனி - இடி, திருவ-27. தாடகை-34, வேள்வி - 43, அகலி - 15.
அசுணம், தற்சி - 7.
அசுவமேதம் ஓராண்டுநடந்தது, திருவ - 85.
அஞ்ச-தோல்வியடைய, கையடை-4
அஞ்சலஞ்சல், கார்மு - 49.
அஞ்சனக்கருமுகில், திருவ - 104.
அஞ்சனநோக்கம், உலா - 10.
அஞ்சனம் - மை, வரைக் - 38.
அஞ்சனம் அமுதமாதல், எழுச் - 26
அஞ்சனவொளியான், கடிம - 21.
அஞ்சினர் - தோற்றவர், தாடகை-7.
அஞ்சு - பஞ்சபூதங்கள், காப்பு - 2.
அஞ்சுமான், அகலி - 34.
அட்டில் - மடைப்பள்ளி, நாட்டு - 24, 26;வரைக் - 27.
அடக்கம் பெரியோர்க்குரியது, உலா - 20.
அடங்கலும் - முற்றும், தாடகை-50.
அடவி - காடு, மிதி - 114.
அடாநெறியறைதல்செல்லா வருமறை, எதிர் - 1.
அடிகதுவ - பாதங்களை வணங்கிச் சூழ்ந்துவர, பரசு - 2.
அடிகள், மிதி - 157.
அடிமையிற் கிடைத்தல் - அடிமையிலமர்தல், அகலி - 29.
அடியிணை தொழ இடமின்றி மன்னர் தம்முடியொடு முடிபொருவாயில், எழுச் - 1.
அடுக்கல், ஆற்று - 13.
அடைதூண், அகலி - 21.
அண்டகூடம் - அண்டமுகடு, அண்டத் தொகுதி, அகலி - 14.
அண்டகோளகை - அண்டகடாகம், அகலி - 5.
அண்டம் - தேவருலகம், மிதி - 28.
அண்டர் - தேவர், வேள்வி - 48, மிதி - 134.
அண்ணல் மரபின்சுடர்,கோலங்-26.
அண்ணியர்-போன்றவர்,வரைக்-58.

---

* இங்குக் காட்டப்படுபவை - படலப்பெயரின் முதற் குறிப்பும், படலச் செய்யுள்களினெண்ணும்.

ஆய்ச்சியர் தயிர் கடைதல், நாட்டு - 28.
ஆயம் - தோழிமார் கூட்டம், திருவ- 118, வேள்வி - 8.
ஆயிரங் கண்களுடன் கிரீடமணிந்து யானையின்மேல் விளங்கும் இந்திரன் × ஆயிரந் தாமரைமலர் மலரப் பெற்றுச் சோதியை மிலைச்சிய வெள்ளியமலை, அகலி - 9.
ஆயிரத்தினிரட்டி - பல, மிதி - 81.
ஆயிர நாமச்சிங்கம், கடிம - 100.
ஆயிழையவர், கோலங் - 2.
ஆர்கலி, ஆற்றுப்-2, அர - 3, வரைக்- 14.
ஆர்கலி நிரைத்தல் × ஆவண நிரைத்தல், வரைக் - 14.
ஆர்த்தல் - நிறைதல், எழுச் - 77.
ஆர்த்தி - துன்பம், உண் - 54, உலா- 32.
ஆர - நிறைய, வரைக் - 57.
ஆரணக்கவிதை, காப்பு - 10.
ஆரணத்துறையுளாய், தாடகை - 12.
ஆபரண மறைவாணர், கடிம - 22.
ஆரம் - சந்தனம், முத்தாகாரம், அகலி-1, வரைக்-57, இரத்தினமாலை, பூமாலை, மிதி - 26, 31. முத்து, சடிம - 59.
ஆரம் மின்றிரிந்தா லெனத் துயல்வரல், உலா - 43.
ஆரம் முதலியன சோர்தல், உலா - 41.
ஆரமிர்து நாணுதல், கோலங் - 28.
ஆரமுத்தின் வருணனை, கோலங்-8.
ஆரவாரம் - பேரொலி, வரைக்-57.
ஆராதனை, பரசு - 17.
ஆரிடைச் சென்றுங் கொள்ள வொண்கிலா வழகு, புனல் - 17.
ஆரை - மதில், நகர - 17.
ஆலம் - விஷம்,அகலி - 26, மிதி-67.
ஆலமர்வித்தினருங்குறள், வேள்வி - 21.
ஆலவட்டம்-பெருவிசிறி, மிதி - 52.
ஆலி - நீர், மிதி-48, பூக் - 14, உண்- 29.
ஆலைபாயரவம், நாட்டு - 3.
ஆலைமென்கரும்பனுன், உண் - 41.
ஆவண நிரைத்தல் × ஆர்கலி நிரைத்தல், வரைக் - 14.
ஆவணம் - கடை; நகர - 59, மிதி - 11.
ஆவரும், அர - 8.
ஆவி-உயிர், குளம், புகை: வரைக்-1.
ஆவிபிரிந்தது வருதல், எதிர்-22.
ஆழ்ப - பலவின்பால் முற்று: நகர- 64.
ஆழ்வான் - ஆள்பவன், காப்பு - 4.
ஆழத்துள்ளுங் கள்ள நினைப்பாள், பூக் - 24.
ஆழி,மிதி - 67. வாகுவலயம், புனல்- 12
ஆழி துயிலாதே துயராழி நெடுங்கடலுட்டுயில்கின்றான், மிதி - 154.
ஆழிநீத்துச் சிலைகைக்கொண்ட கொண்டல், மிதி - 154.
ஆழிப்படை வெய்யோன், குல-14.
ஆழிமால்வரை - சக்கரவாளகிரி, நகர - 14.
ஆளி - சிங்கம், நகர - 25, எழுச்சி - 30. வரைக் - 62. வண்டு - என்றபொருளில் அளி என்பதன் நீட்டல், வரைக் - 62.
ஆற்றல் - செய்தல், நாட்டு - 39.
ஆற்றுதல் - குவித்தல், நகர - 45.
ஆறு - நதி, வழி: வரைக்-60. எழுச்- 16, 53.
ஆறுதல் - தாமதித்தல், தாடகை-65.
ஆறுபோகிய ஆறு போமாறு × வனகரிதண்டத்தைக் கரிதடவிச் செல்வது, வரைக் - 5.
ஆறும் ஆறும் வந்தெதிர்தல் × சாறும் வேள்வியும் மயங்குதல், நாட்டு - 56.
ஆறு வற்றியும் கிள்ளுதலால் புனல் எழுதல், வரைக் - 23.
ஆனம் - ஒருவகைப்பறை; பரசு-25.
ஆனனம் மலர்தல், திரு - 21.
ஆனுமறை நெறி, பரசு - 1.
ஆனைமேல் வள்ளுவர் முரசறைதல், எழுச் - 7.
இகந்த - களைந்தெறிந்த: நகர - 56.
இகல் - பகை, கையடை - 7.
இகலுதல் - மாறுபடுதல், நாட்டு-45, நகர - 59, பூக் - 31.
இசைக்கலைத்தொழில்எட்டு,வரை-74
இசைக்குப்பை, நகர - 71,

